# KATIRAVEL PILLAI'S
# TAMIL DICTIONARY

# தமிழ்ச் சொல்லகராதி

## முதலாம் பாகம்






உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

# Katirvel Pillai's Tamil Dictionary

# தமிழ்ச் சொல்லகராதி

(முதற் பாகம்)

இது,
யாழ்ப்பாணத்து வல்வையம்பதி
ஸ்ரீ. க. குமாரசாமி முதலியார் குமாரரும்
இலங்கைச் சுப்ரீம் கோடென்னும் அதிசிரேட்ட நீதாசநர் சபையின்
அத்துவக்காத்தும் இலங்கை அரசினரால் நியோகிக்கப்பட்ட மூலகிரந்த
வித்தியாநுபாலந சங்கத்தாருளொருவரும் இலங்கை அரசின்
சிவில் சேவை நிரையில் நீதிபதியாயிருந்தவருமாகிய

**ஸ்ரீ. கதிரைவேற்பிள்ளையவர்களால்**

இயற்றப்பெற்று,

மதுரைத் தமிழ்ச்சங்கப் பண்டிதர்களாற்
பரிசோதிக்கப் பெற்றது.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
**தரமணி, சென்னை — 600 113.**

# Katiravel Pillai's Tamil Dictionary Vol - I

**Author:**
**C.W. Katiravel Pillai**

**Published by:**
**International Institute of Tamil Studies,**
C.I.T. Campus, Taramani, Chennai - 600 113.

| | | |
|---|---|---|
| Publication No | : | **285** |
| Edition | : | **Reprint** |
| Year | : | **1998** |
| Language | : | **Tamil** |
| Size | : | **1/4 Crown** |
| No. of Copies | : | **1000** |
| No. of Pages | : | **6 + xii + 706** |
| Price | : | **225. 00** |
| Printed by | : | **Parkar Computers,**<br>293, Royapattah High Road,<br>Chennai - 600 014.<br>Phone: 8551363, 8266637. |
| அட்டைப் படம் வடிவமைப்பு | : | வே. கருணாநிதி,<br>பர்வீன் கருணாநிதி |

தமிழ் வளர்ச்சி இயக்கத்தின்
அரிய நூல்களை வெளியிடும் திட்டத்தில்
நிதியுதவி பெற்று
இந்நூல் வெளிவருகின்றது.

முனைவர் மு. தமிழ்க்குடிமகன்,

எம்.ஏ., பிஎச்.டி.

தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப் பண்பாடு,

இந்து சமயம் மற்றும்

அறநிலையத்துறை அமைச்சர்

தி. பி. 2029/மீனம், 15

# அணிந்துரை

யாழ்ப்பாணம் கு. கதிரைவேல் பிள்ளையவர்கள் ஓர் அரிய தமிழ்ப் பணியைச் செய்திருக்கிறார்கள். அதுதான் அவர் உருவாக்கிய 'தமிழ்ச் சொல்லகராதி'. தமிழில் சொல்லுக்குப் பொருள் காணும் முயற்சியாகத்தான் 'நிகண்டுகள்' பிறந்தன. இவை கவிதை வடிவில் அமைந்தன. 1732இல் வீரமாமுனிவர்தான் உரைநடை வடிவில் இப்போதுள்ள அகரமுதலி முறையைக் கொண்டுவந்தவர். அதுதான் 'சதுரகராதி' என்பது. அதன்பின் எத்தனையோ பெருமக்கள் பலவகையான அகரமுதலிகளைக் கொண்டு வந்துள்ளனர். அதில் தமிழகத் தமிழ் அறிஞர்களும் வெளிநாட்டு அறிஞர் களும் அதிலும் குறிப்பாக யாழ்ப்பாணத் தமிழறிஞர்களும் பெரும் பங்காற்றியுள்ளனர். இதுகாறும் 64 வகையான அகரமுதலிகள் வெளி வந்துள்ளன.

நீதியரசராயிருந்து ஓய்வுபெற்ற இவ்வறிஞர் இந்நூலைச் செய்துள்ளார் என்பது வியப்புத்தான். இதுபற்றி அவரே எழுதுகிறார்.

> "நாம் முன்நெடுங்காலந் தொட்டு வாசித்துவந்த நூல்களில் உள்ளனவாய்ச் சதுரகராதி, மானிப்பாயகராதி, சென்னை யகராதிகள், உவின்சிலோ அகராதி, வைத்திய அகராதி என்னுமிவற்றில் இல்லாதனவாகிய சொற்களைப் புதிதாக ஓரகராதி செய்யவேண்டுமென்று புத்திபண்ணிக் காலாந் தரத்திற் குறித்து வைத்திருந்தோம்; ஆயினும் முன்னர்த் தமிழ் ஆங்கிலேயம் என்னும் இரு பாஷைகளிலும் நூலுரை யாசிரியராயும் பின்னர் அத்துவக்காத்தாயும் நீதிபதியாயும் ஏற்பட்டுச் செய்துவந்த கடமைகள் எமது காலத்தைக் கொள்ளை கொண்டமையால் எமது அபிப்பிராயத்தை நிறைவேற்றுவதற்கேற்ற சமயம் வாயாமற் போயிற்று. நீதிபதித் தொழிலினின்று ஓய்ந்திருக்கும் பின்னிட்ட ஐந்து

வருட காலங்களில் நோயனார் கைக்கொண்ட காலம் ஒழித்து எஞ்சிய காலத்தில் இவ்வகராதி எழுதுவதே நமது தொழிலாயிற்று."

பணி செய்த காலத்தில் செய்ய விழைந்த பணியை, ஓய்வு பெற்றதும் உழைத்து முடித்திருக்கிறார் என்பதே பெருமைக்குரியதாகும். இவர் இதற்கான முன்னுரையை 1904 சனவரி 1 இல் எழுதியுள்ளார்.

அதன்பின் இந்த நூல் என்ன வளர்ச்சியைக் கண்டது; வடிவம் எடுத்தது என்ற வரலாற்றைச் சற்றுப் பார்க்க வேண்டும். சண்முகம்பிள்ளை தம் நூலில் குறிப்பிட்ட செய்தியை அப்படியே தருகிறேன்.

"தமிழ்ச்சங்க அகராதி

தமிழ் - தமிழ் அகரமுதலிகளுள் மிகவும் பெரியது தமிழ்ச் சங்க அகராதி. இது மூன்று பெருந்தொகுதிகளாக வெளி வந்துள்ளது. சொற்பொருள் விளக்கம் தவிரப் பொருள், தொகை, தொடை அகராதி என்னும் சேர்க்கை இந்த அகராதியில் இல்லை. இந்த அகராதியைப் பல்லாண்டுகள் உழைத்து உருவாக்கியவர் யாழ்ப்பாணம் நீதிபதி கு. கதிரை வேற்பிள்ளையாவார்.

இவர் சதுரகராதி, மானிப்பாய் அகராதி, சென்னை அகராதி கள், வின்சுலோ அகராதி, வைத்திய அகராதி என்னும் இவற்றில் இல்லாத புதுச் சொற்களைத் திரட்டி விளக்கம் தந்துள்ளார். இதனை முற்றுமாய் வெளியிடும் முன்னர் இவர் காலமானார்.

பின்னர் அப்பொழுது மதுரைத் தமிழ்ச் சங்கத் தலைவராக விளங்கிய பொன். பாண்டித்துரைத் தேவரவர்கள் அகராதிப் படிவங்களைக் கதிரைவேற்பிள்ளையின் குமாரர் பாலசிங்கம் என்பவரிடமிருந்து பெற்றார்; மதுரைத் தமிழ்ச் சங்க வித்து வான்களைக் கொண்டு பரிசோதித்து அச்சிட்டு வெளியிடப் பணித்தார். சே.ரா. சுப்பிரமணியக் கவிராயர் முதலிய பலரும் பல்லாண்டுகள் உழைத்து இந்த அகராதியை மூன்று பகுதி களாக 1910, 1912, 1923ஆம் ஆண்டுகளில் வெளியிட்டு முற்றுவித்தனர்.

நீதிபதி கு. கதிரைவேற்பிள்ளை சூட்டிய 'தமிழ் சொல் லகராதி' என்னும் பெயருடன் இந்த அகரமுதலி வெளி வந்தபோதிலும் மதுரைத் தமிழ்ச்சங்கம் வெளியிட்டமையால் 'தமிழ்ச்சங்க அகராதி' எனக் குறிப்பதே பெருவழக்காயிற்று.

ஒரு சொற் பல்பொருள்களுக்கு விளக்கம் தரும்போது பொருள்களை 1, 2 என எண் குறியிட்டுக் காட்டியிருப்பது புதுமை. இதனால் ஒரு சொல்லுக்கு எத்தனை பொருள்கள் உண்டு என்பதும் தெளிவுபடுகிறது. மேலும், சொற் பொருளுக்கு அடிப்படை ஆதாரமான நூற்சான்றுகளையும் உதாரணம் என எடுத்துக் காட்டியது புதுமுயற்சி. சொற் பொருளுக்கு இலக்கிய இலக்கணம் முதலிய நூல்களில் இருந்து மேற்கோள் எடுத்துத் தந்த முதல் தமிழ் - தமிழ் அகராதி இதுவே.

இவர் 344 நூல்களிலிருந்து மேற்கோள்களை எடுத்தாண் டுள்ளார். சொல் மூலங்களைக் காட்டியதோடு வடசொற்கள், இந்துஸ்தானிச் சொற்கள், தெலுங்குச் சொற்கள் முதலிய வற்றையும் இனஞ்சுட்டிக் காட்டியுள்ளார். இந்த அகரமுதலி யில் முந்திய அகரமுதலிகளில் இல்லாத பல சொற்களும் திருந்திய விளக்கங்களும் காணப்படுகின்றன. தமிழ் - தமிழ் அகரமுதலிகளுள் கால அடைவில் விரிவு பெற்ற பேரகராதி இதுவே.''

இதிலிருந்து நாம் பெறும் உண்மைகள் பல.

யாழ். அறிஞர் கதிரைவேற்பிள்ளையின் அகரமுதலிதான் 'மதுரைத் தமிழ்ச் சங்க அகராதி'யாகியுள்ளது. பல அகரமுதலிகளில் இல்லாத பலவற்றை இவர் திரட்டியுள்ளார்.

சிங்காரவேலு முதலியாரின் 'அபிதான சிந்தாமணி' அச்சுக் கட்டத்தில் வந்து தவித்தபோது, எப்படி, செந்தமிழ் அரிமா, தென்பாண்டித் தமிழ்த் தென்றல் பாண்டித்துரைத் தேவர் தானே முன்வந்து நூற்படியைப் பெற்று, வெளியிட்டுச் சிறப்புச் சேர்த்தாரோ அதேபோல இந்த அகரமுதலியையும் பெற்று வெளியிட்டுள்ளார் என்பது பெருமைக்குரியது. பல புதுமைகளை இவர் செய்துள்ளார் என்றும் பிற அறிஞர்கள் உறுதிப்படுத்துகிறார்கள்.

மேற்கோள் காட்டி விளக்கிய முதல் நூல் என்ற பெருமை பெறுகிறது. அதிலும் 344 நூல்களிலிருந்து மேற்கோள் காட்டியிருப்பதால் அவரது பன்னூற் பயிற்சியும் புலமையும் நமக்குத் தெரிகின்றன. 'கால அடைவில் விரிவுபெற்ற முதல் பேரகராதி இதுவே' என்பதுதான் பெரிய சிறப்பு.

1998 மார்ச்சு 29ஆம் நாள் இதனை வெளியிடும் வாய்ப்புப் பெற்ற மைக்காக மகிழ்கிறேன். இதனால்தான்,

"என்னை நன்றாகக் கலைஞர் படைத்தார்
அன்னைத் தமிழுக்கு அணிசெய்யு மாறே"

என்று நான் அழுத்தமாகக் கூறிவருகிறேன். என் துறையில் இயங்கும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் இதனை வெளியிடுகின்றது. இதனை விரைந்து வெளிக்கொணர்ந்த இராமர் இளங்கோ, அவர்களைப் பாராட்ட வேண்டும்.

தமிழக அரசின் தமிழ் வளர்ச்சி இயக்ககம் தான் ஒவ்வொரு தொகுதிக்கும் உரூபா 10,000/- நிதி வழங்கியிருக்கிறது. வழங்கவும் வாங்கவும் எங்கள் துறைகளே பயன்பட்டுள்ளன என்பது குறித்து மகிழ்வெய்துகிறேன்.

அட்டைப்படம், உறுத்தல் இல்லாத வண்ணத்தில் சிறப்பாக அமைந்துள்ளது. அட்டைப்படம் போட்டவர் வே. கருணாநிதி, வடிவமைத்தவர் பர்வீன் கருணாநிதி.

இந்த நூலுக்கு மறுவாழ்வளித்து உங்கள் கைகளில் எல்லாம் தவழ வைத்தவரும் கருணாநிதிதான். ஆம்! தமிழக முதல்வர் மாண்புமிகு கலைஞர் அவர்கள்தான்.

இதுபோன்ற பயன்பாடு மிக்க பணிகளைப் பார்க்கும் போதுதான் தமிழ் வளர்கிறது என்ற பூரிப்பும், வளர்ந்து விடும் எனும் நம்பிக்கையும், வளர்த்துக் காட்டுவோம் எனும் சூளுரையும் பிறக்கின்றன.

பணி தொடரட்டும்!

29 - 03 - 1998.

அன்புடன்

**(மு. தமிழ்க்குடிமகன்)**

1998 மார்ச்சு 28

**முனைவர். ச. சு. இராமர் இளங்கோ**
**இயக்குநர்**
**உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,**
**தரமணி, சென்னை – 113.**

## இரண்டாம் பதிப்பு முன்னுரை

தொல்காப்பியர் ஒரு சொல்லைக் குறிக்கும் பல பொருள்களை உரியியலில் குறிப்பிடுகிறார். எனவே தொல்காப்பியருக்குப் பின்னர்த் தோன்றிய நிகண்டுகளுக்கு அவர் தோற்றுவாயாக அமைந்தார். நிகண்டு களில் திவாகரம், பிங்கலம், சூடாமணி என்பன புகழ் பெற்றவை.

நிகண்டு எனும் வடசொல்லுக்குத் தொகுப்பு என்பது பொருளாகும். முதன்முதலில் நிகண்டு என்னும் சொல்லைச் 'சூடாமணி நிகண்டு' எடுத்து ஆண்டுள்ளது. நிகண்டு எனும் வடசொல்லுக்கு நிகரான தமிழ்ச்சொல் 'உரிச்சொல் பனுவல்' ஆகும்.

நிகண்டுகளில் தெய்வப் பெயர், மக்கட் பெயர், ஓ'ன்னோரன்ன தொகுதிகள் காணப்படினும் 'ஒரு சொல் பல்பொருள்' எனும் தொகுதியே அகராதி அமைப்பை ஒத்திருக்கிறது.

தமிழ் மொழியில் அருஞ்சொற்களுக்குப் பொருள் விளக்கம் தரும் அகராதி தோன்றுவதற்கு முன்னர் நிகண்டுகள் அப்பணியைச் செய்தன. எனவே அகராதிகளுக்கு முன்னர் தோன்றிய நிகண்டுகளைக் 'கருவி நூல்கள்' எனலாம்.

அக்காலத்தில் நிகண்டுகள் மனனம் செய்வதற்கு ஏற்ற வகையில் பெரு வழக்காய் இருந்த செய்யுள் வடிவில் எழுதப்பட்டன. அகவல், விருத்தம், வெண்பா, கட்டளைக் கலித்துறை முதலிய பா வடிவங்களில் அவை இயற்றப்பட்டிருந்தன.

நிகண்டுகளில் ஒரு சொல்லுக்குரிய பொருளை அறிய வேண்டின் அந்நிகண்டு முழுவதையும் முதலில் படிக்க வேண்டும். பின்னர் அச்சொல் எந்தத் தொகுதியில் வருகிறது என்பதைத் தேடிப் பிடிக்கவேண்டும். நிகண்டுகள் செய்யுள் வடிவில் எழுதப்பட்டிருந்தமையால் அசைச் சொற்

களும் அடைமொழிகளும் இடம்பெற்றிருந்தன. எனவே நிகண்டுகளை மனனம் செய்தால்தான் பொருளை அறிய முடியும். அதனால் நிகண்டுகளை நம்முன்னோர் மனனம் செய்தனர்.

ஆங்கிலக் கல்வி இந்தியாவில் பரவிய பின்பு அகராதிகள் எழுதப் பட்டன. நிகண்டுகள் செய்யுள் வடிவில் அமைய, அகராதிகள் உரை நடையில் அமைந்தன. நெடுங்கணக்கு முறையைப் பின்பற்றி 'அகராதிகள் அகரநிரலில் எழுதப்பட்டன.

ஒரு மொழியில், அகர நிரலில் ஒரு சொல்லுக்குரிய பல பொருள்களை அறிய உதவுவது அகராதியாகும். 'அகராதி' என்பதற்கு 'அகரத்தை முதலாக நெடுங்கணக்கு முறையில் அமையும் சொற்பொருள் விளக்கம்' என்று 'மானிப்பாய் அகராதி' விளக்கம் தருகிறது.

மொழியின் சொல் வளத்தை அறிய அகராதி துணை செய்கின்றது. அகராதி என்பதை அகரம் + ஆதி எனப் பிரித்து ஆதி என்பது வடசொல் என்பர். எனவே அகராதி எனும் வடசொல்லுக்கு இணையான தமிழ்ச் சொல் 'அகரமுதலி' என்பதாகும்.

1906இல் பாம்பன் குமரகுருதாச சுவாமிகள் வெளியிட்ட 'சேந்தன் செந்தமிழ்' எனும் நூலில் அகர நிரலில் அமைந்த பகுதியை 'அகரமுதல்' என்று அவர் குறிப்பிடுகிறார். எனினும் 'அகரமுதலி' என்று இன்று வழங்கும் சொல்லைப் பெருவழக்காய் ஆக்கியவர் மொழி ஞாயிறு தேவநேயப்பாவாணர் ஆவார்.

தமிழ் மொழியில் அகராதியை உருவாக்கிய பெருமை 'பெஸ்கி' எனும் வீரமாமுனிவரைச் சாரும். அவர் எழுதிய சதுரகராதி 18ஆம் நூற்றாண்டில் முடிந்திருந்தாலும் 19ஆம் நூற்றாண்டில்தான் மக்களிடம் வந்தது.

சதுரகராதி என்பதற்கு 'நான்கு வகை அகராதி' என்று பொருள்.

| | |
|---|---|
| முதலாவது | பெயரகராதி |
| இரண்டாவது | பொருளகராதி |
| மூன்றாவது | தொகையகராதி |
| நான்காவது | தொடை அகராதி. |

இவற்றுள் முதற்கண் சுட்டிய பெயரகராதியில் 'ஒரு சொல்லுக்குரிய பல பொருள்கள்' தரப்பட்டுள்ளன. இப்பகுதியே பிற்காலத்தில் அகராதி

பெருகுவதற்கு வழிவகுத்தது. மேலும் வீரமாமுனிவர் தமிழ் இலத்தீன் அகராதி, தமிழ் - போர்ச்சுகீசு அகராதி ஆகிய இரு மொழி அகராதிகளை வெளியிட்டார்.

வீரமாமுனிவரின் சதுரகராதிக்குப் பின்பு 1842இல் சந்திரசேகர பண்டிதரின் 'யாழ்ப்பாணத்து அகராதி' எனும் மானிப்பாய் அகராதி வெளி வந்தது. 1899இல் நா. கதிரைவேற்பிள்ளையின் 'தமிழ் பேரகராதி எனும் தமிழ் மொழியகராதி' என்ற நூலும், 1909இல் இராமநாதனின் 20ஆம் நூற்றாண்டுத் 'தமிழ் அகராதி' என்ற நூலும் அடுத்தடுத்து வந்தன.

ஈழத்தைச் சார்ந்த நீதியரசர் கு. கதிரைவேற்பிள்ளை அவர்கள் 'தமிழ்ச் சொல்லகராதி' என்னும் இவ்வரிய அகராதியை உருவாக்கினார். இவரது அகராதி உருவாக்க ஆர்வத்தையும், உழைப்பின் மேன்மையையும் நம்மால் புரிந்துகொள்ள இயலுகிறது. விரிவாக எழுதப்பட்ட இவ்வகராதி வெளி வருவதற்கு முன்னமே அவர் மறைந்தது இரங்குதற்குரியது.

மதுரைத் தமிழ்ச் சங்கத் தலைவர் பாண்டித்துரைத் தேவர் அவர்கள் கதிரைவேற் பிள்ளையின் மகன் பாலசிங்கம் என்பவரிடம் அச்சுக்கூடம் செல்லா அந்த அகராதியைப் பெற்று மதுரைத் தமிழ்ச் சங்கப் புலவர்களின் துணையுடன் 1910இல் முதல் தொகுதியையும், 1912இல் இரண்டாம் தொகுதியையும், 1923இல் மூன்றாம் தொகுதியையும் வெளியிட்டார்.

88 ஆண்டுகளுக்கு முன்னர் மதுரைத் தமிழ்ச்சங்கம் வெளியிட்ட 'தமிழ்ச் சொல்லகராதி'யை மீண்டும் புதுப்பொலிவுடன் உலகத் தமிழா ராய்ச்சி நிறுவனம் வெளியிடுவதில் மகிழ்ச்சி அடைகிறது. 'நல்லார் துணையுடன் நாளும் தமிழ்ப்பணி' என்ற நோக்கில் பணியாற்றி வரும் இந்நிறுவனம், இந்நேரத்தில் இந்நூல் வெளியீட்டுக்குத் துணைபுரிந்த நல்லார் பலரையும் நன்றியுடன் நினைவு கூர்வதிலும் மகிழ்வுறுகிறது.

இவ்வகராதியை மீண்டும் வெளியிட வேண்டும் என்ற எண்ணத்தை எனக்கு உருவாக்கிய பெருமக்கள் இருவர். ஒருவர் மொழி பெயர்ப்புத்துறை யில் முன்னோடியும் அரிய நூல்களைச் சேர்த்து வைத்திருக்கும் கருத்துக் கருவூலமான தஞ்சை வழக்கறிஞர் உயர்திரு. டி.என். ராமச்சந்திரன் ஆவார். மற்றவர் பேராசிரியர் அ. தட்சணாமூர்த்தி ஆவார். இப்பெருமக்கள் இருவருக்கும் எங்கள் நன்றி.

இவ்வகராதியை வெளியிட இசைவு தந்த மதுரைத் தமிழ்ச்சங்கச் செயலாளர் திரு. தனுக்கோடி பாண்டியன் அவர்களுக்கும், மதுரைத் தமிழ்ச் சங்கத் தலைவி சேதுபதி அரசியார் திருமதி இந்திராதேவி அவர்களுக்கும் நன்றி.

நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருகின்ற நிறு வனத் தலைவர் மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி - பண்பாட்டுத்துறை மற்றும் இந்து சமய அறநிலையத்துறை அமைச்சர் முனைவர் மு. தமிழ்க்குடிமகன் அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி - பண்பாட்டுத்துறைச் செயலாளர் திரு. த. இரா. சீனிவாசன் இ. ஆ. ப. அவர்களுக்கும் எங்கள் நன்றி.

அரிய நூல்கள் வெளியிடும் திட்டத்தில் இந்நூலை வெளியிட நிதி நல்கிய தமிழ் வளர்ச்சித்துறை இயக்குநர் முனைவர் ச. நாகராசன் அவர் களுக்கும் எங்கள் நன்றி.

கண்ணையும் கருத்தையும் கவருமாறு நூலினைச் சிறப்புற அச்சிட்டுத் தந்த 'பார்க்கர் கம்ப்யூட்டர்ஸ்' திரு. வே. கருணாநிதி அவர்களுக்கும் எங்கள் நன்றி.

**இயக்குநர்**

**உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்**

## முதலாம் பதிப்பின் முகவுரை

ஆரிய பாஷையோடொத்து அதி பூர்வீகமாயுள்ளதும், மதுரையிலே முதல் இடை கடையென்னும் முச்சங்கத்திலே வளர்க்கப்பட்டதும், "வடவேங்கடந் தென்குமரி" யென முன் எல்லை கூறப்படினும் அவ்வெல்லை கடந்து பற்பல தேசங்களிலுந் தற்காலம் பரந்து பேசப்படுவதுமாகிய இன்ன பெருமை யுடைய இனிய தமிழ்ப் பாஷையிலே ஆசிரியரின்றிக் கற்க விரும்புவோர் நூல்களைப் பிரயாசமின்றிக் கற்றற்குக் கருவியாக ஓரகராதியை யெழுதி அச்சிட்டு வெளிப்படுத்துவது தமிழைக் கற்க விரும்பும் எவருக்கும் பெரும் பயனைக் கொடுக்குமென்று துணிந்து எனது தந்தையாரவர்கள் இவ் வகராதியை யெழுதினார்கள். அவர்கள் தாங்கள் எழுதிய இவ்வகராதியை ஆறு பாகமாகப் பிரித்து ஒவ்வொரு பாகத்தையும் தனித்தனி அச்சிட்டு வெளிப்படுத்த நினைத்து அகரத்தை முதலிலுள்ள சொற்களை முதற் பாகமாகக் கொண்டு அச்சிட்டு வெளிப்படுத்திய அந்த அணித்தான் காலத் திற்றானே நாம் நினைத்திராப்பிரகாரம் தேகவியோகமாயினார்கள்.

சுயபாஷையாகிய தமிழ்ப் பாஷையை அபிவிருத்தியாக்க வேண்டு மென்னும் எண்ணத்தினாற் பெரும்பொருள் செலவிட்டு மதுரையிலே தற் காலம் தமிழ்ச்சங்கத்தைத் தாபித்தவர்களும், எங்கும் பெரும்புகழ் பெற்றவர் களுமாகிய ஸ்ரீமான் பாண்டித்துரைத் தேவரவர்கள், எந்தையாரவர்கள் இறந்துபோகவும் இவ்வகராதியையச்சிட்டு வெளிப்படுத்தவேண்டுமென் னும் அத்தியந்த அபிப்பிராயமுடையவர்களாய், கையெழுத்துப் பிரதியாய் இருக்கும் அவ்வகராதியைத் தமக்கனுப்பிவிட்டால் தாம் அதனை இச் சங்கத்திற்றானே பரிசோதித்து அச்சிட்டு வெளிப்படுத்திதருவோமென்று அன்புகூறிக் கையேற்று கொண்டார்கள். யான் அப்பிரதியை அவர்களுக்கு அனுப்பி வைத்தேன். அவர்களால் அச்சங்கத்திற்றானே அஃதிந்நாள் அச்சிடப்பட்டு வருகின்றது.

இங்ஙனம் அச்சிடப்பட்டு வருகின்ற இவ்வகராதி முன்போல ஆறு பாகமாகப் பிரிக்கப்படாது மூன்று பாகமாகப் பிரிக்கப்பட்டு வெளிப்படுத்தப்

படும். இப்போது வெளிப்படுத்தப்படும் முதற்பாகம் உயிர்வர்க்கம் முழுவதையும் அடக்கியுள்ளது. செயற்கரிய இப்பெருங்கருமத்தைச் செய்துவரும் ஸ்ரீமாந் பாண்டித்துரைத் தேவரவர்களுக்குத் தமிழ் நாடெல்லாம் எக்காலத்தும் நன்றி பாராட்டக் கடமைப்பட்டிருக்குமென்பது சித்தம்.

எனது தந்தையாரவர்கள் இவ்வகராதியை எழுதும்போது அதற்குச் சகாயராயிருந்தவர்கள்: சுன்னாகம்-அ. குமாரசுவாமிப்புலவரும், வல்லிப்பட்டி சி. ஆறுமுகப்பிள்ளையும், நல்லூர். சு. சரவணமுத்துப்பிள்ளையும், வேறு சிலருமே. இதனைப் பரிசோதித்தவர்கள்: மதுரைத் தமிழ்ச் சங்கத்து நூற் பரிசோதகர் மு.ரா. அருணாசலக் கவிராயர், சைவநூற் பரிசோதகர் சே.ரா. சுப்பிரமணியக் கவிராயர், செந்தமிழ்க் கலாசாலைத் தலைமை உபாத்தியாயர் திரு. நாராயணையங்கார், செந்தமிழ்க் கலாசாலை ஸம்ஸ்கிருத உபாத்தியாயர் வி. ஸ்ரீநிவாஸாசாரியர், தமிழ்ச்சங்கம் எழுத்தாளர் கோ. அப்பனையங்கார், செல்லமையங்கார் என்னும் இவர்கள்.

இவர்கட்கு இடையிடையே உதவி புரிந்து வந்தோர் செந்தமிழ்க் கலாசாலை உபாத்தியாயர் நா. சுந்தரேசுவர ஐயர், செந்தமிழ்ப் பத்திராசிரியர் மு. இராகவையங்கார் இவர்களேயாவர்.

**கொழும்பு** **ஜாலசிங்கம்**
**28–2–1910**

# PREFACE

"The chief glory of a Nation," says Dr. Johnson, "arises from its authors" and it is hardly necessary to add that, for a proper study of their works a good dictionary is required.

It is a characteristic peculiarity of the Tamil classics and shastras that poetry has been the recognised and almost the only vehicle of their authors, so much so that not only literature, properly so-called but also works on grammar, medicine, metaphysics, astronomy, astrology and chemistry have been metrical in their composition. To this rule even the dictionary has been no exception.

The first Tamil dictionary compiled on the more modern or what may be called the European method is the Sathur - Akarathi by the celebrated Beschi, an Italian priest, who holds perhaps the foremost place among foreigners as a Tamil scholar, poet and prose writer. Many words not given in the Sathur Akarathi were collected and arranged for a Tamil - English dictionary by the late Rev. Mr. Knight of the Church Mission, Jaffna, with the assistance of the Tamil scholars of his day; and the manuscript left by him formed the basis of the Tamil dictionary compiled by Pundit Sandira Sekara printed at the Manepay Press in 1842, under the auspices of the American Jaffna Missionaries. Two other dictionaries edited on similar lines appeared at a later date in Madras, and proved to be very useful and necessary additions to the number.

Many years ago I attempted, in the course of my reading, a collection of such words as are not found or defined fully in the dictionaries extant, with a view to the compilation of a new and comprehensive dictionary of the Tamil language; but the duties in which I had been successively engaged, as Instructor, Journalist, Advocate and Magistrate, interfered with the prosecution of my

design. Since my retirement five years ago from Government service, I have devoted what intervals of health and leisure I have had, to the completion of a work undertaken many years ago as a labour of love, for the benefit as well of my countrymen who must ever regard a fair knowledge of Tamil as an intellectual necessity, as of foreign students who will find it to be "one of the most copious and polished languages spoken by man."

I have included in the present work the words derived and gradually adopted from Sanskrit to meet modern requirements and now appropriated by various writers as part and parcel of the Tamil language. Although I had to correct a few words found in the other dictionaries, I have not rejected the foreign words included in that of Dr. Winslow. My chief aim has, however, been to rescue from obscurity and present to the public as large a collection as possible of words not found in any previous dictionary, occuring in shastras, whether existing in print or in manuscript.

To those wishing to study Hindu Philosophy and Metaphysics, including Vedantism and Siva-Sithantham, this dictionary will, it is hoped, be a great help. Medical men will be glad to find in this compilation, botanical and medical words collected from the medical books published by the celebrated Pandit Suppiramania. Technical words relating to the science of logic, rhetoric, astrology, astronomy, chemistry and mathematics have received special attention. A noticeable feature of the work is the citations from standard authors and approved sources which are intended to illustrate the meanings and uses of words.

Words of Sanskrit origin are traced to their source and the originals from which they are derived are also given in Sanskrit characters.

To the sum total of the words given in previous dictionaries the present work claims the addition of thousands.

January 1st, 1904. **C.W. Katrivel Pillai**

# நூலாசிரியர் முகவுரை

அகராதியென்பது அகர எழுத்து முதலாக வருணமாலைக் கிரமப்படி சொற்களை ஒன்றன்பின் ஒன்றாகச் சேர்த்து வைக்கப்பட்ட ஒரு கோவை. சொற்கள் அவ்வாறு கோவை செய்யப்பட்டுப் பொருள் கூறுஞ்சொற்களோடு வருமுறையே அகராதியெனக் காலாந்தரத்தில் வழங்கலாயிற்று. இவ்வகராதி யிற் பெயர், வினை, இடை, உரி என நான்கு வகைப்பட்ட சொற்களுக்கும் பொருள் கூறுகின்றாம்; ஆதலால் இதனைச் சொல்லகராதியென்றாம்.

உரை நடையாய் வருணமாலைக் கிரமந் தவறாது ஒருசொற்கு ஒன்றாக அல்லது பலவாகப் பொருள் எழுதப்பட்டு முன்னாளில் வழங்கியது, ரோமாபுரியில் இருந்துவந்த கத்தோலிக்கக் குருவாகிய வீரமா முனிவராற் செய்யப்பட்ட பெயரகராதியொன்றே. அதனிற் காணப்படாதனவாகிய சொற் கள் தமிழ் நூல்களில் அதிகமாக இருத்தலைக் கண்டு சேர்ச்சுமிசியோனைச் சேர்ந்த நயிற் பாதிரியார் தமிழ் வித்துவசன சங்கத்திலே தமிழும் இங்கிலீஷுமாக எழுதியும் நிறைவேற்றாது வைத்திருந்த அகராதியைத் துணையாக எடுத்து, அ. சந்திரசேகர பண்டிதரைக் கொண்டு எழுதுவித்து, அமரிக்கன் மிசியோன் குருமார் மானிப்பாயில், கஅ௪உ-ஆம் வருஷம் அச்சிடுவித்த அகராதியும், அதன்வழியே சென்னைப் பட்டணத்திற் பிரசுரிக் கப்பட்ட இரண்டு அகராதிகளுந் தமிழ்க்கடலில் நீந்துவார்க்குப் பெருந் துணையாயின. இவைகளிலுங் காணப்படாத சொற்கள் இன்னுந் தமிழிற் பல்லாயிரமுள என்பது வேதாந்தம், சித்தாந்தம், புராணம், ஸ்மிருதி, இதிகாசம், வைத்தியம், சோதிடம், கணிதம் முதலிய சாத்திரங்களை வாசிப்பவர்களுக்கு நன்கு விளங்கும்.

நாம் முன் நெடுங்காலந்தொட்டு வாசித்துவந்த நூல்களில் உள்ளன வாய்ச் சதுரகராதி, மானிப்பாயகராதி, சென்னையகராதிகள், உவின்சிலோ அகராதி, வைத்திய அகராதி என்னுமிவற்றில் இல்லாதனவாகிய சொற் களைப் புதிதாக ஓரகராதி செய்யவேண்டுமென்று புத்திபண்ணிக் காலாந் தரத்திற் குறித்து வைத்திருந்தோம்; ஆயினும் முன்னர்த் தமிழ் ஆங்கிலேயம் என்னும் இரு பாஷைகளிலும் நூலுரையாசிரியராயும் பின்னர் அத்துவக் காத்தாயும் நீதிபதியாயும் ஏற்பட்டுச் செய்துவந்த கடமைகள் எமது காலத்

தைக் கொள்ளை கொண்டமையால் எமது அபிப்பிராயத்தை நிறைவேற்றுதற் கேற்ற சமயம் வாயாமற் போயிற்று. நீதிபதித் தொழிலினின்று ஓய்ந்திருக்கும் பின்னிட்ட ஐந்து வருட காலங்களில் நோயனார் கைக்கொண்ட காலம் ஒழித்து எஞ்சிய காலத்தில் இவ்வகராதி எழுதுவதே நமது தொழிலாயிற்று.

மகாசமுத்திரம் போன்று விரிந்து நாநா சாத்திரஞ்ஞர் எழுதிய புத்தகங் கள் பரவியிருக்குஞ் சம்ஸ்கிருத பாஷையிலிருந்து தமிழ்ப் பாஷையிற் கொண்டு வரப்பட்டனவும் படுவனவுமாகிய சொற்களுக்கெல்லை காண்ப தரிது. இன்னுந் தமிழெழுதுவோர், சம்ஸ்கிருதம் வேற்றுப் பாஷையாகவும் தமது சொந்தமாம் என்பார் போலச் சிறிதும் பின்னில்லாமல் சம்ஸ்கிருத பதங்களையெடுத்துத் தமிழிற் புதிது புதிதாய்ப் பிரயோகித்துக்கொண்டே வருவாராயினர். சம்ஸ்கிருதத்திலிருந்து பல நூல்களுந் தொகுத்தும் விரித்தும் மொழிபெயர்த்தும் எழுதப்பட்டிருத்தலாலும் இன்னும் எழுதப்படுவதாலும் அப்பாஷை தமிழோடு நெருங்கச் சம்பந்தப்பட்டிருத்தலினால் அப்பாஷை யிலிருக்கும் பதங்களனைத்துந் தமிழகராதியிலே தற்பவமாயுந் தற்சமமாயும் எழுதி முடியும்போதே தமிழகராதியும் ஒருவாறு சமாப்தியானதெனலாம்.

நாம் முக்கியமாகத் தேடியெடுத்திவ் வகராதியிற் சேர்த்தவைகள் தமிழில் முன் எழுதப்பட்டிருக்கும் நூல்களிலுள்ள அரும்பதங்களே.

நாம் இவ்வகராதியிற் கொண்ட விதானங்கள் வருமாறு :–

1. நெடுங்கணக்கின் கிரமப்படி உயிர்மெய்க்கு முன்னே மெய்வருக்கம் எழுதப்பட்டிருக்கின்றது. ஒரு சொல்லுக்குப் பலபொருள் எழுதப் பட்டவைகளையும் மாணாக்கருடைய சௌகரியத்திற்காக முன் அகராதிகளிற்போல நெடுங்கணக்குக் கிரமமாயே எழுதினோம்.

2. ஆரியத்திலிருந்து பிறந்தாவது ஆரியத்தோடொத்தாவது தமிழில் வழங்கும் பதங்களை இரு மருங்கினும் பகர அடைப்பிட்டு ஆரிய ரூபத்தினும் எழுதிக் காட்டினோம்.

3. சொற்களின் பொருள் வரம்புபட விளங்குமாறு, காலம் இடந்தந்த அளவு முன்னைய அகராதிச் சொற்கள் பலவற்றிற்கும் நாம் புதியன வாகச் சேர்த்துக்கொண்ட சொற்களெவற்றிற்கும் உதாரணங்களுங் காணப்பட்ட இடங்களுங் குறிக்கப்பட்டன.

4. முன் அகராதிகளிலே னகர வர்க்கத்திலே கண்ட வடசொற்கள் இப்போது நகர வர்க்கத்திலும் எழுதப்பட்டிருக்கின்றன.

5. பெரும்பாலுஞ் சொற்களுக்குச் சொன்மூல முதலியன பொருளுரை மொழிகளின் பின் எழுதியிருக்கின்றாம். அங்ஙனமாகச் சொன் மூல முதலியன பல வேறுபட வருங்கால் அவ்வெழுத்து இன்ன பொருளுக் கியைந்ததென்பது அவ்வப் பொருண் மொழியின் இலக் கத்தாற் காட்டப்பட்டிருக்கின்றது.

6. இத் துவிவிந்துவை விசர்க்கமென்று கொள்ளாதொழிக.

7. ஒருமைச் சொற்குத் தக்க விகுதி சேர்த்துப் பன்மைச் சொல் வரு விக்கு முறை மாணாக்கர் அறிவாராதலால் அவற்றுள் ஒன்றையே எழுதியும் உபயோகமாகுமெனக் கண்ட இடங்களில் அவ்விரண் டையும் எழுதியுமிருக்கின்றாம்.

8. எட்டு வேற்றுமைகளிலும் வெவ்வேறு உருபு பெற்றும், ஒரு வேற்றுமையிற்றானே பல உருபு பெற்றும் வரும் பெயரின் விகார ரூபங்களையும் பகுதியினின்றும் பல வேறுபடப் பிறக்கும் வினை யின் விகார ரூபங்களையுந் தனித்தனியெழுதிப் பொருள் விளக்கிக் காட்டுதல் பயன்படும் ஆயினும் விரிவஞ்சி அங்ஙனங் காட்டாது விட்டோம். பயன்படும் என்பது கருதிச் சில இடங்களில் எச்ச வினைகளுக்கும் பொருள்கூறி உதாரணங்கள் காட்டப்பட்டன.

9. முதனிலையினும் இறுதி நிலையினும் வாரா என்ற எழுத்துக்கள் அந்நிலையில் வருதலும் இடைநிலையில் வேற்று நிலை மயக்க மாய் வாரா என விலக்கப்பட்ட எழுத்துக்கள் மயங்கி வருதலும் வடநூலார் வியாகரணத்தில் விதித்தபடி தமிழ் நூல்களிற் சிறு பான்மை வரக் கண்டமை பற்றியென்க.

1904 - ஜனவரி - 1. இங்ஙனம்,

**கு. கதிரைவேற்பிள்ளை**

திருச்சிற்றம்பலம்.

# இவ்வகராதியில் உதாரணமாகக் குறிக்கப்பட்ட நூல்கள்.

| நூல்களின் பெயரும், குறியீடும். | நூல்களின் பெயரும், குறியீடும். |
|---|---|

அகத்தியர் சிந்தூரம் - சிந்தூரம்.
அகத்தியர் பரிபாஷைத் திரட்டு - பரிபா.
,, பரிபூரணம்- பூரணம், அகத்தி, பூ.
,, வைத்திய காவியம் - காவியம்.
அகத்தியர் வைத்திய வல்லாதி ௬00 - அகத்தியர் வல்.
அகப்பொருள் விளக்கம் - அகப்பொ.
அகபஞ்ச சஷ்டி - அகபஞ்ச.
அகோரசிவாசாரியர் பத்ததி - அகோ.
அசதிக்கோவை - அசதி.
அசுவ சாத்திரம் - அசுவ.
அநுமான விளக்கம் - அநுமா.
அமுதகலைக்கியாநம் - அமுத.
அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ்- அமுதா. தமிழ்.
அரிச்சந்திரபுராணம் - அரிச்ச.
அரிய விதி - அ. வி.
அருணைசலபுராணம் - அருணைசலபு.
அவிரோதவுந்தியார் - அவிரோ.
அழகர் கலம்பகம் - அழகர் கல.
அறப்பளீச்சுரர் சதகம் - அறப்பளீ.
ஆசாரக்கோவை - ஆசாரக்.
ஆசிரிய நிகண்டு - ஆ-நி.
ஆசௌச தீபிகை - ஆசௌ.
ஆத்திசூடி - ஆத்திசூடி.
ஆத்திசூடி புராணம் - ஆத். பு.
ஆநந்தலகரி - ஆ-ரி.
இடைக்காட்டுச் சித்தர்பாடல் - இடைக்காட்.
இதோபதேசம் - இதோப.
இரகுநாத சேதுபதி ஒருதுறைக்கோவை - ஒருதுறை.
இரகுவம்மிசம் - இரகு.
இராசவைத்திய மகுடம் - இராசவைத்; இராசவை.
இராமாயணதாற்பரிய சங்கிரகம்-இராமா. தாற்.
இராமாயண பதம் - இரா. பத.
இராமாயணம் - இராமா.
இருபாவிருபது - இருபா.

இரேகைச் சாத்திரம் - இரேகை.
இலக்கணக்கொத்து - இலக்.
இலக்கண சந்திரிகை - இல. சந்.
இலக்கண சிந்தாமணி. [1880.] - இல. சிந்.
இலக்கணதீபிகை - இல. தீபி.
இலக்கண விளக்கம்- இலக்கணவி; இலக்-விள.
இலக்கணவினாவிடை - இலக்கணவி; இலக்கணவினா.
இலிங்காபட்டியம் - இலிங்.
இறையனாரகப்பொருள் - இறைய.
உடலறிவிளக்கம் - உடலறி.
உபதேசகாண்டம் - உபதேச; உபதேசகா
உபதேசவுண்மைக் கட்டளை - உபதே. கட்.
உபதேசவுண்மை - உபதேசவு.
உபநிடதம் - உபநி.
உபநிஷதார்த்தப் பிரகாசம் - உபநி. பிர.
உரிச்சொல் நிகண்டு - உரி. நிகண்.
உள்ளமுடையான் வீமேசுர - வீமே.
உள்ளமுடையான் சூடாமணி - உள்ளமுடை.
ஏகாதசவர்ணம் - ஏகாதச.
ஏகாதசி புராணம் - ஏகாதசி.
ஐங்குறு நூறு - ஐங்குறு.
ஐந்திணையம்பது - ஐந்திணை.
ஒழிவிலொடுக்கம் - ஒழிவி.
ஔவை குறள் - ஔவை.
கட்டளைக்கொத்து - கட். கொ.
கந்தசட்டி புராணம் - கந்தசட்.
கந்தபுராணம் - கந்தபு.
கந்தபுராண நவநீதம் - கந். நவ.
கந்தர்கலி வெண்பா - கந்தர்கலி.
கந்தரந்தாதி - கந்தரந்.
கந்தரநுபூதி - கந்தரநு.
கந்தரலங்காரம் - கந்தரல.
கம்பரந்தாதி - கம்பரந்.
கல்லாடம் - கல்லா; கல்லாட.
கல்வளையந்தாதி - கல்வளை.
கலித்தொகை - கலித்தொகை. கலி.

| நூல்களின் பெயரும், குறியீடும். | நூல்களின் பெயரும், குறியீடும். |
|---|---|

கலைசைச்சிலேடை வெண்பா - கலைசை.
காசிக்கலம்பகம் - காசிக்கல.
காசிகாண்டம் - காசிகா.
காஞ்சிப் புராணம் - காஞ்சிபு, காஞ்சிப்.
குணவாகடத்திரட்டு - குணவா.
குமாரசுவாமீயம் - குமாரசாமி.
குவலயாநந்தம் - குவ; குவல.
குறிஞ்சிப்பாட்டு - கு-பா.
கூர்மபுராணம் - கூர்மபு.
கெவுளிசாத்திரம் - கெவுளி.
கைவல்லிய நவநீதம் - கைவல்.
கொலைமறுத்தல் - கொலைம.
கொன்றைவேந்தன் - கொ. வே.
கோயிற்புராணம் - கோயிற்பு.
சகத்திரநாமம் - சகத்திர.
சசிவர்ணபோதம் - சசிவர்.
சட்டமுநி நிகண்டு - சட்ட.
சத்தப்பிரகரணம் - சத்தப்.
சதாசிவரூபம் - சதாசிவ.
சதுர்வேததாற்பரிய சங்கிரகம் - சதுர்.
சந்தானதீபிகை - சந்தா.
சப்தஸ்தோமம் - சப்தஸ், சப்த.
சரசோதிமாலை - சரசோ.
சரநூல் - ச. நூ.
சாதககணிதாமிர்தம் - கணிதாமிர்தம்.
சாதக சிந்தாமணி - சாதகசிந்.
சாநந்தகணேசர் புராணம் - சாந.
சால நிகண்டு - சாலநிக.
சித்தாந்தக்கட்டளை - சித்தா. கட்.
சித்தாந்த சாராவலி - சி-லி. சித்தா. சாரா.
சித்தாந்தப்பிரகாசிகை - சி. பி. கை; சி. கை.
சிதம்பர சபாநாத புராணம் - சி. நாத. பு.
சிதம்பர சபாநாயகர் துதிமாலை - சிதம்பர.
சிதம்பர புராணம் - சித. பு.
சிந்தாமணி நிகண்டு - சி. நி.
சிராத்தவிதி - சி. வி.
சிலப்பதிகாரம் - சிலப்; சில.
சிவகர்ணமிர்தம் - சிவகர்ண.
சிவஞானசித்தியார் சுபக்ஷம் - சி. சி; சி. சி. சு.
சிவஞானசித்தியார் ,, இராமலிங்கதம்பிரான் உரை - சி. சி. ரா. இராமலி.
,, சிவஞான முநிவர் உரை - சி. சி. சிவஞா.
,, சிவாக்கிரயோகியர் உரை - சி. சி. சிவாக். சிவா.
,, சுப்பிரமணிய தேசிகர் உரை - சி. சி.சுப்பிர.
,, ஞானப்பிரகாசர் உரை - சி. சி. ஞாநப்.
,, திருமறைஞானதேசிகர் உரை - சி. சி.மறை.
,, நிரம்பவழகியர் உரை - சி. சி. நிரம்ப.
சிவஞானசித்தியார் பரபக்ஷம் - சி. சி. பர, பரபக்ஷ.
சிவஞான பாஷ்யம் - சிவஞாந. பா.
சிவஞானபோதம் - சிவஞாநபோ.
சிவஞானபோதம் சிற்றுரை - சிவஞாநபோ. சிவஞா.
சிவஞானபோதம், பாண்டிப்பெருமாள் விருத்தியுரை - சிவஞாநபோ. பாண்.
சிவதத்துவவிவேகம் - சிவதத்து.
சிவதருமோத்தரம் - சிவதரு.
சிவப்பிரகாசக்கட்டளை - சிவப். கட்.
சிவப்பிரகாசம், சிதம்பரநாதருரை - சிவப்பிர. சிதம்.
சிவப்பிரகாசம், சிவப்பிரகாசர் வியாக்கியாநம் - சிவப்பி. வியாக்.
சிவபராக்கிரமம் - சிவபரா.
சிவபோகசாரம் - சிவபோக.
சிவரகசியம் - சிவரக.
சிவராத்திரி புராணம் - சிவராத்.
சிவாநந்தலகரி - சிவா-ரி.
சிவாலய தரிசன விதி - சிவால - தி.
சிறீயூகிமுநிவர் சிகிச்சாசாரசங்கிரகம் - சிகிச்சா.
சிறுபாணாற்றுப்படை - சிறுபா.
சீகாழிப்புராணம் - சீகாழிப்பு.
சீவகசிந்தாமணி - சிந்தா. சிந்.
சீவரட்சாமிர்தம் - சீவரட்.
சீவாசீவ குணவிளக்கம். [1864 - ம் ஆண்டிற் பதிப்பு] - சீவாசீ.
சீவோற்பவ சிந்தாமணி - சீவோற்.
சூடாமணி நிகண்டு - சூ. நிகண்; சூடா. நிக. சூ. நிக.
சூதசங்கிதை - சூத.
சூளாமணி - சூளா.
செகராசசேகரம் - செகராச.
செந்தமிழ் - செ. த.
செவ்வந்திப்புராணம் - செவ்வந்.
சேக்கிழார்புராணம் - சேக்கிழார்பு.
சேதுபுராணம் - சேதுபு, சேது.
சேந்தன் திவாகரம் - திவாகர.
சைவசமயநெறி - சைவச.
சைவசமய விளக்கம் - சைவ. விள.
சைவப்பிரகாசநம் - சைவப்.
சைவபூஷணசந்திரிகை - சைவபூ.
சைவவினவிடை - சைவவின.

| நூல்களின் பெயரும், குறியீடும். | நூல்களின் பெயரும், குறியீடும். |
|---|---|

நீதிமஞ்சரி - நீதிமஞ்.
நீதிவெண்பா - நீ. வெ.
நீர்க்குறி நெய்க்குறிச்சாத்திரம் - நீர்க்குறி.
நெடுநெல்வாடை - நெ. வா.
நெல்லைச்சிலேடை வெண்பா - நெல்லை.
நேமிநாதம் - நேமி.
நைடதம் - நைட; நைடத.
பகவற்கீதை - பகவற்.
பசுபதிபாசவிளக்கம் - ப. பா.
பஞ்சகாவிய நிகண்டு - பஞ். நிக.
பஞ்சதசப்பிரகரணம் - பஞ். தச.
பஞ்சதந்திரம் - பஞ்சதந்.
பஞ்சபட்சிசாத்திரம் - பட்சி.
பட்டினத்துப்பிள்ளையார் பாடல்-பட்டினத்தடி.
பட்டினப்பாலை - ப. லை.
பத்துப்பாட்டு - பத்துப்பா.
பதார்த்தகுண அரும்பொருள் வைத்திய அகராதி - பதார்த்த. வை.
பதார்த்தகுண சிந்தாமணி - பதார்த்த.
பதார்த்தகுண சிந்தாமணி. சுப்பிரமணிய பண்டிதர் உரை - பதார்த்த. சுப்பிர.
பதிற்றுப்பத்து - பதிற்றுப்.
பரநிதம் - ப. நி.
பராசரஸ்மிருதி [விரோதி வருஷம் பதிப்பு.] - பராச; பராசர.
பராசரஸ்மிருதி [காலாந்தரப்பத்திரிகையாகப்பதிக்கப்பட்டது.] - ப. மி.
பரிபாஷைத்திரட்டு - பாஷை.
பழமலையந்தாதி - பழமலை.
பழமொழி - ப. மொ.
பருளை விநாயகர் பள்ளு - பருளை.
பாகவதம் - பாகவத.
பாடீகணிதம் - பா. க.
பாடுதுறை - பாடு.
பார்க்கவபுராணம் - பார்க்க.
பாரததாற்பரிய சங்கிரகம் - பாரத. தாற்.
பாரதம் வில்லிபுத்தூராழ்வார் - பாரத.
பாரதவெண்பா - பாரதவெ.
பாலவாகடத்திரட்டு - பாலவா.
பிங்கலந்தை - பிங்க; பிங்கல.
பிரபஞ்சோற்பத்தி - பிரபஞ்ச.
பிரபுலிங்கலீலை - பிரபுலி; பிரபுலிங்க.
பிரபோதசந்திரோதயம் - பிர. சந்.
பிரமகீதை - பிர. கீ.
பிரமோத்தரகாண்டம் - பிர. காண்.
பிரமோபநிடதம் - பிரமோ.
பிரயோக விவேகம் - பி. வி.
பிராசாதகலைத்தியாநம் - பிரா. கலை.
பிருகச்சாதகம் - பிருகச்சாத.
புலியூரந்தாதி - புலியூர; புலியூரந்.
புறநானூறு - புறநா.
புறப்பொருள்வெண்பாமாலை - புறப். வெ.
பூவாளூர்ப்புராணம் - பூவா.
பெரியபுராணம் - பெரியபு.
பெரும்பாணாற்றுப்படை - பெரும்பா.
பொருநராற்றுப்படை - பொருந.
போகர் சத்தகாண்டம் - போ. சத்த.
போகர் நிகண்டு - போ. நிகண்.
பௌஷ்கரம் - பௌட.
மகாபாகவதம் - ம. பா. ம்.
மகாராசாதுறவு - துறவு.
மச்சபுராணம் - மச்சபு.
மணிமேகலை - மணிமே.
மதுரைக்காஞ்சி - மதுரைக்.
மதுரைப்பதிற்றுப்பத்தந்தாதி - மதுரை. பதிற்றுப்.
மநுதருமசாத்திரம் - மநு.
மயூரகிரிப்புராணம் - மயூர.
மரணகண்டி - மரண.
மருதூரந்தாதி - ம. தி. மருதூ.
மலைபடுகடாம் - மலைபடு.
மலையகராதி - மலையக.
மறைசையந்தாதி - மறை. தி; மறைசை.
மனையடிச்சாத்திரம் - மனையடி.
மிருகேந்திர சவ்வியாக்கியானம் - மிருகேந்திர.
மிருதிசந்திரிகை. [பார்த்திவ வருஷப்பதிப்பு - மிரு - மிருச; மிரு - சந்; மிருதி.
மீனாட்சியம்மைபிள்ளைத்தமிழ் - மீனா.
முல்லைப்பாட்டு - மு. பா.
மூலிகை வைத்திய விரிவகராதி - கந். வைத்.
மூன்றாம் பாலபாடம் - சிவப்பிரகாச பண்டித.
யாப்பருங்கலக்காரிகை - யா. காரிகை.
யாப்பருங்கலம் - யாப். ம்.
யோகஞானானுபவதீபிகை - யோகஞானா.
ரசாயன நூல் - ரசா.
ரிபுகீதை - ரிபு.
வருஷாதிநூல் - வருஷாதி.
வள்ளலார் சாத்திரம் - வள்ள.
வள்ளுவமாலை - வ. மா.
வாக்குண்டாம் - வாக்.
வாசஸ்பத்தியம் - வாச.
வாசுதேவமநநம் - வாசுதே.

நூல்களின் பெயரும், குறியீடும்.

சொரூபசாரம் - சொ. சா.
சொரூபாநந்த உபநிடதம் - சொரூபா.
சோதிசாத்திரம் - சோதி.
சௌந்தரியலகரி - சௌந்.
ஞானக்கட்டளை - ஞானக்.
ஞானவாசிட்டம் - ஞானவா.
ஞானவெட்டியான் - ஞானவெ.
ஞானாமிர்தம் - ஞானா.
தசகாரிய மகாவாக்கியம் - தச. மகா.
தஞ்சைவாணன்கோவை - வாண.
தக்ஷிணகைலாயபுராணம் - தக்ஷிண.
தண்டலையார் சதகம் - தண்ட.
தண்டியலங்காரம் - தண்டி.
தணிகைப்புராணம் - தணிகைப்.
தத்துவ நிசாநுபோகசாரம்- த. நி. போ; த.போ.
தத்துவப்பிரகாசம் - த. பி. ம்.
தத்துவ விளக்கம் - த. வி. ம்.
தர்க்ககௌமுதி - தர்க்ககௌ.
தர்க்கசங்கிரகம். இராமகிருஷ்ணர், சிவஞான முனிவர் - தர்க்கசங். தர்க்கச. இராம. சிவ ஞான.
தர்க்கபரிபாஷை. கதிரைவேற்பி - தர்க்கபா.
தர்க்காமிர்தம் - தர்க்கா, தர்க்காமிர்.
தன்வந்தரி நிகண்டு - தன்வந்.
தனிப்பாடற்றிரட்டு - தனிப்பா.
தனியூர்ப்புராணம் - தனியூ.
தாயுமானசுவாமிபாடல் - தாயு.
திராவிடப்பிரகாசிகை - திராவிட.
திரிகடுகம் - திரிக.
திருக்கடைக்காப்பு - கடை.
திருக்குதிருசிய விவேகம் - திருக்கு.
திருக்குற்றாலபுராணம் - தி. கு.
திருக்கோவையார் - திருக்கோ.
திருச்செந்தினிரோட்டகயமகவந்தாதி - செந்தில்.
திருச்செந்தூர்ப்புராணம் - செந்தூர்.
திருத்தொண்டர் புராணசாரம் - திருத்தொண்டர்.
திருத்தொண்டர் திருவந்தாதி - திருத். வந்.
திருநாகைக்காரோகண புராணம்- காரோ; திரு நாகைக்.
திருநூற்றந்தாதி - திருநூற்.
திருநெல்வேலிப்புராணம் - திருநெல்.
திருப்பதிக்கோவை - திருப்ப.
திருப்புகழ் - திருப்பு.
திருப்போரூர்ச்சந்நிதிமுறை - திருப்போ.
திருமந்திரம் - திருமந்.

நூல்களின் பெயரும், குறியீடும்.

திருமுருகாற்றுப்படை - திருமு; திருமுரு.
திருமுல்லைவாயிலந்தாதி - திருமுல்.
திருமுறைகண்டபுராணம் - திருமுறைகண்ட.
திருவரங்கயமகவந்தாதி - திருவ.
திருவள்ளுவர் பரிமேலழகர் - வள். பரி.
ஷை சரவணப்பெருமாளையர் - வள். சர.
திருவாசகம் - திருவாச.
திருவாதவூரர் புராணம் - திருவாத.
திருவாலவாய்க்கட்டளை - திருவால.
திருவாலவாய்த்திருவிளையாடற்புராணம் - திரு வால. திருவிளை.
திருவாவடுதுறைக்கோவை - திருவாவடு.
திருவானைக்காப்புராணம் - திருவானை.
திருவிளையாடற்புராணம் - திருவிளை.
தேவாரம். (அடங்கன்முறை.) திருஞானசம்பந்த மூர்த்தி, சுந்தரமூர்த்தி, திருநாவுக்கரசு - சம், சம்ப. சுந், சுந்த. நாவு, திருநா.
தேவிகாலோத்தரம் - தேவி.
தைலவருக்கம் - தைல.
தொல்காப்பியம் - தொல்.
தொல்காப்பியம் எழுத்ததிகாரம் இளம்பூரணர் உரை - எழுத். இளம்பூ.
,, சொல். சேனாவரையம் - தொல். சேனா.
,, நச்சினார்க்கினியர் - நச், நச்சி.
,, பொருள் - தொல். பொரு.
தொன்னூல் விளக்கம் - தொன்னூல்.
தோத்திரமாலை - தோத்தி.
நல்லாபிள்ளை பாரதம் - நல்லா. பார; நல். பா ரத; நல். பார.
நல்வழி - ந. வ.
நளவெண்பா - ந. வெ.
நன்னூல் - நன்.
நன்னூல் காண்டிகை ஆறுமுகநாவலர் உரை - நன். ஆறு.
நன்னூல் ,, இராமாநுசர் - நன். இராமா. இரா.
நன்னூல் ,, கோவிந்தபிள்ளை - நன். கோ.
நன்னூல் விருத்தியுரை - நன். விரு.
நன்னெறி - ந. றி.
நாநாசீவவாதக்கட்டளை - நாநா. கட்.
நாலடியார் - நாலடி.
நாலாயிரப்பிரபந்தம் - நாலா. நாலாயி.
நான்மணிக்கடிகை - நா. க.
நிட்டாநுபூதி - நிட்டா.
நித்தியகரும விதி - நித்திய.
நீதிநெறிவிளக்கம் - நீதிநெறி.

| நூல்களின் பெயரும், குறியீடும். | நூல்களின் பெயரும், குறியீடும். |
|---|---|
| விசாரசந்திரோதயம் - விசா. சந். | வேதாந்தசூடாமணி - வே. சூ; வேதா. சூ. |
| விசார சாகரம் - விசார; விசாரசா. | வேதாந்ததத்துவக்கட்டளை - வேதா. தத். |
| விதானமாலை - விதான. | வேதாரணிய புராணம் - வேதாரணியபு. |
| விருத்தாசலபுராணம் - விருத்தாசலபு. | வைத்திய நிகண்டு - வைத். நி. |
| விருத்திப்பிரவாகரம் - விருத்தி. | வைத்திய ரத்நசுருக்கம் - வை. ர. |
| விவேகசிந்தாமணி - விவே. | வைராக்கியதீபம் - வை. தீ. |
| விவேகசிந்தாமணி. [கன்னடபாஷையிலிருந்து மொழிபெயர்க்கப்பட்டது.] - வி. ணி. | |
| விநோதரசமஞ்சரி - விநோத. | |
| வீசகணிதம் - வீச. | |
| வீரசோழியம் - வீரசோ. | |
| வீரமாமுனிவர் தொகையகராதி - வீர. தொகை. | |
| வெண்பாப்பாட்டியல் - வெண்பாப். | |
| வெற்றிவேற்கை - வெற். | |
| வேங்கட தலபுராணம் - வேங். | |

## குறிப்பு விளக்கம்.

அவதாரிகை - அ-கை.
இந்துஸ்தானிச்சொல் - இந்துஸ்.
உலகவழக்கத்திற்கண்ட சொல் - வழக்.
தெலுங்குச்சொல் - தெலுங்கு; தெலுகு.
மூலம் - மூ.
வார்த்திகம் - வார்த்தி.

ஒரு முக்கிய அறிவிப்பு:— இவ்வகராதியில் உதாரணங்காட்டப்பெறாத பதங்களைச் சப்தகற்பத்ருமம், சப்தஸ்தோமமகாநிதி, நாமலிங்காநுசாஸனம், வாசஸ்பத்தியம் முதலிய வடமொழி நூல்களினும், சென்னை நிரஞ்சனிவிலாச அச்சியந்திரசாலையிற் பதிப்பித்த பேரகராதியினும், ஏனைய தமிழ் நூல்களினுங்காண்க.



உ

கடவுள்துணை.

# தமிழ்ச்சொல்லகராதி.

திருவா ருலகஞ் சிருட்டித் தளிக்கும்
அருவார் பொருட்டென் னகம்.





**அ**—[இது தமிழ்ப்பாஷையின் வர்ணமாலையில் வரும் முதல் எழுத்து. உயிர்முயற்சியாற் பிறக்கும் எழுத்துக்களுள், அங்காந்தவளவிலே ஒலிக்கும் ஒரு குற்றுயிர். அங்காந்தவளவிற் பிறப்பதாகிய இந்த உயிரெழுத்து, அங்காப்போடண்பல் முதலிய கருவிகளின் றொழிலைக்கொண்டு பிறக்கும் மற்றையெழுத்துக்களோடு செறிந்தும் இருத்தல் பற்றிச் சிவஞானசித்தியார் ௨ : ௨-ல் "அக்கரங்கடோறுஞ் சென்றிடுமகரம்போல நின்றனன் சிவனுஞ்சேர்ந்தே" என அச்செறிவு, ஆன்மாக்கடோறுஞ் சிவன்சேர்ந்திருத்தற் குபமானமாக்கப்பட்டது.]

1. அஃறிணைப் பன்மைப் படர்க்கையில் வரும் ஒருபெயர்விகுதி; அது : தன்முன் அன் சாரியை பெற்றும் பெறுதும் வரும். (உ-ம்.) பொருளன, பொருள. (நன். பெய. ௨௩.) அன்றியும், "இன்" சாரியை பெற்றும் வரும். (உ-ம்.) "உன்னின" (சி. சி. ௪ : ௨௫. சிவஞானமுனிவர் உரைப்படி.)

2. அஃறிணைப் பன்மைப் படர்க்கையில்வரும் ஒருவினைமுற்று விகுதி; அதுவுந் தன்முன் அன் சாரியை பெற்றும் பெறுதும் வரும். (உ-ம்.) நடந்தன, நடந்த; கரியன, கரிய. (நன். வினை. ௧௦.)

3. ஆறும் வேற்றுமையில் அஃறிணைப் பன்மைப் பொருளில்வரும் ஓர் உருபு. (உ-ம்) எனகைகள். (நன். பெய. ௪௩-ம் உரையும்.) சிறுபான்மை "என கருத்து" என்பதிற்போல அஃறிணை ஒருமைப்பொருளிலும் வரும். (உ-ம்.) "எனகருத்திடை முற்பகலெய்தினர்" (கந்தபு. மேருப். ௫௬.)

4. ஒரு சாரியை யிடைச்சொல்; இது: "பொருநக்கடுமை" "கன்னத் தட்டு" "ஈமக்குடம்" "கம்மக்குடம்" "தமிழப்பிள்ளை" என்பவற்றிற்போலத் தொடர்மொழியிடத்தும், "நடந்தது" என்பதிற்போல ஒருமொழியின் அகத்தும் க.ங. என்பதிற்போல மெய்யெழுத்தை யுச்சரிக்குமிடத்தும் வரும். (நன். மெய். ௫. ௨௦. ௨௨; உருபு. ௫.)

5. ஒருபெயர்ச்சொல்லின் அகத்தாவது புறத்தாவது நின்று தூரத்திற்பொருளைச் சுட்டிவரும் ஓர் இடைச்சொல். (உ-ம்.) அவன். (அகம்.) அக்கொற்றன். (புறம்.)

6. ஒரு பெயரெச்சவிகுதி; இஃது: உடன்பாட்டுத் தெரிநிலைவினையில்,வருங்கால், இறந்தகால நிகழ்கால இடைநிலைகளுள் ஏற்பதொன்றினை யணைந்தும், கு டு று என்னும் எழுத்துக்களில் ஒன்றை யீறாக உடைய சில குறிலிணைப்பகுதிகள், இறுதிநின்ற உயிர்மெய்யின் ஒற்றிரட்டித் திறந்தகாலங் காட்டுவனவற்றில் உகரங்கெட அதற்குப் பற்றுக்கோடாய்நின்ற அவ்வொற்றினை யூர்ந்தும், எதிர்மறை வினையில் வருங்கால், எதிர்மறை யிடைநிலையாகிய ஆகாரத்தினை யடுத்த தகர மெய்யை யூர்ந்தும் வரும். (உ-ம்) உண்ட சாத்தன், உண்கின்ற சாத்தன்; புக்கமனை, தொட்டகை, உற்ற செய்தி; உண்ணாத சாத்தன், உள்ள பொருள்; இல்லாத பொருள். (நன். வினை. ௨௩. உரை. இராமா.)

7. ஒரு வியங்கோள் விகுதி. (உ-ம்.) "நான்மறையறங்களோங்க" (கந்தபு. வாழ்.)

8. ஒரு வினையெச்சவிகுதி; இது; ககர மெய்யை முன்னுடையதாய்க் "கின்று" "கிறு" என்னும் இடைநிலைகள் பெற்று நிகழ்காலங் காட்டும் இனத்தின் ஒன்றாய வினையடியோடு ககர பகரமெய்களில் ஒன்றிரட்டித் திடையில் வர அணைந்து "படிக்க" "அலைப்ப" என்பவற்றிற்போலவும், ககர மெய்யை முன்கொண்டு வாராத அவ்விடைநிலைகள் பெற்று நிகழ்காலங்காட்டும் இனத்தின் ஒன்றாய வினையடியோடு விதிப்படி யணைந்து "படிய" "போக" "வர" "உண்ண" என்பவற்றிற் போலவும் வரும். இவ்வினையெச்சம், தன்னை முடிக்குஞ் சொல்லோடொரு கருத்தா உடையதாய், வினைமுதலின் அபிப்பிராயத்தைப்புலப்படுத்திப், "படிக்கவந்தான்" என்பதிற்போலவும்; தனக்கு வினைமுதல் ஒன்றாகத் தன்னைமுடிக்குஞ் சொற்கு வினைமுதல் வேறொன்றாக வந்து தன்னால் உணரப்படுந் தொழிலும் முடிக்குஞ் சொல்லால் உணரப்படுந் தொழிலும் ஒருகாலத்திலே நிகழ்ந்தன என்றாவது நிகழ்கின்றன என்றாவது நிகழுமென்றாவ தொருவாறு நிகழ்காலப் பொருளுடையதாய்ச் "சூரியனுதிக்க அவன் வந்தான்" "சூரியனுதிக்க அவன் வருகிறான்" "சூரியனுதிக்க அவன் வருவான்" என்பவற்றிற்போலவும்; முடிக்குஞ்சொல்லால் உணரப்படுந் தொழிற்குத் தன்னால் உணரப்படுந் தொழில் காரணமென்பதுபட வருதலாகிய காரணப் பொருளாய், "மழைபெய்ய நெல்விளைந்தது" என்பதிற்போலவும்; முடிக்குஞ்சொல்லால் உணரப்படுந் தொழிற்குத் தன்னாலுணரப்படுந் தொழில் காரியமென்பது படவருதலாகிய காரியப்பொருளாய், "நெல்விளைய மழைபெய்தது" என்பதிற்போலவும் வந்து நான்குவகைப்படும்.

9. ஓர்வ்வியயம்; அஃது: ஒற்றெழுத்தே முதலாகவுடைய வடமொழிப் பெயர்ச்சொற்கு முன் "அபடம்" என்பதிற்போல அங்கியங்கருதும் அன்மைப்பொருளிலும், "அப்பிராமணன்" என்பதிற்போல ஒப்புமையுள்ளிட்ட அன்மைப் பொருளிலும், "அமலம்" என்பதிற்போல இன்மைப் பொருளிலும், "அமாம்சம்" என்பதிற்போல அற்பங்கருதிய இன்மைப்பொருளிலும், "அநீதி" என்பதிற்போல விரோதங்கருதிய மறுதலைப்பொருளிலும், "அகாலம்" என்பதிற்போலத் தகுதியின்மை யுள்ளிட்ட மறுதலைப் பொருளிலும் வரும். [அபடம்-சீலையல்லாத பிறிதொரு பொருள். அப்பிராமணன்-பிராமணன் அல்லாதவனும் பிராமணன்போன்றும் உள்ளவன். அமாம்சம்-அற்பமாமிசம்.]

10. சிவன். "ஆருமறியாாகாரமவனென்று" என்னுந் திருமந். சதாசிவ. உஉஞ-செய்யுளாலும் பெறப்படும்.

11. சுக்கு. (இராசவைத்.)

12. தடைசெய்தற்பொருளில்வரும்ஓர்இடைச்சொல்.(உ-ம்) "அ! அவனை அடியாதே"

13. திப்பிலி. (இராசவைத்.)

14. பிரமா. அது "அச்சொரூப நான்முகற்றியாநித்துக்கொண்டு" என்னுஞ்செய்யுளாற் பெறப்படும். (சூத. ஞாந. கசு: சு.)

15. விட்டுணு. (உ-ம்.) "அவ்வெனுங் கரியமாலும்" (காஞ்சிபு. திருவேக. உரு.)

அஆ—இரக்கக்குறிப்பிலே வரும் ஒருகூட்டிடைச்சொல்.(உ-ம்.) "அஆவிழந்தானென் றெண்ணப்படும்" (நாலடி. செல்வநிலை. க.)

அஃகம்—1. ஊறுநீர். (பிங்க. ருளஎ.)

2. விலைப்பொருள். (உ-ம்.) "அஃகஞ் சுருக்கேல்" (ஆத்திசூடி. கஉ.)

அஃகரம்—வெள்ளெருக்கஞ் செடி.

அஃகல்—அஃகுதல்.

அஃகான்— அ என்னும் எழுத்து. (உ-ம்.) "அஃகானடைவுமாகும்" (நன்.மெய். கூ.)

அஃகு—1-3. அஃகென்னேவலுந் தெரிநிலை வினைப்பகுதியும் பெயரெச்சத் தொகையும். 4. அஃகுதல், [ஒரு முதனிலைத் தொழிற்பெயர்.]

அஃகுதல்—1. அளவிற் குறைதல், சுருங்கல். (உ-ம்.) "அஃகிய இ" (நன். எழுத்தியல். ரு.) 2. கழிந்துபோதல். (உ-ம்.) "அல்லாயிரமாயிரமஃகினவால்" (இராமா. அதிகா. சுகூ.) 3. குவிதல். (உ-ம்.) "அரிவையர் வாண்முகமதியா லாம்பன் மலர்தரநோக்கி-யிரவணைந்தெனக்கரையினிவர்ந்தவைமீட்டஃகுதலும்" (காஞ்சிபு. திருக்க. கoஅ.) 4. நுண்மையாதல். (உ-ம்.) "அஃகியகன்ற வறிவென்னாம்" (வள். கஎரு.) 5. நீர்வற்றுதல். (உ-ம்.) "அஃகாநின்ற பெருநதிகள்" (இரகு. திக்கு. கச.)

அஃகுல்லி—உக்காரியென்னுஞ் சிற்றுண்டி. (பிங்க. கககக.)

அஃகுள்—அக்குள். [அஃகு- சுருங்கிய. உள்-உள்ளிடம்.]

அஃகேனம்—1. நெடுங்கணக்கிலே உயிர் வருக்கத் திறுதியில் வைக்கப்பட்டு முப்புள்ளிவடிவினைக் குறிக்கப்படும் "ஃ" ஆகிய

எழுத்து ; அஃது : "இஃது" என்பதிற்போலக்குற்றெழுத்துக்கும் உயிரேறிய வல்லொற்றுக்கும் இடையேவருவது. (வீரசோ. எழுத். ௧; நன். எழுத்தி. ௬௫.) [அஃது "அற்றா லளவறிந் துண்க வஃதுடம்பு-பெற்றானெடிதுய்க்குமாறு" என்னும் வள்ளுவர் ௯௪௩-ஞ் செய்யுளிற்போல உயிரையொப்ப அலகுபெற்றும் "தோன்றிற் புகழொடு தோன்றுகவஃதிலார்-தோன்றலிற்றோன்றாமை நன்று" என்னும் வள்ளுவர் ௨௩௬-ஞ் செய்யுளிற்போல ஒற்றினையொப்ப அலகுபெறாதும் வருதலினாலும், ஒருபால் உயிரெழுத்தும் ஒருபால் மெய்யெழுத்தும் வந்தியக்க இயங்குவதினாலும் உயிர், மெய் என்னும் இரண்டு வருக்கத்துக்கும் நடுவில் வர்ணமாலையில் வைக்கப்பட்டது. இவ்வெழுத்தைப் பெயரிட்டழைப்பதற்காக அகர உயிர்த்துணை வேண்டப்பட்டது. ஏனம்-ஒரு சாரியை. ] 2. முள்ளில்லாப்பன்றி. [அஃகு-குறைதல். ஏனம்-பன்றி. முள்ளில்லை என்றபடி.]

**அஃதான்று**—அஃதன்றி. (உ-ம்.) "அஃதான்றுமுன்னேன் காண்க" (திருவாசகம், திருவண்ட. ௨௮.) ["அஃது" என்பதனோடு சேர்ந்த "அன்றி" என்னும் வினையெச்சம், "அன்று" எனத்திரிந்து நீண்டு நின்றது. [நன். உயிரீற். ௬௦.]

**அஃதி**—அஃதை, (நன். பொதுவி. ௨௯. இரா.) ["அகதி" என்பதன் மரூஉ. ]

**அஃது**—அஃறிணை யொன்றன்பாலிலேவரும் ஒரு சுட்டுப்பெயர். (உ-ம்.) "மறத்திற்குமஃதேதுணை" (வள். ௭௬.)

**அஃதை**—திக்கற்றவன், திக்கற்றவள், திக்கற்றது எனப் பொருள்பட்டு, இருதிணையாணொருமை பெண்ணொருமைகளிலே விரவி நிற்பதோர் பொதுச்சொல். (உ-ம்.) "ஒவ்வொருவருந் தனித்தனி அஃதைக்குத் தந்தைபோல்வராதலால்" (நன். பொதுவி.௨௯. இரா.) [இஃது "அகதி" என்பதன்மரூஉ. ]

**அஃபோதம்**—நிலாமுகிப்புள்.

**அஃறிணை** — உயர்திணையல்லாத சாதி. அது மனிதர், தேவர், நரகரென்னும் உயர்திணையாமொழிந்த உயிர்ப்பொருளும் உயிரல்லாப்பொருளும் ஆகிய சாதியைக்கருதும். (உ-ம்.) மக்கடேவர் நரகருயர்திணை-மற்றுயிருள்ளவு மில்லவுமஃறிணை" (நன். பெய. ௪.) "தன்னுணர்ச்சிகெட்டஃறிணைகளினுடறிப்பார்" (நல்லா. பார. யயா. ௬௨௰.) [அல்-அன்மை. திணை-சாதி. குற்றெழுத்தின் பின்னின்ற லகரம் ஆய்தமாய்த் திரிந்தது. நன். மெய். ௨௫.]

**அக்ககந்நம்**—திரிகோணவடிவத்திலேயிலம்பகோணத்துக் கெதிராகிய ரேகை. 2. பதநகேந்திரம். [அக்ஷகர்ண.]

**அக்கசாலை**—பொன் முதலிய உலோகங்களிலே வேலைசெய்யும் இடம்.(உ-ம்.) "போயக்கசாலை புகுந்தனள்காணந்தப் பொய்ம்மகளே" (தனிப்பா. பலவித். ௬௭.) [அர்க்க-செம்பு, நெருப்பு. ஶாலா-வீடு.]

**அக்கசாலையர்**—1. கண்ணாளர், கம்மியர். (சூ. நிகண். ௨. ௨௯.) 2. செம்பிலே வேலை செய்வோர். 3, தட்டார். (பிங்க. ௭௯௨.)

**அக்கசூத்திரம்**—உருத்திராட்சக்கோவை. (உ-ம்.) "யோகபட்டம், அக்கசூத்திரம், மௌஞ்சி, அசினம், பவித்திரம் என்னுமிவை தரித்துக்கொண்டு" (சி. வி. கிரியா. அ ஆ. தாற்.) [அக்ஷஸூத்ர.]

**அக்கட**—அவ்விடம். (உ-ம்.) "அக்கடவிராவணற் கமைந்தவாற்றலே" இராமா. (ஒரு தெலுங்குச்சொல்.)

**அக்கடி**—கடுங்காற்றாற் கயிறடியுண்டு (மரக்கலம்) அலைதல். [அக்கம்-கயிறு. அடி-அடித்தல்.]

**அக்கணம்** — 1. அந்தக் கணப்பொழுது. (உ-ம்.) "அக்கணத்தேகியிருந்தவாறுதனன்னையோடுரைசெய்து" ( பாரத. சம்ப. ௧௯. ) [அ-அந்த. கணம்-கணப்பொழுது] 2. பொரிகாரம். 3. வெங்காரம்.(கா.வைத்.)

**அக்கணு**—தான்றிமரம்.

**அக்கதம்**—அறுகும் வெள்ளரிசியுங்கூட்டியணியப்படுவது. ( சூ. நிகண். ௯: ௧௮. ) 2. ஆசிர்வாதத்தில் உபயோகிக்கப்படுங் கண்டப்படாத அரிசி. (உ-ம்.) "தலைத்தலையாசிகள் சாற்றிச்-சேர்த்தனர் சிந்துரந்துணருமக்கதமும்" (கந்தபு. சூரனர. ௨௫.) 3. நோப்படாதது. 4. பங்கப்படாதது. 5. பொரித்த தானியம். [அக்ஷதம் : அ-எதிர்மறை. க்ஷதம்-கிழிக்கப்பட்டது, தகர்க்கப்பட்டது.]

**அக்கதயோநி**—ஆடவனோடு புணராத பெண். [அக்ஷதயோநி: அ-எதிர்மறை. க்ஷதம்-பங்கப்பாடு. யோநி-பெண்குறி.]

**அக்கதாரி** —1. சிவன். 2. சிவனடியான். [அக்ஷதாரிந்: அக்ஷ-உருத்திராக்கம். தாரிந்-தரித்தவன்.]

**அக்கதூர்த்தன்**—சூதாடுகிற தீயன். [அக்ஷ-தூர்த்த: அக்ஷ-சூதாடு கட்டை. தூர்த்த: வஞ்சகன், தீயவன்.]

**அக்கதேவி**— 1. சூது விளையாடுவோன்.

(சப்த.) [அக்ஷதெவிந்: அக்ஷ-சூதாடுகருவி. தெவிந்- விளையாடுவோன்.] 2. சோனைப்புல். (கா. வைத்.)

**அக்கதை**—1. கண்டப்படாத அரிசி. 2. மங்களகாரியத்திலே கொண்டாடப்படும் அரிசி. (உ-ம்.) "வெண்ணிலவெறிக்கு நித்திலவக்கதையுமிட்டான்" (பிரபுலிங். மாயை. ௬௬.)

**அக்கந்தம்**—தான்றிமரம். (கா. வைத்.)

**அக்கந்து**—நென்முதலிய தானியங்களை மிதிக்குங் களத்திலே தூற்றும்போது காற்றுக்கெடுபட்டொதுங்கி அப்பாற்கிடக்கும் முதிராத தானியங் கலந்த பதர்க்கூட்டம்.

**அக்கப்பாடு**—கடலிலாவது ஆற்றிலாவது மரக்கலத்தில் ஏற்றப்பட்ட தானியங்கள் விலைப்பொருள்கள் கடுங்காற்று முதலியகாரணங்களினால் நட்டப்படுகை. [அக்க-விலைப்பொருள். பாடு-கெடுகை.]

**அக்கபாடகன்**—நியாயாதிபதி.

**அக்கபாடம்**—1. மற்போர்க்களம். 2. திரைப்புடைவை. (சி.லி-கிரி. ௨௭ தார்.)

[அக்ஷபாட: அக்ஷ-மற்போர், எடுத்தல். பாடம்-அடைப்பு.]

**அக்கபாதன்**—1. நியாயசூத்திரஞ் செய்த கௌதமமுனிவன். (உ-ம்.) "அக்கபாதன் கணாதன்சைமினி" (மணிமேகலை. ௨௭: ௮௨.) (இவர், தம்மதத்தை நிந்தித்த வியாசமுனிவருடைய முகத்தைக் கண்ணாலே பார்க்கமாட்டோம் என்று, சபதமிட்டும் வியாசமுனிவர் வேண்டிக்கொள்ளத் தம்முடைய பாதத்திலே கண்ணுண்டாக்கிப் பார்த்த காரணத்தால் இப்பெயர் பெற்றாரென்பது புராண கதை.) (வாச.) 2. நையாயிகன். [அக்ஷ-தர்க்கம். வாத-போகிறவன்.]

**அக்கபிரம்**—மாமரம். (கா. வைத்.)

**அக்கம்**—1. அறிவு. 2. ஆன்மா. 3. உருத்திராக்ஷம். (உ-ம்.) "தலையெலும்பப்புக் கொக்கிறகக்கம்" (திருப்பு. ௬௧௫.) 4. ஒரு மரம். [இதன் விதைகளால் உருத்திராக்கமாலையும், சூதாடு கருவியுஞ் செய்யப்படும்.] 5. கடலுப்பு. 6. கண். (உ-ம்.) "அக்கநிரை சிந்தினர்" (கந்தபு.சகத்திர. ௨௩.) 7. கயிறு. 8. சூதாடுகருவி. 9. ஞானேந்திரியம். 10. தராசுக்கோல். 11. தானியம். (உ-ம்.) "அக்கமுங் காசுஞ் சிக்கெனத் தேடு". (கொன்-வே) 12. தான்றிமரம். 13. துரிசு. 14. தேர். 15. தேருருள். 16. தேருறுப்பு. 17. பக்கம். 18. பண்டியச்சு. 19. பதினாறுமாடங்கொண்ட ஒரு நிறை. 20. பாம்பு. 21. பூகோளாட்சம். 22. பெறும் விலை. 23. பொன். 24. வியவகாரம், வழக்கு. [1, 2, 3, 4, 5, 6, 8, 9, 10, 11, 13, 14, 15, 16, 17, 19, 20, 21, 24. அக்ஷ. 25. சுவடு.]

**அக்கமணி**—உருத்திராக்கமணி. (உ-ம்.) "பூதியக்கமணியெழுத்தைந் தாதரியாப் புன்மையோரை" (சூத. எக்கி. பூ. ௧௮: ௨௭.) [அக்ஷ; மணி.]

**அக்கமாலிகாபரணன்**—சிவன். [உ-ம்.] "மன்னுமாபதி நல்லக்கமாலிகாபரணன்" (சூத. ஞாந. ௧௧: ௮.) [அக்ஷமாலிகா-உருத்திராக்ஷமாலை. ஆபரண.]

**அக்கமாலை**—1. அருந்ததி-வசிட்டன் மனைவி. [அக்கமாலையணிந்ததனாலாய பெயர்.] 2. ஜபமாலை. (திருவால. ௬௨. ௨௦.) 3. உருத்திராக்ஷ மாலை. (உ-ம்.) "அக்கமாலைகுண்டிகை" (வேதாரணியபு. பிரம. ௬.)

**அக்கமுன்றி**—கண். [அக்கம்-பஞ்சேந்திரியம். முன்றி-முன்னது. பஞ்சேந்திரியங்களின் முன்னானது.]

**அக்கமை**—1. இயலாமை, சாமர்த்தியமின்மை. 2. பொறுமையின்மை. 3. பொறுமை. [அக்ஷமா: அ-எதிர்மறை. க்ஷமா-பொறுமை, சாமர்த்தியம்.]

**அக்கயத்துவம்** — அழிவின்மை. [அக்ஷயத்வம்; அ-எதிர்மறை. க்ஷயம்-அழிவு. த்வம்-தன்மை.]

**அக்கயம்**—அழிவின்மை. [அக்ஷய.]

**அக்கர்**—1. உருத்திராக்கமணியுடையவர். (உ-ம்.) "திசைமுகன் மாறிரளக்கரக்கரை" (கந்தாங். ௰.) [அக்ஷம்-உருத்திராக்கம்.] 2. கண்ணுடையவர். (உ-ம்.) "திரளக்கர்" (கந்தரங். ௧௦.) [அக்ஷம்-கண்.]

**அக்கரகாரம்**—தோஷகாரத் திரவியங்களுள் ஒன்று; அது, வாயில் அடக்கினால் வாய் நீர் ஊறச்செய்யும் ஒருவகைப்பதார்த்தம். (உ-ம்.) "அக்கரகாரமதன்பேருரைத்தக்கால்- உக்கிரகாலத்தோடமோடுங்காண்-முக்கியமாய்க்-கொண்டாற்சலமூறுங்கொம்பனையாய் தாகசுரங்-கண்டாற்பயந்தோடுங்காண்."(பதார்த்தகுண. ௧௦௪௬.)

**அக்கரச்சுதகம்**—இருபதுவகைச் சித்திரகவிகளுள் ஒன்று; அஃது: ஒருபொருள் பயப்பதோர் சொற்கூறி, அச்சொல்லின் எழுத்துக்களை ஒரோரெழுத்தாக நீக்க வேறுவேறு பொருள் பயப்பது. (உ-ம்.) "கற்றோர்பரவுங் ககாரிககாரிகாரி" இதிற்ககாரி என்னுஞ் சொல்லில், முதலிலுள்ள ககா

ரத்தை நீக்க, "நகாரி" என்றாய்க் "நநகாரி" என்பதற்கு வேறான ஒருபொருளும் அதில் நகாரத்தை நீக்கக் "கார்," என்றாய்ப் பின்னும் வேறான ஒரு பொருளும் பயந்தவாறுணர்க. (உ-ம்.) கோமுத்திரியேகூடசதுர்த்த, யாலைமாற்றே மாத்திரைச்சுருக்க, மாத்திரைவருத்தந மெழுத்துவருத்தந, மொற்றுப்பெயர்த்தல் வினாவுத்தாமே, நாகபந்த முரசபந்தந், திரிபாதிரிபங்கி பிறிதுபடுபாட்டுக், காதைகரப்பே கரந்துறைச்செய்யுள், சக்கரஞ்சுழிகுளஞ்சருப்பதோபத்திர, மக்கரச்சுதகநிரோட்டமென்ன, முறைபெறவகுத்த மிறைக்கவியிருபது,மறிவுறக்கிளந்தவவற்றின்பால"(இலக்கணவிள. பொரு. ௬௯௦.) [அக்ஷரச்யுதகம். அக்ஷர-எழுத்து. ச்யுதகம்-நீக்கப்பட்டது.]

அக்கரநோய்—பித்தசிகுவாசண்டகம் என்னும் நாக்கில்வரும் ஒரு நோய். (உ-ம்.)"அக்கரநோய்தீர்க்குமதிசுரந்தாசம்போக்குந்-தக்க சிறுகுறிஞ்சாத்தான்." (பதார்த்த. ௩௪௪.)

அக்கரப்பிரஞ்சம்—எழுத்து மாறாட்டம். (உ-ம்.) "பாணிநிபிராதிபதிகத்தையுந் தாதுநிட்பந்நமென்றாராலெனின், எழுத்துமாறாட்டமென்னும் அக்கரப்பிரஞ்சம் வாராமை பற்றி அவ்வாறுரைத்தாரென்பர் பாடியகாரர்"(பி. வி. எ. உரை.) [அக்ஷரப்ரம்ஸஃ அக்ஷர-எழுத்து. ப்ரம்ஸ-மாறாட்டம்.]

அக்கரம்— 1. அசரம். [அ- எதிர்மறை. க்ஷர- இயங்குவது.] 2. (யாப்பில.) அசை. 3. அழியாதது, [அ-எதிர்மறை. க்ஷர-அழிவுள்ளது.] 4. ஆகாயம். 5. உயிரெழுத்து. (உ-ம்.) "அக்கரங்கடோறுஞ்சென்றிடு மகரம்போல" (சி. சி. ௨: ௨;) 6. எழுத்து. (உ-ம்.) "அக்கரமொன்றினுக்கொன்றாடகப்பணம்" (சிவதரு. கோபுர. ௨௧௬.) 7. எழுதப்பட்டவாசகம். 8. ஓம் என்னும் மந்திரம். 9. சலம். 10. சொல். 11. நித்தியாநந்தம். 12. நோய்வகையினொன்று. 13. பிரமம். 14. மந்திரலிபி. (உ-ம்.) "அஞ்சக்கரமெனுங் கோடாலிகொண்டு" (பட்டினத்தடி. ௪௬.) 15. மாமரம். (கா. வைத்.) 16. வெள்ளெருக்கு. (கா. வைத்)

அக்கரவர்த்தநம்—இருபது வகைச் சித்திரகவிகளுள் ஒன்று; அஃது: ஓரெழுத்தான் ஒருமொழியாய்ப் பொருள் பயந்து, பின் ஓரெழுத்தேற்ற பிறிதொரு மொழியாய்ப் பொருள் பயந்து, அவ்வாறு முறையானேயேற்ற எற்ற வேறு வேறு மொழியாய்ப் பொருள் பயந்துவரப் பாடுவது. (உ-ம்.) "உலைவிலெழுத்தடைவே யோரொன்றாய்ச் சேர்க்கத்-தலைமலைபொன் றாமரையென்றாம்"[இச்செய்யுட்டொடையிலே ககரம் மகரவொற்றை அணைந்து தலையெனப் பொருள்படும் "கம்" என்பதன்மேல் நகாரமேற்ற "நகம்" என்றாய் மலையெனப்பொருள் பயந்து, ககாரம் ஏற்றக் "கநகம்" என்றாய்ப் பொன்னெனப் பொருள் பயந்து, கோ என்பதை ஏற்றக் "கோகநகம்" என்றாய்த் தாமரையெனப் பொருள் பயந்து வருதல் காண்க.] (இலக்கணவிள. ௬௯௦-ம் உரையும்.) [அக்ஷரவர்த்தநஃ அக்ஷர-எழுத்து. வர்த்தந-வளர்த்தல்.]

அக்கரவிலக்கணம்.— எழுத்தியல்பு. 2. கலைஞானம் அறுபத்துநான்கனுள் ஒன்று; அஃது: எழுத்திலக்கணத்தைக் கூறுவது.

அக்கரன்— 1. ஈச்சுரர் மூவரில் ஒருவனாகிய அந்தரியாமி. (த. நி. போ. ௧௦௯-ம் பக்.) 2. கூடஸ்தன். (கைவல். உப. அரும்பதவிளக்கம்.) 3. விஷ்ணு. 4. பிரமம். [அக்ஷரஃ அ — எதிர்மறை. க்ஷரஃ-அழிவுடையோன்.]

அக்கராகாரம் —ஒருசாதிப் பூண்டு.

அக்கராரம்பம்—எழுத்துப் பயிலத்தொடங்குதல். (உ-ம்.) "அக்கராரம்பம்பண்ணுமிடத்து" (விதாந-மைந்தர்வி. ௧௬. உரை.) [அக்கர - எழுத்து. ஆரம்பம்- தொடக்கம்.]

அக்கரை—அப்பாற்கரை. (உ-ம்.) "அளக்கரக்கரைகாண்பான்" (கந்தரந். ௧௦.)

அக்கவடம்—உருத்திராக்ஷமாலை. (உ-ம்.) "நீறணிந்தக்கவடம்பூண்டு"(மச்சபு. கடவுள் ௧௨.) [அக்ஷ-உருத்திராட்சம். வடம்-மாலை.]

அக்கவாடம்—1. சூது விளையாடும் இடம். 2. மற்போர்க்களம். [அக்ஷவாட: அக்ஷ- சூதாடுகருவி, மற்போர். வாடம்- அடைப்பு.]

அக்களிந்தல்—மநமகிழ்தல். [அகம்-மநம் களித்தல்-மகிழ்தல். அகக்களி என்பதிற்ககர உயிர்மெய்கெட்டு அக்களியென்றாய்த் தொழிற்பெயர்விகுதிபெற்றது.]

அக்களிப்பு—மநமகிழ்ச்சி. [அகக்களிப்பு என்பதிற் ககரவுயிர்மெய்கெட்டது.]

அக்கறை-கவனம், காரியம், தொடர்பு. (தெலுங்கு.)

அக்கன்—இராவணன்மக்களுளொருவன். (இராமா. ஊர்தேடு. ௪௪௮.) 2. உருத்திராக்கமுடையவன். (உ-ம். "அக்கர்" பார்.) 3. கண்ணுடையவன். (உ-ம். "அக்கர்" பார்) 4. கருடன். 5. பிறவிக்குருடன். [அக்ஷஃ] 6. நாய். (சூ.நிகண். ௩: ௨௫.) [அக்கு-எலும்பு.]

**அக்கா**—தாய். (சப்த.)

**அக்காக்கிரம்**—1. பண்டியச்சு. 2. பண்டியின் முற்பக்கம். [அக்ஷாக்ர: அக்ஷ-பண்டி. அக்ர-சிரேட்டம், முன்.]

**அக்காத்தான்**— தான்றிமரம். (மலைய்க.)

**அக்காதேவி**—மூதேவி. [அக்கா-மூத்தவள். தேவீ-தெய்வப்பெண்.]

**அக்காரடலை**—சர்க்கரை சேர்த்தடப்பட்டசோறு. (உ-ம்.) "ஆம்பாலக்காரடலையண் பனீரூறமிர்தம்." (சிந்தா. குணமா. எஅ.) [அக்காரம்-சர்க்கரை. அடலை-அடப்பட்டது. "அக்காரம்"என்பதில்"அம்"கெட்டுநின்றது]

**அக்காரம்**—1. கரும்பு. (கா. வைத்.) 2. கரும்புக்கட்டி. (கா. வைத்.) 3. சருக்கரை. (உ-ம்.) "அக்காரமன்னாரவர்க்கு." (நாலடி. பொதுமக. ௪.) 4. சீலை. (பிங்க.) 5. மாமரம். (கா. வைத்.)

**அக்காள்**—தமக்கை.

**அக்காளான்**— வசப்புல்லு. (கா. வைத்.)

**அக்கி**—1. அக்கினிக்கரப்பன். (கா. வைத்.) 2. ஓர் நோய். (கா. வைத்.) 3. அக்கினிதேவன். (உ-ம்.) "அக்கியங்கரமிழந்தஞ் சிகைஞ்சனன்." (சிவதரு. செநநமரண. ௬௧.) 4. ஆனைக்கரப்பனோய். 5. உட்டணம். 6. ஒரு பூச்சி. [அக்நி என்னும் வடமொழியில் நவ்வொற்றுக்கெட்டு நின்றமெய் திரிந்திரட்டித்து வந்தது.] 7. கண். (சப்தஸ்.) (உ-ம்.) ["அக்கிதாரை" அக்ஷி.]

**அக்கிக்கல்**—ஓர் இரத்தினம்.

**அக்கிச்சூர்**—நேத்திரரோகம். (உ-ம்.) "அசைத்தொடியத்- தள்ளும் பித்தக்கிச்சூர் சர்த்தி தலைநோயவசம் அள்ளூம் பித்துக்கொள்ளுமால்." (தைல. தைலவ. அ.)

**அக்கிநாயி**—1. அக்கினிதேவன் மனைவியாகிய சுவாகா. 2. திரேதாயுகம். [அக்நாயீ]

**அக்கினி**—1. அக்கினிதேவன். (உ-ம்.) "அக்கினிபுராணம்" 2. இரவிலே யேழாவதாகவும் பகலிலே பதினொராவதாகவும் நிகழும் முகூர்த்தம். (விதான. குணா. எ௩-ம் உரையும்.) 3. உதராக்கினி. (உ-ம்.) "அக்கினிமாந்தியம்." 4. ஓமாக்கினி. (உ-ம்.) "அக்கினிதாரணம்" 5. செங்கொடிவேலி. 6. நவச்சாரம். 7. நெருப்பு. (உ-ம்.) "ஈசனக்கினிமேனிகுளிப்புற." (உபதேச. சிவத. ௧௨௨.) 8. பித்தம். 9. பொன். 10. மூத்திரம். 11. மூலாக்கினி. 12. வெடியுப்பு. [அக்நி.] (இது அங்கியென மருவிவரும்.)

**அக்கினிக்கட்டு**—அக்கினித்தம்பனம். [அக்கினி-நெருப்பு. கட்டு-தம்பநம்.]

**அக்கினிக்கண்ணன்**—1. சிவன். [அக்கினிக்கண்ணையுடையவன் என்றபடி.] 2. பயங்கர ரூபன்.

**அக்கினிகண்டம்**—1. நாற்பத்து முக்கோண சக்கரத்திலே யெண்கோணமும், இரண்டு பத்துக் கோணமும், பதினொன்கு கோணமும் ஆகிய கண்டம். (சௌந். ௧௧. உரை.) 2. மூலஞ் சுவாதிட்டானம் என்னும் இரண்டாதாரங்களின் இடம் ஆகிய கண்டம். (சௌந். ௧௪. உரை.)

**அக்கினிகணம்**—1. தீப்பொறி. 2. நோய் விளைக்குமென்று நூன்முதற் செய்யுளின் முதற்சீராக வருதல் விலக்கப்பட்ட நிரை நேர் நிரையாகிய மூவசைச்சீர். [இதனைப் பாட்டியலார் "தீக்கணம்" என்பர்.] (இலக்கணவிள. ௮௦௦-ம் உரையும்.) [கணம் - பொறி. ருண-சீர்.]

**அக்கிநிகர்ப்பை**—1.சாமைப்பயிர். 2. பூமி. [அக்நிகர்பா: கர்பா - உட்கொண்டது.]

**அக்கிநிகருப்பம்**—1. அக்கினியைத் தன்னுட்கொண்ட வஸ்து. தீக்கடைகோல். 2. சூரியகாந்தக்கல். [அக்நிகர்ப: கர்ப-உட்கொண்டது.]

**அக்கிநிகருப்பன்**— கந்தசுவாமி. [அக்நிகர்ப: கர்ப- கர்ப்பத்திற்பிறந்தவன்.]

**அக்கிநிகலை**— (சரசாத்திரம்.) நாசியிலிருந்துவரும் சுவாசம். கலை-கூறு.

**அக்கிநிகாரியம்**—1. ஓமாக்கினி வளர்த்தல். 2. ஓமாக்கினிவளர்த்துச்செய்யப்படுங்கிரியை. [அக்நிகார்ய: அக்நி- தொழில்.]

**அக்கிநிகிரியை**—1. தகிக்கப்படும் பிரேதத்திற்செய்யுங்கிரியை. 2. நெருப்பினாற்சுடுதல். [அக்நிக்ரியா:க்ரியா-செயல்.]

**அக்கிநிகீடம்**—கீடவகையுள் ஒன்று; [அஃதிருபத்துநான்கு பேதம். அவை: கௌடிந்யம், கண்டபவம், லாதரி, பத்திரவிருக்ஷிகம், சீநாதுகம், பிர்மணிகம், விடபப்பிரமணம், பாகியகி, பிச்சிலம், கும்பி, வர்ச்சகீடம், அருமேதகம், உண்டுபம், பதுமகீடம், மகரம், சதபாதி, பஞ்சாவம், பாந்தமச்சம், சூட்சுமதுண்டம், அதிகர்த்தபி,கீடக்கிரமம், சராஷி, சீதபி, சிலேஷ்மகம் என்பன. [இவற்றின் விஷத்தினால் கடிவாயில் இரத்தங்கம்மி யிருப்பைப்பூ, பேரீச்சங்காய்

இவைகளைப்போலக் கொப்புளம் எழும்புதலும் எரிச்சலும் பேதியும் உண்டாகுமென்பர். சிவரட். ௩௪௪.]

அக்கிநிகுண்டம்— ஓமாக்கினி வளர்க்குங்கிடங்கு. [அக்நிகுண்ட குண்டம்- கிடங்கு.]

அக்கிநிகுமாரன்—கந்தசுவாமி. [அக்கினியிற் பிறந்தவன் ஆதலால். அக்நிகுமார:குமாரமகன்.] 2. ஓர் மருந்து.

அக்கிநிகேதநு—புகை. [அக்நிகேதந:கேதநு- குறி.]

அக்கிநிகோணம்—தென்கிழ்த்திசை. (சப்தஸ்.) [அத்திசைக் கக்கினி தெய்வமென்பது பற்றிவந்தபெயர். அக்நிகோண: கோணம், மூலை.]

அக்கிநிகோத்திரம்— அக்கினிக்குச்செய்யும் நைவேத்தியம், ஓமாக்கினிவளர்த்து அதற்கு நைவேத்தியஞ்செய்தல். [அக்நிஹோத்ரம்.]

அக்கிநிஹோத்திரம்—1. நித்தியாக்கினி வளர்த்தல். 2. நெய். 3. நெருப்பு. [அக்நிஹோத்ரம் ஹோத்ர-யாகம், யாகப்பொருள்.]

அக்கிநிஹோத்திரி—1. நித்தியஓமாக்கினிவளர்ப்போன். 2. யாகாக்கினி வளர்த்திருப்போன். [அக்நிஹோத்ரிந:ஹோத்ரி-யாகஞ் செய்பவன்.]

அக்கிநிச்சிவம்—குப்பைமேனி. (மலை)

அக்கிநிச்சுவத்தர்— பிதிரர் வகையினொருசாரார். [தேவர்பிதிரர்.] (உ-ம்.) "உரைத்திடுமக்கினிச்சுவத்த ரெனுந்தேவர் பிதிர்க்களு நீளுலப்பில் சீர்த்தி-நிரைத்தவெருகிடத ரெனுமாருடர்தம் பிதிர்க்களும்." (கூர்மபு. பிருகு. கரு.) [அக்நிஷ்வாத்த: ஸ்வ-சொந்தம். ஆத்த-எடுத்த. நெருப்பிலே கொடுக்கப்பட்டவைகளைத் தமக்குச் சொந்தமாக எடுத்துக் கொண்டவரென்பது பொருள்.]

அக்கிநிச்சுவாலை—1. அக்கினிக்கொழுந்து. 2. ஒரு பூண்டு; இது சாயக்காரருக்குபயோகமுள்ள சிவந்த மலர்களைப் பூக்கும். [அக்நிஜ்வாலா. ஜ்வாலா- கொழுந்து.]

அக்கிநிச்சேர்வை— காரச்சீலை. [சேர்வை- சேர்க்கப்பட்டது.]

அக்கினிசகன்-வாயு. [அக்நிஸக: ஸக:- நண்பன்.]

அக்கிநிசகாயன்—வாயு. [அக்நிஸஹாய: ஸஹாய- நண்பன்.]

அக்கிநிசந்மன்—கந்தசுவாமி. [அக்நிஜந்ம: ஜந்ம- பிறந்தவன்.]

அக்கிநிசயநம் — ஓமாக்கினி வளர்த்தல். [அக்நிசயந: சயா- கூட்டுதல்.]

அக்கிநிசன்—கந்தசுவாமி. [அக்நிஜ: ஜ- பிறந்தவன்.]

அக்கிநிசாந்தி— அக்கினி தேவனால் வரும் இடையூற்றை நிவிர்த்தியாக்கற் பொருட்டு மந்திரம் நூற்றெட்டுருச்செபித்து நெய்முதலியவைகளைக்கொண்டு செய்யுஞ் சாந்தி. [அக்நிசாந்தி: சாந்தி - நிவிர்த்தி.]

அக்கிநிசாலம்—1. ஒரு பூண்டு. 2. நெருப்பினாற்செய்யுஞ் சாலவித்தை. [அக்நிஜால.]

அக்கிநிசாவர்ணி—பதினான்கு மநுக்களில் ஒருவன். (த. நி. போ. ௩௩௦.) [அக்நிஸாவர்ணி.]

அக்கிநிசிகம்—1. அம்பு. 2. கார்த்திகைப் பூண்டு. 3. மஞ்சள். 4. வர்ணம். 5. விளக்கு. 6. குங்குமப்பூ. (அமரம். ௩அ௩)

அக்கிநிசிகா— குப்பைமேனி. (அமரம். ௪அ௨.) [அக்நிசிகா. சிக-கொழுந்து.]

அக்கிநிசிலேட்டுமரோகம்- சிலேட்டுமரோகத்திலே யொருவகை; அது சர்வாங்கத்திலாவது கால் கை கண் மூக்கென்னும் உறுப்புக்களிலாவது தெரிச்சல், இருமல், கோழை, தாகம், கைகால்களிற் சீதளம், அதிக தீபநம் ஆகிய குணங்களைச்செய்வது. (சிவர. ௪௪௩.) [அக்நிச்லேஷ்மரோகம்]

அக்கிநிசேகரம்— 1. குங்குமமரம். (சப்தஸ்.) 2. குசும்பமரம். 3. மஞ்சட்பூண்டு. (சப்தஸ்.) [அக்நிசேகர: சேகர- நுனி.]

அக்கிநிட்டம்—1. அக்கினியில் வைக்கப்பட்டது. 2. இரும்பாலாய பொரியற்சட்டி. [அக்நிஷ்ட: அக்நி; ஷ்ட.]

அக்கிநிட்டி—ஞெகிழி. (சி. பொ.)

அக்கிநிட்டுது—ஒருநாளிலேமுடிக்கப்படும் ஒருயாகம். [அக்நிஷ்டுத் ஷ்டுத் - பலிசெய்தல்.]

அக்கிநிட்டோமம்— அக்கினிதேவனுக்கு வசந்தகாலத்திலே ஐந்துநாட்களிற் செய்யப்படும் ஒரு யாகம். இது சோதிட்டோமயாகத்தின் முதற்பாகம். (உ-ம். அக்கினிட்டோமமாற்றிய பயன்களையடைவர்." (மச்சபு-தடாக. உ௯.) [அக்நிஷ்டோம: ஷ்டோம - நைவேத்தியம்.]

**அக்கிநித்தம்பநம்** - நெருப்பினைச்சுடாது தடுத்தல். [ஸ்ரு ஹ்ஸம்ஹநம்: ஹ்ஸம்ஹநா- தடுத்தல்.]

**அக்கிநித்தம்பம்**— 1. அக்கினித்தூண். 2. அறுபத்துநான்கு கலைஞானங்களுள் ஒன்று; அஃது, அக்கினியின் சுடுஞ்சத்தியைத் தடுக்கும் உபாயத்தைச்சொல்வது. [ஸ்ரு ஹ்ஸம்ஹ ஸ்தம்பம்-தூண். தடுத்தல்.]

**அக்கிநித்தம்பன்**— சிவன். [ஸ்ரு ஹ்ஸம்ஹ: ஸ்தம்ஹ- தூணனவன்.]

**அக்கிநித்திரயம்**—மூவகையக்கினி; அவை: காருக பத்தியம், தக்கிணம், ஆகவநீயம் என்பன. (பெரியபு- தில்லைவா. ரு. உரை. [ஸ்ரு த்ரய: த்ரய- மூன்று.]

**அக்கிநித்திராவகம்**— ஒருவகைச்செய்நீர்; அது வெடியுப்புத்திராவகம்போல்வது. [ஸ்ரு த்ராவக: த்ராவக- செய்நீர்.]

**அக்கிநித்திரேதை**—அக்கினித்திரயம். [ஸ்ரு த்ரேதா: த்ரேதா- மூன்று.]

**அக்கிநித்தூண்**—தீப்பிழம்பு.

**அக்கிநிதம்**—1. அக்கினியூட்டல். 2. சீரணிக்கச் செய்யும் ஒரு மருந்து. 3. வஞ்சகமாய் வீடெரித்தல். [ஸ்ரு தம்: தம்- கொடுத்தல்.]

**அக்கிநிதன்**—1. தீயிலிட்டவன். 2. வீடெரிக்கிற துரோகி. [ஸ்ரு த: த:-கொடுப்பவன்.]

**அக்கிநிதந்நர்**—பிராமணபிதிர்க்களில்ஒரு வகுப்பார். (மநு.ங. ககக.) [ஸ்ரு தக்த: ஸ்ரு; தக்த- தகிக்கப்பட்ட.]

**அக்கிநிதாரணம்**— ஓமாக்கினி வளர்த்தல். [ஸ்ரு தாரண: தாரணம்- வைத்துக்கொள்ளல்.]

**அக்கிநிதிவ்வியம்**—அக்கினிபரீட்சை. அஃதொன்பதுவகைத் திவ்வியங்களுள் ஒன்று. (மிருதிசந். கூ௫.) [திவ்யம் - தேவசம்பந்தமுடையது.]

**அக்கிநிதேவன்**— அக்கினிதேவதை. [ஸ்ரு தேவ: தேவ- தேவன்.]

**அக்கிநி நட்சத்திரம். } அக்கிநி நாள்.** -1. அக்கினியாளுகை செய்யுங் காலம்; அது, பரணி நாலாங்காலிலுங், கார்த்திகையிலும் உரோகிணி முதற்காலிலுஞ், சூரியன் நிற்குங்காலம். [இந்நாட்களில் வீடு கட்டத் தொடங்கினல் அவ்வீடு நெருப்புக் கிரையாமென்பர். சரசோ. மனை. க௩.] 2. கார்த்திகைநாள். [எரி பிறந்தநாள்.]

**அக்கிநிப்பிரத்தரம்**—1. சூரியகாந்தம். 2. தீத்தட்டிக்கல். [ஸ்ரு ப்ரஸ்தர: ப்ரஸ்தரம்- கல்.]

**அக்கிநிப்பிரமணம்**—ஆச்சியத்துக்குச் செய்யும் பதினெட்டுச்சம்ஸ்காரங்களுள் ஒன்று; அஃதக்கினியைச்சுற்றுதல். (சி. வி. கிரி. உஎ. தாற்.) [ஸ்ரு: ப்ரமணம்- சுற்றுதல்.

**அக்கிநிப்பிரவேசநம். } அக்கிநிப்பிரவேசம்.** -அக்கினியிற் புகுதல். [ஸ்ரு ப்ரவேஶ: ப்ரவேஶ- புகுதல்.]

**அக்கிநிப்பிழம்பு**—அக்கினித்திரட்சி. [பிழம்பு-திரட்சி.]

**அக்கிநிபஞ்சகம்**—1. ஆகவநீயம், தட்சிணாக்கினி, காருகபத்தியம் எனக்கிழக்குத்தெற்கு மேற்குத் திசைகளிலே வேதியில் வளர்க்கப்படும் அக்கினிகளும், சப்பியம் ஆவசத்தியம் என வளர்க்கப்படும் அக்கினிகளுமாகிய ஐந்தக்கினிகள். 2. தவஞ்செய்வோர் நிற்கும் ஐந்தக்கினி; அவை நான்கு திசையிலும் நான்கு தீக்குண்டமும், மேலே சூரியனும். ("பஞ்சாக்கினி பார்.") 3. பஞ்சகதோஷங்களுள் ஒன்று; அது பிரதானமாகக் கிருகாரம்ப கிருகப்பிரவேசங்களுக் காகாதென நீக்கப்பட்டகாலம். (உ-ம்.) "பஞ்சகம் பார்க்கவேண்டியகாலம் வரையில் ஞாயிறு முதலாக அன்றையவாரம் வரையும், பிரதமை முதலாக அன்றைய திதிவரையும், அச்சுவினிமுதல் அன்றைய நட்சத்திரம் வரையும், மேஷம் முதல் அப்போதுதயலக்கினம் வரையும் எண்ணிக்கண்ட தொகையையொன்பதிற்கழித்ததின் மிச்சம் ௩, ௫, எ, ೦, ஆயின் உத்தமம். க, உ, ச, சு, அ, ஆயின் நீக்கப்படும். க. மிருத்தியுபஞ்சகம். உ. அக்கிநிபஞ்சகம். ச. இராசபஞ்சகம். சு. சோரபஞ்சகம். அ. ரோகபஞ்சகம். (வருஷாதிநூல். க௩உ.)

**அக்கிநிபதச்சிலந்தி**— சிலந்திவகையுள் ஒன்று; அதன் கால்கடோறும் விஷமுண்டென்றுங், கால்பட்ட இடங் கொப்புளிக்குமென்றுஞ் சொல்வர். (சீவரட். பக். ௩௫ச.)

**அக்கிநிபம்**—பொன். [ஸ்ரு ஹ: ஹ- பிரகாசம். அக்கினிப்பிரகாசமுடையது.]

**அக்கிநிபரிச்சதம்**— ஓமஞ் செய்தற்குவேண்டிய உபகரணம். [ஸ்ரு பரிச்சத: பரிச்சதம்- உபகரணம்.]

**அக்கிநிபரித்தியாகம்**— அக்கினியிலே ஓம

ஞ்செய்யாதொழிதல். (உ-ம்.) "அக்கிநிபரித்தியாக பிராயச்சித்தம்." (பராச. கூ. ககூச. வரதாசா.) [வஹ்நிபரித்யாக- விடுதல்.]

**அக்கிநிபரீட்சை**— அக்கிநியைக்கொண்டு பரீட்சித்தல்; அது, நெருப்பிலே நடப்பித்தாவது காய்ச்சிய இரும்பை அல்லது நெய்யைப் பரிசிப்பித்தாவது சோதித்தல். இப்பரீட்சையிலே தாக்கமுற்றவனை யசுத்தனென்றும், தாக்கமுறாதவனைச்சுத்தனென்றும் முன்னோர் சிலர்கொண்டனர். [அக்நி பரீக்ஷா: பரீக்ஷா-சோதனை.]

**அக்கிநிபுக்து**—ஒரு முநிவர். (வேதாரண்ய பு. வான். கு.)

**அக்கிநிபுராணம்**—பதினெண் புராணங்களுள் ஒன்று; அது ஆக்கிநேயம்; இப்புராணத்திலே விட்டுணுவுடைய அவதாரம், சிருட்டிக்கிரமம், விட்டுணுபூசை முதலியன சொல்லப்படும். அஃதெண்ணாயிரங் கிரந்தமுடையது. (வாச.) [அக்நிபுராண: புராணம்- பழங்கதை.]

**அக்கிநிபூ**—1. கந்தசுவாமி. "ஆர்த்தெழுமனவிற்றோன் றலாலக்கினிபூவேயென்றும்." (மச்சபு. குமார. ககு.) 2. நீர். [அக்நி பூ: பூ- பிறந்தவன், பிறந்தது.]

**அக்கிநிப்ரோஷணம்**— வைசுவதேவ பூசை.

**அக்கிநிமண்டலம்**—1. அக்கிநியினாலேயதிட்டிக்கப்படும் மண்டலம். 2. சரீரத்திலே பிருதிவிக்கும் அப்புவுக்குமுரியதானம்; அது, மூலாதாரமுதல் நாபி பரியந்தமுள்ளஇடம்.

**அக்கிநிமணி**— சூரியகாந்தக்கல். [அக்நி மணி: மணி—கல்.]

**அக்கிநிமந்தச்சுரம்**—சுரநோய்வகைகளுள் ஒன்று. (சிவரட். பக். சஎ.) [அக்கிநி- உதராக்கிநி. மந்தம் - மென்மை. சுரம்- காய்ச்சல்.]

**அக்கிநிமந்தநம்**—தேய்த்தலால், கோல்களினின் றக்கிநியைப் பிறப்பித்தல். [அக்நி மந்தந: மந்தந- கடைதல்.]

**அக்கிநிமந்தம்**— 1. கோங்கமரம். [அக்நி மந்த: மந்த- கடைதல். கடையப்படும்பொழுதிதன்கோல்களிலே நெருப்புப் பிறத்தல்பற்றிவந்தபெயர்.] 2. சமியாமை. [மந்த- சேட்டையின்மை.] 3. தேய்த்தலாற்கோல்களினின் றக்கிநியைப்பிறப்பித்தல்.

**அக்கிநிமாந்தம்**—ஒருநோய், உதராக்கிநிமந்தமுற்றிருத்தல். (உ-ம்.) "அக்கிநிமாந்தங்கை காலக்கியெரிவுழலே" (தைல-தைலவ. கு அ.)

**அக்கிநிமாந்தியம்**—அசீரணம், சமியாமை. (கா. வைத்.) [அக்நிமாந்த்ய: அக்நி- நெருப்பு. மாந்த்ய- மந்தத்தன்மை.]

**அக்கிநிமாருதி**—அகத்தியமுநிவர். (வாச.) [இவர் ஒரு கற்பத்திலே அக்கிநிக்கும் வாயுவுக்கும் புத்திரராகப் பிறந்ததனால் வந்தபெயரென்பர்.]

**அக்கிநிமுகச்சிலந்தி**— ஒருவகைச் சிலந்திப்பூச்சி. அஃததிக நோவையும் நெருப்பாற் சுட்ட கொப்புளம்போன்ற கொப்புளத்தையும் உண்டாக்கும் விஷமுடையது. (சீவர.)

**அக்கிநிமுகம்**—சேங்கொட்டை.

**அக்கிநிமுகன்**—1. சூரபன்மன் புதல்வருள் ஒருவன். [கந்தபு. புதல். கசு. இதில் "அங்கிமாமுகன்" எனக்குறிக்கப்பட்டவன்.] 2. தேவன். [முக- வாய். அவியை, அக்கிநியை வாயாகக்கொண் டநுபவித்தலால் வந்தபெயர்.] 3. பிராமணன். (சப்தஸ்.) [சாப்ருபமான அக்கிநிமுகத்தில் இருத்தலால்வந்தபெயர். [அக்நிமுக]

**அக்கிநிமூலை**— தென்கீழ்த்திசை. (உ-ம்.) "அக்கிநிமூலை திங்கள்." (மச்சபு. சாந்தி.அ.) [மூலை-கோணம்.]

**அக்கிநியத்திரம்**—அக்கிநிமயமான அம்பு. [அக்நியஸ்த்ர: அஸ்த்ர-ம்- அம்பு.]

**அக்கிநியாகாரம்**—அக்கிநியிருக்குஞ்சாலை. [அக்ந்யாகார: ஆகாரம்- வீடு.]

**அக்கிநியாதாநம்**— ஓமாக்கிநி வளர்த்தல். [அக்ந்யாதாந: ஆதாநம் - செய்துமுடித்தல்.]

**அக்கிநியாதேயம்**— 1. அக்கிநிப்பிரதிட்டை. 2. இருபத்தொருவகையாகங்களுளொன்று. [அக்ந்யாதேய: ஆதேய-வைக்கப்படுவது.]

**அக்கிநியாலயம்** — ஓமகுண்டம். (வாச) [அக்ந்யாலய: ஆலயம்- வீடு.]

**அக்கிநியுருத்திரம்**—நிவிர்த்திகலையில் உள்ளதெனச்சொல்லப்படும் நூற்றெட்டுப்புவனங்களுள் ஒன்று. (சி. வி. கிரி. உக. உரை.) [அக்நி. ருத்ரம்.]

**அக்கிநியுற்பாதம்**—1. வால்வெள்ளி. 2. விண்வீழ்கொள்ளி. 3. விழுகின்ற நக்ஷத்திரம். [அக்ந்யுத்பாத: உத்பாத- தீமையையறிவிக்குங் குறி.]

அக்கிநியேழுநா—அக்கிநிதேவனுக் குள்ள ஏழுநாக்குக்கள்; அவை: காளி, கராளி, மநோசவை, சுலோகிதை, சுதூம்பரவருணை, புலிங்கிநி, விசுவரூபி என்பன. (முண்டகோ.)

அக்கிநியேழுநாவண்ணம்— அக்கிநிதேவனுக்குள்ள ஏழுநாக்குக்களின் நிறம். அவை: அருணம், கநகம், இரத்தம், கிருஷ்ணம், சுப்பிரம், வெகுவர்ணம், அதியிரத்தம் என்பன. (வி. ணி. கடூo.)

அக்கிநியோகம்— அக்கிநிக்குரிய யோகம். அது; ஞாயிற்றுக்கிழமையிலே சத்தமிதுவாதசிகளும், திங்களிலே சட்டியேகாதசிகளும், செவ்வாயிலே பஞ்சமி சப்தமிகளும், புதனிலே துதியையட்டமிகளும், வியாழனிலே சட்டிநவமிகளும், வெள்ளியிலே யட்டமிதசமிகளும், சனியிலே நவமியேகாதசிகளும் வரும் நாள். (சரசோ. குணகுண. ௫o.)

அக்கிநிரசம்—1. அக்கிநியின்வீரம். 2. இந்திரகோபம். 3.பொன். [அக்நிரஜஸ் : ரஜஸ்-அணு.]

அக்கிநிரோகணிரோகம்—ஒருவகையுரோகம்; அது சுரத்தினுன் மெலிந்தவருக்குப் பித்தப்பிரதாநமான வாதசிலேட்டுமங்களினுலே யக்குளுக்குள்ளே மாமிசகண்டத்தைப்போலக் கட்டிகளை யுண்டாக்குமென்றும், அக்கட்டிகள் கட்டையி னெருப்புப்போலிருந்துபத்திரவத்தைச் செய்து, ௩. எ. கரு. என்னும் நாட்களில் மரணங் கொடுக்குமென்றும், அந்நாள் விலகினுற் சாத்தியமாகுமென்றுஞ் சொல்வர். (சீவரட். பக். ௩கக.) [அக்கிநி - நெருப்பு. ரோகணம் - வளர்வு. ரோகம் - நோய்.]

அக்கிநிவநுணன்—சூரிய குலத்திலே யிராமனுக்குப்பின்னிருந்த ஓரரசன். (இரகுவம். குலமுறை. ௩உ.)

அக்கிநிவநுத்தகம்—உதராக்கினியை வளர்க்கும் ஒரு மருந்து. [அக்நிவர்த்தக: அக்நி - உதராக்கிநி. வர்த்தகம்- வளர்ப்பது.]

அக்கிநிவநுத்தநம்—1.உதராக்கினியை வளர்க்கும் ஒருமருந்து. 2. தீவளர்த்தல். [அக்நி வர்த்தந: வர்த்தநம்- வளர்த்தல்.]

அக்கிநிவல்லபம்—குங்கிலியம். [அக்நிவல்லப: வல்லப- நட்பு. அக்கிநிசேர்ந் தெழுப்புவதென்றபடி.]

அக்கிநிவாகம்—1. ஆடு, (வாச.) 2. புகை. (வாச.) [அக்நிவாஹ: வாஹ- வாஹநம்.]

அக்கிநிவாகு—புகை. [அக்நிவாஹு: வாஹு- புயம்.]

அக்கிநிவிசர்ப்பம் — புண்ணின் அழற்சி. [அக்நிவிஸர்ப்ப: விஸர்ப்ப- அழற்சி.]

அக்கிநிவிஷபாகரோகம்- எண்வகை விஷபாகரோகத்துள் ஒன்று; அது வாதபித்தாதிக்கம், தேகமிளைத்தல், வீக்கம், கிடைபொருந்தாமை, புரளல், கோழை, இருமல், சர்த்தி, மூர்ச்சை, வாய்நீரூறல், வயிறளைதல், மலசலச்சிக்கல், பக்கநோவு என்னும் இக்குணங்களையுண்டாக்குவது. (சீவரட். பக். உoஉ.)

அக்கிநிவீசம்—1. பொன். 2. ரம் என்னு மொழி, [அக்நிவீஜ: அக்நி- நெருப்பு. வீஜ- காரணம்.]

அக்கிநிவீரியம்—1.அக்கிநியின்வீரம்.(வாச.) [அக்நிவீர்ய: அக்நி- நெருப்பு. வீர்ய-வீரம்.]

அக்கிநிவேசன்—இக்குவாகுவுக்குத் தம்பியாகிய அரிஷியனுடைய வம்சத்தில் வந்த தேவதத்தன் மகன் சாதகர்ணமகா இருஷி.

அக்கிநிவேசியாயநம்—அக்கிநிவேசன் வம்சப்பிராமணகுலம்.

அக்கிநேத்திரன்— 1. நாவலந்தீவை யாசுசெய்த பிரியவிரதனுடைய ஒருமகன். (மிருகேந். அத்துவா. சுஎ.) 2. அக்கிநிகாரியஞ் செய்யுங்குரு. [அக்நீத்ர: அக்நி, இந்த-கொளுத்தல்.] [அக்நீத்ர:] இவனை அக்கிநிதருவன் என்றும், (த. நி.போ. பக். ௩கo.) அங்கிதீரன் என்றும், (கந்தபு. அண்ட. உஅ.) அங்கிநேத்திரன்என்றும், (சிவதரு. கோபுர. சுகு.) சொல்வர்.

அக்கிநோய்—கண்ணோய். (உ-ம்.) "இமையிலவங்கூழாட்டமக்கிநோயிவை பெரியகுமரியாங்கொன்ளிமுன்பல்லமாமே." (தைல. தைலவ. ௩௫.) [அக்ஷி- கண்.]

அக்கிபடலம்—கண்ணோய்களுள் ஒன்று. [அக்ஷிபடல: அக்ஷி-கண். படல-போர்வை.]

அக்கியம்— பகலிலே பதினுன்காவதாக நிகழும் உத்தரமென்னும் முகூர்த்தம். (விதா. குண. எ௩-ம் உரையும்.)

அக்கியாதம்— அறியப்படாதது. (உ-ம்.) "ஓதுமொருவருடமக்கியாதமெனவும் புகன்றே." (நல். பார. சிறப்பு. ௩கு.) [அஜ்ஞாத: அ-எதிர்மறை. ஜ்ஞாத-அறியப்பட்டது.]

அக்கியாதி—பிரமத்தை (திரிபுணர்வைப்) பற்றிய ஐவகைக் கோட்பாடுகளுள் ஒன்று;

இது சாங்கியப்பிரபாகாரர்மதத்தில் அங்கீகரிக்கப்பட்டது. அவ்வைவகைக் கோட்பாடுகளாவன—சத்கியாதி, அசத்கியாதி, அந்யதாக்கியாதி, அநிர்வசநீயக்கியாதி, அக்கியாதி என்பன. இவற்றின் விவரங்கள் விருத்திரத்தினவளி, விருத்திப்பிரபாகரம் முதலிய நூல்களில் விளங்கும்.

**அக்கிரகண்ணியன்**—முதல்வனுக மதிக்கப்படத்தக்கவன். (உ-ம்) "மகாவீரர்க்கெல்லாமக்கிரகண்ணியன்." (சி. சி பாயி. சிவாக்.) [அக்ர்யமண்ய: அக்ர-முதல். மண்ய - மதிக்கப்படத்தக்கவன். சப்தஸ்.]

**அக்கிரகத்தம்**—1. கைந்நுதி. 2. வலக்கை. [அக்ரஹஸ்த: அக்ர-நுனி, பிரதானம். ஹஸ்த-கை.]

**அக்கிரகரம்**—1. கிரணத்தின் அந்தம். 2. கைந்நுதி. 3. வலக்கை. [அக்ரகர: அக்ர-நுனி, பிரதானம். கர-கிரணம், கை.]

**அக்கிரகன்**—1. சிரேட்டமானவன், முதன்மையுடையவன். 2. முன்னுக்குப்போகிறவன். [அக்ரக: அக்ர- முன். க-போகிறவன்.]

**அக்கிராகாரம்**—1. தலைமையான இடம். 2. பிராமணனுக்குச் சீவநத்திற்காக கொடுக்கப்பட்ட நிலம், அல்லது கிராமம். [அக்ரஹார: அக்ர-தலைமை. ஹாரம்-எடுக்கப்படுவது.]

**அக்கிரச்சியை**—கிரகங் கிழக்கு மேற்கு வீதியகறலில் வருஞ்சா. 2. வில்லின் நாணினது நுனி. [அக்ரஜ்யா.]

**அக்கிரசங்கை**—1. கணைக்காலின் மேற்பாகம். (வாச.) [அக்ரஜங்கா] 2. முதன்மரியாதை. [அக்ர-மேல், முதல். ஜங்கா-கணைக்கால். ஸங்க்யா-எண்ணப்படுகை.]

**அக்கிரசந்தாநி**—இயமபஞ்சிகை; இது பிராணிகளுடைய நன்மை தீமைகள் எழுதப்படும் ஏடு. [அக்ரஸந்தாநீ: அக்ர- முன். ஸந்தாநீ-தொடுக்கப்பட்டது.]

**அக்கிரசந்மந்**—1. பிரமா. 2. பிராமணன். 3. மூத்த சகோதரன். [அக்ரஜந்ம: அக்ர-முதல். ஜந்மந்-பிறந்தவன்.]

**அக்கிரசம்பாவனை**—முதன் மரியாதை. [அக்ரஸம்பாவநா: அக்ர- முதல். ஸம்பாவநா-மதிக்கப்படுகை.]

**அக்கிரசரதை**—முன்னுக்குப் போதல். [அக்ரஸரதா: அக்ர- முன். ஸரதா-போதல்.]

**அக்கிரசரம்**—முன்போதல். [அக்ரஸர: ஸர-போதல்.]

**அக்கிரசன்**—1. பிராமணன். (சி-லி.கிரி. உக.) 2. மூத்தசகோதரன். [அக்ரஜ: அக்ர-முதல். ஜ-பிறந்தவன்.]

**அக்கிரசாதகன்**—1. பிராமணன். 2. முன்பிறந்தோன். [அக்ரஜாதக: அக்ர- முன். ஜாதக- பிறந்தவன்.]

**அக்கிரசாதி**—1. பிராமணன். 2. முன்பிறந்தவன். [அக்ரஜாதி: ஜாதி-பிறந்தவன்.]

**அக்கிரசை**—முன்பிறந்தவள். (வி-ணி.) [அக்ரஜா: ஜா- பிறந்தவள்.]

**அக்கிரணி**—தலைவன். [அக்ரணீ: நீ-நடத்துகிறவன். ர நோக்கி நகாரம் ணகாரமாயிற்று.]

**அக்கிரதாம்பூலம்**—முதற்கொடுக்கும் தாம்பூலம்.

**அக்கிரபாகம்**—1. சிரேட்ட பாகம். 2. நுனிப்பாகம். 3. மிஞ்சிய பாகம். [அக்ரபாக: அக்ர- பிரதானம், நுனி. பாக-பங்கு.]

**அக்கிரபாணி**—1. கைந்நுனி. 2. வலக்கை. [அக்ரபாணி: அக்ர- நுனி, பிரதானம். பாணி-கை.]

**அக்கிரபூசநை** — அக்கிரபூசை. (உ-ம்.) "அச்ரபூசை" (பார்.)

**அக்கிரபூசை**—1. மிகமேலான மதிப்பு. 2. முதற்பூசை. (வாச.) [அக்ரபூஜா: பூஜா-மதிப்பு.]

**அக்கிரபூமி**—1. இலக்குக் குறிக்கப்பட்டதானம். 2. பெறநோக்கிய பொருள். [அக்ரபூமி: அக்ர- இலக்கு. பூமி- இடம்.]

**அக்கிரம்**—1. அதிகம், மிகுதி. 2. அருகு. (உ-ம்.) "அக்கிரேவணம்." (இப்பொருளில் வரும்போது, ரவ்வொற்றுக் கெட்டுக் கவ்வொற்றுத்திரிந்திரட்டித்து "அக்கம்" எனவும் வழங்கும்.) 3. இலக்கு. "அக்கிரபூமி." 4. உச்சி. (உ-ம்.) "பர்வதாக்கிரம்" 5. கிரகங் கிழக்கு மேற்கு வீதியகறல். 6. கூர். 7. சிரேட்டம். (உ-ம்.) "அக்கிராசநம்." 8. திரள். 9. தொடக்கம். (உ-ம்.) "அக்கிரகாயணம்." 10. நுனி. (உ-ம்.) "குசலாக்கிரம்." "அங்கிலங் தருப்பை கைக்கொண்டக்கிரங் கிழக்கதாக."

(இரகு. கடி. எக.) 11. மிச்சம். (உ-ம்.) "அக்கிரபாகம்." 12. முதலாவது, முந்தியது. (உ-ம்.) "அக்கிரசங்மன்." 13. முற்பாகம். (உ-ம்.) "அக்கிரபாதம்." 14. மேற்பாகம். (உ-ம்.) "அக்கிரசங்கை."

அக்கிரமம்—1. ஒழுங்கின்மை. 2. கொடுஞ்செயல், நீதிதிறம்புதல். (உ-ம்.) "அக்கிரமத்தாற் குற்றமடித்துத் தீர்த்தச்சம்பண்ணி." (சி. சி. உ: கரு.) [அக்ரமம்: அ-எதிர்மறை. க்ரமம்-ஒழுங்கு. "கிரமம்" என்பதனுற் போந்தபொருள் எல்லாவற்றிற்கும் மாறுய பொருட்கண்வரும்.]

அக்கிரமாமிசம் — இரத்தாசயம், இரத்தாசயத்தின் மாமிசம். [அக்ரமாம்ஸ: அக்ர-பிரதானம். மாம்ஸம்-தசை.]

அக்கிரமி—கொடியவன்.

அக்கிரவருணம்-1.உயர்ந்தசாதி. [அக்ரவர்ண: அக்ர- முதல். வர்ணம்-சாதி.]

அக்கிரன் — முதல்வன், முந்தினவன். [அக்ர:]

அக்கிராகரம்— அக்கிராகாரம். [அக்ர-முதல். அகரம்-உறையிடம்.

அக்கிராசியம்—1.எடுக்கத்தகாதது,ஏற்றுக்கொள்ளப்படத்தகாதது. 2. கிரகிக்கப்படாதது. (உ-ம்.) "அக்கிராகியமானதேசொரூபமாம்." (சி. சி. பாயிரம். சிவாக்.) 3. சம்மதிபெருதது. [அக்ராஹ்ய: அ- எதிர்மறை. க்ராஹ்ய- கிரகிக்கத்தக்கது.]

அக்கிராந்தம்— 1. கடக்கப்படாதது. 2. செம்பு. 3. வெல்லப்படாதது. [அக்ராந்த: அ. எதிர்மறை. க்ராந்த-கடக்கத்தக்கது.]

அக்கிராரம் — 1. தலைமையான இடம். 2. பிராமணனுக்குச் சீவனத்திற்காகக் கொடுக்கப்பட்ட விளைநிலம் [அக்ரஹாரப]

அக்கிரியம்—1. முதலிலுண்டானது. (பிரமோப.) 2.சிறந்தது. (பிரமோப.) [அக்ரிய] 3. தொழிலற்றது- [அக்ரிய.]

அக்கிரியன்—1. சிரேட்டன். 2. தமையன். [அக்ரிய: அக்ர- முதல்.இய-ஒருவிகுதி.]3. முயற்சியற்றவன், மந்தன். 4. கிரியைவிட்டவன், யாதொருகருமமுஞ்செய்யாமல்விட்டவன்: (பகவற். கூ. க.) [அக்ரிய: அ-எதிர்மறை. க்ரிய- தொழிலுடையவன்.]

அக்கிருதன் — யோகாட்டகரிலொருவன். (வி. ணி.)

அக்கிரேவணம் — காட்டின் அருகு. [அக்ரேவணம்:அக்ரே-அருகில்.வநம்-காடு.]

அக்கிலீபதை—அலியன்மை. [அக்லீபதா: அ- எதிர்மறை. க்லீபதா- அலித்தன்மை.]

அக்கிலு—நெருஞ்சில். (கா. வைத்.)

அக்கு—1. அகில். (கா. வைத்.) 2. உகாமாத்துக்காய். 3. உருத்திராக்கம். (உ-ம்.) "அக்கையணிந்தவர்." (திருவானைக்கா. சோச்செங். ௬.) 4. எட்டிமரம். (கா. வைத்.) 5. எருத்துத்திமில். (பிங்க. ௩௦௩௬.) 6. எலும்பு. (உ-ம்.) "கக்கக்கை." (திருப்புகழ். ௫௩௧.) 7. ஒரு சாரியை. (உ-ம்.) "ஆனேயக்கேயிக்கே சாரியைமொழியே." (தொல். எழுத். ௧௧௯.)[இச்சாரியை,(உ-ம்) ௩-ம் எழுத்துக்கள் கெட்டன்றிவாராதென்பர். மேற்படி ௧உஅ.] (உ-ம்.) "தமிழநாகன்." "தாழக்கோல்." இவைகளிலே "அக்கு" என்பதன்று, "அ" என்பதே சாரியை என்பர் நன்னூலார். (நன். மெய். உஉ.) 8. கண். (உ-ம்.) "அக்குப்பிழை." (திருப்புகழ். ௫௭௩.) 9. சங்கு. (கா. வைத்.) 10. சங்குமணி. (உ-ம்.) "அக்கேதநவல்லார்பதிசேட." (கம்பர. ௬.) 11. பலகறை.

அக்குசை— மங்கலம் இழந்த பெண்களுள்ளே துறவுபூண்டு உபதேசம்பெற்றுத் தவஞ்செய்கிறவள். (உ-ம்.) "கன்னியிற் றுறவனனங்கள் கணவனிற்றுறவின், மன்னுமாரியாங்கனைகளுல்வாங்குமக்குசைகள்; என்னமூவகைப்பெண்டவப்பள்ளிகளெல்லாம்" (திருவிளையா. சமணரை. ௧எ.) [இது சமணபரிபாஷையில் வழங்குஞ்சொல்.]

அக்குமணி—சங்குமணி. (கா. வைத்.)

அக்குமாலை— உருத்திராக்கத்தினுற் கோக்கப்பட்டமாலை. (உ-ம்.) "அக்குமாலைகொடங்கையிலெண்ணுவார்."(தேவாரம். நமச்சிவா. சம்ப.)

அக்குரன் — இடையெழு வள்ளல்களில் ஒருவன்.

அக்குரு—விரல். [அக்ரு.]

அக்குருக்கி—கயரோகம்.

அக்குரூரன்—1.கிருட்டிணனுடைய தகப்பனுடன்பிறந்த ஒரு யாதவன். 2. குரூரமில்லாதவன்.

அக்குரோணி — உகஅஎ0 யானையும், ௬௫௬௧0 குதிரையும், உகஅஎ0 தேரும், ௧0௯௩௫0 காலாட்களுங்கொண்ட ஒரு சேனைத்தொகை. (உ-ம்.) "இருபத்தோராயிரத்தெண்ணூற்றெழுபதியற்றேர்களியானையஃதே,பொருவற்றபரிகளறுபத்தையாயிரத்தறு

நூற்றொருபான்போர்செய், திருமிக்கோரி லக்கமுடனொன்பதினாயிரத்து முந்நூற்றை ம்பான்சேர, நிருமித்தவகைநான்குமக்குரோ ணியென்றொருபேர் நிகழுமன்றே." (நல். பார. சிறப்பு. உரு.) ["அக்ஷௌஹிணி" என்னும் வடமொழி "அக்குரோணி" என மரீஇயிற்று. அக்ஷ- தேர். ஊஹிணி - கூட்டம்.]

அக்குரோதம்—குரோதமின்மை.[அக்ரோத: அ- எதிர்மறை.[க்ரோத- கோபம்.]

அக்குல்லி—1. உக்காரி. (கா. வைத்.) 2. சிற்றுண்டி.(கா.வைத்.) 3. பிட்டு. (கா.வைத்.)

அக்குள்—கக்கம். ["அஃகு" என்பது, "அச்குள்" என மருவிற்று.] (உ-ம்.) "அக்குளுக் குண்மாமிச கண்டத்தைப்போற் கட்டிகளை யுண்டாக்கும்." (சீவரட். ருசo.)

அக்குளு—அக்குளுத்தல். (உ-ம்.) "அக் குளுத்துப்புல்லலு மாற்றேன்." (கலித்தொகை. கரு.)

அக்கை—1. தமக்கை. 2. தாய்.[அக்காள்.]

அக்கோ—ஓர் அதிசய இரக்கச்சொல்.

அக்கோகிணி—அக்குரோணி. [அக்ஷ: ஊஹிணி.]

அக்கோடகம்— கடுக்காய். (கா. வைத்.) [அக்ஷோடக.]

அக்கோடம்—அக்கோடகம்.[அக்ஷோடு.]

அக்கோணி—அக்குரோணி. ["அக்ஷௌஹிணி" என்பதன் மரூஉ.]

அக்கோபம்—1. அசையாநிலை. 2. யானை கட்டுந்தூண். [அக்ஷோப: அ- எதிர்மறை. க்ஷோப- அசைவு.]

அக்கோலம்— 1. தேற்றாங்கொட்டை. (கா. வைத்.) 2. தேற்றாமரம்.

அக்கௌகிணி—அக்குரோணி. [அக்ஷௌஹிணி: அக்ஷ- தேர். ஊஹிணி-கூட்டம்.]

அக்ரகாரம்—அக்கிரகாரம். (உ-ம்.) "அந் தணருக்கங்கவத்ரமக்ரகாரம்." (திருநெல். சுவேத. அo.)

அக்ரபூசனை—முதற்பூசை, முதன்மரியாதை. (உ-ம்.) "ஆர்கொலோ வக்ரபூசனைக்குரியார்." (பாரத. இராய. ககஉ.)

அக்ரமாதிசயோக்தியலங்காரம்— முறை யிலுயர்வுநவிற்சியணி. (குவ. ௫௩.) [அக்ரம; அதிசய; உக்தி; அலங்கார.]

அக்ருத—பிரதிட்டாகலையிற்பிரகிருதிதத் வத்திலுள்ளனவெனச் சொல்லப்படும் எட் டுப்புவனங்களுள் ஒன்று. (சி-வி. கிரி. உக. உரை.)

அக்ரேதிதிடு—1. தமக்கைக்கு விவாகமா காமலிருக்கையில், தான் விவாகஞ்செய்து கொண்ட தங்கை. (பராசர. வரதாசா. பிரா யச்சி. க. உரு-உச.) 2. முன்விவாகஞ் செய்துகொண்ட ஒருத்தியை விவாகஞ்செய்த பிராமணன், அல்லது அரசன், அல்லது வைசியன். [அக்ரேதிதிஷு.]

அகக்கடவுள்—1. ஆன்மா. 2. ஆன்மா வின் உள்ளிருந்ததனைச் சேட்டிப்பிக்குங் கடவுள். 3. மனம். [அகம்- உள். கடவுள்- தெய்வம், தெய்வம்போல்வது.]

அகக்கண்—ஞானக்கண்ணாகிய அகத்துக் கண். (உ-ம்.) "அகத்துக்கண்கொண்டறிவ தேயாநந்தம்."

அகக்கனு—உள்ளிருக்குங்கனு.

அகக்கரணம்—அந்தக்கரணம், உட்கருவி. (உ-ம்.) "சமமகக்கரணதண்டம்." (சைவ. தத். கூ.) [அகம்- உள். கரணம்- கருவி.]

அகக்காழ்—1. உள்வைரம்.(உ-ம்.)"அகக் காழன"(பார்க்க.) 2.உள்வைரமுடைய மரம். 3. வச்சிரக்கல். [அகம்; காழ்- வைரம்.]

அகக்கருவி—1. உட்கருவி. 2. தேகசம் பந்தமாகிய ஆன்மாவினது உட்கருவி; அது பிருதிவிமுதலிய ஐந்துபூதங்களுஞ், சுரோத் திரியமுதலிய ஐந்து ஞானேந்திரியங்களுஞ், சத்த முதலிய ஐந்து தன்மாத்திரைகளும், வாக்குமுதலிய ஐந்து கன்மேந்திரியங்களும், மனமுதலிய நான்கு அந்தக்கரணங்களும், கால முதலிய எழு வித்தியாதத்துவங்களுஞ் சுத் தவித்தை முதலிய ஐந்து சுத்த தத்துவங்க ளும் என முப்பத்தாறுவகைப்படும். (திரு வால. ரு-வது. பாசலக்கணம். அகக்கருவி.)

அகக்காழன— உள்வைரமுடைய மரங் கள். அவை: இருப்பை, புளி முதலியன. (வரலாறு,) "அகக்காழனவே மரமெனமொ ழிப." (தொல். பொரு. கூசக.)

அகக்கூத்து— அகச்சுவையாகிய குணத் தின்வழி நிகழுங்கூத்து; அது தேசி, மார்க் கம் என இருவகைப்படும். (உ-ம்.) "குண த்தின் வழியதகக்கூத்தெனப்படும்." (குண நூல்.) (சிலப். அரங்கே. கஉ. அடியார்க்கு நல்லார் உரையும், அரும்பதவுரையும்.)

அகக்கூத்துக்கை—அகக்கூத்திற் காட்ட ப்படுங்கை; அஃது, எழிற்கை தொழிற்கை யென இருவகையினது; பொருட்கை கூட் டிமூவகையினதென்பாருமுளர். [அது பின் வருஞ் சூத்திரத்தினாற்பெறப்படும். அவை தாம், "எழிற்கையழகே தொழிற்கை தொ

ழிலே பொருட்கை கவியின் பொருளாகும் மே."] (சிலப். அரங்கே.கஅ.உரை.அடியார்).

அகங்கரம்—அகங்காரம். (உ-ம்.) "அகங்கரத்தால் வரும்." (ஞானவா. வைராக். கு.) [அஹம்- நான். காம்- செயல்.]

அகங்கரித்தல்-1.கர்வங்கொள்ளல்.(உ-ம்.) "அன்புடைய தம்முனடிவீழ்ந் தகங்கரித்தான்." (பாரத. கஎ-ம்போ. சுஉ.)

அகங்கரிப்பு—அகங்கரித்தல்.

அகங்களித்தல்— மனமகிழ்தல். (உ-ம்.) "அப்பார்சடையா னடித்தொண்டரகங்களிப்ப." (காஞ்சிபு. தழுவ. உகு.) அகம்-மனம். களித்தல்- மகிழ்தல்.]

அகங்களிப்பு—மனமகிழ்வு.

அகங்காரக்கிரந்தி—சமுசாரபந்தம்; அஃது இருபத்தொன்பது தத்துவங்களையும் ஒருமைப்பாடாகத்தானென்று சிவன் அபிமானிப்பது. (நாநா. வா.கு.) [அகங்காரம் - நானென்கை. கிரந்தி-கட்டு.] அஃது: இருபத்தொன்பது தத்துவங்களையும் ஒருமைப்பாடாக நானென்று ஆவரணசத்தியால் மறைக்கப்பட்ட சிவன் அபிமானிப்பது. (நாநா.சி.சு.) [ஸ்ஹஂகார: க்ரந்தி.]

அகங்காரசைதந்யவாதி—"அகங்காரவியாபாரமாய் இருக்கும் பிராணாதி வாயுக்களை யான்மா என்னும் ஞானத்தினாலே யதனை யறிந்தத்தத்துவம் அடைதலே மோக்ஷம்" என்னுமதத்தன். (சி. சி. உ: எ௩. உரை. மறை.) [அகங்காரம் - அகங்காரதத்துவம். சைதந்யம்- ஞானம். வாதி - சொல்லுகிறவன்.]

அகங்காரத்திரயம்—1. முக்கிய அகங்காரம், அமுக்கிய அகங்காரம், முக்கியாமுக்கிய அகங்காரம் என மூவகைப்பட்ட அகங்காரங்கள். 2. தைசத அகங்காரம், வைகாரிக அகங்காரம், பூதாதியகங்காரம் என மூவகைப்பட்ட அகங்காரங்கள். [இது பின்வரும் மேற்கோளாற் பெறப்படும். "தானும் (அகங்காரம்) மூன்றதாய் நிகழுமென்பர் பாங்கார் பூதாதிவைகாரிகந்தைசதந்தானென்றே."(சி. சி. உ: ருக.) [த்ரயம் - மூன்று.]

அகங்காரதத்துவம்—முப்பத்தாறு தத்துவங்களில் ஒன்று; அது பேரண்டத்திலிருப்பதாகப்பேசுங்கால் ஆகாய தத்துவத்திற்கு அப்பாலிருக்கும் ஒருதத்துவமென்றும்,கோடிகோடியோசனம் விஸ்தாரங்கொண்ட பிரமாணமுடையதென்றுஞ் சொல்வர். (சி. வி. ஞா. உக.) [ஸ்ஹஂகார: தத்வ.]

அகங்காரம்—1. அந்தக்கரணம்நான்கனுள் ஒன்று; அது புத்தியினால் நிச்சயித்துக் கிரகிக்கப்பட்ட விடயங்களை நான்செய்தேன் என்று நிச்சயித்தலும், பிராணவாயுவினால் அன்னபானாதிகளைக் கிரகித்தலும், ஒன்று செய்யுமாறு பிரவர்த்தித்தலும், யான் எனது என்றபிமானித்தலும் உடையது. (உ-ம்.) "திருவார்மநமே புத்தியொடுசித்த மகங்காரமுங்கூட, மருவுமந்தக்கரண நான்காம்." (நல். பார. கௌசிக. அ௬.) "ஆனதநுவதனிலநிலனையுமியக்கியாங்கார நீங்காத வகந்தைக்குவித்தா, யானலது பிறரொருவரென்னை யொப்பாரிப்புவியிலில்லையெனுமியல்பினதாயிந்திரியம்புலன்க, டானுகருமளவிலஃதின்மூந்தியுறும்." (சிவப்பிர. உ: உகு.) 2. கர்வம், நானென்றெழும்புகை. (சப்தஸ். ந.) அது நான் கடத்தையறிந்தேன் படத்தையறிந்தேனென்று புலப்பட்டவிஷயங்களைத் தொடர்ந்தறியும் அபிமானமாகிய கர்வம். (சி. வி. ஞா. கஎ. உரை.) 3. மனத்துக்கு மேலே பத்துப்பங்கு படர்ந்து தானுவட்டகருக் கிடமாய்உள்ள ஒரு தத்துவம். (த. போ. நசக.) [அஹங்கார: அஹம் - நான். காரம் - செய்தல்.]

அகங்காரவாதி— மனோமயகோசமே யான்மா என்று வாதிக்கு மதத்தன். (உ-ம்.) "அகங்காரவாதிகள் மனோமயகோசன் ஆன்மா என்பார்கள்." (சி. சி. ச: உ௩. உரை. மறை.)

அகங்காரான்மஞாநம்—(வைசேடிகம்)அகங்காரதத்துவமே யான்மா எனக்கொள்ளும் ஞானம். (உ-ம்.) "அகங்காரான்ம ஞானோபாயம் உபதேசிக்கும் வைசெடிகனுக் ககங்காரபுவநப் பிராப்திதானே மோக்ஷம்." (சி. சி. அ: கஉ. ஞா.) [அகங்காரம்- அகங்காரதத்துவம். ஆன்மா- உயிர். ஞானம்- அறிவு.]

அகங்காரான்மவாதி—அகங்காரமே யான்மா என்று வாதிக்கும் வைசேடிகன். (உ-ம்.) "அகங்காரான்மவாதியாகிய வைசேடிகனையும்." (சி. சி. ச: க. ஞா.)

அகங்காரி—செருக்குடையவன். (உ-ம்.) "வண்ணகங்காரிகை மற்றுமென்போற்பகர் வாரிலையென், றெண்ணகங்காரி." (முல்லையந். சுஉ.) [அஹங்காரீ.]

அகங்காழ்—அகக்காழ்.

அகங்கிரகத்தியாநம்— தியாகிக்கப்படுஞ் சொரூபத்தைத் தனக்கபேதமாகச் சிந்தித்தல். (விசார. உ०எ.)

அகங்கிரகோபாசனை—(தெய்வங்களைத்) தான் என்று பாவித்துச்செய்யும் உபாசனை. (உ-ம்.) "தெய்வங்களை யகங்கிரகோபாச்னை பண்ணுகிறான்." (சி. சி. அளவை. கஈ. சிவாக்.)

அகங்கிருதன்— கெர்வமுடையவன். (சப்தஸ்.) [ஸஹங்க்ருத: ஸஹம்- நான். க்ருத- பண்ணப்பட்ட. தன்னை மேலாக எண்ணுகிறவன் என்றபடி.]

அகங்கிருதி— 1. அகவிவகாரம். (உ-ம்.) "அகங்கிருதிநிரங்கிருதியுமுமல்." (வேதா. சூ. கசஅ.) 2. செருக்கு, நானென்கை. 3. அகங்காரதத்துவம். (சி. வி. ஞாந. கஎ.) [ஸஹங்க்ருதி: ஸஹம்- நான். க்ருதி- செயல்.]

அகங்கை—உள்ளங்கை. (உ-ம்.) "அகங்கையினவிர்மதியதனை." (காஞ்சி. திருக். கஉஈ.) [அஹம்-உள்.]

அகச்சந்தாநுவித்தசமாதி—ஆறு சமாதிகளில் ஒன்று; அது: சனித்துவிளங்கிய சச்சிதாநந்தமே யாத்துமா என்னுஞ் சிந்தனையை யகத்தில் அநுசரித்துவருதல். (உ-ம்.) "அசங்கசச்சிதாநந்த சுயம்பிரகாசசுவரூபமே தான் எனச் சிந்திப்பதே யகச்சத்தாநுவித்த சமாதியாம்." (வேதா. சூ. கருக. உரை. கசஅ.) அஹம் - உள். ஸத்தா - உண்மை [ஸநுவித்தம்- பதிந்தது. ஸமாயி - நன்கு சிந்தித்தல்.]

அகச்சந்தாநுவேதம்— அகச்சத்தாநுவித்தசமாதி. (வேதா. சூ. கருக. உரை. [அநுவேயம் - பதிந்தது.]

அகச்சமயம்—உட்சமயம்; சைவம், பாசுபதம், மகாவிரதம், காளாமுகம், வாமம், வைரவம் என்னும் ஆறுஞ் சைவசமயத்துக் குட்சமயங்களாம். (உ-ம்.) "அகச்சமயத்தொளியாய்." (சிவப்பிர. மங்கல. எ.) [சமயம்- மார்க்கம்.] (சிவஞானமுனிவர் பகுப்பின்படி.) பாஷாணவாதசைவம் முதல் சிவாத்துவித சைவம் ஈறாகிய ஆறும். "பாஷாணவாத சைவர் முதலிய அறுவரும் பொருளுண்மையெல்லாஞ் சித்தாந்தசைவரோ டொப்பக்கொள்ளும் அந்தரங்கவுரிமையுடையராயினும், அவ்வப்பொருள்கட்குக் கூறுந் தன்னியல்பு பொதுவியல்புமாத்திரையின் முரணுதலான் அவர் சமயம் அகச்சமயமென வேறுவைத்தெண்ணப்பட்டன." (சிவஞானபாஷ்யம். ுி-ம் சூ-ம் பக்கம்.)

அகச்சுட்டு—பெயர்ச்சொல்லின் அகத்து முதனிலையுறுப்பாய் அமைந்துநிற்குஞ் சுட்டெழுத்து. (நன். எழுத். கக. உரை. (உ-ம்.) "அவன்."

அகச்சுவை—நாடகரசத்தொன்று.

அகசியக்கூத்து—பகடிக்கூத்து; அஃது உள்ளதுபோல இல்லாததைக் காட்டும் வெளிவேடம். (ஒழிவி.)

அகசியகாரன்—விதூஷகன்.

அகசியம்—1. பகடிக்கூத்து. (உ-ம்.) "ஒரு பாலினேழிசையு முணர்த்தும் பாடலொரு பாலி னகசியங்கள்." (நல். பார. இராசசூ. கஎ.) 2. பரிகாசம். 3. வேடிக்கை. [ஹாஸ்ய:]

அகசு—1. இராப்பகல்கொண்டதினம். (சி. வி. யோக-கoரு)2. பகற்பொழுது. [அஹந்.]

அகசை—மலையிற்பிறந்தவள், பார்வதி. [ஸகஜா: ஸக- மலை. ஜா- பிறந்தவள்.]

அகஞ்சுகி—"நான் சுகியெனப்" பொருள் படும் ஒரு வடமொழி வாக்கியம். (சி. சி. எ: க. சிவாக்.) [ஸஹம் ஸுகீ: ஸஹம்-நான். ஸுகீ- சுகமுடையவன்.]

அகஞாநாமி—"நான் அறிவேன்" எனப் பொருள்படும் ஒரு வடமொழி வாக்கியம். (வி. ணி.) [ஸஹம்ஜாநாமி: ஜாநாமி- அறிவேன்.]

அகட்டுத்தே— விநாயகக்கடவுள். (அகடு- வயிறு. தே- கடவுள்.)

அகடநம்— 1. கேடு. 2. செய்யக்கூடாதது. [ஸவடநம்: ஸ- எதிர்மறை. வடநம்- செயல்.]

அகடம்—1. அநீதி. 2. சித்தியாகாமை. 3. பொல்லாங்கு. [அ- எதிர்மறை. கடம்- நீதி. வடம்- செயல்.]

அகடவிகடம்— உண்மையை மறைத்து வேறாகத்தோன்றும்படி காட்டுஞ் சாமர்த்தியம். [ஸவட- செய்தற்கரியது. விவடம்- மாறாகத்தோன்றுவது.]

அகடன்—1. துட்டன். 2. நீதியில்லாதவன். [அகடு-பொல்லாங்கு. அன்-ஒருவிகுதி.]

அகடிதகடநா— செய்தற்கரியதைச் செய்தல். (உ-ம்.) "அகடிதகடநாசாமர்த்தி."

அகடிதகடநாசமர்த்தன்— செய்தற்கரியதைச் செய்ய வல்லவன். [ஸவுடிதம்- செய்தற்கரியது. வடநா- செய்தல். ஸமர்த்த- வல்லவன்.]

அகடிதகடநாசமர்த்தை— செய்தற்கரிய காரியத்தைச் செய்ய வல்லமையுடையவள்.

(வி.ணி.) [வஜ்ரயோகினி - வல்லமையுடையவள்.]

அகடிதகடநாபடீயசி—அகடிதகடநாசமர்த்தை. (உ-ம்.) "அதிருசியமாய் இருக்கிற மாயையிற் திருசியமாய் இருக்கிற பிரபஞ்சம் அகடிதகடநாபடீயசிமாயா என்றுண்டாவதன்றி." (சி. சி. க: கசு. சிவா.) படீயஸி-வல்லமையுடையவள்.]

அகடிதம்—செய்தற்கரியது. [அ - எதிர்மறை. வடிதம்- செய்யப்படுவது.]

அகடியம்—அநீதி.

அகடு—1. உள். (உ-ம்.) "வண்டுபொறையுயிர்த்துச் செழுந்தோட்டகட்டினடைகிடக்கும்." (கூர்மபு. தக்கன்வேள். கஎ.) 2. நடுப்பக்கம். (உ-ம்.) "மதியகடுதோய்மாடகூடச்சிகரம்." (தாயு. சச்சி. சு.) 3. பொல்லாங்கு. (உ-ம்.) "அகடுசெய்ய" 4. வயிறு. (உ-ம்.) "அகடாராரல்லலுழப்பர்" (வள். கஉசு.)

அகடூரம்—கோணமை. [ஸுமன்ஸர: அ- எதிர்மறை. முஜுன்ஸ- கோணல்.]

அகடூரீ—பாம்பு. [அகடு - வயிறு. ஊரி - ஊர்வது. வயிற்றாலூர்வது.]

அகண்டகம்—முள்ளில்லாதது. [அகண்டக: அ- எதிர்மறை. கண்டகம்- முள்.]

அகண்டச்சுருதி—அகண்டத்தன்மையான பொருளுணர்த்தும் வேதம். (சைவப். கச) [அ-எதிர்மறை. கண்டம் - கூறு. ஶ்ருதி- வேதம்.]

அகண்டஞானம்— பூரணஞானம். (உ-ம்.) "அகண்டஞானத் தொலைவில் பரபதமெவர்க்குந்தோன்றுமாறு" (ஞானவா. சுக. உகூ.) [ஸுவண்ணு - பூரணம். ஜ்ஞாநா - அறிவு.]

அகண்டத்துவம்—தேசத்தினாலும், காலத்தினாலும், பொருளினாலுஞ் சின்னப்படாதிருக்குந் தன்மை. (வாசுதே. கக.) [ஸுவண்டம்- சிந்நப்படாதது. த்வம் - தன்மை.]

அகண்டபதம்— 1. அகண்டாகாரமான பிரமபதம். (உ-ம்.) "அழுத்துமலக்கற்பனை நீக்கியகண்ட பதத்திலிருவெனலும்" (ஞானவா. வேதாள. க.) 2. பகாப்பதம். (உ-ம்.) "வடமொழியகண்டபதத்திற்குப் பெயரும் மேற்பிரதமாவிபத்தி என்னும் முதல்வேற்றுமையுருபு முதலிய உருபுபெறுமாறுங்கூறுகின்றது" (பி. வி. எ.) [ஸுவண்ணு-பிரிவுபடாமை. வதம்- நிலை, சொல்.]

அகண்டபரிபூரணம்—எங்கும் நிறைந்திருத்தல். (உ-ம்.) "அகண்டபரிபூரணமாங் வாழி." (உபதேச. சிவகாட். சுo.) [ஸுவண்ணு- எங்கும், பரிபூரணம் - நிறைந்திருத்தல்.]

அகண்டபூரணம்— எங்கும் நிறைந்திருத்தல். (உ-ம்.) "அகண்டபூரணமாய் ஞானச்சோதியாய் நின்றமாயன்" (சி. சி. பர. பாஞ். மதம். க.) [ஸுவண்ணு- எங்கும். பூரணம்- நிறைவு.]

அகண்டம்— 1. எல்லாம். (உ-ம்.) "அண்டகூடமுமகண்டமுநெக்குவிட்டு" (நல். பாரத. உத்தா. கஅக.) 2. கண்டிக்கப்படாதது; கூறுபாடில்லாதது. (உ-ம்.) "அகளமாய் ஞானமேயா யகண்டமாயமர்ந்ததன்றே" (கோயிற்பு. பதஞ். சுகு.) 3. பூரணம். (உ-ம்.) "அன்று சடபாவனை நீங்கிய கண்டவறிவின்மையைப்பெறலாம்" (ஞானவா. உபசாந். கச.) [ஸுவண்ணு: அ - எதிர்மறை. வண்ணு- கூறுபாடு.] 4. மண்விளக்கு.

அகண்டவடிவம்- அகண்டாகாரசுவரூபம். (உ-ம்.) "அகண்டவடிவப்பரம்பொருளாம்." (ஞானவா. பிரகலா. சு.)

அகண்டன்—1. அருகன். 2. கடவுள். 3. கூறுபடாதவன். (ஞானவா. புசுண். கு. உரை.) 4. சிவன். 5. பூரணன். 6. விட்டுணு. [அ- எதிர்மறை. வண்ணு- கூறு.]

அகண்டாகண்டன்—பரப்பிரமம். [ஸுவண்ணு- எல்லாவற்றிற்கும். ஸுவண்ணு- ஈசன்.]

அகண்டாகாரஞானம்-பூரணஞானம். (உ-ம்.) (அஞ்ஞானமும்மனோவிருத்தியுமாகிய) "மூடநிலைகளையொருங்ககலப்பண்ணிப் பண்ணினவிடத்துச்சதோதயமாய் நின்றொளிர்வது சுயஞ் சைதந்நியமாதலால், அதனையதுவாக நின்றறிதல் அகண்டாகாரஞானம் எனப்படுவதாம்" (உபநிட. அ. உரை. சச்சி.) [ஸுவண்ணு- கண்டிக்கப்படாதது. ஆகாரம்- வடிவம். ஞானம்-அறிவு.]

அகண்டாகாரம்—1. அகண்டாகார விருத்திஞானம். (உ-ம்.) "ஒதரியவஞ்ஞானந்தனை யறியா வுணர்விதற்கோருறுதிமூலமாதன் மனவிருத்தியவையகற்றி யொளிதனையறியுமகண்டாகாரம்" (உபநிட. அ.) 2. எல்லைப்படாதவடிவம். (உ-ம்.) "அகண்டாகாரசிவபோகமெனும் பேரின்பவெள்ளம்." (தாயு. காடு. கூ.)

அகண்டாகாரவிருத்தி— அகண்டாகாரவிருத்திஞானம். (உ-ம்.) "பிரிவிலகண்டாகா

ரவிருத்தியிற் சாட்சியையறியாப் பெந்தநீங்கும்" (உபநிட. ௧௨.)

அகண்டாகாரவிருத்திஞாநம்—சாட்சியாயிருந்த கூடஸ்தரை யறியாதபடி மறைத்திருந்த அஞ்ஞாநத்தை நீக்கும் ஞாநம். (உ-ம்.) "மநோவிருத்திஞானத்தினு மேலாகப் பிரிவற்று விளங்கும் அகண்டாகாரவிருத்தி ஞாநத்தினால், கூடஸ்த சைதந்நியத்தையுணரவொட்டாமல் மறைத்துநிற்கும் பெநதம் ஆகிய அவித்தையை நீக்க அது நீங்கும்" (உபநி. ௧௨. உரை. சச்சி.)

அகண்டி—ஒருவாச்சியம்.

அகண்டிதம்— 1. இடையறுத்தொடர்புடையது. (உ-ப்.) "அகண்டிதோற்சவம்." 2. கண்டிக்கப்படாதது; கூறு செய்யப்படாதது. (உ-ம்.) "நின்மலமாயகண்டிதமாய்". (தாயு. ஆசை. ௯.) 3. மறுக்கப்படாதது. 4. முழுதும். [அவண்டித: அ - எதிர்மறை. வண்டிதம்- கண்டிக்கப்பட்டது, கூறுசெய்யப்பட்டது, மறுக்கப்பட்டது.]

அகண்டிதமூர்த்தி—கண்டிக்கப்படாத வடிவுடையோன். (உ-ம்.) "அகண்டிதமூர்த்தியாகச்சொல்லலாம்" (சி. சி. ௧: ௪௨. ஞா.) [அவண்டிதம்-கண்டிக்கப்படாதது. மூர்த்தி- வடிவுடையவன்.]

அகண்டிதன்—எங்குநிறைந்தவன். (உ-ம்.) "அகண்டிதனகம்பன்முத்தமிழ் மதுரைவாழ்முதல்வன்." (மதுரைப் பதிற் - ௭௦.)

அகண்டிதாகாரம்—கண்டிக்கப்படாத வடிவம். (உ-ம.) "போதபரிபூரண வகண்டிதாகாரமாய்" (தாயு. சிந்மய. ௬.) [அவண்டிதம்- கண்டிக்கப்படாதது. ஆகாரம்- வடிவு.]

அகணி—1. உள். 2. கடுக்காய். (கா. வைத்.) 3. சுக்கிலப்புரணிநஞ்சு. (கா. வைத்.) 4. தெங்கு பனை முதலியவற்றின் உள்நார். (கா. வைத்.) 5. நஞ்சு. (கா. வைத்.) 6. மருதநிலம். (உ-ம்.) "அகணிநாட்டுடன்." (கந்தபு. தெய்வ. ௯௯.) 7. வயல்.

அகணிதபஞ்சாங்கி— அலகிடாது மநக்கணிதமாய்ப் பஞ்சாங்கஞ்சொல்பவன்.

அகணிதம்— கணிக்கப்படாதது. [அகணித: அ- எதிர்மறை. கணிதம் - எண்ணப்பட்டது.]

அகத்தன்—1. இடத்தினன். (உ-ம்.) "ஆதவனெழுகிரி யகத்தராக்கினான்" (கந்தபு. சிங்க. ௩௩௮.) 2. கர்த்தா அல்லாதவன். (உ-ம்.) "அகத்தினிற்கத்தன் றன்னிலமைந்ததே ததனினிற்பாய்." (ஞாநவா. கசன். ௬.) [அ- எதிர்மறை. கர்த்ரு- கர்த்தா.]

அகத்தார்—1. இல்வாழ்வார். (உ-ம்.) "அகத்தாரே வாழ்வாரென் றண்ணாந்துநோக்கி." (நாலடி. ௬: ௧.) 2. உள்ளிடத்துள்ளார். 3. சுற்றத்தார். [அகம்- உள். அத்து- ஒருசாரியை. ஆர்- ஓர்விகுதி.]

அகத்தி—1. அகத்தியமுனிவன். [அகஸ்தி: அகம்- மலை. ஸ்தி- நிலைப்படுத்தினவன். மலையைப் பூமிக்குள்ளே யடங்கிநிற்கப்பண்ணினவன்.] 2. உள்ளிருக்கிறவள். [அகம்- உள்.] 3. ஒருமரம். (உ-ம்.) "நல்லகத்திவேரதனை நாடுங்கான்மேகமெனுஞ் சொல்லகலுந் தாகமறுந்தோகையே- மெல்ல மெல்ல - மெய்யெரிவுகையெரிவுமேகத்தினுள்ளெரிவு-மையெரிவும்போமென்றறி" (பதார்த். ௫௦௭.) [அகத்தி, சாழையகத்தியுஞ்சிற்றகத்தியுஞ் செவ்வகத்தியும் முதலாகப் பல திறப்படும். கா. வைத்.]

அகத்திடல் — உட்புகுத்தல். (உ-ம்.) "வாளினையுறையகத்திட்டான்." (கந்தபு. பாநுகோபன்வதை. ௧௩௨.) [அகம் - உள். இடல்- புகுத்தல்.]

அகத்திணை— 1. உள்ளத்தே நிகழ்கின்ற இன்பமாகிய ஒழுக்கம். அது, கைக்கிளை, குறிஞ்சித்திணை, பாலைத்திணை, முல்லைத்திணை, மருதத்திணை, நெய்தற்றிணை, பெருந்திணையென எழுவகைப்படும். (உ-ம்.) "திணையாவது ஒழுக்கம். இயல் - இலக்கணம். எனவே அகத்திணையியல் என்றது, இன்பமாகிய ஒழுக்கத்தின் இயல் என்றவாறாயிற்று." (தொல். பொரு. ௧. உரை. நச்.) [அகம்- உள்: திணை- ஒழுக்கம்.] 2. உரைப்பான் எடுத்த பொருளைக் காட்டற்குதவும் நியாயங்கள்; அப்பொருளின் அகத்தேதோன்றும் நிலை. அகத்திணையின் உறுப்புக்கள்; இயல்பு, வகை, பொது, சிறப்பு, உவமை, புறநிலை, எதிர்நிலை, கருவி, காரியம், காரகம், முன்னவை, பின்னவை எனப் பன்னிரண்டாம். (உ-ம்.) "அகத்திணையியல்பே யறைபடும் வகையே, பொதுச்சிறப்புவமை புறநிலை யெதிர்நிலை, கருவி காரியங் காரக முன்னவை, பின்னவையெனவாம் பிரிவீராறே" (தொன்னூல். ௧௫௦.)

அகத்திணைப்புறம்—அகத்திணைகள் ஏழனுள் அகனைந்திணைக்குப்புறமாகிய கைக்கிளையும் பெருந்திணையும். (தொல். பொரு. ௫௪. உரை. நச்.)

அகத்திணையியல்— இன்பமாகிய ஒழுக்கத்தினிலக்கணம். தொல்காப்பியப்பொருளதிகாரத்தின் முதல் இயல் இப்பெயர்த்து. (திராவிட. சக.)

அகத்தியம்— 1. அகத்தியமுனிவராற் செய்யப்பட்ட ஓர் இலக்கண நூல். இந்நூலிலே இயல், இசை, நாடகம் என்னு முத்தமிழ் இலக்கணங்களுஞ்சொல்லப்பட்டன. 2. அவசியம். (உ-ம்.) "ஆகையால் திதீக்ஷை யகத்தியம் வேண்டும்." (விசாரசா. கஉ.) 3. சொல்லத்தகாதது.

அகத்தியர்குழம்பு— அகத்தியமுனிவரால் விதிக்கப்பட்ட ஒருமருந்து. இதற்குப் பெருங்காயம், இந்துப்பு, இரசம், வெண்காரம், மனோசிலை, அரிதாரம், நேர்வாளம், ஓமம், கருஞ்சீரகம் என்னுஞ் சம்பாரங்கள் சேர்க்கப்படும். (கா. வைத்.)

அகத்தியவாசம்—பொதியமலை. [வாசம்- இருக்கும் இடம்.]

அகத்தியன்—ஒருமுனிசிரேட்டன். இவன் அகத்தியமெனப் பெயரிய இலக்கண நூலுக்கும் பிற தமிழ்நூலுக்கு மாசிரியன். பொதியமலை இவன் வாசஸ்தாநம். (உ-ம்.) "ஆரணங்களுணர்ந்த வகத்தியனுக்கு" (சிவப்பிர. மங்கல. ௪.) விந்தமலையைப் பிலத்திலே புகும்படி யடக்கியகாரணம்பற்றி யகத்தியன் எனப் பெயர்பெற்றனன் என்பர். [அகஸ்த்ய: அக - மலை. ஸ்த்ய - அடக்கியவன்.]

அகத்தியாச்சிரமம்— அகத்தியான்பள்ளி என்னும் ஊர். (உ-ம்.) "அற்றைநாண்முதலகத்தியாச்சிரமமென் றருட்பேர்- மற்றையப்பதிபெற்றது" (வேதாரணியபு. மணவா. உஎ.) [அகஸ்த்ய- அகத்தியமுனிவர். ஆச்ரமம்- முனிவர் வாசம்.]

அகத்தியான்—அகத்தியமுனிவன். (உ-ம்.) "அகத்தியான்பள்ளி."

அகத்தியான்பள்ளி— வேதாரணியத்திற்குச்சமீபமாயுள்ள ஒரு தலம். (தேவா. திருச்சே. ௪. சம்பந்த.) [அகத்தியான்-அகத்தியமுனிவன். பள்ளி- ஆச்சிரமம்.]

அகத்திருசியாநுவித்தம்— ஆறு சமாதிகளில் ஒன்று. அது, மனத்தின்கண் உள்ள இராகத்துவேஷாதிவிடயங்களுக்குத்தானே சாட்சியென்று சிந்திப்பது. (வேதா.சூ.கஙo. உரை.) [அகவிடயத்தில் அநுசந்தானம் ஆதலின் இப்பெயர் பெற்றது.]

அகத்தினள்—மனைவி. (உ-ம்.) "அகத்தினளேயைத்தனில்வருந்த." [அகம்- வீடு.]

அகத்தீசாறுகு—அகத்தியேசாறுகு. அது, பேராறுகு, சிற்றறுகென இருவகைப்படும். (கா. வைத்.)

அகத்தீடு—1. உள்ளிடுதல். 2. கைச்சுள்ளே விட்டணைத்தல். 3. தழுவுதல். [அகம்; அத்து; ஈடு- இடுதல்.]

அகத்துவம்— கர்ப்பக்கிரகத்தன்மை, வீட்டுத்தன்மை. (உ-ம்.) "ஒய்வுறுகோவிலகத்துவங்கொள்க." (விதாந. நல்வினை கஉ.)

அகத்துறுப்பு—1. உள்ளவயவம். 2. மனத்திற் குறுப்புப்போல்வதாகிய குணம். (உ-ம்.) "யாக்கையகத்துறுப்பன்பிலவர்க்கு" (குன். எக.) [அகம்; அத்து; உறுப்பு- அவயவம்.]

அகதங்காரன்—வைத்தியன். [அகத- ஆரோக்கியம். காரன்- செய்வோன்.]

அகதம்—1. ஆரோக்கியம். (உ-ம்.) "அகதங்காரன்" 2. மருந்து. [அகத: அ- எதிர்மறை. கத- நோய்.]

அகதன்—நோயிலி. [அகத: அ- எதிர்மறை. கத- நோயாளி.]

அகதி—1. தில்லைமரம். 2. புகலிடம் இல்லாதவன். (உ-ம்.) "அகதியைமறவனே." (திருப்புகழ். ருஉ.) 3. புகலிடம் இன்மை. 4. வேலமரம். (கா. வைத்.) 5. வறியவன். [அகதி: அ- எதிர்மறை. கதி- வழி, புகலிடம்.]

அகதிகன்—1. ஆதாரவற்றவன். 2. உதவியற்றவன். [அகதிக: அ-எதிர்மறை. கதிக- கதியுடையவன்.]

அகதிதகருமம்—"பசுவைப்பாலைக்கறந்தான்." என்பதிற்போலச் செயப்படுபொருட்பெயரும், அதனோடு சம்பந்தப்பட்டாரும் வேற்றுமையுருபுபெறற்பாலதாய்வரும்பொருட்பெயருந் தனித்தனி "ஐ" யுருபுபெற்றும் "ஆசிரியனை யையுற்ற பொருளை வினவினான்" என்பதிற்போலச் செயப்படுபொருட்பெயரும், அச்செயலைக் கருதும் வினைச்சொல்லோடேழாம்வேற்றுமையுருபு பெற்றணைதற்பாலதான பொருட்பெயருந்தனித்தனி "ஐ" யுருபுபெற்றும் இவ்வண்ணம் ஈருருபிணைய நிற்குஞ் செயப்படுபொருள். (உ-ம்.) "துணைநிலையகதிதந்துகன்மகமென்பர்" (பி. வி. கஉ. உரை.) [அகதித- சொல்லப்படாதது. கருமம்-செயப்படுபொருள்.]

அகதிநம்—சொல்லப்படாதது. [ஸ்கதி தம்: அ; கதிதம்- சொல்லப்பட்டது.]

அகதீகம்— ஊடு செல்லற்கரியது. [ஸம தீக: ஸ; மதீக- செல்லற்கியைந்தது.]

அகதேசி—உள்ளூரவன்.

அகதேசு—பிணியில்லாதவன்.

அகந்தை—1. அகங்காரதத்துவம்.(உ-ம்.) "எலுறுமகந்தையொன்றிலெய்து மைம்புல னும்" (கந்தபு. அண்ட். உ.) 2. செருக்கு. (உ-ம்.) "ஒழிந்த வானவர்குருதியுமகந்தையு ங்கொண்டு" (கந்தபு. கடவுள். எ.) 3. நான் எனுந்தன்னுந்தன்மை. (உ-ம்.) ("அகங்கா ரம்" பார்.) [ஸஹந்தா: ஸஹம்- நான். தா- தன்மை.]

அகநகர்—நகருள்.

அகநகை— இகழ்ச்சிநகை. (சிலப். கொ லைக்களக். சுசு. உரை.) [அகம்-உள். நகை- சிரிப்பு.]

அகநகைநந்தல்— இகழ்ச்சிநகை செய்தல், உள்ளே சிரித்தல். (உ-ம்.) "அருந்திறன் மாக்களையகநகைத்துரைத்து" (சிலப். கொ லைக்களக். சுசு.) [நகைத்தல்-சிரித்தல்.]

அகநம்—1. பாரமின்மை. 2. பெருமை யின்மை. [ஸவநம்: வநம்- பாரம்.]

அகநாடகவுரு—அகக்கூத்தின வண்ணம். அவை கந்தமுதல் பிரபந்தமீறாக இருபத் தெட்டாகும். (சிலப். அரங்கே. கச. உரை.)

அகநாடகம்—அகக்கூத்து. (சிலப். அரங் கே. கச. உரை.)

அகநாடு— உள்ளிருக்கும் நாடு. (உ-ம்.) "அகநாடு புக்கவரருப்பம்வெளவி" (பத்து. மதுரை. கசுக.) [அகம்; நாடு.]

அகநிட்டம்—இளையதல்லாதது, மூத்தது. [ஸகநிஷ்ட: ஸ; கநிஷ்ட- இளையது.]

அகநிட்டலோகம்— (பௌத்தம்.) பிரம லோகம் இருபதினுள்ளே பதினாறாம்லோ கம். (மணிமேகலை. பதிக. ரு.)

அகநிட்டன்—1. கநிட்டன் அல்லாதவன். 2. கௌதமபுத்தன். [ஸகநிஷ்ட: ஸ; கநிஷ்ட- இளையவன்.]

அகநிர்ணயம்— ஆசௌசவிதிகளைக்கூறும் ஒரு சம்ஸ்கிருதநூல்.[ஸவநிர்ணய: ஸவ- ஆசௌசம். நிர்ணய- நிச்சயம்.]

அகநிருவிகற்பசமாதி—(வேதாந்தம்) ஆறு சமாதிகளுள் ஒன்று; அது: திருசியாநுவே தம், சத்தாநுவேதம் என்னும் இரண்டும் நீங்கி மனங்கரைந்து நிச்சலமாய் நிற்றல். (உ-ம்.) "புகன்றதிருசியஞ்சத்தமெனுமிரண் டுமகன்றே-யிங்கசைவிறீபமெனப் பந்தமற விருத்தலிலங்குமகநிருவிகற்பசமாதி." (வே தா. சூ. கருக.) [அகம்- உள். நிர்விகல்பம்- பேதமின்மை. ஸமாதி-நன்கு தியானித்தல்.]

அகநிலை—உள்ளானநிலை. (உ-ம்.) "அக நிலைச் செயப்படுபொருள்." (பி. வி. கஉ. உரை.) 2. ஊர். (உ-ம்.) "அரசுமேம்படீஇய வகநிலைமருங்கின்." (சிலப். இந்திர. கசுக.) 3. கடவுள். [அகம்- உள். நிலை- நிற்றல், நிற் பது, நிற்பவன்.]

அகநிலைக்குறிஞ்சி—ஒருபண். [இது பின் வரும் மேற்கோளாற் பெறப்படும். "தென் னுறுபாலைகுறிஞ்சியேமருதஞ் செவ்வழியெ ன்னுநானிலத்திற் - பின்னகம்புறமேயருகி யன்மற்றைப் பெருகியலுறழவெண்ணிரண் டாய்- மன்னியயாதத்திசைகளில்." கந்தபு. சூரனரசி. உரு.]

அகநிலைச் செயப்படுபொருள்— வினைச் சொல்லின் அகத்தே செயப்படுவதாக நிற்கு ந்தொழில். அது, "வந்தான்." என்பதில் 'வருதலைச்செய்தான்' என இவ்வாறாய் இர ண்டனுருபு விரிந்து நிற்கப்பெற்ற கருமபா வம். (பி. வி. கஉ. உரை.)

அகநிலைச்செவ்வழி— ஒரு பண். (உ-ம்.) ("அகநிலைக்குறிஞ்சி." பார்.)

அகநிலைப்பசாசக்கை—மூவகைப்பசாசக் கைகளிலொன்று. அது, சுட்டுவிரனுனியிற் பெருவிர லகப்படவளைப்பது. "அவைதாம், சுட்டுவிரனுனியிற் பெருவிரலகப்பட வொ ட்டிவளைத்ததகநிலை." (சிலப். அரங்கே. கஅ. உரை.)

அகநிலைப்பாலை—ஒரு பண்.(உ-ம்.)("அக நிலைக்குறிஞ்சி." பார்.)

அகநிலைமருதம்—ஒரு பண்; அஃது உழை குரலாய கோடிப்பாலை. (உ-ம்.) "அகநிலைமரு தமும்." (சிலப். வேனில். ருக.)

அகப்பக்கம்— 1. அநுமானிக்கப்படும்பொ ருள்; அகத்து நிகழும் பக்கம். 2. உட்பக் கம்.

அகப்பகை—உட்பகை. (உ-ம்.) "புறப்ப கை கோடியின்மிக்குறினுமஞ்சா- ரகப்பகை யொன்றஞ்சிக்காப்ப." (நீதிநெறி. ருரு.) [பகை - விரோதம்.]

அகப்பட்டி—சுருங்கியபட்டி.(உ-ம்.)" அக ப்பட்டியாவார்" (வள். கoஎஉ. பரி.)

அகப்படல்—அகப்படுதல். (பார்.)

அகப்படுத்தல்—1. உட்படுத்தல். (உ-ம்.) "பரதவர் வலையினகப்படுத்தரிய." (பாரத. குரு. கoகு.) 2. பிடித்தல். (உ-ம்.) "மற்றவன் பெருமூரண்முருக்கிக் கையகப்படுத்துய்ப்பனால்." (கந்தபு. வச்சிர. சூ.) [படுத்தல்- ஆக்குதல்.]

அகப்படுதல்—1. உட்படுதல். (உ-ம்) "ஐயிருதிங்களெல்லையகப்படக் காண்பிர்" (சிந்தா. பதுமை. உசகூ.) 2. உள்ளே சிக்கிக்கொள்ளுதல். (உ-ம்.) "ஆசை வெள்ளங்கவர்ந்துகொண்டிழுப்ப வந்தக் கட்டிலேயகப்பட்டடையோ." (தாயு.சிவன்செயல். க.) 3. கிடைத்தல். (உ-ம்.) "அடியனேற்கிவர் தாமிங்கே யகப்பட்டாரச்சோவென்று" (பெரியபு. சண்ண. கoகூ.) 4. பிடிக்கப்படுதல். (உ-ம்.) "எழிலுடைக்கொண்டல்வண்ணனகப்படானெவர்க்குமென்றான்."(பாரத.கிருட். கசை.) 5. வசப்படுதல். (உ-ம்.) "தனஞ்சயன் கைவாள்வெரீஇ, யகப்படுந்தராதிபன்." (பாரத. வாரணா. அo.)

அகப்பணி—வீட்டுவேலை. [அகம் - வீடு. பணி- வேலை.]

அகப்பரம்—திண்ணை, வேதிகை. [அகம்- வீடு. பரம்- முன்.]

அகப்பற்று—1. நானென்னும்பற்று. அது, தானல்லாத உடம்பைத் தான் எனக் கருதி யதன்கட்செய்யும் பற்று. (உ-ம்.) "போமே யகப்பற்றென்றுந்தீபற" (அவிரோ. கச.) 2. மனவிருப்பு. [அஹம்- நான். அகம்- உள். பற்று- விருப்பு.]

அகப்பா—1. அகழி. 2. மதில். (உ-ம்.) "குட்டுவனகப்பாவழியநூறி" (இறைய. உகு. உரை.) 3. மதிலுண்மேடை.(பிங்க.௩௦௩௧.)

அகப்பாட்டு—1.அகநானூறென்னும்நூல். (புறநா. முகவுரை.) [இது அகப்பொருளைக் குறிக்கும் பாட்டென்றபடி.] (சிலப். கசு. பக்.) 2. அகப்பொருள்பற்றி வரும் பாட்டு; அகப்பொருளிலக்கணத்திற் கிலக்கியமாகச் செய்யப்படுஞ் செய்யுட்கோவை. (இலக்கண வின. ௫௩௨. கருத்துரை.)

* அகப்பாட்டுவண்ணம்— வண்ணச் செய்யுள்வகை யிருபதனுள் ஒன்று. அது, முடிந்ததெனக்காட்டும் ஈற்றசையேகாரத் தானன்றியொழிந்த உயிரீற்றானும் தொற்றீற்றானும் வந்திறுதியடி யிடையடிபோன்று நிற்பது. (உ-ம்.) "அகப்பாட்டுவண்ணம் முடியாத்தன்மையின் முடித்தன்மேற்றே" (தொல். பொருளு.) [அகம்-உள். பாடு-ஆதல். வண்ணம்- விதம். இறுதி உள்போலவருதல் என்றபடி.]

அகப்பாட்டுறுப்பு— அகப்பொருள்பற்றி வருஞ்செய்யுட்கோவையில் உறுப்புக்கள்: திணை,கைகோள்,கூற்று, கேட்போர், இடம், காலம், பயன், முன்னம், மெய்ப்பாடு, எச்சம், பொருள்வகை, துறை எனப் பன்னிரண்டுவகைப்படும். (உ-ம்.) "திணையே கைகோள் கூற்றே கேட்போ-ரிடனே காலம் பயனே முன்னம்- மெய்ப்பாடெச்சம் பொருள்வகை துறையென்- றப்பாலாறிரண்டகப்பாட்டுறுப்பே" (அகப்பொ. ஒழிபி. உ.)

அகப்பாடு—1. அகப்படுதல். 2. உண்ணிகழ்ச்சியானது. [அகம்- உள். பாடு- ஆதல், ஆவல்.]

அகப்பு—ஆழம்.

அகப்புறக்கைக்கிளை—ஒருவன் காயக்குறிப்பிற் கமைதியில்லாத இளமைப்பிராயத்தாள் பக்கத்தில், குறிப் பறியாதுசென்றவளோடு மேன்மேலுங் கூறுவது. (உ-ம்.) "காமஞ்சாலாவிளமையோள்வயின்- குறிப்பறிவுறாது குறுகியாங்கவளோ-டிறப்பக் கூறுவதகப்புறக்கைக்கிளை" (அகப்பொ. ஒழிபி. ௩௨.) [அகத்தே நிகழும் இன்பநுகர்ச்சிக்கொவ்வாத ஒருதலைக்காமம் என்றபடி.]

அகப்புறச்சமயம்— சைவசமயத்துக்குள்ளாகிய வேதசிவாகமங்களைப் பிரமாணமாகக்கொண்டும் அவற்றுக்கு விலக்கான கொள்கையைச் சாதிக்குஞ் சமயம். அது: பாசுபதம், மாவிரதம், காபாலம், வாமம், வைரவம், அயிக்கவாதசைவம் என்றாறுவகைப்படும். (சிவஞானபா. ௫.) "பாசுபதர் முதலிய ஐவரும், வேதஞ் சிவாகமம் இரண்டிற்கும் பொதுவகையாற் பிரமாணங் கொள்ளினும் அவ்விரண்டிற்கும் புறமாகிய பாசுபதமுதலிய நூல்கட்குச் சிறப்புவகையாற் பிரமாணங்கோடலானும், வேதஞ் சிவாகமமிரண்டினும் ஆகாவென விலக்கப்பட்டனவற்றை யாசரித்தலானும், அயிக்கவாதசைவர் வேதஞ்சிவாகமமிரண்டிற்குஞ் சிறப்புவகையாற் பிரமாணங்கொண்டு அவற்றின் விலக்கியன ஒழித்து விதித்தவழி யொழுகுவாராயினும், எல்லாப்பெருங் கேட்டிற்கும் மூலகாரணமாகிய ஆணவமலத்துண்மை கொள்ளாமையானும், அவ்வறுவகைச்சமயமும் அகப்புறச்ச

மயமென வேறுவைத் தெண்ணப்பட்டன." (சிவஞானபா. சு.)

அகப்புறத்திணை— அகனாகிய ஐந்திணைக்கும் புறனாகிய ஒழுக்கம். அவ்வொழுக்கம், கைக்கிளையும் பெருந்திணையுமென இருவகைப்படும். அவை: காந்தள், வள்ளி, சுரநடை, முதுபாலை, தாபதம், தபுதாரம், குற்றிசை, குறுங்கலி, இல்லாண்முல்லை, பாசறைமுல்லையெனப் பத்தாகவிரியும். "ஆய்ந்த வகப்புறமையிரண்டுமொயுங்காற்-காந்தள் கலி மடன் மாவேறுதல்- காமமிக்-காய்ந்தவர் வள்ளிவெறியாட்டாம் வாய்ந்த - சுரநடை மாதர் வருத்தஞ்சுரனுண் - முதுபாலை தன்னைமொழியின் மதுமலர்த் தார்க்- காவலன் வீயக்கவன்றததுவாகும்- பாசறைமுல்லை தலைமகன் பாசறைக்கண்- யாசறு மாதரையுள்ளுதல் - மாசற்ற- வில்லவண்முல்லையுமஃதேயாஞ் சொல்லுங்காற்- குற்றிசை கோல்வளையாளைத்- தலைமகன் - முற்றத்துறந்த துறவாங்குறுங்கலி- முற்றத்துறந்த தலைமகனை - முன்னின்று - பொற்றொடிமாதர் பழிதூற்றுங் குற்றந் தீர்- தாபதங்காதற்றலைமகனை- நீங்கிய-மேவருமாதர்நிலையாகுமேவருஞ்சீர்- நீக்கப்பட்டாளையுவந்ததலைமகன்- பார்த்துறூஉந்தன் மையதுவாந்தபுதாரம் - பத்துமகத்தின்புறம்" (வீரசோ. பொரு. கஉ. உரை.)

அகப்புறப்பாட்டு— அகப்புறப்பெருந்திணை. (உ-ம்.) "அகப்புறப்பாட்டுமிகப்பிலவவையே" (அகப்பொ. ஒழிபி. சக.)

அகப்புறப்பெருந்திணை—(அகப்பொருள்) மடலேறுதல் முதல் தபுதாரநிலையீறாயுள்ள கிளவிகளினுல் இயற்பெயர் கூறப்படாத தலைவன் புணர்ச்சிபெறாது வருந்துதலைக்கூறுதல். (உ-ம்.) "மடலேறுதலொடுவிடைதழாலென்றா - குற்றிசைதன்னொடுகுறுங்கலியென்றா - சுரநடைதன்னொடுமுதுபாலையென்றா- தாபதநிலையொடுதபுதாரநிலையெனப்- புகன்றவையியற்பெயர்பொருந்தாவாயி- னகன்றவகப்புறப்பெருந்திணைக்காகும்." (அகப்பொ. ஒழிபி. ருரு.)

அகப்புறப்பொருள்—அகப்புறத்திணை.

அகப்புறம்—அகமாகிய ஐந்திணைக்கும் புறமாகிய திணை; அவை: கைக்கிளையும் பெருந்திணையும். (உ-ம்.) "ஏற்றுமுதுபாலைபாசறைமுல்லையியன்றவள்ளி - தோற்றுஞ் சுரநடையில்லவண்முல்லை தொல்காந்தளன்றி - மாற்றுங்குறுங்கலி தாபதங்குற்றிசைகைக்கிளையோ - டாற்றும்பெருந்திணையாந்தபுதாரமகப்புறமே. (வீரசோ. பொரு. கஉ.) "அகமென்பது நடுவினின்ற ஐந்திணையாதலின் கைக்கிளையும் பெருந்திணையும் அவற்றின் புறத்தினிற்றலின் அகப்புறமென்று பெயர் பெறுதலும் பெற்றும்." (தொல். பொரு. ருசு. நச்சி.)

அகப்புறமுழவு— எழுவகை முழவுகளுள் ஒன்று; அது: தண்ணுமை, தக்கை, தகுணிச்சம் முதலாகப் பலவகைப்படும். (சிலப். அரங். உஎ. உரை.)

அகப்பூ—இதயகமலம். (உ-ம்.) "பெருவெண்டிங்கண் மாலகப்பூ மலைந்துபெட்பாகுகின்ற" (சிந்தா. கநக. கoசு.) [அகம்- மனம். பூ- புட்பம்.]

அகப்பேய்ச்சித்தன்—"அகப்பேய்ச்சித்தர் பாடல்" என்னும் நூல்செய்த ஒரு சித்தன். [தன்னூலில் "அகப்பேய் அகப்பேய்" என்று பலதரமும் வரப்பாடினமையால் அகப்பேய்ச் சித்தன் எனப்பட்டான்.]

அகப்பை—

அகப்பொருட்கைக்கிளை—காமம் நுகர்தற்கமைந்த இளமையையுடைய தலைமகளிடத்துண்டாகிய குறிப்பினைத் தானறியுமளவுந் தலைமகன் அவளைச் சாராது நின்று நெஞ்சொடு சொல்லுதல். (அகப்பொ. அகத். உஅ, உகூ.)

அகப்பொருட்கோவை— பிரபந்தவகைகளுள் ஒன்று; அது: முதற்பொருளுங், கருப்பொருளும், உரிப்பொருளும் பொருந்திக் களவொழுக்கத்தையும், கற்பொழுக்கத்தையுங்கூறுதலே யெல்லையாகக்கொண்டு திணைமுதலாகத் துறையீறாகச் சொல்லப்பட்ட அகப்பாட்டுறுப்புப் பன்னிரண்டுந் தோன்ற நானூறு கட்டளைக்கலித்துறையாகப் பாடப்படுவது. (உ-ம்.) "முதற்பொருள் கருப்பொருளுரிப்பொருண்முகந்து- களவுகற்பெனும் வரைவுடைத்தாகி - நலனுறுகலித்துறை நானூறாக-வாறிரண்டுறுப்புமுறின்றிவிளங்கக்- கூறுவதகப்பொருட்கோவையாகும்" (இலக்கணவி. அகசு.)

அகப்பொருட்டுறை— அகப்பாட்டுறுப்புக்கள் பன்னிரண்டனுள் ஒன்று; அது: உரைப்போருங் கேட்போருமின்றிக் கவிக்கூற்றாகச்சொல்லப்படுவது. "சொல்லியவல்லவொன்றினுமவற்றினோ - டொல்லும்வகைதேர்ந்துணர்த்தியல்வழாமை - யுரைப்போர் கேட்போருண்மையின்றி- யுரைக்குங்கவியேயுரைப்பது துறையே" (அகப்பொ. ஒழிபி. உ௫.)

**அகப்பொருட்பெருந்திணை**—அகத்தின்கண் உள்ள இன்பத்தைச் சிலநாள் நுகர்ந்த தலைவனுந் தலைவியும் பின் இடைக்காலத்து நுகராமைக்கான இடையூற்றுக் கூற்றுக்களைக் கூறுவது. (உ-ம்.) "அகன்றுழிக்கலங்கலும் புகன்றமடற்கூற்றுங்- குறியிடையீடுந்தெளிவிடைவிலக்கலும் - வெறிகோள்வகையும்விழைந்துடன்போக்கும்-பூப்பியலுரைத்தலும் பொய்ச்சூளுரையுந்- தீர்ப்பிலூடலும்போக்கழுங்கியல்பும்- பாசறைப்புலம்பலும்பருவமாறுபடுதலும்-வன்புறையெதிர்ந்துமொழிதலுமன்புறு-மனைவியுந்தானும்வனமடைந்துநோற்றலும் - பிறவுமகப்பொருட்பெருந்திணைக்குரிய" (அகப்பொ. ஒழிபி. நுச.)

**அகப்பொருள்**—1. அகப்பொருளிலக்கணத்திற் கிலக்கியமாகவருஞ்செய்யுட்கோவை. (உ-ம்.) "பயந்தோன்றன்னையுயங்குநோயறிவோர் - குரவரயலோர்சேரியோரென்றிவர்-முகத்துரைநிகழாவகப்பொருளகத்தே"(அகப்பொ. ஒழிபி. சு.) 2. உட்பொருள். 3. சிற்றின்பம். (உ-ம்.) "5"பார். 4. பொருளிலக்கணவகையிரண்டனுள் ஒன்று; அது, புனைந்துரையுலகியலெனும் இரண்டுதிறத்தானுங்கைக்கிளையைந்திணை பெருந்திணையென்னும் எழுவகைகளையும் அமைத்தகப்பாட்டு நூல் செய்யு முறையைக்கூறுவது. இதில், குறிஞ்சி பாலை முல்லை மருதம் நெய்தல் ஆகிய ஐந்து நிலங்களிலும் வசிப்பவர்க்குரிய பொதுப்பெயர்களுந் தொழிலும் உணவும் அவர்கள் வணங்குந் தெய்வமும் அவ்வந்நிலங்களுக்குரிய விலங்கு புள் மரம் இவைகளும் பிறவுஞ்சொல்லப்படும். (உ-ம்.) "மலர்தலையுலகத்துப் புலவோராய்ந்த - வருந்தமிழகப்பொருள் கைக்கிளையைந்திணை - பெருந்திணையெனவெழு பெற்றித்தாகும்" (அகப்பொ. அகத்தி. க.) 5. வீட்டிலுள்ள பொருள். (உ-ம்.) "அகப்பொருடமக்கருளுவார்க்கஃதுநல்கி-யுகப்புறுபரத்தையர்கள்." (தணிகை. நக. எஅ.)

**அகம்**— 1. அகக்கூத்து. (உ-ம்.) "அகத்தெழுசுவையானகமெனப்படுமே" (சயந்த நூல், சிலப். அரங். கஉ. உரை.) 2. அகங்காரம். (உ-ம்.) "அகமறுவுணர்வின்றாயும்" (ஞானவா. சுகர். அ.) [அஹம்] 3. அகநானூறென்னும் நூல். (உ-ம்.) "கற்றறிந்தார்சொல்லுங்கலியோடகம்புறமென் - றித்திறத்த வெட்டுத்தொகை" (புறநா. முகவுரை.) 4. ஆகாயம். (தைல. பாயிர. உக.) 5. ஆசௌசம். (உ-ம்.) "அகமறநூற்றெட்டாகுதி மூலத்தாக்கி" (திருவானை. கோச்செங். எக.) [சுவஸ.] 6. ஆழம். 7. இடம். (உ-ம்.) "அருவியஞ்சாரலகத்து" (வாண. உரு.) 8. இருப்பிடம், வீடு. (உ-ம்.) "அந்தகாரத்தையோரகமாக்கி" (தாயு. பரிபூரண. கo.) 9. உபத்திரவம். [அகம்.] 10. உள்ளிடம். (உ-ம்.) "அகம்புறநிறைந்தசோதியாய்" (தாயு.சிவன்செயல்.) 11. ஒருமரம். (கா. வைத்.) 12. ஒருவனுமொருத்தியுங்கூடுங்காலத்துப்பிறந்ததோரின்பம். (தொல். பொரு. க. உரை. நச்சி.) [அகத்து நிகழ்வதனையகமென்றதாகுபெயர்.] 13. ஒருவிகுதி. (உ-ம்.) "நாடகம்" [நட்- அகம்.] "மன்மமையகம்"(வீரசோ.தாது. சு.) 14. ஏழாம்வேற்றுமைச் சொல்லுருபு.(உ-ம்.)"கண் கால் புற மகம்"[எயிலகம் புக்கான்] (தொல். சொல். அஉ.) 15. குணம். 16. சரீரம். (உ-ம்.) "அகத்தெலும்பு முரித்திடுவர்" (சிவதரு. சுவர்க். கசகூ.) 17. சீவன். (உ-ம்.) "தேரினகமெனுஞ்சத்தமெம்மலமுமிலீர் சீவர்க்கிடுகுறிவாசகம்" (சூத. எக்கி. பூ. எ: கூ.) 18. சூரியன். [சுஸ்ஹ] 19. தாகியம். (உ-ம்.) "மகபதிதனக்கு மன்னன்வருவிழா நடத்தலாலே யகமதுகுறைவிலாதாய்" (நல். பார. வியாசருற். அ.) 20. துக்கம். [சுவஸ.] 21. நான். (உ-ம்.) "முல்லைத்தண்பதியெந்தாயகங்கைக்கிளையாற்பயன்சோடலத்தன்மையதே" (திருமுல்லை. கக.) [சுஹம்] 22. பகல். (உ-ம்.) "ஈரேழ்நாளகத்தெல்லைநீங்கி" (சிலப். பதிக. ருக.) [சுஹநு.] 23. பள்ளம். 24. பாம்பு. [சுஸ: சு- எதிர்மறை. ஸ்ஸ- போதல்.] 25. பாவம். (உ-ம்.) "விருப்பொடேயுழுதொழிலகமறக்கலைமேலோன் - றருப்பைநீர்நிலத்தையன்மேற் றெளித்தமைதகுமால்." (இரகு. நாட்டு. நஉ.) [சுவஸ.] 26. பூமி. (பிங்க. நூoருஉ.) 27. மனம். (உ-ம்.) "பொய்யிலாவகமும் வாய்மையும்" (தாயு. பொன். எச.) [அகம் என்னும் உள்ளிடப்பெயர் ஆகுபெயராய் மனத்திற்காயிற்று.] 28. மரம். (பிங்க. நூuருஉ.) [சுஸ்ஸ.] 29. மலை. (உ-ம்.) "விறற்கொள்வாகு விடுத்தன கல்லகம்" (கந்தபு. நகரழி. எo.) [சுஸ: சு- எதிர்மறை. ஸ்ஸ- போதல்.] 30. மார்பு. (உ-ம்.)"அகந்கனிவிணைமுலையெதிர்பொர" (திருப்பு. ரு.)

**அகம்படித்தொண்டு**—உள்ளாகநின்றுசெய்யுந்தொண்டு. (உ-ம்) "அங்கணர் கோயிலு

ள்ளாரகம்படித்தொண்டுசெய்வார்." (பெரியபு. தில்லைவா. ௬.)

**அகம்படிமை** — அகம்படித் தொண்டு. (உ-ம்.) "நிருத்தனருட்செல்வமலியகம்படிமைத்திறலினர்தம்பதம்போற்றி" (கோயிற்பு. பாயிர. ௧௩.)

**அகம்படியார்**—உள்வேலைக்காரார். ஒருசாதியார்; இவர்கள் அரசர் வீடுகளிலுந் தேவாலயங்களிலும் ஏவல்செய்பவர்.

**அகம்பதவாச்சியம்**—அகமென்னும் பதத்தாற்சொல்லப்பட்ட பொருளாகிய ஆன்மா. (சி. சி. ௬: எ. ஞாந.) [அஹம்-நான். வசும்- சொல். வாச்யம்- சொல்லப்பட்டது.]

**அகம்பன்**—அசைக்கப்படாதவன். (உ-ம்.) ("அகண்டிதன்" பார்.) [கம்பம்- அசைவு.]

**அகம்பாவம்**—செருக்கு, நானென்னுமெண்ணம். (உ-ம்.) "மிகுந்த வகம்பாவமிறைந்து" (ஞாநவா. ஃவரா. ௪௩.) [அஹம்பாவ: பாவம்- எண்ணம்.]

**அகம்பிரதமர்**—என்னை முதலாகவுடையவர். [நானுமென்போலிகளும் என்றபடி.] (உ-ம்.) "பின் அகம்பிரதமர்க்கும்" (சி.சி.௪: ௬அ. ஞாந.) [ப்ரதமர்- முதலானோர்.]

**அகம்பிரதமிகா**— 1. முந்திக்கொள்ளவேண்டுமென்றோடுகை. 2. பெருமைபாராட்டுகை. [ப்ரதமிகா- முன்னுக்குப்போகை.]

**அகம்பிரமமெனல்**—சிவோகம்பாவனைசெய்தல். (உ-ம்.) "அமலனைத் தன்னுட்கண்டகம்பிரமமென்றே" (சைவச. ஆசாரி.௨௩.) [ப்ரஹ்ம- கடவுள்.]

**அகம்பிரமவாதி**— நானே பிரமமென்று வாதிக்கிறவன். (சிவப். எ. வியாக்.)

**அகம்பிரமாஸ்மி**— நான் பிரமமாயிருக்கிறேனெனப் பொருள்படும் ஒரு யசுர்வேத மகாவாக்கியம். (கைவல். சந்தே. ௧௬௬. உரை.) [ப்ரஹ்ம - கடவுள். அஸ்மி - இருக்கிறேன்.]

**அகம்மியம்**— 1. அணுகக்கூடாதது. 2. அறியக்கூடாதது. (உ-ம்.) "பிரத்தியக்ஷாதிபிரமாண சதுட்டயங்களிலு மகம்மியமாதலாலே" (சி. சி. அளவை. உ. சிவாக்.) [அகம்ய: கம்ய- அணுகத்தக்கது, அறியத்தக்கது. 3. ஒரெண்.

**அகம்மியா**—அகம்மியை. (உ-ம்.) "அகம்மியாகமநம்."

**அகம்மியாகமநம்**—அகம்மியையோடுபுணர்தல். [அகம்யாகமநம்: கமநம்_புணர்தல்.]

**அகம்மியை**— 1. இழிகுலப்பெண். 2. புணர்ச்சிக்குத் தகுதியற்றபெண். [அகம்யா: அ- எதிர்மறை. கம்யா- புணரத்தக்கவள்.]

**அகமநம்**— 1. அடையாமை. 2. நடவாமை. 3. புணராமை. 4. போகாமை. [அகமநம்: அ- எதிர்மறை. கமநம்- போதல், அசைதல், அடைதல், புணர்தல்.]

**அகமம்**—1. மரம். 2. மலை. [அகம: கம- போதல்.]

**அகமமரம்**— வெள்வேலமரம். (கா. வைத்.)

**அகமருடணதீர்த்தம்**— அகமருடணஸ்நாநத்துக்காகிய நீர்.

**அகமருடணஸ்நாநம்**— அகமருடணத்தோடு கூடிய ஸ்நானம்.

**அகமருடணம்**— நீர்விடப்பட்ட வலப்பக்கத்துள்ளங்கை மூக்கிற்பிடித்திருக்குவேதத்திலே பத்தாம்பாகத்துள்ள ௧௯௦-வதுசுலோகத்தை நீருள்ளே நின்று செபித்துப் பாவத்தை நீக்குதல். [அகமர்ஷணம்: அகம்-பாவம். மர்ஷணம்- துடைத்தல்.] (உ-ம்.) "முன்னுபவாசம் புரிந்து முழங்குங்கண்டத்துணை நீருள்-மன்னுநின்று மூன்றுதரமருவகமருடணஞ்செபிக்கில்" (சூத. எக்கி. பூ. ௬௨: ௧௩.) அங்கநியாசஞ்செய்து இடக்கையிலே சலத்தைவிட்டு வலக்கையால் மூடிக்கொண்டு ஹம், யம், ரம், லம், வம். என்று மூன்றுதரம் அபிமந்திரித்து மூலமந்திரத்தையுச்சரித்து ஒழுகும் நீர்த்துளிகளினால் எழுதரந் தலையிலே தெளித்து மிஞ்சியநீரை வலக்கையிலே விட்டுத் தேஜோரூபத்தைத் தியானித்து இடைகலையினலிழுத் துடம்பினுந்தர்ப்பாவத்தைக்கழுவிச் சழுவியநீர் கருநிறமடைந்ததாகப் பாவித்துப் பிங்கலையினலே வெளியிலே விட்டுத்தன்முன்னே கற்பித்துக்கொள்ளப்பட்ட வச்சிரசிலையிலே பாவபுருஷவடிவமாகிய அந்த நீரை விட்டுவிடுதல் அகமர்ஷணம் என்னுங்கிரியையென்று தந்திரசாரத்திற் சொல்லப்பட்டது. (வாச.)

**அகமருடம்**—1. அகமருடணஸ்நாநம். (உ-ம்.) "ஆராதவிருப்பினலகமருடம்படிய" (பெரியபு. திருஞாந. ௬௦.) 2. அகமருடணமந்திரம். (உ-ம்.) "ஞானதடத்தினிலகமருடத்துடனுடு

ற்றோர்" (சேதுபு. சாத்தியா. ச.) [ஸ்வம - பாவம். க்ஷம - அழித்தல்.]

அகமலர்ச்சியணி—ஓரலங்காரம்; அஃது: ஒன்றின் குணத்தால் மற்றொன்றின் குணமும் ஒன்றின்குற்றத்தால் மற்றொன்றின் குற்றமும் ஒன்றின் குணத்தால் மற்றொன்றின் குற்றமும் ஒன்றின் குற்றத்தால் மற்றொன்றின் குணமும் வருணிக்கப்படுவது. இதனை வடநூலார் உல்லாசாலங்காரம் என்பர். (குவ. கூக-வது.)

அகமாட்சி—மனையறத்திற்குரிய நற்குண நற்செய்கைகள். (உ-ம்.) "அனையவனுக்குயிரனையாளொருத்தி யகமாட்சி புரந்தளிப்பான்" (உபதேச. சூராதி. எ.) [அகம்- மனை. மாட்சி- மகிமை.]

அகமார்க்கநடம்—மெய்த்தொழிலாற் செய்யுங்கூத்து.

அகமார்க்கம்— 1. அருமையிற் பாடல். அது: வாய்திறவாமற் கீழ்க்குரலெடுத்துப்பாடுதல். (பிங்கல. கசசு௦.) 2. உள்வழி.(உ-ம்.) "மூச்சதாமூலாதாரங்க ளகமார்க்கமறிந்து" (சி. சி. அ: உக. உரை. நிரம்ப.) 3. மந்திரக்கிரமம். (சி.சி.அ: உக. உரை. சுப்பிர.) 4.மெய்த்தொழிலாற்செய்யுங்கூத்து. (உ-ம்.) "மெய்க்கூத்தாவது தேசி வடுகு சிங்களமென மூவகைப்படும். இவை அகச்சுவைபற்றியெடுத்தலின் அகமார்க்கமென நிகழ்த்தப்படும்" (சிலப்.அரங். கஉ. ஆடலாசிரி.உரை.) [அகம்- உள். மார்க்கம்- வழி.]

அகமான்மா—நானே யான்மா என்று பிரமத்தின் வேறாகத் தன்னைக்காண்போன். (உ-ம்.) "அறிவுடையோனகமான்மாவொடு வருசம்பந்தம்" (வேதா. சூ. கறுக.) [ஸஹம ஆத்மா.]

அகமிதம்— நான் இது என்பது. (உ-ம்.) "உளமற்றகமிதமறவொன்றதாய்" (வேதாரணியபு. வரன்மு. ரு௦.) [ஸஹம் - நான். இதம் - இது.]

அகமுகம்—அந்தர்முகம். (உ-ம்.) "அகமுகமாந்தொடர்பால்" (ஞானவா.சுரகு. கஉ.)

அகமுழவு—எழுவகைமுழவுகளுள் ஒன்று. அது உத்தமகருவியான மத்தளம், சல்லிகை, இடக்கை, கரடிகை, பேரிகை, படகம், குடமுழாவெனப்பலவகைப்படும். (சிலப். அரங். உஎ. உரை.)

அகர்— பகல். (தொல். எழுத். மொழிமாபு. கஎ. உரை. இளம்.) [இது அஹந் என்னும் வடமொழித்திரிபு. அகருபவாஸம் என்பதிற்போலப் பிறசொல்லோடு சேர்ந்தன்றித்தனித்துவாராது.]

அகர்ணம்—1. செவிடு. (வாச.) 2. பாம்பு. (வாச.) [அகர்ண: அ- எதிர்மறை. கர்ணம்- காது.]

அகர்த்தநன்— குறள் வடிவமுடையவன். [அ- எதிர்மறை. கர்த்தநம்- துண்டுபடுத்தல்.]

அகர்த்தவ்வியம்—செயற்பாலதல்லாதது. (உ-ம்.) "கரையும் விதிகிடேதவாக்கியங்களுரைத்திடுங்காற் கர்த்தவ்விய வகர்த்தவ்விய விடயமாயினவால்" (சூத.எக்கி.பூ. ச௦: உ௦.) [அகர்த்தவ்விய.]

அகர்த்தன்—கர்த்தனல்லாதவன்.

அகர்த்தா—கர்த்தாவல்லாதவன். (உ-ம்.) "நான் அசங்கன அகர்த்தா அபோக்தா என்கிற நிச்சயபலன் ஞானிக்குண்டு" விசாரசாகர. ௬சரு.) [அ- எதிர்மறை. கர்த்ரு.]

அகர்த்திருத்துவம்—கடவுளுடைய பிரபுத்துவசாமர்த்தியகுணங்கள் மூன்றனுள் ஒன்று; அது கர்த்திருத்துவம் நீங்கிநிற்றல். அஃதாவது, தநுகரண புவநபோகங்களைக் கூடிக்கர்மாநுசாரப்பிரகாரம் ஆத்மாக்கள் பிரேரிக்கும்படி பிரேரகஞ்செய்தும் அவற்றிற் பற்றின்றித் தனியேதானிருத்தல். (உ-ம்.) "கர்த்திருத்துவமோடகர்த்திருத்துவம் பின்னந்நிதாகர்த்திருத்துவமே -யத்தன்மெய்ப் பிரபுத்துவவலி" (வேதாந். சூ. சஎ.) [கர்த்திருத்துவம்- செய்வோன்றன்மை.]

அகர்த்திருவாதம்—சிருட்டிகர்த்தா இல்லையென்று வாதித்தல். (சி. சி. பரபக்ஷ. சௌத்திராந்திகன்மதம். க. உரை.) [அ-கர்த்ரு வாத.]

அகர்நாதன்—சூரியன். (வாச.) [ஸஹர்நாத: ஸஹந்- பகல். நாத- தலைவன்.]

அகர்ப்பதி—சூரியன். (சப்த.) [ஸஹர்பதி: ஸஹந்- பகல். பதி- தலைவன்.]

அகர்மகத்திருப்பிரயோகம்— அகர்மகர்த்தரிப்பிரயோகம். இது, செயப்படுபொருள் குன்றியவினைமுதலையுடைய வாக்கியம்.

அகர்மணி— சூரியன். [ஸஹர்மணி: ஸஹந்- பகல். மணி- இரத்திநம்.]

அகர்மம்— 1. செயலில்லாமை. 2. தகாதசெயல். [ஸகர்ம: அ- எதிர்மறை. கர்மம்- செயல்.]

அகர்மி—கர்மமில்லாதவன். (பௌட்.பசு. உசு.) [ஸகர்மி: அ- எதிர்மறை. கர்மி- கர்மமுடையவன்.]

அகர்முகம்— வைகறை. (உ-ம்.) "ஆறுமடிவிலகர்முகமப்பாலெருக்கு" (தைல. பாயிர. ருசு.) [ஸஹர்முகம்: ஸஹ ந்-பகல். முகம்- தொடக்கம்.]

அகரம்— 1. "அ"என்னுமெழுத்து. [அ; கரம்- ஒருசாரியை.] 2. இரசம். (கா.வைத்.) 3. இறையின்மை. [கரம்- இறை.] 4. ஊர். (உ-ம்.) "அகரமுல்லையள்ளார்."(முல்லையந்- எஎ.) 5. ஒற்றெழுத்தின் சாரியைகளுளொன்று. 6. கையின்மை. [கரம்- கை.] 7. செயலின்மை. [கரம்- செயல்.] 8. பாரப்பனச்சேரி. 9. மருதநிலத்தார். 10. வீடு. (உ-ம்.) "அகரங்கள் பற்பலவு மாலயங்கள் பற்பலவும்" (நல். பாரத. கிருட்டிண. கூகூ.) [ஸமாரம.]

அகராதி-- 1. சொற்களை, யவற்றின் முதலிலுள்ள எழுத்துக்கள் வர்ணமாலையின் கிரமப்படி அகரமுதலாக ஒன்றன்பின்னொன்றாய்த் தொடர்ந்துவர், அடுக்கிப்பொருள்விளக்கும் புத்தகம். [அ; கரம்; ஆதி. கரம் என்பதீறுகெட்டது.] 2. சொற்களை, யவற்றின் முதலிலுள்ள எழுத்துக்கள் வர்ணமாலையின் கிரமப்படி யொன்றன்பின்னொன்றாய்வர நிரைக்கப்பட்ட சோலை.(உ-ம்.) "சூத்திரவகராதி" 3. பகல்தொடங்குங்காலம். (வாச.) [ஸஹராதி: ஸஹ ந்- பகல். ஆதி- தொடக்கம்.]

அகரிடணம்— 1. துக்கம். 2. வெறுப்பு. [ஹஷிணு- மகிழ்ச்சி.]

அகரிடம்— 1. துக்கம். 2. வெறுப்பு. [அ; ஹர்ஷ-மகிழ்ச்சி.]

அகரு—அகில், ஓர் மரம்.

அகருமகம்— செயப்படுபொருளில்லாத வினை. (வீரசோ. தாது. உ. உரை.) [அகர்மக: அ - எதிர்மறை. கர்மகம் - செயப்படுபொருளுடையது.]

அகல்—1. அகலுதல். 2. அல்குல். (பிங்கல. சooக.) 3. ஒரளவு. (தொல். தொகைமரபு. உஅ. உரை. இளம்.) 4. சட்டி. (உ-ம்.) "காரகத்கூவியன்பாகொடுபிடித்த" (பத்து. பெரும்பாணாற். ருஎஎ.) 5. தகழி. (உ-ம்.) "திருவிளக்குத்திரியிட்டகல்பரப்பி" (பெரியபு. கலய. கரு.) 6. பெருமரம் என்னுமரம். 7. விரிவு. 8. வெள்வேலமரம். (கா. வைத்.)

அகல்கை—அகலல். [கை- ஒரு தொழிற்பெயர் விகுதி.]

அகல்வு— 1. அடர்ச்சியின்மை. (உ-ம்.) "வித்துநிலத்தின் வெறுத்தபயிர் விறப்பினீங்க விடைவாங்கிப் - பைத்தநிலத்தினகன்ற பயிரகல்வினீங்கப்பதித்து" (தணிகை. திருநா. கரு.) 2. நீங்குகை. (உ-ம்.) "அமுதம்வவ்வியகல்வுழி" (காஞ்சிபு. முத்தீ. சo.) 3. விசாலம்.

அகல்வோர்— 1. நீசர். 2. விலகியிருப்பவர்.

அகலக்கட்டை—ஆகலக் குறைவுடையது.

அகலக்கவி— 1. வித்தாரகவி. அது தொடர்நிலைச் செய்யுளாலும், அடிபலவாய் நடக்கும் முத்தகச்செய்யுளாலும் பாடப்படுவது. (இலக்கணவி. எசுஎ. உரை.) (உ-ம்.) "முன்மொழிக்-கீட்டியதொன்மை யிலக்கணங்களிவ்வகையே, காட்டுமகலக்கவிக்கு" (வெண்பாப். முதன். உக.) [அகலம் - வித்தாரம். கவி-பாட்டு.] 2. வித்தாரகவி பாடும்புலவன்.

அகலப்பா—அகலக்கவி. (உ-ம்.) "பாங்கார்தொடர்நிலைப்பாப் பல்பாதஞ்சேர்தனிப்பா- ஈங்ககலப்பாக்களிரண்டாகும்" (வெண்பாப். செய்யு. ரு.) [அகலம்-விரிவு. பா - பாட்டு.]

அகலம்— 1. அகலவுரை. அது: வினாவிஅவ்வினாவுக்கு விடையாகத்தோன்றும் விகற்பங்களெல்லாங் காட்டி எழுதப்படுமுறை. (உ-ம்.) "தன்னூன் மருங்கினும் பிறநூன்மருங்கினுந் - துன்னியகடாவின் புறந்தோன்றும் விகற்பம்- பன்னியவகலமென்மனார்புலவர்" (தொல். சிறப்புப்பா. நச்சி.) 2. உழாதுவிடப்பட்ட நிலம், தரவை நிலம். 3. மார்பு. (உ-ம்.) "ஏடவிழ்ந்ததாரகலமுமிணைத் தடந்தோளும்" (திருவிளை. நகரப். கரு.) 4. விசாலம். (உ-ம்.) "சென்னியகலமுப்பானிராயிரமாம்" (கந்தபு. அண்ட. உக.) 5. வித்தாரகவி. (உ-ம்.) "ஆசுமதுரஞ்சித்திரமகலமென் - றோசையெழும்பாட்டொருநால்வகைத்தே" (இலக்கணவி. எசுரு.) 6.விரிவு.(உ-ம்.) "உரைத்தனைசுருக்கியாங்கணன்றிதனகலங்கேட்க" (கந்தபு. பாயிர. அக.) [அகல்; அம்.]

அகலர்—1. கலைநீங்கினவர். (உ-ம்.) "விஞ்ஞானகலர்க்குக் கலாதிசம்பந்தமுண்டாயிருந்துங்கலாதிபரதந்திரரல்லாதபடியால் அகலரே" (சி. சி. க: உரு. உரை. சிவாக்.) [ஸ-

எதிர்மறை. கலர்- கலையுடையவர்.] 2. சண்டாளரல்லாதவர், நீசரல்லாதவர். வ்ரு-நீசர், சண்டாளர்.

அகலல்— 1. அடர்ச்சியின்மை. (உ-ம்.) "அகல்வு" பார். 2. ஒழிதல். (உ-ம்.) "மீன் நிகழ்விசும்பிற்பாயிருளகல" (புறநா. உரு.) 3. பிரிந்துபோதல். (உ-ம்.) "அகன்றபூங்கொடியை" (பாரத. குருகுல. எக.) 4. விசாலித்தல். (உ-ம்.) "அகன்றவியன்மார்பும்" (புறநா. ந.) 5. விருத்தியாதல், பெருக்கமடைதல். (உ-ம்.) "அழுக்கற்றகன்றாருமில்லை" (வள். களo.)

அகலவுரை—ஒருவகையுரை. "அகலம்" என்பதின் 1-ம்பொருள்பார்.

அகலறை—1. பகைவர்மேற்சென்றோருறைவிடம். 2. மலைப்பக்கம். (உ-ம்.) "மாக்கணகலறையதிர்வனமுழங்க" (பத்து.பட்டி. உநஎ-ம் உரை.) [அகல்; அறை.]

அகலன்—1. கடவுள். 2. கொடியவனல்லாதவன். 3. பெருத்தவன். 4. பெருமையுடையவன். [அ- எதிர்மறை. வ்ரு தீயன், கொடியன், நீசன்.

அகலி—அகலியை. (உ-ம்.) "அகலிமெய்க்கேள்வனுதியர்கள்" (நல். பாரத. கிருட்டி. கூக.)

அகலிடம்—பூமி. (உ-ம்.) "அகலிடத்துயர்ந்ததில்லை" (பெரியபு. தில்லைவா. கo.) [அகல்; இடம்.]

அகலிது—அகலமுடையது. (உ-ம்.) "ஈமத்தாழியகலிதாகவனைமோ" (புறநா. உருசு.) [அகல்; இ; து.]

அகலியம்—1. ஆயத்தமில்லாதது. (உ-ம்.) "அகலியமாமிசம்" 2. இணங்காதது. 3. ஒருமரம். (கா. வைத்.) 4. சாமர்த்தியமில்லாதது. 5. மரம். (பிங்கல. உஎகூஈ.) [1, 2, 4. அ- எதிர்மறை. கல்யம்- ஆயத்தம், இணக்கம், சாமர்த்தியம்.]

அகலியமாமிசம்—தன்னால் அல்லது தன்னிமித்தமாகக் கொல்லப்பட்ட பிராணியின் மாமிசம். அது "திரிகொடி, சட்கொடி, நவகொடி மாமிசமென மூன்றும். திரிகொடியாவது: கொலைசெய்தல், செய்வித்தல், உடன்படல் என மூன்றும். சட்கொடியாவது: அம்மூன்றுடனே தன்னிமித்தம் வேறொருவன் கொல்வது காண்டல், கேட்டல், ஐயப்படாமை, கூட ஆறும். நவகொடியாவது: அந்த ஆறுடனே சுவைமேல்விருப்பம், மிகைபடத்தின்னுங் கருத்து, இனிமை கூறுங் கொல்லுதலாகிய புகழ்ச்சி கூட ஒன்பதாம். இவற்றின் ஒன்று வரினும் அகலியமாமிசமாம்". கொடி என்பது தொழில். (சி.சி.பர. சௌத்திராந்திகன்மதம். உக. உரை.) [அ- எதிர்மறை. கல்யம்- ஆயத்தம். மாமிசம்- இறைச்சி.]

அகலியாசாரன் — இந்திரன். (வாச.) [ஸஹல்யாஜார: ஸஹல்யா- கௌதமமுனிவருடையமனைவி. ஜார- சோரநாயகன்.]

அகல்யாநந்தநன்— சதாநந்தன். [ஸஹல்யாநந்தந: ஸஹல்யா- அகலியை. நந்தந- மகன்.]

அகலியை—கௌதமமுனிவருடைய மனைவி. (உ-ம்.) "அகலியையகல்லதானுள்" (சி. சி. உ: சச.) [ஸஹல்யா: ஸ- எதிர்மறை. ஹல்யா- அவலட்சணமுடையவள்.]

அகலுதை—அகலுதல்.

அகலுதல்—அகலல்.

அகலுள்— 1. அகலம். (சூ. நிக. அ: சஉ.) 2. ஊர். (சூ. நிக. ரு: நரு.) 3. நாடு. (சூ. நிக. ரு: நரு.) 4. பூமி. (ஆசிரியநிகண்டு. ந.) 5. பெருமை. [அகல்; உள்.]

அகலுஷிதம்—கலங்காதது. (உ-ம்.) "இந்த உபாதிகளினாலே அகலுஷிதசைதந்நியம்பிரமாதாவாம்" (சி. சி. அளவை. ச.) [ஸகலுஷித: ஸ- எதிர்மறை. கலுஷித- கலங்கினது.]

அகவடி—அடியினுள்ளிடம், உள்ளங்கால். (உ-ம்.) "அகவடியங்கைநாட்டச்சுடை" (திருவிளை. உக்கிரபாண்டியனவ. சச.)

அகவர்—1. சூதர், அழைத்துப்புகழ்வோர். (உ-ம்.) "நாளீண்டநல்லகவர்க்கு" (பத்து. மதுரை. உஉந.) [அகவு- அழைத்தல். அர்- ஓர்விகுதி.] 2. நாட்டில்வாழ்வோர். (உ-ம்.) "அகவர்நீனிறமுல்லைப்பஃறிணைநுவல" (பத்து. பொருந. உஉo.) [அகம்- உள்.]

அகவல்—1. அழைத்தல். (உ-ம்.) "அகவினம்பாடுவொந்தோழீ" (கலி. சஉ.) 2. ஆசிரியப்பா. (உ-ம்.) "அகவலென்பதாசிரியம்மே" (தொல். பொரு. நஅக.) ["அகவிக்கூறுதலாலகவலெனக் கூறப்பட்டது" என்பதுரை] 3. எடுத்தலோசை. (பிங்கல. உகoக.) 4. ஒலித்தல். (உ-ம்.) "பல்பொறிமஞ்ஞைவெல்கொடியகவ" (பத்து. திருமுரு. கஉஉ.) 5. ஓர் ஓசை. அஃதகவற்பாவுக் குரியது. (உ-ம்.) "ஒலிமுறையே திண்பாமலிசெப்பல் சீர்சாலகவல்" (யா. காரிகை. செய்யு. க.) 6. கூத்தாடல். (பிங்கல. கசகூச.) 7. மயிலின்

குரல். (உ-ம்.) "பாலம்பகவன்மயிலுரைகோ வியற்பாவைபங்கன்" (மறைசையந்தா. கக.)

அகவல்விருந்தம்-ஆசிரியவிருத்தம்.(உ-ம்.) "அகவல் விருத்தங்கலித்தாழிசையால்"(இலக்கணவி. அசரு.) [அகவல்- ஆசிரியம். விருத்தம் - மூவகைப்பாவினத்துளொன்று.]

அகவலிசை—அகவலோசை. (உ-ம்.)"அகவலிசையனவகவன் மற்றவை எ ஒ ஈ ஆய் என் ஐ யென்றிறுமே"(இலக்கணவி. எகஉ.)

அகவலுரிச்சீர்—அகவற்பாவுக்குரிய சீர். இது: தேமா, புளிமா, கருவிளம், கூவிளம் என்னும் வாய்பாட்டால் வரும் ஈரசைச்சீர். (உ-ம்.) "அகவலுரிச்சீர் விகற்பமுமொண்ணுதலே" (யா. காரிகை. உறுப்பு. கO.)

அகவலோசை—ஆசிரியப்பாவிற்குரிய சந்தம். அது நேரொன்ருசிரியத்தளையாற் பிறப்ப தேந்திசையகவலெனவும், நிரையொன்ருசிரியத்தளையாற் பிறப்பது தூங்கிசை யகவலெனவும், அவ்விருதளைகளினது கலப்பாற்பிறப்பதொழுகிசையகவலெனவுஞ்சொல்லப்படும். (உ-ம்.) "அகவலோசை மூன்றுவகைப்படும்" (இலக்கணவி. எகஉ-ம் உரையும்) [அகவல்-ஆசிரியம். ஓசை. சந்தம்.]

அகவற்சீர்—அகவலுரிச்சீர்.

அகவற்சுரிதகம்—கலிப்பாக்களின் கடையுறுப்பாய்த் தனிச்சொல்லின்பின் மூன்றடிமுதற் பலவடியாக அகவலான்வருவது.[அகவல்- ஆசிரியப்பா. சுரிதகம்-கலிப்பாவுறுப்புக்களுள் ஒன்று.]

அகவற்பா — ஐவகைப்பாக்களிலொன்று. அது, நாற்சீருக்குமேற்படாத அடியுடையதாய் இயற்சீர்பயின்றுங், கருவிளங்கனி, கூவிளங்கனியென்னும் இரண்டுமொழிந்த அயற்சீர்விரவியும், ஆசிரியத்தளை தழுவியும் பிறதளைமயங்கியும், ஏ, ஓ, ஈ, ஆய், என், ஐ, என்பவைகளுள் ஒன்றனை இறுதியாகக்கொண்டு முடிவது. [அகவல்- ஆசிரியம். பா- பாட்டு.] அகவற்பாவின் பெருக்கத்துக்காயிரமடியும், சுருக்கத்துக்கு மூன்றடியுமெல்லையாமென்பர். (தொல். பொரு. சஎO.)

அகவற்றழிசை — ஆசிரியப்பாவினத்துளொன்று; அது, எவ்வகைச்சீரானுந் தளையானும் ஒத்த மூவடியாகத் தனித்தாவது ஒருபொருண்மேல் மூன்றடுக்கியாவது வருவது. (உ-ம்.) "மூன்றடியொத்த முடிவினவாய்விடி-னென்றவகவற்ருழிசையாகும்" (யாப்பருங். எரு.) [அகவல் - ஆசிரியம். தாழிசை - பாவினத்துளொன்று.] அகவற்ருழிசைக்குதாரணம்: "வானுறநிமிர்ந்தனைவையகமளந்தனை, பான்மதிவிடுத்தனை பல்லுயிரோம்பினை, நீனிறவண்ணநின்னிரைகழரெழுதனம்" இது தனியே வந்த ஆசிரியத்தாழிசை.

"கன்று குணிலாக்கனியுகுத்தமாமாயன், இன்று நம்மானுள்வரு மேலவன்வாயிற், கொன்றையந்தீங்குழல்கேளாமோ தோழீ"

"பாம்பு கயிருக்கடல்கடைந்த மாமாயன், ஈங்கு நம்மானுள் வருமேலவன்வாயில், ஆம்பலந் தீங்குழல் கேளாமோ தோழீ"

"கொல்லையஞ்சாரற்குருந்தொசித்த மாமாயன், எல்லினம்மானுள் வருமேலவன்வாயின்,முல்லையந்தீங்குழல்கேளாமோதோழீ"

இவை மூன்றும் ஒருபொருண்மேலடுக்கிவந்த ஆசிரியத்தாழிசைகள்.

அகவற்றுள்ளல் — துள்ளலோசை மூவகையுளொன்று; அது வெண்டளையுங் கலித்தளையுங்கலந்துவருதலாற்பிறக்குமோசை. (உ-ம்.) "வெண்டளைதன்றளையென்றிரண்டியையி, னென்றியவகற்றுள்ளலென்ருேதுப" (யா. காரிகை. செய்யு. க. உரை.) [அகவல்-ஆசிரியம். துள்ளல்-துள்ளிச்செல்வது.]

அகவற்றுறை—ஆசிரியப்பாவினத்துளொன்று. அது, நான்கடிபெற்றீற்றயலடிகுறைந்தும், நான்கடி பெற்றீற்றயலடி குறைந்திடைமடக்காயும், நான்கடிபெற்றிடையிடைகுறைந்தும்,நான்கடிபெற்றிடையிடைகுறைந்திடைமடக்காயும் வருவது.(உ-ம்.) "கடையதனயலடிகடைதபுநடையவும்- நடுவடிமடக்காய் நான்கடியாகி - யிடையிடைகுறைநவுமகவற்றுறையே"(யாப்பருங். எசு.) [துறை- பாவினத்துளொன்று.]

அகவற்றுறைக்குதாரணம்:

கரைபொருகானியாற்றங் கல்லதரெம்முள்ளிவருவிராயி, னரையிருள்யாமத்தபுலியேறஞ்சியகன்றுபோக,நரையுருமேறுநுங்கைவேலஞ்சு நும்மை, வரையரமங்கையர்வெளவுதலஞ்சுதும் வாரலையோ.

இஃது ஈற்றயலடி குறைந்து வந்தது.

| | |
|---|---|
| வண்ணேர்பூந்தார்வளங்கெழு செம்பூட்சேஎய்வடிவேபோலத், தண்டளிர்ப்பூம்பிண்டித் தழையேந்தி மாவினவித் தணந்தோன் யாரே, தண்டளிர்ப்பூம்பிண்டித்தழையேந்தி வந்து நம், பண்டைப்பதி வினவிப் பாங்குபடமொழிந்து படர்ந்தோனன்றே. | இஃது ஈற்றயலடி குறைந்திடைமடக்காய்வந்தது. |

கொன்றூர்ந்தமைந்த குருமுகத்தெழினிறக், குருதிக் கோட்டினவிருந்தாட்பெருங்கைக், குன்றுமெனவன்றுமெனக், குமுறுநின்றன கொடுஞ்தொழில்வேழம்;

வென்றூர்ந்தமைந்த விளங்கொளியிளம்பிறைத், துளங்குவாளிலங்கெயிற்றழலுளைப் பருஉத்தாள திரும்வாளெனவெதிருங்கூற்றெனச், சுழலாநின்றன சுழிக்கண்யாளி;

சென்றூர்ந்தமைந்த சிறுநவதிவள்ளுகிர்ப் பொறியெருத்தெறுழ்வலிப் புலவுநாறழல்வாய்ப், புனலாமெனக்கனலாமெனப், புகையாநின்றன புலிமானேற்றை;

என்றாங்கிவையிவையியங்கலின்னெந்திறத், தினிவரல்வேண்டலந் தனிவரலெனத்தலை, விலக்கலினிறுவரைமிசையெறிகுறும்பிடை, யிதுவென்னெனவதுநோனர், கரவிரவிடைக்களவுளமதுகற்போரோதுங்கற்பன்றே. இஃது இடையிடைகுறைந்துவந்த ஆசிரியத்துறை.

| | |
|---|---|
| இரங்குகுயின்முழவாவின்னிசையாழ்தேனு, அரங்கமணிபொழிலா வாடும் போலுமிளவேனில், அரங்கமணிபொழிலா வாடுமாயின், மரங்கொன்மணந்தகன்றூர் நெஞ்சமென் செய்ததிளவேனில், | இஃது இடையிடை குறைந்திடைமடக்காய்வந்த ஆசிரியத்துறை. |

அகவற்றூங்கல்—தூங்கலோசை மூவகையுள் ஒன்று; அது, ஒன்றுதவஞ்சித்தளையாற் பிறக்குமோசை. (உ-ம்.) "எந்திசைத்தூங்கல்" பார்.

அகவாட்டி — அகத்துள்ள அடியாள். [அகம்-உள். ஆட்டி- ஆளப்படுபவள்.]

அகவாயுக்கள்—அகத்திலுள்ள அந்தக்கரணங்களைச் சீவனோடு கூடிநின்று அசைப்பிக்கின்றனவாகச் சொல்லப்படும் வைராம்பன், முக்கியன், பிரபஞ்சனன், அந்தரியாமி, மகாப்பிராணன் என்னும் ஐந்துவாயுக்கள். (வேதா. சூ. எகூ. உரை. எஎ.) [அக-உள். வாயுக்கள்.]

அகவிடன்—அகப்பொருளுக்குரிய சட்டகமுதலாகிய இருபத்தேழு உரைகளுள் ஒன்றாகிய இடத்தின் வகையிரண்டனுள் ஒன்று; அது ஒரு செய்யுள் மனையும் வளாகமும் பற்றிவருவது. (வீரசோ. பொருட். ச. ரு. சு. உரையும்.)

அகவிதழ்—உள்ளிதழ். (உ-ம்.) "செய்ய தாமரையகவிதழ்" (பெரியபு. திருஞாந, எஅ.) [அகம்- உள். இதழ்- மடல்.]

அகவிலை—தானியவிலை. (உ-ம்.) "ஆதலாலுலகினெல்லுமகவிலைகுறைந்து" (திருநெல். நெல்லுக்கு. ச.) [அகம்- தானியம்.விலை.]

அகவு— 1. ஆடுதல். 2. அழுக்கிரா. (கா. வைத்.) 3. கூத்தாடுதல். (உ-ம்.) "மலைக்கு வட்டகவுறுமயிலின்மாழ்கினர்" (இராமா. நகர்நீங்கு. ககஎ.)

அகவுதல்—1. அழைத்தல். 2. ஒலித்தல். (உ-ம்.) "செங்கணிருங் குயிலகவுஞ்சோலை" (கூர்மபு. சந்திர. கூச.)3.கூத்தாடல். (உ-ம்.) "பீலிமாமயிலகவுமதுவநம்" (கூர்மபு. இராம. வ௩. கக0.)

அகவேற்றம்—தானியவிலையேற்றம். [அகம், அர்க்கம் என்பதன் மரூஉப்போலும்.]

அகவை—1.உள்ளிடம். (உ-ம்.) "ஆயகானகத்தகவையுட்சரித்துறு மந்நாள்" (உபதேசகா. சிவவிரத. கச.) 2. உட்பட்டபிராயம். (உ-ம்.) "ஈருண்டகவையாள்" (சிலப். மங்கலவாழ்.)

அகழ்—1. அகழி. (உ-ம்.)"வையையுமொருபுறத்தகழாம்" (திருவிளை. நகரப்ப. சஎ.)

அகழ்தல்—1. உழுதல். 2. தோண்டுதல். (உ-ம்.) "அகழ்தன்மாக்கடலன்ன" (சிந். நாமக. க0கூ.) 3. மூலத்தோடு நீக்குதல். (உ-ம்.) "அகழ்தருபாவத்தினராய்" (சூத. சிவ. கரு: ௩ச.)

அகழல்—அகழ்தல்.

அகழான்—அகழெலி. [அகழ்; ஆன்.]

அகழானெடுத்தல்--அகழான் நிலத்திலே வளையுண்டாக்கிமண்ணைப் புறம்பேதள்ளுதல்.

அகழி—1. கிடங்கு. (உ-ம்.) "பாருடைத்தகுண்டகழி"(புறநா. கச.) 2.கோட்டையின் மதிலினைச்சூழ்ந்துவா நீர் நிற்கும்படி ஆழமாகத்தோண்டப்பட்டிருக்குங் கிடங்கு.(உ-ம்.) "அருமிளையுடுத்தவகழிசூழ் போகி" (சிலப்.

புறஞ்சேரி. அரு.) [அகழ்- தோண்டு.இ-ஒரு செயப்படுபொருள் விகுதி.]

அகழுதல்—அகழ்தல்.

அகழ்ழலி—ஒருவகைப்பேரொலி. [அகழ்; ஒலி.]

அகளங்கம்—1. களங்கமின்மை. (உ-ம்.) "தேயுங்களங்கவுருவுடையை நீயிவன்செம்மைவாய்ந்துதேயாதென்று மகளங்கவுருவுடையனுகலின்" (செங்கழுநீர்விநாயகர் பிள்ளைத்தமிழ். அம்புலி. உ.) 2. சீதாங்கபாஷாணம். [அகளங்க: அ- எதிர்மறை. களங்க- குற்றம்.]

அகளங்கமூர்த்தி—1. கடவுள். 2. புத்தன். (திவாகர.) [அகளங்கம்- குற்றமின்மை. மூர்த்தி- வடிவுடையவன்.]

அகளங்கன்—1. கடவுள். 2. குற்றமில்லாதவன். (உ-ம்.) "அகளங்கனநகனநாதி"(நல். பாரத. கௌசிக. எஎ.) 3. புத்தன். [களங்கன்- குற்றமுடையவன்.]

அகளம்—1. சாடி. (சூ. நிக. எ: கூசு.) 2. நிட்களம். (உ-ம்.) "அகளமெய்வடிவாநந்தவற்புதக்கூத்தனுர்"(காஞ்சிபு. திருக்கண்.உஅ) 3. நீர்ச்சால். (உ-ம்.) "அகளத்தன்னநிறைசுனைப்புறவின்" (பத்து. மலை. கoசு.) 4. மிடா. 5. யாழின்பத்தர். (உ-ம்.) "வயிறுசேர்பொழுகியவகையமையகளத்து"(பத்து. சிறு. உஉ.) ["தாழிபோலப்புடைபட்டிருத்தலின்" அப்பெயர்த்து. என்பதுரை.] 6. சூட்சுமரூபம். [சி-லி. ஞாந. அ.] [அகலம்.]

அகளர்—நிட்களர். (உ-ம்.) "ஆன்மாக்கடேகம்போற்சர்மாஸ்தி முதலிய தேகதாதுக்களில்லையாகலின் அகளரே" (சி. சி. அளவை. கூ. உரை. சிவாக்.) அ - எதிர்மறை. களர்- கலையுடையவர். கலை - உறுப்பு.]

அகளி—1. தாழி. 2. மிடா. 3. பாத்திரம். (உ-ம்.) "அப்பங்குமப்பக்கு மோரகளி பெய்ததநபின்." (தைல-தைலவ, கசு.)

அகற்சி— 1. அகலம், விசாலம். (உ-ம்.) "அன்னமாபெருங்கயிலையினகர்ச்சியுங்கவப்பும்" (உபதேசகாண். கயிலை. கசு.) 2. பிரிவு. (உ-ம்.) "அயலோராயினுமகற்சிமேற்றே" (தொல். பொரு. ந. அ.)

அகற்பதும்பகம்— மந்திரதியாநமில்லாத கும்பகம். (சி-லி. யோக - ச-ம் - நிம் சுலோ.) [சு; கல்வ; ...]

அகற்பசேபம்—விதியின்றிச்செய்யும் செபம். (தத். நி. போ. உகஅ.) [அ - எதிர்மறை. கல்ப- விதி. ஜப - ஜபிக்கப்படுவது.]

அகற்பந— கற்பனையில்லாதது, மாசில்லாவிற்சமையாதது. (உ-ம்.) "இன்பமுதிரநிறைந்த கற்பனைக்கேதுன்னித்திகழ்தற்பதம்பற்றி" (ஞானவா. உற்பத்தி. க.) [கற்பனை - நினைவு.]

அகற்பம்— 1. ஒரு பிராணுயாமயோகம். அது: வாக்கினுலே மந்திரஞ்செபியாமலும், மநத்தினுலே சிவனைத்தியாநியாமலுஞ்செய்யப்படுவது. (உ-ம்.) "அகற்பமவ்விரண்டுமின்றி யாக்கிடுமாயாமந்தான்" (சிவதரு. சிவஞானயோ. சுசு.) 2. கற்பம் அநுகற்பம் உபகற்பமென்னுமூவகையுமல்லாதவிபூதி. (உ-ம்.)"இடியுண்டவிடத்திலுண்டான விபூதியும், மலையுச்சியினும் பூமியினும் விளைந்த விபூதியும்அகற்பமெனப்படும்" (சைவ. பொது. சஅகூ. உரை.) [கல்ப - நியாயவழி. சப்த.]

அகற்பன்— ஒப்பில்லாதவன். (உ-ம்.) "சொற்பாக் - கற்பவர்கணற்புலனினிற்புறுமகற்பா." (சேதுபு-சருவதீ-உஎ.) [அகல்ப.]

அகற்பிதமரணம்— விதியின்றி நிகழுமரணம். (வி-ணி. உஉசு.) [கல்பித-விதிக்கப்பட்டது. மரணம்-இறப்பு.]

அகற்பியமாமிசம்—அகலியமாமிசம். (சி. சி. பா. சௌத்-தம். உகூ. உரை.) [அ-எதிர்மறை. கல்ப்ய-விதியுடையபது.]

அகற்றல்—அகலச்செய்தல். இஃது,"அறுவகையகற்றி" (வாதவூ. திருப். ருரு.) என்பதிற்போல, நீக்குதற்பொருளிலும், "களிறுசென்றுகளனகற்றவும்" (புறநா. உசு.) என்பதிற்போல விசாலமாக்குதற்பொருளிலும், "மடங்கொன்றறிவகற்றுங்கல்வி." (நீதிநெ. ரு.) என்பதிற்போலப்பெருகச்செய்தற்பொருளிலும் வரும்.

அகற்றுதல்—

அகறல்—1. அகலம். (சூ. நிகண். அ: கஉ.) 2. கடத்தல். (உ-ம்.) "அடர்மலர்க்காற்குங்கட்குமகறலால்" (இரகு. மாலை. ருரு.) 3. நீங்குதல்.(உ-ம்.)"அகறலினுற் பிறருடல்போற்றன்னுடலந்தனினுமுறுதிதருமபிமாநமின்மையேயாங்" (வேதா. சூ. சுருக.)

அகன்—1. அகன்ற. (உ-ம்.) அகன்பிலவாயினுர்" (கந்தபு. வச்சிர. உச.) 2. அகாசுரன். [இவன், பகன் பூதனை என்பவருக்குச் சகோதரன்; கஞ்சனுக்குச்சேனைத்தலைவன்.] 3. உள். (உ-ம்.) "அகனைந்திணையும்" (தொல். பொரு. ருச.) [அகம், அகனெனப்போலியாயிற்று.] 4. வினைமுதற்பொருளில் வரும் ஒருவிகுதி.(உ-ம்.)நாயகன். (வீர. தாது. ரு.)

அகன்பணை—அகன்ற மருதநிலம்.(உ-ம்.) "ஆம்பலம்போதுளவோவளிகாணும் மகன் பணைக்கே" (திருக்கோ. ௧௧.)

அகன்மகதாது—செயப்படுபொருளில்லாத வினைப்பகுதி. (உ-ம்.) "நட" (பி.வி.௩௰. உரை.) [ஸகர்மக- செயப்படுபொருளில்லாதது. தாது- வினைப்பகுதி.]

அகன்மகம்—செயப்படுபொருள் குன்றிய வினை. (உ-ம்.) "செயப்படுபொருள் குன்றா வினை குன்றியவினைத்திறமிரண்டுஞ் சகன்மக மகன்மகம்" (பி. வி. ௩௰. உரைச்சூத்திரம்.) [அ-எதிர்மறை. கர்மகம்-செயப்படுபொருளுடையது.]

அகன்மகர்த்தரிப்பிரயோகம்—செயப்படுபொருளில்லாத வினையை எழுவாயிற் பிரயோகித்தல். (உ-ம்.) "சாத்தன்வரும்"(பி. வி. உரை.) [ஸகர்மக-செயப்படுபொருளில்லாதது. கர்த்ருப்ரயோக- எழுவாயிற் பிரயோகிப்பது.]

அகன்மணி—1. அகன்றஇரத்திநம்.(உ-ம்.) "அகன்மணி முன்றிலிற்றுயில்வார்" (கூர்ம பு. அந்தகா. உக.) 2. தெய்வமணி.

அகன்றவறிவு—சர்வஞ்ஞத்துவமாகிய பேரறிவு. (உ-ம்.) "ஆயவாணவமகன்றவறிவொடுதொழிலையார்க்கும்" (சி. சி. க. சக. உரை. ஞாந.)

அகன்றில்—ஆணன்றில். (உ-ம்.) "உறைந்தனவகன்றிலுடனன்றிலுயிரொன்றி" (இராமா. கார்கா. எக.)

அகன்னம்—செவிடு. [ஸகர்ண: அ-எதிர்மறை. கர்ண- காது.]

அகஸ்மாத்து—காணப்பட்ட காரணமில்லாமல் (பௌட். பும்ஸ். ௧௪.) [ஸகஸ்மாத்: அ- எதிர்மறை. கஸ்மாத்- எதனால், எதனாலுமின்றி என்றபடி.]

அகாகம்-ஆசௌசதிநம்.(வாச.) [ஸகாஹ: அக- ஆசௌசம். அஹ- நாள்.]

அகாடி—(இந்துஸ்.) 1. குதிரை முன்னங்கால் கட்டுங்கயிறு. 2. முன்.

அகாண்டசாதம்—அகாலத்திற் பிறந்தது. [ஸகாண்டஜாத: அகாண்ட-அகாலம். ஜாத- பிறந்தது.]

அகாண்டபாதசாதம்—அகாலத்திலே பிறந்து உடனேயழிதல். [ஸகாண்டபாதஜாத: ஸகாண்ட- அகாலம். பாத-விழுதல். ஜாத- பிறந்தது.]

அகாண்டபாதம்—அகாலசம்பவம். [ஸகாண்டபாத: ஸகாண்ட- அகாலம். பாத- சம்பவித்தல்.]

அகாத்தியம்—1. உண்ணத்தகாதது. [ஸகாத்ய: காத்ய- உண்ணத்தக்கது.] 2. பொல்லாங்கு. 3. வஞ்சனை.

அகாந்திரம்—அவசியம். கவனமின்மை.

அகாத்துமசை—பார்ப்பதி. [ஸகாத்மஜா: ஸகம்- மலை. ஆத்மஜா- புத்திரி.]

அகாதத்துவம்—மிக்க ஆழத்தன்மை. [ஸகாதத்வம்: ஸகாத- ஆழம்.த்வம்- தன்மை.]

அகாதம்—1. நீந்துபுனல். (பிங்க எஅ.) 2. பள்ளம். 3. பொந்து. 4. மிக்க ஆழம். (வாச.) (உ-ம்.) "உத்தரவாகினியாயும் அகாதமாயுமிருக்கிற கங்கைநதிக்கரையில்" (விசார. அக.) 5. வஞ்சகம். [ஸகாத: அ- எதிர்மறை. காத- நிலை, பேடு.]

அகாதன்—வஞ்சகன். [ஸகாத- ஆழம்.]

அகாதிகள்—அகாதிகன்மங்கள். (உ-ம்.) "தீர்ப்பதகாதிகள்" (திருநூற். அஅ.)

அகாதிதம்—உண்ணப்படாதது. [ஸகாதித: காதித- உண்ணப்பட்டது.]

அகாமம்—1. அகாமவினை. (உ-ம்.) "மூற்றும் வினைதைவிகத்தான் மோகத்தானேயான்மூர்க்கரசர் சோரரிவாமுடுகுபயத்தாலும், அற்றுமுறையறிவழிந்துமகாமமெனவறிக" (சிவதரு. பரிகா. ௩.) 2. இச்சையின்மை. (வாச.) [ஸகாம: காம- இச்சை.]

அகாமவினை—அபுத்திபூர்வமாகச் செய்யுஞ்செய்கை; அது: தைவிகத்தாலும், மோகத்தாலும், வியாதியாலும், சோரபயம் முதலியவற்றாலும், அறிவழிந்து செய்யுஞ்செயல் (உ-ம்.) "கிருகபதியகாமவினையினுக்குப்பரிகாரம் பகர்ந்திடுவாம்." (சிவதரு. பரிகா. உ.) [அகாமம்-இச்சையின்மை. வினை-தொழில்.]

அகாயம்—1. இராகு. 2. சரீரமில்லாதது. 3. பரப்பிரமம். [காயம்- சரீரம்.]

அகாயு—1. கத்தி. 2. காகம். 3. தீயவழியில் நடக்கிறவன். [ஸகாயு.]

அகாரணம்—1. காரணமின்மை. (உ-ம்.) "பொருதெல்லீருமகாரணத் தெதிர்த்தீர்"

(காஞ்சிபு. தக்கி. ௬௨.) 2. தற்செயல். 3. நிட்பிரயோசநம். (சப்த.) [காரணம்-ஏது.]

அகாரணன்—1. கடவுள். 2. காரணமில்லாதவன். (காரணன்-காரணமுடையவன்.) (உ-ம்.) "நிராமயனகாரணன தெல்லை சயிலாயமலையே" (அருணகிரிபு. அருந்தவ.௧௩.)

அகாரத்திரயவித்தை— அகர எழுத்தை முதலிலுடையமூன்றாகிய ஆகருடணம், அதிருச்சியம், அஞ்சநம் என்னும் பதங்களாற்கருதப்பட்ட மந்திரவித்தைகள். ஆகருடணம்- தூரத்திலுள்ளதைச் சமீபத்தில் வருவித்தல். அதிருச்சியம்- கண்களுக்குப்புலப்படுவதைப்புலப்படாமற்செய்தல். அஞ்சநம்-மறைந்துகிடக்கும் பொருட்களை விளக்கிக்காட்டுதல். [இது பின்வருமேற்கோளாற்பெறப்படும். "அகரமாதிமூன்றாகிய வாகருடணமே புகரிலாவதிருச்சியமஞ்சநம் பொருவில், வகரமாதி மூன்றாகிய வசியமேவாத, மிசலிலா வயத்தம்பமென்றின்னவைசெய்தும்" (திருவிளை. எல்லாம். ௯௨.) அகாரம்- ஓரெழுத்து. அஃது அகரத்தின் விகாரமாகிய ஆகாரத்தையும் உள்ளடக்கிற்று. [த்ரய மூன்று. வித்யா- மந்திரவித்தை.]

அகாரம்—1. அ என்னுமெழுத்து. (உ-ம்) "அகாரமுன்னுச்சார்ந்தவைம்பத்தோரெழுத்தின் சொரூபமாய்" (சூத. எக்கி. ௭: அ.) 2. ஒற்றெழுத்தின் சாரியைகளுளொன்று. (உ-ம்.) "லகார ளகாரமாயிரண்டும்பிறக்கும்" (நன். எழுத்தி. உக.) 3. செயலின்மை. (சப்த.) [காரம்- செயல்.] 4. வீடு. (சப்த.) [அகாரம்: அக- மலை, மரம். ர- எழுதல், அடைதல்.]

அகாரி—1. இடி. [அகாரி: அக- பாம்பு. அரி - பகை.] 2. இந்திரன். [அக - மலை. அரி- பகைவன்.] 3. கடவுள். [அகம்- பாவம். அரி- பகைவன்.]

அகாரியம்—1. அப்பிரதாநமான காரியம். [அ; கார்யம்.] 2. செய்யத்தகாத காரியம். (உ-ம்.) "நாவகாரியஞ்சொல்லிலாதவர்" (நாலாயிர. நாவ. க.) [அகார்யம்.] 4. தூர்க்கிரியை. (சப்த.) [கார்யம்- செய்யத்தக்கது.]

5. [அஹார்யம்: ஹார்யம்- எடுக்கத்தக்கது.]

அகாருண்ணியம்— காருண்ணியமின்மை. (சி. சி. பர. நிகண்டவாதம். இ. உரை.) [காருண்யம்-கிருபை.]

அகாலம்—1. அவகாலம். 2. காலமல்லாதது. (உ-ம்.) "உடலைநோக்குதியகாலத்திலுன்னுடையுடலை." (ஞானவா. பிரகலா.௬௧.) 3. நியமமல்லாதகாலம். (உ-ம்.) இக்குவாகுவின் மரபோர் நாட்டுத்துன்றிடாவகாலந்தன்னிற்றோன்றிய மிருத்து" (இரகு. சம்புக. ௨௩.) காலம்-சமயம்.]

அகாலமரணம்— நியமமல்லாதகாலத்திற் சம்பவிக்கு மரணம்.

அகாலமிருந்து— அகாலமரணம். [அகாலம்-நியமமல்லாதகாலம். மிருத்யு-மரணம்.]

அகாளம்—கறுப்பின்மை. (சி. வி. கிரி. ௭௪.) [காளம்-கறுப்பு.]

அகி—1. ஆவணி. (இராசவைத்.) 2. இரும்பு. (பிங்க. ௩௦௩௪.) 3. இராகு. 4. ஈயம். 5. ஒருவகைமரம். 6. சூரியன். 7. பாதகன். 8. பாம்பு. (உ-ம்.) "அடியகிப்பிணிதீர்த்தகன் பின்" (சேதுபு. இராமனரு. ௩௦.) 9. மேகம். 10. வச்சிராயுதம். 11. வஞ்சகன். 12. வழிப்போக்கன். 13. விருத்திராசுரன். [3, 4, 6, 7, 8, 9, 11, 12, 13, அஹி.]

அகிகாந்தம்—காற்று. [அஹிகாந்த: அஹி- பாம்பு. காந்தம்- விரும்பப்பட்டது.]

அகிகை—1. இலவமரம். (வாச.) 2. திருவநக்ஷத்திரம். (வாச.) [அஹிகா.]

அகிஞ்சகன்—பிராணிகளுக்குப் பீடைசெய்யாதவன். (வாச.) [அஹிம்ஸக: ஹிம்ஸக- பிராணிகளுக்குப்பீடைசெய்வோன்.]

அகிஞ்சநீயாயதநலோகம்— (பௌட்.) பிரமலோகமிருபதனுள்ளே பத்தொன்பதாம் உலோகம். (மணிமேகலை. ௩.)

அகிஞ்சநன்—மிகவறியவன். [அ; கிஞ்சந- யாதொன்றும்.] யாதொன்றுமில்லோன்.

அகிஞ்சன்—மிகவறியவன். [அகிஞ்சநன் என்னும் வடமொழியின் ஈறு தொக்கது.]

அகிஞ்சை— 1. கொல்லாமை. 2. வருத்தாமை. [அஹிம்ஸா: ஹிம்ஸா- கொலை, தீங்கு.]

அகிதம்— 1. அயோக்கியமானது, தகாதது, உரியதல்லாதது. 2. உயிர்க்குறுதியென வேதாகமங்களில் விதித்தவற்றிற்கு மறுதலை செய்தல். (உ-ம்.) "அகிதமற்றது செய்யாமை" (சி. சி. ௨: ௧௩. சிவஞா.) 3. பகை. 4. நோயாளிக்குக் கொடுக்கத்தகாதபோசநம். [அஹித: ஹிதம்-நன்மை.]

அகிதமிட்டிரன்—ஓரரக்கன். (சேதுபு. விதும. ௨அ. குறிப்பு.) [ஸஹிஜாஷ்ட: ஸஹி-பாம்பு. ஜஂஷ்ட- பல்லு.]

அகிதர்—பகைவர். [ஸஹித: ஸ- எதிர்மறை. ஹித- சிநேகம்.]

அகிதலம்—பாதாளம். (உ-ம்.) "அகிதலவரினதணிமுடிமணி யிடையணவின சிலவாளி" (இரகு. யாகப். எக. [ஸஹி-பாம்பு. ஸ்தலம்- இடம்.]

அகிதுண்டிகன்—1. பாம்பாட்டி. (சப்த.) 2. பாம்புபிடிப்போன். (சப்த.) [ஸஹிதுண்டிக: துண்டிக - துண்டத்திற்பிடித்து விளையாடுவோன். துண்ட - முகம். ஜ்ஹ நீ ஓர் வடமொழிவிகுதி.]

அகிப்பிரத்திநம்—1. இரவிலே நிகழும்மூன்றுமுகூர்த்தமாகிய உத்திரட்டாதி. 2. உத்திரட்டாதிநக்ஷத்திரம். (உ-ம்.) "அகிப்பிரத்திநதேவதை."

அகிப்பிரத்திநன்— 1. ஒருருத்திரன். 2. சிவன். [ஸஹிர்புத்ந்ய: ஸஹி-பாம்பு. புத்யி-கட்டுதல். நக்- ஓர் வடமொழி விகுதி. பாம்புகளாற்கட்டுண்ட கழுத்துடையானென்றபடி.]

அகிபதி—1. ஆதிசேடன். 2. பெரும்பாம்பு. 3. வாசுகி. [ஸஹிபதி: பதி- தலைவன்.]

அகிபுக்கு— 1. கருடன். (சப்த.) 2. கீரி. 3. மயில். (சப்த.) [ஸஹிபுஜ்: புஜ் - உண்பது.]

அகிபேநம்— 1. அவின். 2. பாம்பின்விஷம்.[ஸஹிபேந: ஸஹி-பாம்பு.பேந-நுரை.]

அகிம்சை—கொல்லாமை. (உ-ம்.) "ஐந்து சீலமாவன: அகிம்சை, சத்தியம், அஸ்தேயம், பிரமசரியம், சங்கிரகம் எனக்கொள்க" (சி. சி. பர. சௌத்-தம். க. உரை.) 2. மனம் வாக்குக்காயங்களாற்றீங்குசெய்யாமை. [மகரவொற்றுச் சகாரத்தோடுமயங்குதல் சமஸ்கிருத வழக்கு. [ஸஹிம்ஸா: ஹிம்ஸா கொலை, தீங்கு.]

அகிமரால்—வெள்வேலமரம்.(கா. வைத்.)

அகிர்—அயறு, தலைச்சுண்டு. [வழக்.]

அகிர்த்துநமவிஷம்—பாம்புமுதலிய சரப்பொருள்களிலும், மாமுதலிய அசரப்பொருள்களிலுமுள்ள விஷம். (சீவரட். ௯௨௭.) [ஸஹி- பாம்பு. த்ருமம்- மரம்.]

அகிர்ப்புத்திநி— இரவில் நிகழும் மூன்று முகூர்த்தமாகிய உத்திரட்டாதி. (விதாந. குணகுண. எ௩. உரை.) 2. உத்திரட்டாதி. (காலாமிருதம். ௩-ஞ் சுலோகம்.) [ஸஹிர்புத்ந்ய.]

அகிரச்சுசாமியம்— பாம்புக்குங் கயிற்றுக்குமுள்ள ஒப்புமை. (பௌட். மாயா. உக.) [ஸஹி; ரஜ்ஜு; ஸாம்ய). ரஜ்ஜு- சயிறு. ஸாம்ய- ஒப்புமை.]

அகிரன்— 1. சூரியன். 2. நெருப்பு. 3.புவர்லோகத்திலிருக்கும்பதினோருருத்திரரிலொருவன். (வி-ணி. உ௬உ.) [ஸமிர: ஸம-போதல். ஈர-ஒரு வடமொழிவிகுதி.]

அகிரிபு— 1. இந்திரன். (வாச.) 2. கருடன். (வாச.) கிருட்டிணன். (வாச.) 4. கீரி. (வாச.) 5. மயில். (வாசு.)[ஸஹிரிபு: ஸஹி- விருத்திராசுரன், பாம்பு. ரிபு- பகை.]

அகிருத்தியம்—செய்யத்தகாத செயல்.

அகிருத—இருநூற்றிருபத்துநான்கு புவநங்களுளொன்று. (கந்தபு. கணங்கள். ௪௦. உரை.)

அகிருதகம்—செய்யப்படாதது. [ஸ; க்ருதக- செய்யப்பட்டது.]

அகிருதஜ்ஞதை— நன்றிமறத்தல். [ஸக்ருதஜ்ஞதா: க்ருதஜ்ஞதா- நன்றியறிதல்.

அகிருதஜ்ஞன்—நன்றிமறந்தோன். (வாச.) [ஸக்ருதஜ்ஞ: க்ருதஜ்ஞ- நன்றியறிவோன்.

அகிருதம்—1. செய்யப்படாதது. 2. ["ஓமத்திரவியம்"பார்.] 3. முடிவுபெறாத கிரியை. [ஸக்ருத: க்ருத- செய்யப்பட்டது.]

அகிருதர்—கிரியை செய்யாதவர். (பௌட். பும்ஸ. உஎரு.)

அகில்—1. அகில்வாசம். (உ-ம்.) "அகிலு மாரமுமார" (இராமா. பால. வரை. ருஅ.) 2. ஒருமரம். (உ-ம்.) "அங்கோங்குமே, அகிலு மாரமுமாரவங்கோங்குமே" (மேற்படி.ருஅ.) [இது கள்ளிவிருக்ஷத்திலுண்டாவதென்று சில நூல் கூறும்.] (உ-ம்.) "கள்ளிவயிற்றி லகில் பிறக்கும்" (நா. க. கூ.)

அகிலம்—1. எல்லாம். (உ-ம்.) "அகிலதே வர்க்கும்" (பெரியபு. திருஞான. கூக.) 2. சருவலோகம். (உ-ம்.) "அகிலத்துள்ளதோர் கணங்களும்" (கந்தபு. பார்ப். கூ.) 3. பிரபஞ்சம். (உ-ம்.) "அழிந்தபின்னணுக்கடாமே யகிலமாய் வந்துநின்று, கழிந்திடும்" (சி. சி. க: கக.) 4. பூமி. (உ-ம்.) "அகிலெங்குநா டுவன்" (கந்தபு. சூரன்றண். உகூ.) [அகில- அ- எதிர்மறை. கில- குறைவு.]

அகிலரூபன்— 1. எல்லாவடிவுமுமானோன். 2. கடவுள். [அகில; ரூப- வடிவமுடையவன்.]

அகிலாங்கம்—சதுரவடிவம். (உ-ம்.) "அற்புதமாந்திரிபுண்டமதியின்பாதி யகிலாங்கந் தீபமிகுமழகார்வட்ட,முற்பொலியுமுடலணியுமுறையாரன்றே மூழுநீறுபூச வல்லமுனிவர்தாமே" (திருத்தொண்டர். கூஎ.) [அகில- பிருதிவி. அங்க- வடிவம்.]

அகிலாண்டம்—1. சகல அண்டம். (உ-ம்.) "நீ பெற்றவகிலாண்டமுநிரைத்துவைத்தது கடுப்ப" (மீனாட்சியம்மைபிள். அம்மானை. ௫.) 2. பிருதிவியண்டம். [அகில-எல்லாம், பிருதிவி.]

அகிலாண்டவல்லி—உமாதேவி. [வல்லி-கொடிபோல்வாள். சகல அண்டங்களையும் பிறப்பித்த பெண் என்றபடி.]

அகிலேசர்—விசுவேசர். (உ-ம்.) "உடையாளகிலேசர்க்கு" (காசிக்க. உ. [அகில விசுவம். ஈச- தலைவர்.]

அகிவைரி—1. கருடன். 2. மயில். [அஹி வைரி: அஹி-பாம்பு. வைரி-விரோதி.]

அகிற்கூட்டு—ஏலம், கருப்பூரம், எரிகாசு, சந்தனம், தேன் என்னும் ஐந்தின் கலவை. இது மயிருக்குப்பரிமளம் ஊட்டும்படி கொள்ளப்படுவது. (உ-ம்.) "உந்து சந்தனங் கற்பூரமுடனெரிகாசு செந்தே - னந்தவேலங்க ளென்பவகிற்கூட்டோரைந்தாமே" (சூ. நிகண். கஉ: ௩கூ.)

அகீசன்—ஆதிசேடன். [அஹி - பாம்பு. ஈச- தலைவன்.]

அகீநகு— சூரியவமிசத்திலே ஸ்ரீராமனுக்குப்பின்னிருந்த ஓரரசன். (இரகு. குலமு. கூ.) [அஹீநகு.]

அகீநம்— 1. குறைவின்மை. அ - எதிர்மறை. ஹீநம்-குறைவு. 2. பலநாளாகச்செய்யப்படும் ஓர் யாகம். [அஹீந: அஹ நீ- நாள். ஈந - ஓர் வ-வி.]

அகீநன்—பெரியோன். [அஹீந: அ- எதிர்மறை. ஹீந- நீசன்.]

அகுசலம்— 1. அதிட்டவீநம், துக்கம். (உ-ம்.)"அகுசலவேதனை" 2. சாமர்த்தியமின்மை. [அகுசல: அ- எதிர்மறை. குசல- சந்தோஷம், சாமர்த்தியம்.]

அகுசலவேதனை— துக்க அறிவு; இது பஞ்சகந்தங்களுள் ஒன்றாகிய வேதனையின் பகுதி மூன்றனுள் ஒன்று. (மணிமேகலை. ௩சஉ.) [அகுசல - துக்கம். வேதநா - அறிவு.]

அகுட்டம்—மிளகு.

அகுடம்—கடுரோகிணிப்பூண்டு.

அகுணம்— 1. குற்றம். 2. குணமின்மை, நற்குணமின்மை. [அகுணம்: அ; குணம்.]

அகுணன்—குணமில்லாதவன். [அகுண]

அகுணாத்துமா—அவ்வியத்தம். (பௌட். பும்ஸ். ௩சரு.) [அகுணாத்மா: அ- எதிர் மறை. குணாத்மா- குணவடிவுடையது.]

அகுணி— 1. குணமில்லாதது. 2. குணமில்லாதவன். 3. மூடவன். [அகுணி: அ; குணம்; இ.]

அகுதம்— 1. அழைக்கப்படாமை. 2. ஐவகை யாகத்துளொன்றாகிய தியாநம்; அது: மநமானது சதாசிவாதி விக்கிரகங்களுளொன்றை அன்பினாலே நினைந் தத்தியாநத்திலே யிடைவிடாது கலந்துநிற்றல். 3. யாகஞ்செய்யப்படாமை. 4. வேதமோதல். (மநு. ௩: எச.) [அஹுத: ஹுத- ஓமஞ்செய்யப்பட்டது, அழைக்கப்பட்டது.]

அகுதி— அசதி. (உ-ம்.) "அகுதியிவடலை யின்விதியானுலும்" (திருப்பு. கஉக. நன். பொதுவி. உக. உரை.) [அகதையென்பதன் விகாரம்.]

அகுப்பியம்— 1. பொன். 2. வெள்ளி. [அகுப்யம்: குப்யம்- செம்பு, பித்தளை முதலிய இழிந்த லோகங்கள்.]

அகும்பை—கவிழ்தும்பைப்பூண்டு.

அகுரு— 1. அகில்மரம். 2. இலகுவானது, கனமில்லாதது. 3. குருவில்லாதவன், குருவாகாதவன். [அகுரு: அ- எதிர்மறை. குரு- கனம், ஆசிரியன்.]

அகுலி— நறுவிலிமரம். (வை. தீ.)

அகுலீநன்— உயர்குலத்தோனல்லாதவன். [அ- எதிர்மறை. குலீநந்- உயர்குலத்தோன்.]

அகுவைக்கட்டி— அரையாப்புக்கட்டி. (வை. தீ.)

அகுளிதநாதர்—நிஷேதகர்மசாத்திரங்கள் செய்த நவநாதசித்தர்களிலொருவர். (த. நி. போ. உருக.)

அகுளுதி—வேப்பமரம். (வை. தீ.)

அகூடகந்தம்—பெருங்காயம். [அகூடகந்த: [அகூட - மறைவின்மை. கந்த- வாசனை.]

அகை—1-3. அகையென்னேவலுந்தெரிநிலைவினைப்பகுதியும் பெயரெச்சத்தொகையும். 4. எரிதல். (உ-ம்.) "அகையுறுகழைகொன்றுண்ட" (கந்தபு. வள்ளி. கக.) [இது முதனிலைத்தொழிற்பெயர்.] 5. கூறுபாடு. (சிந். முத்தி. கசு. உரை.)

அகைத்தல்—1. அடித்தல். (பிங்க. உகந எ) 2. அறுத்தல். (உ-ம்.) "மயிருக்கொன்றாக வாங்கியகைத்தகைத்திடுவர்" (சிந். முத்தி. கசுஅ.) 3. எழுப்புதல். 4. ஓட்டுதல். (இராசவை.) 5. செலுத்துதல். (இராசவை.) 6. தழைத்தல், கிளைத்தல். (உ-ம்.) "குப்பைக்கீரை கொய்கண்ணகைத்த" (புறநா. கருக.) 7. முறித்தல். (உ-ம்.) "உம்பலகைத்த வொண்முறியாவும்" (பத்து. மலைபடு. சஉக.) 8. வருத்தல்.

அகைதல்— 1. எரிதல். (உ-ம்.) "அகையெரியானுது" (கலி. கநக.) 2. ஒடிதல். (உ-ம்.) "அகைந்தவித்துணைமலர்" (பாரத. புட்ப. சo.) 3. தளிர்த்தல். (உ-ம்.) "கொய்குழையகைகாஞ்சி" (கலி. எசு.) 4. முரிதல். 5. வருந்தல். "அகையேலமர்தோழி" (சிந். கேம. கககு.) 6. எழுதல். (உ-ம்.) "வேங்கைகளெரியகைந்தனவலருட்கும்." (தணிகை. திருநா. சக.)

அகைப்பு— 1. அடித்தல். 2. அறுத்தல். 3. எழுப்புதல். 4. ஒடித்தல். 5. முறித்தல். 6. வருத்தல்.

அகைப்புவண்ணம்— இருபது வண்ணங்களுள் ஒன்று; அது "வாராராயினும் வரினுமவர்நமக்-கியாராகியரோதோழி" என்பதிற்போல அறுத்தறுத்துப் பயிலுஞ்சந்தமுடையது. (உ-ம்.) "அகைப்புவண்ண மறுத்தறுத்தொழுகும்" (தொல். பொரு. ருசஉ.) [அகைப்பு - அறுத்தல். வண்ணம்- சந்தம். விட்டுவிட்டுச்செல்வது என்றபடி.]

அகைமம்—குருவிச்சை. (வை. தீ.)

அகோ—ஒரு வடமொழியவ்வியயம்; இது: இகழ்ச்சி, துக்கம், இரக்கம், ஐயம், அழைப்பு, ஆச்சரியம், புகழ்ச்சி, சம்மதம், பொறுமை முதலியபொருள்களுளொன்றையுள்ளிட்ட ஒருகுறிப்புமொழி. (உ-ம்.) "மண்டலத்தின்மிசையொருவன்செய்த வித்தையகோவெனவும்" (ஆச்சரியம்.) (தாயு. மண்ட. க.) [அஹோ.]

அகோசரம்—1. அறியப்படாமை. (உ-ம்.) "காட்சிமுன்னைம்பிரமாணங்களுக்கு மகோசரமதான-திருகில்பிரமம்" (சூத. எக்கி. பூ. கஅ. சு.) 2. புலன்களுக்கு விடயமாகாமை. [அகோசர: அ- எதிர்மறை. கோசர - விடயம்.]

அகோடம்—கமுகமரம். [அகோட: அ- எதிர்மறை, கோட- வளைவுடையது.]

அகோதாரை— அதிகமாக மழைபொழிகை. [அஹோ- ஆச்சரியங்குறிக்கும் ஓரவ்வியயம். தாரா- நீரொழுக்கு.]

அகோபிலம்— கடப்பையென்னுமூரிலுள்ள ஒரு விட்டுணுதலம்; இது சென்னைக்கு வடமேற்கேயுள்ளது. (உ-ம்.) "சொலகோபிலநரசிங்கம்" (திருச்செந். கஅ: சந.)

அகோரகலை— சிவபூசை செய்யும்போது சிவலிங்கத்தைச்சதாசிவனுகப்பாவித்து அவரதைந்துமுகத்திலுநிற்பனவாகக் கொள்ளப்படுங் கலைகளுள் அகோரமுகத்தில் நிற்குங் கலைகள்; அவை: தமம், மோகம், காயை, நிட்டை, மிருத்து, மாயை, உருத்திரபயம், சுவரம் என எட்டாமென்றும், அவற்றுக்குத் தானங்கள் இருதயம், கண்டம், வலத்தோள், இடத்தோள், நாபி, வயிறு, முதுகு, மார்பு

என எட்டாமென்றுஞ்சொல்வர். (அகோ. கிரி. ௨சரு-௨சச.)

அகோரகைவல்லியப்பிரதம்— தணிகை மலை. (உ-ம்.) "வீட்டினையகோரனென்று ரைக்கு - மரிறபுதவத்தோர்குய்த் தளித்தி டலாலகோர கைவல்லியப்பிரதம்" (தணிகை. புராண. ௬௦.) [ஸ்ஃவொர- ஒருதபோதனன். கைவல்ய- மோக்ஷம். ப்ர ஃத-கொடுப்பது.]

அகோரசிவாசாரியர்—பத்ததிக்காரர்பதினெண்மருள் ஒருவர்; இவர் வசித்த இடம் சிதம்பரம்.

அகோரதந்திரம் — உபாகமங்களுளொன்று. [ஸ்ஃவொரதந்த்ர.]

அகோரப்பிரமம்— அகங்காரம், சக்ஷு, பாதம், ரூபம், அக்கினியென்பவற்றிற் கதிட்டானதேவதையாகிய உருத்திரர். (கூர்மபு. பிர. தோ. ௬. உரை.) [ஸ்ஃவொரப்ரஹ்ம]

அகோரம்— 1. அகோரமுகம். (உ-ம்.) "விசயமுதலைந்தும் விகிர்தவகோரத்தி-லிசைய்வுதித்தே" (சைவச. பொது. ௩௩௩.) 2. அச்சம்விளைக்கத்தக்கது. 3. அச்சம்விளையாதது. 4. உக்கிரம். 5. கொடுஞ்செயல். (உ-ம்.) "அன்னதோர்காலையகோரவெங்காலன்" (திருநெல். சுவேத. அஅ.) 6. நரி. 7. பஞ்சமந்திரங்களுளொன்று; அது பஞ்சபாசங்களையும் அழிப்பது. (பௌட். பதி. ௬௦.) [ஸ்ஃவொர: ஸ - எதிர்மறை, ஒப்புமை. வொர- அஞ்ஞானம், பயங்கரமானது.]

அகோரமுகம்— சதாசிவனுடைய ஐந்து முகங்களுளொன்று; இது சர்த்திருசாதாக்கியமென்னுந் தத்துவமும் ஈசுவரனென்னு மூர்த்தியும் பொருந்தியுள்ளது. [ஸ்ஃவொர; முக.]

அகோரலிங்கம்— பஞ்ச லிங்கங்களுளொன்று; (த. நி. போ. ௩௩உ.) [ஸ்ஃவொர; லிங்க.]

அகோரவுரை— அகோரமந்திரம். (உ-ம்.) "உரைத்தேயகோரவுரை" (சைவச.பொது. ௩உக.) [ஸ்ஃவொர; உரை- மந்திரம்.]

அகோரன்—பரசிவன். (உ-ம்.) "அவமறுத்தெமைப்புரக்கு மீசானனகோரன் சத்தியோசாதன்" (சூத. எக்கி. பூ. ௩௩. ௨.) [ஸ்ஃவொர: ஸ- ஒப்புமை. வொர- பயங்கரம்.]

அகோராத்திரம்— 1. அகோரம் அத்திரமென்னும் இரண்டுமந்திரங்கள். (உ-ம்.) "அருமைமகவின் சிரப்புறத்திலகோராத்திரத்தான்" (திருவானை. கோச்செ. எச.) [ஸ்ஃவொராஸ்த்ர.] 2. இரவும் பகலும்; அஃதொரு சூரியோதயந்தொடங்கி மற்றைநாட் சூரியோதயம்வரையுமுள்ளகாலம். (உ-ம்.) "அக்கலை மூப்பான்கொண்டது முகூர்த்தமுறுமது மூப்பான்கொண்டது மனிதர்க்கோரகோராத்திரமாகும்" (சூத. சிவமா. அ: ௩.) [ஸஹொராத்ர: அஹஸ் - பகல். ராத்ரு- இரவு.]

அகோரை— 1. இரண்டரைநாழிகைக் காலம். [ஸ்ஹொரா.] 2. புரட்டாசிமாசத்துக்கிருட்டிணபக்கத்துச் சதுர்த்தசி [ஸ்ஃவொரா.]

அங்கக்கிரகம்— ஒருவகைச்சரீரவலி-கெண்டைவாங்கல். [ஸ்ஙக்ரஹ: ஸ்ஙம்- சரீரம். க்ரஹ- பிடிப்பு.]

அங்கக்கிரியை— 1.சரீரத்தினதுழைப்பினுற்செய்யுஞ்செயல். 2. சரீரத்தினல், நடனார்த்தமாகச்செய்யுஞ்செயல்; அச்செயல்: சரிகை, புரிகை, சமகலி, திரிகை, ஊர்த்துவகலிகை, பிருட்டகம், அர்த்தபிருட்டகம், சுபத்திகம், உல்லோலம், குர்த்தநம், வேட்டநம், உபவேட்டநம், தாஙபதப்பிராயவிருத்தம், உட்சேபணம், அவட்சேபணம், நிகுஞ்சநம்எனப்பதினறுவகைப்படும்.(உ-ம்) "ஈரெண்வகையவங்கக் கிரியையும்" (சிலப். அரங்கே. கஉ. உரை. குறிப்பு.) [ஸஙக்ரியா: ஸங- உறுப்பு,சரீரம். க்ரியா-தொழில்.]

அங்ககணிதம்— எண்கணிதம்; அஃது: எண்களின் சம்பந்தமுறையையும், அவற்றினற்கணிக்கும் விதிகளையும் உணர்த்து நூல். [ஸங்க; கணிதம்.]

அங்ககம்— 1. அங்கத்தோடு சம்பந்தமானது.2.உறுப்பு. 3. சரீரம். [ஸஙக: ஸங்க.]

அங்ககாரம்— 1. அங்கசேட்டை. 2. பரதத்திற்பொது இலக்கணங்களாகிய இருபது பேதங்களுளொன்று. (உ-ம்.) "விண்டிடாத்தேசிசாரியே நியாயம் விருத்தியே பிரவிசாரம்பூ-மண்டலமுட் டுகாசமண்டலமேமா

சில்சுத்தக்காணஞ்சீர்-கண்டவுற்புலிசகாண மேயங்ககாரமேயிரேசிதமென்னக்-கொண் டனாலெந்துபேதமுங்கற்றுக் கோதறப்பயின் றபினவற்றுள்" (திருவிளை. கான்மா. கூ.) [சுஜூஹார: சுஜூ- சரீரம். ஹார- அசைத்தல். இருபதுபேதங்களினெஞ்சியவற்றின் நாமம் எட்டாஞ்செய்யுளிற்காண்க.]

அங்கஹீநம்— உறுப்புக்குறைவு. [சுஜூ ஹீந: சுஜூ- உறுப்பு. ஹீநம் - குறைவு.]

அங்கஹீநமந்திரம் — இருதயம் முதலிய அங்கங்களைக் குறியாது சொல்லும் மந்திரம். (த. நி. போ. உகஎ.) [சுஜூஹீநமாந்த்ரு.]

அங்கஹீநன்—உறுப்புக்குறைந்தவன். [சுஜூ ஹீந: சுஜூ-உறுப்பு. ஹீந- குறைந்தவன்.]

அங்கச்சனி— ஒருவன் பிறக்கும்போதவனுடைய தேக உறுப்பில் நிற்பதாகக்கணிக்கப்படுஞ்சனி. (உ-ம்.) "ஒன்றுநான்காறு நான்கோரைந்து மூன்றிரண்டிற்றிரண்டு- மென்றும் வாய்கைகாலிடக்கைவயிறுச்சி கண்ணிலிங்கம்-பொன்றுமரணம் வழிபோக்கிடர் திருப்போற்றுநன்மை-நன்றுதீதங்கச்சனி கின்றநாண்முதனாட்டிக்கொள்ளே" (விதாந. எச்ச. ௰க.) [சுஜூ; ஸநி.]

அங்கச்செவ்வாய்— ஒருவன் பிறக்கும் போதவனுடைய தேக உறுப்பில் நிற்பதாகக்கணிக்கப்படுஞ்செவ்வாய். (உ-ம்.) "அங்கச் செவ்வாய் பலன்" (விதாந. எச்ச. சஎ. கவி முகம்.) [சுஜூ- செவ்வாய்.]

அங்கச்சோமன்— ஒருவன் பிறக்கும்போ தவனுடைய தேக உறுப்பில் நிற்பதாகக் கணிக்கப்படுஞ் சந்திரன். (உ-ம்.) "முண்டந்தொடை கணைக்கால்பத முச்சி கண் வாய் செவிதோ- டொண்டையுரம் வயிறங்கச்சோமற்குத்தன்னேரைபற்றிக் - கண்டனரின் பநற்காலஞ்சுகநோய்கணிகைதுன்ப-முண்டிடரின்பமொடோசையிலாபநோயுற்றிடுமே" (விதாந. எச்ச. சகூ.) [சுஜூஸொஜ: சுஜூ- உறுப்பு. ஸொஜ- சந்திரன்.]

அங்கசங்கம்—புணர்ச்சி. [சுஜூஸஜூ:சுஜூ- சரீரம். ஸஜூ- புணர்ச்சி.]

அங்கசம்— 1. இரத்தம். 2. உரோமம். 3. காமம். 4. நோய். [சுஜூஜ:சுஜூ உடம்பு, மனம். ஜ- பிறந்தது.] 5. மலைகளிலொன்று. (உ-ம்.) "அங்கசமென்னுங்குன்றும்" (கூர்ம பு. சம்பு. அஅ.)

அங்கசலனவாதரோகம்— ஒருவகை வாத ரோகம்; அது: "வாதத்தைப் பிறப்பிக்கின்ற வஸ்துவையும், வாதகோபவஸ்துவையும் மிகவும் புசித்தலினால் சர்வாங்கத்திலும் பிறந்து வாதநரம்புத்துவாரங்களிலும் வியாபித்து, உடம்பெங்கும் பரவி வேதனையைச்செய்யும். அப்போது ஊர்த்துவாங்கத்திலாவது,அதோங்கத்திலாவது, நடுக்கல் உண்டாகும்." (சிவரட். எஎகூ.) [சுஜூ- தேகம். வலநம்- அசைதல்.]

அங்கசவேள்—மன்மதன். (உ-ம்.) "அங்கசவேண்முராசென்னவதிர்ந்த" (பிரபுலி. கைலாச. உக.) [சுஜூஜ; வேள்.]

அங்கசன்— 1. புத்திரன். 2. மன்மதன். "அங்கசன்றென்றற்றேரிலாயினன்" (நல். பார. வசு. ச0௬.) [சுஜூஜ:சுஜூ-உடம்பு,மனம். ஜ- பிறந்தவன்.]

அங்கசா— சோதிடவுறுப்புக்களிலொன்று. [சுஜூ- ஜா.]

அங்கசாரி— சிவன். [சுஜூஜாரி: சுஜூஜ- மன்மதன். அரி- பகைவன்.]

அங்கசாலைக்காரன்— ஊரதிபதியின் சட்டளைப்படி கிராமத்தாரைக்கூப்பிடி செய்ததற்கான ஆயத்தங்களைப்பண்ணுகிறவன்.

அங்கசிவயோகம்— அட்டாங்கசிவயோகம். (சி. சி. அ: உக. உரை. சிவாக்.)

அங்கசேட்டை—உடம்பினது சலனம். 2. கைமெய்க்காட்டு. [சுஜூ-உடம்பு. செஷ்டா- அசைதல்.]

அங்கசை—மகள். [சுஜூஜா: சுஜூ-உடம்பு. ஜா- பிறந்தவள்.]

அங்கண— அவ்விடம். (உ-ம்.) "அங்கணுற்றில" (கந்தபு. சூரன்றண்ட. உகூ.)

அங்கணம்—1. இரண்டு தூண்களுக்கிடையிலுள்ள இடம். 2. உள்ளறை. 3. கம்மோம். (கா. வைத்.) 4. சலதாரை. (உ-ம்.) "ஊரங்கணநீருராவு நீர்ச்சேர்ந்தக்கால்" (நாலடி. நல்வின. ௯.) 5. சேறு. (உ-ம்.) "அங்கணம் படர்வோரென்னவகமெலிவுற்றேன்" (கந்தபு. வீரவாகுசய. கஅ.) 6. பத்துமுழத்தளவு. 7. பரப்பு. (உ-ம்.) "ககனாங்கணம்" 8. பொரிகாரம். 9. மதகு. 10. முற்றம். (உ-ம்.) "அங்

கணத்துளுக்கவமிழ்தற்றால்"(வள். ௭௨௦.)11. வெங்காரம். 12. இடம், நிலம். (உ-ம்.) "முழுமாணிக்கத்தூண் - மன்னிஞ்சிமூன்றுமோனாங்கணமுதலேழ்நிலத்துப் - பொன்னின்சினாலயமாயிற்றன்றோ வெங்கள்புங்கவற்கே" (திருநூற். ௪௮.) [1, 2, 4, 5, 6, 7, 8, 9, 10, 11, [ஸ்ஜண.]

அங்கணர்— சிவன். (உ-ம்.) "வீரட்டத்தமர்ந்தருளுமங்கணரும்" (பெரியபு. தடுத்தாட். ௮௫.) [அம் - அழகு. கணர் - கண்ணுடையவர். அருட்கண்ணரென்றபடி.]

அங்கணன்— 1. அருகன். 2. சிவன். (உ-ம்.) "அங்கணனேயருளாய்" (தேவாரம் திருமுது. ௪. சுந்தர.) 3. மிருதபாஷாணம். (கா. வைத்.) 4. விட்டுணு.

அங்கணாளர்— சிவன். (உ-ம்.) "அங்கணாளர்தம்பிமுகத்தினில்" (பெரியபு. திருஞான. ௧௦௮௩.)

அங்கணி— 1. கற்றாழை. 2. காளி. 3. பார்ப்பதி.

அங்கத்தீ— உதராக்கினி; அது: சமாக்கினி, விஷமாக்கினி, தீக்ஷ்ணாக்கினி, மந்தாக்கினி யென நான்குவகைப்படும். (உ-ம்.) "சேர்த்தங்கத்தீ நான்கிலாதியந்தத்தீ முறையே யெரி" (தைல. அநுபங். ௬௪.)

அங்கத்தை— அவ்விடத்திருக்கும் பெரியவர். இது அங்கத்தி எனவும் வழங்கும். (உ-ம்.) "அங்கத்தைக்கெல்லாந்தெரியும்" (வழக்.)

அங்கதச்செய்யுள்—வசைக்கவி. (உ-ம்.) "நெடுவெண்பாட்டே குறுவெண்பாட்டே, கைக்கிளைபரிபாட்டங்கதச்செய்யுளொ,டொத்தவையெல்லாம்வெண்பா யாப்பின"(தொல். பொரு. ௪௩௦.)

அங்கதப்பாட்டு-அங்கதச்செய்யுள். (உ-ம்.) "அங்கதப்பாட்டவற் றளவோடொக்கும்" (தொல். பொரு. ௪௭௨.)

அங்கதம்— 1. சந்திரகலை பதினாறிலொன்று. (வி-ணி. ௨௪௬.) 2. தோளணி - வாகுவலயம். (உ-ம்.) "மற்றடம்புயவரைமிசை வரம்பிலா விலைகள்பெற்றவங்கதம்" (திருவிளை. மாணிக். ௧௨.) [அங்கத.] 3. பாம்பு. (உ-ம்.) "அங்கதக்குழாமங்கதுபுரிந்தன" (சேதுபு. காசிப. ௪௨.) 4. பொய். 5. மார்பு. 6. யானையுணவு. 7. வசைகூறுங்கவி; அது: செம்பொருளங்கதமென்றும், வசைப்பொருளினைக் கரந்துசொல்வதாகிய பழிகரப் பங்கதமென்றும் இரண்டுவகைப்படும். (உ-ம்.) "ஆற்ற நன்னெடுங் கவிஞரோரங்கதமுரைப்ப" (இராமா. முதற். ௨௪௮.) "அங்கதந் தானேயரிறபத்தெரியிற்-செம்பொருள் கரந்ததென விருவகைத்தே" (தொல். பொரு. ௪௩௬.)

அங்கதர்— வசைச் செய்யுள் சொல்வோர். (உ-ம்.) "புலவோர்களைப் பழிக்கும் பொல்லாவங்கதர்க்கெளியேனலேன்" (தேவார. ஆலவா. ௧௦. ௪ம்.)

அங்கதன்— 1. இலக்குமணனுடைய ஒருமகன். (இரகு. அவதா. ௪௩.) [அங்கத.] 2. கிட்கிந்தையிலேயிருந்த குரக்கரசனாகிய வாலியின் ஒருமகன். (இராமா. விடை. ௧௮.)

அங்கதாரி— 1. சிவன். 2. சீவன். 3. தேகம். [ஸ்ஜ- எலும்பு, உடம்பு. தாரி- தரிப்பவன், தரிப்பது.]

அங்கதாளம்— பரதசாஸ்திரத்திற்சொல்லப்பட்ட தாளப்பிரமாணங்கள் பத்தினுள் ஒன்று; அது: அநுதரிதம், துரிதம், இலகு, குரு, புளுதம், காகபதம் என ஆறுவகைப்படும்.

அங்கதி— 1. கொடை. 2. தியாகம். 3. நெருப்பு. 4. நோய். (சப்த.) [ஸம்ஹதி] 5. பிரமா. 6. யாகாக்கினிவளர்க்கும் பிராமணன். 7. வாகனம். 8. வாயு. 9. கிருட்டிணன். [5, 6, 7, 8, [ஸ்ஜதி.]

அங்கனை— 1. சதாசிவனுடைய பஞ்சமுகங்களுளொன்றாகிய ஈசானமுகத்தினிற்குங் கலைகளுள் ஒன்று. (த.சி. போ. ௩௦௧.) 2. தென்றிசை யானையின் பெண்யானை. [ஸ்ஜநா.]

அங்கநட்சத்திரம்— ஒருவன் பிறக்கும்போதவனுடைய தேக உறுப்பினிற்பதாகக்கணிக்கப்படும் நட்சத்திரம்.

அங்கநம்— 1. அசைதல், போதல். 2. அரசர்மனையின்முற்றம். 3. முற்றம். [ஸ்ஜந]

அங்கநியாசம்— அநுட்டானக்கிரியைகளுள் ஒன்று; அது: இருதயம் முதலிய அங்கங்களிலே மந்திரத்தோடு கையாற்றொடுதல். (உ-ம்.) "அங்கநியாசஞ்செய்க" (சூத. எக்கி. ௫: ௧௫.) [ஸ்ஜந்யாஸ: ஸ்ஜ - உறுப்பு. ந்யாஸ- வைத்தல்.]

அங்கநூல்— வேதாங்கநூல். (உ-ம்.) "மந்திரஞ்சிட்சை சோதிடாதி மற்றங்கநூல்" (தாயு. ஆகார. ௨.)

அங்கனை— 1. பெண். (உ-ம்.) "அங்கனைகடவாநடஞ்செய் கச்சிவாணன்"(கம்பராந்.

அசமர்த்தவிசேடணசித்தம்— சொரூபாசித்த எதுப்போலிவகையுளொன்று; அது: சாத்தியத்தைச்சிறிதுஞ்சாதிக்கவலியில்லாத விசேடணத்தையுடையது; "சத்தம் நித்தியம், குணத்துவமுடையதாய காரணபாவத்தையுடைமையால்" என்பதிற்போல. [இங்கே நித்தியத்துவத்தைச் சாதிக்கக் குணத்துவமுடையதாகிய விசேஷணம் வலியில்லாததாயிற்று.] (தர்க்கபா. எஎ.) [அஸமர்த்த- பயனில்லாத. விசேஷண- விசேடிப்பது. ஸித்த முடிவுபெறுமை.

அசமர்த்தவிசேடியாசித்தம்— சொரூபாசித்த எதுப்போலிவகையுள் ஒன்று; அது சாத்தியத்தைச்சிறிதுஞ் சாதியாத பயனில்லாத விசேடியத்தையுடையது. "சத்தம் நித்தியம், அகாரணத்துவமுடையதாய்க் குணத்துவமுடைமையால்" என்பதிற்போல. [இங்கே நித்தியத்துவத்தைச்சாதிக்கக் குணத்துவமுடைமையாகிய விசேடியம் வலியில்லாததாயிற்று. (தர்க்கபா. எஅ.) [அஸமர்த்த- பயனற்ற. விசேஷ்யம் - விசேடிக்கப்பட்டது. ஸித்த - முடிவுபெறுமை.]

அசமருதம்— அத்திமரம்.

அசமவாயி — 1. அசமவாயிகாரணம். (உ-ம்.) "காரணமுஞ்சமவாயி, அசமவாயி, நிமித்தமென்னுங்கூறுபாட்டான் மூவகைப்படும்" (தர்க்கபா. ௬.) 2. சமவாயமல்லாதது. [அஸமவாயி: ஸமவாயி-ஒற்றுமையுடையது]

அசமவாயிகாரணம்— சமவாயிகாரணமல்லாதது; அது: சமவாயிகாரணத்தணுகியிருப்பதுந் துணிந்தகாரணத்தன்மையுடையதுமாயிருப்பது. (உ-ம்.) "யாது சமவாயிகாரணத்தணுகியிருப்பதுந் துணிந்தகாரணத்தன்மையடையதுமாயிருப்பது, அஃதசமவாயிகாரணமென்று கூறப்படும். எங்ஙனம்? ஆடைக்கு நூலியைபசமவாயிகாரணம்; நூலியைபாகிய குணம் ஆடைச் சமவாயிகாரணமும் குணியுமாகிய நூல்களிலே சமவேதித்திருத்தலின், சமவாயிகாரணத்தணித்தாயிருத்தலின், பிறிதொன்றற்காகாமையு நியதியுமாகிய முன்னிற்றற்றன்மையால் ஆடையைக்குறித்துங்காரணமாதலின், இங்ஙனம், நூலுருவமு மாடையையடைந்த உருவிற்க சமவாயிகாரணம்" (தர்க்கபா. அ.) [அஸமவாயிகாரண.]

அசமாநம்— சமாநமின்மை. [ஸமாநம்-ஒப்புமை.]

அசமுகன்— 1. ஆட்டினது முகத்தையுடையவன். (உ-ம்.) "அசமுகத்தக்கன்" (கந்தபு. யாக. சகூகூ.) 2. தக்கன். [அஜமுகன்: அஜம்- ஆடு. முகம்- முகமுடையவன்.]

அசமுகி— 1. ஆட்டுமுகமுள்ளவள். 2. சூரனுக்குத்தங்கை[illegible]. (கந்தபு. அசமுகிநகர். ௪.) [அஜ - ஆடு. [illegible] - முகமுள்ளவள்.]

அசமுசாரி— மலபந்தமில்லாதவன். [[illegible] ஸாரி - மலபந்தமுடையவன்.]

அசமோதகம்— அசமோதம்.

அசமோதம்— அசமதாகம். [அஜமோத: அஜ - ஆடு, மோத - பரிமளம்.]

அசர்— அயிர், பொடுகு.

அசர்வகர்த்திருத்துவம்— சர்வகர்த்திருத்துவமின்மை. (உ-ம்.) "அசர்வஞ்ஞத்துவ அசர்வகர்த்திருத்துவரூப பசுத்துவத்தையுமுடையனாகி" (சி. சி. எ: உ. உரை. ஞானப்.) [ஸர்வ - எல்லாம். கர்த்ரு - செய்வோன். த்வ- தன்மை.]

அசர்வஞ்ஞத்துவம்— சர்வஞ்ஞத்துவமில்லாமை. (உ-ம்.) "அசர்வஞ்ஞத்துவ" (சி. சி. எ: உ. உரை. ஞானப்.) [ஸர்வஜ்ஞத்வ - எல்லாமறியுந்தன்மை.]

அசர்வஞ்ஞதை— சர்வஞ்ஞத்துவமில்லாமை. (உ-ம்.) "ஆன்மாவுக்கு அசர்வஞ்ஞதைக்கு உபாதிசொல்லி" (சி. சி. ௬: உக. உரை. சிவாக். [ஸர்வஜ்ஞதா - எல்லாமறியுந்தன்மை.]

அசரசீவன்— தானாயியங்குந்தன்மையில்லாத உயிர்ப்பொருள். (உ-ம்.) "சரசீவன் அசரசீவன் சராசரசீவன் இந்தமூன்றுக்கும்" (த. நி. போ. உஎக.) [அசரஜீவ.]

அசரம்— தானாயியங்குந்தன்மையில்லாதது. (உ-ம்.) "அசரசரபேதமான" (தாயு. சின். ௬;) [அசரம்: அ- எதிர்மறை. சரம்- அசைவது, செல்வது.]

அசராது—கொன்றைமரம்.

அசரியம்— 1. அழிவின்மை. 2. சிநேகம். [அஜர்ய: ஜர்ய - அழிவு.

அசரீரத்துவம்— சரீரத்தன்மையின்மை. (வி-ணி. உருஉ.) [அசரீரத்வ.]

அசரீரம்—சரீரமின்மை. (உ-ம்.) "அசரீரமவிகாரமத்துவிதமென விலக்குமநேகமுண்டே" (கைவல்.சந்தே.கூஎ.) [அஶரீர]

அசரீரமுத்தி—விதேகமுத்தி. (உ-ம்.) "சரீரமுத்தியுடையபேர் நக்ஷத்திரரூபமாய்ப்பிரத்தியக்ஷமாய்த்தெரிகிறதுபோல் அசரீரமுத்தியுடையபேர் தெரியவில்லை" (வாசுதே. உக.) [அஶரீரமுக்தி.]

அசரீரன்—1. சரீரமில்லாதவன். 2. மன்மதன். [அஶரீர: ஶரீர - சரீரமுடையவன்.]

அசரீரி—1. ஆகாயவாணி. (உ-ம்.) "என்றது வானிடைத்தசரீரி." (பாரத. புட்ப. எஅ.) 2. சரீரமில்லாதது. (உ-ம்.) "நானன்று நானன் றசரீரியன்று சரீரியன்றே" (கந்தால.) 9. சரீரமில்லாதவன். (உ-ம்.) "சர்த்தாசரீரியோ வன்றியசரீரியோ" (சி. சி. க: ந அ.உரை.ஞானப்.) [அஶரீரி. ஶரீரி- சரீரமுடையது, சரீரமுடையவன்.]

அசரு—1. அகிர், பொடுகு. 2. புண்ணின் அசடு.

அசருதல்—அயருதல்.

அசரை—1. அழிவின்மை. [அஜரா: ஜரா - அழிவு.] 2. ஒருமீன். [வழக்.] 3. நரைதிரையின்மை, வார்த்திகமின்மை. [ஜரா- நரைதிரை, வார்த்திகம்.]

அசல்—1. அயல். [அயலென்பதன் றிரிவு.] 2. கொசுகு. (உ-ம்.) "மேசநோய் பெருங்காற்றின் மேவசலென் றுணரே" (தைல. நக.) 3. சிலை. 4. பூமி. 5. மிக மேலானகாரியம். 6. மூலப்பிரதி.

அசலசலம்—நால்வகைச் சிவலிங்கங்களுளொன்று; அது: அசலசலலிங்கம். (உ-ம்.) "மண்டலமுங்காணினசலசலங்காண்" (சைவச. பொது. கஉக.) [அசலசல: அனந்தவிசய முதலிய தொண்ணூற்றாறுமண்டலலிங்கங்களுள் யாதொன்று தீக்ஷைக்குச்சொல்லியபடி வேதிகையிலிட்டுப் பூசிக்கப்படின் அசலமெனவும், இட்டலிங்கமாக நாடோறுமிட்டுப்பூசிக்கப்படிற் சலமெனவு நிற்றலால் "அசலசலம்" எனப்பட்டது.]

அசலசலலிங்கம்—நால்வகைச் சிவலிங்கங்களுளொன்று; அது: தீக்ஷைக்குச் சொல்லியபடி வேதிகையிலிட்டுப்பூசித்தற்கும், இட்டலிங்கமாக நாடோறுமிட்டுப் பூசித்தற்கும் உபயோகமான மண்டலலிங்கம். (சைவச. பொது. கஉங. உரை.) [அசல - அசைவின்மை. சல - அசைவு. லிங்க - விக்கிரகம்.]

அசலநம்—அசைவின்மை. (உ-ம்.) "சமாதியடையுநிமித்தஞ் சலநாசலநமின்றி யயிக்கியங்கூடும் விதம்" (ஞானவா. சிகித். கசுO. உரை.) [அசலந: சலந - அசைவு.]

அசலபதி—இமயமலை. [அசலபதி: அசல- மலை. பதி- தலைவன்.]

அசலம்—1. ஆயுதப்பிரயோகத்திலே செபிக்கப்படும் ஒருமந்திரம். 2. இரும்பு. 3. கற்பாஷாணம். 4. சலனமற்றது. (உ-ம்.) "அசித்தாயசலமாகி" (சிவப்பிர. உ. சு.) 5. நால்வகைச்சிவலிங்கங்களுளொன்றாகிய அசலலிங்கம். (உ-ம்.) "கோபுரமாதியசலம்" (சைவச.பொது.கஉஉ.) [போக்குவரவின்மையா லசலமெனப்பட்டது.] 6. நிலைத்திணை. 7. படைக்கலம். 8. பூமி. 9. மலை. (உ-ம்.) "பொறியராவிருபுடைபற்றித், தருவலிமிகையாலீர்த்தனரசலந்தன்பெயர் நாட்டியதன்றே" (காஞ்சிபு. மணி. கூ.) 10. வேறொருபொருளானுஞ்சலிக்கப்படா தென்றுமொருபடித்தாய்ச் சுவதந்திரங்கொண்டுநிற்பது. (உ-ம்.) "நித்தமாயொன்று யசலமாயொளியாய்" (கூர்மபு. பிரகி. சு.) [1, 2, 7. அஸல: அஸ - இருத்தல். அலம் - ஒரு வ-வி. 4, 5, 6, 8, 9, 10. அசல: சல-அசைவு, போதல்.]

அசலமூர்த்தி—அசைவின்றி நிலையாயிருக்கும் மூர்த்தி; அது: சிவலிங்கம். (உ-ம்.) "சிவலிங்கம் முதலாகிய அசலமூர்த்திகளினும்" (சி.சி.உ:உஅ. உரை. சிவாக்.) அசல- அசைவின்மை. மூர்த்தி-மூர்த்தமுடையது.]

அசலர்—அயலார். (உ-ம்.) "அசலருஞ் செச்சேயென" (திருப்பு. சகஎ.)

அசலலிங்கம்—இடப் பெயர்ச்சியின்றித் தாபிக்கப்பட்ட இடத்திற் றனேயிருக்கும் இலிங்கம். (உ-ம்.) "கோபுர முதலாயின அசலலிங்கமாம்" (சைவச. பொது. கஉஉ. உரை.) [அசலம்- அசைவின்மை. லிங்கம்- விக்கிரகம்.]

அசலன்—1. அசைவில்லாதவன். 2. கடவுள். 3. சிவன். 4. நிலைத்தவன். (உ-ம்.) "இந்த ஆன்மாவும் அசரீரியுமாய் அசலனுமாய்" (சி. சி. அ: சு. உரை. மறை.) [அசல: அ; சலன் - அசைவுடையவன்.]

அசலா—(சைவசித்தாந்தம்.) "கண்டத்திலிருக்கும் உகாரத்திலுண்டான பதினாறு கலைகளுளொன்று." (சி. வி. கிரி. உஉ. தாற்.)

அசலாதிபன்— 1. இமயமலை. 2. மலையரசன். [அசலாதிப: அசல - மலை. அதிப - அரசன்.]

அசலாவதி— (இலக்கணம்.) "மலையினின்றிழிந்தான்" என்பதிற்போல அசைவில்லாத எல்லைப்பொருள்பற்றி வினைகொண்டு முடிவது. இது, "அசலஞ்சலமாம் பூரணமாகுமவதி" யென்னும் வீரசோ. உபகாரக. ௩-ஞ் செய்யுளாற்பெறப்படும்.

அசலேசன்— 1. சிவன். (உ-ம்.) "அரனசலேசனம்பொற்றேக்குயர்கோயில்வாயிற் சேறலும்" (உபதேச. சிவபுண். ௩௪௫.) [அசல - மலை. ஈச - ஆள்வோன்.]

அசலை— 1. உமாதேவி. (உ-ம்.) "அம்பிகைதையசலைசுமங்கலை" (கூர்மபு. திருக்கல்.௨௦) 2. சிற்சத்திமூர்த்தி. 3. பூமி. (உ-ம்.) "அசலைமங்கைதன்மெய்த்தநுவளைத்திட" (கந்தபு. இரணி. ௫௬.) [அசலா: அ; சலா - அசைவுடையள், அசைவுடையது.]

அசலைமூர்த்தி—ஞானக்கிரியா சிற்சத்திமூர்த்தி; அது: தனது சங்கற்பத்தாற் றனசைவின்றி யசைவினாற்சடகாரிய நிகழப்பண்ணும். (சி. சி. க: ௫௬. உரை. ஞானப்.)

அசவல்— 1. அசமம். 2. கொதுகு. (சூ.நிகண். ௩: ௬௬.) 3. சேறு.

அசவாகநன்— 1. அக்கினி. 2. முருகன். [அஜ - ஆடு. வாஹந:]

அசவை—1. அசபாமந்திரம். [அஜபா.] 2. பெருவிரலடி.]

அசற்காரியம்— உள்ளதல்லாதகாரியம். (உ-ம்.) "இந்திரியங்களை நீங்கிச்சிவனுடைய சீர்பாதத்திலே பொருந்தியழுந்தின ஆன்மா, மீண்டும் அசற்காரியமான இந்திரியங்களிலே வந்து கூடப்படாது" (சி.சி. அ:௩எ. உரை நிரம்ப.) [அஸத் - பொய். கார்யம் - செய்யப்படுவது.]

அசற்காரியவாதம்—உள்ளதல்லாதகாரியந்தோன்றுமென்று வாதித்தல். (உ-ம்.) "அப்போதான்மாவின்முன் காணாத சிவத்துவங்காணப்படுமாகில் அசற்காரியவாதத்தைத்தாக்கித் தள்ளி சற்காரியவாதம் ஆவிர்ப்பவிக்கும்" (சி. சி. எ: உ. உரை. ஞானப்.) [அ; ஸத் - உள்ளது. கார்யம்; வாதம் - வாதித்தல்.]

அசற்கியாதி—அசத்தான ஒன்று உள்ளதுபோலத்தோன்றுதல். (விசார. அக.) [அஸத் - இல்லது. க்யாதி - விளங்குதல்.]

அசற்சூத்திரன்— ஒழுக்கமுந் தீக்ஷையுமில்லாத சூத்திரன். (உ-ம்.) "துங்கஞ்சேர் தீக்கையொழுக்கத்திலுன்ற சூத்திரன் சற்சூத்திரனுமவற்றிற்சாலாப்- பங்கஞ்சார்ந்தவனசற்சூத்திரனும்" (திருவானை. கோச்செங். உஎ.) [ஸச்சூத்ர- ஒழுக்கமுந் தீக்கையுமுடைய சூத்திரன்.]

அசற்பதம்— 1. ஆகாதவழி. 2. தூர்ப்போதனை, துராசாரம். [அஸத்பத: ஸத்பத நல்வழி.]

அசற்பாத்திரம்— ஈதற்குரியராகாதபடிற்றெழுக்கமுதவியவுடையதீயோர்.

அசற்பாவம்— 1. இல்லாதது. 2. கெட்ட கருத்து. 3. தீயகுணம். [அஸத்பாவ: அ; ஸத் - நன்மை. பாவ: - தன்மை, கருத்து.]

அசற்பிரதி—சுத்தமான பிரதி.

அசற்பிரதிபக்கம்— (தர்க்கம்.) அந்நுவய வியதிரேகியேதுவின் பஞ்சரூபங்களுளொன்று; அது, சாத்தியத்திற்கு விபரீத சாதகமாயிருக்கிற வேறோர் ஏதுவில்லாதிருக்கை. (தர்க்க- பா. உச; சி. சி. அளவை. கக. சிவாக்.) [அஸத் - இல்லாதது. ப்ரதி பக்ஷ - பக்கத்துக்கெதிர்.]

அசறு— ஒருவண்டு. 2. சேறு. (பிங்க. ௬௦௬.) 3. சொறி. 4. தலைச்சுண்டு. 5. புண்ணிலசடு. 6. புழு.

அசறுக்கம்— கருமைகலந்த சிவப்பு.

அசறை— அசரை.

அசன்— 1. சிவன். 2. தசரதராசனுடைய பிதா; இவன் இரகுவுக்கு மகன். 3. பிரமன். 4. பிரமனுடைய ஒருமகன். (த. நி. போ. கடுக.) 5. பிறப்பிலி. 6. மன்மதன். 7. விட்டுணு. [அஜ: 1, 3, 5, 6, 7. அ - எதிர்மறை, விட்டுணு. ஜ- பிறந்தவன்.]

அசன்மாநம்— நன்குமதியாமை. [அஸந்மாந.]

அசன்றிகா— 1. தைவேளைப்பூண்டு. 2. வேளைப்பூண்டு.

அசன்னு — உபயதன்மவிகலமென்னுந் திருட்டாந்தப்போலியுளொன்று. (உ-ம்.) "அசன்னுயுள்ளவுபயதன்மைவிகல, மில்லாப்பொருட்கட்சாத்தியசாதன, மென்னு மிரண்டுங் குறையக்காட்டுதல்" (மணிமேகலை. உக-ஆம் பா. ௩௭௪. அடி.)

அசா— 1. தளர்ச்சி. (உ-ம்.) "அசாவுறு செருவில்வென்றுடல்கொள்வதற்கு" (கந்த பு. மூதஞ.க.அங.) 2. (சாங்கியம்) பிரகிருதி. 3. மறியாடு. [2, 3. அஜா.]

அசாகசம்— 1. அமைதி. 2. பலாற்காரமல்லாதது. [அ; ஸாஹஸ - பலாத்காரம்.]

அசாகை— 1. களி. 2. புற்கை.

அசாசநம்— 1. அரசாட்சியின்மை. 2. ஆளுகையின்மை. [அசாஸநம்: ஸாஸநம்- ஆளுகை.]

அசாசி— கருஞ்சீரகம். [அஜாஜி.]

அசாட்சியம் — சாட்சியமல்லாதது. [அஸாக்ஷ்யம்: ஸாக்ஷ்யம் - கண்டவாறு கூறுவது.]

அசாணிமூலி— உத்தமதாளி, வேலிப்பருத்தி.

அசாத்தியம்— 1. அருமை. (ப. மொ. கரு.) 2. சந்தேகம். 3. சாதிக்கப்படக்கூடாதது, சித்தாந்தஞ்செய்யக்கூடாதது. (உ-ம்.) "இது பிரத்தியக்ஷாநுமானாகமங்களினலே யசாத்தியமாகையினல்" (சி. சி. அளவை. க. சிவாக்.) 4. சாத்தியமாக்கக்கூடாதநோய். (உ-ம்.) "பிணியளவு சாத்தியம் அசாத்தியம் யாப்பியமென்னுஞ் சாதி வேறுபாடும், தொடக்க நடுவீறென்னுமதன் பருவவேறுபாடும் வன்மை மென்மைகளு முதலாயின" (வள். ககசக. பரி.) [அஸாத்யம்: ஸாத்யம்- சித்தியடையத்தக்கது.]

அசாத்திரம்— 1. சாத்திரத்திற்கிசையாதது. 2. சாத்திரமல்லாதது. [அஸாஸ்த்ரம்: ஸாஸ்த்ரம் - உறுதிப்பொருளையறிவிக்குநூல்.]

அசாத்திரீயம்— சாத்திரத்திற் சொல்லப்படாதது. (உ-ம்.) "அசாத்திரீயமார்க்கமானது" (ஞானவா. மூமூட். க. உரை;) [அஸாஸ்த்ரீயம்: ஸாஸ்த்ரீயம் - சாத்திரத்திற்சொல்லப்பட்டது.]

அசாதகன்—இல்லறஞ்செய்வோர் இருதிறத்தருள் ஒருவன். (உ-ம்.) "எச்சமாற்றிப், பல்கலையும் பயின்றேற்றுப் பைங்கூழ்கள் விளைவித்துதியத்தினீட்டி, வெல்படைகள்பயில்வித்துப் பயின்றுளோனசாதகனும்" (கூர்மபு. இல்லறபே. க.) அஸாதக.]

அசாதசத்துரு— 1. தருமபுத்திரன். 2. தனக்குச்சத்துருவில்லாதவன். 3. தான் பிறர்க்குச்சத்துருவர்காதவன். [அஜாதஸத்ரு: அஜாத - தோன்றாத. ஸத்ரு - பகை.]

அசாதநம்— 1. அகாரணம். 2. சாதநமல்லாதது. [அஸாதநம்: ஸாதநம் - கருவி.]

அசாதம்— பிறவாதது. [அஜாத: ஜாதம்- பிறந்தது.]

அசாதாரணசவ்வியபிசாரம்— ஏதுப்போலிகள் ஐவகையினென்றாகிய சவ்வியபிசாரத்தின் ஒருவகை; அது, சிறப்பனைகாந்திகம்; ஏது சபக்கவிபக்கங்களில் இல்லாதது. (தர்க்கசங். உ௦.) [அஸாதாரணஸவ்யபிசார.]

அசாதாரணதருமம் — சிறப்பிலக்கணம். அஃதாவது அவ்வியாத்தி, அதிவியாத்தி, அசம்பவமென்னும் மூன்று தூஷணங்களும் நீங்கிய தருமம். அது பசுவுக்குச் சாசநாதியுடைமைபோல்வது. (தர்க்கசங். கூஉ.) [அஸாதாரணதர்ம.]

அசாதாரணம்—பொதுவல்லாதது. (சிறப்பு.) [அஸாதாரண: ஸாதாரண - பொது.]

அசாதாரணலக்கணம்—சிறப்பிலக்கணம். (உ-ம்.) "தன்னியல்பு என்பது அதிவியாத்தியவ்வியாத்தியசம்பவ தோஷரகிதமானஅசாதாரணலக்கணம். (சி.சி. அளவை. ச. சிவாக்.) [அஸாதாரணலக்ஷணம்.]

அசாதி— 1. உயிரெழுத்தினை முதலாக உடையது. (உ-ம்.) "அலாதியசாதியிவை" (பி. வி. சகூ.) 2. செவ்வாயென்னுங் கிரகம். (உ-ம்.) "சாபலமசாதிநன்னிற் றகர்களைதுலை மேற்கூட்டு" (கணிதாமிர்தம்.) [அஜாதி: அஜ் - உயிர். ஆதி - முதல்; அஜ - மேடம். ஆதி - அதிபதி.]

அசாது—1. சற்புத்தவறினமனைவி. 2. தீயவன். [அஸாது: அ- எதிர்மறை. ஸாது- பதிவிரதை, நல்லவன்.]

அசாதுரியம்—சாமர்த்தியமின்மை. சொற்றிறமின்மை. [அசாதுர்யம்: சாதுர்யம் - சாமர்த்தியம்.]

அசாந்தர்— சாந்தமில்லாதவர். (உ-ம்.) "விரவசாந்தர்கள்" (ஞானவா. சுராகு. சக.) [அசாந்த:]

அசாந்நித்தியம்—1. அண்மையின்மை. 2. சந்நிதிப்படாமை. [அஸாந்நித்யம்: ஸாந்நித்யம் - அண்மை.]

அசாபலம்— அசைவின்மை. [அசாபல: சாபலம் - அசைவு.]

அசாபாலகன்— அசாசீவி. [அஜாபாலக: அஜா-வெள்ளாட்டுமறி. பாலக-காப்போன்.]

அசாமர்த்தியம் — சாமர்த்தியமின்மை. [ஸுஸாமர்த்ய: ஸாமர்த்ய - வன்மை.]

அசாரதை—சாரமில்லாமை. [அஸாரதா: ஸாரதா - சாரமுடைமை.]

அசாரம்— 1. ஆமணக்கமரம். 2. ஒன்றற் குமுதவாமை. 3. பிரயோசநமின்மை. 4. பெலமின்மை. 5. முக்கியமல்லாத பங்கு. [அஸார.]

அசாவதாநம்—அவதாநமின்மை. [ஸுஸாவதாந: ஸு - எதிர்மறை. ஸாவதாநம் - அவதாநமுடைமை.]

அசாவாமை — தளர்ச்சியடையாமை. (உ-ம்.) "அருமையுடைத்தென்ற சாவாமை வேண்டும்" (வள். சுகக.)

அசாவிடல்—இளைப்பாறுதல். (உ-ம்.) "இரைதேர்ந்துண்டசாவிடூஉம் புள்ளினமி றைகொள" (கலித்தொகை. கஙஉ.) [அசா-தளர்ச்சி. விடல் - ஒழித்தல்.]

அசாவேரி— வசந்தகால இராகத்துளொன்று. (சைவச. மாணக். அ.)

அசி—1-3. அசியென்னேவலுந் தெரிநிலை வினைப்பகுதியும் பெயரெச்சத்தொகையும். 4. அவமதிச்சிரிப்பு. (சூ. நிகண். கக: சகர. ங.) [ஹஸி.] 5. ஆயுதம். (சூ. நிகண். கக: சகர. ங.) மிருகவதைசெய்வதிற் பிரயோகிக்கப்படும் ஆயுதம். [அஸி.] 6. ஆனையென ப்பொருள்படும் ஒரு வடமொழி வினைச்சொல்; இது: "தத்துவமசி" என்னுஞ் சாமவேத மகாவாக்கியத்திலே பரமான்மாவுஞ் சீவான்மாவும் அத்துவிதமாயிருத்தலைக் கருதி நிற்கும். (உ-ம்.) "ஆரணங்கடருதத்துவமசிபதங்களின் பொருளறிந்திடாய்" (சி.சி. பர. மாயாவா. மறு. கஅ.) 7. யுத்தம். 8. வாள். (உ-ம்.) "அசிநிகர்விழியினாய்" (நல். பார. வேத்தி. உஉ.) [அஸி.]

அசிக்கல்—அரும்பொருள்.

அசிக்கிநி— 1. அந்தப்புரத்திலே யேவல் செய்யும் இளம்பெண். 2. பஞ்சாப்புத்தேசத்திலுள்ள ஒரு நதி. [ஸுஸிக்நீ: ஸு; ஸிக்நீ-நரையுடையவள்.]3.தக்கன் மனைவி. (உ-ம்.) "வீரனப்பிரமனரிதினிற் பயந்தவேய்த்தடந் தோளசிக்கினிதன்" (கூர்மபு. அந்தகா. உ.)

அசிகுவன் — 1. அசத்தியவார்த்தையும் அநித வார்த்தையுமில்லாதவன். (வாசுதே. ககசுக.)2.நாக்கில்லாதவன். [ஸுஜிஹ்வ: ஜிஹ்வ-நாக்குடையவன்.]

அசித்தசாத்தியம்— முடியாத சாத்தியம். (உ-ம்.) "பிரத்தியக்ஷத்தினானு மநுமானத்தினாலும் அசித்த சாத்தியம்" (சி. சி. அளவை. கூ. உரை. சிவாக்.) [ஸுஸித்த-முடியாத. ஸாத்ய - சாதிக்கப்பட்டது.]

அசித்தம்— 1. ஒரேதுப்போலி; அது: பக்ஷத்திலிருக்கையில்லாத வேது; அது பக்ஷாசித்தம், சொரூபாசித்தம், வியாப்பியத்துவாசித்தமென மூன்றுவகைப்படும். 2. முடியாதது. 3. முடிக்கப்படாதது. இவை மூன்றிற்கும் (உ-ம்.) (சைவப். கக.)

அசித்தல்— 1. அழித்தல். 2. சிரித்தல். (உ-ம்.) "அசிப்பபோன்று" (சிந்தா. காந்த. ககஎ.) [இது ஹஸ் என்னும் வடமொழியடியாற்பிறந்தது.]2.பரிகாசம்பண்ணல்.(உ-ம்.) "முகக்கள் போலொளித்திருந்த முகிவராவி தன்னையும் - அசிக்கவீரன்விட்டகுலமன்னி யன்ளியுண்டதே" (அருணசலபு. திருவவ. உஉ.)

அசித்தன்— 1. அழிக்கப்படாதவன். 2. கண்டிக்கப்படாதவன். (வாசுதே. கக௬.)

அசித்தி— 1. அசித்தமென்னும் வேதுப்போலி. 2. முற்றுப்பெறாதது.

அசித்திரம்— சித்திரமின்மை. வாசுதே. கூ௫. [ஸுஸித்ர.]

அசித்து— 1. ஆன்மதத்துவமாகிய இருபத்துநான்கு தத்துவங்கள். (உ-ம்.) "சித்தசித்தொடீசனென்று செப்புகின்ற மூவகைத்தத்துவத்தின் முடிவுகண்ட" (பாரத. பதினை. க.) 2. சடப்பொருள். (உ-ம்.) "சித்தசித்துணர்ந்தருண்முகியும்" (பாரத. இராய. கசஅ. [ஸுஸித்: சித் - அறிவுடையது.]

அசித்துப்பொருள்—சடப்பொருள்.

அசிதம்— 1. அபரபக்கம். 2. அவமதிச்சிரிப்பு. 3. கருமை. (உ-ம்.) "அசிதவெங்கடலுண்டு" (இரகு. குசு. அங.) 4. சர்மன்வில்லு. 5. சனி. 6. சிரிப்பு. 7. மூலசிவாகமமிருபத்தெட்டினுள்ளே கௌசிகமுநிவர்பொருட்டுத் தோன்றிய ஐந்தாகமங்களுளொன்று; அது: பிரபூதாகமம் பரோற்பூதாகமம், பார்வதீதந்திரம், பதுமசங்கிதையென நான்குபபேதங்களையுடையது. இதற்குக் கோத்த சங்

கியை கியுதம். (சைவச. பொது. ௩௧௧. ௩௧௫. உரை; க. சொ. ௪௬௦.) [1, 3, 5. அஸித: ஸிதம் - வெண்மை. 2, 4, 6. அஜித; [அஜித.]

அசிதம்சம்—அசித்தின்கூறு. (சி. சி. ௫: அ. ஞாநப்.) [அஸித்- சடம். அம்ஸ-கூறு.]

அசிதவேலி— உதட்டிற் கரியசிறத்தைப் பெற்றிருக்கும் ஒருவகை எலி. இது கடிக்கி ற்சரீரங்கறுத்தலு மூர்ச்சையும் வாந்தியுமு ண்டாகும். (சீவரட். ௩௬௦.)

அசிதன்— 1. சநி. (பிரு - கம். உ: உ.) [அஸித: ஸித்-வெண்ணிறமுடையவன்.] 2. சிவன். 3. பதினொன்கா மநுவின்காலத்து ள்ள ஏழு முநிவருள் ஒருவர். (கூர்மபு. மநு வ. ௩௦.) 4. புத்தன். 5. விட்டுணு. [அஜித: ஜிதன் - வெல்லப்பட்டவன்.]

அசிதாங்கவைரவன்— வைரவரெண்மருள் ஒருவர். (த. கி. போ. உ.௫௦;) [அஸித- கறுப்பு. அங்கம் - சரீரம். ஒ. ஊ. ரவ.]

அசிதாம்புருகம்— நீலோற்பலம். [அஸிதாம்புருஹம்: அஸித- கறுப்பு. அம்புருஹம் - நீரிற்பிறந்தது.]

அசிதாரு—அசிபத்திரவநம். (உ-ம்.) "அதி பாதகக்கிரகசமற்றசிதாரு" (சிவதரு. சுவர்க். ௪௧௫.) [அஸிதாரு.]

அசிதாலவநம்—நூற்று நாற்பது நரகங்க ளுள் ஒன்று; அது: வாள்போலறுக்கும் மட் டைகளையுடைய பனங்காடு. (உ-ம்.) "உன் னுமசிதாலவநத்துடற்றுணியைத் தொடுத் திழுப்பர்" (சிவதரு. சுவர்க். ௪௪௫.) [அஸி தாலவநம்: அஸி - வாள். தாலவநம் - பன ங்காடு.]

அசிதை— 1. அவுரிப்பூண்டு. 2. பரையெ ன்னுஞ் சிவசத்தியின் நால்வகைப்பிரிவுள் ஒன்று. (சைவச. பொது. ௭௪. உரை.)[அஸிதா: ஸிதா - வெண்மை.

அசிதோதம்- மேருமலையின்சாரலிலுள்ள ஒருவாவி. (கந்தபு. அண்ட. ௩௨.)

அசிதோபலம்—இந்திர நீலமணி. [அஸிதம்-கறுப்பு. உபலம்- மணி.]

அசிதோற்பலம்— நீலோற்பலம். [அஸிதோத்பலம்: அஸித - கறுப்பு. உத்பலம்.]

அசிந்தம்—1. கோடாகோடி, பத்திலட்சங் கோடி. 2. மரணம்.

அசிந்தன்— சிந்திக்கப்படாதவன். [அசிந்த்ய: சிந்த்ய - சிந்திக்கப்படுவோன்.]

அசிந்திதன்— 1. அவமதிக்கப்பட்டவன். 2. நினைக்கப்படாதவன் 3. கடவுள். [அசிந் தித: சிந்திதன் - நினைக்கப்பட்டவன்.]

அசிந்தியம்— 1. ஓரெண். சிந்தைக்கெட் டாமை. [அசிந்த்ய: சிந்த்ய - நினைக்கப்ப ட்டது.]

அசிந்தை— 1. அவமதிப்பு. 2. சிந்தனை யின்மை. [அசிந்தா: சிந்தா - எண்ணம்.]

அசிநபத்திரி— வௌவால். [அஜிநபத்ரீ: அஜிந - தோல். பத்ரீ-சிறகுடையது. தோ லைச்சிறகாகவுடையது.]

அசிநபத்திரிகை—வௌவால். [அஜிநபத் ரிகா: அஜிந - தோல். பத்ரிகா - சிறகுடை யது.]

அசிநபத்திரை—வௌவால். [அஜிநபத்ரா: அஜிந - தோல். பத்ர - சிறகு.]

அசிநம்— 1. மிருகங்களின்தோல்.[அஜிந: அஜ - போதல். இந - ஒரு வ-வி.]

அசிநயோநி—மான். [அஜிநயோநி: அஜிந- தோல். யோநி - பிறப்பிடம்.]

அசிபத்திரகம்— 1. கரும்பு. 2. வாள்போ லுங்கூரிய இலையுடையது. [அஸிபத்ரக: அஸி - வாள். பத்ரக - இலையுடையது.]

அசிபத்திரம்— 1. கரும்பு. 2.படையுறை. 3. வாளலகு. [அஸி - வாள். பத்ரம் - இலை, இறகு.]

அசிபத்ரவநம்— ஒரு நரகம். [இதிலுள்ள மரங்கள் வாள்போலுங் கூரிய இலையுடை யன.] (உ-ம்.) "அழிவுதருகாலசூத்திரமசி பத்திரவநமே" (சேதுபு. சநுக். ௩.) [அஸி பத்ரவநம்: அஸிபத்ர - வாள்போலுங் கூரிய இலை. வநம் - காடு.

அசிபதசோநபம்— கூடஸ்தனே பிரமம்; பிரமமே கூடஸ்தனென ஐக்கியார்த்தமா யறிவது. (வாசுதே. உ௧௪.) [அஸிபதஸ்வ ரூபம்.]

அசிபதம்—"தத்துவமசி" யென்னும் மகா வாக்கியத்தின் மூன்ரும் பதம்; அது: சிவ சீவர்களுடைய ஐக்கியத்தைக் குறிப்பது.

அசியவாமீயசூக்கம்— பொன்னைத்திரு டிய பாதகந் தீர்க்குமாறு செபிக்கப்படும் ஓர் இருக்குவேதவாக்கிய மந்திரம். (உ-ம்.) "சிவ சங்கற்பங்களைவளரசியவாமீயசூக்கத்தைத் தவவுள்ளன்பிற் செய்த்திடிற்காஞ்சநங் கள்

ளியபாதகந்தீரும்" (சூத. எக்கி. பூ. சஉ:சரு) [ஸுஷியவாஜீயஸ-ருத்ஷ.]

அசிர்க்கரம்— பெரும்பாடு. (பதார்த்த. ௲சஉ. உரை.)

அசிர்க்கரோகம்— அல்குல்வழியால் இரத்தமொழுகும் ஒருவகைரோகம். இதனைப் பெரும்பாடு என்பர். (சீவரட். ருஅ.)

அசிர்க்கு—இரத்தம். (உ-ம்.) "வாதாசிர்க்கரோகம்" (சீவரட். ருஅ) [ஸுஷ்ரூஜ்]

அசிரநாநம் — கண்டஸ்நாநம். [ஸுஶிர ஸ்நாந: ஸுஶிரஸ் - சிரமல்லாத உறுப்பு. ஸ்நாநா - தோய்தல்.]

அசிரப்பிரபை—மின்னல். [ஸுஶிரப்ரபா: ஸுஶிரம்- அற்பகாலம். ப்ரபா-ஒளி.]

அசிரம்— 1. அற்பகாலம். 2. உடம்பு. 3. காற்று. 4. தலையற்றவுடல். 5. தவளை. 6. பொறிகளின் விடயம். 7. முற்றம். 8. வச்சிரக்கல். 9. வெட்டிவேர். [1. அசிர: சிரம்- நெடுங்காலம். 4. அசிரஸ்: சிரஸ்- தலை. 2,3, 5, 6, 7, அஜிர: அஜ - போதல். இர - ஒரு வ-வி. 8. அசிரம்.]

அசிரவணம்—செவிடு. [ஸுஶ்ரவண: ஶ்ரவணம் - கேள்வி.]

அசிரன்— 1. அக்கினி. 2. காற்று. 3. சூரியன். 4. பிசாசு. [ஸுஶிர: ஸுஶ் - உண்ணல். இர - ஒரு வ-வி.

அசிராபை— அசிரப்பிரபை.[ஸுஶிராபா: ஸுஶிர - அற்பகாலம். ஆபா - ஒளி.]

அசிருபாதம்— கண்ணீர்ப்பெருக்கு, கண்ணீர் சொரிதல். [ஸுஶ்ருபாத.]

அசிவகாரம்— அஞ்ஞானத்தைச்செய்வது. (சி. வி. ஞாந. அ.)

அசிவம்— 1. அதிட்டவீநம். 2. தீங்கு. 3. அஞ்ஞானம். (சி. வி. ஞான. அ.) [அசிவ: சிவ - மங்கலம்.]

அசிற்பிரபஞ்சம்— அசித்துப்பொருளாகிய பிரபஞ்சம். (உ-ம்.) "அசிற்பிரபஞ்சத்திலே சில அந்தக்கரணமுதலிய" (சி. சி. எ: க. ஞாந.) [அசித்; ப்ரபஞ்ச.]

அசீதகரன்— சூரியன். [ஸுஶீதகர: ஸுஶீத - உட்டணம். கர நீ - கிரணமுடையவன்.]

அசீதம்— 1. எண்பதாவது. 2. உட்டணம். [ஸுஶீத: ஶீதம் - குளிர்.]

அசீதளம்—கருப்பூரம். (உ-ம்.) "தல்லிய மசீதளம் பூலாங்கிழங்கசை"(தைல. தைலவ. ௬.) [அ - எதிர்மறை. சீதல - குளிர்.]

அசீதி— 1. எண்பது. (உ-ம்.) "அதற்கு நீள மசீதியுமைந்துமால்" (சிவதரு. கோபுர. அசு.) [அஶீதி.] 2. சடசிதிமுகம்; அது:ஆனி, புரட்டாதி, மார்கழி, பங்குனி என்னு மாதங்களின் பிறப்பு. (உ-ம்.) "ஆனிமுதனாளசீதி புரட்டாதிமுத - லேனையவிற்பங்குனியுமே" (சைவச. பொது. கரு.)

அசீதிகம்— எண்பதென்னும் அளவுடையது. [அசீதி: அசீதி - எண்பது. க - ஒரு வ-வி.

அசீதிகன் — எண்பது வயசுடையவன். [ஸுஶீதிக: ஸுஶீதி - எண்பது. கந் - ஒரு வ-வி.

அசீர்— ஆயத்தம். [இது இந்துஸ்தானி.]

அசீர்ணம்— 1. சமியாமை. 2. யௌவநம். [அஜீர்ண: ஜீர்ணம் - சமிக்கை, பழமை.]

அசீர்த்தி— அசீரணம். (உ-ம்.) "அக்கினி தேவற்கசீர்த்தியென்று சுக்கரைத்து" (ஒழிவி. கிரியை. ௬.) [அஜீர்த்தி - சீரணம்.]

அசீரணபேதி — சமியாமையால் வரும் பேதி.

அசீரணம்— அழிவுபடாமை. (உ-ம்.) "அசீரணமாஞ் சித்துருவாற் சீவன்வாழும்" (ஞாநவா. சிகித். கஅ.) 2. சமியாமை. [ஸுஜீர்ண: ஜீர்ண - அழிவு, சமிக்கை.]

அசீரணரோகம்— சமியாமையாலுண்டாகும் ஒரு நோய். (உ-ம்.) "அசீரணரோகமானது வாத பித்த கபங்களினால் முறையே ஆமாசீரணம், விதக்தாசீரணம், விஷ்டம்பாசீரணமென மூன்றுவிதப்படும். (சீவரட். அக.) [அஜீர்ணரோக: ரோக - நோய்.]

அசீரணவாயு—சமியாமையால் வரும்வாயு. [ஸுஜீர்ணவாயு.]

அசீரியம்— அழியாதது. (உ-ம்.) "அக்கிராகியமசீரியமசங்கமாயிருக்கு மமலமான" (சூத.எக்கி.உத்.பிரம.௧௦: கஅ.) [ "அசீர்ண" என்பதன் றிரிவுபோலும்.]

அசீலன் — நல்லொழுக்கமில்லாதவன். [அசீல: சீலன் - நல்லொழுக்கமுடையவன்.]

அசீவநம்— சீவனில்லாமை. (கட். கொ. திருவால. சொப்பனம்.)

அசீவநி— மரணம். [அஜீவநி: ஜீவநி- சீவனுடையது.]

அசீவம்— மரணம். [ஸஜீவம: ஜீவம - ஜீவித்தல்.]

அசீவன்—சீவனில்லாப்பொருள். [அஜீவ: ஜீவ - சீவித்தலுடையது.]

அசு— 1. சுவாசம். 2. துக்கம். 3. பிராணவாயு, பஞ்சவாயு. [அஸு.]

அசுகம்— 1. அடைதற்கருமை. 2. சுகமல்லாதது, துக்கம். அஸுவ.]

அசுகிருத்து—பகைவன். [ஸுஹ்ருத்: ஸுஹ்ருத் - நண்பன்.]

அசுகுணி— 1. ஒரு பூச்சி. 2. ஒருவகைக் காப்பன். 3. காதிற்படரும் ஒரு நோய். [அ - எதிர்மறை. ஸு - நல்ல. குணி - குணமுடையது.]

அசுசமன்— 1. அன்பன். 2. கணவன். [ஸுஸமஸ: ஸு - ஆன்மா. ஸம நீ - ஒத்தவன்.]

அசுசி— 1. அருவருப்பு. 2. அழுக்கு. (உ-ம்.) "தேரூரசுசியென் றகல்வரென் றுன்" (நல். பார. உமாமகே. ௫அ.) 3. இழிவுபடல், அபகீர்த்தி. சுசியின்மை. 4. சூரிய சமூகத்தினின் றூறிருதுக்களிலும் பாட்டயர்வோரில் ஒருவன். (கூர்மபு. ஆதவர்சிற. எ.)[1, 2, 3. அஸுசி: ஸுசி - சுத்தம்.]

அசுசிப்படல்— அழுக்கடைதல்.

அசுட்கம்— பச்சையானது, உலராதது. [அஸுஷ்க: ஸுஷ்க - உலர்ந்தது.]

அசுண்டவாயு— பூமிக்கு மேலே யைம்பது யோசனைக்கப்பாலிருக்கும் ஒரு வாயு; இது: சமஸ்த சீவன்களுக்குந் தீபநம் பிறப்பித்திராட்சதர் கெமநத்துக்கும் பட்சிகள் கெமநத்துக்கும் ஆதாரமாயிருக்கும். (த.நி. போ. ௬௪௨.)

அசுணம்—அசுணமா. (உ-ம்.) "குழலிசை கேட்டருகணையு மசுணமென" (காஞ்சிபு. அந்தகே. அ.) (பிங்கல நிகண்டில்) கேகயப்புள்ளென்றூர். (சிந்தா. பதுமையா.௨௬எ.) ஆங்கவியுரையில் இசையறிவதோர்விலங்கென்றூர்.

அசுணன்— வெள்வெங்காயம்.

அசுத்ததத்துவம்— 1. ஆன்மதத்துவம். (சிவப். கட். முதலங்க.) ["ஆன்மதத்துவம் இருபத்துநான்கையும் அசுத்தமென்றதே தென்னில், அது பிரகிருதியிற் றேற்றமாகையாலு மும்மலத்தையுமுடைய சகலர்க்குத்தநுகரண புவநபோகங்களாயிருக்கையாலும் என அறிக"] (சிவப்பிர. வியாக். பொது. ௬௪. உரை. நுட்பம்.)

அசுத்தப்படல்—அழுக்காதல்.

அசுத்தம்— 1. அசுத்ததத்துவம். (உ-ம்.) "அசுத்தந் தந்திடும்புமான்கீழெண்மூன்றுய தத்துவம்" (சி. சி. ௨: ௭௦.) [பிரகிருதிமுதற் பிருதிவிவரையிலுள்ள தத்துவங்களெல்லாஞ்சத்துவமுதலான குணங்களினலே மிகவுஞ் சுகதுக்கபோகங்களையுண்டாக்குவதா லசுத்தமேயாகும். சி. வி. கிரி. ஞாந. ௨௰. உரை.] 2.அமேத்தியம்=பவ்வீ.(உ-ம்.) "ஆசையுற்றுழல்சூகரங்களசுத்தமேவியவாந்து" (சி. சி. பர. லோகா. மறு. ௨அ.) 3. சுத்தமின்மை. (உ-ம்.) "சாதககருமமுதலறைசருமங்களா லசுத்தமறச்சுத்தியடைந்தானய்" (சூத. எக்கி. பூ. ௨௧.அ.) 4. திருத்தமின்மை. 5. வேசிமார்க்கம். [அஸுத்த: ஸுத்த - தூய்மை.]

அசுத்நயாயாக்கோபகர்— அநந்தேசுவரர். (டௌட். பிந்து. ௧௬.) [அஸுத்தமாயாக்ஷோபக: க்ஷோபக - கலக்குபவர்.]

அசுத்தமாயாதத்துவம்— அசுத்த மாயையிலே யகந்ததேவராற் கலக்குண்டபாகம். அது தத்துவங்களினிடைவைத்தெண்ணப்படும். (சி. சி. ௪: ௨௧. உரை. சிவஞா. [அஸுத்தமாயாதத்வ.]

அசுத்தமாயை — நித்தியமாய் ஏகமாய் எங்கும் வியாபகமாய் அருவமாய்ச்சடமாய்ப் பிரளயகாலத்திலே யான்மாக்களுடைய கன்மங்களுக்குறைவிடமாய் ஆன்மாக்களுக்குச் சுத்தாசுத்தமும் அசுத்தமுமாகிய தநுகரணபுவனபோகங்கள் தோன்றுதற்கு முதற்காரணமாய்த் தன்காரியமுகத்தான் ஞாநக்கிரியைகளை விளக்குமாயினு மயக்கஞ்செய்வதாயுள்ள ஒரு பதார்த்தம். (சைவவினா.௧௬: சி. பி. கை. ௧௬.) "சுத்தமாயையின் அதோபாகமே யசுத்தமாயை" என்று சிலர் கூறுவர்."சுத்தமாயை மேலாய் நிற்ப அதன்கீழடங்கி மல கன்மங்களோடு விரவிமுதற்காரணமாயிருப்பது அசுத்தமாயை"என்பர் சிவஞானமுனிவர். (சி. சி. ௧: ௧௧.) [அஸுத்தமாயா.]

அசுத்தமார்க்கம்- அசுத்தாத்துவா.(உ-ம்.) "மாயையென்னும் பெயருள்ள பாசமானது

அநேகவித வல்லமையோடு கூடினதாயுஞ் சூட்சுமரூபமாயும் அசுத்தமார்க்கத்துக்கு முக்கிய வுபாதானகாரணமாயும்" (சி.வி. ஞான. அ. உரை.) [ஊமூ.]

அசுத்தன்— சுத்தனல்லாதவன். (உ-ம்.) "அசுத்தனென்றிடவுணர்வதுகுன்றி" (திருப்பு. சக.) [அஶுத்த: ஶுத்த - நல்லொழுக்கமுடையவன்.]

அசுத்தாத்துவகர்த்தா— அனந்தேசுவரர். (சி. வி. ஞான. கo.)

அசுத்தாத்துவா—பிருதிவிமுதற் பிரகிருதிவரையுள்ள இருபத்தைந்து தத்துவங்களின் சமூகம். இதன்கண்ணிருப்போர் வைந்தவம் திரோதம் ஆணவம் கன்மம் மாயேயமென்னும் ஐவகைப்பாசமுடையவர். இவ்வத்துவா அநந்தேசுவர கர்த்திருத்துவம். (சி. பி-கை. ந, சு; சி. சி. கக: ஞானப்.) [அஶுத்த; அத்வா.]

அசுத்தாவி— 1. சுத்தமில்லாத அரூபி. 2. பசாசு.

அசுத்தி— 1. அழுக்கு. 2. ஆணவமலம். (உ-ம்.) "இந்த ஆணவமலத்திற்குப் பரியாயநாமங்கள், பசுத்துவம், பசுநீகாரம், மிருத்தியு, மூர்ச்சை, மலம், அஞ்ஞானம், அவித்தை, ஆவிருதி, ருக்கு, கிலாநிபாவம்,மூலம் க்ஷயம், பாசம், அசுத்தி, பெந்தனம், வியாகாதம், களங்கம், மோகம், கேவலம், ஆவரணம், தமசு, சடம், படலம், நிரோதம், ஆச்சாதநம் இவைமுதற் பிறவுமுள" (சிவப்பி. உ: உரை. சிதம்.) 3. சுத்தமின்மை. (உ-ம்.) "மண்சுத்தம் பயின்றிருந்துஞ்சந்தமுறு கடாதிகளாகிய காலையசுத்தி சுத்திதாமானாற்போல" (சூத. எக்கி. பூ. கரு. கஉ.) 4. வழுக்களையப்படாமை. [அஶுத்தி: ஶுத்தி-சுத்தம்.]

அசுத்தை— குற்றமுடையவள். (உ-ம்.) "ஆதலாலசுத்தையென்றே யறிந்து வைத்தவளை நீத்தோம்" (இராமா. சீதை. ருசு.) [அ; ஶுத்தா - சுத்தமுடையவள்.]

அசுதந்திரம்—சுதந்திரமில்லாமை. [அஸ்வதந்த்ர: ஸ்வதந்த்ர - தன்வசம்.]

அசுதாரணன்—சிவன். [அஸுதாரண: அஸு - பிராணவாயு. தாரண - தரிப்பவன்.]

அசுதை—விஷம். [அஸுதா: ஸுதா-அமிர்தம்.]

அசுந்தரம்— 1. அழகற்றது. 2. தகாதது. [அஸுந்தர: ஸுந்தர - அழகுள்ளது.]

அசுப்பு— 1. உளவு. 2. சடிதி.

அசுபக்கிரகம்— தீயகிரகங்கள்; அவை: ஆதித்தன், செவ்வாய், சநி, அபரபக்க சந்திரன், இராகு, கேது, ஆதித்தனுடன்கூடி நின்ற புதன் என்பன. (உ-ம்.) "சுபாசுபக்கிரகம்" (விதான. மாபி. உ - ஆங்கவிமுகம்.) [அஶுபக்ரஹ.]

அசுபக்கிரியை-அமங்கலக்கிரியை.(உ-ம்.) "ஈன்றோர்க்கன்றிப்புல் லசுபக்கிரியை செயல்" (திருவாளை. கோச்செ. ருக.) [அஶுபக்ரியா: அஶுப-சுபமல்லாதது. க்ரியா-செயல்.]

அசுபதம்பவாதம்— ஒரு நோய்.

அசுபதி—1.இருபத்தேழுநட்சத்திரங்களுள்ளே முதலாம் நக்ஷத்திரம். [அஶ்விநீ.]

அசுபபாவனை— (பௌத்த) பாவனை ஐந்தனுள் ஒன்று; அது: உடம்பினை யநித்தியம், துக்கம், அநான்மா, அசுசியென்றுபாவித்தல். (மணிமேகலை. நகஅ.) [அஶுப; பாவநா - எண்ணம்.]

அசுபம்— 1. அமங்கலகாரியத்திற் செய்யுங்கிரியை. (உ-ம்.) "தாழ்வுபெறுசிராத்தமுதலசுபத்தும்" (திருவாளை. கோச்செ. சக.) 2. அமங்கலம். (உ-ம்.) "சுபாசுபங்களென்னுந் துன்றுமுளை தந்தருளுமேகிவித்தாம்" (ஞானவா. உபசா. கள.) 3. அழுக்கிரா. [அஶ்ரு.] 4.பாவம். [1, 2, 4, அஶுபம் ஶுபம்- நன்மை.]

அசுபயோகம்—சுபமல்லாதயோகம்.அது சாதகனுக்கிலக்கினத்திற்குப் பன்னிரண்டாமிடத்திலே சந்திரசூரியரல்லாத மற்றைக்கிரகங்கள் கூடிநிற்கும் நிலை. (சரசோ. சாதக. உoக.) [அஶுபயோக: யோக - கூட்டம்.]

அசுபராசி—குரூரராசி. (உ-ம்.) "சுபராசியசுபராசி"(விதான. பஞ்சாங். கச. கவிமுகம்) [அசுபராசிகள்: மேடம், சிங்கம், விருச்சிகம், மகரம், கும்பம் என்பன. இவை பாவக்கிரகங்களுக் காட்சிவீடாய் அசுபராசியாயின. [அஶுபராஶி.]

அசுபவாதநை— தீயவிடயவாதனை. (உ-ம்) "வருத்தத்தாலே மெத்தமுயன் றசுபவாதனை யைத்தள்ளி" (ஞானவா. முமூட். ந.) [ஸுப — வாஸநா: வாஸநா - அழுத்தம்.]

அசும்பல்— இடையறுதொழுகல். (உ-ம்.) "அசும்புதேனலங்கல்" (சிந்தா. காந்த. கஉக.)

அசும்பு—1-3. அசும்பென்னேவலுந் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். 4. ஊறுதல்; நீர்ப்பொசிவு. (பிங்கல. ஙுஉ.) (உ-ம்.) "அசும்பிவர்சாரல்" (சிந்தா. காந்த. ௩௦) 5. கிணறு. (சூ. நிகண். ௫; உஎ.) 6. சேறு. (உ-ம்.) "தாழ்கணசும்பின்" (மணிமேகலை. ௬.) 7. துளி. (உ-ம்.) "அம்மழையசும்பதன் புண்ணீர்" (திருவிளை. நாட்டு. சச.) 8. பொல்லாநிலம். 9. வழுக்குநிலம்.

அசும்புதல்—1. அசும்பல். 2. வழுக்குதல். (உ-ம்.) "சோலைத்தே - னொழுகிநின் றசும்புயர்சந்தனத் தொழுதிக்குன்றம்" (சிந்தா. முத்தி. சகூ.)

அசும்புசெய்தல்— ஒளிவீசுதல். (உ-ம்.) "ஆயபொதியில் வளைபொன்னு லசும்புசெய்து" (திருவிளை. உலவா. கஎ.)

அசுமத்— 1. சீவன். நாமெனப்பொருள்படும் ஒரு வடமொழிப் பிராதிபதிகம். (உ-ம்.) அசுமதாதி பாகியேந்திரியாகோசரம்" (சி. சி. உ: எக. உரை, சிவாக்.) [அஸ்மத்.]

அசுமந்தகம்— நாணற்பூண்டு. [அஸ்மந்தகம்.]

அசுமந்தம்— 1. அடுப்பு. 2. அதிட்டவீனமானது. 3. எல்லையில்லாதது. 4. மரணம். 5. வயல், வெளி. [அஸ்மந்த.]

அசுமம்— 1. இடியேறு. 2. கல்லு. 3. தீத்தட்டிக்கல்லு. 4. மேகம். [அஸ்மந்.]

அசுமநா— சூரியவமிசத்துள்ள அரியச்சுவனென்னும் அரசனுக்கு மகனான ஒருவன். (கூர்மபு. சூரிய. உஅ.)

அசுமலோட்டிரநியாயம்— மீமாஞ்சையிற் கூறப்பட்ட நியாயங்களுளொன்று; அது, ஒரு மண்ணாங்கட்டியை யொருகல்லோடு சீர்தூக்கும்போது மண்ணாங்கட்டி மிருதுபதார்த்தமாகவும், பஞ்சோடுசீர்தூக்கும்போது அது கடினபதார்த்தமாகவும் விளங்குதல் போல ஒருவன் தன்னின் மேலானவரோடு சீர்தூக்கப்படும்போது இழிந்தவனாகவும் தன்னின் இழிந்தவரோடு சீர்தூக்கப்படும்போது உயர்ந்தவனாகவுங் காணப்படுதலாகிய நியாயம். [அஸ்மலோஷ்ட ந்யாய: அஸ்ம- கல்லு. லோஷ்ட - மண்ணாங்கட்டி.]

அசுமாந்தகம்—நாணற்பூண்டு. [அஸ்மாந்தக]

அசுமாந்தம்— நாணற்பூண்டு. (உ-ம்) "இவை கிடையாவழி, தருப்பை, அசுமாந்தநார்" (பராச. க. ஆசா. உ. அத். ௩எ.)

அசுமாநகிரி— மேற்கட்டி. [இது இந்துஸ்தானி.]

அசுரகன்— 1. அக்கினி. 2. இந்திரன். 3. விட்டுணு. [அஸுரஹந்: அஸுர - அவுணன். ஹந் - கொல்வோன்.]

அசுரதரு— 1. சுக்கிரனென்னுங் கிரகம். 2. சுக்கிராசாரியர். [அஸுரகுரு.]

அசுரசந்தி— இரணியவேளை, மாலைக்காலம். [அஸுரஸந்தி.]

அசுரநாள்— மூலநாள். (பிங்க. உ௫எ.)

அசுரபி— துர்க்கந்தம். (தச. ச.) [அ; ஸுரபி - நறுமணம்.]

அசுரம்— அசுரமணம். (உ-ம்.) "வரமுந் தசுரமிராக்கதமே" (கல். பார. துட்டி. சக.)

அசுரமணம்— எண்வகை விவாகத்துளொன்று; அது: "பெண்ணுக்காபரணமிட்டுப் பெண்ணின் பிதாவுக்கும் பணங்கொடுத்துப்பெண்ணினைவாங்கிச் செய்யும் விவாகம்" என்று "ஆசுரம்" என்னும் பெயருடன் மநு தருமசாத்திரம் மூன்றும் அத்தியாயம் ௩க - ஆஞ் சுலோகத்திற் சொல்லப்பட்டிருக்கின்றது. தொல்காப்பியப்பொருளதிகாரவுரையிலே "அசுரமாவது: கொல்லேறு கோடல், திரிபன்றியெய்தல், வில்லேற்றுதல் முதலியனசெய்துகோடல். "முகைகயவிழ்கோதையை மூள்ளெயிற்றரிவையைத் - தகைநலங் கருதுந் தருக்கினிருள்ளேனி - னிவையிவை செய்தாற்கெளியண்மற்றிவளெனத் - தொகைநிலையுரைத்தபின்றைப், பகைவலித்தன் னவையாற்றியவளவையிற் - றொன்னிலைய சுரந்துணிந்தவாறே" என எழுதப்பட்டிருக்கின்றது. (தொல். பொரு. களவி. க). [அஸுர - அசுரசாதிக்குரிய. ஐணம - விவாகம்.]

அசுரமந்திரி— சுக்கிரன். (சூ. நிகண். க: ௩௩.) [அஸுர: மந்த்ரிந் - ஆலோசனை சொல்வோன்.]

அசுரர்— அவுணர்.

அசுரன்— 1. அவுணன். 2. இராகு. 3. கேது. (உ-ம்.) "தகைபெறு பூதசம்போத நனென்று மசுரனென்றும்" (மச்சபு. புவந கோச. உஎ.)

அசுரரிபு—விட்டுணு. [ஸுராரி: ஸுர: ரிபு - பகைவன்.]

அசுரேசன்— அசுரர்களுக்குத் தலைவன். (உ-ம்.) "என்றசுரேசனிசைத்தலும்" (கந்தபு. வரவுகே. கரு.) [ஸுரேஶ: ஈஶ: - தலைவன்.]

அசுரேந்திரன்— தாரகாசுரனுடைய ஒரு மகன். (கந்தபு. புதல்வ. கக, உ0.) [ஸுரேந்த்ர: இந்த்ர - சிரேட்டன்.]

அசுரை— 1. இராக்காலம். 2. இராசி. 3. வேசி. [ஸுரா.]

அசுலபம்— அடைதற்கருமை. [ஸுலப: ஸுலப - இலகுவிலடைகை.]

அசுவகந்தி— அமுக்கிரா. (உ-ம்.) "அசுவகந்தி பலாலட்சை நவில்வாம்" (தைல. தைலவ. உரு.) [அஶ்வகந்தி: அஶ்வ - குதிரை. கந்தி - நாற்றமுடையது.]

அசுவகந்திகா—அமுக்கிரா. [அஶ்வகந்திகா]

அசுவகந்திபலாலட்சாதைலம் — ஒருவகைத்தைலம். (இதனிலக்கணம், தைல. தைலவ. உரு-ம் கவியிற்காண்க) "அசுவகந்திபலாலட்சை நவில்வாம்—பேதசூதிகைவாயுவுஞ்சந்நியாம்பீடைவாதபித்தாமையுஞ் சேவண்ப், பேர்கொள்வெப்பமுதலிய நோய்களும் பேருயிர்க்கெதிர்பீளையலரோ."

அசுவகந்தை — அமுக்கிராப்பூண்டு. [அஶ்வகந்தா.]

அசுவகிரந்தம்— ஒரு பறவை. (மகாபாரதம். க: கசஅஅ.) [அஶ்வக்ராந்த.]

அசுவகிநி—அசுபதிநக்ஷத்திரம். [அஶ்விநீ.]

அசுவகோட்டம்— குதிரைச்சாலை. [அஶ்வகோஷ்ட: அஶ்வ - குதிரை. கோஷ்டம் - சாலை.]

அசுவசாத்திரம்— குதிரையிலக்கண முதலியன கூறும் நூல். [அஶ்வஶாஸ்த்ர: ஶாஸ்த்ரம் - நூல்.]

அசுவசாந்தி— ஒரு யாகம். [அஶ்வஶாந்தி]

அசுவசாரத்தியம்— குதிரை செலுத்தும் வன்மை. [அஶ்வஸாரத்ய.]

அசுவசாலை — குதிரைப்பந்தி. [அஶ்வஶாலா:]

அசுவசாவம்— குதிரைக் குட்டி. [அஶ்வஶாவ.]

அசுவசிகிற்சை — குதிரை வைத்தியம். [அஶ்வசிகித்ஸா: சிகித்ஸா - வைத்தியம்.]

அசுவத்தம்— 1. அத்திமரம். 2. அரசமரம். [அஶ்வத்த.]

அசுவத்தாமன்— துரோணாசாரியன் மகனாகிய ஒருவீரன். [அஶ்வத்தாமந்]

அசுவதமிட்டிரம்; அல்லது தட்டிரம்—நெருஞ்சி. [அஶ்வதம்ஷ்ட்ர.]

அசுவதந்திரபாவம்—பாதந்திரத்தன்மை. (பௌட். விந்து. ருக. உரை.) [அஸ்வதந்த்ர ஸ்வதந்த்ரஸ்வப. தன்வயமுடைமை.]

அசுவதந்திரம்—சுவதந்திரமின்மை. (உ-ம்.) "இனி (மாயாகுணத்துவயம்) அசுவதந்திரம், சுவதந்திரமெனமாயாகுணத்துவயமுண்டு" (த. சி. போ. கசஉ.) [அஸ்வதந்த்ர: ஸ்வதந்த்ரம் - தன்வயமுடைமை.]

அசுவதரம் — ஆண் கோவேறுகழுதை. [அஶ்வதர.]

அசுவதரன்— ஒரு நாகசிரேட்டன். [அஶ்வதர.]

அசுவதரி — பெண்கோவேறுகழுதை.

அசுவதி— அசுபதிநக்ஷத்திரம். (உ-ம்.) "அந்தரம்வரு மசுவதிநாள்" (தணிகை:நகர. நக.) [அஶ்வதி.]

அசுவந்தம்— 1. அடுப்பு. 2. அதிட்டவீனம். 3. இறுமெல்லை. 4. கேடாய்முடிதல். 5. மரணத்துக்குச் சமீபித்தல். 6. மரணம். 7. வயல். 8. வெளி. [1,4,5, அஸவந்த. 2,3,6,7. அஶ்வந்த.]

அசுவநாயன்— குதிரைகாப்போன், குதிரை மேய்ப்போன். [அஶ்வநாய:]

அசுவப்பிரதாநம் — சுவப்பிரதாநமல்லாதது. (உ-ம்.) "பாசிவசொரூபந்தனை- யடிவில்சுவப்பிரதாநம்லயங்கசுவப்பிரதாநமற்று

முள்ள - தடிவில்சமப்பிரதாநமிவற்றொன்று ய்த்தியாமித்தறகுதியாலோ" (சூத. எக்கி. பூ. க. எ.)

அசுவபரி— அலரி.

அசுவபரீட்சை— அறுபத்துநான்கு கலைஞாநங்களுள் ஒன்று; அது: குதிரையிலக்கணங்கூறுவது. [அச்வபரீக்ஷா: பரீக்ஷா-பரீட்சித்தல்.]

அசுவபாலன்—குதிரைப்பாகன். [அச்வபால: அச்வ-குதிரை. பால-காப்போன்.]

அசுவம்— 1. அமுக்கிராக்கிழங்கு. (தைல.தைலவ. க. உடு.) 2. குதிரை. 3.குதிரைப் பற்பாஷாணம். [அச்வ.]

அசுவமியம்— குதிரைப்பாஷாணம்.

அசுவமுகன்— குதிரைமுகமுள்ள கின்னரன். [அச்வமுக: அச்வ - குதிரை. முக-முகமுள்ளவன்.]

அசுவமேதம்— ஒருவகை யாகம்.

அசுவமேதிகம்— 1. அசுவமேதயாகத்திற்குரியது. 2. அசுவமேதயாகத்திற்குத் தகுதியான குதிரை. [அச்வமேதிக: அச்வமேத-ஒரு யாகம். இக - ஒரு வ-வி.]

அசுவமேதீயம்— அசுவமேதிகம். [அச்வமேதீய.]

அசுவரம்— 1. கீழ்க்குரல். 2. மெய்யெழுத்து. [அஸ்வர: அ - எதிர்மறை. ஸ்வர - தொனி, உயிரெழுத்து.]

அசுவலக்கணம்— குதிரையின் குணங்களையும் குற்றங்களையும் ஆராய்தற்குரிய குறி. [அச்வலக்ஷண: லக்ஷண - குறி.]

அசுவவாகன்—குதிரைப்பாகன். [அச்வ; வாஹ.]

அசுவவாதரோகம்— ஒருவகை வாதரோகம்; அது: குதிரைக்குட்டியின் பாய்ச்சல் போலத் தேகம் முழுதுங்குலுங்கும்படி பாய்ந்து மேனோக்கியேறி யவ்வாறே கீழிறங்கி யண்டத்தை வீங்கச்செய் தவைகளிலே தங்கிக்கோசத்தைச் சுருங்கப்பண்ணி யக்கோசத்திலும் அடிவயிற்றிலும் அளவிடக்கூடாத நோவையுண்டாக்குவது. (சீவரட். களஅ.) [அச்வவாதரோக.]

அசுவவித்து— 1. அசுவசாத்திரம் அறிந்தவன். 2. நளமகாராசன். [அச்வவித்: வித் - அறிந்தவன்.]

அசுவவைத்தியம்— குதிரை வைத்தியம். [அச்வவைத்ய.]

அசுவாபரி— அலரி.

அசுவாமணக்கு— சிறுபூளைப்பூண்டு.

அசுவாமி— உடையவனல்லாதவன். [அஸ்வாமி: அ- எதிர்மறை. ஸ்வாமி-உடையவன்.]

அசுவாமிவிக்கிரயம்—உடையவனல்லாதவன் விற்றல். (மிரு. சங். ந.) [அஸ்வாமிவிக்ரய: அஸ்வாமி - உடையவனல்லாதவன். விக்ரய - விற்றல்.]

அசுவாநடமூர்த்தி— மாணிக்கவாசகசுவாமிகள்பொருட்டு நரிகளைக் குதிரைகளாக்கியரிமர்த்தநபாண்டியனுக்குக் கொண்டுவந்த சிவன். (சிவபரா. கஎ०.) [அச்வ; ஆநய-கொண்டுவந்த. மூர்த்தி - மூர்த்தமுடையவன்.]

அசுவிநி— அச்சுவிநி. [அச்விநீ.]

அசுவிநிதேவர்—அச்சுவிநிதேவர். (உ-ம்.) "விளங்குமாண்குதிரையாகிச் - சென்றுறுவடவைதன்பாற் சேர்ந்துயோநிட்டமூக்கிலன்றுறுகவிதந்தன்னிலசுவிநிதேவருற்றார்" (மச்சபு. இளா. கச.) [இவர் தத்திரன், நாசத்தியனென்னும் இருவர்.] [அச்விநீதேவ.]

அசுவீயம்—1. குதிரைக்கூட்டம். 2. குதிரைச்சம்பந்தமுடையது. [அச்வீய: அச்வ; ஈய - ஒரு வ-வி.]

அசுவை— 1. அச்சுவிநிநாள். 2. தன்னுடையதல்லாதது. [அஸ்வா.] 3. பெட்டைக்குதிரை. [1, 3. அச்வா.]

அசுழம்— நாய். (உ-ம்.) "கருதசுழமாமிந்தமட்டைதனையாள" (திருப்பு. கசக.)

அசூசம் / அசூசி —1. சுத்தமின்மை. (உ-ம்.) "உன்னுடலமசூசியென நாணில்" (சி. சி. பர. சௌத். மறு. நஎ.) 2. சூதகம். ["அசுசி" யென்பதன்விகாரம்.]

அசூதி— 1. பிறப்பின்மை. 2. மலடு. [அஸூதி: ஸூதி - பிறப்பு.]

அசூயை— 1. அவதூறு. 2. அழுக்காறு, பிறருடைய குணத்திலே குற்றமேற்றுதல். (உ-ம்.) "கோபமோடசூயை லோபம்" (மச்சபு. மன்வந். யுச. உஉ.) [அஸூயா.]

அசூரி— மசூரிநோய். [மசூரியென்பதின் மகரங்கெட்டது.]

அசேசரி— புவர்லோகத்திலிருக்கும் ஒரு வாயு. (வி-ணி. உக௫.)

அசேசன்— சுத்தவித்தியாதத்துவத்தில் இருக்கின்ற ஐம்பத்தோர் உருத்திரர்களில் ஒருவர். (வி-ணி. உளஎ.)

அசேதநம்— 1. அறிவில்லாதது, சடம். (உ-ம்.) "விரவுசேதந வசேதநங்கட்கு மேன் மைசான்ற, பரவதிட்டாநமாய்" (சூத. ஞாந. கக: க.) 2. தானுயியங்குந் தன்மையில்லாதது. (உ-ம்.) "இறையேனென்னிலசேதநம்" (சிவப்பிர. உ. சு.) [அசேதந: அ; சேதநம் - அறிவில்லாதது.]

அசேநன்— சூரியசமுகத்தாறிருதுக்களிலு நின்று பாட்டயர்வோரில் ஒருவன். (கூர்ம பு. ஆதவர்சிற. எ.)

அசேவநம்— 1. அசட்டைபண்ணல். 2. கீழ்ப்படியாமை. 3. விலகுதல். [அஸேவந: ஸேவநம் - சேவித்தல்.]

அசேவை— 1. அவமதித்தல். 2. சேவையின்மை. 3. விலகல். [அஸேவா: ஸேவா - வணக்கம், பூசை, சேவித்தல்.]

அசை— 1. அசைநிலை. (உ-ம்.) "மூன்னிலையசை" (இலக்கணவி. உஎசு.) 2,3,4. அசையென்னேவலுந் தெரிநிலைவினைப்பகுதியும் பெயரெச்சத்தொகையும். 5. இரையை மீட்டுமெல்லுதல். (உ-ம்.) "அருந்தும் பசும் புல்லுணத் தெவிட்டியசைவிட் டுறங்குங்கன்று" (கூர்மபு. கண்ண - அவ. அங.) 6. சீரகம். (தைல. தைலவ. உக.) 7. செய்யுளுறுப்புக்களு ளொன்று; அது: எழுத்தினலாக்கப்பட்டு நேரசை நிரையசையென இருவகையாய்ச் சீர்க்குறுப்பாய் நிற்பது. (உ-ம்.) "அசைத்திசைகோடலினசையே" (இலக்கணவி. எகக.) 8. தாளவகையு ளொன்று; அதன் தொழில் தாக்கியெழுதல். அதன் மாத்திரையொன்று. அதற்கு வடிவு "எ" (சிலப். அரங்கே. கசு. உரை.) 9. பிரகிருதிமாயை. 10. வெள்ளாட்டுமறி. 11. மாணவர் சுவடிவைக்குந்தூக்கு. [9, 10. அஜா.]

அசைஇ— போய். (உ-ம்.) "கருங்கோட் டெருமை கயிறுபரிந்தசைஇ" (ஐங்கு. கூ௫.)

அசைஇய— மெலிந்த. (ஐங்கு.)

அசைகபாதன்— காசிபருக்குச்சுரபிபயந்த பதினோருருத்திரர்களுளொருவன். (மச்சபு. வசுருத். கஅ.) [அஜைகபாத.]

அசைகை— அசைதல்.

அசைச்சீர்— ஓரசையாலாகுஞ்சீர்; அது: நேரசையாயின் "நாள்" என்னும் வாய்பாட்டிற்கும், நிரையசையாயின் "மலர்" என்னும் வாய்பாட்டிற்கும் இலக்கியமாய்ப்பெரும்பாலும் வெண்பாவினீற்றிலுஞ் சிறுபான்மை மற்றையவற்றுள்ளும் வரும். (உ-ம்.) "நாமாண்புரைத்த வசைச் சீர்க்குதாரண நாண்மலரே" (யா - காரிகை. உறுப். எ.)

அசைச்சொல்—வேறு பொருளுணர்த்தாது பெயர்ச்சொல்லோடு அல்லது வினைச்சொல்லோடு சார்த்திச்சொல்லப்பட்டு நிற்குஞ்சொல். (உ-ம்.) "நீதான்" "மைந்தவென்னவே" (நன். இடையி. உஉ. உரை.)

அசைத்தல்— 1. ஆட்டுதல். (உ-ம்.) "நந்திபிரான்திருப்பிரம்பையசைத்தருளி" (காஞ்சிபு. மணிகண். ௩ச.) 2. இயக்குதல். 3. இறுமாப்பு. 4. ஓசையெடுத்தல். 5. கட்டுதல். (உ-ம்.) "பொன்னார்மேனியனே புலித்தோலையரைக்கசைத்து" (தேவா. மழபாடி. க. சுந்தர.) 6. சார்த்துதல். (தொல். சொல். இடை. உ. உரை. சேனு.) 7. சொல்லுதல். 8. வருத்துதல். (உ-ம்.) "நாய்நாவினல்லெழிலசைஇ" (பத். சிறுபா. கஎ.) 9. வீசுதல். (உ-ம்.) "ஆலவட்டமசைத்தனர்" (கந்தபு. திருக்கயிலா. உக.)

அசைந்தொழில்— (இசைநூல்.) தாக்கியெழுதல்.

அசைதந்நியம்—1. அசிற்பிரபஞ்சம். 2. அறிவில்லாதநிலை. 3. அஞ்ஞானம். [ஜடசைதந்ய: சைதந்ய - அறிவுடையது.]

அசைதந்நியநுபம்— (புத்தம்) சடரூபம்; அது: பிருதிவி, அப்பு, தேயு, வாயு என நான்குவகைப்பட்ட பூத உருவும் கடிநம், கந்தம், இரதம், வன்னம் என நான்கு வகைப்பட்ட உபாதாய உருவுமாகிய எட்டுங்கூடிய இடத்தில் உண்டாயது. (சி. சி. பர. சௌத். ௬, ௯-ஆம் உரை.) [ஜடசைதந்யரூப.]

அசைதல்— 1. ஆடுதல். 2. இயங்குதல். (உ-ம்.) "அவனன்றியோரணுவுமசையாது" (தாயு. எங்குநிறை. க.) 3. இருத்தல். (உ-ம்.) "தாவில்கொள்கைமடந்தையொடுசின்னாள்-ஆவினன்குடி யசைதலுமுரியன்" (பத். திருமு. கஎசு.) 4. இளைத்தல். (உ-ம்.) "உண்ணுநீர் வேட்டசைந்தேனென வுரைப்ப" (சிந். தா. கனக. ௩சு.) 5. இளைப்பாறுதல். (உ-ம்.) "கடும்பரிநெடுந்தேர்ப்பூட்டு விட்டசைஇ" (புறநா. கசக.) 6. உலாவல். (உ-ம்.) "தென்றியா யசைந்துமெல்லச்சிநகரம் புகுதுமெ

ல்லை" (கந்தபு. திருவவ. ௧௧.) 7. ஒய்தல். (உ-ம்.) "நடைமெலிந்தசைஇய நன்மென் சிறடி" (பத். சிறுபா. ௩௨.) 8. கலங்கல். 9. கிடத்தல். (உ-ம்.) "குரங்கின்மிசையசைஇய தொருகை" (பத். திருமுரு. ௧௦௯.) 10. செல்லுதல். (உ-ம்.) "அசைந்திடாதொழி கவென" (ஞானவா. சிகித். ௭௦.) 11. சோம்பலாயிருத்தல். (உ-ம்.) "இலமென்றசைஇ யிருப்பாரைக்காணின்" (வள். ௧௦௪௦.) 12. தங்குதல், சஞ்சரித்தல். (உ-ம்.) "அங்கணசைந்திடு தன்மையுன்னியருள்செய" (கந்தபு. தேவகிரி. ௯௦.) 13. தடுமாறுதல். (உ-ம்.) "மடங்கலின்றேற்ற நோக்கி யந்தகனசைந்துநின்றான்" (கந்தபு. சிங்க. ௩௪௦.) 14. தள்ளாடுதல், துவளல். (உ-ம்.) "வெங்கழுத்தசையநின்று சுமந்திளைத்தனர்" (பாரத. முதற்போ. ௩௬.) 15. பயப்படல். 16. புடைபெயர்தல்.

அசைநிலை— அசைச்சொல். [பொருளுணர்த்தாது பெயரொடும் வினையொடுஞ்சார்த்திச் சொல்லப்பட்டு நிற்றலின் அசைநிலையாயிற்று.] (உ-ம்.) "மற்றென்கிளவி வினைமாற்றசைநிலை" (தொல். சொல். இடை. ௧௪.)

அசைநிலையளபெடை — அசைகோடற்பொருட்டுக்கொண்ட அளபெடை; அது: "செறாஅஅய்வாழியநெஞ்சு" என்பதிற்போல வருவது. (பி. வி. ரு. உரை.)

அசைப்பு— 1. அசைத்தல். (உ-ம்.) "மலர்க்கையசைப்பில்" (காஞ்சிபு பாசிரா. ௧௧.) 2. இறுமாப்பு. 3. சொல்லு. (உ-ம்.) (திவாகர. ௧௧.) 4. சொல்லுகை.

அசைபோடல்—இரைமீட்டல். [போடல் போகடலென்பதன் மரூஉ.]

அசைமீட்டல்—மிருகங்கள் தாம் உண்ட உணவை மீட்டுமென் றிரைப்பையினுட் செலுத்துதல்.

அசையடி—(யாப்பு.) கலிப்பாவினோர்உறுப்பாகிய அம்போதரங்கம். (உ-ம்.) "அசையடிமிசைத்தாய்" (இலக்கணவி. ௭௩௮.)

அசையந்தாதி — செய்யுளில் ஓரடியின் ஈற்றசை மற்றையடிக்கு முதலசையாக வருந்தொடை. [இது: யா. காரிகை, உறுப்பி. ௧௭. உரையில். அடிதோறும் இறுதிக்கண் நின்ற எழுத்தையும், அசையையும், சீரையும் ஆதியாகத்தொடுப்பது அந்தாதித்தொடையென்பதன்றற் பெறப்படும்.]

அசையாநிலை— அசையாதநிலை.

அசையாமணி—விசேடசமயங்களினன்றி அசைக்கப்படாதமணி. [அரசருடைய ஆராய்ச்சிக்குக்கருவியாக வைக்கப்படுதலால் இதனைச் சிலர் ஆராய்ச்சிமணியென்பர்.]

அசையாமை—சலனமின்மை. (உ-ம்.) "விஞ்சுமஞ்சவசையாமை யிரண்டுமொன்றாய்" (ஞானவா. சிகித். ௧௯௦.)

அசையிடல்—அசைபோடல்.

அசையு— அழுக்கிரா என்னும் பூண்டு.

அசைவாடுதல்— 1. அசைதல். 2. உலாவுதல்.

அசைவின்மை— முயற்சி. (உ-ம்.) "ஆகூழாற்றோன்று மசைவின்மை" (வள். ௩௭௧.)

அசைவு— 1. இளைப்பு. (உ-ம்.) "செம்மலு மசைவுதீர்ந்தான்" (சிந்தா. கேமசரி. ௨௯.) 2. ஆட்டம், எழுச்சி. (உ-ம்.) "பெருத்துநீண்டசைவுபெற்றிடுபானை" (கந்தபு. முதற்றுட். ௩௮.) 3. சலனம். (உ-ம்.) "துணைமொததசைவறநின்றான்" (காஞ்சிபு. சார்ந்தா. ௧௩.) 4. சோம்பலாகிய பாடற்குற்றம். (உ-ம்.) "நாசிகாகுளி - பேசுறுகுற்றமசைவொடுயாற்றி" (கல்லாடம்.) 5. சோர்வு, தளர்வு. (உ-ம்.) "அற்றுத்தற்சேர்ந்தார்க் கசைவிடத்து" (நாலடி. குடிப். ௪௦.) 6. நிலைதவறுகை. (உ-ம்.) "ஓரசைவிலாதவனறைந்தனன்" (பாரத. கிருட். ௩௩௮.) 7. புடைபெயர்ச்சி. 8. மடிதல், பின்னிடுதல். (உ-ம்.) "அசைவிலூக்கத்து நசைபிறக்கொழிய" (சிலப். இந்திர. ௯௫.) 9. மனக்கலக்கம். (உ-ம்.) "அசைவிலாடவன்றன்னை" (கந்தபு. சூரன்றண். ௨௮.) 10. முன்னிலைமைகெட்டு வேறொருவாறாகி வருந்துதல். (உ-ம்.) "இழிவே யிழவே யசைவே" (தொல். பொரு. ௨௫௩.) 11. வருத்தம். (உ-ம்.) "என்னுழை யசைவின்றையனே" (சிந்தா. கனக. ௨௫௮.)

அசைவேட்டுதல்— இரையைமீட்டு மெல்லுதல்.

அசோகந்தளிர்மணி— சௌகந்திகப்பதுமராகமணி.

அசோகம்— 1. அசோகமரம். (உ-ம்.) "அளிமுரலணிமலரசோகம் பூத்தன" (நைட. அன்னத்தைக்க. ௩௬.) 2. சோகமின்மை. (உ-ம்.) "அசோகமெய்தி- மாறுதண்ணளிகூர் மலர்வாண்முகமாதவியே" (வாண. ௧௧.) 3. பாதாசம். 4. மருதமரம். 5. வாழை. [அசோக]

அசோகரோகிணி— ஒரு மருந்துப்பூண்டு. [அசோகரோஹிணி.]

அசோகவநம்— 1. அசோகமரச்சோலை. 2. இராவணனுடைய உத்தியானவனம். 3. வாழைவனம்.

அசோகவநிகாநியாயம் — இராவணன் சீதையை வைத்தற்கு மற்றை யிடங்களை விட்டுப் பிரதானகாரணம் ஒன்றுமின்றியசோகமரச் சோலையைத் தெரிந்துகொண்டது போல ஒரு காரியத்தைச் செய்தற்குப் பல வழியிருக்கவும் பிரதான காரணமின்றி ஒரு வழியைத்தெரிந்துகொள்ளுதல். [அசோகவநிகா - அசோகமரச்சோலை. ந்யாய - நீதி.]

அசோகவநிகை — அசோகமரச் சோலை. [அசோகவநிகா: அசோக - அசோக மரம். வநிகா - சோலை.]

அசோகன்— 1. அருகன். (உ-ம்.) "சமணருமசோகன்றனைநினைந்து" (திருவிளை. பாண்டி. ௬௦.) [அசோகமர நிழலில் இருக்கிறவன் என்றபடி.] 2. சோகநீங்கினவன். (உ-ம்.) "எனையசோகனெனச் செயவெண்ணியோ" (சேது. இராமனரு. ௪௪.) 3. மன்மதன். [அசோக.]

அசோகாரி — கடம்பமரம். [அசோகாரி.]

அசோகு—1. அசோகமரம். (உ-ம்.) "கணியின்கொம்பருலவியே யசோகின்வாவி" (கந்தபு. வள்ளி. ௭௨.) 2. மருது. 3. வாழை.

அசோகை—சவரிப்பூண்டு. [அசோகா.]

அசோசம்—1. அமைதி. 2. மநத்திருத்தி. 3. விசாரமின்மை. [அசோச: அ- எதிர்மறை. சோச - துக்கம்.]

அசோண்டி— அசோணம்.

அசோணம்— குறட்டைப்பூண்டு, சவரிப்பூண்டு. 2. சவரிலோத்திரம்.

அசோதநம்— 1. அசுத்தம். 2. திருத்தமின்மை. [அசோதந: சோதநா-சுத்தி.]

அசோதிதம்—1.சுத்திபண்ணப்படாதது. 2. திருத்தப்படாமை, பரிசோதிக்கப்படாமை. [அசோதித: அ; சோதித.]

அசோதை—நந்தகோபன் மனைவி; இவள் கண்ணபிரானைவளர்த்த தாய். (உ-ம்.) "அன்றிற்பெடைபோலரற்று மசோதை கையின ளித்தார்" (கூர்மபு. கண்ணனவ. ௬௦.) [யசோதா: யசஸ் - கீர்த்தி. தா - கொடுப்பவள். யகாரங்கெட்டு "அசோதை" என த்தற்பவமாயிற்று.]

அசோவதி — மேருவின் வடகிழக்கிலுள்ள ஒரு நகரம். (உ-ம்.) "இலகொளிவடகீழ்த்திசை யிடைவிளங்கு மசோவதியென்னுநன்னகரில்" (கூர்மபு. மேருவின்சி. ௩௫.)

அசௌசம்— 1. அசுசி, அழுக்கு, சுத்தியின்மை. 2. ஜநந மரணங்களால் வரும் ஆசௌசம். [அசௌச: சௌச- சுத்தம்.]

அசௌரியம்— வீரமின்மை. [அசௌர்ய: சௌர்ய - வீரம்.]

அஞ்சத்தான்— பிரமா. (உ-ம்.) "அஞ்சத்தானடியான வானவர்" (கந்தபு. அக்கினி. ௬௭.) [ஹம்ஸ - அன்னப்பறவை. அத்து- ஒரு சாரியை. ஆன் - ஒரு விகுதி.]

அஞ்சநக்கல்— சுருமிக்கல்.

அஞ்சநக்கலிக்கம்— அஞ்சநம் பார்க்கக் கண்ணுக்கிடும் ஒரு மருந்து.

அஞ்சநக்காரன்— அஞ்சனவித்தை செய்கிறவன்.

அஞ்சநக்கிரி— நீலமலை. (உ-ம்.) "அஞ்சநக்கிரியில் வாழு மகான்றன்" (அருணபு. இடப். ௧.)

அஞ்சநக்கோல்— அஞ்சனந்தீட்டும் இலேகனி. (உ-ம்.) "அஞ்சநக்கோல் ஞற்றுநாகம்" (சிந்தா. விமலை. ௬.)

அஞ்சநகிரி—சேடமலை.

அஞ்சநசலாகை — மைதீட்டுங் கோல். [அஞ்ஜநசலாகா: அஞ்ஜந - மை. சலாகா- கோல்.]

அஞ்சநசேவோத்தேசநம் — அஞ்சநபிரயோகத்தினால் விளக்குதல். (உ-ம்.) "அஞ்சனசேவோத்தேசந திருத்தியத்தாற் கண்ணொளி விளங்கிக்காணப்படுதல்போல்" (சி. சி. ௫. ௧. ஞானப்.) [அஞ்ஜந; ஸேவா; உத்தேஜநம்.]

அஞ்சநத்திரயம் — மூவகை யஞ்சநங்கள்; அவை: பூதாஞ்சநம், சோமாஞ்சநம், பாதாளாஞ்சநம் என்பன [அஞ்ஜந; த்ரய-மூன்று.]

அஞ்சநபாஷாணம் — வினைவுப்பாஷாணம் முப்பத்திரண்டினொன்று. (சட்ட. ௧௮௨.) [அஞ்ஜந; பாஷாணம் - கல்லு.]

அஞ்சநம்— 1. அக்கினி. 2. ஆணவமலம். (உ-ம்.) "அணுக்கடஞ் சத்திதன்னைத்திரைப் பாஞ்சநமுமற்றே" (சிவதரு. சிவஞானயோ.

கக.) 3. இரவு. 4. ஒரு பூண்டு. 5. ஒரு மரம். (உ-ம்.) "சூரலஞ்சனமந்தாரை" (மச்சபு. அத்திரி. ரு.) 6. ஒரு மலை. (உ-ம்.) "அஞ்சனங் கவுஞ்சங்கோவத்தநந்திரிகூடங் காஞ்சி-குஞ் சரசைய மேமகூடமேவிந்தமென்னு - மஞ் சிவர் வரைகளெட்டும்" (திருவிளை. யானை யெ. எ.) 7. கண்ணுக்கிடும் மை. (உ-ம்.) "அஞ்சனவியர் மதர்க்கண்ணிணைவிரகின்" (இரகு. தேநு. சுசு.) 8. கருமை. (உ-ம்.) "மேலோரஞ்சனப்போர்வை போர்த்தாலன்னதால்" (கந்தபு. காளிங். க௦.) 9. கல்க்கம்; பாம்பு கடியுண்டவர் முதலியோர்க்குக் கண்ணிலிடும் மருந்து. 10. சலவைக்கல். 11. தாமதகுண சித்திகளுளொன்று; அது: கண்ணுக்குப்புலப்படாது மறைந்துகிடக்கும் பொருளை வெளிப்படுத்திக்காட்டுவது. (கூர்மபு. உ: கச. உரை.) 12. மறைந்துகிடக்கும்பொருளைக்காட்டும் மை. 13. மேற்றிசைக்காவல் அமர்ந்துளதென்று சொல்லப்படும் ஒரு யானை. (சூ. நிகண். கூ. எசு.) 14. மை. (பிங்க. ந௦சச.) [அஞ்ஜந.]

அஞ்சநவண்ணன்—விஷ்ணு.

அஞ்சநவித்தை— அறுபத்துநான்கு கலைஞானங்களில் ஒன்று; அது: மறைந்தபொருளைக் காண்பிப்பது. (உ-ம்.) "அறுபத்துநான்கு கலைகளாவன: மாயாசம்பிரதம்.....அஞ்சநவித்தை...அஞ்சநவித்தை - மறைபட்ட பொருளைக்காண்பிப்பது" (சௌந். ந௦. உரை.) [அஞ்ஜநவித்யா.]

அஞ்சநன்— 1. இந்திரன். 2. சநி. 3. விட்டுணு. [அஞ்ஜந - கருமை.]

அஞ்சநாட்சியம்மை— திருக்கற்குடியிலே கோயில்கொண்டிருக்குந் தேவியார்.

அஞ்சநாலா— 1. கருங்காக்கணம். 2. நீலோற்பலம்.

அஞ்சநாவதி—சுப்பிரதீபமென்னும் வடகீழ்த்திசை யானையின் பெண்யானை. [அஞ்ஜநாவதி: அஞ்ஜந - கருமை. வதி - உடையது.]

அஞ்சநி— 1. காயாவென்னுமரம். (உ-ம்.) "அஞ்சநி தலையசைப்ப" (இரகு. குசனயோ. கூஅ.) 2. நாணற்புல். [அஞ்சந-கருமை. இ - ஒரு விகுதி.]

அஞ்சநேயன்— அநுமான். (உ-ம்.) "அஞ்சநேயனுமார்த்தெதிர்ந்து" (நல். பார. இராவணச. சஉ.) [அஞ்ஜநா- அஞ்சனை. ஏய- மகன்மையைக்காட்டும்ஒரு விகுதி.]

அஞ்சநை— 1. அநுமானுடைய தாய். (உ-ம்.) "நிருமலாஞ்சனை செய்பணிமாலத்தர்" (மறை-து.குஎ.) [இவள் முன் ஓர் அப்சரஸ்திரீயாயிருந்து பின் ஒரு சாபத்தாற் குஞ்சரன் என்னும் வாநரனுக்குப் புத்திரியாகப் பிறந்து, இச்சித்த ரூபங்களையெடுக்கும் வன்மையுடையளாய் ஒருநாள் மனுஷரூபமுள்ள ஓரிளம்பெண்ணாகி வாயுபகவானைக்கூடி வநுமானைப்பெற்றவள், பின்னர்க் கேசரியென்னும் வாநரனை மணம்புரிந்து அவனுக்கு மனைவியாயினள் என்பர்.] 2. ஒரு நதி. (உ-ம்.) "நங்கண்டகிமந்தாகினியேநவிலஞ்சநைமந்தகைசோணை" (விருத்தாசலபு. தீர்த்தச.க௦.) 3. தீபசிகை. (உ-ம்.) "அஞ்சநை நாமிகாவர்த்தமரோகம்" (சீவரட். உசரு.) 4. வடதிசைக்காவலமர்ந்துளதென்று சொல்லப்படும் சாருவபௌமம் என்னும்யானையின்பெண்யானை. [அஞ்ஜநா.]

அஞ்சநைநாமிகாவர்த்தமரோகம்— இமையைப் பற்றிய ரோகபேதங்களு ளொன்று; அது: இமைகளின் நடுமையத்திலாவது மூலைகளிலாவது பயறுகளின் பிரமாணமாகத் தாமிரநிறத்துடன் உதிரத்தைக் கக்குவதான கட்டிகளையெழுப்புவதும், அக்கட்டிகள் தினவுடன் நோவைத்தருபவைகளும், திரமுள்ளவைகளுமாக இருப்பதுமானது. (சீவரட். உசரு.)

அஞ்சப்படுதல்— மதிக்கப்படுதல். (உ-ம்.) "மாலால் அலரேந்தியஞ்சலிசெய்தஞ்சப்படுவான்" (சிந்தா. கனக. ருச.)

அஞ்சபாதம்— 1. அன்னப்புள்ளினடி. 2. ஓர் புள்ளடிக்குறி. 3. சாதிலிங்கம். [ஹம்ஸபாத: அன்னத்தின் கால்போலும் நிறமும் உருவும் உடைமையாற் சாதிலிங்கத்திற்கு இப்பெயர்வந்தது.]

அஞ்சம்— 1. அசபாமந்திரம். (உ-ம்.) "கூயத்திரியதனினதிகமஞ்சமாமந்திரம்" (காஞ்சிபு. திருவேக. உஅ.) 2. அன்னப்பறவை. (உ-ம்.) "அஞ்சமுமஞ்சவருஞ் சசிவந்தாள்" (கந்தபு. தெய்வ. உச௦.) 3. ஒருவகைச் சந்நியாசம். (உ-ம்.) "குலவுறு சந்நியாசவாச்சிரமங் குடீசகம் பகூதகமஞ்சம் - நலமுறுபாமகஞ்சமேயென்ன நான்கதாம்" (சூத. சந்நியாச. உ.) 4. பங்கு. (உ-ம்.) "அஞ்சக்கலைபடு" (திருப்பு. கக.) [1, 2, 3. ஹம்ஸ. 4. அம்ஶ.]

அஞ்சரதன்—பிரமன். [ஹம்ஸ; ரத - வாகனம்.]

அஞ்சல்— 1. அஞ்சாதிருக்க எனப்பொருள்படும் ஒரு வியங்கோள்வினைமுற்று.(உ-ம்.) "அஞ்சலஞ்சலென்றடிமைக்கு" (தாயு. பாரா. கஉசு.) 2. தபால். [வழக்.] 3. தாங்கல். 4. தோல்வி.(பிங்க. கஅசுசு.) 5. பயப்படுதல். (உ-ம்.)"எஞ்சுமவர் தம்மையிளையோன் பரிவினோக்கி - யஞ்சல்விடுமின்களென" (கந்தபு. தகரே. கஎ.)

அஞ்சலம்— 1. சிலையினோம். [அஞ்சல.] 2. வானுறை.

அஞ்சலர்— பகைவர். (உ-ம்.) "அஞ்சலர் தனிப் போரேறே" (நல். பாரா.மார்க்.உசரு.)

அஞ்சலளித்தல் — அபயங்கொடுத்தல்.

அஞ்சலி— 1. ஆடுதின்னாப்பாளை. 2. இரண்டுகைகளையும் இணைத்து உள்ளங்கைகளைப்பதித்துக்கோலிய குழி. 3. இரண்டு கைகளையும் இணைத்து உள்ளங்கைகளைப் பதித்துக்கோலிய குழியிற்கொள்ளத்தக்க அளவு. 4. இரண்டு கையும் பதாகையாய் அகம் ஒன்றுவது. (உ-ம்.) "அஞ்சலியென்பதறிவுறக்கிளப்பின் - எஞ்சலின்றி யிருகையும் பதாகையாய்- வந்தகம்பொருந்து மாட்சித்தென்றனர் - அந்தமில்காட்சி யறிந்திசினோரே" (சிலப். அரங்கே. கஅ. உரை.) 5. சங்கங்குப்பிப்பூண்டு. 6. நான்குபலம். (உ-ம்.) "சழலடியஞ்சலியைந்து" (தைல. தைலவ. ருசு.) 7. கைகுவித்துக் கும்பிடுதல்.(உ-ம்.)"அஞ்சலிகுவித்தகரங்களுந் தலைமேலணந்திட" (பெரியபு. திருஞா. கூருரு.) 8. மாவிலிங்கமரம். 9. வண்டுகொல்லிப்பூண்டு. 10. வறட்சுண்டி. 11. வெளவால். [2,3,7. அஞ்சலி.]

அஞ்சலிக்கை— கைமுகிழ்த்தல்.

அஞ்சலிகாரிகை— ஒரு பூண்டு.

அஞ்சலிகை—வெளவால்.(பிங்க.உக அக)

அஞ்சலித்தல்— அஞ்சலிசெய்தல். (உ-ம்.) "அஞ்சலித்தடிமேற்சூடி" (நல். பாரா. மார்க்கண். உசுரு.)

அஞ்சலிவந்தநம்—நெற்றியிற்கைகுவித்து வந்தனஞ்செய்தல். [அஞ்ஜலிவந்தநம்.]

அஞ்சலினவர்—பாஞ்சராத்திரமதத்தோர். (உ-ம்.) "அஞ்சலினவர் புகழண்ணலாதியோர்" (கந்தபு. திருவவ. சுஉ.) [அஞ்சு - ஐந்து. அலினவர் - இராத்திரிசம்பந்தமுடையவர். அல் - இரா.]

அஞ்சலோமசம்—அன்னபேதி. [ஹம்ஸ லோமசம்.]

அஞ்சவத்தை—ஐந்துநிலை; அவை: ஆன்மாவுக்குரிய சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்பன.(உ-ம்.)"ஆன்மாத்தங்கிய வஞ்சவத்தை" (சிவப்பிர. ந. க.) [அஞ்சு - ஐந்து. அவஸ்தா - நிலை.]

அஞ்சவாச்சிரமம்— நால்வகைச் சந்நியாசங்களுள் ஒன்று. (உ-ம்.) "பரத்தியலுமஞ்சவாச்சிரமத்திற் செய்தன்மிகப் பாங்கேயாகும்" (சூத. ஞாந. ௪: உ௩.) [ஹம்ஸ; ஆச்ரமம்.]

அஞ்சற்காரன்—தபாற்காரன். [வழ.]

அஞ்சற்றுளச்சி— முப்பத்திரண்டு பாஷாணங்களுள் ஒன்றாகிய குங்குமபாஷாணம்.

அஞ்சறைப்பெட்டி— ஐந்து அறையுள்ள தாசச்செரியப்பட்ட பெட்டி.

அஞ்சன்— 1. "அஞ்சம்" என்னும் சந்நியாச ஆச்சிரமத்துக்குரிய சந்நியாசி. இவனிலக்கணம், சூத. ஞாந. கூ: எ, அம் செய்யுட்களிற்கூறப்பட்டுளது. அவை வருமாறு: "கொண்டசிரஞ்சன் கமண்டலங்கந்தைகோவணம்பவிக்கலன்வேணுத் - தண்டமுத்தரியங்கொள நிருநீறுத்தாளநந்தசச் செயநகை முப் - புண்டரஞ்சரித்தல் சிரச்சிகைமழித்தல் பொம்மலெண்கவளமேபுசித்தன்- மண்டலம்புகழ்சாவித்திரிசந்திவயங்குகாலங்தொறுஞ்செபித்தல்" "திடமுறவான்மவிசாரஞ்செய்திடுதல் தீர்த்தயாத்திரை புரிந்திடுதல் - படர்கிருச்சிரஞ் சாந்திராயண முதலாப்பல விரதமுமநுட்டித்தல் - இடமுறமோருரினிலொர்நாளன்றியேற்றநாளிராமை சஞ்சரித்தல் - படவரவணிந்தோனருட்குறிப்பூசை பத்தியிற்புரிந்திடன்மாபால்" 2. ஆறிருதக்களிலுஞ் சூரியசமூகத்துநின்று ஒரிருதுவுக்கிருவராகப்பாடுவோர் எனச்சொல்லப்படும் பன்னிருவருளொருவன். (உ-ம்.) "மன்னுதும்புருயாழ்நாரதனஞ்சன்"(கூர்மபு.௩க௧:எ.) 3. பன்னிரண்டாதித்தருள் ஒருவன்; இவன் எழாயிரங் கதிர்பரப்பியிருளைத் துரப்பவனென்றும், மேடமாதத்திலுதிப்பவனென்றும் (கூர்மபு. ஆதவர் கதிர். சு-ம் ச-ம்)செய்யுட்களிற்சொல்லப்படும். அச்செய்யுட்கள் வருமாறு: "ஒற்றை......செற்றுவெங்கதிரேழாயிரம்பரப்பிச் செறியிருள்பருகிடுமஞ்சன்..... தாதா" "மாசிநீள்வருணன் பங்குனிபூடாச்சித்திரையஞ்சன்வைகாசிக் - காசறுதாதாவானியிந்திரனுடியிற்சவிதாநலாவணக்கு - நாசமில்விச்சுவான் புரட்டாதிபகனைலப்பசிப்பரிச்சநிசிர் - வீசுகார்த்திகைதொட்டாநன்மார்கழிக்கு மித்திரன்றைக்கு விட்டுணுவே" 4. பிரமன். (உ-ம்.) "அஞ்சன்சரியோனுருத்

திரன் மற்றொருவர்க்கொருவரதிகரென" (சூத. எக்கி. உத். உ: சரு.) [ஹிம்ஸ.]

அஞ்சாச்சிறப்பு—வாகைத்திணை விகற்பங்களுளொன்று; அது: பகைவர்கண்ணுந் தன்பாலார்கண்ணும் ஒப்புமையாகப் பாசறையுள்ளாச்சால்புடைமைகூறல். (வீரசோ. பொருட். கக. உரை.)

அஞ்சாநநன்— சிவன். [அஞ்சு - ஐந்து. ஆநநன் - முகமுள்ளவன்.]

அஞ்சாப்பட்டயம்— அச்சமின்றியுலாவும் பொருட்டு அரசினரால் ஒருவருக்குக்கொடுக்கப்படும் பத்திரம்.

அஞ்சாமை—திண்மை. (உ-ம்.) "அஞ்சாமையீகையறிவூக்கம்" (வள். கஅஉ.)

அஞ்சாலியிடையர்—இடையருள் ஒருபகுதியார். இவர்களுடைய பெண்கள் மங்கலவணியாக் ஐந்தாலியணிபவர்கள். [ஐந்தாலி யஞ்சாலியென்று மருவிற்று.]

அஞ்சாவிரா—பெருங்குமிழ்.

அஞ்சிட்டன்—சூரியன். [அம்ஜிஷ்ட: அம்ஜ்; இஷ்ட - ஒரு வ-வி.]

அஞ்சித்தல்— 1. பூசித்தல். 2. அடைதல் (உ-ம்.) "அஞ்சித்தல்சொற்ற பூசனையடைவுமாம்" (காஞ்சிப. திருவே. ௩௬.)

அஞ்சிதம் — 1. பூசிக்கப்பட்டது. 2. வளைந்தது. [அஞ்ஜித.]

அஞ்சிதமுகம்—தலையைத்தோளின்மேலே சாய்த்தல். [அஞ்ஜிதமுகம்: அஞ்ஜித - வளைந்த.]

அஞ்சிதவணி—சிறகு நீப்பெற்ற அணி.

அஞ்சீரம்— 1. அத்தி. 2. அத்திப்பழம்.

அஞ்சு — 1-3. அஞ்சென்னேவலுந் தெரிநிலைவினைப்பகுதியும் பெயரெச்சத்தொகையும். 4. அலங்கரித்தல். 5. ஐந்தென்னுமெண். (உ-ம்.) "அஞ்சுவைக விவ்வகன்கிரிநண்ணி" (கந்தபு. வள்ளி. உஉரு.) 6. சூதாடுவோர் வசனிக்குங் குழூஉக்குறிகளுளொன்று. (கந்தபு. கயமுகனு. ககஎ.) 7. பயப்படுதல். 8. பிரார்த்தித்தல். 9. போதல். 10. வணங்குதல். 11. வளைதல்.

அஞ்சுகம் — 1. கிளி. 2. உத்தரீயவஸ்திரம். 3. சீலை. 4. வெள்ளைச்சீலை. [2, 3, 4. [அம்சுக.]

அஞ்சுதல் — 1. நடுங்குதல். (உ-ம்.) "அஞ்சு மஞ்சுமென்றெருயிரென்னுமால்" (இரா. மா. நகர்நீ. சo.) 2. பயம். (உ-ம்.) "அஞ்சுதல்வெகுளிசோகமக்கணத்தகற்றி" (அருணசலபு. திருமலைவல. உசு.) 3. மதித்தல். (உ-ம்.) "அஞ்சப்படுதல்."

அஞ்சுபயம்—குடிகளுக்கு நேரிடும் ஐந்துவகைப்பட்ட பயங்கள்; அவை: அரசனால் வருவதும், அவன் பரிசனரால் வருவதும், பகைவரால் வருவதும், கள்வரால் வருவதும், விலங்கு முதலிய உயிர்களால் வருவதுமாம். (உ-ம்.) "மாநிலங்காவலனாவான் மன்னுயிர்காக்குங்காலைத்- தானதனுக்கிடையூறுதன்னாற்றன்பரிசனத்தா - லூனமுறுபகைத்திறத்தாற்கள்வராலுயிர்தம்மா-லானபயமைந்துந்தீர்த்தறங்காப்பானல்லனோ" (பெரியபு. திருவா. ௩௯.)

அஞ்சுமாந்— 1. இருபத்தெட்டாசமங்களுளொன்று; அது: சதாசிவமூர்த்தியுடைய வாமதேவமுகத்தினின் றுற்பவித்த ஐந்தாகமங்களுள் ஒன்றென்பர்; அதற்குக் கிரந்தசங்கியை யைந்திலக்கம். (சைவச. பொது. ௩௩உ) 2. கன்னியிராசியில் உதிக்குஞ்சூரியன். (உ-ம்.) "அஞ்சுமாந்விட்டுணுவென்ன" (கூர்மபு. அந்தகா. சஉ.) 3. சூரியன்மரபிற்பிறந்த ஓரரசன்; இவன் சகரனுக்குப் பௌத்திரன். (கூர்மபு. சூரிய. ச௩.)

அஞ்சுமாலி— சூரியன். [அம்சுமாலிந் [அம்சு - கிரணம். மாலிந் - மாலையுடையவன்.]

அஞ்சுருவாணி— அச்சாணி. (உ-ம்.) "தடையற்ற தேரிலஞ்சுருவாணிபோலவேதன்னிலசையாதுநிற்கும்" (தாயு. மவுன. சு.)

அஞ்சுவர்ணத்தோன்—துத்தநாகம்.

அஞ்சுவரத்நார்— நெய்வாரின் ஒருபகுதியார்.

அஞ்சுறல்—பயப்படுதல். (உ-ம்.) "செல்லுதற்கஞ்சுறுந்தமியேன்" (கந்தபு. அக்கினி. உஉஎ.)

அஞ்செவி— 1. செவியகம். (நன். மெய். எக-ம் உரையும்.) [அகம் - உள். அகமென்பதிற் ககரவுயிர்மெய் கெட்டுநின்றது.] 2. வறட்சுண்டி.

அஞ்செழுத்து— பஞ்சாட்சரம். (உ-ம்.) "அஞ்செழுத்தாலைமைந்தமையும்" (சி. சி. கூ: அ.) அவை, நமசிவாய என்னும் எழுத்துக்கள். இவற்றுள், ந- திரோதாநசத்தியையும், ம- ஆணவமலத்தையும், சி - சிவத்தையும், வ - அருளையும், ய- ஆன்மாவையுங் கருதும். (சிவப்பிர. கூ: உரை.)

அஞ்ஞத்துவம்—ஞானமின்மை. [அஜ்ஞத்வம்: அஜ்ஞ; த்வ - அறியுந்தன்மை.]

அஞ்ஞதை— அறியாமை. (பௌட். பசு. ககரு.) [சுஜ்ஞதா: சு; ஜ்ஞதா - அறியுந்தன்மை.]

அஞ்ஞன்— அறிவில்லான். [சுஜ்ஞ: ஜ்ஞ- அறிவுடையவன்.]

அஞ்ஞாதம்— அறியப்படாதது. (உ-ம்.) "ஞாதமஞ்ஞாதமாகியவெல்லாவற்றிற்குநல்லசான்றாகி" (சூத. எக்கி. பூ. ககூ. எ.) [சுஜ்ஞாத: சு; ஜ்ஞாத - அறியப்பட்டது.]

அஞ்ஞாதவாசி— பிறராலறியப்படாத வாசமுடையவன். (உ-ம்.) "அக்ஞாதவாசியாகிய பீமசேநனேயென்று நிச்சயிப்பது" (சி. சி. அளவை. ச. சிவாக்.)

அஞ்ஞாநபூமி— பொல்லாதவாசனையாகிய எழுபூமிகள்; அவை: வித்துசாக்கிரம், மேற்சாக்கிரம், மகாசாக்கிரம், சாக்கிரசொப்பநம், சொப்பநம், சொப்பநசாக்கிரம், சுழுத்தி யென்பன. (தாயு. எங்கு. ௬. உரை.) [சுஜ்ஞாநஹூமி.]

அஞ்ஞாநம்— 1. ஆணவமலம். (சிவப்பிர. உ: உ. உரை.) 2. ஞாநமின்மை. (உ-ம்.) "அஞ்ஞாநத்தாலுறுவதுதான்பந்தம்" (சி. சி. அ: உஎ.) 3. தெய்வ அறிவின்மை. 4. (வேதாந்தம்) மாயை, (விசாரசா. சஎக.) 5. விபரீதஞாநம். (பௌட். மாயா. சரு.) [சுஜ்ஞாந: ஜ்ஞாந - அறிவு.]

அஞ்ஞாநவிருத்தி— அஞ்ஞாநச்செயல்கள்; அவை: தமம், மோகம், மகாமோகம், தாமிச்சிரம், அந்ததாமிச்சிரம் என ஐந்துவகைப்படும். (பௌட். புமஸ். க௩உஇ.) [சுஜ்ஞாநவ்ருத்தி: சுஜ்ஞாந- அறிவின்மை. வ்ருத்தி - செயல்.]

அஞ்ஞாநி— அறிவிலி. (உ-ம்.) "அலைந்து பிறப்பிலாங்கார வஞ்ஞாநிகளாமாறுடரும்" (பிரபுலிங்க. விமலை. உக.) [சுஜ்ஞாநி: சு; ஜ்ஞாநி - அறிவுடையவன்.]

அஞ்ஞான்று— அப்போது. (உ-ம்.) "அஞ்ஞான்றுடலைவெஃகி" (கந்தபு. காளி. கங.) [அ - அந்த. ஞான்று - பொழுது.]

அஞ்ஞை— 1. அஞ்ஞாநம். 2. அறிவில்லான். (உ-ம்.) "உணர்விலஞ்ஞையின் ஹும் பிரிவிலன்" (சீகாழிப்பு. புகலி. சு.) [சுஜ்ஞா: ஜ்ஞா - அறிவு, அறிவுடையவன்.] 3. இளைடத்தாநம். [சுஜ்ஞா.] 4. தாய். (உ-ம்.) "அஞ்ஞைநீயேங்கியழலென்று" (சிலப். கஞ. உச.)

அநூர்— 1. துன்பம். (உ-ம்.) "பேரஞர்க் கண்ணள்பெருங்காடுநோக்கி" (புறநா. உசஎ)

அநராட்டி— நோயுள்ளவள். (உ-ம்.) "அழிவுடையுள்ளத்தா ரஞராட்டி" (சிலப். புறஞ்சே. ௮௦.)

அநலம்— 1. சொசுகு. 2. நுளம்பு. (திவாகரம்.)

அட்சசூலை— ஒருவியாதி.

அட்சதரோகம்— உபநகரோகம்; அது: நகச்சுற்றுவந்து வேதனையைச்செய்து நகத்தின் வேரைக்கெடுத்து அந்நகம் விழுவதற்குமுன்னமே மறுநகத்தை முளைப்பிப்பதால்வரும் ரோகம். (சீவரட். உஅச.)

அட்சதை— 1. அக்கதை. 2. பொரியரிசி.

அட்சபாகை— பூகோளாக்ஷத்தின்பாகை.

அட்சபாடம் — திரைப்புடவை. (சி. வி. கிரி. உஎ.)

அட்சபாதன்— அக்கபாதன்.

அட்சம்— 1. குன்றியெயந்துகொண்ட ஒரு நிறை. (மிரு. ச. ருஅ.) 2. தான்றிக்காய். (தைல. தைலவ. கசச.) [அக்ஷ-தான்றி. அமர.] வெங்காயம். (தைல. தைலவ. சஉரு) ["அக்கம்" என்பதற்குச் சொல்லப்பட்டபொருள்களில் 7, 12, 18, 23, 24, தவிர்ந்தன இதற்கும் பொருளாம்.]

அட்சமணி— அக்கமணி.

அட்சமாலாதரன்— அட்சமாலைதரித்தவன். (உ-ம்.) "அட்சமாலாதரா" (திருப்பு. ௬௦க.) [அக்ஷமாலாதர.]

அட்சமாலிகை— 1. இருக்குவேத உபநிடதங்களுளொன்று. 2. உருத்திராக்ஷமாலை. [அக்ஷமாலிகா.]

அட்சமாலை— அக்கமாலை.

அட்சய — பிரபவ முதலிய வருடங்களிலேயறுபதாம்வருடம். (வருஷாதிநூல்.) [அக்ஷய.]

அட்சயதிருதீயா— வைகாசிமாதத்துச்சுக்கிலபக்கத்தில் வரும் மூன்றாந்திதி. [இது முதலாவது யுகமாகிய சத்தியயுகத்தின் ஆரம்பதினமென்றும், இத்திநத்திற் செய்யும் புண்ணியக்கிரியைகள் நித்திய பலமுடையன என்றும், இதனால் இப்பெயர் வந்ததென்றும் சொல்வர். [அக்ஷயத்ருதீயா.]

அட்சயதூணி— அருச்சுநனுடைய அம்புக் கூடு. [அக்ஷய - குறைவின்மை. தூணி - அம்புக்கூடு.]

அட்சயபாத்திரம்— 1. பாண்டவர்களுக்கு ச்சூரியனாற்கொடுக்கப்பட்ட பாத்திரம். 2. பிட்சாபாத்திரம். (வைஷ்ணவபரிபாஷை.)

அட்சயம்—கேடின்மை. [அக்ஷய: அ; க்ஷயம் - கேடு.]

அட்சயா— 1.சாந்திரமாநத்தில் ஞாயிற்றுக்கிழமையில் அல்லது திங்கட்கிழமை வரும் ஏழாம் நாள். 2. சாந்திரமாநத்துப் புதன்கிழமையில் வரும் நாலாம் நாள்.

அட்சரகணிதம்— பீசகணிதம். [எழுத்துக்களை யெண்ணுக்காகப் பிரயோகித்தலால் வந்தபெயர். அக்ஷர - எழுத்து. கணித - கணக்கு.]

அட்சரச்சுதகம்—அக்கரச்சுதகம்.

அட்சரசஞ்சன்—அட்சரசணன்.

அட்சரசணன்—எழுத்துக்காரன். [அக்ஷர சண: அக்ஷர; சண - ஒரு வ-வி.]

அட்சரசநநி—எழுத்தாணி. [அக்ஷர- எழுத்து. ஜநநி - பிறப்பது.]

அட்சரசநன்—அட்சரசணன்.

அட்சரசீவகன்—எழுத்தினாற்சீவிப்போன்.

அட்சரசீவி—அட்சரசீவகன். [அக்ஷரஜீவிக்: ஜீவிக் - சீவிப்போன்.]

அட்சரசுத்தி— 1. உச்சரிப்புத் திருத்தம். 2. எழுத்துத்திருத்தம்.

அட்சரதாபநம்— மந்திர எழுத்துக்களை யந்திரத்திலடைத்தல். [அக்ஷர; ஸ்தாபநம் - தாபித்தல்.]

அட்சரதூலிகை—இலேகநி. [அக்ஷர தூலிகா: தூலிகா - கோல்.]

அட்சரப்புல்—பீனசப்புல்.

அட்சரபாவநை — மகேச்சுரியபாவநை. (கூர்மபு. வருணா. சஙூ. உரை.) [அக்ஷர பாவநா.]

அட்சரம்— 1. அக்கரம். 2. சருமம். 3. தவம். 4. பிரகிருதி. 5. பிரணவம். 6. மூத்தி. [அக்ஷர.]

அட்சரரோகம்—கந்தாளிரோகம். (சீவரட். உகச.)

அட்சரலட்சணம்—அக்கரவிலக்கணம்.

அட்சரவிந்நியாசம்—1.எழுத்து.2.எழுதப்பட்டபத்திரிகை. 3. வேதம். [அக்ஷரவிந்யாஸ: அக்ஷர; விந்யாஸம் - தாபநம்.]

அட்சரன்— 1. அக்கரன். 2. காலதத்துவத்திலிருக்கும் ஒரு ருத்திரன். (வி-ணி. உஎச.) [அக்ஷர:] 3. அந்தரியாமி. (வேதா. சூ. சஉ. உரை.) [அக்ஷர: - அழிவற்றவன், கடவுள்.]

அட்சராத்துமகசத்தம்— எழுத்தாலாகிய ஒலி. (த. நி. போ. உகஉ; பௌட். விந்து. சுநஇ.) [அக்ஷராத்மகஶப்த: அக்ஷராத்மக- எழுத்தாந்தன்மையுடையது. ஶப்த- ஒலி.]

அட்சராரம்பம்—அக்காராம்பம். [அக்ஷராரம்ப.]

அட்சன்— அக்கன். [அக்ஷ.]

அட்சி— 1 கண். 2. கண்ணுடையவள். (உ-ம்.) "மீனாட்சி" 3. சேர் என்னும் அளவை. [அக்ஷி.]

அட்சிபாகாந்நியரோகம் — கண்களில் வருஞ்சங்காரோகவகைகளிலொன்று; அது: கண்கள் வீங்குதல், கலங்குதல், நீர் கம்முதல், பீளைவடிதல், கருவிழி வெள்விழிசிவத்தல், எரிச்சல், பார்வைகெடல் முதலிய குணங்களையுண்டாக்குவது. (சீவரட். உசுо.)

அட்சியம்—யசுர்வேதஉபநிடதங்களுளொன்று. (கூர்மபு. அட்டமூ. உசு. உரை.)

அட்சீவம்—1. ஒருவகை மாமரம். 2. முருங்கைமரம்.

அட்சௌகிணி—அக்குரோணி. [அக்ஷௌஹிணீ.]

அட்டகசம்— 1. ஆடாதோடை. 2. அட்டதிக்கியானை. [அஷ்டகஜ.]

அட்டகணம்—நூன்முதற் செய்யுளின் முதற்சீர்க்குச் சுபமென விதிக்கப்பட்ட நான்கும், அசுபம் என விதிக்கப்பட்ட நான்குமாகிய எண்வகைக்கணம். அவை: நிலக்கணம், நீர்க்கணம், மதிக்கணம், இயமாநகணம், சூரியகணம், தீக்கணம், வாயுகணம், ஆகாயகணம் என்பன. (சூ. நி. கஉ. தொ. கசு-கஎ.) [அஷ்ட-எட்டு. கண - கூட்டம்.]

அட்டகணிதம்— எண்வகைக்கணக்குகள்; அவை: சங்கலிதம், விபகலிதம், குணநம், பாகாரம், வர்க்கம், வர்க்கமூலம், கநம், கநமூலம் என்பன. அவற்றுள் சங்கலிதம்-கூட்டல். விபகலிதம் - கழித்தல். குணநம்- பெருக்கல். பாகாரம் - பிரித்தல். வர்க்கம்- ஒரு

எண்ணை அவ்வெண்ணால் ஒருமுறைபெருக்கல். வர்க்கமூலம் - வர்க்கத்துக்கு மூலங்காணல். கனம் - ஒரு எண்ணாலே அந்த எண்ணைப்பெருக்கிப் பெருக்கிப்பெற்றபேற்றை மறுபடியும் அவ்வெண்ணாலே பெருக்கல். கனமூலம் - கனத்துக்கு மூலங்காணுதல். (பிங்க. சஙச.) [அஷ்ட - எட்டு. கணிதம் - கணக்கு.]

அட்டகந்தம்— எண்வகை வாசனைப்பொருள். அவை: சந்தனம், அகரு, கஸ்தூரி, கருப்பூரம், பச்சிலை, குங்குமம், இலாமிச்சை, கோட்டம் என்பன. (த. நி. போ. ௩0௪.) [அஷ்ட; கந்த - வாசனை.]

அட்டகம்— 1. அயமலாதி. 2. எட்டன்கூட்டம். (உ-ம்.) "உருவமெலாம் பூதவுபாதாய சுத்தாட்டகவுருவமென்னின்" (சி. சி. பர. சௌத். மறு. ௩௯.) 3. எட்டு. 4. எண்மடங்கு. (உ-ம்.) "ஆற்றினட்டகஞ் சோடசங்கயைப் பலனளிக்கும்" (வேதாரணியபு. வன்னி. ௩௧.) 5.வசம்பு. [2, 3, 4. அஷ்டக.]

அட்டகர்ணன்— பிரமன். [அஷ்டகர்ண: அஷ்ட - எட்டு. கர்ண - காதுள்ளவன்.]

அட்டகருமம்—1. அரசர்க்குரிய எண்வகைக்கருமம்; அவை: ஆதானம், விசர்க்கம், பிரஷம், நிஷேதம், சார்த்தவசநம், வியவகாரேக்ஷணம், தண்டம், சுத்தியென்பன. 2. எண்வகைக் கருமங்கள்; அவை: வசியம், மோகனம், தம்பனம், ஆகருஷணம், உச்சாடனம், வித்துவேடணம், பேதனம், மாரணம் என்பன. (வேதா. சூ. ௧௬. உரை.) [அஷ்டகர்ம: அஷ்ட - எட்டு. கர்ம - செயல்.]

அட்டகவர்க்கம்— அட்டவர்க்கம். (உ-ம்.) "அட்டகவர்க்கமென்பது தானே யாதித்தன் சந்திரன் செவ்வாய் - இட்டமாம் புந்தி பொன் புகர்சநிய னிலக்கினத்துடனெட்டுவகையில்- வட்டவான் புவிமேலட்டகவர்க்கம் வகுத்தனா" (சாதகசிந். ௧௬௫௬.) [அஷ்டக; வர்க.]

அட்டகவுடலம்—புரியட்டகம். (உ-ம்.)"அட்டகவுடலதனோடே யுயிர்பிதா வருந்தங்நாதி - தொட்டவனுதரந்தொக்குச் சுக்கிலத்துடனே தோன்றி" (சிவதரு. அ. ௧௩.)

அட்டகாசம்— 1. ஒரு தலம். (உ-ம்.) "அட்டகாசத்துப்பெருந்தகை மகாநந்தேச்சுரனே" (சூத. எக்கி.பூ. ௪௩: ௨௩.) 2. பெருஞ்சிரிப்பு. (உ-ம்.) "அட்டகாசத்தி லட்டகயங்களு மதிர்ந்துநிற்ப" (மச்சபு. இரணிய கசிவத. ௧௩.) [அட்டஹாஸ.]

அட்டகாசன்—இருபத்தெண் கலியுகத்திலொன்றில் மறைவிரிப்போன். [அட்டஹாஸ.]

அட்டகாசி— 1. சிவன். 2. பெருநகைசெய்வோன். [அட்டஹாஸி.]

அட்டகிரி—எட்டுமலைகள்; அவை: இமயம், மந்தரம், கைலை, விந்தம், நிடதம், ஏமகூடம், நீலம், கந்தமாதனம் என்பன. (பிங்க. ௪௩௩.) [அஷ்ட - எட்டு. கிரி - மலை.]

அட்டகீடம்—எட்டுவகைக்கீடமாகிய பிராணிகள்; அவை: ஓணான், தவளை, அடவியீ, வீட்டுப்பல்லி, காட்டுமசகம், மக்ஷிகா, மலையெறும்பு, சிலந்தியென்பன. (சீவரட். ௩௫0.) [அஷ்டகீடம்.] மக்ஷிகா - தேனீ.

அட்டகுட்டம்— எட்டுவகைக் குட்டநோய்கள்; அவை: கருங்குட்டம், இரணக்குட்டம், வெண்குட்டம், செங்குட்டம், கிருமிக்குட்டம், நீர்க்குட்டம், விரல்குறைகுட்டம், சொரிகுட்டம் என்பன. இது "கருங்குட்டமிரணக்குட்டங்காசுறுவெண்மையக்குட்டம் - பெருகுசெங்குட்டநாளும் பேசருங் கிருமிக்குட்டம் - விரியுநீர்க்குட்டங் கால் கைவிரல் குறைகுட்டமேலுஞ் - சொரிகுட்டமிதனோ டெட்டாய்ச் சொற்றனர் பிணிதேர்நூலோர்" என்னும் வைத்தியநிகண்டாற் பெறப்படும். [அஷ்டகுஷ்ட.]

அட்டகுணச்செல்வம்— அணிமாதிகுணங்களையுடைய அட்ட ஐசுவரியங்கள். (உ-ம்.) "அட்டகுணச்செல்வமும் படைத்தவந்தமாதனைவோரும்" (ஞானவா. புசுண். ௪௫.)

அட்டகுணபூதன்— அருகன். (எண்குணமுடையவன் என்றபடி.) (உ-ம்.) "புசிப்பு வந்திடுபிறப் புறக்கமிவைவிட் டொராட்டகுணபூதனை" (சி. சி. பர. நிகண். ம௯. ௬.) [அஷ்டகுணபூத.]

அட்டகுணம்—கடவுளுக்குரிய எட்டுச்குணங்கள்; அவை: தன்வயத்தனாதல், தூயவுடம்பினனாதல், இயற்கையுணர்வினனாதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களினீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்பமுடைமை என்பன. (வள்.கு.உரை.பரி.) [அஷ்டகுண.]

[அருகநூலார். "அநந்தஞானம், அநந்ததரிசநம், அநந்தவீரியம், அநந்தசுகம், நிர்நாமம், நிர்க்கோத்திரம், நிராயுஷியம், சகலசம்

மியக்குபாவம்" என்னும் எட்டினையும் அருகனெண்குணங்களென்பர்.] (சி. சி. அ: சஉ. மறை.)

அட்டகுரவர்— எட்டுவகையாசாரியர்கள்; அவர்கள்: போதககுரு, வேதககுரு, நிஷிதகுரு, காமியகுரு, சூசககுரு, வாசககுரு, காரககுரு, விகிதகுரு என்பவர்கள். இவர்களுள், போதககுரு- சாத்திரார்த்தம் போதிப்பவன். வேதககுரு- தத்துவதரிசகன். நிஷிதகுரு - வசியாகருஷணாதிகளால் இகலோகத்திற் சுகமும் பரலோகத்திற்றுக்கமுங் கொடுப்பவன். காமியகுரு - சுகர்ம்மோபதேசத்தால் இகபரங்களிற் சுகமெய்தப்பண்ணுபவன். சூசககுரு - விவேக மூகத்தாற் சமாதிசட்குணங்களையும் ஒருங்கே வரப்பண்ணுகிறவன். வாசககுரு - விஷயங்கள் பொய்யெனவெறுத்து ஆன்மவிருப்பமுண்டாகச்செய்பவன். காரககுரு - சிவஜீவர் ஐக்கிய ஞானத்தை வரச்செய்கிறவன். விகிதகுரு - சந்தேகம்நீங்கி மோக்ஷம் அடையச்செய்கிறவன். (வேதா.சூ.கசு,கஎ. உரை.) [சுஷ மானவ.]

அட்டகுலபருவதம்— அட்டகிரி. அவையாவன: மாலியவான், கந்தமாதனம், நிசதம், ஏமகூடம், இமம், நீலம், சுவேதம், சிருங்கம் என்பனவாம். (கந்த. அண்டகோ.நச.)

அட்டகுலயானை— அட்ட கசம்.

அட்டகுன்மம்— எட்டுவகைக் குன்மம்; அவை: குலேகுன்மம், வாதகுன்மம், பித்தகுன்மம், வலிகுன்மம், சந்நிகுன்மம், சர்த்திகுன்மம், வெய்ய குன்மம், எரிகுன்மம். (உ-ம்.) "குலேகுன்மம் வாதகுன்மங் கொடுமைகொள்பித்தகுன்மம் - வலிகுன்மஞ்சந்நிகுன்மம் வாந்திகொள் சர்த்திகுன்மம் - நிலேதடுமாறச்செய்யு நிகரிலாவெய்யகுன்மம், உலேவுகொ ளெரிகுன்மத்தோடோதியகுன்மமெட்டே" என்னும் வைத்தியநிகண்டாற் பெறப்படும். [சுஷ மானு.]

அட்டகை— 1. அட்டமி. 2. இருபத்தொருவகை யாகத்திலொன்று. 3. பிதிரர்களையுபாசித்தற்குரியனவாய, மார்கழி, தை, மாசியென்னும் மாதங்களிலே யபரபக்கங்களிலே வருஞ்சத்தமி, அட்டமி, நவமியென்னும் மூன்று திதிகள். [பங்குனிமாதமுங்கொள்ளுப.] 4. மேற்குறித்த காலங்களிற் செய்யப்படுஞ் சிராத்தம். (உ-ம்.) "மருவுமார்கழி தையொடு மாசியி - லருளினேடு மபரபக்கந்தனிற் - றெருளுமட்டகையென்னுஞ் சிராத்தமாங் - கொருவிடாமலுஞற்றிடவேண்டுமால்" (கூர்மபு. அழற். ந.) மேற்குறித்த மூன்று திதிகளுள்ளும் முக்கியமாகக்கொள்ளப்படும் அட்டமி. [சுஷ கா.]

அட்டகைச்சிராத்தம்— பிதிரர்களையுபாசித்தற்குரியனவாய் மார்கழி, தை, மாசியென்னும் மாதங்களிலே யபரபக்கங்களிலேவரும் சத்தமி, அட்டமி, நவமி என்னும் மூன்று திதிகளிற் செய்யப்படுஞ் சிராத்தம். (உ-ம்.) "விருப்பமெய்தி - யாதரவோடுசெய்யுமட்டகைச்சிராத்தநாளின்" (கூர்மபு.பிரமசாரி.உக) [சுஷ கா; மானு.]

அட்டகோணம்— எட்டுக்கோணம்.

அட்டசத்திகள்— 1 ஆரிணி, ஜநநி, ரோதயித்திரி என்னும் மூன்று பரிக்கிரகசத்திகளும், ஈசானம், தற்புருடம், வாமம், அகோரம், சத்தியோசாதம் என்னும் பஞ்ச சத்திகளுமாகிய எட்டுச் சத்திகள். 2. சயை, விசயை, சயந்தி, அபராசிதை, சித்தை, ரத்தை, அலம்புசை, உற்பலை என்னும் எட்டுச் சத்திகள். இது "தவத்திலுயர்ந்த சயை விசயைசயந்தி யபராசிதை சித்தை - யிரத்தையோடே யலம்புசை யுற்பலையென்றெண்மர் மாதர்களாம் - புரத்திலுறுநாயகிகள்" என்னும் (ஞானவா. புசுண். கஉ-ம்செய்யுளாலும் உரையாலும் பெறப்படும்.) 3. சிவனுடைய கிரியாசத்தியினதுள்ளுருவும் புறவுருவுமாகிய உருவுகள் எட்டு. அவை: ஈசாநி, பூரணி, ஆர்த்தி, வாமை, மூர்த்தி, ஆரிணி, ரோதயித்திரி, ஜநநி யென்னும் எட்டுச்சத்திகள். இது பின்வரும் மேற்கோளாற்பெறப்படும். "ஈசாநி, பூரணி, ஆர்த்தி, வாமை, மூர்த்தியென்னும் பஞ்சசத்திப் புறவுருவுடைத்தாய், ஆரிணி, ஜநநி, ரோதயித்திரி என்னுந் திரிசத்தியுள்ளுருவுடைத்தாயிருக்கும் கிரியாசத்தி சரீரப்புறவுருவிலுதித்த" (சி. சி.க: ஞாந. கு. மூகவாசகம்.) 4.வாமை, சேட்டை, ரௌத்திரி, காளி, கலவிகரணி, பலவிகரணி, பலப்பிரமதனி, சர்வபூததமநியென்னும் எட்டுச்சத்திகள். (உ-ம்.) "வாமாதி சர்வபூத தமநியந்தமாகிய அட்டசத்திகளுமாகி" (சி. சி. பாயிரம். சிவசத்தி.) [சுஷ மாஹ்.]

அட்டசித்தி— அணிமா, மகிமா, இலகிமா, கரிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம் என்னும் எட்டுச்சித்திகள். (உ-ம்.) "எந்தையட்டசித்திவேண்டுமெங்களுக்கெனத்தொழ" (திருவிளை. அட்டமா.

சா.) "அணிமா மகிமாவிலகிமாவரியகரிமாப் பிராத்திமலப் - பிணிமாசுடையோர்க்கடை வரியபிரகாமியமீசத்துவமெய் - தணிமா யோகார்க்கெளியவசித்துவமென்றெட்டாம்" என்னுந் திருவிளை. அட்டமா. உ-ம் செய்யுளாலும் பெறப்படும். [ஸுஷ்டைஸிஜி.]

அட்டசிரவணன் — பிரமன். [ஸுஷ்ஃரு வண.]

அட்டசுபம்—அட்டமங்கலம். [ஸுஷ்ஃஶு ஹ.]

அட்டணைக்கால்— ஒன்றின்மேலொன்றாகக் குறுக்கேயணைத்து வைக்கப்பட்டகால். [அடு; அணை; கால்.]

அட்டத்திரிஞ்சத்—முப்பத்தெட்டு. (உ-ம்.) "அட்டத்திரிஞ்சற்கலைகள்" (சி. சி. க: நிகூ. ஞாநப்.) [ஸுஷ்திஶத்: ஸுஷ் - எட்டு. திஶத் - முப்பது.]

அட்டத்திரிஞ்சங்கலைகள்— சிவபூசைசெய்யும்போது சதாசிவனது ஐந்துமுகத்தினும் நிற்பனவாகக்கொள்ளப்படும் முப்பத்தெட்டுக்கலைகள். (உ-ம்.) "கிரியாசத்தி சரீரப் புறவுருவினுதித்த சசினியாதியட்டத்திரிஞ்சற்கலைகளினது"(சி.சி.க: நிசு. ஞாந.முகவாசகம்.) அவை: ஈசாநகலைகளைந்தும், தற்புருஷகலைகள் நான்கும், அகோரகலைகளெட்டும், வாமதேவகலைகள் பதின்மூன்றும், சத்தியோசாதகலைகளெட்டுமாம். (அகோ. கிரி.)

அட்டதந்திரவாதம்— வாயுவினால் வரும் ஒருவகைரோகம்.

அட்டதநம்—எண்வகைச்செல்வம்; அவை அழகு, குணம், ஆயு, குலம், சம்பத்து, வித்தை, விவேகம், தநம் என்பன. [ஸுஷ் யநம.]

அட்டதயாவிருத்தி— எண்வகைத் தயவுச்செயல்; அவை: பிறரையந்தீர்த்தல், தீமைக்கஞ்சல், பிறர்துயர்க்கிரங்கல், நன்மைகடைப்பிடித்தல், பிறர்கருமத்திற் குடன்படல், பிறர்கருமமுடிக்கவிரைதல், பிறர்க்குப்பொருள்வரவை யுவத்தல், பிறர்செல்வம் பொறுத்தலென்பன. [ஸுஷ்டயாவூஜி: வூஜி - செயல்.]

அட்டதருமம்— எண்வகைத்தருமம்;அவை: யாகம், வேதமோதுதல், தாநம், தபம், சத்தியம், திடம், பொறுமை, லோபமின்மையென்பன. (இதோப. கo.) [ஸுஷ்யஃ: ஸுஷ் - எட்டு. யஃ - அறம்.]

அட்டநளசக்கரம்— எண்வகையிழமுடைய சக்கரம்; அவை: சோத்திரத்துவாரம் இரண்டு, நேத்திரத்துவாரமிரண்டு, ஆக்கிராணத்துவாரமிரண்டு, துவக்குத்துவாரம் ஒன்று, சிங்குவைத்துவாரம் ஒன்று. (சு. சி. போ. கநிக.) [ஸுஷ்உஉவக்ர.]

அட்டதளம்—எட்டிதழ்த்தாமரை. அது: எட்டிதழையுடையதாகக்கொள்ளப்படுந் தாமரை. [ஸுஷ்உஉ.] (சி. லி. கிரி. சஎ.)

அட்டதா— 1. எட்டுப்பிரிவு. 2. எண்மடங்கு. [ஸுஷ்யா: ஸுஷ் - எட்டு. யா - மடங்கு.]

அட்டதாது— எண்வகைலோகங்கள்;அவை: பொன், வெள்ளி, செம்பு, இரும்பு, வெண்கலம், தரா, வங்கம், தத்தநாகம் என்பன. [ஸுஷ்யாத.]

அட்டதாநபரீட்சை— வைத்தியர் பரீட்சிக்கும் எட்டுக்குறியிடங்கள்; அவை: நாடி, முகம், மலம், அமரி, கண், நா, சரீரம், தொனியென்பன. [ஸுஷ்ஹாந வரீக்ஷா.]

அட்டதிக்கயம்— எட்டுத் திக்கியானைகள். அவை: ஐராவதம், புண்டரீகம், வாமநம், குமுதம், அஞ்சநம், புட்பதந்தம், சார்வபூமம், சுப்பிரதீகம் என்பன. (பிங்க. மு.த. வான. உo.) [ஸுஷ்திஜ.]

அட்டதிக்கரிணி — அட்டதிக்கயங்களின் பிடிகள்; அவை: அப்பிராமை, கபிலை, பிங்கலை, அநுபமை, தாமிரகர்ணி, சுப்பிரதந்தி, அங்கனை,அஞ்சநாவதியென்பன;இவை: ஐராவதம் முதலியவற்றிற்கு முறையே பெண்களாகும். [ஸுஷ்திக்கரிணி: திக்கரிணி - திக்குப்பெண்யானை.]

அட்டதிக்காளர்— அட்டதிக்குப்பாலகர். (உ-ம்.) "அளக்கரும்பிரமாண்டமபோலட்டதிக்காளர் காப்பர்" (ஞாநவா. வீமபா. உ.)

அட்டதிக்கு— எட்டுத்திசைகள்; அவை: கிழக்கு, தென்கிழக்கு, தெற்கு, தென்மேற்கு,மேற்கு, வடமேற்கு,வடக்கு,வடகிழக்கு என்பன. (உ-ம்.) "அட்டதிக்கையுமடைப்பர்கள்" (காஞ்சிபு. வாணீ. கூ.) [ஸுஷ்திக்: திக் - திசை.]

**அட்டதிக்குப்பாலகர்**— எட்டுத்திசைகளையுங்காப்பவர்; அவர்: இந்திரன், அக்கினி, இயமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் என்பவர். இவர் முறையே கிழக்கு முதலிய திக்குக்களிலே காவல்செய்துகொண்டிருப்பர். [அஷ்டதிக் பாலகரி.]

**அட்டதிசம்**— எருக்கஞ்செடி.

**அட்டதேறல்**—காய்ச்சியமது. (சாராயம்.) (உ-ம்.) "அட்டதேறலுமடாதமைதேறலும்" (கந்தபு. நகர்பு. ௬௦.) [அட்ட - காய்ச்சிய. தேறல் - மது.]

**அட்டநம்**—வட்டவடிவமாகிய பரிசை.

**அட்டநாகபந்தம்** — சித்திரகவிவகைகளுளொன்று; அது: நான்காமெழுத்து நாற்பத்தொராமெழுத்தாகவும், ஆறுமெழுத்து நாற்பத்தைந்தாமெழுத்தாகவும், எட்டாமெழுத்து இருபதாமெழுத்தாகவும், பன்னிரண்டாமெழுத்துப் பதினெட்டாமெழுத்தாகவும், இருபத்திரண்டாமெழுத்து நாற்பத்தேழாமெழுத்தாகவும், இருபத்துநான்காமெழுத்து முப்பத்தொன்பதாமெழுத்தாகவும், முப்பத்துமூன்றுமெழுத்து ஐம்பத்தொராமெழுத்தாகவும், முப்பத்தேழாமெழுத்து நாற்பத்தொன்பதாமெழுத்தாகவும் வரும்படியொற்றுட்பட ஐம்பத்தோரெழுத்தான் ஒரு செய்யுட்செய்து கிரமப்படி எட்டுப்பாம்பு வரைந்து அதன்கண் அடைத்துக்கொள்ளப்படுவது. (தண்டி.) [அஷ்ட; நாக, பந்த.]

**அட்டநாகம்**—எட்டுவகைத்திவ்யசாதிச்சர்ப்பங்கள்; அவை: அநந்தன், வாசுகி, தக்கன், கார்க்கோடகன், பதுமன், மகாபதுமன், சங்கபாலன், குளிகன் என்பன. (பிங்க. ௨. ௧) [அஷ்ட; நாக.]

**அட்டநிக்கிரகங்கள்**— (தர்க்கம்.) எட்டுத்தோல்வித்தானங்கள். (உ-ம்.) "அட்டநிக்கிரகங்களாவன" (தர்க்க-பா. ௭௪.) அவை: நியூநம், அதிகம், அபசித்தாந்தம், அசித்தம், விருத்தம், அநைகாந்திகம், பிரகரணசமம், காலாத்தியாபதிட்டம் என்பன. [அஷ்ட நிக்ரஹ.]

**அட்டப்பிரகரணம்**— எட்டுப்பிரகரணங்கள்; அவை: தத்துவப்பிரகாசிகை, தத்துசங்கிரகம், தத்துவத்திரயநிர்ணயம், போககாரிகை, மோக்ஷகாரிகை, நாதகாரிகை, பரமோக்ஷநிராசகாரிகை, இரத்திநத்திரயம், (சைவச. பொது. ௩௨௭. உரை.) [அஷ்ட; ப்ரகரண.]

**அட்டப்பிரணவம்**—எட்டுப்பிரணவம். (த. நி. போ. ௩௭௬.) [அஷ்ட ப்ரணவ.]

**அட்டப்பிரமாணம்**— எட்டுவகைப்பிரமாணங்கள்; அவை: அநுமாநம், அபாவம், அருத்தாபத்தி, ஆகமம், உபமாநம், ஐதிகம், சம்பவம், பிரத்தியட்சம என்பன. (உபநி. ௧௬.) அஷ்ட; ப்ரமாண.]

**அட்டபதம்**— 1. கயிலாசமலை. 2. சரபப்புள். 3. சிலந்தி. [அஷ்டபத.]

**அட்டபதி**— எட்டுப்பாதமுடையது. (பி. வி. ௨௧. உரை.) [அஷ்டபத: அஷ்ட - எட்டு. பத. பாதமுடையது. ஈ - ஒரு வ-வி.]

**அட்டபந்தநம்**—சுக்கான்கல்லு, கொம்பாக்கு, சாதிலிங்கம், செம்பஞ்சு, தேன்மெழுகு, எருமைவெண்ணெய், குங்கிலியம். நற்காவியென்னும் எட்டுப்பொருளையுஞ் சேர்த்திடித்துத் திரட்டப்படும் ஒருமருந்து; அவை சிலாவிக்கிரகங்கள் சலநமின்றியிருக்கும்படி சார்த்தப்படும். [அஷ்ட; பந்தந]

**அட்டபரிசம்** — எண்வகைப் பரிசங்கள்; அவை: ஊன்றல், கட்டல், குத்தல், தட்டல், தடவல், தீண்டல், பற்றல், வெட்டல் என்பன. (பிங்க. ௪௩௫.) [அஷ்ட; ஸ்பர்ஶ.]

**அட்டபாதம்**— 1. எண்காற்புள். 2. சிலந்திப்பூச்சி. [அஷ்டபாத: பாத - கால்.]

**அட்டபாலகர்** — அட்டதிக்குப் பாலகர். (உ-ம்.) "அட்டபாலசரும் வசுக்களும்" (நல். பார. குமாரச. ௪௦௩.) [அஷ்ட; பாலக - காவலாளர்.]

**அட்டபுட்பம்**— 1. எட்டுவகைப்பூக்கள்; அவை: புன்னை, வெள்ளெருக்கு, சண்பகம், நந்தியாவர்த்தம், பாதிரி, நீலோற்பலம், அலரி, செந்தாமரையென்பன. இவை புறப்பூசைக்குரியன. 2. பூப்போலக்கொள்ளத்தக்க எட்டுக்குணங்கள்; அவை: கொல்லாமை, ஐம்பொறியடக்கல், பொறை, அருள், அறிவு, வாய்மை, தவம், அன்பு எனபன. இவை அகப்பூசைக்குரியன. (சைவச. பொது. ௧௨௮. உரை.) (உ-ம்.) "அட்டபுட்பமவை கொண்டடிபோற்றி" (தேவார. திருப்பழ. ௮. ௬௩.)

**அட்டபுயம்**— காஞ்சிபுரத்துள்ள விட்டுணு ஆலயங்களெட்டினுள் ஒன்று. [விட்டுணு எட்டுப்புயங்களோடிருந் திலக்குமியை விவாகஞ் செய்தமையால் "அட்டபுயம்" எனப்பெயர் பெற்றதென்பர்.] (உ-ம்.) "கரிகிரியட்டபுயம்" (கந்தபு. நகா. கூ௦.) [ஸஂஷ்டஹஜ.]

**அட்டபோகம்**— எண்வகையின்ப அநுபவம்; அவை: அணிகலம், ஆடை, தாம்பூலம், பரிமளம், சங்கீதம், பூவமளி, பெண், போசநம் என்பன. (பதார்த்த. வை. தி. கக.) விவேகசிந்தாமணிக்காரர் அணிகலமென்பதை விலக்கி ஸ்நாநமென்பதைச்சேர்த்தனர். (விணி. உக௦.) [ஸஂஷ்டபோக.]

**அட்டம்**— 1. அருகு. (உ-ம்.) "அடர்க்குநாய்களட்டமாகவிட்டு"(பெரியபு. கண்ணப். சு.) 2. எட்டு. (உ-ம்.) "அட்டமாம்புயயாகுமாரூபரே" (தேவார. திருவாரூ. க-வது. திருச்குறு. எ. திருநா.) [ஸஂஷ்டந.] 3. குறுக்கு. 4. சாதிக்காய. 5.நேர். (உ-ம்.) "அட்டமாக வழுதி மேல்மர்க்கெழுந்ததாக்குமே" (திருவிளை. கடல்சு. கூ.) 6. மேல்வாய். 7. மேல்வீடு. 8. ராசமனை.

**அட்டம்பாரித்தல்**— பக்கலலே விசாலித்தல், பருத்தல். [அட்டம் - அருகு. பாரித்தல் - பரத்தல்.]

**அட்டமகாரோகம்**— எளிதில் வசப்படாத எட்டு மகாரோகங்கள்; அவை: வாதம், கல்லடைப்பு, குட்டம், மேகம், மகோதரம், பகந்தரம், மூலரோகம், கிரகணிரோகம் என்பவைகளாம். [ஸஂஷ்டமஹாரோக.]

**அட்டமகாலிகன்**— வாநப்பிரஸ்தருளொருவன். இவன் மூன்றுநாள் உணவின்றியிருந்து நான்காநாளிற்பின்பகலில் உண்போன். [ஒருநாளைக்கு இருகாலப்போசநமாகக்கொண்டெட்டாங்காலத்திற் புசிப்போனென்றபடி.] [ஸஂஷ்டகாலிக. ஸஂஷ்ட - எட்டாவது. காலிக - காலசம்பந்தமுடையவன்.]

**அட்டமங்கலம்**— எட்டுவகை மங்கலங்கள்; அவை: கவரி, நிறைகுடம், கண்ணாடி, தோட்டி, முரசு, விளக்கு, பதாகை, இணைக்கயல் என்பன. (உ-ம்.) "அட்டமங்கலமுந்தந்து"(கந்தபு.விண்குடி. நகூ.)[சீவகசிந்தாமணி கோவிந்தையாரிலம்பகம் அறுபத்துநான்காஞ்செய்யுளுரையிற்காட்டப்பட்ட "சாமரைதீபந் தமர்யப்பொற்குடங்- காமர்கயலிணைமுரசலாத்- தேமருவு- கண்ணாடி தோட்டி கதலிகை வெண்முரச- மெண்ணியமங்கலங்களெட்டு" என்னுஞ்செயயுளால் அட்டமங்கலம் இவையெனக்காண்க. வாசஸ்பத்திய அசராதிகாரர் சிங்கம், எருது, யானை, குடம், ஆலவட்டம், கொடி, பேரி, தீபமென்பனவகளே யட்டமங்கலமென்பர்.] 2.ஒருவகைக்குதிரை; அது: உரம், நான்கு குளம்புகள், வால், முகம், உச்சி என்னுமெட்டிடங்களிலுமுள்ள மயிர்கள் வெண்ணிறமுடையனவாயிருப்பது. (உ-ம்.) "முகமார்புச்சிவால்காலென்றுரைத்த வெட்டுறுப்பினும் வெண்மை- விரவிய தட்டமங்கலம்" (திருவிளை. நரிபரி. கக௦.) 3. ஒருவகைப் பிரபந்தம்; அது: "கடவுள்காக்க" என ஆசிரியவிருத்தம் எட்டினுலே பாடப்படுவது. (உ-ம்.) "கடவுள் காக்கவெனக்கவியிருநான்-கடைவுறவக்கவல் விருத்தமதனுல்- வகுப்பதட்ட மங்கலமாகும்" (இலக்கணவிள. அசந.) [ஸஂஷ்டமங்கல: மங்கல - சோபநம்.

**அட்டமச்சநி**— உதயலக்கினத்துக் கெட்டாம் இடத்தில் நிற்குஞ்சநி. [அட்டம்- எட்டாவது. சநி - ஒருகிரகம்.

**அட்டமசுத்தி**— எட்டாமிடஞ்சுத்தியாயிருத்தல். (உ-ம்.) "ஓரையிற் - பொருந்தியவட்டமசுத்தியிற் புஞ்சவநஞ்செயுமே" (விதா. மகளிர். க.)

**அட்டமணம்**— எண்வகை விவாகங்கள்; அவை: பிராமம், பிராசாபத்தியம், ஆரிடம், தெய்வம், காந்தருவம், ஆசுரம், இராக்கதம் பைசாசம் என்பன. (மநு. ந. உக.) மணம்- விவாகம்.]

**அட்டமதம்**— குலம், ரூபம், யௌவநம், வித்தை, தநம், பிரபுத்துவம், சகாயம், சகசம் என்னும் எட்டினுலும் உண்டாகுஞ்செருக்கு. (தாயு.பன்மாலை. உ. உரை.)[ஸஂஷ்ட - எட்டு. மத - செருக்கு.]

**அட்டமம்**— எட்டாவது. (உ-ம்) "ஒத்தவுதயத்துக்கட்டமத்தே நிற்குமோரதிபன்" (விதாந. குணகுண. அஎ.) [ஸஂஷ்டம.]

**அட்டமாந்தம்**— எட்டுவகை மாந்தநோய். அவை: சொியாமாந்தம், போர்மாந்தம், மலட்டுமாந்தம், பெருமாந்தம், வாதமாந்தம், சுழிமாந்தம், வலிமாந்தம், கணமாந்தம் என்பன.(உ-ம.)"பெருமாந்தங்கணமாந்தமுட்பெய்திடுமணவுசற்றுஞ் - சொியாதமாந்தம் வளமைசெறிந்திடு மலட்டுமாந்தம் பொருமியவாதமாந்தம் புகல்வலிமாந்தங்கண்கள் - சொருகிய சுழிமாந்தம்போர்மாந்த மெண்ணெணச்சொனருமே" என்னும் வைத்தியநிகண்டால் மாந்தவகைகயைக்காண்க.

**அட்டமி**— 1. எட்டாங்கிதி. (உ-ம்.) "அட்டமியுமேனையுவாவும்"(ஆசாரக்.சஎ.) 2. எட்டாவது. [இது நியதமாய் வடமொழிப்பெண்பாற்பெயருக்கடையாக வருவது.](உ-ம்.) "காமனங்காசநியட்டமியாஞ்சபை" (வேதாரண்யபு. சபை கூ.)

**அட்டமிகை**—அரைப்பலம்.(உ-ம்.) "தனித்தனிக்கங்கஷ்டமிகை வெவ்வேறுந்தழலடியுருது வெதுப்பி" (தைல. தைலவ. ருசு.) [அஷ்டமிகா.]

**அட்டமூர்த்தம்**--சிவனுக்குச் சொல்லப்படும் எண்வகை வடிவங்கள்; அவ்வடிவங்கள் நிலம், நீர், தீ, காற்று, வெளி, சூரியன், சந்திரன், இயமான் என்பன. (உ-ம்.) "அட்டமூர்த்தங்கொண்டருளினோன் றண்டீச்சுரன்" (சூத. எச்கி. பூ. சங. எ.) [அஷ்டமூர்த்தம்.] [சிவன், பிரமாவினது நுதலிடைத்தோன்றிய உருத்திராவதாரத்தில் சருவனென்னும் உருத்திரனுக்குப் பிருதிவியும், பவனென்னும் உருத்திரனுக்கு அப்புவும், பசுபதியென்னும் உருத்திரனுக்கு அக்கினியும், ஈசானன் என்னும் உருத்திரனுக்கு வாயுவும், வீமனென்னும் உருத்திரனுக்கு ஆகாயமும், உருத்திரனென்னும உருத்திரனுக்குச்சூரியனும், மாதேவனென்னும் உருத்திரனுக்குச் சந்திரனும், உக்கிரனென்னும் உருத்திரனுக்கு இயமானனும் வடிவமாமென்று சொல்வர். சைவபுராணத்திலே உருத்திரனுக்கு நெருப்ப எனவும், உக்கிரற்கு வாயு எனவும்,ஈசானனுக்குச்சூரியனெனவும் மாதேவற்கு மதியமெனவும், பசுபதிக்கு இயமானனெனவுஞ் சொல்லப்படும்.(உ-ம்.) "தோன்றியோர் விளையாட்டயர்ந்தெழுதலுந்தூயோற் - கேன்றவாகு மற்று ருத்திரன் முதற்பெயரெட்டு - யான்றதாநமோரெட்டு மோரெட்டரிவையருஞ்- சான்றமைந்தரோரெண்மருஞ்சார்ந்தனரன்றே" (கூர்மபு. அட்டமூ. கச.) "எய்துநாமமென்னெனிற்பவன் சருவனீசானன் - வைதிசந்தருபசுபதிவீமன்மாதேவ - னெய்திளம்பிறை யுக்கிரனுருத்திரனென்ப - மைதிகழ்ந்தொளிர்கண்டனெண்வடிவமும்வகுப்பாம்" (கரு) "பரிதிவெண்கதிர்க் கடவுணீர்புவியழல்பனிவா - னுருவநல்வளியரு மகம்புரிந் தழலூட்டும் - பொருவிருன்மறை யந்தணனென்பாப்புகிதர் - மருவிவாழ்வுறுமக்கையமெண்மர்பேர் வகுப்பாம" (கங.) இங்கே அந்தணன் என்றது ஆன்மாவை.

**அட்டமூர்த்தி**— சிவன். (உ-ம்.) "மலைமகள் பாகத்தட்டமூர்த்தியை" (பெரியபு. திருஞாந. எஅசு.) [அஷ்ட - எட்டு; மூர்த்தி - மூர்த்திங்-மூர்த்தமுடையவர்.]

**அட்டமூர்த்திகள்**-1.எட்டுமூர்த்திகள். அவர்கள்: பவன், சருவன், ஈசானன், பசுபதி, வீமன், உக்கிரன், மாதேவன், உருத்திரன் என்பவர்கள். (உ-ம்.) "கட்டுசெஞ்சடைப்பவர் முதலாகவேகழறு - மட்டமூர்த்திகடாங்களும்" (கந்தபு. கணங். கச.) 2. பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம், சந்திரன, சூரியன், ஆன்மா எனப்படுபவர். (சி. வி. கிரி. நங-ம் உரையும.)

**அட்டமூர்த்தீசுவரர்**— பிருதிவி முதலான அட்டமூர்த்திகளுக்குமதிபர். (சி. வி. கிரி. நங-ம் உரையும.)

**அட்டமூலம்**—எட்டுவகை வேர்கள். அவை: சுக்கு, அரத்தை, (சிற்றரத்தை, பேரரத்தை,) செவ்வியம், சித்திரமூலம், கண்டுபாரங்கி, (சிறுதேக்கு) கோரைக்கிழங்கு, நன்னாரிவேர், காஞ்சொறிவேர் என்பன. [அஷ்ட; மூலம் - வேர்.] வைத்திய நிகண்டுடையார்: சுக்கு, சிற்றரத்தை, சித்திரமூலம் பேரரத்தை, காஞ்சொறி, செவ்வியம், திரண்டமிளகு, கண்டுபாரங்கியாகிய எட்டும் அட்டமூலமென்பர்.

**அட்டமெய்ப்பரிசம்**— அட்டபரிசம்.

**அட்டயோகம்**—அட்டாங்கயோகம்.(உ-ம்) "மெய்ஞ்ஞானந்தரு மட்டயோகத்தவமே" (கந்தர்கலி. சுரு.) [அஷ்டயோகம்.]

**அட்டயோகம்**—அரைபொடி.

**அட்டரக்து**— உருக்கிய அரக்கு. (உ-ம்.) "அட்டரக்கனையசெவ்வாயணிநலங்கருகி" (சிந்தா. கோவிந். சுo.) [அட்ட - உருக்கிய. அரக்கு - மெழுகு.]

**அட்டல்**— 1. அழித்தல். (உ-ம்.) "அட்டவின்றியமர்தருசாலிகை" (கந்தபு. வச்சிர. க) 2. அள்ளுதல். (உ-ம்.) "அட்டித்தரப்பணியே" (தேவார. திருக்கோளி. ச. கங்.) 3. கொல்லல். (உ-ம்.) "வெஞ்சமரியற்றியட்டல்பழியாகும்" (கந்தபு. சதமுக. ங.) 4. நெருப்பிற்காய்ச்சுதல். (உ-ம்.) "அடைபலங்காய்தானியம் வெவ்வேறட்டல்" (தைல. பாயிரம். உக.)

**அட்டலக்ஷுமி** — (அட்டலட்சுமி) தனலக்குமி, தானியலக்குமி, தைரியலக்குமி, சௌரியலக்குமி, வித்தியாலக்குமி, கீர்த்திலக்

குமி, விசயலக்குமி, இராச்சியலக்குமி என்னும் எட்டிலக்குமிகள். [ஸ்ஷ லக்ஷ்மீ.]

அட்ட லட்சணம்—அட்டகுணம். [ஸ்ஷ; லக்ஷண.]

அட்டலோகபற்பம்— பொன், வெள்ளி, செம்பு, இரும்பு, வெண்கலம், தரா, வங்கம், துத்தநாகம் என்னும் எட்டுலோகங்களினுஞ் செய்யப்பட்ட ஒருமருந்து. [ஸ்ஷ லோஹஐஸ்ம - உலோகத்தாலுண்டாகிய பற்பம்.]

அட்டலோகம்—அட்டதாது. [ஸ்ஷ லோஹ: ஸ்ஷ; லோஹம் - தாது.]

அட்டவசுக்கள்— எட்டுவசுக்கள்; அவர்: அநலன், அநிலன், ஆபன், சோமன், தரன், துருவன், பிரத்தியூடன், பிரவாசன் என்பவர். (பாரத. குருகுல. சுஉ. உரை.) [ஸ்ஷ வஸு: தேவ வகுப்பிலொருசாரார்.

அட்டவணை— 1. அநுக்கிரமணி. 2. சேர்க்கப்பட்டது. 3. விஷயசூசிகை.

அட்டவர்க்கம்—, அட்டவநக்கம்—, அட்டவநக்கு— எட்டுவகை மருந்துச்சரக்குகள்; அவை: இந்துப்பு, ஓமம், கருஞ்சீரகம், சீரகம், சுக்கு, திப்பிலி, பெருங்காயம், மிளகு என்பன. (உ-ம்.) "திப்பிலிமிளகு சுக்குச்சீரகமிந்துப் போமம் - வெப்பங்கொள்பெருங்காயந்தான் விசித்தனரிவற்றினோடே - செப்பருங்கருமைகொண்டசீரகம்பின்னுஞ்சேர்க்கில்- ஒப்பிலாவட்டவர்க்க முறுமெனத்தொகுத்தார் முன்னோர்" (வைத். நிக.) 2. (சோதிடம்) ஏழு கிரகங்களுக்கும் இலக்கினத்திற்கும் எட்டுவகையாக வகுக்கப்படும் ஒரு கணக்கு. இதன் விவரஞ் சாதகசிந்தாமணி முதலிய சோதிடநூலிற்காண்க.

அட்டவன்—1. அழித்தவன். (உ-ம்.) "மாற்றலார்புரமட்டவன்"(கந்தபு. கணங்க. கஎ.) 2. அடுதல்செய்தவன் (எப்பொருளையாயினும்.)

அட்டவாதம் — எட்டுவகை வாதங்கள்; அவை: சிவசமவாதம், ஐக்கியவாதம், சங்கிராந்தவாதம், பிரவாகேசுவரவாதம், காபாலிகவாதம், அவிகாரவாதம், பேதாபேதவாதம், அநேகேச்சுரவாதம் என்பன. (த. நி. போ. கஉ.) [ஸ்ஷ வாதம்.]

அட்டவிகாரம்— உயிர்களுக்குள்ளனவென்று சொல்லப்படும் எட்டு விகாரங்கள்; அவை: காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாற்சரியம், அசூயை, இடும்பையென்பன. [ஸ்ஷ விகார.]

அட்டவிஞ்சதி—இருபத்தெட்டு.

அட்டவிஞ்சதியோகாசாரியர் — இருபத்தெட்டுயோகாசாரியர்; அவர்: ஸ்வேதர், சதாசிவர், தமனர், சகோத்திரர், கங்கர், லோகாக்ஷர், ஜசிஷர், ததித்தியவந்தர், விஷயர், உக்கிரர், அத்திரி, சுபாலகர், கௌதமர், வேதசிரர், கோகர்ணர், குகாவாசர், சிகண்டி, சடமாலி, அட்டகாசர், தாருகர், லாங்குலி, மகாகாயர், சூலி, டிண்டி, முண்டி, சயிஷ்ணு, சோமசர்மர், இலகுளீசுவரர் என்னும் முனீசுவரர். (வி-ணி. கசுo.) [ஸ்ஷா விம்ஶதி - இருபத்தெட்டு;யோகாசாரியர்.]

அட்டவித்தியேசுரர்— எட்டுவகைவித்தியேசுரராகிய விஞ்ஞாநகலர்; அவர்: அநந்தர், சூக்குமர், சிவோத்தமர், ஏகநேத்திரர், ஏகருத்திரர், திரிமூர்த்தர், ஸ்ரீகண்டர், சிகண்டியென்பவர். [இவர் ஈசுவாதத்துவத்திலிருக்கும் ஈசுரனைச்சூழ்ந்திருந்து மாயையின்கீழுண்டாகிய சிருட்டி முதலிய கிருத்தியங்களைச் சிவனுடைய ஏவலாற் செய்பவர்களாய் அபரமுத்தி பெற்றிருப்பார். அநந்தர் முதலிய இவர் மேற்சொல்லிய அடைவே ஒவ்வொருகலை குறைந்துகுறைந்து வருதலால் ஒருவர்க்கொருவர் தாழ்வுடையவர் என்பர். அநந்தர் அதிகாரத்தில் வைரம்பிறந்து மோக்ஷமடைய அதன்பின் அவர்க்கடுத்த சூக்குமர் அவ்வதிகாரம்பெற்று அவர் போலக் கிருத்தியஞ்செய்வர். மற்றையோரும் இப்படியடையவே யதிகாரத்தைப்பண்ணுவர். எல்லார்க்கும் பிந்தின சிகண்டியுடைய இடம் பாழ்கிடவாமல் விஞ்ஞாநகலருட் பக்குவமான ஒருவரைச் சிவன் அடையவே எண்மரிற் குறையாமற் கூட்டுவர்.] (சி. சி. அ: உ. மறை.)

அட்டவித்தியேசுவரர்—அட்டவித்தியேசுரர். (மிருகேந்திர. க. கக.) [ஸ்ஷ வித்யேஶ்வர.]

அட்டவிததாடநம்— எட்டுவகைத் தாடநம்; அவை: சங்கோசம், பக்கத்தம், பிரசுரிதம், முட்டி, கீலம், கர்த்தரிகை, சந்தஸ்கிசம், வித்தை யென்பன. (கொக்கோ ௫.

௭௨. ௭௩.) [அஷ்டவித - எட்டுவகை. தாடநம் - தட்டுதல்.]

**அட்டவைசுவரியம்**— எண்வகைச்செல்வங்கள்; அவை: அடிமை, இராசாங்கம், சுற்றம், நெல், பொன், மக்கள், மணி, வாகநம் என்பன. [அஷ்ட - எட்டு. ஐச்வர்யம் - பாக்கியம்.]

**அட்டவைரவர்**—எட்டு வைரவர்கள்; அவர்: மகாவைரவர், உக்கிரவைரவர், சண்டாளவைரவர், குரோதவைரவர், உன்மத்தவைரவர், காபாலவைரவர், பீஷணவைரவர், சாகரவைரவர் என்பன. இவர் சிவலோகத்திலே சோதிமயமான கோட்டையில் எட்டுவாயில்களிலுங் காவல்செய்துகொண்டிருப்பர் என்பர். (வி-ணி. ௨௬௧.) [அஷ்டபைரவ.]

**அட்டாங்கசீலம்**—(பௌத்தம்.) நல்லொழுக்கமாகிய சீலத்தினெட்டுறுப்புக்கள்; அவை: கொல்லாமை, திருடாமை, வியபிசரியாமை, பொய்கூறாமை, கள்ளுண்ணாமை யென்னும் பஞ்சசீலத்துடன் இல்லறத்தார்களில் கிட்டாபார்களைப் போகியாமை, தரையிற்படுத்தல், பாய்மேற்படுத்தல் என்பன. (மணிமேகலை. ௧௮அ.) [அஷ்டாங்கசீலம்.]

**அட்டாங்கநமஸ்காரம்**—மோவாய், செவிகள் இரண்டு, தலை, புயங்கள் இரண்டு, கைகள் இரண்டென்னும் எட்டுறுப்பும் நிலத்திலே தோய நமஸ்கரித்தல். (சைவச.பொது. ௫௫௩. உரை.) [அஷ்டாங்கநமஸ்காரம்: அஷ்டாங்க - எட்டுறுப்பு. நமஸ்காரம்-வணக்கம்.]

**அட்டாங்கமார்க்கம்**—பழுதிலாவாழ்க்கையெனப்படும் எட்டங்கங்களையுடைய துக்கநிவாரணமார்க்கம்; அவை: நற்காட்சி, நல்லூற்றம், நல்வாய்மை, நற்செய்கை, நல்வாழ்க்கை, நன்முயற்சி, நற்கடைப்பிடி, நல்லுளத்தோர் தலைப்பாடென்பன. (மணிமேகலை. ௩௧௨.) [அஷ்டாங்கமார்க்கம்.]

**அட்டாங்கயோகம்**— யோக உறுப்புகள் எட்டு; அவை: இயமம், நியமம், ஆதநம், பிராணயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியாநம், சமாதி யென்பன. (உ-ம்.) "மார்க்கவட்டாங்கயோக முற்றுமுழத்த வழுந்தவர்" (சி. சி. அ: ௨௧.) [அஷ்டாங்கயோகம்.]

**அட்டாதசகணம்**— பதினெண்கணங்கள்; அக்கணங்களாவார்: தேவர், சித்தர், அசுரர், தைத்தியர், கருடர், கிந்நரர், நிருதர், கிம்புருடர், காந்தருவர், இயக்கர், விஞ்சையர், பூதர், பைசாசர், அந்தரர், முனிவர், உரகர், ஆகாயவாசியர், போகபூமியர் என்பவர். [அஷ்டாதசகணம்.]

**அட்டாதசபுராணம்**—பதினெண்புராணங்கள்; அவை: சைவம், பவிடியம், மார்க்கண்டம், இலிங்கம், காந்தம், வராகம், வாமநம், மற்சம், கூர்மம், பிரமாண்டம், பிரமம், பதுமம், காருடம், நாரதம், விண்டு, பாகவதம், ஆக்கிநேயம், பிரமகைவர்த்தம் என்பன. (உ-ம்.) "அட்டாதசபுராண மறைமுநி" (மச்சபு. பூரு. க; கந்தபு. பாயிர. ௫௪, ௫௫.) [அஷ்டாதசபுராணம்.]

**அட்டாதசம்**—பதினெட்டு. (உ-ம்.) "அட்டாதச மகாபுராணங்களையுமறிந்தும்" (சி.சி. அ: ௧௧.சிவாக்; [அஷ்டாதச: அஷ்ட - எட்டு. தச - பத்து.]

**அட்டாதசமூலம்**— பதினெண்வகை வேர்கள்; அவை: எருக்கு, கண்டங்கத்திரி, காந்தை, கறிமுள்ளி, குமிழ், கொடிவேலி, சங்கங்குப்பி, சிற்றாமல்லி, தழுதாழை, தூதுளை, நன்னாரி, மாவிலிங்கை, நொச்சி, பாதிரி, பேராமல்லி, முருங்கை, வில்வம், வேர்க்கொம்பென்பன. [அஷ்டாதசமூலம்.]

**அட்டாதசவித்தை**— பதினெண்வித்தைகள்; அவை: ஆறுவேதாங்கங்கள், நான்குவேதங்கள், மீமாஞ்சை, நியாயம், ஸ்மிருதி, புராணம் என்னும் பதினான்கும், ஆயுர்வேதம், தநுர்வேதம், காந்தருவவேதம், அருத்தவேதம் என்பனவும். [அஷ்டாதசவித்யா: வித்யா- வித்தை.]

**அட்டாதசவியவகாரபதம்**— வழக்குச்குரிய பதினெண்விடயங்கள்; அவை: கடன்கோடல், உபநிதி, கூடிமேம்படல், நல்கியதை நல்காமை, ஒப்பிப்பணிசெய்யாமை, கூலிகொடாமை, உடையானல்லான்விற்றல், விற்றுக்கொடாமை, கொண்டுள்ளமொப்பாமை, சட்டுப்பாடுகெடத்தல், நிலவழக்கு, மாதராடவர்தருமம், தாயபாகம், வன்செய்கை, சொற்கொடுமை, தண்டக்கொடுமை, சூது என்பனவும் ஒழிந்தனபலவும். (மிரு. ச. உ: வள். உரைப்பா.) [அஷ்டாதசவ்யவஹாரவிஷய: அஷ்டாதச - பதினெட்டு. வ்யவஹார - வியாச்சியம். விஷய - விஷயம்.]

அட்டாதசவிவாதபதம்—அட்டாதசவியவகாரபதம். [அஷ்டாதசவிவாதபதம். விவாதம் - வியாச்சியம்.]

அட்டாதசோபபுராணம் — பதினெட்டு உபபுராணங்கள்; அவை: நாரசிங்கம், சநற்குமாரம், நாரதீயம், சிவதன்மம், துருவாசம்; நந்திகேச்சுரம், அவுசநம், காளிகம், வாருணம், சாம்பேசம், பராசரம், பார்க்கவம், காபிலம், மாநவம், வாசிட்ட லைங்கம், சவுரம், மாரீசம், பிரமாண்டமென்பன.(பிங்க. சசரு.) [அஷ்டாதசோபபுராணம்.]

அட்டாதுட்டம் — அதிசதீங்கு. [அட்ட; துஷ்டம்.]

அட்டாதுட்டி— 1. அதிக துட்டத்தனஞ் செய்கிறவன். [அட்ட - அதிகம். துஷ்டம் - தீங்கு. இ - ஒரு விகுதி.] 2. அதிக துட்டத்தனம். [அட்ட; துஷ்டி.]

அட்டாபதம்—1. ஒருவகை வன்னப்புடைவை. 2. கதவின் தாழ். 3. கைலாசமலை. 4. சரபப்புள். 5. சிலந்தி. 6. பொன். [அஷ்டாபதம்.]

அட்டாலகம்— 1. கோபுரம். 2. மேல்வீடு.

அட்டாலம்—1. அட்டாலை. 2. மேல்வீடு.

அட்டாலிகாகாரன்— அரசர் மனைகளைக் கட்டுஞ் சிற்பாசாரி.

அட்டாலிகை— 1. அரசர்மனை. 2. மேல்வீடு.

அட்டாலை— 1. அட்டாளை. (உ-ம்.) "கீழ்த்திசைமருங்கோரட்டாலை மண்டபஞ்செயெனவதுகேட்டெழுந்தரசன்" (திருவிளை. யானை. உங.) 2. அரசர்மனை. (உ-ம்.) "கதநவாயிலுங்கட்டியட்டாலையும்" (இராமா. முதற்போர். கூஉ.) 3. மேல்வீடு.

அட்டாலைமண்டபம்—மேல்வீடாகக்கட்டப்பட்ட மண்டபம். (உ-ம்.) "அகங்கவ்விய களிப்பெய்திவக் - தட்டாலை மண்டபம்பொன் - னகங்கவ்வியதெனத்தானொருநாளனினிலெடுத்தே" (திருவிளை. யானை. உச.)

அட்டாலைமரம்— ஒருமரம்.

அட்டாவதானம்—எட்டுக்காரியங்களை யொருகாலத்திலே யவதானிக்குஞ் சாமர்த்தியம். [அஷ்டாவதானம்.]

அட்டாவிஞ்சதி— இருபத்தெட்டு. (சி-வி. சரி. எ. [அஷ்டாவிம்ஶதி.]

அட்டி— அதிமதுரம். (தைல. தைலவ. சுஈச) [யஷ்டி.]

அட்டிலம்— வீக்கம். (சீவரட். கசுசு.) [அஷ்டிலம்.]

அட்டிலாரோகம்—ஆணுறுப்பின் ரோகத்திலொருவகை. (சீவரட். ககக.)

அட்டிலாவாதம்— ஒருவகை வாதரோகம்; அது: மூத்திரப்பையின் துவாரத்திலும் அம்மூத்திரப்பைக்குள்ளிலும் வெளியிலும் பக்கங்களிலும் கட்டிபோல வீக்கத்தைப்பிறப்பிப்பது. (சீவரட். கசுரு.) [அஷ்டீலா-வீக்கம்.]

அட்டிலிகம்—கல்லு. (சீவரட். ருககு.)

அட்டிலிகாரோகம்— ஆண்குறியில் விரணத்தைப் பிறப்பிக்கும் ஒருவிதரோகம்; அது: குழிவிழுந்து கல்லைப்போற்கெட்டியாயிருக்கும். (சீவரட். ருககு.) [அஷ்டிலிகம் - கல்லு.]

அட்டுப்பு— காய்ச்சுலவணம். (தைல.தைலவ. கஉக.)

அடக்கம்— 1. அடங்கியகாரியம். 2. அடங்கியபொருள். 3. ஒடுக்கம். 4. ஒருவகை மெய்ப்பாடு. அஃது: உயர்ந்தோர்முன் அடங்கியொழுகும் ஒழுக்கம். பணிந்தமொழியுந், தகைந்த நடையுந், தானைமடக்கலும், வாய்புதைத்தலும் முதலாகப் பலவகைப்படும். (உ-ம்.) "ஆங்கவையொருபாலாகவொருபாலுடைமையின் புறநடுவுநிலையருள- றன்மையடக்கம் வரைதலன்பெனாஅ" (தொல்.பொரு. உசுo. உரை.) 5. கருத்து. 6. சீவனொடுங்கியிருத்தல். 7. மனவமைதி. (உ-ம்.) "அடக்கமுடையாரறிவிலரென்றெண்ணி"(வாக்குண்டாம்.)

அடக்கம்பண்ணுதல் — 1. சேமஞ்செய்தல். 2. பிரேதமுதலியவற்றைப்புதைத்தல்.

அடக்கல்— 1. ஒடுக்கல். 2. கீழ்ப்படியப்பண்ணுதல்.

அடகு— 1. இலைக்கறி. (உ-ம்.) "மூலமடகுதுய்த்தல்" (கூர்மபு. வருணச். கக.) 2. கடன்வாங்குவோன் ஈடாகக்கொடுக்குஞ்சங்கமப்பொருள். (உ-ம்.) "ஆபரணம் வைத்தடகு தேடுபொருள்" (திருப்பு. ருகூச.) 3. பச்சிலை. (உ-ம்.) "ஆயிரமாண்டு புல்லடகுமேயினன்" (கந்தபு. கயமு. எரு.)

அடங்க—"உள்ளாக"எனப்பொருள்படும் ஒருவினையெச்சம். (உ-ம்.) "அவனிமுழுதுமோரடிக்குளடங்க வளர்ந்துகொண்டவனே" (சூத. முத்தி. ச: உக.)

அடங்கம்—கடுரோகிணிப்பூண்டு.

அடங்கல்— 1. அந்தர்ப்பவித்தல், உள்ளாதல். (உ-ம்.) "அளவைகாண்டல்கருதலுரையென் றிம்மூன்றினடங்கிடுமே" (சி. சி. அளவை. க.) 2. அமைதல், செயப்படக்கூடியதாதல். (உ-ம்.) "இடங்கொளுந்தாதையரிட்ட காரியமடங்கலின்றாயினுமமையுமாயினும்" (சேதுபு. அவை. உ.) 3. எல்லாம். [இப்பொருளிலே வரும்போது பெரும்பான்மையும் முற்றும்மை பெற்றுவரும்.] (உ-ம்.) "திக்கடங்கலுங்கடந்த" (திருவிளை. திருநகரங்கண்ட. கரு.) 4. ஒடுங்குதல். (உ-ம்.) "சிந்தையுமென்போலச் செயலற்றடங்கிவிட்டால்" (தாயு. பராபர. ௬உ௫.) 5. கீழ்ப்படிதல். 6. மனம்புறத்துப் பாவாதறத்தின்கண்ணேநிற்றல்.(உ-ம்)"கதங்காத்துக் கற்றடங்கலாற்றுவான்" (வள். கக0.) 7. வலிகுறைதல். (உ-ம்.) "தடிசுவைத்திருளுண்டுந் தழற்பசி யடங்கிடாது" (சூத. எக்கி. பூ. உ0. சு.) 8. வெளிப்படாது மனத்தினுள்ளே அமர்தல். (உ-ம்.) "அடங்கருணாணமும்பயமுங்கொண்டனன்" (சூத. எக்கி. உ. ச: உ௬.)

அடங்கலர்— 1. ஐம்பொறிகளையும் வாட்டாதோர். (உ-ம்.) "அடங்கலர்க்கீந்ததாநப் பயத்தினால்" (சிந்தா. முத்தி. உசச.) 2. கீழ்ப்படியாதவர்கள். 3. பகைவர். (உ-ம்.) "அடங்கலர்முப்புரமெரித்தார்" (பெரியபு. இடங்கழி. ச.)

அடங்கலும்— 1. அனைவரும். (உ-ம்.) "பார்விசும்புறையுநீரா ரடங்கலும்" (கந்தபு. திருக்கல். எஎ.) 2. எல்லாம். (உ-ம்.) திருவிளை. திருநகரங்கண்ட. கரு. "அடங்கல்" பார்க்க.

அடங்கவும்—முழுவதும். (உ-ம்.) "உடம்படங்கவுமுன்கொடு" (பெரியபு. திருநா. ௬௫௬.)

அடங்கன்முறை—தேவாரம் முற்றும் அடங்கிய ஒரு புத்தகம். இது திருஞானசம்பந்தமூர்த்திநாயனாரது தேவாரத் திருப்பதிகம் முந்நூற்றெண்பத்துநான்குந் திருநாவுக்கரசுநாயனாரது தேவாரத்திருப்பதிகம் முந்நூற்றுப்பன்னிரண்டுஞ் சுந்தரமூர்த்திநாயனாரது தேவாரத்திருப்பதிகம் நூற்றொன்றும்ஆகிய எழுநூற்றுத்தொண்ணூற்றேழு திருப்பதிகங்கள் அடங்கியும்,அபயகுலசேகரசோழமகாராசாவினது வேண்டுகோளின்படி நம்பியாண்டார் நம்பியால் எழு திருமுறைகளாக வகுக்கப்பட்டும் உள்ளது.

அடங்காதோர்—பகைவர். (உ-ம்.) "அடிபுறந்தருகுவ ரடங்காதோரே" (புறநா. ௬௫.) 2. மன அடக்கம் இல்லாதோர். (உ-ம்.) "துன்றுபிணியோர்துறந்தோரடங்காதோர்" பாரத. கிருட்டி. ௫உ.)

அடங்காப்பற்று— அரசனாணையை மீறுவோரிருக்கும் ஊர்.

அடங்காமாரி— ஒருவருக்குக்கீழ்ப்படியாது முரணிநடப்பவள். [அடங்கா - அடங்காத. மாரி - துர்க்கை.]

அடங்காமை— 1. கீழ்ப்படியாமை. 2. மனம் வாக்குக்காயங்கள் அடங்காது தீநெறிக்கட்செல்லல். (உ-ம்.) "அடங்காமையாரிருளுய்த்துவிடும்" (வள். கஉக.)

அடங்கார்—பகைவர். (உ-ம்.) "அடங்கார் சேடுடைமுடித்தலைகள்" (காஞ்சிபு. வாணி. ௫உ.)

அடங்காவாரிதி— 1. கடலுப்பு. 2. மூத்திரம்.

அடங்கிடம்—அழிந்தொடுங்குமிடம்.(உ-ம்.) "விந்துநாதஞ்சத்திநெறியேயடங்கிடும் பரசிவத்தினில்" (அருணாசலபு. திருமலை. ௫.)

அடங்கு—அடங்குதல். (உ-ம்.) "அடங்கருணாணமும் பயமுங்கொண்டனன்" இங்கே, வெளிப்படாதுள்ளேயிருத்தல் என்னும்பொருட்டு. (சூத. எக்கி. உ. ச: உ௬.)

அடங்குதல்— அடக்கல். ["அடங்கல்"என்பதற்குக் கூறியபொருள்களில் மூன்றாவது ஒழிந்தன இதற்கும் பொருளாம.]

அடசுதல்—அடையப்பண்ணுதல்.(உ-ம்.) "அழுந்தவாளியொன்றுபத்துநூறுவன்பொடடசினான்" (பாரத. பதின. ௬0.)

அடஞ்சர்தித்தல்— எதிரிடைபண்ணுதல்.

அடடா— 1. ஓரதிசயக்குறிப்பு. (உ-ம்.) "அடடா அவனெவ்வளவு இரசமாய்ப்பாடுகிறான்" 2. தனக்குக்கீழ்ப்பட்ட ஒருவனைவிளிக்கும் ஒருசொல்; [இது அடா அடா என்னும் அடுக்குமொழியின் முன்னிறுதி ஆகாரமும் பின்னதின் முதல் அகரமுங்கெட்டுநின்றன.] (இராமாயணபத.)

அடத்தி—வாசி. [இது கடன்கொடுப்போன் கடன்தொகையிற் கழித்தெடுக்கும் பணம்.]

அடதாளம் — எழுவகைத் தாளங்களில் ஒன்று.

அடந்தை— ஒருதாளம்.

அடநம்— 1. அலைந்துதிரிதல். 2. போதல். [அடந.]

அடநி—வின்னுனியிலே நாண்கொளுவும் இடம். [அடநி.]

அடப்பம்— 1. நாவிதன் கருவிப்பை. 2. வெற்றிலைப்பை. [இஃது அடப்பை என்பதன் மரூஉ.]

அடப்பம்விதை-வாதுமைப்பருப்பு.(உ-ம்) "அடப்பம்விதையாம் வாதுமைப்பருப்பினுலே" (பதார்த்த. அ௬௬.)

அடப்பன்— 1. கடப்பமரம். 2. நெய்தனிலத்தலைவனைக்கூறும் ஒரு பட்டப்பெயர். [வழக்.]

அடப்பிரதீபிகை -அடயோகத்தை விவரிக்கும் ஒருவடநூல். (த. நி. போ. ந௪௪.)

அடம்— 1. அலைந்துதிரிதல். 2. பொல்லாங்கு. 3. போதல். 4. வலாத்காரம். (1, 3. அட. 2, 4. ஹ௦.]

அடம்பண்ணல்— தீங்குசெய்தல்.

அடம்பாரம்—முழுதும்.

அடம்பு—1.ஒரு படர்கொடி.(உ-ம்)"தும்பைவெள்ளடம்புதிங்கள்" (பெரியபு. ஏயர். ௪௦௧.) 2. அடப்பமரம்.

அடயோகம்— நால்வகையோகங்களிலொன்று; இது ஒற்றைக்காலிலே நிற்றல், தலைகீழாகத்தூங்கிப் புகைசுவாசித்தல், கையுயர்த்திநிற்றல் முதலிய பிராயாசச்செயல்களோடு செய்யப்படுவது. [ஹ௦யொ௧: ஹ௦ - வலாற்காரம். யொ௧.]

அடர்— 1, 3. அடவென்னேவலுங் தெரிநிலைவினைப்பகுதியும் பெயரெச்சத் தொகையும். 4. தகடு. (உ-ம்.) "அடர்ப்பொன்முட்டை" (மணிமேகலை. ௧௫-ஆங்காதை. ௧௪.) 5. நெருக்குதல். (உ-ம்.) "அடர்க்குறுமாக்களொடு" (மணிமேகலை. ௧௩-ஆங்காதை.௪௦.)

அடர்ச்சி— 1. குரூரவுரை சிந்தனைசெயல்களாகிய இராசதத்தின்குணம். (உ-ம்.)"அடர்ச்சிமிகுங்கவுரவமகங்கியம்" (சிவப்பிர. உ: உ௪.) 2. நெருக்கம்.

அடர்த்தல்—கொல்லல். (உ-ம்.) "இடங்கரையாழிவலவனடர்த்தனபோல" (கல்லாட. ௫௩.) 2. நெருக்கல். (உ-ம்.) "திருவிராலடர்த்தான்வல்லரக்கனையும்" (தேவார. திருநனி. அ. ௬ங.) 3. போர்செய்தல். (உ-ம்.) "ஆளையாள்கொண்டடர்த்தனர்" (கந்தபு. முதனாட். ௧௧௧.) 4. வருத்துதல். (உ-ம்.) "அடர்புலன்போக்கற்றோர்க்கும்" (கோயிற்பு. பாயிர. ௧அ.)

அடர்த்தி—நெருக்கம்.

அடர்தல்— 1. நெருங்கல். (உ-ம்.) "அறுகையுநெருஞ்சியுமடர்ந்து" மணிமேகலை.௧உ-ஆங்காதை. ௬௦.) 2. புடைத்தல். (உ-ம்.) "வச்சிரங்கொண்டிந்திரன் வெற்படர்வதென்ன" (ஞானவா. சகரா. ௧௪.) 3. போர்செய்தல்.(உ-ம்) "எண்ணுறுபடைகளிவ்வாறெதிர்தழீஇ யடரும்வேலை"(கந்தபு. தாரக. ௩௧.)

அடர்ந்தேற்றம்—அடர்ந்தேற்றி.

அடர்ந்தேற்றி—கொடுமை.

அடர்ப்பம்—நெருக்கம்.

அடர்ப்பு— 1. நெருக்குகை. (உ-ம்.) "அவன் சங்கற்ப புருடனைப்போல் வைசவற்றிருப்ப வடர்ப்பரிதாய்" (ஞானவா. ஞானவிண். ௧௬.) 2. போர். (உ-ம்.) "அசநியினயிற்படையடர்ப்புமோரயலாக" (இரகு. திக்கு. ௧௭௪.)

அடர்பு— 1. அச்சத்தகடு. 2. ஐமை. 3. நெருக்கம். 4. நெருங்கித்தொடர்கை.

அடரடிபடாடி — முற்றும் அழிக்கை. [வழக்.]

அடரார்—பகைவர்.

அடரோலி— அதட்டல். (பிங்க. உ௧௧௩.)

அடல்— 1. ஒருமீன். 2. கொல்லுதல். (உ-ம்.) "அன்னவர்தமையடலரியதாமெனின்" (கந்தபு. மூவாயி. ௭௦.) 3. போர். (உ-ம்.) "அடல்வலிமானவர்" (கந்தபு. தெய்வ. ௬௭.) 4. வருத்துதல். (உ-ம்.) "அடல்வண்ணவைம்பொறியும்" (சிந்தா. சேமச. ௫௭.) 5. வலி. (உ-ம்.) "அடன்மாவின் பேருரித்திறந்தரித்தனே" (கந்தபு.மோன.௧உ.) 6. வெற்றி. (உ-ம்.) "அடலயினெடுவேலண்ணல்" (கந்தபு. சூரபன். உ௫௬.)

அடலம்— 1. மாறுமை. 2. விகாரமடையாமை. [அடலம்.]

அடலார்— 1. பகைவர். 2. போர்வீரர்.

அடலி— அடுக்களை வேலைபார்க்கும் அடிமைக்காரி.

அடலை— 1. சாம்பல். (உ-ம்.) "வேளும்புரமுமடலைபடவிழித்து நகைத்த வெள்விடையோன்" (உபதேச. நாகா. ௩௧.) 2. பற்பம். 3. போர்க்களம். (உ-ம்.) "அடலையினுணர்வின்றுகும்"(கந்தபு.சூரபன். உ௫௬.) 4. மாறுமை. [அடலா.] 5. விபூதி. (உ-ம்.) "ஆதியாலயத்தடலைகொண்டு" (திருவிளை. சமணரை. அ௨.)

அடலைமுடலை—வீண்வார்த்தை.

அடவாதி— 1. தீங்குசெய்கிறவன். 2. பிடிவாதக்காரன்.

அடவி— 1. காடு. (உ-ம்.) "விந்தத்தடவியும்" (சிலப். கடலாடு. உக.) 2. சோலை. 3. தொகுதி. (உ-ம்.) "எரியலர்முண்டகத்தடவி திக்கெறிய" (கல்லாட். ௩௬.)

அடவிக்கச்சோலம்— ஒரு சரக்கு.

அடவிகன்—வனவாசி. [அடவிக.]

அடவிச்செசல்—கோரோசனை.

அடவிசரர்— வேடர். (உ-ம்.) "அடவிசரர் குலமாகதவநிதையும்" (திருப்பு. ௪௬௫.) [அடவி - காடு. சரர் - சரிப்போர்.]

அடவியீ— ஒருவகைக்கீடம். [இது கடிக்கில் அதிக நித்திரையும் மிகுமூர்ச்சையுமுண்டாகும். (சீவரட். ௬௫௧.)

அடா— தனக்குக்கீழ்ப்பட்டவனை விளிக்கும் ஒருசொல். [இது, தனக்கு ஒத்தாரோடும் மிக்காரோடுங் கோபமாய் நிந்தித்துப் பேசுமிடத்தும் பிரயோகிக்கப்படும்] (உ-ம்.) "நில்லடா சிறிது நில்லடா" (இராமா. நாக. ௭௩.)

அடாசனி—புளியாரைப்பூண்டு.

அடாசு—உக்கினபதார்த்தம்.

அடாசுகல்— 1. திணித்தல். 2. விலகுதல்.

அடாணு—ஓர்ராகம். [ஸஹாணா.]

அடாத்து—பலாற்காரம். [ஹடாத்.]

அடாத— "தசாத" எனப்பொருள்படும் ஓரெதிர்மறைப்பெயரெச்சவினை. (உ-ம்.) "அடாதவான்களைகட்டனர்" (கந்தபு. நாட்டு. கரு.)

அடாதது— தகாதது எனப்பொருள்படும் ஒரு வினையாலணையும்பெயர். (உ-ம்.) "தமக்கடாதது செயதுயிர்வாழ்வதுதன்னில்" (பிரபுலிங்க. அக்கமா - து. உக.)

அடாது— 1. "அடு" என்னும் பகுதியினின்றும் பிறந்த ஓரெதிர்மறை வினைமுற்றாய்த், "தகாது" எனப்பொருள்படவரும் ஒரு சொல். 2. தகாதது. [ஹடாத்.] (உ-ம்.) "அடாதுசெய்சடாசுரன்" (பாரத. சடாசு. ௨௨.) [உ. அடாதது என்பது அடாதெனநின்றது.]

அடார்— புலிமுதலியவைகளை அகப்படுத்தும் பொறியாகிய கல்லடார். (உ-ம்.) "பெருங்கல்லடாரும் போன்மெனவிரும்பி" (புறநா. ௧௧.)

அடாவந்தி—அடாததாய்வந்தது.

அடி— 1, 3. அடியென்னேவலுந் தெரிநிலைவினைப்பகுதியும் பெயரெச்சத்தொகையும். 4. அடுத்த இடம், சமீபம். (உ-ம்.) "இணற்றடியினின்றான்" 5. உடம்பின்காற்பரட்டின்கீழிருப்பதாய் நடக்கும்போதல்லது நிற்கும்போது நிலத்திற்றோயும் பாகம். (உ-ம்.) "தோயுநிலத்தடி" (திருக்கோ. ௩.) 6. உடம்பினுறுப்பினாலே தாக்குதல். 7. கருவிகொண்டாவது கொள்ளாமலாவது கையினாலே தாக்குதல். 8. பாதமிதி. (உ-ம்.) "ஆத்தனூன்றுமடிதொறுந் தோன்றியநீத்தமியாவும்" (கந்தபு. காவலா. அ.) 9. கீழ். (உ-ம்.) "அடிவயிறு." 10. சத்திரூபசாமர்த்தியம். (உ-ம்.) "சிவனடிசென்னிவைப்பாம்" (சி. சி. பாயிர. க.) 11. சூதாடுவார் வசநிக்குங் குழூஉக்குறிகளிலொன்று. (உ-ம்.) "அடியிதுபொட்டையீதென்பர்" (கந்தபு. கயமுக. ௪௩௮.) 12. செய்யுளுறுப்புக்களுளொன்று; அது: நாற்சீர்கொண்டுவருவதன்றியும், இருசீர் முச்சீர்களினாலும் ஐந்துமுதலிய பல சீர்களினாலும் வருவதுமுண்டு. (உ-ம்.) "நாற்சீர்கொண்டதடியெனப்படுமே" (தொல். பொரு. ௩௪௩-ஆம் உரையும்.) 13. தொடக்கம், ஆதி. (உ-ம்.) "நடுவின்முடிவினிலடியினன்றான பொருளொன்று ஞாலத்தில்லை" (ஞானவா. சநகரா. ௨௨.) 14. பகுபதத்தின் முதனிலை. 15. பழமை. (உ-ம்.) "அடியிட்டசெந்தமிழின்" (தாயு. மலைவளர் ௬.) 16. பன்னிரங்குலங்கொண்ட ஓரளவு. 17. மரம் மலைமுதலியவற்றிலே நிலத்தோடுத்திருக்குங் கீழ்ப்பாகம். (உ-ம்.) "வெண்பெருமணலை யடிக்கடியிற் பொதிந்தே" (தைல. பாயிர. ௪௬.) 18. வமிசமூலம். (உ-ம்.) "பனிமதிமரபிற்கடியுநீ" (பாரத. குருகுல. ௨௫.) 19. விசையாயசைந்து தாக்குதல். (உ-ம்.) "மலையிலிருந்துருண்டுவந்தகல் என்றலையிலடித்தது" 20. வேர். (உ-ம்.) "அடியற்றமரமென்னவடியிலே வீழ்ந்து" (தாயு. தேசோ. ௧௦.) [சிவஞானசித்தியாரெட்டாஞ்சூத்திரம். ௧௨ - ம் கவியுரையிலே சிவாக்கிரயோகியர் அடியென்பதன்பரியாய மொழியாகிய பதமென்பதற்கு வஸ்து என்னும் பொருளுமிருத்தலால் அடி யென்பதற்கு வஸ்து எனவும் ஒருபொருள் கூறுவர்.]

அடிக்கடி— 1. அடிபெயர்க்குந்தோறும். (உ-ம்.) "அடிக்கடிபடித்துகள் பாவைதூர்த்தன" (பாரத. பதினான். ௨௦க.) 2. பலமுறை. (உ-ம்.) "அண்ணல்சாமந்தனுஞ்

சானடிக்கடியெழுந்து" (திருவிளை. மெய்க்கா. உ௦.)

அடிக்கணை—கணைக்கால். (உ-ம்.) "இணைவரானிகரடிக்கணையாளை" (சேதுபு. விதும. அ௦.)

அடிக்கீழ்ப்படுத்தல்— 1. அடக்கிநடத்துதல். 2. ஆண்டுகொள்ளுதல்.

அடிக்குடி—அடிச்சேரி.

அடிக்குடில்— 1. அடிச்சேரி. (உ-ம்.) "அன்னந்துஞ்சுமடிக்குடிலினுள்ளன்றி" (சிந்தா. இலக்கணை. உகங.) 2. வேடரிருக்குமூர்.

அடிக்குள்ளே—உடனே.

அடிக்கொள்ளுதல்—தொடங்குதல். (உ-ம்.) "வாட்டடங்கண்ணிமார்பின் வந்தடிக்கொண்டஞான்றே" (கூர்மபு. கண்ணனவ. உரு.)

அடிக்கோலுதல்- அத்திவாரம்போடுதல்.

அடிகண்மார் — சமணருள் ஆசிரியராய் நின்றவர்களைக் குறிக்கும் ஒரு சிறப்புப்பெயர். (உ-ம்.) "அடிகண்மாராவாரெண்ணாயிரவரும்" (திருவிளை. யானை. அ.)

அடிகள்— 1. கடவுள். (உ-ம்.) "திருவாரூர்ப்பெருமானடிகள்" (பெரியபு. தண்டி. உ.) 2. குருக்கள். (பெரியோர்) (உ-ம்.) "அன்னைதன்னைத்தாதையையடிகடன்னை" (கந்தபு. வீர. சய. உக.) 3. தேவரீர். (உ-ம்.) "அடிகள்சொற்றுக" (இராமா. அகலிகை. சரு.) 4. முனிவர். (உ-ம்.) "அடிகண்மார்" (பெரியபு. திருஞா. கூசச.) 5. பாதங்கள். (உ-ம்.) "குமரேசனதடிகண்முன்னி" (கந்தபு. காயலா. க.) 6. மூத்தோன். (சூ. நிகண். உ-க.)

அடிகாற்று—பெருங்காற்று.

அடிகொள்ளல்—தொடங்குதல்.

அடிகோலல்— 1. அத்திவாரம்போடல். 2. முயலல்.

அடிச்சால்— உழவின் முதற்சால்.

அடிச்சி— அடியாள். (உ-ம்.) "சூட்டுன்னடித்தியை" (சிந்தா. கோவிந். எ௩.)

அடிச்சுவடு—பாதம் பதிந்தவடையாளம், பாதமுத்திரை. (உ-ம்.) "எக்கர்வாயவரிடுமடிச்சுவட்டு" (திருவானை. நகர. உள.) [அடி-கால். சுவடு - அடையாளம்.]

அடிச்சூடு—காலடியிற்சுடுதல்.

அடிச்சேரி — நகர்வெல்லையினிருக்கும் ஊர்.

அடிசில்— உண்பன தின்பன பருகுவன நக்குவன என்னும் ஆகாரப்பொது. (தொல். சொல். கிளவி. சுசு. உரை. சேனா.) (உ-ம்.) "சிலமோடடிசில் செய்வன் சிறிதுபோதிருத்தியென்று" (கந்தபு. வில்வலன் வாதாவிவதை. கக.) "துணைமுலைகள் பொழிகின்ற பாலடிசில்" (பெரியபு. திருஞான. சுசு.) 2. சோறு. (உ-ம்.) "அடிசிலஞ்சாலை" (கந்தபு. திருநகர. சரு.)

அடிஞானம்—சிவஞானம். (உ-ம்.) "ஆரியனுமாசான் வந்தருளாற் றோன்றவடிஞானமான் மாவிற்றோன்றும்" (சி.சி.அ: உஅ.சிவாக்.) [அடிகள் - சிவன். அடிகளது ஞானம் அடிஞானமென்றுயிர்த்தெனப சிவாக்கிரயோகிகள். சிவஞானமுனிவர் முந்தியஞானமென்ப.]

அடித்தல்— 1. (பறை) அடித்துச்சொல்லல். (உ-ம்.) "வாய்ப்பறைகொண்டடிநீ" (தாயு. நினை. ந.) 2. (ஆணி) அறைதல். 3. இறைச்சியின்பொருட் டாடு மாடுமுதலியவற்றைக்கொல்லல். (உ-ம்.) "மாடடிக்குமிடம்" 4. மோதல். (உ-ம்.) "திரையடித்துப்போகின்றது. 5. விரித்த கையினாலாவது தண்டுமுதலிய கருவியினாலாவதோங்கித்தாக்குதல். (உ-ம்.) "அக்கிரமத்தார்க்குற்றமடித்துத்தீர்த்த" (சி. சி. உ: சரு.) 6. வீசுதல் (உ-ம்.) "சண்டமாருதச்சுழல்வந்தடிப்ப" (தாயு. தேசோ. உ.)

அடித்தலம்— 1. அத்திவாரம். (உ-ம்.) "பாசறைகொண்டே மோப்பவடித்தலம்படுத்து" (கந்தபு.நகர்செய். கூ.) 2. கீழிடம். 3. பாதம். (உ-ம்.) "முத்தமிழ்விரகர்பொன்னடித்தலம்" (பெரியபு. திருஞா. சஉங.) 4. முதலிடம்.

அடித்தழும்பு— 1. அடிச்சுவடு. 2. அடிபட்டதழும்பு.

அடித்தளம்— 1. அடிவரிசை. 2. சர்ப்படுத்தநிலம். 3. பின்னணி.

அடித்திகம்— அசுவகந்தி.

அடிதலை— 1. ஆதியந்தம். (உ-ம்.) "அடிதலைவாக்கு" (அருணாசலபு. திருமலைச்.௬௦.) 2. கீழ்மேல். 3. வரலாறு.

அடிதலைதடுமாறுதல்—ஆதியந்தந்தெரியாது தடுமாறுதல். (உ-ம்.) "அந்தமின்மறைவெல்லாமடிதலைதடுமாறி" (கந்தபு.பாயிர.க.)

அடிநிலம் — அடிப்பக்கம், அடியிடம். (உ-ம்.) அடிநிலத்திலே படிவனவிடுமுகிலனைத்தும்" (பாரத. கிருட்டிண. ௬௦.)

அடிப்பட்டகாந்தி—நீருறுகற்பாஷாணம்.

அடிப்பட்டசாந்தி—மகாசாந்தம்.

அடிப்பட்டசான்றோர்— பரம்பரைப்பெரியோர்.

அடிப்படல்— 1. கீழ்ப்படிதல். (உ-ம்.) "உரியவம்புவி- பல்லாண்டடிப்படவாண்டா

ன்" (பாரத. உலூகன். ௩.) 2. கீழ்ப்படையிலிருத்தல். 3. பாதத்தின் கீழ்ப்படுதல்.

அடிப்படுத்தல் — 1. கீழ்ப்படுத்துதல். (உ-ம்.) "பிறபுலங்களடிப்படுத்து" (பெரியபு. ஐயடி. ௨.) 2. பாதத்தின்கீழ் அடங்கச்செய்தல். (உ-ம்.) "மாவலியளிப்பஞாலமுழுவது மாயனெய்திப் - பாவடிப்படுத்திமுன்னம் பண்பொடுகெவர்ந்தவாறும்" (கூர்மபு. அநுக்கிரமணி. ௧.)

அடிப்படை— 1. ஆதாரமாக அடியிற்கிடப்பது. 2. பிரதானசேனை.

அடிப்பதறல்— 1.கால் நடுங்குதல். 2.நிலைகுலைதல்.

அடிப்பந்தி—முதற்பந்தி—[அடி - முதல். பந்தி-வரிசை.]

அடிப்பலம்—முதற்பலன். [அடி-முதல். பலம் - பிரயோசனம்.]

அடிப்பற்றல்— அடிப்பற்றுதல்.

அடிப்பற்று— 1. பாண்டத்தில் அடிப்பற்றினபதார்த்தம். 2. பாறையுப்பு.

அடிப்பற்றுதல்— பாகஞ்செய்யும்போது வேகும்பதார்த்தம் நீரின்மையினற் பாண்டத்தினடிப்பக்கத்தினுள்ளே யொட்டிக்கொள்ளல். (உ-ம்.) "கைக்கயமூழிகொண்டே சலனடிப்பற்றுவண்ணம்" (தைல.தைலவ.௯௪.)

அடிப்பாடு—1.(இலக்கணம்) பகுதி. (நன். வினை. ௨. உரை. இரா.) 2. வரன்முறை. (உ-ம்.) "மற்றவட்கு விபூதிபுகலடிப்பாட்டின்றொடர்பாகுமகேசன்" (கூர்மபு. திருக்கல். ௬.) 3. வழக்கம். 4. வழி. (உ-ம்.) "நிலந்தனிலடிப்பாடுணர்ந்து" (நல். பார. அரசநீ. ௬௫.) [அடி - பாதம். பாடு - படுதலுடையது.]

அடிப்பிடித்தல்— அடிப்பற்றுதல்.

அடிப்பிணை— 1. வங்கம். 2. வங்கமணல்.

அடிப்போடுதல்—தொடக்கல்.

அடிபட்டவன்—பழகினவன். (உ-ம்.) "நாநாகாரியங்களிலும் அடிபட்டவன்" (வழக்.)

அடிபடல்—அடிபடுதல்.

அடிபடுதல்—1. அடிக்கப்படுதல். (உ-ம்.) "பிட்டமுதுக்கடிபடுவோன்" (திருப்பு.௩௦௨) 2. தாக்கப்படுதல். (உ-ம்.) "அவசமாகியடிபட்-டெனைத்தாமுறுப்புந்தூளாய்.(ஞானவா. மநத். ௯.)

அடிபணிதல்—காலிலேவிழுந்து நமஸ்கரித்தல்.

அடிபிடித்தல்— 1. அடிச்சுவடு பார்த்தல், பின்றொடருதல். 2. மூலமறிதல். 3. (வியாபாரத்துக்கு) முதற்பிடித்தல்.

அடிபிடி—சண்டை.

அடிபெயர்தல்— நின்ற இடத்திலிருந்து விலகுதல்.

அடிம்பு—சிவதைக்கொடி.

அடிமடக்கு— முன்வந்த அடியே பெயர்த்தும் வேறு பொருள் விளைத்துவருவது; அது: ஈரடிமடக்கு, மூவடிமடக்கு, நான்கடிமடக்கு என மூவகைப்படும். (தண்டி. ௯௦. ௯௪.) [அடி - பாவினடி. மடக்கு - மடங்கிவருவது.]

அடிமடை—நீர்வாய்க்காலின்முதன்மடை.

அடிமயக்கு — சித்திரகவிகளுள் ஒன்று; அது: மூவர்மூன்றுசிரியவடிசொன்னால், தான் ஓரடிசொல்லிக்கிரியைகொளுத்துவது. இதனை யாப்பருங்கலநூலார் பாதமயக்கென்பர். (யாப். ம - செய்யு. ௯௬.)

அடிமறி — எண்வகைப் பொருள்கோளிலொன்றாகிய அடிமறிமாற்று. (உ-ம்.) "ஏற்புழியெடுத்துடன் கூட்டுறுமடியவும்- யாப்பீறிடைமுதலாக்கினும் பொருளிசை - மாட்சியுமாறுவடியவுமடிமறி" (நன்.பொது.௯௮.) [மறிதல் - மடங்கல்.]

அடிமறிமண்டிலம்— அகவற்பாக்களுளொன்று; அஃது: எல்லாவடியும் அளவடியாகியெவ்வடியை முதல் நடு இறுதியாகக்கொள்ளினும் ஓசையும் பொருளும் வழுவாது நிற்கப் பாடப்படுவது. (உ-ம்) "நடுவாதியந்தத்தடைதருபாதத்தகவலடிமறிமண்டிலமே"(யாப். காரிகை. செய்யுளி. அ.) (அடிமறிமண்டிலத்துக்குதாரணம்) (தீர்த்தமென்பது சிவகங்கையே - ஏத்தருந்தலமெழிற் புலியூரே - மூர்த்தியம்பலக் கூத்தனதுருவே")

அடிமறிமண்டிலவாசிரியம்— அடிமறிமண்டிலமென்னும் வகைப்பட்ட ஆசிரியப்பா. (உ-ம்.) "மநப்படுமடி முதலிடையீறாயின் - அடிமறிமண்டிலவாசிரியமாதலும்" (இலக்கணவி. எ௪எ.)

அடிமறிமாற்று— பொருள்கோள் எட்டினுள் ஒன்று; அது: சீர்நின்றாங்கு நிற்ப அடிகள் ஒன்றனிலைக்களத்துமற்றொன்று பொருளுக்கியைய மாற்றப்படுவதாய் அல்லது ஒரு செய்யுளின் யாதாயினுமோரடியை யாதாயினுமோரிடத்துக் கூட்டி யுச்சரிப்பினும் பொருளும் ஓசையும் வேறுபடாதிருப்பதாயுள்ளது. (உ-ம்.) "யாற்றுநீர்மொழிமாற்று நிரனிறைவிற்பூண் - டாப்பிசையளைமறிபாப்புக்கொண்டுகூட்-டடிமறிமாற்றெனப்பொ

ருள்கோளெட்டே" (நன். பொது. சுO.சுஅ-ஆம் உரையும்) (அடிமறிமாற்றுக்குதாரணம்) " நடுக்குற்றுத் தற்சேர்ந்தார்துன்பந் துடையார் - கொடுத்துத்தான்றுய்ப்பினு மீண்டுங் காலீண்டு- மிடுக்குற்றுப்பற்றினுநில்லாதுசெல்வம் - விடுக்கும்வினையுலந்தக்கால்" "மாருக்காதலர்மலைமறந்தனரே- யாருக்கட்பனிவரலாறுவே - வேருமென்றேள்வளைநெகிழும்மே - கூருய்தோழியான்வாழுமாறே "

அடிமுடி—1. ஆதியந்தங்கள். (உ-ம்.)"அடிமுடியொன்றில்லாத வகண்டவாழ்வே" (தாயு.பன்மாலை.ந.)2.காலுந்தலையும்.3.வரலாறு.

அடிமுதன்மடக்கு— ஆதிமடக்கென்னுஞ் சொல்லலங்காரம். (தண்டி. ௩௨. பக்.)

அடிமுரண்டொடை— செய்யுட்டொடை நாற்பத்துமூன்றனுளொன்று; அது ஒரு செய்யுளில் ஒரு அடியில் முதலிலே வருஞ்சொல்லாவது பொருளாவதடுத்த அடியின் முதற்கண்ணே வருஞ் சொல்லோடும் பொருளோடும் மாருகத்தொடுக்கப்படுவது. (யாப். காரிகை. உறுப். கஅ. உரை.) (அடிமுரண்டொடைக்குதாரணம்.) "இருள்பரந்தன்ன மாநீர்மருங்கி - னிலவுகுவித்தன்னவெண்மணலொருசிறை-இரும்பினன்னகருங்கோட்டுப்புன்னை- பொன்னினன்னநுண்டாதுறைக்குஞ் - சிறுகுடிப்பரதவர்மடமகள் - பெருமதர்மழைக்கணுமுடையவாலணங்கே"

அடிமை— 1. அடிமைவேலைசெய்வோர். (உ-ம்.) "தள்ளருமடிமையாதிதாநங்கள் செய்தபேறும்" (திருவிளை. தலவி. கO.) 2. தாழ்ந்துநின்றேவல்கேட்டல். (உ-ம்.) "ஒன்ஞர்க்கடிமைபுகுத்திவிடும்" (வள். சுOஅ.) 3. தொண்டன். (உ-ம்.) "அஞ்சல்" பார்க்க. 4. தொண்டுபடுந்தன்மை.

அடிமைப்படல்—தொண்டுபூணுதல்.

அடிமைப்படுத்தல்— அடிமையாக்குதல்.

அடிமைப்பத்திரம்— "ஒருவன் ஆடையுணவின்றி வருத்தப்பட்டுக் கொடியவழியிற்போகும்போது தன் துன்பந்தீரும்பொருட்டு "நானுனக்கடிமை; உன்பணியைச்செய்குவேன்" என்று மற்றொருவனுக்கு எழுதிக்கொடுக்கும் பத்திரம். (மிரு. ௩சு.)

அடிமைபூணல்—அடிமையாதல்.

அடிமையோலை — அடிமைப்பத்திரம். (சௌந் எ.)

அடிமோனைத்தோடை—செய்யுட்டொடைகள் நாற்பத்துமூன்றிலொன்று; அது அடிகடோறும் முதலாமெழுத் தொன்றிவாத் தொடுக்கப்படுவது. (யாப். காரிகை. உறுப். கஅ) (அடிமோனைத்தொடைக் குதாரணம்) "மாவும்புள்ளும் வதிவயிற்படா - மாநீர்விரிந்தபூவுங்கூம்ப - மாலைதொடுத்தகோதையுங் கமழ - மாலைவந்தவாடை - மாயோளின்னுயிர்ப்புறத்திறுத்தன்றே"

அடியந்தாதி— ஒருசெய்யுளினோரடியடுத்து வருமடியுமாக வாத்தொடுக்கப்படுவது. (யாப். காரிகை. உறுப். கஎ. உரை.) (அடியந்தாதித்தொடைக்குதாரணம்.)"ஆசனத்திருந்ததிருந்தொளியறிவன் - ஆசநத்திருந்ததிருந்தொளியறிவனை"

அடியம்—அடியேம். (உ-ம்.) "அடியமில்லறத்தையாற்றி" (கந்தபு. நகர. ககஉ.)

அடியர்—அடியார். (உ-ம்.) "பணிதற்கடியர் சென்றெதிர்கொள்ள" (பெரியபு. திருஞாந. ௫Oக.)

அடியரேங்கள்— அடியேமாகிய நாங்கள். (உ-ம்.) "சிற்றடியரேங்கள் செயல் சீருளதையன்றே" (கந்தபு. தெய்வ. உஉசு.)

அடியவர்—தொண்டர். (உ-ம்.) "அந்நகரில்வாழ்வாருமடியவரு மநமகிழ்ந்து" (பெரியபு. திருஞாந. ௩உ௫.)

அடியவன்—அடிமையானவன். (உ-ம்.) "அமரர்நாயகன்றனக்கடியவன்" (கந்தபு. சிங்கமுகா. உஎக.)

அடியளபெடைத்தோடை—செய்யுட்டொடைகள் நாற்பத்துமூன்றனுளொன்று; அது அடிகடோறும் முதலாமெழுத்தளபெடுத்து வாத்தொடுக்கப்படுவது. (யாப். காரிகை. உறுப். கஅ. உரை.) (அடியளபெடைத்தொடைக்குதாரணம்.) "ஆஅவளியவலவன்றன் பார்ப்பினோ - டீஇரிரையுங்கொண்டீஇரளைப் பள்ளியுட் - டூஉந்திரையலைப்பத்துஞ்சாதுறைவன்றோண் - மேஎவலைப்பட்டநம்போனறுநுதா - லோஒவுழக்குந்துயர்"

அடியறுக்கி— மட்கலமறுக்குங்கருவி.

அடியனேன்—அடியேனாகிய நான்.(உ-ம்.) "பொய்யடியனேன் பிழை" (கந்தபு. தெய்வ. ௩சு.)

அடியார்— 1. அடிமைக்காரர். (உ-ம்.) "பின்னும் பகர்வாண் மகனேயிவன்பின்செறம்பி- யென்னும்படியன் றடியாரினிலேவல் செய்தி" (இராமா. ௩கர்நீ. க௫க.) 2. தொண்டர். (உ-ம்) "அடியார்க்கெல்லாமலகிலாவினைதீர்க்க" (தாயு. ஆசை. எ.)

அடியாள்— அடிமைபூண்டவள்.

அடியாறு—தொண்டுதொட்ட வரலாறு.

அடியான்—ஏவலாளன்.

அடியிடுதல்—1. சீர்பலவடுக்கிச் செய்யுளு

க்குறிப்பாக வருதல். (உ-ம்.) "அடியிட்டசெந்தமிழினருமையிட்டாரூரில்" (தாயு. மலைவளர். ச.) 2. தொடங்கல். (உ-ம்.) "பரிந்தழுவதற்குப்பாவாயடியிட்டவாறுகண்டாய்" (சிந்தா. பதுமை. உஉகூ.) 3. நடக்கக்கால்வைத்தல். (உ-ம்.) "பரவைவாயிலம்மட்டு மடியிட்டு" (தாயு. மலைவளர். ச.) 4. நடத்தல். (உ-ம்.) "ஆடுநாடநெஞ்சி னெண்ணிறேனு ரடியிட்டோர்கள்" (கூர்மபு. நவகண். ௩க.) 5. மிதித்தல். (உ-ம்.) "சேடன்முடியுங்கதிர்கொள் சென்னிவரையுந்து - ளாடவடியிட்டு" (திருவிளை. மாயப். கூ.)

**அடியியைபுத்தொடை** — செய்யுட்டொடை நாற்பத்துமூன்றனுளொன்று; அது: செய்யுளடிகளினிறுதிதோறும் நின்ற எழுத்தாவது சொல்லாவது ஒன்றிவரத்தொடுக்கப்படுவது. (யாப். காரிகை. உறுப். கஅ. உரை.) (அடியியைபுத்தொடைக் குதாரணம்.) "இன்னகைத்துவர்வாய்க்கிளவியுமணங்கே - நன்மாமேனிச் சுணங்குமாரணங்கே - யாடமைத்தோள்கூட்டலுமணங்கே - யரிமதர்மழைக்கணுமணங்கே - திருநுதற்பொறித்ததிலதமுமணங்கே" "அவரோவாரார் கார்வந்தன்றே - கொடிக்குமுல்லையுங் கடிக்கரும்பின்றே"

**அடியீடு**— 1. தொடக்கம். 2. பாதம்வைத்தல். (உ-ம்.) மங்கையாடியீடேத்த" (கூர்மபு. வயிரவ. உஅ.)

**அடியுண்ணல்**— 1. அடிக்கப்படுதல். 2. திரிந்து பழகுதல்.

**அடியுரம்**— 1. அத்திபாரம். 2. முன்னுள்ளபெலம்.

**அடியுறை**— பாதகாணிக்கை. (உ-ம்.) "விமலன்மலையீட்டியபல்பொருள்க ளெம்பிரானுக்கடியுறையென்று" (நாலாயிர. உருப்பிணி. கூ.)

**அடியெதுகைத்தொடை**— செய்யுட்டொடை நாற்பத்துமூன்றனுளொன்று; அது; அடிகடோறும் முதற்கண் இரண்டாமெழுத்தொன்றிவரத்தொடுக்கப்படுவது. (யாப். காரிகை. உறுப். கஅ. உரை.) "வடியேர்கண்ணீர்மல்க" என்னுஞ்செய்யுளைக் காண்க.

**அடியேம்**— அடிமையாயுள்ளேம். (உ-ம்.) "தொழுமடியேம் வல்வினையின் வேர்தடிந்தாய்" (கந்தபு. தேவர்கள் ௩.)

**அடியேன்**— தொண்டனேனாகிய யான். (உ-ம்.) "அடியேற்கொன்று மற்றிவணருளியவேண்டும்" (கந்தபு. பானுகோ. கருந.)

**அடியொட்டி**—நிலத்திலே நட்டுவைக்கப்படுகிற ஒருவகையூசி. (உ-ம்.) "கூப்பிட்டோடுகின்றவர்கள், அங்ஙனமோடாமைக்கு நட்டுவைத்த அடியொட்டியுள்ளடியிலே பாய்கையினலே, கால் நிலத்தோடே யொட்டிக்கொண்டு தறிவலையிலகப்பட்ட மான்போலே பின்னரும் அகப்பட்டாரென்றுனென்க" (சிந்தா. முத்தி. கஎ0. உரை.)

**அடியோட்டி**— ஒரு யுத்தக்கருவி. அது: நெருஞ்சின்முட்போன்ற இருப்பாயுதம்.

**அடியோர்**— பிறர்க்குக்குற்றேவல் செய்வோர். (உ-ம்.) "அடியோர் பாங்கினும்" (தொல். பொரு. உ௩.)

**அடிலவோடாகம்**—ஒருசெடி. இதனிலைகளும் வேருஞ் சாறு பிழிந்து மந்தாபகாசங்கபமென்னும் வியாதிகட்கு மருந்தென்று மலையாளதேசத்திலே வழங்குகிறார்களாம்.

**அடிவயிறு**—கீழ்வயிறு.

**அடிவாநம்**—திகந்தம்.

**அடிவாரம்**— மலைச்சாரல். (உ-ம்.) "திருக்காளத்திமலையடிவாரம்" (பெரியபு. திருஞாந. க0உக.)

**அடிவிடுதல்**—பாத்திரம் முதலியவற்றின் அடிப்பொருத்துவிடுதல்.

**அடிவீழ்ச்சி**—வணங்குதல். (உ-ம்.) "அநங்கமாலையடிவீழ்ச்சி" (சிந்தா. இலக்கணை. உக0.)

**அடிவீழ்தல்**— வணக்கம். (உ-ம்.) அடிகண்முன்னர்யானடி வீழ்ந்தேன்" (சிலப். புறஞ்சே. அஎ.)

**அடிவெண்துருத்து**—முருந்து.

**அடிவைத்தல்**—1. ஆரம்பித்தல். 2. கால்வைத்தல். 3. நடக்கத்தொடங்குதல். 4. பிறர்காரியத்திலே தலையிடல்.

**அடு**—1-3. அடு என்னும் ஏவலுந்தெரிநிலைவினைப்பகுதியும் பெயரெச்சத்தொகையும்.

**அடுக்கணி**— சொன்மிக்கணி மூவகையுள் ஒன்று; அது: சிறப்புக்காட்டலாவ தன்பு துயர் களிப் பிவற்றினொன்றின் மிகுதியைக் காட்டவாவ தொருபொருளைத்தரும் பல திரிசொற்களடுக்கிவைக்கப்படுவது. "இகழ்ந்தொளித்தானே வென்னையிகழ்ந்தகன்றானே கொடியநெஞ்சான்" என்பதுபோல. "அடுக்கணியொருபொருட்கடுக்கிய திரிசொல் - அடுக்கிவைப்ப தடுக்கணியெனப்படும்" (தொன்னூல். ௩கஎ.)

**அடுக்கம்**— 1. அரைமலை. (உ-ம்.) "ஆமழை - யணங்குசாலடுக்கம்பொழியுநம்" (புற

நா. கருக.)2. பக்கமலை. (உ-ம்.) "மந்தியுமறியாமரன்பயிலடுக்கத்து" (திருமுரு. சஉ.) 3. ஒன்றன்மேல் ஒன்றாய் அடுக்கிச்செய்யப்பட்ட வீடு. (உ-ம்.) "விஞ்சுமேனிலவடுக்கமும்" (கந்தபு. நகர்புகு. அஉ.) 4. மரச்செறிவானசோலை. (உ-ம்.) "குரங்கமையுடுத்தமரம் பயிலடுக்கத்து" (சிலப். நாடு. கருஎ.) 5. மலைச்சாரல். (உ-ம்.) "கறிவளரடுக்கத்துமலர்ந்தகாந்தள்" (புறநா. கசுஅ.) 6. மலைப்பக்கம். (உ-ம்.) "மழைமிசையறியாமால்வரையடுக்கத்து" (புறநா. உ௦௦.)

அடுக்கல்— 1. அடுக்கற்க. (எதிர்மறைவியங்கோள்) 2. அடுக்குக. (உடன்பாட்டுவியங்கோள்) 3. அடுக்கு. (உ-ம்.) "ஆரவடுக்கல் பொன்னுகமிலங்க" (கந்தபு. அவைபு. நடு.) 4. ஒன்றன்மேலொன்றுவைத்தல். (உ-ம்.) "திங்கண்மூன்றடுக்கிய" (சிலப். காடு. க.) 5. குவித்தல். 6. குவியல். (உ-ம்.) "மீனத்தடுக்கன்முழுவதுநோக்கி" (கந்தபு. தேவரையேவல். அ.) 7. மலை. (உ-ம்.) "அடுக்கன்மீமிசையருப்பம்பேணு" (மலைபடு. கக.)

அடுக்கலரி— அடுக்கடுக்கான பூவுள்ளவொருவகையலரி.

அடுக்கலிடல் — உமிமுற்றக்களையும்படி நெல் முதலியவைகளை யிரண்டாமுறை குற்றுதல்.

அடுக்களை—பாகசாலை. (உ-ம்.) "வகையமையடுக்களைபோல்"(மணிமே. உகூ- ஆங்காதை. சுக.)

அடுக்காலாத்தி—அடுக்குத்தீபம்.

அடுக்கானகன்னி— 1. பவளப்புற்றுப் பாஷாணம். 2. பூரணநிலையுள்ள பெண்.

அடுக்கியல்— வண்ணகவொத்தாழிசைக்கலிப்பாவின் உறுப்புக்களுள் ஒன்றாகிய அராகம். (வீரசோ. யாப். கக. உரை.)

அடுக்கு— 1-3. அடுக்கென்னேவலுந்தெரிநிலைவினைப்பகுதியும் பெயரெச்சத்தொகையும். 4. (இலக்கணம்) அடுக்குத்தொடர். "தீத்தீ" என்பதுபோல. "தழுவுதொடரடுக்கெனவீரேழே" (நன். உயிரீற். உ.) 5. ஒன்றுடனொன்று பொருந்தவைக்கும் வைப்பு. (உ-ம்.) "அண்டமவையடுக்கடுக்காவந்தரத்தினிறுத்து மதிகாரம்போல" (தாயு. மண்டல. க.) 6. ஓரினமான பலபொருள்களின் கூட்டம். (உ-ம்.) "தடிமுன்குயப்பாண்டத்தினடுக்காக" (தைல. தைலவ. கரு.) 7. சேர்மானம். 8. வரிசை. (உ-ம்.) "அண்டகோடியையெலாங் கருப்பவறைபோலவுமடுக்கடுக்காவலமத்து" (தாயு. தேசோ. எ.)

அடுக்குகை— அடுக்குதல்.

அடுக்குச்செவ்வரத்தை—அடுக்காக மலருள்ள செவ்வரத்தை.

அடுக்குத்தீபம்— அடுக்குவிளக்கு. [அடுக்கு - அடுக்கப்பட்டது. தீபம் - விளக்கு.]

அடுக்குத்தொடர்— அல்வழித்தொடர் பதினன்கனுளொன்று; அது அசைநிலைக்கண்ணும், விரைவு, துணிவு, உடம்பாடு, ஒருதொழில் பலகானிகழ்தல், வெகுளி, உவகை, அச்சம், அவலம் முதலிய பொருணிலைக்கண்ணும், இசைநிறைக் கண்ணும், ஒருசொல் இரண்டு முதலியவாக அடுக்கிவருவது. (உ-ம்.) "அன்றே வன்றே" (அசைநிலை), "வந்தது வந்தது கூற்று" (விரைவு), "அவனவன்" (துணிவு), "வைதேன் வைதேன்" (உடம்பாடு), "போம் போம்" (ஒருதொழில் பலகானிகழ்தல்), "எயே" (வெகுளி),"வருக வருக" (உவகை), "படைபடை" (அச்சம்), "உய்யேனுய்யேன்" (அவலம்), "பாடுகோ பாடுகோ பாடுகோ பாடுகோ"(இசைநிறை) (இலக்கணவி. நசசு.)

அடுக்குதல்— அடுத்தல்.

அடுக்குப்பண்ணல்— ஆயத்தஞ்செய்தல்.

அடுக்குப்பார்த்தல்—பொருந்துமாறு பார்த்தல்.

அடுக்குமல்லிகை— ஒருவகை மல்லிகைக்கொடி.

அடுக்குமுள்ளி— ஒருவகை முள்ளிப்பூண்டு.

அடுக்கூமத்தை—ஒருவகையூமத்தை.

அடுகலம் — பாகஞ்செய்யும்பாத்திரம். (உ-ம்.) "அரிசிமுத்தழல்செம்மணியடுகலம் பிறவும்" (திருவிளை. நகர. சுச.)

அடுகளம்—போர்க்களம். (உ-ம்.) "அடுகளத்தினெதிர் பொரநின்றாற்றலனாய்" (உபதேச. விபூ. ருரு.)

அடுகனலவன்— சங்காரத்தொழில் செய்யுங்காலாக்கினியுருத்திரன். (உ-ம்.) "அடுகனலவன்கூர்மாண்டருடகன்" (கந்தபு. திருக்கல். கச.)

அடுகிடை—எழும்பாதகிடை. [அடு-கொல்லுதல். கிடை - கிடத்தல்.]

அடுதறல்—கொல்லுதல். (உ-ம்.) "அடுகுற்றிடுசூலமடற்கதைகடொடுகுற்றனர்" (கந்தபு. மூவாயிர. உஅ.)

அடுகை— 1. கொல்லுதல். 2. பாகஞ்செய்தல். (சிவதரு. சிவஞானதா. எ௦.) (உ-ம்.) "அடுகைமனைபார்" 3. போர்புரிதல்.

அடுகைமனை—மடைப்பள்ளி. (உ-ம்) "அங்கிமுதற் றென்றிசை யந்தத்தடுகைமனை"

(சிவதரு. சிவஞானதா. ௭௦.) [அடுகை-பாகஞ் செய்தல். மனை - வீடு.]

அடுசிலைக்காரம்—செங்நாயுருவி.

அடுத்தல்— 1. அடைதல். (உ-ம்.) "அடுத்தவர்க்கருத விளக்கமெய்த்தலில்" (சூத. முத். ௬: ௧௨.) 2. ஏற்றதாயிருத்தல். (நான்காம்வேற்றுமையோடு) (உ-ம்.) "இது யோக்கியருக்கடுத்ததல்ல" 3. கிட்டல். (உ-ம்.) "அந்நாவடுத்துவயமாருதியை" (பாரத.மணிமா. ௩.) 4. கூடியிருத்தல். (உ-ம்.) "முனிவர்யாருமடுத்திடுமவைக்கணெய்தி" (கந்தபு. ததீசியுத். ௩௬.) 5. சம்பவித்தல். (உ-ம்.) "ஆவிகைந்திறவடுத்ததென்றெய்வதங்காளெனும்" (இராமா. நகர்நீ. ௧௪.) 6. சார்தல், நண்புகொள்ளல். (உ-ம்.) "கற்பகந்தனையடுத்துய்வாம்" (சூத. முத். ௧: ௧.) 7. சேர்த்தல். (உ-ம்.) "வெண்டுகிலடுத்து" (சிந்தா. காந்த. ௧௫.) 8. நினைவுண்டாதல், அயிர்த்தல். (உ-ம்.) "இடித்துமின்னி யிருண்டுமேகமெழுந்தபோதிதுபெய்யுமென்- றடுத்ததும்" (சி. சி. பர. உலோகா. மறு. ௨.)

அடுத்தார்—சேர்ந்தார்.

அடுத்தி—அடத்தி. (இது தென்னிந்தியாவில் வழங்கப்படும்)

அடுத்து—மேன்மேல். (உ-ம்.) "அதனையடுத்தூர்வதஃதொப்பதில்" (வள். ௬௨௧.)

அடுத்துவரல்— 1. அடிக்கடிவருதல். 2. நெருங்கிவருதல்.

அடுதல்— 1. இயக்கமறச்செய்தல். (உ-ம்.) "வியாதனீட்டியகையடுந்தி" (கந்தபு. கடவு.) 2. குத்துதல். (உ-ம்.) "வித்தட்டுண்டனை" (புறநா. ௨௨௭.) 3. கொல்லுதல். (உ-ம்.) "அவனையாரடுதற்பாலார்" (கந்தபு. தருமகோ. ௭௪.) 4. தீயிற்பாகஞ்செய்தல். (உ-ம்.) "சிறுவீடுகட்டியதனடுசோற்றையுண்டுண்டு" (தாயு. கருணா. ௪.) 5. பொருதல். (உ-ம்.) "ஈறிலாதிக்குரம்பிருந்தா லஃதாறதாகவடுவாரடலுளோர்" (சேதுபு. தனுக்கோ. ௩௪.) 6. வருத்தல். (உ-ம்.) "கழிபசிநோயடக்கவலும்பூதரும்" (கந்தபு. சூரனமை. ௫௬.) 7. வெல்லுதல். (உ-ம்,) "அடல்வண்ணவைம்பொறியுமடியெர்ந்தார்கோமான்" (சிந்தா.கேமசரி. ௫௭.)

அடுநை—சொல்வாய். (இது முன்னிலைவினை) (உ-ம்.) "அடுநையாயினும்" (புறநா. ௩௬.)

அடுப்பங்கரை—அடுப்பின் பக்கம். [அடுப்பு; அம் - ஒரு சாரியை; கரை.)

அடுப்பு— 1. அச்சம். (பிங்க. ௩௦௪௭.) 2. அடுத்தமை. 3. நிரை. (சிலப். அரும்.) 4. பரணிநாள். (சூ. நிகண். ௧: ௬௨.) 5. பாகஞ்செய்யும்படி நெருப்புமூட்டி யெரித்தற்கிடமாக வைக்கப்பட்டிருக்குமது. (உ-ம்.) "பாலைக்கறந்தடுப்பேறவைத்து" (நாலாயிர.வெண்ணெய். ௫.)

அடும்பு—1. அடப்பங்கொடி. (உ-ம்) "அடும்பிவரணியெக்கர்" (கலித்தொகை. ௧௩௨.) 2. அடம்பு.

அடுவல்—வரகும் நெல்லுங்கலப்பு.

அடை— 1. அடுத்தல். (உ-ம்.) "ஆடுகின்றனர் பண்ணடையின்றியே பாடுகின்றனர்" (இராமா. மந்திர. ௮௮.) 2. அடைகஷாயம். (தைல) 3-5. அடையென்னேவலுந் தெரிநிலைவினைப்பகுதியும் பெயரெச்சத்தொகையும். 6. அப்பவருக்கத்துளொன்று. (சூ. நிகண். ௬: ௨௫.) 7. இலை. (உ-ம்.) "வனசஞ்சாய் கழைக்கடையணை விரித்திடவென" (இரகு. நாட்டு. ௩.) 8. கரை. (உ-ம்.) "ஆற்றிடையியக்கவெண்ணுமடையினையடையும்" (சிவதரு. ௪. ௩௫.) 9. கனம். (பிங்க. ௩௦௪௮.) 10. கோழிமுதலியன முட்டைகளிற் குஞ்சு பொரிக்குமாறு தம்முடம்பின் அனல்படக் கிடத்தல். 11 சும்மாடு. 12. தோசை. 13. நிலவினைவிலே யரசனையடையும்பாகம். 14. (நென்முதலியவற்றின்) முளை. (உ-ம்.)"பூம்புறநல்லடையளைஇ" (பத்து. பெரும்பா. ௨௭௮.) 15. விசேடணம். (உ-ம்.) "அடைசினைமுதலென" (தொல். சொல். ௨௬.) 16. வெற்றிலை. (உ-ம்.) "நூறுகாயடைகூடும்" (சி. சி. பர. உலோகா. மறு. ௭.)

அடைக்கத்து— அடைகிடக்குங்கோழியடுஞ்சத்தம்.

அடைக்கலக்குருவி— அடைக்கலம்புக்கதுபோல வீடுகளிற்போய்க் கூடுகட்டியிருக்கும் ஊர்க்குருவி.

அடைக்கலங்காத்தல்— 1. அடைக்கலப்பொருளைக்காத்தல். 2. அடைக்கலம்புகுந்தவனைக்காத்தல்.

அடைக்கலங்குருவி—அடைக்கலக்குருவி.

அடைக்கலப்பொருள்— அடைக்கலமாக வைக்கப்பட்ட பொருள். (உ-ம்.) "அடைக்கலப்பொருள்கவர் வஞ்சகர்" (உபதேச. சிவத்துரோ. ௨௨௬.)

அடைக்கலம்— 1. பாதுகாத்தற்பொருட்டொப்பிக்கப்படுகிறபொருள். (உ-ம்) "அடைக்கலமடியேனென்று" (காஞ்சிபு. திருநெறி. ௫௩.) 2. புகலிடம். (உ-ம்.) 'திருப்பாற்கடலில் வசிக்கும் விட்டுணுவினதடைக்

கலமன்றி - வேறடைக்கலமில்லை' (ஞானவா. பிரகலாத. ௬.)

அடைக்கலம்புகுதல்—சரண்புகுதல். (உ-ம்) "இருளிறைமிடற்றினடைக்கலம்புக" (பிர புலி. கைலாச. ௬௭.)

அடைக்கலாங்குருவி—அடைக்கலக்குருவி. [வழக்.]

அடைக்காய்— 1. பாக்கு. (உ-ம்.) "வெள் ளிலையடைக்காய்விரும்பி" (தாயு. சச்சி. ௧௧.) 2. வெற்றிலை பாக்கு. (உ-ம்.) "விஞ்சியவ டைக்காயுண்டி வழியிடைவெறுப்பதாகி" (அ ருணாசலபு. திருமலைவ. ௨௯.)

அடைக்குடிநீர்—விருக்ஷம், செடி, கொடி, புல்லென்னு மிந்நான்குவகையிலுள்ள வேர், கிழங்கு, பட்டை, கட்டை, பிசின், இலை, பூ, கனி, வித்து என்னுமெட்டுப்பதார்த்தங்க ளையும், காரசாராதி திரவியங்களையும் ஒன்று பட இடித்து ஒரு பானையிலடைத்துக்காய் ச்சுவது; இது: "நான்காகச்செப்புவன்மை வோரதிகளை வெவ்வேறிடித்துச் சீவநீயத்தூ றச்செய்தாக்கற்குடிநீ-ரொப்பிலடை" என் னும் (தைல. பாயிர. ௨௯ - ம் செய்யுளாற்பெ றப்படும்.)

அடைகட்டி—அடைமண்.

அடைகரை—நீரடையுங்கரை, நீரினான்ம ணலேற்றியடைக்கப்பட்ட கரை. (ஐங்குறு.)

அடைகல்— 1. ஆதாரசிலை. (உ-ம்.) "ஆ மையாய் மேருத்தாங்கி யடைகலாய்க்கிடந் தபோது" (சி.சி. பர. பாஞ்சரா. மறு. ௧௧.) 2. கம்மப்பட்டடை. (உ-ம்.) "சுட்டவல்லி ரும்படைகலைச்சுடுகலாதனபோல்" (இராமா. பாச. ௩௩.) 3. மதகடைக்குங்கல்.

அடைகலம்— சேமக்கலம்.

அடைகாத்தல்—அடைகிடத்தல்.

அடைகாய்— 1. ஊறுகாய். 2. வெற்றிலை பாக்கு.

அடைகிடத்தல்— 1. ஒட்டிக்கொண்டு கிட த்தல். (உ-ம்.) "முயலடைகிடக்குந்திங்கள்" (கூர்மபு. மேரு. சி. ௧௯.) 2. கோழிமுதலி யன குஞ்சுபிறப்பிக்குமாறு தம்முடம்பின் அனல் முட்டையிற்படக்கிடத்தல். (உ-ம்.) "பெடைக்குருகணங்கின் விடுத்தவெண்சி னையொடு, காவலடைகிடக்குங் கைதையம் பொழிலே" (கல்லாட. ௨௬.)

அடைகுதல்—அடைதல். (உ-ம்.) "புரை யில்வீட்டின்ப மடைகுவான்" (வைராக்கிய தீப. ௬௭.) [கு - ஒருசாரியை.]

அடைகுறடு—கம்மப்பட்டடை.

அடைகை—1. சேர்கை. 2. பெறுகை.

அடைகொடுத்தல்— 1. நிலவிளைவிலொ ருபங்கையாசனுக்குக்கொடுத்தல். 2. நிறை த்துவைத்தல். (தி. க. அ௩.)

அடைகொளி—அடைமொழியைக்கொள் ளுதலுடையது - விசேடியம். (நன். பொது. ௩௦. உரை.)

அடைகோட்டை— முற்றுகைசெய்யப்பட் டகோட்டை.

அடைகோழி—அடைகிடக்குங்கோழி.

அடைச்சல்—பொத்துதல். (உ-ம்.) "கை யாற்செவிமுத லடைச்சிச்சொன்னாள்" (சிந் தா. குண. ௧௩௮.)

அடைச்சுதல்—1. அடைவித்தல். (உ-ம்.) "அடைச்சியகோதைபரிந்து" (கலித்தொ கை. ௩௧.) 2. சொருகுதல். "அல்கலுங்கு ழலுந்தோழியங்கையினடைச்சி" (சிந்தா. பதுமை. ௨௩௨.)

அடைசல்—அடைசுதல்.

அடைசுதல்— 1. அடைதல். [வழக்.] 2. ஒதுக்கல். 3. ஒதுங்குதல். (உ-ம்.) "அஞ்சு பூதமடைசியபடனை" (திருப்பு. ௩௩௭.) 4. கிட்டுதல். 5. செருகுதல். 6. நெருக்குதல். 7. நெருங்குதல். (உ-ம்.) "தொடைகளிற் றொடையடைசி" (பாரத. பதினேன். ௨௦௩.)

அடைசுபலகை—செருகிவெளியடைக்கு ம்பலகை. [வழக்.]

அடைசேர்ல்—அடைமொழி.

அடைத்தது—இட்ட கட்டளை. (உ-ம்.) "ஈதுனக்கடைத்ததென்ன" (கந்தபு. மேரு. ௬.)

அடைத்தல்—1. அமைதல். (உ-ம்.) "திரு வினட்கடைத்த வினைதருமடைவினல்" (க ல்லா. ௨௧.) 2. காப்புச்செய்தல். 3. காவலிலி டுதல். (உ-ம்.) "செழியனடைத்தசென்னி பாட" (கல்லா. ௩௪.) 4. செல்லாது தடுத் தல். (உ-ம்.) கங்கைப்பெருநதியடைக்கும ன்றோ" (கந்தபு. திருவிளை. ௨௩.) 5. சேர்த் தல். (உ-ம்.) "இடப்பாகமாதாளோடியை ந்துயிர்க்கின்பமென்று - மடைப்பானுமதுவு ம்" (சி. சி. ௧: ௩௪.) 6. புகுத்தல். (உ-ம்.) "கடுகிற்பெரிய கடலடைக்கும்" (தாயு. சொ ல்லற். 7.) 7. பூட்டல். (உ-ம்.) "அடை த்தலை நீங்கிய வம்பொற்கோநகர்" (கந்தபு. சிங்க. ௧௪.)

அடைதல்— 1. எடுபட்டுப்போதல். 2. ஒன்றோடொன்று சேர்ந்திறுகுதல். 3. சர ண்புகல். 4. சேர்தல். (உ-ம்.) "கரையடை ந்தார்" (பாரத. வாரணா. ௩.) 5. தூருதல். 6. பெறுதல். (உ-ம்.) "உலவாப்பொன்னு

ல்கடைதாவைத்த" (கல்லா. உஎ.) 7. பொருந்துதல். (உ-ம்.) "அணுவிஞேடெல்லாமாகியடைந்திடுந்தத்துவங்கள்" (சி. சி. உ. எஅ.) 8. முத்தியடைதல். 9. வண்டல்படிதல்.

அடைதூண்—கடைதறி. (உ-ம்.) "மத்துமந்தரம் வாசுகிகடைகயிறடைதூண் - மெத்துசந்திரன்" (இராமா. அகலி. உக.)

அடைந்தார்— 1. அடைக்கலம்புகுந்தவர். 2. மித்திரர். 3. அடைந்தவர்.

அடைப்பம்— 1. நாவிதன் கருவிப்பை. 2. பண்டம்பெய்யும்பை. 3. வெற்றிலேப்பை.

அடைப்பன்—ஒருவியாதி. [இது மாடுகளுக்குத் தொண்டையில் உண்டாவது. அடைப்பு; அன் - ஒருவிகுதி.]

அடைப்பு— 1. (குப்பிமுதலியவற்றை) அடைக்குங்கருவி. 2. அடைத்தல். 3. அடைத்தற்றன்மை. 4. கதவு. 5. வேலி. 6. வேலியிஞலடைக்கப்பட்ட நிலம். [அடைத்தலென்னுஞ் சொற்குரிய பொருளெல்லாம் இதற்குமாகுமாம்.]

அடைப்பை— பாக்கு, வெற்றிலே, சாதிக்காய், ஏலம் முதலிய வாசங்கள் வைத்திருக்கும்பை. (பெரியபு. தடுத். கஅஎ. உரை.) வெற்றிலேப்பை. (உ-ம்.) "அடைப்பைபொற்களாஞ்சியேந்த" (திருவிளே. தடாதகை. சஎ.)

அடைப்பைக்காரன் — வெற்றிலேப்பை வைத்திருக்கும் ஏவலாளன்.

அடைமண்—கலப்பையிலடைந்தமண்.

அடைமதிப்படுதல்— முற்றுகைசெய்யப்படுதல். (பதிற்றுப். கசு. உரை.)

அடைமழை— விடாமழை. திக்குகளெங்கும் இடைவிடாதடைத்துக்கொள்வதுபற்றி வந்தபெயர்.

அடைமாங்காய்—மாங்காயூறுகாய்.

அடைமாநம்— ஈடு.

அடைமொழி — ஒருபொருளின் றன்மை விளக்க அதனேடடுத்துக்கூறப்படுஞ்சொல்; விசேடணம். (உ-ம்.) "அடைமொழியினமல்லதுந் தருமாண்டுறின்" (நன்.பொது.ருக.)

அடைய— 1. எல்லாம். (உ-ம்.) "அடையவன்றும்பர்பதிகுடிபுக" (பாரத. பதினே. அஅ.) 2. சேர. (ஐங்குறு)

அடையடிமை— தநம் வாங்குதன்முதலியவற்றல் அடையப்பட்ட அடிமை. (மிரு. ச. கஙகு.)

அடையடுத்தவாகுபெயர்— ஒருபொருளின்பெயராய், அதனேடு சம்பந்தமுள்ள பிறிதொருபொருளே, அடைமொழியோடுகூடி விளக்குவது. "திருவாசகம்" என்பதிற்போல. (நன். பெய. ருங. உரை.)

அடையல்—1. அடைக அல்லது அடையற்க எனப்பொருள்படும் ஒரு வியங்கோண் முற்று. 2. அடைதல். (உ-ம்.) "சாயலுளடையலுற்றிருந்தேன்" (தேவா. திருப்பிர. எ. சுங.) 3. அடைந்தபொருள். 4. எல்லாம்.

அடையலர்—பகைவர். (உ-ம்.) "அடையலர்தம்மைவென்று" (கந்தபு. அக்கினி. கஙக.)

அடையலவர்—பகைவர். (உ-ம்.) "அடையலவராவிவெருவ" (திருப்பு. காப்பு. சு.)

அடையலார்—அடையலர்.

அடையாதவர்—பகைவர். (உ-ம்.)" அடையாதவர்மூவெயில் சீறும், விடையான்" (தேவா. திருப்பளே. எ. சம்.)

அடையாதார்—பகைவர். (உ-ம்.) "அடையாதார்தம்புரங்கள்" (தேவா. காவிரி. க. சம்.)

அடையார்—பகைவர். (உ-ம்.) "அடையாரென்னும் பொங்கிருட்பிழம்பு" (கூர்மபு. கண்ணனவ. கஅ.)

அடையாளம்— அறிகுறி. (உ-ம்.) "அந்தமில்குணங்கள்செய்கையாதியவடையாளங்கண் - முந்தையின் வழுவாவண்ணமுறையிஞன் மொழிந்தான் முன்னேன்" (திருவிளே. மாமஞ. ங௨.)

அடைவிகச்சோலம்—கஸ்தூரிமஞ்சள்.

அடைவு—1. அடைதல். (உ-ம்.) "நின்னேயடைவாக" (பெரியபு. திருஞாந. சஎகு.) 2. ஈடு. [அடவு அடகென்பதன் மரூஉ.] 3. உபமானம். 4. எல்லாம். 5. முறை. (உ-ம்.) "அங்கதிஞெருசிலவடைவிற் கூறுகேன்" (கந்தபு. அவையட. கஉ.) 6. விதம்.

அண்—1-3. அண்ணேனவலுங்கெதரிநிலே விஃனப்பகுதியும், பெயரெச்சத்தொகையும். 4. மேல். 5. வேட்டைநாயின் உருவு கயிறு.

அண்டகடம்— அண்டகடாகம். (உ-ம்.) "அண்டகடமுதற்றரையீருக" (கந்தபு. அண்ட. கஅ.)

அண்டகடாகம்—அண்டகோளத்தின் சுவர். (உ-ம்.) "எண்கைத்தலப்பிரமனண்டகடாகமுங்கீண்டதவ்வேல்" (திருவிளே. தீர்த்த. க.)

அண்டகபாலம்— அண்டகடாகம். (உ-ம்) "அண்டகபாலத்தப்பாலான் கண்டாய்"(தே

வார. கொட்டையூர்.உ. திருநாவு.) [அண்ட; கபாலம் - ஓடு.

**அண்டகம்**— 1. குப்பைமேனி. 2. சிறு முட்டை. 3. பீசகோசம். [ஸ்ஹ்க.]

**அண்டகன்**—அண்ணகன். [ஸ்ஹ்க.]

**அண்டகை**— அப்பவருக்கத்தொன்று. (சூ. நிகண். கூ: உரு.)

**அண்டகோசம்**— 1. அண்டசாத்திரம். 2. அண்டத்திேனாடு. [கோச - ஓடு.] 3. பழத்தின்றோல். 4. பழம். 5. பீசப்பை. [ஸ். கோஶ: கோஶம் - உறை.]

**அண்டகோளகை** — 1. அண்டகடாகம். (உ-ம்.) "அதற்குமீதேதிகழண்டகோளகையுங்கோடியாமே" (கந்தபு அண்ட. கூரு.)

**அண்டகோளம்**—உண்டைவடிவபான அண்டம். (உ-ம்.) "திசையுமண்டகோளமும் பார்த்து" (திருவிளை. நகர. உக.)

**அண்டங்காக்கை**—அண்டங்காகம். (மநு. ரு: கச.)

**அண்டங்காகம்**—ஒருவகைக்காகம். [இது கழுத்தில் வெண்மைதாவிய மற்றைக்காகங்கள்போலாது உடல் முழுதுங்கருமையுடையது.]

**அண்டசம்**—முட்டையிற்பிறப்பன; அவை: அரவு, தவளை, முதலை, ஆமை, அரணை, உடும்பு, மீன், ஓந்தி, பறவை, பல்லி, இப்பிமுதலியன. (பிங்க. நoருந.) (உ-ம்.) "அண்டசஞ்சுவேதசங்கள்" (சி. சி. உ: அக.) [இராமாயணத்திலே சூர்ப்பநகை. ககஆங்கவியிலே "அண்டசத்தருந்தியிறுறந்தவையனே" எனப் பாம்புக்கும் பிரயோகிக்கப்பட்டது. [ஸ்ஜ: ஸ் - முட்டை. ஜம் - பிறந்தது.]

**அண்டசன்**—பிரமா. [ஸ்; ஜன் - பிறந்தவன்.]

**அண்டசை**—கஸ்தூரி. [ஸ்ஜா. அண்டத்திற்பிறந்ததென்றபடி.]

**அண்டதரன்**—சிவன். [ஸ்யர; யர - உடையவன், காக்கிறவன்.]

**அண்டநாயகி**—உமாதேவி. (உ-ம்.)"அண்டநாயகிதன்முகிழ்முலை சுரந்தபால்" (திருப்பு. சஅ.) [ஸ்; நாயகீ - முதல்வி.]

**அண்டப்பார்த்தல்**— பொருந்தச்செய்தல்.

**அண்டப்புத்தேள்**—விராட்புருடன். (உ-ம்.) "திருந்துநல்லண்டப்புத்தேள் சிந்தையாம்புண்டரீக - புரந்தனில்" (கந்தபு. திருவவ. கoக.)

**அண்டபகிரண்டம்**— தருவசக்கரத்துட்பட்ட உலககோளமும் அதற்குப் புறத்திலுள்ள கோளமும். (உ-ம்.) "அண்டபகிரண்டமுமாயா விகாரமே." (தாயு. பரிபூ. ச.)

**அண்டபிண்டம்**— பிரமாண்டமுந்தேகமும். [ஸ்விஹ.]

**அண்டம்**— 1. ஆகாயம். (உ-ம்.) "அண்டப்பாற்றுக்கிலரயிடுகின்றனர் சிலர்" (கந்தபு. யாக. எஎ.) 2. உலகம். (உ-ம்.) "பிறங்குந்தொல்லை - நீர்கொண்டவண்டத்துந் தாவரத்துஞ் சங்கமத்து நிறைந்துநின்றோன்" (அரிச்ச. பாயிர. ந.) 3. கஸ்தூரிமானின் கோசம். 4. கோசம், பீசப்பை. 5. சுக்கிலம். 6. தலையோடு. 7. தேவுலகம். (உ-ம்.) "பின்னவர்க்கண்டமளிப்பனவஞ் செழுத்துமே" (தேவார. பஞ்சாக். அ. சம்.) 8. பீசம். (உ-ம்.) "அண்டத்திலூறுசெய்வனவால்" (திருவிளை. பரிநரி. கஎ.) 9. முட்டை. (உ-ம்) "மயிலினண்டம்" (சி. சி. க. உஉ.) 10. விதை, கொட்டை. (உ-ம்.) "இல்லமுறுமண்டங்கணூறுபலம்"(தைலவ. நக.) [ஸ்]

**அண்டமீன்றவன்**—பிரமா. (உ-ம்.) "அண்டமீன்றவன் பிறங்கடையாச்சிரமத்தில்"(சேதுபு. கவிதீர். கந.)

**அண்டமுகடு**—அண்டத்தினுச்சி. (உ-ம்.) "அண்டமுகட்டுறசின்று சிரித்தனன்" (பாரத. கிருட். உ0உ.)

**அண்டமூர்த்தி**—அண்டரூபி. (உ-ம்.) "அண்டமூர்த்தியழனிறவண்ணனே." (தேவார. இலிங்க. க0. திருநாவு.) [ஸ்மூர்த்தி.]

**அண்டயோநி**— 1. சூரியன். (பிங்க. உக0) 2. முட்டையிற்றோற்றுவது. [ஸ்- ஆகாயம், முட்டை. யோநி - பிறப்பிடமாக உடையது.]

**அண்டர்**—இடையர். (உ-ம்.) "ஆன்கிளைக்காப்புச்செய்தங்கண்டர்நின்றாற்றுமோதை' (இரகு. நாட். குஅ.) 2. தேவர். (உ-ம்.) "அண்டர்மடவார்கள்" (திருவாத. திருப்பெரு. கு.) 3. பகைவர். (பிங்க. ந0ருகு.)

**அண்டர்நிலை**—பொன்னுங்காணி. (உ-ம்.) "அண்டர்நிலைசிவிகரியவேம்பாடகிவயற்பயறுசிறிய முற்கம்பலினியசை" (தைல. பாயிர. குஎ.)

**அண்டர்பிரான்**— சிவன். (உ-ம்.) "அண்டர்பிரான்கோயிலினை" (பெரியபு. திருஞா.

சoக.) [அண்டர் - தேவர். பிரான் - தலைவன்.]

அண்டரண்டம் — தேவரண்டம். (உ-ம்.) "அண்டரண்டமளவிடுசூளிகை" (கந்தபு. நகரழி. ருள.)

அண்டல்— 1. அழுந்துதல் 2. கிட்டுதல். (உ-ம்.) "அண்டினள்சேர்தலும்" (கந்தபு. திருமண. சரு.) 3. பொருந்துதல்" (உ-ம்.) "ஆகாரமா மூவமைக்கண்டாதென்னும்" (ஞானவா. முமூட்சு. உஎ.)

அண்டலர்—பகைவர். (உ-ம்.) "அண்டலர்வன்மையாலயுதயோசனை- யுண்டதுகொழுங்கனல்" (கந்தபு. யுத்த. நகர்புகு. ருக.)

அண்டவாணர்— 1. ஆகாயவாசிகள். 2.தேவர். (உ-ம்.) "அண்டவாணர்மறைபாட" (பெரியபு. தண்டியடி. க.) [அண்ட - ஆகாயம், தேவுலகம். வாணர் - வாழ்வோர்.]

அண்டவாதம் — 1. அண்டவாயுநோய். (உ-ம்.) "மூலவியாதியொடண்டவாதம்" (திருப்பு. ருசுஅ.) [அண்ட - பீசம். வாதம்- வாயு.] 2. அந்திரவாயு; குடர்வாதம்.

அண்டவாயு— 1. அந்திரவாயு. 2. விரைவாதம். [அண்ட; வர்யு.]

அண்டவிருத்தி—ஒருவகை விருத்தி. (தைல. தைலவ. கஎ.) [அண்டவ்ருத்தி.]

அண்டன்— 1. கர்த்தா. (சி. சி. பாஞ்ச. மறு. கக.) 2. சிவன். (உ-ம்.) "ஆதரமாதுடனுடுமண்டனடங்கண்டனையால்" (கோயிற்பு. பாயிர. உரு.) [அண்ட.]

அண்டா— செம்பினாலே செய்யப்பட்ட சட்டிவடிவமான ஒரு பெரும்பாத்திரம்.(தெலுங்கு.)

அண்டாகாரம்—முட்டைவடிவம்.[அண்டாகாரம்: ஆகாரம் - வடிவம்.]

அண்டாதவன்—பகைவன். (உ-ம்.) "அண்டாதவனுமெலம்மகத்திலிரு - ளுண்டாகிய தன்மையுணர்ந்து" (கந்தபு. முதனாட். ருருக.)

அண்டாதிநாதன்—சிவலோகத்திலே தக்கிண திசையோலக்கஞ்சேவிக்கும் பதினெட்டு முக்கிய கணேசரிலொருவன். (வி - ணி. உசுச.)

அண்டார்— பகைவர். (உ-ம்.) "அண்டார் தமக்கோரரியே" (கந்தபு. சிங்க. சஎo.)

அண்டிகம்— செந்நாய். (பிங்க. உருகரு.)

அண்டிகா—மட்பானை. [ஹண்டிகா]

அண்டிரன்— 1. ஆடவன். 2. ஆயென்னும் வள்ளல்.(உ-ம்.) "ஆஅயண்டிரனடுபோரண்ணல். (புறநா. கஉங.) 3. சமர்த்தன். 1, 3. [அண்டீர.]

அண்டில்— மாடு முதலியவற்றின் கண்ணிற்பற்றும் ஒருபூச்சி.

அண்டீரன்— 1. ஆடவன். 2. சமர்த்தன். [அண்டீர.]

அண்டுகை—அண்டுதல்.

அண்டுதல்—அண்டல்.

அண்டை— 1. அருகிடம். (உ-ம்.) "அவனிணற்றண்டையினிற்கிறான்" 2. அயல். (உ-ம்.) "அண்டைவீட்டுக்காரி" 3. ஒன்றை நிறுத்தும்படி கொடுக்கும் முட்டு. 4. ஒட்டை முதலியன அடைக்கும் ஒட்டு. 5. சமீபம். (உ-ம்.) "கிடத்தியனையவள் சம்பத்துறைமுறையண்டைக்கொழுகையில்" (திருப்பு. ருஙஎ.) 6. நீர்தூவுங்கருவி. (உ-ம்.) "செம்பொன் செய்துருத்திதூம்புசெய்குழல் வட்டமாக-வம்பொன்செய்சிவிறிவெண்பொனண்டைகொண்டு" (திருவிளை. உக்கிர. உச.) 7. பீறலடைக்குந்துண்டு. (உ-ம்.) "சீலைக்கண்டைவைத்துத்தைத்தான்" 8. வரம்பு. (உ-ம்.) "அண்டைகொண்டுகெண்டைமேயும்" (நாலாயி. திருச்சந். சக.)

அண்ணகன்— பீசம்வாங்கப்பட்டவன்.

அண்ணணிந்து—மிகக்கிட்டியது. (உ-ம்.) "அண்ணணித்தூராயின்" (கலித்தொகை. கoஅ.)

அண்ணந்தாள்—தலையையுங்காலிற்பெருவிரலையுஞ் சேர்த்துக்கட்டித் தலைநிமிர்ந்திருக்கச்செய்யுந்தண்டனை.

அண்ணம்—1. உண்ணாக்கு. 2. மேல்வாய்.

அண்ணல்— 1. அரசன். (சூ. நி. உ: கஉ.) 2. அருகன். (சூ. நிகண். க: உ.) 3. சார்தல். 4. சிவன். (உ-ம்.) "அண்ணலருளானண்ணியவையவராயதனால்" (சிவப்பிர. உ: ச.) 5. சிறப்பு. (உ-ம்.) "ஓங்குமண்ணன் மால்வரை" (கூர்மபு. திருக்கல். கஅ.) 6. தலைமை. 7. தலைவன். (உ-ம்.) "அடுபோரண்ணல்கேட்டிசின்வாழி" (மதுரைக். உoஎ.) 8. புத்தன். (சூ. நிகண். க: கஅ.) 9. பெருமை. (உ-ம்.) "அண்ணலங்குமாராமென்று" (பாரத. திரௌ. சு.) 10. பெருமையிற்சிறந்தோன். (உ-ம்) "அகத்தியனுக்கோத்துரைக்குமண்ணல்" (சிவப்பிர. மங்கல. ச.) 11. முல்லைநிலத்தலைவன். 12. பற்றல். (உ-ம்.) "தொக்கண்ணியெழும்புதுணைப்பூக்கிரந்திமுதனோய்தொலையும்" (தைல. தைலவ. கoசு.)

அண்ணலார்—சிவன். (உ-ம்.) "ஆடன் மேவியவண்ணலாரடி" (பெரியபு.ஏயர்.கஅ.)

அண்ணன்— தமையன். (உ-ம்.) "முன்னவனண்ணன்மூத்தோன்" (சூ. நி. உ. எஎ.)

அண்ணா— 1. அருணாசலம். (உ-ம்.) "உயர்பொழிலண்ணாவிலுறைகின்றாரும்" (தேவார. திருவிடை. உ. திருநாவு.) 2. உண்ணாக்கு. (உ-ம்.) "அண்ணாவில்லாவமைவருவறுவாய்" (பொருந. சஉ.)

அண்ணாக்கு— உண்ணாக்கு. (உ-ம்.) "அண்ணாக்கையுரிஞ்சி மூக்கையுயர்த்திடுவென்க." (சிந்தா. முத்தி. கoகூ. உரை.)

அண்ணாத்தல்— 1. அங்காத்தல். (உ-ம்.) "அண்ணாத்தல் செய்யாதளறு" (வள்.உகூகூ.) 2. தலையெடுத்தல். (உ-ம்.) "நண்ணார் நாணவண்ணாந்தேகி" (புறநா. சஎ.) 3. நிமிர்ந்து நிற்றல். (உ-ம்.) "அண்ணாந்தவனமுலை" (கல்லாட. உஅ.) 4. மேனோக்கல்.

அண்ணாந்தாள்— அண்ணாந்தாள்.

அண்ணாமலை— அருணாசலம். (உ-ம்.) "அண்ணாமலையங்கமரர்பிரான்" (பெரியபு. திருஞா. கூஎ0.)

அண்ணார்— பகைவர். (உ-ம்.) "அண்ணார் புரமவியக்கனல்" (உபதேச. திரிபுர. ககஉ.)

அண்ணாவி — கூத்துமுதலியன பழக்குவோன்.

அண்ணி— தமையன் மனைவி.

அண்ணிடல்— பொருந்தல். (உ-ம்.) "பின்னுமண்ணிடும்" (சிவப்பிர. ௬. க.)

அண்ணித்தல்—1. பொருந்துதல்.(உ-ம்.) 'அடியார்க்கென்றுமாரமுதாயண்ணிக்குமையாற்றான் காண்"(தேவார.திருவாரூ.உ. திருநாவு.) 2. மதுரித்தல் (உ-ம்.) "திருப்புத்தூரானைச்சிந்தைசெயச் செயக்கருப்பஞ்சாற்றிலுமண்ணிக்குங்காண்மினே" (தேவார. திருவரிசிற்கரைப்புத்தூர். கூ. திருநாவு.)

அண்ணிது— அணிமை.

அண்ணிப்பான்— மதுரிப்பான். (உ-ம்.) "ஆகமமாகிநின்றண்ணிப்பான்" (திருவாச. சிவபுரா. ௬.)

அண்ணியது—கிட்டியது. (உ-ம்.) "அண்ணியதாயு மகன்றும்" (கூர்மபு. பொது.கஉ.)

அண்ணியன்— சமீபமானவன்.

அண்ணுதல்— 1. அணுகுதல். 2. சார்தல். 3. பொருந்துதல்.(உ-ம்.)"உன்னடிக்கீழண்ணியமெய்யடியவர்க்கு மாதக்கவென விரந்து" (திருவிளை. மெய்க்கா அ.)

அண்பல்— மேல்வாய்ப்பல். (உ-ம்.) "அண்பன்முதனாவிளிம்புறவருமே" (நன். எழுத்தி. உஉ.) [நாவிளிம்பு அணுகுதற்காரணமாகிய பல் என்பதுபொருள்.]

அண்மல்— அண்முதல்.

அண்முதல்— கிட்டுதல். (உ-ம்.) (இந்திராலம் விடுத்தனனண்மி" (தணிகை. சீபரி. கூஎஉ.)

அண்மை— 1. அடையுந்தன்மை. (உ-ம்.) "விண்ணவர்பாலண்மையிலனாகு மண்ணல்" (கந்தபு. காமத. கூஅ.) 2. அந்துவயித்தற்கு வேண்டப்படும் பதங்களிடையீடின்றி நிற்றல். (சைவப்பிர. உகூ.) 3. சமீபம். (உ-ம்.) "அண்மையினியல்பும்"(இலக்கணவி.உகூ.)

அண்மைச்சுட்டு—சமீபத்திலிருக்கும்பொருளைச் சுட்டிக்காட்டுதல்.

அண்மைவிளி—சமீபத்திலுள்ளாரையழைத்தல்.

அணங்கம்—இலக்கணம். (உ-ம்) "அஞ்சணங்கம்"

அணங்கயர்தல்—விழாக்கொண்டாடுதல். (உ-ம்) "சுறவமுண்மருப்பணங்கயர்வனகழிச்சூழல்" (பெரியபு. திருக்குறி. எ.) [அணங்கு -தெய்வம். அயர்தல்--செய்தல்.]

அணங்கல்—அணங்குதல்.

அணங்காட்டு—வெறியாட்டு. (உ-ம்.) "அணங்காட்டுமுதியோன்" (கல்லாட. கஎ.) [அணங்கு-தெய்வம். ஆட்டு-ஆடல்.]

அணங்காடல்—வெறியாடல் (உ-ம்) "பேரணங்காடல்செய்து" (பெரியபு. கண்ணப். கக.)

அணங்கார்— பெண்கள். [ஆர்-ஒரு பன்மைவிகுதி.]

அணங்கிய— 1. அழகிய. (உ-ம்.) "சீரணங்கியதேவர்கள்" (பெரியபு. திருவாரூர்ச்சி. கo.) 2. பின்னிவளர்ந்த. (உ-ம்.) "முழுநெறியணங்கியநுண்கோல்வேரலோடு" (மலைபடு. உஉ௬.)

அணங்கினர்—தெய்வப்பெண்கள். (உ-ம்.) "புடையுறவணங்கினர்போற்றி" (கந்தபு. தெய்வ. கo.)

அணங்கு— 1 - 3. அணங்கென்னேவலுந்தெரிநிலைவினைப்பகுதியும்பெயரெச்சத்தொகையும். 4. அழகு. (சூ. நிகண். கக: சஉ.) 5. ஆசை.(சூ.நிகண். கக:கஉ.) 6. காமநெறியால் உயிர்கொள்ளுந்தெய்வமகள்,கொல்லியம்பாவை. (உ-ம்.)"ஆயுமறிவினரல்லார்க்கணங்கென்ப" (வள். ககஅ.)7. கொலை. (உ-ம்.)"அண

ங்குபார்த்துநகைமுகிழ்த்தாவியோ - டணங்குபேய்முலையூறலுண்டானரோ" (கூர்மபு. கண்ணனவ. ௫௧.) 8. திவ்வியம். (உ-ம்.) "சீரணங்குமணிமாடத் திருச்சிற்றம்பலம் போற்றி" (கோயிற்பு. பாயிர. உ.) 9. தெய்வப்பெண். (உ-ம்.) "அணங்குகொலாய்மயில்கொல்" (வள். ௧௦அ௧.) 10. தெய்வம். (உ-ம்.) "அணங்குடைநெடுங்கோடு" (புறநா. ௫௨.) [அணங்கென்பது; அமரர், சித்தர், அசுரர், தைத்தியர், கருடர், கின்னரர், நிருதர், கிம்புருடர், காந்தருவர், இயக்கர், விஞ்சையர், பூதர், பைசாசர், அந்தரர், முனிவர், உரகர், ஆகாயவாசிகள், போசபூமியர் ஆகிய பதினெண்கணத்தாரையும் நிரயபாலரையும், பிறரையும், அணங்குதற்றொழிலாகிய சவந்தின்பெண்டிர் முதலாயினாரையும், கருதவருவதொருசொல்லென்று "அணங்கேவிலங்கே கள்வர்தமிறையெனப் - பிணங்கல்சாலாவச்சநான்கே" என்னுஞ் சூத்திரத்திற்கு நச்சினார்க்கினியர் செய்த உரையிலிருந்து விளங்குகின்றது. தொல். பொரு. உ௫௩.] 11. தேவர்க்காடுங்கூத்து. 12. நோய். (பிங். ௩௦௪௪.) 13. பராசத்தி. (உ-ம்.) "பேரணங்கினுடனாடும் பெரும்பற்றப்புலியூர்" (கோயிற்பு. பாயிர. உ.) 14. பெண். (உ-ம்.) "ஆண்டவ்விராக்கதவணங்குமெய்தும்" (சேதுபு. வேதாள. ௫அ.) 15. பேய்மகள். (உ-ம்.) "துணங்கையஞ்செல்விக்கணங்குநொடித்தாங்கு" (பெரும்பா. ௪௫௯.) 16. வருத்தம். (உ-ம்.) "வறிதேனுமணங்குகொள்ளலீர்" (கந்தபு. மோன. ௧௫.) 17. வருத்துதல். (உ-ம்.) "அரவின்பொறியுமணங்கும் புணர்ந்த- வுரவுவின்மேலசைத்தகையை" (கலித்தொகை. ௫௦.) 18. வெருவுதல். (உ-ம்.) "நான்முகத்தோன் - கண்ணணங்குறவருபவர்க்கடிதிர்" (கூர்மபு. அட்டமூ. ௫.) 20. வேலனுடல்.

அணங்குசார்ந்தாள்—படிமத்தாள். (உ-ம்) "அழைத்தபணியென்னென்றா ளணங்குசார்ந்தாள்" (பெரியபு. கண்ணப்ப. ௪௧.)

அணங்குதல்— 1. அஞ்சல். 2. கொல்லுதல். (உ-ம்.) "அணங்குவாள்விடவரா" (இராமா. மந்தரை. ௪௫.) 3. வருத்துதல். (உ-ம்) "பெண்ணணங்குபூந்தார்" (சிந்தா. முத்தி. ௭௬.) 4. வருந்துதல். (உ-ம்.) "ஆடியுட்பாவை போனீ யணங்கியதணங்கவென்றான்" (சிந்தா. குணமா. ௪௦௭.) 5. விரும்புதல்.

அணங்குதாக்கு— காமநெறியாலுயிர்கொள்ளுந்தெய்வமகள்தீண்டல். (உ-ம்.) "அணங்குதாக்கென்றுசொல்வர்" (வள். ௧௧அ. உரை.) [அணங்கு - காமநெறியாலுயிர்கொள்ளுந்தெய்வமகள். தாக்கு - தீண்டல்.]

அணந்தல்— 1. தலையெடுத்தல். (உ-ம்.) "பாம்பணந்தன்ன" (பொருந. ௧௩.) 2. மேனோக்கிநிற்றல். (உ-ம்.) "நெற்கொணெடுவெதிர்க்கணர்ந்தயானை" (குறிஞ்சி. ௩௫.)

அணம்— மேல்வாய். (உ-ம்.) "மூக்குற்றிதழ்நாப்பல்லணத்தொழிலின்" (நன்னூல். எழுத். ௧௧.)

அணர்ச்செவி— எடுத்தசெவி. (உ-ம்.) "நோன்புறத்தணர்ச்செவிக் கழுதைச்சாத்தொடு" (பெரும்பா. அ௦.)

அணரி— அன்னம். (உ-ம்.) "அணரியிற்றொடரிற்பூண்டு முடக்கினையழுத்தி" (காஞ்சிபு. இருபத்தெண். ௩௯௪.)

அணல்— 1. கழுத்து. (உ-ம்.) "கரையணற்குறும்பூழ்" (பெரும்பா. உ௦௫.) 2. கீழ்வாய். (உ-ம்.) "கறையணற்புயங்கவெரிதழல்விடத்தை" (கல்லாட. அ.) 3. தாடி. (உ-ம்.) "மையணற்காளை" (புறநா. அ௩.) 4. மிடறு.

அணவல்— அணவுதல்.

அணவன்— பொருந்தினவன். (உ-ம்.) "குரங்காடுதுறைதனி லணவன்காண்" (தேவார. குரங்காடு. ௪. திருநா.)

அணவு— 1 - 3. அணவென்னேவலுந் தெரிநிலைவினைப்பகுதியும் பெயரெச்சத்தொகையும். 4. நடு. 5. பொருந்துதல். (உ-ம்.) "இருகரையணவுறக்கிடக்கும்" (உபதேச. மச்ச. ௩௨.)

அணவுதல்— 1. இணைதல். 2. கிட்டல். (உ-ம்.) "அணவலேயணுகல்புல்லல்" (சூ. நி. ௧௧, ௩௧௪, ஊ.) 3. சேர்தல். (உ-ம்.) "எரணவுமெய்த்திரு" (இரகு. மாலை. ௬௬.) 4. மேனோக்கிச்செல்லுதல். (உ-ம்.) "அந்தரவகடுதொட்டணவுசீர்புகழ்" (சிந்தா. பதுமை. ௭௪.)

அணாப்பல்— அணாப்புதல். (வழக்.)

அணாப்பி—ஏய்ப்பவள். (உ-ம்.) "அணாப்பிகள் படிறிகள்" (திருப்பு. ௩௧௫.)

அணாப்பித்து—ஏய்த்து. (உ-ம்.) "அணாப்பித்துலகஞ் சீர்த்துத்திரிமாணர்" (திருப்பு. ௩௪௨.)

அணார் — கழுத்து. (நாலாயிர. முதலா. ௪௩. பக்.)

அணாவல்— அணாவுதல். (உ-ம்.) "அருக்கன்மண்டலத்தணாவுமந்தணாளர்" (தேவா

ர. திருவாரூர். க. சம்.)

அணி— 1. அணியிலக்கணநூல். 2. அணியிலக்கணம். (உ-ம்.) "வல்லோரணிபெறச் செய்வன செய்யுள்" (இலக்கணவி. கசுகூ.) 3-5. அணியென்னேவலுந் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். 6. அலங்காரம். (பிங்க. ௩௦௫௦.) 7. அழகு. (உ-ம்.) "அணிமாழ்கி" (கந்தபு. காம. அ.) 8. ஆபரணம். (உ-ம்.) "அணியிழேஞெங்கலும்" (கந்தபு. நகர. ௩௧.) 9. எத்தனம், அடுக்கு. 10. எல்லை. 11. ஒழுங்கு. 12. கவிப்பது கட்டுவது செறிப்பது பூண்பது முதலியவற்றின் பொதுப்பெயர். (தொல். சொல். சடு. உரை. சேனு.) 13. கூட்டம். (உ-ம்.) "தேவரணி தொழு" (கோயிற்பு. பதஞ்சலி. கூ.) 14. சம்பாரம். 15. சமீபம். (உ-ம்.) "இறையணிகேட்க வுய்த்திட்டனர் பூசல்" (சிந்தா. கோவிந்தை. கக.) 16. சேனைநிரை. 17. தளவாடம். 18. தேரின் அச்சாணி. 19. நன்மை. 20. படைவகுப்பு. (உ-ம்.) "ஆணணி புகுதலும்" (சிறுபாணு. உகக.) 21. பற்று, அன்பு. (பிங்க. ௩௦௫௦.) 22. பூமாலை. 23. பெருமை. (உ-ம்.) "அணிநிலாவிரிக்கும்" (சிலப். அந்தி. ௩.) 24. வரிசை. (உ-ம்.) "எயிற்றணிகறகறகலிப்ப" (கந்தபு. சூரன்றண்ட. சு.)

அணிகம்—1. அணிகலம். (உ-ம்.) "அணிகயாப்பணிகள்செய்து" (சிந்தா. முத்தி. உகங.) "அணி திரிந்து அணிகமாயிற்று(ஷெ. உரை.) 2. சிவிகை. (உ-ம்.) "அணிகமூர்ந்தமாரீண்டி" (சிந்தா. முத்தி. ௫கஎ.)

அணிகலச்செப்பு—ஆபரணப்பெட்டி.

அணிகலம்—ஆபரணம். (உ-ம்.) "அணிகலமாவென்பு" (கந்தபு. தவங்காண். க௫.)

அணிச்சை—நாகமல்லிகை.

அணிஞ்சில்— 1. அழிஞ்சில். [மரூஉ.] 2. கொடுவேலி. 3. சிற்றாமுட்டி. 4. நொச்சி. 5. முள்ளி.

அணித்து—1. சடிதி, சமீபகாலம். (உ-ம்.) "உணர்வுமிகவணித்தாகை" (கோயிற்பு. இரணிய. ௩சு.) 2. சமீபமானது. (உ-ம்.) "தொந்தலீலையிலணித்துந்தூரமாம்" (ஞானவா. சித்த. உ.)

அணிதல்—1. அலங்கரித்தல். 2. அழகுபெறல். (உ-ம்.) "பாஅயன்னபாறையணிந்து" (மதுரைக். உஎஅ.) 3. தரித்தல். (உ-ம்.) "ஆதலாற்றனைவியப்பதற்கன்றவையணிதல்" (கந்தபு. ததீசியுத். கச) 4. படைவகுத்தல். (உ-ம்.) "இத்தகவாகவணிந்திருசேனையும்" (பாரத. பதின்மூன். அ.) 5. பூணுதல். 6. வரிசையாதல். (உ-ம்.) "ஜயிருதிசையினு மணிந்து செல்வன" (கந்தபு. தெய்வ. சுடு.)

அணிந்தம்— கோபுரவாயிலின்மேடை.

அணிந்தவைதிருத்தல்—(பொருளிலக்கணம்) மெய்ப்பாடுகளுளொன்று; அஃது: ஒரு பெண் தான் அணிந்திருக்கும் கடிசூத்திரம் முதலியன திருத்துதல். (தொல். பொரு. உசுங.)

அணிந்தன்று—அணிந்தது.

அணிந்துரை—பாயிரம்; அது: நூலின் பெருமைமுதலியன அலங்கரித்துச் சொல்லுவது. (நன். பொதுப்பா. க.)

அணிநுணு— சீத்தாஎன்னுமரம். (வழக்.)

அணிபடுத்தல்—1. அலங்கரித்தல். (உ-ம்.) "அண்டம்வெஃகவணி படுத்திட்டவை" (கந்தபு. திருக்கல். ௩க.) 2. ஒழுங்காக்கல்.

அணிபெறுத்தல்— 1. அலங்காரம்பெறச் செய்தல், புனைதல். (உ-ம்.) "அந்நகருக்கொருநாமமணிபெறுத்தி யளித்தனனே" (கந்தபு. நகர்செய். உஉ.)

அணிமா—அட்டசித்திகளிலொன்று; அஃதணுப்போலாதல்; பரமாணுவினுஞ்சூக்குமமாந் தேகமுடைத்தாயிருக்கை. (உ-ம்.) "அறவுஞ்சிறியவுயிர்தொறுந்தான் பரமகாட்டையணுவாய்ச் சென் - றுறையுஞ்சிறுமையணிமாவாம்" (திருவிளை. அட்டமா. உ௩.)

அணிமுலை—பூசனிக்கொடி.

அணிமை—சமீபம். (உ-ம்.) "மூதூரணிமையின்" (காஞ்சிபு. நாட்டு. கக.)

அணியம்— 1. ஆயத்தமாதற்குவேண்டியன. 2. படைவகுப்பு. 3. மரக்கலத்தின்முற்பக்கம்

அணியல்—1. அணிதல். 2. அழகுசெய்தல். (உ-ம்.) "அணியலுமணிந்தன்று" (புறநா. க.) 3. எதிர்மறையில்வரும் ஓரேவல்வினை. 4. உடன்பாட்டில் அல்லதெதிர்மறையில்வரும் ஒரு வியங்கோண்முற்று. 5. மாலை. (உ-ம்.) "அணியலணிகுவனன்றி" (நைடத. அன்னத்தைத்தூ. கூக.) 6. வரிசை. (உ-ம்.) "அளக்கர்வாய்முத்தமூரலணியலாரணியுஞ்சோதி" (இராமா. கைகேசிசூ. எ௫.)

அணியன்— 1. அணியுடையவன். 2. கிட்டினவன். (உ-ம்.) "தோன்றல்வந்தணியனுனன்" (கந்தபு. சுரம் உசு.)

அணியிலக்கணம் — ஐந்திலக்கணத்தொ

ன்று; அது அலங்காரங்களைச் சொல்லுவது.

அணியென் — முப்பத்தைந்து. (உ-ம்.) "தூதுளமியாட்டமணியென்றுதவிரண்டரைத்தாக்கு" (தைல. தைலவ. சஉ.) [அலங்காரம் முப்பத்தைந்துபற்றி 35 என்னுந்தொகைவிளங்கக்கூறும் குறிப்புச்சொல்.]

அணில்—1. அன்றில். (உ-ம்) "இளிநடையினணிலோளியாங் குரல்" (திருப்பு. ௰௨க.) [இது அன்றில் என்பதன் விகாரம்.] 2. தாய்முலையுண்டுவளர்வதாயும், முதுகிலே மூன்றுவரியுடையதாயும், மரங்களிலேவிரைந்தோடும் பயிற்சியுடையதாயுமுள்ள ஒரு பிராணி. (உ-ம்) "வரிப்புறவணில்வாற்கருந்தினை" (கல்லா. கூ.)

அணில்வரியன்— 1. ஒருவகைப்பசு. 2. ஒருவகைப்பட்டு. 3. ஒருவகைப் பலாப்பழம். 4. ஒருவகைவெள்ளரி.

அணில்வாற்றினை—அணில் வால்போலுங் கதிர்களுடைய ஒருவகைத்தினை.

அணிவகுப்பு — படைவகுப்பு. அது: வகையால் நான்கும் விரியால் முப்பதுமாம். வகைநான்காவன:— தண்டம், மண்டலம், அசங்கதம், போகம் என்பன. விரிமுப்பதாவன:— பிரதாம், திருடசம், தியாவத்தம், குட்சி, பிரதிட்டம், சுப்பிரதிட்டம், சியேம், விசயம், சங்கயம், விசாலம், நிசயம், சூசீ, தூணு, கர்ணம், சமூமுகம், இரதாசியம், வலயகம், சர்வதோபத்திரம், துர்சயம், அர்த்தசந்திரம், உத்தாணம், சிருங்காடம், கர்க்கடகசிருங்காரி, காகபாரி, கோதிகா, கோமூத்திரிகை, கிஞ்சுகம், சஞ்சாரி, சகடம், பந்தம் என்பன. அவற்றுள்; தண்டமாவதுசேனையைக் குறுக்காக நிறுத்துவது; மண்டலமாவது பாம்பு மண்டலமிடுவதுபோலச் சேனையை நிறுத்துவது; அசங்கதமாவது சேனையை வேறுவேறாக நிறுத்துவது; போகமாவது நால்வகைச் சேனைகளையும் ஒன்றுக்குப்பின்னொன்றாக நிறுத்துவது—அணிவகுப்புறுப்புக்கள்: உரம், இறக்கையிரண்டு, மத்தியம், பிரதிக்கிரகம், பிருட்டம், கோடியென ஏழாம்.

அணிவடம்—மாதர் கழுத்தில் அணியும் ஆபரணக்கோவை.

அணிவியூகம்—படைவகுப்பு.

அணிவிரல்—அநாமிகைவிரல்.

அணிவு—அணிதல். (உ-ம்.) "பொழிலணிவேணுபுரத்தவன்" (தேவாா. ஏகபாத. உ. சம்.)

அணிவேர்—வெட்டிவேர். (தைலவ.அகூ.)

அணு—1. உயிர். (உ-ம்.) "மூன்றுதிறத்தணுக்கள்செய்யும்" (சி. சி. அ. க௦.) [விபுவாயிருந்துஞ் சூக்குமதேகத்தளவிலே ஞானக்கிரியா வியாபாரமாகையால் அணுவென்னும்பெயர் உயிர்க்காயிற் றென்பர் சிவாக்கிரயோகியர்.] 2. ஒருவகைத்தானியம். 3. சூக்குமசத்திரூபம். (உ-ம்.) "வித்துச்சாகாதியணுக்களாக வேற்றதேல்" (சி. சி. க: கச.) 4. சூக்குமதேகம். (உ-ம்.) "உளமணுவாய்ச் சென்றுமசங் - தள்ளவிழுங்கருவிற்றன்" (சிவஞானபோ. உ: எ.) 5. நுண்மை. 6. பகுக்கக்கூடாத அற்பபதார்த்தம், பாமாணு. (உ-ம்.) "ஒழிந்திடுமணுரூபங்களுலகெலாமொடுங்குமன்றே" (சி. சி. க: கக.) 7. மந்திரம். (சி-லி. கிரி. சுக.) 8. மிகச்சிறியது. (உ-ம்.) "அண்டங்களெல்லாமணுவாக வணுக்களெல்லா மண்டங்களாகப்பெரிதாய்ச்சிறிதாயினானும்" (திருவிளை. கடவு. கூ.)

அணுக்கத்தொண்டர்—சமீபமாயுள்ளதொண்டர். (பெரியபு. வெள்ளா. ௩.)

அணுக்கம்—1. சந்தநம். 2. சமீபம்.(உ-ம்.) "அணுக்கத்தொண்டர்" (பெரியபு. வெள்ளா. ௩.)

அணுக்கர்—சமீபத்தர். (உ-ம்.) "அடியவர்க்கடிமைபூண்டே யணுக்கராயமர்வர்கண்டாய்" (காஞ்சிபு. சார்ந்தா. ௩கூ.)

அணுக்கன்—1. சமீபத்தன். (உ-ம்.) "வேல்வலனுயர்த்தருளும் வீரனை யணுக்கனுய்த்தொழுதான்" (தணிகை. நந்தி. ச௦.)

அணுக்கன்றிருவாயில் — தன்னையடைந்தாரைச் சிவன்சமீபராகச்செய்யும் வாயில். (உ-ம்.) "அந்தமில்லவாணுக்கன் றொருழுதிருவணுக்கன்திருவாயில்" (பெரியபு. திருஞா. கருக.)

அணுக்கு—சமீபம். (உ-ம்.) "தில்லையூரன்றிண்டோள்-பெருமாத்தொடுந்தன்னபேரணுக்குப்பெற்ற பெற்றியனே - டிடுமாப்பொழிய" (திருக்கோ. ௩௭௩.)

அணுகம்—சிறியது. [அணுகம்.]

அணுகல்— 1. கிட்டுதல். (உ-ம்.) "ஊசிகாந்தத்தினைக் கண்டணுகல்போல"(தாயு. கருணை. கூ.) 2. போய்ச்சேருதல். (உ-ம்.) "தென்னாட்டினையணுகி" (பாரத. அருச்சுனன்றீ. கஉ.)

அணுகலர்—1. அயலார். 2. பகைவர்.

அணுகன்—சமர்த்தன். [அணுக.]

அணுகார் —பகைவர்.

அணுகாரணவாதம்— பரமாணுக்கடாமே பிரபஞ்சமாகத் தோன்றிநின்றழியுமென்று சொல்லுதல். (உ-ம்.) "இவ்வணுகாரணவாதஞ் சௌத்திராந்திகர் வைபாடிகர் ஆசீவகர்க்கும் ஒக்குமேனுந் தலைமைபற்றித் தார்க்கிகர்மேல் வைத்து மறுத்தவாறு" (சி. சி. க: கக. சிவஞா. உரை.)

அணுத்தல்—அணுகல்.

அணுசதாசிவர்— சதாசிவ தத்துவத்தில் சதாசிவமூர்த்தியைச் சூழச் சேவித்துக்கொண்டிருந்து போகங்களைப்புசிக்கும் அபரமுத்தர்; இவர்கள் பிரணவர், சாதாக்கியர், தீர்த்தர், காரணகர், சுசீலர், ஈசர், சூக்குமர், காலர், தேகேசுவரர், அங்கு எனப்பதின்மராவர்; மலபரிபாகமாந்தியத்தால் இப்படியாய், அதோமாயா புவனத்துள்ளார்க்குப் பக்குவம் வந்தவிடத் தநுக்கிரகஞ்செய்வரென்றும், போகவைராக்கியம் பிறக்கும்போது மேலான பதமடைவரென்றுஞ் சொல்லப்படுவர். (சி.சி.அ: உ. மறை. சி. சி. க: சுo. ஞாநப். உரை.)

அணுசைவம்— பதினறுவகைச்சைவத்தொன்று; அது: சிவனை உள்ளும்புறமும் பஞ்சகிருத்தியஞ்செய்வனென்றறிந்து திகம்பர வேடங்கள் பூண்டு சன்மார்க் கலக்கணத்தோடுகூடிக் குருலிங்கவேடம் பொருளாய்ச் சிவன் செய்யுந் தொழில்களை யநுபவத்திலே பார்த் தாநந்தம்பொங்கி யதன்கண் மநோலயமாவதே மோக்ஷமென்று சொல்லுவது. (த. நி. போ. உருக.) [அணு-சைவம்.]

அணுத்துவம்—அணுத்தன்மை. (உ-ம்.) "தூலமாய்விண்டன்னை நிறைகைக்கு மணுத்துவந்தூலத்துவமுடற்குத்தருமாறெங்ஙன்" (ஞாநவா, சிகித்து. ரு. [அணுத்துவம்.]

அணுப்பிரமன் — ஆன்மபட்சப்பிரமன். (உ-ம்.) அணுப்பிரமாதியணுபரசிவாந்த' (சி. சி. உ: எச. ஞாநப்.) [அணு-ப்ரஹ்ம.]

அணுபட்சநவபேதம் — சத்தியலோகமுதற்புவநாதிபதிகளாய் வாஸ்தவபேத தேகிகளாயிருக்கும் பிரமாமுதற் சிவமூர்த்திபரியந்தம் ஒன்பதின்மராகிய பேதம்.(சி. சி. உ: எச. ஞாந.) அணு-பக்ஷ-நவ-பேதா.]

அணுபட்சம்— ஆன்மபட்சம்.(உ-ம்.) "அணுபட்சசம்புபட்சம்" (தாயு. மவுந. ரு.) [ஆன்மாக்கள் தாமே பக்குவப்பட் டடையுநெறியென்றும், பிரேரகப்படுபவையென்றும், பொருள்படுமென்று மேற்படி நூலுரைகாரர் கூறுவர். [அணு-பக்ஷம்.]

அணுபரசிவன் — அணுபட்சத்துப்பரசிவன். (உ-ம்.) "அணுபரசிவாந்த அநேகேசுரர்கள்" (சி. சி. உ. எச. ஞாநப்.) [அணு-பரசிவ:]

அணுபேதம்—ஆன்மபட்சபேதம். (உ-ம்.) "சிவபேதமணுபேத மெனப்பிரமாதி" (சி. சி. உ: எச. ஞாநப்.) [அணு-பேதம்.]

அணுபை—மின்னல். [அணு-பா: அணு-அற்பம். பா-ஒளி.]

அணுமூர்த்தி—ஆன்மமூர்த்தி. (உ-ம்.) "அணுமூர்த்திவடிவுமுதற் காரியமாத்திரத்தால்" (சி. சி. பாயிர. சிவஸ்துதி. ஞாநப்.) [அணு-மூர்த்தி.]

அணுமை— 1. அணிமை 2. சமீபம்.(ஐங்குறுநூறு.)

அணுரூபம்—1. அணுவகை. (உ-ம்.) "ஒழிந்திடுமணுரூபங்கள்"(சி. சி. ச.கக.) 2. நுண்ணியரூபம்.)

அணுரூபி—1.ஆன்மா. 2. கடவுள். [அணுரூபி.]

அணுரேணு— சிறுதுகள். [அணு-ரேணு: அணு-அற்பம். ரேணு-துகள்.]

அணுவங்கபதிகள்— விஞ்ஞாநகலரிற்பரிபக்குவம் வந்தவர்களிற் றீவிரபக்குவம் வந்துள்ளோர்களாய்ச் சூக்குமசிவாபிவியத்தி விளங்கிச்சத்திதத்துவத்துஞ் சிவதத்துவத்துமிருப்பவர்கள். சி. சி. அ: ருo. ஞாந.)

அணுவலி—ஆன்மசத்தி.(உ-ம்.) "அடங்கிடுமநாதிமுத்தன் வலியணுவலியுமென்னில்" (சிவதரு. சிவஞானயோ. கoஎ.) [அணு-ஆன்மா. வலி-ஆற்றல்.]

அணை—1. அணைக்கட்டு. (உ-ம்.) "கடற்றலையன் றணைவேண்டிய" (இராமா. ஆற்று. கூ.) 2-4. அணையென்னேவலுந் தெரிநிலைவினைப் பகுதியும் வினைத்தொகையும். 5.அணைமரம். 6. ஆசனம். (உ-ம்.) "மடங்கலேறுற்றும்-பொன்னின்மாமணி யணையினும் பொருக்கெனவெழுந்தான்" (கந்தபு. தெய்வ. கககூ.) 7. உதவி. 8. கரை. 9. செய்கரை. (பிங்க. கoருஉ.) 10. படுக்கை.(உ-ம்.)"நுண்ணிடையாள்வெய்துயிர்த்து மெல்லணைமேல் வீழ்ந்தபோது" (பெரியபு. தடுத்தா. களஉ.) 11. புணர்ச்சி. 12. முட்டு. (உ-ம்.) "அம்மரம்விழாதபடி ஓ

ர்ணைவை" 13. மெத்தை. (உ-ம்.) "ஆவிவிரி பானுரையினைடையணையாக" (இராமா.தைலமாட்டு.கo.)14. வரம்பு.(உ-ம்.) "அணையை நூக்கிச்சென்றநீர்"(பெரியபு.திருஞா.எஉ௩.)

அணைக்கட்டு—வரம்புக்கட்டு.

அணைக்கை—அணைத்தல்.

அணைகட்டல்— வரம்புகட்டல். (உ-ம்.) "குரக்கினத்தாலே குரைகடறன்னை நெருக்கியணைகட்டி" (நாலாயிர. மாணிக்கக். அ.)

அணைகயிறு—அணைக்குங்கயிறு,

அணைசல்—ஒதுங்கல், விலகல்.

அணைசு— வெண்கலத்தாற் பண்ணிவங்கியத்தினிடமுகத்தை தயடைத்தற் குரியது. (உ-ம்.) (சிலப்பதி. அரங்கே.உசு. அடியுரை.)

அணைசுதல்—அணைசல்.

அணைத்தல்— 1. அடுத்துச் சேர்த்தல். (உ-ம்.) "அல்லன்மிகவுயிர்க்கிவைதானணைத்தது" (சிவப்பிர. உ: எ.) 2. அடைகிடத்தல். (உ-ம்) "குருகுமன்னமும்வால்வளைக்குப்பையை-யண்டமும்பார்ப்புமாமெனவணைக்கும்" (கல்லா. சஎ.) 3. அவித்தல், தணித்தல். (உ-ம்.) 'விளக்கணைத்தல்' 4. கட்டுதல் (உ-ம்.) "குறுந்தாம்பணைத்த குழக்கன்றினுருவாய்" (கூர்மபு. கண்ணன. எக.) 5. சேர்த்தல். (உ-ம்.) "அணைத்தகூந்தல்" (திருமுரு. உoo·) 6. தழுவுதல். (உ-ம்.) "அன்னையங்கணுவொழித்துவல்லே யணைத்திடப்பெறுஞ்சிறுர்" (காஞ்சிபு. தக்கீ. ௫௧.)

அணைதல்—1. அடைதல், போய்ச்சேர்தல். (உ-ம்.) "பெருந்துறைமருங்கினிலணைந்தார்" (திருவாத. திருப்பெரு. உ௧.) 2. அவிதல். (உ-ம்.) "விளக்கணைந்தது" 3. உண்டாதல். (உ-ம்.) "தவத்தாலணைந்தபுதல்வன்" 4. புணர்தல். (உ-ம்.) "கிரதுவினையணைந்துபெற்ருள்" (கூர்மபு. பிருகுவா. அ.) 5. பொருந்தல். (உ-ம்.) "அடுகொலைக்கணைந்தமுகிலுருப்பெறும்" (கல்லா. சரு.)

அணைதறி— யானை முதலியவற்றைக்கட்டுங் கம்பம்.

அணைப்பு— அணைத்தல். (உ-ம்.) "அடியானும் விழியானுமணைப்பானும்" (திருவானை. ஆர. உசு.)

அணையாடை—1. பிள்ளைக்கிடும் படுக்கைத்துகில். (உ-ம்.)"அழுதணையாடையிற்கிடந்தான்" (திருவிளை. விருத்த. உஅ.) 2. கொப்பூழிலுக்குள் சீலை.

அணையார்—பகைவர் (உ-ம்.) "அணையார் தம்படைக்கடலில்" (பாரத. பதினே. உசுo.)

அணைவு— 1. அணைக்கப்பட்டது. 2. அணைத்தல். (உ-ம்.) "முன்னும்பின்னுமருங்குமணைவெய்த" (பெரியபு. ஏயர். ௩எo.)

அனோக்கம்— மேனோக்கம். [மரப்பொதுவெனப் பொருள்படும் "அநோகஹம்" என்னும் வடமொழியைத் திரித்து அனோக்கம் என எழுதினரும் உளர்.]

அத்தக்குன்று—சூரியன் அஸ்தமயஞ்செயயும் மலை. (உ-ம்.) "ஆயிடையத்தக்குன்றுக்காதவனணியனுக" (பாரத. நிரைமீ. கஉஅ.)

அத்தகடகம்— கையிலணியும் வளையல். (உம்.) "ஆடகமணிக்குழைகள் பாரியசாப்பணிகளத்தகடகம்" (அரிச்ச. விவாக. ககஅ.) [ஹஸ்தம்-கை. கடகம்-வளையல்.]

அத்தகண்டாதநம்— யோகியின் நாற்றெட்டு நிலைகளுளொன்று; அது: ஒருகாலில் நின்றுகொண்டு மற்றைக்காலை நீட்டியும் ஒரு கையை நிலத்தூன்றி மற்றைக்கையால் நீட்டிய காலைப்பிடித்தும் ஆன நிலை.

அத்தகம்பவாதம்— காக்ஷேபகவாதரோகம். (சீவாட்.கஎசு )[ஹஸ்த-கை. கம்ப- நடுக்கம்.]

அத்தகம்—1.ஆமணக்கு. 2. கருஞ்சீரகம்.

அத்தகிரி—சூரியன் அத்தமிக்கும்இடமாகச்சொல்லப்படும் மேற்குமலை. [அஸ்தகிரி: அஸ்த-முடிவு. கிரி-மலை.]

அத்தகோரம்—நெல்லிமரம்.

அத்தகோளம்-கோளத்தின்பாதி.[அர்த்த-பாதி. கோல- உண்டை.]

அத்தசகாயம்— பொருளுதவி. [அர்த்தம்-பொருள். ஸஹாயம்-துணை.]

அத்தசதம்— 1. ஐம்பது. [அர்த்த - பாதி. ஶதம் - நூறு.] 2. நூருண்டு. [அப்த - ஆண்டு. ஶதம் - நூறு.]

அத்தசந்திரன்—1. பாதிச்சந்திரன். 2. பாலசந்திரன். [அர்த்தசந்த்ர: அர்த்த - பாதி, பங்கு.]

அத்தசாமம்—நடுச்சாமம், இரவில் நடுப்பகுதி.

அத்தசித்திரம்— மார்க்கசடப்பிரமாணத்தொன்று; அஃதனைமாத்திரை யோர்கலையாகக்கொண்டது.

அத்தத்தாவெனல்— அத்தா அத்தாவெனக்கூறுதல். (உ-ம்.) "காமருநோக்கினையத்தத்தாவென்னுநின் றேமொழிகேட்டலினிது" (கலித்தொகை. அo.)

அத்தநாசம்-பொருளழிவு.[அர்த்தநாஶ.]

அத்தநாரீசன்
அத்தநாரீசுரன்
அத்தநாரீசுவரன் } தமதுடம்பிற்பாதி பெண்வடிவான சிவன்.

அத்தநாள்—1. பதின்மூன்றாநக்ஷத்திரநாள். (உ-ம்.) "பங்குனியத்தநாளிற் - கண்ணியவரங்கர்முன்னே கவியரங்கேற்றினனே" (இராமா. அபியுக்தர். எ.) 2. பதின்மூன்றாநக்ஷத்திரம். 3. பாதிநாள்.

அத்தப்பிரகரம்— அரைச்சாமம்; அது ஒருநாளிற் பதினறிலொருபங்குகொண்ட நேரம். [ஸம்ஸ்க்ருதம்: அர்த்தப்ரஹர: ப்ரஹர - ஒருசாமம்.]

அத்தப்பிரகரன் — உபக்கிரகங்களிலொன்று புதன்மகனென்பர். (குமாரசாமீ. க௦.)

அத்தப்போநந்தி—ஒருபூடு.

அத்தபவனம்— ஏழாமிராசி. (பிருகச்சாத. அத்தி. க.) [ஹஸ்தபவந:]

அத்தபாகம்—1. பாதிப்பங்கு. [அர்த்தபாகம்.] 2. பொருட்பாகம்.

அத்தம்—1. அத்தகிரி. (உ-ம்.) "அத்தம்மலையகளிற்றங்கர்" (சிந்தா. பதிக. கரு.) [இது அத்தகிரி என்னும் வடமொழிச்சிதைவென்றார் நச்சினார்க்கினியர்.] 2. அதிவிடயவேர் 3. அருநெறி. (உ-ம்.) "கல்லதாரத்தம்" (மணிமேக. கரு: ௬௯.) 4. கண்ணாடி. 5. காடு (உ-ம்.) "நெடும்பேரத்தநீந்தி" (சிலப். காடு. எ௦.) 6. குக்கிலென்னுமருந்து. 7. குங்குலியம். 8. கை. (உ-ம்.) "ஒரு கன்னியத்தமீனத்தை நாடிச்செல" (ஒருதுறைக்.கருக.) 9. கையாந்தகரை. (இராசவைத். ரு.)10. சொற்பொருள். (உ-ம்.) "வைகரிசெவியிற் கேட்பதாயத்தவசனமாகி" (சி. சி. க: உ௦.) 11. பங்கு. (உ-ம்.) "தோட்டத்திலே யத்தத்துக்கிறைக்கிறார்கள்" 12. சூரியன் முதலியனபடுகை. 13. பதின்மூன்றாநக்ஷத்திரநாள் (உ-ம்.) "அத்தநலமுறுவாடையே" (வீமே. சஅக.) 14.பதின்மூன்றாநக்ஷத்திரம். (உ-ம்.) "அத்தங்கும்பத்தைவிட்டப்பாலிராசிநட்பானதுவே" (ஒருதுறைக். ௬௦௯.) 15. பாதி. (சூ. நி. கக. கக.) 16. பிரயோசநம். 17. பொன். 18. மரணம். 19. முழம். 20. மேகம். 21. யானைத்துதிக்கை. 22. வஸ்து, பொருள். (உ-ம்.) "அத்தத்தேகாடியலையாமல்" (இராசவைத். ரு) 23.வருடம். (உ-ம்.) "எண்ணியசகாத்தம்" (இராமா. அபியுக்தர். எ.) 24. வழி. 25. அருஞ்சுரம், செம்மை. (ஐங்குறு.) [1,12, 18. அஸ்த. 8, 13, 14, 19, 21. ஹஸ்த. 10, 16, 17, 22, 25, அர்த்த. 20, 23. அப்த. 24. அத்வந.]

அத்தமண்டபம்—கோயிலினுள்ளே கருப்பக்கிரகத்துக் கடுத்தமண்டபம். [அர்த்தமண்டபம்.]

அத்தமத்தககைசயோகம்— கையாலேமத்தகத்திலேதடவுதல். (தாயு.பலவ. ரு. உரை.) [ஹஸ்த - கை. மஸ்தக - தலை - ஸம்யோக - கூடுதல்.]

அத்தமநம் — 1. சூரியன்முதலியன படுதல். (உ-ம்.) "அத்தமனமுதயமில்லை" (ஞானவா. தாசூ.எ.) 2. மறைதல்.(உ-ம்.) "சநகத்தின்மரணத்திலுதயத்திலத்தமநந்தனிலே ராக" (ஞானவா. விரதகு. கஉ.) [அஸ்தமந.

அத்தமம்—அத்தமிப்பு. [அஸ்தம்.]

அத்தமயம்—அத்தமயநம். (உ-ம்.) "அத்தம்மய வெற்படைந்தான்கதிராயிரத்தோன்" (கந்தபு. தெய்வ. கசசு.) [அஸ்தமய.]

அத்தமலை— சூரியன் அத்தமிக்கும் இடமாய மலை.

அத்தமானம்—ஆமணக்கு.

அத்தமானியம்— கண்டதிற்பாதியிறைதருதல்.

அத்தமித்தல் — 1. சூரியன் முதலியன படுதல். 2. மறைதல்.

அத்தயாமம்- ஒருதினத்திற்பதினறிலொன்றுகொண்டநேரம். [அர்த்த - பாதி. யாமம்- ஒருதினத்திலெட்டிலொன்றுகொண்டநேரம்.]

அத்தர்—1. சிவன். (உ-ம்.) "அத்தர்தந்தவருட்பாற்கடல்"(பெரியபு. திருமலை. க.ரு.) 2. தேவர். 3. பிதா. (உ-ம்.) "அத்தர்வேண்டிமுன்னாண்டவர்" (பெரியபு. திருக்கூட்ட. ரு.) 4. முனிவர். 5. வநசார். 6. வாசனையுடைய ஒருதைலம். [இந்துஸ்.]

அத்தாசிதம்— மட்ற றுத்தம்.

அத்தவசநம்— நினைந்த பொருளைச்சொல்லுஞ்சொல். (உ-ம்.) "வைகரிசெவியிற்கேட்பதாயத்தவசநமாகி" (சி. சி. க: உ௦.) [அர்த்த; வசந:]

அத்தவர் — ஆசையுடையோர். (உ-ம்.) "எனக்கத்தவர்க்கு" (திருப்பு. சஉஉ.) [அ

த்ரு - ஆசை.]

அந்தவரை— அத்தகிரி. (உ-ம்) "செய்ய கதிரத்தவரை சென்றணையுமுன்னம்" (கூர்மபு. கண்ணனவ. அசு.)

அந்தவாகநன்—சிவன். [ஸ்வவாஹந: ஸ்வ - விட்டுணு சிவனைமேகமாய்நின்றுபரித்தமை பற்றிவந்தபெயர்.]

அந்தவாளம்—1. உல்லாசம். 2. காடு. 3. போர்வைச் சீலை.

அந்தவுதயம்— அருத்தோதயம். (உ-ம்.) "மன்னுமத்தவுதயமகோதயமென்னு மிங்கிவற்றிற் புனலாடினேன்" (சேதுபு. தரு. கூச.)

அந்தவேடணை—பொருளாசை. [அர்த்த - பொருள். ஈஷணை - ஆசை.]

அந்தன்—1. அருகன். (சூ. நிகண். க: ந.) 2. உயர்ந்தோன். (உ-ம்.) "அத்தனரும்பொருளனைத்தும்" (திருவிளை. மெய்க்கா. நச.) 3. கடவுள். (உ-ம்.) "அத்தாவாலங்காடா" (தேவா. திருவாலங். க. சுந்த.) 4. கடுக்காய். 5. குரு. (சூ. நிகண். க: உரு.) 6. சிவன். 7. பிதா. (உ-ம்.) "என்னத்தனைவென்றிசைகொண்டிலானோ" (கந்தபு. காமத. க0.) 8. மூத்தோன். 9. வெள்ளீயம். 10. வைரவன். (இராசவைத். உ.)

அந்தனை—அவ்வளவு. (உ-ம்.) "இவ்வளவென்றத்தனையுமென்னாலறியுந்தரமாமோ" (தாயு. பல. கசு.) [அ; தனை - அளவு.]

அந்தாட்சி—சாட்சி, திருட்டாந்தம். (திசை. வழக்.)

அந்தாணி — 1. அரசிருக்கை. (உ-ம்.) "அண்டத்தமரர்கள்சூழ வத்தாணியுள்ளங்கிருந்து" (நாலாயி. முதலா. பூச்சூட். க.) 2. சபைகூடுமிடம். [ஆஸ்தாநி.] 3. பிரியாமை. (உ-ம்.) "அத்தாணிச்சேவகமும்" (நாலாயி. முதலா. திருப்பல். அ.)

அந்தாணிமண்டபம்— அரசிருக்கைமண்டபம். (உ-ம்.) "மாளிகைமுன்னத்தாணிமண்டபத்து" (பெரியபு. புகழ்ச். கரு.) 2. சபைகூடு மண்டபம். [ஆஸ்தாநீமண்டபம்.]

அந்தாதிகம்— பாதிக்கதிகப்பட்டது. [அர்த்த - பாதி. அதிக - மேற்பட்டது.]

அந்தாதிகாரம் — பொக்கிஷாதிகாரியின் அதிகாரத்தானம். [அர்த்தாதிகாரம்.]

அந்தாதுரம் — பொருளாசை. [அர்த்த - பொருள் - ஆதுரம் - ஆசை.]

அந்தாந்தரம்—1. எதிரர்த்தம். 2. புதுக்காரியம். 3. வேறர்த்தம். 4. வேறுநிமித்தம். [அர்த்தாந்தரம்: அர்த்த - காரியம், நிமித்தம், பொருள். அந்தரம் - வேறு.]

அந்தாநம்—1. சரியற்றஇடம். 2. தேவாலயமுதலியவற்றின்வாயில். 3. மிகுந்தஆழம். [1, 3. அஸ்தாநம். 2. ஆஸ்தாநம்.]

அந்தாநி—
அந்தாநிமண்டபம்— } சபைகூடுமிடம்.
[ஆஸ்தாநீ, ஆஸ்தாநீமண்டபம்.]

அந்தாயம்—1. அந்தரம். [வழக்.] 2. சடைசற்சக்கரத்திற் கடைகிறவன்மிதிக்குந்தடி.

அந்தார்ச்சநம் — திரவியந்தேடுதல். [அர்த்த - பொருள். அர்ஜநம் தேடுதல்.]

அந்தார்த்தம்— 1. ஆண்டிற்பாதி. [அப்த - வருடம். அர்த்த - பாதி.] 2. பொருணிமித்தம். [அர்த்த - பொருள். அர்த்த - பொருட்டு.]

அந்தாவரம் — அசைவுள்ளபொருள்; சங்கமம். [அ - எதிர்மறை. ஸ்தாவர - நிலைப்பொருள்.]

அந்தான் — 1. அத்தைமகன். 2. மூத்தமைத்துனன். 3. மூத்தவனாகிய சகோதரிகணவன்.

அந்தி—1. அக்காள். [அத்தி: இது வடமொழியில் நாடகவழக்கு.] 2. அத்தினபுரி. 3. ஆனைவணங்கி. (இராசவைத்.) 4. "இருக்கிறான்" எனப்பொருள்படும் "அஸ்தி" யென்னும்வடமொழிதிரிந்துவந்த ஒருசொல். (சி. சி. அ: ந0. ஞாக.) 5. உண்டு என்பதன் பிரதிபதமாக "அஸ்தி" யென்னும் வடமொழிதிரிந்துவந்த ஓரவ்வியயம். (பி. வி. சஉ. உரை.) 6. எலும்பு. (உ-ம்.) "அத்திவெம்பணி தலைக்கலன்றாங்கியே" (கந்தபு. பிரமயா. கஅ.) [அஸ்தி] 7. ஒருமரம். (உ-ம்.) "அழிஞ்சத்திதொண்டை" (தைல. தைலவ. எஉ.) [ஊழலத்தி, மலையத்தி, சீமையத்தி, நீரத்தி, கொடியத்தி, கல்லத்தி, பேயத்தி யெனப்பலவகைப்படும். 8. கடல். (உ-ம்.) "அத்திமேலெழுமவெண்கரி" (காஞ்சிபு. அரி. உரு.) [அப்தி] 9. கருவிளையென்னும் ஒருபடர்கொடி. 10. கொலை. (உ-ம்.) "கோவத்தி" [ஹத்யா] 11. சந்திரவமிசத்துள்ள பரதன் குலத்திற் பிறந்த ஓரரசன்; அத்தினபுரம் அமைத்தவன். (உ-ம்.) "அக்குலத்தினிலத்தியென்பவனவதரித்தான்" (பாரத. குருகு.

உ-அ.) [ஹஸ்திந்] 12. திப்பிலி. 13. நெருஞ்சி. (இராசவைத்.) 14-15. பாதி-செய்யென்னே வலும், தெரிநிலைவினைப்பகுதியும். 16 பாதிவடிவினள். (உ-ம்.) "அத்திகையேபுனலோடு நாகமுமூற்றிடலால்" (அரிச்ச. நாட்டு. கக.) [ஸம்ஸ்; இ-ஒருபெண்பால் விகுதி.] 17. பிருதிவியின்வழியான தசநாடிகளிளென்று; 18. பெண்யானை. [ஹஸ்திந்.] 19. மலை. 20. முருகமூர்த்தி பாரி தெய்வயானையம்மை. (உ-ம்.) "அத்திநகையினித்திலமும்" (கந்தாங். சுக.) 21. மூர்ச்சை. (இராசவைத்.) 22. யானை. (உ-ம்.) "அத்தியீருரிபோர்த்திரோ" (தேவார. திருப்பை. அ. சுந்தர.) [ஹஸ்திந்.] 23. வெருகஞ்செடி.

**அத்திக்கன்னி** — 1. காசிலாங்கண்ணி. 2. வெருகு.

**அத்திகபம்**—1. கடனுரை. 2. கணவாய்மீனெலும்பு. [அஸ்திகப. இவ்வெலும்புகடனுரையெனக் கொண்டாரிட்டபெயர்.]

**அத்திகர்ணியவிசு**— சிற்றாமணக்கு நெய். (தைல. தைலவ. ககந.)

**அத்திகாயம்**—(ஆருகதம்.) தன்மாத்திகாயம் அதன்மாத்திகாயம் என அசீவபதார்த்தங்களோடு கூட்டிவழங்கப்படும் ஒருவாய்பாடு. (சிவஞானபா. பக். கக.) [அஸ்திகாயம்.]

**அத்திகிரந்தி**—ஒருவகைக்கிரந்தி; அஃது: எலும்புகள் நொறுங்கலாலும் அபிகாதத்தினுலுமுண்டாகிப் பருத்துயருவதும் கொஞ்சம் அமுங்குவதுமாக இருக்கும். (சீவரட். ௬௦௪.) [அஸ்தி- எலும்பு. க்ரந்தி- பொருத்து, வளைவு, கட்டு.]

**அத்திகிரி**—காஞ்சிபுரத்துள்ள விட்டுணுதலங்களெட்டனுளொன்று; அது: வெள்ளையானை தனதமிசமொன்றினலே விட்டுணுவைத் தாங்கப்பெற்ற காரணத்தினலே வந்தபெயரென்பர். (உ-ம்.) "அத்திகிரிதனிலிருப்பச்செல்கின்றோம்" (கந்தபு. திருக்குற். கஉ.) [ஹஸ்திந்; கிரி.]

**அத்திகை**—தமக்கை. [அத்திகா.]

**அத்திகோசத்தான்** — ஒருகுழூஉப்பெயர். (இலக்கணவிள. களஎ. உரை.) [அது, இளந்துணைமகார் தம்மிற்கூடிவிளையாடல்குறித்த பொழுதைக்குத் தாமேபடைத்திட்டுக்கொண்டது.]

**அத்திகோபம்**—ஒருநயனரோகம்.

**அத்திகோலம்**—அழிஞ்சின்மரம்.

**அத்திசஞ்சயம்**— இறந்தவரின் உடம்பைத்தகனஞ்செய்தபின் எலும்புகளைக் கங்கைமுதலிய தீர்த்தங்களில் ஒன்றில் இடும்படியெடுத்துத்திரட்டல். [அஸ்திஸஞ்சய: ஸஞ்சய-திரட்டல்.]

**அத்திசம்**— 1. சங்கு. 2. சந்திரன். 3. நீர்முள்ளிப்பூண்டு. [அப்தி - கடல், நீர்நிலை. ஜ - பிறந்தது.]

**அத்திசமர்ப்பணம்**—இறந்ததேகத்தினெலும்பைக் கங்கைமுதலிய தீர்த்தங்களிலெறிதல். [அஸ்திஸமர்ப்பணம்: ஸமர்ப்பணம்-கொடுத்தல்.]

**அத்திசயனன்**—விட்டுணு. [அப்திசயந. அப்தி - கடல். சயந - படுக்கை. கடலிற்றுயின்றவனென்றபடி.]

**அத்திசயன்** — விட்டுணு. [அப்திசய. கடலிற்றுயின்றவனென்றபடி.]

**அத்திசாரம்** — எலும்புத்துவாரங்களிலுள்ள எண்ணெய்ப்பற்றான ஊன். [அஸ்திஸார: அஸ்தி - எலும்பு. ஸாரம் - மச்சை.]

**அத்திசிராவரோகம்**— ஒருவகை ரோகம்; அஃது: இரசதாது கொதித்தலினால் இரத்தத்தின் சுபாவவன்னங்கெட்டுவரும் ரோகமென்று காசிபரும், எலும்புகளின் மத்தியிலிருக்கிற மச்சையையுருக்கிக்கொண்டு சுலையுடன்வெளிப்படும் ரோகமென்று ஆத்திரையரும், எலும்புருக்கிரோகமென்று திருமூலர் முதலிய சித்தர்களுஞ்சொல்வர். (சீவரட். ௫௪.) [அஸ்திஸ்ராவரோக.]

**அத்திசுரம்** — ஒருவகைச்சுரம். இஃதெலும்பைத்தாக்கிவருவது. [அஸ்தி - எலும்பு. ஜ்வர - காய்ச்சல்.]

**அத்தித்தல்**—பாதிசெய்தல். [அர்த்த-மூ.]

**அத்தித்திப்பிலி**—யானைத்திப்பிலி. [ஹஸ்திந் - யானை. அது பருமையைக்காட்டும்.]

**அத்திதி**— 1. நிலையின்மை. 2. மரியாதையின்மை. [அஸ்திதி: அ-எதிர்மறை. ஸ்திதி-நிலை, மரியாதை.]

**அத்திதந்தம்**—முள்ளங்கிக்கிழங்கு. (உ-ம்.) "விடமாக்கனிமுருக்கத்திதந்தத்தின்மூனைவீழிசங்குத்தாமணி" (தைல. தைலவ. எங.) 2. யானைக்கொம்பு. [ஹஸ்திதந்த: ஹஸ்திந்-யானை. தந்த - கொம்பு.]

**அத்திதாது**— கதசுரம்; ஒருவகை விஷமசுரம். அஃது: ரோகாதிகளின் விஷமத்தி

ணல் சுரமானது ஒருகோளாகி உள்ளுக்குள்ளே விஷமத்தால் ஐந்துமாதத்துக்குமேல் அத்திதாதுவில் வியாபிக்குமென்று சொல்வர். (சீவரட். ௩௧.) [ஸ்தியாதுமத ஜ்வரம்.]

அத்திதாரணம்— எலும்புமாலைதரித்தல். (உ-ம்.) "மாவிரதம் அத்திதாரணாதிகளைச் சொல்லும்" (த. நி. போ. ௧௫.) [ஸ்தி; யாரண - தரித்தல்.]

அத்திநபுரம்—சந்திரவமிசத்துள்ள அத்தியென்பவனாலேதாபிக்கப்பட்டதென்று மகாபாரதத்திலே சொல்லப்பட்ட ஒருபிரதாநநகரி; இது தற்காலத்திலே டில்லிநகரத்துக்கு வடகிழக்கே அரைக்காத வழிதூரத்திலே காணப்படுமென்பர். (உ-ம்.) "அத்திநபுரத்திலெய்தி" (கூர்மபு. கண்ணன்மண. ௧௧௪;) [ஹஸ்திநபுர.]

அத்திநவநீதகம்— சந்திரன். [ஸ்தி-நவநீதக: ஸ்தி - கடல். நவநீதகம் - வெண்ணெய் போல்வது. பாற்கடலைக் கடைந்தபோது பிறந்ததென்பதுபொருள்.]

அத்திநாடிவிரணம்— நாடிவிரணங்களில் ஒருவகை; எலும்பின் மார்க்கத்திற்பிறந்து அந்த எலும்பினரம்புகளுக்கு உபத்திரவத்தைத்தருவது. (சீவரட். ௩௦௮.) [ஸ்தி-நாடீ வ்ரண.]

அத்திநாத்தி—உண்டுஇல்லையெனவும் உள்ளதும் இல்லதும் எனவும் சந்தேகிக்கநின்றதெனவும் பலவேறுபொருள்களைத் தரும் ஒரு வடமொழி யவ்வியயம். (உ-ம்.) "அத்திநாத்தி யென்றுரைக்குநாவும்" (திருவிளை. பாண். சுர. ௧௨.) [அஸ்தி - உண்டு. நாஸ்தி - இல்லை.]

அத்திநாத்திவாதம்— (ஆருகதம்.) உண்டில்லையென்னும்வாதம். (சி.சி.பர. நிகண். ௬.) [ஸ்தி-நாஸ்திவாத: வாத - பேச்சு.]

அத்தினபுரம்— அத்திநபுரம். [ஹஸ்திநாபுரம்]

அத்திநாபுரி—அத்தினபுரம். (உ-ம்.) "அண்டர்தானமுமுவமை கூரத்திநாபுரியே" (பாரத. குருகு. ௨௧.) [ஹஸ்திநாபுரி.]

அத்திநி— 1. பதுமினிமுதலியநால்வகைப் பெண்களுள்ளே தாழ்ந்தவள், இவள் சரீரம் கற்றுழைநாற்றம் உடையது. (உ-ம்.) பதுமினிசித்திநிபகர்ந்தசங்கினி - யிதமுறுமத்திநி" (கொக். ௧. அத். ௧.) [யானைமதம்போல நாறுங் காமநீருடைமைபற்றி அத்திநி எனப்பட்டாள்.] 2. பெண்யானை. ஹஸ்திநி: ஹஸ்த- கை. இநி - ஒரு -வ. வி.]

அத்திப்பதி—அத்திநாபுரம்.

அத்திப்பிரக்ஷேபம் — இறந்தவனுடைய எலும்பைக் கங்கை முதலிய தீர்த்தங்களில் இடுதல். [ஸ்திப்ரக்ஷேப: ஸ்தி - எலும்பு. ப்ரக்ஷேப - எறிதல்.]

அத்திபங்கம்—எலும்புமுறிதல். [ஸ்திபங்க: ஸ்தி - எலும்பு. பங்க - முறிதல்.]

அத்திபஞ்சரம்—கங்காளம். [ஸ்திபஞ்ஜர: ஸ்தி - எலும்பு. பஞ்ஜர - கூடு.]

அத்திபாரம் — மேலெழும் பாரத்திற் காதாரமான அடிக்கோலுகை. (உ-ம்.) "அத்திவாரம்பார்") [ஸ்திபார.]

அத்திபுரசாதனி— அவுரிப்பூண்டு.

அத்திபெருக்கல் — அத்திசஞ்சயம். (ஆசௌ. ௧௩௯. அகபஞ். ௨௦.)

அத்திபேதம்—ஒருநரகம். (உ-ம்.) "அடைந்திடுவனவனரக மத்திபேதம்" (சேதுபு. தூராசார. ௩௫.)

அத்திபேதி— ஒருமருந்து. [இஃதியானைகளுக்குக்கொடுக்கும் பேதிமருந்து.]

அத்திமண்டூகி— முத்துச்சிப்பி.

அத்திமாலி — சிவன். [ஸ்திமாலிந்: ஸ்தி - எலும்பு. மாலிந் - மாலையுடையவன்.]

அத்திமிர் — தெய்வயானையம்மையையுடையீர். (உ-ம்.) "உந்திமிரத்திமிர்" (கந்தரந். எ.)

அத்திமேகரோகம்— ஒருவகைமேகரோகம்; அது: மூத்திரமானது யானைமூத்திரம் போன்று தடைப்படாது இறங்குவதும், ஒருவேளை தடைப்பட்டுக்கலங்கியதுமாக இறங்குவதுமாயிருக்கும். (சீவரட். பக். ௩௮.) [ஹஸ்தி - யானை. யானையின்மூத்திரம் போலிறங்கலால் அத்திமேகமெனலாயிற்று.]

அத்தியக்கம்— 1. தலைமை, மேல்விசாரணை. 2. பிரத்தியக்கம். (உ-ம்.) "ஆக்கைவிதம்பேதமெனவத்தியக்கமறிவிக்கும்" (சிவதரு. சிவஞானயோ. ௧௧.) [அத்யக்ஷ: அதி- மேல். அக்ஷ - இந்திரியம்.]

அத்தியக்கினி— 1. அக்கினிசமீபம். 2. சீதனம், விவாககாலத்திலே யக்கினிமுன்னிலையிலே பெண்களுக்குக் கொடுக்கப்படும்பொருள். 3. வடவாமுகாக்கினி. [1, 2. அத்யக்நி: அதி- சமீபம். அக்நி - நெருப்பு. 3. ஸ்த்யக்நி: ஸ

ஸி - கடல். ஸம்ஸ்ரு.]

அத்தியக்கிநிட்டோமம் — யாகம் இருபத்தொன்றனுள் ஒன்று. இது சோதிட்டோம யாகத்தின் இரண்டாம் பாகம். [ஸம்ஸ்க்ரு ஷோடஸீ.]

அத்தியசநம்— 1. அதிகமுண்ணுதல். 2. ஏகோத்திட்ட ஊண். [ஸம்ஸ்க்ரு அத்யஸந: அதி - அதிகம். அஸந.உண்ணுதல்.]

அத்தியஸ்மி—மிகவும் ஐக்கியம்.

அத்தியட்சரம்—பிரணவம். [ஸம்ஸ்க்ரு அத்யக்ஷர: அதி - மேல். அக்ஷரம் - எழுத்து.]

அத்தியட்சன் — 1. மேல்விசாரணைசெய்வோன். 2. வரவுசெலவு முதலியன விசாரிக்கும் அதிகாரி. [ஸம்ஸ்க்ரு அத்யக்ஷ: அதி - மேல். அக்ஷ- பார்வைசெய்வோன்.]

அத்தியந்தகோபநம்— மிக்ககோபம். [ஸம்ஸ்க்ரு அத்யந்த - மிகுதி. கோபந - கோபம்.]

அத்தியந்தகோபம்—மிக்ககோபம்.

அத்தியந்தப்பிரளயம் — (வேதாந்தம்.) ஐவகைப்பிரளயங்களுள் ஒன்று; அது: முத்தி. இந்த அவத்தையில் அஞ்ஞானஞ்சிறிதுமில்லை. (வாசுதே. சஉ- நிரூபகம்.) [ஸம்ஸ்க்ரு அத்யந்த - அதிகம். ப்ரலயம் - ஒடுக்கம்.]

அத்தியந்தம்— 1. எப்பொழுதும். (உ-ம்.) "அத்தியந்தாபாவம்" 2. ஓரண். 3. பூரணம். (உ-ம்.) "அத்தியந்தம்விமலனுகி" (சி. சி. அளவை. கஉ. சிவாக்.) 4. மிகுதி. (உ-ம்.) "அத்தியந்தவைரம்" [1, 3. 4. ஸம்ஸ்க்ரு அத்யந்த: அதி - அப்பால். அந்தம் - மட்டும், எல்லை.]

அத்தியந்தாதிசயோக்தியலங்காரம்—மிகையுயர்வு நவிற்சியணி. (குவல. கூ. பக்.)

அத்தியந்தாபாவம் — அபாவப் பிரமாண வகைகளுள் ஒன்று; அஃதென்றுமில்லாமை. (உ-ம்.) "ககனாரவிந்தம் ஒருகாலுமில்லையென்பதத்தியந்தாபாவம்" (உபநி. கசு. உரை.) [ஸம்ஸ்க்ரு அத்யந்தாபாவ: அத்யந்த - என்றும். அபாவ - இன்மை.]

அத்தியயநம்—1. படித்தல். 2. வேதமோதுதல். (உ-ம்.) "ககநத்துநெறி யத்தியயநத்திலனுடு" (நல். பார. தரும. கஎஎ.)

அத்தியம்—பத்துச்சமுத்திரங்கொண்டது. "சமுத்திரம்பத்தேயத்தியமாகும்" (உ-ம்.) (சே. திவாகா. கஉ: உஉஎ.)

அத்தியயம்—1. அத்தியாயம். [ஸம்ஸ்க்ரு அத்யய:] 2. அழிவு. 3. இடுக்கண். 4. கழிந்துபோதல். 5. குற்றம். 6. கேடு 7. தாக்குதல். 8. தோற்றமை. 9. நினைவுகூருதல். 10. படித்தல். 11. பொல்லாங்கு. 12. மரணம் 13. மீறுதல். [2, 3, 4, 5, 6, 7, 8, 11, 12, 13, ஸம்ஸ்க்ரு அத்யய: அதி - அப்பால். அய - போதல். 9, 10. ஸம்ஸ்க்ரு அத்யய: அதி - அப்பால். அயம்-போதல்.]

அத்தியவசம்—மிகவும் அவசமாதல் (சி. சி.)

அத்தியவசயித்தல்— அத்தியவசாயஞ்செய்தல்.

அத்தியவசாயம்—1. ஒரு பொருளின் மற்றொரு பொருளினபேதத்தை யையத்துடனறிதல். (விசாக. இலக்கணச். அணி. கஉ) 2. நிச்சயஞ்செய்தல். (உ-ம்.) "புத்தியத்தியவசாயத்தினது" (சி. சி. இ: அ. ஞானப்.) 3. விடாதுமனஞ்செலுத்துதல். 4. விடாமுயற்சி. [ஸம்ஸ்க்ரு அத்யவஸாய.]

அத்தியவசாயிதம்—பிரயாசத்தோடு முயலப்பட்டது. [ஸம்ஸ்க்ரு அத்யவஸாயிதா.]

அத்தியவசாயிநி — விஷயநிச்சயஞ்செய்யுமது. [ஸம்ஸ்க்ரு அத்யவஸாயிநி.]

அத்தியற்பம்—மிக அற்பம். (பௌட்-பசு. அஉ.)[ஸம்ஸ்க்ரு அத்யல்ப: அதி- அதிகம். அல்ப - சிறிது.]

அத்தியற்புதம் — மிக்கஅற்புதம். [ஸம்ஸ்க்ரு அத்யத்புத.]

அத்தியாகரணம்—1. அவாய்நிலையாற்சொல்வருவித்து முடித்தல். 2. நியாயம்பேசுதல். [ஸம்ஸ்க்ரு அத்யாகரண: அதி - முன். ஆஹரண - கொணர்தல்.]

அத்தியாகாரம்—1. அவாய்நிலையால் வருவித்துமுடிக்குஞ்சொல். (பி. வி. ௫0. உரை.) 2. அவாய்நிலையாற் சொல்வருவித்து முடித்தல். 3. குற்றமேற்றல். 4. மிகப்பெருஞ்சீரம். 5. மிகுபோசநம். [1, 2. [ஸம்ஸ்க்ரு அத்யாஹார: 3, 4. ஸம்ஸ்க்ரு அத்யாகார: 5. ஆஹாரம்-போசநம்.]

அத்தியாகாரி—மிகப்புசிக்கிறவன். [அதி - ஆஹாரி.]

அத்தியாகாரியம்— ஒருவாக்கியத்தில்ஒரு சொல் அங்ஙனம்வெளிப்படையாயிராத மற்றொருசொல்லை யவாவிநிற்றல். [ஸம்ஸ்க்ரு அத்யாஹார்ய.]

அத்தியாச்சியம்— விடப்பட்டக்கூடாதது. [அ - எதிர்மறை. த்யாஜ்ய - விடத்தக்கது.]

அத்தியாச்சிரமம்— ஆச்சிரமங்களைக்கடங்

தல்லை. (உ-ம்.) "நைட்டிகம், பாசுபதம், அத்தியாச்சிரமம், பஸ்மசரியை இவைகள் முதலான விரதங்களைப் பண்ணவேண்டுவதுமில்லை" (சி. சி. அ: நஉ. சிவாக்.) [அத்யாஶ்ரம: அதி - மேல். ஆஶ்ரம - நிலை.]

அத்த்யாச்சிரமயோகி— மூவகையோகிகளுளொருவன். (கூர்மபு. வருண. சo. உரை.) [அத்யாஶ்ரமயோகி.]

அத்த்யாசசதுட்டயம்—ஒன்றனை மற்றொன்றாகக் கொள்ளுதலாகிய நால்வகை அத்தியாசங்கள். அவை:- மித்தியாத்தியாசம், இதராத்தியாசம், இதரேதராத்தியாசம் சத்தியாத்தியாசம் என்பன. அவற்றுள்; மித்தியாத்தியாசமாவது நித்தியமான ஆன்மா நெருப்பின் சம்பந்தத்தால் நீரினிடத்துச்சூடு வந்ததுபோல அநித்தியமானதேகசம்பந்தத்தால் தன்னிடத்துவந்த சரித்தல் முதலிய தொழில்களைத் தன்னுடையனவாகப்பாவித்தல் எனவும், இதராத்தியாசமாவது தனக்குவேறான இந்திரியங்களின் தொழில்களைத் தன்னுடையனவாகக் காண்டல் எனவும், இதரேதராத்தியாசமாவது மநம் முதலியன "யான் எனது" எனச்சங்கற்பிப்பதைத் தனதாகப் பாவித்தல் எனவும், சத்தியாத்தியாசமாவது தானல்லாததைத் தானாகக் கருதும் அகங்காரத்தைத்தானாக அறிதல்எனவும் வேதாந்திகள்சொல்வார்கள். (வேதா. சூ. கக. உரை.) [அத்யாஸ;சதுஷ்டயம்.]

அத்தியாசநம் — தகனம்பண்ணின எலும்புகளின் சாம்பலைப்பிராமணனிடங்கொடுத்துச்செய்யும் ஏகோத்திட்ட அபரக்கிரியையின் ஒருபகுதி.

அத்தியாசம்—1. அடையச்செய்தல், சாட்டுதல். 2. இருத்தல்(உ-ம்.) "வள்ளல் வெண்புகழ்திரண்ட வளங்கெழு கயிலைக்குன்றில் வெள்ளிவந் தத்தியாச மாகவேவிளைந்த தம்மா" (பிரபுலி. கைலாச. ௪.) 3. ஒன்றின்மேல்இருத்தல். 4. கயிற்றினைப் பாம்பென்று கொள்வதுபோல ஒன்று மற்றொன்றாகவிளங்குதல். (உ-ம்.) "உற்றவத்தியாசவிலக்கணமது வேறொன்றையொன்றாகக்கருதலிப்பி வெள்ளியதுபோல - மற்றதுநால்வகைப்படுமாமித்தையுடனிதர மற்றிதரேதரஞ்சத்தியங்களினுலன்றே" (வேதா. சூ. கம.) [அத்யாஸ: அதி - முன். ஆஸ- இருத்தல்.]

அத்த்யாசவாதம் — விபரீதவாதம். (சிற். பா. கஅ. [அத்யாஸவாத:]

அத்தியாசாரம்— விதிக்கப்பட்ட ஆசாரங்களைக்கடந்து நடத்தல். [அத்யாசார: அதி- அப்பால். ஆசார - ஒழுக்கம்.]

அத்தியாசாரி— அத்தியாசாரமாய் நடக்கிறவன். [அத்யாசாரி.]

அத்தியாசிரமபாவனை— பிரமிபாவனை. (கூர்மபு. வருண. சந. உரை.) [அத்யாஶ்ரம; பாவநா.]

அத்தியாசை—அதிகஆசை. [அத்யாஶா.]

அத்தியாசோபாதி— மூன்றுவகைச்சீவ உபாதிகளுள் ஒன்று; அது: அந்தக்கரணசம்பந்தமாகிய சுக துக்கங்கள் முழுதும் ஆத்துமா அநுபவிப்பதுபோல முயற்சிப்பது (உ-ம்.) "புத்திகதமாய் - முற்றுசுகதுக்கங்களுயிர்நுகர்தல்போல முயலுதலேயத்தியாசோபாதியாகும்" (வேதா. சூ. கo.) [மநோகற்பிதத்தால் உண்டான துக்கரூபமான விடயங்களைச் சுகம்போலக்கருதி நனவின்கண் அடைதற்கு விசுவனுக முயலுதலின் அத்தியாசோபாதியென்னப்பட்டதென்பர் உரைகாரர். அத்யாஸோபாதி:]

அத்தியாத்துமஞானம் — பரமான்மாவை அறியும் ஞானம். [அத்யாத்மஜ்ஞாந.]

அத்தியாத்துமதத்துவநூல் — அத்தியாத்துமஞானசாத்திரம் (உ-ம்.) "இம்மோகத்தழுந்தார்க்குத் - திதமுறவத்தியாத்தும தத்துவநூலே பிறவிநோய்தீர்ப்பதன்றே" (ஞானவா. சிகித். ௬.)

அத்தியாத்துமம்—யசுர்வேத உபநிடதங்களுள் ஒன்று. (கூர்மபு. அட்டமூ. உசு.உரை.)

அத்தியாத்துமா—1. சீவான்மா. 2. பரமான்மா. [அத்யாத்மா: அதி - மேல். ஆத்மா - ஆன்மா.]

அத்தியாத்துமிகநூல் — அத்தியான்மிக நூல்.

அத்தியாத்துமிகம்—1. தன்னால் வருவது. 2. பரமாத்துமாவோடுசம்பந்தமுடையது.

அத்தியாதாநம் — கிரமத்தினின்று மாறுபடுதல். [அத்யாதாநம்.]

அத்த்யாநம்—தியாநாபாவம். (உ-ம்.) "அத்தியாந தியாநமெனுமுபயத்துக்கும்" (ஞானவா. சூகு. ௮. [அத்யாந: அ - எதிர்மறை. த்யாந.]

அத்தியாபகர்— வேதம், நியாயம், வியா

காணம் முதலியவைகளைப் படிப்பிப்போர்; அத்தியாபகர்: ஆசாரியரென்றும் உபாத்தியாயரென்றும் இருவகைப்படுவர். அவருள், ஆசாரியராவார் உபநயனஞ்செய்து விரதமும் நியமித்து வேதம் படிப்பிப்போராம். உபாத்தியாயராவார் வேதநம் வாங்கிப் படிப்பிப்போராம்: [அத்யாபக.]

அத்தியாபநம்—1. படிப்பித்தல். 2. வேதமோதுவித்தல். [அத்யாபந.]

அத்தியாபிதம்—படிப்பிக்கப்பட்டது. [அத்யாபிதம்.]

அத்தியாயநம்—அத்தியயநம்.

அத்தியாயம்—1. நூற்கூறுபாடு; அது: ஒரு சொல் நின்று பலபாக்களுந் தன்பொருளுதலி வருவதாகிய பாகம். (உ-ம்.) "மலைவறவிந்தவத்தியாயத்தைக்கேட்டவ ரடைகுவர்மாதோ" (கூர்மபு. நவகண். எஉ.) 2. பாடம். 3. பாடம்படித்தற்கேற்றகாலம். 4. வேதம். 5. வேதமுதலியவைகளையோதுதல். [அத்யாய: அதி - மேல். அய - போதல்.]

அத்தியாருடம் — 1. மிகவுயர்ந்தநிலை. 2. மிகுந்தவளர்ச்சி. [அத்யாரூட.]

அத்தியாரோகணம் — அத்தியாரோகம். [அத்யாரோஹண.]

அத்தியாரோகம்— ஏறுதல். [அத்யாரோஹ: அதி - மேல். ஆரோஹ - ஏறுதல்.]

அத்தியாரோபணம் — அத்தியாரோபம். [அத்யாரோபண.]

அத்தியாரோபநம்—அத்தியாரோபம். [அத்யாரோபந.]

அத்தியாரோபம் — 1. ஒன்றையொன்றிலேற்றுதல். 2. கயிற்றைச்சர்ப்பமாகவிளக்குதல்போல ஒருவஸ்துவை மற்றொருவஸ்துவாகவிளக்குதல். (உ-ம்.) "அத்தியாரோபமபவாதமெனவிரண்டா யறைகுவர்கற்பிதமத்தியாரோபமுள்ள - சுத்திமூடிலாத விரசிதம் விளைத்தல்போலச் சொற்பிரம சத்தினிலாவுலகதுகற்பித்த - லெத்திறுதான்வெள்ளியதின்றிப்பியெனல்போலோர்ந் திறைமெய்பொய்யுலகமெனத் தெளிதலபவாத - மெய்த்த பொருளறியு மிலக்கணமூன்றுமவைதாம் விளங்கதத்துவா விருத்திதடத்தமொடுசொரூபம்" (வேதாசூ. உஅ.) [வடநூலார் அதிகதம் - ஆரோபம்: அத்தியாரோபமென வந்ததென்ப ரென்றுரைகாரர் கூறுவர். [அத்யாரோப: அதி - ஆரோப.]

அத்தியாவசியகம் — மிகுந்த அவசியம். (சைவப்.சாரு.) [அத்யாவஶ்ய அதி-அதிகம். ஆவஶ்யக - அவசியமுடையது.]

அத்தியாவாகநிகம்— அறுவகைச்சீதனங்களுளொன்று; அது: பிதாவின்வீட்டிலிருந்து கணவன் வீட்டுச்சுப்புறப்படும்போது நாயகி பெற்றுக்கொள்ளும் பொருள். [அத்யாவாஹநிக. அதி - மேல். ஆங் - முன். வஹ - கொண்டுபோதல். இக் - ஒரு வ - வி.]

அத்தியாவிருதவாதம்—ஆவிருதவாதவகைகளிலொன்று; அஃது: அத்திதாதுவைவாயு ஆவரணமாகச் சூழும்போது பிறப்பதொரு நோய். (சீவரட். ககஅ. பக்.)

அத்தியான்மர் — அண்டபிண்டமிரண்டிலும் வியாபகமாயுள்ள பதின்மூன்று வாயுக்கள்.

அத்தியான்மராமாயணம்— விசுவாமித்திரரால் சொல்லப்பட்ட ஓர் உபதேசநூல். [அத்யாத்ம; ராமாயணம்.]

அத்தியான்மிகநூல் — ஆன்மஞானத்தைப் பயப்பிக்குநூல்கள்; அவை: சாங்கியம், பாதஞ்சலம், வேதாந்தம் என்னு மூன்றுமாம். இவை இருடிகளாற் செய்யப்பட்டன என்பர். (சி. கை. பக். சஉ.) [அத்யாத்மிக - ஆன்மசம்பந்தமுடைய. நூல்-சாத்திரம்.]

அத்தியான்மிகம்—அத்தியாத்துமிகம். [அத்யாத்மிக.]

அத்தியுக்தியலங்காரம்— மிகுதிநவிற்சியணி. (குவல. கூரு.) [அதி; யுக்தி - பேசுதல். அலங்காரம்.]

அத்தியுத்தி— 1. அதியுக்தியலங்காரம். 2. பெருப்பித்துப் பேசுல், வன்னித்துப் பேசுதல் [அதி; யுக்தி.]

அத்தியூடன்—சிவன். [அத்யூட: அதி-மேல். ஊட - சுமப்போன்.]

அத்தியேதா— படிக்கிறமாணுக்கன். [அத்யேதா.]

அத்திரசந்தாநம்— அம்பின் தொடர்ச்சி. [அஸ்த்ர; ஸந்தாந.]

அத்திரசாத்திரம்— வில்வித்தை. [அஸ்த்ரஶாஸ்த்ர: அஸ்த்ர - ஆயுதம். ஶாஸ்த்ர - வித்தை.]

அந்திரசிகிற்சகன் — சத்திரவைத்தியஞ் செய்வோன். [அஸ்த்ரஸிகித்ஸக: அஸ்த்ர - ஆயுதம். ஸிகித்ஸக - வைத்தியன்.]

அந்திரசிகிற்சை—சத்திரவைத்தியம். [அஸ்த்ரஸிகித்ஸா: அஸ்த்ர - ஆயுதம்; ஸிகித்ஸா - வைத்தியம்.]

அந்திரநர் - இரதவீரரில் நான்காம்வகையார். [இஃது, அர்த்தரதர் என்பதன் மரூஉ.]

அந்திரதேவர்— மகோற்சவாதிகாலங்களிலே சுவாமிக்குமுன்னே கொண்டுபோகப்படும் ஆயுதவடிவமான ஓர் அதிகாரதேவதாவிக்கிரகம். அது: பூதபிசாசாதிகளால் பிராணிகளுக் கிடையூறொன்றுமணுகாமல், இந்திராதியர்களால் திசைக்காவல்செய்வித்தற்பொருட்டுக்கொண்டுபோகப்படுவது. (உ-ம்.) "செருவின்மலியத்திரதேவர்தமக்கு விழாமுன்செய்திட்டு" (திருவானை. திருவிழா. கக.) [அஸ்த்ரதேவ.]

அந்திரப்பிரயோகம் — அம்புசெலுத்துதல். [அஸ்த்ரப்ரயோக - அம்பு. ப்ரயோக - செலுத்துதல்.]

அந்திரபரீட்சை — 1. கலைஞானம்அறுபத்துநான்கனுளொன்று; அது: வில்வித்தை. 2. வில்வித்தைகற்கை. [அஸ்த்ரபரீக்ஷா: அஸ்த்ர - வில். பரீக்ஷா-ஆராய்தல்.]

அந்திரம்—1. அம்பு. (உ-ம்.) "அத்திரமென்மாரிகொண்டவன்றனை மறைத்தான்" (கந்தபு. தருமகோ. சஎ.) 2. ஆயுதம். 3. இலந்தை. 4. கடுக்காய்ப்பூ. 5. கழுதை. 6. குதிரை. (உ-ம்.) "அத்திரத்தாமா நீ" (பாகவத. பரீட். க0.) 7. கைவிடுபடை. 8. நிலையின்மை. (உ-ம்.) "அலவான்பொருள்கள் யாவுமத்திரமென்னும்" (நல். பார. கிருட்டிண. சகூ.) 9. பதினொருமந்திரங்களுளொன்று. (உ-ம்.) "ஒருநூறத்திரநினைந்து" (தணிகை. அகத். நகஅ.) 10. மலை. 11. முன்விடும் அம்பு. 12. வாள். 13. வில். [1, 2, 7, 12, 13. அஸ்த்ர: அஸ்- எறிதல். த்ர - ஒருகருவிப்பொருள்விகுதி. 8. அஸ்திர: அ-எதிர்மறை. ஸ்திர - நிலை.]

அந்திரமந்திரம் — பதினொருமந்திரங்களிலொன்று; சாந்தியாதீதகலைக்கான மூன்றுமந்திரங்களில் ஒன்று. (சி. லி. கிரி. உக.)

அந்திரமநு—அத்திரமந்திரம். (சி. லி. கிரி. எஎ.) [அஸ்த்ரமநு.]

அந்திரயூகம் — ஒருவகைப்படைவகுப்பு. (உ-ம்.) "அத்திரயூகமாக வரும்பெருஞ்சேனையைவகுத்து" (பாரத. பதினெட். கரு.) [அஸ்த்ர - அம்பு. வ்யூஹம்-படைவகுப்பு.]

அந்திரலாகவம்— அத்திரப்பிரயோகவன்மை. [அஸ்த்ரலாகவ: அஸ்த்ர-அம்பு. லாகவம்-இலகுத்துவம்.]

அந்திரவர் — விசுவதேவர்களுளொருவர். (வி-ணி. உசகூ.)

அந்திரவியம்—திரவியமல்லாதது. (உ-ம்.) "அந்தவாணவமலம் அத்திரவிய ரூபமோ" (சி. சி. வரலாறு. சிவாக்.) 2. நன்குமதிக்கப்படாதபொருள். [அத்ரவ்ய: அ - எதிர்மறை. த்ரவ்யம் - பொருள்.]

அந்திரா—அரசமரம்.

அந்திராகாரம் —ஆயுதசாலை. [அஸ்த்ராகாரம்: அஸ்த்ர - அம்பு. ஆகாரம் - வீடு.]

அந்திராசம்—அச்சமின்மை. [அத்ராஸ: அ - எதிர்மறை. த்ராஸ - அச்சம்.]

அந்திராதரம்— அம்புக்கூடு.

அந்திராதாரம்—அம்புக்கூடு. [அஸ்த்ர - ஆயுதம். ஆதார - கூடு.]

அந்திராபரம்—அம்புக்கூடு.

அந்திரி—1. இடியேறு. 2. உலைத்துருத்தி. (பிங்க. கஎகசு.) 3. உள்வஸ்திரம். 4. எழுமுனிவர்களுளொருவன். (உ-ம்.) "அத்திரிப்பெயரந்தணன்" (பாரத, குருகு. ரு.) 5. ஒட்டகம். (பிங்க. உசகக.) 6. கணை. 7. கழுதை. (சூ. நிகண். ந: உரு.) 8. குதிரை. (சூ. நிகண். கக: உங.) 9. கோவேறுகழுதை. (உ-ம்.) "வானவண்ணையனத்திரியேற" (சிலப். கடலாடு. கககூ.) 10. சூரியன். 11. தருமநூல்பதினெட்டினுளொன்று. (பிங்க. சசசு.) 12. புல்லிங்கநபுஞ்சகலிங்கங்கள். 13. மரம். 14. மலை. (உ-ம்.) "சிகராத்திரிகூறிட்டவேலும்" (சந்தால. குஉ.) 15. மேகம். [1, 10, 13, 14, 15. அத்ரி. 12, அஸ்த்ரி 4. அத்ரி.]

அந்திரிகீலை — பூமி. [அத்ரிகீலா: அத்ரி - மலை. கீலா - ஆப்புப்போலக்கொண்டது.]

அத்திரீகை—ஓரப்சரப்பெண.

அத்திரிசாதன்—1. சந்திரன். 2. முதன்மூன்றுவருணத்தாருளொருவன். [அத்ரிஜாத: அத்ரி-ஒருமுனிவன். ஜாத-பிறந்தவன். அத்திரிமுனிவனுடைய கண்ணிற்பிறந்தவனென்றபடி. அ-எதிர்மறை. த்ரிஜாத-மூன்றுதரம்பிறந்தவன். மூன்றுதரமல்லன் இருதரம்பிறந்தவன் என உபநயனதாரிக்கு வந்த பெயர்.]

அத்திரிசாரம்—இரும்பு. [அத்ரிஸார: அத்ரி-மலை. ஸார-உள்ளீடு.]

அத்திரிசிருங்கம் — மலையின்கொடுமுடி. [அத்ரிஶ்ருங்க-அத்ரி-மலை. ஶ்ருங்க-கொடுமுடி.]

அத்திரிசை — பார்வதிதேவி. [அத்ரிஜா: ஜா-பிறந்தவள்.]

அத்திரிநந்திநி— பார்வதிதேவி. [அத்ரிநந்திநீ: அத்ரி-மலை. நந்திநீ-மகள்.]

அத்திரீசன்—1. இமயமலை. 2. சிவன். [அத்ரீஶ: அத்ரி-மலை. ஈஶ-தலைவன்.]

அத்திரு—அரசமரம்.

அத்திலை—செருப்படைப்பூண்டு.

அத்திவாரம்—அத்திபாரம். (உ-ம்.) "அத்திவாரமிருத்தி வெண்படிகத் தமைத்ததளத்ததாய்" (அரிச்ச. இந்தி. ௧௯.) [அத்திபாரம் என்றும் பாடம்.]

அத்தின்—அதனின். (உ-ம்.) "தானத்தின் வேறுகுந்தான்" (சிவஞானபோ. ௩:எ. வெண்பா.) [அதனின் என்பது அத்திலென மருவிற்று.]

அத்து—1-3. அத்தென்னேவலுந் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். 4. அரைநாண், அரைப்பட்டிகை. 5. அழிஞ்சில்வேர்ப்பட்டை.(இராசவைத்.)6. இருப்பதாக எனப்பொருள்படும் ஒருவடமொழியவ்வியயம். (உ-ம்.) "சுபமஸ்து" 7. எல்லை. [தெலுங்கு.] (உ-ம்.) இவ்வளவுதூரம்போய்த் திரும்புகிறதென்று ஒரு அத்தேற்படுத்திக்கொண்டு அந்த அத்துக்குள் இன்னவித சகுநமாகவேண்டுமென்று"(பிரபஞ்ச. ௪௫.) 8. ஒரு சாரியை. (உ-ம்.) "அயிலுற்றிடுபொழுதத்தினில்" (கந்தபு. சரவ. ௩௩.) இந்த அத்து என்னுஞ் சாரியை மொழியினகரம் மரத்தின்குறை யென்பதிற்போல மகரங்கெட விதியீறுய்நின்ற அகரத்தின் முன்னும் மகத்துக்கையென்பதிற்போல இயல்பீறுய்நின்ற அகரத்தின்முன்னும் வகரவுடம்படுமெய்பெருது கெட்டுவரும். "அத்தினகரமகரமுனையில்லை" யென்முரிலக்கண நூலார். அம்மீற்றுப் பெயர்ச்சொற்கள் ஐ,ஆல்,இன், அது என்னும் வேற்றுமையுருபேற்குமிடத்து மரத்தை மரத்தால், மரத்தின், மரத்தது என்பவற்றிற்போல அத்துச்சாரியைபெற்றே வருதலும் கு, கண் என்னும் வேற்றுமை யுருபேற்குமிடத்து மரத்துக்கு, மரத்துக்கண் என்பவற்றிற்போல அந்தச்சாரியைபெற்றும் மரக்கு, மரக்கண் என்பவற்றிற்போல அந்தச்சாரியைபெருதும் வரும். 9. கடப்பம்பட்டை. (இராசவைத்.)10. (சிலவிடங்களில் வேற்றுமை யுருபேற்குங்கால்) அது என்னுஞ் சுட்டுப்பெயர் திரிந்துவரும் ஒரு விகாரமொழி. (உ-ம்.) "அத்தொடொருமருவுகோண்" (சௌந். ௧௧.) 11. சிவப்பு.(உ-ம்.)(சூ. நிகண். ௧௪. ௧௨.) 12. செவ்வை. 13. துவர். (உ-ம்.) "ஆடுநீபன வத்துமண்கலூம்" (சிந்தா. இலக்கணை. ௬௧.) 14. தைப்பு. (பிங்க. ௩0௫அ.)

அத்துகம்—ஆயணக்கமரம்

அத்துகமானி—அரசமரம்.

அத்துச்சம்— கிரகங்களின் அதிசவுச்சம்; சூரியனுக்கு மேடத்திற் ௧0-ஆம் பாகையும், சந்திரனுக்கு இடபத்தில் ௩-ஆம் பாகையும், செவ்வாய்க்கு மகரத்தில் ௨அ-ஆம் பாகையும், புதனுக்குக் கன்னியில் ௧௫-ஆம்பாகையும், வியாழனுக்குக் கற்கடகத்தில் ௫-ஆம் பாகையும், சுக்கிரனுக்கு மீனத்தில் ௨எ-ஆம் பாகையும், சனிக்குத் துலாத்தில் ௨0-ஆம் பாகையும், அத்தியுச்சத் தானங்களாகும். (வீமே. ௧௧௫.) [அத்யுச்ச; இதில் யகரங்கெட்டுத் தகரமிரட்டித்து அத்துச்சமென்றாயிற்று.]

அத்துணை—அவ்வளவு. [துணை-அளவு.]

அத்துதல்— 1. அடைதல். (உ-ம்.) "அந்தச்சமாசாரம் எசமான் சாதிலுமத்திப்போயிற்று" 2. அப்புதல். (உ-ம்.) "மருந்தைக்காயத்தின்மேலத்திவைத்தான்" 3. அரத்தைப்பூண்டு. 4. சார்தல். (உ-ம்.) "என்தோளையத்திக்கொண்டுவரலாகாதா" 5. பொருத்தியிசைத்தல்.(சூ. நிகண். ௧௧. ௧௨.)

அத்துமம்—அரத்தை.

அத்துமானி—அரசமரம்.

அத்துருக்கம்—அகழியாற்சூழப்பட்டகோட்டை. [அப்துர்க: அப்-நீர். துர்க-கோட்டை.]

அத்துரோகம் — துரோகமின்மை. [அ

ஜௌராஹ.]

அத்துலாக்கி—கருஞ்சீரகப்பூண்டு.

அத்துவகமநம்—பிரயாணஞ்செய்தல். [ஸ்ரு அத்வ ஗மந: அத்வ - வழி. ஗மந - போதல்.]

அத்துவகன்—1. தீர்த்தயாத்திரைக்கு வெளிப்பட்டு வழிநடப்போனாய் உண்டியின்பொருட்டுவந்த யாசகன். (பராசர. க.) 2. வழிச்செல்வோன். [ஸ்ரு அத்வ஗: அத்வ - வழி. ஗ - செல்வோன்.]

அத்துவசுத்தி—ஆறத்துவாக்களினுங் கட்டுப்பட்டிருக்கின்ற போகங்களெல்லாவற்றையும் ஏககாலத்திலே புசித்துத்தொலைப்பித்து மோட்சங்கொடுத்தல். (உ-ம்.) "அருகமேநால்வர்க்குமத்துவசுத்தி" (சைவச. ஆசாரி. கூச.) [ஸ்ரு அத்வஶுத்தி: அத்வ - வழி. ஶுத்தி.]

அத்துவசோதனை—அத்துவசுத்தி. (சி.சி. அ: கூ. சிவஞா.)

அத்துவத்திரயம்—அத்துவாக்கள்மூன்று; அவை: சுத்தம். சுத்தாசுத்தம், அசுத்தமென்பன. (சி. சி. உ: எச. சிவாக்.)

அத்துவநிட்டம்—வழியிலிருப்பது. (உ-ம்.) "அதை அத்துவநிஷ்டம்பண்ணி" (சி.சி.உ: ச: சிவாக்.) [ஸ்ரு அத்வநிஷ்டா - இருத்தல்.]

அத்துவம்—1. இரண்டொன்றாயிருத்தல். 2. ஒன்றிப்பு. 3. சிவப்பு. 4. வழி.

அத்துவயதார்க்கம்—யசுர்வேத உபநிடதங்களுளொன்று. (கூர்மபு. அட்டமூ. உசு. உரை.)

அத்துவயம்—1. இரண்டன்மை. 2. (வேதாந்தம்) பிரமமும் பிரபஞ்சமுமொருபொருளானதன்மை. [ஸ்ரு அத்வய: அ - எதிர்மறை. த்வய - இரண்டு.]

அத்துவயவாதி—1. பிரமமும் பிரபஞ்சமுமொன்றெனச்சாதிப்போன். 2. பௌத்தன். [ஸ்ரு அத்வயவாதிந: அ - எதிர்மறை. த்வய வாதிந - இரண்டெனபோன்.]

அத்துவயன்—பௌத்தன். [ஸ்ரு அத்வய:]

அத்துவர்—பிரமஞாநிகள்.

அத்துவர்க்கயம்—கருஞ்சீரகம்.

அத்துவர்க்காயம்—1. கருஞ்சீரகம். 2. சீரகம்.

அத்துவரியு—1. யசுர்வேதம். 2. யசுர்வேதஞாநியாகிய யாகபுரோகிதன். (உ-ம்.) "வனநிறல்வசுக்களத்துவரியுநற் பிருகுவோதாவொன்று நான்முகத் தோன்மிக்க பிரமனுற்காதா" (மச்சபு. சநதிரோ. கஉ.) [ஸ்ரு அத்வர்யு.]

அத்துவரியுவேதம்—யசுர்வேதம். [ஸ்ரு அத்வர்யுவேத.]

அத்துவலிங்கம்—ஆன்மதத்துவம்அடிப்பாகமும் வித்தியாதத்துவம் நடுப்பாகமுஞ் சிவதத்துவங் கடைப்பாகமுமாக அமைந்த சிவலிங்கம். (உ-ம்.) "மண்முதற்சிவமீறனவத்துவலிங்கந்தன்னை" (திருவிளை. இந்திரன்முடி. கரு.)

அத்துவா—1. ஆன்மாக்களைப் பாகதிய டைவிக்கை காரணமாகியவழி; அது: மந்திராத்துவா, பதாத்துவா, வர்ணத்துவா, புவநாத்துவா, தத்துவாத்துவா, கலாத்துவா என ஆறு. இவற்றுள்; மந்திரம், கக. பதம், அச. வர்ணம, ருச. புவநம். உஉச. தத்துவம், நகூ. கலை.ரு. (உ-ம்.) "அத்துவாசுத்தி" (சைவச. ஆசாரி. கூச.உரை.) 2. வழி. [ஸ்ரு அத்வா.]

அத்துவாக்காயம்—1. கருஞ்சீரகம். 2. சீரகம்.

அத்துவாகாயாரோணம்—ஒரு தீட்சை. (த. நி. போ. உகக.)

அத்துவாசங்கற்பவாதி—அத்துவாவடிவாகச் சிவனைப்பாவிப்போன். (த.நி.போ.கூ0ரு.)

அத்துவாசுத்தி—ஆறத்துவாக்களிலுஞ் சஞ்சிதமாயிருந்த கன்மங்களையெல்லாம் நசிப்பித்தல். (உ-ம்) "அழிவிலாக் கிரியையினைலர்தல் சத்திமத்தாலாத லத்துவாசுத்திபண்ணிமலமகற்றி" (சி. சி. அ: கூ. சிவாக்.)

அத்துவாசுத்திபண்ணல்—அத்துவாக்களிலே சநநங்களுக்கு ஏதுவானகன்மங்களையெல்லாஞ் சுத்திகரித்தல். (சி. சி. அ: கூ.)

அத்துவாசைவம்—பதினறுசைவங்களிலொன்று; அது: சத்திநிபாதம்வரப்பெற்ற சீடன் சைவவேடங்களைத்தரித்து அத்துவசோதனைசெய்து அத்துவாக்களின் முடிவைத் தியாநித்துச் சிவனைவழிபடும் நெறி.

அத்துவாந்தம்—காலைமாலை வெளிச்சம். [அ-எதிர்மறை. த்வாந்த - இருள்.]

அத்துவாமூர்த்தி—மந்திரமுதலிய ஆறத்துவாக்களையுந் திருமேனியாகக்கொண்ட சதாசிவர்க்குப் பிராணபூதமாகிய பரமசிவன். (உ-ம்.) "அத்துவாமூர்த்தியாகவறைகுவதென்னையென்னி - னித்தனுய் நிறைந்தவற்றினீங்கிடாநிலைமையானுஞ் - சித்துடனசித்துக்கெல்லாஞ்சேட்டிதனுகலானும் - வைத்ததாமத்துவாவும் வடிவெனமறைகளெல்லாம்"

(சி. சி. க: ருசு.) [சாந்தியதீதை, சாந்தி, வித்தை, பிரதிட்டை, நிவிர்த்தி என்னுங் கலைகளைந்தும் முறையே முடி, முகம், மார்பு, குய்யம், முழந்தாள்பாதம் என்னும் அங்கங்களாகவும், புவநங்கள் உரோமங்களாகவும், வர்ணங்கள் தோலாகவும், மந்திரங்கள் இரத்தமாகவும், பதங்கள் நரம்பாகவுந், தத்துவங்கள் என்புந் தசையுமாகவுஞ், சதாசிவர்க்கு ஆறத்துவாக்களுந் திருமேனியாயின.[ஸ்வா ஸி-ஞ் த்தி-ம்.]

அத்துவானம்—1. செவ்வானம். 2. பாழ்ங்காடு.

அத்துவிதநிலை— சிவபெருமான்மாவுந்தம்முள்வேறற ஒற்றுமைப்பட்டுநிற்றல்(உ-ம்.)"அப்பெற்றித்தாகிய வருட்கண்ணை முதல்வனருவம் பார்த்திருநது கொடுக்கப்பெற்றுடையார்க்கேயவன் அறிவுக்கறிவாய்நின் றவ்வாறுபகரித் திவருமய அத்துவிதநிலையினிது விளங்குமென்பதாம்" (சி. சி. கக: அ. சிவஞா.)

அத்துவிதபாஷியம் — வியாசசூத்திரததிற்குச் சங்கராசாரியர் செய்தபாஷியம். இது பரமான்ம ஐக்கியமான அத்துவித சுவரூபத்தைக் கூறுவது.

அத்துவிதம்— 1. பேதப்பொருளிரண்டு தம்முள் அபேதமாதற்குரிய சம்பந்தவிசேடம். அஃதாவது பொருளிரண்டாயிருந்தும் வேறறக்கலந்து நிற்குந்தன்மை. (சிவஞானபோ.கஉ.சூ.டு.வெண்பா.சிவஞா.)2. இரண்டு பொருளாயிராமை. (உ-ம்.)"உண்மைச்சுத்தவத்துவிதமான சுயம்பிரகாசமாகும்" (திருவிளை. வேதத்து. உசு.) [ஸ்த்வய: அ - எதிர்மறை. த்வயம் - இரண்டுவகை.]

அத்துவிதர்—பரமான்மாவோடிரண்டறக்கலந்தவர்.(உ-ம்.) "துகளற்ற- அத்துவிதர்க்கேதுமுதியா" (ஒழிவி. அ: ந.)

அத்துவிதாநந்தம்—எண்வகை யாநந்தங்களிலொன்று; அது: சீவன் வேறு, பிரமம் வேறு எனக்கொள்ளுந் துவிதஞானம நீங்கிய விடத்துண்டான ஆநந்தம். (உ-ம்.) "விரியுமுலகனைத் தும்பொய் மெய்ம்மைதானென்னும் விவேகத்திற்றோன் றவதே யத்துவிதாநந்தம்" (வேதா. சூ. நடு.)[ஸத்விதா நந்த; ஸ்த்விதா - இரண்டின்மை. ஆநந்த- மகிழ்ச்சி.]

அத்துவிதீயம் — இரண்டாவதில்லாமை. [ஸத்விதீய: அ - எதிர்மறை. த்விதீய - இரண்டாவது.]

அத்துவை—1. காலம். 2. தூரம். 3. மூளை கோளைகளின்கரைவு. [ஸத்வா:]

அத்துவைதம்—1. இரண்டன்மை. 2. பரமான்மாவுஞ் சீவான்மாவும் ஒருபொருளென்று கொள்கை. 3. பிரமம். [ஸத்வைத; அ- எதிர்மறை. த்வைத - இருதன்மை.]

அத்துவைதவாதி—அத்துவிதமே மெய்யென்று சாதிப்போன்; இவன், சிற்சத்தியே சகத்துக்கு உபாதானகாரணமென்பன். (உ-ம்.) "அத்வைதவாதிநிராசார்த்தமாக" (சி. சி. உ: ருடு. சிவாக்.)

அத்துவைதி- அத்துவிதக்கொள்கையுடையோன (த. நி. போ. சுடு.)

அத்துாரம்—மரமஞ்சள்.

அத்தேயம்— 1. களவுசெய்யநினையாமை. (உ-ம்.) "எதிலார்தம் பொருள்களிலேதேனுங்கவரவெண்ணாமை - நீதிவாவத்தேயம்" (சூத. ஞாந. சங. எ.) 2. களவுசெய்யாமை. [ஸஸ்தேய: அ - எதிர்மறை. ஸ்தேய - களவு.]

அத்தை—1. அதனை. (அது வென்பது இரண்டாம் வேற்றுமை யுருபேற்றுநின்றது.) (உ-ம்.) "அத்தையறியாதே சுட்டி" (தாயு. ஆநந்தக்.கஅ.)2. ஒருமுன்னிலையசைச்சொல். (உ-ம்.) "நடுக்கின்றி நிலியரோவத்தை" (புறநா. உ: உ௦.) 3. கற்றுழை. (இராசவைத்.) 4. குருவின மனைவி. 5. தமக்கை. 6. தலைவி. (உ-ம்.) "அத்தைக்குமெய்ப்பங்களித்தோய்" (புலியூர். சுசு.) 7. பிதாவுடன் பிறந்தாள். (உ-ம்.) "கானிடையத்தைக்குற்ற குற்றமும்" (இராமா பாச. கசு.) 8. பெண்கொடுத்தமாமி. (உ-ம்.) "மாமியையத்தையைத் தோயின்" (கூர்மபு. பிராய. க.) 9. மாதா. [4, 5, 8, 9, அத்தா.]

அத்தோ— 1. ஓர் அதிசய இரக்கச்சொல். 2. ஓர் இரக்கச்சொல்.

அத்தோதயம்—அர்த்தோதயம்.

அத்தோர்யாமம்--1. ஒருயாகம். அது சோதிட்டோமயாகத்தின் இறுவாயாகிய எழாம் பகுதி. (உ-ம்.) "அத்தோர்யாமத்திருப்பேரீட்டுமகமிழைத்தபலத்தெட்டு மடங்கெய்திவென்" (சேதுபு. பலதீ. உ௦.) 2. சாமவேதத்திலுள்ள ஒருசுலோகம்; அது, அத்தோர்யாமமுடிவிலே அத்தியயநஞ் செய்யப்படுவது. [ஸஸ்தோர்யாம.]

அத்யுச்சம்—அத்துச்சம்.(உ-ம்.)"அறிவுறு மத்யுச்சமாமதற்கேழ் நீசமன்னவையே" (விதாந. நட்பா. உ.) [அதி+உச்சம்.]

அத்ர — இங்கே அல்லது இதுகாரியத்தி லெனப் பொருள்படும் ஒருவடமொழியவ்வி யயம். (உ-ம்.) "அத்ர சிற்சத்திப் பிரமாண மென்னும் பொதுப்பிரமாணமானது பிரமி தியாகாது" (சி. சி. அளவை. க. சிவாக்.) [ஸ்த்ர.]

அத்விதீயம்—1. இரண்டாவதாக உண்டெ ன்றுசொல்ல ஒன்றில்லாமை. 2. ஒப்புமை சொல்லவொன் றில்லாமை. 3. தனிமை. 4. பரப்பிரமம். [ஸ்த்வீதீய:அ - எதிர்மறை. த்விதீ ய - இரண்டாவது.]

அத்விதீயன் — 1. அத்விதீயத்தன்மையு டையான். 2. பரப்பிரமம். [ஸ்த்விதீய: அ - எதிர்மறை. த்விதீய.]

அத்வைதி— அத்துவைதி. (த. நி. போ. சூ.) [ஸ்த்வைதி.]

அநக்குதல்—1. இளக்குதல். 2. கசக்குதல். 3. குதப்பல். 4. கெடுத்தல். (உ-ம்.) "மாவலி யைக் குறும்பதக்கி" (நாலாயி. மரவடியை. திருவா. எ.)

அதகம்—1. சுக்கு. (தைல.) 2. பெருமரு ந்துக்கொடி. 3. மருந்து. (உ-ம்.) "மலைமறை யதகமாற்றியவதுபோல்"(கல்லா. அ.) [ஸ்ஆ மo.]

அதகன்—வைத்தியன். (உ-ம்.) "உறுதுய ரந் தீர்த்தவதகன்"(நாலாயி. மெய்ச்சுது. க.) [ஸ்மஆ:மெய்ந்நிலைமாற்றம்.]

அதங்கம்—ஈயம்.

அதங்கோட்டாசான்— அகத்தியமுனிவரி டங் கற்ற தொல்காப்பியா முதலிய பன்னி ரு மாணவர்களிலொருவர். (உ-ம்.) "அதங் கோட்டாசாற் கரிறபத்தெரித்து" (தொல். சிறப்புப்பா.)

அதசம்— 1. ஆயுதம். 2. ஆன்மா. 3. கா ற்று. 4. சணல் நூலினாலே செய்யப்பட்ட சீலை. [அதஸ்.]

அதசி—சணல். [அதஸீ.]

அதசிரசு— பரிதாபம் வரங்குவோர் புகும் நரகு.

அதசு—நாசம், [ஹத.]

அதசுரோதோபவம்— இருவகைச்சைவா கமங்களுளொன்று. "மற்றதிற்பிரமா கமமு ரை தருமம் விசேடமா மாயணகமஞ்சொ ன் - னற்றருமந்தான தனினும் விசேடமத னினு நயச்சைவா கமஞ்சொல் - பொற்ற ருமந்தான்விசேடமாம் புகலீததசுரோதோ பவமென்றும்-பற்றுறுசிர்சாலூர்த்துவசுரோ தோபவமென்றமிருவகைப்படுமால்" "மூன் னதுகாபாலாதிபேதத்தான்மொழிபலவிதப் படுமதனிற் - பின்னதுகாமிகாதிபேதத்தாற் பேசிடு மிருபத்தெண்வகையாய்"(சூத.எக்கி. பூ. உo. கங, கச.)

அதட்டம்— 1. அரவின்நச்சுப்பல். 2. அர வுயிர்ப்பு. [ஆப்தியென்னும் அகராதிகாரரால் "பல்லில்லாதது" "பல்லில்லாப்பாம்பு""பல் லுப்பிடுங்கப்பட்ட பாம்பு" எனவும், சிந்தா. பதுமை- கஉக- ல் நச்சினார்க்கினியரால் "பா ம்பின் கீழ்வாய்ப்பல்" எனவும் இச்சொற்குப் பொருள்கூறப்பட்டன.] [ஸ்ஓஷ்ட: ஓஷ்ட - பல்.]

அதட்டல்— 1. அமட்டல், புரட்டுநியாயம் பேசல். 2. உரப்புதல். (உ-ம்.) "கார்போற் குழற்சரியவேவாயதட்டி" (திருப்பு. உசுச.) 3. உருக்குதல். (உ-ம்.)"உரத்ததொனியோ டதட்டி" (நல். பார. உத்தர நிரை. நஙச.)

அதட்டு—1-3. அதட்டென்னேவலுந் தெ ரிநிலைவினைப் பகுதியும் பெயரெச்சத் தொ கையும். 4. உறுக்கு.

அதட்டுதல்— அதட்டல்.

அதடம்—மலைமுதலியவற்றின் சரிவில்லா த இறக்கம். [ஸ்தட: அ- எதிர்மறை. தட- சரிவு.]

அதத்துணலங்காரம்—பிறிதின்குணப் பே றின்மையணி. (குவல. எஎ.) [ஸ்தத்குணா லங்காரம்.]

அதத்தம்— அபலக்கொடை.[ஸ்தத்தம். அ- இன்மை. தத்தம் - பலக்கொடை.]

அதத்துவாவிருத்தி—சரீரம் முதலியவைக ளை யுத்தியால் நேதிகளைந்து எஞ்சிநின்ற ஆ ன்மாவைத் தெரிவித்தல். (உ-ம்.) "ஆகமுத லனநேதியதுசெய்துநின்ற வாருயிரையறிவி த்தலதத்துவாவிருத்தி"(வேதா-சூ.உக.) [ஸ் தத்வாவ்ருத்தி: ஸ்ததீ - அதுவல்லாதது. வ்யாவ்ருத்தி - நீக்குதல். யகரங்கெட்டு வாவி ருத்தியென்முயிற்று.]

அதத்துவியாவிருத்தம்— மற்றைப்பொரு ளிலிருந்து நீக்கி இலக்கியத்திலிருக்கும் இல க்கணம். (சைவப். உ.) [ஸ்தத்வ்யாவ்ருத்த.]

அதநம்— 1. அதிகம. (அதநு என்பதன் திரிபு.) 2. போதல். [ஸ்தந.]

அதநு— 1. அற்பமல்லாதது. 2. பருமையானது. [ஸ-த-ந்: அ- எதிர்மறை. த-நு- அற்பம்.]

அதபம்—குளிர்ச்சி. [ஸ-தவ.]

அதபலோகம்— (பௌத்தம்) பிரமலோகம் இருபதனுட் பதின்மூன்றாவது. (மணிமே. பதிக. பக். ௩.)

அதம்—1. அத்திமரம். 2. கீழ். 3. சங்காரம். (உ-ம்.) "அதமுறமடிந்தபின்னர்" (ஞானவா. வீமபா. கசு.) 4. பள்ளம். 5. பாதாலம். 6. பின்பு. [2, 4, 5. ஸ்அத: . 3. ஹத. 6. ஸ்அத.]

அதம்பம்—கற்பரிபாஷாணம்; அது, இயற்கைப்பாஷாணம் முப்பத்திரண்டிலொன்று.

அதம்புதல்— அதட்டுதல். [வழக்.]

அதமசரீரம்— பரலோக இகலோகபுத்திகள் இல்லாதிருக்கின்ற சீவனைக்கொண்டசரீரம்: கற்பகவிருட்சம், பாரிசாதம்முதலாயின அதமசரீரம். (நானா. கட். கடு-வது.) [ஸஅத; ஶரீர.]

அதமசிருட்டி— ஐவகைச்சிருட்டிகளுள் ஒன்று; இச்சிருட்டிகாலத்திலே குணநிலயப்பிரமவிட்டுணுக்களும் பிரமாண்டநிலயப்பிரமவிட்டுணுக்களுங் குணதிபிருதிவியாதி புவநங்களிற் போக்கியப்பொருள்களையுந் தூலதேகங்களையும் தேவர்முதலிய தேகிகளையும் படைத்துக் காப்பர். (சைவப். ருஅ.) [ஸஅத - கீழான. ஸ்ருஷ்டி - படைப்பு.]

அதமத்தோற்கருவி — முழவேழ்வகையிலொன்று; அது: கணப்பறைமுதலான புறமுழவும், நெய்தற்பறைமுதலான புறப்புறமுழவுமாம். (சிலப். அரங்கே. உஎ. உரை.)

அதமநமப்பிராரத்தம்— அதமதரப்பிராரத்தத்தினும் அதிகப்பட்டபிராரத்தம்; அது: இட்டப்படிநடத்தல், புசித்தல் முதலியபிரமாதங்களுக்கேதுவானது. (விசாரசா. ௩கக.) [ஸஅத-தம-ப்ராரப்த. ஸஅத-தம - இழிந்தனபலவினிழிந்தது. ப்ராரப்த - பயனளிக்கத்தொடங்கும் வினை.]

அதமதரப்பிராரத்தம்— கனிட்டப்பிராரத்தத்தினும் அதிகப்பட்டஅதமமானபிராரத்தம். அது, முதலிலே நிவிர்த்திக்கும் பின்பிரவிர்த்திக்குங் காரணமானது. (விசாரசா. ௩கக.பக்.) [ஸஅத-தர-ப்ராரப்த. ஸஅத-தர - இழிந்தவையிரண்டிற்றாழ்ந்தது]

அதமதாநம்— கடைப்படுதாநம்; அது: ஆசை, புகழ், அச்சம், கைம்மாறு, கண்ணோட்டம், கடப்பாடு முதலிய காரணம்பற்றிக் கொடுக்கப்படுங்கொடை. (திவாகர. கஉ.) [ஸஅத- இழிந்தது. தா௩ம் - கொடை.]

அதமபட்சம்—மிகக்குறைந்தபடி. [ஸஅத; பக்ஷம்.]

அதமபிருதகன்—சுமைகாரன். [ஸஅதப்ருதக: ஸஅத -கீழான. ப்ருதக - வேலைசெய்வோன்.]

அதமம்—1. கடைத்தரம். (உ-ம்.) "தங்காவதமப்புகழ்க் கம்ப" (கம்பரங். ருக.) 2. மிக்ககேடு. [ஸஅத.]

அதமர்— கடையாயார், கடைத்தரமானவர். (உ-ம்.) "கம்பவாழ்தருமந்தாதமர்க்கெட்டார்" (கம்பரங். சுஉ.)

அதமர்ணிகன் — கடன்வாங்கினவன். (உ-ம்.) "உபாயமாவது அதமர்ணன் பந்துக்களைக்கொண்டு அவனுக்கு நல்வார்த்தை சொல்லியாவது"(மநு. அ: சக.) [ஸஅதமர்ணிக: ஸஅத - கீழான. ருணிக - கடனுடையவன்.]

அதமவாசான்—மூவகைக்குரவருட் கடைத்தரமானவன்; இவன், வைசியர்க்குஞ் சூத்திரர்க்குங் குரு. (உ-ம்.) "நாய்சர் குலத்துள்ளானதமவாசான்" "அதமவாசான்வைசியர்க்குமொழுக்கம்பூண்ட விழுக்குடிச்சூத்திரர்க்குமேதகு குரவனுவான்" (சூத. முத்தி. ரு: ௭, ரு.)

அதமவிஞ்சதி—பிரபவ முதலிய அறுபதுவருடங்களிலே தீதாக விளங்குங் காலமாகிய பின்னிருபது வருடம். (பரிதம். ரு.)[ஸஅத - தாழ்ந்த. விம்ஶதி - இருபது.]

அதமன்—1. அதிகங்கீழானவன். 2. நாணமில்லாக்காமி. [ஸஅத.]

அதமாங்கம்—பாதம். [ஸஅதாங்க:ஸஅத-தாழ்ந்த. அங்க - உறுப்பு.]

அதமாதமன்—மிக்கீழ்மையானவன். [ஸஅதாஅத.]

அதர்— 1. ஆட்டின் கழுத்திலே கழலைபோலத்தூங்குமது. 2. இடங்கு. 3. நுண்மணல். 4. புழுதி. 5. முறைமை. (இராசவைத்.) 6. வழி. (உ-ம்.) "ஆனினங்கலித்தவதர்" (புறநா. கஙஅ.) 7. விலங்குசெல்வழி. (உ-ம்.) "தேக்குயர்கல்லதர்கடிதுசேணிடைப்- போ

க்கியபொருளெனக்கின்றுபோந்ததால்" (இராமா. மந்தரைசூ. ருக.)

அதர்க்கன்—குதர்க்கி [அதர்க்க: அ-எதிர்மறை. தர்க்க நியாயம்பேசுவோன்.]

அதர்கொளல்—வழியிற் பறித்தல்.

அதர்கோள்— வழிப்போக்கருடைய பொருளைப் பறித்தல். (திவாகர. கூ-வது.) [அதர்-வழி. கோள்- கொள்ளல்.]

அதர்பறிந்தல்—கிடங்குவெட்டல்.

அதர்மசாரி—அதர்மவழியிற் செல்லுவோன். [அதர்மசாரிந்: அதர்ம - தருமமல்லாதது. சாரிந் - சார்பவன்.]

அதர்மாசாரி—துராசாரி. [அதர்ம; ஆசாரி.]

அதர்மம்—தருமமல்லாதது, பாவம்; அது, வேதத்தில் விதிக்கப்பட்டன செய்யாமையும் விலக்கப்பட்டன செய்தலுமாம். [அதர்ம: அ - எதிர்மறை. தர்ம - நற்செயல்.]

அதர்மன் — சதருத்திரருள்ளே இயமதிசையி லிருக்குந் தசருத்திரருள் ஒருவன். (வி. ணி. உ௭௦.)

அதர்மாத்திகாயம்—அதருமாத்திகாயம்.

அதர்வசிகை— அதர்வணவேத உபநிடதத்தொன்று. (உ-ம்.) "நானமறைத்தலையாமதர்வசிகை நவிலும்" (காஞ்சிபு.சார்ந்தா.கசு.) [அதர்வஶிகா.]

அதர்வசிரசு— அதர்வணவேத உபநிடதத்தொன்று. (சி. சி. அ: கக. உரை. மறை.) [அதர்வஶிரஸ்.]

அதர்வசிரம்—அதர்வசிரசு.

அதர்வணம்—நான்காம் வேதம். (உ-ம்.) "வியன்புருடம் விழுத்தகு மதர்வணமயமாம்" (திருவானை. கோச்செங். கஉஎ.) சுமந்து முனிவர்க்கு உபதேசிக்க, அவர் வழியாகக் கபந்தர், தேவதரிசர், பத்தியர், மேதன், பிரமபலி, சவுல்காயனி, பிப்பலாதன், சாபாலி, குமுதாதி, சௌநகர் முதலாயினோர்க்கு உபதேசிக்கப்பட்டமையால் ஐம்பதுசாகைகளாயிற்று. (கூர்மபு. வருண. கஉ. உரை.) இது முன்னைய மூன்று வேதமும் போலாது இடையாய வேதமென்றும் வேள்வி முதலிய ஒழுக்கங் கூறாது பெரும்பான்மையும் உயிர்கட்கு ஆக்கமேயன்றிக் கேடுசூழும் மந்திரங்களையுங் கூறுமென்றும், நச்சினார்க்கினியர் சொல்வர். (தொல். பொரு.எரு. உரை.) [அதர்வ.]

அதர்வணவேதோபநிடதங்கள்— அதர்வணவேதத்திற்குரிய உபநிடதங்கள்; அவை:- காருடம், தத்தாத்திரேயம், அயக்கிரீவம், கிருஷ்ணம், கோபாலதபநம், பிரச்சிநம், திரிபாத்வீயமகாநாராயணம், இராமரகசியம், முண்டகம், மாண்டூக்கியம், அதர்வசிரசு, அதர்வசிகை, கணபதி, மகாவாக்கியம், பஸ்மசாபாலம், பாவனை, தேவி, திரிபுராதபிநி, பரப்பிரமம், பாசுபதம், ஆத்மம், சூரியன், அன்னபூரணை, பிருகச்சாபாலம், நரசிம்மதாபநி, நாரதபரிவிராசகம், சீதை, இராமதாபநி, சரபம், சாண்டில்லியம், பரமகம்சபரிவிராசகம் என்னுமுப்பத்தொன்றும். (கூர்மபு. அட்டமூ. உசு. உரை.)

அதர்வணன்—சிவன். [அதர்வண: அதர்வ - நான்காம்வேதம். ண - ஒருவிகுதி.]

அதர்வணி— அதர்வவேதத்திலே நற்பயிற்சியுடைய பிராமணன். [அதர்வணி: அதர்வ - நான்காம்வேதம். ணி- ஒருவிகுதி.]

அதர்வம்—நான்காம்வேதம். (உ-ம்.) "அதர்வவேதம்"

அதர்வவேதம்—நான்காம்வேதம். (உ-ம்) "விண்டதர்வவேதமு" (காஞ்சிபு. ஒவரவ. கஉ.) [அதர்வவேத.]

அதரபானம்— அதரத்திலூறும் நீரைச்சுவைத்தல். (உ-ம்) "பற்பலர்க்களித்தனரதரபானமே" (உபதேச. திரிபுர.கசுப.) [அதரம்-உதடு. பானம்-குடித்தல்.]

அதரம்—1. இழிந்தது. 2. உதடு (உ-ம்.) "மணியதரம் புடைதுடிப்ப" (பெரியபு. திருஞாந. சுஉ.) 3. கீழுதடு. (பிங்க. க௦௩௭.) 4. கீழுள்ளது. 5. பெண்குறி. [அதர.]

அதரமதம்— இதழூறல். [அதர; மது-தேன்.]

அதரமது— அதராமிர்தம்.

அதராமிர்தம்—அதர ஊறல். [அதராம்ருத: அதர - உதடு. அம்ருத.]

அதராவலேபம்— இதழதுக்கல். [அதராவலேப: அதர - உதடு. அவலேப - அதுக்கல்.]

அதரிகொள்ளுதல்—கடாவிடுதல். (உ-ம்.) "அதரிகொள்பவர்" (மதுரைக். கூச.)

அதரிசநம்—காணப்படாதிருத்தல். 2. சொல்லுத்தொக்கு நிற்றல். 3. பார்வையின்மை. [அதர்ஶந: அ- எதிர்மறை. தர்ஶந-பார்வை.]

அதரிசநன்—1. கடவுள். 2. குருடன். [ஸ ...: கடவுளுக்குக், காணப்படாதவன் என்பது பற்றியுங்; குருடனுக்குப்,பார்வை இல்லாதவன் என்பதுபற்றியும் வந்தபெயர்.]

அதரிசி—அதரிசநன்.

அதரித்திரன்—1. கன்னன். 2. செல்வன். [ஸ...]

அதரிதிரித்தல்—கடாவிடல். (உ-ம்.) "கோட்டுமாப்பூட்டி வாட்கோலாக வாளழிவாங்கி யதரிதிரித்த" (சிலப். கால்கோ. உகக.)

அதருமம்—அதர்மம். (தர்க்கபா. சுங)

அதருமாத்திகாயம்—அதன்மாத்திகாயம். (உ-ம்.) "நிரந்துகிழதருமாத்திகாயமது நித்தமாயது நிறுத்திடும்" (சி.சி. பர. நிகண். எ.)

அதலகுதலம்—கலகம். (வழக்.)

அதலம்—கீழுலகத்திலே முதலாவதான உலகம். (உ-ம்.) "அதலவிதலமுதலந்தத்தலங்களென்னக்" (திருப்பு. கஉடு.) 2. பாதலம். (உ-ம்.) "வம்பறுவதலமேழும்பதங்களாய்" (நல்பார. தருமசாத். சுக) [அதல: அ-எதிர்மறை. தல-அடி.]

அதலமூலி—ஆடுதின்னாப்பாளை.

அதலன்—சிவன். [அதல.]

அதவம்—1. அத்திமரம். (உ-ம்.) "அதவமாம் நறுநெயுண்டெலிலன்பர் கருதிற் - றுதவு சேவடியினுலமலனுந்துதனுமே" (இராமா. விராதன்வதை. சுடு.) [ஸ...]

அதவா—அல்லதென்பதை யுணர்த்தும் ஒருவடமொழி யவ்வியயம். (உ-ம்.) "மழுவாளியுரைசெய்த சாபத்தையுறவுன்னினுன் - அதவாமுரட்போர்தனக் கஞ்சுமோவென்று மடலங்கர்கோன்" (பாரத. பதினே. உகஉ.) [ஸ...]

அதவிடம்—அதிவிடயமூலிகை. [இது அதிவிடயமென்பதன் மரூஉ.]

அதவு—1. அத்திமரம். (உ-ம்.) "அதவுதிரசியன்ன" (கல்லா. கஅ.) 2. பள்ளம். [ஸ...]

அதவுதல்—கொல்லுதல். (உ-ம்.) "முதலை மடுவினிலதவிய புயலெனு" (திருப்பு. உஎஅ.)

அதழ்—பூவிதழ். (உ-ம்.) ஞெகிழதழ்க்கோடலும்" (கலித்தொகை. முல்லை. க.)

அதள்—1. களகம்பளம். 2. தோல். (உ-ம்.) "அதளெறிந்தன்ன" (புறநா. கககு.) 3. பட்டை. (உ-ம்.) "வேங்கையதள்" (தைல. தைலவ. சுசு.)

அதள்புனையரணம்—தோற்கைத்தளமென்னுங்கருவி. (உ-ம்.) "அதள்புனையரணமும்" (சிலப். ஊர்காண். கஎ0.)

அதளி—ஆரவாரம். (வழக்.)

அதளை—1. ஒருபெரும் பாத்திரம். 2. நிலப்பீர்க்கஞ்செடி. (உ-ம்.) "அதளைக்காய் வாய்க்குருசியாயிருக்கும்" (பதார்த்த. எகூ0.) 3. புளியம்பழக்களியுண்டை. 4. வயலிற்கட்டுங் காவற்குடில்.

அதறுதல்—பதறுதல். [திசைச்.]

அதன்மம்—பாவம். (உ-ம்.) "அருளினுமைத்தநூலின்வழிவராததன்மஞ்செய்யின்" (சி. சி. உ; கக.) [ஸ...]

அதன்மாத்திகாயம்—சமணமதத்திற்சொல்லிய அசீவ பதார்த்தத்தினது நான்குவகையுள் ஒன்றாய்த் தீமைபயப்பதோரத்திகாயம். (சிவஞானபா. கடு, கசு. பக்.) பாவத்தினுலெடுக்குந்தேகம். (சி. சி. பர. நிகண். எ. உரை.)

அநாசலம்—காட்டுமல்லிகை.

அநாதா—உலோபி. [ஸ...: அ- எதிர்மறை. ...- கொடையாளி.]

அநாதிமந்தம்—அநாதிமந்தரோகம்; அது: அதிமந்தரோகம் ஐவகையுள் ஒன்று. (சீவரட். உகுக.) [...]

அநாதிமந்தரோகம்—கண்களிலே விரணத்தைப் பிறப்பித்துப் பார்வையைக்கெடுக்கும் ஒருவகைநோய். (சீவரட். உகுக.)

அநாதிரு—1. லோபி. 2. (மகளை) விவாகம்பண்ணிக்கொடாதவன்.

அநாது—தாதுவல்லாதது. (உ-ம்.) "அருத்தவத்தாதப்பிரத்தியமாகித் - திருத்தகநிற்பது பிராதிபதிகம்" (பி. வி. எ. உரை.) [ஸ...: அ- எதிர்மறை. ... - வினைப்பகுதி.]

அநாயன்—தாயத்துக் குரிமையில்லாதவன். [ஸ...: அ - எதிர்மறை. ... - தாயத்திற்குரியவன்.]

அநாரன்—விவாகஞ்செயயாதவன். [ஸ...: அ- எதிர்மறை. ... - மனையாளையுடையவன்.]

அநாலத்து—நியாயஸ்தலம். [அராபி.]

அதி—அதிகம், அப்பால், மேல், மேன்மையென்பவைகளையுணர்த்தும் ஒருபசர்க்கம். [அதி.]

அதிக்கம்—மேன்மை. (உ-ம்.) "அதிக்கமன்னவர்முகம்" (இரகு. கடிமண. ௬௦.)

அதிக்கிரமம்—1. அசட்டை. 2. அதிகப்படல். 3. கடந்துபோதல். 4. கேடுசெய்தல். (உ-ம்.) "அன்னதன்மையனதிக்கிரமங்கள் கேட்டு" (இராமா: உத்த. வரையெடு. உ.) 5. மாறுபடுதல். 6. மீறுதல். [அதிக்ரம: அதி-அப்பால். க்ரம-போதல்.]

அதிக்கிரமித்தல்— 1. அசட்டைசெய்தல். 2. இல்லாதுபோதல். 3. கடத்தல். (உ-ம்.) "அழிவற்றபரமேசுரன் நியதியாகப்பொருந்திய இதை யார் அதிக்கிரமிப்பார்கள்" (ஞாநவா. புசுண். ௩௧. உரை.) 4. கழித்தல், நீக்குதல். 5. குறுக்கேபோதல். 6. தப்பிப்போதல், விலகுதல். 7. போகவிடுதல். 8. மேற்படுதல். (உ-ம்.) "காமங்கோபமதிக்கிரமிக்குமண்மேல்"(மச்சபு. மந்வந்தர. ௩௩.) 9. விடுதல். 10. விலகுதல்.

அதிக்கிராந்தம்— 1. அவமதிக்கப்பட்டது. 2. எல்லைகடந்தது. 3. சென்றுபோனது. 4. மட்டற்றது, மிகுந்தது. 5. வெறுக்கப்பட்டது. [அதிக்ராந்த: அதி - மேல். க்ராந்த- போனது.]

அதிக்கிராந்தவிந்துகபரசிவம்—அதிக்கிராந்தவிந்துகபரசிவன். (கூர்மபு. திருக்கல். ௬. உரை.)

அதிக்கிராந்தவிந்துகபரசிவன்—சிவன் ஆன்மாக்களுடைய அறிவுக்குப் புலப்படும்பொருட்டுத் தனது சிற்சத்தி சந்நிதிமாத்திரத்திலே தோற்றுவித்த சிவபேதம் ஒன்பதனுள் முதலாவதாகிய நிட்களசிவம். இவர் விந்துவைநீங்கிய இலயராதலால் அதிக்கிராந்த விந்துகபரசிவனெனப் பட்டார். (சி.சி. உ: எச. ஞாநப்.)

அதிக்கிராந்தவிந்துகபராசத்தி—சுத்த மாயையாகிய விந்துவுக்கு மேற்பட்ட விந்துவை யதிட்டிப்பவளாய் அதிக்கிராந்தவிந்துகபரசிவத்துக்குச்சத்தியாக நிற்பவள்; இந்தச்சத்தியை அதிக்கிராந்தவிந்துகபரசிவந்தோற்றுவித்தது. (சி. சி. உ; எச. ஞாநப்.)

அதிக்கிராமகன்— கிரமந் தவறி நடப்பவன். [அதிக்ராமக: அதி - அப்பால். க்ராமக-நடப்பவன்.]

அதிக்கிராமம் — வைத்தீசுரன்கோயில். (உ-ம்.) "அம்பலமாரூர்காசி காளத்தி விருத்தகிரி அதிக்கிராமம்"(கடம்பவன. இலீலாசங். அஉ.)

அதிக்குதி—1. ஒவ்வாதநடை. 2. செருக்கானநடை. [வழக். அதிகக்குதி என்பது அதிக்க்குதி எனமரீஇயிற்றுப் போலும்.]

அதிகசிநம்— பெருஞ்சிரிப்பு. [அதிஹஸித: அதி - அதிகம். ஹஸித - சிரிப்பு.]

அதிகடம்—யானை.

அதிகண்டம்— நித்திய யோகங்களிருபத்தேழனுள் ஆறுவது. இதில் ஆதியில் எழுநாழிகை கழித்து எஞ்சியகாலஞ் சுபகாரியத்திற்குக்கொள்ளப்படும்.(உ-ம்.)"கண்டாதிகண்டத்துக்கேழ் கன்னல்" (விதாந. பஞ்சாங்க. உச, உ௫.) [அதிமணு:] 2. மரணவத்தை.

அதிகதம்—1. அடையப்பட்டது.2. அறியப்பட்டது. 3.சென்றது. 4.படிக்கப்பட்டது. [அதிகத: அதி - மேல். கத - சென்றது.]

அதிகதை— பயனில்சொல், வீண்பேச்சு. [அதிகதா: அதி - அதிகம். கதா - பேச்சு.]

அதிகந்தம்— 1. அதிகமணமுடையது. 2. ஒரு வாசனைப்புல்லு. 3. கெந்தகம். 4. சண்பகமரம். [அதிகந்ய: அதி - மேன்மை. கந்ய-வாசனை.]

அதிகநாரி— கொடிவேலிப் பூண்டு.

அதிகப்பிரசங்கம் — 1. தன்மேம்பாட்டுரை. 2. மட்டுக்குமிஞ்சிப்பேசுதல்.

அதிகப்பிரசங்கி— மட்டுக்கு மிஞ்சிப்பேசுவோன். [வழக்.]

அதிகம்— 1. அடையாளம். 2. இலாபம். 3. ஏற்றம். (உ-ம்.) "போகந்துய்ப்பரொன்றற்கொன்றதிகமாக" (சூத. முத்தி. உ: உ௬.) 4. ஓரலங்காரம்; அது:- "உலகமுழுதடங்குமாவிசும்பிலுன்ற, னலகில்குணமடங்காவாம்" என்றாற்போலப் பெரிய ஆதாரத்தினும் ஆதேயத்தைப் பெரிதாகச் சொல்லுதலும் "மன்சீருலகெவ்வளவுபெருமைத் தளவிலுன்சீரடங்கியுள" என்றாற்போற் பெரிய ஆதேயத்தினும் ஆதாரத்தைப் பெரிதாகச் சொல்லுதலுமாம்.(இலக்கணவி. பக்.ககக. விசாக.) 5. குருக்கத்திமரம். 6. சேனை. 7. நிக்கிரகத்தாநம் இருபத்திரண்டினொன்று; அது: ஒன்றற்குப் பலகூறுதல். (சி.சி. அளவை. கச.) 8. பொலிவு. 9. மிகுதி. (உ-ம்.) "ஞாநங்களதிகநோக்கிநுகர்விப்பன்" (சி. சி. உ: உக.) 10. மேன்மை. (உ-ம்.) "அதிகமாயினதிருப்பணி" (பெரியபு. ஏயர்கோ. எ.) [அதிக.]

அதிகமாதம்— இரண்டுசங்கிரமங்களுக்கிடையில், இரண்டுசந்திரோதயம்வரும் மாத

ம், அது: சூரியகெதியால் முப்பத்திரண்டு மாசமும் பதினாறுநாளும் முப்பதுநாழிகையும் ஐம்பத்தைந்துவிநாழிகையுஞ் செல்லச்செல்லவரும். (விதாந. குணகுண. அக, அஉ. உரை.) [அதிகமாஸ.]

அதிகமாதாபவாதம்—அதிகமாஸதோஷநிவிர்த்தி. (விதாந. குணகுண. அச - ஆங் கவிமுகம்.)

அதிகர்ந்தபி--இருபத்துநால்வகை அக்கினிகேடங்களுளொன்று. (சீவரட். ௯சக.)

அதிகரணத்துவம்— அதிகரணமாயிருக்குந்தன்மை.

அதிகரணம்— 1. அதிட்டித்தல். (சி.சி. க: கடு. மறை.) 2. இருப்பு. (உ-ம்.) "அதிகாரத்தோடதிகரணத்தினுமே"(சி. சி. க: சுடு. ஞாநப்.) 3. உரிமை. 4. தன்னுற் கூறப்படும் பொருளும், அதன்கணையப்பாடும், அதற்குப் பிறர்கூறும் பக்கமும், அதனை மறுத்துரைக்குஞ்சித்தாந்தத்துணிவும், இயைபுமென்னுமிவற்றது நிலைக்களம். (சிவஞானபோ. க: வார்த்தி. கருத்துரை. சிவஞா.) 5. பதார்த்தம். 6. பிரதிஞ்ஞை. 7. மேன்மை, சிரேட்டம். [அதிகரண: அதி - மேல். கரண- செயல்.]

அதிகரித்தல்—1. அதிகப்படுதல். (உ-ம்.) "தீ - அதிகரித்த குந்தனை" (தைல. தைலவ. க௯.)2. அதிகாரஞ் செலுத்துதல், ஆணையினடப்பச்செய்தல். (நன். விருத். எழுத்ததிகாரம் என்பதனுரை.) 3. அதிகாரத்தோடு பொருந்தவருதல். (உ-ம்.) 'அதிகாரமாவது எடுத்துக்கொண்ட அதிகாரமிதுவாதலின் இச்சூத்திரத்ததிகரித்த பொருள் இதுவென அவ்வதிகாரத்தோடு பொருந்த உரைத்தல்.' (நன். பொது. உக. விருத்.) 4. உரிமைபூண்டுகொண்டாடல். (உ-ம.) "மறைமொழிகளையதிகரிக்கும்பிராமணர்" (சிவதரு. பாயிர. கூ. உரை.) 5.தலைமைப்பட்டுநிற்றல். (உ-ம்.) 'எழுத்ததிகாரம்' என்பதற்கு எழுத்து அதிகரித்தல் எனப்பொருள் கூறுவாருமுண்டு. (நன். எழுத்ததி. இராமா.) [அதிகார.மூல.]

அதிகல்—காட்டுமல்லிகைச்செடி.

அதிகவுச்சம்--அத்யுச்சம். (உ-ம்.) "அதிகவுச்சநதனையுரைக்கிற் கதிரவனுக்குத்தானுனமேடந்தனிலே பாகையொருபத்தா - மதிதனக் கேரிடபத்திற்றான் மூன்றுபாகைவருஞ்சேய்க்கு மகரத்திலிருபத்தெட்டாகுந் - திதிபுதற்குக் கன்னியினிற் பதினைந்துபாகை - சொற் குருவுக் கேகடகந்தனிலைந்து பாகை - புதிய புகர்க்கேமீனிலிருபத்தேழ்பாகைபுகழ்ச்சங்க்குக் கோவிலிருபதுபாகையென்பார்" (சாதகசிந். கஉக.) [அதி; உச்ச.]

அதிகற்றதி—கொடிவேலிப்பூண்டு.

அதிகன்— 1. அதிக்கன், மேற்பட்டவன். (உ-ம்.) "மூவர்தம்மினுமதிகனென்றால்" (இராமா. ஊர்தேடு கஉ.) 2. ஒருவள்ளல்; இவன், தனக்குக்கிடைத்த அமிழ்து விளையுங்கருநெல்லிக் கனியைத் தானுண்டு உடம்பு பெறாதே ஔவைக்குக்கொடுத்தோன். (சிறுபா. பக்.அக.) 3. சிவன். (உ-ம்.)"அதிகன்வேணியிலார்தரு கஙகையை"(கந்தபு. திருக்கயி. உ௦.) [அதிக.]

அதிகாகம்— காகத்தின்மேல். (பி. வி. காரக. சூ.உரை.) [அதிகாக: அதி - மேல். காகம் - ஒருபறவை.]

அதிகாங்கிஷை—பேராசை. (த. நி. போ. உஎஎ.)[அதி- அதிகம். காங்க்ஷா_ விருப்பம்.]

அதிகாசம்—பெருஞ்சிரிப்பு.[அதிஹாஸ: அதி - அதிகம். ஹாஸ - சிரிப்பு.]

அதிகாந்தம்— 1. ஒருவிலையுயர்ந்தகல். 2. செவ்வானம். 3. பேரழகு. [அதி - அதிகம். காந்தம்- உயர்ந்தகல். க- சூரியன். அந்த- முடிவு; காந்தம்- அழகு.]

அதிகாயன்—1.இராவணன்புதல்வருளொருவன். (இராமா. அதிகாய. எக) 2. மிசப்பெருஞ் சரீரமுடையவன். [அதிகாய: அதி- அதிகம். காய- சரீரம்.]

அதிகாரசத்தி—1. சிருட்டியாதி அதிகாரஞ்செய்யுஞ் சாமார்த்தியம். (உ-ம்.) "புரைத்ததிகாரசத்தி புண்ணியனண்ணலாலே" (சி. சி. க: ௬௪. ஞாநப்) 2. சிவன்; இலயம், போகம், அதிகாரம் என்பவைகளுள் அதிகாரவவத்தையிலிருக்கும்போ தவரோடுநிற்குஞ் சத்தி. (சி.சி. உ: எகு. மறை.)[அதிகாரசக்தி.]

அதிகாரசத்திகள்— பிரமாவை யதிட்டித்துச் சிருட்டி செய்யும் வாமையும், விட்டுணுவை யதிட்டித்துத் திதிசெய்யுஞ் சேட்டையும், காலருத்திராரை யதிட்டித்துச் சங்காரஞ்செய்யும் ரோதயித்திரியுமாகிய சத்திகள். (சி. சி. க: ௬௪. மறை.)

அதிகாரசிவன்— மகேசர்; இவர் சுத்தமாயையிலே உற்பங்நகாரியத்தைச்செய்வதினால் அதிகார சிவன் எனப்படுவோர்.(பௌட். பதி. உக.) [அதிகாரசிவ:]

அந்தகசயன்— யமனை வென்றோன், சிவன். [அந்தகஜய: அந்தக- யமன். ஜயன்- வென்றவன்.]

அந்தகசந்நிபாதசுரம்—ஒருவகைச்சந்நிபாதசுரம்; அது: மறதி, அடிக்கடி தலைநடுக்கமுதலிய குணங்களையுண்டாக்கும். (சீவரட். உஅ.) [அந்தக- முடிவு. ஸந்நிபாத- விழுதல். ஜ்வர - காய்ச்சல்.]

அந்தகம்— 1. ஆமணக்கமரம். 2. ஒரு சந்நிநோய்.

அந்தகர்—1. அறிவிலிகள். [அந்தக] 2. குருடர். (உ-ம்.) "அந்தகர்செவிடராதுலர்" (நல். பார. வேள்வி. ருக.)[அந்தக.]

அந்தகரணம்— குருடாக்கல். [அந்தகரண: அந்த- குருடு. கரணம்- செய்தல்.]

அந்தகரன்—அழிப்போன். [அந்தகர: அந்த- அழிவு. கர- செய்கிறவன்.]

அந்தகரிபு—சிவன். [அந்தகரிபு: அந்தக- ஓரசுரன். ரிபு - பகைவன்.]

அந்தகன்—1. அந்தம்வரையுஞ் செல்லுகிறவன், நன்றாகப்பயின்றவன். [அந்தக: அந்த- முடிவு. க - செல்லுகிறவன்.] 2. அழிப்போன். [அந்தக.] 3. யமன். (உ-ம்.) "இருளுடலந்தகன்"(கல்லா. உகூ.)[அந்தக: அந்த- முடிவு. க-விகுதி.] 4. ஓர் யமதூதன். (உ-ம்.) "நெரித்தபுருவத்தினொடந்தகனுநீட" ( சிவதரு. சுவர்க்கநரக. அஎ.) [அந்தக.] 5. ஓரசுரன். (உ-ம்.) "அவுணரிற்கள் வனைவந்தகற்காய்ந்து" (திருவிளை. அருச். ககூ.) [அந்தக.] 6. குருடன். [அந்தக: அந்த- குருடு. க - விகுதி.] 7. சனி. 8. சவுக்காரம். 9. புல்லுருவி. 10. மரித்தவன். [அந்தக: அந்த-முடிவு. க - சென்றவன்.] 11. அக்கினி.

அந்தகாசுகிருந்து—சிவன். [அந்தகாஸுரஹ்ருத். அந்தக: ஓரசுரன். அஸுரஹ்ருத்- பகைவன்.]

அந்தகாந்தகன் —சிவன். (உ-ம்.) "அந்தகாந்தகனம" (பாகவத. கைலா. கஎ.) அந்தக - யமன். அந்தகன்- முடிவுசெய்தோன்.]

அந்தகாரம்—1. அஞ்ஞானம். (உ-ம்.) "இருவினைமும்மலம் போர்த்தவந்தகாரப்படலவிருணீத்து"(மச்சபு. கடவு. கசு.) 2. இருள். (உ-ம்.) "பகவருமந்தகாரம் படர்தாவிருந்தகாலை" (சூத. சிவ. கஉ. உ.) [அந்தகார. அந்த- குருடு. கார- செய்வது.] 3. நரகம்.

அந்தகாரி—1. சிவன். (உ-ம்.) "தக்கவெக்கிய விநாசகனந்தகாரி" (சூத. எக்கி. பூ. ருரு: ரு.) [அந்தக. அரி - பகைவன்.]

அந்தகாலம்—மரணகாலம். (நாலாயிர. முத. திள. பக்.) [அந்த- முடிவு. காலம்.]

அந்தகூபம்— 1. ஒருநரகம். 2. செடிகள் வளர்ந்துவாய்மறைந்திருக்குங்கிணறு. [அந்தகூப: அந்த- குருடு. கூப- கிணறு.]

அந்தகோ— ஐயோஎனப் பொருள்படும் ஓர் இரக்கச்சொல். (உ-ம்.) "அந்தகோவிதுவருவதே யெனக்கென வயர்ந்தான்" (வேதார. பிரமசா. உஉ.)

அந்தகோரம்
அந்தகோலம் } நெல்லிமரம்.

அந்தகோலாங்கூலநியாயம்— மீமாஞ்சையிற் சொல்லப்பட்ட நியாயங்களுளொன்று; அது:ஒருகுருடன் பிறர் வார்த்தையை நம்பி ஊர்க்குப்போகலாமென்று ஒரெருத்தின் வாலைவிடாமற்பிடித்துப்போய் நட்டம் அடைந்ததுபோலப்பிறர் வார்த்தையை நம்பி நட்டமடைதலைக்காட்டுவது. (விசாரசா. ருககூ.) [அந்த- குருடன். கோ- எருது. லாங்கூல- வால். ந்யாய.]

அந்தகோளம்—நெல்லிமரம்.

அந்தசடகநியாயம்— மீமாஞ்சையிற் சொல்லப்பட்ட நியாயங்களுள் ஒன்று; அது: ஓர் அவிவேகியாற் சொல்லப்படுவதொன்று ஒரு குருடன் ஊர்க்குருவியைப் பிடித்துக் கொண்டதுபோலப்பலிக்கவருவது.இது,கருத்தினாலே குணாக்ஷரநியாயத்தையொத்தது. [அந்தசடகந்யாய. அந்த- குருடன். சடக- ஊர்க்குருவி. ந்யாய.]

அந்தசூநியம்— (சித்தாந்தம்.) மூன்றுவகைச்சூநியங்களுள் ஒன்று; அது: பிராசாதத்தியாகஞ்செய்யும்போது அகாரமுதல் உன்மனையிறுதியான பன்னிரண்டுகலைகளில் இறுதியிலுள்ள மூன்றுகலைகளையொழித்து எஞ்சி நின்ற ஒன்பதுகலைகளிற்கடைநின்ற மூன்று கலைகளைத் தள்ளுவதும் பன்னிரண்டுகலைகளிற்கடைநின்ற மூன்றுகலைகளில் இறுதியான உன்மனையைத்தள்ளுவதும் ஆம். (சி. வி.கிரி. அ. உரை.) [அந்தசூந்ய.]

அந்தஸ்தம்— ஒருமந்திரம். (சி. வி. சரி. கஅ. உரை.) [ஸஂஸ்ஸூ-ய் ர் ல் வ் என்னுமி டையெழுத்து.]

அந்தல்—அந்தணர்குலம். (உ-ம்.) "அந்த ண்மாமுதுகுரவரென் றுன்னினன்" (கந்தபு. தவங்காண். கஉ.)

அந்தணத்துவம்— அந்தணனுந் தன்மை. (உ-ம்.) "ஒருவனேற்றுலவாவந்தணத்துவம டைந்தனன்" (உபதேச.சிவவி. ருகஎ.) [அந் தணன்- பிராமணன். த்வ- தன்மை.]

அந்தணநாபி—விஷத்தைப்போக்கும் ஒரு மருந்து.

அந்தணமை—அந்தணன் றன்மை. (உ-ம்.) "குளித்து மூன் றனலையோம்புங் குறிகொள ந்தணமைதன்னை" (நாலாயிர. திருமாலை. உ௫.) [இது கன்னியப்பமுதலியார் பிரதி யில் அந்தண்மையென்றிருக்கின்றது.]

அந்தணர்—1. பார்ப்பார். (உ-ம்.) "ஆறறி யந்தணர்க்கருமறைபலபகர்ந்து" (கலித்தொ கை. க.) [இங்கே நச்சினார்க்கினியர் "அந்தத் தை அணவுவார் அந்தணர்; என்றது, வேதா ந்தத்தையே பொருளென்று மேற்கொண்டு பார்ப்பா ரென்றவாறு" என்றார்.] 2. முனி வர். (உ-ம்.) "அந்தணரென்போரறவோர்" (வள். ௩௦.) [அம்- அழகிய. தணர்- தண்ண ளியுடையவர்.]

அந்தணர்வாக்கு—வேதம். [அந்தணர்- பா ர்ப்பார். வாக்கு-சொல்.]

அந்தணாறுதொழில்— பிராமணருக்குரிய அறுவகைத் தொழில்கள்; அவை: ஓதல், ஓ துவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்பன.

அந்தணன்— 1. அபிசித்து முகூர்த்தம்; [இது: பகலிலே நிகழும் எட்டாவதான மு கூர்த்தமென்றும், நூறாயிரங் குற்றத்தைப் போக்குமென்றுஞ் சொல்லப்படும்.] (உ-ம்.) "அரன்பாம்பனுடமகம்புட்புனலாடியந்தண ன்றேர்" (விதான. குணா. எஉ, எ௩.) 2. அருகதேவன். 3. கடவுள். 4. சநி. 5. சிவன். (உ-ம்.) "அந்தண னுதியென்றே யேவரையி சைத்தவம்மா வெல்லையின் மறைகளெல்லா ம்" (கந்தபு.ததீசி.உக.) 6. பார்ப்பான். (உ-ம்.) "அந்தணனேவையெல்லாம்" (பாரத. பதி னே. ககo.) 7. பிரமன். (உ-ம்.) "அறத்தை நல்கவினந்தணன்போல்வன" (கந்தபு. சிங்க. ௩அச.) 8. வியாழனென்னுங்கிரகம். (உ-ம்) "மற்றவன்மேலுயரந்தணனுலவும்" (கூர்மபு. மண்டல. கக.) [அம்- அழகு. தணன்- தண் ணளியுடையவன்.] 9. பிராமணச்சாதிப் பா ம்பு. (உ-ம்.) "அந்தணனறுமான் பாலவியி னை" (சிந்தா. பதுமை. கஉஉ.) 10. முனிவன். (உ-ம்.) "திசைமுகமுனிசெவ்வே - தந்தனவு யிரெல்லாந்தன்னுயிரெனநல்கு - மந்தணன்" (இராமா. அயோத். வனம்புகு. உஉ.)

அந்தணாளர்— 1. அழகியதண்ணளியுடை யவர். (உ-ம்.) "செய்யதீவண்ணாரந்தணாளர் கண்டீர்" (தேவார. அங்கியூர். கூ. திருநாவு.) 2. பார்ப்பார். (உ-ம்.) "அருந்தவமுனிவருமந்தணாளரும்" (இராமா. திருவவ. ச.) 3. மு னிவர். [அந்தண்- அழகியதண்ணளி. ஆளர்- ஆள்பவர்.]

அந்தணாளன்—1. அழகியதண்ணளியுடை யவன். 2. பிராமணன். (உ-ம்) "அந்தணா ளனுமதிசயித்தரும் பெறன்மகட்குச்" (திரு விளை.விருத்தகுமார.௫.) 3. முனிவன் (உ-ம்.) "அந்தணாளனுன்னடைக்கலம் புகுத" (தே வார. திருப்புன். க. கங.)

அந்தணி—1. உமை. [அழகியதண்ணளி யுடையவளென்றபடி.] (உ-ம்.) "உலகடைய ப்பெற்றவுந்தியந்தணி" (திருப்பு. சஉo.) 2. பிராமணப்பெண். (பிராயச்சித்தசமுச்.)

அந்தத்தம்—அந்தத்தாக்கரம். (உ-ம்.) "ய காரமே ரகாரமிலங்கிய லகாரமேவகாரமெ ன்னு மிந்நான்கந்தத்தமென்றுரைப்பர்" (மச்சபு.) [அந்தர்-இடை. ஸ்த- நிற்றல்.]

அந்தத்தாக்கரம்— ய, ர, ல, வ என்னும் இடையெழுத்துக்கள். [ஸஂஸ்: ஸ்தாக்ஷர: அந்தர்- இடை. ஸ்தா- நிற்றல். அக்ஷர - எழு த்து.]

அந்தத்தாபம்— உள்ளே தபிக்கை. (பௌ ட். பக. ககரு.) [ஸஂஸ்தாப: அந்தர்-உள். தாப-தபித்தல்.]

அந்தஸ்து—1.ஒழுங்கு.2.நிலை.(உ-ம்.)"உன் னந்தஸ்துக்கிதுயோக்கியமல்ல" [இஃது இந் துஸ்தானி.]

அந்ததமசம்—மிக்க இருள். [ஸஂஸ்-தமஸ். ஸ்- குருடு. தமஸ் - இருள்.]

அந்ததரம்— சித்தாந்தம். (உ-ம்.) "சிவ மென்னுமந்ததர சிந்தை" (சிவஞா. போ. கஉ. அ. சிவஞானமுனிவருரைப்படி.) [அந்த- வேதாந்தம். தர- உயர்ந்தது.]

அந்ததரன்—(சர்வான்மாக்களுக்கும்) பிரா ணனுயுள்ளவன். (உ-ம்.) "சிவமென்னுமந்த தரன்" (சிவஞா. போ. கஉ. அ. பாண்டிப் பெருமாளுரைப்படி.)

அந்ததாமிச்சிரம்—1. ஒரு நரகம். 2. தமோ சிருட்டியாகிய ஐவகை யஞ்ஞானத்துள் ஐந்தாவது; அது: திவ்வியாதிவ்விய பேதத்திலே சத்தாதிகள் பத்தும் அணிமாதி சித்திகள் எட்டும்பெற்று அதிலே மிகப்பற்றுவைத்தல். (பௌட். பும். ககஅ; சி. சி. உ. ருஅ. சிவாக்.) 3. மிகுந்த இருள். [அந்ததாமிஸ்ர: அந்த - குருடு. தாமிஸ்ர - இருள்.]

அந்ததாமிசிரம்—அந்ததாமிச்சிரம். (உ-ம்.) "அந்ததாமிசிரமென விவைநாளும்" (சூத. பிரமசிரு. ௩.) [அந்ததாமிஸ்ர.]

அந்தந்த— அந்த அந்த. என்னும் சுட்டடுக்கு. [இடைநின்ற அகரங்கெட்டது.]

அந்தப்புரம்—1. பெண்களுடைய அறை. மன்னன் றேவியில்லம். (உ-ம்.) "அடைதருதனியேயந்தப்புரத்தினில்" (சி. சி. ௩: ௩உ.) [அந்த:புர: அந்த - உள். புர - வீடு.]

அந்தப்போதிகை — பின்னங்காலிற்சங்கிலி. (உ-ம்.) "அந்தப்போதிகைபரிந்தழன்றதே" (சிநதா. கஙக. உஎரு.)

அந்தபரம்பரா நியாயம்— மீமாஞ்சையிற் சொல்லப்பட்ட நியாயங்களுளொன்று; அது குருடனைக்குருடன் பின தொடர்வதுபோல த்தான் செய்வதின்னதென ஆலோசியாமல் ஒருவன் மற்றொருவன் செய்வதுபோற் செய்தல். [அந்தபரம்பராந்யாய: அந்த-குருடன். பரம்பரா - தொடர்ச்சி. ந்யாய-நியாயம்.]

அந்தம்— 1. அவயவம். 2. அழகு. (உ-ம்.) "வசகநதமாதநவாழ்வோருணற்கு" (கம்பராங். எ௰.) 3. அளவிடல். (உ-ம.) "அந்தமில்ல தோராயிழையாரொடு" (கந்தபு. பாநுகோ. ககசஅ.) 4. இருள். 5. இறுதி. (உ-ம்.) "அந்தமுமாதியும்" (தாயு. ஆசையெனு. க௦.) 6. எல்லே. 7. கஸ்தூரி. 8. குருடு. 9. சுபாவம், தன்மை. 10. நாசம். (உ-ம்.) "சதமகன்வாழ்வினுக்-கந்தமாகியதோ" (கநதபு. சுக்கிர. கஉ.) 11. நிச்சயம். 12. நீர். 13. மரணம். (உ-ம்.) "நெஞ்சமேயுடலந்தமாதியை விடாநிற்க" (வைராக்கியசத. கரு.) 14. வேதாந்தம். (சிவஞாபோ. கஉ. அ. சிவஞா.) 4, 8, 12, [அந்த.]

அந்தமுள்— குறிஞ்சா. [இது வடநாட்டார் வழக்கு.]

அந்தர்— 1. அறிவில்லார், கடையாயார். (உ-ம்.) "அந்தர்கடம்மினும்" (கல்லா. க.) 2. உள். 3. கீழ். [அந்த.] 4. குருடர். (உ-ம்.) "அந்தரினலமந்தஞ்சி" (இராமா. யுத். வருண. சுசு. "அந்தன்" பார்.) 5. நடு. [அந்தர்.]

அந்தர்க்கதம்— 1. உள்ளானது. (உ-ம்.) "அந்தர்க்கதமானசத்தத்தை" (சி.சி. க:உக. சிவாக்.) 2. மறைந்திருக்கை. [அந்தர்கத: அந்தர் - உள். கத - அடைந்தது.]

அந்தர்க்கதவுவமை — உள்ளுறையுவமை. [அந்தர்கத; உவமா.]

அந்தர்க்கிருகம்— உள்வீடு. [அந்தர்க்ருஹ: அந்தர் - உள். க்ருஹ - வீடு.]

அந்தர்ச்சடரம்— அங்நாசயம். [அந்தர்ஜடர: அந்தர் - உள். ஜடர - வயிறு.]

அந்தர்த்தகநம்— 1. உள்ளனல். 2. மதுநீர்வடித்தல். [அந்தர்தஹந: அந்தர்-உள். தஹந - அநல்.]

அந்தர்த்தசை— சோதிடத்திற்சொல்லப்பட்ட மகாதசையில் இடைவருக்கிரகங்களுடைய அதிகாரத்தோடு பொருந்தியகாலம். அந்தர்தசா: அந்தர்-இடை. தசா- நிலே.]

அந்தர்த்தாநம்— 1. மறைவு. (உ-ம்.) "அந்தர்த்தாநமாநேர்ந்துபோவார்" (மச்சபு. அசுர. ௩க.) [அந்தர்தாந.]

அந்தர்த்துவாரம் — உள்வாயில். [அந்தர்த்வார: அந்தர் - உள். த்வார- வாயில்.]

அந்தர்நியமநம் — உள்ளே யடக்குதல். (உ-ம்.) "சிவன் அந்தர்ப்பகிர்வியாப்தனுகிநின்று சுவதந்திரகர்த்தாவாகித் தேகேந்திரியாதிகளுக்கு ஆன்மாப்போல ஆன்மாக்களை யந்தர்நியமநத்தையும் பகிர்ப்பிரவர்த்தநத்தையும் பண்ணுவதொன்றும். (சி. சி. ரு. க. சிவாக்.) [நியமநம் - அடக்குதல்.]

அந்தர்ப்பகிர்வியர்ப்தன்— உள்ளும்புறமுஞ்செறிந்திருப்போன். (உ-ம்.) "அந்தர்நியமனம்பார்" (சி. சி. ரு. க. சிவாக். ) [அந்தர்பஹிர்வ்யாப்த: அந்தர் - உள். பஹிர்- வெளி. வ்யாப்த - நிறைந்தவன்.]

அந்தர்ப்பவம்— 1. உள்ளாதல். 2. உள்ளே பிறத்தல். [அந்தர்பவ: அந்தர் - உள். பவ - பிறத்தல்.]

அந்தர்ப்பவித்தல் — 1. உள்ளாக்குதல். (உ-ம்.) "மேற்சொல்லிய பிரமாணங்களை இம்மூன்று பிரமாணங்களுள்ளே அந்தர்ப்ப

வித்து" (சி. சி. அளவை. க. சிவாக்.) 2. உள்ளாதல். (உ-ம்.) "அந்த எல்லாப்பிரமாணங்களும் - மூன்று பிரமாணங்களில் அந்தர்ப்பவிக்கும்" (சி. சி. அளவை. க. ஞாநப்.) [ஸம்ஸ்கி. ...]

அந்தர்ப்பாவநை— உள்ளத்திற்பாவித்தல். [ஸம்ஸ்கி. ...: அந்தர் - உள். பாவநா - தியாநம்.]

அந்தர்ப்பாவிதகருமம்— அகநிலைச்செயப்படுபொருள். (உ-ம்.) "வந்தான்" இங்கே வருதலைச்செய்தானெனப்பொருள்பட்டுச் செயப்படுவதாகிய வருதல் அகநிலையாதலறிக. [அந்தர் - உள். பாவித - அடைந்த. கர்மம்- செயப்படுபொருள்.] (பி. வி. கஉ. உரை.)

அந்தர்ப்பாவிதணிச்சு— பிறவினைவிகுதிகள் தொக்குநிற்பது. (பி. வி. ருடு. உரை.) [ஸம்ஸ்கி. ...: ணிச் - ஒரு பிறவினைவிகுதி.] ["இருணீங்கியின்பம்பயக்கும்" என்புழி நீங்கி என்பது போல்வது.]

அந்தப்பிரஞ்ஞன் — தன்னையறிகிறவன். [அந்தர் - உள். ப்ரஞ்ஞ - அறிகிறவன்.]

அந்தர்ப்பூதம் — உள்ளிருப்பது. (உ-ம்.) "அந்த முப்பத்தாறு தத்துவங்களும், இந்தச்சரீரத்தில் அந்தர்ப் பூதமாயிருக்கிறபடியினால்" (வாசுதே. உ0உ.)

அந்தர்மலக்கிருமி— தேகத்திலே கபத்திலும் உதிரத்திலும் பிறக்கின்ற கிருமிகள்; மதுராந்நம், வெல்லம், பால், தயிர், மா, மழைத்தண்ணீர் இவ்வஸ்துக்களைத்தின்பதினாற்பிறக்கின்ற கிருமிகள். (சீவரட். சருரு.) [அந்தர் - உள். மலம் - அழுக்கு. கிருமி- புழு.]

அந்தர்முகம்— உள்நோக்கியமுகம்.(உ-ம்.) "அந்தர்முகத்திலே தனது சைதந்நியத்தையடைய" (ஞாநவா. முமூட்சு. உ. உரை.) [அந்தர் - உள். ...]

அந்தர்முகி— அடங்கிய மநத்தன், உள்ளே நோக்கிய முகமுடையவன். (உ-ம்.) "இச்சையானது அந்தர்முகியையும் பகிர்முகியாக்குமென்பார்" (ஞாநவா. வைராக். ...உரை.) [ஸம்ஸ்கி. ...: அந்தர் - உள். முகி- முகமுடையவன்.]

அந்தர்முகியோநி— வாயு அதிகரித்து அந்தர்முகமாக எழும்பிப்பெண்களுக்கு யோநித்தாநத்திலே உபத்திரவஞ்செய்யும் ஒருவகை ரோகம். (சீவரட். ருஉஉ.) [ஸம்ஸ்கி. ...: உள்ளே நோக்கிய முகமுடையது. யோநி - பிறப்பிடம்.]

அந்தர்யசநம்— அந்தரியாகம். (சி. சி. கூ. கக. சிவாக்.) [ஸம்ஸ்கி. ...: அந்தர் - உள். யஜந - யாகம்.]

அந்தர்யாகம்—கண்களை மூடியல்லது மூக்குநுனியைப்பார்த்து ஞாநமுத்திரையோடிருந்துகொண்டு தன்னுள்ளே குண்ட முதலிய எல்லா உபகரணங்களையும் தேடியதாகவும் புறத்திற்செய்யுமாறே உள்ளே அக்கினிகாரியஞ்செய்யப்படுகிறதாகவும் பாவித்துச்செய்யும் வழிபாடு. (சித்தா. கிரியா.சஅ.)

அந்தர்வஞ்சிசன்—அரசனுடைய அந்தப்புரத்திலே காவலாளனாக நியமிக்கப்பட்டவன். [ஸம்ஸ்கி. ...: அந்தர்-உள். வம்ஸிக- குடும்பமுடையவன்.]

அந்தர்வேதி—1. இரண்டு யாறுகளுக்கு நடுவேயுள்ள சமபூமி. (உ-ம்.) "அங்கவற்றிடையே யேகம்பமுதலாமாலயத் தந்தருவேதி" (கந்தபு. நகர. எசு.) 2. பிரயாகைதொடங்கிக்கங்கைக்கும் யமுனைக்கும் நடுவேயுள்ள தேசம். (உ-ம்.) "அவர்களையந்தர்வேதி-சென்றுடன்கொணர்வாயென்று திருமுநியருளிச்செய்தான்" (கோயிற்பு. இரணிய. ச0எ.) [ஸம்ஸ்கி. ...- அந்தர் - நடு. வெதி - சமபூமி.]

அந்தாகணம்— பாட்டியலுட்சொல்லப்பட்ட எண்வகைக்கணங்களுளொன்று; அது: நிரை நிரை நேர் என்னு மூவசையாலாகிய ஒரு சீர். இஃதொரு நூலின் முதற்செய்யுளின் முதற்சீராக வரலாகாதென்றும், வருமாயிற்பாட்டுடைத்தலைவனுடைய வாழ்நாளையகற்றுமென்றுங்கூறுவர். (உ-ம்.) "அந்தரகணமே வாணாளகற்றும்" (இலக்கணவி. பொருள். பாட்டி. ச0.) [ஸம்ஸ்கி. ... - ஆகாயம். கண - சீர்.]

அந்தரங்ககிருத்தியம்— தன்னாலே நேரே செய்யப்படுங்கிருத்தியம். (உ-ம்.) "அந்தரங்ககிருத்தியம் பகிரங்ககிருத்தியம் இரண்டுமுறைமையிற் சாக்ஷாத்தன்னாலும் பிறரைச்செலுத்தியவர்தானாகி மறைவாலும் நடக்குமென்று கூறுகின்றார்" (சி. சி. க: ருச. கருத்துரை. ஞாநப்.) [ஸம்ஸ்கி. ...- தன்னுடைய. க்ருத்யம் - செயல்.]

அந்தரங்கத்தியாநி— ஆமை.

அந்தரங்கம்— 1. அதிகம் நேசிக்கப்பட்டது, அருமையானது. 2. ஆலோசனை. 3. இர

கசியம். (உ-ம்.) "அந்தரங்கத்திற்பொருந் துறு புருடனேடு மாசகத்திற்பொருந்துதல்" (நல். பார. உமாம. நஎஎ.) 4. உள்ளம். 5. உள்ளானது. 6. தன்னுடையது. (உ-ம்.) "அந்தரங்ககிருத்தியம்" [ஸம்ஸ்: அந்தர் - உள். அங்க - அவயவம். அந்தர்க-உள். க - போவது.]

அந்தரங்கன்— 1. அதிகம் நேசிக்கப்பட்டவன், அருமையானவன். 2. இரகசியங்கேட்டுவைத்திருப்போன், விஷயங்களில் நம்பத்தக்கவன். 3. உற்ற நண்பன். [ஸம்ஸ். அந்தர் - உள். அங்க - உறுப்பு.]

அந்தரச்சிந்து—கற்பாஷாணம். இது: முப்பத்திரண்டு பாஷாணங்களுள் ஒன்று.

அந்தரசரிதர்— ஆகாயத்திலே திரிபவர். (உ-ம்.) "அந்தரசரிதர் கொண்டேகாமல்" (பாரத. உலூக. கஅ.) [அந்தர - ஆகாயம். சரிதர் - திரிவோர்.]

அந்தரசாதி — வேறுசாதி. (உ-ம்.) "சந்திரகலையானெனக்குநீர்பொழிவ சந்திரகாந்தமேயல்லா - லந்தரசாதிச் சிலையிலுண்டாகாது" (அரிச்ச. விவாக. உ௦.) [அந்தர - வேறு ஜாதி-குலம்.]

அந்தரசாரி— ஆகாயசாரி. (உ-ம்.) "அந்தரசாரிகளறைந்தனர்" (சிலப். நாடு. கங.) அந்தர - ஆகாயம். சாரி - செல்வோன்.]

அந்தரசைவம்—ஒருவகைச்சைவம். [இதனிலக்கணஞ் சைவமென்னுஞ்சொல்லிற்காண்க.]

அந்தரசைவர்— அந்தரசைவத்தைத்தழுவினோர். (த. நி. போ. கஙக.) [ஸம்ஸ்: ஶைவ - சிவசமயி.]

அந்தரசௌசம்—உட்சுத்தி. (த. நி. போ. உகூக.) [ஸம்ஸ் - உள். ஶௌசம்-சுத்தி.]

அந்தரத்தர்-சுவர்க்கலோகவாசிகள். (உ-ம்.) "அந்தரத்தரிலொருவனேயிலையவரங்கை" (கந்தபு. சூரன்றண்ட. உச.) [ஸம்ஸ்: ஸ்த; அந்தர - ஆகாயம். ஸ்த - இருக்கிறவன்.]

அந்தரத்தாநம் — ஆதாரமில்லாத நிலை, இடைவெளியினிற்கும் நிலை. [அந்தர - ஆதாரமின்மை, இடைவெளி, ஸ்தாந - நிலை.]

அந்தரத்தாமரை — ஆகாயத்தாமரைப்பூண்டு. (பதார்த்த. ந௩௬.)

அந்தரதாமசர்— இடைபிற்கருமையடைந்தவர். (த. நி. போ. கசுச.) [அந்தர- இடை. தாமஸர் - கரியவர். தமஸ் - இருள்.]

அந்தரதிசை—கோணத்திசை, இடையிலுள்ள திசை. [அந்தர - உள். திஶா - திக்கு.]

அந்தரதுந்துபி— ஒரு வாச்சியம். (உ-ம்.) "சங்கநாத மந்தரதுந்துபிமுதலாமளவில்பெருகொலிதழைப்ப" (பெரியபு. திருஞாந. கூஅ.) [ஸம்ஸ் - தேவ. துந்துபி - ஒருவகைவாச்சியம்.]

அந்தரநடநர்—கழைக்கூத்தர். [அந்தர-ஆகாயம். நடநர் - கூத்தர்.]

அந்தரநதி — ஆகாயத்திலுள்ள கங்கை. (உ-ம்.) "அந்தரநதியைநாடி" (பாகவத. சுபத். கஅ.) அந்தர - ஆகாயம். நதீ - யாறு.]

அந்தரநாதன்—இந்திரன். (உ-ம்.) "அன்னதொர்சாலையிலந்தரநாதன்" (கந்தபு. தெய்வ உசக.) [அந்தரம் - தேவுலகு. நாத - தலைவன். ன் - ஆண்பாலில் வரும் ஒரு இறுதிநிலை.]

அந்தரபவனி— 1. ஆகாயகதி. 2. ஆகாயகமநம். 3. மிருவேகம். [அந்தர - ஆகாயம். பவனி - உலா.]

அந்தரபுத்தி—கிரகங்களினுட்கதி. (த. நி. போ. உஅ௫.) [அந்தர - உள். பு-க்தி-கதி.]

அந்தரபுருஷன்-உடம்பினுளிருக்கும் ஆன்மா. [ஸம்ஸ்: அந்தர - உள். புருஷ.]

அந்தரம்—1. அந்தரிப்பு. [வழக்] 2. ஆகாயம். (உ-ம்.) "அண்டமலையடுக்கடுக்காயந்தரத்தினிறுத்து மவதாநம்போல" (தாயு. மண்டல. க.) 3. ஆதாரவின்மை. 4. இடைக்காலம். 5. இடையிடம். 6. இருள். (பிங்க. ந௦௬க.) 7. உட்பக்கத்திலிருப்பது. 8. உடுப்பு. 9. உள்வெளி. 10. உள்ளீடு. 11. உள்ளுக்கிருக்கும் பொருள். 12. ஒத்தது. 13. ஒப்பு. (உ-ம்.) "பொரார்க்குநீகொலந்தரமெனக்கெனு" (பாரத. வாரணா. சுடு.) 14. காலம். 15. கூட்டம். (பிங்க. ந௦௬க.) 16. (கணிதம்) சேடம். 17. சொந்தம். 18. தனிமை. (பிங்க. ந௦௬க.) 19. தூரம். 20. தேவாராலயம். (பிங்க. ந௦௬க.) 21. நடு. 22. பரமான்மா. 23. பலக்கேடு. (உ-ம்.) "விண்ணோர்காறும் வென்றவெனக்கென்மனைவாழும்- பெண்ணால்வந்ததந்தரமென்னப்பெறுவேனோ" (இராமா. கைகேசி. ௬௦.) 24. புறத்திலுள்ளது. 25. பேதம். (உ-ம்.) "அந்தரஞ்சிறிதுமின்றி" (கந்தபு. வள்ளி. உ௫.) 26. மேன்மை. (உ-ம்.) "அந்தரந்தீர்ந்தலகளிக்கும் நீரினல்-தந்தையுங் கொடியன்" (இரா

மா. மந்தரை. சுo.) 27. வேறு. (உ-ம்.) "தூலதேகம் விட்டுச் சூக்குமதேகத்தோடு போய்த்தூலதேகாந்தரத்தைப்பொருந் துதற்கு உவமையுரைக்கிறார்" (சி. சி. உ. கஅ. ஞானப்.) [அந்த - முடிவு. ர - கொடுப்பது.]

அந்தரமகளிர்—அரம்பையர்கள். (உ-ம்.) "அந்தரமகளிர்பாட" (திருவிளை. உக்கிர. கஉ.) [அந்தர - தேவுலகம். மகளிர் - பெண்கள்.]

அந்தரர்— தேவர்.(உ-ம்.) "அந்தரர்கோனுதனத்தில்" (திருவிளை. பதிக. கூ.) [அந்தர - சுவர்க்கம். ர்- ஒருபலர்பால்விகுதி.]

அந்தரவல்லி— கருடன் கிழங்குப்பூண்டு, கொல்லன்கோவை. [அந்தர - ஆகாயம். வல்லி - கொடி.]

அந்தரவநசம்—கொடிப்பாசி. [அந்தரம் - உள். வநம் - நீர். ஜ0 - பிறந்தது. நீருட்பிறப்பதென்றபடி.]

அந்தரவநம்— ஊர்க்குப்புறத்திலிருக்குங் காடு. [அந்தர - புறம். வநம் - காடு.]

அந்தரவாசம்— 1. ஆகாயத்தில் வசிக்கை. 2. கொட்டைப்பாசிப்பூண்டு. [அந்தர - ஆதாரமில்லது. வாஸ - வசித்தல்.]

அந்தரவாணி— அசரீரிவாக்கு. (உ-ம்.) "அந்தரவாணிகேட்டு" (கூர்மபு. கண்ணனவ. உ.) [அந்தர - ஆகாயம். வாணி - வார்த்தை.]

அந்தரவாயு— 1. அண்டவாதநோய். 2. புறம்பிலுள்ள கன்மேந்திரியங்களுக்கும் அகத்திலுள்ள அந்தக்கரணங்களுக்கும் இடையிலுள்ள ஞானேந்திரியங்களை யசைப்பிக்கின்றனவாகச்சொல்லப்படும், பிராணன், அபானன், சமானன், உதானன், வியானன் என்னும் ஐந்துவாயுக்கள். (வேதா. சூ. எசு. உரை.)

அந்தரவாயுக்கிரகணி— ஒருவகைக் கிரகணிரோகம்; அது: இரைச்சல், அசதி, தாகம், தளர்ச்சி, புசித்தவுடன்பேதியாதல், விலாவில் இசிவு, சரீரம்வெளிறல், விக்கல் என்னும் இக்குணங்களை யுண்டாக்கும். (சீவரட். அகு.)

அந்தரவீச்சு — 1. அந்தரத்தில்வீசுதல். 2. ஆதாரமின்மை. [அந்தரம்; வீச்சு - வீசுதல்.]

அந்தரவீணை — இருபத்திரண்டுவகைவீணைகளுள் ஒன்று. (வி - ணி. உஉ0.)

அந்தராத்மா— (வேதாந்தம்.) தாமரையிலையின் நீர்போலச் சமுசாரத்திலுள்ள பெரிய விவகாரங்களைக்கலந்துங் கலவாது சொப்பநத்திற்குச்சாட்சியா யிருக்கும் பிரமசைதந்நியம். (உ-ம்.) "தாமரையிலையினீர்போலத்தோய்ந்துளகும்பப் பெருவிவகாரந்தோய் விலனந்தராத்மாவாம்" (வே. சூ. கூகூ.) [அந்தர; ஆத்மா- சீவன்.]

அந்தராந்தரதசை—கிரகங்களினது தசையில் உள்ளுக்குள்ளான தசாகாலம். (த. நி. போ. உஅகு.) [அந்தராந்தர - வகையின்வகை.]

அந்தராபத்நியை— கருப்பஸ்திரீ. [அந்தராபத்நீ: அந்தரா - உள். அபத்யா- பிள்ளையுடையவள்.]

அந்தராயம்—1. இடையூறு. 2. தீமை. 3. துக்கம். (சி. சி. பர. நிகண். உ. உரை.) [அந்தர- இடை. அயம் - போதல்.]

அந்தராயாமவாதம்— தேகத்தின் உட்புறநரம்புகளைப்பற்றிய ஒருநோய். (சீவரட். கசுசு.) [அந்தர- உள். ஆயாமம்- சஞ்சரித்தல். தேகத்தின் உட்புறநரம்புகளைப் பற்றியதால் வந்தபெயர்.]

அந்தராளசம்பந்தம்—ஆகமம் உபதேசஞ்செய்த ஸ்ரீகண்டர்க்கும் உபதேசங்கேட்ட தேவர்க்கும் உள்ளசம்பந்தம். (சி.சி க: சுகூ. மறை.) [இது மூன்றாவது சம்பந்தம் என்பர். (சி. வி. சரி. உ.) [அந்தராள - நடு. ஸம்பந்த- தொடர்பு.]

அந்தராளதிக்கு— கோணத்திசை. [அந்தராலதிக்: அந்தராள - இடையிடம். திக் - திசை.]

அந்தராளயகரணம்—அந்தக்கரணம். (சி. வி. கிரி. அஉ.)

அந்தராளம்—1.இடைக்காலம். 2. இடையிடம். 3. உட்பாகம். 4. நடுப்பாகம். (உ-ம்.) "ஒன்பதினாயிரம்யோசனையந்தராளமுண்டாய்" (த. நி. போ. கூகூ.)

அந்தராளன்—அநுலோமத்தந்தைசுருப்பிரதிலோமத்தாயிடத்திற் பிறந்தவன். (உ-ம்.) "மருவநுலோமத்தந்தைவனர் பிரதிலோமத்தாய்பாலொரு வறப்பிறந்தபிள்ளை யுறுபெயரந்தராளன்" (சூத. சிவ. கஉ: எ.)

அந்தரான்மா—1. ஆகாயத்தில் அந்தரமாகத்திரியும் ஆன்மா. (உ-ம்.) "தூலசரீரத்துக்கேற்ற கன்மம் பரிபக்குவம் இல்லாதிருந்தால் அதற்கேற்றபரிபாகம் வரும்வரைக்குஞ் சூக்குமசரீரத்தோடு கூடி அறிவின்றி ஆகாயத்தைப் பற்றி அந்தரான்மாவாயிருந்து கன்மபரிபாகத்திற் காலாந்தரத்தில் உடலுறும்" (சி. சி. உ: கஎ. ஞானப்.) 2. உள்ளு

ணர்வு. 3. உள்ளேயிருக்கும்-ஆன்மா. 4. மநுடன் உள்ளத்திலிருக்கும் பரமான்மா. [அந்தர - ஆகாயம், உள். ஆத்மா- சீவன்.]

அந்தரி— 1 - 3. அந்தரியென்னேவலுந், தெரிநிலை வினைப் பகுதியும், பெயரெச்சத்தொகையும். 4. ஆகாயவாணி. 5. ஒருவகைத்தோற்கருவி. (சிலப். அரங்கே. உஎ. உரை.) 6. துர்க்கை. (உ-ம்.) "அந்தரியிருந்தவிந்தமால்வரை" (மணிமே. உ௦. கா. ககசு.) 7. பார்ப்பதி. (உ-ம்.) "அந்தரிபோற்றினளன்புறு" (கந்தபு. திருமண. ௩அ.) 8. காளி. (உ-ம்.) "அந்தரியாமளையமலையாலகாலி" (அரிச்ச. பாயி. எ.)

அந்தரிட்சம்— பறவை முதலியனசெல்லுதற் கிடமாகப் பூமிக்குஞ் சூரியனுக்கும் இடையிலுள்ளவெளி. (உ-ம்.) சத்தாசாமானியமானது வியாபிக்க அந்தரிட்சலோகம் நசிக்கும்" (ஞாநவா. வைராக். ககஅ. உரை.) [[illegible]: [illegible] - உள். [illegible]- பார்த்தல். [illegible]-நட்சத்திரம். தன்னுள் நட்சத்திரங்களையுடையது, அல்லது உலகங்கள் பார்த்தற்குரியது என்றபடி.]

அந்தரித்தல்— 1. அலைதல். (உ-ம்.) "வேடஞ்சரித்து விதியந்தரிககஒழுகி" (திருநூற். சுஉ.) 2. ஒருதொகையை மற்றொரு தொகையிற் கழித்துச்சேடம் அறிதல். 3. உதவியற்றிருத்தல். 4. தனித்திருத்தல். 5. நிலைகெடுதல். 6. மனந்தடுமாறுதல்.

அந்தரிதம்— 1. (கணக்கதிகாரம்.) ஒன்றையொன்றிற்கழித்தலால் வருஞ் சேடம். 2. தேகவியோகம். 3. மறைக்கப்பட்டது. (உ-ம்.) "படிகாந்தரிதமாயிருக்கிறவஸ்து" (சி. சி. உ: சு௦. சிவாக்.) 4. விபாகம், பிரிவு. [அந்தரிதம்.]

அந்தரிந்திரியம்— 1. மநம். (தர்க்காமி.) [அந்தர்- உள். இந்திரிய- பொறி.]

அந்தரிப்பு—அந்தரித்தல்.

அந்தரியாகம்—உட்பூசை. (உ-ம்.) "அந்தரியாகந்தன்னை" (சி. சி. கூ: க௦.) [அந்தர்- உள். யாகம் - பூசை.]

அந்தரியாமி — 1. அகவாயுக்களைந்தனுளொன்று; அது: சித்தத்தை யசைப்பிக்குமென்பர். (உ-ம்.) "சாற்றின்வயிரம்பன்முக்கியன்பிரபஞ்சநன் அந்தரியாமியொடு மகாப்பிராணனென்னும்பெயர்கொள்-காற்றிவைகள் சிவசம்பந்தமாயே உட்காரணங்களியக்கிடும்" (வேதா. சூ. எஎ.)[அகத்தின் நிறைத்திருத்தலின்வந்தபெயர்.] 2. ஆன்மா. 3. உள்ளீடாயிருப்பவன். (உ-ம்.) "சிவனெல்லாவஸ்துக்களிலு மந்தரியாமியாக நின்றமையும்" (சி. சி. அ: ௩௪. சிவாக்.) 4. கடவுள். 5. கூடஸ்தன். (உ-ம்.) "சீவனென்றிடு மூவகையதிட்டானன் சேதநனந்தரியாமி- ஆவலினநுசந்தாத் திருசுயஞ்சத்தார்த்தனோடவிச்சிநந சீவன்-தாவரும்பாரமார்த்திகன் றுரியன் சான்றினன்பிரத்திகான்மாவா-மேவமிரும்பதத்திலக்கியார்த்தனென்ப கூடத்தனுமங்கள்" (வேதா. சூ. ரு௨.) 6. சிவன். (உ-ம்.) "சீர்மெய்த்த வந்தரியாமிசால வேத்திடுதிருசிய நாயகன்சாற்றதிருசியன்னே". (சூத. எக்கி. பூ. ௩௩: அ.) 7. சீவசாட்சி. 8. மாயையாகிய சத்துவகுணத்திற் பிரதிவிம்பித்த பிரமச்சாயையாகிய ஈசன். (உ-ம்.) "அகிலகாரணமா மாயையைமருவி யந்தரியாமியாய்" (வேதா. சூ. சச.) 9. வாயு. [அந்தரியாமி: அந்தரி - உள். யாமி- நடத்துபவன்.]

அந்தரியாமித்துவம்— 1. ஆன்மாவோடுகலந்திருத்தல் 2. உள்ளீடாயிருக்குந்தன்மை. (உ-ம்.) "சர்வாந்தரியாமித்துவம்" (வேதா. சூ. சஎ. உரை.) 3. கடவுள். [[illegible] - கடவுள். [illegible] - தன்மை.]

அந்தரிலம்பம்—குகோணம், அஃது ஒடுங்கியமூன்று கோணங்களையுடைய வடிவம். [[illegible]: [illegible] - உள். [illegible] - தூங்குதல்.]

அந்தரீட்சம்—அந்தரிட்சம்.

அந்தரீபம்—தீவு. [[illegible]. [illegible]- உள். [illegible]-நீர். இது [illegible] என்றாயிற்று.]

அந்தரீயம்— உள்ளுடை. (பௌட். பதி. ச.) [[illegible]: [illegible] - உள். [illegible]- ஒரு. வ. வி.]

அந்தருத்திரேகம்-உட்பொடாச்சம். (உ-ம்.) "சூக்குமயோசநசாத்தசவிகற்பத்தினது அந்தருத்திரேகத்தைப் பண்ணிக் கிரியாசத்திபேதமாகிய இச்சாசத்தியாயிருத்தல்அதிகாரம்" (சி. சி. பாயி. உ. "ஈசனருளி" ஞாநப்.)

அந்தளம்—கவசம்.

அந்தளி—தேவர்கோவில்.

அந்தன்—1. அழகன். (உ-ம்.) "சங்கை குடும்பிரான் மைந்தனே யந்தனே" (திருப்பு. ச௦.) 2. கடுக்காய். 3. குருடன். (உ-ம்.) "அந்தனண்ணிய கண்ணுமொத்த" (ஞாநவா.

வைரா. ௩அ.) 4. சசி. [1. அந்த- அழகு. 3, 4. கூ௫- குருடு, இருள்போலுங்கருமை.]

அந்தா — ஒருமகிழ்ச்சிக்குறிப்புமொழி. (உ-ம்.) "அந்தாவுய்ந்தேன்" (கந்தபு. அசுரர்தோ. க.) [இது "ஹந்த" என்னும் வடமொழித்திரிபுபோலும்.]

அந்தாதி— 1. அடிதோறும் இறுதிக்கண் நின்ற எழுத்தாவது அசையாவது சீராவது அடுத்துவரும் அடிக்குமுதலாய் அல்லது அவ்வடிமுழுதும் மற்றையவடியாய் வரத்தொடுக்குந் தொடை. (உ-ம்.) "அந்தமுதலாத் தொடுப்பதந்தாதி" (யா. காரிகை. உறுப்பி. கச.) 2. ஒருசெய்யுளின் இறுதியில்நின்ற சீராவது சீரின்ஒருறுப்பாவது அடுத்துவருஞ் செய்யுளுக்கு முதலாகவரச் செய்யப்படும் நூல். (உ-ம்.) "இரட்டைமாலையந்தாதியெடுத்துப்பாடி" (பெரியபு. காரைக். ௫ச.)

அந்தாதித்தல் — அந்தாதியாகத்தொடுத்தல்.

அந்தாதித்தொடை—அடிதோறும் இறுதிக்கண் நின்ற எழுத்தேனும் அசையேனும், சீரேனும் மற்றை அடிக்கு ஆதியாகவருவது. (உ-ம்.) "அடியுஞ் சீருமசையுமெழுத்து- முடிவுமுதலாச்செய்யுண்மொழியின் - அந்தாதித்தொடையென்றறைதல்வேண்டும்" (இலக்கணவி. எ௨௫.)

அந்தாதிமடக்கு — ஓரடியின் இறுதியில் வந்தசொல்லேவேறுபொருளோடு மற்றைய அடிக்குமுதலாகவருவது. (தண்டி. ௩-வது. ௫.) [அந்த- முடிவு. ஆதி- முதல். மடக்கு- மடங்கிவருவது.]

அந்தாளி—குறிஞ்சியாழ்த்திறன்வகை முப்பத்திரண்டில் ஒன்று. (பிங்க. க௩அ௨.) (உ-ம்.) "கோலக்குறிஞ்சியந்தாளிக்குறிஞ்சி" (இரகு. அவதா. ககூ.)

அந்தாளிபாடை— 1. ஒருபண். திவாகர. பத்தா.) 2. பாலையாழ்த்திறன்வகையில் ஒன்று. (பிங்க. க௩அக.)

அந்தி—1. (நாடகம்.) அக்காள். [அந்தி.] 2-4. அந்தியென்னேவலுந் தெரிநிலைவினைப் பகுதியும் பெயரெச்சத்தொகையும். (உ-ம்.) "பத்தர்சித்தமெய்யிற்செவ்வந்திநீ" (கந்தர. எ.) 5. இரா. (சூ. நிகண். கக: ௩கஉ.) 6. இருட்புலர்வுக்குஞ் சூரியோதயத்திற்கும் இடைக்காலம். (உ-ம்.) "காலையந்தியும்" (புறநா. ௩௪.) 7. சூரியாத்தமயத்திலே தோன்றுஞ்செவ்வானம். (உ-ம்.) "அந்திவேணியண்ணல்" (கந்தபு. காமதக. எ௪.) 8. தில்லைமரம். 9. பாலையாழ்த்திறத்தின் ஒன்று. (பிங்கல. க௩அக.) 10. மாலைக் காலம். (உ-ம்.) "அந்தியர்தணருங்கடனிறுக்கும்" (புறநா. ௨.) 11. முடிவு, பொருத்து. (உ-ம்.) "அந்திக்கடலிற்கடிதோடி" (திருப்பு.௩.அ.) 12. முச்சந்தி, முத்தெருக்கூடுமிடம். (பிங்க. க௪௩.)

அந்திக்கோன்—சந்திரன். (உ-ம்.) "அந்திக்கோன் றனக்கேயருள்செய்தவர்" (தேவா. திருப்பாசூர்.க. திருநாவு.) [அந்தி- மாலை.கோன் - தலைவன்.]

அந்திகம்—1. அயல். 2. கொளுவுகொம்பு. 3. சமீபம். [அந்திக.]

அந்திகாசிரயம்— கொளுவுகொம்புபோல அடுத்திருக்கும் ஆதரவு. [அந்திகாஶ்ரய: அந்திக- சமீபம். ஆஶ்ரயா- ஆதரவு.]

அந்திகாவலன்— 1. சந்திரன். (உ-ம்.) "அந்திகாவலனமுதுறபசுங்கதிர்" (நாலாயிர. பெரியதிரு. அ-வது பத்து. ௫.க.) [அந்தி- மாலை. காவலன்- அரசன்.]

அந்திகை—1. (நாடகம்.) அக்காள். 2. அடுப்பு. 3. இரவு. 4. ஒருவகைக்கண்ணோய். 5. சமீபம். 6. மாநடப்பெண். [அந்திகா]

அந்திசந்தி—காலையும், மாலையும்.

அந்தித்தல்— 1. கிட்டுதல். (உ-ம்.) "வேதமந்தித்துமறியான்செய்த திருவிளையாடல் கேட்டும்" (திருவிளை. நகர. ௪0௬.) 2. சந்தித்தல். (உ-ம்.) யமபடையெனவந்திக்குங்கட்கடையாலே" (திருப்பு. அ௫.) 3. நியமித்தல். (உ-ம்.) "அந்தித்தநின்புணர்ப்பை" (கந்தபு. சயந்தன்பு ௫அ.) 4. பொருந்துதல்.

அந்திப்பூ—அந்திமல்லிகை.[அந்தி-மாலை]

அந்திபகல்— 1. இராப்பகல். (உ-ம்.)"அந்திபகலாச்சிவனையாதரித்து" (பட்டணத்து) 2. கேவலசகலாவத்தைகளைக் கருதும் ஒரு குறிப்புமொழி. (உ-ம்.) "அந்திபகலென்றிரண்டையுமொழித் திந்திரிய சஞ்சலங்களையறுத்து" (திருப்பு. ச௨.) [அந்தி - இரா. பகல்.]

அந்திமந்தாரம்— அந்திமந்தாரை. [அந்தி - மாலை.]

அந்திமந்தாரை—ஒருமரம். [அந்தி-மாலை இது அந்திக்காலத்திற்புட்பிக்கும்.]

அந்திமல்லிகை—ஒருவகைப்பூண்டு. [அந்தி-மாலை.]

அந்திமலர்ந்தான்— அந்திப்பூ. [அந்தி-மாலை. மலர்ந்தான் - மலர்தலுடையது.]

அந்திமான்—இடையெழுவள்ளல்களுளொருவன். (கந்தபு. கந்தவிர. கஅ.)

அந்திமாலை— பகற்காலத்தின் முடிவில்வருமூன்னிரவு. (இராமா. மிதிலை. சுடு.)

அந்தியகருமம்—மரணத்தின்பின் செய்யும் பிரேதசக்கிரியை: இறந்த ஆன்மாவை கடேற்ற எண்ணிச்செய்யுங்கிரியை. [சுஷியகூ-: சுஷிய - இறுதி. கூ- - கிரியை.]

அந்தியகாலம்—மரணகாலம். (உ-ம்.) "அந்தியகாலந்தன் னிலணிவயிற்றிரதசிற்கில்" (விருத்தாசல. சிவபூ. சக.) [சுஷிய - இறுதி. காலம் - பொழுது.]

அந்தியகிரியை— அந்தியகருமம்.

அந்தியசன்— 1. தாழ்ந்தவருணத்தோன். 2. தம்பி. [சுஷிய - இறுதி. ஜ- பிறந்தவன்.]

அந்தியசாதி— மிகக்கீழான சாதி. (உ-ம்.) "அநதியசாதியின் பாண்டத்துச் சலமுதலிய வற்றைக்குடித்தற்குப்பிராயச்சித்தம்" (பராச. வரதா. பிராயச்சி. ந. நo, நக.) வண்ணான், முச்சி, கூத்தாடி, பாய்க்குடிசையிலிருப்பவனை குருவிக்காரன், செம்படவன், மேதரவனென்னும் மூங்கிற்பாய்வேலைசெய்யுமொருவிதசாதியான, வேடன் அல்லது இருளன் ஆகிய இந்த எழுசாதிகளும் அந்தியசாதிகளாம். [சுஷ ஜாதி.]

அந்தியசைவர்— சிவதீக்ஷைபெற்ற பிரதிலோமர் முதலிய சாதியார். (உ-ம்.) "அரிய சதாசிவனென்போ னநாதிசைவனவன் பால வதரித்த சிவமறையோராதிசைவரிவர்பால் - உரிய சிவதீக்கைபெற்ற பூசுரர்மாசைவருயர்ந்தவரசன் வணிகனநுசைவராவார்- பெரியகுவளைப்புயத்தோ னவாந்தரசைவன்சீர்பெறுசவன்னனுதியநுலோமர்பிரவரராம்-விரியவனிமிசையொழிந்தோரந்தியசைவத்தோர் விரிந்திடுமேழ்சைவவிதமிவையெனா நூல்விளம்பும்" (ஆசௌசதீபிகை. உo.) [சுஷிய - இறுதி. சைவர் - சிவசமயத்தோர்.]

அந்தியபம்—இரேவதி. 2. மீனராசி. [சுஷியஷ: சுஷிய - இறுதி. ஷ - நக்ஷத்திரம்.] (பிருகச்சாதக. ஈ. அ.)

அந்தியம்— 1. (கணிதம்) சமுத்திரம் பத்துக்கொண்ட எண். (பிங்க. உஉஎஎ.) 2. மரணம். (உ-ம்.) (அடல்வாலியந்தியத்திலறைந்த". (இராமா. உத். அநுமபசுசு.) 3. முடிவு. [சுஷிய - சுஷ - இறுதி. ய - ஒரு வ. வி.]

அந்தியாபாகம்— அந்தியேட்டி. (சி-வி.இரி. உ.) [சுஷ யாம:]

அந்தியர்—கீழ்மக்கள். [சுஷ - இறுதி.]

அந்தியவருணம்—1. நான்காம்வருணம். 2. மிகக்கீழான வருணம். [சுஷ வண-: சுஷ - இறுதி. வர்ண - குலம்.]

அந்தியாவசாயி— நிஷர்தமாதுக்குஞ் சண்டாளனுக்கும் பிறந்தவன்; இவன்றொழில் சண்டாளத்தொழிலுங் சுடுகாடுகாத்தலும். 2. வேட்டையாடுதற்றொழிலுடைய ஒருவருணத்தார். [சுஷிய இறுதி. சுவ்வஸாயிந்- வெட்டுவோன.]

அந்தியாவயவி—இறுதியிலே வரும் அவயவமுடைய பிண்டம். (உ-ம்.) "பரமாணுத்துவயமகள் சேர்ந்து துவியணுகங்கடோன்றும். துவியணுகங்கள் மூன்று சேர்ந்து திரிசரேணுசந்தோன்றும்; இங்ஙனமே சதுரணுகம் முதலியன முறையானே தோன்றவின் அந்தியாவயவிகளாகிய மகாபிருதிவி, மகாசலம், மகாதேயு, மகாவாயுத்தோன்றும்.(தர்க்காமிர். பக். கச.) சுஷிய - இறுதி. அவயவி - அவயவமுடையது.]

அந்த்யேட்டி— மரணத்தின்பின் செய்யும் யாகம. (ஆசௌசதீபிகை. கூக.) (உ-ம்.) "எண்ணவருமந்தியேட்டி மந்திரத்தாற்றகனிலை" [சுஷிமியஷி: சுஷிய- இறுதி. ஐஷி- யாகம்.]

அந்த்யை— ம்லேச்சப்பெயருடையவள். (பராசர. கூஉ.) [சுஷ - இறுதி. யா - ஒரு வ - வி.]

அந்திராக்கண்மணி—நீலக்கல்.

அந்திராக்கொடிச்சி—செங்ககம்.

அந்திரம்— குடர். [சுஷர: சுஷ - பிரிதல். த்ர - ஒரு-வ. வி. உணவினைப்பிரிப்பித்தின் ஹும் பொருட்டு.]

அந்திராவசநம் — கொட்டைப்பாக்கு.

அந்திரன்— ஓரிழிந்தஜாதியான்; இவன் தந்தை வைதேகனும் தாய் காராவரப்பெண்ணும் ஆவர். இவன் காட்டுப்பசுக்களைக் கொன்று வயிறுவளர்க்கிறவன். (பராச.கூருக.)

அந்திரு— நிவிர்த்திகலையிற் பிருதிவிதத்துவத்தில் உள்ளனவாகச் சொல்லப்படும்புவநங்கள் நூற்றெட்டனுள் தென்மேற்றிசையில்

இருக்கும்பத்துப்புவநங்களுள் ஒன்று. (சி.வி. கிரி. உக. உரை.) [ஸஹஜ.]

அந்திலி—1. அவ்விடம். (உ-ம்.) "அந்திலரங்கத்தகன்பொழில்" (சிலப். காடு. சு.) 2. ஓரசைச்சொல்" (உ-ம்.) "அந்திலசெம்பொன்னணிமணிக்கோயிலின்"(கந்தபு. பாயிர. சு.) 3. வெண்கடுகு. (பிங்க. உகூக. க.)

அந்திவண்ணர்—சிவன். (உ-ம்.) "அந்திவண்ணர்தமடியவர்க்கு" (பெரியபு. அமர்நீதி. உ.) [அந்தி- செவ்வானம். வர்ணர்- நிறமுடையவர், ர்- ஒருமைச்சிறப்பில்வந்தது.]

அந்தீகிருதன் — குருடனாக்கப்பட்டவன். [அந்தீக்ருத- அந்த- குருடன். க்ருத - ஆக்கப்பட்டவன்.]

அந்தீபூதன் — குருடனானவன். [அந்தீபூத: அந்த - குருடன். பூத - ஆனவன்.]

அந்து—1. எருது. [ஹந்து.] 2. கிணறு. [அந்து.] 3. கொலை. (உ-ம்.) "அந்துசெய்குவனென" (இராமா. யுத். இராவணன்வதை.சுக.) 4. நெல்வண்டு.(உ-ம்.)"அந்தேயளவுமளியில்சிறியேன்" (கந்தபு. காவிரிநீ. கச.) 5. பாதகிண்கிணி. [அந்து.]

அந்துகம்—1. சங்கிலி. 2. பாதகிண்கிணி. 3. யானைக்காலிற் கட்டுஞ்சங்கிலி. [அந்துக அந்தி- கட்டுதல்.]

அந்துளியிந்துளியாத்தல்—1. சூறையாடல். 2. தலைச்சுழற்சி. 3. பதைபதைத்தல். [அந்த; உளி. இந்த; உளி: உளி-இடம் வழக்.]

அந்தூகம்— யானையைக் காலிற்கட்டுஞ் சங்கிலி. [அந்தூக; அந்தி - கட்டுதல்.]

அந்தேசம்—1. அந்தரிப்பு. [அந்தே-முடிவில். ஜ- பிறந்தது. [வழக்.] 2. அபஸம்.

அந்தேவாசி—மாணாக்கன். [அந்தே- சமீபத்தில், வாஸி ந்- வசிப்போன்.]

அந்தை—ஒருநிறை. (தொல். எழுத். தொகை. உஅ. நச்.)

அந்தோ—இரக்கத்தினையுணர்த்தும் ஒருகுறிப்புச்சொல். (உ-ம்.) "பெற்றிலடவமந்தோபெருநிலமகள்" (இராமா. அயோ. வநம் உரு.) [இதனை நச்சினார்க்கினியர் சிங்களச்சொல் என்பர்.] (தொல். சொல். சா௦௦. உரை.)

அந்தோட்டம்— கண்டோட்டம் என்னும் ஓர் உரோகம்; அது: வாயு உதட்டிற்சேரும் போது பிறந்து உதடுகளிலே வெடிப்பையுண்டாக்குவதென்பர். (சீவரட். உஎகூ.) [அந்த - நாசம். ஓஷ்ட - உதடு.]

அந்நோர்—நெல்விமரம்.

அந்நக்கனை— பெலவீநமான நேரத்திலே யந்நத்தையதிகம்புசித்தலால்வருங் கனை. அந்நம்- சோறு. கனை-இளைப்பு.]

அந்நக்காவடி—1. யாசகர்பொருட்டு வீடுதோறும் யாசித்துவாங்கிய அந்நங்கொண்டுபோகுங் காவடி. 2. விக்கிரகத்துக்குநைவேதிக்கும்படி யந்நங்கொண்டு போகுங்காவடி. அந்நம்- சோறு. கா - காவுதல். அடி அடுத்தது.]

அந்நக்கோடி—தருமமாகச்சோறுகொடுக்கப்படும் என்பதை அறிவித்தற்குச்சத்திரத்திற் கட்டியகொடி. [அந்நம்; கொடி.]

அந்நக்கொடை— அந்நதாநம். [அந்நம் - சோறு. கொடை- கொடுத்தல்.]

அந்நகந்தி—வயிற்றுளைவு.[அந்நமாந்த்ய: அந்நம்- சோறு. மாந்த்ய- மந்தமுடையது.]

அந்நகாலம்—போசநகாலம். [அந்நகால: அந்நம் - உணவு. காலம் - பொழுது.]

அந்நகோட்டகம் — தானியம்வைக்கும் வீடு; [அந்நகோஷ்டக: அந்ந - தானியம். கோஷ்டக-சாலை.]

அந்நகோட்டகன்— 1. சூரியன். 2. விட்டுணு. [அந்நகோஷ்டக: அந்ந - உணவு. கோஷ்டக- கொள்ளுமிடம்.]

அந்நகோட்டம் — தானியம்வைக்கும்வீடு. [அந்நகோஷ்ட: அந்ந- தானியம். கோஷ்ட - சாலை.]

அந்நசத்திரம்— தருமமாகச்சோறுகொடுக்குஞ்சத்திரம். [அந்நம்- சோறு.ஸத்ர - வீடு.]

அந்நசலம்— 1. கஞ்சி. 2. சீவனுக்காதாரம், வெற்றுணவு. 3. சோருந்தண்ணீரும். [அந்நஜல: அந்நம்-சோறு. ஜல-நீர்.]

அந்நசாரம்—1. அந்நரசம். (உ-ம்.) "மன்னியவந்நசாரமிருதயமலரின்வாய்த்துத் - தின்னியநாடிதோறுஞ்சொரிந்திடும்" (சிவதரு. சௌநமரண. க.) 2. கஞ்சி. [அந்நம்-உணவு, ஸாரம் - சாரம்.]

அந்நசாலை—அந்நசத்திரம்.[அந்நம்-சோறு. சாலா- வீடு.]

அந்நசுத்தி—நெய். [அந்நம்-சோறு.ஶுத்தி- சுத்தஞ்செய்வது.] (வழக்.)

அந்நதன்—போசநங்கொடுப்போன். [அ ன்ந: அன்ந- சோறு. த- கொடுப்பவன்.]

அந்நதாதா — அந்நங்கொடுக்குந் தருமவா ன். (உ-ம்.) "அந்ந- தாதாவுமுதலான தயா விஞேர்" (இராமா. உத்-திக்கு. ௬க.) [அன்ந தாதா அன்நம்- உணவு. தாதா - கொடுப் போன்.

அந்நதானம்—சோற்றுக்கொடை. (உ-ம்.) "அருட்படுதானந்தம்முள் விழுமிதாமந்நதான ம்" (திருவிளை. மூர்த்தி. அ.) [அன்நதாநம்- அன்நம் - சோறு. தாநம்- கொடை.]

அந்நப்பாகு—அந்நரசம். [அந்நம்-உணவு பாகு- ரசம்.]

அந்நப்பால்—கஞ்சி. [அந்நம்-சோறு.பால்- பால்போல்வது.]

அந்நப்பிராசநம்— குழந்தைக்கு முதலி ற்சோறூட்டுங்கிரியை. (உ-ம்.) "பூணிரு துசங்கமங்கருப்பாதாநம் புஞ்சவநஞ் சீமந் தஞ்சாதகன்மம்-பேணுநாமகரண மந்நப்பிராசநமேபிரவாசம்பிண்டவிர்த்தி-கா ணவுறுசவுளமுபநயனங் கண்டோபக்கிரகம ணங்காண்டமோசநஞ்சேர்- மாணுசமாவர்த்த நமேவிவாகமின்ன வகுத்தபதினாறுமெனம திக்கயன்ஞ" (திருவானை. கோச்செங். கச.) [அன்நப்ராசந: அன்நம்- சோறு. ப்ராசந- விதிமுறையுண்பித்தல்.]

அந்நபாநம்—சோறுந்தண்ணீரும். [அந்ந ம்- சோறு. பாநம் - குடிப்பது.]

அந்நபாநோற்காரம்—சோற்றையும நீரை யும் வாந்திசெய்தல். (த. கி. போ. கக௩.) [அந்நம்- சோறு. பாநம்-குடிப்பது. உத்கார- உமிழ்தல்.]

அந்நபூமி—சோற்றுக்குவியல். [அன்நபூமி:அன்நம்- சோறு. பூமி- குவியல்.]

அந்நபூர்ணி—
அந்நபூர்ணை— } தூர்க்கை. [அன்நபூர்ணா: அன்நம் - சோறு. பூர்ணா- பூரணமுடையவள், பூரணமா கக்கொடுப்பவள்.]

அந்நபூரணை— அதர்வணவேத உபநிடத த்தொன்று. (கூர்மபு. அட்டமூ. ௨௬. உரை.)

அந்நபேதி— சோற்றினைநீராக மாறச்செ ய்யுஞ் சத்தியுடையதெனச் சொல்லப்படும் ஒருமருந்து: [அன்நம்- சோறு.பேதி - பே தஞ்செய்வது. அந்நத்திலேபோடச் சலமு ண்டாதலால்; இந்தப்பெயரால் இரண்டுவ கையான சரக்குகள் கடையில் விற்கப்படுகி ன்றன என்றும் ஒளஷதத்துக்குப் பிரயோ கிக்கப்படும் அந்நபேதி பிரகாசமான பச்சை நிறமுள்ளதாய்ப் பளிங்குக்கற்போல இருக் கின்றதென்றுஞ்சொல்லப்படுகிறது.]

அந்நம்—1. உணவு. (உ-ம்.) "பூதத்தேய ந்நமாகியந்நத்தாலுடம்புபுத்தி" (சி. சி. பர. லோகா. மதம். க௩.) 2. சோறு. (உ-ம்.) "முல்லைமுகையின் பொற்பமைந்தவந்நஞ் சொரிந்து கருணைகொட்டி" (கூர்மபு. தென். ௫.) 3. தானியம். [அன்நம்: அத் - உண்ணல். ந - செயப்படுபொருள்விகுதி.] அந்நம் - ["அன்ந" என்னும் வடமொழியின் விகார மாய்ச் சம்யுக்தபதங்களில் இரண்டாம்பதமா ய் நிற்பது.] ஆறுநாழிகைகொண்ட பகற் கூறு. இது: பூர்வாந்நம், பராந்நம், மத்தியா ந்நம்,அபராந்நம், சாயாந்நம் என ஐவகைப்ப டும்.

அந்நமயகோசம்—தூலதேகம்; இது தா ய் தந்தையர் புசித்த அந்நத்தினாலே அவர்க ளுடைய சுக்கிலசுரோணிதங்களாற் பிறந்த தாயும் பாலினாலும், அன்னத்தினாலும், வள ர்ந்ததாயும் இருப்பது. (வாசுதே. ககஎ.) உணவிலேயுண்டாகியதோல், எலும்பு, நர ம்பு, மச்சை, சோரி, சுக்கிலம் என்னும் ஆறு தாதுக்களுங்கூடிவந்த கோசம். (சி. சி. பர. மாயா. மதம். அ.) [அன்நம் - சோறு. கோசம் - உறை.]

அந்நமயம்—1. அந்நமயகோசம். (உ-ம்.) "மதமுறுநல்லந்நமயம் பிராணமயத்தால்" (சூத. எக்கி. உத். ௩: கக.) 2. சரீரம், போச நத்தாலாயது: [அன்நமய: அன்நம்-சோறு. மய- ஆயது என்னும் பொருளுடைய ஒரு வ-வி.]

அந்நமலம்— 1. அமேத்தியம். 2. மஸ்து நீர். [அன்நமல: அன்நம்- சோறு. மல- சளிநீர், வேர்வைநீர், அழுக்கு.]

அந்நமழகி—ஒருவகையரிசி. (உ -ம்.) "அந் நமழகியரிசியாரோக்கியங்கொடுக்கும்"(பதா ர்த்த. ௯௦௪.)

அந்நரசம்—1. இரத்தம் முதலியவாக மா றும் அந்நத்தின்சாரம். 2. கஞ்சி. [அன்நர ஸ: அன்நம்- உணவு. ரஸ- சாரம், சலம்.]

அந்நவாகிநுரோதம் — கண்டத்தினின் றுணவை யந்நாசயத்துக்குக் கொண்டுசெல்லுங் கால்வாய். [ஸ்ஹ வாஹிஸ்ரோதஸ் - ஸ்ஹ- சோறு. வாஹி- கொண்டுசெல்வது. ஸ்ரோதஸ் - கால்வாய்.]

அந்நவிகாரம்— சுக்கிலம். [அந்நவிகாரம்: அந்நம்- உணவு. விகாரம்- பரிணாமம்.]

அந்நவூறல்—கஞ்சி. [அந்நம் - சோறு. ஊறல்- ஊறியது.]

அந்நவேதி—அந்நபேதி.

அந்நாகாரம்— சோறுண்வு. [அந்நம்-சோறு. ஆகாரம்- உணவு.]

அந்நாசயம்— வயிற்றினுள்ளே உணவு போய்த் தங்குமிடம். [ஸ்ஹாஶய: ஸ்ஹ- சோறு. ஆஶயம்- தங்குமிடம்.]

அந்நாதரம்—சோறு புசித்தலிலுண்டாகும்விருப்பம். (உ-ம்.) "அந்நாதரம்போய்த்தவஞ்செய் தவிழ்பன்னமூனை" (ஞானவா. சுரகு. கஇ.) [ஸ்ஹ-சோறு. ஆதர- விருப்பம்.]

அந்நாதன்— 1. பிறனுடைய உணவையுண்போன். 2. விட்டுணு. [ஸ்ஹாத: ஸ்ஹ- உணவு. அத- உண்போன்.]

அந்நாபிடேகம்— விக்கிரகத்துக்கந்நத்தாற் செய்யும் அபிடேகம்.[அந்நம்- சோறு. அபிஷேகம்- முழுகச்செய்தல்.]

அந்நாலத்தி— விக்கிரகத்துக்குமுன்னும் மணவாளனுக்குமுன்னுங் கண்ணூறுகழித்தற்குச் செய்யுஞ் சோற்றாலத்தி. [வழக்.] [அந்நம்-சோறு. ஆரதி - தீபங்காட்டல். "ஆரதி" ஆலத்தியென மருவிற்று. நெருப்புக்கொள்ளியைக்கருதும் ஆலாதம் என்னும் வடமொழியாகுபெயராய் மருவிவந்து ஆலத்தியாயிற்றெனினும் இழுக்காது.]

அந்நாவிருதவாதம்—ஒருவகைஆவிருதவாதம்; அது: அசீரணப்பட்டு நோவைத்தருகின்ற அன்னத்தை வாயு ஆவரணமாகச்சூழும்போது பிறப்பதோர் நோய். (சீவரட். கககஅ.) [ஸ்ஹ ஆவ்ருதவாத.]

அந்நாள்— அக்காலம். (உ-ம்.) "அந்நாளுற்றவெதல்லாமவனுக்காசனனைவான்" (இராமா. நகர்நீ. எகூ.) [அ- அந்த. நாள்- காலம்.]

அந்நியகாமி—பாதாரகமனஞ் செய்கிறவன். [ஸ்ந்யகாமி: காமி- போகிறவன்.]

அந்நியதுணசகநம்— தயாவிருத்திபதினொன்றினொன்று; அது: பிறர் குணத்திலே அழுக்காறின்றிப்பொறுத்தல்.[ஸ்ந்யகுணஸஹநம்: அந்ய- பிறர்குணம். ஸஹந- பொறுத்தல்.]

அந்நியத்துவம்— அந்நியமா யிருக்குந்தன்மை. (உ-ம்.) "அப்பேதந்தானயப்பவுண்டானற்றானந்நியத்துவம் வந்திடுமே" (சூத. எக்கி. பூ. கo: உக.) [ஸ்ந்ய- வேறு. த்வ- தன்மை.]

அந்நியதரகந்மசம்— இரண்டில் ஒன்றன் கன்மத்தாற்பிறந்தது.(தர்க்காமிர்.) [ஸ்ந்யதர - இரண்டிலொன்று. கர்மஜம்-கன்மத்தாற்பிறந்தது.]

அந்நியதரம்—இரண்டினுளொன்று.

அந்நியதரன்—இருவரில் ஒருவன்(எதிரி.) (அநுமா. பக். உo.)

அந்நியதராசித்தம்— ஏதுப்போலிவகையுளொன்று.(உ-ம்.) "உபயாசித்தமன்னியதாசித்தம்" (மணிமே. உக - அந்நியதரன் இருவரிலொருவன். அசித்தம் - பெறப்படாதது.) "அந்நியதராசித்தமாவது, உபயவாதிகளில் ஒருவனால் உள்ளதாகக்கொள்ளப்படாத பொருளை ஏதுவாகக்கூறுவது" (அநுமா. பக். கக.)

அந்நியதா—1. தவறாய், திருத்தமில்லாதாய். 2. வேறுவிதமாய். "அத்தையறியாமலந்நியதாவாகச் சொல்வார்கள்" (சி. சி. க: கக. சிவாக்.) 3. வேறொருபொழுது. [1, 2. ஸ்ந்யதா: ஸ்ந்ய- வேறு. தா - விதம். 3. ஸ்ந்யதா.]

அந்நியதாகர்த்நுத்துவம்— ஈச்சுரனுடைய பிரபுத்துவ சாமர்த்தியகுணங்கள் மூன்றனுள் ஒன்று; அது: கடத்தைப் படமாகச் செய்வதுபோல ஒன்றை மற்றொன்றாகச் செய்யுஞ்சாமர்த்தியம். (வேதா. சூ. சஎ. உரை.) [ஸ்ந்யதா- வேறுவிதமான. கர்த்ருத்வம் - கர்த்தாவின் செயல்.]

அந்நியதாசித்தி—எடுத்துக்கொண்டசாதனத்தினின்று கருதிய தல்லாதவேறு சாத்தியஞ் சித்தித்தல். 2. போலியாய்ச்சித்தித்தல். [ஸ்ந்யதாஸித்தி: ஸ்ந்யதா- வேறு. ஸித்தி- பேறு.]

அந்நியதாஞாநம்—ஒன்றை வேறொன்றாய் அறிதல். (உ-ம்.) "ஒன்றையொன்றாகக்கரு

துதலேயந்நியதாஞானமெனில்" (சிவப்பிர. உ: உ. உரை. சிதம்பர.) [அந்யா - வேறு விதம். ஞானம்- அறிதல்.]

அந்நியநாபிரதிபத்தி—போலி. அஃது: ஒன்றுநின்றவிடத்து அதுபோன்ற வேறொன்று வந்தடைதல். [அந்யதா-வேறுவிதம். பிரதிபத்தி - விஸ்வசித்தல், நம்புதல்.]

அந்நியதோவாதரோகம் — சர்வநேத்திர ரோகபேதத்திலொன்றாகிய சங்கரோசம் எழுவகைகளுள் ஒன்று; இது: கண், நெற்றி, வாதநரம்பு, மற்றையநரம்பாகிய இந்த இடங்களில் வாயுதங்கிச் சஞ்சரிக்கும்போது பிறந்து, கண்களிற் சிவப்பு, வீக்கம், அதிகநோவு, நீர்க்கம்ம லென்னுமிக் குணங்களையுண்டாக்கும். (சீவரட். உருக.) [வாயுவானது தனக் கந்நிய ஸ்தானமாகிய பித்த சிலேஷ்ம நரம்புகளிலும் வியாபித்து நேத்திரத்திற்கு பத்திரவத்தைக் கொடுப்பதால் வந்த பெயர்.]

அந்நியநாத்தி—வேறன்மை (உ-ம்.) "அத்விசமென்ற சொல்லேயந்நிய நாத்தியையுணர்த்துமாயிட்டு" (சிவஞானபோ. உ: க. அதி. வார்த்திக.) [அந்ய - வேறு. நாஸ்தி- அன்மை.]

அந்நியபாவம்— வேறாயிருக்கை. (உ-ம்.) "ஆன்மாசிவனுக் கந்நிய பாவத்தையு மடைந்து" (சி.சி. அ: க. சிவாக்.) [அந்ய-வேறு. பாவ - இருக்கை.]

அந்நியபுட்டம் — குயிற்பறவை. [அந்ய புஷ்ட: அந்ய - பிறிது. புஷ்ட:- வளர்க்கப்பட்டது. காகத்தினாலே வளர்க்கப்பட்டதென்றபடி.]

அந்நியம்—வேறு. (உ-ம்.) "அந்நியமின்மையி னரன்கழல்செலுமே" (சிவஞானபோ. அ-அஞ்- சூத்.) [அந்ய.]

அந்நியமநஸ்கம்— கவனம் வேறாயிருத்தல். [அந்யமநஸ்க: அந்ய - வேறு. மநஸ்க- மநங்கொள்ளல்.]

அந்நியயோகவியவச்சேதம்— பிறிதினியைபுநீக்குதல். (பி. வி. ௫௦.) [அந்யயோக - பிறிதினியைபு. வ்யவச்சேத - பிரித்தல்.]

அந்நியர் — பிறர். (உ-ம்.) "அந்நியர்தமையொழித்தானையேத்துதி" (காஞ்சிபு. திருநெறி. ௩௦.)

அந்நியவாதி— 1. ஒவ்வாமறப்பேசுவோன். 2. புரட்டிப்பேசுவோன். [அந்யவாதீ ந்: அந்ய - வேறு. வாதீ ந் - பேசுவோன்.]

அந்நியவோடாலிகாதிரகம்— பாலர்களைத் தொடருகின்ற பன்னிரண்டுபெண்கிரகங்களுளொன்று; அது: குழந்தைபிறந்த எட்டாம்நாளிலாவ தெட்டாம் மாதத்திலாவ தெட்டாம் வருஷத்திலாவது சிசுவை யல்லது தாயைப்பிடிக்கும். அப்போது அந்தத்துவேஷம், அடிக்கடி நாவைநீட்டுதல், இளைத்தல், நோவு, சதா அழுகை, கண்மூடல் என்னுமிக்குணங்களையுண்டாக்கும். (சீவரட். உஉஎ.)

அந்நியன்— பிறன். (உ-ம்.) "அந்நியன்றனைக்கொண்டாங்கருமகம் நடத்துகின்ற"(இராமா. உத். இலவண. சரு.) [அந்ய.]

அந்நியாதீநன்—பிறருக்குக்கீழ்ப்பட்டிருக்கிறவன், பிறரைச்சார்ந்திருக்கிறவன். [அந்யாதீந: அதீந - சார்ந்திருத்தல்.]

அந்நியாயம்— அநீதி. (உ-ம்.) "என்னையந்நியாயத்தாலேயெரிவித்தசாபம்" (இராமா. உத். இலவண. கசு.) [அந்யாய: அ-எதிர்மறை. ந்யாய - நீதி.]

அந்நியை—1. பிந்நாசத்தி. (பௌட். ச௦.) [அந்யா.] 2. பிறள்.

அந்நியோந்நியகலகம் —ஒருவரோடொருவர் இளையாது செய்யுங்கலகம். [அந்யோந்யகலஹ: அந்யோந்ய- ஒருவருக்கொருவர். கலஹ - சண்டை.]

அந்நியோந்நியம்— ஒன்றற்கொன்றிருக்குஞ்சம்பந்தம். [அந்யோந்ய: அந்ய+அந்ய- வேறு.]

அந்நியோந்நியவந்தியாசம்—இந்த வஸ்துவின்தர்மம் அந்தவஸ்துவினிடத்தும், அந்த வஸ்துவின் தர்மம் இந்த வஸ்துவினிடத்துமாகத்தோற்றப்பட்டது. (வாசுதே. எ.) [அந்யோந்ய - ஒன்றற்கொன்று. அத்யாஸ - விபரீதம்.]

அந்நியோந்நியவிருத்தம்— ஒன்றற்கொன்றுமாறுபட்டது. [அந்யோந்ய- ஒன்றற்கொன்று. விருத்த - மாறுபட்டது.]

அந்நியோந்நியவிரோதம்— ஒன்றற்கொன்று விரோதம். (உ-ம்.) "சகலவிஷயங்களுக்கும் நித்தியத்துவஞ்சாதிக்கின்ற மெய்ஞ்

ஞாநத்துக்கும் அவ்விடயங்களுக்குச் சத்தியத்துவஞ்சாதிக்கின்றதேகத்தினல் அநுபவிக்கும் பிராரத்தவினைக்கும் அந்நியோந்நிய விரோதமாய்" (வேதா. சூ. கரு. உரை.) [அந்யோந்ய - ஒன்றுக்கொன்று. விரோத - முரண்.]

அந்நியோந்நியாச்சிரயதோஷம் — இருபொருள்களுள் ஒன்றற்கொன்று பற்றுக்கோடாயிருக்குமென்னுந் தோஷம்; அது: இருவினைகள் உடலின்காரியமாயும், உடல் இருவினையின் காரியமாயுமிருக்கு மென்று சொல்லுதல்போல்வது. (சி. சி. உ: சுo. சிவாக்.) [அந்யோந்ய - ஒன்றுக்கொன்று. ஆஶ்ரய - பற்றுக்கோடு. தோஷம் - குற்றம்.]

அந்நியோந்நியாச்சிரயம் — இருபொருட்கள் ஒன்றுக்கொன்றுபற்றுக்கோடாக இருத்தல். (சி. சி. அ: உ. உரை. சிவாக்.) [அந்யோந்ய - ஒன்றையொன்று. ஆஶ்ரயம் - பற்றுதல்.]

அந்நியோந்நியாபாவம் — ஒன்றிலொன்றில்லாதிருக்கை. (உ-ம்.) "கடத்திற்படமும் படத்திற்கடமும் இல்லையென்பது" (வேதா. சூ. நரு. உரை.) [அந்யோந்ய - ஒன்றுக்கொன்று. அபாவம் - இன்மை.]

அந்நியோந்நியாலங்காரம் — ஒன்றுக்கொன்றுதவியணி; அது: ஒன்றற்கொன்றுபகரித்தலைச்சொல்லுதல். (உ-ம.) "திங்களிரவால்விளங்குஞ் செப்பியவத் திங்களினற் - கங்குன்மிகவிளங்குங் காண்" (இலக்கணவிள. கக௨. விசாக.) [அந்யோந்ய - ஒன்றுக்கொன்று. அலங்காரம் - அணி.]

அந்நுவயச்சொல் — பார்த்தாநுமாந மென்று சொல்லப்பட்ட சொல்லினொருவகை; அது: திருட்டாந்த பூர்வமாகப் போதிக்கும் உடம்பாட்டுச்சொல். (உ-ம்.) "தொக்கவிவற்றாற்பிறர்தெளியச் சொல்லலாகுமச்சொல்லு, மிக்கவந்நுவயத்தினொடுவெதிரேகச் சொல்லெனவிரண்டாம்" (சி. சி. அளவை. அ.) [அந்வயம் - உடன்பாடு. சொல் - வாக்கியம்.]

அந்நுவயம் — 1. அந்நுவயச் சொல். (உ-ம்.) "புகையாலநலுண்டடுக்களைபோலென்னப்புகறலந்நுவயம்" (சி.சி. அளவை. கக) 2. ஒருவாக்கியத்திலே எழுவாய், பயனிலை, செயப்படு பொருள் என்னுமிவைகளை வெளிப்படுத்தற்குப் பொருத்தமான பதங்களையெடுத்துக் கூட்டிக்கொள்ளுதல். (வேதா. சூ. அ.) 3. காரணகாரியங்களினது உடம்பட்டுரூபமான சம்பந்தம். 4. சம்பந்தம். 5. பின்போதல். 6. வமிசத்தொடர்ச்சி. [அந்வய: அநு - பின். அயம் - போதல்.]

அந்நுவயலக்கணம் — பொருத்தமான பதங்களையெடுத்துக்கோத்துச் சொல்லப்படும வாக்கியத்திற்குரிய இலக்கணங்கள்; அவை: கருத்தா, கருமம், கிரியை, விசேடணம், விசேடியம் என்பன. (உ-ம்.) "கோத்துரைசெய்விசேடவிசேடியங்கருத்தாக்கருமங் கொள்கிரியை யிவைவையைந் தந்நுவய விலக்கணம்" (வேதா. சூ. அ.) [அந்வய - கூட்டிக் கொள்ளுதல். லக்ஷண.]

அந்நுவயவியதிரேகி — பரார்த்தாநுமானவகையுளொன்று; அது: அந்நுவயத்தானும் வியதிரேகத்தானும் வியாத்தியுடையது. "யாண்டுப்புகை, ஆண்டுத்தீ; எங்ஙனம்; அட்டில்" என்பது அந்நுவயவியாத்தி. யாண்டுத்தீயில்லை, ஆண்டுப்புகையுமில்லை, எங்ஙனம்; மடுவில்" என்பது வியதிரேகவியாத்தி. இப்படியிருவகை வியாத்தியினலுமலைக்குத் தீயுண்மை சாதிக்கப்படக்கிடந்ததனல் இந்த நியாயம் அந்நுவயவியதிரேகி. (தர்க்கபா. உக.) [அந்வயவ்யதிரேகிந்: அந்வய - உடன்பாடு. வ்யதிரேகிந் - எதிர்மறையுடையது.]

அந்நுவயவியதிரேகியநுமாநம் — பிரதிஞ்ஞை, எது, திருட்டாந்தம், உபநயம், நிகமநம் என்னும் ரூபங்கள் ஐந்தினல் அந்நுவயவியதிரேகவியாத்திகளைக்கொண்டு சொல்லப்படும் அநுமாநம். (சி. சி. க: க. உரை. சிவாக்.)

அந்நுவயவியாத்தி — "யாண்டுப்புகை ஆண்டுத்தீ" என்பதிற்போல அந்நுவய உண்மையது காட்சியைச்சொல்லும் உடனிகழ்ச்சி நியமம். (தர்க்கபா. உக.) [அந்வயவ்யாப்தி: அந்வய - உடன்பாடு. வ்யாப்தி - தவறாது உடனிகழ்தல்.]

அந்நுவயாநுமாநம் — அந்நுவயவியாத்தியுள்ளது. (அநுமா. பக். சு.)

அந்நுவாகாரியபசநம் — தக்ஷிணாக்கினி. [அந்வாஹார்ய - ஒருசிராத்தம். பசநம் - அக்கினி.

அந்நுவாகாரியம் — 1. இறந்த பெற்றோருக்கு முதல்வருடத்திலேமாசந்தோறுஞ்செய்

யப்படும் மாசிகசிரார்த்தம். 2. மாசந்தோறும் வரும் அமாவாசித் திநத்திலே பிதிருக்குச் செய்யுஞ்சிராரர்த்தம். அது புதிதாயும் நாற்ற மில்லாததாயும் இருக்கிற மாமிசத்தாற்செய் யத்தக்கது. (மநு. ௩: ௧உ௩.) [அந்வாஹார்யம்; அநு - பின். ஆஹார்ய - உண்ணப்பட்டது.]

அந்நுவாசநம்— 1. அபாநவாயிலால் உள்ளேபுகப்படும் நெய்ப்பற்றுள்ள ஒருமருந்து. 2. உபத்திரவம். 3. துக்கம். 4. தொழில் செய்யுமிடம். [அந்வாஸந; அநு - பின். ஆஸந - இருப்பு.]

அந்நுவாதேயம்—கணவனுடைய சுற்றத் தாரால் பெண்ணுக்கு விவாகத்தின் பின் கொடுக்கப்படும் பொருள். [அந்வாதேய; அநு - பின். ஆதேய - எடுக்கப்படுவது.]

அந்நுவாரோகணம் — பெண்ணானவள் இறந்த தன் நாயகனோடு டவன்பிரேதஞ்சுடுகட்டையிலாவது பின்வேறாக அடுக்கப்பட்ட சுடுகட்டையிலாவது தகிக்கப்படும்படி யேறுதல். [அந்வாரோஹண; அநு - பின். ஆரோஹண - ஏறுதல்.]

அந்யதாகர்த்திருத்துவம் — அந்நியதாகர்த்திருத்துவம். (உ-ம்.) "கர்த்திருத்துவமோ டகர்த்திருத்துவம்பிறநியதா கர்த்திருத்துவமே யத்தன் மெய்ப்பிரபுத்துவவல்" (வேதா. சூ. ௪௭.) [அந்யதா - வேறுவிதம். கர்த்ருத்வ - செய்வோன்றன்மை.]

அந்யாயம்—அந்நியாயம். [அ- எதிர்மறை. ந்யாய - நீதி.]

அந்வயம்— 1. பொருத்தமுள்ளது. உடம்பாடாய்வருவது. (சி. சி. அளவை. அ. சிவாக்.) 2. "அந்நுவய" என்னும்பதத்திற் குண்டாகிய அர்த்தங்கள் இதற்குமர்த்தங்களாகும். [அந்வய; அநு - பின். அய - போதல்.]

அந்வயித்தல்—சேர்தல், கூடுதல். (உ-ம்.) "தொன்மையிற் றொடர்ந்த வாய்மையறத் தொடுந் தொடர்ந்திலோரை யாவயித்தோரும்" (இராமா. இரணிய. ௧௩௧.) [மூ. அந்வய.]

அந்வாசயம்—1. அந்வாசயவும்மை. (உ-ம்.) "மன்மொழித்தோற்றஞ் சமுச்சயத்தோடு மந்வாசயமே" (பி. வி. உ௩.) 2. பிரதாந விஷயத்தோ டப்பிரதாநமான ஒன்றைச் சேர்த்துச்சொல்லல். [அந்வாசய; அநு - பின். ஆங் - முன். சி - சேர்த்தல். அ - வ - வி.]

அந்வாசயவும்மை—ஒருபெயர் இருவினை கொள்ளும் எதிர்மறையும்மை; அது: சாத்தன் பசுமேய்த்தும் வருவன் என்னுங்கால், மேய்க்காதும் வருவன் எனப் பின்னும் ஒரு வினைகொள்ளுவதுபோல்வது. (பி.வி. உ௩. உரை.) [அந்வாசய - இணைத்தல். உம்மை "உம்" என்னும் இடைச்சொல்.]

அந்விதம்— கூடிவருவது, தொடர்ந்துவருவது. (உ-ம்.) "யுத்தியாவிதசர்க்கபாஷை" (தர்க்கபா. ௧.) [அந்வித; அநு- பின். இத - போதல்.]

அநக்ஷம்—குருடு. [அநக்ஷ; அந் - எதிர்மறை. அக்ஷ - கண்.]

அநக்ஷரம்—1. சொல்லத்தகாதது. 2. நிந்தை. [அநக்ஷர; அந் - எதிர்மறை. அக்ஷர - எழுத்து.]

அநக்ஷரன்—1. ஊமை. 2. கல்வியில்லாதவன். 3. சொல்லத்தகாதது சொல்வோன். [அநக்ஷர; அந் - எதிர்மறை. அக்ஷர - எழுத்து.]

அநக்நி — அக்கினியல்லாத வஸ்து. 2. அக்கினியில்லாமை. 3. உ. தாக்கினியின்சேட்டையற்றவன். 4. விவாகம்பண்ணாதவன். [அநக்நி; அந் - எதிர்மறை. அக்நி - நெருப்பு.]

அநகங்காரம் — அகங்காரமின்மை. தானென்கிற அகங்காரமின்மை. (பகவற்கீ. ௧௩: ௭.) (உ-ம்.) "தேகேந்திரியங்களிற் றானென்கிற அகங்காரமற்றிருப்பதுந் தன்னுடையதல்லாத வஸ்துக்களிற் றன்னுடைய தென்கிறஅபிமாநமற்றிருப்பதும்." (பகவற்கீ. ௧௩: ௭. ரா.) தன்னிடத்தில் இல்லாமலிருக்கிற குணங்கள் தன்னிடத்திலிருப்பதாக வெண்ணி யஞ்ஞாநமடையாதிருத்தல். (பகவற்கீ. ௧௩: ௭. ஸ்ரீ. வி.) [அநஹங்கார; அந் - எதிர்மறை. அஹங்கார - கர்வம்.]

அநகம்—1. அழகியது. 2. இன்பமானது. 3. பாவமின்மை. (உ-ம்.) "அநகமாநெறிப டரடிசுணும்மலால்" (இராமா. சடாயுவுயிர். ௩௧.) 4. புல்லுருவி. 5. மாசின்மை. (உ-ம்.) "அநகமாந்துடலுந்தன் வசப்படும்" (சூத. ஞாந. ௧௨: ௧௧.) [அநக; அந் - எதிர்மறை. அக - தவறு, மாசு, பாவம்.]

அநகர்—1. அழகுடைய ஆடவர். (உ-ம்.) "அநகருமணங்களுரு மம்மலர்ச சோலைநின்று" (இராமா. நீர்விளை. க.) 2. அழகுள்ளவர். 3. பாவமற்றவர், மறுவற்றவர். (உ-ம்.) "அநகர நாளாங்கிதர்தமை" (திருப்பு. சஙரு.) 4. மேன்மக்கள். [அ ந் - எதிர்மறை. அகம் - தவறு, பாவம்.]

அநகன்—1. அருகன். (சூ. நிகண். சு: க.) 2. கடவுள். (உ-ம்.) "அநகன்கண்டதர்கருள்செய்தேகினன்" (கந்தபு. தெய்வ. உ0அ.) 3. சிவன். 4. பதினொரா மநுவின் காலத்துள்ள எழுமுனிவருளொருவன். (கூர்மபு. மநுவ. உசு.) 5. பாவமில்லாதவன். (உ-ம்.) "அநகனச்சுத னுருத்திரன்" (சிவதரு. ஐவகை. நடு.) 6. விஷ்ணு. [அநகு: அ ந் - எதிர்மறை. அகம் - பாவமுடையோன்.]

அநங்கதிலகை— ஓர் அப்சரஸ்திரீ, தெய்வமகள்.

அநங்கம்— 1. ஆகாயம். 2. இருவாட்சிப் பூச்செடி. 3. உடலின்மை. (உ-ம்.) "அநங்க மநங்கமான மாஞருடன்" (பாரத. அருச்சுனன்தீ. கூ0.) 4. மநம். 5. மல்லிகைக்கொடி. 6. வாயு. [அநங்கம்: அ ந் - எதிர்மறை. அங்கம் - உடல், உறுப்பு. உறுப்புப்போல ஒருவர் விரும்பத் தக்க பூவுடையவாயும் உறுப்பல்லாதிருத்தல்பற்றி உ-ம் ரு-ம் பொருட்களுக்குப் பெயராயிற்று.] (உ-ம்.) (சூ. நி. சக. ச0)

அநங்கமாதா—1. அரக்கு. 2. செம்பஞ்சு.

அநங்கர் — மதநனெனப்படுவார் பலர். (உ-ம்.) "கோடிகோடி யநங்கரெய்தார்கொலோ" (திருவிளை. மாபாத. ரு.) [அ ந் - எதிர்மறை. அங்கம் - உடம்பு.]

அநங்கலீலை — மதநநூல் வழியாடும் விளையாட்டு. (உ-ம்.) "அநங்கலீலையிற்றோய் காம வமுது" (இரகு. மாலை. க0க.) [அநங்கம் - மன்மதன். லீலா - விளையாட்டு.]

அநங்கன்— உடம்பில்லாதவன். (உ-ம்.) "உடம்பிழந்தநங்கனாயமன்மதன். (தேவார. திருத்தருத்தி. அ. சம்.) 2. மன்மதன். (உ-ம்.) "அநங்கனையொழியாமண்ணிலாடவர்கெறதிர்" (நைடத. அன்னத்தைக்கண். ச.) [அநங்கம்: அ ந் - எதிர்மறை அங்கம் - உடம்புடையவன். அங்கமில்லாமையினாலும் அங்கமுடையான்போல இருத்தலைக்கருதுவதொருபெயர். "அந்" ஒப்புமை யுள்ளிட்ட அன்மைப்பொருளில்வந்தது.]

அநங்கு—மன்மதன். (உ-ம்.) "தடங்கடனஞ்சுண் டநங்கைக்காய்ந்தபிரான்" (தேவார. கைச். ரு. சம்.) [அ ந் - எதிர்மறை. அங்கம் - உடம்பு, கடைக்குறை.]

அநச்சுவம்—குதிரையல்லாதது. (பி. வி. உக. உரை.) [அநச்வ: அ ந் - எதிர்மறை. அச்வ - குதிரை.]

அநசநம்—உபவாசம். (உ-ம்.) "தவம், சாந்திராயணம், கிருச்சிரம், மாசோபவாசம் அட்டமியாதி அநசநவிரதங்கள்" [அ ந் - எதிர்மறை. அசந - உணவு.]

அநசூயம்— அழுக்காறின்மை. 2. பிறர்குணத்திலே குற்றமேற்றுதலின்மை. [அநஸூய: அ ந் - எதிர்மறை. அஸூயா - அழுக்காறு; பிறர்குணத்திற்குற்றமேற்றல்.]

அநசூயை— 1. அழுக்காறின்மை. [அநஸூயா: அ ந் - எதிர்மறை. அஸூயா - பொறாமை.] 2. அத்திரிமுனியின் மனைவி. (இராமா. விராத. ரு.)

அநஞ்சநம்—1. அஞ்சநமின்மை. 2. ஆகாயம். 3 பாப்பிரமம். [அநஞ்ஜந: அ ந் - எதிர்மறை. அஞ்ஜந - குற்றம்.]

அநட்சரசத்தம் — எழுத்தொலியல்லாத ஒலி. [அநக்ஷரசப்த: அநக்ஷர - எழுத்தல்லாத. சப்த - ஒலி.]

அநட்சராத்மகம்— எழுத்தல்லாததனலாய ஓசை. (த. நி. போ. உஅஉ.) [அநக்ஷர - எழுத்தல்லாத. ஆத்மக - சொரூபம்.]

அநணு—1. அணுவின்மை. 2. அற்பமான அணு. [அநணு. அ ந் - எதிர்மறை. அற்பம். அணு - நுண்ணியது.]

அநந்தம்—பயனற்றது. (உ-ம்.) "அநர்த்தமானவுள்ளதான" (ஞானவா. உபசாந். கக.) [அ ந் - எதிர்மறை. அர்த்த - பயன்.]

அநத்தியாயநம்— ஓதுதலொழிந்திருக்கவேண்டிய காலம். (பராசர. ஆசார. உ0.) [அநத்யயந: அ ந் - எதிர்மறை. அத்யயந - ஓதுதல்.]

அநத்தியவசாயாத்துமா— பாவம்; அது: கிராகக ஆத்துமாவினுடைய சுபாவம். (பௌட். பும்ஸ். சு0இ.) [அநத்யவஸாயாத்மா.]

அநுகாமீ—கூடச்செல்வோன். 2. தோழன். [அநுகாமிந்: அநு - பின். காமிந் - செல்வோன்.]

அநுகாரம்—1. ஒப்புமை 2. வேறொன்று செய்வதுபோலச் செய்தல். [அநுகாரம்: அநு - போல. காரம் - செய்தல்.]

அநுகிருதி— அநுகரணம், ஒத்தசெய்கை. (உ-ம்.) "தர்மாநுகிருதிலட்சணே" (சி.சி. சு: உஅ. சிவாக்.) [அநு-போல. க்ருதி-செயல்.]

அநுகிலாதன்— இரணியகசிபுவின் மக்களுளொருவன். (உ-ம்.) "அநுகிலாதனுயர் கொற்றவெஞ்சிலை குனித்தது" (கூர்மபு. அந்தகா. ருரு.) [அநு-ஹ்லாத: அநு - பின். ஹ்லாத - மகிழ்தல்]

அநுகீதை—வேதாந்தகிரந்தங்களுள் ஒன்று; அது: பாரதத்தில் அசுவமேதபருவத்திற்சொல்லப்பட்டுள்ளது. (அபிதா.)

அநுகீர்த்தநம்—பிரசித்தஞ்செய்தல். (உ-ம்.) "ஆயந்த நரகிராசரூபத்தநு கீர்த்தநத்திறனும்" (யச்சபு. அநுக்கிர. உசு.) [அநு - பின. கீர்த்த - சொல்லுதல்.]

அநுகுணம்— ஏற்றது, அநுகூலமானது. (உ-ம்.) "அறைதரு மிருதியெல்லாமவைக்கநுகுணமாய" (திருவிளை. கசு: சக.) [அநு-அநுகூல. குண - தன்மை.]

அநுகுணாலங்காரம்—தன்குணமிகையணி; அது: மற்றொன்றனசாரபினாலே தனதியற்கைக்குணமிகுதல். (உ-ம்.) "வார்செவிசேர் காவிமலர் மாவலையாய்நின் கடைக்கட், பார்வையினால் மிககருமபண்பு" (இலக்கணவி. அ-வது அணி. விசாக. குவல. எஎ.)

அநுகூலசாத்திரம் — ஆத்தவாக்கியமாகிய பமைக்குமுடைகளையும் பரோட்சார்த்தங்களையும் குற்றமறவுணர்த்திச் சுருதியின முதன்மையை விளக்கப் போதிக்கின்ற வழிநூல். (சைவப். நச.) [அநுகூல - நன்மை. சாஸ்த்ர - நூல்.]

அநுகூலம்—நன்மை.

அநுகூலர்—அநுகூலமுடையவர். (உ-ம்.) "குருக்களுக்கநுகூலமாய்." (நாலாயிர. நாவ. உ.)

அநுகூலன்—1. உபகாரி. 2. சிங்கார நாயகர் நால்வருளொருவன். 3. சிநேகன்.

அநுகூலி—சகாயஞ்செய்வோன்.

அநுகோதம்—மூளையின் பிற்பக்கத்துக்கீழ்ப்பிரிவாகிய சிறியமூளை. [அநு - பின. கோஷ - மூளை.]

அநுச்சுவாரம்—உயிரின் பின்வரும் மகாரவிகாரமாகிய புள்ளி; இது: வடமொழியிலுயிர் வருக்கத்துப் பதினைந்தாமெழுத்து. [அநுஸ்வார:அநு-பின். ஸ்வார-ஓசை.]

அநுச்சூநகம்— வடுப்படாது பற்குறிவைத்தல். (கொக்கோ. ரு: சுசு.) [பற்குறி - வீக்கம்.]

அநுச்ஞை—உத்தரவு. (உ-ம்.) "அவ்வண்ணஞ் செய்வதேயென்றரசனு மநுச்ஞைசெய்ய" (திருவிளை. சமணரை. கo.)

அநுசியூதன்— கலந்தவன். (உ-ம்.) "பஞ்சாயஸ்தாநுச்யூதன்." (சி.சி. கஉ: எ. சிவாக்.) [அநுஸ்யூத: அநு-பின. ஸ்யூத-தொடர்ந்த.]

அநுசங்கம்—1. அதிகாரத்தால் வருவித்து முடிப்பது. (பி. வி. ருo.) 2. இரக்கம். 3. காரண காரியத்தொடர்ச்சி. 4. சம்பந்தம். (உ-ம்.) "அகங்காராநுஷங்கமாயிருக்கிறபிராணதி வாயுக்களுக்கும்" (சி.சி.உ: ருரு.சிவாக்.) 5. சேறபுணர்ச்சி. 6. புணர்ச்சி. 7. விருப்பம். [அநுஷங்க: அநு - பின். ஷங்க - தழுவுதல்.]

அநுசந்தாநம்—1. ஆயத்தப்படுதல், ஒழுங்குசெய்தல் 2. இடையறாது சிந்தித்தல், ஜபஞ்செய்தல். (உ-ம்.) "ஓங்காராதிகளநுசந்தாநத்தால்" (வேதா.சூ. ௧௩அ.) 3. இலக்குப்பார்த்தல். 4. போனதை நினைத்தல். (உ-ம்.) "சகசற்பவேட்கையநுசந்தாநங்கணின்றாறுந்தவிரதியென்னின் - மங்குற்றமனோலயந்தானதுவாகும்" (ஞானவா. உத்தால. ந.) [அநுசந்தாந: அநு - பின. ஸந்தாந: இருப்பு.]

அநுசந்தித்தல் — கிரமமாகச் செய்தல். (உ-ம்.) "அநுசந்தித்தால்" (ஞானவா. வீம. ௪. உரை.) 2. சிந்தித்தல். (உ-ம்.) "நான்கு வேதவாக்கியங்களில் எந்தவாக்கியத்தை அநுசந்திக்கினும்" (தாயு. கருணா. எ. உரை.)

அநுசந்தேயம்—1. விசாரணைக்குப்பாத்திரமானது. 2. விசாரிக்கத்தக்கது. [அநுஸந்தேய.]

அநுசயம் — 1. ஒருபொருளிற் சம்பந்தப்பட்டிருத்தல். (உ-ம்.) "அநுசயப்பட்டதுவி

துவென்னுஞ்சே" (தேவார. பூவனூர். ௬ திருநாவுக்.) 2. பகைமை. (உ-ம்.) "அநுசயத்தையற்றுநீருணவெற்பசத்துனீர்" (அருணகிரிபு. வலம்புரி. ௪௬௮.) 3. பற்று. 4. மனஸ்தாபம். [ஸ நு-ஶய: அநு-பின. ஶய - இடத்தல்.]

அநுசர்—தம்பியர். (உ-ம்.) "ஆல்வரும்புரவித்திண்டோரனுன் மகனநுசரான - னால்வரும்" (பாரத. இராய. ௬௬) [அநு - பின். ஜ - பிறந்தவன்.]

அநுசரணம்—1. ஒன்றன்காரியம். 2. ஒன்றோடொன்றுகிய இசைவு. 3. பழக்கம். 4. பின்தொடர்தல். 5. வழக்கம். [ஸ நு-ஸரண: அநு - பின். ஸரண - போவது.]

அநுசரணை—அநுசரணம்.

அநுசரன்—1. கூடச்செல்வோன். 2. தோழன். 3. பின்செல்வோன். [ஸ நு-ஸர: அநு - பின். ஸர - செல்வோன்.]

அநுசரிக்கை—அநுசரித்தல்.

அநுசரித்தல்—சார்ந்துநடத்தல், பின்செல்லல். (உ-ம்.) "மகாபுராணங்களிசைத்திடும் பொருளெலாமிசைத்தே யவையநுசரிக்குமென்று" (மச்சபு. நைமிசா. ௬௦.)

அநுசரிதம்—தொடர்ந்தசரித்திரம். (உ-ம்.) "வம்மியாநுசரிதம்" (மச்சபு. நைமிசா. ௩௯) [ஸ நு-ஸரித: அநு - பின். ஸரித - சரித்திரம்.].

அநுசரிப்பு—அநுசரித்தல்.

அநுசன்—தம்பி. (உ-ம்.) "அநுசனிற்ற சொல்" (இராமா. பாசப். ௨.) [ஸ நு-ஜ: அநு - பின். ஜ - பிறந்தவன்.]

அநுசாசகன்—ஆளுபவன். [ஸ நு-ஶாஸக: அநு-பின். ஶாஸக-ஆளுவோன்.]

அநுசாசநம்—கட்டளை. [ஸ நு-ஶாஸந: அநு உபசர்க்கம். ஶாஸந - கட்டளை.]

அநுசாந்தி — கட்டளை. [ஸ நு-ஶாஸ்தி: அநு - உபசர்க்கம். ஶாஸ்தி - கட்டளை.]

அநுசாதன்—தம்பி. [ஸ நு-ஜாத: அநு - பின். ஜாத - பிறந்தவன்.]

அநுசாதை — தங்கை. [ஸ நு-ஜாதா: அநு - பின். ஜாதா - பிறந்தவள்.]

அநுசாரணம்—பின்தொடர்தல். [ஸ நு-ஸாரண: அநு - பின். ஸாரண - போதல்.]

அநுசாரம்—1. ஒப்புமை. 2. காரியம். 3. கிரமக்கிரமம். 4. நியாயப்பிரமாண அதிகாரத்தை அங்கீகரித்தல். 5. பின்செல்லல். (உ-ம்.) "காமாநுசாரம்" (பௌட். பாச. ௬௩.) 6. பொருட்சுபாவம்.

அநுசாரி—உதவிசெய்வோன். 2. சார்ந்து நடப்பவன். 3. வழிபடுவோன், பின்செல்வோன். [ஸ நு - பின். ஸாரிந் - செல்வோன்.]

அநுசாரோணா—அநுசரித்தவினுல். (சி. சி. உ: ௬௪. சிவாக்.) [ஸ நு-ஸாரோ: அநு - சரித்தல். இ - வ. மூன்றும் வேற்றுமையுருபு. ணா - விகாரம்.]

அநுசிதம்—1. தக்கதல்லாதது. (உ-ம்) "செல்லாவையனுசிதமென்றதனைச் சிதைக்க" (பெரியபு. கோச்செங. ௩.) 2. பொய். (திவாகர. ௧௦.) [ஸ நுசித: அந் - எதிர்மறை. உசித - தக்கது.]

அநுசிந்தநம்—முன்னறிந்த விஷயத்தை நினைத்தல். [ஸ நு-சிந்தந: அநு - பின். சிந்தந - நினைத்தல்.]

அநுசிந்தை—நினைத்தல். [ஸ நு-சிந்தா: அநு - பின். சிந்தா - நினைத்தல்.]

அநுசிரஞ்சவாதம்— மகாவாதமிருபத்துநான்கு வகையுளொன்று; அது: "தாடியின் பூட்டையனுசரித்து எப்போதும் வாயைத்திறந்தாவது மூடியாவது இருக்கச் செய்யும்." (சீவரட். கஎ௬.) [ஸ நு - பின். சிரஞ்சம - தளர்தல்.]

அநுசீவி— ஒருவரையடைந்து சீவிப்போன். 2. வேலைக்காரன். [ஸ நு-ஜீவிந்: அநு - பின். ஜீவிந் - சீவிப்போன்.]

அநுசூதத்துவம்—இடையறுமை.

அநுசூதம்—நீங்காதுகூடியிருப்பது. (உ-ம்.) "இம்மூன்றுபிரமாணத்தாலும அநுசூதமாயிருக்கிற ஆன்மசிற்சத்தியானது" (சி. சி. அளவை. க. சிவாக்.) [ஸ நு-ஸ்யூத: அநு - பின். ஸ்யூத - இசைப்பு.]

அநுசை—தங்கை. [ஸ நு-ஜா: அநு - பின் ஜா - பிறந்தவள்.]

அநுசைவர்—சிவதீக்ஷைபெற்ற க்ஷத்திரியரும் வைசியரும். (உ-ம்.) "உயர்சைவரநுவணகனநுசைவராவ." (ஆசௌசதீ. ௨௦.) [அநு - பின். ஶைவ]

அநுஞ்ஞாலங்காரம்—வேண்டலணி: அது;

குணமல்லாதசனைற் குணமுண்டாதலை அறிந்து அக்குணமல்லாதசனை வேண்டுதல். (உ-ம்.) "வெண்டிருநீறு டலையுமாதவர்க்கு விருந்துசெய்துறுபெருமிடியுங் - கொண்டநல்விரதத்திளைக்கும் யாக்கையுநீ கொடியனேர்கருளுநாளுளதோ." (இலக்கணவிள. சகக. விசாக; குவல எக.) [அநு-ஜ்ஞா - வேண்டுகோள். அலங்காரம்.]

அநுஞ்ஞை— 1. உத்தரவு. 2. கட்டளை. (உ-ம்.) "இந்நூல்சொல்லியது பெரியோரநுஞ்ஞைகொண்டாகையாலும்" (வைராக்கியதீப. எ. உரை.) 3. சம்மதம். 4. விடுகை. [அநு-ஜ்ஞா.]

அநுஞை— கட்டளை. (உ-ம்.) "தன்னநுஞையாலே யண்ணலங் கணத்திறைமை மூழ்குவித்து" (திருவிளை. தீர்த்த. கடு.) [அநு-பின். ஜ்ஞா - அறிதல்.]

அநுட்டணம்—1. உற்பலம். 2. குளிர்ந்தது. 3. சூடற்றது. [அநுஷ்ண: அநு-எதிர்மறை. உஷ்ண - வெம்மை.]

அநுட்டணசீதம்— சூடுங்குளிர்ச்சியுமில்லது. (சி- வி. ஞா. கக. சாற்.) [அநுஷ்ண-வெப்பமில்லது. அசீத - குளிரில்லது.]

அநுட்டயம் — அநுட்டிக்கப்படுவது. (உ-ம்.) "ஆனகன் மவநுட்டயங்களாந்தக்காரணசுததிதரும்" (சி. சி. பர. மாயா. மத. சந.) [அநுஷ்டேயம்.]

அநுட்டாதா— 1. அநுட்டிக்கிறவன். (சி. சி. உ: எந. மறை.) 2. தொழின்முயன்று செய்வோன். [அநுஷ்டாதா.]

அநுட்டானம்— ஒழுக்கம். (உ-ம்.) "வயங்கநுட்டானம்பண்ணிப் பிதிர்முறை தர்ப்பணஞ்செய்து" (மச்சபு. வீம. உச.) [அநுஷ்டாந: அநு - பின். ஸ்தாந - நிற்பது.]

அநுட்டித்தல்— 1. ஒழுகுதல். (உ-ம்.) "சிவாகம முறையினீரிருபாதமு மநுட்டித்து" (காஞ்சிபு. நகர. ககo.) 2. நோற்றல். (உ-ம்.) "மநுடருமநுட்டித்து" (திருவிளை. இந்திரன்முடி. உக.)

அநுட்டிப்பு— அநுட்டித்தல்.

அநுட்டுப்பு— முப்பத்திரண்டசைகளையுடைய ஒரு வடமொழிச் சந்தம். [அநுஷ்டுப்.]

அநுட்டுபு— 1. சூரியனுடைய தேரூருஞ் சந்தச்சாநவயப்பரி ஏழினபெயர்களுளொன்று. (எழ்பரியினியங்கள் உதாரணச்செய்யுளிற்காண்க.) (உ-ம்.) "நகநதியரசினூற்றந்நுவல்பக்கமாகு - மகிழ்பிருசந்தலைனயுடபரியேழுமைந - திகழ்காயத்திரியேநுட்டுபுசெகதிவென்றி - மிகுபநுட்டுபாதபிரகதிவிளங்கியோங்கும்" "யருவுமுட்டிணுகுவென்னும்வயப்பரியேழுபூண்ட - விடதகலச்சு" (மச்சபு. சூரியரத. உஉ.) [அநுஷ்டுப்.]

அநுடம் — இருபத்தேழுநக்ஷத்திரங்களுள்ளே பதினேழாவது நக்ஷத்திரம். (உ-ம்.) "களங்கமிலநுடமூலமிவையினுநு சதிபோன் செல்வன்" (மச்சபு. சூரியசந். உரு.) 2. பகலிலே நிகழும் மூன்றாம முகூர்த்தம. (விதாந. குணாகுண. எந.) [அநுராதா.]

அநுத்தசித்தம்— சொல்லப்படாமற்சித்தியானது. (உ-ம்.) "சத்திநிபாதத்துக்கு மலபரிபாகமே யேது என்பது மூவகையான்மாக்களுக்கு மநுத்தசித்தமாகையாலும" (சி.சி. அ: உ. சிவாக.) [அநுக்த சொல்லப்படாதது. ஸித்த - ஏற்பட்டது.]

அநுத்தம்—1. சொல்லப்படாதது. [அநுக்த: அநு - எதிர்மறை. உக்த - சொல்லப்பட்டது.]

அநுத்தம்பவாதம் — ஒருவகை வாதரோகம்; அது: வாயினிருபக்கமூலங்களினுங்காதினடிகளினும் வருவது. (சீவரட். சஎo.) [ஹநு - கதுப்பு. ஸ்தம்ப - தம்பித்தல்.]

அநுத்தமம்— 1. உத்தமமல்லாதது. 2. எல்லாவற்றினும் மிக்க உத்தமம், தனக்குமேலாக உத்தமமான ஒன்றையில்லாதது. (பகவற்கீ. எ: உச.) [அநுத்தம: அந்- எதிர்மறை. உத்தம - சிரேட்டம.]

அநுத்தரம்— 1. உத்தமம். 2. உறுதியில்லை. 3. தெற்கு. 4. மற்றொன்று கூறு மறுமொழி. 5. மறுமொழிசொல்லக்கூடாமை, பேசாதிருத்தல். 6. மாறுகொளக்கூறுமறுமொழி. 7. மிகச்சிரேட்டம், தனக்கு மேலாக ஒன்றில்லாதது. 8. மேன்மை. [அநுத்தர: அந் - எதிர்மறை. உத்தர - மேல், விடை, வடக்கு.]

அநுத்தரோபபாதிகதசாங்கம்— அங்காகமத்திலொருபகுப்பு. (சிலப். நாடு. கஅஎ. உரை.)

அநுத்தாநம் — முகங்குப்புறக்கிடத்தல். [ஸ்ஙூ-உத்தாந: ஸ ந் - எதிர்மறை. உ த்தாந- மேல்.]

அநுத்திரதபஞ்சமம்— 1. குறிஞ்சியாழ்த் திறவகையிலொன்று. (பிங்கல. கஙஅஉ.) [ஸ்ஙூ - பின. த்ருத-செல்வது. பஞ்சமம்-ஒரிசை.]

அநுத்துருதம்—1. (இசைநூல்.) ஒரு கால அளவு; அஃது: ஒரு துருதகாலத்தின் பாதி-ஒரு மாத்திரையின் காற்பங்கு. 2. பின் தொடரப்பட்டது. [ஸ்ஙூத்ருத: ஸ்ஙூ-பின். த்ருத செய்கின்றது.]

அநுத்துவயம்— இருகதுப்பு. (த.சி.போ. உ௦கு.) [ஹநூ- கதுப்பு. த்வய-இரண்டு.]

அநுதரம்— 1. சிற்றிடை. [ஸ்ஙூதர: ஸ ந் - அற்பம். உதரம் - இடை.] 2. தோணிமுதலியவற்றினேற்றமதிக்கூலி. [ஸ்ஙூ தர: ஸ்ஙூ - சம்பந்த. தர - தோணி.]

அநுதரித்தல்— 1. படகிலேற்றல்.

அநுதாத்தம்—படுத்தலோசை, மெள்ளச் சொல்லுதல். (உ-ம்.) "உதாத்தவோசைய நுதாத்தமசாரிதந்தழுவவோதி" (திருவிளை. தடாதகை. அ.) [ஸ்ஙூதாத்த: ஸ ந் - எதிர் மறை. உதாத்த - எடுத்துச்சொல்லல்.]

அநுதாபம்— கழிவிரக்கம், நடந்ததற்குவி யசனப்படல். [ஸ்ஙூதாப: ஸ்ஙூ- பின். தாப - வெப்பம்.]

அநுதர்வநம்—1. ஆராய்தல். 2. சுத்திசெய்தல் 3.பின் தொடர்தல். [ஸ்ஙூயாவந: ஸ்ஙூ - பின். யாவந - ஓடுதல்.]

அநுதிநம்— நாடோறும். (உ-ம்.) "அநுதி நமரன்புகழ்சாற்றுசைவபுராணநூல்" (திருவிளை. விடையில. ச.) [ஸ்ஙூதிந: ஸ்ஙூ-தோறும். திந - நாள்.]

அநுதோடம்— உபபாதகம். (உ-ம்.) "கொலைகளவாதிசெய்வோர்தம்முடன் குழீஇயபாவந்-தொலைவுறுங்கணமதோன் றிலவைக்கநு தோடந்தானும்" (சேதுபு. சங்கரபா. எகூ.) [ஸ்ஙூதோஷ: ஸ்ஙூ - பின். தோஷ - குற்றம்.]

அநுநயம்— 1. ஆசாரக்கிரமம். 2. சாந்தி செய்தல். 3. பயிற்றுதல். 4. மரியாதை. 5. விண்ணப்பம். 6. விருந்தர் முதலியோரையுபசரித்தல். [ஸ்ஙூநய: ஸ்ஙூ-பின். நய - நடத்துவது.]

அநுநாசிகம்— மெல்லெழுத்து. (பி. வி. கு.) [ஸ்ஙூநாஸிக: ஸ்ஙூ - கூட. நாஸிக - நாசியையுடையது. மூக்கினுற்பிறந்ததனுல் வந்தபெயர்.]

அநுநாசிகை— அநுநாசிகம். [ஸ்ஙூநாஸிகா.]

அநுநாதம்—1. எதிரொலி. 2. ஒலி.[ஸ்ஙூநாத: ஸ்ஙூ - பின. நாத - ஒலி.]

அநுப்பிரவிட்டம்— உட்புகுந்தது.(உ-ம்.) "மாயாதநுமுதலியவற்றனுப்பிரவிட்டமாகவியாபகது" (சி. சி. அ: கச. மறை.) [ஸ்ஙூப்ரவிஷ்ட: ஸ்ஙூ - கூட. ப்ரவிஷ்ட - உட்புகுந்தது.]

அநுப்பிரவேசம் — 1. அநுக்கிரகம். அது:போகவாசனையைநீக்கித்தெளிவித்தல். (உ-ம்.)"ஆக்கலளித்தல்போக்குதல்சமாந்தானெய்த்திடலகற்றுமநுப்பிரவேசமென்பன விசனைத்தொழிலே" (வேதா. சூ. சஎ.) 2. உட்புகுந்திருத்தல். 3. ஒருவர்கருத்துக்குத்தனையிசைவாக்கல். [ஸ்ஙூப்ரவேஶ: ஸ்ஙூ - கூட. ப்ரவேஶ - அடைதல்.]

அநுப்பிரவேசி — உமாதேவி. (உ-ம்.) "நிததையநுப்பிரவேசி" (கூர்மபு.திருக்கல். உச.) [ஸ்ஙூப்ரவேஶி: ஸ்ஙூ - கூட. ப்ரவேஶி - அடைந்திருக்கிறவள்.]

அநுப்பிராசம்—1. அநுராகம், 2. வழியெதுகை. அது: ஒருசெய்யுளடியில்வரும் பலசீர்களிலிரண்டாமெழுத்து முதலன ஒன்றிவருதல், பின்வருமுதாரணச் செய்யுளாலிது நன்குபுலப்படும். "மண்டலம் பண்டுண்டதிண்டேர்வாருணன்றுண்டியின் வாய்க்-கண்டலந தண்டுறைசகண்டதொணறுண்டுகணமகர-குண்டலஞ்சென்டையிரண்டொடுந்தொண்டையுங்கொண்டோர்திங்கண்- மண்டலம் வண்டலம்பக்கொண்டருமுவருகின்றதே" (இலககணவிள. செய்யு. ௩௧. உரை.) [ஸ்ஙூப்ராஸ: ஸ்ஙூ - பின். ப்ராஸ - மேன்மையாயிருப்பது.] 3. விரகம.

அநுபசங்காரம்—முடிவுபெருமை. (அநுமா. கூ.)

அநுபசங்காரி—சவ்வியபிசாரமாகிய ஏதுப்போலிவகையுளொன்றாகிய முடிவுபெறுமை, அந்துவய திருட்டாந்தம் வெதிரேகதிருட்டாந்த மிரண்டுமில்லாதது. அது எல்லாப்பொருளுமநித்தம் அளவையானளகப்படலாகலின் என்பதிற்போல. (ஈண்டு முழுவதும் பக்ஷமாயிருத்தலிற் றிருட்டாந்தமில்லை.) (தர்க்கசங். சுo.) [ஸ-ந்-உபஸம்ஹாரிந்: ஸந் - எதிர்மறை.உபஸம்ஹாரிந் - முடிவுடையது.]

அநுபதிதம் — 1. இறங்கினது. 2. பின்தொடரப்பட்டது. 3. விழுந்தது. [ஸ-ந்-பதித: ஸ-ந்- பின். பதித - விழுந்தது, போனது.]

அநுபந்தசதுட்டயம்—ஒரு நூல்செய்வோன் அந்நூலோடுசேர்த்துத்தந்துரைக்கும் நான்குபொருள்கள்;அவை:விடயம், சம்பந்தம், பயன், அதிகாரியென்பன. (உ-ம்.) "சாத்துமநுபந்தசதுட்டய நூற்கவிடயஞ்சம்பந்தம் பயனதிகாரிகளென னான்கறியே" (வேதா. சூ. அ.) [ஸ-ந்-பந்தசதுஷ்டய: ஸ-ந்-. பின். பந்த - கூடிநிற்றல். சதுஷ்டய - நான்கன் கூட்டம். சம்பந்த நீக்கிஆநந்தரியங்கூட்டி நான்கென்பாருமுளர்.] (சுன். விருத்தி. சிறப். உரை.)

அநுபந்தம்— 1. அடுத்துயாக்கப்படுவது. 2. அநுசரித்தல். 3. இம்மையிலுண்டாகின் றநன்மைதீமைகள். 4. இடையறாத் தொடர்ச்சி. 5. ஒற்றுமை, ஒன்றிப்பு. 6. ஒன்றனோடிணைக்கப்பட்டது. 7. கட்டுதல். 8. காரியத்தொடர்ச்சி. 9.கூடுதல். 10.சிசு. 11.தளை. 12. தொடக்கம். 13. தொடர்ச்சி. 14. பிரயோசனமான செய்கையைச்செய்யப்பழகல். [ஸ-ந்-பந்த: ஸ-ந்- பின். பந்த கூடிநிற்றல்.]

அநுபந்தன்—1. உடன்பட்டவன். (உ-ம்.) "காயுமவர்க் கநுபந்தருமாயுள் களித்தீரே" (சிவதரு. சுவர். ககூ.) 2. குருவைப்பின்றொடர்ந்து நடக்குஞ் சீடன். 3. பெற்றோரைப் பின்றொடர்ந்து நடக்கும் பிள்ளை. [ஸ-ந்-பந்த, ஸ-ந்- பின். பந்த - தொடர்ப்பாடுடையவன்.]

அநுபந்தை—1. தாகம். 2. விக்கல். [ஸ-ந்-பந்தா: ஸ-ந்- பின். பந்தா - கட்டுவது.]

அநுபபத்தி— 1. சாத்தியத்தைச் சாதிக்கவல்லதல்லாதது (உ-ம்.) "ஓதநுபபத்திஞானத்தாலேயுற்பத்தியாகு - மாதாவுடையஞானமருத்தாபத்தியெனச்சொல்வர்"(சூத.எசுகி. பூ. சுo: கசு.) 2. சித்தாந்தமாகாத நியாயம். 3. சிததியாகாமை. 4. தகுதியின்மை, பொருத்தமின்மை. (உ-ம்.) "அநுபபத்திச்சொன்மயங்கோனற்பொருள் வேறுணர்த்தில்" (பி.வி.சுஎ.) 5.நிறைவேறாமை. 6. பிரயோகிக்கப்படாமை. 7. யுத்தியின்மை. [ஸ-ந்-உபபத்தி: ஸ-ந்-எதிர்மறை. உபபத்தி- தகுதி, பிறத்தல், யுத்தி.]

அநுபமம்—தனக்கு நிகரில்லாதது. (உ-ம்.) "தெரிவரிதாயநுபமமாய்" (தத்துவ. பதி. ங.) 2. மிகச்சிரேட்டமானது. [ஸ-ந்-உபம: ஸ-ந் - எதிர்மறை. உபம - ஒப்பு.]

அநுபமை—1. உவமையின்மை. 2. குமுதமென்னுந் தென்மேற்குத்திசையானையின் பெண்யானை. 3. மிகச்சிரேட்டமானது. [ஸ-ந்-உபமா:ஸ-ந்-எதிர்மறை. உபமா-ஒப்பு.]

அநுபயம்— இரண்டுமல்லாதது. (தர்க்கபா. அக.) [ஸ-ந்.- எதிர்மறை. உபயா - இரண்டு.]

அநுபல்லவி—பதமென்று வழங்கப்படுஞ் செய்யுளின் இரண்டாமுறுப்பு.

அநுபலந்தம்—1. அடையாமை. (தர்க்கபா. ஙகூ.) 2. காணப்படாதது. (பௌட். பசு. சுoஇ.) [ஸ-ந்-உபலப்த:ஸ-ந்-எதிர்மறை. உபலப்த - அடைதல்.]

அநுபலந்தி— 1.அநுபலத்தியலங்காரம்.2. அறுவகைப்பிரமாணத்துளொன்று. (உ-ம்.) "அநுபலத்தியது- சேதமின்மைபனியின்மை காட்டல்போலும்" (சி. சி. அளவை. சுo.) 3. அறியப்படாமை. [ஸ-ந்-உபலப்தி: ஸ-ந்- எதிர்மறை. உபலப்தி அறிதல்.]

அநுபலத்தியலங்காரம் – நுகர்ச்சியின்மையணி. (குவல. ககங.)

அநுபவப்படல்— உற்றறிதல்.

அநுபவபூமி — இருவகை ஞானபூமிகளுளொன்று; அது: சத்துவாபத்தி, அசஞ்சத்தி, பதார்த்தாபாவனை, துரியமென நான்குவகைப்படும். (வேதா. சூ. கசஅ. உரை.) [ஸ-ந்-பவபூமி; ஸ-ந்-பவ- தானேயறியுமறிவு. பூமி - நிலை ]

அநுபவம் — 1. அநுபோகம். (உ-ம்.) "கண்டபேரின்ப வநுபவக் கருத்தினொடெழுந்து" (காஞ்சிபு. தழுவ. கசுஉ.) 2. காரியம. 3. கைவல்லியம். (உ-ம்.) "அநுபவநிலையுஞ்சேருமோ" (தாயு. ஆரண. கூ.) 4. சுகபோகம். (உ-ம்.) "பிறைநுதல்வஞ்சியாநுபவமுண்டு" (மதுரைப்பதிற்றுப்பத். ருஅ.) 5 தானேகண்டறியுமறிவு, நினைவிற்கும்வராகிய உணர்வு. (உ-ம்.) "யதார்த்தாநுபவப்பிரமை" (தர்க்கபா. ரு.) [அநு-ஃபவ: அநு - பின். ஃபவ - இருக்கை.]

அநுபவி — உலக விவகாரங்களை நினையாமல் ஆத்துமவிவேகத்தை யடைந்து ஒரு சந்தததுல்ல சீவன்முத்தனுவோன. (உ-ம்) "வீடு லகவிவகாரம் நினையாமல் விவேகமேவியோர்பிரப்பினுமுத்தனநுபவியே" (வேதா. சூ. கச.) [அநு-ஃபவி: அநு-ஃபவ; இ-ஒரு வ-வி.]

அநுபவித்தல்— துய்த்தல். (உ-ம்.) "இச்சாபமுமநுபவித்தல்லதுவிடாதால்" (காஞ்சிபு. அரிசா. கந.)

அநுபவிப்பு—அநுபோகம்.

அநுபவியம்— அநுபவிக்கப்படுவது. (உ-ம்.) "சீவனுமவன் றனதுபிரியத்தைத தனதிவ்வியங்களின் மேல்வைத்து அவைகளையின்பமாயநுபவிக்குநிடத்தநுபவிப்பானு மநுபவமுமாகிய இரண்டுமின்றி" (வேதா. சூ. ருகு. உரை.) [அநு-ஃபாவ்ய: அநு-ஃபவ; ய-ஒரு வ-வி.]

அநுபவை — பார்ப்பதி. (அநுபவமுள்ளவள்.) (உ-ம்.) "அமகிரிகுமாரத்தையநுபவைபாரசத்தி" (திருப்பு. ருஅச.) [அநு-ஃபவா: அநு-ஃபவா - வடமொழி ஆவீறு தமிழில் ஐயீறாயிற்று.]

அநுபவைகவேத்தியம் — அநுபவமொன்றாலேயறியத்தக்கது. (உ-ம்.) "பரமசிவம் ஸ்வரூப ஞானாநுபவைகவேத்திய" (சி. சி. பாயிர. ரு. சிவாக்.) [அநு-ஃபவ; ஏக-ஒன்று. வேத்ய - அறியத்தக்கது.]

அநுபாடணம் — 1. கண்டிக்கும் பொருட்டாக ஒரு பிரதிஞ்ஞையைத் திருப்ப வெடுத்துச் சொல்லுதல். 2. சொன்னதைப்பின்னுஞ்சொல்லுதல். (உ-ம்.) "ஆயாமமறைபொழுதல்வைந்தவநுபாடணத்தால்" (சிவதரு. சிவஞானயோ. எகு.) [அநு-ஃபாஷண: அநு - பின். ஃபாஷண - சொல்லுதல்.]

அநுபாடித்தல்—1. உறுவதித்தல், ஒருவர் சொன்னதை யெடுத்துச்சொல்லல். (உ-ம்.) "சுத்தமாயையிலசுத்தமாயை தோன்றுமென்றுஞ், சுத்தபதேசத்திற் றூலதேசந்தோன்றுமென்றுஞ்சொல்லுஞ் சைவபுராணிகமதாநுசாரிகளாயிருக்கின்ற ஆசாரியாமசமநுபாஷித்து" (சி. சி. உ: ருக ஞாப.) 2. சொல்லுதல். [மூ. அநு-ஃபாஷ்: அநு - பின். ஃபாஷித்தல் - சொல்லல்.]

அநுபாதகம் — மகாபாதக துல்லியம். (உ-ம்.) "பஞ்சபாதகந்தனக்கநுபாதக-மெஞ்சலில்லனயாவையுமெஞ்சுமால்" (சேதுபு. தநுஷ்கோ. உக.) [அநு - ஒப்பு. பாதக - தீங்கு.]

அநுபாதம்— 1. (மதநூல்) காரணங்களிலொன்று. (கந்தபு. இந்திரபுரி. சஎ.) 2 (கணக்கதிகாரம்.) சங்கலிதம 3. (கணக்கதிகாரம்) திரயராசிகம். 4. பின்றொடர்தல். [அநு-பாத: அநு - பின். பாத - விழுதல்.]

அநுபாதேயம்— அங்கீகரிக்கப்படாதது. [அநு-பாதேயம்.]

அநுபாதேயன்—அங்கீகரிக்கப்படக்கூடாதவன. [அநு-பாதேய: அந் - எதிர்மறை. உபாதேய - அங்கீகரிக்கப்படக்கூடியவன்.]

அநுபானம்— 1. மருந்தையுட்கொள்ளுகைக்குரிய பானம், மருந்துடன், குடிக்கும் பானம். 2. மருந்துடனருந்தும் பதார்த்தம். (உ-ம்.) "ரசாதியநுபானமது" (இராசவைத். கoக.) [அநு-பான: அநு - கூட, பின். பான - குடித்தல்.]

அநுபாலநம்— 1. கீழ்ப்படிதல். (உ-ம்.) "அஞ்ஞாநுபாலநம்" (பௌட். பும். கஉ.) 2. பாதுகாத்தல். [அநு-பாலந.]

அநுபாவம்— 1. கண்காட்டு, கைகாட்டு முதலிய அங்கசேட்டைகளினால் மனக்கருத்தை விளக்குங்குறி. 2. திடமான எண்ணம். 3. தேசசு. 4. நிச்சயம். 5. மகத்துவம். [அநு-ஃபாவ: அநு; ஃபாவ - கருத்து, இருத்தல்.]

அநுபாவியம் — அநுபவிக்கத்தக்கது. (உ-ம்.) "ஸ்வாநுபவாநுபாவியமாய்" (சி.சி. அ: ருசு. ஞாநப்.) [அநு-ஃபாவ்ய.]

அநுபூதம்— 1. அறிந்துகொள்ளப்பட்டது. (உ-ம்.) "பூர்வத்திலேயநுபூதமானபேரி

யாதிசத்தசாதியங்கள் என்று நிச்சயிக்கப்படும்" (சி. சி. உ: கக. சிவாக்.) 2. காரியமாக வந்தது. [ஸ-நு-ஜா-த.]

அநுபூதி— 1. தானே கண்டறிந்தும் பிறர்க்குச் சொல்ல இயலாததுமான அறிவு. (உ-ம்) "பேசாவநுபூதியையடியேன்பெற்றுப்பிழைக்க" (தாயு. சொல்லற். ரு.) 2. நிலைவிற்சயலாய் வேருகிய உணர்வு. (உ-ம்.) அநுபூதியாவதுஙு திருநிவியதிரிக்தஞானம்" (சி. சி. அளவை. க. சிவாக்.) [ஸ-நு-பூ-தி; ஸ-நு-பின். பூ-தி- யானது.]

அநுபூதிகம்— அநுபவிக்கத்தக்கது. (உ-ம்.) "சிவானுபவஞ் சுவாநுபூதிகமாம்" (சி.சி. அ: கச. சிவாக.) [ஸ-நு-பூ-திக. ஸ-நு-பின். பூ-தி - ஆனது. க - ஒரு வ-வி.]

அநுபோகம்— 1. அநுபூதி. (உ-ம்.) "தானே தானுயனுபோகந் தன்னில்" (சி. சி. பர. மாயா. மக. கசு.) 2. அப்பியாசம். (உ-ம்.) "அவன் இராமபாணக்குளிகை செய்வதிலநுபோகப்பட்டவன்" [வழக்.] 3. இன்பம். (உ-ம.) "சிவயாதுடனே யநுபோகமதாய்ச் சிவஞானமுதேபசியாறு" (திருப்பு. ருசஎ.) 4. சுகவாழ்வு. (உ-ம்.) "நீதியநுபோகநெறிநின்று" (இராமா. நூற்பய. அ.) 5. புணர்ச்சி. (உ-ம்.) "குறயாதினின்பவநுபோகசரசக்கார" (திருப்பு. ருகு.) [ஸ-நு-கூட. போக-உண்ணல்.]

அநுபோகி- அநுபோகங்கொள்ளுவோன். (உ-ம்.) "நகைலோகமெலாநுபோக" (திருப்பு. ருஎ.) [ஸ-நு-கூட. போகி-உண்போன்.]

அநுபோகித்தல்—அநுபவித்தல்.

அநுமக்கொடியோன் — அருச்சுநன். [ஸ-நு-மந் - அநுமக்குரங்கு.]

அநுமகுண்டம்—சேதுவிலுள்ள ஒரு தீர்த்தம். (உ-ம.) "அநுமகுண்டவியனீராடி" (சேதுபு. சேதுயா. உஅ.) [ஸ-நு-மகுண்ட.]

அநுமதம்— 1. அன்பு 2. சம்மதி. (உ-ம்) "ஆசற்றுநிறைவேற வநுமதஞ்செய்கென" (சிவதரு. சிவஞா. தாற். உஎ.) 3. பிரியம். [ஸ-நு-மத: ஸ-நு - கூட. மத - கருதப்பட்டது.]

அநுமதி— 1. கட்டளை. (உ-ம்.) "அநுமதி கொடுத்தொழுது" (திருவிளை. நாக. கசு.) 2. சம்மதி. (உ-ம்.) "தெளிதருபுனலின் மூழ்கத்திருவருள் செய்தியென்று - வுளமலயுவகையோடு முறைத்தநுமதி பெற்றங்கண்" (சேதுபு. சேதுயா. சகு.) 3. சுக்கிலபக்க சதுர்த்தசியோடு கூடிய பௌர்ணிமை. [ஸ-நு-கூட. மதி - சம்மதமுடையது.]

அநுமதீயம்— பாவராகதாளங்களென்று மூன்றனிலக்ஷணங்களேயுங்குறித்து அநுமனாற்செய்யப்பட்ட பாதசாத்திரம். [ஹநு-மதீயம்.]

அநுமந்— அநுமாந். [ஹநு-மந்.]

அநுமந்தன்- - அநுமான். (உ-ம்.) "அநுமந்தனடித்தானே" (இராமநா.)

அநுமந்தா— சம்மதித்தவன் போலிருக்கிறவன். (பகவற்கீ. கரு. உரு. ஸ்ரீ.) தேகேந்திரிய வியாபாரங்களில் தான் பிரவிருத்தியற்றவனுனாலும் பிரவிருத்தியுள்ளவனைப்போலத்தோற்றப்படுகின்றவன். (ஷை ஹ0). செவ்வையாயேவுகிறவன். (ஷை ). ம்செய்யவேண்டியகாரியங்களை லாலோசனை சொல்லுகிறவன். (ஷை ஸ்ரீ. வி). [ஸ-நு-மந்தா.]

அநுமந்திருசம்பிரதாநம் — (இலக்கண.) சம்மதமாய்யற்றறற்பொருளில்வரும் நான்காம்வேற்றுமையுருபு. "ஆசிரியன் மாணாக்கனுக்குக்கசையடிகொடுத்தான்" என்பதிற்போல. (பி. வி. கரு. உரை) [ஸ-நு-மந்த்ரு - சம்மதித்தவன். ஸம்ப்ரதாந-(கொடை) நான்காம்வேற்றுமை.]

அநுமரணம் — இறந்தகணவனோடுடன்கட்டையேறிமரித்தல். (உ-ம்.) "பந்தமுறவநுமரணஞ்செய்தவருக்குமணி முதற்பாவையார்கள்." (நல். பார. முத்தியடை. சு.) [ஸ-நு-மரண: ஸ-நு - கூட. மரண-இறத்தல்.]

அநுமலோசை—சூரியசமுகத்து நடிக்கும் மாதர்களிலொருத்தி. (கூர்மபு. ஆதவர்சிறப். கூ.)

அநுமாந்— 1. அஞ்சனை யென்னும் பெண்ணினுடையமகன்; இவன் கிட்கிந்தைமலையிலே சுக்கிரீவனுடைய சேனையைச்சேர்ந்திருந்து இராமச்சந்திரனுக்குத் துணைவனுந் தூதனுமானவன். இந்திரனுடைய ஐராவதயானையிற் பாய்ந்து அவனுடைய வச்சிராயுதத்தினால் ஊறுபட்ட கதுப்புடைமையால் அநுமானெனப்பெயர்பெற்றான் என்பர். (உ-ம) "கூர்பற்றிய வெண்குலிசத்தாற்கூறுபடுபுண்வடுத்தீர்க- வார்பெற்றுளர்பெற்றதுசின்னநு

வற்றிடலாலநுமனெனும்-பேர்பெற்று" (இராமா.உத்.அநு. ௩௪.) [ஹநுமாந் - சிற்பநூல் முப்பத்திரண்டிலொன்று.]

அநுமாநசாமக்கிரி— அநுமாநத்திற்குவேண்டும் உறுப்புக்கள். (அளவை. சக. சிவஞா.) [அநுமாநம் - அளவை. ஸாமக்ரீ - காரணசமூகம்.]

அநுமாநப்பிரமாணாலங்காரம் — அநுமாநப் பிரமாண அணி. (குவல. ௧௦௧.)

அநுமாநப்போலி—சாதநம் பக்ஷத்திலிருக்கையின்மை, சபக்ஷத்திலிருக்கையின்மை, விபக்ஷத்தினீக்கமின்மையென்னுங் குற்றங்களோடு கூடியுஞ் சிலரூபயோகத்தால் அநுமாநம் போலத் தோற்றும் போலிநியாயம். (சைவப்பி. கடு. தர்க்கபா. எசு.)

அநுமாநம்— 1. ஐயததோடெண்ணுதல். 2. ஐயம். (உ-ம்.) "இனியிங்கிதற்குமநுமாநமோ" (தாயு. அகிலா. க.) 3. தர்க்கசாத்திரத்திற் சொல்லப்பட்ட பிரமாணங்களுளொன்றாகிய கருதலளவை. இதுநேரே யறியப்படாது சாதித்துப் பெறற்பாலதாய் மறைந்துநின்றபொருளை யதனைவிட்டு நீங்காது யாண்டும் உடனாய்நிகழும் ஏதுவைக் கொண்டு உணர்வதாகிய ஆன்மாவின் ஞானசத்தி; அது: புகையைக்கண்டு காணப்படாத நெருப்பையுண்டென்றுணர்தல் போல்வது. ஏதுக்களைக்கொண்டு மறைந்தபொருள்களை யறிதல். (சி. சி. அளவை. உ. நிரம்ப.) [அநுமாநம்: அநு - பின். மாந-அளவை.]

அநுமாநவாக்கியம்—அநுமாநப்பிரமாணத்தால் ஒருவன் அறிந்ததைப்பிறன் அறியும்படியுணர்த்தும் வாக்கியம, இவ்வாக்கியத்திற்குப்பிரதிஞ்ஞை, ஏது, உதாரணம், உபநயம, நிகமநம் என்பன அவயவங்கள். (உ-ம்.) "அநுமாந வாக்கியத்தினுடைய ஏகதேசங்கள் அவயவங்கள்." (தர்க்கபா. எஉ.) [அநுமாநவாக்யம்.]

அநுமாநவிருத்தம்— அநுமானப்பிரமாணத்துக்கு மாறுகப்பக்கவுறுப்புக்கூறுவது. (அநுமா. பக். கக.)

அநுமாநவுறுப்பு— பக்கம், ஏது, திருட்டாந்தம், உபநயம், நிகமனம் என ஐந்தாம். (அநுமா. பக். ரு.)

அநுமாநாகம்மியம்— அநுமாநத்தால் அறியப்படாதது. (சி. சி. உ: எ௩. சிவாக்.) [அநுமாந- கருதலளவை. அகம்ய- அறியப்படாதது.]

அநுமாநபாசம்— அநுமாநப்போலி. (சி. சி. அளவை. கச. மறை.) [அநுமாந-கருதலளவை. ஆபாஸ - போலி.]

அநுமாநித்தல்— அநுமாநப்பிரமாணத்தாலறிதல். 2. ஐயத்தோடெண்ணுதல். 3. குதிரைகனைத்தல். (உ-ம்.) "குதிரைதற்செயலாயாவது வாங்குகிற ஆளைக்கண்டாவது அநுமானித்தாலுங் கூத்தாடினாலும்" (அசுவசாத். கஎ.)

அநுமாநிதம்—குதிரைக்கனைப்பு.

அநுமாபகம் — அநுமிக்கப்பண்ணுவது, ஏதுவாகி அறிவிப்பது. (பௌட். பதி. எஇ.) [அநுமாபக.]

அநுமித்தல்— அநுமாநப்பிரமாணத்தினாலறிதல். (உ-ம்.) "மாயையிடையையுளண் முலையான் மற்றைமாதர்போலென்று தூயமதிஞாநுமித்துச்சொல்லுமருங்குற்றேகைதான்." (பிரபுலி. பிரபுதே. ௩எ.)

அநுமிதி — அநுமாநத்தினுற்றேன்றும் அறிவு. (தர்க்கபா. கஎ.) [அநுமிதி.]

அநுமேயம்—அநுமாநப் பிரமாணத்தால் அறியத்தக்கது.

அநுமை—அநுமாநத்தினால் வரும் அறிவு. [அநுமா.]

அநுமோதநம்—1. அங்கீகரிப்பு. 2. ஒத்து மகிழ்தல். 3. சம்மதம். [அநுமோதந: அநு - கூட. மோதந - மகிழ்தல்.]

அநுயாத்திரி— } யாத்திரையிற் கூடப்
அநுயாத்திரிகன்— } போவோன். [அநுயாத்ரி: அநு-கூட. யாத்ரி-பயணகாரன்.]

அநுயோகம்—1. கண்டித்தல். 2. தேவத்தியாநம். 3. வருந்திக்கேட்டல். 4. விசாரணை. 5. வினா. [அநுயோக: அநு-பின். யோக - இணைத்தல்.]

அநுயோகி—1. கூடியிருக்குமது. (தர்க்கபா. கசு.) 2. விதிவினை. (உ-ம்.) "விதியநுயோகி மறைபிரதியோகி" (பி. வி. கசு. உரை.) [அநுயோகிந்.]

அநுயோசநம்—வினா. [அநுயோஜந: அநு - பின். யோஜந - இணைத்தல்.]

அநுரஞ்சகம்—திருத்தியாக்குவது. [அநுரஞ்ஜக; அநு- கூட. ரஞ்ஜக பிரியமாதல்.]

அநுரஞ்சநம்—1. நேசித்தல். 2. பிரியப்படுத்துதல் [அநுரஞ்ஜந: அநு - கூட. ரஞ்ஜந - பிரியமாக்குவது.]

**அநுராகம்**—1. சிற்றின்பவிருப்பம். (உ-ம்) "இதழைக்கொடுத்தநுராகத்துருக்கி" (திருப்பு. உசக.) 2. சிநேகம். 3. மிகுபிரியம். [𑌅𑌨𑍁-𑌰𑌾𑌗.]

**அநுராகமாலை** — ஒரு பிரபந்தம்; அது: தலைவன் கனவின்கண் ஒருத்தியைக்கண்டுகேட்டு உண்டு உயிர்த்து இனிமையுறப் புணர்ந்ததைத் தன்னுயிர்ப்பாங்கற்கு உரைத்ததாக நேரிசைக் கலிவெண்பாவாற் கூறுவது. (தொன்னூல். உஅடு. உரை.) [𑌅𑌨𑍁-𑌰𑌾𑌗𑌮𑌾𑌲𑌾.]

**அநுரூபம்**— 1. இணக்கம், ஏற்றது. 2. ஒத்தது. 3. தக்கது. (உ-ம்.) "முனிவர்தோணறினர்கருமவநுரூபமாய்ச்சிவாக்கினையால்" (சூத. சிவ. சச: கஎ.) [𑌅𑌨𑍁-𑌰𑍂𑌪: 𑌅𑌨𑍁-ஒத்த. 𑌰𑍂𑌪 - வடிவம்.]

**அநுரோதம்**—இணக்கம்.

**அநுலாபம்** — அடிக்கடிபேசுதல், மறுபடியும்பேசுதல். (லிங்கா. களஉ.) [𑌅𑌨𑍁-𑌲𑌾𑌪: 𑌅𑌨𑍁 - பின். 𑌲𑌾𑌪 - பேசுதல்.]

**அநுலேபகம்**—சந்து முதலியபூசுங்கருவி. [𑌅𑌨𑍁-𑌲𑍇𑌪𑌕: 𑌅𑌨𑍁 - கூட. 𑌲𑍇𑌪𑌕- பூசுவது.]

**அநுலேபநம்**— } **அநுலேபம்** — } 1. அபிடேகஞ்செய்தல். 2. அபிடேகத்திரவியம். 3. தைலமுதலியவற்றை யுடம்பிற்பூசுதல். (உ-ம்.) "குங்குமகற்பூரசந்தநாதி யநுலேபநமாகவும்" (சி-லி. கிரி. கக. உரை.) [𑌅𑌨𑍁-𑌲𑍇𑌪𑌨: 𑌅𑌨𑍁 - கூட. 𑌲𑍇𑌪𑌨- பூசுதல்.]

**அநுலோமசன்**— அநுலோமன். [𑌅𑌨𑍁-𑌲𑍋𑌮𑌜:]

**அநுலோமன்**— நாற்குலத்துள், உயர்குலத்தாடவன் இழிகுலப் பெண்ணை விவாகஞ்செய்து பெற்றபிள்ளை. (உ-ம்.) "குலமுயராணுந்தாழ்ந்தகுலமுறுபெண்ணுங் கூடி-யலமறப்பிறந்தமைந்தனநுலோமனென்னும் பேரான்" (சூத. சிவ. கஉ: சு.) இப்படிப்பிறந்த அநுலோமர்: சவர்ணன், அம்பட்டன், பாரசவன், மற்குரு, உக்கிரன், சூசுகன் என அறுவகையர். (சைவச. பொது. சகக. உரை.) [𑌅𑌨𑍁-𑌲𑍋𑌮: 𑌅𑌨𑍁 - கிரமம். 𑌲𑍋𑌮 - தொடர்பு.]

**அநுவகன்** — வாயுசக்கரங்களுளொன்று. (உ-ம்.) "ஆங்கனுவகன் பிரவகனநுவகன் சிறப்பின் - வீங்குசக்கங்களிவகன்மேற் பராவகனதன்மே - லோங்கினின்றதோர் பரிவகனெனும் பெயருடைய - தீங்கில்வாயு சக்கரங்களேழுந்தனிசிறக்கும்." (கூர்மபு. மண்டல. ச.)

**அநுவதித்தல்**-முன்னர்க்கூறிய ஒருபொருளை யொருநிமித்தத்தாற் பின்னும் எடுத்துக் கூறுதல். (உ-ம்.) "இருவர்சொல்வழக்குமேற்கொண்டநுவதித்து" (திருவிளை. மாமனு. ந0. பி. வி. ருC. உரை.)

**அநுவம்சம்**-வமிசவரலாறு. [𑌅𑌨𑍁-𑌵𑌂𑌶: 𑌅𑌨𑍁 - வரிசை. 𑌵𑌂𑌶 - மரபு.]

**அநுவயித்தல்**—ஒரு வாக்கியத்திலே இலக்கணமுறைப்படி யெழுவாய் பயனிலைகள் வெளிப்படத்தோன்றுமாறு சொற்களைக் கூட்டிச் சொல்லுதல்.

**அநுவர்ணனை**— வர்ணித்துச் சொல்லல். (உ-ம்.) "பெருகுபிதிர்வஞ்சாநு வர்ணனை" (மச்சபு. அநுக்கிர. சு.) [𑌅𑌨𑍁-𑌵𑌰𑍍𑌣𑌨𑌾.]

**அநுவர்த்தநம்**—1. காரியம். 2. கீழ்ப்படிதல். 3. சம்மதித்தல். 4. தொடருதல். 5. பிரியப்படுத்துதல். 6 முற்சூத்திரத்திற்சொல்லப்பட்டதைக்கொண்டு குறைநிரப்புதல். [𑌅𑌨𑍁-𑌵𑌰𑍍𑌤𑌨: 𑌅𑌨𑍁- பின். 𑌵𑌰𑍍𑌤𑌨- விருத்தியாதல், தாபித்தல்.]

**அநுவர்த்தி**—அநுசரித்தல். (உ-ம்.) "ததநுவர்த்தியாயிருக்கிற புத்தியாதிபிருதிவியந்தமான தத்துவங்களும்" (சி. சி. ச: அ. சிவாக்.) [𑌅𑌨𑍁; 𑌵𑍃𑌤𑍍 - இருத்தல்.]

**அநுவர்த்தித்தல்**—தொடருதல். (உ-ம்.) "அந்தச்செய்தகருமம் நசித்ததிறுவொருஆபூர்வஞ்செனித்துப்பலபரியந்தஞ் சம்ஸ்காரான்மாவாய் அநுவர்த்திக்கும்" (சி.சி. உ: ருஅ. சிவாக்.)

**அநுவழி**— புதன். (சூ. நிகண். ச: சுக.)

**அநுவாக்கியை** — யாகத்திலே தேவதையை யழைத்தற்குச்சாதநமான ஒரு வேதமந்திரம். [𑌅𑌨𑍁-𑌵𑌾𑌕𑍍𑌯𑌾: 𑌅𑌨𑍁; 𑌵𑌾𑌕𑍍𑌯𑌾.]

**அநுவாகம்**—வேதத்தின் உட்பகுப்பு.

**அநுவாசநம்**— } **அநுவாசம்** — } 1. அணபு. 2. கூடியிருத்தல். 3. வாசனையூட்டுதல். 4. வேலைச்சாலை. [𑌅𑌨𑍁-𑌵𑌾𑌸: 𑌅𑌨𑍁 - கூட. 𑌵𑌾𑌸 - இருத்தல், பரிமளம்.]

**அநுவாசிதம்** — வாசனையூட்டப்பட்டது. [𑌅𑌨𑍁-𑌵𑌾𑌸𑌿𑌤.]

**அநுவாதம்**—1. சம்மதம். 2. நிந்தித்தல். 3. முன்னர்க்கூறிய ஒருபொருளை யொருநி

மித்தத்தாற் பின்னும் எடுத்துக் கூறுதல். (பி. வி. ௫௦.) வாதிகூறிய பொருளை நீயிவ்வாறு கூறினையெனக் கண்டனஞ்செய்தற்பொருட்டுப்பிரதிவாதியுங்கூறுதல்.(உ-ம்.)“ஆங்கவன்ற னுரைத்தமொழிகேட்டவன்பரதனையநுவாதஞ் செய்து” (பெரியபு. திருஞாந. ௯௧௯.) [அநு-வாத: அநு - பின். வாத- சொல்லுதல்.]

**அநுவாதி**— 1. அநுவாதம் செய்பவன். 2. சமணரிலொருவன். (சி. சி. பர. நிகண். மதம். க. உரை.)

**அநுவாதித்தல்**—அநுவதித்தல். (உ-ம்.) “சொன்னநூலநுவாதித்து” (திருவிளை. நடாத. ருச.)

**அநுவித்தம்**—1. கலக்கப்பட்டது. 2. கலந்து பிணைப்பட்டது. 3. குயிற்றப்பட்டது. 4. கூடினது. 5. சம்பந்தப்பட்டது. 6. துளைக்கப்பட்டது. 7. பலவன்னப்பட்டது. [அநு-வித: அநு-வித.]

**அநுவிதாயிநீ**— அநுசரிப்பது, இணங்கியது. (உ-ம்.) “ஈசுவரனுடைய இச்சாநுவிதாயிநீயாகமாயையானது ஆன்மாவாரகமாகிய ஆணவம் நீஙகும்படிக்குக் கலையாதி தத்துவங்களைத் தன்னிடத்திலே யுதிப்பிக்கும்” சி. சி. உ: அச. சிவாக்.) [அநு-விதாயிநீ: அநு- பின். விதாயிநீ - விதிகளையநுசரிப்பது.]

**அநுவியவசாயம்**— பிரத்தியக்ஷப் பிரமாணத்தினால் உணர்ந்ததை யுணர்ந்தேன் என ஒருவனுக்குப் பின்னிகழுமுணர்வு. (தர்க்காமிர்த. கூ௩.) [அநு - பின். வ்யவஸாய - உணர்வு, செயல்.]

**அநுவிரசநம்**— வழிவிட்டனுப்புதல். [அநு-வ்ரஜந: அநு - பின். வ்ரஜந- போதல்.]

**அநுவிருத்தம்**—1.முட்டைவடிவம். 2. முன் சூத்திரத்திலிருந்து அவாய்நிலையாற் பின் சூத்திரத்துக்கெடுத்துக்கொள்ளப்படுஞ்சொல்முதலியன. [அநு-வ்ருத்த.]

**அநுவிருத்தி**— 1. இசையச் செய்தல். 2. இணங்கல். 3. உபசாரம். 4. ஒப்பாகச்செய்தல். 5. கூடிநின்று செய்தல். (உ-ம்.) “அவ்வொருவனே யென்று - மான்றவிலநுவிருத்தியாயிருக்கும் வகையினால்” (சூத. எக். பூ. கக: ௪௦.) 6. சேர்ந்திருத்தல். 7. தொடர்ச்சி. (உ-ம்.) “ஆகில் எங்கும் ஞானமானது அநுவிருத்தியாயிருக்கையினாலே” (சி. சி. உ: ௬௦. சிவாக்.) 8. புறநடை. [அநு-வ்ருத்தி: அநு - பின். வ்ருத்தி - தொழில்.]

**அநுவுருவம்**—ஒத்தரூபம். (உ-ம்.) “பார்ப்பனமாக்களினிடையே பாண்டுமைந்தரநுவுருக்கொண்டிருந்ததன்மை” (பாரத. திரௌ. சக.) [அநு ஒத்த. ரூப - ரூபம்.]

**அநுவுலோமன்**— அநுலோமன். (உ-ம்.) “அரும்பிரதிலோமனு மநுவுலோமநும்” (நல். பார. கன்னிகா. உச.) [அநு-லோம.]

**அநுவேதம்**—1. கூட்டுதல். 2. சம்பந்தம். (உ-ம்.) “சங்கமறுசச்சிதாநந்தவொளியுருவந்தானெனச்சிந்தித்திடலுட் சத்தாநுவேதம்” (வேதா. சூ. கருக.) [அநு-வேத: அநு- கூட. வேத - துளைத்தல்.]

**அநுற்பத்தி**—1. சித்தியின்மை. 2. பிறப்பின்மை. [அநுத்பத்தி: அநு - எதிர்மறை. உத்பத்தி - பிறப்பு.]

**அநுற்பூதம்**— காணப்படாதது. (உ-ம்.) “அநற்பூதசத்தம்” (சி. சி. உ: கூ௫. சிவாக்.) [அநுத்பூத:அநு-எதிர்மறை. உத்பூத- காணப்படுவது.]

**அநூகம்**—1. ஆமோதித்தல். 2. ஒழுக்கம். 3. கழிந்தபிறப்பு. 4. குணம், தன்மை. 5. கோத்திரம். [அநூக.]

**அநூடன்**— விவாகஞ்செய்யாதவன். [அநூட: அநு - எதிர்மறை. ஊட - விவாகஞ்செய்தவன்.]

**அநூநகன்**—குறைவில்லாதவன். [அநூநக: அநு - எதிர்மறை. ஊநக - குறைவுடையோன்.]

**அநூநம்**—1. குறைவின்மை. 2. முழுமையும். [அநூந: அநு- எதிர்மறை. ஊந- குறைவு.]

**அநூபசம்**—இஞ்சிப் பூண்டு. [அநூபஜ: அநூப - ஈரம். ஜ - பிறந்தது.]

**அநூபம்**—1. ஈரம். 2. எருமை. 3. தவளை. 4. நீர்நிலை. 5. நீர்சூழ்ந்தநிலம். 6. யானை. [அநூப: அநு - சமீபம். ஆப் - நீர். இது, ஊப என்றாயிற்று.]

**அநூர்த்துவாத்தி**—மேற்கதுப்பினெலும்பு. [ஊர்த்வாஸ்தி: ஊர்த்வ - கதுப்பு. ஊர்த்வ - மேல். அஸ்தி - எலும்பு.]

அநூரு— 1. சூரியனுடைய தேர்ப்பாகனாகிய அருணன். 2. தொடையில்லாதவன். [அநூரு: அந - எதிர்மறை. ஊரு - தொடை.] 3. புதன். 4. விடியற்காலம்.

அநேகத்துவம்— அநேகமாயிருக்குந்தன்மை. (தாயு. எனக்கெனச. ௩௨. உரை.) [அநேக - பல. த்வ - தன்மை.]

அநேகதங்காவதம் — காஞ்சிபுரத்துள்ள ஒரு சிவஸ்தலம். (பெரியபு. ஏயர். ௧௧௪.)

அநேகபம்— 1. அநேசபேசம் என்னுந்தலம். (உ-ம்.) "பச்சிமாலயநல்லநேகபங் கடம்பை" (கந்தபு. நகர. அ௯.) 2. யானை. [அநேகப: அநேக - பல. ப- குடிப்பது. கையினாலும் வாயினாலுங் குடிப்பதென்றபடி.]

அநேகபேசம்— காஞ்சிநகரத்துள்ள இருபது சிவாலயங்களுளொன்று; இது: விநாயகர் கயமுகனைக் கொன்று அவன்கொம்பிலுள்ள முத்துக்களாற்சிவனைப்பூசித்ததமையால் வந்தபெயர் எனபர். (கந்தபு. நகர. அ௯. உரை.) [அநேகப - யானை. ஈச - ஈசுரனிருக்குமிடம்.]

அநேகம்—ஒன்றுக்கு மேற்பட்டது, பல. (உ-ம்.) "இநநகர நேகநாளிருநதவெல்லையில்" (பாரத. வேத்திர. ௩௭.) [அநேக; அந - எதிர்மறை. ஏக - ஒன்று.]

அநேகமூர்த்தி— கடவுள். [அநேகமூர்த்தி; அநேக - பல. மூர்த்தி - மூர்த்தமுடையவன்.]

அநேகர்—பலர். (உ-ம்.) "அடலவக்கரநேகருடன் அடுபோர்செய்து" (பாரத. புட்பயா. ௧௧.)

அநேகவற்பாவி— முன்மொழியெண்ணும் பின்மொழிதத்திதார்த்தமாயும் வந்து பலரையாவது பலபொருளையாவது கருதிநிற்குஞ் சமாசம். "பஞ்சபாண்டவ" ரென்பதிற்போல. (உ-ம்.) "தொகைத்துவிகு-முற்பதமெண்பிற் பதத்தத்தி தார்த்த முடித்துமெழூஉம் - பற்பல வேகவற்பாவியநேகவற்பாவியென்றே" (பி. வி. ௨௧.) [அநேக - பல. வதீ-போல, ஆக. பாவி-இருப்பது.]

அநேகன்—1. கடவுள். (உ-ம்.) "ஏகனுமாகியநேகனுமானவனுதனுமானுனென்றுந்தீபற" (திருவுந்தி. ௫.) [அவனவளதுவென்றுபலவாய் நிற்கத்தக்கவனென்றபடி. மேற்படி. சிற்றம்ப. உரை.] 2. பசுவாகிய ஆன்மா. (உ-ம்.) "ஏகனநேகனிருள்கருமமாயை" (திருவருட்பய. ௪: ௨. இது சாதியொருமை.) 3. பலயோநிகளிலும் நிற்பவன. (உ-ம்.) "ஏகனநேகன்" (சங்கற்பநிராகரணம்... சங. அ. அடி.) [அந - எதிர்மறை. ஏக - ஒன்றாயிருப்பவன்.]

அநேகாங்கம்— 1. அநேகாங்க வுருவகம். (உ-ம்.) "உருவகமேகாங்கமநேகாங்கமென" (தண்டி. ௩௪.) 2. பல அங்கம். [அநேக; அங்க.]

அநேகாங்கவுருவகம் — உருவக அணிவகையுளொன்று; அஃது: ஒன்றன் அங்கங்கள் பலவற்றையு முருவகஞ்செய்து சொல்லுவது. (உ-ம்.) கைத்தளிராற் கொஙகைமுகிழ்தாங்கிக் கண்ணென்னு - மைத்தடஞ்சேலைமைந்தர் மனங்கலங்க - வைத்ததோர் - மின்னுளதான் மேகமிசையுளதான் மற்றதுவ - மென்னுளதா நண்பாவினி" என்னுமிகவியிற்போல. (தண்டி. ௩௪. உரை.) [அநேகாங்க-ரூபக.]

அநேகாசிரிதகுணம்— இரண்டு அல்லது இரண்டுக்கதிகமாகிய பலதிரவியங்களை யாதாரமாகக் கொண்ட சையோகம் முதலிய குணம். (தர்க்காமிர். ௨௧.) [அநேக - பல. ஆச்ரித - பற்றியது.]

அநேகாந்தம்— சந்தேகமானது, பலமுடிவு. [அநேகாந்த. அநேக- பல. அந்த-முடிவு.]

அநேகாந்தவாதம்— ஆருகதவாதம். (சி. சி. ௪: ௨௦. சிவாக்.) [அநேகாந்த-பலமுடிவு. வாத - பேச்சு.]

அநேகார்த்தம்— பலபொருள். (உ-ம்.) "ஆன்மாவின்வடிவுதானுமநேகார்த்தகூட்டமென்னில்" (சி. சி. ௪: ௫.) [அநேக - பல. அர்த்த - பொருள்.]

அநேகான்மவாதி—ஆன்மாக்கள் அநேகம் என்றுவாதிப்போன். (உ-ம்.) "வியங்கிய வியஞ்சக பாவசம்பந்தத்தோடு வியாப்பிய வியாபக பாவசம்பந்த சம்பந்தியாயிருப்பனென்றநேகான்ம வாதியாய்நீர் சொன்னதேதென்னில்" (சி. சி. ௨: ௨. ஞானப்.) [அநேக-பல. ஆத்மவாதிந் - ஆன்மா என்போன்.]

அநேகேச்சுரவாதம்— பலகடவுளருளரென்றுவாதித்தல். (உ-ம்.) "அற்றேல் அநே

சேச்சுரவாதம் பரிகரித்தற்பொருட்டு" (சி. சி. ௪: ௬௦. சிவஞா.) [ஸம் நக: ஈச்வர; வாத.]

அநேகேசுவரத்வம்— ஈசுவரர்பலராயிருக்குந்தன்மை. (உ-ம்.) "சத்திமானுயநேகமாய் அநேகேசுவரத்வம்வரும்" (சி. சி. ௪: ௬௧. சிவாக்.) [ஸம் நகேச்வர-பலகடவுளர். த்வ தன்மை.]

அநேகை — அநேகமாயிருக்கிறவள். (உ-ம்) "சத்தியநேகையென்னில்" (சி. சி. ௪: ௬௧. சிவாக்.) [ஸம் நகா.]

அநேடமூகன் — 1. கபடமுடையவன். 2. செவிடு மூமையுமானவன். 3. தூர்ச்சநன் [ஸம் நடமூக: ந- ஒப்பு. ஏட - செவிடு. மூக - ஊமை.]

அநேடன் — அறிவில்லாதவன். [ஸம் நட: ந - ஒப்பு. ஏட - செவிடு.]

அநைக்கம் — அநைக்கியம். [ஸம் நக்ய.]

அநைக்கியம் — 1. ஒற்றுமையின்மை. 2. ஒன்றனமை, பன்மை. [ஸம் நக்ய: ந- எதிர்மறை. ஐக்ய - ஏகத்துவம்.]

அநைகாந்தம்— ஏதுப்போலி மூன்றுவகையுளொன்று; அது: விபக்ஷத்தினீங்கிப் பக்ஷசபக்ஷங்களிலிருத்தலாகிய நியமமல்லாத ஏது. இது பொது அநைகாந்தம், சிறப்பு அநைகாந்தம் என இரண்டாய் விரியும். (சைவப். ௧௧.) [ஸ ந - எதிர்மறை. ஏகாந்த - ஏகாந்த சம்பந்தம்.]

அநைகாந்திகம்—1. ஆறுவகை. அவையாவன:— "சாதாரணம், அசாதாரணம், சபக்கைகதேசவிருத்தி விபக்கவியாபி, விபக்கைகதேசவிருத்தி சபக்கவியாபி, உபயைகதேசவிருத்தி, விருத்தவியபிசாரி" (அநுமாந. ௨௨ - ஆம் பக்.) அநைகாந்தம். (உ-ம்.) "ஆகையால் ரூபாரூபமென்னும் விருத்ததருமத்வயாசிரயத்துவம் அநைகாந்திகதோஷமென்றிதன்பொருள்" (சி.சி.௪:௬௨.சிவாக்.) [ஸ ந - எதிர்மறை. ஐகாந்திக - ஏகாந்தசம்பந்தமுடையது.]

அநைசுவரியம்—ஐசுவரியமின்மை.

அநைதிகம்—ஐதிகமல்லாதது. [ஸம் நைதிக: ந- எதிர்மறை. ஐதிக - பரம்பரையானது.]

அநோகசும் — 1. மரப்பொது. 2. மரம்.

அப்சரசு — தேவுலகத்துள்ளவேசிகள். [ஸ அப்ஸரஸ்: அப் - சலம். ஸரஸ் - சரிப்பவர்.] இவர் கந்தருவருடைய மனைவியரென்றும் ஸ்நானஞ்செயவதிலே மிகப்பிரியரென்றும், சூரிய சகாயரான ஏழு கணதவர்களுள்ளேயொருகணத்தவரென்றும் அவர் கிருதஸ்தலை, புஞ்சிகஸ்தலை, மேனகை, சககநியை, பிரமலோசை, அநும்லோசா, கிருதாசி, விசுவாசி, ஊர்வசி, பூர்வசித்தி, திலோத்தமை, அரம்பையெனப் பன்னிருவரென்றும், முறையே சித்திரை முதலிய மாசந்தோறுந்தனித்தனி சூரியனோடுபோக்குவரவுடையரென்றுஞ் சொல்லப்படுவர். ஊர்வசி, மேனகை, அரம்பை, மிசிரகேசி, அலம்புடை, விசுவாசி, கிருதாசி, பஞ்சசூடை, திலோத்தமை, பாநுவதி, அபலை, இரம்பியையெனப்பன்னிருவரென்பர். இவரினும் பேதித்துக்கூறப்படுவர்.

அப்தம்—வருடம். (உ-ம்.) "சகாப்தம்" [ஸப்த.]

அப்தோரியாமம்—1. சோதிட்டோமயாகத்தின் ஏழாமங்கமாய் இறுதியிற்செய்யப்படும் யாகம். (உ-ம்.) "வடக்குநோக்கிய முகத்தினின்றும் அதர்வணவேதமும், அப்தோர்யாமமென்னும் யாகமும், அநுட்டுப்பு என்னுஞ்சந்தமும், வஞ்சிப்பாவும, வினையவுந் தோன்றின" (கூர்மபு. பலவ. ௨௪. ௨௭.) 2. இந்தயாகத்தினிறுதியிலே யத்தியயனஞ்செய்யுஞ் சாமவேத வாக்கியம். [ஸம் தோர்யாம.]

அப்ப— 1. அப்பனையழைக்கும் அண்மைவிளி. 2. ஓரதிசயச்சொல். (வழக்.)

அப்பட்டா—வட்டத்திருப்பிப்பூண்டு. [வைத்திய அகராதிகாரர் "அப்பட்டா" என்பர்.]

அப்படா—ஓரதிசயச்சொல். (வழக்.)

அப்படி—அவ்வண்ணம். (உ-ம்.) "அப்படியொருத்தி செல்ல" (கந்தபு. தெய்வ. ௮௧.) [அ - ஒருசுட்டெழுத்து. படி - வண்ணம்.]

அப்பனை—1. ஆதாரம். 2. உத்தரவு. 3. பிணை. [திசைச்.]

அப்பத்தாள் — அப்பனைப்பெற்றதாய். (வழக்.)

அப்பதி— 1. கடல். 2. வருணன். [அப்பதி: அப் - நீர். பதி - தலைவன்.]

அப்பப்ப—ஓரதிசயச்சொல். [வழக்.]

அப்பம்—ஒருவகைச் சிற்றுண்டி. (உ-ம்.)

" எனவெலட்பொரியொடப்பமிவையென்பவுணார்"(உபதேச.வாஞ.௧௬௧.) 2. புட்டுத்திருப்பிப்பூண்டு. 3. வட்டத்திருபபிப்பூண்டு.

அப்பர்–1. ஆண் ஆட்டின் பெயர்களுளொன்று; இஃது: இப்போதுவழக்கமில்லை. இப்பெயர் குரங்குக்குமாமென்பது நச்சினார்க்கினியார் "அப்பர்குரங்கென்றலுமாம்" என்றதனாற்பெறரும். (தொல். பொரு. ௬௦௩.) 2. சிவன். (பெரியபு. நமிநந். ௧௩.) 3. சைவசமயகுரவர் நால்வருளொருவராகிய திருநாவுக்கரசர். (பெரிய. திருஞாந. ௬௧௫.) 4. தந்தையார். (உ-ம்.) "விற்பரமரப்பரருள்வித்தகமருப்புடையபெருமானே" (திருப்பு. காப்பு. ௩.)

அப்பல்—1. ஒற்றுதல். (உ-ம்.) "யாக்கையினப்பும்" (இராமா. இராவணன். சோக. ௩௪.) 2. பூசுதல்.

அப்பவருக்கம்— சிற்றுண்டியினம். அபூபம், இலையடை, கஞ்சம், சஷ்குல்லி, நொலையல், பூரிகை, பொள்ளல், போநகம், மண்டிகை, மெல்லடையெனப்பத்தும் அப்பவருக்கம் எனப்படும்.

அப்பவாணிகர் — ஒருவகைசசாதியார்; இவர்: அப்பஞ்செய்துவிற்பவர். (மணிமே. உ௬௧.)

அப்பளக்காரம்—உறைப்பும், உவர்ப்புமுள்ள ஒருவஸ்து. (உ-ம்.) "குடல்வாதஞ்சூலைகொடிதானவாத-மடல்புரியுமையமறுக்கும்-நெடுவயிற்றி- னுப்பிசத்திரேடேயுயர்குன்மநோயகற்று- மப்பளக்காரமது" (பதார்த்த. ௧௧௧௧.)

அப்பளம்— ஒருவகையப்பம்; இது: உழுந்தினாலும் அரிசியினாலும் செய்யப்படுவது. (உ-ம்.) "வாதத்தையுண்டாக்கு மாபலத்தையுங்கொடுக்குஞ்- சீதத்தைமேவுகபந் தீர்க்குங்காண்- ஓதுமுழுந்- தப்பளஞ்சோற்றப்பளங்காலாதிகள்விஞ்சாதுகிலை - யொப்பவளஞ்செய்யுமுறை" (பதார்த்த. ௧௫௧௮.)

அப்பளாக்காரம்—உறைப்பும் உவர்ப்பும் உள்ள ஒருவஸ்து.

அப்பறத்தூணி— 1. அம்புதொலையாமல் இருக்குங் கூடு. 2. சரகாண்ட பாஷாணம். இதனை யப்பறுத்தூணியென்பர். வைத்திய அகராதிகாரர். [அம்பு - பாணம். அறு - நீங்காத. தூணி - கூடு.]

அப்பன்—1. சைவசமய குரவருளொருவராகிய திருநாவுக்கரசுநாயனார். (உபதே. கடவுள். எ.) 2. நீருடையவன். (உ-ம்.) "ஆடணீள்சடைமேவியவப்பனே" (தேவார. திருவால. திருவிய. ௩. சம்.) [அப்பு - நீர்.] 3. பிதா. (உ-ம்.) "அப்பனென்றுமன்னையென்று மாரியனென்று மூனையே செப்புவது" (தாயு. பரா. உ௮உ.)

அப்பா— 1. அதிசயந் துக்கம் முதலியவைகளைக்காட்டும் ஒருசொல். (உ-ம்.) "என்னப்பா மற்றிவ்வெழுபது வெள்ளமுமொருவன் - றின்னப்போதுமோதேவரில் வலியரோ"(இராமா. மூலபல. ௬௦.) 2. பிதாவைப் பிள்ளை யழைக்கும் ஒரு விளிப்பெயர். 3. இளைஞர்தாம் நன்குமதிக்கு முதியோரை விளிக்கும்போதும், முதியோர் இளைஞரை யன்புகாட்டி விளிக்கும்போதும் பிரயோகிக்கும் ஒரு சொல்.

அப்பாகம்—வாலுளுவை.

அப்பாட்டன்–பாட்டனுடையபிதா.(திசை)

அப்பாயி—தகப்பனைப்பெற்ற பாட்டி.

அப்பால்—1. அதன்பின். 2. அதன் மேல். (உ-ம்) "பின்னவன்பெற்றசெல்வமடியனேன்பெறறதன்றோ - வென்னினியுறுதியப்பால்" (இராமா. கைகேசி. ௧௪௦.) 3. அப்பக்கம். (உ-ம்.) "அப்பாலிருந்தவநசரிதமைவர்க்கு" (பாரத. நச்சுப். ௧௬.) [அ; பால்.]

அப்பாவி—பேதை. (வழக்.)

அப்பிங்கநம்— அப்பியங்கநம் பார். [ꠀꠁꠂ.]

அப்பியங்கநம்— அப்பியங்கம். (உ-ம்.) "தேகமுழுதும் நனையும்படி முதலில், சிரசிற்சொரிந்து ஸ்நாநஞ்செய்வதுவே யப்பியங்கநமாம்" (தைல. பாயிர. ௫௧. உரை.) [ꠀꠁꠂ.]

அப்பியங்கம்— 1. உடம்பிலே தைலம்பூசுதல். (உ-ம்.) "அப்பியங்கஞ்செய்யிற் செவிடுண்ணுக்கு மகலும்" (தைல. தைலவ. ௬௮.) 2. கண்ணுக்குமைதீட்டல். 3. பிண்ணாக்கு. [ꠀꠁꠂ.]

அப்பியசித்தல்— அப்பியாசஞ்செய்தல். (உ-ம்.) "மறுமைக்குபயோகமான வேதாந்த சாத்திரங்களையும் நாடோறும் அப்பியசிக்க வேண்டியது" (மநு. ௪: ௧௧.)

அப்பியஞ்சநம்— 1. எண்ணெய்ப்பதார்த்தம். 2. கண்மடவில் மைதீட்டல். 3. தேகத்தில் எண்ணெய் பூசுதல்.[ꠀꠁꠂ; ꠀꠁ; ꠀꠁꠂ.]

அப்பியந்தம்— தாமதம், பின்போடுதல்

அப்பியந்தர்க்காணம்— அகத்து நிகழ்கருவி. (உ-ம்.) "அப்பியந்தரமேவாகியமென்

னச்-செப்பியகாணமகம்புறமாகும்" (பி. வி. ௪௨. உரைச்சூத்திரம்) [அப்யந்தரகரண: அப்யந்தர - உள். கரண - கருவி.]

அப்பியந்தரம்— 1. இடைக்காலம். 2. உள்வீதி. 3. உள்ளிடம், தடை. [அப்யந்தர: அபி - முன். அந்தர - உள்.]

அப்பியமேகம்— ஒருவகை மேகரோகம்; அதன் தன்மை: மூத்திரமானது யானையின் மலசலத்தைப்போல அதிவிரைவாய் ஒவ்வொருவேளைக்கொருபடியளவாக இறங்குவதுங்காய்ச்சினால் உவர்மண்ணைப்போல அடியில் வண்டல்படிவதும் ஆம். (சீவரட். ௩௦௫.)

அப்பியாகதன்— 1. சந்திக்கவந்தோன். 2. முன்னறியப்படாதுவந்தோன். (உ-ம்.) "அப்பியாகதரோடுத்தமவதிதிபூசையும்புரிதல்" (திருவானை. கோச்செங். ௧௩௦.) 3. வந்துசேர்ந்தவன். [அப்யாகத: அபி - எதிர். ஆகத - வந்தவன்.]

அப்பியாகமநம்— 1. சந்தித்தல். 2. வந்துசேருதல். [அப்யாகமந. அபி - எதிர். ஆகமந - வருதல்.]

அப்பியாகமம்— 1. அடித்தல். 2. அயல். 3. எழும்புதல். 4. கொலை. 5. சந்தித்தல். 6. பகை. 7. யுத்தம். 8. வந்துசேருதல், வருதல். [அப்யாகம: அபி - கிட்ட. ஆகம - வருதல்.]

அப்பியாகாரம் — 1. உண்ணுதல். 2. களவு. [அப்யாஹார: அபி; ஆஹார - உண்பது, எடுப்பது.]

அப்பியாசபூமி— ஞானபாதத்துக்குச்சாதநமாகிய சுவேச்சை, விசாரணை, தநுமாநசி யென்னும் நிலைகள். (வேதா. சூ. ௧௪-அ. உரை.) [அப்யாஸ-பலகாற்செய்தல். பூமி - நிலை.]

அப்பியாசம்— 1. இருமுறை கூறுதல். 2. சமீபம். 3. தொழில்கொள்ளுகை. 4. பலகாலுஞ்செய்திருக்கை. 5. பலகாலுஞ்சொல்லுகை. (உ-ம்.) "மநுவப்பியாசஞ்செயலுமது" (சூத. ஞாந. ௧௪: ௩௨.) 6. பலகாலும் அறிந்திருக்கை. 7. பழக்கம். (பகவற். ௬: ௩௫.உரை.) 8. (கணக்கதிகாரம்)பெருக்கல். 9. வாய்ப்பாடம் பண்ணுதல். [அப்யாஸ: அபி; ஆஸ.]

அப்பியாசயோகம்— கடவுளைக்குறித்துப் பலகாலுஞ் செய்யுந் தியானம். [அப்யாஸ - பலகாலுஞ்செய்தல். யோக- தியானம்.]

அப்பியாசி— 1. அப்பியாசமுடையவன். 2. (வேதாந்த.) ஐந்ததிகாரிகளில் ஒருவன்; இவன் சற்கருமமுதிர்ச்சியால்கனவைப்போல மநத்தோற்றமே செகமெனக்கருதி இரண்டுசென்மத்திற் சீவன் முத்தனாகுமவன். (உ-ம்.) "உலகங் கனவெனக்கண்டுள்ள சற்கருமஞ்சேர்ந்து பிறப்பிரண்டினி லப்பியாசி" (வேதா. சூ. ௧௩.) [அப்யாஸி.]

அப்பியாசித்தல்— அப்பியாசஞ்செய்தல். [மூ. அப்யாஸ.]

அப்பியாதாநம்— தொடக்கம். [அப்யாதாந: அபி; ஆதாந - எடுத்தல்.]

அப்பியாமர்த்தம்— யுத்தம். [அப்யாமர்த: அபி; ஆமர்த - மிதித்தல்.]

அப்பியுக்கணம்— 1. நனைத்தல். 2 நால்வகைச்சுத்திகளுளொன்று; அது: கவிழ்ந்த பதாகைமுத்திரையையுடைய கைத்தலத்தினால் பதார்த்தத்தினிடத்துத்தோன்றியசித்தினது பிரகாசமானது தன்னுடைய தாநத்தைவிட்டு நீங்காமலிருக்கும்பொருட்டு மூடுவது. (உ-ம்.) "அருகங்கவசந்தானப்பியுக்கணத்தென்-றுரைசெய்வர்" (சைவச.பொது. ௩௫௫.) 3. நீர்தெளித்தல். [அப்யுக்ஷண. அபி; உக்ஷண - நனைத்தல்.]

அப்பியுத்தாநம்—1. இருக்கையிலிருந்தெழும்புதல். 2. உயர்தல், மேம்படல். 3. கீர்த்தி. 4. சித்தியடைதல். 5. சூரியோதயம். 6. மேலெழுகை. (பகவற். ௪: எ.) [அப்யுத்தாந: அபி; உத்தாந - எழும்புதல்.]

அப்பியுதயம்— 1. (கிரகம் முதலியவைகளின்) உதயம். 2. சித்தியடைதல். 3. சூரியோதயம். 4. திருவிழா. 5. தொடக்கம். 6. வளர்ச்சி, நல்வாழ்வு. 7. வர்த்திப்பு. [அப்யுதய: அபி; உதய - உதித்தல்.]

அப்பியுபகமம்— 1. அணித்தாகுகை, போய்ச்சேருகை. 2. இயைபு. 3. மெய்யென்றொத்துக்கொள்ளுகை. 4. வாக்குத்தாநம், உடன்பாடு. [அப்யுபகம: அபி, உபகம- போதல்.]

அப்பியுபபத்தி— 1. உடன்பாட்டுப்பொருத்தம். 2. உதவிக்குப்போதல். 3. தயவு, இரங்குகை. 4. தேற்றுகை. 5. பாதுகாப்பு.

[ஸூஹ்ரூவ்வதி: ஸூஹி; உவவதி - போதல்.]

அப்பியுபாயநம்— 1. கைக்கூலி. 2. புகழ்ந்து கொடுக்கும் உபகாரம். [ஸூஹ்ரூவாயநீ: ஸூஹி: உவாயநீ - உபகாரம்.]

அப்பியுபாயம்—2. உடன்பாட்டுப்பொருத்தம். 2. மிக்க உபாயம். [ஸூஹ்ரூவாய: ஸூஹி; உவாயம் - போவது.]

அப்பிரககற்பம் — ஒரு வைத்திய நூல்; அது: அப்பிரகத்தைப்பற்றிச் சொல்வது.

அப்பிரகபற்பை— அப்பிரகற்பம். (இராசவைத். எ.)

அப்பிரகபாஷாணம்— விளைவுபாஷாணத்தொன்று. இது இரசப்பிரீதி. [ஸூஹ்ரக; வஷாண.]

அப்பிரகம்—ஒருவகை நிரசவஸ்து; இது: பொன்னப்பிரகம், வெள்ளியப்பிரகம், தேனப்பிரகம், கிருட்டிணப்பிரகம், கெந்தகாப பிரகம் என நிறம் பற்றியைவகைப்படும். [இவையெல்லாம் நூற்றிருபதுவகை யுலோகங்களிற் சேர்ந்தவைகள். (உ-ம்.) "அப்பிரகமென றறைந்தாலண்டமகோதரமும் - எப்பிரமயங்களுமுன்னீரிழிவும் - வெப்பூரற்- பேதமும்போகாமேகப் பித்தமுங்கண்ணோயும் பல்வாதமும்போந்தாதிவுமாமால்" (பதார்த்த. கஉகo.) [ஸுவ்ரக.]

அப்பிரகலோகம்—(பௌத்த)பிரமலோகம் இருபதினுள்ளே பன்னிரண்டாவது. (மணிமே. ௩.)

அப்பிரகாசத்துவம்— பிரகாசமில்லாததன்மை. (வாசுதே. கககச.) [ஸுவ்ரகாஶஷ்வம்: ஸு - எதிர்மறை. வ்ரகாஶஷ்வ - பிரகாசத்தன்மை.]

அப்பிரகாசம்— 1. இருள். 2. பிரகாசமின்மை. (உ-ம்.) "ஒருகாலத்துப்பிரகாசமொருகாலததப்பிரகாச மருவாநிற்குமோசத்து" (சூத. எக்கி. பூ. சஎ: உஎ. 3.) பிரசித்தமல்லாதது. 4. மறைவிலிருப்பது. 5. வெளிப்படையல்லாதது. [ஸுவ்ரகாஶ: ஸு - எதிர்மறை. வ்ரகாஶ - ஒளி.]

அப்பிரகிருட்டம்— காக்கை.

அப்பிரகை— அப்பிரகற்பம். (இராசவைத். எ.)

அப்பிரசந்நம்— 1. கலங்கல். 2. திருத்திபெற்றிராமை. 3. பிரியவீனமாயிருத்தல். [ஸுவ்ஸஷ: ஸு - எதிர்மறை. வ்ஸஷ- தெளிவு, பிரியமானது.]

அப்பிரசம்—1. சந்ததியில்லாதது. 2. சநங்களில்லாதது. [ஸுவ்ஜ: ஸு - எதிர்மறை. வ்ஜா - சந்ததி, சநம்.]

அப்பிரசன் — சந்ததியில்லாதவன். [ஸுவ்ஜ: ஸு; வ்ஜா - சந்ததி.]

அப்பிரசாதம் — தயவின்மை. [ஸுவ்ஸாஜ.]

அப்பிரசாதை— மலடி.

அப்பிரசித்தம்— 1.பிரசித்த மின்மை,வெளிப்படையாகானம. 2. அறியப்படாதது. (அநுமாந.கூ-பக்.) [ஸுவ்ஸிஜ.]

அப்பிரசித்தவிசேடணம்— பக்கப்போலிவகையுளொன்று; அது: எதிரிக்கு வெளிப்படையில்லாதபொருளைத் துணிபொருளாக வைத்துப்பக்கவுறுப்புக்கூறுவது. [ஸுவ்ஸிஜ-வெளிப்படையின்மை. விசேடணம்- துணிபொருள். [ஸுவ்ஸிஜவிஶேஷணம்.]

அப்பிரசித்தவிசேடியம்— பக்கப்போலிவகையுளொன்று; அது: எதிரிக்கு வெளிப்படையில்லாத பொருளைப்பக்கவுறுப்பின் விசேடியமாகக்கூறுவது. [ஸுவ்ஸிஜவிஶேஷ்ய.]

அப்பிரசித்தாசம்பந்தம்— பக்கப்போலிவகையுளொன்று; அது: "தமக்குமாறாய்நின்றவன், ஆராய்ந்து துணிந்தபொருளைத்தானும் அவனுக்குப்பொருந்தச்சாதித்துக்கொடுத்தல்" (உ-ம்.) "அப்பிரசித்தாசம்பந்தமாவது எதிரிக்கிசைந்தபொருள்சாதித்தல்" (மணிமே. உக: கஅக.) [ஸுவ்ஸிஜ - வெளிப்படையாகாத. ஸுஸமைந்த - விசேடிய விசேடணசம்பந்தமின்மை. ஸுவ்ஸிஜஸம்ப ந்த.]

அப்பிரசித்தோபயம்— பக்கப்போலிவகையுளொன்று; அது: எதிரிக்கு வெளிப்படையில்லாத விசேடணவிசேடியங்களைப்பக்கவுறுப்பாகக்கூறுவது. [ஸுவ்ஸிஜோபயா.]

அப்பிரத்தியக்ஷம்— இந்திரியங்களுக்குவிடயமாகாதது. (உ-ம்) "அமூர்த்தமாய அபபிரத்தியக்ஷமா" (சி. சி. க: ௩௦. ஞாநப்.) [ஸுவ்ரத்யக்ஷ: ஸு; வ்ரத்யக்ஷ.]

அப்பிரத்தியயம்— 1. அறிவில்லாமை. 2. சந்தேகம். 3. நம்பிக்கையின்மை. 4. விகுதியன்மை. (உ-ம்.) "அதாது" பார். 5. விகுதியின்மை. [ஸ்வப்ரத்யய: ஸ - எதிர்மறை. ப்ரத்யய - விகுதி, நிச்சயம், நம்பிக்கை, அறிவு.]

அப்பிரத்துதப்பிரசஞ்சாலங்காரம்— புனைவிலிபுகழ்ச்சியணி; அது: அவர்ணியத்தை வர்ணிக்க அதனது சம்பந்தத்தால் வர்ணியந் தோன்றுதல். (குவல.) [ஸ்வப்ரஸ்துதப்ர ஸம்ஸாலங்கார]

அப்பிரத்துதம்— 1. சம்பந்தப்படாதது. 2. தொடங்காதது. 3. புகழப்படாதது. 4. வழக்கமில்லாதது. [ஸ்வப்ரஸ்துத: ஸ; ப்ரஸ்துத - புகழ்ச்சி.]

அப்பிரதக்கிணம்— இடப்பக்கத்திலிருந்து வலப்பக்கமாகப்போதல். [ஸ்வப்ரதக்ஷிண: ஸ; ப்ரதக்ஷிண - வலம்வருதல்.]

அப்பிரதட்சிணம்— அப்பிரதக்கிணம். [ஸ ப்ரதக்ஷிண.]

அப்பிரதாநம்— 1. கிழானநிலை, சிரேட்டமில்லாத நிலை. 2. தலைமையில் பொருள். (உ-ம்.) "பிரதாநத்தோடப்பிரதாநந் - தலைமைப்பொருளொடு தலைமையில்பொருளே" (பி. வி. கசு. உரைச்சூத்திரம்.) 3. முக்கியமற்றசெயல். [ஸ்வப்ரதாந: ஸ; ப்ரதாந - தலைமை, முக்கியம்.]

அப்பிரதிகாம்— ஒருநரகம். (சிவதரு. சுவர்க்கநரகவி. கஉ௦.)

அப்பிரதிட்டம்— ஒருநரகம்; இதில் கொடியபாவிகள் யந்திரங்களிலிடப்பட்டு அரைக்கப்படுவர்கள்.

அப்பிரதிபத்தி— 1. தோல்வித்தானம் இரண்டனுள் ஒன்று; அஃது: அர்த்தநதெரியாதது. (சி. சி. அளவை. கசு. சிவாக்.) 2. உண்மையாகக்கொள்ளாமை.

அப்பிரதிபை— 1. தடுமாறுதல். 2. திகைத்தல். 3. தோற்றுமை. (சி. சி. ந: சு. சிவாக்.) 4. விடைசொல்லத் தெரியாது வேறொரு கருத்துடையான் போன்றிருத்தலாகிய தோல்வித்தானம். (சி. சி. அளவை. கச சிவாக், சிவஞா; தர்க்கபா. அச.) [ஸ்வப்ரதிஹா: ஸ- எதிர்மறை. ப்ரதிஹா - ஒளி, அறிவின்விளக்கம்.]

அப்பிரநாகம்— அயிராவதயானை. [அப்ர நாக: அப்ர - தேவுலகம். நாக - யானை.]

அப்பிரபுட்பம்— 1. ஆகாயப்பூ, இல்பொருள். 2. நீர். 3. மழை. [அப்ரபுஷ்ப: அப்ர - மேகம். புஷ்ப - பூ.]

அப்பிரம்—1. அப்பிரகம். 2. ஆகாயம். 3. (கணக்கதி) சுன். 4. தேவலோகம். 5. பொன். 6. மேகம். (உ-ம்.) "மேகநண்ணுநீர்பொழிதலாலப்பிரமெனுநாமஞ்சாரும்" (மசசபு. சூரியரத. கஎ.) [அப்ர.]

அப்பிரமாணம்— 1. அளக்கப்படாதது. 2. எல்லைக்குட்படாதது. 3. பிரமாணமல்லாதது. (உ-ம்.) "சாத்திரவசநமப்பிரமாணமாய்விடும்" (விசாரசா. ருக,) [ஸ்வப்ரமாண: ப்ரமாண - அளவை.]

அப்பிரமாணுபலோகம்—(பௌத்த.) பிரமலோகம் இருபதனுள் ஐந்தாவது. (மணிமேக. ந.)

அப்பிரமாதம்— சாக்கிரதை. (உ-ம்.) "புத்திநற்போதமப்பி... சமுமளித்தாள்" (கூர்மபு. தமோ. க௦.) [ஸ்வப்ரமாத: ஸ - எதிர்மறை. ப்ரமாத - அவதானமின்மை.]

அப்பிரமாலை— மேகசமூகம், மேகநிரை. [அப்ரமாலா: அப்ர-மேகம். மாலா-வரிசை.]

அப்பிரமு— அப்பிரமை, ஐராவதயானையின் பெண்யானை.

அப்பிரமேயம்— 1. எல்லைப்படாதது. 2. ஓரெண்; அது: தசமகாபூரி. 3. பிரமம். 4. பிரமாணத்தினலறியப்படாதது. [ஸ்வப்ரமேய: ஸ; ப்ரமேய - அளக்கப்பட்டது.]

அப்பிரமேயன்— 1. கடவுள். 2. சிவன். (உ-ம்.) "புகழ்கொளப்பிரமேயன்" (சூத. எக்கி. பூ. நந: சு.) 3. பிரமாணங்களாலறியப்படாதவன். (உ-ம்.) "அத்துவாமூர்த்தியாகியப்பிரமேயனுகி" (சூத. ஞாந. கக:கஅ.) [ஸ்வப்ரமேய: ஸ; ப்ரமேய - அளக்கப்பட்டவன்.]

அப்பிரமை— பொய்யறிவு. [ஸ - எதிர்மறை. ப்ரமா - மெய்யறிவு.]

அப்பிரயோச்சியம்— 1. ஏவப்படாதது. 2. பிரயோகிக்கப்படாதது. [ஸ- எதிர்மறை. ப்ரயோஜ்ய - ஏவப்படுவது, பிரயோகிக்கப்படுவது.]

அப்பிரயோசநம் — பிரயோசநமின்மை. (உ-ம்.) "அநிர்வசநீயமாயப்பிரயோசநமாய்" (சி. சி. கூ: கு. ஞானப்.) [அப்ரயோஜந: அ; ப்ரயோஜந.]

அப்பிரவர்த்தகம்—1. செய்யஏவாமை. 2. செயலின்மை. [அப்ரவர்த்தக: அ - எதிர்மறை. ப்ரவர்த்தக - எழுப்புதல், ஏவுதல்.]

அப்பிரவர்த்தநம்— 1. ஏற்படாமை. 2. சம்பவியாமை. 3. செய்ய ஏவாமை. 4. செய்யாதொழிதல். 5. துராசாரம். 6. தொடங்காமை. 7. முன்போகாமை. [அப்ரவர்த்தந: அ; ப்ரவர்த்தந - சம்பவித்தல், ஆசாரம், தொடக்கம், போதல்.]

அப்பிரவிருத்தன்— பிரவிருத்தியற்றவன். [அப்ரவ்ருத்த: அ- எதிர்மறை. ப்ரவ்ருத்த- தொழில், செய்கை.]

அப்பிரவிருத்தி — 1. செயலொழிந்திருக்கை. 2. முயற்சியின்மை. (உ-ம்.) "ஆன்மாவிற்சிவத்துவம் அப்பிராதப்பிரவர்த்திரூபவநபிவியத்தியெனுஞ் சத்திரூபமாயிருந்து" (சி. சி. எ: உ. ஞானப்.) [அப்ரவ்ருத்தி: அ - எதிர்மறை. ப்ரவ்ருத்தி - செயல், முயற்சி.]

அப்பிராகிருதம்—1. பாகதமல்லாதது. 2. பிரகிருதி சம்பந்தமல்லாதது. (உ-ம்.) "அப்பிராகிருத லோகம் நித்தியம்"(சி.சி.உ: எஉ. சிவாக்.) 3. விசேடமானது. [அப்ராக்ருத: அ - எதிர்மறை. ப்ராக்ருத - பிரகிருதிசம்பந்தமுடையது, கோடியபேச்சு.]

அப்பிராணம்—சுவாசமின்மை. [அ; ப்ராணம் - சுவாசம்.]

அப்பிராணி— 1. உயிரில்லாதது. 2. வலியற்றவன்.

அப்பிராத்தகாலம்— 1. (தர்க்க.) நிக்கிரகத்தானங்களுளொன்று; அது: பிரதிஞ்ஞைமுதலிய ஐந்து அவயவங்களையும் முறைபிறழப் பிரயோகித்தல். (உ-ம்.) "அப்பிராத்தகாலமாவது - வாதம்பண்ணுமிடத்து வாதியானவன்பஞ்சாவயவங்களை யடைவின்மாறிப்பிரயோகித்தலெனவறிக"(சி.சி. அளவை. கச. மறை.) 2. பிராத்தகாலமல்லாதது. [அப்ராப்தகால: அ; ப்ராப்தகால - அடைந்தகாலமுடையது.]

அப்பிராத்தம்- 1. அடையாதது. 2. வாராதது. 3. விதிப்படிவாராதது. (உ-ம்.) "எத்துமப்பிராத்தப் பிராத்தியபேதமெனில்"(சூத. எக்கி. பூ. ந-அ: கசு.) [அப்ராப்த: அ; ப்ராப்த - அடைந்தது.]

அப்பிராந்தி—1. தடுமாற்றமின்மை. 2. மெய்யுணர்வு.

அப்பிராப்பியம் — அடையத்தகாதது. (உ-ம்.) "அப்பிராப்பியமென்றுரைக்கினம் முத்திக்கமைந்தசாதநந் தழுவுதலென்-ஞெப்பவாதலினல்" (சூத. எக்கி. பூ. ந-அ. கரு.)

அப்பிராம்மணன்-- 1. பிராமணனல்லாதவன். 2. பிராமணனைப்போன்றும் பிராமணனல்லாதவன். (பி. வி. உக. உரை.) [அ- அன்மை, ஒப்புமையுள்ளிட்ட அன்மை.]

அப்பிராமாணியம்–பிரமாணத்தாலே நிசசயம் பண்ணப்படாதது. (உ-ம்.) "பவுதிகாசாரியர்பவுதிகர்க்குத்தீக்ஷை பண்ணக் கடவர்களென்னும் வசநம் நிஷ்பலமாய் அப்பிராமாண்ணியததாநமாய்ப்போகாதோ" (சி. சி. அ: கு.ஞானப்.)"இதரமாமார்க்கங்களுக்குமப்பிராமாண்ணிய மெடுத்தியம்பல் கூடாது" (சூத எக்கி. பூ. உஉ: கரு.) [அப்ராமாண்ய: அ-எதிர்மறை. ப்ராமாண்ய-பிரமாணமுடையது.]

அப்பிரியதரு—ஒதியமரம்.

அப்பிரியம்— 1. மேகசம்பந்தமானது. [அப்ரியா: அப்ர-மேகம்.] 2. வெறுப்பு. (உ-ம்.) "நேர்ந்தனைக்கப் பிரியத்தையாற்றினை" (நல். பார. இந்திர. எஎ.) [அப்ரிய: ப்ரிய- விருப்பம்.]

அப்பிரியன்- சத்துரு. [அப்ரிய: ப்ரிய- நண்பன்.]

அப்பிரீதி— 1. சிநேகமின்மை. 2. பகைமை. 3. வெறுப்பு. [அப்ரீதி: ப்ரீதி-விருப்பு.]

அப்பிரேரகசாதநம்— தன்னையேவுவோனில்லாத கருவி; அது: பறவைக்குச் சிறையுங் காலும்போல்வது. (மணிமே. உகூ௦.) [அ; ப்ரேரக - ஏவுவோன். ஸாதநம்- கருவி.]

அப்பிரகம்—புளிமா.

அப்பு—1. அப்பென்னேவலுந் தெரிநிலைவினைப் பகுதியும் வினைத்தொகையும். 2. அம்பு. (உ-ம்.) "வில்லுமிழப்பொடு" (கந்தபு. இரண். சூரபன். சக.) [அம்பு என்பதன் விகாரம்.] 3. கடல். 4. கடன். 5. தந்தை. 6. நீர்; இதுகுளிர்ந்து பிறபொருள்களைநெகிழச்

செய்யும். (உ-ம்.) "துப்பாயின தாய்த்துவரத் தகைசே - ரப்பாயுவாற்றழிவில்பொருளின் வைப்பாய" (கந்தபு. காளிந். சு.) 7. முப்பத்தாறு தத்துவங்களுளொன்று. அது சிற்றண்டத்திலே பிருதிவிபூதத்திற்கும் அக்கினிபூதத்திற்கும் இடையிலிருக்கும் ஓர் அசாதாரண பூதமாயப் பிறைவடிவமுடையதாய் வெண்ணிறமுடையதாய்த் தாமரைப் பூவாகிய அடையாளமுடையதாய இருக்கும் என்றும், (சி. சி. உ: சுசு-ஆம் சுஎ-ஆம சுஅ-ஆம் உரைகளும்.) பேரண்டத்திலே தூலபூதபிருதிவி தத்துவத்துக்கப்பால் தசகுணமதிகமாக ஆவரித்திருக்குமென்றுஞ்சொல்வர். (வி. ணி. உஎக.)8. பாதிரிமரம். 9. பூராடநாள். 10. பகல்முகூர்த்தம் பதினைந்திலொன்று. (விதாங். குறைகுண. எங. உரை.)

அப்புத்திரட்டி — கட்டுக்கொடிப் பூண்டு.

அப்புதத்துவம்— முப்பத்தாறு தத்துவங்களுளொன்று ("தத்துவம்" பார்.)

அப்புதல்— 1. அறைதல். 2. ஒற்றுதல். (உ-ம்.) "இருவரும்புயஙகளினப்பிமொததினர்" (பாரத. பதினே. கசஎ.) 3. கும்முதல். 4. கொட்டுதல். 5. கௌவல். 6. சாத்துதல். 7. பூசுதல். (உ-ம்.) "அரைபடு மகிலுஞ்சாந்துமப்பி" (திருவிளை. நாட். கங.)

அப்புது— யானையைப் பாகன் அதட்டும் ஓசைகளுளொன்று. (உ-ம்.) "அங்கையந்தல ததிறலப்புதாளைதயென" (சிந்தா. கஙக. உஎஅ.)

அப்புபூதவாதிமதம்—அப்பு என்னும் பூதமே பிரமம் என்பவனுடைய மதம். (த. நி. போ. உஅ௦.)

அப்புநவம்—1. உப்பு. 2. நவசாரம்.

அப்புலிங்கத்தலம்— திருவானைக்கா என்னுஞ் சிவதலம். இத்தலத்தில் இருக்கிறகோயில்லேமூலத்தானததிலே சலமேலிங்காகாரமாகத்திரண்டிருப்பதனல் அப்பாகார சிவலிங்கமென்பர். (திருவானை. மூர்த்தி. ங.)

அப்புவின்கோபம்—சேத்துமம்.

அப்புளண்டம்—தகரை.

அப்புறப்படல்— குறித்த ஓரிடத்துக்கப் பாற்போதல்.

அப்புறப்படுத்தல்—இடமாற்றுதல்.

அப்புறம்—1. அப்பக்கம், மற்றைப்பக்கம். (உ-ம்.) "அப்புறவுலகினுள்ளார நிந்திடயானே சென்று - செப்புவனென்பான்போல" (கந்தபு. தேவகி. ங.) 2. அதன்பின். 3. வெளிப்பக்கம். (உ-ம்.) "சுற்றமப்புறநிற்க." (இராமா. சங்கை. ஙஎ.)

அப்பூதி—அப்பூதியடிகள். (உ-ம்.)"ஒருநம்பியப்பூதி" (திருத்தொண்டத்தொகை. ச. சுந்தர.)

அப்பை— 1. அப்பைக்கோவை. 2. கற்கொவ்வை. 3. கொன்றைமரம்.

அப்பைக்கோவை—ஒருவகைக்கோவைக்கொடி. (பதார்த் ஙசுஎ.)

அப்பொழுதை—அப்பொழுது. ஐ-சாரியை.

அப்போதைக்கப்போது—(ஒன்று வேண்டியதாகக் கண்ட அந்தந்தக்காலம்) (உ-ம்.) "அஞ்சலஞ்சலென் றடிமைக் கப்போதைக்கப்போதே-நெஞ்சிலுணர்த்து நிறைவேபராபரமே." (தாயு. பரா. கஉச.)

அப்ரத்துதபிரசஞ்சாலங்காரம்— புனைவிலிபுகழ்ச்சியணி. (குவல. உஅ.) [ஸ்அப்ரஸ்துத- புனையாமை. ப்ரசம்ஸா - புகழ்தல்.]

அப—அபாவம், இயற்கையல்லாமை, இழத்தல், எதிர்மறை, தவறு, நீக்கம் எனப் பொருள்படும் ஒரு வடமொழி உபசர்க்கம். கீழ்மையெனவும வித்தியாசமெனவும் பொருள்படும். [ஸ்அப.]

அபக்கியாதி— 1. அபகீர்த்தி. 2. நிந்தை. [ஸ்அபக்யாதி: ஸ்அப- எதிர்மறை, க்யாதி- புகழ்.]

அபக்கிரமம்—1. கிரமமின்மை. 2. தோற்றோடுதல். 3. போதல். 4. விலகியோடுதல். [ஸ்அப- இயற்கையல்லாமை. க்ரம- அடிவைத்தல்.]

அபக்கிரியை—அபகாரம். [ஸ்அபக்ரியா: ஸ்அப; க்ரியா - செயல்.]

அபக்குவம்—1. சீர்ணமாகாதது. 2. பக்குவமின்மை. 3. பாகம்பண்ணப்படாதது. 4. பூரணப்படாதது. 5. முதிராதது. [ஸ்அபக்வ: ஸ்அ - எதிர்மறை. பக்வ - முதிர்ந்தது.]

அபக்குவர்— பக்குவரல்லாதவர். (உ-ம்.) "அபக்குவர்க்கோவந்நலந்தான் விளங்கும்" (தாயு. நினை. அ) [ஸ்அ- எதிர்மறை. பக்குவர் - பக்குவமுடையவர்.]

அபக்குவி—பக்குவமில்லாதவன். (உ-ம்.) "அபக்குவியாகி என்னிலையைப் பற்றி" (தாயு. எங்கு. எ. உரை.) [ஸ்அபக்வ - பக்குவமின்மை. இ - ஒருவிகுதி.]

அபகடம்—அவகடம். (உ-ம்.) "அபகடநினைவிகள்" (திருப்பு. உசஉ.) [ஸ்அபகட.]

அபகமம்—1. புறப்பட்டுப்போதல். 2. மா

ணம். 3. மறைந்துபோதல். [அபமஷ: அப- நீக்கம். மஷ - போதல்.]

அபகர்டசமை— (தர்க்கம்.) அசத்தான உத்தரசாதியில் ஒருவகை; அது: அவ்வியாத்தமான திட்டாந்த தருமத்தால், அவ்வியாபகமான தருமத்தினதபாவத்தைப்பொருளுக்கு வருவித்தல். (உ-ம்.) "சத்தம் அநித்தியம், காரியத்துவத்தால், கடம்போல" என்றுசொல்லுதற்கண் ஒருவன் இங்ஙனஞ் சொல்லாநின்ருன் காரியத்துவ ஏதுவாற் கடம்போலச் சத்தம் அநித்தியமாயின்; அந்த ஏதுவாற்கடம்போலச் சத்தமுஞ் செவியாற்கவரப்படாததாகவேண்டும். கடஞ்செவியினுற் கவர்வதன்றே என. (தர்க்க-பா. ௬.) [அப கர்ஷஸம.]

அபகர்ந்தா—1. அகற்றுவோன். 2. அபகரிப்போன். 3. கள்ளன். [அபஹர்த்ரு.]

அபகரணம்—1. அபகரித்தல். 2 களவுசெய்தல். 3. தவறுசெய்தல். [அப - தவறு. ஹரண - எடுத்தல். கரண - செய்தல்.]

அபகரித்தல்—1. எடுத்துக் கொண்டுபோதல். 2. கவர்தல். (உ-ம்.) "என்மயமெனக்குக்காட்டாதென்னையபகரிக் கவந்தசின்மயம்" (தாயு. ஆசை. ௩௩.) 3. வஞ்சனையாய்க்கவர்தல். (உ-ம்.) "குதிரைகளையும் வேகத்தையுடைய யானைகளுடன் அபகரிக்கச் சென்ருர்கள். (கந்தபு. திக்கு. ௩௫. உரை.) [மூ. அபஹார.]

அபகருடசமை— அபகர்ஷசமை. [அப கர்ஷஸம.]

அபகருமம்—1. இடுக்கண்செய்தல். 2. கடனிறுத்தல். 3. தகாத செயல். 4. துர்க்கருமம். 5. பொல்லாங்கு. [அபகர்மந்: அப- தவறு. கர்மந் - செயல்.]

அபகளங்கம்— நீராவசை. [அபகளங்க.]

அபகாசம்—வீண்சிரிப்பு. [அபஹாஸ: அப - தவறு. ஹாஸ - சிரிப்பு.]

அபகாதம்—1. அடித்தல். 2. கொல்லல். 3. வெட்டல்.

அபகாரகன்— கள்ளன். [அபஹாரக: அப - தவறு. ஹாரக - கவர்வோன்.]

அபகாரம்—1. களவுசெய்தல். 2. கொடுங்கோன்மை. 3. பகைமை. 4. பிறருடையையை நியாயமின்றி எடுத்துச்செலவிடல். 5. மறைத்துவைத்தல். 6. தீயசெயல். (உ-ம்.) "அவனிச்சொர்க்கபகாரமெத்தனை புரிவான்" (நல். பாரத. அரசநீ. ௧௬௬.) [1, 4, 5. அப ஹார: அப - தவறு. ஹார - எடுத்தல். 2, 3, 6. அபகார: அப - தவறு. கார - செயல்.]

அபகாரி—அபகாரஞ்செய்வோன். [அப காரிந்.]

அபகிருதி—1. இடுக்கண்செய்கை. 2. துர்ச்செய்கை. 3. பகைமை. [அபக்ருதி: அப- தவறு. க்ருதி - செயல்.]

அபகீர்த்தி— 1. துர்க்கீர்த்தி. 2. நிந்தை. (உ-ம்.) "நாம்பகைவர்களையடக்காமல் வாழுதல் அபகீர்த்திக்கிடம்" (கந்தபு. சூரனமை. ௩௧. உரை.) [அபகீர்த்தி: அப - தவறு. கீர்த்தி - புகழ்.]

அபதண்டனம்—சுற்றல்.

அபங்கம்—1. கோளகபாஷாணம். 2. பங்கமின்மை. [அபங்க.]

அபங்கன்— நாசமில்லாதவன், பங்கமில்லாதவன். (உ-ம்.) "மங்கையுமைபங்குறையபங்க" (சேதுபு. சருவ. ௨௦.) [அ- இன்மை. பங்க - பங்கமுடையவன்.]

அபச்சாயை— 1. சாயையில்லாதது. 2. தள்ளுபடியானசாயை. 3. தீமையைக்குறிக்குஞ்சாயை, பிசாசின்தோற்றம். [அபச்சாயா: அப - கேடு. சாயா - நிழல்.]

அபச்சுமாரம்—1. காக்காயவலி. 2 பைத்தியம். [அபஸ்மார: அப - நீக்கம். ஸ்மார- நினைப்பு.]

அபசகுநம்—துன்னிமித்தம். [அபசகுந: அப - தவறு. சகுந - நினைப்பு.]

அபசங்கம்—அச்சப்படாமை. [அபசங்க: சங்க - பயம்.]

அபசத்தம்—1. அமங்கலமொழி. (உ-ம்.) "சுசத்தவபசத்தசொருபமாய்" (சூத. எக்கி. ௬. கஅ.) 2. வழுமொழி. 3. வீண்பேச்சு. [அபசப்த: அப-தவறு. சப்த-சொல்லு.]

அபசதம்—கீழ்மை.

அபசதர்—1. அநுலோமராகிய கீழ்ச்சாதியார். (மநு. ௧௦: ௧௦.) 2. கீழ்மக்கள். [அப ஸத: அப - கீழ். ஸத - இருப்பவன்.]

அபசதன்— 1. அநுலோமனாகிய கீழ்ச்சாதியான். 2. கீழ்மகன். [அபஸத.]

அபசயப்படல்—தோல்வியடைதல்.

அபசயம்—1. குறைவு, தேய்வு. (பி. வி. சச. உரைச்சூ.) [அபசய.] 2. சித்தியடையாமை. [அபஜய.] 3. தோல்வி. (உ-ம்.) "அசுரர்சேனைகளூறுபுரத்தொடுமபசயநதுன்ற" (மச்சபு. திரிபுரவிச. உ.) [அபஜய.]

அபசரணம்—1. பின்னிடுகை. 2. புறப்படுதல். [அபஸரண: அப; ஸரண-போதல்.]

அபசரிதம்—1. துர்ச்சரிதம். 2. துராசாரம்.

அபசநுச்சநம்— 1. கைவிடுதல். 2. சொல்லுதல். 3. நன்கொடை. 4. பிறவிநீங்குதல். [அபஸர்ஜந: அப - தவறு. ஸர்ஜ-விடுதல்.]

அபசவ்வியம்—வலப்பக்கம். (உ-ம்.) "நலத்தசவ்வியமேயபசவ்வியநாமம்" (வேதார. பிரதக். கரு.) [அபஸவ்ய: அப - நீக்கம். ஸவ்ய- இடப்பக்கம்.]

அபசாயம்— 1. இறுதி. 2. நிச்சயம். 3. நிச்சயப்படுத்தல்.

அபசாரம்—1. உபசாரமின்மை. 2. குறைவு. 3. துராசாரம். (உ-ம்.) "அத்தகையபசாரந்தானன்னவன்செய்தும்" (மச்சபு. சநிரோ. கஎ.) 4. பத்தியபாகங்கவனியாமை. 5. புறப்படுதல். 6. போகும்வாயில். 7. போதல். 8. மரணம். [1, 2, 3, 4, 8. அபசார. 5, 6, 7. அபஸார.]

அபசாரி—1. ஒழுக்கந்தவறினவள், ஒழுக்கந்தவறினவன். 2. பொல்லாதவள், பொல்லாதவன்.

அபசித்தாந்தம்— தன் சித்தாந்தத்திற்கிணங்காதன வற்றைச் சொல்லிச் சித்தாந்தஞ்சாதித்தல். (சி. சி. அளவை. கசு. சிவஞா.) சித்தாந்தத்தின்கேடு; அது: நிக்கிரகத்தானத்துளொன்று. (தர்க்கபா. அச.)[அப- தவறு. ஸித்தாந்த - முடிந்தமுடிபு.]

அபசிதம்—1. குறைக்கப்பட்டது. 2. பொருட்செலவுசெய்யப்பட்டது. 3. வாழ்த்தப்பட்டது. [அபசித.]

அபசுமாரம்—1. காக்காய்வலி. 2. புத்தியின் தெளிவு நீங்குதல். (சீவரட். உசo.)[அப; ஸ்மார.]

அபசுமாரரோகம்—புத்தியின் தெளிவை நீக்கும் ஒருவகைரோகம். (சீவரட். உசo.) [அபஸ்மார - பைத்தியம். ரோக-நோய்.]

அபசெயம்—தோல்வி. [அபஜய.]

அபஞ்சீகிருதம்— ஐந்தாகப்பகுக்கப்படாதது. (உ-ம்.) "ஆயவபஞ்சீகிருதசூக்கும வாகாயமும்" (சூத. எக். உத். ந : க.)

அபட்சணம்— உபவாசம். [அபக்ஷண: அ - எதிர்மறை. பக்ஷண - உணவு.]

அபட்சியம்—உண்ணத்தகாதது. (உ-ம்.) "அபட்சிய பட்சணப்பிராயசசித்தம்" (மநு. கக: கசகூ.) [அபக்ஷ்ய: அ - எதிர்மறை. பக்ஷ்ய - உண்ணத்தக்கது.]

அபட்டம்— யானைத்தோட்டியின் நுனி. [அபஷ்ட: அப; ஷ்டா - சுற்றுதல்.]

அபட்டமம்—யானைத்தோட்டியின் நுனி. [அபஷ்டம.]

அபடி—திரைசசீலை. [அபடி.]

அபத்தம்—1. கட்டப்படாதது. 2. தவறு. 3 பயனில்சொல். 4. பொய். [அபத்த: அ- எதிர்மறை. பத்த - கட்டுப்பட்ட.]

அபத்தியசத்துரு — நண்டு. [அபத்ய சத்ரு: அபத்ய - பிள்ளை. சத்ரு - விரோதி.]

அபத்தியதை—மருத்துவிச்சி. [அபத்ய தா: அபத்ய- பிள்ளை. தா-கொடுப்பவள்.]

அபத்தியதோஷம்—தருணசுரத்தில் வரும் எழுவகைத் தோஷங்களிலொன்று. (சீவரட். ௯o.)

அபத்தியபதம்—யோனி. [அபத்யபத: அபத்ய - பிள்ளை. பத - வழி.]

அபத்தியம்—1. பத்தியந்தவறுதல். (உ-ம்.) "இச்சையுடனிச்சையிறரிச்சையெனுமிவற்றுலியம்பலுறுபிராரத்த மூன்று வகைப்படுமா - லச்சுரர்களானும் விலக்குதற்கரியவாகுமபத்தியஞ்செய்திடறனக்கே கேடெனவிங்கறிந்தும்" (வேதா. சூ. கஎ௫.) 2. பிள்ளை. [1. அபத்ய. 2. அபத்ய.]

அபத்தியவிக்கிரயி— 1. தன்மகட்கொண்டாரிடம் பரிசம்வாங்கும் பிதா. 2. பிள்ளையை விற்பவன். [அபத்யவிக்ரயி: அபத்ய- பிள்ளை. விக்ரயி - விற்போன்.]

அபத்தியாநம்—1. அவமதிப்பு. 2. கெட்ட

சிந்தனைகள். [ஸ்வயம்ஞா:ந: ஸ்வ - தவறு. யஞா ந - எண்ணம்.]

அபத்திரபம் — } அபந்திரபை — } 1. வெட்கக்கேடு. 2. வெட்கப்படுகை. [ஸ்வ த்ரவ: ஸ்வ; த்ரவ - வெட்கம்.]

அபநந்திரகவாதம்—ஒருவகைவாதரோகம்; அது ஊர்த்துவகாயத்திலிருந்து அதோகாயத்தை மரத்தலடையச் செய்தும், அதோகாயத்திலிருந்து ஊர்த்துவ காயத்தை மரத்தலடையச் செய்தும், மிகுந்த உபத்திரவத்தை விளைப்பதும், அங்கத்தை விற்போலவளைத்து வருத்தமுற நெட்டுயிர்ப்பையெழுப்புவதுமான ஒரு நோய். (சீவரட். கக௯௦.)

அபதம்— மகாதீத பூரண நின்மல சிவம். (உ-ம்.) "புரையாருஞ்சத்தமே பதமகாதீத பூரணநின் மலசிவமேயபதமெனப்படுமோல்" (சூத. எக்கி. பூ. ௩: கக.) [ஸ்வத.]

அபதர்ப்பணம்— 1. திருப்தியில்லாமை. 2. நோயுற்றுழிப் பசிபொறுத்தல். [ஸ்வ தர்ப்பண: ஸ்வ- எதிர். தர்ப்பண - திருப்தி]

அபதாந்தரம்—அடுத்தது, உடன். [ஸ்வ தாந்தர:ஸ-எதிர்மறை. பத-கால். அந்தர- இடை.]

அபநாநகம்— ஒருவகைவாதநோய்; அது: அபதந்திரகவாதம். 2. சுத்தமான ஒழுக்கம். 3. நன்குமுற்றுப்பெற்றதொழில். 4. மேன்மையானதொழில். [1. ஸ்வதாநக: ஸ்வ; தாந - பரவுதல். சகல நரம்புகளிலும் பரவுதலால் வந்தபெயர். 2, 3, 4. ஸ்வதாநக.]

அபதாநம்—1. நன்குமுற்றுப்பெற்றதொழில். 2. வியந்துகொள்ளப்பட்ட தொழில்.

அபதூறு—1. கொள்ளை. 2. துர்க்கீர்த்தி.

அபதேசம்—1. இலக்கு. 2. உபாயம். 3. கீர்த்தி. 4. திக்கு, இடம். 5. பிறர்பொருட்டதுமானத்தில் ஐந்தவயவங்களுளொன்றாகிய ஏது. 6. புரளி, வாய்ப்புரட்டு. 7. பெயர்சொல்லிப்பொருளைத் தெரிவித்தல். 8. மறுத்தல். 9. வஞ்சகம். 10. வீண்சாட்டு. 11. வேஷந்தரித்தல். [ஸ்வதேஶ: ஸ்வ - கேடு. தேஶ - காண்பிப்பது.]

அபதேவதை-பைசாசம். [ஸ்வதேவதா: ஸ்வ - கேடு. தேவதா - தெய்வம்.]

அபந்தலம்—செங்கத்தரி.

அபநயம்—1. அகற்றல். 2. அழித்தல். 3. கடனிறுத்தல். 4. பிணிதீர்த்தல். 5. மரணம். [ஸ்வநய: ஸ்வ - நீக்கம். நய - கொண்டு போதல்.]

அபநீதம்—1. அசற்றப்பட்டது. 2. இறுத்துத்தீர்ந்தது. 3. எடுக்கப்பட்டது. [ஸ்வ நீத: ஸ்வ- நீக்கம். நீத- எடுக்கப்பட்டது.]

அபநுத்தி—அகற்றுதல், துரத்துதல். [ஸ்வநுத்தி: ஸ்வ; நுத - அனுப்புதல்.]

அபநோதநம்—போக்குதல். [ஸ்வநோதந: ஸ்வ - முன். நுத - அனுப்புதல்.]

அபநுத்யுநவகம் — பொருளைமறுத்துவமையையுடனபடுத்துரைப்பது. (உ-ம்.) "கையல்லகாந்தண்மலர்" (தண்டி. ௫௦. பக்.)

அபநோதம்—1. நீச்சுகை. 2. பிராயச்சித்தம். [ஸ்வ; நுத.]

அபப்பிரசாதை— வயிற்றிற் கரு அழியப் பெற்றவள். [ஸ்வப்ரஜாதா: ஸ்வ - கேடு. ப்ரஜாதா - பிள்ளைபெற்றவள்.]

அபப்பிரஞ்சம்— பாமரசாதிகளானஇழிசனர்மொழி. [ஸ்வப்ரம்ஶ: ஸ்வ - கேடு. ப்ரம்ஶ- வழுவுதல்.]

அபபாசகந்துகம்— சர்வபதார்த்தங்களையும் அறிந்துகொண்டிருத்தல். (வாசுதே. கஉ.)

அபபாசம்—ஒளிவிளங்கச்செய்தல். [ஸ்வ; ஹாஸ - ஒளி.]

அபமம்— கீழ்க்கதி; அது: சூரியன் தக்கிணாயநத்திலாவது உத்தராயணத்திலாவது இறங்குதல்போல்வது. [ஸ்வம: ஸ்வ - கீழ். ம - அளத்தல்.]

அபமரணம்—துன்மரணம். [ஸ்வ-கேடு. மரணம் - சாவு.]

அபமாநம்—மானக்கேடு. [ஸ்வமாந.]

அபமார்க்கம்— 1. ஒருபக்கத்தாற்போகும் வழி. 2. கெட்டவழி. 3. சுத்திசெய்தல். 4. துன்மார்க்கம். 5. புன்சமயம். [ஸ்வமார்க.]

அபமார்க்கி—செங்காயுருவி. (உ-ம்.) "சங்கெட்கோதபமார்க்கி மூன்றுஞ் சுட்டசாம்பரிடை" (தைல. தைலவ. ககஅ.)

அபமிருத்தியு—1. சடுதிமரணம். 2. நோய்முதலிய காரணமில்லாத மரணம். [ஸ்வ

ம்ருத்யு:அப-இயற்கையல்லாமை.ம்ருத்யு-மரணம்.]

அபமிருத்து—அபமரணம்.[அபம்ருத்யு.]

அபயக்கை— அபயகரம். (உ-ம்.) "வரத மோடபயக்கைகண் முறைமையினோங்க" (தாயு. தேன்முக. ௫.)

அபயகரம்— ஒருவன்பயப்படாதிருக்கும் படிக்கான கருத்தைக்குறிப்பிக்குங் கைகாட்டு. [அபய - பயமின்மை. கர - கை.]

அபயகுலசேகரன்— அபயகுலசேகரசோழன். (திருமுறைகண். ௧.)

அபயங்கொடுத்தல்— பயப்படாதிருக்கும்படி யொருவரைத்திடஞ்செய்தல்.

அபயதன்— அபயங்கொடுக்கிறவன், அச்சமகற்றுகிறவன். [அபயத: த - கொடுக்கிறவன்.]

அபயதானம்—அபயங்கொடுத்தல். [அபய-பயமின்மை. தாந - கொடுத்தல்.]

அபயப்பிரதானம் — அபயங்கொடுத்தல். (உ-ம்.) "சக்கரபாணிதேவர்க்கபயப்பிரதானவாறும்" (மசசபு. அநுக்கிர. ௩௪.) [அபயப்ரதாந: அபய - பயமின்மை. ப்ரதாந-கொடை.]

அபயம்— 1. அச்சநீங்கியிருத்தற்குச்சரண்புகல், அடைக்கலம். (உ-ம்.) "அவனிபரெலா மபயமபயமென் றடிவணங்கவே" (பாரத. இராச. ௬௪.) 2. அச்சமின்மை. (உ-ம்.) "விசயைகண்ணபயம்வைத்தான்" (சீவ. முத. ௩௧௩.) 3. ஒருவகைவாசனைப்புல். 4. ஓலம் முறையிடுதல். 5. பயந்தீர்க்குங்கரம். [அபய: அ; பய.]

அபயமிடல்—அடைக்கலம் புகுதல், முறையிடுதல். (உ-ம்.) "அபயமிடுகுரலறியாயோ" (திருப்பு. ௧௮௦.)

அபயமிடுதல்—அபயமிடல்.

அபயர்—1. சோழர். (உ-ம்.) "சமரிற்பிறகிடுமுதியரு மபயருமெதிரிட்டமராட" (மீனாட்சியம்மைபி. சப்பாணி. ௭.) 2. போர்வீரர்.

அபயலை— இலாமிச்சம்வேர். (உ-ம்.) (தைல. தைலவ. ௩௪.)

அபயவந்தம்—1. அபயகரம். (உ-ம்.) "வரதாபயவத்தங்கள்" (சூத. எக்கி. பூ. ௯: ௬.) 2. இணைக்கை பதினைந்துவகையுளொன்று; அது: இருகையுஞ்சுகதுண்டமாக நெஞ்சுறநோக்கிநெகிழ்ந்து நிற்பது. (உ-ம்.) "அபயவத்தம்மேயறிவுறக்கிளப்பின்- வஞ்சமில்சுகதுண்டமிருகையுமாட்சியி - னெஞ்சுறநோக்கி நெகிழ்ந்துநிற்பதுவே" (சிலப். அரங்கே. ௧௮. உரை.) [அபய; ஹஸ்த.]

அபயவாக்கு— அஞ்சாதே யென்னுஞ் சொல். [அபயவாக்: அபய- பயமின்மை. வாக் - சொல்.]

அபயன்—1. அச்சமறுப்போன். 2. அருகக்கடவுள். (திவாகர.) 3. ஒருவகைக்கடுக்காய். (உ-ம்.) "அபயனென்னுங் கடுக்காயங்க நோயெல்லாமபயமிட்டோடவடிக்கும்" (பதார்த். ௧௦௫௨.) 4. கடவுள். 5. சோழன். 6. துரியோதனன்றம்பிமாருளொருவன். (பாரத. எட்டாம். ௬.) 7. பயமில்லாதவன். (உ-ம்.) "செய்யகோலபயன்" (பெரியபு. திருமலை. ௧௨.) 8. வீரன். [அபய: பய - அச்சமுடையவன்.]

அபர்ணை— 1. இலையில்லாதவன். 2. பார்வதிதேவி. [அபர்ணா: அ; பர்ண-இலை. சிவனை நோக்கித்தவஞ்செய்தகாலத்தில் இலையிற்புசியாதிருந்தமையாற் பார்வதிதேவிக்கு இப்பெயர் வந்தது.]

அபரகாத்திரம்— 1. கால். 2. பின்கால். (உ-ம்.) "சடாம்பிறைமருப்புத்திண்கையபரகாத்திரங்கடம்மால்" (சிங். காந்தரு. ௩௧௪.) அபர - சிரேட்டமல்லாத. ("அவரம்" சிதைந்துநின்றது.) அபரம் - பின், சிரேட்டமல்லாதது. [காத்ர - உறுப்பு. "வராகாத்திரமென்பதனைத் தலையென்றும், அவராகாத்திரமென்பதனைக்காலென்றும் வடநூலார் கூறுவாராகலிற்றேவாதனைச்சிதைத்து அபரகாத்திரமென்றார்; ஐராவதம் ஐராபதமென்றாற்போலஎனவே அபரகாத்திரமென்றது கால்களை. இனிப்பின் காலென்பாருமுளர்" என உதாரணைசெயயுளுரையில் நச்சினார்க்கினியர் கூறுவர்.]

அபரசந்திதத்துவம்—அபரவிந்து. (உ-ம்.) "நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியதீதை யென்கின்ற பஞ்சகலாகர்ப்ப சத்தருப ஆர்த்தரூப சத்திகலைகளும், ஆர்த்தரூபமாத்திர சத்திகளா புவனங்களும், அபரசத்தி தத்துவமென்கின்ற அபரவிந்துவாக வறியப்படும" (சி. சி. உ: ௪௬. ஞானப்.) [அபர: சக்தி; தத்வ.]

அபரசன்—பின்பிறந்தோன். [அபரஜ: அபர - பின். ஜ - பிறந்தோன்.]

அபரசாந்திரம்— பரசாத்திரமல்லாதது. (சி-வி. கிரி. கஉ.)

அபரசாமாநியம்— அற்ப விடயங்களினுளதாகிய சாமாநியத்தன்மை. திரவியத்துவமுதலியன போல. (தர்க்கபா. கக.)

அபரசிவநந்துவம்—அபரநாதம். (உ-ம்.) "பிரமரந்திரத்துக்குள் இந்திகை, தீபிகை, ரோசிகை, ஊர்த்துவகையென்கின்றபஞ்சகலாகர்ப்பசத்தரூப அர்த்தரூப சிவகலைகளும், அர்த்தரூபமாத்திர சிவ கலாபுவனங்களும், அபரசிவதத்துவ மென்கின்ற நாதநாதாந்த அபரநாதமாக அறியப்படும்" (சி சி. உ: எச. ஞாந.) [ஸ்வபர. ஶிவ; தத்வ.]

அபராஞ்சி—புடமிட்டபொன். (உ-ம்.) "ஆயிரத்தெட்டுமாற்றின பரஞ்சியதனாற்செய்த" (மச்சபு. தாரகாசுரவத. உகூ.) [தெலுங்கு.]

அபரஞாநம்—கீழ்ப்பட்டஞாநம்; அது: சாத்திரங்கற்றலால்வரும்ஞாநம். (ஒழிவி. கிரியை. கக.) 2. காமிகமுதலிய திவ்வியாகமங்கள். (திருவிளை. வரகுண. சக. உரை.) [ஸ்வபர; ஜ்ஞாந.]

அபரத்துவம்— இடத்தாலாவதுகாலத்தாலாவது பின்னாகைநிற்குந்தன்மை. (தர்க்கபா. ருஅ.) [ஸ்வபரத்வம்: ஸ்வபர-பின். த்வ- தன்மை.]

அபராதி—ஒழிகை, நிவிர்த்தி. [ஸ்வபரதி: ஸ்வப - நீக்கம். ரதி - இன்பம்.]

அபரநாதகலைகள் — இந்திகை, தீபிகை, ரோசிகை, மோசிகை, ஊர்த்துவகாமினி யென்னும் ஐந்துகலைகள். (சதாசிவ. கக.)

அபரநாதம்—1. அபரசிவதத்துவம். (சி. சி. உ: எசு. ஞாநப்.) 2. எதிரொலி. 3. (மகாமாயையென்னுங் குண்டலி) சத்தியினது முதல்க்ஷோபத்தாலுண்டாகும் துவநி ரூபமானநாதம். (சி - வி. ஞாந. கஉ. தாற்.) [ஸ்வபர: நாத.]

அபரப்பிரணவம் — சத்தப்பிரணவம். (உ-ம்.)"மருவபரப்பிரணவமென்பதுமாயா சொரூபமாய் வயவகுசத்த-வுருவயேயிம்மநுவினாற்சிவதத்துவவுண்மைஞானமென்னும்-பொருவில்பிரகருடமுண்டாகிப் புதியமகத்துவமெய்பொலிசிவாக்குத்- திருவமுறவுறுதலிற்பிரணவமென மொழிவர்னைதத் தெளிந்தோர்யாரும்" (சூத. எக்கி. பூ. டு: ந.) இதுவே "உம்பர்நாயகன்றிருவாக்கிற்-பிரணவமுதித்ததனிடைவேதம் பிறந்தன" என்று (திருவிளையாடற்புராணத்தில். கசு: ந, ச.) (கூறியதூஉமென்க.) [ஸ்வபரப்ரணவ.]

அபரப்பிரமம்—சகுணப்பிரமம். (விசார.) [ஸ்வபர; ப்ரஹ்ம.]

அபரபக்கம்— பௌர்ணிமைக்குப்பின்வரும் பதினைந்து திதிகொண்ட பக்கம்.(உ-ம்.) "அடரிருளபரபக்கமதனி" (இரகு. மாலையீ. கசு.) [ஸ்வபரபக்ஷ: ஸ்வபர-பின். பக்ஷ.]

அபரபட்சம்— அபரபக்கம்.

அபரபதி— ஆணவமலம் நீங்கி யிடைக்காலத்திலே பதித்தன்மையடைந்த ஆன்மா. (உ- ம்.) "மலநீங்கியதிகாரமலமாத்திரர்களாய் அபரபதிகளாய்க் கடந்துபோனவர்" (சி. சி. க: உகு. ஞாநப்.) [ஸ்வபர; பதி.]

அபரபுத்தி— 1. கீழ்ப்போகங்கள். (உ-ம்.) "சரீராந்தத்திற்குனேவரும் பராபரபுத்தியபரபுத்தி போகவாஞ்சை மாத்திரத்தினாலேயும்"(சி.சி. அ: கு. ஞாநப்.) [ஸ்வபர; புக்தி.]

அபரபுருடார்த்தம்— நான்குபுருடார்த்தங்களிற்கீழ்ப்பட்டன; அவை: அறம்பொருள் இன்பம் என்பன. (மகாவாக்கிய. பாயிர. க.) [ஸ்வபர புருஷார்த்தம்.]

அபரபோகம்— கீழ்ப்பட்டபோகாநுபவம்; அது: அசுத்தமாயாகாரியமாகிய புவனங்களிலிருக்கும் அமரேசராதியான உருத்திரர்கள் புசித்திருக்கும்போகம்.(சி.சி. அ: உகூ. மறை.) [ஸ்வபர; போக.]

அபரம்—1.உருத்திரருக்குபதேசித்தவிஜயம் முதலிய பதினெண் ஆகமம். (சி - வி. சரி. க.) 2. எதிர்காலம். 3. ஒப்பற்றது. 4. கப்பலின் பிற்பக்கம். 5. கவசம். (பிங்க. கசுoஅ.) 6. (காலத்தாலாவது, இடத்தாலாவது வரும்)பின். (தர்க்கபா. ருஅ.)7. சகளம். (சி. சி. க: ருகு. மறை.) 8. நரகம். (பிங்க. நoசுச.) 9. பிணககு. (சூ. நிகண். க: சுந.) 10. பிந்தினது, அடுத்துப்பின்வருவது. 11. பிற்பக்கம். (பிங்க. நoகூச.) 12. பொய். (பிங்க. நoகூச.) 13. மற்றையது. 14. முதுகு. (பிங்க. கoஉக.) 15. மேற்குத்திசை. 16. யானைப்பின்கால். [ஸ்வபர.]

அபரமந்திரேசுவரர்— ஸ்ரீகண்டர், வீரபத்திரர்முதலிய அபரமுத்தசிவரூபர்; இவர்கள் பிரளயாகலருட் பரிபக்குவ மலர்களாய்ச் சிவாநுக்கிரகம பெற்றுப் பதிபதார்த்தமாக ளாவர்கள். (உ-ம்.) "பிரளயாகலருட் பரிபக்கு

வமலர்கள் சிவாநுக்கிரகம் பெற்றுப் பதிபதார்த்தங்களாய் ஆதிமுத்தசிவரூபர்களாயும் ஸ்ரீகண்டர், வீரபத்திரர் முதலிய அபரமந்திரேசுவரர்கள் புவநவாசிகள் என்னும் அபரமுத்தசிவரூபர்களாயும் போயிருப்பார்கள்" (சி. சி. அ: உ. ஞாநப்.) [ஸ்வொர; ஜேஷ்ர; ஶஷ்வூர.]

அபரமுத்தசிவன் — அபரமுத்தியடைந்து சிவத்துவம் பெற்றிருக்கும் ஆன்மா. "அணுசதாசிவர், அநந்தாதிகள், மந்திரர்கள், ஸ்ரீகண்டர், வீரபத்திரர் முதலிய அபரமந்திரேசுவரர் என்பவர்களும், இன்னுஞ் சிவாநுக்கிரகம்பெற்று நாநாபத முத்தராயிருக்கிறவர்களும் ஆகிய இவர்களிலெல்லொருவரும் அபரமுத்தசிவன் எனப்படுவர். (சி. சி. அ: உ. ஞாநப்.) [ஸ்வொரஜீவந்முக்தசிவ: ஸ்வொர - கீழ். ஜீவந்முக்தி - விடுதலை.]

அபரமுத்தி — சுத்த மாயா புவநத்தையடைந்திருத்தல்; அது: பதமுத்தி. (சி. சி. பாயிர. உ. ஞாநப்.)

அபரர் — கீழ்ப்பட்டவர்.

அபரராத்திரம் — இராத்திரியின் பிற்சாமம். [ஸ்வொரராத்ர: ஸ்வொர - பின். ராத்ர - இராத்திரி.]

அபரலோகம் — 1. கீழ்ப்பட்டலோகம். 2. மற்ற உலகம். [ஸ்வொர - கீழ், வருகாலம். லொக.]

அபரவயசு — முதிர்ந்தவயசு. [ஸ்வொர - பின். வயஸ;]

அபரவாக்கியம் — பிரதானவாக்கியத்திற்குப் பின்வரும் வாக்கியம். [ஸ்வொர - பின். வாக்ய - சொற்றொடர்.]

அபரவாகீசுவரர் — பரவாகீசுவரரல்லாதவர், அபரமாகிய வாநகுசகதிபர். (உ-ம்.) "அநந்தேசுவரதத்துவாரத்தினாலே மாயோபாதி புவனோபாதிமணநது, அபரவாகீசுவரி அபரவாகீசுரரசனாயும்" (சி. சி. உ: எஎ. ஞாநப்.) [ஸ்வொரவாமீஶ்வர.]

அபரவாகீசுவரி — பரவாகீசுவரியல்லாத சத்தி, அபரமானவாக்குக் கதிபதியானவள். (உ-ம்.) "அபரவாகீசுவரர்" பார்.) (சி. சி. உ: எஎ. ஞாநப். [ஸ்வொரவாமீஶ்வரி.]

அபரவித்தை — 1. வேதவேதாங்கம முதலியன. (உ-ம்.) "வேதவேதாங்கமாதிகளபரவித்தை பரமார்த்தத்திற்குப் போதகமாமுபரிடதம்பரவித்தை" (சூத. எக்கி. உத். எ: ந.) 2. உதயாதி யுதயாந்தமாகக்கொள்ளப்படும் ஒருநாளிலே பின்னுறச்சிலநாழிகை மற்றொருதிதிவந்து கூடிநிற்கப்பெறுநதிதி. (ஸ்மிருதிமுத்தாபலம்) [ஸ்வொரவிஷ்ரா: ஸ்வொர - பின். விஷ்ரா - கலப்புடையது.]

அபரவிந்து — 1. அநதிக்கிராந்த விந்துக பாரசத்தி; இது: அநதிக்கிராந்தவிந்துகபர சிவம் என்னும் அபரநாதத்தாற்றோற்றுவிக்கப்பட்டது. (சி. சி. உ: எஎ. ஞாநப்.) 2. அபரசத்திதத்துவம்; அர்த்தசந்திரன், நிரோதியென்னுமிரண்டும் இதிலடங்கும். (சி. சி. உ: எசு. ஞாநப்.) 3. மூலோபாதாநமான குண்டலியினின்றுண்டான குணத்மகங்கள் மூன்றிலொன்று. "அபரவிநது, மோகினி, மகான் என்பவைகளே மூன்றுகுணத்மகங்களாம்" (சி. சி. க: ருஎ. சிவாக்.) 4. மகாமாயையென்னுங் குண்டலினீ சத்தியின் இரண்டாவது சோபத்தாலுண்டாகுஞ் சங்கற்பரூபமான விந்து. (சி-வி. ஞாந. கஉ. தாற்.) [ஸ்வொரவிந்து.]

அபரவிந்துகலை — நிவிர்த்தி, பிரதிட்டை, விததை, சாந்தி, சாந்தியதீதையென்னும் பஞ்சகலைகள். (உ-ம்.) "முந்துரைநிவிர்த்தி முதலிய வபர - விந்துகலையென விளம்பியவைந்தே" (சதாசிவ. ந அ.) [ஸ்வொரவிந்துகலா.]

அபரன் — தாழ்வுடையோன். (சைவப். உசு.) [ஸ - எதிர்மறை. வொர நீ - உயர்ச்சியுடையவன்.]

அபராங்கம் — சரீரத்தின் பிற்பாகம். (உ-ம்.) "வேடனதனபராங்கம் பிளக்கவெய்தான்" (பாரத. அருச்சு. தவ. கூ0.) [ஸ்வொர - பின். ஸங்க - சரீரம்.]

அபராசிதன் — வெல்லப்படாதவன். (பகவற். க: கஅ.) [ஸ்வொராஜித:ஸ; வொராஜித - வெல்லப்பட்டவன்.]

அபராசிதை — விசயதசமியில் வணங்கப்படுந்துர்க்கை. [ஸ்வொராஜிதா.]

அபராணம் — மத்தியாநத்தையடுத்துப்பின்வரும் ஆறுநாழிகைகொண்டநேரம். (உ-ம்) "நிரைத்தபின்முகூர்த்த மூன்றை நிகழபராணமென்ப" (மச்சபு. சூரியசந்திர. நஎ.) [ஸ்வொராணு: ஸ்வொர - பின், ஸஹ - நாள்.]

அபராத்தர்—பின்னுள்ள ஆப்தர். (சைவப். உக.) [அபர - பின். ஆப்த - உள்ளது கூறுவோர்.]

அபராத்தன்—1. தவறுசெய்கிறவன். 2. தீங்குசெய்கிறவன். 3. பின்னுள்ள ஆப்தன். (சைவப். உக.) [1,2. அபராத:அப-கேடு. ராத - செய்தல். 3. அபராப்த: அபர; ஆப்த.]

அபராத்திரம்—கடைச்சாமம்.

அபராதம்— 1. கட்டளையைமீறுதல். 2. குற்றமானசெயல், பாபச்செயல். (உ-ம்.) "அடியனேன்முன்னஞ் செய்தவபராதமிரண்டுந்தீரும்- படிபொறுத்தருள்வாயென்று" (திருவிளை. கக: உரு.) "வசையபராதமாயவுவரோதநீங்கும்" (தேவா.திருநாரை.ரு. சம்.) 3. தண்டம்.[அபராத:அப-கேடு. ராத. நிறைவேற்றல்.]

அபராதர்–கட்டளையைமீறுவோர். (உ-ம்.) "அரையனும் வேறேயபராதர்வேறே- யவர் பலமும் வேறென்றறி" (சி. சி. பர. மாயா. மறு. கo. உரை.) [அபராத.]

அபராதி— தீங்குசெய்கிறவன். (உ-ம்.) "உறவினுக் கபராதியும்" (சிவதரு. பாவ. ௬அ.) [அபராதிந்.]

அபராந்தம்—மேற்குக்கடற்கரையிலுள்ள தேசம். [அபராந்த: அபர-மேற்கு. அந்த-முடிவு.]

அபராந்தர்— மேற்குக்கடற்கரையிலிருக்கிறவர். (உ-ம்.) "வாசத்தண்டொடையல்வாகு வானபராந்தர்" (இரகு. திக்கு. க௬எ.)

அபராந்நம்— மத்தியாநத்தையடுத்துப்பின்வரும் ஆறுநாழிகைகொண்டநேரம்.(உ-ம்.) "செப்புங்காலந் - தவ்வவில்பிராதக் காலஞ் சங்கமமத்தியாந்ந- மவ்வபராந்நஞ்சாயாநநம மொன்றுக்காறுந கனைல்" (மச்சபு. தீர்த்த சிரா. ௩க.)[அபராஹ்ண:அபர-பின். அஹ்ந-நாள்.]

அபரிகாரம்—விலக்காமை. (உ-ம்.) சொல்லுகிறவர்களுக்கு அபரிகாரமாக இடிவிழுவதுபோலச்சங்கையும்வரும்." (வாசுதே.கக௪.) [அபரிஹார:அ-எதிர்மறை. பரிஹார- விலக்குதல்.]

அபச்சரிதம்— உடையின்மை. [அபரிஹித: அ; பரிஹித - மூடுகை.]

அபரிச்சிந்நத்துவம்— 1. கண்டஞ்செய்யப்படாத தன்மை. 2. தேசத்தாலுங், காலத்தாலும், வஸ்துவாலும் எல்லைப்படாமை.(வாசுதே. ககஎ.) [அபரிச்சிந்நத்வம்: அ - எதிர்மறை. பரிச்சிந்நத்வம் - எல்லைப்படுந் தன்மை.]

அபரிச்சிந்நம்— கண்டஞ்செய்யப்படாமை. [அபரிச்சிந்நம்; அ; பரிச்சிந்நம் - எல்லைப்படுதல்.]

அபரிச்சேதம்—1. எல்லைப்படாமை, கண்டிக்கப்படாமை. (உ-ம்.) "அசுத்தமாயாகாலத்திரு ளபரிச்சேதமாகையால்" (சி. சி. க: ௬௬. சிவாக்.) 2. ஒழுங்கின்மை. 3. பிரிவின்மை. [அபரிச்சேத:அ;பரிச்சேத-எல்லைப்படுத்தல்.]

அபரிசதுட்டரோகம் — ஒருவகைக்குட்டரோகம்; அது: சர்வாங்கத்திலுங் கறுத்தரத்தம் வடிதல், நோவு, தொடப்படக்கூடாமை, வீக்கம், வெடிப்பு முதலிய குணங்களுடையது. (சீவரட். கருஉ.)

அபரிசரம் — அடுக்க இராதது, தூரம். [அபரிஸர: அ; பரிஸர - சமீபம்.]

அபரிட்சயம்—நாசமின்மை.(பௌட். ப௬. கரு.) [அபரிக்ஷய: அ; பரிக்ஷய-நாசம்.]

அபரிணயநம்— இல்வாழ்க்கைப்படாதிருத்தல். [அபரிணயந: அ - எதிர்மறை. பரிணயந - விவாகம்.]

அபரிணீதை — விவாகஞ் செய்யாதவள். [அபரிணீதா: அ; பரிணீதா - விவாகஞ்செயதவள்.]

அபரிதம்— அளவில்லாதது. ["அபரிமிதம்" என்பதன் விகாரம்.]

அபரிபக்குவமலர் — விட்டுநீங்கப்பக்குவமாகாத ஆணவ மலத்தையுடைய ஆன்மாக்கள். (உ-ம்.) "விஞ்ஞாநகலருள் அபரிபக்குவ மலர்கள் மாயைக்குமேற் சுத்த வித்தைக்குக் கீழ் ஆணவமலமொன்றுமேயுடையவராயப் பசுபதார்த்தங்களாய் இருப்பார்கள்என்றும்,பிரளயாகலருள் அபரிபசுவமலர் சிருட்டிகாலத்திற்சகலராவார்கள்என்றுஞ்,சகலருககுள் அபரிபக்குவமலர் சஞ்சாரிகளாயிருப்பார்கள் என்றுஞ் சொல்வார்கள்" (சி.சி. அ: உ. ஞாநப்.)

அபரிபூதம்— ச .ரியாதது, பூரணப்படா

தது, முதிராதது. [ஸ்வபரிஹ-ருத: ஸ; வபரிஹ-ருத - பூரணமானது.]

அபரிமாணம்— அளக்கக்கூடாதது, அள வுபடாதது. [ஸ்வபரிமாண: ஸ; வபரிமா ணம - அளவு.]

அபரிமிதம்— 1. அளவுபடாதது, எல்லைப் படாதது. (உ-ம்.) "அபரிமிதமின்சொலாக வுரைசெய்தே" (பாரத. பதின்மூ. சஙு.) 2. பெருமை. [ஸ்வபரிமித: ஸ; வபரிமித- எல் லைப்பட்டது.]

அபரியந்தம்—எல்லையற்றது. [ஸ; வபய-ந் த - எல்லை.]

அபரியாப்தம்— வல்லமையற்றது. (பக வற். க: கO.) [ஸ்வபரியாப்த: ஸ; வபரி யாப்த - வல்லமையுடையது.]

அபரியாப்தி— பூரணமில்லாமை. [ஸ்வப ய-ாப்தி: ஸ; வபய-ாப்தி - பூரணம்.]

அபரீபாந்திரம் — தசவித பாத்திரங்களி லொன்று. (வி-ணி. உஉஉ.)

அபரூபம்— அவலட்சண ரூபம். [ஸ்வப ரூப: ஸ்வப - கேடு. ரூப - வடிவு.]

அபரை—1. சிவசத்தி மூன்றனுள் ஒன்று; இதுவும் பிராமி, வைஷ்ணவி, ரௌத்திரி யென மூன்றுவிதப்படும். இவற்றுள் பிராமி நூறுகோடியோசனை விசாலங்கொண்ட இர த்தமண்டலத்திலே சகல லோகங்களையுஞ் சிருட்டித்தல் காரணமாகவும், வைஷ்ணவி யிரண்டுகோடி யோசனை விசாலங்கொண்ட சுவேதமண்டலத்திலேசகல லோகங்களையும் இரட்சித்தல்காரணமாகவும், ரௌத்திரி மூ ன்றுகோடி யோசனை விசாலங்கொண்ட விந் துமண்டலத்திலே சங்கரித்தல் காரணமாக வும் இருப்பார்கள் என்பர். (சைவச. பொது. எச. உரை.) 2. சிவதன்மிணி-தீக்ஷையிரண் டனுள் ஒன்று; அது: பவுதிகிதீக்ஷை. (சி. சி. அ: சு. ஞாகப.)

அபரோட்சஞானம்—1. (வேதாந்த.) சிவா வத்தை யேழனுள் ஒன்று; அது: குருகடா ட்சத்தினாற் பரோட்சமாய்க் கேட்கப்பட்ட பிரமசைதந்நியமேதானானது. (உபநி. கஎ. உரை.) 2. சுவாநுபூதியினால் வரும் ஞானம்.

அபரோட்சம்— 1. அநுபவ அறிவு, அப ரோட்சஞானம். (உ-ம்.) "தன்னிலேதானான துவே யபரோட்சம்" (உ. சி. கஎ.) 2. பிரத் தியக்ஷம். (சி. ஞா.) [ஸ்வபரோக்ஷ: ஸ; வபரோக்ஷ - காணப்படாதது.]

அபரோட்சன்— பிரமசைதந்நியதரிசநன். [ஸ்வபரோக்ஷ.]

அபலம்—1. அடைக்குந்தாழ். 2. ஆண்ட ன்மையின்மை. 3. கனிகொடாதது. 4. கை ம்மாறு வேண்டாதது. 5. பிரயோசநமில்லா தது. (உ-ம்.) "தப்பில் பலாபலமிவற்றில் விருப்பமற" (ஞானவா. விரதகு. கO.) 6. பெ லமின்மை, பெலவீநம். [1, 2, 3, 4, 5. ஸ்வல: ஸ; லை. 6. ஸ்வல: ஸ; வல.]

அபலன்—பெலவீநன். [ஸ்வல.]

அபலாபம்— 1. அறிந்ததை மறைத்தல். 2. நேசம். 3. பிதற்றல். [ஸ்வலாப: ஸ்வ; லாப - பேசுதல்.]

அபவம்—1. அபாவம், இராமை. 2. உல கமுடிவு. 3. திம்மகிலம். [1, 2. ஸ்வஹவ: ஸ; ஹவ - இருத்தல்.]

அபவர்க்கம்—அபவருக்கம். (உ-ம்.) "மை ஞ்ஞான்றகண்டனருள் கூருமபவர்க்கம்" சே துபு. தூாசார.உஎ.) இதனில் "அபவர்க்கம்" முத்தி யென்னும்பொருட்டு.) [ஸ்வவர்க.]

அபவர்த்தநம்— 1. ஆட்டியசைத்தல். 2. சுருக்குதல். 3. நீக்குதல். [ஸ்வவர்தந]

அபவர்த்தம்— 1. அகற்றியெடுத்தல். 2. (வீசகணிதம்.) ஒன்றுக்கொன்று வித்தியாச மான இரண்டு இராசியையாவது பலராசி யையாவது சேடம் வாராமல் அரிக்கும்வே ற்றோர் இராசி. (உ-ம்.) "கடுக்கும், உoக்கும் கு அபவர்த்தம்." [ஸ்வவர்த.]

அபவாரணம்—1. அங்கவஸ்திரம். 2. மறை த்தல். 3. மூடுதல். [ஸ்வவாரண: ஸ்வ; வாரண - மறைத்தல்.]

அபவருக்கம்-1. நிறைவேற்றம். 2. பலம். 3. முடிவு. 4. முத்தி. [ஸ்வவர்க.]

அபவருச்சநம்-1. நற்கொடை. 2. முத்தி. 3. விடுதல். [ஸ்வவர்ஜந.]

அபவருத்தநம்—அபவர்த்தநம்.

அபவருத்தம்—அபவர்த்தம்.

அபவாகம்—1. அருத்தாபத்தி. 2. (கண க்கதி) கழித்தல். 3. கொண்டுபோதல். [ஸ்வ வாஹ: ஸ்வ; வாஹ - கொண்டுபோதல்.]

அபவாதம் — 1. உள்ளபடியுணர்தல். அது. சர்ப்பாகாரமாகத்தோன்றுங்கயிற்றைச்

சர்ப்பமன்று கயிறுதானென்றறிதல். ஞானவாசிட்ட உரைகாரர். "அபவாதமாவது விபரீத பாவனையாற் பார்க்கின்ற இல்லாத நாமரூப வடிவமாகிய சகத்தை யதார்த்தமான சச்சிதாநந்த வடிவமாகத் தெளிவினுற் சாண்குதல்" என்பர். 2. ஒவ்வாப்பேச்சு. 3. கட்டளையிடுதல். 4. கண்டநஞ்செய்தல். 5. குற்றம்பேசுதல். 6. நிந்தித்தல். (உ-ம்.) "உரையாதொழிதிமற்றொருவர்க்கபவாதம்" (சேதுபு. கவிசம். சுக.) 7. பழிச்சொல். (உ-ம்.) "அழுகையுநகோளும் பொய்யுமயலபவாதநதானும்" (சிவதருமோ. பாவ. சு.) 8. எய்தியதுவிலக்கிப்பிறிதுவருஞ்சிறப்புவிதி. (பி. வி: ௰ உரை.) [ஸ்அபவாத: ஸ்அப- அபத்தம். வாத- பேச்சு.]

அபவாரணம் — 1. தோற்றுதொழிதல். 2. மறைவு. 3. மறைத்தல். (அமரகோசம். ௮௫.) [ஸ்அபவாரண.]

அபவித்தபுத்திரன் — தாய் தந்தையரால் நீக்கப்பட்டுப்பிறரால் எடுத்து வளர்க்கப்பட்டபுத்திரன். (மநு.௯.௧௭௧.) [ஸ்அபவித்தபுத்ர: ஸ்அபவித்த - நீக்கப்பட்ட.]

அபவித்தன்— 1. அகற்றப்பட்டவன். 2. அபவித்தபுத்திரன். (உ-ம்.)"ஔரசன், க்ஷேத்திரசன், தத்தன், கிருத்திரிமன், கூடோற்பந்நன், அபவித்தன் இவ்வாறு புத்திரர்களும் பிதுராஸ்திக்கும் பிள்ளையில்லாத ஞாதிகளாஸ்திக்கு முரியவர்கள்" (மநு. ௯: ௧௫௯.) [ஸ்அபவித்த.]

அபவித்திரம்— அசுத்தம். [ஸ்அபவித்ர: ஸ; பவித்ர- சுத்தம்.]

அபவித்திரன்—அசுத்தன்.

அபவிதவ்வியம்— வருங்காலத்துளதாகாதது. [ஸ்அபவிதவ்ய: ஸ; பவிதவ்ய - உளதாவது.]

அபவியயம்—அளவுக்குமேற்பட்டசெலவு. [ஸ்அபவ்யய: ஸ்அப- தவறு. வ்யய-செலவு.]

அபவியயமாநம்— 1.கடனிறுமை.2.விருதாவாகச் செலவிடல். [ஸ்அபவ்யயமாந.]

அபவிருத்தி-- குறைவு. [ஸ்அப - எதிர். வ்ருத்தி-வளர்ச்சி.]

அபவேட்டிதம்— கைவட்டணை நான்கனுளொன்று; அது: தர்ச்சனிவிரல் முதலாக அகம்வாப் பிடிக்குந் தொழில். (சிங். பதும. ௬௨. உரை.)

அபாக்கியம்—நிர்ப்பாக்கியம் [ஸ்அபாக்ய: ஸ; பாக்ய - செல்வம்.]

அபாக்கியவான் — நிர்ப்பாக்கியவான். (உம்.) "பொருந்தியதரித்திரத்தைப்போல அபாக்கியவான்கள் எப்படிவிளங்குவார்கள்" (ஞானவா. சிகித்து. ௨௬. உரை)

அபாக்கியன்—நிர்ப்பாக்கியன். [ஸ்அபாக்ய: ஸ; பாக்ய - செல்வன்.]

அபாகசாகம்— இஞ்சி. [ஸ்அபாகசாக.]

அபாகம்—1. சமியாக்குணம். 2. பாகம்பண்ணப்படாதது. 3. முதிராதது. [ஸ்அபாக: ஸ; பாக - பக்குவமானது.]

அபாகரணம்—1. கடனிறுத்தல். 2. நிராகரணம். [ஸ்அபாகரண.]

அபாகிரோகம்—மசூரிகைரோகவகையுள் ஒன்று; அது: சரீரத்திலே தூரந்தூரமாக உலர்ந்ததுபோலுங்கருகினது போலுங்கொப்புளங்களாக எழும்பியிறக்கங் கொள்ளாமல் நெடுநாளைக்கு நின்று உபத்திரவஞ்செய்யும். (சீவரட். ௪௬௪.)

அபாங்ககம்— 1. அங்கஹீநம். 2. கடைக்கண். [ஸ்அபாங்கக.]

அபாங்கதரிசநம்—கடைக்கண்பார்வை.

அபாங்கம்—1. அங்கஹீநம். 2. கடைக்கண். 3. கடைக்கண் பார்வை. 4. நெற்றித்திலகம். [ஸ்அபாங்க: ஸ்அப; அங்க - உறுப்பு.]

அபாசங்கம்- அம்புக்கூடு. [ஸ்அபாஸங்க.]

அபாசம்-- ஆசையின்மை. 2. ஆபாசம். [ஸ்அபாஸ.]

அபாசிரயம்—முற்றத்திற்பந்தல். [ஸ்அபாஸ்ரய: ஸ்அப; ஆஸ்ரய - பாதுகாப்பு.]

அபாசீநம்— 1. தெற்கிலுள்ளது. 2. தெற்கு. [ஸ்அபாசீந: ஸ்அபாஞ்ச் - தெற்கு. ஈந - ஒரு வ-வி.]

அபாசுவரம்—ஒளியில்லாதது. (தர்க்காமி. ௨௪.) [ஸ்அபாஸ்வர: ஸ்அ-எதிர்மறை. பாஸ்வர- ஒளியுடையது.]

அபாடனம்—பேச்சின்மை. [ஸ்அபாஷண: ஸ; பாஷண - பேச்சு.]

அபாடவம்— 1. அநதக்கேடு. 2. சாமர்த்தியமின்மை. 3. நோய். [ஸ்அபாடவ: ஸ; பாடவ - சாமர்த்தியம், சுகம்.]

**அபாண்டம்**—1. அபாத்திரம். 2. இடுகிந்தை. பொய்க்குற்றச்சாட்டு. (வழக்.)

**அபாத்திரம்**—1. அசற்பாத்திரம். (உ-ம்.) "தன்னைக்குறிததிரப்பான்றன்னை யபாத்திரமென்றுன்னிவிடுவா" (சைவச. பொது. சஉக.) 2. கூடாதபாத்திரம்.

**அபாத்திரீகரணம்**—1. அயோக்கியமான கிரியைகளைச் செய்தல்; அது: பிராமணன் சூத்திரனுக்கு ஏவல்செய்தல் முதலியன. (உ-ம்.) "நிந்திக்கப்பட்டவனிடத்துப் பொருள்வாங்கல் வர்த்தகஞ்செய்தல் சூத்திரசேவை செய்தல் பொய்சொல்லல் இவையெல்லாம தனித்தனியே யபாத்திரீகரணம்" (மநு. கக: சுக.) 2. அயோக்கியனென்று தள்ளுதல். [ஸ. அபாத்ரீகரண.]

**அபாதாநகாரகம்**— நீக்கப்பொருள்கொடுக்கும் ஐந்தாம்வேற்றுமை வினையோடு முடிவது. (பி. வி. கக.)

**அபாதாநம்**—ஐந்தாம் வேற்றுமையில்வரும் நீக்கப்பொருள்.

**அபாநத்தாநவித்திரதிக்கட்டி**— ஒருவகை வித்திரதிக்கட்டி; இது: ஆசநத்திற் பலவித உபத்திரவங்களை யுண்டாககி மலததுவாரத்தைக் கெடுக்குமென்பர். (சீவரட். கoஅ.) [ஸ. அபாநஸ்தாநவித்ரதி.]

**அபாநம்**—1. இரகசியஸ்தாநம், மூத்திரம் முதலியபோகும் வழியென்பர். (உ-ம்.) "நன்றுறுமபாந மின்றி யோர்மகவமையப் பெற்றான்" (மச்சபு. தீர்க்கதம. நஉ.) 2. கடுக்காய். 3. குடிக்கக்கூடாதது. 4. மலவாயில். (சீவரட். கoஅ.) 5. மூலாதாரம். [ஸ. அபாந: ஸ. அப-கீழ். ஆந - சுவாசித்தல். 3. ஸ; பாந.]

**அபாநவாயு**— பத்துவாயுக்களுளொன்று; இது: நாபித்தாநத்திலே தோனறிக் குதத்தையுங் குய்யத்தையும் பற்றிநின்று மலசலங்கள் கழியவகைசெய்யும். (த. வி. ச. ஒற்.) சரீரத்திற்குள்ளிருக்கும் வாயு ஒன்றாயிருந்த போதிலும் ஸ்தாநவியாபார பேதத்தினாலே யைநதென்னப்படும் வாயுக்களு ளொன்று; அது: குதஸ்தாநத்திலேயிருநது மலம், மூத்திரம், சுக்கிலம் இவற்றைக் கீழே தள்ளும். (சி-வி. ஞாந. கஎ. உரை. சீவரட். ச.) [அபாந வாயு.]

**அபாநவிருத்தி**—அபாநவாயுவாய்ச்சேட்டித்தல். (உ-ம்.) "அத்தகுபிராணவளியின் சொரூப மூன்றொன்றதோமுகமாய்ப் பூரக சொரூபமாயமைய- வொத்தவபாநவிருத்தி சொரூபமாயிருக்கும்" (சூத. எக்கி. பூ. ச: கரு.) [ஸ. அபாநவ்ருத்தி.]

**அபாநன்**—அபாநவாயு. "அபாநன்குதத்திலுற்றுச் சென்றொழிய மலசலங்களொழித்தலுறும்" (வேதா. சூ. எரு.) பிங்கலநிகண்டுகாரர்: "உச்சத்தலத்திடைநிற்பதபாநன்" எனபர். (பிங்கல. நச.) [ஸ. அபாந.]

**அபாநீயம்**— குடிக்கத்தகாதது. [ஸ. அபாநீய: ஸ; பாநீய - குடிக்கத்தக்கது.]

**அபாபம்**—1. குற்றமின்மை. 2. பாபமின்மை. [ஸ. அபாப: ஸ; பாப - புண்ணியமல்லாதது.]

**அபாம்பதி**—1. சமுத்திரம். 2. வருணன். (உ-ம்.) அரியதோர்விண்டுவாகியபாம்பதியாகி" (சேதுபு சேதுயாத். கந.) [ஸ. அபாம்பதி: ஸ. அப - நீருக்கு. பதி-தலைவன்.]

**அபாமார்க்கஸ்நாநம்**— சரீரத்தில் நாயுருவி தடவிச்செயயும் ஸ்நாநம். (பராமிரு. ஆசார. ஸ்நாந. நஅ.) [ஸ. அபாமார்க்கஸ்நாந.]

**அபாமார்க்கம்**— 1. நாயுருவி. 2. வெண்ணாயுருவி. [ஸ. அபாமார்க்க.]

**அபாயம்**—1. அந்தம். 2. ஆபத்து. (உ-ம்.) "தேயத்து-வாய்த்தவபாயஞ் சிலவுற்சவ மிக்காலங்களின்மெய் மயங்குமாறு - நீத்தவிழிஞர்களுறினுக்தோடமிலை" (சூத. எக்கி. பூ. சச: கஅ.) 3. இணக்கமின்மை. 4. கேடு. 5. சதிசெய்தல். 6. சேதம்பண்ணுதல். 7. தோற்றப்படாமை. 8. நட்டம். 9. பிரிவு. 10. போதல். 11. மோசம். (உ-ம்.) "மற்றதுகண்டு மைநதன் வந்ததிங்கபாயமென்று" (பெரியபு. திருவா. சிற. உச.) [ஸ. அபாய.]

**அபார்த்தகம்**—ஒரு நிக்கிரகத்தாநம்; அது: அவாய்நிலை, தகுதி, அண்மையில்லனவாப் பேசல். (சி.சி. அளவை. கச. மறை; சிவஞா.) [ஸ. அபார்த்தக.]

**அபார்த்தகரணம்**—வீண்வழக்கு. [ஸ. அபார்த்தகரண.]

**அபார்த்தம்**—1. அர்த்தமில்லாதது. 2. பிரயோசனமில்லாதது. [ஸ. அபார்த்த: ஸ. அப - எதிர்மறை. அர்த்த-பொருள், பிரயோசநம்.]

**அபாரணை**— பாரணைசெய்யாதொழிதல். [ஸ; பாரணா- உபவாசமிருந்துபின்னுண்ணல்.]

அபாரம்— 1. அளவற்றது, எல்லைப்படாதது. (உ-ம்.) தேசகாலவஸ்துக்களால் அந்தமில்லாமல் அபாரமாயுமிருக்கிறது" (விசார. உ.) 2. கடவுள். 3. கரையற்றது. 4. தொலையாதது. [அபார.]

அபாரமார்த்திகம் — பரமார்த்தமில்லாதது, யதார்த்தமல்லாதது. [அபாரமார்த்திக.]

அபாவசதுட்டயம் — முன்னில்லாமை, பின்னில்லாமை, ஒன்றி னொன்றில்லாமை, என்றுமில்லாமை யென்னும் அபாவம்நான்கு. [அபாவசதுஷ்டய.]

அபாவநம்--மறப்பு. (உ-ம்.) "இம்மநத்தையபாவமென்னுங் கத்தியினுற்கெடுப்பாய்" (ஞானவா. உற்பத்தி. எ. உரை.)[அபாவந.]

அபாவநை—1. தியானமின்மை. 2. நிந்தை. 3. பகுத்தறிவின்மை. [அபாவநா: அ;பாவநா - கருதல்.]

அபாவப்பிரமாணம் — ஓரளவை; அது: இல்லதனை யில்லையென்றல். "முயற்கோடில்லையென்றவழி யதனையுண்டோ என்றுமயங்காமற்றுனும இல்லையென்றுகோடல்போல்வது"(சிவ. போ. விருத்தி. கஙசு.)[அபாவப்ரமாண.]

அபாவம்—1. அபாவப்பிரமாணம்.(உ-ம்.) "அளவைகாண்டல்கருதலுரையபாவம்" (சி. சி. அளவை. க.) 2. அபாவயோகம். (வேதா. சூ. கங.கூ.) 3. அறியாமை. (உ-ம்.) "அகமினதுபாவாபாவங்கள்" (வேதா. சூ. கoஅ.) 4. இன்மை. (உ-ம்.) "அங்கிவிர்த்திதானுமபாவமாம்" (சூத. எக்கி. பூ. உ: சு.) 5. நனவிற்சுழுத்தி. 6. நிருமூலமான அழிவு, முழுதுமழிதல். 7. நினையாமை. (உ-ம்.) "பாவமொடபாவமும்" (தாயு. ஆநந்த. கூ. உரை.) 8. மரணம். (உ-ம்.) "நீண்டபாவாபாவம்" (ஞானவா. உபசா. கஎ) [அபாவ.]

அபாவயோகம்—ஐவகையோகங்களுளொன்று; (த. நி. போ. ஙஎச.) அது: காணங்களுக்கெட்டாத பிரமத்திலே மனோலயமாவது. (வேதா. சூ. கஙக. உரை.)[அபாவயோக.]

அபாவர்த்தநம்— திரும்புதல். [அபாவர்த்தந.]

அபாவவளவை— அபாவப்பிரமாணம்.

அபாவாபாவம்—ஓரலங்காரம்; அது: "பள்ளியுள்ளீரம்புலராமையேற்றக" என்பதிற்போல எச்சமுமுடிக்குஞ்சொல்லும் எதிர்மறுத்து உடன்பாட்டுப் பொருளில் வருவதொன்று. (பி. வி. ௩க. உரை.) [அபாவ; அபாவ.]

அபி—1. அதட்டுகை, கண்டித்தல், கேள்வி, சந்தேகம், சையோகம், நிகழக்கூடியதன்மை, ஆவலான விசாரணை ஆகியவற்றின் ஒன்றன் பாற்படப்பொருள்விளைத்து நிற்பதும், பொருள் ஒன்றுமின்றி யசைத்து நிற்பதுமான ஒருவடமொழியுபசர்க்கம்.[அபி.] 2. இடத்திலாவது குலத்திலாவது அதிகாரத்திலாவது மேற்பட்டிருக்குந்தன்மை, சமீபம், விருப்பம், வேறுந்தன்மை யாகியவற்றின் ஒன்றன் பாற்படப் பொருள்விளைத்துநிற்கும் ஒருபசர்க்கம். [அபி.]

அபிக்கியாதம்-- அறியப்பட்டது. [அபிக்யாத: அபி; க்யாதம்- அறியப்பட்டது.]

அபிக்கியை— 1. அழகு. 2. அழைத்தல். 3. கீர்த்தி. 4. சொல்லல். 5. நற்கீர்த்தி. 6. நாமம். 7. பரியாயபதம். 8. பிரகாசம். 9. மேன்மை. [அபிக்யா.]

அபிக்கிரகணம்—உடையவன் முன்னிலையிலே யாதாயினுமொருபொருளைக் கவர்தல், கொள்ளையிடல். [அபிக்ரஹண: அபி- சமீபம். க்ரஹண - கவர்தல்.]

அபிக்கிரகம்—1. திருடுதல். 2. போர்க்கறைகூவுதல். 3. பலாற்காரமான களவு.[அபிக்ரஹ: அபி; க்ரஹ - எடுத்தல்.]

அபிக்கிரமம்—1. அடர்த்தல். 2. ஊறுபாடுசெய்ய முயலுதல். 3. ஏறுதல். 4. தொடக்கம். [அபிக்ரம: அபி - மேல். க்ரம- போதல்.]

அபிகதம்—சமீபித்தது. [அபிகத: அபி- இட்ட. கத - போனது.]

அபிகமநம்— சமீபமாகப்போதல். [அபிகமந: அபி - சமீபம். கமந - போதல்.]

அபிகமம்—சமீபமாகப்போதல்.[அபிகம: அபி - சமீபம். கம - போதல்.]

அபிகருடணம்—1. உரிஞ்சுதல். 2. பேய்க்கோட்படல். [அபிகர்ஷண: அபி-சமீபம். கர்ஷண - இடித்தல்.]

அபிகாதசுரம் — ஒருவகைச்சுரம்; இது:

குத்துக்காய முதலிய விரணங்களினுலும் அக்கினி சமீபமாயிருந்து நடத்துந் தொழிலினுலும், அதிக நடையினுலும், அதிக உழைப்பினுலும் வருவது. (சீவரட். ௩க.) [ஜுஹிவாதஜ்வரம்: ஜுஹிவாத-குத்துக்காயம். ஜ்வர-சுரம்.]

அபிகாதசோபை — ஆயுதக்காய முதலியவற்றல் உண்டாகும் ஒருவகை ரோகம். (சீவரட். க௩அ.) [ஜுஹிவாதஸோஹா.]

அபிகாதம்— 1. அடித்தல். 2. உபத்திரவம். 3. காயப்படுத்துதல். 4. நிருமூலமாயழித்தல். 5. பரிசித்தல். [ஜுஹிவாத.]

அபிகாதவாதம்—அதிகமா கவழிநடத்தல் முதலிய காரணங்களாற் பிறந்து சரீர முழுதும் வியாபித் தடித்தாற்போல நோகச்செய்யும் ஒருவகைவாதநோய். (சீவரட். ௪௫௬.) [ஜுஹிவாதவாத: ஜுஹிவாத - அடித்தல்.]

அபிகாதி—பகைவன். [ஜுஹிவாதிநு.]

அபிகாரம்—1. உடையவன் முன்னிலையிலே அவன்பொருளைப் பலாற்காரமாகக்கவர்தல். 2. ஊறுபாடுசெய்ய ஊக்குதல். 3. ஓமத்திலே நெய்விடுதல். வக்த்ரத்தில் தனித்தனியாகுதிகொடுப்பது. (சி-வி.கிரி.௨எ.தாற்.) 4. நெய். 5. படைக்கலந்தரித்தல். 6. படையெடுத்தல். [1,2,5,6. ஜுஹிஹார: 3, 4. ஜுஹிவார.]

அபிகிதகர்த்தா— தன்செயலையுணர்த்தும் வினைக்கெழுவாயாக நிற்குங்கர்த்தா. (பி. வி. கக:) "தந்தைமகனையடித்தான்" என்பதில், தந்தை அபிகிதகர்த்தா. [ஜுஹிஹிதகஃதா]

அபிகிதகர்மம்—செயலையுணர்த்தும்வினை செயப்பாட்டுவினையாய் வர அதற்கெழுவாயாக நிற்குஞ் செயப்படுபொருள். (பி.வி.க௨.) "மாடந்தச்சனுலியற்றப்பட்டது" என்பதில் மாடம். [ஜுஹிஹிதகஃ.]

அபிகிதகருத்தா—அபிகிதகர்த்தா. (பி.வி. கக.) [ஜுஹிஹிதகஃதா.]

அபிகிதகன்மம்—அபிகிதகர்மம். (பி. வி. க௨.) [ஜுஹிஹிதகஃ.]

அபிகிதத்துவம் — பிரமாணவாக்கியம். [ஜுஹிஹிதவ.]

அபிகிதம்— 1. சொல்லப்பட்டது. 2.சொல்லப்படுகிலை, தெரிகிலை. (உ-ம்.) "சொல்லப்படுகிலை சொல்லப்படாகிலை - யபிகிதமநபிகிதமெனமொழிப - தெரிகிலை தெரியாகிலையெனவும் பெயர்பெறுஉம்" (பி. வி. கக. உரை.) [ஜுஹிஹித.]

அபிகிருதி—ஒருவகைச்சந்தம்; அஃது: ஒற்றொழித்து உயிராவது உயிர்மெய்யாவது அடியொன்றற்கிருபத்தைந்தெழுத்தாய்வருவது. (வீரசோ. யாப்பு. ௩௩. உரை.) அபிகிருதிக்குதாரணம்: "அங்குலிகமொன்று புனலாழ்தருகிணற்றில்விழவந்தமுனிதேடியினைப்-புங்கமொடுபுங்கமுறவெய்திவனெடுத்தமைபுகன்றருகுநின்றவரைநீ - ரிங்கிதனிலைத்தொகைகள் யாவுமுருவப்பகழியேவுமினனுமுன்விசயன் - றுங்கவில்வளைத்தொருகணத்திணில் வடத்திலைதுளைத்தனனிலக்கிருடையால்" (பாரத. வாரணா. ருக.)

அபிசங்ககூரம் — ஒருவகைச்சுரம்; இது: பூதாவேசசுரம், ஔஷதகந்தசுரம், விஷசுரம், கோபச்சுரம், பயச்சுரம், துக்கச்சுரம், காமச்சுரம் என எழாகவிரியும். (சீவரட். ௩௨.) [ஜுஹிஷங்கஜ்வரம்: ஜுஹிஷங்க - சேர்க்கை.]

அபிசங்கம்—அபிடங்கம். [ஜுஹிஷங்க.]

அபிசத்தி— 1. அபதூறு. 2. இரத்தல். 3. நிந்தித்தல். [ஜுஹிஸஹ்தி: ஜுஹி, ஸஹ்தி - புகழ்தல், கேட்டல்.]

அபிசந்தாநம்—1. உடன்கை. 2. எய்ப்பு. 3. சமாதானம் பண்ணுதல். 4. விசேடமான உடன்படிக்கை. [ஜுஹிஸநாந.]

அபிசந்தாபம்—யுத்தம். [ஜுஹிஸஞாப: ஜுஹி - அதிகம். ஸஞாப - வருத்தம்.]

அபிசந்தி—1. எய்ப்பு. 2. சமாதானஞ்செய்தல். 3. நோக்கம். 4. விசேடமான உடன்படிக்கை. [ஜுஹிஸநி: ஜுஹி-அதிகம். ஸநி-உடன்பாடு.]

அபிசநம்— 1. கீர்த்தி. 2. பிறந்ததேயம். 3. வமிசத்தலைமை. 4. வமிசம். [ஜுஹிஜந: ஜுஹி; ஜந - பிறந்தது.]

அபிசநவான்—உயர்குலத்தோன். (பகவற். க௬: ௪௫.) [ஜுஹிஜநவாநு.]

அபிசம்பந்தம்—1. இனத்தொடர்ச்சி. 2. கூடுதல். 3. மைதுனம். [ஜுஹிஸஂவஃ.]

அபிசம்பாதம்— 1. சாபம். 2. யுத்தம். ஜுஹிஸஂவாத: ஜுஹி - முன். ஸஂவாத-போதல்.]

அபிசர்க்கம்—சிருட்டிப்பு. [ஜுஹிஸகஃ.]

அபிசர்ச்சநம்—1. கொலை. 2. நற்கொடை. [அபிவர்ஜந.]

அபிசரன்— 1. அநுசரன். 2. தோழன். [அபிசர: அபி- பின். சர-செல்வோன்.]

அபிசவம்— 1. ஸ்நாநஞ்செய்தல். 2. புளிப்பேறினகஞ்சி. 3. யாகம். [அபிஷவ.]

அபிசாததுலம்— உயர்குலம். [அபிஜாதகுலம்.]

அபிசாதம்— 1. அழகியது. 2. கணிக்கத்தக்கது. 3. தகுதியானது. [அபிஜாத.]

அபிசாதன்—1. உயர்குலத்தோன். 2. தக்கோன். 3. பண்டிதன். [அபிஜாத.]

அபிசாபம்—1. அபராதபத்திரம். 2. சபித்தல். 3. பொய்யாக அபராதமேற்றல். [அபிசாப: அபி; சாப - சபித்தல்.]

அபிசாரகம் — மந்திரத்தாற் கொல்லல். [அபிசாரக.]

அபிசாரசுரம் — ஒருவகைச்சுரம்; இது: அதர்வணவேத மாரண மந்திரங்களைக் கொண்டு ஒருவன்பேரைச்சொல்லியோமஞ்செய்தலினாற் பிறக்குமென்பர். (சீவரட். ௩௨.) [அபிசாரஜ்வர-ஓமாகுதிகளாற் பிறப்பதால் இப்பெயர்பெற்றது.]

அபிசாரணம்—1. சந்தித்தல். 2. சமீபித்தல். 3. விரும்பிக்கேட்டல். [அபிசாரண.]

அபிசாரம்— 1. அதர்வணவேதத்திலுஞ் சில தந்திரங்களிலுஞ் சொல்லுகிறபடி வைத்தியம, உறவு, பகைமை, உணர்ச்சியின்மை, வாதம், மரணம் என்னும் இவற்றிலொன்றைவருவிக்கு மந்திர யந்திரங்கள். [அபிசார.] 2. கருவி. 3. காமுகர் சந்தித்தற்கு நியமிக்கும் இடம். 4. பெலன். 5. யுத்தம். [1, 2, 3, 4. அபிசார.]

அபிசாரி—1. மோகந வித்தைக்காரன். 2. மோகநவித்தைக்காரி. 3. வேசி. [1, 2. அபிசாரிந் 3. அபிசாரிணீ.]

அபிசாரிகை— நியமித்துக்கொண்ட குறியிடத்திற்குச் செல்லும் பெண். [அபிசாரிகா: அபி - சமீபம். சாரிகா - செல்பவள்.]

அபிசித்து—1. ஓர்யாகம். 2. ஒரொட்டுநட்சத்திரம்; இஃது: உத்தராடத்தின் நாலாங்கால் நாழிகைபதினைந்துந் திருவோணத்தின் ஆதிநாழிகைநான்குங் கொண்டது. (குமாரசுவா. நட்சத்திர. அ.) (உ-ம்.) "மகரத்தேவிரவு மம்புலி விளங்கபிசித்திடைமேவுநாள்" (வேதாரணியபு. பிரமயாத். க.) 3. பகலிலேயெட்டாமுகூர்த்தம்; ஒருமுகூர்த்தம், இரண்டுநாழிகை. (விதாந. குணகுண. எ௩.) 4. மத்தியாநகால அபிமாநதேவதை. (பசவற். அ: உரை.) 5. விட்டுணு. [அபிஜித்.]

அபிசிதம்—கூப்பிட்டுக் கொடுக்கும் அநாம்புசித்தல். (வி. ணி.)

அபிசுதம்— புளிப்பேறினகஞ்சி. [அபிஷுத.]

அபிஞ்ஞர்—1. அறிந்தவர். (உ-ம்.) "தத்தத் காரியாபிஞ்ஞரா யிருக்கிற ஆப்தராலும்" (சி. சி. ௫: ச. சிவாக்.) 2. நிபுணர். [அபிஜ்ஞ.]

அபிஞ்ஞாநம்—1. அடையாளம். 2. அறிவு. 3. கறை. [அபிஜ்ஞாந: அபி-சமீபம். ஜ்ஞாந-அறிதல்.]

அபிட்டம்—பாதரசம்.

அபிட்டுதம்— துதிக்கப்பட்டது. [அபிஷ்டுத.]

அபிடங்கசுரம்—ஆகந்துகசுரத்தினொருவகை. (சீவரட். ௩௨.) [அபிஷங்க-சேர்க்கை.]

அபிடங்கம்—1. அபசயப்படுத்தல். 2. ஆணையிடுதல். 3. ஒன்றிததுககூடுதல். 4. சபித்தல். 5. தழுவுதல். 6. பேய்பிடித்தல். 7. பொய்யாக அபராதமேற்றல். [அபிஷங்க.]

அபிடவணம்—1. நீரின்முழுகுதல். 2. யாகாதிசெய்தல். [அபிஷவண.]

அபிடவம்—1. நீரின்முழுகுதல். 2. புளிப்பேறினகஞ்சி. 3. யாகத்துக்கங்கமான ஸ்நாநம். [அபிஷவ.]

அபிடிந்தர் — அபிடேகஞ்செய்யப்பட்டவர். (தணிகை. வரலாறு.) [அபிஷிக்த.]

அபிடியந்தம்— 1. கண்ணின் பெலவீநம். 2. பாய்தல். 3. பெருகுதல். 4. பொசிதல். 5. மிஞ்சிநபாகம். [அபிஷ்யந்த: அபி; ஷ்யந்த-சிந்துதல்.]

அபிடுதம்— புளிப்பேறின கஞ்சி. [அபிஷுத: அபி; ஷுத - கலந்தது.]

அபிடேகக்கூட்டு — சுவாமிக்கபிடேகஞ் செயதற்குச்சேர்க்குஞ்சரக்கு.

அபிடேகதிரவியங்கள்— அபிடேகஞ்செய்தற்குவேண்டிய திரவியங்கள்; அவை: எண்

ணெய்க்காப்பு, மாக்காப்பு, நெல்லிக்காப்பு, மஞ்சட்காப்பு, பஞ்சகௌவியம், இரசபஞ்சாமிர்தம், பலபஞ்சாமிர்தம், பால், தயிர், நெய், தேன், சர்க்கரை, கருப்பஞ்சாறு, எலுமிச்சம்பழச்சாறு, நாரத்தம்பழச்சாறு, தமரத்தம்பழச்சாறு, குளஞ்சிப்பழச்சாறு, மாதுளம்பழச்சாறு, இளநீர், சந்தனக்குழம்பு என்பவைகளாம்.

அபிடேகம் — 1. குருவாய் அல்லது அரசனாய் வருதற் காரம்பத்திலே செய்யப்படும் ஸ்நாநக்கிரியை. (உ-ம்.) "சமயவிசேடநிருவாணமபிடேகமிவற்றடங்குமன்றே" (சி. சி. அ: ரு.) "அங்கண்மன்னனைப்பராசரன்முனபிடேக- மங்கலத்தடநீரினாற்செய்து"(சேதுபு. மங்கல. எகூ.) 2. திருமஞ்சநம். (உ-ம.) "அரனுக்குப்பஞ்சவாமிர்தத்தினா லபிடேகஞ்செய்வித்து" (உபதே. சிவவிரத. எ.) 3. ஸ்நாநஞ்செய்தல். 4. கிரீடம். (திருப்பு. ருoசு.) [அபிஷேக.]

அபித்தியாநம்— 1. இச்சித்தல். 2. தியானித்தல். [அபித்யாந: அபி; த்யாநம்-நினைத்தல்.]

அபித்தியை— 1. இச்சை. 2. பிறன் பொருளையிச்சித்தல். [அபித்யா: அபி- விருப்பம். த்யா - நினைத்தல்.]

அபித்துரோகம்— 1. கொடுமை. 2. நிந்தனை. [அபித்ரோஹ: அபி; த்ரோஹ - பலாற்காரம்.]

அபிதன்மபிடகம்— பௌத்தருடையபிடகாகமங்கள் மூன்றனுள் ஒன்று. (மணிமே. உசரு.)

அபிதா— அபிதை. [அபிதா.]

அபிதாநம்— 1. சலாகை (இராசவைத்.) 2. சொல்லுதல். 3. பெயர். (உ-ம்.) "அபிதாநமுன்னான்காக"(சிகாழிப்பு. தலவி. சரு.) 4. பெயரிடுதல். [அபிதாந.]

அபிதாபம்— 1. கலக்கம், மநச்சலநம். 2. மிகுவெப்பம். [அபிதாப: அபி; தாப - வெப்பம்.]

அபிதாமூலந்தொநி—பெயரடியாகத் தோன்றிய குறிப்புப் பொருள். "குடம்பை தனித்தொழியப்புட்பறந்தற்றே- யுடம்போடுயிரிடை நட்பு" என்பதிலே நட்பென்பது குறிப்புமொழியாய் நட்பின்றிப் போதலையுணர்த்துதல்போல்வது.(பி.வி. ௩௦. உரை.)[அபிதா - மூலம் - அடி. த்வநி - குறிப்பு.]

அபிதர்மூலம்—அபிதாமூலத்தொநி. [அபிதாமூல: அபிதாமூலம் - பெயரடியாற்பிறந்தது.]

அபிதார்த்தம்— பதவுரை. (த. நி. போ. கoஅ.) [அபிதா- பெயர். அர்த்த- பொருள்.]

அபிதாவகம் — பின்றொடர்ந்தோடுதல். [அபிதாவக.]

அபிதாவநம்— பின்றொடர்ந்து துரத்துதல். [அபிதாவந: அபி - பின். தாவந - ஓடுதல்.]

அபிதேயம்— 1. சொல்லப்படும் விடயம், சொல்லப்படுவது. (சி. சி. சு: க. ஞாநப்.) 2. சொல்லின்மூலப்பொருள். 3. சொற்பொருள். 4. நாமமிடத்தக்கது. [அபிதேய: அபிதா - சொல்லு. ய - ஒருசெயப்படுபொருள்விகுதி.]

அபிதை—1.செஞ்சொல். (பி.வி.ருo.உரை.) அது கற்றோர்க்குங் கல்லாதோர்க்கும் ஒப்பத்திரிசொற்போலாது தன்பொருளைத்தானே விளக்கும் உலகவழக்கச் சொல். 2.(குறிப்பிலக்கணைகளின்வேறாகிய) சொல்லாற்றலென்னும் விருத்தி. 3. பெயர். [அபிதா.]

அபிந்நதை—ஒன்றாந் தன்மை. [அபிந்நதா: அ; பிந்நதா - பிறிதாநதன்மை.]

அபிந்நநிமித்தோபாதாநதை—நிமித்தகாரணமும் உபதாநகாரணமும் வேறல்லாதிருக்குந்தன்மை. (உ-ம்.) "சிவனுடைய திருமேநியான சிற்சத்தி யபிந்நநிமித்தோபாநதையினாலே" (சி. சி. க: சஅ. சிவாக்.) [அபிந்ந - பிந்நமில்லாமை. நிமித்த; உபாதாநதா.]

அபிந்நம்—1. ஒற்றுமை. 2. பிந்நமல்லாத எண், முற்றெண். 3. பேதமின்மை. (உ-ம்.) "பிந்நமென்று மபிந்நமென்றும் பிந்நாபிந்நமென்றும்" (சூத. எக்கி. பூ. நஅ: க.) 4. மாற்றப்படாதது. [அபிந்ந: அ; பிந்ந - வெட்டப்பட்டது, வேறுபட்டது.]

அபிந்நை — வேறறக் கூடியிருப்பவள். (உ-ம்.) "ஈசுவரனுடைய சமவாயசத்தி பிரபஞ்சாநுகுணையா யபிந்நையாயிருக்கையினாலும்" (சி. சி. உ: க. சிவாக்.) [அ; பிந்நா- பிந்நமுடையவள்.]

அபிநந்தை—விருப்பம். [அபிநந்தா.]

அபிநயக்கூத்து— நிருத்தக்கைதழுவாது பாட்டினது பொருளுக்குக்கைகாட்டி வல்ல

பஞ்செய்யும் பலவகைக்கூத்து. (சிலப். அரங்கே. கஉ.)

அபிநயபிடகம்—பிடகசாத்திரங்கள் மூன்றனுள் ஒன்று. ( இது விம்மாயபிடகத்தை மூன்றுளொன்றெனக்கொள்ளாதார் கூற்று.) (சி. சி. பர. சௌத். உ. உரை.)

அபிநயம்—1. அபிநயநூல். 2. அலங்கரித்தல். 3. உபசாரணை. 4. கூத்து. 5. நடநபாவனை. 6. மநக்கருத்தைக் குறிப்பாய் விளக்கும் அங்கசேட்டை. (உ-ம்.) "கூத்தாடியொருவனே யிராவணுதிகளைப்போல உருபத்தையும் பிறர்க்குக் காட்டி" (சி.சி. க:கூஎ. சிவாக்.) "கானவார் கூந்தலாமாத ரபிநயக்கைவழிக்கண்கள் செல்ல" (சூத. சிவ. எ: உஉ.) [𑌅𑌭𑌿𑌨𑌯: 𑌅𑌭𑌿 - மேல், மிக. 𑌨𑌯 - அடைவித்தல்.]

அபிநயர்—கூத்தர்.

அபிநயித்தல்—1. அபிநயஞ்செய்தல். 2. நடித்தல். (உ-ம்.) "சிவபேதமென்கின்ற நவபேதத்தை யொருபொருளாகிய சிவன், தானேயதிட்டேய பேதத்தையொட்டி யபிநயித்துத் தடத்தக்கற்பனையினுலே காண்பிப்பன்" (சி. சி. உ: எச. ஞாநப்.)

அபிநவம்—1. மிகப்புதியது. 2. மிகு இளமையானது. (உ-ம்.) "அபிநவவிசால பூரணவம்பொற் கும்பத் தநமோதி"(திருப்பு.சாடு.) [𑌅𑌭𑌿𑌨𑌵: 𑌅𑌭𑌿 - மிக. 𑌨𑌵 - புதுமை.]

அபிநாசசந்நி— ஒருவகைச் சந்நி.

அபிநிட்கிரமணம்—புறப்படுதல், வெளியிற்போதல். [𑌅𑌭𑌿𑌨𑌿𑌷𑍍𑌕𑍍𑌰𑌮𑌣: 𑌅𑌭𑌿; 𑌨𑌿𑌸𑍍; 𑌕𑍍𑌰𑌮𑌣 - போதல்.]

அபிநியாசசந்நிபாதசுரம்—ஒருவகைச்சந்நிபாதசுரம; இது: வாதமும் பித்தமுஞ் சிலேஷ்மமுஞ் சமமாகஅதிகரித்தலினுற் பிறப்பதும் பசிநீங்குதல், முகத்திற்பளபளப்பு, பேச்சில்லாமை, தூர்ப்பலம், பஞ்சேந்திரியதத்ன்மை குறைவு, மயங்கியநித்திரை, அறிவின்மையென்னும் இக்குணங்களை யுண்டாக்குவதும் ஆம். (சீவரட். உசு.) [தேகவியாபாரங்களை நீக்குதலால் வந்தபெயர்.]

அபிநியாசவாதம்— ஒருவகை வாதநோய்; இது: வாத பித்த சிலேட்டுமங்களை யதிகரிக்கச் செய்து வருத்தும. (சீவரட். கசுஎ.)

அபிநிரியாணம்—படையெழுச்சி. [𑌅𑌭𑌿𑌨𑌿𑌰𑍍𑌯𑌾𑌣: 𑌅𑌭𑌿; 𑌨𑌿𑌰𑍍𑌯𑌾𑌣-வெளியிறபோதல்.]

அபிநிவேசம்— 1. ஊக்கம். 2. எனக்கிது வேண்டுமென் றவாவிய பொருளினிடத்தே செல்லும் ஆசை.(உ-ம்.)"வருநதபிநிவேசமெனுமவையைந்தும" (கூர்மபு. விபூ. கக;) (சி. சி. உ: நிசு. ஞாநப். ) 3. மரணபயத்தாற் சரீரத்தை யிரட்சிக்கவேண்டும் என்னுங்கிலேசம். (விசார. சக.) 4. விடாப்பிடி. [𑌅𑌭𑌿𑌨𑌿𑌵𑍇𑌶: 𑌅𑌭𑌿; 𑌨𑌿𑌵𑍇𑌶 - பிரவேசிக்கை.]

அபிநீதி— 1. சிநேகம். 2. மநக்குறிப்பை விளக்கும் அங்கசேட்டை. 3. மரியாதை. [𑌅𑌭𑌿𑌨𑍀𑌤𑌿: 𑌅𑌭𑌿; 𑌨𑍀𑌤𑌿 - ஒழுக்கம்.]

அபிப்பிரணயநம்—பிராயசசித்தம். [𑌅𑌭𑌿𑌪𑍍𑌰𑌣𑌯𑌨: 𑌪𑍍𑌰𑌣𑌯𑌨- சுத்திகரித்தல்.]

அபிப்பிரணயம்—1. தயவு. 2. பிராயச்சித்தம்.

அபிப்பிராயம்— 1. கருத்து, நோக்கம். 2. சொல்லினுல் அல்லது வாக்கியத்தினுற் கருதப்பட்டபொருள். 3. விருப்பம். [𑌅𑌭𑌿𑌪𑍍𑌰𑌾𑌯.]

அபிபவநம்—1. கீழ்ப்படுத்தல். 2. கீழ்ப்படுதல். 3. வியாதி முதலியவற்றுல் அறிவுமாறுபடுதல். [𑌅𑌭𑌿𑌭𑌵𑌨: 𑌭𑌵𑌨-இருத்தல்.]

அபிபவம்—1. அவமானமடைதல். 2. கீழ்ப்படுத்தல். 3. கீழ்ப்படுதல். 4. தோற்கச்செயதல். [𑌅𑌭𑌿𑌭𑌵: 𑌅𑌭𑌿 - கீழ். 𑌭𑌵 - இருத்தல்.]

அபிபூதம்—1. அபசயப்பட்டது. 2. அறியப்படாதது. 3. கீழ்ப்படுதப்பட்டது. 4. மழுங்கினது. [𑌅𑌭𑌿𑌭𑍂𑌤.]

அபிபூதி—1. அவமாநம். 2. கீழ்ப்படுத்தல். 3. தோற்கச்செய்தல். [𑌅𑌭𑌿𑌭𑍂𑌤𑌿.]

அபிமதம்— 1. அங்கீகரிக்கப்பட்டது. 2. சம்மதமானது. 3. விரும்பப்பட்டது. (உ-ம்.) 'அவாக்குளவபிமதமறைந்திடுமென்ன' (நல். பார. பாண்டவர்து. கூ.) 4. விருப்பம். [𑌅𑌭𑌿𑌮𑌤: 𑌅𑌭𑌿 - மேல். 𑌮𑌤 - நினைவு.]

அபிமந்— அபிமந்யு. (உ-ம்.) "அதிரதாதிபர்சானும்வீமனும் விசயனுந் திறலபிமநும்" (பாரத. அணிவ. உ.) [𑌅𑌭𑌿𑌮𑌨𑍍𑌯𑍁.]

அபிமந்தம்—கண்ணோய். [𑌅𑌭𑌿𑌮𑌨𑍍𑌥.]

அபிமந்திரணம்—1. அழைத்தல். 2. ஆலோசித்தல். 3. விசேட மந்திரங்களாற்பிரதிட்டைசெய்தல். [𑌅𑌭𑌿𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌣.]

அபிமந்திரம்—மந்திரித்தல். (உ-ம்.) "இலங்கு பாம்பபிமந்திரத் தடங்குமோவெனலும்"(காஞ்சிபு. திருக்கண். கசகூ.)[ஸஂஹிஜ்ஞ.]

அபிமந்திரித்தல் — மந்திர உரு ஏற்றல். (உ-ம்.) "பாங்கினுதவுதிருநீற்றைப்பகரும் வேத மந்திரத்தாற்-ரூங்கியபிமந்திரித்து" (சூத. ஞானயோககாண். ௩: ரு.)

அபிமந்திரிதம்—1. நால்வகைச்சுத்தியுளொன்று; அது:மந்திரித்தலாற்செய்யப்படுஞ்சுத். 2.மந்திரஞ்சொல்லப்பட்டது.[ஸஂஹிஜ்ஞித]

அபிமந்நு— பஞ்சபாண்டவருளொருவனுகிய அருச்சுனனுக்குச் சுபத்திரைபெற்ற ஒரு மகாவீரன். (உ-ம.) "மூந்தபிமந்நுவந்தைவரை வணங்கிநிற்றலும்" (நல். பார. புத்திர. ககள.) [ஸஂஹிஜ்ஞ.]

அபிமர்த்தம்—1. உரிஞ்சுதல். 2. தேய்த்தல். 3. (சத்துருவினல்) நாடழிக்கப்படல். 4. போர். [ஸஂஹிஜஷ.]

அபிமரம்— 1. ஒருவனுக் கவன்பக்கத்தாராற் செய்யப்பட்டதுரோகம். 2 கட்டி யல்லது விலங்குபூட்டிவைத்தல். 3. கொலே. 4. போர். [ஸஂஹிஜர: ஸஂஹி; ஜர - மரணம்.]

அபிமாநதேவதை—ஒனறைத் தன்னுடையதாகப் பாவிக்கும் அதிதெய்வம். (உ-ம்.) "தத்துவாபிமாநதேவதைகளுக்குமநதத்தத்துவ நாமங்களே" (சி. சி. உ: எக. சிவாக்.) [ஸஂஹிஜாந; தெவதா.]

அபிமாநபுத்திரன்—1.தக்கவயதுகழிந்தபின் சுவீகரிக்கப்பட்ட புத்திரன். (உ-ம்.) "நரசிங்கமுனேயரது அபிமாநபுத்திரராய்"(பெரியபு. தடுத்தாட். ௬. உரை.) 2. வைப்பாட்டிபுத்திரன். [ஸஂஹிஜாந; பு.]

அபிமாநம்— 1. அறிவு. 2. ஒன்றைத்தன்னுடையதாகநினைத்துத் தனதென்றல்லதுதானென்றுகொண்டாடுதல். (உ-ம்.) "செயிரினுலுடனுனெனுமபிமாநஞ்சேர்ந்தது" (சூத. சிவ. கஉ: ௩அ.) 3. கொலே. 4. செருக்கு. 5. தைசதாகங்காரம். (உ-ம்.) "இவற்றினேக் கருத்தாப்-புனேயபிமாநம்புற்கலனுன்மாசசீவன் மந்தாவெனப்புகல்வார்" (கூர்மபு. பிரகிருதி. அ.)6.நானே சகலமுமென்னும் அகங்காரம். 7. நெறிதவருதொழுகித் தன்மேன்மையைக் காக்கவேண்டும் என்னுஞ் சிந்தை மேலிட்ட கருத்து. (உ-ம்.) "கொலேயபிமாநீத்தல்" (மச்சபு. மநவக். யுக.உஉ.) 8. நேசம். 9. நோப்படுத்தல். 10. பெருமை. 11. மகிமைபாராட்டுதல். 12. மதிப்பு. 13. விரும்பிக்கேட்டல். 14. விரும்புதல். [ஸஂஹிஜாந: ஸஂஹி; ஜந - அறிதல்.]

அபிமாநவிருத்தி—அகங்காரம். [ஸஂஹிஜாந வ்ருஜி.]

அபிமாநாக்கிநி— அக்கிநிமண்டலத்திலேயுள்ள அக்கிநிதேவர்களாகிய அநலர் நாற்பத்தெதான்பதின்மரிலே தலைமைபெற்ற ஒருவன். அவன்புத்திரர்: பாவகன், பவமாநன், சுசியென்னுமூவர்.

அபிமாநி—1. அபிமானமுடையோன். 2. கணவன். 3. தனதாகப்பாவிக்கிறவன், தனதாகநினேக்கிறவன். (உ-ம்.) "இருதயாதிகளிலே யகாராதி யபிமாநிகளான பஞ்சசத்திகளும்" (சி. சி. ௪: ௩௪. சிவாக்.) 4. மாநதத்திலுற்ற அக்கிநி. (உ-ம்.) "அந்தவக்கிநிதன் பேரை யபிமாநியென்பர்" (மச்சபு. அக்கிநிவமிச. உ.) 5. விருப்புடன்பொருந்தியிருப்போன். [ஸஂஹிஜாநி.]

அபிமாநித்தல்— 1. அபிமாநஞ்செய்தல்; இது:அகங்காரதத்துவத்தின்ருெழில். (உ-ம்.) "சிந்திததுவிகற்பித்தல்,சங்கற்பித்தல், அபிமாநித்தல், நிச்சயித்தல் என்கின்ற நான்கு வியாபாரங்களேயும்" (சி. சி. ௪: க. ஞாநப்.) 2. அளவிடல். 3. ஒருதாநத்தில் விருப்புடன் பொருந்தியிருத்தல். (உ-ம்.) "இதுவே சீவனுக்குசசொப்பனுவத்தை; இதையபிமாநித்தசீவனுக்குத் தைசதனென்றுபெயா" (உபதேசவு. ௪௬.) 4. கநம்பண்ணல். 5. தனதாகப்பாவித்தல். (உ-ம்.)"அங்கதனேயபிமாநித்ததுவே தானென்றறைதலினல்" (நல். பார. கௌசிக. எஅ.) 6. மதித்தல். 7. மெச்சல். 8. விரும்புதல்.

அபிமாநிதம்—புணர்ச்சி. [ஸஂஹிஜாநித.]

அபிமுகம்— 1. எதிர்நோக்கினது, வெளிநோக்குதல். (உ-ம்.) "விடயாபிமுகமாகாது" (சி.சி. உ: ருகு. சிவாக்.) 2. எதிர்முகம்.(உ-ம்.) "வடக்கபிமுகம்" (நல். பார. கபிலே. அ௬.) 3. சமீபத்தில். 4. முன்னிலே. (உ-ம்.) "அங்கணைர்தம்மபிமுகத்தினில்" (பெரியபு. திருஞாந. க0அ௪.) [ஸஂஹிமுவ.]

அபிமுகர்—1. அபிமுகமுடையவர். 2. பிரியமுற்றவர்.(உ-ம்.)"ஐவருமபிமுகராக நின்னுழை-மெய்யவருமந்திரமருநதுவேறுண்டோ" (நல். பார. சத்தியபா. ௪.) [ஸஂஹிமுவ.]

அபிமுகன்— 1. அபிமுகமுடையான். 2.

எதிர்நோக்கியமுகமுடையவன். 3. பிரியமுற்றவன். (உ-ம்.) "அபிமுகன்பூர்வத்து"(சைவச. பொது. ௩௩அ.) [ஸுஷிஊவ.]

அபிமுகி— எதிர்நோக்கிய முகமுடையது. (சி. சி. அளவை. க. சிவாக்.) [ஸுஷிஊவி.]

அபியாதி—சத்துரு. [ஸுஷியாதி: ஸுஷி - எதிர். யாதி - செல்வோன்.]

அபியிதம்—சொல்லப்பட்டது.

அபியுத்தம்–1. கடிந்துகொள்ளப்பட்டது. 2. சத்துருவினாற் றாக்கப்பட்டது. 3. சொல்லப்பட்டது. 4. பகையெதிர்கொள்ளல். 5. முயற்சி. [ஸுஷியுக்த.]

அபியுத்தன்— 1. சாவதானமுடையவன். 2. படித்தவன், வித்துவான். [ஸுஷியுக்த.]

அபியூட்சணம்—அமைத்தல்.

அபியோகம்—1. அபராதமேற்றல். 2. இடித்துரை. 3. ஊறுசெய்ய ஊக்குதல். 4. தடைசெய்தல். 5. போர். 6. போர்க்கறைகூவுதல். 7. முயற்சி. 8. முறையீடு. (உ-ம்.)"இராசத்துரோகஞ்செய்தவரென்றும், வன்செய்கைசெய்தவரென்றும், பாதகஞ்செய்தவரென்றுந், திருடர் கூட்டுறவினாற் றிருடரென்றும் அபியோகம் பண்ணப்பட்டவர்களுக்கு வாதி வழக்குத்தோல்வித்தண்டத்தை யொப்புதல்வேண்டாமலே இவ்விஷயம்விதிக்கப்படும்." (மிரு. சங். ௩௭.) [ஸுஷியோக.]

அபியோகி—1. ஊறுசெய்ய ஊக்குவோன். 2. குறைகூறுவோன். 3. முழுமுயற்சி யுடையோன். 4. முறையீடுசெய்வோன். 5. வாதி. [ஸுஷியோகி.]

அபியோத்தா—1. பகைவன். 2. முறையீடுசெய்கிறவன். [ஸுஷியோக்தா.]

அபிரங்கி—கருநெல்லிமரம்.

அபிரட்சை— சர்வபரிபாலநம், சர்வரட்சை, பூரணமான பாதுகாப்பு. [ஸுஷிரக்ஷா: ஸுஷி; ரக்ஷா - காத்தல்.]

அபிரதி—1. சந்தோஷம் 2. திருத்திகரம். 3. தொழில் [ஸுஷிரதி:ஸுஷி; ரதி-இன்பம்.]

அபிராமம்—1. அழகு. 2. பிரியம். [ஸுஷிராம.]

அபிராமன்—அழகன். (உ-ம்.) "அபிராம விங்குவருக" (திருப்பு. ௯0.)

அபிராமி— 1. அழகுள்ளவள். 2. சத்தமாதர்களுள் ஒருத்தி. 3. சரஸ்வதி. 4. பார்ப்பதி. (உ-ம்.) "என்றபிராமியிசைத்திடநோக்கி" (நல். பார. உமாமகே. ௨௯௬.)

அபிருசி—1. கீர்த்திப்பிரியம். 2. மிகு விருப்பம். [ஸுஷிருசி: ஸுஷி; ருசி-பிரியம்.]

அபிநுபன்—அழகுள்ளவன். [ஸுஷிரூப: ஸுஷி; ரூப - அழகு.]

அபிலாசம் — விருப்பம். [ஸுஷிலாஷ: ஸுஷி; லாஷ - விருப்பம்.]

அபிலாசுகன்—1. இச்சையுடையவன். 2. விருப்பமுடையவன். [ஸுஷிலாஷுக.]

அபிலாபம்— பேச்சு. [ஸுஷிலாப: ஸுஷி; லாப - பேசுதல்.]

அபிலிகிதம்— எழுதப்பட்டது. [ஸுஷிலிகித: ஸுஷி; லிகித - எழுதப்பட்டது.]

அபிலேகநம்— எழுதுதல். [ஸுஷிலேகந: ஸுஷி;லேகநம - எழுதுதல்.]

அபிவந்தநம்—வந்தநஞ்சொல்லுதல். [ஸுஷிவந்நம.]

அபிவாதநம்— பெரியோரை வாழ்த்துதல்; அது: கண்டவுடன் இருக்கைவிட்டெழுதல், பாதந்தொழுதல் முதலிய உபசாரங்கள்செய்து வாழ்த்துதல். (உ-ம.) "அபிவாதநத்தாற்பெரியோரை வணங்குதல்" (கூர்மபு. வியாதர்கரு. அ.) [ஸுஷிவாதந: ஸுஷி - முன்னிலையில். வாதந - சொல்லல்.]

அபிவிக்கியாதம்— 1. புகழ்பெற்றது. 2. பெரும்பாலும் அறியப்பட்டது. 3. பேர்பெற்றது. [ஸுஷிவி஖்யாத: ஸுஷி; வி; ஖்யாத - அறியப்பட்டது.]

அபிவியஞ்சகம் — 1. தோற்றுவிக்கும் துணைக்கருவி. (உ-ம்.) "தீபமானது பதார்த்தாபிவியஞ்சகமானபொழுது" (சி. சி. உ: ௯0. சிவாக்.) [ஸுஷிவ்யஞ்ஜக: ஸுஷி; வ்யஞ்ஜக - வெளியாக்கல்.]

அபிவியஞ்சகர் — வெளிப்படுத்துவோர். (பௌட். பக. ௪அ: உரை.) [ஸுஷிவ்யஞ்ஜக:]

அபிவியந்தம்—மிகுவிளக்கமுற்றது, வெளிப்படை. (உ-ம்.) "நீதிலபிவியத்தமாஞ்சிதாகாசம்" (சூத. எக்கி. பூ. ௧௧: ௬.) [ஸுஷிவ்யக்த: ஸுஷி - மிக. வ்யக்த - விளக்கம்.]

அபிவியத்தர்— வெளிப்பட்டவர். (உ-ம்.)

"அந்தமந்திரமகேசுவரமந்திரேசுவரர்களிடத்திலபிவியத்தராய்" (மிருகேந். க. உக.) [அபிவ்யக்த.]

அபிவியத்தி—வெளிப்படுதல். (உ-ம்.) "சிந்துசலில்விசேடமாயபிவியத்தியாயப் பொன் போற்றிகழுமாதோ" (சூத. எக்கி. பூ. சு:சு.) [அபிவ்யக்தி.]

அபிவியாத்தம்—பரம்பியது. [அபிவ்யாப்த.]

அபிவியாத்தி—1. அந்தர்ப்பவித்தல். 2. சர்வவியாபகத்துவம். [அபிவ்யாப்தி: அபி- எங்கும். வ்யாப்தி- பரம்புதல்.]

அபிவியாபகம்—ஒருபொருண்முழுதிலும் பிறிதொருபொருள் வேறறக் கலந்தொற்றுமைப்பட்டிருப்பது. (உ-ம்.) "வேற்றுமை நயத்தால் வேறேயாயினு - மொற்றுமை நயத்தாலொன்றபிவியாபகம்" (பி.வி.கரு.உரை.) [அபிவ்யாபக: வ்யாபக - பரத்தல்.]

அபிவிர்த்தி—அபிவிருத்தி. (உ-ம்.) "சிஷ்யசந்தானாபிவிர்த்தியின் பொருட்டும்" (சி. சி. பாயிர. க. சிவாக்.) [அபிவ்ருத்தி.]

அபிவிருத்தி—1. அதிகப்படுதல், மிகப்பெருகுதல். 2. கூடுதல். 3. சித்தியடைதல். 4. பெருவாழ்வு. (உ-ம்.) "இப்படியியற்றினோர் தங்குலமபிவிருத்தியெய்தும்" (மசசபு. சபிண்டி. உக.) 5. வளர்தல். [அபிவ்ருத்தி: அபி; வ்ருத்தி - வளர்ச்சி.]

அபிவெஞ்சகம்—அபிவியஞ்சகம். (உ-ம்.) "கூறிடுமிப்பிரமாணந்தனக்கபிவெஞ்சகமாய க்குறித்திடுவர் காண்டலனுமான வுரைதனை" (த. வி. போ. நகஅ.) [அபிவ்யஞ்ஜக.]

அபின்—ஒருமருந்து. [இந்துஸ்.] [இதுகசகசாச்செடியிலுள்ள முதிர்ந்த காயைக்கிள்ள அதிலிருந்து வருகிற பாலென்றும், துருக்கி, ஸ்மிரினா, வங்காளம், எகிப்து, ஐரோப்பா ஆகிய தேசங்களிலிருந்து கொண்டுவரப்படுகிறதென்றும், அவற்றுள்ளே துருக்கி ஸ்மிரினாத்தேசங்களிலிருந்து வருவதே முதற்றரமென்றும் பதார்த்தகுண அருமபொருளகராதியிற் சொல்லப்பட்டது.]

அபினி—அபின். (உ-ம்.) "நல்லவபினிக்குணத்தை நாடறிய நாம்புகல்வே-மல்லல் குன்மவாத மருஞ்செவிநோய்- பல்லின்வலி - பேதிமந்தமத்திநோய்பீநசம்போம் வன்மையுண்டாஞ்-சாதியுதிரச் சுத்திதான்" (பதார்த்த. ககஙசு.) [இந்துஸ்.]

அபீகன் — 1. கணவன். 2. காமுகன். 3. சிவன். 4. பயப்படாதவன். 5. புலவன். [அபீக: அபீ; கம - விருப்பம்.]

அபீசு— 1. கலிணவார். 2. இரகணம். 3. கைவிரல். [அபீஶு.]

அபீட்சணம்— 1. எப்போதும். 2. கணந்தோறும். 3. திரும்பத்திரும்ப. [அபீக்ஷண: அபீ; க்ஷண.]

அபீட்டம்—மிகவிருமபப்பட்டது (உ-ம்.) "நவ்வியொண்கண்ணியுன்றனபீட்டமு நல்குவேனால்" (மச்சபு. யயாதிபுத. கரு.) [அபீஷ்ட: அபி; இஷ்ட - விரும்பப்பட்டது.]

அபீட்டியம் — துதிககத்தக்கது. [அபீ; ஸ்தவ்ய.]

அபீடங்கம்—வைதல். [அபிஷங்க.]

அபீடநம்—1 சாந்தகுணம். 2. தயாளசிந்தை. 3. வருத்தஞ்செயயாமை. [அபீடந: அ - எதிர்மறை. பீடந - வருத்தம்.]

அபீதம் —பயமின்மை.

அபீதன்—அச்சமில்லாதவன்.

அபீதி—அச்சமின்மை. [அபீதி: அ-எதிர்மறை. பீதி - பயம்.]

அபீநசம்—பீநசமின்மை; அது: சளியின்றி நாசிவறண்டிருத்தல். [அ; பீநஸ - சளி.]

அபீநசரோகம்— சிலேட்டுமத்தைக்கொண்டு மூக்கின் நரம்புகளையடைக்கும் ஒருவகை நாசிகா ரோகம். இதனால், அதிக உபத்திரவமுஞ் சுவாசம் விடும்போது குருகுரு என்னும் ஒருசத்தமும் நாசியிலே வேர்வையும் உண்டாகும். (சீவரட். உஎஎ.) [அ: பீநஸ; ரோக.]

அபீமாநம்—அபிமாநம். [அபீமாந.]

அபீரன்—1. மாட்டிடையன். [அபீர:] 2. பிராமணனுக்கு அம்பட்டஸ்திரீயிடத்திற் பிறந்தவன். (மநு. க0: கரு.)

அபீரு—1. அச்சமில்லாதவன. 2. கடவுளருள் ஒருவனாகச் சொல்லப்படும் வைரவன். [அபீரு: அ - எதிர்மறை. பீரு - அச்சமுள்ளோன்.]

அபுண்ணியம் — பாபம். [அபுண்ய: அ; புண்ய - நற்செயல்.]

அபுக்தம் — 1. அநுபவிக்கப்படாதது. 2. உண்ணப்படாதது. 3. செலவாகாதது. [ஸ ஊகூ: ஸ; ஊகூ - உண்ணப்பட்டது.]

அபுக்தன்—1. அநுபவியாதவன். 2. உண்ணுதவன். 3. புத்தியில்லாதவன். [1, 2. ஸ ஊகூ: ஸ; ஷ. 3.]

அபுத்தி—1. அறியாமை. (உ-ம்.) "அபுத்திபூருவமாய்வந்த சமயாசாரலோபத்திற்கு" (சி - லி. ஸ்ரீ கு. தாற்.) 2. புத்தியின்மை. [ஸவுஜி: ஸ; வுஜி - அறிவு.]

அபுத்திபூர்வம்— } அறிவுடன்கூடாத.
அபுத்திபூருவம்— } (செயல்.) (உ-ம்.) "அதிசயம் பயப்பவபுத்தி பூருவமாவவனிடைத் தமோமயசிருட்டி-பொதிதரத்தோன்றிற்று" (சூத. சிவமான். ௧0: உ.) [ஸ: வுஜி; வ-ஷ-ு.]

அபுத்திரகன்—புத்திரனில்லாதவன். [ஸ வுத்ரக: ஸ-எதிர்மறை. வுத்ரக- புத்திரனுடையவன்.]

அபுத்திரன்—அபுத்திரகன். [ஸவுத்ர: ஸ; வுத்ர.]

அபூதம்— 1. அசுசி. 2. இறந்தகாலத்தில்லாதது. [ஸவுத: ஸ; வுத - சுசி.]

அபூதவுவமை — உவமாலங்காரவகையுளொன்று; அது: முன்பில்லதனை யுவமையாக்கியுரைப்பது; (உ-ம்.) "எல்லாக் கமலத் தெழிலுந்திரண்டொன்றின்- வில்லேர்புருவத்து வேனெடுங்கண் - ணல்லீர் - முகம்போலும்" என்பதிற்போல. (தண்டி. ௩௧.) [ஸ ஊதெ: உவமா.]

அபூபம்—கோதுமை முதலியவற்றிற்செய்த அப்பவருக்கம். (சூ. நிக. ௬: ௬௫.) ஸவுவ.]

அபூர்ணகாலசம்— காலம் பூர்ணமாகுமுன் பிறந்தது, முதிருமுன்பிறந்தது. [ஸ வுணகாலஜ: ஸவுணகால - நிறைவில்லாதகாலம். ஜ0 - பிறந்தது.]

அபூர்ணகாலம்— முற்றுதற்குக்குறைவான காலம். [ஸவுணகால.]

அபூர்ணம்— பூரணமாகாதது. [ஸவுணு.]

அபூர்வதை— 1. அபூர்வமாயிருக்குந்தன்மை. (வாசுதே. ௧௧எ.) 2. (வேதாந்த) நான் பிரமம் அலன் என்னும் அஞ்ஞானத்துக்கு முரணுகக் கூடஸ்த்பிரம ஐக்கியங்கூறும் வேதவாக்கியத்தைக் கேட்டலாகிய சிரவணத்திற்குச் சொல்லப்படும், ஆறுவித லிங்கங்களின் மூன்றுவதாகிய இலிங்கம்; அது: கூடத்தனே பிரமமென அப்பியாசித்தனுபவித்த பொருளில் அதிதமாதல். (உ-ம்.) "துரியன் றிகழ்பிரமாணுதீதனென்கை யபூர்வதையாம்" (வேதா. சூ. ௧௩௫.)

அபூர்வம்—1. அருமை. 2. ஆச்சரியமானது. 3. ஒருகருமத்திற்குத் தூரத்திலே நிகழுங்காரியம். 4. ஒருவன்செய்யும் புண்ணியபாவங்களொழிந்த விடத்திலே அவற்றினல் சம்ஸ்கார ரூபமாகத் தோன்றிநின்று மறுமையிலே பலத்தைக்கொடுக்குமது. (உ-ம்.) "செயலினபாவத்தேயபூர்வமெனுமது தோன்றித்தருஞ்செயலின்றழிவின்பின்பலிப்பிப்பதாகும்" (சி. சி. பா. பிரபாக. மதம். உ.) 5 கிழக்கல்லாதது. 6. நூதநமானது. 7. முதலாவதல்லாதது. 8. முன்னில்லாதது. 9. மேன்மையானது. [ஸவுவ.]

அபூர்வவிதி— புதுவிதி. [ஸவுவ வியி: ஸவுவ - முன்னில்லாதது.]

அபூர்வன்—பரமான்மா. [ஸவுவ.]

அபூரணம்—அபூர்ணம். (உ-ம்.) "தன்னுபூரண்சொரூபமே மாயையாலபூர்ணமாய்த் தோன்றும்" (சூத. எக்கி. பூ. ௧௬: ௪0.) [ஸவுண.]

அபூரணி—இலவமரம். [ஸவுரணி.]

அபூருவம்—அபூர்வம்.

அபேத்தன்—பாதமில்லாதோன். [ஸவெஃ: ஸ; வெஃ - தளை.]

அபேட்சன் — அபேட்சையுடையவன். (பௌட். பதி. ௮௬.) [ஸவெக்ஷ.]

அபேட்சித்தல்—1. அவாவுதல். 2. மிகவிரும்புதல். 3. வேண்டிநிற்றல், பற்றல். (சி. சி. கு.) [மூ. ஸவெக்ஷா.]

அபேட்சிப்பு—1. அவாவுகை. 2. வேண்டிநிற்கை.

அபேட்சை— 1. அவாய்நிலை. 2. ஆசை. 3. எதிர்பார்த்திருத்தல். 4. காரண காரியத்தொடர்பு. 5. (தர்க்க) சாதிவியக்தசம்பந்தம். 6. தருணம். 7. நன்குமதிப்பு. [ஸவெக்ஷா: ஸவ; ஈக்ஷா - பார்த்தல்.]

அபேதசட்டி—ஒருபொருள் தானேயுடையானும் உடைப்பொருளுமாகிவரும் ஆறும்

வேற்றுமை. (உ-ம். "இராகுத்தலை" (பி. வி. சஎ.உரை.)[ஸ்ஹேஷ-ஒற்றுமை. ஷஷ்டீ-ஆறுவது.]

அபேதசித்தாந்தம்— பணிபலவாயும்பொன் ஒன்ருனற்போல ஆன்மாவுஞ் சிவமும் ஒன்றெனறுவாதிக்கும் மாயாவாதக் கோட்பாடு. (சி. பி. கை.எ.) [ஸஹேஷ; ஸிஷாந்த - முடிந்தமுடிவு.]

அபேதசைவம்—ரூபம், அரூபம், ரூபாரூபம் என்னும் பேதமில்லாமல் இருக்குஞ்சிவனைச் சைவத்துக்குரிய வேடம், விபூதி, ருத்திராக்கம், பஞ்சாட்சரம், குருலிங்கவேடமுதலியவைகளைப் பொருளாகக்கொண்டு வழிபடுஞ் சைவம். (த. நி. போ. உ௬௪.) [ஸஹேஷ; ஸெஶவ.]

அபேதச்சிறப்பு— பொன்னும் பணியும் போல ஒன்றினின்று தோன்றியும் அதனின் வேருகாத தோற்றம். (உ-ம்) "பொற்பணி போலபேதப்பிறப்பிலதாய்"(சிவப்பிர.வாழ். எ.)

அபேதம்—ஒற்றுமையாய்நிற்றல். (உ-ம்.) "தக்கபரைபுருடனுடபேதத்தையெப்போதநுசந்தானம் பண்ணும்" (சூத. எக்கி. பூ. ௪: கஉ.) [ஸஹேஷ.]

அபேதவாதம்— சிவமும் ஆன்மாவும் ஒன்றென வாதிக்கும் வேதாந்தம். [ஸஹேஷவாஷ.]

அபேதவாதி — சிவமும் ஆன்மாவும் ஒன்றெனவாதிக்கும் வேதாந்தி. [ஸஹேஷவாதிந.]

அபேதாத்தியவசாயசாதாரணதர்மம் – இயற்கையில் வெவ்வேருய் விளங்கினுங் கவியின்கொள்கையால் அபேதமாய்க் கிரகிக்கப்படுந்தன்மைகள். (உ-ம்.)"இந்துவிடத்தைச சிவன்போ லேகுணங்குற்றத்தினேனு - னந தெளிவாஞேன்கிரகணம்புரிந்து - முந்தினதைச் - சேகரங்கொண்டேவிளங்கசசெயதுக டையுற்றதையம்- மாகளத்துளேயடக்குவான்" இக்கவியில் சிவனும் ஞானந்தெளிவோனுமாகிய உபமாந உபமேயஙகளுக்கு ஒருதன்மையாயினும் பொதுவாக இணங்காவிடினும் விம்பப்பிரதி விம்பபாவத்தினல் இந்துவிடமென்பவற்றிற்கும் குணங் குற்றமென்பவற்றிற்கும் அபேதமெனக் கொளவதாலுஞ் செயகையுணர்சசியென்பவற்றிற்குக் கிரகணம் புரிதலென்னுஞ் சொல்லொற்றுமையிருப்பதாலும் முடியிலிருத்திப்பிரகாசிக்கச்செய்தல் சிரக்கம்பத்தாற் கொண்டாடி விளங்கச்செய்தலென்பவைகளுக்குச் சேகரங்கொண்டே விளங்கலென்னுஞ்சொல்லொற்றுமையிருப்பதாலும் களத்தினுள்ளிருத்துதல் கண்டத்தினின்றும் வெளிவிடாமை மென்பவற்றிற்குக் களததுளே யடக்குவானெனுஞ்சொல்லொற்றுமையிருப்பதாலுமிது அபேதாத்திய வசாய சாதாரணதர்மமேயாம்.(குவல. க. உரை.) [ஸஹேஷ; ஸுயுவஸாய; ஸாயாரண; யக்ஷ.]

அபேநம்—1. அபின். (இப்பொருள் பிற்காலவழக்கு.) 2. நுரையின்மை. [ஸ; பேந- நுரை.]

அபேயபாநம்— குடிக்கத்தகாதது; மது. (உ-ம்.) "அபேயபாநாதி ாகிதருமாயருககிற சூத்திரரிலும்" (சி.சி. அளவை. கங. சிவாக.) [ஸபெயபாந; பெயபாந - குடிககத தக்கது.]

அபைசுநம்— நேர்மை, கோடாமை. [ஸபைஶுந; ஸ;பைஶுநம்-கள்ளம.]

அபையம்—அபயம்.

அபோக்கியம்—1. அநுபவிக்சபபடாதது. 2. உண்ணத்தகாதது. (உ-ம.) "அபோக்கிய மானநஞ்சை" (தாயு. ஆசை. உஎ. உரை.) [ஸஹோ஗்ய.]

அபோகண்டம்— நெகிழ்சசிச்குணமுடையபொருள்: [ஸவோவஂட.]

அபோகண்டன் — 1. அரசமுள்ளோன். 2. அவலட்சணமுடையவன். 3. குழந்தை. [ஸவோமஂட.]

அபோகம்—1. தர்க்கத்தால் ஐயந்தீர்தல். 2. தாககிததல. [ஸவோஹ: ஸவ- எதி. உஹ - தர்க்கித்தல்.] 3. போகமின்மை [ஸஹோம: ஸ; ஹோம - அநுபவம்.]

அபோச்சியம்— உண்ணததகாதது, அசுத்தமானது. (உ-ம்.) "போதமிகுஞானக்கட்க போச்சியமொன்றேனுமில்லை"(சூத. எக்கி. பூ. ௬௫. ௩.) [ஸஹோஜ்ய: ஸ; ஹோஜ்ய - உண்ணத்தக்கது]

அபோசநம்— உபவாசம். [ஸஹோஜந: ஹோஜந - உணவு.]

அபோத்தா— 1. அநுபோகம் பண்ணாதவன். 2. உணவில்லாதவன் (வாசுதே. சககூ.) [ஸஹோக்தா: ஸ; ஹோக்தா - உண்பவன்.]

அபோதசுவரூபன்— அறியப்படாதசுவரூபமுடையவன். (வாசுதே. கககூ.) [ஸ்வொய ஸ்வூப-ந்வ.]

அபோதம்—1. அறியாமை. (உ-ம்.) "ஒதவோதப்போதங்கெட்டபோதமான தோங்கியதே" (இராமா. உத். இராவணன். பிறப். கஎ.) [ஸ்வொய; சு; வொய - அறிவு.]

அபோதார்த்தம்—விபரீதப்பொருள். [ஸ்வொப - அறியாமை. ஸுயூ - பொருள்.]

அபௌருஷேயம்—மனுஷனினின்று வாராதது. (உ-ம்.) "வேதமபௌருஷேயமாய் நித்தியமுமாகையாற்பிரமாணமாம்" (சி. சி. அளவை. சுகூ. சிவாக்.) [ஸ்வெளாஷேய; சு; வெளாஷேய- புருடனால் வந்தது.]

அம்— 1. அசபாமந்திரத்தின் ஓர் உறுப்பு, சீவான்மா. இது ஹம்ஸ என்னும மந்திரத்தில் ஒருறுப்பாகிய ஹம் என்பது தமிழில் அம்மெனத்திரிந்துவந்தது. (உ-ம்.) "இம்மனுவின்பெருண்மையினு மியமபிற் சிவபர, செம்மொழிவாசகமாகுஃ தேரினகமெனுஞ்சத்த, மெம்மலமுமிலிர் சீவற்கிடுகுறிவாசகமதனு, லம்மெனுமந்திரபாகக் கருததஞ்சீவான்மாவே" (சூத. எக்கி. பூ எ. சு.) 2. அழகு. (உ-ம்.) "பரமரம்பாவிகைசசெம்பவளக்கொடிபங்கர்" (மறைசை. ௩.) 3. ஒருகருவிப்பொருள்விகுதி. (உ-ம்.) "நோக்கம்" (நன். பத. கஙு. உரை.) 4. ஒருசாரியை; (உ-ம்.) "புளியங்காய்" (நன். உருபு. ௫.) 5. ஒருசெயப்படு பொருள் விகுதி; (உ-ம்.) "தொல்காப்பியம்" (நன். பத. கஙு. உரை.) 6. ஒருதத்தித விகுதி; (உ-ம்.) "சிங்களம்" (வீரசோ. தத்தி. க.) 7. ஒருதன்மைப்பன்மை விகுதி; இது: தெரிநிலையில் வரும்போது "படிப்பம்" "வருகுவம்" என்பவற்றிற்போல எதிர்கால இடைநிலையை நேரே புணர்ந்தும், "படித்தனம்" "சென்றனம" "உண்டனம்" என்பவற்றிறபோல இறந்தகால இடைநிலையையும், "படிக்கின்றனம" "படியாநின்றனம்" என்பவற்றிற்போலக் "கிறு" ஒழிந்த நிகழ்கால இடைநிலையையும், "அன்" சாரியை இடையில்வா ஒட்டியும், குறிப்புவினையில வரும்போது "குழையம்" "குழையினம்" எனபவற்றிற்போல், "இன்" சாரியை இடையிற் பெற்றும் பெறாதும பகுதியோடு புணர்ந்தும் வரும. இவ்விகுதி, "நீயும நானும் உண்டனம" என்பதிற்போல முன்னிலையிடத்தாரை யுளப்படுத்தியும், "அவனும் நானும் உண்டனம்" என்பதிற்போலப் படர்க்கையிடத்தாரை யுளப்படுத்தியும், "அவனும் நானும் நீயும உண்டனம்" என்பதிற்போலமுன்னிலையிடத்தாரையும் படர்க்கையிடத்தாரையும் உளப்படுத்தியும் வரும். (நன். வினை. கஙு. இராமா.) 8. ஒருதொழிற்பெயர்விகுதி; (உ-ம்.) "வாட்டம்" (நன். பத. கஙு. உரை.) 9. ஒருபண்புப்பெயர்விகுதி; (உ-ம்.) "நலம்" (நன். பத. கஙு. உரை.) 10. ஒருவினைமுதற்பொருள்விகுதி; (உ-ம்.) "எச்சம்" (நன். பத. கஙு. உரை.) 11. நீர். (உ-ம்.) "சென்னியமோகந்தவிராமுதோகண்" (கந்தாங். ௩.) 12. மேகம். 13. ஓரசைச்சொல். (உ-ம்.) "பொய்யுரையன்றுகாணீர்போமினம" (சிந்தா. பதுமை. உசசு.)

அம்சம்— 1. அன்னப்பறவை. (ஞானவா. சதவுருத். கஙு. உரை.) 2. உரிமைப்பங்கு. (உ-ம.) "யோகபூமியம்சம்விடாதுறலாற்பழையதீவினைபோம்"(ஞானவா. நிருவா. ௩ஙு.) 3. ஒரு மந்திரம். (உ-ம்.) "அசபா" பார். 4. (பாஷகணிதம்) போகம்; அது: பிங்நத்தில் இத்தனை கூறுகொள்ளப்படவேண்டியதென்பதையுணர்த்தும் ஒரெண். [1, 3. ஹஂஸ. 2, 4. ஹஂஸ.]

அம்சமந்திரம்— அசபாமந்திரம். (சி-லி. யோக. ௫. உரை.) [ஹஂஸஜந.]

அம்சர்— அறுவகைச்சநநியாச ஆச்சிரமத்தாருளொருவகையர். (கூர்மபு. வருணா. சo.) உரை.)

அம்சாம்சம்—பங்கிற்பங்கு [ஹஂஸ;ஹஂஸ]

அம்சாம்சி—பங்குபங்காக. [ஹஂஸ;ஹஂஸி]

அம்சாம்சிபாவம்—பங்கும் பங்குடையதுமாயிருத்தல். [ஹஂஸ; ஹஂஸி; ஹாவ.]

அம்சுசஞ்ஞா— இருதயத்தானத்திலிருக்கும் அகாரத்திலுண்டாகியபத்துக்கலைகளுள் ஒன்று. (சி-லி. கிரி. உஉ.) [ஹஞுஸஂஜூா.]

அம்பகம் — 1. உத்தரவு. 2. எழுச்சி. [திசைச்.] 3. கண். (உ-ம்.) "நெஞ்சுடனம்பகமலர்ந்து" (பாரத. நச்சு. சுஅ.) 4. கூத்தாடிக்குப்பொருந்தின கூலி. 5. செம்பு. [3, 5. ஹஂவகஂ.]

அம்பகன்—சீர்பந்தபாஷாணம்; அது: முப்பத்திரண்டு பாஷாணவகைகளுளொன்று.

அம்பட்டச்சி— அம்பட்டப்பெண்.

அம்பட்டத்தி—அம்பட்டச்சி.

**அம்பட்டன்**—அறுவகையநுலோமருளொருவன். இவன், பிராமணனுக்கு வைசியப்பெண்ணிடத்திற்பிறந்தவன். (உ-ம்.) "காய்கர் தம்மகளிர்வேதநற்குலத்தவனைக்கூடி - யாய்தரவுயிர்த்தபிள்ளையம்பட்டனெனும் பேருள்ளான்" (சூத. சிவமான். கஉ. க0.) 2. சத்திரியன் வணிகப்பெண்ணைக்காவினிற்கூடிப்பெற்றபிள்ளை. (உ-ம்.) "புரவலன்வணிகர் சாதிப்புணர்மூலைப் பொற்பூங்கொம்பைக்-காவினிற்கூடி யீன்றகான் மூளைபெயரம்பட்டன்" (சூத. சிவமான். கஉ. கரு.) 3. நாவிதன். [ஆம்பஷ்ட.]

**அம்பட்டன்கத்தி**— 1. ஒருவித மீன். 2. சௌரம் பண்ணுங்கத்தி.

**அம்பட்டை**—1. அம்பட்டப்பெண். அவள் பிராமணனுக்கு வைசியப்பெண்ணிடம்பிறந்தவள். (பாா. பக். க0எ.) 2. வட்டத்திருப்பிப்பூண்டு. (உ-ம்.) "பெண்ணிச்சைதரு முருங்கைப்பீசமம்பட்டைசுக்குபெருமுன்னைவேரிரத்தம்பிப்பலிதேக்கித்தொண்டும்" (தைலதைலவ. கக.) [அம்பஷ்டா.]

**அம்படம்**— 1. ஆடுதின்னுப்பாளை. 2. புழுக்கொல்லிச்செடி.

**அம்படலம்**— 1. அம்மி. 2. ஈயம். 3. ஓடம். 4. தேர். 5. மரக்கால். 6. வாழை. 7. வெள்ளி. 8. வெளி.

**அம்பணத்தி**— துர்க்கை. (உ-ம்.) "அந்தங் கரும்பள்ளி பாசாங்குசத்தி சொல்லம்பணத்தி" (தனிப்பா. க.) [அம்பணம் - மரக்கால்; இது: துர்க்கை நடனத்துக்கோர்பெயர். அத்து; சாரியை இ - விகுதி.]

**அம்பணம்**—1. ஆமை. 2. ஒருவகையாழ். (உ-ம்.) "அம்பணகாதலிக" (திருப்புகழ். க0கூ.) 3. அளவுகருவியாகியமரக்கால். (உ-ம்.) "அம்பணவளவையரெங்கணுந்திரிதர" (சிலப். ஊர்கா. உ0கூ.) 4. துலாக்கோல். 5. நீர். 6. நீர்ப்பத்தல். இது, லோகத்தாற்குழாய்வடிவமாகச்செய்யப்பட்ட கருவி. (மணிமேக. உசுஅ. பக்.) 7. வாழை.

**அம்பணவர்**—ஒருசாதியார். இவர்கள் பாணர் என்று சிலப்பதிகார உரைகாரர் கூறுவர். (சிலப். புறஞ்சே. க0ரு. உரை.) [அம்- அழகு. பண் - இசை.]

**அம்பர்**— 1. அவ்விடம். (உ-ம்.) "அம்பரேகுகர்" (திருவானை. நகர. அரு.) 2. ஒரு மரப்பிசின். 3. ஓர்க்கோலை. இது, கடல்படுதிரவியங்களுளொன்று. 4. சோழதேசத்தோரூர். (உ-ம்.) "அம்பரான்சோமாசிமாறனுக்குமடியேன்" (தேவார. திருத்தொண். ரு. சுங.)

**அம்பர்மாகாளம்**— ஒரு தலம். (பெரியபு. தடுத்தாட். கககூ.)

**அம்பரத்தவர்**— தேவர். (உ-ம்.) "அம்பரத்தவருடன்று சீறினுமொரம்பிலேயழிவர்" (பாரத. கிருட். கருஎ.)

**அம்பரம்**— 1. ஆகாயம். (உ-ம்.) "அம்பரத்தமீனையுந்தடுத்து" (காஞ்சிபு. நகர. சஉ.) 2. கடல். (உ-ம்.) "விரும்பியம்பரமுநாளும் விரிதருதிரைக்காங்கொண்டி-ரும்புறக்கலைத்தாலன்ன விருங்கருங்கோட்டுப்புன்னை" (சூத. முத். ரு: சஉ.) 3. சீலை. 4. திக்கு. (உ-ம்.) "விஞ்சவம்பரமேவியபோதினும்" (ஞானவா. தாமவியாள. உக.) 5. பருத்தி. 6. மஞ்சள். 7. சித்திரை நட்சத்திரம். (வீமேசுர. கஎ.) [1, 3, 4, 5, 6. அம்பர.]

**அம்பரமணி**— சூரியன். [அம்பரமணி: அம்பர - ஆகாயம். மணி - இரத்தினம்.]

**அம்பரர்**— அசுரர். (உ-ம்.) "அம்பரருயிர்" (கந்தரங். உ.) [அம்பர - கடல். கடலிடத்தொருநகரில் வாழ்ந்தவராதலால்.]

**அம்பராந்தம்**— 1. திகந்தம். 2. புடவையினோரம். [அம்பர - வாநம், சீலை. அந்தம் - முடிவு.]

**அம்பராம்புயம்**— 1. ஆகாசத்தாமரை. 2. பதுமநிதி. [அம்பர; அம்புஜ.]

**அம்பரான்**—அம்பரென்னுந்தலத்திலிருப்பவன். (தேவார. திருவின்னம்பர். க. திருநாவு.)

**அம்பரீசம்**— அம்பரீடம்.

**அம்பரீசன்**— 1. சிவன். 2. திருமால். [அம்பரீஷ.]

**அம்பரீடம்**— 1. ஒரு மகாநரகம். 2. திக்கம். 3. நெய்விட்டுப்பொரிக்குஞ்சட்டி. 4. யுத்தம். 5. விலங்கின்குட்டி. [அம்பரீஷ.]

**அம்பரீடன்**— 1. சிவன். 2. சூரியன். 3. விட்டுணு. 4. விட்டுணுபத்தனுன சூரியவமிசத்தோரரசன். (இராமா. மிதிலை. கஉ0.) [அம்பரீஷ.]

**அம்பரை**— ஒரு கிமிளை.

**அம்பரைநாதம்**—அப்பிரகம்.

**அம்பல்**— 1. சிலரறிந்து தம்முட்புறங்கூறுதல். (உ-ம்.) "அம்பலே சிலரறிந்திட்டது புறங்கூறலாகும்" (சூ.நிக. ச0. அ.) 2. பரவாத

கவென்பார். (திருக்கோ. ௬அ௰ உரை.) 3. சேந்தனென்னும்பிரபுவுக்குடையதாயிருந்த ஒருதேசம். 4. பழிச்சொல்.

அம்பலக்கூத்தன்— சிவன். (உ-ம்.) "அனைத்தும்வேடமா மம்பலக்கூத்தனை" (தேவார. திருநா ஐநதா. திருக்குறு கோயி.உ:௧.)

அம்பலகாரன்— 1. கள்ளரென்னுஞ் சாதியாரின் தலைவன். 2. சபையாருடையகட்டளையைப் பிரசித்தஞ்செய்வோன்.

அம்பலத்தாடி— சிவன். (உ-ம்.) "புனையுமம்பலத்தாடிபொற்பாதமும்போற்றி" (சூத. எக்கி. பூ. ௬௩: ௬௪.)

அம்பலத்தி— 1. தான்றிமரம். 2. தில்லைமரம்.

அம்பலம்— 1. சபை. (உ-ம்.) "எழைசொல் அம்பலமேறுமா" (வழக்.) 2. சித்திரகூடம். 3. சிதம்பரத்திற்சபை. (உ-ம்.) "அம்பலத்தெம்பரனருள்ளாலுணர்ந்து" (சூத. எக்கி. பூ. ௧:௧௦.) 4. பலருங்கூடத்தக்காணுமிடம். 5. வெளி.

அம்பலவன்— சிவன். (உ-ம்.) "குவளைக்களத்தம்பலவன்" (திருக்கோ. ௩௩.) [ஸம்ப்வ-சபை.]

அம்பலவாணன்— சிவன். (உ-ம்.) "ஆற்றேறுதும்பை யணிந்தாடுமம்பலவாணர்தம்மை" (பட்டணத்து.)

அம்பலவிருக்கம்— தில்லைமரம்.

அம்பலி— ஒருவாச்சியம். (உ-ம்.) "அம்பலிகணுவைமூமை" (இராமா. யுத். பிரமா. ௫.)

அம்பறாத்தூணி— அப்பறாத் தூணி.

அம்பா— 1. தாய். 2. துர்க்கை. [ஸம்பா.] 3. பசுகத்தறல். [ஸம்பா.]

அம்பாயம்— 1. அக்கப்பாடு. 2. பிரசவவேதனை.

அம்பாரம்— அடுக்கு, குவியல்.

அம்பாரி— அவுதா, யானைமேற்றவிசு. (இந்துஸ்.)

அம்பால்— தோட்டம்.

அம்பாலிகை— 1. உமை. 2. தருமதேவதை. 3. தாய். 4. தாய்போலன்புள்ளவள். 5. பாண்டுராசாவின்தாயாகிய ஒரு பெண். (உ-ம்.) "அம்பிகைக்குமம்பாலிகைக்கும்பதியெம்பியே" (பாரத. குருகுலச். ௪௨அ.) [ஸம்பாலிகா.]

அம்பாவனம்— சாபப்பட்சி.

அம்பி— 1. இறைகூடை. 2. ஓடம். (உ-ம்.) "ஆயிரமம்பிக்கு நாயகன்" (இராமா. அயோ. கங்கை. உஅ.) 3. நீரிறைக்குங்கயிறு. 4. காராம்பி. (சூ. ௬௧. எ. ௫அ.) 5. சல்குத்திரம். 6. தெப்பம். 7. மரக்கலம். 8. மிடா. [ஸம்பு-நீர். இ - விகுதி.]

அம்பிகாபதி— சிவன். (உ-ம்.) "அம்பிகாபதி பதத்தடைந்து" (சூத. சிவமான். ௭: அ.) [ஸம்பிகாபதி: ஸம்பிகா - உமை. பதி - நாயகன்.]

அம்பிகாவநம்— உமாதேவிக்குரிய ஒருசோலை. (பெரியபு திருக்குறி. ௫௬.) [ஸம்பிகா வந: வந - சோலை.]

அம்பிகாவல்லவர்— சிவன். (உ-ம்.) "அம்பிகாவல்லவர்செய்ய வடித்தாமரை" (பெரியபு. ஏயர். ௩உ௬) [ஸம்பிகா - உமை. வல்லவர் - நாயகர்.]

அம்பிகேயன்— 1. திருதராட்டிரன் என்னும் ஓரரசன். (உ-ம்.) "அம்பிகேயனமைச்சரோடெண்ணினன்" (பாரத திரௌபதி. ௧௦எ.) 2. முருகமூர்த்தி. 3. விநாயகர். [ஸம்பிகேய; ஸம்பிகா-உமை; ஏய - ஒருவ- வி.]

அம்பிகை— 1. உமை. (உ-ம்.) "அல்லுறழ்மிடற்றவனுமம்பிகையுமாக" (கந்தபு. தெய்வ. ௩உ.) 2. காளி. (உ-ம்.) "அந்தரி" (பார்.) 3. கோபதியென்பவரிடத்திலே சிந்தியாகமங்கேட்ட அணுசதாசிவருளொருவர். (சைவச. பொது. ௩௩எ. உரை.) 4. சைநமதத்தாருடைய தெய்வங்களுளொன்றாகிய தருமதேவதை. 5. தாய். 6. திருதராட்டிரன்தாயாகிய ஒருபெண். [ஸம்பிகா.]

அம்பிகைபாகன்— சிவன். (உ-ம்.) "அம்பிகைபாகற் போற்றி" (காஞ்சிபு. அந்தர்வே. ௩உ.) [ஸம்பிகா-உமை. பாக-பங்கினுடையவன்.]

அம்பியகமணை— தெப்பத்தின் உட்கட்டை. (உ-ம்.) "துறைபடியம்பியகமணையீனும்." (ஐங்குறு. ௧௬அ.)

அம்பினடி— 1. திப்பலி. (தைல.) 2. திப்பலிமூலம். (உ-ம்.) "திரிகடுகுவசம்போமம்பினடி சவ்வியஞ்சித்திரங்கோரைவிடயந் திரிபலை விளங்கமரகிசிதளவு கோலமந்திட்டிபாரங்கிருப்பை" (தைல. தைலவ. ௩௩: ௫௬. பக்.)

அம்பு— 1. அஞ்சுமானென்னு மூலாகமத்தை முதலிற்கேட்ட அணுசதாசிவருளொருவர். (சைவச. பொது. ௩௩எ. உரை.) 2. அஸ்திரம். (உ-ம்.) "எம்மம்புகடிவிடுது" (புறநா ௧.) 3. ஆடுதின்னாப்பாளை. 4. எலுமி

ச்சை. 5. குடிநீர். (உ-ம்.) "இருசந்தம்பில்வரும்பேசு" (தைல. பாயிர. நுo.) 6. சரகாண்டபாஷாணம். 7. தண்ணீர்முட்டான். 8. தளிர். 9. திப்பலி. (உ-ம்.) "அம்பேல மிங்கொலி" (தைல. தைலவ. கககூ.) 10. நீர். (உ-ம்.) "வழிச்செல்வோர்க்கு மோதுகானலினம்புமுறைமைபோல்" (ஞானவா. வைராக். சுக.) 11. பாதிரிமரம். 12. மூங்கில். 13. மேகம். 14. யானைத்திப்பலி. (உ-ம்.) "அட்டவர்க்கமம்பணிவோர்" (தைல. தைலவ. அகூ.)

அம்புக்குப்பி—அம்புக்குழைச்சு.

அம்புக்கூடு— அம்புவைத்திருக்குங்கூடு.

அம்புகிராதம்—முதலை. [அம்புகிராத: அம்பு - நீர். கிராத - துட்டத்தனமுள்ளது.]

அம்புகேசரம்— எலுமிச்சை. [அம்புகேஸர.]

அம்புசம்— 1. இடியேறு. 2. ஒருநாகம். (மிருகே. கஉ௦. பக்.) 3. தாமரைச்செடி. 4. நீரிற்பிறந்தது. [அம்புஜ: அம்பு - நீர். ஜ - பிறந்தது.]

அம்புசந்மம்— தாமரை. [அம்புஜந்ம.]

அம்புசாதம்—தாமரை. (உ-ம்.) "அத்தகு பகலோன்முன்னரலர்செயுமம்புசாத - மொத்தவர்" (திருவாத. திருப்பெ. சக.) [அம்புஜாத: அம்பு - நீர். ஜாத - பிறந்தது.)

அம்புசாதன்— பிரமா. [அம்புஜாத.]

அம்புசேந்மம்— தாமரை. [அம்புஜந்ம: அம்பு - நீர். ஜந்ம - பிறந்தது.]

அம்புதம்— 1. கோரைக்கிழங்கு. 2. நீர். 3. நீரைக்கொடுப்பது. 4. மேகம். (உ-ம்.) "அள்ளல்வேலையுமம்புதசாலமும்" (இராமா. மிதிலை. கூ௦.) [அம்புத: அம்பு - நீர். த௦ - கொடுப்பது.]

அம்புதி—சமுத்திரம். (உ-ம்.) "வேலுக்குத்தான் முன் வந்தவம்புதிமுரசமாயிற்றுகையால்" (கந்தபு. தேவகிரி. ங.) [அம்புதி: அம்பு - நீர். தி - உடையது.]

அம்புநிதி— சமுத்திரம். [அம்புநிதி: அம்பு - நீர். நிதி - பொக்கிஷம்.]

அம்புப்பிரசாதநம்— தேற்றாங்கொட்டை. [அம்புப்ரஸாதந: அம்பு-நீர். ப்ரஸாதந - சுத்தி. இக்கொட்டையை உரைத்துவிடுதலினாலே கலங்கனீர்தெளியுமென்பர்.]

அம்புபூரணரோகம்— சகசரோகம். (சீவ. ரட். உகச.)

அம்புயத்தவன்— பிரமா. [அம்புஜ; ஸ்த; ஸ; ஸ்த.]

அம்புயம்—1. இறைகூடை. 2. தாமரை. (உ-ம்.) "அம்புயத்தின்போதை" (நளவெண். கலிநீ. கக.) 3. நீரிற்பிறந்தது. 4. பதுமநிதி. [அம்புஜ: அம்பு- நீர். ஜ - பிறந்தது.

அம்புயன்—பிரமா. (உ-ம்) "அங்கதுதெரிந்துதொழுதம்புயனிசைப்பான்" (கந்தபு. தெய்வயா. உஉங.)

அம்புயாசனை — இலக்குமி. [அம்புஜாஸநா: அம்புஜ- தாமரைப்பூ. ஆஸநா - ஆசநமாகவுடையவள்.]

அம்புயாதம்—தாமரை. [அம்புஜாத: அம்பு - நீர். ஜாத௦ - பிறந்தது.]

அம்புயாதன்— பிரமா. [அம்புஜாத.]

அம்புயை— இலக்குமி. (திருவரங்கத்தந். ருசு.) [அம்புஜா.]

அம்புரம்—கதவுநிலையின் கீழ்ப்படி. [அம்பர.]

அம்புராசி— கடல். (உ-ம்.) "அம்புராசியைமான்மந்தாஞ்சுழற்றி" (பாரத. குருகுல. ச.) [அம்புராஸி: அம்பு - நீர். ராஸி - கூட்டம்.]

அம்புருகம்—1. தாமரை. 2. நீரில்வளரும் பூண்டு. [அம்புருஹ: அம்பு - நீர். ருஹ - பிறந்தது.]

அம்புரோகிணி—தாமரை. [அம்புரோகிணீ: அம்பு- நீர். ரோஹிநு-வளர்தல்.]

அம்புலி—சந்திரன். (உ-ம்.) "ஆங்குநோக்கினனகைத்தனனம்புலிக்கடவுள்" (உபதேச. சிவவிர. நுருக.)

அம்புலிப்பருவம்—பிள்ளைத்தமிழில் ஒருறுப்பு; அது: பிள்ளைக்குச் சந்திரனைக்காட்டி அப்பிள்ளையுடன் விளையாட அழைக்கும்பருவம்.

அம்புலிமான்—சந்திரன்.

அம்புலிமணி—சந்திரகாந்தக்கல்லு. (இரகு. சிதைவ. உங.)

அம்புலிச்சோதரி— இலக்குமி. (உ-ம்.) "அம்புலிச்சோதரியாடுகூத்தையும்" (ஒருது

றைக்கோ.) [ஸுவ்பே-ஷி - சந்திரன். ஸொ தரி-சகோதரி. பாற்கடலிலே சந்திரனோடு கூடப் பிறந்தமையால் வந்தபெயர்.]

அம்புவன்— அஞ்சுமானென்னும் ஆகமங் கேட்டவருளொருவன். (த. நி. போ. கஙஅ.)

அம்புவாகம்— முகில். [ஸுவ்பு-வாஹ: ஸுவ்பு - நீர். வாஹம் - சுமப்பது.]

அம்புவாகன்— நீர்கொண்டுசெல்வோன். [ஸுவ்பு-வாஹ: ஸுவ்பு - நீர். வாஹநு- கொண்டுபோவோன்.]

அம்புவாகிநி—1. இறைகூடை. 2. நீரிறைக்கும்பாத்திரம்.[ஸுவ்பு-வாஹிநி: ஸுவ்பு- நீர். வாஹிநி - தாங்குவது.]

அம்புவாசிநி— 1. எலுமிச்சை. [ஸுவ்பு வாஸிநி: ஸுவ்பு-நீர்.வாஸிநி-வசிப்பது.]

அம்புவி— பூமி. (உ-ம்.) "அம்புவியெயினர்போற்றும்வள்ளியை"(கந்தபு. வள்ளி.க.)

அம்புறைதூணி— அம்புக்கூடு.

அம்பை— 1. உமாதேவி. (உ-ம்.) "அம்பையொருபாகா" (சூத. சிவமான். உ: கக.) 2. காசிராசன் புத்திரிகளுளொருத்தி.(உ-ம்.) "அமரின்றதறிந்துழியம்பையை" (பாரத. குருகுல. கஉஎ.) 3. தாய். 4. துர்க்கை. 5. மூத்திரக்கிரிச்சரம். (இராசவைத்.) 6. வெட்டிவேர். [1, 2, 3, 4, 6. ஸுவா.]

அம்போசம்— 1. தாமரை. 2. நாரைப்பறவை. 3. நீர்ப்பிறந்தது. [ஸுமெஹாஜ: ஸுஹஸ் நீர். ஜம் - பிறந்தது.

அம்போசயோநி— பிரமன். [ஸுமெஹாஜ யொநி: ஸுமெஹாஜ - தாமரை. யொநி - பிறப்பிடமாகவுடையவன்.]

அம்போநம்— முகில். [ஸுமெஹாத: ஸுஹஸ் - நீர். த - கொடுப்பது.]

அம்போதரங்கம்— கலிப்பாவிற்குரிய உறுப்புக்கள் ஆறனுளொன்று; அஃது: அம்போதரங்க வொத்தாழிசைக்கலிப்பாவிலே தாழிசைக்குந் தனிச்சொற்கும் நடுவிலும், வண்ணகவொத்தாழிசைக்கலிப்பாவிலே அராகத்திற்குந்தனிச்சொற்குநடுவிலுங் கரைசாரக் கரைசார ஒருகாலைக் கொருகாற் சுருங்கிவரும் நீர்த்திரைபோல நாற்சீரடியும், முச்சீரடியும், இருசீரடியுமாய்க்குறைந்து குறைந்துபேரெண்,அளவெண்,இடையெண்,சிற்றெண்ணென்னும் நான்கு வகுப்பாய் வரும்.(உ-ம்.)"மன்னியவீரடியிரண்டுமோரடியானன்கு - மூளமலிசிந்தடியெட்டுங்குறளடியீரெட்டுமொருங்கியல்பேரெண் சிற்றெணிடையெண்ணேளவெண் - ளமலியம்போதரங்கமெனும் பெயரானிலவும்"(வீரசோ.யாப்பு.கப.உரை.) [ஸுஹஸ் - நீர். தரங்கம் - திரை.]

அம்போதரங்கவோத்தாழிசை—
அம்போதரங்கவோத்தாழிசைக்கலிப்பா

ஒருவகைக்கலிப்பா; அது: தரவு, தாழிசை, அம்போதரங்கம், தனிச்சொல், சுரிதகம் என்னும் ஐந்துறுப்பும் பெற்றுவருவது. (வீரசோ. யாப்பு. கக. உரை.)

அம்போதரம்— முகில். [ஸுமெஹாயுர: ஸுஹஸ் - நீர். யுரம் - தரிப்பது.]

அம்போதி—1.கடல். (உ-ம்.) "அம்போருகசதகத்தன்னம்போலுப்பொழிய - அம்போதியார்ந்தெழிலிநல்கமிழ்தம்." (அரிச்சந்திர வெண்.அர்சா. கூ.) [ஸுமெஹாயி: ஸுஹஸ் - நீர். யி- உடையது] 2. காற்று. 3. பாட்டின்பொருள்.

அம்போநிதி—சமுத்திரம். [ஸுமெஹாநியி: ஸுஹஸ் - நீர். நியி - உடையது.]

அம்போராசி— சமுத்திரம். [ஸுமெஹா ராஸி: ஸுஹஸ் - நீர். ராஸி - கூட்டம்.]

அம்போருகம்—1. தாமரை. (உ-ம்.) "அம்போருகச் சேக்கைநாடிவந்து" (காஞ்சிபு. நாட். கக.) 2. நீரிற்பிறந்தது. [ஸுமெஹா ருஹ: ஸுஹஸ் -நீர். ருஹம்-பிறந்தது.]

அம்போருகன்— பிரமா. (உ-ம்.)"அம்போருகன்மால்பணி" (தாயு. பாய. உ.) [ஸுமெஹா ருஹ.]

அம்போருகை—இலக்குமி. (உ-ம்.) "அல்லியம்போருகை யன்னனின்" (வாணன்கோ. உOO) [ஸுமெஹாருஹா.]

அம்ம—1. ஓர்இசையச்சொல். (உ-ம்.) "மெய்ம்மையி னல்கிய விதியினோர்க்கியா - னம்மசெய்கின்றதோராளவுண்டோவென்றான்" (கந்தபு. அசுரர்தோற். கச.) 2. ஒருரையசைச்சொல். (உ-ம்.)"அதுமற்றம்ம"(நன்.இடை. கக. உரை.) 3. கேட்பாயாக எனப் பொருள்படும் ஓரிடைச்சொல். (உ-ம்.) "அம்மவாழிதோழி" (நன். இடை. கக. உரை.)

அம்மகோ — ஓரிரக்கக்குறிப்புச்சொல். (உ-ம்.) "அம்மகோவெனும் விழுமழும்" (மதுரைக்கல. கச.)

அம்மட்டி—கொட்டிக்கிழங்கு.

அம்மணம் — 1. அசப்பியவார்த்தை. 2. சோரமார்க்கம். 3. நிருவாணம்.

அம்மணி — தனக்குப் பந்துவல்லாதபெண்ணை யழைக்கும்போது பிரயோகிக்கப்படும் ஒருமரியாதை வார்த்தை. (மநு.க:கஉக. உரை.) இது அம்மனே என்பதன்மரூஉ. (வழக்.)

அம்மம்—1. பெண்களின்முலை. (உ-ம்.) "கொம்மையம்மமசைவுற" (இரகு. நாட்டு. ௬௦) 2. முலைப்பால். (உ-ம்.) "அன்னேயுன்னை யறிந்துகொண்டேனுனக்கஞ்சுவனம்மந்தரவே" (நாலாயிர. பெரியாழ். ௩.) [ஆகுபெயர்.]

அம்மம்ம—மிக்கவியப்பைக் குறிக்கும் ஓரிடைச்சொல். (உ-ம்.) "அம்மம்மவெல்லவெளிதோ" (தாயு. சச்சி. ச.)

அம்மல்—1. சமியாக்குணம். 2. மந்தாரம். 3. மூட்டம். 4. விறைப்பு.

அம்மவம்ம — மிக்க வியப்பினைத் தரும் ஓரிடைச்சொல். (உ-ம்.) "அம்மவம்மகடவுண்மகனுனை நின்னுலறிவுற்றேன்" (ஞானவா. சிகித்து. கந௦.)

அம்மவோ — ஓரிரக்கக் குறிப்புச்சொல். (உ-ம்.) "அம்மவோவ்தியேயென்னும்" (கந்தபு. அக்கினி. ககஅச.)

அம்மன் — தாய்.

அம்மனை—1. அம்மானை. (உ-ம்.) "அம்மனைவேண்டுவதளித்தான்" (இராமா. உத்தர. அசுவமே. கஉக.) 2. அவ்வீடு. (உ-ம்.) "அம்மனைக்கம்மனைவழங்கும்" (பாரத. வாரணா. கஉரு.) 3. நெருப்பு. 4. மாதா. (உ-ம்.) "அன்புடையம்மனையததனிங்கிவர்" (கந்தபு. சயந்தன். புல. உங.)

அம்மா — 1. ஓர் அசைச்சொல். (உ-ம்.) "அத்திரத்திருந்தைத் தேரோனுக்கினனிமைப்பினம்மா" (பாரத. திரௌ. அ.) 2. ஓரிசயச்சொல். (உ-ம்.) "சும்மாவிருசொல்லறவென்றலுமே - அம்மா பொருளொன்றுமறிந்திலனே" (கந்தரநு. கஉ.) 3. ஓரிரக்கச்சொல்-ஐயோ.(உ-ம்.)"ஆவம்மாவம்மா வென்னம்மா வகன்றனையே" (சிந்தா. கஙக. உசஅ.) 4. அம்மாளின் விளிப்பெயர். 5. மாவிலிங்கை. (இராசவைத்.)

அம்மாச்சி—1. தாய். 2. தாயைப்பெற்றபாட்டி. (வழக்.)

அம்மாய்—தாயைப்பெற்றவள். (அம்மையின் ஆய்.)

அம்மாள்—1. தாய். 2. தாய்போல மதிக்கப்படுகிறவள்.

அம்மாறு—பெருங்கயிறு. (வழக்.)

அம்மான்—1. அழகியபெரியோன்.(உ-ம்.) "திகழத்திகழுமடிமுடியுங் காண்பான்கீழ்மேலயனுமாலும்- அகழப்பறந்துங்காணமாட்டாவம்மான்" (திருவாசக. புணர்ச்சிப்ப. ரு.) 2. சிவன். (உ-ம்.) "அன்னவர்செய்யுஞ்சிருட்டியுமம்மானருளினுற் றன்வயத்தாக்கி" (சூத. சிவமான். க௦: கஎ.) 3. தகப்பன். (சூ. நிகண். உ: எரு.) 4. பெண்கொடுத்தமாமன். (உ-ம்.) "உரியவம்மான்மாதுலன்றான்" (கூர்மபு. வியாதர்கரும. க௦.)

அம்மான்பச்சரிசி— சித்திரப்பாலாவிப்பூண்டு. [இது அகராதிகளில் "அம்மாபச்சரிசி" என்றும், "அம்மாம்பச்சரிசி" என்றும், எழுதிச் "சிற்றிலைப்பாலாவி" "ஸ்ரீதேவியார்செங்கழுநீர்" எனப் பொருளுங் கூறப்பட்டது.]

அம்மானை—1. கலம்பகமென்னும் பிரபந்தத்தின் பதினெட் டுறுப்புக்களுளொன்று; அது: மகளிர் அம்மனையாடும்போது பாடுவதாகக் கருதிப்பாடப்படுவது. (இலக்கணவி. அகஉ.) 2. மகளிர் அம்மனையெறிந்துவிளையாடும் விளையாட்டு. (உ-ம்.) "ஆகங்கலந்தொருவர்பாகம்பகிர்ந்த பெணம்மானையாடியருளே" (மீனாட்சியம். பிள். அம்மானை. க.)

அம்மி—1. கறிச்சரக்குச் சாந்து முதலியன அரைக்குங்கல்லு. (உ-ம்.)"உரலம்மியிலோங்கு முலக்கையில்" (காசிகாண். கற்பிலக். உசு.) 2. மாமி.

அம்மிக்கல்— 1. அம்மியில் அரைக்குங்குழவி. (பிங்க. கசுகசு.) 2. அம்மி. (உ-ம்.)"பெருத்தவம்மிக்கன் முதலியதாங்கிப்பேணிவிற்றுண்பனேவுணர்வீர்"(சூத. ஞான. கக:உஎ.)

அம்மியம்— 1. கள். 2. காளம். 3. சிறுசிங்கம்.

அம்மியை—மிண்டுத்தனம்.

அம்மிரம்—மாமரம். [ஸ.]

அம்மிலசாரம்—காடி. [ஸ: ஸ-புளி, ஸாரம்.]

அம்மிலம்—புளிப்பு. [ஸ.]

அம்மிலவிருட்சம்—புளியமரம். [ஸ: ஸ- புளி. வ்ருக்ஷ மரம்.]

அம்மிலிகா— 1. புளிப்பு. 2. புளியமரம். [அம்லிகா.]

அம்முதல்—1. அடைதல். 2. அணுப்புதல். 3. சூரியனொளிமறைக்திருண்டமந்தாரம். 4. தலைகனத்தல், விறைத்தல்.

அம்மெனல்— ஓரநுகாரண ஒசை. (உ-ம்.) (சூ. நிகண். பத். ௪௮.)

அம்மை—1. அமைதி. (உ-ம்.) "அம்மையஞ்சொல்லார்" (சிந்தா. முத்தி. ௫௩௩.) 2. அழகு. (பிங்க. ௧௯௪௪.) 3. உமாதேவி.(உ-ம்.) "அரன்விடைபுரிதலுமம்மையாங்கவன்"(கந்தபு. உமைவரு. ௧௪.) 4. கடுக்காய். 5. செய்யுட்குரிய எண்வகை வனப்புக்களுளொன்று; அது: "அறிவினுருவதுண்டோபிறிதினோய்- தங்நோய்போற் போற்றுக்கடை" என்பதிற்போலச்சில அடியாகிச்சிலவாய மெல்லிய சொற்களால் ஒள்ளியபொருண்மேல் இனிதுதொடுக்கப்படுவது. (உ-ம.) "அம்மைதானே யடிநிமிர்வின்றிச்சின் மென்மொழியாற் சீர்புனைந்தியாத்தலும்"(இலக்கணவி.எ௫௪.) [அமைதிப்படுத்தலி லம்மையெனப்பட்டது.] 6. சைநகுலதெய்வமாகிய தருமதேவதை. (சூ. நிகண். ௧: ௩௧.)7. சைநசமயத்துத் தவப்பெண். (உ-ம்.) "நந்தியபிண்டிவாமனன்னெறிவழாதுநோற்பாள் - கந்தியேயவ்வையம்மைகந்தியே கவுந்தியென்ப" (சூ. நிகண். உ: ௬உ.) 8. தாய். (உ-ம்.) "அம்மையோடப்பனுநி" (சி. சி. பாயிர. "அறுவகை" நிரம்ப.) 9. மசூரிகைநோய். [வழக். அம்மையின் விளையாட்டென்பதுபற்றிவந்தபெயர்.]10. முற்பிறப்பு. (உ-ம்.) "அம்மையாற் றவங்கடாங்கி" (சூளா. மந்தி. ௧௧௮.) 11. வருபிறப்பு.(உ-ம்.) "அம்மையில்வாழ்விடையறுமுருமே" (கந்தபு. தெய்வ. ௪௧) 12. சுவர்க்கநரகங்களாகிய மறுமை. (சி. சி. உ: ௧௧. ஞாநப்.)

அம்மைகுண்டலி— தாயாகிய குண்டலிசத்தி. (தாயு. தேசோ. ௧.)

அம்மையப்பர்–சிவன்.(பெரியபு.திருஞாந. ௧௦௦அ: உரை.) (அம்மையுமப்பருமாயான்மகோடிகளைப்பெற்றமையால் வந்தபெயரென்பர். தாயுந்தந்தையுமானவர்.)

அம்மையார்கூந்தல்— கொடியார் கூந்தலென்னும்பூண்டு.

அம்மைவனப்பு— செய்யுட்குரிய எண்வகைவனப்புக்களுளொன்று;"அம்மை"5.பார்.

அம்மைவார்த்தல்— மசூரிகை நோய்வரச்செய்தல், அம்மைப்பாலூற்றல்.

அம்நுதர்— சந்திரகலைகள்பதினாறிலொன்று. (சி-வி. சரி. எ. தாற்.)

அம்வந்தி—நீரிழிவு. (ம. தி. ௩உ. உரை.)

அமங்கலம்— 1. ஆமணக்கு. 2. அசுபகாரியம். (உ-ம்.) "மங்கலமாமூனை வழுத்தாதார்தங்களுக்கு" (காஞ்சிபு. அநேகத. அ.) [ஸம்ஸ்க்ருதம்: அ; மங்கலம் - சுபம்.]

அமங்கலி—கைமை. [அ; மங்கலீ - மங்கலமுடையவள்.]

அமங்கலை—கைமை. [அ; மங்கலா - மங்கலமுடையவள்.]

அமச்சன்—1.மந்திரி. 2. வியாழன்.(உ-ம்.) "இந்துசூரியரை - யமச்சனொழியப்புதன்சநிநோக்கில்" (விதாந. கர்ப்பா. ௬.)

அமச்சு— அமைச்சு.

அமஞ்சி—வேகாரி, கூலிகொடாமற் செய்விக்கும் வேலை. [அந்நியபாடைச்சொல்.]

அமட்டு— 1. உறுக்குகை. 2. நிலைப்படாதசைதல்.

அமட்டுகை— } 1. அதட்டுதல், உறுக்கு
அமட்டுதல்— } தல். 2. சிக்குப்படுத்தல். 3. நிலைப்படாதசைதல்.

அமடு—1. சிக்குதல். (உ-ம்.)"மாதராரொளிமளிபீடத்திலடு படுவேனுக்கு" (திருப்பு. ௩௮௪.)

அமண்—1. சமணசமயம். (உ-ம்.) "தீயமண்கையர்கள் பிணித்து"(கந்தபு. கடவுள்வா. ௨௧.) 2. சமணர். (உ-ம்.) "வல்லமண்விடுத்தவேழம்" (திருவிளை. அங்கம். ௩)

அமண்டம்— ஆமணக்கு. [ஸம்ஸ்.]

அமணம்— 1. இருபதினாயிரம்பாக்கு. 2. நிர்வாணம். ["பதினாயிரங்கொட்டைப்பாக்காயிருந்தனள் பைந்தொடியே" என்னுங் கவிக்கூற்றிற் பதினாயிரங் கொட்டைப் பாக்கென்ப தரையமணமெனப் பொருள்பட்டமைத்துகிலின்றியிருந்தாள் எனச்சிலேடார்த்தமாய் நின்றது.]

அமணர்—1. சமணர். (உ-ம்.) "ஆமணர்களிட்டதீத்தழல்"(பெரியபு. திருஞாந. எ௦௪.) 2. மதிகேடர்.

அமத்திரம்—1. உண்கலம். 2. பகைவரைமேற்கொள்ளல். 3. மண்முதலியவற்றாலாய பாத்திரம். 4. வலிமை. [ஸம்ஸ்.]

அமதம்—1. அறியப்படாதது. 2. காலம். 3. சம்மதமின்மை. 4. நோய். 5. மரணம். [ஸம்ஸ்.]

அமதி—1. அறிவின்மை. 2. கபடஞ்செய்

வோன், துட்டன். 3. காலம். 4. சந்திரன். [1, 2. அ; மதி-அறிவு. 3, 4. அம-போதல். தி-ஒரு வ. வி.]

அமந்தம்— 1. உக்கிரமானது. 2. ஒருமரம். 3. காரியசாமர்த்தியம். 4. சாகசிரதை. 5. மந்தமில்லாமை. [அமந்த.]

அமந்தலம்—செங்கத்தரிச் செடி.

அமந்தி— ஒருமரம்.

அமநஸ்கம்—1 இராசயோகத்திலொருவிதம்; இது: மனமிறந்து நிற்பது. (த. நி. போ. நஎச.) 2. கவனமில்லாதது. 3. புத்தியில்லாதது. 4. மனத்தைக்கடந்தது. (உ-ம்.) "அதற்கப்பால் அமநஸ்கரானபரசிவமிருக்கிறார்" (சித். சாரா. ஞானபாத. க. கூ. தாற்.) 5. மனத்தையடக்கியாளுந்திறமில்லாதது. [அமநஸ்க.]

அமநசன்—மனமுடையனல்லாதவன். (வாசுதே. ககூசு.) [அமநஸ.]

அமநி—தெரு. [அமநி: அம-போதல். நி-ஒரு வ. வி.]

அமநோயோகம்— கவனமின்மை. [அமநோயோக: அ; மநோயோக- கவனம்.]

அமம்—நோய். [அம.]

அமயம்—காலம். (உ-ம்.) "ஆனதோரமயந்தன்னில்" (கந்தபு. திருக்கல்.எஉ.)[அமய.]

அமர்— 1-3. அமரென்னேவலுந் தெரிநிலை வினைப்பகுதியும் வினைத்தொகையும். 4. நோயின்திகரிப்பாலாகிய உக்கிரம். 5. மதில் 6. யுத்தம். (உ-ம்.) "பூழிபுனைந்தவர்பாலகனேவமர்புரிவானே" (கந்தபு. வரவுகே. கஅ.) 7. அமைதி. (திருப்பு. ருகசு.) 8. விருப்பம். (ஐங்குறுநூறு.)

அமர்க்களம்—யுத்தகளம். (உ-ம்.) "இடைந்திலாவமர்க்களத்திடை" (இரகு. திக்கு. கஎஉ.) [அமரீ - யுத்தம். கல - இடம்.]

அமர்த்த— 1. பொருந்திய. (கலி. ருஎ.) 2. போர்செய்த. (கலி. ருஎ.) 3. விரும்பிய. (கலி. ருஎ.)

அமர்த்தல்— 1. அமர்செய்தல். 2. இருத்துதல். (உ-ம்.) "அவாஞோர்குடிபுகவமர்த்திவிட்டசுவாமீ" (திருப்பு. சஅஎ) 3. பொருதல், மாறுபடுதல். (உ-ம்.) "பேதைக்கமர்த்தன கண்" (வள். கoஅச.)

அமர்தல்— 1. இருத்தல். (உ-ம்.) "திருப்பரங்குன்றமர்சேயைப் போற்றுவாம்" (கந்தபு. கடவு. கஉ.) 2. ஒப்பாதல். (உ-ம்.) "வாளமர்கண்மடவாய்" (திவாந. குறைகு. நஅ.) 3. நெளாதடங்குதல். (உ-ம்.) "காற்றமர்ந்தது"(வழக்)4.திருத்திப்பட்டமர்தல்.(உ-ம்.) "புகழுநர்க்கரசுருமுதுங் கொடுப்பினுமமரா நோக்கமொடு" (மலைபடு. எசு.) 5. பொருந்துதல். (உ - ம்.) "வள்ளியொடு நகையமர்ந்தன்றே" (திருமுருகா. கoஉ.) 6. பொலிவு. (திவாகா. கக.) 7. மிகுதி. (திவாகா. கக.) 8. வாய்த்தல். (உ-ம்.) "அவனுக்குச்சேவகமமர்ந்தது" 9. விரும்புதல். (உ-ம்.) "அகனமர்ந்தீதலினன்றே" (வள். கஉ.)

அமர்ந்தான்—மேற்கொண்டான். (புறப். பக். கூ.)

அமர்நீதியார்—அறுபத்துமூன்று நாயன்மாருளொருவர். (பெரியபு. அமர்நீதி. உ.)

அமர்வித்தல்— தங்கச்செய்தல். (உ-ம்.) "தொட்டிலமர்வித்தார்"(பெரியபு.திருஞாந. சக.)

அமர— 1. இருக்க எனப்பொருள்படும் ஒருவினையெச்சம். (உ-ம்.) "குமரவேளொருபுடையமர" (கந்தபு.சரவண.உரு.) 2. ஒருவகையுருபு. (தொல். பொரு. உஅசு. உரை.)

அமரக்காரன்—ஆயிரங்காலாட்களுக்குத்தலைவன்.

அமரகண்டம்— நருமதையாறு பாயும் ஓரிடம். (கூர்மபு. நருமதை. ச.) [அமரகண்ட.]

அமரகோசம்— ஆரியபாஷையிலே அமரசிங்கர் என்பவர்செய்த ஒரு நிகண்டு. [அமரகோஶ: அமர; கோஶ - சொற்பொருள் அறிவிக்கும் நூல்.]

அமரசிங்கம் — அமரசிங்கர் செய்த நிகண்டு. (பி. வி. சஉ. உரை.) [அமரஸிம்ஹ.]

அமரசிங்கர் — அமரகோசஞ் செய்தவர்; இவர்: சைநசமயத்தவர்; விக்கிரமாதித்தனுடைய சபையிலிருந்த ஒன்பது வித்துவான்களுளொருவர்.

அமரசிலைக்கெந்தகம்— ஒருவகைக்கெந்தகம்; அது: முப்பத்திரண்டுவகைப்பாஷாணங்களுளொன்று.

அமரசிலைக்கெந்தம்— அமரசிலைகெந்தகம்.

அமரத்துவம்—அழிவின்மை. [அமரத்வ: அமர - அழிவில்லாத. த்வ - தன்மை.]

அமரதை—அழிவின்மை. [அமரதா: அமர-அழிவில்லாத. தா - வ-வி.]

அமரம்— 1. அமரசிங்கராற்செய்யப்பட்ட சம்ஸ்கிருத நிகண்டு. 2. அரசனுலொரு

வனுக்குக்கொடுக்கப்படும் ஊர்வருவாய். 3. அழிவின்மை. 4. ஆயிரங்காலாட்களையாளுகை. 5. எலும்புக்குவை. 6. ஒருவிதக்கண்ணோய். (உ-ம்.) "விழியருகலொடு நீர்க்கம்மலும் அமரமுங்கண்ணோயுமேகவழறலைநோயுமாமையஞ்சிறகாமரோ" (தைல. தைலவ. ருச. பக். சஅ.) 7. சுத்தம். ["அமலம்" என்பதன்றிரிபுபோலும்.] 8. தோணியின்பின்பக்கம். ["அபரம்" என்பதன்றிரிபு.] 9. பாதரசம். 10. பொன். [1, 3, 5, 9, 10. அமர.]

அமரர்— 1. தேவர். (உ-ம்.) "அடைந்தவியுண்டிமெமரர்யாவரும்" (கந்தபு. கடவு. கக.) [அ - எதிர்மறை. மர - அழிபவர்.]

அமரபதி— 1. இந்திரன். 2. கடவுள். 3. தேவலோகம். 4. ஒருபருப்பதம். (சி-வி. சரி. உச.) [அமரபதி: அமர-தேவர். பதி-தலைவன், நகர்.]

அமரயோநி—வித்தியாதராதிபர். (உ-ம்.) "அமரருமமரயோநிகளும்" (பாரத. பதினே. உசடு.) [அமரயோநி.]

அமரலோகம்— தேவலோகம். (உ-ம்.) "அமரலோகமதாளுடையார்களே" (தேவார. திருக்கோழம். சா. திருநாவு.) [அமரலோக.]

அமரன்— 1. அமரசிங்கன் என்ற ஆசிரியன். 2. தேவன். (உ-ம்.) "தேவர்வணங்குமமரன்" (தேவார. திருவா. க. சுங.) [அமர.]

அமராங்கனை — தெய்வப்பெண். [அமராங்கநா: அமர- தேவ. அங்கநா- பெண்.]

அமராசயம்—கருப்பை.

அமராடல்—போராடல். (உ-ம்.) "அந்தன்சேய்களுக் காயமராடுநின்- மைந்தன்றானுமடிந்தனன்" (சேது. இராமதீ. ருச.)

அமரர்பகை—தேவகங்கை. [அமராபகா: அமர - தேவர். ஆபகா - நதி.]

அமராபதம்-தேவலோகம்.[அமராபதம்: அமரா; பதம் - இடம்.]

அமரார்— பகைவர். (உ-ம்.) "அமராரை வெல்ல வல்லான்" (வாணன்கோ. அ.)

அமராவதி—தேவலோகம். (உ-ம்.) "அற்பமென்னவமராவதியையே"(பாரத.வாரணா. ககக.) [அமராவதீ: அமர- தேவர். வதி- வி.]

அமரி—1. அமிர்தம். (உ-ம்.) "அமரிவெளிக் - கதிமெனப்பீளுகென்றாள்" (சேதுபு. கத்தாரு. உஅ.) 2. இந்திரனுலகம். 3. கற்றாழை. (மலையகராதி.) 4. துர்க்கை. (உ-ம்.) "பலர்தொழுமமரி" (சிலப். வேட்டு. சுசு. கள.) 5. தெய்வப்பெண். 6. மூத்திரம். 7. விஷம். [1, 2, 3, 4, 5. அமரீ.]

அமரிக்கை—அமைதி.

அமரிதம்—கடுக்காய்.

அமரிய—"பொருத" எனப்பொருள்படும் ஒருபெயரெச்சம். (உ-ம்.) "அமரியசேனை."

அமரியம்—1. குருந்தமரம். 2. சண்பகப்பூ. 3. சண்பகமரம்.

அமரியுப்பு—ஒருவகையுப்பு. [இது மூத்திரத்திலிருந்தெடுக்கப்படுவது. அமரி - மூத்திரம், உப்பு.]

அமருடணம்—கோபமுள்ளது. [அமர்ஷணம்; அ; த்ருஷ - தாங்குதல்.]

அமருதல்— 1. அயர்தல். 2. விரும்புதல். (உ-ம்.) "ஆத்திசூடியமர்ந்ததேவனை" (ஆத்திசூடி. காப்பு.) 3. அடங்குதல்.

அமருலகம்—தேவுலகம். (உ-ம்.) "அமருலகந்தம்மடைந்தார்க்கு"(தேவார.திருச்சாய். க. திருநாவு.) [அமர; உலகம். "அமாருலகம்" என்பதன்மரூஉ.]

அமருலகு—தேவுலகம். (உ-ம்.) "அமருலகுதானின்னதடியடைந்ததென்கோ"(சூளா. துறவு. சுக.) [அமர; உலகம். அமாருலகென்பதன்றிரிபு.]

அமரேசன்—1. இந்திரன். (உ-ம்.) "என்னுந்துணையிலமரேசனை யெங்கைநோக்கி" (கந்தபு. தெய்வ. கக.)2. குய்யகாட்டகரிலொருவன். (வி-ணி. உஎக.) 3. சிவலோகத்திலே உத்தரதிசையோலக்குஞ்சேவிக்குமுக்கியதேவர்களிலொருவன். (வி-ணி. உசுச.) 4. பிருகஸ்பதியாகிய தேவகுரு. (உ-ம்.) "அடைவிலைகல்வினைக்கென்றமரேசனறைந்தனனே" (விதான குணகு. நள.) [அமரேசன்: அமர - தேவர். ஈசன் - தலைவன்.]

அமரேசுவரம் — அமரேசபுவனம். இது: அப்புதத்துவத்திலிருக்கிற எட்டுப்புவனங்களுளொன்று. (சிவபரா. கருக.) [அமர; ஈசுவர.]

அமரேசுவரன்— இந்திரன். [அமரேச்வர: அமர- தேவர். ஈச்வர - தலைவன்.]

அமரேந்திரமுநி— சைநமுனிவரிலொருவர். (த. சி. போ. உஎஎ.) [அமரேந்த்ரமுநி.]

அம்மை—1. அறுகு. 2. கருப்பை. 3. கொப்பூழ்க்கொடி. 4. தேவலோகம். 5. வீட்டுத் தூண்.

அமரோசை—தக்கோசை. (உ-ம்.) "ஆரோசை யமரோசைகளினமைத்தார்" (பெரியபு. ஆனாய. உச. உரை.)

அமரோர்— தேவர். (உ-ம்.) "மாலயனோடமரோரிளையோனெனவே மறையோத" (திருப்பு. ருகஎ.)

அமல்—1-3. அமலென்னேவலுந் தெரிநிலைவினைப்பகுதியும வினைத்தொகையும். 4. மேல்விசாரணை. [இது: அராபிச்சொல்.]

அமல்தார்— வரிப்பணம்வாங்கும் ஊருத்தியோகஸ்தன். [அராபிச்சொல்.]

அமலகம்—நெல்லிமரம. [ஆமலகமென்பதுமுதற்குறுகியது.]

அமலகமலம்—1. சோசலம். 2. மலினமற்றநீர். [அமல - சுத்தம். கமல - நீர்.]

அமலசாந்தம்--1. சுண்ணும்பு. 2. பசுச்சாணி. [அமல- சுத்தம். ஸாந்த - சாந்து.]

அமலம்— 1. அழகு. (உ-ம்.) "இருக்கமலமலா" (திருவாளை. கோச்செங். ரு.) 2. அழுக்கின்மை, புநிதம். (உ-ம்.) "ஆலமாமிடற்றோற்கானவமலமாம்பொருளையேற்று" (கந்தபு. திருக்கல். அரு.) 3. அறிவு. (பிங்க. ருορகூக.) 4. சிதம்பரம். (கோயில். வியாக். உக.) 5. மரமஞ்சள். 6. மலத்திறைற்பந்திக்கப்படாமை. ("அமலன்" பார்.) 7. வெண்மை. [வ, அமல.]

அமலர்—1. சிவன். (உ-ம்.) "ஏற்றமலர்க்கேகமுக்காலரைகா லென்ன விசையு மண்டலங்களிரசித நாடோறும்" (தைல. தைலவ. கருஎ.) 2. மலம் நீங்கினவர். (உ-ம்.) "அநந்தேசுவராதிகள் சிவனால் அமலரானதுபோல" (சி. சி. உ: க. சிவாக்.) [வ, அமல.]

அமலல்—அதிகரித்தல், மிகுதல். (உ-ம்.) "தருக்கமலமலமென்ன" (திருவாளை. கோச் ரு.) 2. செருதல். (உ-ம்.) "அமலலகலமகலல்பய" (தண்டி. சொல்ல. கூ௫.) 3. நெருங்கல். (உ-ம்.) "வேயமலகல்லறை" (கலித்தொகை. சரு.) 4. பொருந்தல். (உ-ம்.) "அமலும் வேறிடமளவையின்றியே விமலரூபமாய்விரவும" (சேதுபு. சிவதீர்த்த. எ0.)

அமலன்—கடவுள். மலத்திறைற்பந்திக்கப்படாதவன்.

அமலா—நெல்லிமுள்ளி.

அமலாவத்தை— நிர்மலான்மாவின் நிலைமை. அது: சாக்கிரம், சொப்பநம், சுழுத்தி, துரியம், துரியாதீதமென ஐந்துவகைப்படும். அவற்றுள்: பீசத்தையுச்சரித்தல் சாக்கிரம்; விந்துபரிக்கிரகஞ்சொப்பநம்; நாதசம்யோகஞ்சுழுத்தி; சத்திசமாகமம் துரியம்; பரசிவதேசசில் சாந்தமாய் இலயிப்பது துரியாதீதம். (சி-லி. யோக. அ: உரை.)

அமலுதல்—அமலல்.

அமலை— 1. இலக்குமி. 2. ஒலி. (உ-ம்.) "அறைகழல்வீரரார்க்கு மமலையை யவிக்குமன்றே" (நைட. த. நாட்டு. தரு.) 3. கட்டி. 4. கடுக்காய். 5. காளி. (உ-ம்.) "அந்தரியாமளை யமலையரலகாலியம்பிகை" (அரிச்சந். பாயிர. எ.) 6. கொப்பூழ்க்கொடி. 7. சுத்தம், அழுக்கின்மை. (உ-ம்.) "அங்கரணிவுறுமமலைவானவர் - பொன்னகரியல்பெனப்பொலியுமேல்வையில்" (இராமா. மந்தரை. ருக.) 8. சுத்தமுடையவள். (உ-ம்.) "நீயமலையென்றும்" (இராமா. சீதைவ. கூஉ.) 9. சோறு. (சூ. நிகண். சு: உஉ.) 10. திரட்சி, மிகுதி. (உ-ம்.) "அட்டவேந்தன் - வாளோராடுமமலையும்" (தொல். பொரு. எஉ.) 11. திரளை. (உ-ம்.) "பெருஞ்சோற்றமலை" (மணிமேக. கஎ:உ.) 12. நெல்லிமரம். 13. பார்வதி, சிவசத்தி. (உ-ம்.) "அமலைக்குவியாபகனேயரன்" (சிவதரு. சிவஞானயோக.உஉ.) 14. கூத்து. (புறப். பக். சுசு.) [1, 5, 6, 7, 8, 12, 13, அமலா.]

அமவாசி— அமாவாசி. (உ-ம்.) "தென்புலத்தோர்க்கூட்டிடுதற் கமவாசி" (கூர்மபு. சிராத்த. க.)

அமளி—1. ஆரவாரம். [வழக். "அமலை" யென்பதன்மரூஉப்போலும்.] 2. மக்கட்படுக்கை, மெத்தை. (உ-ம்.) "ஐந்துமூன்றடுத்தசெல்வத்தமளிமூன்றியற்றி" (சிந். காந். ருசசு.) 3. பள்ளியறை. 4. மிகுதி.

அமளை—கடுரோகிணிப்பூண்டு.

அமறல்—மிகுதி.

அமன்— பன்னிருசூரியர்களுள் ஒருவனாகிய அரியமன். (உ-ம்.) "உன்னுமமனுளர் விட்டுணு" (மச்சபு. காசிபர். ரு.)

அமன்று—நெருங்கின.

அமாத்தியன்—1. ஆலோசனை சொல்வோன். 2. மந்திரி. [அமாத்ய: அமா-கிட்ட. த்ய- ஒரு விகுதி. அரசனுக்குக்கிட்ட இருப்போனென்றபடி. வள். சுருஅ. பரி. உரை.]

அமாதாநம்— 1. சேமித்துவைத்தல். 2. அடக்கம். [அமாதாந: அமா- கிட்ட. ஆதாந - வாங்குதல்.]

அமாநநம்—அவமானம். [அ;மா-ந-ந-மதிப்பு.]

அமாநம்-அளவின்மை. [அ;மா-நம்-அளவு.]

அமாநிதை—1. செருக்கின்மை. 2. மரியாதை.

அமார்க்கம்—1. துன்மார்க்கம். 2. வழியல்லாதது.

அமார்ச்சநம்—1. உரிஞ்சுப்படாதிருக்கை, தட்டாதிருக்கை. (பௌட். பும்ஸ். கக௲.) 2. சுத்தியின்மை. [அ;மாஜ-ந: அ;மாஜ-நம்-உரிஞ்சுதல், சுத்தி.]

அமாவசி—அமாவாசியை.

அமாவாசி— அமாவாசியைத்திதி. (உ-ம்.) "ஆயிரம்வெதீபாதமொப்போரமாவாசி"(சேதுபு. சேதுபல. ௫எ.)

அமாவாசியை—1. இடைபிங்கலைகளின் சந்தியைப் பிராணன்கூடுங்காலம். (உ-ம்.) "தழைதரு மிடைபிங் கலையெனு மிரண்டின்சந்தியைப் பிராணன்சேர்காலம்- விழைதரு மமாவாசியை யெனவுரைப்பர்" (சூத. ஞாந சக: உ௩.) 2. சூரியனுஞ்சந்திரனுங்கூடிநிற்குந்திதி; அது: அபரபக்க சதுர்த்தசியின் பின்னடுத்துவருந்திதி. (உ-ம்.) "சோமநல்வாரந்-தங்கமாவாசியை கதிர்வாரஞ்சத்தமிபொன்னியாடிடினும்" (சூத. எக்கி. பூ. சஉ: உ௩.) [அமா - உடன். வாஸ்யா - வசித்தற்குரிய காலம்.]

அமாவாசை—அமாவாசியை. (உ-ம்.) "பிற்றைநாளமாவாசையில்" (உபதேச. சிவவி. உஉக.)

அமானி— 1. இராச விசாரணைக்குள்ளான நிலம். 2. குத்தகைகொடாமல் அரசர்நேரே இறைவாங்குதற்கிடமான நிலம். [அராபிச்சொல்.] 3. புளியாரைப்பூண்டு.

அமிச்சை—ஞானம். [அபி்யா என்பதன் திரிபு.]

அமிசகம்—1. சௌரமாநதினம். 2. பங்கு. [அம்சக.]

அமிசகன்—1. தாயபாகமுடையோன். 2. பங்காளி. [அம்சக.]

அமிசநம்—பிரித்தல். [அம்சந.]

அமிசம்—1. அக்கபாகை. 2. அதிட்டம். 3. அனைப்பறவை. (உ-ம்.) "பிதாவினது பாதமென்னுங்குவியாத அம்போருகத்தை அமிசம்போல அணைந்து"(ஞானவா. வைராக். உக. உரை.) 4. செல்வாக்கு. 5. தாயபாகம். 6. யதார்த்தம், நேர்மை. 7. பங்கு. (உ-ம்.) "அராவருமல்குலாடனமிசத்தினனுவேயாயின்" (வேதாரணியபு. மணவாள. ௫சு.) 8. (கணக்கதிகாரம்) பின்னக்கணக்கிற்பிரிக்கப்பட்ட கூறுகளில் எத்தனைகூறுகள் கொள்ள வேண்டியதென்று காட்டும் மேலிலக்கம். 9. (கணக்கதிகாரம்) பின்னம். 10. புயம். 11. பெருவாழ்வு. 12. லௌகிக அநுபோகம்.

அமிசாமம்— } பிரமாவின் மாநசவாவி.
அமிசாமியம்— } [ஹம்ஸ - அன்னம். அ;ம-போதல், அன்னஞ்சென்று தங்குமடம்.]

அமிசு—1. அணு. 2. சூரியன். 3. பிரபை. [அம்சு.]

அமிசுகம்—1. இலை. 2. ஒளி. 3. மெல்லிய சீலை. [அம்சுக.]

அமிஞ்சி—அமஞ்சி. [அந்நியபாஷைச்சொல்.]

அமிடம்— 1. கபடமின்மை. 2. தசை. 3. வாழ்வு. [ஆமிஷ.]

அமித்திரன்—1. ஒருமுனிவன். (உ-ம்.) "அங்கெடுவநத்திற்சின்னளகன்ற பினமித்திரன் பேரொன்னுமாமுனிவற் சென்றே" (பாரத. பழம். க.) 2. சிநேகநல்லாதவன். 3. பகைவன். [அமித்ர.]

அமித்துரு—பகைவன். [அமித்ரு.]

அமித்தை—பொய்யல்லாதது. [அமித்யா: அ - அன்மை, மித்யா - பொய்.]

அமிதம்—அளவின்மை. (உ-ம்.) "அமிதமாகிய பெரும்படை"(சூளா. கல்யாண. ௬௯.) [அமித.]

அமிர்தக்கடுக்காய்—காசிதேசத்திலேஉற்பத்தியான ஒருவிதக்கடுக்காய். (உ-ம்.) "அமிர்தமெனுங்கடுக்காயம்புவியிலுள்ள- திரிதசிலேட்டுமத்தைத்தீர்க்கும் - விமிதச் - சதைப்பற்றுண்டாயிருக்குஞ்சாற்றில்தன்றேசங் - கதிக்சொத்தகாசியென்பார்காண்" என்னுஞ் செய்யுட்காண்க. (பதார்த்த. ௪0௫0.)

அமிர்தக்குமரி—ஒருவகைத்தைலம்; அது: சீந்திற்கொடி சர்ருமைமுதலியவற்றில் வடிக்கப்படுவது. (இதனிலக்கணம். தைல. வைதலவ. ௩௬. கவியிற்பார்.) மதுபன்னிசன்னி - பட்சமே சுத்திபுரிநாமமிர்தக்குமரியித்தைலமே."

அமிர்தகலை—சந்திரகலை. (உ-ம்.) "அவனையமிர்தகலையினலே அபிடேகம்பண்ணினதாக" (சி. சி. அ: ௩. சிவாக்.) [அம்ருத - விரும்பத்தக்கது. கலா - கூறு.]

**அமிர்தகிரணன்**—சந்திரன். [அம்ருத-விரும்பத்தக்கது. கிரண - ஒளி.]

**அமிர்தகோடி**—சீந்திற்கொடி.

**அமிர்தசஞ்சீவநி**— உயிர்தருமருந்து, குற்றுயிர்தருமருந்து. [அம்ருத: ஸஞ்ஜீவநீ - உயிர்தருவது.]

**அமிர்தசஞ்சீவி**—மரணத்தைப்போக்கி வாழ்விப்பதாகிய ஒருமருந்து. (உ-ம்.) "அங்கன்" பார். [அம்ருத ஸஞ்ஜீவிநு - உயிர்தருவது.]

**அமிர்தசாரம்** — 1. கற்கண்டு. 2. வெண்ணெய். [அம்ருதஸார: அம்ருத - பால். ஸார - உள்ளீடு.]

**அமிர்தசோதரம்**—இந்திரனுடைய உச்சையிச்சிரவம் என்னுங் குதிரை. [அம்ருதஸோதர: அம்ருத-அமுதம். ஸோதர- சகோதரம்.] [பாற்கடலிலே அமுதத்தோடு கூடப் பிறந்ததனால் வந்தபெயர் என்பர்.]

**அமிர்தத்தாநம்**—தேவயாந வழியாகச் செல்லும் புண்ணியமுள்ளார் பிரமாவின் றிருமுடிவு வரையும் இன்பத்துடன் வாழ்தற்கேதுவாய மோட்சமெனஉபசரிக்கப்படுவதாயுள்ள ஓரிடம். (கூர்மபு. பிரமா. ௬. உரை.) [அம்ருதஸ்தாந.]

**அமிர்ததரங்கிணி**—நிலவு. [அம்ருததரங்கிணி: அம்ருத-அமுதம். தரங்கிணி-கடல்.]

**அமிர்தநாதம்**— யசுர்வேத உபநிடதங்களுளொன்று. (கூர்மபு. அட்டமூர். உ௯. உரை.) [அம்ருதநாத.]

**அமிர்தப்பலம்**— நெல்லிக்காய். (உ-ம்.) "அமிர்தபல மெனிலாங்கோதிலிரதங்களும்" (தைல. தைலவ. ௬௮.) [அம்ருத; ஃபல.]

**அமிர்தபிந்து**— முப்பத்திரண்டு உபநிடதங்களுளொன்று. (வேதா. சூ. சிறப். ௩:உரை.) [அம்ருதவிந்து.]

**அமிர்தம்**—1. அமிர்தபீசம். (உ-ம்.) "நகவமிர்தத்தைப்பில்கும" (சூத. ஞாந. ௧௨: ௮.) 2. அழிவில்லாதது. 3. இனியபொருள், உவக்கத்தக்கபொருள். 4. உணவு. 5. சோமலதைச்சாறு. 6. சோறு. 7. நஞ்சு. 8. நீர். 9. நெய். 10. பசுவின்பால். (உ-ம்.) "திலநெய்யமிர்தம்வாரநீர்க்கரையவை" (தைல. தைலவ. க.) 11. பாக்கியம். 12. பாதரசம். 13. பால். 14. பாற்கடலிற் கடைந்தெடுக்கப்பட்டதென்னுந் தேவருணவு. 15. பொன். 16. மூர்ச்சைதீர்த் துயிர்தருமருந்து. 17. மோட்சம். 18. மோர். 19. யாகப்பொருளில் மிஞ்சியவை. 20. யாசியாது வந்தபொருள். (உ-ம்.) "ஒன்றிரவாமல் வருவதேயமிர்தம்" (காஞ்சிபு. ஒழுக். ௩௬.) 21. விஷந்தீர்க்குமருந்து. 22. வெண்ணெய். [அம்ருத: அ-எதிர்மறை. ம்ருத - மரணம்.]

**அமிர்தமுடிபவிடம்**—சுக்கு. (தைல. தைலவ. க.)

**அமிர்தமூடுவிடம்**—மாச்சுக்கு. (உ-ம்.) "சீரமிர்தமூடுவிடமஃதை" (தைல. தைலவ. க.)

**அமிர்தயோகம்**— சுபகாரியங்களுக்கு உபயோகமான வாரமும் நட்சத்திரமுங்கூடிய ஒருகூட்டம். [அம்ருதயோக.]

**அமிர்தர்**— 1. தேவர். 2. மநுக்களுள் ஐந்தாமநுக்காலத்திலுள்ளஒருதேவவகுப்பினர். (உ-ம்.) "சிறப்புடை யைந்தாமநுவின் றிருநாமமிரேவதனுமகவானும - மறத்துறைபோஞ் சுகனுகுமமிர்தராறந்தருபாகமிரதர்நாளும். (கூர்மபு. மநுவந். ௮.)

**அமிர்தவல்லி**— சீந்திற்கொடி. (சூ. நி. ௪: ௩௬.)

**அமிர்தவிந்து**—1.யசுர்வேத உபநிடதங்களுளொன்று. (கூர்மபு. அட்டமூர். ௨௯. உரை.) 2. ஆகாசத்தின் அடையாளம். (சி. சி. ௨: ௪௪. சிவாக். உரை.) [அம்ருதவிந்து.]

**அமிர்தன்**—1. கடவுள். 2. தன்வந்திரியென்னும் ஒரு தேவவைத்தியன். 3. மரணமற்றவன். [அம்ருத:]

**அமிர்தாகரணன்** — விட்டுணுவின் வாகனமாகிய கருடப்பறவை. [அம்ருதாஹரண: அம்ருத- அமுதம். ஆஹரண- கவர்ந்தவன். கருடன்முன்னொருமுறைஅமிர்தத்தைக்கவர்ந்துகொணர்ந்தானென்பது புராணகதை.]

**அமிர்தாசநர்**—அமிர்தபோசநமுடையவர், தேவர். [அம்ருதாஸந: அம்ருத - அமுதம். அஸந - உணவு.]

**அமிர்தாமலகத்தைலம்**— ஒருவகைத் தைலம்; இது: சீந்திற்கொடி நெல்லிக்கனி முதலியவற்றிலிருந்து வடித்தெடுப்பது. இதனிலக்கணந். தைல. தைலவ. ௫௬- ஆங் கவியிற் காண்க. "குண்டலி சிலை- அமிர்தாமலகத் தைலமிதன்பெயரே" [அம்ருத - சீந்தில். ஆமலக - நெல்லி. தைல - எண்ணெய்.]

**அமிர்தாமிர்தை** — பஞ்சசத்திகலைகளுள் ஒன்று. (சி. சி. உ: எச. ஞானப்.) [ஸ்ரூதா ஸ்ரூதா.]

**அமிர்தாரிவளை**—சங்கநிதி.

**அமிர்தீகரணம்**— பூசைமுதலியவற்றிற்கு பயோகமாகத் தன்னுடம்பை அல்லதொரு பொருளை மந்திரத்தினல் தகித்ததாகப்பாவித்தும் அதுபின் நிஷ்களங்கமாய்த் தோன்றியதாகப்பாவித்தும் அமிர்தமயமாகக்கற்பித்துக்கொள்ளுதல். (சிவப்பிரகாசர்.)[ஸ்ரூ தீகரண.]

**அமிர்து**—1. அன்னம், சோறு. (உ-ம்.) "அத்திரத்தாலந்நீரமிர்திற் புரோக்கிக்க" (சைவச. பொது. உஅகூ.) 2. திரவியம். (உ-ம்.) "நாட்டகத் தமிர்துநளிகடலமிர்து நல்வரையமிர்தமுமல்லாக் - காட்டகத்தமிர்துங்காண்வர" (சிந்தா. மண். கூ.)3. பால். (உ-ம்.)"கனதனத்திலூறுமமிர்தூட்டினளால்" (கந்தபு. வள். நஎ.) 4. பாற்கடலிற்கடைந்தெடுக்கப்பட்டதென்னுந் தேவருணவு. (உ-ம்.) "அமரர்க்கமிர்தீய"(சிவதரு. சிவஞா. அந.) [ஸ்ரூத.]

**அமிர்தை**—1. அழிவில்லாதவள். 2. கள். 3. சந்திரனுடையசோடசகலைகளிலொன்று. 4. சிந்தில். (உ-ம்.) "அமிர்தைவெங்கம்புன்றேக்கரிக்காந்திநீடம்பின் மூலல்பிசநதுவிதத்தருவரிசனத்துவயஞ்சகச்சிராட்டியும்"(தைல. தைலவ. உந.) 5. திப்பலி. 6. துளசி. 7. நெல்லி. 8. நெல்லிக்காய். (உ-ம்.) "கரியசரிப்பானமிர்தைகாணி யிம்மூன்றிற் கசியாத முப்படி" (தைல. தைலவ. உகூ.) 9. பஞ்சசத்திகளுளொன்று. (சி. சி. உ: எச. ஞானப்.) 10. பார்ப்பதி. (உ-ம்.)"அமிர்தையசலைசுமங்கலை" (கூர்மபு. திருக்கல். உ௦.) 11. ரசாஞ்சனம். (உ-ம்.) "அமிர்தைமுக்கடு சாதிதிரிபலை சுசாதிபல மட்டிமதுகம்பைசாசியபயலைதரிக்கும் யோர்சாதுர்சாதந்தகரமரியுண் மூலஞ்சாரிபை" (தைல. தைலவ. நச.)12. வெள்ளைப்பூண்டு. (உ-ம்.) "நறியசோம்பசையமிர்தை" (தைல. தைலவ. கùகூ.) 13. அமிர்தக்கடுக்காய். (பதார்த்த. சுப்பிர. கùசகூ.) 14. கடுக்காய்மரம். (அமரா.) [ஸ்ரூதா.]

**அமிரம்**—மிளகு.

**அமிருதம்**—1. அமிர்தம். 2. சந்திரனுடைய சோடசகலைகளுளொன்று. (வி-ணி. உசகூ.) 3. தேவருணவு. (உ-ம்.) "பரமானந்தாமிருதம்" (சி. சி. உ: இக. சிவாக்.) [ஸ்ரூத.]

**அமிருதை**—1. திப்பலி. 2. துளசி. 3. மது. [ஸ்ரூதா.]

**அமிழ்ந்தல்**—நீரிலேயாழச்செய்தல். (உ-ம்.) "ஆடன்மைந்தாடங்கவமிழ்த்திடுன்" (சேதுபு. அக்கினி. நக.)

**அமிழ்தம்**— 1. அமிர்தம். (உ-ம்.) "தானமிழ்தமென்றுணரற்பாற்று" (வள். கக.) [இங்கே அமிர்தம் என்னும் வடமொழியில் ரகரம் ழகரமாயிற்று.]2. இனிமை.[ஸ்ரூத.]

**அமிழ்தல்**—நீரிலேயாழ்தல். (உ-ம்.)"இன்பக்கடலூடேயமிழுவேனை"(திருப்புகழ்.எஅ.)

**அமிழ்து**—1. அமிர்தம். (உ-ம்.) "அமிழ்தினுமாற்றவினிதே" (வள். கூச.) 2. பசுவின் பால். (உ-ம்.) "இருதூணியமிழ்துருத்ததின்" (தைல. தைலவ. உஅ.)

**அமிழ்ந்தல்**—அமிழ்தல். (உ-ம்.)"ஆழ்ந்தபுனற்கயமதனேர்விழுந்தமிழ்ந்திமீளவெழும" (சேதுபு. அகத். கச.)

**அமிழ்வித்தல்**—அமிழச்செய்தல். (உ-ம்.) "கேட்டவேந்தன் மிகமுனிந்துகிளருநீரிலமிழ்வித்தும்" (ஞானவா. வஞ்சவி. ரு.)

**அமிழல்**—அமிழ்தல். (உ-ம்.) "இந்தயோகத்திலேகணத்தினீனணியமிழலுற்றனை"(ஞானவா. காதி. நந.)

**அமிழும்**—ஆழும் எனப் பொருள்பட அமிழென்னும் வினைப்பகுதியடியாற் பிறந்த ஓர் எதிர்காலப்பெயரெச்சம். (உ-ம்.) "உழுந்தமிழ மாசமனமாலோரேழுகடலையும் பருகவல்லீர்"(தாயு. சித்தர். க.) செய்யுமென்னுமுற்றுமாம்.

**அமீதுபம்**—செம்மறியாட்டுக்கடா.

**அமீவம்**—1. பாபம். 2. வருத்தம்.[ஸ்ரூவ.]

**அமுக்கடி**—1. மந்தாரம். 2. மூட்டாயிருத்தல். 3. மூடமாயிருத்தல். 4. மூடிக்கொள்ளுதல்.

**அமுக்கல்**— 1. அமரச்செய்தல். (உ-ம்.) "வெற்பினுச்சிதொட்டமுக்கினசிலகரம்" (உபதேச. கூர்ம. கரு.)2. நீரிலேயமிழ்த்தல். (உ-ம்.) "ஆழவமுக்கிமுகக்கினும்" (வாக்குண்டாம். ககூ.)

**அமுக்கன்**— 1. இரகசியத்திற் கருமமுடிப்போன். 2. உபாயமாகக்காரியம் பார்ப்போன். 3. நித்திரையில் அமுக்கும் ஆவியெனப்படும் ஓர்நோய்.

**அமுக்கனங்கிழங்கு**— அமுக்கிராக்கிழங்கு.

**அமுக்கி**— நித்திரையிலே ஒருவர் நெஞ்சிலே அல்லதுவயிற்றிலே ஒருபாரத்தினல்

அழுக்குண்டாற் போன்று அசையப் பேசச் சுவாசிக்கக் கூடாதிருக்கவும் பதறிய மநத்தோடு விழிக்கவுஞ் செய்யும் ஒருநோய். இதனைப் பிற அகராதிக்காரர் அமுக்கன் என்பர்.

அமுக்கிரா—அமுக்குராச்செடி.

அமுக்கிரி—அசுவகந்திக்கிழங்கு. (உ-ம்.) "பாதிரிநெரிஞ்சிறமூதாழைவாரணங்காரி பாரணைசாரடைசித்திரமபருவாகைமுங்கைவிழுதிந்திராணிமாகாளி பாலைசரியமமுக்கிரி" (தைல. தைலவ. சுஉ.)

அமுக்கு—1. அமுக்குதல். (உ-ம்.) "அவனமுக்குண்டு கதறிக்கொண்டு கிடக்கிறான்" (வழக்.) 2. அமுக்குபாரம். 3. 5. அமுக்கென்னேவலுந் தொழிற்பெயரும் வினைப் பகுதியும வினைத்தொகையுமாம்.

அமுக்குதல்—அமிழ்த்தல்.

அமுக்குரவு—அமுக்கிரா.

அமுக்குரா—ஒருசெடி.

அமுக்கோந்தி— ஒருவகைச் சத்தி.

அமுகம்— 1. கடுக்காய். 2. சீந்தில். 3. நெல்லி.

அமுங்கல் — 1. அமர்தல். (உ-ம்.) "கட்டடமுங்கிவிட்டது" (வழக்.) 2. அழுந்தல். 3. நெரிபடல். (உ-ம்.) "வீடுவிழ எல்லாரும் அமுங்கிப்போனார்கள்" (வழக்.)

அமுசம்—சிறுசெருப்படைப்பூண்டு.

அமுசு—ஒட்டறை.

அமுணங்கம்—அடக்கமின்மை.

அமுத்தம்— 1. கைவிடாப்படை. (உ-ம்.) "சக்கராதிகள் கையால் விடப்படுவதால் முக்தமென்றும், சத்தி முதலியன அமுத்தம் என்றும், ஈட்டி முதலியன முத்தாமுத்தமென்றும், ரவை முதலியன யந்திரமுத்தமெனறுஞ்சொல்லப்படும" (விசாரசா. ௩௬௬.) 2. பிறப்புக்களினின்று நீங்காதது. 3. வசநாபி. 4. விடுவிக்கப்படாதது. [ஸ: அ-எதிர்மறை. முக்த - விடுக்கப்பட்டது.]

அமுத்தி—அடைபட்டிருக்கை. 2. தன்னிட்டமின்மை. [ஸ: அ - எதிர்மறை. முக்தி - விடுதல்.]

அமுத்திர— 1. அங்கே. 2. மறுமையில். (உ-ம்.) "இகாமுத்திரார்த்தபலபோகவிராகம்" (பிரமாநந்தவிவேகசமுத்திரம்) [ஸ: அமுத்ர.]

அமுதக்கடத்தோடுதித்தோன்— தேவமருத்துவனாகிய தன்வந்தரி. (தைல. கடவுள்வா. ரு.) [கையிலமிர்தகடத்தோடு இருப்பாற்கடலிற்பிறந்தவனென்பர்.]

அமுதகடிகை—சில நட்சத்திரகாலங்களிற் சுபகருமங்களுக்கு யோக்கியமாயினவாகக்கருதப்படும் நாழிகைகள்; அவை: பரணி மிருகசீரிடம் பூரம் என்பவற்றிற்கு முப்பதின்மேலும், பூசத்திற்குப் பதினொன்றின்மேலும், அச்சுவினிக்கு இருபத்தொன்றின்மேலும், கார்த்திகைக்கு ஐம்பதின்மேலும், திருவாதிரை ஆயிலியம் என்பவற்றிற்கு நாற்பதின்மேலும், பூராடம், பூரட்டாதி என்பவற்றிற்கு ப்பத்தின்மேலும், அத்தத்திற்கு எழின்மேலும், உத்திரட்டாதிக்குப் பதினெட்டின்மேலும், சோதிக்கு இருபத்திரண்டின்மேலும், ரேவதிக்குப் பன்னிரண்டின்மேலும, அநுடம், மூலம், உத்திராடம், அவிட்டம், புநர்பூசம், உரோகிணி என்பவற்றிற்குப் பதினான்கின் மேலும், சித்திரைக்குப் பதினைந்தின் மேலும், கேட்டைக்கு முப்பத்தொன்றின் மேலும், விசாகம், திருவோணம், மகம், சதயம் என்பவற்றிற்கு இருபதின்மேலும், உத்திரத்திற்கு முப்பத்துமூன்றின்மேலும் வரும நான்கு நாழிகை. விஷகடிகைக்கு மேல்வரும் நாலுநாழிகை அமுதகடிகை என்பாருமுளர். (விதாந. குணகுண. உசு: உஎ.) [ஸ: அம்ருதகடிகா: அம்ருத-நன்மை. கடிகா-நாழிகை.]

அமுதகம்— 1. இறவாமைக்குக் கருவியாகிய அமிர்தம். 2. பாற்கடல். 3. மூலை [ஸ: அம்ருதக: அம்ருத - அழியாமை, பால். க- ஒரு வ. வி.]

அமுதகிரணன்—சந்திரன். (உ-ம்.) "செறிந்த வமுதகிரணனுமென்னேயாமென்றுசிலுகிட" (பாகவத. குருகுல. சஉ.) [ஸ: அம்ருதகிரண.]

அமுதகுண்டம்— அமுதம் வைத்திருக்கும் பாத்திரம். [ஸ: அம்ருதகுண்ட: அம்ருத - அமுதம். குண்ட - பாத்திரம்.]

அமுதகுண்டை— இரப்போர்கலம். [ஸ: அம்ருத: குண்டா.]

அமுதகுலர்— 1. இடையர். 2. சான்றோர். [ஸ: அம்ருதகுல: அம்ருத - பால், இறவாப்புகழுக்கேதுவாகிய அறிவு.]

அமுதங்கம்— 1. கள்ளி. 2. சதுரக்கள்ளி.

அமுதசம்பூதநன்—சந்திரன். (உ-ம்.) "அமுதசம்பூதனன்மைந்தன்" (பாகவத. குருகு. உ௩.) [ஸம்ஸ்கிருத: ஸம்பூத-பிறந்தவன்.]

அமுதசருக்கரை— சீந்திற்கிழங்கிலிருந்து செய்தசருக்கரை. [ஸம்ஸ்கிருத-சர்க்கரா.]

அமுதசாரணி—வெள்வேலமரம்.

அமுதசித்தயோகம்—ஞாயிற்றுக்கிழமையிலத்தமுந் திங்கட்கிழமையில் மிருகசிரமுஞ் செவ்வாய்க்கிழமையில்அச்சுவினியும் புதன்கிழமையிலநுடமும் வியாழக்கிழமையிற் பூசமும் வெள்ளிக்கிழமையில் ரேவதியுஞ் சனிக்கிழமையில் ரோகிணியும் வருங்காலம். (வருஷாதி.)

அமுதசிந்தி- மதிமண்டலத்தினின்றும்பெருகிப்பாயுங்கலா அமிர்தப்பேறு. (உ-ம்.) "ஓசைசாலுமொருசத்திமதிகப்படிக, மோடுகூடியொருசித்தமுதசிதியோடும்" (திருப்பு. ௩அக.)

அமுதசுறு—வெள்வேல்மரம்.

அமுததரம்—மஞ்சிட்டிச்செடி.

அமுததாரணை—உணவின்றி நிட்டையிலிருக்கும் மௌனயோகிக்கு ஆதாரவாகத் தலையினுள்ளிருந்து வடியும் அமிர்தம். [ஸம்ஸ்கிருத தாரணா.]

அமுதப்பார்வை— இன்பப்பொருட்டான பார்வை, இனியபார்வை.

அமுதபுட்பம்— சிறுகுறிஞ்சாக்கொடி. [ஸம்ஸ்கிருத; புஷ்ப.]

அமுதம்— 1. அமிர்தமாகியதேவருணவு. (சேதுபு.தரா. சக.) 2. அமுதகடிகை (உ-ம்.) "ஆங்கதன்மேனுன்கமுதமென்னே"(விநாந. குறு தண. உ௪.)3. இனிமை. (உ-ம்.) "தேன்பொதிந்தமுதமூறப்-பயிரிலாங்கரம்பிறக்கிதமு" (சீகா. சுரமஞ். இ௪.) 4. உப்பு. (பிங்கல. ௩௦க௬.) 5. உயிர்தருமருந்து. 6. சீந்தில். 7. தயிர். 8. திரிகடுகு; அது: சுக்கு, மிளகு, திப்பலி. 9. திரிபலை; அது: கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய். 10. நீர். (உ-ம்.) "அரைபடுமகிலுஞ்சாந்துமப் பியின்னமுதமூட்டி" (திருவிளை. நாட். க௩.) 11. பால். (உ-ம்.) "அமுதவெண்டிரைச்சிந்துவின்" (பாரத. குருகுல. ௩௩.) 12. பெருமை. 13. போசனம். 14. முத்தி. (உ-ம்.) "அமுதம்பெறுசண்டி" (தேவார. திருநின்றி. உ. சுக்.) 15. யாகசேஷம். 16. விரும்பப்படுவது. [ஸம்ஸ்கிருத.]

அமுதமதநம்— அமிர்தத்தின் பொருட்டுக் (கடலைக்) கடைதல். (உ-ம்.) "அதிதவளமத்தவாரணமுமுதலமுத மதநத்திலாழிமிசை வரு-மதகளிறு" (பாரத. பன்னிரண். சரு.) [ஸம்ஸ்கிருத - அமுதம். மதநம் - கடைதல்.]

அமுதமேந்தல் — புண்ணியம் ஒன்பதில் ஒன்று; அது: துறவிகளுக்கும் மற்றைப்பெரியோர்களுக்கும் அந்நங்கொடுத்தல். [ஸம்ஸ்கிருத அந்ந - உணவு. ஏந்தல் - கையிற்றருங்குதல்.]

அமுதயோகம்—அமிர்தயோகம்; அது: ஞாயிற்றுக்கிழமையில் மூலம், திருவோணம், ரேவதி, அத்தம், ரோகிணி, உத்திரம், உத்திராடம், உத்திரட்டாதியாகிய நட்சத்திரங்களிலொன்று வருங்காலம். திங்கட்கிழமையில் மிருகசிரஞ், சோதி, ரோகிணி, புநர்பூசம், திருவோணம் ஆகிய நட்சத்திரங்களிலொன்றுவருங்காலம்- செவ்வாய்க்கிழமையில் ரோகிணி,மூலம்,உத்திரட்டாதி,உத்திரம் ஆகிய நட்சத்திரங்களிலொன்று வருங்காலம் - புதன்கிழமையில் பூரம்,பூராடம்,பூரட்டாதி, உத்திராடம், கார்த்திகை, உத்திரம் ஆகிய நட்சத்திரங்களிலொன்று வருங்காலம் - வியாழக்கிழமையில் புநர்பூசம், சோதி, பூசம், அச்சுவினி, மகம் ஆகிய நட்சத்திரங்களிலொன்று வருங்காலம் - வெள்ளிக்கிழமையில் மூலம், அத்தம், ரேவதி, அச்சுவினி ஆகிய நட்சத்திரங்களிலொன்று வருங்காலம் - சனிக்கிழமையில் மகம், சோதி, கார்த்திகை, ரோகிணி, சதயம் ஆகிய நட்சத்திரங்களிலொன்றுவருங்காலம். (வருஷாதி.)

அமுதர்—1. அழிவில்லாதவர். (உ-ம்.) "கருகாவூ-ரமுதர் வண்ணம்மழலும்மழல்வண்ணமே"(தேவார. கருகா,உ,சம்பந்.)2. இடையர். 3. தேவர். (உ-ம்.) "கண்ணுதற்சாமி நின்றுளிணையி - லள்ளலளக்க ரமுதந்தன்றைப் பூசனையாற்றி யமுதரானேம்"(காஞ்சிபு. சுரகரி. ௩உ.)

அமுதவல்லி—1. சீந்திற்கொடி. 2. விட்டுணுவின் புத்திரிகளுளொருத்தி. தெய்வயானையம்மையாகப் பிறந்தவளும் இவளே என்பர். (உ-ம்.) "மாலருள்கன்னியரிருவர்-சொல்லரும்பெருவனப்பினர்சுந்தரியமுத-வல்லியென்றிடும் பெயரினர்" (கந்தபு. விடை. க.) [ஸம்ஸ்கிருத வல்லீ.]

அமுதவிந்து— 1. அமிர்தத்துளி. (உ-ம்.) "உந்துகின்றவமுதவிந்து வொக்குமென்னவரைசெய்வான்" (பாரத. வாரணா. சுசு.) 2. அமுதவிந்துவாகிய வட்டம். (சி. சி. உ: சுஅ. மறைஞான. உரை.)[விந்து-துளி,வட்டம்.]

அமுதவெழுத்து — அகலக்கவியிலே முதன்மொழியிலே வருதற்குரிய சுபவெழுத்து; அவை: க, ச, த, ப, ந, ம, வ என்னும் எழுமெய்யெழுத்துக்களும் அ, இ, உ, எ என்னும் நான்குயிரெழுத்துக்களுமாம். (உ-ம்.) "கசதபநமவவேழொடு மகரம்-இகரம் உகரம் எகர நான்கும்- அமுதவெழுத்தென்றறைந்தனர்புலவர்" [இலக்கணவிள. எஎக.)

அமுதவேணி—சிவன். (உ-ம்.) "நிலாவெறித்த வமுதவேணிநிற்க" (திருப்பு. உ0உ.) [ஸ்ரீ:த - நீர். வேணி - சடை.]

அமுதன்—அழிவில்லாதவன். (உ-ம்.) ஆயிரமாவமார்த்தவமுதனே" (தேவார. தனித்திரு. ரு. திருநாவுக்.)

அமுதாசநர்—தேவர். (உ-ம்.) "அருமாதவர்பிசிதாசநராமுதாசநர்" (சேதுபு. இராமனரு. கடுஎ.) [ஸ்ரீ:தாஸந: ஸந்ரீ-உணவாகவுடையவர்.]

அமுதாரி—பூனைக்காலி.

அமுது— 1. அமிர்தம். (உ-ம்.) "இளையவரமுதினு மினியசொற்களே" (இராமா. நகர்நீ. கஅக.) 2. இனியபொருள் (உ-ம்.) "கடல்பவெமுதும்" (நைடத. நாட்டு. உடு.) 3. உணவு. (உ-ம்.) "கொடியவாலவமுதாகவிலையோ" (தாயு. பரிபூரண. க.) 4. சந்திரகிரணம். (உ-ம்.) "திங்களின்னமுதிறைப்ப" (கூர்மபு. அட்ட. உஎ.) 5. சுபநிலை, அமுதகடிகை. (உ-ம்.) "பொன்னவன்கடத்துறினு மமுதெனப்போற்றுவரே" (விதாந. குணகு. உகு.) 6. சோறு. (உ-ம்.) "வாடாமலரும் நல்லமுதும்" (ஞானவா. பிரகிலா. அ.) 7. நிவேதநம். (உ-ம்.) "பேரமுதருத்தியேத்தி" (கந்தபு. காவிரிநீ. உ.) 8. நீர். (உ-ம்.) "அமுதுகொப்பளித்தி வாங்கி" (தைல. தைலவ. ௩௪.) 9. பால். (உ-ம்.) "அமுதாற்கரையவெடி" (தைல. தைலவ. க.) 10. மூர்ச்சைதீர்த்துக் குற்றுயிர்தருமருந்து.(சூ.நிகண்.௪.௬.) 11. மோக்ஷம். (உ-ம்.) "விட்புலத்தவரோயன்றி வீடுபெற்றவருமவீழ்ந்து- பெட்பமுற்றமுதுண்கைப்ப" (திருவிளையாடல். திருநக. ௫௨.) 12. உப்பு. (உ-ம்.) "அள்ளலோங்களத்தமுதின் பண்டியும். (இராமா. நாட்டு. ௫௪.) [ஸ்ரீ:த.]

அமுதுசெய்தல்—புசித்தல். (உ-ம்.) "நறுவெண்ணெ - யாயர்மங்கையரிடவிட வமுதுசெய்த" (பாரத. நச்சு. க.)

அமுதுபடி—அரிசி.

அமுதுமோர்—பிரைமோர்.

அமுதுறை—எலுமிச்சங்கனி.

அமுதூட்டல்—சோறு உண்பித்தல், பால்குடிப்பித்தல்.

அமுதோர்—அமிர்தமுடையோர். (உ-ம்.) "அயிலுநல்லமுதோர் சூழ்வந்தன்புடன்போற்றுவாரே" (பாரத. அருச்சுனன்ற. ௩௫.)

அமுமுட்சு—முமூட்சு அல்லாதவன். (வாசுதே. கஎக.) [ஸ- எதிர்மறை. ஸ்ரீ-மோக்ஷ- மோக்கவிருப்பமுடையவன்.]

அமுரி—சிறுநீர். (உ-ம்.) "கருங்குன்றி-யமுரிகலந்ததனில்" (குமா. பிர. ஏக.)

அமுரியுப்பு—அமரியுப்பு.

அமுஸு—பூகினிமொக்குள் (இராசவைத்.)

அமூர்த்தம்— 1. அமூர்த்திசாதாக்கியம். (சைவச. பொது. ௫௭௭.) 2. உருவமின்மை.(உ-ம்.)"அமூர்த்தமதிவியமுமாய்"(சி.சி. ௬: ௧௪. சிவாக.) [ஸ்ரீ:த-: ஸ - எதிர்மறை. ஸ்ரீ:த- வடிவம்.]

அமூர்த்தன்—1.வடிவமில்லாதவன்.(உ-ம்.) "சிவனுமமூர்த்தனேயினும்" (சி. சி. ௬: ௩0. மறை.) [ஸ்ரீ:த-: ஸ; ஸ்ரீ:த-நீ- வடிவுடையவன்.]

அமூர்த்தி— 1. உருவமில்லாதது. 2. உருவமில்லாதவன். 3. உருவமின்மை. 4. விட்டுணு. [ஸ்ரீ:தி-.]

அமூர்த்திசாதாக்கியம்—பஞ்சசாதாக்கியங்களுளொன்று; அது: பரையுடன்கூடிக்கிருத்தியத்திலே உத்தியோகமுடையது. (சதாசிவ. ௬: எ.) [ஸாதாவ்யம்.]

அமூர்த்தித்துவம்— உருவமில்லாததன்மை. (சி. சி. பர. நிகண்ட. ௫.) [ஸ்ரீ:தித்வ.]

அமூலம்— காரணமில்லாதது. (உ-ம்.) "அபேதமாயநாமயமாயமூலமாகி" (ஞானவா. உற்பத். ௫௨.) [ஸ்ரீ:மூல.]

அமேந்துக்கோட்டை— வாதுமைக்கொட்டை. (திசைச்சொல்.)

அமேத்தியநாறி— ஒரு பூண்டு. 2. ஒரு மரம். [ஸ்ரீமேத்யம் - மலம். நாறி - நாறுவது.]

அமேத்தியநாறுமரம்— 1. ஒருபூண்டு. 2. ஒருமரம்.

அமேத்தியம்— 1. அசுத்தம். 2. தூர்ச்சுகுநம். 3. பவ்வீ, மலம். 4. யாகத்துக்குத்தகாதது. [ஸமேத்யம்: ஸ- எதிர்மறை. மேத்யம்- சுத்தம்.]

அமேதநீக்கி—கற்றுழை.

அமேயதை— அக்கிராகியபாவம், அறியப் படாமை. (பவுட். பசு. ௪௦.) [க்ஷெமயதா.

அமேயம்— பிரமேயமாகாதது. (உ-ம்.) "பரசிவமநந்தம்பூரண மமேயம்"(வேதாரணி யபு. கக்கே. ௪௨.)[க்ஷெமய: க்ஷ; ஙெமயம்-அறி யப்படுவது.]

அமேயன்—பிரமாணுதீதன். (கம்பராம.எக.) [க்ஷெமய.]

அமை— 1. அமாவாசி. (உ-ம்.) அமையத னின் மாளயந்தானுற்றுவரேல்"(சேதுபு.தரா சா. சக.) 2-4. அமை யென்னுமேவலுக் தெ ரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். (உ-ம்.) "அமையெனினமரேசனுந்தியினுத வாமேயுதவிடுதொழில்வல்லான்" (இராமா. வாம்புகு. உஉ. ஏவல்.) 5. அழகு. (பிங். ௩௦௬அ.) 6. ஒருகாணல். 7. ஒருமுதனிலை த் தொழிற்பெயர். (உ-ம்.) "யாருமமைதா வொருங்குகூடி." (சூத முத்தி. க: கக.) 8. சந்திரனுடைய பதினாறங்கலை. 9. மூங்கில். (உ-ம்.) "அமையடைத்ததோட்சநகி" (சேது பு. சேதுபல. அக.) 10. தினவு. (தைல. தைலவ. கஉ௪.) [1, 8. க்ஷஜெ.]

அமைச்சன்—1. மந்திரி. (உ-ம்.) "சானிற த்தொடைவிதுரனேயமைச்சனிக் காவலற் கெனவைத்தான்" (பாரத.சம்பவ. உஉ.) 2. வியாழன். (சூ. நிகண். க: சுஉ.)

அமைச்சி—அண்டவாதம்.

அமைச்சியல்—மந்திராலோசனை. (உ-ம்.) "சிறவராந்தனிமுதல்வற்குமமைச்சியல்செ ய்வார்" (கந்தபு. அவைபுகு. ககச.) மந்திரித் துவம்.

அமைச்சு—1. அமைச்சன். (உ-ம்.) "அரு வினையு மாண்டதமைச்சு" (வள். சுகக.) 2. பித்தம். 3. மந்திரியின்தன்மை; அது: மந்தி ரியின்குணங்களுஞ் செயல்களும்.(வள். அதி. சுச. உரை.)

அமைத்தல்—1. அமையச்செய்தல்.(உ-ம்.) "பாரிடக்கணங்களைப்பாணியானமைத்து" (கந்தபு. அக்கினி. சுஎ.) 2. அழுத்துதல். (உ-ம்.) "பொற்குடமுகட்டுக்கருமணியமை த்தென" (கல்லாட.எ.) 3. உண்டாக்கல், செ ய்தல். (உ-ம்.) "புண்டரீகன் முன்படைத்த வப்புரவலனமைத்தது"(பாரத. குருகு.உக.) 4. சேர்த்தல், கூட்டுதல். (உ-ம்.) "அநாது யாயமைக்கவேண்டும்" (சி. சி. பர. லோகாய. மறு. கஅ.) 5. நியமித்தல். (உ-ம்.) "நாளமை த்தழைக்க" (கல்லாட. க.) 6. பாகம்பண் ணல், சமைத்தல். (உ-ம்.) "ஐந்துபல்வகையி ற்கறிகளும்வெவ்வேறறுசுவைமாறுயாறமை ப்பேன்" (பாரத. நாடுகர. கடு.) 7. பொருந் தச்செய்தல். (உ-ம்.) "அருமறைத்தாபதன மைத்திடுசெம்மலர்"(கல்லாட.கடு.) 8. பொ றுமைசெய்தல்.(உ-ம்.)"குற்றமமைத்தருள்" (சேதுபு. துத்தம.௧௦.) 9. விதித்தல். (உ-ம்.) கடவுளமைத்தபடி நடக்கும்" (வழக்.) 10. வெளியேபோகாதடங்கச்செய்தல். (உ-ம்.) "புலனைந்துந்தீமைசேர்விடயங்களிற்செலா தமைத்து" (வைராக்கியசத. நஎ.)

அமைதல்—1. செய்யப்படக்கூடியதாகல். (உ-ம்.) "அடங்கல்" பார். 2. ஏற்படுதல். (உ-ம்.) "அனுகுமாறமைந்து" (கந்தபு. காம தக. எஅ.) 3. ஓய்ந்துதல், மௌனமாயிருத்தல். (உ-ம்.) "வாய்மொழியமைந்து நின்றான்" (ஞானவா. வைராக். ருசு.) 4. கோலங்கொள் ளுதல். (உ-ம்.) "அமைதிர்போருக்கனைவிரு மென்றனன்" (கந்தபு. வச்சிர. சச.) 5. சம்ப வித்தல். 6. சம்மதித்தல். 7. நட்பாய்ப்பொ ருந்துதல். (உ-ம்.) "அமைந்தார்கொழுநான ளவறியான்றன்னை - வியந்தான்விரைந்துகெ டும்" (வள். ௬௪௪.) 8. நெருங்கியிருத்தல். (உ-ம்.) "வலைழயமைசாரல்"(மலைபடு. சஅக.) 9. பொருந்துதல். (உ-ம்.) "பாங்கமைபதலை யோமுதல" (கந்தபு. திருப்பர. கூ.) 10. யோ தியதாதல். (உ-ம்.) "அன்றெனக்குநீயிசைந் தவவனிபாதியமையும்" (பாரத. வாரணா. அஉ.) [படர்க்கையில்.] 11. மநதிற்பதித்தல். (உ-ம்.) "அமைவர" பார். 12. வசமாதல். (உ-ம்.) "அமைந்தாலு மின்பந்தேடும்" (ஞா னவா. வைராக். எக.)

அமைதி—1. அடக்கமாயிருத்தல். (உ-ம்.) "ஆய்ந்தமிபெரியோர்சிந்தையமைதியின்" (இரகு.சேது. சஎ.) 2. அமரிக்கை. 3. உறை விடம். 4. கீழ்ப்படிவு. 5. சமயம், தருணம். 6. திருத்தி, நிறைவு. (உ-ம்.) "அமைதியொ டுபேசாதபெருமைபெறு குண சந்திராமெ னவிருந்தபேரும்" (தாயு. பரிபூரண. ரு.) 7. தொழில். (உ-ம்.) "அவ்விடைசெய்திடும மைதிகூறுவாம்" (கந்தபு. தெய்வ. கஅகு.). 8. நிகழ்ச்சி. 9. பொருத்தம். 10. பொழுது, கா லம். (உ-ம்.) "அன்னதோரமைதிதனனில்" (கந்தபு. மூன்று. உக௦.) 11. மாட்சிமை. (உ-ம்.) "அண்ணலங்கடிநகரமைதிசெப்பு வா" (சிந்தா நாமக. ௪கூ.) 12. அறுவகைநா ட்டமைதி. "செல்வம்விளைவுபல்வளஞ்செங் கோன்மை - தொல்குறைமபினமமகொடிமெபி ணியின்மை - யிவ்வயினாறுநன்னாட்டமைதி"

(திவாகர. கஉ.) 13. செய்தி, தன்மை. (உ-ம்.) "ஆற்றினதமைதியங்கறியக்கூறினன்" (சிந்தா. பதுமை. கக.)

அமைப்பு—1. அநுபோகம். 2. கூட்டரவு. சேர்த்தல். (உ-ம்.) "அநாதியாதியமைக்கவேண்டுமமைப்பினேடுமெநாதியே" (சி. சி. பர. லோகா. மறுதலை. கஅ.) 3. நியமிப்பு. 4. விதி.

அமைப்போன் — செய்பவன், கருத்தா. (உ-ம்.) "அமைப்போனுதலெனக்கெங்கே" (ஞானவா. நிருவா. உ0.)

அமைய—திருத்திவர. (உ-ம்.) "சிறுவலையமையநோக்கி" (கூர்மபு. கண்ணனவ. உஎ)

அமையம்— 1. இலாமிச்சை. 2. காலம். (உ-ம்.) "ஆனதோரமையந்தன்னிலாடினரமரமாதர்" (கந்தபு. திருக்கல். எஉ.)

அமையாமை — 1. கிடைத்தற்கருமை. (உ-ம்.) "அமையாவின்ப விண்ணுட்டில்" (ஞானவா. சுக்கிர. கூ.) 2. கீழ்ப்படியாமை 3. திருத்திப்படாமை. (உ-ம்.) "பெரும்பாழ்செய்துமமையான்" (பட்டின. உ௭0.)

அமையுமென்றல்—போதுமெனல். (உ-ம்.) "வாடிவாடியினியமையுமென்றுதவநமடைந்தனள்") பாரத. குருகுல. கசஙு.)

அமைவடக்கம்—1. மநம் ஒருவழிப்பட்டடங்கி நிற்றல். 2. மறைவு.

அமைவர—மநத்துட்படிய. (உ-ம்.) "ஆசாற்சார்ந்தவை யமைவரக்கேட்டல்" (நன். பொது. சக.) [அமை - அமைதல்.]

அமைவு— 1. அடக்கம். 2. இடங்கொண்டிருப்பவர். (உ-ம்.) "திருக்காளத்தியுள்ளமைவே" (தேவார. திருக்காளத்தி. உ. சுந்தரமூர்த்தி.) 3. சேர்த்தல், கூடச்செய்தல். (உ-ம்.) "அநாதியேயமைவின்மெனின்" (சி. சி. பர. லோகா. கஅ.) 4. பொருநுதுகை. 5. நட்பான பொருத்தம். (உ-ம்.) "அஞ்சுமறியா னமைவிலன்" (வள். அசுஙு.) 6. புலனடக்கம். (உ-ம்.) "அமைவுபிறக்குமமார்கள்" (விருத்தா. நிருத்த. கச.) 7. பொறுமை. (உ-ம்.) "ஞாலத்தார்கொலோவமையின்மிக்கோர்" (பாரத. நிரை. கஙஉ.) 8. மநவமைதி. (உ-ம்.) "உலகை, நிகராகியுமமைவுற்றோ னிமலமுத்தனும்" (ஞானவா. வேதாள. ங.) 9. மாட்சிமைப்பட்ட வொழுக்கம். (உ-ம்.) "அமைவில்வாய தொழில்" (வள். கூருகூ. உரை.) 10. ஒப்பு.

அமோககாரணி—மாயை. (பிரமஞ்சதந்நியந்தனனிடத்திற்பிரதிபலித்துததோன்றினஈச்சுரனுக்குபாதியாயிருத்தலினல்.) (த. நி. போ. ககஉ. பக்.) [ஸ்ஓோஹகாரணி.]

அமோகப்படை — மருளகற்றும்படை. (உ-ம்.) "மீண்டெற்றவமோகவியன்படைபோய்" (கந்தபு. மூதனு. நருகூ.)

அமோகபாணம்— மருளகற்றும்பாணம். (உ-ம்.) "தீதிலாவமோகபாணஞ்சிந்தையாற்றெருழுதுவிட்டான்" (பாரத. நிவாத. அச.) [ஸ்ஓோவ; வாண.]

அமோகம்— 1. இலக்குத்தவறுமை. 2. ஒருவாயு: இது மோகமென்னும் வாயுவின் மேல் ஐம்பதுயோசனை உந்நதத்தினின்று மாருதமென்னும் மேகம்பெய்த உதகச்சாற்பூமியிலுள்ள பிராணிகளுக்கு மரணங்கொடுக்குமென்பர். (த. நி. போ. ஙசஉ.) 3. பெருகுந்தன்மை. 4. மிக்க பிரயோசநங்கொடுப்பது 5. மிகுதி. 6. மோகநீயம். 7. வீணல்லாதது. [1, 3, 4, 7. ஸ்ஓோவ.]

அமோகவாசான் — துரோணுசாரியன். (உ-ம்.) "அண்ணலஞ்சிலைவலாருளமோகவாசானிற்பின்னே" (சிந்தா. கஙக. க0.) [ஸ்ஓோவ - அம்பினிலக்குத்தவறுமை. ஆசா நீ குரு.]

அமோகன்—மோகமில்லாதவன். (உ-ம்.) "அமோகனே போற்றிபோற்றி" (மச்சபு. சுக்கிர. ங௬.) [ஸ்ஓோஹ.]

அமோகி—மயக்கமில்லாதவன். (உ-ம்.) "ஆலகாலமருந்தினனயமோகியை" (நல். பார. மருத்து. கூச.) [ஸ்ஓோஹி.]

அமோகை— கடுக்காய். (உ-ம்.) "குமரியைக்கைசகொண்டமோகையறியா - அமுதுகொப்புளித்திடவாங்கி" (தைல. தைலவ. ஙச.)

அமோட்சம்—1. அடிமைத்தன்மை. 2. சிவாந்தம்வரையுஞ்சிறையிருப்பு. 3. விடுதலைசெய்யப்படாமை. [ஸ்ஓோக்ஷ: அ - எதிர்மறை. ஒோக்ஷ - விடுதல்.]

அய— 1. நிவிர்த்திகலையிற் பிருதிவிதத்துவத்திலிருக்கும் நூற்றெட்டுப்புவநங்களுளொன்று. (சி-வி. கிரி உக. கூ. உரை.) 2. வித்தியாகலையில் இராகதத்துவத்தில் இருக்கும் ஐந்துபுவநங்களுளொன்று. (சி-வி. கிரி. உக. கூ. உரை.)

அயக்கம்—நோயின்மை, நிராமயம். (உ-ம்.) "எண்டிசைக்கிறைவாகியயக்கமாயடக்கமா (தேவார. ஆப்பாடி. அ. திருநாவு.)

அயக்கல்—அசைத்தல். (உ-ம்.) "குன்று

களயக்கலின்" (இராமா. சேதுப. கo.) [ அச க்கல் என்பதன்போலி.]

அயக்களங்கு—1. இரும்புத்துரு. 2. இரு ம்புருக்கியமணி. [அய - களங்கு.]

அயக்காந்தம்—1. ஊசிக்காந்தம். (உ-ம்.) "அவர்தம்-புடையாரம்படிபுரியயக்காந்தமும் பொலிவ" (திருவானை. நாடு. உo.) [அயஸ் காந்த: அயஸ் - இரும்பு, லோகம். காந்தா- விரும்புவது.]

அயக்கிரீவகன்—விட்டுணு. [ ஹயக்ரீவ ஹ; ஹயக்ரீவ-ஓரசுரன். ஹ-கொன்றவன்.]

அயக்கிரீவம்— அதர்வணவேத வுபநிடத த்தொன்று.(கூர்மபு. அட்டமூர். உசு.உ௯.) [அயக்ரீவ.]

அயக்கிரீவன் — 1. ஓரசுரன். (மச்சபு. இர ணியகசிபுவரம். கக.) 2. விஷ்ணு அவதாரத் துள் ஒருமூர்த்தி. [ ஹயக்ரீவ: ஹய - குதிரை. க்ரீவ - கழுத்து.]

அயக்கிருட்டி—காந்தக்கல். [அயஸ் - இரு ம்பு. க்ருஷ்டி - இழுப்பது.

அயகீடம்— இரும்புக்கறை. [அயஸ் ; கீட- கறை.]

அயகம்—1. சிறுகுறிஞ்சாக்கொடி. 2. வச ம்புப்பூண்டு.

அயசிந்தூரம்—இரும்பினாலாகிய ஒருமரு ந்து. [அயஸ் ; ஸிந்தூர- மருந்துவகையி லொன்று.]

அயசிலவேதை—கோளகபாஷாணம்.

அயசீசம்—அயம்.

அயசு—1. இரும்பு. (உ-ம்.) "அயஸ்காந்த சந்நிதியிலேயசானதுபோல" (சி. சி. ச: அ. சிவாக்.) 2. உருக்கு. 3. பொல்லாநிலம், வழு க்குநிலம். [அயஸ் .]

அயசுபடிவு—வெள்ளீயமணல்.

அயணம்—செலவு, வழி. (உ-ம்.) "மாசறு விசும்பின்வெய்யோன் வடதிசையயணமுன் னி"(சிந்தா.குணமா.க.)[அயநம் என்பது அய ணமெனப்பாகதமாயிற்று.]

அயத்திநம் -முயற்சியின்மை.[அயத்ந: அ- எதிர்மறை. யத்ந- முயற்சி.]

அயத்தின்சாரம்—இருப்புக்கிட்டம்.

அயத்தீ— இரும்புத்தொட்டிப்பாஷாணம்.

அயத்தொட்டி—வைப்புப்பாஷாணத்தொ ன்று.

அயதார்த்தம்— பொய். (தர்க்கபா. சுஎ.) [அயதார்த்த: அ - எதிர்மறை. யதார்த்த - மெய்.]

அயதார்த்தமரணம் — யதார்த்தமல்லாத நினைவு; கனவிற் றோன்றும் ஞானமென்பதிற் போல.(தர்க்கபா.சுஅ.)[அயதார்த்தஸ்மரண: ஸ்மரண - நினைவு.]

அயதார்த்தாநுபவம்— யதார்த்தமல்லாத அநுபவம்; அது: சமுசயம், தருக்கம், விபரி யயம் என மூவகை. (தர்க்கபா. சுஎ.) [அய தார்த்த: அநுபவ - தானேகண்டறியும றிவு.]

அயதி—திருநாமப்பாலைக்கொடி.

அயநகாலம்— துலாயநத்துக்கும் மேஷா யனத்துக்கும் இடையே நிகழுங்காலம்.[அய ந; காலம்.]

அயநசலநம்— கிரகங்கள் மையவரியிலிரு ந்து பக்கவரிக்குத் திரும்புதல். அயநத்தின் ஒரு அம்சத்தினின்று அதற்கு முன்னவது பின்னவது வேறிடம்போதல்.

அயநம்—1. அயநப்பிறப்பு. (உ-ம்.) "அ யநமேவிடுவெந்திங்கட்பிறப்பருத்தோதயம் " (வேதாரணியபு. தோற்றம். அஉ.) 2. ஆண் டிற்பாதி. (உ-ம்.) "பகருமத்திங்களோராறு தொக்கதோரயநம்" (சூத. சிவமான். அ:ச.) 3. இடம், வாசத்தலம். (கூர்மபு. பிரமா. ச. உரை.) 4. கடையில், விடுதலை, மோட்சம். 5. சரித்திரம். (உ-ம்.) "இராமாயணம்" 6.சா த்திரம், வேதம். 7. சூரியன் சமரேகை க்கு வடக்கிலுந்தெற்கிலும் போகும்பாதை. (உ-ம்.) "அயநமில்லையருக்கனுக்கவ்வழி" (இ ராமா. நாடவிட். கக.) 8. போதல். 9. வரு டம். [ஹயந.] 10. வழி. [2, 3, 4, 5, 6, 7, 8, 10. அயந. 9. ஹயந.]

அயநமண்டலம்— சமரேகைக்கு வடக்கே யல்லது தெற்கேசூரியன்செல்லுமவீதி. [ அய ந - சூரியகதி. மண்டல - பாதை ]

அயநமாசம்—அயநாஞ்சாநுசாரத்தினாலே திகமாந முதலிய அறியும்பொருட்டுக் கற்பி க்கப்பட்டமாசம். [அயநமாஸ.]

அயபாதம்— இரும்புத்தூள். [ அயஸ் ; ஹஸ்த - தூள்.]

அயபானி— ஒருசெடி. இதனிலையாலாய குடிநீர் மிகப்பிரயோசனமானது. இதனிலை யைத்துவைத்து உடனே கட்டினாற் புண்கள் மாறும். (அந்நியபாஷைச்சொல்.)

அயம்—1. அசுபதி. (உள்ளமுடை. க.) 2. அதிட்டம். 3. அரத்தாலராவியபொடி. (உ-ம்.) "அசீதளம்" பார். (தைல. தைலவ. கு.) 4. அலரி. 5. ஆடு. (உ-ம்.) "அயக்குலத்துட்கரந்தனை" (உபதேச. அயமு. எரு.) 6. இரும்பு. (உ-ம்.) "புவனிவிடங்கரடக்கயநீர்போல்" (மறைசை. உஎ.) 7. இவனென்னும் பொருள்படும் ஒருவடமொழி அவ்வியயம். (வேதா. சூ. கஉச. உரை.) 8. குதிரை. (சூ. நி. கக. யகா. ரு.) 9. குழி. 10. குளம். 11. சிறுபூளைக்கொடி. 12. சேறு. 13. நல்வினை. 14. நிலம். (உ-ம்.) "அயங்கொண்டதிண்டோள்கொண்டவறன்மகன்" (சேதுபு. இலக்குமி. உக.) 15. நீர். (சூ. நி. க. இச.) 16. விழா. [1, 2, 8, 14. ஹய. 3, 6. அயஸ். 5, 11. அஜ. 7. அய.]

அயம்பற்றி—காந்தம்.

அயமகம்—அசுவமேதயாகம். (உ-ம்.) "அயமகமாயிரத்துக்கேனும்" (நல். பார. தீர்த்தம. கஅ.) [ஹய; மஹம்.]

அயமணல்—அயமலே.

அயமத்தி— இவனிருக்கிறானெனப் பொருள்படும் ஒருவடமொழிவாக்கியம். (உ-ம்.) "கோவாமயகிம்" என்னும் வடமொழிவினைவில். "உத்தரமொப்புச்செப்புதலாகு மயமத்தி யாதிபடர்க்கை முன்னிலை தன்மைமுக்குறி" (சி. அ: ௯௦. ஞாந.) [அயமேஷு; அயம்-இவன். அஸ்தி- இருக்கிறான்.]

அயமரம்—அலரி.

அயமாரகம்—அலரிச்செடி.

அயமாரணம்—அரசமரம்.

அயமாரம்—அலரி.

அயமான்மாப்பிரமம் — (வேதாந்தம்.) இந்த ஆன்மாப் பிரமம் எனப்பொருள்படும் அதர்வணவேத மகாவாக்கியம். (உபதேச வுண். எ.) [அயம்; ஆத்மா; ப்ரஹ்ம.]

அயமி—வெண்கடுகு.

அயமுகம்—ஓர் இருக்கை. (உ-ம்.) "பதுமுகமூற்கட்டிதமேயப்படி - இருக்கைசம்புடமயமுகஞ்சுவத்திகந் - தனிப்புடமண்டிலமேகபாத-மூளப்படவொன்பதுமாகும்- இரிதரவில்லாவிருக்கையென்ப" (சிலப். வேனி. உசு. உரை.)

அயமேதம்—அசுவமேதயாகம்.

அயர்—1-3. அயரென்னேவலுந்தெரிகிலவினைப்பகுதியும் வினைதொகையும். 4. தளர்தல், வாட்டம். (உ-ம்.) "சிற்றிலிற்சென்றழியாதுநின்றயர்காண்பன்" (கல்லா. ருஅ.) 5. வருத்தம்.

அயர்க்குதல்—மறத்தல். (உ-ம்.) "தன்னையயர்க்குதல்" (உபதேசகா. சிவபுண்ணி. உஅ.)

அயர்ச்சி— 1. உணர்வழிவு. 2. செய்தல். (உ-ம்.) "சாறயர்ச்சிவிளைப்பன" (சீகாழிப்பு. பூந்தரா. ச.) 3. சோம்பு. 4. பெலவீனம். 5. மறதி. 6. வருத்தம். (உ-ம்.) "மறைந்துபோயினனெனச்சிறிதயர்ச்சியுமநந்தி - னிறைந்ததோர்பெருங்கவற்சியை நீக்கினானென்ன" (திருவிளை. இரசவா. உஎ.) 7. வெறுப்பு.

அயர்ந்தல்— மறத்தல். (உ-ம்.) "அயர்த்தனைபழமறைத்துணிவு" (உபதேசகா. சந கா. கக.)

அயர்தல்—1. உணர்வழிதல். (உ-ம்.) "கள்ளுண்டயர்தல்" (கூர்மபு. திரிபுர. உஅ.) 2. இளைத்தல். (உ-ம்.) "அயராமலஞ்சலென்று" (வாண. உ௮௦.) 3. செய்தல். (உ-ம்.) "விருந்தயர்தலும்" (வள். ருக. உரை.) 4. சோர்தல், தளர்தல். (உ-ம்.) "அற்புதனேயிங்கார்விலமென்றென் றயர்கின்றார்" (கோயிற்பு. நட. கக.) "உடலெங்கு மோய்ந்தயர்ந்தவசமாகி" (தாயு. சுகவா. க.) 5. விரும்புதல். (ஐங்குறுநூறு.)

அயர்தி—1. உணர்வழிவு. 2. இளைப்பு. 3. சோம்பு. 4. மறதி.

அயர்நீகம்—செய்வேம். (உ-ம்.) "இளவியோடயர்ந்நீகம் விருந்தே" (கலித்தொகை. ருஉ.) [இது தன்மைப்பன்மை வினைமுற்று.]

அயர்ப்பு—மறப்பு. (உ-ம்.) "அயர்ப்பிலாதானேயோலம்" (பெரியபு. இயற். உக.)

அயர்வு—1. அகலம். 2. உன்மத்தம். 3. சோம்பு. (உ-ம.) "அயர்வில்காலன்" (ஞானவா. ஞானவிண். உ௦.) 4. தளர்வு. (உ-ம்.) "களைந்துகளைந்தயர்வுறுவார்" (சேதுபு. நாட்டு. சுஉ.) 5. மனக்கவர்சசி. (உ-ம்.) "உலகுடன்பெறினுங்கொள்ளலரயர்விலர்" (புறநா. கஅஉ.) 6. வருத்தம். (உ-ம்.) "அயர்வன்றியில்" (ஞானவா. புசுண். அச.) 7. வெறுப்பு.

அயர்வுயிர்த்தல்— 1. சிந்துதல். (உ-ம்.) "கள்ளயர்வுயிர்க்குஞ்செழுங்கமலமென்பொகுட்டு வள்ளல்" (கூர்மபு. அட்ட. அ.) 2. தளர்ச்சிநீங்குதல். (உ-ம்.) "குருகயர்வுயிர்க்குஞ் சோலை" (சூளா. துற. உரு.) 3. வருத்தந்தீர்தல்.

அயரப்போடல்—அயரவிடல்.

அயரவிடல்— சமயம் வாய்க்கும்வரையும் அயரவிடுதல்.

அயல்—1. அந்நியமானது. (உ-ம்.) "இருவருட்கயனுமாய்" (தாயு. சுகவாரி. ரு.) 2.

அருகு. (உ-ம்.) "தனக்கயலின்வந்தபரிசநத்தை" (கந்தபு. காமதக. கூடு.) 3. இடம். (உ-ம்) "தலைக்குவட்டயன்மதிதவழுமாளிகை"(இராமா. நகர்நீ. ககஎ.)4. வேறு.(உ-ம்.) "விரியுருவாயயல்போலாய்" (ஞானவா. விரதசூ. ந.)

அயலகத்தார் — அடுத்த இடத்திலிருப்போர்.

அயலவர்—1.பக்கத்தார். (உ-ம்.) "அயலவர் பரவவும்" (தேவார. திருக்கழு.எ.சுந்.) 2.பகையுநட்புமில்லாதார். (சூ.நிகண். உ: நக.)

அயலன்—அந்நியன் (உ-ம்.) "பிரயகோத்திரக்கயலனுகியே" (சேதுபு. பாவநா. கஎ.)

அயலாதாரம்—(இலக்கணம்) ஏழாம்வேற்றுமையில் வரும் நான்குவகைஆதாரகாரகங்களுள் ஒன்று; அஃது: ஆதேயத்திற்கு அயலாக இருக்கும் ஆதாரம். "ஆலின்கட்பசுக்கிடந்தது" என்பதிற்போல.(வீரசோ. உபகார.ச.) [ஸமீப; ஆதார.]

அயலார்— 1. அயலவர். (உ-ம்.) "அன்புடையன்கொல்லென்றயலாரெடுத்துரைப்ப" (கந்தபு.இரணியன்பு.அ.) 2. ஏவல்செய்வோர். (உ-ம்.) "தன்பன்னியோடுமயலார் சுற்றந்தமரோடும்"(திருவிளை. உலவாக்கோ. கஅ.) 3. பிறர்.

அயலி—வெண்கடுகு.

அயலுரை—1. அயலார் ஒருப்பட்ட வுரை. (திருக்கோ. கநஎ. உரை.)2. (அகப்பொருள்) தலைமகட்குயாதும் இயைபில்லாத வுரை.) (திருக்கோ. கநஎ. உரை.)

அயலோர்—1. அயலார். 2. மற்றையோர். (உ-ம்.) "ஆரியர்பேணுவதாகியயலோர்க்கெல்லாமரிதான" (ஞானவா. முமூட்சு. கஎ.)

அயவணம்— ஒட்டகம். (பிங்க, உசகக.)

அயவந்தி— ஒருசிவத்தலம்.(பெரியபு.திருஞாந. சகக.)

அயவாகநன்— அக்கினிதேவன். [அஜவாஹந: அஜ - ஆடு. வாஹந - வாகநமாக உடையவன்.]

அயவாரி— வசம்புப்பூண்டு.

அயவி—சித்தரத்தை.

அயவு—அகலம.

அயவெள்ளை—இரும்புப்பற்பம். [அயஸ் - இரும்பு.]

அயற்படல்— விலகிச்செல்லல். (உ-ம்.) "இயற்படுமானமு நாணுமீதலு - மயற்பட" (கந்தபு. சயந்தன்பு. ௫.)

அயறு—புண்வழலை. (உ-ம்.) "அயறுசோருமிருஞ் சென்னிய" (புறநா. உஉ.)

அயன் — 1. அருகன். 2. கிரமமானது. (அரபி.) 3. சர்க்காரைச்சார்ந்தது. (அரபி.) 4. சரியானது. (அரபி ) 5. சூரியகுலத்தோரரசன்; இவன் இரகுவின்மகன். (உ-ம்.) "பேதமில்லதோர் பிரமமூர்த்தமே-யாதலாற்பெயரயனென்றோதினன்" (இரகு. அயனு.௫உ.) 6. பிரமா. (உ-ம்.) "அயன்படைத்திடுமண்டத்திற் காவியாய்" (கந்தபு. வள்ளி. உ.) 7. பிறப்பில்லாதவன். 8. மகேச்சுரன். (உ-ம்.) "சாதலும்பிறப்புந் தோயாத் தன்மையாலயன்" (கூர்மபு. பிரகிருதித்தோற். உக.) [1, 5, 6, 7, 8. அஜ.]

அயன்பதஞ்சேர்ந்தோர்—சூத்திரர். (உ-ம்.) "அயனபதஞ்சேர்ந்தோர்துங்கவீதியும்" (கந்தபு. நகர. சௌ.) [பிரமாவுடைய பாதத்திலே பிறந்தமைபற்றிவந்தபெயரென்பர்.]

அயன்பதத்துதித்தோர்—சூத்திரர்.

அயன்மனைவி— சரசுவதி. (சூ. நிகண். ச: ந௫.) [அஜ- பிரமன். மனைவி - இல்லாள்.]

அயன்முகத்துதித்தோர்—பிராமணர்.

அயன்வாவி—மாநதவாவி.

அயன்றோளுதித்தோர்—அரசர்.

அயனாள்— 1. உரோகிணிநாள். [பிரமன் பிறந்தநாள்.] 2. பிரமன்வாழ்நாள்.

அயனிலம்— சர்க்காருக்கு இறை கட்டும் நிலம்.

அயனூருவில்வந்தோர்— } வைசியர்.[அஜ- அயனூருவிலுதித்தோர்— } பிரமா ஊரு - தொடை.]

அயா—வருத்தம். (உ-ம்.) "மானயாநோக்கியர்மருங்குல்" (சிந்தா. கநக. உகக.)

அயாசகபிச்சை— கேளாதிருக்கத் தானிருக்குமிடத்திலே மற்றொருவன்கொண்டுவந்துதரவாங்கும் பிச்சை. (சைவச. பொது. உ௫எ. உரை.) [அயாசக; பிக்ஷா.]

அயாசகம் —அயாசகபிச்சை. (உ-ம்.) "சாந்தாநிகபிச்சைதக்ககணமாதுகரி-யாய்ந்தார்க்கயாசகமுமாம்" (சைவச. பொது. உ௫எ.) [அயாசக.]

அயாசகன்—இரந்து கேளாதவன். [அயாசக: யாசக - இரந்துகேட்பவன்.]

அயாசிதம்— கேளாமற்றாக்கொள்ளும்பிச்சை. [அயாசித - யாசிக்கப்பட்டது.]

அயாசிதவிருத்தம்— கேளாதுவந்த பிச்சைப்பொருளைக் கொண்டு சீவநம்பண்ணுதல். (உ-ம்.) "பிராரத்தம் அல்லது வாராதென்னு

முறைமையையறிந்த பெரியோர் அயாசிதவி ருத்தியாகப் பூமியின்கண்ணே யிருக்கவும் அவர்களுக்குச் சீவநம் நடக்கவுங் கண்டோம்" (சி. சி. உ: அ. சிவாக்.) [அயாசித - கேட்கப்படாதது. வ்ருத்தம் - விருத்தி.]

அயாநம்— இயற்கைக் குணம். [அயாந: அ; யாந - போதல்.]

அயாவுயிர்த்தல்—1. அறிவுமயக்கமாயிருந்து எழும்புதல். (உ-ம்) "கேடுநீங்கிநீள யாவுயிர்த்தார்போல" (கந்தபு. மார்க்க. கoகூ.) 2. வருத்தநீங்கியெழும்புதல், இளைப்பாறுதல். (உ-ம்.) "இளையவரயாவுயிர்த்தெழுந்தார்" (சிந்தா. மண். எ.)

அயிக்கம்— ஒற்றுமை. [இஃது ஐக்கியம் என்பதன்றிரிபு.]

அயிக்கவாதி—ஐக்கவாதி. [வைக்யவாதி.]

அயிக்யம்—ஒன்றுந்தன்மை. (உ-ம்.) "அத்துவிதமானவயிக்யவநுபவமே" (தாயு. பரா. உகூடு.)

அயிகம்—ஊமத்தைப்பூண்டு.

அயிங்கிதை—சொல்லாமை. (உ-ம்.) "அயிங்கிதை பொறையேமேன்மை" (சிவதருமோ. சிவதரும. ங.) [இஃது: "அஹிம்ஸா" என்பதன்றிரிபு.]

அயிச்சுவரியம் — ஐசுவரியம். (உ-ம்.) "மெச்சயிச்சுவரியமுளவேள்விநாயகற்கு" (நல். பார. காருட. உச.) [ஐஸ்வர்யம்.]

அயிச்சொரியம்—செல்வம். (உ-ம்.) "அதனயிச்சொரியந்தாவில்சீர்-வித்தகமுனிவரவ்பூதியாகுமால்" (கூர்மபு. இந்திரத். ஙச.) [ஐஸ்வர்யம்.]

அயிஞ்சி—திலப்பனைப்பூண்டு.

அயிஞ்சை—கொல்லாமை. (உ-ம்.) "ஒப்புறுமறையோர்பூசை குருபூசையோங்குமங்கியைப்புரிபூசைதன்னினீங்கிசையறத்திற்செய்யிற் - றப்பிலாவயிஞ்சையென்று சாற்றுவர் தலைமையோரே" (மச்சபு. யோகசாத். கக.) [அஹிம்ஸா.]

அயிணம்—மான்றோல். [ஐணம் என்பதன்றிரிப.]

அயிந்திரம்—ஐந்திரவியாகரணம். (உ-ம்.) "அயிந்திரவியாகரணமுமோதி" (இராமா. அநு. சகூ.) [ஐந்த்ர.]

அயிப்பை—ஒருசெடி.

அயிர்—1-3. அயியென்னேவலுஞ்செரிநிலை வினைப்பகுதியும் வினைத்தொகையும். 4. ஆற்றுமணல். (சைல. சைலவ. கஉஎ.) 5. கண்டசர்க்கரை. (உ-ம்.) "குடதிசைமருங்கின் வெள்ளயிர்தன்னொடு" (சிலப். அந்தி கூடு.) 6. சந்தேகம். (உ-ம்.) "அயிரிற்றீர்ந்தபோறிஞரும்" (திருவிளை. நகர.கூடு.) 7. சருக்கரை. (உ-ம்.) "அயிருநதேனும்" (இராமா. நாட். குகு.) 8. சிறுநீர். (இராசவைத்.) 9. நுண்மணல். (உ-ம்.) "அயிரார்திரைவந்துன்வண்டலம்பாவையழித்தனவோ" (வாண. உஅஅ.) 10. நுண்மை. 11. யானைக்காஞ்சொறி. (இராசவைத்.)

அயிர்க்கடு— அங்குசம்.

அயிர்க்கல்— அயிர்த்தல். (உ-ம்.) "அயிர்க்கலாந்தன்மையன்மையன்றி" (உபதேசகா. சநகா. கூ.)

அயிர்த்தல்— 1. சந்தேகித்தல். 2. மறைத்தல். (உ-ம்.) "உயிரனையாயயிராமலுரையெனக்கே" (வாண. ஙoங)

அயிர்ப்பு— 1 அநுத்திரபஞ்சமம். (பிங்கல். கஙகூங.) 2. அயிர்த்தல். (உ-ம்.) "அண்ணலிங்குமாரனென்றயிர்ப்புறுமாசர்யாரும" (பாரத. திரௌ. கூங.)

அயிரம்— கண்டசருக்கரை.

அயிராணி—1. இந்திராணி. (உ-ம்.) "நகைமணிப்பூணயிராணி" (காஞ்சிபு. நகரேற்று. கசக.) 2. பார்ப்பதி. (திவாகர.)

அயிராணிகேள்வன்— இந்திரன். (திவாகர.)

அயிராவணம்— 1. அயிராவதயானை. 2. இரண்டாயிரங்கொம்புடைய ஓர்யானை. அது கைலாயத்திலிருப்பது. (உ-ம்.) "இயங்குந்திறனுடைத்தீராயிரமருப்பேய்ந்துடற்றத்-தயங்குந்திறலயிராவணஞ்சார்வது" (தணிகை. களவு. கூஉ.) பிருதிவிலிங்கசொரூபம். (உ-ம்.) "அமரர்நாடாளாதேயாரூராண்ட - அயிராவணமே" (தேவார. திருவாரூர். க. திருநாவு.) [இரா. பிருதிவி. இகரம் - ஆதிவிருத்திசந்தியால் ஐகாரமாயிற்று. வணம் - வண்ணம், மயம்.] [ஐராவண: இராவண - கள்ளுநிக்கவனம் - அதிற்பிறந்தது.

அயிராவதப்பாகன்— இந்திரன். (உ-ம்.) "அண்ணலயிராவதப்பாக னடைபடைதாங்க" (கூர்மபு. திருக்கல். சகூ.)

அயிராவதம் — இந்திரனுடைய யானை. (உ-ம்.) "பனைக்கைப்பிறைவெண்கோட்டயிராவதமேபோலும்பகட்டின்" (பாரத.திரௌ

௪௪.) [ஐராவத: ஐராவதீ - கடல். பாற்கடலிற்பிறந்ததென்பர்.]

அயிராவதன்— 1. இந்திரன். [ஐராவத: அயிராவத யானையையுடையவன் என்றபடி.] 2. சூரியனுடைய தேரைப்பரிக்கும் நாகரில் ஒருவன். (உ-ம்.) "ஆசறுமயிராவதன்" (கூர்மபு. ஆதவ. ௬.) [ஐராவத.]

அயிரி— 1. நெட்டிலைப்புல். 2. மீன்முள்ளரியும் ஒருவகைக்கத்தி. (பிங்கல. ௧௩௨௧.)

அயிரியம்—நெட்டிச்செடி.

அயிரை— 1. ஒரு சிறுமீன். (உ-ம்.) "குமரியமபெருந்துறையயிரைமாந்தி" (புறநா. ௬௭.) 2. நுண்மணல். (உ-ம்.) "அயிரைவார்கரைக்குடகடல்" (சூளா. கல்யா. ௫௩.)

அயில்— 1-3. அயிலென்னேவலுமதெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். 4. அழகு. 5. இரும்பு. (உ-ம்.) "அயிலுண்ணல்" (சைவ. சைலவ. ௨௧.) 6. உண்ணல். 7. கலப்பை. 8. கூர்மை. (உ-ம்.) "அயில்வேற்கைக்கந்தவேள்" (கந்தபு. வள்ளி. ௨௧௫) 9 சோரைப்புல். 10. வேலம்பட்டை. (இராசவைத்.) 11. வேற்படை. (உ-ம்.) "சுற்றுமயிலும்வட்டமுமெடுத்திருகை" (அரிச்சந். விவாக. ௧௧௭.)

அயில்வித்தல்— உண்பித்தல். (உ-ம்.) "அடிசிலயில்வோர்தம்மையயில்வித்து" (திருவிளை. உக்கிர. மேவல்வளை. ௬0.)

அயில்வு —உண்ணல்.

அயிலம்—இருப்பைவேர்ப்பட்டை. (இராசவைத்.)

அயிலல்—உண்ணல். (உ-ம்.) "உகுபாலயிலுற்றிடுபொழுதத்தினில்" (கந்தபு. சரவண. ௩௩.)

அயிலவன்—வேற்படையுடையவன், கந்தசுவாமி. (உ-ம்.) "தினைகாவன்மயிலைமணந்தவயிலவ" (திருப்புக. ௩௧௩.) [அயில்-வேற்படை. அ - ஒரு சாரியை. அன்-ஒருவிகுதி.]

அயிலான்— கந்தசுவாமி. [அயில்-வேற்படை. ஆன்-ஒருவிகுதி.]

அயிலிடம் —சிற்றரத்தை.

அயிலுதல் —உண்ணல்.

அயிலேயம்-முசுமுசுக்கைக்கொடி. (உ-ம்) "வானநாடயிலேயம்" (தைல. தைலவ. ௧௧.)

அயிற்கடு—அங்குசம்.

அயிறல்—உண்ணல். (உ-ம்.) "ஆனபல்கடல்களுமயிறன்மேயினன்" (கந்தபு. சிங்க. ௨௭.)

அயினி— 1. சோறு, உணவு. (சூ - நி. ௬. ௨௨.) 2. நீராகாரம். (இராசவைத்.)

அயினிநீர் — சோறுகலந்த ஆலத்திநீர். (உ-ம்.) "போதுடனயினிநீர்சுழற்றி" (இராமா. மிதிலை. ௫௧.)

அயுக்தம்—தகாதது. [அ-எதிர்மறை. யுக்தம் - இயைபு.]

அயுகலம்—தனிமை. [அயுகளம்: அ - எதிர்மறை. யுகளம் - இரண்டு.]

அயுத்தம்— 1. எதுவலங்காரவகையைந்தனுள் ஒன்று. அது, "இகன்மதமால்யானையுபாயனெங்கோன் - முகமதியின்மூரனிலவா - னகமலர்வ - செங்கயற்கணல்லார்திருமருவுவாள்வதன - பங்கயங்கள் சாலட்பல" என்பதிற்போலக் காரணத்துக்கேலாத காரியம் நிகழ்வது. (உ-ம்.) "தூரகாரியமுமொருங்குடன்றோற்றமுங் - காரியமுந்துறாஉங்காரணநிலையும், யுத்தமுமயுத்தமுமுத்தைதயோடியலும்" (தண்டி. ௬௨.) 2. பொருத்தமில்லாதது. [அயுக்தம்.]

அயுத்தி—1. நியாயவிரோதம். 2. பொருத்தமில்லாமை. [அயுக்தி: அ - எதிர்மறை. யுக்தி - பொருத்தம்.]

அயுதசித்தசம்பந்தம்— நீக்கமின்றியிருப்பவற்றின்சம்பந்தம்; அது: கெடாததாய் ஒன்றுமற்றொன்றை எப்பொழுதும் பற்றிநிற்பது. (தர்க்கபா. ௫.) [அயுதஸித்தஸம்பந்த: அயுத - பிரிவின்மை. ஸித்த - சித்தாந்த. ஸம்பந்த - சம்பந்தப்பட்டது.]

அயுதசித்தம்—சமவாயசம்பந்தம். [அயுதஸித்த.]

அயுதம் —1. பதினாயிரம். (உ-ம்.) "இரண்டுபடையுமயுசவருடநேர்ந்து" (காஞ்சிபு. மகாலி. அ.) 2. பிரிவின்மை. [அயுத.]

அயுதாயு— சூரியகுலத்துள்ள ஓரரசன். இவன்: சிந்துதீபனுடையமகன். (கூர்மபு. சூரிய. ௬௬.)

அயோக்கியதை — 1. இசையாமை. 2. பொருத்தமின்மை. [அயோக்யதா: அ - எதிர்மறை. யோக்யதா - பொருத்தம்.]

அயோக்கியம்— 1. இசையாமை. (உ-ம்.) "பிரத்தியக்ஷத்திற்குயோக்கியமுமயோக்கியமுமாய் ஒளித்தவஸ்துவையறிவிப்பதாகும்"

(சி. சி. அளவை உ: ஞாந.) 2. தகுதியின்மை. 3. பொருத்தமின்மை. [அயோக்ய].

அயோக்கியன்— யோக்கியனல்லாதவன். [அ-எதிர்மறை. யோக்ய-தக்கவன்.]

அயோக்கிரம்—உலக்கை. 2. சுத்தியல். [அயோக்ர: அயஸ் - இரும்பு. அக்ர - நுனி.]

அயோகநம்— சுத்தியல். [அயோகந: அயஸ் - இரும்பு. கந - அடித்தல்.]

அயோகம்— 1. சுத்தியல். [அயஸ் - இரும்பு. க-போதல்.] 2. தகுதியின்மை. 3. பிரிவு, கூடுதலின்மை. 4. முயற்சி. 5 வெறுப்பு. [அயோக: அ-எதிர்மறை. யோக-சேர்க்கை.]

அயோகவன்— சூத்திரனுக்கு வைசியப்பெண்ணிடத்திலே பிறந்தவன். (சைவச.பொது. சகூஎ.) உ-ம்.) "பார்கொள் சூத்திரற்கு நாய்கர்பாவைக்குமுதித்தவாட்க-ணோரயோகவப்பெண்"(சூத. சிவமான். கஉ:) [அயோகவ: அயோக - வேறுகப்பட்ட. வ - போதல்.]

அயோகவியவச்சேதநம்— இயைபின்மை நீக்குதல். (பி. வி. ௰.) உரை.) [அயோகவ்யவச்சேத: அயோக- இயைபின்மை. வ்யவச்சேத - நீக்குதல்.]

அயோகன்— 1. தாரமிழந்தவன். 2. மனைவியைப்பிரிந்திருப்பவன். [அயோக: அ - எதிர்மறை. யோக - கூடியிருத்தல்.]

அயோகிருதபம்— இரும்புபோன்ற கடினமானமனம். [அயோஹ்ருதய: அயஸ் -இரும்பு. ஹ்ருதய - மநம்.]

அயோசநம்— 1. ஒன்றுதலின்மை. 2. வேறுந்தன்மை. [அயோஜந: அ - எதிர்மறை. யோஜநம் - ஒன்றுதல்.]

அயோத்தி — சூரியவம்சராசர்களுடைய இராசதாநியாய்ச்சரயுநதிக்கரையிலுள்ள ஒரு நகரம். (உ-ம்.) "மணிமாடவயோத்தியென்னும் பொன்னகரு மல்லாது புகலுண்டோ" (இராமா. கையடை. எ.) [அயோத்யா: அ - எதிர்மறை. யோத்யா - யுத்தஞ்செய்யத்தக்கது.]

அயோதகதி—"இரும்பு சுடுகின்றது"என்பபொருள்படும் ஒரு வடமொழி வாக்கியம். (உ-ம.)"பிரமா சிருட்டிக்கவும் விட்டுணு இரட்சிக்கவுஞ் சாலருத்திரன் சங்கரிக்கவும பொருந்துகையாலே, "அயோதகதி" யென்றாற்போலச், சிவசத்தியிவர்களை யதிட்டித்துச் செய்கையால் இவர்களே செய்ததென்பபெறும்" (சி. சி. க: ௩௪. சிவாக்.) [அயோதஹதி: அயஸ் - இரும்பு. தஹதி - சுடுகின்றது.]

அயோநி—1. சிவன். 2. தொடக்கமில்லாதது. 3. நித்தியம். 4. பிரமா. 5. யோநியிற்பிறவாதது. [அயோநி: அ - எதிர்மறை. யோநி - காரணம்.

அயோநிசம்—யோநியாற் பிறவாதது. [அயோநிஜ: அ - எதிர்மறை. யோநிஜ- யோநியிற்பிறந்தது.]

அயோநிசை— யோநிவழியாற் பிறவாது கலப்பைச் சாலிற் பிறந்த சீதையென்னும் பெண். [அயோநிஜா: அ; யோநிஜா- யோநியிற்பிறந்தவள்.]

அயோமலம்—இருப்புக்கிட்டம். [அயோமல: அயஸ் - இரும்பு. மல - அழுக்கு.]

அயோமுகி—ஓரரக்கி.(இராமா.ஆரணியகா. அயோ. ௩௬.) [அயோமுகீ.]

அயோற்கம்— அரத்தினாலே யராவியெடுத்த இரும்புப்பொடி.

அர்—1. ஒருபகுதிப்பொருள்விகுதி (உ-ம்.) "பூவர்சோலை புகுவலென்றெண்ணினான்" (சிந்தா. பதுமை. கசுஈ.) 2. பெயர்வினைகளில் உயர்திணைப்பன்மையைக் காட்டும் ஒரு விகுதி; "அவர்வந்தனர்" என்பதிற்போல. இவ்விகுதி: தெரிநிலைவினைமுற்றில் இறந்தகால இடைநிலையாகிய டகர றகர ஒற்றுக்களை யொட்டிவரும்போதும் நிகழ்கால இடைநிலைகளாகிய கின்று, ஆநின்று என்பவைகளை யொட்டிவரும்போதுந்தன்முன் அன்சாரியை பெற்றன்றி வருதலில்லை. மேலும் இவ்விகுதி வினைமுற்றின் ரூபமல்லாத வினையாலணையும் பெயரில்வரும்போது "வந்தவர்"என்பதிற்போல அகரச்சாரியை யடுத்தே பின்வரும். 3. பெயர்வினைகளில் ஒருமைச்சிறப்பில்வரும் ஒருவிகுதி. "சம்பந்தர் நின்றனர்" என்பதிற்போல. 4. மென்றொடர்க்குற்றியலுகரப்பெயரிறுதியுகரத்தோடொத்தவரும் ஓரிடைச்சொல்; "சுரும்பர்" என்பதிற்போல.

அர்க்கக்கீராதித்தைலம்— எருக்கம்பால், சதுரக்கள்ளிப்பால் முதலியவற்றில் வடித்தெடுக்கும் ஒருவகைத்தைலம். [இதனிலக்கணம். தைல. தைலவ. ருக-ஆம் ௬உ-ஆங்கவிகளிற்காண்க.]

அர்க்கதநு—1. இயமன். 2. கன்னன். 3. சநி. 4. சுக்கிரீவன். [அர்க்கதநு: அர்க்க-சூரியன். தநு - மகன்.]

அர்க்கந்து—தடங்கல். [அராபி.]

அர்க்கபந்து— 1. கௌதமபுத்தன். சூரியவம்சத்திலே தோன்றினோனென்பர்.]2.தாமரைக்கொடி. [அர்க்கபந்து: அர்க்க - சூரியன். பந்து - உறவு.]

அர்க்கம்— 1. எருக்கஞ்செடி. 2. செம்பு. 3. தேவருக்கு அல்லது பெரியோருக்கு வணக்கத்தோடு கொடுக்கும்பொருள்; அப்பொருள்; நீர்த்தம், பால், தருப்பை, தயிர், நெய், அரிசி, கோதுமை, எடுகு என்பன. 4. நீர்க்காகம். (சூ. நிகண். ௩ : ௬௩.) 5. பளிங்கு. 6. பூகோளாட்சம். 7. பொன். 8. விலைப்பொருள். [2, 5. அர்க்க; 3, 8. அர்க்ய.]

அர்க்கமலை— அருணாசலத்திற்குக்கிழக்கேயுள்ள ஒருமலை. (அருணாசலபு. திருந. ௩௯.)

அர்க்கலும்—கதவடைக்குந்தாழ் [அர்கல.]

அர்க்கன்—1. இந்திரன். 2. உத்திரநட்சத்திரம். 3. சூரியன். 4. ஞாயிறுக்கிழமை. 5. செருப்பு. [அர்க்க.]

அர்க்காதிபன்—திவியாதிபதி. [அர்க்காதிப.]

அர்க்காம்சு — துவாதசகலாப்பிரசாதம். சூரியனாகிய ஹகாரத்தின்மேல் அனுஸ்வரம் ஆகிய அகாரம், கோணம் ஆகிய உகாரம், ஆன்மா ஆகிய மகாரம், பைந்துமா ஆகியபிந்து, அர்த்தசந்திர ஆகிய அர்த்த சந்திரன் ரோதி ஆகிய நிரோதிசி, நாதம் ஆகிய நாதம், தண்டாந்தமாகிய நாதாந்தம், இடப்புறத்தில் விந்துவோடுகூடின கலப்பைவடிவமான சக்தி, வியாபிகா ஆகிய வியாபிகி, ஸமநா உன்மநா ஆகியவைகளே. இதிற்சமனைவரையிற் பாசசமூகம். உன்மனாந்தத்திற் பிராசாத மந்திரவாச்சியாதிய பரசிவனை விளக்கினர். (சி-வி. கிரி. எ-ஆம் உரையும்.) [அர்க்காம்சு.]

அர்க்நார்—வேவுகாரன். [இந்துஸ்.]

அர்க்நாரி —அர்க்கார். [இந்துஸ.]

அர்க்கியபாத்திரம்— அர்க்கியபாத்தியாசமநங்களுக்கு யோக்கியமான பாத்திரங்களிலொன்று. (சி-வி. கிரி. ௪௪.தாற்.) [அர்க்யபாத்ரம்.]

அர்க்கியம்— அருக்கியம். (உ-ம்.) "அவரவர் மந்திரத்தினாலே விதமாரர்க்கியங்கொடுத்து" (சேதுபு. சேதுபல. ௬௰.) [அர்க்ய.]

அர்க்கீசம்—அருக்கீசம்.

அர்கதமுநி—அருகன்.(வேதா. சூ. பொது. உ௪.) [அர்ஹத்முநி.]

அர்ச்சகன்—அருச்சகன். [அர்சக.]

அர்ச்சநாகிரகம்— ஒருவகைநோய்; அது: குழந்தை பிறந்த பதினொராநாளிலாவது பதினோராம் மாசத்திலாவது பதினோராம் வருடத்திலாவது குழந்தையையல்லது தாயைப்பிடிக்கும் ஒரு பெண்கிரகத்தாலாயதென்பர். அதனால் தேகமிளைத்தல், சுரம், சர்வாங்கத்திலு நிருநோவு, அங்கத்தில் வெறுப்பு, விழித்தவிழி விழித்தபடியிருத்தல் என்னும் இக்குணங்களுண்டாகும். (சீவரட். உஉஅ.) [அர்ஜ - சம்பாதித்தல், "நாட்பட அநுசரித்தல்."]

அர்ச்சநம் — 1. திரவியஞ் சம்பாதித்தல். [அர்ஜந.] 2. பூசைசெய்தல். [அர்சந.]

அர்ச்சநாதிகாரம்—பூசனைசெய்தற்கு யோக்கியம். (உ-ம.) "அதிகாரம்" "5." பார். [அர்சநாதிகார.]

அர்ச்சநீயம்—1. மதிக்கத்தக்கது. 2. வணங்கத்தக்கது. [அர்சநீய:]

அர்ச்சனை—1. பூசை. (உ-ம்.) "செவ்விதர்ச்சனைசெய்தனன் மாண்பமே"(கந்தபு.திருவி. ௯உ௩.) 2. வணக்கம். [அர்சநா.]

அர்ச்சி —1. ஒளி. 2. சுவாலை. 3. பூசைசெய்யெனப்பொருள்படும் "அர்ச்சி" யென்னேவல். [அர்சி:]

அர்ச்சித்தல்— பூசைசெய்தல். (உ-ம்.) "அர்ச்சிப்பாரிந் நூலலரினால்" (சைவச.பொது. ௫௯௬.)

அர்ச்சிதன்—1.பூசிக்கப்படுவோன்.(உ-ம்.) "ஆதிநாதனமரர்களர்ச்சிதன்" (தேவா. திருப்பூவ.எ.திருநாவு.)2 விட்டுணு. [அர்சித.]

அர்ச்சியம்— பூசிக்கத்தக்கது. [அர்ச்ய.]

அர்ச்சுநம்—அருச்சுநம். [அர்ஜுந.]

அர்ச்சுநன்—அருச்சுநன். [அர்ஜுந.]

அர்ச்சை — மூர்த்தி - கல், மரம், மண் முதலியவற்றாற் செய்யப்பட்ட விக்கிரகம். [ஸம்ஸ்கி.]

அர்ஜி—விண்ணப்பம். [பார்சி.]

அர்ஜிதாஸ்து — விண்ணப்பபத்திரம். [பார்சி.]

அர்டணம்—1. சந்தோஷம். (உ-ம்.) சோகமோக அர்ஷணாதிகள் அந்தக்கரணதருமமாகவும்" (சி. சி. அ: கo. சிவாக்.) [ஸம்ஸ்கி. ண.] 2. நித்திய யோகத்தொன்று.

அர்த்தக்கிரியாஸ்திதி—யாதொருபதார்த்த தெரிசநத்தினாலே ஞானமானது கெடுக்கப்படாமலிருக்குமோ அது. [ஸம்ஸ்கி. க்ரியா ஸ்திதி.]

அர்த்தக்கிரியார்த்தி—பிரயோசநமான கிரியையை யிச்சிக்கிறவன். [ஸம்ஸ்கி. க்ரியா, ஸம்ஸ்கி.]

அர்த்தசஞ்சயகிருது — ஒருவகையதிகாரி. (கூர்மபு. திருக்கல். க. உரை.) [ஸம்ஸ்கி. ஸஞ்சயக்ருதி: ஸம்ஸ்கி. - பொருள். ஸஞ்சய-ஈட்டல். க்ருதி - செய்பவன்.]

அர்த்தசந்திரபாணம் — பிறைமுகங்கொண்ட அம்பு. (உ-ம்.) "அர்த்தசந்திரபாணமானது தைக்கின்ற" (ஞானவா. சிகித். சஎ. உரை.) [ஸம்ஸ்கி.; சந்த்ரபாண.]

அர்த்தசந்திரம்—வியூகவகை நான்கனுளொன்றாகிய அசங்கதத்தின்விரியாறனுள் ஒன்று. (உ-ம்.) "தோலாவர்த்தசந்திரப்பேர் வியூகம் வகுத்தான்றுளவோனே" (பாரத. ௩-ஆம் போர். உ;வள். எகூஎ. உரை. குறிப்பு.)[ஸம்ஸ்கி. சந்த்ரம்.]

அர்த்தசந்திரன்—1. பாதிச்சந்திரன். 2. பாதிச்சந்திரன்வடிவான வளைவாக நகத்தைப் பதித்து வைக்கும் நகக்குறி. (கொக்கோ. ௫: ௬அ.) 3. பாதிச்சந்திராகாரமாக வளைக்கப்பட்டகை. 4. பிறைமுகாஸ்திரம். 5. புருவநடுவுக்கு மேலே மூன்றங்குலம் வியாபித்து நிற்கும் பிறைவடிவுடைய கலை; அது: பன்னிரண்டுகலைகளில் ஆறாவது. (சி. சி. உ: எசு. ஞானப்; சி - வி. கிரி. கூ - ஆம் உரையும்.) [இதனைப்பிரமாந்திரத்தானத்தில் இருக்கும் நான்குகலைகளில் ஒன்றென்பர். (சி - வி. கo.] ஸம்ஸ்கி. சந்த்ர: ஸம்ஸ்கி. - பாதி. சந்த்ர.]

அர்த்தசம்விருத்தி— விடயத்தையறியும் அறிவு. (பௌட்.பும் சுருசஇ.) [ஸம்ஸ்கி. - விஷயம். ஸம்வித் - அறிவு.]

அர்த்தசா—விருத்தபாகமாகிய பிறைவடிவு. [ஸம்ஸ்கி. ஜ்யா.]

அர்த்தசாமம்—இரவில் நடுச்சாமம். (உ-ம்.) "அர்த்தசாமத்தில் நித்திரைசெய்யும் வஞ்சிக்கொடிபோன்ற சூடாலையானவள்" (ஞானவா. சிகித். எஉ. உரை.) [ஸம்ஸ்கி.; யாமம் - இரவு.]

அர்த்தசாமர்த்தியம்— சொற்பொருளின் வலிமை. (சைவப்பி. ௩௩.) [ஸம்ஸ்கி. - பொருள். ஸாமர்த்ய - வல்லமை.]

அர்த்தசாலம்—பொருட்கூட்டம். (உ-ம்.) "சராசராத்மகமாயிருக்கிற அர்த்தசாலமுங் கிரமத்திலுண்டாம்" (சி. சி. அளவை. க௩.) [ஸம்ஸ்கி.; ஜால.]

அர்த்தசித்திரம்— தாளப்பிரமாணம் பத்துவகையுளொன்றாகிய மார்க்கம் என்பதன் பிரிவுகள் ஆறனுள் ஒன்று; அஃது, அரைமாத்திரையோர்கலையாகக்கொண்டது. [ஸம்ஸ்கி. சித்ரம்.]

அர்த்தநாரீசுரன்— பாதியுடம்பு பெண்ணாகஇருக்குஞ்சிவன். (உ-ம்.) "திருவளருமர்த்தநாரீசுரப்பொற்பதுமையதில்" (மச்சபு. புரா. உஉ.) [ஸம்ஸ்கி. நாரீ; ஈச்வர.]

அர்த்தநாரீசுவரம்— பாதிச்சரீரம் பார்வதியாரும் பாதிச்சரீரஞ்சிவபெருமானுமாகவீற்றிருக்குங்கோலம். (சிவபரா. எஉ. பக்.)

அர்த்தப்பிரகரன்— 1. அர்த்தப்பிரதோஷம்; அது: ஞாயிற்றுக்கிழமை முதல் சனிக்கிழமைவரையும் முறையே வரும் நாலாஞ்சாமம், ஏழாஞ்சாமம், இரண்டாஞ்சாமம், ஐந்தாஞ்சாமம், எட்டாஞ்சாமம், மூன்றாஞ்சாமம், ஆறாஞ்சாமம் என்னுங் காலங்கள். (விதான. குணகுண. இo.) 2. புதன்மகன். (குமாரசுவா.திநாதி. உ.உரை.) [ஸம்ஸ்கி.; ப்ரஹர.]

அர்த்தப்பிரதீதி—அர்த்தமறிதல். (உ-ம்.) "இப்படியிருக்கிற வாக்கியங்களால் வைதிக லௌகிக ஏதுவாயிருக்கிற அர்த்தப்பிரதீதியுண்டாம்.. (சி. சி. அளவை. க௩. சிவாக். ) [ஸம்ஸ்கி.-பொருள். ப்ரதீதி- அறிவு.]

அர்த்தப்பிராணன்— அற்பப்பிராணனுக்கும் மகாப்பிராணனுக்கும் இடையாக உச்ச

ரிக்கப்படும் எழுத்துக்கள். (பி. வி. ச.உரை.) [அர்த்த; வ்யாண.]

அர்த்தபிதரபூதம்—ஒருவகை நோய்; இது: கண்ணிமைகள் சரிந்து தொங்குதல், தலைமயிர் முறைத்தல், தாடையுலர்தல், மூடிக்களை நீங்குதல், துக்கித்தமுகம், உருட்டியுருட்டிப்பார்க்குதல், அகாலநித்திரை, மந்தாக்கினி, சுபாவவார்த்தை, சொப்பநத்தில் இறந்தவர்களைக்கண்டுபேசுதல், கறுப்பாகிய வஸ்து, வெல்லம், பால், மாமிசம் இவைகளில் விருப்பம் என்னும் இக்குணங்களையுண்டாக்கும். (சீவரட். உ௩௫.)

அர்த்தபிப்பலி— பாதிப்பிப்பலி. (பி. வி. உக. உரை.) [அர்த்த; பிப்பலீ.]

அர்த்தபிருட்டகம்—அங்கக்கிரியை பதினுறிலொன்று. (சிலப். அரங்கே. கஉ. உரை.) [ப்ருஷ்டக.]

அர்த்தபேதரோகம்—சிரசில்வரும் ஒருவகைரோகம். (சீவரட். உக௯.) [இது சிரசிலொருபக்கத்தைப்பேதிப்பதால் அர்த்தபேதமெனப்பட்டது.]

அர்த்தம்— 1. இரந்துகேட்டல். 2. ஒருகூறு. 3. சடப்பொருள். 4. சம்பத்து. 5. சொல்லினுற் கருதப்படும்பொருள். (உ-ம்.) "மருந்தனவேதார்த்த முழுவதுமுரைக்கும்" (சூத. எக்கி. பூ. ௫: கக.) 6. திரவியம். 7. தொடக்கம். 8. நன்ருயிருத்தல். 9. பாதி. 10. பிரயோசநம். 11. பிறப்பு. 12. வியாச்சியம். [1, 3, 4, 5, 6, 7, 8, 10, 11, 12, [அர்த்த; 2, 9. அர்த்த.]

அர்த்தம்பண்ணல்— பொருள் சொல்லல்.

அர்த்தமண்டபம்—கோயிலிலே மூலத்தானத்துக்கடுத்தமண்டபம். [அர்த்த; மண்டப.]

அர்த்தமாத்திரயோசந நிர்விகற்பக்காட்சி—குணங்களையின்றிப்பொருண் மாத்திரம் அகப்படுக்கும் நிருவிகற்பக்காட்சி. [அர்த்த - பொருள். மாத்ர - மட்டும். யோஜந - பொருந்துகை. நிர்விகல்ப - விகற்பமின்மை. காக்ஷீ - பிரத்தியட்சம்.]

அர்த்தாதன் — ஒருவகைத் தேர்வீரன். (உ-ம்) "நண்ணுமர்த்தரதர்க்குநாயகர்" (பாரத. அணி. ௩.) [அர்த்த; ரத.]

அர்த்தராத்திரி—பாதியிரா. (உ-ம்.) "அர்த்தராத்திரியதாகு மமரர்கோன் வாழுமூரில்" (மச்சபு. சூரியசங். கஉ.) [அர்த்தராத்ரி: அர்த்த - பாதி. ராத்ரி - இரா.]

அர்த்தவாதம்—1. பிரயோசநத்தைச்சொல்லுதல். (சைவப்பி. ௩௪.) 2. புகழ்தல், துதித்தல். (உ-ம்.) "பட்டுக்களைப்போல வேதார்த்தத்தின் மகிமையைத் துதிப்பதே யர்த்தவாதமெனவும்" (வேதா. சூ. ௩. உரை.) (அநுத்தவாதம்பார்.) [அர்த்த; வாத.]

அர்த்தவுதயம்— அர்த்தோதயம். (உ-ம்.) "மன்னுமர்த்தவுதயமகோதயம்" (சேதுபு. தநு. ௬௪.) [அர்த்த; உதய.]

அர்த்தவேதம்— உபவேதங்கள் நான்கனுளொன்று; அது: தட்சிணை ஆச்சியசரு உபகாராதிகளை நிண்ணயம்பண்ணுவித்துத்தருமாதி சதுர்விதபுருஷார்த்தத்திற்குஞ் சாதநமாயிருப்பது. (வேதா.சூ.௩.உரை.) [அர்த்த; வேத.]

அர்த்தாங்கம் — 1. அர்த்தாங்கவாதரோகம். (உ-ம்.) "இழியுமிந்தவள்ளியத்தாங்கயிலப்பேரை யியம்புங்காலர்த்தாங்கமிசுவுவீக்கம்" (தைல.தைலவ. கஉஅ.) 2. பாதிச்சரீரம். [அர்த்த - பாதி. அங்க - சரீரம்.]

அர்த்தாங்கவாதம்— பாரிசவாதம். (சீவரட். க௬௪.) [அர்த்த; அங்க; வாத.]

அர்த்தாங்கீகாரம்— ஒரு பகுதியையங்கிகரித்தல். பாதியையங்கீகரித்தல். (உ-ம்.) "இங்ஙனங்கூறிய உபதேசமொழிகளை யாத்தாங்கீகாரமாக உட்கொண்டு" (வைரா.சத. கக. அவதாரி.) [அர்த்தாங்கீகார: அர்த்த - பாதி. அங்கீகார - ஒத்துக்கொள்ளுதல்.]

அர்த்தாட்சி—பகைப்பார்வை. [அர்த்தாக்ஷீ]

அர்த்தாத்— அர்த்தத்தினுலே, இருக்கிறபடி, உள்ளபடி. (உ-ம்.) "கர்த்திருத்துவமுண்டானபொழுதேயிச்சை யர்த்தாத்சித்தம்" (சி. சி. உ: ௫௬. சிவாக்.) [அர்த்தமென்பது அர்த்தாத் என வடமொழி ஐந்தாம்வேற்றுமையில் மணிப்பிரவாளத்துள்வந்தது.]

அர்த்தாதுரம்— பொருளாசை. [அர்த்த பொருள். ஆதுர - ஆசை.]

அர்த்தாந்தரநியாசம்— வேற்றுப்பொருள் வைப்பென்னும் ஓரலங்காரம். (விசா். இலக். ௬௧. குவ. ௬௪.) [அர்த்தாந்தரந்யாஸ:

அர்த-பொருள். அந்ய-வேறு. ந்யாஸ - வைப்பு.]

அர்த்தாந்தரம்—1. தோல்வித்தானம் அறுபத்தைந்தில் ஒன்று; அது: தனக்கு வருந் தோல்வியைப் பிறிதொன்றுபேசி மறைத்தல். (சி. சி. அளவை. கச. மறை.) 2. வேறர்த்தம். 3. வேறுகாரணம். [அர்தாந்தர: அர்த - பொருள். அந்தர - வேறு.]

அர்த்தாபத்தி— அருத்தாபத்தியென்னும் பிரமாணம். (சி. சி. அளவை. க. ) [அர்தாபத்தி: அர்த-பொருள். ஆபத்தி- பேறு.]

அர்த்தாபத்தியலங்காரம்—பொருட்பேற்றுப்பிரமாண அணி. (குவல.ககஉ.) [அர்த; ஆபத்தி; அலங்கார.]

அர்த்தாலங்காரம்—பொருளணி. [அர்தாலங்கார.]

அர்த்தி— 1. இரந்து கேட்போன். 2. வலியதுசெய்வோன். 3. முறையிட்டுசெய்வோன். 4. வாதி. [அர்திந்.]

அர்த்தித்தல்—இரத்தல், வேண்டுதல்.(தாயு. மௌன. சு. உரை)

அர்த்திதவாதம்— ஒருவகை வாதரோகம். (சீவரட். கசுக.) [இது பாதிமுகத்தை விகாரப்படுத்துதலால் வந்தபெயர். [அர்தித வாத.]

அர்த்தோதயம்—அறுபதுவருஷத்துக்கொருமுறை வரும் ஒரு விசேடகாலம்; அது: தைமாசத்திலே ஞாயிற்றுக்கிழமையும அமாவாசையுந்திருவோணநக்ஷத்திரமும் வியதீபாதயோகமுங்கூடியகாலம். ( சைவ. வினா. ) (உ-ம். ) "அயநசங்கிராமமாசிமகத்திலர்த்தோதயத்தில்" (அருணசலபு. திருமலை. வலம். உச.) [அர்தோதய.]

அர்ப்பகன்—பாலகன். [அர்பக.]

அர்ப்பணம்— 1. ஒப்பித்தல். ( உ-ம். ) "ஈசுரார்ப்பணம்" ( ஞானவா. அருச்சு. கசு. ) 2. கொடுத்தல். 3. திருப்பிக்கொடுத்தல். 4. துளைத்தல். 5. நிவேதித்தல். [அர்பண.]

அர்ப்பம்— 1. ஒளியில்லாதது. 2. பனி. 3. பிள்ளை. 4. பூண்டு. [அர்ப.]

அர்ப்பன்—மாணக்கன். [அர்ப.]

அர்ப்பித்தல்—நிவேதித்தல்.

அர்ப்பிதம்— 1.கொடுக்கப்பட்டது.2.நிவேதிக்கப்பட்டது. [அர்பித.]

அர்ப்பீடம்—அரப்பாயம். (வீரசோ. பெருட். உக. உரை.)

அர்ப்புதோட்டரோகம் — உதடுகளிலே சிறிய பேரீச்சங்காய்போல வீக்கத்தை உண்டாக்கும் ஒரு ரோகம். (சீவரட். உஎக.)

அர்ப்புதம்—1. இந்தியாவிலே மேற்குத்திசையிலிருக்கும் ஒருமலை. 2. ஒரெண்; அது: ஆயிரம் இலட்சங்கொண்டது. (த. நி. போ. உ௫) பத்துக்கோடி. (சி-லி. ஞாந. உ௫. சு.) 3. பாம்பு. 4. மாமிசமொத்தை. 5. மேகம். [அர்புத.]

அர்ப்புதவர்த்தமரோகம் — கண்ணிமையிணோரங்களிலேமாமிசமொத்தையைப்போலத் தடித்தலையுண்டாக்கும் ஒருநோய். (சீவரட்.உசரு.) [அர்புத-மொத்தை. வர்த்ம-இமை.]

அர்ப்புதாகிரகம்— பாலரைத்தொடருகின்ற பன்னிரண்டு பெண்கிரகங்களுளொன்று; அது: குழந்தைபிறந்த பன்னிரண்டாம் நாளிலாவது, பன்னிரண்டாம் மாசத்திலாவது, பன்னிரண்டாம்வருஷத்திலாவது சிசுவையல்லது தாயைப்பிடிக்குமென்பர். (சீவரட். உஉஅ.)

அர்வாசீநம்— 1. நவீநகாலத்தது. 2. பின்வருவது. 3 மாறுனது. [அர்வாசீந.]

அர —1. பாம்பு. (உ-ம்.) "உள்வாழரக்கொடுமுதிண்கலுழனொத்தான்" (இராமா. கடறு. அசு.) [அரா என்பது அர என நின்றது.]

அரக்கம்— 1. கொம்பரக்கு. 2. திருநாமப்பாலைப்பூண்டு. 3. நன்னாரிக்கொடி.

அரக்கர்—1.அசுரர்.2. இராக்கதர். (உ-ம்.) "அரக்கரோரழிவுசெய்துகழிவரொல்" (இராமா. வாலிவதை. எக.)

அரக்கல்— 1. "அரக்கல்" என்னும் ஒரு வியங்கோள்வினைமுற்று. 2. அமைத்தல். 3. இருப்புவிட்டுப்பெயர்தல். 4. தேய்த்தல். 5. புடைபெயர்தல். (உ-ம்.) "கல்லரக்குங்கமையவல்ல" (இராமா. நகர்நீ.உஉ௫) 6. வருந்தச்செய்தல். (உ-ம்.) "எல்லாக்குமயினுதிவேலிராவணனும்" ( இராமா. ஊர்தேடு. உ௩௦.) [அரங்கு என்னுந்தன்வினையினின்ற நகரங் ககரமாய்த்திரிந்து பிறவினைப்பொருளில் வந்தது.]

அரக்கன்—1.அசுரன்.(உ-ம்.) "ஆம்பன்முகவரக்கன்" ( கல்லா. க .) 2. இராக்கதன்.

(உ-ம்.) "ஆயிடையரக்கன்" (இராமா. நிந்தனை. உக.) [ரக்ஷஸ்.]

**அரக்காம்பல்**—செவ்வாம்பல். (உ-ம்.) "மருவரக்காம்பல் பங்கயந்தழைந்த" (சூத. முத்தி. அ: ௧௦.) [அரக்கு - சிவப்பு.]

**அரக்கி**—இராக்கதமகள். (உ-ம்.) "மைவண்ணத்தரக்கிபோரில்" (இராமா. அகலி. அஉ.)

**அரக்கிலச்சினை**— மெழுகினால் வைத்த முத்திரை. (உ-ம்.) "அரக்கிலச்சினையில்வைத்தவெஞ்சவிலோலைகாட்ட" (சூளா. தூது. அஉ.)

**அரக்கினிரதம்**— கொம்பரக்குக்கஷாயம். (உ-ம்.) "அரக்கினிரதஞ்சுவச்சமும்" (தைல. தைலவ. உங.)

**அரக்கு**— 1-3. அரக்கென்னேவலுந்தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். 4. கொம்பரக்கு. (உ-ம்.) "வாரககர்ணிபலையரக்கோர்வகைக்கீரைம்பலமாம்" (தைல. தைலவ. உச.) 5. சாதிலிங்கம். (உ-ம்.) "அங்கையரக்குத்தோய்ந்தன்னசேயிதழ்" (சிறுபா. எச.) 6. சாராயம். 7. சிவப்பு. (உ-ம்.) "அரக்குண்பஞ்சிகடிாட்டி" (சிந்தா. கஙக. அ.) 8. சிவப்புமெழுகு. (உ-ம்.) "தீயூட்டரக்கேயென்னவுருகி" (கந்தபு. மார்க்கண். கரு.) 9. தேன்.

**அரக்குக்காந்தம்**— ஒருவகைக்காந்தக்கல்.

**அரக்குத்தைலம்**—கொம்பரக்கு முதலியவற்றிலிருந்து வடிக்கும் ஒருவகைத்தைலம். (உ-ம்.) (தைல. தைலவ. ௫௯. ௬௦. பார்.)

**அரக்குதல்**— 1. அழித்தல். 2. இருப்புவிட்டுப்பெயர்த்தல். 3. உரைஞ்சுதல், தேய்த்தல். (உ-ம்.) "அரக்கனீரைந்துவாயுமலறவேயரக்கிஞனடியாலும்" (தேவா. திருவை. ௪௦. திருநா.) 4. சகடம் பூமியிற்படப்புடைபெயர்தல். "பிள்ளையரக்கி யரக்கிவந்தது" (வழக்.) ["அரக்கல், அரக்குதல்" இரண்டும் ஒருபொருளன.]

**அரக்குநீர்**—இரத்த நீர். (உ-ம்.) "புண்ணிடையரக்குநீர்பொழியச்சாம்புவர்" (சூத. முத்தி. எ: உ௫.) [அரக்கு - சிவப்பு.]

**அரக்குமஞ்சள்**—மிகச்சிவந்தமஞ்சள்.

**அரகர**— சிவ சிவ எனப்பொருள்படும் ஒரு அடுக்குமொழி. (திருவிளை. இந்திரன் முடி. கஎ.) [ஹரஹர.]

**அரங்கக்கூத்தி**— பகிரங்கமான நாடகசாலையிற்கூத்தாடும்பெண். (உ-ம்.) "அரங்கக்கூத்தியெனச்செல்லும்" (கூர்மபு. நவகண். சங.)

**அரங்கசீவகன்**—மைப்பூச்சுவேலைசெய்து சீவிப்போன். [ரங்கஜீவக: ரங்க - சபை, ஜீவக - சீவிப்போன்.]

**அரங்கபூசை**— வீரலக்குமியாகிய அரங்கதேவதைக்குச்செய்யும் பூசை. (உ-ம்.) "இனந்தணிந்தரங்கபூசைசெய்வனென்று" (பாரத. வாரணா. சுரு.) [ரங்க; பூஜா.]

**அரங்கபூதி**—ஐப்பசிமாசப்பௌரணை வரும் இராத்திரி. [ரங்கபூதி]

**அரங்கபூமி**— 1. நாடகசாலை. 2. யுத்தகளம். [ரங்கபூமி.]

**அரங்கம்**— 1. அபிநயசாலை, கூத்தாப்பயிலிடம். (உ-ம்.) "ஆடம்பலமுமரங்கமுஞ் சாலையும்" (சிந்தா. பண்மக். கக.) 2. கல்விச்சாலை. (உ-ம்.) "சென்மலியரங்கமன்றந்தெற்றியேமுதலவெல்லாம்" (கந்தபு. ஞானசாபுரி. உகூ.) 3. கூத்தாடிப்பாடல். 4. சத்திரம். 5. சதுரச்சாலை. 6. சபை. (உ-ம்.) "சூளிகையரங்கமன்றம்" (கந்தபு. நகர்செய். எ.) 7. சிலம்பகூடம். 8. சூதுபயிலிடம். 9. சோழதேசத்துள்ள ஸ்ரீரங்கம என்னும் விட்டுணுதலம். (உ-ம்) "அலங்காரமளிக்குந்தென்னரங்கத்திடைதொழுதான்" (பாரத. அருச்சுனன்றீ. கக.) 10. நிறம். 11. யாற்றிடைக்குறை. (உ-ம்.) "அகநிலரங்கத்தகன்பொழில்" (சிலப். காடு. கூ.) 12. யுத்தகளம். 13. வண்ணங்கொடுக்கும் மை. [1, 2, 3, 4, 5, 6, 7, 8, 9, 10, 12, 13. ரங்க.]

**அரங்கல்**— 1. அழிதல். (உ-ம்.) "பிணியரங்கவினையகல" (இராமா. குலமுறைகி. உ.) 3. ஈடழிதல், மனங்கலங்கல். (உ-ம்.) "சோடரங்கிட வெழுங்குவிதடங்கொங்கையார்" (இராமா. பால. எதிர். ௯௩.)

**அரங்கன்** — ஸ்ரீரங்கத்துப்பெருமாள். (உ-ம்.) "அத்தனச்சனரங்கன்" (நாலாயி. தேட்டரும். ௬.) [ரங்க.]

**அரங்கு**— 1-3. அரங்கென்னேவலுந்தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். 4. அறை. 5. இடம். 6. சபை. 7. சூதாடுதற்கு வகுத்ததானம். (உ-ம்.) "அரங்கின்றி வட்டாடியற்றே" (வள். ௪௦௧.) 8. நாடகசாலை. (உ-ம்.) "அவைபுகழரங்கின்மேலாடுவாளணிநகல்" (கலித்தொகை. எ௬.) 9. போர்

க்களம். 10. யாற்றிடக்குறை. [4,5,6,7,8,9. ரஂஅ.]

**அரங்கேற்றம்**— சபையாரிடங்கொண்டுவெந்து அவரதங்கீகரிப்பைப்பெறல். [ரஂஅ - சபை. எற்றம் - எற்றுதல்.]

**அரங்கேற்று**—1.அரங்கேற்றம். 2-4.அரங்கேற்றென்னேவலுந் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும்.

**அரங்கேற்றுதல்**—1.அரங்கேறச்செய்தல். 2. புதிதாக இயற்றப்பட்ட ஒரு நூலைச்சபையார்முன்கொண்டுவந்து தெரிவித்து அவரது சம்மதத்தைப்பெறல். (உ-ம்.) "கன்னியவாங்கர்முன்னே கவியரங்கேற்றினனே" (இராமா. சிறப்பு. கக.) 3. முதன்முறை சபைக்குமுன்கொண்டுவருதல்.

**அரங்கேறுதல்**—1.சபைக்கு முன்வருதல்.

**அரங்கொழ்செய்யுள்**—புறநாடக உருக்களுள் இறுதியுரு. (சிலப். ந: சச. உரை.)

**அரசங்கம்**—அரசினுக்குளவாகிய உறுப்புக்கள்; அவை: அமைச்சு, நாடு, அரண், பொருள், படை, நட்பு என்பன. (வள். நஅக. பரி.)

**அரசசின்னம்**— மரபுபற்றி யரசர்க்குரியனவாகிய விசேடமானகுறிகள்; அக்குறிகள்: முடி, குடை, கவரி, தோட்டி, முரசு, சக்கரம், யானை, கொடி, மதில், தோரணம், நீர்க்குடம், பூமாலை, சங்கு, கடல், மகரம், ஆமை, இணைக்கயல், சிங்கம், தீபம், இடபம், சிங்காசனம் என்னும் இருபத்தொன்றுமாம். (சூ - நிகண். கஉ. கஉ௦.)

**அரசன்மை**— பகையரசன் அணித்தாக இருக்கை. அஃது ஈதிகள் ஆறனுள் ஒன்று. (வள். எஙஉ. பரி.)

**அரசநீதி**— அரசு நடாத்து முறைமைகூறு நூல். (உ-ம்.) "தேறலார்தமைத்தேறலுந் தேறினர்த்தேறலாமையுமென்று - மாறலாருடன்மலைதலுமாறுடன் மருவிவாழ்தலுமுன்னே - யாறலாதனவரசருக்கென்றுகொண் டரசநீதியிற்சொன்னார்" (பாரத. சூது. எஉ.)

**அரசபரி**— பெண்களது மனம்போல மிக்க மனத்ததாய் வாழைமடலைப்போலச் செவியுளதாய் நான்கு காலும் பிடரும் முகமும் முதுகும் முன்புறமும் வெண்ணிறமாய் எண்பத்திரண்டுவிரலுயர்ந்த குதிரை. (சூ - நிக. கஉ. கரு௦.)

**அரசம்**— 1. சாரமில்லாதது. 2. சுவையில்லாதது. 3. மூலரோகம். (உ-ம்.) "அரசம்மொலிகுன்மம்" (தைல. தைலவ. அ௯.) [1, 2. அரஸ.]

**அரசர்க்குத்துணைவர்**— அரசர்க்கெண்பேராயம்.

**அரசர்க்குறுதிச்சுற்றம்**—— அரசரைப்பற்றிநின்றவர்க்குயிர்த்துணைசெய்வோர்; அவர்: படைத்தொழிலோர், நிமித்திகப்புலவர், மருத்துவக்கலைஞர் நட்பாளர், அந்தணாளர் என்னும் ஐவர். (சூ - நிகண். கஉ. ௯எ.)

**அரசர்க்கெண்பேராயம்**— அரசர்க்குத்துணைசெய்யும எண்மர்; அவர்: கரணத்தியலவர், கடைகாப்பாளர், நகரமாக்கள், படைத்தலைவர், சுற்றம், யானைவீரர், புரவிவீரர், மந்திரியர் என்பவர். (சூ - நிகண். கஉ. கூ௯.)

**அரசர்க்கைம்பெருங்குழு**— அரசரோடுகூடித்தொழினடாத்தும ஐவர்; அவர்: மந்திரியர், புரோகிதர், தூதுவர், ஒற்றர், சேனாபதியர் என்பவர். (சூ - நிகண். கஉ. ௯எ.)

**அரசர்குணம்**— தூங்காமை, கல்வி, துணிவு என அரசர்க்குரிய மூவித இலக்கணங்கள். இது: "தூங்காமைகல்விதுணிவுடைமையிம்மூன்று- நீங்காநிலனாள்பவற்கு" என்னுங்குறளாற்பெறப்படும். (வள். ௯அ௯.) [தூங்காமை-விரைவுண்மை.]

**அரசர்பா**— அகவற்பா. (உ-ம்.) "அரசர் பாவாலாற்றுப்படைமேல்" (இலக்கணவிள. பாட். அ௭௯.)

**அரசர்பின்னோர்**— வணிகர். (உ-ம்.) "அரசர்பின்னோரகநகர் மருங்கில்" (சிலப். அடைக்கல. க௦௧.)

**அரசராறுதொழில்**—அரசர்க்குரிய ஆறுதொழில்கள்; அவை: ஈதல், பல்லுயிரோம்பல், ஓதல், படைக்கலம்பயிலல், பகைத்திறந்தெறுதல், வேட்டல் என்பன. (வள். ௯அச. திவா. கஉ-வது.)

**அரசரியல்பு** — அரசர்க்கெப்பொழுதும் இருக்கவேண்டிய தன்மைகள்; அவை: அஞ்சாமை, ஈகை, அறிவு, ஊக்கம் என்பன. இது: "அஞ்சாமை யீகையறிவூக்க மிந்நான்கு - மெஞ்சாமைவேந்தர்க்கியல்பு" என்னுங்குறளாற்பெறப்படும். (வள். ௯அஉ.)

**அரசரொளி**— குடியோம்பல், கொடை, செங்கோல், தலையளி ஆகிய அரசர்க்குரியமகிமை. இது: "கொடையளிசெங்கோல் குடியோம்பனான்கு-முடையானாம் வேந்தர்க்கொளி" என்னுங்குறளாற்பெறப்படும். (வள். ௯க௦.)

அரசவநம்— திருவாவடுதுறையென்னும் ஒரு சிவஸ்தலம். (தணிகை. முகவு.)

அரசளித்தல்—இராச்சியபரிபாலநஞ்செய்தல். (உ-ம்.) "ஆரூரரசளிப்பவரருளினால்" (பெரியபு. திருஞாந. ௫0௧.)

அரசன்— 1. இறைவன். 2. எப்பொருட்குமிறைவன். 3. கார்முகிற்பாஷாணம். 4. துருசு. 5. பாணகெந்தகம். 6. வியாழன். (உ-ம்.) "ஒகையோடரசனேநிடுகின்றான்" (கந்தபு. திருச்செந்தி. ௧அ.)

அரசன்விருத்தம்—தொண்ணூற்றாறு பிரபந்தங்களுளொன்று; அது: பத்துக்கலித்துறையும், முப்பது விருத்தமும், கலித்தாழிசையுமாக மலைவருணனையுங், கடல்வருணனையும், நாட்டுவருணனையும், நிலவருணனையும், வாண்மங்கலமும், தோண்மங்கலமும் பாடிமுடிப்பது. இது முடிபுனைந்த அரசனுக்குரியது. (தொன்னூல். உ௮௩. உரை.)

அரசன்விரோதி— 1. கொவ்வைக்கொடி. 2. பூவரசமரம்.

அரசநீதி— அரசாகிய காவலை நடாத்துமுறை. (வள். ௩௯-ம் அதி.)

அரசனுயிர்காத்தோன்—காண்டாமிருகம். [இஃதொரு கதையிலே ஓரரசனுயிரைக்காத்ததென்பதனால்வந்தபெயர்.]

அரசாட்சி—அரசாளுதல். (உ-ம்.) யானுமிவ் வரசாள்வனென்னையிவ்வரசாட்சியினிதேயம்மா" (இராமா. யுத். மீட். உஉ௧.)

அரசாணி—விவாகமண்டபத்திலே யரசங்கால் நாட்டும் மேடை.

அரசாணிக்கால்—விவாகமண்டபத்திலே யரசாணியிலே முருக்குடன் நாட்டப்படும் அரசங்கொம்பு.

அரசாணிப்பானை— விவாகமண்டபத்துக்குமுன்னிறுத்தப்படும் அடுக்குப்பானை.

அரசாளுகை— இராச்சியஞ்செய்கை.

அரசாளுதல்— அரசுசெய்தல். (உ-ம்.) "மூண்டபகைசெற்றுலகமுற்றுமரசாளும் - பாண்டியன்" (திருவாதவூ. மந்திரி. உ.)

அரசானம்— 1. அரசமரம். 2. அரத்தைப்பூண்டு. 3. பேரரத்தைப்பூண்டு.

அரசி— 1. அரசன்மனைவி. (உ-ம்.) "அரசிரிப்புகுந்துபேரரசியானநீ" (இராமா. மந்த. ௬௧.) 2. அரசுசெய்கிறவள். 3. சிரேட்டமானவள். (உ-ம்.) "உன்னைக்காட்டினன் கற்பினுக்கரசியென்றுலகில்" (இராமா. மீட். ௧உ௩.)

அரசிகம்— சுவையில்லது, ரசமில்லாதது. [அரஸிக.]

அரசியல்— 1. அரசனதியல்பு. (வள். ௩௯-ஆம் அதி.) 2. அரசுநடாத்து முறைமை. (உ-ம்.) அழைத்துநீடரசியலுசாவி" (பாரத. வாரணா. ௧உ௮.)

அரசிருக்கை— 1. அரசன்வீற்றிருக்குஞ் சபை. (சூ. நிகண். ௫: ௬௧.) 2. அரசுசெய்யும் உரிமை. (உ-ம்.) "தனயனுங்குலோத்துங்கற்குத் தன்னரசிருக்கைநல்கி" (திருவிளை. பழியஞ். உ.) 3. சிங்காசநம்.

அரசிருத்தல் — இராசாவாகவீற்றிருத்தல். (உ-ம்.) "தென்னவனீன்றகன்னிப் பெண்ணரசிருந்து" (திருவிளை. தடாதகை. ௬௩.)

அரசிருப்பு—1.அரசிருக்கும் இடம். (உ-ம்.) "அவனகருமரசிருப்புமண்டபமும்" (திருவிளை. மாணிக். எஎ.) 2. அரசிருத்தல்.

அரசிலியை— ஒரு சிவஸ்தலம். (பெரியபு. திருஞாந. ௧௧௩௫.)

அரசிலை—1. அரசமரத்தின் இலை. 2.மிருகங்களுக்கிடும் அரசிலைக்குறி.

அரசிலைத்தூக்கம்—அரசிலைபோலுந்தொங்கல்.

அரசிறை— 1. அரசர்க்கரசன். (உ-ம்.) "அரசிறையரசரொடெழுதலும்" (சூளா. கல்யாண. ௧0௧.) 2. அரசர்க்கிறுக்கும் இறைப்பொருள்.

அரசு— 1. அரசர். (உ-ம்.) "அரசுபடவமருழக்கி" (மதுரைக்காஞ்சி. ௧உ௮.) 2. அரசன். (உ-ம்.) "நராதிபனுசுருக்கரசாய் - மகுடமேந்தியகுரிசில்" (பாரத. குருகு. ௧௬.) 3. அரசாட்சி. (உ-ம்.) "அரசேதஞ்சமென்றருங்கானடைந்த" (சிலப். புறஞ்சேரி. ௬௪.) 4. அரசியல், அரசன்றன்மை. (உ-ம்.) "அரசுமேம்படீஇய" (சிலப். இந்திரவிழ. ௧௬௧.) 5. அரசென்னுமரம். (உ-ம்.) "மீச்செலாதவாசு" (சூத. எக்கி. பூ. ௬: ௩உ.) 6. இராச்சியம். (உ-ம்.) "எனதுயிரரசுவாழ்வென்பயாவையு-மினது" (பாரத. குருகுல. ௬௫.) 7. சிரேட்டம். (உ-ம்.) "மின்னார்தமக்கோரரசே" (கந்தபு. தெய்வ. ௧௬௩.) 8. திருநாவுக்கரசுநாயனார். (பெரியபு. திருஞாந. ௬௧௬.)

அரசுகட்டில்—சிங்காசநம். (உ-ம்.) "அரசுகட்டிலிற்றுஞ்சியதறியாது" (சிலப். அழற்படு. எ.)

அரசுவா — நான்குகால்கள், துதிக்கை, கோசம், வாலென்னும் எழுறுப்பும் நிலத்திலே தோய்வதாய், காவிளகம்பாலையுஞ் சங்கினையும் ஒத்த வெண்ணிறம் உடையதாய்,

நான்கு கால்கள் துதிக்கை வால் இரண்டு கொம்புகள் என்னும் எட்டுறுப்பாலுங்கொல்லவல்லதாய், எழுமுழ உயர்ச்சியும் ஒன்பது முழநீட்சியும் பதின்மூன்றுமுழச் சுற்றுமுடையதாய்ச், சிறுகண்ணுஞ் செம்புள்ளியுமுடையதாய், முற்பக்கமுயர்ந்து பிற்பக்கந்தாழ்ந்த அரசியானை. (உ-ம்.) "அரசுவாவதனொடாடி" (சூளா. கல்யாண. ௧0௧.)

அரசோநம்— வெள்ளைப்பூண்டு. (தைல. தைலவ. ௬. [ராஸோந.]

அரட்டம்—பாலைநிலம்.

அரட்டர்— 1. குறுநிலமன்னர். (உ-ம்.) "அரட்டக்கரும்படை - மானவேற்குறுமன்னவர் நண்ணினர்" (திருவிளை. உக்கிர. வேல்வளை. ௧௧.) 2. குறும்பர், துட்டர். (உ-ம்.) "அடைந்தவர்க்குறுகணுற்றுமரட்டரும்"(காஞ்சிபு. இருபத். ௩௪௪.)

அரட்டல்—அச்சுறுத்தல்.

அரட்டன்—குறும்பன். (உ-ம்.) "ஆதிருமதியினெய்தியரட்டனையடர்த்து" (சிந்தா. பதுமை. ௯௬.)

அரட்டு— 1. அச்சம். [இஃதரளென்னுஞ் சொல்லினின்று பிறந்தது.] 2. அச்சுறுவித்தென்னும் செய்தெனச்சம்.

அரட்டு— 1. அரளச்செய்தல். 2. ஏவல். 3. வினைத்தொகை.

அரட்டுகம்— } தசநாடகத்தொன்று.
அரட்டுசம்— }

அரட்டுதல்—அச்சுறுத்தல்.

அரண்— 1. அழகு. 2. காவல். (உ-ம்.) "அரணிலாவெனன் கட்டங்கியவன்பினால்" (சிந்தா. ௧௩௧. உ௫௭.) 3. காவற்காடு. 4. கோட்டை. 5. மதில். 6. மதில், கடல், மலை, காடு என்னும் நான்கனுளும் ஆகிய காவல். இது: "மணிநீருமண்ணு மலையுமணிநிழற்காடுமுடையதாண்" உயர்வகலந்திண்மையருமையிந்நான்கி - னமைவரணென்றுரைக்குநூல்" என்னுங் குறட்களாற் பெறப்படும். (வள். எ௪உ. எ௪௩.) 7. வேல். (பிங்கல. ௩௭௭.)

அரண்மனை— 1. கோட்டை. 2. மதிலாற் காவல்செய்யப்பட்டவீடு.

அரணம் — 1. அழகு. 2. இருப்பிடம். (உ-ம்.) "துன்னெறியவுணர்யாருந்துவன்றியவரணமாகி" (கந்தபு. விந்தம்பி. ௧.) 3. கதவு. 4. கருஞ்சீரகம். (உ-ம்.) "அரணம் பலங்கடுகை நீரடிமுத்தமொலிபோகிபுட்பேந்திரங்காரமட்டம்" (தைல. தைலவ. ௧௧உ.) 5. கவசம். (உ-ம்.) "பாசம்பிணித்தவாணம்பரிவெய்த" (கந்தபு. அவுணர். ௯௪.) 6. கழித்தல். (உ-ம்.) "புறம்பாகவைத்ததனையரணஞ்செய்யும்" (சாதக. அட்ட. உஉ.) 7. கட்டாலயகாவல். 8. காவல். (உ-ம்.) "அவுணர் வைகுமோரரணமானகிரவுஞ்சகிரி" (கந்தபு. தாரகன்வதை. ௧0அ.) 9.காவற்சாலை.10. கோட்டை. 11. தொடுதோல். 12. மாணுக்கனுக்குச்செய்யும்நற்கொடை.(உ-ம்.)"துயர்த்தழல்சமிப்ப - வரணவாசிநீருளினுற்றெளித்தளித்து" (சேதுபு. மங்கல. ௯௧.) 13. நீக்குதல். (உ-ம்.) "பாசஹரணம்" (சி. சி. அ: உ௫. சிவாக்.) 14. மஞ்சம். 15. மதில். (உ-ம்.) "நம்மூர்ப்புறத்தினிலரணமீதாய்ப் போகுதலரிது" (கந்தபு. அசுரசெய். ௩) 16. வேலி. (உ-ம்) "மாற்பெருமதிலைச்சூழவரம்பறுதானைதன்னை - யேற்புடையரணமாகவியற்றுவித்து" (கந்தபு. அசுரர்யா. ௩எ.) 17. வேற்படை.

அரணம்பாம் — 1. மதில். 2. வேலி.

அரணி— 1. அக்கினி. 2. அக்கினியைப்பிறப்பிக்க உபயோகமாகும் அரசுமுதலிய மாங்களின் கட்டை. (பிரமோப. ௩௩.) 3 - 5. அரணியென்னேவலும் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். 6. கணிகாரிகையென்னுமொரு சிறுமரம். அது: தீக்கடைதற்கானது. 7. கவசம். 8. காடு. 9. சூரியன். 10. தீக்கடைகோல். (உ-ம்.) "அரணியின்புறத்தனலென" (பாரத. சம்பவ. எ.) 11. தீத்தட்டிக்கல். 12. மதில்.

அரணித்தல்— 1. அரணுக்கல். 2. உரத்தல், கடினப்படல், முறைத்தல் 3. காவல்செய்தல். 4. சிறப்பித்தல்,

அரணிப்பு—அரணித்தல்.

அரணியகதலி—காட்டுவாழைமரம். [ஆரண்யகதலீ: ஆரண்ய - காடு. கதலீ - வாழை.]

அரணியசடகம்— காட்டுக்குருவி. [ஆரண்யசடக.]

அரணியசாரணை—காட்டிஞ்சி.

அரணியம்—காடு. [ஆரண்ய.]

அரணியன்—காட்டிலிருப்பவன். (உ-ம்.) "அரணியனென்றவர்க்கன்புகூர்ந்தனை" (இராமா. விபீடண. உ.) [ஆரண்ய.]

அரணியா—காட்டுக்காளை. [ஆரண்யா]

அரணியரநி— பெருங்காடு. [ஆரண்யாநீ.]

அரணிருக்கை—கோட்டை.

அரணை— ஒரு செந்து. (சீவரட். ௩௧௪.) [இது கடித்தால் சரீரமுழுதுநடுக்கல், வாயால் நுரைவீழ்தல், நாத்தடித்தல் என்னும் இக்குணங்களுண்டாகும்.]

அரந்தகம்—செம்பஞ்சி. (உ-ம்.) "அரத்தகமருளச்செய்தசீறடி" (சிந்தா. இலக்க. அஉ.) [ரக்தக.]

அரத்தம்— 1. அரக்கு. (உ-ம்.) "அரத்தமாதிவகைகாய்ச்சு-மூளவை" (தைல. பாயிர. உஎ.) 2. இரத்தம். (உ-ம்.) "அரத்தமுண்டொளிரும்வாளவுணர்ச்செற்று" (நைடத. நளன். க௪.) 3. குங்குமப்பூ (தைலவ. அரும்பத.) 4. சிவப்பு. (உ-ம்.) "அரத்தவேணியர்" (கந்தபு. மூதது. அஉ.) 5. செங்கடப்பமரம். 6. செங்கழுநீர். 7. செங்குவளை. 8. செம்பரத்தைப்பூண்டு. 9. செம்பருந்து. 10. செம்பு. 11. செம்மெழுகு. 12. செம்மை, செவ்வை. 13. பவளம். (சூ. நிகண். ௬: எ.) 14. பொன். 15. மஞ்சள். [ரக்த.]

அரத்தன்— 1. ஆசையில்லாதவன். (பௌட். பாச. உக.) [அ - எதிர்மறை. ரக்த- ஆசையுடையவன்.] 2. செவ்வாயென்னுங்கிரகம். [ரக்த - ரகரந்தமிழில் அகரம்பெற்று வந்தது.]

அரத்தி— 1. இன்பமானது. [ரக்தி.] 2. செவ்வல்லி.

அரத்திநி—1. சிறுவிரல்நீட்டிய பிடிமுழம். 2. முழங்கை. [அரத்நி]

அரத்துறை— ஒரு சிவஸ்தலம். (பெரியபு. திருஞாந. கஅஎ.)

அரத்தை— 1. ஒரு செடி; இது: சிற்றரத்தை, பேரரத்தையென இருவகைப்படும். 2. சிற்றரத்தை. (உ-ம்.) "அரத்தைமுக்கடுமுஸ்தைமஞ்சிட்டி" (தைல. தைலவ. க.)

அரத்தோற்பலம்— 1. செங்கழுநீர்ச்செடி. 2. செங்குவளைச்செடி. [ரக்தோத்பல.]

அரதநம்— 1. இரத்திநம், அகன்மணி. (உ-ம்) "அரதநகலசைவியன்கரம்" (தணிகை. கடவுள்வாழ். ௩.) 2. சிரேட்டமானது. 3. பெண்கள் காலிலணியுஞ்சிலம்பு. அது: பொன்னினால் அல்லது வெள்ளியினால் ஆக்கப்பட்டது. 4. மிருதபாஷாணம். [1,2,3. ரத்ந.]

அரதநாகரம்— 1. இரத்தினமுண்டாகுஞ்சுரங்கம். 2. சமுத்திரம். (உ-ம்.) "மரகதாதிகளுறுத்த விழித்துமணிமேடையினும் வாரிவீச - அரதநாகரயானதன்று முதலின்றளவு மாழிதானே" (அருணசலபு. திருக்கண். க௪.) [ரத்நாகர.]

அரதைப்பெரும்பாழி— ஒரு தலம். (பெரியபு. திருஞாந. ௩௦௬.)

அரந்தை— 1. குறிஞ்சியாழிசை. (பிங்க. ௩௦எ௯.) 2. சுரவெட்டை. (இராசவைத்.) 3. பாரிசசந்நி. (இராசவைத்.) 4. மநக்கவற்சி. (உ-ம்.) "அரந்தைப்பெண்டிரினைந்தனரகவ" (மதுரைக்காஞ்சி. க௬௬.) 5. வருத்தம். (உ-ம்) "வானத்தரக்கரந்தைப்படவீர்த்து" (மறைசையந். கக.)

அரநி— ஒரு அரிட்டதேவதை.

அரப்பள்ளியான்—சர்ப்பசயநனாகிய விட்டுணு. (உ-ம்.) "அரப்பள்ளியானுமலருறைவானும்" (தேவார. திருச்சி. திருஞாந. க.)

அரப்பிரியை— உமாதேவி. (உ-ம்.) "அரப்பிரியைபார்ப்பதியே" (திருவானை. கோச்செங். அக.) [ஹர - சிவன். ப்ரியா - மனைவி.]

அரப்பொடி— 1. அயவெள்ளை. 2. இரும்பை யரத்தினாலேயராவியெடுத்ததூள்.

அரபி— 1. கடுக்காய். 2. காடு.

அரம்—1. இரணம். (இராசவைத்.) 2. இரும்பு முதலியவைகளை யராவுதற்காகக்கூரிய சிறுசிறுன பற்களுடையதாக உருக்கினாற் செய்யப்பட்ட ஒருகருவி. (உ-ம்.) "அரம்போலுங்கூர்மையரேனும்" (வள். ௯௯௭.) 3. உருளையின் சிலைக்கம்பு. 4. கீழறை. 5. குகை 6. பாதலம். 7. வாளரம். (உ-ம்.) "அரம்போழ்ந்தறுத்த" (மதுரைக்காஞ்சி. ௩௧௬.)

அரம்பு—குறும்பு. (உ-ம்.) "மேலைவாரம்பிகந்தரம்புசெய்யும் - கலியதுபிறவிகண்டாங்" (சிந்தா. முத். கஉக.)

அரம்பை— 1. அசமதாகப்பூண்டு. (இராசவைத்.) 2. தெய்வப்பெண். (உ-ம்.) "செருவின்மாண்டவ ரரம்பையர்ச்சேர்குவான்றே" (நைடத. நிலா. க௩.) 3. தேவவேசையருளொருத்தி. (உ-ம்.) "திலோத்தமை யரம்பையுருப்பசி மேநகை முதலோர்" (கூர்மபு. மேரு. ௬.) 4. வாழை. (உ-ம்.) "தன்னரம்பை நிரம்பியதொல்வரை" (இராமாவரைக்காட்சி. ௫௩.) [2, 3, 4, ரம்பா.]

அரமகள்—தெய்வப்பெண். (உ-ம்.) "அங்ஙனிதிருந்தகாலை யரமகளவனைநோக்கி" (கந்தபு. வள்ளி. உ௩எ.)

அரமங்கை—தெய்வப்பெண். (உ-ம்.) "அரமங்கையர் சாமரைபாங்காசைத்திட" (காஞ்சிபு. பன்னி. உ௯௪.)

அரமனை— அரசன்மனை. (உ-ம்.) "அரமனைக்கெய்துமுனியம்பினேன்" (பாரத. ஜீசக. ௯.)

அரமாதர்— தெய்வப்பெண்கள். (உ-ம்.) "அம்மென்மூரலாமாதரொருவர்க்கொருவர்" (இரகு. திக்கு. ௪௦௫.)

அரமாரவம்— நாயுருவி.

அரமி—கடுக்காய்.

அரமியம்— 1. அரண்மனை. 2. செல்வர் வீடு. 3. நிலாமுற்றம். (உ-ம்.) "நிரைநிலை மாடத்தரமியந்தோறும்" (மதுரைக்காஞ்சி. ௪௫௧.) 4. பிரமிப்பூண்டு [1, 2, 3, ஹர்மிய.]

அரமுறி—இரும்புமுறிச்செடி.

அரயன்—அரசன்.

அரரம்— 1. ஆயுத முதலியன வைக்கும் உறை. 2. கதவுத்தட்டு. 3. தூணாழி. [அரர.].

அரரி— கதவு. (சூ. ரீ. ௭.௯௧)

அரரு—சத்துரு.

அரலை — 1. கடல். 2. கழலை. 3. குற்றம். (உ-ம்.) "நரம்பினாலைதீரவுரீஇ" (மலைபடு. உ௪.) [அது: முடங்கிப்பற்றன்மைபோலிருப்பதாலரலையென்றாயிற்று.] 4. தூர்க்கை. 5. மரற்செடி. 6. விதை. (உ-ம்.) "அரலையுக்கனநெடுந்தாளாசினி" (மலைபடு. ௧௩௯.) 1, 2, 4, 5, 6. (சூ. நிகண். ௧௧. ரகர. ௩௫.)

அரவக்கிரி—வேங்கடமலை. (உ-ம்.) "அரவக்கிரிசார்ந்தான்" (பாரத. அருச்சுனன்றீ. ௧உ.)

அரவக்கொடியோன்— துரியோதனன். (உ-ம்.) "அரவநெடுங்கொடியுயர்த்தோன்" (பாரத. திரௌ. ௫௪.) [அரவம் - பாம்பு.]

அரவணை—பாம்பாகிய படுக்கை. (உ-ம்.) "நெளிந்தாடரவணையையன்" (பாரத. அருச்சுனன்றீ. ௧௧.)

அரவணைத்தல் — தழுவிக்கொள்ளுதல். [வழக்.]

அரவணையான்—விட்டுணு. (உ-ம்.) "அரவணையான்சிந்தித்தாற்றுமடி" (தேவார. திருவதிகை. ௧. திருநா.)

அரவப்பகை—கருடன். (உ-ம்.) "அரவப்பகையூர்தி" (நாலாயிர. அட்டு. ௧௧.)

அரவம்— 1. ஆயிலியநாள். (உ-ம்.) "ஆதிரைகேட்டையரவம்" (விதாந. பஞ்சா. ௧௬.) 2. ஆரவாரம். 3. இராகுகேது. (உ-ம்.) "வரியரவம்பெண்" (விதாந. பஞ்சா. ௧௭.) 4. இரைச்சல். 5. ஒலி. (சூ. நிகண். ௧௧. ரகர. ௪.) 6. சிலம்பு. 7. படையெழுச்சி. (வீரசோ. பொருட். ௧௬.) 8. பதஞ்சலிமுனிவர். (உ-ம்.) "புலியரவங்கண்டுகொண்டாடவாடும்புராதநன்" (புலியூரந். ௭௧.) 9. பாம்பு. (உ-ம்.) "நச்சளையரவமென்ன" (பாரத. பதினேன். ௧௬௩.) 10. பேரொலி. (உ-ம்.) "அரவமாநதியன்னையும்" (பாரத. குரு. ௧௧௯.) 11. மனக்கலக்கம். (உ-ம்.) "கண்ணும்புருவமுமரவஞ்செய்ய" (சிந்தா. முத்தி. உ௦அ.) [2, 4, 5, 10. ரவ.]

அரவன்— சிவன். (உ-ம்.) "அரவன்பால்வெண்ணீற்றன்" (சூத. எக்கி. பூ. ௩௪: ௧.)

அரவாபரணன்— சிவன். (உ-ம்.) "அரவாபரணன்றந்தருளருமாமறை" (பாரத. பதினேன். ௫௧.) [அரவு-பாம்பு. ஆபரணம்-அணி.]

அரவாய்க்கடிப்பகை—வேப்பிலை. (மணிமேகலை. ௭௩-ம்பக்.) [அரம்போன்ற வாயுடையதாய்ப்பேய்க்குப் பகையாயிருத்தல்பற்றிவந்த பெயரென்பர். அரம்; வாய்; கடி - பிசாசம்; பகை.]

அரவித்தல்—ஒலித்தல். (உ-ம்.) "அரவத்தால்வரையைச்சுற்றியமரரோடசுரர்கூடி-யரவித்துக்கடைய" (தேவார. திருநனி. ௭ திருநாவ.)

அரவிந்தம்— 1. தாமரை. 2. நாரைப்பறவை. 3. பஞ்சலோகத்தொன்றாகிய செம்பு. [அரவிந்: அர - விரைவு. விந் - அடைதல்.]

அரவிந்தலோசநன்— விட்டுணு. (உ-ம்.) "அனைத்துலகுமுடையவரவிந்தலோசநனை" (நாலாயிர. திருவாய்மொழி. ௬-ஆம்பத்து. ௧௦.)

அரவிந்தன்— பிரமா. (உ-ம்.) "அரக்கரவிந்தன்குலத்தோர்" (கல்வளை.) [தாமரைப்பூவிலிருக்கிறவனென்றபடி.]

அரவிந்தாக்கன்— விட்டுணு. [அரவிந்-தாமரை. அக்ஷி - கண்ணன்.]

அரவிந்தை—இலக்குமி. (உ-ம்.) "அரவிந்தையன்னுளை" [அரவிந்தா- தாமரையுடையாள்.]

அரவீசம்—பாதரசம்.

அரவு— 1. ஆயிலியம். (இராசவைத். 2. பதஞ்சலிமுனிவர். (உ-ம்.) "புலியோடரவுதொழுங்கூத்துடையவர்" (வெங்கை. ௩௭௭.) 3. பாம்பு. (உ-ம்.) "நச்சாடரவணையான்" (பாரத. பதின்மூ. ௧௦அ.) 3. வைக்கோற்பழுதை.

(உ-ம்.) "கிட்டுவார்பரிகிறுத்துவா ரரவுருட்டு வார்" (திருவிளை. மண்சுமந்த. கு.) 4. விடம்; ஆகுபெயர். (ஐங்குறு.)

அரவுநாள்—ஆயிலியநாள்.

அரவெனுந்துதி—கருமசாந்தி.(வைதல. அரும்பத.)

அரவொலி— ஹர என்று சிவனை நோக்கிச்சொல்லுஞ்சத்தம். (உ-ம்.) "அரவொலியாகமங்களறிவாரறிதோத்திரங்கள்" (தேவார. கொடி. அ. சுந்தர.)

அரவோன்—பதஞ்சலி முனிவன். (உ-ம்.) "சீரரவோனும்" (கோயிற்பு. நடராஜ. ௭௦.)

அரளல்— அரளுதல். (உ-ம்.) "அரண்டார்சிலர்." (இராமா. இலங்கையழி. சச.)

அரளி— 1. நாறிமரம். 2. பீநாறிமரம். 3. பெருமரம். 4. ஒருவகைப்பூச்செடி. [இது அலரியின் மரூஉ.]

அரளித்தோக்கு—பீநாறிமரப்பட்டை. [அரளி - பீநாறிமரம். தொக்கு - தோல்.]

அரளுதல்— பிரமித்தல், மிக அஞ்சுதல்.

அரற்றல்— 1. அரற்றுதல். 2. யாழ்நரம்போசை. (பிங்கல. கசசக.)

அரற்று— 1. ஒலி. (உ-ம்.) "அரற்றெருகுறைந்துவீழ்ந்தும்"(கந்தபு.சூரப-வ. ௬அஅ.) 2. பலவுஞ்சொல்லியழுது தன் குறைகூறுதல், வாய்விட்டழுதல். (சிந்தா. நாம. உஎங. உரை.)

அரற்றுதல்—1. அலறுதல். (உ-ம்.) "அருமறையின்னமுங்காணுதரற்ற" (தாயு. ஆகார. ௪.) 2. அழுதல். (உ-ம்.) "கல்லுயர்பொருப்பினிடைகாமரடிசெல்ல - வல்லனசொலென்றுமணிநூபுரமரற்ற" (கந்தபு. தெய்வ. உ௩௦.) 3. ஒலித்தல். (உ-ம்.) "நோன்கழல்கல்லெனவரற்றிடக்கழலிற்பூட்டினுன்" (கந்தபு. முதனுட்பா. உஉ.) 4. சத்தமிட்டுச்சொல்லுதல்.(உ-ம்.) "அங்கசரீரியரற்றியசாபம்" (பாரத. புட்ப. எக.)

அரன்—1. இரௌத்திரமுகூர்த்தம்; இது: பகலிலும் இரவிலும் முதலில் நிகழுமுகூர்த்தம். (விதாந. குணுகு. எங.) 2. எப்பொருட்குமிறைவன். 3. சிவன், சங்காரகர்த்தா. (சிவதரு. ஐவகை. ௩௩.) [பக்குவான்மாக்களுடைய பாசத்தைதயரிக்கையினுலே யரனென்னும் நாமத்தையுடைய சிவன் என்பர் சிவாக்கிரயோகியர். சி. சி. அ: ௬. சிவாக்.] 4. திரிகாலனிடத்திலே காமிகாகமங்கற்றுக்கொண்ட ஒருவன். (த. கி. போ. கடுஅ.) 5. பதினொருருத்திரரிலொருவன். 6. மஞ்சட்பூண்டு. [1-5. ஹர.]

அரன்மகன்— 1. குமரன். 2. விநாயகன். 3. வீரபத்திரன். [ஹர; மகன்.]

அரன்வெற்பு—கைலாசமலை.

அரன்றேழன்—குபேரன். [ஹர-சிவன். தோழன் - நண்பன்.]

அரனிடத்தவள்—உமாதேவி. [சிவனுடைய இடப்பக்கமுடையவளென்றபடி.]

அரனெறி— ஒரு சிவாலயம். (பெரியபு. திருஞாந. ௫௩.)

அரா— 1. அராவென்னேவல். 2. ஆயிலியநாள். (உ-ம்.) "முற்றிலராவழல்பூராமூன்றுமகம்விற்பரணியதோமுகம்" (விதாந. பஞ்சா. கஅ.) 3. நாகமல்லி. (இராசவைத்.) 4. பாம்பு. (உ-ம்.) "பொங்கராவெயின் மணிப்பூணும்" (பாரத. பதின்மூ. உ௦அ.)

அராக்கோள்—இராகுகேது. (உ-ம்.) "அராக்கோளிரண்டும்" (சேந்தன் திவாகர. கஉ.)

அராகதத்துவம்—வித்தியாதத்துவம் ஏழினென்று; அது: வித்தையிலிருந்து தோற்றிப்போகத்திலே யாசையையெழுப்புவது. (உ-ம்.) "வித்தியாதத்துவத்திலே யாராகதத்துவந்தோன்றி யான்மாக்கள் செய்த கன்மத்துக்கீடாகப் பிரகிருதியினின்றும் பிறந்த சுக துக்காநுபவங்களை மேலுமேலும் புசிக்கையின்பொருட்டிச்சையைப் பண்ணுநிற்கும்" (சி. சி. உ: ௫௬. மறை.) [ராக; தத்வ.]

அராகபகவான்—புருஷதத்துவத்திற்கும் அராகதத்துவத்திற்கும் அபிமாநதேவதை. (சி. சி. உ: எக. சிவாக்.) [ராக; பகவந்.]

அராகம்— 1. அடக்கமான தன்மை. [அ ராக: அ - எதிர்மறை. ராக - விருப்பு.] 2. அடங்காத இச்சை. (உ-ம்.) "அராகவாராகமிலரானவர்பராவும்" (சேதுபு. சருவ. உக.) 3. ஒருவன் தான் விரும்பிய பெண்ணைப்பெருதபோது மிகவும் வருந்தி யழும் படியாசையைச்செய்வது. (சி. சி. உ. அ௦. மறை.) 4. இராகதத்துவம். (உ-ம்.) "அருந்தின்பத்துன்பமுள்ளத்தறிவினுக் கராகமாதி-தருந்தன்வேதனையாங்காட்சி" (சி. சி. அளவை. எ.) 5. இராகம். (உ-ம்.) "பாவமொடராகந்தாளமிம்மூன்றும் பகர்ந்திடுமுறையினுற்பாதம்" (திருவிளை.மாறியாடி.அ.) இது: பைரவிமுதற்குறிஞ்சியீருயுள்ள ௩உ-என வரையறைப்படினும் இவ்வரையறையுள் அடங்காது நெஞ்சு, மிடறு, நாக்கு, மூக்கு, அண்ணம், உதடு, பல், தலையென்னும் எட்டுத்தாநங்களினின்று எடுத்தல், படுத்தல், நலிதல், கும்பித்தல், குடிலம், ஒலி, உரு

டு, தாக்கு என்னும் எட்டுக்கிரியைகளால் இன்னும் பலவகைப்படும். 6. கலிப்பாவுறுப்புள் ஒன்றாகிய முடுகியல். அது: அளவடிமுதலாக எல்லா அடியானும் வந்து நான்கடியிற்குறையாமலும் எட்டடியில் மிகாமலிருப்பது. (இலக்கணசிந். எஎ.) 7. சிவப்பு. 8. செம்பராகம். (உ-ம்.) "நெய்யராகமழிய" (இராமா. நீர்விளை. கக.) 9. பாலையாழ்த்திறம். (சூ.நிகண். கoː௩௩.) 10. பொன். [ராஜம் என்னும் வடமொழி தமிழில் அகாரம் பெற்று அராகமெனநிற்றலன்றி இராகம் என இகாரம் பெற்றுநிற்கும்."இராகம்"பார். [2. 10. ராஜ.]

அராகவொத்தாழிசைக்கலிப்பா— வண்ணகவொத்தாழிசைக்கலிப்பா. அது: தரவுந்தாழிசையும் வந்தபின் வண்ணகமும் அதன்பின் அம்போதரங்கமும் அதன்பின் தனிச்சொல்லுஞ்சுரிதகமும் வந்து ஆறுறுப்பினுல் முடிவது. (இலக்கணசிந். எக.)

அராத்தல்— 1. அராவுதல். 2. சிந்தித்தல். 3. முட்டுதல். [வழக்.]

அராத்திரி—கைலாசமலை. [ஹராத்ரி: ஹர - சிவன். அத்ரி - மலை.]

அராத்துதல்— அராத்தல்.

அராதி—சத்துரு. [ஆராதி.]

அராநட்பு— பிடிகொடாத கொண்டாட்டம். [வழக்.] [அரா - பாம்பு. நட்பு - சிநேகம்.]

அராபதம்—வண்டு. (உ-ம்.) "தங்கராபத நெருங்கு தொங்கலணி தாமவேலடலாக்கநீ" (பாரத. மணிமான். கமக.)

அராமி— 1. கெட்டவள். 2. கெட்டவன்.

அராமுநி—பதஞ்சலிமுனி. (உ-ம்.) "அராமுனியீது வேண்டும்"(திருவிளை.வெள்ளி.திருக்கூ. உடு.)

அராமை—கீழ்மகள். [ராமா.]

அராலம்— 1. கொடுவாள். 2. மதம்பிலிற்றும் யானை. 3. வளைந்தது. [ஆராஃ.]

அராலை—1. நாட்டியப்பெண், 2. வேசை. [ஆராமா.]

அராவணம்—புலம்பாமை. (உ-ம்.) "ஞாலம்-அராவணமதாவவதரித்திடுமெருட்சிதரா" (சேதுபு. இராமனருச். டுக.)

அராவணல்—ஆதிசேடன். (உ-ம்.) "அராவணன்முடித்தலை" (சேதுபு. இராமனருச். டுக.) [அரா - நாகம். அண்ணல் - சிரேட்டன்.]

அராவணை— அரவணை பார்.

அராவல்— 1 அழுத்தல். 2. உரிஞ்சுதல். 1-2. (உ-ம்.)"வய்யராவியமாரன்வாளியும்வானிலாநெடுவோடையும் - மெய்யராவிடவாவிசோர" (இராமா.கைகேசி.டுக.) 3. மிண்டல்.

அராவாரம்—கொடிமுந்திரி.(உ-ம்.)"மதுமாங்கனி மாதுலங்கங்- கதலியராவாரங்கொளுஞ்சி" (தைல. தைலவ. கக டு.)

அராவுதல்—அரத்தாற்றேய்த்தல்.

அராவைரி—1. கருடன். 2. கீரி. 3. மயில். [அரா - பாம்பு. வைரி - பகை.]

அராளகடகாமுகம்—திருத்தக்கை முப்பதனுளொன்று. (சிலப். அரங்கே. கஉ.) [இது: சுத்தானந்தப்பிரகாசமென்னுந் தமிழ்ப்பரதநூலிற்காணப்பட்டதென்றார்.]

அராளம்—1. இருவாட்சிச்செடி, (உ-ம்.) "ஓம்புபுளியாரை மருக்கொழுந்தராளம் பதின்மூன்றும்" (தைல. தைலவ. கக டு.) 2. குங்கிலியம். (தைல. தைலவ. சகக.) 3. பெருவிரல் குஞ்சித்துச் சுட்டுவிரன்முடக்கியொழிந்த விரன்மூன்றும் நிமிர்ந்து வளைவது. (உ-ம்.) "அராளமாவதறிவரக்கிளப்பிற்- பெருவிரல்குஞ்சித்துச் சுட்டுவிரன்முடக்கி- விரல்கண் மூன்றும் நிமிர்த்தகம் வளைத்தற்-குரியதென்பவுணர்ந்திசினோரே" (சிலப். அரங்கே. சஅ. உரை.)

அரி — 1. அக்கினி. 2. அக்கினிதேவன். (உ-ம்.) "அரியுமற்றெனது கூறுநீலனென்றறைந்திட்டானுல்"(இராமா.திருவவ. உஎ.) 3. அங்கிரனுடைய ஒன்பது புத்திரர்களிலொருவன். (உ-ம்.) "கிம்புருடனரிகேதுமாலன்" (கந்தபு. அண்டகோ. உஅ.) [அங்கிரனென்பது அங்கிரஸ் என்பதன்விகாரம். ஸ்ரீஹ்ய என்பது மிருகேந்திரம் அத்வப்பிரகரணம் கஎ-ஆஞ் சுலோகத்திற்காணப்பட்டது.] 4. அடர்பு. 5. அரிசி. (உ-ம்.) "வாலரிகழுவியவண்ணச்செம்புனல்" (சிந்தா. காந். ௩௩அ.) 6. அரித்தல். (உ-ம்.) "அரிக்கூடின்னியம்" (மதுரைக்காஞ்சி. கூகஉ.) 7. அரிதல். (உ-ம்.) "ஆக்கரிய மூக்குங்கையரியுண்டாளென்றான்" (இராமா. சூர்ப்பநகை. கஉடு.) 8-10. அரியென்னேவலுந் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத் தொகையும். (உ-ம்.) "ஆலைவாய்க்கரும்பின்றேனுமரிதலைப்பாளைத்தேனும்" (இராமா. நாட்டு. க. விகை.) 11. விட்டுணு. 12. அழகு. (உ-ம்.) "அ

ரிநீரவிழ்நீலமல்லி" (கலித்தொகை. கக.) 13. அறுத்தல்.(உ-ம்.)"அரிபுகும்பொழுதில்" (மதுரைக்காஞ்சி.) 14. ஆயுதம். (சூ. நிகண். கஃ: ௩௪.) 15. ஆவணிமாதம். (இராசவைத். கக௦.) 16. ஆறென்னும் எண். [அரியாகிய உட்பகைகள் ஆறென்னுங் குறிப்புப்பற்றிவந்த பெயர்.] 17. இந்திரன். (உ-ம்.) "அரி திருமுன்னரெய்தி"(கந்தபு. திருவிளை.௩எ.) 18. வெற்றி. 19. இயமன். (உ-ம்.) "ஆருயிர்கொண்டிடுமெரிதனூர்தியும்" (கந்தபு. தான. ௪௦.) ·20. இலக்கினத்திற் காருமிடம். 21. ஈர்வாள். 22. உட்டுளைப்பொருள். 23. பகை. 24. உருக்குமகவசவரசனுக்கு மகனும் விதர்ப்பநாட்டரசனுமாயிருந்த ஒருவன்.(மச்சபு. போச. க௦.) 25. உருளை. 26. ஐம்மை. (உ-ம்.) "அரிமயிர்த்திரண்முன்கை" (புறநா. கக.)27.ஒருதாளம்.(சூ.நிகண்.கஉ-வது க௦உ.) 28. ஒன்பதுகண்டங்களுளொன்று. 29. கட்டில். 30. கடல். 31. கடுக்காய். (இராசவைத். கக௩.) 32. கண்வரி, செவ்வரி. (உ-ம்) "அரிமதருண்கணார்" (கலித்தொகை. கக.) 33. கபிலநிறம். 34. கருங்காலிமரம். 35. கருங்கிளி.(பிங்க.உ௩௬க.) 36.கருஞ்சிவப்பு. 37. கள்ளு. (சூ. நிகண். கக: ௩௪.) 38. காசம். (இராசவைத். ககக.) 39. காற்று. 40. கிளி. (உ-ம்.) "மாப்புக்கரியுங் குயிலும் பயில்பொழில்" (பழமலையந்தாதி. எஎ.) 41. கிரணம், ஒளி. (உ-ம்.) "அரிமணிச்சிலையின் சலாகையால்" (பாரத. இந்திரப். ௨௩.) 42. கீழ்காய்நெல்லி. (இராசவைத். கக௩.) 43. குதிரை. (உ-ம்.) "நன்றிகொளரிமகநடத்த வெண்ணியோ" (இராமா. திருவவ. அக.) 44. குசசத்வீபத்திலுள்ள ஒருமலை. (உ-ம்.) "அரியெனுங்குன்றும்" (கூர்மபு. பிலக்க. உஎ.) 45. குயில். 46. குரங்கு. (உ-ம்.) "அரியினஞ்செனறசென்றவடவிகளனைத்தும்" (இராமா. மீட். ககக.) 47. குற்றம். (சூ. நிகண். கக: ௩௩.) 48. குன்மம். (இராசவை. கக௩.) 49. கூர்மை. (சூ. நிகண். கக: ௩௪.) 50. கொடிவேலி. 51. வெண்புகை. (ஆசிரியநிகண்டு.) 52. கொள்ளின்வேர். (இராசவைத்.) 53. சத்துரு. (உ-ம்.) "தங்கடிராரியேவலினெல் வந்ததிலோத்தமை" (பாரத. இந்திர. ௪௩.) 54. சந்திரன். 55. சிங்கம். (உ-ம்.) "அரியெனும்பெயர்பொருமையில்" (பாரத. காண்ட. ௩எ.) 56. சிங்கமுகன் என்னும் அசுரன். (உ-ம்.) "திறலரிக்கிளவல்" (கந்தபு. கிரவுஞ்ச. க.) 57. சிங்கவிராசி. (உ-ம்.) "மறியரியாறின்" (விதான. குணகுண. ௪௬.) 58. சிலம்பு. 59. சில்ம்பு முதலியவைகளுக்குள்ளிடுமணி. (உ-ம்.) "சில்லரிச்சிலம்பின்வன்வார்" (சிந்தா. கோவிந். ௬௦.) 60. சிவன். (உ-ம்.) "முராரிநாராயணனரிமுசுறபுசலுறுநாமங்கள்- விளையிலந்தணீர்சாரணவளவினவ்விமலனையுணர்த்தும்மே" (சூத. எக்கி. பூ. ௩௩. க.) 61. சுரம். (இராசவை. க௬க.) 62. சூரியன். (உ-ம்.) "நிலவெனக்கென வரியெனக்கெனு நீதியொப்பனவீதியே" (அரிச்ச. இந்திர. க௪.) 63. செம்மறியாட்டுக்கடா. (உ-ம்.) "அரியினொடுதாக்குறவாடுமே"(மச்சபு.நைமி. ௩௦.) 64. சோலை. 65. தசட்டுவடிவம். 66. தவளை. (உ-ம்.) "தொல்லையோர்பிரமன்றுஞ்சியகாலைத் தோன்றியநீத்தமேலரிபோற் - செல்லுமார்க்கண்டன்" (கந்தபு. திருநகர. எஎ.) 67. தான்றிக்காய். (இராசவை. கக௩.) 68. திருவோணநட்சத்திரம். (உ-ம்.) "அரிமகங்குன்றிருபான்" (விதான. குணகுண. உஎ.) 69. துண்டம். 70. துளசி. (தைல. தைலவ. ௪௩௬.) .71. தேர். 72. நித்திரை. (பிங்கல.௩௦ஆ௬.)73.நிறம்.(உ-ம்.)"வெள்ளரி வெண்சோறு"(மலைபடு.௪௬௬.)74. நீர்.(விசுவநிகண்டு.) 75. நீர்த்தொட்டி. (மேதினிகோசம்.) 76. நெருக்கம். 77. நெல். (உ-ம்.) "அரிமண்டலம்புதைத்து" (தைல. தைலவ. அ௪.) 78. நெற்கதிர். (உ-ம்.) "எறிதருமரியின்சும்மையெடுத்துவானிட்டபோர்கள்" (இராமா. நாட். உக.) 79. நெற்கதிர்களின் பசுங்காய்த்தண்ணீர். (இராசவைத்.) 80. நெற்சூடு. (உ-ம்.) "எள்ளாவரிமானுடர் மிகுப்ப" (இலக்கணவி. சுஎக. உரை.) 81. விசி, கட்டிலின் விசி. 82. பச்சைகலந்தமஞ்சணிறம். 83. பச்சைநிறம். 84. படுக்கை. 85. பத்திரகிரியென்னும்புலவன். 86. மருதப்பறை.(உ-ம்.) "அரிக்குடரரியின்யாமை மிளிர" (புறநா. உ௪க.) 87. பன்றி. (உ-ம்.) "அரிக்குருளைவடிவான" (திருவிளை. கரிக்குருவி. க.) 88. பனைமட்டைக்கருக்கு. (இராசவைத். க௪அ.) 89. பாம்பு. (உ-ம்.) "கரத்தரிக்கங்கணங்கட்டரனூர்" (திருச்செந்தினிரோட்ட.) 90. பிரமன். 91. புகை. (உ-ம்.) "சாதிநறுந்தைலவரியார்க்குநிறையாயுடர்தளித்தாலென" (தைல. கடவுள்வா.௬.)92. பொடி.(இராசவைத்.) 93. பொன். (உ-ம்.) "அரித்தேர்நல்கியுமமையான்" (பெரும்பாண. ௪க௦.) 94. மறுடன். 95. மஞ்சணிறம், செந்நிறம்.(உ-ம்.)"அரித்தளிர்மெல்லணை" (இராமா. மிதிலை. அக.) 96. மயில். (உ-ம்.) "அரியினொடுமெரியுற வாடுமால்" (மச்சபு. நைமிச. ௩௦.) 97. மரகதம்.

(சூ. நிகண். சு: சு.) 98. மாவயிரம். (உ-ம்.) "அரிகிணைமுழக்கி" (கல்லாட. இநட.) 99. மலர்மாலே. 100. மலே. 101. மழைத்தூவல். 102. மூங்கில். 103. மென்மை. (உ-ம்.) "மெல்லிலேயரியாம்பலொடு"(மதுரைக்காஞ். உருஉ.) 104. யாழின்நரம்பு. (உ-ம்.) "அரிக்குரற்றட்டை"(மலேபடு.சு.)105. வண்டு.(உ-ம்.) "அரிவிரகுந்துழாய்" (பாரத. இராய. கஎ.) 106. வரி. (சூ. நிகண். கக: நடு.) 107. வலிமை. (சூ. நிகண். கக: நச.) 108. வாயுதேவன். (உ-ம்.) "இரண்டரிகளருளாண்மையோரும்" (பாரத. இராச. கஎ.) 109. அன்னம். [1, 2, 3, 11, 15, 17, 18, 20, 25, 29, 32, 34, 36, 37, 40, 41, 42, 44, 46, 47, 54, 55, 56. 57, 60, 61, 62, 66, 74, 82, 83, 85, 89, 90, 91, 93, 94,95, 96, 97, 108, 109. ஹரி; 16, 21, 24, 26, 35, 53, 75, 81. அரி.]

**அரிக்கண்சட்டி** — அரிசியரித்தற்குச்சிறுதுவாரங்கள் விட்டுச் செய்யப்பட்டசட்டி.

**அரிக்கரியார்**—சிவன்.(உ-ம்.)"அரிக்கரியார்கழல்வணக்கி" (பெரியபு.திருஞாந. சOOச.) [ஹரி - விட்டுணு. அரியார் - காணுதற்கரியவர்.]

**அரிக்காந்தி**—விஷ்ணுகாந்திப்பூண்டு.(உ-ம்) "புனர்நவமரிக்காந்திதாழை" (தைல. தைலவ. எடு.)

**அரிக்குதல்**— அரித்தல்.

**அரிக்குரல்**—அரித்தெழுமோசை. 2. இனியகுரல். 3. தவளைசசத்தம். (உ-ம்.) (1,3, ஐங்குறு.)

**அரிகண்டம்**— 1. ஒருவிரதவேடம்; அது: படலமாக இருப்புத்தககெளிணைத்துச்செய்துதன்னைவருத்தும்படி கழுத்திலே மாட்டிக்கொள்ளும்வேடம். [அரி- அரிதல். கண்ட - கழுத்து.] 2. தொந்தரவு. [அரி-அரிதல். கண்டக - இடைஞ்சல்.] 3. நவகண்டங்களுளொன்று. (உ-ம்.) "அரிகண்டத்துவாழ்வோர்" (கந்தபு. அண்ட. சு0.) [ஹரி; வர்ஷ- பிரிவு.]

**அரிகண்டம்பாடுதல்** — சமுத்திபாடவும் பாடத்தவறின் கத்தியின லரியப்படவுமிசைந்து கழுத்திலே கத்திமாட்டிக்கொண்டு பாடல். (பாவலர்சரித். கOஉ.)

**அரிகயிறு**—அரிநூற்பொறி. (சிந்தா. நாம. எடு. உரை.)

**அரிகரதமரன்** — அரிகரபுத்திரன். (சூ. நிகண். க: உஅ.) [ஹரி - விட்டுணு. ஹர - சிவன். குமார- மகன்.]

**அரிகரப்பன்**— ஒருகரப்பன். [வழக்.]

**அரிகரப்பான்**—வாதக்கரப்பான். (உ-ம்.) "குட்டரிகரப்பான் வெய்யமருத்தணிமருட்காய்கள் வதப்பும்போம்" (தைல. தைலவ. கஙநு.)

**அரிகரபுத்திரன்**—ஐயனார். (உ-ம்.) "அத்தகுந்திருமைந்தற்கரிகர புத்திரனெனுநாமம்புனைந்து" (கந்தபு. மகாசாத். ௫0.) [ஹரிஹரபுத்ர: ஹரி - விட்டுணு. ஹர - சிவன். புத்ர - மகன். விட்டுணு மோகினியென்னும் பெண்வடிவங்கொண்டபோது அம்மோகினியைச் சிவன் கூடிப்பெற்றபிள்ளையென்பர்.]

**அரிகரி**—அத்திக்கொழுந்து.

**அரிகல்**—மகாமேரு.

**அரிகள்**—பகைவர். (சூ. நிகண். உ: ௫க.) [அரியென்னும் பேரின்பன்மைச்சொல்லாதலால் அப்பெயரின் பொருளனைத்துக்கும் பன்மையாம்.]

**அரிகளவம்**—நதி.

**அரிகறையான்**— 1. அரிக்குங்கறையான். 2. தொந்தரவுகொடுக்கிறவன். [கறையானரிப்பைப்போல விடுக்கண் செய்கிறவனென்றபடி.]

**அரிகிணை**— மாவயிரத்தினுற் செய்யப்பட்ட ஒரு மருதநிலவாத்தியம். (உ-ம்.) "அழலவிர் மணிப்பூண் மள்ளரரிகிணைக்கிசையவூதுங்-குழலிசையறுகான்மாதர்குழலிசையறுகாற்கூட்டம்" (அருணைசலபு.திருக்கண். சடு.)

**அரிகுரல்**—காகரத்தகுரல். (உ-ம்.) "அரிகுரற்சோழி நாமத்தரவவட்கடித்ததாக" (சிந். தா. கஙக. கககூ.)

**அரிகூடம்**—கோபுரவாயின் மண்டபம்.

**அரிகேசம்**—சூரியனுடைய கதிர்களினொன்று.(உ-ம்.)"ஆதவன்கதிரிலேழ்கதிர் சிறந்தவவற்றினிற்சுசுழுமணத்தோடு- மேதமற்றெளிருமியலரிகேசமிரண்டும்வான்புதற்கொளிவழங்கும்" (கூர்மபு. ஆதவர்க. க.)

**அரிச்சந்திரம்**— பிரதிட்டாகலேயிலேதேயுதத்துவத்திலுள்ள எட்டுப் புவநங்களுளொன்று.(சி-வி. கிரியா. உக-ஆம் சுலோ. உரை.) [ஹரிஶ்சந்த்ர:]

**அரிச்சந்திரன்**— சூரியகுலத்தரசர்களுளொ

ருவன்; இவன்: திரிசங்குவின் மகன். அறுவகைச்சக்கரவர்த்திகளிலொருவன்.(உ-ம்.) "ஒடைமால்யானைச் சத்தியாதனன்றனுயிர் நிகரெழிலுடைமைந்த - னேடவிழ்நறுந்தார்மன்னவர்போற்றுமடலரிச்சந்திரனென்பான்" (கூர்மபு. சூரியன்மர. ௩௪.) [ஹரிஶ்சந்த்ர.]

அரிச்சிகன்—சந்திரன்.

அரிச்சுவடி— அரிவரியெழுதப்பட்ட ஏடு.

அரிசட்டுவர்க்கம் — காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மற்சரம் என்னும் ஆறு உட்பகையின் கூட்டம். (மணிமேக. ௪0௨.பக்.) [அரி - பகை; ஷட் - ஆறு; வர்க்க.]

அரிசந்தநம் — 1. ஐந்தருவிலொன்று. 2. ஒருவகைச் சந்தநமரம். (உ-ம்.)"மலரரிச்சந்தநவாசம்" (பாரத. அருச்சுனன்றவ. ௧௫௮.) 3. தாமரைப்பூந்தாது. 4. நிலவு. 5. மஞ்சள். [ஹரிசந்தந:]

அரிசம்— 1. அமாவாசை யதிகமும் பிரதமை குறைவுமாகக் கூடிநிற்குந்திநம்.(உ-ம்.) "சொல்லமாவாசைமிஞ்சிற் பிரதமைதலங்குமந்நா-ளொல்கலிலரிசமென்பர்" (மச்சபு. புரூரவா. உ௭.) 2. மகிழ்ச்சி. (சி. சி. உ: அ0. மறை.)[ஹர்ஷ: அரிசமாவது புத்திரமித்திராதிகளைக்கண்டு களித்து இனியெமக் கொன்றுங் குறைவில்லை யென்கை.] 3. மிளகு.

அரிசயம்—1. எலுமிச்சை. 2. கொன்றை. [அரிசயமென்பதை அரிசலமெனவுங் கூறுவர்.]

அரிசரன்— சிவன். [ஹரி - விட்டுணு. ஶர - அம்பு. விட்டுணுவையம்பாகக்கொண்டவனென்றபடி.]

அரிசனம்—1. மஞ்சள். (உ-ம்.) "அரிசனமேனிநல்லாள்" (கந்தபு. தெய்வ. அ௭.) 2. மஞ்சள்விரவிய கலவைப்பொடி. (உ-ம்.) "ஆசநத்தணிநீராட்டியரிசனஞ்சாத்தி" (பெரியபு. தடுத்தாட். ௧௫. உரை.)

அரிசா—பெருங்குமிழிமரம்.

அரிசி—1. உமியுடைப்பொருளில் உமிகழற்றி யெடுக்கப்பட்ட உட்பதார்த்தம்.(உ-ம்.) "பண்டுமுளைப்பதரிசியேயானலும்" (வாக்குண்டாம்.) 2. விதைமுதலியவை. [அதவரிசி, உருளரிசி, ஏலரிசி, கார்புகா அரிசி, வாவா அரிசி, வெட்பாலையரிசியென ஔஷதவகைக்காக ஆறுவகையரிசி யுண்டென்பர் வைத்தியர்.]

அரிசில்—ஒருநதி. (உ-ம்.) "அரிசிற்றென்கரையழகார்திருப்புத்தூர்" (தேவார. திருப்புத். ௫. சுந.) [இது, "அரிசொல்" என்பதன் திரிபு.]

அரிசு—மிளகுக்கொடி.

அரிசொல் — கும்பகோணத்துள்ள ஒருநதி. (உ-ம்.) "அரிசொற்கரைப்புத்தூர்"(பெரியபு. திருப்பதிகக். ௧௨.)

அரிசோபகந்தரவிரணம்— மூலபகந்தரம். (சீவரட். ௩0௨.) [அர்ஶஸ் - மூலம். பகந்தரம்.]

அரிசோரோகம்—ஆண்குறியில்வரும் ஒருவகைரோகம்; அது: வாதபித்தகபங்கள் இரத்த மாமிசங்களை யநுசரிக்கும்போது பிறப்பதும், அப்போதாண் குறியினுள்ளிலாவது வெளியிலாவது நமைச்சல், அவ்விடங்களில் மூலரோக முளைகளைப்போலுஞ் சிறு சிறு காளான் முளைகளைப்போலும் மாமிசம் எழும்புதல், அவைகளில்மிகவும் வியர்வைகசிதல், இரத்தம் வடிதல், என்னும் இக்குணங்களுண்டாவதுமானது. (சீவரட். ௩௧௫.) [அர்ஶஸ் - மூலம்.]

அரிசோவர்த்மரோகம்— கண்ணிமையில்வரும் ஒருவகைரோகம்; அது: இமைச்சந்திகளிலே தூர்மாமிசம்வளரக்கண்களிலே மரத்தல், மினுமினுப்பு, எரிச்சல்,சிவப்பு என்னுங்குணங்களுண்டாதல். (சீவரட். உ௪௭.) [அர்ஶஸ்; வர்த்மந்.]

அரிட்டசூதநன்— விட்டுணு. [அரிஷ்டஸூதந: அரிஷ்ட-ஓரசுரன். ஸூதந-கொன்றவன்.]

அரிட்டநேமி— 1. சூரியனுடைய துவாதசசாரதிகளுளொருவன். (உ-ம்.) "கோங்கிளமுலையார் நால்வரையரிட்டநேமிகைக் கொள்கெனக் கொடுத்தான்" (கூர்மபு. அந்தகா. ச. வி-ணி. உ௪௫.) 2. சைநமதத்திலுள்ள இருபத்துநான்கு தீர்த்தகரருள் இருபத்திரண்டாந் தீர்த்தகரன். [அரிஷ்டநேமி.]

அரிட்டம்—1. அதிட்டகிநம். (உ-ம்.) "சாடுநோயாதி-யளவில்லாதபல்லரிட்டங்களனுங்கவும்" (திருவானை. நான. ௧.)2. கள்ளு,மது. 3. காகப்பறவை. (உ-ம்.) "எங்குஞ்சங்கவரிட்டவிரக்கமே" (இரகு. திக்கு. ௧௪௫.)4. தீங்கு, கேடு. 5. துன்னிமித்தம். 6. நல்லதிட்டம். 7. நாரைப்பறவை. 8. பிரசவமண்டபம். 9. பிறவிக்குற்றம், சென்மதோஷம். (பிங்க. ௩0௮௬.) 10. மரணக்குறி. (உ-ம்.) "இவை

முன்னுயவரிட்டங்களெய்துங் காலை" (சூத. எக்கி. பூ. சக: உசு.) 11. முட்டை.(சூ.நிகண். ௩: சுக.) 12. மோர். 13. வெள்ளுள்ளிப்பூண்டு. 14. வேப்பமரம். [அரிஷ்ட.]

அரிட்டன்—ஓரசுரன். [அரிஷ்ட.]

அரிட்டாநகம்— 1. அபசயம். 2. வக்கம். [அரிஷ்டாநக.]

அரிட்டித்தல்—கொல்லல்.

அரிட்டை—கடுரோகிணிப்பூண்டு. (தைல. தைலவ. உ௩.) (உ-ம்.) "அதிபலை" பார். 2. கந்தருவராயிரவர்தாய்.(கூர்மபு. வாஞைசு. க.)

அரிடணம்—1. சதாசிவனுடைய பஞ்சமுகங்களுளொன்ருகிய ஈசாந முகத்தினிற்குங் கலைகளுளொன்று. (த. சி. போ. ௩0க.)2. சந்தோஷம். 3. சித்தியயோகங்களுளொன்று. (வருஷாதி.) 4. மன்மதனுடைய பஞ்சபாணங்களிலொன்று. [ஹர்ஷண.]

அரிடம்—1. அதிட்டகீநம். (உ-ம்.) "அரிடமானதன்விதியினல்" (பாரத. நிரை. சஉ.) 2. கடுரோகிணிப்பூண்டு. 3. கேடு. (உ-ம்.) "ராவணபுயாரிடநிராமயசரோருகானருள்பாலா" (திருப்பு. ௩௩௦.) 4. மூலத்திலே வரும் ஒருவகை நோய். 5. விடாமழை. 6. வீடுமுதலிய வளங்களைக்கண்டு களித்து இனியெமக்கென்னகுறையென்னுங்குணம். (சிவப்பிர. உ: உ. சிதம்பர.) 7. வேப்பமரம். 8. ரோமபுளகம். [1-3. அரிஷ்ட. 4-5. அரிஷ. 6, 8. ஹர்ஷ.]

அரிடிகம்— சிற்பநூன் முப்பத்திரண்டிலொன்று.

அரிணம்—1.சிவப்பு. 2. பொன். 3. மான். (சூ.நிகண்.௩.உஉ.) 4. யானை. 5. வெள்ளை. [1, 2, 3, 5. ஹரிண.]

அரிணவம்—கடல். [அர்ணவ.]

அரிணன்— 1. சிவன். 2. சூரியன். 3. விட்டுணு. [ஹரிண.]

அரிணி— 1. சித்திரிசாதிப்பெண். 2. பெண்மான். 3. பொன்னுலாய வுருவம். 4. மான்சாதிப்பெண். (உ-ம்.) "அரிணிவடவைய்த் திரியென்பவை- தெரியுங்காலை யரிவையர்சாதி" (கல்லா. எ. உரை.) 5. வஞ்சிக்கொடி. [1. 4. ஹரிணி.]

அரிணை—கள்.

அரித்தல்— 1. கழித்தல். 2. கெடுத்தல், (உ-ம்.) "பாலிக்குமரிக்குந்தாணிழல்வெப்" (கம்பாந். கடு.) 3. சங்கரித்தல். (உ-ம்.) "சருப்பத்தையு மரைக்கச்சௌத்தரிப்பானுலகரிப்பான்" (சீகாழி. ஆபத்து. ச.) 4. சிறிதுசிறிதாக அறுத்தல். (உ-ம்.) "களக்கறையானைச்சற்றெறண்ணுநெஞ்சே - கலங்கரிக்குநந்திவினையான கருங்கலையே" (மறைசையந். கக.) 5. சிறிதுசிறிதாக எடுத்துப்போதல். (உ-ம்.) "அரித்தொழுகுவெள்ளருவி" (தேவார. திருவையா. ௩.திருநா.) 6. புல்லுமுதலியவைகளைத்துகணீக்கியெடுத்தல். 7. மாமுதலியவைகளை அரிக்குங்கருவியிலிட்டுக்கழிவுநீக்கியெடுத்தல். 8. வருத்தல். 9. படைத்தல். (உ-ம்.) "ஒங்குலகையரித்துமளித்துமழிப்பவராத்தரொன்னு" (திருநூற். கசு.)

அரித்திரம்— 1. சுக்கான். 2. தோணிவலிக்குந்தண்டு. 3. மஞ்சட்பூண்டு.(பிங்க.கஎஉ0) [1, 2. அரித்ர 3. ஹரித்ர.]

அரித்திரா— 1. மஞ்சட்கிழங்கின்மா. 2. மஞ்சள். [ஹரித்ரா.]

அரித்திராசுரம்—ஒருவகைச்சுரநோய்;அது: சர்வாங்கத்திலும் மஞ்சள்வன்னத்துடன் தடிப்பு, சயித்தியம், சடத்துவம், முகத்திலெண்ணெய் தடவினதுபோலப் பிசுபிசித்தல், நகங்களிலுங்கண்களிலும் நோவு, கீல்களில் வீக்கம், எப்பம், கொட்டாவி, விக்கல், கைகால் குளிர்ச்சி, சிரோபாரம், தலைதிருப்பல், நாவுகசத்தல், தாகம், நெஞ்சுலருதல், மார்பெரிச்சல், அக்கினிமந்தம், மலபந்தம், பலவீநம், அரோசகம், வாயில் நுரைவீழ்தல், அதிகப்பேச்சு என்னும் இக்குணங்களையுண்டாக்கும். (சீவாட். சக.)

அரித்திராந்நம் — மஞ்சட்சோறு. இது: அறுவித நைவேதநங்களுளொன்று. (த. சி. போ. ௩0உ.) [ஹரித்ரா- மஞ்சள். அந்ந- சோறு.]

அரித்திராப்பிரமேகரோகம்—ஒருவகைப்பிரமேகரோகம்; அது: மஞ்சணிறமான வெள்ளைகாணல், சூடாகநீரிறங்கல், நெருப்பைக்கொளுத்தினதுபோல எரிச்சலுடன்கூடிய கடுப்பு, விருவிருப்பு, உட்டணம், முகத்தில் மஞ்சணிறம், நாவிற்கசப்பு, மந்திக்கிடல் என்னும் இக்குணங்களையுண்டாக்கும். (சீவாட். ௩கக.)

அரித்திராபம்— ஒரு மரம். 2. மஞ்சணிறம். 3. மஞ்சணிறமுள்ளது. [ஹரித்ராஹ:

ஹரிஜ்ர - மஞ்சள். சூஹ-போன்றது.]

அரித்திராமேகம்— போகத்தால் விளைந்த பித்தவெட்டை. (உ-ம்.) "போகத்தால்விளைந்த அரித்திராமேகம் வாந்தியென்னும் ரோகங்களெல்லாம்" (தைல. தைலவ. ருஅ. உரை.)

அரித்துவசன் — 1. சிங்கக்கொடியுடையோன். 2. வீமன். (உ-ம்.) "அரித்துவசன் றனைநோக்கியரக்கன் - கருத்துடனின்றிவை கட்டுரைசெய்வான்" (பாரத. புட்ப. எஉ.) [ஹரி- சிங்கம். த்வஜ - கொடியுடையோன்.]

அரித்து— 1. அரித்தெனப்பொருள்படும் ஒரு வினையெச்சம். 2. சிங்கம். 3. சூரியன். 4. சூரியனுடைய பச்சைநிறக்குதிரை. 5. திக்கு. 6. பச்சை தாவிய மஞ்சணிறம். 7. பச்சைநிறம். 8. மஞ்சணிறம். 9. விரைவாகச்செல்லுங்குதிரை. [2-9. ஹரித்.]

அரித்துவஞ்சத்துவம் — இருபத்தைந்து சிவமூர்த்தத்தொன்று; அது: யமனைச்சங்கரித்த மூர்த்தம். (வி-ணி. உஎஅ.) [ஹரி- யமன். த்வம்ஸம - அழித்தற்றன்மை.]

அரித்துவம்— பகைமை.

அரித்துவாரம்— 1. கங்காத்துவாரம், மாயாபுரி. (கூர்மபு. தக்கன்வேள். உ. உரை.) [மாயாபுரியின் பக்கத்திற்கங்காநதியுற்பத்தியென்பர். [ஹரித்வாரம.]

அரித்தை— 1. அரித்தாயெனப்பொருள்படும் ஒரு முன்னிலைவினைமுற்று. 2. கிலேசம். 3. துன்பம்.

அரிதகி— கடுக்காய்மரம். (உ-ம்.) "அரிதகியினலர்பாரிபாவியம்" (தைல. தைலவ. கூகூ.) [ஹரீதகீ.]

அரிதம்—1. இருண்டநீலநிறம். 2. பச்சைநிறம். 3. பசும்புன்னிலம். 4. பசுமை. 5. பொன்மை. (பிங்க. ககூஙஉ.) 6. மஞ்சள். 7. திக்கு. (சூ. நிகண். ரு.) [ஹரித.]

அரிதல்—கத்தி முதலிய ஆயுதங்களாலறுத்தல். (உ-ம்.) "நாககரியுந்தசமுகனுர்" (இராமா. சூர்ப்பந. கஉரு.)

அரிதவெலி—மஞ்சணிறமுடைய ஒருவகை வெலி. இது: கடித்தலால் அக்கினிமந்தமுங் கொட்டாவியும் மயிர்க்கூச்செறிவும் உண்டாகும் என்பர். (சீவரட். நகூ௦.) [ஹரிதம் - மஞ்சணிறம்.]

அரிதளம்— பொன்னரிதாரம். [இஃது: அரிதாளம் என்பதன் குறுக்கம்.]

அரிதாரம்— 1. இலக்குமி. (உ-ம்.) "அரிதாரமன்னவளம்பகங்காட்டும்" (மறைசை.சஉ) [ஹரி - விஷ்ணு. தாரா - மனைவி.] 2. ஒரு மருந்து. மனோசிலையென்னும் அரிதாரமானது மலைகளிலேயுதிக்குமென்றும், அதற்கு வேறாய் நறுமணம் வீசும் அரிதாரம் மான்வயிற்றுதிக்குமென்றும் பெரியபுராண உரைகாரர் கூறுகின்றார். (உ-ம்.) "மானின் வயிற்றரிதாரத்திலகமிட்டு" (பெரியபு. கண்ணப்ப. சஅ.) 3. தாளகமென்னும் பாஷாணம். இது: சீனதேசத்திலிருந்தும் பிரமாதேசத்திலிருந்துஞ் சுமித்திராதேசத்திலிருந்தும் வருகிற சரக்கென்றும் பாஷாணவகையிற்சேர்ந்ததென்றும்,இது:பொன்னரிதாரம், தாளகம், கட்டியரிதாரம், காட்டரிதாரம், தகட்டரிதாரம், மடலரிதாரம், வைப்பரிதாரம், கனத்தீயரிதாரம் எனப்பலவகைப்படுமென்றுஞ்சொல்லப்பட்டிருக்கின்றது.

அரிதாலம் — 1. பொன்னரிதாரம். 2. மஞ்சணிறமான ஒரு சாதிப்புறு. [ஹரிதாலு.]

அரிதாலிகை—புரட்டாசிமாதச்சுக்கிலபக்கச்சதுர்த்தி. [ஹரிதாலிகா.]

அரிதாள்—நெல்லுமுதலியவைகளின் கதிரறுக்கப்பட்டதாள்.

அரிதாளம்— 1. நவதாளத்தொன்று. 2. பொன்னரிதாரம். [ஹரிதாலு.]

அரிதிநம்— ஏகாதசி. (உ-ம்.) "ஏதமறுந்துவாதசியினிலங்குமரிதினத்தும்" (வேதாரணியபு. அந்தர். க.) [ஹரி- விஷ்ணு. தி நநாள்.]

அரிதின்வயச்சி-- 1. திருநாமப்பாலை. 2. நன்னாரிக்கொடி.

அரிது— 1. அருமையென்னும் பண்படியிற்பிறந்து "அருமையானது" எனப்பொருள்படும் ஒரு குறிப்புவினைமுற்று. (உ-ம்.) "அரியவற்றுளெல்லாமரிதே" (வள். சசகூ.) 2. அருமையானகாரியம். (உ-ம்.) "பழிப்பருமுலகங்களெவையும்பன்மூ.றை - யழித்தளித்தியற்றுவார்க்கரிதுண்டாகுமோ" (இராமா. யுத்த. மந்திர. ந.) 3. அருமையென்னும் பண்படியிற்பிறந்து ஏலாதெனப்பொருள்படும் ஒரு குறிப்புவினைமுற்று. (உ-ம்.) "அன்

னதுகாத்திடலரிதுகாணென்றான்" (கந்தபு. அக்கினி. ௧௧௧.) 4. பச்சைநிறம். [ஹரித்.]

அரிதை—பகைமை. [அரிதா.]

அரிதொடர்—துவக்கு சங்கிலிகளுளொருவகை. (உ-ம்.) "துவக்குசங்கிலியெறிந்திழுக்குமரிதொடர்பிடித்தகை" (திருவிளை. நகர. உஎ.)

அரிந்தமன்—1. பகைவனையடக்குவோன். 2. விட்டுணு. (உ-ம்.) "அரிந்தமன்சிலைநாணெடிதார்த்தலும்" (இராமா. மராமர. ௧௩௯.) 3. வெற்றியாளன். [அரிந்தம.]

அரிநர்—(நெல்) அறுக்கிறவர். (உ-ம்.) "அரிநர்கீழ்மடைக்கொண்டவாளையும்" (புறநா. ௪உ.)

அரிநாதம்—சிங்கநாதம். (உ-ம்.) "அரிமகன்" பார். [ஹரி; நாத.]

அரிநிம்பம்—மலைவேம்பு.

அரிநூற்பொறி—நகரத்தின் மதிலிலேவைக்கப்படும் பொறிகளுளொன்று. (சிலப். அடை. உ௧௯. உரை.)

அரிநெல்லி—ஒருவகை நெல்லிமரம்.

அரிப்பர்—அரித்துப்பொருள்தேடுவோர். (உ-ம்.) "அரிப்பர்கையகப்படுவனவாயிரத்திரட்டி" (திருவிளை. நகர. ௬௯.)

அரிப்பறை—அரித்தெழுமோசையையுடைய பறை. (உ-ம்.) "அறிப்பறைவினைஞர்" (ஐங்குறு அ௧.)

அரிப்பன்—1. பொற்றுகளை மணலினின்றும் அரித்தெடுப்போன். (உ-ம்.) "குருட்டரிப்பனார்க்குங்குபேரனென்றபேரோ" (ஒழிவி. பொது. ரு.) [குருட்டரிப்பனென்றிழிபின்கட் பன்மையாகக்கூறினரென்பர்.] 2. மண்முதலியவைகளையரிக்கிறவன்.

அரிப்பாளன்—அரிப்பன். (உ-ம்.) "பிறவியந்தகனாகிய வரிப்பாளனுக்குங் குபேரனென்று பெயருண்டுகொலோ" (ஒழிவி. பொது. ரு. உரை.)

அரிப்பான்—அரிப்பன்.

அரிப்பிரத்தம்—இந்திரப்பிரத்தம். (உ-ம்.) "இளவன்மீளவுமரிப்பிரத்தநகர்" (பாரத. இராச. ௫௩.) [ஹரி - இந்திரன். ப்ரஸ்த- நன்றாய் நிலைத்தது, சமநிலம்.]

அரிப்பிரியம்—1. கடம்பு. 2. சங்கு. [ஹரி ப்ரிய.]

அரிப்பிரியை—1. இலக்குமிதேவி. 2. சுக்கிலபட்சத்துப்பன்னிரண்டாந்திதி. 3. துளசிப்பூண்டு. 4. பூமிதேவி. [ஹரி- விஷ்ணு. ப்ரியா - பிரியமானது.]

அரிப்பு—1. அரித்தல். (உ-ம்.) "அரிப்பாளன்" 2. குற்றம். (சூ. நிகண். அ: ௯௮.) 3. கோபம். (சூ. நிகண். அ: ௬௨.) 4. சொரிதல், தினவு. 5. பிரித்துக்கழித்தல்.

அரிப்புக்காரன்—அரிப்பாளன்.

அரிப்புக்கூடை—அரிப்பெட்டி பார்.

அரிப்புழுக்கல்—சோறு. (உ-ம்.) "வாலரிப்புழுக்கலுஞ்சாதக்- கமையக்கொட்டியகறிகளின்வருக்கமும்" (திருவிளை. குண்டோ. ௬.) [அரி - அரிசி. புழுக்கல் - வெந்தது.]

அரிப்பெட்டி—மாமுதலியன அரிக்குஞ் சல்லடைப்பெட்டி.

அரிபாகர்—அரியத்தர். (உ-ம்.) "நிலவுசலந்தரதகனாரிபாகர்நீலகண்டர்" (திருநெல். அறம். ௯.) [ஹரி - விஷ்ணு. ஹாம - பங்கிலுடையவர்.]

அரிபாலுகம்—1. தக்கோலச்செடி. 2. தக்கோலவிதை. [ஹரிவாலுக.]

அரிபிளவை—தசையையரிக்கும் பிளவைக்கட்டு.

அரிபீடிகை—1. சமஸ்கிருதபாஷையிலுள்ள ஒரு வியாகரண நூல். (பி.வி. எக,பக்) 2. சிங்காசனம். [ஹரிபீடிகா.]

அரிபுரம்—1. கலிங்கதேசத்துள்ள ஒரு நகரம். (உ-ம்.) "கலிங்கநாடதன்பாலாவதத்தநேர்மாக்கள் வாழரிபுரமதனில்" (கந்தபு. மார்க்க. ௧௪௪.) 2. சத்திருவின் நகரம்.

அரிபெட்டி—அரிப்பெட்டி.

அரிமஞ்சரி—குப்பைமேனிப்பூண்டு.

அரிமணல்—நுண்மணல்.

அரிமணி—மரகதரத்நம். (உ-ம்.) "எறுதேசிகவளையரிமணிக்கதிர்கல" (இரகு. நாட். ௧௯.) [ஹரிந்மணி: ஹரித்-பச்சை. மணி- ரத்நம்.]

அரிமந்திரம்—சிங்கம் இருக்குங்குகை. (உ-ம்.) "அரிமந்திரம்புகுந்தாலானைமருப்பும் பெருகொளிசேர் முத்தும்பெறலாம்" (நீதிவெண்பா.) [ஹரி - சிங்கம். மந்திர- வீடு.]

அரிமர்த்தநன்—1. ஒருபாண்டியன். (உ-ம்.) "திறலரிமர்த்தநனென்னுந்தென்பார் வேந்தன்" (திருவிளை. மண். ௧௦.) 2. சத்திருவைச்

சங்கரிப்போன். [அரிஸூதந: அரி-சத்துரு. ஸூதந - இடித்தல்.]

**அரிமல்**—மாவிலிங்கமரம்.

**அரிமா**—1. ஆண்சிங்கம். (உ-ம்.) "அரிமா பிழைப்பெய்தகோல்" (நாலடி. கசு: உ.) 2. சிங்கராசி.

**அரிமாநோக்கம்**— சிங்கததின் பார்வை; அது: முன்னும்பின்னும் பார்த்தல். (உ-ம்.) "ஆற்றொழுக்கரிமாநோக்கந் தவளைப்-பாய்த் துப்பருந்தின்வீழ்வன்னசூத்திரநிலை" (நன். பொது. கக.) ஹரிமா - ஆண்சிங்கம். நோக்கம் - பார்வை.]

**அரிமான்**—ஆண்சிங்கம். (உ-ம்.) "அரிமா னிடித்தன்ன" (கலி. பாலை. கச.)

**அரிமுகச்சிவிகை**— சிங்கத்தலைச்சிவிகை; அது: சமயவாதிகளை வென்ற ஆசிரியர்களே றுவது. [ஹரி-சிங்கம், முக-வெ; ஶிவிகா.]

**அரிமுகவம்பி**—சிங்கமுகவோடம். (உ-ம்.) "பரிமுகவம்பியுங் கரிமுகவம்பியு மரிமுகவம் பியும்" (சிலப். புற. கஎஎ.)

**அரிமுகன்**—சிங்கமுகாசுரன். (உ-ம்.) "இற் றைப்பகனீயிறந்தாயரிமுகனே" (கந்தபு. சிங் க. ௬எ௩.) [ஹரி - சிங்கம். முக- முகம்.]

**அரிமைதா**—வெள்வேலமரம்.

**அரியகம்**—1. காற்சரியென்னுங் காலிலணி யும் ஆபரணம். (உ-ம்.) "அரியகங்காலுக்க மைவுறவணிந்து" (சிலப். கடலாடு. அகூ.) 2. கொன்றைமரம்.

**அரியகொள்கை**— தாபதர்க்குரிய அரிய இயல்பு. அவ்வியல்புகள்: பலதாமுநீரின்மூ ழ்கல், நிலத்திற்கிடத்தல், தோலுடுத்தல், அக்கினியோம்பல், ஊரடையாமை, சடைதரி த்தல், காட்டிலுணவு, கடவுட்பூசை என எட்டு. (உ-ம்.) "அரியகொள்கையர்" (சிந் தா. கேம. கஉ.)

**அரியசம்**—கொன்றை.

**அரியசாரணை**—மாலைக்குப்பூண்டு.

**அரியணை**—சிங்காசனம். (உ-ம்.) "இனைய காலையிலரியணைப்பீடநின்றிழியா" (கந்தபு. தெய்வ. உசுக.) [ஹரி - சிங்கம். அணை - ஆசநம். இங்கே செய்கைச்சிங்கத்தைக்கருதி ற்று.]

**அரியணைச்செல்வன்**— அருகன். (சூ. நிக ண். க: ௩.)

**அரியபச்சை**— வங்காளப்பச்சை. (உ-ம்.) "பச்சிலையரியபச்சைபத்திகாய்மயூரம்" (தை ல. தைலவ. கசு.)

**அரியது**—அருமையானது. (உ-ம்.) "தவ ந்தனிலரியதொன்றில்லை" (கந்தபு. காசிப னுப. உ௩.)

**அரியம்**—வாச்சியம்.

**அரியமன்**—அரியமான் பார்.

**அரியமா**— 1. ஒரு பிதிரர்கணம். 2. சூரி யன். 3. பன்னிருசூரியருளொருவன். அவன்: மிதுனத்திலுதிக்கும் பதினாயிரங்கிரணங்க ளையுடையவன். (கூர்மபு. ஆதவர்பிற. உ.) [ஆர்யமந் நீ.]

**அரியமான்**— 1. அதிதியின் புத்திரராகிய சூரியர் பன்னிருவரிலொருவன். (கூர்மபு. அந்தகா. கஉ.) 2. பிதிரர்களுட்டலைவனாகிய அரியமன். (உ-ம்.) "தென்புலத்தோரிலிச் சையுறுமரியமான்யான்" (கூர்மபு. விபூதி. க௦.) [ஆர்யமந் நீ.]

**அரியர்** — கிடைத்தற்கருமையானவர். (உ-ம்.) "நீதடையாச்செல்வர்மொழிதிறம் பாதகூரர்நடுத்தெரிந்துநோக்கு-நாதரிவர் மிக வரியர்" (ஞானவா. வைராக். சுச.)

**அரியல்**—1. அரித்தல். (உ-ம்.) "வெந்நீர ரியல்விரலலைநறும்பிழி" (பெரும்பாண். உஅக.) 2. அரிதல். 3. கள். (உ-ம்.) "அரி யலார்ந்தமர்த்தவின்" (சிந்தா. பதுமை. அச.)

**அரியன்**— 1. அருமையானவன். (உ-ம்.) "மறைகடேடரியனுவோன்" (பாகவத. சிசு பால. சுச.) 2. சிரேட்டன். 3. மேலான வன். 4. வைசியகுலத்தோன். [2-4. ஆர்ய.]

**அரியாணி**—வைசியசாதிப்பெண். [ஆர்யாணீ.]

**அரியுண்மூலம்**—கோரைக்கிழங்கு. (தைல)

**அரியேறி**— துர்க்கை. [ஹரி- சிங்கம். ஏறி - ஏறுதலுடையவள்.]

**அரியேறு**— ஆண்சிங்கத்தினது சாயலாக ச்செய்யப்பட்டவடிவம். (உ-ம்.) "நவமணி யழுத்தியவரியேறேந்துமாசனம்" (பாரத. கிரு ட். எசு.) 2. ஆண்சிங்கம். (உ-ம்.) "அடுதிற னிருபவேழக்குழாமடுமரியேறிந்த" (இரகு. தேனுவந். ௩எ.)

**அரில்**— 1. குற்றம். (உ-ம்.) "அரிலகற்று ங்கேள்வியார்" (திரிகடு. ௩.) 2. சிறுகாடு, சிறுதூறு. (உ-ம்.) "பிணங்கரினுழைதொ றும்" (மலைபடு. ௩௭க.) 3. பகை. 4. பிண க்கு. (உ-ம்.) "அகத்திணை மருங்கினரிறபவு

ணர்ந்தோர்" (தொல். பொருள். ருசு.) 5. பின்னுதல். (உ-ம்.) "நுணங்கரின் மாலை" (பொருநா. கசுக.)

அரிவட்டம்— கழுத்திலே மாட்டும் அரிகண்டம்.

அரிவரி— அகாமுதலாக முறையே கோவைசெய்யப்பட்ட வரிவடிவமான எழுத்துக்கள்.

அரிவருடம்—நவகண்டத்துளொன்று; இஃது ஏமகிரிக்கும் நிடதகிரிக்கும் இடையேயுள்ளது. (உ-ம்.) "அம்புவியினிசதமுதலேமங்காறுமரிவருடம்" (கந்தபு. அண்டகோ.ங்எ.) [ஹரி - அங்கிரானுடைய புத்திரரிலொருவன். வருஷ - கண்டம்.]

அரிவாட்கள்ளன்— கூன்வாள் பிடிக்குங்கைப்பறண்டையில் வரும் ஒரு நோய். [வழக்.]

அரிவாட்சொண்டன்—கடலிற்றிரியுமொருவிதக்கொக்குப்பறவை.

அரிவாட்டாயர்— அறுபத்துமூன்றுநாயன்மாருளொருவர். (பெரியபு. அரிவாட். உஉ.)

அரிவாண்மணை— 1. அரிவாண்மணைப்பூண்டு. 2. காய்முதலிய கறிபபதார்த்தங்களையரியுங்கருவி செறிக்கப்பட்ட பலகை.

அரிவாண்மணைப்பூண்டு— ஒருவகைப்பூண்டு.

அரிவாண்மூக்கன் – அரிவாட்சொண்டன்.

அரிவாள்— 1. காய்முதலிய கறிப்பதார்த்தங்களையரியும்படி மணையிற்செறிக்கப்படுகிறகருவி. [வழக்.] 2. நெல்லரிவி முதலியவைகளையரியுங்கூனிரும்பு. 3. மரம் முதலியவைகளையரியும் ஈர்வாள். (உ-ம்.) "அறுதியாத்துகளரிவாள்" (ஞானவா. புசுண்.எரு.)

அரிவி— 1. அரிவிப்பிடி. 2. நெல்லுமுதலியவற்றின் தாள்.

அரிவிக்கள்ளன்— அரிவிபிடிக்குங்கைப்பிடிப்பு, கைப்பறண்டையில் வரும்நோய். [வழக்.]

அரிவை— 1. சௌந்தரியமானபெண். 2. பத்தொன்பதுவயசுக்குமேற்பட்டும் இருபத்தைந்துவயசுக்குமேற்படாதுமிருக்கும்பருவத்தையுடைய பெண். (உ-ம்.) "பதினைன்காதிப்த்தொன்பான்காறு-மெதிர்தருமடநதைமேலாறுமரிவை" (இலக்கணவி. அசுஉ.) 3. பெண். (உ-ம்.) "அம்மா வரிவை முயக்கு" (வள். ககOஎ.)

அரீஇ—பயம்.

அரீடம்— 1. கடுகுப்பூண்டு. 2. கடுரோகிணிப்பூண்டு.

அரு— 1. அணு. 2. உருவமற்றது. (உ-ம்.) "ஒளிருமேனி- அருவென்றூர்சிலர்சிலர்கள்" (இராமா. மருத். நக.) 3. (பௌத்தம்) உருவல்லாதபொருள்; அது: சித்தவரு, கன்மவரு என இரண்டு "புலன்கள் பொறிவழியோடியறிய அதனைக்கண்டது சித்தவரு" "அப்படிக்கண்டபொருளை நன்றென்றுந்தீதென்றுங்காண்டல்கன்மவரு" (உ-ம்.) "அருவியல்சித்தங்கன்மமென்றிரண்டாகும்" (சி. சி. பர. சௌத். மதம். ௬ - ஆம் உரையும்.) 4. கடவுள். 5. காணப்படாததன்மை.(உ-ம்.) "நிலவுமருவுருவின்றி" (சிவப்பிர. பொது. க.) 6. காயம், புண். 7. மும்மலங்களுளொன்றாகிய மாயை. (உ-ம்.) "அருவினிலுருவந்தோன்றி" (சி. சி. க; உஎ.) 8. சித்தபதம். (உ-ம்) "விண்ணோர்பதந்தந்து பின்னுமருத்தருமத்தரை" (திருநூற். கரு.)

அருக்கசர்—அச்சுவினிதேவராகிய தேவவைத்தியர். [ஸுக-ஜ: ஸுக-ர் - சூரியன். ஜ- பிறந்தவர். சம்ஸ்கிருத துவிவசனவிகுதி தமிழிற்பலர்பால் விகுதியாய்த்திரிந்துவந்தது.]

அருக்கசன்— 1. கன்னனென்னும் அரசன். 2. சனியென்னுங்கிரகம். 3. சுக்கிரீவனென்னுங்குரக்கரசன். 4. யமராசன். [அருக்க-ஜ.]

அருக்கபாதவம்—வேப்பமரம்.[அருக்க-பாதவ.]

அருக்கபுத்தி— சூரியகதி. [அருக்க - சூரியன். பு்க்தி - உணவு. அது சூரியனுண்ணுங்காலம்.]

அருக்கம்— 1. அக்கினி. 2. உணவு. 3. எருக்கஞ்செடி. (உ-ம்.) "அருக்கவெண்பஞ்சுபோல" (அருணைசலபு. திருவவ. ருக.) 4. குறைவு, சுருக்கம். (உ-ம்.) "ஆவியாயவியுமாகியருக்கமாய்ப்பெருக்கமாகி" (தேவா. திருப்பய. எ. திருநா.) 5. செம்பு. 6. துன்னிமித்தம். 7. சீர்க்காக்கை. 8. பளிங்கு. [1, 2, 3, 5, 8, அருக்க.]

அருக்கமண்டலம்— சூரியமண்டலம். [அருக்க - சூரியன். மண்டல - வட்டம்.]

அருக்கர்— சூரியர். (உ-ம்.) "அருக்கர்தந்தொகையனைத்தையும்" (கந்தபு. திருவி. கககு.)

அருக்கல்— 1. அச்சம். 2. அருமைப்படுத்தல். 3. குறைத்தல், சுருக்கல். (உ-ம்.) "மழையருக்குங்கோள்" (திரிகடு. ருO.)

அருக்கலம்— 1. கடற்றிரை. 2. கதவடைக்குந்தாழ். [கூடூஜு.]

அருக்கவிக்கேபம்—சூரியாட்சம். [கூ-கூவி விக்ஷேப.]

அருக்கவிட்சேபம்—அருக்கவிக்கேபம்.

அருக்களித்தல் — 1. அருவருத்தல். 2. பயப்படல்.

அருக்களிப்பு — 1. அருவருப்பு. 2. பயம்.

அருக்கன்— 1. இந்திரன். 2. சூரியன். 3. ஞாயிற்றுக்கிழமை. 4. தமையன். 5. பண்டிதன். 6. வேர்க்கொம்பு. 7. சாணைக்கிரகங்கள் இரண்டு. [1, 5. கூக-கூ.]

அருக்கன்வீதி—கிராந்திமண்டலத்தை நான்கு ராசிகொண்ட மூன்றுபாகமாகக்கொண்டு சூரியன் செல்லும் வீதி.

அருக்காணி— 1. அருமை. 2. அருமைப்படுத்துதல். 3. பிரியவீநங்காட்டிப்பின்னிற்கை. [வழக்.]

அருக்கிநம்—கோவின்மை, ஆரோக்கியம். [கூ ரூ-கூ.]

அருக்கியத்திரவியங்கள்—சலம், பால், தருப்பைநுனி, அட்சதை, எள், யவம், சம்பாநெல், வெண்கடுகு என அருக்கியத்திற்கு உபயோகமாகும் எட்டுத்திரவியங்கள். (திருவாதவூர. திருப்பெ. ௭௰. விருத்தி.)

அருக்கியம்— 1. சலத்தோடரிசிமுதலியவற்றைக்கொண்டாவது, தனியே சலத்தைக்கொண்டாவது தேவர்களுக்கல்லது பெரியோருக்கு வணக்கத்தோடுசெய்யும் உபசாரம்; நீர்சிரசிற்புரோட்சித்தல். (உ-ம்.) "அருக்கியமுதலினோடாசநங்கொடுத்து" (இராமா. திருவ. ௬௨.) 2. வணங்கப்படத்தக்கது. [கூவ-கூ.]

அருக்கீசம் — இருதயமுதற்கண்டமட்டாக எழுங்குலம் வியாபித்து நிற்கும் ஒரு கலை. (பிரசாததீபிகை) [கூவீ-கூ.]

அருக்கீசன்— தேவர் யாவருள்ளும் மிகப் பூசிக்கப்படத்தக்க மகாதேவன். [கூவீ-கூ]

அருக்கு— 1. அஞ்சுகை. 2. அருக்காணி. 3-5. அருக்கென்னேவலுந்தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். 6. அருமை. (உ-ம்.) "நிதியினருக்குமுன்னி" (திருக்கோ. ௨௭௫.) 7. எருக்கஞ்செடி. (உ-ம்.) "கூவிளயருக்கஞ்சாறுதோயமதி" (இராசவைத்.௭௯)

அருக்குத்—அர்க்கத். பார். [அராபி.]

அருக்குதல்— 1. அருமைசெய்தல். (உ-ம்.) "ஒருச்சுநாமமேங்குரவையுணமைமை யருக்கினன்போனேக்கியல்லனேய்செய்தல்" (கலித்தொகை. ௧௦௪.) 2. ஒடுக்குதல். (உ-ம்.) "முருக்கிமுன்னரரிமுதலோருயிரருக்கி" (உபதேசகா. சிவத்து. ௬௨௨.) 3. குறைத்தல், சுருக்குதல். (உ-ம்.) "நீரருக்கி மோர்பெருக்கி" (பதார்த்தகுண. ௯௫௨.) 4. செய்யப்பின்னிற்றல். (உ-ம்.) "அம்புவிதனிற்பொன்னுள்ளேரனுலோபியாயருக்கினுனேல்" (மச்சபு. சங்கிரா.௧௧.) 5. சாரச்செய்தல், அணைத்தல். (உ-ம்.) "அருக்குமங்கையர்மலரடி" (திருப்பு. ௬.)

அருக்கை—தமக்கை. [அருக்கன். 4-பார்.]

அருக்கேந்துசங்கமம்— அமாவாசை. [கூகூ-கூ - சூரியன். இந்து-சந்திரன். ஸம-கூடுதல்.]

அருக்கோபலம் — சூரியகாந்தக்கல். [கூகூ-கூ: கூகூ-கூ - சூரியன். உபல-கல்.]

அருகசநி—பேரேலப்பூண்டு.

அருகஞ்சி—சீந்திற்கொடி.

அருகணி—பிரண்டைக்கொடி.

அருகந்து— (பௌத்த) தியானங்கள் ஐந்தனுள் நான்காவது. (மணிமே. பக். ௬௫.) [கூ ஹ-கூ தி.]

அருகந்தர்— அருகசமயத்தோர். (உ-ம்.) "ஊத்தைவாயருகந்தர் கூடி" (சூத. ஞானயோ. ௧: ௩௧.) [கூஹ-கூ.]

அருகந்தன்— 1. அருகசமயத்தோன். 2. சிவன். 3. சைநமதத்திற்சொல்லப்படும் இருபத்துநான்கு தீர்த்தகரருளொருவர். (த. நி. போ. ௧௩. பக்.) [கூஹ-கூ.]

அருகம்— 1. உரிமை, உரியது. (உ-ம்.) "அருகங்கவசந்தான்" (சைவச.பொது.௩௫) 2. சமணசமயம். (உ-ம்.) "பாஞ்சராத்திரம் பௌத்தமருகமிவற்றுழல்களாலும்" (சூத. எக்கி. பூ. ௩௨: ௧௨.) 3. சமீபம். 4. பக்குவம் 5. யோக்கியம். [1, 2, 4, 5. கூஹ-கூ]

அருகர்— 1. அருகசமயத்தோர். (உ-ம்.) "சருநடர்வேந்தனருகர்ச்சார்ந்து" (கல்லா. ௫௭) 2. அருகில் இருக்கிறவர், அருகில் இருக்கு நண்பர். 3. அருகு, சமீபம், (உ-ம்.) "ஆண்டகையாண்டவ்வானோர் துறக்கநாடருகர்கண்டான்" (இராமா. கடறுவு. ௨.) [இது: அருகென்பதன்போலி.] 4. இருடிகள். (உ-ம்.) "அருகாறவனறிவோர்க்கல்ல

தென்-னிருகைய்யுங்கூடியொருவழிக்குவியா" (சிலப். நாடு. ௨௦௨, ௨௦௩.) 5. தக்கவர். (உ-ம்.) " அங்கண்ஞானநிலைமைசேரவருகராகுமவர்கடாம்" (சேதுபு. முத். ௫௨.) 6. யோக்கியர். [1, 4, 5, 6. ஸம்ஸ்கிருத - பூசிக்கத்தக்க யோக்கியன்.]

அருகல்— 1. அணைதல். 2. (கண்) அருகல். 3. ஒழுகுதல், சிந்துதல். (உ-ம்.) "நீரருகிப்பாய்தல்" (வழக்.) 4. கிட்டுதல். 5. குறைதல், சுருங்கல். (உ-ம்.) "அருகலிலாயபெருஞ்சிரமரர்கள்" (நாலாயிர. க: கூ: ௩.) "அருகிலைநஞ்சுப்புப்பிரகுதிதன்னை" (சூத. சிவ. கக: கஉ) 6. சர்க்கிலேசஞ்செய்தல். (உ-ம்.) "வினைகண்மாற்றிடவருகலும்" (கந்தபு. பாயிர. உசு.) 7. சாதல்.

அருகன்— 1. அருகசமயத்தவன். இவன், உலகமெல்லாம் நித்தியம் எனறும், அருகேசுரன் குருத்துவமாத்திரத்திலே கர்த்தாஎன்றும் பிராணவாயு ஆன்மா என்றுஞ்சொல்வன். (சி. சி. பாயிர. ௪. ஞானப்.) 2. அருகதேவன். (உ-ம்.) "அங்கம்பயந்தோனருகனருண்முனி" (சிலப். நாடு. கஅஎ.) [பூச்சியனென்பதனால் வந்தபெயர்.] 3. அருகிலிருக்கிறவன்-நண்பன். 4. தக்கவன், பக்குவி. (உ-ம்.) "அன்புகொளறத்திற்கருகனேனுதலின்" (மணிமேக. உஅ. காதை. கக.) [1, 2, 4. ஸம்ஸ்கிருத]

அருகன்குடை— பொற்குடை, முத்துக்குடை, இரத்தினக்குடையென முறையேசொல்லப்படுஞ்சகலபாசநம், சந்திராதித்தியம், நித்தியவிநோதமாகிய அருகதேவனுக்குரியவாயமுக்குடைகள். (சூ. நிகண். பாயிர. ௪.)

அருகன்குணம்— அருகதேவனுக்குடையனவாகச் சமணநூலிற்சொல்லப்படும் நற்குணங்கள். அவை: அநந்தசுகம், அநந்தஞானம், அநந்ததரிசநம், அநந்தவீரியம், நிர்க்கோத்திரம், நிர்நாமம், நிராயுஷியம், அழிவின்மை என எட்டாம். இது: (சி. சி. பர. சமணரில் நிகண்ட. உ-ஆங்கவியானும் உரையானும் பெறப்படும்.)

அருகன்சிறப்பு— அருகதேவனுக்குடைய மங்கலப்பொருள்கள். அவை: தூபதீபக்காட்சி, தேவதுந்துபி, தெய்வத்துவனி, சிங்காதநம், பிண்டி, வெண்சாமரை, புட்பமாரி, மும்மைக்குடை என எட்டாம்.

அருகன்ஞானம்— அருகனுக்குடைய ஐந்துவகை ஞானங்கள். அவை: மதிஞானம், சுருதஞானம், அவதிஞானம், மநப்பரியயஞானம், கேவலஞானம் என்பன. இவற்றுள்: மதிஞானம் - சுபாவபுத்தி; சுருதஞானம் - நூலுணர்ச்சி; அவதிஞானம் - தன்னுடைய முற்பிறப்பையறியும் அறிவு; மநப்பரியயஞானம் - தன்னுடைய முற்பிறப்பையும்பிறருடைய முற்பிறப்பையும் அறியும் அறிவு; கேவலஞானம்- திரிகாலவுணர்ச்சி. (சிலப். நாடு. கஎஎ. குறிப்புரை.)

அருகன்மதில்— உதயதரம், சலியாணதரம், பிரீதிதரம் எனச்சொல்லப்படும் அருகனுடைய மும்மதில்கள்.

அருகன்விட்டகுணம்— அருகதேவனுக்குடையனவல்லவாகச்சமணநூலிற்சொல்லப்படுந்தீக்குணங்கள். அவை: ஞாநாவரணியம், தரிசநாவரணியம், வேதநீயம், மோகனீயம், ஆயுஷியம், கோத்திரம், நாமம், அந்தராயம் என எட்டாம். (இது: சி. சி. பர. சமணரில் நிகண்டவாதி. உ-ஆங்கவியானுமுரையானும் பெறப்படும்.)

அருகனைமுடிதரித்தாள்— தருமதேவதை.

அருகி— 1. "அருகி" என்னும் ஒரு வினையெச்சம். 2. கள். (திவாகர. சு.) 3 யோக்கியமுடையவள். [ஸம்ஸ்கிருத.]

அருகித்தோன்றல்— 1. அரிதாகத்தோன்றல். (உ-ம்.) "விண்ணிலங்கருகித்தோன்றுமேதகுவடமீனன்றி" (பாரத. சூது. ௨௦௨.) 2. சுருங்கித்தோற்றல். (உ-ம்.) "அம்மலைமுடிமேலேறிநின்று நீண்டுபார்க்குமிடத்து முன்னிருந்தமாநிலமும் பின்வந்த மலையிடமுநதானின்றவிடத்திற்குக்கீழ்ப்பட்டருகித்தோற்றுமாபோலும்" (ஒழிவி. பொது ௪௩. உரை.)

அருகியரத்தம்— பூனைக்காலிப்பூண்டு.

அருகியற்குறிஞ்சி— ஒருபண். (கந்தபு. சூரனர. ௨௩.)

அருகியற்செவ்வழி— ஒருபண். (கந்தபு. சூரனர. ௨௩.)

அருகியற்பாலை— ஒருபண். (கந்தபு. சூரனர. ௨௩.)

அருகியன்மருதம்— ஒருபண்; அது: குரல்குரலாய செம்பாலை. (சிலப். வேனி. ௪௦.)

அருகு— 1. அடுத்த இடம், சமீபம். (உ-ம்.) "அணியுங்கழற்காற்சுயோதநனுக் கருகாசநத்தரிவர்" (பாரத. திரௌ. ௩௯.) 2-4. அருகென்னேவலுந் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். 5. ஓரம். (உ-ம்.) "தாமரையின்மொய்ம்மலரைத்தும்பி-யருகுடைக்குநன்னாட்டரசு" (நளவெண். கலிநீங்.

உச.) 6. சாரலின் ஒரு பகுப்பு. (உ-ம்.) "சால்புறுமகம்புறத்தோ டருகொடுபெருகுஞ்சார - ஞூலுணர்ந்துமறிஞூற்று மூன்றதாநவலும்பண்ணே" (கூர்மபு. கண்ணன்மண. கடுஅ.) 7. நிவர்த்தி.

அருதுதல்—அருகல்.

அருதுறல்— கிட்டுதல், பக்கத்தில் வருதல். (உ-ம்.) "ஆன்றவிச்செல்வமித்தனேயுமொய்த்தருகுற" (இராமா. பால. எதிர். உக.)

அருங்கலச்செப்பு— 1. மணிக்கலம்பெய்தபணிப்பெட்டகம்.(சிலப். அரும்பதவுரை.) 2. ஒரு ஜைனநூல்.

அருங்கலச்செவ்விதழ்— பொற்றாமரை. (சிலப்.)

அருங்கலம்— 1. பெறுதற்கரிய ஆபரணம்போலுஞ் சிரேட்டமானபொருள். (உ-ம்.) "பூவினுக்கருங்கலம்பொங்குதாமரை" (தேவார. நமச்சிவாய. உ. திருநாவு.) 2. ஆபரணம். (உ-ம்.) "அருங்கல வெறுக்கையொடளந்துகடையறியா" (சிலப். இந. உ௰.) 3. விலையுயர்ந்த ஆபரணம். (உ-ம்.) "பெண்ணணிணிற்கருங்கலமனையபெய்வளை" (இராமா. கார்கால. உ௦.)

அருங்கிடை—அதிகப்பட்டினி. [வழக். அருமை; கிடை - கிடத்தல்.]

அருங்துரைத்து— அருமைத்தெனப்பொருள்படும் ஒரு குறிப்புவினை. (உ-ம்.) "கருங்களிறட்டவன்றனக்குங்காப்பதிங்-கருங்குரைத்தென" (காஞ்சிபு. கழுவாய். கடுக.)

அருங்கேடன்—1.கேடில்லாதவன்.(உ-ம்) "அருங்கேடனென்பதறிக"(வள்.உக௦.)[அருமை - இன்மை.] 2. மிகக்கெட்டவன்.

அருங்கேடு— கேடில்லாமை. (உ-ம்.) "அருங்கேட்டாலாற்றவிளைவது" (வள். எ௬உ.) [அருமை - இன்மை.]

அருங்கோடைத்தாநம் — உத்தமதாநம். (உ-ம்.) "அருங்கொடைத்தாநமாய்ந்தவருந்தவநதெரியின்மண்மேன் - மருங்குடையவர்கட்கல்லால் மற்றவர்க்காவதுண்டோ" (சிந்தா. முத். ௩உசு.)

அருங்கோடை— 1. மிக்க வெப்பத்தைக்கொடுக்குங்கோடைகாலம். 2. மிக்க வெப்பம்.

அருந்நிமேடவர்த்தமரோகம்— இமையைப்பற்றிய ஒருவகை ரோகம்; இது: வாயு இமைச்சந்திகளிலே நிற்கும்போது பிறந்திமைகளை ஓயாதாட்டுவிப்பது. (சீவரட்.உசச.பக்.) [ஸ்ர-ரூக்-நோவின்மை. நிமேஷ - இமைகொட்டல். வ௲-ஃ3 - இமை.]

அருச்சகன்— பூசைசெய்வோன். (உ-ம்.) " ஆதிசைவனுமருச்சகனொருவன் " (திருவிளை. வாதவூர. உ௫.) [ஸ௨-ஃக.]

அருச்சநம்—1.தேவர்க்கல்லது பெரியோர்க்குச்செய்யும் பூசை. 2. பூசைத்திரவியம்.

அருச்சநை—பூசை. (உ-ம்.) "தம்முளத்-தாங்கைநீங்கவருச்சநைசெய்து" (கந்தபு.திருவி. சஉச.)

அருச்சயோகம்—பூசை.

அருச்சி—1-3. அருச்சியென்னேவலுந்தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். (உ - ம்.) " ஆசாரியன்மனைவியையடிதீண்டாதருச்சி " (சைவச. மாணு. கக.) 4. பூசை. (உ-ம்.) "வள்ளறன்னைமெய்யன்பினாலருச்சிசெய்வாரே" ( திருவிளை. நகரங்க. கக.) [அருச்சி-ஒரு முதனிலைத்தொழிற்பெயர்.]

அருச்சிக்கை—அருச்சித்தல். (உ-ம்.)"அந்தயுகந் தோறுமடி தீண்டியருச் சிக்கை"(சைவச. மாணு. உ௰.)

அருச்சித்தல்–1. தெய்வத்திற்குப்பூசைசெய்தல். (உ-ம்.) " அல்லும்பகலுமருச்சிக்க " (சைவச. பொது. எசு.) 2. பெரியோர்க்குப்பூசைசெய்தல்.

அருச்சிதம் — வழிபாடு. [ஸவி-ஃத.]

அருச்சிதன் — பூசிக்கப்படுவோன். [ஸவி-ஃத.]

அருச்சிப்பு—அருச்சித்தல்.

அருச்சியம்— 1. உவப்பில்லாதது, இணக்கமில்லாதது. [ஸர-ூஷ): ஸ; ர-ூஷ)- உவப்பு. 2. வணக்கம். [ஸவி-ஃய.]

அருச்சுநம்— 1. எருக்கஞ்செடி. 2. ஒருவகை நேத்திரரோகம். அது: வெள்விழிமேற்கடப்பம்பூநிறமான படலத்தைப்பிறப்பிக்கும். (சீவரட். உ௫௦.) 3. களங்கமின்மை. (உ-ம்.) "துன்றருச்சுநநான்மறையுரலுடன்ஒருடர" (பாரத. பதினொன். சா௩.) 4. புல். 5. பொன். 6. மயிற்பறவை. 7. மருதமரம். (உ-ம்.) "சென்றருச்சுநமிரண்டுதைத்தருளினேன்" (பாரத. பதினொன். சா௩.) 8. வெண்மை. [2 8. ஸஜ-ஃ-ந.]

அருச்சுநவட்டம் — திருவிடைமருதூர். (உ-ம்.) "மண்ணிடையருச்சுநவட்டத்தெய்தினர்" (கந்தபு. உமைக. உ௩.)

அருச்சுநன்— 1. ஒருதாயின் தனிமகன். 2. கார்த்தவீரியனென்னும் அரசன்; இவன்: ஆயிரம்புயங்களுடையவனென்பர். (உ-ம்.) "மருவலரின் றிமண்ணுண்ட - வாயிரந்திண் டோளருச்சுநன் றனக்கும்" (இராமா. கார்த்தவீ. உ). 3. சுத்தன். 4. பஞ்சபாண்டவருளொருவன்; இவன், இந்திரனுக்குக்குந்தியிடம்பிறந்தவன். (உ-ம்.) "பார்த்தனருச்சுநன்கரியோன்" (பாரத. அருச்சுந. சச.) [செவ்வியசெயலினனென்றபடி.] 5. வெண்ணிறமுள்ளோன். [அர்ஜுந.]

அருச்சுநி— குட்டிலிப்பெண். 2. பசு. [அர்ஜுநி.]

அருச்சை— 1. பூசிக்கப்படுந்தெய்வம். 2. பூசை. (உ-ம்.) "தத்திவெம்முலைத்தோகைக்குஞ்சொன்முறையருச்சை" (வேதாரணிய. மண. உக.) [அர்சா.]

அருசாவிரா—பெருங்குமிழமரம்.

அருசி—1. சுவையின்மை. 2. பசியின்மை. 3. வெறுப்பு. 4. அரோசிகம். (உ-ம்.) "வாயினருசிவயிற்றுளேச்சனீடுசுரம்" (பதார்த்த. ௧எ௬.) [அரூசி: அ; ரூசி-சுவை.]

அருஞ்சயன்—சீவகனுடைய தாயாகிய விசயையென்பவளுக்குப்பாட்டனை ஒருவன். (உ-ம்.) "அசைவிலாப்புரவிவெள்ளத்தருஞ்சயன்குலத்துட்டோன்றி" (சிந்தா. நாமக. கஎ௨.)

அருஞ்சிறை— 1. அரியசிறகு. (உ-ம்.) "அருஞ்சிறைபெற்றமேருவதென்ன" (கந்தபு. தெய்வ. ௪அ.) 2. கடுஞ்சிறை. (உ-ம்.) "அற்புதனரக்கர்தம்வருக்கமாசற - விற்பணிகொண்டருஞ்சிறையின்மீட்டநாள்" (இராமா. உருக்கா. உ௦.) 3 நரகம். (பிங்க. ௪௫௫.)

அருட்கண்—கிருபைநோக்கு.

அருட்குடையோன்— 1. அருகதேவன். 2. கடவுள்.

அருட்குறி— சிவலிங்கம். (உ-ம்.) "ஆனுயர்த்தவனருட்குறியருச்சனைப்பயனால்" (காஞ்சிபு. சார்ந்தா. உக.)

அருட்கேவலம்— தத்துவசுத்தியின் பின்னர்ப்படுங்கேவலம். (சி. போ. சு: சு. சிவஞானமுனி.)

அருட்கொடியோன்— அருகதேவன்.

அருட்கோடையோன்—கடவுள்.

அருட்சத்தி—பராசத்தி. (உ-ம்.) "முன்னருட்சத்திதன்பான்முகிழ்க்குந் தான்முளையானன்றே" (சி. சி. க: ௬அ.)

அருட்சி—அருளுதல்.

அருட்டம்—கடுரோகிணி.

அருட்டல்— அருட்டுதல்.

அருட்டி— 1. "அருட்டி"யென்னும் ஒருவிளையெச்சம். 2. அச்சம். 3. நடுக்கம். [வழக்.]

அருட்டுதல்— 1. எழுப்புதல். 2. ஏவிவிடுதல். 3. சாக்கிரதைபண்ணுதல். (உ-ம்.)"தாபணமேயென-வருட்டிக்கண்சிமிட்டி" (திருப்பு. ௫எ௪.) 4. நித்திரையை நீக்குதல்.

அருட்டை—1. கடுரோகிணி. (உ-ம்.)"அதிபலை" பார். (தைல. தைலவ. உ௩.) 2. தக்கன் புத்திரிகளுளொருத்தி; இவள், காசிபனுக்கு மனைவியென்பர். (உ-ம்.) "அருட்டையெனும்வல்லிதந்தாளோர்ந்தியுடும்பணில்கண்முதலானவெல்லாம்" (இராமா. சடாயுகாண். ௨அ.)

அருட்டெரிசநம்—சூரியோதயத்திலே இருளுநட்சத்திரமுமின் றிச்சூரியப்பிரகாசமாத்திரங்கண்டகண்போல அருள்தோற்றியகாலத்துக் கேவலவிருளுங் கருவிக்கூட்டங்களுந் தோன்றாது அருளேமாத்திரம் ஆன்மாக்கண்டுகொண்டிருப்பது. (ஒழிவி. விரத்தி. ௧. உரை.)

அருட்பா—கடவுள் அருள்பெற்றோர் எனப்பட்டார் செய்த பாக்கள். அவை: தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, பெரியபுராணம் என்பன. (சைவச. மாணு. அ. உரை.)

அருட்புரி—குறிஞ்சியாழ்த்திறவகையினொன்று. (பிங்க. க௩அ௨.)

அருடம்— 1. கோபமின்மை. 2. திருப்தி. அருடமாவதுமனைமுதலிய வளங்களைக்கண்டுகளித்துதமக்கினியென்னகுறையென்றிருக்கை. 3. ரோமப்புளகம். 4. பிரகாசம். 5. மகிழ்ச்சி. [1, 4. அரூஷ; 2,3,5. ஹ்ருஷ்ட.]

அருட்ணன்— வைசிய விராத்தியனும் வைசியப்பெண்ணுஞ் சோரத்திற்புணர்ந்துபெற்றபிள்ளை. (உ-ம்.) "சொற்றிடுவைசியவிராத்தியன் வசியத்தோகையைச் சோரத்திற்புணர்ந்து-பெற்றிடுபிள்ளையருடணன்" (சூத. சிவ. க௨: ௩௪.)

அருண்மநி—அருகதேவன். (சிலப். நாடு. கஎ.)

அருணகிரணகலம்— (சித்தாந்த.) பிராசாதகலைகள் பன்னிரண்டில் எட்டாவதாகிய நாதாந்தம்; அது: வலப்புறத்தில் மாத்திரம் விந்துவையுடைய கலப்பை வடிவுள்ளதாக நாதகலைக்குமேலே பிரமரந்திரமட்டாகமூன்

றங்குலம் வியாபித்துநிற்குங்கலை. (சி-லி.கிரி. க;பிராசாததீபி.) [ஆங்குலம்]

அருணகிரி — அருணாசலம். (உ-ம்.) "அருணவடிவாதலினலருணகிரியெனுமொருபேர்" (அருணாசலபு. திருமலை. அஉ.) [அருண - சிவப்பு. கிரி - மலை.]

அருணசாரதி— சூரியன். [அருண- விநதையின்மகன். ஸாரதி-தேர்ப்பாகன். அருணனைத்தனக்குச்சாரதியாகவுடையவன்.]

அருணம்— 1. அருணதேசத்திலே வழங்கப்படும் பாஷை. 2. ஆடு. 3. எலுமிச்சம்பழம். (உ-ம்.) "அருணச்சாறுபடியிரண்டு" (தைலவ. தைலவ. அஎ.) 4. எலுமிச்சைமரம். (தைலவ. தைலவ. கஉகு.) 5. ஐம்பத்தாறு தேசங்களுளொன்று. 6. கருமைகலந்த சிவப்பு. 7. சந்தியாகாலநிறம், சிவப்பு. (உ-ம்.) "அருணவெங்கனலோன்" (பாரத. காண்டவ.சுஎ) 8. சிந்தூரம்.(இராசவைத்.) 9. சூரியனுடைய தேர்ப்பாகனெனப்படுபவன்உதயகாலம்.10. நீர். 11. மேருமலையின் கீழ்த்திசையிலுள்ள மந்தரமென்னும் மலையடிவாரத்திலிருக்கும் ஒரு நீர் நிலை. (சிவதரு. கோபுர. கஎ.) 12. மான். (பிங்கல. கதஅஎ.) [6, 7, 8, 9, 11. அருண. 10. அருணஸ்.]

அருணமணி— மாணிக்கம். (உ-ம்.) "அருணமணிசூழ்பாதலத்தில்" (ஞானவா. பிரகலா. சஎ.) [அருண - சிவப்பு. மணி - இரத்திநம்.]

அருணர்—சான்மலித்தீவில் அரசர்.(உ-ம்) "மன்னவரை - மாறெறிவடிவேலருணரென்றுரைப்பர்" (கூர்மபு. பிலக்க. உச.)

அருணலோசநம்— 1. சிவந்தகண்ணுடையது. 2. புறாப்பறவை. [அருணம்- சிவப்பு. லோசநம் - கண்.]

அருணவம்— கடல். [அர்ணவ: அர்ணஸ் - நீர். வ - ஒரு வ-வி.]

அருணவமந்திரன்— வருணன். [அர்ணவ- கடல். மந்திர - வீடு.]

அருணவூரி—இந்திரகோபப்பூச்சி. [அருண - சிவப்பு. ஊரி - ஊர்வது.]

அருணவேலி— ஒருவகையெலி. (சீவரட். கசுo.)

அருணன்— 1. ஊமையன். 2. சூரியன். (உ-ம்.) "அருணனையன்னசெவ்வேற்படைச்செந்திலர்க்கு" (திருச்செந்தினிரோட்ட.) 3. சூரியனுடைய தேர்ப்பாகனென்று சொல்லப்படும் ஒருவன். இவன்: காசிபனுக்கு விநதையிடம்பிறந்தவனென்பர். (உ-ம்.) "விநதைசுதனருணன்" (இராமா. சடாயுகாண். உக.) 4. புதன். (சூ. நிகண். க: சுக.) [1-3. அருண.]

அருணாக்கிரசன்— கருடன். [அருணாக்ரஜ: அருண - சூரியனுடைய தேர்ப்பாகன். அக்ரஜ - தமையன்.]

அருணாசலம் — திருவண்ணாமலை; இது: கிருதயுகத்திலே அக்கினிமலையாகவும், திரேதாயுகத்திலே மாணிக்கமலையாகவும், துவாபரயுகத்திலே பொன்மலையாகவும், கலியுகத்திலே கன்மலையாகவும் உருக்கொண்டதெனபர். (அருணாசலபு. திருநகா. கo.)(உ-ம்.) "சுற்றார்தொழுமருணாசலமன்போலுகைதொழுதான்" (பாரத. அருச்சுநன்றீர். கு.) [அருண - சிவப்பு. அசல - மலை.]

அருணாத்துமசன்— 1. இராமாயணத்திலே சொல்லப்படுஞ்சடாயு என்னும் பறவை. 2. கன்னராசன். 3. சநி. 4. சாவர்ணமநு. 5. சுக்கிரீவன். 6. யமன். [அருணாத்மஜ: அருண - சூரியன், சூரியன் தேர்ப்பாகன். ஆத்மஜ - மகன்.]

அருணினம்— 1. திருநாமப்பாலைக்கொடி. 2. நன்னாரிக்கொடி.

அருணெறிசுரக்குஞ்செல்வன்— புத்தன். (திவாகர.)

அருணை —திருவண்ணாமலை. (உ-ம்.) "அருணையை நினைக்கவெய்தலாமுத்தியென்றுரைத்தீர்" (அருணாசலபு. திருநகா. சகு.)

அருணோதம்— மேருமலையின் கீழ்த்திசையிலுள்ள ஒரு வாவி. (உ-ம்.) "அவ்வரையின் கீழ்பாலுந்துநீர்வாவிதெண்ணீரோங்கருணோதம்" (கூர்மபு. சம்பு. உஉ.) [அருண-சிவப்பு. உதம், உதகம், என்பதன்றிரிபு - நீர்.]

அருணோதயம்— 1. சூரியோதயம். (உ-ம்) "மணிக்குலங்களருணோதயத்தைவென்ற" (திருப்பு. கஅஅ.) 2. வைகறைப்பொழுது. [அருணோதய: அருண - சூரியன். உதயம - தோற்றம்.]

அருணோபலம்— பதுமராகம். [அருண- சிவப்பு. உபலம் - கல்.]

அருத்தகங்கை — காவேரிநதி. [அர்த்த கங்கா: அர்த்த - பாதி. கங்கா - ஒரு நதி. காசிக்கங்கையிலே தீர்த்தமாடுதலினால் வரும் பலனிற்பாதியளவு இதுகொடுக்குமென்பர்.]

அருத்தகாமம்— பொருளாசை [அர்த்த காம: அர்த்த - பொருள். காம - ஆசை.]

அருத்தகோளம்—பாதிக்கோளம்.

அருத்தசந்திராதுண்டம்—ஒன்பது பங்காகச் செய்யப்பட்ட நாற்கோணக்ஷேத்திரத்தின் அடியிலுங்கடையிலும் ஒவ்வொருபங்கு தள்ளிவிட்டு நடுவிலிருக்கும் ஏழுபாகத்தைச் சமசதுரத்திரத்தினுற்சுற்றவரும் அர்த்தசந்திராகாரமான குண்டம். (சி-வி. கிரி. நடசு-ஆஞ்சுலோ. உரை.) [அர்த்த சந்த்ர குண்ட.]

அருத்தசந்திரபாணம் — பிறைமுகாத்திரம். [அர்த்த; சந்த்ர; பாண.]

அருத்தசந்திரம்—1. பிறைமுகாத்திரம். 2. பிறைவடிவமான நகக்குறி. 3. மயிற்றோகையிலே பிறைபோலிருக்குங்கண்வடிவம். [அர்த்த சந்த்ர.]

அருத்தசந்திரன்— அர்த்த சந்திரன்.

அருத்தசாத்திரம்—அருத்தவேதம்; அது: பொருள்தேடுதற்குபயோகமான பார்க்கஸ்பத்தியம், ஔசநம் முதலிய நூல்களைக்கருதும். (மநு. ச: ககூ.) [அர்த்த சாஸ்த்ர.]

அருத்தசாநவி— காவேரிநதி. [அர்த்த-பாதி. ஜாஹ்நவி - கங்கை.

அருத்தசாமம்— அர்த்தயாமம். [யகரஞ் சகரமாய்த்திரிந்தது.]

அருத்தசீரி— விளைவிற்பாதி வாரமாயெடுக்கப்பொருந்தியுழுது பயிரிடுஞ்செய்கைக்காரன். [அர்த்தஸீரி ந்: அர்த்த; ஸீர - கலப்பை.]

அருத்தநம்— 1. இடுக்கண்செய்தல். [அர்த்தநம்] 2. நிந்தித்தல். [அர்த்தந.]

அருத்தநாரிசன்—
அருத்தநாரீசுரன்—
அருத்தநாரீசுவரன்— } பாதி பெண்வடிவமான சிவன்.

அர்த்தநாரீச: அர்த்த-பாதி. நாரி-பெண். ஈச, ஈச்வர - ஆளுகிறவன்.]

அருத்தனை—இரந்துகேட்டல். [அர்த்தநா.]

அருத்தப்பிராத்தி— 1. சம்பத்து அடைதல். 2. பெறக்கருதியதைப்பெறுதல். [அர்த்த ப்ராப்தி: அர்த்த - சம்பத்து. ப்ராப்தி - அடைதல்.]

அருந்தபதி— 1. அரசன். 2. குபேரன். [அர்த்த - சம்பத்து. பதி - தலைவன்.]

அருந்தபாகம் — பாதிப்பங்கு. [அர்த்த பாக: பாக - பங்கு.]

அருத்தபாகை—வேதநூற்பொருள்கூறும் பாகைகளிலொன்று. (சூ. நிகண். கo. உக.)

அருத்தம்— 1. அர்த்தம், சொற்பொருள். (உ-ம்.) "பாவுறுமறையருத்தம்பரமென்றுமபரமென்று-மிருவகையாகும்" (சூத. எக்கி. பூ. உ: உ.) 2. அரைப்பங்கு. (உ-ம்.) "மாமுகன்கை- சத்திவினையான்மா வீடருத்தமிட்டு" (தைல.தைலவ. ககங.) 3. நடு. (உ-ம்.) "அருத்தயாமம். 4. பன்னிருவகைப்பிரமேயங்களுளொன்றாகிய பதார்த்தம். இது: திரவியம், குணம், கருமம், சாமாநியம்,விசேடம், சமவாயமென்னும் ஆறுபதார்த்தங்களையுணர்த்திநிற்பது. (தர்க்கபா. சக.) 5. பயன். 6. பொருள். [1, 4, 5, 6, அர்த்த; 2, 3, அர்த்த.]

அருத்தமண்டபம் — அர்த்தமண்டபம். (உ-ம்) "அருத்தமண்டபத்துட்புக்கேயந்தணரமலன்பாதங் - கருத்தினுங்கண்டுவாழ்த்தி" (அருணைகிரிபு. வலம்புரி. கூச.)

அருத்தயாமம்— 1. அரையாமம்; அது: மூன்றேமுக்காணுழிகை. 2. இரவில் முன்னிகழுமூன்றேமுக்காணுழிகையையும் பின்னிகழு மூன்றேமுக்காணுழிகையையும் விட்டு இரவில் திரியாமமாவென மூன்றியாமங்கொள்ளப்படுவதில் நடுநிகழும் யாமம். (உ-ம்.) 'அப்பதியருத்தயாமத்தனக்களியுதவுங்கோலம்" (வேதாரணியபு. மணவா. அச.) [அர்த்த-நடு. யாம - ஏழரைநாழிகைகொண்டகாலம்.

அருத்தராத்திரம்—நடுராத்திரி. [அர்த்தராத்ர.]

அருத்தரேசிதம் — நிருத்தக்கை முப்பதிலொன்று. (சிலப். அரங்கேற்று. கஉ.) குறிப்பு.]

அருத்தல்—1. உண்பித்தல். (உ-ம்.) "வேதியர்க்கருத்திப்பின்னர்" (நைடத. நாட்டு. கச.)

அருத்தலக்கணை — விட்டும் விடாதலக்கணை. (உ-ம்.) "விருத்தமறுதருமமாந்தேவதத்தன்றனையேவிடாதுகொளினவனிவனேயிவனவனேயென்னும் - தெரித்தலரிதாயதா

தான்மியங்கூடுறுமாற்றேரினிதை விட்டுவிடாலக்கணையிடுனெடுதா- னருத்தவிலக்கணே பாகத்தியாகவிலக்கணேயென்றறைதலினலிது வேதத்தொம்மசிவாக்கியத்திற் -குரைத்திடுவெருதாரண மாயுரியதென" (வேதா. சூ. கஉ௨.) [அஜஹல்லக்ஷணா.]

அருத்தலோபம்— பொருளாசை. [அர்த்த- பொருள். லோப - ஆசை.]

அருத்தவாதம்— 1. அபிப்பிராயத்தைக்கூறுதல். 2.(வேதாந்த)சிரவணத்திற்குரிய சடுவிதலிங்கங்களில் ஆறுவதானது; அது: கூடத்தனது சொரூபமாகிய பிரமத்திற்குப் பஞ்சகிருத்திய கர்த்திருத்துவஞ் சொல்லுதல். (உ-ம்.) "பிரத்திகாண்மவுருவாம்பிரமந்தனகு - மாறரியவைந்தொழிற் கர்த்திருத்துவஞ் செப்புறுதல் வயங்கருத்தவாதமென மதித்திடுகதெரிந்தே" (வேதா.சூ.கஙஙு.) 3. துதித்தல், புகழ்தல். 4. பொருளை விளக்கும் வாக்கியம்; அது: சாத்திரவிதியை வழங்குவிக்கும்பொருட்டு விதிப்படி நடத்தலால் வரும் நன்மைகளையும் நடவாமையால் வருந்தீமைகளையும் விவரமாகக்கூறி விதிவிடயத்தைப் புகழ்தலும், விலக்கு விடயத்தை இகழ்தலும், பிறர் செய்கை காட்டலும், பழைய நிகழ்ச்சி கூறலுமுடையது. [அர்த்த-பிரயோசனம். வாத - கூறுதல்.]

அருத்தவிற்பத்தி — அருத்தங்களிலே நன்கு பயின்ற சாமர்த்தியம். [அர்த்த - பொருள். வ்யுத்பத்தி - வித்தியை வல்லபம்.]

அருத்தவேதம்— அர்த்தவேதம்.

அருத்தாந்தரநியாசம்— அர்த்தாந்தரநியாசம் என்னும் அணி.

அருத்தாந்தரம்— வேற்றுப்பொருள்.

அருத்தாபத்தி— ஆறளவைகளிலொன்று; அது: பகலுண்ணுனப்பருத்திருப்பானெருவன் இரவிலுண்டானெனன்பதிற்போல அநுமித்தல். (சி.சி.பாயிர. அளவை. க.சிவாக்.)

அருத்தார்த்தி— திரவியந்தேடப்பிரயாசப்படுவோன். [அர்த்த - திரவியம். அர்த்தி - தேடுவோன்.]

அருத்தி— 1-2. அருத்தியென்னேவலுந்தெரிநிலைவினைப்பகுதியும். 3. அருந்தச்செய்து எனப்பொருள்படும் ஒரு பிறவினைத்தெரிநிலைவினையெச்சம். 4. இரந்து கேட்போன். 5. ஒருவன்றனக்கு வேண்டுமென்று கேட்கும்பொருள். (உ-ம்.) "அருத்தியீதல்பொற்சுரதருவினுக்குமற்றரிது" (பாரத. இருட். உசக.) 6. கூத்து. 7. செல்வமுடையவன்-வள். "சேணமிசை,யருத்திபெற்றவணங்கையும்" (கந்தபு. தெய்வ. உஙக.) 8. பாதம். 9. புசிப்பு. 10. முறையிடுசெய்வோன், வாதி. 11. விருப்பம். (உ-ம்.) "கைம்மாறியற்றதியென்னுமருத்தி" (நைடத. அன்னத்தைத்தூது. கூ.) 12. வேலைக்காரர். (உ-ம்.) "அணிநகரணிந்தனரருத்திமாக்களே" (இராமா மந்தரை. உஅ.) [4. யாசிந; 5-7. அர்த்த; 10, 11, 12. அர்த்தி.]

அருத்தித்தல்— 1. பாதிசெய்தல். 2. வேண்டுதல். (உ-ம்.) "உன்னையருத்தித்துவந்தோம்" (நாலாயிர. திருப்பாவை. உ௫.) [மூ. அர்த்த.]

அருத்திதம்—1.இரந்துகேட்டல். 2. விரும்பல். 3. பிச்சைத்திரவியம். [அர்த்திதம.]

அருத்தியன்— விருப்பமுடையவன், வேண்டிவந்தவன். (உ-ம்.) "எதிலருத்தியனென்னக்கேட்டியென்றான்" (பாரத. புட்ப. ககஅ.) [அர்த்திக.]

அருந்திரம்— மரமஞ்சள்.

அருத்து— 1-3. அருத்தென்னேவலுந்தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். 4. பொருள். (உ-ம்.) "கண்ணுணய்மணியானய்கருத்தாயருத்தானய்" (தேவார. திருவையாறு. பழந்தக்க. எ. திருநா.) [அர்த்த.]

அருத்துதல்— அருத்தல்.

அருந்துரு— 1. ஆராய்வு. 2. நுணுக்கம்.

அருத்துருமம்— வெள்வேலமரம்.

அருத்தேந்து— பாதிச்சந்திரன். [அர்த்தேந்து: அர்த்த - பாதி. இந்து - சந்திரன்.]

அருந்தோதயம்—1.அர்த்தோதயம்.(உ-ம்.) 'ஆதவாற்கதிர்மதிகளையரவங்கடீண்டிற்-போதமா ரருத்தோதயமகோதயம்பொருந்தில் - ஓதுபுண்ணியகாலங்களாம்" (சேது. சேதுபல.உ௩.) 2. குரு அத்தமிக்கச்சூரியனுதிக்குமுகூர்த்தம்.

அருத்தோபார்ச்சநம்— திரவியந்தேடுதல். [அர்த்த- திரவியம். உபார்ஜந-தேடுதல்.]

அருதா—சதாப்புப்பூண்டினிலே.

அருந்ததர்— அருந்ததிபுதல்வர். (உ-ம்.) "அருந்ததிமைந்தரருந்ததர்" (கூர்மபு. அந்தகாசு. எ.) [இங்கே அருந்ததியென்றது வசிட்டரது மனைவியாகிய ஊர்ச்சையல்லள்- தருமதேவதையின் மனைவி.]

அருந்ததி— 1. ஒரு நக்ஷத்திரம். (உ-ம்.) "அங்கண்வானத்தருந்ததி காட்டினன்"(நைடத. மணம்புரி. உ௦.) [இது வசிட்டன் மனைவியின் பெயரான்வழங்குவது.] 2. ஒருபெண். இவள்: வசிட்டனுக்கு மனைவி; கற்பிற்சிறந்தவள். (உ-ம்.) "அருந்ததியனையாளேயமிர்தினுமினியாளே" (இராமா. வனம்பு. அ.) 3. தக்கனுக்குமகளுந் தருமதேவதைக்குப்பாரியுமான ஒரு பெண். (உ-ம்.) "அருந்ததியிலங்கைசியாமிசங்கற்பையருண்மருத்துவதி நல்விசுவை- முருந்திளமுறுவற்சாத்தியைபானுமுகுர்த்தையம்வசுவெனத்தருமன் - பொருந்தியமடவார் பெயரினிதுரைப்பார்" (கூர்மபு. அந்தகாசு. சு.) [அருந்ததீ.]

அருந்ததிகாட்டல்— அருந்ததிப்பெண்ணைப்போலக் கற்புடையவளாயிருக்கவேண்டுமென்று வலியுறுத்துமாறு அருந்ததியின் குறியாகக்கொண்ட நட்சத்திரத்தை விவாகம்பண்ணுகிறபெண்ணுக்குக்காண்பித்தல். (உ-ம்.) "பங்கயப்பதம்பைம்பொனினம்மிவைத்-தங்கண்வானத்தருந்ததிகாட்டினன்" (நைடத. மணம்புரி. உ௦.)

அருந்ததிதரிசநநியாயம்— மீமாஞ்சையிலே சொல்லப்பட்ட நியாயங்களுளொன்று. அது: முதலிலேயொருபெரிய நட்சத்திரத்தைக்காட்டிப் பின் அதற்குச்சமீபமாயுள்ள அருந்ததியைக்காட்டல்போல முதலில் ஒரு பெரும்பொருளைககாட்டிப்பின் அதற்குச்சார்பான சிறியபொருளைக்காண்பிக்கு நியாயம். "தூலதத்துவங்களை முன்னர்க்காண்பித்துப் பின்னரவற்றையொட்டிச்சூக்குமதத்துவங்களைக் காண்பித்தல்போல்வது" (கைவல். தத். உ௫.) இது தூலாருந்ததி நியாயமெனவும் வழங்கப்படும். [அருந்ததிதர்சநந்யாயம்.]

அருந்ததிபதி— வசிட்டமுனிவன். (உ-ம்.) "அருந்ததிபதிதிருவருளால்" (பாரத. குருகுல. அஎ.) பதி - கணவன்.]

அருந்தல்— 1. அநுபவித்தல். (உ-ம்.) "ஆருயிர்கள் பயனருந்துமமருலகாம்" (கோயிற்பு. வியாக். சு.) 2. "அருந்தாதொழிக" எனப் பொருள்படும் ஒரு வியங்கோள்வினைமுற்று. (உ-ம்.) "அருந்தலதிபாதகாதியரங்நம்" (சைவச. பொது. உசக.) 3. அருமை. [வழக்.] (உ-ம்.) "மாம்பழம் மிக அருந்தலாயிருக்கிறது" [அருமை என்பதினின்று வந்ததுபோலும்.] 4. குடித்தல். (உ-ம்.) "தண்ணீரருந்தி" (தாயு. அருளி. கக.) 5. புசித்தல். (உ-ம்.) "அருந்தேல்விடலிபதிமனையிலங்நம்" (சைவச. பொது. உச௫.) 6. விழுங்குதல். (உ-ம்.) "அங்கவற்றையும்பற்றியருந்தினன்" (கந்தபு. இரண்டாநாட்சூர. க௫.)

அருந்தவர்— முனிவர். (உ-ம்.) "அயருமருந்தவர்தம்பழி" (கோயிற்பு. பதஞ்சலி. சங.)

அருந்திடல்—உண்ணுதல். (சூ. நிகண். க. சு.)

அருந்து— அருந்தென்னேவலுந்தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும்.

அருந்துதல்— 1. அநுபவித்தல். (உ-ம்.) "பத்தாருந்தும்பரமசுகம்" (தாயு. பரா. உஎ௦.) 2. உண்ணுதல். (உ-ம்.) "அருந்துதற்கினியமீன்கொணர" (இராமா. விபீடண. ந௦.) 3. குடித்தல். "தண்ணீரருந்தி" (தாயு. அருளி. கக.) 4. விழுங்குதல்.

அருந்துதன்—வேதனைசெய்வோன். (சூ. நிகண். உ. சச.) [அருந்துத: அருந்துஸ் - காயம். துத - வருத்துதல்.]

அருந்துதி—அருந்ததி. (உ-ம்.) "இடப்பாலருந்துதிகாணுமளவும்" (திருக்கோ. ந௦௦.)

அருநரகம்—பாழ்நரகம், வேதனை.

அருநிலை— 1. கடந்து செல்லற்கரிய ஆற்றுநிலம். 2. யுத்தநிலை. (பாரத.)

அருநெல்லி—ஒருமரம்.

அருநெறி— 1. ஒடுங்கியவழி. (உ-ம்.) "தொடர்ந்தபல்வரை முடுக்கருமருநெறித்தொடர்பும்" (உபதேச. சிவவிர. கசக.) 2. நரகம். 3. பாலைநிலம். 4. போதற்கரியவழி. (உ-ம்.) "அருநெறிக்கடவுளர்க்கமுதமூட்டுதல்" (பாரத. வேத்திரகீ. நசு.)

அருப்பகம்— 1. அற்பமானது. 2. குழந்தைதன்மையானது. 3. பெலமில்லாதது. 4. விலங்கின்பிள்ளை யல்லதுகுட்டி. [அர்ப்பக]

அருப்பகன்— 1. குழந்தை. 2. வைத்தியகாரன். 3. மூடன். [அர்ப்பக.]

அருப்பம்— 1. அருமை. (உ-ம்.) "அடிநிலைதளர்க்குமருப்பமுடைய" (மலைபடு. உஉஉ.) 2. அற்பம். (உ-ம்.) "அருப்பமென்று பகையையுமாரழல் - நெருப்பையும்மிகழ்ந்தாலதுநீங்கியோ" (இராமா. முதற்போர். கஉ.) 3. உரோமக்கிளர்ச்சி. 4. ஊர். (சூ. நிகண். ௫: நச.) 5. கள். (பாரதிதீபம்.) 6. காட்டுத்துருக்கம். (பிங்க. ௫நஅ.) 7. காடு. 8. கொலை. [அர்வ என்னும் வடமொழி வினைப்பகுதித்திரிபு.] 9. கோட்டை. (உ-ம்.) "அம்புமிழயிலருப்பம்" (மதுரைக்காஞ்சி. சுஎ.) 10. துக்கம்.

(உ-ம்.) "அருப்பமன்றிதென்றையுறவெய்தினன்" (இராமா. பள்ளி. சo.) 11. தொடரிச்செடி. 12. நோய். (உ-ம்) "அருப்பமுறினரசெனினுந்தீர்ப்பானைக் கண்டழைத்தல்" (தைல. பாயிர. ௩.) 13. பனி. 14. பிட்டு. 15. பிள்ளை. 16. பூண்டுகள்; கீரை. 17. மருதநிலத்தூர். 18. (இடித்த) மா. 19. மோர். (சூ. நிகண். சு: உஎ.) 20. வழக்குநிலம். (பிங்க. ௩oஅகூ.) [2. ஆலூகு. 4, 16, 17. ஆலூகு.]

அருப்பலம் — அநிச்சமரம். (சூ. நிகண். ச: எ.)

அருப்பு—1. அரும்பு. (உ-ம்.) "அருப்பிளமுலையவர்க்கநங்கனுகிய" (சிந்தா. நாமக. உகரு.) [அரும்பு என்பதன் விகாரம்.] 2. கிளைத்தல். (உ-ம்) "அருப்பறுவாக்கம்" (வள் குஉஉ.) 3. கொலை. (உ-ம்.) "அருப்புடையறவினஞ்சம்" (பாரத. நச்சு. ௩க.) 4. தயிர். 5. துக்கம். (உ-ம்.) "அருப்பறப்பிறந்தகோபமாறினன்" (இராமா. வருண. எச.)

அருப்புத்துருப்பு— 1. அருந்தேட்டம். 2. அருமை.

அரும்பண்டம்— கிடைத்தற்கரியபொருள்.

அரும்பதம்— 1. அரியசெவ்வி. (ஐங்குறு.) 2. அரியவுணவு. (ஐங்குறு.) 3. விளங்கற்கரியசொல். (ஐங்குறு.)

அரும்பர்— அரும்பு. (உ-ம்.) "பங்கமெங்கணும்வேளெய்கணையாகப் பரம்புவதாமரையரும்பர்" (தணிகை. நாட். அகூ.) [அர் - ஓர் அசைநிலை இடைச்சொல். இறுதியில் நின்ற உகரத்தோடு அர் என்பது ஒத்துப்போலியாய் வந்ததென்பர் பெரும்பாலார்.]

அரும்படல்— அரும்புதல்.

அரும்பாலை—ஓரிசை. (பிங்க. கசoகூ.)

அரும்பி—குங்குமபாஷாணம்.

அரும்பிணி—தீராதவியாதி.(உ-ம்.) "ஐயாவதற்குமரும்பிணியொன்றெய்தியக்கா - லுய்யானே" (கந்தபு. மார்க்கண். கஅ.)

அரும்பித்தல்—தோன்றுதல், முகிழ்த்தல். (உ-ம்.)"அரும்பித்தசெஞ்ஞாயிறேய்க்குமடி" (தேவார. திருவதிகைவீர. திருவடித்திருத்தாண்டகம். ச.)

அரும்பினை—அரும்பையீன்றனை. (ஐங்குறு.)

அரும்பு– 1.பூவரும்புபோலும் வடிவுடைய அணிகல ஒட்டு. 2. மலருமுன் பூவின் உறுப்புக்களையடக்கியிருக்கும் ஒரு புடைப்புவடிவம். (உ-ம்.) "அரும்புமலர்காய்கனி" (தாயு. பரா. கஙஎ.) 3. மெல்லியமயிர்.

அரும்புதல்— 1. சிறிதாகத்தோன்றுதல். (உ-ம்.) "அரும்புமின்னிலைகபோற்றி" (திருவிளை. கடவுள். ச.) "அமுதூற்றரும்பி"(தாயு. பொருள்வண. உ) 2.முகிழ்த்தல்.(உ-ம்.) "காலையரும்பிப் பகலெல்லாம்போதாகி" (வள். கஉஉஎ.)

அரும்புமணி — பொன்னாலே செய்யப்பட்ட அரும்புகளையுடைய ஒரு கழுத்தணி.

அரும்பூதுகை— ஊதிப் பொன்மணிசெய்கை.

அரும்பொருள்— 1. பிரயாசப்பட்டுவிளங்கும் அர்த்தம். 2. பெறுதற்கரியபொருள். (உ-ம்.) "அரும்பொருள்பெறுநரின்"(சிலப். அடை. கஉஎ.)

அருமதாளம்— நவதாளத்தொன்று.

அருமந்த—அரியமருந்தன்ன.(உ-ம்.)"அருமந்தமேருவரையுந்தவரூகுமம்மா" (கந்தபு. திருக்கல். கூஉ.) [இது ஒரு மரூஉமொழி.]

அருமந்தன்ன— அரியமருந்துபோன்ற எனப்பொருள்படும் ஒரு விகாரமொழி. (உ-ம்.) "அருமந்தன்னவதிர்கழல்சேர்மினே" (தேவார. சித்த. பொது. திருநா. உக.)

அருமருந்து— 1. அமிர்தம். (உ-ம்.)"ஆவித்துணையேயருமருந்தே" (தாயு. பலவகை. கடு.) 2. பெறுதற்கரிய மருந்து. (உ-ம்.)"அரந்தைவெம்பிறவியென்னோய்க்கருமருந்தனையவையா" (இராமா. வாலி. கஉo.)

அருமலதி— ஒரு பண்.

அருமறை—1. அறிதற்கரியவேதம். (உ-ம்.) "அருமறைமுதல்வனையாழிமாயனை" (பாரத. வாரணா. க.)2. அறிதற்கரிய இரகசியம். (உ-ம்.) "அருமறைசெவியறிந்தமைகூறலும்" (நம்பியக. களா. சஅ.)

அருமறைக்கொடியோன்— துரோணாசாரியன்.

அருமேதகம்— அக்கினி கீடங்கள் இருபத்தினாலில் ஒன்று. (சீவரட். ௩சகூ.)

அருமேனி—கலைகளுடன் கூடாத நிட்களமான திருமேனி. (உ-ம்.) "உருமேனிதரித்துக்கொண்டதென்றலுமுருவிறந்த-வருமேனியதுவுங்கண்டோம்" (சி. சி. க: ருகூ.)

அருமை—1. இன்மை. (உ-ம்.) "மனக்கவலைமாற்றலரிது" (வள். எ.) 2. செய்தற்கருமை. (உ-ம்.) "அருமைநோன்புகளாற்றுதியாமன்றே" (இராமா. நகர்நீங். உக.) 3. எளிதிற்பெறக்கூடாமை. (உ-ம்.) "அருமையினெய்தும்யாக்கையும்" (சிந்தா. முத். கருo.) 4. பிரயாசம். (உ-ம்.) "கான்புறஞ்சேறலிலருமைகாண்டலால்"(இராமா.ஸதலமா. ௩க.)

5. பெரும்பாலுமில்லாமை. (உ-ம்.) "இவ்வூ ரிலேநெய்கிடைப்பதருமை. (வழக்) 6.பெருமை, மேன்மை. (திவாகர. கூஉ. பக்.)

அருவசாட்சாத்காரம் — அறிவில் நின்று குருவாயுணர்த்தியது.(தாயு. சிற்சு எ. உரை.)

அருவசிவசமவாதி— ஆன்மசித்துஞ் சிவசித்தும் ஒத்துவேறாய்நிற்குமென் றுசொல்லுமதஸ்தன். (சி. சி. கக: கக. சிவஞா.)

அருவத்திருமேனி— சிவன் நடிக்கும் நவபேதத்திலே யருவவடிவமாகக் கற்பிக்கப்படுஞ் சிவம், சத்தி, நாதம், விந்து என்னும் நான்கு மேனிகள். அது: சி. சி. உ: எசு-ஆங் கவியாற்பெறப்படும். வருமாறு "சிவஞ்சத்திநாதம் விந்து சதாசிவந்திகழுமீச-னுவந்தருளுருத்திரன்றான் மாலயனென்றிஒன்றாய்ப் - பவந்தருமருவநாலிங்குருவநாலுபயமொன்றாய் - நவந்தருபேதமேகநாதனே நடிப்பனென்பர்."

அருவம்—உருவமில்லாதது. (உ-ம்.) "அருவமுமுருவுமாகியநாதியாய்ப்பலவாயொன்றாய்" (கந்தபு. திருவவ. கூஉ.)

அருவருத்தல்— தூர்நாற்றமுதலிய எதுக்களினாலே மநத்திற் கேற்காததாகக்கண்டு வெறுத்தல். (உ-ம்.) "அருவருக்குமுலகவாழ்வடங்க நீத்தோர்க்கு" (சிதம்பர. கூசு.)

அருவருப்பு—அருவருத்தல். (உ-ம்.) "புன்புலான் மயிர்தோ னரம்பென்பு மொய்த்திடு புலைக்குடிலி லருவ ருப்புப் பொய்யல்லவே" (தாயு. சுகவாரி. ச.)

அருவல்— 1. கிட்டிப்போதல். 2. மெல்ல மெல்லப்போதல்.

அருவன்— உருவிலி. (உ-ம்.) "அருவனுயிவற்றோடு" (சி. சி. ச: நக.)

அருவா— கொடுந்தமிழ்நாடு பன்னிரண்டினொன்று. (உ-ம்.) "தென்பாண்டிகுட்டங் குடங்கற்காவேண்பூழி - பன்றியருவாவதன் வடக்கு- நன்றாய - சீதமலாடுபுனனாடு செந்தமிழ்சே- ரேதமில்பன்னிருநாட்டெண்"(நன். பெயரி. கசு. உரை.)

அருவாணம்-— செம்பினாற் செய்யப்பட்ட தட்டம், [அங்கியபாஷை.]இது சுரிவாணமெனவும்படும். தேவாலயங்களிலிருந்து பெரியோர்க்குச் செய்யுஞ் சிறப்புக்குவழங்கப்படுகிறது.

அருவாவசு— 1. சூரியசமூகத்துநின்று பாட்டயர்வோரில் ஒருவன்.(கூர்மபு.ஆதவர்சிற. எ.) 2. சூரியன்கதிர்களுள் வியாழனைவிளங்கச்செய்யுங்கதிர். (உ-ம்.) "வயங்கொளியருவாவசுவெனுங்கதிர்நல் வியாழத்தைமறுவறவிளக்கும்" (கூர்மபு. ஆதவர்கதிர். உ.)

அருவாவடக்கு— கொடுந்தமிழ்நாடு பன்னிரண்டினொன்று. "அருவா" பார். (நன். பெயரி. கசு. உரை.)

அருவாளர்—அருவாளநாட்டிலரசர். (உ-ம்.) "தொல்லருவாளர்தொழில்கேட்ப" (பட்டினப்பாலை. உஎரு.)

அருவி—1. கழிமுசம். (சூ. நிகண். ரு. ருக.) 2. தினைத்தாள். (சூ. நிகண்.ச:சூ௦.) 3.மலையின்வீழாறு. (உ-ம்.) "அருவிக்குன்றமுமைவனச்சாரலும்" (சிந்தா.கநக.உஉந.)4.நீர். (பதிற்றுப்பத்.) 5. வினையெச்சவகையுளொன்று.

அருவுடம்பு— பத்துவகை இந்திரியவுணர்வோடும் ஐவகை வாயுக்களோடுங் காமவினைவிளைவுகளோடுங் கூடியமநம். இது நுண்ணுடம்பு எனவும்படும். (வள்.நசகு பரி.)

அருவுதல்—அருவல்.

அருவுரு—சகளநிட்களதிருமேனி. (உ-ம்.) "அருவமுமாயுருவமுமாயருவுருவுமாயெங்குமமாநிற்கும்" (சூத. முத். ச: கசு.)

அருவுருவத்திருமேனி— சிவன் நடிக்கு நவபேதத்திலே யருவுருவவடிவமாகக் கற்பிக்கப்படுஞ் சதாசிவமாகிய திருமேனி. (சி. சி. உ: எசு-ஆங் கவி பார்.)

அருள்—1. அநுபவமுடைய தேசிகர் அருளிச்செய்யும் உபதேசம். (உ-ம்.) "அருளினாலாகமத்தே யறியலாம்" (சி. சி. பாயிர. ரு.) 2-4. அருளென்னேவலுந தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். 5. ஆன்மாக்களுக்காணவ முதலிய மலத்தைப் போக்கி ஞானத்தைக்கொடுத்து வீட்டையடைவிப்பிக்கை. (உ-ம்.) "அருட்செய்திதானும் - பழிப்பொழிபந்தம் வீடுபொர்த்திடிலருளேயெல்லாம்" (சி. சி. க: நஎ.) 6. கொடை. (உ-ம்.) "அருளில்லார்களிலைந்தரு நிகர்க்கிலாரில்லை" (நைடத. நகர. கூ.) 7. தயவோடிடும் பணி, தயவோடுபண்ணுங்கற்பனை. (உ-ம்.) "அவனைமுனிர்-கொண்டுவருகென வருளுங்குலவு திருவருள் கேளா" (கோயிற்பு. இரணிய.ருக.) 8. தொடர்புபற்றாதியல்பாக உயிர்கண்மேற் செல்லுங்கருணை. (வள். அதி. உரு.) ஒன்றின்துயர்கண்டாற்காரணமின்றித்தோன்றும் இரக்கம். (புறநா. ரு-ஆங் கவியுரை.) (உ-ம்.) " அருட்பெருங்கடலேயெய்த்தேம் " ( கந்தபு. உற்பத். மேரு. சு.) "என்றித்திறங்களருளோடுபன்னி" (கந்தபு. அவைபுகு. சக.) 9.பராசத்தி.(உ-ம்.)(சூ.நிகண். கக, ககர. கo.)

அருள்செய்தல்— கிருபையோடு சொல்லுதல். (உ-ம்.) "உள்ளபடியருள்செய்யவேண்டுமென" (கோயிற்பு. பதஞ். கூ.)

அருள்புரிபத்திரம்—அரசனானவன், ஒருவனுடைய சேவகம், சௌரியமுதலியவைகளை வியந்து கொண்டாடியவனுக்குக் கிராம முதலியவற்றைக்கொடுத்ததற்குச்சாதநமாக எழுதிக்கொடுக்கும் பத்திரம். (பிருதிசங். ௯௧.)

அருளகம்—வெள்ளெருக்கஞ்செடி.

அருளரசி — 1. குடசப்பாலைக்கொடி. 2. வெட்பாலைப்பூண்டு.

அருளல்—1. காத்தல். (உ-ம்.) "பொறுத்தேயருள்வாயென்னுவிருதாள் சென்னிபுனைந்தேன்" (இராமா. நகர்நீ. அ௫.) 2. கிருபைசெய்தல். (உ-ம்.) "பரதஞ்செய்-கோலமவன்றனக்கருளி யடிமைகொளவேண்டுமென" (கோயிற்பு. இரணி. ௬0.) 3. கொடுத்தல். (உ-ம்.) "ஏற்றவர்க்கு-மாற்றுதருள் செங்கை" (வாண. கஉ௬.) 4. சிருட்டித்தல். (உ-ம்.) "ஆரணத்தானருள்பாரளித்தான்" (வாண. உ௯௫.) 5. சிவனுடைய பஞ்சகிருத்தியத்துள் ஒன்றாகிய அநுக்கிரகம்; அது: ஆன்மாக்களுக்குப் பாசத்தைநீக்கி ஞாநத்தைக்கொடுத்து மோக்ஷமடைவித்தல். (சி. சி. க: ௯எ.) 6. தயவோடுசொல்லுதல். (உ-ம்.) "ஐயநீதான் யாவனந்தோவருள்கென்றயர" (இராமா. நகர்நீ. எஎ.) 7. தேவரல்லது பெரியோருடைய செயன்முதலியவைகளை யுணர்த்தும், "செய்து" என்னும் வாய்பாட்டு வினையெச்சச்சொற்களை யடுத்துக் கிருபையானசெயல் அல்லது சொல் என்பதை விளைவிக்குதற்குப் பிரயோகிக்கும் ஒருசொல். (உ-ம்.) "நாதனை மூந்தருள" (கோயிற்பு. பதஞ். உ௫.) "திருவுள்ளமகிழ்ந்தருளி" (மேற்படி இரணி. ௬௧.)

அருளவம்—1. அழிஞ்சில். 2. பெருமரம்.

அருளறம்பூண்டோன்— புத்தன். (மணிமேகலை.)

அருளாதி—குடசப்பாலைக்கொடி.

அருளாபு—சாரணைப்பூண்டு.

அருளாமை— அருள்செய்யாமை. (வள். உ௭௯. பரி.)

அருளாழிவேந்தன்—1. அருகதேவன். 2. கடவுள். [அருள் - கிருபை. ஆழி - கடல். வேந்தன் - தலைவன்.]

அருளாளன்— கிருபையை விசேடமாகவுடையவன். (உ-ம்.) "அத்தா விமலாவருளாளா" (தாயு. காண்பே. ௯0.)

அருளிச்செய்தல்— 1. கிருபையோடுசொல்லுதல். (உ-ம்.) "செய்கவென்றருளிச்செய்தான்" (கோயிற்பு. இரணி. ௬௧.)

அருளிப்பாடு— அருளப்பட்ட உத்தரவு. (உ-ம்.) "ஆயசிரிராகவனருளிப்பாடெனவாயில்காப்பாளருமகிழ்ந்துகூறலும்" (இராமா. அசுவ. கருஎ.)

அருளுடைமை— தொடர்புபற்றாதியல்பாகவெல்லாவுயிர்கண்மேலுஞ்செல்லுவதாயகருணையுடைமை. (வள். அதி. ௨௫.)

அருளுதல்—அருளல்.

அருளுவம்—பெருமரம்.

அருளுறுதி—வேப்பமரம்.

அருங்சிகைரோகம் — கபாலத்தில்வரும் ஒருவகைரோகம். அது: பித்தத்தினாற்கபாலமூளை கரையும்போது பிறந்து கபாலத்தின் மீது தினையைப்போலுங் கடுகைப்போலும் அநேக கொப்புளங்களுண்டாக்குமென்பர். (சீவரட். உ௯௩.) [வட-அருஷிகா- பரவு தலையுடையவிரணம். இது: "அருஷிகா" என இருக்கவேண்டும்போலும்.]

அருபதை— 1. அலட்சணம். 2. உருவமின்மை. 3. ஒப்பின்மை. [வட-அருபதா.]

அருபம்—1. அவலட்சணம். 2. உருவமின்மை. (உ-ம்.) "அஞ்சலினயனநீருகுத்தருபமா" (இரகு. திக்கு. ௨௫௩.) 3. ஒப்பாகாமை. 4. (சாங்கியர் சொல்லும்) பிரதானமென்னுமூலப்பகுதி. 5. (வேதாந்திகள் சொல்லும்) பிரமம். [வட-அருபம்.]

அருபி—1. அசரீரி, அருபத்தன்மையுடையது. (உ-ம்.) "மல்லலருபிவழங்கியதன்றே" (பாரத. புட்ப. எஎ.) 2. கடவுள். 3. கர்ப்பூரம். 4. சிவன். (பிங்க. கசு.)

அருபிநருபிந் — எண்பத்தொரு பதங்களிலொன்று. (சி. சி. அ: எ. மறை.)

அருபை—1. அவலட்சணமுள்ளவள். 2. ஒப்பில்லாதவள். 3. உருவமில்லாதவள். (உ-ம்.) "ஆதிசத்தியருபையாதலில்" (சதாசிவ. கஉ.) [வட; அருபா.]

அரேசகண்டு—கருணைக்கிழங்கு.

அரேசிகம்—வாழைமரம்.

அரேணுகம்—1. கடுமரத்தின்வேர். 2. கவுக்கிக்கொடி. 3. காட்டுமிளகுகொடி. (உ-ம்.) "கருவேம்பரேணுகங் கைச்சோரம்வாலுகம் மகாகோளிமகிழம்பூ" (தைல. தைலவ. எஎ.) 4. வான்மிளகுபூண்டு.

அரேணுகை—காட்டுமிளகு. (உ-ம்.) "பண்டிதவாயு மரேணுகையும்பருமாசோநங்கமஞ்சரணம் பளையருணுதம்புட்கரமுக்ககெடுகீசைந்து" (தைல. தைலவ. ௯.)

அரை— 1-3. அரையென்னேவலுந்தெரி நிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். 4. இடை. 5. உடம்பின்நடுவிடம்; அது: வயிற்றுக்குந் தொடைகளுக்கும் நடுவிலுள்ளது. (உ-ம்.) "புனைமணியரைநாணொடுபோதும்" (பெரியபு. திருஞாந.'கூங.) 6. ஒரு மரம். (உ-ம்.) "வகுளதெரைமையரை பாங்கர்க்-கன்னிகாரம்" (திருவானை. சம்புக. க.) 7. பாதி. (உ-ம்.) "வேணப்பாகஸ்தூரி வகைக்குத்தானும்விளங்கவேயரைக்கழஞ்சு வேண்டுவாயே" (அகஸ்தியர்பூ. ககஅ.) 8. மரத்தின் அடிதொடங்கிக்கவடுவரைக்குமானபாகம். (உ - ம்.) "பொரியரைத்தேமா" (நைடத. நாட். உ0.) 9. வயிறு. (உ-ம்.) "கன்றரைப்பட்டகயநதலை மடப்பிடி" (மலைபடு. ௩0எ.)

அரைக்கச்சு — } இடையிற் கட்டுங்கச்சு.
அரைக்கச்சை— } (சொழி. ஆபத். ச.)

"அரித்தல்" பார்.

அரைக்கல்— அரைத்தல்.

அரைக்காணி—(கீழ்வாய்க்கணக்கு.) ஒன்று நூற்றறுபது கூறிட்டதில் ஒரு கூறு.

அரைக்கால்— ஒன்றெட்டுக் கூறிட்டதில் ஒரு பாகம். ஞ.

அரைகல்—அம்மி.

அரைங்கரம்—நாஞ்ஜி.(உ-ம்.) "வல்லிசம்படியுகராமாபமிருங்கரமடவந்தபுனல்ரைங்கரம்" (தைல. தைலவ. ரு.)

அரைச்சதங்கை— பிள்ளைகள் அரையில் அணியுஞ்சதங்கை.

அரைச்சல்லடம்— அரையினின்று முழங்கால் வரைக்கும் இடுஞ்சல்லடம்.

அரைசபாரம் — அரசுநடத்துங்கடமை. (உ-ம்.) "அருந்தவமரைசபாரமிரண்டுமே" (சூளா. மங். ௩௩.)

அரைசர்— அரசுசெய்வோர். (உ-ம்.) "அரைசர்ற்புகுந்து போரைசியானநீ" (இராமா. மந்தரை. ருக.) அகரத்தை ஐகாரமொத்துப் போலியாய்வந்தது.

அரைசி— இராணி, பட்டமகிஷி. (உ-ம்.) "அரைசர்" பார்.

அரைசிலை—அம்மி. (உ-ம்.) "அரைசிலை குமிழ்ப்புவடித்தல்" (தைல. பாயிர. கஉ.) [அரை - அரைத்தல். ஶிலா - கல்லு.]

அரைஞாண்—ஆண்மக்கள் அறையிற்கட்டுங்கயிறு.

அரைஞாண்மணி— அரையிற் கட்டுஞ்சதங்கை, கிண்கிணி. (உ-ம்.) "கட்டழகுமேயவரைஞாண்மணிகறங்க" (கந்தபு. திருவிளை.உ.)

அரைத்தல்—1. அழித்தல். 2. உரோஞ்சல். 3. தேய்த்தல். (உ-ம்.) "அரைத்தவாரமும்" (பாரத. நிரை. உக.) 4. தேய்த்துமாவாக்கல், தேய்த்துத் தூளாக்கல். 5. நசுக்கல். 6. வியாதியிலழுந்துதல்.

அரைத்தொடர்—அரையிற்கட்டுஞ் சங்கிலி. (உ-ம்.) "அங்கைச்சரிவளையுநாணுமரைத்தொடரும்" (நாலாயிர. மாணிக்க. ச.)

அரைதல்— 1. அரைபடல். 2. தேய்தல். (உ-ம்.) "அங்கமெங்குமரைந்திட" (பெரியபு. திருநாவு. ௩௬0.)

அரைநலம்— விதைநருங்காது குறையாயிருககு நலம். [வழக்.] அரை-பாதி, நலம் எருத்தின்விதைநசுக்கல்.

அரைநலவன்—நன்றாக நலமடிக்கப்படாத ஆண்மாடு. [வழக்.]

அரைநா—முதலை.

அரைநாண்—அரைஞாண். (உ-ம்.) "பொன்னரைநாணொடுமாணிக்கக்கிண்கிணி - தன்னரையாட" (நாலாயிர. மாணிக்கக்கிண். உ.)

அரைநாவை—1.ஒருபாற்கோடிய கொழுவுடையதாய்ப் பாவனைக்காகாத கலப்பைப்பகுதி. 2. ஒருபாற்கோடிய மண்வெட்டி நுனி.

அரைநாள்— 1. நடுநாள். (உ-ம்.) "மழையமைந்துற்றவரைநாளமயமும்" (மதுரைக்காஞ்சி. ௬சக.) 2. நாளிற்பாதி, பாதிநாள்.

அரைநூல்—1. அரைச்சதங்கை. 2. அரைநாண். 3. நூலிற்பாதி, பாதிநூல்.

அரைநெக்கல்—அரைப்பர்கம்' நெகிழ்ச்சி, அரைத்திட்டம் பழுத்தது.

அரைப்பட்டிகை—மாதராவதாடவராவதரையிற்கட்டும் பட்டிகை.

அரைப்பு— 1. அரைக்கப்படுவது. 2. அரைத்தல். 3. இருப்பைப்பிண்ணாக்கு. 4. தேகத்திலே 'செறிந்த எண்ணெய்போக்குதற்காகத் தேய்க்கும்படி பச்சைப்பயறு முதலியவற்றை யரைத்தெடுக்கப்படுவது. (உ - ம்.) "சோடியிருப்பைத்திப்பிசொல்லரைப்பாநெய்க்குமுற்கங்-தேடியரைப்பாகுந்தெள்"(தைல. பாயிர. ௯0.)

அரைப்பூட்டு— 1. இடையுந்தொடையும் பொருந்தும்பூட்டு. 2. இடைக்கட்டு.

அரைமா—(கீழ்வாய்க்கணக்கு.) ஒன்றுநாற்பது கூறிடப்பட்டதில் ஒருபாகம்.

அரைமூடி— சிறு பெண்பிள்ளைகள் அல்குலைமறைத்துக்கட்டும் ஓராபரணம்.

அரையலன்—சோம்பன். (உ-ம்.) "அவனொரு அரையலன்" [வழக்.]

அரையன்—1. அரசன். (உ-ம்.) "பூசைநீர்

க்கடலரையற்காற்றுவான்" (தணிகை. நாட்டு. கங-அ.) 2. அரையையுடையவன். (உ-ம்.) "வெம்மான்றோல்வீக்குமரையன்" (கலைசை. அ௨.) 3. பாதியையுடையோன்.

அரையாப்பு— மேகநோயால் அரையிலுண்டாகும் விரணம்.

அரையிரவு— 1. அர்த்தராத்திரி. (உ-ம்.) "மடவரலிங்கரையிரவிற்கண்விழித்தாள்" (ஞானவா. சிகித்து. எ௫.) 2. இரவிற் பாதி.

அரையிருள் — அர்த்தராத்திரி. (உ-ம்.) "அரையிருட்பொழுதில்" (கூர்மபு. பிலக்க. ௫௩.)

அரைவட்டம்— 1. அரைமூடி. 2. வட்டத்திற்பாதி.

அரைவடம்—அரையிற்கட்டும்வடம். (உ-ம்.) "அரைவடங்கள்கட்டி" (திருப்பு. உ.)

அரைவயிரக்கல்— கம்மாளர் கருவியினொன்று.

அரைவயிறன்— அரிசி பிடியாதநெல்லு, அரிசிமுதிராத நெல்லு.

அரைவாசி—பாதி. [வாசி - பங்கு.]

அரைவாய்—1. பங்கப்பட்டவாய்.

அரோ—ஓர் அசைச்சொல். (உ-ம்.) "அன்புகூர்வாமரோ" (பாரத. காப்பு.)

அரோகம்— சுகம், நோயினமை. (உ-ம்.) "அரோகதிடகாத்திரம்" (தாயு. பாய. ௯௧.) [அ; ரோக - நோய்.]

அரோகி— நோயில்லாதவன், சுகமுடையவன். [ஆரோகி; அ; ரோகி - நோயாளி.]

அரோகிணி—அரோகிணிக்கடுக்காய். (உ-ம்) "ஆதிவிசயனரோகிணியோடேப்ருதிவி-நீதலபிர்தைசிவந்திமலை-மீதார்-திரிவிருதநீயபயன் செப்பிவிவையோமா - மரிதகியின்பேதமறி" (பதார்த்த. ௧0௪௬.)

அரோகிணிக்கடுக்காய்— நான்குவரைபோன்ற குறியுடையதாகிய ஒருவகைக்கடுக்காய்; இது கன்னியாகுமரியிலுற்பத்தி. (உ-ம்.) "ஓதுமரோகிணிகாயொன்றுண்டாமேற் சந்தி-பாதமொசேதம்பறக்குங்காண்" என்பதனாற்பெறப்படும். (பதார்த்த. ௧0௪அ.)

அரோகிதை—நோயின்மை, சுகமுடைமை. [அரோகிதா.]

அரோகை— தயித்தியநாசத்திலேகோயில்கொண்ட உமை. (உ-ம்.) "புகழ்வளைதயித்தியநாசத்தன்புறுமரோகையென்றும்" (மச்சபு. கவுரிநா. மட். ௩௨.) 2. நோயில்லாதவள். [அரோகா.]

அரோசகம்—1. அருவருப்பு. 2. சமியாக்குணம். 3. பசியின்மை. 4. பசியின்மையையுண்டாக்குதல். 5. பிரகாசமின்மை. 6. வெறுப்பு. [அரோசக; அ; ரோசக - சமித்தல் பிரகாசித்தல்.]

அரோசகரோகம்— ஒக்காளத்தையுண்டு பண்ணும் ஒருவகைநோய். (சீவரட். ௬௪.)

அரோசநம்—1. சந்தோஷமின்மை, பிரியமின்மை. (உ-ம்.) "அரோசநத்துடனந்நகர் நண்ணினர்" (பாரத. திரௌ. ௧0௫.) 2. பிரகாசமின்மை. [அ; ரோசநா-மகிழ்ச்சி. பிரகாசம்.]

அரோசம்—அரோசகம்.

அரோசிகம்—1. அருவருப்பு. (உ-ம்.) "ஆழ்ந்துநினைக்கிலரோசிகமாமிவ்வுடலில்" (தாயு. யாக்கை. அ.) 2. வெறுப்பு. [அரோசிகா.]

அரோசிகை—1. அருவருத்தல். 2. பசியின்மை. 3. பசியின்மையையுண்டாக்குதல். 4. பிரகாசமின்மை. [அரோசிகா - பசித்தல். பிரகாசித்தல்.]

அரோசித்தல்— 1. அருவருத்தல். 2. வெறுத்தல்.

அரோசிப்பு—1. அருவருப்பு. 2. வெறுப்பு.

அல்— 1. அதிசாரம். (இராசவைத்.) 2. அல்லாத, இஃது அன்மையென்பதன்விகுதி கெட்டுநின்றதென்பர். (உ-ம்.) "ஒன்றலெண்ணும்" (நன். பெய. ௨௩.) 3. ஆண்பாலொருமையில் வரும் ஒரு பெயர்விகுதி. (உ-ம்.) "இளவல்" "தோன்றல்" (நன். பெயரி. ௧௧. இராமா.) 4. இராக்காலம். (உ-ம்.) "அல்லும்பகலுமருசசிக்க" (சைவச. பொது. எ௬.) 5. இருள். (உ-ம்.) "அல்லார்குழலின்" (வாண. அ.) 6. ஒருசாரியை. (உ-ம்.) "தொடையல்" (நன். உருபு. ௫. இராமா.) 7. ஒரு தொழிற்பெயர்விகுதி. (உ-ம்.) "ஆடல்" 8. ஒருடன்பாட்டுவியங்கோள்விகுதி. (உ-ம்.) "மக்கட்பதடியெனல்" (வள். ௧௯௬.) 9. ஒரெதிர்மறைவியங்கோள்விகுதி. (உ-ம்.) "மகனெனல்" (வள். ௧௯௬.) 10. ஒரெதிர்மறையொருமை ஏவல் விகுதி. (உ-ம்.) "இருங்குஊறவாணரிளங்கொடியேயிடரெய்தல்" (திருக்கோ. ௧௫.) 11. ஒரெதிர்மறைஇடைநிலை. (உ-ம்.) "வாழலேன்" 12. சுக்கு. (இராசவைத்.) 13. தன்மையொருமை வினைவிகுதிகளுள் ஒன்று; இது: பகரவசர எதிர்கால

இடைநிலைகளுள்யாதேனும் ஒன்றேவரும். (உ-ம்.) "பொய்ம்மலிசெயலிற்றப்பிப் போமெனிற்காண்பலென்ன" (பிரபுலிங்க. கைலாச. ௫எ.) "காலன்குறுகில் என்செய்குவல்" (கம்பரங். ௪.) 14. மதில். 15. மயக்கம். (உ-ம்.) "அல்லாற்சாயுச்சியப்பனை" (ஒழிவி. ௬.) "அன்னுழையாத வுள்ளத்து" (சூத. முத்தி. ௩: ௫௦.) 16. மெய்யெழுத்து.(உ-ம்.) "மேவியமெய்கள் விளம்புமல்லீலாடு வியஞ் சநமாம்.(பி. வி. ௪.) [ஹஞ். இது சம்ஸ்கிருதத்திலே வகுத்துக்கொண்டபடி ஆதியிலே நின்ற "ஹ" என்பதை அந்தத்திலே நின்ற "ஞ்" என்பதனுடன்கூட்டி அவற்றுக்குட்பட்டமெய்யெழுத்துக்களுக்குப்பிரதியாகாரஞ் செய்தலினால் வந்தபெயர். சம்ஸ்கிருதஒற்றுக்களுக்கே இது சிறந்த பெயராயினும் தமிழில்வரும்ஒற்றுக்களுக்கும்பெயராகக்கொள்க.]

அல்கல்—1. இராக்காலம். (உ-ம்.) "பெருநகையல்கனிகழ்ந்ததொரு நிலையே" (கலித்தொகை.௬௫.) 2.சுருங்கல்,குறைதல். (உ-ம்.) "அஃகலின்மொழிசிலவுரைந்து" (நைடத. அன்னத்தைக்கண். ௬௬.) 3. தங்குதல், தங்கியிருத்தல்.(உ-ம்.) "அல்குதன்புரத்தினண்ணி" (கந்தபு. காம. ௬௧.) 4. தினம். (உ-ம்.) "மூன்றல்கல்" (தைல. தைலவ. ௧௩௧.) 5. வறுமை. (சூ. நிகண். அ: ௬௧.)

அல்கலும்—நாடோறும். (உ-ம்.) "அகல்விசும்பிடையல்கலும்படர்-பகலவன்" (கந்தபு. தெய்வ. ௫௧.)

அல்கு— 1. அல்கல் எனப்பொருள்படும் ஒருமுதனிலைத்தொழிற்பெயர். (உ-ம்.) "அல்கருஞ் சீர்த்துவாரகை" (கூர்மபு. கண்ணன்மண. ௧௦௪.) [இங்கே அல்கு-குறைவு எனப் பொருள்படும்.] 2-4. அல்லென்னேவலுந்தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும்.

அல்குகழி—உப்பங்கழி, சிற்றாறு. (உ-ம்.) "அல்கு-கழியினுஞ்செல்லாதோகடல்" (நன்னெறி. ௧௬.)

அல்குதல்— 1. குறைதல். 2. சுருங்குதல். 3. தங்கியிருத்தல்.

அல்குல்—நிதம்பம். (உ-ம்.) "கலந்தகினறுமல்குற்கவான் மிசைக்கொண்டிருந்தான்" (சிந். பதுமை. ௨௩௨.) 2. பெண்குறி ஆண்குறியின்மேற்பக்கம். (உ-ம்.) "எம்மல்குற்கும்மல்குலிணையொக்கும்" (காஞ்சிபு. அந்தகேச. ௧௫.)

அல்ல— 1. அஃறிணைப்பன்மை எதிர்மறைப்பொருளில் வரும் ஒரு குறிப்புவினைப்பெயர். (உ-ம்.) "கருதுபகோடியு மல்லபல" (வள். ௩௩எ.) 2. அஃறிணைப் பன்மை எதிர்மறைப்பொருளில் வரும் ஒரு குறிப்புவினைமுற்று. (உ-ம்.) "ஒருவற்கணியல்லமற்றுப் பிற" (வள். ௯௫.) 3. சொல்லாதொழிந்தன. (உ-ம்.) "உருவவெட்பயறழூந்துமல்லவும்" (சிந்தா.௧௩௧௫.)4. முன்சொல்லிக்கொண்டதற்கு மாறானவை, விரோதமானவை. (உ-ம்.) "அறங்கூறானல்லசெயினும்" (வள். ௧அ௧.)

அல்லகண்டம்— உபத்திரவம். (உ-ம்.) "அல்லகண்டங் கொண்டடியேனென் செய்கேனே" (தேவார. திருவானை.௧.திருநாவு.)

அல்லகம்—1. உற்பலச்செடி. (உ-ம்.) "அல்லகாத்திரி" பார். (தணிகை. புராணவர. ௫௧.) 2. கோவணச்சீலை. 3. செந்தாமரை. [1, 3. ஹலுக:]

அல்லகாத்திரி— தணிகைமலை. (உ-ம்.) "வைகவெருறுமலர்மூன்று- கோலமார்காவியுதிர்த்தலினல்லகாத்திரி" (தணிகை, புராணவர. ௫௧.) [ஹலுக- உற்பலம். கிரி- மலை.]

அல்லத்தட்டல்— கூடாதென்று மறுத்தல். [வழக்.]

அல்லது—1. அல்லாமல். (உ-ம்.) "நீயாகவல்லதுமாந்தழையாகநினைந்திலளே"(வாண. ௧௨௧.) 2. தீவினை. (உ-ம்.) "அல்லதுகெடுப்பவனருள்கொண்ட முகம்போல" (கலித்தொகை. ௧௪அ.) 3. முன்சொல்லியதல்லாதது. (உ-ம்.) "நல்லதுசெய்தலாற்றீராயினுமல்லதுசெய்தலோம்புமின்" (புறநா. ௧௯௫.) 4. முன்சொல்லியதாகாவிடத்து எனப் பொருள்படும் ஒருகுறிப்புவினையெச்சம். (உ-ம்.) "செல்வனையின்றுநாடிச்சேவடிதொழுதலொன்றோ-வல்லதிவ்வுடம்புநீங்கிவேற்றுலகடைதலொன்றோ - யெல்லையிவ் விரண்டினொன்றேயிப்பகன்முடிப்பலென்று"(சிந்தா. ௧௩௧. ௧அ௧.)

அல்லதூஉம்—அல்லாமலும். (உ-ம்.) "அல்லதூஉமவனுடைத் துணைவராயினோர்க்கு" (ஸ்ரீராமா. பிணிவீட். ௨௨.)

அல்லதேல்— அல்லாதிருந்தால். (உ-ம்.) "அத்தவிங்கினிக் காத்தருளல்லதேலடுவல்லே" (கந்தபு. மோக. ௧௦.)

அல்லதை—அல்லது. (உ-ம்.) "அலியரல்லதையாண்டகையார் கொலோவனையோர்" (கந்தபு. சூரன்றண். ௨௫.) [ஐ-ஒருசாரியை.]

அல்லம்— 1. அல்லென்னுமடியாற்பிறந்து தன்மைப் பன்மையில் வரும் ஒரு குறிப்புவினைமுற்று. 2. அல்லென்னும் அடியாற்பிற

ந்துதன்மையொருமைச்சிறப்பில் வரும் ஒரு குறிப்புவினைமுற்று. (உ-ம்.) "பண்டையம ல்லம்."(சிந்தா. கஙக. சுஎ.)3. இஞ்சிப்பூண்டு. (சூ. நிகண். ச: சுங.) [தெலுங்கு.]

அல்லமன்— சுஞ்ஞாகி கிராங்காரன் என் னும் இருவரிடத்திலும் பிறந்த புதல்வன். (உ-ம்.) "தொல்லையிலுயர் சுஞ்ஞாகிநாங்ராங் காரனென்போ - ரெல்லையிறவங்கள் செய்ய வெமதுமெய்வடிவந்தானே- யல்லமனுமமை ந்தனுயினன்." (பிரபுலிங்க. கைலாச. ருச.)

அல்லர்—1. அல்லாதவர். (உ-ம்.) "வீர ரையல்லரைவெகுளவீரென" (கந்தபு. சிங்க முகா. கசஎ.) 2. அன்மைப்பொருளில்வரும் ஒருயர்திணைப் பன்மைப் படர்க்கைக்குறிப்பு வினைமுற்று. (உ-ம்.) "வறிது பெயர்குநரல் லர்" (புறநா. கஉச.)

அல்லல்—துன்பம். (உ-ம்.) "அல்லலரு ளாள்வார்க்கில்லை" (வள். உசரு.)

அல்லவை — 1. தீங்கான செய்கைகள். (உ-ம்.) "அல்லவைபுரியாரேனும்" (கந்தபு. காசிபன்பு. ஙக.) 2. பயனில்லன. (பிங்க.) 3. மாறுனவை. (உ-ம்.) "சவமறைந்தல்ல வைசெய்தல்" (வள். உஎச.)

அல்லள்— அல்லென்னும் அடியாற்பிறந் துபடர்க்கைப்பெண்பாலொருமையில் வரும் ஒருகுறிப்புவினைமுற்று. (உ-ம்.) "மாதர்விஞ் சையும் வல்லளுமல்லளோ"(சிந்தா.கஙக.எரு.)

அல்லன்—1. அல்லாதவன். (உ-ம்.) "ஒரு வனே யெல்லாமாகி யல்லனுயுடனுமாவன்" (சி. சி. க: உஎ.) [இது: குறிப்புவினையாலணை ந்த ஒருபெயர்.] 2. அன்மைப்பொருளில்வ ரும் ஒருயர்திணையாண்பாற்படர்க்கைக்குறிப் புவினைமுற்று. (உ-ம்.) "இறையுமல்லன்" (சி. சி. அ: ஙஅ.) 3. தீயவன். (உ-ம்.) "அல் லனேடொருபந்தியயின்றிடல்" (சேதுபு. காசிப. சுசு.)

அல்லன—1. ஒழிந்தவை, அல்லவை.(உ-ம்.) "சொன்னநன்மலருமல்லனவும்"(சிந்தா.கஙக. கசு.) 2. தீங்கானசெய்கைகள். (உ-ம்.) "நல் லாரொழுக்கின்றலைநின்றார்நல்கூர்ந்து - மல் லனசெய்தற்கொருப்படார்" (நீதிநெறி.சுக.)

அல்லா—1. ஒழிந்த. (உ-ம்.) "சோதிவை கும்- பொற்றையதொன்றேயல்லாப்பொருப் பெலாம்"(கந்தபு. சூரபன். சஅசு.)[இது:பெ யரெச்ச விகுதியுந்தவ்வுங்கெட்டுநின்றது.]2. கடவுள். [அராபி. இது: மகமதியரால் வழங் கப்படுஞ்சொல்.] 3. தாய். [நாடகத்தில் வழ ங்கப்படும் ஒருசொல்.][சுலூ.]

அல்லாத்தல் — அலமரல், துன்பமுறல். (உ-ம்.) "ஆக்கமிழந்தேமென்றல்லாவார்" (வள். ருகசு.)

அல்லாத—1. தீமையுடைய எனப்பொரு ள்பட, அன்மையென்னும் அடியாற்பிறந்த ஒருகுறிப்புவினைப்பெயரெச்சம். (உ-ம்.) "அ ல்லாதபரசமயவலைகைத்தேர்விண்டகல"(சே துபு. கடவு. கங.) 2. தீமையுடையவையெ னப் பொருள்படும் ஒரு குறிப்பு வினையால ணையும் பெயர். 3. தீமையுடையன எனப் பொருள்படும் ஒரு குறிப்புவினைமுற்று. 4. மாறுன எனப்பொருள்படும் ஒருகுறிப்புவி னைப்பெயரெச்சம். 5. மாறுனவையெனப் பொருள்படும் ஒரு குறிப்புவினையாலணையும் பெயர். (உ-ம்.) "சொலற்பாலவல்லாத சொ ல்லுதலுங்குற்றம்" (நன். விரு. சகக.உரை.)

அல்லாதது—1. சொல்லாதொழிந்தது. 2. தகாதது, தீயது.

அல்லாதவர்— 1. தகாதவர், தீயவர். 2. முன்சொல்லப்படாதவர். (உ-ம்.) "சமயாதி பர்களுக்கு-மல்லாதவர்க்கும்"(பாரத. கிருட். உஙரு.)

அல்லாதன—1. ஒழிந்தபிற. 2. செய்யத்த காதசெயல்களெனப்பொருள்படும் ஒருகுறி ப்புவினைப்பெயர். (உ-ம்.) "பற்றினர்போ - யல்லாதன புரிவர்"(கந்தபு. அயிராணிசோக. கரு.)

அல்லாதார்—1. ஒழிந்தபிறர். (உ-ம்.)"பெ ற்றோர்மகப்பெற்றாரல்லாதார் பிறர்மக்கள்பி றரேகண்டீர்"(சிந்தா. கேம. கஙச.)2. தீயார். (உ-ம்.) " அருட்கண்ணுனேக்காதாரல் லா தாரே" (தேவா. திருவாரூர். திருத்தாண் ட. க. திருநாவு.)

அல்லாது— அல்லாமல்.(உ-ம்.)"அவனே- யல்லாதுவேறுசிலர்" (பாரத. பதினெட்.ச.)

அல்லாந்து— அலம்வந்து. (புறப்பொருள் வெண். கசுஅ. பக்.)

அல்லாமல்— அன்றியெனப் பொருள்ப டும் ஒருகுறிப்புவினையெச்சம். (உ-ம்.) " மரு வுயிர்க்கு நாண்மலர்க்குமாமதியுமல்லாமல் " (நைட. த. அன்னத்தைத்தூ. கஅ.)

அல்லாமை—கெட்டகுணம். (உ-ம்)" வா ஞ்சைமுதலா-வல்லாமையெத்தனை" (தாயு. ஆநந்த. க.)

அல்லார்— அல்லாதார். (உ-ம்.) "அல்லார் செயுங்கேண்மையாகாதே"(நன்னெறி.ஙஅ.)

அல்லாரி--1. வெள்ளாம்பற்பூண்டு. 2. அ டார்த்தியின்மை. [வழக்.]

அல்லால்—அல்லாமல். (உ-ம்.) "அஞ்சாமையல்லால்"(வள். ௪௬௭.)["ம"தொக்கது.]

அல்லி—1. அகவிதழ். (உ-ம்.) "அல்லியங் கமலந்தன்னிலரிவையும்" (கந்தபு. திருக்கல். ௭௩.) 2. ஆம்பல். [அல்-இரா. இ-விகுதி. இராக்காலத்தில் மலரும்புட்பம் என்பதுபற்றிவந்தபெயர்] 3. இரா. 4. இளவேர்.[வழக்.] 5. காயாமரம். (சூ. நிகண்.௧௧.௯௧ம. அ.) 6.பூந்தாது.(உ-ம்.)"அல்லியங்குழலாடன்னை"(அரிச்சந். விவாக. ௨௩.)

அல்லிகம்—பேய்க்கொம்மட்டிக்கொடி.

அல்லிப்பிஞ்சு—பூவிழாதபிஞ்சு.

அல்லியத்தொகுதி— விட்டுணுவின் கூத்துக்களுளொன்று; அது: மாதுலனாகிய கஞ்சன் அனுப்பிய யானையின்கொம்பினை முறித்தற்காடியது. (உ-ம்.) "கஞ்சன் வஞ்சங்கடத்தற்காக- வஞ்சனவண்ணனாடியவாடலு-ளல்லியத்தொகுதியும்" (சிலப். கடலாடு. ௪அ.)[முகம், மார்பு, கைகால்களின்வட்டணை, அபிநயமுதலியன இருந்தந் தொழில்செய்யாது நிற்றலின்பெருகுதியென்றார்.]

அல்லியம்—1 அவலட்சணம். 2. இடையர்ஊர். 3. உழக்கூடியது. 4. உழுதல். 5. கொட்டிப்பூண்டு. 6. விட்டுணுவின்கூத்துளொன்று; அது: மாதுலனாகியகஞ்சன் அனுப்பிய யானையின்கொம்புமுறித்தற்காடியது.(உ-ம்.) " அல்லிய மாயவனாடிற்றதற் குறுப்புச்- சொல்லுபவாறுமெனல்" (சிலப். கடலாடு. ௪அ. உரை.) [1, 3, 4. ஸம்ஸ்.]

அல்லியன்—தன்குழுவைப் பிரிந்தயானை. [ஸம்ஸ். இஃதலியனெனவும்வழங்கப்படும்.]

அல்லியாமரம்—படவுவலிக்குந் தண்டு.

அல்லியான்— பிரமா. (உ-ம்.) " அல்லியானரவைந்தலைநாகப்பள்ளியான் " (தேவார. திருக். ௧. திருநாவு.]

அல்லியை-கலப்பைசகூட்டம்.[ஸம்ஸ்ா.]

அல்லு—முடைதல். [தெலுங்கு.]

அல்லூரம்—வில்வமரம்.

அல்லேம்— அன்மைப்பொருளில் தன்மைப்பொருளில் தன்மைப்பன்மையில் அல்லது ஒருமைச்சிறப்பில் வரும் ஒரு குறிப்புவினைமுற்று. (உ-ம்.) "நின்பாற்காய்சினங்கொண்டேமல்லேம்" (கந்தபு. காவிரிநீ. ௯௦.)

அல்லேன்— அன்மைப்பொருளுடைத்தாய்த் தன்மையொருமையில் வரும் ஒரு குறிப்புவினைமுற்று. (உ-ம்.) " கண்டவிவையல்லேனுன்" (சி. சி. ௧: எ.)

அல்லை—1. அல்லாய் எனப்பொருள்படும் ஒரு முன்னிலை யொருமைக் குறிப்புவினைமுற்று. (உ-ம்.) "காதரமார்தருமநமே கமலமலராயனல்லை" (கோயிற்பு. பாயிர. ௨௩.) 2. உணவுக்குரிய ஒருவகைக் கிழங்கை விளைக்கும் ஒருகொடி. 3. தாய். [ஸூா. நாடகவழக்கில் வந்தது.]

அல்லோர்— முன்சொல்லப்பட்டவர்க்கு மாறுகொண்டவர். (உ-ம்.) " அன்புளோரல்லோராயவாசமண்டலங்களெல்லாம்."(இரகு. மாலை. ௧௨அ.)

அல்லோன்—1. சந்திரன். (சூ. நிகண். ௧: ௫௯.) [அல் - இரா. இரவுக்குடையவனென்றபடி.] 2. முன்சொல்லப்படாதோன்.

அல்வழி— 1. அல்லாதவழி. 2. (இலக்கணம். ) ஐ முதலிய வேற்றுமைப்பொருளில் வாராத நிலைமொழியை மற்றொரு மொழி தொடருஞ்சந்தி. அச்சந்தி: வினைத்தொகை, பண்புத்தொகை, உவமத்தொகை, உம்மைத்தொகை, அன்மொழித்தொகை, எழுவாய்த்தொடர்,விளித்தொடர், பெயரெச்சத்தொடர், வினையெச்சத்தொடர், தெரிநிலைவினைமுற்றுத்தொடர், குறிப்புவினைமுற்றுத் தொடர், இடைச்சொற்றொடர், உரிச்சொற்றொடர், அடுக்குத்தொடர் எனப் பதினான்குவகைப்படும். (உ-ம்.) "அல்வழி- தொழில்பண்புவமை யும்மை யன்மொழி-யெழுவாய்விளியீரெச்சமுற்றிடையுரி- தழுவுதொடரடுக்கெனவீரேழே" (நன். உயிரீ. உ.)

அல—1. அல்ல என்னுங்குறிப்புவினைலகாரந்தொக்க ஒரு விகாரமொழி. 2-3.அலவென்னேவலுந் தெரிநிலைவினைப்பகுதியும்.

அலக்கண்—துன்பம். ( உ-ம். ) "ஆதலாலெங்களலக்கணசுற்றிடுவான் " (கந்தபு. தேவர்புல. ௨௪.)

அலக்கணம்—1. அதிவியாத்தியவ்வியாத்திமுதலிய தோஷங்களைவிலக்கிச் சொல்லப்படாத அர்த்தவசநம். 2. இலக்கணமின்மை, குறிகளின்மை. [ஸ; லக்ஷண- இலக்கணம்.]

அலக்கிநம்— இலக்கிநமல்லாதது, துட்டலக்கிநம். [ஸம்ஸ்.]

அலக்கியம்—1. அற்பகாரியம், தோற்றத்திற்சிறியது. 2. அறியப்படாதது. 3. இலக்கியமல்லாதது. ( தர்க்க. பிரத்தியக்க நிரூபணம். ௫௫. ) ["ஈண்டுச்சீவப்பிரத்தியக்கமேயிலக்கியமாகலானும், ஆண்டையீசுவரப்பிரத்தியக்கமலக்கியமாகலானுமென்க"] 4. காணப்படாதது. 5. விசேடக்குறிகளல்லாதது. [ஸம்ஸ்.]

அலக்கு—வரிச்சுக்கொம்பு. (உ-ம்.)"அந்தமின் மனையினீமெலக்கினையறுத்து வீழ்த்தார்" (பெரியபு. இளையா. கக.)

அலக்கைச்சுரம்—கீழ்க்காய்நெல்லி.

அலகம்—1. யானைத்திப்பிலிப்பூண்டு. 2. வேப்பலகு.

அலகிடல்—1.அலகுவைத்துக்கணக்கிடல். 2. (யாப்பில) செய்யுளிலே சந்தம்வழுவாதமைத்தற்பொருட்டு அசைகளைக் கணக்கிடுதல். (உ-ம்.) "ஓசையேகுறிக்கொண்டொடுங்கவும் விரியவுமலகிடல்" (இலக்கணவி. எடுஉ.) 3. துடைப்பத்தால் இடத்தை விளக்கல். (உ-ம்.) "மேவுமாலயமலகிடன்மெழுகல்" (திருவாதவூர. திருப்பெ. சுக.)

அலகிடுதல்—அலகிடல்.

அலகின்மாறு—விளக்குமாறு. (உ-ம்.) "அலகின்மாறுமாறாதகலதி" (திருப்பு. ந அக.)

அலகு— (யாப்பில) 1. அசையுறுப்பாக எண்ணப்படுதல். (உ-ம்.) "ஆருமறிவ ரலகு பெறுமை" (யா - காரிகை. ஒழி. க.) 2. ஆயுதம். (சூ.நிகண். கக: லகர.க.) 3. இலகு அல்லாதது, கனத்தது. [ஸுஒமு; ஸு; ஒமு - இலகு.] 4. எண். (உ-ம்.) "அலகில் பல்வளஞ் சேர்த்தியவாவணம்" (நைடத. நகர. ந0.) 5. சதுப்பு, கொடிறு. 6. கூர்மை. (உ-ம்.) "அலகம்பனகண்" (வாண. உருசு.) 7. கொருகு. (பிங்க. ந0ககக.) 8. சலாக்கு. 9. நுளம்பு. (பிங்க. ந0ககக.) 10. நெய்வோர் பாவோடற்கு நிரையாக நாட்டுந்தடி. 11. நெல். (உ-ம்.) "அலகுடைநீழலவர்" (வள். க0நசு.) [அல்கு - கதிர். அஃதாகுபெயராய் நென்மேலதாயிற்று.] 12.நெற்கதிர் முதலியகதிர்.13. பல்கறை. (உ-ம்.) "அலகையன்னவெள் வேர்ப்பீலி" (மலைபடு. உருசு.) 14. பறவை மூக்கு. (உ-ம்.) "குயிலலகாற்பல்லவங்கள் கோதுமாலோ" (பாரத. காண்ட. உ.) 15. பிடியிற்செறித்த ஆயுதங்களிற்பிடியொழிந்த பாகம். 16. பொன்னாங்காணி. (இராசவைத்.) 17. மகிழம்விதை. (சூ. நிகண். சுஈசு.) 18. மின்மினி. 19. விசாலம். 20. விளக்குமாறு. (உ-ம்.) "செருப்படியுநாயடியுந் திருவலகான் மாற்றியபின்" (பெரியபு.கண்ணப்ப. கருஅ.)

அலகுசோலி—அறுகம்புல்.

அலகுஞ்சம்—1. நுளம்பு. 2. மின்மினி.

அலகுநிலை— கூட்டல், பெருக்கல் முதலியவற்றான் வரும்பெயர்.

அலகுநிறுத்தல்— திரௌபதியம்மைகோவிலிலே உற்சவத்திற்குமுன்னே வாள் நாட்டிக் காப்புக்கட்டிச் செய்யும் ஒரு கிரியை.

அலகுபருப்பு—பட்டாணிப்பயறு.

அலகுபனை—1. ஆண்பனை. 2. ஒருவகைப் பனை. [அது நீண்ட தட்டையோலையுள்ளது.]

அலகுபாக்கு— வெந்நீரில் அவித்து நிறமூட்டப்பட்ட பாக்குச்சீவல்.

அலகுபோடல்— நாக்கிலே யிரும்புமுதலியவற்றாலாய கம்பி குத்திக்கொண்டு சுவாமிக்குமுன்னாடுதல்.

அலகுவிறைப்பு—குளிர்பிடித்து வாய்கிட்டுதல்.

அலகை— 1. காட்டுக்கற்றாழை. 2. பிசாசம். (உ-ம்.) "தற்பாவகனுனைத்தன்மையாலலகையீட்டம்" (கந்தபு. மேரு. உக.) 3. பேய்ச்சும்மட்டிக்கொடி.

அலகைக்கொடியாள்—காளியம்மை.(பிங்க. கககூ.) [பேய்வடிவமைக்கப்பட்ட கொடியினையுடையாள்.]

அலகைத்தேர்—கானலாகிய பேய்த்தேர்.

அலகைமுலையோடாவியருந்தினேன்—கிருஷ்ணன். (சூ. நிகண். க: கரு.) [மாமனாகிய கஞ்சன் மாதாவடிவங்கொண்டுசென்று முலைப்பாலூட்டித் தன்னைக்கொல்லும்படி யனுப்பிய பூதனையென்னும் பிசாசின்முலைப்பாலருந்துவார்போன்றுயிரையுமுண்டானென்பது பாரதகதை.]

அலங்கிருதம்—அலங்கிருதம். (உ-ம்.) "அலங்க்ருதமணிமவுல் யானவொருபதும்"(திருப்பு. உ0சு.)

அலங்கடை—அல்லாவிடம். (உ-ம்.) "மூன்றலங்கடையே" (தொல். எழுத்தி. க.) [அல் - அல்லாத. அம்- ஒருசாரியை. கடை-இடம்.]

அலங்கம்—1. அரண். (உ-ம்.) "தெண்டிரையலங்கத்துப்புக்குலவி" (திருப்பு. சுகஎ.) 2. கொத்தளம். 3. மதிலின்றுருறுப்பு.[அல்- மதில். [ஸுமீ - மதில். ஸுமு- உறுப்பு.]

அலங்கரணம்— அலங்கரித்தல். [ஸுஒ - அணி. ஸுரண - செய்தல்.]

அலங்கரி—1-3. அலங்கரியென்னேவலுந் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும்.

அலங்கரித்தல் — அலங்காரஞ்செய்தல். (உ-ம்.) "நாயகனுந்திருமேனிநலங்கிளரவலங்கரித்தான்" (கோயிற்பு. பதஞ். க0.)

அலங்கரிப்பு—அலங்கரித்தல்.

அலங்கல்—1. அசைதல். (உ-ம்.) "அலங்குளைப்புரவியையவொரோடுசினைஇ" (புறநா. உ.) 2. இரக்கம். (பிங். ௩௦கஉ.) 3. ஒளிசெய்தல். (உ-ம்.) "அலங்குவெண்மதியைப்பசியடைய" (சிந்தா. கநக. உகச.) 4. தளிர். (சூ. நிகண். ச: சஎ.) 5. தாழை. (இராசவைத்.) 6. பூமாலை. (உ-ம்.) "நறைவிரியலங்கன்மார்பிற்றிளைத்தலின்" (நைடத. அன்னத்தைக் கண். கஎ.) 7. மங்கலங்கல்.

அலங்கனரி— முத்துச்சிப்பி. [அலங்கல்- ஒளி. நாரி - பெண்.]

அலங்காரநைவேத்தியம்— சுவாமி முன்னிலையிலே வெளியிற் செய்யும் நைவேத்தியம்.

அலங்காரப்படுத்தல்— அலங்காரஞ்செய்தல்.

அலங்காரபஞ்சகம்— தொண்ணூற்றாறு பிரபந்தங்களிலொன்று; அது: வெண்பாவும், கலித்துறையும், அகவலும், ஆசிரியவிருத்தமும், சந்தவிருத்தமு முறையே மாறிமாறி நூறுசெய்யுள் அந்தாதியாகவரப் பாடப்படுவது. (உ-ம்.) "வெள்ளைகலித்துறையகவல் விருத்த - மெள்ளவில்வண்ணமிவையோரைந்து-மலங்காரபஞ்சகமாகுமென்ப" (இலக்கணவி. அசச.)

அலங்காரம்— 1. அழகு. (உ-ம்.) "அலங்காரகிகழாங்கு" (செந்தினிரோட். ச.) 2. ஆபரணம். (உ-ம்.) "பாம்பலங்காரப்பரன்" (திருக்கோ. கக.) 3. உடை, உத்தரீயம், ஆபரணம் முதலிய அணிகளாற் சிறப்பித்தல். 4. சிங்காரம். (பிங். ககூ௫.) 5. பஞ்சலக்கணத்துளொன்று; அது: சொற்சுவை, பொருட்சுவைகளோடு வாக்கியம் எழுதும் முறையைக் கூறுவது. [இதனை அறுபத்துநான்கு கலைஞானங்களுளொன்றென்பர்.] 6. வாசகச்சுவை. [அலம்- அணி. காரம்- செய்தல்.]

அலங்காரித்தல்—அலங்கரித்தல். (உ-ம்.) "அயலலங்காரித்து" (தணிகை. அகத். கசுந.)

அலங்கியம்—கடத்தற்கரியது. [அலங்க்யம்: அ; லங்க்யம் - கடக்கத்தக்கது.]

அலங்கிருதம்—அலங்கரிக்கப்பட்டது. [அலங்க்ருதம்: அலம் - அணி. க்ருதம் - செய்யப்பட்டது.]

அலங்கிருதி—அலங்காரம். [அலம் - அணி. க்ருதி - செய்யப்பட்டது.]

அலங்கு— 1-3. அலங்கென்னேவலுந்தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். 4. அலங்குதல். [ஒரு முதனிலைத்தொழிற்பெயர்.] (உ-ம்.) "முடங்குளையலங்குறுமுதியபூநுதல்" (கந்தபு. மார்கக. அஎ.)

அலங்குதல்—1. அசைதல், அலைதல். (ஐங்குறு.) 2. இரங்குதல். 3. ஒளிசெய்தல். (உ-ம்.) "நிகரிலாதநம் - மறையருளாலடைந்தலங்குமுத்தியில்" (சூத. முத். அ: அச.)

அலங்கை— துளசிப்பூண்டு.

அலங்கோலம்—1. கிரமமின்மை. 2. கோலக்கேடு. [வழக்.]

அலச்சை— இலச்சையின்மை. [அலஜ்ஜா: அ; லஜ்ஜா - நாணம்.]

அலசகம்—1. சோம்பு. 2. வாயுப்பொருமல்.

அலதசட்டம்—ஒருவகைக் குட்டரோகம்; அது: இரத்தநிறமாக ஆற்றிற் கிடக்குஞ் சிறுசிறு கூழாங்கல்லுகளையொத்த கொப்புளங்கள் பிறந்து உடைந்து இரணங்களாக வருவது. (சீவரட். கசகூ.)

அலசத்துவம்—சோம்புத்தன்மை. [அலஸத்வம்: அலஸ - சோம்பு. த்வம் - தன்மை.]

அலசம்—1. ஒருமரம். 2. சோம்பு. 3. பொத்தைக்கால், யானைக்காலேநாய். 4. மந்தம். (உ-ம்.) "சர்த்திதலைநோயலசம்" (தைல. தைலவ. அ.) [அலஸ.]

அலசரோகம்—மந்தத்தினால்வரும் ஒருவகைக் கொடியரோகம். (சீவரட். அகூ.) [அலஸ- மந்தம்.]

அலசல்— 1. அநுகூலமாகாதவேலை. 2. அலைவு. 3. இழையைதானவத்திரம். 4. கழுவுதல். 5. சிந்துண்டுகிடப்பது. 6. சோம்பல். 7. சோர்வு. (உ-ம்.) "அவன்செயத் திருவுடம்பலச நோற்கின்றான்" (இராமா. சூர்ப்பநகி. கஅ.)

அலச்விரணரோகம்— விரணபேதங்களுளொன்று; அது: அழுகற்சேறு முதலியவற்றைப் பலதரம் மிதித்தலினாலே பாதங்களினேரங்களிலும் உள்ளங்கால்களிலும், விரற்சந்துகளிலுந் தினவோடுண்டாகும் வெளிறினபுண். (சீவரட். ௩கஉ.)

அலசி— ஒருவகை நத்தை.

அலசிரோகம்— 1. ஒருவகைக் குய்யரோகம்; அது: ஆண்குறியினின்றும் மேகத்தை விழச்செய்து, விரணத்தையுண்டாக்குவது. (சீவரட். ௩கரு.) [அலசி - மேகவிரணம்.] 2. வெள்விழிக்கும் இமைச் சந்திக்கும் இடையில் வரும் ஒருவகை ரோகம்; அது: கருவி

ழிக்குள் வீக்கத்தைப் பிறப்பிக்கும். (சீவரட். உசஅ.) [ஸம்ஜி.]

அலசிவர்த்நமரோகம்– இமைகளில்வரும் ஒருவகைரோகம்; அது: கருவிழிக்குவெளியிற் சிவந்த கட்டிகளைப் பிறப்பித்து ஓயாத பீளையைத் தருவது. (சீவரட்.உசடு.)[ஸம்ஜீ- வீக்கத்தையுடையது. வத்ம - இமை.]

அலசு— 1-3. அலசென்னேவலுந்தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். 4. வருந்துதல். [இது:ஒருமுதனிலைத் தொழிற்பெயர்.] (உ-ம்.) "ஐதின்மேனியலசுறயான்றவஞ்செய்து" (கந்தபு. மாயைப். எக.)

அலசுதல்— 1. கழுவுதல். 2. தளர்தல், வருந்துதல்.

அலஞ்சரம்—நீர்விட்டுவைக்கும் மட்சாடி. [ஸம்ஜர.]

அலட்சிதம்— அறியப்படாதது, காணப்படாதது. [ஸலக்ஷித:]

அலட்சியம்— அலக்கியம், அற்பகாரியம். (உ-ம்.) "அச்சிறியவனுக்காக இப்பெரியமந்திரமநுசிதமென்பான் மந்திரம்வேண்டுமோ மற்றிதற்குமே" என்றலட்சியமாகக் கூறினன். (கந்தபு. சூரனமைச். டுடு. உரை.) [ஸலக்ஷிய.]

அலட்டல்—அலட்டுதல்.

அலட்டி—அலட்டுகிறவன்.

அலட்டு—1-3. அலட்டென்னேவலுந்தெரிநிலை வினைப்பகுதியும் வினைத்தொகையும். 4. அலட்டுதல். (உ-ம்.) "யோக்கியர்தம்மைத்தேடியீங்கிடாதொருவன்கூறும் - வாக்கியத்தலட்டுக்கீதல்" (மச்சபு. பத்திமான். உஉ.) 5. பிதற்றுகை.

அலட்டுகை—அலட்டுதல்.

அலட்டுச்சந்நி— பிதற்றுங் குணமுடைய சந்நிநோய்.

அலட்டுதல்—1. பிதற்றுதல். 2. வீண்வார்த்தைகளை மேலு மேலும் பேசுதல்.

அலத்தகம்—செம்பஞ்சுக்குழம்பு. (உ-ம்.) "அங்கலார்தமலத்தகமலர்த்தாணீவி" (நைடத. நாட்டு. உக.) [ஸலக்தக.]

அலத்தம்—1. செம்பஞ்சுக்குழம்பு. 2. செம்பருத்திப்பூண்டு. [ஸலக்த.]

அலத்தல்—1. அலைதல். (உ-ம்.) "ஐவர்வந்துமுறைமுறை துயரஞ்செய்ய- வற்றுநானலந்துபோனேன்" (தேவா. திருவாரூ. அ. திருநாவு.) 2. ஆசைப்படுதல். 3. துன்பமுறுதல். (உ-ம்.) "அலந்திலர்செருக்களத்தஞ்சினாலர்" (இராமா. கிங்கர. ருஅ.) 4. வறுமைப்படல். (உ-ம்.) "அலத்தற்காலையாயினும்" (புறநா. கஙஅ.)

அலத்தி—நுளம்பு, மின்மினி.

அலத்துவம்—மிக்கதன்மை. (அகராதிகாரர் அலத்துவமென்பர்.) [ஸஅலம் - மிகுதி. த்வ - தன்மை.]

அலதரன்—1. உழவுகாரன். 2. பலராமன். [ஹலதர: ஹலம் - கலப்பை. தர - தரித்தவன்.]

அலது— அல்லதென்பதில்மெய்லகரந்தொக்க ஒருவிகாரமொழி. (உ-ம்.)"பூதங்கள் பேய்க்கோலமாய் விதண்டைபேசுமோ வலது தான்பரிபாககாலம்பிறக்கவில்லையோ"(தாயு. எங்கு. எ.)

அலந்தம்—மெய்யீறு. (உ-ம்.) "ஆயுமலந்தமசந்தமலாதியசாதியிவை - மாயுமெய்யீறுயிரீறுயிராதி மதிநுதலாய்" (பி. வி. சசு.) ஹலந்த - மெய்யெழுத்து. அந்த - ஈறு.]

அலந்தல் —செங்கத்தரிப்பூண்டு.

அலந்தலை— 1. துன்பம். (உ-ம.) "அலந்தலைப்பட்ட சிந்தையனுகி" (உபதேச. சஙகாதி. உங.) 2. மயக்கம். (உ-ம்.) "அலந்தலையுற்றவரும்புலன்களைந்தும்" (இராமா. கைகேசிசூழ். கங.)

அலந்தார்—1. துன்பமுற்றவர். (உ- ம்.) "அலந்தாரையல்லனோய்செய்தற்றால்"(வள். கஙOங.) 2. வருமையுற்றவர். (உ-ம்.) "அலந்தார்க்கொன்றீந்தபுகழும்" (திரிகடு. சக.)

அலந்து—நொந்து. (புறப்பொருள்வெண்)

அலந்தை—1. குளம். (உ-ம்.) "இருடீர்மலயமுனியலந்தையிராமனிலஞ்சியிலக்குமன்பேர்ப்பொருவிலோடை" (சேதுபு. சேதுவந்த. சச.) 2. துன்பம்.

அலந்தோர்— 1. துன்பமுற்றவர். (உ-ம்.) "அலந்தோர்க்களிக்கும்பொலம்பூட்சேஎய்" (திருமுருகாற்று. உஎக.) 2. வருமையுற்றவர்.

அலப்படை— கலப்பைப்படை. (உ-ம்.) "அலப்படை - யண்ணலாம்பலபத்திரவாண்டகை" (காஞ்சிபு. பலபத். உ.)

அலப்படைகோண்டோன்— பலராமன். (சூ. நிகண். க: கO.)

அலப்பல்—அலப்புதல், உழறுதல்.(பிங்க. உககஅ.)

அலப்பன்—வீண்பேச்சுக்காரன். [வழக்.]

அலப்பாரித்தல்—வீண்பேச்சுப்பேசி யாரவாரித்தல்.

அலப்பியம்— அடையக்கூடாதது. [ஸ (அ) : ஃ; ஸ (அ) - அடையத்தக்கது.]

அலப்பிருத்து—1. உழுகிறவன். 2. டலராமன். [ஹல-ப்ருத்: ஹல-கலப்பை, ப்ருத்-தரித்தவன்.]

அலப்பு—1-3. அலப்பென்னேவலுந்தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும்.

அலப்புதல்— 1. வீண்பேச்சுப்பேசுதல். 2. ஆரவாரித்தல். 3. அலட்டுதல்.

அலபதுமம்— நிருத்தக்கைமூப்பத்தனுளொன்று. (சிலப். அரங்கேற்று. கஉ.உரை.)

அலம்— 1. அடைதல். 2. அணி,பூடணம். 3. அமையுமெனல், போதுமெனல், வேறு வேண்டாமெனல். (உ-ம்.) "அல்லற்பிறவியலமலம் விண்ணுடுமைறந்து-தொல்லைத்திருநகருந்துன்புமலமலமால்" (கந்தபு. சயந்தன்பு. எஎ.) 4. அமைவு. (உ-ம்.) "அலநதருமறிவான்மூத்தோ ரனைவருமிசைய" (திருவிளை. மாமனு. கஉ.) 5. அலமரல். (உ-ம்.) "சித்தமமைவில்லை" (சி. சி. அ: நஉ. சிவாக்.) 6. கலப்பை. (உ-ம்.) "சிலையலங்கணிச்சிவெண்ணெய்தெவ்வி" (தணிகை. நாட். உக.) 7. சஞ்சலம். (உ-ம்.) "அலமகன்முத்தியுண்டாம்" (சூத. எக்கி. பூ. உ: அ.) 8. சாமர்த்தியம். 9. தேள். (திவாகர.சஉ.பக்.) 10. தேளினவாலிற்கொடுக்கு. 11. பொன்னரிதாரம். 12. மிகுதி. (உ-ம்.) "ஆசலம்புரியைம்பொறிவாளியும்" (இராமா. ஆற்று. ச.) 13. மூழுதம். (உ-ம்.) "புலன்களிற்பழகிச சித்தம்பூண்டவாதனைகண்மூன்னே - யலம்பெறமாற்றி" (ஞானவா. முதல்.கசன். கo.) 14. விருச்சிகராசி. [1,2, 3, 4, 8, 10, 11, 12, 13. ஸ; 6. ஹலம்.]

அலம்பசன்—ஓரரக்கன். (பாரத. எட்டாம். உக.) இவன் துரியோதனனுக்காகப்போர்க்குவந்தவன்.

அலம்பல்—1. அலக்குத்தடி. 2. ஆரவாரித்தல். (உ-ம்.) "மாடலம்பினமாமணித்தேர்மணி - பாடலம்பினபாய்மதயானையே" (இராமா. முதற்போர். கஎ.) 3. கழுவுதல். 4. ததும்பல். 5. தவறல். 6. தொந்தரவு. 7. பிரயாசம். 8 வீண்பேச்சு. [வழக்.]

அலம்பிறத்தல்—திருத்திபிறத்தல்.(உ-ம்.) "அந்தரியாசனத்திலேமனதலம்பிறவாமல்" (சி. சி. கூ: கக. சிவாக்.)

அலம்பு—1-3. அலம்பென்னேவலுந்தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். (உ-ம்.) "மட்டலம்புகோதையார்" (திருவிளை. வளை. நச.) 4. தசநாடியிலொன்று. (சிலப். அரங்கே. அச. பக். உரை.)

அலம்புசை— 1. அப்சரஸ்திரீகளுளொருத்தி. (உ-ம்.) "அவர்தமிற்சிலர்நடித்தபினலம்புசைநாமத் - துவரிதழ்க்கொடியாடினள்" (சேதுபு. விதூம. கக.) [ஸ-ஷா: இங்கே ஷகாரஞ்சகாரமாயிற்று.] 2. பத்துநாடிகளிலொன்று. அது: மூலாதாரநதொடங்கி யிடதுகாதளவுநிற்பது. (வேதா. தத். டுஎ.)

அலம்புடம்—1. வாந்திசெய்தல். 2. விரல்கள் விரிதத உள்ளஙகை. [ஸ-ஷ.]

அலம்புடை— (தசகாரியம்.) அலம்புசை; இது: தசநாடிகளிலொன்று. "அலம்புசை" பார்.

அலம்புதல்— 1. அதிர்தல். (உ-ம்.) "சிறிநந்த-வலமபுமோதையால்" (ஞானவா. பிரகலாத. டுகூ.) 2. கழுவுதல். (உ-ம்.) "வைத்தசுவாலமபின்மண்போமோ" (தாயு. பரா. உககச.) 3. ததும்புதல். (உ-ம்.) "கள்ளலம்புற்றதண்டார்" (கந்தபு. எமகூட. உஉ.)

அலம்புருடன்— தசநாடிகளிலொன்று.இது: கண்களிலே நிற்பது.

அலம்புநடை— அலம்புருடன்.

அலம்வரல்—1. அமைவுண்டாதல்.(உ-ம்) "அலம்வரவடியேற்கருளுவாயே" (திருப்பு. டுஅச.) 2. சுழலுதல். (உ-ம்.) "அங்குமிங்குமாகியலம்வருவோர்" (சி. சி. அ. நக.)

அலமந்த — ஒரு தெரிநிலைவினைப்பெயரெச்சம். (உ-ம.) "அலமரல்" பார். [இஃது "அலமரு" என்னும் பகுதியினின்று பிறந்தது.]

அலமந்து—அலமரு என்னும் பகுதியினின்று பிறந்த ஒரு தெரிநிலைவினையெச்சம். (உ-ம்.) "ஓடியலமந்து" (கோயிற்பு. இரணி. உஅ.)

அலமரல்—1. அசசங்கொள்ளல். (உ-ம்.) "ஐமேலுந்தியமலந்தபோதாகவஞ்சேலென்றருள்செய்வான்" (திருவையாறு. திருஞான.) 2. இளைத்தல். (உ-ம.) "அலமந்து" பார். 3. கலங்கல். 4. சுழலல். (உ-ம்) "வளரிவண்டினங்களலமருங்கழனி" (நைடத. அன்னத்தைத்தூ. கo.) 5. துன்பமுறல். (உ-ம்.) "அமுதாற்றியலமநதாரே" (பாரத. பதினெட். கக.)

அலமரு—1-3. அலமரு என்னேவலுந்தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும்.

அலமலத்தல்—1. அங்கலாய்த்தல். 2. மனங்கலங்கல். [வழக்.]

அலமலாத்தல்— 1. அங்கலாய்த்தல். 2. கலங்கல். 3. சுழலல். [வழக்.]

அலமாரி— 1. அவாவுள்ளோன். [அலவாரியென்னுஞ்சொல் இதன் அபத்தத்திரிபென்பர்.] 2. ஒருவகையான மரப்பேழை. [வழக்.]

அலமுகவிநம்பு — கலப்பையின் கொழு. (உ-ம்.) "அலமுகவிரும்புதேய" (திருவிளை. நாட். சக.) [ஹல - கலப்பை.]

அலமுறல்— துன்பமடைதல். (உ-ம்.) "தந்தைதாயை-யிழந்தலமுறுமினென்னு" (திருவிளை. பன்றி. எ.)

அலயம்— 1. உற்பத்தி. 2. ஒடுங்காமை, அழியாமை. 3. நிலையுண்மை. [அ - எதிர்மறை. லய - அழிவு.]

அலயன்— 1. அழிவில்லாதவன். [லய - அழிவு.] 2. வீடில்லாதவன். [அலய: அ; லய - வீடுடையவன்.]

அலர்— 1-3. அலரென்னேவலுந்தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். 4. நீர். (பிங்க. ருஎ.) 5. பலரறிந்து பழிதூற்றல். (உ-ம்.) "அலரொமக்கீந்ததிவ்வூர்"(வள். ககசஉ.) 6. பழிச்சொல். (உ-ம்.) "அருந்தவந்தபுள்ளார்த்தலர் தூற்றுமால்" (நைடத. நகர. உக.) 7. பூமாலை. (உ-ம்.) "நீயன்று சூட்டலர்" (வாண. உஅரு.) 8. மகிழ்ச்சி. (பிங்க. கூ0கூச.) 9. மஞ்சள். 10. மலர்ந்தபூ. (உ-ம்.) "அலரின்வண்டளகத்தலர்பாயவன" (தணிகை. நாட். க0சு.) 11. மிளகுகொடி.

அலர்க்கம்—1. ஒருவகைக்கிருமி. 2. விசர்நாய். 3. வெள்ளெருக்கு.

அலர்ச்சி—அலர்தல்.

அலர்த்தல்—1. மலரச்செய்தல். (உ-ம்.) "பருதியலர்த்திடுவதுபோல்" (சி.சி. கக: அ.) 2. விரித்தல். (உ-ம்.) "கரகமலப்போதலர்த்தித்தாங்கினன்"(திருவிளை.வெள்ளையா.ரு.)

அலர்த்தி—அலர்ச்சி.

அலர்தல்—1. பரத்தல். (உ-ம்.) "அலர்தலைமாநிலம்பரக்கும்" (நைடத. சிறப்புப்பாயிர. க.) 2. பருத்தல். (உ-ம்.) "கனஞ்சேர்தலர்ந்துளி காலுமுன்னே" (வாண. உசுக.) 3. மலர்தல். (உ-ம்.) "தாமரையலர்ந்தபூந்தடம்" (நல். பாரத. நகர. உக.)

அலர்ந்தபூ—1. கொத்தான்செடி. 2. மலர்ந்தபூ.

அலர்ந்திடுதல்—மலர்தல். (உ-ம்.) "எழ்பரித்தேரவற்காணி னலர்ந்திடுதலியல்பன்றே" (நைடத. அன்னத்தைத்தூ. க00.)

அலர்மகள்—1. இலக்குமி. (உ-ம்.) "அலர்மகள் மலிதர வவனியினிகழ்பவர்" (தேவார. திருவீழி. க. திருஞாந.) 2. சரசுவதி. [அலர்-பூ; தாமரைப்பூவினிடத்திருக்கிறவள்.]

அலர்முகராகம்—பாத உறுப்புக்களுளொன்று.

அலர்வு—அலர்தல். (உ-ம்.) "வானின்முந்திரவியெதிர்முளரியலர்வுறுமொன்று" (சிவப்பிர. க: ரு.)

அலரவன்—பிரமன். (உ-ம்.) "அலரவன்முதலமரருமுநிவரும்" (சந்தபு. தெய்வ. உருசு.) [அலர் - பூ.]

அலராகின்று—அலராயிற்று. (ஐங்குறு.) [அலராகினது எ-து, அகரங்கெடத் தகரந் திரிந்தது.]

அலராங்கட்டு — பழிமொழியை அங்கே உடையது. (ஐங்குறு.)

அலரி—1. அலரிப்பூ. (உ-ம்.) அலரிவாய் கமழக்கூறினன்" (சிந். கநக. சுஉ.) 2. அழகு. 3. ஒருமரம். (உ-ம்.) "பாதிரியலரிபுன்னை" (சேதுபு. இராமநாத. ருரு.)[இதன்வேர் முதலியன நஞ்சுடையன என்பர்.] 4. கண்வரி. (பிங்க. கூ0கூரு.) 5. கோதுமை. 6. சூரியன். (உ-ம்.) "அலரியாதி-மிடிதுளக்குந் தேவர்தமை" (தணிகை. நகர. கசு.) 7. தேனீ. 8. நீராவி. 9. பூப்பொது. (சூ. நிகண். சுக. லகர. க.)

அலல்—அல்லல். (உ-ம்.) "அலலுறவனரியன்" (சைவச. ஆசா. எஅ.)[அது லகரமெய்கெட்டுவந்தவிகாரமொழி.]

அலவர்—உழுதொழிலாளர். (உ-ம்.) "அலவர்சாலிகொய்தண்ணுமை" (தணிகை. நாட். சகூச.) [ஹலா - கலப்பை.]

அலவல்—1. அலமரல். (உ-ம்.) "அலவலையுடையையென்றீதோழீ"(கலித்தொகை. கஉஉ.) 2. கன்னைதச்சீலை. 3. நூல்நெருங்காது நெய்தசீலை.

அலவலை— 1. ஆராயாது மநத்திலேதோற்றியதைச் செய்தல். (உ-ம்.) "அலவலைச்செய்திக்கஞ்சினன்" (மணிமே. கஎ-ஆங் கா. ருச.) 2. சீர்கெட்டநிலைமை. 3. புலம்பல். (உ-ம்.)"சிறைநின்றவலவலையில்லாக்குடியும்" (திரிகடு. ருச.) 4. பேச்சுக்காரன். (உ-ம்.) "அல்லவைசெய்யுமலவலையும்" (திரிகடு. கூகூ.)

அலவன்—1. ஆண்ஞண்டு.(பிங்க.உகூசஎ.) (உ-ம்.) "அலவன்பேட்டுடனம்புயச்சேக்கை

மேல்" 2. இஞ்சிரசம். (இராசவைத்.) 3. கர்க்கடகராசி. 4. சந்திரன். (சூ. நிகண். க:ரு௮.) 5. நண்டு. 6. பூனை. (சூ. நிகண். ௩: உக.)

அலவாங்கு— பிடிவேண்டாது முழுதும் இரும்பாற்செய்தபாரை. [வழக்.]

அலவாட்டு—வழக்கம். [தெலுங்கு.]

அலவாநிற்றல்—அங்கலாய்த்தல். (உ-ம்.) "அலவாநிற்குமன்பிலேன்" (திருவாசக. திருச்சத. ருச.)

அலவு—அலைதல். (உ-ம்.) "அலவுநுண்ணெளியருவிநீராம்பையராட" (இராமா. சித்திர. உரு.)

அலவுறல்—அலம்வருதல். (உ-ம்.) "நறையும்விரையுமோச்சியுமலவுற்று" (குறிஞ்சி. எ.)

அலவை—அல்லவை. (உ-ம்.) "அலவை சொல்லுவார்" (தேவா. பூந்தரா. ௫௦.) (திருஞாந.)

அலவைப்பெண்டிர்— வியபிசாரப்பெண்கள். (உ-ம்.) "அவமறைந்தொழுகுமலவைப் பெண்டிர்" (சிலப். இந்திர. கஉக.)

அலறல்—1. அழுதல். (உ-ம்.) "பொருமாகனைவிட்டிடலும் புவிமீதலறிப்புரள" (இராமா. நகர்நீ. எரு.) 2. ஓயாதுசத்தமிடல். (உ-ம்.) "சங்குகுலுனைந்தலறிய தடம்பணை" (நைடத. நாட். ரு.) 3. கமையிலாதழைத்தல். (உ-ம்.) "ஆதியென்றுமாரூராவென்றென்றேயலறுநில்லே" (தேவார. திருவாரூர். திருத்தாண்ட. க. திருநா.) 4. சிதறுதல். வழக்.]

அலறு—அலறென்னேவலுந் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும்.

அலறுசந்தி— அலறியலறியெழும்பச்செய்யும் ஒருவகைச்சந்நிபாதசுரம். (சீவரட். உக.)

அலறுதல்—அலறல்.

அலறுதலை— 1. காய்ந்ததலை. (ஐங்குறு.) 2. விரிந்ததலை. (உ-ம்.) "அலறுதலையோமே" (ஐங்குறு. ௩உக.)

அலன்றல்—சாதல்.

அலாக்கு—தீங்கு. [இந்துஸ்.]

அலாசம்—அடிநாக்கில் வரும் ஒரு நோய். [ஸுவாஸ: ஸு; லாஸ - உமிழ்நீர்.]

அலாதம்—1. கரி. 2. நெருப்புக்கொள்ளி. [ஸுலாத.]

அலாதா—1. தொழிற்படாதது. 2. வேறு. [இந்துஸ்.]

அலாதார்— ஒழிந்தபிறர். (உ-ம்.) "மின்னேரிடைமின்னேரிழைமென் கொம்பையலாதார்" (பாரத. அருச்சுனன்றவ. கஉ.) [இது அல்லாதார் என்பதில் லகரமெய்கெட்டது.]

அலாதி— மெய்யெழுத்துமுதல். (உ-ம்.) "அலந்தம்" பார். (பி.வி. சக.) [ஹல் - மெய். ஆதி - முதல்.]

அலாது—1. அல்லாதது. (உ-ம்.) "கடியுடன்வந்தளிக்கினலாது களிப்பரிதாம்" (தணிகை. களவு. ௩௩௦.) [லகாரமெய்கெட்டுவந்த ஒருவிகாரமொழி.] 2. தொழிற்படாதது. 3. வேறு. [2, 3. இந்துஸ்.]

அலாபத்திரம்— ஒற்றைக் கைக்குக்காட்டிய முப்பத்துமூன்றுவகையுள் ஒன்று; அது: சிறுவிரன்முதலாகிய ஐந்தும் வளைந்துமறிவது. (உ-ம்.) "அலாபத்திரமேயாயுங்காலை - புரைமையின்மிகுத்த சிறுவிரன்முதலா- வரன்முறையைந்தும் வளைந்துமறிவதுவே" (சிலப். அரங்கேற்று. கஅ. உரை.)

அலாபதம்—இலாமிச்சைச்செடி.

அலாபம்—1. அடையாமை. 2. இடையூறு. 3. ...ம். [ஸுலாஹ: ஸு; லாஹ - அடைதல்.]

அலாபு—சுரைக்கொடி. [ஸுலாபு: ஸு; லாபு - தாழ்தல்.]

அலாபுகம்—சுரைக்காய். (சீவரட். உஅஎ.) [ஸுலாபு:]

...புகரோகம்—ஒருவகைரோகம்; அது: ... ன் உட்புறத்திற் சுரைப்பிஞ்சுபோ ... டியகன்ற மாமிசகண்டமாய் வரும்; ... ற் சுவாசம் விடுதல் பிரயாசமாகும். (... உஅஎ.) [ஸுலாபுக:; ரோக.]

...யுதம்— கலப்பைப்படை. (உ-ம்.) "... ாயுதங்கொடுமுன் மேருமால்வரையை ... துவிற்கிடையிழுத்திடுங் - கிலாதன்" (கூ. மபு. அந்தகாசு. ருஎ.) [ஹல-கலப்பை. ஆயுத - படை.]

அலாயுதன்—பலராமன். (உ-ம்.) "அறிவுருவகையலாயுதன்முதல்வடமதுரை-செறியும்யாதவர்" (பாரத. அருச்சுனன்றீ. எஉ.) [ஹலாயுத:]

அலாரம்—கதவு. [ஸுலார.]

அலாரி—அலரிச்செடி.]

அலாரிதா—அலரிச்செடி.

அலால்—அல்லால். (உ-ம்.) "மாஞ்சஞ்சலப்படுமேலால்" (தாயு. பரிபூ. சு.) [லகரமெய் கெட்டுவந்தது.]

அலி—1. ஆண்பெண்ணல்லாதது. (உ-ம்.) "பெண்ணோடா ணலியாய்ப்பிறவாவுருவான வனே" (தேவா. திருக்கடவூர். சுங. சு.) 2. இயமன். 3. உழவுசால். 4. உழுவோன். 5. காகம். 6. குயில். 7. தேள். 8. நறுவிலிமரம்.(சூ. நிகண். ச: கஉ.) 9. நெருப்பு. 10. பலராமன். (உ-ம்.) "அலிமுகந்தொழுமிளவல்" (பாரத. பதினென். சக.) 11. விருச்சிகராசி. 12. வேளாண்மை 13. வைரமில்லாதமரம். [3, 4, 10, 12. ஹலிந், 5, 6, 7. அலி.]

அலிக்கிரகம்— ஆண்பெண்வகுப்பிற்சேராத கிரகம். அவை: சநி, கேது, புதன் எனமூன்றும். அஃது உள்ளமுடையான் கஉக-ஆங் கவியாற்பெறப்படும்.

அலிக்கை—ஆறுவகைக் கையினுளொன்று; அஃதும்: ஆறுவகையதென்பதுபின்னேகாட்டப்படுஞ் சுத்தாநந்தப்பிரகாசச் செய்யுளான் விளங்கும். (உ-ம்.) "சர்ப்பசிரம்வண்டு தனிமுகுளங் கத்தரிக்கை - விற்பனஞ்சேர்கோசங்கபித்தமுட- னற்புதமே- யாகுமலிக்கைகளாமென்றுரைப்பாரே- பாகமையமிசால்லாய் பரிந்து" (சிலப். அரங்கேற்று. கஅ. உரை.)

அலிகம்—நெற்றி. [அலி - அலங்கரித்தல். இக.- ஒரு வ-வி.]

அலிங்கம்—1. இலிங்கமல்லாதது. (உ-ம்.) "அலிங்கமென்றுணர்ந்துமையமாயடைந்தேன்" (வேதாரணியபு. கக்கிவ. சுo.) 2. குறிகளில்லாதது. [அலிங்கம.]

அலிச்சர்ப்பம்—ஒருவகைச் ; அது: மிருதுவுடன் நீண்டஉருவத்தை வனுத் தயடத்தையும் மந்தநடையையுட றைந்த தொனியையும் அற்பகோபத்தை உடை யது. (சீவரட். நகஅ.)

அலிஞ்சரம்—நீர்விட்டுவைத்திரு ம் மட்சாடி. [அலிஜர.]

அலிந்தம்—கோபுரவாயிலிறப்பிண்ணே.

அலிநாள்— ஆண்பெண் என்னும் வகுப்பல்லாத சாதிப்பட்ட நட்சத்திரங்களாகியமிருகசிரமுஞ் சதயமும். (வருஷாதி.)

அலிப்பேடு— அல்லியமென்னுங் கூத்து. (சிலப். கடலாடு. சஎ. உரை.)

அலிபகம்—1. கருவண்டு. 2. தேள். 3. நாய். [அலிவக.]

அலிபிஞ்ஞன்—எழுத அறியாதவன். [அலிபிஜ: அ; லிபி-எழுத்து. ஜ-அறிந்தவன்.]

அலிமரம்— முருக்குப்போல உள்ளாவது வெளியாவது வைரமில்லாத சாதிப்பட்டமரம்.

அலிமுகப்பாண்டுரோகம்—ஒருவகைப்பண்டு ரோகம். (சீவரட். கநகசு.)

அலியர்—அலித்தன்மையுடையவர், ஆண்மையில்லாதவர். (உ-ம்.) "அலியால்லதை யாண்டகையார் கொலோ" (கந்தபு. சூரன் றண். உகு.)

அலியன்—கமெரம்.

அலியெழுத்து—ஆய்த எழுத்து.

அலிவேதம்-- (சைநம்) மோகனுவாணியத்தொன்று. (சி. சி. அ: கஉ. மறை.)

அலீகம்—1. நெற்றி. 2. பொய். 3. வானம் 4. வெறுப்பானது. [அலீகம.]

அலீசா—1. கிண்டன்சீலே. 2. தோணிவலிக்குந்தண்டு.

அலு— 1-3. அலுவென்னேவலுந் தெரிநிலேவினைப் பகுதியும் வினைத்தொகையும். 4. நீர்விட்டுவைக்குஞ்சிறுகுடம். [அலூ.]

அலுக்கு—(குடத்தைவளைந்தானென்பதிற்போல) வேற்றுமையுருபு வெளிப்பட்டுநிற்குந் தொடர். (உ-ம்.) "நித்தமநித்தமலுக்குலுக்காந்தொகை" (பி. வி. உஎ.) [அலூக்.]

அலுக்தந்து—மகமதியர் அணியும் ஒருகாதணி. [அடாந்வா.]

அலுக்குதல்—பிலுக்குப்பண்ணல்.

அலுக்குலேதல்--- 1. அடுக்குக்குலேதல். 2. தாறுமாறுதல். [வழக்.]

அலுக்குலேவு— அலுக்குலேதல்.

அலுசிலும்பல்— ஒழுங்கின்மை, குழம்பல். (திசை.)

அலுத்தசத்தி—பேரருளுடைமை. (சி. சி. பாயிர. க. சிவஞா.) [அ-எதிர்மறை. லுப்த-குறைவு.]

அலுத்தம்—1. ஆசையின்மை. 2. மகத்திருப்தி.

அலுத்தல்— 1. அலேக்கழிவுபடல். 2. இளேத்தல். (உ-ம்.) "ஐயாமிகவுமலுத்தோமலுத்தோமே" (கந்தபு. தேவர்பு. சு.) 3. வருந்துதல்.

அலுத்தன்— 1. ஆசையற்றிருப்போன். (உ-ம்.) "இகபரமிரண்டுவேண்டாதிருப்பவனலுத்தனென்றும்" (மசசபு. பத்தி. உச.)

அலுப்பு—1. இளேப்பு. 2. வருத்தம்.

அலுமாரி—உடுப்பு, புத்தகம் முதலியவைத்திருக்கும்படி பலகைத்தட்டுக்களே யொன்

பின்மேல் ஒன்ருக இடைவெளிவிட்டு நிரைத்துநாலுபக்கமும் பலகைகளால் மூடி மூட்டப்படுவது.

அலுவல்—வேலே, தொழில். (உ-ம்.) "உனக்கலுவலுண்டோ" [அலு என்னும் வினேயடியாற் பிறந்ததுபோலும்.]

அலுவலுவெனல்— அலப்பல், ஓயாமற் பேசுதல்.

அலுவா— ஒருவகையூறுகாய். [இந்துஸ்.]

அலுவிகம்—வில்வமரம்.

அலேகம்— 1 எழுதப்படாத வெள்ளே டு. (உ-ம்.) "அரியவிதழினலேகத்தையளித்தாரனேயர்" (சிவதரு. சிவஞானதாந. ருஅ.) 2. லோகமணல்.

அலே— 1. அசைதல், அலேதல். (உ-ம்.) "மதியப்புத்தேள் சலங்கலம்புனலிற்ருேன்றி - யலேப்படுதன்மைத்தன்ருே" (கந்தபு. வள்ளி. எஅ.) 2. அலேயச்செய்தல். (உ-ம்.) "அலேமேற்கொண்- டல்லவைசெய்தொழுகும்வேந்து" (வள்.ருருக.) 3. அல்லே என்பதில் லகரமெய்கெட்டுநின்ற ஒரு முன்னிலேசுகுறிப்புவினே. (உ-ம்.) "நீயலேயோசொல்லாய்" (தாயு. பராபர. நஉசு.) 4-6. அலேயென்னே வலுந்தெரிநிலேவினேப்பகுதியும் வினேத்தொகையும். 7. கடல். (உ-ம்.) "அலேவளம்பெரிதன்கோ" (நைட. நாட். உஉ.) 8. திரை. (உ-ம்.) "ஆழியினமுதம்பொங்கியலேயெறிந்தொழுகிற்றென்ன" (கந்தபு.தெய்வ. கக.) 9. கொலே. (பிங்க. நுoகரு.) 10. திரையடித்தொதுக்கிய கருமணல். 11. நீர். 12. பூமி. 13. மது. 14. மிகுதி. (உ-ம்.) "கண்ணீரலேப்பட்டகொங்கையாள்" (நளவெண். கலிநீ. நுசு.)

அலேக்கல்— 1. அலேத்தல். 2. நீரைக்கலக்குதல். (உ-ம்.) "முகேரெனவலேக்கலுற்ருர்" (கந்தபு. சுரம்புகு. நுo.)

அலேக்கழித்தல்— அலேந்துவருந்தச்செய்தல். (உ-ம்.) "அவனேயலேக்கழித்தான்" (தண்டலேயார்சதக.)

அலேக்கழிதல்—அலேந்துவருந்துதல்.(உ-ம்) "ஐம்பூதத்தாலே யலேக்கழிந்ததோடமற" (தாயு. தத். க.)

அலேக்கழிவு—அலேக்கழிதல்.

அலேகுதல்— அலேதல். (உ-ம்.) "நின்றுருதலேகுதல்விருப்புனக்கு" (வைராக்கியசதக. உநு.)

அலேச்சல்—உலேச்சல்.

அலேசடி—தொந்தரவு. [இழிசனர் வழக்.]

அலேசடை—அலேசடி.

அலேசல்— 1. அலேவு. 2. துன்பம்.

அலேசுதல்— 1. கழுவுதல். 2. சோம்பல். (பிங்க. கஅகக.)

அலேசோலி—அலேக்கழிவு. [சோலி.](தெலுங்கு).

அலேத்தரல்— அலேதல். (உ-ம்.) "கருங்குழுனிழன்றெருத்தலேத்தர" (சிந்தா. குண. உருக.)

அலேத்தல்— 1. அசைத்தல். (உ-ம்.)"கொலேத்தலேயகூர்வாளிகோப்புண்டுகிடந்ததுகா-லலேத்தலேயவீழ்ந்து" (திருவிளே. பழியஞ். அ.) 2. அடித்தல். (உ-ம்.) "எயிற்றிமாதர் வயிறலேத்தோட" (இராமா. ஆற்று. கசு.) 3. அலேயச்செய்தல், உலேத்தல். (உ-ம்.) "ஆநிரைமுழுவதுமலேத்து" (கந்தபு. ஆற்று. கசு.) 4. கெடுத்தல். (உ-ம்.) "கூற்ற-ஹுமுகத்தானடியவராவியலேத்தானே" (கந்தபு. அக்கினிமுகா. உகo.) 5. திரையடித்தல். (உ-ம்.) "அலேக்குமாழியடங்கிட" (இராமா. சூர்ப்பநகி. எகு.)6. நீரைக்கலக்குதல். (உ-ம்.) "அலேத்தலேயடையுமெல்லே" (கந்தபு. சுரம்பு. நுக.) 7. வருத்துதல். (உ-ம்.) "ஆருஞர்க் கடலலேப்ப" (கந்தபு. வீரவாகுநீ. உஉ.)

அலேந்திடல்—1. அலேயச்செய்தல். 2. வருத்துதல். (உ-ம்.)"உயிர்ப்பெனுமோதைநின்ருயிரலேத்திட" (கந்தபு. சயந்தன்பு. ரு.)

அலேதரல்— அலேயச்செய்தல். (உ-ம்.) "அநங்கவாளியலேதர"(திருவிளே.நாட். கஉ.)

அலேதல்— 1. ஆடுதல், அசைதல். (உ-ம்.) "திருத்தகுதாமரையலேதல் சேர்தடம்"(நைட. அன்னத்தைக்கண். சுo.) 2. சோம்பல். 3. தள்ளாடல். 4. திரிதல். (உ-ம்.) "புசிப்புக்கலேந்திடல்" (தாயு. சித்தர்கண. ரு.) 5. திரிந்துவருந்தல். (உ-ம்.) "மெத்தவலேந்தேனுன்னே மறவாவின்பத்தால் வாழ்கின்றேன்" (தாயு. பன்மா. கo.) 6. துன்பம்.

அலேதாடி— பசுவின் கழுத்திலே புடைத்துத்தூங்குந்தசை. (தர்க்கசங். நுஉ.)

அலேநீர்—கடல். (உ-ம்.) "அலேநீராடை" (சிலப். இந்திர. க.)

அலேப்படுதல்—வருந்துதல். (உ-ம்.) "தாயிலாச்சேய்போலலேந்தலேப்பட்டேன்" (தாயு. சிவன். ரு.)

அலேப்பு— 1. அசைப்பு. 2. அலேத்தல், வருத்தல். (உ-ம்.) "அலேப்புறுமனேவாழ்க்கை" (பெரியபு. வெள்ளா. உக.)3. ஒன்பது வகைக்கூத்துக்களிலொன்று.

அலேமகள்— இலக்குமி. [அலே - கடல். மகள் - புதல்வி.]

அலைமான்—இலக்குமி. (உ-ம்.) "அலைமான்புணருமால்" (சேதுபு. காயத்திரி. ௩உ.)

அலையல்—1. அலைதல். (உ-ம்.) "அங்குமிங்குமென்றலையலாமோ" (தாயு. பரா. ௩உக.) 2. சோம்பல். 3. துன்பம்.

அலையெடுத்தல்—அலையெழும்புதல்.

அலைவாய்—1. கடல். (உ-ம்.) "சூரலைவாயிடைத்தொலைத்து" (கந்தபு. கடவுள்வா. கரு.) 2. திருச்செந்தூர். (உ-ம்.) "மேவருங் கூடன்மேலைவெற்பினிலலைவாய் தன்னில்" (கந்தபு. திருநகர. க0சு.)

அலைவாய்க்கரை— கடற்றிரை வந்துமறியுமிடம்.

அலைவு—1. அசைவு, சலநம், இயக்கம். (உ-ம்.) "அலைவிலசேதனமாயையாதலாலும்" (சிவப்பிர. க: ச.) 2. அமைவின்மை. 3. அலைதல். (உ-ம்.) "ஓதரிரி-னலைமடவார்விழியநலின் கொழுந்தொடுமின் னிவைக்கெலாமலைவுகற்பித்து" (ஞானவா. வைராக். அசு.) 4. சஞ்சலம். (உ-ம்.) "மனவலைவெல்லா மொழித்து" (ஞானவா. சநகரா. உக.) 5. வருத்தம். (உ-ம்.) "அலைவுசெய்தொல்லை யிடைப்பெற்றேகுவான்" (கந்தபு. சூரனமை. ருரு.)

அலோகநம்—காணப்படாமை. [அலோகந: அ; லோக்ந - காண்டல்.]

அலோகம்— காட்சிக்கு விடயமாகாதது. (உ-ம்.) "தங்கியவலோகவிருளூர்தனிதூரப்ப" (கூர்மபு. விச்சுவ. ரு.) [அ; லோக.]

அலோகி—பசளைப்பூண்டு.

அலோபம்— 1. ஆசையின்மை. 2. லோபமின்மை. [அ; லோப.]

அலோமி— பொற்றலைக்கையாந்தகரைப் பூண்டு.

அலௌகிகசந்நிகருடம்—லௌகிகமல்லாத சம்பந்தம். (தர்க்கா. சு0.) [அலௌகிக: ஸந்நிகர்ஷ.]

அலௌகிகப்பிரத்தியக்கம்— லௌகிகப் பிரத்தியக்கமல்லாதது. (தர்க்கா. சுரு.) [அலௌகிக; ப்ரத்யக்ஷ.]

அலௌகிகம் — இலௌகிகமல்லாதது. (தர்க்கா.) [அலௌகிக.]

அலௌகிகீ—சிவதன்மினிதீக்ஷை. (சி-வி. கிரி. ௩க. உரை.) [அலௌகிகீ.]

அவ்—அவை. (உ-ம்.) "அவ்வே-இவ்வெனவறிதற்குமெய்பெறக் கிளப்ப" (தொல். சொல். கககூ.) [இஃது: அஃறிணைப்பன்மைச்சுட்டுப்பெயர்.]

அவ்வது—அவ்வாறு. (உ-ம்.) "அவ்வதுறைவதறிவு" (வள். சஉசு.)

அவ்வரி—அழகியவரி. (ஐங்குறு.)

அவ்வழி—1. அதன்பின்பு. (உ-ம்.) "அவ்வழிகுழவித்திங்க ளடுசிலைவடிவேற்செங்கேழ்க்" (கூர்மபு. வருணை. ரு.) 2. அந்தமார்க்கம். 3. அப்படிவருமிடத்து. (உ-ம்.) "அவ்வழி - யாவியிடைமையிடமிடறாகும்" (நன். எழுத். உ0.)

அவ்வாய்—அழகிய இடம். (உ-ம்.) "அவ்வாய்வளர்பிறை" (பெரும்பாணாற். சகஉ.)

அவ்வாறு —1. அந்தவழி, அப்படி. (உ-ம்.) "எழில்கூர்வனத்- தவ்வாறுபயில்கின்றவருள்வாரி" (பாரத. புட்ப. கஉரு.) [அ-ஒருசுட்டு. ஆறு-வழி] 2. ஆறு ஆறு. (உ-ம்.) "அப்பதினையிரவர்க்குமொவ்வொருத்திக் கவ்வாறு- யொப்பரியவறுபதினாயிரங்குமாருளர்" (திருவிளை. பழியஞ். ச.) [ஆறு- இரட்டித்தது.]

அவ்வித்தல் — பொறாமைகொள்ளுதல். (உ-ம்.) "அவ்வித்தழுக்காறுடையானை" (வள். ககூஎ.)

அவ்விதழ்—அழகிய இதழ். (உ-ம்.) "அவ்விதழவிழ்பதங்கமழ" (நெடுநல். சக.)

அவ்வியஞ்சநம்—1. அடையாளமில்லாதது. 2. கொம்புமுளைக்கும் பருவம்வந்துங் கொம்புமுளையாதமிருகம். [அவ்யஞ்ஜந: அ; வ்யஞ்ஜந- அடையாளம்.]

அவ்வியத்தக்கிரமம்— வழக்கத்தில்வெளிப்படாதகிரமம், மயக்கமாகச்சொல்லப்பட்டகிரமம். (உ-ம்.) "பாசபசுபதியென்னு மவ்வியத்தக்கிரமமாகச்சொன்னது, முதற்பாசதரிசநம்பண்ணி நீங்கினபின்பு பசுதரிசனமாயதன் பின்பு பதிதரிசநமாக வேண்டுமாகையால்" (சி.சி. அளவை. க0. சிவாக்.) [அவ்யக்த.]

அவ்வியத்தகாயத்திரி— வெளிப்படச்செபிக்கப்படாத காயத்திரி. (த.சி. போ. உகூஎ) [அவ்யக்த; காயத்ரீ.]

அவ்வியத்தசாமியம்— அறியப்படாத சங்கியை வைத்துச்செய்யுஞ் சமீகரணம். [அவ்யக்த; ஸாம்ய.]

அவ்வியத்தபூதம்— அவ்வியாகிருதபூதத்தை வியாபித்திருக்கும் பஞ்சபூதம். (உபதேட. உஅ.) [ஸ-ருக.]

அவ்வியத்தம்— 1. (வீசகணித.) அறியப்படாத எண், மறைநிலையிராசி. 2. ஆன்மா.

3. (வேதாந்தம்) இரச்சுவிலே சர்ப்பத்துவம் போலப் பிரமத்தினிடத்தில் விவர்த்தமாகத் தோன்றுகிற மூலப்பிரகிருதியென்னுஞ் சத்தி. (உ-ம்.) "பேசரியபரத்தினி லாரோபமதாமூலப்பிரகிருதிதனிலவ்வியத்தந்தோன்றும்" (உபநிட. கரு.) 4. ஒரெண்; அது: கோடிகோடிகோடிகோடாகோடி. 5. காட்சிக்கமையாதது, வெளிப்படாதது. (உ-ம்.) "பிரளயாகலருக்கு அவ்யத்தசரீரங்களும் அவ்வியத்தபுவனங்களும் மாயைக்குள்ளேயநேகமிருக்கின்றன" (சி-வி. ஞான. உஉ. தாற்.) 6. சாமவேதஉபநிடதத்தொன்று. (கூர்மபு. அட்டமூ. உசு: உரை.) 7. சிருட்டிக்கப்படாதது. 8. சூக்குமம். (உ-ம்.) "பொருவிலவ்வியத்தமாயழிவின்றி" (கூர்மபு. பிரகிரு. ங.) 9. நிச்சயிக்கப்படாதது, நிதானிக்கப்படாதது. 10. பரப்பிரமம். 11. (சித்தாந்த.) பிரகிருதிமாயை; அது: சுத்தமாயை தூலபரிணமமாய்த்தோன்றுவது. (உ-ம்.) "மாயையினவ்வியத்தம் வந்திடும்" (சி. சி. க: கக.) [முக்குணங்களும் விளங்காதிருத்தலால் அவ்வியத்தமென்றார்] (சி. சி. உ: ருஎ. மறை.) 12. பிரிந்துதெரியாதது. (உ-ம்.) "அவ்வியத்தசத்தம்" (சி. சி. உ: சுஉ. சிவாக்.) 13. பீடமும் இலிங்கமுமாயிருக்குஞ் சிவலிங்கம்; அது: கரசரணாதி யவயவங்கள் வெளிப்படத்தோன்றாதது. (உ-ம்.) "அவ்வியத்தம்பீடலிங்கமங்கமனைத்தும்விளங்கு - மவ்விலிங்கமேவியத்தமாம்" (சைவச. பொது. ககசு.) 14. மகேச்சுரன். (உ-ம்.) "கருதரியவவ்வியத்தத்தருளானுங்காண்வருசீர்ப் - புருடனுஞற்றிடலானும்" (கூர்மபு. பிரகிரு. கசு.) 15. (சாங்கியர்சொல்லும்) மூலப்பிரகிருதிமாயை. (உ-ம்.) "இலகு காரியமாகிய வுலகாகியிருக்கவுந் தெரிதரப்படாத-வலனுறுதலினவ்வியத்தமேயென்றும்வகுப்பரம் மாயைக்குப் பெயர்கள்" (சூத. சிவமான். அ: கக.) [அவ்யக்த.]

அவ்வியத்தலக்கணை—உமாதேவி. (உ-ம்.) "சருவசத்திகலையவ்வியத்தலக்கணை" (கூர்மபு. திருக்கல். உரு.) [அவ்யக்தலக்ஷண-சிவன். ஐ - ஒருபெண்பால்விகுதி.]

அவ்வியத்தன்—1. சிவன். (வேதாந்த) அந்தர்யாமி. (வேதா. சூ. சஉ.) "அநந்தமயன்" பார். [இந்திரியங்களின் விடயமாகாதடங்கிநிற்றலின்வந்த பெயர்.] 2. மன்மதன். 3. மூடன். 4. விட்டுணு. [அவ்யக்த.]

அவ்வியதத்திதன்— அவ்வியயதத்திதன். (பி. வி. ருரு.)

அவ்வியதி— 1. அஞ்சாதது. 2. (வேதத்தில்) குதிரை.) [அவ்யதி: அ; வ்யத- வருத்தம். போரில் இளையாததென்றபடி.]

அவ்வியதிதி—1. இரவு. 2. பூமி. [அவ்யதிதி.]

அவ்வியபாவம்—அவ்வியயீபாவம். (உ-ம்.) "முன்மொழியவ்வியஞ்சேர்தொகைபேர்முன்மொழித் தொகையே- சொன்மொழி யவ்வியபாவமருவும்" (வீரசோ. தொகை. சு.) [அவ்யயபாவ.]

அவ்வியம்—1. அழுக்காறு. (உ-ம்.) "அவ்வியநெஞ்சத்தானாக்கமும்" (வள். கசுக.) 2. இடைச்சொல். (உ-ம்.) "முன்மொழியவ்வியஞ்சேர்தொகை" (வீரசோ. தொகைப்பட. சு.) 3. தேவர்க்கிடும்பலி. (மநு. ங: கரு0.) 4. பெய். 5. வடிவம் இல்லாமை. (உ-ம்.) "அவ்வியமென்சொப்பனமாதனை விளைவு" (வேதா. சூ. கஉஅ.) [2. அவ்யம். 3, 4, 5. ஹவ்ய. 6. அ-வியம்; அவ்வியமெனவிகாரமொழியாயிற்று. வியம் - வடிவம்.]

அவ்வியயதத்திதன்— இடைச்சொற்களாலாயதத்திதன்; அவை: ஆங்கு, ஆன், ஈன்முதலியவாக வருஞ் சுட்டுப்பிளந்து நில்லாத இடப்பெயர்களும்; அவ்வயின், இவ்வயின், உவ்வயின், அங்கண், இங்கண், அவ்வாய், ஆயிடை எனச் சுட்டோடும் எவ்வயினென விஞவோடும் வந்து ஏழாம் வேற்றுமையிடப்பொருள் உணர்த்துவனவுமாம். (உ-ம்.) "பேர்கொண்ட சுட்டுப்பெயரிற் பிளந்துநில்லாவிடனு-நேர்கொண்டவெண்சுட்டெகாரங்களேழோடு நின்றனவு - மேர்கொண்டவேழனிடப்பொருள்காட்டுமிடைச்சொற்களாந் - தார்கொண்டபூங்குழ லாயவை யவ்வியதத்திதனே" (பி. வி. ருரு.) [அவ்வியய என்றதில் ய கெட்டுநின்றது. அவ்யய.]

அவ்வியயபூர்வபதம்— ("அவ்வியயீபாவம்" பார்.) [அவ்யயபூர்வபத:]

அவ்வியயம்—1. அழியாதது. (உ-ம்.) "ஊழிதனினுங் குன்றதீர்த்தலினலவ்வியயம்" (வேதாரணியபு. வேதநதி. எகூ.) 2. அற்பமாகச்செலவுசெய்தல். 3. இடைச்சொல். (பி. வி. ருரு.) அவ்வியயதத்திதன் பார். 4. செலவு செய்யாமை.

அவ்வியயன்— 1. விட்டுணு. 2. [illegible]சயில்லாதவன். (சி-வி. ஞான. உஉ.) [அ; வ்யய-அழிவு.]

அவ்வியயீபாவம்—1. அழிவுறுமை. 2. இடைச்சொற் சமாசம்; அது: நாமபூர்வபதம், அவ்வியயபூர்வபதம் என இருவகைப்படும். பெயர்க்குப்பின்வரும் இடைச்சொல் நாமபூர்வபதம்; "வாண்மன்" என்பதிற்போல. பெயர்க்குமுன்வரும் இடைச்சொல் அவ்வியயபூர்வபதம்; "மற்றையாடை என்பதிற்போல. (உ-ம்.) "முன்மொழிப்பேர்ச் சொலிடைசசொலிரண்டு முரணிநிற்கும் - தன்மொழியவ்வியயீபாவம்"(பி. வி. ௨௩.)[அவ்யயீபாவ.]

அவ்வியவகிதம்— அடுத்திருத்தல், கிட்டினது. (உ-ம்.) "அவ்வியவகித வஸ்துக்கள்" (சி. சி. உ: ௬௧. சிவாக்.) [அ; வ்யவஹித - வேறானது.]

அவ்வியவச்சிந்நம்—தடுக்கப்படாதது. [அ; வ்யவச்சிந்ந - தடுக்கப்பட்டது.]

அவ்வியவத்தை—1. அபத்தமான அறிவு. 2. கிரமமல்லாதது. 3. விதிதவறுதல்.[அவ்யவஸ்தா: அ; வ்யவஸ்தா - கிரமம்.]

அவ்வியவாகன்—அக்கினிதேவன். [ஹவ்யவாஹ: ஹவ்ய - அவி. வாஹ - கொண்டுசெல்லுகிறவன்.]

அவ்வியன்—1. ஒன்பதாமநுவின் காலத்துள்ள எழுமுனிவருளொருவன். (உ-ம்.) "சீர்கெழுநற்றுதிமானவ்வியன்றனோடு" (கூர்மபு. மநுவ.௨௩.) சுவாயம்புமநுவின் புத்திரனாகிய பிரியவிரதனுடைய எழுமக்களுளொருவன். (உ-ம்.) "தொல்சீர் - தங்குமவ்வியனே" (கந்தபு. அண்ட. ௨.௭.) 2. (சாங்கியத்தில்) பிரதானம்.

அவ்வியாகிருதம்— (வேதாந்த) ஈசுரன்காரண சரீரமாகிய மாயை. (நாநாசீவ. ௧௫.) [அவ்யாக்ருத: அ; வ்யாக்ருத - பிரிக்கப்பட்டது.]

அவ்வியாகிருதன்— சுழுத்தியவத்தையிற் சமட்டிகாரணசரீரத்தில் அபிமானித்த ஆத்மாவாகிய அந்தரியாமி. (வாசுதேவ. அவத்தாத்தி. ௨௦௧.) [நாமரூபாகிதமாயிருக்கிறபடியால் வந்தபெயர்.]

அவ்வியாத்தி—1. அடைதல் இன்மை. 2. இலக்கியத்தினேகதேசத்தின் இலக்கணமில்லாமை; அது: 'ஆவிற்குக்கபிலநிறத்தன்மை' (தருக்கசங்.கு-ஆம்.பக்.) 3. பரிக்கக்கூடாதது. (சி. சி. அளவை. ௧௫. சிவாக்.) 4. ஒன்றுமற்றொன்றில் அடங்கியிருத்தல் இன்மை. [அவ்யாப்தி.]

அவ்வியாப்பியம்— முழுதிலுஞ்செறிந்திராமை. வியாப்பியம் இன்மை, பெரும்பாலனவற்றிற்செறிந்திராமை. [அவ்யாப்ய: அ; வ்யாப்ய - செறிந்திருத்தல்.]

அவ்வியாபகம்—வியாபகம் இன்மை.(தர்க்க.பா.௮௫.) [அவ்யாபக.]

அவ்வியாபி—சர்வவியாபகம் இல்லாதது-வன்-வள். (உ-ம்.) "கண்ணுக்குத்தோற்றிய பூதங்காரண மென்னும் லோகாயதனுக்குப் போல அவ்வியாபியன்றி" (சி. சி. உ: ௫௩.. ஞானப்.) [அவ்யாபிந்.]

அவ்வியாவிருத்தி—வேறுபாடின்மை. (அநுமான. ௪௫. பக்.)

அவ்வுதல்—அவாவிவிழுதல்.

அவ்வெதிரேகம்—வெதிரேகவாக்கியமின்றிக்கூறுவது. (அநுமான. ௪௬. பக்.)

அவ்வேயன்— பதின்மூன்று மநுவின்காலத்துள்ள எழுமுனிவரில் ஒருவன். (உ-ம்.) "பொங்கொளிசேர்த்திமானவ்வேயன்" (கூர்மபு. மநுவ. ௨௬.)

அவ்வை—1. ஆத்திசூடி முதலிய சிலநூல்கள் இயற்றிய தமிழ்ப்புலமைநிரம்பிய ஒருபெண். (உ-ம்) "அவ்வைபாடலுக்கு நறுநெய்பால்பெருகி" (பாரத. சிறப். ௮.) 2. தவப்பெண். 3. தாய். (உ-ம்.) "ஈன்ற - வவ்வையுமத்தனுமாயருள்செய்தார்" (கந்தபு. தெய்வ. ௨௩௮.)

அவ்வோன்— அவன். (உ-ம்.) "அவ்வோனுயிருக்கழிவில்லை"(பாரத.பதினெட்.௧௧௧.)

அவ—1. அறிவு, 2. கட்டளைசெய்தல், 3. குறைத்தல், 4. சுத்திசெய்தல், 5. திருத்துதல், 6. நிந்தை, 7. நீக்கம், 8. புறம்பு, 9. போஷித்தல், 10. வியாபகம், 11. ஆதாரம், 12. தோல்வி எனப் பொருள்படும் ஓர் அவ்வியயம்.

அவக்கியாதம்—அவமானம்.

அவக்கியாதி—துர்ச்கீர்த்தி.

அவக்கிரகணம்—1. அவசங்கை. 2. தடை. [அவக்ரஹண: அவ; க்ரஹண- எடுத்தல்.]

அவக்கிரகம்—1. எடுத்தல். 2. ஏற்றுக்கொள்ளுதல். 3. சுபாவகுணம். 4. தடை. 5. நிந்தனைப்பேச்சு. 6. நிந்தித்தல். 7. பிடித்தல். 8. மழையின்மை. 9. யானைத்திரள். 10. யானையின் நெற்றி. [அவக்ரஹ: அவ - முன்; க்ரஹ - எடுத்தல்.]

அவக்கிரசம்—காடி.

அவக்கிரந்தநம்— உரத்தழுதல். [அவ; க்ரந்த - அழுதல்.]

அவக்கிரயம்—1. அரசனுக்கிறுக்கும்வரிப் பணம். 2. குத்தகைப்பணம். 3. கூலி. 4. சம்பளம். 5. விலை. [அவக்ரய: அவ-அடைதல். க்ரய - கொள்ளுதல்.]

அவக்கிராகம்—1. அவமானம். 2. சாபம் இடுதல். 3. மழையின்மை. [அவக்ராஹ: அவ-கீழ். க்ராஹ - எடுத்தல்.]

அவக்கிராந்தி— 1. இறங்குதல், கீழ்போதல். 2. சமீபமாய்ப்போதல். [அவக்ராந்தி: அவ - கீழ். க்ராந்தி - செல்லல்.]

அவக்கிரியை— 1. அசட்டை. 2. விதித்தன செய்யாதொழிதல். [அவக்ரியா: அவ-கீழ். க்ரியா - செயல்.]

அவக்குறி— 1. கெட்டகுறி.

அவக்கெனல்— 1. ஒருவிரைவுக்குறிப்பு. (வழக்.) 2. ஓர் அச்சக்குறிப்பு.

அவகட்டநம் — உரோஞ்சித்தள்ளுதல். [அவகட்டந.]

அவகடம்— 1. எதிராயது. 2. கீழே. 3. பின்னே. 4. வஞ்சகம். [1, 2, 3. அவமுக.]

அவகண்டநம்—1. அழித்தல். 2. களைதல், பிரித்தல். (பாரா. பி. ௫௨.) [அவகண்டந.]

அவகண்டம்— முகத்தில் அல்லது கன்னத்தில் வரும் விரணம். [கண்ட - கன்னம் அல்லது முகம்.]

அவகணிதம்—அவமதிக்கப்பட்டது. [அவகணித:]

அவகணிதன் — அவமதிக்கப்பட்டவன். [அவகணித:]

அவகத்தம்—புறங்கை.

அவகதவாய்—கீழ்க்காய் நெல்லிப் பூண்டு.

அவகதன்— பிரசித்திபெற்றவன், அறியப்பட்டவன். [அவ-அறிவு. கத-அடைதல்.]

அவகதி—1. அறிவு. 2. இடம் விட்டுப்பெயர்தல். 3. புலப்படுதல். [அவ- அறிவு. கதி-போதல்.]

அவகமம்—1. அகற்றல். 2. அறிதல். 3. யதார்த்தமான அறிவு. [அவ - அறிவு. கம- போதல்.]

அவகர்த்தநம்—1. சீவுதல். 2. தறித்தல். [அவகர்த்தந: அவ - கீழ். கர்த்தந - வெட்டுதல்.]

அவகர்த்தம்—குழி. (சீவரட். ௧௦௦.)

அவகர்த்தவிரணம்— ஒருவகை விரணம்; அது: விரணத்திற் குழிவிழுந்துள்ளது. (சீவரட். ௧௦௦.)

அவகாணம்— 1. அபகரித்தல். 2. மீட்டுதல். [அவஹரண.]

அவகாகநம்— 1. நன்றானபயிற்சி. 2. நீராடுதல். [அவகாஹந: அவ - முன்; காஹ- ஆடுதல், முழுகல்.]

அவகாகம்—1. நீராடுதல். 2. நீராடும்இடம். [அவ- முன்; காஹ - ஆடுதல்.]

அவகாசதன்— ஒதுக்கிடங்கொடுப்பவன். [அவகாஶ - இடம். த - கொடுக்கிறவன்.]

அவகாசப்பிரதம் — இடங்கொடுப்பது. (உ-ம்.) "அகங்காரா நுஷங்கமாயிருக்கிற பிராணாதி வாயுக்களுக்கும வகாசப் பிரதமாயிருக்கும்" (சி. சி. ௨: ௬௫. சிவாக்.) [அவகாஶ- இடம். ப்ரத - கொடுப்பது.]

அவகாசம்—1. ஆகாயம். (பௌஷ். பும். ௨அ௨.) 2. இசைந்தகாலம். 3. இடம். (உ-ம்.) "பரமமுத்தியிலே சிவமேயாகையினால் இந்த விசாரத்துக்கு அவகாசமேயில்லை" (சி.சி. ௯: ௯. சிவாக்.) 4. இடையேயிருக்கும் இடம். 5. ஓய்ந்திருக்கும் நேரம். 6. கொள்கலம். 7. திராணி. (உ-ம்.) "கடனிறுக்க எனக்கு அவகாசம் இல்லை" [வழக்.] 8. துவாரம். 9. பரந்த இடம். 10. பொருள்வைக்குமிடம். [அவகாஶ: அவ - ஊடே. காஶ - பிரகாசித்தல்.]

அவகாசிப்பித்தல்—இடங்கொள்ளச்செய்தல், இடங்கொடுத்தல். (த. நி. போ. ௧௧௪.) [மூ. அவகாஶ.]

அவகாதம்— 1. அடித்தல். 2. அவமானம். 3. கொல்லுதல். 4. சடிதிமரணம். 5. தானியங்களை யுரலிலிட்டு உலக்கையாற் குற்றுதல். [அவகாத: அவ; காத - அடித்தல்.]

அவகாரம்—1. அழைத்தல். 2. சுறாமீன். 3. சூதாடுகை யுத்தஞ்செய்கையாகிய இவற்றின் நின்றோய்ந்திருத்தல். 4. பதிதனுடைய தன்மை. 5. யானைமீன். [அவஹார.]

அவகாரன்—கள்ளன். [அவஹார:]

அவகாலம்— 1. அசுபகாலம். 2. கெடுகாலம், பஞ்சங் கொள்ளைநோய் முதலியன பரம்புங் காலம்.

அவகிருத்தியம்— கெட்டசெய்கை. [அவ க்ருத்யம்.]

அவகீதம்—1. குணம் இல்லாத பாடல். 2. நிந்திக்கப்பட்டது. 3. பொல்லாதது. 4. வசையாகப்பாடப்பட்டது. [அவகீத.]

அவகீர்ணம்—1. அவமதிக்கப்பட்டது. 2. சிதறுதல். 3. பருப்பொருளாகக் குத்தப்பட்டது. 4. மண்ணையெடுத்தல்; இது: குண்டசுத்திநிமித்தஞ்செய்யப்படும் பதினெட்டுச் சம்ஸ்காரங்களுள் ஒன்று. (சி-வி. கிரி. உஎ. தாற்.) [அவகீர்ண.]

அவகீர்ணி— ஸ்திரீ சங்கமஞ் செய்தலாற் பிரமசரியநெறி தவறினவன். [அவகீர்ணிந்.]

அவகீர்த்தி—அபகீர்த்தி. (உ-ம்.) "உனத்தகுகீர்த்தியல்லாதவகீர்த்தியுலகினிற்ப"(மச்சபு. பத்திமான். கச.) [அவகீர்த்தி.]

அவகீரணிவிரதம்—ஒரு விரதம்; அது:சந்நியாசி மகளிர்போகம் விரும்பி நினைந்த தோஷம் நீங்கச்செய்யப்படுவது. (உ-ம்.) "வளம்பெறுசந்நியாசியென்றுரைப்போன் வரிமூலை மங்கையர்போக- மூளம்பெறவேண்டிநூற்றிடவேண்டுமுயாவகீரணிவிரதம்"(சூத. ஞானயோ. கஎ: ௬க.) [அவகீர்ணிந்; வ்ரதம்.]

அவதஞ்சநம்—1. சுருங்குதல். 2. வளைதல். [அவகுஞ்சந: அவ; குஞ்சந - வளைதல்.]

அவதடாரம்—1. எதிரானது, மாறானது. 2. கீழ்ப்போவது. 3. பின்போவது. [அவகடார.]

அவதண்டநம்—1. இழுத்தல். (சித்தாந்தம்) சிவனுடையஇருதயாதிதாநங்களில்இருதயாதிமந்திரங்களைக்கவசஞ்சுற்றுவதுபோல நியாசஞ்செய்வது. (சி-வி. கிரி. உ௲. தாற்.)2. சுற்றுதல். (உ-ம்.) "பத்திசேர்கவசத்தவகுண்டநம்பண்ணி" (கடம்பவந. இலீலாசங். சஅச.) 3. மறைத்தல். 4. முகத்தை மறைக்குஞ்சீலை. [1, 2. அவகுண்டந. 3, 4. அவகுண்டந.]

அவதண்டநமுத்திரை — இரண்டுமுட்டிகளையும் பிடித்துத் தர்சநிவிரல்களைமாத்திரம் நீட்டி மண்டலாகாரமாகச்சுற்றுதல். (சி-வி. கிரி. உ௲. தாற்.)

அவதண்டிதம்— 1. இழுக்கப்பட்டது. 2. சுற்றப்பட்டது. 3. மறைக்கப்பட்டது. 4. மூடப்பட்டது. [1, 2. அவகுண்டித. 3, 4. அவகுண்டித.]

அவதுணம்—1. கெட்டகுணம் 2. கெட்டகுறி. (உ-ம்.) "திவ்வியைச் சக்கரத்தா-லவகுணஞ் செய்தன்றோட" (சி. சி. பர. பாஞ். மறு. உக.) [அவகுணம்.]

அவகேசி— பூத்துங் காயாத மரம். [அவகேசிந்: கேச - கனி.]

அவகேடு—மிக்ககேடு.

அவகேளநம்—அவமதிப்பு. [அவஹேளந: அவ; ஹேள.]

அவகேளம்— அவகேளநம். [அவஹேள: ஹேள - நிந்தித்தல். அ - ஸவ்வாயிற்று.]

அவகேளிதம்—அவமதிக்கப்பட்டது. [அவஹேளித.]

அவகோரணம்—கொலைசெய்யக்கருதி ஆயுதங்களால் ஊறுபடுத்தல். [அவகோரண]

அவச்சா—துன்மரணம்.

அவச்சாயை—தன்னுருபடியானசாயை.

அவச்சாவு—அவச்சா.

அவச்சிந்நம்—1.எல்லைக்குள் அடங்கியது. 2. (தர்க்கம்) ஒருபொருள் அதன்விசேடகுணங்களால் மற்றைப்பொருள்களினின்று வேறுபடுத்துணர்த்தப்படல். 3. வெட்டப்பட்டது. 4. வேறாகப்பிரிக்கப்பட்டது. [அவச்சிந்ந: சிந்ந - வெட்டப்பட்டது.]

அவச்சிந்நன்— 1. எல்லைப்படுத்தப்பட்டவன். (உ-ம.) "ஆன்மா அந்தக்கரணவச்சிந்நனாகி யிருதயத்திலேநின்று" (சி. சி. ௨:கூ௰. சிவாக்.) 2. வேறுபடுத்தப்பட்டவன். [அவச்சிந்ந.]

அவச்சுரிதகம்— } குதிரைக்கனைப்பு.
அவச்சுரிதம்— } [அவச்சுரிதக:

அவச்சேதகம்— 1. எல்லைப்படுத்தல். 2. ஒருபொருளை மற்றொரு பொருளினின்று விசேடகுணங்களாற்பகுத்துக்காட்டல், அளவிடல். (உ-ம்.) "பதார்த்தாவச்சேதககாலம்" (சி. சி. உ: ௬ச. சிவாக்.) 3. நிச்சயித்தல். 4. விசேடகுணம். (உ-ம்.) "ஆன்மாவச்சேதகமாயிருக்கிற அகங்காரம்" (சி. சி. உ: கூ௰. சிவாக்.) 5. விசேடித்தல். 6. வேறாக்கல். [அவச்சேதக.]

அவச்சேதநம்— 1. களைதல். 2. பகுத்தறிதல். 3. பிரித்துவேறுக்கல். [அவச்சேதந]

அவச்சேதம்— 1. அங்கஞ்சேதித்தல். 2. எல்லை. 3. ஒருபொருளை மற்றொருபொருளினின்று விசேடகுணங்களாற் பகுத்துக்காட்டல். 4. தடை. 5. பங்கு. [அவச்சேத]

அவசகுநம்—துன்னிமித்தம்.

அவசங்கை— 1. அழகின்மை. 2. சாமர்த்தியமின்மை. [அவஸுஷமா: அவ - எதிர். ஸுஷமா - அழகு, சாமர்த்தியம்.]

அவசத்தம்— தீங்கைக்குறிக்குஞ் சத்தம்.

அவசதம்— 1. கல்லூரி. 2. கிராமம். 3. வீடு. [அவஸத².]

அவசநம்—பேசாமை. [அ - எதிர்மறை. வசநம் - பேச்சு.]

அவசம்— 1. தனவசப்படாமை, அடங்காமை. (உ-ம்.) "இந்திரியமஞ்ஞாநிக்கவசமாயிருக்கும்" (சூத. எக்கி. உத். கக: எ.) 2. தன்னிட்டம் இன்மை. 3. பெலன் இன்மை,உதவியின்மை. 4. மூர்ச்சித்தல், அயர்வாதல். (உ-ம்.) "விண்ணோ - னவசம்படவேழ்களைதாண்டினன்" (கந்தபு. திருவிளை. ௩௪.) [அவஶ.]

அவசயம்— 1. புட்ப முதலியவைகளைத்திரட்டுதல். 2. வெற்றியடைதல். [1. அவசயம்: சய - திரட்டுதல். 2. அவஜய: ஜய- வெற்றி.]

அவசர்ப்பிணி— உலகம் வாழ்நாள்போக முதலியவற்றால் தேய்பிறைபோலச்சுருங்குங்காலம். (வள். ௩௬க. பரி.) சைநருடைய ஒரு கால அளவு. [அவஸர்ப்பிணீ.]

அவசரநாமம்— நிற்கு நிலைக்கேற்ற பெயர். (சி. சி. உ: ௫௬. சிவாக்.)

அவசரம்— 1. இடம். 2. இரகசியாலோசனை 3. இறக்கம். 4. உற்றகாலம். (உ-ம்.) "நிராசைநெஞ்சின னவசரத்தவளிடைநிகழ்ந்தமெய்க்குறிதன்னால்" (பாரத. சம்பவ. கங.) 5. ஓய்வுநேரம். 6. கணப்பொழுது. 7. சமயம், காலம். (உ-ம்.) "அந்தரப்புட்பமுங் கானனீருமோரவசரத்துபயோகமோ" (தாயு. மௌந. ௩.) "ஓரவசரத்திலே பிரமாதா என்றும், ஓரவசரத்திலே பிரமிதி யென்றுஞ்சொல்வது விருத்தம்" (சி.சி. அளவை.க. சிவாக்.) 8. தக்ககாலம். 9. மழை. 10. வருடம். 11. விரைவு. [வழக்.] [அவஸர.]

அவசாதம்—1. இளைப்பு, ஆயாசம். 2. காம ஆசையிலே சித்திபெருமையால் வரும் மெலிவு. 3. தைரியக்குறைவு. 4. தோல்வியடைதல். 5.முடிவு. 6. (ஸ்மிருதியில்)வீண்வழக்கு. [அவஸாத³.]

அவசாநம்—1. இறுதி. 2. எல்லை. 3. ஒழிவு. 4. மரணம். [அவஸாந.]

அவசாயம்—1. சமாப்திசெய்தல். 2. நிச்சயம். 3. நிச்சயித்தல். 4. இறுதி. [அவஸாய.]

அவசாயகன்—1. சமாப்திசெய்வோன். 2. நிச்சயிப்போன்.]

அவசாரணம்— 1. அகற்றுதல். 2. இடம்விட்டுப் பெயரச்செய்தல். 3. நடத்துதல். [அவஸாரண:]

அவசாரம்—1. புறம்போதல். 2. வேசித்தனம். [அவஸார.]

அவசாரி—வேசி. (உ-ம்.) "ஆங்காலமான தெலாமவசாரியாடி" (தண்டலை. ௬.)

அவசி— கழுதைப்பாலை. (உ-ம்.) "தழற்கொடி யவசிதிகழ் பாதலத்தம்பியும்"(தைல. தைலவ. ௭௨.)

அவசிட்டம்—மிச்சமானது. [அவஶிஷ்ட: அவ; ஶிஷ்ட - மிஞ்சியது.]

அவசித்தாந்தம்— சித்தாந்தம் ஆகாதது. (உ-ம்.) "அஃது ஆகமவசநங்களோடு முரணுதலின் அவசித்தாந்தமென்றொழிக" (சி. சி. க: உ௬. சிவஞாந.) [அவஸித்தா⁴ந்த.]

அவசிதம்— 1. அறியப்பட்டது. 2. கூட்டிச்சேர்க்கப்பட்டது. 3. செய்து முடிக்கப்பட்டது. [அவஸித.]

அவசியம்—1. இன்றியமையாதது. 2. நிச்சயம். (உ-ம்.) "அவசியஞ்செய்யவேண்டிய வேள்விக்கு உதவிவேண்டல்" (ஞாவா. வைராக். ௪௪. உரை.) 3. வசியப்படாதது. [அவஶ்ய: வஶ்ய - வசப்பட்டது.]

அவசீநம்—தேன். [அவஶீந.]

அவசுத்தம்—சுத்தமின்மை.[அவ; ஶுத்³த⁴.]

அவசூலம்—சாமரை. [அவஶூல: அவ- கீழ். ஶூல - குடுமி.]

அவசேகம்—1. நனைத்தல். 2. புரோட்சித்தல். [அவஸேக.]

அவசேடம்—1. இறுதி. 2. மிச்சமாய்விடப்பட்டது. [அவஶேஷ.]

அவஞ்ஞாதம்—அவமதிக்கப்பட்டது. [அவஜ்ஞாத: அவ - உபசர்க்கம். ஜ்ஞாத - அறியப்பட்டது.]

அவஞ்ஞாலங்காரம்—இகழ்ச்சியணி; அஃது: ஒன்றின் குணத்தாலுங்குற்றத்தாலும் மற்றொன்றற்கவையுண்டாகாமல் இருப்பதைக் கூறுவது. இது பின்வருஞ்செய்யுளாற்புலப்படும். "மற்றொன்றினுக்குமொன்றின் குணங்குற்றமருவிலதைச்- சொற்றலிகழ்ச்சியணி நாழிவாரிதொடினுஞ்சிறி - துற்றபுனல்கொளுங்கஞ்சக்குவிவினுமெபதிக்கென் - குற்றமென்றேதலிலக்கியங்கென்னிளசைக்குமனே" (குவ. எ௦.) [அவஜ்ஞா - இகழ்ச்சி.]

அவஞ்ஞை—அவமானம். (இலிங்கா.) [அவஜ்ஞா.]

அவஞானம்—அவமானம். [அவஜ்ஞாந.]

அவட்சயம்—1. அழிவு. 2. நட்டம். [அவக்ஷய: அவ - உபசர்க்கம். க்ஷய - அழிவு.]

அவட்சேபணம்— விழுதல். (தர்க்கபா. கூ௪.) [அவக்ஷேபண.]

அவட்சேபம்— 1. எறிதல். 2. தவறாக எறிதல். 3. நினைவுக்கு மாறான அர்த்தம் விளைக்குஞ்சொற்களைச்சொல்லி நிந்தித்தல். [அவக்ஷேப.]

அவடம்—பள்ளம். (இலிங்கா.) [அவட.]

அவடி— 1. ஒடுங்கு. 2. கிணறு. 3. திரைச்சீலை. 4. (அங்கசோதநவித்தை) துவாரம். [1, 2, 4, அவடி. 3. அவடீ.]

அவடு— 1. கழுத்தின் பிற்பக்கம், பிடரி. 2. கிணறு. 3. குழி. 4. பிளப்பு. [அவடு.]

அவண்—அவ்விடம். (உ-ம்.) "பால்வளாய் பசும்பொற்கஞ்ச- வீசிலகொணரவேண்டுமே வுதுமவண்யாமென்று" (சேதுபு. வேதாள. கூகூ.)

அவண்ணியம்—அவர்ணியம்.

அவண—அவ்விடத்தன. (உ-ம்.) "அமைசெலாமவண மணியெலாமவண" (இராமா. நகரப். எ.)

அவணம்— 1. இருபதினாயிரம்பாக்கு. 2. ஒரு முகத்தலளவைப்பெயர்; அஃது: இத்தேசத்து ஏறக்குறைய ஏழரைப்பறை யல்லது எட்டுப்பறை கொண்ட அளவு. 3. நிந்தனை. [அவணம்.]

அவணன்—1. நிண்ணியன். (உ-ம்.) "அவணணொடு கண்ணனுறை தோளன் விசைதோ - யவணன்விண்ணிடைநிமிர்ந்து படர்கின்றவன்" (இராமா. விராதன். ௩அ.) 2. அர்க்கீர்த்தியுடையவன். 3. நீசன். [2, 3. அவணம்: வணம் - கீர்த்தி.]

அவணி—நன்மை.

அவத்தம்—1. நாய்வேளைப் பூண்டு. 2. பிரயோசநம் இன்மை. (உ-ம்.) "பெருஞ்சமயத்தின மயங்கி- யவத்தமே பிறந்து" (இராமா. தோத்திரப். உ௩.) 3. பொய். (உ-ம்.) "அவத்தத்தன்மைவிட்டுழி" (தேவா. திருத்தினை. கூ. கூ.)

அவத்தன்—பிரயோசநமில்லாதவன். (உ-ம்.) "தவக்குணம்பங்கப்பித்தனவத்தன்" (திருப்பு. எ.)

அவத்தாசதுட்டயம்—மநிதருடைய நான்கு பருவநிலை; அவை: பாலியம், கௌமாரம், யௌவநம், வார்த்திகம் என்பன. [அவஸ்தா சதுஷ்டய: அவஸ்தா-நிலை. சதுஷ்டயா- நான்கு.]

அவத்தாத்திரயம்—1. சாக்கிரம், சொப்பநம், சுழுத்தி என்னும் மூன்று அவத்தைகள்; சுரோத்திராதி இந்திரியங்களினாற் சத்தாதிவிடயஞானம் எதமட்டும் வருகின்றதோ அந்தமட்டுஞ் சாக்கிரம்; சாக்கிர வாசனையாற் பிறந்த விடயத்துடன் கூடினஞானமே சொப்பநம்; சமஸ்த விடயஞானங்களும் இல்லாதிருத்தல் சுழுத்தி. (வாசுதே. உ௦௦.) 2. மூன்றுதன்மைகள். (உ-ம்.) "சத்தர், உத்தியுத்தர், பிரவர்த்தர் என்னும் பதியவத்தாத்திரயாசாதாரணலட்சணங்கள்" (சி.சி. அளவை. மு. சிவாக்.) [அவஸ்தா - நிலை, தன்மை. த்ரய- மூன்று.]

அவத்தாநம்— 1. நிலை. 2. நிலைத்தல். 3. நிற்கும் இடம், இருக்கும் இடம். (உ-ம்.) "மாயாத்துவயமத்தியே அவத்தாநஞ் சொல்லப்பட்டது" (சி. சி. அ: உ. சிவாக்.) 4. (வேதாந்தம்.) விடாத்தொடர்பு. [அவஸ்தாந.]

அவத்திதன்—இருந்தவன். (உ-ம்.) "சகலாவத்திதனைவான்மா" (சி. சி. ௪: ௩௯. சிவாக்.) [அவஸ்தித.]

அவத்திதி—இருப்பு. (பௌட். பும். ௩௪௬.) [அவஸ்திதி.]

அவத்தியம்—1. இழிந்தது. 2. தீங்கு. 3. பாபம். 4. மாணத்துக்குவிலக்கு. 5. வெறுக்கப்பட்டது. [1, 2, 3, 5. அவத்ய: அ-எதிர்

மறை. வச்யா-சொல்லத் தக்கது; 4. அவய்ய: வய்ய- சொலைக்குரியது.]

அவந்தியன்— மாணத்துக்கு விலக்கப்பட்டவன். [அவய்ய:]

அவந்திரங்கம்— அங்காடி, கடை. [அவ ரங்க.]

அவந்திரியம்—ஆபத்து.

அவந்து— 1. உதவாதபொருள். 2. பொருளல்லாதது. (உ-ம்.) "மாயைஅநிர்வசநீயமர்கிற அவத்து ரூபமாகாது" (பௌட். மாயா. கூ: உரை.) [அவஸ்து: அ; வஸ்து-பொருள்.]

அவந்துறை—தீயவழி. (உ-ம்.) "அவத்துறைபோய நெஞ்சத்தககனுங் கறைந்திட்டானே" (கூர்மபு. தக். வே. எ.)

அவந்தை—1. ஆபத்துநிலை. (உ-ம்.) "அன்னவளவத்தைகண்டாங்கிளையவன்" (இராமா. சூர்ப்பணகைவ. சுக.) 2. தன்மை, நிலைமை. (உ-ம்.) "இலைகொணுதலாய்பின்னர்வருமவத்தை சேராதருள் புரியாய்" (நைட. அன்னத்தைத்தூ. ககஎ) 3. மலத்திலே கட்டப்பட்ட ஆன்மாவினது சாக்கிர முதலாகிய ஐவகைநிலை; அது: காரணாவத்தை, காரியாவத்தையென இருதிறப்படும். (உ-ம்.) "ஆன்மாவுடலினுளவத்தையைந்துமுறும்" (சி.சி. சு: ௩௨.) [அவஸ்தா: அவ - உபசர்க்கம். ஸ்தா - நிற்றல்.]

அவந்தைப்பிரயோகம்—1. அறுபத்துநான்கு கலைஞானங்களுளொன்று; அஃது: உயிரைப் பஞ்சாவத்தைகளில் ஒன்றிலேகிறுத்துவதைப்பற்றியது. 2. சூநியம்வைத்துக்கொல்லல்.

அவதஞ்சம்—1. காதணியிலொன்று.(உ-ம்.) "மருவியசெவிமலர்ப்பூமன்னுகன்னவதஞ்சம்"(சூளிகண்.எ:உஅ.)2. தலையணி. 3.பூமாலை. [அவதம்ஸ.]

அவதந்திரம்—சரியற்றவழியால் ஒன்றுசெய்தல், சதியாலோசனை. (உ-ம்.) "அவதந்திரந்தனக்கந்தரம்"[வழக்.][அவ-எதிர். தந்திர-நியாயவழி.]

அவதந்திரி —அவதந்திரஞ் செய்வோன்.

அவதரணம்— 1. இறங்குதல். 2. பிறர்சொன்னதையெடுத்துமொழிதல். 3. மொழிபெயர்த்தல். [அவதரண: அவ; தரணம்-கடத்தல்.]

அவதரணிகை—1. நூலின் ஆரம்பத்திலே சொல்லப்படுங்காப்பு. 2. முகவுரை. [அவதரணிகா.]

அவதரம்—1. இறங்குதல். 2. காலம், சமயம். (உ-ம்.) "விடயங்களைப் புசிக்கவருகிறவதரத்திலே" (சிவப்பி. உ: உ௩, சிதம்ப.) [1. அவதர. 2. வஸர.]

அவதரித்தல்—1. கருவிற் புகுதல். 2. சிந்தித்தல்.(உ-ம்.)"அந்தமநமாதியந்தக்காணங்கிரமத்தில்விஷயங்களைநினைப்பது நிச்சயிப்பது அபிமானிப்பது அவதரிப்பது வியாபாரமாம்"(த. நி. போ. கக௩.) 3. தங்கல். 4. பிறத்தல். (உ-ம்.) "அங்கவர்தம்மிடையவதரித்தனன்" (கந்தபு. பாயி. சக.) [2. மூ. அவயார.]

அவதாதம்—1. சிறந்தது. 2. சுத்தம். 3. மஞ்சணிறம். 4. வெண்மை. [அவதாத.]

அவதாதன்—வெண்ணிறமுள்ளோன். [அவதாத:]

அவதாநம்--1. கவனம். (உ-ம்.) "அந்தரத்தினிறுத்துமவதாநம்போல" (தாயு. மண்டலத்தி. க.) 2. சோதிக்கை. 3. சாக்கிரதை. 4. ஞாபகம். 5. நீட்டுதல், விரித்தல். 6. மேன்மையானசெயல். [1, 2, 3, 4. அவதாந; 5. அவதாந; 6. அவதாந.]

அவதாநம்பண்ணல்—கவனமாய் நினைத்தல்.

அவதாநித்தல்—அவதாநம்பண்ணல். [மூ. அவதாந.]

அவதாநிப்பு—அவதாநித்தல்.

அவதாரணஞாநம்—நிண்ணயம்.(தர்க்கபா. கூ-வது.) [அவதாரண- நிச்சயித்தல்.]

அவதாரணபூர்வபதகருமதாரயன்— சமாசங்கள் ஆறனுளொன்று; அது: முன்மொழி தேற்றமாகிய பண்புத்தொகை. அஃது "அருட்செல்வம்" என்பது போல்வது. (பி. வி. உஉ.) [அவதாரணம்- தேற்றம். பூர்வபதம்-முன்மொழி. கர்மதாரய - பண்புத்தொகை.]

அவதாரணம்—1. எடுத்தல். 2. சிலையிலேறல். 3. துண்டங்களாகவெட்டுதல். 4. தேற்றம். (உ-ம்.) "சம்பாவனையவதாரணமுறையேயெண்ணந் தேற்றமெனப் பெயர் பெறுமே" (பி. வி. உஉ. உரைச்சூத்திரம்.) 5. நிச்சயம். 6. நிச்சயித்தல். (உ-ம்.) "அவதாரணஞாநம் நிண்ணயம்; அது: பிரமாணபலம்." (தர்க்கபா. கூ-வது.) 7. நான்முகம். 8. பிளத்

தல். 9. பேயினுற் பிடிக்கப்படுதல். 10. மண் தோண்டுங்கருவி. 11. மண்தோண்டுதல். 12. வணக்கம். 13. வற்புறுத்தல். [1, 2, 7, 9, 12. அவதாரண; 3, 8, 10, 11. அவதாரண; 4, 5, 6, 13. அவதாரண.]

அவதாரம்— 1. அயோநிசம்பந்தமாய்வெளிப்படுதல், இறங்குதல். (கந்தபு. திருவவதாரப்படலம்.) 2. குளம். 3. கேணி. 4. தீர்த்தக்கரை. 5. நுட்பமாய் நிச்சயித்தல். 6. முகவுரை. 7. மொழிபெயர்த்தல். [1, 2, 3, 4, 5, 6, 7. அவதார; 6. அவதாரம்.]

அவதாரிகை—1. அவதாரஞ்செய்தல். 2. வாக்கியத்தின் முகத்துரைக்கும் உரை. (ஞாநவா.) [அவதாரிகா.]

அவதாவநம்—1. சுத்திசெய்தல். 2. துரத்துதல். 3. பின் தொடருதல். [அவதாவந: அவ; தாவந - ஓடுதல்.]

அவதி—1. அளவு. (உ-ம்.) "என்னவதியேனுங்கன்மமடாது" (சம்பா. சஅ.) 2. இறுதி. 3. நியமிப்பு, விதி. (உ-ம்.) "அக்காலத்தேயகலுமோவவதியென்றென்றுளதானுல்" (இராமா. தைல. அச.) 4. (காலத்திலாவது இடத்திலாவது) எல்லை. (உ-ம்.) "அத்தனைக்குநின்பொருடரவவதியீகென்றான்" (அரிச்ச. சூழ்வினை. கஅ.) 5. ஐந்தாம் வேற்றுமை. (உ-ம்.) "ஒழியவதி" (பி. வி. கூ.) [இது நீக்கப்பொருளுடையது.] 6. கணக்கு. (உ-ம்.) "ஆயிரமாயிரமவதிசேரவுணர்தஞ்- சேயதண்குஞ்சியைச் செங்கையாற்பற்றியே" (கந்தபு. வச்சிரவா. ருச.) 7. கவநம். 8. காலப்பகுதி. (உ-ம்.) "போனவவதியில் நாம் மிகவருத்தப்பட்டோம்" 9. காலம். (உ-ம்.) "கங்குலவதியுமுறங்கா துற்றான்" (கந்தபு. கந்தவிர. கரு.) 10. இடங்கு. 11. துன்பம். (உ-ம்.) "இன்னம்பாழவதிப்படவெனக்கு முடியாது" (தாயு. பன்மாலை. ௬.) [அவதி.]

அவதிகத்தம்—1. கடனுரை. 2. காலாந்தரத்தில் இற்றுவந்த கடலிப்பியின் ஓடு.

அவதிகாரகம் — ஆறு காரகபதங்களில் ஒன்று; அது: யாதொன்றினின்று ஒருபொருள் நீங்குமோ அது. இது "யாதனினீங்குமவதியதாம்" என்பதனுற் பெறப்படும். (வீரசோ. உபகாரக. ௫.) [அவதி; காரக.]

அவதிஞானம்—1. அதீதகதமான பரிஞ்ஞானம்; அது: முற்பிறப்பையறியும் அறிவு. (சிலப். நாடு. கசஎ. உரை.) 2. முக்காலத்தையும் அறியும் அறிவு. (நினைக்கும் அவதியிற்றோன்றும் ஞானம் என்றபடி.)

அவதிதரிசநம்— தரிசநாவரணியம் ஒன்பது பேதத்துள் ஒன்று. (சி. சி. அ: கஉ. மறை.)

அவதிப்படல்— துன்பப்படல். (உ-ம்.) "அவதி" 11 பார்.

அவதீரணம் — அவமதித்தல். [அவதீரண.]

அவதும்பரதுட்டரோகம்— ஒருவகைக்குட்டரோகம்; இதிற், கொப்புளங்கள் அத்திப்பழத்தை யொத்து விஸ்தரித்துச் சீக்கிரத்திற் பிறந்து நசுங்கிக் குழிவிழுந்த இரணங்களாகும். (சீவரட். கசஎ.)

அவதும்பரம்—அத்திப்பழம். (சீவரட். கசஎ.) [ஔதும்பர என்பதன் றிரிபு.]

அவதூதகீதை— அதிவர்ணச் சிரமத்தைக் கூறும் ஒருநூல்.

அவதூதம்—1. அசைக்கப்பட்டது. 2. அடிக்கப்பட்டது. 3. அவமதிக்கப்பட்டது. 4. சிதறப்பட்டது. 5. திருப்பியனுப்பப்பட்டது. 6. நீக்கப்பட்டது. 7. மல்யுத்தத்திலொருவகை; அது: புறங்கையாற் கீழே தள்ளுவது. (கூர்மபு. அட்டமூர்த். உசு. உரை.) [அவதூத.]

அவதூதன்— அதிவர்ணச்சிரமி. இலௌகிகபந்தம் அனைத்தையும் விட்டு நீத்தவன். [அவதூத:]

அவதூதி— அவதூதன்.

அவதூநநம்—1. அகற்றல். 2. அசைத்தல். 3. அசைதல். 4. கலங்குதல். 5. மிதித்தல். [அவதூநந: அவ - முன். தூநந - அசைதல்.]

அவதூறு—1. நிந்தை. 2. பிறர்பழிகூறுதல்.

அவதோகம்—பால். [அவதோஹ: அவ; தோஹ - கறத்தல்.]

அவந்தரை— 1. குளப்பம். 2. கைவிடப்பட்டவன். (உ-ம்.) "அவந்தரையாய்ச்சாக" 3. சேதம். 4. பிரயோசநம் இன்மை. (உ-ம்.) "அவந்தரையாய்ப்போக."

அவந்தன்—பாக்கியகீநன், வீணன். (உ-ம்.) "நின்மகனவந்தனாய் வெறுநிலத்திருக்கலானபோது" (இராமா. மந்தரை. ௫௫.)

அவந்தி—1. அவந்திதேசம்; அஃது: ஐம்பத்தாறு தேசங்களுள் ஒன்று. 2. சத்தபுரிகளுள் ஒன்றாகிய உச்சயினி புரம். (உபதேசகா. சிவநாம. ௧௦௮.) 3. ஒருநதி. 4. காடித்தண்ணீர்.

(உ-ம்.) "அதிலவந்தியுமெனையுமுபயமுபய ம்படிபெய்" (தைல. தைலவ. கககூ.) 5. கிளி (பிங்க. நஒகக.)

அவந்திக்கண்ணி—மெருகன்கிழங்கு.

அவந்திகன்—அவந்திதேசராசன். (உ-ம்.) "இவனேகண்டா யவந்திகனெனன்னச் சொன்ஞன்" (இரகுவமி. மாலேயீ. கூசு.)

அவந்திகை—1. அவந்திநகரம். (உ-ம்.) "அழகியவயோத்தி மதுரையே மாயையவந் திகை காசி நற்காஞ்சி" (கந்தபு. திருநகர. எஞ.) 2. கிளிப்பறவை. (சூ. நிகண். ந: ருரு.)

அவந்திசோமம்—புளித்த கஞ்சி. [ஸவந்தி ஸோமம்: ஸோமம் - கஞ்சி. அவந்தி நகரிற் செய்யப்படுவது.]

அவந்தியன்-அவந்திதேசத்தவன். (உ-ம்.) "அவந்தியன்முரசமார்ப்ப" (சிந்.காந்த.கஉக.)

அவநதம்—1. குனிதல். 2. தலைகவிழ்தல். [அவ- கீழ். நத - வளைதல்.]

அவநதன்—1. குனிந்தவன். 2. தலைகவிழ்ந்தவன்.(உ-ம்.) "அரசனவனதஞ்ஞன்" (கோயிற்பு. இரணி. கசு.) [அவநத: அவ - கீழ். நத - வணங்கல்.]

அவநதி—1. குனிதல். 2. தலைகவிழ்தல். 3. தாழ்மை. 4. மரியாதை. 5. மேற்குத்திசையில் அத்தமித்துப்போதல். 6. வணக்கம். [அவ - கீழ். நதி - வளைதல்.]

அவநம்—1. அலங்கரித்தல். 2. இருத்தல். 3. காத்தல். 4. கொல்லல். 5. செய்தல். 6. தழுவுதல். 7. தாங்குதல். 8. திருத்திகொடுத்தல். 9. திருத்தியடைதல். 10. நீவிரம். 11. பட்சம், அன்பு. 12. பிடித்தல். 13. பெலன். 14. தரும்படி கேட்டல். 15. போதல். 16. விருத்தியாதல். 17. விருப்பு. [அவந.]

அவநம்பிக்கை—நம்பிக்கையீனம். [அவ - கேடு.]

அவநாசி—சரஸ்வதி.

அவநாயகம்—இறங்கச்செய்தல். [அவ - கீழ். நாயகம் - அடைவித்தல்.]

அவநி—1. பூமி. (உ-ம்.) "அன்றெனக்கு நீயிசைந்தவவநிபாதி யமையும்" (பாரத. வாரணு. அஉ.) 2. மருதநிலம். (இராசவைத்.) [அவநி: அவ - காத்தல்.]

அவநிகேள்வன்—விட்டுணு. (பூமிதேவிக்கு நாயகன் என்றபடி.) (உ-ம்.) "அவநிகேள்வனு - நாற்றிசைமுகனுமடைநளிநத்தேவுமே" (கந்தபு. திருவவதா. எ௦.)

அவநிதம்—தோத்திரித்தல்.

அவநிந்தை—தூஷணம்.

அவநிபதி—1. அரசன். 2. விட்டுணு. [அவநி - பூமி, பூமிதேவி. பதி - தலைவன்.]

அவநிபன்—அரசன். (உ-ம்.) "அவனிபனகரியில்" (பாரத. வாரணு. கஅ.)

அவநிபாரகன்—அரசன். [அவநி - பூமி. பாரகந - காப்போன்.]

அவநிபாலகன்—அரசன். [அவநிபால: அவநி - பூமி. பால - காப்போன்.]

அவநிபாலன்—அரசன். [அவநிபால: பால - காப்பவன்.]

அவநியாயம்—நியாயகீநம்.

அவநீதம்—நீதகீநம். [அவ; நீத - நடத்துதல்.]

அவநீதி—நீதியின்மை. (உ-ம்.) மறனுறும வநீதியை" (பாகவத. குருகுல. சநகூ.)

அவநுதி—1. (இலக்கணம்.) ஓரலங்காரம்; அஃது: ஒன்றன் உண்மையை மறுத்துப் பிறிதொன்ருக உரைப்பது. "நறைகமழ் தார் வேட்டார் நலனணியு நாணு - நிறையு நிலைதளரா நீர்மை- யறநெறிசூழ் - செங்கோலனல்லன்கொடுங்கோலன் றெவ்வடுபோர் - வெங்கோபமால்யானை வேந்து" என்பதிற் போல இதன்கண் செங்கோன்மையுடைமையாகிய சிறப்புண்மையை மறுத்துக் கொடுங்கோன்மையாகிய பிறிதொன்ருகக் கூறியவாறு காண்க. "சிறப்பினும் பொருளினுங் குணத்தினு முண்மை - மறுத்துப்பிறிதுரைப்பதவநுதியாகும்" (தண்டியலங். பொருள். எக.) 2. துதித்தல், புகழ்தல்.

அவநுதியுருவகம்—ஒருவகையுருவகஅலங்காரம்; அது: "பொங்களகமல்லபுயலே" யென்றதிற்போல, உண்மைப் பொருளைமறுத்து ஒப்புமைப்பொருளைப் பொருளாகச் சாதிப்பது. "உவமையேது வேற்றுமைவிலக்கேயவநுதிசிலேடையென்றவற்ருெடுவருமே" என்னுந் தண்டியலங். நகூ - ம் சூத்திரமும் உரையும்.

அவநெறி—பாவமொழி. (உ-ம்.) "தீவினையாலவநெறியிற்செல்லாமே" (பெரியபு. தடுத்தா. எக.)

அவப்பிரசவம்—ஆறுக்குமேலானமாதங்களிலே கருவழிதல். (சி. சி. உ: கூஈ. மறை.)

அவப்பிரஞ்சம்-இழிசனர்மொழி.

அவப்பெயர்—துர்க்கீர்த்தி.

அவப்பொழுது—வீண்பொழுது. (உ-ம்.) "அவப்பொழுதகலவிருப்படுதன்விருப்போ" (வைராக். தீப. கஅ.)

அவபத்தி— 1. பத்தியின்மை. 2. வீண்பத்தி.

அவபத்தியம்—பத்தியந்தவறுதல். [ஸவ; பத்ய - இணக்கமானது.]

அவபாதுகவாதம்— தோள்களைச் சூம்பச்செய்யும் ஒரு நோய். (சீவரட். கசுஅ.) [ஸவ- கீழ். பாஹு - தோள்வாதம்.]

அவபாசகத்துவம்— விளக்குதல். [ஸவஹாஸகத்வ.]

அவபாசகம்—1. ஒளியுடையது. 2. பரப்பிரமம். [ஸவஹாஸக.]

அவபாசகன்—விளக்குகிறவன். [ஸவஹாஸக:]

அவபாசனை—1. விளக்குதல். 2. விளங்குதல். [ஸவஹாஸநா.]

அவபாசம்—1. அறிவு. 2. இடம், எல்லை. 3. ஒளி. 4. காட்சியறிவு. 5. தோற்றுதல், வெளிப்படுதல். 6. விபரீதஞாநம். [ஸவஹாஸ; ஸவ; ஹாஸ - ஒளி.]

அவபாதநம்—1. தறித்தல். 2. வெட்டுதல். ஸவபாதந; ஸவ - கீழ். பாதந - விழுதல்.]

அவபாதம்— 1. இறங்குதல். 2. படுகுழி. 3. யானைப்படுகுழி. 4. விழுதல். [ஸவபாத; ஸவ - கீழ். பாத - விழுதல்.]

அவபிருதம்—1. சுத்திசெய்தற்கானசலம். (உ-ம்.) "அரசராடுறுநீரவபிருதத்திலாடுக" (சூத. ஞாந.எ; கூ.) 2. முதலாம் யாகத்திலுண்டான குறையை நீக்கச்செய்யும் இரண்டாம் யாகம். 3. யாகமுடிவிலே சுத்திசெய்தற்பொருட்டுச்செய்யும் ஸ்நாநம். [ஸவஹ்ருய.]

அவபுத்தி—துற்புத்தி.

அவபேதகவாதம்— ஒருவகை வாதரோகம்; அது: கண், புருவம், நெற்றியென்பவைகளிலே வியாபித்து நெற்றி பிளந்துபோவதுபோலச் சகிக்கக்கூடாத வேதனையைச்செய்வது. (சீவரட். கஎச.) [ஸவஜேடி; வாத.]

அவபோதகன்— 1. உபாத்தியாயன். 2. சூரியன். 3. விழிக்கச்செய்வோன். [ஸவஜோயக; ஸவ; ஜோய - அறிவு.]

அவபோதநம்— 1. அறிவு. 2. காட்சியுணர்வு. [ஸவஜோயந.]

அவபோதம்— 1. அறிவித்தல். 2. அறிவு. 3. ஊகம். 4. படிப்பித்தல். 5. விழிப்பு. [ஸவஜோய: ஜோய - அறிவு.]

அவபோதரூபம்— அறிவுருபம். (சி - வி. சரி. அவதாரிகை.)

அவம்—1. ஆகாயத்தாமரை. (இராசவைத்.) 2. கேடு, தீமை. (உ-ம்.) "அவஞ்செய்வாராசையுட்பட்டு" (வள். உகசு.) 3. பயனின்மை, வீண். (உ-ம்.) "அம்மையிஞராத்தவம்புரியாதவமே பிறந்தேதற்கு" (தணிகை. களவு. நசக.)

அவம்போதல்—வீணாகப்போதல்.

அவமதி— 1 - 3. அவமதியென்னேவலுந்தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். 4. நிந்தை. (உ - ம்.) "இழிஞன்புலைக்காந்தீண்டியென்னையவமதிசெய்திட" (காஞ்சிபு. பரசிரா. சஉ.) 5. வெறுப்பு. [4, 5. ஸவமதி.]

அவமதிச்சிரிப்பு— நிந்தனையாகச்சிரித்தல்.

அவமதித்தல்—இகழ்வாக மதித்தல். (உ-ம்.) "பானைக்குருவை யவமதித்தோர்" (தணிகை. அகத். நடகூ.)

அவமதிப்பு—இகழ்வாகமதித்தல். (உ-ம்.) "அவமதிப்புமான்ற மதிப்பும்" (நாலடி. பெரியாரை. ந.)

அவமந்தம்— கலத்தல். (சீவரட். நகரு.)

அவமந்தரோகம்— ஆண்குறியிலே வரும் ஒருவகைரோகம்; அஃது: ஆண்குறியில் நீளவடிவாய் அநேககொப்புளங்களை யுண்டாக்க, அக்கொப்புளங்களின்நடுவில் வீறலுண்டாகிச்சீழ் இரத்தம் ஒழுகுவதும் அன்றி, வேதனையும் ரோமச்சிலிர்ப்பு முண்டாம். (சீவரட். நகரு.) [ஸவமந்தம் - கலத்தல். இது பல உபத்திரவங்களோடு கலந்து வெளிப்படுதலால் வந்தபெயர்.]

அவமரணம்—அகாலமரணம்.

அவமரியாதை—மரியாதைத்தவறு. (உ-ம்.) "பொன்போலும் அரியதவத்தையுடைய எல்லாமுனிவர்களுங்கோபித்து எங்களுக்கு அவமரியாதைசெய்தபடியினலே" (அருணசலபு. இடப்பாக. சசு. உரை.)

அவமழை—கேடுசெய்யும் அகாலமழை.

அவமாக்கல்—வீணாக்கல்.

அவமாநம்— 1. இழிவு. (உ-ம்.) "ஆசிரியன்வாடவவமாநமதுசெய்தோன்" (சூத. எக்கி.

பூ. சஎ: ச.) 2. மானகேம். (உ-ம்.) "அமணர் கடாமென்னையவமானஞ் செய்ய" (பெரியபு. தண்டி. கக.) [அவ; மான - மதிப்பு.]

அவமானித்தல்—1. அவமானப்படல். (பாரதவெண். அஎகு.) 2. அவமானப்படுத்தல். (உ-ம்.) "மாதகம்வெருவவேந்தரவையினில வமானித்த-பாதகன்" (நல். பார. சொர்க்க தெரி. நக.)

அவமானிதம்—அவமானம் அடைந்தது.

அவமிருத்துரோகம்—திருவாதிரை கேட்டை ஆயிலியம் பரணி கார்த்திகை மூப்பூரம் என்னும் நாட்களுடனே பாவவாரமும் இருத்தையுங் கூடிவருவது. [இந்தயோசத்திலே வியாதி கொள்ளின் மரணம் வரும். என்பது பற்றிவந்தபெயர்.] (விதான. பஞ்சாங்க. கசு. உரை.)

அவமிருத்து—1. அபமிருத்து. (உ-ம்.) "பல்கோடிசன்மப்பகையு மவமிருத்தும்" (கந்தர் அலங். கதஉ.) 2. (சோதிடம) கேதுவின்மகன். (குமார. திருநா. உ. உரை.)

அவமோசநம்—1. விடுதல். 2. விடுதலையாக்கல். [அவமோசந: அவ; மோசந - விடுதல்.]

அவயம்—1. (கோழிமுதலியன) அடைகிடத்தல். 2 அழுகை. 3. இலாமிச்சைசசெடி. 4. நன்மையின்மை.

அவயவசாபிண்டியம்— தேக உறுப்புக்களின்கலப்பினுற்சபிண்டராயிருக்குந்தன்மை. (அவயவசம்பந்தத்தால் மகனுந் தகப்பனுஞ் சபிண்டசம்பந்தம் உடையோர்.) (பரா. மி. கூஎ.)

அவயவம்— 1. அநுமானவாக்கியத்தினுறுப்பு; அவ்வுறுப்புக்கள்: பிரதிஞ்ஞை, ஏது, உதாரணம், உபநயம், நிகமநம் என ஐந்து. (தர்க்கபா. எஉ.) 2. உடம்பு. 3. உறுப்பு. (உ-ம்.) "ஆராமந்தொறுந் தங்களவயவம் போல்வனகொய்தார்" (பாரத. காண்ட. சு.) 4. ஒருபொருளின் ஏகதேசமாய்த் தனித்தனி பிரிக்கப்படுந்தகுதியுடையது. ஆடையின் ஏகதேசமாய்த் தனித்தனி பிரிக்கப்படுநூல்கள்போல. (சிவஞானபாடியம். உச.)

அவயவவுருவகம்— 1. உருவக அலங்காரத்தின் ஒருவகை; அஃது: அவயவத்தை உருவகஞ்செய்து அவயவியை வாளா உரைப்பது. "புருவச்சிலைகுனித்துக் கண்ணம்பென்னுள்ள - முருவத்தொடுத்தாரொருவர்" என்பதிற் போல. (தண்டியல. நகூ-ம் உரையும்.)

அவயவி—1. அநுமானவாக்கியம். 2. அவயவத்தையுடையது. 3. உடம்பு. [அவயவிநு: அவயவம்- உறுப்பு. இ- ஒரு விகுதி.]

அவயவியுருவகம்— உருவக அலங்காரத்தின் ஒருவகை; அஃது: அவயவியை யுருவகஞ்செய்து அவயவத்தைவாளா உரைப்பது. "வார்புருவங் கூத்தாட வாய்மழலை சோர்ந்தசைய - வேர்வரும்பச்சேந்து விழிமதர்ப்ப - மூரல்- அளிக்குந்தெரிவைவதநாம்புயத்தாற்களிக்குந் தவமுடையேன்கண்" என்பதிற் போல. (தண்டியல. நகூ-ம் உரையும்.)

அவயோகம்—1. துர்ச்சம்பவம். (உ-ம்.) "தீமை - தூற்றுமனையவண்முகங்கண்டவயோகமுணர்ந் தழிந்து" (வேதாரணியபு. அக்கினிதீர். அ.) 2. நாசயோகம். (விதான. குணகுண. க. மூகத்துரை.)

அவர்—1. அவர்கள். (பலர்பாற்படர்க்கையில்வரும் ஒருசுட்டுப்பெயர்.) (உ-ம்.) "புவியினரேனையர் புராணந்தெரினுஞ் - சிவகதையுணர்கிலரென்னிற் றீருமோ - வவர்மயல்" (கநதபு. அவையட. கக.) 2. உயர்திணைப்பொருள். (உ-ம்.) "அவையவராய்"(சிவப்பிரகாச. உ: க.) உயர்திணையில் ஒருமைச்சிறப்பாய் வருவதொரு சுட்டுப்பெயர். 3. நாயகன். (இது நாயகி தன்னுயகன்பெயர் கூறுதுபடர்க்கையிற்சுட்டிச்சொல்லுமிடத்துவழங்குவது.) (உ-ம்.) "யானுரைப்பதவர்திறம்" (வள். ககஅச.)

அவர்கள்— பலர்பாற்படர்க்கையில் வரும் ஒருசேய்மைச்சுட்டுப்பெயர். (உ-ம்.) "அவர்கண்முன்றோன்ற"(சூத. எக்கி. பூ. உ0:உக.)

அவர்ச்சநீயம்— தள்ளிவிடத்தக்கதல்லாதது. (உ-ம்.) அவர்ச்சநீயசம் சித்தபஞ்ச கிருத்திய கர்த்திருத்துவம்" (சி. சி. சு: க. ஞான.) [அ- எதிர்மறை. வர்ஜநீயம்-தள்ளத்தக்கது.]

அவர்ணியம்—வர்ணித்துச்சொல்லப்படுவதல்லாதது. [அ; வர்ண்யம்- வர்ணித்துச்சொலப்படுவது.

அவர்வயின்விதும்பல்— பிரிவின்கண்தலைமகனுந் தலைமகளும் வேட்கைமிகுதியால் ஒருவரிடம் ஒருவர்செல்லவிரைதல். (வள். கஉஎ-ஆம் அதி.)

அவரகாத்திரம்— 1. கால். (சிங். காந்த. நகச. உரை.) [அ - எதிர்மறை. வர- சிரேட்டம். காத்ர- உறுப்பு. வராகாத்திரம் என்பதனைத் தலையென்றும் அவராகாத்திரம் என்பதனைக் கால் என்றும் வடநூலார் கூறுவர்

என்றார் நச்சினார்க்கினியர்.] 2. யானையின்பின்காலும் முன்காலும். [அவர- யானைப்பின்கால். மாத்ர- யானைமுன்கால்.]

அவரசன்—1. சூத்திரன். 2. தம்பி. [அவரஜ: அவர - கீழ், பின். ஜ - பிறந்தவன்.]

அவரசை—தங்கை. [அவரஜா: அவர - பின். ஜா - பிறந்தவள்.]

அவரசைலம்—அஸ்தமயமலை. [அவர- மேற்கிலுள்ளது. ஶைலம் - மலை.]

அவரம்—1. கடைசியானது. 2. கீழ்மையானது. 3. பிரதானம் அல்லாதது. 4. பின்புறம். 5. பின்வருவது. 6. மேற்கிலுள்ளது. 7. யானைப் பின்னங்கால், யானைப் பின்னந்தொடை. 8. வயசிலிளையது.

அவராகம்— இச்சையின்மை. (உ-ம்.) "தாரதலமென்னுஞ்செங்கண் - மானவராக வேத மலர்முனிதனக்குச்சொன்னாள்" (பாரத. சூதுபோர். உ0௪.) [அவ - எதிர்மறைப்பொருளில் வந்த ஒரு உபசர்க்கம்; அவபத்தியம் என்பதிற்போல. ராகம் - இச்சை.]

அவரி—அவுரி (பார்.)

அவநுணியம்—அவர்ணியம் (உ-ம்.) "பொதுச்சிறப்புக்களிலொன்று வருணியமாகவும் ஒன்றவருணியமாகவும் இருப்பனவாம்" (குவ. ௬௧. உரை.)

அவரை— ஒருகொடி. (உ-ம்.) "குளிர்புரைகொடுங்காய் கொண்டனவவரை" (மலைபடு. ௧௧0.)

அவரோகணம்— 1. இறங்குதல். 2. விழுது. [அவரோஹண.]

அவரோகணமந்திரம்—ஒருமந்திரம். (பிரபஞ்ச. ௧௪௬.)

அவரோகம்—1. அடிதொடங்கி மரத்தைச்சுற்றிக்கொடிபடருகை. 2. இறங்குதல். 3. சுவர்க்கம். 4. (ஆலமரம் முதலியவைகளின்) விழுது. [அவரோஹ: அவ- கீழ். ருஹ் - ஏறுதல்.]

அவரோகி— ஆலமரம். [அவரோஹிந்: அவரோஹம - விழுது. இ- உடைமையையுணர்த்தும் ஒரு விகுதி.]

அவரோதநம்— 1. அரசன் மனையில் அந்தப்புரம். 2. தடுத்தல். 3. முற்றுகை, அரணைவளைத்து வழிதடுக்கை. [அவரோதந]

அவரோதம்—1. அடைக்கப்பட்ட இடம். 2. அரசன் மனையிலே யவன் தேவியிருக்கும் உள்வீடு. 3. கட்டுப்பாடு செய்தல். 4. குழியாதல். 5. தடை. 6. முற்றுகை, அரணைவளைத்து வழிதடுக்கை. 7. வேலி. [அவரோத: அவ; ருத் - தடுத்தல்.]

அவரோபணம்— 1. இலதாகச்செய்தல். 2. இறக்குதல். 3. குறைத்தல். 4. வேரோடுபிடுங்குதல். [அவரோபண.]

அவல்—ஒரு சிற்றுணவு; இது நெல்லைத் தண்ணீரிலே நனையவைத்துப் பின் சிறிது உலரச்செய்து பொரித்து உரலிலிட்டிடித் தெடுக்கப்படுவது. (உ-ம்.) "அவலெறியுலக்கைபோயதிரத்தாக்கலும்" (தணிகை. திருநகர. ௬௬.) 2. குளம். 3. பள்ளம். (உ-ம்.) "மேடவல்சிலைவிளைநிலம்" (தணிகை. அகத். உ௬௭.) 4. விளைநிலம். (உ-ம்.) "மெல்லவிருந்தவூர்தொறும்" (மலைபடு. ௪௫0.)

அவலக்கணம்— அவலட்சணம். [அவ; லக்ஷண.]

அவலச்சுவை— ஒன்பது சுவைகளுளொன்று; அது: துயருறுதல்.

அவலச்சுவையலங்காரம்—சுவையலங்காரவகையுள் ஒன்று; அது: பொறியுணர்வாலாகியுள்ளத்திலே நிகழுந் துயரைக்குறிப்பது. (உ-ம்.) "கழல்சேர்ந்த தாள்விடலை காதலி மெய்தீண்டும் - அழல்சேர்ந்து தன்னெஞ்சயர்ந்தான் - குழல்சேர்ந்த-தாமந்தரியாதசையுந்தளர்மேனி - யீமந்தரிக்குமோவென்று" (தண்டியல. ௬௮.)

அவலட்சணம்— 1. அழகின்மை. 2. இலக்கணக்கேடு. [அவ; லக்ஷண.]

அவலட்சணன்— இலக்ஷணம் இல்லாதவன்.

அவலத்தவிநயம்— விலக்குறுப்புப்பதினொன்கனுள் ஒன்றாகிய சுவை ஒன்பதுவகையுள் ஒன்று; அஃது: "அவலத்தவிநயமறிவரக்கிளப்பின் - கவலையொடு புணர்ந்தகண்ணீர்மாரியும் - வாடியசீர்மையும் வருந்தியசெலவும் - பீடழியிடும்பையும் பிதற்றியசொல்லும் - நிறைகையழிதலு நீர்மையில்கிளவியும் - பொறையின்றாகலும் புணர்த்தினர்புலவர்" என்னுஞ்சூத்திரத்தால் விளங்கக்கிடந்தது. (சில. ப். அரங்கே. ௧௩. உரை.)

அவலம்— 1. எண்வகை மெய்ப்பாடுகளுள்ஒன்றாகிய அழுகை. (தொல்.பொரு.உ௩௪. உரை.) (உ-ம்.) "எரியின்மெழு - கன்னவலங்கூயலமந்தலறினனால்" (உபதேசகா. சிவவிர. உ௩௮.) 2. குற்றம். (உ-ம்.) "உன்

ளுமவலத்தையகற்ருர்" (சைவச. ஆசா. ௪.) 3. சோர்வு. (உ-ம்.) "கைதொழுதவலங்கூர்ந்து-நின்றனள்" (கந்தபு. வரவுகேள். ௬௭.) 4. நோய். (தைல. தைலவ. ௧௧௫.) 5. பிரயோசநம் அற்றது. (உ-ம்.) "கற்றதுங்கேட்டதுமவலமாய்ப்போதனன்ருே" (தாயு.சச்சி.௫.) 6. பெலகீநம். 7. மநக்கவலை. (உ-ம்.) "நெஞ்சத்தவலமிலர்" (வள். ௬௦௭௨.) 8. வறுமை. (உ-ம்.) "கெடுகெநின்னவலம்" (பெரும்பா. ௩௮.) [ஃபைமு.]

அவலம்பகசிலேட்டுமம்— இதயத்தானத்திலே வாசம்பண்ணிக்கொண்டு, தனது சுபாவபராக்கிரமத்தைக்கொண்டு திரிகத்தாநத்துக்கும், அங்கசாரத்தைக்கொண் டிதயத்தாநத்துக்குஞ், சலத்தொழிலைக்கொண்டு மற்ற நான்கு சிலேட்டுமங்களுக்கும் ஆதாரமாயிருக்குஞ்சிலேட்டுமம். (சீவரட். ௫.)

அவலம்பகம்— (பற்றுதல். சீவரட். ௬.)

அவலம்பம்— 1. ஆதாரம், சார்வு. 2. ஊன்றுகோல். 3. (கணக்கதிகாரம்.) ஒரு ரேகையினின்றெழும்பித் தனதிருபக்கத்துஞ் சமகோணமவாத்தக்கதாக மேலே செல்லும் ரேகை. 4. தூங்குதல். [ஃவலஂப.]

அவலம்பித்தல்— சார்ந்துநிற்றல். (உ-ம்.) "சாலம்பசிவயோகம் அவலம்பித்து" (சி. சி. ௯: ௰. ஞாநப்.)

அவலாக்கு— அரக்கிலொருவகை.

அவலவவிநயம்— ஆவலத்தவிநயம். (சிலப். அரங்கே. ௧௩. உரை.)

அவலன் — உடற்குற்றம் உடையவன். (உ-ம்.) "அறவும்பரியனவலன்" (சைவச. ஆசா. ௮.)

அவலி— 1-2. அவலியென்னேவலுந்தெரிநிலைவினைப்பகுதியும். 3. பூனைக்காலிச்செடி.

அவலித்தல்— 1. புலம்புதல், அழுதல். (உ-ம்.) "அவலித்தணங்குநையாவகைதேறற்கு" (தணிகை. களவு. ௫௩௨.) 2. மநம் வருந்துதல். (உ-ம்.) "யானெவன் செய்வலென்றேயவலியாவிருந்தபோதில்" (சிங். நாம. ௨ ௮௫.)

அவலீலை— 1. அவமரியாதை, நிந்தனை. 2. விளையாட்டு, களிப்பு. [ஃவலீலா.]

அவலுஞ்சநம் — 1. கிழித்தல். [ஃவ; லுஞ் - பிரித்தல்.] 2. வேரோடு பிடுங்குதல். 3. வெட்டுதல். [ஃவலுஞ்சந.]

அவலுண்டநம்— 1. களவுசெய்தல். 2. நிலத்திலே விழுந்துருளுதல். [ஃவலுண்டந: லுண்ட - களவாடல், உருளுதல்.]

அவலேகநம்—நாவினாலே நக்குதல். [ஃவலேஹந: லேஹந - நக்குதல்.]

அவலேகம்— 1. இலேகியம். 2. கஷாயம். 3. நக்குதல். [ஃவலேஹ; ஃவ; லேஹ - நக்குதல்.]

அவலேசம்— 1. அவமாநம். 2. அற்பம், சிறுமை. 3. ஆபத்து. [1, 2. ஃவ; லேஶ - அற்பம்.]

அவலேபநம்— 1. ஒன்றுதல், கூடுதல். 2. கெர்வம், இறுமாப்பு. 3. தைலம். 4. பூசுதல். [ஃவலேபந: ஃவ; லிபீ - பூசுதல்.]

அவலேபம்— 1. அலங்காரம். 2. ஒன்றுதல், கூடுதல். 3. கெர்வம், இறுமாப்பு. 4. நிந்தனை. 5. பூசுதல். [ஃவலேபந.]

அவலை— 1. கடுப்பு. 2. காடு, பாழ்நிலம். (உ-ம்.) "காடுங்கடுப்புமவலையின்கண்ண" (பிங். ௩௬௦௦.) [ஃபலா: ஃ - எதிர்மறை. பல - பிரயோசநம்.]

அவலோககன்— ஒற்றன், வேயன். [ஃவலோகக: ஃவ; லோக - பார்த்தல்.]

அவலோகநம்— பார்வை. (உ-ம்.) "அருக்கிரகாவலோகநம்" (சி. சி. ௮: ௩. சிவாக்.) [ஃவலோகந.]

அவலோகம்— 1. பார்த்தல், பார்வை.

அவலோகிதம்— காணப்பட்டது. [ஃவலோகித.]

அவலோகிதன்— 1. சமணமுநிவன். (உ-ம்.) "ஆயுங்குணத்தவலோகிதன் பக்கல்" (வீரசோ. பாயி. ௨.) 2. காணப்பட்டவன். [ஃவலோகித:]

அவவாதம்— 1. கடைப்பிடி. 2. கற்பித்த கட்டளை. 3. நம்பிக்கை. 4. நிந்தனை. 5. வீண்பேச்சு. (உ-ம்.) "அம்புயகின்- வனைமுகம் போன்மின்னுளதெனின்வீணவவாதம்" (குவ. எதிர்நிலையணி. ௮.) [ஃவவாத: வாத- பேச்சு.]

அவவு— 1. அவா-ஆசை. (உ-ம்.) "அவவுக் கைவிடுதல்" (கலித்தொகை. ௧௪.) [குறியதன் கீழ் ஆகாரங் குறுகியுகரமேற்றது.]

அவள்— 1. உயர்திணைப் பெண்பாற் படர்க்கையிற்சேய்மைச்சுட்டுப்பொருளில்வரும் ஒருபெயர். (உ-ம்.) "அவளால்வர்தவாக்கம்"

(சி. சி. க: ௬௯.) 2. உயர்திணைப்பெண்பாற் பிரபஞ்சம். (உ-ம்.) "அவனவளதுவெனுமவை" (சிவஞானபோ. க.)

அவளிகை— இடுதிரை. (பிங்க. ௨௨௯௪.)

அவளிவணல்லூர்—ஒரு தலம். (தேவார. அவளிவ. திருஞான.)

அவற்கம்—கஞ்சி.

அவற்காளான்—ஒருவகைக்காளான்.

அவன்—1. அவம். (உ-ம்.) "அவன்செயத் திருவுடம்பலச நோற்கின்றான்" (இராமா. சூர்ப். கஅ.)[குறிலிணைக்கீழ்வந்த மகரம் னகரப்போலியாயிற்று.] 2. உயர்திணையாண்பாற் படர்க்கையிற் சேய்மைச் சுட்டுப்பொருளில் வரும் ஒருபெயர். (உ-ம்.) "ஆனுன்சிவன் மற்றவனீள்கழற்கன்புசெய்வாம்" (கந்தபு. கடவு. உ.)3. "உயர்திணையாண்பாற்பிரபஞ்சம்" (உ-ம்.) "அவனவளதுவெனுமவை" (சிவஞானபோ. க.)

அவா— 1-3. அவாவென்னேவலுந் தெரிநிலைவினைப்பகுதியும் பெயரெச்சத்தொகையும். [க-ஆம் ௩-ஆம் பொருள்களில் வருங்கால் உகரச்சாரியை பெறும்.] 4. ஆசை. (உ-ம்.) "புன்கட்கூதவாவேட்டையினவாவெறும்பொய்யேற்-றின்கட்போரவாமாதாரவா' (இரகுவ. தசரத. ௯.) 5. ஆசைப்பெருக்கம், பொருள்களைப்பெறவேண்டுமென மேன்மேல் நிகழும் ஆசை. (வள். ௩௭0.) 6. இறங்குகை. 7. ஒருபதந் தன்னோடன்றுவயித்துப் பொருண் முடிதற்குரிய வேறொருபதத்தை வேண்டுதல். (சைவபரி. உ௫.)

அவாகு— கஞ்சி. [யவாகூ இங்கே வடமொழியகரமெய் கெட்டது.]

அவாகேசவுப்பி—பெருந்தும்பைச்செடி.

அவாங்மாநசகோசரம்—வாக்குக்கும் மனத்துக்குமெட்டாதது. (கந்தபு. மோந. ௩௨.) உரை.)

அவாச்சியம்—1. கெட்டது. 2. சொல்லத்தகாதது. 3. சொல்லினால் வெளிப்படுத்த முடியாதது. (உ-ம்.) "அதனையின்னதென் றுரைத்திடப்படாமையா லவாச்சிய வடிவாகும்" (கைவல். சந்தே. ௬௫.) 4. தெற்கிலுள்ளது. [அ- எதிர்மறை. வாச்யம் - சொல்லத்தக்கது. அவாசு-தெற்கு. ய-ஒருவிகுதி.]

அவாசி—1. கீழ்த்தேசம். 2. தெற்குத்திசை. (உ-ம்.) "மாசிலாவவாசிநின்று" (சேதுபு. வேதாள. சக.) [அவாசி. அவ - கீழ். அஞ்சு - போதல். கீழ்ப்போன இடம் என்றபடி.]

அவாசியர்—1.ஞானிகள்.2.தென்னாட்டார்.

அவாசீநம்–1. இறங்கினது. 2.கீழுள்ளது. 3. தெற்கிலுள்ளது. [அவாசீந.]

அவாத்தம்—அடைந்தது. [அவாப்த:]

அவாதிதம்—கண்டிக்கப்படாதது. (உ-ம்.) "அதுநீயுடைமை, யாதுபிரமாணத்தானும் அவாதிதம்" (தர்க்கபா. உ௫.) [அபாதித: அ - எதிர்மறை. பாதித - கண்டிக்கப்பட்டது.]

அவாதிதவிடயம்— (தர்க்க) அநுமானவாக்கியத்திற் சொல்லப்படும் பஞ்சரூபங்களுள் ஒன்று; அஃதேதுவுக்கு விடயமான சாத்தியதருமம் எப்பிரமாணத்தானுங் கண்டிக்கப்படாதிருத்தல். (தர்க்கபா. உ௫. "பஞ்சரூபம்" பார்.) [அபாதிதவிஷய.]

அவாந்தரகாரணம்—இடையில்வந்த காரணம்.

அவாந்தரசங்காரம்—பிரகிருதி தத்துவம் வரையில் நிகழுஞ் சங்காரம்; இது: பிரமவருடம் பார்த்த சங்கியையான பின் நிகழ்வது. (சி-வி. ஞா௩. உ௪. உரை.)

அவாந்தரசிருட்டி—இடையில் நிகழுஞ் சிருட்டி. (உ-ம்.) "நடுவே நடுவே வருமவாந்தர சிருட்டியில்" (சி. சி. ச: ௫௪. ஞானப்.)

அவாந்தரசைவர்—சிவதீக்ஷைபெற்ற சூத்திரர். (சைவச. பொது. சாரு. உரை.) (உ-ம்.) "கரைந்தவவாந்தரசைவன்றனக்குங்கன்மத்துரிமையில்லை" (திருவானை. கோச். உ௩.)

அவாந்தரதிசை— இடையிலுள்ள திசை; அவை: தென்கிழக்கு, தென்மேற்கு, வடமேற்கு, வடகிழக்கு என்பன. [அவாந்தரதிசா.]

அவாந்தரப்பிரயோசநம் — இடையில்வரும் பிரயோசநம், பிரதாநம் அல்லாத பிரயோசநம். (உ-ம்.) "அவாந்தரப்பிரயோசநமாகிய போகத்தையுங்கொடுப்பவர்" (சி. சி. பாயி. க. சிவாக்.)

அவாந்தரப்பிரளயம்–1. பஞ்சப்பிரளயங்களுள் ஒன்று. "பஞ்சப்பிரளயம்" பார். (வாசுதே. உ0௩.) (உ-ம்.) "அனைத்துளவிஞ்சையாவு மவாந்தரப் பிரளயத்தி- னினைத்துணையாகச்சேரும்" (மச்சபு. பிரமாண்ட. ௯.) 2. பிரகிருதியந்தமான பிரளயம். (சி-வி.) [அவாந்தர- இடை.]

அவாந்தரம்—1. அந்தர்ப்பவித்தது. 2. அழிவு. 3. இடையிலுள்ளகாலம், இடையிலு

ள்ள இடம், இடையினிற்பது. (உ-ம்.) "அவாந்தரவியாபாரம்" (சி. சி. அளவை. க. சிவாக்.) 4. உதவியின்மை. 5. பிரதானமல்லாதது, இரண்டாவதாயுள்ளது. 6. வெறுவெளி. [அவ; அந்தரா - உள்.]

அவாந்தரவாக்கியம்— விதிரூபமும் விலக்குரூபமும் ஆகாதுவரும் வாக்கியம்; அது: "சோதிட்டோமாதிகளைப்பண்ணினுற் சீவனுக்குச் சொர்க்காதிபலனுண்டாகும்" என்றாற்போல்வது. (வாசுதே. உசுo.)

அவாந்தரவியாபாரம்— (தறித்தற்கருவியாகியகவியத்திக்கு மரத்தோடுகூடுதல்போல) இடையிலுள்ளசெயல். (உ-ம்.) "நடுவுதோன்றியனவாகியசங்கிர்ஷ முதலியன எவ்வளவோ அவையனைத்தும் அவாந்தர வியாபாரம்" (தர்க்கபா. கஉ.) [அவாந்தரா - இடை. வ்யாபாரம் - தொழில்.]

அவாந்தரை—அவாந்தரம். [அவ அந்தர - உள்.]

அவாபுளப்பி—பிரமிப்பூண்டு.

அவாம்—அவாவும் என்னும் பெயரெச்சம். (வகர உகரங் கெட்டுநின்றது.) (உ-ம்.)"கண்ணவாம்வனப்பிஞனை"(சிந். கேமசரி. ககஎ.)

அவாய்—அவாவி. (உ-ம்.) "கேட்டார்ப்பிணிக்குந்தகையவாய்" (வள். சுசுஅ.) [இது வினையெச்சம்.]

அவாய்நிலை— ஒருபதந் தன்னோடுபொருந்திப் பொருண்முடித்தற்குரிய மற்றொருபதத்தை வேண்டிநிற்கும் நிலை. (உ-ம்.) "கெடுப்பதூஉங்கெட்டார்க்குச் சார்வாய் மற்றாங்கே,யெடுப்பதூஉமெல்லாமழை." என்பதில், எல்லாம்வல்லதுமழை யென்பதுபோல்வன. வல்லது-அவாய்நிலையால் வந்தசொல். (வள். கடு. உரை.)

அவாரபாரம்— கடல். [அவாரபார: அவாரே- இக்கரை. பாரே- அக்கரை.]

அவாரம்—1. ஆற்றின் இக்கரை. 2. இந்தப்பக்கம்.

அவாரி—சிறுநீர்.

அவாவயின்விதும்பல்— கணவனுமனைவியும் பிரிந்திருக்கும்போதிருக்கும் உள்ளன்பு.

அவாவல்—அவாவுதல்.

அவாவறுத்தல்—ஆசைநீக்கல். (வள். கூஎ-ஆம் அதி.)

அவாவன்— 1. கள்ளன். [அவாவநு] 2. பேராசையுடையோன். (உ-ம்.) "கோவியவாவன்" (சைவச. ஆசா. கஎ.)

அவாவாமை— ஆசைப்படாமை. (வள்: கூசுகூ. பரி.)

அவாவு— 1-2. அவாவென்னேவலும் வினைத்தொகையும்.[உகாச்சாரியைபெற்றது.]

அவாவுதல்—1. இறங்குதல். 2. ஒருபதந் தன்னோடுபொருந்திப் பொருண் முடித்தற்குரிய மற்றொருபதத்தைவேண்டுதல். 3.பேராசைகொள்ளுதல். (உ-ம்.) "பின்னையும் போய் செய்தற்கவாவுநெடுநோடா" (நளவெ. கலிநீ. ுக.)4. விரும்புதல். (உ-ம்.) "முருந்தனேரனேர்வாழ்க்கையு மவாவுகில்லேன்" (காஞ்சிபு. திருநெறி. உக.)

அவி— 1-3. அவியென்னேவலுந் தெரிநிலைவினைப் பகுதியும் வினைத் தொகையும். (உ-ம்.) "தரியலார்மூணவி மதிலயோத்தியைச் சார்ந்தான்" (கூச. சிவமா. கஙு: அஅ.) 4. ஆடு. 5. எலி. 6. கம்பளிப்படாம். 7. காற்று. 8. கெடுதல் எனப்பொருள்படும் ஒருமுதனிலைத்தொழிற்பெயர்.(உ-ம்.)"அவிதருமகிழ்வினரற்று நுண மருங்குல்" (கூத. முத்தி. அ:உஅ.)9. சூரியன். 10. சோறு. 11. தலைவன். 12. தேவர்க்கு வேள்வித்தீயிற் கொடுக்கும் உணவு. (உ-ம்.) "அவியுணவினுன்றோரொடொப்பர்" (வள். சகங. பரி.) 13. நீர். 14. செய். (உ-ம்.) "அவிசொரிந்தாயிரம்வேட்டலின்" (வள். உருக.) 15. மதில். 16. மலை. [4, 5, 6, 7, 9, 11, 15, 16. அவி. 10, 12, 13, 14. ஹவிஸ்.]

அவிக்கிநம் — 1. இடையூறின்மை. [அவிக்னா: அ- எதிர்மறை. விக்ந- இடையூறு.] 2. ஒருமரம். [அவிக்ந.]

அவிக்கியாதார்த்தம் — தோல்வித்தாநம் இருபத்திரண்டனுள் ஒன்று; அது:பொருள் இனிது விளங்காத சொற்களை யெடுத்துக்கொண்டு பேசுதல். (சி. சி. அளவை. சஅ. மறை. சிவஞாந.) [அவிஜ்ஞாதார்த: அ-எதிர்மறை. விஜ்ஞாத-அறியப்பட்ட. அர்த-பொருள்.]

அவிக்கிரமம்— பராக்கிரமமின்மை, வீரமின்மை.[அவிக்ரம: அ-எதிர்மறை.விக்ரம-வீரம்.]

அவிக்கை—அவித்தல்.

அவிகசம்— குவிந்து, மலராதது. [அவிகச: விகஅம-விரிதல்.]

அவிகசிதம்— மலராதது. [அவிகஸித:

விகஸித - மலர்ந்தது.]

அவிகடம்— ஆட்டுக்கூட்டம். [ஸவிகட: ஸவி; கட்வீ.]

அவிகம்— வைரத்திநம். [ஸவிக: ஸவி-சூரியன். க - ஒருவிகுதி.]

அவிகலம்— 1. குறைவின்மை, நிறைவு. [ஸ; விகல- குறைவு.] 2. அத்தியந்தநிஷ்களம். (சி-வி. யோக. எ.)

அவிகற்பம்— 1. சந்தேகம் இன்மை. 2. நிருவிகற்பக்காட்சி; அது: பொருளுண்மை மாத்திரம் உணரும் உணர்வு. (உ-ம்.) "அவிகற்பமத்தமுளதென்றறிகை" (சி. சி. அளவை. ௩. மறை.) [ஸவிகல்ப: ஸ- எதிர்மறை. விகல்ப - வேறுபாடு.]

அவிகாயம்—1. அழற்சி. 2. ஒருகாசநோய். 3. சீற்றம். 4. மநவேகம். [அழன்றுகொண்டிருத்தல்; காயம்பட்டோனுக்குள்ள குணம் போலுதலின் இப்பெயர்த்து.]

அவிகாரம்— 1. இயல்பான ரூபத்தினின்று வேறுபடாமை. 2. பரிணாமமல்லாத பொருள். (சி. சி. க: உஅ. ஞாநப்.) 3. விகாரம் இன்மை, வேறுபடுதல் இன்மை. (உ-ம்.) "நனவாதிகளி னவிகாரமாகி" (வேதா. சூ. ௧௦அ.) [ஸவிகார.]

அவிகாரவாதசைவன்— பக்குவம் அடைந்த ஆன்மாவானது ஞாநம்பெற்று, விகாரம் இன்றிநிற்கும் பதியைத்தானே சென்றடையும் என்றுசொல்லுஞ் சைவன். (கந்தபு.நகர. அ௩. உரை.)

அவிகாரன்—1. ஆட்டுக்காரன். 2. கடவுள்.

அவிகாரி—1. கடவுள். 2. மாறாதவன்.

அவிச்சிந்நம்—பிரிக்கப்படாதது. (உ-ம்.) "லோகத்தில் அவிச்சிந்நமாய் இடைவிடாத சம்பிரதாயமுள்ளவைகளும்". (சி-வி. சரி. அ. உரை.) [ஸவிச்சிந்ந.]

அவிச்சிந்நன்— பாரமார்த்திகன். (வாசுதே. ௯.) சுழுத்தியவத்தையிற்காரணசரீரத்தில் அபிமானிக்கப்பட்ட ஆத்மாவாகிய பாரமார்த்திகன். (வாசுதே. அவஸ்தாத்திரய நிரூபகம். ௨௦௧.) [தேகேந்தரியாதியுபாதியினுற் பரிச்சிந்நமாகிறபடியால் வந்தபெயர்.]

அவிசம்வாதி— வேத பிரமாணத்தையநுசரிப்போன். (சி. சி. அளவை. க. சிவாக்.) [ஸவிஸம்வாதி: விஸம்வாதி - பிராயணமுடையநல்லன்.]

அவிசு— 1. உப்பின்றிச் சமைத்த பச்சரிசிப்புற்கை. 2. சுத்தம். 3. நீர். 4. நைவேத்தியம். (உ-ம்.) "உப்புமிளகுபுளியொழித்தே யுளுந்றுமவிசுநிவேதித்து" (மச்சபு. நட்சத்திர. ௨௦.) 5. வெண்ணெய். [ஹவிஸ்.]

அவிசுவாசம்—விசுவாசம் இன்மை.(மநு. கஉ: உசு.) [ஸவிஸ்வாஸ: ஸ - எதிர்மறை. விஸ்வாஸ - நம்பிக்கை.]

அவிசுவாசி — விசுவாசம் இல்லாதவன். [ஸவிஸ்வாஸிநு: ஸ; விஸ்வாஸிநு.]

அவிசேடம்—விசேடம் அல்லாதது, ஒருதன்மையானது. (உ-ம்.) "சத்திரூபமாய்க் காரியஞ்சுருங்கிக் காரணமான காலத்திற் காரியகாரணங்கள் அவிசேடங்களாய்த் தோன்றும்" (சி. சி. க: உஎ. ஞாநப்.) [ஸவிஶேஷ: ஸ - எதிர்மறை. விஶேஷ - வித்தியாசம்.]

அவிஞ்சதை—அறியாமை.

அவிஞ்சன்— 1. அறியாமையுடையோன். 2. போதிக்கப்படாதவன். [ஸவிஜ்ஞ.]

அவிஞ்ஞை—அவித்தை. (உ-ம்.) "அவிஞ்ஞையிங்கில்லை" (ஞாநவா. நிருவாண. க.) [ஸவிஜ்ஞா: ஸ- எதிர்மறை. விஜ்ஞா - ஞாநம்.]

அவிஞ்ஞாதம்— அறியப்படாதது. [ஸவிஜ்ஞாத: ஸ; விஜ்ஞாத - அறியப்பட்டது.]

அவிஞ்ஞாதார்த்தம்— அவிக்கியாதார்த்தமென்னுந் தோல்வித்தாநம். (உ-ம்.) "பிரதிவாதியானவன் ஒரேதரவை மூன்றுதாஞ்சொல்லுகையிலுஞ் சபையிலேயிருக்கிற பரீட்சித்துக்கள் அறுவாதிக்கையிலும் வாதியானவன் ஏதுவையறியேனென்றல். (சி. சி. அளவை. கஅ. மறை.) பொருள் இனிது விளங்காத சொற்களை யெடுத்துக்கொண்டு பேசுதல். (ஷை சிவஞாந.) வாதியானவன் தனக்குவந்த தூஷணம் மறைத்தற்காகத்தெரியாதசத்தங்களைக்கொண்டு பேசுதல். (ஷை நிரம்ப.) வாதியானவன் மூன்றுபிரகாரஞ்சொல்லியிருக்கையிலும் மத்தியஸ்தருக்கும் பிரதிவாதிக்கும் அர்த்தந்தெரியாத சத்தஞ்சொல்லுகை" (ஷை சிவாக்.) [ஸ; விஜ்ஞாத- அறியப்பட்ட. அர்த்த - பொருள்.]

அவிஞ்ஞை—அஞ்ஞாநம். (உ-ம்.) "நிரைபவத் தவிஞ்ஞையாகி"(ஞாநவா. வைராக்.கஉ.) [ஸவிஜ்ஞா: ஸ- எதிர்மறை. விஜ்ஞா - ஞாநம்.]

அவிட்டம்— இருபத்தேழு நட்சத்திரங்களுள் இருபத்துமூன்றாவது நக்ஷத்திரம்.

அவிட்டுமோன்— ஆறு மநுவின்காலத்துச் சத்தவிருடிகளுள் ஒருவன். (உ-ம்.) "அவிட்டுமோன்சீர்காத்தருளுத்தமன் மநுவத்திரி" (கூர்மபு. மநுவந். ௪௦.)

அவிடி—திரைச்சீலை. (பிங்க. ௩௨௩௬.)

அவிடியந்திரியசூக்கம்— குருவின் இல்லாளைப்புணர்ந்த பாதகந் தீர்க்குமாறு செபிக்கப்படும் ஒருமந்திரம். (உ-ம்.) "அவமில்புருடசூக்கத்தையவிடியந்திரியசூக்கத்தை - யிவாராசையினெண்ணிற் குரவனில்லாட் புணர்ந்த பாதகம்போம்" (சூத. எக்கி. பூ. ௪௨: ௧௫.) [ஹவிஷ்ந்ஜீய.]

அவிடியந்திரியம்—ஒருவேதமந்திரம். (சூத. எக்கி. பூ. ௪௨: ௧௫.)

அவிடியந்தியம்— அவிடியந்திரியம். (மநு. ௧௧: ௨௫௧.) [ஹவிஷ்ந்ஜீய.]

அவித்தம்— 1. அறியப்படாதது. 2. வறுமை. [சுவித்த: ஆ- எதிர்மறை. வித்தா-அறியப்பட்டது, திரவியம்.]

அவித்தல்—1. அடக்குதல். (உ-ம்.) "ஐந்தவித்தானாற்றல்" (வள். ௨௫.) 2. அவியச்செய்தல், வேகச்செய்தல். (உ-ம்.) "அறுத்தவித்தாரச் சமைத்தபிள்ளைக்குகந்தார்" (மறைசை. ௨௦.) 3. அழித்தல், கெடுத்தல். (உ-ம்.) "ஒருமூன்றவித்தோன்"(சிலப். நாடு. ௧௧௬.) "யானையருவிதுகளவிப்ப" (சிறுபா. ௨௦௦.) 4. துடைத்தல். (உ-ம்.) "பொங்குபூஞ்சிலம்பிற்போர்த்தபூந்துகளவித்து" (சிந். சுரமஞ். ௭௦.)

அவித்தியம்—அறியாமை, மாயை.

அவித்தியசம்— பாதரசம். [சுவித்யஜ.]

அவித்தியமாந— 1. உள்ளதல்லாத, இருக்காத. [சுவித்யமாந: ஆ-எதிர்மறை. வித்யமாந - இருக்கின்ற.]

அவித்தியாபஞ்சகவுரு— அபுத்திபூர்வமாகிய ஐவகைச்சிருட்டி; அவை: தமம், மோகம், மாமோகம், தாமிசிரம், அந்ததாமிசிரம் என்பன. (உ-ம்.) "அதிசயம்பயப்பவபுத்திபூருவமாவவனிடைத் தமோமயசிருட்டி-பொதிதரத் தோற்றிற்றதுதமமோகம் புகலுமாமோகந்தாமிசிரம்" (சூத. சிவமான். ௪௦: ௨.) "அந்ததாமிசிரமெனவிவைநாளுமவித்தியா பஞ்சகவுருவாய்- உந்துறவிருக்குமெனநலோருரைப்பர்" ஷை ௩.)

அவித்தியா— அஞ்ஞானம். (இதே அவித்தையெனத்திரிந்தது.) (உ-ம்.) "பொல்லாவவித்தியாபுரமொன்றமைத்தான்" (பிரபோத. அவித்தியாபுரச். ௬.)[சுவித்யா.]

அவித்தியை—1. அஞ்ஞானம். (உ-ம்.) "அநிர்வசநீயாவித்தியையோ" (சி. சி. வாலாறு. சிவாக்.) 2. அவித்தை.

அவித்துருமம்—இருப்பைமரம்.

அவித்துவையல்—பச்சடி. (பிங்க. ௧௧௨௫.)

அவித்தை—1. அஞ்ஞானம். ( உ-ம். ) "அடைய"பார்.)2. அறியாமை. 3. ஆணவமலம். (உ-ம்.) "அவித்தைசிந்தத்தருங்கலையாதி மாயை" ( சி. சி. உ: ௮௬.) 4. பிரமத்திலே ஆரோபமாகத் தோன்றின மூலப்பிரகிருதியென்னுஞ் சத்தியில் உண்டான இராசகுணம். இதிலே பிரமப்பிரதிவிம்பமான சீவர்கள்தோற்றுவார்கள். 5. மாயை. (உ-ம்.) "அசத்து" பார். [சுவித்யா.]

அவித்யமாந— உள்ளதல்லாத, அபாவம். [சு- எதிர்மறை. வித்யமாந- இருத்தல்.]

அவிதம்— மெய்ம்மை. [சுவிதத: ஆ - எதிர்மறை. விதத- பொய்.]

அவிதல்—1. இறத்தல். (உ-ம்.) "பொய்க்கரிபுகலும்புன்கணோர், குலங்களினவிந்தனர்" (இராமா. கிங். ௫௮.) 2. கெடுதல், அழிதல். (உ-ம்.) "அகல்விசும்புறையுந்தேவரொளியவிந்திருப்ப" (சிந். முத்தி. ௪௫௫.) "அவினும் வாழினுமென்" (வள். ௪௨௦.) 3. சூடுபிடித்துவெதும்பல். 4. தணிதல். (உ-ம்.) "குணகடறறிரையொடும் பொருதலவியாதே" (குளா. கல்யா. ௫௧.) 5. துன்னீர்கழலப் புண்படல். (உ-ம்.) "வாயவிகதது" 6. நூர்தல். (உ-ம்.)"ஓதுமவ்விளக்கவிந்தமை"(காஞ்சிபு. இருபத்தெண். ௬௧௧.) 7. யாதேனும் ஒருபொருளை நீர்விட்டபாத்திரத்திலே நீரினுள்ளாவது மேலாவது வைத்தாவியெழும்ப நெருப்பினாற் சூடுகாட்டிப் பாகம் பண்ணுதல். 8. வருந்தல். 9. வேர்த்துப்புழுங்குதல்.

அவிதா—யாதேனும் ஓர் ஆபத்து அடைந்தவர் அதினின்றும் நீங்குதற்கு உதவிபெறும்பொருட்டு முறையிட்டுக்கூறும் ஒருசொல். இது "துணைசெய்துணைசெய்" எனப்பொருள்படும். [சுவியா.]

அவிதாநம்— கிரமமின்மை, நியமித்தவிதியைவிட்டு விலகுதல். [சுவிதாந: ஆ - எதிர்மறை. விதாநம் - விதி.]

அவிதாவிடல்— ஆபத்தில் உதவிவேண்டி முறையிட்டுக்கூறுதல். (உ-ம்.) "சாவமுன்

ணுட் டக்கன்வேள்வித்தகர்தின்றுநஞ்சமஞ்சி - யாவவெந்தாயென்றவிதாவிடு நம்மவரவரே" (திருவா. திருச்சத. ௪.)

அவிதி— 1. கிரமமின்மை. 2. விதிக்கு விரோதம். [அவிதி; அ - எதிர்மறை. விதி - கட்டளை.]

அவிதூசம்—ஆட்டுப்பால். [அவிதூசம்; அவி - ஆடு. தூசம் - பால்.]

அவிநயக்கூத்து—நிருத்தக்கை தழுவாது பாட்டின் பொருளுக்குக்கைகாட்டி வல்லபஞ்செய்யும் பலவகைக்கூத்து (சிலப். அரங்கே.கஉ.உரை.) இது சாந்திக்கூத்தின் நால்வகைகளுளொன்று. (திருவி. கான்மா. ௧0. உரை.)

அவிநயசாலை—நாடகசாலை.

அவிநயம்— 1. அபிநயமாகிய நாடகாங்கம். (உ-ம்) "தத்துவப்பெருநாடகசாலையுஞ்சமைத்தவிநயங்காட்டி- யத்தலத்தெனையாட்டுவிப்பானும்" (மதுரை. பதிற். கஉ.) 2. அவிநயர் செய்த ஒரு யாப்பிலக்கணநூல். 3. துராசாரம். 4. நற்பழக்கமின்மை. [அ- எதிர்மறை. விநயம் - நல்லொழுக்கம்.]

அவிநயர்— 1. அகத்தியருடைய மாணாக்கர் பன்னிருவருள் ஒருவர். (தொல். பொருள்.பதிப்.உ.)2. கூத்தர். (சூ.நிகண். உ: ௩அ.)

அவிநாசி— 1. அழியாமை. (உ-ம்.) "அசமநந்தமவிநாசி" (கைவல். சந். ௧௩௭.) 2. அழிவற்றவன். (உ-ம்.) "அவிநாசிகண்டாயண்டத்தான் கண்டாய்" (தேவார. திருவலஞ்சுழி. திருக்கொட்டையூர். எ. திருநா.)3. கொங்குநாட்டுள்ள ஒரு சிவஸ்தலம். (உ-ம்.)"அவிநாசியெந்தைபெருமான்" (பெரியபு. வெள். ௬.)

அவிநாபாவம்—விட்டு நீங்காது உடனிகழுந்தன்மை. (உ-ம்.) "அவிநாபாவம், பேசுறுமேதுக்கொண்டு" (சி. சி. அளவை. உ.) [அவிநாபாவ; அ - எதிர்மறை. விநா - இல்லாமல். பாவம் - இருத்தல்.]

அவிநாபூதம்—நீக்கமின்றியிருத்தல். (சி. சி. பாயி. ௩. சிவாக்.)[அவிநாபூத.]

அவிநாபூதை— விட்டுப்பிரியாதிருக்கிறவள். (உ-ம்.) "ஈசுவராவிநாபூதையாணசத்தி" (சி. சி. பாயி. உ. சிவா.) [அவிநாபூதா: அவிநா - விட்டுநீங்காமல். பூதை - இருக்கிறவள்.]

அவிநிகமம்— தருக்கநூலுக்குத்தகாதநிகமம். [அவிநிகம: அ - எதிர்மறை. வி - விசேஷம். நிகம - நிச்சயம்.]

அவிநீதம்— 1. தீய ஒழுக்கம். 2. மரியாதையின்மை. [அவிநீத; அ எதிர்மறை. விநீதம் - நல்லொழுக்கம்.]

அவிநீதன்— நல்லொழுக்கம் பயிற்றிவளர்க்கப்படாதவன். [அ- எதிர்மறை. விநீதநு சன்மார்க்கன்.]

அவிநீதை— கற்பில்லாதவள். [அவிநீதா: அ - எதிர்மறை. விநீதம்- சன்மார்க்கம்.]

அவிப்பலி — இன்னது செய்யேனாயின், இன்னதுசெய்வேன் என வஞ்சினங்கூறித் தன்னுயிரை அக்கினிக்குப் பலியாகக்கொடுத்தல். இது: வாகைத்திணையின் துறைகளுள் ஒன்று. (தொல். பொரு. புறத். எ௬.)

அவிப்பாகம்— அவியின்பங்கு, தேவருணவின்பங்கு. (உ-ம்.) "ஆவாதிருமாலவிப்பாகங்கொண்டன்று- சாவாதிருந்தானெனன்றுந்தீபற" (திருவாச திருவுந். ௬.)

அவிபட்சம்--1. எதிரியில்லாதது. 2. விபட்சமல்லாதது. [அவிபக்ஷ: அ-எதிர்மறை. விபக்ஷம் - விரோதபட்சம்.]

அவிபடம்— ஆட்டுமயிர்க்கம்பளம். [அவிபட: அவி - ஆடு. படம் - சீலை.]

அவிபத்தர்— 1. பகுக்கப்படாதபொருட்குரியவர். (மிரு. சந். ௧௧௬.) 2. பங்காளிகள். [அவிபக்த.]

அவிபந்நம்—1. அதிட்டமானது. [அ-எதிர்மறை. விபந்நம்- அதிட்டவீநம். 2. கெடாதது. 3. சுத்தமானது. 4. நோப்படுத்தப்படாதது. [அவிபந்ந.]

அவிபவநம்— மேற்கொள்ளுதல், விசயமடைதல். [அவிபவந.]

அவிபாகம்—1. அசீர்ணம். 2. கூறுக்கப்படாததாயம். 3. கூறுக்கப்படாதது.(உ-ம்.) "மேவவெங்கும் வியாபித்த வெளிகடாகாசாதிவிபாகத்தாலும், பாவவவிபாகத்தாலுந்தோன்றுமெப்படி" (சூத. எக்கி. உத். ௬: ௧௧.)4. முதிர்வடையாமை. 5. முற்பிறப்பிற்செய்த வினைகளின் பயனை அநுபவியாமை. [1, 4, 5. அவிபாக: அ- எதிர்மறை. விபாகம் - முதிர்தல். 2, 3. அவிபாக: அ - எதிர்மறை. விபாக - பிரிவு.]

அவிபாச்சியம்—பிரிக்கத்தகாதது. [அவிஹாஜ்ய: அ - எதிர்மறை. விஹாஜ்ய - பிரிக்கக்கூடியது.

அவிபாடிதம்— அதிகம் பிளத்தல். (சீவரட். ௩கசு.)

அவிபாடிதரோகம்— வாதபித்தசிலேஷ்மங்களினால் ஆண்குறியினது சருமத்தையெல்லாம் மிகவுந் தடிக்கச்செய்து பின்பத்தடிப்பைப் பிளப்பிக்கும் ஒரு ரோகம். [அவி - அதிகம். பாடிதம் - பிளத்தல்.] (சீவரட். ௩கசு.)

அவிபாவநம்—பிரத்தியட்சமாகாமை. [அவிஹாவநம்: அ - எதிர்மறை. விஹாவநம் - பிரத்தியட்சம்.]

அவிமுத்த—பிரதிட்டாகலையில் ஆகாயத்திலிருக்கும் எட்டுப் புவனங்களிலொன்று.(சி-வி. கிரி. உக. தாற்பரி. [அவிமுக்த.]

அவிமுத்தம்—1. காசிநகரம். (உ-ம்.)"குன்றிரண்டுசுமந்தொசியுங்கொடியன்னாரவிமுத்தங் குடிகொண்டாகம் - ஒன்றிரண்டுவடிவானார்" (குமர. காசிக்கலம். ௫௩.) 2. நீக்கிவிடப்படாதது. [அவிமுக்த: அ - எதிர்மறை. விமுக்தம் - விடப்பட்டது.]

அவிமுத்தி—காசிக்குக் கிட்ட இருக்கும் ஒரு தலம்.

அவிமுத்தேசன்— காசியிலிருக்கும் விசுவநாதசுவாமி. [அவிமுக்தேஸ்வர.]

அவிமுத்தேசுவரன்— காசியிலிருக்கும் விசுவநாதசுவாமி. [அவிமுக்தேஸ்வர: அவிமுக்தா - காசி. ஈஸ்வர - கடவுள்.]

அவியம்—வடிவமில்லாமை, பொய்வடிவம். (வேதா. சூ. கஉஅ. உரை.)

அவியல் — 1. அவிக்கப்பட்ட உணவு. (உ-ம்.) "அணில்வாற்குரலசெந்தினையினவியலன்ன" (கூர்மபு. கண்ணன்மண. கசஙு.) 2. அவிதல். 3. உடம்பிலே வாய் முதலிய உறுப்புக்களிலே வெப்பினால்வரும்புண். 4. புழுக்கம். 5. வெப்பம்.

அவியாகிருதம்—பிரிவின்றி நிற்பது. [அவ்யாக்ருத.]

அவியாத்தம்— வியாபியாதிருப்பது. [அவ்யாப்த.]

அவியாத்தி—அவ்வியாத்தி தோஷம். [அவ்யாப்தி.]

அவியாப்பியம்— முழுதிலும் வியாபித்திருப்பது. [அவ்யாப்ய.]

அவியோகம்—கூடுதல். [அ - எதிர்மறை. வியோகம் - கூடாமை.]

அவிர்— 1-3. அவிரென்னேவலுந் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். 4. பிரகாசம். (உ-ம்.) "அவிர்தருதிருமுகமாகும்" (சூத. எக்கி. பூ. ௬: ௧.) 5. பீறல். 6. புல்லு.

அவிர்தல்—1. ஒளிசெய்தல். (உ-ம்.) "அவிர்பூவொளியாமல்"(நைடத. அன்ன. தூது. ௬அ.) 2. பீறல்.

அவிர்ப்பாகம்—அவிப்பாகம். (உ-ம்.)"பரமனுருக்கடவுளவிர்ப்பாகங்கேசு" (தைல. பாயிர. கூச)

அவிர்ப்புக்கு—1. அக்கினி. 2. சத்திரியபிதிர். (மது. ௩: கஙஎ.) [ஹவிர்புக்.]

அவிர்யஞ்ஞம்— ஒருவகை யாகம்; அது: ஆதேயம், அக்கினிகோத்திரம், தரிசனம், பௌர்ணமி, மாச்யம், சதுர்மாச்யம், பசுபந்தம்,சௌதாமணி என எட்டு.

அவிரதம்—ஓயாமல்.

அவிரளம்— நெகிழ்ச்சியின்மை. (உ-ம்.) " அவிரளசிவைக்கியப்பிராப்தி " (வி- ணி. உகூ.) [அவிரல: அ - எதிர்மறை. விரல- நெகிழ்ச்சி.]

அவிரி— நீலிப்பூண்டு. [அவுரி என்பதன் மரூஉ.]

அவிருகம்—அதிவிடயப்பூண்டு.

அவிருத்தம்— விரோதம் இன்மை. (உ-ம்.) "அவிருத்தமான சின்மாத்திரத்தை" (சூத. எக்கி. உத். ௫: கஎ.) [அ-எதிர்மறை. விருத்த - விரோதம்.]

அவிரேசநம்— மலவரட்சி. [அவிரேசந: அ - எதிர்மறை. விரேசநம்- கழிதல்.]

அவிரோதச்சிலேடை— சிலேடையலங்காரபேதங்களுள் ஒன்று. அது: முன்னர்க்கொண்டசிலேடைச்சொற்பொருள்களோடு பின்வரும்சிலேடைச் சொற்பொருள்கள் விரோதமுறாமல் இயையத்தொடுப்பது அவிரோதச்சிலேடையாகும். " சோதியிரவிகரத்தாலிரவொழிக்கும் - மாதிடத்தான் மன்மதனை மாறழிக்கும்- மீதாம் - அநகமதிதோற்றிக் குமுதமளிக்குந்-தநதனிருநிதிக்கோன்றான்" என்பதிற்போல. (தண்டி.௭௧. உரை.) [அவிரோத; ஸ்லேஷா.]

அவிரோதம்—1. சம்மதம். (உ-ம்.) "சிவ சாத்திரத்துக்கவிரோதாம்சத்தால்" (பௌ ட். எ: எஅ) 2. தடையின்மை. 3. மாறின் மை. (உ-ம்.) "மறையவிரோதமும் வகுப்ப ங்கேண்மினோ" (சூத. எக்கி. பூ. ௩க. க.) [அவிரோத.]

அவிரோதவுந்தியார்— சாந்தலிங்கசுவாமி கள் செய்த நூல்களிலொன்று.

அவிலம்பிதம்—விரைவு.

அவிவாதம்— இணக்கம், சம்மதம், மாறி ன்மை. [அ- எதிர்மறை. விவாத-மாறு.]

அவிவு— அழிவு. (உ-ம்.) "கந்தத்தவி வேமுத்தி" (பெரியபு. திருஞாந. கககூ.)

அவிவேகம்— விவேகம் இன்மை.(உ-ம்.) "எண்ணுமவிவேகவிடன் வாழ்மனையாம்" (ஞானவா. வைராக். அஎ.) [அவிவேக: அ - எதிர்மறை. விவேக - புத்தி.]

அவிவேகி—விவேகம் இல்லாதவன் - வள். (உ-ம்.) "அவிவேகிக்குப்பாரஞ்சாத்திரம்" (ஞானவா. வைராக். கூஅ.) [அவிவேகிந: அ- எதிர்மறை. விவேகிந - விவேகம் உடையவன்.]

அவிழ்— 1 - 3. அவிழென்னேவலுந்தெ ரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். (உ-ம்.) "தனையவிழ்பாடலத்தின்கவரிணர்" (நைடத. அன்னத்தைக்கண்.௩௩.)4.சோறு. (உ-ம்.) "சஜனுதியர்க்களித்தவூணவிழொன்ற ற்கு" (தணிகை. அகத். ககக.) [இஃது: அவி யென்னும் வினையடியாற்பிறந்ததுபோலும். கவி-கவிழ் எனவந்தாற்போல.]

அவிழ்கேசி—விரிதலையன் - யள். (உ-ம்) "மோரரவமாடையிலிநீடுமவிழ்கேசி" (செக ரா. யாத்தி. உக.) [கேஶ- மயிர்.]

அவிழ்த்தல்—1. கட்டுநீக்கல். (உ-ம்.)"பசு நிரையையவிழ்க்கின்றனர்" (கந்தபு. யாக. எக.) 2. மயக்கிக்கிடந்தபொருளை விளக்கிக் காட்டுதல். (உ-ம்.) "நொடியவிழ்த்தல்" 3. மலரச்செய்தல். (உ-ம்) "புல்விதழ்த்தாம மைப் புதுமுகையவிழ்ப்ப" (கல்லாட. ௫௩.)

அவிழ்தம்—மருந்து. (உ-ம்.) "அறபவவிழ தமும்பலிப்பதாகும்" (தண்டலை. எ௫.) [இஃது, "ஔஷதம்" என்பதன் சிதைவு.]

அவிழ்தல்—1. உதிர்தல். (உ-ம்.) "அவிழ் பன்னமூறுய்" (ஞானவா. சுராகு. ௩௫.) 2. குலைதல். (உ-ம்.) "கூந்தறேமென்மலரோ டவிழ" (கூர்மபு. கண்ணனவ. கக.) 3. சொ ரிதல். (உ-ம்.) "மட்டவிழலங்கன்மறவோனுடன்" (பாரத. மணிமா. ௩அ.) 4. நெகிழ் தல்.(உ-ம்.)"சிந்தையவிழ்ந்தவிழ்ந்து" (தாயு. பராபர. எ௫.) 5. பிரிவு. (உ-ம்.)"அருட்கண் ணுகிச- சமமுமுடன்கலப்புமவிழ்தலும் யாங் காணத்தன்னருடந்து"(தாயு. ஆகாரபு. ௫.) 6. மலர்தல். (உ- ம்.) "தோடவிழ்ந்ததாம மை" (நைடத. கைக்கி. கசு.)

அவிழகம்— அவிழ்ந்தபூ. (பதிற்றுப்பத். ௫உ.)

அவிளம்பம்—விரைவு. [அவிலம்ப: அ - எதிர்மறை. விலம்ப - தாமதம்.]

அவிளம்பிதம்—விரைவு. [அவிலம்பித: அ; விலம்பித - மெல்ல.]

அவீசி — 1. இராசாதிராசநரகம். "கிருமி செறியவீசியிறை யெவற்றினுக்குங் கிளக்குங் கால்" (சிவதரு. சுவர்க்க. நரகவி. கஉஎ.) 2. இருபத்தெட்டாவதாகியமாயையென்னும்நர கத்திலுள்ளநாயகநரகங்கள் ஐந்தனுள் ஒன்று. "அறக்கொடியதீவிரமே யவீசியெனவறைந் தனவுஞ் - செறித்தறிகவொருநூற்றுநாற்ப தென" (சுவர்க்கநரகவி. கஉகூ.) 3. திரையில் லாதது. [அவீசி: அ; வீசி - திரை.]

அவுசநசம்—உசநசு முநிவராற் செய்யப்ப ட்ட ஓர் உபபுராணம். [ஔஶநஸ.]

அவுசநம்—அவுசநசம். (உ-ம்.) "மானவஞ் சீர்வாய்ந்த- வவுசநம"(கூர்மபு. இந்திரத்.கo.)

அவுசுப்பம்—தொடரிப்பூண்டு.

அவுசுமாபகவாதரோகம்—ஒருவகை வா தரோகம். (சீவரட். ககூஅ.) [உட்டணத்தை வா அழைத்துக்கொள்ளுகிறதினுல் வந்தபெ யர். உஷ்ண- உட்டணம்.]

அவுடதகந்தகசுரம்— ஒருவகை அபிஷங்க சுரம்; அஃது: இரசம், கந்தகம், பாஷாணம். சேங்கொட்டை முதலியவைகளின் வேகத் தாற் பிறப்பது. (சீவரட். ௩உ.)

அவுடதம்—ஔடதம். [ஔஷத.]

அவுணீ— அவுணர். (உ-ம்.) "அவுணமக சேனை" (திருப்பு. க௫௩.)

அவுணன்—அசுரன். (உ-ம்.) "அன்றிலம் பேர்பெற்றுள்ள வவுணனத்தன்மை கண்டான்" (கந்தபு. கிரவுஞ். க.)

அவுத்திரம்—ஔத்திரிதீக்ஷை. (உ-ம்.) "அவுத்திராதியநேகமுள" (சி. சி. அ: ௩.)

அவுத்திரி—ஔத்திரிதீக்ஷை. (உ-ம்.) "அவுத்திரிதான் வியன்கிரியைஞானமெனவிரு பாலாய்" (காஞ்சிபு. தழுவ. ௫௩.)

அவுத்துவாசநம்— ஔத்து வாசநம். (த. நி. போ. உசஎ.)

அவுதசியம்—பசுவின்பால். (உ-ம்.) "மாருச்சிம்ஙக பலநேயமவுதசியம்" (தைல. தைலவ். ௫௩.) [ஔதஸ்ய- பால். ஔதஸீ - முலைமடி.]

அவுதா—யானைமேற்றவிசு.

அவுபசர்க்கிகரோகம்— கண்களில் வரும் ஒருவகைரோகம்; அது: தூர்ப்பலகாலத்திற் சூரியவிம்ப முதலிய திட்சண ஒளிகளைத் திநந்திநம் உற்றுப்பார்ப்பதினால் வாதபித்த கபங்கள் கண்களில் வியாபிக்கும்போது பிறந்த வ்விழிகளின்ஒளியைக் குறைத்துப் பார்வையில்லாததுபோலச் செய்யும்; அல்லது வைடூரியத்திற்சொலிக்கும்நிறங்களைப் போலத்தோற்றுவிக்கும். (சிவரட். உ௫௭.) [இது, மற்றொரு ஒளியினாற் பிறந்து நேத்திர ஒளியைக் கெடுததலால் வந்தபெயர். [ ஔபஸர்கிக.]

அவுபலபாஷாணம்—விளைவு பாஷாணம் முப்பத்திரண்டினொன்று.

அவுபாசநம்—ஔபாசநம். விவாக காலத்திலே ஓமகுண்டத்தினின்றும் எடுத்த அக்கினியை அவியாதுவளர்த்து வருவதற்குப் பிராமணவருணத்தாராற் செய்யப்படும் ஒருகிரியை.(கூர்மபு. வருணாச். உ௩. உ.ரை.) "வேற்றோர்புலத்தினெய்தினுந் தன்மனைவிவீந்தாளாயினும்- போற்றுமவுபாசநமொழிதல் புலவோர்புரியார்" (கூர்மபு. வருணாச். உச.)

அவுரி—நீலிப்பூண்டு. (உ-ம்.) "இந்தடிதராமுளியிலங்கவுரிசயையாயில்",(தைல. தைலவ. எஉ.)

அவுழ்தம்—மருந்து. (உ-ம்.) "மெய்யினோய்மாற்றவுழ்தம்" (தாயு. பைங்கி. சஎ.) ["அவிழ்தம்" பார்.]

அவிழதம்—மருந்து. [ஔஷதம்: "அவு" ஔகாரத்தின் போலி. "ழ" ஷ என்பதனோடொத்த உச்சரிப்பினையுடைய தமிழெழுத்து ழகாரத்தில் அகரங்கெட்டு "அவுழ்தம" வும்வழங்கும்.]

அவுறுதம்—1. கிரந்திநோய். 2. பித்தாதிகம்.

அவெளி— நரிவிளாமரம். (இராசவைத்.)

அவேட்சை—1. உடம்பாடு. 2. கவநம். 3. பார்த்தல். [அவேக்ஷா: அவ; ஈக்ஷ- பார்க்தல்.]

அவேட்டிதம்— சுற்றிக்கொள்ளப்படாதது, மூடப்படாதது. (பௌட். எ: உகஇ. உரை.) [அ; வெஷ்டித:]

அவேத்தியம்—1. அறியப்படாதது, இரகசியமானது. 2. பசுக்கன்று. [அவேத்ய: அ; வெத்ய - அறியப்படத்தக்கது, நோப்படுத்தத்தக்கது.]

அவேத்தியன்—அறியப்படாதோன்.(உ-ம்.) "சர்வவியாபியாகிய சிவன் மாயா காரணங்களினாலே வேத்தியனும் சர்வான்மநா அவேத்தியனுமல்லாமல் சச்சித் சுவரூபனாகிறிற்பன்" (சி. சி. சு: க. சிவாக்.) [அவெத்ய: அ - எதிர்மறை. வெத்ய - அறியப்படுவோன்.]

அவேதம்—மறதி, ஞாபகத்தில் வாராமை. [அவெத: அ; வெத - அறிதல்.]

அவை—1. அஃறிணைப் பன்மையில் வரும் ஒரு சேய்மைச் சுட்டுப்பெயர். (உ-ம்.) "அரசர்க்கடைவேயவையின்க ணவையனைத்து - முரசக்கொடியோனயமாகமொழிந்தபோது" (பாரத.வெளி. உ௫.)2. அஃறிணைப்பொருள். (உ-ம்.) "அவயவராய்" (சிவப்பிர. உ: க.)3-5. அவையென்னேவலுந் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். 6. கற்றவர். (சூ. நிகண். உ: அ.)7. கூட்டம். (பிங்க. உ௩௫.) 8. சபாமண்டபம். (உ-ம்.) "வோங்கிண்டுதமநியத்தவைக்கணேச்சி" (கந்தபு. நகரழி. க.) 9. சபை. (உ-ம்.) "அரசவைக்களத்துளேகினர்" (கந்தபு. பாநுகோ. வதை. க௫க.)

அவைகரணம்—1. தோண்டல். 2. மூடல்.

அவைத்தல் — 1. கையினாற்குத்துதல். (உ-ம்.) "ஆவியயர்ந்துளதங்கையவைத்தலின்" (சேதுபு. தேவிபு. சுக.) 2. நெரித்தல். 3. நென் முதலிய குற்றல். (உ-ம்.) "அறையுரற் குழிகொளேன லவைக்குமொய்க்கோட்டுலக்கை" (சூத. எக்கி. பூ. உ0: ௩.)

அவைதிகசாத்திரத்திரயம்—வேதவிரோதமான மூன்று சாத்திரங்கள்; அவை: சார்வாகம், சைநம், பௌத்தம் என்பன. (த. நி. போ. க௩.)

அவைதிகம்—வேதசம்பந்தப்படாதது.

அவைப்பு—1.குற்றப்பட்ட அரிசி.(உ-ம்.) "தவைக்கதிவரகினவைப்புறுவாக்கல்" (புறநா. உகூ.) 2. குற்றப்பட்டது. (உ-ம்.) "அவைப்புமாணரிசியமலைவெண்சோறு" (சிறுபா. ககச.)

அவையடக்கம்— 1. ஒருவர் தாஞ்செய்த

நூலிலே குற்றம் எற்றுதபடி கற்றோரை வழிபட்டடக்குதல். (உ-ம்.) "அவையகத்தா ரெல்லார்க்கும் வழிபடுகிளவி சொல்லுதல் அவையடக்கமெனப்பெறும்" (சி. சி. பாயிர. ச. மறை.) 2. சபையார்முன் அடங்கிநிற்றல்.

அவையடக்கு— அவையடக்கம். (உ-ம்.) "அவையடக்கியலேயரிறபத்தெரியின்" (தொல். பொரு. சஉகு.)

அவையம்— அபயம். (உ-ம்.) "அவையமி ன்னவயமென்று" (இராமா. வருண. கூஎ.) 2. கூட்டத்தார். (உ-ம்.) "சிறந்தகொள்கை யறங்கூறவையமும்" (மதுரை. ௪௯௨.) 3. சபாமண்டபம். (உ-ம்.) "ஆறுமாமுகவள்ளல் வாய்மையிகழ்ந்துளானவையத்தைமுன்- னீறுசெய்து" (கந்தபு. சதமுக. உக.) 4. சபை. (உ-ம்.) "தருக்குறுமவையங்காணியபெருது" (கந்தபு. ஞானர. உ௦.)

அவையர்— சபையிலுள்ளார். (உ-ம்.) "அன்னவன்கருத்துக்கேற்ப வவையருமனையராளுர்" (திருவி. இசைவாது. உஉ.)

அவையல் — 1. அவல். 2. குற்றலரிசி. (உ-ம்.) "ஆய்தினையரிசியவையலன்ன" (பொருநரா. கசு.) 3. திரட்சி.

அவையல்கிளவி— அவைக்கண் உரைக்கத்தகாதசொல். (உ-ம்.) "அவையல்கிளவி மறைத்தனர்கிளத்தல்" (தொல்.சொல்.சசஉ.) [அவை-சபைக்குரிய சொல். அல்-அல்லாத. கிளவி- சொல்.]

அவையறிதல்— சபையினதியல்பை அறிதல்; அது: மிகுதியொப்புத்தாழ்வென்னுமூவகையிலெத்தன்மைத்தெனத் தன்னோடு தூக்கியறிதல். (உ-ம்.) "அவையறிந்தாராய்ந்து" (வள். எகக.)

அவையாவரிசி— கொழியலரிசி. (உ-ம்.) "அவையாவரிசி யங்களித்துழவை" (பெரும்பா. உஎகு.)

அவையிற்றின்— அவற்றின். (உ-ம்.) "அவையிற்றினமேலுமறைவர்" (சி.சி. அளவை. க.) [இற்று- ஒருசாரியை.]

அவைராக்கியம்— வைராக்கியம் இன்மை. (த. நி. போ. ௬௦௦.) [அவெராக்ய.]

அழக்கு— ஆழாக்கு. (உ-ம்.) "அருந்தழக்கவிக்காச்சியமுப்பும் புளிப்பும்விட்" (தைல. தைலவ. அச.)

அழகர்— 1. அழகுடையவர். 2. வெள்ளெருக்கஞ்செடி.

அழகர்மலை— 1. சுப்பிரமணியர்தலம் ஆறினொன்று. 2. விட்டுணுஸ்தலங்கள் நூற்றெட்டினுளொன்று. "முத்திதரு பேரழகர் திருமலையினிடையுற்றோம்" (கந்தபு. திருக்குற். கஉ.)

அழுகவேதம்— அதிவிடயவேர்.

அழகி— அழகுடையவள். (உ-ம்.) "அழகிகூத்தாடுகின்றாள்" (சிந். பதுமை. அக.)

அழகிது— நன்றாயிருந்தது. (உ-ம்.) "நோற்றுத்திரிந்தவா றழகிதாமே" (சி. சி. பர. சௌத். மறு. ச௦.)

அழகிய— அழகுடைய (உ-ம்.) "நீண்டழகிய" (சிந். கஙக. கஙகு)

அழகியர்— அழகியார். (உ-ம்.) "ஆடுமாறு வல்லாரவரேயழகியரே" (தேவா. திருப்பனையூா. க. சுந.)

அழகியவாணன்— ஒருவகைநெல்லு.

அழகியார்— அழகையுடையவர். (உ-ம்.) "பரிமேலழகியாரடைவுறவிரிப்பார்" (திருவி. நரிபரி. க௦அ.)

அழகு— 1. அளவு நிறம் முதலிய குணங்களினாலே கண்ணுக்கு அல்லது மநத்துக்கு இனிதாகததோன்றுந்தன்மை. (உ-ம்.) "அழகெனுமோரழகுபெற்றதே" (இராமா. மிதிலை. ௬ச.) 2. ஒழுங்கு. 3. சருக்கரை. 4. தகச்செயல். (உ-ம.) "சூதைக்கருதிமறைவிருந்து தொடுத்ததழகோசொல்லாயே" (நல். பாரஇராமன்படை. எகூ.) 5 நூலின் இனியதன்மை. (உ-ம்.) "சுருங்கச்சொல்லல் விளங்கவைத்தல்- நவின்றோர்க்கினிமை நன்மொழிபுணர்த்தல்- ஓசையுடைமை ஆழமுடைத்தாதன்- முறையின்வைப்பே யுலகமலையாமைவிழுமியதுபயத்தல்விளங்குதாரணத்த- தாகுதனூலிற்கழகெனுமபத்தே" (நன். பொதுப்பா. கங.) 6. பதினாறுபேறினொன்று.

அழகுகாட்டுதல்— 1. உடை முதலியவற்றின்சிறப்பினைக் காண்பித்தல். 2. சரசஞ்செய்தல்.

அழகுகாமாலை— காமாலைவகைகள் பதின்மூன்றனுள் ஒன்று; அது: சரீரம் வாட்டமில்லாமல் வெப்பத்துடன் மினுமினுத்தல், கால்களகள் அசதி, புருவம், கண், மூத், இவைகளில் மஞ்சண்ற முதலிய குணங்க உண்டாக்கும். (சீவரட். கஙசு.)

அழகுதுரைப்பெண்— இந்திரபாஷாணம்.

அழகுதேமல்— அழகாகத் தோன்றும் ஒருவகைத்தேமல், அழகுத்தேமல்.

அழகுவனப்பு— செய்யுள்வனப்பெட்டினொ

ன்று; அது: செய்யுட்சொல்லாகிய திரிசொற்களினொலோசைபெறப்பாவெது.

அழந்தியன்—பெருங்காயம், சோமநாதிப் பெருங்காயம்.

அழம்— பிணம். (உ-ம்.) "அழத்தினைவேட்டுனும்" (தணிகை. களவு. ௫௭௭.)

அழல்—1-3. அழலென்னேவலுந் தெரிநிலைவினைப் பகுதியும் வினைத் தொகையும். 4. அழுதல். (உ-ம்.) "எழுந்தோவிட்டழல்கேட்டு" (சேதுபு. அநும. ௧௮.) 5. எரிவு. 6. எருக்கஞ்செடி. 7. கள்ளி. 8. கார்த்திகை நட்சத்திரம். (உ-ம்.) "அழலெனுமீனவர்க்கத் தறுவரும்"(கந்தபு. திருவவ. ௧௨௬.) 9. கேட்டைநட்சத்திரம். (பிங்க. ௨௫௬.) 10. கொடிவேலிச்செடி. 11. கொதிப்பு. (உ-ம்.) "சினக்காமன்வாளியு-மழல் பிரிந்தன"(இராமா. நகர்நீ. ௨௦௬.) 12. கோபம். 13. செவ்வாய். 14. நஞ்சு. (உ-ம்.)" அரவின்சீற்றத்தாரழல்குளிக் கலுற்றார்"(சிந். காந்த. ௨௫௪.)15. நரகம். 16. நெருப்பு. (உ-ம்.) "ஆலையஞ்சிலைவேளாகமழல்பட"(கந்தபு. காமத. ௬௦.) 17. வெப்பம். (உ-ம்.) "படுமழனீக்க" (கல்லாட. ௧௮.) 18. வேகம். (உ-ம்.) "பன்மருந்தழலும்" (தைல. தைலவ. ௧௨௩.)

அழல்வண்ணன்—சிவன். (உ-ம்.) "அத்தனிடமழல் வண்ணனிடம்" (தேவார. திருக்கச்சியநேகத. ௫. ௬௩.)

அழல்விரியன்—எரிவிரியன் பாம்பு.

அழல்விரை—நேர்வாளம்.

அழலல்—அழலுதல்.

அழலவன்—அக்கினிதேவன். 2. சூரியன். (பிங்க. ௨௧௦.) 3. செவ்வாய். (பிங்க. ௨௩௦.)

அழலாடி—சிவன். (சூ. நிகண். ௧: ௮.)

அழலிக்கை—மாசெரிதல், பொறாமை.

அழலுதல்—1. எரிதல். (உ-ம்.) "இரவிகாந்த மழல்வதென்னவாறெனு"(நைட. கைக்கி. ௧௭.) 2. கோபித்தல். (உ-ம்.) அவன்வந்திது பகாரதமுனதிவேகமொடழலா"(பாரத. மணிமா. ௧௧.)3. வெம்மைசெய்தல். (உ-ம்.) "ஆலமுங்குளிர்வுறவழல்வீசினன்" (பாரத. மணிமா. ௬௧.) [அழல் என்னும்பகுதி உகரச்சாரியை பெற்றது.]

அழலேந்தி— சிவன். (சேந். திவா. ௧: ௧.) [அழல் - அக்கினி. ஏந்தி - தரித்தவன்.]

அழலோம்பல்— அக்கினிகாரியஞ்செய்தல். (உ-ம்.) "பொறியழலோம்பல் பூசையில்" (சைவச. பொது. ௩௨௫.) [அழல் - அக்கினி. ஓம்பல் - காத்தல்.]

அழலோன்—1. அக்கினிதேவன். (உ-ம்.) "அஞ்சியந்தவழலோனு மப்பொழுதொராந்தணனவன் வடிவாகியே" (பாரத. இராய. ௫௭.) 2. சூரியன். (உ-ம்.) "பனிக்கதிர்லைநீயழலோய்" (கந்தபு. ஆற்று. ௨௪.) 3. செவ்வாய். (சூ. நிகண். ௧: ௬௦.)

அழற்கடவுள்— அக்கினிதேவன். (உ-ம்.) "அந்நாளினழற்கடவுள்கரியாக" (கந்தபு. காமத. ௬௦௬.)

அழற்கண்ணன்—1. உருத்திரன். 2. சிவன். [அழல்- நெருப்பு. கண்ணன் - கண்ணுள்ளவன்]

அழற்கண்வந்தோன்—1. சுப்பிரமணியன். 2. வீரபத்திரன். (சூ. நிகண். ௧: ௨௮.) [அழற்கண்- அக்கினிக்கண்.]

அழற்கதிர்—சூரியன். (உ-ம்.) "வேலையழற்கதிர்படிந்தவியன்கங்குல்" (பெரியபு. திருஞா. ௮.) [அழல்-வெப்பம். கதிர்- கிரணம்.]

அழற்கருமம்—அக்கினிகாரியம். (உ-ம்.) "இல்வாழ்வுற்றோர்தருமமழற்கருமமதிதிபூசை" (கூர்மபு. வருணச். ௧௧.) [இல்வாழ்வார்க்குரிய அழற்கருமமாவது: சூரியனுச்சியில் வரும் சாலைத்துச செய்யப்படுங் கிரியை.] (உ-ம்.) "வானப்பிரத்தர்செய-லொல்லாரணங்கள் பயிற்றலழற் கருமம்" (கூர்மபு. வருணச். ௧௧.)

அழற்காய்—மிளகு. (உ-ம்.) "தோகைவிளங்கழற்காய்" (தைல. தைலவ. ௫௪.)

அழற்றுத்துதல்—வேகமானகாற்றம்வீசுதல்.

அழற்சி— 1. அழுக்காறு. 2. உரைப்பு. (உ-ம்.) "புளிப்புக்கைப்பழற்சியுப்பு" (ஞானவா. விரதசு. ௩௩.) 3. எரிதல். (உ-ம்.) "நெற்றியங்கண்ணும் வெய்யவலக்கணு மழற்சிநீங்கா-தற்றிடுமென்றால்"(கூர்மபு. கண்ணனவ. ௧௨௪.) 4. கோபம். (உ-ம்.) "யாண்டுநேரொல்லையாக வவன்றிறத்தழற்சியின்மை- வேண்டுமெலென்றுசொன்னன்" (சிந். நாம. ௩௬௪.)

அழற்பால்—எருக்கஞ்செடி. [அழல் - அழற்சி.]

அழற்பித்தம்—ஒருவகைப் பித்தநோய்.

அழற்பிரபை— ஏழ்நரகவட்டத்தொன்று; அது: தீநரகு.

அழற்புற்று — ஒருவகைப் புற்றுரோகம்; அது: வெள்விழியிற் காந்தலுடன் விம்மலானதசையையுண்டாக்கும். (சீவரட். ௨௯௯.)

அழற்றி—அழலச்செய்யுமது.

அழற்று—1-3. அழற்றென்னேவலுந் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும்.

அழற்றுதல்—1. அழலச்செய்தல். (உ-ம்.)

"அழற்றியபல்கதிராதபத்திரம்"(கந்தபு. திருப்பா. கூ.) 2. சுடுதல்.

**அழன்**—பிணம். (உ-ம்.) "அத்தன்மிசை காட்டுறை யழன்பணியையேற்றி" (சேதுபு. காசிப. கரு.)

**அழனம்**—1. நெருப்பு. (பிங்க. ௩கoக.) 2. பிணம்.

**அழனுகம்**— ஒருவகை விடப்பாம்பு.

**அழாக்கு**—ஆழாக்கென்னும் அளவு. (உ-ம்.) "வீரியமழாக்குடற்பித்தமுழக்கு" (தணிகை. அகத்தி. ௩௦அ.) ["ஆழாக்கு" "அழாக்கு" எனக்குறுகிநின்றது.]

**அழால்**— அழுதல். (உ-ம்.) "அழான்மறந்த புன்றலைச்சிறார்" (புறநா. சகூ.) [அழு; ஆல்.]

**அழி**–1-3. அழியென்னேவலுந் தெரிநிலை வினைப்பகுதியும் வினைத்தொகையும். 4. அழிவு. (உ-ம்.) "அழிவந்தசெய்யினும்" (வள். அ௦எ.) 5. இரத்தம். (உ-ம்.) "அழிவரப்பாடி வருநரும்" (புறநா. கருஅ.) 6. வைக்கோல். (உ-ம்.) "உழுதநோன்பகடழிதின் றாங்கு" (புறநா. கஉரு.) [4, 5. பெயர்ப்பொருளைத்தரும்; இவை-முதனிலைத் தொழிற்பெயர்கள். 7. தின்றழிதலால் வந்தபெயர்.]

**அழிக்கல்**—அழித்தல். (உ-ம்.) "ஐயருமழிக்கலாகா" (இரகு. மீட்சி. கூக.)

**அழிகட்டு**—1. ஒன்றனையழித்தற்குச்செய்யும் எதிர்ச்செய்கை. 2. தடை. 3. பொய்யேதுக் கற்பித்து மறுத்தல். 4. விடமுதலியவைகளுக்குமாற்று.

**அழிகரு** — சிதைந்துபோகுங் கருப்பம். (உ-ம்.) "அழிகருக்கடலூடே-யமிழ்தலற்று" (திருப்பு. உருக.)

**அழிகருப்பம்**— வயிற்றில் உருவங்கொள்ளாத இளங்கருவாயிருக்கும்போது கரைந்து விழுகருப்பம். (சீவரட். உ௦ரு.)

**அழிகவுள்**— மதம் இடைவிடாதொழுகுதலாலேதனதியற்கையழிந்தகன்னம்.(உ-ம்.) "அழிகவுளியானைகொன்ற-வெஞ்சினத் தரியின்" (இராமா. வரைக்காட். ௩அ.)

**அழிகுட்டி**—வயிற்றின் மரித்த குட்டி.

**அழிகை**—1. அழிவு. 2. சிதைவு.

**அழிச்சாட்டியக்காரன்**— தொந்தரவுக்காரன்.

**அழிச்சாட்டியம்**—1. அழிவழக்கு. 2. அழிவுசெய்தலைக்கருதியதீச்செயல். [இவை-வழக்கு.]

**அழிஞ்சில்**—1 அழிஞ்சிற்பட்டை. (உ-ம்.) "அமுக்கிரி" பார். (தைல. தைலவ. சஉ.) 2. ஒருமரம்; இதன்வேர், பட்டை, விரை, பூ, இலைமுதலியவை நஞ்சுக்கு மாற்றும். இதன்விரை கிராணித்திரவியங்களில் ஒன்று. "தொழுஞ்சகமோகக்கரப்பிற்சொல்லஞ்சநமா- மழிஞ்சில் விரையென்றறி" (பதார்த்தகுண. ருச.)

**அழிஞ்சு**—அழிஞ்சில்வேர். (தைல. தைலவ. எஉ.) "அத்தி" பார்.

**அழித்தல்**—1. இல்லதாகச் செய்தல். (உ-ம்.) "இல்லவளணிகலமழித்தல்" (தணிகை. அகத். உசஉ.) 2. கண்டித்தல். 3. குலைத்தல். (உ-ம்.) "ஈடுசொல்போரழித்தெருமைப்போத்திறுன் - மாடுறத்தெழித்துவைகளைந்து" (சிந். நாமகள். ௩௦.) 4. கெடுத்தல். (உ-ம்.) "கோல- மழித்துமேவியவரம்பையர்" (இராமா. சித்திர. உக.) 5. சங்கரித்தல். (உ-ம்.) "உலகழித்துநிற்குமொருபெருங்கடவுளொத்தான்" (கந்தபு. நகரழி. கூ.) "சிவனுடைய பஞ்சகிருத்தியத்துளொன்று; அது: பிரபஞ்சத்தையொடுக்குதல். தநுகரணபுவநபோகங்களை யொடுக்குதல். "அறுதியிலானையெல்லாமழித்தலால்" (சி. சி. க: ௩ரு.) 6. பாழாக்கல்.

**அழிதகன்**— 1. அழிக்கப்படத் தக்கவன். (உ-ம்.) "அறத்தைக்காயுமழிதகன்" (கந்தபு. தருமகோ. எஅ.) 2. தகுதிகெட்டவன். (உ-ம்.) "அழிதகன்குறுகுவானமுன்" (திருவிளை. மாபாத. உக.)

**அழிதகை**—தகுதிக்கேடு.

**அழிதகையவன்**–தகுதிகெட்டவன். (உ-ம்.) "அழிதகையவனைப்பார்த்தித் - திறப்பழியாங்குச்சென்றும்" (திருவிளை. மாபாத. ௩௦.)

**அழிதகையாள்**—தகவழிந்தவள், கற்பழிந்தவள். (உ-ம்.) "அன்னையென்னுமழிதகையாள்" (திருவிளை. மாபாத. எ.)

**அழிதரவு**—அழிதல். (உ-ம்.) "அன்னைமூப்பழிதர வார்கொலாற்றுவார்" (நைட. அன்னத்தைக்கண். கூஅ.)

**அழிதல்**—1. இரங்குதல். (உ-ம்.) "அழிந்தநெஞ்சம்" (புறநா. உஉக.) 2. கலங்குதல். (உ-ம்.) "மஞ்சுதம்வயிறழிந் - தஞ்சிநீருகுத்தவே" (சிந். காந்த. எஅ.) 3. குலைதல். (உ-ம்.) "உண்டையுமழிதலுற்ற" (கந்தபு. தருமகோ. எக.) 4. கெடுதல். (உ-ம்.) "ஆரவண்டலழியும்" (நைட. கைக்கி. க௦.) 5. சிதறுதல். (உ-ம்.) "அழிநறுவெயர்விற்றோன்ற" (நைட. அன்னத்தைக்கண். உஎ.) 6. தவறல். 7. தோல்வியடைதல். (உ-ம்.) "ஆரமருடற்றிமல்லரனைவருமழிந்தபின்னர்" (பாரத. மற்போர். எ.) 8. நிலைகெடுதல். (உ-ம்.) "உள்ள

மார்வமோ டழிந்ததே" (நைட. கைக்கி. ௭.) 9. பெருகுதல். (உ-ம்.) "அழியும்புனல்" (சிந். பதுமை. ௨அ.) 10. மனங்கலங்கல். (உ-ம்.) "இதற்குள்ளமழியே லென்றான்" (இராமா. நகர்நீங். கஅ.) 11. வருந்துதல். (உ-ம்.) "நீயின்மேயதளிரின்வாடியழிதல்கண்டுசிந்தியா" (நைட. கைக்கி. கக.)

அழிதலை — தலையோடு. (உ-ம்.) "அழிதலையங்கையிலேந்தி" (தேவார. திருவாழ். எ. திருஞான.) [அழிந்ததலையென்றபடி.]

அழிதன்மாலைய— அழியுந்தன்மையுடையன. (உ-ம்.) "அழிதன்மாலையவென்றறத்துறந்தவர்" (தணிகை. அகத். ௨௩௬.) [அழிதல்; மாலை- தன்மை.]

அழிதுளி—மிக்கதுளி. (ஐங்குறு.)

அழிதூ— அலி. (உ-ம்.) "அந்தணரிலழிதூவானீர்" (கந்தபு. அநந்தன்சா. ௩௬.)

அழிந்தோரைநிறுத்துதல் — அறத்துறப்பெட்டினுள் ஒன்று.

அழிப்பாளி—பொருளைவீணாயழிப்பவன்.

அழிப்பு— 1. அதிகஞ்செலவுசெய்தல். 2. அழித்தல். (உ-ம்.) "அழிப்பரியேவலென்றாய்" (சி. சி. பர. பாஞ். மறு. அ.)

அழிபசி—மிக்கபசி. (உ-ம்.) "அற்றாரழிபசிதீர்த்தல்" (வள். ௨௨௬.) ["எல்லாநன்மைகளுமழியவருதலினழிபசி" (வள். ௨௨௬. பரி.) அறிவுமுதலியஅழிதற்குக் காரணமானபசி. சிறுபா. ௧௩௦. உரை.]

அழிபடர்—மிக்குநடக்கும்விதனம். (புறப். வெண். ௧௨௬. பக்.)

அழிபடல்- வருந்தல். (உ-ம்.) "ஆனுலின்னலழிபடக்காண்பான்" (கல்லாட. ௭௬.)

அழிபு— அழித்து, அழிதல், தோல்வி, நொந்து. (புறப். வெண். ௨அ, ௨௨, எஅ, ௩எ. பக்கங்களில் முறையேகாண்க.)

அழிபுண்—ஆறாதபுண்.

அழிம்பன்—1. கடன் இறுக்காமற் புரட்டுகிறவன். 2. வீணாய் அதிகஞ் செலவுசெய்கிறவன்.

அழிம்பு—1. கேடு. 2. கொடுக்கவேண்டிய கடனைக்கொடாமற்செய்யும்புரட்டு" (உ-ம்.) "என்னுடைமைக்கழிம்புபேசுகிறான்" [வழக்.]

அழிமதி— 1. கெடுபுத்தி. 2. அதிகச்செலவுசெய்துபொருள் அழிதல்.

அழிமுதல்—முதலழிவு.

அழியாதபத்திநி—திரௌபதி. [த்நீ-மனைவி. ஐவர்க்குமனைவியாயுங் கற்பழியாமையாற்றி வந்தபெயர்.]

அழியாமுதல்—1. கடவுள். 2. நிலமுதலிய அசைவற்றபொருள்.

அழியாமை—1. அழிவின்மை. 2. மனங்கலங்காமை. (உ-ம்.) "இடுக்கணழியாமை" (வள். ௬௩. அதி.)

அழியுநர்—தோற்பவர். (உ-ம்.) "அழியுநர்புறக்கொடையயில்வாளோச்சாமை" (வெண்பாமாலை. வஞ்சிப். ௨௦.)

அழிவழக்கு— அநியாயம் இல்லாத ஓர் எதுவைக்கற்பித்து வாதாடும் வழக்கு.

அழிவி—கழிமுகம்.

அழிவிலான்— கடவுள். (உ-ம்.) "அழிவிலானுரையாகமம்" (திருவிளை. நகர. ௬௦.)

அழிவிலூர்—சிதம்பரம். (உ-ம்.) "அரிவையூரழிவிலூரொன் றலகினால்பாவ" (கோயிற்பு. இரணிய. ௬௬.)

அழிவு— 1. கழிமுகம். (பிங்க. ௫அ௬.) 2. குற்றம். 3. கேடு. (உ-ம்.) "அழிவிலாயுளும்" (கந்தபு. தருமகோ. ௫.) 4. தோல்வி. (உ-ம்.) "அரும்புறுகாலைக்கொங்கைக் கழிவுற்றுமுகமொவ்வாது" (கந்தபு. மாயைப். ௫௧.) 5. நட்டம். 6. மனக்கலக்கம். (உ-ம்.) "அடுக்கிவரினுமழிவிலானுற்ற" (வள். ௬௨௫.)

அழிவுகாலம்—யுகமுடிவு.

அழிவுபாட்டபாவம்— அபாவப்பிரமாணவகையுள் ஒன்று; அஃதொருபொருள் அழிவதனாற் பின்னில்லை யென்னும் அபாவம். (உ-ம்.) "குடம் உடைந்தாலஃதில்லையென்கை" என்பதிற்போல. (சி. சி. அளவை. ௧. உரை.) [அழிவுபாடு - அழிவுபடல். அபாவம் - இன்மை.]

அழு— 1-3. அழுவென்னேவலுந் தெரிநிலை விளைப்பகுதியும் வினைத் தொகையும். (உ-ம்.) "அழுகுரல்விலக்கியபினைம்மகவையுங் கொண்-டெழுகடனிலத்தாசையீமவிதிசெய்ய" (பாரத. சம்பவ. ௧௦௫.)

அழுக்ககற்றி—சாம்பற்சாரநீர்.

அழுக்கடித்தல்— அழுக்கொழிக்கச்சீலையடித்தல். (உ-ம்.) "அழுக்கடிக்கும்வண்ணார்போலாய்" (தாயு. உடல். ௬௫.)

அழுக்கணவன் — 1. அழுக்கணவன்புழுவைத்தகூடு. 2. ஒருபுழு. [அழுக்கு; அணவு- ஒட்டல். அன் - உலகவழக்கில் ஒன்றன்பாலில் வரும் ஒரு விகுதி.]

அழுக்கம்—கவலை. (உ-ம்.) "அழுக்கமுற்றெழுந்து" (திருவிளை. விறகு. ௬அ.) [அழுங்கு- அம்.]

அழுக்கறல்—அழுக்கு நீங்குதல். [அழுக்கு; அறல்- நீங்குதல்.]

அழுக்கறுத்தல்— பிறாக்கத்திற் பொறாமையடைதல். (வள். ௧௬௩. பரி.) ["அழுக்கறுப்பான்" பார்.]

அழுக்கறுப்பான்— 1. "அழுக்கறு" என்னும் வினையடியாற்பிறந்து உயர்திணையாண்பாலில்வரும்ஓர்எதிர்காலவினைமுற்று. (உ-ம்.) "பிறனாக்கம்பேணா தழுக்கறுப்பான்" (வள். ௧௬௩.) 2. பொறாமைகொள்பவன். (உ-ம்.) "கொடுப்பதழுக்கறுப்பான்சுற்றம்" (வள். ௧௬௬.)

அழுக்காமை—ஒருவகை யாமை.

அழுக்காறாமை— அழுக்காறு செய்யாமை. (வள். அதி. ௧௭.) [அழுக்காறு என்னுஞ்சொல், எதிர்மறையாகாரமும் மைவிகுதியும் பெற்றுநின்றது.]

அழுக்காறு— 1. பிறாக்கம் பொறாமை, பிறாக்கத்தில் அடையும்பொறாமை. (உ-ம்.) "அழுக்காறவாவெகுளியின்னாச்சொன்னான்கும்" (வள். ௩௫.) 2. பொய்.

அழுக்கு—1. அவித்தை. (உ-ம்.) "அழுக்கொடுபற்றுஞ்சீவர்க்கு" (கைவல். தத்து. ௩௪.) 2. அழுக்காமை. 3. ஆணவமுதலிய பாசம். (உ-ம்.) "உயிர்க்கழுக்கறுக்க" (சிவதரு. பாயி. ௭.) 4. சடப் பொருளின் அசுத்தம். (உ-ம்.) "இரண்டியக்கமுதலான வழுக்காடையெய்தின்" (தணிகை. அகத். ௩௯௨.) 5. சித்துப்பொருளின் அசுத்தம். (உ-ம்.) "அழுக்குளத்தினும்" (தணிகை. அகத். ௨௧௩.) 6. பொறாமை. (உ-ம்.) "விழுத்தகும்பலசெல்வமும் வியந்துபார்த்துள்ளத்- தழுக்கறாமையாலின்னமுமமார்கண்ணுறங்கார்" (திருவிளை. ௩௧. ௬௦.)

அழுகண்ணி—ஒரு பூண்டு. [நீர்பொசிந்துகொண்டிருப்பதினால்வந்தபெயர்.]

அழுகல்— 1. அசுத்தம். (உ-ம்.) "தேம்புகலாம்விளைத்திடுவோனழுகல்வாயினன்" (தணிகை. அகத். ௩௪௪.) 2. அழுகுதல். 3. பதனழிதல், அழுகிக்கெட்டுப்போதல். 4. பதனழிந்தபதார்த்தம்.

அழுகள்ளன்—கள்ளமாய் அழுவோன்.

அழுகு— 1-3. அழுகென்னேவலுந் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும்.

அழுகுசப்பாணி— 1. அழுகுசர்ப்பம். 2. ஒரு விடநோய்.

அழுகுசர்ப்பம்—ஒரு விஷசெந்து.

அழுகுணி—1. அழுகிற குணம் உள்ளவன்-வள். [அழு: குணம்; இ- ஒருவிகுதி.] 2. ஒரு கரப்பனோய். [அழுகு - உண்; இ.]

அழுகுதல்— 1. அருவருக்கப்படுந்தன்மையாதல். (உ-ம்.) "அழுகுசேறழிந்து" (தணிகை. நாட்டு. ௯௦.) 2. பதனழிதல்.

அழுகை—அழுதல். (உ-ம்.) "அழுகையுங் கோளும் பெய்யும்" (சிவதரு. பாவ. ௯.)

அழுங்கல்—1. அஞ்சுதல். 2. அலைதல். 3. அழுதல். 4. அழுந்தல். 5. இரக்கம். (உ-ம்.) "அதுசேர்ந்தல்கியவழுங்கலாலே" (புறநா. ௨௨௦.) 6. உருவழிதல். (உ-ம்.) "பின்னழுங்கக்களனுழக்கி" (புறநா. ௯௮.) 7. ஒலித்தல். (உ-ம்.) "அழுங்கியகழற்கால்வீரன்" (கந்தபு. கடல்பாய். ௧.) 8. ஒளிமழுங்கல். 9. கேடு, கெடுதல். (உ-ம்.) "குணனழுங்கக்குற்றமுழைநின்றுகூறுஞ்சிறியவர்கட்கு" (தொல். சொல். ௩௫௦. உரை.) 10. சோம்பு. (சூ. நிகண். அ: ௬௭.) 11. தாமதித்தல், தவிர்தல். (உ-ம்.) "செலவழுங்குகிளவி" (தொல். பொரு. ௧௭௭.) 12. துன்பப்படுதல். 13. யாழ்நரம்போசை. (பிங். ௧௪௪௧.) 14. வருந்தாதேயெனப்பொருள்படும் ஒருமுன்னிலையேவல்வினை. (உ-ம்.) "அலராகாதொழியுமேயழுங்கலென்று" (சிந். ௧௩௧. ௧௧௦.) 15. வருந்துதல். (உ-ம்.) "ஆனநற்புலவர்தாரித்திரத்தினாலழுங்கலானும்" (பஞ்சத. சுகிர். ௨௩.)

அழுங்காமை— அழுங்குதல் அடையாமை.

அழுங்கு—1-3. அழுங்கென்னேவலுந் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். (உ-ம்.) "வெள்ளநோக்கியழுங்குசெம்பியன்" (திருவிளை. விடை. ௧௨.) 4. ஒரு விலங்கு. (உ-ம்.) "குறுமுயலும்போடாமைமுட்பன்றியழுங்கிவைகொன்றருந்தினுமாம்" (கூர்மபு. அல்லவை. ௯.) 5. பாலையாழ்த்திறவகையினொன்று. (பிங். ௧௩௮௧.)

அழுங்குதல்—அழுங்கல்.

அழுங்குப்பிடி — நெகிழாது பிடித்தபிடி. [அழுங்குபோலப் பிடித்தல்பற்றிவந்த பெயர்.]

அழுங்குவித்தல்— துன்பம் உறப்பண்ணல். (உ-ம்.) "நெஞ்சமழுங்குவிக்குமாலை" (சிந். சுரமஞ். ௫௭.)

அழுத்தக்காரன்—1. அடக்கமானவன். 2. இறுக்கமுடையவன்.

அழுத்தங்கோல்—ஒருவகையெழுதுகோல், மைதீட்டுங்கோல். (சி.சி. அளவை. ௧. மறை.)

அழுத்தம்—1. அடக்கம். 2. இறுக்கம். 3. உலோபத்தனம். (உ-ம்.) "திரவியத்திலழுத்தமானவன் செத்தாலுங்கொடான்" [வழக்.]

4. உறுதி, இடம். 5. ஒப்பம், சருச்சரையின்மை. 6. கடினம். 7. பதிப்பு. 8. பிடிவாதம், முரட்டுத்தனம். 9. பிரியமாய் அழுந்திநிற்றல். (உ-ம்.) "உயிரசைவால் வாதனைப்பா லழுத்தத்தாலறிவை விரிவாக்கா யென்னில்" (ஞானவா. உபசா. உ0.) 10. மிக்ககவனம்.

அழுந்தல்—அழுத்துதல். (உ-ம்.) "ஆர்தருசாக்கிரங்கனவு சுழுத்தியெனவழுத்தலுறுமவத்தைதமூன்று" (சூத. எச்சி. பூ. ரு: கங.)

அழுந்தி — அழுந்தச்செய்கிறவள்- வன். (உ-ம்.) "புயமீதேகோங்குபடைத்ததனத்தையழுத்திகள்" (திருப்பு. உகங.)

அழுத்து— 1. அழுத்துகை, பதித்தல். (உ-ம்.) "நகநுதியழுத்தைதக்காட்டி."(திருப்பு. ச0௩ )2-4. அழுத்தென்னேவலுந் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும்.

அழுத்துகை — அழுத்துதல்.

அழுத்துதல்–1. அழுந்தச்செய்தல். (உ-ம்.) "இதையுன்மநதிலேயழுத்திப்பார்" 2. உரப்பித்தல். 3. பதித்தல். "தாவேது மில்லாத்தமனியமீது தலம்புரக்குங்-கோவேயழுத்தவரோவறியோருங்குருவிந்தமே" ( வாண. அஉ.)4. பாராட்டல். 5. மநத்திலுறைக்கச்செய்தல். (உ-ம்.) "அவன் அழுத்திப்பேசினன்"

அழுதல்—1. இரங்கல். 2. கதறுதல். 3. சிணுங்கல். 4. துக்கத்தினால் அல்லது வருத்தத்தினால் கண்ணீர் விட்டுச் சத்தமிடல். (உ-ம்.) "இன்பவீடெதுவென்றே-நின்றுன்றழுதிலே" (வைராக். சத. கக.)

அழுந்தக்கட்டல்—இறுகக் கட்டுதல்.

அழுந்தல்—1. அமிழ்ந்தல். (உ-ம்.) "அள்ளல் கூர்மமழுந்தும்" ( தணிகை. நாட்டு. க0எ.) "செயற்கையம்பிறவிநச்சுக்கடலகத்தழுந்துகின்றார்" ( சிங். பதுமை. உஉஅ.) 2. அமுங்குதல். (உ-ம்.) "கால்கள்சேற்றிலழுந்திட" (பஞ்சத. சுகிர். உ௩.) 3. இறுகுதல். (உ-ம்.)"அவரை-யழுந்தப்பற்றி"(புறநா. எஎ.) 4. பதிதல். (உ-ம்.) "நன்றாகவழுந்த எழுது" 5. வருந்துதல். (உ-ம்.) "அழுநதே னரகத்தியானென்றிருப்ப" (திருக்கோ. கசுசு.)

அழுந்து—1. அமிழ்ந்துதல். (உ-ம்.) "அழுந்துபட்டுள ரொத்தயர்ந்தார்" (இராமா. இலங்கையெரி. உச.) 2. அழுந்துதல். 3-5. அழுந்தென்னேவலுந் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். (உ-ம்.) "இறையடிக்கணே-யழுந்துநேசமொடு" (திருவிளை. அட்ட. கசு. ) [ அழுந்தும் - நேசம் எனக்கொளின் அத்தொகையன்று.]6. ஆழம். (உ-ம்.)"அழுந்துறுபாலின்வேலையமரர்கள் கடைந்தகாலை" ( கந்தபு. காசிபன்பு. உரு. ) 7. வெற்றிலைநடும்வரம்பு.

அழுந்துதல் —அழுந்தல்.

அழுந்துபட்டிருத்தல்— நெடுங்காலம் அடிபட்டிருத்தல். (உ-ம்.) "அழுந்துபட்டிருந்த பெரும்பாணிருக்கையும்" (மதுரை. ௩சஉ.)

அழுந்தூர்—ஒரூர். (பெரியபு.ஞாந. ச௩ச.)

அழுந்தை—அழுந்தூர். ( தேவார. அழுந்தூர். ௩. திருஞா.)

அழுப்பு—சோறு.

அழுப்புகம்— தேவலோகம்.

அழும்பில்— ஒரூர்; அது: வானவிறல்வேளென்னுங்குறுநிலமன்னனுடையது.(உ-ம்.) "வானவிறல்வே-ளழும்பிலன்னநாடிழந்தனரும்" (மதுரை. ௩சரு.)

அழுவம்— 1. அப்பவருக்கம். 2. அழுக்குநிலம். 3. ஆழம். (உ-ம்.)"கடன்மண்டழுவத்துக் கயவாய்கடுப்ப" (மலைபடு. ருஉஅ.) 4. கடல். (உ-ம.)"நீண்டொலியழுவங்குறைபடமுகந்து" (புறநா. ககசு.) 5. குழி. 6. துருக்கம். 7. நடுக்கம். 8. நாடு. (சூ. நிகண். ரு: சு.) 9. பரப்பு. (உ-ம்.) "நீரழுவநிவப்புக்குறித்து" (புறநா. கச.) 10. பெருமை. 11. போர்க்களம். (உ-ம்.) "வாளமரழுவத்தவுணர்கோன் சேனை" (கூர்மபு. அந்தகா. ருக.) 12. முரசு. 13. வழுக்குநிலம்.

அழை— அழையென்னேவலுந் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும்.

அழைக்கை—அழைத்தல்.

அழைத்தல்–1. கூட்டிக்கொண்டுபோதல். 2. கூட்டிக்கொண்டுவருதல். 3. கூப்பிடுதல். ( உ-ம். ) "நீலவுண்கண் - கையாலழைப்பன போலிமையாநிற்குங் கர்ரிகைக்கே" (வாண. ௩.) 4. வரச்செய்தல். (உ-ம்.) "அரசியலுரிமையெல்லாமாங்கவரழைத்து" (கந்தபு. விண்கு. ச0.)

அழைப்பு— அழைத்தல். ( உ-ம். ) " அப்போதொழியுமழைப்பு" (நாலாயிர. இயற்பா. நான்மு. ௩அ.)

அள்— 1-3. அள்ளென்னேவலுந் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். 4. ஒருநோய். (உ-ம்.) " தள்ளும்பித்தகலிச்சூர்சர்த்தி தலைநோயலசம்-அள்ளும்பித்துக்கொள்ளுமால்" (தைல. தைலவ அ.) 5. காது. (உ-ம்.) "விழிமூக்கட்டான்" (தைல. பாயிர. உச.) 6. கூர்மை. (உ-ம்.) "அள்ளிலைவேற்கைநம்பி" (கந்தபு. வள்ளி. க.)7. நீர்முள்ளி.

(இராசவைத்.) 8. நெருக்கம். (உ-ம்.) "அள்ளிலைத்தாளி" (புறநா. உ௫உ.) 9. பற்றிரும்பு. (சூ. நிகண். எ:க௫.) 10. பெயர்ச்சொல் வினைச்சொற்களிற் பெண்பாற்படர்க்கையில் வரும் ஓரொருமைவிகுதி; இவ்விகுதி தெரிநிலைவினையில் வருங்கால் இறந்தகால இடைநிலைத்தகரத்தையாவது, தகரத்திரிபாகியடறக்கனையாவது, நிகழ்காலத்தில் வருங் கின்று என்னும் இடைநிலையையாவது, அன்சாரியையைத் தொடர அதனையடுத்துப் பின்வருதலுந் தெரிநிலைவினையாலணையும் பெயரில் வருங்காற் கால இடைநிலையைத்தொடர்ந்து அகரச்சாரியைவர அதனையடுத்து வகர உடம்படுமெய்யைச்சார்ந்து பின்வருதலும் ஆகும். (எங்ஙனம்?) அவள். [பெயர்ச்சொல்] வந்தனள், உண்டனள், சென்றனள், வருகின்றனள் [வினைச்சொல்] வந்தவள், உண்டவள், சென்றவள், வருகின்றவள், வருகிறவள், வருபவள். [வினையாலணையும்பெயர்.] 11. வரண்முள்ளி. (இராசவைத்.)

**அள்வழப்பு**—காதுக்குறும்பி. (உ-ம்.) "அள்வழுப்புச் சார்வலமே வினையூழை" (திருப்பு. ௫எ௩.)

**அள்ளகடு**—செறிந்தவயிறு. (புறப். வெண். பக். ௬உ.)

**அள்ளல்**— 1. அள்ளுதல். 2. இசைக்கரணங்கள் எட்டினுள் ஒன்று; அஃது: "அரம்-அரும்பொற் சுட்டுவிரல் சேடந்தன்றலள்ளல்" (கூர்மபு. கண்ணன்மண. க௪எ.) 3. குழைசேறு. (உ-ம்.) "அள்ளலங்கருஞ்சேற்றிடை" (நைட. நாட்டு. எ.) 4. நரகம். (உ-ம்.) "அலைசெயள்ள லகல்காறும்" (தணிகை. அகத். ௨அ௫.)

**அள்ளாத்தி**—ஒருமீன்.

**அள்ளி**—வெண்ணெய். (இராசவைத்.)

**அள்ளிருள்**—கும்மிருட்டு.

**அள்ளு**—1. அள்ளப்படும் பொருள். 2. அள்ளுநோய். (தைல. தைலவ. அ. உரை.) 3-4. அள்ளென்னேவலும் வினைத்தொகையும். [உகாரம்- ஒருசாரியை.]

**அள்ளுக்கட்டல்**—1. பலப்படுத்தல். 2. பற்றிரும்புகட்டல்.

**அள்ளுகொள்ளை**—1. அதிகவாவு. 2. பெருங்கொள்ளை

**அள்ளுதல்**—1. அள்ளியெடுத்தல், திரளாயெடுத்தல். (உ-ம்.) "உதிர்சருகுந்தமூலங்களேனும் - கனல்வாதைவந்தெய்தினள்ளிப் புசித்து" (தாயு. சச்சி. ௫.) 2. செறிதல். (சிந். காந்த. க௨உ. உரை.) 3. நெருங்குதல். (உ-ம்.) "அள்ளியதிருமிகிண்டவழுகல்வாயாவரின்னோர்" (சூத. எக்கி. பூ. ௪எ: எ.) 4. வாரியெடுத்தல். (உ-ம்.) "கற்பகநேர்க்கிறைவனை- யள்ளி மண்ணிடைகளிற்றெறு மரைத்ததொருகை" (கூர்மபு. தக்கன்வேள். ௬௫.)

**அள்ளுமாந்தம்**— ஒருவகைமாந்தரோகம்; அது: விலாவைத் தூக்கிக்கொள்ளுவது. (சீவரட். உ௧அ.)

**அள்ளூறல்**—வாயூறல். (உ-ம்.) "அத்தனானந்தனமுதனென்றள்ளூறித்- தித்திக்கப்பேசுவாய்" (திருவாச. திருவெம். ௩.)

**அள்ளை**—பிசாசம்.

**அள**—1. அளவென்னேவலும் 2. தெரிநிலைவினைப்பகுதியும்.

**அளக்கர்**— 1. உப்பளம். (சூ. நிகண். ரு: உக.) 2. கடல் (உ-ம்.) "அங்கண்மாஞாலஞ்சூழுமளக்கரைநீக்கித்ததாமே" (கந்தபு. ஆற்று. ௬௬) 3. கார்த்திகை நட்சத்திரம். (சூ. நிகண். க: ௬அ.) 4. சேறு. (சூ. நிகண். ரு: உஅ.) 5. நீள்வழி. (சூ. நிகண். ரு: ௬௪.) 6. பூமி. (சூ. நிகண். ரு: அ.)

**அளக்கார்**—உப்பமைப்போர்.

**அளக்கல்**— அளத்தல். (உ-ம்.) "அளக்கலாகாவளவும்பொருளும்" (நன். பொதுப். உஅ.)

**அளக்குதல்**—அளக்கல்.

**அளக்கை**—அளத்தல்.

**அளகத்தி**—அளகம் உடையவள். (உ-ம்.) "கரியகாரளகத்தி" (திருப்பு. க௬உ.) [அளகம்-அத்து-இ.]

**அளகநந்தை**—ஒருதீர்த்தம். (கூர்மபு. மேருவின். கஅ.)

**அளகநாதர்**— (சைநம்.) ஒரு தீர்த்தகரர். (த. நி. போ. உஎ௬.)

**அளகபந்தி**—பெண்களின்மயிர்முடி. (உ-ம்.) "நல்லாரளகபந்தியெனவிருண்டசெவ்விநளிர்தண்கா" (இரகு. திக்கு. க௨.)

**அளகபாரம்**—கூந்தற்பாரம். (உ-ம்.) "அளகபாரமலைந்து குலைந்திட" (திருப்பு. கஎ.)

**அளகம்**— 1. நீர். (சூ. நிகண். க: ரு௪.) 2. பன்றிமுள்ளு. 3. பனிச்சை, (உ-ம்.) "கொய்பூந்-தாதுகொண்டளகத்தப்பி" (சிந். முத்தி. ௬ரு௦.) 4. மயிர்ச்சுருள். 5. பெண்மயிர். (உ-ம்.) "கானேயளகங்கரும்புயலே" (வாண. ருஉ.) 6. வெள்ளெருக்கஞ்செடி. [3, 4. ஸம்ஸ.]

**அளகாதிபதி**—குபேரன். (உ-ம்.) "ஆயபொழுதளகாதிபதி" (பாரத. மணிமா. ரு௩.) [ஸம்ஸ்காயிபதி: ஸம்ஸ்கா - அளகை. அதிபதி - தலைவன்.]

**அளகாதிபன்**—குபேரன். (உ-ம்.) "அளகாதிப-னுரைத்தவாசகம்"(இராமா.வரையெ. உசு.) [ஸுகாபிப: ஸுகா; ஸுபிப- தலைவன்.]

**அளகாபதி**—குபேரன். (உ-ம்.) "அல்லது நீடளகாபதிதானும்" (பாரத. புட்ப. சுங.) [ஸுகா; பதி - தலைவன்.]

**அளகாபுரி**—குபேரனுடைய நகரம்.(உ-ம்.) "அளகாபுரியுறைவோர்" (பாரத. மணிமா. கரு.)

**அளகு**— 1. கார்த்திகைநட்சத்திரம். (வீமே. சரு.) 2. கோழி, கூகை, மயில் என்னும் பறவைகளின்பெண். (தொல். பொரு. சுககக: சுகஉ.) இவற்றுள், "மனைவாழளகின்வாட்டொடும்பெறுகுவிர்" (பெரும்பா. உருசு.) என்பதிற் "கோழிப்பெடைக்கும், அளகினோடு பாட்டிராட்டுமாலைதொறுங்கூரால்கள்" (தணிகை. நாட்டு. ௩௯.) என்பதிற் கூகைப்பெண்ணுக்குங்கொள்க. [திருவிளையாடற் புராணகாரர் ஆண்கோழிக்கும் போதர, "அளகைப்பொறித்தகொடியினையோன்" என்றார். திருவிளை. அருச்சனை. ௩ச.] 3. பறவைப்பேடு. (உ-ம்.) "அளகைசேடிப் - பார்வல்வந்தணையுமாபோல்" (கந்தபு. சுரம்பு. உசு.)

**அளகேசன்**——குபேரன். (உ-ம்.) "அளகேச னமர்வென்றதனியாண்மையான்" (பாரத. ஐந்தாம். அ.) [ஸுகா; பராபா - தலைவன்.]

**அளகை**— 1. எட்டுவயசுக்கும் பத்துவயசுக்கும் இடைப்பட்டபெண். 2. குபேரனுடையநகரம். (உ-ம்.) "அது பொழுதவுணர்களளகை யூடுபோய்"(கந்தபு. திக்குவி. ௩௫.) [ஸுகா:ஸு-அலங்கரித்தல், ஸ-ஒருவிகுதி.]

**அளகையாளி**—குபேரன். (உ-ம்.) "அளகையாளியை யெம்பிரான் வரவழைத்தருளி" (உபதேசகா. சிவபு. ௩கச.)

**அளத்தல்**—1. அளவளாதல். (உ-ம்.) "என்முகமளக்குங்கால்" (கல்லாட. கக.) 2. அறிதல். (உ-ம்.) "ஆசைப்புறத்தளவா" (வாண. சுக.) 3. எட்டுதல், தீண்டுதல். (உ-ம்.)"மோவியண்டமுகட்டினையளப்ப" (கூர்மபு. தக்கன்வேள். கக.) 4. எடுத்தல், முகத்தல், நீட்டல் என்னும் அளவைகளோடு கலந்தாவது கலவாமலாவதெண்ணியளவுசெய்தல்.(உ-ம்.) "மன்னவர் தருதிறையளக்கு மண்டபம்"(இராமா. நகர. சுஉ.) 5. கீழ்ப்படுத்தல். (உ-ம்.) "தாமுலகளந்தவென்றித்தனிவிற் சேவகனுய்த்தோன்றி" (திருவிளை. யானையெ. உ அ.) 6. நியதி செய்தல். (உ-ம்.) "அளந்துநாந்தாநுகர்ந்து" (திருவாதவூ. திருப்பெருந். கச.) 7. பங்கிடல். 8. பிரமாணத்தைக்கொண்டறிதல். (உ-ம்.) "இதனானே காட்சிமுதலிய மூன்றும்படும் பாகுபாடும் அவற்றான் அளக்கப்படும்பொருள்களின் பாகுபாடுந் தொகுத்துக்கூறப்பட்டன" (சி. சி. அளவை. ச. சிவஞா.) 9. மட்டறிதல். (உ-ம்.) "வரம்பில்கட்புலங்கொண்டவரோனு மற்றிவ்வூர் - விரும்பியித்திரு நோக்கினுமளத்தன்மேவருமோ" (கந்தபு.நகர்பு.அ௫.) 10. மதித்தல். 11. வரையறுத்தல். (உ-ம்.) "முன்னமளந்தறிவளித்து" (சிவப்பிர. க0: சு.)

**அளத்தி**—நெய்தனிலப்பெண்.(சூ. நிகண். உ: எஉ.)

**அளத்தியர்**— 1. உப்பமைப்போர்பெண்கள். 2. நெய்தனிலப்பெண்கள்.(உ-ம்.)"மீட்டளத்தியர்கடாரம்பாடுபெவிளரிவேண்டார்" (இரகு. நாட்டு. ௫௫.)

**அளத்துநிலம்**—களர்நிலம்.

**அளத்துப்பச்சை**—மருக்கொழுந்துச்சக்களத்தி; இஃதுவர்நிலத்திலுண்டாவது.

**அளத்துப்புல்**— முயிற்றுப்புல்.

**அளத்துப்பூளை**—ஒருசெடி.

**அளத்திடல்**— அளத்தல். (உ-ம்.) "அளத்திடற்கரிதாய" (திருவிளை. புராணவர. க.)

**அளப்பம்**— 1. அலப்பு. 2. அளக்கை. 3. ஊழ். 4. முறுமுறுக்கை.

**அளப்பளத்தல்**— 1. பிதற்றல், வீண்பேச்சுப்பேசுதல். 2. முறுமுறுத்தல். [அலப்பு எனற்பாலது அளப்பு என நின்றது.]

**அளப்பன்**— 1. குதர்க்கம்பேசுவோன். 2. வீணைகப்பேசுவோன். ["அலப்பன்" என்பது திரிந்தது.]

**அளப்பு**— 1.அலப்பு.2.அளத்தல்.(உ-ம்.) "அடியினதெல்லையளப்பரிதென்றால்" (பாரத. புட்ப. ௫க.) 3. அளவு, எல்லை. (உ-ம்.) "ஈசனையளப்பில்காலமிதயமேலுன்னி" (கந்தபு. தசிப். கஉ.)4.ஆராய்ந்தறிதல்.(உ-ம்.) "அருமறையாகமமுதனூலனைத்து முரைக்கையிஞலளப்பரிதாம்" (சி.சி. அ: கச.கிரம்.) 5. ஊழ்.

**அளப்புக்கு**—முடக்கொத்தான்செடி.

**அளப்புதல்**—1. அலப்புதல். 2. குழப்புதல்.

அளபு—1. அளபெடை. (உ-ம்.) "குற்றியிரளபினீரும்" (நன். எழுத்தி. ௫௩.) 2. அளவு. 3. ஓரலங்காரம்; அஃதளபெடையாய்வருவது. 4. மாத்திரை. (உ-ம்.) "அளபிறந்துயிர்த்தலும்" (தொல். நூன்மரபு. ௩௩.)

அளபெடுத்தல்— எழுத்தின் மாத்திரையையெழுப்புதல்.

அளபெடை— எழுத்துக்கள் தத்தம் மாத்திரையின் நீண்டொலிக்கப்படல். (உ-ம்.) "ஒற்றளபெடையாறேழ்"(நன். எழுத்தி.௯.) அஃதுயிரளபெடையொற்றளபெடையென இருவகைப்படும். இயற்கையளபெடை செயற்கையளபெடையென இருவகைப்பட்டும் வரும். [அளபு-எடு-ஐ.]

அளபெடைவண்ணம்— இருபதுவண்ணங்களுள் ஒன்று; அஃதுயிரளபெடை அல்லது ஒற்றளபெடை பயின்றுவரப்பாடப்படுவது. (உ-ம்.) "அளபெடைவண்ணம் அளபெடை பயிலும்" (தொல். பொரு. ௫௩௨.) "மாஅ அமலரோஒவிராஅய்ப்பாஅஅம்" எனவும் "கண்ண்டனனெனக்கண்டுங்கேட்டும்" எனவும் வருவனவற்றிற்போல.

அளம்— 1. ஆயுதக்கூர்மை. 2. உப்பளம். (உ-ம்.)"அளம்படுவார்திரும்பண்மினர்கோ" (தணிகை. களவுப். ௪௩௧.) 3. செய்தனிலம். 4. நெருக்கம். 5. புத்திக்கூர்மை.

அளமரல்— அலமரல். (உ-ம்.) "அளமருபிறப்புகவமலர்க்குய்த்திடும்-வளமலர்"(தணிகை. நாட்டு.௧௧.) [௬௰ - சுழற்சி. "ள"எவ் வாகியது போலி.]

அளமரு— 1-3. அளமருவென்னேவலுந் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். (உ-ம்.) "அளமருகுயில்னமழுங்கி" (சிந். நாமக. ௨0.) [அலமரு என்பதன் திரிபு.]

அளமளைதல்—1. அளவளாவுதல். 2. மிக அளைதல். [௬௰ - மிகுதி.]

அளர்க்கம்—1. தாதுளங்கொடி. (உ-ம்.) "சிதசுரசமார்க்கவஞ்சங்குசாறடைமுட்டிதேட்கடைபெரும்புன்முள்ளி- சிம்மழுகிபொடுதலைதமாலகியளர்க்கமெண்டெரி பனிருவகையிரதமும்" (ஸதல. தைலவ. ௪௯.)

அளவடி—நாற்சீரான்வரும் அடி. (உ-ம்.) "நாலொருசீ- ரறைதருகாலையளவடி" (காரிகை. உறுப். ௯௨.)

அளவடிவிருத்தம்— கலிவிருத்தம். (காரிகை. செய். ௧௩.) [நாற்சீரடியால் வரும் விருத்தமாதலின்இப்பெயர்த்து.]

அளவர்— 1. அளக்கிறவர். 2 உப்பமைப்போர். (உ-ம்.) "பரதவரளவர்வாரிப்படுத்தமீனுப்பின்குப்பை" (கந்தபு. ஆற்று. ௩0.)

அளவல்—1. கலத்தல். 2. பொருந்தியிருத்தல். (உ-ம்.) "வளமலிகாஞ்சி தன்வைப்பிடை- யளவலினிந்தவடுக்கலே" (தணிகை. விடை. ௩௧.) 3 எட்டுதல். (உ-ம்.) "கொண்டலேயளவியகோங்குபூத்தவே" (கந்தபு. இந்திரனருச். ௧அ.)

அளவழிச்சந்தம்—குருவும் இலகுவும் ஒவ்வாதனவாய் மற்றவையொதத அடிகளால் வருவன. (சிந்தா. கடவுள். ௪. உரை.)

அளவழிந்தாண்டகம்—குருவும் இலகுவும் ஒவ்வாது மற்றவையொத்துவருவன. (சிந்தா. கடவுள். ௪. உரை.) [அளவு; அழி- அழிந்தது.]

அளவளத்தல்— கலத்தல்.

அளவளாதல்— அளவளாவுதல்.

அளவளாய்— அளவளாவி யெனப்பொருள்படும் ஒருவினையெச்சம். (உ-ம்.) "அருந்திகணவன்வேகதோடளவளாய்" (கூர்மபு. இராமனவ. ௭அ.)

அளவளாவல் —அளவளாவுதல்.

அளவளாவு— 1-3. அளவளாவென்னேவலுந் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். 4. கொண்டாட்டம், நெஞ்சுகலத்தல். (உ-ம்.) "அளவளாவில்லாதான் வாழ்க்கை" (வள். ௫௨௩.)

அளவளாவுதல்—கொண்டாடுதல், நெஞ்சுகலத்தல். (உ-ம்.) "ஆனவுபசாரமொழிகூறியவரோடளவளாவியபின்" (இராமா. அநுமப். ௫௪.)

அளவறுத்தல் — அளவுவரை யறுத்தல். (உ-ம்.) "அளவறுப்பதற்கரியவன்" (திருவாச. திருச்சத. ௩௫.)

அளவன்—1. அளக்கிறவன். 2. உப்பமைப்போன். 3. சோரபாடாணம்.

அளவி— அளவு. (உ-ம்.) "அளவியையார்க்குமறிவரியோன்" (திருச்சோ. ௧0.)[துறவு-துறவியெனநின்றாற்போல, அளவு - அளவி என நின்றது.]

அளவிடுதல்—1. அளவுபடுத்தல். (உ-ம்.) "மண்ணுற்றவெல்லையளவிட்டுமால்கொலென்றே" (கந்தபு. அகத்தி. ௭.) 2. அளாவுதல், மூட்டுதல். (உ-ம்.) "வானிலளவிடவளர்ந்த

புன்னைகள்" (கந்தபு. இந்திரனருச். கச.) 3. மட்டிட்டறிதல். (உ-ம்.) "அளவிடாவாநந்த வடிவே" (தாயு. ஆரண. ௯.)

அளவிடை—1. அளவிடுகை. 2. நிருவாகம். 3. நிறை. 4. மட்டறிதல். (உ-ம்.) "சத்துரு வையளவிடைபார்"

அளவியற்சந்தம்— தனித்தனிநான்கெழுத்துச் சிறுமையும் இருபத்தாறெழுத்துப் பெருமையும்பெற்று எழுத்தளவொத்துக் குருவும் இலகுவும் ஒத்த அடிகளால் வருவது. (சிந்தா. கடவுள். க. உரை.)

அளவியற்றண்டகம்— அஃது: இருபத்தாறெழுத்துமுதலாக எழுத்தளவொத்துக்குருவும் இலகுவும் ஒத்தவடிகளான் வருவது (சிந்தா. கடவுள். க. உரை.)

அளவிறந்தல்— 1. எண்ணிலதாதல். 2. எல்லைகடத்தல். 3. மீறுதல். [இறத்தல்-கடத்தல்.]

அளவின்மை—அபரிமிதம்.

அளவு—1. எண்ணியறியப்படுதல்.(உ-ம்.) "அளவில்பூதவெம்படையொடும்" (கந்தபு. குமாரபுரி. க.) 2 காட்சி முதலிய அளவைகளைக்கொண்டு அளந்து உள்ளவாறறிதலாகிய நெறி. (உ-ம்.) "அளவின் கணின்றொழுகலாற்றார்" (வள். உஅ௬.) 3. தாளமாத்திரைகளுளொன்று. அது: தாக்கின ஓசை நேரே மூன்றுமாத்திரைபெறுமளவும் வருதல். (சிலப். அரங்கே. உ௫. உரை.) 4. பரந்த எல்லை, பரிமாணம். (உ-ம்.) "பரவைமாநிலத்தளவெனப்பகர்ந்தனர்" (கூர்மபு.மண்டல. உ.) 5. மட்டு. (உ-ம்.) "தனித்தனியேதாமறிந்தவளவில்" (சி. சி. அ: கச.) 6. வரையறை.

அளவுகோல் — நிலம் அளக்குந்தண்டு. (உ-ம்.) "வியனிலத்தளவுகோல்"(பிரபுலிங். துதி. கசு.)

அளவுதல்— கலத்தல். (உ-ம்.) "கனியிலமிழ்திற்கோற்றேனி - லளவுந்தீஞ்சொல்" (கூர்மபு. கண்ணன் மண. எக.)

அளவெடுத்தல் — ஒன்றினுடைய நீளம் அகல முதலிய அளவைக்குறித்தல். [ அளவு; எடுத்தல்.]

அளவெண்– (யாப்பு) அம்போதரங்கவகையுள் ஒன்று; அது: நாற்சீர் ஓரடியாக நான்கடிவருவது. "கனல்படவிழித்துக்காமற்காய்ந்தனை - மனைவிவேண்டலின்மறித்தவற்றந்தனை - யருவரைபெயர்த்தவரக்கனைநெரித்தனை - புரிநரம்பின்னிசைபுகன்றவற்கருளினை" என்பதுபோல. (காரிகை. செய். க0: ) [ வீரசோழியவுரைகாரர் இருசீரடி பதினாறினை அளவெண் என்பர்.வீரசோ. யாப்பு.கக.]

அளவை— 1. அளவு; அஃது: எண்ணல், எடுத்தல், முகத்தல், நீட்டல் என நான்குவகைப்படும். 2. அளவுக்கருவி. 3. ஆராய்ந்தறிதல்.4.எண்ணியளந்தறியப்படுதல்.(உ-ம்.) " ஆசினிவருக்கையாதியளவையில் கனிகள் கீறி" (கந்தபு. வில்-வதை. உ0.) 5. ஒரு தருக்கநூல். 6. காலவெல்லை. ( உ-ம். ) "ஐந்தியாண்டென்னுமளவை நிற்ககன்றுழி" (கந்தபு. உமை கயிலை. சக.) 7. சமயம், காலம். (உ-ம்.) "அன்னதோரளவையில்" (கந்தபு. குமாரபுரி. ௩உ.) 8. தன்மை. (உ-ம்.) "அதன்பயமெய்தியவளவைமான" (பொருநரா. கஉ.) 9. நாள். 10. பிரமாணம். ( உ-ம். ) "அளவைகாண்டல் கருதலுரையபாவம் பொருளொப்பாறென்பர்" (சி. சி. அளவை. க.) [உலகத்துப்பதார்த்தங்களை எண்ணல், எடுத்தல், முகத்தல், நீட்டல் என்னும் நால்வகை அளவினால் அளந்தறியுமாறுபோலப்பதிமுதலிய பொருள்களைப் பிரமாணத்தினால் அளந்தறிதலினாற்பிரமாணம் அளவையெனப்பட்டது.]

அளவையாகுபெயர்— ஆகுபெயர் வகையுள்ஒன்று; அஃது: எண்ணல், எடுத்தல், முகத்தல், நீட்டல் என்னும் அளவுகளுள் ஒன்றன்பெயர் அவ்வளவையுடைய பொருளுக்காய்வரும் பெயர்; கால் என்னும் எண்ணலளவைப்பெயர் அவ்வளவைக்கொண்ட உறுப்பிற்காதல்போல. (நன். பெயரி. ௩௩.)

அளவைவிளக்கம்—பிரமாணங்களை விளக்கும் ஒரு நூல். (சி. சி. அளவை. க. மறை.)

அளறல்— அளறுதல்.

அளறு— 1-3. அளறென்னேவலுக்கேரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். 4. குழம்பு. (உ-ம்.) "வனமுலைச்சுண்ணமுமளறும்" (கல்லாட.உஅ.) 5. குழைசேறு.(உ-ம்.) (சூ. நிகண். ௫: உஅ.) 6. நரகம். (உ-ம்.)"அளறேழுகோடியுறுவர்" ( தணிகை. அகத்தி. உஅஅ.)

அளறுதல்— 1. ஓயாதழைத்தல். 2. சிதறிவெடித்தல். (உ-ம்.) "மரமளறினது" 3. நெரிதல். (உ-ம்.) "தலைமண்டையளறிப்போனது" 4. பின்னமாய்ப்பிளத்தல். [ வழக். ]

அளாய— அளாவிய, கலந்த. (உ-ம்.) "ஆங் கெலாமகிழ்ப்புகையளாயவாசமும்" (சிந்தா. கேமச. உக.)

அளாயின— 1. அளாவியவை எனப்பொருள்படும் ஒருவினைமுற்றுப்பலவின்பாற்பெயர். (உ-ம்.) "வாளும் வேலும் விட்டளாயினவனையகண்மயிலே" (இராமா. சித்திர. உ.) 2. அளாவின எனப்பொருள்படும் ஒரு பலவின்பால் வினைமுற்று.

அளாவல்— அளாவுதல்.

அளாவு— 1-3. அளாவென்னேவலுந்தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும்.

அளாவுதல்— 1. (கையால்) அளைதல். (உ-ம்.) "சிறுகையளாவியகூழ்" (வள். சுச.) 2. ஊடாடுதல். 3. எட்டுதல். (உ-ம்.) "மாயிருவிசும்பினையளாவுமன்னவன்-கோயிலை" (கந்தபு. மூவாயி. க.) 4. கலத்தல். (உ-ம்.) "அட்டதோர்புகைமுகிலளாவிற்றெருக்குமே" (கந்தபு. நாட்டு. ௩௩.) 5. சேர்ந்துபற்றல். 6. தடவுதல். 7. துழாவியாற்றுதல்.

அளி— 1. அருள். (உ-ம்.) "வலியுந்தெறலுமளியுமுடையோய்" (புறநா. உ.) 2-4. அளியென்னேவலுந் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். 5. அன்பு. (உ-ம்.) "அடியுநீயினியெனமகிழ்ந் தளியுடனளித்தான்" (பாரத. குருகுல. உ௫.) 6. எளிமை. (உ-ம்.) "தாய்த்தாய்க்கொண் - டேகுமளித்திவ்வுலகு" (நாலடி. இளமை. ௯.) 7. கருந்தேனீ. 8. கள். 9. காகம். 10. காய். 11. கிராதி. (திசைச்.) 12. குளிர்ச்சி. 13. கொடை. (திவாகர. ககசசுக. பக்.) 14. சாந்தம். (உ-ம்.) "அளியரு மநத்தன்புடையன்பருக்கு" (திருவிளை. விடை. உக.) 15. தேள். 16. தேன். 17. மதுரம். 18. வண்டு. (உ-ம்.) "அளியினுக்குணவதாந்தேறல்" (கந்தபு. தெயவ. க௫௩.) 19. விருச்சிகராசி. [7, 8, 9, 15, 16, 18, 19, அலி.]

அளிகம்— 1. கட்டழகு. 2. நெற்றி. 3. பொய். [அலீக: அலீ - அலங்கரித்தல். ஈக - ஒரு விகுதி.]

அளிகுலம்— 1. தேனீக்கூட்டம். 2. வண்டுக்கூட்டம். (உ-ம்.) "இன்னிசைமுரன்றெழுமளிகுலம்" (காலாயிர. பெரியதிருமொ. திருவகிந்திர. இருந்தண். க.) [அலிகுல.]

அளித்தல்— 1. அரசாளுதல். (உ-ம்.) "நீதியாலுலகளிப்பதேயரசர்தநெறியே" (கந்தபு. அவைபுகு. க௦உ.) 2. அருள்செய்தல். (உ-ம்.) "அஞ்சினார்க்களித்தலும் வெஞ்சினமின்மையும்" (சிறுபா. உக௦.) 3. ஈனுதல், (மகவாகப்) பெறுதல். (உ-ம்.) "காந்தார-பதியளித்தமெய்க்கன்னியை" (பாரத. சம்பவ. உ௩.) 4. காத்தல். (உ-ம்.) "தோற்றுவித்தளித்துப்பின்னுந்துடைத்தருடொழில்கண்மூன்றும்-போற்றவேயுடையனீசன்" (சி. சி. க: ௩௩.) 5. கொடுத்தல் (உ-ம்.) "அறவோர்க்களித்தலும்" (சிலப். கொலை. எக.) 6. சிருட்டித்தல். (உ-ம்.) "இத்திறமளப்பில்-காலம்யாவையுமளித்தனனிருத்தலும்" (கந்தபு. அயனைச்சிறைநீ. க.) 7. செறித்தல். (பிங்க. ௩க௦எ.) 8. பங்கிட்டுக்கொடுத்தல்.

அளித்து— அளிக்கத்தக்கது. (உ-ம்.) (புறப்பொருள்வெண். கூ௪-ம் பக்.)

அளிதல்— 1. உருகுதல். 2. கரைய அவிதல். (உ-ம்.) "சோறளிந்துபோயிற்று" 3. கனிதல். (உ-ம்.) "மேம்பழுத்தளிந்தனசுளையும்" (சூளா. ௩க. க௪.)

அளிது— 1. அளிக்கத்தக்கது. (உ-ம்.) "அளிதோதானேயதுபெறலருங்குரைத்தே" (புறநா. ௫.) 2. இரங்கத்தக்கது. (உ-ம்.) "அளிதோதானேபாரியதுபறம்பே" (புறநா. க௦க.)

அளிந்தம் — 1. கோபுரவாயிற்றிண்ணை. (உ-ம்.) "தெளிபளிக்களிந்தம்" (சேதுபு. திருநா. க௦உ.) 2. வீட்டின் வெளிச்சாலை. [அலிந்த.]

அளிப்பு— சிருட்டிப்பு.

அளிய— அளிக்கத்தக்கன. (ஐங்குறு.)

அளியர்— 1. அருளுடையவர். (உ-ம்.) "வேதவளியரிற்சிறந்த" (இரகு. தேநுவந். ௩க.) 2. அன்புடையோர். 3. ஏழைகள். (உ-ம்.) "அளியராகியவமரரும்" (கந்தபு. முதனாட். பா. அ.)

அளியன்— 1. அளிக்கத்தக்கவன். (உ-ம்.) "அளியன்றானேமுதுவாயிரவலன்" (திருமுரு. உஅ௪.) 2. அன்புள்ளவன், கிருபையுள்ளவன். (உ-ம்.) "பொன்றிலனளியன்போலப்புலம்பினன்வறிதேயென்னும்" (கந்தபு. அக்கினி. ககஅ.) 3. எளியன், தாசன். (உ-ம்.) "அவ்வயினனையகாண்டற்கமைதலாலளியனென்றான்" (இராமா. நைலமா. உ௦.)

அளீகதை — பொய்மை. [அலீகதா: அலீக - பொய். தா - தன்மை.]

அளீகம்— 1. நெற்றி. 2. பிரியம் இல்லாதது. 3. பொய். [அலீக.]

அளுக்கல்— அச்சக்குறிப்பு. (சூ. நிகண். அ: ௯கூ.) 2. குலைதல். (பிங்க. கஅ௯௩.)

அளுக்கு— 1-3. அளுக்கென்னேவலுந்தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும்.

அளுக்குதல்— அஞ்சுவித்தல்.

அளுங்கு— அழுங்கு. [வழக்.]

அளேசுவேப்பம்— } அதிவிடயவேர்.
அளேசுவேப்பு— }

அளேருகம்— தூதுளங்கொடி.

அளை— 1-3. அளையென்னேவலுந்தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். 4. எலி முதலியவற்றின்வளை. 5. ஏழாம் வேற்றுமையுருபுகளுளொன்று. (உ-ம்.) "கல்லளைச்சுனைநீர்" (நன். பெயரி. ௬௫- உரை) 6. குழி. 7. தயிர். (உ-ம்.) "பாலளையிலீனுறுமோதகம்" (கந்தபு. ததீசியுத். ௯௫.) 8. புற்று. (உ-ம்.) "பாம்பளைபுகுவதேபோல்" (கந்தபு. ஆற்று. ௩௩.) 9. பொந்து, வளை. (ஐங்குறு.) 10. மலைக்குகை. (உ-ம்.) "அளைச்செறியுழுவையுமாளியுமுளியமும்" (குறிஞ்சிக். ௨௫௨.) 11. மோர். (உ-ம்.) "அளைவிலையுணவிஞைச்சியர் தம்மொடு" (சிலப். கொலை. ௩.) 12. வெண்ணெய். (உ-ம்.) "அம்புலாவசடலலைத்த நாளாரளைக்கள்வன்" (சேதுபு. விதாம. ௭௫. [அளை - தயிர், வெண்ணெய்.]

அளைகுதல்— அளைதல். [கு - ஒருசாரியை.]

அளைதல்— 1. அருந்துதல், அநுபவித்தல். (உ-ம்.) "அளைவது காமமடுநறவு" (சிந்தா. கேமச. ௧௨௦.) 2. கலத்தல். (உ-ம்.) "ஊனளைந்தவுடற்குயிராமெனத் - தானளைந்து தழுவின தண்ணுமை" (இராமா. பள்ளி. ௧௬.) 3. திண்டுதல். (உ-ம்.) "வேழத்தங்கம்பிளந்தளைவதல்லாமல்" (கூர்மபு. வயிரவர்பலி. ௯௯.) 4. தொட்டழுக்காக்கல். 5. புணருதல். (உ-ம்.) "தாதளைந்தினவண்டுகண்படு" (நைட. அன்னத்தைக்கண். ௨.) 6. வருடல். 7. குழைதல்.

அளைமறிபாப்பு— } பொருள்
அளைமறிபாப்புப்பொருள்கோள்— } கோளெட்டினுளொன்று; அது: செய்யுளின் இறுதியினின்றசொல் அதன் இடையிலும் முதலிலுஞ்சென்று பொருள் கொள்ளப்படுவது. "தாழ்ந்தவுணர்வினராய்த் தாளுடைந்து தண்டூன்றித் தளர்வார்தாமுஞ் - சூழ்ந்தவினையாக்கைசுடவிளிந்துநாற்கதியிற்சுழல்வார்தாமு - மூழ்ந்தபிணிநலிய முன்செய்தவினையென்றேமுனிவர்தாமும் - வாழ்ந்தபொழுதினேவானெய்துநெறிமுன்னி முயலாதாரே" என்பதிற்போல. (நன். பொதுவி. ௯௯. உரை.) [அளை-புற்று. மறி - மடங்குதல். பாப்பு - பாம்பென்பதன்விகாரம்.]

அளையெடுத்தல்— 1. புரைசெய்தல். 2. வளைசெய்தல்.

அளைவு— அளைதல். (உ-ம்.) "இழுதளையளைவுறசெயலால்" (திருவிளை. அன்னக்குழி. ௧௯.)

அளைவைத்தல்— அளையெடுத்தல்.

அற்கம்— 1. அலரி. 2. குன்றி. 3. தும்பை. 4. துளசி. 5. நந்தியாவர்த்தம். 6. முருக்கு 7. வன்னி 8. வெண்டுளசி. 9. வெள்ளெருக்கஞ்செடி. 10. வேம்பு. இப்பத்தும் (இராசவைத்.) காண்க.

அற்கல்— 1. அடைதல். (உ-ம்.) "பொம்மன்முலையாளையற்கச் செய்தயாப்பினராகி" (சிந்தா. குணமா. ௨௧௦.) 2. அறிவு. 3. தங்குதல். (உ-ம்.) "வன்னிமைவற்றினற்கும்வன் குரம்" (தணிகை. நகர. ௨௩.) 4. நிலைபெறுதல். (உ-ம்) "அற்குபவாங்கேசெயல்" (வள். ௩௩௩.)

அற்கா— நிலையாத (உ-ம்.) "அற்காவியல் பிற்றுச்செல்வம்" (வள். ௩௩௩.) [அற்காத என்னும் எதிர்மறைப்பெயரெச்சம் அற்கா எனநின்றது.]

அற்காமை— 1. அறிவின்மை. 2. நிலையாமை.

அற்கி— ஓரிலைத் தாமரை. (இராசவைத்.)

அற்குதல்— நிலைபெறுதல், நிலைத்தல், தங்குதல்.

அற்பக்கியன்— சிற்றறிவுடையவன். (உ-ம்.) "அற்பக்கியனுகியசீவற்கு" (சூத. எக்கி. உத். ௩: ௮.) [அல்பஜ்ஞ: அல்ப - சிறிது. ஜ்ஞ - அறிகிறது.]

அற்பகந்தம்— செந்தாமரை. [அல்பகந்த: அல்ப - குறைவு. கந்த - மணம். மணங்குறைந்ததென்றபடி.]

அற்பகம்— 1. சிறுமை. 2. நுட்பம். [அல்பக.]

அற்பகேசி— வசம்பு. [அல்பகேஶீ: கேஶிநு - மயிருடையது.]

அற்பச்சுருதிவாக்கியம்— கர்மாநுஷ்டானக்கிரமங்களைச் சொல்லும் வேதவாக்கியம். [அல்பஶ்ருதி; வாக்ய.]

அற்பசங்கை— அற்பாசமனம். [அல்பஸங்க்யா: அல்ப; ஸங்க்யா - இலக்கம். ஒன்றுக்குப்போதல் என்னும் இடக்கரடக்கன்மொழிபற்றிவந்தபெயர்.]

அற்பசுருதி—கருமகாண்டம். [இதுவேத த்தின் ஒருபகுதி.] [வட.ஸ்ருதி.]

அற்பசோபாட்சிபாகரோகம்—கண்களில் வரும் ஒருவகைச் சங்காரரோகம்; அது: கண் களில் அற்பவீக்கமாய்ச் சோபாட்சிபாக ரோ கத்தின் குணங்களை யெல்லாம் உண்டாக்கு வது. (ஜீவாட். உ௬௦.)

அற்பத்தனம்—சிறியகுணம்.

அற்பதநம்— திரவியக் குறைவுடைமை. [வட.அல்பதந: வட. - சிறிய. தநம் - செல்வம்.]

அற்பதை— இழிவுத்தன்மை. [வட.தா: தா- தன்மை.]

அற்பப்பிராணன்—1. சிறுமூச்சு. (சப்தசங். ௫.) 2. சிறுமூச்சுடன் உச்சரிக்கப்படும் எழு த்துக்கள்; அவை: சம்ஸ்கிருத பாஷையிலே "க" வர்க்கம்முதலிய ஐவருக்கங்களினும் மு தலாம் மூன்றாம் ஐந்தாம் எழுத்துக்களும், ய ர ல என்பவைகளுமாம். (சப்தசங். ௫.)

அற்பபத்திரம்—ஒருவகைத்துளசி. [வட. பத்ர: வட- சிறிய. பத்ரம்- இலை.]

அற்பபதுமம்—செந்தாமரை. [வட.பத்ம.]

அற்பம்—1. அணு. 2. இலேசு. 3. இழிவு. (உ-ம்.) "அற்பமென்னவமாரவதியையே" (பாரத. வாரணா. சககூ.) 4. சிறுமை. (உ-ம்.) "பழு-கண்ணியற்பநகும் பரிதிப்படை" (இர கு.திக்கு. கஎஎ.) 5.நாய். 6. பஞ்சு. 7. புகை. [வட.]

அற்பமாரிடம்—சிறுகிரை.[வட.மாரிஷ.]

அற்பர்—கீழ்மக்கள். (உ-ம்.)"அறிவிலாத- வற்பரானவர்க்குச் செல்வமல்லதுபகைவேறு ண்டோ" (திருவிளை. இந்திரன்பழி. ௬௫.)

அற்பாம்—மக்கட்படுக்கை.

அற்பருத்தம் —வாழை.

அற்பாசி— ஆறாதாரங்களுள் ஒன்றாகிய விசுத்தியினது பதினாறு பதும தளங்களுள் ஒன்றிலிருக்கும் அதிதேவதை. (சி. சி. அ: உக. மறை.)

அற்பாயு—1. அற்பவயசு. (உ-ம்.) "அற் பாயுநார்க்கென்றேயமலன்வேதம்"(சிவதரு. பாமதரு. உக.) 2. அற்பவயசுடையவன். 3. குட்டி. 4. வெள்ளாடு. [1, 2, 3, 4. [வட.ஆயுஸ் : வட. - சிறிய. ஆயுஸ் - வயது.]

அற்பாலங்காரம்— சிறுமையணி; அஃதற் பமான ஆதேயத்தைப் பார்க்கினும் ஆதாரத் தையற்பமாகக் கூறுவது. (குவ. ௪௨.)

அற்பீயம்—மிக அற்பம். [வட.அல்பீயஸ்: வட.; ஈயஸ் - ஒருவிகுதி.]

அற்புத்தளை—நேசபந்தம். (உ-ம்.) "அற் புத்தளையுமவிழ்ந்தன"(நாலடி. இளமை. உ.)

அற்புதசயா—சூரத்துக்கடுக்காய். (தைல. தைலவ. ௧௨௫.)

அற்புதம்—1. அழகு. 2. ஆச்சரியம். (உ-ம்.) "அற்புத புத்திருத்தியளித்தருளாவே"(திரு வாதவூ. மந்தி. ௧௯.) 3. சிதம்பரம். (உ-ம்.) "சுத்தம் பாமற்புதமெய்ப்பதம்" (கோயிற்பு. வியாக். உக.) [காணுந்தோறும் புதிதுபுதிதா தலின்.] 4. ஞானம். (உ-ம்.)"அற்புதமூர்த்தி" (நன். சிறப்பு.) 5. கோடிபத்து. (பிங்க. உ௨௬அ.) 6. ஓரலங்காரம். [வட.அத்புத.]

அற்புதமூர்த்தி—கடவுள். (உ-ம்.) "அற்பு தமூர்த்திதன்னலர்தருதன்மையின்" (நன். சிறப்பு.) [வட.அத்புதம்- ஞானம். மூர்த்தி- மே னியுடையோன். ஞானமே மேனியாக உடை யவன் என்றபடி.]

அற்புதர்— 1. கம்மாளர். 2. ஞானமுடை யவர்.

அற்புதவவிநயம்— ஒன்பது சுவைகளுள் ஒன்று; அது: பின்வரும் உதாரணச்செய்யு ளால் இன்னதெனத்தெளிக. (உ-ம்.) "அற் புதவவிநயமறிவரக்கிளப்பிற் - சொற்சோர்வு டையதுசோர்நதகையது- மெய்ம்மயிர்குளிர் ப்பது வியத்தகவுடைய- தெய்தியதிமைத்த லும் விழித்தலுமிகவாதென் - றையமில் புல வாறைந்தன ரென்ப" (சிலப். அரங்கே. ௧௩. உரை.)

அற்புதவாதம்—ஒருவாதநோய்.

அற்புதவுருவகம்— ஒருவகையுருவகம்; அஃ துவமைக்கியல்பல்லாதவற்றை யுள்ளதாயெ டுத்து உருவகப்படுத்துவது.

அற்புதவுவமை— உவமையலங்காரவகை யுள் ஒன்று; அஃது: உபமேயத்தின் இலக்க ணங்களை யெடுத்துக்காட்டி அவ்விலக்கணங் கள் குறித்த உபமானத்திற்கு முளவேல் அது உபமேயத்திற்கொப்பாகும் என்று கூறுவது. "குழையருகுதாழக் குனிபுருவந்தாங்கி- யுழை யருயிர்பருகிநீண்ட- விழியுடைத்தாய- வண் டேடிருளளகஞ்சூழவருமதியொன்-றுண்டே. லிவண்முகத்திற்கொப்பு" என்பதிற்போல. (தண்டி. ௩௧. உரை.)

அற்புதன்—1. ஆச்சரியபூதன். (உ-ம்.)"அ ற்புதவகோசா" (தாயு. கருணா. க.) 2. ஒன்

பதாமநுவின்காலத்துள்ள இந்திரன். (உ-ம்.) "வாய்த்ததிறலொன்பதாமநுவினுமம் வழங்குதக்கசாவனனன்மகவானுமங் - கோத்தபுகழ்ச்சுதையுலகமுழுதுந்தீட்டுங் குணமுடைய ற்புதனென்றுகூறுவாரால்" (கூர்மபு. மநுவந். ௨௨.) 3. கடவுள். (உ-ம்.) "தனிவேற்செங் கையற்புதன்றன்னை" (கந்தபு. கந்தவி. ௨௦.) 4. கம்மாளன்.

அற்புதாகிரகம்— ஒருவகைநோய்; அது: குழந்தைபிறந்த பன்னிரண்டாநாளிலாவது பன்னிரண்டா மாதத்திலாவது பன்னிரண்டாம்வருடத்திலாவது குழந்தைக்கு அல்லது தாய்க்குவருவது. (சீவரட். ௨௨அ.)

அற்றம்—1. அச்சம். (உ-ம்.) "செற்றியலசுரர்தஞ்சேனைதன்னுடன் - அற்றமிருரகனமர்தன்மேயினான்" (கந்தபு. தாரக. அ.) 2. அவமானம். (உ-ம்.) "அற்றமறைக்கும்பெருமை" (வள். ௯௮௦.) 3. அழிவு. (உ-ம்.) "அறிவற்றங்காக்குங் கருவி" (வள. ௪௨௧.) 4. இல்லாமற்போஞ் சமயம். (உ-ம்.) "அருந்தவன்றந்தையையற்ற நோக்கியே" (இராமா. திருவவ. ௪௧.) 5. உண்மை. 6. குறைவு. (உ-ம்.) "அற்றமிலிராக்கருடன்" (கந்தபு. தெய்வ. ௨௧௬.) 7. சமயம், காலம். (உ-ம்.) "பிறங்குபொற்கதவங்கடிறக்கு - மற்றநோக்குவன்" (நைட. நகர. ௨.) 8. மீசார்வு. (உ-ம்.) "அற்றத்தினனுகியாசுரத்தின்பாற்போன" (கந்தபு. அசுரோ. ௧௬.) 9. துன்பம். (உ-ம்.) "இரக்தோரற்றந்தீர்க்கென" (புறநா. ௧௫அ.) 10. மறைக்கவேண்டிய இடம். (உ-ம்.) "அற்றமறைத்தலோபுல்லறிவுதம்வயிற் - குற்றமறையாவழி" (வள். அ௪௬.) 11. மெலிவு.

அற்றவர்— பொருள் அற்றவர். (உ-ம்.) "கழிசிரப்பினு- லற்றவராவரேல்" (கந்தபு. மாயையுப. ௯.)

அற்றறுதி—முற்றுமற்றுப்போதல்.

அற்றார்—1. அற என்னும் வினையடியாற் பிறந்த ஒருதெரிநிலை வினைமுற்று. 2. இறந்தோர். 3. நீங்கப்பெற்றவர். (உ-ம்.) "அவாவற்றார்" (வள். ௩௬௫.) 4. முனிவர். 5. வறியவர். (உ-ம்.) "அற்றாரழிபசிதீர்த்தல்" (வள். ௨௨௬.)

அற்று—1. அத்தன்மை. (உ-ம்.) "அற்றால்விதித்திறங்கூடிற்றில்லை" (கந்தபு. உருத்திரர்கேள்வி. ௬.) 2. அத்தன்மைத்து. (உ-ம்.) "அற்றுகின்றவேலையின்" (கந்தபு. ததீசியுத். ௨௪௧.) 3. அறு என்னும்வினையடியாற்பிறந்த ஒருவினையெச்சம். (உ-ம்.) "வலியற்று" (கந்தபு. அக்கினிமுகா. ௭௨.) 4. ஒரு சாரியை. (உ-ம்.) "அங்ஙவற்றிடை" (கந்தபு. நகரப். ௭௬.) 5. குறிப்புமுற்றுகப் பொருள்படும் ஓர் உவமையுருபு. (உ-ம்.) "ஊருணிநீர்நிறைந்தற்றே" (வள். ௨௧௫.) 6. அற்றறுதிப்பட்டு. (புறப்பொருள். வெண். ௧௪அ. பக்.)

அற்றுப்போதல்—இல்லாமற்போதல்.

அற்றுவிடல்—கழலுதல். (உ-ம்.) "இருண்மல - வீக்கமற்றுவிட்டவே" (திருவிளை. அட்ட. ௧௦.)

அற்றை—1. அற்பம். (வழக்.) [பலநாளில் வருவனபோலாது ஒருநாள் வருவது சிறிதாதலின் அன்று என்பதன் ஆகுபெயராய் அற்பம் எனப்பொருள்பட்டது.] 2. அன்று. (உ-ம்.) "அற்றைவெஞ்சமரில்" (பாரத. பதினே. ௨.)["அன்று" என்பது ஐகாரச்சாரியையும் வலித்தல் விகாரமும் பெற்று "அற்றை" என நின்றது.]

அற்றைக்காரியம்— 1. அற்பகாரியம். 2. அன்றைய்ற்காரியம்.

அற்றைக்கூலி—1. அந்த அந்த நாளிற்பெறுங்கூலி. 2. அற்பக்கூலி.

அற்றைநாள்—அந்நாள். (உ-ம்.) "யான்காவல்பூண்டவற்றைநாண்முதலா" (அரிச்ச. விவாக. ௨௯.)

அற்றைப்பரிசம்—விலைமாதர் ஆடவரிடம் அன்றன்று வாங்கும் விலை. (மணிமே. ௩.௩௬அ.)

அற்றைவாக்கியம் — (சோதிடம்) நிகழ்கின்ற பஞ்சாங்கவாக்கிய காலமாகிய இருநூற்றுநாற்பத்தெட்டுத் திநங்களில் எடுத்துக்கொண்ட திநமாகிய அன்றைத்திநத்துக்கு ஆகிய வாக்கியம். இது பின்வருஞ் செய்யுளாற்பெறப்படும். "எல்லையிறினத்தின்மன்னன்வீடு சூழ்குளமெடுத்துப் - பல்லியோனிக்கர்த்த பலமுதலாகுஞ்சேடஞ்- செல்விகேழேதீர்மாவென்றரித்தது விருத்தஞ்சேடம்- சொல்லிடிலற்றை நாட்குத்தோன்றும் வாக்கியமதாமே" (பரகிதம். ௧௩.)

அற—1. செய என்னும் வாய்பாட்டில் வரும் ஒருவினையெச்சம். (உ-ம்.) "போரறமலைந்து வென்று" (பாரத. பதினேர். ௨௬.) 2. மிக. (உ-ம்.) "அறவேதுயர்செய்தணுகாதிகலித்" (கந்தபு. காசிபன்பு. ௧௫.) 3. முற்ற. (உ-ம்.) "வகையறச்சூழாது" (வள். ௪௬௫.)

அறக்கடவுள்—1. இயமன். (உ-ம்.) "தொல்லறக்கடவுளருளுடனளித்ததோன்றறன்றணைவரைநோக்கி" (பாரத. நாடுகா. ௩.) [நீதியை நடத்துவோன் என்றலின் வந்தபெயர்.] 2. விதுரன். (உ-ம்.) "சரிற்புதல்வனுக்கு

நல்லறக்கடவுளுக்கு முறையா" (பாரத. வாரணா. ௫௪.) [இவன் வியாசருக்கு அம்பிகையின்றோழியிடத்திற் பிறந்தவன்; இயமாவதாரமுடையவன் என்னுங் கதைபற்றி வந்த பெயர்.]

அறக்கடை—பாவம்.

அறக்கப்பிளப்பி — திருநாமப்பாலைப்பூண்டு.

அறக்கற்பு— மறந்தவிர்சற்பு. (திருவிளை. அங்கம். ௧.)

அறக்காடு—சுடுகாடு.

அறக்குளாமீன்—சூரைமீன்.

அறக்கொடி— உமை. (உ-ம்.) "அறக்கொடிபாகன்". [அறம் - முப்பத்திரண்டுவகைத் தருமங்கள். கொடி - பெண். முப்பத்திரண்டறங்களையும்வளர்த்தவளென்பதுபற்றிவந்தபெயர்.]

அறங்கடை—அறன்கடை. (உ-ம்.) "எஃத்தும் - அறங்கடையிற்செல்லார்பிறன்பொருளும் வெஃகார் - புறங்கடையதாகும் பொருள்" (நீதிநெறி. ௬௫.)

அறச்சாலை—தருமசாலை. (உ-ம்.) "பிறரச்சாலைகள் காப்போரும்" (தணிகை. அகத்தி. ௩௭௦.) [அறம்- தருமம். சாலை- வீடு.]

அறச்செல்வி—1. உமாதேவி. (உ-ம.) "அறத்தனிச்செல்விபாகவன்பிலேன்" (திருவாதவூ. திருப்பெ. ௧௩௨.) [முப்பத்திரண்டுவகையறங்களையும் வளர்ப்பவள் என்பதனாலவந்தபெயர்.] 2. தருமதேவதை. (சூ. நிகண். ௧: ௩௪.)

அறணை—காட்டுக்கருணை.

அறத்தவிசு—நியாயபீடம். (உ-ம்.)"அறத்தவிசிருப்போ ரேவலாடவரோடும்போந்து" (திருவிளை. மாமனு. ௧௭.) [தவிசு - ஆசநம்.]

அறத்தளி—அந்தப்புரம்.

அறத்தின்சேய்— பஞ்சபாண்டவருள் ஒருவனாகிய தருமன்.(சூ. நிகண். உ: ௧௪.)[அறம்- இயமன். சேய் - புத்திரன்.]

அறத்தின்மூர்த்தி— 1. தருமதேவதை. 2. பார்வதி.

அறத்துப்பால்—நான்குபுருடார்த்தங்களில் ஒன்றாகிய தரும நெறியைக் கூறும் பாகம்; அது: நாலடியார் வள்ளுவர் முதலிய நூல்களிலே இல்லறந்துறவறம் என இரண்டாகப் பகுத்துக்கூறப்படும்.

அறத்துறத்தல்— 1. உலகப்பற்றை முற்றாகவிடல். (உ-ம்.) "அறத்துறந்தோன்" 2. முற்றாகக்கைவிடல். (உ-ம்.) "ஈன்றறத்துறந்தவன்றையினும்"(பாரத. இருட்டி. உ௫௬.) [அற - முற்ற. துறத்தல் - நீக்குதல்.]

அறத்துறந்தோன் — உலகப்பற்றை முற்றாகவொழித்தவன், சந்நியாசி. (உ-ம்.) "வானப்பிரத்த னறத்துறந்தோன்" (கூர்மபு. வருணாச். உ௧.)

அறத்துறுப்பு—அறத்துக் கங்கமாக எண்ணப்படுங்குணங்கள்; அவை: அழிந்தோரை ...ல், அறம்விளக்கல், ஐயப்படாமை, பழியைநீக்கல், மயக்கமின்மை, போன்புடைமை, விருப்பின்மை, வெறுப்பின்மை என எட்டு. (சூ. நிகண். ௧௨: ௮௩.) (உ-ம்.) "அறத்துறுப்பெய்தினுமன்பிலைறஞ் - சிறப்புறச்செய்தலிங்கரிது" (பிரபுலிங். இட்டலிங்க. ௧௨.)

அறந்தைக்காப்போன்—அரிகாபுத்திரனாகிய ஐயன். (சூ. நிகண். ௧: உ௮.)

அறந்தொடுநிலை — (அகப்பொருட்கோவை) அறத்தொடுநிற்றல். (உ-ம்.)"ஆற்றுறத்தோன்று மறத்தொடுநிலையே" (அகப்பொ. அகத்திணை. ௭௭.)

அறந்தொடுநிற்றல்— (அகப்பொருட்கோவை) களவை முறையே வெளிப்படுத்திநிற்றல். (உ-ம்.) "தலைவிபாங்கிக்கறத்தொடுநிற்கும்" (அகப்பொ. அகத்திணை. ௭௮.)

அறநிலை—1. பிரமமணம். 2. மநுமுதலிய நூல்களில் விதித்தன செய்தலும் விலக்கியன ஒழிதலும் ஆகிய தருமநிலை.(வள்.உரைப்பா. பரி.)

அறநிலைப்பொருள்— நெறிவழிநின்று தத்தம் நிலையினால் முயன்று பெறும் பொருள். (பிங்கல. ௭௬௩.)

அறநிலையறம்—நான்குவருணத்தாருந் தத்தம் வருணநெறியிற் பிறழாது நிலைபெறப் பாதுகாத்தல். (பிங்க. ௭௬௧.)

அறநிலையின்பம்— ஒழுக்கமுங் குணமுங் குலமும் பருவமும் ஒத்த கன்னிகையை அக்கினி முன்னிலையில்வேட் டில்லறத்திருந்து அநுபவிக்கும் இன்பம். (பிங்க. ௭௬௫.)

அறப்பால்—அறத்துப்பால்.

அறப்புறம்—1. அறச்சாலை. (உ-ம்.)"மடமறப்புறநீர்ச்சாலை"(திருவிளை. நாட்டு. ௩௩.) 2.ஓதும்பள்ளி. (திவாகர. ௫. ௬௩.பக்.)ஓதுவிக்குஞ்சாலை.(சிந்தா.நாமக.௭௨.)3. தருமத்துக்கு விடப்பட்ட இறையிலிநிலம்.(உ-ம்)"அடிசில்வைகலாயிரமறப் புறமுமாயிரம்" (சிந்தா.நாமக. ௭௭-ம் உரையும்.) [புறம் - இடம். அறத்திற்குவிடப்பட்ட இடம் என்றபடி.] 4. பாவச்செயல்.(உ-ம்.)"மறத்தினுக்குவாகியின்று

வன்மைசெய்வதேயறப் - புறத்திருர் புரம் பொடித்தபுண்ணியாவெனக்கரைந் - துறைத்துவேண்டினன்" (திருவிளை. தண்ணீ.௯.) [அறத்திற்குட்படாதசெயல் என்றபடி.]

**அறம்**— 1. இயமன். (உ-ம்.) "அறத்தின் மைந்தன்" [நீதிநெறியைக்கருதும் அறமென்னும் பெயர், ஆகுபெயராய் அதனையுடையானுக்காயிற்று.] 2. கடவுள் அருளிய வேதாகமங்களில் விதித்தனசெய்தலும் விலக்கியன ஒழிதலும்; மநுமுதலிய நூல்களிலே விதித்தனசெய்தலும் விலக்கியன ஒழிதலுமாகிய ஒழுக்கம். (வள். உரைப்பாயி. பரி.) இது நான்குபுருடார்த்தங்களுள் ஒன்ருகவும் பெரியோரியல்பேழனுள் ஒன்ருகவுஞ்சொல்லப்படும். 3. தீங்கினைவருவிப்பது. 4. புண்ணியம். (உ-ம்.) "அறம்பாவங்கள் பெரிதாற்றி" (தணிகை. அகத்தி. ௩௩௩.) 5. முறைமை. (உ-ம்.) "அறங்கூறமைத்தருளால்"(வாண. ௫௭.) [1, 2, 4, 5. அறு; அம். செய்யத்தக்கதென அறிவுடையோரால் வரையறுக்கப்படுவதென்றபடி. அம் - செயப்படுபொருள்விகுதி. 3. அறு - வெட்டு என்னும்பொருட்டு. அம் - கருவிப்பொருள்விகுதி.]

**அறம்பகர்ந்தோன்**— புத்தன். (மணிமே. ௪௪௭.) [தருமநெறியைச்சொன்னவன் என்றபடி.]

**அறம்பாடல்**—கையறம்பாடுதல்.

**அறம்புறம்**—முறைமையல்லாதது. [அறம் - முறை. புறம் - பின்.]

**அறல்**— 1. அரித்தொழுகுதல். (உ-ம்.) "தீம்புளிக்களாவொடுதுடரிமுனையின் - மட்டறனல்யாற்றெக்கரேறி" (புறநா. ௧௭௭.) 2. அறுக்கப்பட்ட தன்மை. 3. அறுதல். (உ-ம்.) "ஆயிரங்கரமறலும்" (கந்தபு. யாளிமு. ௩௯.) 4. இல்லாமற்போதல். (உ-ம்.) "துறக்கமாண்டவறவோர்கடுய்ப்பங்கறலும்" (தணிகை. அகத்தி. ௩௩௪.) 5. கடற்றிரை. (சூ. நிகண். ௫. ௧௮.) 6. கருமணல். (உ-ம்.) "நெடுந்திரைகொழித்ததெள்ளறலோ" (நைட. அன்னத்தைத்தூ. ௧௧.) 7. சிறுதூறு. (சூ. நிகண். ௪: ௫௯.) 8. நீர். (உ-ம்.) "அறலிற்புடைபெயருமயிலைத்தநுவொருவி" (கந்தபு. சரவண. ௩௩.) [அறு; அல்.]

**அறவணைப்பு**—ஆதரிப்பு. (உ-ம்.) "ஐயன் புரியும் அறவணைப்பும்" (பணவிடுதூது.)

**அறவர்**— 1. அறஞ்செய்தலைத்தொழிலாகவுடையவர். (உ-ம்.) "அறவர்க்கேய்தாவிராச்சியமதனைமுன்னளித்த" (இரகு. தசர. ௪. ௪.) 2. பிராமணர். 3. முனிவர். (சூ. நிகண். உ: ௧.) [அறம்; அர்.]

**அறவன்**—1.புண்ணியசொரூபனாகிய கடவுள். 2. புத்தன். (திவாகர.) 3. மநுநீதியிற்பிறழாதவன். (உ-ம்.) "அறவனீயல்லையோவுன்னகத்தினுக்கிசைந்தசெய்கென் - றிறைவன தருளால்வானின்றெழுமொழிகேட்டுவையைத் - துறைவனும்" (திருவிளை. தண்ணீ. ௩௯.)

**அறவாக்கல்**— அறவிடுதல். [அற - சிக்கற. ஆக்கல்.]

**அறவாணர்**— சிவன். (உ-ம்.) "அறவாணர்க்கன்பென்னுமமுதமைத்து" (பெரியபு. வாயி. ௮.) [அறம் - வாழ்நர்.]

**அறவாழி**—1. தருமசக்கரம்.(உ-ம்.)"அருளோடெழுமறவாழி" (திருநூற். ௫.) 2. மிகுதியினுற்கடல்போன்ற அறச்செயல். (உ-ம்.) "அறவாழியந்தணன்" (வள். ௮.)

**அறவாழியந்தணன்**— 1. அருகன். (திவாகர.) [தருமசக்கரத்தையுடைய அந்தணன் என்றபடி.] 2. கடவுள். (உ-ம்.) "அறவாழியந்தணன்ருள்சேர்ந்தார்க்கல்லாற் - பிறவாழிநீந்தலரிது" (வள். ௮.) [மிகுதியாற்கடல்போன்ற பல வேறுவகைப்பட்ட அறங்களை வடிவாகவுடைய அந்தணன் என்றபடி.]

**அறவாழியாள்வோன்**—புத்தன். (மணிமேக.)

**அறவாழிவேந்தன்**— 1. அருகன். (உ-ம்.) "வென்ருேர்பெருமானறவாழிவேந்தன்விரிபூந்தாமரைமேல்" (சிந்தா. முத்தி. உ௧௯.)

**அறவாளன்** — அறச்செயலுடையவன்.

**அறவி**—1. அறமுடையது. (உ-ம்.) "பிறவியுமறவியும்பெற்றியினுணர்ந்த"(மணிமே.) 2. அறவழிநின்ருேன். (உ-ம்.) "ஆசில்கொள்கையறவிபாலணைந்து" (சிலப். புறஞ்சே. ௯௦௩.)

**அறவிடுதல்**— 1. அறவாக்குதல், தண்டுதல். [அறவு; இடுதல்.] 2. முற்ருக நீக்குதல். (உ-ம்.) "அகமென்பது மென்னுதவு முளதுமிலதுமறவிட்டு"(ஞானவா. மானுவே.௧௭.) [அற; விடுதல்.]

**அறவிய**—அறத்தோடு கூடிய. (மணிமே. ௯௮.)

**அறவியங்கிழவோன்**—புத்தன்.(மணிமே.)

**அறவியான்**—அறத்தினிற்போன்.(உ-ம்.) "அறவியாற்காறுமூன்றமமைந்த நாலமிர்தமேர்தப்" (சிந்தா. குணமா. உ௭௫.)

அறவிருத்தம்—தருமத்துக்குமாறுபட்டது. (உ-ம்.) "குலமார்கொடிநீயறவிருத்தங்குறிப்பதழகோ" (நல். பார. யயாதி. எ௫.)

அறவு—1. அறுதல், தொலைதல். (உ-ம்.) "நீறவறியாக்கரகத்து" (புறநா. க.) 2. அறுபட்ட இடம். 3. ஆசைநீக்கம். (உ-ம்.) "அறவேபெற்றார்நின் னன்பர்" (திருவாச. பிரார். ௬.) 4. வெளிகண்ட இடம். [வழக்.]

அறவுபதை—உபதை நான்கனுள் ஒன்று; அது: மந்திரிமுதலியோரைப் பரிசோதிக்குமிடத்து, அவரிடம் புரோகிதரையும் அறவோரையும் விட்டு, அவரைக்கொண்டு, இவ்வரசன் அறவோன் அன்மையின் இவனைப் போக்கி அறனும் உரிமையுமுடையானொருவனை வைத்தற்கெண்ணினம் இதுதானையாவர்க்குமியைந்ததுநின் கருத்தென்னை எனச் சூளுறவோடுசொல்லுவித்தல். (வள். ௫0௪. பரி.)

அறவுளி—நோயாளி ஆரோக்கியம் அடையும்படி செபிக்கு மந்திரம். 2. முடியுமிடம், அறுமிடம், தீருமிடம்.

அறவூதல்—புடமிடல்.

அறவை—உதவியற்றது-வன்-வள்.

அறவைச்சோறு— அநாதருணவுக்காகிய அன்னம். (பிங்க. ௩0௧.)

அறவைத்தல்—புடமிடுசெல். (உ-ம்.) "வெள்ளியறவைத்தனைய நிறத்தர்" (கூர்மபு. நவகண்.௪.) "அறவைத்தோங்கும்-பொன்னிறதர்" (ஷை. ௫.) [அற- களிம்பற.]

அறவைத்தூரியம்— அநாதர்அணியற்காகிய புடவை. (பிங்க. ௩0௧.) [அறவை; அநாதர்; தூரியம்- புடைவை.]

அறவைப்பிணஞ்சுடுதல்— அநாதப்பிரேதத்திற் கிமக்கடன் செய்தல். (பிங்க. ௩0௧.)

அறவையேன்— அநாதையேன். (உ-ம்.) "அறவையேன் மனமேகோயிலாக்கொண்டாண்டு" (திருவாச. பிடித். ௬.) [என்-ஒருதன்மைவிகுதி.]

அறவோர்—அறவர் பார்.

அறவோர்பள்ளி—1. அருகர்பள்ளி. (உ-ம்.) "அறவோர்பள்ளியுமறனோம்படையும்" (சிலப். இந்திர ௧௭௧.) 2. புத்தர்பள்ளி. (ஷை உ-ம் பார்.) [பள்ளி- வசிக்கும் இடம்.]

அறவோன்—1. அருகன். (உ-ம்.) "அறிவனறவோனறிவுவரம்பிகந்தோன்" (சிலப். நாடு. ௧௭௬.) [அறஞ்செய்தலேயே தொழிலாகவுடையோன் என்றபடி.] 2. தருமக்குணமுள்ளவன். 3. பிரமன். 4. பிராமணன். 5. புத்தன். (உ-ம்.) "போதி-யணிதிகழ்நீழலறவோன்" (சிலப். நாடு. ௬௨.)

அறனை—1. ஒருநோய். 2. மனமுதலிய கருவிகள் நன்னிலையற்றுப்பேதப்பட்டிருக்குந்தன்மை. (வழக்.)

அறன்—1. அறக்கடவுள். (உ-ம்.) "வழிநின்றறனேயருளாய்" (சிந்தா. கேம. ௩0௧.) 2. அறம். (உ-ம்.) "அறனெனப்பட்டதேயில்வாழ்க்கை" (வள். ௪௯.) [இங்கே மகரத்துக்கு னகரம்போலி.] 3. இயமன். (உ-ம்.) "அறனுல்வந்த-மைந்தன்" (பாரத.நச்சு.௩அ.)

அறன்கடை— பாவம். (உ-ம்.) "அறன்கடைநின்றாருளெல்லாம்" (வள்.௧௪௨.) [அறத்தினீக்கப்பட்டமையின் அறன்கடையென்றார்.]

அறன்மகன்— பஞ்சபாண்டவருள் ஒருவனாகிய தருமன்.(உ-ம்) "ஆர்வருமுரவித்திண்டோறறன் மகனநுசரான-நல்வரும்" (பாரத. இராய. ௬௬.) (அறன் -[இயமன்.]

அறனளித்துரைத்தல் — அறக்கிழவனையன்புசெய்தல். (தொல். பொரு. ௨௯0.)

அறனில்பால்— தீவினை. (ஐங்குறு.)

அறனிலாளன் — தருமமில்லாமையையுடையவன். (ஐங்குறு.)

அறனோம்படை — தருமம்போதிக்கும் இடம். (உ-ம்.) "அறவோர்பள்ளியுமறனோம்படையும்" (சிலப். இந்திர. ௧௭௧.) [அறன் - தருமம். ஓம்பு - காத்தல். அடை - அடுத்தது.]

அறமை—1. கவிழ்தும்பைப்பூண்டு. 2. அறல் என்பதன் எதிர்மறைத்தொழிற்பெயர்.

அறவிலை — அளவுக்குமேற்பட்ட விலை. (உ-ம்.) "நடந்துகொள்ளுநர்க்கறுவிலைபகர்ந்தநானமாடமிடைந்தவீதியுங்சுவலையுருடுக்கருமிடைநது" (திருவிளை. விறகு. ௧௭.)

அறவிலைக்காலம்—கருப்புக்காலம்.

அறி—1-3. அறியென்னேவலுந் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். 4. அறிவு. (உ-ம்.) "அறிகொன்றறியானெனினும்" (வள். ௬௩அ.) [இதுமுதனிலைத் தொழிற்பெயர்.]

அறிக்கை—1. அறியும்படி பண்ணப்பட்ட காவற்செயலாகிய சட்டப்பாடு. (வழக்.) 2. அறிவித்தல். (உ-ம்.) "தானறவுயர்ந்ததன் பந்தனை நினைக்கறிக்கைசெய்ய" (வேதாரணியபு. மணவாள. ௩௩.)

அறிக்கைப்பத்திரம்—1. காவற்செயலாகிய கட்டுப்பாட்டை அறிவிக்கும்பத்திரம்.(வழக்.)

2. விசேடகாரியங்களை யறிவிக்கும்படி எழுதப்படும்பத்திரம். 3. வேள்வித்துணையினர், புரோகிதர், ஆசாரியர் முதலான தக்கோர்களுக்கரசர் அமைப்பிதுவென்று காரியங்களை அறிவித்தற்கெழுதப்படும் இலிகிதம். (மிருதிசங். ௩.௧.)

அறிக்கைப்பத்திரிகை— அறிக்கைப்பத்திரம்.

அறிக்கையிடல்—அறியப்பண்ணுதல்.

அறிகருவி—1. அறிதற்கருவியாகிய ஞானேந்திரிய முதலியன. (உ-ம்.) "அறிகருவியணையா" (சிவப்பிர. ௨: ௧௫.) 2. சுத்ததத்துவம். (ஷை உரை. சிதம்பர)

அறிகிலாதார் —அறியவன்மையில்லாதார். (உ-ம்.) "செய்வதொன்றறிகிலாதார்" (பெரியபு. திருஞான. ௭௧௨.)[கில்- ஆற்றலையுணர்த்தும் ஓர் இடைநிலை.]

அறிகுதல்—அறிதல். (உ-ம்.) "மாயனுமெனைத்தானறிகுதல்" (பாகவத. உபதேச. ௭௨.) [கு - ஒருசாரியை.]

அறிகுறி— ஒன்றனை யறிவிக்கும் பொருட்டமைக்கப்பட்ட அடையாளம். (உ-ம்.)"திங்கண்மாட்டறிகுறியொன்றுசெய்துவைத்தனரால்" (காஞ்சிபு. ௩௧௭. அ௫.) ["ஓஒதல் வேண்டும்"இதன்கண் ஓகாரம் அளபெடுத்தமையை அறிவித்தற்கு, ஒகரம் அறிகுறி.]

அறிகை —அறிதல்.

அறிஞர்—1. அறிவுடையோர். (உ-ம்.) "அறிஞர் சூழ்விலைக்-கோல்வளைமகளிர்பாற் கூட்டமொத்ததே" (கந்தபு. நாட்டு. ௪.) 2. புலவர். (உ-ம்.) "ஆனசொற்றமிழ்வல்ல வறிஞர்முன்" (கந்தபு. அவையட. ௭.) 3. முனிவர். (சூ. நிகண். ௨: ௨.)[அறி; ஞ்-ஓர் இடைநிலை. அர்- ஒருவிகுதி.]

அறிஞன்—1. அறிவுள்ளோன். (உ-ம்.)"அன்னகாலையில்வீரவாகுப்பெயரறிஞன்" (கந்தபு. வச்சிரவா. ௬௧.)2. புத்தன். 3. புதன்.(சூ. நிகண். ௧: ௬௧.) 4. புலவன். 5. முனிவன்.

அறிதல்—உணர்தல். (உ-ம்.)"வல்லறிதல் வேந்தன்றொழில்" (வள். ௫௮௨.)

அறிதுயில்—அறிவு குன்றாது செய்யும் நித்திரை, யோகநித்திரை. (உ-ம்.) "அணிகிளரரவினறிதுயிலமர்ந்த-மணிவண்ணன்"(சிலப். நாடு. ௬.)

அறிதுயிலமர்ந்தமூர்த்தி— விட்டுணு. (சூ. நிகண். ௧: ௧௪.)

அறிநன்—அறியவல்லன். (உ-ம்.) "கோடியர் தலைவ கொண்டதறிந"(பொருநா. ௫௭.) [அறி; ந்-ஓர் இடைநிலை. அன் - விகுதி.]

அறிப்பலம்— திப்பலி.

அறிப்பு— அறிவிப்பு. (உ-ம்.) "நினைந்தவர் சிந்தையு-ளறிப்புறு மமுதாயவன்" (தேவார. திருவேகம்பம். திருக்குறுந்தொகை. ௪. திருநாவு.)

அறிபொருள்வினா—தன்னால் அறியப்பட்ட பொருளையே அறிவொப்புக்காண்டல் முதலியபயன்நோக்கி ஒருவன் வினவுவது.(தொல். சொல், கிளவி. ௧௩. சேனா.)

அறிமடம்— தான்கூறுவது அறியும் அறிவில்லார்மாட்டுத் தான் அறிந்தும் அறியாதான்போன்றிருத்தல். (சூ. நிகண். அ: ௫௦.)

அறிமுகம்—முன்கண்டறிந்தமுகம்.(உ-ம்.) "அறிமுகம்பிறகாண்கிலே னடுத்தவூரறியேன்" (சேதுபு. விதூம ௧௧.)

அறியல்— அறிதல். (சி. சி. அளவை. ௫. சிவஞா )

அறியலுறவு—அறிய விரும்பியது.(தொல். சொல், ௧௩. சேனா.)

அறியாதுடம்படல் — தந்திரயுத்திகளுள் ஒன்று; அது: தான் ஓதிய இலக்கணத்தின் வேறுபட வருவன தான் அறிந்திலனாகக்கூறி அதன் புறத்துச் செய்வதோர் புறனடை' "கிளந்தவல்லவேறுபிறதோன்றினுங் - கிளந்தவற்றியலா னுணர்ந்தனர்கொளலே"என்பது போல்வது. (தொல். பொரு. ௬௬௬.)

அறியாமை —1. அறியாததன்மை.(உ-ம்.) " அறிவினிற்சிறியநீராமறிந்தறியாமையானும்"(தணிகை. வீராட். ௧௦௪.)2. ஆணவமலம். (உ-ம்.)"அறியாமையிற்கட்டுணலுற்றதென்னுண்மை" (வைராக். சதக. தோத்தி. ௪௩.) 3. ஆன்மா ஆணவமலத்தான்மறைப்புண்டு மயக்கமுற்றிருக்குங்கேவலாவத்தை.(உ-ம்.) "அறியாமையறிவகற்றி " ( சி. சி. அ: ௩௦. மறை.) கருவிகள் எல்லாம் நீங்கி யொன்றும் அறியாமற் கிடக்கிற அதீதாவத்தை. ( ஷை நிரம்ப.)

அறியாவறிவு— அறிதற்கரிதாய அறிவு. (உ-ம்.) "நானொன்றறியா-வறிவை-யறிந்து" (ஒழிவி. துறவு. ௨௩.)

அறியாவினா— தான் அறியாததொன்றை யறிதற்கு வினாவும் வினா. ( இலக்கணவிள. ௩௦௫.)

அறியுநர்—அறிகிறவர்கள். (உ-ம்.)"அறியுநராவிபோ[illegible] 'ங்கனைங்களையும்" (சித்தா. ௧௩௧. ௧௬.) [illegible]றி; உ - ஒரு சாரியை. ந் - ஓர் இடைநிலை. அர் - ஒருவிகுதி.]

அறிவர்—1. [illegible]றிவார் எனப்பொருள்படும் ஒருமுற்றுவினை. 2. கம்மாளர். (திவாகா. ௨.)

3. நல்ல அறிவுடையோர். (உ-ம்.) "அறிவர் தேர்குறின்" (கந்தபு. மார்க்கண். உ௯௧.)

அறிவர்சிறப்பு—இறைவர் பூசனை. (உ-ம்.) "நற்றுநஞ்சிலநடுங்காத்தவமறிவர்சிறப்பிர்நான்கும்" (சிந்தா. கேமச. ௪௩௪.) [அறிவர்-இறைவர். சிறப்பு- பூசை.]

அறிவரன்— அருகன். (உ-ம்.) "அறிவரனீயன்றே" (சிந்தா. பதுமை. ௮௧.) [அறிவுக்குவரன் என்றபடி.]

அறிவழி–1. கள்ளு. 2. பிசாசம். [அறிவு; அழி- அழிப்பது.]

அறிவறை—1. அறிவற்றவன்-வள்-து. 2. அறிவற்றதன்மை. [அறை - அறு. ஐ-ஒருவிகுதி.]

அறிவன்—1. அருகன். (உ-ம்.) "அறிவனறவோன்"(சிலப். நாடு. ௧௭௬.) 2. அறிவுடையோன். (உ-ம்.) "அந்தமிலறிவனைவணங்கி" (இராமா. மந்திர. ௬௨.) 3. உத்திரட்டாதி. (வீமேசுர. ௧௧. உரை.) 4. கடவுள். (உ-ம்.) "அநாதியேயமலனயவறிவன்" (சி. சி. அளவை. ௪௩. மறை.) [எல்லாம் அறிகிறவன் என்றபடி.] 5. கம்மாளன். 6. சிவன். (உ-ம்.) "அறிவனேயமுதே"(திருவாச. திருச்சதகம். ௰.) 7. செவ்வாய்.(பிங்க. உ௩௰.)8. புத்தன். 9. புதன். 10. விட்டுணு. 11. வியாழகுரு. (உ-ம்.) "அல்லலுற்றறிவன்றன்னைத்தேடுவானுவினனே" (திருவிளை. இந்திர. ௯.)

அறிவனாள்—உத்திரட்டாதி. (திவாகர.)

அறிவாகரன்— அதிகக்கல்வியுடையவன். [அறிவு; ஆகரம்- இருக்கை.]

அறிவாளர்—1. அறிவுடையோர். (உ-ம்.) "செஞ்சொலறிவாளர்" (இராமா. நாகபா. உ௬௩.) [ஆளர் - உடையவர்.]

அறிவாளி—அறிவுடையவன்-வள்.

அறிவித்தல்—1. அறியச்செய்தல். (உ-ம்.) "அத்தகுகடவுடன்னையறிவிக்குங்குரவன்யாவன்" (சூத. முத்தி. ௪: உ௰.) 2. பிரசித்தஞ்செய்தல்: [வி- ஒரு பிறவினைவிகுதி.]

அறிவிப்பு—அறிவித்தல், பிரசித்தஞ் செதல்.

அறிவிலார்—1. அறிவில்லாதவர். 2. புல்லறிவாளர். (உ-ம்.)"அறிவிலார்தாந்தம்மைப் பீழிக்கும் பீழை" (வள். ௮௪௩.)

அறிவிலி— 1. அறிவில்லாதவன். (உ-ம்.) " ஆதியாதலினறிவிலியடங்குதியென்றான் " (இராமா. மந்தரை. ௬௭.) 2. அறிவில்லாதவன். (உ-ம்.) "அறிவிலியுடனே" (பாகவ. சிந்து. உ௬.) [அறிவு-இல்-இ.]

அறிவிற்பரிந்தான்—தோழன். (உ-ம்.)"அறிவிற்பரிந்தானகத்திடுனும் " (சிவதரு. பாவ. ௩௩.)

அறிவினு— அறுவகை வினுக்களுள் ஒன்று; அஃது; ஒருவன் தான் அறிந்தபொருளைக்குறித்து வினவுதல்; ஆசிரியன் மாணுக்கனிடம் வினுவுவதுபோல்வது. (நன். பொதுவி. ௩௪. உரை.)

அறிவீநம்—அறிவுக்குறைவு. [ஹீநம் - குறைவு.]

அறிவீநன்— அறிவுக்குறைவுடையோன்.

அறிவு— 1. அறிதல். (உ-ம்.) "அறிவுறும் பொருளோவீசன்" (சி. சி. ௬: ௧.) 2. அறிதற்கருவியாகிய இந்திரியம். (உ-ம்.) "அறிவுடல்சிந்தையான்மா" (சி. சி. ௪: உ௧. ஞாநப்; மறை.)[மேற்கூறிய செய்யுளில், அறிவு என்பது விஞ்ஞானாநந்தமயகோசமாகிய காரணசரீரம் என்பர் சிவாக்கிரயோகியர்.] 3. அறியவேண்டியது. (உ-ம்.) "அறிவறிந்தமக்கட்பேறு" (வள். ௬௧.) 4. இயல்பாகிய அறிவோடுகூடிய கல்வியறிவு. (உ-ம்.) "தம்மிற்றம்மக்களறிவுடைமை" (வள். ௬௮.) 5.ஞானசத்தி. (உ-ம்.) "ஈசனருளிசைவயறிவியற்றல்" (சி. சி. பாயிர. உ.) 6. புத்தி. (உ-ம்.) "எதிரதாக்காக்குமறிவினர்க்கு" (வள். ௪௨௯.)

அறிவுகொளுத்தல்— போதித்தல். [கொளுத்தல் - கொள்ளச்செய்தல்.]

அறிவுசூடு– நினைத்திருக்கத்தக்கதாகச்செயயுஞ்செயல். [சூடு - சுடுதல்.]

அறிவுடைமை— உண்மையறிவுடையனுகுதல். (வள். அதி. ௪௩.)

அறிவுணர்த்தல்—அறிவுறுத்தல்.

அறிவுமடம்— தான்கூறுகின்றவற்றையுணரும் அறிவில்லார்மாட்டுத்தானும் அறியாதான்போன்றிருத்தல். (உ-ம்.) "அறிவுமடம்படுதலுமறிவுநன்குடைமையும்" (சிறுபா. ௧௬.)

அறிவுவரம்பிகந்தோன் — 1. அருகன். (உ-ம்.) "அறவோனறிவுவரம்பிகந்தோன்" (சிலப். நாடு. ௧௭௬.) 2. வரம்புகடந்த அறிவினையுடையோன்.

அறிவுறல்— அறிவுறுத்தல். (உ-ம்.) "நாமறிவுருவிற்பழியுமுண்டோ" (குறிஞ்சிப். உஉ.) [அறிவுறு; அல்.]

அறிவுறுத்தல்—அறிவித்தல்.(உ-ம்.)"சான்றீருமக்கொன்றறிவுறுப்பென்" (கலித்தொகை. ௧௩௧.) [உறுத்தல் - உறச்செய்தல்.]

அறிவோப்புக்காண்டல்— தானறிந்ததற்குப்பிறனறிந்ததொத்திருக்கிறதோ என்றறியுமாறு வினவுதல்.

அறு— 1-3. அறு என்னேவலுந்தெரிநிலை வினைப்பகுதியும் வினைத்தொகையும். 4. ஆறு என்னும் எண்ணுப்பெயரின் விகாரமாய்ப்பிறிதொரு பெயர்ச்சொல் தொடரவருவது. (உ-ம்.) "அறுமுகமுடையவோர் மலன்மாக்கதை" (கந்தபு. அவையட. க.)

அறுக்கை— அறுத்தல்.

அறுகரிசி— அக்கதை, விவாககாலத்திலே நாயகனுக்கும் நாயகிக்கும் சாத்தும் அறுகம்புல்லோடு கூடிய அரிசி. (உ-ம்.) "சென்னி திருத்தமுறுமறுகரிசியிட்டு" (திருவானை. கோச். கூ௯.)

அறுகழி— நீரற்றகழி. (ஐங்குறு.)

அறுகால்— 1. அறுகிறபொழுது, இல்லாதபோது. (உ-ம்.) "அரிக்கிணைகிசையவூதுங்குழவிசையறுகால்" (அருணசலபு. திருக்கண். ௪௫.) 2. தேனீ. 3. வண்டு. (உ-ம்.) "அறுகாற்பேடிசைபாடும்" (திருவிளை. பாயிர. ௩௦.)

அறுகீரை— அறைக்கீரை. (உ-ம்.) "சேம்பறுகீரை" (நைதல. பாயிர. ௩௮.)

அறுகு— 1. ஆண்புலி. 2. ஆளிவிதையரைத்துப்பிழிந்தரசம். (இராசவைத்.) 3. ஒரு புல்லு. (உ-ம்.) "அறுகுநிம்பமடிசிலரிசநம்" (கந்தபு. திருக்கல். ௩௫.) 4. சிங்கம். (உ-ம்.) "வாயிலறுகுசூழ்கிரைதெற்றியிவ்விடந்தொறும்" (திருவிளை. எல்லாம்வ. ௭.) 5. யானை. 6. யாளியாளி. (உ-ம்.) "அறுகுமாமுகத்தண்ணல்" (கந்தபு. யாளிமுக. ௩௮.)

அறுகுணன்— கடவுள். [ஆறுகுணங்களுள்ளவன் என்றபடி. அவ்வாறு குணங்கள்: ஐசுவரியம், வீரியம், புகழ், திரு, ஞானம், வைராக்கியம் என்பன. இவ்வாறுகுணங்கட்கும் பகம் என்னும் பெயருண்மையாற் பகவனென்பர். (வள். க: க. குறிப்புரை.)

அறுகுநாராசு— சிறுநாராசு.

அறுதுறை— கவந்தம். (உ-ம்.) ஆடினவறுகுறையலகைகளுடனின்று" (பாரத. நிவாத. ௧௪௧.) [தலையற்ற உடல் என்றபடி.]

அறுகை— 1. அறுகம்புல். (உ-ம்.) "அறுகையுநெரிஞ்சியுமடர்ந்து" (மணிமே. ௧௨-காதை. ௯௦.) 2. அறுதல். 3. ஒரு குறுநிலமன்னன். (பதிற்றுப்பத்.)

அறுகோணம்— ஆறுகோணப்பட்டவடிவம். (உ-ம்.) "தண்பிறைமூன்றுகோணந்தகுமறுகோணம் வட்டம்" (சி. சி. உ: ௬௭.)

அறுசமயத்தோர்க்குண்டி— முப்பத்திரண்டு தருமங்களுள் ஒன்று; அது: சைவத்துள்ள ஆறு சமயத்தோர்க்கும் அன்னங்கொடுத்தல். (பிங்கல. ௪௦௬.)

அறுசமயம்— அறுவகைச்சமயசமூகம்.

அறுசாம்— இனிய ஓசை தரும் யாழ்.

அறுசீர்க்கழிநெடிலடி— ஆறுசீர்கொண்ட கழிநெடிலடி.

அறுசுவை— ஆறுசுவை; அவை: கைப்பு, தித்திப்பு, புளிப்பு, கார்ப்பு, உவர்ப்பு, துவர்ப்பு என்பன. (உ-ம்.) "அறுசுவையுண்டி யமர்ந்தில்லாளூட்ட" (நாலடி. செல்வநிலையாமை. க.)

அறுத்தல்— 1. அரிதல். (உ-ம்.) "வாளினைறுத்து" (நைட. நாட்டு. ௪௦. உரை.) 2. அழித்தல். (உ-ம்.) "அரக்கர்கோனை வேரொடு மறுத்தவாறும்" (கூர்மபு. அநுக்கி. ௩௦.) 3. அறுத்துச்செய்தல். (உ-ம்.) "செங்கலறுத்தான" 4. இல்லாமற்செய்தல். (உ-ம்.) "அல்லலறுத்தாநந்தமாக்கியதே" (திருவாச. க.) 5. தீர்மானித்தல். (உ-ம்.) "இதனையெய்துவாமெனவுளத்தினறுத்தவர்போல்" (தணிகை. நாட்டு. ௧௨௬.) 6. நாணையறுத்தான் என்பதிற்போலச் சிறிதும் இழவாமன்முதலையாயினுஞ் சினையையாயினும் இருகூறு செய்து வேறுபடுத்தல். (தொல். சொல். ௭௨. சேனா.) 7. வளைதோண்டல். 8. வெட்டுதல். (உ-ம்.) "மாமுகக்களோராயிரந்தன்னையுமறுத்துவட்டியே" (கந்தபு. யாளிமு. ௩௩.)

அறுதல்— 1. அறுந்தது. (உ-ம்.) "அறுதற்கயிறு" 2. இல்லாமற்போதல். (உ-ம்.) "அல்லலோடருவினை யறுதலாண்மையே" (தேவா. திருவெண்காடு. ௧௧. திருஞா.) 3. ஒன்றுக்குங்கூடாதவன், ஒன்றுக்கும் உதவாதவன். 4. கைம்பெண். 5. நால் கயிறுமுதலியன இருகூறுதல். (உ-ம்.) "கோடுபோதசாபநாணறுகுமிலவோதை" (இரகு. யாகப். ௮௭.) 6. பிரயோசனமிலதாதல். (உ-ம்.) "உறினட்டறினொரூஉமொப்பில்லார்" (வள். ௮௧௨.)

அறுதலி— அமங்கலி. (உ-ம்.) "அறுதலிமகனுக் கங்கமெலாஞ்சேட்டை" (வழக்.) [மங்கலியம் அற்றவள் என்றபடி.]

அறுதி— 1. இல்லாமை. 2. முடிவு. (உ-ம்.) "அறுதியாகவின்றருஞ்சமர் முடித்துமென்று" (பாரத. பதினெட். ௪௬.) 3. சொந்தம். (உ-ம்.) "செறிதிரைப்பாற்கடல்வயிறுநொந்தீன்றசெம்மகள்கரியோற்கறுதிபோக" (கல்லாட. ௧௮.) 4. தீர்ப்புவிலை. 5. நாசம். (உ-ம்.)

"அறுதியிலானே" (சி. சி. கஉ-ருகு. சிவாக்.) 6. நிச்சயித்தல். (உ-ம்.) "மேவுகதையார்சிற்சத்திவிரிவேயுலகென்றறுதிவரும்" (ஞானவா. அயிர். உ.) 7. நீக்கம். (உ-ம்.) "அறுதியிலாத்துயர்க்கடலின்" (சாஞ்சிபு. பன்னிரு. உரு.) 8. வரையறை. (உ-ம்.) "காமென்னுநின்புதல்வருக்கறுதிசெய்காலமோகழிந்தன்று" (பாரத. உலூக. கக.) 9. விக்கிரயச்சீட்டு.

அறுதிச்சாதநம்— அறுதியுறுதி. [அறுதி; சாதநம்- கருவி.]

அறுதிச்சொல்— உறுதியாகச்சொல்லுகிற சொல்.

அறுதியிடல்—1. காலங்குறித்தல். 2. நிச்சயித்தல். (உ-ம்.) "புசிக்கத்தக்கவிடயங்களையறுதியிட்டுப்புசிப்பதுஞ்செய்து" (சி. சி. உ: ௫அ. நிரம்ப.)

அறுதியுறுதி— ஒருவன் தன்பொருளைவேறொருவனுக்கு விலைக்குக் கொடுத்தலையெழுத்தில் அமைக்கும் பத்திரம்.

அறுதொழில்— அறுவகையான தொழில்; அவை: ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல், அந்தணர் அறுதொழிலென்றும்; ஓதல், வேட்டல், ஈதல், உலகோம்பல், படைபயிறல், பொருநீட்டல், அரசாறுதொழில் என்றும்; ஓதல், வேட்டல், பொருளீட்டல், ஈதல், பசுக்காத்தல், ஏருழல், வைசியர் அறுதொழில் என்றும்; முதன்மூவர்க் கேவல்செய்தல், பொருளீட்டல், உழுதல், பசுக்காத்தல், குயிலுவத்தொழில் செய்தல், காருக வினைகளாக்கல், சூத்திரர் அறுதொழில் என்றுஞ், சொல்லப்படும். இவற்றுட் குயிலுவத்தொழில்களாவன: தோற்கருவிகளைக்கொட்டலுந் துளைக்கருவிகளையூதலுமாம். காருகவினைகளாவன. பட்டுநூலையும் பருத்திநூலையுங்கொண்டு ஆடையாக்கலுஞ் சுமத்தலும் உழத்தலுமாம். [உழவு, சிற்பம், தொழில், வரைவு, வாணிகம், வித்தை என்னும் இவ்வாறனையுஞ் சாதாரணமாக அறுதொழில் என்பர்.]

அறுதொழிலோர்— முற்கூறிய ஆறுதொழிலுடையோராகிய பிராமணர். (உ-ம்.) "ஆபயன்குன்றுமறுதொழிலோர்நூன்மறப்பர்" (வள். ௫௬௦.)

அறுந்தருவாய்— உற்றசமயம், தருவாய். [தெலுங்குச்சொல்.]

அறுந்தொகை—(கணக்கதிகாரம்) சேடமின்றிப்பிரிக்கப்படும் எண். "௧௫" ஆகிய எண் ஐந்தாற்பிரிக்க அறுந்தொகையாகும்.

அறுப்பு—1. அரிவியறுத்தல். (உ-ம்.) "அறுப்புக்காலம்" (வழக்.) 2. அறுத்ததுண்டு. 3. அறுத்தல். (உ-ம்.) "அச்சமார்தலையறுப்புண்டான்" (சி. சி. பர. பாஞ்ச. மறு. ரு.) 4. ஆட்சேபிக்கை. 5. தாலியறுத்தல். 6. மாமுதலியவற்றின் அறுவாய்.

அறுப்புக்காலம்— அரிவிவெட்டுங்காலம்.

அறுபகை— ஆறுவகையான உட்பகைகள்; அவை: காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாற்சரியம் என்பன. (உ-ம்.) "ஐம்புலன்களையடக்கிநின்றறுபகைதுறந்து" (காஞ்சிபு. திருமேற். ௬.)

அறுபதம்— 1. ஆறுகால். (உ-ம்.) "அறுபதவண்டினமார்ப்பத்தாமரை" (சிந்தா. நாமக. ௬௭.) 2. கையாந்தகரைப்பூண்டு.3. வண்டு. (உ-ம்.) "அஞ்சிறையறுபதமளகவோளிய" (இராமா. கார்கா. ௧௧௧)

அறுபது— ஓரெண்.

அறுபருவம் — ஆறுபருவங்கள்; அவை: கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் என்பன. (சூ. நிகண். ௪: ௮௭.)

அறுபான்— அறுபது. (உ-ம்) "ஓரறுபானேற்றவழுவிலாத்திரேதை" (பாகவத. உ.) [ஆன் - ஒரு சாரியை. பத்து என்பதில், பவ்வொற்றொழியமேலெல்லாம் ஓடின.]

அறுபுள்ளிவண்டு—ஒருவகைவண்டு. இது கடித்தாற்சர்வாங்கத்திலுஞ் சிலநாட்சென்றபின்பு வட்டம் வட்டமான தடிப்புக்களுண்டாகும் என்பர். (சீவரட். ருகுச.)

அறுபொருள்— ஐயமற்றபொருள். (சிலப்.)

அறும்பன்— கொடியன்.

அறும்பு— 1. கொடுமை. 2. பஞ்சகாலம்.

அறுமனை— 1. அரிவாண்மனை. [அறு; மனை - பலகை.] 2. ஊத்தைநாறிப்பூண்டு. 3. சீர்கேடி. [மண்ணுதல் அற்றவள் என்றபடி.]

அறுமர்— எண்ணெய்வாணிகர்.

அறுமீன் — 1. கார்த்திகை நக்ஷத்திரம். [ஆறு நக்ஷத்திரக்கூட்டம் என்றபடி.] 2. கார்த்திகைமாதர். (உ-ம்.) "அறுமீன்முலையுண்டமுதவிளையாடி" (கந்தர்கலி. ௮௪.)

அறுமுகன்—கந்தசுவாமி. (உ-ம்.) "அறுமுகன்றனையணங்கினையவையுளோரெவரும்" (கந்தபு. தெய்வ. உ௫௭.) [அறு - ஆறு என்பதன் விகாரம். முகன்-முகமுள்ளவன்.]

அறுவகைப்படை— மூலப்படை, கூலிப்படை, நாட்டுப்படை, காட்டுப்படை, துணை

பபடை, பகைப்படை என்னும் ஆறுவிதப் படை. (உ-ம்.) "உறவின் மிக்கவர்பகை யினெய்:த்தவருதவுமப் படைகுடைகிழற் - செறிதலத்தினில் வளர்நகர்ப்படைதிரள்வன ப்படைபொருணிலைத்-தறுகண்மெய்ப்படை யுறுதியிற்பொரு தமதகப்படையெனவிரா - யறுவகைப்படைகளும் வகுத்தனவணிகளுட் கினபணிகளே" (பாரத. அணிவகு. கஉ.)

அறுவகைப்புறச்சமயம்— உலோகாயதம், பௌத்தம், ஆருகதம், மீமாஞ்சம், பாட்டா சாரியம், பாஞ்சராத்திரம் எனச் சைவத்துக் குப் புறமான சமயங்கள் ஆறு. (சி. சி. பாயிர. க. மறை; பிங்க. ௬௦௭.)

அறுவகைப்போகபூமி— ஆதியரிவஞ்சம், நல்லரிவஞ்சம், ஏமதவஞ்சம், இரணவஞ்சம், தேவகுருவம், உத்தரகுருவம் என்னும் ஆறு வகைப்போகபூமிகள். (கூர்மபு - வருணச். உசு.) இவை, இராசதகுணத்தினின்றோர் அடையும் மத்திமகதியின்பாற்பட்டன என் பர்.]

அறுவகையுட்சமயம் — சைவம், பாசுபதம், மகாவிரதம், காளாமுகம், வாமம், வைரவம் எனச்சைவத்துக்கு உட்பட்ட சமயங்கள் ஆறு. (சி. சி. பாயிர. க. மறை; பிங்க. ௬௦௮.)

அறுவகைவழக்கு—(பௌத்தம்)தொகையுண்மைவழக்கு, தொகையின்மை வழக்கு, தொடர்ச்சியுண்மை வழக்கு, தொடர்ச்சியின்மைவழக்கு, மிகுத்துரையுண்மைவழக்கு, மிகுத்துரையின்மை வழக்கு எனப்படும் ஆறுவகை வழக்குகள்; இது "சொற்றருந்தொகைதொடர்ச்சி மிகுத்துரையென்று மூன் று- யுற்றிடும்வழக்கிரண்டுமொன்றுமூன்றுகி யாறுய" என்னும் (சி. சி. பர. சௌத். மதம். கூ-ஞ்செய்யுளாற்பெறப்படும். வேறுமொருவகையாய்; உள்வழக்கு, இல்வழக்கு, உள்ளதுசார்ந்த உள்வழக்கு, உள்ளது சார்ந்த இல்வழக்கு,இன்மைசார்ந்த உள்வழக்கு,இன்மைசார்ந்த இல்வழக்கு என ஆறுவழக்குள்ளன. "உள்வழக்கில் வழக்குள்ளதுசார்ந்தவுள்வழக்கோ - டுள்ளது சார்ந்தவின்மை வழக்குடனின்மைசார்ந்த- வுள்வழக்கின்மைசார்ந்தவில்வழக்கென்றோராறும்" (சிசி.பர. சௌத். மதம். ௪௦.)

அறுவடை— நென்முதலியன அறுத்தல். [வழக்கு.]

அறுவரி— குறித்தகாலத்திற்கொடுக்கவேண்டிய வரி.

அறுவாய்— 1. இறுமிடம். 2. கத்திமுதலியவைகளால் அறுக்கப்பட்ட இடம். 3. கார்த்திகைநக்ஷத்திரம். (உ-ம்.) "அறுவாய்நிறைந்த மதிப்புறத்தோவென" (கல்லாட. கூ.) [அறு; வாய் - இடம்.]

அறுவிதி— தீர்ப்பு.

அறுவு— அறுதி. (உ-ம்.) "கொன்னுமிக்கவ்வன்றன்னைக் கொண்டுபோய்த் தண்டஞ்செய்தெம்-பொன்னெலாமறுவுகொண்டு வாங்குமின் போமினென்றான்" (திருவிளை. நரிபரி. சு.)

அறுவை— 1. சித்திரைநக்ஷத்திரம். (சூ. நிகண். க: ௭௩.) 2. வஸ்திரம். (உ-ம்.) "அறுவையொளித்தான்வடிவென்கோயாம்" (சிலப். ஆய்ச்சியர். ௩௬. பக்.) [அறுக்கப்படுதலின் வந்தபெயர்.]

அறுவையர்—1. ஆடையுடையவர். (உ-ம்.) "செங்கற்றோய்த்தவறுவையர்"(திருவிளை.நகர.அசு.) 2. சீலைநெய்வார்.(உ-ம்.) "கைவினைவண்ணவறிவையர்வளந்திகழ் மறுகும்" (மணிமே. உஅ. காதை. ௫௩.)

அறை— 1. அடி. 2. அடித்தல். (உ-ம்.) "அறையதின்மல்லனைவா யறைதிறந்தாவிபோனான்" (சேதுபு. வேதாள. ௬௪.) 3. அரங்கு, கூத்தாடுவதற்கு வகுத்த அறை. 4. அறுந்தது. 5-7. அறையென்னேவலுந்தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும்.(உ-ம்.) "வண்டறைகுழல்களெங்கும்" (பெரியபு. திருநாட். ௩௨.) 8. உத்தரம். (உ-ம்.) "சொல்லுவார்தமக்கறையோசொல்லொணாதே"(சி. சி. அ: ௧௬.) 9. எழுத்தோசை. 10. ஒலி. (உ-ம்.) "அறைபடுமாலைகளிடையிட்டாட்டலே" (கந்தபு. நாட்டு. ௩௧.) 11. கற்பாறை. (உ-ம்.) "அறையும்பொறையுமணந்த" (புறநா. ௧௧௮.) 12. குழி. (சிலப்.) 13. சிற்றில். (சூ. நிகண். ௧௧: ௪௦. நகர.) 14. சொல். (சூ. நிகண். ௧௧: ௪௦. றகர.) 15. சொல்லுதல். (உ-ம்.) "அறைபெற்றிடுமித்திறயான வெலாம்" (கந்தபு. காமத. ௧௧)16. தட்டல். 17. செயித்தற் கரிதென்று சொல்லுதல். (உ-ம்.) "பைம்பொற்பன்றி- யறையெனத்திரியுமாய் பொற்பூமியில்" (சிந்தா. மண். ௭௧.) 18. திரைசீலை. 19. தூக்கங்கள். 20. பாத்தி. (உ-ம்.) "குறையறைவாரா நிவப்பின்" (மலைபடு. ௧௧௮.) 21. மலையுச்சி. 22. மாளிகை. (உ-ம்.) "அலங்கல்வேலைவர்மாளவரக்கறையெரித்தல்கேளா" (கூர்மபு. கண்ணன்மண- ௧௧௧.) 23. முழைஞ்சு. (உ-ம்.) "அறைக்கண்டவழருவிக்கிரி" (மறைசைய. ௪௫.) 24. வகுக்கப்பட்ட இடம். (உ-ம்.) "அறைபடைத்திவணீண்டிய" (கந்தபு. நகர்பு. ௧௫.) 25. வஞ்

சனே.(உ-ம்.)"அருளாதறைகொண்டு"(கலித். கசங.) 26. வெட்டுதல். (உ-ம்.) "அறையுற் ருலேக்கலமரும்" (மலேபடு. கசஅ.) 27. பாசறை. (பதிற்றுப். உச.)

அறைக்கீரை— ஒருவகைக்கீரை. (உ-ம்.) "சொல்லுமறைக்கீரை" (மச்சபு. பிதிர்வமி. உச.)

அறைதுறை— 1. முடிவிற்குறைபாடு. 2. முடியாமை.

அறைகூவல்–1.பொரஅழைத்தல்.(உ-ம்.) "சஞ்சத்தகர்வந்தறைகூவ"(பாரத.பதின்மூ. அ.) 2. வலிந்தழைத்தல். (உ-ம்.) "அறைகூவியாட்கொண்டருளி" (திருவாசக. திருவண். கசஅ.)

அறைசெய்தல்— அறுத்துத் துண்டமாக்குதல். (உ-ம்.)"அறைசெய்கன்னல்" (இரகு. ௩௧. எ௨.)

அறைத்தொழிலார்— கீழறுக்குந்தொழிலுடையார். உ-ம்.) "அறைத்தொழிலார்க்குஞ் செல்வா" (சிந்தா. குணமா. உ௧௨.)

அறைதல்—1. அடித்தல். (உ-ம்.) "அவனறைந்தகற்றூணிடை வந்தாய்" (பாரத. கிருட். சங.) 2. ஒலித்தல். (உ-ம்.) "அறைகழல்வீரர்" (நைட. நாட். கங.) 3. சொல்லுதல். (உ-ம்.) "அன்றவணிகழ்ந்தபூசலாகுலமறைதற்பாற்றோ" (கந்தபு. மார்க்க. க௦௪.) 4. (ஆணி)கடாவல். (உ-ம்.) "நினைப்புடையிதயத்தாணி-யறைந்ததும்"(இரகு.இந்துமதி. அ௫.) 5. மோதல். (உ-ம்.) "முரசறையுமாக்கடல்காரெனவார்த்தன"(சிந்தா.மண்.௩௨எ.)

அறைநர்— அறுப்பவர். (உ-ம்.) "அறைநர் கரும்பித்தொண்ட தேனும்" (புறநா. சஉ.)

அறைப்படுத்தல்— கீழறுத்துத் திறப்பித்தல். (உ-ம்.) "அறைப்படுத்தும்பற்றறகரிய தாண்" (வள். ௪௯௭.)

அறைபோக்கு — 1. அற்றுப்போதல். (உ-ம்.) "கள்ளுண்டல்காமமென்பகருத்தறைபோக்குச்செய்வது" (திருவிளை. மாபா த. உக.)

அறைபோதல்–1.அற்றுப்போதல்.(உ-ம்.) "அறிவறைபோயினர்" (கந்தபு. அடிமுடி. இக.)2.ஓட்டைபோதல்.(மதுரைப்பதிற்றுப். கக.) 3. கீழறுத்தல், உள்ளேநின்று துணைச்செய்யும் உற்றவன்போலத் தன்னைக்காண்பித்துநின்று சதிசெய்தல். (உ-ம்.) "கீழ்ந்தறைபோகிய கினைஞராமென" (கந்தபு. மார்க்க. அக.) "அறைபோகமைச்சர்" (சிலப். இந்தி. ககஂ.)

அறைமாரி— மரப்பேழை. (தைல. பாயிர. கக. உரை.)

அறைமுறையிடல்— இல்லாமை சொல்லி முறையிடுதல்.

அறையல்–சொல்லல். (உ-ம்.) "அங்கதற்கதுவேயல்லாலறையலாம்படிமற்றுண்டோ" (கந்தபு. மாயைப். சஎ.)

அறையுண்ணல் — 1. அடிக்கப்படுதல். (உ-ம்.) "கையினாலறையுண்ணும்பந்துபோல" (ஞானவா. தாசூ. ௩௦.) 2. அறுக்கப்படுதல். (உ-ம்) "சோரிக்கணையாலறையுண்டு" (பாரத. சம்ப. ௫௦.)

அறைவித்தல்–பறையடிப்பித்தல்.(உ-ம்.) "செல்வன்றிருமுரசறைவிக்கின்றான்" (சிந்தா. பூமக. சஅ.)

அன்—1. உயர்திணையாண்பால் ஒருமைப் பெயரிலும் வினையிலும்வரும்விகுதி; அஃது: உடன்பாட்டுத் தெரிநிலைவினையில் வருங்கால். இறந்தகால இடைநிலைத் தகரத்தையாவது தகரத்திரிபாகிய டறக்களையாவது நிகழ்கால த்தில் வரும் ஆநின்று கின்று என்னும் இடைநிலைகளையாவது குற்றுக்களை யிறுதியிலுடையசில குறிவினைவினைப்பகுதிகளுள் விகாரப் பட்டுவர உகர மூர்ந்து நின்ற அவ்வொற்றுக்களை அன்சாரியை தொடர அதனையடுத் துப்பின் வருதலும், அவ்வினையாலணையும் பெயரில்வருங்கால் இறந்தகால நிகழ்கால இடைநிலைகளையும் முற்கூறிய விகாரப்பட்ட பகுதியையும் எதிர்காலத்தில்வரும் பகர இடைநிலையையுந் தொடர்ந்து அகரச்சாரியை வர அதனையடுத்து வகரஉடம்படுமெய்மை சார்ந்து பின்வருதலும் ஆகும். எங்ஙனம்? அவன் (பெயர்); வந்தனன், உண்டனன், சென்றனன், வாராநின்றனன், வருகின்றனன், புக்கனன், விட்டனன, உற்றனன், குழையன். (வினை) வந்தனன், உண்டவன், சென்றவன், வாராநின்றவன், வருகின்றவன், வருகிறவன், வருபவன், புககவன், விட்டவன், உற்றவன். (வினையாலணையும்பெயர்.) 2. தன்மையிடத்தில் ஒருமையில் வரும் ஒரு வினைவிகுதி; அது: உடன்பாட்டுத்தெரிநிலை வினையில் வருங்கால் மேற்சொல்லியவாறு இறந்தகால நிகழ்காலங்களில் அன்சாரியை தொடர அதனையடுத்துப்பின் வரும். எங்ஙனம்? நான்வந்தனன், நானுண்டனன், நான் சென்றனன், நான்வாராநின்றனன், நான்வருகின்றனன், நான்புக்கனன், நான்விட்டனன், நானுற்றனன், நான்வருவன், நானுண்

பன். 3. பெயர்வினைகளில்வரும்ஒருசாரியை. எங்ஙனம்? ஒன்றன்கூட்டம். (பெயர்.)படித்தனன். (வினை.) 4. விலங்கின் ஆணைக்குறிக்கும் அஃறிணை யொன்றன்பாலிலே வரும் ஒரு பெயர்ச்சொல்விகுதி. (உ-ம்.) "கடுவன் முதலியபெயர்களிற்காண்க".

**அன்பகம்**—
**அன்பகர்**— } சமுத்திரசோகிப்பூண்டு.

**அன்பன்**—1. கணவன். (உ-ம்.) "உயிரினன்பரைக்-கூடின ரழுதனர்" (இராமா. நகர் நீங். உகக.)2. அன்புடையவன். 3. தோழன்.

**அன்பு**—1. ஆசை. 2. தயை. 3. நேசம்.

**அன்புறல்**—நேசத்திலழுந்தல்.

**அன்புறுத்தல்**—நேசமுண்டாக்குதல்.

**அன்மை**—1. அல்லாமை. 2. தீமை.(உ-ம்.) "அன்மைகடியுந்தவவலியால்" (சேதுபு. முத்தீர். அ.)

**அன்மொழி**—1. அல்லாதமொழி. 2. அன்மொழித்தொகை. (உ-ம்.) "ஐந்தொகைமொழிமேற்பிறதொகலன்மொழி" (நன். பொதுவி. கஅ.)

**அன்மொழித்தொகை**— அறுவகைத்தொகைநிலைத் தொடர்மொழிகளுள் ஒன்று.

**அன்றி**—1. அல்லாமல்.(உ-ம்.)"ஆராயினீயன்றியாரே துணை யாவார்" (கந்தபு. சயந்தன்பு. சுஉ.) ["அன்றி" யென்னும் வினையெச்சம் செய்யுளில் "அன்று" எனத்திரிந்தும்வரும்; "நாளன்றுபோகிப்புள்ளிடைதட்ப" என்பதிற்போல. (நன். உயிரீ. உ௩. உரை.) அது என்னுஞ் சுட்டுப்பெயரைத்தொடர்ந்து வருங்கால் "ஆன்று" எனமுதல் நீண்டுவருதலும் ஆம்; "அதான்றம்ம வெண்பாவீறே" என்பதிற்போல. (நன். உயிரீ. ௩௦. இரா.) 2. மாறுபட்டு எனப்பொருள்படும் வினையெச்சம்.

**அன்றியனைத்தும்**—அவ்வனைத்தும். (உ-ம்.) "அன்றியனைத்தும் பெயர்ப்பயனிலையே" (தொல். சொல். சுக.) [அகரச்சுட்டு அன்றியென ஈறுதிரிந்துநின்றதென்பர்.ஷெசேனா.)

**அன்றில்**—1. ஒருபறவை. (உ-ம்.) "அன்றிலம்பெடைகளையணுகி" (கந்தபு. நாட்டு. ருக.) [இஃதாண் பெண் என்னும் இரண்டற்கும் பொதுவாய் நிற்றலன்றிச் சில இடங்களிற் பெண் அன்றிலையே விசேடமாகக் கருதியும் வரும். "உறைந்தன மகன்றிலுடனன்றிலுயிரொன்றி" (இராமா. கார். எக.) என்பதிற்போல. 2. ஒருமலை. (உ-ம்.) "அன்றிற்கற்பகவேலெறிவேடுணைவன்"(கல்வளை. உ.) [கிரௌஞ்சன் என்னும் ஓரவுணனே அகத்தியராற் சபிக்கப்பட்டு இம்மலையாயினன் என்னுங் கதைபற்றி வந்த பெயர். கிரௌஞ்சம் - அன்றில்.] 3. மூலநாள்.

**அன்றிற்றீவு**—கிரௌஞ்சத்தீவு. ( உ-ம். ) "அன்றிற்றீவினிலுறைபவரிவர்"(இராமா. படைக்கா. கஉ.) [அன்றில்; தீவு. கிரவுஞ்சம், அன்றிலெனப்பொருள்படுதல் பற்றிவந்த குறிப்புப்பெயர்.]

**அன்றினர்**—பகைவர். (உ-ம்.)"அன்றினர்க்காலமாயண்மினர்க் கமுதமாம்"(தணிகை. வீராட். ௧௦௧.)

**அன்று**—1. அந்நாள். (உ-ம்.) "மன்றங்கறங்கமணப்பறையாயின- அன்றவர்க்காங்கே பிணப்பறையாய். (நாலடி. யாக்கை. ௩.) 2. அநாதி. (உ-ம்.)"மூவகையாருயிர்வர்க்கமலத்தார் கன்மமூலமலத்தார்மூன்றுமுடையாரன்றே" (சிவப்பிர. அ.)3. அல்லாமல். (உ-ம்.) "நாளன்றுபோகிப்புள்ளிடைதட்ப" ( புறநா. கஉச.) [அன்றியென்னும்வினையெச்சத்திரிபு.] 4-6. அன்றென்னேவலுந் தெரிநிலை வினைப் பகுதியும் வினைத் தொகையும். 7. அஃறிணையொருமைப் படர்க்கையில் அன்மைப்பொருளில்வரும் ஒரு குறிப்புவினைமுற்று. (உ-ம்.) "திரவியமுவமையன்று" (சி. சி. உ. கக.) [ மற்றைத்திணைபாலிடங்களில் மயங்கிவருதலும் உண்டென்பாருமுளர்."யான்பிறனன்றே" ( கந்தபு. திக்கு. கஉ௩. ) என்பதில் தன்மையொருமைக் குறிப்புமுற்றும், அத்துவாமார்க்கத்துள்ளா னன்று" (சி. சி. க: சஉ.) என்பதில் உயர்திணையொருமைப் படர்க்கைக்குறிப்பு முற்றும் வந்தமைகாண்க. "அன்று" என்பது உயர்திணைப் படர்க்கையில் வாராதென்னுங் கருத்துடையராய் "அத்துவாமார்க்கத்துள்ளானன்று" என்பதை "அத்துவாமார்க்கத்துள்ளானலன்" எனத் திருத்திப்படாமோதுவாருமுளர்.] 8. ஓர் அசைச்சொல். (உ-ம்.) "அழுதெனப்பரந்தமையன்றே" (நைட. நாட்டு. ௫.) 9. கழிந்துபோனகாலம், பழையகாலம், முன்னொருநாள், முற்காலம். (உ-ம்.) "அமரர்க்கன்றெழு-நீலமெய்யுருவினைநீத்து" ( கந்தபு. காசிபன்புல. சஉ.) 10. முதுமைக்காலமாகியவருங்காலம். (உ-ம்.) "அன்றறிவாமென்னாதறஞ்செய்க" (வள். ௩௬.)

அன்றுதல்—மாறுபடுதல். (சி. சி. க: ௬௨. சிவஞா.)

அன்றெரிந்தான்—ஒருபூண்டு, சிறுபுள்ளடி.

அன்றே—1. "ஏ" என்னும் ஈற்றசையோடு கூடிவந்தஓர் அசைநிலையிடைச்சொல்" (உ-ம்.) "அழுதெனப்பரந்ததையன்றே" (நைட. நாட்டு. ௯.) 2. குறிப்போசையாற்பொருளுணர்த்தும் ஓர் இடைச்சொற்றொடர். (உ-ம்.) "அவனன்றே இது செய்வான்" இது தெளிவுப்பொருளும் பிறபொருளும் குறிப்பாலுணர்த்தும்.. (தொல். உ௮உ.)

அன்றை—அந்நாள். (உ-ம்.) "அன்றையமரினில்" (பாரத. ஆறும். உ௪.) [அன்று என்பது ஐகாரச்சாரியைபெற்றுநின்றது.]

அன்றைக்கன்று — அந்த அந் தநாளுக்கு. (உ-ம்.) "வருநாட்கு-மன்றைக்கன்றிருமடங்கா" (திருவிளை. மெய்க்கா. கஉ.)

அன்றோ—தெளிவுப் பொருளும் பிறபொருளும் உணர்த்தும் ஓர் இடைச்சொற்றொடர். (உ-ம்.) "வருபயன்கோடற்கன்றோமற்றவை வரைதல்செய்யார்" (கந்தபு. மார்க்க. ௩௮.) [அன்று என்பதனோடு ஓகாரங்கூடிநின்றது.]

அன்ன—1. அத்தன்மையன எனச்சுட்டுப்பொருளிற் பலவின்பாலில் வரும் ஒரு குறிப்புவினைப்பெயர். (உ-ம்.) "ஆண்டகைப்பிரான் மகிழ்ந்தன்னவாகவென்று" (காஞ்சிபு. குமா. ௬௩.)2. அத்தன்மையன எனச்சுட்டுப்பொருளிற் பலவின்பாலில் வரும் ஒருகுறிப்புவினை முற்று. (உ-ம்.) "பிறவுமன்ன" (தொல். எழு. உஎ.) 3. உவமைப்பொருளில் வரும் ஒருகுறிப்புவினைப்பெயரெச்சம்.(உ-ம்) "அரிமாவன்னவணங் குடைத்துப்பிற்-றிருமாவளவன்" (பட்டின. உ௯௮.) 4. ஒத்தன என உவமைப்பொருளிற் பலவின்பாலில்வரும் ஒருகுறிப்புவினைமுற்று. (உ-ம்.) "பாசிழைமடநதைபூண்ட பன்மணிக்கோவை யன்ன" (திருவிளை. நகா. எ௪.) 6. சுட்டுப்பொருளில் வரும் ஒரு குறிப்புவினைப்பெயரெச்சம். (உ-ம்.) "அன்னசாலதனிற்சிவமுநி" (கந்தபு. வள்ளி. உ௪௪.)

அன்னக்கொடி— அன்னந்தீட்டியகொடி.

அன்னக்கொடியோன்—பிரமன்.

அன்னக்கோப்பு— அன்னப்பறவைவடிவு சித்திரிக்கப்பட்ட மாதர்காதணியிலொன்று.

அன்னணம்—அந்தப்பிரகாரம். (உ-ம்.) "அன்னண மாசர்பேசியிருந்தபின்" (சூளா. கல். க௬எ.)

அன்னதாழை—அன்ஞசிச்செடி.

அன்னது— 1. அத்தன்மைத்தெனப்பொருள்படும் ஒரு குறிப்புவினைமுற்று. (உ-ம்.) "அன்னதெனினும்" (கந்தபு. திருவிளை. அஎ.)2. அது என்னுஞ் சுட்டுப்பொருட்டாய ஒரு பெயர். (உ-ம்.) "அன்னதுசெய்வனென்ஞ" (நல். பார. கந்தமா. உஎ.) 3. ஒத்தது. (உ-ம்.) "தாமரைக்கொட்டையன்னதாய்" (சிந்தா. கேமச. ௫உ.) 4. சுட்டுப்பொருளில் வரும் ஒரு குறிப்பு வினையாலணையும்பெயர். (உ-ம்.) "அன்னதோசொல்லை"(கந்தபு. மூவாயிரர்வதை. அஅ.)

அன்னபம்—ஆல்.

அன்னம்—1. ஒருபறவை.(உ-ம்.)"அன்னம்பயிலாதெதிராக" (நல். பார. நாட்டு. ௬.) 2. கவரிமா.

அன்னப்பெயர்மந்திரம்— (பிரபுலிங். விமலை. உ௫.) அசபாமந்திரம் பார்.

அன்னம்பாறல்—புலம்பல். (வழக்.)

அன்னவம்—கடல்.[ஞண—்வ: ஞண—்வஸ் - நீர். வ-ஒருவிகுதி.]

அன்னவன் —1. அவன், அத்தன்மையன். (உ-ம்.)"அன்னவன்புகழ்கேட்டலும்"(நைட. அன்னத்தைக்க. ௩.) 2. ஒத்தவன். (உ-ம்.) "அருங்கலக்கொடியன்னவனேகினன்" (சிந்தா. பதுமை. உ0எ.)

அன்னவூசல்—ஒருவகையூஞ்சல்.

அன்னவூர்தி— 1. அன்னவாகனம். 2. பிரமா. (உ-ம்.) "அன்னவூர்தியருஞ்சிறை நீக்கலன்" (கந்தபு. அயனைச்சிறைநீ. க௩.)

அன்னவை— 1. அவை, அத்தன்மைகள் (உ-ம்.)"அன்னவையொற்றர்களறிந்து" (கந்தபு. நகர்புகு. ௬உ.) 2. ஒப்பானவை.

அன்னன்— 1. அவன், அத்தன்மையன். (உ-ம்.) "அன்னனவ்விடத்தஞகவாசனுமமைந்து நோக்கி" (இரகு. யாகப். ௬௬.) 2. ஒத்தவன்.

அன்ஞசி—அன்னதாழை.

அன்ஞய்—1. அன்னையே. (விளி.) (உ-ம்.) "ஈன்றவடன்னிடங்குறுகி- யன்ஞயிதற்கேதுவையன்ன" (நல். பார. சர்ப்பயா. க0.) 2. ஒத்தவனே. (உ-ம்.) "ஆவியன்ஞய்கவலேல்"(திருக்கோ. ௩எ.)3. ஓர் அசைநிலை. (உ-ம்.) "அன்ஞய்பின்னநவத்தைதப்படும்" (சி. சி. பர. சௌத். மறு. அ.)

அன்னார்—1. அத்தன்மையா. 2. ஒத்தவர். 3. கல் நார்என்னும் ஒரு மருந்துச்சரக்கு.

அன்னான்—அன்னன்பார்.

அன்னியூர்— ஒருசிவஸ்தலம். (தேவார. அன்னியூர். க. திருஞான.)

அன்னுழி—அப்பொழுது. (உ-ம்.) "அன்னுழியிந்திரனாறுமுகேசன் - றன்னொருகையிடைதந்தியைநல்கி" (கந்தபு. தெய்வயா. ௨௬.) [அ; ன்-சாரியை. உழி-இடம்.]

அன்னே— 1. தாயே. (உ-ம்.) "உயிரெல்லா-மன்னேயெனவந்தளிக்குந்தகையாயோ" (கந்தபு. அசுரர்யா. ௨௧.)[அன்னையென்னும் பெயர்விளிவேற்றுமையில் ஐ கெட்டு ஏகாரம் பெற்றுவந்தது.]

அன்னை—1. அக்காள். 2. தாய். (உ-ம்.) "அன்னையும்பிதாவும் முன்னறிதெய்வம்" (கொன்றை. க.) 3. தோழி. [தலைவிதோழியையன்னையென்பாள் தோழிதலைவியையன்னையென்பாள் என்றார் நச்சினார்க்கினியார்.] (தொல். பொரு. ௨௪௬.)

அன்னோ—1. ஓரதிசயச்சொல். 2. ஓரிரக்கச்சொல். (உ-ம்.) "வேந்த-னன்னோவென வேயிரங்கா" (கந்தபு. திருவிளை. ௫௧.)

அன்னோன்—1. அவன். (உ-ம்.) "மாதிரக்களிற்றையன்னோன் வல்லையிற் கொணர்திரென்னா" (கந்தபு. தருமகோ. ௧௪.) 2. ஒத்தவன்.

அன்னோன்றி— பலமற்றவன். [அல்; நோன்றி - சுமப்பவன் பொறுப்பவன்.]

அன—ஒப்பான. (உ-ம்.) "கரும்பனமொழியினர்" (இராமா. நகர்நீ. ௧௭௫.) [அன்ன என்பதில் னகர ஒற்றுக்கெட்டுநின்ற ஒரு விகாரமொழி.]

அனந்தர்— 1. நித்திரை. 2. பருத்திப்பூண்டு. 3. பித்து. 4. மயக்கம். (உ-ம்.) "அனந்தர்நோக்குடைக்- கரியவாய்நெடியகட்கடைசிமங்கையர்" (சிந்தா. பதுமை. ௮௪.) 5. மயிற்குட்டு.

அனந்தல்— 1. செருக்கு, மதம். (உ-ம்.) "வைகறைப்பழஞ்செருக்குற்றதுமனந்தரீர" (மலைபடு. ௧௭௧.) 2. நித்திரை. (உ-ம்.) "அனந்தலாடேல்" (ஆத்திசூடி. ௩௦.)

அனந்தற்பந்தி— சூரியவெப்பம் தெரியாமல் இருக்கும் பச்சிலைக்கொடிப்பந்தர்.

அனுசிப்பூ— ஒரு பூ; இந்தச்சரக்குச் சீனதேசத்தினின்று கொண்டுவரப்படுகின்றது.

அனிச்சம்—ஒருமரம். (உ-ம்.) "அனிச்சப்பூக்கால்களையாள்" (வள். ௧௧௧௫.)

அனிச்சை—1. அனிச்சமரம். 2 நாகமல்லி.

அனிசூ—நட்சத்திர சீரகம், பெருஞ்சீரகம்.

அனுக்கம்— 1. அச்சம். 2. அனுங்குதல். 3. சந்தநமரம். 4. சோம்பு. 5. பாம்பு. 6. புலம்புகை. 7. வருத்தம். (உ-ம்.) "மநமனுக்கம்விடத்தனித்தனிவள்ளலைப்புணர்கள்ளவன் - கனவினுக்கிடையூறடுக்க"(இராமா. கைகேசிசூழ். ௫௨.) 8. வாட்டம். (உ-ம்.) "அனுக்கமாய்ப்பேசினார்"

அனுக்கல்—1. ஒன்றோடொன்று முட்டச்செய்தல். 2. கெடுத்தல். (உ-ம்.) "அல்லனுக்குபன்மணி" (தணிகை. நகரப். ௫.) 3. வருத்துதல்.

அனுக்காட்டல்—1. குறிப்புக்காட்டல். 2. சிறிதுதோன்றல்.(உ-ம்.)"காய்ச்சலனுக்காட்டிற்று" [வழக்.]

அனுக்கியடித்தல்—ஒருவிளையாட்டு.(வழக்.)

அனுக்கு—1-3. அனுக்கென்னேவலுந் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும்.

அனுக்குதல்—அனுக்கல்.

அனுங்கல்—1. அசைதல். 2. இழுகல். 3. ஒன்றோடொன்று முட்டுதல். 4. கெடுதல். (உ-ம.) "வாட்படையனுங்கவேடர்" (சிந்தா. கோவிந். ௨௮.) 5. புலம்பல். 6. வருந்தல். (உ-ம்.) "ஓதிமயச்சமுற்றனுங்கி" (உபதேச. சிவத்துரோ. ௨௪௦.) 7. வாடல்.

அனுங்கு— 1 - 3. அனுங்கென்னேவலுந் தெரிநிலை வினைப்பகுதியும் வினைத்தொகையும்.

அனுங்குதல்—அனுங்கல்.

அனுப்பல்—அனுப்புதல்.

அனுப்பு— 1. அனுப்புதல். 2-4. அனுப்பென்னேவலுந் தெரிநிலை வினைப்பகுதியும் வினைத்தொகையும்.

அனுப்புதல்— போகச்செய்தல். (உ-ம்.) "ஆங்கவர்பிடித்தசைத் தனுப்பி" (உபதேசகா. சிவத்துரோ. ௧௭௪.)

அனுமதை—ஒருவகைப்புல்.

அனுமாசாக்கா—பொன்னாங்காணி.

அனை—1. அத்தன்மை. (உ-ம்.) "அனைநால்வகையும்" (தொல். பொரு. ௨௪௫.) 2. ஒரு மீன். 3. தாய். (உ-ம்.) "அனைதனைவிடைகொண்டே" (கந்தபு. வில் - வாதா. ௧௪.) [இடையில் னகரங்கெட்டது.] 4. அத்தனை. (ஐங்குறு.)

அனைத்து— 1. அத்தன்மையது. (உ-ம்.) "ஐயவமைந்தன்றனைத்தாகப்புக்கீமோ"(கலி

த்தொகை. ௭௮.) 2. அவ்வளவு. (உ-ம்.) "அனைத்தறன்" (வள். ௩௪.) 3. எல்லாம். இப்பொருளில், வரும்போது உம்மைபெற்று வரும். (உ-ம்.) "ஆவிகளனைத்துமாகியருவ மாயுருவமாகி" (கந்தபு. மேருப். ௭௫.) உம்மைதொக்கும் வருவதுண்டு. "போகமனைத்தினுக்குறுப்பாம்" (பெரியபு. புகழ்ச். ௩.)

அனைமார்—தாய்மார். (உ-ம்.) "எம்மனைமாரினியெங்ஙனம்வாழ்குவிர் - நும்மனைமார்களை நோவவதுக்கி" (சிந்தா. கோவிந். ௧௭.) [இடையிலுள்ள னகரங்கெட்டது. அன்புமிகுதித்தொடர்பால், "அனைமார்" என, இச்செய்யுள் ௧௮-ஆம் அடியிற் பசுக்கன்றுகளையும் ௨௮-ஆம் அடியில் அவற்றின் தாய்ப்பசுக்களையும் உயர்த்தி உயர்திணையாகக் கூறப்பட்டது.]

அனைய— 1. அந்த, அத்தன்மையான. (உ-ம்.) "அனையகாலையிலாயிடைநீங்கியே" (கந்தபு. வள்ளி. ௨௬.) 2. அவைகள். (உ-ம்.) "அரசர்தங்கோமகனனைய கூறலும்" (இராமா. திருவவ. ௫.) 3. எல்லாம். [இப்பொருளில் வரும்போது இச்சொல், "உம்" பெற்று வரும்.] (உ-ம்.) "ஆருயிர் - அனையவும்புரப்பவனுதலால்" (கந்தபு. பாயிர. ௩௧.) 4. ஒத்த எனப் பொருள்படும் ஒரு பெயரெச்சக்குறிப்பு. (உ-ம்.) "பால்பரந்தனையபட்டார்" (சிந்தா. காந்த. ௬௬.) 5. ஒத்தன எனப்பொருள்படும் ஒரு குறிப்புவினைமுற்று. (உ-ம்.) "அகல்விசும்பிடைக்கதிர்களின் புறமறைத்தனைய" (கந்தபு. நகரப். ௨௭.)

அனையது— 1. அத்தன்மையது. (உ-ம்.) "அனையதாகியதேரினை" (கந்தபு. சூரபன். ௨௬.) 2. அது, அத்தன்மை. (உ-ம்.) "இனையது கண்டு பின்னுமிறுதிசெய்யிறைவற்கின்று- லனையதென்றறிதநேற்றார்" (கந்தபு. ததீசியு. ௧௧௩.) 3. அவ்வளவு. (உ-ம்.) "எனையதனையதெய்திஞானையதனையதாயினர்" (சிந்தா. காந்த. ௨௧௭.) 4. ஒத்தது. (உ-ம்.) "மேலுலகனையதொன்றே" (சிந்தா. நாமக. ௮௨.)

அனையம்—1. அத்தன்மையினேம் எனப் பொருள்படும்ஒருகுறிப்புவினைமுற்று.(உ-ம்.) 2. ஒத்துளேம் எனப்பொருள்படும் ஒரு குறிப்புவினைமுற்று. (உ-ம்.) "கடலேயனையம் யாங்கல்வியாலென்னும்" (நன்னெறி. ௭.)

அனையவன்—1. அவன், அத்தன்மையன். (உ-ம்.) "அனையவன்கழன்முன்" (கந்தபு. மேருப். ௩௧.)2. ஒத்தவன். (உ-ம்.)"ஈசனையனையவன்" (நல். பார. சலற்கார. ௧௫.)

அனையவை— 1. அவை, அத்தன்மையுடையவை. (உ-ம்.) "அறத்தாற்றினீட்டப்பட்ட வனையவை"(திருவிளை. மண்சும. ௬௨.) 2. ஒப்பானவை.

அனையன்— 1. அவன், அத்தன்மையன். (உ-ம்.) "அனையனையெடுக்குமம்மை" (கந்தபு. சூரம்பு. ௩௫.)"அனையனைமறுக்கஞ்செய்தாய்" (திருவிளை. மண்சும. ௬௩.) 2. ஒத்தவன்.

அனையன—1. அத்தன்மையன. (உ-ம்.) "அனையனபலபாராட்டி" (கலித்தொகை. ௫௫.) 2. ஒத்தவை. (உ-ம்.) "பவளமேயனையனபன் மயிர்ப்பேரொலி"(சிந்தா.விமலை.௬௦.)

அனையிர்— } 1.ஒத்தீர். 2.அத்தன்மையீர்.
அனையீர்— }

அனையேன்— 1. ஒத்தேன். 2. அத்தன்மையேன்.

அனையை— 1. ஒத்தாய். 2. அத்தன்மையாய்.

அனையோம்—அனையம் பார்.

அனையோர்— 1. அவர்கள், அத்தன்மையோர். (உ-ம்.) "ஆண்டகையார்கொலோவனையோர்" (கந்தபு. சூரன்றண். ௨௫.) 2. ஒப்பானவர்.

அனைவர்— எல்லாரும். [இப்பொருளில் வரும்போது அனைவர் என்பது தானுவது தன்னையடைந்த உருபாவது முற்றும்மை தொடர்வரும்.] (உ-ம்.) "அனைவருந்தொழுதுடன்வர" (கந்தபு. தெய்வ. ௨௬௧.) "ஆயிரம்புயமுடைத்திறலோர் - அனைவர்தம்மையும்" (௸ சகத்திர. ௩௩.)

அனைவிரும்— } நீங்கள் எல்லீரும்.
அனைவீரும்— }

அனைவோரும்—எல்லாரும்.

## ஆ

ஆ – இது தமிழ்ப்பாஷையின் வர்ணமாலையில்வரும் இரண்டாமெழுத்து; உயிர்முயற்சியாற்பிறக்கும் எழுத்துக்களுள், அங்காந்தவளவிலே ஒலிக்கும் ஒரு நெட்டுயிர்.]

1. அஃறிணைப்பன்மைப்படர்க்கையெதிர்மறைத்தெரிநிலைவினைமுற்றில் வரும் ஒரு விகுதி. (உ-ம்.) "கடலோடாகால்வனெடுந் தேர்" (வள். ௪௯௬.)

2. அதிசயத்தைக்குறிக்கும் ஓரிடைச்சொல். (உ-ம்.) "ஆசிறுவனல்லன்" (கந்தபு. தகரேறு. ௪௦.)

3. ஆக. (உ-ம்.) "செல்வப்புதல்வனேயீர்ங்கவியா" (நீதிநெறி. ௪.) [ஆக என்னும் செயவெனெச்சம் விகாரமாகி ஆ என நின்றது.]

4. ஆச்சாமரம். (உ-ம்.) "ஆவுமாரமுமோங்கினவெங்கணும்" (சிலப். வேட்டு. ௭௬.)

5. ஆதல். (உ-ம்.) "இலயித்தவாறுளதாவேண்டும்" (சிவஞானபோ. ௧: உ. சிவஞா.) இது முதனிலைத்தொழிற்பெயர்.]

6, 7. ஆவென்னேவலுந்தெரிநிலைவினைப்பகுதியும். [இது வினைத்தொகையில்வரும்போது "ஆகூழ்" என்முற்போலக்குச்சாரியைபெற்றுவரும்.]

8. ஆன்மா. (உ-ம்.) "ஆதிருக்கச்சிவம்" (கம்பரா. ௩௧.)

9. இரக்கக்குறிப்புணர்த்தும் ஓரிடைச்சொல். (உ-ம்.) "ஆவம்மாவம்மாவென்னம்மாவகன்றனையே" (சிந்தா. ௧௩௧மா. உ௪அ.)

10. உடன்பாட்டில்வரும் ஒரு தெரிநிலைவினையெச்ச விகுதி. (உ-ம்.) "பாராவணங்காப்பரவலுறுவிம்மிதமுஞ்- சேரா" (கந்தபு. வள். ௧௧௭.)

11. எருமை. (தொல். பொருள். ௬௧௬.)

12. ஒரு சாரியை இடைச்சொல். (உ-ம்.) "இல்லாப்பொருள்" (நன். மெய்யீ. ௩௦. உரை.)

13. ஒரு வினையாலணையும்பெயர் விகுதி. (உ-ம்.) "உண்ணுகிடந்தன" (நன். உயிரீ. உ௧ - ம் உரை.)

14. சம்மதம், அருளின்கட்குறிப்பு. அன்பு, துக்கம், அற்பம், நினைப்பு, எல்லை, மூற்று என்னுமிப்பொருள்களைக்குறிக்கும் ஒரு வடமொழியவ்வியயம். (உ-ம்) "ஆமயங்கேலெனவாண்டனன்" [அருளின்கட்குறிப்பு.] (கம்பரா. ௪௦.)

15. சிவஞானம். (சி. சி. அளவை. ௧௩. சிவாக்.)

16. தன்மை, விதம், (உ-ம்.) "இனந்தெரிந்தெய்துமாபோல்" (கந்தபு. ஆற்று. ௩௯.) ["ஆறு" என்பது ஆ என நின்றது.]

17. தெரிநிலைவினையில் எதிர்மறைப்பொருளுணர்த்தும் ஓரிடைநிலை. (உ-ம்.) "உண்ணுமை" இவ்விடைநிலை சிறுபான்மை "உணராநோக்கிய" என்பதிற்போல எதிர்மறைவினையெச்சத்திலும், "உண்ணுமூலை" என்பதிற்போல எதிர்மறைப்பெயரெச்சத்திலும் இறதிநிலையாய் நிற்கும். (வள். ௧௧௭உ; கந்தரந். உ.)

18. "தொடங்கி" அல்லது "வரையும்" எனப்பொருள்படும் ஒருபசருக்கம். (உ-ம்.) "ஆகன்னமுறச்செம்பொன்வரைவில்வாங்கி" (பாரத. அருச்சுனன்றீ. ௪௧.) "ஆபாத, சூடங்கருதி" (பாரத. இராசசூ. ௭அ.)

19. பசு. (உ-ம்.) "ஆபயன்குன்றும்" (வள். ௫௬௦.)

20. "அன்னு" என்பதிற்போலப்பொதுப்பெயர்க்கண்ணும் "மன்னு" என்பதிற்போல உயர்திணைப் பெயர்க்கண்ணும் வரும் ஒரு விளியுருபு.

21. மறை. (உ-ம்.) "பெற்றமுமெருமையுமறையுமாவே" (தொல். பொரு. ௬௧௬.)

22 மொழியிறுதியினின்று வினப்பொருளைத்தரும் ஓரிடைச்சொல். (உ-ம்.) அவன் கந்தனு?

23. வைகாசிமாதம். (இராசவைத்.) [ஆ - இடபம். இப்பெயரையுடைய இராசியில் சூரியன் நிற்கும் மாதம் வைகாசி.]

ஆக்கக்கிளவி— ஆக்கச்சொல். (உ - ம்.) "ஆக்கக்கிளவி காரணமின்றியும்" (தொல். சொல். கிளவி. உஉ.)

ஆக்கங்கூறல்— ஆசிவசனஞ்சொல்லுதல். (உ-ம்.) "மன்னவற்காக்கங்கூறி மழவிடைக்கொடியோன்கூடற் - பன்னரும் புகழ்மையோதுபனுவலையருளிச்செய்ய" (திருவிளை. மாயப். உ௬.)

ஆக்கச்சொல்— செயற்கையையுணர்த்துகிற "ஆ" என்னும் பகுதியிற்பிறந்து "ஆயினன்" "ஆயினள்" என்பன முதலியனவாய் வழங்கும் வினைச்சொல். "எண்ணெய்பெற்றமையான் மயிர்நல்லவாயின" என்பதிற்போல, (தொல். சொல். கிளவி. உஉ. சேனு.) [இவ்வாக்கச்சொற் செயற்கையையுணர்த்தலேயன்றிச்சிறுபான்மை "நிற்குணனாய் நின்மலனாய்" என உண்மையையுணர்த்தலுமுண்டு. (சிவஞானபோ. ௬. ௩. வெ.

சிவஞா.) மேலும் "ஆள்வாரிலிமாடாவே ஞே" என உவமைப்பொருளுணர்த்தலும் உண்டு. (ஷை எ. ௩. வெ. சிவஞா.)

ஆக்கஞ்செப்பல்— மன்மதபாணத்தால் வரும் பத்தவத்தையிலொன்று; அது: தன் மனவருத்தத்தைப்பிறர்க்குரைத்தல். (உ-ம்.) "பத்தவத்தை: காட்சியும், வேட்கையும், ஒருதலையுள்ளுதலும், மெலிதலும், ஆக்கஞ்செப்பலும், நாணுவரையிறத்தலும், நோக்குவவெல்லாமவையேபோறலும், மறத்தலும், மயக்கமும், சாக்காடும் என்னும் இவை" (அகப்பொ. அகத்திணை. ௩௬. உரை.)

ஆக்கணி— ஆறுதாரங்களுள் ஒன்றாகிய அநாகதத்துக்குரிய பன்னிரண்டிதழ்களுள் ஓரிதழில் நிற்கும் ஓாதிதேவதை. (சி சி. அ: உக. மறை.) [ஆக்ஷணி.]

ஆக்கதம்—முதலே.

ஆக்கப்பெயர்— காரணக்குறியாயாவது இடுகுறியாயாவது இடையில் ஆக்கப்பட்ட பெயர். (நன். பெயரி. கஅ. இராமா.) [இடையிலே பொன்னுடைமைபற்றி ஒருவனைப் பொன்னன் என்பது காரணவாக்கம். "மாநவேன்முட்டைக்குமாறாயதெவ்வர்போங்- கானவேன்முட்டைக்குங்காடு" என்னும் பொய்யாமொழிப்புலவர்பாட்டிற்குமரனை "முட்டை" என்றது இடுகுறியாக்கம்.]

ஆக்கப்பொருள்— ஆகுபெயர்ப்பொருள்.

ஆக்கபாடிகன்— 1. சூதாடுமிடத்தலைவன். 2. நீதிபதி. [ஆக்ஷபாடிக.]

ஆக்கபாதன்—ஒரு தார்க்கிகன். [அக்ஷபாதாகிய கௌதமர் செய்த நியாயநூலைக்கற்றவன் என்பது பற்றி வந்தபெயர். [ஆக்ஷபாத.]

ஆக்கம்— 1. அமைத்துக்கோடல். (தொல். சொல். கிளவி. க. சேனு.) 2. ஆக்கச்சொல். (தொல். சொல். உக.) 3. ஆக்கியதன்மை. 4. ஆகியதன்மை. 5. ஆசிவசநம். (உ-ம்.) "புங்கவர்மந்தாரமழை பொழியவருந்தவராக்கம்புகல" (திருவிளை. தடாதகை. ௩௬.) 6. இலக்குமி. (சூ. நிகண். க: ௩௪.) 7. இலாபம். (உ-ம்.) "ஆக்கங்கருதி முதலிழக்குஞ் செய்வினை" (வள். ௪௬௩.) 8. எழுச்சி. 9. கொடிப்படை. 10. சிருட்டிப்பு. (உ-ம்.) "ஆக்கமவ்வவர்கண்மமெல்லாங்கழித்திட" (சி. சி. க: ௩௭.) 11. செல்வம். (உ-ம்.) "அளப்பருங்கல்வியுமாக்கம் யாவையும்" (கந்தபு. மாயையுப. ௬௨.) 12. மேன்மேலுயர்தல். (உ-ம்.) "அறத்தினூஉங்காக்கமுமில்லை" ... "அறத்திணூஉங்காக்கமெவனேவுயிர்க்கு" (வள். ௩௧. பரி.) 13. வளர்ச்சி. (உ-ம்.) "தன்னொருமதலையாக்கமுங் கருதிச்சாநவித்தடங்கரையடைந்தான்" (பாரத. குருகுல. அ௦.) 14. வாழ்வு, பெருவாழ்வு. (உ-ம்.) "அவளால் வந்தவாக்கமிவ்வாழ்க்கையெல்லாம்" (சி. சி. க: ௬௬.) 15. விருத்தி. (உ-ம்.) "தேக்கியின்பந்திளைக்கத்திளைக்கவே- யாக்கமாயெனக்கானந்தமாகியே" (தாயு. பொன். உஅ.)

ஆக்கல்—1. அனுட்டித்தல். (உ-ம்.) "அறமதனையறிந்து சிலாத்தனையாக்கி" (சிவதரு. பாயிர. க௫.) 2. உயர்த்தல். (உ-ம்.) "ஒன்னார்த்தெறலுமுவந்தாரையாக்கலும்" (வள். உ௬௪.) 3. சிருட்டித்தல். (உ-ம்.) "ஆரியன்குலாலனுய்நின்றாக்குவனகிலமெல்லாம்" (சி. சி. க: கஅ.) 4. செய்தல். (உ-ம்.) "இக்கோர்நாலிரண்டினுந்தன்செய்ய-கோல்வரும்படியேயாக்கிக்கொணர்ந்தன திறைகள்" (பாரத. இராச. ௬௬: ௫.) பாகஞ்செய்தல், காய்ச்சுதல். (உ-ம்.) "சீவநீயத்தூறச்செய்தாக்கற்குடிநீர்" (தைல. பாயிர. உ௬.)

ஆக்கவினை— 1. ஆக்கவினைச்சொல். [ஆக்கமாகிய வினைச்சொல் என்றபடி.] 2. ஆக்கவினைக்குறிப்பு. [ஆக்கத்தைக்கொண்டிருக்குங்குறிப்புவினையென்றபடி.]

ஆக்கவினைக்குறிப்பு — ஆக்கச்சொல்லைக்கொண்டிருக்கும் வினைக்குறிப்புச்சொல். (உ-ம்.) "சாத்தன் நல்லனாயினான்" என்புழி "நல்லன்" என்னும் வினைக்குறிப்பு "ஆயினான்" என்னுமாக்கச்சொல்லைக்கொண்டிருத்தலால் ஆக்கவினைக்குறிப்பு (நன். வினை. உஅ.)

ஆக்கவும்மை—தன்னைப்பெற்ற சொல்லின்பொருள் பிறிதொன்றுமாயிருத்தலைக்குறிப்பிக்கிற "உம்" என்னுமிடைச்சொல். (நன். இடை. ௬. உரை.) [ "பாலுமாயிற்று" என்புழிப் "பாலும்" என்பதின் உம்மை "அப்பால் இனிய துப்பாதலேயன்றி நோயைத்தீர்க்குமருந்துமாயிற்று" என்பதனைக்குறிப்பித்தல்காண்க.]

ஆக்கிடல்— செய்தல். (உ-ம்.) "ஆக்கிடுமதிகாரத்திற்கழிவினை" (சி. சி. க: உ௩.)

ஆக்கிநாகரணம்— கட்டளைப்படிசெய்தல், கீழ்ப்படிதல். [ஆஜ்ஞாகரணம்.]

ஆக்கிநாசத்தி— ஆஞ்ஞாசத்தி. (உ-ம்.) "அவனுந்தனதாக்கினைசத்தியுங் கோடாமற்செங்கோல் நடத்தாநிற்பன்" (சி. சி. உ: ௩௧. மறை. [ஆஜ்ஞா; ஶக்தி.]

ஆக்கிநாபங்கம்— கீழ்ப்படியாமை, ஆணைப்படி நடவாமை. [ஆஜ்ஞாபங்கம்.]

ஆக்கிநிகநாநம் — எழுவகை ஸ்நாநத்துளொன்று; அது: விபூதியை விதிப்படி தரித்தல். [ஆக்நிகஸ்நாநம்; அக்கினியில் வெந்த திருநீறுகொண்டு செய்யப்படுவதாலிப்பெயர்த்தாயிற்று.]

ஆக்கிநேயம்— 1. அக்கினிக்குடையது. 2. அக்கினிபுராணம். இது: பதினெண்புராணத்தொன்று. (உ-ம்.) "ஆக்கிநேயம்மழற்கதையாம்" (கந்தபு. பாயிர. ௫௫.) 3. அக்கினியஸ்திரம். (உ-ம்.) "பொய்யறுமாக்கிநேயமவித்தவிப்புகழோன்மற்றை - மையறுபகழியாவும்" (இரகு. மீட்சி. ௬௭.) 4. இரத்தம். 5. இருபத்தெட்டாகமங்களுள்ளே சதாசிவமூர்த்தியினுடைய அகோரமுகத்தினின்று உற்பவித்த ஐந்து ஆகமங்களுள் ஒன்று. இதற்குக்கிரந்த சங்கியை முப்பதினாயிரம். (சைவச. பொது. ௩௩௩.) 6. எழுவகைஸ்நாநத்துள் ஒன்று; அது: விபூதியை விதிப்படி தரித்தல். (உ-ம்.) "வாருணமாக்கிநேயமந்திரமிவைமுன்னனை- பேருணர்வளிக்குநாநஞ்செய்தவர்" (திருவிளை. தீர்த்தவி. ௨௦.) 7. கார்த்திகைநாள். 8. தென்கீழ்த்திசை. 9. நெய். 10. பொன். 11. விபூதி. (வி-ணி) [ஆக்நேய: அக்நி; ஏய - ஒரு வ-வி.]

ஆக்கிநேயன்— கந்தசுவாமி. [ஆக்நேய: இஃது: அக்கினிக்குமகன் எனப்பொருள்படும் ஒருதத்திதபதம்.]

ஆக்கிநேயி—1. அக்கினிதேவன்மனைவியாகிய சுவாகாதேவி. 2. ஊரு என்னும்அரசனுடையமனைவி. (கூர்மபு. தக்கனைச்சபி. ௫.) [அக்கினியின்மகள்.] 3. தென்கீழ்த்திசை. [ஆக்நேயீ:]

ஆக்கிநை— 1. ஆக்கினாய் எனப்படும் ஒருமுன்னிலை வினைமுற்று. (உ-ம்.) "ஆருவிடரொன்வயினைக்கினையால்" (கந்தபு. அக்கினிமுகா. உ௩௫.) 2. ஆறுதாரங்களில் ஒன்று. அதன் தாரம் இலாடம். 3. கட்டளை. (உ-ம்.) "ஐந்துகுரவர்களுடைய ஆக்கினையைத்தடுத்து நடத்தலும்" (திரிகடு. ௬௭. உரை.) 4. தண்டஞ்செய்தல். [வழக்.] 2-4. [ஆஜ்ஞா.]

ஆக்கிநைப்பத்திரம்—சாமந்தர், வேலையாளர், நாடுபுரப்பவர் முதலானவர்களுக்கு இக்காரியம் செய்யவேண்டுமென்று எழுதப்படுங்கட்டளை. (மிருதிசங். ௩௧.)

ஆக்கியாதம்—1. சொல்லப்பட்டது. 2. பிரசித்தஞ் செய்யப்பட்டது. 3. வினைச்சொல். [ஆக்யாதம்.]

ஆக்கியாநம்—1. கட்டுக்கதை. 2. பிரசித்தஞ்செய்தல். 3. பேசுதல். [ஆக்யாநம்.]

ஆக்கியை—நாமம். [ஆக்யா.]

ஆக்கியோன்—1. ஆக்கினவன், சிருட்டித்தவன். 2. நூல்செய்தவன். (உ-ம்.) "ஆக்கியோன்பெயரே" (நன். சிறப்பு. ௧.)

ஆக்கிரகம்— 1. கடுங்கோபம். 2. கிரகித்தல். 3. சாமர்த்தியம். 4. தயை. 5. வெற்றிகொள்ளுகை. [ஆக்ரஹ.]

ஆக்கிரகாயணகம்— மார்கழிமாசம். [ஆக்ரஹாயணக (ணிக): அக்ர-சிரேட்டமானது. ஹாயந-நெல். மிருகசிரிடத்தினத்திற் புதுநெற்கொண்டு ஒருவகையாகஞ்செய்யப்படுதலால் ஆக்ரஹாயணி என்பது மிருகசீரிடத்தின்பெயராம். அதனோடுகூடியபூரணை "ஆக்ரஹாயணி" எனப்பெயர்பெற்றது. அப்பூரணையையுடையதாகையால் மார்கழிமாசத்துக்கு "ஆக்ரஹாயணிகம்" என்னும், "ஆக்ரஹாயணம்" என்றும் பெயராயின. இனி அக்ர- கடைசி-ஹாயந - ஆடிமுதலாறுமாதங்கள். ஆகையால் அயநத்தின்கடைசி என்பதுபற்றிவந்தபெயரென்பதுசிலர் கொள்கை.]

ஆக்கிரகாயணம்—ஆக்கிரகாயணிகம். [ஆக்ரஹாயண:]

ஆக்கிரகாயணி—1. புதுநெற்கொண்டுமிருகசீரிடநாளிற்செய்யப்படும் ஒருவகையாகம். 2. மார்கழிமாசப்பௌர்ணிமை. 3. மிருகசீரிடம். [ஆக்ரஹாயணீ.]

ஆக்கிரகாயணிகம் — ஆக்கிரகாயணம். [ஆக்ரஹாயணிக.]

ஆக்கிரகி— 1-2. ஆக்கிரகியென்னேவலுந்தெரிநிலைவினைப்பகுதியும். [மூ. ஆக்ரஹ.]

ஆக்கிரகித்தல்—1. ஆதரித்தல். 2. உக்கரித்தல். 3. தயவுசெய்தல். 4. வலாற்காரமாயெடுத்தல். (உ-ம்.) "அவன் என்வீட்டையாக்கிரகித்துக்கொண்டான்". 5. வலிமைகாட்டல். 6. வெல்லல். [மூ. ஆக்ரஹ.]

ஆக்கிரந்தம்—1. அழுதல். 2. உக்கிரமான சண்டை. 3. கூப்பிடுதல். 4. சத்தம். [ஆக்ரந்த: ஆ; க்ரந்த - அழுதல், கூப்பிடுதல்.]

ஆக்கிரமம்— 1. அடைதல். 2. அதிபாரமேற்றுதல். 3. கடந்துபோதல். 4. நெருங்கித்தாக்குதல். 5. மேலாகப்பார்த்தல். 6. மே

ற்கொள்ளுதல், வெல்லுதல். 7. வீரம். [ஆக்ர- க்ரம: க்ரம - போதல், ஏறுதல்.]

**ஆக்கிரமி**—1-2. ஆக்கிரமியென்னேவலுந் தெரிநிலைவினைப்பகுதியும்.

**ஆக்கிரமித்தல்**— 1. அணுகிவருதல். 2. அதிகபாரமேற்றுதல். 3. உள்ளேயடக்கிக் கொள்ளுதல். (உ-ம்.) "பிரதாநத்திலேயாக் கிரமிக்கப்பட்டிருக்கின்றதன்னை" (சி.சி. உ: எ௩. சிவாக்.) 4. சினத்துவீரங்கொண்டெழும்புதல். 5. நெருங்கித்தாக்குதல். 6. வெல்லுதல், மேற்கொள்ளுதல். [மூ. ஆக்ரம.]

**ஆக்கிரயணம்**—1. அக்கினிட்டோமயாகத்திலே செய்யப்படுஞ்சோமநீர்நைவேத்தியம். 2. விளைவுகாலத்திலே தானியங்களைப்பலியிட்டுச்செய்யும் ஓர்யாகம். [ஆக்ரயண:]

**ஆக்கிராணம்**— 1. ஆக்கிராணேந்திரியம். (சிவப்பிரகாசக்கட். ௩-ஆம். அங்கம்.) 2. திருப்தி. 3. மணத்தைக்கவர்தல். 4. மூக்கிலிடும் மருந்துப்பொடி. 5. மூக்கு. [2,3. ஆக்ராண:]

**ஆக்கிராணி**— 1. ஆக்கிராணியென்னேவலுந் தெரிநிலை வினைப் பகுதியும். [மூ. ஆக்ராண.]

**ஆக்கிராணித்தல்**— 1. மணத்தைக்கிரகித்தல். 2. மணந்துகவர்ந்தெடுத்தல். (உ-ம்.) "இமையவல்லி- சத்தியாகிய தன்றுகூறாகவுள்ள உதிரமாமிசங்களையவருடலிற் சிறிதுமின்றியாக்கிராணித்துக்கொள்ளல்" (சிவபார. எக. பக்.)

**ஆக்கிராணேந்திரியக்காட்சி**—ஆக்கிராணேந்திரியத்தைக்கொண்டு அறியும்அறிவு. [அதுகந்தமறிதல்.]

**ஆக்கிராணேந்திரியம்**—ஞானேந்திரியமைந்தினொன்று; அது: நாசியினின்று மணத்தைக்கிரகிக்குங்கருவி. (வாசுதே. ௫௬.) [ஆக்ராண; இந்த்ரியம்.]

**ஆக்கிராந்தம்**— 1. ஆக்கிரமிக்கப்பட்டது. 2. ஆளப்பட்டது. 3. கூடிவரப்பட்டது. 4. பாரமேற்றப்பட்டது. 5. மறைக்கப்பட்டது. (உ-ம்.) "அஞ்ஞானாக்கிராந்தமாயிருக்கிறஞானத்தையுடையனுவன்" (சி.சி. உ:௯௯. சிவாக்.) 6. மேலிடப்பட்டது, வெல்லப்பட்டது. 7. மேற்பரவப்பட்டது. [ஆக்ராந்த; ஆ; க்ரம- போதல்.]

**ஆக்கிராந்தி**—1. ஏறுதல். 2. கடந்துபோதல். 3. வீரம். [ஆக்ராந்தி: ஆக்ராந்தி; க்ரம-போதல்.]

**ஆக்கிராயணம்**—ஆக்கிரயணம். [ஆக்ராயண.]

**ஆக்கிரீடம்**—1. இராசாவுடையபூந்தோட்டம். 2. பொழுதுபோக்கு. 3. விளையாட்டிடம். [ஆக்ரீட: ஆ; க்ரீட- விளையாட்டு.]

**ஆக்கு**— 1-3. ஆக்கென்னேவலுந் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும்.

**ஆக்குகை**— } 1. ஆகச்செய்தல். 2. சமைத்தல்.
**ஆக்குதல்**— }

**ஆக்குமவன்**—செய்வோன். (உ-ம்.) "இடர்நோக்கியுயிர்க்காக்குமவன்" (சைவச. ஆசா. ௧௧.)

**ஆக்குமாறு**—ஆக்குதலினால். (உ-ம்.) "ஆக்குமாறயனும்" [பாரத. தற்சிறப். க.] [மாறு "அனையையாகன்மாறே" என்பதுபோலமூன்றனுருபின்பொருள்படவந்தஇடைச்சொல்.]

**ஆக்குருட்டம்**— கோபப்பேச்சு. [ஆக்ருஷ்டம்:]

**ஆக்குரோசகம்**— } 1. ஆணையிடுதல். 2. உரத்துக் கூப்பிடுதல். (உ-ம்.) "மஞ்சத்தனுயிருக்கிற புருடனுடைய ஆக்குரோசத்தை ஆதாரமாயிருக்கிற மஞ்சத்துக்கு லக்கணையாகச்சொன்னது" (சி.சி. ௫: க. சிவாக்.) 3. கடுங்கோபம். 4. சாபமிடுதல். 5. நிந்தித்தல். [1, 2, 4, 5. ஆக்ரோஶ: ஆ; க்ருஶ- கூப்பிடுதல்.]
**ஆக்குரோசநம்**— }
**ஆக்குரோசம்**— }

**ஆக்குரோடம்**—மார்புவரைக்கும். [ஆக்ரோடம்: ஆ- வரைக்கும். க்ரோடம் - மார்பு.]

**ஆக்குவயம்**—அபிதானம், பெயர். [ஆஹ்வய:]

**ஆக்குவோன்**—சிவன். (உ-ம்.) "அவமெனுங்களைகணீங்கியாக்குவோனருளால்" (திருவாத. மந்திரி. எ.)

**ஆக்கூர்**—ஓரூர். (தேவார. ஆக்கூர். திருஞான.)

**ஆக்கேபகன்**— குற்றஞ் சொல்வோன், தடைகூறுவோன். [ஆக்ஷேபக.]

**ஆக்கேபம்**—1. குற்றஞ்சொல்லல். 2. சந்தேகம். 3. தடைமொழி. (உ-ம்.) (வீரசோ. அலங். ௧௧. உரை.) [1, 2, ஆக்ஷேப: ஆ; க்ஷிப் -எறிதல்.]

**ஆக்கை**— உடம்பு. (உ-ம்.) "ஆக்கையுள்ளுறையாவிகெடுத்தவன்" (சிந்தா. பது. ௧௧௭.)

[யாக்கையென்பதில் யகரவொற்றுக்கெட்டது, நாடி, நரம்பு முதலியவற்றால் யாக்கப்பட்டமைபற்றிவந்தபெயர்.]

ஆக்கோத்துமம்—கொன்றை.

ஆக்கோல்லி—1. ஒருபுழு. 2. தில்லைமரம்.

ஆக—1. ஆகட்டும். (சி. சி. அ: ௫. ஞானப்.) 2. முற்றெச்சப்பொருளைத்தாவரும் ஓரிடைச்சொல். (உ-ம்.) "காரெதிர்கானம்பாடினேமாக" (தொல். இடை. ௩௨. நச்.) 3. முழுதும், ஆகத்தொகை. (உ-ம்.) "ஆகவுயர்திவ்வியவாண்டாறிரண்டாயிரஞ்சதுரயுகமதாகும்" (கூர்மபு. பிரமாவி. ௭.) 4. விகற்பப்பொருளைக்காட்டும் ஓரிடைச்சொல். (உ-ம்.) "தெய்வத்தானுகமக்களானுகத்தனக்குவந்த துன்பங்களை" (வள். ௩௪௨. பரி.)

ஆகச்சதி—வருகிறான்எனப்பொருள்படும் ஒருவடமொழிவினைமுற்று. (பி. வி. காரக. ௧௨.) [ஸ்ரீஆகச்சதி.]

ஆகட்டு— } ஆக. (சி. சி. அ: ௫. ஞானப்.)
ஆகட்டும்— }

ஆகடியக்காரன் — பரிகாசம்பண்ணுகிறவன்.

ஆகடியம் — 1. அநியாயம், கொடுமை. (உ-ம்.) "அஞ்சுபூதமுண்டாகடியகாரரிவர்" (திருப்பு. ௧௪௬.) 2. பரிகாசம். (உ-ம்.) "ஆகடியம்பண்ணுகிறான்" (வழக்.)

ஆகண்டலன்—இந்திரன். (உ-ம்.) "அண்டர்க்கெல்லாமரசானவாகண்டலனுக்கு" (பாரத. இராய. ௧௨௧.) [ஸ்ரீஆகண்டல: ஸ்ரீ; கண்ட- வெட்டுதல். ல - ஒருவிகுதி. மலையின்சிறகரிந்தோனென்றபடி.]

ஆகதம்—1. அடிக்கப்பட்டது. 2 அறியப்பட்டது. 3. கோடிச்சீலை. 4. வந்தது. (உ-ம்.) "துரியாவத்தைக்குக்காரணமாகிய ஆகதவிந்துநாதம் குடிலையிலுஞ்சித்தம் பிரகிருதியிலும்லயிக்க" (சி. சி. ௪: ௩௪. சிவாக்.) 5 வாத்தியம். 6. வியர்த்தமானபேச்சு. [1, 2, 3, 5, 6. ஸ்ரீஆஹத. 4. ஸ்ரீஆகத.]

ஆகந்து—1. இடையில்வந்தது. 2. வருதல். [ஸ்ரீஆகந்து.]

ஆகந்துகசுரம்—அருந்துகின்ற அறுசுவை வருக்கங்களின் காரணமில்லாமல் வருகிறசுரம். அஃது: அபிஷங்கசுரம், அபிகாதசுரம், அபிசாரசுரம், சாபச்சுரம் எனப் பலவகைப்படும். (சீவரட். ௩௧.) [ஸ்ரீஆகந்துகஜ்வர.]

ஆகந்துகம்— இடையில்வந்தது, வந்துகூடியது. (உ-ம்.) "இந்த மலம் ஆன்மாவினுடையஞானசத்தியை மறைத்தலால் சகசமே ஆகந்துகமலமன்று" (சிவப்பிர. ௨: ௨. உரை.) "காய்ந்திடுசகசமே யாகந்துகப்பவங்களுக்கும்" (மச்சபு. யோகசாத். ௩௮.)

ஆகந்துகமசூரிகைரோகம்— ஒருவகையானமசூரிகைரோகம். அது: திரிதோஷமசூரிகைக்கொப்புளங்களைப்போலவேயிருந்தாலும் அதைப்போல் ஒரேகாலத்தில் பிறக்காமல்முதன்முதல் ஒரு அவயவத்திற்பிறந்து உடனே சரீரம் முற்றிலும் வியாபித்ததாயிருக்கும். (சீவரட். ௧௪௩.) [ஸ்ரீஆகந்துகமசூரிகா ரோக.]

ஆகந்துகவிரணம்—காயங்களினுலுண்டாகின்ற ஒருவகை விரணம். (சீவரட். ௨௧௫.)

ஆகந்துகன்— புதியவனாகவந்தவன். [ஸ்ரீஆகந்துக.]

ஆகநம்—கிண்டுதற்கருவி. [ஸ்ரீஆகந: ஸ்ரீ; கந - கிண்டுதல்.]

ஆகநிகம்—1. எலி. 2. பன்றி. 3. மண்ணகழ்கருவி. [ஸ்ரீஆகநிக: ஸ்ரீ; கந- கிண்டுதல்.]

ஆகநிகன்— 1. கள்வன். 2. மண் கிண்டுவோன். [ஸ்ரீஆகநிக.]

ஆகம்—1. உடம்பு. (உ-ம்.) "ஆகத்தைவருத்துகின்றவரும்பசியவித்தாய்" (கந்தபு. வள். ௧௦௪.) 2. குப்பைமேனி. (இராசவைத்.) 3. சுரை. 4. பாரை, மண்வெட்டி. [ஸ்ரீக.] 5. மனம். (உ-ம்.) "ஆகத்தெழுகனல்கண்வழியுக" (இராமா. கான்வ. ௯௯.) 6. மார்பு. (உ-ம்.) "முனைவாயவிழ்ந்ததகைசூழாகத்து" (திருமுரு. ௧௧௯.)

ஆகம்பநம் — 1. அசைவு. 2. நடுக்கம். [ஸ்ரீஆகம்பந.]

ஆகம்பம்—1. அசைதல். 2. சிறிதசைதல். 3. நடுங்கல். [ஸ்ரீஆகம்ப.]

ஆகம்பிதம்— 1. சம்மதிக்குறிகாட்டுமுகம். 2. சிறிதசைக்கப்பட்டது. [ஸ்ரீஆகம்பித.]

ஆகம்பிதமுகம்— பதினான்குமுககிலைகளிலொன்று; அது: சம்மதியைக்காட்டும்படி அசைக்கப்படும்முகம். [ஸ்ரீஆகம்பிதவத்ர.]

ஆகமநகாலம்— 1. சங்கிராந்திகாலம். 2. பிரசவகாலம். [ஸ்ரீஆகமநகால.]

ஆகமநம்— 1. திரும்பிவருதல். 2. தேட்டம். 3. வந்துசேருதல். (உ-ம்.) "கமநமா

கமநமெனுஞ்சொல்விட்டு" (நல். பாரத. இரு ட்டிணு. சஅ.) [ஆகமஜ்ஞ.]

ஆகமப்பிரமாணம்— காட்சியாலும் அநு மானத்தினாலும் அறியப்படாத பொருளையும் அறிவிக்கும் ஆப்தவாக்கியமாகிய சாத்திரம்.

ஆகமப்போலி—உள்ளதுகூறாதவாக்கியம். (சைவப்.உஎ.)[ஆகம;வொலி-போன்றது.]

ஆகமபரோட்சஞாநம்— காட்சிக்கெட்டா ததை ஆகமவழியாயறிதல். ( சி. சி. கக: க. ஞானப்.) [ஆகமபரோக்ஷஜ்ஞாந: ஆகம; பரோக்ஷ- காணப்படாதது. ஜ்ஞாநம்-அறி தல்.]

ஆகமம்—1. ஆன்மாக்களுக்குமலத்தைநா சஞ்செய்து ஞானத்தையுதிப்பித்துமோட்சங் கொடுத்தற்காக உபதேசிக்கப்பட்டதெனச் சொல்லப்படும்நூல். இது: மந்திரகலை, தந் திரகலை, உபதேசகலை யெனமூவகைப்படும். (உ-ம்.) "அணுதியேயமலனுயவறிவனூலாக மந்தான்"(சி.சி.அளவை.கரு.)[ஆ-சிவஞானம். க-மோட்சசாதநம். ம-மலநாசம. (சி. சி. அள வை.கரு.சிவாக்.) திருவாசகத்துட்சிவபுராண வகவலிலே.ஆ-பசு.கம்-பதி. ம-பாசம். எனவு ம்,பசுபதிபாசம் என்பவற்றின் இலக்கணங்க ளைவிரித்துணர்த்துநூல் ஆகமம் எனவும் உ ரைகாரர்கூறினர்.] 2. கடவுளருளியநூல். 3. கல்வி. 4. சாட்சியாகவரும் உறுதிப்பத்தி ரம்.5. தருமநூல்.அது:"ஆகமமென்பனமநு முதலாகியவறநெறிபுணர்ந்ததிறனறிநூலே யென்னும்" தண்டியலங்காரம்.கஉக-ஆம் சூத் திரத்தாற்பெறப்படும். 6. (இலக்கணம)தோ ன்றல்விகாரம். (உ-ம்.)"மூன்றொடுநான்கொ ன்பதாமுயிர்ப்பின்னுயிர்மூந்திடு, வான்றய காரம்வந்தாகமமாகும்" (வீரசோ. சந்தி.சுரு.) 7. மரம். [இது அகமமென்பதனீட்சி. இயங் குதலில்லாததுஎன்றபடி.]8. வந்துசேருதல். 9. வருதல். 10. வேதம். (சி.சி. அளவை.கரு. சிவஞாந.) [ஆகம.]

ஆகமமலைவமைதி— ஆகமமலைவாயினும் நாடகவழக்குப்பற்றியொன்று அமையுமென க்கோடல். (தண்டி. கஉஉ. உரை.)

ஆகமமலைவு— இன்னதுசெய்தல்அறமெ ன்று விதிக்குந்தருமநூல்விதியிற் பிறழவருவ து. (தண்டி. கஉக.) [ஆகம - தருமநூல். விரோத- மாறுபாடு.]

ஆகமன்—சிவன். (உ-ம்.)"ஆகமன்சிவனே" (சிந்தாமணிநிகண்டு.) [ஆகம: ஆகமத்தை யுடையவன் என்றபடி.]

ஆகமாநுமாநம்—உரையாலநுமாநம். (சி. சி. அளவை. கஉ. மறை.)

ஆகமோத்தம்— ஆகமத்திற்சொல்லப்பட் டது. [ஆகமோக்தம்: ஆகம; உக்த- சொல் லப்பட்டது.]

ஆகர்ஷித்தல்—இழுத்தல், பற்றுதல், கவ ர்தல். (உ-ம்.)"இவைகாட்டுசிவோயம், சிவோ கம் என்று ஒன்றையொன்று ஆகர்ஷிக்கும் இரண்டுபாவனையியற்றலாமே" ( சி. சி. சுஃ க. ஞானப்.) [மூ. ஆகர்ஷணம்.]

ஆகர—பிடி, என்னும் எவற்பொருள்கொ ண்ட ஆரியவினை.(கந்தபு.அக்கினிமுகா.வதை. உ௦அ-ஆம்பாட்டின்கீழ்க்குறிப்பு.) [ஆஹர.]

ஆகரசம்— 1. இரத்தினாதிகள். ( த. சி. போ.கஉசு பக்.) 2.சுரங்கத்திற்றோன்றுவது. (தர்க்கச. ச.) [ஆகரஜ: ஆகர - சுரங்கம். ஜ - பிறந்தது.]

ஆகரணம்— 1. அகற்றுதல். 2. எவுதல். 3. கொண்டுவருதல். 4. பிடித்தல், பற்றுதல். 5. விவாகசமயத்திற்கொடுக்குஞ் சீதனப்பொ பொருள். [ஆஹரண: ஆ; ஹ்ரு - எடு த்தல்.]

ஆகரம்— 1. உறைவிடம். (உ-ம்.) "எரி மணிபுட்பராகமென்றிவற்றிற்காகரம்" (பா ரத. இந்திர. கஉ.) [இது ஆகாரத்தின் குறு க்கம்.] 2. எடுத்தல். 3. கவர்தல். 4. குற்று வாள். (உ-ம்.) "மாயாவாதகா" என்ற எக பாதசெய்யுளில் நான்காமடி.(உதஞ்சா.உ-ம் புத். கசுக.) 5. சாலாங்கபாடணம். 6. சிரே ட்டம். 7. சுரங்கம். 8. திரள். 9. நிச்சுவா சம். 10. மண்கிண்டுங்கருவி. 11. வீடு. (உ-ம்.) "ஆகரமுதலியவிடந்தொறுமாய்கு வார்" (கந்தபு. இந்திரன்கா. கஉ.) [6. 7. 8. ஆகர: ஆ; ஹ்ரு-செய்தல். 10. ஆவர. 9. 2. 3. ஆஹர: ஆ; ஹ்ரு - எடுத்தல்.]

ஆகரன்— 1. உறைவிடமுடையோன். 2. கிண்டுவோன். [ஆவர:.]

ஆகரி—1.இராவிற்பாடும் ஓர் இராகம். (சை வச. மாணு. அ. உரை.) 2. சுரங்கத்திற்பிற ந்தது. [ஆகரிகா.] 3. திப்பலி.

ஆகருடணத்தம்பநவாதரோகம்— அர்தா

யாமவாதரோகம். (சீவரட். ௧௬எ.) [ஆக்ஷணம் - இழுத்தல்.]

ஆகருடணம்— 1. அறுபத்துநான்குகலைகளிலொன்று. அது: ஆகருடண கருமத்தைக் கூறுவது. 2. இழுத்தல். (உ-ம்.) "முன்னைசொற்றிடும் யோகத்தாலே- யாற்றலாகருடணஞ்செய்தாற்கயிறமையவீக்கி" (மச்சபு. பிரமாண்ட. எ.) 3. தூரத்திலிருக்கும பொருளைச்சமீபத்தில் வருவிப்பது. அது: தாமதகுணமெட்டனுளொன்று. (கூர்மபு. வருணை. ௧௪. உரை.) 4. நவநாதசித்தர்களாற் கற்பிக்கப்பட்ட கௌளயாமளாதிகளிற்சொல்லப்படும் அட்டகர்மங்களுளொன்று. அஃது ஒருவன் பொன், பெண் முதலிய வஸ்துக்களை இருந்தவிடத்திலிருந்து தானிருக்கும் இடத்துக்கு வரச்செய்தல். (உ-ம்.) "அகரமாதிமூன்றாகிய வாகருடணமே" (திருவிளை. எல்லாம்வல். ௧எ.) [ஆக்ஷணை.]

ஆகருடணி—காய் பழம் முதலியவற்றைக் கொளுவி இழுத்துப் பறித்தற்குரிய ஒருவகைத்தோட்டி. [ஆக்ஷணி.]

ஆகருடணை— 1. அழைத்தல். (பிங்கல. ௧௬௬௬.) 2. இழுத்தல்.

ஆகருடித்தல்—1. அழைத்தல். 2. இழுத்தல். (உ-ம்.) "அங்குசமுத்திரையினலேபூரகத்தால் ஆகருஷித்து" (சி-வி. கிரி. எஅ. உரை.)

ஆகருணநம்—காதினற்கேட்டல். [ஆகர்ணநம்: ஆ; கர்ண - கேட்டல்.]

ஆகல்—1. ஆகுக வென்னும் வியங்கோள். 2. ஆகுதல். 3. வினையெச்சமாய் வரற்பாலதொன்று வினைமுற்றுப்பெயராய் வருமிடத்து அப்பெயராகிய வினைமுதலுக்குப் பயனிலையைத்தன்னகத்தட்கொண்டு, ஆக்கப்பொருளிலே இடைச்சொற்றன்மையாய் வரும் ஒருதொழிற்பெயர். (உ-ம்.) "அவனேவலின் வழாஅகலையடைந்து" (பாரத. வாரணா. ௫0.)

ஆகலநம்— 1. அறிந்துகொள்ளுதல். 2. (கணக்கதிகா) எண்ணுதல். 3. சிறைசெய்தல். 4. பிடித்தல். 5. விசாரணை. 6. விரும்புதல். [ஆகலந.]

ஆகலூழ்—ஆகூழ். (உ-ம்.) "அவ்வினைவிரம்பகற்று-ஞைகலூழ்வலியால்" (திருவிளை. அங்க. ௪.)

ஆகலே—மிருகத்தின்கார்குளம்பு. (இராசவைத்.)

ஆகவநம்—1. பலி. 2. பலியிடுதல். [ஆஹவந.]

ஆகவநீயம்—1. மூவகைவேதிகளுள் ஒன்று; அது: நாற்சதுரமாய் யாகசாலையிலே வடக்கினகண் வைக்கப்படுவது. (கந்தபு. அசுரர்யாகப். ௪அ. உரை.) 2. வேதாக்கினிமூன்றனுள் ஒன்று; அது: நாற்சதுரமாய் யாகசாலையின்வடக்கின்கண் வைக்கப்பட்டுத் தேவர்களுக்கு அவிகொடுத்தற்குரியது. (பெரியபு. தில்லைவா. ௫. உரை.) [ஆஹவநீய.]

ஆகவபூமி—போர்க்களம். [ஆஹவபூமி.]

ஆகவம்—1. சிலை. 2. பலியிடுதல். 3. யுத்தகளம். (உ-ம்.) "மாகவந்தங்கள்கூறி வாய்ப்பவுறமிழற்றவாடு- மாகவந்தங்குமெல்லையகன்று" (கந்தபு. தேவகிரி. க.) [ஆஹவ.]

ஆகவே—ஆதலால். [முன்னர்க்கூறியதனலே பெறப்பட்டதொன்றனைப்பின்னர்விளக்குமிடத்து அவற்றினியைபை விளக்கிக்கொண்டு இடையில்நிற்பது.] (தொல். சொல். கிளவி. ௧௧. சேனை.)

ஆகளரசம்— அபின். (தைல. தைலவ. ௧௩௫.)

ஆகற்க— ஆகாதொழிக. (ஐங்குறு.)

ஆகற்பகம்—1. அவா. 2. அறிவுமயக்கம். 3. இருள். 4. பச்சாதாபம். 5. மகிழ்ச்சி. 6. முடிச்சு. [ஆகல்பக.]

ஆகற்பம்—1. அதிகப்படுத்தல். 2. அலங்காரம். 3. உடை. 4. கற்பகாலம்வரையும். 5. நோய். [ஆகல்ப.]

ஆகன்மாறு—ஆகலால். (பதிற்றுப்பத்து.)

ஆகன்னம்—காதுபரியந்தம். (உ-ம்.) "ஆகன்னமுறச்செம்பொன்வரைவில்வாங்கி" (பாரத. அருச்சுனன் தீர்த்த. ௪௬.) [ஆகர்ண: ஆ - வரைக்கும்; கர்ண - காது.]

ஆகஸ்மிகம்— காத்திராமற்சடிதியிற்சம்பவித்த ஒன்று. [ஆகஸ்மிக. இஃது அகஸ்மாத் என்பதினின்று பிறந்த தத்திதபதம்.]

ஆகா— 1. அஃறிணைப்பலவின்பாற்படற்கையெதிர்மறையில்வரும் ஒருவினைமுற்று 2. ஆகாதவெனப்பொருள்படும் ஒரு பெயரெச்சம். 3. ஆகி எனப்பொருள்படும் வினையெச்சம். 4. ஒரு கந்தருவன். (உ-ம்.) "வீணைபயில்வோன்முகம்பார்த்துரைப்ப-வாகாவெனலாலவர்க்கப்பெயர்த்திருரோ" (நைடத. அன்ன.

து. ௬௬.) [ஹாஹா.] 5. வியப்பையுணர்த்தும் ஓரிடைச்சொல். (உ-ம்.) "வீணைபயில்வோன்" என்னும் மேலுதாரணம்பார்.

ஆகாக்களங்ந-மிருதாரசிங்கி. அது: முப்பத்திரண்டுபொஷாணங்களிலொன்று.

ஆகாங்கிசை-ஆகாங்க்ஷை.[ஆகாங்க்ஷா]

ஆகாங்க்ஷை— 1. அவாய்நிலை. 2. ஆசை. [ஆ; காங்க்ஷ - விருப்பம்.]

ஆகாசக்கந்தரி-ஒருவகைக்கத்தரிப்பூண்டு.

ஆகாசக்கரை— } மனோராச்சியம்.

ஆகாசக்கரைக்கட்டு— } [ஆகாசத்திலே கரைகட்டுதல் பாவனையிலன்றி யில்லாமையால் மனோராச்சியத்தைக்கருதுகிறது.]

ஆகாசக்கல்- ஆகாசத்திற்பறக்கும் அணு.

ஆகாசகக்ஷை— ஒருவனுடைய பார்வைக்குப்பூமியைத்தொடுவதுபோலத்தோற்றும் அடிவானம். [ஆகாசகக்ஷா: ஆகாச - கக்ஷா - இடைக்கச்சை, சுவர்.

ஆகாசகங்கை- ஆகாசத்திலுள்ள கங்கை. [ஆகாசகங்கா.]

ஆகாசகபாலி— 1. புரளிக்காரன். 2. மிக நல்லவன்.

ஆகாசகம்— பறவை. [ஆகாசகம: ஆகாச, கம - செல்லலுடையது.]

ஆகாசகமநம்— 1. அறுபத்துநான்கு கலைகளிலொன்று. அஃது: ஆகாசத்திலே நடத்தலைப்பற்றியது. 2. ஆகாசத்திற்செல்லுகை. [ஆகாசகமந: ஆகாச;கமந போதல்.]

ஆகாசகர்ணி— ஒரு தேவதை. (வி-ணி. உ௩அ.)

ஆகாசகருடன்— 1. கொல்லன்கோவைக்கொடி. 2. சீந்திற்கொடி. 3. பேயத்தி.

ஆகாசகாமி— மூன்றுவகைக்குதிரைகளுள் ஒருவகை. அஃது: ஆகாசத்திற்செல்லும் வல்லமையுடையது. [ஆகாசகாமி: ஆகாச; காமி - செல்வது.]

ஆகாசத்தாமரை—1.இல்பொருள். [ஆகாசத்திலே தாமரையில்லையென்றபடி.] 2. ஒரு நீர்ப்பூண்டு. 3. கொட்டைப்பாசி.

ஆகாசதீபம்—1. உயர்ந்த கம்பத்தில் வைக்கப்படும் ஒருவிளக்கு. 2. சூரியன் துலாராசியிலிருக்கும் ஐப்பசிமீ முழுவதும் நாடோறுந்தவறாமல் மாலைக்காலத்திலே உயர்ந்தவிடத்திலே நல்லெண்ணெயிலேற்றப்படுந்தீபம். 3. கார்த்திகைமாசத்திலே விளக்கிட்டுத்திருநாளிலே உயர்ந்த கம்பத்தில் ஆகாசத்திலே நின்றெரியும்படி வைக்கப்படும் ஒரு விளக்கு. [ஆகாசதீப: ஆகாச; தீப - விளக்கு.]

ஆகாசபட்சி—சாதகப்புள்.

ஆகாசபூதவாதிமதம்— ஆகாசமென்னும் பூதமே பிரமம் என்பவனுடைய மதம். (த. நி. போ. உ௮உ. பக்.)

ஆகாசம்— 1. ஆகாயகணம். 2. இடம். 3. (சிற்றண்டத்திலே) வாயுபூதத்திற்கு மேலாக இருக்கும் ஓர் அசாதாரணபூதமாய் வட்டவடிவமும், அகாரபீசாக்கரமும், புகைநிறமும், அமுதவிந்துவென்னும் அடையாளமுமுடையதாய்ச்சதாசிவனை, அதிட்டாதாவாகக்கொண்டிருக்கும் ஒருபூதம். (சி. சி. உ: ௬௬, ௬௭, ௬௮, உரை.) 4. வெளி. [ஆகாச: ஆ; காச-பிரகாசித்தல்.]

ஆகாசமண்டலம்— 1. ககோளம். [ஆகாசமண்டல: ஆகாச, மண்டல - விருத்தாகாரம்.] 2. பாதத்தின் பொது இலக்கணங்களாகிய இருபது பேதங்களுளொன்று. (திருவிளை. சான்மா. ௬.)

ஆகாசமயம்—வெறுமை.

ஆகாசமாஞ்சி— சிறுசடாமாஞ்சிப்பூண்டு. [ஆகாசமாம்ஸி.]

ஆகாசயாநம்— 1. ஆகாசத்திற்செல்லும் ஊர்தி. ஆகாசத்திற்பிரயாணஞ்செய்தல். [ஆகாச: யாந - ஊர்தி, போதல்.]

ஆகாசவல்லி— 1. ஒரு பூண்டு. 2. சீந்தில். [ஆகாசவல்லீ: ஆகாச; வல்லீ - கொடி.]

ஆகாசவாசிகள்— 1. அந்தரசஞ்சாரிகள். 2. பதினெண் கணங்களுளொருவகையார். இவர்: ஆகாசத்தில் வசிப்போர். (திருமுரு. க௬அ. உரை.)

ஆகாசவாணி—அசரீரிவார்த்தை. [ஆகாசவாணீ: ஆகாச, வாணீ- வார்த்தை.]

ஆகாசவீணை— ஒருவகை வீணை. (வி-ணி. உ௨௦.)

ஆகாசாநந்தியாயதநலோகம்-(பௌத்த.) பிரஹ்மலோகமிருபதினுட் பதினேழாவது. (மணிமே.)

ஆகாசி—சீந்தில்.

ஆகாசிநி—ஒரு தேவதை. (வி-ணி.உ௩௬)

ஆகாசேசன்— 1. ஆதாரவற்றவன். [ஆகா

சமன்றி வேறு துணையில்லாதவன் என்றபடி.] 2. இந்திரன். [ஆகாபெலஹ: ஆகாஹ, ஸஹ - தலைவன் ]

ஆகாடம்—1. எல்லை. 2. செந்நாயுருவி. 3. வெண்ணாயுருவிப்பூண்டு. [ஆவாட.]

ஆகாத்தியம்— பொல்லாங்கு. [ஆவாத என்பதனின்றுவந்ததத்திதம்.]

ஆகாத— 1-2. அன்பெறாத அகாவீற்றுப் பலவின்பால்வினைமுற்றும் அம்முற்றுவினையாலணையும்பெயரும். 3. பொல்லாத எனப் பொருள்படும் ஒருஎதிர்மறைப்பெயரெச்சம். (உ-ம்.) "அந்தக்காரணமெனுமாகாதபேய்கள்" (தாயு. பரா. உ௫௧.)

ஆகாதகம்— நிவிர்த்திகலையிற் பிருதிவிதத்துவத்திலுள்ள நூற்றெட்டுப்புவனங்களுளொன்று. (சி-வி. சிரி. ௨௧. உரை.)

ஆகாதநம்—1. அடித்தல். 2. கொல்லுதல். 3. மிருகங்களைக்கொல்லுமிடம். [ஆவாதந: ஆ; ஹந - கொல்லுதல்.]

ஆகாதம்—1. அடித்தல். 2. ஆபத்து. 3. காயம். 4. குளம். 5. கொல்லுதல். 6. மிருகங்களைக்கொல்லுமிடம். [ஆவாத: ஆ; ஹந - கொல்லுதல்.]

ஆகாது— இயலாது. (உ-ம்.) "யாரையும் பிறாற்றம்மா - லாசறப்போற்றலாகாதது துணிவாகும்" (கந்தபு. பார்ப்ப. ௩௩.)

ஆகாமியப்பதிபந்தம்— } இன்னஞ் சில
ஆகாமியப்பிரதிபந்தம்— } பிறப்பெடுத்துப்பெரும் போகங்களநுபவித்தலாலல்லது இச்சைவிடாதென்கின்றசங்கற்பம் - வஸ்து நிச்சயந்தெரிந்து மஃதாகவொட்டாமற்செய்வது. (வேதா. சூ. ௧௫௧.) [பிரதிபந்தம்- தனக்குவேறாகநின்றுபந்திப்பது.]

ஆகாமியம்—1. அதிக்கிரமம். 2. (சித்தாந்தம்) மூவகைக்கன்மங்களுள் ஒன்று; அது: பிராரத்தத்திற்கிசைய எடுத்த தேகத்திலே அதன்பலம் புசிக்கையில் விருப்புவெறுப்புக்களாலுண்டாயபுண்ணியபாவங்கள். (சி. சி. உ: ௧௨. மறை.) 3. வருங்காலத்திற்குரியது. (வி-ணி.) [ஆகாமி.]

ஆகாயக்ககக்கரிக்காய்— ஒருவகைக்கக்கரிக்காய். (உ-ம்.) "காந்தியும்போமாகாயக்கக்கரிக்காய்" (பதார்த்த. எ௮௦.)

ஆகாயக்கத்தரி— ஆகாசக்கத்தரி.

ஆகாயகணம்— பாட்டியலிற் சொல்லப்பட்ட கணப்பொருத்தத்துளொன்று; அது: கருவிளங்காயென்னும் வாய்பாட்டால் வரு மூவசைச்சீர். இது நூலின் முதற்சீருக்குவிலக்கு. (இலக்கணவி. ௮௦௦. உரை.)

ஆகாயகமநம்— ஆகாசகமநம்.

ஆகாயகருடன்— ஆகாசகருடன்.

ஆகாயகாமி— ஆகாசகாமி.

ஆகாயச்சொல்— (பரதம்) தானேகூறல். இது பின்வரும் மேற்கோளாற்பெறப்படும்: "நெஞ்சொடுகூறல் கேட்போர்க்குரைத்தல், தஞ்சம்வரவறிவுதானேகூறலென் - றம்மூன் றென்பசெம்மைச்சொல்லே" (திருவிளை. கான்மா. ௧௭. உரை.)

ஆகாயசாரிகள்— சாரணர். (மணி-மே.)

ஆகாயத்தாமரை— அந்தரத்தாமரை. (உ-ம்.) "எப்போழ்துமந்தரத்தாமரையால்" (பதார்த்தகுண. ௩௩௬-ஆம்பாகம்.)

ஆகாயத்தூள்— ஒட்டடை.

ஆகாயதத்துவம்— வாயுதத்துவத்திற்கப்பாலிருக்குமொருதத்துவம்; அது:பத்துநூறுயிரநகோடியோசனைகொண்ட விஸ்தாரமுடையது (சி-வி. ஞாந. ௨௧. தாற்.)

ஆகாயப்பிரவேசம்— 1. அந்தரத்திற்புகுதல். 2. அறுபத்துநான்கு கலைகளிலொன்று; அஃது: ஆகாசத்திற்புகுதலைப்பற்றியது.

ஆகாயப்பூ— ஆகாயத்திலேபூத்தபூ,இஃது: இல்லாத ஒன்று என்பதைக்குறித்தற்கு உலகத்தாரால்வழங்கப்படும் ஒரு சொற்றொடர். (உ-ம்.) "ஒப்பிலாமலடிபெற்றமகனொருமுயற்கொம்பேறித்- தப்பிலாகாயப்பூவைப்பறித்தமைசாற்றினரோ" (சி. சி. பர. ௬ உலோ.)

ஆகாயபதவி— திரிசங்கு என்னுமரசனுடைய பதவி.

ஆகாயம்— 1. ஆகாசம். (உ-ம்.) "ஆகாயந்தேரோடுமிராவணனை"(தேவார. புள்ளிரு. ௭. திருஞா.) [இது: சிவனுடைய அட்டமூர்த்தத்துளொன்று.] 2. ஆகாயகணம். 3. சவுஞ்சுடுகாட்டை. 4. வீடு.

ஆகாயமஞ்சி— } சிறுசடாமாஞ்சி.
ஆகாயமாஞ்சி— }

ஆகாயவாணி— ஆகாசவாணி.

ஆகாயவீதி— நட்சத்திரவீதி.

ஆகாரகுத்தி — உள்ளத்து நிகழ்ச்சியை மறைத்துக்கொள்ளும் வேஷம். [ஆகார மஹ்ருதி: ஆகாரம் - தோற்றம். மஹ்ருதி - மறைத்தல்.]

ஆகாரசம்பவம்— உடம்பின் கிணநீர். [ஆஹாரஸம்஭வ: ஆஹார - உணவு. ஸம்஭வ - பிறத்தல்.]

ஆகாரணம்— அழைத்தல். [ஆகாரண.]

ஆகாரதாகி— வீடுசுடுவோன். [ஆகார தாஹிநு; ஆகார - வீடு. தாஹிநு - சுடு வோன்.]

ஆகாரம்— 1. அடையாளம். 2. ஆ என்னும் எழுத்து. (உ-ம்.) "மகரவாகாரநங்கை மணமகளுக்கண்டான்" (சேதுபு. சங்கரபா. ௫௧.) 3. உடம்பு. (உ-ம்.) "ஆகாரமழகெறிப்ப விருவருமாம்குடனிருந்தா ராவிபோல்வார்" (பாரத. காண்டவ. ௧௧.) 4. உருவம். (உ-ம்.) "நல்ல - வாகாரம்புத்திரர்பாலாம்" (சைவச. ஆசாரி. ௬.) 5. உள்ளத்தினிகழுங் கருத்தை வெளிப்படுத்தும் முகத்தோற்றம். (வள். ௭௪௨. பரி.) 6. கொண்டுபோதல். 7. கொண்டுவருதல். 8. நெய். 9. புரோட்சித்தல். 10. போசநம். (உ-ம்.) "ஆகாரதோட மறவன்னை புசித்தால்" (சைவச. ஆசாரி. ௬.) 11. போசநம்பண்ணுதல். 12. வீடு. [1, 2, 3, 4, 5. ஆகார. 6, 7, 10, 11 ஆஹார, ஹர - எடுத்தல். 8, 9, ஆகார: க்ரு - புரோட்சித்தல். 12. ஆகார.]

ஆகாரி— 1. உயிர். 2. பூனை. [ஆகார; இ - ஒரு விகுதி. உடம்பையுடையது என்றபடி. ஆகு: அரி - எலிக்குப்பகையென்றபடி.]

ஆகாரியம்—1. எடுக்கத்தக்கது. 2. ஒருவகையவிநயம். 3. ஔபாசநாக்கினி. 4. செயற்கையானது. [ஆஹாய.] 5. தின்னத்தக்கது. 6. வௌகிகம். 7. வஞ்சகம். 8. வியாப்பியம். [1, 2, 3, 5, 6, 7, 8. ஆகாய.]

ஆகாரியாரோபம்—காணப்பட்ட ஒருவடிவிலே காணப்படாத மற்றொன்றையாரோபித்தல்; அது: புத்திபூர்வமாகச் சிலையைத் தெய்வமாகக்கொண்டு வணங்குதலும், பிறனொருவனைத் தந்தையாகக்கொண்டு சிராத்தம்புசிப்பித்தலும் போல்வது.(பி-வி. இங்கு. ௧௯. உரை.) [ஆகாயாரோப]

ஆகாரா—வடிவமுடையவள். (உ-ம்.)"காளீவாயுவாகாரா" (சி-வி. ஞாந. ௪. உரை.) [ஆகாரா.]

ஆகாலம்—தக்ககாலம். [ஆகால.]

ஆகாலிகம்— அகாலசம்பந்தமுடையது.

ஆகாவம்–1. அழைப்பு. 2. நீர்த்தொட்டி. 3. நெருப்பு. 4. யுத்தம். [ஆஹாவ.]

ஆகிஞ்சநம்— தரித்திரம். [ஆகிஞ்சந: அ கிஞ்சந என்பதினின்றுவந்த தத்திதபதம். அ - எதிர்மறை. கிஞ்சந - அற்பம்.]

ஆகிடந்து—ஒருநிகழ்காலவிடைநிலை. (உ-ம்.) "உண்ணுகிடந்தான்" (நன். பதவி. ௧௮. உரை. இராமாநு.)

ஆகியர்—ஆகுக எனப் பொருள்படும் ஒரு வியங்கோள்வினைமுற்று. (உ-ம்.) "பொய்யா கியரோ பொய்யாகியரோ" (புறநா. ௨௩௩.)

ஆசிரதம்—வணங்கல்.

ஆகிரந்தம்—புன்கமரம்.

ஆகிரம்—விரிவு.

ஆகிரா—ஒரு பட்டணம்.

ஆகிருதி— 1. ஒருசந்தம்; அது: அடிதோறும் இருபத்திரண்டசைகொண்டநான்கடியுடையதாய் வரும்பாட்டு. (வீர. யாப்பு. ௩௩. உரை.) 2. குலம். 3. சாதி. 4. தேகம். 5. யாதிரி. 6. வடிவம். [ஆக்ருதி.]

ஆகிருதிகணம்— ஒரேசாதிப்பட்ட சொற்கூட்டம். (பி. வி. பக். ௨௦.) [ஆக்ருதிகணம்.]

ஆகிருனந்தம்— புன்கமரம்.

ஆகிலாகிநி— (சித்தாந்தம்) தாலுத்தானத்திலருக்கும் மகாரததிலுண்டான உசு-கலைகளில் ஒன்று. (சி-வி. இரி. ௨௨. தாற்.) [ஆஹ்லாதிநி.]

ஆகிலியர் - ஆகாதொழிக. (புறநா. ௨௧.)

ஆகின்று— ஆகாநின்றது. (ஐங்குறு.)2. ஆயிற்று. (புறநா ௧.)

ஆகு— 1. ஆகு என்னேவலுந்தெரிநிலைவினைப்பகுதியும் பெயரெச்சத்தொகையும். 2. எலி. 3. சவரி. (பிங்கல. ௨௪௧௬.) 4. கள்வன். 5. கொப்பூழ். 6. சாமரம். 7. பன்றி. 8. பெருச்சாளி. (உ-ம்.) "பேரவாகுவையுடையவனிளவல்பேருளால்"(கந்தபு. துணை. ௨௫.) 9. லோபி. [ஆகு.]

ஆகுகன்—விநாயகன்.[ஆகுரத:ஆகு- பெருச்சாளி. ரத - செல்வோன். பெருச்சாளியில் ஏறிச்செல்வோன் என்றபடி.]

ஆகுகை—ஆகை.

ஆகுங்காரியம்—செய்யக்கூடியகாரியம்.

ஆகுஞ்சநம்—1. அடக்குதல். 2. குவித்தல். 3. சுருக்குதல். (உ-ம்.) "தாமரைப்பூவின் கேசராக்கிரத்திலேயுள்ள சந்திரமண்டல

த்தை ஆகுஞ்சநத்தினலே மூலாக்கினியை வன்னிபீஜோச்சாரணத்தினலேயெழுப்பி" (சி. சி. அ: உக. சிவாக்.) 4. முடக்குதல். (உ-ம்.) "கிரியையாவது ஆகுஞ்சநப்ரசாரணப்பிரமணுதிகளன்றே" (சி. சி. உ: ருசு. சிவாக். 5. வளைத்தல். 6. விளைத்தல். [ஸ்ரீ ஆகுஞ்சந.]

ஆகுஞ்சிதம்— 1. ஒடுக்கியது. 2. சுருக்கியது. 3. சுருண்டது. [ஸ்ரீ ஆகுஞ்சித.]

ஆகுண்டநம்— (சித்தாந்தம்) அவகுண்டநம்; அது: பரசிவனை லிங்காதியில் ஆவாகநஞ்செய்யுமிடத்து நிகழ்த்தும் பத்துச்சம்ஸ்காரங்களில் ஒன்று - சிவனுடைய முகங்களிற்பிரத்தியக்ஷமாகப்பிரகாசமாதல். (சி-வி. கிரியா. உ௩.) [சிவனது இருதயாதிதாநங்களில் இருதயாதி யந்திரங்களைக்கவசஞ்சுற்றுவதுபோல நியாசஞ்செய்வதென்று சிலர் சொல்வர். [ஸ்ரீ ஆகுண்டந.]

ஆகுண்டிதம்—சோழை.

ஆகுநம் — உயிர்க்குறுதிசெய்தல். [ஸ்ரீ ஹிதம்.]

ஆகுதல்— 1. ஆதல். (உ-ம்.) "நூலாவருணூல்வல்லனாகுதல்" (வள். ௬அ௩.) 2. உண்டாதல்.

ஆகுதி— 1. அக்கினிகாரியம். (உ-ம்.) "தர்ப்பணத்திலர்ச்சனையிலாகுதியிலுந் தரிக்க" (சைவச. ஆசா. ௯உ.) 2. ஓமாக்கினியில் நெய்முதலியவற்றைப்பெய்கை. 3. தெய்வத்திற்கு இடும்பலி. (உ-ம்.) "ஆகுதிநடத்தினல்கார்" (சேதுபு. இராமனரு. உ௩௬.) 4. தெய்வத்திற்குப்பலியிடுகையுடன் சேர்ந்த ஒரு கிரியை. [ஸ்ரீ ஆஹுதி.]

ஆகுபாடாணம்— 1. எலிப்பாஷாணம். 2. காந்தக்கல். 3. வெள்ளைப்பாஷாணம். [ஸ்ரீ ஆகுபாஷாண.]

ஆகுபுக்கு—பூனை. [ஸ்ரீ ஆகுபுக்; (ஜ்) ஆகு - எலி. புக் - உண்பது. எலியைப்புசிப்பதென்றபடி.]

ஆகுபெயர் — ஒன்றன்பெயராயிருந்தும் அதனோடு சம்பந்தமுடைய மற்றொன்றற்குத்தொன்றுதொட்டுவருங் காரணப்பெயர். அது: "கடுத்தின்ரான்" என்பதிற்போல. ஒன்றன்பெயரானதற்கியைபிறிதைத் - தொன்முறையுரைப்பனவாகுபெயரே" (இலக்கண வி. ௧௧உ.)

ஆகுரதன் — விநாயகன். [ஸ்ரீ ஆகுரத: ஆகு - பெருச்சாளி. ரத - ஊர்தி.]

ஆகுரவம்—அதிகமானகநம். [ஸ்ரீ ஆகுரவ]

ஆகுலத்துவம்—கலக்கம். [ஸ்ரீ ஆகுலத்வம்]

ஆகுலம்—1. ஆரவாரம். 'ஆகுலநீரபிற' (வள். ௩௪.) 2. ஒலி. 3. கலக்கம். (உ-ம்.) "நாற்றமேற்றுவந்தெம்மை நலிந்திடத் - தோற்றுமாகுலச்சூழ்வினை" (அரிச்ச. வஞ்சனை. ௬௦.) 4. குழப்பம். 5. துன்பம். (உ-ம்.) "வாகுலப்பரியதோர்மாதர்மாலெனு- மாகுலப்புணரியுளமுழ்ந்தினேரையும்" (கந்தபு. குமாரபுரி. ௬அ.) 6. மாறுபாடு. [ஸ்ரீ ஆகுல.]

ஆகுலி— 1. கலக்கம். 2. சிற்றரத்தை. (உ-ம்.)"அச்சடை பார்." (தைல. தைலவ. ௧௧௧.) ஆவிரையென்பர்.

ஆகுலித்தல்—1. அழுதல். 2. ஆரவாரித்தல். 3. வருந்துதல். (உ-ம்.) "அடல்கடந்தபோர்வாளியென்றுகுலித்தழுதான்" (இராமா. பிரமாத். ௧௩௩.)

ஆகுவாகநன்— விநாயகன். (உ-ம்.) "வாரணமுகத்தோனகுவாகனன்வலவைகேள்வன்" (திருநெல். தாருகா. ௪௦.) [ஸ்ரீ ஆகுவாஹந: ஆகு - பெருச்சாளி. வாஹநம் - ஊர்தி.]

ஆகுளி—சிறுபறை. (உ-ம்.) "விரலூன்றுபடுகணுகுளிகடுப்ப". (மலை. ௪௭௦.)

ஆகுனி—ஆகுனிவாதம்.

ஆகுனிவாதம்—ஒருநோய்; அது வாதநோய் எண்பதினொன்று.

ஆகூதம்—1. அழைக்கப்பட்டது. 2. ஆச்சரியம். 3. கருதது. 4. விருப்பம். [1. ஸ்ரீ ஆஹூத; 2, 3, 4. ஆகூத.]

ஆகூதி—1. அழைத்தல். 2. சுவாயம்புமநுவுக்குச்சதரூபையிடத்துப்பிறந்தவள். (உ-ம்.) "சதரூபை - யங்கண்மாஞாலமுழுவதுமளிக்குஞ் சுவாயம்புமநுவினையணைந்து - பங்கமில்பிரியவிரதனையுலகம்பரவுமுத்தானபாதனைச்சொன் - மங்கைநற்பிரசூதிசிறந்தவாகூதியிவர்தமைவயிறுவாய்த்தனளால்" (கூர்ம. தமோ. ௪.) [ஸ்ரீ ஆஹூதி.]

ஆகேடகம்— வேட்டை. [ஸ்ரீ ஆகேடக.]

ஆகேடம்—வேட்டை. [ஸ்ரீ ஆகேட:]

ஆகேறு—கொன்றைமரம்.

ஆகை— ஆதல். (உ-ம்.) "மையலும்புணர்ப்புமற்றவாகையால்" (கந்தபு. மேரு. உ௬.) 2. உயருதல். 3. சம்பவிக்கை.

ஆகோடணம்— பிரசித்தமாகக்கூறுதல். [ஆகோஷண.]

ஆகோடிபம்—1. தடை. [ஆக்ஷேபம்போலும்.] 2. மறியல்.

ஆகோள்— பசுவையகப்படுத்திக்கொள்ளுதல். (உ-ம்.) "ஊர்கொலையாகோள்பூசன் மாற்றே" (தொல். பொருள். ௫அ.)

ஆகௌசலம்—சாமர்த்தியமின்மை. [அகௌஶல.] அ- இன்மை. கௌஶல- சாமர்த்தியம். இஃது: அகுசலமென்பதினின்று வந்த தத்திதபதம்.]

ஆங்க— கட்டுரைக்கண் அசைத்துநின்று அங்ஙனே எனப்பொருள்படும் ஓரிடைச்சொல். (உ-ம்.) "ஆங்கக்குயிலுமயிலுங்காட்டி" (தொல். சொல். ௨௭௯. நச்.)

ஆங்கண்—அவ்விடம். (உ-ம்.) "ஆங்கண் மேதகவிளங்கினன்" (சேதுபு. மங்கல. ௮௦.)

ஆங்கனம்— 1.அப்படி.(உ-ம்.)"ஆங்கனம் போற்றியடிபணிந்து" (பெரியபு. திருஞாந. ௯௯௯.) 2. அப்பொழுது. (உ-ம்.) "ஆங்கனமவர்தமைஆதிநோக்கி" (கந்தபு. திருவவதா. ௭௫.) 3. அவ்விடம். (உ-ம்.) "பாங்கியுந்தலைவியும்பகர்ந்து மற்றிவை-யாங்கனமிருத்தலும்" (கந்தபு. வள். ௧௨௬.) [ஆங்ஙனம் என்பதில் ஙகரம் - ககரமாகமருவிவந்தது.]

ஆங்காரம்—1. அகங்காரமென்னும் அந்தக்கரணம். (உ-ம்.) "ஆங்காரம்புத்தியின்கணுதித்து" (சி. சி. ௨: ௫௧.) 2. செருக்கு.(உ-ம்.) "ஆங்காரமிக்கமகவான்" (கந்தபு. திருவிளை. ௫௫.) 3. நெருப்புக்கொள்ளிக்கூட்டம். [1, 2.அஹங்காரம் என்பதில் ஹகார உயிர்மெய் கெட்டு முதனீண்டுவந்தவிகாரம் என்பாரும் ஹகாரமெய்கெட்டுத்தீர்க்கம்பெற்றுவந்த விகாரமென்பாரும் என இருதிறப்படுவர் ஆசிரியர். 3. அங்கார; அங்கார என்பதினின்று வந்த தத்திதபதம்.]

ஆங்காரகிதன்— நானென்னுஞ்செருக்கில்லாதவன்.

ஆங்காரி—செருக்குக்கொள்ளுகிறவன்.

ஆங்காரித்தல்—செருக்குக்கொள்ளல்.

ஆங்காலம்—ஆகுங்காலம்,சித்திக்குங்காலம்.(உ-ம்.)"ஆங்காலமெய்வருந்தவேண்டாம்."

ஆங்கிகம்— 1. உள்ளக்கருத்தைவெளிப்படுத்தும் உறுப்பின்றொழில். 2. சரீரசம்பந்தமுள்ளது. 3. புருவங்கண்முதலிய அங்கங்களாற் பிறப்பிக்கப்பட்ட காரியம். (அங்கம் என்பதினின்றுவந்ததத்திதம்.) [ஆங்கிகா.]

ஆங்கிரசம்— தருமநூல்பதினெட்டனுள் ஒன்று. (வேதா. சூ. பாயி. ௩. உரை.)

ஆங்கிரசன்— 1. ஆங்கிராமுனியின் சந்ததியான். 2. அங்கிராவின் மகனாகிய பிருகஸ்பதி. [ஆங்கிரஸ:]

ஆங்கிரம்—உபபுராணம் பதினெட்டனுள் ஒன்று. (வேதா. சூ. பாயி. ௩. உரை.)

ஆங்கிரன்— }
ஆங்கிரா— } ஆங்கிரசன்.

ஆங்கீரச— வியாழவட்டமாகிய அறுபது வருடத்தில் ஒன்று.

ஆங்கீரசன்—சத்தவிருடிகளுளொருவன்.

ஆங்கு— 1. அக்காலத்து. (சிறுபாணு. ௧௧௧. உரை.) 2. அப்படி. (உ-ம்.) "ஆங்கு தொழுவிடையேறுகுறித்தவளர்த்தார்" (சிலப்.ஆய்ச்சியர்குரவை.எடுத்துக்காட்டு)(உ-ம்) "நீவிர்கள்வெஃகியாங்கெலா - மிம்மையினெய்துமாறு" (கந்தபு. மாயையுபதே. ௨௧.) 3. அவ்விடம். (கந்தபு. (உ-ம்.) "ஆங்குறுகுமாரப்புத்தேள்" (கந்தபு. அயனைச்சிறைநீ ௩௨) 4. ஓர் அசைநிலை. (உ-ம்.) "தென்புலத்தார் தெய்வம்விருந்தொக்கலுனென்றாங்கு"(வள். ௪௩.) ஓர் உவமையுருபிடைச்சொல்.(உ-ம்.) "பலர்புகழ்ஞாயிறுகடற்கண்டாங்கு" (திருமுரு. ௨.)

ஆங்ஙனம் —அத்தன்மை. (உ-ம்.) "ஆங்ஙனம்விரிப்பின்" (தொல். பொரு. ௩௩௧.) 2. அவ்விடம். (உ-ம்.) "ஆங்ஙனமேகி" (கந்தபு. மகே. நகர்பு ௬௩.) [ஆ - அந்த. ஙனம் - இடம், தன்மை.]

ஆச்சமரம்—மூங்கைப்புல்.

ஆச்சரியத்துவம் — ஆச்சரியத்தன்மை. [ஆஶ்சர்யத்வம்: ஆஶ்சர்ய; த்வ - தன்மை.]

ஆச்சரியம்—புதிதாய் அல்லது வழக்கத்திற்கு மாறாய் ஒன்று தோன்றுதலால் உண்டாகும் மனக்கிளர்ச்சி. (உ-ம.) "சொன்னவக்கதையையுன்னுந்தோறுமாச்சரியமெய்தி" (இராமா.உத்.இலவண. ௪௦.) [ஆஶ்சர்ய.]

ஆச்சல்— 1. அசைத்தல். 2. பாய்ச்சல்.

ஆச்சா— ஒரு மரம்.

ஆச்சாட்டு— அற்பமான ஈரம். [ஸார்த்ர - என்னும் வடமொழி, சாட்டு எனத்திரிந்து ஆ என்பதனோடு கூடிவந்ததுபோலும். ஆ- அற்பம். ஸார்த்ர - சேறு, பசுமை.]

ஆச்சாதநசத்தி—(வேதாந்த) ஆத்துமஞானத்தை மூடிக்கொண்டிருக்குஞ்சத்தியாகிய விவர்த்தகமாயை. (த. நி. போ. ௧௧௫.)

ஆச்சாதநபலே—பருத்திப்பூண்டு. (உ-ம்.) "அறுக்கம்" பார் (தைல. தைலவ. ௩௩.)

ஆச்சாதநம்—1. (சித்தாந்த) ஆணவமலம். (சிவப்பிர. உ-ம் சூத். உ-ம் கவி. உரை.) 2. (வேதாந்த) ஆத்துமஞானத்தை மூடிய அஞ்ஞானம். (த. நி. போ. ௧௧௫.) 3. உறை. 4. சீலை. 5. மறைவு. (உ-ம்.) "மூன்றுமல மும் ஆன்மாவுக்கு அரிசிக்குத் தவிடுமுமியும் முளையும்போலப்பிரகாசாசசாதநமும் ஆவார கமும் உற்பத்தியேதுவுமாய்நிற்கும். (சி. சி. உ: அசு. சிவாக்.) 6. மூடி. 7. மேலங்கி. 8. வீட்டின் மேல் வெளியை மூடியிருக்கும் மர வுருக்கவிப்பு. [ஸூஆச்சாதந: ஸூ; சத - மூடு தல்.]

ஆச்சாதம்—1. உறை. 2. சீலை. 3. மூடி. 4. மேலங்கி. [ஸூஆச்சாத: ஸூ; சத-மூடுதல்.]

ஆச்சாதாநமுத்திரை— அத்திர முத்திரை முதலிய முத்திரைவிதங்களில் ஒன்று. (த. நி. போ. ௩௦௦.)

ஆச்சியகந்திமேகரோகம்— ஒருவகைமே கரோகம். இதில் மூத்திரமானது நெய்யை யொத்துச் சிலையிற்றோயத்துககொளுத்தில் எரிவதும் நாளொன்றுக்குக் குறுணியென் னும் நாலுபடியளவாக இறங்குவதுமாக இரு க்கும். (சீவரட். ௧௦௫.)

ஆச்சியசுந்தி—நெய்யினாற்செய்யுஞ்சுத்தி.

ஆச்சியத்தாலி—ஆச்சியபாத்திரம். [ஸூஆஜ்ய ஸ்தாலி: ஸூஆஜ்ய - நெய்; ஸ்தாலி - பாத்திரம்.]

ஆச்சியபர்—வைசியபிதிர். (மநு. ௩. ௧௯௭.)

ஆச்சியபுக்கு— அக்கினிதேவன். [ஸூஆஜ்ய புஜ்: ஸூஆஜ்ய- நெய்; புஜ்- உண்பவன்.]

ஆச்சியம்—நெய். (பிங்கல. ௧௧௩௨.)(உ-ம்.) "ஆசசியந்தயங்குமங்கேழ்க்குண்டத்தில்"(கா ஞ்சிபு. கச்சி. ௧௬.) [ஸூஆஜ்ய.]

ஆச்சிரமதர்மம்—ஆச்சிரமத்திலேநிற்போர் செய்யவேண்டிய விசேடதருமம். [ஸூஆச்ரம த்ர்ம: ஸூஆச்ரம - நிலை. தர்ம - கடன்.]

ஆச்சிரமம்—1. இளைப்பாறுமிடம். 2. சங் கம், கூட்டம். 3. சமயநிலை; இந்தநிலை, பிரம சரியம், கிருகஸ்தம், வானப்பிரஸ்தம், சந்நியா சம் என நான்குவகைப்படும். (உ-ம்.) "மூத றிவுடையோர் சேராச்சிரமமூன்றிற்குமொய் ம்பா-லேதமிலுபகாரஞ் செய்யில்லவாச்சிரம ந்தன்னை" (இரகு. அயனு. ௬.) 4. நிலை. 5. பர்ணசாலை. 6. முனிவர்கள் வசிக்குமிடம். (உ-ம்.) "அடையுமாக்கலைபல்வுளவதன்கண் ணச்சிரமம். (சேதுபு. நைமிசா. ௧௫.) [ஸூஆச்ரம: ஸூ; ச்ரம - பிரயாசமான செயலைச் செய்தல்.]

ஆச்சிரமி— ஆச்சிரமநெறியினிற்போன் [ஸூஆச்ரமிந்.]

ஆச்சிரமிகன்— ஆச்சிரமநெறிக்குரியவன். [ஸூஆச்ரமிக: ஸூஆச்ரம; இக - ஒருவ-வி.]

ஆச்சிரயம்—1. அடைக்கலத்தாநம். 2. அ டைக்கலம்புகுதல். 3. அரசர்க்குரிய அறுகு ணங்களுள் ஒன்றுகியகூட்டல்; அது: பகை யைவெல்லுதற்காக ஒருவனைத் தனக்குத்து ணையாகச்சேர்த்தல். (உ-ம்.) "ஆச்சிரயமங் கொருவன்செய்சமர் - கடக்கமற்ஒருருவனை நட்புக்காண்டலே" (இரகு.திக்கு.௨௨.) 4. உ ரியசெயல். 5. ஒன்றனையடுத்து அதனயலி லிருத்தல். 6. ஒன்றுடனொன்றிருத்தல். 7. குடியிருக்கும்வீடு.8.பாதுகாப்பு. 9.பொருள் அல்லது குணமிருத்தற்கான ஆதாரம். [ஸூ ஆச்ரய: ஸூ; ச்ரி - உதவுதல்.]

ஆச்சிரயன்—1. ஒருபொருளையடைந்திரு ப்பவன். 2. பாதுகாப்பவன். [ஸூஆச்ரய:]

ஆச்சிராமம்— 1. ஆளுகைசெல்லுநகாடு. [ஆச்சிரமம் என்பதில் ரகரம் நீண்டதுபோ லும்.] 2. ஆளுகைசெல்லுமிடம்.

ஆர்சிலை—கோமேதகரத்திநம்.

ஆர்சு— 1. ஆய்த்து என்னும் அஃறிணை யொன்றன்பால் இறந்தகாலத் தெரிநிலைவி னைமுற்றுவிகாரப்பட்டுவந்து ஆயிற்று எனப் பொருள்படும் ஒருசொல். (உ-ம்.) "மூக்க ணிறைநேர்மையாய்க்கைகொண்டுபோதிப்ப தாச்சறிவிலே"(தாயுமான. சுகவாரி. கவி.௬.)

ஆச்சுரிதகம்— 1. அட்டகாசம். 2. ஒன் றோடொன்று கைநகங்களை உரிஞ்சி ஓசையு ண்டாக்குதல். 3. குதிரைக்கனைப்பு. 4. கைந் நகத்தினால் ஊறுசெய்தல். 5. நொடித்தல். [ஸூஆச்சுரிதகம்.]

ஆச்சுவத்தம்—அரசமரத்தின்காய். (இது: அச்சுவத்தம் என்பதினின்று வந்த தத்தித பதம்.) [ஸூஆச்வத்த.]

ஆச்சுவரி—அரசமரம்.

ஆச்சேதநம்— } அற்பமாகவெட்டுதல்.
ஆச்சேதம்— } [ஸூஆச்சேதந: ஸூ- அற் பம். சேதந - வெட்டுதல்.]

ஆச்சோதநம்— வேட்டையாடுதல். [ஸூ ஷுாடிந: ஸூ; ஊ௲ந்ி - கட்டளைசெய்தல்.]

ஆச்யரசம்— 1. உல்லாசம். 2. களிப்பு. (உ-ம்.) "ஆச்யரசத்திலேபிரியனும்" (சி. சி. ச. ௩௧. சிவாக்.) [ஹாஸ்யரஸ.]

ஆச்ரயம்— இருக்குமிடம். (உ-ம்.) "வங்கிக்காச்ரயமாம்" (சி. சி. அளவை. க. சிவாக்.) [ஆஶ்ரயம.]

ஆசகவம்— சிவனுடைய வில்லு. [ஆஜ மவ.]

ஆசகாரம்— திரிபுரசங்காரத்திலே சிவனேறிய இடபம். [ஆஜகார.]

ஆசங்கம்— 1. அடர்த்தி. 2. அண்மை. 3. சேர்ந்திருத்தல். [ஆஸங்ம.]

ஆசங்கித்தல்—சந்தேகங்காட்டுதல். (உ-ம்.) "சாங்கியர்மதம்பற்றியாசங்கித்து" (சி. சி.க: ௧அ. சுப்.)

ஆசங்கை—1. சந்தேகம். (உ-ம்.) "மழையென்-றாசங்கைகொண்டசொடைமீளியுண்ணல்சராமன்"(இராமா. நாகபா. ௨௬௩.) 2. சிந்தித்தல். 3. பயம். 4. விசாரணை. [ஆஶங்கா: ஆ; ஶங்கி - சந்தேகம்.)

ஆசட்சு— 1. கண். 2. பண்டிதன். [ஆசக்ஷுஸ் : ஆ; சக்ஷ - பேசுதல்.].

ஆசத்தர்—விருப்புள்ளவர். (பௌட். பசு. ௪௨அ.)

ஆசத்தி— 1. இலாபம், சம்பாத்தியம். 2. சமவாயசம்பந்தம். 3. சாமர்த்தியம், வல்லபம். 4. பதங்கள் ஒன்றையொன்று தொடர்ந்திருத்தலாகிய அண்மை. (சைவப். ௨௯.) 5. பற்றித்தொடரும் விருப்பம். (உ-ம்.)"எப்போதுஞ்சிவபூசை அக்கினிகாரியமிவற்றிலாசத்தியுள்ளவனாயிருப்பது". (சி-லி. கிரி. க. உரை.) [1, 2, 4. ஆஸக்தி; 5. ஆஶக்தி.]

ஆசந்தன்—விட்டுணு. [ஆஸந்த:]

ஆசந்தி— சவங்கொண்டுபோகும் பாடை. [ஆஸந்தீ.]

ஆசந்திரகாலம்—சந்திரனுள்ளகாலம்வரையும். (ஆ - வரையும்.)

ஆசந்திரார்க்கம்— சந்திர சூரியருள்ளகாலம்வரையும். (உ-ம்.) "நின்குலமாசந்திரார்க்கஞான்றுநின்றிலங்கவென்றே" (மச்சபு. சோமவமிச. ௧௦.) [ஆ- வரையும். சந்த்ர; அர்க - சூரியன்.]

ஆசந்நகாலம்—1. மரணகாலம். 2. மரணத்துக்குக்கிட்டியகாலம். [ஆஸந்நகால: ஆ; ஸத் - போதல்.]

ஆசந்நப்பிரசவம்— பிரசவிக்குங்காலத்தினது அணிமை. (சீவரட். ௨௦அ.)

ஆசந்நம்— 1. பிற்பொழுது. 2. காலத்திலாவது இடத்திலாவது எண்ணிலாவது கிட்டியிருப்பது. [ஆஸந்ந.]

ஆசநத்தடைப்பு — குதாவர்த்தவாதம். (உ-ம்.) "மையலாசநத்தடைப்புவலியிழுப்புதாப்பீடை" (தைல. தைலவ. ௧௧௭.)

ஆசநநம்—உயர்குடிப்பிறப்பு. [ஆஜநந.]

ஆசநம்—1. அங்கயோகம் எட்டினுள் ஒன்றாகிய இருத்தல், அது: சுவத்திகம், கோமுகம், பதுமம், வீரம், சிங்கம், முத்தம், மயூரம், சுகம், பத்திரம் என ஒன்பது வகைப்படும். (சூத. ஞா௪ந. ௧௫: ௨.) 2. அரசர்க்குரிய அறுகுணங்களுள் ஒன்றாகிய இருத்தல்; அஃது: ஏற்றகாலம்வரையும் பகைவர் மேற்செல்லாதிருத்தல். (உ-ம்.)"ஆசநமுநதியகாலமங்குணர்ந்திருத்தல்" (இரகு. திக்கு. ௨௧) 3. பலிபீடம்.4. பிருட்டம். 5.புலித்தோல், பலகை, பாய்முதலிய இருக்கை. (உ-ம்.) "தூயவாசநத்தேற்றி" (இரகு. அயனுதய. ௨.) 6. மலவாயில் (உ-ம்.) "ஆசநமுபத்தங்கைகால்வாக்கிவையைந்தாங்கனமம்" (மச்சபு. பிரமமு. ௧௧.) 7. யானைமேற்றவிசு. [ஆஸந.]

ஆசநமூர்த்தி— சிவலிங்கம்.

ஆசநவாயில்—மலவாயில்.

ஆசநன்—சுக்கிரன்.

ஆசநாதர்சம்— நிலைக்கண்ணாடி. [ஆஸந - இருப்பு. ஆதர்ஶ - கண்ணாடி.]

ஆசம்—1. ஆசநம். 2. உரைகல். 3. சிரிப்பு. (மிங்கல. ௧௧௧௭.) 4. நெய். (யகரமெய் கெட்டு ஆசம் எனறாயிற்று.) 5. வில். [1, 5. ஆஸம்; 3. ஹாஸ; 4, ஆஜ்யம்.]

ஆசமநகம்— வெற்றிலைத்தம்பலக்களாசி. [ஆசமநக.]

ஆசமநத்திரவியங்கள்— சாதிக்காய், கிராம்பு, ஏலம், பூலாங்கிழங்கு, சண்பகமொட்டு, பச்சைக்கர்ப்பூரம் என்னும் ஆறுதிரவியங்கள். இவை: ஆசமநத்தக் குபயோகமானவைகள். (திருவாத. திருப்பெருந். ௭௦. விருத்தி.)

ஆசமநம்—1. ஆசமநீர். (உ-ம்.) "அமிழும்"பார். 2. உள்ளங்கையில்விடப்பட்ட அற்ப

ஆசாடிபோகம்—சாந்திரமான ஆடிமாதத்திலே உத்திரட்டாதி நட்சத்திரம் வருந்திநம. இத்திநம் சோதிடர்களாலே அவ்வவ்வருடத்திலே இன்ன இன்னதானியம்பலிதமாகும், இன்ன இன்னவஸ்து மலியும், இன்ன இன்னவஸ்து ஒறுக்கும், மழை குறையும், அல்லது மிகும் என்னும் இவைமுதலியன பரீட்சித்தறிதற்குரியதிநமாம். (பிருகற்சங்கிதை. பூர்வபாகம். அத்தியாயம். உ௩.)

ஆசர்த்திதம்—1. அடையப்பட்டது 2. காரியப்பட்டது. 3. பரந்தது. [ ஆஸ்ரிதம்; ஆ; ஸ்ரீ - போதல்.]

ஆசாநதேவர்— தேவர்களுளொருசாரார். (உ-ம்.) "சித்தர்கிந்நராசாநதேவர்" (வேதாரணியபு. தேவல. க.)

ஆசாநம்—பிறப்பு. [ஆஜாநம்.]

ஆசாபங்கம்— ஆசைப்பட்டது கிடையாதொழிதல்.[ஆஶாபங்க: ஆஶா-விருப்பம். பங்க - கேடு.]

ஆசாபந்தம்— 1. ஆசாபாசம். 2. சிலம்பிநூல்.[ஆஶாபந்த:ஆஶா;பந்த-கட்டு.]

ஆசாபாசம்— அறிவுமேற்படாது பந்தித்துநிற்கும் ஆசை. [ஆஶா - ஆசை பாஶ- பந்தம்.]

ஆசாம்பரன்—சிவன். (உ-ம்.) "அமகாவாசாம்பர"(திருப்புகழ். ௪௩௫.) [ஆஶா-திக்கு அம்பர - வஸ்திரம்.]

ஆசாமி—1. ஒருமனிதன். [அராபி.] 2. ஓர் உத்தியோகஸ்தன். [அராபி.]

ஆசாரக்கோவை— சங்கமருவிய பதினெண்கீழ்க்கணக்கினுள் ஒன்று. இது செய்தவர் பெருவாயின் முள்ளியென்பவர்.

ஆசாரகீநன்—ஆசாரமில்லாதவன்.[ஆசார ஹீந; ஆசார; ஹீந - இல்லாதவன்.]

ஆசாரச்சாவடி— கொலுமண்டபம்.

ஆசாரபோசன்—பெருந்தேகி.

ஆசாரம்—1. அரசிருக்கை.(பிங்கல.௬௫௩.) 2. உபசாரம். 3. ஒழுக்கம். (உ-ம்.) "ஆசாரணத்தவஞ்செய்து" (சிந்தா. முத். உ௧௧.) 4.ஒழுக்கவிதி. 5.சேலை. 6. சுத்தம். 7. சேனைகள்போயசசத்துருவை வளைத்தல். 8. தருமசாத்திரத்திலுள்ள மூன்று காண்டங்களுளொன்று; அது: விதிவிலக்குகளால் ஒழுக்கத்தைக்கூறுவது. (ஆ; சர் - போதல்.) 9. பிரதிட்டைசெய்தல். 10. பெருமழை. (உ-ம்.) "ஐவகையதருமலரிஞசாரம்பொழிந்தார்த்தார்" (சேதுபு. தேவிபுர. ௭௦.) 11. போசகம். 12. வழக்கம். 13. வேதாகமங்களிற்சொல்லியவைகளை அநுட்டித்தல். (உ-ம்.) "ஒழுக்கமன்பருளாசாரம்" (சி. சி. உ: உ௩. மறை.) [6, 7, 10, 11. ஆஸார. 3, 4,6, 12, 13. ஆசார:]

ஆசாரவந்தன் — சன்மார்க்க முள்ளவன். [ஆசாரவந்:]

ஆசாரவாசல்— ஆசாரவாயில்— 1. இராசாவினது கொலுமண்டபத்தின் றலைவாயில். 2. தலைவாயில்.

ஆசாரவீநிகள் — ஆசாரமில்லாதவர்கள்: (உ-ம்.) "முகந்துலக்கிகளாசாரவீநிகள்" (திருப்புகழ். ௩௮௭.)

ஆசாரி—1. ஆசாரமுடையவன். 2. உபாத்தியாயன். 3. ஒழுக்கவிதிகளையநுசரிப்போன். 4. கம்மாளருககு ஒரு பட்டப்பெயர். 5. குரு. [ஆசாரிந.]

ஆசாரியவிருத்தநம்—ஆசாரிய அதிகாரம்.

ஆசாரியன்—1 உபநயநஞ்செய்வித்து வேதம் ஓதுவிப்போன். 2. உபாத்தியாயன். 3. குரு. 4. சமயதீக்ஷை, விசேஷதீக்ஷை, நிருவாணதீக்ஷை, ஆசாரியாபிடேகம் என்னும் நான்கும்பெற்றுக்கொண்டு நித்தியகருமங்களோடு தீக்ஷைபிரதிட்டைமுதலிய கிரியைகளுஞ்செயபவன்.(சைவவினா. ௩௩.) (உ-ம்.) "வண்புகழாளெனன்றாயவாசாரியனை"(ஆத. எக்கி. உ: ௫௧.) [ஆசார்ய:]

ஆசாரியாணி— ஆசாரியன்மனைவி. [ஆசார்யாணி.]

ஆசாரியாபிடேகம்— குருவாசவருதற்குச் செய்யப்படும் ஸ்நாநத்தோடுகூடிய தீக்ஷைக் கிரியை.[ஆசார்யாபிஷேக: ஆசார்ய- குரு. அபிஷேக - ஸ்நாநம்.]

ஆசாள் —1. குருவின்மனைவி. 2. தலைவி. (சூ. நிகண். உ: ௬௨.)

ஆசான்—1. அருகன். (சூ. நிகண். க: உ.) 2. உபாத்தியாயன். (உ-ம்.) "ஆசானுரைத்ததமைவரக்கொளினும்" (நன்னூல். பொதுப்பாயிர. ௪௪.) 3. கந்தசுவாமி. (சூ. நிகண். க: உ௩.) 4. குரு. (உ-ம்.) "ஆரியனுமாசான்வந்து" (சி. சி. அ: உ௮.) 5. சுக்கிரன். (உ-ம்.) "நீயுமையென்னவாசானிருபனுக்குரைக்கலுற்றான்" (காதபு.அண்ட.௪.)6.தலைவன், மூத்

மாணநீரை உட்கொள்ளுதல். (உ-ம்.) "இனை யசியமத் தொழின் முடித்து மனையினெய்தி யாசமநம் - புனிதநெறியிற்றனியியற்றி" (கூர் மபு. நித்திய. கக.) 3. வாயையலசிக்கொப்புளித்தல். [ஆசமந: ஆ; சம் - உண்ணுதல்.]

ஆசமநீயம்— ஆசமநஞ்செய்தற்குரிய நீர். [ஆசமநீய: ஆசமந; பாணய-ஒருவிகுதி.]

ஆசமி— ஆசமியென்னேவலுந் தெரிநிலை வினைப்பகுதியும்.

ஆசமித்தல்—ஆசமநஞ்செய்தல். (உ-ம்.) "அணிநீர்காந்தொட்டாசமித்தான்" (சேதுபு. சேதுவந். உக.)

ஆசயம்— 1. அதிட்டம். 2. அங்காசயம். 3. அநுகூலம். 4. அபிப்பிராயம். 5. உடைப்பொருள். 6. உறைவிடம், தங்குமிடம். 7. ஊழ் 8. ஒன்றைத்தன்னகத்துட்கொண்ட உடம்பினுட்பை. (உ-ம்.) "கருப்பாசயக்குழிக்கேதள்ளுமோ" (பட்டணத்தார்பாடல். திருச். க.) 9. களஞ்சியம். 10. கூட்டிச்சேர்த்தல். 11. தன்னிட்டம். 12. படுக்கையறை. 13 மநம் [1, 2, 3, 4, 5, 6, 7, 8, 9, 11, 12, 13. ஆசய: 10. ஆசய.] (ஆ; சீ-தங்குதல்; ஆ; சீ - கூட்டுதல்.)

ஆசர்—ஆயத்தம். (இந்துஸ்.)

ஆசரணம்—1. அநுசரித்தல். 2. ஒழுக்கம். 3. செய்கை. 4. வந்துசேருதல். 5. வழக்கம். [ஆசரணம்: ஆ; சர் - போதல்.]

ஆசரணை—ஆசரித்தல். (உ-ம்.) "மங்களாசரணை" (வேதா. சூ. அ)

ஆசரி— ஆசரியென்னேவலுந் தெரிநிலை வினைப்பகுதியும்.

ஆசரித்தல்—1. அநுசரித்தல், கைக்கொள்ளுதல். (உ-ம்.) "ஆசரிக்குங்கண்டியுமொன்றும்" (சைவச. ஆசா. சஓ.) 2. அநுட்டித்தல், செய்தல். (உ-ம்) "உக்கிரதவமாசரிக்கிற" (வேதா. சூ. உச. உரை.) 3. உபசாரணை. 4. வணங்கல்.

ஆசரிதம்—1. ஆசரிக்கப்பட்டது. 2. வழங்கப்பட்டது. 3. விதிக்கப்பட்டது. [ஆசரித.]

ஆசரிதவுபாயம்—(தர்மசாஸ்திரம்) கொடுத்தகடன் வாங்குதற்குச்செய்யும் நால்வகையுபாயங்களுள் ஒன்று; அது: தரிசனனவன் கடன்கொடுக்கவேண்டியவனுடைய பெண்டுபிள்ளைகளையும் பசுக்களையும் வெளியிற்போகாதபடிதடுத்து வீட்டையடைத்து முத்திரையிட்டுத்தன்கடனைக் கொடுக்கும்படிசெய்தல். (மிருதிசந். கoஎ.) (இஃது அசரித என்பதினின்றுவந்த தத்திதபதம்.) [அசரித - போகாத.

ஆசரிப்பு—அநுசரிப்பு.

ஆசலே— ஆடாதோடை. (இராசவைத்.)

ஆசவத்துரு—பனைமரம். [ஆஸவத்ரு; ஆஸவ - கள்ளு, த்ரு - மரம்.]

ஆசவம்—1. கள்ளு. 2. விரைவு. [ஆஸவம்; 2. ஆஸவா.]

ஆசவுசம்—ஆசௌசம். (உ-ம்.) "மன்னுகுரவனிறந்திடிலாசவுசமூன்றுநாண்மருவும்" (கூர்மபு. சூதகா. ௩.)

ஆசற—முற்ற. (உ-ம்.) "சொல்லப்புகுந்த பொருளை யாசறக்கூறுது ஒழியப்போதல்" (தொல். பொரு. ௬௬௪ உரை.)

ஆசறுதல்—அழிதல், முடிதல். (உ-ம்.) "ஊழிசென்றசறுங்காலத் தந்நிலையதாகி" (இராமா. சரபங்க ௩௰.)

ஆசறுதி— 1. குற்றமின்மை. [ஆசு - குற்றம். அறுதி - கெடுதல்.] 2. முடிவு.

ஆசா—1. ஆசை. (உ-ம்.) "ஆசாபிசாசமுதலாம்" (தாயு. சின்மய. ௩.) 2. திக்கு. (உ-ம்.) "ஆசாம்பரன்" பார். 3 நம்பிக்கை.

ஆசாசி—சீந்திற்கொடி.

ஆசாட்டம்— 1. அழுகை. 2. அற்பமான தோற்றம். [ஆசு - அற்பம்; ஆட்டம் - அசைதல்.]

ஆசாடகம்—ஆடிமாசம். [ஆஷாடம்.]

ஆசாடபூதி— முருக்கமரத்தாற்செய்யப்பட்டதண்டமாகிய செல்வமுடையவன். (பஞ்சதந். மித்.) [ஆஷாட - முருக்கமரம். பூதி - செல்வம்.]

ஆசாடம்— 1. ஆடிமாதம். 2. துறவிகள் வைத்திருக்கும் பலாசந்தண்டு. 3. பொதியமலை. 4. முழுக்கு. 5. பிரதிட்டாசலேயிலிருக்கும் புவநங்களுளொன்று. (சி-லி. கிரி. ௨௧. உரை.) [1, 2, 3, 4. ஆஷாடம்; 5. ஆஷாட.]

ஆசாடா— பூராட உத்திராடநட்சத்திரங்கள். [ஆஷாடா:]

ஆசாடி— 1. ஆடிமாதப்பௌர்ணிமை. 2. சிவலோகத்திலே உத்தரதிசையோலக்கஞ்சேவிக்கும் முக்கிய தேவதைகளிலொருவன். (வி-ணி. ௨௪௬.) 3. உய்யகாஷ்டகரிலொருவன். (வி-ணி. ௨௭௧.) [ஆஷாடீ.]

தோன். 7. பாலையாழ்த்திறம். (பிங்கல. ௩௩௭௬.) 8. வியாழன். (உ-ம்.) "ஆதியிற்சேய் கதிரம்புலிசுன்னந்தத்தாசான்வெள்ளி" (விதாந. காலசக். ௨௩.) [ஆசாரியன் என்பது ஆசான் எனவிகாரமாயிற்று.]

ஆசி— 1. ஆசியென்னேவலுந் தெரிநிலை வினைப்பகுதியும். 2. சமநிலம். 3. சிந்தை. 4. பாம்பின்பல்லு. 5. பிரார்த்தனை, வேண்டல். 6. போதல். 7. யுத்தகளம். 8. யுத்தம். 9. வாழ்த்து. (உ-ம்.) "காசிபன்முதற்கடவுள் வேதியர்கருத்தா - லாசிபெறுமப்புதல்வர்" (பாரத. சம்ப. ௧௦௭.) 2, 3, 6, 7, 8. ஆஜி: அஜ் - போதல். இ - ஒருவிகுதி. 4, 5. 9, ஆசீஸ் : ஆ; ஸீஸ் - விதித்தல்.]

ஆசிக்கல்— சாகச்சிலை.

ஆசிகம்— ஆட்டுப்பிழுக்கை. (சீவரட். ௨௯௧.)

ஆசிகரோகம்— கருவிழியிற்பிறக்கும் ஒருவகைரோகம். அது கருவிழியில் உயர்ந்தும் பளபளத்துமிருக்கின்ற விரணக்கொப்புளத்தையும் அதைச்சுற்றிலுஞ் சிறு சிறு கொப்புளங்களையுமுண்டாக்கும். (சீவரட். ௨௯௧.) [இது ஆட்டின் பிழுக்கையைப்போலக் கரடானகொப்புளங்களையெழுப்பலால்வந்தபெயர்.]

ஆசிகன்— 1. இருப்பவன். 2. வாளாயுதமுடையவன். (இஃது அசி என்பதினின்று வந்ததத்திதபதம்.) [ஆஸிக: ஆஸ் - இருத்தல். இக - ஒருவிகுதி. அஸி - வாள்.]

ஆசிடல்— ஆசிடுதல்.

ஆசிடுதல்— 1. நேரிசைவெண்பாவிலேதனிச்சொற்கு முன்னே செப்பலோசைநிறைத்தற்பொருட்டு ஓர் அசையேனும் இரண்டசையேனுஞ்சேர்த்தல். (உ-ம்.) "நெரிநுண்கருங்குழனேரிழையாசிட்டநேரிசையே" (யாப். காரிகை. செய்யு. ௩.) 2. பற்றுசுவைத்தல். [ஆசு - அற்பம். இடுதல் - வைத்தல்.]

ஆசிடை— 1. கூட்டம். 2. சேலை. 3. வாழ்த்து. (உ-ம்.) "அந்தணராசிடைகூறி" (சூளா. குமாரகால. ௨௦.)

ஆசிடைநேரிசைவெண்பா— தனிச்சொற்குமுன்னே ஆசிடப்பெற்றுவரும் நேரிசைவெண்பா. (யாப். காரிகை. செய்யு. ௩. உரை.)

ஆசிடையிட்டெதுகை— ஆசிடையெதுகை.

ஆசிடையெதுகை— (யாப்பிலக்கணம்.) எதுகைவகையுளொன்று. அது: யரலழ என்னும் நான்கெழுத்துக்களுள், ஒன்று - செய்யுளில் யாதேனும் ஓரடியில் எழுத்தொன்று மெதுகையில் வரும் எழுத்திற்கும் அதன்முதலெழுத்திற்கும் இடையேவருவது. (உ-ம்.) "யரலழவென்னுமீரிரண்டொற்றும்-வரன்முறைபிறழாது வந்திடையுயிர்ப்பினஃ - தாசிடையெதுகையென்றறிதல்வேண்டும்" (யாப். காரிகை. ஒழிபு ௬. உரை.)

ஆசிடைவெண்பா— ஆசிடைநேரிசைவெண்பா.

ஆசித்தம்— 1. காரியப்பட்டது. 2. சித்தியானது. [ஆஸித.]

ஆசித்தல்— ஆசைப்படுதல். (உ-ம்.) "ஆசித்தார்மநத்திற்புகுமுத்தம" (திருப்புகழ். ௪௦௨.) (உ-ம்.) "தரிசிக்கும்பொருட்டு ஆசித்தான்" (ஞானவா. வைரா. ௨அ. உரை.)

ஆசிதகம்— இருத்தல். (கொக்கோ. ௬: ௫.)

ஆசிதசுதன்— சகரசக்கரவர்த்தி. [அசிதன் மகன் என்றபடி.]

ஆசிதம்— 1. ஆசநம். 2. நகரம். 3. நீலநிறமுடையது. (த. நி. போ. ௧௧௦.) 4. வண்டியிலேற்றும்பாரம். 5. பத்துப்பாரங்கொண்ட அளவு. 6 வசிக்குமிடம். (அசிதம் என்பதினின்றுவந்த தத்திதம்.) [1, 2, 3, 6. ஆஸித 4, 5. ஆசித.]

ஆசிதையன்— நாவிதன்.

ஆசிப்பு— ஆசித்தல்.

ஆசியக்குவாதவாதரோகம்— ஒருவகை வாதரோகம். (சீவரட். ௧௭௫.) [அது வாயைக்கோதிக்கும்படி செய்தலால் வந்த பெயர்.] [ஆஸ்ய - வாய்.]

ஆசியபாகபித்தரோகம்— ஒருவகை பித்தரோகம். அது: வாயிற்கொப்புளங்களெழும்பிப்பழுத்துடைதல் முதலிய குணங்களையுண்டாக்கும். (சீவரட். ௬அ.)

ஆசியபாகவாதம்— ஆசியக்குவாதவாதம். (சீவரட். ௧௭௫.)

ஆசியம்— 1. அங்காந்தவாய். 2. அவ்விடம். 3. அவமதிச்சிரிப்பு. 4. கருஞ்சீரகம். 5. சிரித்துவிளையாடல். 6. சிரிப்பு. 7. முகம். 8. லலாடமத்தியத்திலிருக்கும் விந்துஸ்தானம். (சி-வி. கிரி. ௧௨. தாற்.) 9. வாய். [1, 7, 9. ஆஸ்யம்: ஆ- முன். அஸ் - போதல். 3, 5, 6. ஹாஸ்ய: ஹஸ் - சிரித்தல்.] ய - ஒரு விகுதி.]

ஆசியரசம்— நவரசங்களுள் ஒன்றாகிய நகைச்சுவை. (சி. சி. ௪: ௩௩. சிவாக்.) [ஹாஸ்ய ரஸ: ஹாஸ்யம் - நகை. ரஸம் - சுவை.]

ஆசியாசலம்— வாயிலூறுநீர். [ ஆஸ்யா லவ: ஆஸ்ய - வாய். ஆஸவ - ஊறுநீர்.]

ஆசியாட்சேபவாதரோகம்—காதிலும் நாசியிலுஞ்சாடையிலுமறசரித்து வாயினடுவிலும் அதற்குக்கீழிலுமேவிலுஞ் சஞ்சரித்துக்கொண்டேயிருக்கும் ஒருவகைவாதரோகம். (சீவரட். கஎஉ.) [ஆஸ்ய - வாய்.]

ஆசியை—இருக்கை. [ஆஸ்யா.]

ஆசிரபம்—மூலநட்சத்திரம். [ஆஸ்ரப: இரத்தத்தைக்குடிக்கும் இராக்கதனைத்தெய்வமாக உடையதென்பது.]

ஆசிரபன்— இராக்கதன். [ ஆஸ்ரப: ஆஸ்ர - இரத்தம். ப - குடித்தல்.]

ஆசிரம்—1. இடம். [ஆசிரயத்தின் விகாரம்போலும்.] 2. கண்ணீர். [ஆஸ்ர.] 3. தீ. [ஆஸிர.]

ஆசிரமம்—1. ஆச்சிரமம். 2. பன்னசாலை. (உ-ம்.) "அறவோர்வைகுமாசிரமத்தெழுந்தருளி" (சேதுபு. சக்கர. க.)

ஆசிரமி— ஆச்சிரமி. (த. நி. போ. உஅ௬.) பக்.)

ஆசிரயம்—1. ஆச்சிரயம். 2. இருப்பிடம். (உ-ம்.) "தூமத்தையுடையபர்வதம் நிச்சிதார்த்தமாகிய வஹ்நிக்கு ஆசிரயமாம்" (சி. சி. அளவை. க. சிவாக்.) [ஆஸ்ரய.] 3. சமீபம். 4. வழக்கு.

ஆசிரயன்—ஆச்சிரயன்.

ஆசிரயாசித்தம்— (தர்க்க) அசித்தம் என்னும் ஏதுப்போலிவகை மூன்றனுளொன்று; அது: சாத்தியத்திற்குப் பற்றுக்கோடில்லாமையாற் சித்தியாகாதது. (உ-ம்.) "ஆகாசத்தாமரைமணமுடைத்து; தாமரைத்தன்மையால், பொய்கைத்தாமரைபோல,இதன்கண் இல்லாததாகிய ஆகாசத்தாமரை ஆசிரயமாகக்கொள்ளப்பட்டது" (தர்க்கபா. உஎ.) [ஆஸ்ரய - பற்றுக்கோடு. அஸித்த-சித்தியாகாதது.]

ஆசிரயி— ஆசிரயியென்னேவலுந்தெரிநிலைவினைப்பகுதியும்.

ஆசிரயிகன்— சூத்திரப்பெண்ணைச் சண்டாளன் கூடிப்பெற்றபிள்ளை. (உ-ம்.) "பின்னோர்மாதைவிழைந்துசண்டாளன்சோ - வாதலையடைந்தமைந்த னாசிரயிகப் பேர்பூண்பன்" (சூத. சிவமா. கஉ: ௯௦.)

ஆசிரயித்தல்— 1. அடைதல். (உ-ம்.) "மகத்துக்களையாசிரயித்து" (வழக்.) 2. பற்றுக்கோடாகக்கொள்ளல்.

ஆசிரவம்— 1. இணக்கம். 2. உபத்திரவம். 3. ஒடுதல் 4. கீழ்ப்படிவு. 5. (ஆருகதம்.) சப்த பதார்த்தங்களிலொன்று. அது, பொறிவழிச்சேறல், கன்மத்தொடர்ச்சியென்பாருமுளர். (வேதா. சூ. உச. உரை. சிவஞானபா. ௩௬.) 6. தவறு. 7. நீரோட்டம். 8. பாய்தல். 9. மீறுதல். 10. யாறு. 11. வேகுஞ்சோற்றிற்பொங்கியெழும்புமது. [2, 3, 5, 6, 8, 9, 11, ஆஸ்ரவ. 1,4,7,10, ஆஸ்ரவ]

ஆசிரன்—சூரியன்.

ஆசிராவம்—உபத்திரவம். [ஆஸ்ராவ.]

ஆசிரித்தல்—ஆசிரையஞ்செய்தல்.(உ-ம்.) "அவிர்சருபரமவஞ்சமாசிரித்திடுதல்வேண்டும்" (சூத. எக்கி. பூ. உ: கச.)

ஆசிரியச்சீர்—அகவற்சீர்.

ஆசிரியத்தளை— (யாப்பிலக்கணம், எழுவகைத்தளைகளுளொன்று; அது: தேமா, புளிமா என்னும் வாய்பாட்டுச்சீர்களின்முன் நேரசையும், கருவிளங்கூவிளமென்னும் வாய்பாட்டுச்சீர்களின்முன் நிரையசையும் வரத்தொடுக்கப்படுவது. (யாப். காரிகை. உறுப். க௦.)

ஆசிரியத்தாழிசை— ஆசிரியப்பாவினத்துளொன்று; அது: தம்முளளவொத்தமூன்றடியுடையதாய்த்தனித்தேனும் ஒரு பொருண்மேன் மூன்றடுக்கியேனும் எனைத்துச்சீரானும் வருவது. (இலக்கணவிள. எ௩௫. உரை.)

ஆசிரியத்துறை — ஆசிரியப்பாவினத்துளொன்று. அஃது:எனைத்துச்சீரானும் வரும் அடி நான்குடையதாய்,ஈற்றயலடிகுறைந்தேனும், ஈற்றயலடிகுறைந்து இடைமடக்கியேனும், இடையிடை சுருக்கடியாயேனும், இடையிடை சுருக்கடியாயிடைமடக்கியேனும் வருவது. (யாப். காரிகை. செய். க.)

ஆசிரியநிலைவிருத்தம்—அடிமறியாது வருவது.

ஆசிரியப்பா— நால்வகைப்பாவுளொன்றாகிய அகவற்பா. (தொல். பொரு. சகஎ.)

ஆசிரியம்— ஆசிரியப்பா. (தொல். பொருள். சகஎ.)

ஆசிரியமண்டலவிருத்தம்— அடிமறியாக வருவது.

ஆசிரியவசநம்— முன்னுள்ள ஆசிரியருடைய நூல்களினின்று மேற்கோளாக எடு

க்கப்பட்டவசநம். (உ-ம்.) "ஆசிரியவசனமெ ன்றீரேழுரையே" (நன். பொதுப். உக)

ஆசிரியவிருத்தம்—ஆசிரியப்பாவினத்துள் ஒன்று; அஃது: அளவொத்தகழிநெடிலடிநா ன்கிஞல்வருவது. (யாப். காரிகை. செய். கூ.)

ஆசிரியவுரிச்சீர்—அகவலுரிச்சீர்.

ஆசிரியன்— குரு, நூலாசிரியன்,உரையா சிரியன், போதகாசிரியன் இந்நால்வர்க்கும் பொதுப்பெயர் என்க.

ஆசிலேடம்— 1. ஆலிங்கநம். 2. சமவாய சம்பந்தம். [ஆஶ்லேஷ: ஆ; ஶ்லிஷ- மட க்குதல்]

ஆசினி— 1. ஆகாசம். (உ-ம்.) "செல்லு மீனுந்திகழ்தருமாசினி" (திருச்செந்தூர்ப்பு. செயந்தி. ௩௪.) 2. ஈரப்பலாமரம். (உ-ம்.) "ஆசினிக்கவினியபலவிஞர்வுற்று" (புறநா னூ. ௧௫௮.) 3. மரவயிரம். 4. மரவுரி.

ஆசீயம்—கருஞ்சீரகம்.

ஆசீர்வசநம்—ஆசிகூறுதல். (உ-ம்.) "தப் பாதவாசீர்வசநமெனவுணர்தாழ்குழலே" (வீ ர. அலங். ௩௩.) [ஆஶீர்வசந: ஆஶீ- வா ழ்த்து. வசந- கூறுதல்.]

ஆசீர்வதி—ஆசீர்வதியென்னேவலுக்கெரி ங்லெவினைப்பகுதியும்.

ஆசீர்வதித்தல்—ஆசீர்வாதஞ்செய்தல்.

ஆசீர்வாதம்—ஆசிகூறுதல்.(உ-ம்.) "ஆசீர் வாதமகத்துறுபாவனையேயாம்" (திருவானை. கோச்செ. உக.) [ஆஶீர்வாத: ஆஶீ- வாழ் த்து. வாத- கூறுதல். ஆஶீ: என்பதிலுள்ள விசர்க்கம்ரகரமெய்யானது வடமொழிவிதி.]

ஆசீவகப்பள்ளி— சமணமுனிவரில் ஒருவ கையாருடைய ஆச்சிரமம். [ஆஜீவகர்: பள்ளி- முனிவர்வாசம்.]

ஆசீவகன்—ஆருகதமதத்தசிருவருள் ஒரு வன். (சி. சி. பர. ஆசீவகமத. க.) (சி. சி. சு: கடு. முகம். மறை.) இவன் ஆன்மஅணுவும் பூத அணுக்கள் நாலும் தம்மிற்கூடிக்காரிய ப்படும் என்பன்.

ஆசீவநம்—ஆசீவம். [ஆஜீவந.]

ஆசீவம்—1. சீவநம். 2. சீவநோபாயத்தொ ழில். [ஆ; ஜீவ- சீவித்தல்.]

ஆசீவன்—ஆருகதமுனிவன். [ஆஜீவ:]

ஆசீவிகை—சீவநோபாயத்தொழில். [ஆ ஜீவிகா.]

ஆசீவிடம்— 1. (சோதிடம்) அமாவாசை க்கு இரண்டாம் ஆறும் ஒன்பதாம் பதினொ ன்றும் பதின்மூன்றும் பதினாறும் பதினெட் டாந்திநங்களாலாகியதோஷம். (உ-ம்.) "மன் னுங்கதிருடன் மாமதிமருவுந்தினமதனுக் - கன்னந்தருநடையாயிரண்டாறொன்பதினுட னே- பன்னொன்றுபதினாறொடுபதினெட் டியர்பதின்மூன்-றென்னுந்திநமாசீவிடமென் றும்மிவைகொடிய" (சாசோதி. குணகுண. ௧௦௮.) 2. பாம்பு. [ஆஶீவிஷ: ஆஶீ- பல். விஷ - நஞ்சு.]

ஆசு—1. அல்லிமொக்கு. (இராசவைத்.) 2. அற்பம். (உ-ம்.) "ஆசுமன்பிலாதபுன்பெ ண்கூந்தல்யானைவலென்றான்"(சிந்தா.சுர மஞ். அ.) 3. ஆசுகவி. (உ-ம்.) "ஆசுநாறுவநா வலர்நா" (இரகு. காட்டு. ௧௦.) 4. ஆணவம லம் (உ-ம்.)"திரோதமாசருள்சிவஞ்சூழ்தர" (சிவப்பிர. ௧௦: ௧௨.) 5. இலக்கு. 6. உவர். (குற்றமெனப்பொருள்பட்டுக் குற்றமுடை ய உவருக்காயிற்று.) (உ-ம்.) "உண்ணுமுவ யுமைமைந்தாசரணம்" (கந்தரந். உ.) 7. ஒரு விதபாஷாணம். 8. கவசம். (உ-ம்.) "காலா சோடறவெறிந்தகனைகழற்கால்" (சிந்தா. மண். ௩௫.) 9. கார்காலத்திலே விளைவில் விளையும் ஒருவகைநெல். 10. குற்றம்.(உ-ம்.) "ஆசறவறிவதாகும்" (சி. சி. அளவை. உ.) 11. கைக்கவசம். 12. தூசி. (தைலவ. தைலவ.) 13. நூலிழைக்குங் கருவிகளிலொன்று, ஆசுமணையென்றதுமிது. 14. பற்றுசு. 15. பற்று. (உ-ம்.) "ஆசாகெந்தையாண் டுளன்கொல்லோ" (புறநா. உ௩௫.) 16. பா டுகவென்ற அளவிற்பாடும்பாட்டு. 17. (யாப் பிலக்கணம்.) பொதுவிதிக்கு விரோதமாகச் செய்யுளில்வரும் அசை அல்லது எழுத்து. (ஆசிடைநேரிசைவெண்பாவில் தனிச்சொற் குமுன்வரும்அசைகளும் ஆசிடையெதுகை யில் வரும் யரலழ என்னும் எழுத்துக்களும் இத்தன்மைய.) (உ-ம்.) "ஆசிட்டநேரிசை யே"(யாப்.காரி.செய்.௩.)18. விரைவு.(உ-ம்.) "அக்கணமாசுவிஞசுகன்மைந்தன்" (பாரத. புட்ப. கூகூ.) [ஆஶு.]

ஆசுகம்—1. அம்பு. (உ-ம்.)"ஐந்திறனுகிய வாசுகவில்வேள்" (கந்தபு. சாமதக. க.) 2. கா ற்று. (உ-ம்.)"விரைந்துபடராசுகமதென்ன" (கந்தபு. சூர. வதை. உ௩.) 3. பறவை. 4. விரைவாய்ப்போதல். [ஆஶுக: ஆஶு - விரைவு. க - போவது.]

ஆசுகவி—1. ஆசுகவிபாடும் புலவன். [ஆசு- விரைவு. கவி - பாட்டு, புலவன்.] 2. நால்வகைக்கவியினுளொன்று. அஃது: ஒருவன் இன்னபடிபாடுகவென்று கேட்க அப்பொழுதேயவன் கருத்திற்கு ஒப்பவிரைந்துபாடுங்கவி. (உ-ம்.) "எழுத்துச்சொற்பொருளணி யாப்பிவையின் - விழுத்தகவொருவன்விளம் பியவுள்ளுறை- யப்பொழுதுரைப்பதாசுகவியே" (இலக்கணவி. எகூச.)

ஆசுகன்— 1. காற்று. 2. வாயுதேவன். (உ-ம்.) "ஆசுகன்மதலையென்றறிந்து" (பாரத. வாரணா. கரு.) [ஆஶுக:; ஆஶு - விரைவு - க: - செல்வோன்.]

ஆசுகி—பறவை.

ஆசுசுக்கணி— 1. அக்கினிதேவன். (உ-ம்.) "அடைவியைவளைத்தனனாசுசுக்கணி" (பாரத. காண்டவ. சக.) 2. காற்று. [ஆஶுஶுக்ஷணி; ஆஶு - விரைவு. ஶுக்ஷ் - காயச்செய்தல்.]

ஆசுணம்— 1. அசோகு. 2. அரசு.

ஆசுபந்திரி— ஒருமரம். [ஆஶுபத்ரீ.]

ஆசுபதம்—இடம். (உ-ம்.) "அநேகேசுரவாதத்துக்காசுபதமேயில்லை" (சி. சி. சுக. ஞானப்.) [ஆஸ்பத.]

ஆசுமணை— நெய்வார் கருவியிலொன்று.

ஆசுமநன்— சூரியனுடைய தேர்ப்பாகனாகிய அருணன். [ஆஶ்மந: அஶ்ம- கல்லு. காலியாதலாற்கல்லுப்போல அசைவில்லாதவன் என்றபடி. இஃது அஶ்ம என்பதினின்றுவந்த தத்திதபதம்.]

ஆசுரபம்— மூலநட்சத்திரம். [ஆஸுரப: ஆஸுர - அசுரசம்பந்தமான. ப - நட்சத்திரம்.]

ஆசுரபாவம்—அசுரத்தன்மை. (உ-ம்.) "நீசுரரோடு விண்ணோர்நிகழுநின்மைந்தனோடு - மாசுரபாவஞ்சார்வாயாகெனச்சபித்து" (இராமா. உத். இலவண. சஅ) [ஆஸுரபாவ: ஆஸுர- அசுரருக்குரிய. பாவ- தன்மை.]

ஆசுரம்—1 அசுரசம்பந்தமானது. (உ-ம்.) "ஆசுரப்பெரும்படைக்கலம்" (இராமா. இராவணவதை. கஎ.) 2. அசுரர்கூட்டம். (உ-ம்.) "எங்குமாசுரமொழித்தலாற்குமரவேளென்ன" (திருச்செந். செயந்தி. கசு.) 3. இஞ்சி. 4. எண்வகைவிவாகத்துள் ஒன்று; அது: தலைமகட்குப்பொன்பூட்டிச் சுற்றத்தார்க்கும் பொன்வேண்டுவனகொடுத்துக்கொள்வது. (நம்பியக. களவு. க. உரை.) 5. சிங்கமுகாசுரனுடையநகரி. (உ-ம்.) "ஆசுரமென்னுமகன்பதி வாழ்வோன்" (கந்தபு. சிங்கமு. சுஉ)

ஆசுரவைத்தியம்—இரணவைத்தியம், சத்திரவைத்தியம்.

ஆசுரி— 1. ஆசுரவைத்தியம். 2. இரணவைத்தியன். 3. கடுகுப்பூண்டு. [ஆஸுரீ.]

ஆசுருதம்— சம்மதித்தல். [ஆஶ்ருத.]

ஆசுவம்— 1. குதிரைக்கூட்டம். 2. குதிரைகளிழுக்குந்தேர். 3. குதிரைச்சம்பந்தமுடையது. இஃது அசுவம் என்பதினின்றுவந்த தத்திதம். [ஆஶ்வ.]

ஆசுவயம்—1. விரைவு. 2. வேதநுட்பம்.

ஆசுவயுசம்—ஐப்பசிமாதம். [ஆஶ்வயுஜ]

ஆசுவயுசி—1. ஐப்பசிக்குரியது. 2. ஐப்பசிப்பௌர்ணிமை. 3. யாகமிருபத்தொன்றிலொன்று. [ஆஶ்வயுஜீ; அஶ்வயுஜ - அசுவதி. இ - ஒருவிகுதி.]

ஆசுவலாயநம்— ஆசுவலாயநராற்செய்யப்பட்ட சூத்திரம். இது பிராமணருளொருவகையாரால் கைக்கொள்ளப்படுவது.

ஆசுவலாயநன்— ஒருமுனிவன். (உ-ம்.) "சௌநகமுனிபுலகனாசுவலாயநன்" (காஞ்சிபு. புராணவ. அ.) இவன் இருக்குவேதவிகிதகருமங்களைக் குறித்துச் சூத்திரஞ் செய்தவன். [ஆஶ்வலாயந:]

ஆசுவலாயநீயம்— உபநிடதம் முப்பத்திரண்டிலொன்று. (வேதா. சூ. ௩. உரை.)

ஆசுவாசம்— 1. ஓய்தல். 2. சுவாசித்தல். 3. நூலின்பிரிவாகிய அதிகாரம். (த. நி. போ. கசச.) 4. மெய்போலத்தோற்றுங்கதை. [ஆஶ்வாஸ: ஆ; ஶ்வஸ் - சுவாசித்தல்.]

ஆசுவிந்—ஐப்பசி.

ஆசுவிநம்— ஐப்பசிமாதம். (அசுவினியிற் பௌர்ணிமைவரும்மாசம் என்றபடி.) [ஆஶ்விந.]

ஆசுவீசம்—ஐப்பசி.

ஆசூசம்—1. அசுத்தி. (உ-ம்.) "புறங்காற்சந்துற்றெருடுத்தநீர்தோய்ந்திடாசூசமென்றறிந்துட்புக்கான்" (நல். பாரத. நளன். அஎ.) 2. ஆசௌசம்.

ஆசூடணம்—1. இரத்தம்வாங்குங்கண்ணாடிக்குழலைத்தோலிலேபிரயோகித்தல். 2. உறிஞ்சுதல். [ஆசூஷண: ஆ; சூஷ் - உறிஞ்சுதல்.]

ஆசூரம்—வெள்ளைவெங்காயம்.

ஆசேதுகை—ஆசிடையெதுகை.

ஆசேசநம்—புரோட்சித்தல். [ஆஸேசநம்; ஸிஞ் - நனைத்தல்.]

ஆசை—1. அன்பு. (உ-ம்.) "அரும்பெறற் குமரர்மேலாசை" (கூர்மபு. இந்திரத்துய். சஉ.) 2. திக்கு. (உ-ம்.) "ஆசையங்கரிகடம் மை" (கந்தபு. திருவிளை. உரு.) 3. நீளம். 4. பொன். (உ-ம்.) "மண்ணாசைபெண்ணாசைமூன்றுநீத்து" (திருவாப்பனூர்ப்புரா. கடவுள். கரு.) 5. விருப்பம். (உ-ம்.) "இறைவனார்கமலபாதமின்றியானியம்புமாசை" (சி. சித். பாயிரம். கவி. ச.) [ஆசா.]

ஆசைக்காரணர்—திக்குப்பாலகர். (உ-ம்.) "ஆசைக்காரணரேனோராடலேநேரேகண்டார்கள்" (கோயிற்பு. நடராச. உச.) [ஆசை - திக்கு.]

ஆசைப்பாடு—ஆசைப்படுதல். (உ-ம்.) "ஆசைப்பாட்டினாலேப்புகழுதல்" (உபதேச. சிவபுண். உஉ.)

ஆசோந்தியம்—பிரயாசமின்மை.

ஆசோதை—இளைப்பாறுதல்.

ஆசௌசம்— 1. அசுத்தி. [இஃது அசுசி எனபதினின்றுவந்த தத்திதபதம்.] 2. ஆடவர் மகளிர் பிறத்தலிறத்தலால் வருவனவும், ஞாதியர்களால்வருவனவும் ஆகிய அசுத்தம். (உ-ம்.) "மன்பெருஞ்சூதகதோடியலுமாசௌசவுண்மை - நன்கிதினுரைத்தவாறும்" (கூர்மபு. பதிக. உரு-ம் உரையும்.) 3. இறப்பினால்வருமசுத்தம். (உ-ம்.) (ஷ.)

ஆஞ்சநம்—கண்ணுக்கிடும் அஞ்சநம். [ஆஞ்ஜநம்.]

ஆஞ்சநன்—அநுமான். [ஆஞ்ஜநநு.]

ஆஞ்சநேயன்—அநுமான். (உ-ம்.) "இவ்வணமிருத்தனேக்கியவுடையாஞ்சநேயன்" (நல். பார. இராமன். படையெழு. ககக.) (அஞ்சனை என்பதினின்று வந்த தத்திதபதம். ஏய-விகுதி.) [ஆஞ்ஜநேயநு.]

ஆஞ்சான்— 1. அத்தரிப்பாயசைவது. 2. கட்டிச்சாம்புங்கயிறு. 3. மரக்கலப்பாய்கட்டியிழுக்குங்கயிறு. (வழக். ஆஞ்சிபார்.) 4. மரத்தினையறியதனிக்கொம்பு

ஆஞ்சான்பற்றி— மரக்கலப்பாய்கட்டுந்தம்பம்.

ஆஞ்சி—1. அலையல். (உ-ம். பிங்கல. வழாவதா. ககூஎஎ.) 2. எல்ச்செடி. (உ-ம்.) "ஆஞ்சியதுஸ்திகி தோகைவிளங்கழற்காய்மெல்லிலவங்கத்துரியும்" (தைல. தைலவ. ருச.) (சூ. நிகண். ச: ௩ச.) 3. சோம்பு. 4. கூத்து. 5. விளையாட்டு. (ஆஞ்சு என ஒருவினைப்பகுதி முற்காலத்துவழங்கிற்றப்போலும், அதனடியாகப்பிறந்தே ஆஞ்சான் என்பதும் வந்திருக்கலாம்.)

ஆஞ்சில்—இசங்கஞ்செடி.

ஆஞ்சேல்கை—தெப்பம்.

ஆஞ்ஞகம்— (சைவசித்தாந்த) பிரகிருதி; இது: சத்ருபையசத்தியினுற்கலக்குண்டமகாமாயையின்பிரத்தேசத்தின் ஒருவிதம். (சி. சி. க: ருஎ. சிவாக்.)

ஆஞ்ஞா—ஆஞ்ஞை.

ஆஞ்ஞாகரணம்—1. கீழ்ப்படிதல். 2. பணிபுரிதல். [ஆஜ்ஞாகரண: ஆஜ்ஞா - ஆஞ்ஞை. கரணம் - செய்தல்.]

ஆஞ்ஞாகரன்—ஏவல்செய்வோன். [ஆஜ்ஞாகரஃ: ஆஜ்ஞா; கரஃ - செய்வோன்.]

ஆஞ்ஞாசக்கரம்—தந்திரங்களிலே சொல்லப்படும் ஆறு சக்கரங்களிலொன்று. [ஆஜ்ஞாசக்ரம்.]

ஆஞ்ஞாசத்தி— 1. ஆணையாகிய சத்தி. 2. இராசாவுடைய ஆஞ்ஞாசத்தி. [ஆஜ்ஞா: ஆஜ்ஞை; ஆசக்தி - வலிமை.]

ஆஞ்ஞாபங்கம்—1. கட்டளைக்கமையாமை. 2. கீழ்ப்படியாமை. [ஆஜ்ஞாபங்கம்: ஆஜ்ஞா - ஆஞ்ஞை. பங்கம் - கேடு.]

ஆஞ்ஞாபத்திரம்—சாமந்தர், வேலையாளர், நாடுபுரப்பவர் இவர்கள் முதலியோர்க்கு இன்னகாரியஞ்செய்யவேண்டும் என்று எழுதப்படுங்கட்டளை. (மிருநிசர். ௩௧.)

ஆஞ்ஞாபநம்— 1. அறிவித்தல். 2. கட்டளையிடுதல். [ஆஜ்ஞாபநம்.]

ஆஞ்ஞாபித்தல்—1. அறிவித்தல். 2. கட்டளையிடுதல். 3. நியமித்தல். (பௌட். பதி. ருஇ.)

ஆஞ்ஞை—1. கட்டளை. 2. மானுடதேகத்திலுள்ளதாகச்சொல்லப்படும் ஆறுதாரங்களில் ஆறுவது. இது விசுத்திக்குப்பத்துவிரற்பிரமாணத்துக்குமேலே புருவமத்தியிலேவட்டவடிவமாய்இதழிரண்டுடையதாயிருக்கும். (சி. சி அ: உக. மறை.) இதனடுவேயுள்ள எழுத்து யகாரம். அதிதேவதை- சதாசிவன். (வேதா. தத். கூஉ) [ஆஜ்ஞா.]

ஆஞா— } தந்தை. [திசைச்சொல்.]
ஆஞீ— }

ஆட்காட்டி—1. ஒருபறவை. (உ-ம்.) "ஆட்காட்டிப்பட்சி" (பதார்த்த. ௯௭௫.) 2. சுட்டுவிரல். (ஆள், காட்டி-காட்டுவது.)

ஆட்கொல்லி— 1. ஆளைக்கொல்வோன். 2. பணம். [பணம் அபகரித்தற்பொருட்டு ஆட்கொல்லப்பட்டமைபற்றிவந்தபெயர்.]

ஆட்கொள்ளுதல்— 1. அடிமைகொள்ளுதல். (உ-ம்.) "என்னையுமாட்கொண்டகொங்கைகளே" (திருக்கோ. ௨௬.) (ஆள் - அடிமை. கொள்ளுதல் - கொள்கை.)

ஆட்சபணம்—உபவாசித்தல். [ஆக்ஷபணம்.]

ஆட்சபாடிகன்—நியாயாதிபதி.

ஆட்சபாதன்—ஒரு தருக்கசாத்திரி.

ஆட்சாரணம்—குற்றமேற்றுதல். [ஆக்ஷாரணம்.]

ஆட்சாரம்—ஆட்சாரணம்.

ஆட்சி — 1. ஆண்மை, உடைத்தாதல். (உ-ம்.) "கண்டேனிவர்தங்கடுந்திறலினாட்சிதனை" (கந்தபு. அசுரர்யாக. ௧௬.) 2. ஆளப்படுவது. (உ-ம்.) "மற்றெனாட்சியாமண்டங்கள்" (கந்தபு.சூரபன் மன்வதை.௧.) 3.உரிமை. (பிங்கல. ௨௨௧௪.) (உ-ம்.) "வினையமீதல்லதில்லைவிண்ணுகினாட்சியாக்கி" (இராமா. சூர்ப்பந. ௫௫.) 4.ஒன்றனைத்தன்னுடையதாக அநுபவிக்கை. (உ-ம்.) "ஆட்சியிலாவணத்திலன்றிமற்றயலார்தங்கள் - காட்சியின்மூன்றிலொன்றுகாட்டுவாயென்ன" (பெரியபு.தடுத்தாட்.௫௬) 5. ஒன்றிலுள்ளபிரயோசனங்களை அநுபவிக்கை. 6.கண்ணிமித்தம். 7. பழக்கம். (உ-ம்.) "அசாவேரியவனுக்குநல்ல ஆட்சி" 8. முயற்சி. 9. வழக்கம்.

ஆட்சிபடல்—தற்கிழமையாதல்.

ஆட்சியர் — ஆட்சியுடையார். (இராமா. சுந்தர. பிணிவீட். ௭.)

ஆட்செய்தல் — அடிமைவேலைசெய்தல். (உ-ம்.) "நாவெனடிதுன்மாற்றவ-டாதியர்க்காட்செயத்" (இராமா. மந்தரை. ௫௪.)

ஆட்சேபகம்—1. குற்றச்சாட்டு. 2. நோய். 3. வலி.

ஆட்சேபகன்—ஆக்கேபகன்.

ஆட்சேபசமாதாநம்— சங்கைக்குத்தரம்.

ஆட்சேபநம்—ஆக்கேபம்.

ஆட்சேபம்—1. ஆக்கேபம். (உ-ம்.) "பார்க்கவன்றனைக்குமாரியாட்சேபம்பகர்ந்தவாறும்" (மச்சபு. அநுக்கிர. ௯.) 2. குற்றம். 3. சங்கை. 4. தூஷணை. 5. நிராகரணம். 6. விலக்கணி. (கு. தண்டி. ௬௧. பக்.) 7. பாதாக்ஷேபகவாதம். (தைல. தைலவ. ௭௮.)

ஆட்சேபித்தல் — ஆக்ஷேபஞ்செய்தல். (உ-ம்.) "தெய்வயானியாட்சேபித்ததனைச் சாற்றவேண்டுமென" (மச்சபு. தெய்வயானியாட். ௧.)

ஆட்டம்—1. அசைவு. (உ-ம்.) "இமையில்வங்கூழாட்டம்" (தைல. தைலவ. ௩௫.) 2. அலைவு. 3. ஒத்ததன்மை. (உ-ம்.) "இதுபாலாட்டமாயிருக்கின்றது" (வழக்.) 4. சூதாடுதல், சூதுமுதலியவற்றின்ஒருமுறைவிளையாட்டு. 5. திரும்பத்திரும்பச்செய்யுமுயற்சி. (வழக்.) 6. விளையாட்டு. (உ-ம்.) "தவப்பகடியாட்டங்காண்" (ஒழிவி. யோகம். ௪.)

ஆட்டல் — 1. அசைத்தல், அலைத்தல். (உ-ம்.) "உழைக்குழற்கூசையசைப்பவாட்டி" (புறநா. ௨௬௧.) "அறைபடுமாலைகளிடையிட்டாட்டலே" (கந்தபு. நாட்டு. ௩௧.) 2. அபிடேகஞ்செய்தல். (உ-ம்.) "ஆன்பாறழைத்தவன்பாலாட்ட" (சேதுபு. சடவு. ௧௨.) 3. அரைத்தல். 4. நடப்பித்தல். 5. நடிப்பித்தல். (உ-ம்.) "உருவினைக்காட்டியாட்டி" (சி. சி. ௪: ௧௩. மறை.) 6. ஸ்நாநமபண்ணுவித்தல். (உ-ம்.) "அம்பிளாட்டுதுமென்றகன்" (இராமா. ஆற்று. ௩.)

ஆட்டாங்கள்ளி—திருகுகள்ளிமரம்.

ஆட்டாங்கோரை—ஒருவகைக்கோரை.

ஆட்டி—1. அலைத்து. (ஐங்குறு.) 2. ஆட்டுவோன். 3. தலைவி, மனைவி. (உ-ம்.) "ஆட்டியுமகவுந்தானுமதற்குடன்பட்டவன்றன் - மாட்டினைப்பெருக்கி" (சேதுபு. வேதா. ௩௯.) 4. பெண். 5. பெண்பாலில்வரும் ஒருவிகுதி. (உ-ம்.) "கம்மாட்டி" (வீரசோ. தத்தித. ௫.)

ஆட்டியம்—கூடல். (சீவர். ௪௬௭.)

ஆட்டியவாதரோகம்—சப்த தாதுக்களிருக்கின்றவாதமார்க்கங்களையுஞ் சிலேட்டுமமார்க்கங்களையும் அடைத்துச்சிலேட்டுமத்தோடுகூடிக்கொண்டு உபத்திரவத்தைச்செய்யும் ஒருவகைவாதரோகம். (சீவர். ௪௬௭.)

ஆட்டு— 1. அசைப்பு, வல்லமை. 2. ஆட்டுந்தன்மை. 3. ஆட்டென்னேவலுந்தெரிநிலைவினைப்பகுதியும். 4. ஆடுந்தன்மை. 5. கொண்டாட்டு. (தொல். பொரு. ௬௦.) 6. கூத்து. (உ-ம்.) "உரையும்பாட்டுமாட்டும்

வினை இ" (பத். மதுரை. ௬௧௬.) 7. முழுகுதல். (உ-ம்.) "அருப்புமுலையார்பூப்பெய்திநீராட்டயருநாண்முதலா" (கூர்மபு. வருணைச். உஉ.) 8. விளையாட்டு. (உ-ம்.) "முன்னே குழவியினாட்டயர்கால்"(தணிகை.களவு.௧௫உ.)

ஆட்டுக்கடா—ஆணாடு.

ஆட்டுக்கல்— 1. அமிர்தபாஷாணத்தொன்று. 2. அரைக்குங்கல்லுரல்.

ஆட்டுக்கால்—அடம்பங்கொடி.

ஆட்டுக்காற்கல்—கொக்கைக்கல்.

ஆட்டுக்கிடை—ஆட்டுப்பட்டி.

ஆட்டுக்கோன்—சிவன். [ஆட்டு - கூத்து. கோன் - இறைவன்.] (உ-ம்.) "மாட்டுக்கோன் றங்கைமதுரைவிட்டுத்தில்லைநக - ராட்டுக்கோனுக்குப்பெண்டாயினாள். (தனிப்பாடற்றிரட். காளமேகம். எஅ.)

ஆட்டுரம்—ஆடாதோடைச்செடி.

ஆட்டுதல்—ஆட்டல்.

ஆட்டுவாகநன்—அக்கினிதேவன்.

ஆட்டை—வருடம். (ஆண்டு என்பதன் விகாரமாகிய ஐயீற்றுடைக்குற்றுகரம்.)(உ-ம்.) "ஆட்டைவிழவாசத்தன்னகரவீதிதோறும்" (சிலப். உரைபெறுகட். ௩.உரை.)

ஆட்டைத்திதி— } இறந்தவன் பொருட்டு முதல்வருடமுடிவிலே அவனிறந்ததிதியிலே செய்யப்படுஞ்சிராத்தக்கிரியை. [ஆட்டை - ஆண்டு. திதி-]
ஆட்டைத்திவசம்—

ஆட்படல்—ஆட்படுதல்.

ஆட்படுதல்—1. அடிமைப்படுதல். (உ-ம்.) "ஆட்படுநெறியிற்சேர்த்துமாதியினாழ்தந்துய்க்க". (கந்தபு. சூரப. ௪௧௬.)2. புருடத்துவமடைதல்.

ஆட்யம்— நிறைந்தது. (சி-லி. ஞான. க.) [ஆட்யம்.]

ஆடககருப்பன்—பிரமன். (உ-ம்.) "ஆடககருப்பனெகிர்வதுகந்தமாதநம்" (சேதுபு. கந்த. ௬.) [ஹாடகம் - பொன். கருப்பன் - கருப்பமுடையவன்.](இரணியகருப்பன் என்பதன் பரியாயம்.)

ஆடகத்தி—குங்குமபாஷாணம்.

ஆடகம்—1. சிறுநாகப்பூ. (உ-ம்.) "மாடகமாடகமாகுவிகோலகமட்டணுக்கம் பலினியரேணுகம்" (தைல. தைலவ. உ௩.) 2. தானிய அளவையினொன்று; அது: நான்குபிரஸ்தங்கொண்டது.(த. நி. போ. உ௬.)[இருப்பதுபடிகொண்டஅளவுஎன்பர்உவின்சிலோ.]3. துவரை. (சூ. நிகண். ௪: ௬௧.) 4. நால்வகைச்சாதிப்பொன்னுளொன்று. (உ-ம்.) "சாதரூபங்கிளிச்சிறையாடகஞ்-சாம்பூநதமெனவோங்கியகொள்கையிற் - பொலந்தெரிமாக்கள்" (சிலப். ஊர்காண். உ0உ.) 5. நிவிர்த்திகலையிற்பிருதுவிதத்துவத்திலிருக்கும் நூற்றெட்டுப்புவநங்களிலொன்று. (சி-லி. கிரி. உக. உரை.) 6. பொன். (உ-ம்.) "ஆடகமாமதிலம்பொற்கோபுரம்" (கந்தபு. நாட்டு. ௫௬.)[2. ஆடகம். 4, 5, 6. ஹாடகம். ஹாடு - பிரகாசம். ௬௧ - ஒருவிகுதி.]

ஆடகமயம்—பொன்னாலாயது. [ஹாடகமயம்; ஹாடக - பொன். மய - ரூபம்.]

ஆடகர்—ஆடகேசவுருத்திரர்; இவர் பூமியிலிருந்து இரண்டுகோடியோசனைக்குக் கீழே, கநிட்டபாதலத்துக்கு மேலே இருப்பர் என்பர். (உ-ம்.) "இதன்கீழ்த்திசையிலக்கமொன்பாணடகரிருக்கையாகும்" (கந்தபு. அண்டகோ. ௧எ.)

ஆடகன்— 1.ஆடகேசவுருத்திரன்.(உ-ம்.) "அடுகனலவன் கூர்மாண்டனாடகனையன்" (கந்தபு. திருக்கல் ௬௪.) 2. இரணியகசிபன் என்னும் அசுரன். (உ-ம்.) "தளர்ந்துவீழ்கிசாசானுமாடகன்றன்னையொத்தனன்" (பாரத. வேத். ௧௫.) 3. சூரபன்மன் புத்திரர்களிலொருவனாகிய இரணியன். (உ-ம்.) "சேந்தமெய்யுடையாடகனுறையுளுந் தீர்ந்தான் "(கந்தபு. நகர்பு. ௬௬.)

ஆடகி— துவரைச்செடி. (தைல. பாயி. [ஆடகீ.]

ஆடகூடம்—செம்புமலை.

ஆடகேசன்—ஓர் உருத்திரன். (உ-ம்.)"ஆடகேசனுமுருத்திரன்கயிலையிலடைந்தான்" (கந்தபு. கணங். ௬.)

ஆடகேசுரம்—.பாதாளலோகத்தில் ஆடகேசர் வாழுகின்ற புவநம். (உ-ம்.) "பூவுலகையரியகன்று கீழுலகின்முறைமுறையேபுகுந்துபோந்து- காவலுறுமாவலிதன்போகவதியெனும்புரமுங்கடந்துமேவித்-தேவர்தொழும்பாஞ்சுடர்வாழாடகேசுரம்" (அருணை. திருமலைச். ௬௬.)

ஆடம்— 1. ஆமணக்குமரம். 2. இருபதுபடிகொண்ட ஓரளவு.

ஆடம்பரம்—1. அலங்காரமானதோற்றம். (உ-ம்.) "ஆடம்பரமன்வேடமகற்றி"(பாரத. அருச. தீர். எ.) 2. இறுமாப்பு. 3. இன்பம்.

4. கண்மடல். 5. கோபம். 6. தொடக்கம். 7. போர்ப்பறை. 8. யானைப்பிளிற்ருெலி.

ஆடரி—சுப்பிரமணியன். [ஆடு: அரி-பகை.]

ஆடல்—1. அசைதல். (உ-ம்.) "ஆடுகேத நத்தளவையுமன்னதே" (கந்தபு. திருநகர. உ௬.) 2. அளைதல். (உ-ம்.) "குருதியாடிய கூருகிர்க்கொவிரல்" (பத். திருமுரு. ௫உ.) 3. ஆளுதல். (உ-ம.) "அகிலலோகமுமாடற் குரியதொன்று" (பெரியபு. திருக்கூட். ௪.) 4. கூத்தாடல். (உ-ம்.) "பதமெடுத்திறையா டல்" (தணிகைப். நகர. எ.)ஆடுதல். (உ-ம்.) "கூத்தொருவ-னுடலாற்பாடுபெறும்"(நான் மணிக். அ௫.) 5. செய்தல். (உ-ம்.)"ஆருமிது கேண்மினமராடிகளனேகி". (கந்தபு. தாரக. ௧௦அ.) 6. சொல்லுதல். (உ-ம்.) "யார்க்குநன் னயமாடல்செய்யுநாரதன்"(கந்தபு. ததீசேறு. உ௪.) 7. ஸ்நாநஞ்செய்தல். (உ-ம்.) "அத்தகு வரைப்பினெழுசுனையாடி" (தணிகைப். புரா ணவர. எஎ.) 8. நட்புரை 9. புணர்தல். (உ-ம்.) "தடங்கண்கள்குவளைபூப்பத்தைய லோடாடுமன்றே" (சிந்தா. காந். ௩௪எ.)10. பொருதல். (உ-ம்.) "ஆடலங்தொழின்மேற் கொண்டே" (கந்தபு. ததீசே. உ௧.)11. விளையாட்டு. (உ-ம்.) "கழங்குகந்துகமம்மனையாடலும்" (பாரத. சம்பவ உஎ.) 12. வீரம். (உ-ம்.) "ஆடன்மெய்ம்புடையோன் - பேர ழற்பொறிகதுவுறநோக்கியே" (கந்தபு. தாரக. அ௩.) 13. வெற்றி. (உ-ம்.) "ஆங்கெதிர் விடிலொன்றுடலங்கையினுயகாலே-வாங்கிடி லொன்றிரண்டுமந்திரத்ததுவால்" (இரகு. அயனெழு. ௧௧அ.)

ஆடலார்—நடனமுடையவர். (உ-ம்.) "பாடலாராடலார்"(தேவார. பந்தணைநல்லூர்.உ. திருநாவு.)

ஆடலை—1. பூவில்லாமரம். 2. பூவிளா.

ஆடவர்—1. ஆண்மக்கள். (உ-ம்.) "காவலாடவர்தம்முடனுதித்திடார்" (கந்தபு. மார்க். ௬௪.) 2. விவாகஞ்செய்யும்பருவமடைந்த ஆண்மக்கள். (உ-ம்.) "சிறார்குழாமு - மாடவர்குழாமும்வாட்கணரிவையர்குழாமும்"(கந்தபு. மேரு. உ௨.)

ஆடவவிருத்தம்—நாற்பத்தெட்டுவயசிற்கும் அறுபதுவயசிற்குமிடையிலுள்ளபருவம்.

ஆடவள்—1. விருத்தை. 2. விவாகஞ்செய்யும்பருவமடைந்தபெண்.

ஆடவை—1. ஓரேவல். 2. சிருத்தசவை. 3. பெண். 4. மிதுனராசி. (திவாகர.௧௦. பக்.)

ஆடற்கூத்தியர்—அகக்கூத்தாடும்பதியிலார். (சிலப். இந்திரவி. ௫௦.)

ஆடனூல்—பாதநூல். (உ-ம்.) "ஆடனூல் வரம்புகண்டவராகி" (திருவி. கான்மாறி. எ.)

ஆடாதோடை—
ஆடாதோளை— } ஒருமருந்துச்செடி.(பாவட்டை யென்பாருமுளர்.) (உ-ம்.) "ஆடாதோடைப்பன்னமைய றுக்கும்" (பதார்த்தகுண. ௫அ௪.) [ஆடுதொடா என்பதின்றிரிபென்பர்.]

ஆடி— 1. ஆடு என்னும் அடியாற்பிறந்த ஒருவினையெச்சம். 2. ஆதித்தன்கற்கடகவிராசியில் நிற்கும் நான்காமாதம். (உ-ம்.) "ஆடிவைகாசித்திங்கள்"(தணிகை.அகத்.௧௭௩.) 3. உத்திராடமுகூர்த்தம்; அது பகலில் பன்னிரண்டாம் நாழிகையின்பின்வரும் இரண்டு நாழிகைகொண்டமுகூர்த்தம். (உ-ம்.) "தான்பாம்பநடமகம்புட்புனலாடி" (விதாந. குணகுண. எ௩.) 4. உத்திராடநாள். (சூ. நிக ண். க: எ௬.) 5. கண்ணாடி. (உ-ம்.) "வேலையந்தலைவன்காலை - யொண்பகலாடிகாட்டவுமைமகனங்கணுற்றான்" (கந்தபு. திருவவ. ௯௯.) 6. காற்று. 7. கூத்தாடுவோன்.(உ-ம்.) "மணிப்பையரவினாடி" (பாரத. அருச். தவ நி. ௧௧௩.)

ஆடிக்கரு— ஆடிமாசத்திலுண்டாகும் கருமேகம். இதனால், பின்மழை உண்டு இல்லை என்பது அறியப்படும். (உ-ம்.) "ஆடிக்கரு அழிந்தால்மழைகுறைந்துபோம்." [வழக்.]

ஆடிடம்— விளையாடுமிடம். (மணிமேக.)

ஆடிப்பட்டம்— ஆடிப்பருவத்திற்பயிரிடல்.

ஆடு— 1. ஆடென்னேவலுந் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். 2. ஒரு நாற்கால்விலங்கு. 3. கூத்து. 4. கூர்மை. 5. கொல்லுதல். (உ-ம்.) "ஆடுகொள்வென்றி" (புறநா. ௬எ.) 6. கொல்லுதல்போலவருத்துதல். (உ-ம்.) "ஆடுறுபசியினோராக்கங்கண்டுழி" (கந்தபு. தெய். ௧௫.) 7. மறியாடு. 8. மேடவிராசி. (உ-ம்.) "வெந்திறலரியேறுடு" (சரசோ. சோட௪. ௬௫.) 9. வெற்றி. (உ-ம்.) "ஆடுதுவன்றுவிழவினாடார்த்தன்றே" (மதுரைக். ௪உஅ.)

ஆடுகம்—ஆடுவேம். (ஐங்குறு.)

ஆடுகால்—கிணறுமுதலியவைகளிலேநீரிறைத்தற்கு ஏற்றப்படுந்துலாவைத் தாங்கியிருக்கும்படி நடப்பட்டமரம். (துலாநின்று ஆடுங்காலென்றபடி.)

ஆடுதல்— 1. அசைதல். (உ-ம்.) "ஆடிய கறங்குபோல்"(தாயுமான. சித்தர்கணம். எ.)

2. உடனுதல். (சிலப். கனாத்தி. ௬௯. உரை.) 3. கூத்தாடுதல். (உ-ம்.) "ஆனந்தவெள்ள மேயென்றென்றுபாடினேனாடினேன்"(தாயுமான. சுகவாரி. எ.) 4. செய்தல். (உ-ம்.) "அனந்தலாடேல். (ஆத்திசூடி.)5. சொல்லுதல். 6. ஸ்நானஞ்செய்தல். (உ-ம்.) "இந்தநற்றுறை நாலுநாட்கொருகாலிட் டொருவருடமாடிட" (தைல. தைலவ. ௬௭.) 7. பூசுதல். (உ-ம்.) "வெண்பளிதநறுஞ்சாந்தச்சேறுடி" (கந்தபு. காமத. ௧0௯.) 8. பொருதல். 9. விளையாடுதல்.

ஆடுதின்னாப்பாலை— 1. ஒருவகைச் செடி. 2. புழுக்கொல்லி. (ஆட்டினாலே தின்னப்படாதது என்றபடி.)

ஆடுதின்னாப்பாளை—ஆடுதின்னாப்பாலை.

ஆடுதீண்டாப்பாளை— ஆடுதின்னாப்பாளை. (உ-ம்.) (பதார்த்தகுண. ௩௧௧. மூகம்.)

ஆடுதுறை— ஓரூர். (புறநா.)

ஆடுமாலை—யௌவனஸ்திரி.

ஆடூஉ—ஆண்மகன். (உ-ம்.) "ஆங்குருநாட்டுறைபவரோர்பொழுதின்யாய்பாலாடூஉவு மகடூஉவுமாகத்தோன்றி" (கந்தபு. அண்டகோ. ௩அ.)

ஆடூஉக்குணம்— ஆடவருக்குரியபிரதானகுணங்கள். அவை: அறிவு,நிறை, ஓர்ப்பு, கடைப்பிடியென்பன. அறிவு,எப்பொருளாயினும் அப்பொருட்கண் நின்று அம்மெய்ம்மையை யுணர்வது. நிறை, "காப்பனகாத்துக்கடிவன கடிந்து ஒழுகும் ஒழுக்கம்"ஓர்ப்பு, "ஒருபொருளையாராய்ந்துணர்தல்" கடைப்பிடி,"கொண்டபொருண்மறவாமை" (இறையனு. உ. உரை.) [நிறை, பொறை,தேற்றம், நீதி, சால்புஎன்னும் ஐந்தும் ஆடவர்க்குரிய ஐங்குணங்களாமென்பதுமொன்று.]

ஆடூஉவறிசொல்— உயர்திணை யாண்பாலென்பதனை அறிவிக்கும்னகரவீற்றுச்சொல். (உ-ம்.) "னஃகானொற்றேயாடூஉவறிசொல்" (தொல். சொல். ௫.)

ஆடை—1.உறையும்பாலில்மேலே எழும்பும் நெய்ப்பற்றுள்ள ஏடு (போர்வை) (உ-ம்.)"இடையர்தமிற்பாலாடை கவர்ந்தானிவனென்னு- வடைவுறுதம்பாலாடையளித்தார்" (சேதுபு. கோடி.எ0.) 2. சேலை.(க்-ம் உதாரணம் பார்.) 3. நீர்ப்பதார்த்தத்திலே மேற்பக்கமாகப்படர்ந்திருக்கும்போர்வை. 4. நேத்திரபடலம். 5. பதினான்காம் நட்சத்திரமாகிய சித்திரைநாள். (சூ. நிக்ண். க; எ௩.) 6. பனங்கிழங்கினுட்டோல்.

ஆடையோட்டி—1. சேலைப்பேன். 2. பேய்ப்புல். [ஆடை - சேலை. ஒட்டி - ஒடடுவது.]

ஆடோபம்— 1. இறுமாப்பு. 2. பாக்கை. 3. வாயுக்கொள்ளுதல். 4. வீங்குகை. [ஆடொபம்.]

ஆண்— 1. ஆண்பால். (உ-ம்.) "ஆண்பெண்ணுருவாகி" (கந்தபு. கடவுள். உ.) 2 ஆண்மகன். 3. ஒருமரம். (உ-ம்.) "ஆணடி நிழலோம்பியமர்துயின் மகண்மாவை" (தணிகை. வீரா. ௬அ.) 4. தலைமை. (உ-ம்.)"ஆணு குமாறுமுகத்தெனத்தனே" (சிவதரு. சுவர். உஉ௩.)

ஆண்கடன்—ஆண்மக்கள்தொழில். (உ-ம்.) "நினைத்துநீங்குதலாண்கடன். (சிந்தா. பது. உ௩௫.)

ஆண்கிரகம்— ஆண்கோள்; அவை: செவ்வாய், வியாழம், சூரியன் என்பன. இவை"தரைமகன்பொன்கதிரவண்" என்னும். விதாந. பஞ்சாங். ௧எ-ஞ் செய்யுளாற்பெறப்படும்.

ஆண்துமஞ்சான்—குங்குலியம்.

ஆண்தறி—ஆணைக்குறிக்கும் விசேட உறுப்பு. (உ-ம்.) "மும்மலம்விட்டோர்தம்மாண்குறியறுத்திட்டொல்லை" (கூர்மபு. பிராயச். ௩உ)

ஆண்கோள்—ஆண்கிரகம்.

ஆண்சத்தி— சிவனுக்குரிய நால்வகைச்சத்திகளுள் ஒருவராகிய திருமால். (உ-ம்.)"சிவபெருமானுடையஅருட்சத்தியெனப்படுமின்பசத்தியுமையென்றும்,அழித்தற்சத்தி ஐயையென்றும்,சீற்றச்சத்தி காளியென்றும், ஆண்சத்தி அரியென்றுங்கூறப்படும். (கந்தபு. நவ. ௪௩-ம் பச.)

ஆண்செருப்படி— சிறுசெருப்படிப்பூண்டு.

ஆண்டகை—1. அரசன். 2. ஆண்டன்மை. (உ-ம்.) "ஆண்டகைமள்ளர்" (கந்தபு. ஆற்று. ௩௯.) 3. ஆளும் அதிகாரப்பெருமையுடையோன். (உ-ம்.) "மன்னுயிர்க்குயிராய்நின்றவாண்டகையுணர்வுநல்கி" (கந்தபு. உருத்திரர்கேள்வி. ௫.) 4. பெருமையிற்சிறந்தோன். (உ-ம்.) "அசைவுநீ இமயங்கிச்சோருமாண்டகையசுவத்தாமன்" (சேதுபு. அசுவத். ௩௧.) 5. வீரன். (உ-ம்.) "அண்டர்பிரானளித்தசிலையாண்டகையை" (பாரத. அருச்சுனன்,றீர். ௩௯.)

ஆண்டகைமை—1. ஆண்டன்மை. (உ-ம்.) "ஆண்டகைமைக்கங்கிவிழிமிகையாமென்ற

ணியாதநுதலில்"(தணிகைப்பு.வள்ளி.கககூ.) 2. வீரம்.

ஆண்டகையோர்—ஆண்மக்கள். (உ-ம்.) "ஆண்டகையோர்களுமகன்றுசிந்தினர்" (கந்தபு. மார்க்கண்டேய. அச.)

ஆண்டமை—ஆண்டதன்மை. (உ-ம்.) "நவ்களவறுத்துநின்ருண்டமைகருத்தினுட்கசிந்துணர்ந்திருந்தேயும்"(திருவாச.திருச்ச.௩௫.)

ஆண்டலை— 1. கோழிப்பறவை. (உ-ம்.) "ஆண்டலையுயர்த்தவன்"(கந்தபு. தெய்வ.எ.) 2. படைத்தலைவன். 3. பூவில்லாமரம்.

ஆண்டலைக்கொடி—தலையாண்மகன்றலையும், உடல் புள்ளின்வடிவுமாக எழுதினகொடி; இது: பேய்முதலியன பலியைநுகராமற்கட்டப்படுவது. (திருமுரு. உ௨எ. உரை.)

ஆண்டலைக்கொடியுயர்ந்தோன்— சுப்பிரமணியன். (சூ. நிகண். க: உ௩.) (ஆண்டலை-கோழி.)

ஆண்டலைப்பறவை— ஆண்மகனது தலைபோன்றவடிவமுள்ள ஒருவகைப்பட்சி.(மணிமே. பக். ௫க.)

ஆண்டலையடுப்பு—ஆண்டலைப்புள்வடிவாகப்பண்ணிப்பறக்கவிட உச்சியைக்கொத்திமூளையைக்கடிக்கும்பொறிநிரைகள். (உ-ம்.) "ஆண்டலையடுப்பும்"(சிலப். அடைக். உகக.)

ஆண்டவரசு — திருநாவுக்கரசு நாயனர். (உ-ம்.) "பந்தர்பலவாண்டவரசெனும்பெயராற்பண்ணினமை" (பெரியபு. திருநாவு. உ௦க.)

ஆண்டவன்—1. அரசன். (உ-ம்.) "ஆண்டவன்களிற்றின்காநிகர்தாளை" (பாரத. காண்ட. ௫உ.) 2. ஆளுகை செய்தவன். 3. கடவுள். (உ-ம்.)"ஆண்டவனுரணன்கம்பனெனன்றேத்த" (கம்பாங். ௩௦.)

ஆண்டளப்பான்—வியாழன். (உ-ம்.)"மூரணியவிருவோர்தக்கண்மொய்ம்பையாண்டளப்பான்றன்பால்-விரவினருரைப்ப" (சீகாழிப்பு. சூரியன். ௩.) [ஆண்டு- வருடம். அளப்பான் - அளப்பவன். ஒரிராசியில் ஒருவருடம் நிற்போன் என்றபடி.]

ஆண்டான்— 1.ஆண்டவன்.(உ-ம்.)"இலங்கைவிலங்கலெய்தி- யாண்டானடிமைத்தொழிலாற்றலிலாற்றலுண்டேல்" (இராமா. கடரு. ௬உ.) 2. யசமானன்.

ஆண்டி—யாசகி. (உ-ம்.) "எத்திரப்பாண்யென்வையமேற்குநிறைவன்" (மறைசை. ௬ச.)

ஆண்டிச்சி— யாசகத்தி. (உ-ம்.)"ஒருதோழன்மனமாய்க்கொண்ட - ஆரமிகுமனைக்கிழத்தியாண்டிச்சிவடிவுகொண்டாள்" (தண்ட. எ௦.)

ஆண்டு—1. அவ்விடம். (உ-ம்.) "ஆண்டிலெடுத்தவராமிவர்" (திருக்கோ. உசக.) 2. ஆள் என்னும் பகுதியடியாற்பிறந்த செய்து என்னும்வாய்பாட்டுவினையெச்சம்.(உ-ம்.) "பன்னெடுங்காலமிந்தப் பாரினையாண்டு" (இராமா. இலவண. கக.)3. ஓர் அசைச்சொல். (உ-ம்.) "உடுத்தாடையில்லாதார் நீராட்டும் பெண்டீர் - தொடுத்தாண்டவைப் போர்புகலும்" (திரிகடு. எக.) 4. வருடம். (உ-ம்.) "ஆண்டுபன்னிரண்டாமளவு" (கந்தபு. வள். உ௩க.)

ஆண்டை—1. அடிமைவைத்தாளுவோன், எசமான். (உ-ம்.) "கார்க்குழலிழையாடன்மேற்கண்சிவந்துகறுத்தாண்டைசீறிடவே")பருளப்பள். அக.) 2. அவ்விடம். (உ-ம்.) "சூத்திரத்துட்பொருளன்றியுமாண்டைக்கு"(நன். பொதுப். உ௩.) 3. தேட்கொடுக்கிப்பூண்டு.

ஆண்டையர்—1. அவ்விடத்தவர். (உ-ம்.) "காண்டகுமிமைப்பிலாகிக்காட்சியா - லாண்டையர்திரிகுவார்க்ககற்றுமையமே" (இரகு. நகர. கக.) 2. மனிதர்.

ஆண்டொழில்—பராக்கிரமவேலை.

ஆண்டொழின்மைந்தன்—அருச்சுனன். (பிங்கல. எசங.)

ஆண்பனை— பூம்பாளையுடையதாய்க்காயாதுநிற்கும்பனை. (உ-ம்.) "குரும்பையாண்பெண்பனையினு மென்னும் வாய்மைகுலவுதலால்" (பெரியபு. திருஞான. கூஅ௦.)

ஆண்பால்—1. ஆண்டன்மை. 2. (இலக்கணம்.) உயர்திணையொருமையாண்பகுதிச்சொல். (நன். பெயரி. ௫. உரை.)

ஆண்பாற்பிள்ளைக்கவி—ஆண்பிள்ளையைக்குறித்துப்பாடப்படுந்தொடர்நிலைச் செய்யுளாகியபிள்ளைக்கவி. அது: காப்பு முதல் சிறுதேருருட்டல் ஈருகப் பத்துறுப்புடையது. (இலக்கணவி. அ௦௬.)

ஆண்பிள்ளை—1. ஆண்குழந்தை. 2. ஆண்மகன். 3. சாமர்த்தியமுடையோன். 4. தலைவன்.

ஆண்மகன்— 1. ஆணிற்சிறந்தோன். 2. கணவன். 3. மதன். 4. மனிதன்.

ஆண்மரம்— 1. அழிஞ்சில். 2. உளவயிரமுள்ளமரம். (சூ.நிகண்.ச:௫எ.)3. செம்மரம்.

ஆண்மாரி— கொற்றிபோலும் ஆண்மையுடையபெண்.

ஆண்மை—1. ஆண்டன்மை. (உ-ம்.) "ஆண்மைதிரிந்தபெண்மைக்கோலத்து"(சிலப். கடலாடு. ருக.) 2. ஆளுந்தன்மை. (உ-ம்.) "அருள்வலியாண்மைகல்வி" (சிந்தா. குணமா. ௩கரு.) 3. ஆளுமதிகாரம். (உ-ம்.) "அடவியெங்கணும்வேட்டையாற்றங்கள்பேராண்மை,நடவி" (பாரத. வார. கஉசு.) 4. உடையாந்தன்மை. (உ-ம்.) " புல்லறிவாண்மைகடை" (வள்ளுவர். ௩௩௧.) 5. உண்மை. 6. தைரியம். (உ-ம்.) "தொல்லாண்மைப்பாண்டவர்க்குத்தூதுபோய்மீண்டதற்பின்" ( பாரத. கிருட். ௬௧.) 7. மகமுயற்சி.

ஆண்மைச்சினைப்பெயர்— சினையுடைமையாகியநிமித்தம்பற்றி முடவன், பெருங்காலன்என்பவற்றிற்போல ஆண்மையையுணர்த்தும்பெயர். (தொல். பெய. உ௩.)

ஆண்மைச்சினைமுதற்பெயர்— முடக்கொற்றனிவன், முடக்கொற்றனிவ்வெருது என்றாற்போல்வன. (நன். பெய. உஎ.)

ஆண்மைத்தனம் — ஆண்மைத்தன்மை. (உ-ம்.) " உன்னைக்கொன்றன்றருவியாக்கிலேனேன் - றன்னைக்கொல்லுவதாண்மைத்தனமலால்" (அரிச்ச. விவாக. கஅரு.)

ஆண்மைப்போதுப்பெயர்— உயர்திணையாண்பாலையும் அஃறிணையாண்பாலையும் உற்றும்பெயர். சாத்தன் இவன், சாத்தன் இவ்வெருது என்பவற்றிற்போல. ( நன். உஅச. உரை.)

ஆண்மைமுதற்பெயர்— ஆணினையுணர்த்தும் முதற்பெயர். "சாத்தன்" என்பதிற்போல. (நன். உஅரு. உரை.)

ஆண்மைமுறைப்பெயர்— ஆணினையுணர்த்தும் முறைப்பெயர். தந்தை என்பதிற்போல. (நன். உஅரு. உரை.)

ஆண்வழி— ஆண்சந்ததி.

ஆணகம்—சுரைக்கொடி.

ஆணம்—1. குழம்பு. (பிங்கல.) 2. கொள்கலம். 3. சிறுமை (உ-ம்.) "ஆணமில்சிந்தைவீரன்"(கந்தபு. வீரவாகு கந்த. ௩௧.) [இஃது ஆணகம் என்னும் வடமொழிச்சிதைவு.] 4. நேயம். (உ-ம்.) "ஆணமினெஞ்சத்தணிநீலக்கண்ணார்க்கு" (நாலடி. பொது. ச.)

ஆணர்—1. நன்மை. 2. பாணர். 3. வளமை.

ஆணரசு—ஒருமரம். (உ-ம்.) "நெல்லி - யாணரசா - லத்திகணிவாகைமுருங்கையிருவேற்றேறுநிம்பம்" (தைல. தைலவ. க௩ரு.)

ஆணவம்—1. அதிகச்சிறுமை. 2. கோளகபாஷாணம்; இது: முப்பத்திரண்டுபாஷாணத்தொன்று. 3. தான் பெரியவனென்றெண்ணும் அகங்காரகுணம். (உ-ம்.) "நானென்கின்றவாணவமடைந்திட்டிருக்க" ( தாயு. சின்மயானந்தகுரு. ௩.) 4. (சைவசித்தாந்தம்) மும்மலங்களுள் ஒன்று; அது: செம்பிற்களிம்புபோல ஆன்மாக்களில் அநாதியேயுடன்கலந்திருப்பதாய், ஒன்றேயாய், ஆன்மாக்கடோறும் வெவ்வேறாய், அவைகளுடைய அறிவையுந் தொழிலையும் மறைத்துநின்று தத்தங்காலவெல்லையிலே நீங்கும் அநேக சத்திகளுடையதாய்ச்சடமாயிருப்பது. (சி. சி. உ: அ0. உரை.) [ஆணவம்- அணுசம்பந்தமானது. அணு - ஆன்மா, சிறுமை. ஆன்மாக்களை அணுத்தன்மைப்படுத்திநிற்றல்பற்றி இப்பெயர்த்தாயிற்று. சிவப். உ. உ. உரை.]

ஆணவமலம்—மும்மலத்தொன்று.

ஆணவமறைப்பு—மூலமலத்தடை.

ஆணவேதி— கட்டளையிடுகிறான். இஃது, ஆஞ்ஞாபயதியென்பர். சமஸ்கிருதக்கிரியாபதத்தின் திரிபு. (பி. வி: காரக. உ. உரை.)

ஆணன்—1. ஆண்மையுடையோன்.(உ-ம்.) "அரவாட்டியவாணனே" (சிவதரு. சுவர்க்கநரக. உஉஉ.) 2. அன்புடையோன்.

ஆணு— ஒருமரம். (தொல். எழுத். உயிர்மய. உக. இளம்.)

ஆணுப்பிறந்தோன்—1. ஆவாரை. 2 கழுக்காணி.

ஆணுள்—ஆண்நட்சத்திரம். அவை: பரணி, கார்த்திகை, உரோகணி, புனர்பூசம், பூசம், அத்தம், அநுடம், திருவோணம், பூரட்டாதி, உத்திரட்டாதி என்னும் பத்துமாம். இது: " பரணியழற்றேர்பூசங்களத்தம்பனையோணம்பாத- முரசிலையாண்" என்னும். விதாந. பஞ்சா. கஎ. கவியாற்பெறப்படும்.

ஆணி—1. அச்சாணி. (உ-ம்.) "உருள்பெருந்தேர்க்கச்சாணியன்னாருடைத்து" (வள். சுகஎ ) 2. உரலினடித்துவாரத்தையடைக்கும் மரக்கட்டை. 3. உரையாணி. 4. எல்லை. 5. எழுதுமாணி. (உ-ம்.) "பித்திகைக்கொழுமுகையாணிகைக்கொண்டு" ( சிலப். வேனி. ருரு.) 6. ஒருமரத்துண்டை துல்லதுபலகையை மற்றொன்றனோடுபொருத்துதற்கு இரும்புமுதலியவைகளால் அகன்றதலையும் கூரி

ய நதியு முடையதாய்ச் செய்யப் படுமேது. (உ-ம்.) "புகழாகவொட்டாதறையாணியாகு மே"(இரகு. திக். ௨௬.)7. கதாரோகம். அது, பருக்கங்கல்லுகளின் மேனடத்தலாலும் முட்கள்தைத்தொடிதலாலும் பாதத்தில் அரத்தைப்போலுமிருக்கின்ற முடிச்சுக்களையுண்டாக்குவது. (சீவரட். ௩௧௧.) 8. கருவிழியிலுடாகும் ஒருவிதப்பூரோகம்.(சீவரட். ௨௬௫.) 9. கீலகம். 10. முதன்மை. 11. மேன்மை. 12. வாட்பல்லு. [1, 4, 12. ஆணி.]

ஆணிக்குநுந்து— பனை தெங்கு முதலியவற்றின் மூலக்குருத்து.

ஆணிச்செருக்கம்— இலவண்பாஷாணம். இது முப்பத்திரண்டு பாஷாணங்களிலொன்று.

ஆணிடி—உருமேறு. (கந்தபு. நகரழி. ௭௭. உரை.)

ஆணித்தங்கம்— உயர்ந்த பொன்.

ஆணித்தரம்—1. உறுதி. 2 நல்லமுத்து. 3. முதற்றரம்.

ஆணிப்பூ— } கண்ணில் வரும் ஒரு
ஆணிப்பூடு— } நோய்.

ஆணிப்பொன்— ஆணித்தங்கம். (உ-ம்.) "ஆணிப்பொனிணுகியது" (இராமா. ஆரணிமாரீ. ௨௧௧)

ஆணிமுத்து— சிரேட்டமானமுத்து.

ஆணிவேர்— மூலவேர்.

ஆணு— 1. அன்பு. (மணிமே. பக். ௨.) 2. இனிமை. 3. நன்மை. (உ-ம்)"ஆணுமைமைந்தர்கடேறலொன்று பார்த்தயர்வார்" (கந்தபு. மகே. நகர்பு. ௩௧.)

ஆணெழுத்து—1.ஆண்பாற்படும்எழுத்து; அவை: குற்றெழுத்துக்கள் ஐந்தும். இஃது "ஆடேஉக்குறில்" என்னும் (இலக்கணவிளக். ௭௭௩-ஞ் சூத்திரத்தாற்பெறப்படும்.) 2. உயிர்பன்னிரண்டுமென்பர். (பிங்கல. ௧௩௫௮.)

ஆணை— 1. அடையாளம். (பிங்கல. ௩௧௩௦.) 2. ஆஞ்ஞை, சட்டளை. (உ-ம்.)"நாயகனாணையாலே நடத்திடுஞ்சகத்தையெல்லாம்" (சி. சி. ௨: ௫௪.) 3. ஆளுமதிகாரம். (உ-ம்) "அரும்பதிசெல்வம் கல்கியாணையும் வைப்பன்" (சி. சி. ௨: ௩௧.) 4. வெல். (பிங்கல. ௩௧௩௦) 5. சத்தியம். (உ-ம்.) "மறுத்துரையலாணைநமதென்றான்" (கந்தபு. மார்க். ௯௧.) 6. சபதம். 7. தடுத்தல். (பிங்கல. ௩௧௩௦.) 8. நிக்கிரகவநுக்கிரக கர்த்திருத்துவம். (சி. சி. ௨: ௩௧. ஞாநப்.) 9. மெய். (பிங்கல. ௩௧௩௦.) 10. வெற்றி. (பிங்கல.௩௧௩௦.)

ஆணைச்சக்கரம் — இராசாங்கதத்துவம்.

ஆணைத்தன்மை—ஆணையினியல்பு.(உ-ம்.) "தற்பரவடிகளாணைத்தன்மையா லலகையீட்டம்".(கந்தபு. மேருப். ௨௧.)

ஆணையிடுதல்— 1. சத்தியமிடுதல். 2. சபதஞ்செய்தல்.

ஆணைவழிநிற்றல்—அரசன் கட்டளைப்படி நிற்றல்.

ஆத்தம்— 1. இட்டம். (உ-ம்.) "ஆத்தமாய்வளராநின்றது" (ஞாநவா. சுக்கி. ௩௮.) 2. குருவுக்குச்செய்யும் பணிவிடை நான்கனுளொன்று; அது: குருவுக்குப்பிரியம்வர நடத்தல். (உ-ம்.) "ஆத்தமுயர்குருபரன்குற்றேவலே" (வேதா. சூ. ௪௨. உரை.) 3. பெற்றுக்கொள்ளுதல். [ஆப்தம்.]

ஆத்தர்—தலைவர். (உ-ம்.) "ஒன்குலகை. யரித்துமளித்துமளிப்பவராத்தரென்று" (திருநூற். ௪௯.)

ஆத்தல்— 1. அமைத்தல். (உ-ம்.) "அடுஞ்சமரமாத்து" (பாரதவெண். ௭௫௩.) 2. கட்டுதல், பிணித்தல். (உ-ம்.) "தண்டாரணியத்து-எங்காத்திருந்தாளை" (சிந்தா. ௩௩௧. ௩௨௬.) [யாத்தல் என்பதில் யகரங்கெட்டு நின்றது.]

ஆத்தன்—1. அருகன். (சூ. நிகண். ௧: ௨.) 2. உள்ளபொருளைக்கூறுவோன். (சைவப். ௨௨.) 3. உள்ளவன். 4. சிவன். (உ-ம்.) "ஆத்தனமர்ந்தவகன்கிரிநண்ணி" (கந்தபு. மகாசாத். ௬௬.) 5. தக்கவன். (உ-ம்.) "ஆத்தனூன்றுமடிதொறும்" (கந்தபு. காவலா. அ.) 6. நண்பன். 7. நம்பப்படுவோன். (சைவப்.௨௨.) [ஆப்தஃ.]

ஆத்தா—அணிநுணமரம்.

ஆத்தாடியுள்ளான்— ஒரு குருவி.

ஆஸ்தாநசந்தோஷம்— 1. கோணங்கித்தன்மை. 2. விகடக்கூத்து.

ஆஸ்தாநசந்தோஷி—கோணங்கி.

ஆத்தாநம்—1. ஆபத்து. 2. இடம். 3. கோபுரவாயில். (பிங்கல. ௬௩௫.) 4. தங்குமிடம், பலரும்வந்து இருத்தற்குரிய சிறந்தவிடம். (மணிமே.) 5. தருமசபை, இராசசபை. 7. பிரயாசம். [2, 4, 5, 9, 7. ஆஸ்தாநம்.]

ஆத்தாநமண்டபம்—1. கோபுரவாசலிலுள்ளமண்டபம். 2.சபைகூடுஞ்சாலை. [ஆஸ்தாநமண்டபம்.]

ஆத்தாநி—சபைகூடுமிடம். [இது அத்தாணியென மருவிவழங்குகின்றது. [ஸூஸ்தாநீ.]

ஆத்தாநீமண்டபம் — சபைகூடுஞ் சாலை. [ஸூஸ்தாநீமண்டபம்.]

ஆத்தாள்—பார்வதிதேவி. (உ-ம்.)"ஆத்தாளையெங்களபிராமவல்லியை" (அபிராமி. ௧0௧.) 2. தாய். (உ-ம்.) "அப்பனிரந்துண்ணயாத்தாண்மலைநீலி"(தனிப்பா.காளமே.௭௪.) [இஃது ஸூஸ்தா என்னும் வடமொழியினின்றுபிறந்ததுபோலும். ஸூஸ்தா - ஆதரவு, பற்றுக்கோடு.]

ஆத்தி— ஒருமரம். (உ-ம்.) "சம்புமகிழாத்து" (சைவச. பொது. ௨௯.) அது, திருவாத்தி காட்டாத்தியென இருவகைப்படும்.

ஆஸ்தி—1. ஆதனம். 2. சம்பத்து. 3. பாக்கியம்.

ஆத்திக்கனி—வெருகஞ்செடி.

ஆத்திக்கியம்—கடவுளுண்டென்னும் விசுவாசம், தேவபத்தி. (உ-ம.)"நியமமாவது-தபசு சந்தோஷம், ஆத்திக்கியம், தானம், ஈசுவரபூசை, ஞானசாத்திரத்தைக்கேட்டல், இலச்சை, புத்தி, செபம், விரதம் எனப்பத்துவிதம்" (சி. சி. அ: ௨௧. சிவாக்.) [இஃது ஆஸ்திகம் என்பதினின்றுவந்ததத்திதம்.][ஆஸ்திக்யம்.]

ஆத்திகம்— 1. கடவுளுண்டென்னும்விசுவாசம். (உ-ம்.)"ஆத்திகாசாரம்பண்ணுமறைநெறி"(த.நி. போ ௩௫௯.பக்) 2. சமயாசாரத்திலன்பு. (சி-லி. கிரி. ஞி. தாற்.) 3. தேவபத்தி. 4. யானைக்கூட்டம். [1, 3. ஆஸ்திகம். 4. ஹாஸ்திகம். இவை அஸ்தி ஹஸ்தி என்பவைகளினின்றுவந்ததத்திதம்.]

ஆத்திகன்—1. கடவுளும் புண்ணியபாவமுமுண்டென்போன். (உ-ம்.)"பொன்னுலகம்வெந்நரகம்புண்ணியபாவம்புரிவார் நின்மலனுமுண்டென்றுநிச்சயித்தார்- இங்கிவ்மையாத்திகரே" (சைவச. பொது. ௪௯௮. உரை.) 2. பத்திமான். (உ-ம்.) "சீராயவாத்திகர்தாந்திகழ்ஞாயகத்தா - லோருஞ்சிவஞானமெய்தவதற்கையமில்லை" (சூத. எக்கி. பூ. ௨: ௩௨.) 3. யானைக்கூட்டமுடையவன். (பாரதவெண். ௭௩௯) 4. யானையிலேறிச்செல்வோன். (பாரத. வெண். ௭௩௯.) [1, 2. ஆஸ்திகம் 3, 4. ஹாஸ்திகம்.]

ஆத்திகேடு—1. அருமை. 2. சத்துக்கேடு.

ஆத்திசூடி— 1. ஒளவையார்செய்த நூல்களுள் ஒன்று. [இது, நூலின்முதற்செய்யுளின்முதலாற்பெற்ற பெயர். நன்னூலில் "முதனிமித்தினு" மென்பதுவிதி.] 2. சிவன். (உ-ம்.) "ஆத்திசூடியமர்ந்ததேவனை"(ஆத்திசூடி. காப்பு.) [ஆத்தி-ஆத்திப்பூமாலை. சூடி-தரிப்பவன்.]

ஆந்திட்டி—நீர்முள்ளிச்செடி.

ஆத்திமாலை—சோழர்களுக்குரிய அடையாளமாலை. (மணிமே. பக். ௩௭.)

ஆத்தியந்தப்பிரளயம்— நால்வகையொடுக்கத்துள் ஒன்று. (கூர்மபு. பதிச. ௩௩. உரை.)

ஆத்தியர்த்திகம்— ஆதிதொடங்கி அந்தம்வரைக்குமுள்ளது. (உ-ம்.) "ஆத்தியந்திகதுக்கவிச்சேதமோ" (சி. சி. வரலாறு.) [ஆதி- முதல். அந்திகம் - முடிவு.]

ஆத்தியன்— சிவன். [ஆதியிலுள்ளவன் என்றபடி.] (ஆதி - ய - ஒருவிகுதி.) [ஆத்திமாலையணிந்தவன் என்றும் பொருள்படும்.]

ஆத்தியாத்மிகசாத்திரம்— அத்தியான்மிக நூல். (த. நி. போ. ௧௪.) அது: கபிலபதஞ்சலிவியாசரென்னும் முனிவர்களார்கிரமத்திற் சொல்லப்பட்ட சாங்கியபாதஞ்சலவேதாந்த மெனமூன்றுவகைப்படும். சாங்கியம்:- நித்தியநிர்மலமான ஆத்மசந்நிதானத்தில் குணத்திரயாத்மகப்பிரகிருதியே பஞ்சவிம்சதி தத்துவாத்மகசகத்தாய் விவகரிப்பதே சம்சாரபந்தமென்றும் சத்வாதிகுணத்திரயாநுக்கிரமத்தால் சேத்துமப்பிரகிருதி,பித்தப்பிரகிருதி, வாதப்பிரகிருதியினுள்ளசாந்திகுரோதமூடாதிகுணயுத்தமான உத்தம மத்திம அதமபுருஷத்திரயவர்ணநீதி முதலானவையுண்டென்றுஞ்சொல்லும். பாதஞ்சலம்:- இயமநியமாதிஅஷ்டாங்க யோகத்தால் மனோநிச்சல சித்தியாமென்று சொல்லும். வேதாந்தம்:- பிரபஞ்சத்துக்குமிதநியாத்துவஞ்சாதித்து அதனாற் பரமாத்துமஐக்கியத்துவம் வர்ணிக்கப்பட்டும் பாஸ்கரியம் மாயாவாதம், சத்தப்பிரமவாதம், கிரீடாப்பிரமவாதம் என நான்குபேதமாம்.

ஆத்தியான்மிகசிதாகமம்— சிவசத்தியால் விளக்கப்பட்ட சிற்சத்தியாகிய பரமான்மஞான ஆகமம்.

ஆத்தியான்மிகம்— 1. தாபத்திரயங்களுளொன்று. அது: தன்னாலும் பிற ஆன்மாக்களாலும் வருவது. இது "தன்னாற்பிறரால் தனக்குவருந்தீக்குநல - மின்னுவிலங்காவத் தேனொறுமபு-சென்முதனீ - ரட்டைமலவன்

முதலே மீனாவமாதியினுக் - கட்டமிக் கான்மிகமேகாண்" என்னும் சைவச. பொது. சகஉ. உரையாற்பெறப்படும். "ஆத்தியான்மிகமாவது சடத்தோகூடிய சேதனம் வாயிலாகவருவது" என்றார் சிவஞானமுனிவர் (சிவஞானபோ. உ. எ-ம் வெண்பா. சிவஞா.) 2. பரமாத்துமசம்பந்தமுடையது. [ஆத்யாத்மிக: அதி - மேல். ஆத்மா - ஆன்மா. இக - ஒருவிகுதி.]

**ஆத்தியேட்டிகை**— கோயிற்கட்டிடத்திற்கு ஆதியில் வைக்கபடுஞ்செங்கல்.

**ஆத்தியை**— தார்க்கை. [ஆத்யா.]

**ஆத்தியோபாந்தம்**— ஆதிதொட்டு அந்தம் வரைக்குமுள்ளது. [ஆத்யோபாந்த: ஆத்யா - உப - அந்த.]

**ஆத்திரகம்**— இஞ்சி.

**ஆத்திரம்**— 1. கோபவிரைவு. 2. விரைவு. (உ-ம்.) "ஆத்திரம் வந்தவர்போலலேயாமல்" (தாயு. பாயப்புலி. ௬௩.) [தெலுங்கு.]

**ஆத்திரவம்**— }
**ஆத்திரி**— } ஆத்திரம்.
**ஆத்திரியம்**— }

**ஆத்திரேயம்**— ஒரு வடநூல். இது வேதாங்கமாகிய கற்பவகைகளுளொன்று. அத்திரிமுனிவராற்செய்யப்பட்டது. (மணிமே. உ௬௪. பக்.)

**ஆத்திரேயன்**— 1. சந்திரன். (மணிமே.) 2. தத்தாத்திரயமுனி. [அத்திரிமகன் எனப்பொருள்படும்.]

**ஆத்துமகத்தியை**— தற்கொலை. [ஆத்மஹத்யா: ஆத்ம - தான். ஹத்யா - கொலை.]

**ஆத்துமகநநம்**— தற்கொலை. [ஆத்மஹநநம்: ஆத்ம - தான. ஹநநம் - கொலை.]

**ஆத்துமகம்**— 1. ஒருக்குசேர்ந்திருக்குமது. (உ-ம்.) "மூலப்பிரகிருதியானது திரிகுணாத்துமகமாதலின்" (சி. சி. க: ௧௬. சிவாச்.) 2. தன்மை. 3. பிறத்தல். 4. வடிவம். [ஆத்மக.]

**ஆத்துமகாதம்**— தற்கொலை. [ஆத்மகாத: ஆத்ம - தான். காதம் - கொலை.]

**ஆத்துமகுப்தா**— பூனைக்காலிச்செடி.

**ஆத்துமகோஷம்**— காகம்.

**ஆத்துமசன்**— புத்திரன். [ஆத்மஜ: ஆத்ம - தான். ஜ - பிறந்தவன்.]

**ஆத்துமசுத்தி**— ஐந்து சுத்தியினொன்று; அது: பூதசுத்தி, அந்தரியாகம், சமாதி என்னும் மூன்றன் றொகுதி. (சைவச. பொது. ௫௦௨. உரை.) விவேகசிந்தாமணிகாரர் "சௌச, ஆசமந, ஸ்நாந, பஸ்ம, ருத்திராக்ஷதாரணகவசமந்திர கலாநியாசதியாநாதிரசனைகளைச்செய்வதே" ஆத்மசுத்தி என்பர்.

**ஆத்துமசை**— மகள். [ஆத்மஜா: ஆத்ம - தான். ஜா - பிறந்தவள்.]

**ஆத்துமஞ்ஞன்**— ஆத்துமாவை அறிந்தவன். [ஆத்மஜ்ஞ: ஆத்ம - ஆன்மா. ஜ்ஞ - அறிந்தவன்.]

**ஆத்மஞானம்**— ஆத்துமாவை அறிதல். [ஆத்மஜ்ஞாநம்: ஆத்ம; ஜ்ஞாநம் - அறிதல்.]

**ஆத்துமதத்துவஞ்ஞன்**— ஆத்துமதத்துவத்தை அறிந்தவன். [ஆத்மதத்வஜ்ஞ:]

**ஆத்துமதத்துவம்**— ஆன்மதத்துவம். [ஆத்மதத்வ.]

**ஆத்மதரிசகம்**— கண்ணாடி. [ஆத்ம; தர்சக:]

**ஆத்துமதரிசநம்**— ஆத்துமாவின் நிலையை அறிதல். [ஆத்மதர்சநம்: ஆத்ம; தர்சநம் - அறிதல்.]

**ஆத்துமதரிசம்**— கண்ணாடி. [ஆத்மதர்ச: ஆத்மா, தர்ச - பார்வை.]

**ஆத்துமநிவேதநம்**— தன்னைக்கொடுத்தல்.

**ஆத்துமபுத்தி**— தன்னறிவு. [ஆத்மபுத்தி: ஆத்ம - தான். புத்தி - அறிவு.]

**ஆத்துமபூ**— 1. சிவன். 2. பிரமன். 3. மன்மதன். 4. விட்டுணு. [ஆத்மபூ.]

**ஆத்துமபோதம்**— ஆத்துமஞானம். [ஆத்மபோத.]

**ஆத்துமம்**— 1. அரத்தைச்செடி. 2. சிவசெந்து. 3. சீவாத்துமா. 4. பிராணன். 5. மனம்.

**ஆத்துமயோநி**— 1. காமன். 2. சிவன். 3. பிரமன். 4. விட்டுணு. [ஆத்மயோநி: ஆத்ம - மனம், தான். யோநி - பிறப்பிடம்.]

**ஆத்துமவசம்**— தன்னையடக்குதல்.

**ஆத்துமவசன்**— தன்னையடக்கிக்கொள்பவன். [ஆத்மவச: ஆத்ம - தான். வச - அடக்கிக்கொள்ளுதல்.]

ஆத்துமா— 1. அக்கினி. 2. ஆன்மா. 3. உடம்பு. 4. உறுதி. 5. காடிக்குட்டி. 6. காற்று. 7. சிவசெந்து. 8. சுபாவகுணம். 9. சூரியன். 10. தான். 11. பிரமம். 12. பிரயத்தினம். 13. மகன். [ஸூ-த்மா.]

ஆத்துமார்த்தம்— 1. ஆத்துமலாபத்திற்குரியது. 2. தன்பொருட்டு. [ஸூ-த்மார்த்தம்: ஸூ-த்மா - தான். அர்த்தம் - பொருட்டு.]

ஆத்துமாவச்சேதம்— ஆன்மாவின் விசேடகுணம். (உ-ம்.) "ஆத்துமாவச்சேதமாயிருக்கிற அகங்காரமே" (சி.சி. ௨:௬௫. சிவாக்.) [ஸூ-த்மா; அவச்சேதம் - விசேடகுணம்.]

ஆத்தை— 1. என்றாள். 2. ஓர் அதிசயவிரக்கச்சொல். [இஃது "அஹா" என்னும் வடமொழியின் விகாரம்போலும்.]

ஆத்மசந்தி— 1. ஐம்பத்தொரு ருத்திரசத்திகளிலொருசத்தி. (வி-ணி. ௨௭௭.) 2. தனது சத்தி. [ஶக்தி- வல்லமை.]

ஆத்மசுத்தி — தன்னைச்சுத்தப்படுத்தல். [ஸூ-த்மஶுத்தி.]

ஆத்மசொரூபலக்கணபஞ்சகம்— (வேதாந்தம். ஆன்மாவின சொரூப இலக்கணங்கள் ஐந்தன்கூட்டம். அவை: சத்து, சித்து, ஆநந்தம், நித்தியம், பூரணம் என்பன. அவற்றுள்; அறிவேன், அறியேன் என்பதிலும், காமாதிவிருத்திதோன்றுமிடத்திலும், தோன்றாவிடத்திலும், சாக்கிராதி அவத்தையிலும் தனக்கொருவாதையில்லாமல் உண்டென்பதே சத்துரூபமாம். சர்வாவத்தையிலும் விஷயங்களை இடைவிடாதறிவதே சித்துரூபமாம். பரமப்பிரீதியில் விஷயமாவதே ஆநந்தரூபமாம். சதோதிதமாவதே நித்தியரூபமாம். சர்வ சம்பந்தத்துவமே பூரணரூபமாம். (த. நி. போ. ௧௦௬.)

ஆத்மத்திரயம்— (வேதாந்தம்) மூவகை ஆன்மாக்கள், அவை; சீவாத்துமா, அந்தராத்துமா, பரமாத்துமா என்பன. அவற்றுள், தப்தாயபிண்டமபோலத் தேகங்கட்குள்ளே சம்பந்தித்துச்சகலசமுசாரவிகாரமுள்ளவனே சீவாத்துமா. கமலபத்திரோதகம போலச்சமுசாரம்பொருந்தியும் பொருந்தாதவனே அந்தராத்துமா. லோகவிகாரத்துக்குச் சூரியன் எப்படிச்சாட்சிகனோ அப்படிச்சீவாந்தரவிகாரசாட்சிகனே பரமாத்துமா. (த. நி. போ. ௧௦௧.)

ஆத்மநேபதம்—கர்த்திரு கர்மணிக் கிரியா பலத்தைப் பயப்பது. (பி. வி. ௩௯. உரை.) தன்பொருட்டுச்செய்யுந்தொழிலைக்குறிக்கும் வினைச்சொல். (பிரமோ. நி. ௪௫.)

ஆத்மப்பிரபோதம்— இருக்குவேத உபநிடதங்களுளொன்று. (கூர்மபு. அட்டமூர். ௨௬. உரை.)

ஆத்மப்பிராசாதம்— பஞ்சப்பிராசாத மந்திரங்களுள் ஒன்று. (த. நி. போ. ௨௧௬.)

ஆத்மம்— அதர்வணவேத உபநிடதங்களுளொன்று. (கூர்மபு. அட்டமூ. ௨௬ உரை.)

ஆத்மலக்கணம்—(வேதாந்தம்) ஆத்துமாவின இயல்பு; அவ்வியல்புகள், சத்து, சித்து, ஆநந்தம் என்பன. (வாசுதேவ. ௬௨.)

ஆத்மவதம்— தற்கொலை. [ஸூ-த்வயம: ஸூ-த்- தான். வயம - கொலை.]

ஆத்மாநந்சிநந்தி— தன்னைக் குத்தினன் எனப் பொருள்படும் ஒரு வடமொழிவாக்கியம். (பி. வி. காரக. ௪௨. உரை.) [ஸூ-த்மாநம் - தன்னை. ஜிநந்தி - குத்தினன்.]

ஆத்மாநந்தம்— சீவனானவன் தனது பிரியத்தைத்தநாதிவிடயங்களின்மேல் வைத்து அவைகளை இன்பமாய் அநுபவிக்குமிடத்து அநுபவிப்பானும், அநுபவமுமாகிய இரண்டுமின்றி உதிக்கும் பயன் என்றபடி. [ஆத்மாவை முன்னிட்டுவரும் ஆநந்தம்.] (வேதா. சூ. ௩௫.) [ஸூ-த்மா - ஆநந்தம்.]

ஆத்மாநவாதரோகம் — அடிவயிற்றிலே வேதனையைச்செய்கின்ற ஒருவகை வாதரோகம். (சீவரட். ௧௬௦.) [வயிற்றில் சத்தத்தை யுமுப்புதலையுந்தருதலால் வந்தபெயர்.]

ஆத்மாரோபணம்— முப்பத்திரண்டு உபசாரங்களுள் ஒன்று. (த. நி. போ. ௩௦௨.)

ஆத்மிகம்— ஆன்மசம்பந்தம். (வி-ணி.) [ஸூ-த்மா- இக - ஒருவிகுதி. ஆத்மா என்பதினின்றுவந்ததத்திதம்.]

ஆதக்க—ஆகக்கடவன. (உ-ம்.) "அண்ணுதல்" பார்.

ஆதரு—ஆகின்ற. (உ-ம்.) "ஆதருகாலையில்" (கந்தபு. திருவவ. ௬௬.)

ஆதங்கம்—1. அச்சம். (உ-ம்.) "ஆதங்கத்தெனநிசைக்கூற்று" (மறைசையந். ௨௩.) 2. ஆபத்து. 3. உபத்திரவம். (உ-ம்.) "இப்பாராதங்கமாற" (பாரத.அருச்சுனன்தீர்.௮௭.) 4. கலகம். 5. சுரகேய். 6. தீங்கு. 7. நோய்.

8. வாத்தியவொலி. [ஸ்தநம: ஸ்; தநம- இடர்.]

ஆதஞ்சநம்—1. அழித்தல். 2. உபத்திரவம். 3. திருப்திசெய்தல். 4. திங்கு. 5. பஸ்மமாக்கல். 6. பாலானது தயிராதற்கு உறையிடுதல்போல ஒன்றன்றன்மைதிரிந்து வேறுதற்கு அதனோடு வேறொன்றைச்சேர்த்தல். 7. வேகம். [ஸ்தஜந.]

ஆதண்—1. நோய். 2. வருத்தம்.

ஆதண்டை—காற்றோட்டி.

ஆததாயி—கொடியவன். (உ-ம்.) "கொடியவரென்றது, தீக்கொளுவுவார், நஞ்சிடுவார், கருவியிறகொல்வார், களவர், ஆறலைப்பார், சூறைகொள்வார், பிறனில்விழைவாரென்றிவர் முதலாயினோரை" இவரைவடநூலார் ஆததாயிகள் என்ப. (வள். திருஂ. பரி) [ஸ்ததாயிந: ஸ்தத - பரந்த.]

ஆததாயிதை— ஆததாயியுடையதன்மை. [ஸ்ததாயிதா: ஸ்ததாயி- கொடியவன். தா - தன்மை.]

ஆதநம்—1. ஆசநம். (உ-ம்.) "ஆதநத்திடையிருத்தி" (தணிகை. நைமிச. கக.) 2. எண்வகையோகவுறுப்புகளிலொன்று. அது: சுபத்திகம், கோமுகம், பதுமம், வீரம், கேசரி, பத்திரம், முத்தம், மயூரம், சுகம் என ஒன்பதாம். அவற்றுள், சுபத்திகம், தொடைக்கும் முழங்காற்கும நடுவே இரண்டுள்ளங்காலையுஞ் செலுத்தி இருமாநதிருத்தல். கோமுகம், சகநபக்கத்தில் இருகாற்பரட்டையுமாறி வைத்து அவ்விருகாற் பெருவிரலைக் கையிற்பிடித்திருத்தல். பதுமம், இருதொடைமேலுமிரண்டுள்ளங்காலையும் மாறித்தோன்றவைத்தல். வீரம், வலத் தொடையில் டக்காற்பாட்டைசசேர்த்தி யிருமாப்புற்றிருத்தல். கேசரி, பீசத்தின்கீழ் சீவனியிடதுப் பாட்டை வைத்து இடமுழங்கையை முழந்தாளில் வைத்து அங்குலி விரித்து நாசியைப் பார்த்திருத்தல். பத்திரம், பீசத்தின் கீழ் சீவனியிடத்து இருகாற்பாட்டையுமவைத்து அவ்விருபதத்தையும் இருகையால் இறுகப் பிடித்தசையாதிருத்தல். முத்தம், இடக்காற்பாட்டால் சிவனியை அழுத்திவலக்காற்பாடு அப்பாட்டின் கீழமுந்த இருத்தல். மயூரம், முழங்கையிரண்டும் முந்திப்புறத்திலழுந்தப் புவியிற் கையூன்றிக காலீட்டித்தலை நிமிர்ந்திருத்தல். சுகம், சுகமுந்திடமும் எவ்வா றிருக்கினெய்துமோ அவ்வாறிருத்தல். (கந்தபு. நகர. கரு. உரை.) 3. சேலை. 4. நீளம். 5. பார்வை. 6. விரித்தல். [1, 3. ஸ்லந. 4, 5, 6. ஸ்தநம: ஸ்; தநு- விரித்தல்.]

ஆதநமூர்த்தி—ஆசநமூர்த்தி.

ஆதபத்திரகம்—குடை. [ஸ்தபத்ரகம: ஸ்தப - வெய்யில். த்ர - காப்பது.]

ஆதபத்திரம்—1. குடை. (உ-ம்.) "சுருக்கியமும்பட - டாதபத்திரம்போன றனதாமரையடவி" (பாரத. கிருட். அஅ.) 2. வெண்குடை. (சூ. நிகண். எ: கஎ.) [ஸ்தபத்ர: ஸ்தப - வெய்யில். த்ர - காப்பது.]

ஆதபத்தினர்—சூரியர். (உ-ம்.) "ஆதபத்தினர்பரிமுகர்வசுக்களன்னையர்" (கந்தபு. அயனை. தீ. உ.) [ஸ்தப- ஸ்த- ஐநு- ஸ்ரீ.]

ஆதபநீயம்—ஒருவகைநெல்.

ஆதபம்—1. ஒளி. (பிங்கல. கககந அ.) 2. குடை. 3. வெய்யில். (உ-ம்.) "சவிகையிலாத பங்காப்ப"(கந்தபு. தெய்வ. எக.)[ஸ்; தப- பிரகாசம்.]

ஆதபவாரணம்—குடை. [ஸ்தபவாரணம: ஸ்தப - வெய்யில். வாரணம- தடுத்தல்.]

ஆதபன்—1. சூரியன். (உ-ம்.) "ஆதபன் மதிமுதலமார்யாவரும்" (கந்தபு. தெய்வ. சகஎ.) 2. பிராமணன். [ஸ்தப.]

ஆதபாபாவம்—நிழல். [ஸ்தபாபாவ: ஸ்தப - வெய்யில். அபாவ - இன்மை.]

ஆதபோதகம்—கானற்சலம். [ஸ்தபோதக: ஸ்தப - வெய்யில். உதக- சலம்.]

ஆதம்—1. ஆதரவு, விருப்பு. (உ-ம்.) "ஆதமெய்திநின்றஞ்சலித்தேத்தியே" (கந்தபு. திருக்கலி. சக.) 2. கூந்தற்பனை.

ஆதம்பேதி—செப்புநெருஞ்சிற்பூண்டு.

ஆதமிலி—ஆதரவற்றவன். (உ-ம்.)"ஆதமிலிநாயேனையல்லலறுத்தாட்கொண்டு" (திருவாசக. கண்டபத்து ௫.)

ஆதர்—1. அறிவில்லாதவர். (உ-ம்.)"முல்லைப்பொன்னேயுள்ளா - மருளாதரித்திராதேர்ந் தறியார்" (முல்லையந். உச.) 2. குருடர்.

ஆதர்வணன்—அதர்வணவேதம்பயின்றோன். [அதர்வண என்பதினின்று வந்த தத்திதபதம்.] [ஆதர்வண:]

ஆதர்வணிகன்—ஆதர்வணன். [ஆதர்வணிக: அதர்வண; இக - ஒருவிகுதி.]

ஆதரம்—1. அன்பு. (உ-ம்.) "எம்பாலாதரங்கொடுதணிகைவெற்படைவரேல்" (கந்தபு. வள்ளி. உஉஎ.) 2. ஆசை. (உ-ம்.) "கங்கையாளிடத்திலாதரமெலிந்தகாலையிற் களிந்தவெற்பளித்த" (பாரத. குருகுல. கக.) 3. ஆரம்பம். 4. உபசாரம். (உ-ம்.) "அன்புநீடியதத்தமிழ்ப்பிகழாதரங்கள்பெருக்கினார்" (கோயிற்பு. இரணிய. கரு.) 5. ஊர். (பிங்கல. ௬எரு.) 6. சிலம்பு. 7. மரக்கலக்கூலி. 8 சங்கை. [1, 6. ஆதர. 7. ஆதர: ஆ; த்ரு- கடத்தல்.]

ஆதரவு—1. அன்பு. (உ-ம்.) "ஆதரவிலாதான்செய்யுநல்லவுமல்லவாகும்" (பிரபுலிங். வசவண்ணர். சச.) 2. ஆதாரம். 3. உதவி. (உ-ம்.) "மூரிமதன்-கன்றினங்காதரவாருளரோ" (மூல்லையங். ருஅ.) 4. தேற்றுதல். 5. பேரன்பு. (உ-ம்.) "தென்னாதரவாற்சயற்கண்ணிதலைவன்றன்னையருச்சித்து" (திருவிளை. உவா. ச.) 6. விருப்பம். (உ-ம்.) "ஆதரவுகொண்டேயலமந்தவைம்புலமாம்" (கந்தபு. மார்க்க. உக.)

ஆதரிக்கை—அன்புசெய்தல். (உ-ம்.) "ஆகமப்பத்தருமற் றாரணச்சுத்தருமுற்றாதரிக்கைக்கு" (திருப்புகழ். ருநo.)

ஆதரிசநம்—1. கண்ணாடி. 2. வெளிப்படையாக்கல். [ஆதர்சநம்: ஆ; த்ருசி - காட்டுதல்.]

ஆதரிசம்—1. கண்ணாடி, 2. கையெழுத்தினுள்ளமூலப்பிரதி. 3. வியாக்கியாநம். [ஆதர்ச: ஆ; த்ருசி - காட்டுதல்.]

ஆதரித்தல்—1. அன்புவைத்தல். 2. ஆசைகூர்தல். 3. உதவிசெய்தல். 4. உபசரித்தல். (உ-ம்.) "காந்தாரிநூறுமகவானகருப்பமொன்று - வேந்தாதரிக்கத்தரித்தாள்" (பாரத. சம்பவ. ௭அ.) 5. சங்கித்தல். 6 தாபரித்தல். 7 தேற்றுதல். 8. விரும்புதல். (உ-ம்.) "ஆதரித்தநற்குணங்கள்" (ஞானவா. வைராக். எஎ.)

ஆதரிப்பு—அன்புவைத்தல். (உ-ம்.) "ஆழிவல்வினையாதரிப்பும்" (நாலாயிர. திருவாய். எஉ: ரு.)

ஆதல்—1. ஆகுதல். (உ-ம்.) "பணிவுடையனின்சொலனாதல்" (வள். கரு.) 2. ஆவது என்னும்பொருள்படும்ஓரிடைச்சொல். (உ-ம்.) "பொருந்துமோர்துலாத்தினாதலைத்துலாம்பொன்னினாத - திருந்துகாற்றுலாத்தினாதல்சதுரமாய்த்தகடுசெய்தே" (கூர்மபு. தாந. கரு.) 3. உண்டாகுதல். (உ-ம்.) "ஆதலுமழிவுமுண்டோ" (பாரத. பதின்மூ. கருக.) 4. கல்விநூல். 5. கூத்து. 6. தரிசநம். 7. நுணுக்கம்.

ஆதலை—1 உதவி. 2. தாபரிப்பு.

ஆதவச்சுரம்—வெய்யில்வழிநடப்பதினால் உண்டாம் ஒருவகைச்சுரம். (சீவரட். சஎ.) [ஆதபம்- வெய்யில். ஜ்வர - காய்ச்சல்.]

ஆதவம்—1. ஒளி. 2. குடை. 3. கொன்றைப்பூ. (இராசவைத்.) 4. வெய்யில். (உ-ம்.) "ஆதவம்பனிமழையனிலத்தச்சுறுப் - பாதவமாமென" (கந்தபு. மார்க்க. களசு.)

ஆதவன்—1. சூரியன். (உ-ம்.) "இருட்கார்க்குவன்றோர்- கடவாதவன்" (கம்பாங். சங.) 2. பிராமணன்.

ஆதளபாதளை—1. அதிகவருத்தம். 2. மநக்கலக்கம். [அதல - பாதல.]

ஆதளை—1. ஆமணக்கு. 2. ஆயாசம். [அடியற்றது எனப்பொருள்படும் ஆதல் என்பதன்றிரிவு. [அ; தல - அடி.] 3. எலியாமணக்கமரம். 4. மாதுளை. (உ-ம். நைடத. அன்னத்தைக். உஅ.)

ஆதன்—1. அருகன். 2. அறிவில்லான். (உ-ம்.) "என்முன்வந்திதரு-மன்னாதபோது" (கம்பாங். எக.) 3. உயிர். (சூ. நிகண். உ: கoரு.) 4. குரு. (உ-ம்.) "ஈதனந்தம்பலந்தருமெச்சமென்-றாதனஞ்சந்தனமலராதியால்" (சேது. பாலோ. கஎ.) 5. குருடன். (உ-ம்.) "ஆதன்பொருளானேன்" (தேவார. திருவெண்ணெய். சுந்த. ரு.) [1, 4. ஆப்தன் என்பதன் பகரங்கெட்டுஆதன் என நின்றதுபோலும்.]

ஆதனம்—நிலைமை.

ஆதனவினி—ஒருசோன். (ஐங்குறு. க: வேட்கைப்பத்து.)

ஆதனழிசி—ஒல்லையூர்தந்த பூதப்பாண்டியன் நண்பருள் ஒருவன். (உ-ம்.) "ஆதனழிசியும்" (புறநா. எச)

ஆதனுங்கன்—ஒருகொடையாளி. (உ-ம்.) "கல்லிழியருவிவேங்கடங்கிழவோன்-செல்வுழியெழா அநல்லோருதியனாதனுங்கன்" (புறநா. ௩அரு.)

**ஆதனோரி**— ஓரியென்னும்வள்ளல். (உ-ம்.) "அடுபோரானுவாதனோரி" (புறநா. கருக.)

**ஆதாநம்**—1. அடகு. 2. எடுத்தல். (சி-வி. ஞாந. கஅ. தாற்.) 3. ஏற்றுக்கொள்ளுதல். 4. ஔபாசநாக்கினியாக்குதல். 5. கருத்தரித்தல். (உ-ம்.) "வேதாகமங்களுரைநூலின்விளம்புங்காலந்தனிலுரைத்த - வாதாநத்தினியல்பதனை" (சரசோதி. சோடச. க.) 6. கருத்தரித்தற்பொருட்டுச் செய்யப்படும் ஓமம். 7. சங்கற்பித்தல். 8. செய்தல், செய்துமுடித்தல். (உ-ம்.) "அங்கி-யாதாநமபயின மறையோர்" (சேதுப். அகத். ௩அ.) 9. தாபநம், வைத்தல். 10. பிறப்பித்தல். 11. மந்திரத்தினலே நெருப்பைச்சுத்திபண்ணியுண்டாக்கல். 12. யானைமுழக்கம். [1,2,4,5,6,7,9,11. ஆதாந. 8, 10. ஆதாந. 3, 12. ஆதாந.]

**ஆதாநமுகூர்த்தம்**— கருப்பாதாந முகூர்த்தம். (குமாரசு. ச. எ௩.) [ஆதாநமுகூர்த்த.]

**ஆதாநிகம்**—கருத்தரிக்கும்பொருட்டுச்செய்யுங்கிரியை. [ஆதாநிக: ஆதாந-கருத்தரித்தல். இக-ஒருவிகுதி.]

**ஆதாயம்**— 1. இலக்கினத்திற்குப் பதினொராமிடம். (சோதிடகடல்.) 2 இலாபம், 3. நன்மை.

**ஆதாரகாரகம்**- (இலக்கணம்) ஏழாம்வேற்றுமைவினையோடுமுடிவது. (வீர. சோ. உபகார. க.)

**ஆதாரசத்தி**— சிவசத்தியாலதிட்டிக்கப்பட்டகுண்டலினீசத்தி. (சி-வி. சரி.உ௧.தாற்.) (உ-ம்.) "இயங்குமாதாரசத்திபீடத்தினிருநூல்கூறும் - நயங்கொளுமிலிங்கந்தாபித்து" (சூத. சிவமா. ச: சஎ.)

**ஆதாரசுத்தி**—இலயயோகஞ்செய்யப்பிரயத்தனஞ்செய்யும்போது செய்யுஞ் சாதனங்களில் ஒன்று; அஃது: ஆதாரங்களாறினையுஞ்சுத்திசெய்தல். (சு. நி. போ. ௩௫௩.)

**ஆதாரதண்டம்**—முதுகெலும்பு.

**ஆதாரதீக்ஷை**— சிவன் குருமூர்த்தங்கொண்டுசகலர்க்குச்செய்யுந்தீக்ஷை. (ப. பா. கடு.)

**ஆதாரம்**—1. ஆதரவு. (உ-ம்.) "ஆதாரமிலேனருளைப்பெறவே-நீதாவொருசற்றுநினைந்திலையே" (கந்தரநு. உக.) 2. இடம், பற்றுக்கோடு. (உ-ம்.) "புணருமாதாரமும்புளினமாங்கதி-லிணையுமாதேயமும் புளினமாகுமே" (சேது. சந்த. அசு.) 3. உடம்பிலுள்ள விசேடமான இடம்; அவ்விடங்கள்: மூலாதாரம், சுவாதிட்டாநம், மணிபூரகம், அநாகதம். விசுத்தி, ஆஞ்ஞை என்பன. (உ-ம்.) "படர்தருமிருமூன்றுயவாதாரம் பயிறருபொருளுணர்ந்தேகி" (சூத. சிவமா. க: கஅ.) 4. உடம்பு. (சூ. நிகண். உ: அ௫.) 5. (இடப்பொருளில்வரும்) ஏழாம்வேற்றுமை. (உ-ம்.) "சிட்டாரவதியொடாதாரமென்றறிதேமொழியே" (வீரசோ. வேற்றுமை. க.) 6. காத்தல். 7. கொள்கலம். 8. தாங்குமது, தரிக்குமது. 9. நிலை. 10. பாத்தி. 11. மரக்கலக்கூலி. 12. மழை. 13. வரம்பு. 14. வாய்க்கால். [1, 2, 3, 4, 5, 6, 7, 8, 9, 10, 13, 14. ஆதார. 11. ஆதார. 12. ஆஸார.]

**ஆதாரயோகம்**—ஒருவகையோகம். (உ-ம்.) "இப்படியறிந்துசேர்கைக்கியம்புமூலத்தையந்த- வொப்பிலாவெழுத்தைவிந்துநாதமோடுச்சரித்து - அப்பரஞ்சோதிநோக்கியமைவதாதாரயோகம்" (சு. நி. போ. ௩எக. பக்.)

**ஆதாரலக்ஷணை**—ஆதாரத்திற்குரியபெயர் ஆதேயத்தைக்கருதிநிற்பது. அது: கட்டில் கூப்பிட்டது என்புழி ஆதாரமாகியகட்டிலின்பெயர் அதிலுள்ளபுருடனுக்காதல்போல்வது. (சி. சி. பாயி. குருவண. ஞாநப்.)

**ஆதாளி**— 1. அநதர நிலையிலிருப்பவன், மநக்கலக்கமுடையவன். (உ-ம்.) "ஆதாளியையொன்றறியேனையறத்-தீதாளியையாண்டதுசெப்புமதோ" (கந்தரநு. ௩அ.) 2. புரட்டல், 3. பெருமைபாராட்டல். (உ-ம்.) "ஆதாளிவாயனை" (திருப்பு. ௫௫எ.) 4. பேரொலி. 5. மநக்கலக்கம். (உ-ம்.) "ஆதாளிகள்புரிகோலாகலவிழியாலே" (திருப்பு. கசு௩.)

**ஆதாளிக்காரன்**-பெருமைபாராட்டுவோன்.

**ஆதாளித்தல்**— ஆயாசப்படுதல்.

**ஆதாளிமன்னன்**— சரடி.

**ஆதாளை**— ஒருவகைச்செடி.

**ஆதி**— 1. அடகு. 2. அதிசயம். 3. அருகன். (சூ. நிக. க: ௩.) 4. ஆவல். 5. ஆவாயெனப்பொருள்படும் ஒரு முன்னிலைவினைமுற்று. (உ-ம்.) "எலாதியேகடுகமென்றுரைக்கு பின்மருநது-போலாதியென்ன" (கந்தபு. அசுரர்யாக. உசு.) 6. இடமாக்கல். 7. இறைவன். 8. எசமான். 9. எழுவாய். 10. ஒருதாளம். 11. காய்ச்சற்பாஷாணம். 12. காரணம். (உ-ம்.) "புகைத-னாதியானவனல்காட்டலாகும்" (சி. சி. அளவை. சo.) 13. சிருட்டிக்கடவுள். (உ-ம்.) "அத்திதியுமாதியுமாமஙகு" (சிவஞாநபோ. க: உ. வெண்பா.)

[ஆகுபெயர்] பிரமா. 14. சிவன். (உ-ம்.)"ஆதிதன்னருளெய்தியவன்றிருப்-பாததாமரை சூடிய" (கந்தபு. திருக்கைலா. உஉ.) 15. சூத்திரம். 16. சூரியன். 17. திரோதாநசத்தி. (உ-ம்.) "பரந்தபராபரையாதிபரனதிச்சை" (சிவப்பி. மங்கல. உ.) 18. தொடக்கம், ஆரம்பம். (உ-ம்.) " அந்தமுமாதியுமில்லாமறைசையிலத்தர்தம்மேல்" (மறைசை. காப்பு.) 19. தொன்மைவனப்பு; அஃது: உரைவிராய்ப்பழங்கதைப்பொருளாகச்செய்வது, அதனைப்பெருந்தேவனார் பாரதமுதலியனவற்றிற்காண்க. 20. நேரோடல் (உ-ம்.) "ஆதிவருகதிப்பரியும்" (பாரத. இராய. கஙப.) 21. பதி, கடவுள். (உ-ம்.)"சொற்றவர்தியுநோமுறுவான்றனை- யுற்றவாவியுமொனறல"(கந்தபு. சுக்கிர. உஅ.) 22. பழமை. (பிங்கல. ௩கஙஉ.) 23. பிரதாநம். (உ-ம்.) "வியாகரண - மணிகண்டவாதிவிபுதர்கள்" (கம்பரா. சக.) 24. புத்தன். 25. போதல். 26. மண்டலமாயோடுகை 27. மநவருத்தம். 28. மனவிருப்பம். 29. மிருதபாஷாணம். 30. முதல். 31. முதலாம்பாகம். 32. முதலியவை.(உ-ம்.) "இருக்காதிமறைமொழிந்தோன்" (பாரத. சிறப்புப்பா. உ௩.) 33. முதன்மை, சிரேட்டம். (உ-ம்.) "பண்ணவர்சமக்கு- மேமுறப்படுமறைக்கெலாமாதிபெற்றியலும்- ஒமெனப்படுங்குடிலையே"(கந்தபு. அவைபுகு.க௩ச.) 34. முற்காலம். (உ-ம்.) "ஆதியின்மாறுகொண்டமர்செய்தானெலன"(கந்தபு.மூன்றுநாட். ௬௬.) 35. முன்னுள்ளபொருள். (உ-ம்.)"விதிமுதலுரைக்குஞ்-செயலினுக்கெலாமாதியாய்"(கந்தபு. அயனைச்சிறைபுரி. கஅ.)36. வரவு நோக்குகை. 37. வாசஸ்தாநம். 38. விட்டுணு. (உ-ம்.) "காதியதிறனரகாசுரன்றனை - யாதிவெங்கோலமன்றளித்தவாறுபோல்'(பாரத. வேத்திர. ௩ச.) 39. வேர். (தைல. தைலவ.) [1, 2, 6, 15, 27, 28, 36, 37. ஆயி. 25. ஆதி. 12, 18, 23, 30, 31, 32, 33, 34, 35. ஆதி.]

ஆதிக்கடுஞ்சாரி—வெச்சாரம்.

ஆதிக்கம்–1.உரிமை. 2.முதன்மை.(உ-ம்.) "ஆதிக்கநல்கினவராரிந்தமாயைக்கு" (தாயு. மௌநகுரு. ௩.)3. மேன்மை. (உ-ம்.)"குலதநவித்தியாதிக்கத்தால்" (சி. சி. உ: உ௩.. சிவாச.) [ஆயிக்ய.]

ஆதிக்கமேகரோகம் — மூத்திரமானது காய்ச்சினாலும், சும்மாவைத்திருந்தாலும் இளநீர்ச்சலம்போலவேநிறமும் வாசனையுமுள்ளதாக இருக்கும் ஒருவகைமேகரோகம்.(சீவ. ரட். க0௬.)

ஆதிக்கற்பேதம்—அன்னபேதி.

ஆதிக்கன்—1. உரிமைக்காரன். 2. பெரியவன், மேன்மகன். 3. முதன்மையானவன்.

ஆதிக்கன்றுதம்— அன்னபேதி.

ஆதிக்கியம்–1. அதிகமாந்தன்மை. (உ-ம்.) "சாத்துவிசகுணாதிக்கியத்தால்" (சி. சி. உ: ௬அ. சிவாக.) 2. மேன்மை. (உ-ம்.) "மௌநமந்திராதிக்கியவித்தையை" (தாயு. மலை.அ.) [ஆயிக்ய: ஆயிக என்பதினின்றுவந்த தத்திதபதம்.]

ஆதிக்குடி—சவர்க்காரம்.

ஆதிக்குரு— முப்பூ; அது: பஞ்சலோகங்களைப்பேதிக்கச்செய்வது.

ஆதிகடவுள்—முதற்கடவுள்.

ஆதிகடுஞ்சனி—மகநட்சத்திரம்.

ஆதிகம்—1. சிறுகுறிஞ்சாக்கொடி. 2. முதலியன. (உ-ம்.) "சீடற்குபதேசாதிகமும்" (வேதா. ஆ. சகஉ.)

ஆதிகமாதம்—அதிகமாதம். (உ-ம்.)"தலையா முவாவிரண்டுட்பெறச் சங்கிரமித்தலன்றேற் - றலையாமுவாவினிற்சங்கிரமித்தல்பிறையிரண்டாங் - குலையாதுதயம்பெறுதிங்களையொள்ளியகுணிதக் - கலைவாணராதிகமாதமென்றேதிக்கழித்தனரே" (குணகுண. அக.) [அதிகம் ஆதிகம் என்று விகாரப்பட்டது.]

ஆதிகரன்–பிரமதேவன், சிருட்டிப்போன். [ஆதிகர: ஆதி-முதல், கர-செய்வோன்.]

ஆதிகவி—1. பிரமதேவன். 2. வான்மீகிமுனிவன். (உ-ம்.) "வான்மீகியென்னுமாதிகவி" (விசார. க௯0.) [ஆதிகவி: ஆதி - முதல். கவி - புலவன்.]

ஆதிகாரணியம்—இடமாக்கல். [ஆயிகாரண்ய; அதிகாரணம் என்பதினின்றுவந்த தத்திதபதம். அதிகரணம் - இடம்.]

ஆதிகாரணகாரியம்—முதற்காரணத்தினின்றுதோன்றியகாரியம். (உ-ம்.) "மண்ணாலாகியகுடம்". (நன். பெய. ௬0.)

ஆதிகாரணம்–முதற்காரணம்.(உ-ம்.)"தற்பராவுலகுக் காதிகாரணந்தான் தலைமையினு

பிருடன்சடத்தைச்-சொற்றிடிற்பழுதால்" (சிவதத்து. கரு.) [ஆதிகாரண.]

**ஆதிகாரிகன்**—அதிகாரமுடையவன். [ஆயிகாரிக: ஆயிகார; இக-ஒருவிகுதி.]

**ஆதிகாலம்**—முற்காலம். (உ-ம்.) "ஐயகேளனையாதிகாலந்தனிலளித்த- மையுலாவருகளத்தினன்" (கந்தபு. அயனைச்சிறைபு. எ.)

**ஆதிச்சரக்கு**—சூதம்.

**ஆதிச்சுருதி**— பரமாத்தனானுபதேசிக்கப்பட்டபரமார்த்தமுடையவாக்கியசமூகம். (சைவப். உஅ.)

**ஆதிசத்தி**— திரோதாங்சத்தி; இது: சிருட்டி, திதி, சங்காரம, திரோபவம என்னுங்கிருத்தியங்கள் நான்கையும் ஆரிணி, ஜநகி, ரோதயித்திரிரூபமாயிருந்து செய்யும் என்றும், பராசத்தியில் ஆயிரத்தொருகூறு வலியுடையது என்றுஞ்சொல்வர். (சதாசிவ. ௩.) இந்தச்சத்திபுருடனிடத்துப்பதிந்தபோது அவனுக்கு இந்தச்சமுசாரத்தில்வெறுப்பும் மோட்சத்தில் விருப்புஞ்சிரேட்ட குருசேவையுமாகிய அடையாளமுண்டாகின்ற தென்பர். (சி-வி. கிரி. க. உரை.)

**ஆதிசதாசிவர்**— அநாதிவிராட்சொருபமானமகேசுவரனினின்றுந்தோனறினவர். இவருக்குப்பதினைந்து முகங்களும், பதினைந்துகால்களும், பதினைந்துகைகளும் உள்ளன. (த. நி. போ. சருசு. பக்.)

**ஆதிசநி**—மகநட்சத்திரம்.

**ஆதிசாரம்**— சிற்பநூல்கள்முப்பத்திரண்டின் ஒன்று.

**ஆதிசான்முனிவன்**—புத்தன். (மணிமே.)

**ஆதிசித்தபதி**— இடைக்காலத்திலேசித்தித்தபதித்துவமுள்ளவா. (உ-ம்.) "ஆதிசித்தபதிகளும்பசுக்களுமநந்தமென்றும்" (சி. சி. உ: உ. ௬ாந.)

**ஆதிசிருட்டி**—மகதத்துவசிருட்டி. (உ-ம்.) "ஆதிசிருட்டிமகாவென்னவறைவர்" (கூர்மபு. பலவகை. எ.)

**ஆதிசேடன்**— பூமியைத்தாங்கிக்கொண்டு இருக்கின்றது என்று சொல்லப்படும் அநந்தன் என்னும் பாம்பு. (சங்கார. காலத்தின்பின்னும் எஞ்சிநிற்பவன் என்றபடி.) (உ-ம்.) "ஆதிசேடனைமுதலாவினத்தையே" (நல். பாரத. உ தங்க. கக.)

**ஆதிசைவம்**—ஒருவகைச்சைவம். (த. நி. போ. உ௬௩.)

**ஆதிசைவர்**— அநாதிசைவராகியசதாசிவமூர்த்தியுடைய ஐந்துதிருமுகங்களினுந்தீக்ஷிக்கப்பட்ட இருடிகளுடைய கோத்திரங்களிற்பிறந்தவராகிய சிவப்பிராமணர். (உ-ம்.) "இறைவன்-றருதிருமேனிதீண்டிமொதிசைவர்வாழ்வீதிகள்பலவால்" (தணிகைபு. நகரப். க0௬.)

**ஆதிசைவன்**—சிவப்பிராமணன். (உ-ம்.) "அனைத்துநூலுணர்ந்தீராதிசைவனென்றுணர்வீரென்னை" (பெரியபு. தடுத்தா. ௬ச.)

**ஆதிட்டம்**—1. கட்டளையிடப்பட்டது. 2. சொல்லப்பட்டது. 3. போசநசேடம். [ஆதிஷ்ட:]

**ஆதிட்டி**—பிரமசாரி. [ஆதிஷ்டி: ஆதிஷ்ட-உபதேசிக்கப்பட்ட. இ-ஒருவிகுதி.]

**ஆதித்தசயநம்**—ஒருவிரதம். (உ-ம்.) "ஆதித்தசயநமென்னும்விரதமொன்றெமக்கன்பாமால்" (மச்சபு. ஆதித்தசய. ௩.)

**ஆதித்தபுடம்**—சூரியபுடம்.

**ஆதித்தபுத்தி**—அருக்கபுத்தி.

**ஆதித்தம்**—1. காவிக்கல். 2. துரிசு.

**ஆதித்தமண்டலம்**—1. இருத" . மலத்தில் அறுகோணமாய் எட்டிதழுடைய ஒருபுஷ்பமாய் வாழைப்பூப்போன்று கீழ்நோக்கியிருப்பது. (வேதா. தத். சுஉ.) இது இருதயமுதல் கண்டத்தாநமளவுநிற்பது. 2. சூரியமண்டலம்.

**ஆதித்தமணி**— 1. சூரியன். 2. முத்து.

**ஆதித்தர்**—1. சூரியர். (உ-ம்.) "ஆதித்தர்பன்னிருவரச்சுவினிகளிருவர்" (பிஙகல. கஎஅ.) 2. தேவர். (சூ. நிகண். க: சஉ.) 3. பன்னிரண்டு. (உ-ம்.) "நறுமணச்சந்தக்காழைநாணிலம்புகழாதித்தர்- பலங்கொண்டோரெருங்தெறிட்டு" (தைல. தைலவ. கூச.) [இஃதொருகுறிப்புமொழி.] [ஆதித்ய என்பதில் யகரமெய்கெட்டது.]

**ஆதித்தவாரம்**—ஞாயிற்றுக்கிழமை. (உ-ம்.) "ஆதித்தவாரந்தானேனும்" (மச்சபு. ஆதித்தசயந. ச.)

**ஆதித்தன்**— 1. ஆதிக்குரு. 2. சூரியன். (உ-ம்.) "ஆதித்தனருங்குலமன்னர்" (அரிச்சந்திர. விவாக. சுக.)

**ஆதித்தன்கூர்மை**— இலவணபாஷாணம். அது முப்பத்திரண்டு பாஷாணங்களினொன்று.

**ஆதித்தன்மத்திமச்சா** — ஆதித்தனுக்குக் கற்கடகமுதல் ஆறிராசியிற்கண்டசா.

ஆதித்தன்வெள்ளை—ஆதித்தன்கூர்மை.

ஆதித்தியசா— ஆதித்தனுடையசாவாக்கியம்.

ஆதித்தியசூநு-1. இயமன். 2. கன்னன். 3. குரங்குகளுக்கு அரசனாகிய சுக்கிரீவன். 4. சனியென்னுங் கிரகம். [ஆதித்யஸூநு: ஆதித்ய; ஸூநு - மகன்.]

ஆதித்தியம்—1. விருந்தினர்க்குச்செய்யுமுபசாரம். 2. கவனித்தல். [ஆதித்யம்: அதிதி-விருந்தன். ய-ஒருவிகுதி.]

ஆதித்தியர்— 1. அதிதியிடத்திலே காசிபப்பிரசாபதிக்குப் பிறந்தபுத்திரர். இவர்: தாதா, மித்திரன், அரியமன், இந்திரன், வருணன், அமிசுமந்தன், பகன், விசுவந்தன், பூடன், சவிதா, துவஷ்டா, விஷ்ணு எனப்பன்னிருவர். விஷ்ணு, இந்திரன் என்னுமிருவரும் வைவசுவதமநுவந்தரத்தில் ஆதித்தியராகவிருந்து சட்சுமர்மநுவந்தரத்திலே துஷிதராயினர். கற்பாரம்பத்திலே பிரமாவினாற்சிருட்டிக்கப்பட்ட ஜயரென்றும் இவரைச் சொல்வார்கள். இப்பன்னிருவரும் சிருட்டியில் இச்சையில்லாதவராய்ப் பிரமாவினது ஆஞ்ஞைக்குட்படாராயினர். அதனால் மநுவந்தரங்கடோறும் பிறக்குமாறு சபிக்கப்பட்டார்கள். இருக்குவேதத்திலே அதிதி எண்மர்புத்திரரையீனாளென்றும் அவருள்ளே ஒருவனைப் புறத்தேதள்ளிவிட்டு மற்றையெழுவரையுமுடன் கொண்டுதேவர்கள்பாற்சென்றாளென்றுங் கூறப்பட்டிருத்தலை நோக்குமிடத்துப் புறத்தே தள்ளப்பட்டவனாகிய விசுவதன் என்னும் புத்திரனே இப்பூலோகத்துக்கு ஒளிதருபவனாயினனெனக் கொள்ளல் வேண்டும். மற்றைய எழுவரும்மேன்மேலுள்ள உலகங்களுக்குக் கதிரவர்களாயினர்கள். ஆதித்தியர் பன்னிருவர் பெயரும் வேதத்திலுள்ளனவேயாம். ஆயினும், ஆதித்தியர் பன்னிருவரும் வேறு. உலகத்திற்குப் பிரத்தியக்ஷமாகவுள்ள சூரியனும் வேறு. ஆதித்தர் - சோதிரூபர். சூரியன்-அக்கினிரூபன். 2. தேவர். (உ-ம்) "ஆதித்தியரினுபேந்திரனீ" (கூர்மபு - திருக்கல் - ௩௩).

ஆதித்தியன்—1. சூரியன். (உ-ம்) "திங்களுமாதித்தியனு மெழுந்தாற்போல்." (நாலாயிர. முதலா. திருப்பாவை. ௨௨.) [அதிதிபுதல்வனெனப் பொருள்படும் ஒரு தத்திதபதம்.] 2. தேவன். 3. விருந்தன். [1, 2. ஆதித்ய; 3. ஆதித்ய.]

ஆதித்தியை—சரச்சுவதி.

ஆதிதமோமயசிருட்டி— முதலிற்றோன்றிய ஒருவகைச்சிருட்டி. அது. தமம், மோகம், மாமோகம், தாமிச்சிரம், மந்ததாமிச்சிரமென ஐந்துவகைப்படும். (உ-ம்) "தன்னின் முன் புத்தியாதி தமோமய சிருட்டி தோன்றிற்-றன்னதின் வகையோரைந்தாந்தமமோகமாமோ கஞ்சேர்-மன்னு தாமிச்ரம் மந்ததாமிச்ரமென வகுப்பார்" (கூர்மபு. பலவகை. ௨.) [தமோமயம். அவிச்சை.]

ஆதிநாரணம்—அடகுகொடுத்துக் கடன்பட்டிருத்தல். [ஆதி-அடகு. நாரணம்-கடன்பட்டிருத்தல்.]

ஆதிதேயம்—அங்பாஜாதிகொடுத்து அதிதியைப் பூசித்தல்.

ஆதிதேயன்— 1. தேவன். 2. விருந்தினரை உபசரிப்போன். (உ-ம்) "செந்தழல்வேள்வி கூராதிதேயரே" (பாரத. வேத். ௩௪.) [1. ஆதிதேயஃ, 2. ஆதிதேயஃ; அதிதிஃ-விருந்தன், தேவமாதர். எய-ஒரு விகுதி.]

ஆதிதேவன்—1. சிவன். (உ-ம்) "ஆதிதேவனருளுமைமைந்தனவனுள்ளத்தை நோக்கியே" (கந்தபு. அயனைச்சிறைபுரி. ௫) 2. சூரியன். 3. முதற்கடவுள். 4. விட்டுணு. [ஆதிதேவஃ: ஆதி - முதல், தேவஃ - கடவுள்]

ஆதிதைவிகம்— தாபத்திரயங்கள் மூன்றனுளொன்று; அது, தெய்வத்தால் வருவது. அதனை. "கருவிற்றுயர் செனிக்குங்காலைத்துயர் மெய் - திரை நரை மூப்பிற்றிளைத்துச்செத்து- நாசத்தி-ஞழுந்துயர் புவியையாளின்ப மாதியெலா - மூழுதவுதைவிகமென்றோர்." என்னும் வெண்பாவாலறிக. (சைவச.பொது. சகஉ.உரை.) [ஆதிதைவிகம்: அதி - மேல். தைவிக-தைவத்தாலாயது.]

ஆதிநாதன்—1. (சைநமதம்) இருபத்துநான்கு தீர்த்தங்காருளொருவன். (த.நி. போ. ௧௩.) 2. சிவன். (உ-ம்)"ஆதிநாதனிமாசலையாரெழின்-மாது பாகன்" (உபதே. சிவவிரத. ௩௫.) 3. (சௌளயாமள) நவநாத சித்தர்களிலொருவன். (த. நி. போ. ௨௫௧. பக்)

ஆதிநாராயணன்—1. வச்சிரக்கல். 2. விட்டுணு.

ஆதிநூல்—1. (இலக்கணம்) முதனூல். 2. வேதம். (உ-ம்.)"ஆதிநூலுமனைத்துலகுங்கெடும்" (அரிச்சந். விவாக. ௨௦௪) [ஆதி-முதல். நூல்- ]

ஆதிப்பிராசாதம்—பஞ்சப்பிராசாத மந்திரங்களுள் ஒன்று. (த. நி. போ. உ௩௬. பக்.)

ஆதிபகவன்—1. கடவுள். (உ-ம்) "ஆதிபகவன் முதற்றேயுலகு" (வள். ௧) 2. சிவன். (உ-ம்) "ஆதிபகவன் ஞானவடிவழகிற்பூத்து" (திருப்போ. காப்பு. ௫) [ஆதியாகிய பகவன் எனவிரியும். ஆதி; பகவன் - ஐசுவரியம், வீரியம், புகழ், திரு, ஞானம், வைராக்கியம் என்னும் அறுகுணங்களையுமுடையோன்.]

ஆதிபத்தியம்—1. சுதந்திரம். 2. தத்துவம். 3. தலைமையான அதிகாரம். (உ-ம்.) "பூமியாதிபத்தியம்" (சி. சி. ௧. ௪௨. சிவாக்.) 4. மகத்துவம். [ஆதிபத்யம்: அதிபதி என்பதினின்று வந்த தத்திதபதம். ய-ஒரு விகுதி.]

ஆதிபரம்—ஆதிபலம்.

ஆதிபரன்—முதற்கடவுள்.

ஆதிபலம்—சாதிக்காய்.

ஆதிபன்—1. அரசன். (உ-ம்.) "ஆதிபனது செல்வமாநகரில்" (பாரதம். நாடுநகரங். ௧௧.) 2. எப்பொருட்குமிறைவன். (சூ.நிகண். உ: ௧0.) 3. தலைவன். (உ-ம்.) "பூதிநலந்திகழ் பூருகுலத்திற்-காதிபனுகியநங்களைவென்றோன்." (பாரத. வார. ௬௫.)

ஆதிபாடை—1. சம்ஸ்கிருதபாடை. 2. தமிழ்ப்பாடை.

ஆதிபிட்சு—சிவன். [பிக்ஷு - பிச்சையேற்போன்.]

ஆதிபுங்கவன்—1. அருகன். 2. கடவுள்.

ஆதிபுரி—திருப்பேரூர் என்னுந்தலம். (தணிகைப்பு. முகவுரை.)

ஆதிபுருடன்—1. சிருட்டிகர்த்தா. 2. விட்டுணு. [ஆதிபுருஷ: ஆதி - சிரேட்டம். புருஷ - ஆடவன்.]

ஆதிபூதம்—அதிட்டானபூதம்.

ஆதிபூதன்— 1. பிரமன். 2. முன்பிறந்தவன். 3. முன்னுள்ளவன். [ஆதிபூத: ஆதி - முதல். பூத - தோன்றினவன்.]

ஆதிபோகம்—அடகுவாங்கினபொருளின் பயனை அநுபவித்தல். [ஆதிபோகம்: ஆதி- அடகு. போக - அநுபவித்தல்.]

ஆதிபௌதிகம்—தாபத்திரயங்கள் மூன்றனுள் ஒன்று; அது, பிருதுவிமுதலிய பூதங்களால்வருவது. அதனைப் "பனியாலிடியாற் படர்வாடையினுந் - தனிதென்றலினுஞ்சுகமுங் கனையனை - நீரினுமின்பின்னலுநெருப்பினுந்துயரின்- போரிற்பவுதிகமாகும்" என்னும்வெண்பாவாலறிக. (சைவச. பொது. ௪௩௨. உரை.) [ஆதிபௌதிகம்: ஆதி - மேல். பௌதிக - பூதசம்பந்தம்.]

ஆதிமகாநரு—நரிசு.

ஆதிமகாநாதம்—உலோகமணல்.

ஆதிமகேசுவரர்—ஆதிமீசுவரனிடத்திலே தோன்றினவர். இவருக்குப் பதினைந்துகைகளும் பதினைந்துகால்களுமுள. (த. நி. போ. ௧௫௬.)

ஆதிமடக்கு— மடக்கு என்னும் அலங்காரவகையுள் ஒன்று; அது: செய்யுளிலே, அடியின்முதலில்வரும் எழுத்துக்கூட்டம்பெயர்த்தும்வேறுபொருள்விளைத்துவருவது. இது, முதலடிமுதன்மடக்கு, இரண்டாமடிமுதன் மடக்கு, மூன்றுமடிமுதன்மடக்கு, ஈற்றடிமுதன்மடக்கு, முதலடியு மிரண்டாமடியு முதன்மடக்கு, முதலடியுமூன்றுமடியு முதன்மடக்கு, முதலடியுமீற்றடியுமுதன்மடக்கு, மூன்றுமடியும் நான்காமடியு முதன்மடக்கு, இரண்டாமடியும் மூன்றுமடியு முதன் மடக்கு, இரண்டாமடியும் ஈற்றடியு முதன் மடக்கு, ஈற்றடியொழித்தேனை மூன்றடியு முதன்மடக்கு, இரண்டாமடியொழித்தேனை மூன்றடியு முதன்மடக்கு, மூன்றுமடியொழித்தேனை மூன்றடியுமுதன்மடக்கு, முதலடியொழித்தேனை மூன்றடியு முதன்மடக்கு, முற்றும் முதன் மடக்கு எனப் பலவாக வரும். (தண்டி. சொல்லணி. ௩-ம். ௪-ம்.)

ஆதிமம்—முதலாவது. [ஆதிம: ஆதி- ம.]

ஆதிமருந்து— சுக்கு, மிளகு, திப்பலி இம்மூன்றும். (தைல. தைலவ. ௧௩௫.)

ஆதிமலட்டுரோகம்— வயிற்றில் மூன்றுமடிப்பு விழுந்து இடுப்பும் பருத்துச் சரீரமுந் தாலித்து இருப்பதால் கருப்பந்தரிக்கமாட்டாமையாகியரோகம். (சீவரட். உ0௫.)

ஆதிமலை—இமயமலை. (பிங்கல. ௫0௧.)

ஆதிமார்க்கம்—முதற்சமயம்.

ஆதிமார்க்கசாஸ்திரம்—அதிமார்க்கநூல். (த.நி.போ.௧௫.பக்.) இது: பாசுபதம், காபாலிகம், மாவிரதம் என மூவகைப்படும். அவற்றுள் பாசுபதம், மாயாகர்மாதிகளைச்சொல்லும். காபாலிகம், காகபால பிக்ஷாடனுதிகளைச்சொல்லும். மாவிரதம், அஸ்திதாரணுதிகளைச்சொல்லும். [ஆதி - ஆகிக.]

ஆதிமீன்—அசுவதிநட்சத்திரம். (உ-ம்.) "ஆதிமீன்றேணியீறவற்றின் வண்ணமராய்" (சேது. கந்த. ௧௭.)

ஆதிமுந்தசிவன்—ஆதிமுத்தபதி.

ஆதிமுந்நபதி—இடைக்காலத்திலே மலம் நீங்கப்பெற்றுப் பதியான ஆன்மா. இவர், அநாதி முத்தபதிபோலச் சச்சிதாநந்த சொரூபியாய்ச் சர்வவியாபியாய் அகண்டிதமாய், நிரபேட்சமாய்ச்சிவசாத்தியவியத்தமாய்ச்சர்வபொருட் பிரத்தியட்ச சாட்சாத்காரமாய்ச் சிவதுல்லியசிவமாய் இருப்பர்.(பசு.பாச.௧௩.)

ஆதிமுந்தர்—மலமுடையராயிருந்து பின் மலம் நீங்கினவர். (உ-ம்.) "ஆதிமுத்தரான அநந்தேசுராதிகள்" (சி. சி. ௧: ௧. சிவாக்.) [ஆதி - முதல்; முத்தர் - மலநீங்கினவர்.]

ஆதிமுதல்—ஆதிமூலம்.

ஆதிமுதல்வன்— } புத்தன். (மணிமேகலை.)
ஆதிமுநிவன்— }

ஆதிமூர்த்தி—கடவுள். (உ-ம்.) "ஆதிமூர்த்தியென்றுலளவாகுமோ" (நாலாயிர. திருவாய். உ௩. ௫.)

ஆதிமூலம்—1. ஆட்சிக்கிரகம். 2. கடவுள். 3. முதற்காரணம். 4. முதன் முதல்.

ஆதியங்கடவுள்—1. அருகன்(உ-ம்.)"ஆதியங்கடவுளையருமறைபயந்தனை" (சூளா. இரத. ௬௬.) 2. சிவன் (உ-ம்.) "ஆதியங்கடவுண்மைமந்தன" (கந்தபு. அசுரேந்தி. ௬௫.) 3. முதற்கடவுள்.(உ-ம்.) "அன்புறு மீசன் மாலயன் றனக்குமாதியங்கடவுணியெனவும்.(சிவதத்-௩௫.)

ஆதியந்தபாதிச்சா—1. சீக்கிர உச்சம். 2. மகாச்சா.

**ஆதியந்தம்**—1. ஆதிதொடங்கியந்தம் வரைக்கும். (உ-ம்.) "ஆதியந்தம்பட வனைத்துங்காட்டிய - வேதியன் படைப்பினின் மிகையிரண்டன: (இரகு. நகர. ௫.) 2.முதலும் முடிவும்.(உ-ம்.) "ஆதியந்த மரியெனயாவையுமோதினார்" (இராமா. பாயிர. ௩.)

ஆதியரிவஞ்சம்—அறுவகைப் போகபூமிகளுள் ஒன்று. (பிங்கல. ௫௦௪.)

ஆதியாமம்—மூகைப்புல்.

ஆதியீசுவரன்—ஆதிசதாசிவனிடத்திலே தோன்றினவர். இவருக்கு ஆறுமுகங்களும், பன்னிருபுயங்களும் மூன்று பாதங்களுமுள. (த. நி. போ. ௧௫௬. பக்.)

ஆதியுகம்—முதலாவதாகிய கிருதயுகம். இது, நானூறு தேவவருடம் நானூறுசந்தியஞ்சமுங்கொண்ட காலம். (கூர்ம. பிரமா. ௬. உரை.)

ஆதியெழுஞ்சநி—மகநட்சத்திரம்.(பிங்கல-உ௫அ.)

ஆதியெழுத்து—உயிர் பன்னிரண்டும் மெய்பதினெட்டுமாகிய முதலெழுத்துகள்.

ஆதியோடிடைமடக்கு— } மடக்கு என்னுஞ்சொல்லலங்
ஆதியோடுகடைமடக்கு— }

காரவகையுள் ஒவ்வொன்று. (தண்டி. ௯௨. ௯௩.)

ஆதிர்—ஆவீர். (உ-ம்.) "அதனை நீவிர்-துய்த்திடுமெல்லை தன்னிற்றொல்லுருவாதிரென்றான்" (கந்தபு. சுரம்பு. ௩௫.)

ஆதிரம்—நெய். (பிங்கல. ௧௧௩உ.)

ஆதிரவிட்சிலை—காவிக்கல்.

ஆதிரன்—பெரியோன்.

ஆதிராச்சியம்—ஏகாதிபத்தியம். [ஆதி ராஜ்ய: அதி - மேல். ராஜ்ய - ]

ஆதிரை—1. (அருக) சாதுவன் மனைவி. (மணிமே.) 2. திருவாதிரை நட்சத்திரம். (உ-ம்) "ஆதிரை நாளிற் சோமவாரத்தின்" (தணிகை. அகத். ௧௫௭.)

ஆதிரையன்—திருவாதிரைக்குரியவன். (உ-ம்) "ஆதியனாதிரையன்." (தேவா - திருநனி. ௧. சுந்த.)

ஆதிரௌத்திரம்—சவ்வீரம்.

ஆதிவராகன்—விட்டுணு. (சூ. நிகண். ௧: ௧உ.) [ஆதி - வராகம - பன்றி.]

ஆதிவருணர்—பிராமணர். (சூ. நிகண். உ: ௫.) [ஆதி - முதல். வர்ணம - குலம்.]

ஆதிவாயிலார்— பாதசேனுபதியனூலாசிரியர். (சிலப்பதி.)

ஆதிவாரம்—ஞாயிற்றுக்கிழமை. (உ-ம்.) "நிகரிலாதிவாரத்தில்வருமருத்தோதயம்" (சேது. சேதுப. ௫௫.)

ஆதிவிந்து—1. கார்முகிற்பாஷாணம். 2. நீலபாஷாணம். 3. மழை.

ஆதிவிராகன்—1. அருகன். 2. சிவன். 3. சோரபாஷாணம்.

ஆதிவிராட்டியம்—வெள்ளைப்பாஷாணம்.

ஆதிவிராட்டியன்—1. சூதபாஷாணம். 2. சோரபாஷாணம்.

ஆதிவிருத்தி—தத்திதப்பிரத்தியம்வந்துபுணரும்போது நிலைமொழியின் முதல்திரிவது. அப்படித்திரியுமிடத்து இகர ஈகார எகாரங்கள் ஐகாரமாகவும், உகர ஊகார ஒகாரங்கள் ஔகாரமாகவும், அகரம் ஆகாரமாகவும் இருஆராகவும் வரும். (பி. வி. உ௮.) சைவன், தைரியம், கைவல்லியம், சௌரவம், பௌரவர், ஔடதம், தாசரதி, பார்த்தன் என்பனவற்றிற்போல.

ஆதிவேதநிகம்— ஒருவன் இரண்டாம்விவாகஞ்செய்யும்போது முதலாம் மனைவிக்குக்கொடுக்கும்பொருள். [ஆதிவேதநிக.]

ஆதீண்டுகுற்றி—ஆவுரிஞ்சி.

ஆதீநம்—1. ஆஸ்தி. 2. ஆளுகை. 3. சுதந்திரம். (உ-ம்.) "கருவிகாரணாதிகளைவிட்டுச்சென்றுகூடுதற்கரிதாகியபுருவமத்தியத்தைப்பொருந்தித் தன்னுடையவாதீநமின்றியருளின்வழியேநின்று" (சி.சி. ௯: அ. மறை.) 4. வமிசம்.

ஆதீநவம்—கீழ்ப்படியாமை, மீறுதல். [ஆதீநவம்]

ஆதீபநம்—கோலஞ்செய்தல். [ஆதீபந: ஆ; தீப - அலங்கரித்தல்.]

ஆது—1. அது என்பது நீண்ட ஒருவிகாரமொழி. (உ-ம்.) "ஆதுகொடு நீயசுரர்குலம்." (உபதேச. திருமா. ௯௫.) 2. சம்பந்தப்பொருளில் வரும் ஆறும் வேற்றுமையுருபுகளுள் அஃறிணை ஒருமையில்வரும்ஓர்உருபு. (உ-ம்.) "கஞ்சர் கண்ணர்கடமாதங்கம்" (கம்பர. ௮௭.) 3. தெப்பம். [ஆதந] 4. யானையைப் பாகர் அதட்டும் ஓரோசை. (உ-ம்.) "அங்கையந்தலத்தினலப்புதாதையெனக்-கொங்கலர் கண்ணியான்கொம்மைதான்கொட்டலும்." (சிந்தா. ௧௩௧. ௨௭௮.)

ஆதுநிகம்—இப்போதுள்ளது. [ஆது நிக: அது நா - இப்பொழுது. இக ஒரு விகுதி.]

ஆதுநிகர்—பின்னோர். (உ-ம்.) "பிராசீநர் முன்னோ ராதுநிகர்பின்னோர்." (பி. வி. காரக. ௨. உரை.)

ஆதுரதுடீசகர்—சந்நியாச ஆச்சிரமத்தார் அறுவகையருள் ஒருவகையர். (கூர்மபு. வருண. ௪௦. உரை.)

ஆதுரம்—1. அவா. 2. நோயுடைமை. [ஆதுரம்]

ஆதுரன்—1. ஆசையுற்றோன். 2. நோயாளி. (உ-ம்.) "ஆதுரனளவு" (வள். ௯௪௧. பரி.)

ஆதுலர்—1. நோயாளிகள். 2. மிக்கவறுமையுடையோர். (மணிமே.)

ஆதுலர்க்குச்சாலை—முப்பத்திரண்டு தருமங்களுள் ஒன்று. (பிங்கல. ௧௦௯.) (ஆதுலர்-வறியவர். சாலை. வீடு.)

ஆதுலன்—வறியவன். (உ-ம்.) "அறியாததேயத்தானாதுலன்மூத்தான்" (ஆசாரக்கோ. ௧௦௦.)

ஆதுவம்—கள்.

ஆதேரிசம்—கண்ணாடி. [ஆதரிஶ.]

ஆதேசம்—1. உபதேசம். 2. கட்டளை. 3. (சோதிடம்) கிரகசாரபலம். 4. (இலக்கணம்) திரிதல்விகாரம். (உ-ம்.) "ஆன்றுமூலோபத்தொடாகமமாதேசமாரியத்துண்-மூன்றும்" (வீரசோ. சந்தி. ௧௦.) 5. புத்தி. [ஆதேஶ: ஆ; திஶ - காட்டல்.]

ஆதேயம்—1. அடகு. 2. இடத்தில் அடைந்திருக்குமது. (உ-ம்.) "ஆதாரம் பார்" 3. வாங்கத்தக்கது. [1, 2. ஆதேய. 3. ஆதேய.]

ஆதேயலக்கணை— ஆதேயத்துக்குரியபெயர் ஆதாரத்தைக்கருதிநிற்பது.

ஆதொண்டை — காற்றோட்டிக் கொடி. (உ-ம்.) "புன்காதொண்டைமுட்டிபருவாகைபுன்முருங்கைகூநத-லாயிலகுடம்பருங்கு நிஞ்சிபதின்மூன்றும்வகைக்கு" (தைல தைலவ. ௧௭.)

ஆதொண்டைத்தைலம்— ஒருவகைத்தைலம். இஃது ஆதொண்டையின்பச்சைவேர், எலுமிச்சம்பழம், நாரத்தம்பழம் முதலியவற்றிலிருந்து வடித்தெடுப்பது. இதனிலக்கணம். (தைல. தைலவ. அறு-ஆங்கவியிற்காண்க.)

ஆதோரணர்—1. துரத்துகிறவர்கள். 2. யானைப்பாகர். [ஆதோரண: ஆ; தோரண - அசைத்தல்.]

ஆந்தகம்—1. குருடர்கூட்டம் 2. பாதாளம்.

ஆந்தரங்கம்—1. அருமையானது. 2. இரகசியம். (உ-ம்.) "வேதவாய்மை-யாந்தரங்கம் வெளிசெய்வான்" (சேதுபு. சடவு. ௨.) 3. நம்பிப்பற்றத்தக்கது. (உ-ம்.) "ஆந்தரங்கமாஞ் சுற்றநீயல்லையோவென்றான்" (கந்தபு. கந்தவி. ௫௫.) [அந்தரங்கம் என்பதினின்றுவந்ததத்திதம்.] (அந்தரங்கம்-அருமையானது, உற்றசிநேகம், இரகசியம்.)

ஆந்தரதேகம்—உள்ளிருக்குந்தேகம். (உ-ம்.) "சுழுத்தியவத்தையிற் புறப்பொருளறிவின்றியாந்தரதேகமாத்திரவறிவாய்" (சி. சி. ௪: ௩௦. ஞானப்.)

ஆந்தரப்பிரத்தியக்கம் — ஆன்ம மனசை யோகத்தினன் உள்ளத்திற்றோன்றும் பிரத்தியட்சஞானம். (தர்க்காமிர். பிரத்தியக்க தகிரூ.)

ஆந்தரப்பிரமாணம்— சுருதியின் அகத்திருந்துகாட்டும்பிரமாணம். (சைவப்பி. ௩௬.) [ஸஂஸ்ரு - உள்.]

ஆந்தரபந்தம்—உள்ளாகப்பந்தித்திருத்தல். (உ-ம்.) "ஆந்தரபந்தமானது ஆணவமலத்தைக்காரணமாயுள்ளது" (சி. சி. ௪: ௩௭. சிவாக்.)

ஆந்தரபூதம்—பூதங்களின் ஒரு பிரகாரம். அது, தூலதேகத்திலிருந்து சரீரத்தை வளர்த்து உள்ளே இடங்கொடுத்தல் முதலிய தொழில்களைச்செய்வது. (சி. சி. உ: ௬௫. ஞானப்.) [ஸஂஸ்ரு - உள்.]

ஆந்தரபோகம்—உட்போகம் - அது: "சாட்சாத்பரசிவனே போகத்தைக் கொடுக்குங் கர்த்தாவானதினால் சுத்ததத்துவத்திலுண்டாகிய போகமானது (ஆந்தரபோகம்) உட்போகமெனப்படும்." (உ-ம்) "ஆந்தரபோகம் புசிப்பவர்களுக்குப் போகமுடிவில் மோட்சமாகும்." (சி - லி. ஞாந. ௨௦. தாற்.)

ஆந்தரம்— 1. அகத்தது. (சைவப்பி. உ.) 2. தூலதேகத்திலிருந்து சரீரத்தை வளர்த்து உள்ளிடங்கொடுத்தல் முதலிய தொழிலையியற்றும் பூதம் மறைவானது. [ஸஂஸ்ரு - உள்.]

ஆந்தரி—அந்தரங்ககருவி (சி-லி. ஞாநபா. ௪௩.)

ஆந்தரியம்—உள்ளிருப்பது. (உ-ம்) "ஆத்துமஞானமே சமஸ்த பாவனைக்கு மாந்தரியமாமென்று பார்ப்பவர்" (ஞானவாசி. தர்மவியாள. எ. உரை.)

ஆந்தரீட்சம்—ஆகாயத்திலுள்ளது. (அந்தரீட்சம் என்பதினின்று வந்த தத்திதம்.) [ஸஂஸ்ரு]

ஆந்தாணம்—இடவிசேடம். (மணிமே.)

ஆந்திகை—(நாடக) அக்காள். [ஸஂஸ்ரு]

ஆந்தியம்—குருடு [ஸஂஸ்ரு] : ஸஂ என்பதினின்றுவந்த தத்திதம்.]

ஆந்திரபித்வாதரோகம் — குடல்வாதம். (சிவரட். ௧௬௧.) [ஆந்திரம்-குடல். பித் - பேதித்தல்.]

ஆந்திரம்—1. குடல். (உ-ம்.) "சுழலடியாந்திர மருத்தும் பீஜமருத்தும்மவற்றின் சுரப்புநோயும்" (தைல. தைலவ. ௫௪.) 2. தெலுங்குதேசம். (மணிமே.) 3. தெலுங்குப்பாடை. 4. மரணம்.[4. ஸஂஸ்ரு. ஸஂஸ்ரு- கொல்லல்.]

ஆந்திரமருத்து—குடலில்வாயு. (உ-ம்)"ஆந்திரம்" பார்.

ஆந்திரன்—தெலுங்கன். (சி. சி. உ: ௬௧. சிவாக்.)

ஆந்திரிகநூல்— குடலைப்பற்றி யறிவிக்கு நூல்.

ஆந்திரிகம்—குடலோடுசம்பந்தமுள்ளது. [ஸஂஸ்ருக: ஸஂஸ்ரு-குடல். இக-ஒருவிகுதி.]

ஆந்தை—1. ஒரு பறவை. அது: 'பஞ்சபட்சிகளிலொன்று. (உ-ம்.)"சொம்புறுகின்ளையலகு சொல்லாந்தை" (கந்தபு. ௩௧௨. ௬௫.) 2. புறாமுட்டிப்பூண்டு. 3. பேராமுட்டிப்பூண்டு.

ஆந்தைக்காதல்—1. ஆந்தை கூவுகை. 2. ஆந்தைச்சகுநம் அறியும் நூல்.

ஆந்தோளம் — ஊசலாடு மசைவு. [ஸஂஸ்ரு:]

ஆந்தோளி—1. ஒருவகைச்சிவிகை.(உ-ம்.) "ஆந்தோளியின்மாதுமையேக"(திருவானை. திருவிழா. ௨௧.) 2. ஓர்ராகம். 3. தண்டிகை. (சாதகா. ௬-ம் பாவம்)

ஆந்நிகம்—நித்தியகருமம். (உ-ம்.) "குருவானவர் நித்தியமான ஆந்நிகம் இரண்டையுஞ்செய்து." (சி-லி.கிரி. ௬௬.) [ஸஂஸ்ரு.]

ஆநகதுந்துபி—1. இரணபேரி. 2. கண்ணபிரானுடையபிதாவாகிய வசுதேவன்.(உ-ம்.) "அந்தாதுந்துபி முழங்கச்சங்கமார்ப்பவாநக துந்துபி முதல்வனுதியாக" (பாரத. நிரை. ௫அ.)(அநகதுந்துபனுடைய மகனெனப்பொருள் படுந்தத்திதம்.)[ஸஂஸ்ரு ; ஸஂஸ்ரு - முழக்கம். ஸஂஸ்ரு - பறை.]

ஆநகம்— 1. இடி. 2. காதினுட்சவ்வு. 3. சுரை. 4. சம்பட்டம். 5. தேவதரு. 6. போர்ப்பறை. 7. மத்தளம. 8.முரசம். (உ-ம்.)"ஆநகம பல முழங்கவந்தெதிர்பணிந்து"(பாரத. சூது. ௫௬.) 9. முழங்கு மேகம். 10. மேளம்.[ஸஂஸ்ரு.]

ஆநண்பாயதுறை — கோமதீசுரக்ஷேத்திரம். (உ-ம்.) "குற்றாலம பணிந்தெழுமாநண்பாயதுறையாலங்காடு" (வேதாரணியபு. வான்முறை. ௬௬.)

ஆநத்தம்—1. சேலைதோல் முதலியவற்றாற்கட்டப்பட்டது. 2. மேளம்.

ஆநந்த—வியாழவட்டமாகிய அறுபதுவருடங்களுள் நாற்பத்தெட்டாம் வருடம். [ஸஂஸ்ரு.]

ஆநந்தக்காப்பான் — தினவுண்டாக்கும் ஒருவகைக்காப்பான்ரோகம்.(சீவரட். உ௧௧)

ஆநந்தக்களிப்பு—1. பேரின்பத்திற் செருக்குறுதல். 2. யோகிகள் பத்தியாற்பாடும் பாடல். "ஆனந்தக்களிப்பு" (தாயு.)

ஆநந்தகாநநம்—காசிநகரம். [ஆநந்தகாநந: ஆநந்த - காநந - காடு.]

ஆநந்தகாநம்— காசிநகரம்.(உ-ம்.) "ஆநந்தகாநந்தொடுத்திங்குளவானசைவத் - தானம் பலவுந்தொழுந்தத் பரமாகி"(திருவிளை-கல்லானை. அ.)

ஆநந்ததத்தம்—ஆண்குறி. [ஆநந்தத்த: ஆநந்த - மகிழ்ச்சி, த்த - கொடுப்பது.]

ஆநந்தநம் — 1. இன்பங்கொடுப்பது. 2. இன்பம். 3. உபசாரணை. 4. சந்தோஷித்தல். [ஆநந்தந]

ஆநந்தநீ—பிரமன்பட்டணம்.

ஆநந்தநித்திரை—யோகநித்திரை.

ஆநந்தப்பிரபவம் — சுக்கிலசுரோணிதங்கள். [ஆநந்தப்ரபவ: ஆநந்த - மகிழ்ச்சி. ப்ரபவ - தோன்றியது.]

ஆநந்தப்பிராப்தி—ஆநந்தமடைதல். (த. நி. போ. உ௰உ) [ப்ராப்தி - அடைதல்.]

ஆநந்தபடம் — கூறைப்புடவை. [ஆநந்தபட: ஆநந்த-சந்தோஷம். பட.சேலை.]

ஆநந்தபரவசம் — ஆநந்தத்திற்பரவசமாதல்.

ஆநந்தபாட்பம் — மிக்கமகிழ்வினால்வருங் கண்ணீர். (உ-ம்.)"தாமரைமலர்போன்றஒளியினையுடைய கண்கள் ஆநந்தபாஷ்பம் பெருகநின்றார்" (இராமா. அகத்திய. சகூ. உரை.) [ஆநந்தபாஷ்ப: ஆநந்த- பாஷ்ப - கண்ணீர்.]

ஆநந்தபைரவி—ஓர்ராகம். [பைரவி.]

ஆநந்தம்—1. அரத்தை. 2. கடவுள். 3. சாக்காடு. (உ-ம்.)"செல்வோர் செப்பியமூதாநந்தமும்" (தொல். பொருள். ௭௧.) 4. நாலுவர்ணங்களில் ஒன்று. (உ-ம்) "சத்தியம், ஞானம், அநந்தம், ஆநந்தம் என்பதே நாலுவர்ணம்" (வாசுதே. உ௧௧.) 5. (யாப்பிலக்கண) நூற் குற்றங்களுள் ஒன்று; அது: செய்யுளிலே நிறுவிய பொருளுக்கு அழிவுபயத்தற்கிடனான எழுத்தின்கிலே, அல்லது சொல்லுங்கிலே; இயற்பெயரைச்சார்ந்து அளபெடை வருவது எழுத்தாநந்தம் என்றும், அமங்கலமான தொழிற்சொல்வருவது சொல்லாநந்தம் என்றுஞ் சொல்லப்படும். (உ-ம்) "ஆழியிழைப்பப் பகல்போ மிரவெல்லாந்-தோழி துணையாத்துயர் தீர்வன் - ரோழி-நறுமாலை தாவுந்திரையவோஒ வென்னுஞ்-செறுமாலை சென்றடையும்போது" இதன்கண்" திரையவோ ஒ என இயற்பெயர் சார்ந்து அளபெடை வந்தமையின் இஃது எழுத்தாநந்தம். "என்னிற் பொலிந்ததிவண்முகமென் றெண்ணித்-தன்னிற் குறைபடுவான் றண்மதியமின்னி - விரிந்திலங்கும் வெண்குடைச்செங்கோல் விசய-னெரிந்திலங்கும் வேலி னெழும்" இதனுள் விசயன் என்னும் இயற்பெயர் சார்ந்து "எரிந்து" என்னும் அமங்கலமானதொழின்மொழி வந்தமையான் இது சொல்லாநந்தம். இவற்றோடு பொருளாநந்தம் யாப்பாநந்தம் முதலியவைகளைச் சேர்ப்பாருமுளர். (இலக்கணவி. அ௭.) 6. புணர்ச்சியின்பம். (சி - வி. ஞாந. ௧அ.) 7. பேரின்பம். (உ - ம்.) "ஆநந்தவெள்ளந்துளைத்தாடவைத்தி"(கம்பாந். சஅ.) 8. மகிழ்ச்சி. (உ-ம்.) "ஆநந்தமாயறிவாய் நின்றிலங்கும். (தாயு. ஆநந்தக்களிப்பு. க.) [ஆநந்த.]

ஆநந்தமயகோசம்—1. (சித்தாந்தம்.) கேவலத்தில் ஒன்றுமின்றி நின்ற ஆன்மாமாயையிற் கலக்குண்ட பாகமாகிய காரணசரீரத்தை முதற்கட்பொருந்தி அறிவிச்சைசெயல்கள் பொதுமையான் அவ்வளவு விளங்கப்பெற்ற மாத்திரையே அம்மயக்கறிவால் ஓர் ஆநந்தமுண்டாக நின்றநிலை. (சி. சி. சு: உ௩. சிவஞா.) 2. பஞ்சகோசங்களுள் ஒன்று: அது: காரணசரீரமாகிய அஞ்ஞானம். இது "அவித்தையாநந்தமயமாம்" என்பதனாற்பெறப்படும்.(உபநிட.உ௰) [ஆநந்தமயகோச.]

ஆநந்தமயம்—1. ஆநந்த நிறைவு. (உ-ம்) "ஆநந்தமயமான வாரியை"(தாயு. சிவ. ௩.) 2. ஆநந்தமயகோசம். (உ-ம்) "போற்றுமாநந்தமயமதல்லாதொருபோத முண்டோ"(த. நி. போ. உ௮௬.) [மய-அதுவாந்தன்மை.]

ஆநந்தமயன்—அந்தரியாமி. (த. நி. போ. ௧௦௧.)

ஆநந்தமூலி—கஞ்சா. (உ-ம்) "அப்பனே யாநந்த மூலிச்சாறே" (வை. ர. சந.)

ஆநந்தயித்திரி— ஆநந்தத்தைச்செய்யுமது. [ஆநந்தயித்ரு.]

ஆநந்தயோகம்—அட்டயோகங்களிலொன்று. (த. நி. போ. ௩௭௩.)

ஆநந்தரசம்— ஒருவகைமருந்து. (உ-ம்.)

"ஆநந்தரசம்விஞ்ஞேதமாம்" (பதார்த்தகுண. கஉசுஅ.)

ஆநந்தரியம்—ஆநந்தரீயம். (உ-ம்.) "வடநூலார்யாப்பைஆநந்தரியமென்றும், நுதலியபொருளை விடயமென்றுங், கேட்போரையதிகாரிகளென்றும், பயனைப்பிரயோசநமென்றுங்கூறுப" (நன். சிறப்புப்.)

ஆநந்தரியம்–1. அந்தரமின்மை. 2. இடையிற்பிறிதொன்றின்றி அடுத்திருத்தல். 3. காரணத்தினின்றுநேரேதோன்றுங்காரியம். 4. சம்பந்தம்; அஃது இந்நூல்கேட்டபின் இந்நூல்கேட்கவேண்டும் என்னும் இயைபு. (சிவஞா. போ. சிற். உ.) [அநந்தரம் என்பதினின்றுவந்ததத்திதம். ஈய - ஒருவிகுதி]

ஆநந்தநுபசத்தி—பிரமசந்நிதாநத்தில் இலக்கண சூநியமாயிருக்கின்ற சத்தியிடத்திலுண்டாகிய சுத்ததத்துவகுணம். (ஞாநாசி. பக் உ.)

ஆநந்தநுபன்— பஞ்சகோசகன்மபந்தசென்மமரணாதி அற்றவடிவன்.

ஆநந்தலட்சணம்—நிருபாதிகமாய் நிரதிசயமாய் நித்தியமானசுகசொரூபம். (வாசுதே. சுடு.)

ஆநந்தவருவி—ஆநந்தபாஷ்பப்பெருக்கு.

ஆநந்தவல்லி—1. உமாதேவி. 2. கோழித்தலைக்கெந்தகம்.

ஆநந்தவாதி—கௌரிபாஷாணம்.

ஆநந்தவுரு–1. அறிவுரு, பரமசைதந்நியம். (உ-ம்.) "அகண்டிதமாயாநந்தவுருவாய்"(சிவப்பிர. க: க.) 2. சுகசொரூபம். (சு-ம் உதாரணம்பார்.)

ஆநந்தன்—1. அருகன். (சூ. நிகண். க: ரு.) 2. சிவன், சுகசொரூபியாயிருப்பவன்.(உ-ம்.) "அத்தனாநந்தனமுதனென்றள்ளூறி" (திருவாச. திருவெம். ரு.) 3. கடவுள். 4. பலராமன். [அநந்தனுடைய அவதாரனென்றபடி. அநந்தன் - சேடன்.]

ஆநந்தாகிருதி—கடவுளுடைய எண்குணங்களுள் ஒன்று; அது: ஆநந்தரூபமாயிருத்தல். (சிவதரு. சிவஞாந. சு. உரை.) [ஆநந் - ஆகுருதி - வடிவம்.]

ஆநந்தாட்டகம்— எட்டுவகையான ஆநந்தங்கள்; அவை: விஷயாநந்தம், பிரமாநந்தம், வாசநாநந்தம், முக்கியாநந்தம், நிசாநந்தம், ஆத்மாநந்தம், அத்வைதாநந்தம், நித்தியாநந்தம் என்பன. அவற்றுள்வநிதாதிவிஷயலாபத்திற்றோன்றுவதேவிஷயாநந்தம்; நித்திராகாலத்திற்றோன்றுவதே பிரமாநந்தம்; நித்திரைதெளிந்துந்தெளியா இடத்திற்றோன்றுவதே வாசநாநந்தம்; ஸ்தாநாஸ்தாநமில்லாத உபேக்ஷபுத்தியிற் றோன்றுவதே முக்கியாநந்தம்; யோகாப்பியாசபலத்தால் மநோலயமான இடத்திற்றோன்றுவதே நிசாநந்தம்; பிரியமானவநிதாதி விஷயமத்தியையில் தானே பிரியாத்மகனென்றறிந்த இடத்திற் றோன்றுவதே ஆத்மாநந்தம்; நாமரூபப்பிரபஞ்சமெல்லாம் மித்தைதானேசத்தியமென்றுவிவேகத்திற்றோன்றுவதே அத்வைதாநந்தம்; தத்துவமசியாதிவாக்கிய சந்நியமான அபரோக்ஷஞாநத்திற்றோன்றுவதே நித்தியாநந்தம். (த. ந். போ. கoசு-ம். கoஎ-ம்.) [ஆநந்:அஷ்டக - எட்டன்கூட்டம்.]

ஆநந்தாத்துமா—பிரமா. [ஆநந் - விட்டுணு. ஆத்மா - மகன்.]

ஆநந்தாலயம்—சந்திரலோகம்.

ஆநந்தி— 1. அரத்தைப்பூண்டு. 2. ஆநந்தமுடையவன். 3. ஆநந்தியென்னேவலும் வினைப்பகுதியும். 4. ஆறுதாரங்களுளொன்றாகிய ஆஞ்ஞைக்குரிய இதழ்கள் இரண்டில் ஒன்றில்நிற்கும் ஓரதிதேவதை. (சி. சி. அ: உக. மறை.) 5. உமாதேவி. 6. மகிழ்ச்சி. [1, 4, 5, 6. ஆநந்தி. 2. ஆநந்திந.]

ஆநந்திகம்— அநேகம். (சி. சி.) [அநந்தம் என்பதினின்று வந்த தத்திதம்.]

ஆநந்தித்தல்—1. சந்தோஷித்தல். 2. சுக்கிலசுரோணிதக்கலவையிலின்பமுறுதல். (சிவப். கட். ரு. அங்கம்.) 3. பெருமகிழ்ச்சிகொள்ளல்.

ஆநந்தியம்—1. அழிவின்மை. 2. ஆநந்தத்தின்றன்மை. 3. காலத்தில் அல்லது இடத்தில் அல்லது எண்ணில் அந்தமின்மை. 4. நித்தியம்.

ஆநந்தை—1. உமாதேவி. 2. கொட்டைக்காந்தை. (உ-ம்.) "அதிற்பெய்நெய்யாநந்தையிரதம்" (தைல. தைலவ. ருக.)

ஆநநம்—1. முகம். (உ-ம்.) "ஆநநமாறுளவண்ணல்" (கந்தபு. சூரபன்-வதை. கடு.) 2. வாய். [அந - சுவாசித்தல்.]

ஆநம்—1. கள். 2. பூரகவாயு. 3. மஸ்துள்ளபாநம்.

ஆநமிதம்— 1. குனிதல். (உ-ம்.) "சொற்படாநமிதமென்ன" (கொக்கோ. சு: கு.) 2. வளைந்தது. [ஆ: நம - உளைவு.]

ஆநயநம்— } 1. உபநயநம். 2. கொண்டு
ஆநயம்— } வருகை. [ஆ: நீ - அடைதல்.]

ஆநர்த்தம்— 1. ஒருதேசம். 2. கடல். 3. தோல். 4. நாடகசாலை. 5. நீர். 6. யுத்தம். [ஸ்ரு-நர்த-ு: ஸு; ந்ருதீ - கூத்து.]

ஆநாகசுரம்— ஒருவகைச்சுரம். இது: மலபந்தம், மலத்துவாரத்திற்சூலை, அக்கினிமந்தம் முதலியகுணங்களையுண்டாக்கும். (சீவரட். ௯௦.) [ஸ்ரு-நாஹம - கட்டுதல்.]

ஆநாகம்—1. சலவடைப்பு. 2. மலங்கட்டுப்பட்டுகிற்றல். [ஸ்ரு-நாஹ: ஸு; நஹீ - கட்டுதல்.]

ஆநாகரோகம்—வயிற்றில் இரைச்சல் மலச்சிக்கல் சுரம் சுவாசம் முதலிய உபத்திரவங்களையுண்டாக்கும் ஒருவகைரோகம். (சீவரட். ௧௧௧.) [வயிற்றையிழுத்துப்பிடிப்பதால் வந்தபெயர். [ஸ்ரு-நாஹம - இழுத்துப்பிடித்தல்.]

ஆநாயகலை—வலைபோன்றசிலை.

ஆநாயம்—1. வலை. 2. வாயுசெல்லத்தக்க கண்ணறை. [ஸ்ரு-நாய; ஸு; நீ-அடைதல்.]

ஆநாயி—வலைஞன்.

ஆநி—1. இன்மை. 2. கழிதல். 3. குறைவு. 4. கேடு. (உ-ம்.) "உரவோய்நின்-பிள்ளைமேனிக்கோராணிவந்திலதினிச்செயலென்" (இராமா. யுத். இரணிய. ௮௪.) 5. விடுதல். [ஹாநி.]

ஆநிகம்—ஆர்நிகம்.

ஆநியம்— 1. நாள், பகல். (உ-ம்.) "பயங்கெழுவெள்ளியாநியநிற்ப" (பதிற்று. ௬௯: ௧௪.) 2 பருவம். 3. பொழுது. (உ-ம்.) "பன்னுசெந்தமிழ்சேர்செஞ்சொற்பராசசேகரன்கை - யன்னதப்பொழுதின்மற்றையாநியத்தொலைாதன்றே." (இரகு. அயனுத. ௭௦.) 4. மூலநாள். [ஸ்ஹ : என்னும் வடமொழியினின்று வந்ததுபோலும்.]

ஆநிருண்யம்—சடனின்மை. [ஸ்ரு-ந்ருண்ய: அநிருணம் என்பதினின்று வந்ததத்திதபதம்.]

ஆநிலன்—1. அநுமான். 2. பாண்டவருள் ஒருவனாகிய வீமன். (உ-ம்) "இருவோரினுமாநிலன் பெலவான்" (பாரத - பதினெட். ௧௮௪.) அநிலன் மகன் எனப்பொருள்படுந்தத்திதபதம். அநிலன் - காற்று. [ஸ்ரு-நில :]

ஆநிலி—1. அநுமான். 2. சோதிடநட்சத்திரம். [அநிலசம்பந்தமுடையது.] 3. வீமன். (உ-ம்.) "ஆநிலியினுடல்வீழ வமரிடையர்விகவர்தர" (பாரத. மணிமா. ௭௧.) [அநில-இ. ஒரு விகுதி, அநிலன் மகன் எனப்பொருள்படுந்தத்திதம்.]

ஆநிலை—பசுக்கொட்டில்.

ஆநின்று—நிகழ்கால இடைநிலைகளுள் ஒன்று. (உ-ம்) "ஆநின்றுகின்று கிறு மூவிடத்தி - னைம்பாணிகழ்பொழுதறைவினையிடைநிலை." (நன். பதவி. ௧௩.)

ஆநீர்—கோசலம். (உ-ம்)"கரந்தனன்போதவாநீர் கண்கமூஉக் காணப்பட்டான்" (இரகு. யாக. ௬௮.) [ஆ - பசு. நீர் - சலம்.]

ஆநுகூலியம் — அநுகூலமுடையது. [ஸ்ரு-நுகூல்ய: ஸுநுகூல-ய. ஒருவிகுதி.]

ஆநுசங்கிகம்— 1. காரியமாகத்தொடர்ந்தது. 2. கூடநிகழ்வது. (உ-ம்.) "ஐந்துகிருத்தியமும் ஒவ்வொருகருத்தாவுக்கு ஒவ்வொருகிருத்தியஞ்சுவதந்திரமாகவும், நின்றநாலுகிருத்தியமும் ஆநுஷங்கிகமாகவும், பரமசிவனதுசத்தியாலேபொருந்தும்." 3. சம்பந்தப்பட்டது. [ஸ்ரு-நுஷங்கிக: ஸுநு; ஷஞ்ஜ-தொடர்பு. க-ஒரு. வ - வி. ஆதி நீடலும், இகரத்தோற்றமும் விகாரம்.]

ஆநுபூர்வம் — கிரமமான தொடர்ச்சி. [ஸ்ரு-நுபூர்வ்ய.]

ஆநுபூர்வி—
ஆநுபூர்விகம்— } கிரமம்.

ஆநுபூர்வியம்—கிரமம், வரிசை.

ஆநுமாநிகம்— அநுமானிக்கப்பட்டது. [ஸு நுமாந - இக - ஒருவிகுதி.]

ஆநெய்—பசுநெய்.

ஆநைசுவரியம்—ஆளுகையின்மை. [ஸ்ரு-நைஸ்வர்ய-]

ஆப்தர் — உள்ளது கூறுவோர். (உ-ம்) "ஆப்தர் மொழியொன்று கண்டால்." (தாயு. எங்கு. ௧.)

ஆப்திகம் — வருடந்தோறும் வருவது. [ஸ்ராப்திக: ஸப்த-வருடம். இக-ஒருவிகுதி.]

ஆப்தோர்யாமம் — ௨௧, யாகங்களுளொன்று.

ஆப்பம்—கும்மாசி. [ஸ்ரூப.]

ஆப்பி—பசுசாணி. (உ-ம்.) "புற்பைங்கூழாப்பி"(ஆசாரகோ. ௨௮.) [ஆ - பசு. பீ - மலம். பி எனக்குறுகிற்று.]

ஆப்பிடல்—அகப்படுக்கொள்ளல். (உ-ம்) "மாப்பிட்ட-ஆப்பிட்டுக்கொண்டடி பட்ட" (தனிப்பா. பலவித். ௧.)

ஆப்பியந்தரம்—உள்ளானது. (உ-ம்.) "அரும்பரை பூசைபாகியமாப்பியந்தரமென விச

ண்டாகும்." (சூ. சிவமான். ௫:௨. [ஸூ ஹ்ரு: ஜஹீ - ஜஹரா - உள்.]

ஆப்பியந்தரவாயு—சுரோத்திராதி ஞானேந்திரியங்களைச்சேட்டிப்பிக்கும் பிராணன் முதலியவாயு. (த. நி. போ. ௧௧௪.) [ஜஹீ - ஜஹரா - உள்.]

ஆப்பியம்—1. அடையத்தக்கது. 2. அப்புதத்துவம். (சி. சி. ௨: ௫அ. சிவாக்.) 3. ஒரு முகூர்த்தம். இது பகலில் வரும் ஆறுமுகூர்த்தம். இது விதானமாலை. ௭௩ - ஆங்கவியானும், அதனுரையானும் பெறப்படும். 4. சலசம்பந்தம். (சி - வி. கிரி. ௪அ - ௧௧. தாற்) 5. நீரையுடையது. [1,2, 4, 5, ஆப்யம்: ஆப-நீர். ஆப - அடைதல். ய - ஒரு விகுதி.]

ஆப்பியமூர்த்தி — அட்டமூர்த்திகளிலொன்று; அது: காலதத்துவாந்தம் வியாப்தியுள்ளது. (சிலி. சரி. ௩௩-ம் உரையுப்.)

ஆப்பியாசிகம்—அப்பியாசசம்பந்தமுடையது. [ஆப்யாஸிக: ஆப்யாஸ - இக-ஒரு விகுதி.]

ஆப்பியாநம்—சரீரக்கொழுப்பு. [ஆப்யாநம்]

ஆப்பியாயநம். — 1. கொழுப்பாதல். 2. திருப்தி. (உ-ம்) "ஆன்மாவினுடைய ஆப்பியாயகார்த்தமாக" (சி. சி. அ: ௩. சிவாக்.) [ஆப்யாயந: ஆ- ப்யாய்- அதிகரித்தல்.

ஆப்பியோபசாரம் — பஞ்சோபசாரங்களின் ஒன்று; அது சலசம்பந்தமானது பாதியம். (சி - வி. கிரி. ௧அ, ௧௧. தாற்.)

ஆப்பிரச்சநம்—ஒருவன் தன்னிடம் வரும்போது அல்லது போகும்போது அவனுக்குச்செய்யும் உபசாரம் [ஆப்ருச்சந:- ஆ-ப்ருச் - கேட்டல்.]

ஆப்பிளயம்—பிரளயபரியந்தம். (சி. சி. ௧: ௩. சிவாக்) [ஆ - வரையும். ப்ரளய - ஒடுக்கம்.]

ஆப்பிலவநம்—1. நீர்தெளித்தல். 2. முழுகுதல். [ஆப்லவநம்: ஆ - ப்லு - நீந்துதல்.]

ஆப்பு—1. எட்டிமரம். 2. கட்டப்படுவது. (உ - ம்.) "விண்ணிலமேலாப்புவிரித்தாற்போல்" (நாலாயிர. மேகவிடு. ௪.) 3. மரம்பிளக்கும்போது பிளப்புவாயில்வைத்து இறுக்கும் ஒரு கருவி" (உ-ம்.)"ஆப்பதனைப்பிடித்த சைத்தபேய்க்குரங்குபோல" (தனிப்பாடல்.)

ஆப்புளண்டம்—கையாந்தகரைப்பூண்டு.

ஆபகம்—ஆறு.

ஆபகேயன்—1. கிருட்டிணன். 2. நதியின் மகன். 3. வீட்டுமன். [ஆபகேய: ஆப்கா - நதி. எய - ஒரு விகுதி.]

ஆபகை—1. நதி. (உ-ம்.) "ஒருதுசெல்வடிக்கணைகள்யாபகையெனப் பெருகியோடியமுடைக்குருதியால்" (இரகு. திக்கு. ௨௧௨.) 2. நீரோட்டம். [ஆபகா: ஆப-நீர்க்கூட்டம். கா - போவது.]

ஆபச்சகாயன் — திருத்தணிகையிலிருக்கும் விநாயகமூர்த்தி. (உ-ம்.) "அண்ணலைத்தணிகை வரைவளாபச்சகாயனை யகந்தழீஇக்களிப்பாம்" (திருத்தணி. கடவுள். ௩.) [ஆபத் - இடுக்கண். சகாயன் - துணைசெய்வோன்.]

ஆபச்சத்தமநு — ஒரு மந்திரம். (உ-ம்.) "பொருவிலாபச்சத்தமநுப் புகன்று" (திருவானை. கோச். ௭௪.)

ஆபச்சைவன் — அட்டவசுக்களிலொருவன்.

ஆபணம்—அங்காடி. [ஆபண: ஆ-பண்- வாணிகம்.]

ஆபணிகம்—1. அங்காடிச்சம்பந்தமுடையது. 2. வாணிகசம்பந்தமுடையது. [ஆபண - இக - ஒரு விகுதி.]

ஆபணிகன்—வாணிகஞ்செய்வோன். [ஆபண - இக-]

ஆபணியம்—1. அங்காடிச்சரக்கு. 2. அங்காடிவீதி. [ஆபண-ய- ஒரு விகுதி.]

ஆபணீயம்—1. அங்காடிச்சரக்கு. 2. அங்காடிவீதி. [ஆபண - ஈய- ஒருவிகுதி.]

ஆபத்தம்—1. அன்பு. 2. ஆபரணம். 3. கட்டுதல். 4. நுகம். 5. பிரதிட்டை. [ஆபத்த: ஆ; பந்த - கட்டு.]

ஆபத்தம்பசூத்திரம்—ஆபத்தம்பராற் செய்யப்பட்ட சூத்திரம். இது: பிராமணருளொருவகையாராற் கைக்கொள்ளப்படுவது.

ஆபத்தம்பம் — தருமநூல் பதினெட்டினுளொன்று. இது: வேதாங்கமாகிய கற்பவகைகளுளொன்று; ஆபஸ்தம்பமுனிவராற் செய்யப்பட்டது. (மணிமே.)

ஆபஸ்தம்பன் — ஒரு முனிவன். (உ-ம்.) "அரிதகன்பவுலன் சுமந்தாபஸ்தம்பன்" (தணிகை. நைமி. ௧௦.) [ஸ்ரீ ஆபஸ்தம்ப:]

ஆபத்தி—1. அடைதல், பெறுதல். 2. அதிக்கிரமித்தல். 3. இடுக்கண் ஆன சம்பவம். 4. தவறு. 5. பொருந்துதல். [ஸ்ரீ ஆபத்தி: ஸ்ரீ; பத் - போதல்.]

ஆபத்து—1. அவசரம். 2. இடுக்கண். (உ-ம்.) "ஆபத்தால் வந்தடைந்தவர்போல்" (பாரத. குருவாச.௧.) 3. துக்கம். 4. பெருந்தேவை. [ஸ்ரீ ஆபத்]

ஆபத்துசம்பத்து—தாழ்வுவாழ்வு.

ஆபதநம்—1. அறிவு. 2. இறங்குதல். 3. சம்பவித்தல். 4. வருதல். [ஸ்ரீ ஆபதநம்: ஸ்ரீ; பத் - போதல்.]

ஆபதம் — ஆபத்து. (உ-ம்.) சந்திராபதமும் திகராபதமுமிருபொழுதினு மெழச்சமைத்த - மந்திராதிகளும்" (பாரத. இந்திர. ௧௪.) [ஸ்ரீ ஆபத.]

ஆபதுத்தாரணம்— ஆபத்தைநீக்கிக்காத்தல். (உ-ம்.) "ஆபதுத்தாரணவத்தியாயம்" (சீர்காழி.)

ஆபதோத்தாரணமூர்த்தம்— முனிவர் முதலானோர் ஆபத்துக்காலத்தில் தமது துயர்கூறியாசிக்க, அவர்கள் துன்பத்தைத்தொலைத்துச்சகாயஞ்செய்யும்படி எழுந்தருளியுள்ள சிவனது திருக்கோலம். அக்கோலமாவது, மாநடச்சட்டைசாத்தி இரண்டுகரங்களோடுதண்டமுங் கபாலமு மேற்றுவீற்றிருத்தலும், அவ்வச்சமயங்கட்கேற்ப நானாவகையுருவங்கள்கொள்வதுமாம். (சிவபராக்கிரமம். ௩௯௯-ம். ௯௪௦ ம்.)

ஆபதோத்தாரணன்—1. ஆபத்தை நீக்குவோன். 2. வைரவமூர்த்தி. [ஸ்ரீ ஆபத் - ஆபத்து. உத்தாரண - பிளத்தல்.]

ஆபந்தம்—1. அலங்காரம். 2. அன்பு. 3. கட்டு. 4. நுகக்கயிறு. [ஸ்ரீ ஆபந்த: ஸ்ரீ; பந்த - கட்டு.]

ஆபந்நம்–1. அடைந்தது. 2. ஆபத்தடைந்தது. 3. தேடிக்கொண்டது. [ஸ்ரீ ஆபந்ந.]

ஆபந்நன் — சம்பாதித்துக்கொண்டவன்.

ஆபநம்—1. அடைதல். 2. மிளகுக்கொடி. [ஸ்ரீ ஆபந: ஸ்ரீ ஆப - அடைதல்.]

ஆபநிகம்—மாகதரத்திநம். [ஸ்ரீ ஆபநிக.]

ஆபநிகன்—மிலேச்சன். [ஸ்ரீ ஆபநிக:]

ஆபம்—1. தீவினை. 2. நீர். (உ-ம்.) "வல்லி சம்படியுகர மாபமிருங்கரமடவந்தபுனலனைங்காம்" (சைல. சைலவ. ௬.) 3. நீர்க்கூட்டம். [ஸ்ரீ ஆபஸ்.]

ஆபரணக்கடைப்புணர்வு— பின்கோக்கி.

ஆபரணந்தாநம்— இலக்கினத்துக்கு மூன்றாமிடம். (சோதிடகடல்.)

ஆபரணம்—1. அணிகலம். (உ-ம்.) "ஆபரணஞ்சூடிலரியவிலாவியமாம்" (பதார்த்தகுண. ௧௪௨௨.) 2. சத்தாவத்தையிலொன்று. அஃது, இருபத்தைந்து தத்துவங்களையுமொன்றறக்கொன்று பேதந் தெரியவொட்டாமல் மறைத்திருப்பது. 3. சேலை. 4. போஷித்தல்.

ஆபராணிகம்—பிற்பகலுக்குரியது. [ஸ்ரீ ஆபராஹ்ணிக: ஸ்ரீ அபராண்ண. என்பதினின்றுவந்த தத்திதபதம்.]

ஆபவன்—வசிட்டமுனிவன். [ஸ்ரீ ஆபவ.]

ஆபற்காலம்–ஆபத்துப்படுங்காலம். [ஸ்ரீ ஆபத்கால: ஸ்ரீ ஆபத்; கால.]

ஆபற்சந்நியாசம்—ஆபத்துக்காலத்திற்பெறுந்துறவு. (உ-ம்.) "ஆபற்சந்நியாசந்தீது" (வைராக். தீபம். ௨௫.) [ஸ்ரீ ஆபத்; ஸந்ந்யாஸ - துறவு.]

ஆபற்சந்நியாசி—ஆபற்சந்நியாசம்பண்ணிக்கொண்டவன். (உ-ம்.) "இக்கணத்திருந்தினிவருங் கணத்துமிருக்குமோமரிக்குமோவுடலென் - றக்கணமனையாதிகட்கான்றனையாமன்றென வெணித்துறவறஞ்சார்- மிக்கவனுபற்சந்நியாசி" (வைராக். தீபம். ௨௬.)

ஆபன்—அட்டவசுக்களிலொருவன். (உ-ம்.) "குங்குமமெழுதுங்குடவரைத்தடந்தோளாபன்" (கூர்மபு. அந்தகா. ௬.) [ஸ்ரீ ஆப:]

ஆபாகம்—1. அடுப்பு. 2. மட்கலஞ்சுடுஞ்சூளை. [ஸ்ரீ ஆபாக: ஸ்ரீ; பச் - சுடுதல்.]

ஆபாசம்—1. அபிப்பிராயம். 2. ஒளி. 3. கெடுதல். 4. பயங்கரரூபம், இறுமாந்ததோற்றம். (உ-ம்.) "அல்லார்ந்தமேனியொடுகுண்டுகட்பிறையெயிற்றாபாசவடிவமான" (தாயு. தேசோ. ௬.) 5. பிரதிவிம்பம். 6. பொய்த்தோற்றம். (உ-ம்.) "ஊனத்தைச்சரீரத்தையாபாசக்கொட்டிலை" (பட்டண-பா.) 7. (தர்க்கம) போலிநியாயம். 8. மிகுவிருப்பு. [ஸ்ரீ ஆபாஸ.]

ஆபாசன்—1. (வேதாந்தம்) சீவன். (உ-ம்.) "சாற்றுகாரணங்களுமாபாசனுக்கேவிடயம்"

(உபநிட. ௨௩.)2. போலிநியாயம்பேசுவோன். (உ-ம்.) " அவலனையாபாசனை " (திருப்பு. ௫௩௫.)

ஆபாசித்தல்— உள்ளதுபோலத்தோற்றுதல். (உ-ம்.) "ஆன்மாவின்ஞானம் பிராகபாவம்போலஆபாசித்தலால் " (சி. சி. ௭: ௨. ஞானப்.)

ஆபாடணம்—சம்பாஷித்தல். [ஸ்ரீஆபாஷணஂ: ஸ்ரீ; பாஷ் - பேசுதல்.]

ஆபாடம்—பாயிரம். [ஸ்ரீஆபாஷ: ஸ்ரீ- முன். பாஷ் - பேசுதல்.]

ஆபாதசூடம்— அடிதொடங்கி முடிவரையும்.(உ-ம்.)"ஆபாத-சூடங்கருதித்தொழுதார் சிலமாதர்" (பாரத. இராய. ௭அ.)[ஸ்ரீ-வரை. பாத - அடி. சூடா - முடி.]

ஆபாதபாதாளம்— பத்துநூறுயிரம் யோசனையுந்நதமுடைய ஒருபாதாளம். இது கூர்மாண்டபுவநத்துக்கு மேலுள்ள ஒன்பதினுயிரம்யோசனை உயர்ச்சியுடைய இடைவெளிக்குமேலாயிருப்பது. (உ-ம்.) "உரைத்தபுரிமிசைவெளிதானென்பதினுறுயிரமாங்-தெரித்ததன்மேலாபாதபாதாளதீர்க்கத்தைத்- தரித்திடுகபத்திலக்கமென" (சிவதரு. கோபுர. ௨௧.)

ஆபாதம்—1. அடர்த்தல், தாக்கல். 2. இறங்கச்செய்தல். 3. இறங்குதல். 4. உபத்திரவஞ்செய்தல். 5. ஓடுதல். 6. சம்பவித்தல். 7. கட்டஞ்செய்தல். 8. விழுத்தல். 9. விழுதல். [4, 7. ஸ்ரீபாய. 1, 2, 3, 5, 6, 8, 9. ஸ்ரீபாத: ஸ்ரீ- எதிர். பத்- போதல். பதி- வதைத்தல்.]

ஆபாநம்—மதுவிற்குங்கடை. [ஸ்ரீபாநஂ: ஸ்ரீ; பா - குடித்தல்.]

ஆபாலி—பேன். [ஸ்ரீபாலி.]

ஆபி—பூராடநட்சத்திரம். [ஸ்ரீஅபீ:ஸ்ரீஅப - நீர். இ. ஒருவிகுதி.]

ஆபிகை—கொட்டாவிவிடுதல். [ஜாவிகா.]

ஆபிசாரம்—1. சத்துருமரணமடையும்படி செய்யும் ஒருகொடுந்தொழில். (திருவிளை. யானையெ. ௧௦. உரை.) 2. ஆபிசாரவேள்வி. (உ-ம்.) " தென்னனையாபிசாரஞ்செய்துயிர் செகுத்தால்" (திருவிளை. யானையெ. ௧௦.)

ஆபிதாநீயகம்— அபிதாநசம்பந்தமுடையது. [ஸ்ரீஅபிதாநீயக.]

ஆபில்வநம்—1. நீர்தெளித்தல். 2. மூழுகுதல்.

ஆபீடம்—1. இறுக்குதல். 2. உச்சித்தலையிலணியுமாலை. 3. வருத்துதல். [ஸ்ரீபீடஃ: ஸ்ரீ; பீடு வருத்தல்.]

ஆபீநம்— 1. ஆயர்வீதி. (சூ. நிகண். ௫: ௪அ.) [உவின்சிலோசிறப்பர்வீதி என்பர்.] 2. கிணறு. 3. கொழுப்பு. 4. பசுவின்மடி. [2,3, 4. ஸ்ரீபீநஂ: கபீ - நீர். பரமந-ஒரு வ-வி.]

ஆபீரபள்ளி— இடைச்சேரி. [ஸ்ரீபீர பல்லீ: ஸ்ரீபீர - இடையன். பல்லீ- சேரி.]

ஆபீரன்—1. இடையன். 2. பிராமணனுக்கு அம்பட்டையிடம்பிறந்தபிள்ளை. இவன் தொழில் பசுமேய்த்தல். (பரா. ஆசார. ௧௦௭.) [ஸ்ரீபீர:]

ஆபீரி—இடைச்சி. [ஸ்ரீபீரி.]

ஆபீலம்—1. சங்கடம். 2. நவாசங்களிலொன்று.

ஆபூடம்—ஒருவகைரோகம்; அது, துத்தநாகம். [ஸ்ரீவ-ருஷ:]

ஆபூப்பியம்—இடித்தமா. [ஸ்ரீவ-ருவ்ய: ஸ்ரீவ-ருவ. ய- ஒருவிகுதி.]

ஆபூபிகம்— அப்பக்கூட்டம். [ஸ்ரீவ-ருவிக: ஸ்ரீவ-ருவ - அப்பம். இக - ஒருவிகுதி.]

ஆபூர்த்தி— 1. திருப்தி. 2. நிறைவு. [ஸ்ரீவ-ருதிஃ: ஸ்ரீ; வ-ருதிஃ - நிறைவு.]

ஆபூர்யாணி—சித்தாந்தம். தாதுதாநத்திலிருக்கும் மகாநத்திலுண்டான இருபத்துநான்குகலைகளிலொன்று. (சி-லி. கிரி. ௨௨. தாற்.)

ஆபூர்வம்—கன்மபலம்.(உ-ம்.)"செய்தகருமம்நசித்து அதனால் ஒரு பூர்வஞ்சனித்துப்பலபரியந்தம் சமன்காரான்மாவாய் " (சி. சி. ௨: ௹அ. சிவாக்.)

ஆபெயர்த்துந்தருதல்—(புறப்பொருள்) இருபத்தொரு துறைகளுளொன்று; அது, மறவர்கொண்டபசுக்களைக்குறுநிலமன்னராயினுங்காட்டகத்துவாழும் மறவராயினும் மீட்டுத்தருதல். (தொல். பொருள். ௬௦.)

ஆபேட்சிகம்— அபேட்சையோடுகூடியது. "இந்தவியாபகத்துவம் ஆபேட்சிகவியாபகம் என்றும், நிரபேட்சிகவியாபகமென்றும், இருவகையாம்" (விசார. ௧௧௭.)

ஆபை—1. அழகு. 2. ஒளி. 3. தோற்றம். 4. நிறம். [ஆபா: ஆ; பா - ஒளி.]

ஆபோக்கியம்— (சோதிடம்) இலக்கினத்துக்கு மூன்றும் ஆறும் ஒன்பதாம் பன்னிரண்டாந்தானம். (குமாரா. இராசி. உ.)

ஆபோக்கிலிமம்— இலக்கினத்துக்கு மூன்றும் ஆறும் ஒன்பதாம் பன்னிரண்டாந்தானம். [ஆபொக்லிம.]

ஆபோகம்—1. அநுபவம். 2. கீதவுறுப்பினுளொன்று. (சிலப்பதி.). 3. சுற்றெல்லை. 4. பூரணம். 5. முயற்சி. 6. வருணன்குடையாகப் பிடித்த பாம்பின் படம். 7. வளைவு. [ஆபோக.]

ஆபோகவன் — ஆயோகவன். (பாா. மி. கசஅ.)

ஆபோசநம்— 1. ஆபோசாநம். (உ-ம்.) "அக்கினிகாரியமுடித்துக் குரவனருள்பெற்றுவாய்பேசாது அந்நத்தினைச்சுத்தமாக்கிப்பழியாது ஆபோசநம் பெற்றுப் புசிக்க வேண்டும்" (பாரச. ஆசார. க; போஜனப்.) 2. விழுங்குகை.

ஆபோசாநம்—போசநத்தின் முன்னும், பின்னும் உபஸ்தாணபூர்வமாயும், அபிதாநபூர்வமாயும், மந்திரத்தோடுகூடியநீரையுறிஞ்சுதல். [ஆபொசாந.]

ஆபோதநம்—1. அறிவு. 2. போதித்தல். [ஆபொயந; ஆ; போதி - அறிதல்.]

ஆபோற்சோதி— அப்புவாகியசோதி. (த. நி. போ. உ௮௦.) [ஆபொஜ்யாதி.]

ஆம்— 1. அவ்வியயம். (உ-ம்.) "ஓம் ஆம் என்பனஉடன்பாட்டையுணர்த்தும்வடமொழியவ்வியயங்கள். (பாரத. கிருட்டிண. ௪௦. குறிப்பு.) 2. ஆகுமெனப்பொருள்படுஞ்செய்யுமென்னும்வாய்பாட்டில்வரும் ஒரு சொல். 3. ஈரம். 4. ஒருசாரியை, மண்ணுமைகட்டிஎன்பதிற்போல. 5. ஓரசைச்சொல். (உ-ம்.) "வளக்கரியன்றுகொலாம்" (கம்பாங். சுங.) 6. ஒரிகட்சிக்குறிப்புமொழி. (உ-ம.) "அன்னையானவருமிருவராமுதல்வளித்ததந்தையர்களைவராம்-பின்னையாசைகொடுகுருகுலத்துரிமைபெறுவராம்" (பாரத. கிருட். கஉச.) 7. ஒருவமவுருபு. (உ-ம்.) "அல்லாங்குழலாள்" 8. ஒருவாக்கியத்திற்பயனிலையாகவருமவினைசசொல்வினையாலணையும்பெயராய் எழுவாயினிற்க அதனைமுடிக்குஞ்சொல்லாய் "யான் பிறர்சொல்லக்கேட்டேன்" எனப்பொருள் விளக்கும் ஒருசொல். 9. சடுகு.(இராசவைத். மகுட.) 10. சம்மதத்தையுணர்த்துமொருவட்மொழி. 11. சிறுகீரை. (இராசவைத். மகுட.)12. தக்கது. (உ-ம்.)"எருமன்றிலேற்றவு மாயன்றெனறதாள்" (பாரத. நான்கா. சுக.) 13. தனித்தன்மைப்பன்மைப்பொருளிலும் உளப்பாட்டுத் தன்மைப்பன்மைப் பொருளிலும் வரும் ஒரு விகுதி. நாம் அறைவாம்எனவும் நானும் நீயும் உண்பாம் எனவும் வருவனவற்றிற்போல இவ்விகுதி உடம்பாட்டுப்பொருளிலேவரும்போது உண்பாம்என்பதிற்போல காலஇடைநிலைகளு ளொன்றையடுத்தும் எதிர்மறைவினையில் வரும்போது எதிர்மறை யிடைநிலை கெட்டு உண்ணும் என்பதிற்போல வினையடியை நேரேயடுத்தும்வரும். 14. நீர். (உ-ம்.) "ஆமிழியணிமலை அலர்வேங்கைத்தகைபோல" (கலி. சஅ.) 15. வெந்நீர். (இராசவைத்.)16. வெள்ளரி.(இராசவைத்.)

ஆம்பல்—1. அடைவு. 2. இசைக்குழல், ஆம்பற்பண்ணையுடைய குழல். (உ-ம்.) "பையுள்செய்யாம்பலும்" (சிந்தா. பதுமை. ௧௪௬.) 3. ஊதுகொம்பு. (உ-ம்.) "வீணைகுழலாம்பல்" (கந்தபு. இரண்டா. ௩௪.) 4. ஒருபண். (உ-ம்.)"ஆம்பற்குழலாற்பயிரெம்படப்பைக், காஞ்சிக்கீழ்ச்செய்தேங்குறி" (கலி. க௦அ.)5. ஒழுங்கு. 6. ஓரெண். (உ-ம்.) "அடையடுப்பறியாவருவியாம்பல்" (பதிற்று. சுங: கக.) 7. கள். (பிங்கல. ௩கங௩.) 8. குமுதக்கொடி. (உ-ம்.) "ஆம்பலம்போதளவோ" (திருக்கோ. கக.) 9. சந்திரன். 10. துந்தி. 11. துனபம். 12. நெல்லிமரம். 13. புளியாரைப்பூண்டு. 14. மூங்கில். (உ-ம்.) "கருதிச்சயக்கோடையாம்பன்முத்தே" (மறைசை. கஉ.) 15. யானை. (உ-ம்.) "புதைகொண்மாமதத்தவாம்பலாநகப்புகிதப்பொற்றேன்" (இரகு. காப்பு.)

ஆம்பலரி—1. சூரியன். 2. முதலை. [ஆம்பல்-குமுதம், யானை. அரி-பகை.]

ஆம்பலா—புளியாரைப்பூண்டு.

ஆம்பற்குழல்— 1. ஆம்பலென்னும் பண்பாடற்கிசைந்தகுழல். (பத்.குறிஞ்சி. உஉஉ.) 2. மூங்கிற்குழல். 3. வெண்கலத்தாலே குமுதவடிவாக அணைசுபண்ணிச்செறித்தவோரிசைக்குழல். (உ-ம்.) "ஆம்பலந்தீங்குழல்கேளாமோதோழி" (சிலப். ஆய்ச்சியர்கு. பாட்டு. உ.)

ஆம்பால்—ஆகுந்தன்மை, முடியுங்காலம். (உ-ம்.) "நோற்றிபெகுதியாலாம்பாலொன்றில்லை" (கந்தபு. தவங்கா. கக.)

ஆம்பி—1. இறைக்குங்கருவிவகையுளொன்று; அது, பன்றிப்பத்தல்.(உ-ம்.)"ஏற்றத்தோவெழுங்குமகலாம்பியினிசை" ( மதுரை. கக.) 2. ஒலி. 3. குடைக்காளான். (உ-ம்.) "ஆடுநனிமறந்தகோடுயரடுப்பி-னாம்பிபூப்ப" (புறநா. கசச.)

ஆம்பிகேயன்—1. முருகக்கடவுள். 2. திருதராட்டிரராசன். [ஸ. ஆம்பிகேய: அம்பிகா - உமை, காசிராசன்மகள். ஏய - ஒருவிகுதி.]

ஆம்பியம்—இரதம்.

ஆம்பிரம்—1. தேமா. 2. புளிப்பு. 3. புளிமா. (சூ. நிகண். கக: 1, 2, 3. மகாவெ. கசு.)

ஆம்பிலம்—1. கள். 2. சூரைச்செடி. 3. புளிப்பு. 4. புளியமரம்.

ஆம்பு—காஞ்சோன்றிப்பூண்டு.

ஆம்புடையான்—கணவன். [பக்கத்தவன் என்றபடி.]

ஆம்புலம்—சூரை.

ஆம்பூறு—1. சுரை. 2. சூரைச்செடி.

ஆம்மிரம்—ஒருபலம். (உ-ம்.) "மோதியலாந்துவை யைந்தைதந்தாம்பிரகீர்கடம்பை." (தைல. தைலவ. சஅ.)

ஆம்மிலம்—புளி.

ஆம்மிலை—புளிபாரை. (உ-ம்.) "ஆமிலை பார்"

ஆம்ராதக— பிரதிட்டாகலையிலுள்ள ஐம்பத்தாறு புவனங்களுளொன்று. ( சி-வி. கிரி. உக. உரை.)

ஆமக்கணரோகம்— ஒருவகைக்கணரோகம், அது, நெஞ்சிற்றுடித்தல் சிறுநீர்மஞ்சளாகவிறங்குதல் முதலிய குணங்களை உண்டாக்கும். (சீவாட். உகசு.)

ஆமகணம்—குழந்தைகளுக்குச்சீதவழும்பு விழுகிற ஒருநோய், சீதக்கட்டு.

ஆமங்கர்— கோமேதகீவில் வசிக்குஞ்சாதியருளொருவகையர். (உ-ம்.) "மங்தகராமங்கர் மாசதர் மானசர்மாக்கண்மதிமுன்றெயவம்" (கந்தபு. அண்டகோச. ருகு.)

ஆமசந்தி— ஆமசுரத்தினின்றுண்டாகுமொருவகைச்சந்நி.

ஆமசிராத்தம்— பாகம்பண்ணுது பச்சையாகப் போசநபதார்த்தத்தைக் கொடுத்துச் செய்யுஞ்சிராத்தம் (உ-ம்.) "பின்னரிரணியசிராத்தம் பிறங்காமசிராத்தம்" ( சேதுபு. சேதுபல. கஅ.) [ஸ. ஆம-பச்சை. ஸ்ராத்த-பிதிர்களைநோக்கிச்செய்யும் ஒருகிரியை.]

ஆமசுரம்— குழந்தைகளுக்கு வரும் ஒருவகைச்சுரம். [ஸ. ஆம - சமியாமை. ஜ்வர - காய்ச்சல்.]

ஆமசூலம்—சமியாமையினால் வரும் வயிற்றுவலி, வயிற்றுக்குத்து. [ஸ. ஆமசூல.]

ஆமசூலரோகம்— ஒருவகைச்சூலரோகம். அது, அதிசலபானமுதலியகாரணங்களால் அசீரணம் விர்த்தியடைந்துபிறக்குஞ்சூலரோகம். (சீவாட். கஉக.) [ஸ. ஆம - அசீரணம்.]

ஆமசூலை— 1. ஒருவகைச்சூலைநோய். 2. வயிற்றுவலி.

ஆமடி—காஞ்சிரமரம்.

ஆமண்டம்—1. அலங்கரித்தல். 2. ஆமணக்கு, சிற்றாமணக்கு. (தைல. தைலவ. கஉ.) [ஸ. ஆ - மடி.] [ஸ. ஆமண்ட:]

ஆமணக்கழத்து— ஆமணக்கங்கொட்டை.

ஆமணக்கு— ஒரு செடி. அது, 1. செவ்வாமணக்கு. 2. சூரியகாந்தவாமணக்கு. 3. மலையாமணக்கு. 4. கடலாமணக்கு. 5. காட்டாமணக்கு. 6. எரிக்கரைக்காட்டாமணக்கு. 7. எலியாமணக்கு. 8. புல்லாமணக்கு. 9. பறங்கியாமணக்கு. 10. மணியாமணக்கு. 11. பேராமணக்கு. 12. படுக்கையாமணக்கு. 13. அறுபதாங்கொட்டை. 14. சிற்றாமணக்கு எனப்பலவகைப்படும்.

ஆமணக்குநெய் — சிற்றாமணக்கங்கொட்டையிலிருந்து எடுக்குநெய். (உ-ம்.) "ஆமணக்குநெய்பாலனலமுண்டாம்" ( பதார்த்த. சுருகூ-ம் பாட்.)

ஆமணத்தி— கோரோசனை.

ஆமந்திரணம்—1. அழைத்தல். 2. வந்தனஞ்செய்தல். 3. விளிவேற்றுமை. 4. வினவுதல். [ஸ. ஆமந்த்ரண: மந்த்ர - ஆலோசனை.]

ஆமந்திரிகை—இடக்கையென்னும் வாச்சியம். (உ-ம்.) "முழவொடு கூடிநின்றிசைத்தவாமந்திரிகை" (சிலப். அரங். கசக.)

ஆமபித்தரோகம்— ஒருவகைப்பித்தரோகம். (சீவாட். கசரு.)

ஆமம்—1. கடலை. 2. சமியாமை. 3. (சீதக்கட்டு, சீதம், சீதவழும்பு.) (உ-ம்.)"வின்னாதவாமம்விழுவிக்கும்" (பாலவாக. ஏசச.) 4. தண்ணீர்முட்டான். (இராசவைத்.) 5. துவரை. 6. நோய். 7. பதர்சலைங்கெடுத்தசாகியம். 8. பாகஞ்செய்யாததண்டுலமுதலியன. 9. மலவாட்சி. 10. முதிராதது. [ஸ.]

ஆமயம்—1. நோய். 2. பசுச்சாணி. (உ-ம்.)

"அத்தலேகிலத்தைநீராலாமயம்பூசி" (கந்த பு. வில்வ. வதை. ௪௨.) [ஸூமய.]

**ஆமயாவி**— 1. அசீர்ணத்தால் வாதிக்கப்பட்டவன். 2. குன்மரோயாளி. 3. நோயாளி. [ஸூமயாவிநு.]

**ஆமயாவித்துவம்**—அசீர்ணம். [ஸூமயாவி ஸ்வ: ஸூமயாவி - அசீர்ணநோயாளி. ஸ்வ - தன்மை.]

**ஆமர்த்தகமடம்**— கோதாவரிக்கரையிலே மந்திரகாளீசுவராலயத்துச் சமீபமாகத் துருவாசமுநிவராலே தாபிக்கப்பட்ட ஒரு மடாலயம். (சி. சி. அ: இ. ஞாகப், சிவி. கிரி. அக. தாற்.) [இம்மடத்திற்கதிபதி, சனற்குமாரன்.]

**ஆமர்த்தம்**— 1. நருக்குதல். 2. நெருக்குதல். 3. பிசைகுதல்.

**ஆமரணாந்தம்**—மரணபரியந்தம். [ஆ-வரை. மரண-சாவு. அந்தம்-முடிவு.]

**ஆமரணாந்திகம்** – மரணபரியந்தமுள்ளது. [ஆ-வரை. மரண - அந்த - இக - விகுதி.]

**ஆமரம்**—எட்டிமரம்.

**ஆமரி**—வார்த்தை.

**ஆமரிகம்**—நெல்லிமரம்.

**ஆமல்**—1. மூங்கில். 2. விஷமூங்கில்.

**ஆமலகம்**— 1. நெல்லிப்பழம். (உ-ம்.) "மாமுநிக்குணவாய்நின்ற மதுரவாமலகந்தன்னை" (பாரத. பழம்பொ. ௩.) 2. நெல்லிமரம். 3. பளிங்கு. [ஸூமலக.]

**ஆமலகமலம்**—ஆகாசத்தாமரை.

**ஆமலகை** — 1. நெல்லிக்கனி. 2. காய்ச்சல் குளிருள்ள விஷப்பிணி. (இராசவைத்.)

**ஆமலகி**—நெல்வி. (உ-ம்.) "கோகநகமாமலகியின்சாறெள்ளின்"(தைல. தைலவ.௩௦.)

**ஆமலம்**—பரிசுத்தம். (உ-ம்.) "இறையாமலங்கையுரன்" (மரு. தி. ௬௪.) [நீட்டல்விகாரம்.]

**ஆமா**—1. காட்டுப்பசு. "கானத்திலுள்ள நலேமானினங்காட்டுயாமா" (பாரத. சம்பவ. ௪எ.) 2. நெல்லிக்கனி. (இராசவைத்.)

**ஆமாகோளம்** —
**ஆமாகோளா** — } கடுக்காய்ப்பூ.

**ஆமாங்த**— ஆகவேண்டியமுறை. 2. விபரீதம்.

**ஆமாசயகதகராந்நம்**—விஷங்கலந்த அன்னத்தைப்புசித்து அவ்விஷமானது ஆமாசயத்தாநத்திலூறுவது. (சீவரட். ௩௨எ.)

**ஆமாசயம்**— 1. அன்னாசயஞ்சமித்தல். 2. வயிறு. [ஸூமாஶய: ஸூம; ஸூஶய-இடம்.]

**ஆமாசீரணரோகம்**—கண்களிலுந் தாடைகளிலுமதைப்பு ஏப்பம் வாய்நீரூறல் முதலிய குணங்களையுண்டாக்கும் ஒருவகை யசீரணரோகம். (சீவரட். அக.)

**ஆமாத்தியன்**–1. ஆலோசனைசொல்வோன். 2. சேனாபதி. 3. மந்திரி. 4. வைத்தியன். [ஸூமாத்ய:]

**ஆமாத்திரர்**–1. மந்திரிகள். 2. வைத்தியர்.

**ஆமாத்தூர்**— ஒரூர். (திருஞாந. தேவார. ஆமாத்.)

**ஆமாதிசாரம்**— வயிற்றுளைவு. [ஸூமாதிஸார: ஸூம; அதிஸார-கழிதல்.]

**ஆமாநவன்**— தக்கமநுடன். [ஸூ- ஆகிய. மாநவ - மநுடன்.]

**ஆமாலசகரோகம்**— பிரமாணத்தப்பிமேன்மேலும்புசிக்கும் அசநகாதனுக்கு அந்த அந்நமான துவாந்தியாகாமலும் பேதியாகாமலுஞ், சீரணிக்காமலும், ஆமமாகிய சிலேட்டுமத்தில் பிசறிக்கொண்டு வேதனையையுண்டாக்கும் ஒருவகை அலசரோகம்.(சீவரட்.அஎ.)

**ஆமாவாசியம்**— அமாவாசைச்சம்பந்தமுடையது. [ஸூமாவாஸ்ய: அமாசி யென்பதினின்றுவந்ததத்திதபதம்.]

**ஆமான்**— காட்டுப்பசு. (உ-ம்.) "ஆமானினந்திரியுந்தடஞ்சாரல்" (தணிகை. களவு. ௩௩.) [னகரமெய்சாரியை.]

**ஆமான்புகல்வி**— ஆமானேறு. (உ-ம்.) "புழற்கோட்டாமான்புகல்வியுங்களிறும்"(குறிஞ்சிப். உ௫.)

**ஆமாறு** —ஆகுமுறை.

**ஆமிசம்**—ஆமிடம்.

**ஆமிடம்**—1. அநுபவம். 2. இச்சை. 3. கைக்கூலி. 4. போசநம், உணவு. (உ-ம்.) "கோழ்வாயரியின்குதைத்தாய்கொடுங்கூற்றுமுட்க - வாழ்வாயெனக் காமிடமாய்வருவாய்கொலென்னு" (இராமா. சங். கடறு. ௬எ.) 5. மாமிசம். (உ-ம்.) "ஆகவின்யானினியிதனுக்காமிடம்" (இராமா. கவந்தன். ௨௪.) [ஸூமிஷ.]

**ஆமிநாயம்**—1. ஆகமம். (சை. பி. ௩௦.) 2. பாரம்பரையானவழக்கம். 3. பாரம்பரியவுபதேசம். 4. வேதம். (உ-ம்.) "ஆதிகுருவினின்றுந்தொடங்கிப்பாரம்பரியமாகப்பயிலப்படுதலினாலும், கற்கப்படுதலினாலும் ஆமிநாயமெனவும்" (கந்தபு. நவநீ. வேதாகமப். வேதாக

மோ.) [ஸ்ரு ஞாய: ஸ்ரு- வரை. ஞ - பயிலல்; நினைத்திருத்தல். ய - செயப்படுபொருள் விகுதி.]

ஆமிரம்—1. பலம். (உ-ம்.) "வெவ்வேறிரண்டுகாயாமிரஞ்சேர்த்து" (தைல. தைலவ. ௩.) 2. புளிப்பு. 3. மாம்பழம். 4. மாமரம். "ஆடல்வேலெறிதலோடுமாமிரவடிவாய்"(கந்தபு. சூரபன். ௪௮௮.)

ஆமிரவனம்—மாமரச்சோலை. [ஸ்ரு ஆம்ரம்- மாமரம். வநம் - சோலை. நகரமுன்னின்றரகாரநோக்கிணகரமாயிற்று.]

ஆமிருந்யுகா— நிவிர்த்திகலையிற்பிருதுவிதத்துவத்திலிருக்கும் (௪௦௮) புவநங்களுளொன்று. (சி-வி. கிரி. ௨௧. ௬. உரை.)

ஆமிரேசன்—ஏகாம்பரநாதசுவாமி. (உ-ம்.) "அக்கூலத்தமராமிரேசனை" (வேதாரணியபு. அந்தர்க். ௩.)

ஆமிரேடநம்— சொன்னசொல்லைப் பின்னுஞ் சொல்லுதல். [ஸ்ரு ஆம்ரேடநம: ஸ்ரு; ம்ரேட - பித்தம்.]

ஆமிரேடிதம்—(வியாகரணம்) 1. அடுக்குத்தொடர்மொழி. 2. அடுக்குத்தொடர்மொழியின்பின்னுள்ளது. (உ-ம்.) "பாம்புபாம்பு" இதிற்பின்னது ஆமிரேடிதம். [ஸ்ரு ஆம்ரேடித.]

ஆமிலபித்தரோகம்—ஒருவகைப்பித்தரோகம். அது, மஞ்சளைக்கரைத்ததுபோலப்புளித்தவாந்தி சூலை அக்கினிமந்தம் நடுக்கம்இருமல்முதலியகுணங்களையுண்டாக்கும். (சீவரட். ௧௮௧.)

ஆமிலம்—1. புளி. (உ-ம்.) "ஆமிலமிலறிபத்யமே" (தைல. தைலவ. ௩௮.) 2. புளிப்பு. 3. புளியமரம். [ஸ்ரு அம்ல.]

ஆமிலவிதக்தரோகம்— ஒருவகை ரோகம். அது: மெத்தவும் புளிப்புள்ள வஸ்துக்களைப் புசிப்பதினாற் பிறந்து விழிகளில் வீக்கமும் நமைச்சலுங் கலங்கலுமுண்டாக்கும் (சீவரட். ௨௫௭.)

ஆமிலாந்நம்—புளியிட்டுச்சமைத்த அந்நம். (சைவச. பொது. ௩௪௪. உரை.) [ஸ்ரு அம்ல - புளி. அந்ந - சோறு.]

ஆமிலிகை— 1. புளித்தல். 2. புளியமரம். [ஸ்ரு அம்லிகா: அம்ல - புளி. ஈகா. ஒருவிகுதி.]

ஆமிலே—புளியாரைப்பூண்டு. (தைல.தைலவ. ௧௦௧.)[ஆம்மிலையென்றுமிருக்கின்றது]

ஆமிலோட்சிதரோகம்—கண்களில் வரும் ஒருவிதரோகம். (சீவரட். ௨௬௦.) [ஸ்ரு அம்ல - புளிப்பு. உஷித - பழையது.]

ஆமீலநம்—கண்களைமூடுதல். [ஸ்ரு ஆமீலந: ஸ்ரு; மீல - மூடுதல்.]

ஆமுகம்— தொடக்கம். [ஸ்ரு ஆமுக: ஸ்ரு; முக-தொடக்கம்.]

ஆமுகர்—நந்திதேவர். [ஆ-இடபம். முகர்-முகமுடையவர்.]

ஆமுடையான்—கணவன். [ஆம் என்பது அகம் என்பதன் றிரிபு.]

ஆமுடையாள்—மனைவி.

ஆமுத்தம்— விடப்பட்டது. [ஸ்ரு ஆமுக்தம்: ஸ்ரு; முச - விடுதல்.]

ஆமுத்தி—மோக்கம். [ஸ்ரு ஆமுக்தி: ஸ்ரு; முச-விடுதல்.]

ஆமுத்து— ஆவின் பல்லிற்பிறந்த முத்து. [ஆ - பசு.]

ஆமுஷ்மிகம்— மறுமைக்குரியது. (உ-ம்.) "சுவர்க்கநரகவேதுவாய் அநயோந்யவிருத்தமுமாய்ச்சமபலமுமாயிருக்கிற ஆமுஷ்மிக புண்ணியபாவங்களுக்கு உபலக்ஷணம்" (சி.சி. ௪. ௩௦. சிவாக்.) [ஸ்ரு ஆமுஷ்மிக.]

ஆமூர்—சோழநாட்டுள்ள ஒரூர். (ஐங்குறு)

ஆமேம்பல்லூரி—கோரோசனை.

ஆமேற்பில்லூரி—கடுக்காய்ப்பூ.

ஆமை— 1. இராசசின்னத்தொன்று. 2. ஊருமபிராணிகளுளொன்று; அது: தலை நான்குகால்கள் என்னும் ஐந்துறுப்புகளையுமேலுங்கீழுமுள்ள இரண்டு ஓடுகளுக்குள்ளே அடக்கிக்கொள்வதும் கொம்புபோலும் பற்களுடையதுமாயிருப்பது. (உ-ம்.) "ஒருமையுளாமைபோலைந்தடக்கலாற்றின்" (வள். ௧௨௬.) 3. ஒருநோய். 4. வாசனை.

ஆமைக்கல்— நிலத்திலே பதித்தற்காக அமைக்கப்படும் அறுகோணமுடைய கல்லு.

ஆமைச்சுரம்—ஆமச்சுரம்.

ஆமைநெய்— ஆமையினின்றெடுக்குநெய். (உ-ம்.) "ஊனுமைநெய்மூலமோட்டும்" (பதார்த்த. ௧௫௨.)

ஆமைமடி — ஆமைவடிவமான சிறுமடி. இது: அதிகம் பாலுடையது.

ஆமையாழ்—செவ்வழியாழ்த்திறம்.

ஆமையோட்டுக்கட்டி— மேகரோகங்களினால்வரும் ஒருவகைக்கட்டி. அது: குழிகள் விழுந்தும், மினுமினுத்தும், கோவைத்தரு

வதும், ஒருவேளை தாரததுமாய், அனேசவி தச்சிகிச்சைகளுக்கு வசப்படாமல், ஆவை யோட்டைக்கவிழ்த்து மூடினதுபோலவிருப்பது. (சிவாட். ௪௦௨.)

ஆமோசநம்— 1. பந்தித்தல். 2. பிரகாசித்தல். 3. விடுதலைசெய்தல். [ஆ+மோசந: ஆ-.எதிர்மறை. ஊவ- விடுதல்.]

ஆமோட்சந்தாயி—மோக்ஷம்வரையும் நிற்பது. (உ-ம்.) "மோகினியே நித்தியமென்றதும், ஆமோக்ஷஸ்தாயி ஆகையினாலும்" (சி. சி. க: ௫எ. சிவாக்.)

ஆமோட்சம்— மோக்ஷபரியந்தம். (உ-ம்.) "ஆதில் அசித்தாகிய ஆணவமாயைகன்மமசத்தேயோவென்னில் அவைகளும் ஆமோக்ஷமேசத்து" (சி. சி. எ: க. சிவாக்.)

ஆமோதம்—1. சங்கரிஷ்ணன் இருக்குமுலகம். (இராமா. நாகபாச. உ௫௨. உரை.) 2. மகிழ்ச்சி. 3. மிக்கசுணம். (உ-ம்.) "ஆமோதசீதள்குங்குமபாடீரபூஷணை" (திருப்புகழ். ௫௫.) [ஆ+மோத: ஆ; மோத்- மகிழ்ச்சி.]

ஆமோதித்தல்—மகிழ்தல்.

ஆய்— 1. அழகு. (உ-ம்) ஆய்சிலம்பரியார்ப்ப" (கலி. ௫எ.) 2. ஆயென்னேவலுந்தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். (உ-ம்.) "ஆய்கதிர்முடியினான்" (அரிச்ச. விவாக.௭௫.) 3. இடையராகிய ஆய்ச்சாதி (உ-ம்) "ஆய்ப்படைநெக்கது" (சிந்தா கோவி. ௧அ.) 4. கடைவள்ளல்கள் எழுவரிலொருவன்; இவன்: பாம்பு தனக்குக்கொடுத்த நீலக்கலிங்கத்தை ஆலமர் செல்வனுக்குக்கொடுத்தவன். (உ-ம்.) "நீலநாகநல்கியகலிங்க- மாலமர்செல்வற்கமர்ந்தனன்கொடுத்த- சாவந்தாங்கியசாந்துபுலர்திணிதோ-ளார்வநன்மொழியாயும்" (சிறுபா. ௯௯.) 5. சிறுமை. (உ-ம்.) "ஆய்துதன்மடந்தை" (புறநா. உ௪௯.) 6. தாய். (உ-ம்.) "தாய்தன்னையறியாதகன்றில்லைத் தன்கன்றை-யாயுமறியும்" (இராமா. விராதன். ௫௫.) 7. நுட்பம், மிகுமென்மை. (உ-ம்.) "ஆய்தூவிமடவனமே" (நைட. அன்னத்தைத். தூ. ௧௦எ.) 8. பொதுப்பெயரிலும் அஃறிணைப்பெயரிலும் ஐகாரத்திரிபாய்வந்து விளித்தற்பொருளைக் கொடுக்கும் ஓர் உருபு. (உ-ம்.) "அன்னாய்" "இன்னாய்" (நன். பெயரி. ௩௯. உரை.) 9. முன்னிலையொருமை ஏவல்வினைவிகுதி. (உ-ம்.) "அஞ்சனக்கிரியேயருளாயெனும்" (இராமா. சூர்ப்பந. அ௯.) 10. முன்னிலை ஒருமை வினைவிகுதி. (உ-ம்.) "படிப்பாய்" 11. வருத்தம்.

ஆய்க்குடி— இடைச்சேரி. (மணிமே.)

ஆய்க்குழல்—இடையருடையஊதுகுழல். அது: கொன்றையங்குழல் முல்லையங்குழல் வேய்ங்குழல் என்னும் மூன்றுமாம்.

ஆய்ச்சி—1. தாய். 2. முல்லைநிலப்பெண். (உ-ம்.) "பணைத்தோளிளவாய்ச்சிபால்பாய்ந்தகொங்கை" (நாலாயி. சிதக்கடல். ௯.)

ஆய்ச்சியர்—இடைச்சியர். (உ-ம்.) "கொடிச்சியர்குறிஞ்சிப்பாடற்காய்ச்சியர்" (இரகு. நாட். ௫எ.)

ஆய்த்தியர்—இடைச்சியர். (உ-ம்.) "ஆய்த்தியர்நலக்காசெற்றணனான்" (சிந்தா. கோவி. ௧௧.)

ஆய்த்து— ஆ என்னும் வினைப்பகுதியினின்றுபிறந்து ஒன்றன்பாலிலே இறந்தகாலவினைமுற்றாகவந்து ஆயிற்று எனப்பொருள்படும் ஒருசொல். (உ-ம்.) "உன்சொலிந்திரசாலமாய்த்தே" (சி. சி. உ: உ௦.)

ஆய்தக்குறுக்கம்—குறுகிய ஆய்தம். அது: தகரம்வந்துபுணரத்தனிக்குற்றெழுத்தின்பின்னின்ற லகர ளகாரங்களின் திரிபினாலாகிய ஆய்தம். (நன். ௬௯. உரை.)

ஆய்தம்— அஃகேனம் அஞ்சாப்பு முயற்சியாலே தலையினிடமாகப் பிறந்து முப்புள்ளிவடிவினதாகிய ஓரெழுத்து; இது, குற்றுயிரின்பின்னும் வல்லெழுத்தின் முன்னும் நிற்பது. (உ-ம்.) "வன்னவாயதநேர் - நாட்டமுற்ற வன்னலொரை" (தணிகை. நைமி. ௬.)

ஆய்தல்—1. ஆராய்தல். (உ-ம்.) "பல்லோராய்ந்த நூல்வெள்ளங்கடந்தனன்" (பாரத. குருகுல. ௮எ.) 2. காய்முதலியவைகளைப்பிரித்தெடுத்தல், [பலவற்றுள்ளும்பர்குவமானவைகளை ஆராய்ந்தெடுத்தல்பற்றிவந்தபெயர்போலும்.] 3. தெரிதல். 4. தெரிந்தெடுத்தல். (உ-ம்.) "அணங்குகொலாய்மயில்கொல்" (வள். ௧௦அ௧. பரி.) 5. நுண்மை. (சூ. நிகண். ௮: ௧௧.) 6. முன்னுள்ளதனிற்சிறியதாதல். (உ-ம்.) "ஆய்ந்ததானை" (பொங்குதல் விசித்தலாய்துணுகியசிலை.) (தொல். சொல். ௩௩௦)

ஆய்தூவி— சூட்டுமயிர். "ஆய்தூவியனமென" (கலி. ௫௬.)

ஆய்ந்தோர்— 1. அறிஞர். (சூ. நிகண். உ: எ.) 2. பிராமணர். (சூ. நிகண். உ: ௫.) 3. புலவர்.

ஆய்நலம்—1. அழகியநலம். (ஐங்குறு.) 2. மெலிந்தவழகு. (ஐங்குறு.)

ஆய்நுதல்—அழகுகுறைந்த நெற்றி. (ஐங்குறு.)

ஆய்ப்பாடி— இடையரூர். (உ-ம்.) "பாலருந்ததிருறுநெய்யாய்ப்பாடியின்" (பாரத. அருச்சுனன் றீ. எசு.) [ஆய் - ஆய்ச்சாதி. பாடி - ஊர்.]

ஆய்ப்பு—1. அசைப்பு. 2. வருத்தம். (உ-ம்.) "தேய்ப்புண்டவனுஞ்சிலசில்கணையா - லாய்ப்புண்டவனும்" (இராமா. யுத். அதிகா.சo.) 3. வீச்சு.

ஆய்மதி—1. ஒளியற்றமதி. (உ-ம்.) "ஆய்மதி-மொய்கொள்பூமிழுளைப்பதுபோலவே" (சிந்தா. நாம. ௩ கசு.) 2. விசேஷபுத்தி.

ஆய்மயில்—விசைகுறைநதமயில். "அஃகியமதுகைதன்ஞலாய்மயிலூருமாங்கண்" (சிந்தா. நாம. உஎo.)

ஆய்மை—ஆராயுந்தன்மை. (உ-ம்.) "மதியினகூர்மைய - ஞய்மையின் மந்திரததறிஞுமென" (இராமா. சடாயுகாண். ௫.)

ஆய்விட்டு—ஆராய்ந்து. (உ-ம்.) "தாங்கித்தேடி - யாய்விட்டுப்பிரமனழ" (திருவிளை. விருத்த. உகூ.)

ஆய்வு—1. அகலம். (சூ. நிகண். அ: கஉ.) 2. அழகு. 3. ஆராய்தல். (உ-ம்.) "ஆய்வரும் பெருவலியரக்கர்நாமமே" (இராமா. ஆரணி. அகத். ௫.) 4. நுட்பம். 5. வருத்தம்.

ஆய—ஆகிய. (உ-ம்.) "இம்மாண்கதைக்கோரிறையாயவிராமனென்னும்" (இராமா. பாலகா. அரசியல். க.)

ஆயக்கட்டு— 1. ஒருமாகாணத்திலுள்ள பூமியின்முழுவிஸ்தாரம. 2. மோசடியானபேசசு.

ஆயக்கல்—காரக்கல்.

ஆயக்காரன்—சுங்கம்வாங்குவோன்.

ஆயக்காரி—வேசி. (உ-ம்.) "கொள்ளுமாயக்காரிகள்" (திருப்பு. ௫எக.) [ஆயம் - வருவாய்.]

ஆயக்கால்— 1. குத்துக்கால், சிவிகைமுதலியனதாஙகுங்கால். [இஃது ஆயத்தக்கால் போலும்.]

ஆயக்கோல்— ஆயக்கால். [இஃது ஆயத்தக்கோல்போலும்.]

ஆயசம்—1. இருப்பாயுதம். 2. இருப்புசட்டை. 3. இரும்பினுற் செய்யப்பட்டது. [ஸூயவஸ, ஸூயஸி என்பதினின் றுவந்ததத்திதபதம். ஸூயஸ்-இரும்பு.]

ஆயசூரி—கடுகுப்பூண்டு.

ஆயத்தக்கால்—குத்துக்கால். [ஸூயத்தம்-தாங்குதல்.]

ஆயத்தம்— 1. முயற்சிசெய்தல். [ஸூயஹூ: ஸூ; யஸீ - முயற்சி.] 2. யத்தநம். (உ-ம்.) "மோக்குமுன்வாலுகமெழர்காயத்தமென்னின்-முதிரலன்று காகரப்பாம்பாகமாகும்" (நைடத. பாயிர. சஉ.)

ஆயத்தலம்—ஆயத்துறை.

ஆயத்தன்—1. அடிபட்டவன். 2. கூர்மையுள்ளவன். 3. தள்ளுபட்டவன். (சப்தகற்ப.) [ஸூயஹூ:]

ஆயத்தார்—திரளாகியமகளிர். (உ-ம்.) "ஓங்கிய ஆயத்தாருமேறினருடனத்திண்டேர்" (திருவிளை. திருமணப். அ.)

ஆயத்தி—1. உருக்கம். 2. எல்லை. 3. நன்னடை. 4. நாள். 5. நித்திரை. 6. நீளம். 7. பெலம். [2, 3, 4, 5, 6, 7. ஸூயதி: ஸூ; யதி - முயற்சி.]

ஆயத்துக்கநந்தன்— அஞ்சநபாஷாணம்.

ஆயத்துய்த்தல்— தலைவியைப்பாங்கிமுதலிய பெண்கள்கூட்டத்தில் விடுதல்.

ஆயத்துறை—சுங்கம்வாங்குந்துறை. (உ-ம்.) "ஆயத்துறைப்பிறந்தந்தணர்பால்குடித்து" (தனிப்பாடல்.)

ஆயதநம்—1. ஆலயம். 2. இடம். (உ-ம்.) (மணிமே.)3.பலிபீடம். 4. வீட்டினுட்டளம். 5. வீட்டுக்குரிய நிலம். 6. வீடு. [ஸூயத - நீளம்.]

ஆயதம்— 1. அகலக்குறைந்து நீளங்கூடியிருக்கும் வடிவம். 2. அளவிற்பெருமை. 3. நீளம். (சூ. நிகண். அ: கஉ.) [ஸூயத.]

ஆயதாக்ஷி—அகன்று நீண்டகண்களுடையவள். (உ-ம்.) "நீளாயதாக்ஷி" [ஸூயதாக்ஷீ: ஸூயத - நீளம். அக்ஷீ - கண்ணி.]

ஆயதி— 1. அடைதல். 2. சந்திப்பு. 3. நீளம். 4. மாவடக்கம். 5. மேன்மை. 6. வருகாலம். [ஸூயதி.] 7. வைதரணி, பேருவைச்சேர்ந்து பெற்றமகள். (கூர்மபு. தக்க-சபி. கச. உரை.)

ஆயநம்— 1. ஒருவகைநெல். 2. வருடம். [ஹாயநூ.]

ஆயப்பாலை— நால்வகைப்பாலையுள் ஒன்று. அது: "ஆயஞ் சதுரந்திரிகோணம் வட்டமெனப்- பாயநான்குமபாலையாகும்" என்பதனுற்

பெறப்படும். (சிலப். ஆய்ச்சியர். உரை. ௪௦௫. பக்.)

ஆயம்—1. இலாபம். 2. உதயத்துக்குப்ப தினோராமிடமாகிய இலாபத்தாநம். (உ-ம்.) "உதயந்தனுடனே பிறப்பொண்டோளமை மகவு-சிதையும்பகைபெண்டிர்தேய்வுறுஞ்சா வுசெழும்புண்ணிய- மிதமொன்றியகன்மமா யமவ்யமெனுமாறிரண்டும் - விதமொன்றிய வோரைப்பேரெனச் சான்றோர் விதித்தன ரே" (விதாந. மரபி. ௪.) 3. கவறு. 4. கூட் டம், திரள். (உ-ம்.) "வெற்பராயமோடி" (பெரியபு. கண்ண. ௭௭.) 5. சுங்கம்,கடமை. (உ-ம்.) "இந்நேரமென்றிலையுடற்சுமையதா கவுமெடுத்தாலிறக்கவென்றே யெங்கெங்கு மொருதீர்வையாயமுண்டாயினும்" (தாயு. சுகவாரி. ௫.) (இங்கே ஆயமென்றது உடலை ச்கொடுத்தலாகிய கடமையை.) 6. சூதாடு தாயம். 7. சூது. (உ-ம்.) "அடையாவாமாய ங்கொளின்" (ஆகுபெயர்) (வள. ௯௩௯.) 8. தாய். 9. தேட்டம். 10. தோழி. 11. தோழி யர்கூட்டம். (உ-ம்.) "இவ்வயர்பொழில்வாய் ச்சூழுடையாயத்தை" (திருக்கோ. ௭.) 12. நாணி. 13. நீளம். 14. பசுத்திரள். (சிலப்பதி.) 15. பேறு. (உ-ம்.) "மூன்யாயமாயதமிழ்" (ம ருதூரந். ௭௧.) 16. மகளிர்கூட்டம். (உ-ம்.) "மஞ்ஞை- யாயங்கொலோவெனுமாயத்துள் ளாள" (வாண. ௨௧.) 17. மல்லரிப்பறை. 18. வந்துசேருதல். 19. வருவாய். (உ-ம்.) "பொருளாயமபோஒய்ப்புறமேபடும்" (வள். ௯௩௩.) [1, 9, 17, 18. ஆய:.]

ஆயமானம்— 1. இரகசியம். 2. உயிர்நிலை.

ஆயமுந்கரவலன்—குபேரன்.

ஆயர்— இடையர். (உ-ம்.) "ஆயர்தம்பதி யின்க்குரித்த - செங்கண்மால்" (பாரத. இந் திர. அ.)

ஆயர்பாடி—இடையரூர். (உ-ம்.) "ஆகி வைபுரக்கு மாயர்பாடியிலொளித்திவைகும்" (கூர்மபு கண்ணனவ. ௧௭.)

ஆயல்—ஆராய்தல். (உ-ம்.) "ஆயோதநத் துக்குறுநீர்மைகளாயலுற்றார்" (பாரத. வெ ளிப்பா. ௯௦.)

ஆயவர்—ஆகியவர். "கடைகாப்போ-ராய வர்பலர்" (கந்தபு. தவங்கா. ௯.)

ஆயவன்—அவன். (உ-ம்.) "நெற்றிநாட்ட த்தா - லாயவன்சுடருதவியோர் பதலையாய மர்வா-னேயினன்" (கந்தபு. துணைவர். ௨.)

ஆயவியயம்— வரவுஞ்செலவும். [ஆய வ்யய: ஆய - வரவு. வ்யய - செலவு.]

ஆயன்— 1. இடையன். 2. கிருட்டிணன். (உ-ம்.) "ஆயன்பதியிலரன்பதிவந்துற்று" (த னிப்பாடல். ஔவை.)

ஆயாசம்—1. இளைப்பு. 2. துக்கம். 3. பிர யாசம். 4. மனவருத்தம். 5. முயற்சி. [1, 3, 5. ஆயாஸ: ஆ; யஸ் - முயற்சி.]

ஆயாசாவர்த்தவாதரோகம் — ஒருவகை வாதரோகம். அது: பிரமாணந்தப்பியுண்ணு கின்றபித்த கப வஸ்துக்களினாலும் பலவ கை அன்னத்தினாலும் பிறந்து பித்தத்தோ கூடி ஆயாசத்தைப்பிறப்பித்து வேதனை யைச்செய்யும். (சீவரட். ௧௩௧.)

ஆயாசி— 1. இளைப்படைந்தவன். 2. முய ற்சியுடையவன். [ஆயாஸி.]

ஆயாசிதம்— வருந்தி யாசிக்கப்பட்டது. [ஆயாசித: ஆ; யாசி - யாசித்தல்.]

ஆயாநம்— 1. இயற்கைக்குணம். 2. வரு தல். ஆயாந: ஆ; யா - அடைதல்.]

ஆயாமம்— 1. (கணக்கதி) அகலம். 2. உயரம். (சிவதரு. சிவஞாந. தாந.௩௦.உரை.) 3. சஞ்சரித்தல். (உ-ம்.) "பாகியாயாமவாத ரோகம்" (சீவரட். ௧௩௩.) 4. தடுத்தல். 5. நீட்சி. 6. பிராணாயாமம். (உ-ம்.) "யாக்கை நண்ணியவழிபிராணன்-றவலறவதை நிறுத் தறன்னையாயாமமென்பர்" (கூர்மபு. யோக. ௧.) [1, 4, 5. ஆயாம: ஆ; யம- ஒழிதல்.]

ஆயாமி— 1. அடக்குவோன். 2. தடுப் போன்.

ஆயாள்— 1. செவிலித்தாய். 2. தாய். 3. பாட்டி.

ஆயான்—1. ஆகியிருப்பவன். (உ-ம்.) "உல கேழுமாயானை" (திருவாச.) 2. தமையன். 3. மூத்தவன். [ஜ்யாயஸ்.]

ஆயி— 1. ஒரு சத்தி. (உ-ம்.) "கவுரிகுண் டலியாயிபண்ணவிதனருளிருவே" (தாயு. சித்தர்கண. ௪.) 2. தாய். (சூ.நிகண்.௨:௭௩.)

ஆயிட்டு—ஆகலான், ஆயிடலால். (உ-ம்.) "அத்துவிதமென்றசொல்லே அநந்நியநாத்தி யையுணர்த்துமாயிட்டு" (சிவஞாநபோ. பக். ௬௪.) ஆகலான் என்பதற்கு ஆயிட்டென்பது க்காலவழக்குப்போலும். இனி மழைபெய்து குளம் நிறைந்ததென்புழிப்போல ஆயிடலா லென்பது ஆயிட்டெனத்திரிந்ததெனறலு மொன்று.

ஆயிடல்—தோன்றுதல், ஆகுதல். (உ-ம்.) "ஆயிடுமதுவுமென்னில்" (சி. சி. ௧: ௧௫.)

ஆயிடை—1. அவ்வளவில், அவ்வேளையில். 2. அவ்விடம். (உ-ம்.) "இனி-யாயிடைவந்திடுமொசர்செய்கையும்" (கந்தபு. தெய்வ. கசுஉ.)

ஆயிரக்காலி— 1. தட்டைப்பம். (வழக்.) 2. மரவட்டை.

ஆயிரங்கச்சி—அதிகமாகக்காய்க்கிற ஒருவகையிளநீர். (உ-ம்.) "வயிற்றுவலியுந்தொலையும்-ஆயிரங்கச்சிக்கறி" (பதார்த்தகுண. எ௦.) ஆயிரங்காய்ச்சி எனவும் வழங்குவர்.

ஆயிரங்கண்ணன்—இந்திரன். (உ-ம்.) "ஆயிரங்கண்ணோனருங்கலச்செப்பு" (சிலப். ஊர். சுஅ.)

ஆயிரங்கதிரோன்—சூரியன். (உ-ம்.) "மதியொடுதிகழ்மீ-னாயிரங்கதிரோன்வரக் காந்தவாறதுபோல்" (கந்தபு. மூன்று. க௦க.)

ஆயிரங்காலி—செவ்வட்டை. (உ-ம்.) "ஆயிரங்காலியமைந்தவரிச்சுருள்" (சட்டமுனி. நி. அக.)

ஆயிரஞ்சோதியுள்ளோன்—சூரியன். (சூ. நிகண். க: கூகூ.)

ஆயிரநாமன்—1. சிவன். 2 திருமால். "ஆயிரநாமத்தண்ணலனையவன்வன்மைகாணு" (கந்தபு. நகரழி. கக.)

ஆயிரம்—பத்துநூறுகொண்ட எண்.

ஆயிரம்பேரோன்—திருமால். (பிங்கல. கக ௦.)

ஆயில்— 1. ஆயிலியநட்சத்திரம். (உ-ம்.) "நிறைகொள்கவ்வைபணியாயில்" (உள். உடை. ககூ.) 2. ஆயிற்பட்டை. (தைல. தைலவ. க௦ச.) 3. ஒருமரம். (உ-ம்.) "கருங்காலியாயின்மருதும்" (சைவச. பொது. உஎ.)

ஆயிலியம்— இருபத்தேழு நட்சத்திரங்களுள் ஒன்பதாம் நட்சத்திரம். (உ-ம்.) "மாசிலாயிலியத்திற்காமமுண்டாம்" (கூர்மபு. ககூ-வது. சிரார்த்தமு. கூ.)

ஆயிழை— 1. அரிவாணுனி. 2. கந்நியிராசி. (உ-ம்.) "அலவன்றடிவிடையாயிழைவிற்றுலை" (விதாந. பஞ்சா. கசு.) 3. தெரிந்தெடுத்தவணிகலம். 4. பெண். (உ-ம்.) "ஆயிழையொடின்புறுமறத்தை மூதவாற்றுய்" (கந்தபு. மார்க். கஅ.) [ஆய் - ஆராய், நுட்பம். இழை - அணிகலம், செய்தல்.]

ஆயின்—1. ஆதலால். (பதிற்று.) 2. ஆராயின். 3. ஆனால். (உ-ம்.) "விளக்கு-மிருள்படுவதாயின்" (பழமொ. கல்வி. ௩.)

ஆயின்று—ஆயிற்று. (ஐங்குறு.)

ஆயினி—ஆசினி.

ஆயினும்—ஆனாலும் எனப்பொருள்படும் எதிர்மறைப்பொருளிலே வரும் உம்மையடுத்த ஒரு வினையெச்சம். (உ-ம்.) "காலமோவறிவின்றுகுமாயினுங்காரியங்கள் - காலமேதரவேகாண்டும்" (சி. சி. க: க௦) [ஒன்றையொருவாறு உடன்பட்டும் உடன்படாமையையுணர்த்தற்கண்வரும்.] எண்ணிடைச்சொல். (மணிமே.)

ஆயு— 1. ஆயுமான் என்னும் நித்தியயோகம். (குமாரசுவா. திநாதி. ௪.) 2. சந்திரவம்சத்துள்ள புரூரவா என்னும் அரசன்மகனாகிய ஓரரசன். (உ-ம்.) "ஆயுவென்றொருசெம்மலையம்மகனளித்தான்" (பாரத. குரு. க௩.) 3. வயசு, வாழ்நாள். (உ-ம்.) "ஆயுவழியுமதிகமிலிங்கமெனின்" (சைவச. பொது. க௦க.) [3. ஆயுஸ்: இ - போதல். உ-ஒருவிகுதி.]

ஆயுகாரகன்— சனி என்னுங்கிரகம். [ஆயுஸ் - வயசு. காரகந் - செயவோன்.]

ஆயுசு—1. சீவன். 2. வயசு. [ஆயுஸ்.]

ஆயுசுவிருந்தி— 1 ஆயுவர்த்தனை. 2. உலோகமணல். [ஆயுஸ்-வயசு. வ்ருத்தி-வளர்த்தல்.]

ஆயுட்டாநம்—ஆயுத்தாநம்.

ஆயுட்டோமம்-தீர்க்காயுப்பெறுதற்குச்செய்யும்யாகம். [ஆயுஷ்டோம; ஆயுஸ்-வயசு. ஸ்தோம - யாகம்.]

ஆயுட்பொருந்தம்— மணப்பொருத்தங்களுளொன்று; அது பெண்ணினுடையநட்சத்திரமுதல் புருஷனுடைய நட்சத்திரம்வரையும் எண்ணினதொகையையும், புருஷனுடைய நட்சத்திரமுதல் பெண்ணினுடைய நட்சத்திரம்வரையும் எண்ணின தொகையையும் தனித்தனி எழிற்பெருக்கி இருபத்தேழுக்கீந்த சேஷம் பெண்ணினுடையநாளின்ஒருகைகுறையின் ஆயுட் பொருத்தம் பொருந்தும் எனக்கொள்வது.

ஆயுடியம்— 1. சீவத்துவம், வாழ்நாள். (உ-ம.) "தேவாயுஷியம" (சி. சி. அ: சஉ. மறை.) 2. சீவனைக்காப்பது.

ஆயுத்தாநம்—(சோதிடம்)சென்மலக்கினத்துக்கும் சந்திர லக்கினத்துக்கும் எட்டாந்தானம். அஃது ஆயுவின்எல்லையை அறிவிக்குமிடம். [ஆயுஸ் - வயசு. ஸ்தாந - இடம்.] (வீமேசுரவுள்ள. உகஎ.)

ஆயுதசாலை—படைக்கலவீடு. (உ-ம்.) "ஆயுதசாலையிலவுணர்கோன்மகன்" (கந்தபு. முதனு. உ௦.)

ஆயுதபாணி— கையிலே ஆயுதங்கொண்டவன்.

ஆயுதபீடை—இலக்கினத்துக்கு ஆறுமிடம். (சோதிடகடல்.)

ஆயுதபூசை— புரட்டாசிமாசத்திலேவரும் நவராத்திரியிலே ஆயுதங்களை வைத்துத்துர்க்கையை முன்னிட்டுச்செய்யும் பூசை.

ஆயுதம்—1. உபகரணம். 2. கூத்துப்பயிலிடம். 3. படைக்கலம். (உ-ம்.) "ஆயுதமநேகவிதமானவையெனைப் பலவுமழகுறவியற்றியும்" (பாரத. வாரணா. ௫௭.)

ஆயுதாகாரம்—ஆயுதசாலை. [ஆயுதாகார: ஆயுத - படைக்கலம். ஆகார - வீடு.]

ஆயுதிகன்— ஆயுதங்கொண்டு போர்செய்வோன் [ஆயுதிக: ஆயுத; இக - ஒருவிகுதி.]

ஆயுதேந்திரம்—விட்டுணு சக்கரம்.

ஆயுப்பிரதம்—ஆயுளைக்கொடுப்பது. [ஆயு: - வயசு. ப்ரத - கொடுப்பது.]

ஆயுமறை—வைத்தியநூல். (உ-ம்.) "ஆயுமறைவானவர்மகாரும்" (பாரதம். வெளிப்பாட்டுச். ௩.)

ஆயுமான்—நித்தியயோகம் இருபத்தேழுள் ஒன்று. [ஆயுஷ்மாந்.]

ஆயுர்விருத்தி—தீர்க்காயு. ஆயு: - வயசு. வ்ருத்தி - வளர்ச்சி.]

ஆயுர்வேதம் — உபவேதம் நான்கனுள் ஒன்று அது: சீவனோடுகூடிய யாக்கையின் நோயையறிந்து மருந்து முதலியவைகளால் ஆரோக்கியஞ்செய்யும் உபாயத்தை அறிவிப்பது. (வேதா. சூ. ௩. உரை.) [ஆயுர்வேத: ஆயு: - சீவன். வேத - அறிதற்கருவி.]

ஆயுர்வேதாக்கினி — மருந்து செய்தற்கு உபகாரமாகுமக்கினி. அது: தீபாக்கினி, கமலாக்கினி, காடாக்கினி என மூன்றுவகைப்படும். [ஆயுர்வேதாக்நி.]

ஆயுர்வேதி—வைத்தியன். [ஆயுர்வேதி]

ஆயுராவசானம்— ஆயுவினமுடிவு. (உ-ம்.) "பிரமாவினுடைய ஆயுராவசானத்திலே பிரமாண்டம் பிரளயத்தையடையும்" (சி.சி. சு: ௩. சிவாக்.) [ஆயு: - வயசு. அவஸாநம் - முடிவு.]

ஆயுவின்மை— அருகனெண்குணத்தொன்று; அது, காலத்தால் எல்லைப்படாமை. (சி. சி. பர. நிக. ௨.)

ஆயுள்— 1. சீவன். (உ-ம்.) "இறுமுயிர்க்கு மாயுண்மருந்தொழுக்கநீதன்றூல்" (நீதிநெறி. ௭௯.) 2. வயசு. (உ-ம்.) "ஆயுண்மற்றுமக்கெத்துணையத்துணையளவும்" (கந்தபு. ததீசிப். ௭௨.) 3. வாழ்நாள். (உ-ம்.) "ஆயுளினெல்லையுமெய்த" (கந்தபு. மார்க்க. ௧௭௯.)

ஆயுள்காரகன்—சனி (சோதிடகடல்.)

ஆயுள்வேதம்—ஆயுர்வேதம். (உ-ம்.) "வைத்தவாயுள்வேதகந்தருவ்வேதம்" (நல். பாரத. அரசநீதி. ௨௧௯.)

ஆயுள்வேதர்—மருத்துவநூலோர். (உ-ம்.) "ஆயுள்வேதருங்காலக்கணிதரும்" (சிலப். இந்திர. ௪௪.)

ஆயுள்வேதியன்—வைத்தியன்.

ஆயே—அன்புகாட்டி அழைத்தலைக்குறிக்கும் ஒரு வடமொழியிடைச்சொல்.

ஆயோகம்— 1. நீர்க்கரை. 2. புட்பாதிகளைக்கொடுத்தல். [ஆயோக.]

ஆயோகவன்—சூத்திரனுக்கு வைசிய கந்நியிடத்திற்பிறந்தவன். (பரா. மி. ௧௦௭-ம்பக்.)

ஆயோகவி— ஆயோகவன். (பரா. மி. ௧௦௭-ம் பக்.) [ஆயோகவி.]

ஆயோசநம்—1. எடுத்தல். 2. திரட்டுதல். 3. பிடித்தல். 4. முயற்சி. [ஆயோஜந.]

ஆயோதநம்— 1. சேனை. 2. போர், யுத்தம். (உ-ம்.) "தங்களாயோதநத்துக்குறுநீர்மைகளாயலுற்றார்" (பாரத. வெளி. ௩௦.) 3. யுத்தகளம். [ஆயோதந: ஆ; யுத் - போர்.]

ஆயோதம்— 1. சேனை. 2. போர். [ஆ- யுத் - போர்.]

ஆயோர்—1. அவர்கள். (உ-ம்.) "ஆயோர்தமதயிரே யென வவனைக் குறித்தணைந்தார்" (கந்தபு. சரவண. ௩௭.) 2. ஆனோர். (உ-ம்.) "அறிஞராயோர்சிந்திக்கும்" (கந்தபு. திருவவ. ௭௩.)

ஆர்—1. அச்சுருவாணி. (உ-ம்.) "ஆரழிந்தனவுருளழிந்தனவச்சழிந்தன" (பாரத. முதற். ௭௦.) 2. அசைநிலையாகவரும் ஒரு இடைச்சொல். இப்படி வரும்போது உம்மை இடைச்சொல்லின்முன்னுவது உம்மீற்றுவினைமுன்னுவது வரும். (உ-ம்.) "பெயரினுகிய தொகையுமாருளவே" "எல்லாவுயிரொடுஞ் செல்லுமார்முதலே" (ஆ. நாவலர். இலக்க. சுருக். பக். ௧௮௮.) 3. அருமை. (உ-ம்.) "அரும்பெறற்பாவாயாருயிர்மருந்தே" (சிலப். ௧. மனை

யற. எ௫.) [இஃதோர்விகாரமொழி.] 4. அழகு. (ஆசிரிய. நிகண். அ: ௬.) 5. ஆத்திமலர். (உ-ம்.) "தேங்கடியாரரவார்சடையார்" (கம்பரா. அ.) 6. ஆரென்னேவலுந் தெரிநிலைவினைபகுதியும் வினைத்தொகையும். (உ-ம்.) "இந்தநமார் செந்தழலாலயம் விளங்கல்போல்" (சூத. சிவமா. ௩: ௧உ.) 7. உயர்திணைப் பன்மைப்படர்க்கையில் வருமொரு விகுதி. (உ-ம்.) "பெரியார்வந்தார்" 8. உருளையிலே அச்சடையுந்துவாரம். 9. ஒருவரை உயர்த்திக்கூறுமிடத்து வருமொரு விகுதி. (உ-ம்) "இறைவனார்கமலபாதம்" (சி.சி: பாயிர. ௩.) 10. கூர்மை. (பிங்கல. ௧௬௦௩.) 11. கொன்றைமரம். 12. சினிப்பாகு. 13. சோதி. 14. தேருருளையிற்குறட்டிலிருந்து சூட்டிற்போகுங்கம்பு (உ-ம.) "ஆருடைத் திகிரிச்சில்லி" (கந்தபு. தாரக. சக.) 15 நிறைவு. (உ-ம்.) "கொழுதியலார்செய்குழன்மடவீர்" (வாணன். எ.) 16. நுண்மை. 17. பூமி. (உ-ம்.) "திருவாரணங்குமணமகன்" (மறைசையந். க.) 18. செவ்வாய். (உ-ம்.) "ஆர்சவுரியோகம்" 19. யாரெனப்பொருள்படுமொருவினைச்சொல். (உ-ம்.) "இவ்வாலயத்து-ளாண்டவனுரணவுற்றான்" (கம்பரா. ௩௦.) 20. வினைப்பகுதியோடு எதிர்மறைவிடைநிலையின்றி நேரேயணைந்துஉயர்திணைப்பன்மைப்படர்க்கையெதிர்மறையில்வரும் ஒரு விகுதி. (உ-ம்.) "கல்லார்"

ஆர்க்கங்கோடன்— கொல்லன்கோவைக்கொடி.

ஆர்க்கண்ணியன்—சோழராசன். [ஆர்-அத்தி. கண்ணி - மாலை.]

ஆர்க்கம்—1. இரத்தம். 2. இலாபம்.

ஆர்க்கி—சூரியன்மகன். அர்க்கனென்பதினின்றுவந்தததத்திதம். [ஆர்க்கி.]

ஆர்க்கியம்—காட்டுத்தேன். [ஆர்க்ய: ஆர்கா - தேனீ. ய ஒருவிகுதி.]

ஆர்க்கு—1. எருக்கமரம். (உ-ம்.) "மேன்மதிலார்க இலைத்தமாலகிமத்தமூதிர்சம்பமாதுலங்கத்திரதமும்" (தைல. தைலவ. ௬.) 2. எருக்கின்பட்டை. (உ-ம்.) "அமுக்கிரி"பார். (தைல. தைலவ. ௬உ.) 3. ஒருமீன்.

ஆர்க்தவதம்— கொன்றை மரம். [ஆர்க்வதம்.]

ஆர்க்கை—1. கட்டுகை. 2. கரும்பு. 3. வாரடை.

ஆர்கத்தியம்—அருகசமயியுடையதன்மை. [ஆர்ஹத்யம்.]

ஆர்கதம்— சமணசமயம். [ஆர்ஹத: அர்ஹத என்பதினின்று வந்த தத்தித பதம்.]

ஆர்கதன்— சமணசமயத்தோன். [ஆர்ஹத:]

ஆர்கதி—திப்பலி. (சூ. நிகண். ௪: உ௬.)

ஆர்கலி— 1. கடல். (உ-ம்.) "ஆர்கலியுலகை" (வேதாரணியபு. மேனா. ௩உ.) 2. நிறைந்தபூழக்கம். (ஐங்குறு.) 3. மழைவெள்ளம். (உ-ம.) "பொய்யாவானம்புதுப்பெயல்பொழிரதென-வார்கலிமுனை இயகொடுங்கோற்கோவலர" (நெடுநல். ௩.)

ஆர்கலிவாரணம்—அயிராவதயானை. [ஆர்கலி - கடல். வாரணம்- யானை. கடலிற்றோன்றியயானை என்றபடி.]

ஆர்கோதம்—கொன்றை.

ஆர்ச்சநம்— 1. உபசாரம். 2. சம்பாத்தியம். 3. தேடுதல். (உ-ம்.) "சிவார்ச்சநமார்சநமாயின்" (கோயிற்பு. வியாக். ௬.) 4. பாதுகாத்தல். 5. பூசை. 6. விருந்தோம்பல். [2, 3. ஆர்ஜந 1. ஆர்சந.]

ஆர்ச்சனை—ஆர்ச்சநம்.

ஆர்ச்சவம்—1. உண்மை. 2. சத்துருவையுமமித்திரனையுஞ்சமமாயெண்ணல். உ-ம்.) "செயிரில் சேயமித்திரகளத்திராதியிடத்துந் தெவ்விடத்து-மயர்விறறன்னுண் மாவிடத்து மமையச்சமபாவனைவைத்தல்- வயிரமறுமார்ச்சவமென்றேவகுப்பார" (சூத. ஞாந. ௧௩: ௬.) 3. நேர்மை. [ஆர்ஜவ: ரிஜு என்பதினின்றுவந்ததத்திதபதம. [ரிஜு-நேர்.]

ஆர்ச்சிகம்— 1. இருக்குவேதசம்பந்தமுடையது. 2. சாமவேதம. [ஆர்ச்சிக.]

ஆர்ச்சித்தல்—ஈட்டுதல். (உ-ம.) "பன்னருந்தனமார்சித்து" (நல். பாரத. தருமசாத்திர. ௧௩.)

ஆர்ச்சிதம்—1. உபசாரம். 2. சம்பாதிக்கப்பட்டது. (சி. சி. அ: ௬. சிவாக்.) 3. பாதுகாத்தல். 4. விருந்தோம்பல்.

ஆர்ச்சுநி— அருச்சுனன் மகனாகிய அபிமந்நு. [ஆர்ஜுநி: அர்ஜுந என்பதினின்று வந்ததத்திதபதம். இ - ஒருவிகுதி.]

ஆர்சவுரியோகம்— தநு, மீனம், மகரம், இடபம், சிங்கம் என்னுமிவ்விராசிகளின்பிற்கூற்றிலே செவ்வாயுஞ் சனியுங் கூடிநிற்பது. (விதான பதி. ௧௩. உரை.) [ஆர்- செவ்வாய்.]

ஆர்த்ததாதுகம்—எச்சவினை. (உ-ம்.) "ஆர்த்ததாதுகமாமீரெச்சமும்" (பி. வி. ௩௮. உரை.) [ஆர்த்த-ஆர்த்தியாதுகம்.]

ஆர்த்தநாதம்—நோவினாற்புலம்பல். [ஆர்த்த-நாத: ஆர்த்த-நோவ.நாத - ஒலி.]

ஆர்த்தபம்—1. பூப்படைதல். (உ-ம்.) "பிரதமார்த்தபந்தோன்றின இலக்கினம்" (விதானமா. தெருட்சி. ௬. உரை.) 2. பூப்படைந்தபின் கருத்தரித்தலுக்குபகாரமாயிருக்குநாட்கள். [ஆர்த்தவ.]

ஆர்த்தம்—1. கலக்கமடைந்தது. 2. நோவடைந்தது. [ஆர்த்த.]

ஆர்த்தர்—1. எளியர். 2. நோயுற்றோர். (உ-ம்.) "தில்லைப்பல்பூம்பொழிற்செப்பும்வஞ்சினமு - மார்த்தரங்கஞ்செய்யுமால்" (திருக்கோவை. ௧௮௭.) 3. பெரியோர்.

ஆர்த்தல்—1. அணிதல். (உ-ம்.) "பொடியார்க்குந்திருமேனி" (பெரியபு. திருநாவு. ௧௦௫.) 2. அநுபவிக்கச்செய்தல், உண்பித்தல். (உ-ம்.) "விடலரும்பவப்பேறார்த்திவீடருள்கருணையன்றே" (கந்தபு. மேருப். ௬௪.) 3. ஒலித்தல். (உ-ம்.) "தோட்டுணைகொட்டியார்த்து" (நைட. போர். ௨௫.) 4. கட்டல். (உ-ம்.) "பாகசாதனன்றனைப்பாசத்தார்த்து" (இராமா. பாலகா. திருவவ. ௧௦) 5. தொடுத்தல். (உ-ம்.) "ஆர்த்தபதம்" (வேதா. சூ. ௮) 6. நிறையச்செய்தல். (உ-ம்.) "வருநிதிபிறர்க்கார்த்துமாசாத்துவனென்பான்" (சிலப். மங்கல.௩௬.பக்.) 7. பொருத்தல். 8. பொருதல்.

ஆர்த்தவம்—1. புட்பம் 2. மகளிர்பூப்பு. [இருது என்பதினின்று வந்த தத்திதம்.] [ஆர்த்தவ.]

ஆர்த்தன்—துயருறுவோன். [ஆர்த்த:]

ஆர்த்தி—1. அநுபவம். 2. அழிவு. 3. உண்பித்து எனப் பொருள்படும் ஒரு தெரிநிலை வினையெச்சம். (உ-ம்.) "வரையுறழ்தனப்பாலார்த்திவரம்பறகாப்புநேர்ந்தாள்" (கந்தபு. பார்ப்ப. ௨௭.) 4. கிரியாசத்திக்குடையதாயிருக்கும் புறவுருப் பஞ்ச சத்திகளில் ஒன்று. (உ-ம்.) "ஈசானி, பூரணி, ஆர்த்தி, வாமை, மூர்த்தி என்னும் பஞ்சசத்திபுறவுருவுடைத்தாய்" (சி. சி க: ௩௬. ஞானப்.) 5. கொடுத்து. (உ-ம்.) (பொருந. ௧௪௪.) 6. துன்பம். (உ-ம்.) "ஆர்த்தியாவுநீயகலவென்னுடைச் - சீர்த்தியண்ணல்பாற்சேறல்சிந்தியாய்" (கந்தபு. இந்திராணிமறு. ௪௮.) 7. விருப்பம். 8. வில்லின்நுனி. [ஆர்த்தி.]

ஆர்த்திகம்—பாதிக்குரியது. [ஆர்த்திகம்: அர்த்தம் என்பதினின்றுவந்த தத்திதம்.]

ஆர்த்திகை—துன்பம். (உ-ம்.) "ஆர்த்திகையுறுதவுள்ளத்தரிமுதலமரர்யாரும்" (கந்தபு. திருவவ. ௧௧௪.) [ஆர்த்திகா:]

ஆர்த்தியம்—காட்டுத்தேன்.

ஆர்த்திரகம்—இஞ்சிப்பூண்டு. (உ-ம்.) "அரைப்படியெண்ணெய்க்கருணைச்சாறு படியிரண்டேற்றழிஞ்சில்விதைகோட்டமிளகார்த்திரகம்" (தைல. தைலவ. ௮௭.) [ஆர்த்ரக: ஆர்த்ர - உலராதது.]

ஆர்த்திரசாகம்—இஞ்சிப்பூண்டு. [ஆர்த்ரசாகம்: ஆர்த்ர- உலராத. சாகம்-பூண்டு.]

ஆர்த்திரம் — 1. ஈரம். 2. உலராதது. [ஆர்த்ர:]

ஆர்த்திரமூலரோகம்—எந்நோமும் இரத்தமுதலியசுசிவையுண்டாக்கும் ஒருவகை மூலரோகம். (சிவரட். ௫௫.) [ஆர்த்ர-ரோக- கசிவு.]

ஆர்த்திரேந்தநம்— ஈரவிறகு. (சி. சி. க: ௭௦. சிவாக்.) [இந்தந - விறகு.]

ஆர்த்திரை—திருவாதிரை. [ஆர்த்ரா.]

ஆர்த்துதல்—1. நிறைத்தல். 2. நிறைவேற்றுதல். 3. புசிப்பித்தல்.

ஆர்தல்— 1. அநுபவித்தல். 2. அன்புசெய்தல். (உ-ம்.) "ஆரியனைத் தான்வணங்கிப்பிச்சைக்கநுமதிபெற்-றாருயிருள்ளானடியுமார்ந்து" (சைவச. பொது. ௩௭௮.) 3. இணைதல். 4. உண்ணுதல். (உ-ம்.) "காரியீதுணக்கடனன்றெனை-வாரவண்முதோறகலவோப்புவா" (தணிகை. நாட். ௩௬௩.) 5. குடித்தல். 6. தங்குதல். 7. நிறைதல். 8. பொருந்தல். (உ-ம்.) "நீலப்பிறங்கலலையான்பணியா - லார்கின்றதின்றோரலரே" (கந்தபு. தேவரையேவல்கொள். ௧௧.)

ஆர்துபம்—அரத்தைச்செடி.

ஆர்ந்த—போன்ற (உ-ம்.) "உயிரார்ந்-தமரவரிக்கிறையார்க்கரிதானுய" (மரு-தி. ௬௩.)

ஆர்ப்பதம்—1. சாரம். 2. பச்செனவு.

ஆர்ப்பரவம்—ஆரவாரம். (உ-ம்.) "ஆர்ப்பரவத்தெங்கிருந்தாரும்வெருவ" (சேதுபு. தேவிபுர. ௨௪.)

ஆர்ப்பரித்தல்—ஆரவாரித்தல்.

ஆர்ப்பரிப்பு—ஆரவாரித்தல். (உ-ம்.) "போற்றுநன் மகமுமறைகளார்ப்பரிப்பும்" (மச்சபு. திரிபுரநிருமாண. ௧௪.)

ஆர்ப்பு—கட்டு, பந்திக்கப்பட்டது (உ-ம்.) "ஆர்ப்பாயகாயந்தன்னை" (சி. சி. ௬: ௨௬.) 2. சிரிப்பு. (பிங்கல. ௧௯௯௭.) 3. நுண்ணியது. 4. பேரொலி. (உ-ம்.) "ஆர்ப்புக்கொண்டுகைவிசைத் தெறிமணிக்கல்வந்தணைய" (கந்தபு. நாட். ௪௫.) 5. (இசைநூல்) மாத்திரையிறந்த சுருதி, ஒங்கவிசைத்தல். (உ-ம்.) "இன்னிசைவழியதன்றியிசைத்தல் செம்பகையதாகும் சொன்னமாத்திரையிறேங்க விசைத்திடுஞ்சுருதியார்ப்பே" (பஞ்சபாரதியம். சிலப். வேனிற். ௨௧.) [இதனை, யாழின்குற்றநான்கனுளொன்று. இது மரக்குற்றத்தால் வருவது என்பர் திருவிளையாடற்புராண உரைகாரர்.] 6. முள்ளின் கூர்ப்பாகம். 7. யுத்தம். (சூ. நிகண். ௯: ௬௯.)

ஆர்பதம்—1. உண்ணுமுணவு. (உ-ம்.) "நெல்லி-னம்பணவளவைவிரிந்துறைபோகிய-வார்பதநல்குமென்ப" (பதிற்று.௬௯: ௯.) 2. கிழல். (இரேவணா.) 3. வண்டு. (உ-ம்.) (பிங்கல. ௨௩௮௨.)

ஆர்மதி—1. கற்கடகராசி. 2. நண்டு. [சந்திரனுக்குக்கற்கடகம் ஆட்சிவீடாதலாலும், கற்கடகம் நண்டுவடிவாதலாலும்-[ஆர்-நிறைவு, தங்கல். மதி-சந்திரன்.]

ஆர்மை—1. கூர்மை. 2. மதில்.

ஆர்வங்கோளிக்காரகம்— (இலக்கணம்.) கேளாதுவிருப்பாய்க்கொடுக்கப்பட்ட பொருளை விருப்பமாய ஏற்றற்பொருளில் நான்காம்வேற்றுமையிலே வரும்பெயர். (வீரசோ. உபகாரக. ௩.)

ஆர்வம்—1. அன்பு. 2. ஆசை. (உ-ம்.) "வண்டார்வஞ்செய்துமதுவுண்டு" (நைடத. அன்ன-தூ. ௬௫.) 3. ஒலி. (உ-ம்.) "ஆர்வத்தோடிவயல்புகும்" (கந்தபு. ஆற்று. ௩௫.) 4. கடைப்படுதொகமேழினொன்று. அது: அன்புமுதலியவற்றுளனளித்தல். 5. சேலை. 6. நரகம். 7. பெறக்கருதியபொருண்மேலாசை. (மதுரை. ௪௮௧.)

ஆர்வமொழி— முப்பத்திரண்டு அலங்காரங்களுள் ஒன்று; அஃது, உள்ளத்துநிகழுமாசையை மிக வெளிப்படுத்துஞ் சொற்களாற் சொல்வது. (உ-ம்.) "ஆர்வமொழிமிகுப்பதார்வமொழியே" (தண்டி. ௬௭.) [ஆர்வம் - ஆசை. மொழி - சொல்.]

ஆர்வலன்—1. அன்புடையோன். (உ-ம்.) "ஆர்வலராகுமைந்தராறுவரும்" (கந்தபு. சரம்புகு. ௨௬.) 2. கணவன். 3 மித்திரன்.

ஆர்வு— 1. ஆராய்தல். 2. உண்ணல். 3. குடித்தல். 4. நிறைவு. 5. விருப்பம். (உ-ம்.) "ஆர்வுற்றார்நெஞ்சமழியவிடுவானோ" (கலி. ௪௨.)

ஆர்வை—கோரைப்பாய்.

ஆர—1. நிறைய. (உ-ம்.) "வாயாரவுண்டபேர் வாழ்த்துவதுநொந்தபேர்வைவதுவும்" (தாயு. சச்சி. அ.) 2. நுகர. (உ-ம்.) "பொன்மலிந்த விழுப்பண்ட-நாடாரநன்கிழிதரும்" (பத்து. மதுரை. ௮௨.)

ஆரக்கம்— 1. அகிலங்கட்டை. 2. சந்தனம.

ஆரக்துவதம்— கொன்றைமரம். [ஆரக்வத:]

ஆரகட்டம்—ஆழமாகியகிணறு.

ஆரகம்—1. இரத்தம் 2. பிரிக்குமெண். 3. பிநநத்திலேகீழெழுதப்படுமெண். ஹாரக: ஹ்ரு - எடுத்தல்.]

ஆரகன்—1. அனுப்புவோன். 2. எடுத்தல். 3. களளன். 4. கொள்ளையாடுவோன. 5. சங்கரிக்கிறவன், உருத்திரன். (உ-ம்.) "படைத்திடப்பட்டயாவு-மாரகன்" (சிவதரு. சிவஞானயோ. ௩௧.) 6. சூதாடுவோன்" [ஹாரக: ஹ்ரு - எடுத்தல். ௯௯ - ஒருவிகுதி.]

ஆரகூடம் — பித்தளை. [ஆரகூட: ஆர - போதல். கூட - குவிவு.]

ஆரகூளம்—பித்தளை. [ஆரகூட: டகரம ளகரமாயிற்று.]

ஆரகோம்— வாகுவலயம்.

ஆரகோநம்—கொன்றைமரம்.

ஆரசகம்— அகிலமரம

ஆரந்தோதி— அருந்ததி.

ஆரட்சகன்—1. இடையன். [ஆ - பசு.] 2. காவற்காரன். [ஆ; ரக்ஷக- காபபோன்.]

ஆரண்ணியகம்— வானப்பிரஸ்தர்களுக்கே பயனபடுவதாய வனத்தில் வைத்தெழுதப்பட்டது எனக் கருதப்படும் வேதத்தின் மூன்றம்பாகம் (மச்சபு. முகவுரை.)

ஆரண்ணியம்—காடு.

ஆரண்யம்—ஆரணியம். (உ-ம்.) "நைமிசாரண்யம்" (மச்சபு. நைமிசா. ௧௨.)

ஆரணங்கு—1. அரியதெய்வப்பெண் (உ-ம்.) "விண்ணவர் கோமான்றன்னுளாரணங்குடனேகாழ்படைந்ததேயெழுவாயாக" (கந்தபு.வீரவாகு-௰.௨௦)2. அரியதெய்வம். (உ-ம்.) "ஆரணங்குயர்ந்தோரல்லோர்புள்விலங்கு" (அகப்பொரு. அகத்.௧௧.)3. ஆறுதற்கரியவருத்தம். (உ-ம்.) "கல்லவர்க்-காரணங்காகியமார்

பில்" (புறநா. கச.) [ஆர் - அரிய. அணங்கு- தெய்வப்பெண், தெய்வம், வருத்தம்.]

**ஆரணந்தான்**—பிரமா. (உ-ம்.) "ஆரணத் தானருள்பார்" (வாண. உகரு.) [ஆரணம்-வேதம். அத்து - ஒருசாரியை. ஆன் - ஒரு விகுதி.]

**ஆரணம்**—1. வேதம். (உ-ம்.) "மண்ணிலா ரணங்களெனவியாதனுர்வகுத்த" (பாரத. தற்சிறப். ச.) 2. வேதத்தின் ஞானபாகை. (சி. சி. அ: உஎ. மறை.)

**ஆரணவாணர்**—1. பார்ப்பார். 2. முனிவர். (உ-ம்.) "ஆரணவாணர்க்கென்றுங்கேளான மௌனக்கல்வியன். (பாரத. திரௌ. எரு.) [ஆரண - வேதம். வாணர் - வாழுவோர்.]

**ஆரணவுருவார்**—சிவபிரான். (உ-ம்.) "ஆரணவுருவார்தில்லையம்பலமெய்தப்பெற்றோர்" (கோயிற்பு. இரணிய. எச.) [ஆரண - வேதம். உரு-வடிவம். வேதவடிவினர் என்றபடி.]

**ஆரணன்**— 1. சிவன். (உ-ம்.) "ஆண்டவனாரணன்கம்பனென்றேத்த" (கம்பரங். கo.) 2. பார்ப்பான். 3. பிரமன். (உ-ம்.) "ஆரணன்றனதுமைந்தர்க்கரும்பெறன்ஞானபோதம்" (கந்தபு. மேரு. கஅ.) 4. விட்டுணு. (உ-ம்.) "ஆரணனேயரனே" (பாரத. கிருட்டிண. உoக.)

**ஆரணி**— 1. ஆருதாரங்களுளொன்றாகிய அநாகதத்துக்குரிய பன்னிரண்டிதழ்களுள் ஓரிதழில் நிற்கும் அதிதேவதை. (சி. சி. அ: உக. மறை.) 2. காளி. (சூ. நிகண். க: ந அ.) 3. சுழல்காற்று. 4. பார்ப்பதி. (உ-ம்.) "ஆரணிசடைக்கடவுளாரணியெனப்புகழ. (தாயு. மலைவளர். ரு.)

**ஆரணியகன்**—காட்டில் வசிப்போன்.

**ஆரணியம்**—காடு. (உ-ம்.) "ஐந்துபெரும் பார்த்திவரோடாரணியம்புகுந்தபிரான்" (பாரத. பதினெட். உசங.)

**ஆரணியராசி**—சிங்கராசி. [ஆரண்யராஸி.]

**ஆரத்தியம்**—ஒழிவு.

**ஆரதம்**— மாமிசமின்றிச்செய்யும்போசநம். [ஆ-எதிர். ரத்-கொலை. சீவவதையில்லாததென்றபடி.]

**ஆரதி**—1. ஒய்வு. 2. தீபங்காட்டல்; இது சோடசஉபசாரத்தொன்று. [ஆரதி.]

**ஆரநாலகம்**—காடிச்சலம். [ஆர - போதல். நால - மணம்.]

**ஆரநாளத்தைலம்**— ஒருவகைத் தைலம்; இதனிலக்கணம். (தைல. தைலவ. உக. பார்.) (உ-ம்.) "காடியெண்ணெய்பெருகம்புநாலொன்றரைப்படி- மாடியமர்சீரணச்சுரமுமயிலுண்ணறலிதாரநாளத்தைலம்"

**ஆரநாளம்**—காடிச்சலம். (உ-ம்.) "ஆரநாளத்தைலம்" (தைல. தைலவ. உக.)

**ஆரப்தம்**—ஆரம்பிக்கப்பட்டது. (பௌட். மாயா. ருசுஇ.)

**ஆரபடி**— 1. தைரியம். 2. (நாடக) நால்வகை விருத்தியுளொன்று; அது, பொருள் பொருளாகவீரராகிய மாநுடர்தலைவராகவருவது. (சிலப். அரங். பக். சுகூ.) [ஆரபடி.]

**ஆரபதி**—சர்ப்பராசன். (உ-ம்.) "பாரடைய வாழ்வித்தாரபதிபாசச் சாமளகலாபப்பரியேறி" (திருப்பு. ருரு.) [அரபதியெனற்பாலது ஆரபதியெனவிகாரமாயிற்று.]

**ஆரபி**—ஓரிராகம்.

**ஆரம்**— 1. அஞ்சநபாஷாணம். 2. ஆட்டதர். 3. ஆத்தி. (உ-ம்.) "ஆரங்கண்ணிச் சோழன்" (சிலப். பதிக. கஉ.) 4. ஆபரணம். (உ-ம்.) "அம்பையாரஞ்செறியாகர்" (மரு. தி. கக.) 5 ஒரு பாணம். 6. கடப்பமரம். 7. கண்ணீர். (உ-ம்.) "விளிகளாரஞ்சொரிய" (பாரத. கீசகன்வ. கஎ.) [முத்துப்போலுந்தோற்றமுடையதென்றபடி.] 8. களிம்பு. [ரி - போதல்.] 9. கீச்சுக்கிட்டம். 10. கோடகசாலைப்பூண்டு. 11. கோணம். 12. சந்தனக்குழம்பு. (உ-ம்.) "அரைத்தவாரமும்" (பாரத. நிரைமீட்சி. உக.) 13. சந்தனமரம். (உ-ம்.) "வன்னிகொன்றைறவமைசண்பகமாரமலர்ப்பலாசொடுசெருந்திமந்தாரம்" (பெரியபு. தடுத்தாட். கூச.) 14. சசி. 15. செவ்வாய். 16. நந்தனவநம். 17. நுனி. 18. பட்சிகளுடையகழுத்துவரி. 19. படப்பொறி. 20. பதக்கம். 21. பித்தளை. 22. (கணக்கதிகாரம்.) பிங்நத்திலேகீழெழுதப்படுமெண். 23. பிரிக்குமெண். 24. மணிவடம் (பிங்கல. ௩கஙச.) 25. மாதரணிவடம். (பிங்கல. கஉoக.) 26. மாலை. (உ-ம்.) "செம்பொனாரமதாயிற்றம்மா" (கந்தபு. திக்கு. கூங.) 27. முத்தினாற்செய்தகச்சு. (உ-ம்.) "ஆரந்தாங்கியவலர்முலையாகத்து" (நெடுநல். கஙசு.) 28. முத்து. (உ-ம்.) "ஆரக்குழம்பிலளைந்தாரமணிந்துவிம்மும்பாரக்குசங்கள்" (பாரத. சம்பவ. ருரு.) 29. முத்துமாலை. (உ-ம்.) "கழுஉ

விளங்காரங்கவைஇய மார்பே" (புறநா. ௧௧.) 30. யுத்தம். 31. வண்டியின் ஆர். (உ-ம்.) "அச்சுடைச்சாகாட்டாரம்பொருந்திய" (புறநா. ௨௫௬.) [ 8, 9, 11, 14, 15, 21. ஆரம். 22, 23, 26, 27, 30. ஹார:]

ஆரம்பசூரன்—1. தொடக்கத்திலேவீரனுயிருப்போன். 2. மேன்மைபாராட்டுவோன்.

ஆரம்பம்—1. கொலை. 2. செருக்கு. 3. தொடக்கம். 4. பேரொலி. 5. முகவுரை. 6. முயற்சி. (உ-ம்.) "ஆரம்பநிலைகண்டு" (நல். பாரத. தெட்சிண. ௬௧.) 7. விரைவு. [ ஆரம்ப:]

ஆரம்பரூபம்—கடனீரினின்றுதிரைபிறத்தல்போல ஒருபொருளினின்று பிறக்கும் விகாரரூபம்.

ஆரம்பவாதம்— காரியப்பாடெல்லாம்நூலானுயஆடை போலாமென்னுந் தார்க்கிகவாதம். (சி. சி. ௧: ௨௬. சிவஞா.) நிலமுதலிய உருவப்பொருளினின்றுங்கந்தகுணமுதலிய அருவந்தோன்றுமென்பார்வாதமுமாம்.

ஆரம்பித்தல்—1. ஒலித்தல். 2. தொடங்கல்.

ஆரமரோட்டல்—(புறப்பொருள்.) வெட்சித்திணையிலொருதுறை. அது, குறுநிலமன்னருங் காட்டகத்துவாழு மறவரும் போர்த்தொழில்வேந்தரைப்பொருது புறங்காண்டல். (தொல். பொரு. ௬௦.)

ஆரல்— 1. ஒருசிறுமீன். (உ-ம்.) "பூக்கதூஉமினவாளை-நுண்ணுரைப்பருவரால்" (புறநா. ௧௮.) 2. ஒருபூண்டு. 3. கார்த்திகைநட்சத்திரம். (உ-ம்.) "மறவருமாரலாகுமாதர்மூவிருவர்தாமும்" (கந்தபு. திருவவ. ௧௧௧.) 4. செவ்வாய். (உ-ம்.) "ஆதித்தனோடம்புலியாரல்புதன் வியாழம்- சோதிப்பெருமாமதிச்சுக்கிரன்சௌரிதுமை - கேதுப்பவனன்" (அரிச்ச. இந்திர. ௨௭.) 5. நெருப்பு. (சூ. நிக. ௧: ௬௯.) 6. பித்தம். 7. மதில். (உ-ம்.) "ஆரலோங்கியவயோத்திமாநகரி" (அரிச்ச. விவாக. ௨௮.)

ஆரலம்—பகை.

ஆரவம்—ஒலி. (உ-ம்.) "ஆரவமிகுந்தபல்புள்ளகழிசூழ் புரிசைகண்டார்" (பாரத. திரௌ. ௬௭.) [ஆரவ: ஆ; ரு - ஒலி.]

ஆரவலர்—காட்டாத்திப்பூ. (தைல. ௯௮.)

ஆரவாரம்—1. ஆடம்பரம். 2. ஒலி. (உ-ம்.) "ஆரவாரஞ்செய்தணுகினனரோ" (கந்தபு. காவிரி. ௨.) 3. பேரொலி. 4. வருத்தம். (பிங்கல. ௩௧௩௬.)

ஆரவாரித்தல்—மிகவொலித்தல்.

ஆரவாரிப்பு— ஆர்ப்பு.

ஆராகரியம்—அரசமரம்.

ஆராகவரியம்— அரசமரம். [ ஆராகவயம்.]

ஆராட்டுதல்—தாலாட்டுதல்.

ஆராத்—1. சமீபம். 2. தூரமென்னும் பொருள்களைக்காட்டும் ஒரு வடமொழி அவ்வியயம். [ஆராத்.]

ஆராந்தியர்—ஆராத்திரியர்.

ஆராத்திரவியம்— அரசருடைய பொக்கிஷம்.

ஆராத்திரிகம்— 1. இரவிலே சுவாமிமுன்னிலையிலே தீபம் ஆலாட்டிக்காட்டுதல். [ஆராத்ரிக: ஆ; ராத்ரி - இரவு.]

ஆராத்திரியர்—வீரசைவப்பார்ப்பார்.

ஆராத—திருத்தியடையாத எனப்பொருள்படும் ஒரு பெயரெச்சம். (உ-ம்.) "ஆராத காதலுமு" (கந்தபு. வள். ௧௧௭.)

ஆராதநம்—1. சம்பாத்தியம். 2. நிறைவேற்றுதல். 3. பாகஞ்செய்தல். 4. மகிழ்வித்தல். 5. வணக்கம், வழிபாடு. (உ-ம்.) "ஆராதநஞ்செய்து" (திருவாங். ௩௦.) [ ஆராதந: ஆ; ராத் - முடித்தல்.]

ஆராதனை—பூசை, வணக்கம். (உ-ம்.) "ஆராதனைசெய்துழிமந்தாம்" (கந்தபு. மகாசாத். ௫) [ஆராதநா.]

ஆராதி—1. ஆராதி யென்னேவலுந் தெரிநிலைவினைப்பகுதியும். (உ-ம்.) "ஐங்கரனையாராதிசந்தர்ப்பணைசெய்" (தைல. தைலவ. ௬௩.) [ஏவல்.] 2. பகைவன். [ஆராதி.]

ஆராதித்தல் — பூசைசெய்தல். (உ-ம்.) "மட்டிசமுியுருத்திரனையாராதித்தாடினும்" (தைல. தைலவ. ௪௦.)

ஆராதீயம்—சமீபத்திலுள்ளது. [ ஆராதீய: ஆராத் - சமீபம். ஈய-ஒருவிகுதி.]

ஆராதுபகாரம்—தூரமானவுபகாரம். [ஆராத்-தூரம். உபகாரம்.]

ஆராதூரி—1. அதிகஞ்செலவுசெய்பவன். 2. அழிவு. 3. துட்டத்தனம். (வழக்.)

ஆராப்பத்தியம்—1. அற்பம். 2. கடும்பத்தியம்.

ஆராமம்— 1. இன்பம். 2. உண்டாக்கப்பட்டசோலை. (மணிமே.) சோலை, பூந்தோட்டம். (உ-ம்.) "முகிலூர்தி-யந்தப்புரத்திலா

ராமமந்தப்புரத்துக்காராமம்"(பாரத.திரௌப. சக.)3. மகிழ்ச்சி. [ஆராமம்: ஆ; ரம் - மகிழ்ச்சி.]

**ஆராமை**— 1. நிரம்பாமை. (மணிமே.) 2. பேரன்பு. (உ-ம்.) "என்றமிழினுக்கின்னல்பகாதுலகமாராமைமேலிட்டிருத்தலால்" (தாயு. சித்தர்க. அ.)

**ஆராய்ச்சி**—1. ஆராய்ச்சிமணி. 2. ஆராய்தல். 3. தலையாரி. [வழக்.]

**ஆராய்ச்சிமணி**— தங்கள்குறையை அரசன் நேரேயறிதற்பொருட்டுக்குறையுடையார் அடிக்கும் அசையாமணி; அஃது: இராசவாயிலிற்கட்டியிருப்பது. (உ-ம்.) "பொன்னலலங்கரித்த அழகிய ஆராய்ச்சிமணியைப்போய்த்தன்னுடையகொம்பினலடித்தது" (பெரியபு. திருவாரூர். உஎ. உரை.)

**ஆராய்தல்**— 1. (இசைநூல்) யாழ்நரம்பினுள் நின்றெலிக்கும் ஓசையை யாராய்தல். (உ-ம்.) "நரம்பினுண்ணின்றெலிக்குமோசைசெவியுறவாராய்தலாராய்தல்" (கூர்மபு. கண்ணன்மண. கசஅ.) 2. தேடல். 3. பண்ணல் முதலிய கலைத்தொழில் எட்டனுளொன்று. அது, ஆரோசண அவரோசண வகையாலிசையைத்தெரிதல். (கூர்மபு. அட்டமூ. க. உரை.) 4. விசாரணைசெய்தல். 5. விசாரணைசெய்தறிந்துதள்ளுதல். (உ-ம்.) "உற்றவையாராய்வான்செய்கவினை" (வள். ௫கஉ.)

**ஆராய்வு**—1. நுண்ணறிவு. 2. விசாரித்தல்.

**ஆரால்**—ஆரன்மீன்.

**ஆராலிகன்**—பாகஞ்செய்வோன். [ஆராலிக; சுராலு- குனிவு. போசநபதார்த்தங்களிலே குனிந்து நின்று தொழில்செய்வோன் என்றபடி.]

**ஆராவம்**—ஒலி. (உ-ம்.) "வாளியீரைந்து சோத்தொடுத்தேவின - ஞாரவமுடனிட்டகவசம்பிளந்தோடி" (பாரத. ஐந்தாம்போர். கக.) [ஆராவ.]

**ஆராவமுது**— உண்ணுந்தோறும் இன்னும் உண்ணவேண்டும் என்னும் விருப்பத்தைக் கொடுக்கும் அமுது. (உ-ம்.) "ஆராவமுதேயரசேயாநந்தவெள்ளப்-பேராறேமோநப்பெருக்கேபராபரமே" (தாயு. பராபர. ௪.)

**ஆராவுணர்வு**—சிற்றறிவு. (உ-ம்.) "ஆராவுணர்வாலறிவுற்றயரா" (கோயிற்பு. வியாக். உஎ.) [ஆரா- நிறையாத. உணர்வு-அறிவு.]

**ஆரி**— 1. அழகு. 2. கதவு. 3. சோழன். [சூரி - ஆத்திமாலை. இ- ஒருவிகுதி.] 4. துர்க்கை. 5. தோல்வி. 6. பார்ப்பனி. 7. பார்வதிதேவி. 8. மாலை. 9. மேன்மை. (1, 2, 3, 9.சூ.நிகன்.கக.ரகம‌வெ. சo.) [1, 5. ஹாரி; ஹ்ரு - எடுத்தல். 4, 7. ஆர்யா என்பதன் விகாரம்.]

**ஆரிடதீர்த்தம்**— பஞ்சவித தீர்த்தங்களுளொன்று; அது, விரல்களின் இறைச்சந்தியால் இருடிகளுக்குத் தர்ப்பணஞ் செய்வது. (சைவச. பொது. கூசு. உரை.) [ஆர்ஷ- இருடிசம்பந்தம். தீர்த்- சலம்.]

**ஆரிடம்**— 1. ஆகமம். 2. இருடிகளுால். (உ-ம்.) "ஆரிடத்துத்தானறிந்தமாத்திரையின்" (ஆசாரக்கோ. க.) 3. இருடிசம்பந்தமானது. 4. எண்வகை விவாகத்துள் ஒன்று. (உ-ம்.) "பேராரிடத்தெய்வத்தோடு" (நல். பாரத. துட்டிய. சக.) அது, தக்கான் ஒருவனுக்கு ஆவும் ஆனேறும் பொற்கோட்டுப் பொற்குளம்பினவாகச் செய்து அவற்றிடை நிறுத்திப் பொன்னணிந்து நீவிரும் இவைபோற்பொலிந்து வாழ்வீரென நீரிற்கொடுப்பது.(தொல்.பொரு.களா.க.உரை.) 5. கல்வி. 6.பூசை.7.வழுக்குநிலம்.8.வேதம். [ஆர்ஷ; இருஷி என்பதில் இருஆபொனத்திரிந்து இகரங்கெட்டது.]

**ஆரிடர்**—1. சமணர். 2. பொறுத்தற்கரிய வருத்தம். (உ - ம்.) "குன்றிடம்பட்டவாரிடாழுவத்து" (மலைபடு. ௩௬அ.) [இடர் - துயர்.] 3. முனிவர். (உ-ம்.) "ஆரிடருயிரையெல்லாம்" (கந்தபு. வில்வலன்வாதா. கடு.)

**ஆரிடலிங்கம்**— இருடிகளாலே தாபிக்கப்பட்டபரார்த்தலிங்கம். அசுரர் இயக்கர் சித்தர் முதலானவர்களாலே தாபிக்கப்பட்டது மது. (உ-ம்.) "சயம்புந்தைவிகமுமாரிடமும்" (சைவச. பொது. ௫௩க.)

**ஆரிடை**—அரியவழி. (உ-ம்.) "அறியாத்தேயத்தாரிடையுழந்து" (சிலப். ஊர். ௭௬.)

**ஆரிடோடை**—ஆரிடவிவாகஞ்செய்துகொண்டமனைவி. [ஆர்ஷோடா: ஆர்ஷ- ஒருவிவாகம். ஊடா - விவாகம்பெற்றவள்.]

**ஆரிணம்**— மானின் சம்பந்தமுடையது. [ஹாரிண: ஹரிண - மான்.]

**ஆரிணி**—சிவனுடைய பரிக்கிரகசத்திமூன்றனுள் ஒன்று. அது, பஞ்சகிருத்தியங்களுட் சங்காரம், அநுக்கிரகம் என்னும் இரண்டுஞ்

செய்வது. (சி. சி. க: ருசு. சிவாக்.) [ ஹாரிணி.]

ஆரித்திரம்—1. கடப்பமரம். 2. மஞ்சணி றமானது. [ஹாரித்ரம். ஹாரித்ர- மஞ்சள்.]

ஆரிதம்— தருமசாத்திரத்திலொன்று.

ஆரிப்படுகர்—பிரயாசத்தோடு ஏறியும் இறங்கியுஞ் செல்லும்வழி. (உ-ம்.) "அலங்குகழைநரலுமாரிப்படுகர்" (மலைபடு. கசுக.)

ஆரியக்கூத்து—கழைக்கூத்து. (உ-ம்.) "ஆரியக்கூத்தாயினுங்காரியத்தின்மேற்கண்ணாயிரு" (வழக்)

ஆரியகம்—சிறுகுறிஞ்சா.

ஆரியச்சி— ஆரியப்பெண். (வீரசோ. தத். ருி. குறிப்பு.)

ஆரியப்பாவை—சித்திரப்பாவை.

ஆரியப்பிராமணர்—ஒருவகைப்பிராமணர்.

ஆரியப்பூமாலை — 1. அடங்காப்பெண். 2. கார்த்தவராயன் மனைவியாகிய ஒருபெண்.

ஆரியப்பேடி — ஆரியக்கூத்தரிற் பேடி. (மணிமே.)

ஆரியபரியேடணசூத்திரம்— மத்தியமநிகாயமென்னுநூலின்பகுப்பினுளொன்று; இதிற்புத்தசரிதங்கூறப்படும். (மணிமே.)

ஆரியபுத்திரன்—1. குருபுத்திரன். 2. பெரியோன்மகன். 3. மனைவி தன்னையகனையும், ஒருவன்தன் தமயன்மகனையும் விளிக்குமிடத்து நாடகபாடியத்திற் பிரயோகிக்குமொரு சொல். [ஆர்ய-புத்ர:]

ஆரியபூமி—ஆரியாவர்த்தம். (சைவப். ௩௫.)

ஆரியம்—1. அழகு. (உ-ம்.) "ஆரியவிடைதன்மாண்டவழகினைக்காட்ட" (திருவிளை. மாயப். உக.) 2. இமயமலைக்கும் விந்தமலைக்கு நடுவுள்ளதேசம். (உ-ம்.) "ஆரியவாசிவாணிகர்போலவே" (திருவாத. குதிரை. உ.) 3. சம்ஸ்கிருதபாஷை. (உ-ம்.) "ஆரியநூன்முழுதுணர்ந்தீர்" (சேதுபு. பிரமசத்தி. ௯.) 4. செல்வப்பொருள். 5. தேடப்படுவது. 6. நல்லது. 7. நற்குலமுடையது. 8. பூசிக்கப்படுவது. 6, 7, 8. (சைவப். ௩௫.)

ஆரியமம்—பகலில்வரும்பதினைன்காமுகூர்த்தம். [ஆர்யம.]

ஆரியமொழி—சம்ஸ்கிருதபாடை.

ஆரியர்—1. அறிஞர். (உ-ம்.) "ஆரியருமாரியரையல்லாரைக்குலப்பழுதுமறைவரேயோ" (சிவதரு. சிறப். சு.) 2. ஆசிரியர். 3. ஆரியதேசத்தவர். (உ-ம்.) "நீதிலமாதாகங்கொடுசேர்கெழுமாரியர்வந்தனர்" (திருவாத. மந்திரி. உசு.) 4. ஒருவகைப்பிராமணர். 5. காரியதரிசிகள். (உ-ம்.) "முறைமுறைவணங்கிநின்றவாரியர்முகத்தைநோக்கி" (திருவாத. மண்சுமந்த. கஎ.) [காரியதரிசிகள் அமைச்சரோடொருபுடையொப்ப அறிவுடையாராகவிலாரியரெனப்பட்டார்.] 6. குருமார். 7. சாகத்தீவில்வசித்தஒருவகைச்சாதியார். (உ-ம்.) "ஆரியர்விந்தகர்குகராரண்டு (சாகத்தீவில்) வாழ்வார்" (கந்தபு. அண்டகோச. ௨௮.) 8. பிரயாணிகள். (உ-ம்.) "உன்னுமெய்க்காவலாளராரியருரிமையோர்கள்" (கோயிற்பு. இரணிய. ககஅ.) 9. புலவர். 10. மிலேச்சர்: இதனைச், "செங்கட்புன்மயிர்த்தோறிரைசெம்முக-வெங்களேைக்கிற்குப்பாயமிலேச்சனை" என்றற்றொடக்கத்துப் பண்டையிலக்கியங்களானுய்த்துணர்க. (திருவாத. மண்சுமந்த. கஎ. உரை.) 11. வைத்தியர். [8. ஹாரி.]

ஆரியநுபன்—வைக்கிறவன், மாசாலமுடையவன். [ஆர்ய-ந்ருப:]

ஆரியவராடி—ஒருபண்.

ஆரியவாசியம்——ஓமம் என்னும் பூண்டு.

ஆரியவேளாகொல்லி— செவ்வழியாழ்த்திறவகையுள் ஒன்று. (பிங்கல. கஙஅசு.)

ஆரியன்—1. அதிவிடயவேர். 2. அறிஞன். 3. உபாத்தியாயன். 4. உயர்குலத்தோன். 5. எசமானன், உடையவன், தலைவன். 6. ஐயனார். (சூ. நிகண். ௧: உஅ.) 7. கழைக்கூத்தன். 8. குரு. (உ-ம்.) "ஆறுகோடொருடுப்பவெள்கியாரியன்முதுகிட்டானே" (பாரத. நிரைமீட். கக.) 9. சிவன். (உ-ம்.) ஆரியன்குலாலனுய்நின்றாக்குவனகிலமெல்லாம்" (சி. சி. க: சஅ.) 10. சூரியன். 11. நண்பன். 12. புத்தன். 13. புலவன். 14. வணங்கப்படத்தக்கவன். (உ-ம்.) "ஆரியனுமாசான்வந்து" (சி. சி. அ: உஅ.) 15. வியாழன். (சோதிடகடல்.) 16. வைத்தியன். [ஆர்ய.]

ஆரியாங்கனை— இல்லறத்திற்கணவனோடுவாழுங்காலையிலே துறவுபூண்டு உபதேசம்பெற்றுத்தவநோற்கும்பெண். (உ-ம்) "கன்னியிற்றுறவன்னங்கள்கணவனிற்றுறவின்-மன்னுமாரியாங் கனைகளூல்வாக்குமக்குசைக-ளென்னுமூவகைப்பெண்டவப்பள்ளிகளெல்லாம்" (திருவிளை. சமணரை. கஎ.) [கன்னிப்பருவத்தில் ஆசாரியனிடத்துபதேசம்பெற்றுத் துறவுபூண்டு தவமேற்கொண்ட பெண்ணுக்கு அம்சம் எனவும், இல்லறத்திற்கணவனோடுவாழுங்காலையில் துறவுபூண்டு உபதேசம் பெற்றுத் தவநோற்கும் பெண்ணுக்கு

ஆரியாங்கனே எனவும், மங்கலமிழந்த பெண்களுள் அவ்வாறு நிற்பவட்கு அக்குசை எனவுஞ் சமணபரிபாஷையில் வழங்குமென்ப.]

ஆரியாவர்த்தம்—கீழ்கடல்மேல்கடல்களுக்கிடையிலும் வடக்கே இமையத்துக்குந்தெற்கே விந்தியத்துக்குமிடையிலுள்ளதேசம்.] [ஆர்யா-ஆவர்த்த: ஆர்ய-ர்; ஆவர்த்த-ம்-குடிநெருங்கியவிடம்.]

ஆரியை—1. காளி. (பிங்கல. ௧௧௬.) 2. துர்க்கை. (பிங்கல. ௧௨௪.) 3. பார்வதி. (உ-ம்.) ஆரியைதவஞ்செய்பதியாதியன" (கந்தபு. அடிமுடி. ௧௫.)

ஆரீதம்—1. தருமநூல்களுளொன்று. 2. கரிக்குருவி. (உ-ம்.) "கரியிலேதருமிருளிலாரீதம்புக்குலாயுலேதருமலயவெற்பு." (இரகு. திக். ௧௪௬.) [ஹாரீத.]

ஆரீதன்— ஒருமுநிவன். (வேதாரணி. வரன்மு. ௧௪.) [ஹாரீத.]

ஆரீரம் —சிற்றீரம். [ஆர்- அருமை.]

ஆரு—1. ஒருமரம். 2. குடம். 3. நண்டு. 4. பன்றி. [ஆரு: ஐ - போதல்.]

ஆருகதம் — 1. நாவன்மரம். (பிங்கல. ௨௬௭.) 2. மூவகைநாத்திகமதங்களுளொன்றாகிய அருகசமயம்; இந்நூல் செய்தவன் அருகன். அருகன் என்றொருகடவுள் அநாதியேயுள்ளவன் என்றும், சீவன் என்றொருபதார்த்தம் அநாதியே குற்றமுடையதாயிருக்கும் என்றும், இச்சீவன் தூலதேகநதேயத்தேயும், வளர வளரும் என்றும், மற்றை இந்திரியங்களுமுளவென்றும், இவையெல்லாம் அத்திகாயம நாத்திகாயம் என்று வழங்கப்படுமென்றும், இந்நூற்பொருள் ஞானத்தாலும் இந்நூலிற்கூறப்படுஞ்சுடுபாறையிற்கிடத்தல் முதலிய தவங்களாலும், சீவன் உயிர்க்கொலை முதலிய பாவங்களினீங்கி அருகன் போலக் குற்றநீங்கினவனுவன் என்றும், இந்தநூலும் இந்தப்பதார்த்தமும் உண்டோ இல்லையோ என்று விஞவினுல் உண்டாம் இல்லையாம் உண்டுமில்லையுமாம் என மூன்றுவகையாகச் சொல்லும் என்றும் இந்நூலிற்கூறப்படும். (சித்தாந்தப்பிரகாசிகை. ௧௬.)

ஆருகதன்—1. அருகசமயத்தவன். இவன்: ஞானாவர்ணிய முதலிய எண்குணத்தையும்; பசித்தல் முதலிய பதினெண்குணத்தையும்; ஆசிகமுதலிய ஆறு குணத்தையும் விடுத்து முன்னைக்கன்மம் புசித்துத் தொலைந்த இடமேவீட்டின்பமென்பன். (கந்தபு. நவநீதம். ௪-ம். பக்.)

ஆருகர் — ஆருகதர். (உ-ம்.) "ஆருகர் - திகையினமண் வந்துவிட்டபோதினும்" (திருப்புகழ் - ௧௪௫.)

ஆருணி— சாமவேத வுபநிடதங்களுளொன்று.

ஆருத்திரை—திருவாதிரைநாள். [ஆர்த்ரா.]

ஆருதல்—ஆர்தல்.

ஆருப்பியம்—வங்கமணல்.

ஆருபதம்—பித்தளே.

ஆருயிர்யருந்து—சோறு. (மணிமே.)

ஆருவம்—நீர்.

ஆருடம்— 1. உதித்தல். 2. ஏறுதல். 3. (சோதிடம்) நினைத்தகாரிய முதலிய கேட்டறிவோன், சோதிடன் முன்போய்நிற்கும் இராசிநிலை. 4 முன்னறிவிக்கை. [ஆரூ-ஆரூடம்.]

ஆருடன்—1. ஏறினவன். (உ-ம்.) இடபாருடன். 2. வேதாந்தபஞ்ச அதிகாரிகளிலொருவன்; அவன், அநுபவவறிவின் முதிர்ச்சியாலே தானேசகமாய்விளங்கப்பெற்று அப்பிறப்பிற்றுனே சகத்தோற்றாவின்றிச் சாட்சாத்காரயாய்ச் சீவன்முத்தனுயிருப்பன். (உ - ம்.) "உலகநிலைதோன்றுமற்றன்றிகழ் ஞாநத்தாலுண்மை முத்தனுமவனே யாரூடன்" (வேதா. சூ. ௧௫.)

ஆருபம்—1. ஒவ்வாமை. 2. நீங்காமை.

ஆருர்—திருவாரூர். (உ-ம்.) "ஆரூரின்மேவியபின்" (கந்தபு. கந்தவி. ௩௨௧.)

ஆரேவதம்—சரக்கொன்றைமரம்.(உ-ம்.) "சம்புமா கமுகுதாழைநற்புன் - காரேவதம்" (தைல. தைலவ. ௧௩௫) [ஆரேவத: ஆ; ரேவத - நம்பிக்கை. நோய்நீங்குமென்னும் நம்பிக்கைவிளேத்தலால் வந்தபெயர்.]

ஆரை—1. ஆத்திமரம். 2. ஓர்பூடு, நீருளாரைப்பூண்டு. 3. கொத்தளிப்பாய். (சூ. நிக. எ: ௫௫.) 4. மதில். (உ-ம்.) "வண்டிடங்குசூழுமாரை வைசயந்தநகரிலே" (சேதுபு. சீதை. ௫.)

ஆரைக்காலி— தாழைக்கோரைப்பூண்டு.

ஆரைக்கீரை—நீராரைக்கீரை.(உ-ம்.) "நாவிதழா நீராரைக்கீரையதுநீ"(பதார்த்தகுண. ௬௬௬.)

ஆரைப்பற்றி— உடும்பு. [ஆர் - பூமி.]

ஆரோக்கியம் — 1. ஆரோக்கியஸ்நாநம். (தைல. தைலவ. ௧௩௦.) 2. நோயின்மை. (உ-ம்.) "ஆரோக்கியங் கீர்த்திசிறக்கவுதவி"

(வேதார. வேதநதி. சஎ.) [ஆரோக்யம் : ஆ - எதிர். ரோக - நோய். ய - ஒருவிகுதி.]

ஆரோகணகதி—1. இசையையேற்றிப்பாடுதல். 2. மேலாகச்செல்லல்.

ஆரோகணம் — 1. எழும்புதல். 2. ஏணி. 3. ஏறுதல். (உ-ம்.) ("ஆராய்தல்" பார்.) 4. தாழ்வாரம். 5. படி. [ஆரோஹண: ஆ; ருஹ் - ஏறுதல்.]

ஆரோகம் — 1. ஏறுதல். 2. ஓரளவு. 3. குவியல். 4. சகநம். 5. நீளம். 6. பாரம். 7. மலை. 8. மாதரிடை. [ஆரோஹ: ஆ - ருஹ் - ஏறுதல்.

ஆரோப்பியம் — ஒன்றன்குணம் வேறொன்றில் விபரீதமாயேற்றப்படுவது.(சி. சி. உ: உ. சிவாக்.)

ஆரோபணம்—1. அணிதல் (உ-ம்.) "பவித்திராரோபணம்"(சி - வி. சரியா. எ. உரை.) 2. உயர்த்துதல். 3. ஏற்றுதல். 4. ஒப்புக்கொடுத்தல். 5. நாட்டுதல். 6. வில்வளைத்துநாண்பூட்டல். [ஆரோவணம்: ஆ; ருஹ் - ஏறுதல்.]

ஆரோபம்—ஏற்றுதல். ஒன்றன்குணத்தை மற்றொன்றிலேற்றல், வைத்தல். [ஆரோப: ஆ - ருஹ் - ஏற்றல்.]

ஆரோபித்தல்—ஆரோபஞ்செய்தல்.

ஆரோபிதம்—1. அப்பிரகிருதகுணம். 2. ஏற்றப்பட்டது. 3. செய்யப்பட்டது. 4. நிறுத்தப்பட்டது. 5.வைக்கப்பட்டது.[ஆரோபித.]

ஆல்—1. ஆமெனல். 2. ஆலமரம். "ஆல்படைப்பையேலாசையும் படைப்பையின்றறவோய்"(சேதுபு.காசிப.௩௧.)3.ஒருமுதனிலைத்தொழிற்பெயர். 4. இறந்தகாலவினைநிலையையடுத்து வரும் ஒரு வினையெச்ச விகுதி. (உ-ம்.) "நீவந்தால்" 5. ஒருதொழிற்பெயர் விகுதி. (உ-ம்.) "உழாலிற்பொலிவண்டிவார் பூந்தொடை" (தணிகை. வள். ௫௧.) 6. ஒரு வியங்கோள்விகுதி. (உ-ம்.) "மரீயதொராஅல்" (தொல். சொல். ௪௪௩.) 7. ஓரசைச்சொல். (உ-ம்.) "யாதானுநாடாமால்" (வள். ௩௧எ.)8. நஞ்சு. ஆற்படுகளத்தினன். (இரகு. மாலை. சக.) [ஆலம் என்பது அம்கெட்டுநின்றது.]9. மூன்றும்வேற்றுமையுருபுகளுளொன்று. (உ-ம்.) "வாளால்வெட்டினன்"

ஆல்வாட்டு—உலர்ச்சி.

ஆல்வாட்டுதல்— சிறிதுகாயச்செய்தல்.

ஆல்வாடுதல்— சிறிதுகாய்தல்.

ஆல்வு—அகலமானது.

ஆலக்கச்சி—அரிதாரம்.

ஆலக்கட்டி—துரிசு.

ஆலக்கிரீடை—அலரிச்செடி.[ஹால-நஞ்சு. க்ரீடா - விளையாட்டு.]

ஆலக்கோடிச்சி—அரிதாரம், தாளகம்.

ஆலகண்டன்—1. சிவன். 2. வாசுகி.

ஆலகம்— நெல்லிமரம். [ஆமலக என்பதன்விகாரம்போலும்.]

ஆலகலம்— 1. நஞ்சு. 2. பாற்கடலிலே தோன்றியதெனச்சொல்லப்படும்நஞ்சு.[ஹாலஹலம்.]

ஆலகாலம் — ஆலாகலம் என்னும்விடம். (உ-ம்.) "ஆலகாலமு மஞ்சக்குன்றமுமாரிருட்பிழம்போடு" (இரகு. இலவண. ௬.) 2. நஞ்சு. 3. நிலவாகைப்பூண்டு. [ஹாலஹாலம்.]

ஆலகாலவிடத்தைலம்— ஒருவகைத்தைலம். (உ-ம்.) வாதநாசன - விலக்கடலாலகாலவிடத்தைலமுமீதாமால். (தைல. தைலவ. ௧௧.)

ஆலகாலி— காளி. (உ-ம்.) "அந்தரியாமளையமலை யாலகாலி." (அரிச்சந். பாயிர. எ.)

ஆலகிரீடை—அலரி.

ஆலங்கட்டி—கன்மழை.

ஆலங்காடு—ஒருசிவஸ்தலம்.(உ-ம்.) "ஆலங்காட்டிலந்தேனை" (தேவார. பாவநாச. இ. திருநாவு.)

ஆலசம் — சோம்புத்தன்மை. [ஆலஸ்: அலஸ - சோம்பு.]

ஆலசியம்—சோம்புத்தன்மை.(உ-ம்)"நிவப்புறுமாலசியமேநெடுமோகம் பிராந்தியே" (சூத. எக்கி. உ: ௩௦.) [ஆலஸ்யம்: அலஸம் - சோம்பு. ய - ஒருவிகுதி.]

ஆலசுந்தரர் — ஆலாலசுந்தரர். (உ-ம்.) "ஆலசுந்தரர் பித்தவெனுஞ் சொற்பழியானார்." (வெங்கைக். ௨௩௮.)

ஆலத்தி—நீராஞ்சநம். (உ-ம்.) "பல்லாண்டங்கிசைக்குநிற்பதுமாலத்தி காட்டுநிற்பதும் வேந்தர்க்கே கடனதாயிற்று." (இரகு. குறை. ௬.)

ஆலம்—1. அம்புக்கூடு. 2. ஆகாயம்.(உ-ம்.) "ஆலத்தினுடுக்கண்காட்டி யருந்ததிகாட்டு

வார்போல்." (கைவல். தத்துவ. உகு.) 3. ஆலமரம்.(உ-ம்.) "சிறியதோர் வித்தி-னாலம் யாவையு மொடுங்கியே யவதரித்ததுபோல்" (கந்தபு. சூரனமைச். கஉகு) 4. ஈயம். 5. கலப்பை. 6. தரிசு. 7. நஞ்சு. (உ-ம்) "ஆலமா மெனச்-செஞ்சுடர்ப்படிவமேற் செறித்தமா மணிக்-கஞ்சுகக்கடவுள்" (கந்தபு - கடவுள். கo.) [ஹாலாஹலம்: இது தமிழில் ஆலாலமென்றாய் ஆலம்எனமருவிற்று.] 8. நீர்.(சூ. நிகண். க. ருங.) 9. பாம்பு. (ஆனந்தலகரி. உச.)10. புன்கமரம். 11. பூ.(பிங்கல.உஅoஅ.) 12.மஞ்சளுஞ்சுண்ணமுங்கலந்தநீர். 13.மழு. (உ-ம்.)"ஆலங்கணையங்குலிசாயுதமாதியாக" (கந்தபு.தாரக.கஙஎ.) 14.மழை. 15. மாவிலிங்கை மரம். 16. விஸ்தாரம். ] [ஆல; 5. ஹல - உழவு. 6. ஹால.]

ஆலம்பநம்— தாங்குதல். [ ஆலம்பந: ஆ; லபி - போதல்.]

ஆலம்பம்–1. ஆதாரம். 2. இலம்பரேகை, நிறுத்திட்டவரி. 3 கொள்கலம். 4. தூங்குதல்; 5. பற்றுக்கோடு. 6. புகலிடம். [ ஆலம்ப.]

ஆலமர்கடவுள்—சிவன். (உ-ம்.) "எங்கனாலமர்கடவுளன்றியமரரில்யாவரம்மா"(கந்தபு. ததீசி. உo.) [கல்லாலின்கீழிருந்தவனென்றபடி.]

ஆலமுடையோன்— தரிசு.

ஆலமுண்டோன்—சிவன். (திவாகர. க:க.)

ஆலயம்–1.தங்குமிடம். 2.தேவர்கோயில். (உ-ம்.)"மற்றை-யாலயங்களாயுள்ளவும்"(கந்தபு. வழிநடை. கo.) 3. நகரம். (பிங்கல. ஙகசஅ.) 4. பிராமணவீடு. 5. யானைக்கூடம். (சூ.நிகண்.கு: கச.) 6. வீடு. (உ-ம்.) "மெழுகினமக்காலயம்வகுத்ததும்விரகே " (பாரத. வாரணா. கககூ.)

ஆலயவிஞ்ஞாநம்— (பௌத்தம்.) உருவகந்தத்தைநிருவிகற்பமாக உணருமுணர்வு. இதனைப்பிரவிருத்தி விஞ்ஞாநகாரணமென்பர். (சிவஞாநபாஷியகாரர். )

ஆலல்—1. ஆடல். (உ-ம்.) "அணிக்குலமஞ்ஞைகளகவியாலுவ" (சேதுபு. கந்த. ஙச.) 2. ஆரவாரித்தல். (உ-ம்.) "மகிழ்சிறந் தாலும் பீலிமஞ்ஞையினிகலி" (பெரும்பா. ஙஙo.) 3. சேருதல். (உ-ம்.)"தோாலுமெழுபரியோன்" (சூத. சிவமா. எ. கo.)

ஆலலம்—கூறை.

ஆலாலம்—1. ஓர்மரம். 2. நீர். 3. பூ. 4. விடம். 5. வௌவால். ( பிங்கல. ஙகசகூ.)

ஆலவட்டம்—1. கால்செய்வட்டம்.(உ-ம்.) " படுவேய்வெள்வளையமுந்தண்பட்டாலவட்டமும்" (பாரத. காண்ட. கச.) 2. விசிறி.

ஆலவணியம்–1. அவலட்சணம். 2. சுவையின்மை. [ஆலவண்ய: ஆ- எதிர். லவண- அழகு, உப்பு. ய - ஒருவிகுதி.]

ஆலவன்— 1. ஆசை. 2. சந்திரன். (பிங்கல. ஙகசரு.) 3. விட்டுணு. (உ-ம்.)"கண்ணுதல் விமலனன்றெனி-னாலவனன்றெனிய னுமன்றெனின்" (கந்தபு. சூரனமைச். சங.) [ஆலிலையிற்றுயின்றவனென்றபடி.]

ஆலவநம்— திருவாலங்காடென்னுமொருபதி. (உ-ம்.) " ஆலவநத்தமலனடங்கண்டு வந்த" (சிவதரு. சிறப். ச.)

ஆலவாட்டு—வெய்யிலில் வாட்டுகை.

ஆலவாய் — 1. பாம்பு. (உ-ம்.) "மேருக்கோட்டியாலவாய்கொடுநாண்பூட்டி" ( திருவி. சோழன். கங.) 2. மதுரைநகர். (உ-ம்) ஆலவாயிற் கடவுளிடும்பரிவாவுகாண்பானெண்ணி." (வாதவூ. குதிரை. கூ.)

ஆலவாலம்—1. சிறுபாத்தி. (உ-ம்.) "ஆலவாலத்தவிர்மதியாற்புனல் - காலவாய்ந்தகதிர்மணிமுல்லையின்" (நைடத.அன்னத்தைத்தூ. சo.) 2. வயல்: [ஆலவால: ஆ;லல- கிண்டல்.]

ஆலவிடம்–ஆலகாலவிடம். (உ-ம்.) "அருந்தியவாலவிடத்தினனே". (சிவதரு. சிவஞாநதாந. அo.)

ஆலவூணி—உமாதேவி. (உ-ம்.) "குணவதியாலவூணியபிராமி." (திருப்பு. ஙகூங.)

ஆலன் — 1. சாலிவாகனன். 2. சிவன். (உ-ம்.)"ஆலனிவ்வழிபோந்தவதிசயம்."(தேவார. கூடலையா. க. சுந்தர.) [ஆலநீழலுடையோன் என்றபடி]3.பலராமர்.[ஹால: ஹல- கலப்பை.]

ஆலா— ஒருபறவை. (பட்டினத்தடி. திருவொற். அ.)

ஆலாகலம்—ஆலகாலம். (உ-ம்.) "கடியதோராலாகலவெள்ளம்போலக் கக்கினன் " (திருவிளை. நாக. கஎ.) [ஹாலாஹலம்.]

ஆலாங்கட்டி— கன்மழை, மழைக்கட்டி. (உ-ம்.) "மெய்மயக்கமும் போக்குங்கக்குமாலாங்கட்டிகாண்" (பதார்த்தகுண. கஉ.)

ஆலாசியம்—1. ஆலவாய், மதுரை. 2. முதலை. [1. ஹாலாஸ்யம். 2. ஆலாஸ்யம்: ஆலம் - அகலம். ஆஸ்யம் - வாய்.]

ஆலாட்டு—ஆலவாட்டு.

ஆலாத்தி—ஆலத்தி.

ஆலாத்து—1. அம்மாறு. (பெருங்கயிறு.) 2. ஒருபுள். 3. கப்பல். 4. வெளவாற்கொடிமுடியுங்கயிறு.

ஆலாதம்— நெருப்புக்கொள்ளி. [ஆலாதம்.]

ஆலாநம்—1. கட்டு. 2. கயிறு. 3. யானைகட்டுங்கயிறு. 4. யானைகட்டுந்தூண். 5. விலங்கு. [ஆலாநம்: ஆலா - கட்டு.]

ஆலாபநம்—சம்பாஷித்தல். [ஆலாபநம்; ஆ; லபீ - பேசுதல்.]

ஆலாபம்—1. சம்பாஷணை. 2. பேசுதல் [ஆலாப:]

ஆலாபி—பேசுவோன். [ஆலாபிந.]

ஆலாபித்தல்—1. சம்பாஷித்தல். 2. சுருதிகூட்டல்.

ஆலாபிநி—ஒருவகைவீணை.

ஆலாலம்—1. நஞ்சு. (உ-ம்.) "ஆலாலமெனக்கதுவா" (பாரத. நான்காம்போர். ௫.) 2. வெளவால்.

ஆலாலர்—ஆலாலசுந்தரர். (உ-ம்.) "ஆலாலர்தோற்றரவு" (சி. சி. ௬: ௬௪. சிவஞா.)

ஆலாவர்த்தம் — ஆலவட்டம். [ஆலாவர்த்தம்.]

ஆலி—1. அமுதம். 2. ஆலங்கட்டி. (உ-ம்.) "ஆலியாநீரினருளிறையாய்" (வைரா. தீப. ௬.) 3. ஆலியென்னேவலுந்தெரிநிலைவினைப்பகுதியும். 4. கள்ளு. (உ-ம்.) "தேனுமாலியந்திமிசைச்சிந்தியே" (கந்தபு. அசுரயாக. ஏக.) 5. காற்று. 6. தேன். 7. தேனீ. 8. தொடர்ச்சியானது, நிரை. 9. தோழி. 10. மழை. (உ-ம்.) "புயல்காலாலியெனக்குளிர்தூங்க" (கூர்மபு. திரிபு. ௰௫.) 11. மழைத்துளி. 12. மனைவியின்றங்கை. 13. வரம்பு. 14. விஷமுள்ளது. [6, 7, 8, 9, 13. ஆலி: 12 ஹாலி.]

ஆலிகன்—1. உழுவோன். 2. கலப்பைகொண்டுபொருவோன். [ஹாலிக: ஹல - கலப்பை. இக - ஒருவிகுதி.]

ஆலிங்கநம்—தழுவுதல். [ஆலிங்கநம்: ஆ; லிகி - இட்டுதல்.]

ஆலிங்கிதம்—தழுவியிருப்பது. (பௌட். பும். ௧௬.)

ஆலிஞ்சரம்—பெருஞ்சாடி. [ஆலிஞ்ஜரம்.]

ஆலித்தல்—1. களித்தல். (உ-ம்.) "ஆலிக்குமந்தணர்வாழ்கின்ற" (திருப்பல்லாண்டு.) 2. செருக்குறுதல். (உ-ம்.) "பகலவனேடிகல்செயக்கருதியிருடிரண்டாலித்தெழுந்தன" (அரிச்ச. விவாககா. ௬௧.) 3. நீர்தூறுதல். (உ-ம்.) "நீத்தவியற்கைதனையெல்லா-மூண்டாலித்தேவாளிகண்மீண்டேயுறுகாலை" (கந்தபு. சூரபன்மன்வதை. ௪௦௧.)

ஆலிந்தகி—அணில்.

ஆலிப்பு—ஆரவாரம். (உ-ம்.) "அப்பரிசாளருமஃதேபிடித்தாலிப்பாலடுத்தந்நூல்களுமவிரித்தே" (தாயு. ஆகார. ௬.)

ஆலியகம்—சிறுகுறிஞ்சா.

ஆலீடம்— அம்பெய்தற்குச் சொல்லப்படும் நால்வகைநிலையுளொன்று. அது, வலக்கான்முழந்தாளைமுன்வைத்து இடக்காலைப்பின்வாங்கிநிற்பது. திவாகரத்திலே, "வலககான்மண்டலித்திடக்கான்முந்துறுமதன்பெயராலீடநிலையதாகும்" என்று சொல்லப்பட்டது. [நால்வகைநிலைகளாவன; ஆலீடம், பிரத்தியாலீடம், பைசாசம், மண்டலம் என்பன.] (திருவிளை. யானையெ. ௩௦. உரை.) [ஆலீட:]

ஆலிநகம்—துத்தநாகம்.

ஆலீநம்—1. உருக்கப்பட்டது. 2. புதையல். [ஆலீந.]

ஆலு—1. ஆந்தை. 2. உண்டற்குரியகிழங்கு. 3. கருங்காலி. 4. குடம். 5. சிறியநீர்ச்சாடி. 6. தெப்பம். 7. பல்லு. [1, 2, 4, 5, 6; ஆலு: 7. ஹாலு.]

ஆலுதல்—1. ஆடுதல். (உ-ம்.) "இளங்குயில்கூவமயிலாலும்பொழில்" (சூத. சிவமா. விநாயகர்துதி. ௧௫.) 2. ஒலித்தல். (உ-ம்.) "ஆலுமறைசூழ்கயிலை" (பெரியபு. தடுத்தா. ௨௮.) 3. நிறைதல்.

ஆலும்-1. எதிர்மறைப்பொருளில்வரும் உம்மையாற்றொடரப்பட்டவிறுதிநிலை. (உ-ம்.) "படித்தாலும்". 2. ஆரவாரித்தாடும். 3. ஒலிக்கும். (ஐங்குறு.)

ஆலூகம்—வில்வமரம்.

ஆலேக்கியம்-1. எழுதப்பட்டது. 2. சித்திரப்படம். [ஆலேக்யம்: ஆ; லிக - எழுதல்]

ஆலேகநம்— 1. எழுதுதல். 2. சித்திரித்தல். [ஆலேகநம்.]

ஆலேகநி— 1. எழுதுகோல். 2. எழுத்தாணி. [ஆலேகநீ.]

ஆலேபநம்— 1. பூசுதல். 2. பூசுந்தைலம். [ஆலேபநம்: ஆ; லிப-பூசுதல்.]

ஆலேபம்—ஆலேபநம். [ஆலேப.]

ஆலை—1. கருப்பஞ்சாறு. 2. கரும்பாட்டுஞ்செக்கு. (உ-ம்.) "அறைபடுமாலைகளிடையிட்டாட்டலே" (கந்தபு. நாட்டு. ௩௧.)3. கரும்பு. (உ-ம்.) "ஆலையங்கழனியும்" (கந்தபு. நாட்டு. ௩௦.) 4. கள்ளு. 5. யானைக்கூடம். (உ-ம்.) "அது சேர்ந்தல்கிய வழுங்கலாலை" (புறநா. ௨௨௦.) [ஶாலா.]

ஆலைபாய்தல்—மனச்சுழற்சி.

ஆலைமாலை— அலைச்சல். [அலை என்பதினின்று ஆலை எனவும், மலை என்பதினின்று மாலை எனவும் வந்ததுபோலும்.]

ஆலையம்—ஆலயம். (உ-ம்.) "தேவ-ராலயந்தோறும்" (அரிச்ச. விவாக. ௬௬.)

ஆலோகநம்— பார்வை. [ஆலோகநம்: ஆ; லோக்- பார்த்தல்.]

ஆலோகம்— 1. பார்வை. 2. பிரபை. 3. முகமன்வார்த்தை.[ஆலோக: ஆ;லோக்-பார்த்தல்.]

ஆலோகன்—தெளிந்தபுத்திமான்.

ஆலோசகபித்தம்—கண்களில் வாசம்பண்ணிக்கொண்டு எல்லாப்பொருள்களையும் நன்றாகத்தெரியப்படுத்தும் பித்தம்.(சீவரட்.௫.)

ஆலோசநம்— ஆலோசனை. [ஆலோசநம்.]

ஆலோசனை— 1. காட்சி. 2. சிந்தித்தல். [ஆலோசநா.]

ஆலோசித்தல்—சிந்தித்தல். (உ-ம்.)"என்றுளமுடைந்தாலோசித்து" (மச்சபு. திரிபுரஞ்சமுத். ௫.)

ஆலோசிதம்—1. காணப்பட்டது. (உ-ம்.) "திருவிகற்பஞானாலோசிதமாய்" (சி. சி. ௨: ௯௬. ஞாநப்.) 2.சிந்திக்கப்பட்டது. [ஆலோசிதம்.]

ஆலோடநம்—கலக்குதல். [ஆலோடநம்: ஆ; லுட- அசைத்தல்.]

ஆலோலம்— 1. அசைதல், அலைதல். 2. நீரொலி. 3. புள்ளோப்புமோரொலி.(உ-ம்.) "பூவைகாள்செங்கட்புறவங்காளாலோலம்" (கந்தபு. வள். ௯௬.) [ஆலோலம்.]

ஆலோலிதம்— 1. அசைக்கப்பட்டது. 2. சந்தோஷத்தைக்காட்டும் அசைவு. [ஆலோலிதம்.]

ஆலோலிதமுகம்— பதினான்கு முகநிலைகளுளொன்று; அஃது: ஆசையான் மலர்ந்தமுகமாயழைப்பதைக்குறிப்பது.

ஆலோன்—சந்திரன். (உ-ம்.) "கிளைக்கடல்வளைவுமாலோன்கிளருமவளைவும்" (இரகு. குறை. ௩.)

ஆவ—ஓர் இரங்கற்குறிப்பு. "அனிச்சந்திகழுமஞ்சீரடியாவவழல்பழுத்த,கனிச்செந்திரளன்னகற்கடம்போந்து" (திருக்கோ. ௨௩௧.)

ஆவகம்—1. ஏழுவாயுக்களுளொன்று. 2. சுமக்குமது. [ஆவஹ: வஹ - சுமத்தல்.]

ஆவகன்—சத்தமருத்துவர்களிலொருவன். (மச்சபு. தூர்ச்சகு. ௨.)

ஆவகை —யாறு. [ஆவகா.]

ஆவசதம்—1. ஓமாக்கினிவளர்க்குமிடம். 2. வீடு. [ஆவஸத.]

ஆவசப்பியம்--1. சிஷ்ருந்துறவிகளுமிருக்குமனை. 2. பஞ்சாக்கினியிலொன்று. 3.வீடு.

ஆவசியகம்— 1. அவசியஞ்செய்யவேண்டியகடமை, அல்லதுசெயல். 2. அவசியம். 3. நிச்சயசாத்தியம். [ஆவஶ்யகம்.]

ஆவசியம்— அவசியம். [ஆவஶ்யம்.]

ஆவஞ்சி— இடக்கையென்னும் ஒருவகைத்தோற்கருவி. (சிலப். அரங்கே.) [ஆவினுடையவஞ்சித்தோலைப்போர்த்தலால் இப்பெயர்பெற்றது.]

ஆவட்டங்கோட்டல்—ஆவாய்கத்துதல்.

ஆவட்டை—ஒருபூண்டு.

ஆவடுதுறை— திருவாவடுதுறையென்னுந்தலம். (உ-ம்.) "அதுவோவுனதின்னருளாவடுதுறையானே"(தேவார. திருவாவடுதுறை. திருஞானசம்பந்த.௧.)

ஆவணம்—1. அடையாளம். 2. உரிமை. 3.உரிமைப்பத்திரம், அடிமையோலை. (உ-ம்.) "அண்ணலோர்விருத்தன்போல்வந்தாவணவோலைகாட்டி" (கந்தபு. வழிநடை. ௩௨.) 4. கடைவீதி. (உ-ம்.) "குறுகியாவணஞ்சித்திரகூடநாற்சந்தி" (திருவிளை. எல்லாம். ௭.) 5. கரை. 6. தெரு. (சூடா. நிக. ௧௧: ௯௭வெ. ௬.) 7. தேர்மொட்டுப்பொருந்தியபீடம். 8. புனர்பூசம். (உ-ம்.) "பாலையாவணம்புரைகொண்மூங்கில் புனர்பூசம்" (உள்ளமுடை. கவி. ௧௧.)

**ஆவணி**— 1. அவிட்டநக்ஷத்திரம். (சூ. நிகண். எஅ.) 2. ஐந்தாமாதம். (உ-ம்.) "அங்கிளர்ம துரையம்பதியிலாவணித்-திங்களில்" (வாதவூர. குதிரை. க.) [சிராவணம் என்னும் ஆரியபதம் தமிழில் ஆவணி என மருவிற்றுப்போலும். ஓணநட்சத்திரத்தின் சிறப்புவிசேடமும் இம்மாதத்தில் விளங்கும்.]

**ஆவணியம்**—
**ஆவண்யம்**— } ஆபணியம்.

**ஆவது**— 1. ஆகவேண்டியது. (உ-ம்.) "ஆவதாகியபரிசெலாம்" (கந்தபு. திக்குவிச. ரு.) 2. விகற்பப்பொருளைத்தரும் ஓர் இடைச்சொல். (உ-ம்.) "உரியமனைவிமைந்தன்பாலுறவைத்தாவதுடன்கூடித் - தெரியவரக்கொண்டாவது" (சூத. ஞானயோ. ரு: உ.)

**ஆவந்தியன்**— 1. அவந்திதேசத்தான். 2. பிராமணனுக்குப்பிறந்து உபநயநந்தவறிப்போன விராத்தியனுக்கும் பிராமணப்பெண்ணுக்கும்பிறந்து நீசத்தொழிலுடையரான பிராமணர்களிலொருவகையான். (பரா.கஂஅ. பக்.) [ஆவந்ய.]

**ஆவநாழி**— அம்புக்கூடு. (உ-ம்.) "ஆவநாழி தானென்றுமருளவடைந்தே"(வேதாரணியபு.)

**ஆவநாழிகை**— அம்புக்கூடு. (உ-ம்.) "சேடாவநாழிகையிற்புடைதிரண்டு" (சிந்தா. நாமக. கஅஎ.)

**ஆவநேயன்**— செவ்வாயென்னுங் கிரகம். [ஆவநேய; அவநி- பூமி. ஏய-ஒருவிகுதி. அவநியின்மகன் எனப்பொருள்படுந் தத்திதம்.]

**ஆவபநம்**—1. நெசவுபண்ணுதல். 2. விதைத்தல். [ஆவபந.]

**ஆவம்**— 1. அம்புக்கூடு. (உ-ம்.) "புற்றுருமாவமுறைவாளிப்புயங்கமுன்ன" (நைடத. அன்னத்தைத்தூ.எக.) 2. குங்குமமரம். 3. நாணி.

**ஆவயின்**— அவ்விடம். (உ-ம்.) "ஆவயின் மகிழ்ந்தவையளித்து" (சீகாழி. சூரியன். கஉ.) சுட்டுநீண்டது.

**ஆவர்த்தகம்**— 1. குதிரைமயிர்ச்சுருள். 2. சுழல்காற்று. 3. சுழலுதல். 4. மநக்கலக்கம். 5. மயிர்முடி. [ஆவர்த்தக.]

**ஆவர்த்தம்**— 1. ஏழுமுகில்களிலொன்று. அது: நீர்பொழிவது. (சூ. நிகண். கஉ.) 2. குடிநெருங்கிய இடம். 3. சிந்தித்தல். 4. சுழல்காற்று. 5. சுழி. 6. தடவை, திரும்புதல். (உ-ம்.) "ஈரைந்தாவர்த்தமடக்கு" 7. மயிர்முடி. [ஆவர்த்தம்.]

**ஆவர்த்தநம்**— 1. உருக்குதல். 2. கடைதல். 3. கலக்குதல். 4. சுழற்றுதல். 5. பழக்கம். [ஆவர்த்தந.]

**ஆவரகம்**— 1. திரைச்சீலை. 2. மூடி. [ஆவரக.]

**ஆவரசன்** — மூன்றும் வசுவின்குமாரன். (வி-ணி. உருசு.)

**ஆவரணசத்தி**—(வேதாந்த) மூலப்பிரகிருதியின் தமோகுணத்திலுண்டான இருசத்திகளிலொன்று; அது ஈசுவரனையும், ஞானிகளையுந்தவிர, மற்றைச்சீவராசிகளுக்கெல்லாஞ் சீரத்திரய சாக்ஷிசைதந்நியங்களை ஒன்றற்கொன்று பேதந்தெரியவொட்டாது மறைப்பது. (உபநிட. கசு.)

**ஆவரணதேவதை**— பரிவாரதேவதை. (த. நிபோ. உசஎ.)

**ஆவரணம்**—1. ஆணவமலம். (சிவப். உ: உ. சிதம்பர.) 2. ஈட்டி. 3. கேடகம். 4. தடை. 5. புறவேலி. 6. மதில். (உ-ம்.) "தீர்த்தனாவரணதி சிதைந்திட" (சிவதரு. பாவ. எக.) 7. மூடுதல், மறைத்தல். (உ-ம்.) "இலிங்கசிரசுஆவரணமில்லாமற் சூநியமாயிருந்தால்" (சி-வி. கிரி. க. உரை.) 8. வஸ்திரம். [ஆவரண.]

**ஆவரணித்தல்**—மறைத்தல். (வேதா. சூ. சஅ. உரை.)

**ஆவரண்யம்**—மறைப்பது.

**ஆவரி**—அம்பு.

**ஆவரிக்கை**—மறைத்தல். (உ-ம்.) "இந்தக் கலாதிதத்துவங்கள்விபுவாயிருக்கிறஆன்மாவை இலிங்கசரீரமாவரிக்கையால்" (சி. சி. உ: ருரு. சிவாக்.)

**ஆவரித்தல்**—மறைத்தல். (உ-ம்.) "நின்மலமானஆன்மஞானத்தைச்சமலமானதேகம் ஆவரித்தது அந்த உபாதியினால் அவத்தாதிகளுண்டாமென்னில்" (சி. சி. ச. கக. சிவாக்.)

**ஆவரை**—1. ஆவாரை. (தைல. தைலவ. கசுரு.) 2. நிலவாகைப்பூண்டு.

**ஆவல்**—1. ஆவேனெனப்பொருள்படும்ஒரு தன்மைவினைமுற்று. (உ-ம்.) "கயிலைக்கிணையாவலென்றேசிந்தித்ததுகொல்" (கந்தபு. அகத்தி. சு.) 2. பேராசை. (உ-ம்.) "அநுபவவிலையுஞ் சேருமோவாவலோமெத்த" (தாயு. ஆரண. க.) 3. வளைவு. 4. விருப்பம். (உ-ம்.) "ஆவலாலெமக்காமலர்மரங்களாக்கல்" (வாதவூர. திருப்பெரு. சுக.)

**ஆவல்லி**—சீந்திற்கொடி.

**ஆவலங்கோட்டல்**- ஆர்த்துவாயிலடித்தல். (உ-ம்.)"மேவலன்றனதுசென்னிமெல்விதழது

த்திவிண்மே- லாவலங்கொட்டிச்செல்ல" (கந்தபு. சிங்கமு. சரு௮.)

**ஆவலப்பேச்சு**— ஆதரவற்றபேச்சு, பலமற்றபேச்சு.

**ஆவலம்**—1. கொல்லை. 2. வாயாலார்த்தல்.

**ஆவலர்**—1. உற்றார். 2. கணவர். 3. காதலர். 2, 3. (பிங்கல. ௩௧௫௦.)

**ஆவலாதி**-பிரயோசநமில்லாதபேச்சு. [ஸ்ரீ-ஏதிர்... வது - பிரயோசநம்.]

**ஆவலி**—1. இரேகை. 2. ஒழுங்கு. (உ-ம்.) "மஞ்சளரோ-மாவலி" (கம்பரந். எ௬.) 3. தொடர்ச்சி. 4. வம்மிசவரிசை. [ஆவலி: ஆ; வலு-அசைதல்.]

**ஆவலித்தல்**—1. அழுதல், புலம்பல். (உ-ம்.) "இல்லையாகியவென்மகற்காண்பனென் - றொல்லையாவலித்தோடினளேகினுள்" (கந்தபு. பாநுகோபன்வதை. ௧௧௧.) 2. ஆசைப்படுதல். 3. கொட்டாவிவிடுதல், வாய்துறத்தல். (உ-ம்.)"அங்குளபரிசநங்களாவலித்திரங்கிச்சூழ" (திருவிளை. வன்னியும். ௧௨.)

**ஆவலிப்பு**— 1. ஆசை. 2. பேராசை. 3. விளைவு.

**ஆவளி**—1. இரேகை. 2. ஒழுங்கு.

**ஆவளித்தல்**—ஆவலித்தல். [லகரம் ளகரமாயிற்று.]

**ஆவறி**—அவா. (வழக்.)

**ஆவா**— 1. அதிசயக்குறிப்புணர்த்தும் ஓர் அடுக்குமொழி. (உ-ம்.) "ஆவாகுறவர்தவமாரளக்கவல்லாரே" (கந்தபு. வள். ௧௪௫.) 2. இரக்கக் குறிப்புணர்த்தும் ஒரு அடுக்குமொழி. (உ-ம்.) "ஆவாவெனக்கொடுங்கூற்றெனவொருசார்வரும்" (கந்தபு. சூரபன். ௪௧௦.)

**ஆவாகநம்**—1. அக்கினிக்குப்பலிசெலுத்தல். 2. அழைத்தல். 3. தாபிக்கும்படி தெய்வத்தையழைத்திருத்தல். (உ-ம்.) "ஆவாகநாதிகளை"(சைவச. பொது. ௫௨௫.) "சயம்புநாயகனையாவாகநஞ்செய்து" (சூத. சிவமா. ௪: ௧எ.) [பரசிவனை லிங்காதிகளில் ஆவாகநஞ்செய்தல்- பிரதிட்டா காலத்தில் லிங்காதியிற் சிவஙியாசரூபமாகச்சிறப்பிரகாசாவாகநமென்றும், நாடோறும் பூசாகாலத்தில் அபிமுகமாகச்செய்கிற ஆவாகநமென்றும் இருவகையாம். ] (சி-வி. கிரி. உ௩. உரை.) [ஆவாஹந.]

**ஆவாகநிமுத்திரை**— இருகையும் அஞ்சலியாகச்சேர்த்து இரண்டாமிகைவிரல்களின் அடிக்கணுக்களில் இரண்டங்குஷ்டங்களையுஞ்சேர்த்துக்காட்டுவது. (சி-வி. கிரி. உ௩. உரை.)

**ஆவாகித்தல்**— தாபநஞ்செய்தற்குத்தெய்வத்தையமைத்தல். (உ-ம்.) "சேர்ந்தபொற்குண்டத்தோங்குஞ்சிகைத்தழன்மிசையேகம்ப - வேந்தையாவாகித்து" (காஞ்சிபு. நகர. ௧௧௧.)

**ஆவாகை**—நிலவாகைப்பூண்டு.

**ஆவாசம்**—1. புகலிடம். 2. மருதநிலத்தூர். (சூ. நிகண். ௫: ௪௦.) 3. வசிக்குமிடம். 4. வீடு. [1, 3, 4. ஆவாஸ: ஆ; வஸ் - வசித்தல்.]

**ஆவாபநம்**—1. நூல்சுற்றும் பரிவட்டம். 2. நெய்வார் தறி. [ஆவாபந.]

**ஆவாபம்**— 1. இடுதல். (சைவப். உ௩.) 2. கையிலணியும்வளையல். 3. சமமற்றநிலம். 4. நீர்நிற்கும்படி மரத்தைச்சூழக் கிண்டிவிடும் பாத்தி. 5. விதைத்தல். [ஆவாப:]

**ஆவாரகசத்தி** — ஆன்மாவுக்கு அநாதியே உண்டென்று சொல்லப்படுஞ் சர்வஞ்ஞத்துவ சர்வகர்த்திருத்துவரூபசிவதத்துவத்தை மறைக்கும் ஒராணவமலசத்தி. (சி.சி. உ: ௮௦. ஞாநப்.)

**ஆவாரகம்**—மறைப்பு. (உ-ம்.) "சர்வான்மாக்களுக்குமாவாரகமல்ல" (சி.சி. உ. ௮௦. சிவாக்.) [ஆவாரக: ஆ; வ்ரு - மறைப்பு. அக - ஒரு விகுதி.]

**ஆவாரம்**—1. தாரகம். (சிவப்பி. வியாக். ௧௦.) 2. மயக்குவது. (உ-ம்.) "கன்மாந்தமணுக்களியார்க்குமாவாரமாய்" (சிவப்பி. உ௪.)3. மறைத்தல். (உ-ம்.) "கிகிரிமாதிராவாரகிகிரிசாய"(திருப்பு. ௩௨௫.)

**ஆவாரிகை**—மறைத்தல். (சி-வி. ஞாந. ௬.)

**ஆவாரை**—ஆவாரைவேர். (உ-ம்.) "ஊர்விலாமிச்சாவாரையூனிமாலூரம்"(தைல. தைலவ. ௩௪.) 2. ஆவிரைச்செடி. (உ-ம்.) "ஆவாரைமூலியது" (பதார்த்த. உ௫௪.) 3. நிலவாகைப்பூண்டு.

**ஆவாரைப்பஞ்சகம்**—ஆவாரைச்செடியின் வேர்,பட்டை,இலை,பூ,காய் என்னும் ஐவகையங்கங்கள். (உ-ம்.) "ஆவாரைப்பஞ்சகங்கொள்" (பதார்த்த. ௪௩௧.)

**ஆவாலம்**—1. மரத்தடியிற்கோலியபாத்தி. 2. வௌவால். [ஆவால: ஆ; வல- அசைதல்.]

**ஆவி**—1. உயிர். (உ-ம்.) "பதுமகோமளையெனுந்திருமங்கை-யாவிநீங்கினள்" (கந்தபு. இரணியன்புல. ௨.) 2. உயிர்ப்பு. 3. உயிரெழுத்து. (உ-ம்.) "ஆவியுமொற்று.மளவிறந்திசைத்தலும்" (நன். ௧௦௧.) 4. குளம். (உ-ம்.) "ஆவியம்புனலுருதமரும்" (கந்தபு. சயந்தன்புல. ௮.) 5. நீரிலெழுமாவி. 6. பிட்டு. (பிங்கல. ௧௧௦௮.) 7. புகை. (உ-ம்.) "நாவியுங்காரகிலாவியுந்தோய்குழல்" (வாண. ௨௦.) 8. புகையிலை. (உ-ம்.) "கடு

புளிபாறயிர்கைப்பாவிகண்டு" (தைல. பாயிர. ௫அ.) 9. வாசனை. (உ-ம்.) "கள்ளாவிநாறுங்கமழ்கோதையிற்போயவாறும்" (சிந்தா. பதிக.கடு.) "ஆவிகமழ்கஞ்சன்" (கம்பரங். உடு.)

**ஆவிகம்**— 1. ஆட்டிலிருந்துவருவது. 2. ஆட்டுமயிர்க்கம்பளம். [ஆவிகஃ; அவி - ஆடு. க-ஒரு விகுதி.]

**ஆவிகை**—பற்றுக்கோடு. (உ-ம்.) "ஆகாயம் போவார்க்குமாவிகையோ" (ஒழிவி.கிரியை.௫.)

**ஆவிடை**—சத்திரூபம்.

**ஆவிடையார்**—ஆவுடையார்.

**ஆவித்தல்**— கொட்டாவிகொள்ளல். (பிங்கல. உ0௬௫.)(உ-ம்.) "வெய்யவா-ளரவுபைத்தாவித்தாங்கன்னகாந்தளவிழ்ந்தலர்ந்தன" (சிந்தா. கநக. கடு.) 2. புகைத்தல். (உ-ம்.) "தூபபாத்திரமாவித்தபுகை" (சிந்தா. இலக். சகஉ-உரை.) 3. பெருமூச்செறிதல். (உ-ம்.) "தோன்றியைச்சேர்ந்-தாவித்தகந்தளரும் மணிகாலுமராவென்னவே" (வாண. உஎ0.)

**ஆவிதம்**— 1. துறப்பணம். (துளைக்குமூசி) 2. திருகூசி. [ஆவியஃ]

**ஆவிப்பத்திரம்**— புகையிலை. (ஆவி-புகை. பத்திரம்-இலை.)

**ஆவிப்பதங்கம்**—வைப்புச்சரக்கு.

**ஆவிபத்தம்**—பேராமுட்டிப்பூண்டு.

**ஆவிபதம்**— 1. புறுமுட்டை. 2. பேராமுட்டிப்பூண்டு.

**ஆவியம்**—1. உயிர். 2. சரீரபலம். 3. சரீரம்.

**ஆவியர்**— 1. வேடர். 2. வேளாளர்.

**ஆவியர்கோ**—பேகனென்னும் வள்ளல்.(புறநா.)

**ஆவியேற்றம்**—பெருமூச்சு.

**ஆவிர்த்தி**—மறைத்தல். (உ-ம்.) "ஆதலால் மலம் ஆவிர்த்தி நிவிர்த்திச் சொற்சொல்லும்மறைத்தல்திரும்புதல் என்னு மீரேகசுவபாவசத்திமத்தாதலால்" (சி. சி. எ: உ. ஞாநப்.)

**ஆவிர்தி**—மறைப்பு. (சி. சி. உ: எ. ஞாநப்.)

**ஆவிர்ப்பவித்தல்**—1. உண்டாதல். 2. தோற்றுதல்.

**ஆவிர்ப்பாவம்**— 1. பிறப்பு. 2. தோற்றம். (உ-ம்.) "பஞ்சேந்திரியங்களுடைய ஆவிர்ப்பாவமே" (சி. சி. ங: ௪.சிவாக்.) [ஆவிஹ்-பாவஃ, ஆவிஸ் - வெளிப்படையான. ஹாவ - தன்மை.]

**ஆவிர்ப்பூதம்**—1. தோன்றியது. 2. வெளிப்பட்டது. (உ-ம்.) "பிரணவபஞ்சகலாவிர்ப்பூதவதிருக்குமைமுதலிய" (சி. சி. ௪: ௪0. ஞாநப்.)

[ஆவிஹ்-ஹ்-ஊத: ஆவிஸ் - வெளிப்படை. ஹ-ஊத - ஆனது.]

**ஆவிருட்டி**—மழைபெய்தல். [ஆவ்ருஷ்டி.]

**ஆவிருத்தி**—1. சுற்றிப்போதல். 2. திரும்பி வருதல். 3. பிரயோகம். 4. (இரண்டாவிருத்தி என்றாற்போல எண்ணுப்பெயரோடு சேர்ந்துவருங்கால்) தரம். 5. பரிவிருத்தி. 6. பிறவியிற்சுழலுதல்.

**ஆவிருதம்**—மறைக்கப்பட்டது. (உ-ம்.) "அந்த அஞ்ஞானத்தாற்சேதநம் ஆவிருதமாயிருக்கிறது. (விசார. கஉ௬.) [ஆவ்ருதஃ.]

**ஆவிருதன்**— 1. க்ஷத்திரியனுக்குஞ்சூத்திரஸ்திரீக்கும் பிறந்த உக்கிரையிடம் பிராமணனுக்குப்பிறந்தவன். (பரா. க0எ.) 2. மறைக்கப்பட்டவன். (உ-ம்.) "மலாவிருதன்" (பௌட். பசு. கஉ௫.)

**ஆவிருதி**—1. ஆணவமலம். (சிவ. போ. சிற். ௪. ௫.) 2. கிரமம். 3. சடங்கு. 4. மறைப்பு. (சி. சி. ஞாந. அரும்பத.)5. விதம். [ஆவ்ருதி: ஆ; வ்ருதி - மறைப்பு.]

**ஆவிருந்து**—ஒருநிகழ்காலவிடைநிலை. (உ-ம்.) "உண்ணுவிருந்து"(நன். க௬௫. சூ.இராமாநு.)

**ஆவிரை**—1. ஒருசெடி. 2. ஒருமரம். (உ-ம்.) "வானளாவினவார்கனியாவிரை" (காஞ்சி. சுரகரி. கஉ.)

**ஆவிலம்**—1. அழுக்கு. 2. கலங்கனீர். (சூ. நிகண். ௫. உ௬.) [ஆவிலம்: ஆவில - உடைதல்.]

**ஆவின்**—புல்லுருவி.

**ஆவினன்குடி**— சுப்பிரமணியமூர்த்திக்குரிய ஆறுதலங்களிலொன்று; அது பழனிமலைக்கணித்தாயுள்ளது. (உ-ம்.) "ஆவினன்குடிவருமலற்போற்றுவாம்" (கந்தபு. கடவுள்வா. கச.) இத்தலம் இக்காலத்துப்பழனியென்று வழங்குகின்றது.

**ஆவீதம்**— 1. சென்றது. 2. பூணூல். [ஆவீதஃ.]

**ஆவீதி** — வலப்புயத்திலே உபவீதமுடைய பிராமணன். [ஆவீதிந.]

**ஆவீரம்**—இடையரூர்.

**ஆவீரன்**—இடையன். அந்தணனும், அம்பட்டமாதுங்கூடிப்பெற்றபிள்ளை. இவன்றொழில்: மாடு, ஆடு, எருமை என்னும் மூவினமேய்த்தல். (பரா. மி. க௫௬.) [ஆவீரஃ.]

**ஆவீரி**—இடைச்சி. [ஆவீரீ.]

ஆவு—குன்றிக்கொடி.
ஆவுடையார்—ஆவுடையாள்.
ஆவுடையாள்—சத்திரூபமாகியபீடம். (உ-ம்) "ஆவுடையாளுஞ் சிவலிங்கமும் ஒன்றைவிட்டொன்று நீங்காது தம்மிற்கூடியிருந்து ஆன்மாக்களை இரட்சிக்கும் முறைமையறியார்கள்" (சி. சி. க: ௬௬. நிரம்ப.)
ஆவுத்தன்—சகோதரிபுருடன். [ஆவுத்த]
ஆவுதி— யாகம். (உ-ம்.) "ஆவுதிமண்ணிய விர்துகின்முடித்து" (மதுரைக். ௪௯௪.) [ஆஹுதி என்பதில் ஹகாரமெய் கெட்டுநின்றது.]
ஆவுரிஞ்சி—அவுரிஞ்சுதறி. அது; முப்பத்திரண்டுதருமங்களுள் ஒன்று; அஃது: ஆதீண்டு குற்றிநாட்டல். (உ-ம்.) "அறுசமயத்தோர்க்கு ணவோடாவுரிஞ்சுதறி" (திருநெல். அறம்வள. ௬௬.) [ஆ - பசு. உரிஞ்சு - உரிஞ்சுகின்ற, தறி-குற்றி.]
ஆவெனல்—1. ஆவென்றிரங்குதல். 2. வாய்திறத்தல். (உ-ம்.) "காசினிக்கும் வெண்ணெய்க்குஞ்செம்பவளமாவென்றுன்சேர்பு" (திருவேங்கடவெண்பா. ௩௬.)
ஆவேகம்— 1. சீக்கிரம். 2. தடுமாற்றம். [ஆ: விகி - பயங்கரமடைதல்.]
ஆவேசி—ஆடுதின்னாப்பாலை.
ஆவேசசாமியவாதி— காபாலமதத்தோன்.
ஆவேசநம்— 1. அக்கசாலை. 2. சிற்பர்வீதி. (சூ. நிகண். டு. ௪௮.) 3. சினம். 4. சூரியமண்டலம். 5. சித்திரகாரர் வீதி. [ஆவேசந.]
ஆவேசம்— 1. உட்புகுதல். (உ-ம்.) "முத்தியினதாவேசவாசைக்கடற்குண்மூழ்கி" (தாயு. சின். ௧) 2. இறுமாப்பு. 3. ஒன்றிலே மனமழுந்திநிற்றல். 4. காக்கைவலிமுதலியவற்றில் வருந்தலைச்சுழற்சி. 5. பேய்க்கோள், வெறியாட்டு. (உ-ம்.) "சாயாபுருடனைப்போலாநந்தமேதடித்த-மாயாவயிரிமகமாண்ட-நேயவுரை - யாவேசர் வீரரசர்மடலான்ர்-சாவாநந் தர்க்குச்சரி" (ஒழிவி. பொதுவி. ௩௦.) [ஆவேசः; ஆ- விஶ் - பிரவேசித்தல்.]
ஆவேசவாதி—காபாலமதத்தோன்.
ஆவேசிகன்—விருந்தனுகவந்தவன். [ஆவேஶிகः; ஆ; விஶ் -பிரவேசித்தல்.]
ஆவேசித்தல்— உட்பிரவேசித்தல். (உ-ம்) "அந்தச்சிவன் இந்தக்குருதேகத்திலாவேசித்து" (சி. சி. ௩௨. எ. ஞாநப்.)
ஆவேட்டகம்—1. மதில். 2.வேலி. [ஆவேஷ்டகः: ஆ; வேட்ட - வளைத்தல்.]
ஆவேட்டநம் — 1. அடைக்கப்பட்டவிடம். 2. கட்டுதல். 3. மூடிக்கட்டல். [ஆவேஷ்டநம்]
ஆவேட்டிகம்—சூழப்பட்டது. (சி-லி.யோக.௪.)
ஆவேதகன்— 1. அறிவிப்போன். 2. வியாச்சியத்திற்பிரவேசிப்போன். [ஆவேதகः; ஆ; வித் - அறிதல்.]
ஆவேதநம்— 1. அறிவிப்பு. 2. முறையீடு செய்தல். 3. முறையீட்டுப்பத்திரம். [ஆவேதநம்: ஆ; விதீ - அறிதல்.]
ஆவேதிதம்—அறிவிக்கப்பட்டது. [ஆவேதிதம்.]
ஆவேலி—தொழுவம்.
ஆவேறு—இடபம். (உ-ம்.) "ஆவேறுயர்த்தோன்" (உபதேச. திரு. ௧௬.)
ஆவோ—ஓர் அதிசயவிரக்கச்சொல்.
ஆழ்— 1. ஆழ்ந்த என்னும் பொருள்படும் ஒருவினைத்தொகை. (உ-ம்.) "ஆழ்துயர்க்கடலிடை" (நைடத. அன்- கண். ௭௧.) 2. ஆழென்னேவலுந்தெரிநிலைவினைப்பகுதியும்.
ஆழ்ந்தல்—1. அமிழ்த்துதல். (உ-ம்.) "துன்பத்திலாழ்த்தன்முறையோ" (தாயுமா. ௬௧: ௧௧.) 2. கட்டல். 3. தாழ்த்தல். (உ-ம்.) "அட்லேறனையசெருக்காழ்த்தி" (நன்னெறி. ௭.)
ஆழ்ந்துதல்—ஆழ்த்தல்.
ஆழ்தல்—1. அழுந்தல். (உ-ம்.) "அல்லலுற்றழுங்கிநெஞ்சிற்கட்டியங்காரனுழ்ந்தான். (சிந்தா. கோவிந். ௬௦.) 2. தொழிற்பெயர். (உ-ம்.) "ஆழறமிலங்கையுமாழிமேலெழ" (கந்தபு. யாளிமுக. ௨௪.) 3. தாழ்தல். (உ-ம்.) "இன்னலங்கடலுளாழ்ந்திறக்குமேகொலாம்" (நைடத. அன்- கண். ௬௮.) 4. பதிதல். (உ-ம்.) "ஆளிகளன்னவர்நிறத்திழைம்பவே" (இராமா. நகர. ௬௪.)
ஆழ்வார்—விட்டுணுபத்தர்.
ஆழ்வு—1. ஆழம். (உ-ம்.) "நுடங்கும்வெம்பகை-பாகமிட்டாழ்விளிற்பதிந்ததாயினும்" (இரகு. திக்கு. ௨௬.)
ஆழம்—1. கடல். 2. நுண்ணுணர்வாலறியவேண்டியபொருளுடைமை. (உ-ம்.) "ஆழமன்னேவுடைத்திவ்வையர்வார்த்தை" (திருக்கோவை. ௬௧.) 3. பூமியின்மேற்பரப்பினின்றுகீழேபோகுமளவு, மேலே நின்று கீழேபோகுமளவு. (உ-ம்.) "உள்ளுறவாயிரவாயிரயோசனையுறு நீளங்-கொள்வதொராழமும்" (கந்தபு.அசுரயாக. ௫௨.)

**ஆழமுடைத்தாதல்**— நூலுக்குரியபத்தழகு களுள் ஒன்று. அஃது: அரிதுணர்பொருளதா தல். (உ-ம்.) "சுருங்கச்சொல்லல்" ( நன். பொ துப். ௧௩.)

**ஆழல்**—1. ஆழமுடைத்தாதல். 2. ஆழுதல். 3. கறையான். (பிங்கல. உ௫௩அ.)

**ஆழாக்கு**—அரைக்காற்படி.

**ஆழி**—1. ஆஞ்ஞாசக்கரம். (உ-ம்.) "ஆழியு ழவன்புதல்வ"(இராமா. ஆரணி. அகத்தி.௫௩.) 2. கடல். (உ-ம்.) "ஆழிநீத்தமதொத்ததுமதிற் புறத்தகழி" (கந்தபு. திருநகர. ௩.) [ஆழ்- இ- ஒருவினைமுதற்பொருள்விகுதி.] 3. கடற்கரை. (சூ. நிகண். ழகரவெ.உ.)4 கூடற்சுழிவட்டம். (சிந்தா. குணமா. ௧அஎ.)5. சக்கராயுதம்.(உ-ம்.) "ஆழிவேண்டிச்-சிவசங்கரவென்றரிபோற்றிய செம்மன்மைந்தன் " (கந்தபு. திருவி. ௫௪.) 6. தேருருளை. (உ-ம்.) "ஆகண்டலன்மக-ஞழித் தேர்வலவற்கிளையாளரோ" (சேதுபு. தேவிபுர. ௫௦.) 7. பண்டி. 8. மோதிரம். (உ-ம்.) "ஆழி வாய்விரலிற்காமனம்பொடுசிலைகையேந்த"(சிந் தா.காந்தருவ. ௩௪௧.) 9. யானைக்கைநுனி. 10. வட்டம். (சூ. நிகண். ௧௧: ழகரவெ. உ.)

**ஆழித்தல்**—ஆழமாகத்தோண்டல்.

**ஆழித்தேர்** — வட்டக்காலாற்சிறந்த தேர். (புறப்-வெண்.)

**ஆழிமுரசோன்**— மன்மதன். ( சூ. நிகண். ௧: உ௬.) [ஆழி-கடல். முரசு - ஒருவாத்தியம்.]

**ஆழியளித்தோன்**—சிவன். ( விட்டுணுவுக் குச்சக்கரங்கொடுத்தோன் என்றபடி.)

**ஆழியன்**—வருணன்.

**ஆழியான்**—விட்டுணு. (உ-ம்.) " ஆழியான் வேதனமரர்க்கிறைமுதலோர் " ( கந்தபு. இர ணியன்பு. ௧௩.) [ஆழி - சக்கராயுதம்.]

**ஆழியிழைத்தல்**—கூடலுக்குவட்டமிழைத் தல். (உ-ம்.) "வெண்முத்தவார்மணன்மேலன் ஞங்கணியிழையாளாழியிழைத்தாளே" (சிந்தா. குணமா. ௧அஎ.) [ஆழி- வட்டம். இழைத்தல் - செய்தல்.] இது கண்பாராமல் விரலினாலே நில த்திலேசுழிக்குஞ்சுழி வட்டமாகப்பொருந்துமா யிற் றலைவனோடுகூடலைக் குறிக்குமென்றெண் ணித்தலைவியாற்செய்யப்படுவது.

**ஆழிரேகை**—சக்கரரேகை; இது காலிலுங் கையிலுமிருக்கும்.

**ஆழிவலியான்மணி**—மிளகு. (உ-ம்.)"சோட சத்தொன்றுக்-காழி-வலியான்மணிபிளவு"(தை ல. தைலவ. ௧௩௫.)

**ஆழிவிரல்**—அநாமிகைவிரல். [ஆழி-மோதி ரம்.]

**ஆழுதல்**— 1. அழுந்தல். 2. தாழ்தல்.(உ-ம்.) "சொல்லரும்பிறவியுட்டுன்பத்தாழுவார்" (கந் தபு. காசிபனு. உ௧.)

**ஆள்**— 1. அடிமை. (உ-ம்.) "விமலனுக்கா ளல்லார்" (வைராக். சத. ௫௦.) 2. ஆடவன். (உ-ம்.) "நாளல்லாநாட்பூத்தநன்மலரும்போலு மே-யாளில்லா மங்கைக் கழகு" (வாக். ௩.) 3. ஆண்மகன். (உ-ம்.) "அடுத்தூன்று-நல்லாளிலா த குடி" (வள். ௧0௩0.) 4. ஆளுதல். ( உ-ம். ) "எம்மையாளுடையானன்பர்" (திருவாத. மந். ௫.) 5. ஆளென்னேவலுந்தெரிநிலைவினைப்பகு தியும் வினைத்தொகையும். (உ-ம்.) "மாலையாற் றண்ணளிசுரந்தாள்" (கம்பரந். ௩௫.) "மற்றவ ளுடைரை"(வைரா.தீ.௫.) 6. உயர்திணைப்பெண் பாற்படர்க்கையில்வரும் ஒரு விகுதி. ( உ-ம். ) "இல்லாள்வந்தாள்" 7. உயர்திணையிலே ஆண் பெண் அலி என்னும் முப்பாலின் ஒன்றன்பா ற்பட்ட சீவன். (உ-ம்.) "ஆட்பார்த்துழலுமரு ளில்கூற்றுறண்மையாற்- றோட்கோப்புக்காலத்தா ற்கொண்டுய்மின்" (நாலடி. இளமைநி. ௨௦.) 8. காலாள். ( உ-ம். ) " யானைதேர்பரியாளெனு நால்வகை" (பாரத. நிவாதகவச. ௫௨.) 9. வீரர். (உ-ம்.) "ஆளுமற்றிருதோளுமற்று" (அரிச்சந். வேட்டஞ். ௪௧.) 10.கூலியாள். (உ-ம்.) "அன் றொருமடந்தைக்காளாயடியவர்க்கெளியார்" (தி ருவாத. குதிரை. ௬௬.) 11. தலைவன். (உ-ம்.) "ஆளினெஞ்சமும் வார்த்தையும்" (பாரத.சூது. அ௨.)

**ஆள்கை**—ஆளுதல். (உ-ம்.) "பயங்காய்ந் தென்னையாள்கைக்கு" (மரு. தி. உ௨.)

**ஆள்வணங்கி**—1. அரசமரம். 2. தொட்டா ல்வாடி.

**ஆள்வள்ளி**— ஒரு கிழங்குக்கொடி. (வைத் தியஅகராதிக்காரர் மலைச்சர்க்கரைவள்ளி என் பர்.) (உ-ம்.) (பதார்த்த. ௭௭௧.)

**ஆள்வினை**— 1. தைரியம். 2. பணிவிடை. (உ-ம்.) "சுந்தரவிடங்கன்றன்னை- யாள்வினைய ன்புந்தானும்வைகலுமடைந்துதாழ்ந்து" (திரு விளை. அங்கம். ௩.)3. முயற்சி. (உ-ம்.) "ஆள்வி னையுமான்றவறிவும்" (வள். ௧0உ௨.)

**ஆள்வினையுடைமை**—இடைவிடாதமெய்ம் முயற்சியுடையனுதல். (அது ஆளும்வினையெ னக்காரியத்தாற்கூறப்பட்டது.) ( வள். அதி. ௬௨. )

**ஆள்வு**—ஆளுதல். (உ-ம்.) "அவனினிதிரு ந்திவ்வேழுலகாள்விடமென்முல் " ( இராமா. நகர. ௫.)

**ஆளகம்**—சுரைக்கொடி.

**ஆளத்தி**— (பரதம்) மூலாதாரந்தொடங்கிவ

ருமெழுத்தின் நாதம்; அது: தென்னதெனவென்றுபாடப்படுவது. (சிலப். அறங்கேற். அடு. பக்.)

**ஆளரி**—1. சிங்கவேறு. (உ-ம்.) "ஆனதொர் காலையிலாளரிவெய்யோன்" (கந்தபு. சிங்கமு. எஎ.) 2. நரசிங்கமாகியவிட்டுணு. (உ-ம்.) "ஆளரிக்குமரிதாய்" (திருக்கோ. உஉடு.)

**ஆளாநம்**—1. கட்டுத்தறி. 2. கலப்பை. 3. யானைகட்டுந்தறி. (உ-ம்.) "இருகோட்டுக்குன்றங்கன்றி-யாளாநமதிற்பிணிப்புண்டருஞ்சிறைப்பட்டதுபோல்" (இரகு. குறை. ருரு.)

**ஆளாபம்**—ஆலாபனம். (சிந்தா. காந்தரு. உகூக.)

**ஆளல்**—ஆளுதல்.

**ஆளி**—1. ஆள்வோன். (உ-ம்.) "அளகையையாளிதானும்" (கந்தபு. சூரப. சஎக.) 2. ஒருமரம். [ஆளிவித்துப்பார்.] 3. ஒழுங்கு. 4. சிங்கம். (உ-ம்.) "ஆளிக்கொடியேந்தியதங்கை" (தணிகை. நாட். சுO.) 5. சிங்கவிராசி. 6. பிறபெயரோடணைந்து உடையவன் எனப்பொருள்படும் ஒரு வினைப்பெயர். (உ-ம்.) "பகையாளி" 7. யாளி. (உ-ம்.) "ஆளிசிங்கமிபம்பரித்திரள்" (அரிச்சந். இந்திர. உக.) 8. வரம்பு. [ஆலி.]

**ஆளிவித்து**—ஒரு மரத்தின் வித்து. (உ-ம்.) "வாதமும்போகு-மாளிவிதைதன்னலறி" (பதார்த்தகுண. அசுO.)

**ஆளிந்தம்**—திண்ணை. [ஆலிந்தம்.]

**ஆளியூர்தி**— 1. காளி. 2. துர்க்கை.

**ஆளிவிரை**— சிறியதாயும், சீனதேசத்துள்ளதாயுமுள்ள ஒருவிரை.

**ஆளுகை**— 1. ஆட்சி. 2. ஆளுந்தன்மை. 3. இராச்சியம்.

**ஆளுடையான்**— அடிமையாகவுடையவன். (உ-ம்.) "எம்மையாளுடையானன்பரிதயதாமரைகளெல்லாம்" (திருவாத. மங். ரு.) ஆளுதலையுடையானென்றுமாம்.

**ஆளுதல்**—1. அடிமைக்கொள்ளுதல். (உ-ம்.) "சற்றிரங்கியாளத்தகாதோ பராபரமே" (தாயு. பராபரக். சசு.) 2. அரசுசெய்தல். (உ-ம்.) "துணைவரோடாளலாமே" (பாரத. பதினெட்-போர். கஉக.) 3. ஆட்சிபண்ணல். (உ-ம்.) "காளவுன்னைவிடுத்த" (பாரத. கிருட்- தூ. கச.) 4. உபயோகித்தல். (உ-ம்.) "எடுத்தாளாதபொன்" 5. ஓம்பல். (உ-ம்.) "தீவினைக்கடற்பட்டுள்ளவெம்மையாளுவதற்கு" (கந்தபு. திருவவ. சக.) 6. கட்டுதல். (உ-ம்.) "நெகிழ்ந்ததாடானை" (கம்பரங். ருசு.) 7. பிரயோகித்தல். (உ-ம்) "சான்றோராலாளப்பட்டசொல்" 8. விடாதொழுகல். (உ-ம்.) "உயிர்ப்பொருட்டா-ணண்டுறவார்நாணாள்பவர்" (வள். கOகஎ.)

**ஆளோட்டி**— 1. காவற்கூடு. 2. மறைவு.

**ஆளோதுங்கி**—ஆளொட்டி.

**ஆளோலை**—அடிமையோலை. (உ-ம்.) "எழுதுமாளோலைவாங்கி" (பெரியபு. தடுத்தாட். சரு.)

**ஆற்கந்திதம்**— குதிரையின் விரைவுநடை. [ஆஸ்கந்திதம்.] [இது பழைய அகராதிகளில் ஆஸ்கிரந்திதமென வழூவாக எழுதப்பட்டது.]

**ஆற்பதம்**— 1. ஆசநம். 2. ஆதரவு, ஆதாரம். (உ-ம்.) "எறும்புக்குமாற்பதமில்லைமுன்னாள்" (தனிப்பாடல். சத்திமுத்.) 3. இடம். 4. கொள்கலம். 5. தொழில். 6. நிலை. 7. மேன்மை. 8. வசிக்குமிடம். [ஆஸ்பதம்.]

**ஆற்பலம்**— 1. சாரம். 2. பலம்.

**ஆற்பனேபதம்**—ஒருசெயலால்வரும் பலம். அது, செய்பவனையடைவதாகக்காட்டும் வினைச்சொல். (உ-ம்.) "கர்த்திருகர்மணிக்கிரியாபலத்தைப்பயப்பதாற்பனேபதமெனமொழிப" (பிரயோக. ருசு. உரை.)

**ஆற்ற**— 1. மிக. (உ-ம்.) "அமிழ்தினுமாற்றவினிதே" (வள். சுச.) 2. முற்ற. (உ-ம்.) "அவாவினை யாற்ற வறுப்பின்" (வள். ருசுஎ.)

**ஆற்றல்**— 1. அறிவு. (சூ. நிகண். கக: றகரவெ. ரு.) 2. இன்ன ஒலி இன்னபொருளை உணர்த்துமென்னுநியதி. (தர்க்கசங்.) 3. கூட்டல். (பிங்கல. உஉகூச.) (உ-ம்.) "ஆற்றியமெய்ச்செல்வத்தால்" (பாரத. சிறப். உக.) 4. ஒத்திருத்தல், உவமையாயிருத்தல். (உ-ம்.) "செய்யாமற் செய்த வுதவிக்கு வையகமும்-வானகமுமாற்ற லரிது" (வள். கOக.) 5. செய்தல். (உ-ம்.) "மகன்றந்தைக்காற்றுமுதவி" (வள். எO.) 6. தணித்தல். 7. தாங்குதல், பொறுத்தல். (உ-ம்.) "ஆற்றுவாராற்றல் பசியாற்றல்" (வள். உஉரு.) 8. நிலைபெறுதல். (உ-ம்.) "ஆற்றவேயுடையதாகி" (சி. சி. க: உஉ.) 9. நீக்குதல். (உ-ம்.) "அன்னைமூப்பழிதரவார்கொலாற்றுவார்" (நைடத. அன்-கண். சுஅ.) 10. பெருமை. (உ-ம்.) "ஆற்றுவாராற்றலிகழாமை" (வள். அகூக.) 11. முயற்சி. 12. வல்லமை. (உ-ம்.) "ஆற்றலையுளதுமாதவமதன்றியே வீற்றுமொன்றுளதென விளம்பலாகுமோ" (கந்தபு. காசிபனுப. கரு.) 13. வல்லராந்தன்மை. (உ-ம்.) "ஆற்றுவாராற்றல்பணிதல். (வள். கூஅரு.) 14. வலி. (உ-ம்.) "ஆற்றற்கீறிலா-விப்பரிசனரொடுமேகி" (கந்தபு. மாயையுப. கஅ.) 15. வென்றி. (பிங்கல. ருகருரு.)

**ஆற்றலர்**—சகிக்கமாட்டாதவர். (உ-ம்.) "தோ

ற்றியநுதல்விழிச்சுடரின்சூழ்வினுக்-காற்றலரா கியே" (கந்தபு. திருவவ. ருரு.)

**ஆற்றலரி**— 1. ஒருவகையலரி. 2. சுடலைப் பூச்செடி. 3. சேங்கொட்டை.

**ஆற்றறுத்தல்**— 1. கைவிடுதல். (உ-ம்.) "அல்லற்கணுற்றறுப்பார்நட்பு" (வள். எகஅ.) (ஆற்று என்பது முதனிலைத்தொழிற்பெயர். முன்னெல்லாம் வலியராவார்போன்று ஒழிதலின் வலியறுப்பார் என்னும் பொருள்பட ஆற்றறுப்பார் என்ருர். 2. வலியழித்தல். (உ-ம்.) "அற்றத்திட்டாற்றறுத்தான்மார்பு" (கலி. கசச.)

**ஆற்றாமை**— 1. சகிக்கக்கூடாமை, பொறுக்கக்கூடாமை. (உ-ம்.) "இரணியற்காற்ருதடைந்தனம்" ( கூர்மபு. அந்தகாசு. உஎ. ) 2. செய்யமாட்டாமை. (உ-ம்.) "அஃதாற்ருதெழுவாரையெல்லாம்பொறுத்து" (வள். க0௬உ.) 3. பொறுக்கும் வலியில்லாமை. (ஐங்குறு.)

**ஆற்றார்**— 1. தரித்திரர். 2. தோற்ருேர். 3. பகைவர். 4. வருந்தினர். 5. வலியரல்லாதார். (உ-ம்.) "ஆற்ருருமாற்றியடுப" (வள். சகக.)

**ஆற்றான்**— சத்தியில்லாதவன். (திரிகடுகம் சரு.)

**ஆற்றி**—ஆறுதல்.

**ஆற்றிடல்**— செய்தல். (உ-ம்.) "அந்நாளமலன்பணியாற்றிடலும்" (கந்தபு. காமத. உ௬.)

**ஆற்றிடைக்குறை**— ஆற்றினடுவே நீரில்லாது உயர்ந்த இடம்.

**ஆற்றிய**—தேடிய. (சிந்தா. முத். ௩அஅ.)

**ஆற்றின்வித்து**—கர்ப்பூரசிலாசத்து.

**ஆற்று**— 1. ஆற்றென்னேவல். 2. தலைவாயில். 3. தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். (உ-ம்.) "ஆற்றுதொல்கருப்பத்துடன் பற்பகலமர்ந்தார்" (கந்தபு. துணைவர். கசு.)

**ஆற்றுக்கால்**—ஆற்றிலிருந்து நீர்பாயும் வாய்க்கால்.

**ஆற்றுக்காலாட்டியர்**— உழத்தியர் எனப்படும் மருதநிலப்பெண்கள். (உ-ம்.) "ஆற்றுக்காலாட்டியர்முகத்துக்கழிந்தகமலங்களை" (நல்.பாரத. நாட். அ.)

**ஆற்றுச்சேநப்படி**—ஒரு பூண்டு.

**ஆற்றுணா**—வழியிலுண்பதற்குக்கொண்டுபோகுங்கட்டுச்சோறு. (சூ.நிகண். ௬. உ௬.) [ஆறு-வழி. உணா - சோறு.]

**ஆற்றுத்தும்மட்டி** — பேய்க்கொம்மட்டிக்கொடி.

**ஆற்றுதல்**—1. ஈட்டுதல். 2. ஒத்திருத்தல். 3. சகித்தல், பொறுத்தல். (உ-ம்.) "விதுரனும்வெஞ்சொலாற்ருன் வில்லினையிறுத்துநின்ருன்" (பாரத.எட்டாம்போர்.கச.) 4. சுமத்தல். (உ-ம்.) "புவிமுற்றும் - ஆற்றியபணிக்கிறையும்" (கந்தபு. அசுரேந். சஉ.) 5. செய்தல். (உ-ம்.) "ஆதலின்மைந்தர்காளறத்தையாற்றுதிர் " ( கந்தபு. காசிபனுப. உச.) 6. தணித்தல். (உ-ம்.) "கரையழிகாதலாற்றையறிவெனுங்கரைசெய்தாற்றி" (அரிச்சந். விவாககா. உக.) 7. தரித்தல். (உ-ம்.) "ஆற்றுதொல்கருப்பத்துடன்" (கந்தபு. துணைவ. கசு.) 8. நடத்துதல். (உ-ம்.) "ஆற்றுதலென்பதொன்றலந்தவர்க்குதவுதல் " ( கலி. கருக.) 9. நீக்கல். (உ-ம்.) "மையலாற்றியகுணத்துமாதவர்" (அரிச்ச. விவாக. சஉ.) 10. பிரித்தல். (உ-ம்.) "சேற்றுவார்கதிர்சேரக்கொணர்ந்துவைத்-தாற்றுவார்" (அரிச்சந். நாட்டு. சசு.) 11. வலியராதல்.

**ஆற்றுநீர்ப்பொருள்கோள்**— பொருள்கோள் எட்டனுளொன்று; அது: சொல்லிருக்கிறநிரைப்படி பொருள் அங்கங்கே அமைந்து நடப்பது. (உ-ம்.) "சொல்லருஞ்சூற்பசும்பாம்பின் ருேற்றம்போன்- மெல்லவேகருவிருந்தீன்றுமேலலார்- செல்வமேபோற்றலைநிறுவித்தேர்ந்தநூற் - கல்விசேர்மாந்தரினிறைஞ்சிக்காய்த்தவே" (சிந்தா. நாம. உச.) இக்கவியிலே நெல் எனப்பொருள்படுஞ்சொல் என்னும் எழுவாயை முதலெடுத்து அதன்ருெழில்களாகிய வினையெச்சங்கள் ஒன்றை ஒன்று கொள்ளும்படி முறையாகவைத்து அவற்றை முடித்த "காய்த்த" என்னும் பயனிலையை இறுதியில் வைத்தமையால் இப்பொருள்கோள் ஆற்றுநீரொழுக்கிற்குச்சமமாயிற்று. (நன். பொது. சுக.)

**ஆற்றுநேட்டி**—நீர்ச்சுண்டிப்பூண்டு.

**ஆற்றுப்பச்சை**—நாகப்பச்சை.

**ஆற்றுப்படுத்தல்**— 1. அகற்றுதல். (உ-ம்.) " ஆற்றுப்படுத்துன்மனத்தேயிருந்த வருந் துயரே" (வெங்கைக்கோவை. ௬ருரு.) 2. நன்னெறியினுட்படுத்தல். [ஆறு-வழி. படுத்தல்.] 3. வழிப்படுத்தல். (உ-ம்.) "நெஞ்சாற்றுப்படுத்த நிறைதபுபுலம்பொடு" (முல்லைப்.அக.)

**ஆற்றுப்படை**— 1. ஒரு பிரபந்தம். அது: பரிசுபெற்றுவருவார், கூத்தர், பாணர், பொருநர், விறலி, என்னும் நால்வருட்பரிசிற்குப்போவார் ஒருவரை ஆற்றிடைக்கண்டு தலைவன் சீர்த்திமுதலியவைகளைச்சொல்லி வழிப்படுத்துவதாக அகவற்பாவாற்செய்யப்படுவது. இது, கூத்தராற்றுப்படை, பாணராற்றுப்படை, பொருநராற்றுப்படை, விறலியாற்றுப்படை என நான்குவகைப்படும். (இலக். விள. பாட்டி. கக௬.) 2. வழிப்படுத்தல். (சூ. நிகண். கூ: சரு.)

**ஆற்றுப்பாசி**—ஒரு நீர்ப்பூண்டு.

**ஆற்றுப்பிதலம்**—நிலத்தினின்று நதியைப்

பிரிக்குமெல்லே. [ஆறு-நதி. பிதலம்-(ஸிதல) பிரித்தல்.]

**ஆற்றுப்பூத்தான்**—பூனைக்காலிப்பூண்டு.

**ஆற்றுப்பூவரசு**—ஒரு செடி.

**ஆற்றுபவர்**— ஆற்றலுடையராய்ப் பிறர்மே ற்செல்வார். (உ-ம்.) "ஆற்றுபவர்க்குமரண்" (வள். எ௬௪.)

**ஆற்றுமடை**—வாய்க்காலின் முகம்.

**ஆற்றுமரி**—நீருமரிச்செடி.

**ஆற்றுமல்லிகை**—ஒருமல்லிகைக்கொடி.

**ஆற்றுமுள்ளி**—கண்டங்கத்தரிச்செடி.

**ஆற்றுமேலழகி**—ஒருபூண்டு.

**ஆற்றுவரி**— இசைப்பா வகையு ளொன்று. (சிலப்பதி.)

**ஆற்றுவார்**—எடுத்துக்கொண்டதுமுடிக்கவ ல்லார். (உ-ம்.) "ஆற்றுவாராற்றலிகழாமை" (வள். அ௯௧.)

**ஆற்றுவாளை**—ஆற்றில்வசிக்கும் ஒருமீன்.

**ஆற்றுவித்தம்**—ஆறுபாய்முகம். [ஆறு-நதி. வித்தம் - துளைக்கப்பட்டது.]

**ஆற்றுவித்தல்**—1. உறுதிசெய்தல். 2. செய்வித்தல். 3. தணியச்செய்தல். 4. வலிதரல்.

**ஆற்றெழுக்குநிலை**— (இலக்கணம்) சூத்திர நிலைகளிளொன்று: அது, சூத்திரங்கள், இடையறுது, ஓடுகின்ற ஆற்று நீரோட்டம் போலத் தொடர்ந்துநிற்கு நிலை. (நன். பொது. ௧௧.)

**ஆறதீகம்**—1. ஆறு. 2. கல் நார் என்னுஞ்சரக்கு.

**ஆறந்தம்**— முடிவிலே நிச்சயிக்கப்படுந்தெளிவுரைகள் ஆறு. அவை: நாதாந்தம், சித்தாந்தம், போதாந்தம், யோகாந்தம், காலாந்தம், வேதாந்தம் என்பன. (த. நி. போ. க௬எ.)

**ஆறல்**— 1. ஆறுதல். 2. அலைதல்.

**ஆறலை**—வழிப்பறித்தல். (உ-ம்.) "ஆறலை கள்வரூர்கலக்கி" (கந்தபு. ஆற்றுப். க௪.) [ஆறு-வழி. அலை - அலைத்தல்.]

**ஆறலைத்தல்** — வழியினின்று பறித்தல். (உ-ம்.) "ஆறலைகள்வரூர்கலக்கி" (கந்தபு. ஆற்று. க௪.)

**ஆறலைப்பார்** — வழியினின்று பறிப்பவர். (வள். ௫௫0. பரி.)

**ஆறலைப்பு** —ஆறலைத்தல்.

**ஆறக்காரியம்**—தேற்றம்.

**ஆறடி**—1. தெருத்தோறுமலைந்துதிரிவோன். 2. நிலைகெட்டவன்.

**ஆறதாரம்**— உடம்பிலுள்ள ஆருதாரங்கள்: அவை, மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆஞ்ஞை என்பன.

(உ-ம்.) "ஆருதாரமுமுறையிற்கழிதலும்" (தணிகை. நந்தி. ௬௬.)

**ஆறுமீன்**—கார்த்திகைநட்சத்திரம்.

**ஆறியகற்பு**—அறக்கற்பு. (பதிற்று.)

**ஆறு** — 1. ஒரெண். 2. சமயம், மார்க்கம். (உ-ம்.) "சைவ-நல்லாறேங்க" (பெரியபு. சண்டேசு. ௫௭.) 3. தன்மை. "செல்லாநிழுக்கிச் சுடுகாடவள்சேர்ந்தவாறும்" (சிந்தா. பதிக. ௬.) 4. நதி. (உ-ம்.) "செம்புனலாறொழுக்குற்றதால்" (கந்தபு. அக்கி. கருசு.) 5. நன்னெறி. (உ-ம்.) "ஆறலாதனவரசருக்கென்றுகொண்டு" (பாரத. சூது. எஉ.) 6. படி. (இப்பொருளில்வரும்போது செய்யுமென்னும் வாய்பாட்டுப் பெயரெச்சத் தோடிணைந்து ஏதுப்பொருளில் வருஞ் செய்ய என்னும் வாய்பாட்டு வினையெச்சப் பொருள்படநிற்கும். (உ-ம்.) "போமாறடர்த்தான்" (இரகு. திக்கு. ௯.) 7. வழி. (உ-ம்.) "அமர்செய்யாறெலாம்" (கந்தபு. அக்கி. கருசு.) 8. விதம். (உ-ம்.) "கற்பழியாவாற்ருல்" (நல்வழி. க௬.)

**ஆறுகாட்டி**—வழிகாட்டி.

**ஆறுகிராணி**— ஆறுவகையானகிராணிநோய்கள்: அவை, பித்தக்கிராணி, உட்டணவாதக்கிராணி, சிலேட்டுமவாதக்கிராணி, மேகக்கிராணி, மூலக்கிராணி, வாதக்கிராணி என்பன.

**ஆறுகை**—ஆறுதல். (உ-ம்.) "மகமாறுகைக் கெம்மைவந்தாளுநாதன். (மருதூரந். கஉ.)

**ஆறுசூடி**—சிவன். (கங்கையாறுசூடினவர்.) (உ-ம்.) "ஆறுசூடியை" (நல். பாரத. மருத். ௬௪.)

**ஆறுசூலை**— ஆறுவகையான சூலைநோய்கள்: அவை, பித்தசூலை, வாதசூலை, சிலேட்டுமசூலை, வாதபித்தசூலை, சிலேட்டுமபித்தசூலை, ஐயகணசூலை என்பன.

**ஆறுசெய்கையான்**— பிராமணன். [அறுதொழிலோன் என்றபடி.] (உ-ம்.) "ஆறுசெய்கையானில்லிடம்புகுந்து" (சேதுபு. கவிசம்பு. உஉ.)

**ஆறுதல்**—1. ஆறியிருத்தல், ஓய்தல். 2. சூடுதணிதல். (உ-ம்.) "ஆறியபசுந்தண்காவின்சைவொரீஇ" (பாரத. நிரைமீட் ௪0௧.) 3. தணிதல், நீங்கல். (உ-ம்.) "ஆருவிடரென்வயினுக் கினையால்" (கந்தபு. அக்கி. உ௬௫.)

**ஆறு பருவம்**— வருஷத்தை ஆருகப்பகுத்த பெரும்பொழுதுகள்; அவை. கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் என்பன.

**ஆறுபொழுது** — சௌரதினத்தைப்பகுத்த ஆறுசிறுபொழுதுகள்; அவை. மாலை, யாமம், வைகறை, காலை, நண்பகல், எற்பாடு என்பன.

**ஆறுமலம்**— ஆறுவகையான மலங்கள்; அவை. வாதபித்தமலம், கிருமிமலம், சீழ்மலம், வாயுமலம், சூதகமலம், துன்மாம்சமலம் என்பன.

**ஆறுமுகன்**—குமாரக்கடவுள். (உ-ம்.) "ஆறுமுகனைப்பயந்தநதி" (பாரத. வாரணா. அ௫.)

**ஆறுவிதநைவேத்தியம்**— சுவாமிக்கு நிவேதிக்கும் ஆறுவித உணவுகள்; அவை, அரித்திரான்னம், பரமான்னம், முற்கான்னம், கிருதான்னம், தத்தியன்னம், குளான்னம் என்பன. (த. போ. ௩0௨.)

**ஆறெழுத்து**— 1. குமாரக்கடவுளுடையசடாக்கரமாகியமந்திரம். (திருமுருகா. க௫௫. அடி. உரை.) 2. பிரணவத்தோடுகூடியபஞ்சாக்கரம். (உ-ம்.) "தாரகப்பிரமமாகி-மூன்மொழிகின்றநந்தமூவிரண்டெழுத்துமொன்று-யுன்மகன்நாமத்தோராறெழுத்தெனவுற்றவன்றே" (கந்தபு. திருவி. க௮.)

**ஆறெறிபறை**—வழிபறிக்குங்கொற்கொட்டும் பறை. (உ-ம்.) "ஆறெறிபறையும்" (சிலப். வேட்டுவ. ௪0.)

**ஆன்**— 1. அவ்விடம். (உ-ம்.) "ஆன்வழிக் கொள்ளும்வேதனவன்றனைப்பற்றிவல்லே - யீன்வருகென்ன" (தணிகைபு. வீராட்ட. அக.) 2. ஆயின். (உ-ம்.) "தங்கண்ணாரானுந்தகவில கண்டக்கால்"(பழ. மொ. அரசி. க0.) [இடைக் குறை.] 3. இடபம். (உ-ம்.) "ஆன்முகத்தனடற்கணநாயகன்" (கந்தபு. பானுகோ. க௫.) 4. உயர்திணைப் படர்க்கை யாண்பா லொருமையில் வரும் ஒரு விகுதி. (உ-ம்.) "வந்தான்" 5. எருமை, பசு, மரை என்பவற்றின் பொதுப்பெயர். (திவாகரம்.தொகுதி.௩.) 6. ஒருசாரியை.(உ-ம்.) "ஒருபான்" (நன்.) 7 பசு. (உ-ம்.) "கோதிலானின்குளப்படிநீருமுண்டு" (சேதுபு. அவையட. ௮.) 8. மூன்றும்வேற்றுமையிலே கருவிப் பொருளில்வரும் ஓர் உருபு. (உ-ம்.) "பாவத்தான்வரும்பொருள்" இது தூங்குகையானோங்கு நடைய என்பதிற்போல உடனிகழ்ச்சிப்பொருளிலும்வரும்.(நன்.பெயர்.௪0.உரை.)'ஊரானொருகோயில் என்பதிற்போலத் தொறுப்பொருளிலும்வரும்".

**ஆன்மகம்**— ஆத்துமகம். (சி. சி. உ. ௪௮. மறை.)

**ஆன்மசங்காரம்**— தத்துவங்களையுந் தத்துவவியாபாரங்களையும் ஒடுக்கி ஆன்மாவின் அறிவுதொழில்களை மறையப்பண்ணுவது. (பதி. பசுபா. க0.)

**ஆன்மசிருட்டி**— தத்துவங்களைச்சிருட்டித்து ஆன்மாக்களின் இச்சாஞானக்கிரியைகளை விளக்குவது. (பதிபசுபா. க0.)

**ஆன்மசுத்தி**— 1. ஆன்மாப்பரஞானத்தைக் கூடித்தன்செயலைவிடுதல். (உ-ம்.) "தேசுறமருவுமான்மதெரிசநமான்மசுத்தி" (சிவப். அ: க.) 2. தான்மலமூ மாகாமற் சிவமுமாகாமற் சிவத்தோடிரண்டறக்கலந்து ஆன்மா நிற்பது. (ஒழி. வி. விர. ௮.)

**ஆன்மசுபாவம்**—ஆன்மா சகசமாகிய ஆணவமலத்தோடு சேர்ந்தவடிவம். (ஒழிவி. விர.௬.)

**ஆன்மசொருபம்**— ஆன்மாமும்மலங்களையு நீங்கிநிற்குந்தன்மை. (ஒழிவி. விர. ௬.)

**ஆன்மஞானம்**—தன்னறிவு. (உ-ம்.) "ஆன்மாவைச்சிவன் பிரிவறக்கலந்திருக்கையாற் சிவஞான வ்யதிரிக்தமாக ஆன்மஞானத்திலே தரிசிக்கப்படுமவனல்லன்" (சி. சி. ௬: அ. சிவாக்.) (வ்யதிரிக்தம் - வேறு.)

**ஆன்மதத்துவம்**—1. உருத்திரன். (உ-ம்.) "ஆன்மாவுக்கு அதிதெய்வமாகிய தத்துவம் ஆன்மதத்துவமென உருத்திரனுக்குப் பெயராயிற்று" என்பர். (சி. சி. உ: எ௨. சிவஞாந.) 2. பிரகிருதி (பிருகிருதி எனக்கருதும் மஹான் என்னும் பதம் எழுத்துநிலைமாறி ம, என்பதுபின்னும் ஹான் என்பது முன்னுமாய் ஹான்ம என நின்று ஹகரமெய்கெட்டு ஆன்ம எனத் தமிழில் வந்ததுபோலும். (மேற்படி உரை. மறைஞா. இது அச்சுப்பிரதிகளிலில்லை.) 3. பூதங்கள், ஐந்தும்; தன்மாத்திரைகள் ஐந்தும், ஞானேந்திரியங்கள் ஐந்தும், கன்மேந்திரியங்கள் ஐந்தும், அந்தக்கரணம் நான்குமாகிய ஆன்மாவோடுசம்பந்தப்பட்ட இருபத்து நான்கு தத்துவங்கள்.

**ஆன்மதெரிசநம்**— விடயபோதத்தை நீக்கி ஆன்மா தன்னை யருளாற்காணுதல். (ஒழிவி. விர. அ.) பாசமானதுவிட்டுப்போக ஆன்மாப்பரஞானத்தைத்தரிசிக்கை. (சிவப். அ: க.) "ஆன்மசுத்தி"பார்.

**ஆன்மபவித்திரம்**— தத்துவத்திரயபூணூல்களிலொன்று ஆன்மதத்துவத்தைக் குறிப்பது. (சித். சார. சரியா. எ. வியாக்.)

**ஆன்மபோதம்**— அது இது என்று சுட்டியறியும் அறிவு. (சி. சி. க: ௪௫. நிரம்ப.)

**ஆன்மமூர்த்தி**—சர்வபூததமனன். (சி-லி. ஞாந பா. ௬-ஆஞ்சுலோக. உரை.)

**ஆன்மரூபம்** — ஆசாரியரது அருளினாலே தன்னையுந் தன்னிடத்திலே பந்தமாயிருக்கிற தத்துவவிவகாரங்களையும் எவ்விடத்திலுந்தோன்றாமல் மறைத்து நின்ற ஆணவமலத்தையு

நீங்கித்தான் அறியும் முறைமையும் அவனது ஞானம் அறிவுக் கறிவாய் நின்று உபகரிக்குமுறையுந் தன்னறிவிலே விளங்கக் காண்பது. (உ-ம்.) "பாயிருணீங்கிஞானந்தனைக் காண்டலான்மரூபம்" (உண்மைநெறிவிள. கஉ.)

**ஆன்மலாபம்**—1. ஆன்மா சிவரூபம்பெற்று அதிலே அழுந்துதல். (சிவப். அ: க.) 2. சிவாநந்தாநுபவம். (சி. சி. அ: உஉ. சிவாக்.)

**ஆன்மலயவாதி** — உயிர்கெட்டுச்சிவத்தையணைந்து ஒன்றாய் நின்றதென்று வாதிப்பவன். (சி. சி. கக: க. சிவாக்.)

**ஆன்மவித்து**— ஆன்மசொரூபமறிந்தவன். (சி. சி. க: உக. மறை.)

**ஆன்மவுருவம்** — ஆன்மாவிற்குக்கருவிகள் செயற்கையாய்வந்து பொருந்தினவடிவம்.(ஒழிவி. விர. ௬. உ௱.)

**ஆன்மமநு**—அசபாமந்திரம். (உ-ம்.) "கருதுமான்மமநுநவில்வாம்" (சூத. எக்கி. பூ. எ: க.)

**ஆன்மா**–1.(சித்தாந்தம்.)ஆதியந்தமின்றி நித்தியமாய், சர்வவியாபகமாய், இச்சாஞானக்கிரியா சொரூபியாய், சைதந்நியமாய்,அரூபியாய்,யான் எனதென்னுஞ் செருக்குடையதாய், பின்னுபின்னமாய், பந்தித்த மும்மலத்தோடுகூடியதாயிருப்பது. (பதிபசுபா.க௯.)2. சிவன். (உ-ம்.)"முந்தனையான்மாவென்றும்" (சி. சி. ௪: உ அ) (ஒருபசாரவார்த்தை.) 3. இரண்டு எனப்பொருள்படும் ஒரு குறிப்புமொழி. (சீவானமா. பரமான்மா இரண்டாதலின்) (தைல. தைலவ. கக௯.) 4. நினைக்குஞ்சத்தியும், அறியுஞ்சத்தியுமுடையதாய் மாநுடதேகத்தில் வசிக்கும் அருவப்பொருள். 5. தைசதவாங்காரம்.(உ-ம்.)"அபிமாநம்" பார். 6. மகதத்துவம். (கூர்மபு. பிரகிரு. அ.)

**ஆன்மாநந்தம்**—சீவனானது தன்பிரியத்தைத்தநாதிவிடயங்களில் வைத்து அவைகளை இன்பமாய் அநுபவிக்குமிடத்து அநுபவிப்பானும் அனுபவ்யமுமாகிய இரண்டுமின்றி உதிக்கும் ஆநந்தம். (வேதா. சூ. ௬௪. உரை.)

**ஆன்மார்த்தபூசை** — இட்டலிங்க பூசை. (சைவச. பொது. ௫௦க. உரை.)

**ஆன்மார்த்தலிங்கம்**—இட்டலிங்கம். [ஆன்மார்த்தம் - தன்பொருட்டு.]

**ஆன்மிகம்**— 1. ஆன்மாக்களால்வருவது. (சிவப். உ: கக. உரை.) 2. தன்செயல். (உ-ம்.)"ஆன்மிகத்தாலும், பௌதிகத்தாலும் வரும் பிணிகளை" (சி.சி.உ: ௬௪. சிவஞா.) 3. தன்னுடைய சம்பந்தம்.

**ஆன்மீககன்மம்** — ஆன்மாக்களால் வருந் துக்கம்; அது: சரீரத்தினாலும், மலத்தினாலும் வருவது. அது: தத்தஞ்சரீரத்திலுண்டான வியாதிகளினாலும், மிருகங்களினாலும், பறவைகளினாலும், இராட்சதர்களினாலும், பசாசுகளினாலும், கள்வர்களினாலும், மற்றுள்ள மனிதர்களினாலும் வருஞ் சரீர சுகங்களும்; பிறருடையகல்வியும், சௌந்தரியமும் செல்வமுங்கண்டு பொறாமை, அபிமானங்கெடுதல், எழுந்தது புத்தியாகச்செய்தல், கோபியாய்த்திரிதல் என்னும் இவைமுதலாக உள்ளவை; மனோதுக்கமுமாமென்க" (சிவப். வியா. பக். க௪அ, க௪௯.)

**ஆன்மீட்சணம்**— தேடல்.

**ஆன்மெழுக்கு**—பசுச்சாணம். (தைல. தைலவ.)

**ஆன்வல்லவர்**—பசுக்காக்குமிடையர் (சூ. நிகண். உ: ௬அ.) [ஆ- பசு. வல்லவ- இடையர்.]

**ஆன்ற**— 1. இல்லையான. (உ-ம்.) "அருவியான்றவணியின்மாமலை" (மதுரைக். ௬0௬.) 2. மாட்சிமைப்பட்ட. (உ-ம்.) "தொல்லைநான்முகற்-கான்றதொர்காதலன்"(கந்தபு.மாயைப்.உ௫.) 3. விசாலமான. (உ-ம்.) "தூயதெண்புனலாயான்றதொல்கடலமுவநண்ணி" (கந்தபு. மூன்றா. க௬எ.) 4. விரிவான. (உ-ம்.) "ஆன்றதொன்மறைகளெல்லாமார்த்தன" (கந்தபு. திருவவ. க௯.)

**ஆன்றது**—மாட்சிமைப்பட்டது. (உ-ம்.)"ஆன்றதோர்சீவன்முத்திப் பதத்தினையடைந்து" (ஞானவா. வைராக் க௫.)

**ஆன்றமைதல்**—அடங்கியமைதல். (உ-ம்.) "துகிலத்தெழுது பாவையிலான்றமைபுலத்தினன்" (கந்தபு. குமாரபுரி. ௬௪.)

**ஆன்றல்**—1. அகலம். (சூ. நிகண். அ: கஉ.) 2. மாட்சிமை. (உ-ம்.) "ஆன்றதவச்செந்நெறியின் வைகுந்திலதவதியார்" (பெரியபு. திருநாவு. ௪க.) 3. மிகுதல். (உ-ம்.) "பாடான்றவிந்தபனிக்கடல்" (மதுரைக். ௬உக.)

**ஆன்றவர்**–1. அறிவுடையார். (உ-ம்.,"ஆன்றவரடக்கம்போல" (கலி. ௬உ.) 2. அமைந்தவர். (மணிமே.)

**ஆன்றார்**—1. அறிவுடையார். (உ-ம்,) "ஆன்றார்கேட்கிற்செவிபுதைக்கும்" (பாரத. சூது. உக௯.) 2. படித்தவர்.

**ஆன்றிசின்**---அமைவாயாக. (ஐங்குறு.)

**ஆன்று**—1. அடங்கி, நீங்கி. (உ-ம்.) "புகல்சேரவொலியான்று" (கலி. கஉக.) 2. பிரிதல். (உ-ம்.) "மாநிலமான்றுகீண்டிட" (கந்தபு. காவலர்வதை. எ.) 3. விசாலித்து. (உ-ம்.) "அத்த

மேல்கிரியுதயமால்வரைத்துணையான்று" (கந்தபு. சூரபன்மன். ளஎ௨.)

**ஆன்றோர்**—ஆன்மூர். (உ-ம்.) "செம்மைகொளுணர்விஞன்றோர்தெளிகுவர்" (கந்தபு. தவங்கா. ௨௬.)

**ஆன**— 1. அந்த. இது, அன்ன என்பதன் விகாரம்போலும். (உ-ம்.) "ஆனகாலையரியயனுடொணு"(கந்தபு.தெய். ௨௧௬.)2. ஆகிய.(உ-ம்.) "மேலானவிரதமும்" (பாரத. ஆரம்போ. ௨0.)

**ஆனகம்**—சுரை.

**ஆனஞ்சு**—பஞ்சகவ்வியம். (உ-ம்.) "இகவானஞ்சுமாடி" (கம்பரங். ௨௫.) [ஆன் - பசு. அஞ்சு.]

**ஆனத்தேர்**—விடத்தேர்ச்செடி.

**ஆனது**— 1. அன்னது. (உ-ம்.) "ஆனதோரமையந்தன்னிலாடினரமரர்மாதர்" (கந்தபு. திருக்கல். எ௨.) 2. ஆகியதெனப்பொருள்படும் ஒரு வினைப்பெயர். (உ-ம்.)"இயக்கர்கோனுறைபுளானதும்" (கந்தபு. வரைபுனை. ௧0.) 3. நிகழ்ந்தசெய்தி. (உ-ம்.) "ஆனதுரைசெய்துமென" (திருவிளை.மாயை.௧0.)4.பொருந்தியது.(உ-ம்.) "மறையெனுந் தரங்கவேலையி-லானதொர்பொருளினை" (கந்தபு. பாயிர. ௪௬.)

**ஆனந்தபைரவம்**-ஒருவகை மருந்து.(உ-ம்.) "ஆனந்தபைரவம்பினடர்சுத்தபைரவம்" (பதார்த்தகுண. ௧௨௬அ.)

**ஆனபடி**— அப்படி. (உ-ம்.) "ஆனபடியேயமூலமைக்க" (கந்தபு. அசுரேந்திர. ௧௧.)

**ஆனமை**—ஆனதன்மை. (உ-ம்.) "ஆனமையான்மேலான" (சி. சி. அ: ௨௬.)

**ஆனர்**— ஆயினர்.(உ-ம்.)"யெத்தனைதந்தையுந்தாயருமானரென்றெண்ணுவனே" (திருநூற். ௬௧.)

**ஆனல்**— நீங்குதல்.

**ஆனவை** — ஆகியவை. (உ-ம்.) "எண்ணில் வேதிகையானவைபுரிந்தனன்" (கந்தபு. வரைபு. ௧௫.)

**ஆனு**— 1. அடங்காத, அமையாத. (உ-ம்.) "நம்பர்பாலானுப்பேரன்புமிக" (பெரியபு. தடுத்தா. ௧௧௫.) 2. கெடாத. (உ-ம்.) "ஆனுவமுதே" (கந்தரனு. ) 3. நீங்காத. (உ-ம்.) "ஆனுவறிவினவர்கட்கென்னுங்கொல்" (யாப். காரிகை. அவையட.) [இது ஓர் எதிர்மறைப்பெயரெச்சம்.]

**ஆனுமை**— 1. அமையாமை. (உ-ம்.) "யானறியளவையினேத்தியானுது" (திருமுரு. ௨எஎ.) 2. உத்திராடம். 3. நீங்காமை. (உ-ம்.) 'ஆனுமையாயகிலகிலபேதமனைத்தினுள்ளுநின்றாணுகி" (தாயு. பன்மா. ௫.)

**ஆனுயநாயனுர்**— அறுபத்துமூன்றுநாயன்மாருள் ஒருவர்.

**ஆனுயர்**—பசுமேய்க்குமிடையர். (உ-ம்.)"ஆனுயர்கூடியமைத்தவிழவை"(நாலாயிர. முதலா. அலம்பாவெருட். ௪.)

**ஆனுலும்**—ஆயினும். (உ-ம்.) "மனைவிவீந்தாளானுலும்" (கூர்மபு. வருணைச். ௨0௪.)

**ஆனி**—1. உத்திராடநட்சத்திரம். (சூ.நிகண். ௧: எ௬.)2. எல்லை. 3. ஒருமாதம். (உ-ம்.)"ஆனிமுதனுளசீதி" (சைவச. பொது ௧௫.) [மூலநட்சத்திரத்தின் பெயர்பற்றியே ஆனியென்ப, சேட்டையில்வரும் உவாமதிபற்றியே ஆரியத்தில் சேட்டியமென்றுஇம்மாசம்வழங்கும். ] 4. கேட்டைநட்சத்திரம். 5. கேடு. (சூ. நிகண். ௧௧. ௲௧ர. ௪.) 6. பொருந்தாநதி. 7. மூலநட்சத்திரம். (சூ. நிகண். ௧: எ௫. ) 8. வாளலகு. 9. வெட்டுக்குருத்து.

**ஆனித்திருமஞ்சனம்**— ஆனிமாத உத்திரத்திலே நடராச மூர்த்திக்குச் செய்யும் அபிடேகம். [ஆனி - ஒருமாதம். திருமஞ்சனம் - திருவபிடேகம்.]

**ஆனித்தூக்கம்**— ஆனிமாதத்திலே காற்றடங்கியிருக்குங்காலம்.

**ஆனிரை**—பசுக்கூட்டம். (உ-ம்.) "ஊரானிரையினுடன்புக்கபோது"(பெரியபு. சண்டேசு. ௧எ. )

**ஆனிலை**—பசுக்கொட்டில். ( உ-ம். ) "தேவகுலநீழலானிலை - வெண்பலி" ( ஆசாரக்கோ. ௨அ.) [ஆன்-பசு. நிலை - நிற்குமிடம்.]

**ஆனும்** — ஆயினும் என்பதில் யகர விகரந்தொக்குவந்த ஒருவிகாரமொழி. (உ-ம்.) "வால்பெறமூளைத்த கூன்கோடானும்"(கல்லா. ௨0.)

**ஆனேறு**—எருது. (உ-ம்.)"ஆனேற்றுக்கொடியோன்போலெதிரியவில்வமும்" (கலி. ௨௬.)

**ஆனை**— 1. அத்திமரம். 2. யானை. (உ-ம்.) ஆனைமும்மதமாடியகாடெலாம்" (சிந்தா. இலக். ௨0௧.)

**ஆனைக்கண்**—1. அதிகங்கனிந்துபழுதுற்ற பழங்களிலே தோன்றுந் திரண்ட கரும்புள்ளி. (உ-ம்.) "பலாப்பழம் ஆனைக்கண்பட்டது" 2. யானையின்கண்.

**ஆனைக்கள்ளிழலையான்**—ஒருபூண்டு.

**ஆனைக்கற்றலை**—ஒருமீன்.

**ஆனைக்காயம்**—ஆனைப்பெருங்காயம்.

**ஆனைக்கூடம்**—யானைகட்டுமிடம்.

**ஆனைக்கொம்பன்** — 1. ஆனைவாழை. 2. ஒருவகைநெல்.

**ஆனைக்கோடன்சுரை**— ஒருவகைச்சுரைக்கொடி.

ஆனைச்சப்பரம்—ஆனைமேற்றவிசு.
ஆனைச்சிரங்கு—பெருஞ்சிரங்கு.
ஆனைச்சிலந்தி—ஒருவகைநோய்.
ஆனைச்சீரகம்—ஒருபூண்டு.
ஆனைச்செவியடி—1. யானையின்செவியடி. 2. ஒருபூண்டு.
ஆனைத்தடிச்சல்—ஒருபடர்கொடி.
ஆனைத்தடிப்பு—ஒருபூண்டு.
ஆனைத்திசை—(சோதிடம்) வடக்கு.
ஆனைத்திப்பலி—ஒருவகைத்திப்பலி.
ஆனைத்தீநோய்— பெரும்பசியை விளைப்ப தொருவியாதி. (மணிமே.)
ஆனைத்தும்பை—பெருந்தும்பைச்செடி.
ஆனைநெருஞ்சி—பெருநெருஞ்சிப்பூண்டு.
ஆனைநெருஞ்சில்— பெருநெருஞ்சில், புளியரளை.
ஆனைப்படுவன்—ஒருவகைநோய்.
ஆனைப்பாகன்—யானைசெலுத்துவோன்.
ஆனைப்பிச்சான்—ஒருபூண்டு.
ஆனைப்பேன்—கத்தரிச்செடியிலுண்டாகும் ஒருபூச்சி.
ஆனைமஞ்சள்—ஒருவகைமஞ்சள்.
ஆனைமயிர்க்காப்பு — ஆனையின் வாலின் மயிரினாற்செய்தணியுங்காப்பு.
ஆனைமலை — மதுரைக்குப் பக்கத்திலுள்ள ஒரு மலை.
ஆனைமீன்—பெருமீன். (சூ. நிகண். ௩: ௭௧.)
ஆனைமுகன்— 1. கசமுகாசுரன். 2. விநாயகன். (உ-ம்.) “ஆனைமுகனுதியரையர்ச்சிக்க” (சைவச. பொது. ௫00.)
ஆனையறுகு—ஒருவகையறுகம்புல்.
ஆனையறையும்புள்— யானையையடிக்கும் பறவை.
ஆனையிலத்தி— யானையின்மலம். [ஆனை - யானை. இலத்தி - மலம்.]
ஆனையிறஞ்சிப்புள்— } யானைவிழுங்கும்
ஆனையுண்குருகு— } பறவை.
ஆனையூர்தி— 1. இந்திரன். 2. ஐயனார். [ஆனை - யானை. ஊர்தி - ஊர்வோன்.]
ஆனைவணங்கி — தேட்கொடுக்குப்பூண்டு. [இதன்பூயானைத்துதிக்கைபோலும் என்பர்.]
ஆனைவாழை— ஒருவகைவாழை.
ஆனைவிழுங்குமீன்— திமிங்கிலமீன். (சூ. நிகண். ௩: ௭௧.)
ஆனைவீரர்— அரசனுக்குரிய எண்வகைத் துணைவரிலொருவகையார்.
ஆனோர்—ஆர் எழுவாயுருபு. (உ-ம்.) “பெற்றிடுங்குரவரானோர்” (கந்தபு. மேருப். ௬௫.)





# இ

இ— [இது தமிழ்ப்பாடையின் வர்ணமாலையில்வருமூன்றாமெழுத்து. உயிர் முயற்சியாற்பிறக்கும் எழுத்துக்களுள், அண்பல்லடியை நாவினது விளிம்பு பொருந்தப்பிறக்கும் ஒருயிர்க்குற்றெழுத்து. இவ்வெழுத்து ஆரியமொழியுள் இரண்டு மெய்களிணைந்து ஓரெழுத்துப்போல நடக்கும்போது அவ்விணைந்த எழுத்துக்களிற்பின்னின்ற யகரத்திற்கும் ரகரத்திற்கும் லகரத்திற்கும் முதலில் தியாகம் கிரமம் கிலேசம் என்பனபோலவரும். இன்னும் இராமன் என்பதிற்போலவும் இயக்கன் என்பதிற் போலவும் இலாபம் என்பதிற்போலவும் அங்ஙனமிணையாத ய ர ல என்னு மெழுத்துக்களை முதலிலுடைய ஆரியமொழிக்கு முதலிலும் வரும்.

1. அன்பு.
2. ஆச்சரியம்.
3. இகழ்ச்சி.
4. இருதிணை முக்கூற்றொருமையில்வரும் ஒரு விகுதி. (உ-ம்.) "செவியிலி இவன்; செவியிலி இவள்; செவியிலி இது."
5. உயர்திணையாண்பால் பெண்பால்களில் வரும் ஒரு பெயர் விகுதி. ( உ-ம். ) "வில்லி; திணிதோளி; [மீளி, மருளி, வெகுளி என்பனவற்றிற்போலத் தொழிற்பெயர் விகுதியாயும் வரும்.]
6. ஒரு பெயர்ச்சொல்லின் அகத்தாவது புறத்தாவது நின்றண்மைப்பொருளைச்சுட்டிவரும் ஓரிடைச்சொல். (உ-ம்.) இவன் (அகம்) இக்கொற்றன் (புறம்.)
7. ஒரு முன்னிலையேவலொருமைவிகுதி. (உ-ம்.) "நிற்றியீண்டெனாநிறவிப்போயினாள்" (கந்தபு. வள். கசக.)
8. செய்து என்னும் வாய்பாட்டு வினையெச்சப்பொருள்கொடுத்துவரும் ஒருவிகுதி.(உ-ம்) "நிறுவிப்போயினாள்" (கந்தபு. வள். கசக.).
9. தெரிநிலைகுறிப்புவினைகளில் வரும் ஒரு முன்னிலைவிகுதி. (உ-ம்.) உண்டி; வில்லி.
10. வினைமுதற்பொருளிலாவது செயப்படுபொருளிலாவது கருவிப்பொருளிலாவது வரும்-ஒரு படர்க்கைப்பெயர்விகுதி. (உ-ம்.) அலரி; ஊருணி; மண்வெட்டி.

**இஃது**—இது. (உ-ம்.) " இந்தாவிஃதோரிளங்குழவி" (கந்தபு. வள். ருரு.) [இச்சுட்டுப்பெயர்உயிரையும் யகர மெய்யையும் முதலாகவுடைய மொழிவரும்பொழுது ஆய்தங்கெடாது நிற்குமென்றும், மற்றைய விடத்தேதெல்லாங் கெட்டுநிற்குமென்றுஞ்சொல்வர்.]

**இக்கட்டு** — 1. இடநெருக்கம். 2. தடை. 3.தரித்திரம்.(உ-ம்.)"இக்கட்டாய்வருவதல்லாற் செல்வமுண்டோ" (தண்ட. எசு.) 4. துன்பம். 5. வெல்லக்கட்டி. [இக்கு - கரும்பு. அட்டு - அடுதல்.]

**இக்கணம்**—இந்தக்கணப்பொழுது. (உ-ம்.) "இக்கணமிடையூறும்"(பாரத. மணிமான்.எச.) [இக்ஷண.]

**இக்கரை**—1. இந்தக்கரை. 2. இந்துப்பு.

**இக்கவம்**—கரும்பு. [இக்ஷவ.]

**இக்கன்**—மன்மதன். (உ-ம்.) "சேதிக்கனைத்துகளதாக்குநோக்கினன்" ( கந்தரங். கூச. ) [கரும்புவில்லோன் என்றபடி.]

**இக்கா**— 1. கொட்டாவி. (சீவரட். கஅச.) 2 விக்கல். (சீவரட். ககூஉ.)

**இக்கி**—மன்மதன். [ கருப்புவில்லையுடையனென்றபடி.]

**இக்கிரசம்**—கருப்பஞ்சாறு. [இக்ஷு; இரசம்.]

**இக்கிரி**—ஒரு முட்செடி. [ இது சிங்களநாட்டுவழக்குஞ்சொல்லென்பர்.]

**இக்கு**—1. ஆபத்து. 2. ஒருசாரியை. (உ-ம:) "ஆடிக்குக்கொண்டான்"(தொல்.எழுத்.உசஅ.) [ இவ்வுதாரணத்திற்குவ்வை ஏழாவதாக்கிச்சாரியைப்பேற்றை நீக்குவர் இக்காலத்தார். ] 3. கரும்பு. (உ-ம்.) "இக்கொடுதென்னங்காயும்" (கந்தபு. காவிரிநீங்கு. உரு.)4. கள். (சூ. நிகண். சு: ரு௦.) 5. தடை. (உ-ம்.) "இக்குவைக்குமாடைவீழ" (திருப்பு. கூகரு.)6. மூங்கில். (உ-ம்.) "இக்கெனவினையதீயோனிறப்பவென்றன்னி" (கந்தபு. வரவுகேள்வி. உ.) [இந்த உதாரணத்தில் இக்கென என்பதற்குவிரைவிலெனப்பொருள்கூறுவாருமுண்டு. இக்கெனல் - ஒருவிரைவுக்குறிப்பு.] [3. இக்ஷு.]

**இக்குமேகம்**—சலரோகம். [இக்ஷுமேஹ: இக்ஷு - கரும்பு. மேஹ - மூத்திரம்.]

**இக்குவாகு** — அயோத்தியிலேயரசாண்ட சூரியவமிசத்து முதல் வந்த ஓரரசன். இவன் வைவச்சுவதமனுவின்மகன். இவன் சந்ததியாரொருவனுக்கும் இப்பெயருண்டு. [இக்ஷ்வாகு.]

**இக்குவிகாரம்**— சருக்கரை. [இக்ஷுவிகார.]

**இக்குறி**— 1. அங்கியநாள். 2. இச்செலவு. 3. இம்முறை. 4. இவ்வடையாளம்.

**இக்கூறு**—1. அந்நியநாள். 2. இச்செலவு. 3. இப்பங்கு. 4. இப்பிரகாரம்.

**இக்கேனல்**—ஒரு விரைவுக்குறிப்பு.

**இக்ஷோ**—ஒரதிசயவிரக்கச்சொல்.

**இக்ஷி**—கஸ்தூரிமஞ்சள்.

**இக** — 1. இக வென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும். 2. இங்கே, இவ்விடத்து. (உ-ம்.) "இகவானைஞ்சுமாடி" (கம்பரந்தா. உ௫.) 3. இந்தக்காலத்து எனப்பொருள்படுமொருவடமொழியவ்வியயம். 4. ஒருமுன்னிலை யசைச்சொல். (உ-ம்.) "கண்டேறையூரகாணிக" (நன். இடை. உக. உரை.) [2, 3. ஐஹ.]

**இகசுக்கு**—நீர்முள்ளிப்பூண்டு.

**இகடம்**—மூங்கில்முளை. [ஐகடம்.]

**இகத்தல்**—1. கடத்தல். (உ-ம்.) "சேணிகந்துவிளங்கும்" (திருமுரு. கக.) 2 நடத்தல். (பிங்கல. ௲௩௫.) 3. நீங்கல். (உ-ம்.) "பற்றிகந்துகரணமொருநெறியேசெல்ல" (திருவிளை. அங்க. உ௮.) "முனிவிகந்துயர்ந்த" (நன். சிறப்புப்பா.) 4. பழித்தல். 5. புறப்படுதல். 6. பொறுத்தல். (பிங்கல. ௲௩௫.) 7. போதல். 8. மீறுதல். (உ-ம்.) "நெறியிகந்துதம்மரபினன்னீரலசெய்யும்" (காசிகாண்ட.)

**இகந்தன்று**— இகந்தது, கடந்தது. (உ-ம்.) "இளமையினிகந்தன்றுமிலனே" (குறிஞ்சிப். உ௪௪.) [றுவ்விகுதி, தகர ஒற்றிடைநிலையின் முன் அன்சாரியைபெற்றுவந்தது.]

**இகந்துபடுதல்**—1. கடந்துபோதல். 2. தவறுதல். 3. நிராகரிக்கப்படுதல். 4. பிறழுதல். (உ-ம்.) "எய்தியதிகந்துபடாமறகூறினர்" (நன். உயிரீற்று. உ௯. இராமாநு.)

**இகப்பு**—பழித்தல். (உ-ம்.) "இகத்தல்" பார்.

**இகபராசாதநம்**— இம்மைமறுமைக்கடுத்தகடமைகளைநடப்பித்தல். [ஐஹபரஸாதநம்.]

**இகபரசுகம்**— இம்மைக்கும் மறுமைக்குமுரியசுகம். [ஐஹபரஸுகம்.]

**இகபரம்** — 1. இப்பிறப்பும் மறுபிறப்பும். (உ-ம்.) "இன்னலெனும்பெருங்கடலின்கரைநின்றேறி யிகபரத்தும்போகநுகர்ந்திடுவரன்றே" (பிரமோ. சோமவார. எ.) 2. இம்மையும் மறுமையும்; அது பூலோகபரலோகாநுபவம்.

**இகம்**—1. இம்மை. (உ-ம்.) "இகமுடனுத்தரத்தில்வருபோகவிராகம்" (வேதா. சூ.) 2. இம்மைக்குரியபோகம். (உ-ம்.) "இகமொடுபரமும்வீடும்" (கந்தபு. திருவிளை. ௬௦௫.) 3. இவ்விடம். 4. உலகம், பூமி. [1, 2, 3. ஐஹ.]

**இகரக்குறுக்கம்**—குற்றியலிகரம். (வ-று.) "நாகியாது".

**இகரம்**—1. இ என்னும் எழுத்து. (உ-ம்.) "அகரமுமிகரமுமுகரமும்" (இலக்கணவி. ௬௯எ.) [இ; கரம்-ஒருசாரியை.] 2. சந்தம்.

**இகல்**—1. இக லென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 2. இருவர்தம்முட்பொருது வலிதொலைதற் கேதுவாய மாறுபாடு. (வள். அ௬-ம்-அதி.) 3. ஒப்பு. (சூ. நிகண். அ.எஅ.) 4. பகை. (உ-ம்.) "துன்னரிகலறநூறி" (நன். சிற. பாயிரம்.) 5. பெருங்காப்பியவுறுப்புளொன்று; அது செருச்செய்கையைக் கூறுவது. (உ-ம்.) "மந்திரந்தூதுசெலவிகல்வென்றி" (தண்டி. எ.) 6. போர். (சூ. நிகண். கக: க.) 7. முட்டு. (உ-ம்.) "சைவாகமங்களுண்ஞானபாதப்பொருளினிகலறுத்து" (சிவஞானபாஷ்யம். க பக்.) 8. வலி. (உ-ம்.) "ஒரு வனிகன் மிகுந்-திடமதிப்பெயரினன்" (சேதுபு. பாவநா. க௪.)

**இகல்வு**—1. எதிரிடை. 2. இகலுதல்.

**இகல**—1. மறுதலையாகவெனப்பொருள்படும் ஒரு வினையெச்சம். 2. உவமைச்சொல். (சூ. நிகண். அ. )

**இகலல்**—1. எதிர்த்தல். (உ-ம்.) "இரண்டு குருவிகள் இகலிப்பாடுகின்றன" (வழக்.) 2. ஒப்பாதல். (உ-ம்.) "குலிகமோடிகலியவங்கை" (நன். விரு. பெயரி. கஉ.) 3. பகைத்தல். (உ-ம்.) "எல்லைமை மந்தனிகன்று சென்றறைகூவினன்" (சேதுபு. சேதுவந்த. கஉ.) 4. பொருதல். (உ-ம்.) "எதிர்முனைந்தனரிகலியே" (பாரத. க-ம். போர். ௬௫.) 5. வாக்குவாதஞ்செய்தல்.

**இகலன்**—1. கிழநரி. 2. நரி. (உ-ம்.) "மதுரையாளும்வழுதிக்கிகலனைக்-குதிரையாகக்கொடுவந்தகொற்றவா" (மதுரை. பதிற்று. எஉ.) 3. பகைவன். 4. விகலாத்தர். (உ-ம்.) "இந்த விகலாத்தருக்குச்சொலிகனென்றுமிகலனென்றும்பேர்" (த. நி. போ. உஎ௫.)

**இகலாட்டம்**—1. போராட்டம். 2. முரணுகை. [இகல்; ஆட்டம்.]

**இகலி**—1. ஒருவினையெச்சம். 2. சபதம். 3. சேத்துமம். (இராசவைத்.) 4. பெருமருந்துப்பூண்டு.

**இகலுதல்**—இகலல்.

**இகலோகம்**—இவ்வுலகம். (உ-ம்.) "எண்ணுமிகலோகத்தே" (சி. சி. அ: ௯௧.) [ஐஹலோக; ஐஹ - இவ்விடம்.]

**இகலோர்**—பகைவர். [ஆ, ஓவாயிற்று.]

**இகவு**—இகழ்ச்சி. [இக; உ.]

இகழ்—1. இகழெனேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 2. நிந்தை. (உ-ம்.) "இகழறுசீற்றத்துப்பின்" (காஞ்சிபு. கச்சி. உக.)

இகழ்ச்சி—1. இழிவு. 2. குறைவு. (உ-ம்.) "இகழ்ச்சியொன்றுனுமின்றி" (பெரியபு. தடுத். தா. கக.) 3. மறதி. (உ-ம்.) "இகழ்ச்சியிற்கெட்டாரை" (வள். ருகூ.) 4. வெறுப்பு. (உ-ம்.) "நன்றுதீதிகழ்ச்சிவேட்கைநட்பிகல் விளக்குமாயை-வென்றவன்" (திருவிளை. உக்கிரபா. ரு.) [இகழ்-சி.]

இகழ்ச்சித்தாநம்— இலக்கினத்துக்கு ஆறுமிடம். (சோதிடகடல்.)

இகழ்ச்சிப்புகழ்ச்சி—புகழ்மொழியானிகழ்தல்; அது: பேரில்லாளொருவனைநோக்கியிவன் பேராளியென்பதுபோல்வது.

இகழ்ச்சியணி—ஒரலங்காரம்; அஃது: ஒன்றின்குணத்தாலுங் குற்றத்தாலும் மற்றொன்றுக்கவையுண்டாகாதிருப்பதைக்கூறுவது. (உ-ம்) "மற்றொன்றினுக்கு மொன்றின்குணங் குற்றமருவிலதைச்-சொற்றலிகழ்ச்சியணி. குவல.எ௦.)

இகழ்ச்சியில்புகழ்ச்சி— ஓரணி; அஃது: இகழ்ச்சியின்றிப்புகழ்தல். [சத்தியத்தில் அரிச்சந்திரன் என்பதிற்போல.]

இகழ்ச்சியுட்புகழ்ச்சி — ஓரணி; அஃது: இகழ்ச்சியும் புகழ்ச்சியுங்கலந்து கூறல். [இவர் சற்றேவாசித்தவர் என்பதிற்போல.]

இகழ்ச்சிவிலக்கு— ஓர் அலங்காரம்; அது: காரியத்திற்குரியகாரணத்தை இகழ்ந்துவிலக்குவது. (வ-று) "ஆசைபெரிதுடையேமாருயிர்மேலப்பொருண்மே- லாசைசிறிதுமடைவிலமாற்- றேசு - வழுவாநெறியின்வருபொருண்மேலண்ண- லெழுவாயொழிவாயினி" இங்கே அண்ணலே,நீசெல்க அல்லதுதவிர்க என்றுளாயினும் நின்செலவால் உயிரிழப்பேம்; உயிர்மேலன்றிப்பொருண்மேலெமக்குவிருப்பில்லை என்பதனுற்செல்லுகைக்குக் காரணமானபொருளை யிகழ்ந்துகூறிச்செல்லுதலை விலக்கியவாறு. (தண்டி. சச. உரை.)

இகழ்தல்— 1. தள்ளுதல். (உ-ம்.) "எத்திறைப்பத்திசெய்தேனென்னைநீ யிகழவேண்டா" (தேவாரம். திருநாவு. கோயி. நேரி.) 2. நிந்தித்தல். 3. மிகையாயினசெய்தல், மிகையாயினசொல்லுதல். (வள். கருக. பரி.)

இகழ்பு—இகழ்ந்து. (உ-ம்.) "இகழ்பாடுவோரெருத்தமடங்க" (புறநா. ச௦: சு.)

இகழ்வார்—நிந்தை செய்வார். (உ-ம்.) "இகழ்வார்ப்பொறுத்தறலை" (வள். கருக.)

இகழ்வு—நிந்தை.

இகழாவிகழ்ச்சி — ஒரலங்காரம்; அஃது: புகழ்வதுபோலப்பழித்தல்.

இகழுதல்—இகழ்தல்.

இகழுநர்—இகழ்ந்திருப்போர். (உ-ம்.) "இகழுநர்ப்பிணிக்குமாற்றலும்" (மலைபடு. எகூ.)

இகளை—வெண்ணெய். [ஐஹவா: ஐஹ-இன்று. வா - ஒடுக்கம்.]

இகன்றவர்—பகைவர். (உ-ம்.) "இகன்றவர்ச்செற்று" (பாரத. வாரணாவத. ககூ.)

இகனி—வெற்றிலை.

இகாகநம்—இந்நாள், இப்பகல். [ஐஹ - இந்த. அஹநு - பொழுது.]

இகாசம்—பழிகூறல்.

இகாமுத்திர— 1. இம்மையினும் மறுமையினும் 2. இங்குமங்கும். [ஐஹ-இங்கே. அமுத்ர - அங்கே.]

இகாமுத்திரார்த்தபலபோகவிராகம்—சாதனசதுட்டயத்தின் இரண்டாவது; அஃது: இம்மையினும் மறுமையினும் வரற்பாலனவாய அர்த்தபலபோகங்களினுண்டாயவெறுப்பு. (வாசுதேவ. பக். கரு.) [ஐஹ, அமுத்ர, அர்த்த, பல, போக; விராகம் - வெறுப்பு.]

இகி— ஆச்சரியம் இகழ்ச்சி மகிழ்ச்சியென்னுமிவைகளின்குறிப்பை அல்லதுகளியாட்டின்குறிப்பை உணர்த்தும் ஒருவடமொழியவ்வியயம். [ஹிஹி.]

இகிதம்——இன்பம்.

இகு— 1. இருவென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும். 2. வீழ்ச்சி. (ஐங்குறு.) [இஃது ஒருமுதனிலைத்தொழிற்பெயர்.]

இகுசு—மூங்கில். [இக்ஷு என்பதின் திரிவுபோலும்.]

இகுடி—1. ஆதொண்டை. 2. காற்றோட்டிக்கொடி.

இகுத்த—சொரிந்த, சொரியப்பட்ட. (உ-ம்.) "இகுத்தகண்ணீர்" (புறநா. கசாகூ: கரு.)

இகுத்தல்— 1. அழித்தல். 2. அழைத்தல். (சூ. நிகண். கக: எ.) 3. இரித்தல். (சூ. நிகண். கக: எ.) 4. ஈதல். (சூ. நிகண். கக: எ.) 5. எறிதல். (உ-ம்.) "என்னைதிருநெற்றியிலிகுத்தவடுவென்றான்" (பாரத.வெளிப்பாட்.ச.) 5. ஒலித்தல். (உ-ம்.) "மழையெதிர்படுகண் முழவுகணிகுப்ப" (மலைபடு. ருகூஉ.) 6. குழைத்தல். 7. கொல்லல். (சூ. நிகண். கக: எ.) 8. சொரிதல். (உ-ம்.) "இகுத்தகண்ணீர்நிறுத்தல்செல்லான்" (புறநா.

கசஅ. கரு.) 9. தாண்டல். 10. தாழப்பண்ணல். (உ-ம்.) "கணங்கொள்கூளியொடுகெதுப்பிகுத்தசைஇப்-பிணந்தின்யாக்கைப்பேய்மகள்" (பட்டினப்பாலை. உ௫௬.) 11. துடைத்தல். 12. புடைத்தல், அறைதல். (உ-ம்.) "முரசுகடிப்பிகுப்பவும்"(புறநா. கரு௮. க.) 13. புறங்காட்டச்செய்தல். (சூ. நிகண். கக: எ.) 14. மறித்தல். 15. யாழ்வாசித்தல். (உ-ம்.) "நும்மருப்பிகுத்துணைமின்" (மலைபடு. ௬கக.) 16. வகுத்தல். 17. வீழ்த்தல். (சூ. நிகண். கக: எ.)

இகுதரும்— தாழ்ந்துவிழும். (பத்து. மலை.)

இகுதல் —இறுதல். (கலி. கஎ.)

இகுப்ப—1. அறைய. (உ-ம்.)"முரசுகடிப்பிகுப்பவும்" (புறநா. கரு௮: க.) 2. ஒலியாநிற்க. (பத்து. மலை. ௫௬உ.)

இகுப்பம்— திரட்சி. (உ-ம்.) "இருங்கலிகுப்பத்திறுவரைசேராது" (மலைபடு. ௬௬எ.)

இகும்— முன்னிலைமொழியைச்சார்ந்துவரும் ஓரசைச்சொல். (உ-ம்.) "மெல்லம்புலம்பகண்டிகும்" (தொல் சொல், உஎ௪. சேனு.)["கண்டிகுமல்லமோ" எனத்தன்மைக்கண்ணும். "புகழ்ந்திகுமல்லரோபெரிதே" எனப்படர்க்கைக்கண்ணும்வரும். (தொல். சொல். உஎ௫. சேனு.)

இகுள்—1. ஆரல்மீன். 2. இடி. (உ-ம்.) "இகுடனித்தனிகான்றனவெங்குமே" (இரகு. ஆற்று. ௪.) [இகு - எறிதல்] 3. கார்த்திகைநாள்.

இகுளி — 1. இடியேறு. (பிங்கல. ௬0.) 2. கொன்றைமரம்.

இகுளை—1. சுற்றம். (சூ. நிகண். உ: ௫௬.) 2. தோழி. (உ-ம்.)"சொற்றிடுமிகுளையைச்சுளித்துநோக்கியே" (கந்தபு. வள்ளி. கஉ௫.) 3. நட்பு. (சூ. நிகண். ககஅ. கக: ௬.)

இகூஉ—இகுத்து, வீழ்த்தி. (பதிற்று. ௬0.)

இகை— இகையென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும்.

இகைத்தல்—1. கொடுத்தல். 2. நடத்தல்.

இங்கண்—இவ்விடம். (உ-ம்.)"இங்கணுறைதவிழுக்கன்றோ" (நளவெ. கலிநீ. ௬0.)

இங்கம்—1. அறிவு. 2. ஆச்சரியம். 3. உள்ளக்கருத்தைவெளிப்படுத்து மங்கசேட்டை. 4. நோக்கம். [1, 2, 3. ஐஙு.]

இங்கரி—கஸ்தூரி.

இங்காரம் —கரி. (வட. நைஷ. க-வது.)

இங்காலம்—கரி. [ஐஙாலு.]

இங்கிசை—1. கொலை. 2. சங்கையீனம். 3. தீங்கு. [ஹிம்ஸா.]

இங்கிதகவி—1. இனிமையானகவி. 2. இனிமையானகவிபாடுவோன். 3. பாட்டுடைத்தலைவன் கருத்தைக் குறிப்பினாலறிந்துவிளக்குங்கவி. [ஐஂகிதகவி.]

இங்கிதகாரன்—1. இங்கிதஞ்செய்கிறவன். 2. இனியவைகூறுவோன். [ஐஂகிதகாரு.]

இங்கிதஞ்ஞன்— இங்கிதத்தைவிளக்குஞ்சாமார்த்தியமுடையவன். [ஐஂகிதஜ்ஞ.]

இங்கிதம்—1. அடையாளம். 2. அசைதல். 3. அபிப்பிராயம். 4. இனிமை. 5. உள்ளக்கருத்தைவெளிப்படுத்திக் குறிப்பானிகழும் உறுப்பின்செழுழில். 6. நெஞ்சு முதலியவற்றின்றுடிப்பு. 7. போதல். [ஐஂகித.]

இங்கிரி—கஸ்தூரி.

இங்கினும்—இங்குநின்றும். (உ-ம்.) "என்னவாறவன்போனவாறிங்கினும்போன" (திருவிளை. விறகு. ௬உ.)

இங்கு—1. இவ்விடம். (உ-ம்.) "இங்கெளிதுபோந்தீர்" (சிவதரு. சுவர்க்கநரக. கூ௮.) 2. பெருங்காயம். (உ-ம்.) "இங்குத்தங்கிப்போம் பாத்திரமும்" (சி. சி. க0: ௬.)[2. ஹிஂகு.]

இங்குதம்—ஒருமரம். [ஐஂகுதஂ.]

இங்குதாதி—பீதரோகிணிப்பூண்டு.

இங்குதாரி— நூற்றிருபதுலோகபேதங்களுள் ஒன்று. (பேரோசனை.)

இங்குநாழ்—பீதரோகிணிப்பூண்டு.

இங்குமம்—இங்கு.

இங்குராமம்—பெருங்காயம்.

இங்குலிகம்—1. சாதிலிங்கம். (சூ. நிகண். ௬கஎ.)2. சிவப்பு. [ஹிஂகுலிக.]

இங்குளம்—1. சாதிலிங்கம். 2. சிவப்பு. 3. பெருங்காயம். [1, 2. ஹிஂகுல.]

இங்குளி—பெருங்காயம். (உ-ம்.) "வாசனைவயத்தான் இங்குளிவாங்குங்கலம்போல வந்துதாக்கும்" (சிவஞானபோ. கஉ சூ. வெண்பா. க. சிவஞா.) [ஹிஂகுலி.]

இங்ஙன்—1. இப்படி. (உ-ம்.) "ஒப்பவிரித்துரைப்பரிங்ஙன்பொய்மெய்யென்னவொன்றிலையொன்றெனப்பார்ப்ப தொவ்வாதார்க்கும்" (தாயு. ஆகார. கூ.) 2 இவ்விடம். (உ-ம்.) "இங்ஙனியற்றியமகத்தின்மேவி" (கந்தபு. யாகசங். கஉஎ.)

இங்ஙனம்—1. இத்தன்மை. (உ-ம்.) "இன்னதுன்கருத்தேலிங்ஙனமாக" (தணிகை. சீபரி.

௬௪௪.) 2. இவ்விடம். (உ-ம்.) "இங்ஙனம்வருதலென்று" (தணிகை. வீராட். ௧௦௨.) இது; இஙன்எனவும்வரும். (உ-ம்.) "எந்தமுறையாலுமிஙனே துமதுபாலே-வந்துதவியானது. (சிவதரு: சுவர்க்க. ௬௭.)

இஙனம்—இங்ஙனம். (விகாரம்)

இச்சகம்—1. இச்சையுடைமை. 2. இந்த உலகம். (உ-ம்.) "இச்சகத்துயிர்யாவையுமுய்ய வீற்றிருந்தான்" (கந்தபு. வள்ளி. ௨௬௪.) 3. (கணக்கதிகாரம்) பெறக்கருதியதொகை. 4. முகமன். (வழக்.) [1, 3. ஐச்சுக. 2. ஐ; ஜமதீ.]

இச்சயம்—ஆசை.

இச்சாசத்தி— ஒரு சிவசத்தி; அஃது: ஆதிசத்தியின் ஆயிரத்தொருகூறாகத்தோன்றி ஆன்மாக்களுக்கு அநுக்கிரகஞ்செய்யும்பொருட்டாகச்சிருட்டியாதிகிருத்தியங்களைச் செய்தல்வேண்டுமென்று விரும்பி இப்பொருளிப்படியாம் இப்பொருளிப்படியாகாது என்னும் நியமத்தைச்செய்வது. (சி.சி. பாயிர. பக். ௬௭, ௪௭.) முதல்வன் ஆன்மாக்களுக்கு மலபந்தத்தை நீக்கிச்சிவத்தையழித்தற்கணுளதாகியகருணை. (கூர்மபு. திருக்கல். ௯. உரை.) [ஐச்சாசக்தி.]

இச்சாநிவர்த்தி— 1. இச்சையடக்கம். 2. இச்சையொழிவு. [ஐச்சாநிவ்ருத்தி: ஐச்சா- இச்சை. நிவ்ருத்தி-ஒழிவு.]

இச்சாப்பிராரத்தம்— முன் வினைப்பயனாகிய சுகதுக்கங்களைத்தன் இச்சைப்படிமுயன்று செய்யுஞ்செயலே காரணமாக அநுபவித்தல்; அது: பத்தியந்தவறலுந்தனக்கே துன்பமென்றறிந்திருந்தும், பத்தியந்தவறிச்செல்வதுபோல்வதும். (வேதா. சூ. ௧௭௫. உரை.) தன் இச்சையினாற்போய் இராசாவின்மனைவியைத் தீண்டலால்வருந்துன்பம்போல்வதும். (சி. சி. உ: ௧௨. மறை.) [வ்ராரஸ்ப.]

இச்சாபத்தியம்— 1. புறப்பத்தியம். 2. மருந்துண்ணுங்காலத்திலே மைதுநமொழிந்திருத்தல். [ஐச்சா; ஒபத்ய-பத்தியந்தவறுதல்.] 3. விடுபத்தியம்.

இச்சாபிராரத்தம் — இச்சாப்பிராரத்தம். (வேதா. சூ. ௧௭௫. உரை.)

இச்சாபோகம்— இச்சித்தபடிகொள்ளும் போகம். (உ-ம்.) "இச்சாபோகமாக விரைந்து" (பாரத. பதினேழா. ௧௬௭.) [ஹோம.]

இச்சாமியகம் — நான் இச்சிக்கிறேன் எனப்பொருள்படும் ஒரு வடமொழித்தொடர். (வி ணி.) [ஐச்சாமி-இச்சிக்கிறேன். அஹம்-நான்.]

இச்சாவசு—திக்குப்பாலகருளொருவனாகிய குபேரன். [வஸு-செல்வம்.]

இச்சாவதி — சந்தனபுஷ்பாதிகளிலே மிக்க விருப்பமுள்ளவள்.

இச்சாவான்—இச்சையுடையோன். [ஐச்சாவதீ.]

இச்சி—1. இச்சியென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும். 2. இத்திமரம். 3. உயர்திணைப்பெண்பால் ஒருமையில் வரும் ஒரு பெயர்விகுதி. (உ-ம்.) "அச்சியொடாட்டியணியாத்தியத்தியாளொடள்ளி - இச்சியியாதியும்" (வீரசோ. தத்தி. ௫.)

இச்சித்தல்—1. காமமுறல். (உ-ம்.) "இச்சித்தவின்பநுகராமலிளைத்தமெய்யாள்" (பாரத. திரௌபதி. ௭௫.) 2. விரும்புதல். (உ-ம்.) "இச்சித்ததெய்வம்போற்றி" (சி. சி. உ: ௨௪.)

இச்சிதா— 1. இச்சாசத்திமான். (உ-ம்.) "சத்திமானாகியசிவனும் ஏகனாய் இச்சிதா என்றும், நாதா என்றும், கர்த்தா என்றும், அனந்தனென்றும் பிரிப்பின்றி மூன்றனந்தபேதமாயிருப்பன்"(சி.சி.௧.௬௬.ஞானப்.)2. இச்சிக்கிறவன். [ஐச்சிதா.]

இச்சியல்—கடுகுரோகணி.

இச்சியன் — தேவ குருவாகிய வியாழன். [ஊஜ்ய.]

இச்சியால்— 1. இத்திமரம். 2. கல்லித்திமரம்.

இச்சில்—ஒருமரம். (உ-ம்.) "ஆலரசத்திவேங்கைகூவிளமழிஞ்சிலிச்சில்" (மச்சபு. அத்திரி. ௪.)

இச்சு — 1. ஓரிடைநிலை. 2. விரும்புதல். [ஐச்சு.]

இச்சை—1. அஞ்ஞானம். 2. ஆசை. (உ-ம்.) "முனிவர்யாவரும்பெருகுமிச்சையால்- வினவுகிற்பவர்கள்" (சேதுபு. பாவநாச. ௧௦.) 3. இச்சாசத்தி. (உ-ம்.) "இச்சையுயிர்க்கருணைசமாகும்" (சி.சி. ௧: ௬௬.) 4. இச்சாப்பிராரத்தம். (வேதா. சூ. ௧௭௫.) 5. இட்டம். 6. உறுதிச்சொல். 7. நரிச்சை. 8. பிரியம். (உ-ம்.) "இச்சைப்படிதன்பேரறமெண்ணென்கும்வளர்க்கும் - பச்சைக்கொடி" (பாரத. அருச். தீர். ௬௯.) 9. பேராசை. 10. பொய். 11. (கணக்கதிகாரம்) வினா.

இசகுப்பிசகு—, இசகுபிசகு— } குழப்பம்.

இசங்கு—சங்கஞ்செடி.

இசப்கோல்விதை—ஒருவிதை.(இந்தச்செடி மேற்கு இந்துஸ்தான் தேசத்தில் உண்டாக்கப் படுகின்றதென்பர்.)

இசமான்—எசமான். [ யஜமாநந என்பதன்றிரிவு.]

இசநுகம்—வெள்ளைத்தும்பைச்செடி.

இசலாட்டம்—இகலாட்டம்.

இசலி—சபதம்.

இசலிகள்—பிணங்கிகள். (உ-ம்.) "குசலிகளிசலிகள்" (திருப்பு. உசஉ.)

இசலுதல்—வாதாடல்.

இசி—1. இசியென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும். 2. இணுங்குகை. 3. சிரிப்பு.

இசிகர்—கடுகு.

இசித்தல்—1. இணுங்குதல். 2. இழுத்தல். (உ-ம்.) "பணிமுட்களிற்கட்டியிசித்திட" (திருப்பு. ௬கக.) 3. ஒடித்தல். 4. சிரித்தல். 5. நரம்பிழுத்தல்.

இசிதல்—1. இணுங்கப்படுதல். 2. இழுபடுதல். 3. நீளுதல்.

இசிப்பு—1.இணுங்குகை. 2. ஈர்ப்பு, இசிவு. 3. சிரிப்பு. 4. நரம்புச்சுருக்கு. 5. வயிற்றுவலி.

இசிபலம்—பேய்ப்புடோற்கொடி.

இசிவு—இசிப்பு.

இசின்—1. ஓரசைநிலை. (உ-ம்.) "காதனன் மாநீமற்றிசினே" (தொல். சொல். உகூஅ. நச்சினர்.) இது தன்மைக்கண்ணும் படர்க்கைக்கண்ணும் வரும். (புறநா.) 2. செய்யுளிடத்துவரும் ஓரிறந்தகால இடைநிலை.(உ-ம்.) "என்றிசினோரே" (நன். பதவி. கஅ.)

இசுக்கோல்விதை—இசப்கோல்விதை.

இசுதாரு—கடப்பமரம்.

இசும்பு—வழுக்கு. (உ-ம்.) "மெய்யே-யிசும்பினிற்சிந்தைக்குமேறற்கரிது" (திருக்கோ. கசசக.) [இசும்பு - ஏற்றிழிவுமுதலாயகுற்றமென்பாருமுளர்.]

இசுழ—நாமம். (அராபி.)

இசை—1. இசைப்பாட்டு. 2. இசைப்பு. 3. இசையுணர்ச்சி. (உ-ம்.)"வேத-பாராயணப்பனுவன்மூவர் செய்பனுவலதுபகரவோவிசையுமில்லை" (தாயு. சச்சி. ௬.) 4. இசையென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும் 5. இணக்கம். 6. இராகம். (உ-ம்.) "இசைவழாத-கிந்நரமிதுனம்"(கூர்மபு. திருக்கல். ௫எ.) 7. இனிமை. 8. ஓலி. ( உ-ம். ) "சுரும்பினமிசையொடுதுவன்றிச்சுற்றிட" (கந்தபு. பார்ப்பதி. கரு.) 9. கூடிநிற்றல். 10. கொடை. 11. சங்கீதம். (தைல.) 12. சரிகமபதநி என்னும் ஏழெழுத்தினையும் மாத்திரைப்படுத்தித்தொழில்செய்ய அவற்றுள்ளே சட்சம், இடபம், காந்தாரம், மத்திமம், பஞ்சமம், தைவதம், நிடாதம் எனப்பிறந்துநிற்பது. (இவ்விசையுட்பண்பிறக்கும்.) (கூர்மபு. திருக்கல். ௫எ.) 13. பண்பு. 14. பாட்டினிசை. 15. புகழ். (உ-ம்.) "எய்தவிவணியலுமிசையும்" (மரு.தி.கூரு.) 16. பொன். 17.முத்தமிழினென்றாகியஇசைத்தமிழ்.(உ-ம்) 'இயலுமிசையும்பயின்மருதூரிறையின்னருளால்' (மரு.தி.கூரு.) 18. வார்த்தை. (உ-ம்.) "மராமரமேழுமெய்தவாங்குவிற்றடக்கைவல்வில், விராமனை வல்லனென்ப திசையலாற் கண்டதில்லை" (சிந்தா. கநக. அஎ.)

இசைக்கழல் — தேர்நூறு, குதிரை ஆயிரம், யானை நூறு, காலாள் பதினாயிரம் போரின்மடியவென்றவேந்தர் வலக்காலிலணியும் வீரச்சிலம்பு.

இசைக்குழல்—ஊதுகுழல்.

இசைகாரன்— இசைபாடுகிறவன். (பி. வி. உஅ. உரை.)

இசைகேடு— 1. அபகீர்த்தி. 2. சத்துக்கேடு. 3. சுரபேதம்.

இசைகோள்ளல்—கீர்த்திபெறல்.

இசைஞானியார் — சடையநாயனர் மனைவியார். இவருடைய அருமைத்திருவயிற்றிற்சுந்தரமூர்த்திநாயனர் திருவவதாரஞ்செய்தருளினர். (பெரியபு.)

இசைத்தமிழ்— இசையிலக்கணம். (உ-ம் ) " இசைத்தமிழு நாடகத்தமிழுமிவ் வியற்றமிழ் போலமுதனூற்பொருளுணர்தற்குக்கருவியன்மையினலியற்றமிழொன்றுமேகூறினர்" (நன். சிறப்பு. விருத்தி.)

இசைத்தல்— 1. இசைபிறக்க ஒலித்தல். (உ-ம்.) "ஏசலொப்பனகோகிலப்பறவைகளிசைத்தல்" (கந்தபு. நாட்டு. சச.) 2. இணைத்தல். 3. ஈதல். 4. ஒலித்தல். (உ-ம்.) "ஆர்த்திசைக்கும்பறை" (பழமொழி. க௬ரு.) 5. கட்டல். 6. சங்கீதம்பாடுதல். 7. சொல்லுதல்.(உ-ம்.) "அஞ்சுவதென்கொலென்றிசைத்தான்"(பாரத.நிரைமீட்.௫உ.) 8. பொருந்தப்பண்ணுதல்.

இசைத்திரிபு—1. இசைமாறுகை. 2. இசையறுத்துக்கூறுகை. 3. ஓசைப்பிறழ்வு.

இசைதல்—1. இராகவோசையொவ்வல். 2. உடன்படல். (உ-ம்.) "அதன்புடைபோகவுமிசையா" (கந்தபு. சுரம்பு. ௬.) 3. பொருந்துதல். (உ-ம்.) " தோற்றமுமிசையாதாகும் " (சி. சி. க. ௬.)

இசைநாள்—1. உத்திரட்டாதி. (சோதிடகடல்.) 2. பூரட்டாதி. (சோதிடகடல்.)

**இசைநிறை**—ஓசைநிறைத்துநிற்பது.

**இசைநிறையசைச்சொல்**— ஏ, குரை இரண்டும். (பிங்கல.)

**இசைநுணுக்கம்** — சாரகுமாரன் அல்லது சயந்தகுமாரன் இசையறிதற்பொருட்டு அகத்தியமுனிவர் மாணாக்கருளொருவராகிய சிகண்டியென்னுமருந்தவமுனிவரால் வெண்பாவாலியற்றப்பட்ட ஓரிசைத்தமிழ்நூல். (சிலப்.)

**இசைநூபுரம்**— யானையைக்கொன்ற சுத்தவீரன், வலக்காலிலணியும் வீரச்சிலம்பு.

**இசைநூல்**—சங்கீதசாத்திரம்.

**இசைப்பா**—தேவபாணி; [இசைத்தமிழில் வருங்காலிப்பெயர்த்து.] (கூர்மபு. பிரமாவி. கஉ. உரை.) இது பத்துவகைப்படுமென்றும், ஒன்பதுவகைப்படுமென்றுங்கூறுவர். (சிலப். கடலாடு. ௩௫-அடி. உரை.)

**இசைப்பாட்டு**—இராகம்.

**இசைப்பாணர்**— பாணச்சாதிவகையினுள் ஒருவகையார். (மணிமே.)

**இசைப்பாழகநிலை**—கொச்சகம்.

**இசைப்பு**—1. இசை. (தொல். சொல்லதி. ௩௧௦.) 2. இணக்கம். 3. கூடிநிற்றல். 4. சொல்லல். 5. பொருத்து.

**இசைப்புள்**—1. அன்றிற்பறவை. 2. குயில்.

**இசைப்பொறி**—செவி. (உ-ம்.) "வேறிசைப்பொறிவிழியலாதுற்றிலான்" (சேதுபு. காசிபச். ௩௦.) [இசை-ஒலி. பொறி-புலனறிகருவி.]

**இசைபுனை**--ஆயிரம்பேரைவென்றவன் வலக்காலிலணியும் வீரச்சங்கிலி.

**இசைமடந்தை**—சரச்சுவதி.

**இசைமணி**— பதினாயிரம் பேரை வென்ற வேந்தர் வலக்காலிலணியும் பொன்னாற்செய்த வீரகண்டை.

**இசைமுட்டி**—செருந்தி.

**இசைமுடி**—இசைமூடி.

**இசைமூடி**—சிலந்திநாயகம்.

**இசைமை**— கீர்த்தி. (உ-ம்.) "இத்தகுபண்புசான்றநீர்மையாலிசைமைநீதி" (திருவிளை. உக்கிரபா. ௭௩.)

**இசையந்தாதி**— ஓரலங்காரம். அஃது: ஒருவசநத்திறு மற்றொருவசநத்தாதியாக வருவது. (தொன்னூல். ௩௧௩.)

**இசையளவுபா**— தேவபாணி. இசைத்தமிழில்வரும்போது இப்பெயர்த்து. (கூர்மபு. பிரமாவி. கஉ. உரை.) (சிலப். கடலாடு. ௩௫-அடி. உரை.)

**இசையுரிச்சொல்**— ஓசையாலறியப்படுங்குணச்சொல். அது: "கலிகடல்" என்பதிற்போலவருவது.

**இசையுள்ளான்**— சிறந்தவன். [கீர்த்தியுள்ளவனென்றபடி.]

**இசையெச்சம்**— வாக்கியங்களில் அவ்வவ்விடத்திற்கேற்ப ஒரு சொல்லும் பலசொல்லுமாக வருவித்துரைக்கப்பட்டுவருவது. [இசையென்பது சொல். "கற்றதனாலாயபயனென்" என்புழி நூலைக்கற்றதனால் என ஒருசொல்லும் "அந்தாமரையன்னமே நின்னையானகன்றாற்றுவனோ" என்புழி என்னுயிரினுஞ்சிறந்த நின்னை எனப்பல சொற்களும் வருவிக்கப்படுதல் காண்க.] (நன். ௩௬௦. உரை.)

**இசையெடுத்தல்**— இசைபாடுதல். (உ-ம்.) "என்னையாளுடையநாயகிக்கிசையெடுப்பவள்" (இராமா. பாலகா. அகலிகை. ௬.)

**இசைவல்லோர்**— 1. கந்தருவர். 2. சங்கீதபாடகர்.

**இசைவளை**— குதிரைநூறு போர்க்களத்திற்பொருதுவென்ற மல்யுத்தர்காற்பெருவிரலிலணியும் வளை.

**இசைவாணர்**— இசைவல்லோர். [வாழ்; ந்; அர்.]

**இசைவிரும்பி**— அசுணம். [இசைவிரும்பு; இ.]

**இசைவு**— 1. உடன்பாடு. (உ-ம்.) "தாமுமறையோரிசைவினால்" (பெரியபு. சண்டேசு. ௨௭.) 2. ஒட்டம். (உ-ம்.) "ஈரம்வைத்தசிந்தைமன்னனிசைவெனக்கழுத்தின்மூத் - தாரம்வைத்தது" (பாரத. சூது. ௧௮௫.)

**இசைவுபிசகு**—1. இசகுபிசகு. 2. இணக்கமின்மை.

**இஞ்சம்**—வெங்தோன்றிக்கிழங்கு.

**இஞ்சல்**—1. இறுகல். 2. சுவறல்.

**இஞ்சாகம்**—இறுன்மீன். [ஐஷாக.]

**இஞ்சி**—1. இஞ்சிக்கிழங்கு. (உ-ம்.) "வெறுத்தவரிசனமிஞ்சித்-தொத்தெடுப்பதொருபாலாம்" (தணிகை. நாட். ௧௩௨.) 2. இஞ்சிப்பூண்டு. 3. கேடகம். 4. கொத்தான். 5. மதில். (உ-ம்.) "இஞ்சிவானோனைங்கி" (இராமா. நகர. ௧௦.) 6. வாவி.

**இஞ்சிப்பாகு** -- இஞ்சிக்கிழங்கோடு வேறு பதார்த்தங்களுஞ்சேர்த்துச் செய்யப்படும் ஒரு மருந்து.

**இஞ்சிலேகியம்**— இஞ்சிக்கிழங்குசேர்த்து இலேகியமாகச்செய்யப்பட்ட ஒரு மருந்து.

**இஞ்சை**—தீங்கு. (உ-ம்.) "தந்தியிஞ்சைவிடற்கருள்கூர்த்தமால்" (சேதுபு. சக்கரதீர்த்த. ௧௫.) [ஹிம்ஸா; ஹிம்ஸி - வருத்துதல், கொல்லுதல்.]

இட்சுபாகம்— கவிகளில் அமைக்கப்பட்ட பொருளமைதிவகையினொன்று. அது, கரும்பின்மதுரம்போலக்கவியின் நடுவேயிருப்பது. (வீரசோ. எ௬.) [ஐக்ஷுபாக.]

இட்சுமூலம்—மூங்கில். [ஐக்ஷுமூலம்.]

இட்சுவாகு—இக்குவாகு. [ஐக்ஷ்வாகு.]

இட்டகந்தம்—சுகந்தம். [ஐஷ்டகந்த.]

இட்டகாபதம்—வெள்வெட்டிவேர்.

இட்டகாமியபலம்— விரும்பியதைப்பெறும்பொருட்டுச்செய்யுங் கருமத்தினால் அடையலாகும்பலம். (சி. சி. உ: உ௪. மறை.) [ஐஷ்ட - விரும்பியது. காம்ய- கருமம்.]

இட்டகாமியம்— விரும்பியதைப் பெறும்பொருட்டுச்செய்யுங்கருமம். (சி.சி. உ: உ௪. மறை.)

இட்டகை—செங்கல். [ஐஷ்டகா.]

இட்டங்கட்டல்— (சோதிட) இராசிநிலைவரைதல்.

இட்டசட்டம்—யதேச்சை.

இட்டடை—இட்டிடை.

இட்டதமன்— 1. அதிகாதிகப்பிரியன். 2. கணவன். [ஐஷ்ட - பிரியம். தம- அதிகாதிகம்.]

இட்டதரன்—அதிகப்பிரியன். [ஐஷ்டதர]

இட்டதாநன்— கன்னன். [ஐஷ்டதாந: ஐஷ்ட - விரும்பியது. தாநம்-கொடை. விரும்பியதைக்கொடுக்கிறவன் என்றபடி.]

இட்டதேவதை— தன்கருத்துக்கியைந்தவொருகடவுள். (உ-ம்.) "தனக்கு இட்டதேவதையைப்பூசித்துவாழுந்தருமகிரியைக்கு" (சி. சி. உ: உ௪. சிவாக்.) [ஐஷ்டதேவதா.]

இட்டதேவன்— இட்டதேவதை. [ஐஷ்டதேவ.]

இட்டநூல்— வலித்தநூல். (சிந்தா. நாமக. அ௬.)

இட்டப்பிரசாதம்—1. கைம்மாறுவேண்டாக்கொடை. 2. தெய்வத்துக்கு இட்ட வமுது. 3. தேவகிருபை. 4. தொடர்ந்த அன்பு. 5. யாகசேடம். [ஐஷ்டப்ரஸாத.]

இட்டபோகம்— விரும்பினபடி அநுபவிக்கை. [ஐஷ்டபோக.]

இட்டம்— 1. அடிமை விடுதலை. 2. அன்பு. 3. ஆமணக்கமரம். 4. கிரகநிலையாலாகும் பலாபலம். 5. சுயேச்சையாய் நடக்குந்தன்மை. 6. ஸ்நாநமுதலியசெய்து இயற்றுமொருகிரியை. 7. துருவத்துக்கும் இராசியினந்தத்துக்குமிடையே யிருக்கும் வித்தியாசம். 8. பிரியம். (உ-ம்.) "இட்டமானவிபற்புகரோனிடங்- கிட்டினான்" (கந்தபு. சுக்கிரனுப. க௫.) 9. யாகபலி. 10. யாகம். 11. விருப்பம்.

இட்டலி—ஒரு சிற்றுண்டி. (உ-ம்.) "புரையிலிட்டலியெள்ளுண்டை" (மச்சபு. ரசகல்யாண. க௬.)

இட்டலிங்கம்—ஆசாரியன் விசேஷதீக்ஷையைப்பண்ணிச்சீடனிடங்கொடுக்க அவன் "அடியேனிச்சரீரமுள்ளவரையுஞ் சிவபூசைசெய்தன்றி ஒன்றமுட்கொள்ளேன்" என்று பிரதிஞ்ஞைசெய்துகொண்டு வாங்கிப்பூசிக்கும் இலிங்கம். (சைவச.பொது. ௪௬௩,௪௬௪) (சைவவி. ௬௧.) இது ஆன்மார்த்தலிங்கமெனவும் சலலிங்கமெனவும் பேர்பெறும். [ஐஷ்டலிங்க.]

இட்டவியாத்தி— விரும்பியதைப்பெறுதல். (சி. சி. க: உ௩. சிவாக்.) [ஐஷ்ட - விரும்பியது. வ்யாப்தி- அடைதல்.]

இட்டளம்—1. உபாதி. 2. தளர்வு. 3. துன்பம். (உ-ம்.) "அடியேனிட்டளங்கெடவே" (தேவார. திருமுதுகு. க. சுந்தர.) [ஐஷ்ட: ல- ஒடுக்கம்.]

இட்டளர்— தளர்ந்தவர். (திருநூற். ௬௧. உரை.)

இட்டறுதி— 1. இரண்டுக்குற்றகாலம். 2. நியமித்தவெல்லை. 3. வறுமை.

இட்டன்—1. அன்டன். 2. நாயகன். (உ-ம்.) " இட்டனெனக்காண்பரவனேவலரையேவலரென்- திட்டனையார்காண்பாரியம்பு" (சைவச. மாணாக். கக.) [ஐஷ்ட.]

இட்டாபூர்த்தம்— 1. யாகஞ்செய்தல், தவஞ்செய்தல், வேதாத்தியயநஞ்செய்தல், கிணறுவெட்டல், மரநாட்டுதல் முதலிய புண்ணியகிரியை. [ஐஷ்டாபூர்த்தம்: ஐஷ்டம்-யாகம். பூர்த்தம் - புண்ணியகிரியை.]

இட்டார்த்தம்—விரும்பியபொருள். [ஐஷ்டார்த்த.]

இட்டி— 1. ஈட்டியாயுதம். (உ-ம்.) "இட்டிவேல்குந்தம்" (சிந்தா. முத். க௬௬.) [ஈட்டிஎன்பதன்விகாரம்.] 2. செங்கல். [இட்டிகை என்பதன்விகாரம்.] 3. யாகம். (உ-ம்.) "இட்டிகளும்பலவியற்றி" (காஞ்சிபு. கடவுள். கக.) 4. விருப்பம். [3, 4. ஐஷ்டி.]

இட்டிகை— 1. இடுக்குவழி. 2. கூட்டுமெழுகு. (பழமொழி க௫௬.) 3. செங்கல். (உ-ம்.)

"கருஞ்சாந்திட்டிகை சுண்ணத்தால்" (தைல. பாயிர. ம.) [3. ஐஷ்டிகா.]

இட்டிடம்—இட்டவிடம். (உ-ம்.) "இட்டிடத்திசையும்" (சி. சி. பர. லோகா. அ.)

இட்டிடை—1. அற்பம். (உ-ம்.) "இட்டிடையிடைதனக்கிரக்கம்வைக்கிலார்" (கந்தபு. தெய்வயா. க௮௬.) 2. கடைசற்கருவியினோருறுப்பு. 3 தரித்திரம். 4. துன்பம்.

இட்டிடைஞ்சல்—1. துன்பப்படுகை. 2. வறுமை.

இட்டிது— சிறிதாயினது எனப்பொருள்படும் ஒரு குறிப்புவினை. (உ-ம்.) "ஆகாறளவிட்டிதாயினும்" (வள். ௪௭௮.) [இட்டு-சிறுமை.]

இட்டிய—சிறிய. (உ-ம்.) "கட்டளையன்ன மணிநிறத்தும்பி - யிட்டியகுயின்ற" (ஐங்குறு. உ௧௫.)

இட்டியம்— 1. யாகசம்பந்தம். 2. யாகம். [ஐஷ்டி௰.]

இட்டியயநம்—ஓர் யாகம். [ஐஷ்டி௰யநம.]

இட்டு—1. அற்பம். (சூ. நிகண். அ: ௰௧.) 2. இடு என்னுந்தெரிநிலைவினைப்பகுதியோடுதொடுத்துவந்த செய்து என்னும் வாய்பாட்டில் வருமொரு வினையெச்சம். 3. தனக்கென வேறு பொருளின்றிப்பகுதிப்பொருள் விகுதியாய்வரும் இடு என்பதன் விகாரம். (உ-ம்.) "எழுந்திட்டான்" [இதனை ஒருவினையிடைச்சொல் என்பாருமுளர்.] 4. விருப்பம். [ஐஷ்ட.]

இட்டுக்கட்டிப்பேசுதல்—இல்லாததை நியமித்துப்பேசுதல்.

இட்டுக்கொடுத்தல் — ஏற்றிக்கொடுத்தல். (புறப்பொருள்வெண்.)

இட்டுறுதி— கண்டிதம், இறுக்கம்.

இட்டேற்றம்— செய்யாதிருக்கச்செய்ததாகக்கற்பித்துக்குற்றமேற்றுதல். [இடு-கற்பித்தல். ஏற்று - அம்.]

இட்டோட்டு—அலைக்கழிவு, தொந்தரை.

இட்டோடு—பிரிவு.

இடக்கயம்—கொடி. (உ-ம்.) "பட்டிடக்கயங்கள்கோடி" (திருநெல். விட்டுணு. க௮.) [தெலுங்கு.]

இடக்கர்—1. குடம். (பிங்கல. நி.) 2. சபையிலுள்ளார்க்கு வெளிப்படுத்திச்சொல்லத்தகாத வார்த்தை. (உ-ம்.) "இடக்கரடக்கர்" பார். 3. தூர்த்தர். (சூ. நிகண். ௧௧. டகர. ௬. விகாரம்.) 4. நெருங்கல்.

இடக்கரடக்கல் — சொல்லத்தகாதபொருளை மற்றொருபொருளுடைய சொல்லால் மறைத்துச்சொல்லுஞ்சொல். "கால்கழீஇவருதும்" என்பதிற்போல.(நன். பெயரி. ௬௦. இராமாநு.)

இடக்கரடக்கு— இடக்கரடக்கல்.

இடக்கல்—தோண்டல். (உ-ம்.)"ஆதியேனமதாயிடக்கலுற்றுனென்று" (பெரியபு. திருமலைச். அ.)

இடக்கன்—தாறுமாறுசெய்வோன்.

இடக்கியம்—தேர்க்கொடி.

இடக்கு— 1. குதர்க்கம். 2. சபையிலே வெளிப்படுத்தத்தகாதசொல். 3. சேட்டை. 4. தடை. 5. முருட்டுத்தனம்.

இடக்குமடக்கு— 1. குதர்க்கம். 2. தொந்தரை.

இடக்கை— 1. இடப்பக்கக்கரம். 2. ஒருதேயம். [஢க்க.] 3. நால்வகை உத்தமத்தோற்பெருங்கருவிகளுள் ஒன்று. (சிலப். ஊர்காண். கடுக. உரை.) [வினைக்கிரியைகள் இடக்கையாற்செய்தலின் இடக்கை எனப்பெயராயிற்றென்பர். (சிலப். அரங்கே. உ௭. உரை.) [஢க்கா.] 4. மருதநிலத்தார்.

இடக்கையான்— அஞ்சாவீரன்.

இடகலை—இடைகலை. [௲லா.]

இடங்ககம்— வெள்ளிநாணயம். [டங்கக.]

இடங்கணம்—வெண்காரம். [டங்கண.]

இடங்கணி— 1. ஆந்தை. 2. உளி. 3. சங்கிலி. (சூ நிகண். எ. ௰௫.)

இடங்கம்— 1. கல்வெட்டியின் உளி. 2. காசு. 3. கொடுமுடி. 4. யாகத்திற்பிரயோகிக்குங்கத்தி. 5. வாள். 6. வாளிட்டுவைக்கும் உறை. [டங்க.]

இடங்கர்— 1. ஒருவகை முதலை. (உ-ம்.) "கொடுந்தாண்முதலையு மிடங்கருங்கராமும்" (குறிஞ்சி. உ௫௭.) 2. குடம். (சூ. நிகண். எ: ௬௪.) 3. சிறுவழி. 4. தூர்த்தர். (சூ. நிகண். ௧௧: டகரவெ எ.) 5. நீர்ச்சால். (சூ. நிகண். எ: ௬௪.) 6. முதலை. (உ-ம்.) "இடங்கர்களும்விறக்குமன்றே" (தணிகைப்பு. நகர. ௬௦.)

இடங்கரம்—மகளிர்சூதகம்.

இடங்கழி— 1. இராகவேகம். (புறப்பொருள்வெண்.) 2. தமக்குரிய இடத்தைவிட்டுக்கழிதல். 3. நெருக்குகை. 4. நெருங்கல். 5. மீதூரல். (சூ. நிகண். ௯: ௰௬.)

இடங்கழிமை— 1. இடங்கழித்தன்மை. 2. நெருக்குகை. 3. நெருங்கல்.

இடங்கழியர்—தூர்த்தர். [தமக்குரிய இடத்தைவிட்டுக்கழிந்தவர் என்றபடி.]. (சூ. நிகண். உ: ௪௫.)

இடங்காரம்—1. ஆச்சரியம். 2. கீர்த்தி. 3. மத்தளத்தினிடப்பக்கம். 4. வில்லின் நாணோசை. [டாகார.]

இடங்கேடு—தரித்திரம். [இடம்-செல்வம்.]

இடங்கை—இடக்கை. (உ-ம்.) "நெடுங்கோ தண்டமிடங்கையினெடுத்து" (திருவிளை. யானை. ௩௦.)

இடங்கொடுத்தல்— சம்மதித்தல், இளகிக் கொடுத்தல். (உ-ம்.) "இடம்" பார்.

இடசாரி— இடப் பக்கமாகச் சுற்றி வருதல். [வாரி.]

இடஞ்சுழி — உடம்பிலே இடப்பக்க நோக்கியிருக்குஞ்சுழி.

இடத்தகைவு — வீடு கோயிலிவை முதலாகிய இடம்விட்டுப் போகுதலொழிவாயாகவென்றுதடுத்தல். இஃது: அரசனுணையினாலே வாதியானவன் செய்கின்ற நால்வகைத் தகைவுகளிலொன்று. (மிரு-ச. கசு. பக்.)

இடத்தல்—1. அகலப்பண்ணுதல். 2. சொலித்தல். 3. தகர்தல். (உ-ம்.) "மழைமதக்களிறு வழங்கலினிடந்த மண்ணினால்" (கூர்மபு. அந்தகாசூரன். ௪௦.) 4. தோண்டல். (உ-ம்.) "தங் கண்முன்னிடக்குங் கையைத்தடுக்குமூன்றடுக்கு"(பெரியபு. கண்ணப். ௧௮௬.) 5. பிளத்தல். (உ-ம்.) "அடியினுலகப்படுத்தியு மிடந்துமுற்றருளும்" (கந்தபு. திருக்கைலாச. ௧௪.) 6. விரிந்துநிற்றல்.

இடத்திடல்—சொலித்திடல். (சூ. நிகண். ௧௯: உ௮.) "இடத்தல்" பார்.

இடதுகன்னம்— } இலக்கினத்தின் பதி
இடதுசெவி— } ஞோரா மிடப் பெயர்.
இடதுதோடை— } (சோதிடகடல்.)

இடந்தலைப்படுத்தல்—கூட்டுதல். (சிலப்.)

இடந்தலைப்படுதல்—குறித்த இடத்தேகூடுதல். (வாண. ௩௪. உரை.)

இடந்தலைப்பாடு— 1. இடத்தையடைதல். (ஐங்குறு.) 2. (அகப்பொருள்) களவுப்புணர்ச்சி நான்கனுள் ஒன்று; அது: குறித்த இடத்திலே சென்று கூடுதல். (வாண. ௩௪.)

இடந்து- பெயர்த்து. (புறப்பொருள்வெண்.)

இடநாகம்—அடையிருக்கும்பாம்பு.

இடநாள்—உரோகிணி, மகம், விசாகம், திருவோண முதலாக மும்மூன்றுநாள்கள்; அவை விருச்சிக முதற்றநு அந்தமாக எண்ணப்படும். அஃது "உருடேர்மகமுற்றின் மாயனுளாதிமூன்று நிலையாமிடம்" என்னும் விதாந. காலசக்கர. உ-ம் செய்யுளாற்பெறப்படும்.

இடநிலைப்பாலை—ஓர்பண். (சிலப்பதி. நாடுகாண். ௰௪-அடி. உரை.)

இடப்பு—1. இடக்கப்பட்டது. 2. கான்முதலியவற்றையகலவிடுதல். 3. பிளப்பு. 4. மண்கட்டி. 5. விரிக்கை.

இடப்பெயர்— இடத்தைக்கருதும் பெயர்ச்சொல். "நிலம்" என்பதுபோல.

இடப்பெயர்ப்பகுபதம் — இடம் அடியாக வரும் பெயர்ப்பகுபதம். "கருவூரான்" என்பதுபோல.

இடப்பொருள்— ஏழாம் வேற்றுமைப் பொருள்.

இடபத்துவசன்–சிவன். [இடபக்கொடியையுடையவன் என்றபடி.] [ஸ்ஷஹஜ.]

இடபம்—1. இரண்டாமிராசி. அது: கார்த்திகையின்முக்காலும் உரோகணியும் மிருகசீரிடத்தின் முன்னரையுங்கொண்டது. 2. இராசசிந்நத்தொன்று. 3. எருது. 4. ஒருமலை. 5. கணேசுரர் எண்மரிலொருவர். (சைவச. பொது. ௬௨௮. உரை.) 6. சிவன்கொடி. 7. புள்ளாங்குழலிலிருக்குந் துளைகளுள் ஒன்று; அது: சட்சத்துளைக்கு அடுத்தது. (பெரியபு. ஆனாய. ௨௪. உரை.) 8. மேற்றிசைப்பாலன்குறி. 9. ரி என்னும் இசை; இஃது: ஏழிசைகளுள் ஒன்று. [ஸ்ஷஹ.]

இடபவாகநன்— 1. எருமைநாக்கிப்பூண்டு. 2. சிவன். [இடபத்தைவாகநமாக உடையவனென்றபடி.] [ஸ்ஷஹவாஹந.]

இடபவீதி—சூரியனது மூவகை வீதியினொன்றாகிய நடுவீதி. [வீயி - வழி.]

இடபன்— இடபச்சாதியாடவன். (உ-ம்.) "அச்சுவன்" பார். [ஸ்ஷஹ:]

இடபாருடர் — இருபத்தைந்து மூர்த்திகளுள் ஒருவர்; இவர்: இடபவாகநங்கொண்ட மூர்த்தி. (உ-ம்.) "பிரமகபாலத்தர் மறைபேசுமிடபாரூடர்" (திருநெல். அறம்வளர். ௧௧.) [ஸ்ஷஹாரூ஢.]

இடம்—1. அகலம். 2. அதிகம். (உ-ம்.) "இடம்படமெய்ஞ்ஞானங்கற்பினும்" (நாலடி. மெய்ம்மை. ௩௨: ௬.) 3. ஆகாயம். 4. ஆதாரம். 5. இடப்பக்கம். (உ-ம்.) "தேரிரண்டுமிடம் வலந்திரிந்து" (பாரத. பதினைன். ௧௪.)6. இடம்பாடு. 7. இராகத்தகுதி நான்கினொன்று; அது: ஐந்தினைபற்றிவருவது. 8. இளக்காரம். 9. ஏது. 10. ஏழாம்வேற்றுமைப் பொருளில்வரு மோரிடைச்சொல். (உ-ம்.) "இல்லிடப்பரத்தை" (நன்.

௬௦௨. உரை.) 11. சம்மதி. (உ-ம்.) "என்னவு மிடங்கொடாமலெதிர்வுற" (பாரத. நிரைமீ. ௧௨௩.) 12. சமயம். 13. செல்வம். (உ-ம்.) "இடமில்லாக்காலுமிரவொல்லாச்சால்பு" (வள். ௧௦௬௪.) 14. தருணம். (உ-ம்.) "தொன்னில மனையானில்லாவிடத் தவன்றேவிபாற்போய்" (திருவிளை. அங்கம். ௭.) 15. தலம். (உ-ம்.) "இடமெல்லாங்கொள்ளாத்தகைத்தே" (வள். ௧௦௬௪.) 16. தன்மை முன்னிலை படர்க்கை யெனமூவகைப்படும்பெயர்வினைச்சொற்களின் னிலை; அஃதாவது: பேசுகிறவன் தன்னைச்சுட்டி நான்செய்தேனென்றும், முன்னிலையானை நோக்கி நீசெய்தாயென்றும், படற்கையிடத்தானைநோக்கி அவன் செய்தானென்றுஞ்சொல்வது. 17. ஸ்தாகம், இருக்குமிடம். (உ-ம்.) "முனிவர்நாகரிடந்தொறுமிருப்பமன்றோ" (கந்தபு. மார்க்கண். ௧அ௬.) 18. தூரம். 19. படுத்தல். (பிங்கல.நி.) 20. பெருமை. 21. வலி. (பிங்கல.நி.) 22. விசாலம். (உ-ம்.) "இடம்படவீடெடேல்" (ஆத்திசூடி.) 23. வீடு. (உ-ம்.) "கோவிடமாடமுபரிகைமேடை" (திருவிளை. நாகமெய். ௧அ.)

**இடம்பக்கம்**—திரவிய முதலியவுதவி.

**இடம்பகம்**—செல்வமுங்கீர்த்தியும். [ஸூம. கீர்த்தி.]

**இடம்படல்**—மிகுதல். (உ-ம்.) "தம்மி-லிடம் படமென்புற்றின்புற்றிருவருமிருந்தார்மன்றோ" (திருவிளை. வன்னி. ௫௧.)

**இடம்பம்**—1. தான்செய்யுந்தருமங்களையாருமறிந்துதன்னைச்சபாசென்று மெச்சவேண்டுமென்றுவருகிறசித்தவிருத்தி. 2. பெருமை.(சி. சி. உ: ௫௭. சிவாக்.) [ஸஹ.]

**இடம்பரம்**—1. இடப்பக்கம். 2. இறுமாப்பு. 3. இனியபாஷிதம். 4. கூட்டம். 5. புகழுடைமை. 6. போலித்தோற்றம். 7. வழிவகை. 8. வேடிக்கை. [ஸம்பர.]

**இடம்பாசாரம்**—இடப்படை. (சி. சி. உ: ௫௭. சிவாக்.) [ஸம்பாசார.]

**இடம்பாடு**— 1. செல்வம். 2. பெருமை. 3. விரிவு.

**இடம்புதல்**— 1. விலகுதல். 2. வெறுத்துவிடுதல்.

**இடம்புரி**—1. இடக்கைக்குண்முறுக்கியகயிறு. 2. இடப்பக்கப்புரியையுடைய சங்கு.(உ-ம்.) "இப்பிவாலிடம்புரிவலம்புரி" (தணிகை. நாட்டு. ௧௪௧.) இது: இப்பி ஆயிரஞ்சூழ்ந்ததென்பர். (பிங்கல.நி.) 3. ஒருபூடு. 4. சங்கு.

**இடம்பெற்றுத்தழால்**— தலைவியைக்கலத்தற்கியையுடைய ஓரிடத்தைக்கண்ணுற்று அவ்விடத்தைத்தலைவனணைதல்.(வாண.௧௦.முகம்.)

**இடம்மாநம்**—ஒருவகைப்பறை. (உ-ம்.)"கோட்டுவெங்கரியொட்டகையிடபங்கள் குதிரை, யீட்டுபொன்னணிசெய்முதுகேற்றிடம்மாநம்" (திருநெல். விட்டுணு. உ௫) [டம்மாநம் என்னுந்தெலுங்குமொழி இகரம்பெற்று வந்தது.]

**இடம்மாரம்**—இடம்மாநம்.[இது தெலுங்கு.]

**இடம்வரையறுத்தல்** — தவஞ்செய்வார்க்குரிய நியமங்களெட்டினுளொன்று. (மணிமேகலை.)

**இடமணித்தென்றல்**—(அகப்பொருள்)வன்புறையின்பாற்பட்ட கிளவிகளினொன்று. அது: தலைவன் தலைவிக்குத்தானிருக்குமிடஞ்சமீபமாயுள்ளதெனல். (வாண. உ௪. முகம்.) [இடம். அணித்து- சமீபமாயுள்ளது.]

**இடமரம்**— 1. ஆயுதப்பிரயோகமின்றிச்செய்யுஞ்சண்டை. 2. உரப்பியுமங்கசேட்டைசெய்துஞ்சத்துருவைப்பயமுறுத்தல். 3. ஊர்க்கலகம். 4. பயந்தோடுமோட்டம். [டமர.]

**இடமலைவமைதி**— ஓரலங்காரம். அது: இடமலைவாகிய வழுவை நாடகவழக்கில் அங்கீகரித்தல். (வ-று.) "மரகதச்சோதியுடன்மாணிக்கச்சோதி - யிருமருங்குஞ்சேர்ந்தரிவைபாக - னுருவ - மலைக்குமகில்சுமந்தாரத்துவான்கோ - டலைத்துவரும்பொன்னியாறு" இதனுள்ளே, காவிரியுட் பிறமலைக்கும் பிறநாட்டிற்கு முரிய மரகதமும் மாணிக்கமும் சந்தனமும் அலைத்து வருகின்றதென்றமையால் இடமலைவாய்ப்புகழ்ச்சியிடத்துப்பொருந்துவதால் அலங்காரமாயிற்று" (தண்டி. ௧௨௨. உரை.) [நாடகவழக்காவது இல்பொருளாய்ப்புகழ்ச்சியிடத்துப்புனைந்துரையாகத்தோன்றுவது.]

**இடமலைவு**— செய்யுட்குப் பொருந்தாதனவாகிய ஆறுவழுக்களுளொன்று. அது: மலை, நாடு, ஆறு என்னு மிவைகளிலே ஓரிடத்துள்ளது மற்றோரிடத் துள்ளதாகச் சொல்லுதல். (வ-று.) "தென்மலையின்மான்மதமுஞ்சாமரையுந் தேமருசீர்ப்- பொன்மலையின்சந்தனமுமாரமும்-பன்முறையும்- பொன்னிவளநாடன்முன்றிற்பொதுளுமே-மன்னர்திறைகொணரவந்து" இதிலே இமையத்திலுள்ளன பொதியத்திற்குரியவாகவும், பொதியத்திலுள்ளன இமயத்திற்குரியவாகவும் கூறியது இடமலைவு. (தண்டி. ௧௧௬. உரை.)

**இடமன்**—இடப்புறம்.

**இடமாநம்**—1. மேன்மையானவிடம். 2. விசாலமானவிடம்.

இடமாரம்—இடம்மாரம். [டம்மாரமென்பதன்விகாரம்.]

இடமிடுதல்—பருத்தல்.

இடமிடைஞ்சல்—இடமுடங்கு.

இடமுடங்கு—1. இடங்கழிமை. 2. ஒழுக்கம். 3. நெருக்கம்.

இடமை—பூமி.

இடர்–1. ஆபத்து. 2. துன்பம். (உ-ம்.) "என்றனரிடருழந்திறைஞ்சியேத்தலும்" (இராமா திருவவதா.௨0.)3. மிடி.(புறப்பொருள்வெண்.)

இடர்ப்பாடு—இடர்ப்படுதல். (உ-ம்.) "இடுக்கணிடர்ப்பாடுடைத்து" (வள். ௬௨௪.)

இடர்ப்பிலலம் — ஒருவகைக் கண்ணோய்; இஃது: இமையினடியிலும், புருவமத்தியிலுமிருக்கின்ற நரம்புகளை மஞ்சள் நிறமாக்கித்தடிக்கப்பண்ணுவது. (சீவரட். ௨௬௭.)

இடராகம்—இராகத்தகுதிநான்கனுளொன்று. அத்தகுதிப்பட்டராகங்கள்; குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தலாகிய ஐந்துநிலங்களுக்குரிய குறிஞ்சி, பஞ்சரம், சாதாரி, மருதம், செவ்வழி என்னுமிராகங்கள்.

இடல்— 1. எறிதல். (உ-ம்.) "வித்துமிடல் வேண்டுங்கொல்லோ" (வள். அரு.) 2. கொடுத்தல். (உ-ம்.) "இட்டார்பெரியோரிடாதார்" (நல்வழி. ௨.)

இடலம்—1. அகலம். 2. விசாலம்.

இடலித்தல்— } 1. விசாலிததல். 2.அகலம்.
இடலிப்பு— }

இடலை—1. துக்கம். 2. துன்பம்.

இடவகம்—1. இலவங்கம். 2. பனம்பிசின். 3. மாம்பிசின்.

இடவகை— வீடு. [வகுத்தெடுத்த இடமென்றபடி.] (பெரியபு. முழுநீறுபூ. ௪.)

இடவம்—பூமி.

இடவழு — தன்மை முன்னிலை படர்க்கை மூவிடத்தைப்பிறழக்கூறல், ஐந்திணைக்குரியவற்றுள் ஒன்றற்குரியவற்றை மற்றொன்றற்குக் கூறுவதுமாம்.

இடவன்—1. எதிரிமாடு. 2. மண்ணாங்கட்டி. (உ-ம்.) "ஏனத்துருவாகியவீசனெந்தை யிடவனெழவாங்கியெடுத்தமலை" (நாலாயிர. அட்டுக்குவி. ரு.)

இடவாகுபெயர்—இடத்தினதுபெயர். அவ்விடத்திலிருக்கும் பொருளுக்காய் வரும்பெயர். (வ-று.) "அகனமர்ந்துசெய்யாளுறையும்" இதிலே அகம் என்னுமுள்ளிடத்தைக்கருதும் பெயர் அங்கிருக்கும் மனத்துக்காதலால் இடவாகுபெயர். (வள். அ௪.)

இடவியது—அகலமுள்ளது. (உ-ம்.) "இடவியவறைநின்று" (தணிகை. வீரா. ௬ரு.)

இடவை—வழி. (பிங்கல. ௬௭௧.)

இடவோட்டு— 1. இடப்பக்கமாகச்செல்லுதல். 2. இராகுகேதுவின் நடை.

இடற்சம்—குக்கிற்பிசின்.

இடறல்— 1. தடைபண்ணல். 2. நிந்தித்தல்.

இடறி—யானை.

இடறு — 1. ஆபத்து. 2. இடறென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும்,வினைத்தொகையும். (உ-ம்.)"இடறோட்டவினநெடியவரையுருட்டி" (இராமா. குலமுறை. அ) 3. தடை.

இடறுகட்டை—தடையாகநிற்கும்பொருள். [கட்டை - கட்டைமுதலியபொருள்.]

இடறுதல்—1. உழக்குதல். (உ-ம்.) "தேனிடறுவாசமிகுதெய்வமலர்" (பாரத. மணிமான்வதை. ௬0.) 2. ஊறுபடுத்தல். (உ-ம்.) "ஊனிடறுவாளிகள்" (பாரத. மணிமான். ௬0.) 3. கடத்தல், மீறுதல். (உ-ம்.) "எண்டருநெறிமுறையிடறுகீசகன்" (பாரத. கீசகன். ௬௨.) 4. காலிணுலெற்றுதல். (உ-ம்.) "தாடத்திற்பரிக்காரர்தலையிடறி" (பெரியபு. திருநாவுக்கரசு. ௧௪0.) 5. தட்டுதல். 6. தடக்குதல். (உ-ம்.)"தார்-சுற்றிடுந்தாணமிசையிடறுஞ்சூல்வளை" (கந்தபு. நாட்டு. ௪௧.)

இடன்— 1. அகலம். (உ-ம்.) "இடனுடைவரைப்பின்" (பொருந. ௬ரு.) 2. இடப்பக்கம். (உ-ம்.) "என்கணுந்தோளும் மார்புமிடனுறத்துடிக்கைமாறு" (பாரதம். பதின்மூன்றும்போர். ௧ரு௬.) 3. இடம். இறுதிப்போலியாயிற்று. 4. செல்வம். (உ-ம்.) "இடனில்பருவத்தும்" (வள். ௨௧அ.) 5. தக்கசமயம். (உ-ம்.) "இடனறிந்து துன்னியார்" (வள். ௬௧௪.)

இடனறிந்தொழுகல்— வணிகரெண்குணத்தொன்று.[அதுசமயத்துக்குதக்கபடிசெய்தல்.]

இடாஅ—குத்தி. (உ-ம்.) "எயிறுபடையாக வெயிற்கதவிடாஅ" (புறநா. ௬.)

இடாகிநி— 1. சுடுகாட்டிற் பிணங்களைத்தின்னும்பேய். (உ-ம்.) "இடுபிணந்தின்னு மிடாகினிப்பேய்" (சிலப். கனாத். ௨௧.) 2. சூர்மகள். (சூ. நிகண். ௩: ௩௧.) [டாகிநி.]

இடாகு—புள்ளி. [டாகு என்னும் இந்துஸ்தான் இகரம்பெற்றுநின்றது.]

இடாசுதல்— 1. அகலநிற்குதல். 2. அடித்தல். 3. அவமதித்தல். 4. தள்ளல். 5. நெருக்கல். 6. மேற்படல்.

இடாப்பித்தல்—காலையகலப்பண்ணிநிற்றல்.

**இடாப்பு**—1. அட்டவணை. 2. பார்த்தெழு தும்பிரதி. 3. பெயர்விலாசம். [ இஃது இந்துஸ்தான்.]

**இடாம்பிகன்**—இடம்பன். [தெலுங்கு.]

**இடாமிடம்**—ஏறுமாறானபேச்சு. [ ஐவாதிஷம்: ஐவா- பேச்சு. திஷம் - எதிரிடை, ஏமாற்று.]

**இடாமிடாங்கு**—1. எதிரிடை. 2. ஏறுமாறுகப்பேசுந்தன்மை. 3. ஒழுங்கின்மை. [ இடாமிட- ஏறுமாறானபேச்சு. ஆங்கு- அத்தன்மை. நிலைமொழி அகரங் கெட்டுப் புணர்ந்தது. ] [ஐவா.]

**இடாயம்**— இசையின்பிரிவாகிய பஞ்சதுறைகளுள் ஒன்று. (உ-ம்.) "இசையின்பிரிவாயிருக்கின்ற ஆயத்தம், எடுப்பு, உக்கிரம், சஞ்சாரம், இடாயம் என்னுமைந்து துறைகளிலு முறைமையாகப்பாடினர் " ( பெரியபு. ஆனய. உரு. உரை.)

**இடார்**—1. இறைகூடை. ( சூ. நிகண். எ: ருஅ.) 2. எலிமுதலியனபிடிக்கும்பொறி.

**இடாவேணி**—அளவிடப்படாத எல்லை. (பதிற்று. உச.)

**இடி**—1. இடியென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும், வினைத்தொகையும். 2. இடி. (உ-ம்.) "பல்லியங்களுமிடியொலிகாட்டுவ" (கந்தபு. தெய்வயா. கூஎ.) 3. இந்திரன்கொடி. 4. உறுதிச் சொல், உறுக்கிச் சொல்லுஞ் சொல். (உ-ம்.) " இடிபுரிந்தெள்ளுஞ்சொற்கேட்பர் " (வள். கூ0எ.) 5. ஒலி. (உ-ம்.) " இடியின்னளவெழுகார்" (திருவிளை. யானையெ. கஎ.) 6. சிற்றுண்டி. 7. சுண்ணம். 8. தாக்குகை. 9. தினைமுதலியவற்றின்மா. (உ-ம்.) "செந்தினையிடியுந்தேனும்" (கந்தபு. வள்ளி. உ0அ.) 10. துடிப்பு. 11. மயிர்ச்சாந்து.

**இடியூ**—இடித்து. (ஐங்குறு.)

**இடிக்கல்**— இடிபோலமுழங்கல். ( உ-ம். ) "விரைவி-லிடிக்கலுற்றதுதீயவாய்"(கந்தபு. சூரன்றண்ட. கூ.)

**இடிக்கொடி** — இடியேறுதீட்டிய கொடி. அஃது: இந்திரனதுகொடி. (உ-ம்.) "நனிவிசும்பரங்கிறுடை-மிடிக்கொடிவீழவெய்தான்" (இரகு. யாக. அரு.)

**இடிக்கொடியன்**—இந்திரன்.

**இடிகம்**—பெருமருந்துக்கொடி.

**இடிகரை** —அழிகரை. அஃது: ஆற்றோரத்தில் வெள்ளத்தாற்கீழறுக்கப்பட்டுநின்ற கரை. ( உ-ம். ) "ஆக்கையெனுமிடிகரையைமெய்யென்றபாவிநான்" (தாயுமான. சின்மயாநந்த. உ.)

**இடிகை**— பூமி. [ஐவிகா.]

**இடிசாமம்**—1. கெடுகாலம். 2. நிந்தை.

**இடிஞ்சில்**— விளக்குத்தகளி. (உ-ம்.) "திரியுமிடிஞ்சிலுநெய்யுஞ்சார்வாக எரியுஞ்சுடர்"(பழமொழி. அரு.)

**இடித்தம்**— மரத்தாற்செய்யப்பட்ட யானை. [வி.தூ.]

**இடித்தல்**— 1. இடியேறுகாலுதல். (உ-ம்.) " கோளரிமுகத்தன் றன்மே - லிடித்தெனக்கையாலெற்ற"(கந்தபு. சிங்கமுகா. கஎ0.) 2. ஒலித்தல். (உ-ம்.) " இடித்துமின்னியிருண்டுமேகமெழுந்தபோது " (சி. சி. பர. உலோகாயத மதமறுதலை. உ.) 3. கண்டித்துப்புத்திசொல்லல். (உ-ம்.) " நட்டன்மிகுதிக்கண் - மேற்சென்றிடித்தற்பொருட்டு"(வள்.எஅசு.)4. குத்துண்டாற்போலப்படும்வருத்தத்தைச்செய்தல். (உ-ம்.) "தலையிடித்தல்" 5. தகர்த்தல். (உ-ம்.) "தபநியத்தவைக்களைச்சி - யிடித்தனனொருதானிற்கும்"(கந்தபு. நகரழி. கூ.) 6. துடித்தல். (உ-ம்.) "நெஞ்சிடித்தல்" 7. பலாற்காரமாக முட்டுதல். (உ-ம்.) " பெருவலியரக்கன்றன்னை-யிடித்து " (இராமா. கும்பகருணன்வதை.கஅசு.)8. பொடிபடச்செய்தல். (உ-ம்.) "மூலமலஞானத்தாலிடிப்பன்" (சி. சி. அ: க0.) 9. பொத்தினகையினால் அல்லது கூரில்லாதகருவியினாலேதாக்குதல்.

**இடிந்துக்கூறல்**— உறுதிச்சொல்லுரைத்தல். (வாண. சஉ. உரை.)

**இடித்துரை**—உறுதிச்சொல்.

**இடித்துவரைநிறுத்தல்**— கண்டித்துப்புத்திசொல்லி ஒரெல்லையிலே நிறுத்தல். (உ-ம்.) "இடித்துவரைநிறுத்தலுமவராதாகும்" (தொல். பொரு. கடுரு.) [வரை-எல்லை.]

**இடிதல்**— 1. உடைதல். 2. ஒடிதல். 3. சரிதல். (உ-ம்.) "உலகமோர்மூன்றுமிடிந்துபாழாகுமூழியிறுதியில்"(கூர்மபு. பிரமவிஷ்ணுக். உ.) 4. நொறுங்கல். (உ-ம்.) "இடிந்தனமிசையினெல்லை" (கந்தபு. நகரழி. அ.)

**இடிப்பு** — இடித்தல், ஒலித்தல். ( உ-ம். ) "இரங்கினசேவலங்கொடியிடிப்பினால்" (கந்தபு. திருப்பரங்கு. உ0.)

**இடிபடல்**— 1. இடியுண்ணல். 2. நொறுங்குதல். (உ-ம்.) "எண்டகுபொதியின்முற்றுமிடிபட" (கந்தபு. நகரழி. கூஉ.)

**இடிபு**— இடிதல். (தொல். எழுத்த. தொகை. உ. இளம்.) [இடி; பு.]

**இடிம்பன்**—வீமனாற் கொல்லப்பட்ட ஓரிராக்

கதன். (பாரத. வேத்திரகீய. கசு.) [ஹிம்ஹ; ஹிஹிம்பா.]

இடிம்பிகை—அதிமோகஸ்திரீ [ஹிம்பிகா]

இடிம்பு—அவமதிப்பு.

இடிம்பை— இடிம்பன்சகோதரியும் வீமன் மனைவியுமாகிய ஒரரக்கி. (பாரத.வேத்திரகீ.க.)

இடிமரம்—உலக்கை.

இடிமருந்து—பொடியாக்கப்பட்டமருந்து.

இடியப்பம்—ஒருசிற்றுண்டி.

இடியிடல்—முழங்குதல். (உ-ம்.) "கோட்டி னிற்குத்திக்கோத்திட் - டிடியிட்டதிர்காரெதி ரேற்றெழுந்தாங்குநோக்கிச்"(திருவிளை.மாயப். கஎ.)

இடியேறு— இடி.

இடிவு—அழிவு, ஒடிவு.

இடிக்கு—இடம்பம்.

இடிகை—வியாக்கியானம். [டீகா.]

இடு — 1. இடுவென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும், வினைத்தொகையும். 2. ஒரு பகுதிப்பொருள். (உ-ம்.) "உரைத்திடு" (நன். கசo. உரை.)

இடுக்கண்—1. துன்பம். (உ-ம்.)"இடுக்கண் வருங்காலநகுக" (வள். சுஉக.) 2. வறுமை. (உ-ம்.) "இடுக்கண்வந்துயிர்க்குமூற்றமெய்தினு ம்வாய்மைகாத்து - வடுக்களைந்தொழுகுநாலாமர பினன்" (திருவிளை. இந்திரன்முடி. ருஅ.)

இடுக்கணழியாமை — இடுக்கண்வந்துழி அதற்கு மனங்கலங்காமை. (வள். சுரு-அதி.)

இடுக்கணி—ஒடுங்கியவிடம்.[இடுக்குக்கணி என்பதன் மரூஉப்போலும். [இடுக்கு-ஒடுக்கம். கண்-இடம். இ-ஒருவிகுதி.]

இடுக்கப்படல்— 1. ஒடுக்கப்படல். 2. துன்பப்படல்.

இடுக்கப்படுத்தல்— 1. துன்பப்படுத்தல். 2. நெருக்கல்.

இடுக்கம்—1. ஒடுக்கம். 2. துன்பம். (உ-ம்.) "சொர்க்கத்தரிடுக்கங்கெட" (திருப்பு. சகஅ.) 3. நெருக்கம். 4. வறுமை.

இடுக்கல்—இடுக்குதல்.

இடுக்கி— 1. இடுக்குவது. 2. உலோபி. 3. குறடு.

இடுக்கிடை—நெருக்கம்.

இடுக்கு — 1. இடுக்கென்னேவலும், தெரி நிலை வினைப்பகுதியும்,வினைத் தொகையும். 2. இடைஞ்சல்,துன்பம். 3.உலுத்தகுணம்.(உ-ம்.) " இடுக்குடையுள்ளத்தான்பெற்றபெருஞ் செ ல்வம்" (நாலடி. ஈயாமை. அ.) 4. ஒடுங்கப்பிடிக் குங்கருவி.(உ-ம்.)"இடுக்குக்கொடுத்து"(வழக்.) 5. ஒடுங்கியவிடம். (உ-ம்.) "கவட்டுத்தொன்ம ரத்திடுக்கிற் கானுழைத்துக்கொண்டே" (தனி ப்பாடற்.) 6. கொடுக்கு. 7. சந்து. 8. முட்டு. (உ-ம்.) " இடுக்கொன்றுமின்றியெஞ்சாமை " (திருநாவு. தேவார. பசுபதி. திருவிரு. ரு.)

இடுக்குத்தடி— கள்ளுமுதலிய ஊறுதற்குப் பக்குவமாமாறுபனை முதலியவற்றின் பாளையை இடையில்விட்டு நெருக்கிப்பிடிக்கப் பிரயோகிக் கும் இரட்டைத்தடி.

இடுக்குதல்—1. அணைத்தல். (உ-ம்.) "இடு க்குவார்கைப்பிள்ளையேதோவேதோ" (தாயு. பன்மா. சு.) 2. நெருக்கல்.

இடுக்குப்பனை— கள்ளும்பதநீருமுண்டாக் கும்பனை.

இடுக்குப்பிள்ளை—கைக்குழந்தை.

இடுக்குமரம்— 1. எண்ணையூற்றுமரம். 2. கடம்புமரம்.

இடுக்குமுடுக்கு— 1. சங்கடம். 2. மூலைமுடு க்கு.

இடுகடை—கொடையாளியின்வீட்டுவாயில்.

இடுகாடு—1. சுடுகாடு. (உ-ம்.) "என்புபூண் டிடுகாட்டிற்பொடியாடுமுருத்திரனுக்கு" (திரு விளை. விருத்த. கக.) 2. பிணம்புதைக்குங்காடு. (உ-ம்.) "இடுகாட்டுண்மாதரெலும்பிற்புரண்மா ல்" (நால்வர்நான். க.)

இடுகால்—பீர்க்கங்கொடி.

இடுகிடை—சிற்றிடை. (உ-ம்.) "இளங்குயி லன்னார்தங்களிடுகிடை" (சேதுபு. திருநாட். அசு.)

இடுகு— 1. இடுகென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும், வினைத்தொகையும். (உ-ம்.) "இடுகிடை" 2. ஒடுக்கம். (உ-ம்.) "இடுகுகண் ணினரிடருறுமூப்பினர்" (இராமா. சித்திரகூ ட. கூo.)

இடுகுதல்— 1. ஒடுங்குதல். 2. சுருங்குதல். (உ-ம்.) "இளங்குயிலன்னார்தங்களிடுகிடை" (சேதுபு. திருநாட்டு. அசு.) 3. நோவு.

இடுகுறி—1. இட்டபுண்டரம். 2. இடுகுறிப் பெயர். (நன். உருஎ.)

இடுகுறிச்சிறப்புப்பெயர்— ஒரு காரணமு ம்பற்றாது வழங்குவதாய் ஒருவருக்கப்பொருளு க்கே சிறப்பாய் நிற்கும்பெயர். (உ-ம்.) "பலா, மா என்பனவுமப்படியேயிடுகுறிச்சிறப்புப்பெய ர்களாம்" (நன். சுஉ. உரை.)

இடுகுறிப்பொதுப்பெயர்— பலவினங்களு க்கும் பொதுவாகவரும் இடுகுறிப்பெயர்.(உ-ம்.) "மரம் என்பது ஒருகாரணமும்பற்றாது வழங் கும்பெயராய் பனை, பலா, மா முதலிய பலவகு

க்கப்பொருளுக்கும் பொதுவாகலால் இடுகுறிப் பொதுப்பெயர்" (நன். ௬௨. உரை.)

இடுகை—இடுதல். [இடு, கை-ஒருதொழிற் பெயர்விகுதி.]

இடுங்கம்தன்றம்—செய்குன்று. (மணிமே.)

இடுதங்கம்— கல் நகையினுள்ளே பதிக்கிற தங்கம்.

இடுதண்டம்-1 தண்டமாக இறுக்கும்பணம். 2. பணமிறுக்கும்படி செய்து தண்டித்தல். [இடு-கொடு, தண்டம்-தண்டித்தல்.]

இடுதல்— 1. அணிதல். (உ-ம்.) "புங்கவனி டுவௌபுடைத்துமீளவந்து" (திருவிளை. வளை ய. ௨௭.) 2. இருத்திவைத்தல். (உ-ம்.) "இடு தல்கொண்டிடுசிறையினை" (கந்தபு. சூரனமை. ௧௪௨.) 3. ஈதல். (உ-ம்.) "இடுங்கடுகே" (நல் வழி. ௩.) 4. உவமித்தல். (சிந்தா. இலக்கணை. ௩௨௨.) 5. ஏற்றுதல், சாரச்செய்தல். (உ-ம்.) "படாததொருவார்த்தை-யிட்டனர்"(சிலப்.கனு த்திறமுரைத்த. ௭௭-௪௮.) 6. எறிதல். (உ-ம்.) "சிலைநிலத்திலிட்டான்" (கந்தபு. வள். ௩௬.) 7. சொரிதல். 8. நியமித்தல். (உ-ம்.) "இட்டதொ ருபேரழைக்கவென்னென்றுங்கு " ( சிவஞாந போ. சூ. ௨. வெண்பா. ௧.) 9. புகுத்தல்.(உ-ம்) "மடியகத்திட்டாண்மகவை" (சிலப். ௯: ௨௨.) 10. வைத்தல். ( உ-ம். ) "கந்தமும்பிறவுமாக விலைபொலிநலத்திலிட்டு" (கந்தபு.வள்.௨௦௮.)

இடுதி—அம்புக்கூடு.

இடுதிரை—திரைச்சீலை.

இடுதெண்டம்—1. இடுதண்டம். 2. வாரா வந்தி, அடாவரி.

இடுதேளிடுதல் — தேளல்லாததொன்றை மறையக்கொண்டுவந்து ஒருவர் மேலிட்டுத்தே ளெனநினைக்குமாறுசெய்து அவரைக்கலங்கப்ப ண்ணுதல். (உ-ம்.) "ஊராரிடுதேளிட்டென்ற ன்மேல்" (சிலப். கனுத்திற. ௪௮.)

இடுப்பு—இடைப்பக்கம்.

இடுப்புவலி— ஒரு நோய்.

இடுபிணம் — குழியிற்புதைக்கும் பிணம். (உ-ம்.) " இடுபிணந்தின்னுமிடாகினிப்பேய் " (சிலப். கனுத்திற. ௨௧.)

இடுபு— 1. இட்டு. (உ-ம்.) "புலராப்பச்சிலை யிடையிடுபுதொடுத்த" (புறநா. ௩௩) [பு - ஒரு வினையெச்சவிகுதி.] 2. இடுதல். [பு-ஒரு தொ ழிற்பெயர்விகுதி.]

இடுபோநள் — பிறர் வரவிட்ட பொருள். (மணிமேக.)

இடும்பர்-1. செருக்கர். 2. துயர்செய்வோர். ( உ-ம். ) "இடும்பரொருவழியிணையிலர்கசடர் கள்" (திருப்பு. ௩௧௮.) [இடும்பு-அகந்தை, உப த்திரவம்.]

இடும்பன்—குமரனேவல்செய்வோன்.

இடும்பி—செருக்குடையாள்.

இடும்பு— 1. அகந்தை. 2. அவமதிப்பு. 3. கொடுமை. 4. சேட்டை. 5. தேசோபத்திரவம்.

இடும்பை—1. அச்சம். 2. தரித்திரம். (பொ ருநரா. ௬௭.) 3. துன்பம். (உ-ம்.) "இடும்பைக் கிடும்பைபடுப்பர் " ( வள். ௬௨௩. ) 4. நோய். ( உ-ம். ) " கரப்பிடும்பையில்லாரை " ( வள். ௧௦௫௬.) [ துன்பத்தின்பேர் துன்பத்தைத்தரு நோய்க்கு வந்தமையால் ஆகுபெயர். ] 5. பொ ல்லாங்கு. 6. விகாரமெட்டினொன்றாகிய அகங் காரம். 7. வைக்கும்பை. (உ-ம்.) "இடும்பைக் கிடும்பையியலுடம்பு " (நல்வழி. ௩.) [ இடும்; பை.]

இடுமருந்து— ஒருவரை ஒருவர் வசியப்படுத் தும்பொருட்டு அன்ன முதலியவற்றிலாவது,நீர் முதலியவற்றிலாவது,தாம்பூல முதலியவற்றிலா வது சேர்த்துக் கொடுக்கப்படும் வசிய மருந்து. இது பற்பல செந்துக்களின் கபாலபஸ்மம், அற் பவீரியவிஷம், மலமூத்திர ஔஷதம், பச்சிலை மூலி எனப்பலவகை. (சீவரட். ௩௨௫)

இடுமுடுக்கு—நெருக்கமான இடம்.

இடுமோலி— ஒருமரம். [இது மலையாளக்க டற்கரையில் வளர்வது.]

இடுலி—பெண்ணுமை. [ஊ-ஃவி.]

இடுவந்தி—1. அடாவரி. 2. அநீதி. (உ-ம்.) "எவ்வந்தியோவறியேனிவள் சொன்ன இடுவந் தியே" (தனிப்பா. ௩௧௧.) 3. குற்றமில்லாதவன் மேற்குற்றத்தையேற்றுதல். ( உ-ம். ) "பொற் கொல்ல னெஞ்சமிடுவந்தி கூறுதலைப் புரிந்து நோக்க" (சிலப். கொலைக்கள. ௧௨௦. உரை.)

இடுவேற்று—இடைத்தட்டு.

இடை— 1. அளவு. (தைல. பாயிர. ௩௧. உரை.) 2. இக்குவாகுவின் மகளாகிய புதன் மனைவி. 3. இடப்பக்கம். (உ-ம்.) "நுண்ணூலி டையாளையெங்கள்பெம்மானிடையாளை" (அபி ராமி. ௮௬.) 4. இடம். (உ-ம்.) "ஆயிடைநின்ற கிரீடியை"(பாரத. பதினெழ. ௨௧௭.) 5. இடைச் சொல். (இலக்கணம்.) (உ-ம்.) "பெயர்வினையி டையுரிநான்கும் பகாப்பதம்" (நன். பதவி. ௪.) 6. இடையின எழுத்து. (இலக்கணம்.) (உ-ம்.) "அல்வழியுயிரிடைவரின்" (நன். மெய்யீற்று. ௧௭.) 7. இடையீடு. (உ-ம்.) " இடையில்வண் புகழ்" (தொல். பொரு. ௭௬.) 8. இடையென் னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத் தொகையும். 9. ஒருருபு. அது பெயர்ச்சொல்

லைச்சார்ந்து ஏழாம்வேற்றுமைஇடப்பொருளில் வருவது. (உ-ம்.) "அதன்வாயிடைவந்தனன்" (பாரத. பதின்மூ. உஎ.) 10. சமயம், பொழுது. (உ-ம்.) " இடையறிந்தெம்மைச்சேர்மினென்றனர்" (திருவிளை. விளையல். எ.) 11. சரசுவதி. 12. தேகத்தில் நாபிக்குக்கீழே கொஞ்சதுரத்திலேயுண்டாயிருக்கிற கந்தத்திலிருந்து இடப்புறமாகப்புறப்பட்டு பிரமரந்திரபரியந்தம் வியாபித்து வெளியில் இடப்பக்கத்து நாசித்துவாரத்தையாசிரயித்து இருப்பதொருநாடி. (சி. வி. யோக. க.) சுழுமுனையிலே தோன்றிப்பிங்கலையோடு கத்திரிகைக்கால்போலப்பின்னி வீணைதண்டுக்கு வில்லிணைட்டாற்போலக் கபாலத்தைச்சுற்றிக் குதிரைமுகமாக நாசியளவும் நிற்பது. (த-வி.) 13. நடு. (உ-ம்.) "பாசிலையிடையிற்பூத்தபைந்துணர்" (நைடத. அன்னத்தைக்கண். ௯௪.) 14. நடுநேரம். 15. நிறை. (உ-ம்.) "இடைதான்குறைந்ததுமச்சமுங்காட்டுவதில்லையென்றால்" (ஒரு துறைக்கோ.கஅரு) 16.நீட்டலளவையிலொன்று.17.பக்கம்.18.பசு. 19. பூமி. 20. போசநம். 21. பௌரணை. 22. மருங்குல், சரீரத்தின் நடு. (உ-ம்.) "துடியிடையறன்மென்கூந்தலொண்டொடி" (நைடத. சுயம்வர. ககரு.) 23. யானை. 24. வழி. (உ-ம்.) "அழலவிராரிடை" (கலித்தொ. உ.) 25. வாக்கு. 26. வானம், சுவர்க்கம். 27. விரைவு, கெதி. [2, 11, 12, 28, 19, 20, 25, 26, 27. [ஐஃ௦.]

இடைக்கச்சு—இடைக்கட்டு.

இடைக்கட்டு— 1. அரைக்கச்சு. (உ-ம்.) "யோகபட்டத்திடைக்கட்டினர்" (திருவிளை. இரசவா கக.)2. நிறுத்தன அறியுமிடத்து நிறுக்கப்படும்பொருளுக்கு ஆதாரமாயிருந்த பாத்திரத்தின் நிறையைக்கழித்துப்பார்த்தல்.

இடைக்கணம்—இடையினவெழுத்து.(நன். ஏ0. உரை.) அவை: ய,ர,ல,வ,ழ,ள என்னும் ஆறுமாம்.

இடைக்கருவி— தோற்கருவிகளுள்ளே மத்தளத்திற்கும் உடுக்கைக்குமிடையேகரங்கொள்ளப்படுங்கருவி. அதனைச் சல்லியென்பர். (சிலப். அரங்கேற்று. உஎ. உரை.)

• இடைக்காடன்— 1. ஒருபுலவன். (உ-ம்.) "இடைக்காடனுடன்போய்". (திருவிளை. இடைக்காடன். க.) [இடைக்கழிநாடு என்றும், இடைக்காடு என்றுஞ்சொல்லப்படும் ஊரிற்பிறந்தவனாதலால் இந்நாமமெய்தியது போலுமென்றும், கலாவல்லவனாய் ஊசிமுறி யென்னும் இலக்கண நூலொன்று செய்தனனென்றுங் கூறுவர்.] 2. பதினெட்டுச்சித்தரிலொருவர்.

இடைக்கிடை— 1. ஊடேயூடே. (உ-ம்.) "இலங்கையூர்நடக்குந்தானை- கார்க்கருங்கடலைமற்றோரிடைக்கிடைகாலன்றானே - சேர்ப்பது போன்றது" (இராமா. படைக்காட்சி. ரு.) 2. ஒன்றைவிட்டொன்று. 3. நிறைக்குநிறை.

இடைக்குலநாதன்— விட்டுணு. [கிருஷ்ணாவதாரத்தில் இடையர்குலத்திற்கதிபனாயிருந்ததைபற்றிவந்தபெயர்.]

இடைக்குறை—1. ஆற்றிடைக்குறை. அஃதாவது ஆற்றுக்குள்ளே நீரில்லா திருக்குநிலம். 2. பதத்தின் இடைநின்ற எழுத்துக்குறைந்து வருஞ்செய்யுள்விகாரம். "வேதின வெரிநினோதிமுதுபோத்து" என்பதிற்போல. இங்கே ஓந்தி எனற்பாலது ஓதி என இடை குறைந்து நின்றது. (நன். கருசு. உரை.)

இடைக்கொள்ளை—1. அகமிருத்து. இஃது இடைக்காலத்திற் கொள்ளைநோயால் வருமழிவு. 2. ஒருபொருளைக்குறித்து இருவர் எனக்கு எனக்கு என வாதாட, அவர்க்கில்லாது இடையிலேவருமொருவன் கொள்ளைகொண் டபகரித்தல்.

இடைகலை—1. இடமூக்கால் வருஞ்சுவாசம், சந்திரகலை. (உ-ம்.) "இடைகலையென்பதுவே இடப்பக்கநாசியில் வருஞ்சுவாசம் அதுவே சந்திரகலை எனப்படும்" (சரநூல். கூ. உரை.) 2. இடமூக்கினிற்குநரம்பு.

இடைகழி—வாயிற்றிண்ணை. (உ-ம்.) "முதற்கட்பொய்கையாழ்வார் ஒருபாகவதர்திருமாளிகையிற்சென்று அதனது இடைகழியிற்சயனித்துக்கொண்டிருந்தனர்" (பாரத. பாயிர. கூ. குறிப்பு.)

இடைச்சங்கம் — மதுரையில் இரண்டாவதாயிருந்த தமிழ்ச் சங்கம், அது வெண்டேர்ச்செழியன் முதல் முடத்திருமாறனீறாக ஐம்பத்தொன்பதின்மர் பாண்டியர் அரசுபுரிந்தகாலத்திலே இரீஇயசங்கம். (இறையனார். அகப்பொருள் நக்கீரர். உரை.) இச்சங்க மிருந்துதமிழாராய்ந்தவர்கள் அகத்தியர் தொல்காப்பியர் முதலாகிய ஐம்பத்தொன்பதின்மர்கள். அவர்களுக்கு நூல் அகத்தியமும், தொல்காப்பியமும், மாபுராணமும், இசை நுணுக்கமும், பூத புராணமுமுதலாயின.

இடைச்சந்தி—பூரநாள். (உ-ம்.)"விரையிடைச்சந்திதுர்க்கையுநாவிதன்மிக்கபூரம்" (வீ-உள்ளமுடை. கஞ.)

இடைச்சன்— முதலாம்பேற்றுக்குங் கடைசிப் பேற்றுக்கு மிடையிலே பிறந்த புத்திரன். [இடை - இடையிலே. ஜ: - பிறந்தவன்.]

**இடைச்சாதி**—இடையசாதி. [ஊபா - பசு.]

**இடைச்சி**—1. இடையையுடையவள். (உ-ம்) "ஓசைபெற்றதுடிக்கொளிடைச்சிகள்" (திருப்பு. உ௫௪.) 2. முல்லைநிலப்பெண். (உ-ம்.) "இடையரிடைச்சியர்" (தொன்னூல். கஎ௮.) [ஊபா - பசு.]

**இடைச்சியர்**—முல்லைநிலத்துத்தாழ்ந்தபெண்டீர். (உ-ம்.) "இளைத்தநூண்மருங்குற்செவ்வாயிடைச்சியர்" (இரகு. நாட். ௫௪.)

**இடைச்சீர்**—வெண்சீர். (உ-ம்.) "மூவசையொன்றிநேரிறுவதிடைச்சீர்" (வீரசோ. யாப்பு. க.)

**இடைச்சீலை**—திரைச்சீலை. [இடை-நடு.]

**இடைச்செறி**—குறங்குசெறியென்னுமணி. (சிந்தா.)

**இடைச்சேரி**—இடையரூர்.

**இடைச்சொல்**—பெயர்வினைகளோடே சார்ந்து வழங்குஞ்சொல். அது: பெயரும் வினையும் உணர்த்தும்பொருளைச்சார்ந்துநின்று அவற்றையே வெளிப்படுத்து நடப்பதாய்த்தனக்கென வேறுபொருளையுணர்த்தும் இலக்கணமில்லாததாய்வருஞ்சொல். அச்சொற்கள் (க) இருமொழிதம்மிற்புணர்த வியன்ற நிலைமைக்கண் அவற்றின் பொருணிலைக்கு உதவிசெய்துவருவனவும், (உ) முதனிலைநின்று காரியத்தினைத் தோற்றுவிக்குமிடத்துக் காலங்காட்டியும் பாலுமிடமுங்காட்டியும் வருவனவும், (௩) செயப்படுபொருண்முதலாய வேற்றுமைப்பொருட்கண் உருபென்னுங்குறியாய் வருவனவும், (௪) தமக்கொருபொருளின்றித்தாஞ் சார்ந்த பெயர்வினைகளை அசையப்பண்ணுநிலைமையவாய்வருவனவும், (௫) செய்யுட்கண் இசைநிறைத்தலேபொருளாகவருவனவும், (௬) கூறுவார்தாந்தாங்குறித்த குறிப்பினாலே அவர் குறித்தபொருளைவிளக்கி நிற்பனவும், (எ) ஒப்புமைப்பொருளை உணர்த்திவரும் உவமஉருபுகளும் எனஏழு இயல்பினையுடைய. (தொல். சொல்லதி. உ௫௧, உ௫உ, நச்சி.) [பெயர்ச்சொல்வினைச்சொற்களுமாகாது அவற்றின் வேறுமாகாது இடைநிகரதாய் நிற்குஞ்சொல் என்றும், தனித்துநடத்தலின்றிப் பெயர் வினைகளிடமாக நடக்குஞ்சொலென்றுங்கூறுப.]

**இடைச்சொற்பகாப்பதம்**—நால்வகைப்பகாப்பதங்களிலொன்று; அது: மற்று, ஏ, ஓ, என்பனபோல வருவது.

**இடைசுருங்குபறை**—துடி. (சூ. நிகண். எ: ௬௨.)

**இடைசூரி**—அரும்புவிளையம்.

**இடைஞ்சல்**—1. இடுக்கு. 2. உபத்திரவம். 3. தடை. 4. நெருக்கம்.

**இடைத்தரம்**—நடுத்தரம்.

**இடைத்திரிசொல்**—இயற்சொற்போலத் தனதுபொருள் எளிதில் விளங்கில்லாது அரிதுணர்பொருளதாய்நிற்குமிடைச்சொல். வ-று. சேறும். என்பதில் வரும் விகுதி போல்வன. (நன். உ௭௨.)

**இடைத்தொடர்க்குற்றுகரம்**—இடையினவொற்றைத்தொடர்ந்துவருங்குற்றுகரம். (வரலாறு. சால்பு.) (நன். க௯௪.)

**இடைதல்**—1. ஒதுங்கல். 2. சிலை. 3. தாழ்தல். 4. நெகிழ்தல். (உ-ம்.) "எந்தையேயெனவிடைந்திடைந்துருகுமெளியனே" (தாயு. சிற்சு. ௩.) 5. பலங்குறைதல். 6. பின்னிடுதல். (உ-ம்.) "இற்றதுகுலங்கண்டவசமுகியிடைந்துபோனள்" (கந்தபு. மகாகாளர். உ௦.) 7. வருந்தல். (உ-ம்.) "இடையோமினித்தனிப்போநெறிக்கே" (திருநூற். ௫எ.)

**இடைநாடி**—தசநாடியிலொன்று. (உ-ம்.) "இடை" பார்.

**இடைநிலை**—1. இடைநிற்குந்தரவு. (சிலப். கடலாடுகாதை. ௩௫. உரை.) 2. இடையினிற்றல். (உ-ம்.) "இடைநிலையொழியே" (நன். ௪கக.) 3. இருபுறத்திலுஞ்சாராமனிற்கை. 4. தனிச்சொல். (வீரசோ. யாப். கக. உரை.) 5, பகுபதத்திற் பகுதிக்கும் விகுதிக்கு மிடையே. சாரியைசந்தியாகிய இவற்றின் பாற்படாததாய் நிற்கும் உறுப்பாகிய இடைச்சொல். அறிஞன்; (ஞகரவிடைநிலை) அறிந்தான் (தகரவிடைநிலை) என்பனவற்றிற்போல.

**இடைநிலைக்குணத்தீபகம்**—இடைநிலைத்தீபகம் குணங்குறித்துவருவது. (தண்டி. ௩௮. உரை.)

**இடைநிலைச்சாதித்தீபகம்**—இடைநிலைத்தீபகம் சாதிகுறித்துவருவது. (தண்டி. ௩௧. உரை.)

**இடைநிலைத்தீபகம்**—தீபகவலங்கார மூவகையுளொன்று. அது ஒரு சொல் நடுநின்று முன்வருஞ்சொற்களொடுபொருந்திப் பொருள்விளைத்தும், பின்வருஞ்சொற்களோடு பொருந்திப் பொருள்விளைத்தும் நிற்பது. "உண்ணுமையுள்ளதுயிர்நிலையூனுண்ண - வண்ணுத்தல்செய்யாதளறு" இதிலே, "ஊன்" என்பது முன்னும் பின்னுஞ்சேர்ந்து பொருள் விளைத்து நின்றமைகாண்க.

**இடைநிலைத்தொழிற்றீபகம்**—இடைநிலைத்தீபகம் தொழில்குறித்து வருவது. (தண்டி. ௩௮. உரை.)

இடைநிலைப்பாட்டு—தாழிசை.(உ-ம்.)'இடைநிலைப்பாட்டுத்தரவுபோக்கடையென - நடையயின்றொழுகுமொன்றெனமொழிப்" (தொல். பொரு. ௪௬௪.) [கலிப்பாவிலே இடைநிற்றலுடைமையின் இப்பெயர்பெற்றது.]

இடைநிலைப்பொருட்டீபகம்— இடைநிலைத்தீபகம் பொருள்குறித்து வருவது. (தண்டி. ௩௧. உரை.)

இடைநிலைமயக்கு — சொல்லினகத்துவருமெழுத்துக்கள் ஒன்றோடொன்று கூடுங் கூட்டம்.(நன். எழுத்தி. ௫௰. இராமாநு.) [மயக்கு-கூட்டம்.]

இடைப்படி— பலம் பன்னிரண்டுகொண்டது. (தைல. தைலவ. ௧௨௧. உரை.) [இதனை மாகதப்படி என்பர்]

இடைப்படுதாநம் — மத்திமதாநம். (சூ. நிகண். ௧௨௧௨.)

இடைப்படுவள்ளல்—இடைவள்ளல்.(உ-ம்.) "தம்பாலமைந்திடுங்காலையெஞ்சி-யீண்டியவெறுக்கைவீசுமிடைப்படுவள்ளலொத்தார்" (கந்தபு. ஆற்று. ௩௧.)

இடைப்பழம்— காய்க்குலையில் இடையினடையே பழுத்திருக்கும் பழம்.

இடைப்பழுப்பு— பச்சைகலந்த பழுப்பு.

இடைப்பால் — ஆடலரங்கிற் குரிய நிலம். (சிலப்.)

இடைப்பிறவரல்— வேற்றுமை உருபுகளும், வினை முற்றுக்களும், பெயரெச்சங்களும், வினையெச்சங்கொண்டு முடியும் பெயர்க்கும் வினைக்குமிடையே அவ்விடத்திற்கு ஏற்ற பிறசொற்கள்வருதல். சாத்தன் வயிறார உண்டான். இதிலே "வயிறார" என்பது இடைப்பிறவரல். (நன். பொது. ௫.) [இடை; பிற; வரல்.]

இடைப்புணர்வளபெடை— நடுவிருசீர்க்கண்ணுமளபெடைவருவது.

இடைப்புணர்வியைபு— நடுவிருசீர்க்கண்ணுமியைபுவரத்தொடுப்பது.

இடைப்புணர்வுமுரண்— முரண்டொடையில் ஒருவகை; அஃது: ஓரடியிலே இடையிலுள்ள இருசீர்க்கண்ணு முரண்வரத்தொடுப்பது. (வ-று.) "வணங்குசிறுமருங்குற்பேரமர்க்கண் மாதர்" (யாப். காரிகை. ஒழிபி. ௫.)

இடைப்புணர்வுமோனை — நடுவிருசீர்க்கண்ணுமோனைவரத்தொடுப்பது.

இடைப்புணர்வெதுகை— இடையிருசீர்க்கண்ணும் எதுகைவருவது.

இடைப்பூட்டு—அரையிற்கட்டுங்கச்சு.

இடைப்போகம்— இடைக்காலத்துப்புன்பயிர்விளைவு.

இடைமகன்—இடையன். (உ-ம்.) "இடைமகனுந்தானேரிறைஞ்சிவிட்டகன்றான்" (பெரியபு. சண்டேசு. ௨௪.) [இடை - பசு.]

இடைமடக்கு— 1. இடையிற்றடுக்கை. 2. ஒருவன் எடுத்தவிஷயத்தைப்பேசி முடிக்கவொட்டாது தடுத்தல். 3. மடக்கென்னுஞ்சொல்லணியினொருவகை; அது: செய்யுளின் ஓரடியின் இடையே நிற்குஞ்சொல் வேறுபொருள் விளைத்துப்பெயர்த்தும் வருவது. "மனமேங்குழையகுழையவாய்மாந்தர்" (தண்டி. ௯௨,௯௩) என்பதிற்போல. [இடையிலே மடங்கிவருதலுடைமையின் இப்பெயர்த்து.]

இடைமருது—திருவிடைமருதூர் என வழங்குமோரூர். (உ-ம்.)"வாட்டமுற்றிரிக்குமிடைமருது" (தணிகைப். புராணவ. ௫௰.)

இடைமுள்— 1. இடைப்பரு. 2. ஒரு கரப்பன்.

இடையர்—1. முல்லைநிலத்துத்தாழ்ந்த ஆடவர். (அகப்பொ. அகத்திணை. ௨௨.) [இடை - பசு.] 2. முல்லைமாக்கள்.

இடையல்—1.துகில்.(உடைவிசேடம்.) (சூ. நிகண். ௭: ௩௧.) 2. மெலிதல். 3. வருந்தல். (உ-ம்.) " இனம்பிரிந்தமான்போனனிடையாவண்ணம்" (தாயு. ஆகார. ௨.)

இடையறல்—1.இடைக்காலத்தொழிதல்2. இடையிடத்தொழிதல். (உ-ம்.) "இரும்பனியிடையறுவிமயப்பொன்வரை" (கந்தபு. பார்ப். ௩௫.)

இடையறமை—1. இடைக்காலத்தொழியாமை. 2. இடையிடத்தொழியாமை.

இடையன்— பசுமேய்க்கிறவன், முல்லைநிலத்தோன். (உ-ம்.) "வேயிருக்குமிதழிடையனுக்கு" (பாரத. கிருட்டி. ௩௫.) [இடை-பசு.]

இடையன்கால்வெள்ளி — மேடராசியில் நிற்கும் ஒரு விண்மீன். [திசைச்சொல்.]

இடையாகெதுகை— எதுகைவகையினொன்று; அஃது: அடிதோறும் இரண்டாமெழுத்து ஒன்றிவரத்தொடுப்பது. "அகரமுதலவெழுத்தெல்லாமாதி-பகவன்முதற்றேயுலகு" என்பதிற்போல. (யாப். காரிகை. ஒழிபி. ௬. உரை.)

இடையாயர்—நடுவாயுள்ளார்.

இடையிட்டுமொழிதல் — தவஞ்செய்வார்க்குரியநியமங்களெட்டினுளொன்று.(மணிமேக.)

இடையிட்டெதுகை—ஒவ்வோரடி இடையிலொழித்துவருமெதுகை. (உ-ம்.) "தோடாரெல்வளைநெகிழநாளு- நெய்தலுண்கண்பைதலுழப்ப- வாடாவவ்வரிபுதைஇப் பசலையும்-வைகறோறும்பைப்பயப்பெருகி" (யாப். காரிகை. ஒழிபி. ௬. உரை.)

இடையிடுதல்—1. இடையில் இல்லதாதல். (உ-ம்.) "இருசீரிடையிடின்" (தொல். பொரு. சகக.) 2. இடையிலே புகுத்தல். (உ-ம்.) "செங்கால்வெட்சிச்சீறிதழிடையிடுபு" (திருமுரு. உக.) 3. விக்கிநஞ்சேரிடுதல். (இறைய. ரு.)

இடையிடை— இடைக்கிடை. (உ-ம்.) "இடையிடைகால்களும்" (கந்தபு. தெய்வ எஉ.)

இடையியற்சொல்— உலகவழக்கினுஞ்செய்யுள்வழக்கினுந் தன்பொருளைத் தெற்றென விளக்கும் இடைச்சொல். வரலாறு மண்ணை, இதில் ஐ இடைச்சொல். (நன். உஎக.)

இடையினம்— மூவினமான ஒற்றெழுத்துக்களுளோரினம்; அவை: மிடற்றினின்று பிறக்கும் ய ர ல வ ழ ள என்னும் ஆறெழுத்துக்கள். (உ-ம்.) "இடையினம் ய ர ல வ ழ ள வெனவாறே" (நன். எ௦.)

இடையினமோனை— மோனைத்தொடையினொருவகை அஃது இடையினவெழுத்திலொன்று. அடியின்முதலெழுத்தாய்வர அவ்வடியிற் பின்னே இடையினத்தின் மற்றோரெழுத்துவரத்தொடுப்பது.

இடையினவேதுகை— இடையினவெழுத்திலொன்று ஓரடியில் இரண்டாமெழுத்தாய்நிற்க, மற்றோரினடயெழுத்து மற்றோரடியில் இரண்டாமெழுத்தாய்வரத் தொடுக்கு மெதுகை. "எல்லாவிளக்கும்விளக்கல்லச் சான்றோர்க்குப் - பொய்யாவிளக்கேவிளக்கு" என்பதிற் போல. (யாப். காரிகை. ஒழிபி. ௬.)

இடையீட்டெதுகை— இடையிட்டெதுகை.

இடையீடு— 1. இடையில்விடுதல், ஒய்தல். (உ-ம்.) "ஒருவிடயத்தின்கண்ணும் விட்டுவிட்டறிவதன்றி இடையீடின்றி அறியமாட்டாது" (சி. சி. உ: கூச. சிவஞா.) 2. இடையிலுறுவது. 3. விக்கிநம். (உ-ம்.) "பகற்குறியிடையீடு" (அகப்பொ. களவிய. ருகூ.) 4. வித்தியாசம்.

இடையுவா—பௌர்ணிமை. (உ-ம்.) "சரற்காலசந்திர - னிடையுவாவில் வந்தெழுந்தாலே போல" (நாலாயிரப். கருப்பூர. ரு.)

இடையூறின்மை — ஈச்சுரன் எண் குணத்தொன்று. அஃது: அந்தராயமின்மை, துக்கமின்மை. (சி. சி. பர. நிகண். உ)

இடையூறு—1. ஊறுபாடு, விக்கிநம். (உ-ம்.) "இவன் மிசையிடையூரென்றெய்துறுவதன் முன்யாம்" (பாரத. மணிமான். எஉ.) 2. தடை. (உ-ம்.) "இறுதியில்லவனைத்தொழற்கிடையூறு தென்றனுரெய்துவான்" (திருவிளை. விடையில. க௦.)

இடையூறுகிளத்தல்—(அகப்பொருள்) தலைவி நாணிக் கண்புதைத்ததனுலெழுந்த துன்பத்தைக்கூறுதல். (வாண. கஉ. மூகம்.)

இடையெண்— சிந்தடி ஓரடியாக எட்டுவருவது. (வீரசோ. க௦க.)

இடையெழுஞ்சநி— பூராநாள். (சூ. நிகண். க: எக.) [மூலத்திரிகோணத்தில், இடைவருங்கோணத்திற்குரிய நட்சத்திரமாதலின் இப்பெயர்த்து. ஷநீ - கோணம்.]

இடையெழுத்து— இடையினம்; அது: வல்லோசை மெல்லோசை என்னு மிரண்டற்கும் இடையிலுச்சரிக்கப்படுமெழுத்து. (இலக்கண வி௵.)

இடையொடுகடைமடக்கு — ஓரலங்காரம். அஃது அடிகளினிடையுங் கடையும் மடங்கிவருவது. (தண்டி. கூஉ. உரை.)

இடைவண்ணம் — இசைவகை மூன்றனுளொன்று; அது: இடையெழுத்தேமிகுத்துவருவது. (உ-ம்.) "எண்ணியநூற்பெருவண்ணமிடைவண்ணம்வனப்பென்னும் - வண்ணவிசைவகையெல்லாம்" (பெரியபு. ஆனாய. உஅ.)

இடைவழக்கு – வாதிபிரதிவாதிகளுக்கிடையிலே வேறொருவன் தனதென்று வாதாடுதல்.

இடைவழி—1. இரண்டுதாகங்களுக் கிடையிலே இருக்கும்வழி. 2. நடுவழி.

இடைவள்ளல்— இரப்போர்க்குக் கொடுப்பவர் எழுவர். (உ-ம்.) "அக்குரன், சந்திமான், அந்திமான், சிசுபாலன், வக்கிரன், கன்னன், சந்தன்" (சூ. நிகண். உ: உரு) [இடை - நடு. வண்மை - கொடை. அல் - ஒருபெயர்விகுதி.]

இடைவிடல்— இடையிலே விலகவிடுதல். (உ-ம்.) "கைக்கயமூழ்கொண்டேகனலடிப்பற்றுவண்ணம்-இடைவிடாமற்றுழாவி" (தைல. தைலவ. கூசு.)

இடைவிலக்கல்— இடையிலேவந்து தடுத்தல். (உ-ம்.) "நிருதரிடைவிலக்காவண்ணம்" (இராமா. கையடை. க௦.)

இடைவு—தோல்வி.

இடைவெட்டு–இடையிற்பெறுதல். [வழக்.]

இடைவெட்டுப்பணம் — மாறுமுத்திரை விழுந்தபணம்.

இடைவெட்டுப்பேச்சு— நிந்தனை.

இடைவெளி—இருபொருளுக்கு இடையேயிருக்கும் வெளி.

இடோல்— ஒருபெரும்பறை. [தெலுங்கு.]

இடோலி–ஒருவகைச்சிவிகை. [தெலுங்கு.]

இண்டஞ்செடி–இண்டு; அது: செவ்விண்டு, வெள்ளிண்டு என இருவகை.

இண்டர்—1. இடையர். 2. சிநேகர். 3. சுற்றம்.

இண்டிகன் — 1. சிறைச்சாலையின்வெளிப்புறங்காப்போன். (பராசர. பக். ௪0௬.) 2. சோதிடன்.

இண்டு—இண்டங்கொடி. (பிங்கல.௨௮௮௭.)

இண்டை—1.ஈகைக்கொடி.(பிங்கல.௨௮௮௭.) 2.தாமரை.(சூ.நிகண்.௩:௫௮.)3.ஓர்வகை மாலை. (உ-ம்.)"விழுத்தொண்டர் - குழுக்கடந்த விண்டைநிகர்சுமையடைமேல்" ( திருவிளை. மண். ௧௬.) இது, சிரசின்மேல் வட்டவடிவாய்ச்சுருங்க இறுகக்கட்டிச்சாத்துமாலை.4.முல்லைக்கொடி.

இணக்கம்— 1. இசைவு, சம்மதம், சேர்மானம். (உ-ம்.) " நல்லிணக்கமல்லதல்லற்படுத்தும்" (கொன்றைவேந்தன்.) 2. திருத்தம். (உ-ம்.) " இதனையிணக்கமாச்செய்" (வழக்.)

இணக்கு— 1. இணக்கம். (உ-ம்.) "இணக்குறுமென்னேழைமைதான் " ( தாயு. பரா. ௨௭௬.) 2. இணக்கென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும்.

இணக்குதல்—உடன்படுத்தல்.

இணக்கோலை—ஒருவிஷயத்தைக்குறித்து இருதிறத்தார்தம்முள் இணங்கி யெழுதிக்கொள்ளுகிறபத்திரம்.

இணங்கல்—1. உடன்படல். 2. பொருந்துதல். (உ-ம்.) "இணங்கிடாவிச்சாஞானக்கிரியைகள்" (சி. சி. ச. எ.)

இணங்கலர்—பகைவர். [ இணங்கு; அல்; அர்.]

இணங்கன் —1. சிநேகிதன். (திருவால. திருவிளை.) 2. வெடியுப்பு.

இணங்கார்-பகைவர். [இணங்கு; ஆ; ஆர்.]

இணங்கி—தோழி. (உ-ம்.) "இணங்கிமார் தமையேவினளில்லையால்" ( சேதுபு. விதூமச்ச. ௯௬.)

இணங்கு—1. இணக்கம். (உ-ம்.) "உள்ளப்பெருரிணங்கையொழிவேனே " ( திருப்பு. ௨௮௮.) 2. இணங்கென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும், வினைத்தொகையும். 3. பிசாசம்.

இணங்குதல்—இணங்கல். பார்.

இணர்—1. கிச்சிலிமரம். 2. குலை. (உ-ம்.) "இணர்ப்பெண்ணை" (பட்டினப்பாலை. ௧௮.) 3. தளிர். (உ-ம்.) "ஒள்ளிணர்க்கணியின்கொம்பருலவி " ( கந்தபு. வள்ளி. ௧௨. ) 4. பூங்கொத்து. (உ-ம்.) " இணருழ்த்துநாறுமலரனையர் " (வள். ௬௫0.) 5. பூந்தாது. 6. பூமலர். (உ-ம்.) "தேங்கமழ்மருதிணர்கடுப்ப" (திருமுரு. ௩௪.) 7. மாமரம். 8. பலசுடர். (உ-ம்.) "இணரெரி தோய்வன்ன" (வள். ௩0௮.)

இணரு—பூ. (உ-ம்.)"பிருங்காமலகதைலம்" பார். (தைல. தைலவ. ௨௮.) உ-சாரியை.

இணுட்டு—1. ஓலைத்துண்டு. 2. மீன்செதிள். [வழக்.]

இணுப்பு—ஏய்ப்பு. [வழக்.]

இணுப்புதல்—ஏய்த்தல்.

இணி—1. எல்லை. 2. ஏணி. 3. கண்ணறு.

இணுக்கு—1. இணுங்கப்பட்டது. 2. கிளை முதலியவற்றிடைச்சந்து. 3. குலையினெட்டு. 4. கைப்பிடியளவினுக்கப்பட்டது.

இணுக்குதல்—இணுங்குதல்.

இணுங்குதல்—இசித்தல். (உ-ம்.) "இணுங்கினதாய்" (சிந்தா. கேமசரி. ௬௮. உரை.)

இணை—1.இச்சை. (கக-ஆவதுநிகண். ௧௩௪.) 2. இசைவு. 3. இசையென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும், வினைத் தொகையும். 4. இரண்டு. (உ-ம்.) "இணையடிக்கீழ்" ( பாரத. பதினே. ௨௬௧.) 5. ஒப்பு. (உ-ம்.) "இணையாருமிலாவரசே" ( பாரத. பதினே. ௨௩0.) 6. கூந்தல். (கக-ஆவது நிகண்டு.௧௩௪.) 7. சோடு. (உ-ம்.) "ஈரிணைமாடு" 8. துணை. 9. நால்வகை நரம்புகளுளொருவகை நரம்பு. அஃது: இரண்டு நரம்பு. (உ-ம்.) "இணைகிளைபகைநட்பென்றிந்நான்கி- னிசைபுணர்குறிநிலையெய்தநோக்கி" (சிலப். வேனிற். ௩௩)

இணைக்கயல்— 1. இரண்டுகயன்மீன்வடிவாகப்பொன்முதலியவற்றாற் செய்யப்பட்டுள்ள தொன்று. இதனை அட்டமங்கலங்களுளொன்றாகவும், அரசசின்னம் இருபத்தொன்றனுளொன்றாகவும் கொள்ப. 2. கையிலுள்ள ஓரிரேகை. (உ-ம்.) "மதிமருண்டானிணைக்கயற்கையான்" (பாரத. கீசகன்வதை. ௩.)

இணைக்குறளாசிரியப்பா— (யாப்பு) அகவற்பாவுளொன்று; அஃது, ஈற்றடியும் முதலடியுமளவொத்து, இடையடிகள் சீர்குறைந்து குறளடிசிந்தடியாகவருவது. (காரிகை. செய்யுளிய. ௮. உரை.)

இணைக்கை—இரட்டைக்கை. (உ-ம்.) "இணைந்துடன்வருவது இணைக்கையாகும்"(சிலப். அரங்கே. ௧௮. உரை.)

இணைக்கொடைப்பொருள்—மணவாளனும்,மணவாட்டியுமாகிய இருவரும், கலியாணமுதலிய சுபகாரியங்களில் ஓரிடத்திலே கூடியிருக்கும்போது அவர்களுக்கு எவர்களாலேனுங் கொடுக்கப்படுவது. (மிரு. ச. ௧௧௬.)

இணைக்கோணத்தடை— மூக்கிரட்டையிலையெனப் பொருள்படுமொரு குறிப்புமொழி. (உ-ம்.) "இணைக்கோணத்தடைமுழுதுங்கொள்ளட்டு" (இராசவைத். சo.)[இணை-இரண்டு. கோணம்-மூக்கு. அடை-இலை.]

இணைத்தகோதை—இதழ்பறித்துக்கட்டினமாலை. (உ-ம்.) "இணைத்தகோதையணைத்தகூந்தல்" (திருமுரு. உoo.)

இணைத்தல்—1. இரண்டையொன்றாகச்சேர்த்தல். 2. உவமித்தல். 3. தொடுத்தல். 4. பொருத்தல். (உ-ம்.) "இணைத்துநோக்கும்" (நைடத. காப்பு.)

இணைதல்—1. இசைதல். 2. சேர்தல். 3. ஒத்தல். 4. சையோகஞ்செய்தல். (உ-ம்.) "எயிற்றியரிளமுலையிணையவெண்ணுபு" (தணிகை. நாட்டு. ருக.)

இணைப்படம்— இரண்டுபுறமுமொத்தபடம். (உ-ம்.) "மன்னுகவிணைப்படமுந்தேர்த்தட்டும்" (சிந்தா. நாமக. கசச.)

இணைப்பு—1. இசைப்பு. 2. சேர்ப்பு.

இணைமணிமாலை— தொண்ணூற்றாறு பிரபந்தங்களுளொன்று; அஃது: வெண்பாவும், அகவலும், வெண்பாவும், கலித்துறையுமாக இரண்டிரண்டாக விணைத்து வெண்பாவகவ லிணைமணிமாலை யெனவும், வெண்பாக் கலித்துறையிணைமணிமாலையெனவும் நூறுநூறு அந்தாதித்தொடையாக வரப்பாடப்படுவது.(உ-ம்.) "வெண்பாவகவல் வெண்பாக்கலித்துறை பண்பானீரைம்பஃதந்தாதி - யியலின்வகுப்ப திணைமணிமாலை" (இலக்கணவி. அகஅ.)

இணைமுரண்—இணைமுரண்டொடை.

இணைமுரண்டொடை— தொடைநாற்பத்துமூன்றுவகையுளொன்று;அஃது: ஓரடியின்முதலிருசீரும் முரணுக இணைந்துவரத்தொடுப்பது. "சீறடிப்பேரகலல்குலொல்குபு" என்பதிற்போல. (யா. காரிகை. உறுப். கசு. உரை.)

இணைமோனை— இணைமோனைத்தொடை. பார்.

இணைமோனைத்தொடை —தொடை நாற்பத்துமூன்று வகையு ளொன்று; அஃது: ஓரடியின்முதலிருசீர்க்கண்ணும் மோனையியைந்து வரத்தொடுப்பது. "அணிமலரசோகின்றளிர்நலங்கவற்றி" என்பதிற்போல. (யாப். காரிகை. உறுப். கசு. உரை.)

இணையசை—நிரையசை. [இருகுறிலுங்குறில் நெடிலுமாக இவ்விரண்டு எழுத்துக்களால் வருமசையென்றபடி.]

இணையணை— இருவர்போகநுகர்தற்கானசயனம். (உ-ம்.) "அன்னத்தூவியிற்செறித்த-விணையணைமேம்படத்திருந்து துயில்பெறுஅ" (சிலப். அந்திமா. கஎ.)

இணையல்—இணைதல்.

இணையளபெடை—இணையளபெடைத்தொடை.

இணையளபெடைத்தொடை — தொடை நாற்பத்துமூன்று வகையுளொன்று; அஃது: ஓரடியின் முதலிருசீரும் அளபெடையோடு இணைந்துவரத்தொடுப்பது. "தாஅட்டாஅமரை மலருழக்கி" என்பதிற்போல. (யாப். காரிகை. உறுப். கசு.)

இணையாவினைக்கை— ஒற்றைக்கை.(உ-ம்.) "இணையாதியல்வதிணையாவினைக்கை" (சிலப். அரங்கேற்று. கஅ. உரை.)

இணையியைபு—இணையியைபுத்தொடை.

இணையியைபுத்தொடை—தொடை நாற்பத்துமூன்றுவகையுளொன்று; அஃது: ஓரடியினீற்றுச்சீரிரண்டும் இயைபாக விணைந்து வரத்தொடுப்பது. "மொய்த்துடன்றவழுமுகிலே பொழிலே" என்பதிற்போல. (யாப். காரிகை. உறுப். கசு. உரை. ) [ "இறுதியொன்றலேயியைபு" என்பவாகலின் இயைபுக்கு அடியினிறுதியே முதலாகக்கொள்ளப்படும்.]

இணையிலின்பம்—அநந்தசுகம். (சிந்தா.)

இணையிரோதி—கடையொத்த செய்ப்பினையுடைய கூந்தல்" (திருமுரு. உo. உரை.)

இணையெதுகை — இணையெதுகைத்தொடை.

இணையெதுகைத்தொடை — தொடை நாற்பத்துமூன்றுவகையுளொன்று; அஃது: ஓரடியின் முதலிருசீர்க்கண்ணும் எதுகை இயைந்துவரத்தொடுப்பது. "பொன்னினன்னபொறிசுணங்கேந்தி" என்பதிற்போல. ( யாப். காரிகை. உறுப். கசு. உரை.)

இணையெழுத்து–போலியெழுத்து. [இணை-ஒப்பு.]

இணைவிழைச்சு — இருவர்காமத்தாலாயபுணர்ச்சி. (உ-ம்.) "அரிவையரோடுசேவ- ரிணைவிழைச்சியற்கைகூடாதிரங்கினர் " ( கந்தபு. மேரு. கக.)

இணைவு–1.ஒன்றிப்பு.2.கலப்பு.3. புணர்ச்சி.

இத்தலை—இக்காலம். (சிந்தா.)

இத்தனை—1. இவ்வளவு. 2. சிறிது. (உ-ம்.) "உனைத்தனையே யொக்கவித்தனைநாளிலுயர்த்துகையே" (திருநூற். அரு.)

இத்தால் — இதனலென்னும்பொருள்பட இது என்னுஞ்சுட்டுப்பெயர் உருபேற்று விகாரப்பட்டுவந்தமொழி. (உ-ம்.) "வந்துதொடருமித்தால்" (தாயு. ஆகார. கரு.)

இத்தி—ஒரு துவர்மரம். இதனைக்கல்லாலெ ன்பர். (உ-ம்.) "இத்திதன்னின்கீழிருமூவர்க் - கத்திக்கருளியவரசேபோற்றி" (திருவாச. போற்றித். கசுஉ.) 2. இச்சிமரம்.

இத்திநடையம்—நத்தை.

இத்தியாதி— இதுமுதலானவை. (உ-ம்.) "மோகியென்றும், மகாஎன்றும் இத்தியாதி நாமங்களுண்டு. (சி. சி. க: ௩௭. சிவாக்.)

இத்து— 1. காவட்டம்புல். 2. தன்பொருட்டன்றி யாதாமொருகாரியத்தின்பொருட்டு உச்சரிக்கப்படுகிற எழுத்து. (சப்தசங்கிரகம்.)

இத்துணை— 1. இதுகாலம்வரையும்.(உ-ம்.) " தண்டம்வல்லையிற் புரிந்திலனித்துணைதாழ்த்தான்" (கந்தபு. அவைபுகு. கo௭.) 2. இவ்வளவு. (உ-ம்.)"அத்தகுதேவராலயங்களுக்-கித்துணையலக்கண்வந்தெய்திற்று" (கந்தபு. சூரனமை. கூஅ.)

இத்துரா—காவட்டம்புல்.

இத்துரு—ஈயமணல்.

இத்துவரம்—எருது.

இத்துவரன்—நீசன், எளியவன். [ஐத்வர]

இத்துவரி— வியபிசாரப்பெண். [ஐத்வரீ]

இத்தை—1. இதனை; (உ-ம்.) "இத்தை-யாயுமறிவுடையனுய்" (சி. சி. கக: க.) [இது என்னுஞ்சுட்டுப்பெயர் ஒற்றிரட்டித்துருபேற்றது.] 2. ஒரு முன்னிலையசைச்சொல்.(உ-ம்.)"நீயொன்றுபாடித்தை" (நன். இடை. உக. உரை.)

இத்மா—விக்கல். (சீவரட். கஅச.)

இதசத்துரு—புறத்தின் நட்புள்ளவன்போல் நடித்து அகத்தில் விரோதியா யிருக்கிறவன். (உ-ம்.) " மடமையிதசத்துருவாகவந்து-சிந்தைகுடிகொள்ளுதே" (தாயு. பரிபூ. ரு.)

இதண்—இதணம். (உ-ம்.) "நெட்டிதணேறுமிப்புனத்தினள்" (கல்லா. ருக.)

இதணம்—அட்டாலை, காவற்பரண், பரண். (உ-ம்.) "குறவர்கைத்தொழிலா-விட்டவிதணத்திருந்தெம்பெருமாட்டி" (கந்தபு. வள்ளி. ரு௨.)

இதம்— 1. அன்பு. (உ-ம்.) "இரவிதாங்தும் பரவையை" (மரு-கி. எச.) 2. இது எனப்பொருள்படவரும் ஒருவடமொழித்திரிவு. (பௌட். ச: அஉ.) 3. இன்பம். (உ-ம்.) "இதந்தருமடந்தையொடியைந்து" ( திருவாதவூ. பாயிர. உ.) 4. இனியசொல். 5. உயிர்க்குறுதியென வேதாகமங்களின் விதித்தவற்றைச்செய்தல்,நன்மை. (சி.சி.உ:கரு. சிவாக்.) 6. உரிமை. 7. ஏற்றதன்மை. 8. சொல். [1, 3, 4, 5, 6, 7. ஹித. 2. இதம்.]

இதமித்தல்— இதஞ்செய்தல், பற்றுச்செய்தல். (உ-ம்.) "இதமித்தல்பாசத்தினின்றி"(சிவஞானபோ. சிவஞா. கo: சு. வெண்பா.) [ இது பெயரடியாற்பிறந்தவினைப்பெயர்.]

இதமியம்—1. இதப்படுத்தல். 2. இனிமை. 3. திருத்தி.

இதயகமலம்—சிவனைப்பூசித்தற்குக் கற்பிக்கப்படும் அந்தர்த்தாநமாகிய ஆசநம். இதற்குமேலே சத்திமூர்த்தியும்,சிவன்மூர்த்திமானுமாவர். இது; பிருதிவிதத்துவமுதல் சத்திதத்துவமீறுகிய முப்பத்தைந்தனையும், கிழங்குமுதற் பீசமீறுகிய அவயவங்களாக வுடையதாயிருக்கும். (சி. சி. கூ: க. சிவஞாந.) இது;வாழைப்பூப்போல அதோமுகமாய் நாலங்குலந் தாழ்ந்திருக்கும். (மறைஞாந.)[ஹ்ருதயகமலம்.]

இதயத்தர்ச்சித்தல்— இதயகமலத்திலே எட்டங்குல வுயரமுடைய சிவலிங்கமாகக்கற்பித்து அஞ்செழுத்தாற் பூசைசெய்தல். (சி. சி. கூ: அ. மறை.)

இதயபதுமம்—இதயகமலம். (சி. சி. கூ: க. மறை ) [ஹ்ருதயபத்மம்.]

இதயம்—1. இருதயம். 2. பதினொருமந்திரங்களுளொன்று. ( சி. சி. அ: எ. மறை. ) [ஹ்ருதயம்.]

இதாகர்மம் — அந்நியமாயிருக்கிற கன்மம். (உ-ம்.) "இதனுற்கன்மசாமியம் வந்தாலும் இதரகர்மபரிபாகமாகாததால் அநுக்கிரகங்கூடாது" (பௌட். ச: உசு. உரை.)

இதரபதார்த்தம்—வேறுவஸ்து. [இதரபதார்த்தம்.]

இதரபதார்த்தாநவச்சிந்நவான்மா—வேறுபதார்த்தங்களின் எல்லைக்குளடங்காதவான்மா. [இதரபதார்த்தாநவச்சிந்நாத்மா: இதரபதார்த்தம்-வேறுபதார்த்தம். அந- ஓர் எதிர்மறை. அவச்சிந்ந - எல்லைக்குளடங்கியது. ஆத்மா- சீவன்.]

இதரம்— 1. அழிவு. 2. ஈனம். 3. ஒருமருந்து. 4. கீழ்மை. 5. தீங்கு, பகை. (உ-ம்.) "இதரங்கடந்தானுதிட்டிரனென்று" (பாரத. துருவாச. கஉ.) 6. நீசம். 7. பாதரசம். 8. மற்றொன்று. 9. வித்தியாசம்.

இதரயோகவிவச்சேதம்— பிரிவிலை. [இதரயோகவ்யவச்சேத: வ்யவச்சேத - பிரிவு.]

இதரர்— 1. அந்நியர். (உ-ம்.) " இதரர்க்குமாதர்க்காகா"(விருத்தா. சிவபூசா. ருச.) 2. கீழ்மக்கள்.

**இதரவிதரம்**— 1. அந்நியோந்நியம், ஒன்றுக்கொன்று. (உ-ம்.) "பொருவுபோரிவைபோற்பிறவின்மையா - லிருவர்போர்க்குமிதரவிதரமே- மருவுநேருவமாநம்" (சேதுபு. இராமதீர். ருசு.) 2. இதரேதரவுவமை.

**இதராத்தியாசம்** — அத்தியாசம் நான்கனுளொன்று. (உ-ம்.)"அத்தியாசசதுட்டயம்"பார். [ஐதராத்யாஸ.]

**இதரேதரக்கிரியை** — தடுமாறுதொழில். (உ-ம்.)"புலிகொல்யானை" இது, புலியைக்கொன்றயானையெனவும், புலியானது கொன்றயானையெனவும், புலிகருமமாகியுங்கருத்தாவாகியும், யானை கருத்தாவாகியுங்கருமமாகியும்வரநிற்பது. (பி. வி. கடு. உரை.) [ஐதரேதர க்ரியா: ஐதர - மற்றொன்று.]

**இதரேதரத்தொகை**—உம்மைத்தொகையிலொருவகை. அது, தனித்துச்செய்யலாகாத ஒருசெயலை ஒருங்கியைந்துசெய்பவர்களை அல்லது செய்பவைகளைக்கருதிவரும் பெயர்களின் கூட்டம். "கபிலபரணர்தங்களிலே வாதுசெய்தார்கள்" (வீரசோ. தொகைப்பட. சு.)

**இதரேதரம்**—இதரவிதரம்.

**இதரேதரயோகந்துவந்துவன்** — உயர்திணைப்பன்மையீருகவந்த உம்மைத்தொகை."சேரசோழபாண்டியர்" என்பதிற்போல (பி. வி. சமாச. உரு. உரை.) [ஐதரேதரயோக- ஒன்றோடொன்று கூடுங்கூட்டம். த்வந்த்வ-உம்மைத்தொகை.]

**இதரேதரயோகம்**— இதரேதரயோகத்துவந்தன் .(பி. வி. சமாச. உரு. உரை.)

**இதரேதரவுவமை**— உவமையலங்காரத்தினொன்று; அது: பொருளொருகாலுவமையாகவும், உவமையொருகாற்பொருளாகவும் ஒருதொடர்ச்சிக்கண்ணேவருவது. "களிக்குங்கயல்போலுநுங்கண்ணுங்கண்போற் - களிக்குங்கயலும்" என்பதுபோல. ( தண்டி. ருo. ) [ஐதரேதரஉவமா.]

**இதரேதராச்சிரயம்**—அந்நியோந்நியாசிரயமென்னுந்தோஷம். (உ-ம்.) "சரீராந்தரம் கன்மாந்தரம்: கன்மாந்தரஞ்சரீராந்தரத்துக்குக்காரணமாதலால் இதரேதராசிரயதோஷமுமில்லை" (சி. சி. உ: கo. ஞானப்.) [ஐதரேதராச்ரய: ஐதர-அந்நியம். ஆச்ரய-இடம்.]

**இதரேதராத்தியாசம்**— அத்தியாசநான்கனுளொன்று. (உ-ம்.) "அத்தியாசசதுஷ்டயம்" பார்.

**இதல்**— 1. கவுதாரி. (தைல. பாயிர. ருஎ.) 2. காடை.

**இதலை**—கொப்பூழ். (சூ. நிகண். உ. அகூ.)

**இதவு**—இதம்.

**இதழ்**—1. இலை. 2. உதடு, வாயிதழ்.(உ-ம்.) "மீகீழிதழுறப்பம்மப்பிறக்கும்" (நன். எழுத். உசு.) 3. கண்ணிமை. "நீரொடுநிறைந்த வீரிதழ்மழைக்கண்" (புறநா. கசுச.) 4. கதவு நிலை. 5. பனையேடு. (சூ.நிகண்.கக: தகர. க.) 6. பாயினிதழ். 7. பாளை. 8. பூவிதழ்.(உ-ம்.)"பொன்னிதழ்ச்சண்பகத்தின்" (நைட.அன்னத்தைக்கண். ருஉ.) 9. வகிர்ந்தவோலை.

**இதழ்விள்ளல்**—1. பேசல். 2. மலர்தல். 3. வாய்திறத்தல்.

**இதழி**—1. கொன்றைப்பூவாற்றொடுக்கப்பட்டமாலை. (உ-ம்.) "இதழித்தாழ்சடையான்" (சி. சி. காப்பு.) 2. கொன்றைமரம். ( உ-ம்.) "நறையிதழியந்தொடையே" ( பாரத. கரு. யோர். ருஉ.) 3. சரக்கொன்றை. (தைல. தைலவ. எஉ.)

**இதள்**—பாதரசம்.

**இதன்**—நன்மையுள்ளவன்.

**இதா**—1. இந்த எனப்பொருள்படுமொருதிசைச்சொல். (உ-ம்.) "மாலைவெள்ளருவிசூடி மற்றிதாதோன்றுகின்ற-சோலைசூழ்வரையின்" (சிந்தா. பதுமை. சுஎ.) 2. இப்பொழுதெனப் பொருள்படுமொருவடமொழியவ்வியயம்.

**இதாகிதம்**—நன்மைதீமை. (உ-ம்.) "இதாகிதம் பகையுறவுவிட்டு"(சேதுபு. விதூம. ருஉ.)

**இதார்த்தம்**—1. இனிய அர்த்தம். 2. உண்மை. இப்பொருளில்வரும்போது எதார்த்தமென்பது இதார்த்தம் என வந்தது என்பர்.

**இதி** — 1. அத்தாட்சிப்படுத்தல், நிதரிசநம். 2. உறுதி, தீர்மாநம்பண்ணுதல். 3. காரணம். 4. பிசாசம். (வீரமாமுநி.) 5. பிரகாசம். 6. முடிவு. [ஐதி- என்பது, என்று, இப்படி யென்னும் பொருட்களையுந்தரும்.]

**இதிக**—பரம்பரையுபதேசம்.[ஐதிஹ:ஐதி- இப்படி. ஹ - செய்தி.]

**இதிகாசப்பிரியர்**— 1. நைமிசாரணியர். 2. வேதவியாசர். [ஐதிஹாஸப்ரிய.]

**இதிகாசபுராணம்**—1. அதர்வணவேதத்தினொருபாகம். 2. இதிகாசமும் புராணமும். [ஐதிஹாஸபுராண.]

**இதிகாசம்**— 1. அறிவு. (உ-ம்.) "இதிகாசமிதுசாலவிறும்பூதாம்" (வேதார. பிரவர. உ.) 2. ஐதிகப்பிரமாணம். ( இது, பௌராணிகம

தம்.) 3. தருமார்த்தகாமமோக்ஷபயனைக்கொடுக்கும் பூர்வ கதை. அவை, பாரத முதலியன. (உ-ம்) "வேதம்வேதாந்தம் விளங்கிதிகாசமேதகு புராணம்" (சேதுபு.சடாதீர். ௧௬.) 4. மேற்கோள். [ஊதிஹாஸ.]

இதிர்த்தல்—1. அதட்டல். 2. சொல்லுதல்.

இது—1. இஃது எனப்பொருள்படும் ஒரஃறிணையொருமைச்சுட்டுப்பெயர். (உ-ம்.) "இதுவலாலதனுக்கியம்பலாமுவமைமற்றியாதோ' (இராமா. நகர. ௬.)

இதை— 1. கலப்பை. 2. காராமணி. (உ-ம்.) (பிங்கல. உ௯௬௦.) 3. புதுக்கொல்லை. (உ-ம்.) "ஓதிதை" (காஞ்சி. சுரகரீ. ௧௧.) 4. மரக்கலப்பாய். (உ-ம்.) "மாலிதைமணிபல்லவத்திடைவீழ்த்து. (மணிமே. ௧௪: அக.)

இதைப்புனம்—புதுக்கொல்லை. (சூ. நிகண். ௫: ௯௧.)

இதோத்தி—நற்புத்தி. [ஹிதோக்தி: உக்தி-கூறல்.]

இதோளி—இவ்விடம். (தொல். எழுத். ௧௫௧. நச்சி.)

இந்த — அண்மைச்சுட்டுப்பொருளிலே பெயர்ச்சொற்கு முன்னேவருமோரிடைச்சொல். (உ-ம்.) "இந்தவெற்பினை" (கந்தபு. வள். உ௨௪.) இதனை மரூஉஎன்பர். (நன். பெயரி.௧௦.உரை.)

இந்தநம்—1. காடு. 2. சுவாலை. 3. நறும்புகை. 4. மேல். 5. விறகு. (உ-ம்.) "எற்றியநறுநெய்வீசியிந்தநமடுக்கினுலும்" (பாரத. கிருட்டிண. ௧௪௬.) [ஊந்த.]

இந்தம்—1. புளியமரம். 2. விறகு. [ஊந்த.]

இந்தம்வரம்—நீலோற்பலம். [ஊந்தீவர.]

இந்தரி-இராகு. [ஊந்து-சந்திரன். ஹரி-பகை.]

இந்தளம்— 1. ஒரு பண். (உ-ம்.) "மொழியிந்தளமுதலில்" (பெரியபு. தடுத்தாட். எ௫.) 2. தூபமுட்டி. (சூ. நிகண். எ: ௬௪.)

இந்தனுடை—உத்தரியம்.

இந்தா— 1. இங்கேவந்துவாங்கு. (உ-ம்.) "இந்தாவிஃதோரிளங்குழவியென்றெடுத்துச்-சிந்தாகுலந்தீரத்தேவிகையிலீந்தனனே" (கந்தபு. வள். ௬௫.) [இங்கே என்பதில் இகரமும், வந்து என்பதில் நகரதகரவொற்றுக்களும், வா என்பதில் ஆகாரஉயிருநிற்க, மற்றைய எழுத்துக்கள் சிதைந்து மரீஇயது போலும்.] 2. இங்கேவா. [இந்தா என்பது இங்கு என்னும் இடைச்சொற்பொருட்டு மொருமொழி யென்றும், அஃது அங்கு என்னும் பொருட்டும் அந்தா என்னும் தெலுங்கு நிலத்திருந்து வந்த திசைமொழிநோக்கி அஃதொப்பத்தமிழ்நிலத்து வழங்குவதென்றுங்கூறுவாருமுளர்.]

இந்தி—1. இலக்குமி. 2. பூனை. [1. ஊந்தி.]

இந்திகை — 1. அபராகாதத்திற்கலைகளைந்திலொன்று. (சதாசிவ. ௧௧.) 2. சாந்தியாதீதகலையிலேசிவதத்துவத்திலிருக்கும் பத்துப் புவநங்களுளொன்று. (சி-லி. கிரி. உக. உரை.)

இந்திகோபம்—ஈயம்.

இந்திடம்—இவ்விடம். (உ-ம்.) "பொய்குன்றவேதியரோதிடமுந்திடமிந்திடமும்" (திருக்கோ. உ௨௬.) [இந்தவிடம் என்பது இந்திடமென்றுயிற்று.]

இந்தியக்கலிதம்— சுக்கிலக்கழிவு. (உ-ம்.) "இயலுறுபிரமசாரியென்றுரைப்போனிந்தியக்கலிதஞ் செய்வானேல்" (சூத. ஞாந. எ: உ௦.)

இந்தியம்—இந்திரியம். (உ-ம்.) "உணர்விந்தியங்களும்" (சி. சி. பர. உலோகா. ம. ௬.)[இந்திரியம், என்பதிலே "ரி" தொக்கது.]

இந்திரகணம்—கவிநாயகனுக்குப்பொருத்தமுறச்செய்யுநூலின் முதற்செய்யுளின் முதற்சீர்வரும் வகைகளுளொன்று. அது, தேமாங்காய்வாய்பாடாக மூன்று நேரசைவரப் பாடுவது. (உ-ம்.) "இந்திரகணமேபெருக்கஞ்செய்யும்" (இலக்கணவிள. அ௦௦. உரை.) [ஊந்த்ரகண]

இந்திரகம்— சபாமண்டபம். [ஊந்த்ரகம்: ஊந்த்ர-மேலான. க-ஒருவிகுதி.]

இந்திரகாளியம்— யாமளேந்திரரென்னும் ஆசிரியராற்செய்யப்பட்ட ஓர் இசைத்தமிழ் நூல். (சிலப்.)

இந்திரகீலம்—1. இந்திரன்கொடி. 2. மந்தரமலை. [ஊந்த்ரகீல.]

இந்திரகோடணை — இந்திரவிழா. (உ-ம்.) "இந்திரகோடணையிந்நகர்க்காண-வந்தேன்" (மணிமே. துயிலெழு. ௧௭.)

இந்திரகோபம்— தம்பலப்பூச்சி. (உ-ம்.) "இந்திரகோபநிறத்த" (கூர்மபு. வானவர் வாழ்க்கை. ௬.) [ஊந்த்ரகோப: ஊந்த்ர-இந்திரனைத்தெய்வமாகவுடையகார். கோப- பாதுகாப்பு. கார்காலத்துண்டாவதென்பதுபொருள். ஊந்த்ர-மேலான. கோப-பிரபை. வ- விருத்தி செய்தல்.]

இந்திரசத்தி—இந்திராணி. [ஊந்த்ரஶக்தி]

இந்திரசாபம்— 1. இந்திரனுடையவில். 2. வானவில். (உ-ம்.) "தாலந்தனில்வந்ததொ

ரிந்திரசாபமென்ன" (அரிச்.நாட்டு.கo.) [ஐஜ்ர சாப.] இவ்வானவில்லின் ரேற்றத்தைத்தேவர்களின்ரேற்றத்திற்குவமைகூறப்படும். (மணிமே.)

**இந்திரசாரதி** — இந்திரனுடைய தேர்ப்பாகன். (இவன் பெயர் மாதலி.) [ஐஜ்ர ஸாரதி: ஐஜ்ர; ஸாரதி - தேர்ப்பாகன்.]

**இந்திரசாலம்**— 1. அறுபத்துநான்குகலைஞானங்களுளொன்று; அஃது, அற்புதங்களைக் காட்டுகிறேனென்று செய்யுங் கண்கட்டிவித்தையைக்கூறுநூல். 2. ஏய்ப்பு. 3. கண்கட்டிவித்தை; அஃது, இல்லாததொன்றையுள்ளதுபோற்காட்டும் வித்தை. (உ-ம்.) "அதிலாசையொழிந்தாரிந்திரசாலமென" (பாரத. நச்சு. கக.) [ஐஜ்ர ஜால: ஐஜ்ர - ஞாநேந்திரியம். ஜால - வலை.]

**இந்திரசாலி**— 1. அழிஞ்சில். 2. இந்திரசாலவித்தைக்காரன்.

**இந்திரசாலிகன்**— இந்திரசாலவித்தைக்காரன். [ஐஜ்ரஜாலிகஃ.]

**இந்திரசாவருணி** — பதினான்காவது மநு. [ஐஜ்ர ஸாவர்ணி.]

**இந்திரசித்து**— 1. இராவணனுடைய மூத்தமகனாகிய ஓரரக்கன். 2. கருடன். 3. கிருட்டிணன். [ஐஜ்ர ஜித்.]

**இந்திரசிற்பம்**—சிற்பநூலிலொன்று. [ஐஜ்ர ஶில்ப.]

**இந்திரசுகந்தம்**—நன்னாரி.

**இந்திரசுரசம்**—நொச்சில்.

**இந்திரசேநன்**— 1. அருச்சுனன்பேரனாகிய பரீக்ஷித்து ராசாவின் பிள்ளைகளாறுவரில் நான்காமகன். (மகாபாரத. ஆதி. கூச. அத்.) 2. தருமனதுவேலைக்காரரில் ஒருவன். [ஐஜ்ரஸேநஃ: இந்திரன் சேனைபோன்ற சேனைகளையுடையவனென்றபடி.]

**இந்திரஞாலம்** — 1. இந்திரசாலவித்தை. (உ-ம்.) "இந்திரஞாலவிடர்ப்பிறவித்துயரேகுவதாகாதே" (திருவாச. திருப்படை. ௬.) 2. சூரபன்மன்வரத்தாற்பெற்றுக்கொண்ட ஒருதேர். (உ-ம்.) "அவ்வண்டப்பரப்பனைத்துமேகும்வண்ணந்- திண்டிறல்பெற்றிடுகின்ற விந்திரஞாலமதென்னுந்தேருநல்கி" (கந்தபு.வரம்பெறு.உக.)

**இந்திரதநுப்புடம்**—பரிவேடபுடத்தைமண்டலவிராசியிற்களைந்துநின்றநிலை. (விதாந. குணகுண. ௬ச.) [ஐஜ்ர; தநு; ஸ்புட;]

**இந்திரதிசை**— கிழக்கு. [ஐஜ்ர திஶா.]

**இந்திரநகரி**—தணிகைநகரம். (உ-ம்.) "இந்திரற்கு - வரமளித்திடலாலிந்திரநகரி" (தணிகை. புராணவர. கூo.) [ஐஜ்ர நகரீ.]

**இந்திரநீலசைலம்**—இந்திரநீலமலை. (உ-ம்.) "இந்திரநீலசயிலத்தின்" (பாரத. புட்ப. எ.) [ஐஜ்ர நீலஶைல.]

**இந்திரநீலநிதலதலம்**— பத்மவொளிபாதாளத்துக்கும், அதற்குமேல் இடைவெளிக்கும் மேலாகவிருக்கிற ஒரு பாதாளம். (சிவதரு.கோபுர. உஅ. உரை.)

**இந்திரநீலம்**—நீலரத்நம். (உ-ம்.) "இந்திரநீலத்தாலொரு- திறலரியணையினைச் சிறப்பிற்செய்தனன்" (கந்தபு. வரைபுனை. உo.) [ஐஜ்ர நீல: ஐஜ்ர - மேலான. நீல - பாலின் நடுவிலிட்டால் பால்முழுதும் அந்த நீலமயமாய்த்தோற்றுமென்பது.]

**இந்திரப்பிரகரணம்**— 1. இடியேறு. 2. ததீசியின் முதுகெலும்பினாலாய வச்சிராயுதம். [ஐஜ்ர ப்ரஹரண; ப்ரஹரண - மேலாகக்கொள்ளப்பட்டது, அடித்தல், ஆயுதம்.]

**இந்திரப்பிரத்தம்**—பஞ்சபாண்டவர்கள் வாசஞ்செய்திருந்த ஒரு நகரம். (அது பழைய டில்லிநகரம்.) [ஐஜ்ர ப்ரஸ்த.]

**இந்திரப்பிரியம்**-பொதியமலையிலுண்டான மஞ்சணிறமுள்ள சந்தநம். [ஐஜ்ர ப்ரிய.]

**இந்திரபதம்**-இந்திரனுடையவுலகம். [ஐஜ்ர பத.]

**இந்திரபம்**—வெட்பாலை. [இது கார்காலத்திற்செழிப்படைவது.]

**இந்திரபாஷாணம்** — வைப்புப் பாஷாணமுப்பத்திரண்டிலொன்று. [ஐஜ்ர பாஷாண]

**இந்திரபுட்பம்**— } வெந்தோன்றி.
**இந்திரபுட்பி**— }

**இந்திரபுஷ்பிகை**—வெந்தோன்றிப்பூண்டு. [ஐஜ்ர புஷ்பிகா.]

**இந்திரபுட்பை** — வெந்தோன்றிப் பூண்டு. [ஐஜ்ர புஷ்பா.]

**இந்திரபுரி**—அமராவதி. (உ-ம்.) "இந்திரபுரியுமிந்திரப்பிரத்தமுமிரண்டும்" (பாரத.இந்திரப்பிரத்த. உச.) [ஐஜ்ர புரீ.]

இந்திரபுரோகிதன்—தேவகுருவாகிய வியாழன். (உ-ம்.) "இந்திரபுரோகிதனியம்புமொரு நூலின்" (சி. சி. பர. உலோகாயத. க.) [ஐந்த்ர புரோஹித.]

இந்திரம்—1. இரா. 2. கடப்பமரம். 3. சம்புத்தீவின் நவகண்டங்களுளொன்று. 4. சிற்பநூன்முப்பத்திரண்டினுளொன்று. 5. ஞானேந்திரியம். 6. தேகத்தினுள்வசிக்குஞ்சித்து. 7. பாரதகண்டத்திலுள்ள எட்டுத்தீவுகளுளொன்று. (உ-ம்.) "இந்திரமே சேருகமே தாமிரமே யெழிற்கபத்தி - சந்துமலி நாகமதே சவுமியமேகாந்திருவ-மந்தமலிவாருணமே யென வெட்டுமெதித்திடுக" (சிவதரு. கஉ: சசு.) 8. மாயம். 9. மேன்மை, உசிதம். (உ-ம்.) "இந்திரத்திருமாமுடியேந்தியே" (கந்தபு. பட்டா. சு.) 10. மேலான அதிகாரம். 11. வண்டு. [ஐந்த்ர.]

இந்திரமகம் — 1. கார்காலத்திலே தேவேந்திரனது மகிழ்ச்சியின்பொருட்டுச்செய்யப்படுந் திருவிழா. [ஐந்த்ரமஹ.] 2. தேவேந்திரனுடைய மகிழ்ச்சியின்பொருட்டுக் கார்காலத்திலே செய்யப்படும் ஒருயாகம். [ஐந்த்ரமஹ.]

இந்திரமாமுநி-(சைநம்) தீர்த்தகரிலொருவர். (த. நி. போ. உஎஎ.)

இந்திரயாநி —இந்திராணி. [ஐந்த்ர - இந்திரன். ஜாநி - மனைவி.]

இந்திரர்—1.மேலான வதிகாரமுடையோர். (உ-ம்.) "இந்திரராகிப்பார்மேலின்பமுற்றினிது மேவி" (கந்தபு. கடவுள்வா. ச.) 2. தேவர். (சிலப்பதி.)

இந்திரலுத்தம்— பயிர்முதலிய பச்சிலைகளை எரித்து ஒன்றுமில்லாமற் செய்யும் ஒருவகை எரிப்பூச்சி. (சீவரட். உகரு.)

இந்திரலோகரதம் — இந்திரஞாலத்தேர். (கந்தபு.வரம். உக. உரை.) [ஐந்த்ரலோகரத]

இந்திரவம்—கருங்குவளை.

இந்திரவல்லி— 1. கொத்தான், முடக்கொத்தான். (தைல. தைலவ. கரு - ஆம் பாட்டில் முடக்கற்றான் என்று சொல்லப்பட்டிருக்கின்றது.) 2. பாரிசாதக்கொடி. 3. பிரண்டைக்கொடி. (தைல.) [ஐந்த்ரவல்லீ.]

இந்திரவாசம்— நெய்தற்கொடி. [ஐந்த்ரவாஸ.]

இந்திரவாமம்-நெய்தற்கொடி.[ஐந்த்ரவாம]

இந்திரவாருணி— பேய்க்கொம்மட்டிப்பூண்டு. [ஐந்த்ரவாருணீ;ஐந்த்ர;வாருண;இந்திரனுக்கும் வருணனுக்கும் இட்டமாக பூண்டு என்றபடி.]

இந்திரவாருணிகை— பேய்க்கொம்மட்டிப் பூண்டு. [ஐந்த்ரவாருணிகா.]

இந்திரவிகூட்டம் — அமாவாசியென்னுந் திதி. (சூ. நிகண். க: அசு.) [ஐந்த்ர; ரவி-சந்திரனுஞ்சூரியனுங்கூடியிருக்குங்காலம்.]

இந்திரவியாகரணம் — இந்திரன் செய்த ஸம்ஸ்கிருதபாஷையினிலக்கணம். [ஐந்த்ரவ்யாகரண.]

இந்திரன்— 1. அரசன். (உ-ம்.) "இந்திரனிருக்கை" (இராமா. கோலங். க.) 2. கடவுள். 3. கேட்டைநாள். (உ-ம்.) "இரவிதன்வாரத்துப்புட்பனையிந்திரனிந்துமுறம்" (விதான. குணகுண. க.) 4. சுவர்க்கலோகத்தரசனுங்கீழ்த்திசைப்பாலகனுமாகிய ஒரு தேவன். (உ-ம்.)"இந்திரை" பார். 5. தலைவன். (உ-ம்.) "உயர்வானவரிலிந்திரனீ" (கூர்மபு. திருக்கல். ௯உ.) 6. மிருகசீரிடநாள். 7. மேலான அதிகாரமுடையோன். (உ-ம்) இந்திரராகிப்பார் மேலின்பமுற்றினிதுமேவி" (கந்தபு. கடவுள். ச.) [ஐந்த்ர]

இந்திரன்மைந்தன்—1. அருச்சுநன். 2. குரக்கரசனாகிய வாலி. 3. சயந்தன்.

இந்திரனாள்— கேட்டை. (சூ.நிகண்.க:எடு.)

இந்திரனிருக்கை— அரசனிருக்குமாசநம். (உ-ம்.) "தேவியர்மருங்குசூழவிந்திரனிருக்கை சேர்ந்த" (இராமா. கோலங். க.)

இந்திரனூர்—1. பொன்னாங்காணி. (தைல. தைலவ. கூசு.) 2. அமராவதி.

இந்திரா—இலக்குமி. (உ-ம்.) "இந்திராபதியவ்வியந்திரன்பெயராலிந்திரப்பிரத்தமென்றிட்டான்" (பாரத.இந்திரப்பி. கசு.) [இந்திரா]

இந்திராட்சி— பார்வதி. [இந்த்ராக்ஷீ]

இந்திராணி— 1. இந்திரன் மனைவி.2. நொச்சிப்பூண்டு. (தைல. தைலவ. கூசு.) 3. நொச்சிவேர். (உ-ம்.) "மெருகுபலையாடமுண்டனிநீலியிந்திராணி" (தைல. தைலவ. ௯க.) 4. நொச்சிவேர்ப்பட்டை. (உ-ம்.) "அமுக்கிரி" பார். (தைல. தைலவ. சஉ.) [ஐந்த்ராணீ.]

இந்திராணிகர்ணி—பொன்னாங்காணி.(தைல. தைலவ. கச.)

இந்திராணிகை—நொச்சின்மரம். [ஐந்த்ராணிகா.]

இந்திராணிப்பூ—கையணியினொருறுப்பு.

இந்திராநுசன்—இந்திரன் தம்பி. அவர்; அதிதிமகனாகப்பிறந்து வாமநாவதாரமெடுத்த வி

ஷ்ணுமூர்த்தி. [ஐந்த்ரா நுஜ: அநுஜ-தம்பி.]

**இந்திராபதி**—விட்டுணு. (உ-ம்.) "இந்திரா" பார். [ஐந்த்ராபதி: ஐந்த்ரா; பதி - தலைவன்.]

**இந்திராயுதம்**—1. கருங்கட்குதிரை. 2. வச்சிராயுதம். 3. வானவில். [2, 3. ஐந்த்ராயுதம்.]

**இந்திராரி** — 1. அசுரன். 2. இராக்கதன். [ஐந்த்ராரி: ஐந்த்ர; அரி - பகைவன்.]

**இந்திராலயம்**— காஞ்சிநகரிலுள்ள இருபது சிவாலயங்களுளொன்று; அதிலே இந்திரன் சிவனைப் பூசித்து இந்திரபதம் பெற்றானென்பர். (கந்தபு. நகர. அக. உரை.) [ஐந்த்ராலயம்.]

**இந்திராவரசன்**— விட்டுணு. [ஐந்த்ராவரஜ: ஐந்த்ர; அவரஜ - பின்பிறந்தோன்.]

**இந்திரி** — 1. காந்தம். 2. கிழக்கு. (உ-ம்.) "வந்தனன்வந்தனனென்ற வாசகம்- இந்திரிமுதற்றிசையெட்டுங்கேட்டன" (இராமா. வாலிவதை. க.) 3. நன்னாரி.

**இந்திரியக்காட்சி** — விடயங்களை நோக்கியோடுமறிவாகிய ஆன்மசிற்சத்தி, ஞானேந்திரியங்கருவியாக, ரூபமுதலிய வஸ்துக்களை யறியுமறிவு. (உ-ம்.) "உயிரிளேடுணர்வுவாயிலொளியுருவாதிபற்றிச் - செயிருறுவிகற்பமின்றித் தெரிவதிந்திரியக்காட்சி" (சி. சி. அளவை. சு.)

**இந்திரியகிராமம்**- பஞ்சேந்திரியக்கூட்டம். [இந்த்ரியக்ராம: இந்த்ரிய; க்ராம- கூட்டம்.]

**இந்திரியகோசரம்** — புலனுக்கெட்டியது. [இந்த்ரியகோசர: இந்த்ரிய; கோசர - விடயம்.]

**இந்திரியசமட்டி** — இந்திரியங்களினது கூட்டத்திலேவியாபகமாயிருப்பது. (சி.சி. வ-று.) [இந்த்ரிய; ஸமஷ்டி.]

**இந்திரியசாபேட்சப்பிரத்தியட்சம்** — ஞானேந்திரியத் துவாரத்திலே வஸ்துக்களை யறியுமறிவு. (சி. சி. அளவை. க. சிவாக். உரை.) [இந்த்ரிய; ஸாபேக்ஷ; ப்ரத்யக்ஷ: ஸாபேக்ஷ - கூடினது.]

**இந்திரியசாபேட்சம்**— இந்திரியங்களினுதவியால் விடயங்களையறிவது. (சி-வி. ஞான. ச. உரை.) [இந்த்ரியஸாபேக்ஷ.]

**இந்திரியசைதந்நியர்**—இந்திரிய சைதந்நியவாதிகள். (த. நி. போ. சஙு.) [இந்த்ரியசைதந்ய.]

**இந்திரியசைதந்நியவாதி**—இந்திரியங்களே ஆன்மாவென்று வாதிக்கிறவன். [இந்த்ரியசைதந்யவாதி.]

**இந்திரியஞானம்**— ஞானேந்திரியத்தினாற்பெறுமறிவு. (உ-ம்.) "அயர்விலிந்திரியஞானமைம்புலன்சார்ந்துயிர்க்கண்-மயர்வறவந்தஞானம்" (சி. சி. அளவை. சு.) [இந்த்ரிய; ஜ்ஞாந.]

**இந்திரியத்துவாரம்**—பொறிவாயில்.

**இந்திரியத்ருசியதை**—இந்திரியத்தாலறியப்படுந்தன்மை. (வி-ணி. உருஉ.) [இந்த்ரிய; த்ருஶ்யதா - காணப்படுதல்.]

**இந்திரியநிக்கிரகம்** — இந்திரிய மடக்கல். [இந்த்ரியநிக்ரஹ: நிக்ரஹ- தடுத்தல்.]

**இந்திரியநிரபேட்சம்**— எப்போதும் பந்தமில்லாத சிற்சத்தியானது சுவபாவமாகச்சகலபதார்த்தங்களிலும் சேர்ந்தறிவது. [இந்த்ரியநிரபேக்ஷ.]

**இந்திரியநுகர்ச்சி**—ஐம்புலநுகர்ச்சி.

**இந்திரியப்பிரத்தியட்சம்**— பஞ்சேந்திரியக்காட்சி. [இந்த்ரிய; ப்ரத்யக்ஷ - காட்சி.]

**இந்திரியபுவநம்** — ஞானேந்திரிய கன்மேந்திரியதத்துவங்களிலேயிருக்கும் புவநங்கள். (த. நி. போ. சஙு. பக்.) [இந்த்ரியபுவந.]

**இந்திரியபோகம்**—இந்திரியங்களானுகரும்போகம். [இந்த்ரிய; போக - அநுபவம்.]

**இந்திரியம்**—1. அறிதலுக்கு அல்லது செய்தலுக்காகிய ஆன்மசிற்சத்திக்கருவி; அது ஞானேந்திரியம், கன்மேந்திரியம், அந்தரிந்திரியம், என மூவகைப்படும். 2. இந்திரசம்பந்தமுடையது. 3. இந்திரனாற்செய்யப்பட்டது. 4. சுக்கிலம். [1, 2. இந்த்ரிய. 3, 4. ஐந்த்ர்ய.]

**இந்திரியவம்**—வெட்பாலை. (உ-ம்.) "நீர்ச்-சித்திரம்போகியரணந்தந்தி பீசமிந்திரிய வஞ்சரம் வகைக்கு" (தைல. தைலவ. ககசு.) [இந்த்ரியவ.]

**இந்திரியவிப்பிரதிபத்தி** — விபரீதக்காட்சி. [இந்த்ரிய; விப்ரதிபத்தி - திரிவு.]

**இந்திரியாகோசரம்**— இந்திரியங்களினலறியக்கூடாதது. [இந்த்ரியாகோசர: அகோசர - விஷயமாகாமை.]

**இந்திரியாசங்கம்**—இந்திரியவிஷயங்களிற் பற்றுறிருத்தல். [ஐஂத்ரியாஸம்ஸ: ஐஂத்ரிய; அஸம்ஸ-கூடாமை.]

**இந்திரியாந்தக்கரண நிரபேட்சப்பிரத்தியட்சம்**—இந்திரியங்களோடும் அந்தக்கரணங்களோடுங்கூடாமலறியுமறிவு. அஃது, ஒருகாலத்தும் மறைப்பில்லாமலிருக்கிற ஈசுவரசிற்சத்தியினாலே ஆன்மா சிவாநந்தத்தை அநந்நியமாக அனுபவிப்பது. (சி. சி. அளவை. க. சிவாக்.) [ஐஂத்ரிய; அந்த:கரண; நிரபெக்ஷ; ப்ரத்யக்ஷ.]

**இந்திரியாயதநம்**—உடல். [ஐஂத்ரியாயதந: ஐஂத்ரிய; ஆயதநம் - உறைவிடம்.]

**இந்திரியார்த்தசந்நிகர்ஷம்**— இந்திரியத்திற்கும் பொருளிற்குமுண்டாகுஞ்சம்பந்தம். (தர்க்கபா. கஉ.) [இதனாலுண்டாகுமறிவு பிரத்தியட்சம்.]

**இந்திரியார்த்தம்**—ஞாநேந்திரியத்துக்கான விடயம். [ஐஂத்ரியார்த: அர்த- விஷயம்.]

**இந்திரியான்மஞாநம்** — ஞாநேந்திரியமே ஆன்மாவென்றுகொள்ளுகிற அறிவு. (சி. சி. அ: கஉ. ஞாநப்.) [ஐஂத்ரிய: ஆத்ம; ஜ்ஞாநம.]

**இந்திரியான்மவாதி**—1. இந்திரியப்புவனப்பேற்றினைமுத்தியென்றுசொல்கிறவன். (கூர்ம்மபு. பலவ. கரு.) 2. ஞாநேந்திரியமே ஆன்மாவெனவாதிக்கிறவன். (சி. சி. ஙு: ங. சிவாக்.) [ஐஂத்ரியாத்மவாதி.]

**இந்திரியான்மைகதேசவாதி** — பஞ்சேந்திரியங்களில் ஒவ்வொன்றும் ஒரான்மாவெனவாதிக்கிறவன். (சி. சி. ஙு: ச. சிவாக். [ஐஂத்ரியாத்ம: ஏகதேஸ; வாதி.]

**இந்திரேகம்**—<br>**இந்திரேபம்**— } வெட்பாலை.

**இந்திரேயம்**—வெட்பாவட்டை.

**இந்திரை**—1. அரிதாரம் 2. இந்திரன்மனைவியாகிய இந்திராணி. (உ-ம்.) "இந்திரையிந்திரனெண்ணிறவத்தோர்" (சேதுபு. மங்கள. ங.) 3. இலக்குமி. (உ-ம்.) "இந்திரையினுமெழிலாள்" (அரிச்ச. பு. விவாக. கO.) [இந்திரா.]

**இந்திரைக்குமுத்தாள்** —மூதேவி. (சூ. நிகண். க: ஙகூ.)

**இந்திரைகேள்வன்**—திருமால். (உ-ம்.) "இந்திரைகேள்வனொடு-பேரமர்புரிந்தவெல்லை"(கந்தபு. திக்குவிசய. அக.)

**இந்திவரம்**— 1. கருங்குவளை. 2. நெய்தற்கிழங்கு. (தைல. தைலவ. கஙு.)[இந்திவர.]

**இந்தீவரம்**—1. கருங்குவளை. 2. கருநெய்தல். [இந்தீவர.]

**இந்து**—1. இந்துப்பு. (தைல. தைலவ. அரும்பத.)2. எட்டி. (உ-ம்.) "இந்துசிரந்துடிசாயிருசந்திரு"(தைல. தைலவ. கரு.) 3. கர்ப்பூரம். 4. கரடி. 5. கரி. 6. கௌரிபாஷாணம். 7. சந்திரன். 8. சிந்துநதி. 9. பச்சைக்கருப்பூரம். 10. மிருகசீரிடம். (உ-ம்.) "இந்திரன்" பார். 11. யாகம். (நிருத்தம்.) [3, 7, 9, 10. இந்து.]

**இந்துகமலம்**—1. வெண்டாமரை. 2. வெள்ளாம்பல்.

**இந்துகாந்தம்**—சந்திரகாந்தக்கல். (உ-ம்.) "இரவிகாந்தம்" பார். [இந்துகாந்த.]

**இந்துசநகன்**—1. அக்கினிதேவன். 2. அத்திரிமுனிவன்.

**இந்துசேகரன்**— சிவன். (உ-ம்.) "இந்துசேகரனுறனமும்"(பிரமோத்தர. பஞ்சாட். ரு.) [இந்துஸேகர: ஸேகரம் - முடி.]

**இந்துதலம்**— சந்திரன்கலை. [இந்துதல: இந்து; தல - பிரிவு.]

**இந்துதேசம்**—சிந்துதேசம்.

**இந்துஸ்தாநம்**—<br>**இந்துஸ்தாநி**— } ஒருபாடை.

**இந்துப்பு**—ஒருமருந்துச்சரக்கு. (உ-ம்.)"திரியட்சி" பார்.

**இந்துபம்**— மிருகசீரிடநாள். [இந்துப: இந்து, ப - நட்சத்திரம்.]

**இந்துமதி**— 1. அசனென்னுமரசனுடைய மனைவி. இவள், விதர்ப்ப ராசன் சகோதரி. (உ-ம்.)"மழவிற்பிறைக்கீழ்வைத்தன்னமடநோக்கிந்துமதியெனுமோ- ரழகைப்புதுப்பித்தழகூட்டி" (இரகு. மாலை. சஎ.) 2. பூரணை. [இந்துமதி: மதி - உடையது.]

**இந்துமாரம்**—கடம்பு.

**இந்துரத்நம்**—முத்து. [இந்துரத்ந.]

**இந்துரம்**—எலி. [இந்துர: உகரம், இகரமாய்த்திரிந்ததென்ப.]

**இந்துரவிகூட்டம்**—அமாவாசை.

**இந்துரேகை**—<br>**இந்துலேகை**— } சந்திரகலை. [ரேகா-வரி.]

**இந்துலோககம்**—வெள்ளி. [இந்துலோஹக.]

இந்துவாரி—சாத்தாவாரிக்கொடி.
இந்துள்—நெல்லிமரம்.
இந்துளம்—1. கடப்பமரம். 2. நெல்லிமரம்.
இந்துளி—நெல்லிமரம்.
இந்துறு—இலந்தை.
இந்தோளம்— 1. ஊசல். 2. ஒரிராகம். [ஹிந்தோளம்.]
இந்நாள்— 1. அண்ணியகாலம். 2. இன்று.
இநன்— 1. அத்தநாள். 2. அதிபதி. 3. அரசன். 4. சந்திரன். 5. சூரியன். 6. தைரியவான். 7. வல்லபமுடையோன். [இந.]
இப்படி— 1. இந்தப்பூமி. 2. இவ்வண்ணம். (உ-ம்.) "இப்படியிலிப்படிவம்யாவருளரென்ன" (திருவாத. குதிரையிட்ட. ௧௬.)
இப்பந்தி— 1. உலோபி. 2. பலவீனன். 3. பேடி. 4. வகைதெரியாதவன்.
இப்பந்தியாடு—ஒருவகையாடு.
இப்பர்—மூன்றாம்வருணத்தவராகிய வைசியவகுப்பார். (சூ. நிகண். ௨: ௨௫.)
இப்பால்—இந்தப்பக்கம்,இந்த இடம்.(உ-ம்.) "இப்பாலிவ்வாறேமஞ்செய் திவனிப்பூதமினி தெழுப்ப" (பாரத. நச்சு. ௧௬.) 2. இனி.(உ-ம்.) "மகபதியிருந்தனனிப்பான்- முன்னமேகியவசமுகி" (கந்தபு. சூரனர. க.)
இப்பி— 1. சங்கு. 2.சிப்பி. (உ-ம்.) "துறையிடையுறங்குமிப்பி" (இராமா. நாட்டு. ௬.)
இப்புறம்— இப்பக்கம். (உ-ம்.) "இப்புறவுலகிலுள்ளார்யாவரும்" (கந்தபு. தேவகிரி. ௬.)
இப்போது— இப்பொழுது. (உ-ம்.) "எப்போதோதெரியாதேயிப்போதேதான்" (தாயு. ஆகார. ௬௦.) [இ-இந்த. போது-பொழுது.]
இபங்கம்—புளிமா.
இபபாலகன்—யானைப்பாகன். [இபபாலக.]
இபபோதம் — பத்து வயதுடைய யானை. [இபபோதம்.]
இபம்— 1. மரக்கோடு, மரக்கிளை. (உ-ம்.) "இடம்படுகோட்டிஞுனுமிபமுகநேர்தலானு" (தணிகைபு. நந்தியுப. ௭௬.) 2. யானை. (உ-ம்.) "சேனையிபமுகமற்றுவிழுவன" (பாரத. ஆறாம் போ. ௨௭.) [இப.]
இபாரி—சிங்கம். [இபாரி: இப-யானை. அரி - பகை.]
இபி—பெண்யானை. [இபீ.]
இபேரமம்—பதினான்குவயதுள்ளயானை.
இம்பர்—1. இவ்விடம். (உ-ம்.) "மந்தணமுரைக்கலுற்று-விம்பர்மற்றியாதுசொல்லவிளைஞரையழைத்ததென்றான்" (பாரத. கிருட்டிண. ௧௫.) 2. இவ்வுலகத்துள்ளார். 3. இவ்வுலகம். (உ-ம்.) "இம்பர்வாரியெழுந்ததுபோன்றதே" (இராமா. ஆற்று. ௬.) 4. பின். (உ-ம்.) "நெட்டெழுத்திம்பரொற்றுமிகத்தோன்றும்" (தொல். எழுத்ததி. ௧௬௬. நச்சி.)
இம்பரார்—இவ்வுலகத்தார். (உ-ம்.) "இம்பரார்நடுங்கினர்" (பாரத. இரண்டாம்போ. ௪.)
இம்பரும்பர்—1. பிராமணர். (உ-ம்.) "இம்பரும்பர்தங்கூலம் வவ்விடார்" (சேதுபு. கவிசம்பு. க.) [பூசுரர் என்றபடி.] 2. இவ்விடமும் மேலிடமுமாம்.
இம்பி—கருந்தினை.
இம்பில்— ஒருவிளையாட்டு. (பாடுதுறை. ௬௪௦.)
இம்பூறல்— சாயவேர். [இஃது, "இரும்பூறல்" என்பதன் மரூஉ.]
இம்பூறற்சக்களத்தி— ஒரு பூண்டு.
இம்மடி—யானை.
இம்மி— 1. அற்பம். 2. ஒன்றென்னுமெண்ணின் பத்திலட்சத்தெழுபத்தையாயிரத்திருநூற்றிலொருபங்காகிய ஒரு சிற்றெண்.(ஆறுமுகநாவலர் பாலபாடம்.) 3 நுண்மை. 4. புலம். 5.பொன்மை. 6. மத்தங்காய்ப்புல்லரிசி.(உ-ம்.) "இம்மியரிசித்துணையானும்வைகலு - நும்மிலியைவகொடுத்துண்மின்" (நாலடி. ஈகை. ௪.) (சிந்தா.)
இம்மெனல்— 1. இம்மெனுமநுகரணவோசை. (உ-ம்.) "இம்மெனப்-பெய்யவெழிலிமுழங்குந்திசையெல்லாம்" (நாலடி. ௩௦. ௨.) 2. விரைவையுணர்த்துமொருகுறிப்புசசொல்.(உ-ம்.) "ஏறுடைமுதல்வன்மைந்தனிம்மென வங்கட்சென்றான்" (கந்தபு. சூரப.வதை. ௨௪௫.)
இம்மை—1. இந்தவுலகம். (உ-ம்.) "இம்மையேயீரெட்டாண்டெய்தி" (சி. சி. அ: ௧௮.) 2. இப்பிறப்பு. (உ-ம்.) "இம்மையம்மைமறுமையென்னவிசைந்துமாமறைகூறிய - மும்மையுந்தெளிவுற்ற. (அரிச்ச. பு. இந்திர. க.) 3. இம்மையிலின்பம். (உ-ம்.) "இன்மையெனவொருபாவிமறுமையு-மிம்மையுமின்றிவரும்" (வள். ௧௦௪௨.) (ஆகுபெயர்.)
இமகிரணன்— சந்திரன். (உ-ம்.) "சிலரருக்கனிமகிரணன்வருணனனேர்" (ஞானவா. தாசூர. ௨௮.)
இமகிரி—இமயமலை. [ஹிமகிரி: ஹிம-பனி. கிரி- மலை.]
இமசாநு —1. இமயமலை. 2. இமயமலையின்

மேற்பரப்பு. [ ஹிமவாநு: ஹிம - பனி. வாநு - மலைமேற்பக்கம்.]

இமப்பிரத்தம்—இமயமலை. [ஹிமப்ரஸ்த: ஹிம - பனி. ப்ரஸ்த - இருப்பிடம்.]

இமப்பிரவை — ஏழ்சுகரவட்டத்தொன்று; அது: குளிர்மிகுந்தவிடம். [ஹிமப்ரபா.]

இமபடி—சூரியன். [ஹிமபடி: ஹிம - பனி. படி - மறைப்பது. பனியினைன்மூடப்ப லென்றபடி.]

இமம்—1. இமயமலை. 2. இரவு. 3. உறைந்தபனி. 4. குளிர். 5. சந்தனம். 6. பனி. 7. பொன். 8. முத்து. [ஹிம.]

இமயம்—1. இமயமலை. (உ-ம்.) "போயினனிமயத்தில்" (கந்தபு. தவங்கா. ௩.) 2. மைநாகபருப்பதம். [ஹிமயம்: ஹிம - பனி. ய - அடைதல்.]

இமயவல்லி—பார்வதி. (உ-ம்.) "கற்புறுமிமயவல்லி" (கந்தபு. நகரப். ௭௦௪.)

இமயவில்— 1. இமயமலையிடத்துப்பிறந்த மூங்கிலாகியவில். (உ-ம்.) "இமயவில்வாங்கியவீர்ஞ்சடையந்தணன்" (கலித். ௩௮.) 2. மேருமலையாகியவில். (சிந்தா. குணமாலையாரி. ௧௧௩.) [நச்சினார்க்கினியர், இமயம், மலைகட்கரசாதலின் அதன்பெயர் ஏனைமலைகட்கும் பெயராகுமெனக்கூறுவர்.]

இமயவில்லி—சிவன். (உ-ம்.) "எழுந்தருளிமயவில்லியைக்காணுவிணைவிழிபனிப்ப" (சீகாழி. சேட. ௨௭.) [மேருவைவில்லாகவளைத்தவனென்றபடி.]

இமலம்—மரமஞ்சள்.

இமவத்—1. இமயமலை. 2. பனியையுடையது.

இமவந்தம்—இமயமலை. (உ-ம்.) "இமவந்தந்தொடங்கியிருங்கடலளவும்" (நாலாயிர. தங்கை. ௪.) [பனியையுடையதென்றபடி.]

இமவற்சுதன்—மைநாகபருப்பதம். [ஹிமவத் - இமயம். ஸுத - பிள்ளை.]

இமவற்சுதை—1. கங்காநதி. 2. பார்வதிதேவி. ஸுதா - மகள்.]

இமவாலுகை—பச்சைக்கருப்பூரம். (உ-ம்.) "அமிர்தை"பார். (தைல,தைலவ.௩௪.) [ஹிமவாலுகா.]

இமவான்—இமயமலை. 2. மலையரசன். (உ-ம்.) "கயிலாயருக் கன்றிமவானளித்த கனங் குழையே" (அபிராமி. ௧௧.)

இமாசலம்—இமயமலை. [ஹிமாசல.]

இமாசலை—உமாதேவி. (உ-ம்.) "என்றிமாசலைவரனுவந்தளித்தனள்"(உபதேச. திருமால். ௩௩.)

இமாலயம்—இமயமலை. [ஹிமாலய.]

இமிசை—1. கொல்லுதல். 2. தீங்கு. (உ-ம்.) "பொய்யிலாரிமிசைசெய்யார்" (நல். பாரத. ஆசார. ௩௦.) 4. வருத்துகை. [ஹிம்ஸா.]

இமிர்தல்— 1. ஒலித்தல். 2. முரிதல். 3. மொய்த்தல்.

இமில்—எருத்துத்திமில். (உ-ம்.) "துளங்கிமினல்லேறு" (மலைபடு. ௩௩௦.)

இமிழ்—1. இமிழென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும், வினைத்தொகையும். 2. இனிமை. 3. ஒலி. (உ-ம்.) "இமிழ்கொண்ட" (மலைபடு. ௨௧௬.) 4. கயிறு. (சிந்தா.) 5. பறை.

இமிழ்த்தல்—1. ஒலித்தல். 2. கட்டல். 3. கொப்பளித்தல்.

இமிழ்தல் — 1. இனிதாதல். 2. ஒலித்தல். (உ-ம்.) "புள்ளினமிமிழும்புகழ்சால்விளைவயல்" (புறநா. ௪௰.) 3. கக்குதல். 4. முழங்கல். (உ-ம்.) "அகலிருவானத்திமிழ்ந்தினிதிசைப்ப" (மதுரைக்கா. ௨௩௭.)

இமிழிசை — இயமரம், ஒருவகைப் பறை. (உ-ம்.) "கோடுமுழங்கிமிழிசையெடுப்பும்" (பதிற்று. ௫௦.)

இமை—1. அற்பம். 2. இமைத்தல். [முதனிலைத் தொழிற்பெயர்.] 3. இமை யென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 4. ஒரு மாத்திரைப்பொழுது; அஃது: இயற்கைமகனது கண்ணிமையிரண்டும் அவனது குறிப்பின்றி ஒருகாற் கூடிநீங்கின காலக்கழிவு. (உ-ம்.) "கண்ணிமைநொடியெனவவ்வேமாத்திரை- நுண்ணிதினுணர்ந்தோர்கண்டவாறே" (தொல். எழுத்தி. ௭. நச்சி.) 5. கண்விளிம்பு. (சூ. நிகண். ௨. ௬௪.) 6. கரடி. 7. மயில்.

இமைக்குழிவு—கண்ணிமையில் வரும் ஒருவகைக்குத்துநோய்.

இமைகோட்டல்—இமைத்தல்.

இமைத்தல்—1. ஒளிசெய்தல். (உ-ம்.) "அகலாமீனினவிர்வனவிமைப்ப" (திருமுரு. ௮௮.) 2. கண்களினிதழ்களிரண்டிணையுங்குவித்தல். 3. கண்ணிமைத்தல். (சிந்தா. முத்தி. ௧௧.) 4. சுருங்குதல். (உ-ம்.) "இமையாக்கரு

ங்கண்முலைதாங்கி" (கூர்மபு. அந்தகா. ௧௧௯.) 5. விளங்குதல். (ஐங்குறு.)

**இமைப்பிலர்**—தேவர். (உ-ம்.) "பரந்திடுகி ன்னையிமைப்பிலிமைப்பிலர்பதம்" (சேதுபு. தேவிபுர. ருஅ.)

**இமைப்பு**—1. இமைத்தல். (உ-ம்.) "அந்த ரஞ்சந்திராதித்த-ரிமைப்பிலர் திரிவர்" (இராமா. நகர. ௬.) 2. இமைப்பொழுது. (உ-ம்.) "இமை ப்பினிற்றொலைக்க வுன்னின்- மூரலாலடுவன்" (கந்தபு. சூரபன்மன்வதை. ௭௪.) 3. ஒளி, விள க்கம். (உ-ம்.) "மின்னுறழிமைப்பிற்சென்னிப் பொற்ப" (திருமுரு. அரு.)

**இமைப்பொழுது**—கணப்பொழுது.

**இமையம்**—இமயமலை. (உ-ம்.) "எண்டகு மிமையமும்" (கந்தபு. பார்ப்பதி. ௧௬.) [போலி.]

**இமையவர்**— வானோர். (உ-ம்.) "எண்டி சையும்வளைகின்றவிமையவர்" (பாரத. மணி மான். ருக.)

**இமையவர்வேந்தன்**—இந்திரன். [இமை யவர் - தேவர். வேந்தன் - அரசன்.]

**இமையார்**— தேவர். (உ-ம்.) "இமையாரின் வாழினும்" (வள் ௬0௬.) [இமைத்தலில்லாதார் என்றபடி.]

**இயக்கம்**—1. அசைதல், இயங்குதல் (உ-ம்.) "என்பியக்கங்கண்டும்புறந்தரார்" (நீதிநெறி. அஎ.) 2. இந்திரன்மண்டபம். 3. இயக்கருலத் தார். 4. செய்குதல். 5. பாக்கியம். 6. பிரகாசம். 7. பெருமை. 8. பலம். 9. போதல். 10. மல சலங்கழிதல். (உ-ம்.) "ஈயரியக்க- நடைவழிச் சாம்பரானிலைதீர்நள்ளுறவிடுத்தல்" (காஞ்சிபு. ஒழுக்க. ௬௨.) 11. மிகுதி. 12. வடதிசை. 13. வழி. (உ-ம்.) "வெயிற்புறந்தரூஉமின்னலியக் கத்து" (மலைபடு. ௩௭௪.)

**இயக்கர்**—கந்தருவர். (உ-ம்.) "இயக்கர்தங் குலத்துளான்" (இராமா. தாடகை. உ௬.) [இ வர்கள் பதினெட்டுக் கணங்களு ளொரு வகை யர்.]

**இயக்கர்கோமான்**—குபேரன்.

**இயக்கல்**—1. செலுத்தல். (உ-ம்.) "அகில னையுமியக்கி" (சிவப்பிர. உ: உரு.) 2. தொழிற் படுத்தல். (உ-ம்.) "குரலா-னீடுதந்திரியியக்கி யும்" (கந்தபு. வள்ளி. உ௧௧.)

**இயக்கன்**—1.ஒல்லையூர்தந்த பூதப்பாண்டிய னுடையநண்பருளொருவன். (உ-ம்.) "வெஞ்சி னவியக்கனும்" (புறநா. ௭௧.) 2. கந்தருவன். 3. நாய். (நிகண். ௧௧: ௩0௨.) [யக்ஷ - வண க்கம்.]

**இயக்காதிபர்புவநம்** — பிரதிட்டாகலையி லேவாயுதத்துவத்திலிருக்குமொருபுவநம். (சி. சி.அ: எ. மறை.) [யக்ஷ: ௬யிபெ; ஹுவந]

**இயக்கி**—1. ஆரியாங்கனை. (சிலப். அடை க்கல. ௧௧௬.) 2. ஒலிப்பித்து எனப்பொருள்ப டும் ஒரு வினையெச்சம். (உ-ம்.) "கோடுவாய் வைத்துக் கொடுமணியியக்கி" (திருமுரு. உ௪௬.) 3. காந்தருவப்பெண். 4. குபேரன்மனைவியாகி ய ஒருபெண். 5. தருமதேவதை. (சூ. நிகண். ௧: ௩௧.) [1, 3, 4, 5. யக்ஷீ.]

**இயக்கிமார்**—இயக்கஸ்திரீகள். (உ-ம்.) "சந் துருழ்மலயச்சிலம்பர்தவம்புரிந்தவியக்கிமார்க்-க ந்தநாலிருசித்திதந்ததறைந்தனம்" (திருவிளை. விடையி. ௧.)

**இயக்கிணி**—குபேரன்மனைவி. துர்க்கையின் பரிவாரதேவதைகளிலொன்று.

**இயக்கினி**—கண்டங்கத்தரிப்பூண்டு.

**இயக்கு**—1. அசைவு, செலவு. (உ-ம்.) "நீரி யக்கன்னநிரைசெலனெடுந்தேர்" (மலைபடு. ருஎ௧.) 2. இயக்கென்னேவலும், தெரிநிலைவி னைப்பகுதியும்.

**இயக்குதல்**—1. இயங்குவித்தல். 2. ஒலிப் பித்தல். (உ-ம்.) "கோடுவாய்வைத்துக்கொடும ணியியக்கி" (திருமுரு. உ௪௬.) 3. செலுத்தல். 4. நடத்தல், வழிபோக்குதல். (உ-ம்.) "இயங் குநர்" பார். 5. பழக்குதல்.

**இயக்குரோதம்**—1. அசுணப்பறவை. (இ ராசவைத். ௭0.) 2. ஆலமரம். (சூ. நிகண். ௪: ௧௪.)

**இயங்கல்** — 1. இயங்குதல். 2. சஞ்சரித் தல். (உ-ம்.) "பிணைசெல்வமாண்பின் றியங்கலி வைமூன்றும்" (திரிக. அஅ.)

**இயங்காத்திசை**—(சரநூல்) சூனியதிசை.

**இயங்காத்திணை**— தானுயிடம் விட்டுப்பெ யரவியலாதசாதிப்பொருள். [இயங்கா - தானு யசைதலில்லாத. திணை - சாதி.]

**இயங்கியற்பொருள்**—தாமாயியங்குந்தன்மை யையுடையபொருள்; அவை: தேவர், மனிதர், விலங்கு, பறவை, ஊர்வன, நீர்வாழ்வனவாகிய சரப்பொருள்கள். (சைவவினு. ௯. பக்.)

**இயங்கு** — 1. இயங்கென்னேவலும், தெரி நிலை வினைப் பகுதியும், வினைத் தொகையும். (உ-ம்.) "கல்லியங்குகருங்குறமங்கையர்" (இ ராமா. வரைக். ௬௧.) 2. ஒருமுட்செடி.

**இயங்குதல்**— 1. அசைதல். 2. உலாவல். 3. ஒளிசெய்தல். 4. தங்கல். 5. நடத்தல். 6. போதல். 7. வலிகுறைந்தமூச்சுநிகழ்தல்.

**இயங்குதிசை**—(சரநூல்) பூரணதிசை.

**இயங்குதிணை** — தானுயிடம்விட்டுப்பெயரு

ஞ்சாதிப்பொருள். [இயங்கு - தானுயசையும். திணை - சாதி.]

இயங்குநர்—வழிபோவார். (உ-ம்.) "இடுக் கண்செய்யாதியங்குநரியக்கும்"(மலைபடு. கஅ.)

இயங்குபடையரவம்— (பொருளிலக்கணம்) வஞ்சித்திணையின், கரு, துறைகளுளொன்று. அஃது, இயங்குகின்றபடையெழுச்சியினுர்ப்ப ரவம். (தொல். பொருளதி. கரு.)

இயசமானன்—1. குடும்பத்தலைவன். 2. குருவைக்கொண்டு யாகஞ் செய்விக்கிறவன். 3. செல்வமுடையவன், போஷகன். 4. யாகஞ்செய்கிறவன். [யஜாமாந: யஜஸ் -யாகம். டஜ- வணங்குதல், கனப்படுத்தல்.]

இயசுசு—யசுர்வேதம்.[யஜுஸ் .]

இயசுரு—யசுர்வேதம்.

இயத்தநம்—1. பிரயாசம். 2. முயற்சி.

இயத்திநம்—1. ஆயத்தம். 2. கருவி. 3. பிரயாசம். 4. முயற்சி. [யத்ந.]

இயந்திரம்— 1. ஆலை. 2. (சோதிடம், மாந்திரிகம்.) சக்கரம். பொற்றகடுமுதலியவற்றிலே வட்டஞ்சதுரமுதலிய பல வடிவக்கோடுகள்கீறி அவற்றிடையே பீசாக்கரமுதலிய மந்திரங்களெழுதித்தேவசாந்நியத்தின்பொருட்டுப்பூசை செய்யப்படுஞ்சக்கரம். 3. தேர். 4. நீரிறைத்தல், அச்சடித்தல், சீலைநெய்தல் முதலிய விசேட கிருத்தியங்களை ச்செய்தற்காகப் பல உறுப்புக்களுமமைத்து இயற்றப்படுகிற கருவி. 5. மதிலுறுப்பு. [யந்த்ர - முயற்சியினலடைந்துகாப்பது.]

இயந்திரி—இத்திமரம்.

இயந்திரித்தல்— இயந்திரத்திலிட்டமர்த்துதல். (உ-ம்.) "இக்கெனவேசெக்கிடையிட்டியந்திரிப்பர். (சிவதரு. சுவர்க்க நரக. கசுக.)

இயந்தை—மருதயாழ்த்திறம்.

இயம்— 1. ஈ. 2. ஒலி. 3. சொல். 4. மிருதாரசிங்கி. 5. வாச்சியம்; அது, கொட்டுவன, ஊதுவன, எழுப்புவன என்னுந்தொடக்கத்தனவற்றிற்கெல்லாம் பொதுவாம். (உ-ம்.) "இயங்களார்த்திடுமோதையும்" ( கந்தபு. திக்குவி. உசு.) (தொல். சொல். சசு. சேனு.)

இயம்பல்—1.ஒலித்தல். (உ-ம்.)"தொல்லைவேழஞ் - செயிருற்றியம்பிமுருகேசன்முன்சென்றதன்றே" (கந்தபு. திருவிளை. சஅ.) 2. சொல்லல். (உ-ம்.) " இன்னணமியம்பலும் " (கந்தபு. பார்ப்பதி. ச.) 3. வாச்சியமுழக்கல். 4. வாச்சியமொலித்தல். (உ-ம்.) "வென்றிகெழுதொண்டகம்வியன்றுடியியம்ப" (கந்தபு. வள். கஉ.)

இயம்புணர்தூம்பு– நெடுவங்கியமென்னும் வாத்தியம். (ஐங்குறு.)

இயம்புதல்—சொல்லுதல்.

இயம்புதல்வேட்கையுவமை— உவமாலங்காரத்தினொருவகை; அது, பொருளை இன்னதுபோலுமென்றுசொல்ல என்னுள்ளம் விரும்புகின்றதென்று ஒருவர்சொல்வது. (வ-று.) 'மடுத்ததைந்ததாமரைநின்வாண்முகத்திற்கொப்பென் - றெடுத்தியம்பவேண்டுகின்றதின்று" (தண்டி.கூக )

இயமகணம்—இயமகிங்கிரர்.

இயமகம்— ஒரெழுத்துமுதற் பத்தெழுத்தீறாய் ஓரடிபோல நான்கடியும் வரப்பாடுவது. (தண்டி. கூச. உரை.)

இயமகாயமகம்— மடக்கலங்காரத்தொருவகை. அஃது, ஒரு சொல்லானே நான்கடியும்மடங்கிவருவது: "உமாதரனுமாதர - னுமாதரனுமாதர - னுமாதரனுமாதர - னுமாதரனுமாதரன்" என்பதிற்போல.(தண்டி.கூச.உரை.)

இயமகிங்கிரர்– இயமதூதர். [கிங்கிரர்-பணிபுரிவோர்.]

இயமதூதன்—1.நமனுடையபணிபுரியுந்தூதன். 2 பாம்பினது நான்கு நச்சுப்பற்களினொன்று. (உ-ம்.)"கடுவமருநாலெயிற்றுக்கும்-பேர் சொல்வேன்காளிகாளாத்திரி யமன்யம தூதனும்" (சித்தரா.க.) [யமதூத.]

இயமதூதி — பாம்பினதுநச்சுப்பற்களினொன்றாகிய யமதூதன்.

இயமபடர்—இயமதூதர். (உ-ம்.) "சங்கையிலாவகையமபடராலுயிர்தளர்பொழுது" (பாரத. கரு-ம்போர். க.) [யமபடர்: படர் - படைவீரர்.]

இயமம் -- அட்டாங்க யோகத் தொன்று; அது: கொல்லாமை, வாய்மை, கள்ளாமை, பிறர்மனைவியரையும் பொதுமகளிரையும் விரும்பாமையாகிய ஆண்டகைமை, இரக்கம், வஞ்சனையில்லாமை, பொறையுடைமை, மனங்கலங்காமை, அற்பாகாரம், சுசியுடைமையென்னும் பத்துமாம். (சைவவி. உக.)

இயமயோகம்— அட்டாங்கயோகத்தொன்று. (உ-ம்.) "இயமம்" பார். [யமயோக.]

இயமரம்—ஒருவகைப்பறை. (பதிற்று. ருo. உரை.)

இயமன்-- 1. அரவின்நான்குநச்சுப்பற்களினொன்று. (சித்தரா. க.) (உ-ம்.) "இயமதூத

ன்" பார். 2. மரணத்துக்கு அதிகாரியும், நரகத்துக்கு அரசனும், தெற்குத்திசையிலிருப்பவனுமாகிய கூற்றுவன்.

இயமாநகணம்— கவிநாயகனுக்குப்பொருத்தமுறச்செய்யு நூலின் முதற்செய்யுளின்முதற்சீர்வருவம்வகைகளுளொன்று. அது தேமாங்காய் வாய்பாடாக மூன்று நேரசைவரப்பாடுவது. (இது இந்திரகணமெனவும்படும்.) (வீரசோ. யாப்பு. கூகூ. உரை.) [யஜமாநகணம்: யஜமாந - இந்திரன்.]

இயமாநன்—1. இந்திரன். 2. உயிர். (உ-ம்.) "இருநிலனாய்த்தீயாகிநீருமாகியியமாநனாயெறியுங்காற்றுமாகி" (தேவார. பொது. நின்றதிருத். க. திருநாவு.) 4. குடும்பத்தலைவன். 5. யாகஞ் செய்விப்போன். [யஜமாந: யஜ் -வணங்குதல்.]

இயமான்—எசமான்.

இயல்—1. ஆகமம். (உ-ம்.) "இயலோதேல்" (சைவச. பொதுவி. கூசகூ.) 2. இசை. 3. இயலென்னேவலும், தெரிநிலை வினைப் பகுதியும், வினைத்தொகையும்; (உ-ம்.) "இயறேர்" (ஐங்குறு.) 4. இயற்கை. (உ-ம்.) "என்றிவை யாதியாயவியற்குணமுடையனாகி" (திருவிளை. உக்கிரபா. சஙு.) 5. இயற்றமிழ். (உ-ம்.) "இயல்வாணன்" 6. இலக்ஷணம். (உ-ம்.) "இயன்மேனிகொண்ட" (திருவிளை. வரகுண. உ) 7. ஒழுக்கம். 8. ஒழுங்கு. 9. ஒத்து. (உ-ம்.) "எழுத்தியல்" 10. குணம். (உ-ம்.) "அந்தப்பேரியலானையீதி" (ஞானவா. வைராக். சச.) 11. கூறுபாடு. 12. சாயல். (உ-ம்.) "இயல்புடைபெயர்வன" (இராமா. நாட்டு. சஉ.) 13. தமிழ். (உ-ம்.) "இயலேசாயலுந்தமிழ்நடையுமாகும்" (சூ. நிகண். கக. யகரவெ. கூ.) 14. தன்மை. (உ-ம்.) "சுரத்தியல்புகலும்" (அகப்பொ.ஒழிபி. அ.)15. நடை. (சூ. நிகண். கக: யகரவெ. கூ.) 16. பொருந்தல். (உ-ம்.)"கடிமனைபுகுந்த-மின்னியற்சடைமாதவர்" (திருவிளை. குண்டோ. உ.) [இது முதனிலைத்தொழிற்பெயர்.] 17. விதி.

இயல்பளவை—பலபொருள்கொள்ளக்கிடந்த ஒருசொல்லாற்கருதியபொருள் இஃதெனச்சொல்பவனது குறிப்பாலறிதல்: அது; மாபூத்ததென்று ஒருவன் சொல்ல, பூத்ததென்னுங் குறிப்பினாலே மாமரமேபூத்ததென்றறிதல்போல்வது. (சி. சி. அளவை. க. மறைஞா) (வ-று.) "மாமேலிருந்தொருகோமுவெனிற்சள்ளிக்கோநரலும்- நூமேலிருந்தொரு கோமுவெனிற்றரவேதுணிந்து - பூமேவுங் கண்ணமூத்தங்கோல் கொடுத்தலும் பூதலத்தே - நாமேவியல்பென்று கூறுவர்நல்லசொன்னவலரே" (அளவை-விளக்கம். )

இயல்பாகவேபாசங்களினீங்குதல்— கடவுளுடைய அறுவகைக் குணங்களுளொன்று. (உ-ம்.) "அநாதிபோதம், அநாதிமுத்தத்தன்மையெனப்படும் இயல்பாகவே பாசங்களினீங்குதல் கூறப்பட்டது" (சி. சி. பாயிர. க. சிவஞா.)

இயல்பு—1. இயற்கைவடிவம். 2. ஒழுக்கம். (உ-ம்.) "சால்பும்வியப்புமியல்புங்குன்றின்" (குறிஞ். பா. கரு.) 3. ஒழுங்கு. (உ-ம்.) "அந்நலாரியல்புறவணிய" (நைடத. நகர. கூ.) 4. குணம். (உ-ம்.) "ஏதிலாரென்பாரியல்பில்லார்" (நான்மணிக். சசு.) 5. சுபாவம், விகாரமில்லாத்தன்மை. (உ-ம்.) "இயல்புகாண்டோற்றிமாய்கை யென்றிடினி யல்பினுக்குச் - செயலதின்றியல்புசெய்திசெய்தியே லியல்பதின்றாம்" (சி. சி. க: கூ.) 6. தகுதி. (உ-ம்.) "இயல்பாகுநோன்பிற்கொன்றின்மையுடைமை" (வள். கூசச.) 7. தன்மை. (உ-ம்.) "அபரமுத்திப்பெரும்போகத்தினியல்பிதுவென" (சி. சி. க: உகூ. சிவஞாந.) 8. பெலன். (உ-ம்.) "இயல்புகேடு" 9. பொருட்குப்பின்றோன்றாது உடனிகழுந்தன்மை; அது: நீரினது தண்மைத்தன்மையும், தீயினது வெம்மைத்தன்மையும், போல்வது. (தொல். சொல். கிளவி. கக. சேனா.) 10. முறைமை. (உ-ம்.) "இயல்பினானில்வாழ்க்கைவாழ்பவனென்பான்" (வள். சஎ.) 11. வரலாறு. (உ-ம்) "உலகின்றுடக்கன்மகளாயுதித்தவியல்பும்" (கூர்மபு. திருக்கல். க.)

இயல்புக்காட்சி— காட்சிபேதத்தொன்று.

இயல்புகேடு—பலவீனம்.

இயல்புப்புணர்ச்சி— பதங்கள் விகாரமின்றிஒன்றோடொன்றுகூடிநிற்றல். அது, நிலம்வலிதுஎன்பதிற்போல. (நன் உயிரீற். கூ.)

இயல்புரை — அகப்பொருளுக்குரிய இருபத்தேழுரைகளுளொன்று; அஃது, இயற்கையிலேயுள்ளதனை இன்னதென்று கூறுதல். அஃது: "இயல்பெனப்படுவதியல்புழியெண்ணி-வின்னுழியாயின்னதியன்றதிதுவென்ன-வின்னமுரைப்பதென்மனார்புலவர்" என்பதனாற்பெறப்படும். (வீரசோ. பொரு. ரு. உரை.)

இயல்புநயம்— ஒற்றுமைமுதலிய நான்கு நயங்களுளொன்று. (மணிமே.)

இயல்பூ—வில்வம்.

இயல்பூதி—1. நாய்வேளைப்பூண்டு. 2. வில்வமரம்.

இயல்பூபதி—வில்வமரம்.

**இயல்பேது**— அநுமாந அளவைக்கு உபகாரகருவியான மூன்றேதுக்களிலொன்று; இதனை "ஏது மூன்றுமியல்புகாரியத்தோடநுபலத்தியிவை- யோதினியல்புமாமரத்தைக்காட்டல்" என்னும் (சி. சி. அளவை. ௧௦ - ஆஞ்செய்யுளிற்காண்க.)

**இயல்வு**—இயல்பு.

**இயல**— அசைய. (உ-ம்.) "முழவுறழ்தடக்கையினியலவேந்தி" (திருமுருகா. உ௧௫.)

**இயலடி**—இயற்சீரான்வருமடி.

**இயலணி**—இயற்கையழகு. (ஐங்குறு.)

**இயலல்**—1. அசைதல். (உ-ம்.) "இயலவேந்திமென்றோட்பல்பிணை" .(திருமுரு. உ௧௫.) 2. உடன்படல். (உ-ம்.) "யாதுநீகருதிற்றன்னதியன்றனன்" (ஞாநவா. வைராக். உ௮.) 3. உலாவல். ( உ-ம். ) " பீலிமஞ்ஞையினியலி " (பெரும்பாண். ௩௩௧.) 4. எலுதல். 5. பொருந்தல்.(உ-ம்.)"நிலைமண்டிலைப்பாச்-சாற்றியதன்னேரடியாலியலும்" (வீரசோ. யாப்பு. ௬.) 6. விதிக்கப்படுதல்.

**இயலாசிரியன்**— பரதநூலிற்கூறப்பட்ட பஞ்சாசாரியரிலொருவன். (மணிமே.)

**இயலாமை**—கூடாமை.

**இயலி**—1. நடந்து. (ஐங்குறு.) 2. உலாவி. (பெரும்பா. ௩௩௧.)

**இயலுதல்**—இயற்றுதல், செய்தல். (உ-ம்.) "இயறேர்வளவ" (புறநா. எ.) "பொன்னியற்புனைதோட்டி" (புறநா. ௧௪.)

**இயலுவமம்** — 1. அதீதம்போலும் சாக்காடெனவருவது.) 2. பண்புவமம்.

**இயவநர்**—1. கம்மாளர். 2. சித்திரகாரர். 3. சோநகர், கிரேக்கசாதியார்.

**இயவம்**— 1. ஒரு தானியம்; அது: வாற்கோதுமை. 2. நெல். (சூ. நிகண். ௪: ௩௮.)

**இயவர்**—1. கீழ்மக்கள். 2. சண்டாளர். 3. தோற்கருவியாளர். 4. வாச்சியக்காரர். ( ஐங்குறு.)

**இயவானி**—ஓமம். (உ-ம்.) " எண்ணேயமியவானிமுதிரை" (தைல. தைலவ. எஎ.)

**இயவு**—1. ஊர். 2. காடு. 3. செலவு, போதல். (சிலப்.) 4. புகழ். 5. வழி. (உ-ம்.) "இயவிடைவருவோன்" (மணிமேக. ௧௩: ௧௧.)

**இயவுள்**—1 தலைவன். (உ-ம்.) "பெரியோரேத்தும்பெரும்பேரியவுள்" (திருமுரு. உஎ௪.) 2. தெய்வம். (திருமுரு. உஎ௪.) 3. புகழாளன்.

**இயவை**—1. எட்டூகைகொண்ட ஓரளவு; அஃது: ஓரங்குலத்திலெட்டிலொன்று.(உ-ம்.) "அன்னயூகையெட்டியவை" (கந்தபு. அண்டகோ. ௫.) [யூகை-பேன்.] 2. துவரைப்பூண்டு. 3. தோரைநெல். 4. வழி. (சூ.நிகண்.௫:௬உ.)

**இயற்கை**— 1. இயல்பு, செயற்கையல்லாதது. (உ-ம்.) " இயற்கையல்லனசெயற்கையிற்றோன்றினும்" (புறநா. ௩௫.) 2. இலக்கணம். (உ-ம்.) " தேசுடைப்பிரமாசாரியியற்கையைத் தெரித்தவாறும்" (கூர்மபு. பதிக. உ௩.) 3. ஏது. 4. குணம். (உ-ம்.) " பனிக்குறும்பெறியும்வெய்யோர்புனிதமாமியற்கையாவும்- புகரறப்புகன்றவாறும்" (கூர்மபு. பதிக. ௧எ.) 5. தகுதி. 6. திராணி. 7. பாக்கியம். 8. முறைமை. 9. வழக்கம்.

**இயற்கைஞானம்**—நூன்முதலியவற்றைக்கற்றலினாலும் ஆராய்தலினாலுமின்றிச்சுபாவமாகவுள்ளவறிவு.

**இயற்கைப்புகழ்ச்சியணி**— இயற்கையையே சிறப்பித்துக்கூறுதல். அது, கன்னன்கொடையேகொடை என்பதிற்போல.

**இயற்கைப்புணர்ச்சி**—(அகப்பொருள்)களவுப்புணர்ச்சியிலொன்று. பொருளதிகாரத்திற்கூறப்பட்ட தலைமகனும் தலைமகளும் ஓரிடத்தெதிர்ப்பட்டுத்தெய்வமிடைநிற்பத்தம்முளொத்தவன்பினராய்த்தம்முட்டாமே கூடுங்கூட்டம். இஃது, அகப்பொருளிற்கூறப்படும் இருபத்தைந்துகிளவிக்கொத்திலே காட்சிமுதற்பாங்கியறிதலீறாகிய பதினெட்டுத்துறைகளுள. (திருக்கோ. ௧. உரை.)

**இயற்கைப்பொருள்**— தனது தன்மைதிரியாது நின்றபொருள். (உ-ம்.) "இயற்கைப்பொருளையிற்றெனக்கிளத்தல்"(தொல்.கிளவி.௧௧.)

**இயற்கையளபெடை**— இசைநிறைத்தற்பொருட்டு வேண்டியதல்லாத அளபெடை. (வ-று.) நூறொஒஒஒறு றென்பானுடங்கிடைக்குமென்முலைக்கு - மாறேமாறன் றளந்தமண். (பிரயோகவி. ௫. உரை.)

**இயற்கையுணர்வினனாதல்**— கடவுளெண்குணத்தொன்று. (வள். ௯. பரி.)

**இயற்கைவினைக்குறிப்பு** — ஆக்கச்சொல் விரிந்தேனுந்தொக்கேனும் வரவேண்டாததாய்ச்செயற்கையல்லாததன்மையையுணர்த்தும் வினைச்சொல். சாத்தன் கரியன் என்பதிற்போல. (நன். வினையிய. உ௮.)

**இயற்சீர்**— (யாப்பிலக்கணம்.) அகவலுரிச்சீர். (உ-ம்.) "ஈரசைகூடியசீரியற்சீரஃ-தீரிரண்டாமவையகவற்கிசைதலும்" ( இலக்கணவிள. எ௧௩.) [இயல்புவகையான் ஒரோவொன்றாகிநின்றசொற்கள் வருதல் பெரும்பான்மையாகலானும், நான்கு பாவிற்கும் பொதுவாகியியன்றுவருதலானும், இயலசையான்வரும் ஈரசைச்

சீராகலானும், இவற்றை ஒருபாவிற்கு உரிமை கூறுதலரிதாகலானும், ஈரசைச்சீரை இயற்சீ ரெனப்படுமென்று பேராசிரியர்சொல்வர். (தொல். பொருளதி. ௩௨௫.)

**இயற்சீர்விகற்பம்**—(யாப்பிலக்கணம்.) இயற்சீர்வெண்டளை. (உ-ம்.) "வெண்சீரொன்றலி யற்சீர்விகற்பமென்-றவ்விருதளையும் வெள்ளைக்கமைதலும்" (இலக்கணவி. எ௧அ.) [இதிலே நேர்முன்னிரையும், நிரைமுன்னேரும் வருதலை விகற்பமென்றார்.]

**இயற்சீர்வெண்டளை**—சீர்களை ஒன்றோடொன்று தொடுக்கும் வகைகளுளொன்று. அஃது, அகவலுரிச்சீரினிறுதியில் நிற்கிற நேரசைமுன் நிரையசையும், நிரையசைமுன் நேரசையும் வரத்தொடுப்பது. "அகரமுதல" "மலர்மிசையேகினான்" என்பவற்றிற்போல. (இலக்கணவி. எ௧அ.)

**இயற்சொல்** — திரிசொற்போலாகாது கற்றார்க்குங் கல்லாதார்க்கு மொப்பத்தன்பொருளை விளக்குந் தன்மையினையுடைய உலக வழக்கச்சொல். (நன். பெயரி. ௧௪.) [திரிபின்றியியல்பாகிய சொல்லாதலின் இயற்சொல்.] (தொல். சொல்லதி. ௩௯அ. சேனா.)

**இயற்படமொழிதல்**—(அகப்பொருள்) இயல்புபடச்சொல்லுதல். (வாண. உ௩௩. உரை.) [இயல்-குணம்.]

**இயற்படுத்துரைத்தல்**—வழிப்படுத்திச்சொல்லல். ["இயற்படமொழிதல்" பார்.]

**இயற்பழித்தல்** — குணத்தைப் பழித்தல். (ஐங்குறு.)

**இயற்பழித்துரைத்தல்**—(அகப்பொருள்) தலைவனியல்பைப்பழித்து இகுளைசொல்லுதல். (தணிகை. களவு. ௪௩௧. முகம்.)

**இயற்பெயர்**—ஆதியிற் குரவராற் பெற்றபெயர். (உ-ம்.) "இயற்பெயர்க்கிளவித்தலைவற்கிசையார்" (அகப்பொருள். ஒழிபி. ௩௩.)

**இயற்றமிழ்**—இயலிலக்கணம். (உ-ம்.) "இசைத்தமிழ்" பார்.

**இயற்றல்**—1. செய்தல். (உ-ம்.) "யானியற்றுந் தவவேள்விக்கு" (இராமா. கையடை. ௧௦.) 2. நடத்துதல். (உ-ம்.) "எம்முயிருணின்றியற்றுநின்றான்" (கந்தபு. உபதேச. ௧௦.) 3. பொருள்கள் வரும்வழிகளைஉளவாக்கல். (உ-ம்.) "இயற்றலு மீட்டலுங்காத்தலுங்காத்த- வகுத்தலும்வல்லதரசு" (வள். ௩அ௫.)

**இயற்றளை**—1. ஆசிரியத்தளை. 2. இயற்சீர் வெண்டளை. (உ-ம்.) "இயற்றளைவெள்ளடிவஞ்சியின்பாதமகவலுள்ளான் - மயக்கப்படாவல்ல" (யாப். காரிகை. ஒழிபி. ௪.)

**இயற்றியற்றல்** — கருவிகளாற்செய்யாது சங்கற்பத்தாற்செய்தல்.

**இயற்றி**—முயற்சி.

**இயற்றியார்**—செய்தவர். (உ-ம்.) "இயற்றியார்யாரோவென்பார்" (கந்தபு. அசமுகிநகர்காண். உஅ.)

**இயற்று**—1. இயற்றென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும். 2. மண்முதலியவற்றாற் செய்யப்பட்ட பாத்திரம். [வழக்கு.]

**இயற்றுதல்**— 1. செய்தல். (உ-ம்.) "இயல்பதாம்பூதந்தானேயியற்றிடுஞ் செய்தியென்னில்" (சி. சி. ௧: ௩.) 2. நடத்தல். 3. முன்னில்லதனையுண்டாக்குதல். (பி. வி. காரக. ௧௨. உரை.) 4. விதித்தல்.

**இயற்றுதற்கருத்தா**— பயனிலைச்செயலைத் தானுகச்செய்பவனாகியகருத்தா; அது: தச்சன் கோயிலைக்கட்டினான் என்பதிற்போல. [இதிலே தச்சன் இயற்றுதற்கருத்தா.]

**இயற்றும்வினை**—தன்வினை.

**இயற்றும்வினைமுதல்**— இயற்றுதற்கருத்தா.

**இயற்றுவான்**—செய்கிறவன், உண்டாக்குகிறவன். (உ-ம்.) "மண்ணினில்லதாம்படங்கடாதியெழிதருமியற்றவானல்" (சி. சி. ௧: ௬.)

**இயறல்**—1. இசைதல். 2. கூடியதாயிருத்தல். 3. பொருந்தல். 4. போதல்.

**இயன்மணம்**— இயற்கைவாசம். (உ-ம்.) "அரமாதர்மெய்யு- மிருங்குழற்காடுஞ்சூழ்போயியன் மணம்விழுங்குமன்றே" (திருவிளை. நகர. ௫௦.)

**இயன்மொழிவாழ்த்து**- தொண்ணூற்றாறு பிரபந்தங்களுளொன்று. அது:கவிநாயகன் தன் குடிப்பிறந்தோர்க்கெல்லாம் இயல்பாயுடையதாகிய குணமுடையவனென்பது முதலாகச்சொல்லி அவனை உயர்ந்தோர் வாழ்த்துவதாகக்கூறுவது. (தொன்னூல். உஅ௩. உரை.)

**இயனம்**—மரமேறிகளின் கருவியுறை.

**இயனூல்**- இயற்றமிழிலக்கணங்கூறு நூல்.

**இயாகதம்**—சிற்றகத்திமரம்.

**இயாகம்**— 1. கொன்றைமரம். 2. பாத்திரம். 3. வேள்வி.

**இயாகாதிபதி** — இந்திரன். [யாகாதிபதி.]

**இயாதகம்**—துத்திப்பூண்டு.

**இயாதம்**— 1. தோட்டியால் யானையைச் செலுத்துகை. 2. யானைத்தோட்டியின்பிடர். [யாதம்.]

**இயுசாவியம்**—கொன்றைமரம்.

**இயை**—1. அழகு. (ஆசிரியநிகண். அ: ௬.) 2. இசைப்பு. 3. இயைதல், கூடுதல். (உ-ம்.) "என்

ளுறுகாதலரியைதந்தார்" (கலி. ௯௫.) 4. இயை யென்னேவலும், தெரிநிலை வினைப் பகுதியும். வினைத்தொகையும். 5. புகழ்.

இயைத்தல்—1. இணக்கல். 2. பொருத்தல். (உ-ம்.) "பூவொடுகாரியைக்குமாறு" (பழமொழி. ௧௯௫.) 3. முறைப்படுத்தல்.

இயைதல்—1. இணங்கல். 2. பொருந்தல். (உ-ம்.) "இனையதோரின்பமென்றுமியைந்திலேன்" (ஞானவா. வைராக். ௨௬.)

இயைபிசையணி— தொன்னூல்விளக்கத்தார் சொல்லுஞ் சொல்லொப்பணிநான்குவகையுளொன்று; அது: பற்பலவசனத்தீற்றுமொழிகள் தம்முளியைந்துவருவது. "செங்கதிர் நெடுங்கைநீட்டிமல்கிருட்கங்கு லோட்டிப் படரொளிமுகத்தைக்காட்டி" என்பதிற்போல. (தொன்னூல். ௯௨௯.)

இயைபிலுருவகம்— உருவகவலங்காரத்தினொருவகை; அது: பலபொருளுந் தம்முள்ளொன்றோடொன்றியையாதனவற்றை வைத்துருவகஞ்செய்வது. "தேனக்கலர் கொன்றைபொன்னுகச்செஞ்சடையே-கூனற்பவளக்கொடியாகத்- தானமழையாகக்கோடுமதியாகத்தோன்றும்-புழையார்தடக்கைப்பொருப்பு" என்பதிற்போல.(தண்டி. ௯௫. உரை.)

இயைபின்மைமாத்திரை நீக்கியவிசேடணம்— வெண்குடை என்பதுபோல்வன. (சிந்தா.)

இயைபின்மையணி—உவமாலங்காரத்தினொருவகை; அஃது. உவமையைக் கூறிமறுத்துப் பொருள்தனக்குத்தானே உவமையென் றுரைப்பது. உவமைக்கும் பொருளுக்கும் இயைபு தோன்றப் பொதுத்தன்மையில்லாமையின் இது பொது நீங்குவமையெனவும் படும். "திருமருவுதண்மதிக்குஞ்செந்தாமரையின்- விரைமலர்க்குமேலாந்தகையாற்- கருநெடுங்கண்-மானேயிருளளகஞ்சூழ்ந்தநின்வாண்முகந்- தானேயுவமைதனக்கு" என்பதிற்போல. (தண்டி. ௯௧.)

இயைபு—1. இசைவு. 2. இணக்கம். 3. இயைபுவனப்புப்பார். 4. பொருத்தம். 5. இயைபுத்தொடை; அஃது. அடியினிறுதியிலேயுள்ள சொல்லாவது எழுத்தாவது இயையும்படி தொடுக்கப்படுவது. (உ-ம்.) "இறுதியியைபு" (யாப். காரிகை. உறுப்பி. ௧௬.) [இயைபு- இயைதல்.]

இயைபுத்தொடை— செய்யுட்டொடையினொருவகை; அது: செய்யுளடிகளினிறுதியிலேயுள்ள எழுத்தாவது, சொல்லாவது ஒன்றிவரல்லது ஒரடியின் வருஞ்சீர்களிலே சிலவாயினும், பலவாயினும் இறுதியெழுத்துக்கள் ஒன்றிவரத்தொடுப்பது; அஃது: "எழுவாயெழுத்தொன்றின்மோனையிறுதியியைபு"என்பதனுற் பெறப்படும். (காரிகை. உறுப்பி. ௧௬.)

இயைபுருவகம்—உருவகவலங்காரத்தினொருவகை; அது: பலபொருளை உருவகஞ் செய்யுங்காற்றம்முளியைபுடையவாக வைத்துருவகஞ் செய்வது. "செவ்வாய்த்தளிருநகைமுகிழுங்கண்மலரு - மைவாரளகமதுகரமுஞ் - செவ்வி-யுடைத்தாந்திருமுகமெனுள்ளத்துவைத்தார் - துடைத்தாரேயன்றேதுயர்" என்பதிற் போல. (தண்டி. ௯௫. உரை.)

இயைபுவண்ணம் — இருபது வண்ணங்களுளொன்று; அஃது: இடையெழுத்துக்கள்பெரும்பான்மையாகவருஞ்சந்தம். (வ-று.) "வால்வெள்ளருவிவரைமிசையிழியக் - கோல்வல்லுழுவைவிடரிடையியைவு" (உ-ம்.) "இயைபுவண்ண மிடையெழுத்து மிகுமே" (தொல். பொரு. ௫௩௧.)

இயைபுவனப்பு— செய்யுளினெட்டுவனப்புக்களினொன்று. அது, ஞ ண ந ம ன ய ர ல வ ழ ள வென்னும் பதினொருபுள்ளி யீற்றினுளொன்றனை இறுதியாகச்செய்யுஞ் செய்யுளைச்சொற்றொடராகவும் பொருட்டொடராகவுஞ் செய்வது. சீத்தலைச்சாத்தனராற்செய்யப்பட்டமணிமேகலையும், கொங்கவேளாராற் செய்யப்பட்ட தொடர்நிலைச்செய்யுளும்போல்வன. அவை னகாரவீற்றுனின்றன. "ஞகாரமுதலானகார வீற்றுப்-புள்ளியிறுதியியைபெனப்படுமே" (தொல். பொருளதி. ௫௫௯.)

இயைபுளன்—புகழாளன்.

இயைமே—வாழைமரம்.

இயைய—ஒருவமையுருபு; இது: பெயரோடுவினைபுணருங்கால் உவமப்பொருளின் வரும் வினையெச்சவுருபுகளிலொன்று. (நன். பொது வி. ௧௬.) (உ-ம்.) "குயிலியையப்பாடினன்".

இயைவது—தக்கது. (உ-ம்.) "மன்னன்மாமகட்கியைவதே" (கந்தபு. தவங்காண். ௧௭.)

இயைவு—1. இசைவு. 2. இணக்கம். 3. பொருத்தம்.

இர— 1. இரத்தல். (உ-ம்.) "இரத்தக்கார்" (வள். ௧௦௫௧.) [இதனை ஒரு முதனிலைத்தொழிற்பெயரென்பர் பரிமேலழகர்.] 2. இரவென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், 3.இரா. (உ-ம்.) "இரவருமதி" [இரா- இர எனக்குறுகியது.]

இரக்கச்சொல்—பரிதாபமொழி.

இரக்கம்— 1. ஒலி. (உ-ம்.) "பன்றிவாய்விடுமிரக்கமும்" (திருவிளை. பரிநரி. ௯௧.) 2. கிருபை, மனவுருக்கம். (உ-ம்.) "இரக்கமாயருணந்தியை நினைந்தனனிறையோனே" (கந்தபு.

மோகநீ. ௧௯.) 3. துன்பம், விசநம். (உ-ம்.) "இப்படியுநந்தலேயில் விதித்தானென்னு-விரக்கமொடுமெறுத்தலஞ்சி" (கந்தபு. தேவரையேவல். ௪.) 4. பிச்சை.

**இரக்கிக்கை**—இரட்சித்தல். (உ-ம்.) "இரக்கிக்கையாலே" (சைவச. பொது. ௨0௪.)

**இரக்கை**—1. இரட்சித்தல். (உ-ம்.) "அமரரிரக்கையினாலே" (கலி. பாலே, உ. உரை.) 2. விபூதி. (உ-ம்.) "இரக்கிக்கையாலேயுயிரினையெல்லா-மிரக்கையெனும்பேராமிதற்கு" (சைவச. பொது. ௨0௪.) [தன்னைத்தரித்த ஆன்மாக்களை இரட்சித்தலால்வந்தபெயரென்பர்.]

**இரகசியத்தாநம்**—மறைவிடம்.

**இரகசியம்**—1. அந்தரங்கம், மறைவு. 2. பெண்குறி. 3. மறைத்துவைக்கத்தக்கது. 4. மறைத்துவைக்கப்பட்டது. [ரஹஸ்ய; ரஹஸ் -மறைவு.]

**இரகம்**—1. சூரியகாந்தம். 2. பளிங்கு. 3. பெருமழை. [ரக.]

**இரகிதம்**—1. இட்டம். 2. விடப்பட்டது, நீக்கப்பட்டது. [ரஹித.]

**இரது**—திலீபன்மகனாகிய ஒரயோத்தியரசன். [ரகு.]

**இரதுநாதன்**— அயோத்தியிலரசனாயிருந்த இராமன். [ரகுநாத.]

**இரதுவமிசம்**—1. அயோத்தியரசனாகிய இரகுவினதுசந்ததியார். 2. காளிதாசகவி சம்ஸ்கிருதபாஷையிலேயியற்றிய ஒரு காப்பியம். அதிலே இராமருடையசரித்திரமும், அவரது முன்னோராகிய இரகு முதலியோருடைய சரித்திரங்களுஞ் சொல்லப்பட்டிருக்கின்றன. [ரகுவம்ஶ.]

**இரங்கல்**—1. அழுதல். 2. இரங்கற்க எனப் பொருள்படும் ஒரு வியங்கோள்வினைமுற்று. (உ-ம்.) "வேறுபின்னைநீயிரங்கல்" (திருவிளை. திருமண. ரு.) 3. ஒலித்தல். (உ-ம்.) "இரங்கிவீழருவியிற்கவிழ"(திருவிளை. நாகமெ. ௧௭.) 4. கருணைசெய்தல், (உ-ம்.) "இன்னல்செய்யரக்கற்காற்றுதெய்தினனிரங்கல்வேண்டும்" (ஞானவா. வைராக். ௨௯.) 5. பரிதபித்தல். (உ-ம்.) "போம்வாழ்நாளென்றிரங்கிப்பாடும்" (ஞானவா. வைராக். ௬0.) 6. மநமுருகல். 7. யாழ்நரம்போசை. (பிங்கல. ௧௪௪௧.) 8. வருந்தல். (உ-ம்.) "எங்காட்ணைவோமெனவிரங்க" (திருவிளை. உலவா. ௪.)

**இரங்கல்விலக்கு**— குறிப்பினால் விலக்குவதாகிய முன்னவிலக்கென்னுமலங்காரத்தினொருவகை; அஃது. இரங்கல் தோன்றக்கூறிவிலக்குவது. "ஊசுநெருழிலிழக்குமொப்புமயிலிழக்கும்-வாசஞ்சுனையிழக்கும்வள்ளலே- தேசு-பொழிலிழக்குநாளையெம் பூங்குழலிநீங்க - வெழிலிழக்குமந்தோவிவண்" என்பதிற்போல.(தண்டி. ௪௬.)

**இரங்கலை**—இரங்கு என்னும் வினையடியாற் பிறந்து எதிர்மறையில் வருமோரேவல்வினை. (உ-ம்.) "இரங்கலையிரங்கலையென்றுதேற்றினன்" (கந்தபு. சூரன்நகர்புரி. ௧௯.)

**இரங்காசீவி**—சித்திரமெழுதுவோன். (பராசர. ௧௧0.) [ரங்காஜீவீந.]

**இரங்கு**— இரங்கென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். (உ-ம்.) "கரைகொன்றிரங்குதிரைக்கடல் வான்குழிசியாக" (கூர்மபு. இந்திர. ௩௨.)

**இரங்குசொல்**— இழுமென விசைக்குஞ்சொல். (உ-ம்.) "திருந்துதேனெனவிரங்கு சொற்செவிமடுத்து" (திருவிளை. இரச. ௨0.)

**இரங்கொலி**—முறையீடு. (உ-ம்.) "என்றிரங்குவோரிரங்கொலி"(திருவிளை. நரிபரி. ௨ரு.)

**இரச்சு**— 1. கயிறு. (சூ. நிகண். ௭.௯0.) 2. சடை. 3. பந்தம். [ரஜ்ஜு.]

**இரச்சுப்பொருத்தம்**— மணப்பொருத்தங்களுளொன்று. அது, ஸ்ரீபுருஷர்களுடைய நட்சத்திரங்கள் ஒரே ரச்சுவிலில்லாமலிருப்பது. இரச்சுக்கள் சிரோரச்சு, கண்டரச்சு, உதரரச்சு, தொடைரச்சு, பாதரச்சுவென ஐந்துவகைப்படும். (இரகுநா. பிலவஞ்பஞ்சாங். ௨ரு.)

**இரச்சுலம்**—கவண். [ரஜ்ஜுவால.]

**இரச்சை**—கயிறு.

**இரசக்கட்டு**—சூதக்கட்டு.

**இரசக்கிணறு**—இரசக்குழி.

**இரசக்துண்டு**—கல்லியாணவீடுமுதலியவற்றிலே அலங்காரத்தின்பொருட்டுத் தூக்கப்படுஞ்சூதம்விட்டடைத்ததிரண்டவடிவுடையபளிங்கு.

**இரசக்குழி**—சூதமெடுக்குஞ்சுரங்கம்.

**இரசகந்தபாஷாணம்**—சாதிலிங்கம்.

**இரசகம்**— பாகஞ்செய்யப்பட்ட இறைச்சி. [ரஸக.]

**இரசகருப்பூரம்**— 1. இரசம் உப்புத்திராவகத்தோடு கலத்தலாற்பிறந்த இரசபுட்பம். 2. கிண்ணிக்கர்ப்பூரம். [ரஸகர்ப்பூர.]

**இரசகன்**— 1. நிடாதனுக்கு வைசியப்பெண்ணினிடத்துப்பிறந்தவன். 2. வைதேகனுக்குப்பார்ப்பனியிடத்துப்பிறந்தவன். (சூத. சாதி

வரலாறு. உஅ.) [இரசகன் செய்யுந்தொழில் ஆடையொலித்தல். பராசர. கருக.]

**இரசகி**—வண்ணாத்தி. (உ-ம்.) "இரசகியெ ன்று" (திருவானை. கோச். சசு.) [ரஜகீ.]

**இரசகுளிகை**—செம்பில்நின்று அதன் களி ம்பைப் பரிசித்தமாத்திரத்திலே நீக்குஞ்சத்தி யையுடையதாகச்சொல்லப்படுங்குளிகை(உ-ம்) "செம்பிலுறுங்களிம்பிரதகுளிகை பரிசிக்கக்கழி யும்" (சி. சி. கக: ரு.) [ரஸகுளிகா.]

**இரசகேசரம்**—கருப்பூரம். [ரஸகேஸர]

**இரசசாநு**—1. இருதயம். 2. முகில். [ரஜஸாநு.]

**இரசசித்தன்**— இரசவாதஞ்செய்கிறவன். [ரஸஸித்த: ஸித்த-சித்தியடைகிறவன்.]

**இரசசித்தி**-இரசவாதப்பயிற்சியறிவு.[ரஸஸித்தி.]

**இரசசிந்தூரம்**-இரசத்திலே செய்யப்பட்ட ஒரு சிந்தூரம். [ரஸஸிந்தூர.]

**இரசசு**— 1. இராசதகுணம். 2. துகள். 3. பூந்தாது. 4. மகளிர்பூப்புநீர். [ரஜஸ்.]

**இரசசுவலை**— பூப்படைந்திருக்கிறபெண். [ரஜஸ்வலா.]

**இரசஸ்வலம்**—எருமை.

**இரசசோதநம்**—வெண்காரம்.[ரஸஶோதந.]

**இரசதம்**— 1. அரைப்பட்டிகை. 2. இரத்தம். 3. இராசதகுணம். (உ-ம்.) "இரசதத்தின் குணமெய்தி நான்முகனுயுலகீனும்" (கூர்மபு. பிரகிரு. உஉ.) 4. கழுத்தணி. 5. பொன். 6. யானைத்தந்தம். 7. வெண்மை. 8. வெள்ளி. (உ-ம்.) "இரசதவெற்படைகுவரால்" (திருநெல். தீப. உ.) [ரஜத.]

**இரசதமணல்** — வெள்ளித்துகளிருக்கும் மணல்.

**இரசதாது**—சூதம். [ரஸதாது.]

**இரசதாளி**—கப்பல்வாழை.

**இரசநம்**—1. சுவைக்குங்கருவியாகியநாக்கு. 2. சுவைத்தல். 3. தொனித்தல். [ரஸந.]

**இரசநா**—அரத்தைப்பூண்டு. [ரஸநா.]

**இரசநாதம்**—சூதம். [ரஸநாத.]

**இரசநாயகன்**—சிவன். [ரஸநாயக.]

**இரசநி**—1. அவுரிப்பூண்டு. 2. இரவு. (சூ. நிகண். க: அஉ.) 3. பிசின். 4. மஞ்சள்.(உ-ம்.) "ஏலமாவொடுநெல்லியிரசநி" (தக்ஷிண. அர்ச நா. சுஅ.) [ரஜநீ.]

**இரசநிகரன்**—சந்திரன். [ரஜநிகர.]

**இரசநிசரன்**—கள்வன். [ரஜநிசர.]

**இரசநீகரன்**—சந்திரன். [ரஜநீகர.]

**இரசநீசலம்**—பனி. [ரஜநீஜல.]

**இரசனை**— 1 அணிவகுப்பு. 2. சாறு. 3. சுவை. 4. நா. 5. மயிர்கோதுதல். 6. மாதரிடை யணி. 7. மாலைகோத்தல். 8. மாலைதூக்கியலங் கரித்தல். 9. வாசகமிணைத்தல். [1, 5, 7, 8, 9. ரசநா. 4, 6. ரஸநா.]

**இரசப்பிரீதி** — நூற்றிருபது வகைப்பாஷா ணங்களு ளொன்றாகிய இரசமாதா. [ரஸ ப்ரீதி.]

**இரசபஞ்சாமிர்தம்**—விதிப்படிகூட்டியமை க்கப்பட்டபால், தயிர், நெய், தேன், சருக்கரை என்பவைகளின் றொகுதி. (சைவச. பொதுவி. ருகரு.) [ரஸபஞ்சாம்ருத.]

**இரசபஸ்மம்**— ஒருமருந்து.[ரஸபஸ்ம]

**இரசபலம்**— தென்னமரம். [ரஸபல: ரஸ-நீர். பல-பழம்.]

**இரசபாடாணம்**— கடுகியகாந்தியென்னும் பாஷாணம்.

**இரசபுட்பம்**— இரசகருப்பூரம் [ரஸபுஷ்பம்.]

**இரசம்**—1. அநுபோகம். 2.அன்பு. 3. இன் பம். 4. உடம்பிலுள்ள சத்ததாதுக்களுளொன் று. 5. உபரசம். அது, காந்தம் வெங்காரமுதலி யனவாகப்பலதிறப்படும். 6. சாறு. 7. சுக்கிலம். 8. சுவை. அது, கைப்பு, தித்திப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, கார்ப்பு என அறுவகைப்ப டும். 9. சூதம். 10. செய்யுட்சுவை. அஃதாவது, உள்ளத்துநிகழுந்தன்மை புறத்துப்புலனுய்விள ங்க வீரம், அச்சம், இழிப்பு, வியப்பு, காமம், அவலம், உருத்திரம், நகை ஆகிய எண்வகை மெய்ப்பாட்டானும் நடப்பது. [வடநூலார் இர சங்கள் ஒன்பதென்றும் அவை: சிருங்காரம், ஆசியம், கருணை, ரௌத்திரம், வீரம், பயாந ம், வீபற்சம், அற்புதம், சாந்தமென்றுங்கூறு வர்.] 11. தாளி. 12. நஞ்சு. 13. நீர். 14. பூந் தாது. 15. பூப்பு. 16. மதம். 17. மநச்சார்வு. 18. மிளகு நீர். [ரஸ.]

**இரசமணி** — இரசக்கட்டியமணி. [இது:

நோய்நீங்குகள் அகலும்பொருட்டும், எடுத்தகாரியங்கள் சித்தியாதற்பொருட்டும், மந்திரோச்சாரணத்தோடு காப்பாக அணியப்படுமென்பர்.] [ரஸமணி.]

**இரசமாத்திரை**— இரசகுளிகை. [ரஸமாத்ரா.]

**இரசமாதா**— அப்பிரகபாஷாணம் [ரஸமாதா.]

**இரசலிங்கம்**— 1. ஒரு சிவலிங்கபேதம்; இது, வாணலிங்கத்தினுங்கோடிமடங்கதிகமென்பர். (சைவச. பொதுவி. அக,) 2. சாதிலிங்கம். [ரஸலிங்க.]

**இரசவாதம்**—1. இரசத்தால்வாதித்தல். 2. கலைஞானமறுபத்துநான்கினுளொன்று; அதனை அக்கினியிலே பஞ்சலோகத்தையும்வைத்து வேதிக்கும் வித்தையென்பர். 3. தாமதகுணசித்தி எட்டனுளொன்று; அது. செம்பு, பித்தளைமுதலியதாழ்ந்தலோகங்களை மாற்றுயர்ந்த லோகமாகச்செய்வது. (கூர்மபு. வருணச். கச. உரை.) [ரஸவாத.]

**இரசவாழை**—ஒருவகைவாழை.

**இரசவைப்பு**— இரதஞ்சேர்த்துப்பக்குவஞ்செய்யப்பட்டது.

**இரசாதலம்**—1. கீழேழுலகினொன்று. 2. பாதலம். [ரஸாதல.]

**இரசாதிபதி** – இரசவஸ்துக்களுக்கதிகாரியாங்கிரகம். [ரஸாதிபதி.]

**இரசாதிபன்**— இரச வஸ்துக்களுக்கதிகாரி. [ரஸாதிப.]

**இரசாபாசம்** — 1. அழிவு. 2. இரசமின்மை. 3.(அணியிலக்கணம்)மெய்ப்பாடுதோன்றுதுமறைத்தல். [ரஸாபாஸ.]

**இரசாயநம்**—1. இரசவாதநூல். 2. காயசித்திமருந்து; அது: நெடுங்காலஞ்சீவித்திருக்கச்செய்யுமென்று சொல்லப்படுமொருமருந்து.(சி. சி. கo: ௫. மறை.) 3. நஞ்சு. 4. மோர். [ரஸாயந; ரஸ- சூதம், சாரம். அயந-வழி, போதல்.]

**இரசாயநன்**—கருடன். [ரஸாயந.]

**இரசாலம்**— 1. கரும்பு. 2. கோதுமை. 3. பலாமரம். 4. மாமரம். [ரஸால.]

**இரசிகம்**–1. குதிரை. 2. தூர்த்தத்தன்மை. 3. யானை. [ரஸிக.]

**இரசிகன்**—தூர்த்தன். [ரஸிக.]

**இரசிகை** — 1. தூர்த்தி. 2. நா. 3. மாதரிடையணி. [ரஸிகா.]

**இரசித்தல்**—சுவைத்தல்.

**இரசிதசுத்தி**—ஈயம். [ரஜிதசுத்தி.]

**இரசிதநரன்**— சுக்கிரவாரம். (உ-ம்.) "அலர்" பார். (தைல. தைலவ.)

**இரசிதம்** — 1. இடிமுழக்கம். 2. ஒலி. 3. வெள்ளி. (உ-ம்.)"ஈயஞ்செம்பிரும்பிரசிதமென்பவும்புணர்ப்பாற்" (திருவிளை. இரச. உகூ.) 4. வைப்புப்பாஷாண முப்பத்திரண்டினொன்று. [1, 2. ரஸித. 3. ரஜித.]

**இரசிதலிங்கம்**–விஸ்வதேவன். (த.நி.போ. கூகூo.)

**இரசிப்பு**—சுவையுடைமை.

**இரசுநம்**—உள்ளி. [ரஸோநம்.]

**இரசுவம்**—1. குறுகிய அளவு. 2. குற்றெழுத்து. [ஹ்ரஸ்வ.]

**இரசுவரோகம்**–பித்தத்தினாற்பிறந்து கண்களின்பாவையை அற்பமாத்திரந்தெரிய மறைக்கும் ஒருவகைரோகம். ( சீவரட். உடுக. பக். ) [இரசுவம் - அற்பம்.]

**இரசுவன்**–குறியவுருபமுடையவன்.[ஹ்ரஸ்வ]

**இரசேந்திரன்**— 1. சூதம். 2. பரிசநவேதி. [ரஸேந்த்ர.]

**இரசேந்திரியம்**—நாக்கு. [ரஸேந்த்ரிய.]

**இரசோகரன்**–வண்ணான்.[ரஜோஹர: ரஜஸ் - அழுக்கு. ஹர: - நீக்குகிறவன்.]

**இரசோகுணம்**—இராசதகுணம். [ரஜோகுண.]

**இரசோநம்** — ஒருவகை வெள்ளைப்பூண்டு. "அரேணுகை" பார். ( தைல. தைலவ. க. ) [ரஸோந]

**இரசோபலம்**—1. இருள். [ரஜோபல: ரஜஸ் - தூள். பல- குவியல்.] 2. முத்து. [ரஸோபல: ரஸ - நீர். உபல- கல்.]

**இரசோரசம்** — இருள். [ரஜோரஸ: ரஜஸ் - தூள். ரஸ - சாரம்.]

**இரஞ்சகம்**—1. அன்பு. 2. இயக்கும் அது. 3. சாயமூட்டும் அது. 4. தன்மைதிரிக்குமது. 5. பற்றுவாய்மருந்து. [தெலுங்கு.] [1,2,3,4. ரஞ்ஜக.]

**இரஞ்சகன்** — 1. இயக்குகிறவன். 2. சாயமூட்டுகிறவன். 3. நிறங்கொடுக்கிறவன், சித்திரகாரன், வன்னக்காரன். 4. பிரியம்வரச்செய்கிறவன். [ரஜகஃ.]

**இரஞ்சநம்**—1. இருதயத்தாக்கம், 2. சாயம். 3. சாயமூட்டல். 4. சித்திரித்தல். 5. செஞ்சந்தநம். 6. திரிவாய்மருந்து. 7. திருத்தியடைதல். 8. பிரியங்கொள்ளல். 9. பிரியம்வரச்செய்தல். [ரஜநு.]

**இரஞ்சனை**—களிக்கச்செய்தல். [ரஜநெ]

**இரஞ்சிதபடம்**-வரிசையானசித்திரம் வரையப்பட்டபடம். (உ-ம்.) "சித்திரப்படமோர்பொருளொடுங் கூடாத் திகழ்வினிற்றவுதமேயெனவு - நெய்த்தசூழ்வருடக்கடிதமேயெனவுநீனிறத்திலாஞ்சனையெனவும் - பத்தியோவியஞ்சேர்ந்திரஞ்சிதமெனவும்படுதல்போல்" (வேதா. சூ. சரு.) [ரஜீதவடம்: ரஜீதம்-மகிழ்ச்சி, கண்டோர்மகிழச்செய்யப்பட்டதென்றபடி.]

**இரஞ்சிதம்**— 1. இரஞ்சிதபடம். (உ-ம்.) "இரஞ்சிதபடம்" பார். 2. இன்பமானது. 3. சாயமூட்டப்பட்டது. 4. தன்மை திரிக்கப்பட்டது. 5. பிரியம். [ரஜிதம்.]

**இரட்சகம்**—இரட்சணை. [ரக்ஷக]

**இரட்சகன்**—1. காப்பாத்துகிறவன். 2. மீட்கிறவன். [ரக்ஷகஃ]

**இரட்சசு**—1. பசாசு. 2. பூதம். [ரக்ஷஸ்]

**இரட்சண்ணியம்**— 1. இரட்சிப்பு. 2. பாதுகாத்தல். [ரக்ஷண்ய.]

**இரட்சண்ணியன்**—இரட்சகன்.

**இரட்சணம்**— 1. காத்தல். 2. காவல்செய்தல். [ரக்ஷண.]

**இரட்சணீயம்**—காப்பு. [ரக்ஷணீயம்.]

**இரட்சணை**— 1. காவல். 2. மீட்பு. [ரக்ஷணா.]

**இரட்சபன்** — சேட்டாதேவியின்பிள்ளை. (சைவச. பொதுவி. சசுக. உரை.) [இவனது நிர்மாலியம் புசிக்கிற்புத்திரனுண்டாம்.] [ரக்ஷபஃ]

**இரட்சம்**— 1. இரட்சை. [ரக்ஷ.]

**இரட்சன்**—வேந்தனுக்குரிய ஒருபட்டப்பெயர். (பராசர. உக.) [ரக்ஷஃ.]

**இரட்சாபந்தநம்**—1. காப்புக்கட்டல். 2. மந்திராட்சர யந்திரக்காப்பு. [ரக்ஷாபந்தநம்.]

**இரட்சி**—1. இரட்சிக்கிறவன். [ரக்ஷிநு.] 2. இரட்சியென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும்.

**இரட்சித்தல்**— 1. காவல்செய்தல். 2. காத்தல். (உ-ம்.) "விட்டுணு இரட்சிப்பென்றும்" (சிவப்பி. வியாக். ஆரம்பம். ரு.) 3. மீட்டல்.

**இரட்சிதம்**—காக்கப்பட்டது. [ரக்ஷித.]

**இரட்சிதா** — காக்கிறவன். [ரக்ஷிதா.]

**இரட்சிப்பு**—இரட்சித்தல்.

**இரட்சை**—1. காவல். (உ-ம்.) "மாணத்தயிலவருக்கச்சுருக்கமெனு - மேணத்தமிழிற்கிரட்சையாம்" (தைல. கடவுள். ௬.) 2. திருநீறு. (பொது. உ0ச.) [தன்னைத்தரித்த ஆன்மாக்களை இரட்சித்தலால் வந்தபெயர்.] 3. மந்திராட்சரயந்திரக்காப்பு. 4. மீட்பு. 5. விசேடகாலங்களிலே மணிக்கட்டிற் கட்டிக்கொள்ளும் பட்டுநூற்காப்பு. [ரக்ஷா.]

**இரட்சோவதி** – மகாமேருபர்வதத்தின்மேற்கங்கணத்திலே நிருதிக்கு இருக்கு மொருபட்டணம். ஈசானனுக்குரியபட்டணத்துக்கும்பெயர். (த. நி. போ. ௬௬க.) [ரக்ஷோவதி.]

**இரட்டர்**—ஒருசாதியார்.

**இரட்டல்**—1. அசைத்தல், வீசுதல். (உ-ம்.) "குளிர்சாமரையிருபாலுமிரட்ட" (பாரத. அருச்சுனன்றவ. கரு0.) 2. அசைதல். (உ-ம்.) "அமரரிட்ட- வெழினிகள்புடையேமென்காலெறிதலினிரட்டல்போலும்" (கந்தபு. திருவவ. கக்க.) 3. இரட்டித்தல். (உ-ம்.) "டறவொற்றிரட்டும் வேற்றுமைமிகவே" (நன். கஅ௬.) 4. ஒலித்தல். (உ-ம்.) "நுண்ணீராகுளியிரட்ட" (மதுரைக். ௬0௬:) 5. மாறியொலித்தல். (உ-ம்.) "படுமணியிரட்டுமருங்கில்" (திருமுரு. அ0.)

**இரட்டி**—1. இரட்டிச்சாதியான். 2. இரட்டியென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும். 3. இரண்டுபங்கு. 4. கொட்டி. (புறப்பொருள் வெ. கரு-ஆம் பக்.)

**இரட்டித்தல்**—1. இரண்டாமுறையுழுதல். 2. இருமடங்காக்குதல். 3. உண்டபோசநமிணங்காதிருத்தல். 4. வியாதிமக்களித்தல். 5. வேறுபடல். (உ-ம்.) "இந்தச்சாட்சியிரட்டிக்கிறது.

**இரட்டிப்பு**–1. இரட்டித்தல். 2. இருமடங்கு.

**இரட்டு**–1. இரட்டித்துநிற்றல். (உ-ம்.) "இரட்டைக்கிளவியிரட்டுப்பிரிந்திசையா" (தொல். சேனு. சஅ.) 2. இரட்டென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும். 3. இரட்டைநூலால் அல்லது தடித்தநூலால் நெய்தபுடவை. 4. இரு

மடங்கு. 5. ஒருசாதி. 6. ஒலி. (உ-ம்.) "முழக்கிரட்டு" (நன். உரி. கஅ.)

இரட்டுதல்—இரட்டல்.

இரட்டுமி—ஒருவாத்தியம்.

இரட்டுறமொழிதல்— முப்பத்திரண்டு தந்திரவுத்திகளுளொன்று; அஃது: இரண்டுபொருள்படச்சொல்லுதல். (நன். பொதுப். கச.) [இரண்டு+உற+மொழிதல்.]

இரட்டை— 1. ஆனிமாதம். (இராசவைத். எக.) 2. இரட்டைத்தொடை. (உ-ம்.) அடிமுழுதும்வந்தமொழியே வருவதிரட்டை. (யாப். காரி. உறுப்பி. கஎ.) 3. இரண்டாயிருந்தொன்றுபட்டபொருள். 4. இரண்டு. 5. ஒருவகைச்சந்தபேதம். (உ-ம்.) "வேதங்களைச்சந்தையிரட்டைமுதலியனவிலக்கணத்தோடோதியும்" (சி.சி. அ. கக. மறை.) 6. ஒற்றைப்படாத எண். 7. சோடு. 8. தம்பதி. (சூ. நிகண். உ: சுரு.) 9. மிதுனவிராசி. (சூ. நிகண். க. சுச.)

இரட்டைக்கிளவி—இரட்டித்துநின்றுபொருளுணர்த்துஞ்சொல். (உ-ம்.) "இரட்டைக்கிளவியிரட்டிற்பிரிந்திசையா" (நன். சுகசு.) அது: "சளசளவெனமழைத்தாரைகான்றன" என்பதிற்போல்வது. (இராமா. திருவவதார. சசு.)

இரட்டைக்கை—(பரதம்) இணைக்கை. (சிலப். அரங்கே. கஅ. உரை.)

இரட்டைத்தொடை—நாற்பத்துமூன்றுதொடைகளுளொன்று; அஃது: அடிமுழுதும் வந்தமொழியேவருவது. "ஒக்குமேயொக்குமேயொக்குமே யொக்கும் - விளக்கினிற்சிறெறியொக்குமே யொக்கும்-குளக்கொட்டிப்பூவினிறம்" என்பதிற்போல. இதிலே முதலடிமுற்றும் ஒருசொல்லேவரத்தொடுத்தமைகாண்க. (யாப்.காரிகை. உறுப். கஎ. உரை.)

இரட்டைமணிமாலை—தொண்ணூற்றாறுபிரபந்தங்களுளொன்று; அது: வெண்பாவுங்கலித்துறையுமாக, அல்லது வெண்பாவுமாசிரியவிருத்தமுமாக அந்தாதித்தொடையான் இருபது செய்யுள்வரப்பாடுவது. (உ-ம்.) "இருபதுவெண்பாக் கலித்துறையியையின்-வருவதிரட்டைமணிமாலையாகும்" (இலக்கணவி. அககஃ.) "வெண்பாவிருத்தம் வியப்புறவிருபஃ - தெண்படவுரைப்பது மிரட்டைமணிமாலை".

இரட்டையர்— 1. இரட்டைப்பிள்ளையாகப்பிறந்து சிறப்படைந்தகவிராயரிருவர். 2. ஒருவயிற்றி லொரே காலத்திலே பிறந்த இருவர். (உ-ம்.) "ஒங்குதிறற்சூரனென்றும்பதுமனென்றுமிரட்டையருக்குரைத்து"(உபதேச. சூராதி. எஅ.)

இரட்டைவலம்புரி— ஒருவகைவலம்புரிச்சங்கு. (உ-ம்.) "ஒற்றைவலம்புரி" பார்.

இரண்டகம்—1. இருமனம். 2. நம்பிக்கைத்துரோகம்.

இரண்டகவாதி—நம்பிக்கைத்துரோகி.

இரண்டடிப்பாடகமடக்கு— மடக்கலங்காரவகையுளொன்று; அஃது: ஒருசெய்யுளிலே இவ்விரண்டடிமடக்கிவருவது. "பணிபவநந்தனதாகமன்னுவார் - பணிபவநந்தனதாகமன்னுவார்-அணியெனமேயதுமன்பராகமே-அணியெனமேயதுமன்பராகமே" என்பதிற்போல. (தண்டி. கூச. உரை.) [பாடக- படித்தல்.]

இரண்டடியேதுகை — முன்னிரண்டடியுமோரெதுகையும் பின்னிரண் டடியுமற்றோரெதுகையுமாய்வருவது. (வ-று.) "துவைக்குந்துளிமுங்நீர்க்கொற்கைமகளிர்- ரவைப்பதம்பல்லிற்கழகொவ்வாமுத்த-மணங்கமழ்தாரச்சுதன்மண்காக்கும்வேலி- னணங்குமமுதமுமன்னலார்பாடல்" (யாப். காரிகை. ஒழிபி. சு. உரை.)

இரண்டன்— எதிரிடைசெய்யுங்குணமுடையவன்.

இரண்டிகை—இண்டைச்செடி.

இரண்டு— ஒன்றையுமொன்றையுங்கூட்டலால் வருமெண்.

இரண்டுடை— கருவேல், வெள்வேல் என்னுமிவை. (உ-ம்.) "கூவிளநீர்க்-கண்டகியிரண்டுடைமுக்கண்டகிதுவஞ்சூரி" (தைல. தைலவ. கருு.)

இரண்டுபடுதல்—1. ஐயுறல். 2.வேறுபடுதல்.

இரண்டுவவு— அமாவாசையும் பூரணையும். (உ-ம்.) "ஒவாதிரண்டுவவுமட்டமியும் பட்டினிவிட்டொழுக்கங்காத்தல்" (சிந்தா. கேமசரி. கருசு.)

இரணக்கோடி—போர்க்கொடி. [ரணம்- போர்.]

இரணகளம்—போர்க்களம். [ரணகளம்: ரணம்-போர்.]

இரணகாளம்— போர்நிறுத்தலூதுங்காளம். [ரணம்-போர்.]

இரணகெம்பீரம் — யுத்தத்தின்பேரார்ப்பரவம். [ரணகம்பீர: ரணம்-போர். கம்பீரம்-பேரார்ப்பவம்.]

இரணங்கொல்லி—ஒரு பூடு.

இரணசங்கம்— போர்வென்றூதுஞ்சங்கு. [ரணசங்க.]

**இரணசிந்நம்**— 1. படைக்கலம். 2. படைச்சிநம். [ரணசிஹ்நம்.]

**இரணசுக்கிரன்** — கண்ணோயுளொன்று.

**இரணத்துருவம்**— இரசபுடத்திற்கழிக்கப்படுவது. [ரணத்ருவ.]

**இரணத்தொடை**—முரண்டொடை; அது: சொல்லாலேனும் பொருளாலேனும் மறுதலைப்படத்தொடுப்பது. (உ-ம்.) "கருதிற்கடையேக டையிணைபின்கடைக்கூழையுமென் - றிரணத்தொடைக்குமொழிவ ரிடைப்புணர்வென்பதுவே" (யாப். காரிகை. ஒழிபி. ௫.) [இரணம்-போர்.]

**இரணதோரணம்** — பகைவரைவெட்டி அவர்தலைகளைத் தோரணமாகக்கட்டிப் பிடிப்பது. [தோரண.]

**இரணபரீட்சை**—சத்திரபரீட்சை. [ரணபரீக்ஷா.]

**இரணபாதகம்**-1. கொலைப்பாதகம். 2. நம்பிக்கைத்துரோகம். [பாதகம்.]

**இரணபாதகன்**—கொலைப்பாதகன்.

**இரணபேரி**-போர்ப்பறை. [ரணபேரீ.]

**இரணபேரிகை**—இரணபேரி.

**இரணம்**—1. உணவு, இரை. 2. உப்பளம். [இரண.] 3. உவர்நிலம். 4. ஒலி. [ரண.] 5. கடன். (சூ. நிகண். ௧௧: லகரவெ. ௨௧.) 6. பகை. 7. பல். 8. புண். (உ-ம்.) "உள்ளிலிருபலமிட்டுப்பூசிரணம்போமால்" (தைல. தைலவ. ௧௦௯.) 9. பொன். (சூ. நிகண். ௧௧: லகரவெ. ௨௧.) [ஹிரண்ய.] 10. போர். (பிங்கல. ௧௧௭௯.) 11. மாணிக்கம். (சூ. நிகண். ௧௧: லகரவெ. ௨௧.) [ரண.] 12. வகாந்தரம். [இரண.] 13. வேட்டை.

**இரணமத்தம்**— யானை. [ரணமத்தம்: ரணம் - போர். மத்தம் - மதம்.]

**இரணமயகோசம்**—சிதம்பரம். (கோயிற்பு. பக். ௬௫.) [ஹிரண்மயகோஷ: பொன்மயமாகிய கோசமாதலின் இப்பேர்பெற்றது.]

**இரணமாலை**— பகைவர்குடரை மாலையாகவணிவது.

**இரணமுழுக்கு**— உதிரம் உடலெங்குந்தோயும்படி போர்செய்தல்.

**இரணரங்கம்**— 1. போர்க்களம். [ரண; ரங்க.] 2. யானையின் முகத்திலே தந்தங்களுக்கிடையேயிருக்கும்பகுதி. [ரணரங்க.]

**இரணரணம்**— 1. கொதுகு. 2. துக்கம். [ரண-போர், இரைச்சல்.]

**இரணவஞ்சம்**— அறுவகைப்போகபூமிகளுளொன்று. (கூர்மபு. வருணச். ௨௬. உரை.)

**இரணவிரணம்**—1. கொதுகு. 2. துக்கம். 3. போர்செய்யுமிடத்துப்பட்டகாயம். [ரணவ்ரண: ரண-போர், வ்ரண-காயம்.]

**இரணவீரம்**—தன்வேந்தர் தடுத்தும் அஞ்சாது போர்புரிசௌரியம்.

**இரணவைத்தியம்** — சத்திரவயித்தியம். [ரணவைத்ய.]

**இரணவைத்தியன்** — சத்திரவைத்தியன்.

**இரணாங்கணம்**—போர்க்களம். [ரணாங்கண: அங்கண-களம்.]

**இரணாசிரம்**— போர்க்களம். [ரணாஜிர: அஜிர களம்.]

**இரணாபியோகம்**-படையெழுச்சி. [ரணாபியோக: அபியோக-எற்படுதல்.]

**இரணி**—குருவியால். (இராசவைத்.)

**இரணியகசிபன்**— திதிபுத்திரராகிய ஐம்பத்தாறுகோடி இராக்ஷதர்களுளொருவன்; இவனுக்குப் பிரகலாதன், சகலாதன், அனுலாதன், சிபி, பாஷகன், என ஐவர் புத்திரருண்டு. இவனை விட்டுணு நரசிங்காவதாரத்திற் கொன்றதென்பர். (வி-ணி. ௨௬௫.) (உ-ம்.) "வெருவிலிரணியகசிபன் சிசுபாலனெனும்பெயரான் மேவினனே" (நல். பாரத. பாரதவீர. ௬)[ஹிரண்யகசிபு.]

**இரணியகசிபு**—இரணியகசிபனென்னுமசுரன். (காஞ்சிபு. இரணி. ௨௨.) [ஹிரண்யகசிபு: ஹிரண்ய- பொன். கசிபு- வஸ்திரம்.] [இவனுக்கு இரணிய னென்னும் பெயருமுண்டு என்பர்.]

**இரணியகசிபுகந்**—விட்டுணு. [ஹிரண்யகசிபுஹந: ஹந - கொன்றவன். இரணியகசிபுவைக்கொன்றவனென்றபடி.]

**இரணியகர்ப்பசார்வாகன்**— உலோகாயதர் இருதிறத்தாருளொருவன். (சி. சி. பர. உலோகாயத. மறு.௬௧. உரை.) [ஹிரண்யகர்ப்பசார்வாக.]

**இரணியகர்ப்பம்** — 1. ஈஸ்வரனுடைய சூக்ஷ்மசரீரம். (உபநிடத. உ௦.) 2. உட்பொன்னுடையசாளக்கிராமம். [ஹிரண்யமஹ்.]

**இரணியகருப்பதாநம்**— சோடசதாநங்களுளொன்று. (கூர்மபு. பதிக. உசு. உரை.) [ஹிரண்யமஹதாநம்.]

**இரணியகருப்பமதம்**— சார்வாகமதத்தினொருவகை; இம்மதத்தன் பிராணனே ஆன்மா என்பன். (த. நி. போ. கரு.) பிரமாவேசிருட்டிகர்த்தாவாய்த்தனதாற்றலோடு நிலைபெறுவர் என்றுகொள்ளுமதம், என்பர் சித்தியாருரையில்.

**இரணியகருப்பன்**— 1. சமட்டி சூக்குமதேகத்தை அபிமாநிக்கின்ற ஈஸ்வரன். (வேதா. சூ. சக.) [விகசிதமாய்ப்பிரகாசிக்கின்ற யாவையுந் தனதுதரத்துள் அடக்கியிருப்பவன் என்றபடி.] 2. சார்வாகமதத்தரிலொருவகையானவன்; இவன்பிராணனே ஆன்மா என்பவன். (த. நி. போ. கரு.) 3. பரசொப்பனத்தைநானென்று அபிமானித்தபரன். (ஞாநக். தற்பதமநநம்.) 4. பிரமதேவன். (உ-ம்.) "புருடனிரணியகருப்பன் மறைக்கிழவன் புவநத்துக் - கொருமுதல்வன் கஞ்சனென வவனையே யுரைத் திடுவார்" (கூர்மபு. பிரகிருதி. கஅ.) [பொன்மயமான கருப்ப முடையவனும், கருப்பத்திற்பொன்மயமான பூமியையுடையவனுமாகலின்வந்தபெயரென்பர்.] [ஹிரண்யமஹ்.]

**இரணியசிராத்தம்** — ஒருவகைச்சிராத்தம். (உ-ம்.) "ஆமசிராத்தஞ்செய்தற்கு இயலாவிடத்து இரணியசிராத்தஞ்செய்யலாம்" (பாலபாடம்.) [ஹிரண்ய-பொன்.]

**இரணியதாநம்**— சொர்நதாநம். (வி-ணி.)

**இரணியநேரம்** — மாலைநேரம். [இரணியனைக்கொன்றநேரமது என்பர்.]

**இரணியம்**—1. அழியாதவஸ்து. 2. ஓரளவு. 3. சுக்கிலம். 4. பொன். (சூ. நிகண். சு: கூ.) 5. வெள்ளி. [ஹிரண்ய.]

**இரணியவருடம்**—சிருங்ககிரிமுதற் சுவேதகிரிவரையிலுமுள்ள தேசம். (உ-ம்.) "சிருங்கமுதற்சுவேதமட்டு - நீதியிரணியவருடம்" (கந்தபு. அண்டகோச. கூசு.) [ஹிரண்யவர்ஷ]

**இரணியவிந்து**—அக்கினி. [ஹிரண்யவிந்து.]

**இரணியன்**—1. ஓரசுரன்; இவன் காசிபமுநிக்கு அதிதிவயிற்றிற்பிறந்தவன்; இரணியகசிபுவென்பவனிவனே. (காஞ்சிபு. தல. உ.) [பொன்னிறமுடையவன்-என்றபடி.] 2. துவாதசாதித்தரிலொருவன். 3. பிரகற்பதி. (இராசவைத்)

**இரணியாக்கன்**—ஓரசுரன்; இவன் இரணியகசிபுவுடைய தம்பி. (காஞ்சிபு. இரணி. கஅ.) [பொன்போன்ற கண்ணுடையவன்என்றபடி] [ஹிரண்யாக்ஷ.]

**இரணை**—இரட்டை.

**இரத்தக்கலப்பு**—நெருங்கிய உறவு.

**இரத்தக்கவிச்சு**— இரத்தவெடில்.

**இரத்தக்கமிழ்ச்சல்**— இரத்தம் வயிற்றுற்கழிதல்.

**இரத்தக்கனப்பு**— 1. இரத்தங்கதித்துவருமொருநோய். 2. கருவம்.

**இரத்தக்காட்டேறி** — காட்டிலிருக்கும் ஒரு பெண்பசாசு.

**இரத்தக்கார்**—இரப்பவர் சென்றடைதற்குத்தக்கவர். (உ-ம்.) "இரக்க விரத்தக்கார்க்காணிற்"(வள். க௦ருக.)[இர என்னுமுதனிலைத்தொழிற்பெயரது இறுதிக்கண் நான்கனுருபுவிகாரத்தாற்றொக்கதென்பர்.]

**இரத்தக்கிராணி**— ஒரு நோய்; அது. நீடித்துநிற்கும் ஒருவகை இரத்தக்கழிச்சல். [கிரகணி என்னுஞ்சமஸ்கிருதபதம் கிராணி எனத்திரிந்துவந்தது.] [ரக்தஹணி.]

**இரத்தக்குலை**—ஒருவகைநோய்.

**இரத்தக்கோமாரி**—மாட்டுக்கு இரத்தக்கழிச்சலோடு வருமொருநோய். [கோ-மாடு. மாரி-கொள்ளைநோய்.]

**இரத்தகதசுரம்**—இரத்தத்தோடு சம்பந்தப்பட்ட ஒருவகைச் சுரம். [ரக்தகதஜ்வர.]

**இரத்தகம்** — 1. குசும்பாப்பூ. 2. சிவப்புச்சீலை. [ரக்தக.]

**இரத்தகமலம்**—செந்தாமரை. [ரக்தகமலம்: ரக்த - சிவப்பு.]

**இரத்தகாசம்**— இரத்தமுமிழ வருவதாகிய ஒருவகைக்காசநோய்.

**இரத்தகுமுதம்**—செவ்வாம்பல். [ரக்தகுமுத.]

**இரத்தகுன்மம்** — மலடிகளுக்குமாதாந்தருதுகால ரத்தத்தை வெளிப்படுத்தாத ஒரு வகைநோய். (தைல. தைலவ. க௦அ) [ரக்தகுல்ம.]

**இரத்தகைரவம்** — செவ்வாம்பல். [ரக்தகைரவம்.]

**இரத்தகோகநதம்**— செந்தாமரை. [ரக்தகோகநத.]

**இரத்தசந்தநம்**—1. செஞ்சந்தநம். 2. மஞ்சள். [ரக்தசந்த.]

**இரத்தசந்தியகம்**—1. செங்கழுநீர். 2. செந்தாமரை. [ரக்தஸந்த்யக: ரக்த - சிவப்பு. ஸந்த்யக - மாலைநேரம்.]

**இரத்தசிகுவம்**—சிங்கம். [ரக்தஜிஹ்வ.]

**இரத்தசுரம்**—ஒருவகைச்சுரம். [ரக்தஜ்வர.]

**இரத்தசூலை**-ஒருநோய்; அது: சூதகவாய்வு. [ரக்தசூலா.]

**இரத்தசேந்துகம்** — நாகப்பூச்சி. [ரக்தஜந்துக.]

**இரத்தக்ஷயம்**— இரத்தகாசநோய். [ரக்தக்ஷய.]

**இரத்ததாது**—1. செம்பு. 2. செவ்வரிதாரம். [ரக்ததாது.]

**இரத்ததந்தி**— பார்வதிதேவி. [ரக்ததந்தீ: ரக்த- சிவப்பு. தந்த - பல்.]

**இரத்ததுண்டம்** — கிளி. [ரக்ததுண்ட: துண்ட - அலகு.]

**இரத்ததுரணம்**—நாவிராசிபதினெட்டுப் பாகைவைத்து அதிலே, செவ்வாயுடைய அற்றைச்சுத்தபுடத்தைக்களைந்துவந்ததில் அற்றைநாளுறுமேல் அது. (விதாந. குணகுண. ௩அ. உரை.)

**இரத்தநரம்பு**— இரத்தம் ஓடிக்கொண்டிருக்கிறநாடி.

**இரத்தப்பழி**—கொலைப்பழி

**இரத்தப்பிரமியம்**— சலவாயிலாவிரத்தம் போகுமொருநோய்.

**இரத்தப்பிரமேகம்** — இரத்தப்பிரமியம். [ரக்தப்ரமேஹ.]

**இரத்தப்பிரவாகம்** — இரத்தப்பெருக்கு. [ரக்தப்ரவாஹ.]

**இரத்தப்பிரவை**— ஏழ்நரகவட்டத்தொன்று. அஃது: இரத்தநிலம். [ரக்தப்ரபா.]

**இரத்தப்பீநசம்**— நாசியால் இரத்தத்தைப் போக்குமொருவகைத்தலைநோய். [ரக்தபீநஸ.]

**இரத்தப்புடையன்**— ஒருவகைப்புடையன் பாம்பு. இதன்விஷம் கடியுண்டவனது கண் நாசி வாய் முதலிய தேகத்துவாரங்களினாலே இரத்தத்தைப்போக்கிக்கொண்டிருக்கும்.

**இரத்தப்பெரும்பாடு**— உதிரப்பெரும்பாடாகிய ஒருநோய். (உ-ம்.) "வழுக்கிரத்தப்பெரும்பாடுமெலும்புருக்கிப்பிணியும் மலடிமைந்தராங்கலைதேர்மருத்துவர்களிதனை" (தைல. தைலவ. சக.)

**இரத்தபலம்** — ஆலமரம். [ரக்தபலம்: ரக்த-சிவப்பு. பலம்-பழம்.]

**இரத்தபலி** — இரத்தத்தோடு செலுத்தும் பலி. [ரக்தபலி.]

**இரத்தபாஷாணம்**—1. ஒருநோய். 2. வைப்புப்பாஷாண முப்பத்திரண்டிலொன்று.

**இரத்தபாதம்**—கிளி. [ரக்தபாத: சிவந்தபாதத்தையுடையதென்றபடி.]

**இரத்தபாரதம்**—சாதிலிங்கம். [ரக்தபாரத.]

**இரத்தபிட்சாபிரதாநமூர்த்தி**— வைரவமூர்த்தமாய் இறுமாப்புற்ற இமையவர்பால் இரத்தத்தைப்பலியேற்று அவர்களகந்தையை அடக்கிவைத்தசிவபிரான். (சிவபரா. உசஉ.) [ரக்தபிக்ஷாப்ரதாநமூர்த்தி.]

**இரத்தபிண்டம்**—1. சீனமல்லிகை. 2. வாயாலும் மூக்காலும் இரத்தம்போகின்ற ஒரு நோய். [ரக்தபிண்ட.]

**இரத்தபித்தம்**—இரத்தத்தோடு சம்பந்தப்பட்ட ஒருநோய்; அஃது: இரத்தக்கதிப்பாய் வாய், மூக்கு, மலவாயில் முதலியவற்றால் இரத்தங்கழிதன்முதலிய குணங்களையுந், தலையிடி சுர முதலிய உபத்திரவங்களையு முடையதாயிருக்கும்.

**இரத்தபுட்பிகா** — மூக்கிரட்டைப்பூண்டு. [ரக்தபுஷ்பிகா.]

**இரத்தம்**—1. உதிரம். 2. குங்குமப்பூ. (உ-ம்.) "அம்பட்டை" பார். 3. கொம்பரக்கு. (தைல. தைலவ. கரு.) 4. சாதிலிங்கம். 5. சிவப்பு. 6. செம்பு. 7. பவளம்.

**இரத்தமண்டலி**— ஒருபாம்பு; இதன்விஷம் கடிபட்டவனுடைய தேகத் துவாரங்களினாலே இரத்தம் வரச்செய்யும்.

**இரத்தமாரணம்**—காவிக்கல்.

**இரத்தமூலம்** — இரத்தத்தோடு சம்பந்தப்பட்ட ஒருநோய்.

**இரத்தரோகம்**—1. ஒருநோய். 2. கண்ணோயுளொன்று. [ரக்தரோக.]

இரத்தல்— 1. குறைகூறல். (உ-ம்.) "கை தொழுதிரந்துவேண்டி" (திருவிளை. மெய்க்கா. உச.) 2. பிச்சைகேட்டல். (உ-ம்.) "இல்லெனவிரந்தோர்க்கொன்றீயாமையிளிவென. (கலி. பாலைக்கலி. உ.) 3. பிரார்த்தித்தல்.

**இரத்தவடி**—மசூரிகாநோய்க்குரு.

**இரத்தவாடி**— இரத்தவடி.

**இரத்தவலிப்பு**— இரத்தம் அதிகரித்தலினுலெழுமொருவலிப்பு.

**இரத்தவள்ளி** — உணவுக்குரிய ஒருவகைச் சிவப்புநிறக்கிழங்கு.

**இரத்தவர்க்கனம்**—செம்பு.

**இரத்தவாரி**— ஒரு நோய்; அது: பெரும்பாடிறைத்தல்.

**இரத்தவிந்து**—1. இரத்தத்துளி. 2. இரத்திநக்கல்லுக்குக்குற்றமாயுள்ளசிவத்தமறு. 3.மாணிக்கரத்திநத்தின் ஒருவருக்கமாகிய குருவிந்தம். (சிலப். ஊர்காண்காதை. கஅசு. உரை.) [ரக்தபிந்து.]

**இரத்தவிரியன்**—ஒருவகைப்புடையன்பாம்பு.

**இரத்தவீசம்**—மாதுளங்கனி. [ரக்தபீஜ: பீஜம் - விதை.]

**இரத்தவெறி** — 1. இரத்தங்குடித்தவெறி. 2. செருக்கு.

**இரத்தாக்கம்**—1. எருமை. 2. புறுப்பறவை. [ரக்தாக்ஷ: அக்ஷி - கண்.]

**இரத்தாக்கன்**—1. கொடியவன். 2. கொடுங்கோலன். 3. செங்கண்ணன்.

**இரத்தாகத்தமிர்தம்**— சிற்றுமணக்குநெய். (உ-ம்.) "சுரசமிந்திரவல்லிவிழுதி சுவேதமூலயுத்தாமணிபர்ப்பணந் - தோயபாணமிவ் வேழிரதத்தொடு சோசப்பாலிரத்தாகத் தமிர்தமும்" (தைல. தைலவ. கூக.)

**இரத்தாகம்**—சிற்றுமணக்கு. (உ-ம்.) "நற்புலவிரத்தாகநெய்யொன்றரைப்படி நகத்தயிரணந்தைகுப்பி" (தைல. தைலவ. கஉ௫.)

**இரத்தாங்கம்**—1. செவ்வாயென்னுங்கிரகம். 2. மஞ்சள். 3. மூட்டுப்பூச்சி. [ரக்தாங்க.]

**இரத்தாசயம்**—தேகத்திலே இரத்தந்தங்குங்கோளம். [ரக்தாசய: ஆசய-கொள்கலம்]

**இரத்தாட்சி**—1. எருமை. 2. செம்போத்து. 3. புரு. 4. வியாழவட்டமாகிய அறுபதுவருடத்தொன்று. [ரக்தாக்ஷீ.]

**இரத்தாதாரம்**—தோல். [ரக்தாதார.]

**இரத்தாதிசாரம்**— வயிற்றுளைவோடுவரும் இரத்தக்கழிச்சல். [ரக்தாதிஸார.]

**இரத்தி**—1. இத்திமரம். 2. இரத்திநகருப்பம். 3. இலந்தைமரம். (உ-ம்.) "இரத்திநீடியவகன்றலைமன்றம்" (புறநா. கூச.) 4. சமுத்திரம். 5. பிரியமானதன்மை. [ரத்நி.]

**இரத்திநக்கம்பளம்**—உயர்ந்தகம்பளம். [ரத்நகம்பல: ரத்ந-சிரேட்டம்.]

**இரத்திநக்கம்பளி**—இரத்திநக்கம்பளம்.

**இரத்திநகசிதம்**— இரத்திநம்பதிக்கப்பட்டது. [ரத்நகசித.]

**இரத்திநகருப்பம்**—சமுத்திரம். [ரத்நகர்ப்ப]

**இரத்திநகருப்பன்**—குபேரன்.

**இரத்திநச்சுருக்கம்**— 1. ஒரு வைத்தியநூல். 2. புகழேந்திப்புலவரியற்றிய ஓர் உறுப்புவமைநூல்.

**இரத்திநசாநு**— மகாமேருமலை. [ரத்நஸாநு: ஸாநு-மலைத்தொடர்.]

**இரத்திநத்திரயம்** — 1. நன்ஞானம், நற்சாட்சி, நல்லொழுக்கமாகிய மூன்று தலைமைக்குணங்கள். (சிந்தா. நாமக. கூசரு. உரை.) 2. வடமொழியிலியற்றப்பட்டிருக்கும் ஒரு சைவசித்தாந்தநூல். (சி. சி. க: கக. சிவஞா.) [ரத்நத்ரய.]

**இரத்திநப்பிரத்தம்** — கைலாயத்தின் கண்ணதாகிய தாழ்வரை. (சி. சி. க: ருஉ. மறை.) [ரத்நப்ரஸ்த.]

**இரத்திநப்பிரபை**— எழுநரகங்களுளொன்று. (சிந்தா. முத்தி. உகக.) [ரத்நப்ரபா.]

**இரத்திநபரீட்சை** — கலைஞானமறுபத்துநான்கினுளொன்று; அஃது: இரத்திநங்களது தன்மையையறிவிப்பது. [ரத்நபரீக்ஷா.]

**இரத்திநம்**— 1. சிரேட்டம். 2. விலையுயர்ந்ததிரவியம். 3. விலையுயர்ந்தமணி. இது; பஞ்சரத்திநம், நவரத்திநம், சதுர்த்தசரத்திநம் எனப்பலதிறப்படும்.

**இரத்திநமாத்திரை**— ஒருகுளிகை. [ரத்நமாத்ரா.]

**இரத்திநமாலையணி** — ஓரலங்காரம். அது: வர்ணிக்கவேண்டிய பொருள்களை உலகத்திற் பிரசித்தமாக விருக்கின்றமுறையை வழுவாமற் கூறுவது. "புகழும்பொருளைமுறைவழுவாதுபுகலுதற்குப்-பகருறுநாமமிரத்திநமாலை" என்பதனுற்காண்க. (குவல. அச.)

இரத்திநலிங்கம்—இரத்திநத்தாலாகிய சிவ லிங்கம். இது செம்பு முதலிய லோகங்களாலா கிய லிங்கத்துக்கு நூறுமடங்கதிக மென்பர். (சைவச. பொதுவி. அ௦, அக. உரை.) [ரத்ந லிங்க.]

இரத்திநவருகேம் — குபேரனுடைய தேர். [ரத்நவஷிந்கக.]

இரத்திநாகரம்— 1. இரத்திநமிருக்குஞ்சுர ங்கம். 2. கடல். [ரத்நாகர: ஆகர - உறை விடம்.]

இரத்திநாங்கம்—கருடன். [ரத்நாங்க: க- அடையாளம். ம - அங்கம்.]

இரத்திநாவளி—இரத்திநமாலையணி. (குவ ல. எ௬.)

இரத்திநீ—1. பிடிமுழம். 2. மூட்டியாகப்பி டித்தகை. 3. முழங்கை. 4. முன்கைப்பேரெ லும்பு. [ரத்நீ.]

இரத்தியம்—1. இரதத்திற்பூட்டுங்குதிரை. 2. உயர்ந்ததெரு. 3. உருள். 4. பலதெருக்க ளின்சந்திப்பு. [ரத்ய.]

இரத்திரி—இத்திமரம்.

இரஸ்து— 1. படைகளுடைய போசநச்சா மான். (இந்துஸ்.) 2. வாழைப்பழம்.

இரத்துதல்—பேசலாலெழுமொலி.

இரத்தை—1.அபரை, பராபரை, பரையென் னுஞ்சந்தியாசிவசத்தி மூன்றனுள் சைவாசாரி யர்களாலே பிராதக்காலத்திற் றியாநிக்கப்படும் பரையின்பேதமாகிய ஒரு சத்தி. (சைவச. பொ து. எ௬. உரை.) 2. மஞ்சிட்டிவேர். (உ-ம்.) "பா டீரமிரத்தைசாரிபை மிருணாளமஞ்ச-டோலடர் நிசிமூன்றுகச்சொலுங்கனி" (தைல. தைலவ. ௬௨.)

இரத்தோற்பலம்—1. செங்குவளை. 2. செ ந்தாமரை. [ரக்தோத்பல.]

இரதகம்—இத்திமரம்.

இரதகாரன்— 1. அரசன்பிராமணப்பெண் ணைச்சோரத்திற்கூடிப்பெற்றபிள்ளை. (உ-ம்.) "பொற்றடமகுடவேந்தன்போற்றுவேதியர்தம் மாதை - யுற்றசோரத்திற்கூடவுதித்தவனிரத காரன்" (சூத. சாதிவரலா. ௧௬.) [ரத-பிளத் தல்.] 2. கரணமங்கைமாகிட்டியனைக்கூடிப்பெ ற்றபிள்ளை. (உ-ம்.) "திரைவளைக்கரணமங்கை நேர்மாகிட்டியர்ப்புணர்ந்து- தரையிடைப்பெற் றமைந்தனறக்ககனிரதகாரன்" (சூத. சாதிவர லா. ௨௬.)[இவனதுதொழில் இரதஞ்செய்தல்.] [ரதகார.]

இரதகுண்டகன்—1. தூர்த்தன். 2. பலாற் காரமாக ஒரு பெண்ணைப் பிடித்துக் கொண்டு போய்க்கற்பழிக்கிறவன்.[ரதகுண்டக: ரத- புணர்ச்சி. குடி - போதல்.]

இரதகீலம்—நாய். [ரதகீல: ரத- புண ர்ச்சி. கீல - இறுகுதல்.]

இரதநு—கணவன். [ரதநு.]

இரதகுளிகை—இரசகுளிகை. (சிவப்.௨:௨.) [ரஸகுளிகா.]

இரதகூசிதம்— மகளிர்புணர்ச்சியில்வரும் முறுமுறுப்பு. [ரதகூஜித: ரத- புணர் ச்சி. கூஜித-முறுமுறுப்பு.]

இரதசாரி—1. தேரேற்றம். [ரதசாரி] 2. வேசி, அவிசாரி. [ரதசாரி.]

இரததந்மாத்திரை — பூதாதியகங்காரத்தி னின்றுதோன்றிய வைந்து தன்மாத்திரைகளு ளொன்று. அது, சுவையறியுமிரசேந்திரியம் தன்விடயத்தை விடயிக்குமாறு ஊக்கஞ்செய் வித்து உடனிற்குமென்ப. (சி. சி. உ: ௬௪. சிவ ஞாந. [ரஸதந்மாத்ரா.]

இரததாலி—1.காமதூர்த்தி. 2. காமாதுரன். 3. தூர்த்தன். [ரததாலி.]

இரதநாரீசன்—1. தூர்த்தகாமி. 2. நாய். 3. மன்மதன். [ரதநாரீச: ரத - புணர்ச்சி. நாரீ-பெண். ஷி- சேர்த்தல்.]

இரதபதம்— புறாப்பறவை. [இரதஞ்செல்வ துபோலக்காலால் நடக்குந்தன்மையையுடைய தென்றபடி.]

இரதபந்தம்—1. சித்திரகவிகளுளொன்று; அது: தேர்க்கவி. [ரதபந்த.] 2. மகளிர்பு ணர்ச்சி. [ரதபந்த.]

இரதபரீட்சை— கலைஞாநமறுபத்துநான்கி னொன்று; அது: தேரூரும் வித்தை. [ரத பரீக்ஷா: பரீக்ஷா ஆராய்ந்தறிதல்.]

இரதபாதம்—தேருருள். [ரதபாத.]

இரதம்—1. அரைஞாண். (சூ. நிகண். ௧௧. ரகரவெ. ௨.) 2. அவயவம். 3. இரசம், சாறு: (உ-ம்) "ஆர்க்கு" பார். 4. இரசலிங்கம்.(உ-ம்.) "மணிவாணலிங்கமிரதஞ்சுயம்பு"(சைவச.பொ து. அக.) 5. இனிமை. 6. உடல். 7. ஊர்தி. 8. குணம். 9. சத்ததாதுக்களுளொன்று; அஃது: உமிழ்நீர். 10. சாத்தியம். 11. சுவை. அது: நா வினாற்கவரப்படுவது. 12. சூதம்; அஃது: இரு

ம்பு முதலிய லோகங்களைப் பொன்னுக்குவதோர்பொருள். (உ-ம்.) "சம்புவின்வந்ததோர்தகை சா-விரதமுண்டு" (கந்தபு. மார்க்கண்டேய. கஉக.) 13. தேர். (சூ. நிகண். கக: ரகரவெ. உ.) 14. பல். 15. பாதம். 16. புணர்ச்சி. (சூ.நிகண். கக: ரகரவெ. உ.) 17. மகிழ்ச்சி. 18. மாமரம். 19. வண்டல். [2, 6, 7, 13, 15. ரத. 11. ரஸ. 14. ரத. 16, 17. ரதி.]

இரதயோகநிர்க்குண்டி — ஒருவகைத் தைலம். (உ-ம்.) "நீயுணரிரதயோகநிர்க்குண்டித் தைலமீதே" (தைல. தைலவ. கஅ.)

இரதயோநி—வியபசாரி.

இரதர்—விருப்பமுடையவர். (சைவவிஞ. கூஉ.)

இரதலிங்கம்— இரசலிங்கம். [ரஸலிங்கம்.]

இரதவாழை—ஒருவாழை.

இரதவிரணன்—நாய். [ரதவ்ரண: ரத-புணர்ச்சி. வ்ரண - புண்.]

இரதநம்—1. அரைஞாண். (சூ. நிகண். எ: உஅ.) 2. கிண்கிணி. 3. பல். [ரஸந.]

இரதன்—1. கண். 2. கிளி.

இரதாங்கபாணி— விட்டுணு. [ரதாங்கபாணி: ரதாங்க - சக்கரம்.]

இரதாங்கம்—உருளை, சக்கரம். [ரதாங்க.]

இரதாயநி—வேசி. [ரதாயநி: ரத-புணர்ச்சி. அயநி - வழி.]

இரதி— 1. ஆசை. (சூ. நிகண். கக: ரகரவெ. உசு.) 2. இரத்தல். 3. இரதத்தில்நின்றுபொரும்போர்புரிவீரன். 4. இரதத்தை ஊருகிறவன். 5. இரதமுடையவன். 6. இலந்தைமரம். 7. உருசி. 8. காந்தட்கொடி. 9. காமம். 10. நிறுக்கும்படிக்கல். (உ-ம்.) "மரகதத்தை நிறுக்குமொரு அளவின்பேதம்" (வேதா. சூ. கூ. உரை.) 11. பித்தளை. (தைல. பாயிர. உக.) 12. பெண். 13. பெண்யானை. (சூ.நிகண். கக. ரகரவெ. உசு.) 14. மகளிர்புணர்ச்சி. 15. மன்மதனுக்குத்தேவியான ஒரு பெண். (சூ. நிகண். கக: ரகரவெ. உசு.) [1, 9, 14, 15. ரதி. 3, 4, 5. ரதிந். 13. ரதிநு.]

இரதிகன்—தேரையுடையவன். [ரதிக.]

இரதிகாதலன்—மன்மதன்.

இரதிகாந்தன் —1. தாமரை. 2. மதன்.

இரதிகிரகம்—யோநி. [ரதிக்ருஹ.]

இரதிகிரியை — புணர்ச்சி. [ரதிக்ரியா.]

இரதிகிரீடை — சுரதலீலை. [ரதிக்ரீடா]

இரதிதகாம் — யோநி. [ரதிக்ருஹ.]

இரதித்தல்—1. அடக்குதல். 2. இடுக்கண் படுத்துதல். 3. இழுக்குதல். 4. இன்பமாயிருத்தல். 5. உருசித்தல். (உ-ம்.) "முக்கனிகளோ அமிர்தமோவென்றுசொல்லும்படியிரதிக்கும்" (தாயு. நினைவொ. அ. உரை.) 6. மூடுதல். 7. விரும்புதல்.

இரதிமந்திரம்— 1. களியாட்டயரும்வீடு. 2. யோநி. [ரதிமந்திர.]

இரதிநன் — இரதத்திலேறுகிறவன், இரதமுடையவன். [ரதிந.]

இரதியாளர்—யாசகர்.

இரதிரமணன் — காமன். [ரதிரமண: ரமண - நாயகன்.]

இரதோபத்தம் — இரதசாரதி தேரிலிருந்துசெலுத்துமாசநம். [ரதோபஸ்த: உப - சமீபம். ஸ்த- தரித்தல்.]

இரந்தரம்—வெளி. (உ-ம்.) "இரந்தரமாகி வான்முனிடங்கொடுத்திடும்" (சி. சி. உ: சுசு. சிவாக்ர.)

இரந்திரம் — 1. குழி. (சி. சி. உ: சுசு. சிவாக்.) 2. குறைவானதன்மை. 3. துவாரம். 4. பலங்குன்றினவிடம். 5. வெளி. (சி. சி. உ: சுசு. சிவாக்.) [ரந்த்ர.]

இரந்துபின்னிலைநிற்றல்—(அகப்பொருள்) தலைவியையிரந்துயிதஞ்சொல்லுதல். (வாண. சு. உரை.)

இரந்துபின்னிற்றற்கெண்ணல் — (அகப்பொருள்) தலைவன் தலைவியையிரந்து இதஞ்சொல்லுதற்கெண்ணுதல். (வாண. ஙு.)

இரப்பாளன்—யாசகன்.

இரப்பு—1. தரித்திரம். 2. பிச்சை. 3. யாசித்தல். (உ-ம்.) "தேர்வழியீவார்பாற்சென்றிரப்புநன்று" (இன்னிசை. கச.)

இரப்புக்கோளிக்காரம் — (இலக்கணம்) வேண்டுமென்று இரந்தபொருளை ஏற்றற்பொருளில் நான்காம்வேற்றுமையிலே வரும் பெயர், வினைகொண்டுமுடிவது. அஃது: அந்தணர்க்குப்பொன்கொடுத்தான் என்பதிற்போல. (வீரசோ. உபகார. கூ.)

இரம்பக்கல்—குருந்தக்கல். (தெலுங்கு.)

இரம்பம்— 1. ஈர்வாள். 2. கத்தூரிமிருகம்.

இரம்பிலம்—மிளகு.

இரம்பை—இரம்பம்.

இரம்மியகம்— சம்புத்தீவின் நவவருஷங்களுளொன்று.

இரம்மியகன்— அக்கினிதுருவன் புத்திரரொன்பதின்மருளொருவன்; இவன்: நவகண்டமாக்கப்பட்ட சம்புத்தீவில் ஒருகண்டத்தை யாண்டவன்.

இரம்மியம் — 1. சம்பகமரம். 2. சுக்கிலம். 3. பூரணசந்தோஷம்.

இரமடம்—பெருங்காயம்.

இரமணம்—1. இன்பம்விளைப்பது. 2. கழுதை. 3. காமசேட்டை. 4. சுரதவிளையாட்டு.

இரமணன்—1. கணவன், தலைவன். 2. மன்மதன்.

இரமணியம்—சரசவிளையாட்டு.

இரமணீயம்—1. இன்பமானது. 2. சௌந்தரியமுடையது.

இரமதி—1. காகம். 2. காமி. 3. காலம். 4. சுவர்க்கலோகம். 5. மன்மதன். [ ரம - விளையாடுதல், தரித்தல்.]

இரமம்—1. ஆசை. 2. ஆநந்தம்.

இரமன் — 1. அன்பன். 2. கணவன். 3. மன்மதன்.

இரமாப்பிரியம்—தாமரைப்பூ. [ரமாப்ரிய: ரமா - இலக்குமி. ப்ரிய - விரும்பப்பட்டது.]

இரமாபதி— திருமால். [ ரமா - லக்குமி. பதி - கணவன்.]

இரமித்தல்—1. சந்தோஷித்தல். 2. சரசஞ்செய்தல். 3. போகஞ்செய்தல்.

இரமியம்—1. இரம்மியம். 2. இரம்மியவருடம். அது: சுவேதகிரிக்கும் நீலகிரிக்கும் நடுவிலுள்ளதேசம். (உ-ம்.) "சுவேதநீலநெடுங்கிரியினிரணியமாம்" (கந்தபு. அண்டகோச. ருகூ.)

இரமை—1. இலக்குமிதேவி. 2. செல்வம். 3. மனைவி. [ரமா.]

இரலை—1. அச்சுவினிநாள். (சூ. நிகண். க: கஎ.) 2. ஊதுகொம்பு. (சூ. நிகண். கக: ரகர. ச.) 3. கருமான். (சூ. நிகண். உ: உஉ.) 4. கலைமான். (உ-ம்.) "இரலைமரைமான்பிறவும்" (கந்தபு வள்ளி. ருக.) 5. துத்திரிக்கொம்பு. (சிந்தா. கோவிந். உசு.) 6. புல்வாய். (சூ. நிகண். ரு: உஉ.) [ரல்லக என்னும்சம்ஸ்கிருதபதத்தின் திரிவுபோலும்.]

இரவச்சம் —மானந்தீரவருமிரப்புத்தொழிலுக்கஞ்சுதல். (வள். அதி. க0எ.)

இரவணம்—1. ஒட்டகம். 2. குயில். 3. பரிகாசம்பண்ணுதல். 5. வெண்கலம். 6. வெப்பம்.

இரவாணம்— ஒருவாச்சியம் [ மூலம்: ரவணம் - ஒலி. நீட்டல் விகாரம் பெற்று வந்தது போலும்.]

இரவதம்—குயில். [ரவ- சத்தம். த- கொடுப்பது. இன்னோசைகொடுப்பதென்றபடி.]

இரவம்—ஒலி.

இரவரல்—இரவுவரல். (உ-ம்.) "இரவரவேந்தல்கருதியுரைப்ப"(திருக்கோ. கசக. உரை.)

இரவல் — 1. இரத்தல். (உ-ம்.) "இரவன்மாக்கள்"(புறநா.உச.)2.மீண்டுகொடுக்க உடன்பட்டுச்சிலகாலப்பாவிப்புக்காக வாங்கிவைத்திருத்தல்; அல்லது அப்படி வாங்கப்பட்ட பொருள். 3. யாசகஞ்செய்யாதே, எனப்பொருள்படும் முன்னிலையில் வரும் ஒரு எதிர்மறை வினை. (உ-ம்.) "இரப்பிற்கரப்பாரிரவன்மினென்று" (வள். க0சுஎ.)

இரவலர்—இரப்போர். (ஐங்குறு.)

இரவலன்—இரத்தற்றொழிலில் வல்லோன். (பெரும்பா. சரு.)

இரவலாளர்—யாசகர்.

இரவறிவான்—கோழிச்சேவல்.

இரவாக்கல்—ஓரிரத்திநம்.

இரவி—1.இராவியெனப்பொருள்படும் ஒரு வினையெச்சம். (உ-ம்.) "மதிநிலவாலே-யிரவியெனதுயிர்கவர" (திருப்பு. ருoஉ) [வருத்தியென்றபடி.] 2. சித்திரமூலம். (இராசவைத்.) 3. சூரியன். (உ-ம்.) சந்திரனிரவிதன்னைச்சார்வதோர்தன்மைதோன்ற" (இராமா. எதிர்கொள். ச.) ச. மலை. 5. மூக்கின்வலத்துவாரம்.[ரு- ஒலித்தல், மகிமைப்படுத்தல்.]

இரவிக்கை—முலைக்கச்சு. (தெலுங்கு.)

இரவிகன்னம்—பூமிக்குஞ்சூரியனுக்குமுள்ளதூரம். (சோதி. கருசு.) [ரவிகர்ண: ரவி - சூரியன். கர்ண-குறுக்களவு.]

இரவிகாந்தம்— சூரியகாந்தக்கல். (உ-ம்.) 'இந்திரவிநீள்கிரணமெங்குநிறைந்தாலு-மிந்திரவிகாந்தத்திலங்குமே" (நீதிவெண்பா. ருo) [ரவி-சூரியன். காந்த-ஒருவகைக்கல்.]

இரவிகுலம்—சூரியவமிசம்.

இரவிகேந்திரம்— அணித்தானபாதையில் வருஞ்சூரியனுக்குங்கிரகத்துக்குமுள்ள தூரம். (சோதி. கருச.) [ரவிகேந்த்ர.]

இரவிசங்கிராந்தி— சூரியன் முன்னிராசியைவிட்டுப்பின்னிராசியிற்புகுதல். [ரவிஸாங்க்ராந்தி.]

இரவிநாள்—இரேவதிநாள்.

இரவிநிறமணி—சாதுரங்கபதுமராகம்.

இரவிபுடபுத்தி— சூரியனது உத்தமபுடம். [ரவிஸ்புடஸ்புத்தி.]

இரவிமண்டலம்—சூரியமண்டலம். [ரவிமண்டல.]

இரவிமத்திமபுத்தி— சூரியனதுமத்திமபுடம். [ரவிமத்யமபுத்தி.]

இரவிமது—வெள்ளி.

இரவிவலயம்—சூரியவட்டம்.

இரவிவாரம்—ஞாயிற்றுக்கிழமை.

இரவிவிக்கேபம்—சூரியகிரகணத்திற் சூரியன் கிராந்திமார்க்கத்திற்சாய்ந்திருக்கை.[ரவிவிக்ஷேப.]

இரவு—1. இரத்தல், இரப்பு. 2. சூரியாஸ்தமயநமுதல் சூரியோதயம்வரை நிகழுங்காலம். (உ-ம்.) "இரவிடைச்சூழ்ந்தவண்ணம்"(பாரத. கிருட்டிண. ௧௬அ.) 3. மஞ்சள். (தைல. தைல. ௧௦௩.)

இரவுக்குறி—(அகப்பொருள்) களவுப்புணர்ச்சியில் தலைவனுந் தலைவியும் சந்திக்க நியமிக்குமிடம். (அகப்பொ. களவி. ௪௧.)

இரவுத்திரம்—இரௌத்திரம். [ரௌத்ர.]

இரவுபகல் — 1. இராக்காலமும் பகற்காலமும். 2. கேவலசகல அவத்தைகள். (உ-ம்.)"இரவு பகலில்லாவிடத்திரண்டற்றோங்கும் பரமசிவம்" (சைவச. மாணு. ௬௨.)

இரவுரவம்— இரௌரவம். [ரௌரவ.]

இரவேரி— இரவிசோதிமயமாக விளங்குகின்ற ஒருமரம். (உ-ம்.) "புன்னைகூவிளங்குங்குமமகில்புன்குபுளியிரவெரிமகிழ்" (மச்சபு. நைமி. அ.)

இரவை— 1. அற்பம், அணு. 2. துப்பாக்கியிலிடுமீயச்சன்னம். 3. வச்சிரம். [தெலுங்கு.]

இரவோன் — 1. சந்திரன். 2. யாசகன். (உ-ம்.) "சேமத்திருநிதிபெற்றிடுமிரவோனெனத்திகழ்வான்" (கந்தபு. அசுரர்தோ. ௫.)

இரளி—கொன்றைமரம்.

இரற்று — 1. இரற்றென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும். 2. ஒலித்தல். (உ-ம்.) "இரற்றுறுசூழ்படையீட்டநோக்கியே" (கந்தபு. சூரபன்மன்வதை. ௪௧.)

இரற்றுதல்—ஒலித்தல். (உ-ம்.) "கடலிறைரையிரற்றும்" (ஐங்குறு. ௧௧௪.) "ஈட்டுறுப்புள்ளினமிரற்றுமென்பவே" (சிந்தா. நாம. ௬௬.)

இரா—1.இரவு. (உ-ம்.) "இத்தைநீயிராவெரியிலிட்டெடுக்கினன்பொன்னும்" (திருவிளை. இரச. ௨௪.) 2. இராத எனப்பொருள்விளைத்துவரும் ஈறுதொக்க ஒருபெயரெச்சச்சொல். 3. இருத்தலைச்செய்யா எனப்பொருள்பட்டுஅஃறிணைப்பன்மையிலேவரும் ஒரு வினைமுற்று. 4. இருந்து எனப்பொருள்விளைத்துவரும் ஒருவினையெச்சச்சொல். 5. உணவு. 6. கள். 7. சரசுவதிதேவி. 8. நீர். 9. பூமி. 10. வாக்கு.

இராக்கதம்— 1. எண்வகை மணத்துளொன்று. அது, பெண்ணின் சுற்றத்தாருமுடன்படாதிருக்க அவளைப்பலாற்காரமாய்ப் பிடித்துச் செய்யும்மணம். 2. பரணி எனப்படுமிராமுகூர்த்தம்; அஃது: இரவிலேவருமாறுமுகூர்த்தம். (விதாந. குணகுண. ௭௬. உரை.) 3. (சோதிடம்) யோகங்களுளொன்று.4.விரணவைத்தியம்.

இராக்கதர்—பிசித ஊணரும்நிசாசரருமாகிய ஒரு சாதியார். அவர்கள் இந்திரன் முதலிய சுவர்க்கலோகவாசிகளுக்குச் சத்துருக்களாயிருந்தவர்கள். (உ-ம்.) "அசுரரிராக்கதரை-யிண்டைக்குலத்தையெடுத்துக்களைந்த விருடிகேசன்றனக்கு" (நாலாயிர. திருப்பல். ௪.) [ரக்ஷஸ்-பசாசு. பசிபொறுக்காதுபிரமன்மேற்பாய்ந்தார்கள்.அப்போது சிலர் இரக்ஷியுங்களென்று சொன்னமையால் இராக்ஷசர் எனப் பெயர்பெற்றனர் என்பர் சிலர். (கூர்மபு. பலவ. ௨௨. உரை.)

இராக்கதிர்—சந்திரன். (உ-ம்.) "கங்குலினிடையிராக்கதிரைநேர்தர" (நல்.பாரத. துட்டி. ௪௧.) [கதிர்-கிரணம்.]

இராக்கதிரோன்—சந்திரன். (உ-ம்.) "வருமிராக்கதிரோனீண்டமணிக்கதவி கைகடேய்ப்ப" (திருநெல். ௩௧ா. ௨௬.)

இராக்காய்ச்சல்—இராக்காலத்திலே வரும் ஒருவகைச்சுரம்.

இராக்கினி—அரசன்மனைவி. [ராஜ்ஞீ.]

இராகசூத்திரம் — 1. சாயமூட்டப்பட்டநூல். 2. தராசுக்கயிறு. 3. பட்டுநூல். [ராகஸூத்ர: ராக-நிறம். ஸூத்ர-நூல்.]

இராகத்தாநம்— உதயலக்கினத்துக்குப்பத்தாமிடம். அது, "விடுத்தபத்தாமிராசிப்பலந்திகழ்மிக்க ராகங்கர்ம" என்னும் (வீமே. ௨௯௨-ஞ் செய்யுளாற்காண்க.) [ராகஸ்தாந.]

இராகத்துவம்—(பேரண்டத்திலே) புருடதத்துவத்துக்கப்பால் பதின்மடங்காவரித்துப்பன்னிரண்டுருத்திரருக்கு இருப்பிடமாயிருக்கும் ஒரு தத்துவம். (த. நி. போ. ௩௪௧.) 2.விரும்புகை.

இராகதத்துவம்—1. (பேரண்டம்) பிரகிருதிதத்துவத்திலும் பார்க்க. நூறுபாகம் விரிவும் உயர்ச்சியும் ஏற்றங்கொண்டிருக்கும் ஒருதத்துவம். அது, நிகர்வஸ்தாநம். (சிவபரா. ௯௯௧.)

2. வித்தியாதத்துவங்களுளொன்று; இதன் றொழில் இச்சாசத்தியை விளக்கி விடயங்களி லே ஆசையைப் பெருக்குதலாம். (சி. சி. உ: ௯௬. மறை. உரை. ஞானப்.) [ராகதத்வ.]

இராகப்புள்—கின்னரப்பறவை. (பிங்கல. உ௯௬௪.)

இராகம் — 1. அன்பு. 2. ஆசை. (உ-ம்.) "நல்லிராகமிஞ்ச" (பாரத. சம்பவ ௬௪.) 3. இசை. 4. இன்னிசை. 5. சடத்தீயிறென்று. 6. சிவப்பு. 7. நிறம். 8. மோகம். 9. வித்தியா தத்துவமேழினென்று. (உ-ம்.) "இராகதத்து வம்" பார். [ராக.]

இராகமெடுத்தல்—இராகமாலாபித்தல்.

இராகவன் — 1. சூரியகுலத்தரசனுகிய இரகுமரபிற்பிறந்தவன். 2. தசரதராமனுகிய சூரியகுலத்தரசன். (உ-ம்.) "இராகவன்குண்ட மாம்" (சேதுபு. இரா. தீர்த்த. ௪.) [ராகவ.]

இராகவி—பெருநெருஞ்சிற்செடி.

இராகவின்னுடகம்—கொன்றைமரம்.

இராகவிராகம்—விருப்பு வெறுப்பு. [ராக விராக.]

இராகாந்தநிலையர்—ஸ்ரீகண்டமூர்த்தி. (சி. சி. க: ௯௪. ஞானப். உரை.) [இராகதத்துவத்தி னந்தத்திலிருக்கிறவர்என்றபடி.] [ராகாந்த.]

இராகி—1. குரக்கன். 2. கேழ்வரகு: இஃது எண்வகைக்கூலத்துள் ஒன்று. (மணிமே.) 3. பற்றுசு. (பி. வி. ௯௦.) [ராகி.]

இராகித்தியம்— 1. இல்லாமை. 2. நீங்கியி ருத்தல். [ராஹித்யம்.]

இராகு—1. கோமேதகரத்திநம். 2. சைங்கி கேயனென்னும் ஒரு அசுரன்; இவன் ஒரு கிர கமாய்நின்று சந்திரனைமறைத்தலால், சந்திரகி ரகணம் வருமென்பர். (உ-ம்.) "எழுமதியுண் ணுமிராகுவென" (சேதுபு. தேவிபுர. ௯௬.) [ராஹு: ரஹ் - விடுதல்.]

இராகுக்கிராகம்—சந்திர கிரகணம். [ராஹுக்ராஹ: க்ராஹ - பற்றுதல்.]

இராகுக்கிராசம்— கிரகணத்தில் இராகுவி னலே கிரகம்பற்றப்பட்டிருத்தல். [ராஹு க்ராஸ.]

இராகுகாலம்— ஒவ்வொருநாளினும், கீழே வருஞ்செய்யுளிலே கண்டிருக்கிற நேரமுதலா க, மூன்றேமுக்கால் நாழிகைநேரத்துக்கு இரா குமிற்கும் அசுபகாலம். "அரிஇருபத்தாறேகால ம்புவிமூன்றேமுக்கால்- எரிவண்ணனிருபதோ டிரண்டரைபுதன்மூவைந்து - குருபதினெட் டேமுக்கால் குளிர்வெள்ளிபதினென்றேகால் - கரியனேழரை யிராகுகாலமென் றறிந்துகொள் ளே" (வருஷாதி. உ௬.) [ராஹுகால.]

இராகுமண்டலம்—பூமியின்சாயை. (உ-ம்.) "மருவுபூமியின் சாயையா மிராகுமண்டலம்" (கூர்மபு. மண்டலவளவை. ௧௦.) [ராஹுமண்டல.]

இராகூச்சிட்டம் — உள்ளி. [ராஹூச்சிஷ்ட: ராஹு; உச்சிஷ்ட -வாந்திசெய்தல்.]

இராகை— 1. சொறிநோய். 2. பூப்புத்தொடங்கியபருவத்துப்பெண். [ராகா.] 2. பௌரிணிமையிரவு. [ராகா.]

இராச்சியக்காரர் — இராச்சியம் பண்ணுவோர்.

இராச்சியபரிபாலநம்— இராச்சியப் பாது காப்பு.

இராச்சியபாரம் — அரசாளும் பொறுப்பு. [ராஜ்யபார.]

இராச்சியம்— 1. அரசனுடைய ஆளுகைக் குட்பட்டவிடம். (உ-ம்.) "இராச்சியமதனைமுன் னளித்த-விறைவர்க்கேயும்" (இரகு. தசரத. ௪.) 2. ஆளுகை. 3. உலகு. 4. நாடு.

இராச்சியவதி—இராச்சியக்காரி.

இராசகம்— அரசர்களின் கூட்டம். [ராஜக.]

இராசகயம்—இராசயானை. [ராஜகஜ.]

இராசகரம் — அரசனுக்குக்கொடுக்கும் இறைப்பொருள். [ராஜகர: கர - இறை.]

இராசகலகம் — 1. அரசர்செய்யுஞ் சண்டை. 2. கொடுங்கோன்மை. 3. படைக்குழப்பம். [ராஜகலஹ.]

இராசகனி—எலுமிச்சைக்கனி.

இராசகாரியம் — 1. அரசர்க்குச்செய்யுங்க டமை. 2. அரசியல்.

இராசகீயம்— அரசனுக்குரியது. [ராஜகீய.]

இராசகிரி—கிரிகளுக்குட்பிரதாநகிரி. இது: வெண்ணிறமுங்குள்ளுருவமுமுடையதென்று ம், வேறுகிரிகளினலே காவப்படுகிறதென்றுஞ் சொல்லப்படுகின்றது. [இரதகிரி என்பதன்றி ரிவுபோலும்.]

இராசகுஞ்சரம்—அரசயானை. (உ-ம்.) "ஏழு யரிராசகுஞ்சரமேன் - மற்றைநால்வருந்தற்சூழ்

வரத் தருமன் மைந்தன்மா நகர்வலம்வந்தான்" (பாரத. இந்திர. கூ.)

**இராசகோலம்**— இராசவேஷம்.

**இராசகோழை**— 1. இராசபயம். 2. ஒரு நோய். இஃது, இரத்தங்கக்கச்செய்யுஞ்சேட்டு மந்தொட்டநோய்.

**இராசசபாவம்**— அவைராக்கியம். (சி-வி. ஞாந. கசு. உரை.)

**இராசசம்**— 1. அரசராலுண்டாகியது. 2. இராசதகுணத்தோடு சம்பந்தப்பட்டது. 3. இராசப்பிறப்பு. [2. ராஜஸம்: 1. ராஜஜ.]

**இராசசாசநம்**—அரசன் நிலம்முதலியவற்றை ஒருவனுக்குக்கொடுக்கும்பொழுது எழுதிக்கொடுக்கும் உறுதிப்பத்திரம். (மிருச். உக.) [ராஜஶாஸந.]

**இராசசாரசம்**—மயில். [ராஜஸாரஸ.]

**இராசசிருங்கம்**— பொன்னுலாயபிடியமைந்த இராசாங்கக்குடை. [ராஜஶ்ருங்க.]

**இராசஸ்ரீ**—1. கீர்த்திபெற்ற. 2. மதிப்பான. [ராஜஸ்ரீ.]

**இராசசிந்நம்**—1. இராசதத்துவம். 2. இராசாங்கத்துக்குரிய உபகரணங்கள். அவைகள்: முடி, குடை, கவரி, தோட்டி, முரசு, சக்கரம், யானை, கொடி, மதில், தோரணம், நீர்க்குடம், பூமாலை, சங்கு, கடல், மகரம், ஆமை, இணைக்கயல், சிங்கம், தீபம், இடபம், ஆசநம் என்னுமிவைகளாம். (சூ. நிகண். கஉ: கஉ௦.) [ராஜசிஹ்ந.]

**இராசசூயம்**—1. தாமரைக்கொடி. 2. திறைகொடுக்குமரசர்சமூகமாக ஏகசக்கிரவர்த்தியினலே செய்யப்படுமொரு பெரியயாகம். அஃது: அவனது அதிகாரத்தை மறுப்பவரிலரென்பதனைக்காட்டுதற்கொரு க்ரியாகச்செய்யப்படுவது. எல்லா அரசர்களையும் வென்று ஐந்துதினத்தில் அல்லது ஏழு, ஒன்பது, பன்னிரண்டுதிநங்களில் நாலுமேடங்களால் க்ஷத்திரியர்கள்செய்யும் யாகம். (திருவிளை. தலவி. கூ. உரை.) (உ-ம்.) "தாமரையனையசெங்கட்டரணிபனிராசசூய-மாமகமுற்றி" (பாரத. சூது. உ.) 3. மலை. [ராஜஸூய.]

**இராசசேவை**—அரசனுக்குச்செய்யும்பணிவிடை. [ராஜஸேவா.]

**இராசத்துவம்** — 1. அரசனுயிருக்குந் தன்மை. 2. இராசதத்துவம். 3. இராசாங்கம்.

**இராசதகுணம்**—முக்குணங்களுளொன்று. [ராஜஸகுண.]

**இராசதண்டம்**— 1. அரசனால்விதிக்கப்பட்டதண்டம். 2. செங்கோல். [ராஜதண்ட.]

**இராசதந்தம்** — முன்வாய்ப்பல்; அது நடுவாக இருக்கும் இரண்டுபற்களையேகுறிக்கும்.

**இராசதம்**—1. இராசப்பிரவிருத்தி. (உ-ம்.) "மதந்தவிர்சந்நியாசிகள்போன்மாநமிராசதமவிழ்ச்சிமறுக்கமாற்றும்" (ஞாநவா. வைராக். ருக.) 2. ஒருகாலம்; அது: முக்குணவேளையினென்று; அஃது: ஊக்கம், ஞாநம், வீரம், தருமம், தவம், தாநம், கல்வி, கேள்வி என்னுமெண்குணமுடையது என்பர். (சூ. நிகண். கஉ: கூ.) சூரனுகை, குரூரமுடைமை, ஊக்கமுடைமை, மானமுடைமை, வைராக்கியம், பலம், வன்கண்மை, போகியாதல், இடம்பமாக கூடாவொழுக்கம், என்னு மொன்பதும் இராசதமெனச் சிவப்பிரகாச உரைகாரர்கூறுவர். (சிவப்பி. உ: உசு. உரை.) [ராஜஸ.]

**இராசதருமம்** — அரசன்செய்யவேண்டிய கடமைத்தன்மை. [ராஜதர்ம.]

**இராசதவாங்காரம்** — வைகரியாங்காரம். (உ-ம்.) "சொன்னவாங்கார மூன்றில் வைகாரிதுலங்கு சாத்துவிதவாங்காரம்- அன்னதில்வருமிந்தியவதிட்டானதெய்வதம். (கூர்மபு. பிரகி. க௦.) [பௌட்கரம்-பும்ஸத்துவ-கசகஇ - இராசதகுணமதிகமாயிருப்பதென்றபடி.] [ராஜஸாஹங்கார.]

**இராசதாலம்**—கமுகு. [ராஜதால.]

**இராசதாலி**—கமுகு.

**இராசதாநம்**—இராசதாநி. [ராஜஸ்தாந.]

**இராசதாநி**—1. அரசன்மனை. 2. அரசனது தலைநகரம். [ராஜதாநி.]

**இராசஸ்திரீ**— 1. அரசன்மனைவி. 2. அரசுசெய்கிறபெண்.

**இராசதுரோகம்**— 1. அரசனுக்கு விரோதமாகச்செய்யுந்துரோகம். 2. கொடுங்கோன்மை. [ராஜத்ரோஹ.]

**இராசநரகம்**—ரௌரவநரகம். (உ-ம்.) "இருள்புழுதிவடிவாகியிடர்மிகுத்த ரௌரவத்தையரையனெனவறிந்திடுக"(சிவதரு.சுவர்க்கநரக. கவி. கஉஎ.)

**இராசநாகம்**— நால்வகைநாகபாம்புகளுளொன்று. [ராஜநாக.]

**இராசநிட்டூரம்**—கொடுங்கோன்மை. [ராஜநிஷ்டுர.]

**இராசநீதி**—இராசதருமம்.

இராசநோக்காடு—கடைசியான பிரசவவேதனை.

இராசநோக்கு — 1. இராசகிருபை. 2. இராசபார்வை.

இராசபஞ்சகம்-(சோதிடம்) ஐந்துவகையானபஞ்சகங்களுளொன்று; அஃது: அரசரால்வருந்தீங்கு. பஞ்சகம்பார்க்கவேண்டியகாலம்வரையில் ஞாயிறு முதலாக அன்றையவாரம் வரையும்,பிரதமைமுதலாக அன்றையதிதிவரையும், அச்சுவினிமுதல் அன்றைய நக்ஷத்திரம் வரையும், மேடம் முதல் அந்நேரத்துலக்கினம் வரையும் எண்ணிக்கண்டதொகையை ஒன்பதிற்கழிக்கவருஞ்சேடம் நாலேயாகில் அந்நேரம் இராசபஞ்சககாலமெனக்கண்டு கொள்க. விவாககாலத்திலே இராசபஞ்சகம் நீக்கப்படும். (வருஷாதி. கoஎ-பக்.)

இராசபட்டம்—1. இராசாதிகாரம். 2. ஒருவகைத்தலைப்பாகை. 3. கீழ்த்தரமான ஒருவகைவைரத்திநம்; அஃது: இந்தியாவின் வடமேற்றிசையிலிருக்கும் விராடதேசத்திலிருந்துகொண்டுவரப்படுமென்பர். 4. முடிசூட்டு.

இராசபத்திரம்— இராசாவின் அதிகாரப்பத்திரிகை.

இராசபம்—கழுதை. [ராஸப.]

இராசபாட்டை—இராசபாதை. [பாட்டை. தெலுங்குச்சொல்.]

இராசபாதை—பெருந்தெரு.

இராசபிளவை— முதுகிலேவரும்பெரும்பிளவைப்புண்.

இராசபுத்தி — 1. இராசாவின் அநுபவம். [ராஜபுக்தி.] 2. சிரேட்டமானபுத்தி. [ராஜபுத்தி.]

இராசபுத்திரன்— 1. அரசன்மகன். 2. சத்திரியவமிசத்தான். 3. புதன் என்னுங்கிரகம். [ராஜபுத்ர: ராஜ - அரசன், சந்திரன்.]

இராசபுரி—1. இராசநகர். 2. வெல்லம்.

இராசபுள்—எண்காற்புள்.

இராசமகேந்திரம்— ஒரு நகரம். [ராஜமஹேந்த்ர.]

இராசமண்டலம்—இராசசங்கம், இராசகூட்டம். (உ-ம்) "எங்களுநெருங்கிவைகுமிராசமண்டலங்களோடும்" (பாரத. திரௌப. கஅ.) [மண்டல-கூட்டம்.]

இராசமனை—இராசமாளிகை.

இராசமாடம்—பெரும்பயறு. [ராஜமாஷ.]

இராசமாந்யம்— 1. அரசர்களாலே மதிக்கப்படத்தக்கதன்மை. 2. இராசபொறுப்பாய்நடப்பது. [ராஜ; மாந்ய.]

இராசமாநாகம்—கருவழலைப்பாம்பு. (சூ. நிகண். ௩: சக.) [ராஜமாநாக.]

இராசமாநியம்—இராசமாந்யம்.

இராசமாநியராஜஸ்ரீ —அரசர்களாலே மதிக்கப்படத்தக்க இராசலட்சுமீகரமுடைமையைக்கருதுமொருபெருமைச்சொல்; இஃது: ஒருவரை உயர்த்திக்கூறற்பொருட்டு அவர்பெயர்க்கு முன்வழக்கத்திற்பிரயோகிக்கப்படுவது.

இராசமாமந்தம்—கருவழலைப்பாம்பு.

இராசமார்க்கம்—இராசாவின்தெரு; அது: யானை குதிரைகள் செல்லக்கூடியதாய் நாற்பதுமுழ அகலமுடையதாயிருப்பது. (ஸ்மிருதி.) [ராஜமார்க்க: மார்க்க-வழி.]

இராசமாளிகை— 1. அரசர் அரண்மனை.

இராசமுத்திரை— இராசஅதிகாரத்தைக்காட்டுமொருசின்னம். [ராஜமுத்ரா.]

இராசயானை— ஏழுமுழ உயரமும், ஒன்பதுமுழநீளமும், பத்துமுழச்சுற்றளவுமுடையயானை. (சூ. நிகண். கஉ: கசஅ.) [இதை பட்டத்தியானை எனவுங்கூறுவர்.]

இராசயுகம்—பாலை.

இராசயோகம்—1. ஒருவன் அரசனாகவருவான் என்பதனைக் குறிப்பிக்கும் பிறந்தகாலத்துக்கிரகங்களின்சுபநிலை. (விதாந. சாதக. உச.) 2. ஞானிக்குரியயோகநான்கனுளொன்று. அது: தாரகம், சாங்கியம், அமநஸ்கம் என மூன்றுவகைப்படும். (த.சி.போ. ௩எச.)[ராஜயோக.]

இராசராசநரகம்—கும்பீபாகநரகம். ( சிவதரு. சுவர்க்கநரகவி. கஉஎ. உரை.)

இராசராசன்—1. இராசாதிராசன். 2. ஏகசக்கரவர்த்தி. 3. குபேரன். 4. துரியோதநன். (உ-ம்.) "என்னுயிர்தானும்வேண்டேனென்றனனிராசராசன்" (பாரத. கௌ-ம்போர். கஉ.) [ராஜ - அரசன், இயக்கன்.]

இராசராசேசுவரி—1. துர்க்கை. 2. பார்வதி. [ராஜராஜேஸ்வரீ.]

இராசரிக்கம்—
இராசரிகம்— } அரசாட்சி.

இராசரிஷி — அரசனுயிருந்து இருடியானவன். [ராஜரிஷி.]

இராசலெட்சுமி— அட்டலட்சுமிகளுளொருத்தி; இவள்: அரசருடைய ஆளுகையைத்துலங்கச்செய்பவள். [ராஜலக்ஷ்மீ.]

இராசலேகம்— அரசனுலெழுதப்பட்டகட்டளை, அரசனுலெழுதப்பட்ட நிருபம். [ராஜலெவ.]

இராசவசதி—1. இராசமாளிகை. 2. சிங்காசநம். [ராஜவஸதி.]

இராசவசித்துவம் — இராசாவைத்தன்வசமாக்கல். [ராஜவஸிக்வ.]

இராசவசியம்—இராசவசித்துவம். (த. நி. போ. உருக.) [ராஜவஸ்ய.]

இராசவசீகரம்—இராசவசித்துவம். [ராஜவஸீகர.]

இராசவட்டம்—பொதுவாநசங்கதி.

இராசவதி—1. அரண்மனை. 2. சிங்காசநம்.

இராசவர்க்கம்— 1. இராசசந்ததி. 2. வெண்மையுங்கறுப்புங்கலந்தநிறம்.

இராசவரிசை—இராசச்சிறப்பு.

இராசவள்ளி— ஒருவகை வள்ளிக்கொடி. [இதன்கிழங்கு பருத்ததுஞ்சிவத்ததுமாயிருக்கும்.]

இராசவாகம்—இராசவாகநம். [ராஜவாஹ: வாஹ-வாகநம்.

இராசவாகநம்—1. கஞ்சிகை. (சூ. நிகண். எ: சஎ.) 2. கோவேறுகழுதை. [சிலப்பதிகாரம் கூ-ஆம்காதை கககூ-ஆம் அடியுரையிலே, "இராசவாகநமாகிய அத்திரி (கோவேறுகழுதை) எனக்கூறப்பட்டுள்ளது. ஷை நூல் அரும்பதவுரையாசிரியர் "கோவேறுகழுதை குதிரையில் ஒரு சாதி" என்பர். இதனுல் அரசர் முதலியோர் ஏறுதற்குரியதாதலின், இப்பெயர்கள் அக்குதிரைச்சாதிக்குண்டாயின என்பது தெரிகிறது.] [ராஜவாஹந.]

இராசவாகியம்—இராசயானை. [ராஜவாஹ்ய.]

இராசவிட்டரம்—கொடுங்கோல். [ராஜவிஷ்ர.]

இராசவிரணம்— பெரும் விரணம்.

இராசவிருட்சம்—கொன்றைமரம். [ராஜவ்ருக்ஷ.]

இராசவீதி—1. அரசர்போகுந்தெரு. 2. பெருந்தெரு. [வீயி.]

இராசன்—1. இந்திரன். 2. இயக்கசாதியான். 3. சத்திரியவமிசத்துப்பிறந்தவன், அரசன். 4. சந்திரன். 5. தருமன். 6. பிறபதங்களோடணைந்து "சிரேட்டன், மேலானவன்" எனப் பொருள்விளக்கும் ஒருபதம். [ராஜந.]

இராசனை—வெள்ளைப்பூண்டு. (உ-ம்.) "காயமிராசனைதாருகன்மதமாமிசிமாக்கடு விளங்கம் சொருகப்புன்மேதைபதினுன்கும்" (தைல. தைலவ. சரு.)

இராசாக்கினை— 1. இராசகட்டளை. 2. இராசதண்டனை. [ராஜ; ஆஜ்ஞா.]

இராசாகி—இருதலைமணியன்பாம்பு. [ராஜாஹி: அஹி - பாம்பு.]

இராசாங்கம்—1. அட்ட ஐசுவரியத்தொன்று. 2. அரசாளுகைக்குவேண்டிய உறுப்புகள்; அவை: அமைச்சு, நாடு, அரண், பொருள், படை, நட்பு என்னுமாறுமாம். நாடு-குடிகளெனக்கொள்க. (வள். கூஅக. உரை.) 3. இராசத்துவம். 4. இராசவாளுகை.

இராசாணி—இராணி.

இராசாத்தி— 1. அரசன்மனைவி. 2. அரசி.

இராசாதிகாரம்— 1. இராச உத்தியோகம். 2. இராசதத்துவம்.

இராசாதிகாரி — இராசாங்கத்திலே உத்தியோகத்திலிருப்பவன். [ராஜாயிகாரி.]

இராசாதிபதி— 1. இராசாதிபன். 2. இராசாதிராசன்.

இராசாதிராசநரகம்—அவீசியென்னும் நரகம். (சிவதரு. சுவர்க்கநரக. கஉஎ. உரை.)

இராசாதிராசன் — அரசர்களுக்கு மேலாக அதிகாரஞ்செலுத்துமரசனுகிய சக்கரவர்த்தி. [ராஜாயிராஜ.]

இராசாவர்த்தம்— கீழ்த்தரமான ஒருவகை வைரரத்திநம். அது: விராடதேசத்திலிருந்து கொண்டுவரப்படுமென்பர். இதிலே வெண்ணிறமுடைய சுவேதராசாவர்த்தம், நீலநிறமுடைய நீலராசாவர்த்தம், பொன்னிறமுடைய பீதராசாவர்த்தம், செந்நிறமுடைய சுரோணராசாவர்த்தம் என நான்குவிதமுள்ளனஎன்பர். [ராஜாவர்த.]

இராசாளி— ஒரு பறவை. [ராஜாலி.]

இராசி— 1. இணக்கம். (இந்துஸ்.) 2. ஒழுங்கு. 3. கணக்கின்பொருட்டு எழுதிக்கொள்ளப்படும் இலக்கங்கள். 4. குவியல், திரள். 5. கூட்டம். (சூ. நிகண். கக: ரகர. உச.) 6. நிரை. 7. மத்தியாநம். (வீரமாமுநி.) 8. முன்னூற்றறுபது பாகைகொண்ட ஒரு சக்கரத்திலே பன்னிரண்டிலொன்றுகிய இரண்டேகால் நட்சத்திரங்கொண்ட ஒரு கூறு. அப்பன்னிர

ண்டுகூறுகள்: மேடம், இடபம், மிதுநம், கர்க்கடகம், சிங்கம், கந்நி, துலாம், விருச்சிகம், தநு, மகரம், கும்பம், மீநம் என்பவைகளாம். [3, 4, 5, 8. ராஶி. 2, 6. ராஜி.]

**இராசிக்காரன்**— அதிட்டமுடையவன்.

**இராசிகம்**— 1. அட்சரகணிதம். 2. அமிசம். 3. அரசனால் வருவது. 4. ஓரிராசி. 5. குவியல். 6. நரம்பு. 7. வரி. [ராஜிக.]

**இராசிகை**—1. வயல். 2. வரி. [ராஜிகா.]

**இராசிச்சக்கரம்**— } இராசிமண்டலம்.
**இராசிசக்கரம்**— } [ராஶிசக்ர.]

**இராசித்தலைவர்பொருத்தம்**— இராசியதிபதிப்பொருத்தம். அது: மணப்பொருத்தம் பத்திலொன்று.

**இராசிநாதன்**—அவ்வவ்விராசியினின்று ஆளுகைசெய்யுங்கிரகம். [ராஶிநாத.]

**இராசிப்பிரிவு**— கிரகம், தான் நின்ற ராசியைவிட்டுப்பிரிதல்.

**இராசிப்பொருத்தம்** —மணப் பொருத்தம் பத்திலொன்று; அது: பெண்ணிராசிமுதலாகப் புருடனிராசிவரையுமெண்ணும்போது ஆறிராசிக்குமேற்படினும் அல்லது ஒரு ராசியாயிருப்பினும் உத்தமமெனவும், பெண்ணிராசிக்குப்புருடனிராசி மூன்றும் நாலாமிராசியாயின் மத்திமமெனவும், இரண்டாம் ஐந்தாம் ஆறுமிராசியாயின் அதமமெனவுமறியத்தக்கது. (விதாந. கடிமண. கஉ. உரை.)

**இராசிபாகம்**—பிங்கம்: [ராஶிபாக.]

**இராசிபோகம்**— இராசிக்கூடாகக் கிரகஞ்செல்லுதல். [ராஶிபோக.]

**இராசிபுடம்**—இராசிகளிலே கிரகநிற்குநிலை. [ராஶிஸ்புட.]

**இராசிமண்டலம்**—1. இராசிநிற்குமெல்லை. 2. ஓரை.

**இராசியத்தாநம்**—1. அந்தப்புரம். 2. இரகசியத்தாநம். 3. மறைக்கப்படும் அவயவப்பகுதி. 4. மூலஸ்தாநம்.

**இராசியதிபதிப்பொருத்தம்** — மணப்பொருத்தங்களுளொன்று; அது: சூரியனுக்கு வியாழனும், சந்திரனுக்கு வியாழனும் புதனும், செவ்வாய்க்குப்புதனுஞ் சுக்கிரனும், நட்பென்றும், மற்றையோர் சத்துருக்களென்றும், புதனுக்குச்சூரியனும், வியாழனுக்குச்செவ்வாயும், சுக்கிரனுக்குச்சூரியனுஞ்சந்திரனும், சனிக்குச் சூரியனுஞ்சந்திரனுஞ்செவ்வாயும், சத்துருவென்றும், மற்றையோர்மித்திரரென்றும், ஸ்திரீராசியதிபதியும், புருஷராசியதிபதியும் மித்துருவானாற்பொருந்துமென்றுங்கொள்வது. (விதாந. கடிமண. கரு.)

**இராசியம்** — 1. அந்தப்புரம். 2. சா. 3. தாமரைப்பூ. 4. பெண்குறி. (சூ. நிகண். கக. ரகர. எ.) 5. மறைபொருள். 6. மறைவு. (சூ. நிகண். கக. ரகர. எ.) 7. விந்து நாதம். [ரஹஸ்ய.]

**இராசிலம்**—1. சாரைப்பாம்பு. (சூ. நிகண். ரு. சஎ.) 2. நீர்ப்பாம்பு. [ராஜில.]

**இராசிவக்கிரம்**— இராசிப்பிரிவிலொன்று.

**இராசிவட்டம்**—இராசிச்சக்கரம்.

**இராசீகம்**—அரசனால்வருவது. [ராஜீக.]

**இராசீகரம்**—1. அரசாட்சிக்குரியது. 2. அரசாளுகை. [ராஜீகர.]

**இராசீலம்**—இராசிலம்.

**இராசீவம்**—தாமரைப்பூ.

**இராட்சசம்**—புத்திதத்துவத்திலிருக்கும் எட்டெப்புவநங்களுளொன்று. (சிவபரா. கருக.) [ராக்ஷஸ.]

**இராட்சசன்**—இராக்கதன்.

**இராட்சத**— வியாழவட்டமாகிய அறுபதுவருடத்திலே நாற்பத்தொன்பதாவது. [ராக்ஷஸ]

**இராட்சதர்**— இராக்கதர். [பிரமனாற்படைக்கப்பட்ட ஒருவகைக்கணத்தவர்களுட்சிலர் பசிபொறுக்காது பிரமன்மேற்பாய்ந்தார்கள்; அப்போதுசிலர் இரட்சியுங்களென்றுசொன்னமையால், இராக்ஷசர் என்றும், சிலர் உண்ணுவோமென்றுசொன்னமையால், யக்ஷர்களென்றும் பெயர் பெற்றனர் என்பர்.] (கூர்மபு. பலவ. உஉ. உரை.) [ராக்ஷஸ.]

**இராட்டினத்தொட்டி**—இராட்டினம்போலச்சுழல்கின்றதொட்டி.

**இராட்டினம்**— 1. நூனூற்குங்கருவிகளுளொன்று. 2. மாளிகைகளிற்கட்டப்பட்டுச்சுழன்றுகொண்டிருக்கும் ஒருவகைச்சுழற்றேர். (கந்தபு. நகர. உஅ. உரை.)

**இராட்டினவாழை**— ஒரு குலையிலே நடுவிட்டு மேலுங்கீழுஞ்சீப்பிடும் வாழை.

**இராட்டினவூசல்**— } இராட்டினம்போலச்சுற்றுமூஞ்சல்.
**இராட்டினவூஞ்சல்**— }

**இராட்டு**—இராசா. [ராஜ்.]

**இராடம்**— 1. ஒரு தேயம். 2. கழுதை. 3. பெருங்காயம். 4. வெங்காயம்.

இராணம் — 1. இலை. 2. மயிற்ரேகை. [ராண.]

இராணி — இராசஸ்திரீ. [ராஜீ என்பதன் விகாரம்.]

இராணிவாசம் — அந்தப்புரம். [ராணி வாஸ.]

இராணுவம்—1. படை. 2. யுத்தமுகம்.[இந்துஸ்தானி.]

இராத்திரகம்—ஐந்திரவின் கூட்டம். [ராத்ரக.]

இராத்திரகன்—வேசிவீட்டிலே ஒரு வருஷத்துக்குத் தங்குகிறவன். [ராத்ரம.]

இராத்திரி—1. இராக்காலம். [ராத்ரி.] 2. மஞ்சள். (உ-ம்.) "ஆமலகி" பார். (தைல. தைலவ. ௩௦.) 3. விசுத்திதாநத்துக்குரிய பதினறிதழ்களி லொன்றிலே நிற்குமோ ரதிதேவதை. (சி. சி. அ: உக. மறை.)

இராத்திரிகாசம்—வெண்டாமரைப்பூ.[ராத்ரிஹாஸ: ஹாஸ - நகைத்தல்.]

இராத்திரிசரன்—1. அரக்கன். 2. கள்வன். 3. சேகண்டிக்காரன். 4. பைசாசம். [ராத்ரிசர.]

இராத்திரிஞ்சரன் — 1. இரவிலே திரிகிறவன். 2. கள்வன். 3. காவற்காரன். 4. பசாசு.

இராத்திரிவேதம்—கோழி.

இராத்திரிவேதன்— கோழிச்சேவல். [ராத்ரிவேத - இரவிலே காலத்தையறிவது என்றபடி.]

இராத்திரிவேதி—இராத்திரிவேதன். [ராத்ரிவேதி.]

இராதங்கம்—1. கால். 2. கோரம்.

இராதம்— 1. கடைக்கொள்ளி. (சூ.நிகண். சு: கக.) 2. வைகாசிமாதம். [ராத.]

இராதராங்கம்—1. கலப்பை. 2. கன்மழை. 3. மழைத்துளி. [ராதராங்க.]

இராதேயன் — குந்தி மகனாகிய கன்னன். [ராதேய: இராதையினால் வளர்க்கப்பட்டவனென்றபடி.]

இராதை—1. கிருட்டிணன் மனைவிகளிலொருத்தியாகிய ஓரிடைச்சி. 2. திரிதராட்டிரனது தேர்ப்பாகனாகிய அதிரதன் மனைவியாகிய ஒரு பெண். 3. மின். 4. விசாகநட்சத்திரம். [ராதா.]

இராதைகாந்தன்—கிருட்டிணன்.

இராந்து—1. இடுப்பு. 2. தொடைச்சந்து.

இராந்துண்டு—இலந்தைமரம்.

இராப்பகல்—1. இரவும்பகலும். 2. (சித்தாந்தம்) கேவல சகல அவத்தைகள். (உ-ம்.) "மறைத்தலும் நினைத்தலுஞ் செயுமாணவ மாயை நின்றவைதம்மைத் - துறத்தலே யிராப்பகலகல் வீடெனச்சொல்வர்" (வைராக். ௬௧.)

இராமக்கம்—ஒருநோய்; இஃது உடம்பிலே பருக்களாக வெளியே தோன்றிப் பின்னுள்ளடங்கி வேதனைசெய்யும் ஒருவகைச்சின்ன மூத்துநோயென்பர்.

இராமக்கிரியம் — இராக மூப்பத்திரண்டினொன்று; இது வசந்தமென்னும் புருடராகத்தின் மனைவியென்று இசைநூலார் வகுப்பர்.

இராமக்கிரியை—இராமக்கிரியம்.

இராமகர்ப்பூரம்—கர்ப்பூரமணத்தைக்கொடுக்கும் ஒருவகைப் புல். [ராமகர்ப்பூர.]

இராமகலி— பெண்ணிராகங்களுளொன்று; அது: மத்தியாநத்திற்பாடப்படுவது.

இராமகிரி — ஒருமலை; இதனைத் தசரதராமன் காட்டுக்குப்போனபோது சிலகாலந் தங்கியிருந்த சித்திரகூடமலையென்பர்.[ராமகிரி]

இராமசகன் — சுக்கிரீவனாகிய ஒரு குரக்கரசன். இவன் இராவணனோடுசெய்த யுத்தத்திலே இராமருக்கு உதவிசெய்தவன். [ராமஸக.]

இராமசந்திரன்— தசரத இராமன். (உ-ம்.) "இரகுபதி யிராமசந்திரன் மருகோனே" (திருப்பு. ௧௪௪.)

இராமசீத்தா — அணிநுணா என்னுமொரு மரம்.

இராமசேது — இந்தியாவுக்குமிலங்கைக்குமிடையிலே இராமர் கட்டுவித்தஅணை. [ராமஸேது.]

இராமடம்—பெருங்காயம். [ராமட.]

இராமடை—இராமடம்.

இராமதாபநி—அதர்வணவேத உபநிடதங்களுளொன்று.(கூர்மபு. அட்டமூ. ௨௬. உரை.)

இராமதூதன்—அநுமானென்னுங்குரங்கு. [ராமதூத: தசரத ராமனுக்கு இராவணனிடந்தூதாகச்சென்றவனென்றபடி.]

இராமநவமி — சித்திரைமாசத்துச் சுக்கில

பக்கத்துவரு நவமிதிதி. [ இராமன்பிறந்ததிந மஃதாகலின்.]

இராமநாதபுரம்—சேதுபதியரசர் பிரதான நகரி. [ராமநாதபுர.]

இராமநாதன் — சேதுத் தலத்திலிருக்குஞ் சிவபிரான். (உ-ம்.) "இராமநாதனையேத்துவர்" (சேதுபு. இராமதீர். உரு.)

இராமபத்திரன் — தசரத ராமன். [ராம ஸத்ர: ஸத்ர- அனுகூலம்.]

இராமபத்திரி—ஒருமருந்து.

இராமபாணம்—1. இராமர் அம்பு. 2. ஒரு புழு. 3. ஒருமருந்து. [ராமபாண.]

இராமமரம்—அணிநுணாமரம்.

இராமம்— 1. அழகு. (சூ. நிகண். அ: உச.) 2. ஆசைப்படயோக்கியமானது. 3. கருமை. 4. வெண்மை. [ஐராம.]

இராமரகசியம்—அதர்வணவேத உபநிடதங்களுளொன்று. (கூர்மபு.அட்டமூ. உசு. உரை.)

இராமன்— 1. அழகன். 2. கருமை நிறமுடையவன். 3. சந்திரன். (சோதிடகடல்.) 4. சமதக்கினியின்மகனாகியபரசுராமன். 5. சமுத்திரராசனாகிய வருணன். 6. தசரதபுத்திரராகியராமச்சந்திரர்; இவரே இராவணசங்காரஞ்செய்தவர். [ இது ரமு என்னுந்தாதுவிலிருந்துபிறந்தது. இருதயங்கடோறு நிறைந்து இன்பத்தைக்கொடுப்பவர் என்பது பொருள். ] 7. வசுதேவன்மகனாகிய பலராமன். (உ-ம்.)"வெள்ளை மேனி- யேசில்புதல்வர்க்காங் கேயிராமனெனப் பேரிட்டு" (கூர்மபு. கண்ணனவ. சுச.)

இராமா — சுபகருமங்களுக்கு விலக்காக இருக்கிற இரா. இது, மாசத்தியாச்சியம். ( தாரண. பஞ். ௬.)

இராமாப்பிரியம்—தாமரை. [இது, ரமாப்பிரியமென்பதன்விகாரம்.]

இராமாயணம்—இராமாவதாரமென்னுமொருநூல்; அது: தசரதராமனுடைய சரித்திரத்தைக்கூறுவது; அது: சம்ஸ்கிருதபாஷையிலே வான்மீகிமுநிவராலியற்றப்பட்டுக் கம்பநாடரால் தமிழிலே மொழி பெயர்க்கப்பட் டுள்ளது. [ராமாயண: ராம; அயந- வழி. நகரம் ரகரத்தினுடையதொடர்பினால் ணகரமானது சம்ஸ்கிருத இலக்கணவிதி.]

இராமாலை—இருளடைந்தமாலைநேரம்.

இராமாநம்—இராநாழிகை.

இராமாநுசன் — 1. தசரதராமன் தம்பியாகிய லக்குமணன். 2. விட்டுணு சமயாசாரியர்களிலொருவர். [ராமாநுஜ: அநுஜ - தம்பி.]

இராமிலன்— 1. கணவன். 2. மன்மதன். [ராம - இன்பம். இல- ஒருவிகுதி.]

இராமேசம்—இராமேசுரம். (உ-ம்:) "திருவிராமேசங்கண்டு - கறைப்படமிடற்றினனைய ருச்சித்துக்கருணைவாங்கி" ( திருவிளை. மாயப். ௬௬. )

இராமேசுரம் — ஒரு சிவஸ்தலம். அஃது, இராமனாலே தாபிக்கப்பட்ட ஈசுர ஸ்தானம். [ராமேஶ்வர.]

இராயசம்— எழுதுந் தொழில், சம்பிரதித் தொழில்.

இராயசன்—சம்பிரதி.

இராயணி—அரசி.

இராயன்—அரசன். [ராஜ.]

இராயிரம்—இரண்டாயிரம். (உ-ம்.) " மற்றையசலமிருமூன்றுமிராயிரம்" (கந்தபு. அண்டகோச. ௬௫.)

இராவடம்— 1. அசோகமரம். 2. அராவுத் தொழில்.

இராவடி—1. ஏலம். 2. பேரேலம்.

இராவணம்— 1. அழுதல். (உ-ம்.) "மூன் இராவண இராவண இராவண இராஜன்" (திருப்பு. ௬௬௧. ) 2. ஆரவாரித்தல். 3. விளக்கு.

இராவணன்— 1. இரவின் வண்ணமுடையவன். (உ-ம்.) "இராவணம்" பார் 2. இலங்கைவேந்தனாயிருந்த ஓரரக்கன். [ராவண- அழுதல். கைலாசகிரியை வேரோடு பிடுங்கமுயன்றபோது சிவனால் அழுத்தப்பட்டு அழுதகாரணத்தால் வந்தபெயர்.]

இராவணன்மந்திரி— மகோதரன்.

இராவணன்மீசை—ஒரு புல்.

இராவணாஸ்தம்— ஒரு வீணை. [ராவண ஹஸ்த.]

இராவணாத்தம்—இராவணாஸ்தம்.

இராவணாரி—இராமன்.

இராவணி—1. இராவணனுடைய மகன். 2. இராவணனுடைய மூத்தமகனாகிய இந்திரசித்து. (உ-ம்.) "ஊனுகர்துதின்றிடுமிடிம்பனென் ஒருருவனிங்கிராவணியையொத்துளான்" (பாரத. வேத்திர. ௪.)

இராவதம்— 1. சூரியன்குதிரை. 2. மேகலோகம்.

இராவதி— 1. ஒருகொடி. 2. ஒரு நதி. 3. யமபுரம்.

இராவிரேகு—1. அரசிலைச்சட்டி; அஃது: அரசிலை ஆகாரமாயிருப்பது. 2. அரைமூடி; அது: சிறு பெண்குழந்தைகள் இரகசியத்தாநத்

தை மூடியணியும் வெள்ளியினுல் அல்லது பொன்னினுலே செய்யப்பட்ட ஒரு தகடு. 3. குழந்தைகளணிகளிலொன்று; அது தலைமயிரிலிருந்து நெற்றியிலே தூங்குவது. (தெலுங்கு)

**இராவுத்தன்**—குதிரைப்பாகன். (உ-ம்.) "இராவுத்தர்கைக்குளடங்காதுபரிகான்மீற" (விறலிவிடுதூது.) (இந்துஸ்.)

**இராவுதல்**—அராவுதல்.

**இரிக்கல்**— 1. ஓட்டல். (சி. சி. பாயிர. ரு.) 2. கெடுத்தல்.

**இரிகம்** — 1. இரத்தாசயம். 2. இருதயம். 3. நியாயப்பிரமாணம். 4. மனம். 5. வழக்கு.

**இரிங்கணம்**— 1. ஊர்தல். 2. ஒருபுள். 3. தவழ்தல். 4. நெறிதவறல். [ரிங்கண.]

**இரிசல்**—1. இரிதல். 2. புலனைவேறொன்றிற்செலுத்தல். 3. மனமுரிதல்.

**இரிசியா**—பூனைக்காலிச்செடி.

**இரிஞ்சி**—மகிழமரம்.

**இரிஞர்**—1. அச்சமுள்ளார். 2. தோற்றோடுபவர். 3. பகைவர்.

**இரிணம்**—உவர்த்தரை. (சூ. நிகண். ரு. உக.)

**இரித்தல்**—1. அச்சுறுத்தல். 2. அழித்தல். 3. ஓட்டுதல். (உ-ம்.) "இருணனியிரவிதான் வந்திரித்தலும்" (சிவப்பி. ரு: ச.) 4. கெடுத்தல். 5. தோற்கச்செய்தல். [இரு என்னும் சம்ஸ்கிருததாதுவிலிருந்து பிறந்ததுபோலும்.]

**இரிதல்**—1. அகலுதல். (உ-ம்.) "கலம்பெய்பூண்முலையார்சிலர்கண்புதைத்திரிந்தார்" (திருவிளை. குண்டோ. கரு. ) 2. அஞ்சுதல். 3. ஓடல். 4. கெடுதல். 5. சாய்தல். (சூ. நிகண். க: உக.) 6. தோல்வியடைதல்.

**இரிப்பு**—1. அச்சுறுத்தல். 2. ஓட்டுதல். 3. தோற்கச்செய்தல்.

**இரிபம்**—பூமி. (நிருத்தம்.)

**இரிபு**—1. அச்சம். 2. ஓடுதல். 3. தோல்வி. 4. பகை. 5. பகைவன். 6. வெறுப்பு.

**இரிபேரம்**—வெட்டிவேர். (உ-ம்.) "அரவாரம்" பார். (தைல. தைலவ. ருசு.)

**இரியல்**—1. இரிதல், ஓடுதல். (உ-ம்.) "இரியல்போமதவேழத்தை" (திருவானைக்கா. நாட்டு. கஅ. ) 2. இரியாதே எனப்பொருள்படும் ஒரெதிர்மறைவியங்கோள். 3. கெடுதல். (உ-ம்.) "எறிபயமுடைமையினிரியன் மாக்களொடு" (மணிமே. கக: அஉ.) 4. நல்லாடை. 5. பறத்தல். (உ-ம்.) "மேகவண்ணன்றனைவீழ்த்தி-யிரியல்போக" (கூர்மபு. தக்கன்வே. சஎ.)

**இரியல்போக்கும்**— சாய்த்துக்கொடுக்கும். (உ-ம்.) "கறையடியானையிரியல்போக்கும்"(புறநா. கருரு.)

**இரீஇ**— 1. இருத்தி எனப்பொருள்படும் ஒரு வினையெச்சம். (உ-ம்.) "கண்ணிற்காணநண்ணுவழியிரீஇ" (பொருந. எசு.) 2. இருந்து எனப்பொருள்படும் ஒரு வினையெச்சம். (உ-ம்.) "கல்லெனொக்கல் நல்வலத்திரீஇ" (மலைபடு. ருசக. )

**இரீஇயினர்** — இருத்தினர் எனப்பொருள்படும் இரு என்னுந் தாதுவினின்றுபிறந்த ஒரு வினைமுற்று. (இறைய. ச-பக்.)

**இரீட்டம்**—குறுகல்.

**இரீட்சை**—பிறர்க்குத்துக்கம்வரவேண்டுமென்றும், தனக்கு வரக்கூடாதென்றும் எண்ணுகிறசித்தவிருத்தி. (வாசுதே.கூஎ.) [ஈஷ்ஷா.]

**இரீதி**— 1. இயற்கைக்குணம். 2. இரும்புக்கறை. 3. எல்லை. 4. கிட்டம். 5. தேசவழக்கம். 6. நீர்பொசிந்தொழுகல். 7. பாரம்பரியமானவழக்கம். 8. பித்தளை. 9. பித்தளைப்பஸ்மம். 10. போதல். [ரீதி.]

**இரீதிகவுளம்**— ஓரிராகம்.

**இரு**—1. இருமையென்னும் பண்புப்பெயர்க்குரிய பொருளைக்கொடுக்குமொரு விகாரமொழி. 2. இருவென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும். (உ-ம்.) "யான்செல்வனீயிரு"(ம-தி. கூகூ.) 3.காட்டுமல்லிகை. (இராசவைத்.) 4. பிறபெயர்ப்பதத்துக்கு முன்னின்று இரண்டு எனப்பொருள்படுமொருவிகாரமொழி.(உ-ம்.) "இருசிலையுண்டென்றிந்த விருநிலத்தியம்பும் வில்லின்" (பாரத. கிருட்டிண. கசக.)

**இருக்கம்**—பூசநட்சத்திரம்.

**இருக்கல்**—இருத்தல். (உ-ம்.) "அடியரோடிருக்கலாமே" (சி. சி. பாயிர. ரு.)

**இருக்கன்** — இருக்குவேதமுணர்ந்தவன். ( உ-ம். ) "இருக்கன்சதுர்முகன்சிட்சைப்பட்டொழிய" (திருப்பு. சகஅ.)

**இருக்கால்**—1. இரண்டுதரம். (உ-ம்.)"உருளாழிகொடேர்மே - லிருக்கால்வரமூக்கால்வரவெக்காலுமழித்தே" ( பாரத. கரு-ஆம்போர். ககக.) [ககரமிக்கதுசெய்யுளோக்கிய விரித்தல் விகாரமேயாயினும் உலகவழக்கினுமவ்வாறுதல் காண்க.] 2. கவற்றிற்றுயத்துளொன்று.

**இருக்காழ்** — இரண்டு விதைகளையுடைய காய். [காழ்-வித்து. இ-ஒரு விகுதி. இருகாழி என்பது இருக்காழியென்றாயிற்று.]

**இருக்கு**— 1. உபநிடதமுப்பத்திரண்டினொன்று. 2. நான்குவேதங்களிலே முதலாவதுவேதம். (உ-ம்.) "எழுறுமிருக்குவேதம்" (மச்சபு.

சுக்கிர. ருo.) 3. மந்திரம். 4. வாக்கு.(நிருத்தம்) 5. வேதம். (உ-ம்.) "சொல்லுவதிருக்கையெங் கும்" (பெரியபு. திருநாட்டு. கூஉ.) [ஙீவ.]

இருக்குகை—இருத்தல். (உ-ம்.) "பரசமய ங்களிலே செல்லாதிருக்குகைக்கும்" (சி.சி.உ: கo. நிரம்ப அழகியர் உரை.)

இருக்குதல்—இருத்தல். (உ-ம்.)"உழைப்பு" பார்.

இருக்குமாங்கதன்—ஒரு பாகவதன். (த. நி. போ. கசச.) [ரூக்ஷாமகூ.]

இருக்குவேதம்—நால்வகை வேதங்களுளொ ன்று. சதாசிவமூர்த்தியுடைய அதோமுகங்கள் நான்கனுளொன்றாகிய தற்புருடமுகத்தினின் று தோன்றியது.அஃது, இருபத்தொருசாகைக ளையுடையது. (சைவச. பொதுவி. நகூஅ.)

இருக்குவேதவுபநிடதங்கள்— இருக்குவே தத்திற்குரிய உபநிடதங்கள்; அவை: ஐதரேய ம், கௌஷீதகி, நாகவிந்து, ஆத்மப்பிரபோதம், நிருவாணம், திரிபுரை, வஹ்விருசம், முத்கலே, சௌபாக்கியம், அக்ஷமாலிகை என்னும் பத் தும். (கூர்மபு-அட்டமூ.உசு.உரை.) [ஙீ0ஹூ; உவநிஷஉ.]

இருக்கை — 1. ஆசநம். 2. இருக்குமிடம். (உ-ம்.) "பாலுறுந்ததியிழுதுதேனிருக்கைகள் பலவும்"(கந்தபு.திருநகர.சச.) 3. இருத்தல், உ ட்கார்ந்திருத்தல். (உ-ம்.) "மூந்துற்ற் திருக்கை நலம்" (இராமா. அகத்திய. ருச.) 4. ஊர்ப்பொ து. 5. குடியிருப்பு. (உ-ம்.)"தண்பணைதழீஇய தளராவிருக்கை" (பெரும்பா. உசூஉ.) 6. வசிக் குமிடம். (உ-ம்.) "தன்னிருக்கைகொண்டேகி னன்" (கந்தபு. சுக்கிரனுபதேச. கஅ.) 7. வீடு. (உ-ம்.) "எளிதினுங்கிடவழங்குமாலோதநவிரு க்கை" (கந்தபு. திருநகர. சசு.)

இருகடம்—ஒருதுணி. (உ-ம்.) "விதிதிரை வருபுனலிருகடம்"

இருகால்— 1. இரண்டுபாதம். 2. இரண்டு முறை. 3. ஒன்றன்பாதியாகிய அரை.

• இருகுமிழ்—1. குமிழ். 2. நீர்க்குமிழ்.

இருகுரங்கின்கை — முசுமுசுக்கைக்கொடி. [ஒரு குறிப்புமொழி.] (உ-ம்.) "இருகுரங்கின் கைச்சாறுபடிதானென்று" (தேரையர்வைத்தி யநூல்.)

இருகுறணேரிசைவெண்பா—ஒருவகை நே ரிசைவெண்பா; அஃது, இரண்டுகுறள்வெண் பாவும் அவற்றின் நடுவே தனிச் சொல்லுமாக முடிவதும், முதல்வருங்குறள் வெண்பாவினிர ண்டாமடியின் மூன்றாஞ்சீர் காசு அல்லது பிற ப்பு என்னும் வாய்பாட்டானிறுவதுமாய் வருவ து. "தடமண்டுதாமரையின்றாதாடலவ- னிட மண்டிச்செல்வதனைக்கண்டு- பெடைநெண்டு- மூழிக்கதவடைக்கும் புத்தூரேபொய்கடிந்- தூழி நடாயினானூர்" என்பதிற்போல. (காரிகை. செய்யுளிய. கூ.)

இருகை—இருபக்கம். (உ-ம்.) "வந்திருகை யுந்தங்கண்மாந்தளிர்க்கைகணீட்ட"(திருவிளை. திருமண. கசுரு.) [கை - பக்கம்.]

இருகோட்டறுவை — முன்னும் பின்னும் தொங்கலாக நாலவிட்டதுகில். (உ-ம்.) "இரு கோட்டறுவையர்வேண்டுவயிற்றிரிதர" (நெ. வா. ருரு.)

இருகோபி—1. சிறுநன்னாரி, 2. பெருநன் னாரி. (தைல. தைலவ. எசு.)

இருங்காம்—பதக்கு. (உ-ம்.) "ஆபம்" பார் (தைல. தைலவ. சு.)

இருசகம்—மாதுளைமரம். [ஙீவகு.]

இருசட்டு—பன்னிரண்டு. (தைல. தைலவ [சட்டு - ஆறு.]

இருசடு—பன்னிரண்டு. (உ-ம்.) "கடுபத்தி ந்தசமூலமிருசடு" (தைல. தைலவ. உஉ. [ஙீஷ.ட்.]

இருசடை—விலாமிச்சவேர், வெட்டிவேர் (தைல. தைலவ. கூஅ.)

இருசண்பகம்—சிறுசண்பகப்பூ, பருஞ்சண் பகப்பூ. (உ-ம்.) "அல்லி" பார். (தைல.தைலவ. உஅ.)

இருசந்தம்—வெண்சந்தனம், செஞ்சந்தனம். (தைல. தைலவ. கசச.)

இருசந்து—சந்தனம், செஞ்சந்தனம். (தைல. தைலவ. கரு.)

இருசமயவிளக்கச்சோதி—இருசமயவிளக் கத்தின் மறுப்பாகிய ஒரு நூல்.

இருசமயவிளக்கம்—சைவ வைஷ்ணவ சம யத்தை விளக்கிக்கூறிய ஒரு நூல்.

இருசி— 1. ஆகூதிக்கு நாயகன். (கூர்மபு. தமோ. ரு.) 2. இருதுவாகுந்தன்மையில்லாத பெண். 3. ஒரு பெண்பிசாசு. [ஙீஜீ.]

இருசீரகம்— நற்சீரகம்,கருஞ்சீரகம். (உ-ம்.) "தாளிசந்தகரம்மிருசீரகஞ்- சாற்றுபாதிரிக்கூட் டம்" (தைல. தைலவ. உரு.) [ஜீரக.]

இருசு— 1. நேர்மை, செவ்வை.(சூ. நிகண். கக: ககரவெ. கஉ.) 2. பண்டியின் அச்சிரும்பு. (சூ. நிகண்.கக: ரகரவெ. கஉ.) 3. மூங்கின்மரம். [ஙீஜு.]

இருசுடர்— சூரியசந்திரராகிய இரண்டுவான

சோதிகள். (உ-ம்.) "இருசுடர்த்தோற்றம்" (தண்டி. பொது. எ.)

இருசுடர்த்தோற்றம்—பெருங்காப்பியவுறுப்புளொன்று; அஃது: ஆதித்தோதய சந்திரோதயங்களை வருணிப்பது. (தண்டி. பொது. எ.)

இருஞ்சிறை—1. காவல். 2. நரகம். 3. மதில்.

இருட்சரன்—இராட்சதன். (பார. வெ.௫௯.) [இருளிலே திரிகிறவனென்றபடி.]

இருட்சி—1. இருள்கை. 2. மருளுகை.

இருட்டல்—இருளச்செய்தல்.

இருட்டு—1-2. இருட்டென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும். 3. இருளுடையகாலம். (உ-ம்.) "இருட்டிலே போனான்" 4. இருளுடையவிடம். (உ-ம்.) (அருந்தறகவிருட்டின்" (சைவச. பொதுவி. உ௯எ.)

இருட்டுதல்—இருளச்செய்தல்.

இருட்பகைவன்—சூரியன். (உ-ம்.) "நீடிருட்பகைவன்றனைத்-தருதி" (கந்தபு. புதல்வரைப்பெறு. எ.)

இருட்பிழம்பு—இருட்டிரள். (உ-ம்.) "ஒராழித்தேரேறியகிலமெல்லாம் - படருமிருட்பிழம்பறுக்கும்பண்ணவனே" (மச்சபு. மச்சா. ௧௨.)

இருடபி—1. பேடி. 2. வயதுவந்தும் ருதுவாகாமலிருக்கும்பெண். [ரிஷபீ: இதனை வழக்கத்திலே பகரவொற்றைக்கெடுத்து, சம்ஸ்கிருதமுப்பத்தோராம் மெய்யை "ழ"கரமாய்த்திரித்து "இருழி" என வழங்குவார்.]

இருடபத்துவசன்—சிவன்.

இருடபம்—1. இடபம். 2. காதிற்றுளை.

இருடி—1. ஆந்தை. (சூ.நிகண்.௩:௩௦.)2. ஒளி. 3. சுவாதிட்டாந ஆதாரத்துக்குடைய ஆறிதழ்களிலே நான்காமிதழின் அட்சரமாகிய "ய"கர அட்சரத்தினதிதேவதை. (சி.சி.அ:உக. மறை.) 4. முனிவன். (உ-ம்.) "இருடியருஞ்சித்தருமாவெர்காண்" (தைல. தைலவ. ௧௩௬.) 5. வேதம். [ரிஷி.]

இருடிகேசன்—திருமால். (உ-ம்.) "இருடிகேசன்கோவிந்தன்" (திருவானை. கோச்செ. ௬௬.) [ஹ்ருஷிகேச.]

இருடிச்சந்தம்—ஒருவகைச்செபம். (த. நி. போ. ௩௫௬.) [ரிஷிசந்த.]

இருடியஞ்ஞம்—வேதாத்தியயநம். [ரிஷியஜ்ஞ.]

இருடியமூகம் — கிட்கிந்தமலை. [ரிஷ்ய மூக.]

இருண்மலம்—ஆணவமலம். (உ-ம்.) "என்னரிதாய்நித்தமாயிருண்மலத்திலழுந்தி" (சிவப்பி. உ: க.)

இருண்மூகா—நாவி.

இருண்மை—இருளுடைமை.

இருண்டி—சிறு சண்பகச்செடி.

இருணம்—1. கணக்கதிகாரம். 2. கழிக்கப்படுமெண். 3. கோட்டை. 4. நிலம். 5. நீர். [2, 3, 4, 5. ருண.]

இருணிலம்—நரகம்.

இருத்தம்—பிரகாரம். [ரிதம்.]

இருத்தர—இருத்தலைச்செய்ய எனக்கருதும் ஒருவினையெச்சம். (உ-ம்.) "மலைபுரைமாடத்துக்கொழுநிழலிருத்தர" (மதுரைக்கா. ௪௦௬.)

இருத்தல்—1. ஆசநத்தமர்தல். (உ-ம்.) "அதிசயமுடனமர்ந்தயலிருந்துழி" (இராமா. திருவவதார. கஎ.) 2. இருக்கச்செய்தல். 3. சீவித்தல். (உ-ம்.) "நெடுநாளிருந்தபேரும்" (தாயு. பரி. ௧௦.) 4. தங்கல். (உ-ம்.) "மேயிருந்தனன்பணிவேந்தன்கோயிலே" (பாரத. வாரணவத. கஎ.) 5. தாபித்தல். 6. தாழ்தல். 7. நிலைகொள்ளல். (உ-ம்.) "வலம்வரும்படியிருப்பது கைலைமால்வரையே" (கந்தபு. திருக்கைலாச. ௧௨.)

இருத்தி—1. இருக்கச்செய்து எனப் பொருள்படும் ஒரு வினையெச்சம். (உ-ம்.) "உபசாரமுடனருகுறவிருத்தி" (பாரத. நாடுகரந்துறை. ௩௧.) 2. இருக்கிறாய் எனப் பொருள்படும் ஒரு முன்னிலைவினை. (உ-ம்.) "உடையாளுன்றனடுவிருக்கு முடையாணடுவுணீயிருத்தி" (திருவாசகம்.) (கோயின்மூத்த. க.) 3. இருப்பாய் எனப்பொருள்படுமொரு ஏவல்வினை. 4. சித்தி. (உ-ம்.) "அறவெயில்விரித்தாங்களப்பிலிருத்தியொடு" (மணிமே. உக: ௧௬௬.) 5. சுபாவாதீதகிரியாசாமர்த்தியம். (உ-ம்.) "சமணரிலிருத்திபெற்றோன்" (சூ. நிகண். உ: ௪.) 6. மேன்மை. 7. வளர்ச்சி. 8. விருத்தி. [4, 7, 8. ருத்தி.]

இருத்திர்—இருக்கச்செய்யும். (உ-ம்.) "இக்கொடியார்போற்கண்ணுளெம்மையுமிருத்திரென்முர்" (திருவிளை. விளைய. ௧௧.)

இருத்தினர்—யாகத்திலே குருவுக்கு உதவி செய்பவர். [ருத்விஜ்.]

இருத்தினோர்—யாகாசாரியனுக்கு உதவிசெய்பவர். (உ-ம்.) "மூற்றுநாடியவிருத்தினோரணியின்முறையால்" (கந்தபு. வேள்வி. ௩.)

இருத்து—யாகாசாரியருக்கு உதவிசெய்தல்.

இருத்துக்கள்—இருத்துவிக்குகள். (உ-ம்.)

"வாலிதாமிருத்துக்களையலங்கரித்து" (மச்சபு. விருக்கவுற்சவ. உ.) "இருத்திஞேர்" பார்.

இருத்துதல்—1. அழுத்தல். (உ-ம்.) "குறு குகுறுகெனவிருத்தி" (கந்தபு. திருக்குற்றால. கடு.) 2. இருக்கச்செய்தல். 3. நெடுங்காலமிருப்பச்செய்தல். (உ-ம்.) "பசுமட்-கலத்துணீர்பெய்திரீஇயற்று" (வள். ௬௬0. பரி.)

இருத்துவிக்கு—யாகபுரோகிதர்கள். (உ-ம்.) "இருத்துவிக்கெனப்படு-மன்னவர்க்கு" (காஞ்சிபு. சிவா. ௩௪.) "இருத்துக்கள்" பார்.

இருத்துவிக்குகள்—யாகபுரோகிதர்.

இருத்தை — 1. இருபத்திநான்கு நிமிஷங் கொண்ட வோர் நாழிகை. 2. சேங்கொட்டை. 3. நாழிகைவட்டில். 4. நான்காம்பக்கம், ஒன்பதாம்பக்கம்,பதினான்காம்பக்கம் இம்மூன்றுக்கும் பெயர். (சூ. நிகண். ௧: அ௬. செய்யுளிற்காண்க.)

இருதம்—1. உஞ்சவிருத்தி. (உ-ம்.) "உஞ்சவல்விருத்தியிருதமாம்" (காஞ்சிபு. ஒழுக்க. ௩௩.) இவ்விருத்தி ஆன்றோர்க்குரியது. 2. நீர். 3. மெய்ம்மை. [ஸ்ரீ.த.]

இருதயஸ்தாநம் — இலக்கினத்துக்கு ஐந்தாமிடம். (சோதிடகட.)

இருதயம்—1. அன்பு. 2. இரத்தாசயம். 3. இருதயமந்திரம். (உ-ம்.) "ஏலவிருதய நூறெண்" (சைவச. பொதுவி. ௩00.) 4. உள்ளம், மநம். (உ-ம்.) "இருதயகமலமுகுளங்கட்டவிழ்ந்து" (திருப்பு. ௪௫.) [ஹ்ருதய.]

இருதரு—தேவதாரம், சரளதேவதாரம்.(தைல. தைலவ. ௧௩.)

இருதலைக்கபடம்—விலாங்குமீன்.

இருதலைஞாங்கர்— சுப்பிரமணியசுவாமியின்வேல்; அதனை "ஏயெனமுருகனெருட்டவிருதலைபடைத்தஞாங்கர்" (கந்தபு. சூரபன்மன் வதை. ௪௬௫-ஆஞ்செய்யுளிற்காண்க.) [இரண்டுதலையையுடைய வேல் என்றபடி. ஞாங்கர் - வேல்.]

இருதலைநோய்—எழுஞாயிறு என்னும் ஒரு நோய். (உ-ம்.) "இருதலைநோய் பயித்தியங்கண்ணோய்கள்" (தைல. தைலவ. உக.)

இருதலைப்பட்சி— இரண்டுதலைகளையுடையதென்று சொல்லப்படும் ஒரு பறவை.

இருதலைப்பூச்சி—ஒருபூச்சி.

இருதலைமணியன்—மணிபொருந்திய இரண்டுதலைகளையுடையதென்று சொல்லப்படுமொரு பாம்பு.

இருதலைமாணிக்கம்— முத்திபஞ்சாக்ஷர மந்திரம். (வ-று.) "பொருளருளான்மாப்பொருந்திடுந்திரோதை - மருவிருமலமாய் வயங்குமைந்தெழுத்தின்- றிரோதையுமலமுந்தீர்த்ததனிடத்தில்-வரோதயமானவாசியைநிறுவி- வளம்பெறவிசிவாயவாசியென்றுளத்தில்-விளம்புகவின்னைவிளக்குமாநந்த - முத்தியைந்தெழுத்து மொழிந்தனம்" (சிற்றம்பலநாடிகள்) [முதலெழுத்தினின்றுவாசிப்பினுங் கடையெழுத்தினின்று வாசிப்பினுஞ் சொல்லொன்றேயாய்வருதலால் இருதலைமாணிக்கம் எனப்பட்டது.] [ஊணிஜ.]

இருதாரைக்கத்தி— இருபுறமுங்கூறுள்ள கத்தி.

இருதாவிருதம்—ஒருவகைவாதரோகம். (ஜீவரட். ௧௬௩.) [இருத்-மார்பு. ஆவிருதம்-சூழல்.]

இருதிணை—(இலக்கணம்.) உயர்திணை அஃறிணையாகிய இருவகைச்சாதி. (உ-ம்.) "இருதிணைமுக்கூற்றொருமைத்தன்மை" (நன். ௩௩௧.)

இருது— 1. ஏற்றகாலம். (உ-ம்.) "இன்னபோதுமங்கலங்களாமிருது வீதியாத்திரைக்கிது காலம்" (ஞானவா. வைரா. ௪௨0.) 2. கடவுளின் முத்தொழில். 3. பிரபை. 4. மகளிர்கருத்தரித்தலுக்கு உபயோகமாகியகாலம்; அது: பூப்படைந்ததிநம் முதலாகப்பதினாறுநாள். 5. மகளிர்சூதகம். 6. மகளிர்முதற்பூப்பு. 7. மாசமிரண்டுகொண்டபருவம். (உ-ம்.) "பொருள்வயிற்பிரிவோரிருதுவின்கண்ணுடைத்து" (அகப்பொ. அகத்திணை. ௪௧.) [ஸ்ரீ.த-ஙு.]

இருதுக்காட்சி—அகப்பொருட்டுறையினொன்று.

இருதுகாலம்— கருப்பந்தரிக்கக்கூடியகாலம்; அது: பூப்படைந்தநாண்முதற் பதினாறுநாள்வரையுள்ளகாலம்.

இருதுசங்கமநம்— நாயகியுடைய இருதுகாலத்திலே நாயகன் கூடற்குச் செய்யுங்கிரியை. (உ-ம்.) "அங்கப்பிராசநம்" பார். [ஸ்ரீ.த-ஙுஸம்ம நூ.]

இருதுசந்தி— 1. இரண்டுபருவங்களுக்கிடையிலேநிகழுங்காலம்; அஃதாவது: முன்பருவத்தினிறுதி எழுநாட்களும், பின்பருவத்தின்முன் எழுநாட்களும் இருதுசந்தி என்பர். 2. ஒருபருவத்தினது முடிவிலே மற்றொரு பருவந்தொடங்குதல். [ஸ்ரீ.த-ஙுஸம்தி.]

இருதுசாந்தி— இருதுவான பெண்ணுக்குத் தீங்குநேரிடாதபடி செய்யுஞ்சாந்திகிரியை; இதனைச்சோபநகல்யாணமென்பர். [ஸ்ரீ.த-ஙுஶாந்தி.]

இருதுடி—ஏலம், காட்டேலம். (உ-ம்.) "ஆசிதளம்" பார். (தைல. தைலவ. ௬.)

இருதுத்தம்— துத்தம், துரிசு. (தைல. தைலவ. ௬௬.)

இருதுமதி — பூப்படைந்திருக்கிறகாலத்துப் பெண். (உ-ம்.) "ஈனர்புலேயரிருதுமதிநாய்பன்றி" (சைவச. பொதுவி. ௩௦௭.) [ ருது-மதி: மதி - உடையவள்.]

இருதுராசம்-வேனிற்காலம். [ருது-ராஜ]

இருதுவலி— மாதாந்த இருதுகாலகுன்மம். (உ-ம்.) "உயர்கருவறை - யிற்றுனெட்டியவளியொடி ருதுவலியிவையரவெதிருறுசிறுநுணலினமரோ" (தைல. தைலவ. ௨௭.) [ நுணல் - தவளை.]

இருதுவாதல்—பூத்தல்.

இருதுவிருத்தி — பருவங்களின் பெயர்ச்சி. [ருது-வ்ருத்தி.]

இருதோண்டு— பதினெட்டு. (தைல. தைலவ.) [தொண்டு - ஒன்பது.] (சூ. நிகண். ௧௧: ணகரவெ. ௯.)

இருதோத்தி— மெய்பேசல். [ ருதோத்தி: ருத - மெய். உக்தி- பேசல்.]

இருதுதோற்றம்—சரமசரம்.

இருந்தமூலே— எழாது உள்ளடங்கிய முலே. (உ-ம்.) "இருந்தமுலேயாணின்றுளே" ( சிந்தா. காந்தரு. ௨௨௫.)

இருந்து—1.ஓர் அசைச்சொல். (உ-ம்.)"எழுந்திருந்தான்" (நன். பெயரி. ௩.) 2. இரு என்னுந்தாதுவிலிருந்து பிறந்த ஒருவினையெச்சம். 3. கரி. (உ-ம்.) "இருந்தும்வெளிறும்" (புலியூரங்.)

இருந்தை—1. கரி. (தைல. தைலவ.) 2. கரிப்புடச்சாலே. (தைல. பாயிர. ௧௨.)

இருந்தையூர்க்கருங்கோழிமோசியார்— இடைச்சங்கப்புலவர்களுளொருவர். ( இறையனாரகப். ௪. பக்.)

இருநடுவாதல்—இடைமுரிதல். (சிந்தா. முத்தி. ௨௦௬.)

இருநா—1. உடும்பு. 2. பாம்பு. [இருநாவையுடையதென்பதுபொருள்.]

இருநிசி—கஸ்தூரிமஞ்சள் கப்புமஞ்சளென்னுமிருவகைமஞ்சள். (உ-ம்.) "அரேணுகமிருநிசி- யீடினற்சந்துமிசிகச்சோலமுத்தைமதுரங்கடுகை யிவைநவமதே" (தைல. தைலவ. ௨௧. )

இருநிதி— சங்கநிதி, பதுமநிதிகள். (உ-ம்.) "தருவேவநிஞர்க்கிருநிதியே" ( மதுரைப்பதிற்று. ௫.)

இருநிதிக்கிழவன்—குபேரன்.

இருநிம்பம்—வேம்பு, மலேவேம்பு. (தைல. தைலவ. ௭௬.)

இருநியமம்—1. அல்லங்காடி. 2. நாளங்காடி. (மதுரைக். ௩௬௫.)

இருநினேவு—1. இரண்டெண்ணம். 2. ஊசலாடுமனம், ஒரு நினேவிலுறைத்துநில்லாமை.

இருநெறியின்றெறிப்பு—ஓர் வியாதி.(உ-ம்.) " இருநெறியின்றெறிப்புவலியெயிறதைப்புக் - குதுகுலசீக்குங்கர்ணசூலேகர்ண - கூசிகைபாதிரியம்விடாக்குரை" (தைல. தைலவ. ௪௪.)

இருப்பவல்—ஒரு பூண்டு. இதன்வேர் மருந்தாக உபயோகிக்கப்படும்.

இருப்பாணி—இரும்பினுற்செய்த ஆணி.

இருப்பாயுதம்—இரும்பாலாயபடை.

இருப்பிடம்—வாசஞ்செய்யுமிடம். (உ-ம்.) "இருப்பிடமெமக்கீதென்று " ( கந்தபு. திருநகர. ௧௧௪.)

இருப்பு— 1. ஆசனம். (உ-ம்.) "இறைஞ்சியவேந்தர்க்கெல்லாமிருப்பளித்து" (பாரத. சூதுபோர். ௫.) 2. இருக்குந்தன்மை. 3. இருத்தல். ( உ-ம். ) "புனேயுமோவியமேபோலச்-சந்ததமிருப்பைநோக்கி" (ஞானவா. வைராக்.௨௪.) 4. குதம். (உ-ம்.) "இருப்பினிஞர்" (கந்தபு. சூரப. வதை. ௪௨௫.) 5. கையிருப்பு. 6. மீந்திருப்பவை. 7. வாசஞ்செய்யுமிடம். (உ-ம்.) "மூத்தொழிற்புரிமூவரிருப்புடன்" (சேதுபு. இராமதீர்த்த. ௨௦.)

இருப்புக்காய்வேளே — ஒரு செடி.

இருப்புக்கிட்டம்— இரும்புருகிய ஒருவகைக்கட்டி.

இருப்புக்கொல்லி– சிவனுர்வேம்புப்பூண்டு.

இருப்புச்சலாகை— 1. இரணவைத்தியஆயுதத்திென்று. 2. இருப்புநாராசம். 3.துப்பாக்கிச்சலாகை.

இருப்புச்சீரா—இருப்புச்சட்டை.

இருப்புச்சூற்று—பூண். (சிந்தா.)

இருப்புத்தட்டுமுட்டு—இருப்புமணே.

இருப்புநெஞ்சு— இரக்கமின்மையால் இரும்புபோலுமுள்ளம். (உ-ம்.) "வன்னெஞ்சோவிரங்காதமரநெஞ்சோ விருப்புநெஞ்சோ" (தாயு. ஆசையெனு. ௪.)

இருப்புப்பாரை–குழிகல்லுங்கருவி; அஃது: இரும்பினுற்செய்யப்பட்டதும் மரத்தினுற்செய்த பிடிபூண்டதுமாயிருக்கும். (உ-ம்.) "நெட்டிருப்புப்-பாரைக்கு நெக்குவிடாப்பாறை" (நல்வழி. ௩௩.)

இருப்புமுள்— யானையை அல்லது குதிரையைக்குற்றுங்கோல்.

இருப்புமுறி—ஒரு செடி.

இருப்புயிர்—நரகருயிர்; ஜை. (சிந்தா.)

இருப்புலக்கை—ஓராயுதம்; அஃது: இரும்பாலாய உலக்கை.

இருப்புலி—துவரை.

இருப்பூறல்—இரும்புக்கறை.

இருப்பூறற்பணம்—கெட்டுப்போன வெள்ளிப்பணம்.

இருப்பைத்திப்பி— இலுப்பைப்பிண்ணாக்கு. (தைல. பாயிர. சு௫.)

இருப்பை— 1. இருப்பாய் எனப்பொருள்படும் ஒரு முன்னிலைவினைமுற்று. (உ-ம்.) "இருப்பைநாடொறுநெஞ்சமே" (வைராக். ௬௬.) 2. இருப்பைமரம். 3. ஓரூர். (உ-ம்.) "இருப்பையூர்வாழ்" (தாயு. பொது. ௪௦.)

இருபகம்—வெண்காக்கட்டான், கருங்காக்கட்டான். (தைல. தைலவ. எ௬.)

இருபத்தாறந்தத்துவம்— (சுத்தவேதாந்தம்) அகங்காரகதசிதாபாசசீவன். (த. நி. போ. ௧௧௪)

இருபத்தாறம்பொருள்—ஈசுரன். (சிவதரு. ௪௦: ௬௨.)

இருபத்துநாலாந்தத்துவம்—(சுத்தவேதாந்தம்.) மநம். (த. நி. போ. ௧௧௪.)

இருபத்தெட்டாந்தத்துவம்—(சுத்தவேதாந்தம்.) அகங்காரசீவர்க்கு அதிட்டானமான கூடஸ்தன். (த. நி. போ. ௧௧௪.)

இருபத்தேழாந்தத்துவம்— (சுத்தவேதாந்தம்.) மாயோபாதிகனான ஈச்சுரன். (த.நி. போ. ௧௧௪.)

இருபத்தேழாம்பொருள் — பரமேசுரன். (சிவதரு. ௪௦. ௬௨.)

இருபத்தைந்தாந்தத்துவம்—(சுத்தவேதாந்தம். மூலாங்காரம். (த. நி. போ. ௧௧௪.)

இருபத்தைந்தாம்பொருள்— புருடனாகிய ஆன்மா. (சிவதரு. ௪௦. ௬௨.)

இருபத்தொன்பதாந்தத்துவம்— (சுத்தவேதாந்தம்.) மாயவீச்சுரருக்கு அதிட்டானமான பிரமம். (த. நி. போ. ௧௧௪.)

இருபது—இரண்டுபத்து.

இருபரசிவன்—இலயசிவன். (உ-ம்.) "இருபரசிவனெனுமிலயசிவன்றனென்றும்" (சி. சி. ௯௨: எ. ஞானப். உரை.)

இருபலை—சிற்றாமுட்டி, பேராமுட்டி. (தைல. தைலவ. எ௨.)

இருபன்னியம்—சேங்கொட்டை.

இருபனி—முன்பனி, பின்பனி. (உ-ம்.) "இருபனியுமழையும்வெயிலுநின்று" (மதுரைப்பதிற்று. ௪.)

இருபால்வீடு—இருவகைப்பகுதியினையுடைய முத்திகள். அவை: சாலோக, சாமீப, சாருபமாகிய பதமுத்திகளும், சாயுச்சியமாகிய பரமுத்தியுமாம். (உ-ம்.) "இருபால்வீட்டினைவெஃகினோர்க்கு" (கந்தபு. திருநகர. அஅ.)

இருபாலும்—இரண்டுபக்கமும். (உ-ம்.) "மாலுநான்முகத்தண்ணலும்வந்திரு-பாலுமாகி" (கந்தபு. பாயிர. ௧௬.)

இருபாவிருபஃது— அருணந்திசிவாசாரியராலருளிச்செய்யப்பட்ட ஒரு நூல்; அது: சித்தாந்த சாத்திரம் பதினான்கனுளொன்று.

இருபிறப்பாளர்— 1. அந்தணர்; உபநயநத்திற்குமுன்பு ஒரு பிறப்பும் பின்பொருபிறப்புமாகிய இருபிறப்பினையுமுடையராதலின். (திருமுரு. ௧அ௨.) (உ-ம்.) "இருபிறப்பாளர் மூதன்மூதனுற்சாதிக்காகும்" (திருவிளை. மாணிக்க. எ௨.) 2. வேதியர், அரசர், வைசியராகிய மூன்றுவருணத்தவர்களும். (பராசர. உ௧.)

இருபிறப்பு — 1. சந்திரன். 2. சிறகு. 3. பல். 4. பறவைகள். 5. பார்ப்பார்.

இருபுட்சன்—1. இடியேறு. 2. இந்திரன். 3. சுவர்க்கலோகம். [ஸ்ரீஹ-பக்ஷ: ஸ்ரீஹ-தேவன். க்ஷி-ஏவுகிறவன்.]

இருபுட்சி—இந்திரன். [ஸ்ரீஹ-பக்ஷி.]

இருபுறக்கருமம்— கருமகாரகத்துளொன்று; அது. பற்றுக்கருமம் வீட்டுக்கருமம் இரண்டற்கும் புறமாகியகருமம். "மாவுண்ணுஞ்சிறுக்கன் அதன்கணளந்ததாளியைத்தின்றான்" என்பதிற்போலும். இதில் தாளிவேண்டப்படாமையால் பற்றுக்கருமமுமன்று, அறிந்திலாமையால் வீட்டுக்கருமமுமன்று. (வீரசோ. உபகார. ௪.)

இருபுறவசை—தாய்தந்தையராகிய இருமரபினர்பக்கத்திலுங் கூறற்பாலனவாகியவசைகள்.

இருபுறவாழ்த்து—தாய்தந்தையராகிய இருமரபினர்பக்கத்தாரையும் வாழ்த்திக்கூறுதல்.

இருபுனல் — மேல் நீருங்கீழ்நீருமாகிய இரண்டுநீர். (உ-ம்.)"இருபுனலும்வாய்ந்தமலையும்" (வள். எ௩௭.)

இருபெயரொட்டு— இருசொல்லொருசொல்லாக நிற்பது. (உ-ம்.) "பாம்புபாம்பு.

இருபெயரொட்டுப்பண்புத்தொகை— ஆகியவென்னும் பண்புருபு இடையே தொக்குநிற்பப்பொதுவுஞ்சிறப்புமாகிய இரண்டுபெயர் இணைந்துநிற்றல். "சாரைப்பாம்பு"என்பதிற்போலும். (நன். பொதுவி. ௧௪. உரை.)

இருபொருள்—கல்வியுஞ்செல்வமும்.

இருபொழுதும்— காலைமாலை இரண்டுநேரமும். (உ-ம்.) "இருபொழுதுஞ்சிறுகாண்டிவிடைநுகர்மண்டலமே" (தைல. தைலவ. ௪௬.)

இருபோகம்—இரண்டுதரம் விளைவு.

**இரும்**—இருமல்.(உ-ம்.) "இருமிடைமிடைந்த சிலசொல்" (புறநா. உ௪௯.)

**இரும்பலி**—இரும்பிலி.

**இரும்பன்**—காரெலி. (சூ. நிகண். ௩. உ௮.)

**இரும்பிசிராந்தை**—ஒரு புலவர். (புறநா.)

**இரும்பிடர்த்தலையார்**—கடைச்சங்கப்புலவருளொருவர். இவர்: சோழன் கரிகாலனுடைய அம்மான். (மணிமே.)

**இரும்பிலி**— ஓர் செடி.

**இரும்பினீர்மை**— இழிந்தநிலை; ஜை. (சிந்தா.)

**இரும்பு**—1. இரும்பாற்செய்தவாயுதம். 2. கடிவாளம். (உ-ம்.) "இரும்புகுதட்டிவிலாழியுமிழிவுளி" (கூர்மபு. தக்கன்வேள். உ௭.) 3. இம்புரி. "இரும்புசெய்குழவித்திங்கண்மருப்பிடை" (சிந்தா. குணமாலை. உஉ௬.) 4. சத்தலோகங்களுளொன்று. அது: கரும்பொன். (உ-ம்.) "இரசிதம்" பார்.

**இரும்புக்காய்வேளை**—காய்வேளை.

**இரும்புத்துப்பு**—இரும்புக்கறை. [துப்பு - உண்ணுதல்.]

**இரும்புயிர்**— ஐவகையுயிர்களுளொருவகையென்பர். இது: ஜைனநூல்வழக்கு. (மணிமே.)

**இரும்புலி**—1. ஒருசெடி. 2. துவரை.

**இரும்புளி**—ஓர்மரம்.

**இரும்பூறல்**—சாயவேர். [இம்பூறல் என்றுளது.]

**இரும்பை**—1. இருப்பை. (உ-ம்.) "இரும்பைவகுளமொடு" (திருப்பு. ௧௯௭.) 2. குடம். 3. பாம்பு.

**இரும்பொறை**—சேரன். (உ-ம்.) "பல்வேலிரும்பொறைநின் கோல்செம்மையின்" (பதிற்று. ௮௬.)

**இருமடங்கு**— இரட்டித்தஅளவு. (உ-ம்.) "இன்றைக்காயிரநாளைக்கிருமடங்கு" (திருவிளை. மெய்க்கா. ௧உ.)

**இருமடி**—இருமடங்கு.

**இருமடியாகுபெயர்**—ஆகுபெயராய்நிற்கும் ஒன்றன்பெயர் அவ்வாகுபெயர்ப் பொருளோடியைந்தபிறிதொன்றற்காய்நிற்கும்பெயர். "கார்" என்பதிற்போலும். கருமையின்பெயராகியகார், முதல் மேகத்தின் பெயராய் நின்று பின், அம்மேகம் மழைபெய்யுங் கார்காலத்தின் பெயராய் வந்தது.

**இருமடியேவல்** — ஈரேவல்; அது: செய்வியென்பதிற்போல.

**இருமநம்**— கவர்த்தமநம்; அஃதாவது: ஒன்றைச்செய்தலையுஞ் செய்யாமையும் ஒரேகாலத்திலே விரும்புமநம். (உ-ம்.) "இருமனப்பெண்டிரும்" (வள். ௯உ0.)

**இருமரபு**— தாய்வழி தந்தைவழி. (சூ. நிகண். ௧உ: ௩.)

**இருமருந்து** — சோறுந்தண்ணீரும். (உ-ம்.) "இருமருந்துவிளைக்குநன்னாட்டு" (புறநா. ௭0.)

**இருமல்**—இருமுதலாகிய ஒரு நோய்.(உ-ம்.) "இருமலுஞ்சோகையுமிளையும்வெப்பு" (திருமந். அறன்செயா. ௪.)

**இருமல்லி** — சிறுமல்லி பெருமல்லி என்னும் இருவகைமல்லி. (உ-ம்.) "அதிபலை"பார். (தைல. தைலவ. உ௩.)

**இருமுதல்**—ஈரலிலிருந்து சளிமுதலிய பதார்த்தத்தை உரப்பானசத்தத்தோடு தொண்டைத்துவாரத்தாற்கக்கல். (உ-ம்.) "விக்கி - இருமாமுன்மாகாணிக்கேகாமுன்" (தனிப்பா. கா௭.)

**இருமுதுகுரவோர்**—"இருமுதுகுரவர்"பார்.

**இருமுதுகுரவர்**— தந்தைதாயராகிய இரண்டுமுதிர்ந்தபெற்றோர். (உ-ம்.) "இருமுதுகுரவர்தாளிறைஞ்சி" (காஞ்சிபு. வலம்புரி. ௧௬.)

**இருமுதுமக்கள்**—தாய்தந்தையர். (உ-ம்.) இன்றியமையா விருமுதுமக்களும் பொன்றினமைகண்டும்" (பழமொழி.)

**இருமை**—1. இம்மையும் மறுமையும்.(உ-ம்.) "இருமைவகைதெரிந்தீண்டறம்பூண்டார்" (வள். உ௩.) 2. இரண்டு. (தைல. தைலவ.) 3. இருதன்மை. (உ-ம்.) "அருவதாயுருவா-யிருமையாயுறைபூரணன்" (கந்தபு. ததீசி. ௫௭.) 4. உள்ளும்புறம்பும். (உ-ம்.) "இருமையாலெழுதிநேர்ந்தேன்" (பெரியபு. தடுத்தாட். ௫௧.) 5. கருமை. (உ-ம்.) "இருமலர்க்குவளையுண்கண்" (சிந்தா. பதுமையா. ௬.) இருமையென்பதில் மைவிகுதிகெட்டது. 6. துக்கம். 7. பெருமை. (உ-ம்.) "இருமையயன்முடி" (காஞ்சிபு. திருநகர. ௭.)

**இருமையியற்கை** — வேற்றுப்பொருள்வைப்பு என்னும் அலங்கார வகையு ளொன்று; அது: கூடுவதையும், கூடாதவதனையுங்கூடக்கூறுவது. "கோவலர்வாய்வேய்ங்குழலேயன்றிக்குரைகடலுங் - கூவித்தமியோரைக்கொல்லுமால்- பாவாய்- பெரியோரும்பேணுதுசெய்வரே போலுஞ்-சிறியோர்பிறர்க்கியற்றுந்தீங்கு" என்பதிற்போலும். (தண்டி. ௪௭. உரை.)

**இருலவங்கம்**—இலவங்கப்பூ, கிராம்பூ.

**இருவகைக்கூத்து**—சாந்தி, விநோதம். (சிலப்.)

**இருவகைப்பொருவு**— உறழ்பொருவும் உவ

ம்பொருவுமென இருவகையான ஒப்புமை. (தொல். சொல். எஎ. சேனு.)

இருவகையேது — ஞாபகஏதுவுங் காரகஏதுவும். (தொல். சொல். எஎ. சேனு.)

இருவகைவேற்றுமைமயக்கம் — பொருண்மயக்கமும் உருபு மயக்கமுமாகிய இருவகை மயக்கம்; அவை: முறையேதன்பொருளிற்றீராது பிறிதொன்றன்பொருட்கட்சேறலும், தன்பொருளிற்றீர்ந்து சேறலுமாம்"(தொல்.சொல். அச. சேனு.)

இருவயிற்பற்று — அகப்பற்று, புறப்பற்று. (உ-ம்.) "பாடலாடலிற்பயிலினுமிருவயிற்பற்றறுத்திருப்பாரே" (மதுரைப்பதிற்று. கடு.)

இருவர்மாறுகோளொருதலைதுணிவு—எழுவகைமதத்தினொன்று; அஃது: இருவராலேமாறுபட்ட இரண்டினிலொன்றை நீக்கி ஒன்றைத்துணிந்துகொள்வது. ( நன். பொதுப்பாயிர. கக. )

இருவாட்சி— 1. ஒருமரம். ( உ-ம். ) "கண்ணொளியுமெய்யிற்கமழ்மணமுநீடழகு- நண்ணும்வலிமூர்ச்சைநாசமாம்-பண்ணளியுங்- கங்குலும்வாழ்வார்குழலேகாரமொடுவெப்புமிகத்-தங்குமிருவாட்சிமரத்தால்" (பதார்த்தகுண. உஉரு.) 2. கருமுகைச்செடி.

இருவாட்டித்தரை — மணலுங் களியுமான இருவகைத்தோட்டத்தரை.

இருவாம்— நாமிருவரும். (உ-ம்.) "இருவாமையீனயேத்துவாம்" (கலி. ௬௩.)

இருவாய்க்குருவி—ஒருபறவை.

இருவாழ்ச்சி—இருவாட்சி.

இருவாளிப்பு—இருமநம். [வலித்தல்- நினைத்தல். வகரநீண்டு லகரம் ளகரமாய்த்திரிந்தது போலும்.]

இருவி— 1. இருத்தியெனப்பொருள்படும் ஒருவினையெச்சம். (உ-ம்.) "ஒல்குநிலனெடுத்திருவி"(தணிகைபு. நாட்டு. உக.)2. தினைக்கதிர் கொய்ததாள். (உ-ம்.) " இருவிசெய்தாளின்று காட்டும்" (திருக்கோ. கசச.)

இருவிக்காந்தம்— ஒரு நச்சுமூலிகை.

இருவில்—கரியவொளி. (சிந்தா.)

இருவினை— 1. நல்வினை தீவினை. (உ-ம்.) " இருவினையின்பதுன்பத்து " (சி. சி. உ: ச.) 2. பெருஞ்செயல், அது சிவயோகம். (உ-ம்,) " இருவினைபுனைந்து ஞாநவிழிமுனைதிறந்து " (திருப்பு. ககo.)

இருவினையொப்பு— நல்வினையால்வருமின்பத்திலும் தீவினையால் வருந்துன்பத்திலும் சமபுத்திபண்ணல்.

இருவுக—இருத்துக எனப்பொருள்படுமொருவியங்கோள்வினைமுற்று. (உ-ம்.) "கண்ணடிக்குள் ளொளிர் சாயையென்கையினிருவுகென" (தணிகைபு. களவு. ௬௮௪.)

இருவேம்— இருவராகிய நாம். (கலி. ௬௩. உரை.)

இருவேர்— வெட்டிவேர், இலாமிச்சுவேர் ஆகிய இரண்டுவேர்கள். (உ-ம்.) "அல்லி" பார். (தைல. தைலவ. உ௮.)

இருவேல்— வெள்வேல், கருவேல் ஆகிய இருமரம், (தைல. தைலவ. க௬௫.)

இருவேலி—வெட்டிவேர்.

இருவேளை—தைவேளை, நல்வேளைப்பூண்டுகள்.

இருழி—இருடபி. (உ-ம்.) "இருடபி" பார்.

இருள்— 1. அதிகோரமென்னுநரகத்தின் பத்துவகையான நாயக நரகங்களுளொன்று. (சிவதரு. சுவர்க்கநரகவி. கக௬.) 2. அந்தகாரம். (உ-ம்.) "இருளுலகிலறவுலவுமிரவியின்றேல்" (சிவதரு. பரமதரு. உஉ.) 3.அறியாமை.(உ-ம்.) "புந்திமேற்கொண்ட-விருளொழிந்தனர்" (கந்தபு. ததீசிப் ௬o.) 4.ஆணவமலம்.(உ-ம்.)"கண்ணிருடீர்ந்து" (சி. சிவஞானபோ. உ-ம்.பக்.) 5. கருமை. (உ-ம்.) "இரும்பிடி மேஎந்தோலன்ன விருள்சேர்பு" (மதுரைக்கா. ௬௬௪.) 6. நரகம். (உ-ம்.) " இருணீங்கியின்பம்பயக்கும் " (வள். ௫௨.) 7. மயக்கம், (உ-ம்.) "இருள்சேரிருவினையுஞ்சேரா" (வள். ௫.) 8. மலம், (உ-ம்.) "பிறவிமாயாவிருளெலாமிரிக்கலாகும்" (சி. சி. பாயிர. ௫.) 9. யானை.

இருள்பருதுமருமணி— உதயகிரியிலே சிந்தூர அருவிவீழ்ந்த சிந்தூரசாகரத்திலேபிறந்து பதினறுசதுர்யுகஞ் சிவப்பேறினமுழுமாணிக்கம். (சிந்தா. நாமக. கசo.)

இருள்வரை—கிரௌஞ்சகிரி. (உ-ம்.) "இந்திரண்டனையகூர்ம்பவிருள்வரை நெஞ்சுபோழ்ந்த-மைந்தனில்வலியகாளை" (திருவிளை. இந்திரன்முடி. ௫ச.)

இருள்வலி— சூரியன். (உ-ம்.) "நாரதனிருள்வலிவழிவருநரபதிநலமேவ" ( வேதாரணியபு. கோலாகல. க௬.)

இருளர்—வேடர்.

இருளல்—இருளுதல்.

இருளறை— ஆணவமலம். (உ-ம்.) "அவத்தைதத்துவமழிபடவிருளறை விலக்குவித்து " (திருப்பு. உசஉ.)

இருளன்— 1. ஒரு பிசாசன். 2. மலையில்வாழுமோர்சாதியன்.

இருளி— 1. கருஞ்சீரகம். 2. பன்றி. 3. வேட்டுவப்பெண். (இராசவைத்.)

இருளிச்செவி—அழுக்கிராய்ச்செடி. (உ-ம்) "கடகரோகணியிருளிச்செவி முருகுநிறைந்த தாருந்-தீர்க்கமதுரிக்குமஷ்டிமதுகமருட்கிழங்கு மந்திட்டிமூலம்" (தைல. தைலவ. சுஉ.)

இருளுதல்—1. இருளாதல். 2. ஒளிமழுங்கல். 3. கருநிறமுடையதாதல். (உ-ம்.) "இருண்டகல்லேயுந்தன்னிறமாக்கியவிரதம்" (இராமா. வரைக். அ.) 4. மருளல்.

இருளுலகம்—நரகம். (உ-ம்.) "இம்மூன்றுமிருளுலகஞ்சேராதவாறு" (திரிகடு. கூo.)

இருளோவியகரை—முத்தி. (உ-ம்.) "இருளோவியகரையேறவுய்ப்பாய்" (திருநூற். ரு.)

இருமிமஸ்தகி—ஒரு மருந்து. இது:, தைலம் அல்லது பிசினுள்ளவஸ்து என்றும், பெலங்கொடுக்கும் மருந்து என்றும், சாலாமிசிரி என்னும் வஸ்துவுடன் சேர்த்துக்கொடுக்கப்படுகின்றதென்றும் சையாசென்னுந் தீவிலிருந்து செங்கடல்வழியாக வருகின்றதென்றுஞ்சொல்வர்.

இரெட்டி—ஒரு சாதி. [தெலுங்கு.]

இரெப்பை—கண்மடல். [தெலுங்கு.]

இரேக்கு— 1. ஒருவகைச்சல்லா. 2. தத்துவம். 3. பூவிதழ். 4. பொற்றகடு. [1, 3, 4. தெலுங்கு.]

இரேகபிராணன்—1. தேகத்தோடைக்கியமானசீவன். 2. மிகுசிநேகம்.

இரேகம்—1. அச்சம். 2. சந்தேகம். 3. தவளை. 4. தேகம். 5. மலமோசநம், நோயினுலாதல் மருந்தினுலாதல் வயிறுகழிதல். [ரேசு.]

இரேகன்— 1. கீழ்மகன். 2. சாதியாற்றள்ளுண்டவன். [ரேக:]

இரேகாகணிதம்— 1. கீற்றினுலளக்கப்படுவது. 2. கேத்திரகணிதம். [ரேகாகணித]

இரேகாத்திரயம்—அபயஞ்செய்தல்.

இரேகி—1. அதிட்டவான். 2. கீழ்மகன்.

இரேகித்தல்—1. ஒன்றித்தல். 2. சேருதல். 3. பழகுதல்.

இரேதுத்தி—ஓரிராகம்.

இரேதுபதி—ஓரிராகம். (அரி. வி. ரு.)

இரேகை— 1. அற்பம். 2. இறை. 3. எழுத்து. 4. சந்திரரேகை. 5. சித்திரம். 6. தொடர். 7. நிரை. 8. வரி. 9. வரை. [ரேகா.]

இரேசக்குணு—கடுகு.

இரேசகம்—1. நாசியால் அகத்துள்ள அசுத்தவாயுவைப்புறத்தேகழித்தல். (உ-ம்.) "போற்றிரேசக நன்மூச்சைவிடுக்குதல்" (கூர்மபு. யோகமு. கக.) [ இது பிங்கலேயினுலேகோணலில்லாமல் நேராயிருக்கிற ஊர்த்துவசரீரங்கண்டம், இவற்றையுடையவனுய்ச்செய்யவேண்டும்.] 2. பேதிமருந்து. 3. வெறுமையாக்கல்.

இரேசகி—1. கடுக்காய். 2. சேந்தில்.

இரேசகித்தல்— நாசியினெருதுவாரத்திலே வாயுவைவெளிவரவிடுதல். (உ-ம்.) "இடையாலிரேசகித்தல்" (சூத. ஞாநயோக. கசு: சு.)

இரேசந்திரம்—இரதம், சூதம்.

இரேசம்—இரசம், சூதம்.

இரேசலம்—1. நவமணிக்குற்றத்தொன்று. 2. நெல்லினிறம்.

இரேசன்— 1. அரசன். 2. வருணன். 3. விட்டுணு. 4. வெள்ளுள்ளி. [ரேச.]

இரேசநம்—1. குறைத்தல். 2. நாசியினெருதுவாரத்தினுல் ஒருவாயுவைவிடுதல். 3. விரேசநம். 4. வெறுமையாக்கல். [ரேசந.]

இரேசி— இரேசி யென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும். (உ-ம்.) "முன்னமிரேசிமுயலுபின்பூரகம்-பின்னதுகும்பம்பிடி" ( ஔவைகுறள். தன்பால். சிவயோகநிலை. சு.)

இரேசித்தல்—1. உமிழ்தல். (கோயிற்பு. பதஞ்சலி. ருஉ. உரை.) 2. நாசியினெருதுவாரத்திலேசுவாசம்விடுதல்.

இரேசிதம் — 1. குதிரை ஐங்கதிகளுளொன்று; அது: சுற்றியோடல். (திருவிளை. மெய்க்கா. சுஎ. உரை.) 2. பரதத்தின்பொதுவிலக்கணமாகிய இருபது பேதங்களு ளொன்று. (உ-ம்.) "அங்ககாரம்" பார். 3. வெறுமையாக்குதல். [ரேசித.]

இரேசுதல்—அசீரணம்.

இரேணு—1. துகள். (உ-ம்.) "வணங்கிரேணுவடிவுமிலாது" (தக்ஷிண. அர்ச்ச. சுசு.) 2. பூந்தாது.

இரேணுகம்—ஒருமருந்து.

இரேணுகை—1. காட்டுமிளகு. (உ-ம்.) "இரேணுகைகச்சந்தருசாய்நாரியிவை" ( தைல. தைலவ. உச.) 2. சமதக்கினியின்மனைவியும் பரசுராமரின்தாயுமான ஒருபெண். (நீதிவெண்பா.)

இரேதசு—சுக்கிலம். [ரேதஸ்.]

இரேபதம்—1. தருமநூல் பதினெட்டினென்று. 2. வடவிரேபதம் தென்னிரேபதம் என நவகண்டங்களுளிரண்டைக்கருதும் ஒருபதம்.

இரேவதிகோன்கன்— பலதேவன். ( சூ. நிகண். க: கo.)

இரேயம்—கள்.

இரேவதம்— 1. இரேபதம். 2. இரேவதிநட்சத்திரம்.

**இரேவதன்** — பலதேவனது மனைவியின்பிதாவாகிய ஒரு பிரபு.

**இரேவதி** — 1. இருபத்தேழா நட்சத்திரம். 2. பலதேவன்மனைவியாகிய ஒருபெண். [ரேவதி.]

**இரேவதிகோண்கன்**—பலதேவன். (சூ. நிகண். க: ௧0.)

**இரேவந்தன்**— நிகழுங்கற்பத்தின் ஐந்தாம் மநு.

**இரேவு**— 1. ஆயத்துறை. 2. இறங்குந்துறை. [தெலுங்கு.]

**இரை**—1-3. இரையென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும்,வினைத்தொகையும்.(உ-ம்.) "இரைசங்கொலி" (பெரியபு. திருநாவு. ௭௬.) 4. உணவு. (உ-ம்.) "இரைக்கேயிரவும்பகலுந்திரிந்து" (பட்டினத்தடி. திருக்காளத்தி. ௫.) 5. ஒலி. (உ-ம்.) "இரையுந்தெழுதுநீர்வையை" (திருவிளை. பரிநரி. ௫௭.) 6. கள். 7. நீர். 8. பூமி. 9. பேச்சு. 10. விலங்குமுதலியவற்றினுணவு. (உ-ம்.) "இரையெனவதனைவிழுங்குமுன்" (பாரத. குருகுல. ௧0௫.)

**இரைஇய**—இரத்தற்கு. (பதிற்றுப்.)

**இரைக்குடர்**—இரைப்பை.

**இரைகொள்ளி**—1. இரைப்பெட்டி. 2. பெருந்தீனியாள்.

**இரைச்சல்**—ஆரவாரம்.

**இரைத்தல்**— ஒலித்தல். (உ-ம்.) "இரைத்துவருகான்மகனும்" (பாரத. வெளிப்பா. ௫.)

**இரைந்து**— 1. இண்டஞ்செடி. 2. வெண்கலம்.

**இரைதல்**— 1. ஒலித்தல். 2. சீறுதல்.

**இரைநீர்**—கடல்.

**இரைப்பற்று**—சமியாதிருக்குமுணவு.

**இரைப்பு**—1. இரைதல். 2. ஒருநோய்.

**இரைப்பெட்டி**— இரைதங்கும்பை.

**இரைப்பேலி**—ஒருவகையெலி; இது: கடித்தலினாலே கடிபட்டவனுக்குக் குறுமூச்சுண்டாகுமென்பர்.

**இரைப்பை**–இரைப்பெட்டி; அது: பறவையினிரப்பையென்க.

**இரைமீட்குதல்**— அசைவெட்டுதல், இரையெடுத்தல்.

**இரையூர்**— கார்காத்த வேளாளர்குலத்துள் நாரணக்குடைக்கோத்திரத்திலுற்பவித்து மச்சபுராணந்தமிழில் மொழிபெயர்த்த வடமலையப்பபிள்ளைபிறந்த ஊர். (மச்சபு. முகவுரை.)

**இரௌகிணேயன்**— 1. (பாஞ்சராத்திரம்) குணதத்துவத்துக்குமேலே இருபத்தைந்தாந்தத்துவமாகிய வாசுதேவனினின்றும் சகத்தை உண்டாக்கு நிமித்தமாகத் தோன்றிய நால்வருளொருவன். (சிவஞானபா. ௧அ.) 2. புதனென்னுங்கிரகம். [ரௌஹிணேய.]

**இரௌத்தர்**—1. குதிரைச்சேவகர். 2. சோனகர். (இந்துஸ்தான்.)

**இரௌத்திரம்**—1. பெருங்கோபம். 2. உருத்திரசம்பந்தமானது. 3. சூரியவெப்பம். 4. பகலில்வரும் முதலாமுகூர்த்தம். (விதாந. குணகுண. ௭௬. உரை.) 5. வீரமுதலிய எண்சுவைகளுளொன்று. அது: கோபச்சுவை. 6. வெப்பம். [ரௌத்ர.]

**இரௌத்திரவம்**— சுபாவக்குணம் ஒன்பதினொன்று. அது: பெருங்கோபம்.

**இரௌத்திரன்**—1. உருத்திரனை வணங்குகிறவன். 2. நமன். [ரௌத்ர.]

**இரௌத்திரி**–1. உருத்திரன்மனைவி. இவள் மூன்றுகோடியோசனை விசாலங்கொண்ட விந்துமண்டலத்திலே சங்கரித்தல் காரணமாக இருப்பள். (சைவச.பொது. ௭௪. உரை.) 2. கோபமுடையாள். 3. வியாழவட்டமாகிய அறுபது வருடத்தின் ஐம்பத்துநாலாவது. [ரௌத்ரீ]

**இரௌரவம்**—1. ஒரு நரகம். (உ-ம்.)"இருள்புழுதிவடிவாகியிடர்மிகுத்த ரௌரவத்தை - யரையனெனவறிந்திடுக" (சிவதரு. சுவர்க்கநரக.௧௨௭.)2.சிவாகமம் இருபத்தெட்டினொன்று; இஃது: ஆதியிலே ருரு என்பவருக்கு உபதேசிக்கப்பட்டமையால் ரௌரவமெனப்பெயர்கொண்டது. இந்த ஆகமத்தின் எழுபத்துமூன்றுவதுபடலமாகிய பாசவிமோசநபடலத்துப்பன்னிரண்டாவது அத்தியாயத்துப்பன்னிரண்டு சூத்திரமே சிவஞானபோதம். (சி. சி. வ-று.) [இகரம், "ரவ்விற்கம்முதலாமுக்குறிலும்"என்றவிதிப்படிவந்தது.]

**இல்**— 1. இடம். (உ-ம்.) "உடலமண்ணுறவிழுந்து - வேயிலையடைந்தவரை மெய்ப்புகழ்வழுத்தா" (திருவிளை. வாதவூ. ௬௬.) 2. இராசி. (உ-ம்.) "ஒற்றையில்லினிற்புதிலாண்" (விதாந. கர்ப்பா. ௫.) 3. இல்லாத. (உ-ம்.) "கிளைஞரில்போழ்திற்சினங்குற்றம்" (நான்மணிக்கடிகை. ௧௧.) 4. இல்லையெனப்பொருள்படும் ஒரு குறிப்புவினைமுற்றுச்சொல். (உ-ம்.) "எஞ்சலெனுஞான்றுமில். (வள். ௬௪.) 5. எண்ணின்கண் வருமொருசாரியை. (உ-ம்.) "ஆட்சியிலாவணத்தில்" (பெரியபு. தடுத்தா. ௫௬.)6. எதிர்மறைப்பொருளைக்கொடுக்கும் ஓரிடைநிலை. (உ-ம்.) "செய்திலன்" 7. ஏழாம்வேற்றுமையில் இட

ப்பொருளிலே வரும் ஒருருபு. (உ-ம்.) "ஊரிலிருந்தான்." 8. ஐந்தாம்வேற்றுமையிலே வரும் நீங்கல், ஒப்பு, எல்லை, ஏதுவாகிய இவற்றின் ஒருபொருளிலேவரும் ஒருருபு. (உ-ம்.) "தமரிற்றீர்ந்தான், காக்கையிற்கரிதுகளம்பழம், சென்னையில்வடக்குச்செருத்தணிவரை, கல்வியிற் பெரியவன் கம்பன்." 9. சாவுப்பொருளைக்கொடுக்கும் இன்மையடியாற்பிறந்த ஒரு குறிப்புவினைமுற்று. 10. தலைவி. 11. தேற்றாங்கொட்டை. (உ-ம்.) "இல்லாமலகமிரண்டுமெயின்றுல்" (இராசவைத். ௪௫.) 12. மனைவி. (உ-ம்.) "புகழ்புரிந்தில்லிலோர்க்கில்லை" (வள். ௫௯.) 13. வீடு. (உ-ம்.) "இதுவென்னிரினின்னிலதுவென்னினும்" (பாரத. கிருட்டிண. ௧௦அ.)

**இல்புலப்பயன்றற்குறிப்பு**— ஒரலங்காரம்; அஃது: இயல்பாய் இல்லாதபயனையுள்ளதாகத்தற்குறிப்புச்செய்தல். "வநத்தினின்றுளுற்றுதவத்தினால் நின்சீரடிக்கிணையாயதுகமலம்" என்பதிற்போல.

**இல்புலவேதுத்தற்குறிப்பு**— ஒரலங்காரம்; அஃது: இல்லாதவேதுவையெடுத்துத்தற்குறிப்புச்செய்தல். "முகவொளியைப்பாவாய்பெறற்குமுண்டகத்தோ-டிகலுமதியையமிலை" (விசாக. அணி. ௪௨.)

**இல்பொருள்**—இல்லாதபொருள், அசத்து. (உ-ம்)"மேற்கூறிப்போந்த இருதிறனுமல்லாத பிரமப்பொருளாவது உள்பொருளுமன்று இல்பொருளுமன்று இரண்டுமாவதுமன்று வேறுமன்று என்று அநிர்வசநமாகக்கூறிற்படுமிழுக்கென்னையெனின்" (சி. சி. ௬: ௫. சிவஞாந.)

**இல்பொருளுவமை**— இல்லாத ஒன்றனைக் கற்பித்துக்காட்டுமுவமை. "பெற்றம்புலியின் றோல்போர்த்துமேய்ந்தற்று" என்பதிற்போல. (வள். ௨௭௩. பரி.)

**இல்பொருளுவமையணி** - முன்பில்லதனை யுவமையாக்கி உரைக்குமலங்காரம். (இல்பொருளுவமை பார்.)

**இல்லக்கிழத்தி**—மனைவி. (ப. ம்.) [இல்லம்-வீடு. கிழத்தி - உரியவள்.]

**இல்லடை**—1. அடைக்கலம். 2. இல்லுவமம். 3. பண்டகசாலை. 4. வீட்டிலே பாதுகாப்புக்காக வைக்கப்பட்டபொருள்.

**இல்லது**— 1. இல்லாதது, கிடைக்காதது. (உ-ம்.) "இல்லதெனில்லவண்மாண்பானால்" (வள். ௫௩.) 2. இல்பொருள். (உ-ம்.) "தேரினில்லதற்கோ தோற்றமுள்ளதற்கோ நீ செப்பாய்" (சி. சி. ௧: ௫.) 3. மனையிலுள்ளது. 4. மனைவியுடையது.

**இல்லதுசார்ந்தவில்வழக்கு**—(பௌத்தம்) உணர்வில்லாமற்போவது; அஃது: உள்ளங்கையின்மயிருண்டென்பதும்அம்மயிராற்செய்தகயிறுண்டென்பதும் எனமுன்னும் பின்னும் இல்லதென்பது. "உணரினல்லதுசாரின்மையுள்ளங்கையுரோமமாணே" என்பதிற்காண்க. (சி. சி. பர. சௌத்திராந்திகன். ௧௧.)

**இல்லதுசார்ந்தவுள்வழக்கு**—(பௌத்தம்) அறிவு முன்புள்ளதல்லதாய்ப் பின்புண்டாமென்பது. அஃது: "உணர்வுமுன்பின்றித்தோன்றலில்லதுசார்ந்தவுண்மை" என்பதனாற்பெறப்படும். (சி. சி. பர. சௌத்திராந்திகன். ௧௧.)

**இல்லம்**—1. இல்வாழ்க்கை. 2. தேற்றாமரம். (உ-ம்.)"அண்டம்" பார். (தைல. தைலவ. ௬௬.) 3. மனைவி. 4. வறியேம் எனப் பொருள்படும் ஒரு தன்மைப் பன்மைக் குறிப்பு வினை முற்று. (உ-ம்.) "இல்லமென்கிளவியங்நாட்டிருப்பவரிசைக்குங்காலை- வெல்லருங்கேள்விமேலோர் விதித்திடுமிலக்கணத்துட்- சொல்லிடும் பெயரேயேனைத்தொழிற்குறிப்பிரண்டினுள்ளும்" (சேதுபு. நாட்டு. ௧௦௧.) 5. வீடு. (உ-ம்.) "அருளுடை யறத்தின்வாழ்வா மங்கரில்லமெங்கு-மிருளுடையிந்திரநீலத்தியன்றசாளரங்களுக்கி" (பாரத. இந்திரப்பிரத். ௬௧.)

**இல்லல்**— 1. கடத்தல். 2. நடத்தல், போகுதல்.

**இல்லவண்முல்லை**—இல்லாண்முல்லை. (முல்லைப்புறம்.) (உ-ம்.) "தலைமகன்பாசறைக்கண் - மாசறுமாதரையுள்ளுதல் - மாசற்ற-வில்லவண்முல்லையுமஃதேயாம்" (வீரசோ. பொருட். ௪௨-ம். உரையும்.)

**இல்லவள்**— மனைவி. (உ-ம்.) "இல்லதெனில்லவண்மாண்பானால்" (வள். ௫௩.)

**இல்லவன்**—1. கணவன். 2. தலைவன்.

**இல்லவை**—1. இல்லாதவைகள். 2. மனையிலுள்ளவைகள்.

**இல்லறத்தின்றுறைகள்**— தன்னையொழிந்தமூவர்க்கும், துறந்தார்க்கும், துவ்வாதவர்க்கும், இறந்தார்க்கும், தேவர்க்கும், முநிவர்க்கும், விருந்தினர்க்கும், சுற்றத்தார்க்கும், பிறர்க்குந்துணையாதலும், வேள்விசெய்தலும், சீலங்காத்தல்முதலியனவும், அருளுமன்புமுடையனாதலும் பிறவும். (சிலப்.)

**இல்லறம்**— இல்வாழ்க்கைநிலைக்குவேண்டியநெறிக்கண் நின்று அதற்குத்துணையாகியகற்புடைமனைவியோடுங் கூடி ஒழுகு மொழுக்கம். (உ-ம்.) "இந்நாள்காறுமடியமில்லறத்தையாற்றி" (கந்தபு. திருநகர. ௧௧௨.)

**இல்லாகியர்**— இல்லையாகுக. (உ-ம்.) "இயைந்தகேண்மையில்லாகியர்" (புறநா. ௧௧௦.)

**இல்லாகியார்** — வறிஞராய்வந்தோர், இல ராயொழுகினோர். (உ-ம்.) "இவறியார்" பார்.

**இல்லாதுக**—இல்லையாகுக.

**இல்லாச்சிரமம்**—இல்லறநிலை.

**இல்லாண்முல்லை**—தலைவி நாயகனைவாழ்த் தியில்லின்மிகுதியைக்கூறியது. (புறப்பொரு ள். பொதுவியல். முல்லை. ரு.)

**இல்லாண்மை**— குடியினை ஆளுந்தன்மை; அது: தன்குடியிலுள்ளாரை உயரச்செய்துதன் வழிப்படுத்தல். (உ-ம்.)"தான்பிறந்த-வில்லாண் மையாக்கிக்கொளல்" (வள். ௲௨௬.)

**இல்லாத்தனம்**—வறுமை.

**இல்லாதபொய்**—முழுப்பொய்.

**இல்லாதவன்** — வறியவன்.

**இல்லாநயநி**— கண்ணில்லாதவன். (உ-ம்.) "இல்லாநயநிதன்மகன்சொற்கேட்டு" (பாரத. நச்சுப்பொ. ௪௨.)

**இல்லாமை** — 1. உள்ளதாகாமை. (உ-ம்.) "ஒருமதுவெனக்கிங்- கில்லாமையொன்றினையு மில்லாமையாகவே" (தாயு. எங்குநிறை. ௮.) 2. தரித்திரம். (உ-ம்.)"இல்லாமைசொல்லி யொரு வர்தம்பாற்சென்றிழிவுபட்டு - நில்லாமைநெஞ் சினினைகுவிரேல்" (அபிராமி. ௯௪.)

**இல்லார்**— 1. இல்லையாகச்செய்தவர்; இது: பண்படியிற்பிறந்தவினைப்பெயர். (உ-ம்.) "மலை வில்லாரருளிய" (சிவஞானபோ. சிவஞா. காப்பு.) 2. வறியவர். (உ-ம்.) "உடையார்முனில்லார் போலேக்கற்று" (வள். ௬௯௫.)

**இல்லாள்**—1. உடையளல்லாதவள்.(உ-ம்.) "மனையெனுமுறையில்லாள்" (கந்தபு. வில்வ லன்வாதாவி. ௧.) 2. தரித்திரி. 3. மனைவி. (உ-ம்.) "இல்லாளினூடிவிடும்" (வள். ௲௩௧.)

**இல்லாளி**—கிருகஸ்தன். (உ-ம்.) "உரைத் தாயில்லாளிகணபிச்சை" (சைவச. பொதுவி. ௩௭௬.)

**இல்லான்**—1. இல்லாதவன். (உ-ம்.) "இல் லானுக்கன்பிங்கிடம்பொருளேவன்மற் - றெல் லாமிருந்துமவற்கென்செய்யும்" (நன்னெறி. ௧௫.) 2. கணவன். [இல்லையுடையவன் என்ற வாறு.] 3. தரித்திரன்.(உ-ம்.)"இல்லானை இல் லாளும்வேண்டாள்" (நல்வழி. ௩௪.)

**இல்லி**—1. பொள்ளல். (உ-ம்.) "இல்லிக்கு டம்" (நன். பொதுப். ௩௮.) 2. தேற்றுமரத்தி னிலை. 3. பெண்ணுறுப்பிற்குறைவுள்ளாள். 4. வான்மிளகு.

**இல்லிக்காதன்**— பெருந்துளையுள்ளகாதை யுடையவன்.

**இல்லிடம்**—வீடு.

**இல்லுநர்**—மேவினர்.

**இல்லுவமம்**— } **இல்லுவமை**— } உவமாலங்காரத்தொன் று; அஃது: உலகத்தின் உளதல்லாத தொன்றனை உவமையாகவெடுத் துச்சொல்லுதல்.(உ-ம்.)ககனாரவிந்தம்போலும்.

**இல்லுறைகல்**—அம்மி. (உ-ம்.) "இல்லு றைகல்லின்வெண்மலர்பரப்பி" (கல்லா. ௧௧.)

**இல்லெனறல்**—1. இல்லையென்றுசொல்லி மறுத்தல். 2. இறந்துபோனானென்றுசொல்லு தல். 3. பொருளில்லையென்றுசொல்லுதல்.

**இல்லெனல்**—இல்லையென்றல்.

**இல்லை**—1.இன்மைப்பொருளையுணர்த்தி ஐம் பான்மூவிடத்திலும் வரும் ஒரு குறிப்புவினை முற்று. (உ-ம்.) "உய்திறமில்லையென்றுயிர்ப்பு வீங்கினர்" (இராமா. திருவவதார. ௧௮.) 2. சா தலையுணர்த்தி ஐம்பான்மூவிடத்திலும் வரும் ஒரு குறிப்புவினைமுற்று. (உ-ம்.) "நெருநலுள னொருவனின்றில்லையென்னும்" (வள். ௩௩௬.)

**இல்லொழுக்கம்** — இல்லாளோடு வீட்டிலி ருந்து அறஞ்செய்தல். (உ-ம்.) "கூறுமில்லொ ழுக்கந்தன்னை" (கந்தபு. மார்க்கண்டேய. ௩௩.)

**இல்லொழுக்கு**—இல்லொழுக்கம். (உ-ம்.) "ஏதிலார்பக்கமாகியில்லொழுக்கிறந்தார்" (கந் தபு. தவங்காண். ௨௨.)

**இல்லோர்மெய்ப்பறை**—வறியவர்களுக்கு க்கவசம்போல்வான். (பதிற்றுப்.)

**இல்லோன்**—1. கணவன். 2. தரித்திரன்.

**இல்வலன்**—வாதாபியுடையதமையன்.

**இல்வழக்கு**—(பௌத்தம்.) இல்லதனை இல் லையென்க. அது: முயற்குக்கொம்பில்லையென் பதுபோல்வது. (உ-ம்.) "முயற்கோடின்றில் வழக்கே" (சி. சி. பர. சௌத். ௧௦.)

**இல்வாழ்க்கை** — மனையாளோடுகூடிவாழ் தல். (உ-ம்.) "தானக்குரியவில்வாழ்க்கையதனை யேயறமெனக்கூறி" (வை. நீ. ௧௧.)

**இல்வாழ்பேய்**—துஷ்டமனைவி.

**இல்வாழ்வான்**— இல்லறத்தோடுகூடிவாழ் பவன். (உ-ம்.) "இல்வாழ்வானென்பானியல்பு டையமூவர்க்கு நல்லாற்றினின்றதுணை" (வள். ௪௧.)

**இல்வாழ்வு** — இல்லோடு கூடி வாழுகை. (உ-ம்.) "இல்வாழ்வென்னும்வெஞ்சிறையகத் தும்வீழேன்" (கந்தபு. மார்க்கண்டேய. ௩௨.)

**இலக்கணச்சிதைவு**— இலக்கணநூலிலே விதித்த விதிகளுக்கு விலக்காகச்சிதைந்துவழங் குஞ்சொல்.

**இலக்கணச்சுழி**—(அசுவநூல்.) குதிரைக ளுக்குடையனவாகச்சொல்லப்படும் நல்ல அங் கச்சுழி.

இலக்கணச்சொல் — இலக்கணவழியால் வருஞ்சொல்.

இலக்கணநூல்— ஒரு பாஷையைப்பேசுதற்கும் எழுதுதற்கும் ஆகவேண்டியமுறைமையைக் கற்பிக்குநூல்.

இலக்கணப்போலி— இலக்கணநெறியால் வருவதன்றாய் இலக்கணமுடையதுபோல அடிப்பட்ட சான்றோராலே வழங்கப்பட்டு வருஞ்சொல்; அஃது: இல்முன் என்பது, முன்றில் என்றும்; நகர்ப்புறமென்பது, புறநகரென்றும் வழங்கப்பட்டு வருவனபோல நிலைமொழிவருமொழிகள் முன்பின்னாக மாறிநிற்பதும், கோவில் என்பது, கோயில் என்றும்; பொதுவில் என்பது, பொதியில் என்றும் வருவனபோல எழுத்துமாறிவருவதுமாம். (நன். பெயரியல். ௧௦. இராமாநு.)

இலக்கணம்-1. அசாதாரணதருமம்; அஃது: அவ்வியாத்தி, அதிவியாத்தி, அசம்பவம், என்னும் முக்குற்றங்களுமில்லாததன்மை. (தருக்கசங்கிரகம். ௩. பக்.) 2. அடையாளம். 3. இயல்பு. 4. இலக்கியத்தினமைதி. 5. உறுப்பு. 6. ஒழுங்கு. 7. சிறப்பு. (உ-ம்.) "கருமையெல்லாமிலக்கணத்தொருங்கேயீண்டி" (கந்தபு. மாயைப். ௩௩.) 8. சுபவாழ்வையுரைக்குமொரு அங்கக்குறி. 9. நற்குணம். 10. இலக்கணங்கூறு நூல்; அஃது: எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணியென ஐந்துவகைப்படும். 11. முறைமை. 12. மேன்மை. [லக்ஷண.]

இலக்கணமூலத்தொனி — இலக்கணையடியாய்த்தோன்றிய குறிப்பு. அது "நுசுப்பிற்கு நல்லபடாஅபறை" என்பதுபோல்வது. (வள். ௧௧௧௫.) [இதிலேமக்கட்குரியசாக்காடும் பறைபடுதலும் இலக்கணைக்குறிப்பால் நுசுப்பின் மேலேற்றப்பட்டன.] (பி. வி. ௫௦. உரை.) [லக்ஷணாமூலத்வநி.]

இலக்கணவழக்கு—இலக்கணநடை.

இலக்கணவழு—இலக்கணப்பிழை.

இலக்கணவிளக்கச்சூறவளி — இலக்கணவிளக்கத்திற் சிலபாகத்தை மறுத்துச் சிவஞானமுனிவர் செய்த ஒருநூல்.

இலக்கணவிளக்கம் — வைத்தியநாததேசிகரால் இயற்றப்பட்ட ஓர் இலக்கணநூல்; அது: பஞ்சலக்கணங்களையுமறிவிப்பது.

இலக்கணி — 1. அழகிய ரூபமுடையவன். 2. இலக்கணமறிந்தவன்.

இலக்கணை-1. ஒருபொருளை நேரேயுணர்த்தும்பதம், அப்பொருளை யுணர்த்தாது அதனோடியைபுடைய பிறிதொன்றனை யுணர்த்துவது. அஃது: ஆதாரம், காரணம், காரியம், சமீபம், உபகாரம், தர்மாநுகிருஷி என அறுவகைப்படும். (சி. சி. ச. ௨௮. சிவாக்.) [லக்ஷணா.] 2. சீவகன்மனைவிகளிலொருத்தி. (சிந்தா.)

இலக்கம்— 1. இலக்கு. (உ-ம்.) "அத்தநுவின்பெருமையையு மிலக்கத்துள்ளவருமையையுங்கருதாமலாண்மைகூறி" (பாரத. திரௌபதி. ௧௧௮.) 2. இலங்குதல், பிரகாசித்தல். (உ-ம்.) "எல்லேயிலக்கம்" (தொல். சொல். இடை. ௨௧.) 3. எண். (உ-ம்.) "இலக்கமில்கூறையாதிபொழிந்து" (கோயிற்பு. இரணியவன்ம. ௯௦.) 4. எண்ணைக் குறிக்கும் வடிவம். (உ-ம்.) "குறியிலக்கமெழுதே"(தைல. தைலவ. ௧௫.) 5. காணுதல். 6. நூறாயிரம். (உ-ம்.)"இலக்கத்தொன்பதின்மர்செவ்வே- டம்பியராகிவந்த" (கந்தபு. திருவவதார. ௧௨௭.) [லக்ஷ.]

இலக்கமிடல்—1.இலக்கமெழுதல். 2. கணக்குப்பார்த்தல்.

இலக்கர்-1.இலக்கமென்னுந்தொகையினர். (உ-ம்.) "இலக்கர்தம்மையுஞ்சூளிகைதன்னுடன்"(கந்தபு. சதமுகன்வதை. ௧௫.) 2. கந்தை. 3. சீலை.

இலக்கல் — விளக்குதல்; அஃது: அறியும்படிசெய்தல். (உ-ம்.) "உருத்திரனுருத்தனிலுதித்தகுமர-னிலக்குமியலை" (சிவதரு. சிறப்புப்பாயிர. ௧.)

இலக்காந்தரம்—இடையிலக்கம்.

இலக்காரம்—சீலை.

இலக்கித்து—எழுதி. (சிந்தா.)

இலக்கிதம்—இலட்சிதம். [லக்ஷிதம்.]

இலக்கிநசட்டுவருக்கம்—இராசிக்குரிய ஆறுகாரியம்; அவை: ஓரை, சுடர்ச்செலவு, திரேக்காணம், நவாமிசம், துவாதசாமிசம், கோட்கூறுஎன்பன. (விதாந. சட்டுவருக்க. ௧, ௨, ௩.)

இலக்கிநசடுவருக்கம்— இலக்கிநசட்டுவருக்கம்.

இலக்கிநபுடம்— இராசியைப்பற்றிவருஞ்சுத்தபுடம். [லக்நஸ்புட.]

இலக்கினபோக்கியம்—உதயாற்பரம்.(பிருகற்சாதக.)

இலக்கிநம்—1. ஒருவன் பிறக்கும்பொழுது உதிக்கும் ராசி. (விதாந. மரபியற். ௩. உரை.) 2. சுபமுகூர்த்தம். (விதாந. மரபியல். ௩.)

இலக்கிநமிருத்து— மரணபலத்தைக்கொடுக்குமிலக்கிநம்; அது: பாபக்கிரகங்கள் ௩, ௬, ௧௧ என்னுமிடங்களில் நில்லாது ௧, ௨, ௪, ௫, ௭, ௮, ௯, ௧௦, ௧௨ என்னுமிடங்களில் நிற்ப

தும், சுபக்கிரகங்கள் ௬, அ, ௧௨ என்னுமிடங்களில் நிற்பதுமாம். (விதாந. குணகுண.௩௨, ௩௩.)

இலக்கியம்— 1. இலக்கணமமைந்திருக்கப்பட்டபொருள். அது: தாடி முதலியன உடைமையாகிய இலக்கணத்தையுடைய பசு என்பதுபோல்வது" 2. இலக்கணையாய் வரும்பொருள். 3. உதாரணம். (உ-ம்.) எற்றப்படாதன வின்னிசைச்சிந்திற்கிலக்கியமே" (யாப். காரிகை. செய்யு. ௫.) 4. குறி, அடையாளம். 5. செய்யுணடையாயாவது வசநநடையாயாவது ஆன்றோராற்செய்யப்பட்டநூல். [இராமாயணம், கந்தபு, திருவள்ளுவர்குறள் முதலியன.] (உ-ம்.) " இலக்கியங்கண்டதற்கிலக்கணமியம்பலின் " (நன். ௧௪௧.) 6. செய்யுள்வழக்கினுவது, உலகவழக்கினுவது தொடுக்கப்பட்டுவருஞ்சொல். [லக்ஷ்ய.]

இலக்கியார்த்தம்— இலக்கணையாலறியும் பொருள். (உ-ம்.) "தற்பதத்தினுக்கு விராட்புருடாதியகன்றதனிநிருபாதிகப்பிரமமே யிலக்கியார்த்தம்" (வேதா. சூ. ௧௧௧.) [லக்ஷ்யார்த்த.]

இலக்கு—1. அசாதாரணதருமம். 2. எண்ணம். 3. எதிரி. 4. ஏது. 5. ஒப்பு. 6. குறி, குறிப்பொருள். (உ-ம்.) "இலையிலாவிலக்குமஃதே" (பாரத. திரௌபதி. ௯௧.) 7. சமயம். 8. நேர். [லக்ஷ.]

இலக்குதல்—1. அடையாளமிடுதல். (உ-ம்) " அது தன்னிலிரேகை-யிலக்குக " (சைவச. பொதுவி. ௨௭௪.) 2. இலங்கப்பண்ணல் (உ-ம்) " இட்டமுடன்றந்தமிலக்கிடும் போதிற் பாரேல். " (சைவச. பொதுவி. ௯௨.) 3. சொலிப்பித்தல். (உ-ம்.) " எரியத்திரத்திலக்கியே " (சைவச. பொதுவி. ௨௧௪.)

இலக்குமணன் — 1. இராமன்றம்பியாகிய இலக்குமணன். (காஞ்சிபு. வீரராக. அ) 2. சுபலக்கிநமுடையவன். [லக்ஷ்மண.]

இலக்குமணை—சாரசபட்சியின்பேடு. [லக்ஷ்மணா.]

இலக்குமன்—இராமன்றம்பியாகிய இலக்குமணன்.

இலக்குமி— 1. அதிட்டம். 2. அழகு. 3. செல்வம். 4. மஞ்சட்பூண்டு. 5. முத்து. 6. விட்டுணுவின் மனைவியாகிய ஒரு தெய்வப்பெண்; இவள் பிருகுவுக்குக் கியாதியிடத்தில் பிறந்தவள். [லக்ஷ்மீ.]

இலக்குமிகோ—உமை. (உ-ம்.) "அம்பிகை சீரிலக்குமிகோ." (காஞ்சிபு. வயிரவ. ௨௩.)

இலக்குவன்— இலக்குமணன். (உ-ம்.) "இவரென விலக்குவற் கிராமன் காட்டினன்." (இராமா. வேள்வி. ௪௬.)

இலகடம்—யானைமுதுகின் மேற்றவிசு.

இலகம்—ஊமத்தைப்பூண்டு.

இலகரி—1. ஓர்நூல். 2. பெருந்திரை. 3. மகிழ்ச்சி. 4. மது. 5. வெறி. [லஹரி.]

இலகாம்—கடிவாளம். (இந்துஸ்தான்.)

இலகான்— இலகாம். (இந்துஸ்தான்.)

இலகிமா—அட்டசித்திகளுளொன்று; அது: மிக நொய்தாதல். அஃதாவது சீக்கிரவேகியாய்ச் சேற்றிலுஞ் சலத்திலும் அடியமிழ்ந்தாமற்செல்லுந் தேகத்தையுடைத்தாதல். (சி. சி. ௨. ௫அ. சிவாக்.) (உ-ம்.) "இலகுமேரு பாரம் போலிருக்கும் யோகிதனை யெடுத்தா - விலகுவான தூலமெனவிருப்பதிலகிமாவாகும் ") திருவிளை. அட்டமாசித்தி. ௨௪.) [லகிமா.]

இலகிமாசித்தியோகம் — அட்டமா சித்தியோகங்களுளொன்று. அஃது. அணிமாவிற்கூறிய அவ்வக்கினியைத்தானே மேருத்துளைவழியாக வாயுவாலே குண்டலிமட்டாக எழுப்பி அதிலேற்றி இரண்டுவருஷம் நோக்கில் நீர்நுரைகள்போலத்தேகமெத்தெனவுண்டாவது (த. நி. போ. ௬௭௨.)

இலகிரி— 1. அபின். 2. கஞ்சா. 3. சாதிக்காய். 4. சாதிபத்திரி. [லஹரி.]

இலகு— 1. அகிலமரம். 2. இலகென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 3. கனமின்மை, இலேசு. 4. காலதசப்பிரகரணத்தினொன்று. 5. குற்றெழுத்து. 6. தணிவு. 7. நுண்மை. [3,4,5,6,7, லகு.]

இலகுசம்—ஈரப்பலாமரம். [லகுஜ.]

இலகுத்துவம்— அட்டசித்திகளுளொன்று; அஃது: இலகுத்தன்மை. [லகுத்வ.]

இலகுதல்— ஒளிசெய்தல்.

இலகுநட்சத்திரம்—அசுபதி, அத்தம், பூசம் என்னு நட்சத்திரங்கள். இதனை "பரியத்தம் பூசமலகு" என்னும் (விதாந. பஞ்சாங்க. ௨0. உரையிற் காண்க.) [லகுநக்ஷத்ர.]

இலகுளம்—தடி, தண்டு. [லகுல.]

இலகுளீசன் —இலகுளேசமூர்த்தி. (உ-ம்.) "அடுத்தங்குடனும்பரம்பொருளையன்றேவிரவவொட்டாமற்-றடுத்து முக்கூற்றுயிருணர்வைத் தகையும் விச்சைமுழுதிரிய - மடுத்த கருணைத்

திருநோக்கின் மாணுக்கருக்குப் பொருளுரைப்ப-வெடுத்தகரத்தான் வீற்றிருக்குமிலகுளீசன் றிருவுருவும்" (காஞ்சிபு. சிவபு. உo.)

இலகுளீசுரன்—பிருதிவியாதாரத்திலேதெய்வமாயிருக்குமீசன்(உ-ம்.) "கிளரிலகுளீசுரனை-வாழிநீற்றினும்." (திருவானை. கோச். ௬௫.)

இலகுளேசுவரபுவனம்—அப்புதத்துவத்திலிருக்கும் புவனங்களின் மத்தகத்தில் சோதிமயமுற்றதாய்ப் பிரகாசித்துக்கொண்டிருக்கும் புவனம். (சிவபராக். கருஉ.)

இலகுளேசுவரமூர்த்தம் —அப்பு தத்துவத்தில் வலப்புறம் மழுவொடுசூலமும், இடப்புறங் கலசமும் எடுத்தகரமுந் தாங்கிப் புவனத்துள்ள ஆன்மாக்கட்கு மும்மலங்களையும் போக்கி ஙற்கதி அநுக்கிரகிக்க ஆசாரியமூர்த்தியாய் எழுந்தருளிலகுளேசுவரர் வீற்றிருக்கும் மூர்த்தம். (சிவபரா. கருக.)

இலங்கநம் —1. அதிக்கிரமித்தல், விதிகடத்தல். (உ-ம்.) "எவ்வமாகவந்தெய்திநஞ்சமயலங்கநமும்" (பெரியபு. திருநாவு. அ௬.) 2. உபவாசம். 3. குதித்துப்பாய்தல். 4. கோட்டைபிடித்தல். 5. தாண்டுதல், இது: "சமயலங்கநம்" என்னும் பெரியபு. திருநாவு அ௬-ஞ் செய்யுளிற்காண்க. 6. போதல். [லஂவு௩.]

இலங்கநீ—கடிவாளத்தின் கடியிரும்பு. [லாவநீ.]

இலங்கம்—1. எறும்பு. 2. களரி. 3. கூட்டம். 4. கூடுதல். 5. மூடம். [லஂம.]

இலங்கர்—நங்கூரம். [இந்துஸ்.]

இலங்கல்—இலங்குதல்.

இலங்காதாகி—அநுமான். [லங்காதாஹிநு: தாஹிநு - சுடுகிறவன்.]

இலங்காபுரம்—இலங்காபுரி. (உ-ம்.) "இலங்காபுரமெரித்தானெய்து"(நாலாயிர. இயற்பா. மூன்றுந்திருவந்தாதி. ருக.) [லஂகாபுர.]

இலங்காபுரி — இக்காலத்துக் கொழும்பை இராசதானியாக்வுடைய ஒரு துவீபகம். [லஂகாபுரீ.]

இலங்கிசார்—1. அலைக்கழிவு. 2. இடைஞ்சல்.

இலங்கித்தல் — குதித்தல். (சிந்தா. மண். கo.)

இலங்கிழை—பெண். (சிந்தா. நா. ௬ருஎ.) [இலங்கு; இழை-ஆபரணம். இஃது: அன்மொழித்தொகை.]

இலங்கு—குளம்.

இலங்குதல்—1. ஒளிசெய்தல். 2. விளக்கமாகத்தெரிதல். (உ-ம்) "இலங்கு மிருகுழை யருகு பொருது" (சிவப்பிர. மங்கல. ௬.)

இலங்குபொழுது— அத்தமிக்கும்போதிருக்குஞ்சூரியவொளி.

இலங்கேசன்—இராவணன், இலங்கைக்கு இறைவன். [இலங்கா; ஈசன்.]

இலங்கை—1. ஆற்றிடைக்குறை. 2. ஈழமண்டலம். அஃது: இராவணனூர். (உ-ம்.) "இலங்கையன் றடர்த்தானுந்தேவியுமானின" (ம. தி. கஎ.) 3. வில்லியாதனூர். (உ-ம்.) "நெல்லமல் புறவினிலங்கைகிழவோன் - வில்லியாதன்" (புறநா. ௬எக.)

இலங்கோடு—சந்நியாசிகளுடைய உடை.

இலங்கோதயம்— சமரேகை. (பிருகற்சா) [இம்மத்திய ரேகையிலேயே இலங்கை இருந்தது என்பது சோதிடநூற்றுணிபு. லஂகா-உதயம்.]

இலச்சி— இலச்சியென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும். [லஜ்.]

இலச்சித்தல்—வெட்கித்தல்.

இலச்சிதன்—இலச்சையடைந்தவன், வெட்கப்பட்டவன். [லஜ்ஜித.]

இலச்சினை—1. அடையாளம். (உ-ம்.) "பெயரிலச்சினையுந்தீட்டி" 2. முத்திரை (உ-ம்) "பின்னதுந் தன்னதாகப் பெயரிலச்சினையுந்தீட்டா" (திருவிளை. மேருவைச். ௬௬.)

இலச்சை—1. அவமதிப்பு. 2. கூச்சம். 3. தகாத காரியமுயற்சியிலே மனதைச் சுருக்கல். (சைவப். ௬o.) 4. பழிக்கப்பட்ட செய்கை செய்கையிலே விலகுதல். (சைவப். ௬o.) 5. வெட்கம். (உ-ம்.) "மோடியோடிலச்சையாய சாபமெய்திமுக்கணன்." (நாலாயிர. திருச்சந்த. ரு௬.) [லஜ்ஜா.]

இலச்சைகெட்டமரம்—1. கற்றேக்குமரம். 2. சண்டிமரம்.

இலசுநம்—1. உள்ளிப்பூண்டு. (உ-ம்.)"இந்திரனூரிந்திராணிபர்ண்ணி வெகுபுத்திரியிலசுநமுனிநாமஞ்சடும்." (தைல. தைலவ. ௬௬.) 2. மணியின் குற்றங்களுளொன்று. [லஶுந.]

இலசூநம்—வெள்ளைப்பூண்டு.

இலஞ்சம்—பரிதானம். [தெலுங்கு.]

இலஞ்சி—1. ஏரி, மடு. (உ-ம்.) "கடுமுரண்முதலையநெடுநீரிலஞ்சி" (புறநா. ௬எ.) 2. கீழ். 3. குணம். (சூ. நிகண். கக. லகரவெ. ௬.) 4. குழிந்தாழ்ந்தநீர்நிலை. (உ-ம்.) "வல்சிதேர்ந்திலஞ்சிக்-காரந்திரிகல்லதர்வாய்." (வாண. உ௬உ.)

5. கொப்பூழ். (உ-ம்.) "புரிமலரிலஞ்சியால்" (சேதுபு. கந்த. ௫.) 6. சாரைப்பாம்பு. 7. புன்கமரம். 8. புனம். 9. மகிழமரம். (சூ.நிகண்.கக. லகரவெ. ௪.) 10. மடு. (உ-ம்.) கடுமுரண்முதலைய நெடுநீரிலஞ்சி" (புறநா. ௩௭.) 11. மதில்.

இலஞ்சியங்கானம்—ஒருகாடு. (உ-ம்.) "எழில்வளஞ்சுரக்குந்தொல்லை யிலஞ்சியங்கானநோக்கி" (கந்தபு. குமாரபுரி. அக.)

இலஞ்சியம்—கீழ்காய் நெல்லிப்பூண்டு.

இலட்சணம்—இலக்கணம். [லக்ஷண.]

இலட்சணாத்திரயம் — அதத்துவா விருத்திலட்சணை, தடத்தலட்சணை, சொரூபலட்சணை ஆகிய மூன்று லட்சணைகள். (வாசுதே. மகாவாக்கிய நிரூபகத்திலறிக.) [லக்ஷணாத்ரய: த்ரய—மூன்று.]

இலட்சம்—1. அடையாளம். 2. இலக்கு. 3. நூறுயிரம். 4. பொய்க்கோலம். [லக்ஷ.]

இலட்சயம்—எண்ணத்தக்கது.

இலட்சாதிபதி—இலட்சப்பிரபு.

இலட்சிதம்—1. இலக்கணமமைக்கப்பட்டது. 2. காணப்பட்டது. 3. குறியினுலேவிளக்கப்பட்டது. [லக்ஷித.]

இலட்சியம் — 1. ஆத்துமா காரிய உபாதி ஏழையும் நீங்கிநின்றநிலை. (ஞானக். தொம்பத. சிரவணம்.) 2. இலக்கியம். 3. எண்ணப்படல். 4. எதிர். 5. பார்க்கப்படல். [லக்ஷ்ய.]

இலட்சியார்த்தம்—இலக்கணையாற் பெறப்படும் பொருள். (வாசுதே.) [லக்ஷ்யார்த்த: லக்ஷ்ய-இலக்கணையால் வந்தது. அர்த்த-பொருள்.]

இலட்சியித்தல்— இலக்கியமாகக் கொள்ளுதல். (உ-ம்.)"இங்ஙனம் இலட்சியித்த ஒப்பற்ற பரவஸ்துவை." (வேதா. சூ. ௨0. உரை.)

இலட்சுமணம்—1. ஒருமரம். 2. தாளிப்பூண்டு.

இலட்சுமணன்—இலக்குமணன். [லக்ஷ்மண]

இலட்சுமிசக்கரம்— இலக்குமி தேவியைப் பூசித்தற்பொருட்டுச் செய்யப்படும் இயந்திரம். [லக்ஷ்மீசக்ர.]

இலட்டன்—நீசன். [லட.]

இலட்டு—இலட்டுகம். [லட்டு.]

இலட்டுகம்—1. அப்பவருக்கத்தொன்று. 2. தோசை. 3. மோதகம். (உ-ம்.) "கன்னலிலட்டுகத்தோடு சீடைகாரெள்ளினுண்டை கலத்திலிட்டு" (நாலாயிர.வெண்ணெய்.க.) [லட்டுக.]

இலண்டம் — ஆனையிலத்தி.

இலண்டன்—முருடன்.

இலண்டு—முருட்டுத்தனம்.

இலணை—அரசமரம்.

இலத்தி—குதிரை,யானை,கழுதையிவற்றின் மலம்.

இலத்தைபரதம்—கரகரண முப்பத்துமூன்றுவகையுளொன்று. (திருவிளை. கான்மா. ௬௦. உரை.)

இலதாவேட்டநம்— கொடிபோலச் சுற்றித் தழுவுதல். [லதாவெஷ்டந: லதா-கொடி. ஷ்ட-சுற்றுதல்.]

இலதாவேட்டிதகம் — இலதாவேட்டிதம். [லதாவெஷ்டிதக.]

இலதாவேட்டிதம்— கொடிபோலச் சுற்றித் தழுவுதல். (கொக்கோக. ௫: ௪௧.)

இலதிகை—1.படர்சிறுகொடி. 2. முத்துமாலை. [லதிகா.]

இலது— 1. இலதாகச்செய்தல், சங்காரம். 2. காரணரூபத்தினுலே இல்லாதது. (உ-ம்.) "உள்ளதுமிலதுமின்றி நின்றதொன்றுளதேலுண்டாம்" (சி.சி. க: ௬.) [இல்லது என்பதில் லகரங்கெட்டுநின்றது.]

இலதை—1. இணையாவினைக்கைமுப்பத்துமூன்றுவகையுளொன்று; அது: நடுவிரலுஞ்சுட்டுவிரலுங்கூடி நிமிரப்பெருவிரல் அவற்றின் கீழ்வரைசேர ஒழிந்த இரண்டுபெருவிரலும் வழிமுறை பின்னே நிமிர்ந்துநிற்பது. (உ-ம்.) "இலதையென்பதியம்புங்காலைப்-பேடியுஞ்சுட்டும்பிணைந்துடனிமிர்ந்து - கூடியபெருவிரல்கீழ்வரைகுறுகக்-கடையிருவிரலும் பின்னர்நிமிர்ந்த-நடையினதென்பநன்னெறிப்புலவர்" (சிலப். அரங். க௮. உரை.) 2. இலந்தை. 3. கோற்கொடி. 4. தக்கோலம். (தைலவ.) 5. தூற்கும் நூல். (உ-ம்.) "அமிர்தை" பார். 6. படர்கொடி. (தைல. தைலவ. க௩௫.) 7. மரக்கொம்பு.

இலதைவந்நி—கொடிவேலி. (உ-ம்.) "இலதைவநி" பார்.

இலதைவநி—கொடிவேலி. (உ-ம்.) "நற்கடுகரத்தை ச்வியஞ்சிகர மிலதைவநி நாரிசடைவசைவீரணி"(தைல. தைலவ. ௪௩.)[இலதைவந்நியென்பது இலதைவநியெனத்தொகுத்தது.]

இலந்தை—1. ஒருமுண்மரம்; அது: கொடியிலந்தை, நிலவிலந்தை,நரியிலந்தை எனப்பல

திறப்படும். (உ-ம்.) "பாதிரியிலந்தைதேமா" (மச்சபு. அத்திரியா. ௬.) 2. குளம்.

இலந்தைத்தம்பலம் — இலந்தைமரப்பட்டையிலே பூச்சிகளாலான புடைப்பு.

இலபநம்—1. பேசுதல். 2. வாய். [லபந]

இலபி— 1. பேறு. 2. விதி. [லபி.]

இலபித்தல்— 1. சித்தித்தல். 2. நேரிடல். 3. பேறுகிடைத்தல்.

இலபிதம்—1. சம்பவிப்பது. 2. பட்சித்தல். 3. பேச்சு. 4. பேசப்பட்டது. 5. பேறு. 6. விதி. [1, 2, 5, 6. லபித. 3, 4, லபித.]

இலபிப்பு—சித்திப்பு.

இலம்— 1. இல்லறம். (உ-ம்.) "கருங்காலியாயின்மருதுமிலங்கைத்தார்" (சைவச. பொதுவி. ௨எ.)[இல்லமென்பது இலமென இடைகுறைந்துநின்றது.] 2. வறுமை. (புறநா.) 3. இல்லாமை, வறுமை. (உ-ம்.) "இலம்படுபுலவர்" (மலைபடு. ௫எ௬.) 4. வறியோம் எனப்பொருள்படும் ஒரு தன்மைப்பன்மைக்குறிப்புவினைமுற்று. (உ-ம்) "இலமென்றுவெஃகுதல் செய்யார்" (வள்.௧எ௪.)[இன்மை-பகுதி. அம்-தன்மைப்பன்மைவிகுதி.]

இலம்பகம்—1. அத்தியாயம். (உ-ம்.) "நாமகளிலம்பகம்" (சிந்தாமணி.) 2. நுதலணிமாலை. (உ-ம்.) "இழைக்குமாமணிசூழ்பட்டமிலம்பகமிலங்கப்பெய்து" (திருவிளை. திருமண. ௧௬௩.) 3. மாலை. (சூ. நிகண். ௪ ௬௬.) [லம்பக.]

இலம்படுதல்-வறுமையாதல். (உ-ம்.) "இலம்படுபுலவரேற்றகைநிறைய" (மலைபடு. ௫எ௬.) [இலம்-இல்லாமை. படுதல்-உண்டாதல்.]

இலம்படை—1. இடுக்கண். 2. தரித்திரம்.

இலம்பம்—1. உச்சத்திற்குந்துருவத்திற்குமுள்ளதூரம். 2. ககோளத்திற்கூறுமொருபாகையளவு. 3. கைக்கூலி. 4. தனதிருபாலிலும் ஒத்தகோணங்களையுடையதாக மற்றொரு ரேகையினின்று எழும்பும் ரேகை. 5. தூங்குதல். 6. நீட்சி. 7. பற்றியிருத்தல், சார்ந்திருத்தல். 8. விரிவு. [லம்ப.]

இலம்பநம்—1. கீழே தூங்குதல். 2. கொப்பூழ்வரைக்குந்தூங்குமொரு கழுத்தணி. 3. தொங்கல். [லம்பந.]

இலம்பாட்டார்—வறியவர். (உ-ம்.) "எனைத்துணையவேனுமிலம்பாட்டார் கல்வி" (நீதிநெறி. ௧௦.)

இலம்பாடி— 1. ஒரு சாதி. 2. வறியவன். 3. வறியவள்.

இலம்பாடு — 1. இன்மை. 2. வறுமை. (உ-ம்.) "வந்தவிலம்பாடகற்றென்று" (திருவிளை. உலவாக்கி. ௧௫.)[இலம்-இல்லாமை. பாடு-உண்டாதல்.]

இலம்பிகை—அண்ணாக்கு.

இலம்பிதச்சா — சூரியன்மேல்விராசியிலேறும் பாக அளவு. [லம்பிதஜ்யா.]

இலம்பிதம்— 1. அசைவு. 2. சந்திரபுடத்தைச் சூரியபாகையிற் சேர்க்குமோரளவு. 3. தூக்கப்பட்டது. 4. தூங்குகை. [லம்பித.]

இலம்பை—1. இடுக்கண். 2. தரித்திரம். 3. துயரமானநிலை.

இலம்போதரன்—விநாயகக்கடவுள். [லம்போதர: லம்ப - தூங்குகிற, உதர - வயிறு.]

இலயக்கியாநம்—சங்கீதசுரக்கியாநம். [லயஜ்ஞாந.]

இலயகாலம்— 1. அழிவுகாலம். 2. உலகாந்தரம்.

இலயசத்தி—இலயியான சிவசத்தி. (உ-ம்.) "சிவன் இலயியானபோது இலயசத்தியெனவும் போகியானபோது போகசத்தியெனவும் அதிகாரியானபோது அதிகாரசத்தியெனவும் இப்படிப் பெயருற்று நிற்கும்." (சி. சி. உ. எ௫. மறை.) [லயசக்தி.]

இலயசிவன் — 1. இலயத்தானத்து நின்ற சிவன்; இவர் சுத்தவித்தை, ஈசுரம், சாதாக்கியமென்னும் மூன்று தத்துவங்களையுமொடுக்குவர். (சி. சி. உ. எஉ. சிவஞாந.) 2. சங்காரத்தொழில் செய்யுஞ்சிவன். [லயசிவ.]

இலயஞாநம் — (இசைநூல்.) நால்வகைக் கேள்விகளுளொன்று. (உ-ம்.) "நால்வகைக்கேள்வியான கீதஞாநம், இலயஞாநம், சுருதிஞாநம், தாளஞாநங்கள்" (திருவிளை. இசைவாது. ௨எ. உரை.)

இலயத்தாநம்-ஒடுங்குமிடம். [லயஸ்தாந.]

இலயதத்துவம் — 1. கிரியாசத்தி ஞானத்தொழின்மாத்திரத்தைப் பண்ணி ஞானசத்திரூபியாயிருந்தபோது பெறும்பெயர். (கூர்மபு. திருக்கல். ௧. உரை.) 2. சிவதத்துவம். 3. மகாப்பிரளயத்திலே மகா மாயாகாரியமெல்லாம் ஒடுக்கிஞானத்தொழில் மாத்திரத்தைப்பண்ணி ஞானசத்திரூபியாயிருக்குஞ்சிவசத்தி. (சி.சி. ௧: ௬௫. ஞானப்.) [லயதத்வ.]

இலயபிடி—1. இலயத்தானம். 2. ஒடுக்கம்.

இலயம்—1. அழிவு. 2. ஆழ்ந்த ஏகாக்கிர சிந்

தனே. 3. இலயபிடி. 4. உருக்கல். 5. ஒடுக்கம். 6. ஒருவகைக்கூத்து. 7. ஒளித்தல். 8. ஒன்றுதல். 9. ஒய்ந்திருத்தல். 10. கரைத்தல். 11. தழுவுதல். 12. (இசைநூல்.) துருதம், மத்தியம், விளம்பிதம் என மூவகைப்பட நிற்குங்காலமாத்திரை. 13. நடுக்கம். (இராசவைத்.)

இலயயோகம்— நான்கு யோகங்களுளொன்று; அஃது: ஆதாரதேவதை பிரசந்நமாகும் போதுபிறக்கும் தசநாதத்தைத்தியாநஞ்செய்து மநம் லயமாவது. (த. நி. போ. ௲௫௩.) [லயயோக.]

இலயர்—முத்தி வியத்திகிருத்தியத்தை முடித்து ஞானசத்தி மாத்திரையாயிருக்குஞ் சிவன். (சி. சி. க: ௬௫. இராமலிங்க.)

இலயன்—அதிக்கிராந்த அநதிக்கிராந்த பரசிவன். (சி. சி. க: ௬௫. இராம.)

இலயி—இலயசிவன். (சி. சி. க:௬௫.மறை.)

இலயித்தது—1. ஒடுங்கியது. (உ-ம்.) "இலயித்ததத்திதியிலென்னின்" (சிவஞானபோ. க: உ.) 2. ஒடுங்கியபொருள். (உ-ம்.) "இலயித்ததாம்." (சிவஞானபோ. க: உ.)

இலயித்தல்—1. ஒடுங்குதல். (உ-ம்.) "இலயித்தவாறுளதாவேண்டும்." (சிவஞானபோ. க: உ.) 2. சேர்ந்தொன்றித்தல்.

இலயை—1. இலயகாலம். 2. தாளப்பிரமாணம் பத்தனுளொன்று; அஃது, இசையினிகழுங்காலம்; அக்காலம்: விளம்பம், மத்திமம், துரிதம் என மூன்றுவகைப்படும்; அவற்றுள் அக்கரகாலமாய்க் கிரியையோடு வருவது விளம்பம்; அதனை யிரட்டித்துக் கிரியையோடு வருவது மத்திமம்; அதனை யிரட்டித்துக் கிரியையோடு வருவது துரிதம். (உ-ம்.) "தாளப்பிரமாணம்" பார். [லயா.]

இலயைக்கியாநம்—இலயக்கியாநம்.(போலி)

இலலாடகம்—நெற்றி. [லலாடக.]

இலலாடம்—நெற்றி. [லலாட.]

இலலாடரேகை — 1. நெற்றியிற் காணப்படுமிரேகை. 2. நெற்றியிற்சுருக்கு. 3. நெற்றியிலிடப்படுஞ் சமயக்கொள்கையை விளக்குங்குறி. [லலாடரேகா.]

இலலாடலிபி—தலையெழுத்து.

இலலாடிகை— 1. சந்தநமுதலியவற்றால் நெற்றியிலிடுந்திலகம். 2. நெற்றியிலணியுஞ்சுட்டி. [லலாடிகா.]

இலலாமம்— 1. அடையாளம். 2. அரசசின்னம். 3. அழகு. 4. ஆபரணம். 5. இரேகை. 6. குதிரை. 7. கொடி. 8. கொம்பு. 9. தன்சாதியிற்சிரேட்டமானது. 10. நெற்றியிலிடும் அணி. 11. நெற்றியிலிடுங்குறி. 12. பிடர்மயிர். 13. மகத்துவம். 14. வால்.

இலலிதபஞ்சகம்— ஓரிராகம்.

இலலிதம்— 1. அழகு. 2. அபிநயம். 3. உபசாரம். 4. ஓரிராகவிகற்பம். 5. காமக்குறி. 6. பரிகாசம். 7. மகளிர்விளையாட்டு. 8. மாதுரியம்.

இலலிதாசத்தமி— புரட்டாசிமாதத்துச்சுக்கிலபக்கத்துச்சத்தமிதிதி. [லலிதாஸப்தமீ.]

இலலிதாபஞ்சமி—ஐப்பசிமாதத்துச்சுக்கிலபக்கத்துப்பஞ்சமிதிதி. [லலிதாபஞ்சமீ.]

இலலிதை— 1. இராகமுப்பத்திரண்டினுென்று. 2. பார்வதி. 3. பெண். 4. மான்மதம்.

இலவங்கத்தோல் — இலவங்கப்பட்டை. (உ-ம்.) "சசி" பார்.

இலவங்கப்பட்டை– ஒருவாசனைப்பட்டை.

இலவங்கபத்திரி— இலவங்கத்தின் இலை. [லவங்கபத்ரீ.]

இலவங்கம்—1. ஒரு வாசனைமரம். (உ-ம்.) "முகிழ்மூய்- கந்தமார்குழைமுகத்தலரிலவங்கங் காட்டும். (காஞ்சிபு. நாட்டு. ௬௫.) 2. கிராம்பு.

இலவசம்—1. துண்டந்துண்டமாக, அற்பமாக; அது: விலைபெருது கொடுப்பார்பொருளை அற்பமாகக்கொடுக்கும் பெரும்பான்மைபற்றி உலகவழக்கிலே விலைபெருதுகொடுத்தலைக்கருதவந்ததுபோலும். இவ்வாறே இலவியம் என்பதும். 2. விலையின்றிப்பெறுதல் அல்லது கொடுத்தல். [லவஶஸ்.]

இலவணபஞ்சாட்சரம்— 1. ஒரு மந்திரம். 2.ஒரு மாந்திரிகநூல். [லவணபஞ்சாக்ஷர]

இலவணபாடாணம்— வைப்புப்பாடாணம் முப்பத்திரண்டினுென்று.

இலவணம்—1. உப்பு. 2. உவர்ப்பு.

இலவணவித்தை—ஒரு வித்தை. [லவணவித்யா.]

இலவணன்—ஓரிராக்கதன்.

இலவத்தீவு.—சான்மலித்தீவு. (உ-ம்.)"இலவத்தீவினி னுறைபவ ரிவர்கள்பண் டிமையாப்-புலவர்க்கிந்திரன் பொன்னகரழிதரப் பொருதார்" (இராமா. படைக்காட்சி. கக.)

இலவத்தோல்–இலவங்கப்பட்டை. (தைலவ. தைல. க௬.)

இலவந்திகை—1. தண்ணீர்நிறைக்கும் யந்திரம். 2. நீராவியைச் சூழ்ந்த வயந்தச் சோலை. (உ-ம்.) "பன்மலரடுக்கிய நன்மரப்பந்த-ரிலவந்

திகையினெயிற்புறம்போகி." (சிலப்.நாடுகாண். கூக.) 3. யந்திரவாவி. (உ-ம்.) "இலவந்திகையி னெயிற்புறம்போகி." (மணிமேகலை. கூ: சடு.)

இலவம்—1. அழிவு. 2. அற்பம். 3. இலவங்கம். (தைல. தைலவ. கஙுடு.) 4. ஏழுதீவுகளிலொன்று. 5. ஒருமரம்; இதன் காய்க்குள்ளிருந்து மெத்தைமுதலியவற்றிற்குரிய பஞ்சு எடுக்கப்படும். (உ-ம்.) "இலவம்பஞ்சிற்றுயில்" (ஆத்திசூடி.) 6. கண்ணிமைப்பொழுதிலறுபதிலொன்று. 7. கராம்பு. 8. காலதசப் பிரமாணங்களுளொன்று. 9. சாதிக்காய். 10. பசுவாலின்மயிர். 11. பிழைநீக்கல். 12. மயிர். 13. முப்பத்தாறு இமை அல்லது இரண்கொட்டை கொண்டநேரம். அது, கணம் எட்டுக்கொண்டது. 14.வணக்கம்.

இலவம்போதுமணி—சௌந்திகப்புமராகமணி.

இலவலி—வள்ளிக்கொடி.

இலவலேசம்—மிகச்சிறியது.

இலவன்—இராமன் மக்களுளொருவன்.

இலவியம்—1. விலையின்றிப் பெறுதல் அல்லது கொடுத்தல். (உ-ம்.) "இலவசம்" பார். 2. வெட்டப்பட்டது. [லவ்ய.]

இலவிலை—குபேரனுடையதாய்.

இலவு—1. இலவமரம். (உ-ம்.) "நீர்க்கடுப்பு நீரெரிவு நீண்டொழுகுமேகமும்போ-மார்க்கும் விந்துவோடைக்குமாண்மையுறும்- பார்க்குணி லவு மதிவதனநேரிழையே வெப்பா-மிலவு மரத்தா வியம்பு."(பதார்த்த.உகஎ.)2.தேற்றுமரம்.

இலவுகிகம்-உலகசம்பந்தமுடையது(உ-ம்.) "ஏசாராவிலவுகிகநூல்." (சூத. ஞாந. கூ: அ.) [லௌகிக.]

இலவுகீகம்—இலவுகிகம்.

இலவை—காலநுட்பம். [லவா.]

இலள்—இல்லாதவள். (உ-ம்.) "தருமமதிலள்" (கந்தபு. வில்வலன்வாதாவி. க.)

இலளிதபஞ்சகம்—ஓரிசைவிகற்பம்.

இலளிதம்—1. அழகியது. 2. இலளிதைராகம். 3. உபசாரம். 4. சரசம், லீலை. 5. சிவாகமங்களிருபத்தெட்டனுளொன்று; அஃது:எண்ணாயிரங்கிரந்தங்களை உடையதென்றும், அகத்திய விருடிக்குத் தீட்சைசெய்தற்பொருட்டுத் தோன்றிய எட்டாகமங்களுளொன்றென்றுஞ் சொல்லப்படும். (சைவச. பொது. கூகுடு.) 6. விரும்பப்பட்டது.

இலளிதை—1. கஸ்தூரி. 2. பார்வதிதேவி. உ-ம். ) "வென்றநல்லெழில்விரிந்ததன்மெய்யிடப்புறத்து- மன்றல்வார்குழலிலளிதைமாதினையுயிர்த்தான்" (காஞ்சிபு. திருவேகம்ப. ரு.) 3. பெண், காமச்சேட்டையுடையாள். 4. முப்பத்திரண்டிராகங்களுளொன்று. [1,2,3. லலிதா.]

இலாக்கணிகம்— இலக்கணையாக வந்தது. [லாக்ஷணிக.]

இலாக்கிகி—செம்மெழுகு. [லாக்ஷிகி.] [இதனை இலாக்கிரியெனவழங்குவர்.]

இலாக்கை—1. இந்திரகோபத்தை நிகர்த்த ஒருவகைப்பூச்சி. 2. ஒருவகைச்சிவப்புநிறத்தையுடையது, செம்மெழுகு. [லாக்ஷா.]

இலாகரீ—1.களியாட்டு.2.வெறி. [லஹரி]

இலாகவம்—1. ஆரோக்கியம். 2. எளிமை, அற்பம். 3. கவனமின்மை. 4. சாமர்த்தியம். 5. சுருக்கம். 6. தாபரம். 7. நிந்தனை. 8. விரைவு. [லாகவ.]

இலாகன்— ஒரு மீன்.

இலாகிரி— இலாகரி. [லஹரி.]

இலாகு— இலகு. 2. சாமர்த்தியம்.

இலாகை—மாதிரி [தெலுங்கு.]

இலாங்கலம் — 1. ஆண்குறி. 2. கலப்பை. 3. பனை தெங்கு முதலிய புன்மரம்.[லாங்கல.]

இலாங்கலி—1. செங்கரந்தைப் பூண்டு. 2. செங்காந்தட்பூண்டு.(உ-ம்.)(பிங்கல.) 3. தென்னைமரம். (உ-ம்.) (சூ.நிகண்.கஉ·ச.) 4. தேங்காய். (இராசவைத்.) 5. பலராமன். 6. பாம்பு. 7. வெந்தோன்றிப்பூண்டு. [லாங்கலி.]

இலாங்கலிகம்—கலப்பைக்கிழங்கு. (சீவரட். கூஉஎ.) [லாங்கலிக.]

இலாங்கலித்தைலம்—தேங்காய்ப்பால்முதலியவை சேர்த்து வடிக்கப்படுமொரு தைலம். அதன் விவரம், "மூக்கண்ணியமிழ்து," என்ற செய்யுளிற் பார்த்தறிக. (தைல. தைலவ. கoசு.) [லாங்கலீதைல.]

இலாங்கூலம் — 1. ஆண்குறி. 2. தானியம் வைக்குங்கூடை. 3. தானியம் வைக்குமிடம். 4. மயிரடர்ந்தவால்.(உ-ம்.)(சூ-நிக. கூ: சஉ.)[லாங்கூல.]

இலாங்கூலி—குரங்கு. [லாங்கூலிந்.]

இலாச்சம்—1. ஒரு நிலஅளவை. 2. தானியமளக்குமொருகருவி; அஃது, ஐந்துபடி கொண்டது. 3. பதினெட்டுக்கோல் நீளமும் ஒருகோல அகலமுங்கொண்ட நிலப்பரப்பு.

இலாசடி—தொந்தரை. [லாஜீ.]

இலாசடை — 1. இலாசடி. 2. வருத்தம். [வழக்.]

இலாசம்—1. நனைத்ததானியம். 2. பொரி. [லாஜ.]

இலாசவோமம்—பொரியாற்செய்யும்ஓமம்.

இலாசை—பொரித்ததானியம். [லாஜா.]

இலாஞ்சநபடம்—ஒருவன்னத்தினுலே உருக்கடோன்ற அச்சுக்கட்டப்பட்ட படம். (உ-ம்.) "இரஞ்சிதபடம்" பார். [லாஞ்சநபட-உருவமமைத்தற்கடையாளமான சிந்நமென்றபடி.]

இலாஞ்சநம் — 1. அடையாளம். 2. களங்கம், கறை. 3. கீர்த்தி. 4. நிலஎல்லைக்குறி. 5. பெயர். 6. முத்திரை. [லாஞ்சந.]

இலாஞ்சநை— 1. அடையாளம். (உ-ம்.) (பிங்கல. உஉகசு.) 2. இலாஞ்சநபடம். (உ-ம்.) "நீனிறத்திலாஞ்சநையெனவும்" (வேதா. சூ. சகூ.) [லாஞ்சநா.]

இலாஞ்சி—
இலாஞ்சிலி— } ஏலம்.

இலாட்சை—சிவந்த அரக்கு. (உ-ம்.) "ஒளிரிலாட்சைச் - சத்தான தைலத்தின்பெயரைச் சொல்லின்" (தைல. தைலவ. கூ௦.) [லாக்ஷா]

இலாடசங்கிலி— இலாடதேசத்து யாசகிகள் விநோதார்த்தமாகக்கொண்டுதிரியும் ஒருவகைச்சங்கிலி; இதனைப்பின்னுதலுங்கழற்றுதலும் பிரயாசம்.

இலாடசிந்தூரம்— குதிரைக்காற்குளம்பிலிணைத்துத் தைக்கும் இரும்பை நீற்றியபஸ்மம். [லாடஸிந்தூர.]

இலாடபாஷை—இலாடதேசத்தார் பேசும் பாஷை. [லாடபாஷா.]

இலாடம்—1. ஒருபாஷை. 2. குதிரைக்காற்குளம்பி லிணைத்துத் தைக்குமிரும்பு. [தெலுங்கு.] 3. குற்றம். 4. தேயமைம்பத்தாறினொன்று. 5.நெற்றி. (உ-ம்.) "இலாடத்தேசாக்கிரத்தையெய்தியவுள்ளம்" (சி. சி. ச: எ.) 6. புடவை. 7. புளியமரம். [தெலுங்கு.] [2, 3, 4. லாட. 5. லலாட.]

இலாடர்—இலாடதேசத்தவர்.

இலாடவி—அகிலமரம்.

இலாடன்பருத்தி—ஒருசெடி.

இலாதார்—சஞ்சாயம். [லாத- எடுக்கப்பட்டது.]

இலாந்துதல்— வீட்டின்மேற் கட்டை பரப்பிச் சாந்திடுதல்.

இலாபத்தாநம்— இலக்கினத்துக்குப்பதினோராமிடம். (சோதிடக.) [லாபஸ்தாந.]

இலாபதி—1. அரசன். 2. புதன்.

இலாபம்— 1. ஆதாயம். 2. நயம். [லாப.]

இலாமச்சம்— ஒரு பரிமளப்புல். (உ-ம்.) "இலாமச்சந்தோய்ந்த-காமருநீர்" (மச்சபு. ஆர்த்திராந. கஎ.) [லாமஜ்ஜக.]

இலாமச்சை— வாசனையைத்தரும் வேரையுடைய ஒரு புல்.

இலாமிச்சு—வாசனையைத்தரும் வேரையுடைய ஒருபுல். (உ-ம்.) "வெறிகருப்புரம் வெட்டிவேர் மருவிலாமிச்சு" (கடம்பவநபு. இலீலாசங். கஅ.)

இலாயம்—1. ஏலரிசி. 2. குதிரைப்பந்தி.

இலாலநம்—இலாலனை. [லாலந.]

இலாலனை—1. அன்புபாராட்டல். 2. சீராட்டுதல். 3. செல்லங்காட்டுதல். [லாலநா.]

இலாலி— 1. இச்சகவார்த்தை. 2. ஏமாத்துவோன். 3. ஒருவாழ்த்து. 4. காமி. 5. தீமைக்குட்படுத்துவோன். 6. மங்கலப்பாடல். [தெலுங்கு.] [1-2-3-4-5. லாலி.]

இலாவண்ணியம்—இலாவணியம். [லாவண்ய.]

இலாவணம்—1. உப்பு. 2. சம்பாஷணை. 3. பெயர்ப்பதிப்பு. [தெலுங்கு.]

இலாவணியம் — 1. அழகு. 2. உப்புத்தன்மை. [லாவண்ய.]

இலாவாதேவி—இலேவாதேவி. [இந்துஸ்.]

இலாளன் — இல்லாதவன். (உ-ம்.) "மனையாளையஞ்சும் மறுமையிலாளன்." (வள். கூ௦ச.)

இலாளிதம் — அழகு. (உ-ம்.) "பெருகுமதகும்பலாளிதக்கரியென" (திருப்பு. ககூச.) [இலளிதம் என்பதன் நீட்சி.]

இலான்—இல்லாதவன். (உ-ம்.) "ஊரிலான்." (கந்தபு. மாயைப். க.)

இலாளனை—இலாலனை.

இலி—இல்லாதவன். (உ-ம்.) "தாயுமிலி தந்தையிலிதான்றனியன்காணேடீ." (திருவாச. திருச்சாழல். ரு.)

இலிக்கை—இலீக்கை. [லிக்ஷா.]

இலிகம்—எழுதுகை. [லிக.]

இலிகன்—எழுதுகிறவன். [லிகா.]

**இலிகனம்**—எழுதப்பட்டபுத்தகம்.[லிகந.]

**இலிகி**—1. எழுத்து. 2. எழுதுகை.

**இலிகித்தல்**—எழுதல்.

**இலிகிதசான்றினன்**—பத்திரத்திலே தனது சாதி, பெயர், இடம் முதலியவற்றோடெழுதப்பட்ட சாட்சி. (மிரு. ச. ௬௭.)

**இலிகிதம்**—1. எழுதப்பட்டது. 2. எழுதப்பட்டபுத்தகம். 3. கலைஞானமறுபத்துநான்கினொன்று. [லிகித.]

**இலிகிதன்** — எழுதப்பட்டவன். (மிரு. ச. ௬௭.) [லிகித.]

**இலிகுசம்**—எலுமிச்சைமரம்.(இராசவைத்) [லிகுச.]

**இலிகை**—பூமி. [லிகா.]

**இலிங்கக்கட்டு** — சாதி லிங்கக்கட்டு. இஃதோர் வைப்புச்சரக்கு. (சாதிலிங்கக்கட்டி)பார்.

**இலிங்ககோளம்**— அண்டவாதம். [லிங்க கோள.]

**இலிங்கங்கட்டி**—இலிங்கதாரி.

**இலிங்கசங்கமம்**—அந்தரியாக பூசையிலே தியானிக்கப்படும் வடிவம். [லிங்கஸங்கம.]

**இலிங்கசரீரசமஷ்டியபிமாநி** — இரணியகர்ப்பன். (த. நி. போ. ௧0௧.) [லிங்கசரீர ஸமஷ்ட்யபிமாநி.]

**இலிங்கசரீரம்** — ஆன்மாவோடு சககாரியாய்க் கருப்பத்திலே பதியும்பொழுது கூடப்பதிந்தும், தூலதேகத்தைவிட்டுப் போம்பொழுது கூடப்போயும், மோட்சபரியந்தம் அநுவர்த்திப்பதான சரீரம். (சி. சி. ௨: ௨. சிவாக்.)

**இலிங்கசுத்தி** — பஞ்சசுத்திகளுளொன்று. (புறப்பூசையில்) அது, ஸ்நாநவேதிகையில் விரித்தவஸ்திரத்திலே சடுத்தாசநங் கற்பித்து இலிங்கத்தை யெழுந்தருளப்பண்ணி அந்த ஸ்நாநவேதிகையிலேவைத்து விதிப்படி பூசித்து நின்மாலியங்கழித்து இலிங்கத்தையும் ஆவுடையாரையும் அலம்பிச்சாமாநியார்க்கியத்தாலுஞ் சுத்தோதகத்தாலும் அபிஷேகஞ்செய்து தைலமுதல் அருக்கியசலமீறாக முறைப்படியபிஷேகஞ்செய்து திருவொற்றாடைசாத்திப் பீடத்திலெழுந்தருளப்பண்ணி ஒருபுட்பஞ்சாத்துதல். (அகப்பூசையில்)அது, பதியெங்கும்பூரணமாய்ப் பசுபாசங்களிரண்டினும் பிரிவறநின்று அவற்றைச்சேட்டிப்பித்து நின்ற தன்மையறிந்து அத்தகையசிவம் இலிங்கத்தினும் எழுந்தருளியிருக்குமென்றறிதல். (திருவாத.திருப்பெருந்துறை. ௭௦. உரை.) [லிங்கசுத்தி.]

**இலிங்கசுவாயித்தியம்** — ஒரு தீக்கை. (த. நி. போ. ௨௧௧.) [லிங்கஸ்வாயத்த.]

**இலிங்கசூலை**— ஆண்குறியைப் பற்றிவரும் ஒரு நோய். [லிங்கசூலா.]

**இலிங்கதாரணத்தலம்**—இலிங்கந்தரிக்கும் தலம். (த. நி. போ. ௨௧௧.) [லிங்கதாரண ஸ்தல.]

**இலிங்கதாரி**—தனது தேகத்திலே சிவலிங்கந்தரித்துக்கொள்ளுகிறவன்.[லிங்கதாரிந்]

**இலிங்கதேகம்** — சூக்குமசரீரம்; இது: ஞானேந்திரியங்களைந்தும்,மநம் புத்தி என்னும் அந்தக்கரணங்களும், கன்மேந்திரியங்களைந்தும், பிராணாதி பஞ்சவாயுக்களும் ஆகிய பதினேழு தத்துவங்களாலாயதேகம். உ-ம்.) "இந்தப் பதினேழுமிலிங்கதேகஞ்சுரரசுரர் விலங்காய்த்தோன்றிய வுயிர்கட்கெல்லாம்" (கைவல். தத்துவ. ௬௭, ௬௮.) [லிங்கதேஹ.]

**இலிங்கதேகி** — சூக்கும தேகத்தையுடையவன். (த. நி. போ. ௨௧௮.)

**இலிங்கப்பிராணி**—சூக்குமதேகத்தில் வசிக்குஞ்சீவன். (த. நி. போ. ௨௧௧.) [லிங்க ப்ராணி.]

**இலிங்கப்புடோல்**—1. ஐவிரலிக்கொடி. 2. கொவ்வைக்கொடி.

**இலிங்கப்புற்று**—ஒருநோய்.

**இலிங்கப்பொருத்தம்.**—மணப்பொருத்தங்களுளொன்று;அது. ஸ்திரீபுருஷர்கள் ஒரேலிங்கநட்சேத்திரங்களுடையராயினும் புருஷர்கள் ஆண்லிங்கமும் ஸ்திரீ பெண்லிங்கமுமாயினும், பொருத்தமென்று கொள்வது. (இரகுநாத. பில வ. பஞ். ௨௪.)

**இலிங்கபற்பம்** — ஒரு மருந்து. [லிங்கபஸ்ம.]

**இலிங்கபாஷாணம்**— விளைவு பாஷாணம் முப்பத்திரண்டினொன்று.[லிங்கபாஷாண]

**இலிங்கபுடோல்**—இலிங்கப்புடோல்.

**இலிங்கபுராணம்** — சிவபுராணம் பத்தனுளொன்று; அது: பதினோராயிரங் கிரந்தமுடையதாய் அக்கினிகற்பத்திறுதியிலே சீவர்களடையுஞ்சீலம், ஐசுவரியம், இன்பம், மோட்சம் என்பவைகளையும் அதி யிரகசிய ஞான மயமாகிய

சிவலிங்கங்களையும் விரித்துணர்த்துவது. (கந்தபு. நவ. உசு.)

இலிங்கம்—1. அடையாளம். 2. அநுமாநம் 3. ஆண்குறி. 4. (வியாகரணம்.) ஆண், பெண், அலி என்னுங்குறிப்பை விளக்கவரும்பால். 5. இலிங்கபுராணம். (உ-ம்.) "மார்க்கண்டமிலிங்கம்" (கந்தபு. பாயிர. ருச.) 6. உபநிடதமுப்பத்திரண்டினொன்று. 7. (தர்க்கம்.) ஏது; அது, வியாத்திவலியான் மறைந்த பொருளை யுணர்த்துவது.(சைவப். கo.) 8. கருவிழியினடுவிலிருக்கின்ற பாவை. (சீவரட். உருரு.) 9. கறை. 10. சாதிலிங்கம். (உ-ம்.) "படியிலிங்கங்களிகாய்சுக் கட்டிமுட்டி மூன்றிடு." (தைல. தைலவ. கூo.) 11. சிவம். (சைவவினு. சு.) [லிங்க-சித்திரித்தல். படைத்தல் காத்தல் முதலியவைகளினுலே உலகத்தைச் சித்திரிப்பது என்றபடி] சுத்தசிவம், ஆன்மாக்களின் தியாநபாவநாநிமித்தம் நிட்களசகளத் திருவுருக்கொண்டநிலே; அது: சிவலிங்கமெனப்படும்.(சிவபராக். எ.) 12. நோய்க்குறி. 13. (சாங்கியம்.) பிரகிருதி. 14. பிரமசரியநிலையினொன்று.

இலிங்கமூர்த்தி—மூர்த்திசாதாக்கியம். (சதாசிவ. கஉ. உரை.)

இலிங்கமெழுது—ஒருமருந்து.

இலிங்கர்—இலிங்கிகள்.

இலிங்கரோகம்— ஆண்குறியில் வரும் ஒரு புண். [லிங்ரோக.]

இலிங்காங்கம்—ஆணுறுப்பு. (உ-ம்.) "அச்செலாம் லிங்காங்கபகாங்கமாம்படி சிவமுஞ் சத்தியுங்கொண்டருளிய பீடலிங்கவடிவமே" (சி. சி. க: சுக. சிவஞாந.) [லிங்காங்க.]

இலிங்கி—1. இலிங்கத்தையுடையது(உ-ம்.) "ஆதலால் இலிங்கத்தைக்கொண்டு இலிங்கியை ஊகிக்கிறஞானம் அநுமாநமெனக்கொள்க." (சி.சி.பர. உலோகாயத. மறு.சு. தத்துவரா.) 2. இலிங்கமுடையோன்.3. சிவலிங்கத்தைவணங்குவோன். 4. சூக்குமதேகி. 5. தவவேடம் பூண்டோன்.(உ-ம்.)"சொல்வென்றி வேண்டுமிலிங்கியுமிம்மூவர் - கல்விப்புணைகைவிட்டார்." (திரிக. கஎ.) 6. யானை. [லிங்கிந.]

இலிங்கு—மாவிலிங்கு. (உ-ம்.)"இந்தடிதராமுளியிலிங்கவுரிசயை." (தைல. தைலவ. எஉ.)

இலிங்கோத்தாரணம்— இலிங்கந்தாபித்தல். (த. நி. போ. உகசு.) [லிங்கோத்தாரண.]

இலிங்கோத்தாரம் — பூசித்தற்பொருட்டுக் குருமுகமாகச் சிவலிங்கம்பெறுதல். (சி. சி. அ: கக. ஞாநப்.) [லிங்கோத்தார.]

இலிங்கோற்பவமூர்த்தி—தான் அக்கினிமலையாய் நின்றபோது அதன் அடிமுடிகளைத்தேடியும் காணப்படாத பிரமவிட்டுணுக்களாற் காணுதற்கு அவாவிப்பிரதிட்டைசெய்து அர்ச்சிக்கப்பட்ட சிவலிங்கத்திலே நீலகண்டமும் மான்மழுவரதாபயம்பொருந்திய சதுர்ப்புயமும் நெற்றிக்கண்ணும், பிறையணிசடையும் தேவிபாகமுமாகத்தோற்றிய சிவன். (சிவபராக். கரு.) [லிங்கோத்பவமூர்த்தி.]

இலிங்கோற்பவர்—இருபத்தைந்து கேவலவடிவங்களுள் ஒன்றாகிய இலிங்கோற்பவ மூர்த்தங்கொண்டசிவன்.

இலிதை—1. குறிப்பிசை. 2. பூமி.

இலிந்தகம்—கருங்குவளை.

இலிபி—1. இலக்கம். 2. எழுத்து. 3. மெழுகுதல். 4. விதி. [லிபி.]

இலிபித்தல்—1. அநுகூலமாதல். 2. எழுதுதல். 3. நியமித்தல். 4. விதித்தல்.

இலிர்த்தல்—1. சிலிர்த்தல். 2. தளிர்த்தல். (உ-ம்.) "பூங்கமுகீந்தெனவிலிர்த்த"(உபதேச. சிவபு. கூக.) 3. பொடித்தல்.

இலிற்றுதல்—1.சுரத்தல்.(உ-ம்.)"குழவிக்கிலிற்றுமுலை." (புறநா. சுஅ.) 2. துளித்தல். (உ-ம்.) "தேம்பெய்தமிழ்துபொதிந்திலிற்றுமடங்குபுரி" (சிறுபாணு. உஉஎ.)

இலீக்கை—ஈர். (உ-ம்.) "கதிரெழுதுகளெண்மூன்று கசாக்கிரகந்தானுகு-மிதுதொகையிருநான்குற்றதிலீக்கை." (கந்தபு. அண்டகோசரு.) [லீக்ஷா.]

இலீலாவதி—1. அழகியபெண். 2. இலீலையுடையவள். 3. ஒரு கணிதநூல். 4. காமச்சேட்டையுடையபெண். 5. துர்க்கை. 6. பாஸ்கராசாரியருடைய மகள் பெயர்; இவள் பெயரால் அவர் செய்த கணிதநூல் மேற்சொல்லியநூல். [லீலாவதீ.]

இலீலாவிநோதம்—சுரதவிளையாட்டு. [லீலாவிநோத.]

இலீலை— 1. கதை. 2. சரசம். 3. புணர்ச்சி. 4. மகளிர்மோகவிளையாட்டு. 5.விளையாட்டு. [லீலா.]

இலீநம்—1. உருகினது. 2.ஒட்டியிருந்தது. 3. முற்றுக உள்வாங்கப்பட்டது, விழுங்கப்பட்டது, பூரணமாய்க் கலந்தது. [லீந.]

இலுதை—அணில்.

இலுப்பெண்ணெய் — இலுப்பைக்கொட்டையிலிருந்தெடுக்குமெண்ணெய்.

இலுப்பை—இருப்பைமரம். (உ-ம்.) "இலுப்பைவிதையந்தரவாய் விற்கும் விடத்திற்கு-மலுப்பையுண்டாக்கியகற்றும்." (பதார்த்தகுண. அ௫௪.) [இருப்பை என்பதுஇலுப்பையென்றாயிற்று.

இலுப்பைக்கட்டி—இலுப்பைப்பிண்ணாக்கு.

இலுப்பைக்கடுகு— இலுப்பெண்ணெயினடியிற்படியும் வண்டல்.

இலுப்பைப்பூச்சம்பா — ஒருவகை நெல். (உ-ம்.) "பித்தமிகப்பெருக்கும் பேருலகில்யாவருக்கு-முற்றதலைவலிநோயுண்டாக்குஞ் - சத்தியமாய்த்-தாகமெடுப்பிக்குந் தழலிலுப்பைப் பூச்சம்பா-வாதமதிஞேய்வளர்க்குமாய்." (பதார்த்த குண. அ௯௨.)

இலேக்கியம்—1. எழுதப்பட்டது; இஃது, அரசனமைப்புந் தேசத்தமைப்புமென இருவகைப்படும். 2. கையாலெழுதப்பட்ட புத்தகம். (மிரு. ச. உ௧.) 3. சித்திரிக்கப்பட்டது. [லெ வ்].]

இலேககன்—1. எழுத்துக்காரன், எழுதுகிறவன். 2. சித்திரிக்கிறவன். [லெவக.]

இலேகநசாதநம்—எழுதுதற்கு வேண்டிய உபகரணம். [லெவநஸாதந.]

இலேகநம் — 1. எழுத்து. 2. நாவழித்தல். 3. பனையோலை. [லெவந.]

இலேகநி—1. எழுதுகோல். 2. எழுத்தாணி. [லெவநீ.]

இலேகநிகன் — 1. அதிகாரம்பெற்று வேறொருவனுக்காகக் கையொப்பம் வைக்கிறவன். 2.காகிதங்கொண்டுபோகிறவன். [லெவநிக.]

இலேகம் — 1. எழுத்து. 2. திருமுகம். 3. பாகாகக்கிண்டிய மருந்து. [லெவ.]

இலேகர்—வானோர். (உ-ம்.) "இறையவனிலேகராலுமிழைப்பதோ" (சேதுபு. வேதாள. ௪௪.) [லெவ.]

இலேகிநி—1. எழுதுகோல். 2. எழுத்தாணி [லெவிநீ.]

இலேகியம்— 1. நக்கப்படுவது. 2. பாகாகக் கிண்டிய மருந்து. [லெஹ்ய.]

இலேகை—1. எழுத்து. 2. ஓரம். 3. சித்திரம். 4. வரி. 5. வரை. [லெவா.]

இலேசம்—1. அற்பம். 2. இரண்டுகலைகொண்ட ஒரு காலஅளவு. 3. ஓரலங்காரம்; அது: கருதியது வெளிப்படுக்குங் குணங்களைப் பிறிதொன்றால் நிகழ்ந்தனவாக மறைத்துச் சொல்வது. (உ-ம்.)(தண்டி. ௬௪.) 4.குற்றத்தைக்குணமாகவுங் குணத்தைக் குற்றமாகவுங் கூறுவது. (உ-ம்.) "கோதைக் குணமெனவுங் குணமானதைக் கோதெனவு-மோதப் பெறுவதிலேசம்." (குவல. ௯.) 5. நொய்ம்மை. 6. மிகை.(உ-ம்.)"இலேசம்மிகையேலவமெனமொழிப" (பி.வி.௪௪. உரைச்சூத்திரம்.) [லெஶ.]

இலேசவணி—இலேசம் என்னும் அலங்காரம். (இலேசம். 3. பார்.)

இலேசு—1. அற்பம். 2. எண்வகைப்பரிசங்களுளொன்று; அது: நொய்மை, கனமின்மை. (நன். உரி. ௧௯. இராமாநு. உரை.) 3. எளிது. 4. குறிப்பினாலே பொருளை விளக்குஞ் சிறிய சொல். 5. பலவீனம்.(உ-ம்.)"இலேசானதூண்" 6. மிகை. [இலேசம் என்பதன்றிரிபு.]

இலேசுணம்—அரிதாரம்.

இலேந்து—கல்லுப்பு.

இலேபகரன் — எழுதுகிறவன். [லெவகர.]

இலேபகன்—சாந்துபூசுகிறவன். [லெவக.]

இலேபபாக்குகள்--பிண்டங்கொடுப்போன் முதல் ஐந்தாம் ஆறும் ஏழாம் பாட்டர்கள். (பராசர. ௬௫.) [லெவஹாஜ.]

இலேபபாகர் — பிண்டம் கொடுப்போன் முதல் ஐந்தாம், ஆறும், ஏழாம் பாட்டன்மாராகிய மூவர். (பராசர. ௬௫.) [லெவஹாம.]

இலேபம்—1. கறை. 2. சாந்து. 3. துன்மார்க்கம். 4. பூசுதல். 5. போசநம். 6. மெழுகுதல். 7.வான்மிளகு. [லெவ.]

இலேபநம்—1. சேடித்தல். (உ-ம்.) "ஆண்குறியும் நாவும் இலேபநமும் நீரூறலுமாகிய அடையாளங்களைக் காட்டுமாறல்." (வைராக். சத. ௭௫. சிதம்பர. உரை.) 2. பூசுஞ்சாந்து. 3. பூசுந்தைலம். [லெவந.]

இலேபி—1. இலபி. 2. பூச்சு.

இலேபிதம்—தடவல்.

இலேம்புகம்—நிலக்கடம்புப்பூண்டு.

இலேலாயமாநா — அக்கினியின் ஏழு நாக்குகளிலொன்று.

இலேலிகம்—1. பாம்பு. 2. வயிற்றில் வளருங் கீரைப்பூச்சி. [லெலிஹ.]

இலேவநம்—மெழுகுதல். [லேவந.]

இலேவர்தேவி — பண்டமாற்றல், கொடுக் கல் வாங்கல். [இந்துஸ்.]

இலேவுந்து. கல்லுப்பு.

இலை—1. இயந்திரசக்கரத்தினுடைய ஆர். (உ-ம்.) "இலைமுகத்துழலுகின்ற வெந்திரத்தி கிரிகாப்பண்" (பாரத. திரௌ.கக.) 2. இல்லை (உ-ம்.) "கருவுருவாவதெனக்கிலை." (தாயு. ஆரண. க.) [இல்லை யென்னுங்குறிப்புவினைமுற்றில் லகரமெய் தொக்கது.] 3. உலோபம். 4. தகட்டுவடிவு. (உ-ம்.) "நெட்டிலைவடிவாள்குந்தந்தோமர நேமிநெய்த்தோர்" (திருவிளை. மெய்க்கா. உச.) 5. பச்சிலை. (உ-ம்.) "உருளரிசிதிச்சிலி மதுகம்மாரவலரிலையசை." (தைல. தைலவ. கஅ.) 6. பத்திரம். (உ-ம்.) "இலைமுதிரேனல்" (கந்தபு. வள். கக.) 7. வெற்றிலை.

இலைக்கதவு—ஒருவகைக்கதவு.

இலைக்கள்ளி—ஒருவகைக்கள்ளி.

இலைக்கறி— 1. கீரை. 2. கீரை முதலிய இலைகளைப்பாகஞ்செய்தெடுத்தகறி.

இலைக்குறடு—நீண்டகுறடு.

இலைக்கோடி—வெற்றிலைக்கொடி.

இலைகிள்ளல்— இலைமுதலியவற்றைக்கிள்ளுந்தொழில். அது: கைத்தொழில் ஐந்தனுள் ஒன்று. (உ-ம்.) (சூ; நிகண். கஉ: )

இலைங்கம்— இலிங்கத்தோடு சம்பந்தப்பட்டது. பதினெண்புராணங்களுளொன்று. அது: இலிங்கபுராணம்.

இலைச்சுமி— பதுமராகமணியின் பதினாறு வகைக்குற்றங்களுளொன்று. (திருவிளை. மாணிக்க. சரு. உரை.)

இலைச்சுருளி — ஒருபூண்டு.

இலைஞெமல்—இலைச்சருகு. (உ-ம்.) "இரியன்மகளிரிலைஞெமலுளீன்ற - வரியிளஞ்செங்காற்குழவி" (முத்தொள்ளாயிரம். எ.)

இலைத்தல்—1.சாரமின்மை. 2. சுவைகுறைதல். 3. பச்சைநிறமாதல். 4. அரோசித்தல்.

இலைத்திரி— காதிலே துளையிடலால் வரும் புண்ணையாற்றுதற்பொருட்டு அத்துளையிலே வைக்குமிலைச்சுருள்.

இலைநிறம்—பச்சைநிறம்.

இலைப்பசளி—பெரும்பசளிக்கொடி.

இலைப்பி—இலைச்சாம்பல். (சிந்தா.)

இலைப்புரைகிளைத்தல்—தேடுதல். (உ-ம்.) "ஈட்டமும் வேறுமாக விலைப்புரை கிளைத்திட்டேமே" (சிந்தா. கநக. கஅரு.) [இது ஒரு பழியென்பர். அரிதாகத்தேடுதலைக்குறித்துநின்றதென்க.]

இலைப்புல்லு—ஒருவகைப்புல்லு.

இலைமகப்பைம்பூண்—பத்திராவலி; அது: வெற்றிலைச்சரப்பணி. (நீதிநெறி. உஎ.) [இலைத்தொழிலமைந்தமுகமுடைய பசிய ஆபரணம் என்றார் ஒருவர்.]

இலைமூக்கரிகத்தி—வெற்றிலைக்காம்பறியுங் கத்தி. இதற்குக் குளிர் என்று பெயர். (உ-ம்.) (சூ. நிகண். எ: கஉ.)

இலையம்—1. கூத்தின்விகற்பம். 2. கூத்து. (பிங்கல. ௲க. எ. ரு.)

இலையமுதிடுவோர்— வெற்றிலை விற்போர். (மணிமே.)

இலையாகிருதி—இலையாகாரம். [ஆகிருதி.]

இலையான்—ஈ என்னும் பறவை.

இலையிரட்டை — ஒற்றையாய் வரற்பாலதாகிய ஓரிலையில் நுனிப்புறமிரட்டையாக விருத்தல். (உ-ம்.) "மறைமுதலே முதலேயென்ற அடுக்குப்பூ விரட்டையும் இலை யிரட்டையும் போலாது, மக்களிரட்டைபோல வேற்றுமையின்றிக் கலத்தல்பற்றிவந்த அடுக்கென்க."(கூர்மபு. சுவேதவரா. ச. உரை.)

இலையுதிர்வு— 1. இலைசொரிதல். 2. முதுகாடு.

இலைவாணிகம் —
இலைவாணிபம் — } வெற்றிலை முதலிய இலைவியாபாரம்.

இலைவாணிபர்—வெற்றிலை விற்போர்.

இலைவேல்—இலைத்தொழில்களாற் சிறந்த வேல். (புறப்பொ.)

இலைவைத்தகொடும்பூண்—விளைந்த வெற்றிலைச்சரப்பணியென்னுமாபரணம். (உ-ம்.) "நீண்ட-விலைவைத்த கொடும்பூணுங்கண்." (திருவிளை. வன்னியுங். கக.)

இலௌகிகதருமம் — 1. உலகாசாரம். 2. உலோகத்துக்கேற்றதருமம்.[லௌகிகயாரு.]

இலௌகிகநூல்— ஆயுள் வேதமுந் தண்டநீதியு முதலாய நூல்கள். ( சைவச. பொதுவி. ௲௬அ. உரை.)

இலௌகிகம்—உலக சம்பந்தமானது, இவ்வுலகத்துக்கேற்றது, உலகவழக்கம்.

இவ்— இவை. (உ-ம்.) "சொல்லினைப் படுந்தூதர்க்கிவ்வெலா-மொல்வதன்று." (கந்தபு.தெய்வயானை. ருஎ.)

இவ்விரண்டு–1. இந்தஇரண்டு.(உ-ம்.)"இவ்விரண்டிலாகாசபலம்போல மெய்ஞ்ஞானமிசைந்த தன்மை." (ஞானவா. சநகராச. அ.) 2. இரண்டிரண்டு. (உ-ம்.) "நன்னூ-உயிரீற்றுப்-ஒன்பதொழித்தஎன்னுஞ்சூத்திரவுரையிற்காண்க"

இவ்வோர் — இவர். (உ-ம்.) "இவ்வோர்வி

ரைவிலிவன்றன்னைவினவ" (பாரத. பதினெட்டாம்போர். ௧௧௧.)

இவக்காண்—இங்கே.(உ-ம்.) உவக்காணெங்காதலர்செல்வாரிவக்காணென்-மேனிபசப்பூர்வது. (வள். ௧௧௮௫.)

இவண்—இவ்விடம். (உ-ம்.) "இவணில்லாதுய்ந்திடநினைந்து கடிதோடு மினியென்றாள்." (கந்தபு. வள்ளி. ௯௯.)

இவணர்—இவ்வுலகத்தினுள்ளார். (பதிற்று. ௭௪.)

இவநட்டம்—(மிளகு.)

இவர்—1. இவர்கள்; அது: பலர்பாற்படர்க்கையிலே அண்மையிடத்தாரைக் கருதுமொரு சுட்டுப்பெயர். 2. இவரென்னேவலுந்தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். (உ-ம்.) "அறலிவர்தடம்பொருநை." (திருவிளை. மாயப். ௯.) 3. உயர்திணை ஆண்பால்பெண்பால் ஒருமையிலே உயர்த்திக்கூறுமிடத்து வழங்கும் ஓர் அண்மைச்சுட்டுப்பெயர். (உ-ம்.) "நன்றிவர்திறமென நாணிக்கூறுவாள்." (கந்தபு. வள். ௮௯.)

இவர்தல்—1. ஆசை. 2. உயர்தல். (உ-ம்.) "கோடிவர் நெடுவரை." (கந்தபு. வள். ௮௭.) 3. உலாவுதல். (உ-ம்.)" இரைதேர்ந்திவருங்கொடுந்தாண்முதலையொடு." (மலைபடு. ௯௦.) 4. எழும்புதல். (உ-ம்.)"பொன்னிவர்திரிகோட்டுப் புரிதகராய் நிற்க." (கந்தபு. வில்வலன். வாதாவி. ௨௯.) 5. ஏறுதல். (உ-ம்.) "மட்டுவாரிசத்தோடிவர் வண்டுபோல்." (சேதுபு. இராமதீர்த்த. ௬.) 6. கலத்தல். (உ-ம்.) "சொரூபமிவராதியைக்குறியாமே." (திருப்பு.௬௩௯.) 7. செல்லுதல்,போதல். 8. நெருக்கமாய்ச் செறிதல். (உ-ம்.) "அவலெறியுலக்கைபோயதிரத்தாக்கலு-மிவர்குலைத்தெங்கிளநீர்கள்சிந்துவ." (தணிகைபு.நகர.௯௯.) 9. படர்தல். (உ-ம்.) "தூறிவர் துறுகற்போல." (பட்டினப்பா. ௨௯௪.) 10. பரத்தல். (உ-ம்.)"இவர்நனைவளர்கொடி." (மலைபடு. ௫௧௪.) 11. பேராசை.

இவர்வு—ஏறுதல். (உ-ம்.) குடிமிக் குன்றினிவர்வுறுகாதலாளர்." (கந்தபு.மார்க்கண்டேய. ௬௭.)

இவவு—இழிவு.

இவள்—உயர்திணைப் பெண்பாற் படர்க்கையிடத்து அண்மைச் சுட்டுப்பொருளிலே வருமொருபெயர். (உ-ம்.) "இவளெமதிடத்தில்வந்ததெம்பெருந்தவமேயென்றார்." (கந்தபு. வள். ௧௧௮.)

இவறல்—1. ஆசை. (உ-ம்.) "இவறலுமிகலுமின்றி." (கந்தபு. திருவவ. ௬.) 2. ஆசைப்படுதல். (உ-ம்.) "ஈட்டமிவறியிசைவேண்டாவாடவர்." (வள். ௧௦௦௬.) 3. ஆசைப்பெருக்கம். (உ-ம்.) (சூ. நிகண். ௧௧: வகரவெ. ௬.) 4. கைவிடாதிருத்தல். (உ-ம்.) "இவறியார்" பார். 5. மறதி. (உ-ம்.) (சூ. நிகண். ௧௧: வகர. ௬.) 6. வேண்டும் வழிப்பொருள் கொடாமை. (உ-ம்.) "இவறலுமாண்பிறந்தமானமும்." (வள். ௪௩௨.)

இவறன்மை—1. அசட்டை. 2. ஆசை. 3. உலோபகுணம்.

இவறியார்—கைவிடாதார், ஆசைப்பட்டோர். (உ-ம்.) "கவறலுங் கழகமுங் கையுந்தருக்கியிவறியாரில்லாகியார்." (வள். ௯௩௫.)

இவறு — இவறென்னேவலுந் தெரிநிலைவினைப்பகுதியும் வினைத்தொகையும். (உ-ம்.) "இவறுதிரை" (ஐங்குறு.)

இவறுதல்—ஆசையுறல். (உ-ம்.) "அற்றைத்-திவசத்திவறுவரமங்கையர் வீழச்சென்றார்." (பாரத. நிவாத. ௯௮.)

இவன்—உயர்திணையாண்பாற் படர்க்கையிடத்து அண்மைச்சுட்டுப்பொருளிலே வரும் ஒருபெயர். (உ-ம்.) "இவனுலகிலிதமிதஞ் செய்தவெல்லா" (சி. சி. ௧௦. ௧.)

இவுளி—1. குதிரை. (உ-ம்.) "அலங்குளைப்பரீஇயிவுளி." (புறநா. ௪.) 2. மாமரம். (இராசவைத்.)

இவை—அஃறிணைப்பன்மையிலே வரும் ஒரண்மைச்சுட்டுப்பெயர். (உ-ம்.) "இலங்கியதோற்ற நிற்ற வீறிவை யிசைத மாலே" (சி.சி. ௧: ௪.)

இழ— 1. இழவென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும்.

இழத்தல்—கெடவிடுதல், இல்லாதுபோகவிடுதல். (உ-ம்.) "கோடாதுவைத்தீட்டினாரிழப்பர்" (நாலடி. செல்வநிலையாமை. ௧௦.) "மெய்வலியரக்கரால்விண்ணுமண்ணுமே - செய்தவமிழந்தன" (இராமா. திருவவ. ௧௮.)

இழத்தோறும்—இழக்குந்தோறும். (உ-ம்.) "இழத்தொறூஉங் காதலிக்குஞ் சூதேபோல்" (வள். ௯௪௦.)

இழப்பு— 1. இழத்தல். 2. கீழ்மை. 3. நட்டம்.

இழப்புணி—1. இழப்புண்டவள். 2. இழப்புண்டவன்.

இழவு—1. இழத்தல். 2. சாவு. 3. பிதாமாதாமுதலிய சுற்றத்தாரையிழத்தல். [இழவென்பது அவலச்சுவை தோன்றற்காகிய நான்கு பொருள்களுளொன்றென்றும், அது: தந்தையுந்தாயும் முதலாகிய சுற்றத்தவரையும் இன்பம்பயக்கும் நுகர்ச்சிமுதலாகியவற்றையும் இழத்தல் என்றும் தொல்காப்பியத்துப்பொருளதி

காரத்து இருநூற்றைம்பத்துமூன்றாஞ் சூத்திர உரையிற் காணப்படுகின்றது.] 4. வறுமை. (உ-ம்.) "பேறிழவின்பமோடு பிணிமூப்புச்சாக் காடென்னு-மாறும்" (சி. சி. உ: கூ. சிவஞாக.)

இழவுக்கடித்தல்— சாவீட்டிலே மார்பிலடித்தழுதல்.

இழவுகாத்தல்— சாவீட்டிலே துக்கங்கொண்டாடிக்கொண்டிருத்தல்.

இழவுகாரன்—சாவுக்குரியவன்.

இழவுசோல்லல்— மரணத்தைப்பற்றிப்பிறர்க்கறிவித்தல்.

இழவுவிழுதல்— 1. கேடு சம்பவித்தல். 2. மரணஞ்சம்பவித்தல்.

இழவுவீடு—சாவீடு.

இழவோலை—ஒருவர் மரித்ததை அறிவிக்க எழுதப்பட்ட பத்திரம்.

இழி— 1. இழியென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும், வினைத்தொகையும். (உ-ம்.) "இழிகுலமாகியவெயினர்பாவைநான்" (கந்தபு. வள்ளி. ௩0.) 2. இழிவு, இகழ்ச்சி. (உ-ம்.) "இழித்தகுதாதனுல்" (கந்தபு. சூரனமைச்சு. ௭௧.)

இழிகடை—மிகவிழிந்தவன். (உ-ம்.) "அவனிழிகடை" (வழக்கு.)

இழிகண்—எப்பொழுதும் பீளைநீரொழுகுங் கண். (உ-ம்.) "இழிகண்ணன்" பார்.

இழிகண்ணன்—எப்பொழுதும் பீளைநீரொழுகுங்கண்ணையுடையோன்.(உ-ம்.) "காக்கைக் கணன்குழிந்தகண்ணனிழிகண்ணன்" (சைவச. ஆசாரிய. ௧0.)

இழிதலம்—தாழ்ந்தகுலம். (உ-ம்.) "இழிகுலமாகிய எயினர்பாவைநான்" (கந்தபு.வள்.௩0.)

இழிங்கு— 1. ஈனம், 2. வடு.

இழிச்சல்வாய்—திறந்தவாய்.

இழிச்சு— இழிச்சென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும்.

இழிச்சுதல்—1. இழிவுபடுத்தல். 2. இறக்குதல். (உ-ம்.) "அட்டகரியின் பதமறிந்தங்கிழிச்சி." (பெரியபு. சிறுத்தொண்ட. ௬௬.)

இழிச்சொல்—பழிச்சொல்.

இழிசநர்—கீழ்மக்கள்.

இழிசினன்—புலைமகன். (உ-ம்.)"கட்டிநிணக்குமிழிசினன்" (புறநா. அஉ.)

இழிசொல்—1. அசப்பியவார்த்தை. 2. இழிசனர்பேசுஞ்சொல்.

இழிஞர்—சண்டாளர். (உ-ம்.) "இழிஞர்தம் பதிக்கேகும் வெம்பவம்." (கந்தபு. வீரவாகுமீட்சி. ௫.)

இழிஞன்—புலையன். (உ-ம்.)"இழிஞன்புலைக்கரந்-தீண்டி" (காஞ்சிபு. பராசிரா. ௬௨.)

இழித்தல்—1. அருவருத்தல். (உ-ம்.) "எம்பிரானிழித்திட்டேனே." (திருவாச. திருச்சத. ௬௫.) 2. இழிவுபடுத்தல். 3. இறக்குதல் 4. தாழ்த்தல்.

இழிதகவு—1. இழிவு. 2. எளிமை.

இழிதகன்—பிறர்பழிக்கத்தக்க செயலையுடையவன்.(உ-ம்.) "இழிதகனியற்கைபோலா-மண்ணறன் செயலும்." (கந்தபு. ததீசிப். ௩௯.)

இழிதல்—1. அவகீர்த்திப்படுதல். 2. இறங்குதல். (உ-ம்.) "பொன்வரையிழிவதோர்புயலின்பொற்புற" (இராமா. திருவவதார. ௩௯.) 3. குறைதல். (உ-ம்.) "இழிவு" பார். 4. தாழ்தல்.

இழிதிணை—அஃறிணை; அது, தேவர், மனிதர், நரகரல்லாதன. (உ-ம்.) (நன்னூல் - எல்லாமென்பதிழிதிணையாயின்) என்னுஞ் சூத்திரத்திலறிக.

இழிந்தவர்—இழிந்தோர்.

இழிந்தோர்—தாழ்ந்தநிலையிலிருக்கின்றவர். (உ-ம்.) "ஈதுநிலத்தன்றே யிழிந்தோருயர்ந்திடுவர்." (கந்தபு. அசுரர்யாக. ௨0.)

இழிப்பு—1. இகழ்வு. 2. இழிவுபடுத்தல். 3. சுவையென்னு மலங்காரத்தினெண்வகைப்பட்ட மெய்ப்பாடுகளுளொன்றாகிய அருவருப்பு. அஃது, "உடைதலைய மூளையுமூன்றடியுமென்புங் - குடருங்கொழுங்குருதியீர்ப்ப - மிடைபேய் - பெருநடஞ்செய்பெற்றித்தே கொற்றப் போர்க்கிள்ளி, கருநடரைச் சீறுங்களம்." என்பதிற்போல, (தண்டி. ௬௧. உரை.) [தொல்காப்பியர் இதனை இளிவரல்எனவும்,மூப்புப் பிணி வருத்தம் மென்மை என்னும் நான்குங்காரணமாகப் பிறக்கும் எனவும் கூறுவர்.] 4. நிந்தை.

இழிபாடு—இழிவு. (உ-ம்.) இழிபாடிலாத கடலின்" (தேவார. நாரை. அ. திருஞாந.)

இழிபு—1. இறங்கி. (ஐங்குறு.) 2. கீழ்மை. 3. சிறுமை. (உ-ம்.) "அறத்தாறிதுவெனவெள்ளைக்கிழிபு." (காரிகை. உறுப்பிய. ௧௫.) 4. தாழ்வு. 5. பள்ளம்.

இழிய—ஒழுக. (ஐங்குறு.)

இழியற்கண்—இமை திறந்தகண்.

இழிவரவு—இழிவு, அவமானம்.(உ-ம்.) "யான்பட்டவிழிவரவைமதிக்கிலாயோ." (கந்தபு. அசமுகிபுலம்பு. ௧௪.)

இழிவு—1. அவகீர்த்தி. 2. ஈனம், குற்றம், கேடு. 3. குறைதல். (உ-ம்.) "இழிவறிந்துண்பான்." (வள். ௬௪௬.)4.தாழ்ச்சி.(உ-ம்.)"துன்பவெம்பிறப்பிணிழிவையும்"(வைராக்கியதீ.௧௫.) 5. பள்ளம். (உ-ம்.) (சூ. நிகண். ௫: ௬௧.)

இழிவுசிறப்பு.— இழிந்ததன்மையைப் பெருப்பித்தல். (நன். இடையியல். ௬. உரை.)

இழிவுசிறப்பும்மை—இழிந்த தன்மையை ப்பெருப்பித்தற்பொருளை விளக்கும் உம்மென்னுமிடைச்சொல். "புலையனும் விரும்பாதவிப் புன்புலால்" என்பதிற்போல. (அரிச். மயாந. கஉஅ.)

இழின்— ஓர் ஒலிக்குறி. (உ-ம்.) "ஆன்படு பாலுலை - போந்து பொங்கியவாவியி னுற்பொலிந் - தேந்துமாடங்கடாமிழினென்பன" (சிந்தா. இலக்கணையா. கஅ.)

இழு—இழுவென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும்.

இழுக்கம்—1. ஈனம், இழிவு. (உ-ம்.) "இரந்திடுதொழிலராகியிழுக்கமுற்றுர்களன்றே."(கந்தபு. மாயைப். சஅ.) 2. ஒழுக்கமின்மை. (உ-ம்) "இழுக்கத்தின் மிக்கவிழிவில்லை." (பழமொழி. கருரு.) 3. குறை. 4. தவறு. 5. தளர்வு. (உ-ம்.) "ஏறிமழுவாளவனிழுக்க - முற்றவன்றினும்" (இராமா. மந்திர. சஉ.) 6. தாமதம். 7. பின்வாங்குதல். 8. வசை.

இழுக்கல்—1. தவறுதல். (உ-ம்.) "எற்றுதெண்டிரைநீர்ச்சேர்ப்பன் றன்செயலிழுக்கி." (திருவிளை. நான்மா. ச.) 2. நிந்தை வருதல். (உ-ம்.)"எங்குலமிழுக்குமென் றிருளையகற்றல்" (தணிகை. பு. களவு. உஉஎ-ஆங்கவி.முகம்.) 3. வழுக்கல். (உ-ம்.) "இழுக்குந்தேன்களே." (கந்தபு. நாட்டு. சக.) 4. வழுக்குநிலம்.

இழுக்காமை—மறவாமை. (உ-ம்.) "இழுக்காமை யார்மாட்டு மென்றும் வழுக்காமை-வாயினதுவொப்பதில்." (வள். ருகூ.)

இழுக்காறு—துன்மார்க்கம். (உ-ம்.) "இழுக்காற்றுலின்பாலமெய்தார்." (தாயு.பரா.உகஎ.)

இழுக்கி—தப்பி. (புறநா.)

இழுக்கிய—இழிவானவை. (உ-ம்.)"கோளிலன்பர்களிழுக்கியபுரியினும்" (கந்தபு.மோக.எ.)

இழுக்கியான் — மறந்திருந்தவன். (உ-ம்.) "முன்னுறக்காவாதிழுக்கியான்." (வள்.ருகரு.)

இழுக்கு— 1. ஆபரணத்திளேருறுப்பு. 2. இழுக்கென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். (உ-ம்.)"இழுக்குதேறற்செஞ்சேற்றிற்பெடைவண்டெய்திச் சேவன் முனம் -.வழுக்கிவீழ்ந்துநாணெய்தும்வண்டாமரையாள்"(கூர்மபு. தக்கனைச்சபித்.க.) 3. ஈனம். உ-ம்.) "எமருக்கெல்லாம்-வெம்மாசுபடுபாவம் பழியிரண்டும் படவிழுக்கு விளைத்து"(திருவிளை. பரிநரி. சக.) 4. கீழ்மை. (உ-ம்.) "யாமாரினுமிழுக்குற்றனம்" (கந்தபு. சரவண. உஅ.) 5. தவறு, வழு. (உ-ம்.) "இழுக்குடையபாட்டிற்கிசைநன்று" (நல்வழி. ௬க.) "என்றனண் மறித்தலோடுமிழுக்குரையாடிவைத்து" (திருவிளை. மாமனு. கசு.) 6. தளர்தல். 7. நிந்தை. (உ-ம்.) "எம்பெருங்கிளைக்கிதோரிழுக்கை-மண்ணினுட்டவோவந்தது" (கந்தபு. வள். கருரு.) 8. பொய். 9. பொல்லாங்கு. (பிங்கல. ௬களஎ.) 10. மறதி. 11. வருத்தம். 12. வழுக்குநிலம். (உ-ம்.) "நூழிலுமிழுக்குமூழடி" (குறிஞ்சி. உருஅ.)

இழுக்குதல்—1. இழுக்கல். 2. இழுத்தல். 3. தள்ளிவிடல். (உ-ம்.) "இழுக்கிவிட்டவிக்கிழமகனிசையிதேல்" (திருவிளை. விறகு.சஅ.)

இழுக்கை— இழுப்பு.

இழுகிய— பூசிய. (மணிமே.)

இழுதணி— 1. உலோபி. 2. சோம்பன்.

இழுதுதல்—1. தாமதித்தல். (உ-ம்.)"இடைந்துபின்னரினேகுமக்கணநுழைந்திழுக" (இரகு. திக்குவிசய. உ0சு.) 2. பிசுனித்தனம்பண்ணுதல். 3. பின்போதல். 4. பூசுதல். (உ-ம்.) "வெள்ளிவெண்சுதையிழுகியமாடத்து" (மணிமே. சக்கர. சரு.)

இழுத்தல்—1. உறிஞ்சல். 2. கயிறுமுதலிய கருவியின் துணைக்கொண்டாவது கொள்ளாமலாவது கையினுல் இருப்பினின்று பெயர்த்துத்தன்னைநோக்கிவரச்செய்தல். (உ-ம்.) "தேரிழுத்தான்" 3. காலநீட்டித்தல். (உ-ம்.) "அந்தவழக்கு நெடுக இழுத்துக்கொண்டுவருகின்றது." 4. சுரம்பாடுதல். 5. சுழித்துவாங்கல். 6. நீட்டித்துப்பேசல். 7. நீளமுடையதாகச்செய்தல். 8. பின்வாங்குதல். 9. புறத்திலுள்ளாரது குணகுணங்களை வெளிப்படுத்தல். 10. வசமாக்கல். 11. வலித்தல்.

இழுத்துப்பேசுதல்—கெட்டியாகப்பேசுதல்.

இழுது— 1. கள். (இராசவைத்.) 2. குழம்பு, குழைசேறு. (உ-ம்.) "இழுதுசெய்யினுளிந்திரத்தெய்வதந்-தொழுது" (பெரியபு. திருநாட். கஉ.) 3. தித்திப்பு. 4. நிணம். 5. நெய். (உ-ம்.) "இழுதுபெய்து-பொரிப்பனபொரித்திட்டு" (கந்தபு. வில்வலன்வாதாவிவதை. கஎ.) 6. மூடம். (இராசவைத்.)

இழுதுதல்—1. கொழுத்தல். 2 நெய்த்தல்.

இழுதை—1. அறிவிலான். (உ-ம்.) "நெறியிடையொழுகலாவிழுதைநீரனை" (கந்தபு. நாட்டு. ௬க.) 2. பேய். 3. பொய்.

இழுப்பறை — ஒரு பெட்டியிலிழுக்கும்படியான சின்ன அறை.

இழுப்பாட்டம்—காலநீட்டித்தல்.

இழுப்பாணி— 1. கலப்பையின் ஏர்க்காலை நுகத்திலே பூட்டுமாணி. 2. காலதாமதம் பண்ணுகிறவன்.

இழப்பு—1.இசிவு என்னும் நோய். (உ-ம்.) " இழுப்பின் பேச்சைப் போழ்த்திழுப்பாகும் " (தைல. தைலவ. கூக-ஆங்கவியுரை.) 2. இழுத்தல். 3. சுவாசரோகம். (உ-ம்.) "ஆசநத்தடைப்புவலியிழுப்புதரப்பீடை" (தைல. தைலவ. கஎ.) 4. விலகல். ( உ-ம். ) 'க. பார்.' (தைல. தைலவ. கக.)

இழப்புண்ணுதல்—இழுக்கப்படுதல்.

இழப்புப்பறிப்புப்படல்-1. அவதிப்படல். 2. போராட்டப்படல்.

இழுபறி—1. பிணக்கு. 2. வாது.

இழும்— 1. இனிமை. 2. உவப்பு. 3. ஓர் அநுகரணவோசை. 4. மென்மை. (உ-ம்.) "இழுமென்மொழி" (இலக்கணவிள. எருச.)

இழுமு—1. உவப்பு. 2. தித்திப்பு.

இழுமென்மொழி — மெல் என்றசொல். (உ-ம்.) "இழுமென்மொழியால் விழுமியது நுவலினும்" (தொல். பொருளதி. ருருக.)

இழுமெனல்—1.இழுமென்னும் அநுகரணவோசை பிறத்தல். (உ-ம்.) "இழுமென்புள்ளின்" (பெரும்பா. ச0சு.) 2. இனிமை. (சூ. நிகண். கக. ழகர. கூ.) 3. எண்வகைப்பரிசங்களுளொன்று; அது வழுவழுத்தல். (நன்.உரி. கஙூ. இராமாநு. உரை.) 4. சீர்மை.

இழுவல்— 1. காலதாமசம்பண்ணுகிறவன். 2. சுயகாரியந்துறந்து பிறர்காரியம் நடத்துகிறவன்.

இழுவை—1. இழுக்கப்படுவது. 2. இழுக்கும்வடம். 3. இழுப்பு. 4. ஒரு முட்செடி. 5. சுவடு.

இழை— 1. ஆபரணம். (உ-ம்.) "தமநியம்வலைஇய தாவில்விளங்கிழை" (மதுரை. எ0ச.) [இழைக்கப்பட்டதென்பதுபொருள்.] 2. இழையென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 3. நூற்கயிறு. (உ-ம்.)"இடங்கெழுதிளைத்துன்னூசி யிழைதொடுத்திசைக்கப்பட்ட-படங்கெழுமாடகூடத்து" (கந்தபு. தெய்வயா. ககஉ.) 4. பஞ்சிநூல்.(உ-ம்)"தடமுலையிரண்டேயாகி-யிழையிடைகிடக்கநீங்கி" (திருவிளை. திருமண. கஙூக.) 5. பூண்வடிவாகக்கட்டியமலர்மாலை. (உ-ம்.) "பன்மலர்துதையத்-தழையுங் கோதையுமிழையுமென்றிவை" (கலி. க0உ.)

இழைக்கட்டு — கைக்காப்பாகக் கட்டு நூற்கயிறு.

இழைக்கயிறு—1. தென்னந் தும்பினாலிழைத்த கயிறு. 2. நூலினாற்செய்த கயிறு.

இழைக்குளிர்ச்சி—புடவையின்மிருது.

இழைக்கை—இழைத்தல்.

இழைகூடு—இழைப்புளி.

இழைத்தநாள் — 1. நியமித்தநாள். (உ-ம்.) "இழைத்தநாளெல்லைசென்றோர்."(கந்தபு. அசமுகிநகர். உஅ.)

இழைத்தல் — 1. அழுத்துதல், பதித்தல். ( உ-ம். ) " மரகதமணியி-னிழைத்தசெய்குன்றின்" (நைடத. நகரப். சு.) 2. ஆராய்தல். 3. கலப்பித்தல். 4. சீவுதல். 5. செய்தல். (உ-ம்.) "செய்யுண்மருங்கின் மெய்பெறநாடியிழைத்த விலக்கணம்." (தொல். பொருளதி. ருருசு.) 6. பின்னுதல். (உ-ம்.) "பாயிழைத்தான்." 7. பூசுதல். (உ-ம்.) "குங்குமவருணங் கொங்கையினிழைத்து" (சிலப். ஊர்காண். கூ0.) 8. வஞ்சினங்கூறுதல்; அஃதாவது, இன்னது செய்யேனாகில் இன்னனாகுவனெனத் தான் கூறுதல். (உ-ம்.) "இழைத்ததிகவாமைச்சாவாரையாரே-பிழைத்ததொறுக்கிற்பவர்." (வள். எஎக.) 9. விதித்தல்.

இழைதல்—1. உட்குழைதல். (உ-ம்.) "விழைந்திழைந்து வேண்டியவர்க்கண்டகண் " 2. உரிஞ்சுதல். (உ-ம்.) "மூங்கில் ஒன்றோடொன் றிழைந்து தீப்பற்றிக்கொள்ளும்" 3. கலப்பு.4. பிணைதல்.(உ-ம்.) "பாம்புகள் ஒன்றோடொன்றிழையும்"

இழைந்தவர்—கூடினவர். (சிந்தா.)

இழைநெருக்கம்—இழைக்குளிர்ச்சி.

இழைப்பிடித்தல்—காயத்தை மூடித்தைத்தல்.

இழைப்புளி—சீவுளி.

இழைபு — செய்யுள்வனப்பு எட்டனுளொன்று; அது, வல்லெழுத்து யாதுந் தீண்டாது செய்யுளியலுடையார் எழுத்தெண்ணி அடிவகுக்கப்பட்ட குறளடிமுதலாக வைந்தடியு முறையானேயுடைத்தாயோங்கிய சொற்களால் வருவது. (உ-ம்.) "ஒற்றொடுபுணர்ந்த வல்லெழுத்தடக்காது-குறளடிமுதலாவைந்தடிகாறு-மோங்கியமொழியானுங்ஙனமொழியி - னிழைபினிலக்கணமியைந்ததாகும்" (யாப்பருங்கல. காரிகை. அ. உரைச்சூத்திரம்.)

இழைபோடல்—புடவை பொத்துதல்.

இழைய—பொருந்த. (சிந்தா.)

இழையூசி—புடைவைக்கு இழைப்போடத்தக்க மெல்லிய ஊசி.

இளக்கம்—இளகுதல்.

இளக்கரித்தல்— 1. இளகிப்பின்னிடுதல். 2. எளிமையாதல். 3. தளர்தல்.

இளக்காரம்— கடுமைகாட்டாது நடத்தல்.

இளக்கும்—அசைக்கும். (பத்துப். கஎஉ.)

இளக்குதல்— 1. இளகச்செய்தல், அசைத்

தல். (உ-ம்.) "வெளிலிளக்குங்கயிறுபோல" (ப-லே. களஎ.) 2. நெகிழச்செய்தல்.

**இளகல்** — 1. அசைதல். 2. இளகுதல். 3. தழைத்தல்.

**இளகுகாடு**—தழைத்தகாடு. (உ-ம்.) "சுளகு வார்செவித் தூங்குகைக்குஞ்சரம் - இளகு காடி ளகப்பரிகொண்டதே" (சிந்தா. கஙக. உஉஉ.)

**இளகுதல்**— 1. தணிதல், உக்கிரத்தில் அல்லது வேகத்தில் அல்லது இருந்தநிலையிற்குறைதல். 2. தழைத்தல். (உ-ம்.) "இளகுகாடிளகப் பரிகொண்டதே" (சிந்தா.கஙக. உஉஉ.) 3. தளர்தல், அசைதல். (உ-ம்.) "சோறடுகுழிசியிளக விழூஉம்" (பெரும்பா. ௬௬௬.) 4. மநங்குழைதல், மநநெகிழ்தல். (உ-ம்.) "இளகியவுள்ளத்தனுயிருப்பையாயில்" (சி.சி. அ: ௬௦.சிவாக்.) 5. மிருதுவாதல். [மூ- இளமை. தளர்ச்சிமுதலியன இளமைக்குணமாதலால்.]

**இளகும்**—தளிர்க்கும். (சிந்தா.)

**இளங்கதிர்**— 1. உதயகாலத்திற்றோன்றுஞ் சூரியகிரணம். 2. உதயகாலத்திற்றோன்றுஞ்சூரியன். 3. பயிரின்முதிராக்கதிர். 4. பீன். (பிங்கல.) 5. வெப்பங் குறைந்த கிரணம். (உ-ம்.) "வான்போ-யெறித்தனை திரிதிநாளுமிளங்கதிர் நடாத்தி" (கந்தபு. அரசுசெய். ௩.)

**இளங்கலையன்**—ஒருவகை நெல்லு; அது மற்றைய சில சாதிநெற்களினுங் குறைந்தகாலத்திலே விளைவது.

**இளங்கற்று**—இளங்கன்றையுடைய பசு.

**இளங்கன்று**—1. பசுமுதலியவற்றின் முதிராதகன்று. 2. மரக்கன்று.

**இளங்காய்**—முதிராதகாய்.

**இளங்கார்**— கார்நெல்; அது கார்காலத்திலேகொய்யப்படுவது.

**இளங்கால்**— 1. இளங்கொழுந்து. 2. இளமைப்பருவம். (உ-ம்.) "பண்டையிளங்காலுவப்பன்பாலடிசில்" (சிந்தா. சுரமஞ்சரி. கஅ.) 3. வெற்றிலையிளங்கொடி.

**இளங்காற்று**—மெல்லியகாற்று.

**இளங்குடர்**—கடைக்குடல்.

**இளங்குரல்** — 1.சிறுகுரல். 2. பயிரினிளங் கதிர்.

**இளங்கொடி**— 1. சிறுகொடி, முதிராதபடர்கொடி. 2. பசுவின் நஞ்சுக்கொடி. 3. பெண். (உ-ம்.) "இருங்குன்ற வாண ரிளங்கொடியே." (திருக்கோ. கரு.) [இது பண்புத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை.]

**இளங்கோம்பு**—வளார்.

**இளங்கோற்றி**—இளங்கன்றுடைப்பசு.

**இளங்கோ**—வணிகன். (உ-ம்.) "கோட்டமி விளங்கோமாதநங் கோவிந்தசாமிகேளா." (சேதுபு. வேதாள. ௬க.)

**இளங்கோக்கள்**—வைசியசாதியார். (உ-ம்.) "குலவுமப்பெரும் பதியிளங் கோக்களிலொருவன்." (திருவிளை. நகரங். ௩.) [மூ. இளமை. கோ - அரசன். அரசனுக்கிளையாரென்றபடி.]

**இளங்கோவடிகள்**— சிலப்பதிகாரநூலாசிரியர். (மணிமே.)

**இளசாட்சசம்**—கொன்றைமரம்.

**இளஞ்சாயம்**—வெண்சாயம், நன்றாகப் பற்றாத சாயம்.

**இளஞ்சார்வு**—குருத்தோலை.

**இளஞ்சி**—ஈனுக் கத்தாரிப்பூண்டு.

**இளஞ்சூடு**—சிறுசூடு.

**இளஞ்சூல்** — 1. கருவிலிருக்கும் முதிராப் பிண்டம். 2. பயிரினிளங்கரு.

**இளந்தண்டு**—முளைக்கீரை. (உ-ம்.) "வெள்ளாடிளந்தண்டு." (தைல. பாயிர. ௫.)

**இளந்தலை** — 1. இளமைப்பருவம். (உ-ம்.) "இளந்தலைக் கைம்பெண்." 2. கீழ்மை. (உ-ம்.) "சிவேதனுடன்வீடுமனிளைத்தா - னிளந்தலையுறுதபடியேகுமினென" (பாரத. முதற்போர். ௫க.)

**இளந்தாரி**— முற்றிய இளமைப்பருவத்தையுடையோன். [இளமை. தரம். இ.]

**இளந்தென்றல்**—சிறுதென்றல்.

**இளந்தை**—இளவயசுடையது. (உ-ம்.) "பிறர்புகழின் சொற்பயிலு மிளந்தைப் பருவம்." (திருப்பு. ௬எக.)

**இளந்தோயல்**—1. ஆயுதங்களின் இளகிய தோய்ச்சல், பதமிகுந்தோய்ச்சல். 2. உறைந்துவருந் தயிர்.

**இளநலம்**—1. இளமைப் பருவத்திலனுபவிக்குமின்பம். (உ-ம்.) "கிழமுதிரிள நலங்கிடைப்ப." (கந்தபு. கடவுள்வாழ்த்து. கஎ.) 2. இளையவடிவு. (உ-ம்) "பண்டைத்தன்- மணங்கமழ் தெய்வத்திளநலங்காட்டி." (திருமுரு.உ௩௦.)

**இளநாக்கடித்தல்**—உறுதியற்ற சொற்சொல்லுதல்.

**இளநாக்கு**—1. குழந்தைகளின்நாக்கு; அது: பேச்சுத்திருந்தாத நாக்கு. 2. பேச்சுறுதிப்படாதநாக்கு. (உ-ம்.) "இளநாக்கடித்தல்."

**இளநிறம்**—நன்றாகப் பற்றாத நிறம்.

**இளநீர்**—1. தெங்கினிளங்காய். (உ-ம்.)"தாழை-யிளநீர் விழுக்குலையுதிரத் தாக்கி." (திருமுரு. ௩௦அ.) 2. தெங்கினிளங்காய்க்குள்ளிருக்குநீர். 3. மணியினிளநிறம்.

**இளநீர்க்குழம்பு**—கண்மருந்துகளிலொன்று.

**இளநீலம்**— வெளிறின நீலம்.

இளநெஞ்சன்—1. இளகியமநமுடையோன். 2. கோழைமநமுடையோன்.

இளநெஞ்சு—1. இளகினமநம். 2. கோழை மநம்.

இளநேரம்—சூரியோதயத்தின்மேல் ஐந்து நாழிகைமுதற் பத்துநாழிகைவரையுநிகழும் பகற்பொழுது.

இளப்பம்—1.கீழ்மையானது. 2. திடமின்மை.

இளம்—இளநீர். (இராசவைத்.)

இளம்பச்சை — நன்றாகப் பற்றாத பச்சை நிறம்.

இளம்பசி—அற்பமானபசி.

இளம்பதம்— 1. இலேகியமுதலியவற்றின் பதக்குறைவு. 2. இளம்பாகம். 3. உருகுபதம். 4. நெல் முதலியவற்றின் காய்ச்சற்குறைவு. 5.பக்குவமற்றது, முதிராத்தன்மை. 6. வறுபடாப் பொரி. 7. வேகாப்பதம்.

இளம்பருவம்— 1. இளவயசு. 2. மெல்லிய பதம்.

இளம்பிடி—1. சிறிய பெண்யானை. 2. பெண். [இளம்பிடியானைபோலு நடையினையுடையாளென்றபடி.]

இளம்பிராயம்—இளம்பருவம்.

இளம்பிள்ளை—சிறுபிள்ளை.

இளம்பிள்ளைவாதம் — சிறுபிள்ளைகளுக்கு வரும் ஒருவகையான வாதநோய்.

இளம்பிறை—1. இணையாவினைக்கை முப்பத்துமூன்றுவகையுளொன்று; அதனைச் "சுட்டும்பேடுமொமிகைசிறுவிர - லொட்டியகம்வளையவொசித்தபெருவிரல் - விட்டுநீங்கும்விதியிற்றென்ப." என்பதனாலறிக. (சிலப். அரங்கே. கஅ. உரை.) 2. (பரதம்.) கரகரணம் முப்பத்துமூன்றுவகையுளொன்று. (திருவிளை. மாறியா. கo. உரை.) 3. வளர்பக்கத்து மூன்றாட்களிலே வருஞ்சந்திரன். (உ-ம்.) "குடபா-னின்றெழுந்திடுமிளம்பிறைநோக்கினன்." (உபதேச. சிவவிர. கூடுடு.)

இளம்புல்—1. அறுகு. 2. முதிராதபுல்.

இளம்பெண்—1. இளம்பருவத்துப் பெண். 2. கற்றாழை. (உ-ம்.) "இனித்தநற்றுளிமோகியிளம்பெணிந்திராணிகாணி." (தைல. தைலவ. கூசு.)

இளமட்டம்— இளமைப்பருவத்தையுடைய தாய் ஒருமட்டுக்கு உயர்ந்திருக்குமது.

இளமண்—மணற்கொண்டதரை.

இளமண்டை — பெலங்குன்றிய தலைமண்டை.

இளமத்தியாநம்—உச்சிப்பொழுதுக் கணித்தான காலம்.

இளமரக்கா— இளஞ்சோலை. (மணிமே.)

இளமழை—பயன்படுவதாகியமேகம்.(உ-ம்.) "இளமழையாடு மிளமழையாடு-மிளமழை வைகலும்" (கலி.சுக.)

இளமை—1.அறிவின்மை. (சிந்தா.) 2.முதிராத பருவம். (உ-ம்.) "சின்னாண்மெய்ப்பயின் றிளமைதீரட்டைவிடுமறிஞர்திறம்போல்." (ஞாநவா. வைராக். சுக.)

இளமைப்பருவம்—சிறுவயசு. (உ-ம்.)"இளமைப்பருவத்துக் கல்லாமை குற்றம்" (நான்மணிக்கடிகை. கூகூ.)

இளவடி—இளம்பதத்தில் வடிப்பு.

இளவரசு—1.இராசகுமாரன். 2.இராசபட்டத்துக்குரியபிள்ளை. (உ-ம்.) "இந்தநிலக்கினியிளவரசென்றுங்" (பாரத. வாரணவத. கூசு.) 3. இளமையான அரசமரம். 4. குளந்தைப்பருவமுடைய அரசு.

இளவல்— 1. இளைய சகோதரன். (உ-ம்.) "இங்கெனதுயிர்போலுற்றவிளவலு மிளையசேயும்." (கந்தபு. சூரபன்மன்வதை. சசo.) 2. முதிராதது. (உ-ம்.) "இந்தத் தேங்காயிளவல்."

இளவன்—சோரபாஷாணம்.

இளவாடை — மெல்லிய வாடைக் காற்று. (உ-ம்.) "குன்றி விளவாடை வரும்போதெல்லாம்." (பாரத. அருச்சுநன்றீ. உக.)

இளவாளி—இளவாளியென்னேவலுந் தெரிநிலைவினைப்பகுதியும்.)

இளவாளித்தல்— அற்பமான ஈரத்தன்மையுடையதாதல். (உ-ம்.) "இளவாளிப்பு" பார்.

இளவாளிப்பு — அற்பமான ஈரத்தன்மை. [இள - இளமை. ஆலம்-நீர்.]

இளவிரிசு— ஒருமரம். (உ-ம்.) "இளவிரிசு சென்னகரை" (தைல. தைலவ. கூடு.)

இளவிளவேனில்—துளிர்காலம்.

இளவுச்சி—முன்பகலிலே உச்சிப்பொழுதுக்கு அணித்தாயிருக்குநேரம். (உ-ம்.) "இளவுச்சியினேய் கொற்றமன்னர் கெடும்." (விதாந. எச்சவினை. ச.)

இளவுடையான்— யுவராசா, இளையராசா. (சிந்தா.)

இளவுறை—முற்ற உறையாத தயிர்.

இளவெந்நீர்—சிறுசூடானநீர்.

இளவெயில்—முதிராதவெயில்.

இளவெலும்பு—முதிராதவெலும்பு.

இளவேந்து—இளவரசு.

இளவேனில் —வேனிற்காலத்தின் முன்பருவமாகிய வசந்தகாலம். அது: சித்திரை, வைகாசிமாசங்களிலே வருவது. தென்றல் வீசலும், வண்டு,கிளி, பூவை, அன்றில், குயில் இவைமகிழ்தலும், மாங்கனியுதிர்தலும், புன்னை, மகிழ், தாழை, சண்பகம் இவைமுதலியன மலர்தலும் இக்காலத்துக்குரியன.

இளா—1. பசு. 2. பூமி. [இளா.]

இளாபதி—1. அரசன். 2. புதன். (உ-ம்.) (பாரத. குருகுலச். கூ.) [இளாபதி:இளா-பூமி, மநுவின் மகளாகிய இளை.]

இளாவிருதம்—நாவலந்தீவிலுள்ள ஒன்பது கண்டங்களுளொன்று.(உ-ம்.)"மேருப்-பூதரஞ் சூழ்வருடமிளாவிருதமாகும்" (கந்தபு. அண்டகோச. ௬௬.) [இளாவ்ருத.]

இளாவிருதன்— அக்கினிதுருவனது குமாரர் ஒன்பதின்மருளொருவன். (த. நி. போ. ௬௬௦.) [இளாவ்ருத.]

இளி—1. அவமதிச்சிரிப்பு, இகழ்ச்சியைக்குறிக்கும் ஒருவகைச்சிரிப்பு. 2.இகழ்ச்சி. 3.இசை. "இளிபுணரின் சீரெஃகுளங்கிழிப்ப"(மணிமே. கக: உசு.) 4. இணக்கம். 5. இழிவு.(உ-ம்.) "இளிவரின்வாழாத மானமுடையார்" (வள். ௯௭௦.) 6. இளியென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 7.நெற்றியிலிருந்து பிறக்குமிசை. 8. யாழிலொரு நரம்பு. (உ-ம்.) "இளிப்பயிரிமிருங் குறும்பரந்தூம்பொடு"(மலைபடு. எ.)

இளிச்சுற்றகண்—பீளைக்கண்.

இளித்தல்— 1. அவமதித்தல். 2. சிரித்தல்.

இளிந்தகாய்— இணுங்கினகாய். அது: பாக்கு. (சிந்தா.)

இளிந்தவீ—இணுங்கினமலர். (சிந்தா.)

இளிப்பு—1. இளித்தல். 2. நிந்தை.

இளிபு—அருவருப்பு. (மணிமே.)

இளிபுரிதல்—இகழ்ச்சிசெய்தல்.

இளிவந்தசொல்—அவமானச்சொல். (உ-ம்.) "இன்மையிளிவந்த-சொற்பிறக்குஞ்சோர்வுதரும்" (வள். ௧௦௪௪.)

இளிவரல்—இழிவுவருதல். (உ-ம்.) "இளிவரின் வாழாதமானமுடையார்" (வள். ௯௭௦.)

இளிவரவு—இழிதொழில், உலகத்தாரிகழுமிகழ்ச்சி. (வள். ௪௬௪. பரி.)

இளிவு—1. அருவருப்பு. (உ-ம்.) "இரவும் பகலுமிளிவுடன்றரியாது" (மணிமேகலை. கூ: ௬௮.) 2. அவலச்சுவை நான்கனுளொன்று; அது,பிறரால் இகழப்பட்டு எளியனாதல்.(உ-ம்.) "இளிவேயிழவே யசைவே வறுமையென-விளிவில்கொள்கையழுகைநான்கே" (தொல். பொருளதி. ௨௫௬.) 3. இளிவரவு. (உ-ம்.) "எள்ளிளிவாமென்றெண்ணி" (வள். ௧௨௯௮.)

இளை— 1. இலக்குமி. 2. இளமை. (உ-ம்.) (சூ. நிகண். கக: ளகரவெ. ௬.) 3. இளையென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும், வினைத்தொகையும். 4. காவல். (உ-ம்.) "இளையினிது தந்து" (பதிற்று ௨௮.) 5. காவற்காடு. (உ-ம்.) (சூ. நிகண். கக: ளகரவெ. ௬.) 6. கோழை. (உ-ம்.) "மூக்குக்குட்சளியிளையோடும்" (திருப்பு. ௬௦.) [இஃது,ஈளையென்பதன் குறுக்கம்.] 7. பசு. 8. பிரதானகாவல். 9. பூமி. 10. வாக்கு. (நிருத்தம்.) 11.வேலி. (உ-ம்.) (சூ. நிகண் கக: ளகரவெ. ௬.) 12. வைவஸ்வதமநுவின் மகளும் புதன் மனைவியுமான ஒருபெண். (உ-ம்.) " இளையெனும்பெயர்மடவரலாயினனென்ப " (பாரத. குருகுல. எ.) [இவள் இளனென்பவனது அவதாரம்.]

இளைசு—இளையது.

இளைஞர்—இளையோர். (உ-ம்.) "இம்பர்மற்றியாது சொல்ல விளைஞரை யழைத்ததென்றுன்" (பாரத. கிருட்டிண. ௧௫.)

இளைஞன்—சிறுவன், இளையோன்.

இளைத்தல்—1. சத்திகுறைதல். (உ-ம்.)"யாகசேநனு-மிளைத்தநெஞ்சனன்றி" (பாரத. வாரணாவத. ௭௦.) 2. தளர்தல். 3. தொய்ந்துபோதல். (உ-ம்.) "எஞ்சினர் தமைப்போலிளைத்தபின்" (பாரத. இராசசூய. ௧௬௭.) 4. மெலிதல். 5. வளங்குறைதல்.

இளைத்தோர்—எளியவர். (உ-ம்.) "மேலவரிளைத்தோராவர்" (ஞானவா. வைராக். ௬௫.)

இளைது—இளையது. (உ-ம்.) "இதனினிளைது" (தொல். சொல். ௭௮. சேனா.)

இளைப்பாற்றல்— 1. சத்திகுன்றிய ஒன்றற்குப்பின்னர்ச் சாமர்த்தியத்தை.யுண்டாக்கல். (உ-ம்.) "அழிப்பிளைப்பாற்றல்."(சி.சி. க: ௬௭.) 2. தொய்வுதீர்த்தல், இளைப்புநீக்கல். [இளைப்பு. ஆற்ற - ஆறச்செய்தல்.]

இளைப்பாற்றி— இளைப்பாறச்செய்தல்.

இளைப்பாறுதல்—1. சத்திகுன்றியபின் சாமர்த்தியத்தைப் பின்னரும் பெறும்பொருட்டு ஓய்ந்திருத்தல். 2. தொய்வுதீர்தல், இளைப்புநீங்கல். (உ-ம்.) "இன்னமுதன்னதண்ணீர்குடித்-திதண்ணறற்கழுதாடலது கண்டிருந்தங் கிளைப்பாறினன்" (பாரத. புட்பயாத்திரை. ௧௨௪.)

இளைப்பு—1. தொய்வு. (உ-ம்.) "போக்கொடுவரவிளைப்பு" (சி. சி. க உசு.) 2. மெலிவு. (உ-ம்.) "எழுதிரைநீக்கிவந் தெடுத்தெனவிளைப்பாற-வைத்து" (மதுரை. பதிற்று. ௧௨.)

இளைமை—இளையதன்மை.

இளைய— இளமைத்தன்மையையுடைய எனப்பொருள்படும் பண்படியாற்பிறந்த ஒருகுறிப்பு வினைப்பெயரெச்சம்.

இளையதம்பி — இளையவனுக்கிளையவன். (உ-ம்.) "கும்பகன்பி னிளையதம்பி" (திருப்பு. ௬௭௨.)

இளையபிள்ளையார் —கந்தசாமி. (சிவப்பிர. மங்கல. ௪. உரை.)

இளையவர் — 1. ...ளம்பெண்கள். 2. இளமைத்தன்மையையுடைய ஆடவர்.

இளையவள்— இளமைத் தன்மையையுடையவள். 2. தங்கை. (உ-ம்.)"மூவாமுகுந்தற்கிளையவளே" (அபிராமி. கக.)

இளையவன் — 1. இலக்குமணன். 2. இளைஞன். 3. தம்பி. 4. முருகன். (உ-ம்.) "வேலைமே - லிளையவனென்னவேலெறிந்ததோதுவாம்" (திருவி. கடல்சுவ. க.)

இளையள்—1. இலக்குமி. (உ-ம்.) (சூ. நிகண்- க.௬௪.) 2. பின்பிறந்தாள். (உ-ம்.)"இம்மையுமிளையளானேன்" (கந்தபு. வள். உ௫௬.)

இளையன் — இளமைப் பருவமுடையவன். (உ-ம்.) "இளையனுய்க் - கள்ளுண்வொழ்வான் குடிமையும்" (திரிகடுகம். ௫௧.)

இளையாள் — 1. இலக்குமிதேவி. 2. இளமைத்தன்மையையுடையவள். 3. தங்கை.

இளையோன்—1. இராமன்றம்பியாகிய இலக்குமணன். (உ-ம்.) "ஈதுனக்குக் கருமமெனவிளையோனுக்கவளுரைப்பாள்" (இராமா.சீதைவதம். எ௪.) 2. இளஞ்சேட்சென்னி; இவன் கரிகாற்பெருவளவன் தந்தை. 3. கந்தசுவாமி. (உ-ம்.)"யானைமகளைமணந்துவருமிளையோன்" (திருவிளை. உக்கிர. வேல். ௫அ.) 4. தம்பி.

இளைவலி—கரிக்காடு.

இற்கிழத்தி—இல்லக்கிழத்தி. (உ-ம்.) "தன்னையிகழ்தல்பொறுத்திடினுந் தனதிற்கிழத்திதனையிகழின்" (கூர்மபு. தக்கன்வேள். ௫௬.)

இற்செறித்தல்— (அகப்பொருள்) தலைவியை வெளியேபோகவிடாது வீட்டிலிருத்துதல். (உ-ம்.) "செற்றமெய்தியேயன்னவடன்னையிற்செறித்தார்" (கந்தபு. வள். கரு௨.)

இற்செறிப்பு—இற்செறித்தல். (உ-ம்.)"இரங்கல்வன்புறை யிற்செறிப்புணர்த்தலென்று" (அகப்பொருள். களவியல். ௬௭.)

இற்செறிப்பார்— வீட்டிற்சேர்ப்பார். (ஐங்குறு.)

இற்செறிப்புணர்த்தல்— (அகப்பொருள்) இற்செறித்தலைத்தலைவனுக்குணர்த்தல்.(உ-ம்.) "இற்செறிப்பு" பார்.

இற்பிறந்தார் — உயர்ந்த குடிப்பிறந்தவர். (உ-ம்.) "இற்பிறந்தார்கண்ணேயும்" (வள். கO௪௪.)

இற்பிறப்பு— உயர்குடிப்பிறப்பு. (உ-ம்.) "இற்பிறப்பென்பதொன்றும்" (இராமா. திருவடிதொ. ௬௨, )

இற்புலி—பூனை. (உ-ம்.) "திமிர்வாய்"பார். (தைல. தைலவ. க.) [இல்-வீடு.]

இற்ற—அழிந்தனவெனப்பொருள்பட்டுநிற்கும் இறு என்னும் வினையடியாற்பிறந்த அஃறிணைப்பலவின்பாலில் வரும் ஒரு வினைமுற்று. (உ-ம்.) " இற்றபித்திகையின்சூழல் " (கந்தபு. நகரழி. அ.)

இற்றது—ஒழிந்தது. இஃது: இறு என்னும் வினையடியாற்பிறந்து அஃறிணை ஒன்றன்பாலிலே வரும் ஒரு வினைமுற்று. (உ-ம்.) "இற்றதுகொல்லெமதின்னலின்றெனு" (கந்தபு. திருவவதார. எ௪.)

இற்றி—இத்திமரம். (ஐங்குறு.)

இற்றிசை—இல்லறம். (சிந்தா.)

இற்று— 1. இத்தன்மைத்து எனப்பொருள்படும் ஒரு குறிப்புவினைமுற்று. (உ-ம்.) "இயற்கைப்பொருளையிற்றெனக்கிளத்தல்" ( நன். பொதுவி. ௫௬.) 2. இறு என்னும் வினையடியாற்பிறந்து செய்து என்னும் வாய்பாட்டிலே வரும் ஒரு வினையெச்சம். (உ-ம்.) "மாளிகை-யிற்றுவீழ்தலும்" (கந்தபு. நகரழி. ௬௭.) 3. ஒரு சாரியை. (உ-ம்.) "பதிற்றுப்பத்து"(நன்.உ௪௪)

இற்றுப்போதல்— 1. அழுகிப்போதல். 2. முரிந்துபோதல்.

இற்றுவிழல்—முரிந்துவிழல்.

இற்றை— இன்று. (உ-ம்.) "இற்றையில் விளித்தனையேகுரீயென்றான்" (கந்தபு. தெய்வயானை. ௫.) [இன்ற; ஐ.]

இற்றைத்திநம்—இற்றைநாள்.

இற—1. இறவென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும். 2. இறால். ["இறு" என்பதன் விகாரம்.] 3. இறக்கும்படி. (உ-ம்.) "எய்யுமாறனைவிடுத்தனமவனையுமிறச்செய்தான்" (கந்தபு. மோந. ௬.)

இறக்கம்— 1. இறங்குதுறை. 2. இறங்குந்தன்மை. 3. போகிறவழி. 4. மரணம். (உ-ம்.) "இறக்கமுற்றானென வேக்கமெய்தினன்" (இராமா. சடாயுகா. கக.) 5. மிருகங்கள்செல்வழி. 6. வீக்கமுதலிய இறங்குதல்.

இறக்கல்—இறக்குதல்.

இறக்கிடல்—குனிதல். (உ-ம்.) "தம்மிற்றம்

முகத்தைநோக்கார்தலையிறக்கிட்டுச்செல்வார்" (திருவிளை. திருமண. ௪௨௫.)

இறக்கு—1. இறக்குகை. 2. இறக்கென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும்.

இறக்குதல்— 1. இறங்கச்செய்தல், உயர்ந்த இடத்திருந்து கீழேவரச்செய்தல். (உ-ம்.) "சநங்களைத்தோணியாலிறக்கினான்" 2. கவலையொழித்தல். 3. கீழ்ப்படுத்தல். 4. சாதல். (உ-ம்) "எல்லையிறுயரொடுமிறக்குமேகொலாம்" (நைடத. அன்னத்தைக்கண்ணுற்ற ௬௬.) 5. தலைதோள்முதுகு ஒக்கலைமுதலியவற்றினிருக்குஞ் சுமையையகற்றிக்கீழே வைத்தல். இது: உருவகமாகவும் வரும். (உ-ம்.) "விக்கிரமன்றே-ளேந்துமண்பொறையிராசசேகரன்புயத்திறக்கி" (திருவிளை. மாறியா. ௨.) 6. தைலமுதலியவை வடித்தல்.

இறக்குதுறை—இறங்குதுறை.

இறக்குமதி—இறக்குஞ்சரக்கு. [இறக்குமுதல் என்பதன் மரூஉப்போலும்.]

இறகர்— இறகு. [மொழியிறுதியிலே உகரம் நின்றவிடத்து அர்வந்து ஒத்துநடந்தது.]

இறகு—சிறகு. (உ-ம்.) "குன்றிறகீர்ந்தவன்" (தணிகைப். களவு. ௨௨௭.)

இறகுளரும்— சிறகடிக்கொள்ளும். (புறப்பொரு.)

இறங்கண்டம்— குமுறலண்டம். (சீவரட். ௧௧௨.)

இறங்கமட்டான்—ஒருவகைக்கார்நெல்.

இறங்கர்—குடம். (பிங்கல. ௧௭௬௬.)

இறங்கல்—1. இறங்குமிடம். 2. மேலேயிருந்து கீழேவருதல்.

இறங்குதல்— 1. கீழ்நோக்குதல், தாழ்தல். (ஐங்குறு.) 2. கீழ்ப்படுதல். 3. வளைதல். (உ-ம்) "இறங்குகதிரலம்வருகழனி" (புறநா. ௬௮.)

இறங்குந்துறை—காரியத்தின்போக்கு.

இறங்குபொழுது—பின்பகல்.

இறங்குமிராசி — கடகமுதற்றநுவீறனவிராசி.

இறங்குமட்டான்—
இறங்குமேட்டான்— } ஒருவகை நெல்.

இறஞ்சி—அவுரிப்பூண்டு.

இறடி—1. கருந்தினை. (சூ. நிகண். ௪: ௪௦.) 2. தினை. (உ-ம்.) "குரூஉக்கண்ணிறடிப்பொம்மல்பெறுகுவிர்" (மலைபடு. ௧௬௬.)

இறத்தல்— 1. எட்டாமற்போதல். (உ-ம்.) "மநத்தொடுவாக்கிறந்த-சித்துரு" (சி. சி. ௬: ௫.) 2. கழிதல். (உ-ம்.) "இறந்தநீள்காலஞ்செய்ய" (ஞானவா. தாமவியாள. ௬௫.) 3. சாதல். "இறந்தாரிறந்தாரனையர்" (வள். ௬௧௦.) 4. நெறிகடந்துசெல்லல். (உ-ம்.) "இறந்தார்வா-யின்னுச்சொனோக்கிற்பவர்" (வள். ௧௫௧.) 5. போதல். (உ-ம்.) "இல்லிறப்பான்கண்" (வள். ௧௪௬.) 6. மிகுதல். (உ-ம்) "இறந்தமைந்தசால்புடையராயினும்" (வள். ௬௦.) 7. வழங்காதுபோதல். (உ-ம்) "இறந்ததுவிலக்கல்" (நன். பொதுப்பா. ௧௪.)

இறத்தி— போதியென்னும்பொருட்டாகிய இறவென்னும் வினையடியாற்பிறந்த ஓர் எதிர்காலவினைமுற்று. (உ-ம்.) "இன்னினியமர்செயவிறத்தியென்னினும்" (கந்தபு சூரனமைச்சி. ௪௪.)

இறந்த—கடந்த. (உ-ம்.) "புலவரையிறந்தபுகழ்" (புறநா. ௨௧.)

இறந்தகாலம்—சென்றகாலம். (உ-ம்.) "இறந்தகாலந்தருந்தொழிலிடைநிலை" (நன். ௧௪௨.)

இறந்தகாலவினைத்தொகை— சென்றகாலவினை தொக்குநிற்பது.

இறந்தகாலவினையெச்சம் — உ, இ, இய், பு, ஆ, ஊ, என என்னும் ஏழுவிகுதிகளிலே ஒன்று பெற்று இடைநிலை பெற்றும் பெறாதும் வரும் தெரிநிலைவினையெச்சம். "செய்து, புல்லி, போய், செய்குபு, செய்யா, செய்யூ, செய்தென" என்பதிற்போல வரும்.

இறந்தது—1. மிகுந்தது. (உ-ம்.) "இறந்ததோர் பொருண்மையதிரண்டின் வன்மையும்" (கந்தபு. மாயையுபதேச. அ.) 2. செத்தது.

இறந்தது தழீஇயவெச்சவும்மை — செல்காலநிகழ்ச்சியை விளக்கிநிற்கும் உம்மை "சாத்தனும் வந்தான்" என்பதிற்போலவும் "முற்றும்மையொரோவழி யெச்சமுமாகும்" என்பதிற்போலவும். (உ-ம்.) "இங்ஙனந் தருதலினெச்சமுமெனவிறந்தது தழீஇய வெச்சவும்மையாற்கூறினர். (நன். ௪௨௫, ௪௨௬.)

இறந்ததுவிலக்கல்—முப்பத்திரண்டு தந்திரவுத்திகளில் ஒன்று; அஃது: முற்காலத்துவழங்கியும் பின் வழங்காதொழிந்ததனை நீக்கி வைத்தல். (நன். பொதுப். ௧௪.)

இறந்தவினைவிலக்கு— முன்னவிலக்கென்னுமலங்காரத்தினொருபேதம். அஃது: இறந்தகாலவினையோடு கூடிவரும் விலக்கு. (தண்டி. ௪௨. உரை.)

இறந்தன்று—1. மிக்கது. (உ-ம்.) "வியப்பிறந்தன்றே" (புறநா. ௨௧௭.) 2. இறந்தது.

இறந்திரி—இத்திமரம்.

இறந்தீவாய்—கழிந்துபோகின்றவளே. (கலித்தொகை. ௫௬.)

இறந்து—1. கடந்து. (ஐங்குறு.) 2. செத்து.

இறந்துபடுதல்—சாதல். (உ-ம்.) "அதனு லிவளிறந்துபடும்" (வாண. அ. உரை.)

இறந்துபாடு—இறந்துபடுதல். (உ-ம்.) "இறந்துபாடாயினுன்கொலேகியமதனனென்னு". (கந்தபு. காமதகந. கக.)

இறந்தோர் — 1. நெறிகடந்தோர். 2. மரித்தோர்.

இறந்தோர்சேர்வனம்—மயானம்.

இறப்ப—மேன்மேலும். (உ-ம்.) "குறிப்பறிவுறுது குறுகியாங்கவளோ டிறப்பக் கூறுவது" (அகப்பொரு. ஒழிபி. ௯௨.)

இறப்பு — 1. அழிகை. 2. இறந்தகாலம். (உ-ம்.) "இறப்பெதிர்வுநிகழ்வெனக் காலமூன்றே"(நன். பொதுவி. ௯௧.) 3. கடத்தல் 4. கெடுகை. 5. தொழிலதுகழிவு, அஃதாவது: தொழின்முற்றுப்பெற்றநிலேமை. (உ-ம்.) "இறப்பினிகழ்வி னெதிரினென்று வம்முக்காலமும்" (தொல். சொல். ககூஎ. சேனு.) 6. போக்கு. 7. மரணம். (உ-ம்.) "எப்பொழுதத்தினுமிறப்பின்றுயினுன்" (கந்தபு. மார்க்கண்டேய. உஅடு.) 8. மிகுதி. (உ-ம.) "இறப்பேபுரிந்ததொழிற்றும்" (வள். கூஎஎ.) 9. மிகை, குற்றம். (உ-ம்.) "பொறுத்தலிறப்பினே" (வள். கடுஉ.) 10. வழக்கமில்லாதுபோதல். 11. வீட்டிறப்பு. (உ-ம்.) "சில்வலேயும் பலவாரும் முன்னிறப்பிற்றூங்கும்" (மீநா. குறம். கக.)

இறல்—1. அழிவு. (உ-ம்.)"இறலீனுமெண்ணுதுவெஃகின்" (வள். கஅ௦.) 2. இறுதியைச்செய்தல், இறத்தல். (உ-ம்.) "இறன்முறையானேதம்பலவுந்தரும்" (வள். அஅடு.) 3. கிளிஞ்சில். 4. கேடு. 5. நரம்பு. 6. முரிதல். 7. விசை.

இறலி—1. இத்திமரம். 2. கொன்றைமரம். 3. சத்ததீவுகளிலொன்று. (உ-ம்.) "இறலியப்பெருந்தீவிடையுறைபவரிவர்கள்" (இராமா. படைக்காட்சி. கஎ.) 4. மருதமரம்.

இறவம்-இருன்மீன். (உ-ம்.)"நறவக்கழிநெய்தலங்கானலின் ஞாங்கர்மொய்த்த - விறவப்புலவுகழுவீர்ந்துறைப்பொன்னிசேர்ந்தான்.(திருவிளே. வரகுண. கக.)

இறவாமை—இறப்பின்மை. (உ-ம்.) "பிறவாமையென்றைக்குமிறவாமையாய்வந்து" (தாயு. பரிபூரண. உ.)

இறவாணம்—ஒருவாச்சியம்.

இறவானம்—தாழ்வாரம்.

இறவி—இறத்தல். (உ-ம்.) "இறவிக்கஞ்சிச்சிஃறுபதர்கண்மாதவ-மூறையிற்செய்தார்" (காஞ்சிபு. இறவா. உ.)

இறவிய—தேன்கூடுகளுள்ள. (உ-ம்.)"இறவியதளிர்மேலிருத்தலும்" (ஞானவா. தாசூர. சுக.)

இறவினுணங்கல்— இருன்மீனின்வற்றல். (மணிமே.)

இறவு—1. இருல். (உ-ம்.)"பறவைதாமரையிருந்திறவருந்துவ" (பெரியபு.திருக்குறிப்பு.எ) 2. இறுதி. (உ-ம்.) "இறவிலேயுன்னேச் சிக்கெனப்பிடித்தேன்" (திருவாச. பிடித்தபத்து. சு.) 3. உற்றசமயம். 4. எல்லே. 5. செல்லுகை. 6. தேன்கூடு. 7. மிகுதி. 8. வீட்டிறப்பு.

இறவுள்—குறிஞ்சிநிலம்.

இறவுளர் — குறிஞ்சிநிலமாக்கள். (உ-ம்.) " புண்டவாதவேலிறவுளர் புனத்தெரிமடுப்ப " (திருவிளே. நாட்டு. சஅ.)

இறவை — 1. இறவு. 2. கூடை. (உ-ம்.) (சூ. நிகண். கக: நகரவெ. க.) 3. ஏணி (உ-ம்) (சூ. நிகண். கக: நகரவெ. க.) 4. காடை. 5. விரற்புட்டில். (சூ. நிகண். கக. நகரவெ. க.)

இறா—இறவுமீன். (ஐங்குறு.)

இறாஞ்சுதல்—1. உராஞ்சுதல். 2. தட்டியெடுத்தல். 3.பட்சியறைதல். 4.பருந்து இருஞ்சல்.

இறாட்டாணியம்—இடுக்கண்.

இறாட்டுதல்— 1. உரோஞ்சுதல். 2. பகைத்தல். 3. முரண்டுதல்.

இறாத்தல்—1. ஆறுபலங்கொண்டநிறை. 2. மீன்றீர்வைத் துறை.

இறாத்தலம் — இறவுமீன்வைத்து விற்குமிடம்.

இறால்—1. இடபவிராசி. 2. இறவுமீன். 3. எருது. 4. கார்த்திகைநாள். (வீமேசுர உள்ளமுடையான். கடு.) 5. தேன்கூடு. (உ-ம்.) "கூனிறால்பாயக்குவளேதவளேவாய்த்-தேனிறால்பாயுந் திருநாடா" (நளவெண்பா. கலிநீங். கச.)

இறாலியர்—அழியாதொழிக என்னும் பொருளேயுடைய ஒரு வியங்கோள் வினைமுற்று. (பதிற்றுப். ச௦.)

இறாவுதல்-வக்கமயிர்பேரகச்சீவுதல். (உ-ம்.) "காடுபடுதீயி-னளி புகைகமழா திறாயினிர்மிசைந்து" (மலேபடு. உசக.)

இறீஇயர்—கெடுவதாக. (உ-ம்.) "இறீஇயரென்னுயிரென" (புறநா. உக௦.)

இறுக்கம்—1. அழுத்தம். 2. இளகாத ஒன்றுகை. 3. கடினம். 4. கையழுத்தம். 5. நெருக்கம். 6. பிசினித்தனம். 7. வெப்பம்.

இறுக்கர்—பாலேநிலமாக்கள்.

இறுக்கல்—1. அழுந்தக்கட்டல். 2. இறுகச்செய்தல். 3.தற்றல். (உ-ம்.) (சூ. நிகண். எ: எக.) 4. உறுப்புக்களேநெருங்க ஒன்றும்படிசெய்தல். 5. எடுக்கல். 6. கடிந்துகொள்ளல். 7.

திறை கொடுத்தல். (உ-ம்.) "இருக்கல்வேண்டு ந்திறையே" (புறநா. கூள.)

**இறுக்கன்**—உலுத்தன்.

**இறுக்கு** — 1. இறுக்கியகட்டு, இறுக்கென் னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத் தொகையும். 2. இறுக்கியமுடிச்சு. 3. உறுக்கு கை.

**இறுகக்கட்டல்**—அழுந்தக்கட்டல்.

**இறுகங்கியான்**—கையாந்தகரைப்பூண்டு.

**இறுகத்தழுவல்**—இறுக அணைத்தல்.

**இறுகநீக்கி**—கைவிட்டு. (சிந்தா.)

**இறுகல்** — 1. இறுகுதல், கெட்டிப்படுதல். (உ-ம்.)"இகப்பொருளின் வாதனையினிறுகல்பந் தம்" (ஞானவா. சுகர். உக.) 2. பதுமராகமணி யின் பதினாறுவகைக்குற்றங்களுளொன்று. (திருவி. மாணிக்க. சரு. உரை.) 3. நிலைபெறுதே கொள். (சிந்தா.)

**இறுகி**—மூர்ச்சித்து. (சிந்தா.)

**இறுகினகை**—ஈயாதகை.

**இறுகுதல்**—1. அழுந்துதல். 2. இளகியநிலை நீங்கல். 3. உறுப்புக்கள் நெருக்கமாயொன்று தல். (உ-ம்.) இந்துவின்குலத்து வேந்தேயெம் மைநீயிறுகக்கட்டி. (சேதுபு. சேதுமா. கூ0.) 4. கடினமாதல். (உ-ம்.) "வெயிற்பட்டு நிலமிறுகி ற்று" 5.நெருங்கல். (உ-ம்.)"வாழை-யிறுகுகுலை முறுக" (மலைபடு. கரூஉ.) 6. முரணுதல்.

**இறுகுதிரம்**—கட்டியிரத்தம். (உ-ம்.) "இறு குதிரமொருமூன்றுபலமாகும்" (சிவதரு. சென நமரண. உஅ.)

**இறுங்கு** — 1. எண்வகைக் கூட்டத்துளொ ன்று. (மணிமே.) 2. சோளத்திலோரினம். (உ-ம்.) "ஐவனக்குரல் தினைக்கதிரிறுங்கவைய வரை" (இராமா. சித்திரகூட. ருச.) 3. காக்கா ச்சோளம்.

**இறுத்த**—1. தைத்த. (உ-ம்.) "அம்புசென் றிறுத்த" (புறநா. கக.) 2. முடித்த. (பெரும்பா ண். ௪௪௬.) 3. விட்ட. (புறப்பொரு.)

**இறுத்தரல்**—வருதல். (உ-ம்.) "இளவேனி லிறுத்தந்தபொழுதினான்" (கலி. ருச.) [இறு-முதனிலைத்தொழிற்பெயர்.]

**இறுத்தல்**— 1. அரசனுக்குரிய வரிப்பணத் தைக் கொடுத்தல். 2. ஒடித்தல். 3. கடனைக் கொடுத்தல். (உ-ம்.) "கொடைக்கடனிறுத்த கூ ம்பாவுள்ளத்து" (பெரும்பா.௪௪௬.) 4. சங்கரித் தல். (உ-ம்.) "இறுத்தல்செய்திடுந் தன்மையா லீசனேபோல்வ" (கந்தபு. சிங்க-வதை.ருஅச.) 5. சொல்லுதல். 6. தங்கல். (உ-ம்.) "கழிநாரை வரையிறுப்ப" (பொருநராற்று. உ௦௫.) 7. தெளித்தல். 8. போய்ச்சேர்தல். (உ-ம்.) "ஏவியசெஞ்சரம் - வேறேவர்கண்ணுமிறுத்திலவே" (கந்தபு. சூர-வதை.கூச.) 9. முடித்தல், அந்தமுறச் செய்தல். (உ-ம்.) "அவ்வுரையிறுக்குமுன்னர்" (கந்தபு. சுரம். ருச.) 10. முரித்தல். (உ-ம்.) "விதுரன்மூரிவில்லிறுத்ததும்" (பாரத. கிருட் டிண. உகூச.) 11. வடித்தல். (உ-ம்.) "பார்க்க வருந்துகளாக்கியதிலிட்டுச் சிறுகவட்டிப் பதத் திறுத்துப் பருகவளித்தங்கமெலாந் துவாலையிடு சீதசுரம்பறக்குந்தானே" (தைல. தைலவ.ருஉ.) 12. விடைசொல்லல். 13. வெட்டல்.

**இறுதல்**—1. அறுதல். (உ-ம்.)"கட்டியதாம் பிற" (திருவிளை. பழியஞ்சு.ருக.) 2. இறத்தல். (உ-ம்.) "மூன்றுகோடி யசுரருமுடனேசேர - விற்றதுகண்டேன்" (பாரத. நிவாத. கரு௫.) 3. ஒடிதல். (உ-ம்.)"நகமிறுமுனைவாய்-வச்சிரமனை யது" (பாரத. நிவாத. கரு௬.) 4. கெடுதல். 5. முடிதல். 6. முரிதல். (உ-ம்.) (சூ.நிகண்.க:உக.)

**இறுதி**—1. அழிவு. 2. எல்லை, அளவு.(உ-ம்) "இறுதியில்லதோர் விலங்கினதுருவுகொண்டு" (கந்தபு அசுரர்தோற்று. உக.) 3. மகாசங்கா ரம். (உ-ம்.)"இருவருந்தம்-முறுதியினின்மூரெ ன்னிலிறுதிதானுண்டாகாதாம்" (சி. சி. க: ரு௫.)4. மரணம். (உ-ம்.) "இறுதியேவரினும்" (பாரத. பழம்பொருந்து. கள.) 5.முடிந்தகாலம். (உ-ம்.) "சொன்னதோரிறுதியின்" (கந்தபு. சூரனமைச்சி. ௫௪.) 6. முடிந்தவிடம், கடையி டம். (உ-ம்.) "ஆவியரழவிறுதி" (நன். உயிரீ. கக.)

**இறுதிக்காலம்**— மகாசங்காரகாலம்; அது, "இறுதியாங்காலந்தன்னிலொருவனே" என் பதனாற்பெறப்படும். (சி. சி. க: ரு௫.)

**இறுதிநிலைத்தீபம்**—தீவகவலங்காரமூவகை யுளொன்று; அஃது, ஒருசொல் இறுதியிலே நின்று முன்வருஞ் சொற்கள் பலவற்றோடும் பொருந்திப்பொருள்விளைப்பது. (வ-று.)"எண் பெயர்முறை பிறப்புருவமாத்திரைமுதலீறிடை நிலை" என்பதிலே நிலையென்னுஞ்சொல் இறு தியிலே நின்று முதல் என்பதனோடும், ஈறு என்பதனோடும், இடையென்பதனோடுஞ்சேர் ந்து பொருள்விளைத்தமைகாண்க" (நன். எழு த்ததி. உ.)

**இறுதிநிலைத்தீவகம்**—
**இறுதிநிலைவிளக்கு**—
**இறுதிவிளக்கு**— } இறுதிநிலைத்தீபகம்; இதைக்கடைநிலைத்தொழிற் றீப கம் என்பர். (தண்டி. ருஅ. உரை.)

**இறுதியில்லமிர்து**—மரணமின்மைக்குக்கா ரணமாகியவமிர்தம். (சிந்தா.)

**இறுதிவேள்வி** — அந்தியேட்டி. (உ-ம்.)

"அன்னையர்க்கிறுதிவேள்வி விதிமுறையாற்றி ஞனே" (இரகு. அவதா. ௬௪.)

இறுநாகம்—இலாமச்சஞ்செடி.

இறுப்ப — கிடக்க. (பொருநரா. ௨௨௫.)

இறுப்பு—1. ஆவண ஓலை. 2. கடனைக்கொடுத்துத்தீர்த்தல். 3. குடியிறை.

இறுபு—இற்று. (ஐங்குறு.)

இறும்பல்—அதிசயம்.

இறும்பி—எறும்பு.

இறும்பு—1.இளமரக்காடு.(உ-ம்.) "மஞ்ஞையாலுமரம்பயிலிறும்பின்" (பெரும்பா. ௩௩௫.) 2. காந்தட்பூண்டு. 3. குறுங்காடு. (உ-ம்.) "அகன்மலையிறும்பிற்றுவன்றியயானை" (மலைபடு. ௨௦௫.) 4. சிறுமலை. 5. கார்த்திகைப்பூ. 6. தாமரைப்பூ. (உ-ம்.) (சூ. நிகண். ௧௧: நகரவெ. ௧௨.) 7. தூறு. 8. மலை. (உ-ம்.) (சூ. நிகண். ௧௧: நகரவெ. ௧௨.) 9. வண்டு.

இறும்பூது— 1. அதிசயம். (உ-ம்.) "இறும்பூதுகளுவியவின்குரல்விறலியர்" (மலைபடு. ௩௫௮.) 2. சிறுதூறு. (உ-ம்.) (சூ. நிகண். ௧௧: நகரவெ. ௧௨.) 3. தளிர். (உ-ம்.) (சூ. நிகண். ௧௧: நகரவெ. ௧௨.) 4. தாமரைப்பூ. 5. தீபம். 6. பித்திகை. 7. பெருமை. (உ-ம்.) (சூ. நிகண். ௧௧: நகரவெ. ௧௨) 8. மலை. (உ-ம்) (சூ. நிகண். ௧௧: நகரவெ. ௧௨.) 9. வண்டு.

இறுமாத்தல்— 1. அகங்கரித்தல். 2. ஏமாத்தல். 3. செருக்கடைதல். (உ-ம்.) "மூவரென்றே யெம்பிரானொடுமெண்ணி விண்ணுண்டுமண்மேற் - றேவரென்றேயிறுமாந்தென்னபாவந்திரிதவரே" (திருவாச. திருச்சதக. ௪.) 4. நிமிர்தல். 5. மிகமகிழ்தல்.

இறுமாப்பு— 1. அகந்தை. 2. ஏமாப்பு. 3. நிமிர்ச்சி. 4. பெருமிதம். (உ-ம்.) "யாவர்க்கு மேலாஞ்ஞெமென்றிறுமாப்பெய்தி" (சி. சி. ௧௨: ௧.) 5. மிகுமகிழ்ச்சி. (உ-ம்.) "வண்டுளருந்தண்டுழாய்மாயோனிறுமாப்பும்" (திருவிளை. வெள்ளை. ௧௪.)

இறுமுறி— கிழித்த உறுதி, மாட்டறைந்த உறுதி.

இறுமுறை— 1. முடியுமுறை.(உ-ம்.)"இறுமுறையெழுச்சியினெய்துவதெல்லாம்" (சிந்தா. நாம. ௩௦௪.) 2. வருந்துந்தன்மை. (சிலப்.)

இறுவதஞ்சாமை— வணிகரெண்குணங்களுளொன்று; அது: நட்டத்துக்கஞ்சாமை.

இறுவரை— 1. அழியுங்காலம், இறக்குங்காலவெல்லை. (உ-ம்.) "மார்க்கண்டப்பெயர்ச்சிறுவனுக்கிறுவரைசெப்புமென்னவே" (கந்தபு. மார்க்கண்டேய. ௨௧௧.) 2. பக்கமலை. (ஐங்குறு.) 3. பெரியமலை. (ஐங்குறு.) 4. முடிவிடம், கடைசியிடம். (உ-ம்.) "இருநேங்கிறுவரை" (கலி. ௭௩.)

இறுவாய்— முடியுமிடம், அந்தம். (உ-ம்.) "எழுவாயிறுவாயிலனுகலானும்" (சி.சி. ௧: ௬௪. சிவஞா.)

இறை— 1. அணு. 2. அரசன். (உ-ம்.) "இறைகடியனென்றுரைக்கு மின்னாச்சொல்" (வள். ௫௬௪.) 3. அரசியல். (உ-ம்.) "இறைமுறைசெயுநாளில்" (திருவிளை. மாறியா. ௯.) 4. அற்பம். (உ-ம்.) "ஏந்திளவனமூலையிறைநெரித்ததூஉம்" (மணிமே. ௧௮: ௬௧.)5.இறகு. (உ-ம்.) (சூ. நிகண். ௧௧. நகரவெ. ௧௧.) 6. இறந்துபடுதல். (உ-ம்.) "பிரிந்திறைசூழாதி யைய" (பாலைக்கலி. ௧௮. உரை.) 7. இறைப்பொழுது, அற்பகாலம். (உ-ம்.) "அணங்கையில் வைத்-திறையும் பிரிவதற் கெண்ணுகிலேன்" (வாண. ௨௫௦.) 8. இறைமை; அஃதாவது, நடுவுநிற்றல். (உ-ம்.) "ஓர்ந்துகண்ணோடாதிறைபுரிந்து" (வள். ௫௪௧.) [மைவிகுதிகெட்டுநின்றது.] 9. இறையென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 10. உயர்ச்சி. "ஏந்துகொடியிறைப்புரிசை" (புறநா. ௧௭.) 11. உயர்ந்தோன். (உ-ம்.) (சூ. நிகண். ௧௧. நகரவெ. ௧௧.) 12. ஊழித்தீ. 13. எப்பொருட்குமிறைவன். 14.கடமை. 15.கடவுள். 16.கடன்.(உ-ம்.) (சூ.நிகண்.௧௧. நகரவெ. ௧௧.) 17. காலவிரைவு. 18. குடியிறை. (உ-ம்.) "அரசனுக்கு இறைப் பொருள் ஆறிலொன்முயிற்று" (வள். ௭௩. உரை.) 19. கை. (சிந்தா. காந்தரு. ௧௬௪.) [ஆகுபெயர்.] 20. கையிலணியுந்தொடி. (உ-ம்.) "வீங்கிறைவடுக்கொளவீழுநற்புணர்ந்தவர்" (மருதக்கலி. ௬௬.) [ஆகுபெயர்.] 21. கையிறை. (உ-ம்.) (சூ. நிகண். ௧௧: நகரவெ. ௧௧.) 22. கைவிரல். (உ-ம்.) "இறைநிலமெழுதுமுன்" (கந்தபு. அவையட. ௧.) 23. சந்து. (உ-ம்.) "வணங்கிறைப்பணைத்தோள்" (மதுரைக்கா.௭௧௪.) 24. சந்தையுடைய முன்கை. (உ-ம்.) "வணங்கிறைப்பணைத்தோள்" (புறநா. ௩௨.) 25. சிவன். (உ-ம்.) "அவனேதானேயாகியவந்நெறி-யேகனுகியிறைபணிநிற்க"(சிவஞான போ. ௧௦.) 26. சிறுமை. 27. தங்கல். (உ-ம்.) "வண்டிறைகொண்ட கமழ்பூம்பொய்கை"(மதுரைக்கா. ௨௫௩.) 28. தலை. (உ-ம்.) (சூ. நிகண். ௧௧: நகரவெ. ௧௧.) 29. தலைமையானது.(உ-ம்.) "படைக்கலத்திறையையீந்தான்" (கந்தபு.குமாரபுரி. ௭௫.) 30. நடுவுநிற்றல், நீதி செய்தல். (உ-ம்.) "ஓர்ந்துகண்ணோடாதிறைபுரிந்து" (வள். ௫௪௧.) [இறைமை - இறையென நின்றது. நடுநிற்றல் இறைக்கியல்பாதலின் இறையென்

முர்.] 31. நீர்முதலியன இறைத்தல். (உ-ம்.) "இறைத்தொறுமூறுங்கிணறு" (ப.மொ. ௬௫.) 32. நட்பம். 33. நோய். 34. பிரமன். 35. பெருமை. 36. மறுமொழி. (உ-ம்.) "வினவிறை" (நன். பொது. ௨௪.) 37. மாமரம். 38. முன்கை. (உ-ம்.) "வணங்கிறைவளையூர" (பாலைக் கலி. ௧௬.) 39. மூத்தோன். 40. வசித்தல். "உடன்றிறை கொள்புள்ளொடு விலங்கலறியோட" (திருவி. மாயப். அ.) 41. வருத்தம். (உ-ம்.) (வள். அ௬௭.) 42. விட்டுணு. 43. விடை. 44. வீட்டிறப்பு. (உ-ம்.) "தாழைமுடித்துத்தருப்பைவேய்ந்த-குறியிறைக்குரம்பை" (பெரும்பா. ௨௬௪). [குறியிறை - குறிய இறப்பு.] 45. வேற்றரசர்கொடுக்குந்திறை. (உ-ம்.) "எத்திசைநிதியமுமிறைகொண்டு" (சிந்தா. ௧௧௧. ௬௯.)

இறைக்கள்ளன்--இறைப்பிளவை.

இறைக்குத்தல்—கண்புரட்சியற்றுநிற்றல்.

இறைக்குத்து—சாகுந்தருணத்தில் கண்குழிவிழுதல்.

இறைகிழவோய் — இறைவனுதற்றன்மையையுடையாய். (பதிற்றுப்.)

இறைகுத்தல்— விரலிறையாலளவிடல்.

இறைகூடல்---அரசாளுதல். (உ-ம்.) "ஈரும்பேனுமிருந்திறைகூடி" (பொருந. எ௧.)

இறைகூடை—பூட்டை. (இறைகூடை.)

இறைகூர்தல்—தங்குதல். (ஐங்குறு.)

இறைகொள்ளுதல்— தங்குதல். (உ-ம்.) "தேனிறைகொள்ளுமிரும்பல்யானை" (புறநா. ௧௭.)

இறைகோளல்—தங்குதல். (உ-ம்.) "இறைகொளில்லிடைத் தெய்வதம்" (கந்தபு. நகர்புகு. ௭௭.)

இறைச்சி—1. நேயம். (உ-ம்.) "வீழுநர்க்கிறைச்சியாய்" (கலி. அ.) 2. மாமிசம். (உ-ம்.) (பிங்கல. ௨௫௪௧.)

இறைச்சிப்பொருள் — 1. (அகப்பொருள்) கருப்பொருளினுள்ளே தோன்றும் பொருள்; "அஃது: அங்கியற்பொருள், திணைநிலைப்பொருள், வன்புலப்பொதுப்பொருள், மென்புலப்பொதுப்பொருள், பெருமைப்பொதுப்பொருள், விருந்துப் பொதுப்பொருள். என ஆறு என்பர். அவற்றுள், அங்கியற்பொருளாவது: அந்நிலத்திற்கு அங்கமாம்பொருள். அவையாவன: குறிஞ்சிநிலத்துச் சந்தநம், பொன், வெள்ளி முதலியனவும், நெய்தனிலத்து உப்பு, இப்பி, நந்து, அலவன், வலைமுதலியனவும், பாலைநிலத்துச்சீழ்கு, காய், குருவி, சிள்வீடு, அறுபுள்ளி, கோம்பி முதலியனவும், மருதநிலத்துக் கரும்பு, வாழை, தெங்கு முதலியனவும், முல்லைநிலத்துப்பூவை, பூளை, தும்பி, காவளை, கார்போகி முதலியனவுமாம். திணைநிலைப்பொருள்; அவ்வந்நிலத்திற்குரிய ஒழுக்கநிலையின்பொருள். வன்புலப்பொதுப்பொருள்; அவை: ஆர், புன்கை, அரசு, சிள்ளிஞ்சில், கீரை, பருத்தி, கரும்பு முதலாயின. மென்புலப் பொதுப்பொருள்; அவை: கீரை, வழுதுணை, கிடை, சணப்பு, வேரி, தணக்கந்தம், மருதம் முதலாயின. பெருமைப் பொதுப்பொருள்; அவை: தாளி, பூவல், காவல், கழஞ்சு, வேலி, மாறு, பதடி, சோரை, சூரை, சுரை, சுரும்பு, வண்டு, துவரை, அத்தி, ஐம்பெருமுதிரை முதலாயின. விருந்துப் பொதுப்பொருள்; ஒருதிணைக்குரியன மற்றொருதிணையைச்சேர்ந்திருப்பது" (தொல். பொருளதி. ௨௩௦) (வீரசோ. பொருட். டு. உரை.) "கருப்பொருட்பிறக்குமிறைச்சிப்பொருளே" என்பது (நம்பியகப்பொருள். ஒழிபி. ௩௧.) 2. தருக்கசாத்திரத்தொன்று. 3. அகத்திணைக்குரிய தெய்வமுதலாகிய பொருளின்கண்ணே பிறத்தல். 4. புறத்தேசொல்லுங்குறிப்புப்பொருள்.

இறைச்சிப்போர்—உடம்பு. (சிந்தா.)

இறைஞ்சல் — 1. குனிதல். 2. வணங்கல். (உ-ம்.) "இந்திரனிறைஞ்ச" (திருவானைக்கா. திருநாட்டு. டு.)

இறைஞ்சலர் — } பகைவர்.
இறைஞ்சார் — }

இறைஞ்சி--1. மரவுரி. (சூ.நிகண். எ: எ௬.) 2. வணங்கியெனப்பொருள்படும் ஒருவினையெச்சம். (உ-ம்.) "இறைவிதன்மலரடியிறைஞ்சியேத்துவாம்" (கந்தபு. கடவுள்வாழ். எ.)

இறைஞ்சிய—தாழ்ந்த. (உ-ம்.) "குலையிறைஞ்சியகோட்டாழை" (புறநா. ௧௭.)

இறைஞ்சு—இறைஞ்சென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும். (உ-ம்.) "குருவாதிமூவுருவையுந் தாழ்ந்திறைஞ்சு" (வைராக். சத. ௬௭.) [ஏவலிலே வந்தது.]

இறைஞ்சுதல் — 1. குனிதல். 2. படிதல். (உ-ம்.) "புண்முழுதிறைஞ்சுங்கோட்டு" (சிந்தா. ௧௧௧. ௧௨அ.) 3. வணங்குதல். (உ-ம்.) "இடருழந்திறைஞ்சியேத்தலும்" (இராமா. திருவவதார. ௨௦.)

இறைஞானம்—சிவஞானம். (உ-ம்.) "வடுதருமலர்க்குழலார்முலைத்தலைக்கே யிடைக்கேயெறிவிழியின்படுகடைக்கேகிடந்து மிறைஞானங்கூடுமவர்" (சி. சி. ௧௦: ௫.)

இறைத்தல்— 1. கிணறுமுதலிய நீர்நிலைக

ளிலிருந்து நீரையள்ளிப்புறத்தேபோகவிடுதல். (உ-ம்.) "நெல்லுக்கிறைப்பதேநீரன்றிக்காட்டு முளி - புல்லுக்கிறைப்பாரோபோய்" (நன்னெறி. ௬௬.) 2. நீரைச்சொரிதல். (உ-ம்.) "இரங்கியேயிருவிழிகணீரிறைப்ப" (தாயு. சுகவாரி. ௪.) 3. நீரையள்ளிப்புறம்பேபோகவிடுதல். (உ-ம்.) "எள்ளுந்தண்ணீரு நாளை யாருனக்கிறைக்கப் போறார்" [வழக்.] 4. மிகக்கொடுத்தல்.

**இறைதல்**—சிதறுதல், சிந்தல். (உ-ம்.) "வளைமுத்திறையவெற்றும்- பின்னலுறுவெண்டிரை பிறங்குகடனுப்பண்" (சூத. திருமான்முதலிய தேவர்கள். ௨.)

**இறைதிரியல்**—அரசநீதிதிறம்பல்.

**இறைப்பாரம்**— பல்லுயிரைக்காக்கின்றபாரம். (சிந்தா.)

**இறைப்பிளவை**—கையிறையிலேவருமொருபெரும்புண்.

**இறைப்பு**—நீரிறைக்கை.

**இறைபயப்பது** — நேரே விடையாகாது விடைப் பொருள் கொள்ளக் கிடக்குங் கூற்று; அது: "சாத்தா இது செய்வாயோ" என்றவழி நீ செய்யென ஏவலாயும், செய்வேனே என வினாவாயும், உடம்பு நொந்ததென உற்றதுரைத்தலாயும், உடம்புநோம் என உறுவது கூறலாயும், மற்றையது செய்வேனென இனமொழியாயும் வரும்" (நன். ௩௮௬. உரை.) [இறை - விடை.]

**இறைபுரிதல்** — 1. அரசாட்சிசெய்தல். 2. நீதிசெலுத்துதல்.

**இறைமகள்** — அரசனது புத்திரி. (உ-ம்.) "இருந்தருணம்பினென்னுவிறைமகட்கெந்தை சொற்றான்" (கந்தபு. வள். ௧௭௮.)

**இறைமகன்**—1. அரசன். (உ-ம்.) "பெற்றபினிறைமகன்பெண்மகாரெமக் - குற்றிலரெனவினைந்து" (பிரமோத். சோமவாரவி. ௧௫.) 2. அரசனது புத்திரன். 3. கந்தசுவாமி. 4. விநாயகர். [இறை - அரசன், சிவன்.]

**இறைமரம்**—1. இறைவை மரம். 2. ஏற்றமரம். 3. நீரிறைக்கு மரப்பத்தல்.

**இறைமாட்சி** — 1. அரசனது நற்குண நற்செய்கைகள். (உ-ம்.) (வள். அதிகார. ௩௯.) 2. அரசாட்சிக்குரியமகத்துவம். (உ-ம்.) "சீரிறைமாட்சி செலுத்தியமர்ந்தான்" (கந்தபு. தெய்வயானை. ௪௮.)

**இறைமாண்டார்**—அரசர். [இறைமாட்சியுடையாரென்றபடி.]

**இறைமை**—1. அரசியல். (உ-ம்.) "அநந்தகுணபாண்டியற்குத்தன்னிறைமை முழுதுமீந்தான்" (திருவிளை. அங்கம். ௨௭.) 2. இராச்சியமுறை, தலைமைப்பாடு. (உ-ம்.) "இறைமையில்லோர்க்கு மிழிகுலத்தோர்க்கும்" (அகப்பொருள். ஒழிபி. ௩௩.) 3. கடவுட்டன்மை. (உ-ம்.) "அவனது இறைமைக்கு இழுக்காய் முடியும்" (சி.சி. அ: ௩௮. சுப்பிர.)

**இறைமையாட்டி**—1. அரசி. 2. தலைவி.

**இறைமொழி**—உத்தரம். (உ-ம்.) "ஈறிலானன்பர்கேட்கவிறைமொழிகொடுத்து" (திருவிளை மண். ௧௧௨.)

**இறையணி**—ஒரலங்காரம்; அஃது: ஒரு கருத்தையுட்கொண்டவிடையிருப்பது. (உ-ம்.) "கருத்தொன்றினைமறைவாயுட்கொளும்விடைகாட்டலிறை" என்பதனாற்காண்க. (குவல. ௮௫.)

**இறையவன்**—கடவுள். (உ-ம்.) "கறைமிடற்றிறையவன்மருங்காக" (கந்தபு. மோக. ௫.)

**இறையனார்** — தலைச்சங்கப்புலவருளொருவர்; அவர், ஒரகப்பொருளிலக்கணஞ்செய்தவர்.

**இறையனாரகப்பொருள்**— மதுரைச்சோமசுந்தரக்கடவுளின் கூறுகிய இறையனாரருளிய ஒரிலக்கணநூல். இது. களவியலென்றும் பெயர்பெறும். இதனுரையாசிரியர் மதுரைக்கணக்காயனார்மகனார் நக்கீரனார்.

**இறையால்**— முக்கால்ரூபாவுக்குச்சரியாக முன் இலங்கையிலே வழங்கிவந்த ஒருநாணயம். [இறைசால் என்றும் வழங்கப்பட்டது.]

**இறையான்**— சிவன். (உ-ம்.) "இறையான்மகிழிசைபாடினனெல்லாநிகரில்லான்" (பெரியபு. தடுத்தாட். ௭௫.)

**இறையிலி**—1. இறையிறுதவன். 2. சர்வமானியம். (உ-ம்.) "எம்மையொப்பவர்க்கு மூத்திபிறையிலியாகவிட்ட- மும்மைநற்பதிகடம்மின்" (கோயிற்பு. இரணியவன்ம. ௬௭.)

**இறையிலிநிலம்**— சருவமானியம். (சிந்தா.)

**இறையோன்**— 1. அரசன். (உ-ம்.) "நேர்ந்துதனிநின்றானிருதர்க்கிறையோனே" (கந்தபு. அசுரர்யாக. ௧௧௨.) 2. கடவுள். 3. சிவன். (உ-ம்.) "இரக்கம்" பார். 4. தலைவன். (உ-ம்.) "இறையோன்முதலாவெனைவருங்கேட்ப" (அகப்பொருள். ஒழிபி. ௧௭.)

**இறைவர்மலர்**— கொன்றைமலர். அஃது: "இறைவர்தண்மலரினோடறுகுசாத்தி" (பாரத. அருச்சுனன்றவ. ௧௧௪.) என்பதனாற்பெறப்படும். [இறைவர்-சிவன்.]

**இறைவரை**—கணப்பொழுது. (உ-ம்.) "ஜயநிற்கிதோரிறைவரையாகுமால்" (கந்தபு. மோக. ௮.)

**இறைவன்**— 1. அரசன். (உ-ம்.) "இறை

வன்குலபூடணன்” (திருவிளை. வளையல். உ.) 2. எப்பொருளிலுந் தங்குகிறவன். (உ-ம்.) “இறைவன் குரவ னியல்குணனெனுங்கோன்” (சிவப். நாகொண். கஅச.) 3. கடவுள். (உ-ம்.) “மற்றவரிறைவன் மலரடிவணங்கி” (பாரத. இராசசூய. கசரு.) 4. குரு. 5. சிவன். 6. சிவனார்வேம்பு. 7. தலைவன். 8. பரமகர்த்தா; அவர் சர்வஞ்ஞத்துவத்தையும், சர்வகர்த்திருத்துவத்தையும், சர்வாநுக்கிரகத்தையும் பிறரொருவராலே பெறுதலின்றித் தமக்கியல்பாகவுடையவர். (உ-ம்.) “இறைவனுவான்ஞாநமெல்லாமெல்லாமுதன்மை யநுக்கிரகமெல்லா மியல்புடையான்” (சி. சி. அ: கஎ.) 9. பிதா. 10. பிரமன். 11. மூத்தோன். 12. விட்டுணுவினவதாரமாயுள்ள கண்ணபிரான். (உ-ம்.) “இறைவனெழிற்கதிர்மணிகளழுத்தியதவிசிருத்தலும்” (பாரத. கிருட்டி. கககூ.)

இறைவன்வேம்பு—சிவனார் வேம்பு.

இறைவி—1. அன்னை. 2. இராசாத்தி. 3. குருவின்மனைவி. 4. தலைவி. (உ-ம்.) “இறைவியும்பிரியினுய்யாள்” (கந்தபு. வள். கசுஉ.) 5. பார்வதிதேவி. (உ-ம்.) “அறுவகை நெறிகளும் பிறவுமாக்கிய- விறைவிதன் மலரடி யிறைஞ்சியேத்துவாம்” (கந்தபு. கடவுள்வாழ். எ.) 6. மனைவி.

இறைவை—1. இறைகூடை. (உ-ம்.) “இறைவைகொளுங்கூவல்” (திருப்பு. கூஉஉ.) 2. ஏணி. (உ-ம்.) “ஏறுதற்கமைத்த தோற்றத்திறைவையினின்றவன்றே” (இரகு. யாக. க0ச.) 3. தூற்றுக்கூடை. 4. நீரிறைக்கும் மரப்பத்தல்.

இன்—1. இப்பொழுது. (உ-ம்.) “இன்னே” பார். 2. இறந்த காலப் பொருளிலே வரும் ஓர் இடைநிலை; இது: குற்றியலுகரவீறாகிய வினைப்பகுதிகளோடு சேர்ந்தும், வகர உகரம் இயல்பீறாகவரும் வினைப்பகுதிகளைச்சேர்ந்தும், ஞ ண ந ம ன ர ல வ ள ஆகிய ஒற்றுக்களிறுதியாகிய வினைப்பகுதிகள் உகரச்சாரியை பெற்று வருவனவற்றைச் சேர்ந்தும் வரும். உகரச் சாரியை பெற்றுவருவன என இங்கே சொல்லப்பட்டன, பகுதியோடு தல் விகுதி சேர்ந்து தொழிற்பெயராகும்போது உகரச் சாரியை பெற்றன்றி யங்ஙனமாகாத பகுதிகளேயாம். (உ-ம்.) “நீடினன், தழுவினன், உரிஞினன்” 3. இனிமையென்பதன் விகாரமாய் இனிமையான எனப் பொருள்பட்டுநிற்கும் ஒருபண்புப்பெயர். (உ-ம்.) “இன்னமுதுகனிபாகு கற்கண்டு சீனிதேன்” (தாயு. சுகவாரி. க.) 4. (இலக்கணம்) ஐந்தாம் வேற்றுமையுருபுகளிலொன்று; அது: நீக்கம், ஒப்பு, எல்லை, ஏது ஆகிய பொருள்களிலொன்றைக் கருதும். (உ-ம்.) “ஐந்தாவதனுருபில்லுமின்னும்- நீங்கலொப்பெல்லையேதுப்பொருளே” (நன். பெயரிய. சூஉ.) [வரையின்வீழருவி, பாலிற், வெளிது கொக்கு, கருவூரின்கிழக்குச்சோணாட்டின் கோட்டினாகிய கொடிஞ்சி நெடுந்தேர் என்பன முறையே நீக்கம், ஒப்பு, எல்லை, ஏது ஆகிய பொருள்களைக் கருதினமை காண்க.] 5. ஒரு பொதுச்சாரியை; அஃது: ஒருபதம் விகுதியோடு அல்லது பதத்தோடு அல்லது உருபோடு புணருமிடத்து வருவது. (உ-ம்.) “கச்சினன்” “வண்டின்கால்” “மலையினை”

இன்கண்—1. இன்பம். (உ-ம்.) “இன்கணுடைத்தவர் பார்வல்” (வள். ககுஉ.) 2. கண்ணோட்டம். (உ-.ம்) “இன்கணில்லாதாள்பாரி” (அரிச்ச. மயாந. கூ.)

இன்சபம்—இராசசபை.

இன்சொல்—அன்புடைமையை வெளிப்படுத்துஞ்சொல். (உ-ம்.) “இன்சொலினி தீன்றல்காண்பான்” (வள். கூக.)

இன்சொலுவமை — உவமையலங்காரத்தினொருவகை; அஃது. உவமேயத்தினும் உவமானத்துக்கு ஒருமிகுதிதோன்றக்கூறி உவமித்து இன்ன மிகுதியையுடைத்தேனும் ஒப்பதன்றி மேற்பட்டதன்றென்பது (வ-று.) “மான்விழி தாங்குமடக்கொடியேநின்வதன- மான்முழுதுந் தாங்கிவருமதிய - மானுலு - முற்றிழை நல்லாய் முகமொப்ப தன்றியே - மற்றுயர்ச்சி யுண்டோ மதிக்கு” (தண்டி. பொருளணி. கூ0.)

இன்பக்கனிகவர்கணம்—தேவர். (சிந்தா)

இன்பக்கோடி—காமவல்லி. (சிந்தா.)

இன்பசத்தி—சிவசத்தி நான்கனுளொன்றாகிய உமை. (உ-ம்.) “சிவபெருமானுடைய அருட்சத்தியெனப்படும் இன்பசத்தியுமையென்றும்” (கந்தபு. நவ. சகூ.)

இன்பம்— 1. அகமகிழ்ச்சி. (உ-ம்.) “ஆய்ந்தழூவருமாயிடையின்பமூற்றமர்ந்தார்” (சேதுபு. பராவசு. சரு.) 2. ஆநந்தம். (உ-ம்.) “இன்பக்கடலிற்புகுந்திடுவான்” (தாயு. சொல்லற்கரி. ச.) 3. இனிமை. (உ-ம்.) “கண்டுதெண்டாக்கட்கின்பத்து” (மதுரைக். ககூ) 4. சிற்றின்பம். (உ-ம்.) “துச்சாரிநீகண்ட-வின்பமெனக்கெனைத்தாற்கூறு” (நாலடி. பிறர்மனை. ச.) 5. நவரசத்துளொன்று. 6. நால்வகைநூற்பயன்களுளொன்று. (உ-ம்.) “அறம்பொருளின்பம் வீடடைத னூற்பயனே” (நன். பொதுப். க0.) 7. பெரியோரியல்பினொன்று. 8. போகந்துய்ப்புழித்தோன்றுமுவகை. (பெரியபு. திருநாட்டு. ககூ. உரை.) 9. வைதருப்பநெறியில் சொல்லினுஞ்சுவைபடத்தொடுத்தலும், பொரு

ளினுற்சுவைபடத்தொடுத்தலும். (உ-ம்.) "சொல்லினும் பொருளினுஞ்சுவைபடலின்பம்" (தண்டி. கஅ.)

இன்பர்— இன்பங்கொடுப்போர். (உ-ம்.) "இமையோர்கடமக்கெலாமின்பராகி" (தேவார. அன்னியூ. ௫. திருநாவு.)

இன்பவணி— முயற்சியின்றித்தான் கருதிய காரியம் முற்றுப்பெறுவதைக்கூறுவது."முயலுகையின்றியவாவியகாரியமுற்றுறுதற்- கியலும்பெயரின்பமேயாம்" என்னுங்குவல.௬எ-ஆற் பெறப்படும்.

இன்பன்— 1. கணவன். 2. இன்பத்தையுடையவன்.

இன்பு— சுகம். (உ-ம்.) "இன்பருளவாடையழுக்கேறுமெமக்கு" (தாயு. பைங்கிளி. ௬.)

இன்புறல்—இன்பம்பொருந்தல்.

இன்புறாஉம்— இன்பத்தை மிகுவிக்கும். (உ-ம்.) "இன்புறாஉமின்சொலவர்க்கு" (வள். ௯௬.) [உறாஉம் என்பது உறுவிக்குமென்னும் பிறவினைப்பெயரெச்சத்தின் விகாரம்.]

இன்பூறல்—இன்பூறு. (உ-ம்.) "கவிர்பரியின்பூறல்" (தைல,தைலவ.௧0௫) 2. சாயவேர்.

இன்பூறவேர்—ஒருமருந்துச்சரக்கு.(உ-ம்.) "சீரகமின்பூறுவேர் தேசாவரந்தவளவீருளிகாட்டுள்ளி" (தைல. தைலவ. க௬௫.)

இன்மை— 1. இல்லாமை. (உ-ம்.) "துளியின்மை ஞாலத்திற்கெற்று" (வள். ௫௫எ.) 2. உடைமைக்கு மறுதலை. (சிந்தா.) 3. வறுமை. (உ-ம்.) "இன்மையினின்னாததியாதெனின்" (வள். ௧0௪௧.)

இன்மைவழக்கு—அறுவகைவழக்கினுளொன்று. (மணிமே.)

இன்மைநவிற்சி — இன்மைநவிற்சியணி.

இன்மைநவிற்சியணி — ஓர் அலங்காரம்; அது: யாதேனும் ஒன்றின்மையால் உபமேயத்திக்கு உயர்வேனுந்தாழ்வேனுந் தோன்றச்சொல்லுதல். (குவல. ௨௨-வது.) "மன்னவனின்னவைகோளறைவோன் - றனையடையாமையின்மிக்கொளியாம்" என்பது உயர்வுக்கும், "கல்வியுயர்-வதுதானெனினும் வணக்கமிதியமருவிலதேல்-அதுமேலன்று" என்பது தாழ்வுக்கும் வரலாறாகக்கொள்க.

இன்றி — இல்லாமல் எனப் பொருள்படும் ஒரு குறிப்புவினையெச்சம். (உ-ம்.) "சாதநமின்றியொன்றைச் சாதிப்பாருலகிலில்லை"(கைவல். தத்துவவிளக். ௧௧.)

இன்றியமையாமை—தான் இல்லாமல்நிறையாமை. (உ-ம்.) "மங்கலமாகியின்றியமையாது" (நன். பொதுப்பா. ௩0.)

இன்று— 1. அசைச்சொல். 2. இந்த நாள். (உ-ம்.) "இன்றுமகவான் மகளையீந்திட நினைந்தான்" (கந்தபு. தெய்வயானை. ௨௨௫.) 3. இப்பொழுது. (உ-ம்.) "இன்று நோக்குரைநடக்குமியல்பிலோர்க்கு" (சிவப். ௬: ௨.) 4. இல்லையெனப் பொருள்பட்டு அஃறிணை ஒன்றன்பாலிலேவரும் ஒரு குறிப்பு வினைமுற்றுச்சொல். (உ-ம்.) "பொருட்குப்பொருடெரியினது வரம்பின்றே" (தொல். சொல். ௩௬௧.) 5. இன்றியென்பதன் விகாரமாய்வந்து இல்லாமல் எனப் பொருள்படும் ஒரு குறிப்புவினையெச்சம்.(உ-ம்.) "விண்ணின்று பொய்ப்பின்" (வள். க௩.)

இன்றேல்—இல்லையேல்.

இன்றை—இந்தநாள். (உ-ம்.) "அன்றுமுதலின்றைவரை" (தாயு. ஆகார. ௩0.) [இன்று என்னுஞ்சொல் ஐகாரச் சாரியையேற்று நின்றது.]

இன்றைக்கு—இந்தநாளுக்கு. (உ-ம்.) "இருமடங்கு" பார்.

இன்றைத்திநம் —
இன்றையத்திநம்— } இற்றைத்திநம்.
இன்றையதிநம் —

இன்றேடை—இனியகோவை. (புறப்பொ.)

இன்ன—1. இத்தன்மையான. 2. இத்தன்மையுடையன. (உ-ம்.) "இன்னவாகிய பலவளனுண்டு" (கந்தபு. தவங்காண். ௧எ.) 3. இந்த. (உ-ம்.) "இன்னதன்மைகளியல" (கந்தபு.தெய்வயானை.௨00.) 4. உவமையுருபாக அருகிவரும் ஒரு பெயரெச்சக்குறிப்பு. (நன்.பொதுவி.௧௬.)

இன்னகையாயம் — இயலிசை நாடகத்தாலும் இனிய மொழிகளாலும் இனிய மகிழ்ச்சியைச்செய்யுந்திரள். (சிறுபாணு. ௨௨0. உரை.)

இன்னணம்— இத்தன்மை. (உ-ம்.) "இன்னணம்வளருங்காலை" (பாரத. சம்பவ. ௧௧௧.) [இவ்வண்ணமென்பதன் மரூஉவென்பர்.]

இன்னதல்லதிதுவெனமொழிதல் – தந்திரயுத்தி முப்பத்திரண்டனுளொன்று; அது: சந்தேகிக்க நின்றவிடத்து இப்படிப்பட்டதல்லாதது இதுவெனச் சொல்லுதல். (நன். பொதுப். ௧௪.)

இன்னது — 1. இது. (உ-ம்.) "இன்னது கேண்மெனவிசைத்தன் மேயினன்" (கந்தபு. அசுரர்யாக. க.) 2. இத்தன்மையையுடையது. (உ-ம்.) "எந்தைதானின்னனென்று மின்னதாமின்னதாகி-வந்திடானென்றுஞ்சொல்ல" (சி. சி. ௧: ௪௪.)

இன்னம்— 1. இத்தன்மையை யுடையேம்.

(சிந்தா.) 2. இனிமேலும். (உ-ம்.) "இன்னம்பிறவியும்வேண்டும்" (தாயு. சிவன் எ.)

இன்னமும்— இன்னும். (உ-ம்.) "இன்னமும் வந்திலள் வருந்தியீன்றதாய்" (கந்தபு. சூரனமைச்சி. கருஅ.)

இன்னர்— இத்தன்மையர். (உ-ம்.) "இன்னரைநோக்கியெங்கோன்" (காஞ்சிபு. தக்கீச. சுO.)

இன்னல்—1. குற்றம். (உ-ம்.) "ஆராமை" பார். 2. தீமை. (உ-ம்.) "இரங்கல்" பார். 3. துன்பம். (உ-ம்.) "இன்னநீர்தருபோகமதாற்றினரிருந்தார்" (கந்தபு. தெய்வயானை. உசுஅ.)

இன்னலம்—இனியநலம்.

இன்னவர்— இவர். (உ-ம்.) "இன்னவர்சேனைவெள்ளத்தியாரையென் றறிவதென்றான்" (திருவிளை. மெய்க்கா. ருரு.)

இன்னவன்— இப்படிப்பட்டவன். (உ-ம்.) "இன்னவன்றனையடுதியேல்" (கந்தபு. தாரகன்வதை. ரு.)

இன்னவை— இவை. (உ-ம்.) "அசரீரியின்னுமின்னவையுரைத்ததம்மா" (பாரத. நிவாத. கூஉ.)

இன்னன் — இப்படிப்பட்டவன். (உ-ம்.) "இன்னது" பார். [இ-பகுதி. அன்-ஒருவிகுதி.]

இன்னன— 1. இவைகள். (உ-ம்.) "ஏதமின்னனவின்னணம்" (சிந்தா. ௧௩௧. உருகூ.) 2. இவைபோன்றன.

இன்னா— 1. ஆகாமை. 2. இகழ்ச்சி. 3. கீழ்மை. 4. தீமை. (உ-ம்.) "இன்னாசெய்தாரையொறுத்தல்" (வள். ருகசு.) 5. துன்பம்.(உ-ம்.) "இன்னாவாகப்பிறர்மண்கொண்டு" (புறநா. கஉ.) 6. வெறுப்பு. [இன்-இனிமை. ஆ-எதிர்மறை.]

இன்னாங்கு— 1. தீமை. 2. துன்பம். (உ-ம்) "இன்னாங்கெழுந்திருப்பார்" (நாலடி. இளமைநி. க.)

இன்னாச்சொல்— 1. இழிசொல். 2. கடுஞ்சொல். (உ-ம்.) "அழுக்காறவாவெகுளியின்னாச்சொனான்கும்" (வள். ருரு.)

இன்னாத—1. துன்பஞ்செய்வன. (உ-ம்.) "இன்னாதசெய்தபின்" (வள். ருகரு.) 2. துன்பத்தை விளக்கின்ற எனப்பொருள்படும் ஒரு குறிப்புவினைப்பெயரெச்சம்.

இன்னாதது— 1. தீதானது. (உ-ம்.) "மரணத்தின் பாத்திரமாம்வாணாள்போலவின்னாதில்லை" (ஞானவா. வைராக். சுகூ.) 2. துன்பஞ்செய்வது. (உ-ம்.) "இன்மையினின்னாததியாதெனின்" (வள். ௧0சக.)

இன்னாதார்— பகைவர். (நீதிநெறி. ருகூ.)

இன்னாது—தீது.

இன்னாநாற்பது—கெடுதியைவிவரிக்கும்நாற்பது பாட்டுள்ள ஒருநூல்.

இன்னாமுகம் — சந்தோஷமில்லாத முகம். (வள். ருசரு.)

இன்னாமை—1. இனியதாகாமை. 2. தவறு. 3. தீமை. 4. துயரம். 5. துன்பம். (உ-ம்.) "இன்னாமையின்பமெனக்கொளின்" (வள். சுஙO.) 6. வேண்டாமை.

இன்னாமொழி—அலர்மொழி. (உ-ம்.)"இன்னா-மொழிநாவடங்கமொழிந்து"(வாண. ருகரு.)

இன்னார்—1.இத்தன்மையர். (உ-ம்.) "இன்னார்க்கினனதியைகவென்று" (இலக்கணவி. சுஅக.) 2. பகைவர்.

இன்னாலை—இலைக்கள்ளிமரம்.

இன்னாவறிவு— தீங்குபயக்குமறிவு. (உ-ம்.) "இகன்மேவ - வின்னாவறிவினவர்" (வள். அருஎ.)

இன்னான்—1. இத்தன்மையன். 2. துன்பத்தைச்செய்பவன். (ஐங்குறு.) 3. பகைவன்.

இன்னிசை— 1. இராகம். 2. இன்பமானவோசை. 3. எழு நரம்புள்ள வீணை.

இன்னிசைக்கலிப்பா — கலிப்பாவுளொன்று.

இன்னிசைக்காரர்— } பாணர்.
இன்னிசைகாரர்— }

இன்னிசைச்சிந்தியல்வெண்பா— ஒருவகை வெண்பா; அஃது: இன்னிசைவெண்பாப்போலத் தனிச்சொற்பெறாது நடந்து மூன்றடியான்வருவது. "சுரையாழவம்மிமிதப்பவரையானைய-யானைக்குநீத்துமுயற்குநிலையென்ப- கானகநாடன்சுனை" என்பதிற்போல. இது: "நேரிசையின்னிசைபோல நடந்தடிமூன்றின்வந்தா-னேரிசையின்னிசைச்சிந்தியலாகும்" என்பதனாற்பெறப்படும்.(யாப்.காரிகை.செய்யுளிய.ரு.)

இன்னிசைவெண்பா — வெண்பா வகையுளொன்று; அஃது: ஒருவிகற்பத்தாலேனும் பலவிகற்பத்தாலேனும்நான்கடியாய்த்தனிச்சொல்லின்றிவருவது.(வ-று.)"வைகலும் வைகல்வரக் கண்டுமஃதுணரார் - வைகலும் வைகலை வைகுமென்றின்புறுவர் - வைகலும் வைகற்றம்வாழ்நாண்மேல் வைகுதல் - வைகலை வைத்துணராதார்" "கடற்குட்டம்போழ்வர்கலவர்படைக்குட்டம்- பாய்மாவுடையானுடைக்கிற்குந் தோமில்-தவக்குட்டந் தன்னுடையா னீந்துமவைக்குட்டங் - கற்றான்கடந்துவிடும்" இவை முறையே ஒரு விகற்பத்தானும் பல விகற்பத்தானும் வந்தன. அன்றியும் இரண்டாமடியினிறுதி தனிச்

சீர்பெற்று மூன்று விகற்பத்தான் வருவனவும், மூன்ருமடியினிறுதி தனிச்சொற்பெற்று இரு விகற்பத்தான் வருவனவும், தனிச்சொல்லின் றிப் பலவிகற்பமாகி அடிதோறும் ஒரூஉத்தொடைபெற்றுவருவனவும், பிறவாற்ருனும் நேரிசைவெண்பாவிற் சிறிதுபிறழ்ந்து நான்கடியாய் வருவனவும் இன்னிசைவெண்பா எனப்படும். (காரிகை. செய்யுளி. ச.) [பாடுவோர் வருத்தமின்றிச்செய்தற்குநேரான இசையையுடைய வெண்பாஎன்பது கருத்துப்போலும்.]

**இன்னிதாய்**—இனிதாக. (உ-ம்.) "என்னையின்னிதாயாண்டுகொண்டவா" (திருவாச.திருச்சதக. கரு.)

**இன்னியம்**—இன்பமான வாத்தியம்.

**இன்னியர்**—பாடுவோர்.

**இன்னிலை** — கிருகத்தாச்சிரமநிலை. (உ-ம்.) "இன்னிலையொழுக்கும்" (திருவி. தடாதகை. ருக.) [இல் - நிலை.]

**இன்னினி**—1.இப்பொழுது. (உ-ம்.)"இன்னினிக்கணமதொன்றில் - ஒற்றன்முரண் வலியதனைச்சிந்தி" (கந்தபு. அக்கினிமுகாசுரன் வதை. கருஎ.) 2. இன்னினியே செய்க வறவினை. (நாலடி. யாக்கை நிலையாமை. க.)

**இன்னீர்**—இத்தன்மையையுடையீர்.(உ-ம்.) "இன்னீராகவினினியவுமுளவோ" (புறநா. ருஅ.)

**இன்னும்**—1. இன்னமும். (உ-ம்.) "இன்னுமோர் சூலமுண்டெறிவன்" (கந்தபு. அக்கினிமுகாசுரன்வதை. கககக.) 2. இப்பொழுதும். (உ-ம்.) "மிச்சிலுக்கின்னுமிச்சைசெய்பெருமான்" (கல்லாடம். கசு. அகவலுரை.) 3. பின்னும். (சிந்தா.)

**இன்னுயிர்**—1. இவ்வுயிர். (உ-ம்.) "இன்னுயிரைப் புறத்தகற்றவல்லதான" (ஞானவா. உத்தாலகன். சஉ.) 2. இனியவுயிர்.

**இன்னுழி**—இன்னவிடம்.

**இன்னே**—1. இத்தன்மையே. (உ-ம்.)"விதியார்செய்கையின்னேயோ" (கந்தபு. மார்க்கண்டேய. கoரு.) 2. இப்பொழுதே. (உ-ம்.) "கொடியேன்செய் குற்றமெல்லா - மின்னேதணித்தேயெனையாண்டுகொள்ளுமென்ருள்" (கந்தபு. வள். ககஅ.) [இஃது: இனியென்னுமிடைச்சொல்லின்றிரிபு என்ப.) (திருவிளை. நான்மா. உக. உரை.]

**இன்னேம்** — இத்தன்மையை யுடையேம். (உ-ம்.) "இன்னேமாயினேம்" (புறநா. கசக.)

**இன்னேசை**—இனியவோசை.

**இன்னேர்**—இவர். (உ-ம்.) "இன்னேரெவருஞ்சிவனேயென்றிரங்கலோடும்" (கந்தபு.திருக்கல். சக.)

**இன்னேன்** — இப்படிப்பட்டவன். (உ-ம்.) "இன்னேர்தம்வன்மைக் கிறுதியிலவேனும்" (கந்தபு. அசுரர் யாக. கஅ.)

**இன**—இன்னவற்றை. (சிந்தா.)

**இனக்கட்டு**—இனக்கூட்டம்.

**இனங்காக்கும்யானை**— யானைத்திரட்குத் தலையானை, யூதநாதன். (சூ. நிகண். ரு: சு.)

**இனத்தார்**—சுற்றத்தார்.

**இனந்திரிபதுமம்**—செந்தாமரை வெண்டாமரைகள். (உ-ம்.) "இனந்திரிபதுமக்கோயிலிருவரும்" (திருவிளை. தடாதகை. சஎ.)

**இனநடை**—விதம்விதமானநடை. (உ-ம்.) "இதமிசைந்தனமாமெனவே யினநடைநடந்தனர்" (திருப்பு. கருக.)

**இனந்திரியேறு**— இனத்தைமணத்தாற்கைவிட்ட ஏறு. (சிந்தா.)

**இனம்**— 1. அரசர்க்குறுதிச்சுற்றம். 2.இன்னம். (உ-ம்.) "நீயினமிருந்தனை" (இராமா. பள்ளி. எஉ.) [இன்னமென்பதன்விகாரம்.] 3. குலம். 4. கூட்டம். 5. சம்பந்தம். 6. சுற்றம். (உ-ம்.) " நங்களினத்தையுயிருண்ணு" (கந்தபு. அக்கினிமுகாசுரன் வதை. உoரு.) 7. நிரை. (உ-ம்.) "வெள்வாய்க்கழுதைப்புல்லினம்பூட்டி" (புறநா. கரு.) 8. பசுக்கூட்டம். 9. மந்திரிகள். 10. வருக்கம்.

**இனமாலை**—ஒருவகை மாலை. (சிந்தா.)

**இனமொழியிறை**—ஐவகைவிடைகளுளொன்று. (உ-ம்.) "இறைபயப்பது" பார்.

**இனமோனை**—ஒரு எழுத்துக்குமோனையாக அவ்வெழுத்தின் இனவெழுத்துவருதல்.

**இனல்**—இன்னல் என்பதின்னகரந்தொக்க ஒருவிகாரமொழி. (உ-ம்.) "கண்டகமுமினலுறவே குதத்தியற்றி" (சிவதரு. சுவர்க்கநரக. களசு.) [இடைக்குறை.]

**இனவழி**—வமிசபரம்பரை.

**இனவெதுகை**—ஒரு எழுத்துக்கு இனவெழுத்துக்கள் எதுகையாகவருதல்.

**இனவெழுத்து**— 1. (இலக்கணம்) தானம் முயற்சி, அளவு, பொருள், வடிவு முதலிய எதுக்களிஞலே ஒரு சாதியாய்வரும் எழுத்துக்கள். அவை, உச்சரிக்கப்படுங்கால அளவை ஒருமாத்திரையாதல்பற்றி அ இ உ எ ஒ என்னுமெழுத்துக்கள் ஐந்தும் குறிலென ஓரினமாகவும், இரண்டுமாத்திரையாதல்பற்றி ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ என்னுமெழுத்துக்களேழும் நெடிலென ஓரினமாகவும், சுட்டுப்பொருளிலே வருதல்பற்றி அ இ உ என்னும் எழுத்துக்கள்மூன்

றும் சுட்டெழுத்தென ஓரினமாகவும், வினுப்பொருளிலே வருதல்பற்றி எ ஏ ஆ ஓ யா என்னுமெழுத்துக்கள் ஐந்தும் வினுவெழுத்து என ஓரினமாகவும், மிடற்றைத்தாநமாகக்கொண்டுபிறந்து தனித்தியங்கு மாற்றலுடைமையால் அம்முதல் ஔகாரமீறுகியவெழுத்துக்கள் பன்னிரண்டும் உயிரெழுத்தென ஓரினமாகவும், உச்சரிக்கப்படுங் காலஅளவை அரைமாத்திரையாதல்பற்றியும், புள்ளிவடிவுடைமைபற்றியும், உயிரெழுத்தோடு கூடியல்லது இயங்கு மாற்றலின்மைபற்றியும், கம்முதல் னவ்வீருகிய எழுத்துக்கள் பதினெட்டும் மெய்யெழுத்தென ஓரினமாகவும், உரத்தைத்தாநமாகக்கொண்டு பிறத்தல்பற்றி க ச ட த ப ற என்னும் எழுத்துக்கள் ஆறும் வன்கணம் என ஓரினமாகவும், மூக்கைத் தாநமாகக்கொண்டு பிறத்தல்பற்றி ங ஞ ண ந ம ன என்னும் எழுத்துக்கள் ஆறும் மென்கணமென ஓரினமாகவும், மிடற்றைத்தாநமாகக்கொண்டு பிறத்தல்பற்றி ய ர ல வ ழ ள என்னும் எழுத்துக்கள் ஆறும் இடைக்கணமென ஓரினமாகவுங் கொள்ளப்படும். (நன். எழுத். எ௨, எரு.) 2. முயற்சிவகையால் ஒன்றற்கொன்று இனமாகிய எழுத்துக்கள். "ஐ ஔ இ உச்செறியமுதலெழுத்-திவ்விரண்டோரினமாய் வரன்முறையே" (நன். எழுத். கசு.) என்பதிற்காண்க.

இனன்—சுற்றம். (உ-ம்.) "குணனுங் குடிமையுங் குற்றமுங்குன்ரு - வினனு மறிந்தியாக்கநட்பு" (வள். எகூரு.) [மகரம் நிற்குமிடத்து னகரம் போலியாய் வந்தது.]

இனு—1. நகை, இகழ்ச்சி. 2.வருத்தம், துன்பம். (உ-ம்.) "கோப்புக்கட்டியினுப்பிச் செற்றிடு கூட்டிற்புக்கு" (திருப்பு. கூo.) [விகாரம்.]

இனும்–1. நன்கொடை. 2. பயன் நோக்காத ஈகை. [இந்துஸ்.]

இனி—1. இப்பால். 2. இப்பொழுது.(உ-ம்.) "இனியன்னநின்னெடு சூழ்வார்யார்" (வள். க௨கூச.) 3. இன்று. (உ-ம்.) "இனியைங்-தலை நாகநன்மணியும் பெறலாம்" (வாண. கஅ.) 4. இனிமேல், பின்பு.

இனிச்சு—இனித்த. [இது போலி.]

இனித்தல் — 1. இதப்படுத்தல். 2. தித்தித்தல்.

இனிது—இனிமையுடையது என்னும் பொருள்படுமொரு குறிப்பு வினைமுற்று. (உ-ம்.) "குழலினிதியாழினிது" (வள். கூசு.)

இனிதுறுகிளவி— இன்பந்தோன்றச் சொல்லுஞ்சொல். (உ-ம்.) "இனிதுறுகிளவியுந்துனியுறுகிளவியு - மூவமமருங்கிற்ருேன்றுமென்ப" (தொல். பொருளதி. கூoரு.)

இனிப்பு—1. இனிமை. 2. சிநேகம். 3. தித்திப்பு. (உ-ம்.) "இனிப்பைநல்கு முக்கனிமுதலியவுணவினை" (வைராக். சதக. சஙு.)

இனிப்புத்தட்ட—1. ஆசைதட்ட. 2. உருசிகாட்ட.

இனிமை—1. இனிப்பு. 2.சந்தோஷம், இன்பம். (உ-ம்.) "இனியோர்" பார். 3. மேன்மை.

இனிய— இனியவைகள். (உ-ம்.) "இனிய செய்தி" (புறநா. க௨.)

இனியசொல்—இன்சொல்.

இனியர்—இனியவர். (உ-ம்.)"நாய்கன்பரிவு தீர்ந்தினியர்சூழ" (சிந். காந். கக.)

இனியவன்—இனியன்.

இனியவைகூறல்—மனத்தின்கண் உவகையைவெளிப்படுப்பனவாகிய இனியசொற்களைச் சொல்லுதல். (வள்.அதிகாரம். கo.) [இது வாக்கின் நற்குணம் நான்கினுென்று.]

இனியன்—1. இனிமையுடையவன். (உ-ம்.) "இனியனுயேக தத்துவத்திலே சுழுத்தியிதய முற்றின்பமேபெறுவாய்" (ஞானவா. தாசூர. கoக.) 2. பிறரை மகிழ்விக்குமொழுக்கத்தையுடையவன்.

இனியன—1. தன்கண்உவகையை வெளிப்படுத்துவன. (உ-ம்.) "மநங்களிப்ப-வினியனவுரைகள்பயிற்றி" (பாரத. நாடுகரந்துறை. சு.)

இனியாநாற்பது— நன்மையை விவரிக்கும் நாற்பதுபாட்டுள்ள ஒருநூல்; இது பதினெண் கீழ்க்கணக்கினுளொன்று.

இனியோர்—நண்புடையோர். (உ-ம்.)"இனியோர்க்கினிமைசெய்து" (பாரத. வாரணுவத. ககரு.)

இனும்—இன்னும். (உ-ம்.) "ஆசையாயினுநித்தந்தளராதே" (திருப்பு. ருசஎ. [விகாரம்.]

இனை— 1. இன்ன. (உ-ம்.) "இனைத்துணைத்து" (வள். அஎ.) 2. இனையென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும்.

இனைகூஉ — வருந்திக் கூப்பிடுங் கூப்பீடு. (உ-ம்.) "வினைபுனைநல்லிலினைகூஉக்கேட்பவும்" (புறநா. சச.)

இனைத்தல்—1. ஒலித்தல். 2. வருத்தல்.

இனைத்து—1.இத்தன்மைத்து. (உ-ம்.)"குடிலையிற்பயனினைத்தென்றே-கட்டுரைத்திலன்" (கந்தபு.அயனைச்சிறை.கச.) 2. இவ்வளவிற்று.

இனைதரல்—மெலிதல். (உ-ம்.) "விதித்தனைழுத்தினை தரவருமொரு பொருளரு ளாயோ" (திருப்பு. உஎஎ.)

**இனைதல்**— 1. இரங்குதல். (உ-ம்.) "வான திச்சடைவேதியன்பாதத் - தினைய" (திருவி. அன்னக். அ.) 2. வருந்தல். (உ-ம்.) "சேர்தி யோவென்-றினைந்திரங்கி" (சிந்தா. நாமகள். உகரு.)

**இனைப்ப**—1.கெடுப்ப. (உ-ம்.) "வினைபுனை நல்லில்வெவ்வெரியினைப்ப" (புறநா. உரு.) 2. வருத்த. (ஐங்குறு.)

**இனைய**-1. இத்தன்மையான எனப்பொருள் படும் ஒரு குறிப்புவினைப் பெயரெச்சம். (உ-ம்.) "இனையகொள்கை" (கந்தபு. மூன்றுநாட்பாநு. கஎ.) 2. இத்தன்மையானவைகள். (உ-ம்.) "இனையகூறினனிரதி வேண்டிடுதலும்" (கந்தபு. மோன. உஅ.) 3. இதுபோல்வன. (ஐங்குறு.) 4. வருந்த எனப் பொருள்படும் ஒருவினையெச்சம்.

**இனையது**—இத்தன்மையது.(உ-ம்.)"இனையதுநோக்கி" (கந்தபு. வள். கடுஅ.)

**இனையர்**—1. இத்தன்மையர் (உ-ம்.)"இனையரிவரளவிறந்த நெடுங்கால மரசுபுரிந் திருந்தாரன்றே" (உபதேச. சூராதி. எஎ.) 2. இவர்கள். (உ-ம்.) "மேற்றிகழிலக்கத்தொன்பான் வீரர்மற்றினையரோடும்" (கந்தபு. சூரனமைச்சு. உ.)

**இனையவர்**— இவர்கள், இத்தன்மையர்.

**இனையள்**— 1. இத்தன்மையானவள். 2. இனைதலையுடையாள். (சிலப்.)

**இனையன்**—1. இத்தன்மையையுடையேன். (உ-ம்.) "இனையன்பாவனையிரும்புகன் மனஞ் செவியின்னதென் றறியேனே" (திருவாச.திருச்சதக. கஎ.) 2. இத்தன்மையையுடையவன்.

**இனையன**— 1. இத்தன்மையன.(உ-ம்.)"பாந்தளுச்சியேமத்தமென் றினையன" (கந்தபு. தவங்காண். கசு.) 2. இவைகள்.(உ-ம்.) "வலம் படுதிகிரிமாயவற்கொருபான்மருங்கு நின் றினையனவகுப்பான்" (உபதேச. சங்காதி. உரு.)

**இனையாள்**— இவள். (உ-ம்.) "இனையாளையவன் விருப்பொடுவரையுமோ" (கந்தபு. தவங்காண். கo.)

**இனையினள்**— வருந்தினள். (பாரதவெண். ருஅ.)

**இனையை**—இத்தன்மையையுடையாய்.

**இனையோன்**—இவன். (உ-ம்.) "இனையோன்-முன்னவன்" (கந்தபு. தாரகன்வதை. ரு.)

**இனைவரல்**—வருந்துதல். (உ-ம்.) "அழுத கண்ணீரோ-டினைவருதையல்" (பாரத. கீசகன்வதை. சசு.)

**இனைவு**—துன்பப்படுதல். (உ-ம்.) "மன்னன்றேவிபா-லினைவுடனெய்தி" (பாரத. கீசக. ருஅ.)

**இனைவை**— வருந்துவாய். முன்னிலைவினைமுற்று.)





ஈ

ஈ— [ இது: தமிழ்ப்பாஷையின் வர்ணமாலையிலுள்ள உயிர்வருக்கத்தில் வரும் நான்காமெழுத்து; இஃது: அங்காப்போடு மேற்பல்லையடிநாவின் விளிம்பு பொருந்தப்பிறக்குமொரு நெடில். நன். எழுத்தி. உஉ. ]

1. அம்பு.
2. அரைநாண்.
3. இந்திரவில்.
4. இலக்குமி.
5. (கொடுந்தமிழில்) இலையான் என வழங்குமொரு சிறுபறவை. (உ-ம்.) "ஈயிருக்குமிடமெனினும்" (பாரத. கிருட்டிண. கக௪.)
6. ஈயென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும்.
7. ஒரு முன்னிலையசைச்சொல். (உ-ம்.) "சென்றீபெரும" (நன். இடையிய. உக. இராமாநுஜ.)
8. குகை.
9. கொசுகு.
10. சரசுவதி.
11. தாமரையிதழ்.
12. தேன்வண்டு. ( உ-ம். ) "ஈவிளையாடநறவிளைவோர்ந்து" (திருக்கோ. கருரு.)
13. தேனீ. (ஐங்குறு.)
14. நரி. (இராசவைத்.)
15. பாம்பு.
16. பார்வதி.
17. முன்னிலையசைச்சொல். (உ-ம்.) "நன்றீபெரும"
18. வண்டு.

ஈக்க—தருக. (சிலப். அரும்பத.)

ஈக்கை—புலிதொடக்கி.

ஈக — இக என்பதன் விகாரமாய்வந்த ஒரு முன்னிலையசை. ( உ-ம். ) "என்-போரியானை வந்தீகவீங்கு" (கலி. அசு.)

ஈகம் — 1. இச்சை. (அமர.) [ ஈஹா. ] 2. சந்தநம். (இரேவணாராத்.)

ஈகுதல்—கொடுத்தல். (உ-ம்.) "ஆயாவமுதமீகுதலானும்" (கல்லாட. உ0.)

ஈகை—1. இண்டங்கொடி. (சூ.நிகண். கக. கசரவெ. கஞ.) 2. கற்பகமரம். 3. கொடை. (உ-ம்.) "திருமலியீகைபோகம்" (சிந்தா. குண. ருகரு.) 4. பொன். (உ-ம்.) "அணிநகையிடைவிட்டவீகையங்கண்ணிபோல்" ( கலி. ருஉ. ) 5. மேகம்.

ஈகையறியவிழை — மங்கலிய சூத்திரம். (புறநா.)

ஈகையன்—கொடையாளன்.

ஈகையாளன்—கொடையாளன். (சூ.நிகண். உ: ச௮.)

ஈங்கண்—இவ்விடம். (உ-ம்.) "ஈங்கணின்று நீதிரும்பினையேகுதியென்றான்" ( சேதுபு. காசிப. ருக.)

ஈங்கம்—சந்தநம்.

ஈங்கனம் — இவ்விடம். (உ-ம்.) "ஈங்கனமதுகண்ணினெய்தியகுமரன்" (கந்தபு. திருவிளை. கசு.)

ஈங்கிசை—1. கொலை. 2. தீங்கு. 3. வசை. (உ-ம்.) "ஈங்கிசையுற்ற வலக்குணமட்டைகள்" ( திருப்பு. உகரு. ) [ ஹிம்ஸா என்னும் வடமொழி ஈங்கிசை என விகாரமாயிற்று.] 4. வருத்தம். [ ஹிம்ஸா. ]

ஈங்கிஷை—ஈங்கிசை.

ஈங்கு — 1. இண்டங்கொடி. 2. இவ்விடம். ( உ-ம். ) "ஈங்குநம்மானுள்வருமேல்" (சிலப். ஆய்ச்சி.க.) 3. உவமவுருபு. (சிந்தா.) 4. என்னிடம். (சிந்தா.) 5. சந்தநம்.

ஈங்கை—1. இண்டங்கொடி. (உ-ம்.) "வெண்கொடியீங்கைப்பைம்புதலணியும்" (ஐங்குறு. சஙுக.) [இதற்குச் சில வைத்தியஅகராதிகாரர் உப்பிலிக்கொடிஎன்னும்பொருளுங்கொள்வர்.] 2. இண்டம்பூ. (குறிஞ்சிப்.)

ஈங்கைத்துவக்கு—ஒருமரப்பட்டை (தைல. தைலவ. அரும்பத.)

ஈங்கைப்புதல் — ஒருவகைப்புதல். (ஐங்குறு.)

ஈச்சத்தோல்—ஈயினெச்சம்பிடித்த தோல். [ஈயெச்சம் என்பது ஈச்ச என விகாரமாயிற்று.]

ஈச்சப்பி—உலோபி. [வழக்.]

ஈச்சிதகருமம் — கருத்தன்வழிச்செயப்படுபொருள். (உ-ம்.) "சோற்றையுண்டான்" என்பதிற்போல. (பி.வி. காரக. கஉ.) [ஈச்சிதம்-விரும்பப்பட்டது. கருமம்-செயப்படுபொருள்.]

ஈச்சிதம்—விரும்பப்பட்டது. [ ஈஷ்ஸிதம். ]

ஈச்சிதாநீச்சிதகர்மம்—விரும்பியும் விரும்பாமலுஞ் செய்யப்படும் செயப்படுபொருள். (உ-ம்.)"தூளியோடு பாற்சோற்றையுண்டான்" என்பதிற்போல. [இதில் பாற்சோறு விரும்பப்பட்டதும்,தூளி விரும்பப்படாததுமாம். ஈச்சித-விரும்பப்பட்ட. அநீச்சித - விரும்பப்படாத. கர்மம்-செயப்படுபொருள்.]

ஈச்சு—ஈச்சமரம்.

ஈச்சுக்கோட்டல்—சிழ்க்கைவிடுதல்.

ஈச்சுர— வியாழவட்டமாகிய அறுபது வரு

டத்துள்ளே பதினொராம் வருடம். (சோதிட கடல்.)

**ஈச்சுரதிரயாதிட்டாத்துரு** — (வேதாந்தம்.) பிரமம். (த. நி. போ. ௧௧௧.) [ஈச்சுரர் மூவரையும் அதிட்டித்துநிற்பவரென்றபடி.]

**ஈச்சுரம்** — ஈசுரதத்துவம்; அது : ஞானங்குறைந்து கிரியையுயர்ந்தது.

**ஈச்சுரமூலி**—பெருமருந்துக்கொடி.

**ஈச்சுரன்** — 1. ஈசுவரன். 2. மகதத்துவம். (உ-ம்.) "அனையானன்மகதத்துவத்தினைப் புத்திமகான்மதிபிரக்கியையான்மா - வனைதருங்காதி மேதையீச்சுரனென்றுரைப்பர்" (கூர்மபு. பிரகிரு. அ.)

**ஈச்சுரன்பஞ்சகிருத்தியம்**—ஈச்சுரனுடைய ஐந்தொழில்கள். அவை: சிருட்டி, திதி, சங்காரம், திரோபவம், அநுக்கிரகம் என்பன. (த. நி. போ. ௧௧௦.)

**ஈச்சுரன்பிரபுத்துவ சாமர்த்தியகுணத்திரயம்**— ஈச்சுரனது பிரபுத்துவ சாமர்த்தியமான மூன்றுகுணங்கள். அவை : கர்த்திருத்துவம், அகர்த்திருத்துவம், அந்நியதாகர்த்திருத்துவம் என்பன. (த. நி. போ. ௧௧௦.)

**ஈச்சுரன்முக்கியகுணம்** — ஈச்சுரனுடைய பிரதான குணங்கள். அவை: சர்வஞ்ஞத்துவம், சர்வேச்சுரத்துவம், சர்வநியந்திருத்துவம்,சர்வாந்தரியாமித்துவம், சர்வ கர்த்திருத்துவம், சர்வ சத்தித்துவம் என்பன. (த. நி. போ. ௧௧௦.)

**ஈச்சுவரன்** — 1. இராகதத்துவத்திருக்கும் பன்னிரண்டு ருத்திரர்களிலொருவன்.(வி-ணி) 2. ஐம்பத்தோர் உருத்திரர்களிலொருவன். (வி-ணி.) 3. கடவுள். 4. தலைவன். 5. வித்தியாதத்துவத்திலிருக்கும் ஓர் உருத்திரன். (வி-ணி.)

**ஈச்சுவரை**—பார்ப்பதி.

**ஈச்சோப்பி**—1. ஈப்பிணி. 2. ஈயோட்டி.

**ஈச** — இருநூற்றிருபத்துநான்கு புவனங்களினொன்று. (கந்தபு. கண. ௧௦. உரை.)

**ஈசசகன்**—குபேரன். [ஈஶ-சிவன்.ஸவ-நண்பன்.]

**ஈசசகி**— குபேரன். [ஈஶஸவி; ஈஶ-சிவன். [ஸவி-நண்பன்.]

**ஈசத்துவசித்தியோகம்**.— அட்டமாசித்தியோகத்துள் ஒன்று. அது: கண்ணிலுள்ள அநலவாயுவாலே வாங்கி மேருத் துளைவழியாகச் சிரசிலேற்றி ஏழாண்டுநோக்கி எல்லாருக்கும் பாபங்களைப்போக்கி எல்லாச் சீவனிலும் ஏகமாய்க்கலந்துநிற்றல். (த. நி. போ. ௬௭௨.)

**ஈசத்துவம்** — அட்டசித்திகளுளொன்று. அது: பிரமாமுதலிய சகலரிடத்துந் தன்னுடைய ஆணையைச் செலுத்துகை. (சி. சி. உ: ருஅ. சிவாக்.) (உ-ம்.) "ஈசனெனமுத்தொழிலுந்தனிச்சைவழிசெய்தெழுபுரவித் - தேசன்முதல் கோள்பணி கேட்பத் திகழ்வ தீசத்துவமாகும்" (திருவிளை. அட்டமா. உ௭.) [ஈஶத்வ.]

**ஈசதிசை**—வடகிழக்குத்திசை. (உ-ம்.)"ஈசாநமுச்சிமுகமீசதிசை நோக்கியுறும்" (சைவச. பொது. ௬௬அ.)

**ஈசதேசாந்தி**—பெருமருந்துக்கொடி.

**ஈசர்**—1. அதிகாரியாகிய சிவன். (சி. சி. க: ௬௫. மறை.) 2. சதாசிவதத்துவத்திலிருக்கும் அணுசதாசிவர்பதின்மருள் ஒருவர். (சி. சி. அ: உ. மறை.) 3. தேவர். (உ-ம்.) "ஈசர்தம்மின்மகேச்சுரனீ" (கூர்மபு. திருக்கல். ௬௫.)

**ஈசல்**—1. சிறகுமுளைத்தகரையான்.(கந்தபு. மோகநீங்கு. உ. உரை.) 2. சீழ்க்கை.

**ஈசன்**—1. அரசன். 2. ஆளுபவன். 3. உருத்திரமூர்த்தி. (உ-ம்.) "ஈசத்துவம்" பார். 4. எப்பொருட்குமிறைவன். (சூ. நிகண். உ: ௧௦.) 5. கடவுள். 6. கணவன். 7. குரு. 8. கௌரிபாஷாணம். 9.சிவன்.(உ-ம்.)"அதிர்கழலீசனொடம்மையிருந்தாங்கு" (கந்தபு. தெய்வ. உ௬௭.) 10. பிரமா. 11. மகேசுரன். (சி. சி. க: ௬௫. இராமலி.) 12. (வேதாந்தம்) மாயையிலே பிரதிபலித்தபிரமம். (உ-ம்.) "மாயையிலேதோய்ந்தாவீசன்" (உபநிட. கரு.) மாயையாகிய காரண சரீரத்தையும், விராட்டாகியதூலசரீரத்தையும், இரணிய கருப்பமாகிய சூக்கும சரீரத்தையுமுடைய, மாயையிற் பிரதிபலித்தபிரமம். (உ-ம்.) "ஈசனுக்குத்தூலவுடல் பூதபௌதிகமே-யீசனுக்குச் சூக்கவுடலிருவகைச்சூக்குமமே - யீசனுக்குக் காரணமாமுடன் மாயை யவனே யீசன்" (உபநிட. உ௦.) 13. மூத்தோன். (சூ. நிகண். உ: க.) 14. மூவகைப் பச்சைக் கருப்பூரத்துள் ஒன்று; அது: வெளுப்புங் காரமுந் தளதளப்புமுள்ளது. இது: வசியத்துக்குரிய ஒரு மருந்தென்பர். (உ-ம்.) "ஈசனெனும்பூரம் வெண்மையென்றறிவாய்" (பதார்த்தகுண.௧௧௬௦.)15.வடகீழ்த்திசைப்பாலகன். 16. விட்டுணு. [ஈஶ.]

**ஈசன்மைந்தன்**—1. முருகன். 2. விநாயகன். 3. வீரபத்திரன்.[ஈஶ-சிவ. மைந்தன்-பிள்ளை.]

**ஈசன்யோகம்**—சாலம்பசிவயோகம். (சி. சி. அ. உரு. ஞானப்.)

**ஈசன்றூர்** — 1. கொன்றைமரம். 2. கொன்றைமாலை.

**ஈசனுரணி**—கொன்றை. (தைல. தைலவ. க௬௫.)

ஈசனுள்—திருவாதிரை.

ஈசாந்நியம்—ஈசாநம். [ஐசாந்ய.]

ஈசாந்நியன் — 1. சிவன். 2. வடகிழக்குத் திசைப்பாலன்.

ஈசாந—1. இருநூற்றிருபத்துநான்கு புவநங்களிலொன்று. (கந்தபு. கண. கo. உரை.)

ஈசாநகலை—முப்பத்தெட்டுக்கலைகளுள் ஈசாநமுகத்துக்குரிய ஐந்துகலைகள். (த. நி. போ. ௯oக.) அவை: சசிநி, அங்கதை, பிரமேட்டை, மரீசி, சுவாலிநி என்பன. (அகோ.கிரி. உசரு.) இவற்றை நியசிக்குந்தாநம் முறையே ஊர்த்துவம், பூர்வம், தக்ஷிணம், உத்தரம், பச்சிமம் என்னுமூர்த்திநிகளாம்.

ஈசாநகற்பம்— ஒரு கற்பம். (உ-ம்.) "ஆசின்றுயர்ந்த கற்பத்தினருளீசாநகற்பநீ" (கூர்மபு. திருக்கல். ௬௫.)

ஈசாநதிக்கு— வடகிழக்கு. (உ-ம்.) "இருந்திசைகளோரெட்டுங் குண்டமமைத்தீசாநதிக்கும்" (கூர்மபு. தாந. ச.)

ஈசாநப்பிரமம்— சதாசிவமூர்த்தி. இவர்: புருடன், சோத்திரம், வாக்கு, சத்தம், ஆகாயம் இவற்றிற்கதிட்டாநதேவதை. (கூர்மபு.பிரகிரு. க. உரை.)

ஈசாநம்—1. சதாசிவமூர்த்தியுடைய ஐந்துமுகங்களுள் ஒன்று. (உ-ம்.) "ஈசாநந்தன்னிற்புரோற்கீதமாதியெட்டும்" (சைவச. பொது. ௬௬௫.) 2. சாந்தியதீதகலையில் வியாபித்திருக்கும் மூன்றுமந்திரங்களுள் ஒன்று. (சி. சி. அ: க. மறை.) 3. பதினொருமந்திரங்களுளொன்று. (சி. சி. அ: க. மறை.) 4. வடகிழக்குத் திசை.

ஈசாநமேரு—கைலாசமலை.

ஈசாநர்—1.கலாதத்துவத்திலிருக்கும் ஓர் உருத்திரர். (வி-ணி. உஎ௫.) 2. வடகீழ்த்திசைப் பாலகன். (உ-ம்.) "ஆசை-யீறுசேர்தருமீசாநரிருந்தனர்" (கந்தபு. ததீசி. உஅ.)

ஈசாநன்— 1. ஆஞ்ஞாபிக்குஞ் சத்தியுடையவராய்ச் சர்வலோகத்துக்கும் மேலாயிருப்பவர். (சி. சி. க: ருக. சிவாக்.) 2. ஓர் உருத்திரன். இவன்: மகேசுரனுடைய அழுகையில் உதித்த எழுவரிலொருவன்.[ஐசுவரியமுடையவன் என்றபடி.] 3. கடவுள். 4. சிவசூரியன். 5. சிவன். 6. வடகீழ்த்திசைப் பாலன். (உ-ம்.) "உலவைவேந்தனீசாந - னிருதி" (கூர்மபு. தக்கன்வே. ௬௬.) [ஈச-ஆளுதல். சூ ந-ஒருவிகுதி.]

ஈசாநி — 1. சிவனுடைய கிரியாசத்தியின் புற உருப் பஞ்சசத்திகளிலொன்று. (சி. சி. க: ருக. ஞாந.) 2. பார்ப்பதி.

ஈசாநியம்—ஈசாநம்.

ஈசாநியன்—ஈசாநன்.

ஈசாவாசியம்-- யசுர்வேத உபநிடதத்தொன்று. (கூர்மபு. அட்டமூர். உசு. உரை.)

ஈசாவாயோபநிடதம்-உபநிடதத்தொன்று.

ஈசி—பார்வதி.

ஈசிதை—அட்டசித்திகளுள் ஒன்றாகிய ஈசத்துவம். (பௌட். பும். கoஉஇ.) [ஈஶிதா.]

ஈசுரதத்துவம்— சுத்தமாயையிற்றோன்றிய ஐந்துதத்துவங்களுளொன்று. அது: மகேசுவரனுக்கு அதிட்டேயத்தாநமாகியும், கிரியை ஏறி ஞாநங்குறைந்த அவதரமாகியும் இருக்கும். (சி. சி. க: சுரு, சுசு. சிவாக்.) [ஈஶ்வர-தத்வம்.]

ஈசுரம்—ஈசுரத்துவம்.

ஈசுரமூலி—1.ஈச்சுரமூலி. 2.தராசுக்கொடி. 3. பெருங்கிழங்கு. 4. பெருமருந்துக்கொடி.

ஈசுரவிந்து—பாதரசம்.

ஈசுரவேர்—பெருமருந்துக்கொடி.

ஈசுரன்—1. அநந்தேசுரன். (உ-ம்.) "ஈசுரனெனு மநந்தேசுரனுக்கும் சுத்தமாயையிற்றிரோதாநகிர்த்தியம் நடவாதிருந்தாலும், அசுத்தமாயாகிர்த்தியம் அஞ்சும் நடந்தாலும், திரோதாநகிர்த்தியம்பிரதானம்" (சி. சி. க: சுo. ஞாநப்.) 2. கடவுள். 3. சிவன்.

ஈசுவரசத்தித்திரயம் — செநநி, ஆரிணி, ரோதயித்திரி என்னும் மூன்று சத்திகள். (சி. சி. உ: ருச. சிவாக்.)

ஈசுவரசரீரத்திரயம்—ஈசுவரனுடைய மூன்றுசரீரங்கள். அவை: விராட்டுவாகிய தூலசரீரமும், இரணிய கர்ப்பமாகிய சூக்கும சரீரமும், அவ்வியாகிருதமாகிய காரண சரீரமுமாம். (நாநா. கட், கரு.)

ஈசுவரசாட்சி — பிரமசைதந்நியம். (உபநி. உo.)

ஈசுவரந்திரயம்—(வேதாந்தம்) விராட்புருடன், இரணியகர்ப்பன், அந்தரியாமி என்னும் மூவர். (த. நி. போ. கoக.)

ஈசுவரத்துவம்—ஈசுவரனுயிருக்குந்தன்மை. (வாசுதே. சசு.)

ஈசுவரத்துவைதம் — ஈசுவரவிராட்டு சரீரமாகிய இந்த அண்டபேதங்களெல்லாந்தானெனல். (உபநி. ௬க.)

ஈசுவரதத்துவம்—சாந்திகலையிலிருக்கும் மூன்றுதத்துவங்களுளொன்று. அது. ஈசுவரனலதிட்டிக்கப்படுந்தத்துவம். கிரியாசத்தி சம்பந்தத்தினலே மந்திரேசுவரரான அநந்தாதிகளோடு கூடியதத்துவம். (சி. சி. அ: அ. மறை; சி-வி. ஞாந. க உரை.)

ஈசுவரதரு—கடப்பமரம்.

ஈசுவரதிநம்—உருத்திராயுக்காலம் இரண்டு கூடினகாலம். (சைவப். ௫௧.)

ஈசுவரநிடேதம்— கடவுள் இல்லையெனல். [ஈஶ்வர-நிஷேதம்; ஈஶ்வர-கடவுள். நிஷேதம்-விலக்கு.]

ஈசுவரம்—சுத்தமாயையின் ஐந்துதத்துவங்களுள் ஒன்று. அது: சாதாக்கிய தத்துவத்திற்குக் கீழிருப்பது. (பௌட்-பதி. ௫0.)

ஈசுவரமூர்த்தி— பரமசிவனுடைய ஒன்பது திருமேனிகளுள் ஒன்று. அது: சதாசிவமூர்த்தியிற் பத்திலொன்றிலே தோன்றின ஓர் உருவத்திருமேனி. (சி. சி. உ: எ௪. மறை.)

ஈசுவரவருடம் — ஈசுவரதிநம் மூந்நூற்றறுபது கூடினகாலம். (சைவப். ௫௧.)

ஈசுவரவவிகாரவாதி—அவிகாரவாதி. (சிவப்பி. வியாக். பக். ௬௪. பொது. எ. உரை.)

ஈசுவரவுபாதி — ஈசுவரனுடைய விசேடகுணங்கள். அவை: சர்வஞ்ஞத்துவம், சர்வகாரணத்துவம், சர்வேந்திரியாமித்துவம், சர்வேசுரத்துவம், சர்வசிருட்டித்துவம், சர்வஸ்திதித்துவம், சர்வசங்காரத்துவம் என்பன. (உபதேசவு. ௫எ.)

ஈசுவரன் — 1. அதிகாரசிவன். (பௌட். பதி. உ௬.) 2. உடையவன். 3. கடவுள். 4.(சித்தாந்தம்) கிரியையேறி ஞாநங்குறைந்த அவதரமாகிய ஈசுவரதத்துவத்திலே அநுப்பிரவிட்டனாயிருக்கும் மூர்த்தி. (சி. சி. க: ௬௫, ௬௬. சிவாக்.) 5. சர்வகர்த்திருத்துவசமர்த்தர். (பௌட். ப௬. க௫எ.) 6. (வேதாந்தம்) மாயையிற் பிரதிபலித்த பிரமம். (உபநி. க௫. "ஈசன்" பார்.) [ஈஶ்வர: ஈஶ-ஆளுதல். வர-ஒரு விகுதி.]

ஈசுவரன்சூக்குமசரீரம்— இரணியகருப்பம் (நாநா. கட். க௫.)

ஈசுவரன்தூலசரீரம் — விராட்டு. (நாநா. கட். க௪, க௫.)

ஈசுவராயுக்காலம்—ஈசுவரவருடம் பரார்த்தங்கூடினகாலம். (சைவப். ௫௧.)

ஈசுவராவிகாரவாதி — அவிகாரவாதி. (சி. சி. கக: க. சிவாக்.)

ஈசுவரி— உமதேவி. [ஈஶ்வரீ.]

ஈசுவரிநாதம்— } கெந்தகம்.
ஈசுவரிபிந்து— }

ஈசுவரீயம் — ஈசுவரனுடையது. (சைவப். உ௪.)

ஈசுவரைக்கியவாதி—நீரும் நீருஞ்சேர்ந்தாற்போல ஆன்மாவுஞ் சிவனும் முத்தியில் இரண்டறக் கலந்திருக்கும் என்னும் மதஸ்தன். (சி. சி. கக: க. சிவாக்.) இவன் ஆணவமலம் இல்லையென்றும், மாயாகன்மங்களே யுள்ளனவென்றும், சுத்தராயுள்ள ஆன்மாக்கள் செய்தபுண்ணியபாவங்களுக்கீடாகக்கர்த்தா உடம்புமுதலாயினவற்றைக் கொடுக்க அதனாலே சநநமரணப்பட்டுக் கன்மவொப்புவந்து, ஆன்மா, பண்டுபோலச்சுத்தனும் என்றுஞ்சொல்வன்.

ஈசேல்—சிறகுக்கறையான்.

ஈசை—1. உமாதேவி. [ஈஶா.] 2. கலப்பையினேர்க்கால். [ஈஷா.]

ஈஞ்சு — ஈச்சமரம். (உ-ம்.) "இலவஞாழலு மீஞ்சொடுசுரபுன்னை" (தேவார. திருமாந்துறை. ௪. திருஞாந.)

ஈஞ்சை— 1. கொலை. 2. தீங்கு. 3. நிந்தை. [ஹிம்ஸா.]

ஈட்சணம்— 1. கண். 2. பார்வை. [ஈக்ஷணம்: ஈக்ஷ-பார்த்தல். அண-ஒருவிகுதி.]

ஈட்டடிமை— தநிகனிடத்திலீடாகவைக்கப்பட்டவன். (மிரு. ௪. க௬௬.)

ஈட்டம்— 1. கூட்டம். (உ-ம்.) "புனல்குடைமகளிரீட்டம்" (நைட. நாட். கஉ.) 2. சம்பாதித்தல். (உ-ம்.) "ஈட்டமிவறி" (வள். கப௰௬) [இதனைவணிகரெண்குணத்துளொன்றென்ப.] 3. திரள். 4. தேட்டம். 5. மிகுதி. (உ-ம்.) "இங்கு மாநுடரியற்றும் புண்ணியத்தின்பவீட்டம்" (சி. சி. உ: ௪க.) 6. வலிமை. (உ-ம்.) "புரார்காதல-னீட்டமொடொருகணையேவி" (கந்தபு. தாரகன்வதை. க௪௬.)

ஈட்டல்— 1. சம்பாதித்தல், திரட்டுதல் (உ-ம்.) "இயற்றலுமீட்டலும்" (வள். ௬௩௫). [ஈட்டு, ஈண்டு என்பதன் பிறவினை.] 2. செய்தல். (உ-ம்.) "ஈட்டியமாயைகளெவையும்" (கந்தபு. தாரகன்வதை. க௬௬.) 3. தொகுதி. 4. வணிகரெண்குணத்தொன்று.

ஈட்டி—வேலின் ஆகிருதியாகச்செய்யப்பட்டுக்குற்றுதற்குப்பிரயோகிக்கும் ஓராயுதம்.(உ-ம்.) "குறியவீட்டிகொடுகுற்றுவர்" (கந்தபு. இரண்டாம். ௬௪க.)

ஈட்டியது—1. சஞ்சிதவினை. 2. தேடியது

ஈட்டு—1. ஈட்டுதல். (உ-ம்.) "ஈட்டுறுபவம்" (கந்தபு. காமத. அ.) 2. ஈட்டென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். (உ-ம்.) "ஈட்டுசேனையமைச்சுளாபிறரியாருமின்றி" (திருவிளை. விடையி. அ.

ஈட்டுக்கீடு—சரிக்குச்சரி.

ஈட்டுதல்— ஈட்டல். (உ-ம்.) "இன்னறரு ம்பொருளையீட்டுதலுந்துன்பமே" (நீதிவெண்பா. ௪௬)

ஈட்டுப்பத்திரம் — ஒருவன் அசைவுள்ள பொருளையேனும், அசைவில்லாதபொருளையேனும், தநிகனிடம் ஈடாகவைத்து எழுதிக்கொடுக்கும் பத்திரம். (மிரு. ச. ௩௩.)

ஈட்டுமம்— வசந்தகாலம். [க்ஷீஷ்மா.]

ஈட்டுமன் — மன்மதன். [க்ஷீஷ்ம - வசந்தகாலமுடையவன் என்றபடி.]

ஈடணம்—புகழ்தல். [ஈஷண.]

ஈடணை—விருப்பம்.

ஈடணைத்திரயம்—ஆசைமூன்று. அவை: அர்த்தேடணை, புத்திரேடணை, உலகேடணை. (வி. ணி. ௨௨௪.)

ஈடணை—விருப்பம், ஆசை.

ஈடத்து — அற்பம். (பௌட். பசு. ௧௧௭. உரை.) [ரஷிக.]

ஈடம்— 1. இடம் என்பதன் விகாரமொழி. (உ-ம்.) "நஞ்சுண்டிருள்கண்டத் தீடமாவது" (தேவார. திருஞாந. திருக்கேதீ. உ.) 2. ஐப்பசிமாதம். [ஈஷா.]

ஈடழித்தல்-வலிமையைக்கெடுத்தல். (உ-ம்.) "ஒருகரியீடழித்துரித்தனை" (தேவார. திருவெழுகூற்றிருக்கை. ௧௩-வரி. திருஞாந.)

ஈடழிதல்—ஈடழிவு.

ஈடழிவு—1. பெருமைகெடல், சீர்கெடல். (உ-ம்.) "இரவியைக்கண்ட மின்மினிக் குலம் போலீடழிந்திடவுடன்று" (பாரத. பதினன்கு. ௧௧.) [ஈடு-பெருமை.] 2. வலிகெடுகை. (உ-ம்.) "ஈடழிதல்" பார்.

ஈடறல் — வலிகெடுதல். (உ-ம்.) "இந்த வெம்பகழிக்கெல்லா மீடறு ளிவனென்றெண்ணி" (பாரத. நிரைமீட்சி. ௩௫.)

ஈடன்—1. பணக்காரன். 2. பெருமையுடையோன். 3. வலியுடையோன். [ஈடு-பெருமை, வலி. அன்-ஒருவிகுதி.]

ஈடாட்டம் — 1. இறுக்கங்குறைந்தசைதல். 2.கொடுக்கல்வாங்கல். 3.தளதளப்பு. 4.திராணி 5. விசாலம்.

ஈடாடல் — 1. இறுக்கங் குறைந்தசைதல். 2. உழலல். 3. நேர்நிற்றல்.

ஈடாடுதல்—ஈடாடல்.

ஈடாதண்டம்—ஏர்க்கால். (உ-ம்.) "நகைபெறுமீடாதண்டம்" (மச்சபு. சூரியரத. ௨௧.) [ஈஷாதண்ட.]

ஈடிகை—1. அம்பு. 2. ஆயுதம். 3. சித்திரமெழுதுங்கோல். [ஈஷிகா.]

ஈடிதம்—துதிக்கப்பட்டது. [ஈடித.]

ஈடு—1. அடகு. 2. ஒப்பு. (உ-ம்.) "இறத்த விற்றுறத்தலீடலவால்" (வை. நீ. ௨௫.) 3. ஒரு மருந்து. 4. குழைவு. 5. கைம்மாறு. 6. தகுதி. 7. நேராகுகை. 8. பதில். 9. பெருமை. (உ-ம்.) "ஈடுறுபிலங்கட்கெல்லாமிறைவராய்ப் பாதுகாப்போர்" (கந்தபு.அண்ட.௧௮.) 10. பேறு.(உ-ம்.) "தங்கன்மத்துக்கீடாப் பெற்றதனிலாசைதனைப்பெருகுவிக்கும்" (சிவப்பிர.௨:௨௨.) 11. வலி. (பிங்கல. ௧௯௪௧.) (உ-ம்.) "யானோ-வீட்டொடு துரந்தேன்கொல்" (கந்தபு. காவிரிநீ. ௪௩.) 12. வருத்தம். (சிந்தா.)

ஈடுகட்டல்—1. ஈடுசெய்தல். 2. பிணைகொடுத்தல்.

ஈடுகொடுத்தல்—1. எதிர்நிற்றல். 2. நிகராதல். 3. பதிலளித்தல்.

ஈடுசெலுத்தல் — 1. ஈடுகட்டல். 2. பதிலளித்தல்.

ஈடுபடல்—தாக்கமடைதல். (உ-ம்.) "அப்பர் ......அந்த வருத்தங்களால் ஈடுபட்டதில்லை" (சிவப்பிர. வியாக். உண்மை. ௪0. உரை. பக். ௩௭0.)

ஈடுபாடு — 1. ஈட்டுக்கமைந்திருத்தல். 2. ஒப்பு. 3. சாரவைத்தல். (தாயு. ஆகாரபுவந. ௨: உரை.) 4. நயநஷ்டம். 5. பெருந்துன்பம். (உ-ம்.) "ஈடுபாடித்தனையும்பட்டு" (அரிச்ச. மயாந. ௩௪.)

ஈடேற்றம் — 1. இரட்சிப்பு. 2. உய்வு. 3. ஈடேறச்செய்கை. 4. மீட்பு.

ஈடேற்றல்—ஈடேறச்செய்தல்.

ஈடேறல்—ஈடேறுதல்.

ஈடேறுதல் — 1. அநுகூலமுடையதாதல். 2. உய்யப்பெறுதல். 3. வாழ்வடைதல். (உ-ம்.) "என்னைநீயீடேற்றத்-திருவுளத்தருள்செய்குக வென்" (பாரத. நச்சு. ௫.)

ஈடை—1. ஏர்க்கால். 2. புகழ்ச்சி.

ஈண்டல்—1. கூடுதல். (உ-ம்.) "அமண்கையர்பலரீண்டி" (பெரியபு. திருநாவு. ௫௨.) 2. நிறைதல். 3. நெருங்குதல். (உ-ம்.) "வண்சுண்ணப்-புழுதியீண்டலின் வறப்பவான்கங்கையும் புலர." (கந்தபு. நகர்பு. ௫௫.)

ஈண்டிய — திரண்ட. (உ-ம்.) "ஈண்டியமழையென" (புறநா. ௧௭.)

ஈண்டு — 1. இவ்வண்ணம். 2. இவ்விடம். (உ-ம்.) "ஈண்டு வைகுது மென்றவண் வைகினன்" (கந்தபு.இரணியன்யு.௧௩௧.) 3.ஈண்டெ

ன்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 4. புலிதொடக்கிச்செடி. [இப்பொருட்கு இண்டு எனவுங்கொள்வர்.] 5. விரைவு. (சூ. நிகண். ௧: ௯௧.)

**ஈண்டுசெலல்** — ஓங்கிச்செல்லல். (உ-ம்.) "ஈண்டுசெலன்மரபின்" (புறநா. ௨௫.)

**ஈண்டுதல்** — 1. கூடுதல். (உ-ம்.) "பல்லாண்டுமீண்டிப்பழுதாய்க்" (ப-மொ. ஈகை. ௧.) 2. நிறைதல். (உ-ம்.) "உப்பீண்டுவரி" (நாலடி.) 3. நெருங்குதல், செறிதல். (உ-ம்.) "இமிழ்கடல்வளை இயவீண்டகன்கிடக்கை" (புறநா. ௧௯.) 4. விரைதல். (உ-ம்.) "ஈண்டுசெலற்கொண்மோ" (புறநா. ௧௯௧.)

**ஈண்டுநீர்** — கடல். (நாலடி. பழவி. ௧.) [நிறைந்தநீருடையதென்றபடி.]

**ஈண்டை** — இவ்விடம். (உ-ம்.) "ஈண்டைமாநிதியாவுநல்குகோ" (கந்தபு. தெய்வ. ௫௫.)

**ஈண்டையான்** — இவ்விடத்தான்.

**ஈணவள்** — ஈன்றவள். (உ-ம்.) "செகத்தையீணவள்பச்சைநிறத்தியை" (திருப்பு. ௨௫௧.) [மரூஉ.]

**ஈணை** — அகணி.

**ஈத்தல்** — கொடுத்தல். (உ-ம்.) "துள்ளியின்புனலீத்திட்டாலும்" (சூத. ஞாந. ௮: ௧௩.)

**ஈத்தை** — தருவாய் எனப்பொருள்படும் ஒரு முன்னிலைவினை. (கலி. அசு.) [ஈ; இத்தை, இதில் இகரங் குறைந்துநின்றது.]

**ஈத்வரி** — வியபிசாரி.

**ஈதல்** — கொடுத்தல். (உ-ம்.) "இலனென்னுமெவ்வமுரையாமையீதல்" (வள். ௨௨௩.) 2. சொரிதல். 3. படிப்பித்தல். (உ-ம்.) "ஈதலியல்பேயியம்புங்காலை" (நன். பொதுப். ௩௬.)

**ஈதி** — 1. அதிகமழை, மழையின்மை, எலி, விட்டில், கிளி, அரசன்மை என்னும் ஆறினுலும் நாட்டுக்கு வருங்கேடு. (உ-ம்.) "ஈதியாதெனநிலந்தலையெடுத்திடச்சிறுகா - வீதிவாதையுங்கையகன்றனவெனில்" (இரகு. தசரத. ௬.) 2. ஒருவரோடொருவர் பொருதல். 3. குட்டி. 4. கொடுத்தி எனப்பொருள்பட்டு இரப்புரையாய் வரும் ஓரேவல்வினை. 5. பரதேசப்பிரயாணம், பரதேச சஞ்சாரம். [2, 5. **ஈதி.**]

**ஈது** — இது. (உ-ம்.) "அந்தோவீததிசயமா" (தாயு. ஆகார. ௧௧.) [இது என்பதில் இகரம் நீண்டுவந்த விகாரம்.]

**ஈந்தி** — ஈச்சமரம்.

**ஈந்து** — 1. ஈச்சமரம். (உ-ம்.) "ஈந்தின் சிலம்பி பொதிபைங்காய்" (யா. காரிகை. ௨று. எ. உரை.) 2. பேரீச்சு. (தைல. தைலவ. ௧௩௫.)

**ஈநசாதி** — இழிந்தசாதி, விலக்கப்பட்டசாதி. [**ஹீநஜாதி.**]

**ஈநதை** — குறைவுத்தன்மை. (உ-ம்.) "உற்சாகவீநதை" (சி.சி. ௨: ௫௭. சிவாக்.) [**ஹீநதா**: **ஹீந**-குறைவு. **தா**-தன்மை.]

**ஈநம்** — 1. அழிவு. 2. இல்லாதது. 3. இழிவு. (உ-ம்.) "ஈநமாயில்லிருந்து" (நாலடி-தாளா. அ.) 4. குறைபாடு. 5. சிதைந்தது. 6. விடப்பட்டது. (உ-ம்.) "தானமேற்றல்புலான்மதுக்கொடன்மையிரண்டாந்தரம்புசித்த - வீனமென்று கடிந்தாஞய்" (சூத. ஞாந. ௫. ௫.) [**ஹீந.**]

**ஈநன்** — 1. இல்லாதவன். 2. இழிவுள்ளவன். (உ-ம்.) "ஈநனு மொருவன் சொல்வ" (திருவாத. திருப்பெருந். ௧௩௩.) 3. குறைவுள்ளவன். 4. விடப்பட்டவன். [**ஹீநஃ.**]

**ஈநாயம்** — 1. சங்கையின்மை. 2. நிந்தை.

**ஈப்சை** — ஒன்றுபெறவேண்டும் என்னும் விருப்பு. [**ஈப்ஸா.**]

**ஈப்பி** — ஈயின்மலம். [ஆப்பிஎன்பதிற்போல இதன்கண்ணும் பகரவீகாரங்குறுகிற்று. 2. ஈர்.

**ஈப்பிணி** — உலோபி.

**ஈப்புலி** — ஈயைக்கொல்லும்பூச்சி.

**ஈம்** — 1. ஈயும் என்பது, இடையே நின்ற உயிர்மெய் தொக்கு வந்த ஒரு விகாரமொழி. (உ-ம்.) "நீரினி-யிம்மறையியல்பினேரெவர்க்குமீமென" (கந்தபு. பாயிர. ௪௧.) 2. சுடுகாடு. (உ-ம்.) "ஈமுங்கம்மும்" (நன். ௨௨௩.)

**ஈமக்கடன்** — சுடுகாட்டிற் செய்யப்படும் பிரேததகநமுதலிய கிரியைகள். (உ-ம்.) "ஏந்திழையீமக்கடனிறுவிப்போதென்றேவி" (திருவிளை. பழியஞ். ௩௦.)

**ஈமக்கடுமை** — சுடுகாட்டின் வெப்பம்.

**ஈமத்தாடி** — சிவன்.

**ஈமப்பறவை** — 1. கழுகு. 2. காகம். 3. பருந்து. [ஈமம்-சுடலை, பறவை; சுடலையிலே நிணமுண்ணவரும் பறவை என்றபடி.]

**ஈமம்** — 1. சுடுகாடு. (உ-ம்.) "ஈமத்தே நடம்புரியுங் கண்ணுதலோ னெடாதசிலையென்ன" (கந்தபு. தாரக. ௩௩.) 2. பாதிரிமரம். 3. விறகு, பிணஞ் சுடுதற்கடுக்கும் விறகடுக்கு. (உ-ம்.) "கரிபுறவிறகினீமவொள்ளழல்" (புறநா. ௨௩௧)

**ஈமவநம்** — மயாநம்.

**ஈமவாரி** — வசம்பு.

**ஈமுக்கடுமை** — ஈமக்கடுமை.

**ஈயக்களங்கு** — வங்கவெட்டை.

**ஈயக்கிட்டம்** — ஈயமுறுக்கியெடுத்தகறை.

**ஈயக்குழவி**—நீலபாஷாணம்.
**ஈயக்கேர்டி**—புலிதொடக்கிச்செடி. [ஈகைக்கொடி என்பதன் திரிவு.
**ஈயச்சிந்தூரம்**—வங்கசிந்தூரம்.
**ஈயச்சுரதம்**—இண்டஞ்சாறு. (தைல. தைலவ. கககை.)
**ஈயத்தின்பிள்ளை**—நீலபாஷாணம்.
**ஈயபற்பம்**—வங்கபற்பம்.
**ஈயம்**—1. பஞ்சலோகத்தொன்று. (உ-ம்.) "இரசிதம்" பார். 2. பாதிரிமரம். 3. மிருதாரசிங்கி.
**ஈயமணல்**—வங்கமணல்.
**ஈயமலை**—ஒருமலை.
**ஈயல்**—1. இந்திரகோபப்பூச்சி.(உ-ம்.)"நன்மாரிக்காலமுறையீயலதுகாண்" (பதார்த்தகுண. கஉஉக.) 2. ஈசல். (ஐங்குறு.) 3. சிறகுமுளைத்தகறையான். (உ-ம்.) "நந்தியவீயலுண்டி நகையொடுமிசைவார்" (பெரியபு. கண்ணப். ௯௫.) 4. ஈதல். [அல்-தொழிற்பெயர்விகுதி.]
**ஈய ஈரி**—பெருமருந்துக்கொடி.
**ஈயவெள்ளை** — மரம் முதலியவற்றிற்குப் பூசும் ஒருவகை வெள்ளைமை.
**ஈயுவன்**—இராவணன்.
**ஈயெச்சத்தோல்** — ஈயினெச்சம் பிடித்த தோல்.
**ஈயை**—1. இஞ்சி. 2. இண்டங்கொடி.
**ஈயோட்டி**—ஈயைத்துரத்தும் ஒரு கருவி.
**ஈயோப்பி**—ஈயோட்டி.
**ஈர்**—1. இரண்டு என்பதன் விகாரமாய் வேற்றுமையுருபேலாததாய்ப் பெயர்ச்சொல்லுக்கு முன்னுகவரும் ஒரெண்ணுப்பெயர். (உ-ம்.) "ஈருடன்முயங்குமார்வமின்றியே" (கந்தபு. மேரு. கஅ.) 2. ஈர்க்குமரம். (உ-ம்.) "ஈன்றவடிதலை போலீர்பெய்யுந்தளிரொடு" (கலி. ௯உ. விசேடவுரை.) 3. ஈரம். (உ-ம்.) "ஈர்நறுங்கமழ்கடாஅத்தினம்பிரியொருத்தல்" (கலி. உக.) 4. ஈரென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். (உ-ம்.) "எண்ணுடைமாலையொடீர்படைகொண்டு" (திருநூற். எ0.) 5. ஒரு முன்னிலைப்பன்மைவிகுதி. (உ-ம்.) "வந்தீர்" 6. கரும்பு. 7. நெய்ப்பு. (உ-ம்.) ஈன்றவடிதலைபோலீர்பெய்யுந்தளிரொடு" (கலி.௯உ.) 8. பேன்குஞ்சு. (உ-ம்.) "ஈருடையிருந்தலையாரச்சூடி" (பெரும்பாண்.உககை.) 9. பேன்முட்டை. 10. முன்னிலையொருமைச்சிறப்பில்வருமொருவிகுதி. (உ-ம்.) "முனிவரேநீரெங்குளீர்செப்புமென்றுர்" (பெரியபு. தடுத்தா. ௬௬.)
**ஈர்க்கில்**—1. அம்பிறகு. 2. ஓலையீர்க்கு.
**ஈர்க்கு**—1. அம்பினிறகு. (உ-ம்.) "வையம் பணிசிலை வாழிடமீர்க்குவட்காரை வெல்லும் - வையம்" (கம்பர. உக.) 2. ஓலையின்புறத்தில் நடுவே தடித்திருக்கு மது. (உ-ம்.) ஈர்க்கிடைபுகாதுவீங்குமிளமுலை" (கூர்மபு. கண்ணன்ம. களரு.)
**ஈர்க்குச்சம்பா**—ஒருவகை நெல். (உ-ம்.) "ஈர்க்குச்சம்பாவென்றியம்புமரிசியது- நாக்குக்கதியுருசிநல்குங்காண்" (பதார்த்தகுண. அஅரு.)
**ஈர்க்குமல்லிகை**—ஒருவகை மல்லிகை.
**ஈர்கொல்லி**— 1. ஈர்கோலி. 2. உப்பிலிக்கொடி.
**ஈர்கோலி**—ஈர்வாரி.
**ஈர்ங்கதிர்**—1. குளிர்ந்தகதிர். (உ-ம்.) "ஈர்ங்கதிர்ச்-சிவிகை" (இரகு. அய. ௬க.) 2. சந்திரன். (சோதிடகடல்.)
**ஈர்ங்கழை**—பசியகோல். (உ-ம்.) (இருவெதிரீர்ங்கழைதத்தி" (மலைபடு. உ0எ.)
**ஈர்ங்குருதி**—ஈர்க்குங்குருதி. (சிந்தா.)
**ஈர்ங்கை**—போசநத்தினீரம்பிடித்திருக்குங்கை. (உ-ம்.) "ஈர்ங்கைவிதிரார்" (வள். க0எஎ.)
**ஈர்த்த**—குளிர்ந்த எனப்பொருள்படும் ஒரு குறிப்புப்பெயரெச்சம். (உ-ம்.) "ஈர்த்தமாமதிசசியென்பது" (கந்தபு. திருநகர. உக.)
**ஈர்த்தல்**— 1. அறுத்தல். (உ-ம்.) "யானெனதெனுஞ்செருக்கீர்த்தமகனே" (அவிரோ. க0.) 2. இழுத்தல். (உ-ம்.) "நார்த்தொடுத்தீர்க்கிலென்" (நாலடி. யாக்கை. ௬.) 3. ஈரித்தல். 4. உரித்தல். (உ-ம்.) "புலியினீருரியுடுக்குமோ" (கந்தபு. ததீசியுத். ௬.) 5. பிளத்தல். 6. வெட்டல்.
**ஈர்தல்**—1. அரிதல். (உ-ம்.) "உயிரீரும்வாளது" (வள். ௬௬௪.) 2. அறுத்தல். (ஐங்குறு.) 3. அறுப்பதுபோல வருத்தஞ்செய்தல். (உ-ம்.) "அஃதுயிரை-யீர்கின்றது" (கந்தபு. தேவரைமேவல். கக.) 4. பிளத்தல். 5. வெட்டல்.
**ஈர்ந்தமிழ்**— கேட்டற்கினிய தமிழ், தண்டமிழ்.
**ஈர்ந்தார்**-ஈரத்தாற்சிறந்தமாலை.(புறப்பொ.)
**ஈர்ந்திரி**—நெய்தோய்ந்ததிரி. (உ-ம்.) "இரும்புசெய்விளக்கினீர்ந்திரிக்கொளீஇ" (நெடுநல். ௪உ.)
**ஈர்ப்பி**—ஈர்.
**ஈர்ப்பு**— 1. இசிவு. 2. இழுத்தல். (உ-ம்.) " ஈர்ப்புடைக்கராஅத் தன்ன வென்னை " (புறநா. க0௪.) 3. ஈர்த்தல். 4. உடம்பிலே காயமாறுங்காலத்தில் உண்டாகும் ஒரு வலி. [இக்காலத்தில் ஏர்ப்பு எனவும் வழங்குவர்.] 5. உரித்தல்.

ஈர்ம்பிணவு—அன்பையுடையபிணவு. (ஐங்குறு.)
ஈர்வடம்—ஈர்வாணி.
ஈர்வலி—ஈர்வாரி.
ஈர்வலித்தல்—ஈர்வாரல்.
ஈர்வாநி—ஈர்க்கினாலே பின்னப்பட்ட கயிறு. [ஈர் - ஈர்க்கு. வாநம் - பின்னுதல்.]
ஈர்வாரி—தலைமயிரிலுள்ள ஈருருவுங்கருவி.
ஈர்வாள்—மரமரியும்வாள். (உ-ம்.) "அல்லரும்பகலென்னுமீர்வாளினாலரிந்து" (பெருந்திரட்டு.)
ஈர்வு—1. அரிகை. 2. பிளக்கை. 3. வெட்டுகை.
ஈர்வேட்டு—ஈர்பட்டு.
ஈரக்கல்—1. ஒரு மருந்துக்கல். 2. குருந்தக்கல்.
ஈரங்கொல்லியர்— வண்ணார். [ஈரத்தை உலர்த்துவோரென்றபடி.]
ஈரங்கோலியர்— வண்ணார். (சூ. நிகண். உ: கூஉ.) [ஈரங்கோலுபவரென்றபடி.]
ஈரசைச்சீர்— இரண்டசை கூடிவருஞ்சீர்; அது: தேமா, புளிமா, கருவிளம், கூவிளம் என்னும் வாய்பாட்டான் வருவது. (உ-ம்.) "ஈரசைச்சீர்நின்று" (யாப்-ம். தளை. ௩.)
ஈரஞ்சுவறுதல்— ஈரம் உலர்தல்.
ஈரடி—1. இணையடி. (உ-ம்.) "ஈரடிவெண்பாக்குறள்" (யாப். காரிகை. ௩.) 2. ஈரொட்டு. 3. கவர். 4. சந்தேகம். [இரண்டடுத்ததென்றபடி.]
ஈரடிப்பயன்— 1. இருபொருள்படுகை. 2. கபடம். 3. சந்தேகம். 4. விகற்பம்.
ஈரடிப்பா— 1. குறள்வஞ்சிப்பாச்சிறுமை. 2. குறள்வெண்பா.
ஈரடிமடக்கு—மடக்கலங்காரத்தின் ஒருவகை. அஃது: ஓரடியில் வந்தசொற்றொடரேமற்றையடியிலும் வேறுபொருள் விளைத்துவருவது. (தண்டி. கூகூ. உரை.)
ஈரடிவநுக்கம் — ஒவ்வோரடியினும் முதலாம் எழுத்தும் நடுவெழுத்தும் ஒன்றாயிருக்க இரண்டடியுடையதாகச் செய்யப்பட்ட செய்யுள்.
ஈரடிவெண்பா—குறள் வெண்பா. (உ-ம்.) "ஈரடிவெண்பாக்குறள்" (யா. காரிகை. ௩.)
ஈரடுக்கொலி—ஒருசொல்லை இரண்டுதரம் அடுத்துச்சொல்லுதலாற் குறிக்கப்பட்ட ஓசை. (உ-ம்.) "நெறுநெறெனமுரிந்தது"
ஈரணம்—1. களர்நிலம். 2. வெறுநிலம்.
ஈரந்துவட்டல்—ஈரமெடுத்தல்.
ஈரந்தூர்—ஒரூர். (புறநா. கஅ௦.)
ஈரந்தை—ஈரந்தூர். (உ-ம்.) "ஈரந்தையோனேபாண்பசிப்பகைஞன்" (புறநா. கஅ௦.)
ஈரநாவு—பழிகூறுகிறநாக்கு.
ஈரப்பச்சை—ஈரப்பசுமை.
ஈரப்பசுமை—ஈரப்பற்று.
ஈரப்பசையுள்ளவன் — 1. இரக்கமுடையவன். 2. செல்வமுடையவன்.
ஈரப்பலா—ஒருமரம். (உ-ம்.) "படிக்குளீரப்பலாப்பழுத்தொண்புவி-வெடித்தவாயில்" (பிரபுலிங். மாயையு. எ.)
ஈரப்பற்று—1. அன்புப்பற்று. 2. ஈரப்பிடிப்பு. 3. சம்பத்து. 4. நன்றி.
ஈரம் — 1. அழகு. 2. அறிவு. 3. அன்பு. (உ-ம்) "ஈரமில்லாநெஞ்சத்தார்க்கீந்தவுபகாரம்" (வாக்குண். உ.) 4. இறை. 5. கரும்பு. 6. குங்குமப்பூ. 7. குங்குமம். 8. குளிர்ச்சி. (உ-ம்.) "ஈரமுங்கிழலுங்காயுங்கனிகளுமியாவுமீண்டி" (பாரத. அருச். தவநி. உ.) 9. தயை. (உ-ம்.) "மலைநாடனீரத்துளின்மைதோன்றின்" (கலி. சக.) 10. நனைவு. 11. நீர்முதலியவை படுதலாலுண்டாகிய பச்செனவு. (உ-ம்.) "ஈரம்புலராக்கரத்தோருக்கு" (பாரத. திரௌபதி. கஎ.) 12. பண்பு. 13. வெள்ளரிப்பழம். (இராசவைத்.) [இச்சொல் சிலவிடங்களிலே அம்கெட்டு ஈர் எனநின்றுவரும் வல்லொற்றுக்கினமான மெல்லொற்றோடணைந்து "ஈர்ங்கதிர்" என்றாற்போலக்குளிர்மைமுதலிய பண்புப்பொருளை விளைத்தலுமுண்டு.]
ஈரல் — ஈருள். (உ-ம்.) "மார்புகீண்டீரலை வாயிடுமெஃகம்" (கந்தபு. கடவுள்வாழ். க௩.) [இது ஈருள் என்பதன் மரூஉ.]
ஈரல்பதறல்—பயப்படுதல்.
ஈரலித்தல்—ஈரமாதல். [வழக்.]
ஈரலிப்பு—ஈரம்.
ஈரவன்—1. ஈரம். 2. சந்திரன்.
ஈரவிதைப்பு— ஈரநிலத்திலே விதைத்தல்.
ஈரவுள்ளி—ஈரவெண்காயம்.
ஈரவெண்காயம்—கறிப்பதார்த்தங்களுக்குப் பிரயோகிக்கும் ஒரு கிழங்கு.
ஈரற்கநுகுதல்—1. ஈரல்வாடுதல். 2. மிகவும் பயப்படுதல்.
ஈரற்குலை—ஈரற்கொத்து. அஃது: ஈரலுமீரலைச்சேர்ந்த பிரிவும்.
ஈரற்குழி — 1. ஈரலுறுதானம். 2. நெஞ்சிற்குழி.
ஈரற்பித்து—பித்தந்தங்குமீரல்.
ஈரற்றீதல்—ஈரற்கருகுதல்.
ஈரறம்—இருவகையறம். அவை: இல்லறம், துறவறம்.

**ஈரறிவு**—1. இம்மைமறுமையறிவு. 2. பெரிய அறிவு.

**ஈரறிவுயிர்** — பரிசமுஞ் சுவையும் அறியும் இப்பிநந்து முதலியன. (நன். உரி. ௫.)

**ஈரனுவு**—பழிகூறு நாக்கு. [ஈரல்-அரிதல்.]

**ஈராசிடைவெண்பா**— இரண்டாமடியிலே மூன்றாஞ்சீரில் ஆசாக இரண்டசை பெற்றுவரும் நேரிசைவெண்பா. (உ-ம்.) "தாமரையின் றாதாடித் தண்டுவேலச்சேறளைந்து - தாமரையி னுற்றமேதானுறும்" என்பதிற்போல.

**ஈராட்டி**—1. இரண்டுமனைவி. 2. ஈராடி.

**ஈராட்டை**.—இரண்டுவருடம்.

**ஈராடி**—1. காற்றினமைந்தநிலை, அற்பமாயசைதல். 2. நிலையின்மை. 3. மழைக்குணம்.

**ஈரி**—1. கந்தைச்சீலை. 2. பலாக்காய்த்தும்பு. 3. பெண்பிள்ளைகளினோர் விளையாட்டு.

**ஈரிடாலு**—அழுக்காறுடையவன். [ஈஷ்-ர்ஷா லூ: ஈஷ்-ர்ஷா-அழுக்காறு. ஆலூ-ஒருவிகுதி]

**ஈரிஷை**—அழுக்காறு, பொறாமை. (சி. சி. உ: ௩௧. சிவாக்.) [ஈஷ்-ர்ஷா.]

**ஈரிணம்**—களர்நிலம்.

**ஈரிச்சல்**—குளிர்தல்.

**ஈரித்தல்**—குளிர்தல். (உ-ம்.) "ஈரித்தகுடனரம்பாற்செறிந்து" (ஞானவா. வைராக். ௭௰).

**ஈரிதழ்**—குளிர்ந்த இமை. (பதிற்றுப் )

**ஈரிப்பு**—1. ஈரம். 2. குளிர்மை.

**ஈரிய**—1.அன்புடைய. 2. ஈரத்தையுடைய. ( உ-ம். ) "ஈரியநலுழு மிவள்பெருமதர்மழைக் கண்" ( குறிஞ்சிப்பா. ௨௪௮. ) 3. குளிர்ந்த. (உ-ம்.) "ஈரியநறும்பூவாளி யேறுபட்டாவியோடும்-வீரியம்விடுத்து" (திருவிளை. மாயப். ௨௧.)

**ஈரியது**—1. ஈரமுள்ளது. 2. குளிர்ந்தது.

**ஈரிலைப்பயிர்**—இரண்டிலை வெளியில்வந்த இளம்பயிர்.

**ஈரிழை**—இரட்டையிழைகொண்டது.

**ஈருடல்** — இரண்டு தன்மைத்தாய வுடல். (உ-ம்.) "நாரசிம்மன்"

**ஈருதல்**—1. அரிதல். 2. வருத்துதல்.(உ-ம்.) "காமநோ-யீருகின்றது" (கந்தபு.மாயைப்.௭௨.)

**ஈருயிர்க்காரி**—கருப்பவதி.

**ஈருவா**—அமாவாசை பௌர்ணிமைகள்.

**ஈருள்**—ஈரல். (உ-ம்.) ஈருட்டடிமூடியீண்டு மலப்பிண்டப்-போர்வை" (சிந்தா. முத். ௧௩௩.)

**ஈருள்ளி**—ஈரவெங்காயம்.

**ஈருளி**—ஈருள்ளி. (தைல. தைலவ. ௧௰௮.)

**ஈரெச்சம்** — இரண்டெச்சங்கள். அவை: பெயரெச்சம், வினையெச்சம் என்பன. (நன். உயிர். ௨.)

**ஈரெண்வகைக்கூலம்** — நெல்லு, புல்லு, வரகு, தினை, சாமை, இறுங்கு,தோரை,இராகி, எள்ளு, கொள்ளு, பயறு, உழுந்து, அவரை, கடலை, துவரை, மொச்சை என்பன.

**ஈரைந்துசீலம்**—புத்தர்கள் கூறும் பத்துக் குணங்கள். அவை: கொல்லாமை, பொய்சொல்லாமை, களவின்மை, காமமின்மை, பிறர்பாவிரவாமை, உயர்ந்த ஆதநத்திருத்தல் கிடத்தலின்மை, சந்தநம் மாலை முதலியதரியாமை, பொன்வெள்ளிகளைத்தீண்டாமை, பாடலாடல் விரும்பாமை, உதயத்திற்குமுன் புசித்தல். (உ-ம்.) "ஓதியீரைந்து சீலமுடையராய்" (சி. சி. பர. சௌத். ௧. ஞாநப்.)

**ஈரொட்டு**—1. இரண்டுக்குற்றது. 2. நிச்சயமில்லாதநிலை. (உ-ம்.) "நோயாளியின் காரியமீரொட்டு"

**ஈரொற்றுவாரம்**—இரண்டு மாத்திரை பெற்றுவருஞ்செய்யுள். (சிலப். அரங்கேற். ௧௩௩. உரை.)

**ஈலி**—1. ஆயுதம். 2.குறுந்தடி. 3. கைவாள். 4. சுரிகை. [ஈலீ.]

**ஈவிரக்கம்**—உதாரகுணமுமிரக்கமும்.

**ஈவு**—1. கொடை. 2. பங்கிடுகை. 3. பிரித்துக்கண்டபேறு. 4. வரம்.

**ஈவுக்கணக்கு**— } 1. பங்கிடுதல். 2. பிரிவுக்கணக்கு.
**ஈவுகணக்கு** — }

**ஈவுசோர்வு**—கொடையுமிளகுதலும்.

**ஈவோன்** — 1. படிப்பிப்போன். ( தொல். பாயி. உரை. ) 2. பொருள் கொடுப்பவன். (உ-ம்.) "பன்னுசொற்கொள்வோ னீவோன்" (கந்தபு. நகர. ௧௨௩.)

**ஈழத்தலரி**— 1. ஒருவகையலரி. 2. பெருங்கள்ளி. [ஈழம்-பொன்.]

**ஈழதண்டம்**—ஈடாதண்டம். (உ-ம்.) "நேமிவரையுமந்தரமுநிகழ்த்துமீழதண்டமாய்"(கூர்மபு. திரிபுர. ௩௧.)

**ஈழம்**— 1. இலங்காபுரி. (உ-ம்.) "ஈழமன்னனுமஞ்செழுத்துமியம்பி" (திருவாத. புத்தரை. ௮௭.) 2. உலோகக்கட்டி. 3. கள்ளி. 4. கள். 5. சிங்களதேசம். 6. பொன். ( உ-ம். ) "இறைபடைத்திறக்குந்தொடையீழமே"(இரகு. நகர. ௬௮.)

**ஈழமண்டலம்**—இலங்காபுரி.

**ஈழவர்**— இலங்கையிலிருந்து சிறைசெய்யப்பட்டுச்சென்று சேரநாட்டில் வசிக்குஞ்சிங்களர்.

**ஈழுவர்**—ஈழுவர்.

**ஈளை**—1.காசநோய்.2.கோழை.3.தொய்வு.

ஈளைக்கோல்லி—தாளகம்.

ஈளை—கோழைநோய். இது மூச்சுக்கு முட்டுச்செய்வது. (உ-ம்.) "இருமலுஞ்சோகையுமீளையும்வெப்பும்" (திருமந். அறஞ்செ. ச.)

ஈற்றசை — பாட்டினிறுதியினிற்குமசைநிலை, இறுதியில்வருமசை.

ஈற்றயல்— இறுதிக்கயல். (உ-ம்.) "பெயர்வினையிடத்தனளரய வீற்றயலாவோவாகலும்" (நன். பொது. உ.)

ஈற்ற—ஈற்றுப்பசு. (உ-ம்.) "சாற்றுரவாரத்திற்றும்பறுத்துப்புறநின்ற-ஈற்றுவைவெருளவிடுத்திவனுவிகவர்கென்றுன்" (திருவிளை. பழியஞ். கஎ.)

ஈற்றில்லாக்கடாரி—ஈனுக்கடாரி. (தைல. தைலவ. கஙரு.)

ஈற்று—1. ஈனப்பட்டது. 2. ஈனுகை, பெறுகை. (உ-ம்.) "ஈற்றுமான்பிணை" (கந்தபு. வள். ஙக.)

ஈற்றுநிலையெழுத்து— சொல்லிறுதியினிற்றற்குரிய எழுத்து. அவ்வெழுத்துக்கள் தமிழில் உயிர் பன்னிரண்டும் ஞ ண ந ம ன ய ர ல வ ழ ள என்னும் மெய்யெழுத்துக்களும்.

ஈற்றுளைதல்— 1. ஈனுகையில் வருந்துதல். 2.கருப்பவேதனைப்படல். (உ-ம்.)"ஈற்றுளைந்து-சென்ற வண்டுபொறையுயிர்த்துச் செழுந்தோட்டகட்டினடைகிடக்கும்" (கூர்மபு. தக்கன்வேள். ருஎ.)

ஈற்றெலும்பு—கடையெலும்பு.

ஈற்றெழுத்து—ஈற்றுநிலையெழுத்து.

ஈற்றெழுத்துக்கவி– முற்பாட்டினந்தத்தெழுத்தேனுஞ்சொல்லேனும் வரும் பாட்டிற்காதியாய்வருவது.

ஈறல்—- 1. துக்கம். 2. நெருக்கம். 3. பின்னல்.

ஈறற்பற்றை—நெருக்கமானதூறு.

ஈறந்தம்—இறுதிமுடிவு.

ஈறந்தரம்—கடைத்தரம்.

ஈறம்வரிசை—கடைமுறை. (திருவாலவாயுடையார்திருவி.)

ஈறிலான்— 1. கடவுள். 2. சிவன். (உ-ம்.) "ஈறிலாரையிவரணைந்தார்கொலோ" (கந்தபு. திருக்கல். உஉ.)

ஈறிலி—கடவுள்.

ஈறு—1. உப்பளம். 2. எல்லை. 3. பல்விடையின்முரசு. 4. மரணம். 5. முடிவு, நாசம். (உ-ம்.) "ஈறுசேர்பொழுதினுமிறுதியின்றியே" (கந்தபு. கடவுள். கஅ.)

ஈறுகட்டி—இரசகர்ப்பூரம்.

ஈறுகடை—ஈருந்தம்.

ஈறுகெடுதல்—ஈறழிதல்.

ஈன்— 1. இவ்விடம். (உ-ம்.) "ஈன்வருகென்னநோக்கி" (தணிகை.வீரட்ட. அக.) 2. இவ்வுலகம். (உ-ம்.)"நீனிறவியலகங்கவைஇய-வீனுமும்பரும்பெறலருங்குரைத்தே' (ஐங்குறு. சoக.) 3. ஈனென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும்.

ஈன்மர்—பெறுவார். (உ-ம்.) "ஈன்மரோவிவ்வுலகத்தானே" (புறநா. எச.)

ஈன்றணிமை— சமீபகாலத்திலே ஈனப்பட்டமை. (உ-ம்.) "நாளீன்றணியபசியகுளக்கன்று" (கூர்மபு. கண்ணனவ. அo.)

ஈன்றணிய — சமீபகாலத்திலீனப்பட்ட. (உ-ம்.) "ஈன்றணிமை" பார்.

ஈன்றல் — 1. மகப்பெறுதல். 2. விளைதல். (உ-ம்.) "இன்சொலினிதீன்றல்காண்பான்" (வள். கக.)

ஈன்றவணிமை—1. இளங்கொற்றியின்பசுடம்பு. 2. கன்றினிளமை.

ஈன்றவள்—1. தாய். (உ-ம்.) "இருள்குடிகொண்டமெல்லோதியர்சீறினுமீன்றவளை-மருள்குடிகொண்டவக்காலம்விடாது மரீஇயழுவார்" (தணிகைப். களவு. ருஎசு.) 2. பார்ப்பதி.

ஈன்றவன்—1. பிதா. 2. பிரமன்.

ஈன்றார்—தாய்தந்தையர்.

ஈன்றாள் — 1. தாய். (உ-ம்.) "ஈன்றாள் பசிகாண்பானுயினும்" (வள். சுருசு.) 2. பார்ப்பதி.

ஈன்றான்—1. தந்தை. 2. பிரமன்.

ஈன்றுளார்—தாய்தந்தையர். (உ-ம்.)"யாண்டையரோவெமையீன்றுளாரெனும்" (கந்தபு. சயந்தன்பு, கஎ.)

ஈனசாதி—தாழ்ந்தசாதி.

ஈனம்—1.அழிவு. 2. இழிவு. 3. கள்ளி. 4. குறைபாடு. 5. கேடு. 6. தள்ளல்.

ஈனல்—1. ஈனுதல். (உ-ம்.) "விரிதலையரம்பையீன்றமென்பழன்" (நைட. நாட். உo.) 2. கதிர்.

ஈனனம்—வெள்ளி.

ஈனுக்கதிர்—கருவிலிருக்குங்கதிர்.

ஈனுக்குமரி—பிள்ளைப்பெறுத இளம்பருவப்பெண்.

ஈனுமலடு— } மலட்டுப்பசு, அல்லது எருமை.
ஈனுமாடு— }

ஈனுயம்—சங்கையீனம், நிந்தை.

ஈனுவாக்கி—கொடியவள்.

ஈனுதல்—1. கருவுயிர்த்தல். (உ-ம்.) "மைந்தரிருவரையீன்றனள்" (பாரத. குருகுல. ககக.)

2. பிறப்பித்தல். (உ-ம்.) "அருவுருவீனுதாகும்" (சி. சி. க: உஅ.)

ஈனுமணிமை—1. சூதகம். 2. புனிறு.

ஈனை—1. இலைநரம்பு. 2. ஒருவியாதி. 3. சித்திரக்குறிப்பு, பருமட்டக்குறிப்பு.

ஈனோர்—இவ்வுலகத்தோர். (மணிமே.)

உ

உ— [தமிழ்ப்பாஷையின் வர்ணமாலையின் உயிர்வருக்கத்தில்வரும்ஐந்தாமெழுத்து;அஃது: அங்காப்போடு இதழ்குவித்து உச்சரிக்கப்படு மொரு குறில்.]

1. இரக்கத்தைக்குறிக்கும் ஓரிடைச்சொல்.

2. இரண்டு என்னும் இலக்கத்தைக்குறிக் குமோரெழுத்து.

3. இறந்தகாலவிடைநிலையாகிய தகரமெய்யை அதன்றிரிபாகிய டகர றகரமெய்களுள் ஒன்றை ஊர்ந்துவரும் ஒரு வினையெச்சவிகுதி. (உ-ம்.) "செய்து; உண்டு; கற்று."

4. ஒருசாரியை. (உ-ம்.) "மின்னு"

5. ஒரு தொழிற்பெயர்விகுதி. (உ-ம்.) "வரவு"

6. ஒரு பண்புப்பெயர் விகுதி. (உ-ம்.) "மழவு"

7. கோணகலை. (சி-வி. கிரி. எ: உரை.)

8. சிவன். (உ-ம்.) "ஆலுக்கணிகலம்வெண்டலைமாலை"(கந்தரலங். ௬உ.)ஆல். உ எனப் பிரித்து ஆலவிருக்ஷத்தினடியிலெழுந்தருளிய சிவபிரான் எனவறிக.

9. சுட்டுப்பொருளில் பதத்தினகத்தாவது புறத்தாவது வரும் ஓரிடைச்சொல். (உ-ம்.) "உவன்; உக்கொற்றன்" [இது எதிர்முகத்திற்போல எதிர்முகமின்றிப்பின்னிற்கும்பொருளையுஞ்சுட்டிவரும். (உ-ம்.) "ஊழையுமுப்பக்கங்காண்பர்" (வள். ௬உ0.)

10. பிரமா.

உக்கணம் — தெளித்துச் சுத்தி செய்தல். [உக்ஷண.]

உக்கம்—1. ஆலவட்டம். (சூ. நிகண். எ: ௬அ.) 2. இடபம். [உக்ஷந.] 3. உடம்பின் நடுக்கூறுகிய மருங்கு. (உ-ம்.) "உக்கஞ்சேர்த்தியதொருகை" (திருமுரு. க0அ.) 4. கோழி. 5. தூக்குக்கயிறு. [தெலுங்கு.] 6. நெருப்பு. 7. பசு. 8. பந்து. 9. பொன். (ஆசிரி. நிக. ௬: க.)

உக்கரித்தல்—1. உக்காரம்போடல். 2. வாந்திபண்ணுதல்.

உக்கல்—1. அழிதல். (உ-ம்.) "கரிந்துசாம் பரா-யுக்கவாறுகண்டு" (திருவிளை. சமணரை. ௬அ.) 2. பக்கம். 3. பதனழிந்தபொருள். 4. பதனழிவு.

உக்கலை—மருங்கின்பக்கம்.

உக்கவர்—இறந்தவர், அழிந்தவர். (உ-ம்.) "உக்கவர்சுடுநீறணிந்து" (தேவார. திருவிளை. திருஞான.)

உக்களம்—1.இராக்காவல். 2. தலைக்காவல். 3. பாளயத்தைச்சூழ்ந்த அகழி.

உக்கள்வர்—இராக்காவற்காரர்.

உக்கலை—மருங்கின்பக்கம். [வழக்.]

உக்கா—1. கஞ்சாப்புகைமுதலிய குடிக்குங் கருவி. [இந்துஸ்.] 2. கள்.

உக்காக்கம்—அரைநாண். [உக்கம்-அரை; அக்கம்-நாண்.]

உக்கார்—இறந்தவர். (உ-ம்.) "உக்கார்தலை பிடித்துண்பலிக்கூர்தொறும்-புக்கார்"(தேவார. திருப்புக. ௪. திருநாவு.)

உக்காரம்— 1. சத்திபண்ணல், 2. தொனுப்போடுதல்.

உக்காரி— ஒருவகைச் சிற்றுண்டி. (உ-ம்.) "அஃகுல்லி" பார்.

உக்கி—அம்மனைக்காய். (இராசவைத்.)

உக்கிடர் —ஒருவகைச்சிலந்திப்பூச்சி.

உக்கிர— இருநூற்றிருபத்துநாலு புவநங்களிலொன்று. (கந்தபு. கணங். க0. உரை.)

உக்கிரகந்தம்—, உக்கிரகந்தி— 1. உள்ளி. 2. கரும்பு. 3. கருவேம்பு. 4. சண்பகமரம். 5. பெருங்காயம். 6. மிருமணம். 7. வசம்பு. 8. வேம்பு. [1, 3, 4, 5, 6, 7. உக்ர கந்த: உக்ர- கடுமை. கந்த- மணம்.]

உக்கிரகந்தை—வசம்பு. (தைல.)

உக்கிரகர்மம்— கொடுஞ்செய்கை. [உக்ர கர்ம: உக்ர-கொடுமை. கர்ம- செய்கை.]

உக்கிரகெந்தம்—உக்கிரகந்தம்.

உக்கிரச்சுவாவர்— ஆதொண்டைக்கொடி.

உக்கிரசவா—காற்றோட்டிச்செடி.

உக்கிரசேநசன்— கிருஷ்ணனுடைய மாமனாகிய கஞ்சன். [உக்ரஸேநஜ: உக்ரஸேந-ஓரரசன். ஜ-பிறந்தவன்.]

உக்கிரசேனன்—1. கஞ்சனுடைய பிதா.(கூர்மபு. கண்ணனவ. உ௬௫.) 2. பரீக்ஷித என்னும் அரசனுடைய ஒருமகன். [உக்ரஸேந]

உக்கிரநட்சத்திரம்— 1. புதனின்ற நாளுக்குப்பதினெட்டாநாளும், இருபத்துநான்காநாளும். (விதாந. குணகுண. ௪0. உரை.)2. மகம்,

பூரம், பரணி என்பன. (விதான. பஞ்சாங்க. ௨௦. உரை.)

**உக்கிரம்**— 1. உருத்திரமென்னுஞ்சுவை. 2. உறைப்பு. 3. கடுமையானது. (உ-ம்.) "உக்கிரமாகவீமன்வந்தவுறுதிகண்டு" (பாரத. இரண்டா. ௩௨.) 4. கீதவுறுப்பினுளொன்று. 5. கொடுமை. 6. கோபம். (உ-ம்.) "நிலமேல்-வருமுக்கிரவடவைக்கனல்" (திருவிளை. யானையெய். ௨௦.) 7. தலைக்காவல். 8. பயங்கரமானது. 9. பரணி. 10. பாத்திரபதம். 11. பெலமுள்ளது. 12. முருங்கைமரம். 13. மேலானது. 14. வெப்பம். 15. வேகம். [உக்ர]

**உக்கிரமது**—வைராக்கியமான குணம்.

**உக்கிரமம்**—மூர்க்கம்.

**உக்கிரவைரவன்**— அட்டவைரவர்களுளொருவன். (த. நி. போ. ௨௪௧.)

**உக்கிரன்**—1. அரசனுக்குச்சூத்திரப்பெண்ணிடம் பிறந்தவன். (சைவச. பொது. ௪௬௬.) சூதசங்கிதைகாரர் வைசியனுக்குச்சூத்திரப்பெண்ணிடம் பிறந்தவன் என்பர். (உ-ம்.) "கருங்குழற்சூத்திரப்பெண்கடிதடமூழ்கிநாய்கன்-பெருங்கநகம்போற் பெற்றபிள்ளை யுக்கிரப்பேர்பூண்பன்" (சூத. சிவமான். ௩௨. ௧௧.) 2. உருத்திரன். 3. துருவாசன். 4. மகேசுரருடைய அழுகையினின்றுபிறந்த எழுவரிலொருவர். (உ-ம்.) "இளம்பிறையணிந்திடுமுக்கிரனென்ப"(கூர்ம பு. அட்டமூ. ௩௨.) [உக்கிரன்-கோரமுடையவன்]5.விசுவாமித்திரன்.6.வீரபத்திரன். (சூ.நிகண். ௧: ௨௨.) [உக்ர:]

**உக்கிராட்சன்**—1. சிவன். 2. வீரபத்திரன். [உக்ராக்ஷ.]

**உக்கிராணக்காரன்**— களஞ்சியங் காப்பவன்.

**உக்கிராணம்**—களஞ்சியம். [தெலுங்கு.]

**உக்கிரி**—1. தூர்க்கை. 2. வசம்பு.

**உக்கிரிட்டம்**—1. உற்கிரிட்டம். 2. மிகுதி. 3. மேன்மை.

**உக்கிரை**—1. அரசனுக்குச் சூத்திரப்பெண்ணிடம் பிறந்தவள். (பரா. ௧௦௭.) 2. கருவசம்பு.

**உக்து**—இலவங்கம்.

**உக்துதல்**— 1. இற்றுப்போதல். 2. பயப்படல்.

**உக்துளான்**—சருகுமுயல்.

**உக்துறுமை**—குற்றியலுகரம்.

**உக்தம்**—சொல்லப்பட்டது. (உ-ம்.) "உக்தசாத்தியவத்தல்ல"(சி.சி. அளவை. ௧௯.சிவாக்.) [உக்தம்.]

**உக்தி** — 1. பேச்சு. 2. பேசுதல்.

**உக்ரம்**—1. வித்தியாகலையில் புருடதத்துவத்திலிருக்கும் ஆறுபுவநங்களுள் ஒன்று. (சி-வி. கிரியா. ௨௧. சுலோ. உரை.) 2. வேதம். (உ-ம்.) "உக்ரமிகுசக்ரதரனென்னநிற்பீர்" (தாயு. சித். ௧.)

**உக**—உகவென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும்.

**உகக்தும்**—உயரப்பறந்துசெல்லும்.(ஐங்குறு)

**உககனல்**—வடவாமுகாக்கினி.

**உகசந்தி** — ஒருகம் முடிந்து மற்றொருகந் தொடங்கும் எல்லை.

**உகசூரியர்**—பன்னிரு சூரியர்.

**உகத்தல்**—1. உயர்த்துவிடுதல்.(உ-ம்.)"எமதிடும்பையோங்கலொன்றிரண்டு கூறுபடவொளிதிகழ்வேலுகந்த" (சிவப். மங்கல. ௪.) 2. உயர்தல்.(உ-ம்.)"எல்லைதணந்துகந்திருந்தவாங்கு" (தணிகை. நகர. ௬௬.) 3. உயரப்பறத்தல். (உ-ம்.) "கந்துகோளீயாதுகாழ்பலமுருக்கி-யுகக்கும்பருந்தினிலத்துநிழல்சாடி" (பதிற்று. ௭௭.) 4. சந்தோஷித்தல். (உ-ம்.) "உகந்தாவடிக்குமிடையர்" (மறைசை. ௬௬.) 5. திருத்தியடைதல். 6 மகிழ்வோடுகொள்ளல். 7. விரும்புதல். (உ-ம்.) " காக்கையுகக்கும்பிணம் " (வாக்குண்டாம். ௨௪.)

**உகந்தசெய்தி**—நல்ல சமாசாரம்.

**உகந்தது**— அங்கீகரிக்கும்படியான வஸ்து.

**உகந்து**—உயர்ந்து. (மதுரைக்.)

**உகப்பிரளயம்**—யுகமுடிவு.

**உகப்பு** — 1. உயர்ச்சி. (தொல். சொல். ௬௦௬.) 2. சந்தோஷம். 3. மகிழ்ச்சி. (உ-ம்.) "உகப்புறவிவனேடவனியாளுக" (பாரத. குருகுல. ௮௯.)

**உகபற்சிருட்டி** — ஒன்றின்பின்னொன்றுறாது ஏககாலத்திலே ஒருங்கு சிருட்டித்தல். (உ-ம்.) "தெரித்தகாரியத்தோற்ற மிருவகையாங்கிரமசிருட்டியுகபற் சிருட்டியென" (வேதா. சூ. ௮௦.)

**உகம்**— 1, ஒருசோடு, இரண்டு. 2. தலைப்பாட்டு. (சிலப்பதி.) 3. நாள். 4. நான்கு, என்னுமெண்ணைக்குறிப்பாயுணர்த்துவதான ஒருமொழி. 5. நுகம். 6. பாம்பு. 7. பூமி. ( உ-ம். ) "ஈட்கெமயிற்றடங்குழற்கணீண்டலர் - சூட்டுவென" (இரகு.நாட்.௪௨.) 8. முடிவு. 9. யுகம். [1, 4, 5, 9. யுக. இப்பொருள்களில் யகரமெய்கெட்டு உகமென நின்றது.]

**உகமகள்**—பூமிதேவி. (உ-ம்.) "உகமகளுதற்கணிடையெழுதுபளிதத்திலதம்" (இரகு. திக்குவி. ௨௦௮.)

**உகமாருதம்**—ஊழிக்காற்று.

**உகமுடிவு**— 1. ஊழி. 2. மடங்கல். (பிங்கல.)

**உகரக்குறுக்கம்**— குற்றியலுகரம். [உ என்னும் எழுத்து.]

**உகருத்திரர்**—பதினோருருத்திரர்.

**உகல்**— 1. அழிதல். (உ-ம்.) "உகலிடந்தான்சென்று" (திருக்கோ. சஉ.) 2. உதிரல். 3. கழலல். 4. சிந்தல்.

**உகவல்லி**—நாகவல்லிமரம்.

**உகவா**—அன்புமிக்கு. (சிந்தா)

**உகவு**— நிலையழிவு. (உ-ம்.) "உகவிலாதுணர்த்தி" (வேதா. சூ. கஉச.)

**உகவை**—சந்தோஷம், நட்பு. (உ-ம்.) "உகவையிலாரொடுநேரெனினியென்றே" (பாரத.வாரணா. கoஉ.)

**உகள்**—1. உகளென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும்.

**உகளம்**—1. இட்டம். 2. இரண்டு. (உ-ம்.) "உகளப்-பொன்னின்வார்கழல்" (கந்தபு. அதிவீர. ௬ச.) [யுமளம்.]

**உகளல்**— 1. ஒடித்திரிதல். (உ-ம்.) "பன்மயிர்ப்பிணவொடுகேழலுகள" (மதுரைக். கஎச.) 2. கடத்தல். 3. குதித்தல். 4. பாய்தல். (உ-ம்.) "வெள்ளுளைக்கலிமான்கவிகுளம்புகள" (புறநா. கரு.)

**உகளி**—1. உகளியென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும். 2. பிறழ்ந்து. (சிந்தா.)

**உகளித்தல்**—1. குதித்தல். 2. நீர்நிறைந்துபாய்தல். (உ-ம்.) "திசைநான்குமுகளித்தேறி" (பாரத. முதற்போர். ௬௯.)

**உகளுதல்**— 1. கடத்தல். 2. குதித்தல். 3. பாய்தல். (உ-ம்.) "வயலுகளுஞ்-சேலன்ன நீள்விழியாய்" (வாண. ௬0க.)

**உகளும்**—துள்ளும். (ஐங்குறு.)

**உகா**—உகாமரம்.

**உகாதி**—அருகன். [யுகாதி என்பதில் முதல் யகரங்கெட்டது.]

**உகாந்தகாலன்**— 1. சிவன். 2. விட்டுணு.

**உகாந்தநாதன்**—உகாந்தகாலன்.

**உகாந்தப்பிரளயம்**—உலகத்தின் காலமுடிவிலே வரும் அழிவு.

**உகாந்தம்**— யுகமுடிவு. (உ-ம்.) "உகாந்தத்து-மஞ்சினீடுருமொலியென" (பாரத. காண்டவ. உஅ.) [யுகாந்த.]

**உகாமை**— 1. அழியாமை. 2. உமிழாமை. 3. சிதறாமை. (உ-ம்.) "உண்கவுகாமைநன்கு" (ஆசார. க௬.) 4. நிலைகுலையாமை. 5. வெளிவிடாமை. (உ-ம்.) "யாண்டு-மூகாஅமைவல்லதேயொற்று" (வள். ருஅரு.)

**உகாரி**—உருத்திரமூர்த்தி.

**உகிர்**—நகம். (உ-ம்.) "வள்ளுகிர்கிள்ளைநாசி-யேய்ந்தளவற்று" (கந்தபு. மாயை. ருo.)

**உகிர்ச்சுற்று**—நகச்சுற்று.

**உகிர்நிலைப்பசாசக்கை**—மூவகைப் பசாசக்கைகளிலொன்று; அது: சுட்டுவிரலும் பெருவிரலும் உகிர்நுனை கவ்விநிற்பது. இது: "சிறந்தவுகிர்நிலை-யுகிர்நுனைகவ்வியது" என்னும் (சிலப். அரங்கே. கக. ஆற்பெறப்படும்.

**உகிரம்**—இலாமிச்சம்புல்.

**உகின்** —
**உகினம்**— } புளிமா.

**உகு**—உகுவென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும்.

**உகுணம்**—மூட்டுப்பூச்சி. [உகுணம்.]

**உகுத்தல்**—1.உதிர்த்தல்.(உ-ம்.)"பகலோன் பல்லுகுத்தவனே" (தேவார. திருக்காள. ௬. சுங.) 2.சிந்துதல்.(உ-ம்.)"நெடுங்கணீருகுத்து" (சிலப். பதிக. ௬உ.) 3. சொரிதல்.(உ-ம்.) "மென்பழனுகுத்ததேனும்" (நைடத. நாட். உo.) 4. விடுத்தல்.

**உகுத்தேன**— போகட்டதாக. (மலைபடு.)

**உகுதல்**—1. அழிதல். (உ-ம்.)"வினைகளுக" சி. சி. அ: உக. சுப்பி.) 2. உதிர்தல். (உ-ம்.) "போயுகுமிலைகளெல்லாம்" (சி. சி. க: கரு.) 3. கழலல். 4. சொரிதல். (உ-ம்.) "உகுநிணச்சேற்றினூன்றி" (பாரத. பதினொரா. கo.) 5. நிலைகுலைதல். (உ-ம்.) "நெஞ்சுகவாய்மலரன்ன கண்ணீர்மல்க" (வாண. கருo.) 6. வெளிவிடுதல்.

**உகுவு**—சிந்துதல். (உ-ம்.)"சோர்ந்துகுவன்ன வயக்குறுவந்திகைத்" (மதுரைக். சகரு.)

**உகைத்தல்**—1. எழுப்பல். (உ-ம்.) "பலபுரவிநீறுகைப்ப" (மதுரைக். கஅச.) 2. எழும்பல். (உ-ம்.) "அதில்வீழக்-கிட்டிநின்றுகைத்தேன்" (ஞானவா. சித்தன்.உச.) 3. செலுத்தல். (உ-ம்.) "மதகயமுகைப்பார்" (சேதுபு. திருநா. கo௬.)

**உகைதல்** — 1. எழுதல். 2. செல்லுதல். (உ-ம்.) "கரைவிடவுகையுநாவாயானும்" (கல்லாட. உo.)

**உகைப்ப**—எழுப்ப. (மதுரைக்.)

**உங்கண்**—உவ்விடம். (உ-ம்.) "எந்தனையரைக்கண்டிரோ - வுங்கணென்னவுரைத்தெழுமோதையே" (சேதுபு. அக்கினி. ௬உ.)

**உங்கரித்தல்**—உங்காரஞ்செய்தல்.

**உங்கள்**—நீங்களென்னும் பன்மை முன்னி

லைப்பெயர் வேற்றுமையேற்குமிடத்துத் திரிந்துவந்த ஒரு விகாரமொழி. (உ-ம்.) "உங்களுக்கொன்னலரும்பர்" (கந்தபு. மாயையுபதேச. கரு.)

உங்காரம்—1. அச்சுறுத்தும் ஒரு தொனி. 2. உம்மென்றொலித்தல். (உ-ம்) "உங்காரமது கரங்கள்" (பாரத. காண்டவ. ௩.) 3. தொனிசெய்தல். 4.நாணேதை. 5.முழங்குதல். (உ-ம்.) "உங்காரத்தினுரப்புமோதையாள்" (கந்தபு. அக்கினி. கரு.) [ஹுங்காரம்.]

உங்காரித்தல்—உங்காரஞ்செய்தல்.

உங்கு—உவ்விடம்.

உங்கை— 1. உன்மாதா. 2. உன்றங்கை. (உ-ம்.)"ஆக்கரியமூக்குங்கையரியுண்டாளென்முரை" (இராமா. சூர்ப்பந. கஉரு.)

உங்ஙனம்—1. உத்தன்மை. (உ-ம்.) "உங்ஙனநாரதனேதியதுணர்வுறு" (கந்தபு. தக்கன்மக. ருஉ.) 2. உவ்விடம். (உ-ம்.) "அதற்பி-னுங்ஙனம் பிறந்தயருவர்" (கந்தபு. அவைபுகு. க0ரு.)

உச்சக்கிரகம்—உச்சத்திலேநிற்குங்கிரகம். [மேடத்திற் சூரியனும் இடபத்திற் சந்திரனும் கடகத்தில் வியாழனும் கன்னியிற் புதனும் துலாத்திற்சநியும் விருச்சிகத்தில் இராகு கேதுக்களும் மகரத்திற் செவ்வாயும் மீனத்திற் சுக்கிரனும் உச்சக்கிரகங்களாம்.]

உச்சட்டம்—1. இலக்கு. 2. நேர்.

உச்சடம்—1.கோபம். 2.விரைவு.[உத்கட.]

உச்சடை— 1. இறுமாப்பு. 2. ஒருவகைப்புல்லு. 3. வழக்கம். [உத்பாடா.]

உச்சத்தனம்—உச்சக்கிரகம்.

உச்சத்துவம்—உச்சத்தன்மை.[உச்சத்வம்.]

உச்சத்தானம்—அதிகசுபநிலையிற்கிரகம் நிற்கும் இடம்.

உச்சதமம்—மிக அதிகமான உச்சம். [உச்சதம.]

உச்சதரம்—அதிகவுச்சம்.[உச்சதரம்.]

உச்சதரு— 1. உயர்ந்தமரம், 2. தென்னைமரம். [உச்சதரு: உச்ச- உயர்ச்சி. தரு - மரம்.]

உச்சதேவன்-கிருட்டிணன். [உச்சதேவ]

உச்சந்தம்—1. அதிகப்படல். 2. தணிவு.

உச்சந்தலை— உச்சிச்சிரசு. (உ-ம்.) "உச்சந்தலையோடிவையென்ப" (ஆசார. ரு.)

உச்சந்திரம்-இரவிற்கடைச்சாமம். [உச்சந்த்ர]

உச்சபாஷணம்—உரத்துப்பேசுதல்.[உச்சபாஷணம்; உச்ச; பாஷணம்- பேசுதல்.]

உச்சம்—1. உயர்ச்சி. (உ-ம்.) "உச்சமாமகத்தில்" (பாரத. காண்ட. சுரு.) 2. கிரகங்களின் ஐந்துநிலையிலொன்று; அது: நீசத்திற்கேழாமிடம். "உச்சவீடு" பார். 3. தலைக்குநேரிடம். (உ-ம்.) "உச்சமுற்றவெயிலர்க்கனொத்து" (பாரத. வேத். ருஎ.) 4. நுனி. 5. வல்லிசை. (உ-ம்.) "அந்தவுச்சமதுபிறப்பித்தல்லவிசையும்" (இரகு. அவதார. கரு.) [உச்ச.]

உச்சயநி—உச்சிநிநகரம்; அது: விக்கிரமாதித்தனுக்கு இராஜதானியாயிருந்தது[உஜ்ஜயநீ]

உச்சயிச்சிரவம்—உச்சைச்சிரவம். (உ-ம்.) "உச்சயிச்சிரவமென்னுமோங்குளைப்புரவிதோன்ற" (உபதேசகா. கூர்மாவ. ௩௪.)

உச்சயிநி—அவந்திநகரம்; இது: விக்கிரமாதித்தனுக்குத் தலைநகரமாயிருந்தது. (காஞ்சிபு. தலவி. கசு.) [உஜ்ஜயிநீ: உத்- மேல். ஜயநீ- ஜெயித்தது.]

உச்சர்ச்சநம்— வேதமோதி நிறுத்துவதற்குமுன் செய்யத்தக்க ஒரு விரதம். (மநுதரும. ச. கசு.)

உச்சரித்தல்—இதழ்முதலியவற்றின் முயற்சியால் எழுத்துக்களைப் பிறப்பித்தல். (உ-ம்.) "ஓசைதருமஞ்செழுத்தை விதிப்படியுச்சரிக்க" (சி. சி. கூ: க.)

உச்சரிப்பு—1. எழுத்தினோசை. 2. உச்சரித்தல்.

உச்சலம்—1. அசைதல். 2. அறிவு. 3. மநம். [உச்சலம்.]

உச்சவாசகசெபம்— சொற்களை உரத்துச்சொல்லிச் செய்யுஞ்செபம்; இதனை, "உரைவாசகமற்றுச்சமுபாமிசு வென்றிரண்டாம்" என்னும். (சூத. ஞான. கச: கரு.)

உச்சவானம்— தலைக்கு நேராக மேலேதோன்றும் ஆகாயம். (உ-ம்.) "வட்டமணித் தேரவனுச்சவானத்தடைந்தான்" (பாரத. துருவாசமுநி. ௩.)

உச்சவீடு— ஒரு கிரகம் உச்சநிலையில் நிற்கப்பெற்ற இராசி; ஆதித்தன், சந்திரன், செவ்வாய், புதன், வியாழன், சுக்கிரன், சநியாகிய கிரகங்களுக்கு மேடம், இடபம், மகரம், கந்நி, கர்க்கடகம், மீநம், துலாம் முறையே உச்சவீடுகளாம். இது "மறிவிடைமான்மகள் நள்ளிமீன்வாணிகன் ஞாயிறுதி-செறிவுறுமுச்சம்" என்னும், விதாந. நட்பாட்சி. உ-ம் பாட்டாற்பெறப்படும்.

**உச்சற்கம்**—அபாநம்.
**உச்சாகம்**—முயற்சி.
**உச்சாசநம்**—கொலை. (உ-ம்.) "உச்சாசநஞ் சொல்வி" (பாரத. ஐந்தா. க.) [உஜாஸநம்]
**உச்சாட்டியம்**—ஓட்டல்.
**உச்சாடநம்**— 1. அழித்தல், கெடுத்தல். 2. கலைஞானம் அறுபத்துநான்கினொன்று; அது: பேயகற்றுதன்முதலியவைகளைப்பற்றியது. 3. துரத்துதல். 4. மந்திரம் முதலியவைகளால் ஒருவனைக்கெடுத்தல். 5. வேரோடுபிடுங்கல். [உச்சாடந: உத்- மேல். சட- போதல்.]
**உச்சாணி**— 1. உச்சி. 2. உயர்ப்பு.
**உச்சாயம்**— உற்சாகம். (உ-ம்.) "உச்சாய மாகமுகமன்கள் கோடியுரைசெய்திருந்தபொழு தில். (நல். பாரத. வநம்புகு. கசுரு.)
**உச்சாரணஞ்ஞன்**– பலபாஷைகளையும் உச்சரிக்க அறிந்தவன். [உச்சாரணஜ்ஞ:]
**உச்சாரணம்**— 1. உச்சரித்தல். 2. உச்சாடநம். [உச்சாரணம்.]
**உச்சாரணை**—உச்சாரணம். (உ-ம்.) "துப்புடனுச்சாரணையினல்லான்மிகத்தோன்றரிதே" (வீரசோ. யாப்பு. கூரு.)
**உச்சாரம்**— 1. உச்சரித்தல். (உ-ம்.) "பீசாக்கரத்தினுச்சாரஞ்சாக்கிராவத்தை" (சி-சி. ச: கூரு. மறை.) 2. மலம், பகரவீகாரம். (இதோப. கூ.) 3. மிக்கவுயர்ச்சி. [உச்சார: உத்- மேல். சர் -போதல்.]
**உச்சாரிதம்**— உச்சரிக்கப்பட்டது. [உச்சாரித.]
**உச்சி**— 1. ஆண்மயிர். 2. உச்சந்தலை. 3. தலை. (உ-ம்.) "ஊராரையுச்சிமிதித்து" (கலி. கOச.) 4. தலைக்குநேரிடம். 5. நடு. 6. நவிரம். (பிங்கல.) 7. நாய். (பிங்கல. உருகக.) 8. நுனி. (உ-ம்.) "மாற்றரும்பசும்பொனின்மாடத்துச்சிமேல்" (சிந்தா. நாமக. ருஅ.) 9. மத்தியாநம். (சூ. நிகண். க. கஅ.) 10. மயிர்முடி.
**உச்சிக்கிழான்**— சூரியன். (உ-ம்.) "உச்சிக் கிழான்கோட்டம்" (சிலப். கஞ. கக.) [உச்சி- உச்சிப்பொழுது. கிழான் - உரியவன்.]
**உச்சிக்குடுமி**—உச்சிச்சிகை.
**உச்சிக்குழி**—உச்சந்தலைப்பள்ளம்.
**உச்சிக்கொண்டை**— உச்சியின்மயிர்முடி.
**உச்சிக்கொம்பன்**— 1. உச்சியிற்கொம்புள்ளமாடு. 2. காண்டாமிருகம்.
**உச்சிச்சுட்டி**—ஓராபரணம்.
**உச்சிச்செடி**—புல்லுருவிப்பூண்டு.

**உச்சிட்டசாங்கரியம்**—ஒரு பாத்திரத்திலே பலர்கூடியுண்கை. [உச்சிஷ்ட- எச்சில். ஸாங்கர்ய - கலப்பு.]
**உச்சிட்டம்**— 1. எச்சில். (உ-ம்.) "ஆசமநமுச்சிட்டமன்று" (சைவச. பொது. சுச.) 2. கைவிடப்பட்டது. [உச்சிஷ்ட.]
**உச்சிட்டமோதநம்**–மெழுகு. [மோத- மகிழ்ச்சி.]
**உச்சித்தி**— நிருமூலமாக்கல், முற்றுமழித்தல். [உச்சித்தி:]
**உச்சித்திலகம்**—ஒரு பூஞ்செடி.
**உச்சிதம்**— 1. அரியது. 2. அழகு. 3. உசிதம். 4. உயர்ச்சி. 5. கொடை. 6. தகுதி. 7. நெருஞ்சில். 8. மேன்மை. (உ-ம்.) "உச்சிதமெய்ப்புற" (திருப்பு.கசசு.) [1,6,8. உச்சித.]
**உச்சிந்நம்**— 1. அழிக்கப்பட்டது. 2. வெட்டப்பட்டது. [உச்சிந்ந.]
**உச்சிநி**—விக்கிரமாதித்தனிருந்தவூர்.
**உச்சிநிமாகாளி**— 1. ஒரு காளி. 2. ஒரு பட்டணம்.
**உச்சிப்பிளவை**—உச்சந்தலையில்வரும் பிளவைநோய்.
**உச்சிப்பின்னல்**—உச்சிச்சடை.
**உச்சிப்பொழுது**—மத்தியாநம்.
**உச்சிமல்லிகை**— ஊசிமல்லிகை.
**உச்சிமலை**—செங்குத்தானமலை.
**உச்சிமோத்தல்**—உச்சிச்சிரசை மோத்தல். (உ-ம்.) "தனிப்புதல்வன்றனையணைத்துத் தகவுச்சிமோந்து" (கோயிற். வியாக். உ.)
**உச்சிரட்டம்**—தள்ளப்பட்டது.
**உச்சிரதம்** — 1. உயர்ச்சி. 2. பிரண்டைக் கொடி. 3. பிறத்தல். [1, 3. உச்ச்ரித.]
**உச்சிரதன்**—பிறந்தவன். [உச்ச்ரித:]
**உச்சிராயம்**—1. உயரம். 2. முக்கோணசிர்த்திட்டவரி.
**உச்சிரயோகன்**—கசவான்.
**உச்சிராயம்**—உயரம். [உச்ச்ராய.]
**உச்சிருட்டர்** - காலதத்துவத்திலிருக்கும் ஒரு ருத்திரர். (வி-ணி. உஎச.)
**உச்சிவிடுதி**— மத்தியானநேரவிடுதலை.
**உச்சிவேர்**—மூலவேர்.
**உச்சின்னம்**—சமப்படுதல்.
**உச்சீவனம்**—உய்தல்.

உச்சீவித்தல்—பிழைத்தல்.(தாயு.பரா.ருரு. உரை.)

உச்சுக்காட்டல்—நாயையேவி விடுதல்.[உய்த்து என்பதன் விகாரம்.]

உச்சுச்சேனல்—நாயைக்கூப்பிடல்.

உச்சுதல்—1. இலக்குக்கெறிதல். 2. தள்ளுதல். 3. பிறர்பொருளைக்கவர்தல். 4. வெல்லுதல்.

உச்சுவலம் – 1. ஆசை. 2. எரிதல். 3. பொன். 4. பிரபை. [உஜ்ஜ்வல.]

உச்சுவாசம் — 1. சுவாசத்தையுள்ளேயிழுத்துவிடுதல். 2. நூலினுட்பிரிவு.

உச்சூடை—கொடிக்கம்பநுனி.

உச்சூநம்–1.கொழுப்பு. 2.பருமை.[உச்ச்—சூநம்.]

உச்சேடணம்—மிச்சம். [உச்சேஷண.]

உச்சேதம் — 1. அழித்தல். 2. வெட்டல். [உச்சேத.]

உச்சைச்சிரவம் — இந்திரன்குதிரை. [உச்சை:ஶ்ரவஸ் : உச்சைஸ் - உயர்ந்த, ஶ்ரவஸ் - காது.]

உச்சைச்சிரவா — உச்சைச்சிரவம். (உ-ம்.) "அவர்காண வணங்குளதுச்சைச்சிரவா-வென்னு மகவான்புரவி" (சேதுபு. கத்துரு. எ.)

உசகம்—ஆமணக்கு.

உசநம் — 1. உபபுராணம்பதினெட்டினொன்று. 2. தருமநூல் பதினெட்டினொன்று. (பிங்க. சசசு.)

உசநன் — சுக்கிரன். (உ-ம்.) "உசநவப்பெயர்க் கவியுதித்த" (இராமா. ஆறுசெல். கசு.) [உஶநஸ்.]

உசநார் — சுக்கிரன். (உ-ம்.) "உசநார்-தந்த மூப்பை நீர்கொண்மின்" (பாரத. குரு. உங.)

உசநிதம்—நெருஞ்சில்.

உசல்— }
உசலம்— } ஒருமரம்.

உசவு—கரியும் எண்ணையும் (சிந்தா.)

உசற்காலம்–1. சூரியனுதித்தற்கு முன்னைந்து நாழிகையுள்ளகாலம்.

உசா— 1. ஆராய்ச்சி. (உ-ம்.) "உணர்ச்சிப ட்சாகவு சாவண்டியாக"(அறநெறிச்.கசுக) 2. ஒற்றர். 3. சூழ்ச்சி. ( உ-ம். ) "உசாவேசூழ்ச்சி" (தொல்.சொல்.ஙஎ0.) 4. மநநம். (உ-ம்.) "துன் ப ங்கதையும் வசநமுமுசாவுமத்தொல்பொருட் பொருட்டாகி" (ஞாநவா. லீலை. ஙஅ.)

உசாக்கேட்டல்—ஆலோசனைகேட்டல்.

உசாக்கையர் — ஆலோசனை செய்வோர். (உ-ம்.) "ஒன்றியமோநர்போல வுசாக்கையரொருங்குபோனார்" (இரகு. அயனெ. கஉ.)

உசாத்தாநம் — ஒருதலம். (தேவார. திருஞாந.)

உசாத்துணை—உசாவுதுணை.

உசாதேவி—சூரியன்மனைவியரிலொருத்தி. (சி. சி. பர. உலோகாய. கசு. உரை.)

உசாபதி—அநிருத்தன். [உஷாபதி.]

உசார்—சாக்கிரதை. [இந்துஸ்.]

உசாவல்—உசாவுதல்.

உசாவு— 1. ஆராய்வு. 2. உசாவென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 3. ஒற்றர்.

உசாவுதல் — 1. ஆராய்தல். 2. எண்ணல். (உ-ம்.) "ஆங்கொர்கங்குலினழைத்து நீடரசியலுசாவி" (பாரத. வாரணா. கஉஅ.) 3. வினவுதல். (சிந்தா.)

உசாவுதுணை—ஆலோசனைத்துணைவன்.

உசி—1. கூர்மை. 2. விருப்பம். [உஶி.]

உசிதசமயம்—தக்கசமயம்.

உசிதம் — 1. அழகு. 2. அறியப்பட்டது. (உ - ம்.) "உசிதமொன்றுரைக் கேனுதின்நீக்கடையசிதவெங்கடலுண்டவியாதெழ" (இரகு. குசன். அசு.) 3. உத்தமம். 4. மேன்மை. 5. யோக்கியமானது, தக்கது. (உ - ம்.) "துவக்கு, ஜிஹ்வா, கிராணங்களாகிற மூன்று இந்திரியங்களுந் தன்னைப்பொருந்தின உசிதவிஷயங்களையே கிரகிக்கும்" (சி.சி. உ : சுக. சிவாக்.) [உசித.]

உசிதன்—பாண்டியன்.

உசிர் — உயிர். (உ-ம்.) "உசிர்க்கொலை பல நேர்ந்து" (தேவார. திருமுரு. ங. சுங்.) [உயிர், உசிரென மருவிற்று.]

உசிரம் — 1. இடபம். 2. விலாமிச்சைவேர். (தைல. தைலவ. கங.) 3. கிரணம். 4. மிளகு. [1, 3. உஶ்ரம்.]

உசில்—சீக்கிரிமரம்.

உசிலம்—உசில். (உ-ம்.) "ஆமண்டத்தவிப் படியொன்றறுகுதிரி நிசியுசிலத்ததளிண்டைந் தும்" (தைல. தைலவ. கஉ.)

உசிலை—உசிலம்.

உசீரம் — 1. இலாமிச்சைவேர். 2. வெட்டிவேர். [உஶீரம்.]

உசு—உளுவென்னும் புழு.

உசுக்கல்—ஏவுதல்.

உசுப்பல்—உசுப்புதல்.

உசுப்புதல்—எழுப்புதல்.
உசும்புதல்—இயங்குதல்.
உசுவாசநிசுவாசம்—மூச்சுப்போக்குவரவு. (உ - ம்.) "உடலில்வாயுவானது போகாமல் உசுவாச நிசுவாசங்களைப்பண்ணிக்கொண்டிருக்கிற சுழுத்தியவத்தையிலுமறிவில்லையே" (சி. சி. ௩. ௪. சிவாக்.)
உசுவாசம்—உச்சுவாசம்.
உசை—1. இரவு. 2. காலை. 3. மாலை. 4. வாணன் மகளாகிய உசை. (உ-ம்.) "அசுரனீன்றவுசையொடு" (உபதேச. வாணு. ௧௦௨.)
உஞ்சட்டை—மெலிவு.
உஞ்சம் — சிதறிய தானியங்களைப்பொறுக்குதல். (உ-ம்.) "உஞ்சவிருத்தி" பார். [உ௦௨௦.]
உஞ்சல்—ஊஞ்சல். (உ-ம்.) "உஞ்சனிகர்-காதிற்கும்" (வெங்கையுலா. தொடை. ௭அ.)
உஞ்சவிருந்தி — சிதறியதானியங்களைப் பொறுக்கிச் சீவித்தல். "உஞ்சநல்விருத்தியிருதமாம்" என்னுங்காஞ்சிபு. ஒழுக். ௩௯-ம்செய்யுளால் அறிக. [உ௦௨௨ருத்தி.]
உஞ்சு— உய்ந்து என்னும் வினையெச்சம் விகாரப்பட்டுநின்ற ஒருமொழி. (உ - ம்.) "உஞ்சிவர் போய்விடி னுய்க்குகனென்றெனை யோதாரோ" (இராமா. குகப். ௧௪.)
உஞ்சேனைமாகாளம்—உஞ்சைநகரம். (உ-ம்.) "உஞ்சேனைமாகாளம்" (தேவார. க்ஷேத்திரக்கோவை. அ. திருநாவு.)
உஞ்சை— 1. அவந்திநகரம். (உ-ம்.) "உஞ்சையம் பதியும்" (சிலப். கடலாடு. உ௯.) 2. உச்சயினி நகரம். (மணிமே.)
உஞற்றல்—உஞற்றுதல்.
உஞற்று—1. உற்சாகம். 2. ஊக்கம். 3. இழுக்கு. 4. முயற்சி. (உ-ம்.) "மாண்டவுஞற்றிலவர்க்கு. (வள். ௬௦௪.) 5. வழக்கோதுகை.
உஞற்றுகை—ஊக்குதல். (உ-ம்.) "உள்ளமுஞற்றுகையினாலே" (கலி. பாலை. ௧அ. உரை.)
உஞற்றுதல் — 1. செய்தல். (உ-ம்.) "ஊறுஞற்ற முன்னுவார்கட்கு" (தணிகை. நைமிச. ௪.) 2. முயற்சிசெய்தல். (உ - ம்.) "உன்னருங் கடப்பினிலுஞற்றியோடலும்" (கந்தபு. மார்க்கண். அ௫.) 3. வழக்கோதுதல்.
உட்கட்டு—1. உள்ளூரம். 2. மாதர்கழுத்தோடு ஒட்டிநிற்கக்கட்டும் ஒரு ஆபரணம். 3. வீட்டினுள்ளறை.
உட்கத்தக்கது—அஞ்சத்தக்கது. (சிந்தா.)
உட்காணம்—அந்தக்கரணம். (உ-ம்.) "புணருமுட்கரணமாக்கி" (சி. சி. ௪: ௧.)
உட்கரிஷம்—1. அதிசயம். 2. விளிம்பு.

உட்கருத்து — 1. உட்பொருள். 2. கருத்துரை. 3. மனக்கருத்து, வெளிவிடாமற்கொண்டிருக்கும் பிரியம். 4. வெளிவிடாமற்கொண்டிருக்கும் எண்ணம்.
உட்கருவி — சீவான்மாவின் அந்தக்கரணங்கள். அவை: மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்பன. (சி. சி. உ: ௬௩.)
உட்கருவியினுட்கருவி — சீவான்மாவினது அந்தக்கரணங்களுக்கு முட்கருவியா யிருக்கும் காலம், நியதி, கலை, வித்தை, இராகம் என்னுந் தத்துவங்கள். (சி. சி. உ: ௬௩.)
உட்கல்—1. அச்சக்குறிப்புக்காட்டல். 2. அஞ்சுதல். (உ-ம்.) "உட்கப்படாரொளியிழப்பரெஞ்ஞான்றும்" (வள். ௯௨௧.) 3. நிலைகெடுதல், மடிதல். (உ-ம்.) "உருவுமிளமையுமொண்பொருளுமுட்கு - மொருவழிநில்லாமை" (நாலடி. பழ. உ.) 4. வெட்குதல். (உ-ம்.) நகர்ப்புறம்போயுட்குநெஞ்சராய். (திருவிளை. சமணரை. உ௫.)
உட்கள்ளம் — 1. உள்வஞ்சகம். 2. கட்டியினுள்விஷம்.
உட்களவு—உள்வஞ்சகம்.
உட்காங்கை—உட்சூடு.
உட்காத்தல்—இருத்தல்.
உட்காந்தல்—உட்சுரம். (உ-ம்.) "மூக்கடைப்புட் காந்தனீரிழிவு" (தைல. தைலவ. ௧௪௦.)
உட்காய்ச்சல்—சரீரத்தின்புறத்தே தோன்றாமல் உள்ளேகாயுங் காய்ச்சனோய்.
உட்கார்—உட்காரென்னேவலுந் தெரிநிலைவினைப்பகுதியும்.
உட்காருதல்— இருத்தல். (உ-ம்.) "உட்கார்ந்த பிராமணர்" (பராசர. ௧௭௪. பக்.)
உட்கி—அஞ்சி. (சிந்தா.)
உட்கிராந்தல்— உள்வெப்பத்தினுலிளைத்துப் போதல்.
உட்கு — 1. அச்சம். (உ-ம்.) "உட்குடைச்சீறூரொருமகன்" (சிலப். வேட்டுவவரி. உரைப்பாட்டுமடை. அ௪. பக்.) 2. உட்கென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 3. நாணம்.
உட்குகை—உட்குதல்.
உட்குத்துப்புறவீச்சு—சுரற்குலையைப்பற்றி இசிவு உண்டாக்கும் ஒருநோய்.
உட்குதல்—1. அச்சத்தைக்குறிக்கும் ஒருமனவிகாரம். 2. அஞ்சுதல். 3. நாணுதல். 4. மடிதல்.
உட்குற்றம்—உட்பகை. அவை: காமமுதலியன.
உட்குறிப்பு—உள்ளக்குறிப்பு.
உட்கூதல்—உட்கூதிர்.
உட்கூதிர்—உட்குளிர்.

**உட்கைச்சுற்று**—இடக்கைச்சுற்று.

**உட்கொள்ளுதல்**—1. அருந்துதல். (உ-ம்.) "ஆலமாமிடற்றோற்கான வமலமாம் பொருளை யேற்றுச்-சீலமோடணிந்துட்கொண்டு"(கந்தபு. திருக்கல். அரு.) 2. உள்ளடக்குதல். (உ-ம்.) "பாலையுட்கொண்டிடு செருக்கால்" (கந்தபு. ஆற்று. கசு.) 3. மநசிலேவைத்தல். (உ-ம்.) "நன்னலமாதரை நண்ணுமின்பமே-யுன்னருமுத்தியென்றுட்கொள்வார்சிலர்" (கந்தபு. பாயிர. உஅ.) 4. விழுங்கல்.

**உட்கோபம்** — வெளியிலேதோன்றாக்கோபம்.

**உட்கோள்**—1. கருத்து. (உ-ம்.) "என்னுட்கோளிது" (பாரத. நிரை. எ.) 2. கோட்பாடு.

**உட்சங்கம்**—அகச்சங்கம்.

**உட்சமயம்**—அகச்சமயம்; அவை: சைவமுதலியன. (உ-ம்.) "எண்பாலாமுட்சமயம் புறச்சமயமென்னுமீராறும்"(உபதேச.சிவகாட்சி.கரு.)

**உட்சாடை**—1. இரகசியங்களைச்சமிக்கையாலறிவிக்கை. 2. உட்கருத்து. 3. குழூஉக்குறி.

**உட்சுரம்** — ஒருவகைச்சுரம். (உ-ம்.) "உட்சுரம் புண்மேகச்சூலைர்த்தலும் போமுணரே" (தைல. தைலவ. ககரு.)

**உட்சூத்திரம்**—1. இலேசானவகை. 2. உட்குறிப்பு. 3. உள்ளுபாயம். 4. நுட்பமானவகை. 5. மூலகாரணம். 6. மூலசூத்திரம்.

**உட்செல்லல்**—உட்போதல்.

**உட்சேபணம்** — 1. எழும்புதல். (தர்க்கபா. சுO. பக்.) 2. எறிதல். 3. விசிறி. [உ௳க்ஷப ணம்.]

**உட்சொல்** — (பரதம்.) நெஞ்சொடுகூறல். (உ-ம்.) "ஆகாயச்சொல்" பார். (திருவிளை. கான்மா. கச. உரை.)

**உட்டணகாசம்**—வெப்பக்காசம்.

**உட்டணகாரகன்** — சூரியன். (சோதிடகடல்.) [காரக: செய்கிறவன்.]

**உட்டணசஞ்சீவி**–1. நீர். 2.பிரண்டைக்கொடி. [உஷ்ணஸஞ்ஜீவிநு.]

**உட்டணசிகை**—செவ்வாய், சநி, சூரியன் நின்ற இராசிகளின் கால். (விதாந. குணகுண. கO. உரை.) அச்சுவிநிக்கும் பூரத்துக்கும் முதற்காலும் பரணிக்கும் அநுடத்துக்கும் நாலாங்காலும் உத்தராடத்துக்கும் சதயத்துக்கும் இரண்டாங்கால் மூன்றாங்கால்களுமாம். [உஷ்ணசிகா.]

**உட்டணசைத்தியம்**—வெப்பம் அல்லது காரமுடையதாயிருந்து குளிர்மையைக் கொடுக்குந்தன்மை.[வெ.அ.௫௦.]

**உட்டணத்துவம்**- உட்டணதை.[உஷ்ணத்வம்]

**உட்டணதை** — உட்டணத்தன்மை. [உஷ்ணதா.]

**உட்டணம்**—1. கார்ப்பு, உறைப்பு. 2. மிளகு. 3. வெப்பகாலம். 4. வெப்பம். 5. வெய்யில். [1, 3, 5. உஷ்ணம்.]

**உட்டணருசி**—சூரியன்.

**உட்டணவாதக்கிராணி**—ஒருநோய்.

**உட்டணவாயு**— உட்டணங்கண்டு உடலிற்கிளரும் வாயு.

**உட்டணாசகம்**—குளிர்காலம்.[உஷ்ணாலஹம்.]

**உட்டணாதிக்கம்**—அதிகவுட்டணம்.

**உட்டணி** — உட்டணியென்னேவலுந்தெரிநிலை வினைப்பகுதியும்.

**உட்டணித்தல்**—வெப்பங்கொள்ளல்.

**உட்டணோதகம்** — வெந்நீர்.[உஷ்ணோதக: உஷ்ண- வெம்மை. உதக- நீர்.]

**உட்டணோபகமம்**–வேனிற்காலம்.[உஷ்ணோபகம: உஷ்ண - வெம்மை. உபகம - அடைதல்.]

**உட்டிணிக்கு**—ஓரடி எழுசைகொண்டதானநான்கடிகளையுடைய ஒருசந்தம்.

**உட்டிணிகை**—மணிபூரகத்தின் பத்மதளங்கள் பத்தனுள் "ஊ" என்னுமக்கரம் நிற்கும் ஆறாம் பத்மதளத்திற் கதிதேவதை.(சி. சி. அ : உக. மறை.)

**உட்டிணீடம்**—1. தலைப்பாகை. (உ-ம்.)"உரித்துட்டிணீடந்தானும்"(சைவச. ஆசா. சுசு.)2. முடி.[உஷ்ணீஷம்.]

**உட்டிரம்**–1. களர்நிலம். 2. தேட்கொடுக்கிப்பூண்டு. 3. நீர். 4. முட்செவ்வந்தி.

**உட்டுளை**—குழல், புரை.(பிங்கல. உஉஅசு.)

**உட்டுறவு**—உள்ளத்துறவு. (உ-ம்.)"இத்தவத்தால் உட்டுறவுவரும்; இவ்வுட்டுறவால் மெய்யுணர்வு பிறக்கும்." (வைராக்- தீ. கஅ. உரை.)

**உட்டெளிவு**—1. உட்சாரம். 2. உட்பக்க அளவு. 3. உள்வைரம். 4. தெளிந்தபுத்தி. (உ-ம்.) "உட்டெளிவில்லாநங்கை" (கந்தபு. தெய்வ. கஉஎ.)5. பழுதுதிருத்தியெடுத்துக்கொண்டது. 6. பேரறிவு. 7. வடித்தசாறு.

**உட்டேட்டம்**— 1. உட்சம்பத்து. 2. மநநாட்டம்.

**உட்ணாதிக்கம்**—அதிகவெப்பம்.

உட்ஞேதகம்—வெந்நீர்.

உட்பகை — 1. புறப்பகைக்கு இடனுக்கிக் கொடுத்து அதுவெல்லுந்துணையும் உள்ளாய்நி ற்கும் பகை. (வள். அதி. அக.) 2. மநத்தினிக மும் காமம் முதலிய அகத்துள்ள அறுபகை. (உ-ம்.) "பற்றற்றயோகப்படையாலுட்பகைக ளாறு - முற்றத்துரந்து" (பாரத. சம்பவ. ருச.)

உட்படல்—உட்படுதல்.

உட்படி—தராசின் படிக்கல்லுக்குப்பொருள் எவ்வளவு குறைவென்பதை அறிதற்கு இடும் சிறுபடிக்கல்.

உட்படுத்தல்—1. அகப்படுத்தல். 2. உட்செலுத்தல், 3. உடன்படுத்தல். 4. உள்ளாகச்செய்தல்.

உட்படுதல்—1. இடவெல்லையினுள்ளாதல். 2. ஏற்படுதல். 3. காலவெல்லையினுள்ளாதல். (உ-ம்.) "ஆறுட்பட்டவையிருகாலத்து" (கந்தபு. அக்கினி. உ0ரு.)

உட்பத்தியம்— மருந்துண்ணுங்காலத்திலே பெண்போகமின்றியிருத்தல்.

உட்பந்தி—அகப்பந்தி.

உட்பலம்—அகத்துள்ளபலம். அவை. சேநா பலம், துணைவர்பலம், திரவியபலம், தேகபலம் என்பன.

உட்பற்று—அகப்பற்று.

உட்பிரவேசம்—உட்பிரவேசித்தல்.

உட்பிரவேசித்தல்—உள்ளேபோதல்.

உட்புகல்—உள்ளேபோதல்.

உட்புரை—1. அந்தரங்கம். 2. உட்டுவாரம். 3. உள்மடிப்பு.

உட்புறம்—உட்பக்கம்.

உட்பூசை—இருதயத்திலே தியாநமார்க்கமாகச் செய்யும்பூசை. (சி. சி. உ: உஅ. நிரம்.)

உட்பெறுபொருள் — பெற்றசொற் பொருளைச் சொல்லுமிடத்துமற்ருெருசொற்பொருள் வந்துநிற்பது. (உ - ம்.) "உட்பெறுபொருளைச் செப்புங்காலைப்-பெற்றசொற்பொருளைச் செப்புதன் வழியே-மற்ருெருசொற்பொருள் வந்து நிற்பதுவே" (வீரசோ. பொரு. கக. முல்லை.)

உட்பொருள்—1. மறைந்தபொருள். 2. வாக்கியத்திலே மறைந்திருக்கும்பொருள். (உ - ம்.) "வேதத்தினுட்பொருள்."

உட்போடுதல்—வசமாக்கிக்கொள்ளுதல்.

உடக்காலம்—விடியற்காலம்.[உஷக்காலு.]

உடக்கு—திருகாணிச்சுரையினுட்சுற்று.

உடங்கு–1. ஒருங்கு. (உ-ம்.) "உடங்குசெல் பவர்க்கிடையூருென்றின்றியே" (தணிகை. நாட். ருஎ.) 2. கூடிநிற்றல். 3. சேர. (சிந்தா.)

உடசத்தோல்—வெட்பாலைப்பட்டை.(உ-ம்.) "ஓமமிச்சிங்கம் பாதியுடசத்தோற்கழற்பருப்பு." (தைல. தைலவ. ருக.)

உடசம் — 1. பன்னசாலை. (உ-ம்.) "உடச மேற்படரு-மாடன்மென்கொடி" (சேதுபு. நைமிச. கஉ.) 2. வீடு. 3. வெட்பாலை. (உ-ம்.) "அவுரிசயை யாயிலிருதாருவுடசமத்தை" (தைல. தைலவ. எஉ.)[1, 2.உடஜ: உட - இலை, ஜம் - பிறந்தது.]

உடணம் — 1. இஞ்சிப்பூண்டு. 2. மிளகுக் கொடி. [உஷணம்.]

உடந்தை—1. உரித்து. 2. ஒன்றுபட்டிருத்தல்.(உ-ம்.)"அவரிவனைவிடாதேயுடந்தையாய்" (சி. சி. அ : உக.) 3. கூட்டுறவு. (உ-ம்.) "மனைவியா மநந்தையோடுடந்தையாய்" (மச்சபு. ஆதிசிருட்டி. கரு.)

உடப்பு—தொரட்டுமுள்ளிச்செடி.

உடம்—1. இலை, புல்லு. [உட.] 2. விடியற்காலம்..[உஷஸி.] 3. வேலமரம்.

உடம்படல்-உடன்படல் விலக்கணி. (உ-ம்.) "கையறலுடம்படல்வெகுளியிரங்கல்" (தண்டி. பொருளணி. சச.)

உடம்படிக்கை–1. சம்மதம். 2. பொருத்தச்சீட்டு. 3. பொருத்தம்.

உடம்படுதல்—சம்மதப்படுதல்.

உடம்படுமெய்—உயிரையுமுயிரையும் உடம்படுத்துமெய். (நன். கசுஉ. உரை.) [வந்த உயிருக் குடம்பாக அடுக்குமெய்.]

உடம்படுவிலக்கு—விலக்கு என்னும் அலங்காரவிரியுள் ஒன்று; அஃது, உடன்பட்டார்போலக் கூறி விலககுவது. [உடன்படல் விலக்குப் பார்.]

உடம்பாட்டுவினை — உடம்பாட்டுக்கருத்தையுள்ளிட்டவினை. (உ-ம்.) "அருந்துதற்கோ என்னும் வினை உடம்பாட்டுவினை" (சிவப்பிர. 2. எ. சிதம்பர.)

உடம்பாடு—1. சம்மதம். (உ-ம்.)"யானடைந்த பணிக்குடம்பாடருளுகென்முன்" (சேதுபு. அகத்தி. ஙo.) 2. மநப்பொருத்தம். (உ-ம்.) "உடம்பாடிலாதவர் வாழ்க்கை" (வள். அகo.) [உடம் - உடன். பாடு - படுதல்.]

உடம்பிடி—வேலாயுதம். (உ-ம்.) "உடம்பிடி புரையுமொண்கண் மோகிநி யொருத்திக்காக" (கந்தபு. தெய்வ. கoச. [உடம்பு - சரீரம். இடி - இடிப்பது.]

உடம்பு—1. சரீரம். (உ-ம்.) "உடம்புநன்றென்றுரையார்" (ஆசாரக். ருக.) 2. (இலக்கணம்) மெய்யெழுத்து. (உ-ம்.) "உயிருமுடம்புமா முப்பது முதலே" (நன். ருக.)

உடம்புக்கீடு—கவசம். (சிந்தா.)

உடம்புபுரட்டுதல்—1. சரீரத்திலிருந்து அழுக்கைத்திரட்டியெடுத்தல். 2. பிள்ளைப்பருவச் செயலிலொன்று.

உடம்பெடுத்தல் — 1. உடம்புகொழுத்தல். 2. பிறத்தல். (உ-ம்.) "எற்றுக்குப்பெண்களாகவுடம்பெடுத்துழிதந்தேம்" (தணிகைப். வள். உசஅ.)

உடம்பை—கலங்கனீர்.

உடம்பொடுபுணர்த்தல்—நூலுக்குரிய உத்திவகையுள் ஒன்று; அஃது, ஒருவிஷயத்தைச் சொல்லுங்கால் அதனோடு சம்பந்தப்பட்டவேறுமொருபொருள் அச்சொற்களிலே உள்ளுறையாக அமைந்து கிடக்கவைத்தல். (நன். கச. உரை.)

உடர்—உடல். (உ-ம்.) "உடரெலாமுயிரிலாவெனத்தோன்று மூலகத்தே" (இராமா. குகப்- எ0.)

உடல்—1. உடலென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும், வினைத்தொகையும். (உ-ம்.) " உடல்விடமூறிச்சொரிதுளையெயிற்றினன் " (திருவிளை. நாகமெ. அ.) 2. சந்திரலக்கினம். (விதான. குணகுண. ருக. உரை.) 3. சரீரம். (உ-ம்.) "உலகுடல்கரணங்காலம்" (சி. சி. உ உஉ.) 4. திரவியம். (உ-ம்.) "வேண்டுடலீந்திடல்" (தைல. பாயிர. ௩.) 5. மெய்யெழுத்து. ( உ-ம். ) "உடன்மேலுயிர்வந்தொன்றுவதியல்பே" (நன். மெய். க.)

உடல்வாசகம் — உறுதிப்பத்திரத்தினும், கடிதத்தினும் முகவாசகத்தையும் இறுதிவாசகத்தையும் நீக்கி எழுதப்பட்டிருக்கும் வாசகம்.

உடல்வாயு—வாயுபூதத்தினது மூவகைப்பட்ட காரியதத்துவங்களுளொன்று; அது: நிற்றல், நடத்தல், தத்தல், சுழலுதல், சலித்தல் என்னுங்குணங்களையுடையது. (உ-ம்.) "மற்றுடல்வாயுநிற்றனடத்தறத்தல் சுழல்சலித்தருனே" (தசகாரியவிளக்கம்.)

உடல்வேலை—பரும்படியானவேலை.

உடலக்கண்ணனன்—இந்திரன். (உ-ம்.)"உடலக்கண்ணனுலகுகவர்ந்துண்ட" (கல்லாட. ௩.) [சரீரத்திலாயிரங்கண்கள் உளனுதலில், இப்பெயர் வந்தது.]

உடலம்—சரீரம். (உ-ம்.) "என்னுடலந்தொடுவாய் சுடர்த்திங்காள்" (நைடத. சந்திர. ரு.)

உடலல்—1. கோபத்தோடுபொருதல். 2. சினக்குறிப்புக்காட்டல். 3. சினத்தல். 4. பகைத்தல். 5. வருத்தல்.

உடலன்— 1. சரீரமுடையவன். ( இராசவைத்.) 2. செல்வமுடையவன். (இராசவைத்.)

உடலாகாயம்— ஆகாயபூதத்தினது மூவகைப்பட்ட காரியதத்துவங்களுளொன்று; அது: காமம், மோகம், கோபம், பயம், உலோபம் என்னும் ஐந்துகுணங்களையுடையது. இது, காயாகாயம் எனப்படும். (உ-ம்.) "காயாகாயம்" பார்.

உடலிருந்தவீடு— சதேகமுத்தி. (உ-ம்.)"என்பதுசொல்லிய முனியையுடலிறந்தவீடு முடலிருந்தவீடும்" (ஞானவா. ஞானவிண். ௬௬.)

உடலிலான்—மன்மதன்.

உடலிறந்தவீடு— விதேகமுத்தி. (உ-ம்.) "உடலிருந்தவீடு" பார்.

உடலினேன்—பகைத்தேன். (ஐங்குறு.)

உடலுதல்— 1. வருத்தல். (உ-ம்.) "உடலுங்கூற்றும்" ( கூர்மபு. தக்கன்வேள். உக. ) 2. பகைத்தல். (உ-ம்.) "உடலருந்துப்பு" (புறநா. உரு.)

உடலுநர்— 1. மாறுபடுவோர், சத்துருக்கள். (உ-ம்.) "உடலுநருட்க" (புறநா. கஎ.)

உடலெடுத்தல்—1. சரீரங்கொழுப்படைதல். 2. பிறத்தல்.

உடலெழுத்து—மெய்யெழுத்து.

உடற்கருவி — யுத்தத்திலேமெய்காக்குங் கருவி.

உடற்குறை—1. உறுப்புக்குறை. 2. தலையற்றவுடல். ( உ-ம். ) "பேயுநரியும் பிணமுமுடற்குறையும்" (தணிகை. சீபரி. சருரு.)

உடற்கூற்றுத்தத்துவம் — சரீரத்தினிலக்கணநூல்.)

உடற்கூறு—சரீரக்கூறு.

உடற்கொழுப்பு — உணவிற்பிரியமின்மையைச்செய்யும் கொழுப்பாகிய ஒருநோய்.

உடற்சி — பெருங்கோபத்தோடுபொருதல். (உ-ம்.) "ஒண்டிறற்சிங்கமன்ன கதமொளியுடற்சிகண்டேன்" (சிந்தா. கநக. கக௬.)

உடற்புவி—பிருதிவிபூதத்தினது மூவகைப்பட்ட காரியதத்துவங்களுளொன்று: அஃது: என்பு, தோல், நரம்பு, உரோமம், தசை என்னும் ஐந்து கூறுகளையுடையது. (உ-ம்.) "உடற்புவியென்புதோனரம்பு உரோம - மடக்கருந்தசையென்றைந்தாய்நின்றது." (தசகாரியவிளக்கம்.)

உடற்புனல்—அப்புபூதத்தினது மூவகைப்பட்ட காரியதத்துவங்களுளொன்று; அது: நீர், உதிரம், சுக்கிலம், மூளை, மச்சையென்னும் ஐந்து கூறுகளையுடையது. (உ-ம்.) "உடற்புனல் கூறினே நிணமூளையுதிரசுக்கிலமென்றடையுமைந்தாய்" (தசகாரியவிளக்கம்.)

உடற்றல்—1. அழித்தல். 2. உக்கிரமாய்நடத்துதல். (உ-ம்.) "அமருடற்றினன்" (பாரத.

இராய. ருo.) 3. உக்கிரமாய்ப்பிரயோகித்தல். (உ-ம்.) "ஒருநொடியினிற் பலகோடிபாண முடற்றினன்"(பாரத. பதின்மூன். உச.)4. உலைத்தல். (உ-ம்.) "தருமாறிலனுகியுடற்றுதலும்" (தணிகை. நாரத. சுஎ.) 5. சித்தியாகாதிருக்கச் செய்தல். (உ-ம்.) "ஒல்லுங்கரும முடற்றுபவர் கேண்மை" (வள். அகஅ.) 6. சினக்குறிப்பு. 7. துரத்தல். 8. பகைத்தல். 9.பெருங்கோபம்.(பிங்கல. கஅஎசு.) 10. போர்செய்தல். (உ-ம்.)"வெம்மைதானுடற்றுழி" (தணிகை. நாட். கசு.) 11. வருத்துதல் (உ-ம்.) "உடற்றும்பசி" (வள். கரு.)

உடற்றழும்பு—உடலின்மறு.

உடற்றிசினோர்—சினப்பித்தவர். (உ-ம்.) "சினங்கெழு குருசினின் உடற்றிசினோர்க்கே" (பதிற்று. எஉ.)

உடற்றேயு — தேயுபூதத்தினது மூவகைப்பட்ட காரியதத்துவங்களுளொன்று; அது: பசி, தாகம், சோம்பல், நித்திரை, மைதுநம் என்னுமைந்து குணங்களையுடையது. (உ-ம்.) "உடற்றேயு புகல்பசிமுதலாச்சாற்றிவைந்துங்தோற்றுதல்" (தசகாரியவிளக்கம்.)

உடறல்—உடலல்.

உடன்— 1. அக்கணம். (உ-ம்.) "ஆரமர்செய்துளாரையட்டுடனுயிருநல்கி" (கந்தபு.பாயிர. சுஎ.) 2. ஒக்க. "ஒருயிராகவுணர்க வுடன்கலந்தார்க்கு" (புறப்பொ. ககரு. பக்.) 3. ஒருங்கு. (உ-ம்.) "உள்ளியவெல்லாமுடனெய்தும்" (வள். ருoக.) 4. கூட. (உ-ம்.) "குடங்கருட்பாம்போடுடனுறைந்தற்று" (வள்.அகருo.) 4.மூன்றும்வேற்றுமையிலே உடனிகழ்ச்சிப்பொருளில் வரும் ஓர் உருபு. (உ-ம்.) "பருப்புடனளிகேரப்பழச்செழுந்துருவல்" (திருவாத. திருப்பெரு. ருக.)

உடன்கட்டையேறல்— 1. இறந்தநாயகனுடைய பிரேதத்தைச்சுடும்படிவைத்த கட்டையிலே அநுமரணமடையும்படி நாயகியுமேறுதல். 2. பிரியேனென்று நிற்றல்.

உடன்கலப்பு—உடன்கூட்டம்.(உ-ம்.)"சமமுடன் கலப்புமவிழ்தலும் யாங்காண" (தாயு. ஆகார. ரு.)

உடன்கற்றல் — 1. ஒருவருடன்படித்தல். (உ-ம்.) "வீடுமெனுடன்கற்றூர்" (பாரத. சம்பவ. உக.) 2. ஒருசாலையில் ஒருங்குகற்றல், ஒருவகுப்பிலொருங்குகற்றல்.

உடன்கூட்டு—ஒன்றுகூட்டு.

உடன்கை—உடனே.

உடன்பங்காளி—கூட்டுப்பங்காளி.

உடன்பங்து—கூட்டுப்பங்கு.

உடன்படல்—1. சம்மதமாதல்.(உ-ம்.) "உடன்படலுற்றவர்" (தணிகை. அகத். உoக.) 2. சேருதல். 3. நூன்மதங்கள் எழனுள் ஒன்று; அது: பிறர்கருத்துக்கிசைதல்.(உ-ம்.)"எழுவகை மதமேயுடன்படன் மறுத்தல்" (நன். கக.)

உடன்படல்விடை—வினயதற்கு உடன்பாடு காட்டும் விடை. "செய்வேன்" என்பதிற் போல.

உடன்படல்விலக்கு— விலக்கலங்காரவகையுளொன்று; அஃது: உடன்பட்டார்போல விலக்குவது. "அப்போதடுப்பதறியேனருள்செய்த, இப்போதிவளுமிசைகின்றாள்—தப்பில், பொருளோ புகழோ தரப்போவீர்மாலை, இருளோ நிலவோவெழும்" என்பதிற்போல. (தண்டி. சச: கஎ.)

உடன்படிக்கை — 1. உறுதிப்பாடு. 2. சம்மதிப்பத்திரம்.

உடன்படுத்துதல்— இணக்குதல். (உ-ம்.) "இசைந்துடன்படுத்தினன்"(பாரத.குரு.சச.)

உடன்படுதல்—சம்மதித்தல்.

உடன்படுமெய்—உடம்படுமெய்.[நிலைமொழியீற்றினும் வருமொழிமுதலினுநின்ற உயிர்களையுடன்படுத்துமெய்.]

உடன்படுவிடை— உடன்படல்விடை.

உடன்படுவிலக்கு-உடம்படுவிலக்கு. ["உடன்படல்விலக்கு" பார்.]

உடன்பாட்டுவினை—விதிவினை.

உடன்பாடு— 1. சம்மதி. (உ-ம்.) "ஐயமூற்றுடன்பாடெய்துவான் முன்னரறைந்தனன்" (நைடத. அன்னத்தைத்தூது. ருo.) 2. விதிவினை.

உடன்பிடிக்கை—உடன்படிக்கை.

உடன்பிறந்தார்—சகோதரர். (உ-ம்.) "உடன்பிறந்தார் சுற்றத்தார்" (வாக்குண். உo.)

உடன்பிறப்பு— 1. ஒருவயிற்றிற்பிறத்தல். (உ-ம்.) "ஒண்பொருளாவதையாவுடன்பிறப்பு" (சிந்தா.கசுக.உoச.) 2. சகோதரத்தாநம்; அஃது: உதயலக்கினத்துக்கு மூன்றுந்தாநம். (விதாந. மர. ச.) 3. சகோதரர்.

உடன்புணர்ப்பு—சமவாயம். (மணிமே.)

உடன்போக்கிடையீடு—1. கொண்டுபோத விடையிலே தடைப்படல். 2. (அகப்பொருள்) தலைவன் தலைவியைக்கொண்டுபோதலிலே தடைப்படல். (உ-ம்.) உடன்போக்கிடையீட்டுவிரியாகும்மே" (அகப்பொ. வரைவி. உஅ.)

உடன்போக்கு— 1. கொண்டுபோதல். 2. (அகப்பொருள்.) தலைவன் தன்னூர்க்குத் தலைவியைக்கொண்டுபோதல். "மைந்நீர்நெடுங்கண் மடந்தையுடன்றஞ்சைவாணன்வெற்பா - செக்

நீர்விழவணி நின்னகர்க்கே கொண்டுசேர்ந்தருண்மற்- றிந்நீர்மையல்லதொராறுமின்றுலிங்கெம்மையரென்றுன்-முந்நீருலகுங் கொள்ளார் விலையாக முலையினுக்கே" என்பதனாலறிக. (வாண. ௬0ரு.)

உடன்றல்—1. சினத்தல். 2. போர். (சூ. நி கண். க: ௪௬.)

உடனுதல் — விட்டுநீங்காது கூடிநிற்றல். (உ-ம்.) "அநேகசத்தியுடையதாயுடனாய்" (சி. சி. உ: அ0.)

உடனாளி—1. கூட்டாளி. 2. சொத்துள்ளவன்.

உடனிகழ்ச்சி—1. ஒருங்கு சம்பவித்தல். 2. ஒரு நிலைக்களத்திருத்தல். 3. வினைகொண்டு முடியும் பொருளின்றொழிலைத் தன்னிடத்தும் உடனிகழ்வதாகவுடையபொருள். (உ-ம்.) "மைந்தனொடுதந்தைவந்தான்" என்பதிற்போல. (நன். உகஎ.)

உடனிகழ்ச்சியணி — புணர்நிலையென்னும் அலங்காரம்.

உடனிகழ்தல்—உடனிகழ்ச்சி.

உடனிகழ்வு—உடனிகழ்ச்சி.

உடனிருத்தல்—கூடவிருத்தல். (உ-ம்.) "இளைஞரையுமுடனிருத்தியிம்புவானே" (பாரத. கிருட்டிண. ௪.)

உடனிலை—1. கூடநிற்றல். 2. தம்மிலியைந்து நிற்றல். 3. வேற்றுநிலையல்லாதது.

உடனிலைச்சிலேடை—ஒருபாட்டு இரண்டு வகையாற் பொருள்கொண்டுநிற்பது. (திருக்கோ. க. உரை.)

உடனிலைச்சொல்- உடனிலைக்கூட்டமாகிய ஓர் அலங்காரம்; அது: பெரியதனோடுசெயலால் இழிந்ததை உதாரணமாக்குதல். (உ-ம்.) "உடனிலைச் சொற்-புடையின் முரணுவலாச்சொற்புரிவில்புகழ்ச்சி சுட்டே" (வீரசோ. அலங்கார. கஉ.)

உடனிலைமயக்கம்—ரழஒழிந்தபதினொறு மெய்களுள் ஒன்று தன்னொடுதான்மயங்கும் மயக்கம். (உ-ம்.) "அக்கம்" என்பதிற்போல. (நன். ககஅ. உரை.)

உடனிலைமெய்ம்மயக்கம்—உடனிலைமயக்கம்.

உடனுறை—நான்குநிலத்துமுளவாய் அந்நிலத்துடனுறையுங் கருப்பொருளாற் பிறிதொன்று பயப்பமறைத்துக்கூறும் இறைச்சி. (உ-ம்.) "உடனுறையுவமஞ்சுட்டுநகை சிறப்பெனக்-கெடலருமரபினுள்ளுறையைந்தே" (தொல். பொருள். உ௪உ.)

உடனொத்தபங்காளி—சரிபங்குடையவன்.

உடனொத்தவன்—சமானமானவன்.

உடாபதி — காமன்மகனாகிய அநிருத்தன். [உஷாபதி.]

உடு—1. அகழி. 2. அம்பினிறகு. 3. அம்பு. 4. அம்புத்தலை. 5. அம்புநாண்கொள்ளுமிடம். (உ-ம்.) "உடுவுறும் பகழிவாங்கி" (கு. பா. கஎ0.) 6. ஆட்டுக்கடா. 7. ஆடு. 8. உடுவென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 9. சலம். 10. சீக்கிரிமரம். 11. நட்சத்திரம். (உ-ம்.) "அலமருஞ்சுடருடுக்களும்" (கந்தபு. திருக்கயிலா. கஉ.) 12. மரக்கலமோட்டுங்கோல். (பிங்கல. ௬கஅ௯.) [6. ஊ—ப்ரு—ம, 11, 13. உரு—ம.]

உடுக்கு—1. இடைசுருங்குபறை. 2. ஒருகட்பறை. 3. சீலை.

உடுக்கை—1. இடைசுருங்குபறை. 2. உடுத்தல். 3. உடை, ஆடைவிசேடம். (உ-ம்.) "ஒட்டவீக்கியபுலியதளுடுக்கையும்" (திருவிளை. எல்லாம். ரு.) 4. ஒருகட்பறை. (உ-ம்.) "முரட்டுடிசல்லிகைமுரசங்காளம் - உருட்டுறுசுரிமுகமுடுக்கை துந்துபி" (கந்தபு. சிங்க. வதை. க0.) 5. சீலை. (உ-ம்.) "உடுக்கையிழந்தவன் கைபோல" (வள். எஅஅ.)

உடுகாட்டி—பொன்னாங்காணிப்பூண்டு.

உடுண்டுகம்—வாகைமரம். (தைல. தைலவ. க௬ரு.)

உடுத்தல்—1. உடுத்துதல். (உ-ம்.) "பூந்துகிலொன்றினைப் புனைந்துடீஇயினர்" (கந்தபு. தெய்வ. கஎ௬.) [உடுத்து-பகுதி. அல்-விகுதி.] 2. சூழக்கொண்டிருத்தல் (உ-ம்.) "குரைகடலுடுத்த பார்மடந்தை" (நைடத. நாட். ௬.) 3. வஸ்திரமணிதல். (உ-ம்.) "உடுத்தவாடை புறத்தவிழ" (சௌந்தரி. க௬.)

உடுத்துதல் — ஆடையைப்பிறர்க்கணிதல். (உ-ம்.) "உத்தரைவண்டற்பாவைக்குடுத்துதற்கென்று கொய்தான்" (பாரத. நிரைமீ-க0க.)

உடுநீர்—அகழி.

உடுப்பகை — சூரியன். [உடு-நட்சத்திரம். பகை-விரோதி.]

உடுப்பு — 1. உடுத்தல். 2. உடும்பு. (உ-ம்.) "உடுப்புமுகத்தகூர்ங்கொழுவி னுழுதற்செயலானனும்" (கூர்மபு. வருணச்-க௫.) [வலித்தல்.] 3. புடவை. (உ-ம்) "குஞ்சிதலைக்கெண்ணெயுமோருடுப்புமீந்தால்" (மீனாட்சியம்மைகுறம். உ௪.)

**உடுப்பை** — 1. உடுப்பாயெனப்பொருள்படும் ஏவல்வினை. 2. சீக்கிரிமரம். 3. மத்துவாசாரியர் வசிக்குமிடம்.

**உடுபதம்**—ஆகாயம். (உ-ம்.) "உடுபதத்தினுமுடிவில்லை" (பாரத. கிருட். சு0.) [உடுபதம் : உடு - நட்சத்திரம். பதம் - மார்க்கம்.]

**உடுபதி**—1. சந்திரன். (உ-ம்.) "அருக்கனுடனுடுபதியையொக்கும்" (பாரத. அணி. உச.) 2. மரமஞ்சள்.

**உடுபம்**—தெப்பம். [உடுபம்: உடு-சலம். பம்-காப்பது.]

**உடுபன்**—சந்திரன். [உடுபஃ. உடு-நட்சத்திரம். பஃ-தலைவன்.]

**உடுபாதகம்**—பனைமரம்.

**உடுபாவனை**— 1. உடுப்பின் தன்மை. 2. சுத்த உடுப்பு. 3. சோடான உடுப்பு.

**உடும்பரம்**— 1. அத்திமரம். 2. செம்பு. [உடும்பர.]

**உடும்பு**—இரட்டைநாக்குடைய் ஒருவகைச்செந்து. (உ-ம்.) "மனவுச்சூலுடும்பின்-வறை" (பெரும்பா. கங௨.)

**உடும்புநாக்கன்**—வஞ்சகன்.

**உடும்புமுத்து**—உடும்பிற்பிறந்தமுத்து.

**உடுமாநம்**—அந்தஸ்துக்குத்தக்கஉடை.

**உடுவம்**—அம்பினீர்க்கு. (சிந்தா.)

**உடுத்தவாடை** – 1. கீழுடை. 2. வீட்டுடுப்பு, சிற்றுடை.

**உடுவின்காந்தன்**—சந்திரன்.

**உடுவின்வேந்தன்**—சந்திரன். (சூ. நிகண். க: ருஅ.) [உடு-நட்சத்திரம். வேந்தன் - தலைவன்.]

**உடுவை**—நீர்நிலை. (பிங்கல சு0ச.) உடு-நீர். வை-ஒருவிகுதி.

**உடை**— 1. அநிருத்தன் மனைவியாகிய ஒருபெண். 2. இரா. 3. உடுத்தல். (உ-ம்.) "உடைகழலந்துகில்" (கலி. அக.) 4. உடைமை. 5. உடைய. (உ-ம்.) "உடைத்தம்வலியறியார்" (வள். சஎங.) [உடைய என்பதன் யகரங்கெட்டுநின்றது.] 6. உடையென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். (உ-ம்.) "உடைபடை" 7. உள். 8. கலணை. 9. கால். 10. குடைவேலமரம். (பிங்கல. ௬கக0.) 11. சீலை. (உ-ம்.) "உடைசெல்வமூணொளி" (வள். கூகக.) 12. சூரியன் மனைவிகளிலொருத்தி. (உ-ம்.) "காந்தகவெயிறருகதிரவனுடைதன்-காந்த" (இரகு. திக்கு. அரு.) 13. செல்வம். (பிங்கல.௬கக0.) 14. பானை. [உஷா.]

**உடைக்கல்**—காவிக்கல். (உ-ம்.) "அறுக்கம்" பார். (தைல. தைலவ. ௬௬.)

**உடைகுளம்**— பூராடநாள்; அஃது: இருடதாம் நட்சத்திரம். (சூ. நிகண். க: எச.) [உடைகுளம்போலுதலின் இப்பெயர்த்து.]

**உடைகோல்**—வேலமரம்.

**உடைஞாண்**—அரைஞாண். (சிந்தா.)

**உடைத்தல்**—1.இரித்தல். 2. கெடுத்தல். "ஆனேறு-கோவவன்பீசமுடைத்தல்" (தணிகைபு. அகத். உ௫0.) 3. தகர்த்தல். (உ-ம்.) "உரகர்சூடிகாமகுட கோடிகளுடைத்தலின்" (பாரத. காண்டவ. சசு.) 4. தளர்த்தல். 5. முறுக்கவிழ்த்தல்.

**உடைத்தானவன்**-சொந்தக்காரன். 2. பொருளுள்ளவன்.

**உடைத்து**—1.உடைமை என்னும் அடியாற்பிறந்து அஃறிணை ஒன்றன்பாலில்வரும் ஒரு குறிப்புவினைமுற்று. (உ-ம்.) "அச்சாணியன்னதுடைத்து" (வள். சுசுஎ.) 2. உடையது எனப்பொருள்படும் குறிப்புவினையாலணையும்பெயர். (உ-ம்.) "சீருடைத்துலகு"(சி. சி. க: க.)3. செய்து என்னும் வாய்பாட்டு ஒரு தெரிநிலைவினையெச்சம்.

**உடைதல்**— 1. அழிதல், கலங்கல். (உ-ம்.) "உடைபுநெஞ்சுக" (கலி. க0.) 2. இரிதல். 3. குறைதல். 4. கெடுதல். 5. தகர்தல். (உ-ம்.) "பொன்னின்குடமுடைந்தாற் பொன்னாகும்" (வாக். கஅ.) 6. தளர்வு. (பிங்கல. கஅகசு.) 7. தாழ்தல். 8. தோல்வியடைதல். (உ-ம்.) "உடைதல் கண்டார்த்தபூதரோகையும்" (தணிகை. சீபரி. கூச.) 9. மநநெகிழ்தல். 10. மலர்தல். 11. முறுக்கவிழ்தல். 12. வெளிப்படுதல்.

**உடைதாரம்** — ஒருவகையுடை விசேடம். (உ-ம்.) "திருவிடையுமுடைதாரமுமொட்டியாணமும்" (மீநா. ஊசல். க0.)

**உடைநாண்**—வல்லிக்கயிறு. (சிந்தா.)

**உடைப்பு**—1. உடைத்தல். 2. உடைந்தவறுவாய்(உ-ம்.)"புதுநீர்வைகையுடைப்பெலாமடைக்கு மெல்லை" (திருவாத. மண். உங.) 3. தளர்வு.

**உடைப்பெருஞ்செலவர்**— பெரியசெல்வத்தை யுடையவர்.

**உடைப்பொருள்**— ஒருவருக்குடையதாகிய பொருள்; இப்பொருள், உயிர்வருக்கமெனில் அவருக்கு அடிமையெனவும்,அல்லனவாயினுடைமை எனவுஞ் சொல்லப்படும். (சிவஞானபா. ௩.)

**உடைபடை** — தோல்வியடைந்த சேனை. (உ-ம்.) "வாளாட்குடைபடை" (வீரசோ. பொரு. உ0.)

**உடைமணி**—அரைமணி. (உ-ம்.) பொலன்

மணிவிதித்தவுடைமணியிழுக்கியும்" (கல்லாட. ருஅ.)

உடைமாநம்—உடுத்தலபிமாநம்.

உடைமை— 1. ஆபரணம். 2. உடையராந் தன்மை. (உ-ம்.) "எம்மையுடைமையெமையிகழார்" (சிவஞானபா. அவையடக்.) 3. உரிமை. 4. உரியவை. 5. செல்வம். 6. பொருளுடையனுந்தன்மை. (உ-ம்.) "உடைமையுளின்மை" (வள்.அக.)

உடைய—1. ஆறும்வேற்றுமையிலே எல்லாப்பாலிலும் வரும் ஒரு சொல்லுருபு. (நன்.ருOO. உரை.) 2. ஒரு பலவின்பாற்குறிப்புவினைமுற்று.

உடையர்—செல்வர். (உ-ம்.) "ஒருவினைசெய்யாதோருமுடையரிவ்வுலகத்துள்ளே" (சி. சி. உ: அ.) [உடை-செல்வம். அர்-ஒரு விகுதி.

உடையல்—1. உடைதல். 2. உடைந்தபொருள். 3. கெடல்.

உடையவர்—1. ஆன்மாக்களையடிமையாகவுடையவர். (உ-ம்.) "எம்முடையவர்விடையவர்" (திருவிளை. நாகமெ. கஉ.) 2. சிவலிங்கப்பெருமான். (சைவச. பொது. ருருஎ. உரை.) 3. செல்வர். (உ-ம்.) "உடையவர்களெவரெவர்களெனநாடி" (திருப்பு. உசக.)

உடையவன் — 1. அரசன். 2. உரிமைக்காரன். 3. ஐசுவரியவான். 4. கடவுள். (உ-ம்.)"உடையவனுட்-கொள்ளுமவரின்" (திருக்கோ. கஅரு.) 5. சொந்தக்காரன். 6. தனதாகக்கொண்டவன். (உ-ம்.) பேரவாகுவையுடையவன்" (கந்தபு. துணை. உரு.) 7. யசமானன்.

உடையன்—1. உடுத்தவன். (உ-ம்.)"தோலுடையன்" (தேவார. திருநள். உ. திருஞாந.)

உடையாடல் — சிலமண்செய்தல். (உ-ம்.) "அந்தக்குடத்தின் - கழுத்துதடுங்கரப்பச்சில்விட்டுடையாடி" (தைல. தைலவ. அஅ.)

உடையார்—1. ஒருசாதியின் பட்டப்பெயர். 2. ஒரு உத்தியோகம். 3. செல்வர். (உ-ம்.) "உடையார் முன்னில்லார்."(வள். ருகரு.)[உடை-செல்வம். ஆர்-ஒருவிகுதி.] 4. தமதாக ஆளுதல்செய்வோர். 5. தன்வசத்ததாகப் பெற்றவர். (உ-ம்.)"பெரும்பசியுடையார்போல"(திருவாத. மண். உக.)

உடையார்பாளயம்— திரிசிரபுரத்துக்குச்சமீபத்திலுள்ள ஒரூர்.

உடையாள்—1. உமாதேவி. (உ-ம்.) உடையாளுன்றனடுவிருக்கு முடையாணடுவுணீயிருத்தி" (திருவாச. கோயின்மூத்த. க.) 2. தன்வசத்ததாகப்பெற்றவள். (உ-ம்.) " மடநோக்குநாணுமுடையாள்"(வள். கOஅக.)

உடையான்— 1. உடுத்தவன். (உ-ம்.) "கரியின்றோ-லுடையான்" (தேவார.திருப்பனை.எ. திருஞாந.) 2. உடையவன். (உ-ம்.) "எல்லாமுடையான்" (அவிரோ. க.)

உடைவாரம்—முழுவிளைவு.

உடைவாள்—உடையிற்கட்டும்வாள்.(உ-ம்.) "நிருதர்தங்குரிசிலான நெடுந்தகையுடைவாள் கொண்டான்"(கந்தபு பட்டா. கO.)

உடைவு–1. இரிவு. 2. கலக்கம். (உ-ம்.)"நெஞ்சுடைவுருநின்றாய் " 3. கேடு.· 4. தகர்வு. 5. தளர்வு. 6. மநநெகிழ்ச்சி.

உடைவேல்—குடைவேலமரம்.

உண்— 1. உண்ணென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும் வினைத்தொகையும். 2.தெரிநிலைவினைப்பகுதியின் பின்னணைந்துநின்று செயப்படுபொருளுணர்த்தும்ஒருவினைப்பகுதி. (உ-ம்.)"இவனுடலிற்கட்டுண்டு"(சி. சி. க: உ.)

உண்கண்—மையெழுதியகண். (உ-ம்.)"நெய்தற்போதனையவுண்கணேரிழை." (திருவிளை. மாபாத. ருசு.)

உண்கலம்—போசநபாத்திரம்.

உண்கலன்—உண்கலம். (உ-ம்.) "ஓடாமோவுண்கலனிங்குமக்கென்பார்."(கோயிற்பு.பதஞ். உச.)

உண்கு—உண்பேன் எனப்பொருள்படும்ஒருமைத்தன்மைவினைமுற்று.(நன். கசுரு உரை.)

உண்டல்—1. உட்கொள்ளல். (உ-ம்.)"நதியுண்டகடல்" (தாயு. மலைவளர். க.) 2. புசித்தல். (உ-ம்.) "உள்ளலைத்தொழுகக் குடைந்துண்டலால்" (சூளா. நாட். உக.)

உண்டாக்கல்—உண்டாக்குதல்.

உண்டாக்கு–உண்டாக்கு என்னேவலும்,தெரிநிலை வினைப்பகுதியும்.

உண்டாக்குதல்—1. உளதாக்கல். 2. படைத்தல். (உ-ம்.)"செய்யவோர் தீர்த்தமிங்குண்டாக்கெனச்செப்பலோடும்" (திருவிளை.தீர்த்தவி.அ.)

உண்டாக—காலம்பெற, காலாதீதமாகமுன்னே. (உ-ம்.) " வேண்டினுண்டாகத்துறக்க " (வள். ருசஉ.)

உண்டாகுதல் — 1. உண்டுபடுதல். 2. உளதாதல். (உ-ம்.) "எவ்வாழ்வுமுண்டாகியே" (பாரத.நிரை. சு.) 3. தலைப்படுதல். 4. நிலையாதல். (உ-ம்.) "செல்வமொன்றுண்டாகவைக்கற் பாற்றன்று" (நாலடி. க.)

உண்டாட்டு—1. கள்ளுண்டுமகிழ்ந்து விளையாடுதல். 2. (புறப்பொருள்.) நிரைகொண்டாரும் நிரைமீட்டாரும் தாம்பெற்ற வெற்றியின் மகிழ்ச்சியினால் சுற்றத்தோடு கள்ளுண்டு மகிழ்ந்து விளையாடுதல். (உ-ம்.) "தந்துநிரைபாதீடு

ாடாட்டுக்கொடையென" (தொல். பொருள். அ.) 3. மகளிர்விளையாட்டு. 4. விளையாட்டு.

உண்டாடல்—விளையாடல். (சிந்தா.)

உண்டாத்தா—கள்ளிமரம்.

உண்டாதல்—1. உண்டாகுதல். (உ-ம்.) "உளதுமிலதுமின்றி நின்றதொன்றுளதேலுண்ரம்"(சி. சி. க: சு.) 2. உளதாதல்.(உ-ம்.)"கருகாரியமுமுண்டாய்த்தோற்றமுங் கருத்தாவாரம்" (சி. சி. க: எ.)

உண்டி—1. இரை. 2. உணவு. (உ-ம்.) "உக்கு முன்கிளைக்கு நாளுமுண்டியும் வாழ்வுமிகே" (பாரத. சூது. ருசு.) [உண்டி உண்பனதிபன பருகுவன நக்குவன என நால்வகைப்பம். 3. ஒருமுன்னிலைவினைமுற்று. 4. கொட்டக்கரந்தை.(உ-ம்.)"சதபுட்பிதுஸ்பரிசமுண்வீழி"(தைல. தைலவ. எசு.)5. சோறு.(உ-ம்.) அறுசுவையுண்டியமர்ந்தில்லாளூட்ட" (நால-செல்வநிலையா. க.) 6. போக்கியப்பொருள். உ-ம்.) "உண்டியமருயிர்தானும்" (சி. சி. கூ: ). இராம.)

உண்டிகை—1. உண்டியற்சீட்டு. 2. பொக்சப்பெட்டி.

உண்டிடல்—பெற்றிருத்தல். (உ-ம்.) "ஒற்கல்வளனுண்டிடுவெய்யசூர்" (கந்தபு. மேரு. ௦.)

உண்டிப்பொருத்தம்—நூலின் முதற்செய்ண்முதற்சீருக்குரிய பத்துப்பொருத்தங்களுளொன்று; அது: க, ச, த, ப, ந, ம, வ என்னும் ஏழொற்றுக்களும் அகர விகர வுகர வெரங்கள் என்னும் நான்கு உயிரெழுத்துக்களுாகிய அமுதவெழுத்துக்கள் பொருந்திவரப்ாடுவது. முதற்சீரினன்றித்தசாங்கத்தயலினு அப்படி வரவேண்டும். (இலக்கணவி. எஎக. உரை.)

உண்டியல்—1. உண்டியற்சீட்டு. 2. பொக்சம்.

உண்டு—1. உவமவாசகம். (சிந்தா.) 2. உண்மையென்னுமடியாற்பிறந்து ஐம்பால் மூவிடங்ளில்யாதேனும் ஒன்றில்வரும் ஒருவினைக்குறிபுமுற்று. (உ-ம்.) ஆண்பால், "கண்ணுதல்கொன்ட சிவனுண்டு" (கந்தபு. சுக்கிர. ரு.)பெண்பால், "தாயுண்டாயின்மைந்தர் தமக்கோர்தளர்புண்டோ" (கந்தபு. சுக்கிர. ரு.) பலர்பால்,"சார்ரேருமுண்டுகொல்" (சிலப். ஊர். ருசு.)ஒன்ன்பால், "மருத்தின் முன்றனித்ததீபம்-போக்னிற்பதுண்டோ" (கந்தபு. காமத. அ௨.) பலவின்பால், "உதிப்பதுமீறுமுண்டு" (சி.சி.க: .) முன்னிலையொருமை, "நீயுண்டெங்கட்கோர்குறையுண்டோ"(கந்தபு. சுக்கிர. ரு.) தன்மையொருமை, "ஒதிடாப்-பேதையேனுமுண்டு" (சேதுபு. அவை. அ.) 3. உள்ளது. (உ-ம்.) "உண்டுபோலின்றும் பண்பினுலகினை யசத்துமென்பர்" (சி. சி. சு: ரு.)

உண்டுகம்—பெருவாகைமரம்.

உண்டுபடுத்தல்—உண்டாக்குதல்.

உண்டுபடுதல்—உண்டாதல்.

உண்டுபண்ணுதல்-உண்டாக்குதல். (உ-ம்.) "ஒதரியதுவிதமே யத்துவிதஞானத்தை யுண்டுபண்ணுஞானமாகும்" (தாயு. எங்கு. ரு.)

உண்டுமில்லையுங்கூறல்—அஸ்திநாஸ்திசவாதம். (சிந்தா.)

உண்டுறையணங்கு—நீருண்ணுந்துறையிலுள்ள தெய்வம். (ஐங்குறு.)

உண்டேன—உண்டென்றுசொல்ல,நிரம்ப. (உ-ம்.) "உண்டெனத்தரவேண்டும்" [உண்டு; என.]

உண்டை—1.உண்டாய் என்னும் ஒருவினைமுற்று. 2. உண்டைநூல். 3. குளிகை. 4. சிற்றுண்டி. 5. திரண்ட வடிவமுடைய பொருள். (உ-ம்.) "உடுத்திரள் புலகோளின்னவுண்டையாக்கொண்டு" (கந்தபு. திருவிளை. உக.) 6. படைவகுப்பு. (உ-ம்.) "வீரவாகுவாலமைச்சன் மாய்ந்தா - னுண்டையுமழிதலுற்ற" (கந்தபு. தருமம. எக.)

உண்டைநூல்—தார்நூல்.(த. நி. போ. ருகஎ.)

உண்ணம்—1. ஒடைமரம். 2. மேன்மை. (உ-ம்.) "உண்ணமாயிருக்கிற் செல்வமுண்டாகும்." (திருவிளை. உக்கிர-வேல்வளை. ச௨.)

உண்ணல்—1. புசித்தல்.(உ-ம்.)"உண்ணுங்காலேக்குந்திசை கிழக்கு" (ஆசாரக். கச.) 2. புசித்தற்குரியன. (உ-ம்.) "உண்ணலூமுண்ணேன்" (கலி. உரு.) 3. பொருந்தல். (உ-ம்.) "உறியுண்டகரகத்தோடு மொதுங்குண்டு பதுங்கிப்போனார்"(திருவிளை. யானையெ. ருஅ.)

உண்ணா—1. ஈறுகெட்ட ஒரு எதிர்மறைத் தெரிநிலைவினைப்பெயரெச்சம். (உ-ம்.) "உண்ணாக்குதிரைகள்" (நன். கஎக. உரை.) 2. உண்ணாக்கு. [உள்; நா.] 3. செய்யா என்னும் வாய்பாட்டுத்தெரிநிலைவினையில்வரும் ஒருடன்பாட்டுவினையெச்சம். (உ-ம்.)"உண்ணாக்கிடந்தான்" (நன். கஎக. உரை.) 4. புசியா எனப்பொருள்படும் ஓர் எதிர்மறைப் பன்மைவினைமுற்று. (உ-ம்.) "உண்ணாகுதிரைகள்" (நன். கஎக. உரை.)

உண்ணாக்கு—1. அண்ணத்திலிருந்து கீழ் நோக்கிவளர்ந்து குவிந்தவடிவாய் வரும் ஒரு தசை. (உ-ம்.) "மூயலுந்தெய்வமுருத்திரனும்

முதிருமுண்ணாக்கிடையதனில்" (திருநெல். துறவறம். ௬௬.) 2. நாக்கினுள்.

உண்ணாட்டம்—உண்ணோக்கம்.

உண்ணாமுலை—1. உமாதேவி. (உ-ம்.) "படியிடம்புரக்குமுண்ணா முலையெனும் பச்சைமேனிக்-கொடியிடங்கொண்ட செம்பொற் குன்றமேபோற்றிபோற்றி" (திருவாத. திருவம். ௬அ.) 2. பாலுண்ணாதமுலை. (உ-ம்.) "உண்ணாமுலையுமைமைந்தா சரணஞ்சரணுனக்கே" (கந்தரந்தாதி. உ.)

உண்ணி—1. ஆமொடு முதலியவற்றின் சரீரத்திலே ஒட்டியிருந்து இரத்தமுண்ணும் ஒருவகைச்செந்து. (உ-ம்.) "சருகினுண்ணிகொசுகுதவிர்ந்தவும்"(நல்லா. பாரத. நரகதெரிச. ௫.) 2. உண்பவன். (உ-ம்.) "அப்பனிரந்துண்ணி" (தனிப்பா.) 3. பாலுண்ணிப்பரு.

உண்ணிக்கொக்கு—ஒருவகைக்கொக்கு.

உண்ணிலைக்கருவிகள்— ஆன்மாவினிகழுந்தத்துவங்கள்; அவை: சுத்தத்தத்துவம், அசுத்தத்தத்துவம், சுத்தாசுத்த தத்துவம் என்னும் முப்பத்தாறுகருவிகள். (தாயு. எங்நா. யாக். ௫. உரை.)

உண்ணீர்—குடிக்குநீர்.

உண்ணோக்கல்— சிந்தித்தல், தியானித்தல்.

உண்பது— 1. உண்ணப்படுவது. (உ-ம்.) "உண்பதுநாழி" (நல்வழி.உஅ.) 2. உண்ணல். (உ-ம்.) "உண்பதுமடங்கி" (கல்லா. கஅ.)

உண்பித்தல்—உண்ணச்செய்தல்.

உண்மடை— 1. உள்வாய்க்கால். 2. துட்ட தேவதைக்கிடும்பலி.

உண்மர்—உண்பார். (பதிற்றுப்.)

உண்மலம்—1. உபமலம். (பிங்கல. கஅசு.) 2. மனக்கறை.

உண்மாசு—உண்மலம்.

உண்முடிச்சு—உட்கள்ளம்.

உண்மை—1. அறிவு. 2. உள்ளது. 3. உளதாதல்.(உ-ம்.) "கண்ணோட்டமென்னுங்கழிபெருங் காரிகை-யுண்மையால்" (வள். ௫எக.) 4. ஊழ். (உ-ம்.) "உண்மையறிவேமிகும்" (வள். ௬எக.) 5. ஒன்றையறிதலால் அதனுள் இயற்கையாயிருக்கும்பொருள் இதுவென அறிதல். (உ-ம்.) "துயக்கறவுண்மையெனநாவலர்கணிந்துறைப்ப - தியற்கைப் பொருளினையிற்றெனவாமிதுதானுரைக்கின் - வியக்குற்றகாலசவிக்குந்தீச்சுடு நீர்மிகக்குளிரும் - வயக்குற்ற மண்வலிதென்றுபட்டாங்குவழங்குவதே" (சி. சி. அளவை. க-ம் மறையும்.) 6. சிறப்பியல்பு. (உ-ம்.) "கருத்திலுறைதிருவருளுமிறைவனூலுங்கலந்திபொதுவுண்மையெனக்கருதியானு - மருத்திமிகவுரைப்பன்" (சிவப்பிர. மங்கலவாழ். கக.) 7. மெய்ம்மை. (உ-ம்.) "என்றுகொண்டுண்மையாதவனுரைப்ப" (பாரத. இராச. உ0.)

உண்மைஞானம்— ஆன்மதரிசனம், சிவதரிசனம் முதலாயுள்ளவற்றை அநுபவமாக அறியும் ஞானம்.

உண்மைத்தவறு—தப்பிதம்.

உண்மைத்தாழ்ச்சி—உண்மைக்குறைவு.

உண்மைத்தாற்பரியம்—யதார்த்தமான கருத்து.

உண்மைத்துரோகம் — 1. நம்பிக்கைத்துரோகம். 2. பொய்.

உண்மைநெறிவிளக்கம்—சித்தாந்தசாஸ்திரம் பதினான்கனுள் ஒன்று.

உண்மைப்படுத்தல் – மெய்ம்மையாக்குதல்.

உண்மைப்படுதல்—மெய்யாதல்.

உண்மைப்பொருள்—மெய்ப்பொருள்.

உண்மையதிகாரம்—பன்னிரண்டு சூத்திரங்களாகவகுத்துச் சைவசித்தாந்தத்தை விளக்கும் சிவஞானபோதமுதலிய நூல்களிலே இறைவனுடைய சொரூபலக்கணமெனப்படுஞ் சிறப்பியல்பைக்கூறும் ஏழாஞ்சூத்திரமுதல் ஆறுசூத்திரப்பகுதி. (உ-ம்.) "அற்றாகலினன்றே யுண்மையதிகாரத்தைச்சார ஈண்டுவைத்தோதிய தூஉமென்க" (சி. சி. சு: சிவஞான.)

உண்மையளவை—சம்பவப்பிரமாணம்.

உண்மையறிவு—ஊழாலாகியவறிவு.(உ-ம்.) "நூல்பலகற்பினுமற்றுந்தன்-னுண்மையறிவேமிகும்" (வள். ௬எ௬.)

உண்மையுவமை — உவமையலங்காரவிரியுளொன்று; அஃது: உவமையைமறுத்துப் பொருளையே கூறிமுடிப்பது. "தாமரையன்று முகமே" என்பதிற்போல. (தண்டி. பொருளணி. ௫.)

உண்மைவசை—மெய்வசை. (இலக்கணவி எ௫௬-ம் உரையும்.)

உண்மைவழக்கு—அறுவகைவழக்கினுளொன்று. (மணிமே.)

உண்மைவாழ்த்து — மெய்வாழ்த்து. "வாழ்த்துமெய்வாழ்த்திருபுற வாழ்த்தெனப் - போற்றல் வேண்டும்வசையுமவ்வகைத்தே" என்பதனாற்பெறப்படும். (இலக்கணவி. எ௫௬.)

உண்மைவிளக்கம் — சித்தாந்த சாத்திரம் பதினான்கிலொன்று; இது: செய்தவர் திருவதிகைமனவாசகங்கடந்தார்.

உணவரது—கவடி, வெள்வரகு. (புறப்பொ. உழிஞை. உசு.)

உணக்கம் — 1. உலர்ந்ததன்மை. 2. வாட்டம்.

உணக்கல்—1. உலர்த்துதல். (உ-ம்.) "வித்துணக்கலொருபாலாம்" (தணிகை.நாட்.௧௯௨.) 2. துக்கப்படுத்துதல். 3. வாட்டுதல்.

உணக்குதல்—உணக்கல். (உ-ம்.) "நீவிநித்திலம்பரத்தியருணக்குவ நெய்தல்" (பெரியபு. திருக்குறிப்பு. ௬.)

உணங்கல்—1. உலர்தல், காய்தல். 2. உலர்ந்தபூ. (பிங்கல.௨௮௨௨.) 3. செயலற்றிருத்தல். (உ-ம்.) "உணங்கிடுங்கரணமென்னில்" (சி. சி. ௪: எ.) 4. துக்கப்படல். (உ-ம்.) "உணங்கியசிந்தையீர்" (கந்தபு. மோந. ௨௧.) 5. வரளல். (உ-ம்.) "நாவுணங்கி" (திருவிளை. நாக. ௧௧.) 7. வற்றலிறைச்சி. (உ-ம்.) "உணங்கலஞ்சாதுன்னலாம்" (திருக்கோ. ௨௯௫) 7. வாடல். (உ-ம்.) "நினதுசெம்முகமுணங்கிய துற்றதென்னுரைத்தியாவென்றான்" (கந்தபு. சிங்கமுக. ௧௬.)

உணங்கு—உணங்கென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும்.

உணத்தல்—உலர்த்தல். (உ-ம்.) "தணத்தருமெய்யுணத்தலும்" (தைல. தைலவ. ௧௧௦.)

உணர்— 1. உணர்வு. 2. உணரென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். (உ-ம்.) "உட்சுரம் புண்மேகச்சூடுலர்த்தலும்போமுணரே" (ஏவல்.) "ஓதுமுணர்சூதமுனி" (வினைத்தொ.) (சேதுபு. பலதீர்த். க.)

உணர்கருவி—ஞானேந்திரியம். (உ-ம்.) "ஐந்துகூறுணர்கருவியாகும்" (கைவல். தத்துவ. ௬எ.)

உணர்ச்சி — 1. அறிவு. (உ-ம்.) "விஞ்சையுன்பா-லுறுமுணர்ச்சியே"(கந்தபு.பாயிர.௨௨.) 2. கல்வி. 3. நினைவு. 4. புத்தி. (உ-ம்.) "சிறியாருணர்ச்சியுளில்லை" (வள். ௬எ௬.) 5. புலனறிவு.

உணர்த்தல்—1. அறிவித்தல். (உ-ம்.) "எம்பிரானுணர்த்தக்கண்டு" (கந்தபு. மேரு. ௧௬.) 2. ஊடறீர்த்தல். (உ-ம்.) "கலந்துணர்த்துங்காதலரைக்கண்டால்" (வள். ௧௨௬௬.) 3. கற்பித்தல். 4. துயிலெழுப்புதல். (உ-ம்.) "ஏனல்காப்போருணர்த்தியகூஉங்-கானத்தோர்" (புறநா. ௨௮.)

உணர்த்தி—உணர்ச்சி.

உணர்த்துதல்—உணர்த்தல்.

உணர்தல்— 1. அயர்வுநீங்கித்தெளிவடைதல். (உ-ம்.) "வீழ்ந்தயர்ந்தானுணர்ந்தனனே" (கந்தபு. அசுரே. ௧௬.) 2. அறிதல். (உ-ம்.) "உள்பொருளிதுவென வுணர்தன்ஞானமாம்" (சிந்தா. முத்தி. ௨௪எ.) 3. ஊடறீர்தல்.(உ-ம்.) "ஊடலுணர்தல்" (வள். ௧௧௦௧.) 4. கற்றறிதல், ஆராய்ந்தறிதல். (உ-ம்.) "தத்துவமானவற்றின் றன்மைகளுணருங்காலை" (சிவப்பி.அ: ௬.) 5. துயிலெழுதல். (உ-ம்.) "உணர்ந்து-கண்டிடுங்கனவுஞ்சொல்லி" (சி. சி. ௪: ௬௦. சிவஞா.) 6. நினைத்தல். 7. பகுத்தறிதல். 8. பரிசித்தறிதல்.

உணர்ந்ததையுணர்தல்—பிரமாணுபாசங்களெட்டினுளொன்று; அது, முன்குளிர்வந்தற்றகாலத்து நெருப்பு மருந்தென்றறிந்தவன் பின்னும் அது மருந்தென உள்ளங்கோடல்.

உணர்ந்தோர்—அறிவுடையோர், கற்றுணர்ந்தோர்.

உணர்ப்பு—ஊடறீர்த்தல். (உ-ம்.) "உணர்ப்புவரையிறப்பினும்" (தொல். பொரு. ௧௫௬.)

உணர்வு—அறிதல். (உ-ம்.) "உணர்ந்தார்க்குணர்வரியோன்" (திருக்கோ. ௬.) 2. அறிவு. (உ-ம்.) "கூடியவுணர்வோடெழுந்தகாவலனை" (பாரத. குரு. ௮௬.) 3. ஊடனீங்கல். 4. கற்றுணர்கை. 5. துயினீங்கல். 6. தெளிந்தபுத்தி. 7. தெளிவு. 8. நீங்கல். (பிங்கல. ௬௧௧௧.)

உணராமை— 1. அறியாமை. 2. மயக்கம். (சூ. நிகண். அ: ௬௬.)

உணருதல்—உணர்தல்.

உணல்—உண்ணல். (உ-ம்.) "உணலினுமுண்டது" (வள். ௧௩௨௬.)

உணவின்பிண்டம்—உடம்பு. (புறநா.)

உணவு—உணு. (உ-ம்.) "அரும்பெறலவியுணவருளி" (பாரத. இராச. ௧௦௮.)

உணு—1. சோறு. 2. போசநம். (உ-ம்.) "விராவுசில்லுணுமிசைந்தனர்" (கந்தபு.வள்.௨௦௧)

உணி—உண்ணி.[இடை குறைந்துநின்றது.]

உனை — 1. உண்மெலிவு. [நைவு என்பது நை யென முதனிலைமாத்திரையாய் நின்றது.] 2. உனையென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும்.

உனைதல்—உண்மெலிதல். (உ-ம்.) "ஏலக்குழலார நுராகமதென்னும்மாயா, சாலக்குனைந்தேற்கு" (வைராக். சத. தோத்திர. ௧௨.)[உள்-மநம். நைதல்- மெலிதல்.]

உனைவு— உள்ளமெலிதல். (உ-ம்.) "உனைவுசெய்தடுமிகலதஞ்ஞாநம்" (வைராக்.சதக.௪.) [உள்-உள்ளம். நைவு-மெலிவு.]

உத்—கட்டுதல், சுவாத்தியமின்மை, பிரசித்தி, பிரதாநம், பிரபல்லியம், பிரிவு, பெலம், மேல் எனப்பொருள்படும் ஒரு வடமொழியுபசர்க்கம்.

உத்கடம்—மேலிட்டது. (உ-ம்.)"சத்துவோத்கடமாக" (சி. சி. ௨: ௫௮. சிவாக்.)

உத்கமம்—1. பிறப்பு. 2. வியாபாரம்.

உத்கரம்—தாநியமுதலியவற்றின் குவியல்.

உத்கலநம்—விவாகமுதலியவைகளின் வேடிக்கை.

உத்காஷம்—1. உயர்ச்சி, மேன்மை. 2. தன்னைப்புகழ்தல். 3. மிகுதி, அதிகப்பாடு. 4. மேலாக இழுத்தல்.

உத்காரிகை — சிறு கொழுக்கட்டை முதலியவை.

உத்கிருட்டன்—உயர்ந்தவன்.

உத்கிருட்டை—மேலாயிருக்குமது. (பௌட். ௬: ௪௨. உரை.)

உத்கீதம்—1. ஓங்காரம். 2. சாமவேதத்தின் இரண்டாம்பாகம். 3. சாமவேதம் பாடுதல். 4. மேகம்.

உத்கீதன்—சந்திரன்.

உத்கீதை—பிரணவம். (கந்தபு. நவ. ௧௧.)

உத்கோசம்—1. காணிக்கை. 2. குரோதம். 3. பரிதாநம்.

உத்கோடரோகம் — 1. எச்சிற்றழும்பு. 2. தேமல்.

உத்கோஷித்தல்—முழக்குதல். (தாயு. கரு. ௩. உரை.)

உத்தங்சம்— ஆடவரும் பெண்களுஞ் சிரசிலுஞ் செவியிலும் அணியும் மலர் முதலியவை.

உத்தண்டபாலன்—தண்டஞ்செய்கிற நீதிபதி.

உத்தண்டம்—1. அச்சம்விளைப்பது. 2. உக்கிரம். 3. கொடை. 4. தைரியம். 5. நிமிர்ந்ததண்டம். 6. மகத்துவம். 7. வலிமை. 8. வீரம்.

உத்தண்டமணி— பொன்மணியாலாகிய கழுத்தாபரணம்.

உத்தண்டால்—உத்தண்டமணி, பொன்மணியாலாகிய கழுத்தணி.

உத்ததீ—மேட்டிமை.

உத்தம்—1. கொட்டைமுந்திரிகை. 2. சாமவேதம். 3. புகழுரை. 4. யுத்தமென்னுமலங்காரம். [உ-தூ॰.]

உத்தமசத்து—அவுபலபாஷாணம்.

உத்தமசரீரம்— கருடர் காந்தருவர் முதலியோருடம்பு.

உத்தமசாகசம்— 1. ஆயிரம் அல்லது ஆயிரத்தெண்பதுபணம் அபராதங்கொடுக்கும்படி விதிக்கும் பெருந்தண்டம். (மிருதி. சங்.௨௩௧.) 2. உயிர்நீக்கல்,அவயவச்சேதம், சுடுதல்,தேசத்தைவிட்டகற்றுதல் முதலிய பெரிய தண்டம். [உ-தூஸோஹஸ.]

உத்தமசித்தி—மூவகைச்சித்திகளில் ஒன்அது: தேவர்களுக்கொப்பாகிய சரீரத்தைஎடுத்து "ஆகாயகமநம்பண்ணி அங்குள்ள போகஙளைப்புசித்துத்திரும்பிவருதல்" (சைவச. ஞ. ௩௦. உரை.)

உத்தமத்தோற்கருவி— மத்தளமுதலிய (மணிமே.)

உத்தமதாநம்—அறநெறியாலே தேடியபொருளைத்தக்காருக்குக்கொடுத்தல்.

உத்தமதாளி— வேலிப்பருத்தி.

உத்தமப்பிராணயாமம் — மாத்திரைகள் நாற்பத்தெட்டுவரையிற்கும்பித்தல். (சி-லி. க. ௫. உரை.)

உத்தமபட்சம்—1. நற்பட்சம். 2. முதரம்.

உத்தமபதம்—உயர்ந்த தாநம்.

உத்தமபரி—.1. கொத்துமல்லிப்பூண்டு சிரேட்டமான குதிரை.

உத்தமபலம்—முந்திரிகைப்பழம்.

உத்தமபாத்திரம்— சற்பாத்திரமான பெரியோர்.

உத்தமபுருடன்—1. சன்மார்க்கன். 2. சிரேட்டன்.

உத்தமம்— 1. உண்மை. 2. சிரேட்டம் (உ-ம்.) "உத்தமமாங்குலமயிலே" (பாரத.கு. உ௬௧.) 3. சொல்லல். 4. நன்மை.

உத்தமர்ணன்—கடன்கொடுத்தவன். [உத்தமர்ணம்: உத்-சிரேட்டம். ருணம்-கடன்]

உத்தமர்ணிகன்— உத்தமர்ணன். (உ-ம்.) "எந்த உத்தமர்ணிகன் தான் கொடுத்தபொருளை எவ்விதமாயாவதுதானே வாங்கிக்கொள்ளுவானோ அவனை அரசன் விசாரிக்கக்கூடாது" (மநு. அ. ௫௦.)

உத்தமவிம்சதி— உத்தமமாகிய வருடபதி. (உத்தமம்-சிரேட்டம், விஞ்சதி-இருபது)

உத்தமன்—சிரேட்டன். (உ-ம்.) "பண்டரு-ளுத்தமனுங் கண்ணுதலை யுன்னிப்புலம்வான்" (கந்தபு. சயந்தன்பு. ௫௭.) 2. நற்குணமுடையவன். (உ-ம்.) "மைத்துனன்வனப்பமிக்கான் வளர்நிதிக்கிழவன்காளை யுத்தமனுநாமமல்லதொன்றுரைத்தறேற்றான்" (சிந்தாமணி. ௧௧௮.) 3. பிரகிருதியாகிய விருக்கடன்துரின்றோன். (தாயு. பன்மாலை. உரை.) 4. பிரியவிரதனுடைய மகனாகிய ஒருமநு. 5. மிருநண்பன். 6. விட்டுணு.

உத்தமாகாணி—வேலிப்பருத்தி.

உத்தமாங்கம்— 1. ஆண்குறி. 2. கரு

வீடு. 3. தலை. 4. பெண்குறி. [உத்தாம: உத்தம- சிரேட்டம். அம்ம- உறுப்பு.]

**உத்தமாங்கன்**— சிரேட்டமானவுறுப்புடையவன்.

**உத்தமி**— 1. சிரேட்டமுள்ளவள். (உ-ம்.) "உவகைபொங்கினள்போதுமென்றுத்தமி யெழலும்" (தணிகை. வள். சுரு.) 2. பார்ப்பதி. (உ-ம்.) "பாகமதிலுத்தமியைவைத்தல்பழுத்தென்றாய்" (திருவாதவூ. புத்த. எஅ.)

**உத்தமை**—1. சிரேட்டமுடையவள். (உ-ம்) "வான்த்-துத்தமையுருப்பசியு முட்குமுருவத்தோர்" (இரா. உத். அசுவ. ருக.) 2. பார்ப்பதி.

**உத்தமோசா**– பாரதயுத்தவீரருளொருவன். (உ-ம்.) "உத்தமோசாமுதலாவுள்ள" (பாரத. பன்னி. கச.)

**உத்தமோத்தமசித்தி**— மூவகைச்சித்திகளிலொன்று; அது: வித்தியேசுரராதலும், உருத்திரராதலும், பிரமவிட்டுணுக்கள்முதலிய தேவராதலுமாம். (சைவச. மாணு. ருo. உரை.)

**உத்தமோத்தமம்**—மிகச்சிரேட்டம்.

**உத்தர்ஷணம்** – சரீரத்தின் மயிர்சிலிர்த்தல்.

**உத்தரக்கிரியை**— அந்தியேட்டி முதலிய அபரக்கிரியை. (உ-ம்.) "மறைமுறையுத்தரக் கிரியை-தேசினுர் மநுவிற்செய்தொழிலிழந்தார்" (வேதார. மேன்மைச். சுஎ.) உத்தரம்-பின், கிரியை- செயல். [உத்தரக்கிரியா.]

**உத்தரகன்மம்** — உத்தரக்கிரியை. (உ-ம்.) "எந்தையுத்தரகன்மங்கள்" (மச்சபு. பிரகலாதன்பட்டா. கக.)

**உத்தரகாலம்**— 1. சாந்திரமாதம்; அஃது, ஒரு பூரணைதொடங்கி மற்றப்பூரணைவரையுமுள்ளகாலம். 2. பின்வருங்காலம். 3. வருங்காலம்.

**உத்தரகிராந்தம்**— ஒரு கிரகம் ஓரிராசியினின்று மற்றோர் இராசிக்குச் செல்லுதல்.

**உத்தரகிரியை**— உத்தரக்கிரியை, அபரக்கிரியை.

**உத்தரகுரு**—ஆன்மாக்கள் முன்னர்ச்செய்த நல்வினைப்பயனாகிய போகங்களை அநுபவித்துக்கொண்டிருக்கும் அறுவகைப் போகபூமிகளுள் ஒன்று. (உ-ம்.) "உத்தரகுருவினைப்பத்தோன்றிய" (சிலப். மனை. கo.) [சம்புத்தீவிலுள்ளநவகண்டத்துள் ஒன்றாகிய குருகண்டத்தின் வடபாகமே உத்தரகுரு.]

**உத்தரகுருக்கள்**— உத்தரகுரு கண்டத்துள்ளவர். (உ-ம்.) "அத்திசைக்கணரசானவுத்தரகுருக்கண்மேன்மையையடக்கி" (பாரத.இராசசூயச். சஅ.) [உத்தர-வடக்கு, குரு-நவகண்டத்தொன்று.]

**உத்தரகுருவம்**— உத்தரகுரு. (கூர்மபு. வருணு. உசு. உரை.)

**உத்தரகோசமங்கை** — பாண்டிநாட்டுள்ள ஒருசிவஸ்தலம். (உ-ம்.) "உத்தரகோசமங்கையென்னுநம்மூரிற்சென்று" (திருவாத. மண். கரு.)

**உத்தரகோசலம்**–அயோத்திநகரம். (உ-ம்.) "நன்றியுத்தரகோசலநாயகன்" (இரகு. மாலை. ககஉ.)

**உத்தரகோசலை**—அயோத்திநகரம். [உத்தரகொசலா.]

**உத்தரகோடி**—பிற்பாகம். (உ-ம்.) "கிரியாசத்தியினதுஉத்தரகோடியாயிருக்கும்" (சி. சி. க: சுரு. ஞானப்.) [உத்தர-பின்; கோடி-பாகம்.]

**உத்தரகோளார்த்தம்**—பூகோளத்தின் வடபாதி. [உத்தர-வடக்கு, கோள,அர்த்தம்-பாதி.]

**உத்தரங்கம்**–கதவுநிலைக்குமேலே வில்வளைவாக வைக்கப்பட்டிருக்கும் ஒருமரவடிவம். (உத்தரம்-மேல், கம்-போதல்.) [உத்தரம.]

**உத்தரங்கள்** — உத்தரம், உத்தராடம், உத்தரட்டாதி என்னும் நட்சத்திரங்கள். (உ-ம்.) "செக்குத்தரங்கள்" (விதாந. நல். கஅ.)

**உத்தரசமஸ்காரம்**–பிற்கருமத்தினாலேதிருத்திச் சுத்திசெய்தல். [உத்தர- பின், சமஸ்காரம்-சுத்தி.]

**உத்தரசாட்சி**—பிரதிவாதியின் சாட்சி. [உத்தரஸாக்ஷி.]

**உத்தரசான்றினன்**—முன்னொருவிடயத்திலே சாட்சியாயிருந்த ஒருவன் தேசாந்தரஞ்செல்லும்போதேனும் மரணவத்தையடைந்தபோதேனும் தானறிந்ததை "நீயறிந்திரு" என்று சொல்ல அதனைக்கேட்டிருந்து சாட்சியாவோன்" (மிரு.சங்.சஎ.) [உத்தரம்-பின்,சான்று-சாட்சி.]

**உத்தரசைவம்**—சித்தாந்தசைவம். (உ-ம்.) "சிவகுணசங்கிராந்தி சமுற்பத்தி சமாவேசசிவசமத்துவமென் றிம்முத்திகளுக்குமேலாயிருக்கிற சிவசாயுச்சியப்பிரதமாகையாலுத்தரசைவமென்றும் இதைப்பூர்வபக்ஷம் பண்ணுவதற்கு ஒரு சமயமில்லையாகையால் சித்தாந்தசைவமென்றும் பெயரையுடையவைதிகசைவமே சர்வோத்கிருஷ்டமான சமயம்" (சி. சி. அ: கரு. சிவாக்.)

**உத்தரசைவர்** — சித்தாந்தசைவர். (உ-ம்.) "சிவாநந்தபரவசத்தினாலே சிவமேயாய்நிற்பது மோட்சமென்றுசொல்லிப் பரமுத்தியையடைவது உத்தரசைவராகிய எம்மனோரே" (சி. சி. அ: கஉ. சிவாக்.)

உத்தராட்டாதி—இருபத்தாறுவதான நட்சத்திரம். (உ-ம்.) "வாணியாம் பூரட்டாதியுத்தரட்டாதியாங்கண்" (மச்சபு. நட்சத்திர. கரு.)

உத்தராட்டாதியான்—உத்தரட்டாதி நட்சத்திரத்திற்பிறந்தவன். (உ-ம்.) "ஊனத்திற்றீர்ந்த சீர்த்தியுத்தரட்டாதியானே" (சிந்தா. நாம. ௩௫௫௮.)

உத்தரணம்—1. பங்கிட்டெடுத்தல். 2. முற்றத்துறத்தல், முற்றநீங்குதல். 3. வாந்தித்தல். 4. வேரோடுபிடுங்குதல். (உத்-மேல், திரு-எடுத்தல்) [உத்தரண.]

உத்தரணி—பஞ்சபாத்திரக்கரண்டி.

உத்தரதாராகணம்—அருந்ததி. (உ-ம்.) "தளர்நேரிடையவருத்தரதாராகணமனையார்" (சேதுபு. அநுமகு. எ.) [உத்தரம்-வடக்கு, தாராகணம்-விண்மீன்.]

உத்தரதுருவம்—வடதுருவம்.

உத்தரதேசம்—வடதேசம்.

உத்தரபச்சிமம்—வடமேற்கு.

உத்தரபட்சம்—1. அபரபக்கம். 2. உபநயவாசகம். 3. சித்தாந்தபட்சம், சாதநங்களினாற்பெற்றசித்தி. 4. மறுப்புரை. 5. மறுமொழி. 6. வடக்குப்பக்கம். [உத்தரபக்ஷ.]

உத்தரபதம்—சம்யுக்தபதத்திலே பின்னாகநிற்கும் பதம். [உத்தரபத. உத்தர-பின். பத-சொல்.]

உத்தரபற்குநி—உத்தரபாற்குனி.

உத்தரபாகம்—பிற்பாகம்.

உத்தரபாத்திரபதம்—1. இரேவதிநாள். 2. உத்தரட்டாதிநாள். [உத்தரபாத்ரபத.]

உத்தரபாதம்—மறுமொழி. [உத்தரபாத.]

உத்தரபாலன்—குபேரன். [உத்தரபால. உத்தர-வடக்கு, பால-காப்பவன்.]

உத்தரபாற்குநி—பன்னிரண்டாம் நட்சத்திரமாகிய உத்தரம். [உத்தரபால்குநி.]

உத்தரபூமி—வடபூமி.

உத்தரபூர்வம்—வடகிழக்கு. [உத்தரம்-வடக்கு. பூர்வம்-கிழக்கு.]

உத்தரபூருவதிசை — வடகிழக்குத்திசை. (உ-ம்.) 'உச்சிமுகமீசானமொளிதெளியப்பளிங்கேயுத்தரபூருவதிசையைநோக்கியுறுமுகந்தே' (சிவதரு. பரிகார. அக.)

உத்தராபோசநம் — புசித்துக் கைகழுவினபின் உண்ணுதல்.

உத்தரம்—1. இடப்பக்கம். 2. உத்தராயணம். (விதான. குணகுண. எச.) 3. உயர்ச்சி. 4. ஊழித்தீ. (திவாகர.) 5. எதிருரை. 6. மறுமொழி. (உ-ம்.) "உன்னையான்வினவுரைதனக்குத்தரமுரைத்து" (பாரத. நச்சு. ருரு.) 7. காமிகபேதம் மூன்றனுள் ஒன்று. (த. நி. போ. கருக.) 8. காரியம். 9. (கணக்கதி) சேஷம். 10. பலம். 11. பன்னிரண்டா நக்ஷத்திரம். (உ-ம்.) "உயருத்தரத்திற்பாவந்தீரும்" (கூர்மபு. சிராத்த. ரு.) 12. பின். 13. மேலானது. 14. வடக்கு. (உ-ம்.) "உறைதருகுவடுநீங்கியுத்தரமுடிவுகண்டான்" (பாரத. அருச். தவ. ௩௦.) 15. வருங்காலம். 16. வாதியின் பிரதிஞ்ஞையைமறுத்துப்பிரதிவாதிகொடுக்கும் எதிருரை. (மிரு. ச. உச.) 17. வாமதேவமந்திரம். (உத்தரதிசையை நோக்கும் வாமதேவமுகத்துக்குரிய மந்திரமாதலின் அப்பெயர்பெற்றது.) [உத்தர.]

உத்தரமத்திமபூமி—1. சீதோஷ்ணசமத்துவபூமி. 2. துருவசக்கரத்திற்குங்கற்கிசக்கரத்திற்கும் நடு.

உத்தரமந்தோச்சம்—கிரகங்கள் சூரியனுக்கு அதிதூரத்திற்செல்லுமெல்லை.

உத்தரமீமாஞ்சை— பதினான்குவித்தைகளுள் ஒன்றாகிய மீமாஞ்சையின் இரண்டாம் பாகம்; இஃது எட்டத்தியாயமுடையதாய்ச்சூத்திரவடிவமாக வியாசமுனிவர் செய்தது; இவ்வெட்டத்தியாயங்களுள்ளே முதனான்கத்தியாயமும் தேவதாகாண்டம் எனவும், பின்னுள்ள நான்கத்தியாயமும் பிரமகாண்டம் எனவுஞ்சொல்லப்படும். (உ-ம்.) "உரைத்தவிரண்டாங்கூறு பிரமமுரைப்பதனு லுத்தரமீமாஞ்சையெனப்பட்டருள்கூர்வியாதன் - றெரித்தசூத்திரவடிவமாகி யிருநான்கத்தியாயமாமவற்றுண்முதனான்கத்தியாயம்- விரித்தலுறுதேவதாகாண்டமெனப்பட்டுவிளங்குறுதெய்வதவிலக்கணம் பலபத்திரனு - னிரைத்துரைசெய்யப்படுமேனான்கத்தியாயநிகழ்பிரமகாண்டமெனவேநிகழ்த்தப்படுமால்" (வேதா. சூ. சிறப்பு. ரு.)

உத்தரமீன்—அருந்ததி. (உ-ம்.) "உத்தரமீன்கொண்கனே" (சேதுபு. துத்தம. ௬.)

உத்தரவாதம்— 1. உத்தரஞ்சொல்லல். 2. பிணை. 3. பொறுப்புநிற்றல்.

உத்தரவாதி—1. உத்தரஞ்சொல்வோன். 2. எதிரி. 3. பிணையாளி. [உத்தரவாதிந். உத்தர-விடை, வாதிந்-சொல்வோன்.]

உத்தரவாருணி—ஒருகொடி.

உத்தரவினை—உத்தரக்கிரியை. (உ-ம்.) "உதிட்டிர னேதுமாற்றா லுத்தரவினைகளாற்றி" (சேதுபு. இராமதீ. எசு.)

**உத்தரவு** — 1. ஒருவருக்கு ஒன்றுசெய்யும்படி அதிகாரமுடையவராற்கொடுக்கப்படுஞ் சம்மதி. 2. தேவ உத்தரவு. (உ-ம்.) "அவனுக்குக் கதிர்காமத்திற்குப்போக உத்தரவு கிடைத்தது" 3. மறுமொழி, விடை. 4. விடுதலை.

**உத்தரவுச்சீட்டு** — 1. அதிகாரப்பத்திரிகை. 2. விடுதலைப்பத்திரிகை.

**உத்தரன்** — 1. சிவன். 2. விட்டுணு. 3. விராடராசன் மகனாகிய ஒருவன். (உ-ம்.) "உரைத்தவனனையைக் கதுமெனவுத்தரன் வணங்கி" (பாரத. நிரை. ௨௧.)

**உத்தராசங்கம்**—உத்தரீயம். (உ-ம்.) "சிங்கத்துரியுத்தராசங்கத்தண்ணற்கு" (தணி. களவு. ௧௧௧.) [உத்தராஸங்க. உத்தர - மேல், ஸங்க - சுற்றுதல்.]

**உத்தராசாடம்** — உத்தராட நட்சத்திரம். [உத்தராஷாட.]

**உத்தராசாபதி**—குபேரன். [உத்தராசாபதி. உத்தர-வடக்கு, ஆசா-திக்கு, பதி-தலைவன்.]

**உத்தராசை**—வடக்குத்திக்கு.

**உத்தராட்சம்**—பூகோளத்தின்வடபாகம்.

**உத்தராடம்**—இருபத்தொராம் நட்சத்திரம். (உ-ம்.) "ஏதிலுத்தராடமாயவிடங்களில்" (மச்சபு. நட்சத்தி. ௧௨.) [உத்தராஷாடா.]

**உத்தராத்தகோளம்** — பூமியின் வடபாதியுண்டை.

**உத்தராதரம்** — 1. உயர்வுதாழ்வு. 2. மேல்கீழ். [உத்தராதர: உத்தர - உயர்வு, மேல். அதர - தாழ்வு, கீழ்.]

**உத்தராதலம்**—உத்தராதரம் பார். [ரகரம் லகரமாயிற்று.]

**உத்தராதி**—வடதிசை. [தெலுங்கு.]

**உத்தராதிகாரம்**—ஒருவன் இறந்தபின் அவன் பொருளுக்கு உரியராதல். [உத்தராதிகார.]

**உத்தராதிகாரி** — இறந்தவன் பொருளுக்கு உரியவனாய்ப் பின்வருபவன். [உத்தராதிகாரிந். உத்தர - பின், அதிகாரிந்-அதிகாரமுடையவன்.]

**உத்தராபதம்**—1. வடக்கு. 2. வடக்குவீதி. [உத்தராபத: உத்தர-வடக்கு, பத-வழி]

**உத்தராபாசம்**—போலியுத்தரம், பொய்ம்மறுமொழி. [உத்தராபாஸ: உத்தர - விடை, ஆபாஸ - போலி.]

**உத்தராபோசனம்**—இரண்டாமுறை புசிக்குமுணவு.

**உத்தராயணம்**— 1. சூரியன், மகர, கும்ப, மீந, மேட, இடப, மிதுனங்களென்னும் இராசிகளினிடமாய் வடவீதியாகச் செல்லுங்காலம்; அக்காலம் தைமுதலானிவரையும். (உ-ம்.) "திங்களோராறு கொண்டதயா முத்தராயணமுஞ் சிறப்பினொடு-தங்கு தெக்கிணாயநமு மெனவிரண்டாம்"(கூர்மபு. பிரமா. ௪.) 2. சூரியன் வடபாகமாகப் போதல். [உத்தராயண: உத்தர-வடக்கு, அயந- போதல்.]

**உத்தராரணி** — அரணியின்கண் ஊன்றிக் கடையும் ஓர்கருவியாயுள்ள மரத்துண்டு. (பிரமோபநி. ௬௬.)

**உத்தரி**—1. உத்தரியென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும். 2. குதிரை. (உ-ம்.)"வயங்குகொய்யுளை-யுத்தரிச்சலதியும்"(இரகு. திக். ௧௬௬.)

**உத்தரிஷணம்**—புளகப்பொடிப்பு.

**உத்தரித்தல்** — 1. அழுந்தல். 2. அநுபவித்தல். 3. ஈடுசெய்யல். 4. கடன்செலுத்தல். 5. சகித்தல். 6. சம்மதித்தல், சாதித்தல். 7. தருக்கித்தல். 8. தீவினைப்பயன் அநுபவித்தல். 9. நியாயங்காட்டல். 10.பொருளைமீட்டெடுத்தல், (உ-ம்.)"தன்னை நாடி-யுத்தரிக்கமாட்டா நராதிபர்பதாகைத்தூசும்" (பாரத. நிரைமீட். ௧௬௫.) [உத்ரு என்னும் வடமொழியினின்றுபிறந்ததுபோலும்.] 11. பொறுப்பு நிற்றல். 12. மறுமொழிசொல்லுதல்.

**உத்தரிப்பு**—உத்தரித்தல்.

**உத்தரியம்**—உத்தரீயம். (உ-ம்.) "உரித்தல் லருத்திரருக்குத்தரியம்" (சைவச. ஆசா. ௪௭.)

**உத்தரீயகம்**—உத்தரீயம்.

**உத்தரீயம்**— உடம்பின்மேலேயணியுஞ்சீலை. (உ-ம்.) "தரணிமான்மார்பிற்பயிலுமுத்தரீயமும்போன்று" (பாரத. சிறப். அ.) [உத்-மேல். தரீயம்-தரிக்கத்தக்கது.]

**உத்தரை** — அபிமன்னுவின் மனைவியாகிய ஒருபெண். (உ-ம்.) "உத்தரையும்வில்விசயனுக்குரியளென்றான்" (பாரத. வெளிப்பா. ௧௪.) 2. ஒரு நட்சத்திரம். 3. வடதிசை. [உத்தரா]

**உத்தரோத்தரம்**— 1. எதிரியினுத்தரத்துக்கு எதிர் உத்தரம். 2. ஒன்றன்பின் வருதல். 3. மிகுதி. 4. மேலும் மேலும். (உ-ம்.) "இருதயாதிகளிலே அகாராதி அபிமானிகளான பஞ்

சசத்திகளும் ஆன்மாவினுடைய அனுக்கிரகார்த்தமாகக்கிரமத்திலே உத்தரோத்தராதிகமாகச் சிவாபிவியத்தியைக்கொடுத்தல்செய்யும். (சி.சி. சு: ருசு. சிவாக்.) [உத்தர+உத்தரம்.]

**உத்தவம்** — 1. ஓமாக்கினி. 2. திருவிழா. [உஜ்வ.]

**உத்தவன்**— கிருஷ்ணனுடைய நண்பனும் உசாத்துணைவனுமான ஒரு யாதவன். [உஜ்வ:.]

**உத்தவாணி** — கண்டங்கத்தரிப்பூண்டு.

**உத்தவாறு** — சொல்லப்பட்டபடி. (உ-ம்.) "உத்தவாறேதுவருமது வருகென்றழுந்தியொருமையாளன்" (ஞானவா. சநகரா. ருக.)

**உத்தளம்**— உத்தூளிதம்.

**உத்தா்நபாதசன்**—உத்தாநபாதன் மகனாகிய துருவன். [உத்தாநபாதஜ]

**உத்தாநபாதன்**— சுவாயம்புமநுவின் மகனாகிய ஓரரசன். (உ-ம்.) "இலங்குபுகழ்ப்பிரியவிரதனைப்புகழுத்தானபாதனையாங்கீன்றான்" (கூர்மபு. தக்கனைச். க.) [உத்தாநபாத:]

**உத்தாநம்**—1. அடுப்பு. (உ-ம்.) "உத்தாநமிட்டுமுதற்பொருளைவாழ்த்தியொல்கவெரித்தைந்தாநாளுதயமுந்தி" (தைல. தைலவ. சுo.) 2. அத்தநாள். 3. ஆழமற்றது. 4. இசைப்பு. 5. இடை. 6. எல்லை. 7. எழும்புதல். (உ-ம்.) "உத்தானஞ்செய்து" (நாலாயிர. வண்ணமாட. அ.) 8. ஏறுதல். 9. கட்டுதல். 10. கவிந்தநிலை. 11. கரவற்றதன்மை. 12.சங்கிராந்தி. 13. சேனை. 14. துணைக்காரணம். 15. துயிலெழும்பல். 16. பரவப்பட்டது. 17. பலியிடுங்கோட்டம். 18. புத்தகம். 19. புடைப்பு. 20. புருடத்துவம். 21. மகிழ்ச்சி. 22. மல்லாந்துகிடத்தல். 23. மலங்கழித்தல். 24. முயற்சி. 25. முற்றம். 26.யுத்தம். 27. வடவாமுகாக்கினி. [1, 5, 9, 12, 27, உஜ்ஜாந. 3, 6, 7, 11, 13, 15, 16, 17, 18, 20, 21, 23, 24, 25, 26, உத்தாந. 10, 22 உத்தாந.]

**உத்தாநி**—ஒரு நரம்பு.

**உத்தாநைகாதசி**—விட்டுணு நான்கு மாதம் நித்திரைசெய்து பின் எழும்புங்கார்த்திகைமாசச்சுக்கிலபக்க ஏகாதசி. [உத்தாநைகாதசீ]

**உத்தாப்பித்தல்**—உறுக்கிப்பேசல்.

**உத்தாபநம்**—1. அசுத்தமாகிய அறைவீட்டினின்றும் சுத்தமாகிய உயர்ந்த இடத்திற்குழந்தையைச் சேர்க்குங் கிரியை. (உ-ம்.) "அன்னப்பிராசநம்" பார். 2. எழுப்புதல். [உத்தாபந.]

**உத்தாபம்** — 1. உபத்திரவம். 2. மனக்கிளர்ச்சி.3. மிக்கவெப்பம். 4. முயற்சி.[உத்தாப]

**உத்தாபலம்**—இசங்கு.

**உத்தாபனம்**— 1. எழுப்புதல். 2. பதில்வைத்தல்.

**உத்தாபனி**—1. விசிநரம்பு. 2. தசைநரம்பு.

**உத்தாமணி**—வேலிப்பருத்தி. (உ-ம்.) "மூனைவீழிசங்குத்தாமணி" (தைல. தைலவ. எரு.)

**உத்தாரணம்** — 1. உயர்த்துதல். 2. பங்கிடுதல். 3. நிலைநிறுத்தல். [1, 2, உத்தாரண.]

**உத்தாரசங்கம்**—உத்தரீயம்.

**உத்தாரணம்**— 1. உயர்த்துதல். 2. நிலைநிறுத்துதல். 3. பிரித்தல்.

**உத்தாரணவைரவர்**— அட்டவைரவருளொருவர்.

**உத்தாரம்**— 1. அடுப்பு. 2. உத்தரவு. 3. உயர்ச்சி. 4. கடன். 5. கட்டளை. 6. சிரேட்டமானது. 7. நிலையின்மை. 8. பங்கு. 9. மறுமொழி. 10. வாந்திசெய்தல். [1, 3, 4, 8. உத்தார. 6, 7, 10. உத்தார.]

**உத்தாரவிபாகம்**— பங்கிடுதல். [உத்தார விஹாக.]

**உத்தாலகம்**— 1. ஒருமணி. 2. ஒருவகைச் சோழம்.

**உத்தாலம்**—நறுவிலிமரம்.

**உத்தி**— 1. அநுமானம். 2. அபின். 3. அறிவு. 4. இசைவு. 5. இணக்கம். 6. சீதேவியென்னுந்தலைக்கோல அணி. (உ-ம்.) "பொலம்புரியுத்தியும்பொருதமஞ்ஞையும்" (கந்தபு. தெய்வ. களஅ.) 7. செல்வம். 8. சேர்த்தல். (மணிமே.)9. தக்கதன்மை. 10. தந்திரவுத்தி; அது: நூற்பொருளை உலகவழக்கத்திற்குஞ் செய்யுள்வழக்கத்திற்கும் பொருந்தக்காண்பித்து ஏற்புழியறிந்து இதற்கு இவ்வகையாமென்று தக்கபடியாகவைக்குந்தன்மை; அவ்வுத்தி முப்பத்திரண்டுவகைப்படும்; அவையாவன: நுதலிப்புகுதல் முதலியன.(நன்.பொதுப்.கச,கரு.பார்.) 11. திருவுறுப்பு. 12. தாக்கம். 13.தேமல், 14. பாம்பின்படப்பொறி. (சூ. நிகண். ௩: சுக.) 15. பாரம்பரிய வழக்கம். 16. பேச்சு. 17. பேசுதல். 18. பொருந்துமாறு. (வள். உசஉ. பரி.) [1,7, 13, 16, யுக்தி. 14, 15. உக்தி.]

உத்திட்டம்— 1. உத்தேசிக்கப்பட்டது. (சி. சி. க: க. சிவாக்.) 2.சொல்லப்பட்டது. 3.விசேடிக்கப்பட்டது. [உத்திஷ்ட.]

உத்திதாங்குலி— விரல்கள் விரிந்தநிலையிலிருக்கும் உள்ளங்கை. [இதனை அபயஸ்தம் என்பர். உத்திதாங்குலி.]

உத்திநம்—மத்தியாநம். [உத்தின.]

உத்தியநம்—1. அத்தியாயம் என்பதுபோல க்கல்விநூலின் பாகத்தைக்குறிக்கும் ஒருபெயர். 2. விடாமுயற்சியோடு பிரயாசப்படுதல். [உத்யத.]

உத்தியம்—1. உத்தியோகம். 2. யாகமிருபத்தொன்றினொன்று. (கூர்மபு. உ: கக. உரை.) [இது பதினெண் யாகங்களுள் ஒன்றென்பதுமுண்டு.]

உத்தியாநபாலன்—1. தோட்டமுடையோன். 2. பூந்தோட்டக் காவல்செய்வோன். [உத்யாநபால: உத்யாந-பூந்தோட்டம்- பால- காப்போன்.]

உத்தியாநம் — 1. பிரணவத்துகாரதியாநம். 2. புறப்படுதல். 3. பூந்தோட்டம், சோலை. (உ-ம்.) "நாண்மலருத்தியாநத்துமோருததிகாட்டுமால்" (இரகு. நாட். சக.)

உத்தியாநவநம்—பூந்தோட்டம்.

உத்தியாபநம்—1. முடிவுசெய்தல். 2. விரதோத்தியாபநம். அது: விரதபலனையடையும் பொருட்டுச்செய்யுமொருகிரியை. (உ-ம்.) "உத்தியாபநமுஞ்செய்திட்டு" (மச்சபு.கல்யாணசத். கஉ.) [உத்யாபந.]

உத்தியுத்தசத்தி — உத்யுக்தசத்தி, பார். [உத்யுக்தசக்தி.]

உத்தியுத்தசிவம்—சகல நிட்களராகிய சிவன் (சி. சி. உ: கக. ஞாநப்.)

உத்தியுத்ததத்துவம்—சதாசிவதத்துவம்(சி. சி. க. சுடு. ஞாந.) அது: சிவசத்தி, ஞானமுங்கிரியையுமொத்த கிரியைத் தொழிலையியற்றிக்கிரியாசத்தி ரூபியாயிருக்குமவதரம். (கூர்மபு. திருக்கல். கூ. உரை.)

உத்தியுத்தர்—1. ரூபாரூபர். 2.சகளநிட்களர்.

உத்தியுத்தன்—1. சதாசிவன். (கூர்மபு. திருக்கல். கூ. உரை.) [இது: சிவன்சதாசிவதத்துவத்திற்பெறும்பெயர்.] 2. மிகப்பிரயாசப்படுவோன். [உத்யுக்த.]

உத்தியுத்தை — முயற்சிசெய்பவள். (சி. சி. க: சுடு. ஞாநப்.)

உத்தியோகபர்வம்—மகாபாரதத்தில் பாண்டவர்களும் கௌரவர்களும் சண்டை செய்தற்குவேண்டிய பிரயத்தநம் முதலியகருமங்களைக்குறிக்கும்பாகம்.

உத்தியோகம்—1. அதிகாரத்தோடு கூடிய தொழில். 2. உள்ளமிகுதி. 3. தொழில். (சி-வி. ஞாநபாத. க.) 4. நிலைபெறுத்துந்தொழில். (சி. சி. பாயிர. க. சிவஞாந.) 5. முயற்சி. [உத்யோகம.]

உத்தியோகவான்— சிருட்டியாதி வியாபாரமுள்ளவர். (சி-வி. ஞாநபா. உ.)

உத்திரட்டாங்கம்—தசநாடகத்தொன்று.

உத்திரட்டாதி—இருபத்தேழு நட்சத்திரங்களுள் இருபத்தாறும் நட்சத்திரம். [உத்தரட்டாதியின்திரிவுபோலும்.]

உத்திரதம்—அச்சுருவாணி. [உத்ரத.]

உத்திரம்—1. இருபத்தேழுநட்சத்திரங்களுள்ளே பன்னிரண்டாம் நட்சத்திரம். [இஃது: உத்தரத்தின்திரிவுபோலும்.] 2. சிறுவலை. 3. விட்டம். (உ-ம்.) "செழுந்துகிருத்திரம்பரப்பி" (பாரத. இராச. கூ.)

உத்திரவதுலி—அருந்ததி.

உத்திராசாடம் — உத்தராடம். [உத்தராஷாட.]

உத்திராடம்— இருபத்தேழு நட்சத்திரங்களுள்ளே யிருபத்தொராம் நட்சத்திரம். [உத்தராடத்தின்திரிவுபோலும்.]

உத்திராபம்—பேரொலி.

உத்திராபன்னி—சணல்.

உத்திராவம்—பேரொலி. [உத்ராவ.]

உத்திரி—1. அருச்சனை. 2. தியாகம். 3. பருத்திப்பூண்டு. 4. மந்திரம்.

உத்திரிப்போருள்—1. அருச்சனை. 2. மந்திரம். 3. யோகம்.

உத்திரேகம்—1. அதிகரித்தல். 2. தொடக்கம். 3. மிகுதி. [உத்ரேக.]

உத்தினம்—மத்தியானம்.

உத்தீபகம்— 1. ஒளிவிடல். 2. சுவாலித்தல். 3. மநவிகாரமெழுப்புதல். 4. மலையெறும்பு.

உத்தீபநம்— 1. தகநஞ்செய்தல். 2. தீபமேற்றல். 3. மநவிகாரத்தை யெழுப்புதல். [உத்தீபந.]

உத்து—1. அத்தாட்சி. 2. தெளிவு.

உத்துங்கம்—1. உயர்ச்சி. (உ-ம்) "உத்துங்கமிக்க வொருதன்றவிசேறி" (கந்தபு. சிங்க.

சஎரு.) 2. நெடுமை. 3. மகத்துவம். 4. மிருது. 5. மேன்மை. [உத்தூலம.]

உத்துதம்—உத்துதமுகம்.

உத்துதமுகம்—உத்துவாகிதமுக.

உத்துவகநம்—விவாகம். (த. நி. போ. உச.) [உத்வஹந.]

உத்துவநுத்தநம்—1. அரைத்தல். 2. ஏறுதல். 3. சரீரத்தைத்தேய்த்தல். 4. மிகவளர்ச்சி. 5. மூளைத்தல். 6. வாசனையூட்டல். [உத்வர்த்தநம்.]

உத்துவாகநம் — 1. உழுதிரட்டித்தல். 2. விவாகம். [உத்வாஹந.]

உத்துவாகம்—விவாகம். [உத்வாஹ.]

உத்துவாகிதம்— 1. உயர்த்தப்பட்டது. 2. நிமிர்த்தப்பட்டது. [உத்வாஹித.]

உத்துவாகிதமுகம்—தலைநிமிர்ந்துபார்த்தல்.

உத்துவாசநம்— 1. அகற்றுதல். 2. கொல்லல். 3. மிகவளர்ச்சி. [உத்வாஸந.]

உத்துவாந்தம்—மதமில்லாதயானை. [உத்வாந்த.]

உத்துவாநம்—சர்த்திசெய்யப்பட்டது. [உத்வாநம்.]

உத்துவாபம்—1. சிதைத்தல். 2. தள்ளுதல் [உத்வாப.]

உத்துவேகம்— 1. அச்சம். 2. ஏறுதல். 3. துக்கம். 4. பாக்கு. 5. மனக்கலக்கம். [உத்வேக]

உத்துவேகன் — விரைந்து செல்வோன். [உத்வேக.]

உத்துவேட்டணம் — 1. அடைக்கப்பட்ட இடம். 2. சூழ்தல். [உத்வேஷ்டந.]

உத்தூடணம்—1. மயிர்சிலிர்த்தல். 2. விவாகம்முதலான உற்சவம். [உத்தூஷண.]

உத்தூதம்—1. உயர்த்தப்பட்டது. 2. நிமிர்த்தப்பட்டது. [உத்தூத.]

உத்தூதமுகம்—உத்துவாகிதமுகம்.

உத்தூளநம் — விபூதியை நீரிற்குழையாது தூளாகப்பூசுதல். (உ-ம்.) "ஒருவிரலொருகையாளிடலுத்தூளநஞ் செயாதணிதல்" (தணிகை. இராம. உஉ.) [உத்தூளந.]

உத்தூளித்தல் — உடம்பு முழுதுமணிதல். (உ-ம்.) "ஒண்மையனே திருநீற்றையுத்தூளித்தொளிமிளிரும்" (திருவாச. நீத். உஉ.)

உத்தூளிதம்—1. தூள்விபூதி. 2. விபூதியைக்குழையாது தூளாக உடம்புமுழுதுமணிதல்.

உத்தேகம்—1. மதிப்பு. 2. விருப்பம்.

உத்தேகித்தல்—மதித்தல்.

உத்தேசநம்—1. அனுப்பல். 2. சாணைபிடித்தல். 3. விளக்கம். (உ-ம்.) "அஞ்சநதேவோத்தேசநகிருத்தியத்தால்" (சி. சி. ரு: க. ஞாநப.) [உத்தேஜநம்.]

உத்தேசம்— 1. அபிப்பிராயம். 2. உடன்படிக்கை, பொருத்தம். 3. நோக்கம். 4. பெயர்மாத்திரையாற் பொருளைச்சொல்லல். (உ-ம்.)"ஆதியுத்தேசத்தானுமிலக்கணவமைதியானும்"(திருவிளை. தடாதகை. ருச.) 5. மதிப்பு. 6. விசாரணை. 7. விவரம். [உத்தேஶ.]

உத்தேசி—உத்தேசிப்போன்.

உத்தேசித்தல்— 1. உத்தேசஞ்செய்தல். 2. கருதல். 3. திருட்டாந்தரப்படுத்தல்.

உத்தேசியம் — விளக்கப்படுவது. [உத்தேஶ்யம்.]

உத்தேசியன்—முக்கியன். (சி. சி. உ. உச. சிவாக்.)

உத்தேரிதம்—குதிரையின் ஐவகைக்கதியின் ஒன்று. [உத்தேரித.]

உத்பலன் — அரசமாதுக்குங் கனகனுக்கும் பிறந்தவன். (சூத. சாதி. ருக.)

உத்பவ—இருநூற்றிருபத்துநாலு புவனங்களிலொன்று. (கந்தபு. கணங். கo. உரை.)

உத்பாதகன்—பிறப்பிக்கிறவன்.

உத்பாதநம்—பிறப்பித்தல்.

உத்பாதம்—1. பிறப்பித்தல். (பௌட். உ: கரு.) 2. மேலேதூக்கினகால்.

உத்பாதித்தல்—உண்டாக்குதல். (சி. சி. உ: ருக. சிவாக்.)

உத்பிச்சம்—உற்பிச்சம், நிலத்தைப்பிளந்துகொண்டுமுளைக்குஞ்செடி முதலானவைமுளை.

உத்பிசம்—உற்பிச்சம். (வி-ணி.) [உத்பிஜ்ஜ]

உத்பிரேட்சை— தற்குறிப்பேற்றமென்னும் அலங்காரம்.

உத்பூதம்—உற்பூதம்.

உத்யுக்தசத்தி— திதிகிருத்தியத்திலேற்பட்டிருக்குஞ்சத்தி; இதில் ஞாநக்கிரியைகள் சமமாயிருக்கும். (பௌட். பதி. சஉ.)

உத்யுக்தர்—போகசிவன். (பௌட். உரு.)

உத்ராவம்—ஓடுதல்.

உத்வகனம்—விவாகம்.

உத்வாசனம்—கொல்லுதல்.

உத்வாந்தம்— மதமில்லாதயானை.

உத்வானம்—அடுப்பு.

உதக்கிரம்—1. உயர்ச்சி. 2. நீட்சி. 3. பெரிது. [உது ஹ்ரு உத்-மேல். க்ரு-நனி.]

உதக்கிரியை — உதகக்கிரியை. [உதக்கிரியா: உத-மேல். கிரியா-செயல்.]

உதக்கு—1. பின்னுளது. 2. மேலானது. 3. வடக்கு. (உ-ம்.) "உதக்குத் திசைநோக்கும்" (தணிகை. அகத். சஙக.) [உதக்.]

உதகக்கிரியை—பிதிருக்கு நீரினாலே தர்ப்பணஞ்செய்தல். [உதககிரியா.]

உதககும்பம்—தண்ணீர்க்குடம். [உதககும்ப: உதக-நீர். கும்ப-குடம்.]

உதககுத்தி— தேற்றாங்கொட்டை. (உ-ம்.) "உண்சரமா மணக்குடசந்தகரமதகங்கோட்டு முதகசுத்தி" (தைல. தைலவ. அகூ.)

உதகத்திண்ணை—தண்ணீர் நிரப்பிவைப்பதற்குக்கட்டிய சதுக்கம். (உ-ம்.) "கற்றானுக்கலங்காரக்குறடுதகத்திண்ணை" (தைல.தைலவ.கஙு.)

உதகதன்—1. நீர்கொடுப்பவன். 2. பிதிரர்களுக்கு நீரினாலே தர்ப்பணஞ்செய்வோன். [உதகத: உதக-நீர். த-கொடுப்போன்.]

உதகதாரம்—1. தாராதத்தம். 2.பிதிரர்களுக்கு நீரினாலே தர்ப்பணஞ்செய்தல். (சைவச. பொது. உகூக. உரை.) [உதகதாநம்: உதக-நீர். தாநம்- கொடுத்தல்.].

உதகம் — 1. நீர். (உ-ம்.) "உதகமுங்கொய்தினுண்பான்" (சிவதரு. சிவஞானயோ. சஉ.) 2. பூமி. 3. மழை. 4. மழைத்துளி. [உதகம்.]

உதகமூலம்—1. தண்ணீர்விட்டான்கிழங்கு (உ-ம்.) "இயவானிமுதிரையுமூந்துதகமூலம்" (தைல. தைலவ எஎ.) 2. பச்சைவேர். (உ-ம்.) "சாலவிருட்சோதகமூலந்தந்த" (தைல. தைலவ. அறு.)

உதகமேகம் — நீரே மூத்திரமாகக் கழியும் ஒருவகைச்சலரோகம். [உதகமேஹ: உதக-நீர், மேஹ-சிறுநீர்விடல்.]

உதகரித்தல்—உதகரித்துச்சொல்லல்.(சி.சி. க: உ. மறை.)

உதகவன்— 1. கொடுவேலி. 2. தீ.

உதகாதாரம்—நீர்நிலை. [உதகாதார: உதக- நீர். ஆதார- இடம்.]

உதகாநம்—நீருஞ்சோறும். (உ-ம்.) "மிதித்திழுப்பருதகாநமுதவாதவெட்டியரை" (சிவதரு. சுவர்க்கநரகவி. கசஅ.) [உதக-நீர். அநம - சோறு.]

உதகாரம்—மேகம். [உதஹார: உத- நீர். ஹார - எடுத்தல்.]

உதகாரன்—நீர்கொண்டுபோவோன். [உதஹார: உத - நீர். ஹார - கொண்டுபோவோன்.]

உதது—புன்கமரம்.

உததும்பம்—உதககும்பம். [உதகும்ப.]

உதநிகோதரம்—1. மகோதரம், நீராமயம். 2 முகில். [உதகோதர: உதக-நீர், உதர-வயிறு.]

உதசகிதம்—ஓமத்தோடுகூடியது.(சி. சி. அ: கூ. சிவாக்.) [ஹோமஸஹித: ஹோம - ஓமம், ஸஹித-கூடியது.]

உதசம்—1. சாபம். 2. நீரிற்பிறப்பது. [உதஜ: உத-நீர்,ஜ-பிறந்தது.] 3.பசுமடி.[உதஸ]

உதஞ்சநம் — 1. இறைகூடை. 2. எழும்புதல். 3. ஏறுதல். 4. மூடி. [உதஞ்சந.]

உதட்டடி— வாய்வெருட்டு. (உதடு-அதரம், அடி-அடித்தல்.)

உதடன்—பெருத்த அதரமுடையவன்.

உதடு — 1. அதரம். (உ-ம்.) "உதட்டைமென்று" (திருப்பு. ச.) 2. விளிம்பு. 3. வெட்டுவாய்.

உதடுபிதுக்கி — ஒருபுறத்திற் பிதுங்கிவிழுமுதடுள்ளவன்.

உதடுமடித்தல் — கோபத்தினாலுதட்டைக் கடித்தல்.

உதணம்—மொட்டம்பு. [சூடாமணிநிகண்டுகாரர் உதண் என்பர்.]

உதத்தியன் — அங்கிராமுநியின் மகனாகிய ஒரு முநி. [உதத்ய.]

உதத்தியாநுசன்— வியாழன் என்னுங்கிரகம். [உதத்யாநுஜ: உதத்ய- ஒரு முநி அநுஜ- தம்பி.]

உததரிசம்—நீர்த்தோற்றம். (உ-ம்.) "உததரிசமாமின்பபுத்தமிர்தபோகசுகம்" (திருப்பு. கக்க.)

உததி—1. கடல். (உ-ம்.) "உததிமண்ணுள்ளோர்" (பாரத. குரு. கூகூ.) 2. நீர்க்குடம். 3. மேகம். [உததி: உத-நீர். தி - வைத்தல்.]

உததிக்கிரமன்— 1. கடல் யாத்திரைசெய்வோன். 2. கலவன். [உததிக்ரம: உததி - கடல். க்ரம-போதல்.]

**உததிசுதை**— 1. இலக்குமிதேவி. 2. துவாரகாபுரி. உதயிஸுதா: உதயி-கடல். ஸுதா-மகள்.]

**உததிமேகலை** — பூமி. [உதயிமேகலா: உதயி- கடல். மேகலா- இடை.]

**உததீரம்**—தகரம்.

**உதந்தம்**— 1. சமாசாரம். 2. சரித்திரம். (உ-ம்.) "இராமோதந்தம்" [ஓர் நூல்.]

**உதந்தன்**—சன்மார்க்கமுடையோன், சாது. [உத்ஙு.]

**உதந்நியம்**—நீர்த்தாகம். [உதந்ய.]

**உதப்பி**—1. ஈரல். 2. சீரணமாகாத உணவு. 3. பேசும்போது தெறிக்கும் வாய்நீர்.

**உதப்பிவாயன்**—எச்சில் தெறிக்கும்படி பேசுகிறவன்.

**உதப்புதல்**—1. இகத்தல். 2. கடிந்துகொள்ளல். 3. குதப்புதல்.

**உதபானம்**—கிணறு. [உதபான: உத-நீர், பான-குடிப்பது.]

**உதபாரம்**—மேகம். [உதஹார: உத-நீர், ஹார-பரிப்பது.]

**உதம்**—1. அழைக்கப்பட்டது. 2. ஓமம், ஓமம்பண்ணப்படுதல். (உ-ம்.) "உதசகிதமாகப்பண்ணுந்தீட்சை" (சி. சி. அ: ரு. சிவாக்.) 3. கேட்டல். 4. நீர். [1,2. ஹூத, 4. உத. ஓமம்பண்ணப்படுதல் என்னும்பொருட்கு "ஹுத"என்பதே குறுகினின்றதென்பர்.]

**உதம்புதல்**—1. அதட்டுதல். 2. கடிந்துகொள்ளல்.

**உதமேகம்**—நீர்க்கொண்டமுகில். [உதமேக: உத-நீர், மேக-முகில்.]

**உதயகாலம்**— } சூரியோதயம்.
**உதயகாலை**— }

**உதயகிரி**—1. இருஷகிரி. 2. சூரியனுதித்தற்கு இடமாய் நிற்பதென்றுசொல்லப்படும் ஒருமலை. 3. செம்பாலையிற்பிறக்கும் ஒருபண். (சிலப். வேனில். ருரு. உரை.) 4. நெல்லூரிலுள்ள ஒருமலை. [2. உதயகிரி: உதய- உதித்தல், கிரி-மலை.]

**உதயகுமரன்** — காவிரிப் பூம்பட்டினத்தரசனாகிய நெடுமுடிக்கிள்ளியின் புதல்வன்; இவன் பெயர் இளங்கோனெனவும் வழங்கப்படும். (மணிமே.)

**உதயணகுமாரகாவியம்**— ஒரு தமிழ்நூல். இது வத்சதேசத்தரசனாகிய உதயணகுமாரன் சரிதங்கூறுவது. (மணிமே.)

**உதயணன்**—வத்சதேசத்தரசன்; வென்வத்தவனென்றும் வழங்கப்படுவன். (மணிமே.)

**உதயணன்கதை** — ஒரு தமிழ்நூல்; இது பெருங்கதையென்றும் வழங்கப்படும்.(மணிமே)

**உதயநம்**—1. உதித்தல். 2. காரியம். [உதயந.]

**உதயநன்**—1. அகத்தியமுனிவன். 2. கௌசாம்பிநகரத்தரசனாகிய சந்திரவமிசத்துச் சகத்திராநீகனுடைய ஒரு மகன்.(உ-ம்)"உதயவெற்பினிலுதித்தலாலுதயனென்றோர் - பதமிசைத்ததப்பாலனைநாடிவிண்பரப்பில்" (சேதுபு. விதூம. கoரு.) [உதயந.]

**உதயபர்வதம்**—உதயகிரி. [உதயபர்வத.]

**உதயம்**—1. இலாபம். 2. உதயகிரி. (உ-ம்.) "உதயமெனுங்-குன்றமிசை"(பாரத. ஒன்பதா. சக.) 3. உதயராசி. (சூரியன்முதலியவானசோதிகள்.) 4. உதித்தல். (உ-ம்.)"உதயத்-திங்கண்மாமரபில்" (பாரத. குரு. க.) 5. உலகத்தோற்றம். 6. எழும்புதல். 7. ஒலி. 8. சீர்பேறு. 9. சூரியோதயகாலம். 10.செருப்படை.(இராசவைத்.) 11. தோற்றம். 12. நல்ல அதிட்டம். 13. பிறப்பு. (உ-ம்.) "ஒடைமாகளிறனனுதயராசிகோள்" (இராமா. திருவவ. கக0.) 14. வெளிச்சம். [உதய.]

**உதயமநகிரி**—உதயகிரி.

**உதயமநம்**— 1. உதயகாலம். 2. உதயமலை. 3. உதயம்.

**உதயராசி**—உதயலக்கிநம்.

**உதயலக்கிநம்**—1. ஒருவன் பிறக்கும்போது சூரியன் நிற்கும் இராசி. 2. சென்மலக்கிநம். (சோதிடகடல்.) 3. தற்காலத்துதிக்கும் இராசி.

**உதயன்**—சூரியன். (உ-ம்.) "உதித்ததேருதயனென்றுரைப்ப" (பாரத. இந்திர. ரு.)

**உதயனம்**—உதித்தல்.

**உதயாசலம்** — உதயகிரி. (உதய, அசலம்-மலை.)

**உதயாத்தம்**—உதயாத்தமநம்.

**உதயாத்தமநம்** — உதயமும், அத்தமநமும்.

**உதயாதி**—விடியல்.

**உதயாதிபன்**—ஒருவன் பிறக்கும்போது நிற்கும் இராசியில் ஆட்சியாயிருக்குங்கிரகம்.

**உதர்க்கம்**—1. தூரகாலத்திற்பிறக்குங் காரியம். 2. வருங்காலம். [உதர்க்க: உத் -மேல், தர்க்-புகழ்தல்.]

உதர்ச்சி — 1. அக்கினி. 2. ஒளி. 3. சிவன். 4. மன்மதன். [உதர்ச்சி: உத்-மேல், அர்ச்சி-சுவாலை.]

உதர்த்தம்— 1. அக்கினிநோய். 2. ஒருவகைத் தொற்றுச்சுரநோய். முதலாநாளிலே கண்டதாபிதமடைவதும், இரண்டாநாளிலே சிவப்புநிறக்கரப்பன் வருவதும், ஆறும் ஏழாம் நாளிலே தோலுரிவதும் இதன் குணங்களாகும். [1. உதர்த்தி. 2. உதர்த்தி.]

உதரக்கனல்—தீபநாக்கினி.

உதரக்கோதி—பசி.

உதரக்கோமதம்—பாலடைப்பூண்டு.

உதரத்தீ—உயிர்முத்தீயினொன்று.

உதரத்துடிப்பு—உதரக்கொதி.

உதரதி— 1. சமுத்திரம். 2. சூரியன். [உததி.]

உதரநாடி—இரத்தநரம்பு.

உதரப்பிரிவு—தங்குடித்தமர்.

உதரபந்தநம்— 1. அரைப்பட்டிகையாபரணம். (உ-ம்.) "சுற்றுநீடணிமணிச்சோதிபொங்கமேல்- ஒற்றைமாமணியுமிழுதரபந்தநம்" (இராமா. கடிமண. ௬௨.) 2. ஒட்டியாணமாகிய யோகப்பட்டை. (உ-ம்.)"உதரபந்தநமுமுள்ளான்" (சிவதரு. சிவஞானயோ. ௬௨.)

உதரபந்தம்—அரைப்பட்டிகை. (உ-ம்.) "மருவிய வுதரபந்தக்கோப்பும்" (கோயி. நடரா. ௧௧.)

உதரம்—கருப்பம். (உ-ம்.) "கல்லாலுதரமுட்குழம்புமாறு - செற்றனள்" (பாரத. சம்பவ. ௭௦.) 2. கீழ்வயிறு. 3. யுத்தம். 4. வயிறு. (உ-ம்.) "உதரங்குளிர்ந்து" (பாரத. குருவா.) ௧௨.) [உதரம்.]

உதரம்பரி—வயிறுநிறைப்போன். [உதரம்பரி: உதரம்-வயிறு. பரி-நிறைப்போன்.]

உதரவணி—கண்டங்கத்தரிப்பூண்டு.

உதரவாணி—உதரவணி.

உதராக்கிநி-உதரத்திலிருந்து பசியைவிளைவிக்குந்தீ. (உ-ம்.) "உதராக்கினி சுடுதவிளுனும்" (வை. தீ. உரை )

உதராமயம்—1. கிராணி. 2. வயிற்றுவலி. [உதராமயம்: உதர-வயிறு. ஆமய-நோய்]

உதராவர்த்தம் — 1. கொப்பூழ். 2. திட்டுக்கட்டு. [உதராவர்த்த: உதர-வயிறு. ஆவர்த்த-சுழி.]

உதராவி—மரமஞ்சள்.

உதாரவேட்டம் — நீரைப்பாம்பு. [உதாரவேஷ்ட: உதர-வயிறு. ஆவேஷ்ட - சுற்றுதல்.]

உதவகன்—1. அக்கினி. (உ-ம்.) "உன்னுடலையின்னேயுதவகற்குதவல்வேண்டும்" (சேதுபு. சங்கர. ௬௨.) 2. கொடுவேலிச்செடி. [ஹுதவஹ: ஹுத-ஓமஞ்செய்யப்பட்டது. வஹ தாங்குவோன்.]

உதவச்சிரம்—சமுத்திரத்திலிருந்து திரண்டெழுந்து மேலேபோகும் நீர்த்தம்பம். [உதவஜ்ர: உத-நீர். வஜ்ர-தம்பம்.]

உதவசிதம்—வீடு. [உதவஸித: உத-நீர், வஸித மூடப்பட்டது. நீர் உள்ளேவராதுமூடப்பட்டதென்றபடி.]

உதவரக்கெட்டது— } மிகவுமிழிந்தது.
உதவரங்கெட்டது— }

உதவல்— 1. காரியத்திற்காதல். 2. கூடியதாதல். (உ-ம்.) "மன்றநற்கன்போடுதவுமுபசாரமனைத்துமீந்தார் " ( பாரத. அருச்சுனன்றீ. ௮௪.) 3. கொடுத்தல். (உ-ம்.) "கொங்கை-யூறுபாலமிர்தமன்னோர்க்குதவலும்" (கந்தபு. திருவவ. ௧௧௭.) 4. துணைச்செய்தல். (உ-ம்.) "தந்தையர்க்குதவுமுதவியின்" (பாரத.குரு.௧௦௨.)

உதவாகநம் — மேகம். [உதவாஹநம்: உத- நீர். வாஹந-தாங்குவது.]

உதவாசநம்—முகில்.

உதவாசம்—நீர்க்கரையிலுள்ள வீடு. [உதவாஸ: உத-நீர். வாஸ- வீடு.]

உதவி — துணைச்செயல், சகாயச்செயல். (உ-ம்.)"உதவிவரைத்தன்றுதவி" (வள். ௧௦௫.) 2. கொடை.

உதவிந்து—நீர்த்துளி. [உதவிந்து: உத-நீர். விந்து-துளி.]

உதவு— உதவென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும்.

உதவுதல்—உதவல்.

உதள்—1. ஆட்டுக்கடா. (உ-ம்.) "அதளோன்றுஞ்சுங்காப்பினுதள" ( பெரும்பா. ௧௫௪. ) 2. ஆடு. (உ-ம்.) "உரங்கொடுபெற்றியீர்ப்பவுதளனுமதலை" ( சேதுபு. சாத். ௨௫. ) 3. மேடராசி.

உதறல்—பற்றியிருக்குமொன்றுபற்றுவிடும் படியசைத்தல். (உ-ம்) "மலர்க்கயத்தமிழ்ந்தி யோனைந்தவான்றகி-லுலர்த்தியவெடுத்தெடுத் துதறல்போலுமே" (சேதுபு. கந்த. சக.)

உதறிமுறிப்பான்– விட்டுணுகரந்தைச்செடி.

உதறு— உதறென்னேவலும், தெரிநிலைவி னைப்பகுதியும், வினைத்தொகையும்.

உதறுகாலி—1. உதறுகாற்பெண். எறிகாற் பசு.

உதறுதல்— 1. அசைத்தல். 2. ஆட்டியசை த்தல். (உ-ம்.)"விட்டிடுகின்றவாளிவெய்யவன ங்கமெங்கும்- பட்டிடுகின்றகாலைப்பதைபதைத் துதறிச்சிந்தி" (கந்தபு. சூரபன். வதை.௩௮அ.) 3. இடங்கொடாமற்றள்ளுதல். (உ-ம்.) "பேற னைத்துமணுவெனவேயுதறித்தள்ளப் பேரின்ப மாகவந்தபெருக்கே" (தாயு. ஆகார. ௩.) 4. பற்றியிருக்குமொன்று பற்றுவிடும்படியசை த்தல். (உ-ம்.) "கோகனதங்-கைந்நீங்காதிருந்த தெனக்கரமுதறிக்கரைந்திடுவார்" (சேதுபு.நா ட்டு. சுஉ.) 5. விதிர்த்தல்.

உதறுவலி—ஒருவகைநோய். (உ-ம்.) ஒழி யாக்குடைச்சலுதறுவலி" (தைல தைலவ.கடு.)

உதன்—சிவன். [ஹ௨த.]

உதாகரணம்—1. உதாரணம். 2. சொல்லு தல். 3. வியாத்தியோடுகூடிய திருட்டாந்தத் தையுணர்த்துவது. (சைவப். கஉ.) [உதாஹ ரண: உத்-மேல். ஆஹரண - எடுத்தல்.]

உதாகரி—உதாகரியென்னேவலும், தெரிநி லைவினைப்பகுதியும்.

உதாகரித்தல்– 1.உதாரணங்காட்டிச்சொல் லுதல். (சி. சி. பர. கசு. உரை.) 2. சொல்லு தல். (சி. சி. உ: ௫. ஞானப்.)

உதாகலம்—உரல்.

உதாகாரம்—உதாகரணம். [உதாஹார]

உதாசநம்—1. எண்ணுமை. 2. தூஷணம்.

உதாசநன் — 1. அக்கினி. (உ-ம்.) "உதாசந னையங்குலவவிடு" (தைல. தைலவ. கஉஎ.) 2. அக்கினிதேவன். (உ-ம்.) "ஒளித்துவந்தனனிரு பிறப்பினனலேனுதாசநனெனன்னுமம்" (பார த. காண்ட. உ௩.) 3. கண்குத்திப் பாம்பு. 4. கொடுவேலி. [1, 2. ஹுதாசந: ஹுத- ஓமஞ்செய்யப்பட்டது, அசந-உண்போன்.]

உதாசநி—1. கொடியவள். (உ-ம்.) "சூர்ப்ப நகைப்படுமூழியுதாசநி" (திருப்பு. உகசு.) [அக் கினிபோல்பவள் என்றபடி ] 2. பங்குனிமாசப் பௌர்ணிமை. [ஹுதாசநி.]

உதாசநித்தல்—இகழ்தல்.

உதாசம்—உதாசீநம். [உதாஸ: உத்- மேல், ஆஸ-எறிதல்.]

உதாசினபாவம்—நிந்தனைக்குற்றம்.

உதாசீநசத்தசிவம்— சிருட்டியில் முயலாத வராய் இலயதத்துவத்திலிருக்கும் நிட்களசிவம். (சி. சி. ௪: கக. ஞானப்.)

உதாசீநதை — விருப்பும் வெறுப்புமின்றிப் பொதுமையாயிருக்குந் தன்மை. [உதாஸீந தா.]

உதாசீநம்—விருப்புவெறுப்பின்மை.

உதாசீநநுபிணி—விருப்புவெறுப்பற்றிருப்ப வள். (பௌட். க: ௪0.)

உதாசீநன்—1. இருவகைக்கிருகஸ்தருளொ ருவன்; அவன், முனிவர்கடன்கேள்வியானும், தேவர்கடன்வேள்வியானும், பிதிரர்கடன் புத ல்வரானும் நீக்கியபின், இல்லறமுநீங்கியிருப்ப வன். (உ-ம்.) "ஓதுமில்லறத்தினின்றேனுயரு தாசீநன்மிக்க-சாதகனென விரண்டாந்தன்மை யனவரின்முன்னோ - னேதமில்கடன்கள்மூன் றுங்கழித்தபின்னில்லிற்றீர்ந்தோன்" (கூர்மபு. வருண. ௩அ.) 2. பிரத்தியான். 3. விருப்புவெ றுப்பின்றிப் பொதுமையாயிருப்பவன். (உ-ம்.) "அசங்கோதாசீநனாகிநிற்க" (சி. சி. ௪. அ: சி வாக்.)

உதாசீநை— கிருத்தியமில்லாமலிருக்குஞ்ச த்தி. (பௌட். க: ௪உ.) [உதாஸீநை.]

உதாத்தம்— 1. உபகாரக்கொடை. 2. நே சிக்கப்பட்டது. 3. முப்பத்திரண்டு அலங்கார ங்களுள் ஒன்று; அது: செல்வத்தின் உயர்ச்சி யையும், உள்ளத்தினுயர்ச்சியையும் புனைந்து ரைப்பது. (தண்டி. பொரு. உஉ.) (வரலாறு.) "கன்றும் வயவரினங்கள் பல கவர்ந்தும் - என் றும் வதிஞரினங்கவர்ந்தும் - ஒன்றும், அறிவரி தாகிற்குமளவினதாலம்ம - செறிகதிர்வேற்செ ன்னிதிரு" இது செல்வமிகுதிகூறியவுதாத் தம். "மண்ணகன்றுதன்கிளையினீங்கிவனம்பு குந்து- பண்ணுந்தவத்திசைந்தபார்த்தன்றன்- எண்ணிறந்த, மீதண்டர்கோன்குலையும் வெய் யோர்குலந்தொலைத்தான்-கோதண்டமேதுணை யாக்கொண்டு" இஃது உள்ளத்தின் மிகுதி கூறியவுதாத்தம். 4. வேதத்துக்குரிய உச்சார ணம் மூன்றனுள் ஒன்று; அஃது: எடுத்துக்கூ றுதல். (உ-ம்.) "மந்திரமுதாத்த-வோசையனு தாத்த சொரிதந்தழுவவோதி" (திருவிளை. த டாதகை. அ.) [உதாத்த: உத்-மேல். ஆத்த- உச்சரிக்கப்பட்ட.]

**உதாத்தன்**— 1. சிறப்புள்ளோன். 2. பெரியோன். 3. வள்ளல். [உதாத்த.]

**உதாநம்**—1. கண்ணிமை. 2. கொப்பூழ். 3. சூத்திரபிடகத்தின் சிற்றுறுப்பினுளொன்று. 4. நாபியினிற்கும் வாயு. 5. பாம்பு. [உதாந.]

**உதாநவாயு**—தசவாயுக்களிலொன்று; அஃது. அனலாகாரமாய் உணவைச்சீர்ணமாக்குவது.(த. நி. போ. ருசுரு.) சீரத்திற்குள் ஒன்றாயிருப்பினும் வியாபாரபேதத்தினாலே ஐவகைப்படும் வாயுக்களுள் ஒன்று; அது: கண்டதேசத்திலிருப்பது. பேசுகின்ற புருஷனுக்குப்பேசும் முயற்சியை முன்னிட்டுத்தேகத்துக்குள்ளிருக்கும் ஆகாயத்தின் குணமாகிய துவனியை வாயில் வாக்கிந்திரியத்தோடு கூட்டி வர்ணமாகச்செய்வது. (சி-லி. ஞாக. கஎ.)

**உதாநன்**— உதாநவாயு; அஃது: உதராக்கினியையெழுப்பியுண்டவைகளை நாடியிற்செலுத்திச்சீரத்தை வளர்த்து நாபியினிலைத்துநிற்பது. இது கண்டத்தாநத்தினிற்குமென்பர் அடியார்க்கு நல்லார். (கூர்மபு. பலவ. கஅ. உரை)

**உதாமநியு**—உதாமநு. (சேதுபு. அசுவத்தா. ருரு.)

**உதாமநு** — பாரதயுத்த வீரருளொருவன். (உ-ம்.) "உதாமநுமுதலோரோரிருபுறத்தினுஞ் சூழ" (பாரத. பதினான். கூ.)

**உதார்த்தம்**—உரூபகத்தினொன்று.

**உதாரகுணம்**— கொடைக்குணம். [உதார-கொடை.]

**உதாரணம்**—1. எடுத்துக்காட்டு; அது: கூறப்படும் விதிக்குப்பிரயோகமாக அமைந்த இடம். (உ-ம்.) "நாமாண்புரைத்தவசைச்சீர்க்குதாரண நாண்மலரே"(யாப். காரிகை. உறுப்.ச.) [உதாஹரணம் என்பதிலே ஹகாரங்கெட்டு உதாரணம் என நின்றது.] 2. எதிர்காலம். 3. துணைக்காரணம்.

**உதாரத்தம்**—ஓரலங்காரம்; அது செல்வமுதலியவற்றின் மிகுதிதோன்றக்கூறுவது.

**உதாரத்துவம்**—கொடைத்தன்மை. [உதார-கொடை. துவம்-தன்மை.]

**உதாரதை**— 1. உதாரத்தன்மை, கொடை. (உ-ம்.) "ஊணிலான்செய்யுமுதாரதையும்" (சிறுபஞ்சமூலம்.) 2. வைதருப்பநெறி பத்தனுள்ளே ஒன்றாகிய உதாரம். (உ-ம்) "ஈண்டுஞ்சிவீட்டமுதாரதைகாந்தி" (வீரசோ. அலங்கார. சு.) [உதாரதா.]

**உதாரம்**—1. கொடை. (உ-ம்.) "உதாரசிலனுயரங்கர் கோன்வரிவிலொன்றுமேயமையும்" (பாரத. கிருட். கருச.) 2. சாமர்த்தியமானவாக்கு. (உ-ம்.) "விழுமியகுணத்தான்மிக்கோன் விரத்தியாய்விளம்புஞ்சொற்கள், முழுதுநல்லுதாரமாகிமுடிவிலற்புதமாமென்றா" (ஞானவா. சுகர்கதை. ௫.) 3. தயவானகுணம். 4. பெருமை, மேன்மை. (உ-ம்.) "கனமிலதாயுதாரமதாமெனினும்" (ஞானவா. வைராக். சுஉ.) 5. வீரம். 6. (அலங்காரம்) வைதருப்பநெறி பத்தனுள் ஒன்று; அது, சொற்படுபொருளின்றிக் குறிப்பினாலொருபொருள் நெறிப்படத்தோன்றுவது. (உ-று.) "செருமான வேற்சென்னிதென்னுறந்தையார்தம்-பெருமான் முகம்பார்த்த பின்னர்-ஒருநாளும்,பூதலத்தோர்தம்மைப் பொருணசையாற்பாராவாங் - காதலித்துத் தாழ்ந்திரப்போர் கண்" இதன்கண் இரப்போர் வறுமைதீரக்கொடுப்போன் என்பது குறிப்பினாலே தோன்றிற்று" (தண்டி. பொது. உ௦.) [உதார: உத்-மேல். ரு-இரு-போதல்.]

**உதாரவணி** — உதாரமென்னுமோரலங்காரம். (உதாரம் பார்.)

**உதாரன்**—1. கொடையாளன். 2. வாக்குவல்லவன். 3. வீரன்.

**உதாரி**— 1. கொடையாளி. (உ-ம்.) "ஒங்கு தோள்வலி யாரொனூதுங்கவு தாரிமேவிய கானமே" (சேதுபு. தருமருத். கூ.) 2. வாக்குவல்லமையுள்ளவள். (உ-ம்.) "பணஞ்சுற்றிக்கொளுபாயவுதாரிகள்" (திருப்பு. ருஎஅ.) 3. வீரன்.

**உதாவணி**—கண்டங்கத்தரிச்செடி.

**உதாவர்த்தம்**–1. உதாவர்த்தவாதம். (உ-ம்.) "ஊருத்தம்பமாக்ஷேபமுதாவர்த்தந் தினந்தோறும்பகலிற் - றூங்கியகிபத்தால் வரும்பலமருத்தும்" (தைல. தைலவ. எஅ.) 2. தடைப்பட்டு வரும்பூப்பு. [உதாவர்த்தம்: உத்-மேல். ஆவர்த்தம்-வசித்தல்.]

**உதாவர்த்தவாதம்**—ஒருவகை வாதரோகம்; அது. வேகத்தோடுவருகிற மலமூத்திராதிகளை அடக்கல், மந்தவஸ்து மலபந்தவஸ்துக்களைப்புசித்தல் ஆகிய செய்கைகளினாலேபிறந்து கீழ்வயிற்றிலே கனத்தல்நோவு, உப்பல், மலசலக்கட்டு என்னும் இக்குணங்களை உண்டாக்குவது. (உத்-மேல். ஆவர்த்தம்-சுழலுதல். அதோங்கத்திலிருக்கின்ற நரம்புகளையும் மலமூத்திரங்களையும் மேலாக இழுத்துப்பிடித்துச்சுழலுவதால் வந்தபெயர்.) (சீவரட். கசுரு. பக்.)

உதி— 1. உதியென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும். 2. உலைத்துருத்தி. (உ-ம்.) "உதியுறுதுருத்தியூதுமுலையுறுதீயும்" (இராமா. வரை. ௯௯.) 3. ஒதியமரம். (தொல். எழுத். உசங.) 4. வித்தை. (உ-ம்.) "உதியொரேழிரண்டுந்தந்தமுநிவநிற்குதவவென்ன - நிதியமென்றறைந்தேன்" (இரகு. அயனுதய. கக.)

உதிட்டிரன்— தருமராசன்; இவன் பாண்டுவின் மூத்தகுமாரன். (உ-ம்.) "உதிட்டிரன்பிறந்தகாலை" (பாரத. சம்பவ. ௬அ.) [யுதிஷ்டிர — யுதிட்டிரன் என்பதிலே யகரமெய் கெட்டுநின்றது.]

உதித்தல்— 1. உதயமாதல். 2. தோன்றுதல், உற்பத்தியாதல். (உ-ம்.) "உதிப்பதுமீறுமுண்டென்று" (சி. சி. க: உ.) 3. பருத்தல். 4. பிறத்தல். (உ-ம்.) "குருவுமக்குலத்திலங்குதித்தான்" (பாரத. குரு. ௬க.)

உதிதம்— 1. உயர்ந்தது. 2. சொல்லப்பட்டது. 3. தோற்றப்பட்டது. (பௌட். க: ௬க.) 4. விரிந்தது.

உதிதா— உதிக்க. (சிந்தா.)

உதிதன்—தோன்றினவன். (உ-ம்.) "மதியங்கெடுத்தவயமீனெனத்தம்பிமாழாந் - துதிதற்குரியாள்" (சிந்தா. பதிகம். கஅ.)

உதிப்பு— 1. தோற்றம். 2. பிறப்பு.

உதியர்வேந்தன்–சேரஅரசன். (உ-ம்.) "அதிர்கழலுதியர்வேந்தன்" (பெரியப். சேரமா. உஅ.)

உதியன்— 1. சேரன். (சூ. நிகண். உ: கஅ) 2. வித்துவான், பண்டிதன்.

உதிர்— 1. உதிரென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். (உ-ம்.) "உதிர்காய்" 2. கோரைக்கிழங்கு. 3. துகள். (உ-ம்.) "ஓதநீர்முகிலார்ப்பொடிபுவிக்கண்வீழ்ந்துடைந்தன வுதிராகி" (கந்தபு. சதமுக. கரு.)

உதிர்க்குக்கிடாரி— கருடன் கிழங்கு.

உதிர்காய்—சொரிகாய்.

உதிர்காலம்— இலையுதிர்காலம்.

உதிர்சம்பம் — பழுத்துதிர்ந்த எலுமிச்சம் பழம். (உ-ம்.) "ஆர்க்கு" பார்.

உதிர்த்தல்—1. உகுத்தல். (உ-ம்.) "தழையுடைப்பொதும்பர்பைங்காய் தலைத்தலையுதிர்க்குமாபோல்" (கந்தபு. வீரவாகுகங். உச.) 2. உதிரச்செய்தல். (உ-ம்.) "கொல்கரைநறும்பொழிற்குயில் குடைந்துதிர்த்த-புதுப்பூஞ் செம்மல்" (சிறுபா. ச.) 3. பொடியாக்கல்.

உதிர்தல்—1. சாதல். (உ-ம்.) "நீசிக்கிரமுதிர்ந்துபோவாய்" 2. சிதறுதல். 3. சிந்துதல். 4. சொரிதல். (உ-ம்.) "பூவுதிர" 5. பிதிர்தல். (உ-ம்.) "உதிருகின்ற சிற்றுண்டிகொண்டு" (கந்தபு. ஆற். உஎ.)

உதிர்ப்பு—உதிர்த்தல்.

உதிர்யன்—பண்டிதன்.

உதிர்வு—உதிர்தல்.

உதிர்வேங்கை—உதிரவேங்கை.

உதிரக்கட்டு—இரத்தங் கட்டுப்பட்டுநிற்றல், பூப்புப்படாமை.

உதிரக்கலப்பு— இரத்தக்கலப்பான உறவு.

உதிரக்கிரகி—1. அட்டை. 2. கரடி. [இரத்தத்தைக்கிரகிப்பதென்றபடி]

உதிரக்குடோரி—கருடன்கிழங்கு.

உதிரசூலை—இரத்தசூலை.

உதிரத்துடிப்பு—இரத்தத்துடிப்பு.

உதிரபந்தம்—மாதுளை.

உதிரபாசம்—இரத்தவுறவு.

உதிரம்— இரத்தம். (உ-ம்.) "உரத்திறைந்த கமூரிஇக்குளத்தழுத்தினனுதிரமோடுயிர் சோர்ந்தான்" (தணிகை. சீபரிபூ. உ௬ச.) [ருதிர]

உதிரமுறிப்பான்—விட்டுணுகிராந்திச்செடி.

உதிரரேட்டை—துவாலைப்பெருக்கு.

உதிரவாயு—சூதகவாயு.

உதிரவிரியன்—ஒருவகைப்பாம்பு.

உதிரவேங்கை — ஒருவகை வேங்கைமரம். இதன்சாரம் இரத்தமயமாயிருந்து குடிப்பவரை மயக்கும்.

உதிரன் — செவ்வாயென்னுங் கிரகம். (சூ. நிகண். க: ௬௦.)

உதிரிக்குத்து — மசூரியினாலுண்டாகும் ஒருவகைக்குத்து.

உதிரித்தழும்பு— அம்மைவடு.

உதிரி—1. உதிர்ந்தது. 2. ஒருவகை வாழை. 3. சிறுகீரை. 4. துளசி. 5. மசூரிநோயிலொருவகை.

உதிருநாரம் — உதிர்ந்த நாரத்தை. (உ-ம்.) "நறுமாதுலமுட்சங்குதிருநாரம்" (தைல. தைலவ. கருகு.)

உதிரோற்காரி—எழுவகைமுகிலினொன்று; அஃது, இரத்தம்பொழிவது. [உதிர-இரத்தம், உற்காரம்-உமிழ்தல்.]

உதீசி—வடக்குத்திசை. (உ-ம்.) "கருத்தியல்காட்சித்தாகிக்கவினியவதற்குதீசித் - திருத்தியதிசையில்" (இரகு. முடி. ௯ச.) [உதீசி.]

உதீர்ணன்—நற்சிந்தையுள்ளவன்.

**உது**— அஃறிணையொன்றன்பாற்படர்க்கையில் அண்மை சேய்மைகளுக்கிடையே யெதிர்முகத்திலுள்ளதனைச் சுட்டிவரும் ஒரு சுட்டுப்பெயர். (உ-ம்.) "உலகம்யாங்கணுமிழியிருளுணமிகவுதுதேர்ந்து" (தணிகை. புராணவர. க.)

**உதுக்காண்**—உவ்விடத்தே பார்.(ஐங்குறு.)

**உதும்பரம்**—1. அத்திமரம். (உ-ம்.) "கூரியதருப்பையுதும்பரக்கொம்பு" (திருவானை.கோச். கூசு.) 2. எருக்கஞ்செடி. 3. செம்பு. 4. செவ்வகத்தி. 5. நெற்களம். 6. வாயிற்படி. [1, 3. உதும்பர.]

**உதும்பிரேசம்**—நிவிர்த்திகலையிற்பிருதிவி தத்துவத்திலிருக்கும் (௧௦௮) புவனங்களுளொன்று. (சி-லி. கிரியா. உக. உரை.)

**உதூகலம்**—உரல். [உதூகல.]

**உதை**— 1. உதைத்தல். (உ-ம்.) "தாளா-லுதைபடக்கிடந்தகூற்றமொத்தது" (திருவிளை. யானையெ. ௬௨.) 2. உதையென்னேவலும்,தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 3. காலாலமுத்துகை. 4. காலெறி. 5. முட்டுக்கால்.

**உதைகால்**—முட்டுக்கால்.

**உதைகாற்பசு**— பால்கறக்கையிலே உதையுங்காலுடையபசு.

**உதைகொடுத்தல்**—1.உதைத்தல். 2. முட்டுக்கொடுத்தல்.

**உதைசுவர்**—முட்டுச்சுவர்.

**உதைத்தல்** — 1. அலட்சியம்பண்ணல். (உ-ம்.) "என்பேச்சையுதைத்துத்தள்ளிப்போட்டான்" 2. காலினடிப்புறத்தாலே தாக்குதல். (உ-ம்.) "வாமச்சேவடிதன்னாற்சிறிதுந்தி - யுதைத்தான் கூற்றன்விண்முகில்போன் மண்ணுறவீழ்ந்தான்" (கந்தபு. மார்க்கண். உ௫௬.) 3. தாக்கல். (உ-ம்.) "கடியகாலுதைப்பப்பெய்யுங்கடுஞ்சிலவெழிலி" (திருவிளை. நான்மாட. கக.) 4. பிரயோகித்தல். (உ-ம்.) "வாளியுதையினன்" (பாரத. பதின்மூ. சஉ.) "நவையுறுதிறலுடைநகுசரமுதையா" (பாரத. நிவாத.க௬உ.)

**உதைதல்**— 1. காலினடியினாலே தாக்கல். 2. தாக்கிமீளுதல். (உ-ம்.) "நொய்துதைத்துமீளுமால்" ( நைட. கைக்கிளைப். ௫. ) 3. பிரயோகித்தல்.

**உதைப்பு**—1. உதைத்தல். 2. பயம்.

**உதைமாநம்** — உதைகால்.

**உதையம்**— 1. உதயம். 2. செருப்படை. (இராசவைத்.)

**உதையுண்ணல்**—உதைபடல்.

**உதோளி**—உவ்விடம். (தொல். எழுத். தொகை. கஎ. உரை.)

**உதோன்முகம்**—மேன்முகம்.

**உந்த**— அண்மைசேய்மைகளுக்கு இடையிடத்தைச்சுட்டும் பொருளில் பெயர்ச்சொற்கு முன்னாகவரும் ஓரிடைச்சொல். (உ-ம்.) உந்த வேல்" (பாரத. பதினன். உக௨.) [ உ, உந்த என்றுமாயிற்று.]

**உந்தரம்**— 1. எலி. 2. வழி. [உந்தர.]

**உந்தல்**—1. அசைந்துபோகச்செய்தல், தள்ளுதல். (உ-ம்.) "மந்தரக்கிரியனையதைமணிவிரற்றலையா-லுந்த"(கூர்மபு.இராமன்வன. எ௨.) 2. அனுப்புதல். (உ-ம்.) "பெரும்படையோய் விலன்பெரிதுந்தினன்" (ஞானவா. தாமவியாள. உ௬.) 3. (இசைநூல்) யாழினாலிசைபாடுவோர் செய்யுங்கைத்தொழில்களுள் ஒன்று; அது: யாழ்நரம்புமுழுவதையுந் தடவித்தள்ளல். (உ-ம்.) "இசையனைத்துந்-தழுவுநரம்புமுழுதினையுந்தடவித்தள்ளலுந்தல்" (கூர்மபு. கண்ணன்மணம். கசசு.) இசைக்கரணங்களுளொன்று. அது: நரம்புகளைத்தெறித்து வலிவிற்பட்டதும் மெலிவிற்பட்டதும் நிரல்பட்டதுமறிதல். ( கூர்மபு. திருக்கலி. க. உரை.) 4. எழும்புதல். (உ-ம்.) "உந்துநீர்க்கங்கையாற்றினுய்த்தலும்" (கூர்மபு. இராமனவ. ௬க.) 5. எறிதல். (உ-ம்.) "அந்தமின்றியின வள்ளியள்ளியே-யுந்தினன் றிசைதொறுமுரற்றிவீழவே" (கந்தபு. நகரழி. உ௬.) 6. ஏறுதல். (உ-ம்.) "உந்துபயம்" (சிவப்பிர. உ: ௬௦.) 7. (குணத்தால்) உயர்தல். (உ-ம்.) "உந்துசுடர்ஞானத்தை" (சேதுபு. நாட்டு. ௬.) 8. செலுத்துதல்.(உ-ம்)"உரம்படச்சரங்கண்மேன்மேலுறுக்கிவேல்வீமனுந்த" (பாரத.புட்ப.௧௦௬) " தூளிசெய்தேரினைத் துரோணனுந்தினன் " (பாரத. நிரை. அ௫.) 9. பொருந்துதல்.(உ-ம்.) "உந்துதல்-பொருந்துதல்." (சி.சி. ச: ௬ச. சிவஞாந.) 10. (வடிவால்) உயர்தல். (உ-ம்.) "உந்திரதத்திடைபோய்" (பாரத.பதின்மூன். க௨.)

**உந்தி**— 1. ஆன்கோட்டம். 2. உயர்ச்சி. 3. கடல். (உ-ம்.) "உந்தியுலகத்திலுலகாயதனுரைப்பான்" (சி.சி.பர. உலோகாயதன்மதம். க.) 4. குழாங்கூடியமகளிரது ஒருவிளையாட்டு. (உ-ம்.) "அவன்றுடொழுவாமென றுந்தீபற"(அவிரோ. க.)5.கொப்பூழ்.(உ-ம்.) "உந்தியின்மீதுபோயவுரோமத்தினொழுக்கமன்றே" (கந்தபு. மாயைப். ௫௨.) 6. சாய்த்து. (உ-ம்.) "விண்டொடுபைந்தருக்களையுந்தியே" (திருவிளை. விடையி. க௦.) 7. தேர்ச்சில்லு. (உ-ம்.) "உந்திகளுலுடையுந்திரதத்திடைபோய்" (பாரத. பதின்மூ. க௨.) 8. தேர்த்தட்டு. (பிங்கல. ௬கக௬.) 9. தொழில். 10. நடு. 11. நீர். (பிங்கல. ௬கக௬.) 12. நீர்ச்சுழி. ( உ-ம். ) "பெறவுந்திவிரிநீருவரி" (கூர்

டிபு. பலவ. கக.) 13. பரப்பு. 14. யாழகத்தோ ருறுப்பு. (உ-ம்.) "சென்றுவாங்குந்தி" (மலை படு. ௬௪.) 15. யாற்றிடைக்குறை. (உ-ம்.) "உந்தி-சிவந்துசென்னீத்தம்" (மதுரை. ௨௪௫.) 16. யாறு. (பிங்கல. ௬கககசு.) 17. வயிறு. (உ-ம்.) "உந்திகிரப்புறுமுண்டியதின்றி" (கந்தபு. சூர. வதை. ௬௧௨.)

**உந்திக்கமலம்**—தாமரைப்பூவடிவானகொப்பூழ். இது விட்டுணுவினுந்தியென்பர்.

**உந்திச்சுழி**— 1. கொப்பூழ்ச்சுழி. (உ-ம்.) "உந்திச்சுழிவயினிலங்க" (பாரத. பாயிர. எ.) 2. நீர்ச்சுழி. (உ-ம்.) மேலது பார்.

**உந்திநாளம்** — கொப்பூழ்க்கொடி. (உ-ம்.) "உந்திநாளத்தை-மெல்லவரிந்து புறத்தொழிக்க" (திருவானை. கோச்செ. எ௬.)

**உந்திபூத்தவன்**—விட்டுணு. (உ-ம்.) "உந்திபூத்தவனுவணத்தினடிகளும்" (திருநெல்.நகர. எ௨.)

**உந்திபூத்துளான்**—விட்டுணு. (உ-ம்.) "உந்திபூத்துளானுலகமெய்தினன்" (கூர்மபு. மாவலி. க௨.)

**உந்திபூத்தோன்**—1. நாபியிலிருந்து தோன்றச் செய்தோன். (உ-ம்.) "அந்தநான்முகனை யுந்திபூத்தோன்" (கல்லா. ௨௨.) 2. விட்டுணு. (பிங்கல. க௩௦.)

**உந்திமலர்** — விட்டுணுவினுந்தியங்கமலம். (உ-ம்.) "உந்திமலர்மகனிதனை யுரைத்திடலும்" (சேதுபு. தேவி. கஅ)

**உந்தியார்**—வேதாந்தசாரநூல்.

**உந்தியிறைவன்**—பிரமன். (உ-ம்.) "ஒப்பற்றவுந்தியிறைவன்" (திருப்பு. ௨.)

**உந்து**— 1. உந்தென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும், வினைத்தொகையும். (உ-ம்.) "உந்துநீவிழியுழையரிற்சிலவரை" (கந்தபு. சூரன்றண்ட. ௬௨.) 2. கச்சோலம். 3. செய்யு மென்னும் வாய்பாட்டுப்பெயரெச்சத்தினிறுதி நின்ற உம் விகுதியின் ஒருதிரிபு. (உ-ம்.) "தெண்கடற்றிரைமிசைப்பாயுந்துதிண்டிமில்" (புறநா. ௨௪.) 4. பசுவையழைக்கும் ஒரு குறிப்புச் சொல்.

**உந்துதல்**—1. உந்தல். 2. எழும்பல். 3. ஏறுதல். 4. செலுத்தல். 5. தள்ளல்.

**உந்துரம்**—எலி. [உ-ம்ரு.]

**உந்துரு**—1. எலி. 2. பெருச்சாளி. (சூ. நிகண். ௩: ௨௧.) [உ-ம்ரு: உந்-நனைத்தல். உரு-ஒருவிகுதி.]

**உந்தூழ்**—பெருமூங்கிற்பூ. (உ-ம்.) "உரிதுநாறவிழ்தொத் துந்தூழ்" (குறிஞ்சி. பா. க௫.)

**உந்தை**—உன்தந்தை. (உ-ம்.) "உந்தையும் பிறரும்வந்துன்னைநாடுவர்" (கந்தபு.வள்.க௪௪.)

**உந்நதப்பிரதேசம்**—உயர்ந்த இடம். (சி. சி. ௨: ௬௧. சிவாக்.)

**உந்நதம்**—1. உயர்ச்சி. (உ-ம்.) "உந்நதமான கோடி" (கந்தபு. அண்ட. க௨.) 2. நீட்சி. 3. மேலானது. [உன்நத: உத்-மேல், நத-வளைவு.]

**உந்நதி**—1. எழும்புதல். 2. ஏறுதல். 3. கருடன்மனைவி. [உன்நதி: உத்-மேல், நதி-வளைவு.]

**உந்நதீசன்**—கருடன். [உன்நதீச: உன்நதி-ஒருபெண், ஈச-நாயகன்.]

**உந்நம்**—1. ஈரம். 2. தயவு. [உன்னம்.]

**உந்நமநம்**—1. உயர்த்துதல். 2. எழுப்புதல். [உன்நமந: உத்-மேல், நம-வளைவு.]

**உந்நயநம்** — 1. அநுமித்தல். 2. ஆலோசித்தல். 3. உயர்த்துதல். 4. தண்ணீரிறைத்தல். 5. பன்றிமுள்ளினாற்பாவட்டையின்மேலிழுத்தன் முதலிய கருமம். [1, 4. உன்நயந: உத்-மேல். நீ - பெறுதல்.]

**உந்நயம்** — 1. உயர்த்துதல். 2. ஒப்புமை. [உன்நய.]

**உந்நாமம்**— } உயர்த்துதல்.
**உந்நாயம்**— }

**உந்நேத்திரு**— } யாகாசாரியர்கள் பதினறுவரில் ஒருவன்.
**உந்நேதா**— }

**உந்மணி**—உயர்ந்தமணி.

**உந்மத்தகம்**—1. ஊமத்தை. (உ-ம்.) "உந்மத்தகமலர்சூடி" (தேவார.தனித்திரு. ௬. திருநாவு.)

**உந்மத்தகி**—1. குறிஞ்சா. 2. சிறுகுறிஞ்சா.

**உந்மத்தம்**—1. ஊமத்தை. 2. பைத்தியம், உளமருட்கை. (உ-ம்.) "இவனுக்குந்மத்தமொழியுமுபாயமுரையென்றான்" (சேதுபு. தருமகுத். ௨அ.) 3. மன்மதபாணத்தொன்று; அது, வசியம்; அதனவத்தைசுப்பிரயோகம்.(தொகையகராதி) "மாறிலுந்மத்தமொடு மதனஞ்சமோகமோ மருவுசந்தாபத்துடன், வசிகரணமைந்தும் மலர்க்கணைப் பேராம்வகுப்பரிய சுப்பிரயோகம்-வீறுவிப்பிரயோகமேசோகமோகம்விலக்கரியமரணமைந்தும், விளம்பியமலர்க்கணையவத்தையின்பெயராம்"(ஆசிரியநி.)4. வெறி. [உந்மத்த: உத்-அதிக. மத-வெறித்தது.]

**உந்மத்தன்**—1. பேயாற்பீடிக்கப்பட்டவன்.

2. பைத்தியமுடையோன். (உ-ம்.) "ஊமத்தம் பயன்றுய்த்தார்போ லுன்மத்தனுகி யுற்றுன்" (கந்தபு. வள். உஉ.) 3. வெறியன்.

உந்மத்தி—குறிஞ்சா.

உந்மத்து— } ஊமத்தை.
உந்மத்தை—

உந்மதம் — 1. பைத்தியம். 2. மயக்கம். 3. வெறி. [உ-நூஉ.]

உந்மந்தம்—1. கலக்கம். 2. கொலே.

உந்மநாகலே — 1. பிரமரந்திரத்துக்குமேல் எட்டங்குலத்துக்கு மேற்பட நாலங்குலத்திலும் வியாபித்திருக்குங்கலே. 2. விந்துவையுடைய ருசுவான் ரேகை. (சி. லி. கிரி. க. உரை.)

உந்மநி—உந்மநிசத்தி. (உ-ம்.) "உந்மநிக்குள்ளொளிர்பரஞ் சோதியாம்" (தாயு. பொன். ௬அ.)

உந்மநை– 1.சோடசகலாப்பிராசாதத்திற்சம நைக்குமேலேநிற்கும் பதிறைருங்கலே. இதினந்தத்தில் பிராசாத மந்திரவாச்சியரான பரசிவன் விளங்குகிறுர். (சி-லி. கிரியா. எ. தாற்.) இது, துவாதசப்பிராசாதமந்திரகலேகளிற் பன்னிரண்டாவது விந்துவையுடைய ருசுவானரேகைவடிவம். (சி-லி. கிரியா. க.) 2. பராற்பரநாதம். (சி. சி. உ. எசு. ஞாநப்.)

உந்மாதநம் — பைத்தியமாக்கல். வெறிக்கச்செய்தல். [உ-நூாஉநு: உ-தீ-மேல், ௨தீ - பித்தம்.]

உந்மாதம்— 1. அசைத்தல். 2. கலக்குதல். 3. கொல்லுதல். 4. புலிமுதலியனபிடிக்கும் யந்திரப்பொறி. 5.பைத்தியம். 6.மிக்கமாவிகாரம். [1, 2, 3, 4. உ-நூாஊ: 5, 6. உ-நூாஉ.]

உந்மார்க்கம்—1. தப்பானவழி. 2. துராசாரம். 3. வழிதவறிப்போதல்.[உ-நூாமூ: உ-தீ, ௨ாமூ-வழி.]

உந்மிதம்—அளக்கப்பட்டது. [உ-நிதீ: உ-தீ-மேல். ௨ா-அளத்தல்.]

உந்மீலநம்— 1. கண்ணிமைத்தல். 2. மலர்தல். 3. விழித்தல். (உ-ம்.) "நயநோந்மீலநாதிக்கிரியை" (சி. சி. ச: ௬௬. சிவாக்.) [உ-நீலநு: உ-தீ-மேல். நீலை-இமைத்தல்.]

உந்மீலிதம்—தோற்றுவித்தல். (பௌட். ச: அஎ.)

உந்மீலிநி — சுவப்பிரகாசமாய் இருப்பவள். (பௌட். ச: ௬எ.)

உந்முக்கியம்—நோக்கியிருப்பது. (உ-ம்.) "காரியோந்முக்கியவிசிட்டசத்தியோ" (சி. சி. வரலாறு.)

உந்முகம்—1. எதிர்முகம். (உ-ம்.) "பிரவிருத்தியுந்முகமாகப்பதிய" (சி. சி. அளவை. கங. சிவாக்.) 2. ஒருவிஷயத்திலே சிந்தையாயிருக்கை. 3. மேனேக்கல். 4. மேனேக்கிய முகம். [உ-நூ-ஙெ.]

உந்முகன் — 1. ஒருவிஷயத்திலே சிந்தனையாயிருப்போன். 2. மேனேக்குவோன்.

உந்முகி—உந்முகமுடையவள்.

உந்மூலநம் — வேரோடு பெயர்த்தல். [உ-நூலநா.]

உந்மேடம்—கண்ணிமைத்தல். [உ-நூஷ.]

உந்மேதை—கொழுப்பு. [உ-நூஷா:உ-தீ-அதிகம். தீ-பூசுதல்.]

உப்பக்கம்—1. உந்தப்பக்கம். (உ-ம்.) "உப்பக்கநோக்கியுபகேசிதோண்மணந்தான்" 2. புறப்பக்கம். (உ-ம்.) "ஊழையுமுப்பக்கங்காண்பர்" (வள். சுஉ௦.)

உப்பங்கழி—உப்புக்கழி.

உப்பசம்—சுவாசகாசம்.

உப்பட்டி—அரிவித்திரள்.

உப்பம்பருத்தி– ஒருவகைப்பருத்திப்பூண்டு.

உப்பமைகாமம் — வெறுப்பில்லாத காமம். (சிந்தா.)

உப்பமைத்தல்—உப்புவிளைவித்தல்.

உப்பமைப்போர்— உப்புவிளைவிக்கும் நெய்தனிலமாக்கள்.

உப்பரவர்—குளம் முதலியன அகழுவோர்.

உப்பரிகை—மேன்மாடம். (உ-ம்.) "ஆடகப்புரிசையுப்பரிகை" (மச்சபு.நைமிசாரணி.௨.)

உப்பல்—உப்புதல்.

உப்பளம்—1.உப்புவிளைநிலம். 2.கழிநிலம்.

உப்பளவர்—உப்புவிளைவிப்போர்.

உப்பறுகு-உவர்நிலத்துள்ள ஒருவகையறுகு.

உப்பாரக்காரன் — சுண்ணும்புபூசுவேலைக்காரன்.

உப்பால்—உப்பக்கம். (உ-ம்.) "இப்பாலுலகத்திசைநிறீஇயுப்பா-லுயர்ந்தவுலகம்புகும்" (நான்மணிக். உஎ.)

உப்பிசம் — 1. பொருமுதல். 2. முட்டுத்தொய்வு.

உப்பிலி— 1. இண்டங்கொடி. 2. ஈர்கொல்லிக்கொடி. 3. உப்பில்லாதது. (உ-ம்.) "அடகவிந்தனவுப்பிலியருந்தியும்" (உபதேச.சிவவிர. சுகு.)

உப்பிலிப்புழுக்கல் — உப்பிலாத சோறு. (சிந்தா.)

உப்பு— 1. இராகம். 2. இனிமை. (உ-ம்.) "உப்பாதல்சான்றோர்கடன்". (வள். அ௦உ.) 3. உப்புக்கடல். (உ-ம்.) "எப்பெருங்குலத்தமேக மும்விசும்பிறங்கியே - உப்பருந்திவெற்பிருந் தொருமுழங்கலொக்குமால்" (இரகு. அயனெழு. ௬௧.) 4. கடல்படுதிரவியத்துள் ஒன்று; அது: போசனபதார்த்தத்துக்கு நல்லுருசியைக் கொடுக்கும் உவர்ப்புச்சுவையுடையது. (உ-ம்.) "பரதவரளவர்வாரிப்படுத்தமீனுப்பின்குப்பை" (கந்தபு.ஆற்று.௬௦.) 5. மகளிர்விளையாட்டுளொன்று. 6. விளையாட்டு மணற்குவியல்.

உப்புக்கட்டி— 1. சிறுகட்டுக்கொடி. இதன்பால் பிசுபிசுப்பாயிருக்கும்.

உப்புக்கடல்—எழு கடலுள் ஒன்று; அது: உவர்நீருடையது. இது: "பரவுமிவ்வுலகிலுப்புப்பாறயிர்நெய்யேகன்ன- லிரதமாமதுநீராகுமெழுகடல்" என்னும் கந்தபு. அண்ட. உ௦-ம் பாட்டாற்பெறப்படும்.

உப்புக்கண்டம் — உப்பூட்டிக்காயவைக்கப் பட்ட மாமிசம். (உ-ம்.) "உப்புக்கண்டம் பறிகொடுத்த பார்ப்பனிபோல்"

உப்புக்கரிந்தல்—உப்புக்கூர்த்தல்.

உப்புக்கீரை—ஒருவகைக்கீரை.

உப்புக்குருத்தி—ஒருவகைப்பறவை.

உப்புக்கூர்த்தல் —உவர்த்தல்.

உப்புக்கோள்ளல்— ஒருவிளையாட்டு.

உப்புகை—உப்புதல்.

உப்புசம்—வயிற்றுவீக்கம்.

உப்புடலி—ஒருசெடி.

உப்புத்தரவை—உவர்நிலம்.

உப்புத்திராவகம்—ஒருவகைத் திராவகநீர்.

உப்புத்திரி—மலங்கழித்தற்பொருட்டு உப்புத்தடவியேற்றும் ஒருவகைத்திரி.

உப்புதல்— பொருமுதல்.

உப்புப்படுதல்—உப்புவிளைதல்.

உப்புப்பற்றுதல்—உப்புப்பிடித்தல்.

உப்புப்பால்—ஈன்றணிமைப்பால்.

உப்புப்புல்லு—உவர்த்தரையிற்புல்லு.

உப்புப்பூத்தல்—உப்புப்பற்றுதல்.

உப்புமாறுதல்—உப்புவிற்றல்.

உப்புரிகை—
உப்புரிசை— } உப்பரிகை.

உப்புவாணிகர் — உப்பு வியாபாரஞ் செய்வோர்.

உப்புவிந்து—ஆண்சரக்கு.

உப்புறைத்தல்—உப்புக்கரித்தல்.

உப்பூர்கிழார்— சங்கத்தார்க்குப் பொருளறிவுறுத்திய ஆமன்பிதா. (உ-ம்.) "ஒன்றியவணிகனுப்பூர்கிழார்மகன்" திருவாலவாயுடையார். திருவிளை. ஊமைதமிழறி. ௮.)

உப்பூரணி — உப்பூறுந்தன்மையுடையது.

உப்பை— ஔவையினுடைய சகோதரிகளிலொருத்தி.

உப—1. ஆரியத்துள்ள ஒருபசர்க்கம்; அது: மிகுதி, சமீபம், கூட்டம், கீழ்மை, சமத்துவம், நோய், அலங்காரம், கட்டளை, அதட்டுதல், ஆச்சரியம், கொடை, கொல்லுதல், பரம்புதல், விருப்பம், முயற்சி, வலிமை, குற்றம், தொடக்கம், படித்தல், வணக்கம் என்னும் பொருள்களுள் ஒன்றை உணர்த்தும். [உப.] 2. இரண்டு. [உப.]

உபக்கிரகணம்—1. பிடித்தல். (உ-ம்.) "பாதோபக்கிரகணம்" 2. வேதாப்பியாசஞ்செய்தல் [உபக்ரஹண: உப-கிட்ட. க்ரஹண-எடுத்தல்.]

உபக்கிரகம்–1. அப்பிரதானக்கிரகம். அவை: சூரியன்புத்திரன்காலன், சந்திரன்புத்திரன்கலைக்கியாநபாதன், அங்காரகன் புத்திரன் கரேசன், புதன்புத்திரன் அர்த்தப்பிரகரன், வியாழன் புத்திரன் எமகண்டன், சுக்கிரன் புத்திரன் விடகடிகை, சநிபுத்திரன்குளிகன், இராகுபுத்திரன்அமிர்தகடிகை, கேதுபுத்திரன்அபமிருத்து. (குமாரசாமி. திருதிநாமோ. உ. உரை.) 2. உதவி. 3. உற்பாதம். 4. கிரகாதிபதி. 5. சிறைப்படுதல். 6. தயவு. 7. தருப்பைப்புற்கட்டு. [உபக்ரஹ: உப - கிட்ட. க்ரஹ- எடுத்தல்.]

உபக்கிரமணம்—1. அணுகுதல். 2. தொடக்கம். 3. முயலுதல். 4. வைத்தியஞ்செய்தல். [உபக்ரமண.]

உபக்கிரமணிகை — முகவுரை, பாயிரம். [உபக்ரமணிகா.]

உபக்கிரமம் — 1. ஆராய்ந்துதெளிதல். 2. காரியமுயற்சிசெய்தல். (வேதாந்த) 3. சடுவிதலிங்கங்களுள் முதலாமிலிங்கத்தின் முற்கூறு; சிருட்டிக்குமுன்பின் எப்போதுஞ்சகத்தானது சத்தாமாத்திரமான பிரமமாகத்தோன்றி விளங்குவது. (வேதா. சூ. ௧௬உ.) 4. சமீபித்தல். 5. தைரியம். 6. தொடக்கம். 7. வைத்தியாப்பியாசம். [உபக்ரம:- உப. கிட்ட. க்ரம-போதல்.]

உபக்கிரமித்தல் — தொடங்குதல். (உ-ம்.)

"முதல்விருத்தத்திலேசித்துருவென்று உபக்கிரமித்து" (சி. சி. க: எ௦. சிவாக்.)

**உபக்கிராகியம்**—பெரியோர்க்குச் செய்யும் உபகாரம். [உபக்ராஹ்ய: உப-மிகுதி. க்ராஹ்ய-எடுக்கத்தக்கது.]

**உபக்கிருதி** — அநுபந்தம். [உபக்ருதி: உப-கிட்ட. க்ருதி-செய்கை.]

**உபக்குரோசம்**—நிந்தித்தல். [உபக்ரோஶ: உப-கீழ்மை. க்ரோஶ-ஒலித்தல்.]

**உபகசிதம்**—அவமதிச்சிரிப்பு. [உபஹஸிதம்: உப-மிகுதி. ஹஸிதம்-சிரிப்பு.]

**உபகண்டம்**—1. ஊருக்குச்சமீபித்த இடம். 2. கழுத்துக்குச் சமீபம். 3. குதிரைக்கதிகளி லொன்று. 4. சமீபம். [உபகண்டம்.]

**உபகதை**—1. கட்டுக்கதை. 2. சிறியகதை. [உபகதா: உப- கீழ்மை. கதா- சரிதம்.]

**உபகந்தம்**—சுகந்தம். [உபகந்த.]

**உபகநிட்டிகை**— அநாமிகைவிரல். [உபகநிஷ்டிகா: உப- கிட்ட. கநிஷ்டிகா-சிறுவிரல்.]

**உபகமம்**—1. அடைதல். 2. கொள்கை. 3. சமீபித்தல். 4. பொருத்தம். 5. மைதுநம். [உபகம: உப- கிட்ட. கம-போதல்.]

**உபகர்ணிகம்**— ஊர்க்கதை. [உபகர்ணிக: உப; கர்ண-காது. இக-ஒருவிகுதி.]

**உபகர்த்தா**— துணைசெய்வோன். [உபகர்த்ரு: உப-சமீபம். கர்த்ரு-செய்வோன்.]

**உபகரணம்**—1. இராசசின்னம். 2. உணவிடுதல். 3. உதவுதல். 4. சீவநப்பொருள். 5. துணைக்காரணம். (உ-ம்.) "தநயர்க்காமதத்தழல்வேள்வியுகந்த பொருளோடுபகரண மொருங்குசேர்த்தி" (சேதுபு. அநும. உஉ.) 6. முக்கியமானபயனைமுடித்தற்குரிய அங்கமாகியபொருள். (உ-ம்.) "பலமணிகள் விந்துவெனும் பொய்கைதன்னிலாணுமற் கிடப்பனவுண் டவையிதற்கேயுபகரணமாகுமென்றான்" (பாரத.இராச.ச.) [உபகரண: உப-கிட்ட. கரணம்-செயல்.]

**உபகரித்தல்** — 1. உதவுதல். 2. உபகாரஞ் செய்தல். 3. உபசரித்தல். 4. தயைசெய்தல். (உ-ம்.) "இப்படி யுபகரித்துநிற்கிற சத்தியே யமையாதோ" (சி. சி. க: சுகூ. நிரம்ப.)

**உபகற்பம்** — மூவகை விபூதியுளொன்று; அது: மரத்தோடு மரமுரிஞ்சித் தானே யுண்டான அக்கினியினால் வெந்த சாம்பலைப் பஞ்சகவ்வியம்வார்த்துக் குழைத்து உண்டையாக்கிப் பதரின்மேல் வைத்து விதிப்படி சிவாக்கினியினாலே தகித்தெடுத்தது. (சைவச.பொது.கஅ௱,கஅச, கஅரு,கஅசு.) [உபகல்ப.]

**உபகற்பிதம்** — 1. ஆயத்தஞ்செய்யப்பட்டது. 2. பிரதியாகக் கற்பிக்கப்பட்டது. [உபகல்பித.]

**உபகாசம்**-அவமதிச்சிரிப்பு. [உபஹாஸ: உப-கீழ்மை. ஹாஸ-சிரிப்பு.]

**உபகாதம்**—1. அடித்தல். 2. அழித்தல். 3. தொடுதல், பரிசம். 4. நிந்தித்தல். 5. நோய். 6. பற்றுகை. [உபகாத.]

**உபகாரகத்துவம்**—உபகாரஞ்செய்யுந் தன்மை. [உபகாரகத்வ: உபகாரக, த்வ-தன்மை.]

**உபகாரகம்** — உபகாரஞ்செய்தல். (சி. சி. ச: உக. ஞாநப்.) [உபகாரக.]

**உபகாரகன்**—உபகாரஞ்செய்வோன், அருள்செய்வோன். (உ-ம்.) "ஆன்மோபகாரகராயிருக்கின்ற சிவனே" (சி. சி. ச: உஅ. ஞாநப்.)

**உபகாரணன்**— உபகாரபரன். [உபகாரண.]

**உபகாரதை**—உபகாரத்தன்மை. (பௌட். ரு: உஉ௭.) [உபகாரதா.]

**உபகாரபரன்**—உபகாரஞ்செய்தலிலேமுயற்சியுடையவன். [உபகாரபர.]

**உபகாரம்**—1. ஆதரிப்பு. 2. உதவி. (உ-ம்.) "நல்லாரொருவர்க்குச்செய்தவுபகாரம்" (வாக். உ.) 3. கொடை. (சூ. நிகண். கூ கூ.) 4. சகாயம். 5. சமாதாநத்தின்பொருட்டுக் கொடுக்குந் திறைப்பொருள். 6. தயவு, பிறர்க்கிதஞ் செய்தல். (உ-ம்.) "இந்தச்சத்தியான்மாக்களையுபகரித்துக்கொண்டு நிற்கிறவுபகாரத்தை" (சி. சி. க: சுகூ. நிரம்ப.) 7. தூக்கப்பட்டமாலை. 8. தெய்வத்துக்குக்கொடுக்கும்பொருள். 9. பெரியோர்க்குக்கொடுக்கும் பொருள். 10. மலர்ந்தபூ. 11. விருந்தர்க்குக் கொடுக்கும் உணவு. 12. காணிக்கை. (திருவால. திருவிளை) [2, 3, 6, 7, 10. உபகார. 5, 8, 9, 11. உபஹார. உப-கிட்ட. ஹார-எடுத்தல்.]

**உபகாரலக்கணை**—ஒரு பொருளின்பெயர் அதற்கு உபகாரமாயிருக்கும் மற்றொரு பொருளுக்குப்பெயராதல். (சி. சி. ச: உஅ. ஞாநப்.) [உபகாரலக்ஷணா.]

**உபகாரவர்மா** — தசகுமார சரித்திரமென்னும் வடநூலிற் கூறப்பட்டுள்ள பத்துக்குமாரருளொருவன். (மணிமே.)

**உபகாரன்**—உபகாரஞ்செய்வோன்.

**உபகாரி** — 1. உதவிசெய்பவள். 2. உதவிசெய்வோன். (உ-ம்.) "சுத்தவடியார்களுக்குமுபகாரி" (திருப்பு. ௬௭௬.) 3. கொடுப்பவள். 4. கொடையாளன். 5. பிரயாணிகள் தங்குஞ் சத்திரம். [உவகாரிந.]

**உபகாரிகை**— 1. தலைவி. 2. பிரயாணிகள் தங்குஞ்சத்திரம். [உவகாரிகா: உவகார-உதவி. ஐக-ஒருவிகுதி.]

**உபகாரித்துவம்** — உபகாரியாந் தன்மை. (பௌட். ௩: ௫௩.) [உவகாரிக்வம்.]

**உபகாரியம்** — உபகாரத்தையடையுமது. (சி. சி. ௬: ௨௧. ஞானப்.)

**உபகிந்தம்** — 1. உதவி. 2. உபகரிக்கப்பட்டது. (சி. சி. அ: ௩௨. ஞானப்.) [உவக்ருத.]

**உபகிருதி**—உதவி. [உவக்ருதி: உவ-கிட்ட. க்ருதி-செயல்.]

**உபகுஞ்சம்**—கருஞ்சீரகம். (உ-ம்.) "உபகுஞ்சம்பலமிரண்டிட்டு" (தைல.தைலவ.௧௩௩.)

**உபகுஞ்சி**—கருஞ்சீரகம். [உவகுஞ்சி.]

**உபகுஞ்சிகை**—1. ஏலமரம். 2. கருஞ்சீரகம். (உ-ம்.) "அதிமதுரமுபகுஞ்சிகை" (தைல. தைலவ. ௬௬.) [உவகுஞ்சிகா: உவ-மிக. குஞ்சிகா-சிறியது.]

**உபகும்பம்**—கும்பத்துக்கு அருகுநிகழ்வது. (வீரசோ. தொகை. ௬.)

**உபகுர்வாணன்**—உவகுருவாணன்.

**உபகுரு** — உதவி யுபாத்தியாயன். [உவகுரு: உவ-சமீபம், குரு-உபாத்தியாயன்.]

**உபகுல்லம்**—சுக்கு.

**உபகுல்லியை** — 1. அகழி. 2. திப்பிலி. [உவகுல்யா: உவ-கிட்ட, குல்யா-திரணுதல்.]

**உபகுலியம்**—திப்பிலி.

**உபகூகநம்**—1. அதிசயம். 2. ஆலிங்கநம். 3. மறைத்தல். [உவகூஹந: உவ-கிட்ட. கூஹ்-மறைத்தல்.]

**உபகேசி**—பார்ப்பதிதேவி. (உ-ம்.) "உப்பக்கநோக்கியுபகேசிதோண்மணந்தான்" (வள். மாலை. ௨௧.) [உவ- சமீபம். கேஶி- விட்டுணு.விட்டுணுவுக்குப்பின்பிறந்தவளென்றபடி.]

**உபச்சிலேடம்** — 1. ஒரோவழி மேவுதல். (உ-ம்.) "ஒரோவழிமேவுதலுபச்சிலேடம்" (பி. வி. ௩௯. உரை.) 2. ஒன்றோடொடுத்திருத்தல். 3. தழுவுதல். [உவஶ்லேஷ.]

**உபசங்காரம்**—1. அழித்தல். 2. அழிவு. 3. ஒடுக்கம். (உ-ம்.) "தநுவாதியுபசங்காரப்படுகையால்" (சி. சி. க: ௯௨. சிவாக்.) 4. (வேதாந்த.) சடுவிதலிங்கத்திலே முதலாவதின் இரண்டாங்கூறு. அது: சகத்தைப்பிரமத்திற்கரைத்துக்கூடஸ்தனுக்குப் பிரமத்தோடு ஐக்கியஞ்சொல்லுதல். (உ-ம்.) "சகஞ்சிவத்தின்மாய்த்துப்-பவமகலத்துரியற்குப்பிரமமுடனயிக்கம் பகர்ந்தத்துவிதங்கூறலுபசங்காரந்தான்" (வேதா.சூ.௧௩௨.) 5. சுருக்கம். 6. திரட்டி முடிபுரை கூறுதல். (உ-ம்.) "தத்சந்நிதிமாத்திரத்திலே பஞ்சகிருத்தியமுண்டாவதென்று உபசங்காரம் பண்ணுகின்றது. (சி. சி. க: ௭௦. சிவாக்.) 7. திரட்டு. 8. (தர்க்க) நிக்கிரகித்தல். 9. மீட்டுக்கொள்ளுதல். 10. விலக்குதல். [உவஸம்ஹார.]

**உபசங்கிருதம்**—உபசங்காரமடைந்தது. (சி. சி. க: ௧௧. சிவாக்.) [உவஸம்ஹ்ருத.]

**உபசத்தி** — 1. உபகாரக்கொடை. 2. ஊழியம். 3. ஒன்றித்தல். 4. ஐக்கம். 5. சேவை. [உவஷத்தி: உவ-கிட்ட. ஷத்-போதல்.]

**உபசதநம்**—1. அயல்வீடு. 2. சீடனுக்குக்குருவையடைதல். [உவஸதந: உவ-சமீபம். ஸதந-வீடு.]

**உபசந்தாநம்** — இணைத்தல், தொடுத்தல். (உ-ம்) "ஒரைஞ்ஞூறுவெங்கணைநெறியினல்கியாங்கவையுபசந்தாநம் புரியருமறையுமீந்தான்" (கூர்மபு. இராமனவ. ௨௧.) [உவஸந்தாந.]

**உபசந்தி**—சந்திக்குச் சமீபகாலம். (சைவச. பொது. ௭௬. உரை.) [உவஸந்தி.]

**உபசந்நத்துவம்**—1. அடைகை. 2. குருவின்சமீபத்திலிருந்து கேட்கவேண்டியவைகளைக் கேட்டல். (உ-ம்.) "சற்குருவையடைந்து-அருட்குருவேயென்பாசத்தழிவு - தானுமெத்திறத்திறைலெனவினவல் சீடன்றனது விதிவத்துபசந்நத்துவமாமன்றே" (வேதா. சூ. ௧௪.) 3. சமீபம். [உப-கிட்ட. சந்நத்துவம்-இருத்தல்.]

**உபசந்நன்**—1. அடைந்தவன். 2. குருவையடைந்தசீடன். (வி-ணி.) 3. சமீபத்திலிருப்போன். [உவஸந்ந: உவ-கிட்ட. ஸத்-போதல்.]

**உபசம்பந்நபதம்** — (பௌத்த) துறவிநிலை நான்கனுளொன்று. (பெரியபு.திருஞாந.கககசு. உரை.)

**உபசம்மாரம்**—உபசங்காரம். (உ-ம்.) "பிரமவிட்டுணுக்களும் உபசம்மாரத்தைப்பொருந்துவார்கள்" (சி. சி. க: ருடு. சிவாக்.) [உபஸம்ஹார.]

**உபசமநம்**—1. அமையச்செய்தல். (உ-ம்.) "மநவுபசமநார்த்தம்" (ஞாநவா. சனகரா. க. உரை.) 2. ஒழிவு. [உபஶமநம்.]

**உபசமம்**–1. அமைதி. 2. ஒய்வு.[உபஶம: உப-மிக, ஶம-அமைதல்.]

**உபசயம்** — 1. உதயலக்கிநத்துக்கு மூன்றும் ஆறும் பத்தாம் பதினொரும் இடங்கள். (உ-ம்.) "மூன்றாறுபத்துப்பதினொன்றுபசயம்" (விதாந. மரபி. ரு.) 2. உயர்ச்சி. 3. குவியல். 4. திரளுகை. 5. மிகுதி. [உபசய: உப-கிட்ட. சி-கூட்டல்.]

**உபசர்க்கம்**—1. ஆரியபதங்களோடிணைந்து முன்னிற்கும் அவ்வியயம்; அவை பிர, பரா, அப, சம், நி, அவ, அநு, நிர், துர், வி, (ஸு) அதி, சு, உத், பரி, பிரதி, அபி, (ஸு) உப, ஆங் என்பன. (சத். பக். ரு.) [இவை தம்மோடிணைந்துநிற்கும் பதங்களிலே மறைந்து நிற்கும்பொருளை வெளிப்படுத்திவருவன என ஒரு சாராரும், பதங்களின்பொருளை விகாரப்படுத்தியும், வலியுறுத்தியும் வருவனஎன மற்றொரு சாராருங்கூறுவர். 2. கிரகணம். 3. சிவப்பு. 4. சொன்மூலம். 5. தளிர். 6. நோய்காரணமாகச் சரீரத்திலேவரும் வேறுபாடு. 7. பின்தீங்குவருமென்பதனை முன்னுணர்த்தும் உற்பாதம். 8. மரணக்குறி. 9. மாறுதல். [1, 2, 6, 7, 8. உபஸர்க: உப-கிட்ட, ஸர்க-போதல்.]

**உபசர்க்கை**—உபசர்க்கம்.

**உபசர்ச்சநம்**—1. அடைதல். 2. கிரகணம். [உபஸர்ஜந.]

**உபசரணம்**—1. நேரேபோதல். 2. புகலிடமாக அடையப்பட்டது. [உபஸரண.]

**உபசரணை**—உபசாரம். [உபஸரணா.]

**உபசரம்**—பசு முதன்முறைகருக் கொள்ளுதல். [உபஸர.]

**உபசரி** —உபசரியென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும்.

**உபசரித்தல்** — வழிபாடு செய்தல். (உ-ம்.) "குமரன் றன்னை முற்கொடுபோதலம்போ யுபசரித்த-பின்னர்" (சேதுபு. விதூம. கக0.)

**உபசரிதம்**—1. உபசரிக்கப்பட்டது. 2. உபசாரமாகச்சொல்லப்பட்டது. (சி. சி. எ: உ. ஞாநப்.) [உபசரித.]

**உபசரிப்பு**—உபசரித்தல்.

**உபசருக்கம்**—உபசர்க்கம்.

**உபசருச்சநம்**—உபசர்ச்சநம்.

**உபசல்லியம்**—பறையர்சேரி.

**உபசாகை**— 1. அப்பிரதாநமான மரக்கொம்பு. (சி. சி. க. கச. சிவாக்.) 2. நூலில் அப்பிரதாநபாகம். (உ-ம்.) "நான்குவேதமே முப்பத்திரண்டு உபநிடதமாயும் நான்கு வாக்கியமாயும் ஆறுசாத்திரமாயும் இன்னும் அநேக சாகோபசாகைகளாய் விரிந்திருந்தாலும்" (ஞாநக். ) [உபஶாகா; உப-கீழ். ஶாகா-கொம்பு.]

**உபசாந்தம்**— 1. அமைதி. 2. ஒய்வு. 3. குறைக்கப்பட்டது. 4. சமாதாநம். 5. தயை. 6. விருப்புவெறுப்பின்மை.

**உபசாந்தர்**— தேகம் முதலியவையெல்லாம் பொய்யென்றுதெளிந்து ஒடுங்கினவர். (உ-ம்.) "தேகாதிபொய்யெனவே தேர்ந்த வுபசாந்தருக்கு-மோகாதியுண்டோ மொழியாய்பராபரமே" (தாயு. பராபர. உகூஅ.)

**உபசாந்தி**— உபசாந்தம் பார்.

**உபசாபகன்**— காதுக்குள்ளே இரகசியஞ்சொல்லிப்பேதஞ்செய்வோன்.[உபஜாபக]

**உபசாபம்**— 1. ஒற்றுமையின்மை. 2. கோட்சொல்லிப்பகைவிளைத்தல். 3. பெருந்துரோகம். 4. வெறுப்பு.

**உபசாயம்**— இராக்காவல் செய்யுமிருவரில் ஒருவர் விழித்திருக்க மற்றவர் நித்திரைசெய்தல். [உபஶாய.]

**உபசாரக்கிரியை**—உபசாரச்செயல்.

**உபசாரகரணம்**–உபசாரஞ்செய்தல்.[உபசாரகரண.]

**உபசாரகருமம்**—விருந்தோம்பல்.

**உபசாரகன்**—உபசாரஞ்செய்வோன்.

**உபசாரம்**— 1. அருத்தாபத்தி. 2. ஆசாரம். 3. உபகாரம். 4. ஊழியம். 5. கைக்கூலி, பரிதாநம். 6. சொல்லெஞ்சிநிற்றல். 7. தாம்பூலமுதலியனகொடுத்து உபசரித்தல். 8. தொழில். 9. நோயாளருக்குதவிசெய்தல். 10. மரியாதை. 11. மன்றாட்டு. 12. முகமன்வார்த்தை. (உ-ம்.) "யாங்கிளந்தவிருந்தனுக்கோடியி-ஞேங்குசீருபசாரமென்றோதுவான்" (சேதுபு.தநுக். உச.) 13. வழிபாடு. (உ-ம்.) "எண்ணிரண்டுபசாரங்களெஞ்சிடாவகையியற்றி" (சேதுபு.

இராமனரு. கoக.) 14. வைத்தியஞ்செய்தல். 15. வாழ்த்து. [உவசார.]

உபசாரன்—
உபசாரி— } உபசாரஞ்செய்வோன்.

உபசாரிகம்— ஔபசாரிகம். (உ-ம்.) "ஆளி னையேயருமரசென்பதுபோலவுபசாரிகந்தான்" (வேதா. சூ. கஉசு.) [உவசாரிக.]

உபசிக்வாரோகம் — உண்ணாக்குரோகம். (தைல. தைலவ. சுஅ. உரை.)

உபசிரதம்— சம்மதப்படல்.

உபசிருட்டம்— 1. இராகுகேதுக்களாற்கிர கிக்கப்பட்டது. 2. மைதுநம். [உவஸ்ருஷ்ட.]

உபசீவகன்— பிறரைச்சார்ந்து சீவிப்போன். [உவஜீவக: உவ - சமீபம். ஜீவக - சீவிப் போன்.]

உபசீவநம்—சீவநப்பொருள். [உவஜீவந: உவ - கிட்ட. ஜீவ - சீவித்தல்.]

உபசுந்தன்—நிகும்பன்மகனுஞ்சுந்தனுடை யதம்பியுமாகிய ஓரசுரன். (உ-ம்.) "சுராரிகடம் மிற்சுந்தோபசுந்தரென்றிருவர்" (பாரத. இந்தி ர. சரு.) [உவஸுந்த.]

உபசுருதம்—அங்கீகரிக்கப்பட்டது. [உவ ஸ்ருதம்: உவ-கிட்ட. ஸ்ரு-கேட்டல்.]

உபசுருதி— இரவிலே சொல்லப்படும் ஆகா யவாணி கேட்டல். [உவஸ்ருதி.]

உபசேநம்—ஊழியம்.

உபசேவநம்—1. பணிவிடைபுரிதல். 2. வ ணங்குதல். [உவஸேவந; உவ-கிட்ட. ஸேவ்-சேவித்தல்.]

உபட்சேபணம் — எறிதல். [உவக்ஷே பண.]

உபட்சேபம் — செய்யுட்போக்கு. [உவ க்ஷேப.]

உபத்தம் — 1. உபத்தேந்திரியம். (உ-ம்.) "ஆசநம்" பார். 2. நடுவிலுள்ளது.[உவஸ்த.]

உபத்தாநம் — 1. அணிமை. 2. அயல். 3. கூட்டம். 4.முன்னிலையில்வருதல். [உவஸ்தா ந.]

உபத்தாயம் — 1. உபத்திரம். 2. உபாயம். 3. கபடம்.

உபத்திதம்—செய்யப்பட்டது. (உ-ம்.)"உப ஸ்திதமான கர்மமானது" (பௌட். ங: ருசஉ.) [உவஸ்தித.]

உபத்திதி—1. அடைதல். 2. அறிவு. 3.அநு சிந்தநம். 4. சமீபம். [உவஸ்திதி.]

உபத்திரம்—
உபத்திரவம்—
உபத்திரியம்— } 1. ஊர்க்கலகம். 2. காலக் கொடுமையாலாவது பஞ் சத்தினாலாவது கொடுங் கோன்மையாலாவது ஊர்க்குவரும் இடுக்கண். 3. கொடுங்கோன்மை. 4. நோயினால் வருந்தும் ஒருவனை மேலும் வருத்தும் பீடை. 5. வலாற் காரம். [உவத்ரவம்.]

உபத்தேந்திரியம்—சரீரத்திலுள்ள கருமேந் திரியம் ஐந்தினொன்று.

உபதசம்— பத்துக்குச்சமீபித்தது. [உவ தஸ: உவ - கிட்ட. தஸ - பத்து.]

உபதம்சரோகம்—மேகவிரணம்.

உபதமிசம்—உபத்தத்திலேவரும் ஒருவகை ரோகம். [உவதம்ஸ.]

உபதரிசகன்— 1. வழிகாட்டி. 2. வாயில்கா ப்போன். [உவதர்ஸக: உவ- கிட்ட.தர்ஸ க-காண்பிப்போன்.]

உபதளம்— கீழிதழ், சிற்றிதழ். [உப - கீழ். தளம்-இதழ்.]

உபதாகம்—பனைமரம்.

உபதாது—பொன்முதலிய எழுதாதுக்களை யும்போலத்தோற்றமுடைய இழிந்த எழுலோ கங்கள்; அவை, சுவர்ணமாக்ஷிகம், தாரமாக்ஷி கம், துத்தம், காஞ்சியம், இரீதி, சிந்தூரம், சிலா சதுஎன்பன. [உவதாது.]

உபதாநகம்—தயவுபெறும்பொருட்டுக் கொ டுக்குங்கொடை. [உவதாநக.]

உபதாநம்—1. அத்திவாரம். 2. கடமை. 3. தயவுபெறும்பொருட்டுக் கொடுக்குங் கொடை. 4. தலையணை. 5. துணைக்காரணம். 6. நஞ்சு. 7. பட்சம். 8. வணக்கம். [3. உவதாநம்: 4, 6, 8. உவதாந.]

உபதாபம்—1. சீக்கிரம். 2. நோய். 3. வரு த்தம். 4. வெப்பம். [உவதாவ.]

உபதாபிநன்—நோய்முதலியவற்றாலே துன் புற்றுவந்தவன். [உவதாவிந.]

உபதாமநநாடி—சுவாசக்குழனுடி.

உபதி—1. அச்சுறுத்தல். 2. கபடம். 3. கை. 4. தேருருளை. [உவதி.]

உபதிகன்—ஏய்க்கிறவன், கபடஞ்செய்வோன். [உவ்யிக.]

உபதிசை—இரண்டுதிசைகளுக்கு இடையிலுள்ள கோணத்திசை. [உவதிஶா: உவ-கிட்ட. திஶா-திக்கு.]

உபதிருஷ்டா—கூடவிருந்துபார்ப்பவன். (சிந்தா.)

உபதூபிதன்- மரணஞ்சமீபித்திருப்போன். [உவயூவித.]

உபதேசகலை—ஆகமப்பிரமாணவகை மூன்றனுள் ஒன்று; அது: கடவுளின் தன்மையைக் கூறுங்கலை. (உ-ம்.) "பொருவிலாரணத்தினுயருபதேசகலையினை" (தணிகைப்.நந்தி.கருரு.)

உபதேசகன்—உபதேசஞ்செய்வோன். [உவதெஶக.]

உபதேசநம்—உபதேசித்தல். [உவதெஶந.]

உபதேசம் — 1. கடவுளின் தன்மையைக் கூறுதல், ஞானோபதேசம். (உ-ம்.) "தனுதியீறிலாதான் றன்மை யுணர்த்துத லுபதேசந்தான்" (சி. சி. அளவை. கரு.) 2. நற்புத்திகூறுதல். 3. போதித்தல். (உ-ம்.) "புங்கவன்பழியுமன்னன்புனையிழைபழியும்போதற் - கிங்குபதேசம்வேறுண்டு" (சேதுபு. சங்கரபா. எக.) 4. மந்திரம். (உ-ம்.) "சேமரவிக்கம்படையாகவீசுபதேசமுந்நூற்சேமர்" (கந்தரந். சுo.) 5.மந்திரம்போதித்தல், தீக்ஷை. (உ-ம்.) "ஈசனறுவைகலமுபதேசத்திற்கேய்ந்தனவே" (விதாந. நல். கரு.) 6. விசேடித்துச் சொல்லுதல். [உவதெஶ.]

உபதேசவுரையளவை— உபதேசகலையென்னுமளவை. (சி. சி. அளவை. கரு. சிவஞாந.)

உபதேசி—உபதேசஞ்செய்கிறவன். [உவதெஶிந.]

உபதேசித்தல்-உபதேசஞ்செய்தல். (உ-ம்.) "தேவதேவுபதேசித்த சித்தியைச் சிலம்பன்செல்வி" (திருவிளை. அட்டமா. உக.)

உபதை—1.(இலக்கணம்.)ஈற்றயலெழுத்து. (பி-வி. திங்கு. ரு: உரை.) 2. ஏய்த்தல். 3. ஒருவனுடையமனவியல்பையாராய்ந்து தெளிதல்; அஃது அறவுபதை, பொருளுபதை, இன்பவுபதை, அச்சவுபதை எனநான்குவகை என்பர் பரிமேலழகர். (வள். ருoச. உரை.) 4 பரிதாநம். 5. பெரியோர்க்குக்கொடுக்கும் உபகாரம். [1, 2, 3. உவ்யா: 4, 5. உவடா.]

உபநட்சத்திரம் — அப்பிரதாந நட்சத்திரம். [உவநக்ஷத்ர.]

உபநயநம்—1.முப்புரிநூல்தரிக்குங்கிரியை; அது: பிராமணர், அரசர், வணிகர் என்னும் மூன்று வருணத்தார்க்கும் விதிக்கப்பட்டுளது. (உ-ம்.) "உபநயநத்தும் வேறோருருற்பவமுற்றுன ன்றே" (இரகு. இரகுவுற். சுo.) [இது, சிவத்தைத் தரிசிப்பதற்குச் சமீபமாகிய நயநத்தையுண்டாக்குங் கிரியையென்பர். திருவா. கோச். கச. உரை.] 2. மூக்குக்கண்ணாடி. 3. வழிநடத்துதல். [உவநயந: உவ கிட்ட. நீ-கொண்டுபோதல்.]

உபநயம்—1. அடைதல். 2. உபநயநக்கிரியை. 3. (தர்க்க.) ஏதுவைப் பக்கத்திற்சார்த்திக்கூறுவது. (வ-று. மலைதீயுடைத்தென்று சாதித்தற்கு "இம்மலைபுகையுடைத்து" என்பது. இதிலே இம்மலை என்பது பக்கம். புகையுடைத்து என்பது அக்கினியுண்டென்று சாதித்தற்காகிய ஏது.) (தர்க்கசங். ருக.) 4. கொண்டுவருதல். [உவநய.]

உபநயித்தல் — பூணூற்கிரியை செய்தல். (உ-ம்.) "உபநயித்தோன்பிணியாதன்மரித்தறிட்டம்" (விதாந. மைந்தர். உரு.)

உபநளகம்—முன்காற்சிற்றெலும்பு. [உப-கீழ்மை. நளகம்-நீண்டவெலும்பு.]

உபநாகநம்—1. அபிடேகத் திரவியஞ்சார்த்துதல். 2.பூசுதல். 3.மருந்துவைத்துக் கட்டுதல். [உவநாஹந: உவ-கிட்ட. நஹ்-கட்டுதல்.]

உபநாகம்—விரணம் முதலிய ஆறும்பொருட்டுப் பிரயோகிக்குஞ் சேர்வைமருந்து. [உவநாஹ.]

உபநாயகன்—1. சோரநாயகன். 2. பாட்டுடைத்தலைவனுக்குக் கீழான சிரேட்டன்.

உபநாயம்—1. துவைத்துக்கட்டுமருந்து. 2. பூணுநூலணிதல்.

உபநிட்கரம் — 1. தெரு. 2. பெருந்தெரு. [உவநிஷ்கர.]

உபநிட்கிராமணம்— 1. இராசவீதி. 2. பிள்ளைபிறந்த நான்காமாதத்திலே பிள்ளையை வெளியிற்கொண்டுபோய்ச் செய்யுமொரு கிரியை. (உ-ம்.) "வருநாமகரணஞ்சோறூட்டலுபநிட்கிராமணமுநீக்கி" (திருவானை. கோச். ருக.) 3. பெருந்தெரு. [உவநிஷ்க்ரமண.]

உபநிட்டாநம் — உபநிட்கிராமணம். (உ-ம்.)

"உறுப்படையுபநிட்டாநமோதநம்பிறவுமுற்ற" (கந்தபு. மார்க். ககo.) [உவநிஷ்ஃாந.]

**உபநிடத்து**—உபநிடதம். (உ-ம்.) "வேதக் காட்சிக்குமுபநிடத்துச்சியில் விரித்த-போதக்காட்சிக்கும்" (கந்தபு. சூரனமைச். கஉஎ.) [உவநிஷத்.]

**உபநிடதம்** — 1. அயல்வீடு. 2. இரகசியம். 3. சதாசாரம். (உ-ம்.) "மூப்பகலிலேமலைவனுபநிடதவிற்கைமுநியும்" (பாரத. அணி. கூஉ.) 4. பரப்பிரமஞானம். 5. வேதத்தினுட்பொருள். (சூ. நிகண். கo: உஉ.) 6. வேதத்தினுட்பொருளைக்கூறுநூல். (உ-ம்.) "உன் - திருவடிக்கே தன்கருத்தெலாமமைத்தாள் சீருபநிடதமாமிவளே" (சிவதத்து. கக.) [நான்கு வேதத்திற்கும் ஆயிரத்தெட்டு உபநிடதங்களுள்ளன. கூர்மபு. அட்டமூ. உசு. உரை.] [உவநிஷஷ.]

**உபநிடம்**—உபநிடதம். (உ-ம்.) "பாதபங்கயமுபநிடப்பாதுகைசூட" (திருவிளை. எல்லாம் வல். சு.)

**உபநிதாநம்** – கடன்கொடுத்தவனிடத்திலே அடகாகவைத்திருக்கும்படி கொடுக்கப்படும்பொருள். [உவநியாந: உவ-சமம். நியா-வைத்தல்.]

**உபநிதி**—வியவகாரபதங்கள் பதினெட்டனுளொன்று; அஃது: உபநிதியெனவும் நிக்ஷேபமெனவும் நியாசமெனவு மூன்றுவகைப்படும். அவற்றுள் உபநிதி: ஒருவன் தநமுதலான தனதுபொருள் தன்னிடத்திருந்தால் அரசன் பங்காளி திருடன் இவர்கள் முதலானவர்களால் அபாயப்படுமென்றெண்ணியச்சமுற்றுப்பொருளைச் சேமப்படுத்தற்பொருட்டு நற்குலப்பிறப்பும் நன்னடையும் அறந்தெரிதலும் உண்மையுரைத்தலும்பல்கிளையுடைமையும்பொருளுடைமையுமுடையவனாகியும் நம்பத்தக்கவனாகியுமிருப்பவனிடத்தில் இன்னதென்று சொல்லாமலும் காட்டாமலும் எதிரேயெண்ணாமலும் பெட்டிமுதலானவைகளில் மறைத்து முத்திரையிட்டுவைப்பதாம். நிக்ஷேபமாவது: ஒருவன் மேற்சொல்லிய விசேஷணங்களெல்லாமுடைய ஒருவனிடத்தில் தனதுபொருளையவனெதிரேயெண்ணிக்கொடுப்பது. நியாசமாவது: ஒருவன் மேற்சொல்லிய அச்சத்தால் தன்னுடைய எருதுமுதலிய காலிகள் வெண்கலப்பாத்திரமென்னுமிவைமுதலானவைகளை மேற்சொல்லியவிசேடணங்களையுடையவன் அயலூருக்குப் போயிருக்கும்போது அவன்வந்தபின்னர் அவனிடத்திலொப்புவிக்கவேண்டுமென்றுசொல்லி அவனுடைய வீட்டாரிடத்திற்கொடுப்பது. [உவநியி.]

**உபநியாசம்**—1. அடகு. 2. அடுத்துவைத்தல். 3. கொடுத்தல். 4. செயற்பாலதிதுவென்றுசொல்லுதல். 5. சொல்லத்தொடங்கல். 6. முகவுரை. 7. விதிப்பிரமாணம். [உவந்யாஸ.]

**உபநியாயம்**—1. உதவிநியாயம். 2. திரும்ப நியாயமெடுத்துக்காட்டல்.

**உபப்பிரதாநம்** — 1. உபகாரம். 2. திறை. 3. பரிதாநம். [உவப்ரதாந.]

**உபப்பிரமா** — தக்கன். (கந்தபு. திக்குவி. கரு. உரை.)

**உபப்பிராமிதம்** — அதிகமாய்ச் சொன்னது. (சி. சி. அ: கரு. சிவாக்.)

**உபபட்டணம்**—பேட்டை.

**உபபத்தி**—1. ஏது. 2. ஒழிபு, ஓய்வு. 3. காரியப்படுத்தல். 4. (வேதாந்.) சடுவிதலிங்கங்களுள் ஒன்று; அது: வேதாந்த வாக்கியங்களின் தாற்பரியமாகிற அத்துவைதார்த்தத்திற்கு அநுகூலமான திருட்டாந்தம். 5. சம்பந்தம். 6. சம்பவித்தது. 7. செய்கை. 8. சேவகம். 9. தகுதி. (அநுபபத்திபார்.) 10. தியாநம். 11. சாதனம். (உ-ம்.) "உபபத்தி-சாதனம்" (சி. சி. ரு: க. சிவாக்.) 12. பிறப்பு. 13. மூகாந்திரம். 14. வழங்கியது. (உ-ம்.) "காண்மிகமென்றுபபத்தி" (சி. சி. உ: கூக. சிவாக்.) [உவவத்தி: உவ-கிட்ட. வத்- போதல்.]

**உபபதம்** — 1. அற்பம். 2. பட்டப்பெயர். சங்கராசாரியர் என்பதிற்போல. (இதில் ஆசாரியர் என்பது பட்டப் பெயராகிய உபபதம். [உவவதம்.]

**உபபதி**—1. இரண்டாமதிகாரி. 2. சோரநாயகன். [உவவதி: உவ-சமம். வதி - நாயகன்.]

**உபபலம்**— 1. உதவி. 2. துணை.

**உபபாதகம்** — தூநபாதகம்; அது: பசுக்கொலைமுதலியன. (உ-ம்.) "இதனுக்கணித்தானவுபபாதகமுமினியறைவாம்" (சிவதரு. பாவ. கூசா.)

**உபபாவம்**—உபபாதகம். (உ-ம்.) "அகமுஞ்சுக்குமபாவமுபபாவமடருமாபாவம்" (சூத. ஞாந. எ: கூசா.)

**உபபிருத்து**— ஆலமரத்தினாலே திரண்டவடிவமாகச்செய்யப்பட்ட ஒரு பாத்திரம்; இது, யாகங்களில் வழங்கப்படுவது.

**உபபீடநம்**—வேதனைசெய்தல்.

உபபுரம்—நகர்ப்புறம்.[உப-புர; உப-சமீபம். புர - நகர்.]

உபபுராணம்— அப்பிரதானபுராணம். அட்டாதசோபபுராணம் பார். (உ-ம்.) "பதினெட்டாமுறைநூலுக்கு-மன்னுபபுராணமும்" (மச்ச பு. புராணவநுக். ௬௬.)

உபபோகம்— 1. இன்பம். 2. பொருளின் பலத்தை அநுபவித்தல். 3. மைதுநம். [உபபோக.]

உபபோகந்தராயம்— அநுபவிக்கும் பொருள்களை விலக்குவது. (சிந்தா.)

உபபோத்திருத்துவம்— உபபோக அநுபவியின் தன்மை. (சி. சி. அ: ௬௦. ஞானப்)

உபமந்நியன்— வியாக்கிரபாதமுனிவருடைய குமாரர். (உ-ம்.) "பின்பக்கொடிமன்னுபமந்நியனைப்பெற" (கோயிற்பு. வியாக். ௨௪.)

உபமந்நியு— உபமந்நியன். (உ-ம்.) "சென்றுபமன்னியுநாளு" (கூர்மபு. கண்ணன் சிவதீ. ௯.)

உபம்— இரண்டு. (உ-ம்.) "மற்றையுபமுபநயத்துகளிடு" (தைல. தைலவ. ௧0௧.)

உபமம்—1. உவமை. 2. பாவனை. [உபமா.]

உபமலம்—உள்ளேயிருக்கும் மலம்.

உபமாதீவகம்—தீவகஅலங்கார பேதத்துள் ஒன்று; அஃது: ஓர் உபமேயச்சொல் ஓரிடத்து நின்று செய்யுளிற் பலவிடத்தும் நின்ற உபமச்சொற்களோடும் பொருந்திப் பொருள்விளைப்பது. "முன்னங்குடைபோன் முடிநாயகமணி போன்-மன்னுந்திலகம்போல்வாளிரவி- பொன்னகலந்-தங்குங்கவுத்துவம்போ லுந்தித்தடமலர் போ-லங்கணுலகளந்தார்க் காம்" (இலக்கணவி. ௬௪௭.) [உபமா - உவமை. தீவகம்-விளக்கு.]

உபமாநதீவகம்—உபமாதீவகம். (இலக்கணவி. ௬௪௭. உரை.)

உபமாநம்— யாதேனும் ஒருபொருளுக்கு ஒப்பாகச்சொல்லப்படுமேது. (உ-ம்.) "மதிபோலுமுகம்"இதில், மதி உபமாநம். [உபமாந]

உபமாநரகிதம்—உபமையில்லாதது. [உபமாநரஹித.]

உபமாபூர்வபதம் — முன்மொழியொப்பு; அஃது: இருசொற்றொடரில் முன்மொழி உவமையாய் வரும் பண்புத்தொகை. சங்கவெள்ளை என்பதிற்போல. (பி. வி. ௨௨. உரை.) [உபமாபூர்வபத: உபமா-உவமை. பூர்வ-முன். பத-மொழி.]

உபமிதசமாசன் — உவமைத்தொகை. (பி. வி. ௨௫. உரை.) [உபமித, ஸமாஸ- தொகை.]

உபமிதம்—உபமாநங்காட்டப்பட்டது. [உபமித.]

உபமிதி — 1. உபமாநப் பிரமாணத்தினல் வரும் அறிவு. (வ-று.) ஆமா ஆப்போலும் என்றுகேட்ட ஒருவன் ஆவொப்புமைத்தன்மையுடைய பொருளைக் கண்டபின்னர் இது ஆமா என்னும் அறிவு. (தர்க்கபா. ௬0.) 2. ஒப்பு.

உபமிருதி — அப்பிரதான மிருதிசாஸ்திரம். அம்மிருதிகள்: கணுவம், கபிலம், லோகிதம், தேவலம், காத்தியாயநம், லோகாக்ஷி, புதமிருதி, சாதாதபம், அதிமிருதி, பிரசேதம், தக்ஷம், விட்டுணு, விருத்தவிட்டுணு, விருத்தமநு, தௌமியம், நாரதம், பௌலத்தியம், உத்தராங்கிதம் எனப்பதினெட்டு.(அபிதான.)[உபஸ்ம்ருதி]

உபமேயம் — உபமிக்கப்பட்ட பொருள். [உபமேய.]

உபமேயோபமானம் — உபமேயத்தை யுபமானமாகவும் உபமானத்தை யுபமேயமாகவுஞ் சொல்வது.

உபமேயோபமை—(அலங்காரம்.) இதரேதரவுபமை.[உபமேயோபமா:உபமேய; உபமா.]

உபமை—1. உவமையலங்காரம். 2. ஒப்புமை.

உபமோத்தரபதகர்மதாரயன்—பிற்சொல் உபமாநமாயிருக்கும் பண்புத்தொகை. (வ-று.) அடிமலர். (பி. வி. ௨௨. உரை.) [உபமா-உவமை. உத்தரபத -பிற்சொல். கர்மதாரய-பண்புத்தொகை.]

உபயதலம் — இருமரபு. அது: தந்தைதாயரதுமரபு. [உபயகுல.]

உபயகோமுகி — கன்றீனும்போது அதன் முகம் வெளியே தோற்றமாகும் அச்சமயத்துப் பசு. [உபய-இரண்டு. கோ-பசு.முகீ-முகமுடையது.]

உபயசம்பவம்—ஒருபக்கத்திலும்விலக்குவழியில்லாதநியாயம். [உபயஸம்பவம்; உபய-இரண்டு. ஸம்பவ-பிறப்பு.]

உபயத்தம்—சிலேடை.

உபயநாகமலர்-சிறுநாகப்பூ, பெருநாகப்பூ. (தைல. தைலவ. ௧௬௫.)

உபயநொச்சி—வெண்ணொச்சி, கருநொச்சி. (தைல. தைலவ. எசு.)

உபயம்—1. இரண்டு. (உ-ம்.) "படியுபயஞ்சேர்த்து" (தைல. தைலவ. எஎ.) 2. இரண்டு தன்மையுமுடையது. (உ-ம்.) "அருவநாலிங்கு பயநாலுருவமொன்றும்" (சி. சி. உ: எச.ஞாநப்.) 3. உபகாரம். 4. கோயிற்காணிக்கை. [உஹய]

உபயமாதம்—உபயராசிக்குரியமாதம்; அவை ஆனி, புரட்டாசி, மார்கழி, பங்குனி என்னும் மாதங்கள். [உஹயஶாஸ.]

உபயமுகி—கன்றின் முகமுதயமாய் நிற்கும் பசு. [உஹயஶூவீ.]

உபயமுகிதாநம்—உபயகோமுகிதாநம். (த. நி. போ. உரு.) [ஃதாநி-விதிப்படி வரைந்துகொடுத்தல்.]

உபயர்—இருவர். (உ-ம்.) "அவர்க்கொப்பறு புதல்வருமுபயராயினர்" (வேதாரணியபு. கோலாகல. சுஎ.)

உபயராசி—சரந்திரமென்னு மிரண்டுதன்மைகளையுடைய ராசி; அவை: கந்நி, தநு, மிதுநம், மீநம் என்பன. (விதாந. மரபியல். ரு.) [உஹயராஶி.]

உபயவசை—சீரகம், கருஞ்சீரகமென்னுமிரண்டும். (உ-ம்.) "உபயவசைமுசலி-யுருமமுறு செவ்வல்லிகணமொவ்வொன்றினுக்கு" (தைல. தைலவ. ருக.) [உஹய; அசை.]

உபயவாதி—இருபக்கத்தையுஞ் சார்ந்துநிற்போன்.

உபயவாதிகள் — இருதிறத்தார். (உ-ம்.) "ஈதுபயவாதிகள்சம்மதம்" (தாயு. எங்கு. சு.)

உபயவிட்டகம்—கருப்பந்தரித்து நாளுக்குநாள் விருத்தியடையும்போது மாதாமாதம் ருது காலத்தில் வெளிப்படுவதுபோலச் சோணிதம் வெளிப்பட்டுக்கொண்டேயிருந்தாலும் அச்சிசுவுக்குக்கெடுதியிராமல் மிகவுமிளைத்து மரப்பாவையையொத்துத் தாய்க்குந் தெரியாமல் வயிற்றுக்குள் ஒவ்வொருவேளை கொஞ்சமசைவதாயிருக்கும் பிண்டம். (சீவரட். உ௦சு.) [உஹய விஷ்டக-பிண்டப்பிரவேசமாத்திரமுடையது]

உபயவேர்—வெட்டிவேர், இலாமிச்சவேர் எனப்படும் இரண்டுவேர். (உ-ம்.) "உபயவேர் தகரம்வெள்ளிலோத்திரம்" (தைல. தைலவ. சுசு.)

உபயவோசை—ஈரடுக்கொலி.

உபயாங்கவாச்சியம்—நிருத்தத்துக்குங் கீதத்துக்கும் வாசிக்கும் வாத்தியம். (சிலப். எஉ.பக்.)

உபயாங்கன் — சதாசிவன். [உஹய-இரண்டு. அங்க-சரீரம்.]

உபயாத்தம்—உபயார்த்தம்.

உபயாநுகம்—கூத்துவிகற்பங்களுக்கமைந்தவாச்சியக்கூறுகளிலொன்று; அது. கீதம், நிருத்தமாகிய இரண்டினுக்கும் இசையவாசித்தல். (சிலப். அரங்கே. அரும்பத. கச) [உஹய; அநுக-இசைதல்.]

உபயாமம்—விவாகம்.

உபயார்த்தம்—1. இரண்டுநோக்கம். 2. இரண்டுபொருள். [உஹயாத: உஹய- இரண்டு. அத - பொருள்.]

உபயோகம்— 1. இட்டசித்தியை முடித்தற்கு அநுகூலமாயிருக்குஞ்செய்கை. 2. உதவி. (சோதிட)3. ஒரு யோகம்; அஃது: இலக்கினத்திலும் இரண்டாம் மூன்றும் நான்காம் இடங்களிலும் ஏழு கிரகங்களும் நிற்பது. (உள்ளமுடை. சுகஉ.) 4. ஒன்றனை முடித்தற்கு வேண்டும்பொருள். (உ-ம்.) "தாங்கியுபயோகந்தன்னையும்" (சைவச. பொது. உருக.) 5. சமீபம். 6. தக்கதன்மை. 7. நல்லொழுக்கம். 8. பிரயோகம். 9. பிரயோசநம். 10. மருந்துசெய்தல். [உவயொம: உவ- கிட்ட. யொம-இணைத்தல்.]

உபயோகி—1. உபயோகமுடையது. 2. உபயோகமுடையவன்.

உபயோகித்தல்—உபயோகஞ்செய்தல்.

உபரசநீர்— உபரசக்குடிநீர். (தைல. தைலவ. சகூரு.ம் உரையும்.)

உபரசம்—1. இழிந்தசுவை. 2. சுவாபபதார்த்தமாகிய சரக்கு. அச்சரக்குகள் நூற்றிருபத்தெட்டுவகை. (உ-ம்.) "தாரார்மணியுபரசங்களையும்" (தைல. பாயிர. சுக.) 3. கடல் நுரை. [உவரஸ.]

உபரசன்—தம்பி.

உபரசிதம்— 1. ஆயத்தஞ்செய்யப்பட்டது. 2. உபசரிப்பு. 3. உண்டாக்கப்பட்டது 4. குருவைக்காத்தல். [உவரவித: உவ, ரசி - செய்தல்.]

உபரஞ்சிப்பித்தல் — விரும்பச்செய்தல். (உ-ம்.) "பிறரையுபரஞ்சிப்பிக்குங்குணம்" (சி. சி. உ: உகூ. ஞாநப்.)

உபரட்சணம் — புறக்காவல். [உவரக்ஷணா.]

உபரதி— 1. ஒழிவு. (உ-ம்.) "சித்திரையென்றது இந்திரியங்களுடைய உபரதியேயாகை

யால்" (சி. சி. ௩: ௪. சிவாக்.) 2. பெண்டுபிள்ளைமுதலிய குடும்பவியவகாரங்களை ஒட்டறவிட்டு நிற்றல். இது மூன்றாஞ்சாதநமாகிய சமாதிசட்கசம்பத்தியிலொன்று. (உ-ம்.) "மட்டிலாப்பெண்டிராதி மகிழ்புகழாவதெல்லாங்-கட்டறநீக்கவேண்டுங்கழலாதுநிற்குமாயில் - தட்டுறுபிறவிநீங்காத்தன்மையென்றுன்னியுன்னி - ஒட்டறவிட்டுநிற்றலுபரதியாகுங்காணே" (உபதேசவு. க.) 3. பெருமகிழ்ச்சி. 4. மரணம். [உபரதி.]

உபரதித்தல்—வெறுத்துத்தள்ளுதல்.

உபரமணம்— 1. ஒழிதல். 2. துறத்தல். 3. விஷயவைராக்கியம். [உபரமண.]

உபராகம்— 1. இராகு. 2. ஒரு புண்ணியகாலம். (சி. சி. அ: ௬௬. மறை.) 3. சிவப்பு. 4. சூரியசந்திரகிரகணம். (உ-ம்.) "ஒதுபானுவெண்மதியுபராகத்தில்" (சேதுபு. சேதுபல. உக) 5. துராசாரம். 6. நிந்தனை. 7. வருத்துதல். [உபராக.]

உபராசன்— அரசனுக்கு இரண்டாவதான அதிபதி. 2. இளவரசன். [உபராஜ.]

உபராசிநம்—சிற்றகத்திமரம்.

உபராமம்— 1. சந்நியாசம். 2. துறத்தல். 3. மரணம். 4. வெறுத்தல்.

உபரால்—உதவி.

உபராவம்—சமீபத்திருந்துபேசுதலால் வரும் ஒலி.

உபரி— 1. அதிகம். 2. ஒரு மீன். 3. மேல். (உ-ம்.) "உபரியெழுகின்றசியம்" (பாரத. பதின்மூன். ௬௬.)

உபரிகை—மேன்மாடம். (உ-ம்.) "கோவிடமாடமுபரிகைமேடைகோபுரமரங்கெலாம் பரந்து" (திருவிளை. நாகமெய். ௪அ.)

உபரிசரர்— மேலே சஞ்சரிப்போர். (உ-ம்.) "உபரிசரரெனவுரஞெடுபெருகுதர" (பாரத. பதினெறு. ௬௦.) [உபரிசரர்: உபரி-மேல். சரர் - சஞ்சரிப்போர்.]

உபரிசுரதம்— நாயகன்கீழும் நாயகி மேலுமாகப்புணர்தல். (கொக். ருக.) [ஸுரத - புணர்ச்சி.]

உபரிபுருஷன்—வாகநமேறுகிறவன். [உபரிபுருஷ: உபரி-மேல். புருஷ:]

உபரிலீலை-உபரிசுரதம். [உபரி; லீலா-புணர்ச்சி.]

உபரை—நூற்கதிர்.

உபரோதகம்—உள்வீடு. [உபரோதக: உப; ருத்-அடைக்கிறது.]

உபரோதம்—1. அநுகூலம். 2. கட்டுதல், 3. தயவாக ஒன்றைச் செய்துமுடித்தல். 4. தற்காப்பு. 5. மறுப்பு. 6. முற்றுகையிடல். [உபரோத: உப-ருத-தடை.]

உபலக்கணம்—நால்வகைச்சொற்களுளொருசொல் நின்றுதன்னையுணர்த்துவதோடு தனக்கினமாகிய சொற்களையுந் தழுவிக்கொள்ளுதல். (உ-ம்.) (சடகோப நன்னூல் ௬௫அ - முகமும் உரையும்.) அன்றியும் இலக்கணக்கொத்து. பாயிர. க. உரையிலுங்காணலாம். [உபலக்ஷண.]

உபலட்சித்தல்—பார்த்தல். (சி. சி. அ: உஉ. ஞாநப்.)

உபலட்சியம்—குறிப்பினுற் பொருள்விளக்குமது. [உபலக்ஷ்யம்.]

உபலுத்தி—1. அடைதல். 2. அறிவு. 3. சம்பாத்தியம். [உபலப்தி: உப-லப் - அடைதல்.]

உபலம்— 1. இரத்திநக்கல்லு. 2. எருமுட்டை. 3. கல்லு. 4. பளிங்குக்கல். (உ-ம்.) "பலநிறங்கவருமுபலமாய்" (தாயு. சிற்சுகோ. உ.) 5. பூசித்தல். [உபல.]

உபலாலநம்—1. குதுகலஞ்செய்தல். 2. செல்லங்காட்டல். [உபலாலந.]

உபலாலநை—குதுகலஞ்செய்தல்.

உபலாலிகை—தாகம். [உபலாலிகா.]

உபலாவி—விராடதேசத்தினின்றும் புறப்பட்டுப்பாண்டவர்கள் தங்கிய இடம். (உ-ம்.) "போயோதைவீதியுபலாவிபுகுந்துதங்கள்" (பாரத. வெளிப்பாட். ௬௦.)

உபலாளநம்—சுத்திசெய்தல்.

உபலிங்கம் — தீங்கை அறிவிக்கும் இயற்கைக்குறி. [உபலிங்க: உப-லிங்-போதல்]

உபலேபநம்—சாணியான்மெழுகுதல். [உபலேபந: உப-லிப்-பூசுதல்.]

உபலேபம் — 1. பூசுதல். 2. மெழுகுதல். [உபலேப.]

உபலோத்திரம்—விளாம்பிசின்.

உபவசி—உபவாசி. (உ-ம்.) "அருந்தினலற்றைக்குபவசியாய்" (சைவச. பொது. ௬௦௬.)

உபவசித்தல்—உபவாசஞ்செய்தல். (உ-ம்.)

"அழிபசிக்கழியாதன்றுபவசித்து" (வேதாரணியபு. நியம. அ.)

உபவநம்—1. காஞ்சோன்றிப்பூண்டு. 2. நந்தாவநம். (உ-ம்.) "அந்தமன்னஞேர்நாளிலுபவநத்தொருவனுமிருந்து" (ஞாநவா. உற்பத்தி. ருக.) [உபவநம்: உப-போல், வநம்-சோலை.]

உபவம்—சீந்திற்கொடி.

உபவநுத்தநம்—1. இராச்சியம். 2. குடியில்லாவூர். [உபவர்த்தநம்: உப-வ்ருதி-தங்குதல்.]

உபவாசம்—1. உணவின்றியிருத்தல்.(உ-ம்.) "இதன்புனலாடி உபவாச முஞற்றியக்கால்" (சேதுபு. பலதீ. கக.) 2. ஓமபீடம். 3.ஓமாக்கினிவளர்த்தல். 4. விடயவிருப்பம்நீங்கி விரதங்கொள்ளல். [உபவாஸ: உப-வஸ்-வசித்தல்]

உபவாசி—உபவாசஞ்செய்வோன். (உ-ம்.) "மதத்தவுடலதனுலற்ற வுபவாசியொளித்துண்பானென்றுணர்தல்" (உபநிட. கசு. உரை.) [உபவாஸிந்.]

உபவாசித்தல்—உபவசித்தல். (உ-ம்.) "ஓங்குந்திரி திகையுபவாசித்தே" (மச்சபு. அநந்ததிரி. உஅ.)

உபவாடிகை—1. மந்திரிவீட்டுத்தோட்டம். 2. வேசிவீட்டுத்தோட்டம்.

உபவாயுக்கள்—நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தநஞ்செயன் என்னும் அபிப்பிரதாந வாயுக்கள்; இவை: பஞ்சவாயுக்களுள்ளும் அந்தர்ப்பூதமாயிருக்கும்; இவைகளுள்: வாந்திவரும்படி செய்வது நாகனெனவும்; விக்கல், எப்பம், இமைப்பு, தும்மல்களைச்செய்வது கிருகரன் எனவும்; வீங்கச்செய்வது தநஞ்செயன் எனவுஞ்சொல்லப்படும். (விசார. களசு.)

உபவிட்டன்—உட்கார்ந்திருப்பவன்.

உபவியாக்கியாநம் — வியாக்கியாநத்துக்கு அநுபந்தம்.[உபவ்யாக்யாந: உப-கிட்ட. வ்யாக்யாந-உரை.]

உபவீதம்—1. தேவகாரியத்தில் இடதுதோண்மேனின்று வலதுதோளின்கீழ்த் தொங்கும் முப்புரிநூல். (பிரமோப.) 2. பூணுநூல். 3. பூணுநூல்தரித்தல். [உபவீத: உப-மிக. வீதீ-பிரகாசித்தல்.]

உபவீதி — உபவீதமணிந்தவன். [உபவீதிந.]

உபவேசநம்-உபவேசம்.[உபவேசநம்]

உபவேசம் — 1. ஆசனம். 2. இருத்தல். 3. மலங்கழித்தல். [உபவேஶ: உப-கிட்ட. விஶ்-உட்புகல்.]

உபவேட்டிதம் — கைவட்டணை நான்கினுளொன்று. (சிந்தா. பதுமை. கஉ. உரை.)

உபவேதம் — அப்பிரதாநவேதம். (உ-ம்.) "ஆயுர்வேதம், தநுர்வேதம், காந்தருவவேதம், அருத்தவேதம் என்பன உபவேதம்" (சைவ.வி. உஉ.)

உபற்பவம்—1. இராகு. 2. கிரகணம்.

உபறியாவி—கோட்டம்பூண்டு.

உபாக்கியாநம்—1.கதைசொல்லல். 2.முற்காலத்திலே நிகழ்ந்ததை அறிவிக்குங் கதை. (உ-ம்.) "நளோபாக்கியாநம்"[உபாக்யாந: உப; ஆக்யாந-சொல்லல்.]

உபாகமம் — 1 அங்கீகரித்தல். 2. அப்பிரதானமான ஆகமங்கள். (உ-ம்.) "விசுவான் மகமுதல் நாரசிங்கமிறுதியாயுள்ள இருநூற்று நாற்பத்தேழு உபாகமங்கள்" (கூர்மபு. உ: கஉ. உரை.) 3. கிட்டிவருதல். 4. வந்துசேருதல். [உபாகம: உப-கிட்ட,கீழ். ஆகம-வருதல்]

உபாகரணம்— 1. பசுக்களை யாகத்திற்கொல்லுதல். 2. வேதாத்தியயந ஆரம்பத்துக்கு முன் செய்யும் ஒருகிரியை. [உபாகரண:உப-கிட்ட, ஆகரண.]

உபாகருமம்—1. ஆயத்தஞ்செய்தல். 2. பிதிர்தர்ப்பணம். 3. வேதம்படிக்கத் தொடங்குதல். 4. வேதாத்தியயந ஆரம்பத்துக்குமுன் செய்யும் ஒரு கிரியை. [உபாகர்ம: உப-கிட்ட. ஆகர்ம-செயல்.]

உபாகாரம் — பலகாரம் பழம் முதலிய சிற்றுணவு. [உபாஹார: உப-குறைவு. ஆஹார-உணவு.]

உபாகிதம் — அக்கினியினுல் வரும் அழிவு. [உபாஹித.]

உபாகிதை—விண்வீழ்கொள்ளி.

உபாகிருதம் — 1. தீங்கினையறிவிக்கும் உற்பாதம். 2. யாகத்திலே கொல்லுதற்கு ஆயத்தஞ்செய்யப்பட்டிருக்குமிருகம். [உபாக்ருத: உப; ஆ; க்ருத-செய்யப்பட்டது.]

உபாங்கம் — 1. அங்கம்போல்வது. (உ-ம்.) "முல்லைத்தார்கிண்டுவண்டுபொங்கங்கூடத் - துளைத்தவேய்ங்குழற்சாதாரிதொம்மெனத் தொனிக்குமன்றே" (இரகு. நாட். ருசு.) 2. அப்பிரதானமான உறுப்பு. 3. ஒருவகைத்தோற்கருவி.

(சிலப். அரங். உள. உரை.) 4. ஒருவரைவிட்டு நீங்காமற்சமீபத்தில் இருக்குமது; பிராமணனு க்குப்பூணூல்போல. (சி. சி. க: சஎ. மறை.) 5. பரதத்தின் பொது இலக்கணங்களாகிய இரு பது பேதத்துளொன்று. (உ-ம்.) "பரத-மாவை யினங்கழுபாங்கமே பிரத்தியாங்கமேயலர்முக ராகம்- ஒவறுசிர்சால்கரப்பிரசாரமூவமையில்சிர க்கரகருமம் - தாவறுகரகேத்திரங்கரகரணந்தா னகமே சுத்தசாரி. (திருவிளை. மாறியா. அ.) 6. வேதத்துக்கு இரண்டாமங்கமாகிய நூல்கள். (உ-ம்.) "மீமாஞ்சை, நியாயம், புராணம், ஸ்மி ருதி என்பன உபாங்கங்கள்" (சி. சி. அ: கச. மறை.)

**உபாச்சிரயம்** — 1. அடைக்கலம். 2. ஆதா ரம். 3. கொள்கலம். [உபாஸ்ரயம: உப- கிட்ட. ஸ்ரய-அடைதல்.]

**உபாசகர்**—1. உபாசனைசெய்வோர். (சி. சி. க: ருஅ. சிவாக்.) 2. பௌத்தரில் இல்லறத் தோர். (மணிமே.)

**உபாசகன்**— 1. உபாசனைசெய்வோன். 2. ஏவல்செய்வோன். 3. சூத்திரன். [உபாஸக]

**உபாசகைகள்**— பௌத்தரில் இல்லறநட த்துமகளிர். (மணிமே.)

**உபாசங்கம்**—அம்புக்கூடு. [உபாஸங்க]

**உபாசநம்**— 1. அத்திரப்பிரயோகப்பயிற்சி. 2. ஆசநம். 3. ஓமாக்கினி. 4. தேவத்தியாநம். 5. தேவாராதனை. 6. தொண்டுசெய்தல். [உபா ஸநம.]

**உபாசநாபரவாதம்**— சிந்திக்கப்பட்ட வஸ் துவைத்தனது பிரியத்தைவைத்து அன்போடு ஒரு விக்கிரகத்தினிடத்தில் உபாசிக்கும் உபா சனையே தேவதாரூபமாய் இட்டப்பிராப்தியை த்தருவதுபோல எதிரிட்ட வஸ்துக்களைத்தன தூரூபமாகச்சிந்தித்தலின் அச்சிந்தனையடைய லாம் என்பது. (உ-ம்.) "எழிற்பதுமையைத்தே வெனல்போலிருமைதருமுபாசநாபரம்" (வே தா. சூ. கஉசு.)

**உபாசனை**—உபாசநம். [உபாஸநா.]

**உபாசயம்**—நித்திரை.

**உபாசி**—உபாசியென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும்.

**உபாசித்தல்**—வழிபடுதல்.

**உபாசிதம்**— வணக்கம். [உபாஸித: உப-கீழ். ஆஸ்-இருத்தல்.]

**உபாசிரயம்**—அடைக்கலம்.

**உபாஸ்தி**—வழிபாடு.

**உபாஞ்சநம்**— கோமயத்தாலே மெழுகுதல். [உபாஞ்ஜந: உப; அஞ்ஜந- மெழுகுதல்.]

**உபாஞ்சு**—1. இரகசியம். 2. மந்திரோச்சா ரணபேதம் மூவகையுளொன்று; அது: மந்த மாகச்செபித்தல். (சைவச.பொது.கருஉ.உரை.) [உபாம்ஸு.]

**உபாத்தி**—ஆசாரியன். (உ-ம்.) "ஊன்பிற ங்கொளிறும்வேலா னோர்த்துத்தன் னுபாத்தி சொல்லால்" (சிந்தா. குண. உசo.)

**உபாத்தியாயன்**— 1. ஆசாரியன், படிப்பிக் கிறவன். (உ-ம்.) (சூ. நிகண். உ: எ.) 2. புரோ கிதன். 3. வேதத்திற்சிலபாகத்தையாவது வே தாங்கங்களையாவது வேதநம்பெற்றுப்படிப்பிப் பவன். இப்பெயர் தமிழில் உவாத்தியன், உவா த்தியான், உவாத்திகன், உவாத்தி என்று பல வாறாக வழங்கும். (மணிமே.) [உபாத்யாய]

**உபாத்தியாயாநி**—உபாத்தியாயன் மனைவி. [உபாத்யாயாநீ.]

**உபாத்தியாயி**— உபாத்தியாயாநி. [உபா த்யாயீ.]

**உபாத்தியாயை**— படிப்பிப்பவள். [உபா த்யாயா.]

**உபாதாநகாரணம்**—முதற்காரணம்.

**உபாதாநத்திரயம்**—மூன்றுமுதற்காரணம்; அவை: சுத்தமாயை, அசுத்தமாயை, பிரகிருதி மாயை என்பன. (சி. சி. உ: எச. சிவாக்.) [உபாதாநத்ரயம: உபாதாநம - முதற் காரணம். த்ரயம - மூன்று.]

**உபாதாநதை** — உபாதானமாயிருக்குந்தன் மை. (சி. சி. உ: க. சிவாக்.) [உபாதாநதா: உபாதாநம் முதற்காரணம். தா-தன்மை.]

**உபாதாநம்**— 1. அரிசித்தாநம். 2. ஈவு. 3. உபயார்த்தம். 4. எண்ணம். 5. துணைக்கார ணம். 6. பற்று. (மணிமே.) 7. புலனடக்கல். 8. முதற்காரணம். (உ-ம்.) "என்னையிதுவெனி லுலகுக்குபாதாநம்" (சிவப்பிர. உரு.) 9. வில க்கல். [3, 6, 7. உபாதாந; உப - கிட்ட. ஆதா - எடுத்தல்.]

**உபாதாநரூபம்**— அறிவு, கந்தம், இரதம், வன்னம் என்பன. (உ-ம்.) "அறிவு, கந்தம், இரதம், வன்னம் என்கிற உபாதாநரூபம் நா லும்" (சி. சி. அ: கஉ. நிரம்ப.)

**உபாதாயம்**— பற்றப்படுவது. (சி. சி. பர. சௌத். ச. உரை.)

உபாதாயவுரு—வலி, கந்தம், இரதம், வன்னம் என நான்காகும். (உ-ம்.) "வலிகந்தமிரதம்வன்னமெண்டருமுபாதாயந்தான்" (சி. சி. பர. சௌத். ரு. உரை.) [சி. சி. பர. ககரு - ம் பக்கத்திலிவைகளே உபாதாந உரு என்று சொல்லப்படுகிறது.]

உபாதி—1. இடையூறு. (உ-ம்.) "உம்பரால் வருமுபாதிகாப்பன்" (மச்சபு. பிருகுவி. சக.) 2. உபாதியென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும். 3. காரியம். 4. (தர்க்கம்.) சாத்தியத்திற்சமவியாத்தியுடையதாய்ச் சாதநத்தில் வியாபகமில்லாதது. (உ-ம்.) "தீக்குப்புகையோடு சம்பந்தத்தில் ஈரவிறகின்கூட்டம் உபாதி" (தர்க்கபா. கஅ.) 5. தடை. 6. தருமசிந்தை. 7. தியாநம். 8. தேவசம்பந்தங்களில் ஐயம் வந்தால் அவற்றுள் மநஞ்செல்லாமல் நிறுத்தல். 9. நிமித்தம். (உ-ம்.) "விவேகிக்கு ஒரு உபாதியன்றியில் அவிவேகத்துவங்கூடாது" (சி.சி. ச. அ. சிவாக்.) 10. பாதை. 11. பொய்ஞ்ஞாநம், அவித்தை. (உ-ம்.) "உபாதிகெடாதவர் கேவலமாகாரே" (கைவல். சந். ருகூ.) 12. மார்சம். 13. வருத்தம். 14. வியாதி. [உவாதி.]

உபாதித்தல்—உபத்திரவஞ்செய்தல்.

உபாதித்திரயம்—மூன்று உபாதிகள்; அவை. அவிச்சிந்நோபாதி, பிரதிவிம்போபாதி, அத்தியாசோபாதி என்பன. இது, "பாவமுறுமவிச்சிந்நோபாதிபதிவிம்போபாதியுடனத்தியாசோபாதியெனவே-மேவுமுபாதிக ளொரு மூன்றுள" என்பதனாற் பெறப்படும். (வே. தா. சூ. அக.)

உபாதிதை—உபாதித்தன்மை. [உவாயிதா.]

உபாதீதம்—உபாதியில்லாதது. (உ-ம்.) "ஆன்மசிற்சத்தியே யுபாதீதமானபிரமாணம்" (சி. சி. அளவை. எ. சிவாக்.) [உவாயீத: உவாயி; சூயீத-கடந்தது.]

உபாதேயம்—1. எடுக்கத்தக்கது. (சி. சி. அ உச. சிவாக்.) 2. கூட்டத்தக்கது. (சி.சி.உ: ருஅ. சிவாக்.) 4. பிரதாநம். 5. மேலானது. [உவாதெய.]

உபாந்தம்—1. அணித்தான அயல். 2. எல்லை. 3. கடைக்கண். [உவாங: உவ-கிட்ட. அங-கடை.]

உபாந்தியம்—1. ஈற்றயல். 2. கடைக்கண். [உவாஙூ௦: உவ-சமீபம். உஙூ-இறுதியிலுள்ளது.]

உபாநம்—1. உபாநவரி. 2. செருப்பு, மிதியடி. (உ-ம்.) "உத்தமரைமதியாதே யுபாநபதத்தொடுநடக்கு-மத்தரையும்" (சிவதரு. சுவர்க்க நரகவியல். கசஉ.)

உபாநவரி—கோபுரத்தினடிச்சித்திரவரி.

உபாம்சு—இரகசியம். (உ-ம்.) "சிவமந்திரத்தை வாசகமாகத்தான் உபாம்சுவாகத்தான் மானசமாகத்தான் மேற்சொல்லும் பிரகாரத்திலே சபிப்பது சபயக்கியம்" (சி. சி. அ: உரு. சிவாக்.) [உவாംஶு.]

உபாமிசு — 1. இரகசியம். 2. வாசகசெபவகையிரண்டினென்று. அது: பிறர் செவிக்குக் கேளாது மந்திரங்களைச்செபித்தல். (உ-ம்.) "உரைவாசகமற்றுச்சமுபாமிசு வென்றிரண்டாம்" (சூத. நியம. கரு.) [உவாംஶு.]

உபாயந்திரயம்—(வேதாந்தம்.) உபாயங்கள் மூன்று; அவை: "அதத்துவியாவிருத்தியிலக்கணை, தடத்தலக்கணை, சொரூபலக்கணை" என்பன. (த. நி. போ. க௦ரு.)

உபாயதந்திரம்—தந்திரப்புத்தி.

உபாயநம்—உபக்கிராகியம். (உ-ம்.) "புதராகுமவர்கள்பொருட்டுபாயநதாநத்தினையும்புரிக" சேதுபு. சேதுபல. கூ௦.) [உவாயந.]

உபாயநிட்டை — இலேசிற் சித்தியடையும் வழியைக்காட்டும் நிட்டை. (உ-ம்.) "இந்நிலமயங்கிற்றுகின் மேலொருபாய நிட்டையுணர்த்துகின்றூர்" (சி. சி. கூ: அ. மூகம்.)

உபாயம்—1. கிட்டவருதல். 2. சித்திசதாநம். 3. சித்தியடையும்வழி. (உ-ம்.) "பூரணப்பொருள்வந்து வாய்க்கும்படிக் குபாயம்-வருவித்து" (தாயுமா. சின்மயாநந்தகுரு. உ.) 4. சூழ்ச்சி. (உ-ம்.) "உபாயமெங்கேனுமொன்றுற்-றப்பறச்சூதுகொண்டு சதிப்பதே கருமமென்றான்" (பாரத. சூது. உச.) 5. சொற்பம். 6. நான்கு. (உ-ம்.) "தொடிகாணம்புபாயமாம்படியட்டிப்பின்" (தைல. தைலவ. கூச.) 7. தந்திரம். 8. வகை. [1, 2, 3, 4. உவாய: உவ-கிட்ட, அய-போதல்.]

உபாயவிலக்கு—விலக்கலங்கார வகையுளொன்று; அஃது: ஒருபாயங்காரணமாகவிலக்குவது. (வ-று.) "இன்னுயிர்காத்தளிப்பர்யீயேயிளவேனின்-மன்னவனுங்கூற்றவனும் வந்தணைந்தால்-அன்னோர்-தமக்கெம்மைத் தோன்றுத் தகையதோர்விஞ்சை - யெமக்கின்றருள்புரிந்தேயேகு" (தண்டி. பொருள. சுச.)

உபாயனம்—உபகாரம்.

உபாயி—உபாயமுடையோன். [உவாயிநு].

உபார்ச்சநம்—தேடுதல். [உவாஜ்ஜந.]

உபாலம்பநம்—தூஷித்தல், நிந்தை. (உ-ம்.) "சந்திரோபாலம்பநம்" (நைடத.)

உபாலம்பம்—உபாலம்பநம்.

உபானம்— } கோபுரத்தின்கீழ்ச் சத்திர
உபானவரி— } வரி.

உபுக்த — உபுக்கென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும்.

உபுக்தல்—பெருகுதல்.

உபேட்சிக்கை—உபேட்சித்தல். (சி. சி. அளவை. க. சிவாக்.)

உபேட்சித்தல் — 1. கைவிடுதல். 2. வெறுத்துவிடுதல். (சி. சி. அ: ரு. ஞாநப்.)

உபேட்சியம்-உபேட்சிக்கத்தக்கது. [உபெக்ஷ்ய.]

உபேட்சை—1. அவமதித்தல். (உ-ம்.) "மேதகுமறைவிரோதமேவுநூலுபேட்சை" (சூத. சருவவேதாங.ரு.) 2 கவநமின்மை. 3. கைவிடுதல். 4. பொறுமை. 5. விருப்புவெறுப்பின்மை. [உபெக்ஷா: உப; ஈக்ஷ-பார்த்தல்.]

உபேந்திரன் — விட்டுணு, இரண்டாமிந்திரன்; அவன்: திருமாலினவதாரத்துளொன்றாய வாமநன். (உ-ம்.) "ஓங்குதன்கூற்றுன்மூச்சகமளந்தவுபேந்திரன்முதலியோர்சூழ" (தணிகை. விடை கஅ.) [வாமநாவதாரத்திலே காசிபனுக்கும் அதிதிக்கும் மகனாய்ப்பிறந்து இந்திரனுக்குத்தம்பியாயினனென்பது புராணகதை. [உபெந்த்ர: உப; இந்த்ர.]

உபோதகம்— } பேய்ப்பசளை. [உபொதகா.]
உபோதம்— }

உபோற்காதம் — 1. ஆரம்பம். 2. உதாகரணம். 3. பாயிரம். [உபொத்₃காதம்.]

உம் — 1. உயர்திணைப்படர்க்கை ஒருமையிலும் அஃறிணையொருமை பன்மைகளிலும் நிகழ்கால எதிர்காலங்களைக்காட்டும் ஒரு தெரிநிலை வினைமுற்றுவிகுதி. (உ-ம்.) "மேவிநிலத்திலிருக்கும்நிற்கும்வீழும்" (இராமா. கைகேசி. சூழ். கசு.) [நிகழ்காலம்.] "வரும்வருமெனமனமறுகிவைகினள்" (பாரத. வாரணா. உரு.) [எதிர்காலம்.] 2. எதிர்காலங்காட்டும் ஒரு பெயரெச்ச விகுதி. (உ-ம்.) "நடக்குமனிதன்" (நன். வினை. உக.) 3. எதிர்மறை, சிறப்பு, ஐயம், எச்சம், முற்று, அளவை, தெரிநிலை, ஆக்கம் என்னும் எட்டுப் பொருள்களுள் ஒன்றில் வரும் ஓரிடைச்சொல். (உ-ம்.) "கொற்றன்வருதற்குமுரியன்" இங்கே கொற்றன் வராமைக்குமுரியனெனப் பொருள்பட்டது. [எதிர்மறை.] "குறவருமருளுங்குன்றம்" இது உயர்வு சிறப்பு. "புலையனும்விரும்பாப் புன்புலால்யாக்கை" இது: இழிவு சிறப்பு [சிறப்பு.] "பத்தாயினும் எட்டாயினுங்கொடு" [ஐயம்.] "சாத்தனும்வந்தான்" இது: கொற்றன் வந்தான் எனப் பொருள்படுமாயின் இறந்தது தழீஇயது; கொற்றன்வருவான் எனப்பொருள்படுமாயின் எதிரது தழீஇயது. [எச்சம்.] "தமிழ்நாட்டுமூவேந்தரும்வந்தார்" [முற்று.] "சாத்தனுங்கொற்றனும்வந்தார்" [எண்.] "இருநிலமடிதோய்தலிற் றிருமகளுமல்லளரமகளுமல்லளிவள்யாராகும்" [தெரிநிலை.] "நெடியனுமாயினன்" [ஆக்கம்.] 4. ஒரு முன்னிலைப்பன்மை ஏவல்விகுதி. (உ-ம்.) "நீர்வாரும்" 5. ஒருமைச்சிறப்பில் வரும் ஒரு முன்னிலைவினைவிகுதி. (உ-ம்.) "செப்புமென்றார்" (பெரியபு. தடுத்தா. சுசு.) 6. ஓரநுகரண ஓசை. (உ-ம்.) "உம்மெனல்" பார். 7. (கடதறவொற்றுக்களையூர்ந்து) தனியாயும் முன்னிலைப்பன்மையாரைத்தன்னொடுபடுக்கும் உளப்பாடாயும்வரும் தன்மைப் பன்மை விகுதி. (உ-ம்.) "உண்கும்" (உண்பேம்.) "உண்டும்" (உண்டேம்.) "வந்தும்" (வந்தேம்.) "சேறும்" (செல்வேம்.) (நன். வினை. கரு.) நகர தகரங்களோடு இறந்தகால எதிர்காலங்களிலும், டவ்வோடு இறந்தகாலத்திலும் கவ்வோடு எதிர்காலத்திலும் வரும். 8. தொழிற்பெயரிறுதியில் விகுதியோடிணைந்த ஒடு என்னும் உடனிகழ்ச்சியுருபோடிணைந்து உடனே எனப் பொருள் விளக்கும்ஓரிடைச்சொல். (உ-ம்.) "நிற்றலோடுமவ்வியற்கைநின்று நோக்கி நெடியவேள்" (கந்தபு. காமதக. சுக.)

உம்பர்—1. அப்பால். (உ-ம்.) "ஆறைங்காதநம்மகனாட்டும்பர்" (சிலப். நாடு. சுஉ.) 2. ஆகாயம். (உ-ம்.) "உம்பருச்சியிற் - கடவினீகெதிர்பரப்பு கடவுளெய்துமளவும்" (திருவிளை. தண்ணீர். உஉ.) 3. உயர்ச்சி. (உ-ம்.) "அலரியங்கியா-மும்பர்வான்சுடர்களுக்கு" (கந்தபு. பாயிர. ருகூ.) 4. உவ்விடம். 5. தேவர். (உ-ம்.) "உம்பருய்யக்களமாம் விடமமுதாக்கியதில்லைத் தொல்லோன்" (திருக்கோ. உஉ.) 6. பார்ப்பார். 7. மேல். (உ-ம்.) "கோலத்தனிக்கொம்பரும்பர்புக்கு" (திருக்கோ. சரு.)

உம்பரம்-மேல்வாயிற்படி. [உதூ₃ம்ப₃ர: உத்-மேல். வ்ரு-மறைத்தல்.]

உம்பரார் — மேனிலத்தி விருக்கிறவர்கள். (உ-ம்.) "உம்பரார்க்குமுரைப்பருந்தகையராநர்" (சிந்தா. கரக, கஉஉ.)

உம்பரான்—1. உயர்ந்தோன். 2.காமதேநு. [உம்பர்-மேல், தேவர். ஆன்-ஒருவிகுதி, பசு.]

உம்பருலகு—தேவலோகம்.

உம்பருர்—1. பொன்னுங்காணி.(உ-ம்.)"வேர்வகைசகுநமெல்லாம் விளம்புதுங்குடிநீர்க்கும்பருர்விலாமிச்சாவாரை" (தைல. தைலவ. கூச.) 2. பொன்னுலகு.

உம்பல் — 1. ஆட்டிணுண். (இலக்கணவி. கககூ. உரை.) 2. ஆண்யானை. 3. எருது. 4. எருமையாண். 5. எழுச்சி. (பிங்கல. உகஅஎ.) 6. கோத்திரம். 7. மகன். (உ-ம்.) "எஞ்சலின் மதனனையும்பலெய்தலால்" (சேதுபு. கந்தமா. கக.) [இங்கே உம்பல்என்பது மகனுக்கும் யானைக்குஞ்சிலேடை]8.வழித்தோன்றல். (உ-ம்.) "தம்புகழ்நிறீஇ - யொருதாமாகியவுரவோரும்பல்" (புறநா. கஅ.) 9. முறைமை. 10. யானை. 11. வலி. (சூ. நிகண். அ: உஅ.) 12. விலங்கிணுண். (சூ. நிகண். ௯: ௯௦.)

உம்பளம் — 1. உபகாரம். 2. கொடை. 3. வெகுமாகம்.

உம்பன்—கடவுள். (உ-ம்.) "நீலமேனி-யும்பனை" (காஞ்சிபு. அந்தர்வே. ௯உ.)

உம்பி—உனதுதம்பி. (உ-ம்.) "பலதேவாவும்பியுநீயுமுறங்கேல்" (நாலாயிர. திருப்பாவை. கஎ.)

உம்பிமார்—உங்கள்தம்பிமார். (உ-ம்.) "உம்பிமாரொடுமொத்துவாழ்க" (பாரத.சூது.கஉஎ.)

உம்பிளிக்கை— 1. இராசாவாற்கொடுக்கப்பட்டநிலம். 2. இலவசப்பொருள். 3. மானியம்.

உம்மங்காய்—கொட்டையில்லாப்பனங்காய்.

உம்மெனல்—ஓரநுகரண ஓசை. (உ-ம்.)"உம்மெனத்தெழித்துரப்ப" (கந்தபு. காமத. சுஅ.)

உம்மை — 1. உம்மென்னுமிடைச்சொல். (நன். உயிரீ. உ.) 2. நீரென்பது விகாரமாய் இரண்டாம்வேற்றுமையில் வந்தநிலை. 3. முற்பிறப்பு. (உ-ம்.)"உம்மையதனிலுலகமுண்டோன்றன்மகனீ" (கந்தபு.வள்.கககூ.) 4. வருபிறப்பு. (உ-ம்.)"உம்மை-யெரிவாய்நிரயத்து வீழ்வர்கொலென்று-பரிவதூஉஞ்சான்றோர்கடன்"(நாலடி. துறவு. அ.)

உம்மைத்தொகை—உம்மென்னும் இடைச்சொல் தொக்குவருந்தொடர். (உ-ம்.) "இராப்பகல் என்பதும்மைத்தொகை" (நன். கஙுட. உரை.)

உம்மையெஞ்சணி—ஓரலங்காரம்.

உம்வரம்—மேல்வாயிற்படி.

உமட்டியர் — உப்புவாணிகத்தியர். (உ-ம்.) "உளரியலேம்பாலுமட்டியரீன்ற" (சிறுபா. சு௦.)

உமணத்தி—உமணசாதிப்பெண்.

உமணர்— 1. உப்பமைப்போர். 2. உப்புவாணிகர். (உ-ம்.) "நோன்பகட்டுமணரொழுகையொடுவந்த" (சிறுபா. ருரு.)

உமதகி—சணல்.

உமது—உம்முடையது.

உமம்—1. இறங்குதுறை. 2. நகரம்.

உமரி—1. ஒருபூண்டு; இது: நொய்தானதும், முறிக்கத்தக்கதும், உப்புச்சுவையுடையதும், உவர்நிலத்தில்வளர்வதும், ஊறுகாய்க்குப் பிரயோகிக்கப்படுவதுமாயுள்ளது. 2. நத்தை.

உமரிக்காசு—தூரி.

உமல்—ஓலையாலிழைக்கப்பட்டபை.

உமலகம்—அரிதாரம்.

உமலோத்திரம்—விளாம்பிசின்.

உமற்கடம்—தருப்பைப்புல்.

உமா— 1. உமை. (உ-ம்.) "உமாமகேசுவரனை" (சி. சி. க: எ௦. சிவாக்.) 2. குன்றிக்கொடி.

உமாக்குநவி—உமாபட்சி.

உமாகட்கம்—தருப்பைப்புல்.

உமாகடம்—சணற்கொத்து.

உமாகுமாரசகிதத்துவம் — சோமாஸ்கந்தமூர்த்தம். (வி. ணி. உஎச.) [உமா-உமை. குமார-முருகக்கடவுள். சகிதத்துவம் - கூடியிருக்குந்தன்மை.]

உமாதரு — இமையமலை. [உமா-தாரு: உமா-உமையம்மை. தாரு-பிதா.]

உமாசகிதன்—சிவன். [உமா.]

உமாசத்தி — உருத்திரனுக்குச் சத்தியாகிய உமை. (சி. சி. உ: எரு. நிரம்ப.)

உமாசமேதத்துவம் — மகேசுவரவிக்கிரகத்தொன்று. (வி. ணி. உஎஅ.)

உமாசுதன்—1. கணேசன். 2. குமாரன். 3. வீரபத்திரன். [உமாசுத: உமா - உமை. சுத-மகன்.]

உமாதசி—சணல்.

உமாதம்—அறிவின்மை.

உமாதி–1. அறிவில்லாள். 2. அறிவில்லான்.

உமாபட்சி—ஒருபறவை.

உமாபதி — 1. இருநூற்றிருபத்துநான்குபுவநங்களுளொன்று. (கந்தபு. கணங்கள்செல். க௦. உரை.) 2. சிவன். (உ-ம்.) "அன்றுமாபதியவர்க்கருள்செய்தானரோ" (பாரத. பதின்மூ. உகட.) [உமாபதி: உமா - உமை. பதி - நாயகன்.]

உமாபதிசிவாசாரியர்— சந்தானகுரவருளொருவர்; இவர்: தில்லைவாழந்தணருள் ஒருவரெனவும், மறைஞானசம்பந்தருடைய சீடரென

வும், சிவப்பிரகாசம், கோயிற்புராணம் முதலிய சில நூல்களுக்கு ஆக்கியோரெனவும், கொற்றவன்குடி வாசரெனவுஞ்சொல்லப்படுவர்.

**உமாமகேசமூர்த்தி**— அநந்தேசுவரரூபமாய் இருபத்தைந்து விக்கிரகபேதமாகிக் கிருத்தியபேதத்தைச்செய்யும் உமையோடுகூடிய மூர்த்தி. (சிவபரா. உஎ.)

**உமி**—1. உமியென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 2. தானியங்களின் தோல். (உ-ம்.) "பண்டுமுளைப்பதரிசியேயானலும்-விண்டுமிபோனன்முளையாதாம்" (வாக்கு. கக.)

**உமிக்கரப்பன்**— ஒருவகைக்கரப்பன்.

**உமிக்கரப்பான்**—குழந்தைகட்கு வருஞ்சிரங்கு.

**உமிக்காந்தல்**—உமியெரிந்ததுகள்.

**உமிச்சிரங்கு**—சிறுசிரங்கு.

**உமித்தல்**— 1. பதராதல். 2. பதனழிதல். (உ-ம்.) "உள்ளடியுமித்துமித்தழன்ற" (சூளா. அரசி. ௬௩.)

**உமித்தவிடு**—உமிகலந்ததவிடு.

**உமிதல்**— 1. கொப்புளித்தல். (உ-ம்.) "நீராடும்போது நெறிப்பட்டாரெஞ்ஞான்றும்-நீந்தாருமியார்" (ஆசாரக்கோ. ௧௦.) 2. நாவிறைச்சாரம் வாங்குதல்.

**உமிநகம்**—மிக மெல்லிய நகம்.

**உமிநீர்**—வாய்நீர்.

**உமியல்**—வசம்பு.

**உமியுண்ணி**—ஒருவகையுண்ணி.

**உமிரி**—உமரிப்பூண்டு.

**உமிழ்தல்**— 1. கக்குதல். (உ-ம்.) "ஓலமுடைக்கடலுமிழ்கின்ற-நீலவிடத்தினைநிகர்மெய்யார்"(கந்தபு. சகத்திர. உ.) 2. காலுதல்.(உ-ம்.) "விலகிவில்லுமிழ்விரிகதிர்மணி" (நைட. நாட். ௬.) 3. கொப்புளித்தல். 4. சொரிதல். 5. தெவிட்டல்.

**உமிழ்நீர்**—துப்பல்.

**உமிழ்வு**—1. உமிழ்நீர். 2. துப்புகை. (உ-ம்.) "உமிழ்வோடிருபுலனும்" (ஆசார. உ௮.)

**உமேசமூர்த்தி** — உலகத்திலுள்ள எல்லாப் பொருள்களையும் படைத்துக் காத்துத் துடைக்கும்வகையாய நாநாபேதம்பெற்ற தமது திருவருளாகிய சத்தி உமையம்மையாக வாமபாகத்திலிருக்கக்கொண்டு வீற்றிருந்த மூர்த்தி. (சிவபராக். ௬௧. பக்.)

**உமேசன்**–சிவன். [உமேஶ: உமா-சிவன். ஈஶ-தலைவன்.]

**உமை**—1. அமைதி. 2. காரகத்தி. 3. கீர்த்தி. 4. துர்க்கை. 5. பிரகாசம். 6. மஞ்சள். 7. மநோன்மனியிலாயிரத்திலொருகூற்றிற்றோன்றி உருத்திரருக்காகியசத்தி. (சி. சி. உ: எ௬. மறை.) 8. உமையம்மை. (உ-ம்.) "உண்ணாமுலையுமைமைந்தாசரணம்" (கந்தரந். உ.)

**உமைகாநதி**—கங்காநதி. [உமாதேவியுடையகையினின்று வந்ததென்றபடி.]

**உமைகோணம்** — நாற்பத்துமூன்றென்னுமெண்ணைக்கருதும் ஒருகுறிப்புமொழி. (உ-ம்.) "இருசீரகம்" பார். [சத்திசக்கரத்துள் நாற்பத்துமூன்று முக்கோணம் என்னும் ஞாயம் பற்றி வந்த குறிப்பு.]

**உமைத்தல்**—நிரம்புதல்.

**உமைமகன்**—1. முருகன். (உ-ம்.) "வேலையந்தலைவன்காலை- யொண்பகலாடிகாட்டவுமைமகனங்கணுற்றான்" (கந்தபு. திருவவ. ௬௧.) 2. விநாயகன். 3. வீரபத்திரன். (சூ.நிகண்.த:உஉ.)

**உமையவள்**—பார்ப்பதி. (உ-ம்.) "கொடியிறைஞ்சிய நுசுப்புடையுமையவள் குறிப்பாலே" (கந்தபு. தவங்காண். அ.)

**உமையாள்**—1. சர்வுக்காரம். [இதனைச்சவுக்காரம் எனவழங்குவர்.] 2. பார்ப்பதி. (உ-ம்.) "இன்னமுமுமையாணோற்றிமொங்கே" (கந்தபு. திருநகரப். அ௬.) 3. மயிலிறகு. [உமாதேவியின் நிறமுடைமையின்.]

**உய்**—உய்யென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும்" (உ-ம்.) "உய்வகையியலாதபாவி" (திருவிளை. மாபாத. ௬௪.)

**உய்க்கை**—உய்த்தல்.

**உய்கதியால்**—உண்டாகுந்தடி.

**உய்கை** — விக்கினங்களினின்று நீங்குகை. (உ-ம்.) "உய்கைபொருளாவொருவர்க்கு மோருதவி-செய்கையிலனேல்" (கந்தபு. காம. ௪எ.)

**உய்ஞ்சநன்**—உய்ந்தனன். (உ-ம்.) "உய்ஞ்சனனினியெனவோத" (கந்தபு. மார்க். உ௦உ.) [இவ்வினைமுற்றில் நகர தகரங்களுக்குப்போலியாக ஞகர சகரங்கள் வந்தன.]

**உய்த்தர**— செலுத்துதலைச்செய்ய. (உ-ம்.) "கைய-கொடுங்கோற் கோவலர்பின்னின்றுய்த்தர" (முல்லைப். ௧௫.)

**உய்த்தல்**—1. அடைவித்தல்.(உ-ம்.) "வளைமுதல்வேட்டோர்க்குய்த்து" (தணிகைப். நாட். உ௮.) 2. அனுப்புதல். (உ-ம்.) "பாவகஞ்செய்துதீட்டிப்பட்டிமையோலையுய்ப்பான்" (திருவிளை.மெய்க்கா.௧௩.) 3. அநுபவித்தல். (உ-ம்.) " காதலகாதலறியாமையுய்க்கிற்பின் " (வள். ௪௪௦.) "ஏனையதேவியர் மகிழ்வாலுய்த்துநல்கிட" (கந்தபு. புதல்வரைப்பெறு. ௧எ.) 4. அறிவித்தல். (உ-ம்.) "செவ்வழியாழினூறுந்தீஞ்

சொலாட்குற்றதெல்லா-மவ்வழியரசர்க்குய்த்தார்" (சிந்தா. பதுமை. உசஉ.) 5. ஆணைசெலுத்தல். (உ-ம்.) "கடன்ஞால - முழுதுமுய்த்திடு மகவருளென" (பாரத. சம்பவ. கo.) 6. குறிப்பித்தல். (உ-ம்.) "உள்ளமெய்த்தன்மைமுன்னை யுண்மையுந்தோன்றவுய்ப்பார்" (பெரியபு. தடுத்தா. கருசு. 7. செய்தல். "உய்த்திடுஞ்செய்தி கெட்டே" (சி. சி. உ. கஅ.) 8. (இலக்கணம்) செய்யுளிலில்லாதசொல்லை வருவித்துரைத்தல். (தண்டி. உக.) 9. செலுத்துதல். (உ-ம்.) "கொலையுடைநெடுங் கூர்வாளி கோடிகோடிகணின்றுய்ப்ப" (கந்தபு. சிங்கமுகா. ககஉ.) "உய்த்திடுதேரிஞேம்" (இரகு. மீட். ஞo.) 10. தாங்கிக்கொண்டுபோதல். (உ-ம்.) "கயவர்தாங் கேட்ட-மறைபிறர்க்குய்த்துரைக்கலான்" (வள். கoஎசு.) 11. நடத்துதல். (உ-ம்.) "உய்த்திடு மிச்சைசெய்தி" (சி. சி. க: கூஉ) 12. முத்தியடைவித்தல். (உ-ம்.) "உய்த்தவியோமருபர்" (சதாசிவ. உக.)

**உய்த்தலில்பொருண்மை**— (அலங்காரம்.) வைதருப்பநெறியில்வரும் பத்துக்குணங்களுள் ஒன்று; கவிஞன் தன்னாற் கருதப்பட்ட பொருளைவிளங்க விரிக்குஞ் சொல்லையுடையதாய்ப்பிறிதுமொழிகூட்டியுரைக்கும் பெற்றியின்றி வரத்தொடுப்பது. (உ-ம்.) "கருதியபொருளைத்தெரிவுறவிரித்தற்-குரிய சொல்லுடைய துய்த்தலில்பொருண்மை" (தண்டி. பொது. உக.)

**உய்த்தன்று**— கொடுத்தது. (புறப்பொ.)

**உய்த்துக்கொண்டுணர்த்தல்**—(தொல்காப்பியப்படி) முப்பத்திரண்டு உத்திகளுள் ஒன்று; அஃது: ஒரு பொருள் சொல்லியக்கால் அதன் கண்ணே மற்றொரு பொருளினையுங்கொணர்ந்துகொண்டறியுமாறு தோன்றச்செய்தல். (தொல். பொருள். சுசுசு.)

**உய்த்துணர்தல்** — ஆராய்ந்தறிதல். (உ-ம்.) "உய்த்துணர்ந்தவருரைத்த நீதிமேல்" (சூளா. சீய. ௬எ.)

**உய்த்துணரவைப்பு**—முப்பத்திரண்டு உத்திகளில் ஒன்று; அது: சில சூத்திரவிதிகளைக் கொண்டு ஆராய்ந்து பொருளுணர வைத்தல். (நன். பொதுப்பா. கசு.)

**உய்தக்கோர்**—பிழைக்கும்வகையோர். (உ-ம்.) "எவ்வினைஞரேனு-முய்தக்கோராதல் செய்கையுன்னருள்விளையாட்டன்றே" (திருவிளை. மாபாத. ௬சு.)

**உய்தடி**—உண்டாகுந்தடி.

**உய்தல்**—1. ஈடேறுதல். (உ-ம்.) "யாங்க-ளுய்ந்தேபிறவிப்பயன்பெற்றனமோங்க" (கந்தபு. தெய்வ. கஅ.) 2. உயிருடையதாய்க் கிளருதல். 3. சீவித்தல், பிழைத்தல். (உ-ம்.) "வறுங்கடும் புய்தல் வேண்டி-னின்னேசென்மதி" (புறநா. கஅக.) 4. தாழ்தல். 5. விக்கிரகங்களினின்று நீங்குதல். (உ-ம்.) "ஐயாவதற்குமரும்பிணியொன்றெய்தியக்கா-லுய்யானே" (கந்தபு. மார்க்க. கஅ.)

**உய்தி** — 1. ஈடேறும்வழி. (உ-ம்.) "இதன் கணணை வுற்றுமுய்தியறியார்" (தணிகை. அகத். உகo.) 2. உயிர்வாழ்தல். 3. விக்கிரகங்களினின்று நீங்குதல். (உ-ம்.) "கொன்றோர்க்குய்தியில்லெனவறம்பாடிற்றே" (புறநா. ௬ச.)

**உய்ப்பு**—உய்த்தல்.

**உய்ம்மணல்**—கருமணல்.

**உய்ம்மார்**—செலுத்துதற்கு. (உ-ம்.) "நனந்தலைத்தே எத்து நன்கலனுய்ம்மார்" (மதுரை. ௬உஉ.)

**உய்யக்கொண்டான்** — 1. எருமைமுல்லை. 2. கொய்யாமரம்.

**உய்யல்** — 1. ஏறுதல், கேட்டல். (உ-ம்.) "அயற்செவிக்-குய்யலாவண்ணமுள்ளத் தடக்கினன்" (திருவிளை. மாபாத. கூ.) 2. சீவித்தல். (உ-ம்.) "ஒடியுமுய்யலாகா" (கந்தபு. சூரபன். சுச.)

**உய்யலின்முல்லை**—கற்பு. (உ-ம்.) "உய்யலின்முல்லைவழங்கியுவப்பால்" (இரகு. கடி. ௬o.) [உய்யலின் என்னும் விசேடணத்தால் முல்லைக்கொடியைக் கருதிலர் என்பது போந்தது.]

**உய்யாநகம்**—உய்யாநம். [உஞ்ஞா-நக.]

**உய்யாநம்**— } 1. அரசர்விளையாடுங்காவ
**உய்யாநனம்**— } ற்சோலை, சிங்கார வநம். (உ-ம்.) "உய்யாநத்தினுறு துணை மகிழ்ச்சியும்" (சிலப். ஊர்கா. கஉஎ.) 2. பூந்தோட்டம் (உ-ம்.) "அளிமலரோடையு மலங்குய்யாநமும்" (தணிகை. நகரப். ௬௫.)

**உய்வது**—உய்யத்தக்கவழி. (உ-ம்.) "உய்வதுவேறிலை" (கந்தபு. மாயையு. கச.)

**உய்வனவு** — 1. ஈடேற்றம். 2. சீவநம். 3 தழைவு. 4. வாழ்வு.

**உய்விடம்** — உயிர்கொண்டுபிழைப்பதோரிடம். (உ-ம்.) "உய்விடமறியேமாகி" (குறிஞ்சிப். கசுசு.)

**உய்வித்தல்**—உய்யச்செய்தல். (உ-ம்.) "உன்னை-யுய்விப்பனேல்" (வைராக். சத. தோத்திர. சச.)

**உய்வு**—1. உயிர்சீவித்தல். (உ-ம்.) "எரியாற்சுடப்படினுமுய்வுண்டாம்" (வள். அககூ.) 2. விக்கிரகங்களினின்று நீங்கும் வாயில். (உ-ம்.) "எந்நன்றிகொன்றார்க்குமுய்வுண்டாம்" (வள். ககo.)

உய்வை—காடு. (ஆ. நிகண். ச.)
உயக்கம்— 1. உபத்திரவம். 2. துக்கம். 3. வருத்தம். (உ-ம்.) "உயக்கமோப்புகாந்தருவத்தையேய்ந்து" (தணிகை.அகத்.உகச.) 4. வாட்டம்.
உயக்கல்—உயக்குதல்.
உயக்குதல்—வருத்தல்.
உயக்குநரகு—பாழ்நரகு.
உயக்கொள்ளல்—ஈடேறச்செய்தல். (உ-ம்.) "பின்னுருயக் கொள்ளவலா ரென்பிழைகடீர்த்தே" (வைராக். சதக. தோத்திர. எ.)
உயங்கல்—உயக்குதல்.
உயங்குதல்—1. மநந்தளர்தல். 2. வருந்தல். (உ-ம்.) "உயங்கினுளென்றுங்குசாதிர்" (கலி. கசரு.) 3. வாடுதல், சோர்தல். (உ-ம்.) "வாளியேறுண்டதோர் மயிலின்வீழ்ந்துயங்கினுண்மயங்கினுள்" (திருவிளை. வன்னியுங். கரு.)
உயத்தி—வெள்ளைப்பாஷாணம்.
உயர்— 1. உயவென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும், வினைத்தொகையும். 2. குன்றிச்செடி. 3. வருத்தம்.
உயர்குலத்தோர்—மேற்குலத்தவர்.
உயர்குலம்—மேற்குலம். (உ-ம்.) "உருவுமுயர்குலமுமெல்லாம்" (நல்வழி. உகூ.)
உயர்ச்சி— 1. அடியிலிருந்து மேனோக்கி எழுந்த அளவு. 2. அடியிலிருந்து மேனோக்கி எழும் நிலை. (உ-ம்.) "அத்தபதி தன்குறிப்பால மைத்தபெருமண்டபத்தினளவுநீளம் - வித்தரமோடுயர்ச்சியெனும் வனப்பனைத்துங்கண்டோர்கள்வியந்துகூற" (பாரத. இராச. அ.) 3. மேல். 4. மேன்மை.
உயர்சிறப்பு— மோட்சவீடு. (தர்க்கபா. க. பக்.)
உயர்சொல்— மேன்மைப்படுத்திச்சொல்லுஞ்சொல். (தொல். சேனு. உஎ.)
உயர்த்தல்— 1. அதிகப்படுத்துதல். (உ-ம்.) "விலையையுயர்த்தினுன்" (வழக்.) 2. இசையெழுப்புதல். 3. உருவஞ்சித்திரித்தகொடியை மேலாக எழுப்புதல். (உ-ம்.) "வலனுயர்த்தவண்ணலஞ்சேல்" (நைட. பாயிர.) 4. குவித்தல். (உ-ம்.) "உள்ளமீன்குலங்களெல்லாந்தடங்கரையின்வரையேபோலுயர்த்தலுற்ருன்" (கந்தபு. தேவரையே. எ.) 5. மேலுக்கெடுத்தல். 6. மேன்மைப்படுத்துதல். 7. மேனிலைக்குக்கொணர்தல்.
உயர்த்தி— உயர்ச்சி. (உ-ம்.)"அநகவுயர்த்திகடாழ்த்தியறைதியென" (நல். பாரத. கிருட்டிணர்ச். அரு.)
உயர்த்து—உயர்த்தென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும்.
உயர்த்துகை—உயர்த்துதல். (உ-ம்.) "உனைத்தனையேயொக்க வித்தனைநாளி னுயர்த்துகையே" (திருநூற். அரு.)
உயர்த்துதல்—உயர்த்தல்.
உயர்தல்— 1. அதிகப்படல். (உ-ம்.) "மாற்றுயர்ந்தபொன்" 2. இறுமாப்படைதல். 3. நிமிர்தல். 4. மேலிடத்திற்குப்போதல்.(உ-ம்.)"வடபுவிதாழ்ந்துதென்பாலுயர்தலும்" (கந்தபு. பாயிர. சுகூ.) 6. மேன்மையுறல். 7. வளர்தல்.
உயர்திணை— 1. உயர்ந்தசாதி. 2. மக்கள், தேவர், நரகர் என்னும் முப்பாலாருள் ஒருவர் பெயராயாவது அவர் தொழிலையுணர்த்தும் வினையாயாவது வருஞ்சொல். (நன். பெயர். ச.)
உயர்திணைச்சொல்—உயர்திணையில்வருஞ்சொல். (தொல். சேனு. உ.)
உயர்திநம்— 1. சுபநாள். 2. திருவிழா.
உயர்ந்ததுளச்சி– பவளப்புற்றுப்பாஷாணம்.
உயர்ந்தவர்—உயர்ந்தோர்.
உயர்ந்தவன்— காமன். (உ-ம்.) "உயர்ந்தவன்விழவினுள் விறலிளையவரோடு விளையாடுவான்மன்னே" (கலி. ருo.)
உயர்ந்தோர்— 1. அறிஞர். (உ-ம்.) "உயர்ந்தோர்புகல்-வாசகாதிகள்கற்றும்" (பாரத.கீசக. கரு.) 2. உயர்குலத்தோர். 3. தேவர். 4. நெடியவர். (உ-ம்.) "உயர்ந்தவர்குறளானோர்" (கந்தபு. மார்க். கூச.) 5. பார்ப்பார். 6. முனிவர்.
உயர்நிலத்தோர்—தேவர்.
உயர்நிலம்—1. உபரிகை. 2. தேவலோகம். 3. மேடு.
உயர்நிலை — 1. தெய்வத்தன்மை. (உ-ம்.) "அணங்குசாலுயர்நிலைதழீஇ" (திருமுருகாற். உஅக.) 2. தேவலோகம். (பிங்கல. க.) 3. மேலாக நிற்குந்தன்மை. (உ-ம்.) "உயர்நிலை-வான்றோய்மாடத்து" (பெரும்பா. கூகூஉ.)
உயர்நிலையோர்—தேவர். (பிங்கல. கஎஎ.)
உயர்ப்பு— 1. அதிகப்பாடு. 2. நிமிர்ச்சி. 3. வளர்ச்சி.
உயர்பு— உயர்வு. (உ-ம்.) "இந்தமதிற்கூடலுயர்பு" (சேதுபு. நாட்டு. கூ.)
உயர்வித்தல்— 1. அதிகப்படுத்தல். 2. உயர்த்துதல். 3. எடுப்பித்தல்.
உயர்விழிவுப்புகழ்ச்சியுவமை—ஓரலங்காரம்.
உயர்வு—1. அதிகப்படல். 2. உயரம்.(உ-ம்.) "உயர்வகலந் திண்மையருமையிந்நான்கி-னமைவரணென்றுரைக்குநூல்" (வள்.எசஉ.) 3. மே

ன்மை. (உ-ம்.) "சேருமைந்தினுமுயர்வினுக் தேசினுஞ்சிறந்து" (பாரத. குருகுல. உ௦.)

**உயர்வுசிறப்பு**—உயர்ச்சியைச்சிறப்பித்தல்.

**உயர்வுசிறப்பும்மை**— உயர்ச்சியைச் சிறப்பிக்கும் உம்மையிடைச்சொல்; அது: குறவருமருளுங்குன்றமென்பதிற்போல.

**உயர்வுநவிற்சியணி**—ஓரலங்காரம்; அஃது: ஒருபொருளானது தன் சொல்லாற்சொல்லப்படாமற் கேட்போரை மகிழ்விப்பதும் இஃதஃதன்றெனத்தெரிந்தும் தன்னிச்சையால் அஃதாமெனக்கொள்ளப்படுவதுமாம்.

**உயரம்**—1. அடியிலிருந்து மேனோக்கி எழுந்த அளவு. (உ-ம்.) "முப்பதுகோடிமேலிரண்டிலக்கமொழிந்த மூன்னெல்லையினுயரம்" (தணிகை. அகத். சசகூ.) 2. மிகுதி. 3. மேல்.

**உயராடு**—வெள்ளாடு. (உ-ம்.) "உயராட்டுப்பாற்-றுகையளவைந்தெரிமுகிபால் வாளமெல்லாஞ்சுடரில்வடி" (தைல. தைலவ. கஉ.)

**உயரி** — 1. உயரமானது. 2. எடுத்தெனப்பொருள்படும் ஒரு வினையெச்சம். (உ-ம்.) "விசையவெல்கொடியுயரி" (முல்லைப்பா. கக.)

**உயரிய**—உயர்ந்த. (உ-ம்.) "எற்றுவலனுயரியவெரிமருளவிர்சடை" (புறநா. ருசு.)

**உயருருட்சோதகம்**—மொந்தன்வாழைக்கிழங்குச்சாறு. (உ-ம்.) "கங்கியாகுமரியமிர்தஞ்சுவச்சம்மொவொருகடமுயருருட்சோதகம்" (தைல. தைலவ. கூரு.)

**உயல்** — 1. உய்தல். [யகரந்தொக்கது.] 2. உயிர்வாழ்தல். (உ-ம்.) "உயலாகாவூழ்த்திறத்தவென்னுர்" (நீதிநெறிவிளக். ரு௦.) 3. செய்யாதொழிதல். (உ-ம்.) "உயற்பாலதோரும்பழி" (வள். ச௦.)

**உயவர்**—வருந்தினவர்.

**உயவல்**—1. ஆலோசனைசெய்தல். (உ-ம்.) "உன்றுதைதமியேனுடுயவாமல்" (பாரத.புட்பயா.கஉகூ.) 2. நினைத்தல். 3. வருத்தம். (உ-ம்.) "ஓம்பியுடுத்தவுயவற்பாண" (புறநா.சுக.)

**உயவு**—1. சீவிக்கச்செய்யுமருந்து. (உ-ம்.) "உய்யாவரு நோய்க்குயவாகுமைய-லுறீஇயாளீத்தவிம்மா" (கலி. ககூக.) 2. துன்பம். 3. நினைப்பு. 4. வருத்தம். (உ-ம்.) "உள்ளுதொறுடையுநின்னுயவுநோய்க்குயிர்ப்பாகி" (கலி. கூரு.)

**உயவுதல்**—வருந்துதல். (உ-ம்.) "அடுகளிறுயவுங்கொடிகொள்பாசறை" (புறநா. சுக.)

**உயவை** — 1. உயவைக்கொடி, காக்கணங்கொடி. (உ-ம்.) "மாறுகொளவொழுகினவூறுநீருயவை" (மலைபடு. ககூசு.) 2. காட்டாறு. (பிங்கல. கூஉ௦க.) 3. துன்பம். 4. முகில்.

**உயா**—1. உயங்கல். (உ-ம்.) "ஆவியெல்லாமுயாவற்று" (காஞ்சிபு. திருவேக. உ.) 2. வினு. (மணிமே.)

**உயாவல்**—உசாவல்.

**உயிர்**—1. இச்சரீரத்துக்கு அந்நியமாய் இச்சரீரத்திலே பொருந்திநின்று இச்சாஞானக் கிரியைகளையுடையதாய் இன்பதுன்பப் பலங்களைப்பொருந்திநிற்கும் வஸ்து. (உ-ம்.) "உயிரெனப்படுவதிந்தவுடலின்வேறுளதாயுற்றுச்-செயிருறுமிச்சாஞானச் செய்திகளுடையதாகிப்-பயில்வுறுமின்பதுன்பப்பலங்களைநுகரும்" (சி. சி. கூ: உ.) 2. இலாமிச்சை. 3. உதயலக்கினம். (உ-ம்.) "பதியுறுநல்லவுயிர்க்கிருபாலினும்" (விதாந.சாதக. கக.) 4. உயிர்போல அருமையானவன். (உ-ம்.) "நன்றெனுயிர்போகநாணிருப்பதேயிங்ஙன்" (கந்தபு. அசுரர்யா.கக௦.) (இலக்கணம்.) உயிரெழுத்து. (உ-ம்.) "உயிருமுடம்புமாமுப்பது" (நன்.ருக.)5. உயிரென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும்.(உ-ம்.) "உயிர்கான்முன்வளியுளர்கிளர் வலிவிளிவெய்த"(திருவிளை. நாகமெய். கூ.) 6. ஓசை. (உ-ம்.) "வள்ளுயிர்ச்சீறியாழ்" (புறநா.ககூஅ.) 7. காற்று. (உ-ம்.) "நிலநீர்நெருப்புயிர்நீள் விசும்புநிலாப்பகலோன்-புலனுயமைந்தனோடெண்வகையாய்ப்புணர்ந்துநின்றான்" (திருவாச. திருத்தோணோக்க. ரு.) 8. சீவன். 9. சுவாசம். (உ-ம்.) "அழலின்பொறியாருயிர்வெம்பணி" (வாண. உகூ.) 10. நீரைத்துணைக்காரணமாகக்கொண்டு உய்யும் வஸ்துக்களாகிய மரம், புல் முதலியன. 11. பிராணவாயு. (உ-ம்.) "வைகரியிலுதானன்- பந்தமுறுமுயிரணைந்துவந்தமொழி" (சிவப்பிர. உ: உ௦.)

**உயிர்க்கட்டை**—உடம்பு.

**உயிர்க்கணம்** — 1. இயமாநகணம். 2. உயிரெழுத்துக்களின் கூட்டம்.

**உயிர்க்கருணேசம்**—இச்சாசத்தி.

**உயிர்க்குநல்**—உயிர்த்தல்.

**உயிர்க்குயிர்**—சிவன். (உ-ம்.) "உரைத்தவிப்பாகபேதமுயிர்க்குயிருணர்ந்தார் தம்மை- யருத்தினர்" (சிவதரு. பலவிசிட்ட. உஉ.)

**உயிர்க்கொலை**—சீவவதை.

**உயிர்குடித்தல்**—கொல்லல். (உ-ம்.) "வானவரையெல்லாந்-தின்றுயிர்குடித்து" (கந்தபு. சூரப. வதை. சருரு.)

**உயிர்கொள்ளல்**—உயிர்வாங்குதல்.

**உயிர்ச்சூது**—சூதாடலிலொருவகை; அஃது: ஆடு, கோழி முதலியவைகளைப் போருக்குப்பொருத்தியாடுதல். (மிரு-ச. உஉஅ.)

**உயிர்த்தல்**—1. உயிர்தாங்கியிருத்தல், உயிரடைதல். (உ-ம்.) "உயிர்ப்பதுன்பணியினுலே"

(சிந்தா. கநக. ௬அ.) 2. உள்ளேநின்று வெளிவரச்செய்தல். (உ-ம்.) "பணிலங்களுயிர்த்தவொண்முத்தும்" (நைட. நாட்டு. அ.) 3. பெருமூச்செறிதல். (உ-ம்.) "உரைதமொருவுயிர்த்து" (பாரத. பதினெட். களரு.) 4. மகப்பெறுதல். (உ-ம்.) "பநிவரையுயிர்த்த-வுருவவோடரித்தடங்கணுள்" (நைட. நாட். க.) 5. மூச்செறிதல். (உ-ம்.) "உன்னுநெடிதே யுயிராவுரைக்கின்றான்" (கந்தபு.காமதக.ருஎ.) 6. மோத்தல். (உ-ம்.) "கண்டுகேட்டுண்டுயிர்த்து" (வள். ககoக) 7. விடுதல். 8. வீசுதல். (உ-ம்.) "கொங்குயிர்த்த பூந்தடத்துலாய்" (நைட. நாட்டு. ௫.)

**உயிர்த்தநுவாய்**—பிராணுவத்தை.

**உயிர்த்தாநம்** — 1. உதயலக்கிநம், சென்மத்தாநம். 2. உயிர்நிலை.

**உயிர்த்துணை**—1. ஆபத்திலுதவுவோன். 2. கடவுள். 3.கணவன். 4.பிராணசிநேகன்(உ-ம்.) " ஆருயிர்த்துணையாய் வந்தமாமரகத வடிவோன்" (பாரத. இராச. உஅ.) 5. மனைவி.

**உயிர்த்துணைவன்**—1. உயிர்த்தோழன். 2. கணவன்.

**உயிர்த்துணைவி** — 1. உயிர்த்தோழி. 2. மனைவி.

**உயிர்த்தெறுவாய்**—1. சமயகாலம். 2. பிராணனையழிக்குங்காலம்.

**உயிர்த்தொடர்க்குற்றியலுகரம்**— பிறவெழுத்துத்தொடரநிற்கும் உயிரெழுத்தைத் தொடர்ந்துவருங் குற்றியலுகரம். (நன். ௯௪.)

**உயிர்த்தோழன்**—பிராணசிநேகன்.

**உயிர்த்தோழி**—பாங்கி.

**உயிர்தருமருந்து**—மிருதசஞ்சீவி.

**உயிர்நிலை** — 1. உட்கருத்து. 2. உடம்பு. (உ-ம்.) "கள்வார்க்குத்தள்ளுமுயிர்நிலை" (வள். உ௯o.) 3. உடலில் உயிர்நிற்கும் விசேடதாநம். (உ-ம்.) "நீநினதுயிர்நிலைகூறுயெனக்கெனுமுனம்" (பாரத. பதினெட்.களரு.)

**உயிர்நிலையகம்**—உயிர்நிலை.

**உயிர்ப்பழி** — 1. உயிர்க்கொலைசெய்த குற்றம். 2. பிரமகத்தி.

**உயிர்ப்பன**—சுவாசமுடையன.

**உயிர்ப்பனவு**—1. உயிரின்றன்மை. 2. செழிப்பு. 3. பச்செனவு.

**உயிர்ப்பித்தல்**—பிழைப்பித்தல்.

**உயிர்ப்பிராணி**—சீவனுள்ளது.

**உயிர்ப்பு**—1. இளைப்பாறுதல். (உ-ம்.) "தின்னுயவுநோய்க்குயிர்ப்பாகி" (கலி.௬௫.) 2. உயிரடைகை. 3. காற்று. (உ-ம்.) "ஒல்லெனவீழ்வுறுமுயிர்ப்பின்காவலன்"(கந்தபு.திருவவ.க௬.) 4. சுகந்தம். (உ-ம்.) "உயிர்க்குமெல்லுயிர்ப்பெதிரோடி" (பாரத. குருகுல. கக.) 5. சுவாசம். (உ-ம்.) "மண்டலம்பயிலுரகர்பேருயிர்ப்பினுன் மயங்கி" (பாரத. குருகுல. ௬.)

**உயிர்ப்புவீங்கல்**—நெட்டுயிர்ப்பு.

**உயிர்ப்புனல்**—இரத்தம். (உ-ம்.) "புண்ணிடைப் பொழியுயிர்ப்புனல் பொலிந்துவரவும்" (இராமா. விராதன். ௬௪.)

**உயிர்போதல்**—இறத்தல்.

**உயிர்மருந்து**—1. மிருதசஞ்சீவி. 2. சோறு. (மணிமே.)

**உயிர்மாய்த்தல்** — 1. கொலைசெய்தல். 2. தற்கொலை.

**உயிர்மெய்**—மெய்யும் உயிருங் கூடிப்பிறந்ததாய் ஒற்றொலி முன்னும் உயிரொலி பின்னுமுடையதாய் உயிர்மாத்திரையேமாத்திரையாய் வருமெழுத்து. (உ-ம்.) "புள்ளிவிட்டவ்வொடு முன்னுருவாகியும்-ஏனையுயிரோடுருவு திரிந்தும்-உயிரளவாயதன்வடிவொழித்திருவயிற் - பெயரொடுமொற்றுமுன்னுய்வருமுயிர்மெய்"(நன் ௮௯.)

**உயிர்வாழ்தல்**—உயிரோடுகூடிவாழ்தல்.

**உயிர்விடுதல்**—இறத்தல். (உ-ம்.) "மட்டிவன்வாராவெனன்றுயிர்விடுவான்வனககனல் வளர்த்து" (ஞாநவா. சித்தன். உ௪.)

**உயிர்வேதநை**—உயிருக்கு இடர்விழைத்தற் காரணம்; அக்காரணங்கள்: அநல்,சீதம்,அசநி, புநல், வாதம், ஆயுதம், நஞ்சு, மருந்து, பசி, தாகம், பிணி, மூநிவுறுமை என்பன. (சூ. நிகண். கஉ ககஉ.)

**உயிரவை**—உயிரோடுங்கூடியவுலகம்.(உ-ம்.) "உயிரவையொடுங்கி"(சி சி.க. ௬உ. சிவஞாந.)

**உயிரளபு**—தன்மாத்திரையின் மிக்கொலிக்கும்நெட்டுயிர். (உ-ம்.) "உயிரளபெழுமூன்று" (நன். எழு. ௬௧.)

**உயிரளபெடை**—உயிரளபு.

**உயிரிலுள்ளதீ**—உயிர்முததீயினென்று.

**உயிருண்ணல்** — உயிரைக்கொள்ளல், உயிரைக்கொல்லல். (உ-ம்.) "காலனுருயிருண்ண" (சி. சி. பர. உலோகா. மறு. க.)

**உயிருநுயிர்** — சிவன். (உ-ம்) "உயிர்க்குண் மலமெழடுக்கலாலேயுயிரு-னுயிர்க்குமரனெனும் பேருண்டு" (சைவச. பொது. கக.)

**உயிரெழுத்து** — உயிர்போலத தனித்தியங்கும் ஆற்றலுடைய அகரமுதல் ஔகாரம் இறுதியாயுள்ள பன்னிரெழுத்துக்கள்.

**உயிரொழித்தல்**—கொல்லல்.

**உயிரொளித்தல்**— உயிர்போனதுபோற் காட்டல்.

**உயிரோம்பல்**—உயிர்காத்தல்.

**உயிறு**—இலாமிச்சம்புல்.
**உயுத்தம்**—யுத்தம். (உ-ம்.) "தானவருயுத்த மும்" (பாரத. பதினெட். சுஅ.)
**உரக்கம்**—வசத்திலிருப்பு.
**உரககேதநன்**—துரியோதநன். (உ-ம்.) "வந் தடுத்தானுரககேதநன்" (பாரத. ஐந்தாம். கம.)
**உரககேது**—துரியோதநன். (உ-ம்.) "மற னுடையுரககேதுவன்சமரழிந்தவாறும்" (பாரத. நிரைமீ. கக௪.) [உரகம்-பாம்பு. கேது-கொடியுடையவன்.]
**உரகடல்**—பெருங்கடல்.
**உரகதம்**—பாம்பு. (உ-ம்.) "உரகதவாரந்தோ ற்றுதுயர்மறைப்பரிமேல்வந்தார்" (திருவிளை. நரிபரி. அரு.)
**உரகதுவசன்**—உரககேது. (உ-ம்.) "சொல் லவாவுரகதுவச" (பாரத. நிருட். ககஉ.)
**உரகபந்தநம்**—உரகபந்தம்.
**உரகபந்தம்**—சித்திரகவிகளுள் ஒன்று; அது: நாகபந்தம்.
**உரகம்**—1. நாகமல்லிகை. 2. பாம்பு. (உ-ம்) "வாளெயிற்றுரகமே" (பாரத. ஆரும். க.) [மார்பாற்செல்வதாதலினிப்பெயர்த்து.] 3. மல்லிகை.
**உரகமல்லி**—நாகமல்லிகை.
**உரகர்**—1. சமணர். 2. நாகர். (உ-ம்.) "மண் டலம்பயிலுரகர்பேருயிர்ப்பிஞன்மயங்கி" (பாரத. குருகுல. ரு.) 3. படமும் வாலுமுடையவராய் மனிதவடிவுந்தெய்வப்பிறப்புமான ஒருவகைச் சர்ப்பசாதியார். (கூர்மபு. திருக்கல். ருஉ. உரை.) [உர-மார்பு. கம்-போதல். மார்பிஞலே நகர்ந்து செல்வோர் என்றபடி.]
**உரகவல்லி**—வெற்றிலைக்கொடி.
**உரகன்**—1. ஆதிசேடன். (உ-ம்.) "மிதித் துரகன்பணையணிகள்" (பாரத. பன்னிர. கஅ) 2. பாம்பு. (உ-ம்.) "உரகன்வாய்கீண்டமாதவன் போல" (கல்லா. சக.)
**உரகாசநன்**—1. கருடப்பறவை. [உரகாசந: உரக - பாம்பு. அசந - உணவு.] 2. விட்டுணு. [உரகாசந.]
**உரகாதிபன்**—ஆதிசேடன். [உரகாதிப: உரக - பாம்பு. அதிப - தலைவன்.]
**உரகாரி**—1. கருடன். 2. மயிற்பறவை. [உரகாரி: உரக - பாம்பு. அரி-பகை.]
**உரகேந்திரன்**—1. ஆதிசேடன். 2. வாசுகி. [உரகேந்த்ர: உரக - பாம்பு. இந்த்ர - சிரேட்டன்.]

**உரங்கம்**— } பாம்பு. (உ-ம்.) "உரங்க
**உரங்கமம்**— } வெங்கொடியுயர்த்தகாவல ன்" (பாரத. பதினூன். ககரு.) [உரங்கம: உரம-மார்பு. கம - போதல்.]
**உரங்குத்தல்**—பலமுறச்செய்தல்.
**உரங்கோள்ளல்**—1. கடிநமுறல். 2. பலங் கொள்ளல். (உ-ம்) "காய்ச்சலுரங்கொண்டுகொ ய்கின்றது" (வழக்.)
**உரங்கோள்ளுதல்** — 1. கெட்டியாதல். 2. பலமாதல்.
**உரசல்**—1. உரிஞ்சல். 2. தேய்த்தல்.
**உரசன்**—நெஞ்சுரப்புள்ளவன்.
**உரசி**—நெஞ்சம்.
**உரசிசம்**—முலை. [உரஸிஜம்: உரஸி- மார்பில். ஜம-முளைத்தது.]
**உரசிருகம்**—முலை. [உரஸிருஹ: உரஸி-மார்பில். ருஹ-தோன்றினது.]
**உரசு**—1. மார்பு. 2. மேன்மை. [உரஸ்.]
**உரசுதல்**—உரிஞ்சுதல்.
**உரஞ்சுதல்**—1. துடைத்தல். 2. தேய்த்தல்.
**உரண்டம்** — } காகம்.
**உரண்டை**— }
**உரணம்**—1. ஆட்டுக்கடா. 2. முகில். [உரண.]
**உரத்தல்**—1. பெலத்தல். 2. வலியுறல், கடிநமாதல். (உ-ம்.) "தருமுரத்துத்தரிக்குமுந்துத ரணிதானே" (சிவப்பிர. உ: உஎ.)
**உரத்திதம்**—விருத்தி.
**உரத்திதன்**—விருத்தியானவன்.
**உரந்தை**—துன்பம்.
**உரப்பம்**—பெருங்காயம்.
**உரப்பல்**—உரப்புதல்.
**உரப்பித்தல்**—பெலமுறச்செய்தல்.
**உரப்பிரம்**—செம்மறிக்கடா. [உரப்ரம்.]
**உரப்பு**—1. அதட்டுகை. 2. உரப்பென்னே வலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 3. திண்மை. 4. பேரொலி. (உ-ம்.) "வெற்பி-னுரங்கழிதரவே நீங்காவுரப்பினில்வீ ழ்வதேபோல்" (கந்தபு. காவிரிநீ. ௪௪.)
**உரப்புதல்**—1. உரத்தொலித்தல். (உ-ம்.) "உரவுரு முரசத்திற்றென்ன வொலிமுரசுரப்பி ஞல்" (தணிகை. வள். ருஅ.) 2. பெருஞ்சத் தமிட்டதட்டல். (உ-ம்.) "வீரர்தஞ்சூழ்ச்சியை ப்பாரா-வுரப்பி" (கந்தபு. சூர-வதை. கசுரு.)
**உரம்**—1. உள்ளமிகுதி. 2. ஊக்கம். 3. ஞா நம். 4. திண்ணியவறிவு. (உ-ம்.) "உரமொருவ

ற்குள்ளவெறுக்கை" (வள். சு௦௦.) 5. மதில். (பிங்கல. சுஉஅ.) 6. மார்பு. (உ-ம்.) "உரங்களுந் தோளும்" (பாரத. நிவாத. கூ௦.) 7. வயிரம். 8. வலி. (உ-ம்.) "உரத்தினுலொருவீரருமொப்பி லாவுரவோன்" (பாரத. புட்ப. ௬௪.) 9. வேகம்.

**உரம்புகுதல்**—விசையொடுபுகுதல். (உ-ம்.) "உட்கவைத்தூண்டிலுரம்புகுந்துழக்கும்" (கல் லா. ருக.)

**உரம்போடுதல்**—1. உரப்பித்தல். 2. எருப் போடுதல்.

**உரம்விழுதல்**—பன்னிரண்டுமாதத்துக்குட் பட்ட குழந்தைகளுக்குத் தரையிற்புரளுதலால் உண்டாகும் ஒரு பிடிப்புநோய்.

**உரரீகிருதம்**—அங்கீகாரம்.

**உரல்**—தானியம் முதலியவைகளை உலக்கை யால் விகாரப்படுத்துதற்காக மரம் முதலியவை களால் உள்ளே குழாயாக அமைக்கப்பட்ட வடி வம். (உ-ம்.) "தாக்குரலடிகொள்யானை" (பார த. இந்திர. க௪.)

**உரலாணி** — 1. உரலிலடிக்கிடும் மரவாணி. 2. உலக்கை.

**உரவல்**—உலாவல்.

**உரவன்**—1. அருகன். 2. அறிவுடையோன். 3. பெலமுடையோன்.

**உரவு**—1. அறிவு. (உ-ம்.) "உரவுசான்முநி வோர்களுக்கு" (சேதுபு. காசிப. சுரு.) 2. பரத் தல். (உ-ம்.) "உரவுவாட்டடக்கை" (பெரும் பா. சுருரு.) 3. மிகுதி. (உ-ம்.) "உரவுக்கதிதெ றூஉம்" (குறிஞ்சி. பா. சுரு.) 4. வலி. (உ-ம்.) "உரவுச்சினந்தணித்து" (மலைபடு. ௬உக.)

**உரவுதல்** — பெலனுறுதல். (உ-ம்.) "வெவ் வாசிகள்புனலுண்டுரவாவிடிலோடாதினி"(பா ரத. பதினெண். ருக.)

**உரவுநீர்** — 1. உலாவுநீர். 2. பெருங்கடல். (உ-ம்.) "உரவுநீருலகமேழும்" (கூர்மபு. தக்க ன்வே. க.)

**உரவுபோலிநடநம்**—சூக்குமபஞ்சாக்கரநட நம்.)

**உரவோர்**—1. அறிஞர். (உ-ம்.) "உரவோர் தந்தென்னவர்தமையுள்கி" (திருவிளை. நரிபரி. சுஎ.) 2. மூத்தோர். 3. வலியோர். (உ-ம்.) "ஒரு தாமாகியவுரவோரும்பல்" (புறநா. கஅ.)

**உரவோன்**—1. வலியவன். (உ-ம்.) "உரத் தினுலொருவீரருமொப்பிலாவுரவோன்" (பார த. புட்ப. ௬௪.) 2. விளிவில்லாதவன். (சிலப்.)

**உரற்கட்டை**—உரற்கானமரத்துண்டு.

**உரற்றல்** — 1. ஒலித்தல். (உ-ம்.) உரற்றிய கணமழையும்பார்சூழ்ந்தென" (கந்தபு. சூர. ௪.) 2. பேரொலி. (உ-ம்.) "அள்ளியள்ளியே-யுந்தி னன்றிசைதொறுமுரற்றிவீழவே" (கந்தபு. நக ரழி. உரு.)

**உரற்று**—1. உரற்றென்னேவலும், தெரிநி லைவினைப் பகுதியும், வினைத்தொகையும். 2. ஒலி.

**உரறல்**—1.இடித்தல்.(உ-ம்.)"நெடுங்கொடிநி மூன்மதிநெற்றிதைவர-வுடம்புவேர்த்தினமழை யுரறிநோக்கலின்" (சிந்தா. நாம. ருக.) 2. பெ ருங்கோபங்கொள்ளல். (உ-ம்.) "ஊசற்கரமெதி ர்சுற்றிடவுரறிப்பரியுமுரு" (பெரியபு. திருநாவு. கசுக.) 3. மிகவூக்கங் கொள்ளுதல். (உ-ம்.) "அவுணருரறியார்த்தெழுந்தார்" (கூர்மபு. அந் தகா. க௦௬.) 4. முழங்குதல். (உ-ம்.) "லமந்தர் பொம்மெனவுரறி" (சிந்தா. விமலை. ௪௨.)

**உரறுதல்**—முழங்குதல். (உ-ம்.) "கனையெ ரியுரறியமருங்கும்" (புறநா. உரு.)

**உரன்**—1. உள்ளமிகுதி. 2. திண்ணியஅறி வு. (உ-ம்.) "உரனென்னுந்தோட்டியான்" (வள். உ௪.) 3. பற்றுக்கோடு. (உ-ம்.) "ஊரன் மன்னுரனல்லனமக்கென" (கலி. சுஅ.) 4. பெ லம். 5. மார்பு. (உ-ம்.) "உரன்சிங்காதங்கிடந் தசைய" (திருவிளை.உலவாக்கி.எ.) 6. வெற்றி. (உ-ம்.) "உரனசைஇயுள்ளந்துணையாகச்சென் ரூர்" (வள். கஉ௬௬.)

**உரனர்**—சத்துக்கள். (உ-ம்.) "உரனமெவ்வ மொழிந்தபுந்தியாற்றபெய்ர்" (ஞானவா.உபசாந். சுசு.)

**உரா**—ஊரா என்னும் பெயரெச்சக்குறுக்கம். (உ-ம்.) "உராத்துனைத்தேர்" (சிவஞானபோ. க.)

**உராத்துனை**—நின்றுழிநில்லாமற்பரந்துசெ ல்லும்விரைவு. (உ-ம்.) "உராத்துனைத்தேர்த் தென" (சிவஞானபோ. க. சிற்.) [இதில் உரா என்பது முதனிலைத் தொழிற்பெயர்.]

**உராதாம்**—மூலை.

**உராய்**—1. உராயென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும். 2. பரந்து. (உ-ம்.) "காலென் னக்கடிதுராஅய்"(மதுரைக்.கஉரு.) [இது உரவு என்பதினின்றும் பிறந்ததுபோலும்.] 3. பெயர் ந்து. (சிந்தா.)

**உராய்ஞ்சல்**—உரைதல்.

**உராய்தல்**—உரிஞ்சல். (பிங்கல. உகசுஎ.)

**உராய்ப்போதல்** — 1. உரிஞ்சுதல். (சூ. நி கண். க: ௪௪.) 2. தேய்தல்.

**உரால்**— 1. உலாவுதல். (ஐங்குறு.) 2. ஓடு தல். (உ-ம்.) "குருஉமயிர்ப்புரவியுராலின்" (ம துரைக். ௬அஎ.)

**உராவல்**—உலாவல்.

**உரி**—1. அரைப்படி. (உ-ம்.) "ஆன்றுறுமி

டற்றுக்கபமுரி" (தணிகை. அகத். ௬௦அ.) 2. உரிச்சொல். (உ-ம்.) "பெயர்வினைசேரினிடை யுரியாங்கும்பிறங்கெழில்வாய்ந்- தயர்வினையெய் தாதினிதியலாநிற்கும்"(தணிகை.களவு.௨௨அ.) 3. உரிய. [யகரங்கெட்டுநின்றது.] 4. உரியெ ன்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினை த்தொகையும்" 5. தோல். (உ-ம்.) "உரித்திடு முழுவைவன்றோலுரி" (கந்தபு.ததீசியுத்.௪௨௭.) 6. மரப்பட்டை. (உ-ம்.) "உடுப்பனமரவுரித ழைகள்" (தணிகை. நாட். ௪௭.)

**உரிச்சீர்** — (யாப்பிலக்கணம்.) மூவசைச்சீர்; அது: நேரசையீறுயின்; வெண்பாவுரிச்சீர் என் றும், நிரையசையீறுயின்; வஞ்சியுரிச்சீர் என் றுஞ் சொல்லப்படும். (யாப்-ம். ௭.)

**உரிச்சொல்** — இசை குறிப்பு பண்பு என் னும் பொருட்குரியவாய் வருஞ்சொல். (தொல். சொல். ௨௬௪. சேஞ.)

**உரிசை**—தீஞ்சுவை.

**உரிஞ்**— உரினுதல். (உ-ம்.)"உரினுக்கடிது" (இலக்கணவி. அக. உரை.) [உகரச்சாரியைபெ ற்றது.]

**உரிஞ்சல்**—உரிஞ்சுதல். (உ-ம்.) "போர்மத க்குன்றுரிஞ்சலின்" (இரகு. தேநு. அஅ.)

**உரிஞ்சு**—உரிஞ்சென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும், வினைத்தொகையும்.

**உரிஞ்சுதல்**— தேய்த்தல். (உ-ம்.) "நறுங் குறடுரிஞ்சுபூந்தேய்வை" (நைடத. நகர. ௧௭.)

**உரினு**—உரினு என்னேவலும், தெரிநிலைவி னைப்பகுதியும், வினைத்தொகையும்.

**உரினுதல்**—உரிஞ்சுதல். (உ-ம்.) "உரினுக ன்னடுவோர்" (தணிகை. அகத். ௪௧௭.)

**உரித்தல்**— மற்றொருபொருளில் ஒட்டியிரு க்கும் போர்வையைப் பிரித்தெடுத்தல். (உ-ம்.) "உரித்திடுமுழுவைவன்றோல்" (கந்தபு. ததீசி யுத். ௪௨௭.)

**உரித்தாளி** — உரியவன். [உரித்து-உரிமை. ஆளி-ஆள்வோன்.]

**உரித்திரம்**—1. மஞ்சள். 2. மரமஞ்சள்.

**உரித்து**—1. உரியது. (உ-ம்.) "உரித்துபவீ தமும்" (சைவச. ஆசாரி. ௬௪.) 2. ஒருவனுடை ய உடைமையை அவனுக்குப்பின் அடைதற்கா ந்தன்மை. [இப்பொருளைத்தரும் "ரிக்தம்"என் னும் வடமொழி தமிழிலே உகரம் முன்வரப் பெற்றுக் ககரம் தகரமாய்த்திரிந்து "உரித்தம்" எனற்பாலது உரித்து என மரீஇயிற்று.] 3. க டமை.

**உரிதல்**-1. சீலையைக்களைதல். (உ-ம்.) "செ ழுந்திருவைத்துகிலுரிய" (பாரத. கிருட். ௨௪.) 2. மற்றொருபொருளிலொட்டியிருக்கும் போர் வைகழலுதல்.

**உரிப்பகாப்பதம்** — பகாப்பதமாய் நிற்கும் உரிச்சொல்.

**உரிப்பொருள்** — (அகப்பொருள்.) அகத்தி ணை முப்பொருளிலொன்று; அது: புணர்தல், புணர்தனிமித்தம், பிரிதல், பிரிதனிமித்தம், இருத்தல், இருத்தனிமித்தம், ஊடல், ஊடனி மித்தம், இரங்கல், இரங்கனிமித்தம், என்பன. அது: "புணர்தலும் பிரிதலு மிருத்தலுமூடலு- மிரங்கலுமிவற்றினிமித்தமுமெனவாங்-கெய்தி யவுரிப் பொருளையிருவகைத் தவை-யோரிரண் டோரிரண்டுரைத்த வைந்திணைக்கு - நேருமெ ன்மனுர் நெறியுணர்ந்தோரே" (இலக்கணவி. ௬௬௬) என்பதனுற் பெறப்படும். [திணைக்கு உரித்தாக நிற்றலின் உரிப்பொருளெனப்பட் டது.]

**உரிமை**—1. இனம். (உ-ம்.) "அடுந்தொழி ற்கு நின்றவரெவர்க்குந்தலைவனுமுரிமை" (பா ரத. நாடுகரந். ௯.) 2. ஒருவனுடைய உடை மையை அவனுக்குப்பின் அடைதற்காந் தன் மை. (உ-ம்.) "உரிமைமைந்தரைப்பெறுகின்ற தும்" (இராமா. மந்திரப். ௬௬.) 3. கடமை. (உ-ம்.) "தத்தமதுரிமைதன்னைத் தவாநெறித லைக்கொண்டாற்ற" (கந்தபு. பட்டா. ௧௪.) 4. சுவாதீனம். (உ-ம்.) "ஐவ- ரரசருமெனதுமைந்த ரைவரும்யானுமீண்டு- முரிமையின்றெய்தவெ ஞ்சூதாடுதே லுறுதியென்றான்" (பாரத. சூது. ௨௭அ.) 5. பிரியம். (உ-ம்.) "காதல்கூருருத்தகு முரிமையோ டொருவனேக்கினன்" ( பாரத. குருகுல. ௫அ.) 6. (தர்க்கம்.) பொருளுக்குப்பா தகமில்லாமை. (உ-ம்.) "நெருப்பால் நனையெ ன்கிற வாக்கியமும் பிரமாணமல்ல வுரிமையின் மையால்" (தர்க்கச. ௨௫. பக்.) 7. மனைவி. (உ-ம்.) "இல்லவளுரிமைபந்நி" (சூ. நிகண். ௨: ௭௧.) 8. யோக்கியதை. (உ-ம்.) "போயாமது ரிமை" (கந்தபு. தேவர்புல. ௧௧.) 9. விசேட குணம். (உ-ம்.) "நின்றனதுரிமையைநிகழ்த்தி மேன்மையா" (கந்தபு. பாயிர. ௨௧.)

**உரிமைக்கட்டு**—இனக்கட்டுப்பாடு.

**உரிமைக்கடன்** —1. சேர்ந்திருந்த உரித்து க்குச்செய்யுங்கடன். 2. புத்திரன் பிதாவுக்குச் செய்யுங்கடமை.

**உரிமைக்காணி**—தாயபாகமாக வந்த நிலம்.

**உரிமைக்காரர்**—உரியவர்கள்.

**உரிமைச்சொல்**—உரித்துக்கொண்டபேச்சு.

**உரிமைத்தத்துவம்** — 1. இறந்தவருடைய பொருளைக்குறித்து நியாயாதிபதியிடம் பெறும் அதிகாரம். 2. பாத்தியம்.

**உரிமைப்பாடு**—உரித்து.

**உரிமைப்பிள்ளை**—சுவீகாரபுத்திரன்.

**உரிமைப்பெண்** — விவாகத்துக்கு உரிமையானபெண்.

**உரிமைபாராட்டுதல்**—உரித்துக்கொண்டாடல்.

**உரிமைமண்** — சவக்குழியி லுரிமைக்காரர் போடுமண்.

**உரிமையாட்சி** — இறந்துபோன முன்னோரால்வந்த பொருளை அநுபவித்தல்.

**உரிமைவழி** — 1. உரித்துக்காரணமாய் வருவது. 2. சம்பந்தமுறை.

**உரியடி**—உரிச்சீரான்வருமடி.

**உரியது**—1. தக்கது. (உ-ம்.) "உரியதன்றீங்கொழிகெனவொழியீர்" (சிலப். நாடு. ருரு.) 2. விசேடமாகவுடையது. (உ-ம்.) "பெண்ணும்பிணவுமக்கட்குரிய" (தொல். பொரு. சுகஎ.)

**உரியபொருள்**—சுதந்திரமான திரவியம்.

**உரியர்**—உரியார். (உ-ம்.) "அன்பிலாரெல்லாந்தமக்குரியர்" (வள். எஉ.)

**உரியவன்** — 1. உடையவன். 2. கணவன். 3. தக்கவன், யோக்கியன். (உ-ம்.) "சிந்தனைத்துயர்கெடச்சித்தைச்சேர்ந்துளா - னிந்நூற்குரியவனென்றுகொள்கவே" (ஞானவா. வைராக். கக.) 4. தாயத்தான்.

**உரியள்**—உரியாள். (உ-ம்.) "கலைவலீரவற்கேயந்தக்கந்நியுமுரியளென்றான்" (பாரத. திரௌ. ருக.)

**உரியன்**—உரியவன்.

**உரியார்**—1. அறிஞர். 2. உடையோர். 3. தாயத்தார்.

**உரியாழாக்கு**—அரையேயரைக்காற்படி.

**உரியாள்**—மனைவி.

**உரியியற்சொல்** — இயற்சொல்லாய் வரும் உரிச்சொல்.

**உரியோன்**—1. ஆப்தன். 2. உரித்தானவன். 3. கணவன்.

**உரிவை**— 1. ஒரு முன்னிலை வினைமுற்று. 2. தோல். (உ-ம்.) "கைம்மலையுரிவையோடு" (பாரத. அருச்சு. தவ. ருச.)

**உரீஇ**— தீற்றி. (உ-ம்.) "திரவுரீஇவரகின்" (மலைபடு. உச.)

**உரீகாரம்**—1. அங்கீகாரம். 2. வாக்குத்தத்தம்.

**உரு**—1. அகலம். 2. அச்சம். (உ-ம்.) "உருகெழுசெலவு" (திருமுரு. ருக.) 3. அட்டை. (சூ. நிகண். கூ: எரு.) 4. அழகு. (உ-ம்.) "உருவுங்குலனுமுயர்பேரொழுக்கமும்" (சிலப். நாடு. சசு.) 5. உடம்பு. (உ-ம்.) "உருவினினிறைந்துநின்றங்குணர்ந்திடுமுயிரதென்னின்" (சி. சி. ச: கஎ.) 6. உள். 7. எலுமிச்சை. 8. கண்ணுக்குவிடயமானதோற்றம். (உ-ம்.) "உருவுயிரென்னினிந்தவுடலினுட்காணவேண்டும்" (சி. சி. ச: க.) 9. கரு. 10. கோபம். 11. சந்நதம். 12. செபத்தினுரு. 13. நிறம். (உ-ம்.) "உருவவோடரித்தடங்கணுருக்கொடுமீண்ட" (நைடத. நாட்டு. க.) 14. நோய். 15. பதுமை. 16. பருமை. 17. பாடல். (சிலப்.) 18. பெரிது. 19. மரக்கலம். 20. மிகுதி. (உ-ம்.) ஒண்டிறன்மொய்ம்பினோனுருகெழுசிகஞ்செய்து" (கந்தபு. சதமு. கசு.) 21. மேன்மை. 22. வடிவம். (உ-ம்.) "திரட்டியாவையுமோருருவாக்கினன்" (கந்தபு. மார்க்க. கருஉ.) 23. விக்கிரகம். 24. வெப்பம்.

**உருக்கம்**—1.அன்பு. (உ-ம்.) "தந்தாட்-குருக்கங்கணத்தினுனுற்றிடசெய்தோன்" (கலைசை க.) 2. இரக்கம். 3. உருகுந்தன்மை. 4. தொடை.

**உருக்கள்**— அகநாடகங்களுக்கும் புறநாடகங்களுக்குமுரிய பாஷைப்பாட்டுக்கள்; இவையிக்காலத்து உருப்படியென்றுவழங்கும். (மணிமே)

**உருக்கன்**—1. உடம்பை வாட்டிவரும் ஒருநோய். 2. சடைவு.

**உருக்காரம்**—வெண்காரம்.

**உருக்கினம்**—அஞ்சநபாஷாணம்.

**உருக்கு**— 1. இரும்பாலாகும் ஆயுதங்களைக் கூரியதாக்கும்பொருட்டுச் சேர்க்கப்படும் ஒருவகை இரும்பு; இது சுத்தக்கரியோடு கலந்து உருவாக்கியது. (உ-ம்.) "உருக்கரவீரவயில்விழியாய்" (மறைசையந். உக.) 2. உருக்கென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 3 உருகுதல். (உ-ம்.) "நிணவூன்சுட்டுருக்கமைய" (மதுரைக். எருரு.)

**உருக்குக்காரம்**— 1. உருக்குச் சரக்கு. 2. வெண்காரம்.

**உருக்குதல்**—1. உருகச்செய்தல். 2. கெடுத்தல். (தைலவ.) 3.(தீயினால்.) நெகிழச்செய்தல். (உ-ம்.) "மொய்த்த செங்கனற்றீயிடையுருக்குதன்முயன்றான்" (கந்தபு. மார்க்க. கருக.) 4. வாட்டல். (உ-ம்.) "ஊனையுருக்குயிராயதனிப்பெடை" (இரகு. நகர. கஅ.)

**உருக்குப்பிரமியம்** — 1. இரத்தப்பிரமியம். 2. சலரோகம், நீரிழிவு.

**உருக்குமண்**—உருக்குமணல்.

**உருக்குமணல்**— அயமணல்.

**உருக்குமணி** — 1. ஒருகாதணி. 2. கிருட்டினன்றேவி.

**உருக்குமம்**—பொன். [ரு^க்ம.]

உருக்குமிணி—கிருட்டிணன்தேவிகளிலொருத்தி.

உருக்குலைதல்—வடிவங்குலைதல்.

உருக்குவளை—மெருகாணி.

உருக்கொள்ளல்—உருக்கொள்ளுதல்.

உருக்கொள்ளுதல்—1. ஆவேசங்கொள்ளல். 2. உருப்படைதல். 3. கருக்கொள்ளல். 4. வடிவமெடுத்தல்.

உருகம்—பிறப்பு. [ருக.]

உருகுதல்—1. அன்பினாலே மநநெகிழ்தல், மநமிளகுதல், மநங்கரைதல். (உ-ம்) "உருகுதலைச்சென்ற வுள்ளத்தும்" (திருக்கோ. க௦ச.) 2. இரங்குதல். 3. நீர்போல நெகிழ்தல். (உ-ம்) "ஆமாறுன்றிருவடிக்கேயகங்குழையேனன்புருகேன்." (திருவாச. திருச்சத. கஎ.)

உருகோட்டு—உருகியோடுதல், உருகிப்பெருகுதல். (உ-ம்) "உருகோட்டன்பொடும் வணங்கி" (சி. சி. காப்பு.)

உருசி—1. மதுரம். 2. விருப்பம். [ருசி.]

உருசிகரம்—1. நல்லுருசியானது. 2. பிரியங்கொடுப்பது.

உருசித்தல்—1. சுவைத்தல். 2. சுவைப்படுதல்.

உருசிதம்—விரும்பப்பட்டது.

உருசிரம்—நல்லுருசியுள்ளது.

உருசு—1. அத்தாட்சி. 2. திருட்டாந்தம்.

உருசுப்படுத்தல்—உருசுவாக்கல்.

உருசுவாக்கல்—மெய்ப்பித்தல்.

உருசை—1. ஆசை. 2. இன்சுவை. (உ-ம்) "நல்லுருசைச்சேனை" (தைல. தைலவ. கரு.) 3. உருசி. 4. விருப்பம். [ருசா.]

உருட்சி—1. உருளுதல். 2. திரட்சி.

உருட்டல்—1. இசைக்கரணங்கள் எட்டனுளொன்று. (உ-ம்) "நரம்பையடிதொட்டுறளவுநன்கின்வருட லுருட்டல்" (கூர்மபு. கண்ணன்ம. கசஎ.) "இடக்கைச்சுட்டுவிரலுருட்டலும், வலக்கைச்சுட்டுவிரலுருட்டலும், சுட்டொடு பெருவிரற்கூட்டியுருட்டலும் இருபெருவிரலுமியைந்துடனுருட்டலுமாமென்பர் ஆசிரியர் அடியார்க்குநல்லாரும்" (கூர்மபு.தேவி.க.உரை) 2.உண்டையண்ணல். (உ-ம்) "அள்ளிப்பிசைந்துருட்டி" (சைவச. பொது. கஅசு.) 3. உருளச்செய்தல். (உ-ம்) "உருட்டியகவறு" (பாரத. சூது.உஅக.) 4. உருளையுருளச்செய்தல். (உ-ம்) "தனிப்பெருந்தேர்குடபொருப்பின்- சென்னியினுருளவுருட்டி" (பாரத. ஙீசக. சச.) 5. கவறெறிதல். 6. தர்க்கம்பேசிப்பிதற்றல். (உ-ம்) "கற்றதுங்கேட்டதுந்தானே யேதுக்காக்கடபடமென்றுருட்டுதற்கோ" (தாயுமா. நின்ற. கூ.) 7. புரட்டித்தள்ளல். (உ-ம்) "நெடியவரையுருட்டி" (இராமா. குலமுறை. அ.) 8. மத்தளம் விரைவாயடித்தல்.

உருட்டிப்பார்த்தல்—கோபமாகப் பார்த்தல்.

உருட்டு—1. உருட்டுதல். 2. உருட்டென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 3. திரட்சி. 4. புரட்டு. 5. வெருட்டு.

உருட்டுவண்ணம்—இருபது வண்ணங்களுளொன்று; அஃது: உருட்டிச்சொல்லப்படும் அராகந்தொடுத்து வருவது. "எரியுருவுறழவிலவமலர" என்பதிற்போல. (உ-ம்) "உருட்டுவண்ணமராகந்தொடுக்கும்" (தொல். பொருள். ருசரு.)

உருடை—பண்டி. (உ-ம்) "உருடையூடுதிரியும்" (சேது. முத்தீர். சஉ.)

உருண்டை—1. உண்டை. 2. திரட்சி.

உருண்மணி—திரண்டமணி.

உருத்தகம்—ஒரு சந்நிநோய்.

உருத்தரித்தல்—வடிவங்கொள்ளல்.

உருத்தல்—1. கோபம். 2. கோபித்தல். (உ-ம்) "ஊழியினுதன்றானுமுருப்பினும்" (பாரத. நிவாத. கச.) 3. தோற்றுதல். 4. நெஞ்சழலல். (உ-ம்) "ஒருபகலெல்லாமுருத்தெழுந்து" (கலி. கூக.) 5. மிகுதி. 6. முளைத்தல்.

உருத்திதம்—1. உரியபொருள். 2. தொழிலிலாபம். 3. வளர்தல்.

உருத்திரகசந்நி — ஒருவகைச் சந்நி நோய் (சிகிச். சகூச-பக்.)

உருத்திரகணம்—சிவகணம்.

உருத்திரகணிகை—தேவதாசி.

உருத்திரகணிகையர்—வேசியர்க்கு வேறாய் மணமின்றி உயர்ந்த சாதியாளர்களில் ஒருவனைக்கணவனுகக்கொண்டு பூசாகாலத்தில் சுத்தநிருத்தஞ்செய்யும் மகளிர்கள். (பெரியபு. தடுத்தா. ககூஉ. உரை.)

உருத்திரகிரந்தி — மூலாதாரமும் சுவாதிட்டானமும். (ஆ-நிகண். கூரு.)

உருத்திரகிரி—கயிலாசமலை.

உருத்திரசடை—சிவதுளசிப்பூண்டு.

உருத்திரசம்—பாதரசம்.

உருத்திரசருமன்—உருத்திரசன்மன். (உ-ம்) "திருத்தமிழ்மதுரைதன்னிற் சிவன்பொருணிறுக்குமாற்றா- லுருத்திரசருமனுகியுற்றிடு நிமலன்" (கந்தபு. சூர. வதை. உசுக.)

உருத்திரசன்—விசயாகமங்கேட்ட ஒருவன். (த. நி. போ. கருகூ.)

**உருத்திரசன்மன்**— மதுரையிலே வணிகர்குலத்திலே உப்பூரிகுடிகிழார் மகனுக்த்தோன்றிய ஊமைப்பிள்ளையார்; இவரை: முருகமூர்த்தியின் அவதாரமென்பர்.

**உருத்திரசாதநம்**—உருத்திராட்சம். (உ-ம்.) " போற்றிநீறணிந் துருத்திரசாதநம்பூண்டிடு " (வைராக். சத. சஎ.) 2. சிவசிந்நம். ( உ-ம். ) "எவரேனுமுருத்திரசாதநங்கண்டால்"(திருவிளை. மெய்க்கா. கக.)

**உருத்திரசாவணி** — பன்னிரண்டாம் மநு.

**உருத்திரசூக்தம்** — உருத்திரனைப்புகழ்ந்து பேசும் ஒரு மந்திரம்.

**உருத்திரதத்தன்**—சச்சந்தனுடைய மந்திரி. (சிந்தா.)

**உருத்திரதிநம்** — விட்டுணு ஆயுக்காலம் இரண்டுகூடினகாலம். (சை. பி. ருகூ.)

**உருத்திரதேவர்** — சுத்தவித்தியாதத்துவத்துக்கு அதிபதியாகியதேவர்; இவர்: ஈசுரதத்துவஅதிபதியாகிய மகேசுரனிடத்தில் ஆயிரத்தில் ஒரு கூறுகத்தோன்றிக் கலையிலிருந்துமூலப்பிரகிருதியை உதிப்பித்து அதிலே நின்று குணத்திரயாதியான சூக்கும சிருட்டிகளைப்பண்ணி மகேசுவரருடைய கோடி யமிசமாகத் தோன்றின பிரமாவையும் விட்டுணுவையும் அசுத்தாத்துவசிருட்டிதிதிகளிலே நியோகித்துத் தாம் காலருத்திரரை அதிட்டித்துக்கொண்டு அசுத்தாத்துவ சங்காரத்தையும்பண்ணுவர். (சி. சி. உ: எச. சிவாக்.)

**உருத்திரப்படிமம்**— உருத்திரமூர்த்தியின் வடிவம். (சிந்தா.)

**உருத்திரபஞ்சமம்**—ஒருபண்.

**உருத்திரபூ**—மயாநம்.

**உருத்திரபூஷணம்**—பாம்பு.

**உருத்திரபூமி**—மயாநம்.

**உருத்திரபேதம்**— ஆகமங்கள் இருபத்தெட்டனுள் விசயம் முதலிய பதினெட்டு ஆகமங்கள். [பரமசிவன்பால் உபதேசம்பெற்ற அநாதி உருத்திரர் முதலிய பதினெட்டு ருத்திரர்களுக்கும் அருளிச்செய்யப்பட்டமையின்.] (சைவச. பொது. கூகூஎ. உரையிற்காண்க.)

**உருத்திரம்**— 1. அச்சுறுத்தல். 2. ஒரு மந்திரம். (உ-ம்.) "எண்ணுசீருருத்திரத்தை" (சேதுபு. இராமநா. சஎ.) 3. சங்காரத்திற்கிடமாகியசுத்தவித்தை. (சிவப்பிர. கட். கூ. அங்கம்.) 4. சுவையலங்காரவகையுளொன்று; அஃது: உள்ளத்துள்ளவெகுளிபுறத்துப்புலனாய் விளங்குவது. "கைபிசையாவாய்மடியாக்கண்சிவவா வெய்துயிரா-மெய்குலையாவேரா வெகுண்டெழுந்தான்" என்பதிற்போல. (தண்டி. சுகூ.) 5. பெருங்கோபம். 6. முப்பத்திரண்டு உபரிடதங்களுளொன்று. (வேதா. சூ. சிறப்பு. கூ. உரை.) 7. மஞ்சள்.

**உருத்திரமணி**—உருத்திராக்கமணி; இஃது: "உருத்திரநற்றிருமணியை" என்னும் திருவாத. திருப்பெரு. கூடு-ம் கவியாற் பெறப்படும்.

**உருத்திரமூர்த்தி**—தத்துவாதீதனாகிய பரமசிவன்கொண்ட ஒன்பதுவிதத் திருமேனிகளுளொன்று; அஃது: "ஈசுவரமூர்த்தியில் ஆயிரத்தொன்றிலேதோன்றிய ஓர் உருவத் திருமேனி. (சி. சி. உ: எச. மறை.) (உ-ம்.) "உருத்திரமூர்த்திபோலும்" (தேவார. திருவின்.எ.திருநாவு.)

**உருத்திரர்**— 1. ஆணவம், கன்மம் என்னும் இருமலமுடைய ஆன்மாக்களாகிய பிரளயாகலருக்குள் மலபரிபாகமுடையராய்த் தீக்கைபெற்றுப் பரமசிவனருளால் பதங்களைப் பெற்றுள்ளவர்; இவர்: நூற்றுப்பதினெண்மர். 2. ஏகாதசருத்திரரால் தத்தம் உருவுபோல் சிருட்டிக்கப்பட்ட உருத்திரர்; இவர்கள் பதினொருகோடிபேர்; இவர்கள்: வானோர் இனத்தோடு கூடியிருப்பர். (உ-ம்.) "தத்த-முருவுபோற்பதினோர் கோடி யுருத்திரர்தொகையைத் தந்தார்" (கந்தபு. உருத்திரர்கேள்வி, க.) 3. ஸ்ரீகண்டருத்திரர். (சி-வி. ஞாந. உ. உரை.)

**உருத்திரவருடம்**— உருத்திரதிநம் மூந்நூற்றறுபதுகூடினகாலம். (சைவப். ருகூ.)

**உருத்திரவீணை**— ஒருவகை வீணை. [சிவரகசியத்தில் உருத்திரவீணை வரலாற்றுச்சருக்கம் பார்.]

**உருத்திரன்**— 1. அக்கிநிதேவன். ( உ-ம். ) "உருத்திரனென்னுநாமமொப்பிலாவரற்குமன்னன் - றரத்தருசிறுர்களானோர் தங்கட்குமனையன்பாதங்- கருத்திடையுன்னிப்போற்றுங்கணங்கட்குமவன்றன்மேனி - பரித்திடுவோர்க்குஞ்செந்தீப்பண்ணவன்றனக்குமாமால்." "இன்னலங்கடலுட்பட்டோர் யாரையுமெடுக்குநீரா- லுன்னரும்பரமமூர்த்தியுருத்திரனெனும்பேர்பெற்றான் - அன்னவன்றரவந்தோர்க்கு மடியடைந்தோர்க்குமன்னன்- றன்னுருவெய்தினோர்க்குஞ்சார்ந்ததாலவன்றனிப்பேர்" ( கந்தபு. ததீசி. சுடு, சசு.) (இன்னும் சஎ, சஅ. பார்.) "வெம்புயிர்த்துயரந்தீர்க்கும் விதத்துருத்திரனேயென்றும்" ( சூத. புராணவர. சுடு. ) 2. ஆன்மாக்களினது துயரைப்போக்குவோன். ( உ-ம். ) "அநகனச்சுதனரனுருத்திரன்" (சிவதரு. ஐவகை. கூகூ.) 3. காலாக்கினியுருத்திரனென்னுஞ் சங்காரகாலருத்திரன். (த. நி. போ. கஙசு.) 4. சிவகணத்தவன். (உ-ம்.) "1" பார். 5. சிவகுமாரன். (உ-ம்.) "1" பார். 6. சிவசாரூபம்பெற்

றவன். (உ-ம்.) "1" பார். 7. சிவன், மகாசங்காரக்கடவுளாகிய பரமசிவன். (சி. சி. க: சுரு. சிவஞா.) 8. ஸ்ரீகண்டர்; இவருக்குச்சங்காரகிருத்தியம் பிரதானம். ஆயினும் பிரகிருதிக்குமேல் சங்காரகிருத்தியம் ஐந்தும் நடத்துபவருமிவரே. (சி: சி. க: சுக. ஞாநப்.) இவர் மகேசுரனிடத்தில் ஆயிரத்திலொரு அம்சமாகத்தோன்றினவர்; இவர் கலையிலே நின்றும் மூலப்பிரகிருதியை யுதிப்பித்து அதிலே நின்றும் குணத்திரயாதியான சூக்குமசிருட்டிகளைப்பண்ணி, மகேசுவரனுடைய கோடி அம்சமாகத்தோன்றிய பிரமாவையும் விட்டுணுவையும் அசுத்தாத்துவ சிருட்டி திதிகளிலே நியோகித்துத்தாம் காலருத்திரனை யதிட்டித்துக்கொண்டு நின்று அசுத்தாத்துவப்பிரவியத்தையும் பண்ணுவர். (சி.சி. உ: எசு. சிவாக்.) பிரமவிட்டுணுக்களோடுங்கூடக்குணதத்துவத்தின்வைகிப் பிரகிருதிபுவநாந்தஞ்சங்கரிக்குங் கர்த்தாவாகிய குணிருத்திரன்; இவன் பிரகிருதியின்மேற்பட்ட புவநங்கட்குச்சங்கார காரணனல்லன். ( சிவஞாநபா. உக. ) (வேதாந்தம்.) பிரமத்திலே விவர்த்தமாகக் கயிற்றிலரவம்போலத் தோற்றிய மூலப்பிரகிருதி என்னுஞ் சத்தியினது சத்துவகுணமாகிய மாயையிலே சைதன்னியப்பிரதிவிம்பமாகத்தோன்றிய ஈசுவரன் சததுவத்திலே தமசாகிய குணத்திற் பிரதிவிம்பித்துச் சங்காரத்தொழிலை நடத்தி உருத்திரர் எனப்படுவர். ( உபநிடத. கரு. உரை.) 9. சூரியவரசர்களிலொருவன். (மணிமே.) 10. பெருங்கோபி.

**உருத்திராக்கசாபாலம்** - சாமவேத உபநிடதத்தொன்று. (கூர்மபு.அட்டமூர். உசு. உரை.)

**உருத்திராக்கம்**—, **உருத்திராட்சம்**— 1. உருத்திராட்சமரத்தின் காய். 2. ஒருமரம். 3. தேவர்கள் திரிபுரத்தசுரர்களாலே தங்களுக்கு நிகழ்ந்த துன்பத்தை விண்ணப்பஞ்செய்து கொண்டபொழுது திருக்கயிலாசபதியினுடைய மூன்று திருக்கண்களினின்றும் பொழிந்த நீரிற்றோன்றிய மணி. (2-ஆவது சைவ. வி. சுசு.) (உ-ம்.) "வெந்தநீறுருத்திராக்கம் விழுமியவணியுந்தாங்கி" (திருவானை. கோச்செ. சுக.)

**உருத்திராணி**— 1. துர்க்கை. 2. பார்ப்பதி. (உ-ம்.) "சுருதிசருவாணிசரச்சோதியுருத்திராணி" (கூர்மபு. திருக்கலி. உஉ.)

**உருத்திராணு**—அணுச்தாசிவர். (பௌட். உ: ருசு.)

**உருத்திராதிபதி**— உருத்திரனுக்குத்தலைவனாகிய ஸ்ரீகண்டபரமேசுவரர். (சி. சி. உ: ருஎ. சிவாக்.) [உருத்திர; அதிபதி-தலைவர்.]

**உருத்திராபிஷேகம்**-உருத்திரமந்திரஞ்செபித்துச்செய்யுமபிஷேகம்.

**உருத்திராரி**— மன்மதன். [உருத்திர அரி. உருத்திரனுக்குப்பகைவன் என்றபடி.]

**உருத்திராவாசம்**— காசிநகர். உருத்திர-சிவன். ஆவாசம்-இடம். [ருத்ராவாஸ.]

**உருத்திரி**—ஒருவகை வீணை.

**உருத்திரிதல்**–மாறுவேடங்கொள்ளல். (உ-ம்) "ஒருத்தனாகியுருத்திரிந்து" (திருவிளை. விடையி. எ.)

**உருத்திரேசர்**—ஏகாதசருத்திரர். (உ-ம்.) "பவர்முதலுருத்திரேசர் பதினொருகோடியுள்ளார்" (கந்தபு. உருத்திரர்கேள். கஉ.) [இவர் பதினொருகோடி உருத்திரரைச்சிருட்டித்ததினால் வந்தபெயர்.]

**உருத்திரை**—பார்ப்பதி. (பிங்கல. கoசு.)

**உருத்துவம்**—பருமை. [உருத்வா.]

**உருதிரோற்காரி**— வியாழவட்டமாகிய அறுபதுவருடங்களுள் ஐம்பத்தேழாம் வருடம். (பாலசிகைஷ.) [ருயிரோத்காரி.]

**உருநாடு**— 1. சித்திரம், விக்கிரகம்.

**உருப்பசி**— தேவுலகத்துள்ள அப்சரஸ்திரீகளுள் ஒருத்தி; இவள் பூவுலகத்திலே புரூரவா என்னும் அரசனுக்கு மனைவியாய் ஆயுவென்பவனைப்பெற்றவள். (உ-ம்.) "கொண்டுபோதலுமபயமென்றுருப்பசிகூவ" (பாரத.குருகுல.கக.)

**உருப்படல்** — 1. உருவமாதல். 2.சீர்ப்படல்.

**உருப்படி**– உருவுடைப்பொருளின்தொகை.

**உருப்படுத்தல்**—உருவாக்கல்.

**உருப்படுதல்**— 1. உருவாகல். 2. உருவேறல். 3. சந்நதங்கொள்ளல். 4. சீர்ப்படுதல்.

**உருப்பம்**— 1. உட்டணம். (உ-ம்.) "உருப்பநரகமிவற்காகுமென்ன" (கூர்மபு. வருணச். உஉ.) 2. கோபம். 3. தினைமா. 4. மிகுதி.

**உருப்பு**— 1. பூரணம். 2. மிகுதி. 3. வெப்பம். (உ-ம்.) "வெயிலுருப்பொழிய" (வேதாரணியபு. நிரையவ. கரு.)

**உருபகதீவ்கம்**—ஓரலங்காரம்.

**உருபு**— 1. நிறம். (பதிற்றுப்.) 2. பகுதிவிகுதி இடைநிலை சாரியை எனப்பகுபதத்தின் அகத்துறுப்பாய்வருமது. (உ-ம்.) "பகுதிவிகுதி இடைநிலை என்னுந்தெரிநிலையுங் குறிப்புமாகிய வினையுருபுகள்" (நன். இடை. விருத்தி. க.) 2. பெயர்ச்சொல் தன்னோடு சம்பந்தப்படும் வினையை நோக்கி அடையும் விகாரம். (நன். உருபு. க.) 4. பெயர்ச்சொல்லின் பின் அதனை யடுத்து அதன்பொருளை வேற்றுமைப்படுத்த

ற்கு வரும் இடைச்சொல்; அவ்விடைச்சொற்கள்: ஐ, ஆல், கு, இன், அது, கண் என்பன. (நன். உருபு. உ.) 5. வடிவம். (தொல். சொல். உச. சேனு.) [இதனுரையிலே நச்சினார்க்கினியர் உருபு என்பது வடிவையுணர்த்தாது என்பர்.]

**உருபுத்தொகை**—வேற்றுமையுருபுமுதலிய தொக்குநிற்றல்.

**உருபுப்புணர்ச்சி**—வேற்றுமையுருபுபுணர்ந்துவருவது.

**உருபுமயக்கம்**—ஒரு வேற்றுமையுருபு தன் பொருள்கொடாது பிறிதோருருபின் பொருள் கொடுத்து நிற்றல்; அது. "காலத்தினாற்செய்த நன்றி" என்பதில், ஆல் என்னும் மூன்றனுருபு ஏழனுருபுப்பொருள்கொடுத்து நிற்றல் போல்வது. (பி. வி. கரு. உரை.)

**உருபுவமைத்தொகை**— உவமவுருபுதொக்குநிற்குந்தொடர். [சேல்விழி என்பதிற்போல.]

**உருபுவிரி**—வேற்றுமையுருபு விரிந்துநிற்றல்.

**உருபூகம்**—ஆமணக்கஞ்செடி.

**உரும்**— 1. அச்சம். (உ-ம்.) "பேநாமுருமெனவருஉங்கிளவி, யாமுறை மூன்றுமச்சப்பொருள" (தொல். சொல். ஙகரு.) 2. இடியேறு. (உ-ம்.). "உருமினர்த்துடன்றெறுமுழுவையோம்பல்" (தணிகை. நாட்டு. சஉ.) 3. விடுதல்.

**உரும்பரம்**— 1. சர்ப்பம். 2. பெருங்காயம்.

**உருமணி**—கருவிழி.

**உருமம்**— 1. உட்டணம். (பிங்கல. கூ௪சுஙு.) 2. மத்தியாநம்.

**உருமர்த்தநன்** — மிகுதியும் அடிப்போன். [உரு-மிகுதி. மர்த்தநம்-அடித்தல்.]

**உருமலைவாரி**—உலோகமணல்.

**உருமாறுதல்**—1. கோலமாறுதல். 2. சரீரம் வேறுபடுதல். 3. வேற்றுருக்கொள்ளல்.

**உருமித்தல்**—வெப்பங்கொள்ளல்.

**உருமு**— 1. அச்சம். 2. இடியேறு. (உ-ம்.) "உருமுப்புயல்போற்கவர்வோர்" (பாரத. நிவாத. ககO.)

**உருமுக்குரல்**—இடியோசை.

**உருமுத்துவசன்** — இடிக்கொடியையுடையனாகிய இந்திரன். (உ-ம்.) "உருமுத்துவசன் மைந்தன்" (பாரத. புட்பயா. கஉஎ.)

**உருமுதல்**—அச்சமுறவொலித்தல்.

**உருமேறு**—இடியேறு. (உ-ம்.) "அச்சொற்றத்தஞ்செவிக்குருமேறுகக்கலங்குமரவன்னார்" (பாரத. திரௌ. ஙஉ.)

**உருமேனி**— மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் இவைகளையுடைய வடிவம்.(உ-ம்) "உருமேனிதரித்துக்கொண்டதென்றலும்" (சி. சி. க: ருரு.)

**உருவக்கோடியோர்** — கொடி யுருவினோர். (சிலப்.)

**உருவகதீபகம்**— ஒரு செய்யுளிலே ஓரிடத்திலே நின்ற ஒருசொல் அச்செய்யுளிற்பலவிடத்துஞ்சென்று உருவகப்பிரயோகமாகப்பொருள்படுதல். அது:"கானற்கயலாம்வயலிற்கமலமாமேனற்கருவிளையாமின்புறவின் - மானுங் -கடத்துமேல்வேடர்கடுஞ்சுரமாஙீங்கிற் - கடத்துமே மெல்லியலாள்கண்" என்பதிற்போல. (தண்டி. பொரு. சO. உரை.)

**உருவகந்தம்**— புத்தர்கள் சொல்லும் மூர்த்தபூதங்களாகிய கந்தம்; அக்கந்தங்கள்: நிலம், நீர், தீ, காற்று என்னும் நான்குபூதமும், அப்பூதங்களிடத்திற்பொருந்திய உபாதேயம் என்னும் கடிநம், கந்தம், இரசம், ரூபம் என்னும் நான்குமென எட்டுவகை. (பெரியபு. திருஞாந. ககரு. உரை.)

**உருவகம்**—உபமாநத்தையும் உபமேயத்தையும் வேறுபாடொழிவித்து ஒன்றேன்பதோர் உள்ளுணர்வுதோன்ற ஒற்றுமைப்படுத்திச்சொல்லல். (உ-ம்) "உவமையும் பொருளும் வேற்றுமையொழிவித்தொன்றென மாட்டினஃதுருவகமாகும்" (தண்டி. பொரு. ஙரு.)

**உருவகவுயர்வுநவிற்சியணி**—உருவக அலங்காரவகையுளொன்று; அஃது: உபமேயத்தை அச்சொல்லாற் சொல்லாமல் உவமானச் சொல்லால் இலக்கணையாகச்சொல்லுதல். அது: "புயலேசுமந்து பிறையேயணிந்து" என்பதிற்போல. (வாணன். க.)

**உருவகவுருவகம்**— உருவக அலங்காரவகையுளொன்று; அது உருவகஞ்செய்யப்பட்ட ஒன்றனைப்பெயர்த்தும் உருவகஞ்செ[illegible]து (உ-ம்.) "கந்திதன்கொங்கைக்குவடாங்கடாககளிற்றை" என்பதிற்போல. (தண்டி. ஙரு. உரை.)

**உருவகித்தல்**— உபமாநத்தையும் உபமேயத்தையும் வேறுபாடொழிவித்து ஒன்றென்பது தோன்ற ஒற்றுமைப்படுத்திச்சொல்லல்.

**உருவங்காட்டி**—கண்ணாடி.

**உருவசாட்சாத்காரம்**— மோனகுருவாய் நின்றுணர்த்தியது. (தாயு. சிற்சு. எ. உரை.)

**உருவசாத்திரம்**— கலைஞானமறுபத்துநான்கினொன்று; அது: மூகலக்கணம் ரேகாலக்கணம் முதலியவைகளான் மனிதனுக்கு நிகழ்பவைகளை அறிவிப்பது.

**உருவசி**—உருப்பசி. (உ-ம்.) "உருவசியென்னும்பேராளொப்பிலாவழகுவாய்ந்த - திருநிகர்ம

ங்கைதன்னை" (மச்சபு. அகத்தியர்பூ. கஎ.) [உவ-ரூபா.]

**உருவசித்தம்**—சுவரூபாசித்தம். (தச. மகா. ௬௬.)

**உருவசிவசமவாதி**—ஒருமதஸ்தன்; அவன்: முத்தியினும் நித்தியசுத்த மங்களமான திவ்விய சரீரம் உண்டென்பவன். (சி. சி. கக. ௯. சிவ ஞாந.)

**உருவபாவனை**— தூரியப்பொருளாகாத மூர்த்திகளைத்தியாநித்து வழிபடுதல். (கூர்மபு. வருண. ௬௯. உரை.)

**உருவம்**— 1. அழகு. (உ-ம்.) "உருவப்பூணிஞய் வந்தமையெவன்கொலென்றுரைத்தான்" (நைடத. தேவியை. ௯.) 2. உடம்பு. (உ-ம்.) "ஒருநெஞ்சமொழி யுருவமுற்றுமரனுடைமையாக" (சேதுபு. நைமி. உக.) 3. சாட்சிப்பொருள். (உ-ம்.) "ஆவிகளனைத்துமாகியருவமாயுருவமாகி" (கந்தபு. மேரு. எ௫.) 4. விழிமாத்திரத்தாற்கவரப்படுங்குணம். (தர்க்கபா. க௮.) 5. சிவப்புநிறம். (உ-ம்.) "உருவப்பல்பூத்தூய்." (திருமுரு. உ௪க. உரை.) 6. நிறம். 7. வடிவம். (உ-ம்.) "பேரருளியம்புமிவ்வுருவம்" (திருவாத. திருப்பெரு. ௬௮.) 8. விக்கிரகம்.

**உருவமெடுத்தல்**—வடிவமெடுத்தல்.

**உருவரை**— 1. நல்ல நிலம். 2. நிலம். [உருவ்-ரா.]

**உருவல்**— 1. உருவுதல். 2. காதணியிலொன்று.

**உருவாணி**— 1. தேய்ந்துபோனது. 2. மெலிந்தவுடல்.

**உருவாரச்சம்மட்டி**—வீழிச்செடி.

**உருவாரம்**— 1. பிரதிமை. 2. வெள்ளரிக்கொடி. (சூ. நிகண். ௪. ௯௯.)

**உருவாரு**—வெள்ளரிக்கொடி.

**உருவாளர்**—உருவமுடையவர். (உ-ம்.) "காயமோபொய்யெனக்கண்ட- திருவுருவாளர்" (தாயுமா. ஆரண. ௯.)

**உருவி**—1.செம்முள்ளிப்பூண்டு. 2.நாயுருவி. (உ-ம்.) "எள்ளிரதம்படியுருவி" (தைல. தைலவ. க0௯.) 3. புல்லுருவி.

**உருவியுப்பு**—நாயுருவியுப்பு.

**உருவிலாளி**—மன்மதன். (உ-ம்.) "உருவிலாளியுடல் பொடித்தவொருவர்கூடலிருவரான் - மருவிலார் திருக்கைதொட்டுவளைசெறித்த நீர்மையால்" (திருவிளை. வளையல். ௯௫.)

**உருவிலி** — 1. உருவில்லாதவன். 2. மன்மதன்.

**உருவின்காரணம்**—பன்னிரண்டு. (தைல.)

**உருவு** –1. அச்சம். 2. உருவென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும், வினைத் தொகையும். 5. வடிவம். (உ-ம்.) "உருவுகண்டெள்ளாமைவேண்டும்" (வள். ௬௬எ.)

**உருவுடம்பு**— தூலசரீரம். (வள்.௯௪௫.பரி.)

**உருவுதடம்** — சுருக்குக்கயிறு. [தடம்-தடுப்பது.]

**உருவுதல்**–1. உடம்பினுறுப்பைக் கையினால் ஊன்றியிழுத்தல். 2. உரைகழித்தல். (உ-ம்.) "நாந்தகந்தனையுரீஇக்கொடு" (கந்தபு. சூரப. க௬௯.) 3. ஊடுருவப்படுதல். (உ-ம்.) "கடிதினுச்சி நின்றுருவியேவச்சிரகம்பத் - தடிதனிற்சென்று" (கந்தபு. அசுரர்யா. ௯க.) 4. கையிற் பெருவிரலுக்கும் மற்றை விரல்களுக்குமிடையே ஒன்றனைப்புகுத்தி ஊன்றியிழுத்தல். 5. தடை நீக்கிவிடுதல். (உ-ம்.) "வயப்புலியைவாலுருவிவிடுகின்றீரே" (பாரத. சூது. உ௬௫.) 6. துளைத்தோடுதல். (உ-ம்.) "மூதகுமண்டமுகட்டுருவும்" (கந்தபு. சூர. வ. ௯௯.)

**உருவுவமம்**— உவமத்தின் ஒருவகை; அது: வடிவத்தானுய ஒப்புமை. "தளிர்போலுஞ்சிவந்தமேனி" என்பதிற்போல (தொல். பொரு. உஎ௬. உரை.)

**உருவுள்ளு**—கொள்ளுப்பூண்டு.

**உருவெடுத்தல்**—வடிவெடுத்தல்.

**உருவெளி** — மனோராச்சியத்திலே ஆகாயத்திலேதோன்றும் போலியுரு. (உ-ம்.) "உருவெளியருகுதோன்ற வுற்றன ளிறைவனென்று" (தணிகைப். வள். உ௪௫.)

**உருவெளிக்காட்சி**—, **உருவெளித்தோற்றம்**—, **உருவெளிப்பாடு**— மனத்திலுள்ள பொருளின் மருட்சித்தோற்றம்.

**உருவேற்றல்** — 1. ஆவேசமேற்றல். 2. செபித்தல். 3. துர்ப்போதனைசெய்தல்.

**உருவேறல்**— 1. தெய்வ ஆவேசமேறல். 2. மந்திரோச்சாரணம் அதிகரித்தல்.

**உருவை**–1.சூரைச்செடி. 2.முள்ளிப்பூண்டு.

**உருவொளி**—கண்ணாடி முதலியவற்றிற் காணும் நிழல்.

**உருள்**—1. உருளென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும், வினைத் தொகையும். 2. உரோகிணிநாள். (சூ. நிகண். க. ௬௮.) 3. தேருருள். (உ-ம்.) "உருள்பூந்தண்டார்புரளுமார்பினன்" (திருமுரு. கக.) 6. பண்டி. 7. வட்டம்.

**உருளரிசி**—கொத்துமல்லி. (சூ. நிகண். ௪: உ௬.)

**உருளல்**—உருளுதல்.

**உருளாயம்** — உருளுங் கவற்றின்கட்பட்ட

வரவு. (உ-ம்.) "உருளாயமோவாதுகூறின்" (வள். கூகூகூ.)

உருளி—1. உடம்பின்மூட்டு. 2. உரோகிணிநாள். 3. தேருருள். (உ-ம்.) "முழவினன்னமுழுமரவுருளி" (பெரும்பா. சஎ.) 4. வட்டம்.

உருளிப்பெயர்வு—எலும்புப்புரட்சி.

உருளிபேர்தல்—பொருத்துவிலகுதல்.

உருளுதல்—1. அழிதல். 2. உண்டையாய்த்திரளுதல். 3. ஒருகான்மேனின்றபக்கம் மறுகாற்கீழாகவும் ஒருகாற்கீழ்நின்றபக்கம் மறுகான்மேலாகவுஞ் சுழன்றுசெல்லுதல். (உ-ம்.) "உருள்பெருந்தேர்க்கு" (வள். சுகுஎ.)

உருளை—1. உண்டை. 2. உரோகிணிநாள். 3. தேர்முதலியவற்றினுருள். (உ-ம்.) "சகடிருசக்கர வுருளைகளுய்க்கவே" (பாரத. வேத்திர. ருo.) 4. பண்டி. 5. மூட்டை. 6. வட்டம். 7. வெள்ளைப்பாஷாணம்.

உருளைக்காந்தம்—ஒருவகைக்காந்தக்கல்.

உருட்சை—வாழைக்கிழங்கு. (உ-ம்.) "உயருரூட்சோதகம்" (தைல. தைலவ. கூரு.)

உருடபதம்—1. இயற்சொல். 2. பகாப்பதம்.

உருடம்—1. இடுகுறி. 2. பகாப்பதம். 3. பிரசித்தமாயறியப்பட்டது. [ரூ-ருஊ.]

உருடி — 1. இடுகுறி. (உ-ம்.) "வடநூலார் இடுகுறியை உரூடியென்றும்" (நன். சுஉ. உரை.) 2. பாரம்பரியமானது. 3. புடவையைக் கண்டு இது நூலினன்றித் தோன்றாதென்று நிச்சயிக்கை. (ஞானமி. கரு. உரை.)

உருதி—ஆயிற்பட்டை. (தைல.)

உருப்பியம் —1. அழகானது. 2. வெள்ளி. 3. வெள்ளிநகை. 4. வெள்ளை. [ரூ-ருவ்யo]

உருபகதாளம்—ஒருதாளம்.

உருபகம்—1. அத்தாட்சி. 2. உருவகஅலங்காரம். 3. சத்ததாளத்தொன்று.

உருபகாரப்படுத்தல்—மெய்ப்படுத்தல்.

உருபகாரப்படுதல்—மெய்ப்படுதல்.

உருபகாரம்—திருட்டாந்தம்.

உருபகாலங்காரம்—உருவகவணி.

உருபணம்—உரூபித்தல்.

உருபத்துவயம் — (வேதாந்தம்) இரண்டுரூபம்; அவை: வியட்டி, சமட்டிஎன்பன. அநேகவிருக்ஷமுள்ளது ஒரு வநம் என்பதுபோல அநேகசீவரையுந்தன்னுத்துமன் என்னும் அபிமானமே ஈசுரனுடைய சமட்டியாம். அந்த வநத்திலே இஃது ஒருவிருக்ஷமென்று குறியிடுவது போலப் பிரதேகத்துவாபிமானமே சீவனுடையவியட்டியாம். (வி-ணி. கூஉ.)

உருபதன்மாத்திரை — பூதாதியகங்காரத்திலேதோன்றிய பஞ்சதன்மாத்திரையிலொன்று; அது: கண்ணிந்திரியத்திற்கு அறிவையுண்டாக்கும். "ஓசைசுற்பரிசரூபவிரதகந்தங்களென்று- பேசுமாத்திரைகளைந்தும் பிறக்கும் பூதாதிகத்தி - னேசவிந்திரியங்கட்கு நிகழறிவிதனுற் காண்டும்" என்பதனுற்பெறப்படும். (சி.சி.உ: கூச.)

உருபப்பிடமர்—உரூபப்பிரமர். (மணிமே.)

உருபம்—1. அடையாளம். 2. இனம். 3. உருவம். 4. கிரியாமாலைசெய்தல். 5. சாயை. 6. சுபாவம். 7. நிலை. 8. நிறம். 9. பிரதிமை. 10. மந்தை, ஆடுமாடுகளின்றொகுதி. 11. வாய்ப்பாடமாக்கல். 12. வேற்றுமைமாலை. [ரூ-ருவ.]

உருபலாவண்ணியம்—சிறந்ததோற்றம்.

உருபவதி—அழகுடையவள்.

உருபா—பதினாறு அணுக்கொண்ட வெள்ளிநாணயம்.

உருபாருபம்—உருவுமருவுமாகிய இரண்டுதன்மையுடையது, சகளநிட்களம். (உ-ம்.) "அருவமோ ரூபாரூபமானதோவன்றி நின்ற - வுருவமோவுரைக்குங் கத்தா வடிவெனக்குணர்த்திங்கென்னில்" (சி. சி. க: கூஅ) [உரூப-வடிவம்; அரூபம்-வடிவற்றது.]

உருபி—1. உரூபமுள்ளது. (உ-ம்.) "ஆங்கவட்குரூபியாய்வழங்கும்" (உபதேச. திருமால். கூஉ.) 2. உரூபியென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும்.

உருபிகரம்—1. உரூபம். 2. உரூபிகரிக்கை.

உருபிகரி—உரூபிகரியென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும்.

உருபிகரித்தல்—1. உரூபப்படுத்தல். 2. கருவிலுருப்படல்.

உருபிகை — வெள்ளெருக்கமரம். [ரூ-ரு விகா.]

உருபித்தல் — 1. அத்தாட்சிப்படுத்தல். 2. ஆராய்தல். 3. சிந்தித்தல்.

உருபு—1. உருவம். 2. சாயல்.

உருபை — உருவமுடையவள். (சி. சி. வரலாறு.)

உரேந்திரன்—வீரன்.

உரை—1. ஆகமப்பிரமாணம். (சி. சி. அள. க: மறை.) 2. உயர்ச்சி. 3. எழுத்திலொலி. (பிங்கல. கூஉoக.) 4. ஒலி. 5. சொல். (உ-ம்.) "அரையன்வாயுரைகள்வரைதருமுடங்கல்" (வைராக். தீ. ரு.) 6. சொற்பொருள். (உ.ம்.) "பூரணனெனும்பெயர்விரிக்கினுரைவேறுமுளதோ" (தாயுமா. சின்மயா. கூ.) 7. தேய்வு. 8. புகழ். (உ-ம்.) "உரையொடெங்காளையோங்க" (இரகு.யாக.க.)

9. பொன். (உ-ம்.) "அகருளி-தன்னிலுரைக் காப்பணி" (தைல. தைலவ. கநரு.) 10. மாற்றுரை. (உ-ம்.) "சீரிரும்பினைப்பொன்னெனவுரைபெறச்செய்வாம்" (கந்தபு. மார்க்க. கஉஉ.) 11. வியாக்கியாநம். (உ-ம்.) "ஆசிரியவசநமென்றீரேழுரையே" (நன். பொதுப்பா. உக.)

**உரைஇ**—உலாவி. (உ-ம்.) "கடுங்காற்றெடுப்பக்கல்பொருதுரைஇ" (மதுரைக். நஎஅ.)

**உரைக்கை**—விரித்துச்சொல்லுகை.(உ-ம்.) "அனைத்துமுரைக்கையினுல்" (சி. சி. அ: கச.)

**உரைக்கோள்**—உரைகாரன்கருத்து.

**உரைகட்டுதல்**—நூலுக்கு உரைசெய்தல்.

**உரைகல்**—பொன் வெள்ளியுரைக்குங் கல்.

**உரைகலங்கல்** — சொல்லுத் தடுமாறுதல். (உ-ம்.) "தூயோ-ருரைகலங்க" (பாரத. புட்ப. உ0.)

**உரைகாரன்**—உரையாசிரியன். (உ-ம்.) "தன்மாணுக்கன் றகுமுரைகாரன்" (நன்.சிற.பாயி. ரு.) [உரை-வியாக்கியாநம். காரன்-செய்தோன்.]

**உரைகோள்**—நூலுக்குச் செய்யப்படுமுரையிற்சொல்லப்படுவன; அவை. பதச்சேதம், பதப்பொருள், விக்கிரகம், வாக்கியயோசனை, சங்கை, உத்தரம் என்பன. (சிவதரு. சிவஞாநதாந. நக. உரை.)

**உரைகோளாளன்** — உரையை விரைவிலேகற்குமறிவுடையோன். (உ-ம்.) "உரைகோளாளற்குரைப்பதுநூலே" (நன்.பொதுப்.நஎ.)

**உரைச்சூத்திரம்** — உரையின் ஒரு கூறுக எழுதப்பட்ட சூத்திரம். (பி-வி. உ. உரை.)

**உரைசல்**—உரைசுதல்.

**உரைசுதல்**— 1. உரைசல். 2. சீத்தல். 3. தேய்த்தல். 4. தேய்தல்.

**உரைசெயல்**—1. சொல்லுதல். (உ-ம்.) "உரைசெயவேண்டுமென்றுரைப்ப" (பாரத. குருகுல. ருரு.) 2. வியாக்கியாநஞ்செய்தல்.

**உரைஞ்சல்**—உரிஞ்சுதல்.

**உரைத்தல்**—1. ஒலித்தல். 2. சொல்லுதல். (உ-ம்.) "ஆங்கவனிவ்வாறுரைத்தலும்" (பாரத. நாடுகரந். உஅ.) 3. தேய்த்தல். (உ-ம்.) "உருண்டவாய்தொறும் பொன்னுருளுரைத்துரைத்தோடி" (இராமா. வரைக். அ.) 4. பூசுதல். 5. மாற்றறிய உரைத்தல்.

**உரைத்தாமென்றல்**—(இலக்கணம்.) முப்பத்திரண்டு யுத்திகளுள் ஒன்று; அது: முன்னே ஒருநிமித்தத்தினுலே சொல்லப்பட்டதைப்பின்னே சொல்ல வேண்டியவிடத்து இதனை முன்னேதானே சொல்லினேமென்பது தோன்றச் சொல்லாதுவிடுதல். (நன். பொதுப்பா. கச.)

**உரைத்தீவார்**—கூறுவார். (உ-ம்.) "உரைத்தீவாரில்வழி" (கலி. எரு.) [வினைமுற்று.]

**உரைத்துமென்றல்**—(இலக்கணம்) முப்பத்திரண்டு உத்திகளுள் ஒன்று; அது: பின்னே சொல்லப்படுவதை முன்னே ஒரு நிமித்தத்தினுலே சொல்லவேண்டின் இதனைப் பின்னே சொல்வோமென்பது தோன்ற அங்கே சுருக்கிச்சொல்லுதல். (நன். பொதுப்பா. கச.)

**உரைத்தைக்காண்**—சொல்லிக்காண் (உ-ம்.) "தெருளாமற்காப்பதோர் திறனுண்டேலுரைத்தைக்காண்" (கலி. நஅ.)

**உரைதல்**—தேய்தல்.

**உரைதழுத்தல்**—பேச்சுத்தடுமாறல்.

**உரைநூல்**—உரையெழுதப்பெற்றநூல்.

**உரைப்படல்**—உரைக்கப்படல். (உ-ம்.) "உலகத்துரைப்பட்டது" (நளவெ. கலிநீங். சக.)

**உரைப்பு**—1. உரைத்தல். (உ-ம்.) "உரைப்பரும்பலபொருளாயும்" (பாரத. அருச்சுனன்றவ. எஅ.) 2. தேய்ப்பு.

**உரையசை**—செய்யுட்கண்வரினும் அச்செய்யுளின்பொருட்டன்றித் தானடைந்த சொல்லின்பொருட்டுவந்தசைத்துநிற்கு மோரிடைச்சொல்; "அதுமற்றம்ம" என்பதிற்போல(உ-ம்.) "அம்மவுரையசைகேண்மினென்றாகும்" (நன். இடை. கக.)

**உரையநுமாநம்**—வேதாகமங்களுட் சொல்லியதுகொண்டு அது சொல்லாதபொருளையும் ஒப்புமைபற்றி யூகித்துத்துணிவது. (சி. சி. அளவை. கஉ. மறை.)

**உரையல்**—1. உரைத்தல். (உ-ம்.) "கனவின்றலையிட்டுரையல்" (கலி.கூஉ.) 2. உரைதல்.

**உரையளவை**— காட்சிகருதலளவைகளானறியப்படாத பொருள்களை ஆத்தவாக்கியங்கொண்டு உரைசெய்வதாகிய ஆன்மாவினது ஞாநசத்தி; இந்த உரையளவை: தந்திரகலை, மந்திரகலை, உபதேசகலை என மூன்றுவகைப்படும். (சி. சி. அளவை. உ. சிவஞா.)

**உரையறிகருவி**—1. உரையாணி. 2. மாற்றறிவிக்குமாணி.

**உரையாசிரியர்**—1. நூலுக்கு உரைசெய்தவர். 2 தொல்காப்பியத்துக்கு உரைசெய்தவராகிய இளம்பூரணர். (தொல். சொல். ச. சேனு.)

**உரையாடல்**—பேசுதல். (உ-ம்.) "உண்டியுகந்துரையாடலையாகி" (கந்தபு. மார்க்க. கருக.)

**உரையாணி**—மாற்றறியுமாணி.

**உரையாலநுமாநம்**—உரையநுமாநம்.(உ-ம்.)

"நீதியான்முற்கன்மபலநிகழ்வதிப்போதிச்செய்தி-யாதியாக வரும்பயனென்றறிதலுரையாலநுமாநம்" (சி. சி. அளவை. ௩௨.)

**உரையிலக்கணம்**— நூலுரைக்கு வேண்டுமிலக்கணம்; அது: பாடம், கருத்து, சொல்வகை, சொற்பொருள், தொகுத்துரை, உதாரணம், வினா, விடை, விசேடம், விரிவு, அதிகாரம், துணிவு, பயன், ஆசிரியவசநம் என்பதின் வகைத்து.

**உரையிற்கோடல்** — (இலக்கணம்) தந்திர உத்திகளுள் ஒன்று; அது: மூலத்திற் சொல்லாதவைகளையும் உரையிற் சொல்லுதல். (நன். பொதுப்பா. ௧௪. உரை.)

**உரைவன்மை** — 1. சாதுரியப் பேச்சு. 2. சொற்சாமர்த்தியம்.

**உரைவு**—தேய்வு.

**உரோக்கம்**—கையிருப்புப்பணம்.

**உரோட்டி**—அப்பம். [தெலுங்கு.]

**உரோகக்கிநம்**-ஔஷதம். [ரோகஹ்ந: ரோக-நோய். ஹந-அழிப்பது.]

**உரோககம்**— இலங்கையிலுள்ள சிவனொளிபாதம் என்னும் மலை. [ரோஹண.]

**உரோககாரி**—வைத்தியன். [ரோகஹாரிந்: ரோக-நோய். ஹாரி-கெடுப்பவன்.]

**உரோகசஞ்சீவி**-ஒருவகைத்தைலம். (உ-ம்.) "சுகபலேச்சாறதன்பாலிவ்வடை...வாதஞ்சந்நியுகுகொடுஞ்சுவாசகாசங்களும்போ மூரோகசஞ்சீவியிதற்குரியபேரே" (தைல. தைலவ. ௩௨.) [சஞ்சீவியானது மரணத்தைத்தடுத்துச் சீவிக்கச்செய்யுந் தன்மையைப்போல் இத்தைலமும் மரணத்தையேதராநின்ற மகாவாதரோகங்களையும், விபரீதசந்நிபாதங்களையும், கொடியசுவாசரோகங்களையும் நீக்கி ரோகியைச்சீவிக்கச்செய்வதனால் உரோகசஞ்சீவித் தைலமெனக்கூறினர்.]

**உரோகசாந்தகன்**—உரோகசாந்தன்.

**உரோகசாந்தன்** — வைத்தியன். [ரோகசாந்த: ரோக- நோய். சாந்த- அடக்குவோன்.]

**உரோகசாந்தி**—ஆரோக்கியம், நோய்நீக்கம். [ரோகசாந்தி: ரோக- நோய். சாந்தி - தணிவு.]

**உரோகசிரேட்டம்**—சுரம்.

**உரோகஸ்தன்**—உரோகி.

**உரோகதி**—நாய்.

**உரோகம்**— 1. இறங்குதல். 2. உயர்த்தல். 3. எழும்புதல். 4. ஏறுதல். 5. ஒளியின்மை. 6. தளிர். 7. நோய். [ரோக.] 8. பூவரும்பு. 9. வளர்தல். [2, 3, 6, 9. ரோஹ.]

**உரோகராட்டு**—கயரோகம். [ரோகராஜ: ரோக-நோய். ராட்டு-இராசா.]

**உரோகாதம்**— 1. நெஞ்சிடித்தல். 2. மார்பிலடித்தல். [உரோகாத: உரஸ் -மார்பு. ஆகாத-அடித்தல்.]

**உரோகாயதநம்** — உடம்பு. [ரோகாயதந: ரோக-நோய். ஆயதந-இடம்.]

**உரோகி**—நோயாளி.

**உரோகிணி**— 1. ஒன்பதுவயசுப்பெண். (பராசர. ஆசார. ௩௭.) 2. கடுக்காய். 3. கடுரோகிணி. 4. நான்காம் நட்சத்திரம். (உ-ம்.) "இவளுரோகிணியென்னவேதொழத்தக்காள்" (பாரத. சம்பவ. உச.) 5. பலராமனுடையதாய். (உ-ம்.) "உன்னுதவத்தினுரோகிணிதன்பாலுதயஞ்செய்து" (உபதேச. பலரா. ௪.) 6. பீதரோகிணி. [ரோஹிணீ.]

**உரோகிணிதநயன்**—பலராமன்.

**உரோகிதம்**— 1. செந்நிறம். 2. செம்மரம். 3. மஞ்சள். [ரோஹித.]

**உரோகிதாச்சுவன்**—1. அக்கினி. 2. அரிச்சந்திரன்மகன். (உ-ம்.) "விறலரிச்சந்திரன்மைந்தன்-கைம்மையராகியொன்னலர் மகளிர்கலுழ்ந்தநீர்ப் பெருக்கி னெல்வளர்ந்து - செய்ம்முகத்தோங்கச் சினவுவாள்விதிர்க்குமுரோகிதாச்சுவனெனத் தெரிப்பார்" (கூர்மபு. சூரியன்மர. ௩௫.)

**உரோங்கல்**—உலக்கை. (பிங்கல. ௧௩௬௬.)

**உரோசநகம்**—எலுமிச்சை.

**உரோசநம்**—1. கோரோசநம். (உ-ம்.) "ஒணநற்றிரிரத்தமுரோசநம்"(தைல.தைலவ.௯௧.) 2. முள்ளிலவமரம்.

**உரோசநி**— 1. கடுகு. 2. கோரோசனை. 3. செந்தாமரை. [ரோசநீ.]

**உரோசனை** — 1. உரோசநி. 2. கோரோசனை. (உ-ம்.) "உரோசனைநிறத்தபொற்பரியே" (திருவிளை. நரிபரி. ௪0௧.) [ரோசநா.]

**உரோசம்** — 1. கோபம். (உ-ம்.) "சீரொன்றுதூதாயத்துரியோதனன்பக்-லூரொன்றுவேண்டிப்பெருதவரோடத்தால்" (நாலாயிர. வேலிக்கோ.௫.) 2. மாநம். 3. முலை. [1,2. ரோஷ. 3. உரோஜ: உரஸ்-மார்பு. ஜ-பிறந்தது.]

உரோசல்—உரோஞ்சல்.

உரோசமார்நம்— குதிரைகளுக்குள்ள நற்சுழிகளுள் ஒன்று. (பெரியபு. தடுத்தா. ௧௯. உரை.)

உரோசனம்—முள்ளிலவு.

உரோசனி—1. கடுகு. 2. கோரோசனை. 3. செந்தாமரை.

உரோசித்தல்—1. நாணுதல். 2. மானத்தாற் கிளர்தல்.

உரோஞ்சல்—உரிஞ்சுதல்(பிங்கல.உ௧௧எ.)

உரோஞ்சுதல்—உரோஞ்சல்.

உரோணி — 1. உரோகிணி நட்சத்திரம். (உ-ம்.) "விண்ணகமிருள்கொளவிளங்குவெண்மதி - யொண்ணிற வுரோணியோ டொளித்த தொத்ததே" (சிந்தா. நாம. ௧௬௯.) [ உரோஹிணி என்பதில் ஹி என்பது கெட்டது. 2. ஒருநோய். (உ-ம்.) "உருமிடிநாகமுரோணிகழலை" (திருமந்திர. அறன். ௪.)

உரோதநம்—1. அழுதல். (உ-ம்.) "நீ தோன்றி,உரோதநஞ்செய்துதிராவணஞ்செய்தமையால் உருத்திரனெனப் பெயர்பெறுவாயாகவென்றனன்" (கூர்மபு. அட்டமூ. ௧௧. உரை.) 2. கண்ணீர்.

உரோதநன்—புதன் என்னுங்கிரகம்.

உரோதநி—சிறுகாஞ்சொறி.

உரோதம்—1. ஒருநரகம். (உ-ம்.) "கருவையழித்தோன் உரோதமென்னு நரகத்தையுமடைவன்" (கூர்மபு. வருண. உஉ: உரை.) 2. தடை. 3. நீர்க்கரை. அது: "சீதரோதக்குருதித் திரையொரீஇ" (இராமா. இராவணன்சோக. ௧.) என்பதனாற்பெறப்படும். [ரோத.]

உரோபணம்— இறங்குதல்.

உரோமக்கட்டு—நிறைமயிர்.

உரோமக்கிழங்கு—வசம்பு.

உரோமகடணர் — சூதமுனிவர். (உ-ம்) "புராணங்களைக்கேட்டபொழுது மகிழ்வினால் மயிர்சிலிர்த்திருந்தமைகண்டவியாதர் அக்காரணத்தினால் உரோமகடணர் என்று பெயர்சூட்டினாரென்க" (கூர்மபு. இந்திரத்துய். ௯. உரை.) [உரோமஹர்ஷண.]

உரோமகருடம்—உரோமபுளகம். [ரோமஹர்ஷ.]

உரோமகுச்சகம்—உரோமகுச்சம்.

உரோமகுச்சம்—சாமரை.

உரோமகூபம்—மயிர்த்துவாரம். [ரோமகூப.]

உரோமசன்— 1. ஒரு முனிவன். ( உ-ம். ) "சரோருகரண்டம்விண்டாலொருமயிர்சலிக்குஞ்செங்கை-யுரோமசமுனியைநோக்கி" (பாரத. நிவாத. ௧௬௦.) 2. மயிருள்ளவன்.

உரோமத்துவாரம்—மயிர்த்துவாரம்.

உரோமப்பொடிப்பு— } மயிர்ச்சிலிர்க்கை.
உரோமபுளகம்— }
உரோமபுளகிதம்— }

உரோமபூமி—தோல்.

உரோமம் — 1. குறுகியமயிர். 2. மயிர். (உ-ம்.) "வேணிமுடித்தலுரோமமுகிர்வீழ்த்தும் வபநஞ்செய்யாமை" (சூத. வான. ௪.) 3. மயிர்ப்பரப்பு.

உரோமமுநி— பதினெண்சித்தரிலொருவர்.

உரோமரந்திரம்—மயிர்த்துவாரம். [ரோமரந்த்ர: ரோம-மயிர். ரந்த்ர-துளை.]

உரோமராசி—மயிரொழுங்கு.

உரோமரேகை— உரோமத்தினொழுங்கு.

உரோமாஞ்சம்— } 1. உரோமப்பொடிப்பு. [ரோமாஞ்ச.] 2.
உரோமாஞ்சலி— }
உரோமாஞ்சிதம் } குதுகலிப்பு.

உரோமாம்பரம்—1. கம்பளம். 2. சால்வை. [உரோமம்-மயிர். அம்பரம்-சீலை.]

உரோமாவலி—நாபிக்கு மேலுள்ள உரோமரேகை. [ரோமாவலீ: ரோம-மயிர். ஆவலீ-வரிசை.]

உரோமி—மயிர்ச்சிகைப்பூண்டு.

உரோருகம்—முலை. [ரோருஹம்: உரஸ் -மார்பு. ருஹம்-முளைத்தது.]

உல்— 1. கழு. 2. தேங்காயுரிக்குங்கருவி.

உல்கு—சுங்கம். (பெரும்பா. ௧௧௪. பக்.)

உல்குசெய்தல்— சுங்கம்வாங்குதல். (உ-ம்.) "உல்குசெயமதிநிறைந்தபலபண்டம்"

உல்குபொருள்—சுங்கப்பொருள்; அது: மரக்கலத்தினும் பண்டியினும் வரும் பண்டங்களுக்குவாங்கும் இறைப்பொருள். (உ-ம்.) "உறுபொருளு முல்குபொருளுந் தன்னொன்னார்த் - தெறுபொருளும் வேந்தன் பொருள்" ( வள். எ௫௬.)

உல்லகசநம் — 1. ஆகந்தம். 2. மயிர்ப்புளகம். [உல்லகஸந.]

உல்லங்கநம் — 1. கடந்துபோதல். 2. பாய்தல். [உல்லங்கந.]

உல்லம்—ஒருமீன்.

உல்லரி—தளிர்.

உல்லாகன்—1. சாமர்த்தியமுள்ளோன். 2. நோயுற்றெழுந்தோன். (சூ. நிகண். உ: சுசு.) [உலூாவ.]

உல்லாசம்—1. அத்தவாளம். (பிங்கல, கஉஅ௦.) 2. அத்தியாயம். 3. ஆநந்தம். (உ-ம்.) "உல்லா சமுடனேமுடிப்பானிசைத்தான்" (நல். பாரத. தருமசா. கo௫.) 4. உள்ளக்களிப்பு. 5. ஒளி. 6. வர்த்தித்தல். [உலூாவ.]

உல்லாசன்—உல்லாசக்காரன். (உ-ம்.) "உல் லாசமிராகுலயோகவித - சல்லாபவிநோதனும்" (கந்தரநு. உ.)

உல்லாடி—மெல்லிய ஆள்.

உல்லாபம்—1. துக்கம், உரோகம் முதலிய வைகளாகிய குரலின் விகாரம். 2. மழலைச்சொல். 3. மேற்கட்டி. [உலூாவ; உத் - மேல். லவ் -பேசல்.]

உல்லாபன்—உல்லாகன்.

உல்லி—1. ஒல்லி. 2. மெல்லியஆள். 3. மெல்லியது. 4. வெங்காயப்பூ.

உல்லிங்கநம்—1. அவமதிப்பு. 2. கடக்கை. 3. கலக்கம். 4. சண்டைமிகுதி. 5. நிந்தை. 6. மீறுதல்.

உல்லியம்—கிணறு.

உல்லியர்— கூபநூலோர். (சூ. நிகண். உ: கஉ.)

உல்லு—உல்.

உல்லுகம்—கொள்ளி.

உல்லுமுகம்—நெருப்புக்கொள்ளி. [உலூ—ப ஃ-வம.]

உல்லேகநம்— 1. உயர்த்துதல். 2. எழுது தல். 3. கிண்டுதல். 4. சீவுதல். 5. வாந்திபண்ணல். [உலேவடநம.]

உல்லேகம்— 1. உச்சரிப்பு. 2. ஒரலங்காரம். [உலேவ.]

உல்லேற்றல்—கழுவேற்றல்.

உல்லோசம்—மேற்கட்டி. [உலோச]

உல்லோலம்— பெருந்திரை, மகாதரங்கம். [உலோல.]

உல—உலவென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும்.

உலக்குதல்—உலத்தல்.

உலக்கை—1. அழிதல். (உ-ம்.) "பொருப் புலக்கையுற்றலமர" (பாரத. பதினெட். ரு௦.) 2. இரும்பினால் உலக்கைபோலச் செய்யப்பட்ட ஓராயுதம். (உ-ம்.) "உலக்கைசூலம்வேல்" (கந் தபு. சத. கரு.) 3. தானியம் முதலியவைகளை உரலிலிட்டுக்குற்றுதற்காக மரமுதலியவைகளா ற்செய்து அடியில் இருப்புப்பூண் இடப்பட்ட தண்டம். (உம்.) "அவலெறியுலக்கைபோயதிர த்தாக்கலும்" (தணிகை. நகரப். ௩௯.) 4. திருவோணநட்சத்திரம். (சூ. நிகண். க: எசு.) 5. மெருகன்கிழங்கு. (உ-ம்.) "அறற்போக்குலக் கைப்பொடியோர்படி" (தைல. தைலவ. அச.)

உலக்கைக்கொழுந்து— 1. உலக்கை நுனி. 2. உலக்கை நுனிபோலக்கூர்மையற்றது.

உலக்கைப்பாட்டு—வள்ளைப்பாட்டு. (உ-ம்.) " பறவைப்பேடுகளுலக்கைப்பாட்டால் " (வள் ளுவமா. ரு. உரை.)

உலக்கையாணி—பூட்டினவோணி.

உலக்கைவள்ளி—ஒருவகை வள்ளிக்கிழங்கு.

உலகங்காத்தான்—அவுரிச்செடி.

உலகசஞ்சாரம்—உலகவாழ்வு.

உலகசயன் — புத்தன். [உலகத்தைவென் றோனென்றபடி.]

உலகசீலம்—உலகநோன்பு. (மணிமே.)

உலகதருமணி — உலோகதர்மணி. (உ-ம்.) "உலகதருமணியிற் பரவுசிவதருமணியிற்பயின் றவர்க்குமுந்நாள்" (தணிகை. அகத். ௩௩௪.)

உலகதன்மணிதீக்கை – சபீசதீக்கையினொ ருவகை. இஃது அபரமுத்தியைக்கொடுக்குந்தீ க்ஷை. (உ-ம்.) "அத்தீக்கை யபரமுத்தியைக் கொடுக்குமுலகதன்மணிதீக்கையெனவும் பரமு த்தியைக் கொடுக்குஞ் சிவதன்மணியெனவுமிர ண்டாம்" (சி. சி. அ. ரு. மறை.)

உலகநடை – உலகத்தாரொழுகுமொழுக்கம். [வள்ளுவர்குறளிலே அரசியலிலே பரிமேலழ கர் "உலகநடையாவது ஒப்புரவுசெய்தல், புறந் தருதல், பிழைத்தனபொறுத்தல் என்றிவைமு தலாயின" என்பர். (வள். ருஎஉ.)]

உலகநாதன் — 1. அரசன். 2. கடவுள். 3. பிரமன்.

உலகநீதி — 1. இயல்பானநீதி. 2. உலகந டை. 3. ஒருநூல். 4. தேசவியற்கைநீதி. 5. நன் னெறி.

உலகநேத்திரன்—சூரியன்.

உலகநோன்பு—துறவாது விரதங்காத்தல். (மணிமே.)

உலகப்பற்று—லௌகிகவிஷயப்பற்று.

உலகப்புரட்டன்—மிகுபுரளிக்காரன்.

உலகபாரணன்—விட்டுணு. [உலகம்-பூமி. பாரணம்-உண்ணல்.]

உலகபாலர்—உலோகபாலர். (உ-ம்.) "ஒத் தசீருலகபாலர்" (சேதுபு. பாவநா. ௩.)

உலகபாவநி — உலகத்தைச் சுத்தஞ்செய்ய

வன். (உ-ம்.) உலகபாவநியாயுயர்கங்கையை" (வேதாரணியபு. கங்கையாதி. கஉ.)

**உலகம்**—1. ஆகாயம். 2. உயர்ந்தோர், நன்மக்கள். (உ-ம்.) "உலகம்புகழ்ந்தவோங்குயர்விழுச்சீர்" (திருமுரு. உ௬௪.) 3. உலகத்தன்மை. 4. உலகத்திலுள்ள சீவான்மாக்கள். (உ-ம்.) "உலகமுவப்ப" (திருமுரு. க.) 5. உலகவநுபவம். (உ-ம்.) "அருளிலார்க்கவ்வுலகமில்லை" (வள். உ௪௭.) 6. ஒழுக்கம். (திருமுரு. க. உரை.) 7. சிருட்டிப்பொருள். 8. சிவதத்துவமுதற்சுத்தவித்தியாதத்துவமீருகிய சுத்தாத்துவப்பொருள்களும், காலதத்துவமுதற்பிரகிருதிதத்துவமீருகியசுத்தாசுத்தாத்துவப்பொருள்களும், குணதத்துவமுதற் பிருதிவிதத்துவமீருகிய அசுத்தாத்துவப்பொருள்களும் ஆகிய ஒருவன், ஒருத்தி, ஒன்று என்று சுட்டியுணரப்படுஞ் சேதநவசேதநப் பிரபஞ்சம். (கூர்மபு. இந்திரத்து. எ. உரை.) 9. திசை. (உ-ம்.) "ஒருவனுெருத்தியொன்றென்றுரைத்திடுமுலகமெல்லாம்" (சி. சி. க: க.) 10. நாடு. 11. நிலம். (உ-ம்.) "மாயோன் மேயகாடுறையுலகமும்" (தொல். பொருள். ரு.) 12. பூமி. (உ-ம்.) "உலகமன்னவன்றிருநாளோலிமுடியணிந்து" (சிந்தா. கநக. உ.)

**உலகமலையாமை** — நூலுக்குரிய பத்தழகினென்று; அஃது: உயர்ந்தோர்வழக்கத்தோடு மாறுபடாமை. (நன். கந.)

**உலகமலைவு**— ஓரலங்காரம். அஃது: உலகத்து ஒழுகலாற்ருேடு மாறுபட்ட ஒழுக்கம் நிகழ்ந்தனவாகக்கூறுதல். (வ-று.) "அலைகடல்களேழுந்தூர்த்தந்தரத்தினூடே- மலையனையமால்யானையோட்டிக்-கலவாரை-நீருக்கிவையம் நெடுங்குடையின்கீழ்வைத்தான்-மாருச்சீர்மாநிலத்தார் மன்" இதனுள் ஒரு நிலவேந்தனை எழுகடலையுந்தூர்த்தானுகவும் ஆகாயத்திலே தன் யானையைச் செலுத்தி வென்ருனுகவும் உலகொழுக்கோடு மாறுபடக் கூறினமையின் உலகமலைவாயிற்று. (தண்டி. கக௯.)

**உலகமளந்தான்**—விட்டுணு. (உ-ம்.) "உலகமளந்தானேதாலேலோ" (நாலாயிர.மாணிக்க. உ.)

**உலகமாதா** — 1. இலக்குமிதேவி. 2. சரசுவதிதேவி. 3. செம்மணத்தக்காளி. (உ-ம்.) "உலகமாதாவைச் சேர்வுற்றுயருநிற்குண்டியீதே" (தைல. தைலவ. கக.) 4. பார்ப்பதிதேவி.

**உலகமீன்றள்**—பார்ப்பதிதேவி. (உ-ம்.) "வந்திடு முலகமீன்ருள் வதுவை யஞ்சாலைநண்ணி" (கந்தபு. திருக்கல். ௬௭.)

**உலகமுண்டோன்**—விட்டுணு. (உ-ம்.) "உம்மையதனி லுலகமுண்டோன்றன்மகணீ" (கந்தபு. வள்ளி. கக௯.)

**உலகர்**—1. உலகத்தார். (உ-ம்.) "உலகர்சேருறுதிப்பயனெவற்றினுக்கும்" (சிவதத்து. எ.)

**உலகரட்சகன்**—உலகத்தைக்காப்போன்.

**உலகரட்சணியம்**—உலகத்தாரையீடேற்றுகை.

**உலகரட்சை**—உலகரட்சணியம்.

**உலகவழக்கம்**—உலகவழக்கு.

**உலகவழக்கு** — உலகத்தார் பேசும்பாஷையிலே நடைபெறும்வழக்கம்.

**உலகவறவி**—தருமசாலை. (மணிமே.)

**உலகவாதம்**—ஐதிகம். (சி. சி. அளவை. க. சுப்பிர.)

**உலகவிடைகழி**—ஊர்வாயில். (மணிமே.)

**உலகளந்தோன்**—விட்டுணு.

**உலகாசாரம்**—உலகவொழுக்கம்.

**உலகாயதம்**—உலோகாயதமதம். (புறச்சமயமாறினென்று) அது: சார்வாகன்கோட்பாட்டின்படி உலகவின்பமே சிரேட்டம் என்னும் ஒரு நிரீச்சுரவாதிமதம்.

**உலகாயதன்**— உலோகாயதசமயத்தோன்.

**உலகியல்**—உலகநடை. (உ-ம்.) "கண்ணோட்டத்துள்ளதுலகியல்" (வள். ருளஉ.)

**உலகியற்சொல்**—உலக்வழக்கு. (மணிமே.)

**உலகு**—1. ஆகாயம். 2.உயர்ந்தோர்கூட்டம். (உ-ம்.) "என்னையின்றென்சொலாதுலகே" (பாரத. தற்சிறப். ரு.) 3. உயிர்கள். (உ-ம்.) "தினற்பொருட்டாற்கொல்லாதுலகெனின்" (வள். உருசு.) 4. ஒழுக்கம். 5. திசை. 6. நாடு. 7. நிலம். (உ-ம்.) "ஏழுலகுடையானலமரவே" (பாரத. ஐந்தாம். கரு.) 8. பிரபஞ்சம். (உ-ம்.) "வாரியாலுலகழிந்திடுமெல்லையும்" (கந்தபு. சூரபன்-வதை. கஎ௫.)

**உலகுண்டவன்**—விட்டுணு. (உ-ம்.) "உறுதி பேசினன்வாலியாருயிருண்பனென்றுலகுண்டவன்" (சேதுபு. சேதுவந். அ.)

**உலதுலம்**—1. திப்பலி. 2. திரிபலை.

**உலகேசன்**—உலோகேசன் என்னும்பிரமா (உ-ம்.) "உலகேசனெனும்விரிஞ்சனுறையு நாளில்" (சேதுபு. சக்கர. கஉ.)

**உலகோம்பல்**-அரசரது தொழில்களுளொன்று; அஃது: உலகுபுரத்தல்.

**உலகோர்**—பெரியோர். (உ-ம்.) "தாராதரமெனவுலகோர்பலகலைதருமா" (கோயிற்பு. திருவிழா. ௩௦.)

**உலங்கலம்**—கற்பாத்திரம்.

**உலங்காரணை**—அவுரி.

**உலந்த**—1. கொசுகு. (உ-ம்.) "அனலிசே ருலங்கெனவுலேந்தனர்" (கந்தபு. திருவிளை. அ௦.) 2. திரண்டகல். (பிங்கல. ரு௦எ.)

**உலட்டுநூல்** — உலண்டாற் செய்த நூல். (உ-ம்.) "உலட்டுநூல் பருத்திநூல் சிலம்பிநூல் கள்" (சி. சி. பர. சௌத்திராந்திகன்மறு. க௦.)

**உலண்டம்**—கோற்புழு.

**உலண்டு**—பட்டுநூலை யுண்டாக்குங் கோற்புழு. (உ-ம்.) "மேற்பாட் டுலண்டினிறவொக்கும்" (கலி. க௦க.) "கடத்தினுக்குமண்ணினையும் நூற்கு உலண்டினையுங் காரணமென்பது போல" (வேதாசூ. கஈச. உரை.) [இதனைக் கோசகாரப்புழு என்றுஞ்சொல்வர்.]

**உலத்தல்** — 1. அழிதல். (உ-ம்.) "கொடி கொடேரிழந்துபோ-யுலக்கவிட்டு" (பாரத. பதிஞ. உஈ.) 2. கெடுதல். (உ-ம்.) "மலக்குறுமனத்தினும் வருத்தமுற்றவு- மூலக்குறநீக்கி" (கந்தபு. திருவவ. சு௦.) 3. சாதல். (உ-ம்.) "உலந்த னனசமுகன்" (கந்தபு. முதனாட். கஎ௦.)

**உலத்திசூலை**—ஒருவகைச்சூலை.

**உலந்தவர்**—அழிந்தவர். (உ-ம்.) "நட்புலந் தவரால்" (பாரத. நச்சு. ஈஈ.)

**உலப்பு**—1. குறைவு. (உ-ம்.) "உலப்புறு தெவையுமீவோர்" (கந்தபு. திருவவ. கூ.) 2. கேடு, தோல்வி. (உ-ம்.) "ஊழியினுதன்றுனு முருப்பினுமுலப்பிலாதோர்" (பாரத. நிவாத. கச.) 3. சாவு. (உ-ம்.) "உலப்புற்றோர்-காடதே நடம்புரியிடம்" (கந்தபு. தவங்காண். கரு.)

**உலப்புதல்** — 1. அலப்புதல். 2. ஆர்த்தல்.

**உலபம்**—நெருங்கிப் படர்ந்தகொடித்திரள்.

**உலம்**—திரண்டகல். (உ-ம்.) "உலங்கலந்துயர்ந்ததோளான்" (சிந்தா. பதி. உ.)

**உலம்பல்** — 1. அலப்பல். (உ-ம்.) "ஓல்கா தார்வாய்விட்டுலம்புப" (நீதிநெறி.எஉ.) 2. ஒலித்தல். (உ-ம்.) "உலக்கவிட்டளக்கர் வாயுலம்பவோடுகலமென" (பாரத. பதினன். உஈ.)

**உலம்பு**—உலம்பென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும், வினைத்தொகையும்.

**உலம்புதல்**—உலம்பல்.

**உலம்வரல்**—சுழலல். (உ-ம்.) "வாயாவன்கணிக்குலம்வருவோரே" (புறநா. உ௦எ.)

**உலமரல்** — 1. அச்சக்குறிப்பு. (சூ. நிகண். அ: ருசு.) 2. துன்பம். (சூ. நிகண். அ: எஈ.)

**உலமருதல்**—உலமரல்.

**உலர்ச்சி**—1. காய்வு. 2. வாட்டம்.

**உலர்த்தல்** — 1. அதிசுட்கரோகம். (உ-ம்.) " மேகச்சூடுலர்த்தலும்போமுணரே " (தைல. தைலவ. சகஈ. உரை.) 2. உலர்த்துதல்.

**உலர்த்திச்சூலை**—ஒருநோய்.

**உலர்த்துதல்**—காயச்செய்தல். (உ-ம்.) "ந னைந்தவான் றுகிலுலர்த்திய வெடுத்தெடுத்துதறல்" (சேதுபு. கந்த. சக.)

**உலர்தல்**—1. அழிதல். (உ-ம்.) "தங்கண்டமீதுலராதசாமவேதமார்ப்பவர்போல்" (திருவிளை. மாமனு. உஈ.) 2. காய்தல், ஈரம் வறத்தல். (உ-ம்.) "ஆசெனவழித் தெறிந்துலர்ந்த வாப்பியும்" (தணிகை. நாட்டு. கரு.)

**உலர்ந்தபுல்**—திரணம். (பிங்கல. உகூஅ.)

**உலர்மரம்**—வானம். (பிங்கல. உஅஈரு.)

**உலரல்**— காய்தல். (உ-ம்.) "ஒத்ததிருச்சந் நிதிமுன்னுலரப்போட்டிவைசெய்வான்" (திருநெல். நெல்லு. உரு.)

**உலருதல்**—உலர்தல்.

**உலவக்காரன்**—1. உலோபக்காரன். 2. பிறரில்லிற்கொஞ்சமாயுண்பவன்.

**உலவம்**—உலோபம்.

**உலவமரம்**—இலவமரம்.

**உலவல்**—1. உலாவுதல். (உ-ம்.) "ஊற்றமொடுலவல்செய்யுமொருவனே" (கந்தபு. திருவவ.அ.) 2. குறைதல். (உ-ம்.) "உலவாமாற்றருநீருறைவன" (சிவப்பிர. உ. உக.)

**உலவாக்கிழி**—எடுக்க எடுக்கப்பொருள்குறையாக்கிழிக்கட்டு. (உ-ம்.) "கன்னிநாடன்றனக்கிசைந்த-படியாலுலவாக்கிழிகொடுத்தபடியையறிந்தபடிபகர்வாம்" (திருவிளை. உலவாக்கி. க.)

**உலவாநிற்றல்**—பரத்தல். (உ-ம்.) "இன்பவெள்ளமுலவாநிற்கும்" (தாயு. நின்ற. ௧.)

**உலவித்தல்** — 1. உலோபமாயிருத்தல். 2. ஒறுத்தல். 3. கூசியொழுகல்.

**உலவு** — 1. உலாவல். (உ-ம்.) "எங்குமுலவுற்றது" (கந்தபு. தகரேறு. கரு.) 2. குறைதல். (உ-ம்.) "உலவிறன்படைஞரை" (தணிகைப். சீபரி. உசுஉ.)

**உலவுதல்**—1. உலாவுதல். 2. ஒழிதல்.(உ-ம்.) "ஊழியறுத்திடினும்முலவாதால்" (இராமா. படைத்தலை. கஈ.) 3. குறைதல். 4. சஞ்சரித்தல். (உ-ம்.) "பிரமாதிமுடிவில்விடையூர்தியருளாலுலவுவீர்" (தாயு. சித்தர். ஈ.)

**உலவை** — 1. ஊர். 2. ஓடைமரம். (உ-ம்.) "அடவிதனிலுளவுலவைகள் தளிர்விட" (திருப்பு. ருஉ.) 3. காற்று. (உ-ம்.) "உற்றவுலவையிடையோர்புலிங்கமூட்டியக்கால்" (கந்தபு. மார்க்க. உஅ.) 4. கிலுகிலுப்பை. 5. குடி. 6. குலம். 7. தழை. (உம்.) "உரியபுற்கொடிகொடாவீயுலவையினேப்பி" (இரகு. தேனு. ஈரு.) 8. மரக்கொம்பு. (உ-ம்.) "உலவைநீள்வனத்து" (இரா

மா. வரைக். எ.) 9. மரப்பொந்து. 10. முல்லைக்கான்யாறு. [பிங்கலத்தில் உயவையென்றிருக்கின்றது.] 11. வள்ளிக்கொடி. 12. விலங்கின் கொம்பு. (உ-ம்.) "மதவேழமுலவை-கொண்டலைத்தெறிய" (தணிகை. அகத். உஅச.)

உலவைக்குலம் — வாத ரோகக் கூட்டம். (உ-ம்.) "வழுத்துலவைக்குலமுழுதுஞ்சிற்றுளி முன்வரையாம்" (தைல. தைலவ. அஅ.)

உலவைநாசி—திப்பலி.

உலவையான் — வாயுதேவன். (உ-ம்.) "அண்டருமுலவையானையவுணர்மாத் தலைவன்பாரா" (கந்தபு. அரசு. எ.)

உலறல்—1. காய்தல். 2. சினத்தல். (உ-ம்.) "தனைத்தான் சிதறமோதித்தகர்த்தேயுலறியலறி" (ஞானவா. மநத். சு.)

உலறுதல் — 1. காய்தல். (உ-ம்.) "உலறுதலையோமையும்" (சிலப். காடு. எடு.) 2. சிதைத்தல். 3. சிலும்புதல். 4. சினத்தல். 5. பொலிவழிதல். (உ-ம்.) "வயங்கிழையுலறியவடியின்" (சிறுபா. கஅ.)

உலா—ஒரு பிரபந்தம். அஃது: பேதை முதலிய எழு பருவப்பெண்களுங் கண்டு மயங்கும்படி தலைவன் பவனிவருதலைக் கலிவெண்பாவாற்கூறுவது. (உ-ம்.) "திறந்தெரிந்தபேதை முதலெழுவர்செய்கை-மறந்தயரவந்தான்மறுகென்-றறைந்தகலி - வெண்பாவுலாவாம்" (வெண்ப்பாட். உஎ.) 2. பவனி.

உலாதுமம் —
உலாதுனும்— } மனோசிலை.
உலாங்கம் —

உலாங்கிலி—காவட்டம்புல்.

உலாங்கு—1. காவட்டம்புல். 2. கிலுகிலுப்பை.

உலாஞ்சுதல்—1. கிறுகிறுத்தல். 2. தள்ளாடுதல்.

உலாத்தல்— 1. உலாவச்செய்தல். 2. உலாவுதல்.

உலாத்து—1. உலாத்தென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 2. உலாவச்செய்தல். 3. உலாவுகை.

உலாத்துக்கட்டை—கதவுநின்றுடுஞ்சுழியாணி.

உலாத்துக்கதவு—பிணையற்கதவு.

உலாத்துதல் —உலாத்தல்.

உலாப்போதல்—பவனிபோதல்.

உலாம்—உவமைச்சொல். (சிந்தா.)

உலாமடல் — ஒரு பிரபந்தம்; அஃது: ஒரு பெண்ணைக் கனவிற் புணர்ந்தோன் விழித்தபின் அவன்பொருட்டு மடலூர்வேனெனக் கலிவெண்பாவாற்கூறுவது. (உ-ம்.) "கனவினொருத்தியைக்கண்டுபுணர்ந்தோ - னனவினவள்பொருட்டாகநானே - யூர்வன்மட லென்றுரைப்பதுலாமடல்" (இலக்கணவி. அருஎ.)

உலாமா—கச்சமரம்.

உலாய்—1. இயங்கி, நிலைபெயர்ந்து. (புறப்பொ.) 2. சூழ்ந்து. (சிந்தா.)

உலாவரல்—1. சஞ்சரித்தல். (உ-ம்.) "கராமுலாவருபைந்தடமும்" (பாரத. நாடு. அ.) 2. பவனிவருதல். (உ-ம்.) "வால்வளைமணித்தீபங்கண்முதிர- வுழுவுசாலணிவீதிதோறூர்ந்துலாவருமால்" (இரகு. நாட்டு. கரு.)

உலாவல்—உலாவுதல்.

உலாவு—1. உலாவென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 2.சஞ்சரித்தல். (உ-ம்.) "உலாவுறு காலிலாதமுடவனே" (தணிகை. அகத். ருகடு.)

உலாவுதல்—1. அசைதல். (உ-ம்.) "உலகங்கள்கீழ்மேலவாகப்பெருங்காற்றுலாவின்" (தாயு. சித்தர். ரு.) 2. ஆடியசைதல். (உ-ம்.) "துறைத்தோணி நின்றுலாந் தூங்கு நீர்ச்சேர்ப்ப" (ப.மொ.எ.டு.)3. சாரிபோதல். 4. பொழுதுகழித்துவிளையாடல். (உ-ம்.) "மன்றுதொறுலாவு மலர்வாவிதொறுலாவும்" ( கந்தபு. திருவிளை. ரு.) 5. மெல்லநடத்தல். 6. விளையாடல்.(உ-ம்.) " உரைதருகாமாதிகளா முலூகநிரையுணர்வெனும் விண்ணுலாவுமன்றே" (ஞானவா. வைராக். எசு.)

உலிந்தம்—ஒருதேயம். [உலிந்த.]

உலிமணி—நாயுருவி.

உலிற்கள்—வெண்கலம்.

உலு— தினை முதலியவற்றின்பதர். [போதல் எனப்பொருள்படும். [illegible] . என்பதினின்று வந்ததுபோலும்.]

உலுக்குதல்—குலுக்குதல்.

உலுக்குமரம்—மிண்டிமரம்.

உலுடநம்—1. உருளுதல். 2. புரளுதல்.

உலுடிதம்—1. துவாரம். 2. நிலத்திலுருளுதல்.

உலுண்டநம்—1. உருட்டுதல். 2. களவுசெய்தல். 3. கொள்ளையிடுதல்.

உலுத்தத்தனம்— உலோபத்தன்மை.

உலுத்தம் — 1. உலோபம். 2. பேராசை. [[illegible].]

உலுத்தல்—உதிர்த்தல்.

உலுத்தன்—1. பொருளாசைக்காரன், ஈகையில்லாதவன். 2. வாங்கின கடனைக் கொடாதவன்.

**உலுப்பை**—1. அடைந்தோர்க்களிக்கும் ஊண்பண்டம். (உ-ம்.) "உம்பர்கோன்வைத்தவுலுப்பையென" (வருணகுலா. உ௦.) 2. காய்வருக்கம். 3. கோயின்முதலியவற்றிற்கு அனுப்புங் காணிக்கை. 4. சாமான்பை. 5. சிறுகாய். 6. பெரியவர்களுக்கு அனுப்பும் ஊண்பண்டம்.

**உலுப்பைகட்டுதல்**— பேரியோர்தயவுசம்பாதித்தற்காகவெகுமதியநுப்புதல்.

**உலுப்பைகொடுத்தல்** – கீழ்ப்பட்டவர்க்குப் படிகொடுத்தல்.

**உலும்பினீவனம்** — கௌதமபுத்தர்பிறந்தவிடம். (மணிமே.)

**உலுவம்**—வெந்தயம்.

**உலுவா**— பெருஞ்சீரகம். [வழக்கப்படியும் உவின்கிலோப்படியும் உலுவா வெந்தயமே.]

**உலுவாவரிசி**—வெந்தயம்.

**உலூகம்**—1. ஒருவகைப்பரி. 2. குங்குலியம். 3. கூகை. (உ-ம்.) "பேருலூகமும்பிணையுநல்கிய" (பாரத. உலூக. ரு.)

**உலூகலகம்**—1. குங்குலியப்பூண்டு. 2. குங்குலியம்.

**உலூகலம்**— 1. குங்குலியம். 2. மரவுரல். (உ-ம்.) "காருலூகலங்கரடிக்களிறு" (பாரத. உலூக. ரு.)

**உலூகன்**–1. இந்திரன். 2. ஒருபிராமணன்.

**உலூகாரி**—காகம்.

**உலூதை** — 1. எறும்பு. 2. சிலந்திப்பூச்சி. (உ-ம்.) "ஆனவைம்பொறியுண்டிநித்திரையச் சமைதுநமாதியா - வூனில் வந்திடுமுன்பிலாத வையென்றுரைக்கினுலூதைபோல்.(சி.சி.பர.உலோ. மறு அ.) [வ-இ-கா.]

**உலூபி**— 1. அருச்சுனனை விவாகஞ்செய்த ஒரு நாககந்நிகை; இவள் இராவானுக்குத்தாய். (உ-ம்.) "ஒங்கயல்விழியாரிலுலூபிப்பெயரவளோடு" (பாரத. அருச்சுனன்றீர். அ.) 2. ஒருவகைமீன்.

**உலை**— 1. உலைச்சாலை. (உ-ம்.) "புரிபுனிதவுலை" (தைல. வைத்திய. கக.) 2. உலையென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 3. கொல்லர் முதலிய கம்மியர் இரும்பு முதலிய லோகங்களைக் காய்ச்சி வேலை செய்தற்காக அக்கினி மூட்டியிருக்குங்குண்டம். (உ-ம்.) "கொல்லுலைவேற்கணல்லார்" (நைடத. நாட். உஎ.) 4. நடுக்கம். (உ-ம்.) "உலைதருமலிநமொன்றை"(ஞானவா. வைரா. உச.) 5. நெருப்புமூட்டப்பட்ட அடுப்பு. 6. பாகஞ்செய்தற்கு அடுப்பில் வைத்த பாத்திரத்திற் பெய்யு நீர். (உ-ம்.) "தேக்கநிலாரமாட்டிச்சிருணத் தசும்பரொன்றில்-வாக்கியவுலைப்பெய்தேற்றி" (கந்தபு. வில்வல-வதை. கரு.) 7. பாகஞ்செய்தற்கு அடுப்பிலேற்றும் பாத்திரம்.

**உலைக்கட்டல்** — பொங்கற்பானைக்கு மாவிலைசெருகியகயிறுகட்டல்.

**உலைக்களம்**—1. அடுப்பு. 2. கொல்லனுலையிடம்.

**உலைக்குறடு**— உலைமுகத்தில் இரும்பெடுக்குங்குறடு.

**உலைச்சல்**—உலைத்தல்.

**உலைசல்**—உலைதல்.

**உலைத்தண்ணீர்**—1.இரும்புதோய்க்குநீர். 2. பாகஞ்செய்யவைக்குந்தண்ணீர்.

**உலைத்தல்** — 1. அலைத்தல். 2. அழித்தல். 3. மநங்கலங்கச்செய்தல். (உ-ம்.) "உலைத்துவிட்டகமலம்" (நைட. கைக். ௪௦.)

**உலைத்துருத்தி** — கொல்லுலையிலே நெருப்பெரித்தற்காகப் பிரயோகிக்குங் குழலோடணைந்த தோற்பை. [உலை - உலைமுகம். துருத்தி - தோல்.]

**உலைதல்**—1. அலைதல். 2. கலைதல். 3. கெடுதல். (உ-ம்.) "அலையாழிமிசைத்துயில்கூர்பண்ணவனேமுதலோர்களமர்செய்தாலு - மூலையாது கடந்திடுபோராற்றலொடும்" (கந்தபு. வரம். உ௦.) 4. சீரழிதல். 5. நிலைகுலைதல். (உ-ம்.)"சாரதக்குழாமுலைதலும்" (தணிகை. சீபரி. சஎஎ.) 6. பெலங்குறைதல். 7. மநங்கலங்கல். (உ-ம்.) "உலைந்தனர்முனிவர்" (கந்தபு. சூரன்ற. அ.) 8. வருந்தித்திரிதல். (உ-ம்.) "பணிந்தன வாற்றியே-யுலைவர் வைகலு மூசலினீர்மையார்"(கந்தபு. தேவரையே. உ.)

**உலைநீர்**—1. இரும்புதோய்க்குநீர். 2. பாகஞ்செய்யவைக்குநீர்.

**உலைப்பு**–1. அலைப்பு. 2. அழித்தல். (உ-ம்.) "உலைப்புறவனவதிலுவந்து தோய்நர்க்கே" (தணிகை. அகத். உக.) 3. வருத்துதல்.

**உலைமுகம்**—கொல்லனுலையிடம்.

**உலைமுக்கு**—கொல்லனுலையின்றுவாரம்.

**உலைமூட்டல்** — கொல்லனுலையில் நெருப்புமூட்டல்.

**உலைமூடி**—உலைப்பானையின் மேன்மூடி.

**உலையாணிக்கோல்**—குட்டுக்கோல்.

**உலையிற்பிணந்தின்னி**— மாமிசபேதி.

**உலையேற்றுதல்** — உலைவைத்தல். (உ-ம்.) "தமக்கென்றுலையேற்றார்" (ஆசாரக். ௬௬.)

**உலைவு**—1. அச்சம். (உ-ம்.) உலைவுறுசைச

வத்துடன்" (ஞாவா. வைரா. அசு.) 2. அலைவு. 3. இளைப்பு. (உ-ம்.) "உலைவின்றித்தாழாது ஞற்றுபவர்" (வள். சுஉ0.) 4. கெடுதல். (உ-ம்.) "ஒன்னுத்தெவ்வருலைவிடத்தார்த்து" (பெரும் சகக.) 5. தரித்திரம். (உ-ம்.) "உயங்குபடர்வருத்தமுலைவுநோக்கி" (புறநா. கடு0.) 6. நடுக்கம்.

**உலைவைத்தல்** — உலைப்பானையையடுப்பில் வைத்தல்.

**உலோடுக்து**—1. ஓரொலிக்குறிப்பு. 2. வெறுமை.

**உலோகக்கட்டி**— பஞ்சலோகத்தையுருக்கிக்கூட்டிய கட்டி.

**உலோககர்த்தர்**—உலகத்தைச் சிருட்டித்தவர். [உலோகம்-பிரபஞ்சம். கர்த்தர்-செய்தவர்.]

**உலோககாந்தம்**—காந்தக்கல்.

**உலோககாரன்** — கொல்லன். [லோஹகார: லோஹ-கிட்ட. கார-செய்வோன்.]

**உலோககிட்டம்** — இரும்புக்கறை. [லோஹகிஷ்ட: லோஹ-இரும்பு. கிஷ்டம்-கறை.]

**உலோகசித்து**—1. உலோகத்தை வென்றவன். 2. புத்தன். 3. வச்சிரக்கல். [1, 2. லோகஜித: லோக-பிரபஞ்சம். ஜித-வென்றவன் 3. லோஹஜித.]

**உலோகத்திரம்**—வெள்ளிலோத்திரம்.

**உலோகத்திரயம்**— சுவர்க்கம், பூமி, பாதாளம் என்னும் மூன்றுலோகம். [லோகத்ரய: லோக-உலகம். த்ரய-மூன்று.]

**உலோகதர்மிணி**— சபீசதீக்கையினொருவகை; அது: பௌதிகாசாரியர் திரோதாநசத்திரூபசிகாசேதமின்றிக் கிருகஸ்தனுக்குச் செய்யுந்தீக்ஷை; இஃது: அபரமுத்தியைக்கொடுப்பது. (சி. சி. அ: ரு. சிவாக்.)

**உலோகதாதா**—கடவுள். [லோகதாதா: லோக-உலகம். தாதா-படைத்தவன்.]

**உலோகதாது**—துத்தபாஷாணம்.

**உலோகதாரம்**—நரகம். [லோஹதார.]

**உலோகநாதன்**—உலகநாதன்.

**உலோகப்பிரசித்தம்**—உலோகத்திலெங்ஙனுமறியப்பட்டது.

**உலோகப்பிரவாதம்** — உலோக வாதம். [லோகப்ரவாத.]

**உலோகபற்பம்**—அயவெள்ளை.

**உலோகபாந்தவன்** — சூரியன். [லோகபாந்தவ: லோக-உலகம். பாந்தவ-சுற்றத்தவன்.]

**உலோகபாலர்**—1. அரசர். 2. திக்குக் காவலராகிய இந்திரன், அக்கினி, இயமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசாநன் என்பவர். (உ-ம்.) "இந்திரன்முதலாம்லோகபாலரைநன் கேத்தி" (மச்சபு. விருக்க. ரு.) [இவரோடு பிரமவிட்டுணுக்களைச் சேர்த்துப் பதின்மரென்பாருமுளர்.] (சைவச. பொது. ருOஉஅ. உரை.)

**உலோகபாலன்** — 1. அரசன். 2. திக்குக் காவல்செய்யுந்தேவன். [லோகபால: லோக-உலகம். பால-காப்போன்.]

**உலோகம்**— 1. அகிலமரம். 2. ஆயுதம். 3. இரத்தம். 4. இரும்பு. 5. உருக்கு. 6. உலகத்துக்கு அடுத்ததன்மை. 7. கூட்டம். 8. சனம். 9. சுவர்க்கம், பூமி, பாதலம் என்னும் மூன்றையும் உணர்த்தும் ஒரு பொதுப்பெயர். (உ-ம்.) "அரவுலோகத்திடையாழ்ந்து" (இரகு.திக்கு.உசுச.) 10. திரள். 11. பார்வை. 12. பூமி. 13. பொன், வெள்ளி, செம்பு, இரும்பு, ஈயம் ஆய தாதுக்களை யுணர்த்தும் ஒரு பொதுச்சொல். (உ-ம்.) "பைம்பொனுந்திரவு லோகத்தை மீச்சிதறும்" (இரகு. திக்கு. உசுச.) [7,8,9,10,11. லோக. 1, 2, 3, 4, 5, 13. லோஹ.]

**உலோகமணல்**—இரும்புமணல்.

**உலோகமரியாதை**—உலகவழக்கம்.

**உலோகமாதா**—இலக்குமி.

**உலோகமாபாலன்** — அச்சணந்தியாசிரியன். (சிந்தா.)

**உலோகரட்சகன்**— 1. உலகத்தைக்காப்பவன். 2. விட்டுணு.

**உலோகராட்டு**—கடவுள்.

**உலோகநடம்**—தேசவழக்கம்.

**உலோகவாசாரம்**—உலோகாசாரம்.(உ-ம்.) "நீயுலோகவாசாரமோரணுத்துணையானுநீங்கிலை" (வைரா. சத. கரு.)

**உலோகவாதம்**—ஐதிகப்பிரமாணம். (சி. சி. அளவை. க. ஞாந.) [லோகவாத; லோக-சனம். வாத-பேச்சு.]

**உலோகவேடணை**— உலகவிச்சை. [லோகவேஷணா.]

**உலோகன்** — உலோகவைரவன். (த. நி. போ. உசக.)

உலோகாக்கிரம்—சிரேட்டவுலகம். (த. நி. போ. உஎச.)

உலோகாசாரம்—உலகாசாரம்.

உலோகாதியந்தம் — உலகாரம்பமும் முடிவும்.

உலோகாதீதம் — உலோகத்துக்கு அதீதப்பட்டது; அஃதாவது: உலகத்துக்கெட்டாதது, மேற்பட்டது.

உலோகாந்தருந்தம்— காந்தத்தின் நுனியைப்பற்றி யிருக்கும் வேல்.

உலோகாந்தரம்— 1. மற்றவுலகம். 2. வேறுலகம். [லொகாந்தர: லொக - உலகம். அந்தர - வேறு.]

உலோகாபவாதம்—உலகநிந்தை. [லொகாபவாத: லொக - உலகம். அபவாத - நிந்தை.]

உலோகாயதம்— மூவகைநாத்திகநூல்களினொன்று; இது: செய்தவன் பிரகற்பதிபகவான் காட்சி ஒன்றே பிரமாணம் என்றும் காட்சிப்பொருளாகிய பிருதிவி, அப்பு, தேயு, வாயு என்னும் நான்குமே மெய்ப்பொருளென்றும், இந்த நான்கு பூதக்கூட்டமான சரீரமே ஆன்மா என்றும், உடம்புவளர அறிவுவளரும் உடம்பு தேய அறிவுதேயும் என்றும், ஈசுவரனில்லை என்றும், இம்மையிற் சுகதுக்கங்களே சுவர்க்க நரகங்களென்றும், சரீரம் நசித்தால் மேலேக்காவது ஒருவினை இருப்பதில்லை என்றும் இந்நூலிற் சொல்லப்படும். (சி. பி. கை. கச. பக்.)

உலோகாயதர்— உலோகாயத மதத்தோர். (சி. சி. ச: உகூ. ஞாநப்.)

உலோகாயதன்—உலோகாயதநூலை அநுசரிப்போன். (உ-ம்.) "தரணிமிசைலோகாயதன் சமயநடைசாராமல்" (தாயு. மௌன. ச.) இவன் ஈசனும் ஆன்மாவும் இல்லையென்றும் மகளிரிடத்தின்பமொன்றுமே பொருளென்றுங்கொள்வன். (கந்தபு. நவநீத. கூ-ம் பக்க.)

உலோகாயதிகன் — உலோகாயத சமயத்தோன். [லொகாயதிக: லொகாயத - இக-ஒருவிகுதி.]

உலோகார்த்தம்—உலகநன்மை.

உலோகாலோக்கியம்—சக்கரவாளகிரி. (கூர்மபு. அந்தகாசு. கக. உரை.)

உலோகாலோகம்—சக்கரவாளமலை. (உ-ம்.) "உலோகாலோகசக்கரமென்றும், சக்கரவாளகிரி என்றும்பெயராயிருக்கும்" (த. நி. போ. கூசக.) [லொகாலொக: லொக-காண்டல். அலொக-காணாமை.]

உலோகிதநதி — பிரமபுத்திரநதி. (உ-ம்.) "தெண்டிரைக்-கரவுலோகித நதிக்கரையின்முன்னினான்" (இரகு. திக்கு. உகூச.)

உலோகிதம்-1. இரத்தம். 2. சிவப்பு. (உம்.) "பரவுலோகிதமலரொடு" (இரகு. திக்கு. உகூச.) 3. செவ்வாயென்னுங் கிரகம். 4. மஞ்சள். 5. யுத்தம். [லொஹித.]

உலோகிதாக்கன் —1. செங்கண்ணன். 2. விட்டுணு. [லொஹிதாக்ஷ: லொஹித-சிவப்பு. அக்ஷி-கண்.]

உலோகிதாங்கன்—செவ்வாயென்னுங் கிரகம். [லொஹிதாங்க: லொஹித-சிவப்பு. அங்க-சரீரம்.]

உலோகேசன்—1. அரசன். 2. பிரமா. சேதுபுராணத்திலே சக்கர தீர்த்தச்சருக்கத்திலே பலகாலத்திலும் ஒருவர்பின்னொருவராயிருந்த பிரமாக்களுள் உலகேசன் என்பது ஒரு பிரமா என்றுசொல்லப்பட்டது. "என்காலந்தன்னி-விற்றவிதிபலகோடியுதித்தவேதாவிலக்கமெனக்கதிவரிதாமிவர்கடம்மில்" "உலகேசனெனும்விரிஞ்சனுறையுநாளில்" (சேதுபு. சக்கர. கக. கஉ.) [லொகெஶ.]

உலோகேசுவராத்துமசை — ஒரு சைநப்பெண்தேவதை. [உலோகேசுவா என்னும் சைநமுநியின் மகள் என்றபடி.]

உலோகோத்தமம்—பொன். [வெள்ளிமுதலியவுலோகங்களில் உத்தமமானது என்றபடி.]

உலோகோத்தரம்— 1. எல்லாருமிச்சிக்கக் கூடியது. 2. விசேஷமானது.

உலோகோத்தி—உலோகவார்த்தை. [லொகொக்தி: லொக-உலகம். உக்தி-பேச்சு.]

உலோகோயம்— இமயமலைக்குத் தெற்கும் இராமேச்சுரத்துக்கு வடக்குமுள்ள தேசம்.

உலோசநம்—கண். லொசந.]

உலோசம் — 1. ஒருவகைக்காதணி. 2. கண்மணி. 3. சுட்டியாபரணம். 4. வானம். 5. வின்னாண்.

உலோசி—பேய்ப்பசலைப்பூண்டு.

உலோசிதம்—சந்தநமரம்.

உலோட்டம்—1. இரும்புக்கிட்டம். 2. ஓடு. (உ-ம்.) "தாமமே காவணமுலோட்டமொடுகோமயம்" (தைல. தைலவ. கஉஎ.) 3. மண்ணாங்கட்டி. [லொஷ்ட.]

உலோட்டி—1. சோலி. 2. வெறியுள்ள சாராயம்.

உலோத்திரம் — வெள்ளி லோத்திர மரம். (உ-ம்.) "வீசவெள்ளிலோத்திரப்பொதும்பர்பா ய்ந் ஏவிம்ழுமே"(சூளா.இரத.கக.) [வொ ...]

உலோபத்தனம் — } உலோபத்தன்மை.
உலோபத்துவம் — }

உலோபம் — 1. அநியாயமாகப்பிறர்பொரு ளில் விரும்பல். (உ-ம்.) "உட்பெறுவெம்ப கையாவதுலோபம்" (இராமா. வேள். ௬௨.) 2. அற்பம். 3. ஆசை. 4. குறைவு. (உ-ம்.) "மந்தி ரலோபகிரியாலோப"(சி. சி. உ. உக. சிவாக்.) 5. கெடுதல், அழிதல். 6. (இலக்கணம்) கெடுதல்வி காரம். (உ-ம்.) "ஆன்றுமுலோபத்தொடாகமமா தேசமாரியத்துள்"(வீர.சந்தி.௧௦.) 7. பேராசை. [வொஹ.]

உலோபர் — பேராசையுடையவர். (உ-ம்.) "ஊறுகாட்டினர்க்கலாலுலோபரீவரோ"(கந்தபு. திருநாட். ௬௨.)

உலோபன் — பேராசைக்காரன்.

உலோபனம் — 1. ஒறுப்பு. 2. குறைத்தல்.

உலோபாமுத்திரை — அகத்தியன் மனைவி யாகிய ஒருபெண். (உ-ம்.) "விதர்ப்பர்கோன் பயந்தலோபா-முத்திரைதனைமுன்வேட்டு"(கந் தபு. அகத்திய. உஅ.)

உலோபி — 1. கொய்யது. 2. பேராசையுள் ளவன். (உ-ம்.) "ஒட்டுகின்றவொண்பொருட் குலோபியோ" (பாரத. சூது. ககசு.) [வொ ஹிநு.]

உலோபித்தல் — பேராசைகொள்ளல்.

உலோமகருணம் — 1. புகைப்பொடிப்பு 2. முயலாகிய விலங்கு. [வொஇகண-ந்: வொஇ-மயிர். கண-ந் - காது.]

உலோமகீடம் — பேன்.

உலோமசம் — சடாமாஞ்சில்.

உலோமசன் — 1. நிறைந்தமயிருடையவன். 2. மகாபாரதத்திலே சொல்லப்படும் ஒரு முனி.

உலோமம் — 1. ஒழுங்கு. 2. வால். 3. வா னுனி.

உலோமன் — 1. உரோமன். 2. ஒழுங்குடை யான்.

உலோமாஞ்சம் — உரோமப்பொடிப்பு.

உலோமை — நாயகனுக்குத்தாழ்ந்த குலத்தி னளாகிய மனைவி.

உலோலம் — 1. அசைவு. 2. அமைவில்லா தநிலை. 3. ஆசைப்பெருக்கம்.

உலோலன் — 1. காமவிகாரமுடையவன். 2. துட்டன்.

உலோலிதம் — 1. அசைவு. 2. உலோலித முகம். 3. பயம்.

உலோலிதமுகம் — சிந்தைமிகுதியான் மக ந்தளர்ந்து ஒருதோண்மேற்சாய்ந்த முகநிலை.

உலோலை — 1. இலக்குமி. 2. நாக்கு.

உவ் — உவை.

உவ்வி — தலை. (சூ. நிகண். உ: ௬அ.)

உவ்வு — தவம். (பிங்கல. ௧௭௬௭.) [உவவு என்பது சூ. நிகண்டு.]

உவ்வை — உப்பை.

உவ — உவவென்னேவலும், தெரிநிலைவி னைப்பகுதியும்.

உவக்காண் — 1. அப்பொழுது. 2. உங்கே. (உ-ம்.) "உவக்காணெங்காதலர்செல்வார்"(வள். ககஅரு.) [உவண்காண் என்பது உவக்காண் என மரீஇயிற்றுப்போலும்.]

உவதநுவாணன் — பிரமசாரியாயிருந்து வே தம் முழுதுங்கற்றபின்பு விவாகஞ் செய்தவன். (உ-ம்.)"உவகுருவாணனென்போன் மறைமுழு துணர்ந்தபின்னர் - நவையறுமகளிர்தம்மைவே ட்டுளோன்" (கூர்மபு. வருண. ௬௭.) [உவ கு-வ-ாண.]

உவதுலம் — திரிபலை. [சில வைத்திய அக ராதி முதலியவற்றில் உலகுலம், திப்பலி, திரி பலை என்னும் இரண்டிற்கும் பெயராகக்கொள் ளப்பட்டது.]

உவகை — 1. காமம். (உ-ம்.) "உணவினுசை யாற்கொல்லவந்தீ யுவகையாசையாலுள்ளழிந் து" (பாரத. வேத். கக.) 2. பிரியம். 3. மகிழ் ச்சி. (உ-ம்.) "உதியமையுளத்தினுவகையொ ண்கடல்" (இரகு. இரகுவுற். ௬௧.)

உவகைப்பறை — மங்கலப்பறை.

உவச்சர் — 1. ஒச்சர். 2. சோனகர். (சூ. நிக ண். உ: ௬௦.)

உவட்சி — துவளுகை.

உவட்டல் — 1. அருவருத்தல். (உ-ம்.) "உவ ட்டியுந்திடுதிரைப்புனல்" (கந்தபு. ஆற்று. கச.) 2. பெருகுதல். (உ-ம்.) "மதக்கலுழியுவட்ட" (சேதுபு. நாட். ௬.)3. வெறுத்தல், தெவிட்டல். (உ-ம்.) "விருப்புவட்டாவின்புருவை" (தாயு. எந்நாள். நிற்கு. கக.) "உவட்டாதபேரின்பமா னசுகவாரியினைவாய்மடுத்து" (தாயு. சின். உ.)

உவட்டி — உவட்டிப்பு.

உவட்டித்தல் — 1. அருவருத்தல். 2. புரளுதல்.

உவட்டிப்பு — உவட்டித்தல்.

உவட்டிற்கூர்மை — மாமிசபேதி.

உவட்டு — 1. அருவருப்பு. 2. உவட்டென் னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்

தொகையும். 3. புரட்சி. 4. பெருக்கு. (உ-ம்.) மேவருஞ்சடைப்பகீரதியுவட்டெழ" (உபதேச. சூராதி. கஉ.)

உவட்டுதல் — 1. அருவருத்தல். 2. புரளுதல். 3. பெருகுதல்.

உவட்டுரை—இகழ்ச்சிச்சொல்.

உவட்டெடுத்தல்-பெருக்கெடுத்தல். (உ-ம்.) "ஆங்க - ணுவட்டெடுத்தொழுகருவி" (தணிகை. வீராட்ட. எசு.)

உவண்—உவ்விடம். (உ-ம்.) "சிறுகால்கமுகம்பொழில்சேர்ந்-தவணுய்த்திட" (சிந்தா. முத். உருரு.)

உவணகேதநன்— விட்டுணு. (சூ. நிகண். க: கக.) [உவணம்-கருடப்பறவை. கேதநம்-கொடி.]

உவணம்— 1. உயர்ச்சி. (உ-ம்.) "உவணவைப்பெனும்-பொன்னெயில்வட்டமும்" (கந்தபு. நகரழி. ௯அ.) 2. கருடப்பறவை. (உ-ம்.) "உவணச்சேவலுயர்த்தோனியமமும்" (சிலப். ஊர்கா. அ.) 3. கழுகு. (சூ. நிகண். ௬: ருச.) 4. பருந்து.

உவணமுயர்த்தோன்— விட்டுணு

உவணர் — பதினெண்கணங்களுள் ஒருவகையாராகிய கருடர். (உ-ம்.) "கதிபடருவணர்சித்தர்" (கந்தபு. வீரவாகுகந். ௬எ.)

உவணவூர்தி—விட்டுணு. (உ-ம்.) "இராசதத்துவணவூர்தி" (தணிகை. அகத். ௬எ०.) [உவண-கருடன். ஊர்தி-ஊர்வோன்.]

உவணன் — கருடன். (உ-ம்.) "உவணன்மற்றவனை வெல்வான்" (சேதுபு. கத்துரு. ருஅ.)

உவணி—வாட்படை. (சூ. நிகண். எ: கூ.)

உவணை— 1. உவ்விடம். 2. தேவலோகம். (உ-ம்.) "ஆகநீத்துவணைமேலுறைந்தான்" (சேதுபு. விதூம. ருச.)

உவத்தல்—மகிழ்தல். (உ-ம்.) "உலகமுவப்பவலனேர்பு" (திருமுரு. க.)

உவதி—பதினறுவயதுப்பெண். [யுவதி]

உவதை—மலையின்வீழ்பேரருவி. (சூ. நிகண். ரு: கக.)

உவப்பு — 1. உயரம். 2. பிரியம். (உ-ம்.) "உவப்பொடுதவப்பாதையினிவர்ந்தன்றி" (வைரா. தீப. கஅ.) 3. பொலிவு. (திவாகர.) 4. மகிழ்வு. (உ-ம்.) "நுங்களைவைகலுநோக்கியுவப்பாயிங்குறைகின்றதிகந்து" (கந்தபு. தெய்வ. ௬௯.) 5. விளையாட்டு.

உவமத்தொகை — உவமையுருபு தொக்க தொடர்மொழி; கயற்கண் என்பதிற்போல.

உவமப்போலி— 1. (இலக்கணம்) உள்ளுறையுவமை. (தொல். பொருள். உ௯௯. நச்.) 2. (தர்க்கம்) போலி வகையுள் ஒன்று; அது: வியாத்தி நிச்சயித்தற்கிடனுதலாகிய உவமையிலக்கணமின்றியும் உவமைபோலத்தோன்றுவது. (சி. சி. அளவை. கச. சிவஞா.)

உவமம்—ஒரு பொருளோடு மற்றொரு பொருளினை ஒப்புமைகூறுதல்; இது: தொழிலுவமம், பயனுவமம், வடிவுவமம், வண்ணவுவமம் என நான்கு வகைப்படும். (தொல். பொரு. உஎ௬.)

உவமவுருபு—உவமானத்தைச் சார்ந்து ஒப்பிப்பதைக்கருதும் இடைச்சொல்; அச்சொற்கள் அன்ன, ஏய்ப்ப, ஒப்ப முதலியன. (தொல். பொரு. உஅக.)

உவமவுருவகம்— உருவக அலங்காரத்தின் ஒருவகை; அஃது: உருவகமாக்கப்பட்ட உவமானத்தையே பின்னும் உவமைப்பொருளாக எடுத்துக்கூறுவது; "மதுமகிழ்ந்த மாதர்வதனமதிய-முதையமதிமேயொக்கும்- மதிதளர்வேன்- வெம்மைதணியமதராகமேமிகுக்குஞ்-செம்மையொளியாற்றிகழ்ந்து" என்பதிற்போல. (தண்டி. ௬எ.)

உவமன்— உவமை. (உ-ம்.) "ஒய்விலாதனவுவமனிலிறந்தன" (திருவாச. திருச்சத. ௬௯.)

உவமாதீபகம்—ஓரலங்காரம்.

உவமாநசங்கிரகம்—ஒருநூல்.

உவமாநத்தோகை—உவமானந்தொக்குநிற்பது.

உவமாநபிரமாணம் — ஓரளவை; அஃது: ஆமாவை ஆப்போன்றிருக்குமென்றறிதல்.

உவமாநம்—உபமாநம். (உ-ம்.) "மருவுநேருவமாநம்வகுத்திடப்-பெருகுகாதல்பெறின்" (சேதுபு. இராம. ௬௬.)

உவமாநித்தல்—உபமித்தல்.

உவமாநிலம்—சுவர். (பிங்கல. ௯௯०.)

உவமாநோபமானம்—ஓரலங்காரம்.

உவமித்தல்—ஒப்புமைகாட்டிக்கூறல்.

உவமிப்பு—உவமித்தல்.

உவமேயம்—உபமேயம்.

உவமை—1. ஒப்புமை. (உ-ம்.) "தன்னேடுவமையில்லா-தவனை" (திருக்கோ. ருக.) 2. ஓரலங்காரம்; அது: பண்பு, தொழில், பயன் என்பன காரணமாகப் பொருளொடு பொருளியையவைத்து ஒப்புமைபுலப்படச்சொல்வது. (உ-ம்.) "பண்புந்தொழிலும்பயனுமென்றிவற்றின் - ஒன்றும் பலவும் பொருளொடு பொருள் புணர்த்-தொப்புமை தோன்றச் செப்புவதுவமை" (தண்டி. ௬०.)

உவமைத்தோகை—உவமையுருபு தொக்கு நிற்குந் தொடர். கிளி மொழி என்பதிற் போல. (நன். பொது. கடு.)

உவமையகத்திணை — தானே எடுத்த பொருளை விளக்கவும் மற்றவர் அவற்றை ஒப்புக்கொள்ளவும் பிறிதொன்றனை எடுத்து இரண்டிற்கு ஒப்புமைகாட்டித் தன்பொருடோன்ற விளக்கியுரைப்பது. (தொன்னூல். கடுடு.)

உவமைமபணி—ஓரலங்காரம்.

உவமையாகுபெயர்— உபமேயத்தைக் கருதும் உபமானத்தின்பெயர். (வ-று.) மயில்வந்தாள். இங்கே மயில் என்னும் உபமானத்தின் பெயர் மயில்போலும் பெண் என உபமேயத்திற்காயிற்று. (நன். பெயர். ௬௬. உரை.)

உவமையுருபு—உவமையைச்சார்ந்துவருமுருபு.

உவமையுருவகம்—உவமவுருவகம்.

உவமைவிலக்கு — உவமையணியுள் ஒருவகை. (தண்டி. ௬௨.)

உவமோத்தாபதகருமதாரயன்— பின்மொழியொப்பில்வரும் பண்புத்தொகை. (பி. வி. ௨௨. உரை.)

உவர்—1. உப்பு. (உ-ம்.) "உவர்முதலமைந்தநல்கி" (கந்தபு. வில்வல வதை. கஎ.) 2. உயர்திணைப் பலர்பாலில் வரும் ஒரு சுட்டுப் பெயர். (உ- ம்.) "உவராலாக்கி" (தணிகை. அகத். ௬எ௦.) 3. உவர்ப்பு. 4. உவர்மண். (உ-ம்.) "செழுநவவறுவைசாணியுவர்செறிவித்து" (சி. சி. ௨: ௫௨.) 5. கடல். 6. வெறுப்பு.

உவர்க்கடல்—உப்புநீர்க்கடல். (உ-ம்.) "உவர்க்கடலன்னசெல்வருமுளரே" (நன். ௨௬௬. உரை.)

உவர்க்களம்—1. உப்பளம். 2. உவர்நிலம்.

உவர்க்காரம்—சவர்க்காரம்.

உவர்ச்சங்கு—முட்சங்கு.

உவர்த்தரை—1. உப்புவிளையுநிலம். 2. உவர்நிலம்.

உவர்த்தல்—1. அருவருத்தல். (தொல்.பொருள். ௨எ௨.) 2. அறுசுவையினொன்றாகிய துவர்ப்பு. 3. உப்புக்கரித்தல். 4. வெறுத்தல். (உ-ம்.) "உகவாவுனதுள்ளமுவர்த்ததுவோ" (சிந்தா. பதுமை. ௨கஎ.)

உவர்நிலம்—உவர்சேர்ந்தநிலம். (உ-ம்.) "எந்நாளு முவர்நிலத்தி னென்முளைவித்திடினும் விளைவெய்திடாது" (பாரத. கிருட். ௨௫.)

உவர்நீர்—உப்புச்சலம். (உ-ம்.) "உவர்நீர்பருகு-மளிமுகிற்குலத்துக்கு" (தணிகை.திருநாட். அ௪.)

உவர்ப்பு—1. உப்புறைப்பு. 2. துவர்ப்பு. 3. வெறுக்கப்படத்தக்கசுணங்கள்; அவை: ஆசியம், இரதி, அரதி, சோகம், பயம், குற்சை என்பன. 4. வெறுப்பு. (உ-ம்.) "உறுவர்ப்பேணலுவர்ப்பின்மை" (சிந்தா. முத். ௨கஅ)

உவர்மண் — 1. உப்புச் சேர்ந்த மண்; இது: புடைவையின் அழுக்குநீக்குதற்கு உபயோகமுள்ளது. 2. உவர்நிலம்.

உவராகம்—கிரகணகாலம். (உ-ம்.) "உவராகமாயிரத்துக்கொப்பாம்" (சேதுபு. சேதுபல. எஅ.)

உவரி—1. கடல். (உ-ம்.) "உவரியாழ்ந்தவுடம்புவர்கழிப்பான்போல" (சேதுபு. சக்கர. ௨௪.) [உப்பாகியஉவர்நீரையுடையதென்றபடி.] 2. மகளிர் விளையாட்டு. 3. மூத்திரம். (பிங்கல. க௦கஉ.)

உவரிக்கெண்டை—ஒருவகைமீன்.

உவரோதம்— உவர்க்கடல். (உ-ம்.) "உவரோதநிறத்தோன்" (பாரத. பதினேன். ௬௬.) [உவர்-உப்பு. ஓதம்-கடல்.]

உவல்— தழை. (உ-ம்.) "பாசுவலிட்டபுன்காற்பந்தர்" (புறநா. ௨௬௨.)

உவலை— 1. ஓடை. (பதிற்று.) 2. தழை. (உ-ம்.) "உவலைக்கண்ணிவன்சொலிளைஞர்" (மதுரைக்கா. ௬௧௩.) 2. பொய். (உ-ம்.) "உவலைச்சமயங்களோர்வாதசாத்திரமாம்" (திருவாச. திருத்தெள். கஎ.)

உவலைக்கூவல்—தழைமூடியகிணறு.(உ-ம்.) "உவலைகூவற்கீழ - மானுண்டெஞ்சிய கலிழிநீரே" (ஐங்குறு. ௨௦௩.)

உவவு — 1. அமாவாசை பௌர்ணிமை. (உ-ம்.) "உவவுபராகமகோதயம்" (வேதார. மேன்மை. ௯.) 2. பூரணை. (உ-ம்.) "உவவுத்திங்களையுறப்பகைத்தகைத்து" (தணிகை. வள். ௨௦௯.)

உவவேசநம்—உவவேசம்.

உவவேசம்—இருத்தல். (உ-ம்.) "பிராயோவவேசம்" (கூர்மபு. சூதகா. ௨எ.)

உவள்—உயர்திணைப்பெண்பாலில்வரும் ஒரு சுட்டுப்பெயர். (உ-ம்.) "உவந்துவள்பூப்பையுண்ணு" (இரகு. குறை. ௫அ.) [இது சேய்மைக்கும் அண்மைக்கும் இடையுள்ளாளைக்குறிக்கும்.]

உவளகம்—1. அந்தப்புரம். (உ-ம்.)"குவளையுண்கணார் நீத்தசாந்தணிமலர்கொண்டே - யுவளகந்தருமகழிசென்றகன்கடலுறுமால்" (கந்தபு. நகர்புகு. கக.) 2. இடைச்சேரி. 3.உப்பளம். (உ-ம்.)"பாயுநீருவளகப்பரப்புமெங்கணும்" (சேதுபு. கந்த. ௯௨.) 4. ஒருபக்கம். 5. கல்மதம். 6. குளம். (உ-ம்.) "உவளகம்புக்கதாழி" (சேதுபு. சக்கர. ௨௪.) 7. சிறைச்சாலை. (உ-ம்.) "பல்லம

ரரையுவளகந்தன்னி-லிருத்தினுயென" (கந்த பு. அவைபுகு. கூஅ.) 8. பள்ளம். 9. பிரிதல். 10. மதில். 11. மதிலுறுப்பு. 12. விசாலம். [2, 4, 8, 9, 10, 11, 12. (பிங்கல. ௯௨0அ.)

**உவளம்**—1.சோறு. 2. யானைக்கவளம்.

**உவளல்**—துவளல்.

**உவளித்தல்**—தூய்மைசெய்தல். (சூ.நிகண். க: ருடு.)

**உவளுதல்**—துவளுதல்.

**உவறுதல்**—ஊறுதல். (உ-ம்.) "உவறுநீருய ரெக்கர்" (கலி. கருகூ.)

**உவன்**—உயர்திணையாண்பாலில்வரும் ஒரு சுட்டுப்பெயர். (உ-ம்.)"உய்யானேயானுமுவன் போற்றளர்வேனோ" (கந்தபு. மார்க்கண். கஅ.) [இது சேய்மைக்கும் அண்மைக்கும் இடையிலுள்ளவனைச்சுட்டும்.]

**உவனுயம்**—துவைத்துக்கட்டுமருந்து.(உ-ம்.) "ஆவின்கால்பறித்துவனுயத்தா - லேலவேபொதிந்துகாஞேயொழித்தனர்"(உபதேச.சிவபுண். ௯௬௬.)

**உவனி**—வாள். [உவணி என்பது சூ. நிகண்டு.]

**உவனித்தல்**—1. ஈரமாதல். 2. வில்லையெய்யத்தொடங்குதல். (சிந்தா.)

**உவனிப்பு**—ஈரம்.

**உவா**—1. அமாவாசை. (உ-ம்.) "உவாவின் மாதுடனுவாவினுக்கிளையவனுவாவிற்-றிவாகரன்மதியாமெனவருதலும்" (கந்தபு. விண்குடி. உ.) 2. இளமை. (உ-ம்.) "வந்தனவெண்ணரை போயிற்றுவா" (திருநூற். கூடு.) 3. இளையோன். 4. கடல். 5. தம்பி. 6. நிறைவு. 7. பூரணை. (3, 4, 7. பிங்கல. ௯௨0க.) 8. யானை. (உ-ம்.) ஷ 1-ம் பொருள் பார்.

**உவாக்கள்**—இளைஞர். (உ-ம்.) "வெளிறு மென்னகைமெல்லியன்மாதரு-மொளிறுமேனியுவாக்களுமொன்றியே"(கந்தபு.தெய்வ.கருகூ.)

**உவாகருமம்**—உபாகருமம்.

**உவாத்தி** — 1. கற்பிப்போன், ஆசாரியன். (உ-ம்.) "ஊன்பிறங்கொளிறும்வேலாஞேர்த்துத்தன்னுவாத்திசொல்லாற் - றுன்புறங்கட்டப்பட்டு" (சிந்தா.குணமா.உசு0.) 2. வேதமோதுவிப்போன்.

**உவாந்தியாயன்**—உபாத்தியாயன்.

**உவாதி**—பாதி.

**உவாந்தம்**—உவாவறுதி.

**உவாநாடி**—கிரகணபரிசநாடி.

**உவாமதி**—பூரணசந்திரன். (உ-ம்.) "உவாமதியுடலுரிஞ்சுதலால்" (நைடத. நகர. அ.)

**உவாய்**—ஒருமரம்.

**உவாலம்பம்**—
**உவாலம்பனம்**— } தூஷணை.

**உவாவறுதி**—அமாவாசை, பூரணைகளின்முடிவு.

**உவித்தல்**—அவித்தல். (உ-ம்.) "சாந்தவிறகினுவித்தபுன்கம்" (புறநா. கசுஅ.)

**உவிதல்**—1. அவிதல். 2. சாதல்.

**உவை**— அஃறிணைப்பன்மைப்பாலில்வரும் ஒரு சுட்டுப்பெயர். (உ-ம்.) "ஒன்றுபுரிகாட்சி மூனிவனுவைகேட்டு" (கந்தபு. மார்க்கண். கக.) [இது சேய்மைக்கும் அண்மைக்கும் இடையுள்ளதனைச்சுட்டும்.]

**உழ**— 1. உழவென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும். 2. உழவுத்தொழில். (சிந்தா.)

**உழக்கல்**—1. கலக்குதல். (உ-ம்.) "கண்ணகன்ற பேரகழியினுழக்கியகரிகள்" (நைடத. நகர. உ.) "அரசபடவமருழக்கி" (புறநா. உசு.) 2. காரியநடத்தல். [வழக்.] 3. கொன்றுதிரிதல். (உ-ம்.) "சினஞ்சிறந்துகளனுழக்கவும்" (மதுரைக்கா. சஅ.) 4. சிலம்பம்பழகுதல். 5. மறுவைத்தல். 6. மிதித்தல். (உ-ம்.) "அண்ணலங்குன்றின்மேல்வருடைபாய்ந்துழக்கலின்" (சிந்தா. விமலை. கக.) 7. வருந்தல்.

**உழக்காழாக்கு**—காலேயரைக்கால். [உழக்கு - கால். ஆழாக்கு - அரைக்கால்.]

**உழக்கால்**—உழவுகோல்.

**உழக்கு**— 1. உழக்கென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 2. காற்கொத்து. (உ-ம்.) "உடற்பித்தமுழக்கு" (தணிகை. அகத். ௯0அ.) 3. காற்படி. 4. பிடித்துப்போகடாமற் கவறிட்டுஉருட்டுமுழக்கு.(உ-ம்.) "குலவும் பவள வுழக்கிற்கோதைபுரளப் பாடி" (சிந்தா. குண. எஎ.) 5. மிதிப்பு.

**உழக்கோல்**—உழவுகோல்.

**உழச்சியர்**—மருதநிலப்பெண்கள்.

**உழத்தல்**—1. செய்தல். (உ-ம்.) "அடுதிண்மை - யுள்ளவர்களாயெமையொறுத்தமருழப்பார்" (சேது. கத்துரு. எடு.) 2. பட்டநுபவித்தல். (உ-ம்.) "அகடாராரல்லலுழப்பர்"(வள். கருகூ.) 3. பழகல். (சூ. நிகண். க: சக.) 4. பிரயாசைப்படுதல். (உ-ம்.) "செயற்றலைநின் றுழப்பவர்கள்" (தணிகை. நாட்டு. கரு0.) 5. புரளல். 6. வருந்துதல். (உ-ம்.) "வாளுழந்ததன்றூள்வாழ்த்தி" (மதுரைக்கா. உஉஉ.) 7. வெல்லுதல். (உ-ம்.) "பாடகச்சீறடிப்பரற்பகையுழவா" (சிலப். நாடு. ருஉ.)

**உழத்தி**—மருதநிலப்பெண்.

**உழத்திப்பாட்டு**— ஒருபிரபந்தம்; அது: கடவுள் வணக்க முறையேழுத்தபள்ளி இளையபள்

ளி குடும்பன் வரவோடவன் பெருமைகூறல், முறையே யவர்வரலாறு, நாட்டுவளன், குயிற் கூக்கேட்டல், மழைவேண்டிக் கடவுட்பரவல், மழைக்குறியோர்தல், ஆற்றின்வரவு, அதன்சிறப்புக்காண்ட லிவற்றிற் கிடையிடையகப்பொருட்டுறையுங் கூறிப்பண்ணைத் தலைவன் வரவு பள்ளிகளிருவர் முறையீடு, இளையாளையவனுரப்பல், பள்ளன்வெளிப்படல், பண்ணைச்செயல் வினவல், அவனதுகூறல், ஆயரைவருவித்தல், அவர்வரல், அவர் பெருமைகூறல், மூத்தபள்ளிமுறையீடு, குடும்பன் கிடையிலிருந்தான்போலவரல், அவனைத்தொழுவின்மாட்டல், அவன் புலம்பல், மூத்தபள்ளியடிசில்கொடுவரல், அவனவளொடுகூறல், அவனவளைமன்னித்தல் கேட்கவேண்டல், அவண்மறுத்தல், அவன் சூழுறல், அவளவனைமீட்கவேண்டிப் பண்ணைத்தலைவனைப்பரவல், விதைமுதலிய வளங்கூறல், உழவருழல், காளைவெருளல், அது பள்ளனைப் பாய்தல், பள்ளிகள் புலம்பல், அவனெழுந்து விதைத்தல், அதைப்பண்ணைத்தலைவற்கறிவித்தல், நாறுநடல், விளைந்தபிற்செப்பஞ்செய்தல், நெல் லளத்தல், மூத்தபள்ளி முறையீடு பள்ளிகளுளொருவர்க் கொருவரேசலென விவ்வுறுப்புக்களுறப்பாட்டுடைத்தலைவன் பெருமையாங்காங்குதோன்றச்சிந்தும் விருத்தமும் விரவிவரவிவற்றுற்பாடுவது. (தொன்னூல்,கூ.௨அகூ.உரை.)

**உழத்திமாதர்**—மருதநிலப்பெண்கள். (உ-ம்.) "உழத்திமாதரொருங்குதிரண்டுறீஇ" (சேதுபு. நாட்டு. சுo.)

**உழத்தியர்**— மருதநிலப்பெண்கள். (உ-ம்) "நெடுவரம்-பூடுசாயுமுழத்தியர்தாஞ்சிலர்" (சேதுபு. நாட். ருக.)

**உழத்தோறும்** — அநுபவிக்குந் தோறும். (உ-ம்.) "உழத்தொறூஉங்காதற்றுயிர்" (வள். கசo.)

**உழப்பன்**—கள்ளநியாயம்பேசுகிறவன்.

**உழப்பாளி** — 1. பிரயாசமுடையவன். 2. முயற்சியுள்ளவன்.

**உழப்பு**—1. ஊக்கம். 2. குழப்பப்பேச்சு. 3. கைத்தொழில். 4. துன்பமுழத்தல். (உ-ம்.) "உள்ளமறிவாயுழப்பறிவாய்" (தாயு. பராபர. ருரு.) 5. பழக்கம். (உ-ம்.) "உறுபடையுழப்பினையுணர்வுறுதகோர்-சிறுவரைவெல்வதும்" (கந்தபு.சிங்க.உகo.) 6. பிரயாசம். (உ-ம்.)"அத்திதியின்மாளயத்தைப்புரியகில்லானுழப்பெல்லாமு-நலவளங்கூர்பயனுதவா" (சேதுபு. துரா. ருக.) 7. முயற்சி. (உ-ம்.) "எடுத்தல் படுத்தலைவிதலுழப்பில்" (நன். எழு. ருரு.) 8. வலி.

**உழப்புதல்**—1. குழப்பிப்பேசுதல். 2. பழகுதல்.

**உழம்புதல்**—1. ஒலித்தல். (பிங்கல.) 2.குழம்புதல். 3. பிதற்றல்.

**உழமண்**—உவர்மண். [உஷ - உவர். ஷகாரம் ழகாரமாயிற்று.]

**உழர்தல்**—1. கோதிவகிர்தல். 2. புரளுதல். 3. வருத்தமாற்றுது புரளுதல்.

**உழல்**—1. உழலென்னும் ஒரு பெயரெச்சத்தொகை. (உ-ம்.) "முயன்றுழன்மூடரெல்லாம்" (சி. சி. பர. உலோகாயத. கசு.) 2. உழலென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும். 3. உழாதேயெனப்பொருள்படும் ஓர் எதிர்மறை வினைமுற்று. 4. உழுதல்.

**உழலல்**—1. அசைதல். (உ-ம்.) "உழலூசல்போலநினையுநெஞ்சின்" (மறைசை. ருஉ.) 2. அலைதல். (உ-ம்.) "உலகமாயையிலே வெளியேன்றனை யுழலவிட்டனையேயுடையாயரு-ளிலகு பேரின்ப வீட்டினிலென்னையு மிருத்திவைப்பதெக்காலஞ்சொலாய்" (தாயு. ஆசை. எ.) 3. சுழலல். (உ-ம்.)"ஆடுகறங்காகியலமந்துழன்று" (தாயு. காண். உஉ.) 4. தடுமாறித்திரிதல். (உ-ம்.) "நாடுகளிற்புக்குழன்றும்" (சி. சி. கo: ரு. நிரம்ப.)

**உழலை**— 1. உழலைமரம். (உ-ம்.) "உழலைத்தொழுவானிரைசாலவுவக்கும்வண்ணம்" (தணிகை. நாட். சுஎ.) 2. ஒருரோகம். (உ-ம்.) " அதிசுட்கமுழலைகறுப்பாசயத்துற்பவம்" ( தைல. தைலவ. உசு.) 3. கதவின்குடுமி. 4. பெருந்தாகம். (உ-ம்.) " அக்கினிமாந்தங்கைகாலக்கியெரிவுழலை - மருவ வருபித்தவெட்டை சர்த்தியும்" (தைல. தைலவ. ருஅ.)

**உழலைமரம்**—மாட்டின்கழுத்திற்கட்டுங்கட்டை.

**உழலைவேலி**—வழியில் நடைப்பட்டுப்போகின்றவர்களுக்கு இடங்கொடுத்துப்பின் உழன்று கொண்டுதன்னிலையில் நிற்கும் உழலைமரம்பொருந்தியவழியினையுடையவேலி. (உ-ம்.) "புனை மருப்புழலைவேலிப்புறச்சிறுகானிற்போகி" (பெரியபு. கண்ணப்ப. உரு.)

**உழவர்** — 1. உழுந் தொழிலுடையோர். "உலத்தொடுமுறழ்புயத்துழவர்" (கந்தபு. நாட். ரு. ) 2. படைவீரர். 3 மருதநிலமாக்கள். 4. வேளாளர். (சூ. நிகண். உ: உசு.) பழயை எட்டுப்பிரதி பார்க்க.

**உழவன்**—1. உழவுமாடு. 2. உழுபவன். 3. வீரன். (உ-ம்.) "இலகொளிவைரவாட்படையுழவன்" (கூர்மபு. அந்தகாசு. உக.)

**உழவாரம்**—புல்லுச்செதுக்குங் கருவி. (உ-ம்.) "இடையருப்பேரன்பு மழைவாருமிணைவிழியு முழவாரத்திண்- படையருத்திருக்கரமும்" (காஞ்சிப்பு. கடவுள்வாழ். கக.)

**உழவிடை**—உழவைவிடுதல்.

**உழவு**—1. உழுதற்றொழில். (உ-ம்.) "உழந் துமுழவேதலை" (வள். க0ருக.) 2. பயிர்செய்தல். (உ-ம்.) "உழவின்மிக்கவூதியமில்லை" 3. வழிபாடு. (சிந்தா.)

**உழவுகட்டல்**—முதற்சால்போதல்.

**உழவுகட்டி**— உழும்போது பெயரும் மண்ணாங்கட்டி.

**உழவுகோல்**–1. குதிரைச் சம்மட்டி. (உ-ம்.) "அச்சமற்றிருந்துழவுகோலருணனிற்கொள்ள' (பாரத. நிரை. சுசு.) 2. தாற்றுக்கோல்

**உழவுசால்**—கலப்பையினுலுழப்பட்டநிலக்கீறு. (உ-ம்.) "உழவுசாலணி வீதிதோறார்ந்து லாவருமால்" (இரகு. நாட்டு. கரு.)

**உழவுபொருத்தமாடு**–உழவிற்றேர்ந்தமாடு.

**உழவோர்**—உழவர்.

**உழற்சி**—1. ஆடுகை. 2. சுழற்சி. 3. சுற்றித்திரிகை. 4. மனச்சுழற்சி. 5. வருத்தம்.

**உழற்றல்**— 1. உழற்றுதல். 2. தாகம். 3. வெப்பம்.

**உழற்றி**—1. சுழற்சி. 2. திரிதல். 3. மிகுதாகம். 4. வருத்தம்.

**உழற்றுதல்**—உழலச்செய்தல். (உ-ம்.) "பிறப்பிறப்பாம்பூட்டைதனைப் பிணித்துழற்றும் வாதனையாம்பெரியபாசம்" (ஞானவா. உற்பத்தி. எ0.)

**உழறுதல்**—மோதும்படிதள்ளுதல். (உ-ம்.) "உரறிப்பரியுழறு" (பெரியபு. திருநாவு. கககு.)

**உழன்றி**— மாட்டின்கழுத்திலிருந்து உழலுங்கட்டை.

**உழாநாஞ்சில்** — நாஞ்சின்மலை; ஒருமலை. (உ-ம்.) "உயர்சிமையவுழாநாஞ்சிற்பொருந" (புறநா. கருக.)

**உழால்**—உழுதல். (உ-ம்.) "உழாலிற்பொலி வண்டிவர்பூந்தொடை" (தணிகை. வள். ருக.)

**உழி**—1. அளவு. (சிலப்.) 2. இடம். (உ-ம்.) "துருவாசமுனியுமவ்வுழிவந்தான்" (பாரத. சம்பவ. உசு.) 3. இடப்பொருளையுணர்த்தும் ஏழாம் வேற்றுமையுருபுகளுள் ஒன்று. (உ-ம்.) "என்னுழிவந்தான்" (நன். ருOஉ.) 4. பக்கம்.

**உழிஞ்சில்**— 1. வாகைமரம். (உ-ம்.) "பொரியரையுழிஞ்சிலும்" (சிலப். காடு. எசு.)

**உழிஞை** — 1. எண்வகைமாலையிலொன்று; அது: பகைவருடைய அரணை வளைப்பவன்சூடுவது. 2. சிறுபூளை. (உ-ம்.) "போற்றருமுழிஞை புகுதுபவ மான" (சேதுபு. தரும. உக.) [ உழிஞை என்பதற்குப் புறநானூற்றுரைகாரர் கொற்றான் எனவும் ஒரு பொருள் கூறுவர் ](புறநா. ருO. உரை.)

**உழிஞைமாலை**—1. ஒருபிரபந்தம்; அது: மாற்றாரது ஊர்ப்புறஞ்சூழ உழுஞைப்பூமாலை சூடிப்படைவளைப்பதைக் கூறுவது. (தொன்னூல். உஅரு. உரை.) 2. பகைவரரண்பிடிப்பார்மாலை.

**உழிதரல்**—1. சுழலல். (உ-ம்.) "உழிதர்கிற்பதென்னுள்ளமென்ன" (சேதுபு. சங்கதீர். கஎ.) 2. திரிதல், ஓரிடத்து நில்லாது திரிதல். (உ-ம்.) "கந்துநாமனென் - றுழிதரு பெருநிதியுவப்பநல்கினன்" (சிந்தா. நாமக. ருOசு.) "தன் சுரகந்தன்னி - லுழிதருபுனலைவாட்டி" (கந்தபு. கிரவுஞ். கரு.)

**உழிதருதல்**— உழிதரல்.

**உழு**— 1. உழுவென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும், வினைத்தொகையும். 2. பிள்ளைப்பூச்சி.

**உழுக்குழுன்**—பதனழிந்த மாமிசம். (உ-ம்.) "உழுக்குழுன்விதத்தையுண்டுகளிப்புறவுறைவருள்ளீர" (சிவதரு. சிவதரு. எ.)

**உழுகை**— உழுதல்.

**உழுத்தகல்**—உழுந்து அகல். (சிந்தா.)

**உழுத்தமா**—உழுந்திடித்தெடுத்தமா.

**உழுத்தல்** — பதனழிதல். (உ-ம்.) "உழுக்குழுன்விதத்தையுண்டு" (சிவதரு. சிவதரு. எ.)

**உழுதல்**—1. உழக்கல். (உ-ம்.) "அறுகாலுழுமலர்சேர்" (இரகு. தசரத. சுரு.) 2. கலப்பையையிழுத்து நிலத்தைக் கிளைத்தல். (உ-ம்.) "கொண்டுவிற்றல்கூலித்தொழிலுழுதல்" (தணிகை. அகத். ககஎ.)

**உழுதுண்போர்**—வேளாளர்.

**உழுதூண்**–நிலத்திற் பயிர்செய்து சீவித்தல். (உ-ம்) "தொழுதூண்சுவையினுழுதூணினிது" (கொன்றை.)

**உழுந்து** — நவதானியத் தொன்று. (உ-ம்.) "உழுந்தமிழ்ந்துநீர்" (சைவச. பொது. உகூO.)

**உழுநர்**—1. உழுதற்றொழில்செய்யு மேவலாளர். (உ-ம்.) "வெறிகமழ்க்கழனியிலுழுநர்வெள்ளமே" (சிந்தா. நாமக. கரு.) 2. நிலத்தையுழுவித்துப்பயிர்செய்து சீவிப்போர். (உ-ம்.) "பைம்புலத்துழுநர் தங்கள் பலவகைவிளைவுமீட்டி" (பாரத. பாயிர. கரு.) [உழு-பகுதி. ந்-இடைநிலை. அர்-பலர்பால்விகுதி.]

**உழுநிலம்**—உழுதற்குரியபூமி.

**உழுபடை**— கலப்பை. (உ-ம்.) "உழுபடையூன்றுசான்மருங்கின்" (புறநா. ருரு.)

**உழுவம்**—எறும்பு.

**உழவல்**—1. இடைவிடாதுதொடர்ந்தஅன்பு. (உ-ம்.) "உழுவலன்பொடுகின்னை" (நைட. மணம். ருக.) 2. எதிர்காலத்திலே தன்மையொருமையில்வரும் ஒருவினைமுற்று. 3. குணம். 4. முறைமை.

**உழுவலைப்பு**—தொழுப்பு.

**உழுவான்**—பிள்ளைப்பூச்சி.

**உழுவை**—1. ஒருமீன். 2. புலி. (உ-ம்.) "அளைச்செறியுழுவையிரைக்குவந்தன்ன" (புறநா. எஅ.)

**உழை**—1. அருகு, சமீபம். (உ-ம்.) "ஓரையெய்திய தென்றுழையொற்றரால்" (நைடத. மணம். ௬.) 2. இடப்பொருளைத்தரும் ஓர் எழுத்துருபு. (உ-ம்.) "மன்னவன் றருமடவரலிவனுழைவந்தாள்" (பாரத.குருகுல.கஅ.) 3. இடம். (உ-ம்.)"சுரத்தொடுதொனிக்குமறையாகவுழைதோறும்" (இரகு. தேனு. உ௬.) 4. உவர்மண். 5. உழையென்னேவலும்,தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும்.6. எழிசையிலொன்று; அது: சிரத்திற்பிறப்பது. (உ-ம்.) "தலையிலுழைநீண்மார்பிலிளி"(கூர்மபு. கண்ண. மண. க௫௬.) 7. சூரியன் மனைவியர்களுளொருத்தி. (உ-ம்.) " உருக்கொள் சாயையுமுழையுமங்கறிவுறுதொளித்த" (பாரத. சம்பவ. ௬௪.) 8. பூவிதழ். (உ-ம்.) "வாலுளையெருக்கமும்" (கல்லா. உ௦.) 9. மான். (உ-ம்.) "உழைக்கரனுக்கன்பாகி" (திருவாத. மந்திரி. க௬.) 10. யாழிளோர்நரம்பு. (பிங்கல.) 11. வாணன்மகளாகிய ஒரு பெண். (சிலப். கடலாடு. ௫௪. உரை.) 12. வைகறை.

**உழைஞர்** — பக்கத்தில் நிற்கும் ஏவலாளர். (உ-ம்.) "செறிதருமுழைஞர்தம்முட்சிலவரை" (கந்தபு. அசுரே. சுக.)

**உழைத்தல்**—1. சம்பாதித்தல். 2. சொல்லாலெழுமொலி. 3. பிரயாசப்படுதல். 4. வருந்தல். (உ-ம்.) "மனையாதியவளற்றிலேகிடந்துழைத்தனை" ( வைராக். சத. உ.) 5. வேலைசெய்தல்.

**உழைதல்**— 1. இரைதல். 2. துன்பமுறல்.

**உழைநின்றூர்**—ஏவல்செய்வார். (உ-ம்.) "உழைநின்றீரும்" (கல்லா. கஅ.)

**உழைப்பாளி**—உழைப்பவன்.

**உழைப்பிரிதல்** — ஒருவனைவிட்டுப்பிரிதல். (உ-ம்.)"உழைப்பிரிந்துகாரணத்தின்வந்தானை" (வள். ௫௬௦.)

**உழைப்பு**— 1. அதிகவேலை. (உ-ம்.) "மாதைக்-கூடுவது பகலுறக்க முழைப்புவெய்யில்" (தைல. தைலவ. க௬க.) 2. சம்பாதிப்பு. 3. சுறுசுறுப்பு. 4. பிரயாசப்படுகை. (உ-ம்.) "சும்மாவிருக்குதல் செயற்கரிதாகிப்-போயுழைப்புனக்கெளியவாயிருந்தவிப்புதுமையென்" (வைராக். சத. உஉ.)

**உழைமண்** — உவர்மண். [ உஷா - உவர். இஃது: உழையென்றாயிற்று.]

**உழையர்**— 1. அமைச்சர். (சூ. நிகண். உ: உக.) 2. ஏவல்செய்வோர். (உ-ம்.) "அருளறிந்துழையரோடியரசுவாவருகவென்ன" ( சூளா. கல்யா. க௦௦. ) 3. சமீபத்திலுள்ளார். (உ-ம்.) "செல்லுமுழையருமோதிடு-மிழிபுகேட்டு நின்றேங்கி" (சேதுபு. காசிப. ௫௫.)

**உழையிருந்தான்**— அமைச்சன். ( உ-ம். ) "உறுதி-யுழையிருந்தான்கூறல்கடன் " ( வள். சு௩அ.) [உழையிருந்தானெனப்பெயர்கொடுத்தார் அமாத்தியனென்னும் வடமொழிப் பெயர்க்கும் பொருண்மை அதுவாகலின். ( மேற்படியுரை) அமாத்தியன் - அருகிலிருப்போன். அமா - அருகு.]

**உழையோர்**—உழையர். (உ-ம்.) " தன்னுழையோர்தம்மால்" (கந்தபு. அசுரேந். க௫.)

**உள்**— 1. இடப்பொருளுணர்த்தும் ஓரேழனுருபு. (உ-ம்.) "மற்றையான்செத்தாருள்வைக்கப்படும்" (வள். உக௪.)2. உள்ள எனப்பொருள்படும்ஒருகுறிப்புவினைப்பெயரெச்சம். (உ-ம்.) "உள்ளம் போன்றுள்வழிச்செல்கற்பின்"(வள். ககஎ௦.) [ அகரங்கெட்டுநின்றது. ] 3. உள்ளிடம், ஒன்றின்வியாபகத்துக்குப் புறமல்லாதது. (உ-ம்.) "உறத்தகையபெருஞ்சுடரையுட்படைத்திட்டு" (இரகு. குறை. ௫௪.) 4. உள்ளென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 5. ஒருவினைப்பெயர்விகுதி.(உ-ம்.) "செய்யுள்" 6. மநம். (உ-ம்.) " பொறுமையுள்ளுடைக்கும்" (இரகு. யாக. கஉ.)

**உள்கல்**—1. நினைத்தல். (உ-ம்.) "கலவிமங்கையரையுள்கி-வாடுவது" (சி. சி. பர. லோகா. உ௦.) 2. மடிதல். (உ-ம்.) "சிந்தை-யுள்கியிங்கிரவுநின்பாலொழிந்தனன்" ( இரகு. அயனுதய. உ௦.)

**உள்குதல்**—உள்கல்.

**உள்பொருள்**— உள்ளபொருள், பொருளாயுள்ளது.

**உள்வணக்கம்** — அங்கத்திறைற்செய்யாது மநத்திறைற்செய்யும்வணக்கம்.

**உள்வயிரம்** — 1. உட்பக்கத்து வயிரம். 2. வெளிப்படாது மனத்திலே நெடுங்காலமாக விருக்குங்கோபம்.

**உள்வரி**— வேற்றுவடிவங்கொள்ளல்; அது: பாண்டவர் விராட நகரத்திற் பிரிந்து வடிவங்கொண்டாற்போல்வது.(மணிமே. கூஎ; ககூஅ. பக்.)

உள்வலிப்பு—ஒருநோய்.
உள்வழக்கு — உள்ளதை யுண்டென்பது; அது: யானைக்கோ டுண்டென்கை போல்வது. (உ-ம்.) "உள்வழக்குளதுண்டென்கை" (சி. சி. பர. சௌத். ௧௦.)
உள்வழிகடந்தோன்—கடவுள்.
உள்வளையல்—உள்வளைந்திருப்பது.
உள்வளைவு—உட்கவிவு.
உள்வாங்கல்— உள்ளேமீளுதல். (உ-ம்.) "நன்னீரடங்கியுள்வாங்கிச்செல்ல" (திருவாத. மண். ௧௬.)
உள்வாரம் — 1. அந்தரங்கத்திற் செய்யும் அன்பு. 2. விளைவிலே நிலமுடையானுக்குவரும் பங்கு.
உள்வித்திரதி— ஒருவகைக் கட்டியாகியரோகம். (சுதல. தைலவ. ௧௯௦. உரை.)
உள்விழுத்தல்— 1. உள்ளாக்குதல். 2. நட்பாளனுக்குதல்.
உள்விழுதல் — 1. உள்ளாதல். 2. சுருங்குதல். 3. நட்பாளனுதல். (உ-ம்.) "அவன் ஆளுக்குள்விழுந்துகாரியம்பார்த்தான்."
உள்வினை—1. உட்களம். 2. உட்பகை.
உள்வீச்சுச்சந்நி — ஒருவகைச் சந்நிநோய்.
உள்வீழ்தல்—சுருங்குதல். (உ-ம்.) "வழங்குவதுள்வீழ்ந்தக்கண்ணும்" (வள். ௯௫௫.)
உள்வெக்கை—ஓர்நோய்.
உள்வெட்டு— 1. உயர்ந்தமாற்று. 2. உரையாணியினுள்வெட்டு. 3. சோற்றிவெட்டு.
உள்வெண்டயம்— 1. அரசர்களேறுங்குதிரைக்குக் காலிலணியும் பித்தளை வளையம். 2. பொதிமாட்டின்முதுகில்வைக்குமணை.
உள்வெப்பு—ஒருநோய்.
உள்ள—1. உண்மையென்னும் பண்படியாற்பிறந்த ஒரு குறிப்புவினைப் பெயரெச்சம். 2. குறிப்புவினையாலணையும் ஒரஃறிணைப்பன்மைப்பெயர். 3. பலவின்பாலில்வரும் ஒரு குறிப்புவினைமுற்று.
உள்ளக்கருத்து—மனத்தினுள்ளம். (உ-ம்.) "உள்ளக்கருத்தையொளித்தேகுதியென்முன்" (நளவெ. சுயம்வ. ௧௫௧.)
உள்ளக்களிப்பு—மனமகிழ்ச்சி.
உள்ளக்குறிப்பு— 1. உட்கருத்து. 2. மனக்குறிப்பு.
உள்ளங்கம்—உள்ளுறுப்பு.
உள்ளங்கால்—காலடியின் கீழ்ப்பக்கம்.
உள்ளங்கை—அகங்கை, புறங்கையினெதிர்ப்பக்கம். (உ-ம்.) "உலகினையுள்ளங்கைக்கொண்டருளையாவுருட்டி" (சூளா. அரசி. ௧அ.)
உள்ளடக்கல்—உள்ளடக்குதல்.
உள்ளடக்குதல்—உட்பட்டிருக்கச்செய்தல்.
உள்ளடங்குதல்—உட்பட்டிருத்தல்.
உள்ளடி— 1. இரகசியம். 2. உள்ளங்கால். (உ-ம்.) "உள்ளடிவரைகள்யாவும்" (கந்தபு. சூர. வதை. ௪௨௯.) 3. கிட்டடி. 4. நெருங்கிய சுற்றம்.
உள்ளடியார்—உறவர்.
உள்ளத்துறைவோன்—1. கடவுள். (உ-ம்.) "உள்ளத்துறைவாயுணர்கிற்றிலையே" (நைட. சுயம். ௪அ.) 2.மனத்தினுலிடைவிடாதுநினைக்கப்படுவோன்.
உள்ளது—1. உண்டானது. 2. உள்பொருள். (உ-ம்.) "இல்லது" பார். 3. காரியரூபமாக இருப்பது. (உ-ம்.) "உள்ளதுமிலதுமின்றி நின்றதொன்றுளதேல்" (சி. சி. ௧: ௬.) 4. நியமப்படியுண்டானது. (உ-ம்.) "உள்ளதொழியவொருவர்கொருவர்சுகம்" (நல்வழி. ௬.) 5. மெய்ம்மை.
உள்ளதுசார்ந்தவில்வழக்கு— உள்ளதனைச்சார்ந்த இல்லதனை இல்லையென்கை; அஃது: அறிவுகெட்டாற் பின் அறிவுண்டாகாதென்பதுபோல்வது. (உ-ம்.) "உணர்வுபினின்றுமென்கையுள்ளதுசார்ந்தவின்மை" (சி. சி. பர. சௌத். ௧௧.)
உள்ளதுசார்ந்தவுள்வழக்கு— உள்ளதனைச்சார்ந்த உள்ளதனை உண்டென்கை; அஃது: அறிவைச்சார்ந்து அறிவுண்டா மென்பதுபோல்வது. (உ-ம்.) "உணர்வுசார்ந்துணர்வுதிக்கையுள்ளதுசார்ந்தவுண்மை" (சி. சி. பர. சௌத். ௧௧.)
உள்ளந்தண்டு— வட்டியினருகிலுள்ளநெடுநரம்பு. (உ-ம்.) "உள்ளந்தண்டறக்கழுத்திறேடு-மூட்டியுமரியாநின்றார்" (பெரியபு. அரிவா. ௧எ.)
உள்ளநாள்—ஆயுள்நாள்.
உள்ளப்படிறு—மனவஞ்சம்.
உள்ளப்புணர்ச்சி—(அகப்பொருள்) உள்ளத்தாற்புணரும் புணர்ச்சி. இது: மெய்யுறுபுணர்ச்சியல்லாதது. (இலக்கணவி. ௪௦௬.)
உள்ளபசுமை— 1. ஐயமற்ற வுண்மை. 2. மெய்வாழ்வு.
உள்ளபடி—1. உண்டான அளவு. 2. யதார்த்தம். (உ-ம்.) "உள்ளபடி-கல்லாலின்கீழிருந்துகற்பித்தான்" (தாயு. உடல்பொய். ௪௫.)
உள்ளம்—1. ஆன்மரூபஞானம். (சி. சி. ௬: ௩௪. சிவாக்.) 2. ஆன்மா. (உ-ம்.) "விளம்பியவுள்ளத்துமெய்வாய்கண்மூக்கு" (சிவஞானபோ. ௫: ௧.) 3. ஊக்கம். (உ-ம்.) "உள்ளமிலாதவர்" (வள். ௫௯அ. பரி.) [ உள்ளம்ஊக்கத்துப்பண்

பாதலின் ஆகுபெயர்.] 4. புருடன். 5. மனக்கருத்து. (உ-ம்.) "உளமறியாது" (தாயு. பராபர. உஉ0; 6. மனம். (உ-ம்.) "உள்ளத்தாலுள்ளலுந்தீதே" (வள். உஅஉ.) [உள்ளம் என்புழி அம் பகுதிப்பொருள்விகுதி.]

**உள்ளமிருதி**—ஊக்கம்.

**உள்ளமுடையான்**—ஒருசோதிடநூல்.

**உள்ளமெய்**—உண்மை.

**உள்ளல்**—1. உள்ளான்குருவி. (உ-ம்.) "உள்ளலைவாளை தலைப்படுமோடை" (கம்பரந். ௯க.) 2. நினைத்தல். (உ-ம்.) "உள்ளுவதெல்லாமுயர்வுள்ளல்" (வள், ருகசு.) 3. மறவாதுநன்குமதித்தல். (உ-ம்.) "வீறெய்திமாண்டார்வினைத்திட்பம் வேந்தன்க - ணூறெய்தினுள்ளப்படும்" (வள். கூசுரு.)

**உள்ளவறிவு**—விஞ்ஞானம். (மணிமே.)

**உள்ளவன்**—பொருளுடையவன்.

**உள்ளவா**—உள்ளவாறு. (உ-ம்.) "ஊழுள்ளவாவிடாதென்றே" (வைராக். சத. ௯௬.) [ஆறு என்பது ஆ எனக்கடைகுறைந்துநின்றது.]

**உள்ளளவு**—1. உண்டானமட்டும். 2. சீவனுள்ளமட்டும்.

**உள்ளறை**—1. உள்வீடு. 2. பெட்டியினுள்ளறை.

**உள்ளன்**—1. உள்ளிருப்போன். 2. சிநேகன். 3. போரடிக்கிறமாடுகளிற்றலைமாடு.

**உள்ளாக்கல்**—1. உட்படுத்தல். 2. வசப்படுத்தல்.

**உள்ளாகுதல்**—உள்ளாகல்.

**உள்ளாட்சத்துரு**—உள்ளான்போல நடிக்குஞ்சத்துரு.

**உள்ளாடுதல்**—1. உள்ளேசேருதல் 2. உள்ளேபயிலல்.

**உள்ளாதல்**—1. உட்புகுதல். 2. உடன்படுதல். (உ-ம்.) "துரோகத்திற்குள்ளாகாதே"

**உள்ளாந்தரங்கம்**—மிகுந்த அந்தரங்கம்.

**உள்ளாயிருத்தல்**—உள்ளாளாயிருத்தல்.

**உள்ளார்**—1. உடையவர். (உ-ம்.) "ஓராயிரமாகியவொண்புயமுள்ளார்" (கந்தபு. சகத்திர. சு.) 2. சீவித்திருப்போர். 3. நினையார் எனப்பொருள்படும் ஒருவினைமுற்று. (உ-ம்.) "உள்ளார்கொல்லோதோழி" (யாப். காரிகை. உறுப். கக. உரை.) 4. பகைவர். (சூ. நிகண். உ: ருக.) 5. பொருளுடையோர்.

**உள்ளாள்**—1. உள்ளாகப்பயிலும் ஆள். 2. நினையாதவள் எனப்பொருள்படும் ஒரு வினைப்பெயர். 3. நினையாள் எனப்பொருள்படும் ஒரு வினைமுற்று. [இன்னும் இது இருக்கின்றாள், உயிரோடிருக்கின்றாள் எனப்பொருள்படும் ஒரு குறிப்புவினைமுற்றாயும், இருக்கின்றவள் உயிரோடிருக்கின்றவள் எனப்பொருள்படும் ஒரு குறிப்புவினைப்பெயராயுமவரும்.]

**உள்ளாளம்**—உள்ளாளமென்னுங்கீதம்; அஃது: ஒற்றின்மாத்திரைதோன்ற உள்ளேயிசைக்கும் ஆளத்தி; இதனை வழக்கிற்கமம் என்பர். (உ-ம்.) "உள்ளாளக்-கீதமிசைக்குங்கனிவாயும்" (திருவிளை. வளையல். ௬.) "இடையினேடேனைப் பிங்கலையியக்கமிகந்துமூலந் தொடுத்தியக்கி-நடுவுறுதொழிலாற் பிரமரந்திராந்தநடைபெறவிசைக்குமுள்ளாளம்" (திருவிளை. இசைவாது. ௬அ.)

**உள்ளாற்றுக்கவலை** — ஆற்றிடைக்குறை. (உ-ம்.) "உள்ளாற்றுக்கவலைப்புள்ளிநீழல்" (புறநா. உகக.)

**உள்ளாளனம்**—கூத்தின்விகற்பம். (சூ. நிகண். க: சக)

**உள்ளான்**—1. உயர்திணையாண்பாலில் எதிர்மறையில் வரும் ஒரு வினைமுற்று. (உ-ம்.) "உள்ளத்தா-லுள்ளான்வெகுளியெனில்" (வள். ௬0க.) 2. உள்ளிருப்போன். 3. ஒரு குருவி. 4. சூடுமிதிக்குமாடுகளின் முதன்மாடு.

**உள்ளானம்**—உள்ளாளனம்.

**உள்ளி**—1. வெங்காயம். (உ-ம்.) "உள்ளி வெள்ளுள்ளியுநும்பரஞ்செம்முருங்கை" (சைவச. பொது. உகசு.) 2. வெள்ளைப்பூண்டு.

**உள்ளிட்டார்** — 1. உயர்திணைப்பலர்பாலில் வரும் ஓரிறந்தகாலவினைமுற்று. 2. தொகைக்குட்பட்டவர். (உ-ம்.) "செத்தனரெழுவர்சிங்கசேனனையுள்ளிட்டாரே" (பாரத. பதினே. க00.) 3. நெருங்கின சுற்றத்தவர். (உ-ம்.) "முருகனுமவனையுள்ளிட்டாரும்" [வழக்.]

**உள்ளிடுதல்**—1. உட்படுதல். 2. உள்ளடக்கல். 3. தொகைக்குட்படுத்தல், உட்புகுத்தல். (உ-ம்.) "மரபில்வாலரியுள்ளிட்டான்" (கந்தபு. வில்வல. வா. வதை. க௬.)

**உள்ளிடை**—உள்ளிடம். (உ-ம்.) "நாணிபூண்டவுள்ளிடையடுத்தகோட்டத்தொண்சிலை" (இரகு. தசரத. அக.) [உள் - இடை. உள் - இடு-ஐ.]

**உள்ளிந்திரியம்**—மனம்.

**உள்ளின்மாசு**—மனமாசு.

**உள்ளீடு**—உள்ளிருக்குமது, உள்ளேயிடப்பட்டது.(உ-ம்.) "அறிவென்னும் உள்ளீடின்மையால்மக்கட்பதடியென்றார்" (வள். ககசு. பரி.)

**உள்ளு**— உள்ளான்பறவை. (உ-ம்.) "உள்ளுமூரலும்" (சிலப். நாடு. ககஎ.)

**உள்ளுக்குள்**—உள்ளே.

**உள்ளுடை** — பிறிதோருடைக்கு உள்ளே உடுக்குமுடை.

**உள்ளுடைதல்** — மனங்கலங்குதல். (உ-ம்.) "உருப்பவனுசனவாய்த் தேரையின்பிணிக்குள்ளுடைந்தேன்" (மறைசை, கூரு.)

**உள்ளுடைவு**—உள்ளுடைதல்.

**உள்ளுதல்** — 1. உளதாயிருத்தல். (உ-ம்.) "கேவலமாவதுதன்னிச்சாஞானக்கிரியைகளினிகழ்ச்சி சிறிதுமின்றித்தான்மாத்திரையேயுள்ளுதல்" (சி. சி. சு: கூஎ. சுப்.) 2. ஒருதலையுள்ளுதல். (உ-ம்.) "காட்சிவேட்கையுள்ளுதன்மெலிதல்" (இலக்கணவி. சoரு.) 3. நினைத்தல்.

**உள்ளுயிர்**—கடவுள்.

**உள்ளுயிர்க்குன்று**—நத்தை.

**உள்ளுருகல்**— மனங்கரைதல். (உ-ம்.) உண்ணிறைந்தபேரன்பாலுள்ளுருகி" (தாயுமா.பொருள்வணக். கo.)

**உள்ளுவது**— 1. உளதாயிருப்பது. (உ-ம்.) "காட்டத்திலே தன்னுடைய அபிவியாத்தியானதேயுள்ளுவது" ( சி. சி. சு: கக, சிவாக். ) 2. கருதுவது. (உ-ம்.) "உள்ளுவதெல்லாம்" (வள். ருககூ.)

**உள்ளுறுத்தல்**— 1. உட்புகுத்தல். (உ-ம்.) "மட்பெருங்குகையினின் மருந்தை யுள்ளுறுத்தான்" (கந்தபு.மார்க்.ககூஉ.) 2. நினைத்தல். (உ-ம்.) " உள்ளுறுத்திதனோடொத்துப் பொருண்முடிகென-வுள்ளுறுத்துறுவதை" (தொல். பொரு. சஅ.) 3. நினைப்பித்தல். (உ-ம்.) 2 - ஆம் பொருள் பார்.

**உள்ளுறுதல்**—உட்படுதல்.

**உள்ளுறை**— 1. ஆசு கவிபாடும் புலவனுக்கு அக்கவியில் இன்ன எழுத்து அல்லது சொல் இன்னபொருள் அல்லது அலங்காரம் அமைத்துப்பாடுக என்று பிறனொருவனாற்கொடுக்கப்படுமது. (உ-ம்.) "பேரெழுத்திற்சொல்லிற்பொருளிற்பெருங்கவியிற் - சீரலங்காரத்திற்றெரிந்தொருவன் - நேர்கொடுத்த - உள்ளுறைக்கப்போதுரைப்பதனையாசென்று - ரெள்ளாதநூலோரெடுத்து" ( வெண்பாப். உ. ) 2. உட்கருத்து. 3. மறைபொருள். [உள் - உறு - ஐ.]

**உள்ளுறைதல்**—மனத்திற்றங்குதல். (உ-ம்.) "உள்ளுறையிலென்னாவிநைவேத்தியம்" ( தாயு. கருணா. அ.)

**உள்ளுறையுவமம்**— வெளிப்படையல்லாத உவமம்; அது: புலவன் ஒருவமத்தைப் புலப்படக்கூறி உவமிக்கப்படும்பொருளைப் புலப்படக்கூறாது கேட்போர்க்குத் தான் கருதியதை உணர்த்துதற்கு உறுப்பாகிய சொல்லெல்லாம் நிறையக்கொண்டு முடிவது. [வ-று.] "கலையகலாதுழைவிளையாடுமுயர்சிலம்பா" இங்கே மானைப்பிரியாது கலைமான் விளையாடு மென்பது. அது போல நீயும் தலைவியைப் பிரியாது விளையாடுக என உள்ளுறையுவமமாக நின்றது. (வாண. உகூஅ.) (உ-ம்.) "உள்ளுறுத்திதனோடொத்துப்பொருண்முடிகென வுள்ளுறுத்துறுவதை யுள்ளுறையுவமம்" ( தொல். பொருள். சஅ.)

**உள்ளூர்**— ஊருக்குள்ளானவிடம். (உ-ம்.) "பயன்மரமுள்ளூர்ப்பழுத்தற்றால்" (வள்.உகசு.)

**உள்ளே**—புறமல்லாதவிடத்தில். [ உள்-ஏ-ஏழாம்வேற்றுமைப்பொருளை அடுத்து வரும் ஓரசை.]

**உள்ளொடுக்கம்**—மனவொடுக்கம்.

**உள்ளோற்றல்**— உண்ணிகழ்ந்ததை உய்த்துணர்தல். (உ-ம்.) "உள்ளொற்றியுள்ளூர்நகப்படுவர்" (வள். கூஉஎ.)

**உள்ளோசை**— நுணுக்கம், மெல்லோசை. (பிங்கல. கசகூசு.)

**உள்ளோர்**—1. உள்ளவர். (உ-ம்.) "உவணர்க்கந்தருவர்மற்றுள்ளோ-ரேவரும்" (கந்தபு. திருநகரப். ஙச.) 2. உள்ளிட்டோர். (உ-ம்.) "நின்னையுள்ளோர்- சொல்லாப்பொருட்டிரளை" (தாயு. உடல்பொய். ருரு.)

**உள**— 1. உண்மையென்னும் பண்படியாற்பிறந்த ஒருகுறிப்புவினைப் பெயரெச்சம். (உ-ம்.) "உளவரை" (வள. சஅo.) 2. உள்ளன எனப் பொருள்படும் ஒரு குறிப்பு வினைப்பெயர். (உ-ம்.) " உளபோன்முகத்தெவன்செய்யும் " ( வள். ருஎச.) 3. உள்ளன எனப்பொருள்படும் ஒருகுறிப்புவினைமுற்று. ( உ-ம். ) "பெருஞ்சிறகுள வெனில்" (இராமா. மந்திர. உஉ.)

**உளகர்**—உள்ளானவர். (உ-ம்.) "பலவினைக்கே-யுளகரெல்லாமொத்தொவ்வாநெறி நின்றனர்" (திருநூற். சுக.)

**உளகு**—யாழினொருறுப்பு. (உ-ம்.) "உளகுபுரையுமுன்கையவளோடும்" (சேதுபு. தருமகுத். உஉ.)

**உளத்தியலிடை**—நாயகசுரத்திலிடைச்சொல்.

**உளதாதல்**— உற்பத்தியடைதல். ( உ-ம். ) "ஒருபொருளொருவனின்றியுளதிலதாகுமென்னில்" (சி. சி. க: எ.)

**உளது**— மெய்ம்மை. (உ-ம்.) "இலையெனினுளதேசொல்" (வைராக். சத. உஎ.)

**உளப்படுத்தல்**—உளப்படச்செய்தல்.

**உளப்படுதல்**— 1. இணங்குதல். 2. உட்படுதல். ( உ-ம். ) "அன்னென்கிளவியுளப்பட" (தொல். எழுத். ககக.) 3. உடையதாக என்

ணப்படுதல். (உ-ம்.) "மன்னவர்க்-குளப்படகேடன்முறையுதவி" (கந்தபு. திருநாட். உரு.)

உளப்பாட்டுத்தன்மைப்பன்மை- முன்னிலையாரை யல்லது படர்க்கையாரை உட்படுத்து வருந்தன்மைப்பன்மைவினை. (வ-று.) யானும் நீயும்போவோம். அவனும் நானும் போவோம். (நன். வினை. கரு.)

உளப்பாட்டுமுன்னிலைவினை- படர்க்கையாரை உளப்படுத்திவரும் முன்னிலைவினை.(உ-ம்) "அவனும் நீயும் போனீர்கள்.)

உளப்பாட்டுவினை— மற்றை இடங்களைத் தன்னோடு உட்படுத்தித்தன்மையில் அல்லது முன்னிலையில்வரும் பன்மைவினை.

உளப்பாடு— 1. இணக்கம். 2. உட்படுகை. 3. உளம்படும்பாடு, மனத்துயர். (உ-ம்.) "ஒருத்தராருளப்பாடுணர்பவர்" ( தாயு. ஆரண. சு. )

உளபடி—உள்ளபடி. (உ-ம்.) "மற்றதுமுளபடியே" வைராக். தீப. கം.)

உளபுலப்பயன்றற்குறிப்பு— ஓரலங்காரம்; அஃது: இயல்பாயுள்ளபயன் வேறொன்றாலானதெனத்தற்குறிப்புச்செய்தல். "மூலைசுமந்து தேய்ந்ததிடை" என்பது போல்வது.

உளபுலவேதுத்தற்குறிப்பு— ஓரலங்காரம். அஃது. இயல்பாயுள்ளதை ஏதுவினால்வந்ததென அத்தியவசயித்தல். "நின்றாளவனிமிதித்த வினாற்சேர்ந்தனவென் றுள்ளுமென்னெஞ்சு" என்பது போல்வது.

உளம்— 1. ஆன்மா. (உ-ம்.) "ஐம்பொறியை யாண்டங்கரசாயுளம் நிற்ப" (சிவஞானபோ. ரு: க. வெண்.) 2. உள்ளேம் எனப் பொருள்படும் ஒரு தன்மைப் பன்மைக் குறிப்பு வினைமுற்று. (உ-ம்.) "என்றுளைநீயன் றுளம்யாம்" (தாயு. கல்லாலின். கஎ.) 3. கருத்து. 4. நெஞ்சு. (உ-ம்.) "பிறைமுகப்பகழியொன் ரு-ளுளம்புகத்தொடுத்தான்" (பாரத. பதினே. கംரு.) 5. மகம். (உ-ம்.) "கருதுமடியார்களுளம்" (தாயு. பராபர. உகூக.)

உளம்புதல்— அலைத்தல். (உ-ம்.) "இலங்கொளிமருப்பிற்கைம்மாவுளம்புநர்" (கலி.உரு.)

உளமிகுதி—மனச்செருக்கு (சிந்தா.)

உளமை—உண்மை. (புறப்பொ.)

உளர்—1. உட்பட்டது. 2. உடந்தை. 3. உடையவர். (உ-ம்.) "அழிவின்மையுளரானல்" (சேதுபு. கத்துரு. எசு.) 4. உயிரோடுவாழ்கின்றார் எனப் பொருள்படும் ஒரு குறிப்புவினைமுற்று. (உ-ம்.) "உளரெனினுமில்லாரோடொப்பர்" (வள். எகூം.) 5. உளரென்னேவலும், தெரிநிலை வினைப் பகுதியும், வினைத் தொகையும். (உ-ம்.) "உளர்வளிவலிகெடப்பார்த்தும்" (திருவிளை. எல்லாம். கரு.) 6. ஏது. [வழக்.]

உளர்ச்சி—உளர்வு.

உளர்செரு— எடுப்புஞ் சாய்ப்புமான சண்டை. (புறப்பொ.)

உளர்த்தல்—உளரச்செய்தல்.

உளர்தல்—1. அசைதல், தடவல். ( உ-ம். ) "அளிநரம்புளர"(தணிகை.திருநாட். எஅ.) 2. அசைதல். (உ-ம்.) "உளரியலைம்பாலுமட்டியரீன்ற" (சிறுபா. சுം.) 3. குரவையிடல். 4. சிந்துதல். 5. சிறகுகோதல். 6. சிறகுதறல். 7. சுலாவல். 8. சுழலல். 9. மயிர்கோதல். (உ-ம்.) "தம்மேனிநோக்கார்தலையுளரார்" ( ஆசாரக். சுகூ.) 10. மொய்த்தல். (உ-ம்.) "வண்டுளர்கமலச்செங்கண்மாயனும்" (கந்தபு. அசமுகிநகர். உரு.)

உளர்ப்பு—அலைத்தல். (உ-ம்.) "விரலுளர்ப்பவிழ்ந்த" (திருமுரு ககூஅ.)

உளர்வு—1. அசைவு. 2. சுலாவல். 3. சுழலல். 4. பேரொலி.

உளவன்—உளவுசொல்வோன்.

உளவு—1. இரகசியம். (உ-ம்.) "உளவிலேயெனக்குள்ளவாறுணர்த்தின்" (தாயு. எனக்கென. கக. ) 2. உட்காரியம், உட்கிடை. (உ-ம்.) "உளவறிந்தெல்லாநின்செயலாமெனவுணர்ந்தோர்க்கு" (தாயு. எனக்கென. உ.) 3. நுணுக்கவிதி. (உ-ம்.) "உளவையங்கங்கூறியவாறோர்ந்து" (தைல. பாயிர. உஅ.)

உளவுசொல்லல்— உள்ளவைகளையறிந்து சொல்லல்.

உளறு— உளறென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும்.

உளறுதல் — 1. தடுமாறிப்பேசல். (உ-ம்.) "பந்தமயக்கிருக்கப் பற்றொழிந்தேனென்றுளறும்" ( தாயு. பராபர. கூகூசு. ) 2. பிதற்றல். (உ-ம்.) "பின்னருளறுவதுகருமமன்றும்"(தாயு. சச்சிதா. அ.) 3. பேரொலி.

உளறுபடை—உளறப்பட்டது.

உளி—1. இடப்பொருளில் வரும் ஒரேழனுருபு. (உ-ம்.) "என்னுளி" 2. இடம். (சூ. நிகண். ß. சுரு. ) 3. கருவிப்பொருள்படவேதோர் மூன்றும் வேற்றுமையுருபிடைச்சொல். (உ-ம்.) "இயல்புளிக்கோலோச்சும்" (வள். ருசரு. பரி.) 4. மரவேலைகல்வேலைகளிற் பிரயோகித்தற்காக நுனியிற்கூருடையதாய் உருக்கினால் அல்லது இரும்பினாற்செய்யப்படும் ஓராயுதம். ( உ-ம். ) "கூருளிகுயின் றவீரிலையிடையிடுபு" (நெடுநல்' கககூ.)

உளிநை—1. கோபுரவாயில். 2. படை.

உளித்தலைக்கோல்-இருப்புப்பாரை.(உ-ம்.) "எயின்சேரியி-னுள்ள மாதருளித்தலைக் கோல்

கொடு" (கந்தபு. வள். உஅ.) [உளியைத்தலையி லுடையகோலென்றபடி.]

உளிப்பாரை— குழிகல்லுங் கருவியி னொன்று.

உளியம்—1. இடம். (உ-ம்.) "கானவுளியத் துகிலே" (இரகு. தேனு. உச.) 2. கரடி.(உ-ம்.) 'உவைகள்கண்டாய்சிலவுளியமொல்லென்பன. (சூளா. சீய. கசுசு.)

உளிவைத்தல்— மரத்திலுளியிட்டுத் தறித்தல்.

உளினர்—தியாகிப்பவர். (உ-ம்.) "உளினரு மவனையொப்ப" (சிவதரு. சிவதரு. உச.)

உளு— 1. உளுவென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும், வினைத்தொகையும். 2. மரத்தை அரிக்கும் ஒருபுழு. (உ-ம்.) "கல்வியளவிறந்துமிக்காரறிவெள்ளிக் கூறல்மிள குளுவுண்பான்புகல்" (பழமொழி. உஉஎ.)

உளுக்கார்தல்—1. இருத்தல். 2. பொறுத்துப்போதல்.

உளுக்கு—1. ஒரு கருவி. 2. நரம்புச்சுருக்கு.

உளுக்குதல்— 1. உலோகபாத்திரங்களுக்கு மெருகிடல். 2. சுளுக்குதல், நரம்பு சுருங்கப் பெறுதல்.(உ-ம்.) "புவிமுதுகுளுக்கமுன்செல்" (கூர்மபு. அந்தகாசு.கூகு.) 3. நெளிதல். (உ-ம்.) "நிலமுதுகுளுக்கிக்கீழுற-வைத்தனர்"(இராமா. கார்முக. கo.) [இங்கே நிலம் நிலமகளாக உருவகிக்கப்பட்டது.]

உளுத்தல் — மரம் முதலியன உளுவினால் அரிக்கப்பட்டுக்கெடுதல்.(உ-ம்.)"பொத்தையூன் சுவர்புழுப்பொதிந்துளுத்தசும்பொழுகிய பொய்க்கூரை" (திருவாச. அதிசய. எ.)

உளுப்பு—உளுத்தல்.

உளுப்புத்தாவல்— உளுப்புத்தொடங்குதல்.

உளுவை— ஒருமீன். (உ-ம்.) "வதியுழுமுளுவையாரால்" (மச்சபு. அத்திரியா. அ.)

உளே—1. உயர்திணையாண்பான்மயிர்.(உ-ம்.) "உறத்தகுந்தூணியார்த்திட் டுளேபசுங்கொடியின்வீக்கி" (இரகு: தேநு. கூசு.) 2. உரோமம். (உ-ம்.) "அடுதலையொழித்தெல்லட்டியயப்பியாடுளேயுதிர்த்து" (தைல. தைலவ. கஉக.) 3. உள்ளாய் எனப்பொருள்படும் ஒரு முன்னிலைக்குறிப்புவினைமுற்று. (உ-ம்.) "என்றுளேநீயன்றுளம்யாம்" (தாயு. கல்லாலின். கஎ.) 4. ஒலி. 5. குதிரைக்கழுத்தின் மயிர். (உ-ம்.) "வீளைகண்டன்னவாலுளேப்புரவி" (பெரும்பா. சஅஅ.) 6. சேறு. (உ-ம்.) "அடைமழையும் உளேவழியும் பொதியெருதும் மொருவனும்போ லலைகின்றேனே" (தனிப்பா. 2-ஆம்பா. சஅஎ.) 7.தலை. (உ-ம்.) "மிசையலங்குளேயபனை" (புறநா.உஉ) 8. தலையாட்டம். (உ-ம்.) "அலங்குளேப்புரவியைவரொடுசினைஇ" (புறநா. உ.) 9. புறமயிர். 10. பேசலாலெழுமொலி. (பிங்கல.)

உளேக்கால்—உரோமக்கால்.

உளேத்தல்—1. அழைத்தல். (பிங்கல.கசுகூசு) 2. ஊளையிடுதல். (உ-ம்.) "ஞாளியோடுநின்றுளேக்கின்றநரிக்குலம்பலவால்" (இராமா. கரன்வதை. எக.) 3. ஒலித்தல். 4. வருந்தல். (உ-ம்.) "உளேத்தனவுயிர்த்தொகையையுண்டு" (இரகு. மீட்சி. கூகூ.)

உளேத்தவர்—வெறுத்தவர். (புறப்பொ.)

உளேதல்—1. ஈடுபடுதல். (பதிற்றுப்.) 2.மனம் வருந்துதல். (உ-ம்.) "உயிரிரக்குங்கொடுங்கூற்றினுளேயச்சொன்றான்" (இராமா.கையடை. கo.) 3. வருந்தல், வேதனைப்படல். (உ-ம்.) "ஒரம்பினுளேந்தேழுலகுடையானலமர" (பாரத. ஐந்தாம். கரு.)

உளேந்துபேசுதல்—மனம்நொந்துபேசுதல்.

உளேப்பறித்தல் — 1. சேற்றிற்புரளல். 2. போராட்டப்படல்.

உளேப்பு—1. அழைப்பு. 2. ஒலிப்பு. 3. தேகக்குடைச்சல். (உ-ம்.) "நாக்குளெழுமருப்பமுளேப்புழலே" (தைல. தைலவ. கசo.) 4. வருத்தம். (உ-ம்.)"உகடிரைமறுகியேங்கி யுளேப்புற" (உபதேச. கூர்மாவ. கூo.)

உளேமாந்தை —கடுநோய்.

உளேய — வெறுப்ப. (உ-ம்.) "இளேயனிவனெனவுளேயக்கூறி" (புறநா. எஉ.)

உளேவு—1. சரீரவருத்தம். 2. மனவருத்தம். (உ-ம்.) "சம்பராரி-யுளேவுறவிருவர்மேலுமுடற்றினப்பகழி" (நைட.அன்.கண். கூக.) 3. வலிப்பு.

உற்க—எறிந்துவீழ. (உ-ம்.) "திசையிருநான்குமுற்கமுற்கவும்" (புறநா. சக.)

உற்கட்டிதம்—ஒருவகை இருக்கை. (சிலப். வேனி. உகு. உரை.)

உற்கடம்—1. அதிகம். 2. சமமில்லாநிலம். 3. செருக்கு. 4. நன்னாரி. 5. நிறைவுடையது. 6. மதம்பாயும்யானை. [உக்கட.]

உற்கடிதம்—பஞ்சதாளத்தொன்று.

உற்கடுகாசநம்—1. குந்தியிருத்தல். 2. சம்மணமாயிருத்தல். [உத்கடாஸந.]

உற்கண்டிதம்—துக்கப்படல். [உத்கண்டித: உத் - அதிகம். கடி - துக்கம்.]

உற்கண்டிநி—ஒருசத்தி. (உ-ம்.) "மொழிர்திடுகண்டந்தன்னி- னிகழ்த்துறு பவங்கடீர்க்குமுற்கண்டிநியை" (மச்சபு. ரசகல். கo.)

உற்கணம்—தட்டை.

உற்கம்—1. அனற்றிரள். (பிங்கல. ௪அ.) 2. ஆதித்தனின் றநாளுக்குப்பத்தாம் நாள். (உ-ம்.) "பாகஞ்செறிசுடர்மன்னிய நாளாதியேழும்பத்தும் - மோகந்தருப தினொந்திருபத்தொன்று மூன்முறையே-பூகம்பமுற்கம்" (விதான. குணகுண. ௬௪.) 3. ஊழித்தீ. 4. எரிகொள்ளி. (உ-ம்.) "திசையிருநான்குமுற்கமுற்கவும்" (புறநா. ௪௧.)

உற்கரிகை — பாலும் நெய்யுஞ் சேர்த்துச் செய்யப்பட்ட ஒருவகைப்பலகாரம். [உத்கரிகா.]

உற்கரித்தல்— 1. கோபத்தோடு பேசுதல். 2. வார்த்தித்தல்.

உற்கருடம்— 1. சிரேட்டமானது. 2. பெருமைபாராட்டுதல், தன்னைப்புகழுதல். 3. மிகுதி, அதிகப்பாடு. 4. மேலேயிழுத்தல், மேலேயெழுப்புதல். [உத்கர்ஷ.]

உற்கல்—எரிந்துவீழுதல். (உ-ம்.) "உற்கம்" பார்.

உற்கலம்— சகநாதத்துக்குச்சமீபமாயுள்ள ஒரு தேசம். [உத்கல.]

உற்கலன்—1. பறவைபிடிப்போன். 2. பாரஞ்சுமப்போன். [உத்கல.]

உற்காதகேலி-கோட்டுமண்கொளல். (உ-ம்.) "உற்காதகேலியுவாவெனவே" (மேகது. உ.)

உற்காதம்— 1. ஆயுதம். 2. ஆரம்பம். 3. ஆரம்பிக்கப்பட்டகாரியம். 4. நூற்பிரிவு. 5. விரணம். [உத்காத.]

உற்காதா—நான்கு பிரதான ஆசாரியர்களிலொருவன்; இவன்: சாமவேதகீதம்பாடுவோன். [உத்காதா.]

உற்காதாரி — தீவர்த்திகொண்டு செல்லுவோன்.

உற்காமுகம்—கொள்ளிவாய்ப்பேய். [உல்காமுக: உல்கா-கொள்ளி. முக-வாய்.]

உற்காரசூலை—ஒருநோய்.

உற்காரம்— 1. அதிர்ச்சி. 2. ஏப்பமிடுதல். 3. கார்ப்பு. (உ-ம்.) "உற்காராதிகளில் விளங்குசுவை" (வேதாரு. ௭௩) 4. தூற்றுந்தானியம் 5. வாந்திசெய்தல். [4. உத்கார. 2 5. உத்கார.]

உற்காரன்—தானியம் விதைப்போன். [உத்காரா.]

உற்கிராந்தி—கட்டவிழ்ந்தது.

உற்கிரமணம்—உற்கிரமம்.

உற்கிரமம்— 1. மீறுதல். 2. வழிதவறிப்போதல். 3. வெளியேபோதல். [உத்க்ரம: உத் - மேலே. க்ரம - அடிவைத்தல்.]

உற்கிருட்டதை — சிரேட்டமான தன்மை. [உத்க்ருஷ்டதா.]

உற்கிருட்டம்— 1. இழுக்கப்பட்டது. 2. சிரேட்டமானது. (உ-ம்.) "போகங்களைஉற்கிருட்டமாகவிசாரித்தறிந்து" (சி. சி. பர. உலோகா. ௧௩. ஞாநப்.) [உத்க்ருஷ்டம்.]

உற்கிருட்டன்—உயர்ந்தவன்.

உற்கிருதி— ஒருவகைச்சந்தம்; அஃது: அடியொன்றுக்கு இருபத்தாறசைகொண்ட நான்கடிகளையுடையது.

உற்கீதம்— 1. சாமவேதத்தின் இரண்டாம்பாகம். 2. சாமவேதம்பாடுதல். 3. பிரணவமந்திரம். [உத்கீத.]

உற்கீரணம்—சர்த்திசெய்தல். [உத்கீரண.]

உற்றுண்டம்—முகமேலாகக்கிடைத்தல்.

உற்குரோசம்— 1. நீர்வாழ்பறவை. (சூ. நிகண். ௩.) 2. பேரொலி. [உத்க்ரோஶ.]

உற்கை—1. அக்கினி. 2. தீவர்த்தி. 3. நெருப்புக்கொள்ளி. (உ-ம்.) "உண்ணிவந்தொளிர் மணியினுலுற்கையென்றெறியும்" (நைடத. நகர. உ.) 4. விண்மீன். (உ-ம்.) "வானகத்-தோரிடையுடன்விழுமுற்கைபோல்" (பாரத. குருகுல. ௬௧.) 5. விண்வீழ்கொள்ளி. (உ-ம்.) "இழிந்தவா-னுற்கையென்ன" (பாரத. இரண்டா. ௧.) [உல்கா.]

உற்கோசம்—பரிதானம்.

உற்கோசகன்—பரிதானம் வாங்குவோன்.

உற்சர்க்கத்தலம்—மூலாதாரம்.

உற்சர்க்கம்— 1. உடம்பிலுள்ள அபானத்தையடுத்தமூலம். 2. கைவிடுதல். 3. கொடை. 4. தள்ளுதல். 5. தாநம். 6. மலமோசநம். [உத்ஸர்க.]

உற்சர்ச்சம்—1. கொடை. 2. வேதமோதுதலைநிறுத்துதல். 3. வேதமோதுதலைநிறுத்தும்போதுசெய்யுஞ்சடங்கு. (2. 3. பரா. மி. ௧௧௩. பக்.) [உத்ஸர்ஜந.]

உற்சர்ப்பிணி— 1. உலகம், வாழ்நாள், போகம் முதலியவைகளால் வளர்பிறைபோலப்பெருகுங்காலம். (வன். ௩௬௧. பரி.) 2. பத்துக்கோ

டா கோடி சமுத்திர வருடங்கொண்ட காலம். [உத்ஸவிநீ.]

**உற்சவசங்கேதர்**— மலைவாசிகளாகிய திருத்தமில்லாத ஒருவகைச்சாதியார்; இவர்கள் இன்னனுக்கு இன்னள் மனைவி என்னும் நியமமின்றித் தங்களிஷ்டப் பிரகாரம் கிரீடை செய்வோர். (உ-ம்.) "அண்டமெங்கணுந்-தாண்டுவெண்சீர்த்தியுற்சவசங்கேதரோடு" (இரகு. திக்கு. உசுo.) [உற்சவம் - ஆநந்தம்; சங்கேதம் - நியமம்.]

**உற்சவபேதநான்கு** — சாகலியம், பாவநம், சாந்தம், மாங்கலியம் என்பன.

**உற்சவம்**— 1. ஆநந்தத்தைப்பிறப்பிக்குஞ் செய்கை. 2. உயர்ச்சி. 3. கோபம். 4. திருவிழா. (உ-ம்.) "சிவன்றனுற்சவத்தினும்" (சைவச. பொ.கூசசு.)5. விருப்பம். [உத்ஸவ: உத் மேல். சு-பிறப்பித்தல்.]

**உற்சற்சனம்**—நன்கொடை.

**உற்சாகசத்தி**— அரசர்க்குரிய மூவகை ஆற்றல்களுள் ஒன்று; அது மநத்திடப்பத்தோடுகூடியமுயற்சி. (உ-ம்.) "மந்திரம்பிரபுவுற்சாகமாம் வல-மூன்றுறு சத்திகண்மூன்றும்" (இரகு. திக்கு. உரு.) [உத்ஸாஹ - முயற்சி. ஶக்தி- வலிமை.]

**உற்சாகபங்கம்**—உற்சாகமின்மை. (உ-ம்.) "உந்துகணமோருகமாவுற்சாகபங்கமுற்றே யுறைகின்றூரால்"( சிவரக. நந்திகணங்கள். ௫.)

**உற்சாகம்**— 1. சந்தோஷம். 2. நூற்கும் நூல். 3. முயற்சி, ஊக்கம். 4. விடாமுயற்சி. [உத்ஸாஹ: உத் - மேல். ஸஹ - வலி.]

**உற்சாகித்தல்**—முயற்சிசெய்தல்.

**உற்சாதநம்**—1. அழித்தல். 2. உழுதிரட்டித்தல். 3. பரிமளமூட்டுதல். 4. மேற்போதல். [உத்ஸாதந.]

**உற்சாரகன்**—கடைகாப்போன்.

**உற்சாரணம்**—1. அகற்றுதல். 2. விருந்தினரையுபசரித்தல். [உத்ஸாரண.]

**உற்சுகம்**—இச்சித்தல். (சீவரட். கூ0.)

**உற்சேதம்**— 1. உடம்பு. 2. உயர்ச்சி. 3.கொலை. [உத்ஸேத.]

**உற்சேபணம்**— விசிறி. [உத்க்ஷேபண.]

**உற்சேபம்**— 1. அலைபுரளுதல். 2. அனுப்புதல். 3.எறிதல். 4.வார்த்தித்தல். [உத்க்ஷேப.]

**உற்பத்தி**— 1. காரியத்தைப்பிறப்பித்தல். 2. பிறப்பு. (உ-ம்.)"உற்பத்திநாசமெனுமாசௌசத்தும்" ( சைவச. பொது. கூசசு. ) [உத்பத்தி.]

**உற்பத்திக்கிரமம்**—உற்பத்தியான முறை; அஃது ஒன்றன்பின்னொன்றாக உற்பவித்தவைகளை அம்முறையே எண்ணுவது. [உத்பத்தி கூ௭ி: உத்பத்தி பிறப்பு. கூ௭ி ஒழுங்கு.]

**உற்பத்திப்பிரயோகம்**— அபிப்பிராயம்.

**உற்பத்திமத்து**—உற்பவமுடையது.

**உற்பத்திவாதி**— மாவிரதசமயத்தோன். [மூத்தான்மாக்களுக்குச்சிவனோடு சமமாக எல்லாக்குணங்களும் உற்பத்தியாகுமெனலால், இம்மதஞ்செய்தவர் வித்தையெனுந்தத்துவத்திலிருக்கும் ஒருருத்திரர்.] (சிவ. பாடிய. கக.)

**உற்பதநம்**—1. எறிதல். 2. பிறத்தல். 3.மேலே போதல். [உத்பதந.]

**உற்பதம்**— 1 தன்னெறி. 2. பறவை. 3. பிழை. 4. மேலேபோதல். [உத்பத; உத் - மேலே. பத்-போதல்.]

**உற்பந்நம்** — 1. அதிகப்பட்டது. 2. உண்டானது. (சி. சி. உ: சுக. சிவாக்.) 3. காரியப்பட்டது. [உத்பந்ந; உத் - மேலே. பத் - போதல்.]

**உற்பநம்**— 1. உண்மை. 2. உத்தமம். 3. கல்வி. 4. பிறப்பு. (உ-ம்.) "சேணுமுற்பநவேதத்திருப்பொருளை" (இரகு. அரசு. கூ.)

**உற்பலசாசநன்**—
**உற்பலசானன்**— } பெருங்காயம்.

**உற்பலசைலம்**—உற்பலவரை. (உ-ம்.) "உற்பலசயிலமேவும்" (திருப்பு. உ௫0.)

**உற்பலபத்திரம்**— 1. உற்பலத்தினிலை. 2. நெற்றித்திலகம் 3. பெண்களின்தனம் முதலியவைகளிலேவைக்கும் நகக்குறி. [உத்பலபத்ர.]

**உற்பலம்**—1. கருங்குவளை. (உ-ம்.) "ஒருபகற்குற்பலமூன்றுய்த்- தாழிருஞ்சுனை தன்னிடைமலர்ந்திடும்" (கந்தபு. வள். உஉகூ.) 2. கருநெய்தல். (சூ. நிகண். உ: சுக.) 3. செங்கழுநீர். (சூ. நிகண். உ: சு0.) 4. செங்குவளை. (பிங்கல. கூ0கஉ.) [உத்பல.]

**உற்பலம்பம்**—தோற்றம்.

**உற்பலவரை**—தணிகைமலை. (உ-ம்.) "உற்பலவரையில்வாழ்வோர்" (கந்தபு. வள். உஉஅ.) [ஒவ்வொருநாளும் மலரும் நீலப்பூவுடைமையின் இப்பெயர்த்தாயிற்று. உற்பலம் - நீலப்பூ. வரை - மலை.]

**உற்பவகாரணன்**—பிதா. (உ-ம்.) "வரம்பிலாஞானமுற்பவகாரணன்" (பாரத. பழம். உ0.)

உற்பவநம் — தருப்பையினாலே தோய்த்து நெய்முதலியவைகளை யாகாக்கினியிலே தெளித்துச்சுத்திசெய்தல்.

உற்பவம்—1. கருப்பந்தரித்தல். 2. பிறப்பு. (உ-ம்.)"மாதுடவுற்பவம்-பெற்றவாழுதலரிது" (பாரத. சஞ்சய. எ.) [உத்பவ.]

உற்பவமாலை—ஒரு பிரபந்தம்; அது: பாட்டுடைத்தலைமகன் பிறப்பினை ஆசிரியவிருத்தத்தாற்கூறுவது. [திருமால்பிறப்புப்பத்தனையும் ஆசிரியவிருத்தத்தாற்கூறுவது என்றார் தொன்னூல்விளக்கமுடையார்.]

உற்பவித்தல்—1. பிறத்தல். (உ-ம்.) "அரமகளொருத்திமீனமாயுற்பவித்துழல்வாள்" (பாரத. குருகுல. கo௫.) 2. பிறப்பித்தல். (உ-ம்.) "நாவலனேமத்தியினம்மை யுற்பவித்துவிட்டான்" (பாரத. நச்சு. சக.)

உற்பவிப்பு— 1. கருப்பமுண்டாகுகை. 2. பிறப்பு.

உற்பன்னம்— } 1. உண்மை. 2. உத்தமம். 3. கல்வி. 4. தோற்றம். 5. பிறப்பு.
உற்பனம்— }

உற்பாடநம்— 1. அழித்தல். 2. கக்கல். 3. வேரோடு பிடுங்குதல். [உத்பாடந: உத் - மேல். பட் -போதல்.]

உற்பாத்தியம்—பிறப்பிக்கப்படுமேது. [உத்பாத்ய.]

உற்பாதகம்— 1. காரணம். 2. சரபப்பட்சி. 3. தொடக்கம். 4. பிறப்பிக்குமது. [உத்பாதக.]

உற்பாதகன்— 1. உண்டாக்குவோன். 2. தகப்பன். [உத்பாதக.]

உற்பாதநம்—பிறப்பித்தல், [உத்பாதநம்: [உத்-மேல். பத்-போதல்.]

உற்பாதம்— 1. கொடுமை. 2. தெய்வத்தால்வருந்தீமைகளை அறிவிக்குஞ் சுபாவக்காட்சி. (உ-ம்.) "உற்பாதம்பெரிதெனநெஞ்சுருகுவாரும்" (பாரத. சூது. உசுo.) [அவ்வுற்பாதம் விண்வீழ்கொள்ளிபூகம்பம் முதலியன.] 3. நுண்ணறிவு. 4. பாய்தல். 5. பிறப்பித்தல். (பௌட். உ. கரு.) 6.பிறப்பு.7. மேலே தூக்கின கால். [1. 3. 4. 5. 6. 7. உத்பாத. 2. உத்பாத.]

உற்பாதித்தல்— உண்டாக்குதல். (உ-ம்.) "காலத்தையுற்பாதிப்பர்" (சி. சி. உ: ௫௪. சிவாக்.)

உற்பாதிதம்—பிறப்பிக்கப்பட்டது. [உத்பாதித.]

உற்பிச்சம் — நால்வகைத்தோற்றத்துளொன்று; அது: வித்து, வேர் முதலியவைகளைமேற்பிளந்துதோன்றுவது. (உ-ம்.) "அண்டசஞ் சுவேதசங்களுற்பிச்சம்" (சி. சி. உ: அக.) [உத்பிஜ.]

உற்பிந்நம்—1. தளிர்த்தது. 2. பிளவுபட்டது.[உத்பிந்ந: உத்- மேல். பித்- பிளத்தல்.]

உற்பிராசநம்— நிந்தித்தல். [உத்ப்ராஸந: உத் - மேல். ப்ர. அஸ் - எறிதல்.]

உற்பிரேட்சை — தற்குறிப் பேற்றம் என்னும் அலங்காரம்.

உற்பீசம்—நிலத்திற்பிறப்பன.

உற்புலிதகரணம் — பரதத்தின்பொது இலக்கணங்களாகிய இருபது பேதங்களுளொன்று. (உ-ம்.) "அங்ககாரம்" பார்.

உற்பூதம்— 1. இந்திரியங்களால் அறியப்படத்தக்கது. 2. காட்சியைப்படையப்பதொரு கருமவிசேடம். (தச. மகா. உக.) 3. காணப்படுவது. (சி. சி. உ. சு௫. சிவாக்.) 4. தோன்றியது. (சைவப். சுரு.)[உத்பூத.]

உற்பூதவுருவம்—பிரத்தியட்சமாய்க்காணப்பட்டவடிவம். (உ-ம்.) "எத்திரவியம் பரிதாவுற்பூதவுருவமுடையது அத்திரவியம் கட்புலப்படுவது" (தர்க்கபா. சு. பக்.)

உற்றது— 1. உள்ளகாரியம், நிகழ்ந்த காரியம். (உ-ம்.) "உற்றதெல்லாஞ்-சொன்னபின்" (இராமா. கைகேசி. ௫.) 2. சரியானது.

உற்றதுரைத்தல்— எண்வகைவிடைகளுள் ஒன்று. (உ-ம்.) "இறையப்பது" பார்.

உற்றபடி—நிகழ்ந்தவாறு. (உ-ம்.) "உற்றபடிதம்முனிருதாடொழுதுரைத்தான்" (பாரத. சடாசுரன். உரு.)

உற்றபண்புரைப்பேரர்—தூதர்.

உற்றவன்—1. உறவன். 2. சேர்ந்தவன்.

உற்றறிதல்—1. ஆராய்ந்தறிதல். 2. சேர்ந்தறிதல். 3. பரிசித்தறிதல். (உ-ம்.) "ஒன்றறிவதுவே யுற்றறிவதுவே" (தொல். பொரு. ௫அரு.)

உற்றன்று— உற்றது. (உ-ம்.) "பேர்த்திடுசெம்பொன்வேரம்பேரவைமிசையுற்றன்றே" (கந்தபு. நகரழி. சு.)

உற்றன்மை—1. உற்றவுரிமை. 2. உறவன்போலுந்தன்மை.

உற்றார்— 1. சுற்றத்தார். 2. சிநேகர், சேர்ந்தவர். (உ-ம்.) "உற்றாராருளரோவுயிர் கொண்டுபோம்பொழுது-குற்றாலத்துறை கூத்தன

ல்லானமக்-குற்றாருளரோ" (தேவார. திரு வங்க. ௧0. திருநாவு.) 3. தற்கொண்டார், தன் னைச்சேர்ந்தவர். (உ-ம்.) "உற்றார்க்குரியவர் பொற்றொடிமாதர்" (தணிகை. களவு. ௫௨௩.)

உற்றாய்தல் — தீர்க்கமாய் ஆலோசித்தல்.

உற்றிடம்—1. அடைக்கலம். 2. ஆபத்து, ஆ பத்துவந்தவிடம். (உ-ம்.) "கொற்றவனறிதலு ற்றிடத்துதவி" (கொன்றை.) 3. உற்றசமயம்.

உற்று—உவமவாசகம். (சிந்தா.)

உற்றுக்கேட்டல்—கவனமாய்க்கேட்டல்.

உற்றுணர்தல் — ஆராய்ந்தறிதல். (உ-ம்.) "உள்ளபடியாதுமெனவுற்றுணர்ந்தேன்" (தா யு. பரா. உ௭௫.)

உற்றுநோக்கல்—குறித்துநோக்கல்.(உ-ம்.) "உற்றுநோக்கி" (திருக்கோ. ௧௩௩.)

உற்றுப்பார்த்தல்— 1. ஆராய்ந்துபார்த்தல். 2. குறித்துப்பார்த்தல்.

உற்றுழி— 1. அடைந்தகாலம். (உ-ம்.) "உ றங்கவலொன்-றுற்றுழியுங்கைகொடுக்கும்"(நீ திநெறி. உ.)2.ஊறுபாடுற்றகாலம். (உ-ம்.)"உற் றுழியுதவியும்" (புறநா. ௧அ௩.)

உற்றோர்—உற்றார்.

உற— 1. உற என்னேவலும், தெரிநிலைவி னைப்பகுதியும். 2. மிக. (உ-ம்.) "இவனுறச்சி றியனேனும்" (இரகு. குல. உஉ.)

உறக்கம்—1. ஒடுக்கம். 2. நித்திரை.(உ-ம்.) "ஓதுகங்குலினெடிதுறக்கநீங்கினன்" (இரா மா. கிளை. ௧௩௧.) 3. மரணம்.

உறக்கல்—1. உறங்குதல். 2. கறக்குதல். 3. கிள்ளல். 4. பிழிதல். 5. முற்றுங்காரல். 6. விர லாற்பிதுக்கியெடுத்தல்.

உறக்கு— 1. உறக்கென்னேவலும், தெரிநி லைவினைப்பகுதியும். 2. நித்திரை. (உ-ம்.) "உ றக்கிடைமயிலனுடன்"(சிந்தா. பதுமை. ௧௨௪)

உறக்குதல்— 1. கிள்ளுதல். 2. துயிலச்செ ய்தல். 3. நாசப்படுத்துதல். 4. முற்றுங்கவர்த ல். 5. விரலாற்பிதுக்கியெடுத்தல்.

உறங்கல்—உறங்குதல். (உ-ம்.) "பகலினு றங்கல்" (தணிகை. அகத். ௩௧௭.)

உறங்கி—புளியமரம்.

உறங்குதல்—1. இலை முதலிய ஒடுங்குதல். (உ-ம்.) "ஒள்ளியமலர்களெல்லாமுறங்குதலன் றி" (பாரத. பதினெட். ௧௧௫.) 2. குடிகொண் டிருத்தல்.(உ-ம்.) "அழகுறங்கும்புணர்முலைப்பு லோமசை" (கூர்மபு. அந்தகாசு. உ௩.)3. சோர் தல். 4. நித்திரைசெய்தல். (உ-ம்.) "நிழலிடை யுறங்குமேதி" (இராமா. நாட். ௬.)

உறட்டல்—வறட்டுதல்.

உறட்டலன்—வறண்டவன்.

உறட்டற்களி—வறட்களி.

உறட்டி— 1. அப்பம். [ இது ரொட்டி என் னுந்தெலுங்குச்சொல்லின் திரிபு. ] 2. வறண் டது.

உறட்டு—1. உறண்டைநாற்றம். 2. காட்டு நிலம். 3. குறை. 4. குறைசொல்லல். 5. சுற ட்டு.

உறட்டுதல்—வறட்டுதல்.

உறட்டை—துர்க்கந்தம்.

உறண்டற்களி—வறட்களி.

உறண்டு—முரட்டுக்குணம்.

உறண்டுதல்—வறழ்தல்.

உறண்டை—1. துர்க்கந்தம். 2. தொந்தரவு செய்கை. 3. முரட்டுத்தனம். 4. வறட்சி.

உறத்தல்— 1. சுருங்குதல். (உ-ம்.) "உற க்குமால்வித்தினுள்ளால்" (காஞ்சிபு. கச்சிமயா. உஉ.) 2. பிதுக்கல். 3. புண்படக்கிழித்துத்தி றத்தல். (உ-ம்.) "ஊட்டியையுறந்ததுபுலி" (நன். உ௬௪. பக். இராமாநு) 4. முற்றக்கவர் தல்.

உறந்தை—உறையூர். (உ-ம்.) "ஒடாப்பூட் கையுறந்தையும்" (சிறுபா. அ௩.)

உறப்பு— 1. செறிவு. (உ-ம்.) "உறந்தவிஞ் சி" (தொல். சொல். ௩௪௭. உரை.) 2. புண்பட க்கிழித்துத்திறத்தல். (உ-ம்.) "உறத்தல்" பார்.

உறமுறை—உறவின்முறை.

உறல்— 1. அடைதல். (உ-ம்.) "உருமென வுருத்துவந்துறலும்" (இரகு. மீட். ௭௧.) 2. உறவு. (உ-ம்.) "உறன்முறை" பார். 3. உறு தல், பொருந்தல். (உ-ம்.) "உறற்பால-லூட்டா கழியுமெனின்" (வள். ௩௭அ.)

உறவன்—உறவுடையோன்.

உறவாக்கல்--நட்பாக்கல்.

உறவாடுதல்—1. உறவுகொண்டாடுதல். 2. நட்புச்செய்தல்.

உறவாதல்—நட்பாதல்.

உறவாளி—உறவாகக்கொண்டவன். (உ-ம்.) "மதித்தமூவரையங்குறவாளியே" (சிவதரு. சிவஞா. அக.) [உறவு; ஆளி.]

உறவி— 1. உயிர். (சூ. நிகண். ௧௧: ௭.) 2. உலைக்களம். (பிங்கல. ௬௧௧.) 3. உறவு. (சூ. நிகண். ௧௧. ௭.) 4. ஊறுபுனல். (சூ. நிகண். ௫: உ௭.) 5. எறும்பு. (உ-ம்.) "ஒற்கமின்றி யுறவியொன்று" (சேதுபு. அவை. ௬.) 6. ஒரு புழு. 7. கிணறு. (பிங்கல. ௬௧௧.) 8. சுற்றம். 9. மலைமுருங்கை.

உறவின்முறையார்—உறவர்.

உறவு— 1. உற்றசமயம். 2. ஒற்றுமை. 3. சம்பந்தம். (உ-ம்.) "கோதையாலுறவுகொண்டு

கைதரல்" (பாரத. குருகுல. ௯௯௧.) 4. சிநேகம். (உ-ம்.) "ஒருவேனெனுநீயுறவாகலேயோ" (இராமா. கடிமண. ௧௪.) 5. சுற்றம். (உ-ம்.) "உற்றுழித்தீர்வாருறவல்லர்" வாக்குண்டா. ௧௭.) 6. பொருந்துகை.

உறவோர்— 1. சுற்றத்தோர். 2. நண்பர்.

உறழ்— 1. இடையீடு. 2. உறழென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 3. ஒப்பு. 4. காலம். 5. (கணக்கதி) பெருக்கல். 6. வாது, பகை. (உ-ம்.) "உறழ்குறித்தல்" பார்.

உறழ்குறித்தல் — வாது செய்யக் கருதல். (உ-ம்.) "உறழ்குறித்தெடுத்தவுருகெழுகொடியும்" (பட்டின. ௧௭௧.)

உறழ்ச்சி—1. உறழ்தல். 2. (கணக்கதி) பெருக்கல். 3. (இலக்கண) விகற்பம். (உ-ம்.) "உறழ்ச்சியெய்துநவும்" (இலக்கணவி. ௮௬.) 4. மாறுபாடு. (சிந்தா)

உறழ்தல்—1. இசைக்கரணமெட்டினுளொன்று; அஃது ஒன்றிடையிட்டும் இரண்டிடையிட்டும் நரம்புகளைத்தெறித்தல். (கூர்மபு.தேவி. ௧. உரை.) 2. இடையிடுதல் 3. உவமையாதல். (உ-ம்.) "உலத்தொடுமுறழ்புயத்துழவர்" (கந்தபு. திருநாட். ௫.) 4. (இலக்கண.) பலவிதமாகவருதல், விகற்பம். (உ-ம்.) "கன்னவ்வேற்று மென்மையோடுறழும்" (நன். மெய்யீ. ௧௪.) 5. (கணக்கதி) பெருக்கல். (உ-ம்.) "இருநான்குருபுமுறழ்தரநாற்பதாமுருபே" (நன். உருபு. ௧.) 6. மாறுபடுதல். (உ-ம்.) "உறழ்மணியானுயர்மருப்பின" (புறநா. ௨௨.)

உறழ்தலுவமை—உவமையலங்காரவகையுளொன்று.

உறழ்பொருள்—ஒப்புமை கூறாது மாறுபடக்கூறப்படும் பொருள். (தொல். சொல். ௧௬. சேனு.)

உறழ்வு— 1. இடையீடு. 2. புணர்வு. 3. எண்பெருக்குகை. 4. எதிர். 5. ஒப்பு. (உ-ம்.) "ஐந்துவாளியேயுறழ்வென" (பாரத. சூது. ௭௭.) 6. காலம். 7. செறிவு 8. பகை. 9. போர். 10. (இலக்கண.) விகற்பம். (உ-ம்.) "அல்வழியவற்றோடுறழ்வும்" (இலக்கணவி. ௧௬௭.) [1, 2, 6, 7. சூ. நிகண். ௧௧ ௭.]

உறழ—ஒருவகையுருபு. (நன்னூ. பொது. ௧௬.)

உறழல்—உறழ்தல்.

உறன்முறை—உறவுமுறைத்தன்மை. (உ-ம்) "உறன்முறையானுட்பகைதோன்றின்" (வள்: அஅரு.)

உறவரை—1. பிறருள்ளேவராத எல்லையையுடைய நிலம். (உ-ம்.) "இடமிதெந்தை-யுருவரை" (திருக்கோ. ௨௫௨.) [உரு - அடையாத. வரை-எல்லை. ஆரியபாடையிலுள்ள "நிலம்" எனப்பொருள்படும் "உர்வரா" என்னும் பதம் "உருவரை" எனமருவிற்றென்று கொள்ளினும் பொருந்தும்.]

உறுங்க—உருதொழிதல்வேண்டும். (புறநா.)

உறி— 1. உணவுப் பதார்த்த மிருக்கும் மட்கலம் முதலியவைகளை அல்லது வேறு பொருள்களை வைத்தற்காகக்கயிற்றினுற் கோக்கப்பட்டு வீட்டிறப்பில் அல்லது காத்தடியில் அல்லது மரக்கொம்பிற் றூக்கப்படும் வளையம். (உ-ம்.) "உறியில் வெண்டயிருண்டவன்" (பாரத. அருச்சுனன்றீர். ௭௨.) 2. உறியென்னேவலும், தெரிநிலை வினைப் பகுதியும், வினைத் தொகையும்.

உறிக்கா— இரண்டுபக்கங்களிலுமுறியையுடையதாய்த்தோளிலே வைத்துக்கொண்டு செல்லும் கா. (உ-ம்.) "உறிக்கா வூர்ந்தமறப்படு மயிர்ச்சுவன்" (பெரும்பா. ௧௭௧.)

உறிச்சமணர்—சமண் முனிவரிலொருபாலார். [இவர் பூமியிலே நடந்தால் எறும்பு முதலியபிராணிகளிறக்குமென்று இரங்குவர்போல உறியிலிருப்பர்.]

உறிஞ்சுதல்— 1. ஆக்கிராணித்தல். 2. உள்ளிழுத்தல். (உ-ம்.) "இந்த நஞ்சுபுண்ணின்கள்ளத்தையுறிஞ்சியெடுக்கும்" 3. வாய்க்குள்ளிழுத்தல். (உ-ம்.) "நன்குறிஞ்சிப் - பேய்த்தனஞ்சுவைத்தார் பிறர்க்கமுதீந்தீசனுக்கு - வாய்த்தநஞ்சுவைத்தார்வரை" (திருவேங்கடமாலை. ௪௧.)

உறிதல்—உறிஞ்சுதல்.

உறியடி— கிருட்டிணர் உறியிலே தூங்கிய தயிரைக் கவர்ந்தசெயலைக்கொண்டாடுந் திருவிழா.

உறியடித்தல்— உறியடித்திருநாளைக்கொண்டாடுதல்.

உறியிற்சமணர் — சமணமுனிவரிலோர்பாலார்.

உறீஇ— 1. அழுத்தி. (சிந்தா.) 2. உறுவித்து. (பதிற்றுப்.)

உறு— 1. உறு வென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும், வினைத்தொகையும். 2. மிகுதி. (உ-ம்.) "உறுவலிப்பாசம்" (தணிகை. இராம. ௧௮.)

உறுக்கல்— 1. அதட்டல். (உ-ம்.) "வந்திடாவிடிலுறுக்கிவளாரினலடித்து" (சி. சி. உ: ௧௬.) 2. உறுத்துதல். (உ-ம்.) "செஞ்சுளைப்பலவின்பரற்கையுறுக்கும்" (சிலப். நாடு. ௭௫.) 3.

ருதித்தல். (சூ. நிகண். கூ: கூஅ.) 4. கோபம். 5. சினக்குறிப்பு. 6. தண்டித்தல். (உ-ம்.) "சுரு திமொழிதப்பின மனைவிட்டிடருறவுறுக்கியிட ர்தீர்த்து" (தாயு. சின். சு.)

**உறுக்காட்டம்**—உறுக்கிப்பேசுமுறை.

**உறுக்காட்டியம்**– உறுக்கிப்பேசுமாரவாரம். [உறுக்கு - ஆட்டு - இயம்.]

**உறுக்கு**—1. உறுக்குதல். (உ-ம்.) "உறுக்கு றுசொல்லர்" (இராமா. பஞ்சசேனு. சுசு.) 2. உறுக்கென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதி யும், வினைத்தொகையும்.

**உறுக்குதல்**—உறுக்கல்.

**உறுகண்**— 1. அச்சம். 2. தரித்திரம். 3. துன்பம். (உ-ம்.)"உன்னையேபுகல்புக்கேனுக்கு றுகண்வந்தடைவதுண்டோ" (இராமா. திரு (வவ. கூ0.) 4. நோய்.[1,2, 4. சூ. நிகண். கக:]

**உறுகணாளர்**—1. உறுகண்ணுடையோர். 2. தீவினையாளர், மிடியாளர். (உ-ம்.) "உறுகணா ரிற்-கடைகழிந்திங்ஙனங்கருதியவாறென" (சி லப். நாடு. சஅ.)

**உறுகணாளன்**—1. உறுகண்ணுடையோன். 2. தரித்திரன். (சூ. நிகண். உ: சகூ.)

**உறுகை**—ஊறுதல். (உ-ம்.) "மருவுதலுறு கையினால்" (கலி. சரு. உரை.)

**உறுகோள்**—சம்பவம். (உ-ம்.) "குளங்கோ டுமென்றிதுவுமுறுகோளே" (இராமா. சூர்ப்ப. கச0.)

**உறுசூது**—பெருவஞ்சகம்.

**உறுண்டுகம்**—அவுபலபாஷாணம்.

**உறுத்தல்**—உறுத்துதல்.

**உறுத்துதல்**—1. அமைத்தல். (உ-ம்.) "செ யலுறுத்தெழுதிற்றுண்டேல்" (கந்தபு. மாயை ப். சுஉ.) 2. உண்டாக்கல். 3. ஒற்றுதல். 4. சேர்த்தல். (உ-ம்.) "அம்மமூர்த்துபுக்குறுத்தவ ணடிமலர்பணிவாம்" (தணிகை. காப்பு.) 5. நா ட்டுதல். (உ-ம்.) "சூலையுறுத்தியவயிறுறும்" (இரகு. நாட். கச.) 6. நினைத்தல். 7. பட்டு த்தாக்கல். (உ-ம்.) "காலிற்றெறுக்கான்முள்ளு றுத்தி" (சேதுபு. அநு. கஉ.) 8. மனத்திற்ப தித்தல். 9. மிகுத்தல். 10. வருத்தல். 11. வரு வித்தல். (உ-ம்.) "அறவர்தோழரிவர்க்கருளுறு த்தல்" (தணிகை. அகத். உகூச.)

**உறுத்தை**—அணில்.

**உறுதல்**— 1. அடைதல். (உ-ம்.) "உம்மை ப்போலுந்தரணிபருறுதல்செய்யார்" (பாரத. அருச்சுனன்றவ. உஅ.) 2. ஆராய்ந்தமைதல். (உ-ம்.) "யானுணர்ந்தேனுற்றே" (தாயு. பொ ன். எசு.) 3. உண்டாதல். 4. கூடுதல். 5. சம் பவித்தல். 6. தங்குதல். 7. தொடங்குதல். இது: சொல்லல் எனப்பொருள்படும் ஒரு தொ ழிற்பெயரையணைந்து பின்னின்று இப்பொ ருள்பயக்கும். (உ-ம்.) "வசிட்டனிவைபேசலு ற்றான்" (ஞானவா. வைராக். ருசு.) 8. பரிசித் தல். 9. பழுதுபடுதல்,இடையூறெய்தல்.(உ-ம்) "ஊறொராலுற்றபின்னால்காமை" (வள்.சுசுஉ.) 10. பொருந்துதல். (உ-ம்.) "நீலுறுமணிசெய் மாடம்" (இரகு. நகரப். சஉ) 11. மிகுதல். (உ-ம்.) "உற்றமுஞ்சேய்" (தாயு.சொல்லற்.ச.) 12. வருதல்.

**உறுதி**— 1. அங்கம். 2. அறிவு. (உ-ம்.)"மு ன்னவன்புகலுறுதிகூர்மொழியெலாங்கேட்டு" (பாரத. புட்ப. சரு.) 3. ஆதாரம். (உ-ம்.) "உ யிர்த்திரட்கெலாமுறுதி-யென்றதாய்" (தாயு. எனக்கென. கஉ.) 4. ஆற்றல், பெலம்.(உ-ம்) "இருவருந்தம்முறுதியினின்றாரென்னில்' (சி. சி. க: கூரு.) 5. ஆன்மலாபம். (உ-ம்.) "உறு தியிந்தப்-பிறந்திடும்பிறப்பிலெய்தப்பெறு துமெ ன்றுள்ளந்தேறு" (திருவிளை. பாயிர. உச.) 6. உள்ளகாரியம். (உ-ம்.) "மேலுனக்குறுதி சொன்னேன்" (பாரத. எட்டா. கசு.) 7. உற் றதொழில். (உ-ம்.) "உண்டியுமிழந்தேனுறு தியுமிழந்தேன்" (பாரத. நாடுநகர. உச.) 8. உறுவது, சம்பவிப்பது. (உ-ம்.) "தம்முயிர்க் குறுதியெண்ணார்" (இராமா. மந்திர. கூ.) 9. கல்வி. (சூ. நிகண். க0. உ0. 10. சன்மார்க்க உபதேசம். 11 சாசனபத்திரம். 12 தளரா நிலை. (உ-ம்.) "கன்னனின்றவுறுதிகண்டு"(பா ரத. பதினேன். கக.) 13. திடவாக்கு. (உ-ம்.) "ஆண்டவன்புகலுறுதியுமாண்மையுங்கேட்டு" (பாரத. புட்ப. சஎ.) 14. நம்பப்படுந்தன்மை. (உ-ம்.) "உன்னைமெய்காக்குந்தேவருறுதியுமு ரனுங்கண்டாய்" (பாரத. கீசக. ருச.) 15. நல் லகாரியம். (உ-ம்.) "அமோகனித்தன்மைதே ற்றவுறுதியீதென்று" (கந்தபு. அசுரே. சுக.) 16. நன்மை. (உ-ம்.) இனியென்மைந்தர்க்குறு தியில்லை" (பாரத. பத்தா. சஅ) 17. நிச்ச யம். (உ-ம்.) "வீடுதலுறுதியென்றேவிளம்பி" (கந்தபு. சூர. வதை. சுச.) 18. பயன். (உ-ம்.) "உறுதியெய்தினையிருமையும்" (திருவிளை. இ ரச. உஉ.)

**உறுதிக்கட்டுரை**— கழறல், இடித்தல், நெ ருங்கல். (பிங்கல.)

**உறுதிச்சுற்றம்**— 1. அரசர்க்குத்துணைவரா ய் அவரைப்பற்றிநிற்போர்; அவர்: நட்பாளர், அந்தணாளர், படைத்தொழிலாளர், மருத்துவக் கலைஞர், நிமித்திகப்புலவர் என ஐவர். (பிங் கல. எஎக.) 2. உற்றதுணைவர்.

**உறுதிச்சொல்**—நிச்சயமொழி.

உறுதிப்படுத்தல்— 1. சாதனமுடித்தல். 2. நிச்சயப்படுத்தல். 3. பெலப்படுத்தல்.

உறுதிப்பத்திரம்—எழுத்துறுதி.

உறுதிப்பாடு—திடப்படுத்தல்.

உறுதிப்பொருள்— 1. கடவுள். 2. ஞானம், 3. நிச்சயார்த்தம். (உ-ம்.) "ஒன்றுகூறுவதுண் டுறுதிப்பொருள்" (இராமா. மந்தரை. சு.)

உறுதிபயத்தல்—நயன்தருதல்.

உறுதிமொழி—நிச்சயமொழி.

உறுதியர்—1. உற்றதுணைவர். 2. தூதர். 3. மந்திரிகள்.

உறுதுணை—உற்றதுணை. (உ-ம்.) "ஆவிக் குறுதுணையாரையாபராபரமே" (தாயு. பராபர. உசுக.)

உறுந்தறுவாய்—தற்சமயம்.

உறுநர்—சேர்ந்தவர். (உ-ம்.) "உறுநர்த்தாங் கிய மதனுடைநோன்றாள்" (திருமுரு. ச.)

உறுப்படக்கி—ஆமை. (சூ. நிகண். ௩: எச.) [உறுப்பு - அவயவம். அடக்கி - உள்ளடக்குவது.]

உறுப்பற்றவன்— 1. அவயவவீனன். 2. ஒழுக்கமில்லாதவன்.

உறுப்பறை— அவயவமறுதல்; அது: கை குறைத்தன்முதலியன.(தொல். பொரு.உருஅ.) (உ-ம்.) "ஆவதெனுறுப்பறையின்" (தணிகை. களவு. கசச.)

உறுப்பா— ஒருமரம். இதுமலையாளக்கரையிலுற்பத்தி.

உறுப்பில்பிண்டம்—உறுப்புக்குறை எட்டினொன்று; அது: வடிவில்லாததசைத்திரளாய் மணிபோலப்பிறக்குமது. (உ-ம்.) "சிறப்பில்சிதடு முறுப்பில்பிண்டமும்" (புறநா. உஅ.)

உறுப்பினகவல்— ஒரு பொருண்மேற்பரந்திசைக்குமகவல்.

உறுப்பு—1. அங்கம். (உ-ம்.) "உறுப்பமைந்தூறஞ்சாவெல்படை" (வள். எசுக.) 2. அடுக்கு. 3. அடையாளம். 4. அவயவம். (சூ. நிகண். உ: கoஉ.) 5. உடல். (சூ. நிகண். உ: அடு.) 6. உறுதி. 7. நெருக்கம். 8. மரக்கொம்பு. 9. மிகுதி.

உறுப்புக்குறைவிசேடம் — விசேட அலங்காரவகையுளொன்று; அஃது: உறுப்புக்குறை வுகாரணமாக ஒரு பொருட்கு மேம்பாடு தோன்றச் சொல்லுவது. (உ-று.) "யானையிரதம்பரியாளிவை யில்லை - தானுமநங்கன்றனுக்கரும்பு- தேனுர் - மலரைந்திஞல்வென்றடிப்படுத்தான்மார - னுலகங்கண்மூன்றுமொருங்கு"(தண்டி. எஎ. உரை.)

உறுப்புத்தற்கிழமை— (இலக்கண) ஆறும் வேற்றுமைப்புணர்ச்சியில் வரும் தற்கிழமை வகையுளொன்று; அஃது: அவயவத்துக்கும் அதனேடொற்றுமையுடைய அவயவிக்குமுளதாய சம்பந்தம். "சாத்தனதுகை" என்பதிற்போல. (நன். பெயரி. சகூ.)

உறுப்புத்தோல்— பூணூலிற்கட்டும் மான்றோல்.

உறுப்புநலனழிதல்—துயருறுவோருடைய அங்கத்து அழகு கெடுதல்.

உறுப்புமயக்கம் — உறுப்புக்குறை எட்டினொன்றாகிய மருள்; அஃது. அறிவின்றி மயங்கியிருப்பது. (புறநா. உஅ. உரை.)

உறுப்புள்ளவன்—1. அங்கலக்ஷணமுள்ளவன். 2. ஒழுக்கமுள்ளவன். 3. திறமையுடையவன்.

உறுபடை—பெருஞ்சேனை.

உறுபு—1. பாலையாழ்த்திறம். [பாலையாழ்த்திறத்திற்கு உறுப்பு என்பது.] (பிங்கல.) 2. மிகுதி.

உறுபொருள்—உடையாரின்மையிற்றானே வந்துற்றபொருள்; அது: வைத்தாரிறந்துபோக நெடுங்காலம் நிலத்தின்கட்கிடந்து பின் கண்டெடுத்ததூஉம், தாயத்தார் பெருததூஉமாகிய பொருள். (உ-ம்.) "உறுபொருளுமுல்குபொருளும்" (வள். ஏடுசு.)

உறும்—உறுதியுடைத்து. (புறப்பொ.)

உறுமல்—1. இரைதல். 2. எழுதல். 3. சினத்தல். 4. முழங்குதல்.

உறுமால்—1. தலைச்சீலை. 2. தலைப்பாகை.

உறுமாலா—<br>உறுமாலை— } உறுமால்.

உறுமி—<br>உறுமை— } ஒருவாச்சியம். "கணுவை"பார்.

உறுவது — வரற்பாலது. (உ-ம்.) "உறுவதொன்றுமுணர்கலாது"(பாரத. வாரணு. அசு.) 2. ஒப்பது. (சிந்தா.)

உறுவதுகூறல் — எண்வகைவிடையிலொன்று.

உறுவதுதெரிதல் — வணிகரெண்குணத்தொன்று; அது: வருவதறிதல். (பிங்கல.எஎகு.)

உறுவர்—1. அடைந்தோர். (பதிற்றுப்.2.அருகக்கடவுள். (உ-ம்.) "ஒப்புடையுறுவர்கோயில் வணங்குதும்" (சிந்தா. முத். கஙஅ.) [மேற்படியுரையில் நச்சினர்க்கினியர். "உறுவர்-எல்லாத்தேவரினுமிக்கவர்" என்றார்.] 3. எதிர்ந்தவர். (புறநா.) 4. முனிவர். (உ-ம்.) "உறுவர்நோன்பினுக்கு" (சேதுபு. காசிப. கஎ.)

உறுவல்—1. உறுவேனெனப்பொருள்படும் ஒரு தன்மை வினைமுற்று. 2. துன்பம்.

உறுவன்— 1. அருகன். 2. உறுவேனெப் பொருள்படும் ஒரு தன்மைவினைமுற்று. 3. முநிவன். (1, 3. பிங்கல. ருஉகரு.)

உறுவித்தல்—பொருத்துதல். (உ-ம்.) "பல முறுவிப்பான்வேண்டும்" (சி. சி. உ: உக.)

உறுவை— 1. அவ்வையாருடைய சகோதரிகளிலொருத்தி. 2. உறுவாய் எனப் பொருள்படும் ஒரு முன்னிலைவினை.

உறூஉ—உறுத்துதல். (உ-ம்.) "வாயுறைவாழ்த்துஞ்செவியறிவுறூஉ" (தொல். பொருள். கூ0.)

உறை— 1. அதர்வணவேதங்கூறும் அதிஷ்டான பட்சம் ஆவேச பட்ச மென்னு மிரண்டனுள் ஆவேசபட்சம். 2. ஆடைமாசுகழுவுமுவர் நீர். 3. ஆயுதப்போர்வை. (உ-ம்.) "வள்ளுறைகழித்தொளிர்வனவாள்" (இராமா. மந்திர. ருஎ.) 4. இடம். (உ-ம்.) "உறைசிறியார்" (வள். சுஅ0.) 5. இலக்கக்குறி. 6. உணவு. 7. உறைதல். (உ-ம்.) "நம்முறைவரைந்தனர்" (கலி. சரு.) 8. உறைப்பு. 9. உறையென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 10. ஓரிடைச்சொல். 11. காரம். 12. கூடு. (புறப்பொ.) 13. தலைப்பெயன்மழை. 14. தலையணையுறை. 15. துளி. (உ-ம்.) "உறைகான்மாறிய" (பெரும்பா.உகக.) 16. நீர். (ஞானமி.) 17. நீளம். 18. பாம்பின்விஷப்பை. 19. பாலிடுபிரை. (உ-ம்.) "உறையமைதீந்தயிர்கலக்கி" (பெரும்பா. கருக.) 20. பெருமை. 21. பொருள். 22. மருந்து. (உ-ம்.) "இருட்டருங்கடுமாற்றிடுமெண்ணில் பல்லுறைகள்"(சேதுபு. காசிப். உரு.) 23. மழை. (உ-ம்.) "உறைபனிகதிர்போற்று மோலையன்" (கந்தபு. தவங்காண்.உ.) 24. மேன்மை. (உ-ம்.) "தங்குறைநெடும்புனற்சடிலமேல்" (கந்தபு. விடைபெறு. உ0.) 25. வாழ்நாள். (உ-ம்.) "உறைகடுகி" (வள். ருசுச.) 26. வெண்கலம். (உ-ம்.) "கல்லுறுத்துறையிற்றனே" (இரகு. இலவண. சரு) [2, 5, 6, 8, 10, 11, 12, 20, 21. பிங்கல. ருஉகச.]

உறைகடுகுதல்— வாழ்நாளகுறைதல்.(உ-ம்) "வேந்த-னுறைகடுகியொல்லைக்கெடும்" (வள். ருசுச.) [உறை என்பது முதனிலைத்தொழிற்பெயர். அஃது: ஈண்டு ஆகுபெயராய் உறைதலைச்செய்யும் நாண்மேனின்றது. (வள். ருசுச. பரி.) உறை-வாழ்நாள். கடுகுதல் - விரைதல்.]

உறைகாரர்—படையுறைசெய்வோர்.

உறைகாலம்— 1. மழைக்காலம். 2. வாழ்நாள்.

உறைகுத்தல்—பிரைகுத்தல்.

உறைகோடல்— பெய்யவேண்டுங்காலத்து மழைபெய்யாமை. (உ-ம்.)"உறைகோடி-யொல்லாதுவானம்பெயல்" (வள். ருருக.) [உறை-மழை. கோடல்-கோடுதல்.]

உறைச்சாலை—ஔஷதச்சாலை.(உ-ம்.)"பலுறைச்சாலைகளும்விதியே" (தைல. வைத்திய. கஉ.)

உறைத்தரல்—உதிர்தல். (உ-ம்.) "ஐயகோங்குறைத்தர" (கலி. உக.)

உறைத்தல்—1. அழுந்தல். 2. கார்த்தல். 3. சிந்துதல். (உ-ம்.) "ஈர்ந்தண்ஒளியுறைப்ப"(கூர்மபு. திருக்கல். சக. உரை.) 4. தாக்கங்கொடுத்தல், உறுத்தல். (உ-ம்.) "பரல்வேயுறையுறைக்கும்பஞ்சடி" (திருக்கோ. ககக.) [தாக்கங்கொடுத்தல் சார்புநோக்கிப்பலவகைப்படும். "அழலுறைப்ப" (கந்தபு. நகர்புகு. ருக) என்புழிச்சுட எனவும், "கடுவுறைப்ப" (கந்தபு. வள். கஉ.) என்புழித்தைக்க எனவும் இங்ஙனமே பலபொருள்படும்.] 5. தாக்கல். 6. துளித்தல். (உ-ம்.) "தெண்பனியுறைக்குங்கால்" (கலி. கரு.) 7. வலிந்துகொள்ளல். (உ-ம்.) "அறப்புறம்" பார்".

உறைத்திடல்— திரப்படல்.

உறைத்துளி—மழைத்துளி.

உறைதல்—1. இருத்தல். (உ-ம்.) "உரம்படு மவுணர்களுறைதற்கொத்தமுப்-புரம்" (கந்தபு. சிங்க. உகக.) 2. நிலம், பால் முதலியன இறுகுதல். (உ-ம்.) "குடப்பாலுறையா" (சிலப்.ஆய்ச்சி. க.) 3. வசித்தல்.

உறைந்தமழை—கட்டியானமழை.

உறைநோய்— உறுத்தியநோய். (ஐங்குறு.)

உறைப்பு— 1. உக்கிரம். 2. எரிவு. 3. கலப்பு. 4. காரம். 5. கூர்மை. 6. கொடுமை. 7. தாக்குகை. (உ-ம்.) "விறற்கொள்வாகுவிடுத்தனகல்லக - வுறைப்பின்வீழுவொதுங்கிடமின்மையின்" (கந்தபு. நகரழி. எ0.) 8. திரப்படுகை. (உ-ம்.) "ஒதுகாதலுறைப்பினெறிநின்றார்" (பெரியபு. திருக்கூட்ட. எ.) 9. பதிவு. 10. மழை. (உ-ம்.) "உறைப்பருங்காலத்தும்" (நாலடி. பெருமை. ச.)

உறைபதி— 1. இருக்குமிடம். (உ-ம்.) "நாமுவந்திருத்தற்குறைபதியாக்கி" (பாரத அருச்சுனன்றவ. எஎ.) 2. வசிக்குமூர். (உ-ம்.) "புரிநூன்மார்பருறைபதிச்சேர்ந்து" (சிலப்.புறஞ்சே. ருக.)

உறைமோர்—பாலிடுபிரை.

உறையல்—பிணக்கு.

உறையிடம்—1.இருக்குமிடம். 2. உள்வீடு.

உறையுள்— 1. ஆயுள். 2. இருக்குமிடம்.

( உ-ம். ) "உம்பர்மாலயற்குறையுளாய்" (கந்தபு. வழிநடை. கூ.) 3. உறைதல். (உ-ம்.) "உறையுண்முநியும்" (புறநா. கூகூ.) 4. ஊர். (சூ. நிகண். ரு: கூரு.) 5. நகரம். (உ-ம்.) "மற்றதிவ்வுறையுளென்பவே" (இரகு. நகர. ரு.) 6. நாடு. 7. மருதநிலத்தார். 8. மனிதர் துயிலிடம். (சூ. நிகண். ரு: ருஅ.) 9. வீடு. (உ-ம்.) "சுருதியோ-ருறையுளெய்தி"(இராமா.கங்கை. உகூ.)

உறையூர்—1. திரிசிரபுரத்துக்குச்சமீபமாயுள்ள ஓர் ஊர். (உ-ம்.) "உறையூர்நொச்சியொருபுடையொதுங்கி"(சிலப்.நாடு.உசஉ.) 2. மருதநிலத்தார்.

உறைவி—உறைகின்றவள். (உ-ம்.) "உறைவியரும்படர்களே" (புறநா. கசரு.)

உறைவிடம்—இருக்குமிடம். (உ-ம்.) "அன்றவருறைவிடத்தல்கினரடங்கி"(சிலப்.காடு. க.)

உறைவு—1. இருக்குமிடம். 2. இறுகுகை. 3. உறைதல். ( உ-ம். ) "உடங்குறைவு-தானுங்கருதிவந்தான்" (தணிகைப். களவு. ருருஅ.)

உன்—1. உன்னென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும். 2. மநம். 3. வேற்றுமையுருபுகளை ஏற்கும் பொருட்டு நீ என்பது திரிந்து வந்த ஒரு விகாரமொழி. (உ-ம்.) "உன்னை, உன்னால்"

உன்மணி—உயர்ந்தமணி.

உன்மை—தசைபிடுங்குங்குறடு.

உன்னம்—1. அன்னப்புள். 2. உன்னமரம். (உ-ம்.) "பருந்திருந்துயவுமுன்னமரத்து" (புறநா. ரூ. ) மலைநாட்டார் இலவமரத்தை யுன்னமென்பர்.(பதிற்றுப்.) அன்றி நிமித்தம்பார்க்கு மரமுமாம். ( புறப்பொ.) 3. தசைபிடுங்குங்குறடு. 4. நினைவு. (உ-ம்.) "அகத்தியான்பள்ளியை- யுன்னஞ்செய்தமநத்தார்" (தேவார. அகத்தி. ௨. திருஞாந.) 5. நீர்வாழ்பறவை. (சூ. நிகண். ரூ. சுரூ.) 6. மநம்.

உன்னல்—1. ஆராய்வாகநினைத்தல். (உ-ம்.) "ஊனொழியாதுன்னின்" (சிவப்பிர. உ: கரூ.) 2. நினைத்தல். (உ-ம்.) " உன்னலேதியாநம் " (கந்தபு. திருநகர. அக.)3. விரைந்தெழும்புதல், உந்தல்.

உன்னலர்—பகைவர்.

உன்னுலயம்—இதயம்.

உன்னி—1. அழிஞ்சில். 2. குதிரை. (உ-ம்.) "உன்னிவாய்ப்பொன்கறித்திடவூறிவீழ்" ( இரகு. நகர. ருக.)

உன்னித்தல்—உயர்தல், "ஊனிடையாழிசங்குத்தமர்க்கென்றுன்னித்தெழுந்த " ( நாலாயிர. தையொரு. ரு.)

உன்னிப்பு—1. உயர்வு. 2. கவனிப்பு. 3. குறிப்பு. 4. பலம்.

உன்னியர்—சுற்றத்தார்.

உன்னுதல்—உன்னல்.

உனத்தத்து—குறிஞ்சா.

உனை—உன்னையென்னுமிரண்டாம் வேற்றுமையில் வரும் முன்னிலை யொருமைப் பெயரில் றன்னகர வொற்றுத்தொக்கு வந்த தொரு விகாரமொழி.

## ஊ

ஊ—[இது: தமிழ்ப்பாஷையின் வர்ணமாலையிலுள்ள உயிர்வருக்கத்தில்வரும் ஆறும் எழுத்து; இஃது: அங்காப்போடு இதழ்குவிவாற்பிறக்கும் ஒரு நெடில்.]

1. இறைச்சி.
2. உணவு.
3. சந்திரன்.
4. சமாக்கிய கலை.
5. சிவன்.
6. முடிக்குஞ்சொல்லின் வினைமுதலே தனக்கும் வினைமுதலாகக்கொண்டுமுடியும் இறந்தகாலவினையெச்சவிகுதிகளுள் ஒன்று.(உ-ம்) "உண்ணூமகிழ்வான் " (நன். வினையி. உச. உரை.)
7. வருத்தத்தின் காரியமாகப்பிறக்கும் ஓர் ஒலிக்குறிப்பு.
8. வினையெச்ச விகுதி.

ஊக்கம்—1. உண்மை. 2. உயர்ச்சி. 3. உள்ளக்கிளர்ச்சி. (உ-ம்.) "உடையரெனப்படுவதூக்கம்" (வள். ருகூக.) 4. உற்சாகம். (உ-ம்.) "அவுணரினியூக்கமுடன்வந்தடுவரென" "சேதுபு. வேதாள. உஉ.) 5. மிக்கவலி. (உ-ம்.) "ஊக்கமுடையானொடுக்கம்" (வள். சஅசு.) 6. முயற்சி.

ஊக்கமுடைமை—மநம் மெலிதலின்றி வினைசெய்தற்கண்கிளர்ச்சியுடைத்தாதல்.(வள்.அதி. சு0.)

ஊக்கல்—1. அசைத்தல், ஆட்டல். (உ-ம்) "ஊசலூர்ந்தாடவொருஞான்றுவந்தானை - ஐயசிறிதென்னையூக்கியெனக்கூறத் - தையானன்றென்றவனூக்க" (கலி. ரூஉ.) 2. அதிகப்படுத்துதல். (உ-ம்.) "கேடேக்கல் - கேளீரொரீஇவிடல்" (நா. க. அரு.) 3. எழுப்புதல். 4. எறுதல். 5. மிகுதி. (சூ. நிகண். அ: சக.) 6. முயலுதல், உற்சாகங்கொள்ளுதல். ( உ-ம். ) "உடைத்தம்வலியறியாருக்கத்தினூக்கி" ( வள். சஎரூ.) 7. முயன்றுசெய்தல், மநக்கிளர்ச்சி

யோடு செய்தல். (உ-ம்.) "தவற்றினூற்றீங்கூக்கல்" (நாலடி. சினமின்மை. ௯.)

ஊக்கலர்—முயற்சியையுடையார். (உ-ம்.) "உயர்ந்தவுதவியூக்கலர்த்தம்மின்" (மதுரைக். எசரு.)

ஊக்கார்—மேற்கொள்ளார். (புறநா.)

ஊக்கு—முயற்சி. (உ-ம்.) "ஊக்கொடுபரலெனவுருமுப்பற்றுமால்" (கந்தபு. திருப்பர. கக.)

ஊக்குதல்—1. ஊக்கல். 2. தப்புதல். (மதுரைக்.)

ஊகடகம்— ஓர் மீன்.

ஊகடன்—முருங்கை.

ஊகநம்— 1. அநுமித்தல். 2. தீர்த்தல். 3. நியாயஞ்சொல்லுதல். [ஊஹந.]

ஊகநீ—துடைப்பம். [ஊஹநி.]

ஊகம்— 1. அவாய்நிலையால் வரற்பாலனவற்றை வருவித்தல். 2. அறிவு. (உ-ம்.) "ஊகமுளதேற்சிறுவருரையுங் கொள்க" (ஞானவா. முமுட். உஎ.) 3. உட்பொருளைப்பரீட்சித்துணர்த்தல். (உ-ம்.) "மூன்றுகுணங்களோடு ஊகவிகாரநிச்சயங்களைப் பண்ணும் புத்தியாதி யந்தக்கரணங்கள் சூக்குமகாயமாக ஆன்மாவுக்கு இரண்டாம்பந்தமும்" (சி. சி. சு: உக. சிவாக்.) 4. ஊமத்தை. 5. ஒருபுல். (உ-ம்.) "ஊகம்வேய்ந்தவுயர்நிலைவரைப்பின்" (பெரும்பா. கஉஉ.) 6. கருங்குரங்கு. (உ-ம்.) "பைங்கணூகம் பாம்புபிடித்தன்ன" (சிறுபா. உஉக.) 7. குரங்கு.(உ-ம்.) "கருவிரலூகம்பார்ப்போடிரிய"(மலைபடு.உ0அ.) 8. சந்தேகமானநினைவு. 9. தர்க்கம். 10. தியாநம். 11. நினைவு. 12. படைவகுப்பு. 13. புலி. [1, 3, 8, 9. ஊஹம். 11. வ்ரூஹ.]

ஊகாஞ்சிதம்—ஓரலங்காரம்; அஃது: எடுத்தபொருட்கண் இயல்பாயினவற்றைக் கூறினும் அவற்றிற்குரிய காரணத்தைத் ஒழித்து மற்றொன்றன்சிறப்புத்தோன்றக்கவிதான் கருதிய மற்றொருகாரணத்தைக்கூறுவது. (தொன்னூல். ௯௪௬.) [ஊகாஞ்சிதம் - தற்குறிப்பு. அஞ்சிதம்-பொருத்தம்.]

ஊகாபோகம்—ஒருவிஷயத்திலே பரபக்கசுவபக்க நியாயங்களை யெடுத்துக்காட்டித் தர்க்கித்தல். (உ-ம்.) "ஊகாபோக சாமர்த்தியமுடைய பரீக்ஷகர்களுடைய" (சைவப். ௪௦.)

ஊகாரம்—ஊ என்னுமெழுத்து.

ஊகி—ஊகிப்பவன். [ஊஹிந்.]

ஊகித்தல் — 1. உத்தேசித்தல். 2. நினைத்தல். 3. ஐயமாகவெண்ணுதல். 4. தருக்கித்தாராய்தல்.

ஊகிப்பு—ஊகித்தல்.

ஊகிபாடை—யூகிபாடை.

ஊகு—ஒருகந்தருவன். [ஹூஹூ.]

ஊகை—யூகை.

ஊங்கண்—முன்பு. (மணிமே.)

ஊங்கணோர் — முன்னுள்ளோர். (உ-ம்.) "நின்னூங்கணோர் நினைப்பின்" (புறநா. ௩௬.)

ஊங்கு—1. உவ்விடம். (உ-ம்.) "ஊறுமாகடமாவுறவூங்கெலாம்" (இராமா. வரைக். ௬௦.) 2. மிகுதி, மேற்பட்டது. (உ-ம்.) "அறத்தினூங் காக்கமுமில்லையதனை - மறத்தலினூங்கில்லைகேடு" (வள். ௩௨.) 3. முன். (உ-ம்.) "இன்றினூங்கோகேளலம்"(புறநா. எக.) 4. மேல். (ஐங்குறு.) 5. விசேடம்.

ஊங்கேன—மிகவும்.

ஊசரம்—பூவழலை. (உ-ம்.) "அரணியவூசரமாதித்தன்வெள்ளையே" (சட். கக.)

ஊசல்—1. அசைவு. (உ-ம்.) "பூங்குழையூசற் பொறைசாற்காது" (பொருந. ௩0.) 2. ஊஞ்சல். (உ-ம்.) "ஊசலுற்றவர் குழைக்குலடைந்திடுதலால்"(கந்தபு. திருநாட்டு.௪௪.)3. தொண்ணூற்றாறு பிரபந்தங்களுளொன்று; அஃது: ஆசிரிய விருத்தத்தாலாவது கலித்தாழிசையாலாவது சுற்றத்தாரோடும் பொலிவதாக ஆடீரூஞ்சல் அல்லது ஆடாமோவூஞ்சல் என்று இறுவயில்வரப்பாடுவது. (உ-ம்.) "அகவல் விருத்தங்கலித்தாழிசையாற் - பொலிதருகிளையொடும்புகலூசலதாசல்" (இலக்கணவி. அ௪௫.) 4. பதனழிந்தது, பழுதானது. (உ-ம்.) "குணத்ரயத்தொடுதடுமாறுமூசலை" (திருப்பு. ௫௩௧.) 5. பெண்பாற்பிள்ளைத்தமிழினோருறுப்பு.

ஊசலாடல்—1. ஊசலிலிருந்தாடுதல்.(உ-ம்.) "பொன்னூசலாடாமோ" (திருவாச. திருப்பொன். க.) 2. ஊஞ்சலசைதல். 3. ஊஞ்சலாடுதல்போல ஆடி இருதலைப்பட்டுநிற்றல்.(உ-ம்.) "உள்ளத்தினூசலாடுங்குழைநிழலுமிழவிட்டார்" (இராமா. கோலங்காண். ௬.)

ஊசா—மூக்குத்திப்பூச்செடி.

ஊசாட்டம்—1. உலாவித்திரிகை. 2. களவு.

ஊசாடுதல்—உலாவித்திரிதல்.

ஊசி—1. இழைதொடுக்குந் துளையுங் கூரியநுதியுமுடையதாகச் செய்யப்படுங் தையற்கருவி. (உ-ம்.) "இடங்கெழுதுளைத்துன்னூசி" (கந்தபு. தெய்வ. ககவ.) 2. ஊசிப்பொறி, நிரைக்கழு. (உ-ம்.) "கைபெயரூசியும்" (சிலப். அடைக்கல. உகரு.) 3. எழுத்தாணி. (உ-ம்.) "எடெழுதூசிபாசம்" (தணிகை. அகத்திய. களரு.) 4.ஒரு பொருளினோடு சென்று மற்றொரு பொருளை இணைக்குங்கருவி. (உ-ம்.) "குண்டூசி"

5. கடிகாரத்தின் முள்ளு. 6. நிறைகோலின்மு ள்ளு. 7. வடக்கு. (உ-ம்.) "பாசிச்செல்லாதூசி முன்னாது" (புறநா. ௨௨௯.) [உதீசி என்பதன் விகாரம்.]

**ஊசிக்கண்**—ஊசித்துளை.

**ஊசிக்காது**—ஊசிக்கண்.

**ஊசிக்காந்தம்**—1. இரும்பினையிழுக்குங்கா ந்தக்கல். 2. சலாகை.

**ஊசிக்கார்**—ஒருவகைநெல்லு.

**ஊசிக்கால்**—மச்சுக்கால்.

**ஊசிப்பாலை**—ஒருவகைப்பாலைமரம்.

**ஊசிப்புல்**—ஒருவகைப்புல்லு.

**ஊசிமல்லிகை**—ஒருவகைமல்லிகை. (பிங் கல.)

**ஊசிமிடறு**—ஊசிபோல ஒடுங்கியமிடறு.

**ஊசிமுனை**—ஊசிநுனி.

**ஊசிமுலைத்தலைவாரை**—ஒருவகைத்தலைப் பெட்டி.

**ஊசிவெண்டோடு**—கூரியவெள்ளியதோடு. (உ-ம்.) "தண்பனம்போந்தைக் - குவிமுகிழூசி வெண்டோடுகொண்டு" (பதிற்று. ௭௦.)

**ஊசுதம்**—அச்சம்.

**ஊசுதல்**—1. சீவுதல். (உ-ம்.) "கணிச்சி போற்கோசி" (கலி. முல்லை. ௧.) 2. சுவைகெ டுதல். 3. தைத்தல். 4. பதனழிதல். (உ-ம்.) "ஊசிடுமிடும்பையாகியவுடம்பு" (திருப்பு.௧௩௯௧.)

**ஊஞ்சல்**—ஊசல்.

**ஊட்டம்**—உண்டி.

**ஊட்டல்**—ஊட்டுதல்.

**ஊட்டி**— 1. உணவு. 2. உண்பித்து எனப் பொருள்படும் ஒரு வினையெச்சம். (உ-ம்.) "வீ ட்டிவாளவுணரைவிருந்துகூற்றினை- யூட்டிவீழ் மிச்சிலுளுண்டு நாடொறும்" (இராமா. சடாயு காண்.௬.) 3.உண்பிப்பது. 4. உண்பிப்பவள். 5. உண்பிப்பவன். 6. பறவைகளினுணவு. (சூ. நி கண். ௬: ௯௨.) 7. மழை. 8. விழுங்குதற்குக்க ருவியாகிய முடிச்சு, மிடறு. (உ-ம்.) "கழுத்தி னூடு மூட்டியுமரியாநின்முர்" (பெரியபு. அரி வா. ௧௭.)

**ஊட்டிரம்**—தேட்கொடுக்கிப்பூண்டு.

**ஊட்டு**—1. உண்பித்தல். (உ-ம்.) "தீம்பால டிசிலமிர்தஞ்செம்பொன்வண்ணப்புழுக்க - லா ம்பாலக்காரடலையண்பனிரூறமிர்தந் - தாம்பால வரைநாடித்தந்தூட்டயர்வார்சொரிய" (சிந்தா. குணமா. ௭அ.) 2. உணவு. (உ-ம்.) "தான்புக் குநட்டம் பயின்றிலனேற்றரணியெல்லாம்- ஊ ன்புக்கவேற்காளிக் கூட்டாங்காண்சாழலோ" (திருவாச. திருச்சாழ. ௧௪.) 3. கவளம்.

**ஊட்டுக்குற்றி**—மிடறு.

**ஊட்டுவோ**—தலையாட்டம்.

**ஊட்டுதல்**—1. உட்கொள்ளவைத்தல்.(உ-ம்.) "மையூட்டியவாட்கருமையும்" (வாண. ௬௫.) 2. உண்ணுதல். (உ-ம்.) "காட்டினனமனைக் கடலிறைமு- தூட்டியவும்பரை யுலையவோட்டி னன்" (இராமா. பிணிவீட். ௬௬.) 3. உண்பித் தல். (உ-ம்.) "ஊற்றுப்பெருக்காலுலகூட்டும்" (நல்வழி. ௯.) 4. கன்றுமுதலிய பாலுண்ணு தல். 5. நினைப்பூட்டல்.

**ஊட்டுந்தாய்**—உணவுகொடுக்குந்தாய்.

**ஊட்டுவான்**—உண்பிப்பவன். (உ-ம்.) "அ வர்பாலூட்டுவொன்றனைவிட்டார்" (பெரியபு. திருநா. ௫௫.)

**ஊடகம்** — 1. ஒருமீன். 2. விடியற்காலம். [உஷக.]

**ஊடணம்**—1. கருமிளகு. 2. சுக்கு. [ஊ ஷண.]

**ஊடம்**—1. உவர்நிலம். 2. காதின்துவாரம். 3. விடியற்காலம். [உஷ.]

**ஊடரக்கல்**—நீற்றுக்கல்.

**ஊடரத்திராவணம்**—வெடியுப்பு. [மானிப் பாயகராதிகாரர் ஊசரத்திராவணமென்பர்.]

**ஊடரம்**—பூவழலை. [ஊஷர.]

**ஊடல்**—1. ஊடுதல். (உ-ம்.) "தையலாரு டலாடத் தாமவரோடுங்கூடி" (சி. சி. பர. உ லோகாயத. ௧௭.) 2. விரோதித்தல். 3. வெறுத் தல்.

**ஊடலுவகை**—(அகப்பொருள்) ஊடலினு லேகூடலின்பஞ்சிறந்துழி அச்சிறப்பிற் கேது வாகிய ஊடலைத்தலைமகளுவத்தலுந்தலைமகனு வத்தலுமாகிய உவகை. (வள். ௧௩௩௩. அதி.)

**ஊடறுத்தல்** — 1. ஊடுருவிச் செல்லுதல். (உ-ம்.) "உம்பரானுலகூடறுத்தப்புறத்தனாய் - நின்றவெம்பிரான்" (திருவாச. சென்னி. ௯.) 2. வழக்குத்தீர்த்தல்.

**ஊடாட்டம்**—பழகுகை.

**ஊடாடிப்பார்த்தல்**—ஆராய்ந்துபார்த்தல்.

**ஊடாடுதல்**—1. உள்ளே உலாவித்திரிதல். 2. கல்விபயிலுதல். 3. பழகுதல், கலந்துநடத் தல், சஞ்சரித்தல்.(உ-ம்.) "மீன்கொண்டோடும் வேலை மேகலையுலகமேத்தத்-தேன்கொண்டோ டுங்கூந்தற் சிற்றிடைச்சீதையென்னும் - மான் கொண்டோடுநீயுன் வாள்வலியுலகங்காண- யா ன்கொண்டோடும்வண்ணமிராமனைத்தருதியெ ன்பால்" (இராமா. மாரீசன்வதை. ௭௧.)

**ஊடான்**—ஒருவகைமீன்.

**ஊடு**—1. இடம். (உ-ம்.) "நெடுவரம்-பூடுசா யுமுழத்தியர்" (சேதுபு. நாட்டு. ௫௧.) 2. உள்.

(உ-ம்.) "எண்ணடிக்கின்ற விரவூடலைத்தி" (தணிகை. களவு. கூஅக.) 3. ஊடென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 4. தார்நூல். [வழக்.] 5. நடு, இடை. (உ-ம்.) "வானுல-கூடுபோமுயர்குவட்டுச்சிசியெங்குமே" (இரகு. தேனு. ருஅ.)

ஊடுசெல்லல் — உள்ளேபோதல், இடையேபோதல். (உ-ம்.) "சாலியூடுசெலுந்திரட்சங்கமே" (செந்தூர். செயந்திபுர. கூடு.)

ஊடுதல்—1. (அகப்பொருள்) பிணங்குதல். (உ-ம்.) "ஊடுதல்காமத்திற்கின்பம்" (வள். கஙௗ0.) "ஊடலேநணுகாராகி யுரைமறுத்திருத்தல்" (சூ. நிகண். கூ கஅ.) 2. பிரிதல் 3. விரோதித்தல். 4. வெறுத்தல். (உ-ம்.) "திருப்பெருந்துறையுறைசிவனே - ஊடுவதுன்னோடுவப்பதுமுன்னே" (திருவாச. வாழா. கூ.)

ஊடுநாக்கல் — 1. பின்னிடாதெதிரேநிற்றல். 2. பெலனைச்சோதித்துப்பார்த்தல்.

ஊடுபற்றுதல்— தொடர்ந்தெரிதல், விளக்குள்ளேபற்றி யெரிதல்.

ஊடுபோக்கல் — 1. உருவச்செய்தல். 2. நடுவெறுத்தல். 3. வழக்குத்தீர்த்தல்.

ஊடுநுவல்— } உள்ளேதுளைத்துச் செல்
ஊடுநுவுதல்— } லுதல். (உ-ம்.) "நெற்றிதொறுமோரொருவடிக்கணையூடுருவ விட்டுகுவோன்" (பாரத. இரண்டாம். உசு.)

ஊடுவெளி—இடைவெளி.

ஊடை—1. நூற்றூர். [வழக்.] 2 புடைவையின்குறுக்குநூல். 3. விவாகஞ்செய்த ஓரிளம்பெண். [ஊடா.]

ஊடையம்—நீரரண்.

ஊண்— 1. உணவு. (உ-ம்.) "நஞ்சுதனை-யூணாக வுண்டருளுமுத்தர கோசமங்கைக்-கோனூர் பிறைச்சென்னிக்கூத்தன்" (திருவாச. திருப்பெருந். ரு.) 2. சோறு. 3. புசிப்பு, அநுபவித்தல். (உ-ம்.) "உற்றதொழினினைவுரையிவிருவினையுமுளவாமொன் றொன்றலழியாதாழியாதன்னின்"(சிவப்பி. உ. கூ.) [இது, உண்ணெனன்பதினின்று வந்தவினைப்பெயர்.]

ஊண்பாக்கு—உண்டபின் தின்னும்பாக்கு.

ஊணம்—ஒருதேயம். (உ-ம்.) "ஊணமாநகரிற்புக்கான்"(இரகு. திக்கு.உசச.) [ஊ-ண]

ஊணன்— 1. ஊணதேயத்தான். 2. மிகவுண்போன். 3. மிலேச்சன்.

ஊத்து—ஊதுதல்.

ஊத்தை— 1. அழுக்கு, களங்கம். (உ-ம்.) "உம்பர்கட்கரசே யொழிவறநிறைந்தயோகமேயூத்தையேன்றனக்கு" (திருவாச. பிடித்த. க.) 2. ஊன், புலால். [ஊழ்த்தல்என்பது ஊத்தையெனமரீஇயிற்றுப்போலும்.] 3. கன்மமலம். (உ-ம்.) "ஒன்றுமுளத்திருக்கூத்தை" (கோயிற்பு. பாயிர. கஎ.) [ஊத்தைபோறலின் இப்பெயர்த்தாயிற்று.] 4. சுரோணிதநீர்.

ஊத்தைதுடியன்—ஒருபிசாசம்.

ஊத்தைநாறி — 1. துர்க்கந்தமுடையவன். 2. பீநாறிமரம்.

ஊத்தைப்பாண்டம் — 1. அழுக்குப்பாத்திரம். 2. உடம்பு. [அழுக்குப்பாத்திரம் போன்றதென்றபடி.]

ஊதநாதன் — யானைக்கூட்டத்துத் தலையானை. [ய-ஞ்யூதநாத; யூத என்பதில் யகரங்கெட்டது.]

ஊதம்— 1. பொரவழைத்தல், போருக்குவரும்படிகேட்டல். 2. யானைக்கூட்டம். (உ-ம்.) "உலவைநீள்வநத்தூதமேயொத்தது" (இராமா. வைராக். எ.) [1. வ-ஞ்த. 2. ய-ஞ்ய.]

ஊதல்—1. ஆரவாரம். 2. ஊதுதல். (உ-ம்.) "ஊதினும்பறக்குமென்ன" (கூர்மபு. அந்தகா. கூச.) 3. ஒலித்தல். (உ-ம்.) "இருமலீளையென்றிவை-யூதலாக்கையோம்புவீர்" (திருஞாந. தேவார. கோவலூர். அ.) 4. காற்று. 5. வீங்கல்.

ஊதலினம்— வாதரோகக்கூட்டம். (உ-ம்.) "ஊதலினமைவலியுன்மாதமூர்ச்சை" (தைல. தைலவ. கங0.)

ஊதா—செம்மைகலந்தகருநிறம்.

ஊதாசி — சதருத்திரருள்ளே அக்கினிதிக்கிலிருக்கும் தசருத்திரருளொருவன். (வி-ணி. உஎ0.) [வ-ஞ்தாவசி.]

ஊதாரி— 1. வரைகடந்து வீண்செலவுசெய்வோன். 2. வீண்கொடையாளன். (உ-ம்.) "கொடையிலாதவூதாரி" (திரு[illegible]பு. கூஉக.) [உதாரம் என்பதினின்று வந்த ஒருசொல்.]

ஊதாரித்தனம்—வீண்செலவு.

ஊதிகை—முல்லைக்கொடி. [ய-ஞ்யூதிகா.]

ஊதிடுகொம்பு—கொம்பினாற்செய்த இசைக்குழல்.

ஊதியம்—1. இலாபம். (உ-ம்.) "ஊதியமென்பதொருவற்குப் பேதையார் - கேண்மையொரீஇவிடல்" (வள். எகஎ.) 2. கல்வி. (சூ. நிகண். க0: உ0.) 3. பயன். (உ-ம்.)"ஈதலிசைபடவாழ்தலதுவல்ல-தூதியமில்லையுயிர்க்கு"(வள். உகூக.)

ஊதியொடுக்கம்—சுவாசம்.

ஊதினபொன்—புடமிட்டபொன்.

ஊதுகட்டி—சொக்கவெள்ளி.

ஊதுகரப்பான் — குழந்தைகளுக்கு வரும் ஒருவகைக்கரப்பனோய்.

**ஊதுகாமாலை**—ஒருவகைநோய்.

**ஊதுதழல்**—1. ஒருவாச்சியம். 2. தட்டார் நெருப்பூதுங்குழல்.

**ஊதுகொம்பு**—ஊதிடுகொம்பு.

**ஊதுதல்**—1. காற்றுமெல்லவீசுதல். 2. வண்டுகள் மூக்காலுழுதிரைதல். (உ-ம்.) "ஊதுவண்டெளர்தார்வரைமார்பற்கு" (தணிகை. களவு. ௩௪அ.) 3. வண்டுமுதலியனதுளைத்தல். (உ-ம்.) "வண்டூதியசீலை" 4. வாயினாலாவது துருத்தியினாலாவது காற்றினை எழுப்பி இயக்குதல். (உ-ம்.) "ஊதவுகுவானெனவுலைந்து" (தணிகை களவு. ௧௨எ.) 5. வீங்குதல், பருத்தல். (உ-ம்.) "உடம்பு ஊதியிருக்கின்றது"

**ஊதும்**—நகரும். (ஐங்குறு.)

**ஊதுமா**—ஓரினிப்புக்கூழ்.

**ஊதுமாந்தம்**—மந்தத்தினால் வயிறுவிம்மும் ஒருநோய்.

**ஊதுவழலை**—ஒருவகைப்பாம்பு.

**ஊதுவாரம்**—வெள்ளி.

**ஊதுவிரியன்**—ஒருவகைப்பாம்பு.

**ஊதை**—1. காற்று. (உ-ம்.) "ஊதையில்பூதமொத்துள்ளம்வெம்பிய" (பாரத. வாரணவத. ௨௨.) 2. குளிர்காற்று. (உ-ம்.) "நண்டூதையால் வெயில்காய்மலைறக்காட்டுறை" (மலைற. உரு.) 3. வாதரோகம். (உ-ம்.) "சோபை" பார்.

**ஊந்து**—கச்சோலம்.

**ஊனக்கண்**—1. குறைவுடையகண், உடம்பிற்கண். (உ-ம்.) "ஊனக்கணிரண்டுமூடிப்-பொன்றலின்ஞானக்கண்ணால்" (ஞானவா. சுக்கிர. ௩எ) 2. (சித்தாந்தம்) பசுஞானம். (உ-ம்.) "ஊனக்கண்பாசமுணரா்பதியை" (சிவஞானபோ. ௯.)

**ஊனம்**—1. குற்றம். (உ-ம்.) "ஊனமில்காலன்றன்னை" (ஞானவா. சுக்கிர. ௩௨.) 2. குறைவுடைமை. (உ-ம்.) "அந்நாளுநுசிலைதா- னூனம்முளது" (இராமா. பரசுரா. உரு.) 3. பூரணமின்மை.

**ஊனமாசிகம்**—ஒருவகைச்சிராத்தம்.

**ஊனன்**—குறைவுள்ளோன்.

**ஊனாயம்**—குறைவடைதல். [ஊன- குறைவு. ஆய - அடைதல்]

**ஊம்**—ஊமை. (உ-ம்.) "ஊமுஞ்செவிடும்" (புறநா. உ௮.) 2. மௌனம்.

**ஊமச்சி**—ஒருவகைநத்தை.

**ஊமணாழந்சி**—ஊமணையன்.

**ஊமணை**—1. அழகற்றவன். 2. பேசத்திறமில்லாதவன்.

**ஊமணைச்சி**—அவலட்சணமுள்ளவள்.

**ஊமணையன்**—அவலட்சணமுள்ளவன்.

**ஊமத்தங்கூகை**—ஒருவகைக்கூகை. [ஊம்: அத்து; அம்.]

**ஊமத்தம்**—ஊமத்தை. (உ-ம்.) "ஊமத்தம் பயன்றுய்த்தார்போல்" (கந்தபு. வள். ௨௨.)

**ஊமத்து**—ஊமத்தை.

**ஊமத்தை**—ஒருசெடி. [இதன் இலை, காய் முதலியன உண்டாரைமயக்கும்.]

**ஊமல்**—பனங்கொட்டையின் புறவோடு.

**ஊமற்கச்சி**—ஊமற்பாதி.

**ஊமர்**—பேசவியலாதோர். (உ-ம்.) "ஊனொடுத்துழலுமூமரொன்றையுமுணராரந்தோ" (சி. சி. ௨: ௧௨.)

**ஊமன்**—1. ஊமையன். (உ-ம்.) "ஊமன்-கண்ணில்லாதவன்கேட்டலுங் காண்டலுங்கடுக்கும்" (பாரத. தற்சிற. ௫.) 2. கூகை. (உ-ம்.) "ஊமன்குரல்பல்லிடத்துமுண்டேலஃகிடுமுலகே" (விதாந. உற்பாத. ௬.)

**ஊமனார்**—ஊமையர். (உ-ம்.) "ஊமனார்தங் கனாவாக்கினார்" (தேவார. உசாத். ௩. திருஞான.)

**ஊமாண்டி**—1. ஊமை. 2. பூச்சாண்டி. [வழக்.]

**ஊமிழ்**—சிறுபூளை.

**ஊமை**—1. உறப்புக்குறை எட்டினொன்று; அது: பேச இயலாதது. (உ-ம்.) "கோணற்கூன்செவிடூமைகண்குருடுபங்கெவருங் - காணத்தீர்த்து" (திருவிளை. எல்லாம். ௧௦.) 2. ஒருவாத்தியம். (உ-ம்.) "அம்பலிகணுவையூமைசகடையோடார்த்தவன்றே" (இராமா. பிரமாத். ௫.) 3 கீரி. 4. வாய்திறவாதது. (உ-ம்.) "ஊமையெண்கின்குடாவடிக்குருளை" (மலைபடு. ௫0௧.)

**ஊமைக்கட்டி**—1. பொன்னுக்கு வீங்கிக்கட்டு. 2. முகங்கொள்ளாதபரு.

**ஊமைக்கட்டு**—முகங்கொள்ளாதகட்டு.

**ஊமைக்காடை**—ஒருவகைக்காடை.

**ஊமைக்கோட்டான்**—ஊமத்தங்கூகை.

**ஊமைச்சி**—1. ஊமைப்பெண். 2. ஒருவகைநத்தை.

**ஊமைத்தேங்காய்**—இலுங்காத்தேங்காய்.

**ஊமைமணி**—நாக்கிழந்தமணி. (உ-ம்.) "ஊமைமணியாட்டுகினுமோசையழிந்தாற்போல" (ஒழிவி. துற. ௯.)

**ஊமையன்**—பேசாதவன்.

**ஊமையெழுத்து**—மெய்யெழுத்து.

**ஊமைவிளையாட்டு**—ஒருவிளையாட்டு.

**ஊய்தல்**—பதனழிதல்.

**ஊர்**—1. ஊர்தல், வாகனமாகக்கொண்டுசெலுத்தப்படுதல். (உ-ம்.) "ஊருடைத்திண்புரவி

யுலேத்தனள்" (சேதுபு. தேவி. சகூ.) 2. ஊரினுள்ளார். (உ-ம்.) "ஊருமயலுஞ்சேரியோரும்" (இலக்கணவி. ருகூகூ.) [ஆகுபெயர்.] 3. ஊரென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும், வினைத்தொகையும். (உ-ம்.) "விடையதூரிறையே" (வை. நீ. உஉ.) 4. தேசத்தினுட்பிரிவு; அது: பலவீடுகளையுடையகுடியிருப்பு. (உ-ம்.) 'மேவுமூர்வளம்பலவுமிருந்துளநாடதனினலம்பாவுமூர்" (திருவாத. மந்திரி. கூ.) 7. நகர். 8. நாடு. 9. பரிவேடம். (உ-ம்.) "செங்கதிர்தங்குவதோர்- ஊருற்றதெனப்பொலியொண்முடியான்" (இராமா. சரபங்கர். க.)

**ஊர்க்கதை**— 1. ஊர்ப்பேச்சு. 2. பொய்ச்செய்தி. 3. வீண்செய்தி.

**ஊர்க்கலகம்** — ஊரினுள்ளார்தம்முள்ளேயிருதிறப்பட்டாவது பிறர்க்கெதிராகத் திரண்டாவதுசெய்யுங்கலகம்.

**ஊர்க்கலி**—ஊர்க்கலகம்.

**ஊர்க்காறுபாறு**—1. அந்நியருடைய காரியவிசாரிப்பு. 2. ஊர்க்காரியம். 3. ஊர்விசாரிப்பு.

**ஊர்க்குருவி**—அடைக்கலங்குருவி. (உ-ம்.) "ஊர்க்குருவிதானுயரப்பறந்தாலும் பருந்தாகாதுண்மைதானே" (தண்டலையார். கூகூ.)

**ஊர்க்கொள்ளை**— 1. ஊழிநோய். 2. கொள்ளையடித்தல்; அது: பகையரசர்முதலியோராலும் ஊரிலுள்ளாராலுஞ்செய்யப்படுவது.

**ஊர்கூடுதல்**— ஊரவர்கள் திரளுதல்.

**ஊர்கோலம்வருதல்**— ஊர்வலம்வருதல்.

**ஊர்கோள்**—பரிவேடம். (உ-ம்.) "விண்ணதிர்ந்திட்டேர்கோளும்வெயிலைச்சூழ்ந்து" (பாரத. சூதுபோர். உருக.)

**ஊர்ச்சம்**—1. ஊக்கம். 2. கார்த்திகைமாதம். 3. சுவாசம். 4. சௌரியம். [ஊர்ஜ்.]

**ஊர்ச்சிதம்** — 1. நிலைப்படுதல். 2. பெலத்தோடுகூடியது. 3. மிக்கது. [ஊர்ஜித.]

**ஊர்ணநாபி** — சிலந்திப்பூச்சி. [ஊர்ண நாபி.]

**ஊர்ணம்**— 1. ஆட்டுரோமம். 2. நூலிழை. 3. புருவநடுவிலுள்ளசுழி.

**ஊர்ணயு**—1. ஆட்டுக்கடா. 2. ஆட்டுமயிர். 3. கம்பளம். 4. சிலந்திப்பூச்சி. [ஊர்ணாயு]

**ஊர்த்தசுரோதம்**— பிரமன்மேலாகப்பார்க்கப்பிறந்தசிருட்டி; அது தேவசிருட்டி. (உ-ம்.) "வேறு- நினைதர ஊர்த்தசுரோத மென்சிருட்டி நிகழ்ந்ததுசத்துவகுணத்தாற்- புனைதருமதுதெய்வதசிருட்டியதாம்" (சூத. சிவமா. கo. ச.)

**ஊர்த்ததாண்டவர்** — திருவாலங்காட்டிற்கோயில்கொண்டிருக்குஞ்சிவன். (பெரியபு. திருஞான. கoகக. முகம்.) [இவர்மேலே பாதத்தைத்தூக்கிநின்றுடியதால் இப்பேர்பெற்றனர்.]

**ஊர்த்தம்**—1. ஊர்த்துவம். 2. சைவபேதம் பதினறினுள் ஒன்று. [ஊர்த்வ.]

**ஊர்த்தமுகம்**— ஊர்த்துவமுகம்.

**ஊர்த்தயோநி**—மேல் நோக்கியபார்வையாற்பிறந்துள்ளது. (உ-ம்.) "ஊர்த்தயோநிகளாகிய தேவகதிமாநுடகதிக்கண் வருஞ்சிறப்பு இவைகளானுல்" (வை. நீ. கரு. உரை.)

**ஊர்த்து**—ஊற்றி. (சிந்தா.)

**ஊர்த்துவகதி**-மேலேசெல்லுகை. [ஊர்த்வ கதி: ஊர்த்வ- மேல். கதி - செல்லுகை.]

**ஊர்த்துவகபுரம்**—அரிச்சந்திரபுரம். [ஊர்த்வபுர.]

**ஊர்த்துவகம்**-மேலேபோதல். [ஊர்த்வக: ஊர்த்வ - மேல். க - போதல்.]

**ஊர்த்துவகாமிநி**—1. ஆகாயத்திற்செல்வது. 2. மேல் நோக்கியபார்வையுள்ளகுதிரை.

**ஊர்த்துவகாயம்**— 1. சரீரத்தின்மேற்பாகம். 2. சரீரம் நிமிர்ந்திருத்தல். [ஊர்த்வகாய: ஊர்த்வ- மேல். காய - சரீரம்.]

**ஊர்த்துவகை**— இருநூற்றிருபத்துநான்கு புவனங்களில் ஒன்று. (கந்தபு. கணங்கள்செல். கo. உரை.)

**ஊர்த்துவசீலம்**— 1. நெருப்பு. 2. மேலே செல்லுந்தன்மையுடையது. [ஊர்த்வசீல: ஊர்த்வ - மேல். சீல - சார்புடையது.]

**ஊர்த்துவசேடம்** — நிவிர்த்திகலையிற் பிருதிவிதத்துவத்திலிருக்கும் நூற்றெட்டுப் புவநங்களுளொன்று. (சி-வி. கிரி. உக. உரை.)

**ஊர்த்துவசைவம்**— சைவம்பதினறனுளொன்று; இச்சைவத்தையநுசரிக்குஞ்சைவர், சிவன் ஒருவர் உண்டென்றும், அவர் தத்துவாதீதர் என்றும், அவரையடையும் வழி பலசடைதரித்தல், உருத்திராக்கந்தரித்தல், விபூதி தரித்தல், பூணூல் தரித்தல்,சிவலிங்கபூசைசெய்தல், பஞ்சாக்கரசெபஞ்செய்தல் முதலியன என்றுங் கூறுவர். (த. நி. போ. உருஉ.)

**ஊர்த்துவதேவன்**— விட்டுணு. [ஊர்த்வ தேவ.]

**ஊர்த்துவபதுமம்**—பிரமரந்திரகமலம். (சி-வி. யோக. எ.)

**ஊர்த்துவபாதம்**— 1. எண்காற்புள். 2. பாதம் மேலாய் நிற்றல். [ஊர்த்வபாத: ஊர்த்வம் - மேல். பாதம் - கால்.]

**ஊர்த்துவபுண்டரம்**— 1. சைவருள் ஒருசாரார்சூலத்தினால் நெற்றியில் திருநீறு அணியுங் குறி. (சைவச. பொதுவி. ௧௬௫.)2. விட்டுணுசமயத்தார் திருமண்முதலியவற்றால் நெற்றியிலே லம்பரேகையாகத்தரிக்கும் ஒருகுறி. (உ-ம்.)"விட்டுணுமூர்த்தியைவழிபடுமடியவர் சூலம்போலவும் - சூலம்போல் எனவே ஊர்த்துவபுண்டரம் என்பதும்-பெறப்படும்"(கூர்மபு. வருணச். ௨௫. உரை.) [ஊர்த்வபுண்ட்ர:]

**ஊர்த்துவம்**—1. சிரேட்டமானது. 2. மேல். (பௌட். ௬: ௧௫௯.) 3. மேனோக்கியது. [ஊர்த்வம்.]

**ஊர்த்துவமிதுநம்**—சாந்திரமானத்தால் ஆடிமாதங்கலந்த சௌரமான ஆனிமாதம். (சி-வி. சரி. ௫. தாற்.)

**ஊர்த்துவமுகநாள்**— மேனோக்கியநட்சத்திரம்; அந்தநட்சத்திரங்களாவன: உரோகணி, பூசம், திருவோணம், அவிட்டம், உத்திரத்திரயம், சதயம், திருவாதிரை என்னு மொன்பதுமாம். "சகடன்குருமாயோன் புள்ளுத்திரங்கள் சதயஞ்செங்கை-புகல் தருமேன்முகம்" என்பதிற்காண்க. (விதாந. பஞ்சா. ௧௮.)

**ஊர்த்துவமுகம்**— 1. சிவனுடைய ஈசானமுகம். 2. மேலாகத்திறந்தவாய். 3. மேற்பாகத்திலுள்ளமுகம். (சைவச. பொது. ௬௬௮: உரை.) [ஊர்த்வமுகம்: ஊர்த்வம் - மேல். முகம் - முகம்.]

**ஊர்த்துவராசி**—ஆதித்தன் விட்ட இராசி. அவை; மகரம், கும்பம், மீநம், மேடம், இடபம், மிதுநம் என்பன. (விதாந. குணகுண. ௬௬. முகம்.) [மேனோக்கிய ராசி என்றபடி.]

**ஊர்த்துவலிங்கன்**—சிவன். [ஊர்த்வலிங்க]

**ஊர்த்துவலோகம்**—மேலுலகம்.

**ஊர்த்துவலோசநம்**—எண்காற்புள். [ஊர்த்வம்-மேல். லோசநம் - கண்.]

**ஊர்த்துவாங்கம்**— இடுப்புக்குமேல் சிரசுவரைக்குமான அங்கப்பகுப்பு. (தைல. தைலவ. ௫௪. உரை.)

**ஊர்தல்**— 1. ஏறுதல். (பெரும்பா.) 2. செல்லுதல். (உ-ம்.) "ஓங்கன் - மத்தூரும்பெருங் கடலில்" (சேதுபு. திருநாட். ௭.) 3. தவழ்தல். (உ-ம்.) "நந்தூரும்புனனாட்டின்றிறம்வேண்டு" (பாரத. கிருட்டிண. ௧௧.) 4. நினைவுறல். 5. பரத்தல். (உ-ம்.) "மையில்வாண்முகம் பசப்பூரும்மே" (கலி. கடவுள்வா. ௭.) 6. மெல்ல இயங்குதல். (உ-ம்.) "தென்றல்பி-னூர்ந்தநுகூலமேசெய்ய" (இரகு. குறை. ௬௫.) 7. மேற்படுதல். (உ-ம்.) "ஏரிசிறிதாயினீரூருமில்லத்து-வாரிசிறிதாயிற்பெண்ணூரு-மேலைத்-தவஞ்சிறிதாயின்வினையூருமூரு- முரன்சிறிதாயிற்பகை" (நான்மணிக். ௧௦௧.) 8. வாகநமாகக்கொண்டுசெலுத்துதல். (உ-ம்.) "ஏறுதியூர்தற்கென்றான்" (கந்தபு. சூர. வதை. ௬௮௧.)

**ஊர்தி**—1. ஊர்வாயெனப்பொருள்படும் ஒருமுன்னிலைவினை. 2. வாகநம், ஏறப்படுவது. (உ-ம்.) "நாரதன்மகத்திற்றோன்றிநடந்ததோர் செச்சைதன்னை- ஊர்தியதாகக்கொண்டேயூர்ந் தனனொப்பிலாதான்" (கந்தபு. பாயிர. ௬௭.)

**ஊர்தியன்**—வாகநமுடையவன். (உ-ம்.)"ஓராயிரமைங்கணை தன்முகவூர்தியன்மேலும்.(சேதுபு. தேவிபு. ௬௦.)

**ஊர்நேரிசை**— தொண்ணூற்றாறுபிரபந்தங்களுள் ஒன்று; அது: பாட்டுடைத்தலைவனதூரைச்சார நேரிசைவெண்பாத் தொண்ணூற்றிலாவது, எழுபதிலாவது ஐம்பதிலாவது பாடப்படுவது. (இலக்கணவி. ௮௬௦. உரை.)

**ஊர்ப்பகை**— ஊர்நிந்தை.

**ஊர்ப்பழி**— ஊர்ப்பகை.

**ஊர்ப்பாடு**—அந்நியருடையகாரியம்.

**ஊர்ப்புகைச்சல்** — புகைநிறமாய்த் தோற்றல்.

**ஊர்ப்புரளி**—ஊர்க்குழப்பம்.

**ஊர்ப்புலம்**—ஆமணக்கமரம்.

**ஊர்பு**—ஊர்ந்து எனப்பொருள்படும் ஒருவினையெச்சம்.(உ-ம்.)"கடலூர்பெழுதரு-ஞாயிறு" (புறநா. ௫௬.)

**ஊர்புல்**—ஒருவகைப்புல்.

**ஊர்மச்சி**—ஊமச்சி.

**ஊர்மன்றம்**—ஊரிலேயுள்ளமன்றம். [ஊர்; மன்றம் - பலருங்கூடுமிடம்.]

**ஊர்மன்று**—1. ஊரம்பலம். 2. பொதுமனை.

**ஊர்மனை**—குடியிருப்பு. (உ-ம்.) "ஊர்மனை சந்தியுகந்தாய்போற்றி" (வேழமுகம்.) [வீடுகளையுடைய ஊரென்றபடி.]

**ஊர்மி**—1. ஒளி. 2. சீவ இமிசை; அது: பசி, தாகம், சோகம், மோகம், சரை, மரணம் என ஆறு. 3. திரை. 4. நீரோட்டம். 5. வஸ்திரமடிப்பு. 6. வயிறு முதலிய இடங்களிலுள்ளமூன்றுமடிப்பு. 7. வருத்தம். 8. விரகம், ஆற்றாமை. 9. வேகம்.

**ஊர்மிகை**—1. திரை. 2. மோதிரம்.

**ஊர்மிமாலி**—கடல்.

**ஊர்மிளை**—1. இலக்குமணன்மனைவி. (உ-ம்.) "உருவவோடரிக்கட்செவ்வாயூர்மிளையென்னு மாதை - யருவரையனையதிண்டோளிலக்குவற் களித்து" (கூர்மபு. இராமனவதரி. கoகூ.) 2. கணவனுல்விடப்பட்டகற்புடையமனைவி.

**ஊர்முகம்**—படைபொருமிடம் (பதிற்று.)

**ஊர்வ**—ஊருவன. (உ-ம்.) "ஊர்வபதினொன்றும்" (வள். சுஉ.) [அவை: எறும்பு முதலியன.]

**ஊர்வசி**—உருப்பசி. [ஊவ-சி.]

**ஊர்வரப்பன்**—வெள்ளரிக்கொடி. [இஃது, உருவாரம் என்பதன் மரூஉமொழி.]

**ஊர்வலம்வருதல்**—பட்டினப்பிரவேசம் வருதல்.

**ஊர்வன**—ஊருஞ்செந்து. (உ-ம்.) "தெரிவாகவூர்வனநடப்பனபறப்பன" (தாயு. பரிபூர. உ.)

**ஊர்விருத்தம்**—ஒன்பதுவகை விருத்தங்களுள் ஒன்று; அது: பாட்டுடைத்தலைவன் ஊரைச்சிறப்பித்துப்பத்துவிருத்தத்தாற்கூறுவது. "வில்வாள்வேல்செங்கோன்மதமாபரி - நாடூர் கொடையையநயந்தபப்பத்து - விருத்தமொன்பதும் விளங்குமப்பெயரான்" என்பதனுற்பெறப்படும். (இலக்கணவி. அருகூ.)

**ஊர்வெண்பா**—தொண்ணூற்ருறுபிரபந்தங்களுளொன்று; அது: பத்துவெண்பாவால் ஊரைச்சிறப்பித்துக்கூறுவது. (உ-ம்.) "அறிந்திடி லூர்வெண்பாவையிரண்டாம்வெள்ளை" (வெண்பாப்பா. உஉ.)

**ஊரண்டினுர்**—கள்ளிமரம்.

**ஊரப்பார்த்தல்**—ஊர்ந்துசெல்ல மந்திரித்தல்.

**ஊரல்**—1. ஈரம். 2. உரிஞ்சல். 3. ஊர்தல். 4. காய்ந்துவருகிறபுண். 5. கிளிஞ்சில். (சூ. நிகண். கூ: எரு.) 6. குளுவைப்பறவை. (உ-ம்.) "உள்ளூரலும்" (சிலப். நாடுகாண். ககஎ.) [நீர்மேலூர்தலினுல் ஆகுபெயர் என்பது.] 7. நகர்தல். 8. பசுமை.

**ஊரவியன்**—வைசியவருணத்தோன். [பிரமாவுடைய ஊருவிற்பிறந்தவன் என்னும்பொருட்டு.]

**ஊரம்பதம்**—பச்சைப்பதம்.

**ஊரற்புண்**—காய்ந்துவருகிறபுண்.

**ஊரன்**—மருதநிலத்தலைவன். (உ-ம்.) "இந்திரனூரன் பைந்தார்மகிழ்நன்" (அகப்பொரு. அகத்திணை. உகூ.) "நாடனென்கோவூரனென்கோ" (புறநா. சகூ.)

**ஊராக்குதிரை**—குதிரைமலை. (மணிமே.)

**ஊராண்மை**—1. உபகாரியாந்தன்மை. (உ-ம்) "ஒன்றுற்றக்கா-லூராண்மைமற்றதனெஃகு. (வள். எஎரு.) 2. மிக்கசெயல். (சூ. நிகண். கூ. ருஎ.)

**ஊரார்**—1. ஊரமாட்டார் எனப்பொருள்படும் ஓர் எதிர்மறைவினைமுற்று. 2. ஊரினுள்ளார். 3. பிறர்.

**ஊராளி**—1. ஊரதிகாரி. 2. ஒருசாதியான்.

**ஊரி**—1. இளமை. 2. சங்கு. 3. நீரிடங்களிலே ஊருஞ்சங்குபோலும் ஒருவகைச்செந்து. 4. மரத்திலே முளைக்கும் ஒருவகைப்பூண்டு. (உ-ம்.) "உயர்மரமுளைத்தவூரிபோல" (கல்லாட. கூக.) 5. மேகம். [பரதத்தலால்.]

**ஊரிலிகம்பலை**—கலாதி.

**ஊரின்னிசை**—தொண்ணூற்ருறு பிரபந்தங்களுளொன்று; அது: பாட்டுடைத்தலைவன் ஊரினைச்சார இன்னிசைவெண்பாத் தொண்ணூறினுலாவது எழுபதினுலாவது ஐம்பதினுலாவது பாடப்படுவது. "இறைவன்பேரூரினையின்னிசையான் - முறையிற்ரொண்ணூறெழுபானைம்பா - னறையினப்பெயராகுமென்ப" என்பதனுற்பெறப்படும். (இலக்கணவி. அஉரு.)

**ஊரு**—1. அச்சம். 2. அட்டை. 3. உடம்பினரைக்கீழுறுப்பாகிய தொடை. (உ-ம்.) "மாயனூருவில்வந்தருளந்தமான்வயிற்றில்" (பாரத. குருகுல. கரு.) [ஊரு.]

**ஊருகால்**—சங்கு.

**ஊருசன்**—வைசியவருணத்தான். [ஊரு ஜ: ஊரு-தொடை. ஜன்-பிறந்தவன்.]

**ஊருடை**— } முருங்கைமரம்.
**ஊருடைமுதலியார்**— }

**ஊருணி**—ஊரார்நீருண்ணுதற்கு உபயோகமானநீர்நிலை. (உ-ம்.) "ஊருணிநீர்நிறைந்தற்றே" (வள். உகரு.) [ஊர் - ஊரார்; உண் - இ- ஒரு செயப்படுபொருள்விகுதி.]

**ஊருணை**—புருவங்களுக்குமத்தியிலே மகாபுருடசிந்நமாயிருக்கும் மயிர்ச்சுழி. [ஊர்ணா.]

**ஊருத்தம்பம்**—ஊருஸ்தம்பவாதம். (உ-ம்.) "ஓங்கடலூருத்தம்பம்" (தைல. தைலவ. எஅ.) [ஊருஸ்தம்ப.]

**ஊருத்தம்பை**—வாழைமரம். [ஊருஸ்தம்பா: ஊரு - தொடை. ஸ்தம்ப- தூண். பெண்களினூருப்போன்ற தம்பவடிவமுடைமையின் இப்பெயர்த்து.]

**ஊருதல்**—ஊர்தல்.

**ஊருப்பிரகூடாலிங்கநம்** — தொடையால் நெருக்கித்தழுவுதல்; அது: நாயகிகோபமுள்ளவள்போல இரண்டுதொடையாலும் நாயகனையிறுகும்படி நெருக்கித்தழுவுதல் (கொக். ரு: சரு.)

**ஊருவின்மூலம்**--உபத்தக்குறி. (உ-ம்.) "அலம்புஞைசயூருவின்மூலம்"(சேதுபு. விதூம. கஅ.)

**ஊரேழுச்சி** — ஒருகாரியத்தின் பொருட்டு ஊரார் ஒற்றுமைப்பட்டெழுதல்.

**ஊரேறிபறை**--பாலைப்பறை.(இறைய. கஎ. பக்.)

**ஊரேறு**—ஊர்ப்பன்றி. (உ-ம்.) "நயநங்களற்றதோரூரேறுபோலவே" (தாயு. மலே. எ.)

**ஊரை**—ஊரினுள்ளாய் எனப்பொருள்படும் ஒரு முன்னிலைக்குறிப்புவினைமுற்று. (உ-ம்.) 'கடவுளர்கோன்வைகலுறு-மூரையோ"(கந்தபு. அசுரர்யாக.'உஎ.) [ ஊர்-ஐ-முன்னிலைஒருமை விகுதி.]

**ஊரோசம்**—ஊரிற்கீர்த்தி. (உ-ம்.)"ஊரோசம்வீடுபெட்டினி" [ஊர்; ஓசம்-ஒளி.]

**ஊலுகம்**—1. ஆந்தைப்பறவை. 2. ஓர்வகைக்கரை. 3. கோட்டான். [1. ஊலூ-ருக.]

**ஊவம்**—வடவாமுகாக்கினி.

**ஊழ்**—1. அலர்தல். (உ-ம்.) "முதிரிணரூழ்கொண்டமுழவுத்தாளெரிவேங்கை" (கலி.சச.) 2. ஊழ்த்தலைச்செய்யென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும். 3. குணம். 4. பகை.(உ-ம்.) "ஏற்றையோடேற்றைச்சீற்றத்- துருமினைவெ ன்னத்தாக்கியூழுறநெருக்கி" (இராமா. நாட். கஎ.) 5. பழமை. 6. மரபு. 7. முற்பிறப்பிற்செய்த இருவினைப்பயன் செய்தவனையேசென்றடைதற்கேதுவானநியதி. (உ-ம்.) "ஊழிற்பெருவலியாவுள" (வள். ௬அ0.) 8. முறை. (உ-ம்.) "ஊழல்லதுணைவாகாதானும்" (சிவப்பி. உ: கக.) 9. விதி. 10. வெயில். [ என்றூழ் என்பதின்றலைக்குறைபோலும்.] (5, 6. பிங்கல. ௬உகஅ.)

**ஊழ்கல்**—தியாகித்தல். (உ-ம்.) "புரிதனபங்கயமூழ்கி" (கோயிற்பு. பாயிர. கஎ.) [உள்கி என்பது முதனீண்டு இனம்பற்றி ளகரம் ழகரமாய்நின்றது.]

**ஊழ்கொளல்**—நன்குமதிக்கப்படல். (உ-ம்.) "பழையேயமிறையூழ்கொளப்பட்டமென்றேமாப்பெய்தார்" (திருவிளை. பன்றிக்குட்டி. கரு.)

**ஊழ்த்தசை**— புலால். (பிங்கல. உருசஅ.)

**ஊழ்த்தல்**—1. இறைச்சி. (பிங்கல. உருசக.) 2. உதிர்தல். 3. கழலுதல். (உ-ம்.) "மதுக்கலந்தூழ்த்துச்சிலம்பிவீழ்வன" (சிந்தா. மண்ம. எ.) 4. சமயம். 5. சிதைவு. 6. சிந்திப்பு. 7. செவ்வியழிதல்.(உ-ம்.)"கழைவளர்நெல்லினரியுலையூழ்த்து" (மலைபடு. கஅ0.) 8. நினைத்தல். (உ-ம்.) "ஊழ்ந்திடுமரவம்பூண்டோய்" (திருவிளை. கீரனுக்கு. க.) 9. மடிப்பு. 10. மலர்தல். (உ-ம்.) " அடுக்கல்வேங்கைகளெரியகைந்தெனவலரூழ்க்கும்"(தணிகை. திருநாட்டு. சக.) 11. முடைநாற்றம். (பிங்கல. உருருக.) 12. முதிர்தல். 13. வாடுதல்.

**ஊழ்த்துச்சோரிதல்**—பழுகிச்சொரிதல். (சிந்தா.)

**ஊழ்த்துணை**---மனைவி.

**ஊழ்முறை**—1. நியதி. 2. பூர்வநியாயம்.

**ஊழ்வ்தி**—பிராரத்தவவிதி.

**ஊழ்வினை**— 1. உழுவலன்பு. (சிந்தா.) 2. பழவினை. (உ - ம்.) "யாரேயூழ்வினைதீர்க்கிற்பார்" (இரகு. தேநு. ௬ரு.)

**ஊழகம்**—ஊழம். [ஊஷக: ஷகாரம் ழகாரமாயிற்று.]

**ஊழடிமுட்டம்**—முறையடிப்பாடாய்ப்பின்பு வழிமுட்டாயிருக்கும். (உ-ம்.) "நூழிலுமிழுக்கு மூழடிமுட்டமும்" (குறிஞ்சி. உருஅ.)[ஊழ்-முறை. அடி - அடிப்பாடு. முட்டம் - முட்டு.]

**ஊழம்**—வைகறைப்பொழுது.

**ஊழல்**—1. ஆகாதது. 2. ஊத்தை. 3. நரகம். (உ-ம்.) "உடம்பறியுமென்னுமந்தவூழலெல்லாந்தீர" (தாயு. தன்னு. க.) 4. நாற்றம். 5. பழுதடைந்தது.

**ஊழலத்தி**—ஒருவகையத்திமரம்.

**ஊழலாற்றி**—ஒருவகைமரம். (உ-ம்.) "முதிரூழலாற்றிமண்ணரசுமாலுகமென்னு மூவதளுமவீசைவீசை" (தைல. தைலவ. கஉச.)

**ஊழலாற்றித்தைலம்**— ஒருவகைத்தைலம். அதனிலக்கணம். "முதிரூழலாற்றி......எம்மானையிஃதூழலாற்றிநெய்யே" என்பதிற்காண்க. (தைல. தைலவ. கஉச.)

**ஊழலித்தல்**—1. அருவருத்தல். 2. இளைத்தல். 3. நாற்றமடைந்துகெடுதல். 4. பதனழிதல்.

**ஊழனுற்றம்**—துர்க்கந்தம்.

**ஊழி**— 1. உகமுடிவுகாலம், கடல்பெருகியுலகமழியுங்காலம். (உ-ம்.) "ஊழிபெயரினும்" (வள். ௬அக.) 2. ஒருபிசாசம். 3. நெடுங்காலம். (உ-ம்.) "இனியூழிவாழ்திரென" (பாரத. பதினெட்டா. உரு0.) 4. பிரமனுயுள். (உ ம்.)"சுருதியானுறங்குமிராத் தொறுமுடிவிற்றுஞ்சிய வூழிகடோறும் - விரையவந்துலகமழித்திடுங்கட

ல்" (கந்தபு. நகர. கூரு.) 5. பூமி. 6. வாழ்நாள். (உ-ம்.)"அன்னவாகநின் ஞாழி"(புறநா. கருரு.) 7. விதி.

**ஊழிக்காய்ச்சல்**— 1. ஒருகொள்ளை நோய். 2. தொற்றுசுரம்.

**ஊழிக்கால்**—உகாந்தவாயு; அது: பிரளய காலத்திலே வடவாமுகாக்கினி உலகத்திற்படர்ந்து உலகை அழித்தவுடனே அவ்வடவையை அழிக்கத்தோன்றுங்காற்று. (உ-ம்.) "வடவையுண்ணல்-விருந்திடமூழிக்காலும்"(கந்தபு. கடல்பாய். ௬.)

**ஊழிக்காலம்**—ஊழிகாலம்.

**ஊழிக்காற்று**— 1. உகாந்தவாயு. 2. விஷக்காற்று.

**ஊழிகாலம்**—உகாந்தகாலம். (உ-ம்.) "இன்னமோரூழிகாலமிருப்பினும்"(கந்தபு.பானுகோ. உஅ.)

**ஊழித்தீ**— வடவாமுகாக்கினி. (உ-ம்.) "உள்ளியகாலையி னூழித்தீயினை" (இராமா. தாடகை. கக.)

**ஊழிநாயகன்**—உலகசங்காரஞ்செய்யுங்கடவுள். (உ-ம்.) "அழியா-வூழிநாயகன்" (கந்தபு. தெய்வ. ககூச.)

**ஊழிநாள்**—முடிவுநாள்.

**ஊழிநீர்**— உலகமுடிவிலுண்டாகும் பிரளயம்.

**ஊழிநோய்** — தொந்தவியாதி, பெருவாரிநோய்.

**ஊழியக்காரன்**—வேலைக்காரன்.

**ஊழியம்**—தொண்டு. (உ-ம்.) "அண்டிமண்டையர்க்கூழியஞ்செய்வதென்றுபோமோ" (திருப்பு. ருசஅ.)

**ஊழியார்**— நெடுங்காலவாழ்க்கையுடையவர். (உ-ம்.) "ஊழியாரெளிதுனக்கரசுதந்துதவுவார்" (இராமா. மராமரப். சஉ.)

**ஊழியூழிக்காலம்**—நித்தியம்.

**ஊழுறல்**— முதிர்தல். (உ-ம்.) "பயம்புக்-கூழுற்றலமரும்" மலைபடு. கருஉ.)

**ஊழைக்குருத்து**—துளசிப்பூண்டு.

**ஊளன்**— 1. ஆணரி. 2. நரி.

**ஊளா**—நெடுவாய்மீன்.

**ஊளான்**—நரி.

**ஊளி**—ஊளாமீன்.

**ஊளுகன்**— சூரியன்முன் பாடுந்துவாதசகந்தருவரிலொருவன். (வி-ணி. உசரு.)

**ஊளை**—1. ஊத்தை. (உ-ம்.) "ஊளைநாயென" (திருப்பு. ருகரு.) 2. சளி. 3. நரிமுதலியவைகளின் அழுகைச்சத்தம். (உ-ம்.) "ஊளைப்பெருநரிவவ்வியவூனை"(சணிகை. களவு.சுகஎ.)

**ஊளையிடுதல்**—1. ஒலியிடல். 2. குரலையிடல். 3. நரிமுதலியனகூக்குரல்செய்தல்.(உ-ம்.) "முதிர்நரிகளூளையிடின்" (சூத. எக்கி. பூ. சசு. உo.)

**ஊற்றங்கோல்**—ஊன்றுகோல்.

**ஊற்றம்**— 1. அசைவின்றி நிற்றல்.(உ-ம்.) "ஊற்றமிகவருள்புரிதலேதுவாக வுரைசெய்வர்"(சிவப்பி.உரு.) 2. அறிவுடைமை.(உ-ம்.)"ஊற்றமிகுஞ்சராசரத்துளுயர்ச்சிசரம்" (கொலைமறு. ௬.) 3. இடையூறு. (உ-ம்.) "பொருதுயிரூற்றஞ்செய்யாது" (திருவிளை. மாயப். உக.) 4. கேடு. (உ-ம்.) "சாற்றரியவின்பவெள்ளந்தாக்குமதினீமூளைக்கி லூற்றமுறுமென்னவதிலுண்மைசொன்ஞலாகாதோ"(தாயு.ஆகாதோ. உo.) 5. நீரூறல். (உ-ம்.) "நாற்றைவேறுபழனத்திருட்டுவா-ரூற்றமோபெறித்தாருழவரே" (சேதுபு. நாட்டு. சஉ.) 6. பற்றுக்கோடு. (சூ. நிகண். அ: கக.) 7. புகழ். 8. மிகுதி.(உ-ம்.)"கொடுமை-யூற்றமாகிப்பண்டுதித்தனரென்ப"(இராமா. படைக்காட்சி. உச.) 9. முயற்சி. (உ-ம்.) "கணைபலபரிதியம்பகைஞ-னூற்றமோடுவான்புயலெனச்சொரிதலும்" (கந்தபு. அமரர்சிறைபுகு. சுஅ.) 10. வலி. (உ-ம்.) "படையூற்றமிலன்சிறியனிவன்" (இராமா. கையடை. கஉ.)

**ஊற்றல்**— 1.ஊற்றுதல், துளித்தல்.(உ-ம்) "அமுதங்கனியுந்தனிகுலவி-யூற்றுமழலைமொழிச்சிறுவர்" (கூர்மபு. தக்க. சபி. கo.) 2. நீரூற்று.

**ஊற்றணி**— 1. இடையூறு. 2. ஊறு. 3. கலப்பையிலேருறுப்பு. (உ-ம்.)"நீற்றேனுமலரோனுநெடியோனுமென்கின்ற - தோற்றுளரிவராலேதொல்லுலகநிலைபெறுமோ - மாற்றுதகாவேரிவளாடருளுங்கலப்பை - ஊற்றணியளாயினுலகுநிலைகுலையாதே. ஏரெழு ரு.)

**ஊற்றும்பெட்டி**—ஊற்றுப்பெட்டி.

**ஊற்றல்**— 1. உரோகணிநாள். (சூ. நிகண். க: சுஅ.) 2. கரப்பு. 3. மீன்கூடு.

**ஊற்று**— 1. சரம். 2. ஊற்றென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும். 3. ஊறுதல்.(உ-ம்.) "ஊற்றிருந்தமும்மதத்தோடையானை" (சிந்தா. நாமக. கஉ௬.) 4. ஊன்றுகோல். (உ-ம்.) "அசைவிடத்-தூற்றாவர்" (நாலடி. குடி. கo.) 5. சுரக்குநீர், பெருகுநீர். (உ-ம்.) "ஊற்றிற்செல்லுமொண்பாலுமுடனுரு" (கந்தபு. நகர. ருகூ.) 6. நீர்சுரக்குமிடம். 7. சுரத்தல். (உ-ம்.)

"குருதிநீர்வெள்ள-மூற்றிருந்தொழுகும்" (கூர்மபு. அந்தகா. சஉ.) 8. நீரூற்று. 9. பற்றுக்கோடு. (உ-ம்.) "ஒற்கத்தினூற்றாந்துணை" (வள். சகச.) 10. வந்துதங்குதல். (உ-ம்.) "உறுகாலத்தூற்றாகா" (நாலடி. பழவி. கO.)

**ஊற்றுக்கண்**—ஊற்றுத்துவாரம்.

**ஊற்றுக்களம்**— பலரும் வந்துசேருமிடம். (உ-ம்.) "கதழ்விடைக்காரியை-யூற்றுக்களத்தேயடங்கக்கொண்டட்டு" (கலி. கOரு.)

**ஊற்றுக்குழி**—நீரூறுதலையுடையகுழி.

**ஊற்றுக்கோல்** — ஊன்றுகோல். (உ-ம்.) "இழுக்கலுடையுழியூற்றுக்கோலற்றே" (வள். சகரு.)

**ஊற்றுண்ணல்**—1. இறத்தல். 2. சிந்துண்ணல்.

**ஊற்றுதல்**—1. எண்ணெய் முதலியன ஊறச்செய்தல். (உ-ம்.) "அமுதுங்கனியுந்தனிகுலவி-யூற்றுமழலைமொழிச்சிறுவரிருவர்த்தந்தேம்' (கூர்மபு. தக்க. சபி. கO.) 2. பாத்திரத்தைச்சரித்தாவது நீர்முதலியவைகளைப்புறத்திலேபோக்குதல். (உ-ம்.) "ஒழிவுறக்கடத்தினீரூற்றி" (சேதுபு. கந்தமா. அஎ.)

**ஊற்றுநீர்**—ஊறுநீர். (உ-ம்.) "ஊற்றுநீர்க்கூவலுளுறையுமீனனார்"(சிந்தா. பதுமை. கக.)

**ஊற்றுப்பட்டை**—ஊற்றிறைக்கும்பட்டை.

**ஊற்றுப்பூ**—தேங்காய்ப்பிண்ணாக்கு.

**ஊற்றுப்பெட்டி** — எண்ணெயூற்றுதற்கருவியானபெட்டி.

**ஊற்றுப்பெயர்தல்**— ஊற்றுத்திரும்புதல்.

**ஊற்றுமரம்**— 1. எண்ணெயூற்றுதற்கருவியானமரம். 2. செக்குலக்கை.

**ஊற்றெடுத்தல்**—பெருகுதல். (உ-ம்.) "ஊற்றெடுத்துவண்டோலிடும்" (செந்தூர். காப்பு.)

**ஊறணி**—1. ஊற்று. 2. கசிவுநிலம். 3. சேற்றுநிலம். 4. வருவாய்.

**ஊறல்**—1. ஊற்று. 2. ஊறுநீர். (உ-ம்.)"அவிரதமூறல்"(தாயு. வண்ண.)3. கசிதல். (உ-ம்.) "மாதவர்சித்தத்திலே-யூறிப்பரந்த"(தாயு. பாய. கக.) 4. களிம்பு. 5. சுரந்துவருதல். "ஊறியகுருதியன்" (கந்தபு. சிங்க. ககஉ.) 6. பஞ்சலோகக்கலப்பு. 7. வருவாய்.

**ஊறளத்தல்**— உறுதற்காராய்தல். (பதிற்றுப்.)

**ஊறற்பாக்கு**—நீரிலிருந்தூறியபாக்கு.

**ஊறு**—1. இடையூறு. (உ-ம்.) "வெருப்பிடித்தூறுறுவண்ணம்" (இரகு. தேனு. எக.) 2. உறுதல். (உ-ம்.) "ஊறேரர்பவரிங்குலாவவுங்கூடும்" (வாண. உருக.) 3. ஊறுதல். 4. ஊறென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 5. காயம், புண். (உ-ம்.) "உளந்தளர்வில்லோன் மேனிக்குற்றிலசிறிதூறு" (கந்தபு. சிங்க. ககஎ.) 6. குற்றம். (புறப்பொ.) 7. கொலை. (உ-ம்.) "ஊறுதான்செயக்கூடுமொருவர்க்குமென்றால்" (கந்தபு. சூரனமைச். ககரு.) 8. தீண்டல். (பிங்கல. ருஉகக.) 9. தீமை. (உ-ம்.) "ஊறுபட்டபோதெழுந்தருள்கென" (பாரத. வாரணா. கஉச.) 10. துன்பம். (உ-ம்.) "ஊறுகொணிதிபதியுள்ளநாணி" (கந்தபு. திக்குவி. ருஎ.) 11. நிலத்தையூறுபடுத்தல். (உ-ம்.) "நாரணீர்வய-லூறுசெய்குநர்சிலர்" (கந்தபு. திருநாட்டு. சு.) 12. பரிசம். (உ-ம்.) "சுவையொளியூறோசை" (வள். உஎ.) 13. பழுதுபடுஞ்செயல். (உ-ம்.) "ஊறொரால்" (வள். சுசுஉ.)

**ஊறுகாய்**— உணவுக்காக உப்பு முதலியன சேர்த்து ஊறவைத்தபுளிக்காய். (உ-ம்.) "கையினூறுகாயாதியிடு" (சைவச. பொதுவி. ருOஉ.)

**ஊறுகோள்**—1. காயம், புண். 2. கொலை.

**ஊறுதல்**—1. இடைவிடாதுநீர்முதலியசுரத்தல். 2. தோன்ற அமைந்துகிடத்தல். (உ-ம்.) "சுருதியின்பொருண்மை-முழுதுமூறிய துதியினாகி" (கந்தபு. குமாரபு. சுச.) 3. நனைந்துசாரமேறுதல். 4. நீர்சுரந்துவருதல். (உ-ம்.) "ஊறுமாகடமாமதமோடுமே"(இராமா. வரைக். சுO.)

**ஊறுநீர்**—ஊற்றுநீர். (உ-ம்.) "ஊறுநீர்க்கேணிதனை" (மூதுரை. ஒளவையார்.)

**ஊறுநீர்சுரந்தவோலை**—பச்சோலை. (உ-ம்.) "மந்திரங்கள்வேறுவே - றூறுநீர்சுரந்தவோலையிற்பொறித்து" (திருவிளை. சமணரை. ருஎ.)

**ஊறுபாடு**—1. இடையூறு, கவலை. (உ-ம்.) "ஊறுபாடறவந்தரத்தளிகவர்ந்துண்ப" (திருவிளை. தருமிக்கு. ருசு.) 2. சேதம். 3. தீமை. 4. துன்பம்விளைத்தல். (உ-ம்.) "ஊறுபாடில்லையுயிர்க்கு" (வள். கூசரு.) 5. வெட்டல் முதலிய காரணங்களினால் உடம்பில்வருங்காயம்"

**ஊறுபுண்**—ஆறிவரும்புண்.

**ஊறுபுரிதல்**– பரிசித்தல், நியசித்தல். (உ-ம்.) "அங்கமெவையு-மிக்கானுமூறுபுரியா" (கந்தபு. வில்வ-வாதா-வதை. உஅ.)

**ஊன்**—1. உடம்பு. (உ-ம்.) "ஊனாகியூனுளுயிராகி"(கந்தபு. கடவு. உ.)2. உவ்விடம். (உ-ம்.) "ஊனரசாள்பவனோக்கி" (தணிகை. சீபரி. ருசுஉ.) 3. கொழுப்பு. (உ-ம்.) "வேடனிடு-மூ

னப்பிறைச்சிக்குகந்தார்” (மறைசை.௫௫.)4. தசை, மாமிசம். (உ-ம்.)“ஊன்சுவைத்துடம்புவீக்கிநரகத்திலுறுதனன்ரோ”(சிந்தா.பதுமை.௭௦.)

ஊன்பூச்சுத்தைலம் — ஒருவகைத்தைலம். அதன்விவரம், “சங்கெட்கோதபமார்க்கி...... மிஃதூண்பூச்சுத்தைலமென விரணமருத்துவர்க்குச்சாற்றே” என்பதிற்காண்க. (தைல. தைலவ. ௧௧௮.)

ஊன்விற்போர்—இறைச்சிவிற்போர்.

ஊன்றக்கட்டுதல்—பெலப்படுத்துதல்.

ஊன்றல்—ஊன்றுதல்.

ஊன்றள்ளல்—ஊன்வளர்தல்.

ஊன்றி—ஒருபாம்பு.

ஊன்றிக்கேட்டல்—1. உறுதியாய்வினவுதல். 2. கருத்தாய்ச்செவிகொடுத்தல்.

ஊன்றிக்கொள்ளல் — 1. சார்ந்திருத்தல். 2. நிலைபெறல்.

ஊன்றிச்சொல்லல்— உறுதியாய்ச் சொல்லல்.

ஊன்றிப்பார்த்தல்– 1. ஆராய்ந்துபார்த்தல். 2. கையினால் அழுத்திப்பார்த்தல்.

ஊன்றிப்பேசல் — 1. அசைநிறுத்திப்பேசல். 2. பெலப்படுத்திப்பேசல்.

ஊன்று — 1. ஊன்றென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 2. சார்பு. (உ-ம்.) “தனியோங்கார-மூன்றறவெவ்வளவுமேலுற்றுநின்றது” (ஞானவா. உத்தாலகன். ௬௧.)

ஊன்றுகால் —உதைகால்.

ஊன்றுகோல்—பற்றுக்கோல்.

ஊன்றுதல்—1. அமுக்குதல். (உ-ம்.) “உடுப்புமுகமுழக்கொழுமூழ்கவூன்றி” (பெரும்பா. ௨௦௦.) 2. அழுந்தவைத்தல். (உ-ம்.) “ஊன்றியேவலப்பாதசிப்புடைவிரல்”(சிவதரு. சிவஞானயோ. ௹௬.)3. கடைப்பிடித்தல். (உ-ம்.)“ஊன்சுவைத்துடம்புவீக்கிநரகத்திலுறைதனன்ரோ-ஊன்றினுதுடம்புவாட்டித்தேவராயுறைதனன்ரோ-ஊன்றியிவ்விரண்டனுள்ளுமுறுதிநீயுரைத்திடென்ன” (சிந்தா. பதுமை. ௭௦.) 4. குத்தல். (உ-ம்.) “ஊன்றிப்பிளந்திருகூறுசெய்து” (கூர்மபு. அந்தகா. ௮௦.)5. சார்தல். 6. சென்றுதங்குதல்.(உ-ம்.)“பருஉப்புகை-யகலிருவிசும்பினூன்றுஞ்சூளை” (புறநா. ௨௨௮.) 7. நடுதல். (உ-ம்.)“காழூன்றியகவிகிடுகின்-மேலூன்றியதுகிற்கொடியும்” (பட்டின. ௧௬௭.) 8. நிலைப்படுத்தல். (உ-ம்.) “ஊன்றியவெகுளியள்” (இராமா. மந்தரை. ௬௦.) 9. பதித்தல். 10. பிடித்தல். (உ-ம்.) “கைதருவார்தமையூன்றி” (பெரியபு. திருநாவு. ௬௧.) 11. பெலப்படுத்தல்.

ஊனகத்தண்டு—1. கருவண்டு. 2. இறைச்சிகொத்தும் அடைகுறடு. (பதிற்றுப்.)3. கேடு. (பிங்கல. ௩௨௨௦.)

ஊனம்— 1. சாரம். 2. பிணம். (பிங்கல. ௩௨௨௦.) 3. மலம். (உ-ம்.) “ஊனநீக்கியசிவமுன்னர்” (பிரமோத்தர. பஞ்சா. ௧௫.) 4. மாமிசநீர். [ஊன் - தசை. அம் - நீர்.]

ஊனமர்குறடு — இறைச்சி கொத்தும் பட்டைமரம். (உ-ம்.) “ஊனமர்குறடுபோலவிரும்புண்டு” (சிந்தா. மண்மகள். ௧௮௦.)

ஊனன்—ஒருகொடி. (உ-ம்.) “எண்ணுமவிப்படிநேரமபுட்பிவேம்பூனன்- திண்ணுயுருவிசிவந்திபரி” (தைல. தைலவ. ௧௦௨.)

ஊனி—அமுக்கிராங்கிழங்கு. (உ-ம்.) “ஊர்விலாமிச்சாவாரையூனிமாதூரங்தொண்டி’(தைல. தைலவ. ௯௪.)

ஊனுருக்கி—கயரோகம்.

ஊனெட்டி—உடும்பிறைச்சி.

## எ

எ—[இது தமிழ்ப்பாஷையின் வர்ணமாலையிலுள்ள உயிர் வருக்கத்தில் வரும் ஏழாம் எழுத்து. உயிர்முயற்சியாற்பிறக்கும் எழுத்துக்களுள் அங்காப்போடு அடிநாவின் விளிம்பு அண்பல்லினையுறப்பிறப்பதும், அகர இகரக் கூறுகள் சந்தித்துப்பிறப்பதுமான ஒருகுற்றுயிர்.]

1. ஏழு என்னும் எண்ணின் குறி.

2. ஒரு சொல்லின் அகத்தாயினும் புறத்தாயினும் நின்று வினாப்பொருளைத்தரும் ஓரிடைச்சொல். (உ-ம்.) “எவன், எக்கொற்றன்” (நன். எழுத். ௬௨.)

எஃகம்—1. ஆயுதப்பொது. (உ-ம்.) “ஏற்றநட்டாற்போழல்வினைக்கெஃகங்கிறைகோல்கள்” (தைல. பாயிர. ௬௨.) 2. ஈட்டி. 3. எறியாயுதம். 4. கூர்மை. (உ-ம்.)“எஃகவேற்-புங்கவன் சீர்புகழ்” (கந்தபு. அவையட. ௬௨.) 5. சக்கராயுதம். (பிங்கல. ௧௫௮௪.) 6. வாட்படை. (உ-ம்.)“எடுத்தெறியெஃகம்பாய்தலின்” (முல்லை. ௬௮.) 7. வேற்படை. (உ-ம்.) “எங்கணுமறைகளார்ப்பவெஃகம்வான்போயிற்றம்மா” (கந்தபு. சூரபவதை. ௬௧௦.)

எஃகல்—எஃகுதல்.

எஃகு—1. ஆயுதம். (உ-ம்.) “எஃஃகிலங்கியகையராய்” (நன். ௬௨. உரை.) [இவ்வுதார

ணத்திற்பின்னுள்ள ஆய்தம் அளபெடையால் வந்தது.] 2. உருக்கு. (சூ. நிகண். சு அ.) 3. எஃகென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும், வினைத்தொகையும். 4. கத்தரிகை என்னுமாயுதம். (உ-ம்.) "எஃகிடைதொட்டகார்க்கவின்பெற்றவைம்பால்" (கலி. கூஉ.) 5. கூர்மை. (உ-ம்.) "எஃகுறுமுள்ளின்" (மலைபடு. கூ00.) 6. மதிநுட்பம். (உ-ம்.) "இகலிலாரெஃகுடையார்" (நாலடி. கல்வி. எ.) 7. மரவொடுகம். 8. வேற்படை. (உ-ம்.) "ஒளிறிலையவெஃகேந்தி" (புறநா. உசு.)

**எஃகுகோல்**—பஞ்சுகொட்டும்வில்.

**எஃகுதல்**—1. அவிழ்தல். 2. உதைந்தேறுதல். 3. எட்டுதல். 4. எதிர்க்குதல். 5. தாழ்ந்தெழும்பல். 6. நீளல். 7. நெகிழ்தல். 8. நொய்தாக்கல். 9. பஞ்சுகொட்டல். (உ-ம்.) "எஃகின பஞ்சு" 10. பஞ்சுபறித்தல். (சிந்தா.)

**எஃது**—யாது. (உ-ம்.) "எஃது எவ்வாறுநின்றொடுங்கிற்று அஃது அவ்வொடுங்கினவாறே" (சிவஞானபோ. க: உ. சிற்.)

**எக்கச்சக்கம்**—ஒழுங்கின்மை. [தெலுங்கு.]

**எக்கண்டம்**—முழுக்கூறும்.

**எக்கணும்**— எவ்விடமும். (உ-ம்.) "எக்கணுந்தொழ" (தாயு. பொன்னை. உசு.)

**எக்கர்**—1. இடக்கர். 2. இடுமணல், மணற்குன்று. (உ-ம்.) "எக்கர்மீதுமிழைத்தபொற்குன்றினும்" (தணிகை. திருநகர. சஉ.) 3. இறுமாப்புடையவர். (உ-ம்.) "வெஞ்சமண்பே- ரெக்கர்க்குடஞுக" (பெரியபு. மூர்த்தி. கறு.) 4. ஏறுதல். 5. குவிதல். (சூ. நிகண். கக. ககர. கக.) 6. சொரிதல். 7. பொருதற்றொழிலுடையவர். (உ-ம்.) "செக்குரலிடையிட்டெம்மைத் திரிப்பதுதண்டமென்று-எக்கராம்புத்தர்தாமேயிசைத்தனர்" (திருவிளை. மண்சும. க0எ.)

**எக்கரணம்** —எக்காரம்.

**எக்கரவம்**—பொரப்புகும் எருத்தின் உரப்பொலி. [எக்கு-குவிதல். அரவம்-ஒலி.]

**எக்கல்**—1. எட்டல். 2. ஏறுதல். 3. குவிக்கப்படுதல். 4. குவித்தல். 5. சொரிதல். (உ-ம்.) (எக்கிவிழுங்குருதிகளை" (சி. சி. பர. சௌத்திராந்திக. உ. உரை.) 6. பதிவு. 7. பொருதல். 8. வயிற்றையுள்ளிழுத்தல். (4. பிங்கல. கூஉஉஉ.)

**எக்கழுத்தம்** — } இறுமாப்பு. [ஏக்கழுத்தம்
**எக்கழுத்தல்**— } என்பதின் குறுக்கம்.]

**எக்களித்தல்**—மிகமகிழ்தல்.

**எக்களிப்பு**—மிகுமகிழ்ச்சி.

**எக்காளம்**—ஒருதுகுழல்.

**எக்கியம்**— 1. ஆவாபரயுகம். 2. யாகசம்பந்தம். (உ-ம்.) "மககட்பவதந்தனெக்கியத்தின்" (திருவானை. கோச்செங். எ0.) [யஜ்ஞ.]

**எக்கியோபவீதம்** — பிராமணர் முதலிய மூவருணத்தாரும் ஓமஞ்செய்து தரிக்கும் பூணூல். [யஜ்ஞோபவீத: எக்கியம் - யாகம். உபவீதம் - பூணூல்.]

**எக்கு**—எக்கென்னேவலும் தெரிநிலைவினைபகுதியும்.

**எக்குதல்**—1. குவிதல். 2. சொரிதல். (உ-ம்.) "எக்கியசோரியிற் பரந்ததெங்கணுஞ் செக்கர்" (இராமா. சித்திர. சக.) 3. போர்செய்தல். 4. வயிற்றினை உள்ளிழுத்தல்.

**எக்கூர்**—ஒக்கூர், ஓரூர். (புறநா.)

**எகரம்**—எ என்னும் எழுத்து. [கரம்-சாரியை.]

**எகின்**—1. அழிஞ்சில். 2. அன்னம். (உ-ம்.) "பானிறத்தெகின்வாகனம்பவுரிகொள்வதுபோல்" (சேதுபு. விதூம. கக.) 3. செம்மரம். 4. புளி. 5. புளிமா.

**எகினப்பாகன்**—பிரமா. (உ-ம்.) "ஞாலமீன்றருளெகினப்பாகன்" (கூர்மபு. யுகதன்ம. உஎ.)

**எகினம்**—1. அழிஞ்சின்மரம். 2. அன்னப்பறவை. (உ-ம்.) "மிக்குயருவணமன்னமிசைப்படுமெகினப்புள்ளும்" (கந்தபு. சூரபன்மன்வதை. சஎஉ.) 3. ஆண்மரம். 4. கவரிமா. (உ-ம்.) "நெடுமயிரெகினத்தூநிறவேற்றை" (நெடுநல். கக.) 5. நாய். (உ-ம்.) "மாண்டவெயிற்றெகினம்" (சிந்தா. குணமாலை. கஉ.) 6. நீர்நாய். 7. புளி. 8. புளிமா. 9. புளியமரம். (உ-ம்.) "நுங்கினர்க்குச்சித்திகள்வழங்குறுமெகினம்" (கந்தபு. திருநகர. கசு.) (2,3, 8. பிங்கல. கூஉஉக.)

**எதுன்று**—குன்றிக்கொடி.

**எங்கண்**— எவ்விடம். (உ-ம்.) "எங்கணேகுதியென்றுபோயவுணனையெதிர்ந்தான்" (கந்தபு. பானுகோபன்வதை. கருச.) [எக்கண் என்பது எங்கண் என நின்றது.]

**எங்கணும்**—எவ்விடமும். (உ-ம்.) "அடவியெங்கணும்வேட்டையால்" (பாரத. வாரணுவத. கஉசு.)

**எங்கள்** — வேற்றுமையுருபேற்கும்போது யாங்கள் என்னுந் தன்மைப்பன்மைப்பெயர்தி

ரிந்துவந்த ஒருவிகாரமொழி. (உ-ம்.) எங்களை எங்களால் "எங்கண்மிசைவைத்தவருள்" (கந்தபு. யாகசங். கரு௫.)

**எங்கித்தை**—எவ்விடம். (உ-ம்.) "அங்கித் தம்பனைவல்லார்க்கனல்சுடாதாகு மௌடதமந் திரமுடையார்க்கருவிடங்களேறு-வெங்கித்தைக் கன்மமெலாஞ்செய்தாலு ஞானிக்கிருவினைகள் சென்றணையா" (சி. சி. க0: ௬.) [எங்கு என்பது எங்கித்தை எனமரீயிற்று.]

**எங்ஙு**—எவ்விடம். (உ-ம்.) "எங்குற்றுச்சேறீரோ வென்றுரே" (ஆசார. ௫அ.)

**எங்ஙும்**—1. இடப்பன்மையுணர்த்துமோரிடைச்சொல். (பெரியபு. திருநாட். உ௬. உரை) 2. எவ்விடமும். (உ-ம்.) "எங்குந்தானிறைந்த சிவன்" (சி. சி. கக. அ.)

**எங்கே**—எவ்விடம். (உ-ம்.) "சுரும்பின்சாலங் - கொங்கெங்கே யெங்கேயென்று தனித்தனி குடையுந்தாரான்" (பாரத. நிவாத. எ௬.)

**எங்கை**—என்தங்கை. (உ-ம்.) "மற்றவளெங்கையென்ன" (பாரத. குருகுல. க0௯.)

**எங்ஙன்**—1. எத்தன்மை. (உ-ம்.)"யானுனக்கெங்ஙனேகொலாமிறுதிகூறுகேன்" (பாரத. வேத்திர. ௫.) 2. எவ்விடம். (உ-ம்.) "உம்மையணையாதகல்வதெங்ஙன்" (சிவதரு. சுவர்க்கநரகவி. ௬௪.) [ஙனம் என்பது ஙன் என்றாயிற்று.]

**எங்ஙனம்**— 1. எத்தன்மை. 2. எவ்விடம். (உ-ம்.) "சிறுவர்களெங்ஙனம்போயினர்" (கந்தபு. தக்கன்மக. ௫உ.)

**எஙன்**—எப்படி. (உ-ம்.)"எஙனீங்கும்வினை சொல்லீர்"(சிவதரு. சுவர்க்கநரகவி. ௬௫.)[எங்ஙன் என்பது எஙன் என விகாரமாய்நின்றது.]

**எச்சச்சொல்**—பெயர், வினை, உம்மை, சொல், பிரிநிலை, என, ஒழியிசை, எதிர்மறை, இசை, குறிப்பு முதலிய குறைந்துநிற்குஞ்சொல். (நன். ௩௬0.)

**எச்சதத்தன்** — சண்டேசுரநாயனாருடைய பிதாவாகிய ஒருபிராமணன். (உ-ம்.) "இருமை வினைக்கு மொருவடிவாமெச்சதத்தனுளனொன்" (பெரியபு. சண்டேசுர. க0.)

**எச்சதேவன்**—யாகாதிபதி.

**எச்சம்**— 1. உறுப்புக்குறை; அது: குருடு, ஊமை, செவிடு, கூன், குறள், மா = விலங்குவடிவம், மருள் = அறிவின்றி மயங்கியிருக்குமது, உறுப்பில் பிண்டம் = மணைபோலப்பிறக்குமது என எண்வகைப்படும். (உ-ம்.) "சிறப்பில் சிதடுமுறுப்பில்பிண்டமுங்-கூனுங்குறளுமூமுஞ்செவிடு- மாவுமருளுமுளப்படவாழ்நர்க் - கெண்பேரெச்சமென்றிவையெல்லாம்" (புறநா. உஅ.) 2. ஒழிந்தது, ஒழிந்தன. (உ-ம்.) "ஊனுடையெச்சமுயிர்க்கெல்லாம் வேறல்ல" (வள். க0கஉ.) 3. காரியம். (உ-ம்.) "எச்சம் = ஆற்றிலே வெள்ளம்வர அந்தக்காரியவேதுவைக்கொண்டறுதியிட்டு இதற்குக் காரணமாகிய மழை மலைத்தலையின் கண்ணேயுண்டெனஉணர்தல். காரியம் எனினும் எச்சமெனினுமொக்கும். காரிய அநுமானமாகிய வெள்ளம் மலையில் மேகம் பெய்யாதொழிய அணைகடந்துவரவுங்கூடும்" (சிவஞானபோ. பாண். அளவை. உ. உரை.) 4. குறை, ஒழிபு.(உ-ம்.)"வினைபகை யென்றிரண்டினெச்சநினையுங்காற் - றீயெச்சம்போலத்தெறும்" (வள். ௬எச.) 5. கூடப்போகாதெஞ்சிநிற்பது. (உ-ம்.) "எச்சமென்றென்னெண்ணுங்கொல்லோ" (வள். க00௪.) 6. சந்ததி, பிள்ளை. (உ-ம்.) "தக்கார்தகவிலரென்பதவரவ-ரெச்சத்தாற்காணப்படும்"(வள். கக௪.)7. செய்யுளில்லாமல்வருவிக்கப்படுஞ்சொல்; அது, "சைவத்திறத்தினைத்தெரிக்கலுற்றாம்" என்பதில் தமிழால் என எச்சம் வந்தமைபோல்வது, பாட்டிற்புகுதாதபொருள்களை அமைத்தெழுதுகை.(சி. சி.பாயிர. உ.பக்.) 8. செய்யுளுறுப்புக்களுளொன்று.அது, செய்யுளிடத்தின்றிக்கூற்றினாலாவது குறிப்பினாலாவது பின்கொணர்ந்து முடிக்கப்படுஞ்சொல்லை வேண்டிநிற்பது. (உ-ம்.) "சொல்லொடுங் குறிப்பொடுமுடிவுகொளியற்கை- புல்லியகிளவியெச்சமாகும்"(தொல். பொருளதி. ௫கக.) 9. பறவைமலம். (உ-ம்.) "குரண்டமொன்றுமேற்கவட்டிருந்தெச்சமீக்குதலும்" (நல். பாரத. கௌசி. க0.) 10. பிள்ளைப்பேறு. (பதிற்றுப். ) 11. முற்றுப்பெறாதசொல். (இலக்கணவி. ௩௫0.) 12. முன்சொல்லாதொழிந்தது. (உ-ம்.) "எச்சவியல்" (தொல்.) 13. யாகம். (உ-ம்.) "எச்சமொடழிவிலா விரதஞ் சாலிகை கைச்சிலைபெற்றிலன்" (கந்தபு. சூரனமைச். ௫உ.)

**எச்சமிடல்**—பறவைமலம் விசர்ச்சித்தல்.

**எச்சரிக்கை**— 1. அமைதியாயிருக்கச்சொல்லுதல். 2. ஒருவகைப்பாட்டு. 3. கண்டித்தல். 4. சாக்கிரதை. 5. புத்திசொல்லுதல்.

**எச்சரித்தல்**—1. கண்டித்தல். 2. புத்திசொல்லல். 3. முன்னறிவித்தல், தூண்டுதல்.

**எச்சரிப்பு**—எச்சரித்தல்.

**எச்சரீக்கை**—ஒருவகைப்பாட்டு.

**எச்சவாய்**—மலவாயில்.

எச்சன்— 1. அக்கினி. 2. இருசிபுத்திரன். ( கூர்மபு. தமோ. ரு. ) 3. யாகஞ்செய்வோன். (உ-ம்.) "எச்சனுக்குமிகைத்தலைமற்றருளினன் காண்சாழலோ" (திருவாச. திருச்சாழ. ரு.) 4. யாகத்தின் அதிதேவதை. (உ-ம்.) " இரிந்திடு கின்றதோரெச்சனென்பவன் - சிரந்துணிபடுத லும் " (கந்தபு. யாகசங். ௯அ.) 5. விட்டுணு. [யஜ்ஞ.]

எச்சில் — 1. உடம்பினுறுப்புக்கள்தத்தமி னின்று கழியுங் கிட்டத்தின் எஞ்சியபாகத்தால் அழுக்கடைதல். (உ-ம்.) " எச்சில்பலவுமுள மற்றவற்று- ளியக்கமிரண்டோடிணைவிழைச்சு வாயில்-விழச்சிவையெச்சிலிந்நான்கு" (ஆசாரக்கோ. எ.) 2. உமிழ்நீர்ப்பட்டைவாயால் அல்லது அவ்வாய்ப்பட்டகையாலளைந்த உணவு. (உ-ம்.) "நெடிதுநாளுண்ட-வெச்சிலைநுகருவதின்பமாகுமோ" (இராமா. மந்திர. உசு.) 3. சேஷம். [இஃது: எஞ்சு என்னும் பகுதியினின்றுபிறந்தது. இல்- ஒருவிகுதி.]

எச்சிலன்—உலோபி. [ தன்பொருளைச்செலவுசெய்யாது பிறரெச்சிலுண்டு காலம்போக்குபவன்என்றபடி.]

எச்சிலார்—எச்சிலுடையவர். (உ-ம்.) "எச்சிலார்தீண்டார்" (ஆசாரக்கோ. ரு.)

எச்சிற்கல்லை— எச்சிலிலை.

எச்சிற்பருக்கை— சிந்திக்கிடக்குஞ்சோறு.

எச்சிற்பேய்— 1. அதிகபோசநி. 2. உச்சிட்டதேவதை.

எச்சிற்றேமல்—ஒருவகைத்தேமல்.

எச்சு—1. உயர்வு. [தெலுங்கு.] 2. ஒருவாச்சியம்.

எசம்—நரம்பு.

எசமாட்டி—குடும்பத்தலைவி.

எசமாநத்துவம்—எசமானுக்குந்தன்மை.

எசமாநன்—1. குடும்பத்தலைவன். 2. செலவுகொடுத்து யாகஞ் செய்விப்போன். 3. யாகபதி. (உ-ம்.) " மாயுபமெசமாநனளவேனும் " (மச்சபு. தடாகவிதி. எ.) [யஜமாந: ய்காரம் எகரமாயிற்று.]

எசமாநி—குடும்பத்தலைவி.

எசமான்—எசமாநன். (உ-ம்.) "எசமானடியேதுகிலும்வேறுடுத்து"(மச்சபு. விருக்கவு. எ.)

எசுசு— இரண்டாம்வேதம். (சி. சி. பாயிர. ச. நிரம்ப.) [யஜுஸ்.]

எசுர்—யசுர்வேதம்.

எசுர்வேதம்—யசுர்வேதம். (உ-ம்.) "அரிய தாமெசுர்வேதத்தில்" (சிவரக. காயத்திரி. உக.)

எசுரு—எசுர்வேதம். (உ-ம்.) "அதர்வணம்" பார்.

எசோவதி— எட்டுத்திக்கு பாலர்களுள்ளே ஈசாநன் இருக்கும் மகாமேருவின் கொடுமுடி. (சிவதரு. கோபுர. ௯௯. உரை.)

எஞ்சணி — சொல்லலங்காரவகையுள் ஒன்று; அது: சொல்லுவெளிப்படாமல் எஞ்சிநிற்பது. (உ-ம்.) "எஞ்சணியென்பதெளிதுணர்பலமொழி - துஞ்சில்சிறப்பிற்றேன்றுதொழித்தல்" (தொன்னூல். ௯கஅ.) [இஃது எச்சம் எனவும்படும்.]

எஞ்சல்—1. ஒடுங்குதல். (உ-ம்.) "எஞ்சலின்மநமெனுமிழுதையேறிய-வஞ்சுதேர்வெல்லுதல் " ( இராமா. மந்திரப். கக. ) 2. ஒழிதல். (உ-ம்.) "இறுதிபயப்பினுமெஞ்சாது" ( வள். சுகo.) 3. குறைதல். (உ-ம்.) "என்னுரையி-னிற்சிறிது மெஞ்சலிலவாகி" (கந்தபு. மார்க்கண்டேய. ருஎ.) 4. கேடடைதல். (உ-ம்.) "எஞ்சலாகநூறுகூறுசெய்திழுதிலேற்றி" ( பாரத. சம்பவ. எஉ. ) 5. சேடமாயிருத்தல். 6. மரித்தல். (உ-ம்.) "கொஞ்சுகிளியன்னமொழிகுமுதவிதழமுதா - லெஞ்சினனராதிபதி" (பாரத. சம்பவ. க00.) 7. விலகுதல். (உ-ம்.) "தழுவிய கிடைக்குந்தோறு-மெஞ்சுவானெஞ்சாதேத்தி" (திருவிளை. வளைய. கஉ.)

எஞ்சலித்தல்—. குறைவுசெய்தல். (உ-ம்.) " வன்படைக்கடலாலமரேசனை-யெஞ்சலித்திட" (ஞானவா. தாமவியாள. உக.)

எஞ்சாமை — குறைவுபடாமை. ( உ-ம். ) " அஞ்சாமையீகையறிவூக்கமிந்நான்கு - மெஞ்சாமைவேந்தற்கியல்பு" (வள். ௯அஉ.)

எஞ்சிநிற்றல் — 1. குறைந்துநிற்றல். 2. தொக்குநிற்றல்.

எஞ்சியசொல்லினெய்தக்கூறல் — முப்பத்திரண்டு தந்திரவுத்திகளுளொன்று; அது: சொல்லாது விடப்பட்டவைக்குச் சொல்லியதனால் இலக்கணம்பொருந்தச்சொல்லுதல்.(நன். பொதுப்பா. கசு.)

எஞ்சுதல்—எஞ்சல்.

எஞ்சுமுரை—எச்சமாய்நிற்கும் பொருள் விரித்தவுரை.

எஞ்ஞம்—யஞ்ஞம். (உ-ம்.) "திருகவெஞ்ஞவிதியினை" (மச்சபு. அநுக்கிர. உசு.)

எஞ்ஞவற்கியன் — யாக்கியவற்கியமுநிவர். (உ-ம்.) "தோற்றியசுவேதகேதுவெஞ்ஞவற்கிய

னேதாய்மை- யாற்றுகேகயன்" (வேதாரணியபு. பிரமயாத்திரை. கசு.)

எஞ்ஞான்றும்—எப்போதும். (உ-ம்.) "ஓதாருரையார்வரரரே யெஞ்ஞான்று-மேதைகளாகுறுவார்" (ஆசார. கஉ.)

எட்கசி— எள்ளுண்டை. (சிலப். இந்திர. சுஅ. உரை.)

எட்கசிவு— எள்ளுண்டை. (இலக்கணவி. சுOசு. உரை.)

எட்கிடை—எட்பிரமாணம்.

எட்குக்குழாம்—கரடிக்கூட்டம். (உ-ம்.) "குரும்பி வன்மீகத்தகழ்ந்துணு மெட்குக்குழாமொருபால்" (தணிகைபு. களவு. சOசு.)

எட்கோது—எள்ளுக்காய்த்தோல்.

எட்சத்து— எண்ணெய். (தைல. தைலவ. கஙசு.)

எட்சாதம்—எள்ளுக்கலந்து சமைத்தசாதம்.

எட்சி— உதயம், எழுச்சி. (உ-ம்.) "கருதெட்சியினிற் - சலமுறுதீவினைசத்துருநாசமுந்தான்செயலே" (விதான. பஞ்சாங்க. கசு.)

எட்சினி—1. இயக்ககுலப்பெண். 2. குபேரன்மனைவியாகிய ஒருபெண். 3. துர்க்கைக்கு ஏவல்செய்யும் ஒருபெண். [யக்ஷிணி.]

எட்ட—தூரமாக.

எட்டக்கரம்— எட்டெழுத்துடைய ஒருமந்திரம்; அஃது: ஓம்நமசிவாயாமவெனச்சைவரும், ஓம் நமோநாராயணாய எனவைணவருங்கொள்வர். முறையே. (உ-ம்.) "எட்டக்கரங்கண்முறைமையினுடைத்தாய்" (சி. சி. கூ: கூ. ஞானப்.) எனவும். "அரங்கனெட்டக்கரமே" (திருவரங்கத். எஉ.) எனவுங்காண்க. [எட்டு; அக்கரம் - எழுத்து.]

எட்டடிப்பறவை—எண்காற்பறவை. (உ-ம்.) "எட்டடிப்பறவைமூக்கிண்டயுரிஞ்சிடும்" (சேதுபு. கந்த. ருஅ.) [எட்டு; அடி - கால்.]

எட்டடிவிரியன்— ஒருவகைவிரியன்பாம்பு.

எட்டம்—தூரம்.

எட்டர்— மங்கலப்பாடகர். (சூ. நிகண். உ: சஎ.)

எட்டல்— 1. எட்டுதல். (உ-ம்.) "புரங்கள்செற்ற- ஏவணச்சிலையினுரையார்தொடர்ந்தெட்டவல்லார்" (பெரியபு. தடுத்தாட். சசு.) 2. தொடுதல். (உ-ம்.) "எதிர்மறையெட்டுந்தோறும்"

எட்டாக்கை—தூரம். [எட்டா - எட்டாத. கை - இடம்.]

எட்டாஞ்சிருட்டி—எட்டாவதுசிருட்டி; அது: பூதசிருட்டி. (உ-ம்.) "எட்டாஞ்சிருட்டிபிறையெயிற்றபூதசிருட்டியெனவறைவர்" (கூர்மபு. பலவகைததோ. க.)

எட்டி—1. ஒரு சிறப்புப்பெயர். (இலக்கணவி. எக. உரை.) 2. எட்டிப்பட்டை. (உ-ம்.) "அமுக்கிரி" பார். (தைல. தைலவ. சஉ.) 3. காஞ்சிரைமரம். (உ-ம்.) "எட்டிமரம்பழுத்தாலுமீயாதார்வாழ்ந்தாலுமென்னதானே" (தண்டலை. உக.) 4. செட்டிச்சாதி. 5. வாணிகர்பெறுமொருபட்டம். (உ-ம்.) "எட்டிசாயலனிருந்தோன்றனது" (சிலப். அடைக்கல. கசுரு.) 6. விஷமுட்டி.

எட்டிகம்—1. ஒருகுருவி. 2. சீந்திற்கொடி.

எட்டிகள்—செட்டிகள். (உ-ம்.) "ஆள்வினைவண்மையரெட்டிகள்" (சேதுபு. பராவசு. கஉ.)

எட்டிகுடி—ஒரு சுப்பிரமணியஸ்தலம்.

எட்டிப்பூ—எட்டிப்பட்டத்தார்க்கு அரசராற்கொடுக்கப்படுவதான பொற்பூ. (மணிமே.)

எட்டியர்—வைசியர். (சூ. நிகண். உ: உரு.)

எட்டியல்— வாகைத்திணைத்துறைகளுளொன்றாகிய அவையமுல்லைக்குரிய எட்டுறுப்புக்கள். அவற்றை "அழுக்காறிலாமை யவாவின்மை தூய்மை- ஒழுக்கம் குடிப்பிறப்பு வாய்மை- இழுக்காத- நற்புலமையோடு நடுவுநிலைமையே- கற்புடைய வெட்டுறுப்புக்காண்" என்பதனுலுணர்க. (வீரசோ. பொரு. கக. உரை.)

எட்டிவிரியன்—ஒரு பாம்பு.

எட்டினர்—சிநேகிதர்.

எட்டு—1. ஆசை. 2. இறந்த எட்டாநாளிற் பிதிர்களுக்கு உணவூட்டுங் கிரியை. 3. எட்டென்னுமெண்ணின்குறியாகி அகாரமாய்நின்ற பிரணவம், உறுப்பு. 4. எட்டென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும்.

எட்டுச்சித்தி—அட்டசித்திகள். (உ-ம்.) "அட்டகுணமெட்டுச்சித்தி" (சி. சி. கூ: கூ.)

எட்டுதல்—1. அகப்படுதல். (உ-ம்.) "மூன்னம்பலரடிதேடவுமுடிதேடவுமெட்டா" (பாரத. அருச்சுநன்தீர்த்த. கஅ.) 2. தாவியுயர்தல். (உ-ம்.) "பிறையையெட்டினள்பிடித்திதற்கிதுபிழையென்னுக்- கறைதுடைக்குறுபேதையோர்கொடிச்சியைக்காணாய்" (இராமா. சித்திர. உஉ.) 3. பொருந்தல். (உ-ம்.) "ஏடுவெட்டியமண்டுரும்பொழில்" (திருவிளை. விடையி. உ.)

எட்டுமூர்த்தி—அட்டமூர்த்தி. (உ-ம்.) "எட்

டூர்த்தியாய்நின் றியலுந்தொழில்" (தேவாரம். தனி. அ. திருநாவு.)

எட்பாகு—எள்ளிளுலாகியபாகு.

எட்பிரமாணம்—எள்ளளவு.

எடாதவேடுப்பு—செய்ய இயலாதகாரியம்.

எடார்—வெளிநிலம்.

எடு— எடுவென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும்.

எடுக்கல்—எடுத்தல். (உ-ம்.) "எடுக்கல்செல்லாதுழப்பவன்போல" (கலி. ௬௮.)

எடுக்கு — எடுக்கென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும்.

எடுக்குதல்—எடுத்தல்.

எடுகூலி—சுமைகொண்டுபோகுங்கூலி.

எடுத்தடிமடக்கு—ஒருகாரியத்திலே முயன்றுபோக எடுத்துவைத்த அடியை அப்பாற்செல்லவிடாது மடக்குதல்போல ஒன்று செய்யத்தொடங்குவானை ஆரம்பத்திலே தடுத்தல்.

எடுத்தடிவைத்தல் — மெள்ளஅடிபெயர்த்து வைத்தல், தளர்நடையாய் நடத்தல்.

எடுத்தமொழியினெய்தவைத்தல் — முப்பத்திரண்டுதந்திர வுத்திகளு ளொன்று; அது: தான் சொல்லுமிலக்கணந் தானெடுத்துக்காட்டிய சொற்களுக்கே பொருந்தவைத்தல். "ஈறுபோதல்" என்ற சூத்திரத்திலே சொல்லிய விதியிலக்கணம் அன்பன், அழகன் முதலியபண்புச்சொற்களிற் சொல்லாது அதற்கு முன்வந்த "செம்மை சிறுமை" என்றற்றொடக்கத்துச் சூத்திரத்திலே சொன்ன சொற்களுக்கே எய்துமாறு வைத்தல்போல்வது. (நன். பொதுப். ௧௪.)

எடுத்தல்—1. இடங்குறித்தல். 2. ஈட்டுதல். (உ-ம்.) "புதிதாக - வின்னமுநீசிலசேனையெடுத்தெழுதிக்கொள்கென்றான்" (திருவிளை. மெய்க்கா. ௫.) 3. உடைத்தாதல். 4. உயர்த்தியுச்சரித்தல். (உ-ம்.) "எடுத்தல்படுத்தனலிதலுழப்பிற் - றிரிபுந்தத்தமிற்சிறிதுளவாகும்" (நன். எழுத். ௯௯.) 5. உயர்த்துதல். (உ-ம்.) "தேவரெதிர்-தலையெடுத்து விழியாமைசண்மைப்பதே" (இராமா. சூர்ப். ௭௦௧.) "கொள்ளுங்கொடியெடுத்துக்கொற்றவையும்"(சிலப். வேட்டுவ. ௨௮௫. பக்.) 6. எழுப்பிக்கட்டுதல். (உ-ம்.) "இல்லெடுத்துவிரகினேடுமெமையழைத்து"(பாரத. சூது. ௧௭௦.) "ஏழுறுமவுணவெள்ளத்தெடுத்திடுமெயிலும்" (கந்தபு. அசுரர்யாக. ௯௮.) 7. எழுப்புதல். (உ-ம்.) "செல்லெடுத்தபேரிடியென" (பாரத. பதினெட். ௨௫.) 8. கைக்கொள்ளுதல். (உ-ம்.) "முந்தேதடுக்கவொழியாதெடுத்தவினையேன்" (இராமா. சடாயுவுயிர். ௧௫௪.) 9. கொள்ளல். (உ-ம்.)"சொல்லெடுத்துவைதவாய்" (பாரத. சூது. ௧௭௦.) 10. சுமத்தல். (உ-ம்.) "மீனத்-தடுக்கன்முழுவதுநோக்கிக்கடவுளரை விளித்திவற்றையாற்றலாலே-யெடுப்பது நுந்தொழிலென்றே" (கந்தபு. தேவரைஏவல். அ.) 11. தரித்தல். (உ-ம்.) "தழலெடுத்தான்-மலை" (இராமா. சூர்ப்பநகை. ௭௦௧.) 12. தூக்குதல். (உ-ம்.) "வெள்ளிமலையெடுத்து" (இராமா. சூர்ப்பநகை. ௯௯.) "என்னையிப்பவத்திற்சேராவகையெடுத்து" (சி. சி. பாயிர. ௨.) 13. தெரிந்துகொள்ளுதல். 14. தொடங்குதல். 15. நிறுத்துதல். 16. நீக்குதல். 17. (பொருளிலக்கணம்) படையெடுத்தல். (உ-ம்.) "அரவமெடுத்தல்வயங்கியலீகை" (வீரசோ. பொருட். ௧௯.) 18. பற்றிக்கொள்ளுதல், கவர்தல். (உ-ம்.) "தேனெடுக்குமாலையோய்" (பாரத. சூது. ௧௯௭.) 19. பிரயோகித்தல், எடுத்துக்காட்டல். (உ-ம்.) "இதற்கியானனுமானுதியெடேன்" (சி. சி. ௧: ௨.) 20. பொருந்துதல். (உ-ம்.) "மல்லெடுத்ததோள்வலனுறவளைத்தனர்" (பாரத. பதினெட்டு. ௨௫.) 21. வாங்குதல். (உ-ம்.) "புன்குஞ்சோரா-தெடுப்ப" (இரகு. திருநாட். ௬௦.) 22. விஷயமாகக்கொள்ளுதல். (உ-ம்.) "உயிர்த்திறக்கேட்டினையெடுத்துப் - பன்னுமேல்வையில்" (தணிகை. வீராட். ௬௯.) 23. வீடுமுதலியகட்டுதல்.

எடுத்தலளவு—நிறை.

எடுத்தலளவையாகுபெயர் — எடுத்தலளவைப்பெயராய் அதனோடியைபுடைய பிறிதொன்றற்கு ஆகும்பெயர். "இரண்டுவீசைதந்தான்" என்பதில் வீசையென்னுமெடுத்தலளவைப்பெயர் அவ்வளவைக்கொண்ட பொருட்காயிற்று. (நன். பெயரிய. ௯௯.)

எடுத்தன்—பொதிமாடு.

எடுத்தாட்சி—எடுத்தாளுதல்.

எடுத்தார்கைப்பிள்ளை— தன்புத்தியின்றித் தன்னையணைத்தவர்சொற்கேட்டு அவ்வணைவிலிருக்கும்வரையுஞ்செய்வோன்.

எடுத்தாளுதல்—கைக்கொண்டுவழங்குதல்.

எடுத்து—1. எடுத்தென்னேவலும், தெரிநிலை வினைப் பகுதியும். 2. ஒரு வினையெச்சம். (உ-ம்.) "என்னையிப்பவத்திற்சேராவகையெடுத்து" (சி. சி. பாயிர. ௨.) 3. சுமை.

எடுத்துக்கட்டல்—இல்லாதகாரியத்தையெடுத்துதொடுத்தல்.

எடுத்துக்கட்டு—கட்டுக்கதை.

எடுத்துக்காட்டல்—முப்பத்திரண்டு தந்திர வுத்திகளுள் ஒன்று; அது. தான்சொல்லுமிலக் கணத்திற்குத்தானே யிலக்கியத்தை எடுத்துக் காட்டுதல், உதாரணங்களையெடுத்துக்காட்டுத ல். (நன். பொதுப். கஎ.)

எடுத்துக்காட்டு—1. உதாரணம். (சூ. நிக ண். ௧௦: ௨அ.) 2. (தர்க்கம்.) திருட்டாந்தம்; அது: நியாயத்தின் ஐவகை உறுப்புகளுள் ஒன் று. (உ-ம்.) "இவ்விருவகைச்சொற்களையும் மே ற்கோளும், ஏதுவும், எடுத்துக்காட்டும், உபநய மும், நிகமநமும் என்னும் ஐவகை உறுப்புக்க ளான் இணங்கவைத்துத் தெளியக் கூறுவாரு முளர் என்பதாம்" (சி.சி. அளவை. கக. சிவஞா.)

எடுத்துக்காட்டுதல்—எடுத்துக்காட்டல்.

எடுத்துக்காட்டுவமையணி—உவமையலங் காரவகையுள் ஒன்று; அது: மறுபொருளுவமை. (இலக்கணவி. ௬௩௧. பக்.)

எடுத்துக்காரர் — எருத்திலே பொதியேற் றுவோர்.

எடுத்துக்கூட்டுதல் — பிசகினதை யொரு வழி ஒழுங்குபடுத்தல்.

எடுத்துக்கைநீட்டல்— கைத்தொண்டுசெ ய்தல்.

எடுத்துக்கொள்ளல் — ஏற்றுக்கொள்ளல்.

எடுத்துக்கோள்—திட்டாந்தம். (ஞானமி.)

எடுத்துச்சொல்லல்—1. தன்கருத்தையெ டுத்துக்கூறுதல். 2. பிறர்கருத்தையெடுத்துக் கூறுதல்.

எடுத்துதல்—சுமக்கச்செய்தல். (உ-ம்.) "இ ன்னலுறுவானவர்பாலெடுத்த வவர்கொண்டே கியிரங்குகின்றுர்" (கந்தபு. தேவரையேவல்.௯.) "மணலெடுத்துவார்" (திருவிளை. மண். ௫.)

எடுத்தேத்து— எடுத்துப்புகழ்தல். (உ-ம்.) "கையறியாமாக்களிழிப்புமெடுத்தேத்தும் - வை யார்" (நாலடி. பெரியாரை. ௯.)

எடுத்தேற்றம்— இணக்கமின்றியிருப்பது.

எடுத்தேறு—எடுத்தெரிதல். (பதிற்றுப்.)

எடுத்தோத்து—எடுத்தோதுவது. (சிவஞா நபாடி. கக. பக்.)

எடுத்துப்பேசல்—1. துதித்தல். 2. நியாய முத்தரித்தல். 3. பரிந்துபேசல். 4. விட்டதைத் திரும்ப எடுத்துப்பேசல்.

எடுப்பல்—1. எழுப்புதல். (உ-ம்.) "எடுப்பி யதோகையுந்துஞ்சுக" (தணிகை. களவு.௭௦௬.) 2 போக்கல், அகற்றல். (உ-ம்.) "தலைதவச்செ ன்றுதண்பணையெடுப்பி" (பட்டினப்பா.௨௩௯.)

எடுப்பானவன்—இறுமாப்புள்ளவன்.

எடுப்பித்தல்—எடுக்கச்செய்தல்.

எடுப்பு—1. இறுமாப்பு. 2. உயர்ச்சி. 3. எ டுத்தல். 4. எடுப்பென்னேவலும், தெரிநிலைவி னைப்பகுதியும். 5. தொடக்கம். (உ-ம்.) "அவ னெடுத்தவெடுப்பு" 6. நிந்தை.

எடுப்புச்சாய்ப்பு — தராதரமறிந்து நடக் கும் நடை, நிமிர்ச்சியுந் தாழ்ச்சியும்.

எடுப்புத்தேர்- காவிக்கொண்டுபோகுந்தேர்.

எடுப்படுத்தல்— ஒருசெயலின்முயன்றெ ழுதல். (உ-ம்.) "உள்ளம்போற்போதுநாமோரெ டுப்பெடுத்துய்யவென்று" (சிந்தா.கோவிந்.௬௨.)

எடுபட்டவள்— நிலையில்லாதவள். [கற்பில் லாதவள் என்றபடி.]

எடுபட்டவன்—நிலையற்றவன்.

எடுபடுதல்— 1. அழிதல். 2. எழும்புதல். 3. கெடுதல். 4. நிலைதவறுதல். 5. நீக்கப்படுதல்.

எடுபாடு—1. அழிகை. 2. உயர்ச்சி. 3. செ ல்வாக்கு. 4. நிமிர்ச்சி. 5. நிலையின்மை. 6. மே ட்டிமை.

எடுபிடி—முயற்சி.

எடை—1. எடுத்தல். 2. எழுப்பல். (உ-ம்.) "துயிலிடையெடுப்பிய துயிலெடைநிலையும்" (இலக்கணவி. ௬௧௭.) 3. தூக்குகை. 4. நிறை யிடை.

எண்—1. அம்போதரங்கம், அம்பத்தரங்கம். (உ-ம்.) (யாப். காரிகை. செய்யு. ௧௦. உரை.) 2. அறிவு. (உ-ம்.) "தொக்கிருந்தெண்ணி னெண்ணப்படும்" (நான்மணி. எ௫.) 3. ஆலோ சனை. (உ-ம்.) "எண்சேர்ந்தநெஞ்சத்திட னுடையார்க்கு" (வள். ௬௬௦.) 4. இலேசு. 5. எண் ணம். (உ-ம்.) "எண் - பொய்த்தவெமக்" (இர கு. நகர கஎ.) 6. எண்ணென்னேவலும், தெரி நிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 7. எண்ணெய். (உ-ம்.) "குடம்" பார். 8. எள்ளு. (உ-ம்.) "எண்ணிடவிடமொன்றின்றி" (நைடத. சுயம்வர. ௨.) 9. எளிமை. (உ-ம்.) "எண்பதம்" பார். 10. ஒன்றுமுதலியவழக்கிற்கேதுவாயிருப் பது, சங்கியை. (உ-ம்.) "ஒன்றுமுதலெட்டீறு மெண்ணுள்" (நன். உயிரீற். ௯அ.) 11. கண க்கிடுதல். (உ - ம்.) "எண்ணரியகணநாதர்" (தாயு. கருணை. எ.) 12. கணிதம். (உ-ம்.) "எண் ணென்பவேனையெழுத்தென்ப" (வள். ௩௯௨.) 13. கவலை. 14. சோதிடம். 15. தர்க்கம். (உ-ம்.) "காண்டலநுமானங் கதையருத்தாபத்தியிவை- மீண்டிசைத்தவெண்ணெனவேயெண்" (பரம ததிமிரபாநு.) 16. தாழிசை. வீரசோ. யாப்புப். கக.) 17. நினைவு. (உ-ம்.) "எண்ணுடைமட வார்புரிந்தன" (பாரத. அருச்சுனன்றவ. ௬௯.) 18. நோயளவை மருந்தளவைகளைக் கூறுமொ ருநூல்" (தைலவ.) 19. மதிப்பு. (உ-ம்.) "மண்

புரக்கும் வரிசிலைவீரனை-யெண்பெறக்கொணர் வாயெனவேவினான்"(பாரத. அருச்சுனன்றவ. கக௮.) 20. மனம். (உ-ம்.) "கலைவலோ-ரெண் சுமந்து" (பாரத. நிவாத. கஉரு.) 21. வரைய றை. 22. வலி. (சூ. நிகண். கக: ணகரவெ.க௮)

எண்கண்ணன்— பிரமன். (உ-ம்.) "கஞ்ச த்திருக்குமரிசேருங் கண்ணனெண்கண்ணனு நீ" (மறைசை. ருகு.)

எண்கணன்—பிரமன். (சூ. நிகண். க: கசு.) [எட்டுக்கண்ணுடையவனென்றபடி.]

எண்கணாளன்-பிரமன். (உ-ம்.)"எண்கணா ளனை எழில்வலக்கண்ணிலும்" (காஞ்சிபு. திரு வே. க௦.)

எண்காற்புள்—சரபப்பறவை.

எண்கு—கரடி. (உ-ம்.) "குரும்பிதேரியமு தையவூர்ப்படப்பையுங்குன்றினெண்குகள்செ ல்ல" (தணிகை. நாட்டு. கசுசு.)

எண்குணத்தான்—1. அருகன். 2. கடவுள். (உ-ம்.) "எண்குணத்தான் - றாளைவணங்காத்த லை" (வள். க.) 3. சிவன். ( உ-ம். ) "எண்கு ணத்தானிமயச்சிலைவாங்கினன் " ( தணிகை. களவு. எஎ.)

எண்குணம்— எட்டுக்குணங்கள். ( உ-ம். ) "அட்டகுணங்கள்" பார்.

எண்குணன்—1. அருகன். ( சூ. நிகண். க: க.) 2. கடவுள். [எட்டுக்குணங்களையுடையவ ன் என்றபடி.] 3. சிவன். (உ-ம்.) "இமையவ ரு நின்றிறைஞ்செண்குணன்" (திருப்பு. உ௦.)

எண்கோணம்—எட்டுக்கோணம்.

எண்சாத்திரம்—கணிதம்.

எண்சிறப்பு— அருகனுக்குச் செய்யப்படும் எண்வகைச் சிறப்புக்கள்; அவை: தூபதீபக்கா ட்சி, தேவதுந்துபி, தெய்வத்துவனி, சிங்காத நம், பிண்டி, வெண்சாமரை, புட்பமாரி, மும் மைக்குடை என்பன.

எண்சிறப்புள்ளோன்—அருகன். (சூ. நிக ண். க: கூ.) [தேவர்களாற் செய்யப்படு மெண் வகைச் சிறப்புள்ளவனென்றபடி. எண்வகை ச்சிறப்புக்கள் இவையென்பதை "சுடர்மண்ட லஞ் சுரதுந்துபி தெய்வத்துவனி சிங்கப்- பிடர் மண்டலவணை பிண்டி வெண்சாமரை பெய்ம் மலரி - னடர்மண்டலமழை யம்பொற்குடைமு ம்மையாமடியோ- மிடர்மண்டலங்கெடுப்பாற்கி மையோர்செயுமெண்சிறப்பே" என்னுந்திருநூ ற்றந்தாதிச் செய்யுளானறிக.]

எண்சுவடி—கணக்கேடு.

எண்சுவை—எட்டுச்சுவைகள்; அவை: வீரம், அச்சம், இழிப்பு, வியப்பு, காமம், அவலம், உரு த்திரம், நகையென்பன. (இலக்கணவி. கூசுரு.)

எண்செய்யுள்— எண்ணாற் பெயர் பெறும் பிரபந்தம்; அது: பாட்டுடைத்தலைவனது ஊரி னையும் பெயரினையும் பத்துமுதலாயிரமளவும் பாடி எண்ணாற்பெயர்பெறுவது. (தொன்னூல். உ௮௬. உரை.)

எண்டிக்கு—அட்டதிக்கு. (உ-ம்.) "எண்டி க்களந்துகொண்டன" (கல்லாட. கஎ.)

எண்டிசை—அட்டதிக்கு. (உ-ம்.) "எண்டி சையும்வென்று"(பாரத. அருச்சுனன்றவ.க௦ரு.)

எண்டோகைமங்கலம்— எட்டெனத்தொ கைபூண்ட மங்கலங்கள்; அவை: கண்ணாடி, பூர ணகும்பம், இடபம், இரட்டைச்சாமரம், சீவ ற்சம், சுவஸ்திகம், சங்கம், தீபம் என்பனவாம். (உ-ம்.)"பண்ணவ-ரெண்டொகைமங்கலமிருத் தினரோ" (கந்தபு. வரைபுனை. உக.) [திருவி ளையாடற்புராணம் திருமணப்படலத்தில் இட பத்தை நீக்கிக்குடை கூறப்பட்டிருக்கின்றது.

எண்டோளன்—சிவன். (சூ. நிகண். க: க.) [எட்டுப்புயமுடையவனென்றபடி.]

எண்டோளி—1. காளி. (சூ. நிகண். க: ௬௮.) 2. துர்க்கை. (சூ. நிகண். க: ௬௦.) [எட்டுத்தோ ளுடையவளென்றபடி.]

எண்ணத்தப்பு—1. நினைவுமயக்கம். 2. மதி கேடு. 3. மதியாமை.

எண்ணப்படல்—1. கணிக்கப்படுதல். 2. நி னைவிற்றோற்றல். 3. மதிக்கப்படுதல்.

எண்ணம்—1. ஆலோசனை. (உ-ம்.) "எனக் கிதுதெளியவொண்ணாதென்றன னெண்ணமி க்கான் " (பெரியபு. தடுத்தா. ருச.) 2. இறுமா ப்பு. 3. கர்வம். 4. கருத்து. (உ-ம்.) "நீயேமுடித் தியெனதெண்ணத்தையென்று" ( பாரத. பதி னெட்டாம். ரு.) 5. கிலேசம். 6. குறிப்பு. (சூ. நிகண். ௮: ௬௪. ) 7. நம்பிக்கை. 8. நினைவு. (உ-ம்.) "பெண்ணிவண்மாநுடப்பிறப்பினளெ னவெண்ணமுற்று"(பாரத. குரு. ௬௮.) 9. மதி ப்பு. 10. விசாரம்.

எண்ணர்—1. கணிதர். 2. தார்க்கிகர்.(உ-ம்.) "எரணங்காவெனப்பரெண்ணர்" ( திருக்கோ. நூற்சிறப்பு.) 3. மந்திரியர். ( சூ. நிகண். உ: உக.)

எண்ணல்—1. ஆலோசித்தல். (உ-ம்.) "சகு நியொடுமெண்ணி"(பாரத. பதினெட்டாம்.கூ.) 2. இறுமாத்தல். 3. உத்தேசித்தல். 4. எண்ணு தல். 5. கணக்கிடுதல். (உ-ம்.) " இயம்பியபுன் சொற்களெல்லாமெண்ணியெண்ணி" ( பாரத. இராய. கஉஎ.) "எண்ணலாவதன்று" ( பாரத. நிவாத. கஉ௮.) 6. கணிதம். 7. கவலைப்படல்.

8. குறித்தல். (சூ. நிகண். அ: ௯௫.) 9. தியானித்தல். (உ-ம்.) "எண்ணியஞ்செழுத்துமாறி" (சிவப்பி. ௧௧: ௫.) 10. தேர்ச்சி. 11. நிலைத்தல். 12. நினைத்தல். (உ-ம்.) "உயிர்கட்-கிறுதியெண்ணல்" (தணிகை. அகத். ௨௨௫.) 13. மதித்தல். (உ-ம்.) "வெயிலோன்மகற்குமுடனெண்ணத்தகுந்திறலினான்" (பாரத. பதினேழாம். ௪.) 14. விலைமதித்தல். (உ-ம்.) "எண்ணற்கரியமுடிவேந்தர்" (பாரத. இராச ௯௨.)

எண்ணலங்காரம் — ஓரலங்காரம்; அது: ஒருகோட்டனிருசெவியன்மும் மதத்தனால் வாயைங்கரத்தனாறு - தருகோட்டம்பிறையிதழித் தாழ்சடையான்" என்றாற்போல எண்ணுப்பெயர்கள் ஒன்றன்பின்னொன்றாய் விசேடணங்களைச் சார்ந்துதொனிக்கத்தொடுப்பது. (சி. சி. காப்பு.)

எண்ணலர்—1. பகைவர். 2. பிறரைமதியாதோர்.

எண்ணலளவு—இலக்கத்தாலெண்ணுமளவு.

எண்ணலளவையாகுபெயர்— எண்ணுக்குரிய பெயரை அதற்குரிய பொருட்கு வழங்குவது; அஃது: "ஒன்றுவந்தது" என்பதிற்போல.

எண்ணலார்—பகைவர். (உ-ம்.) "எண்ணலார்வரைமேன்-மறையும்படி வென்றசந்திரவாணன்" (வாண. ௨௬௯.)

எண்ணவி— நல்லெண்ணெய். (உ-ம்.) "எண்ணவியரை" (தைல. தைலவ. ௬௫.) [எண் - அவி.]

எண்ணுதகண்டன்—துணிவுள்ளவன்.

எண்ணுதநெஞ்சன்—எண்ணுதகண்டன்.

எண்ணுதவன்— 1. ஆலோசனை யில்லாதவன். 2. துணிந்தவன்.

எண்ணுமற்பேசல்— 1. ஆலோசியாமற்பேசல். 2. மதியாமற்பேசல்.

எண்ணுமை—1. கணக்கிடாமை. 2. நினையாமை. 3. மதியாமை.

எண்ணுயிரம்—எட்டு ஆயிரம்.

எண்ணுயிரவர்–1. எண்ணுயிரம்பேர். (உ-ம்.) "எண்ணற்கரியமுடிவேந்தரெண்ணுயிரவர்பசுவாக" (பாரத. இராய. ௯௨.) 2. சமணரிலொரு கூட்டத்தார். 3. சைநருளொருவகுப்பார். 4. ஸ்மார்த்தப்பிராமணருளொருவகுப்பார்.

எண்ணுர்— பகைவர். (உ-ம்.) "எண்ணுரெயில்கண்மூன்றும்" (தேவார. காவிரி. ௨. திருஞா.)

எண்ணுன்கு— முப்பத்திரண்டு. (உ-ம்.) "எயிறெண்ணுன்கு" (தணிகை. அகத். ௯0௮.)

எண்ணிக்கை— 1. எச்சரிக்கை. 2. எண். 3. கணிப்பு. 4. கவநம். (உ-ம்.) "சுந்தரம்பெற நான்கதிரட்டிமுன்னான்குதாண் பதினாறுநூருயிரம்- இந்த வெண்ணிக்கையாகிய கால்களால்" (திருநெல். சிவபுண். ௧௧.) 5. சங்கை. 6. மதிப்பு.

எண்ணிடல்—கணக்கிடல்.

எண்ணில்கண்ணுடையோன்—1. கடவுள். 2. புத்தன். (சூ. நிகண். ௧: ௧௮.)

எண்ணியார்— எண்ணியிருந்தவர். (உ-ம்.) எண்ணியாரெண்ணமிழப்பர்" (வள். ௪௬௯.)

எண்ணிலார்— பகைவர். (உ-ம்.) "எண்ணிலாரெயின்மூன்றுமெரித்த" (தேவார. திருக்கடம்பூ. ௪. திருநா.)

எண்ணிலி— அளவற்றது. (திருவாச. திருப்படையா. ௫.)

எண்ணிலிகாலம்— அளவில்லாததாகிய காலம். (பட்டண. பொது. ௨௭.)

எண்ணின்று—எண்ணியது. (பதிற்றுப்.)

எண்ணுதல்—எண்ணல்.

எண்ணுநர்—கருதினோர். (உ-ம்.) "இறக்கவெண்ணுநர்" (சிவதரு. சிவஞானதா. ௭௫.)

எண்ணும்மை— எண்ணுப்பொருளில்வரும் உம்மையிடைச்சொல். "நிலனுந்தீயுநீரும்வளியுமாகாயமுமெனப்பூதமைந்து" என்பதிற்போல. (இலக்கணவி. ௨௫௬. உரை.)

எண்ணும்மைத்தொகை — எண்ணுப்பொருளில்வரும் உம்மைதொக்கதொடர். "இராப்பகல்" என்பதிற்போல.

எண்ணுவண்ணம் — இருபது வண்ணங்களுளொன்று; அஃது: எண்ணுப்பயின்று வருவது. (உ-ம்.) "எண்ணுவண்ணமெண்ணுப்பயிலும்" (தொல். பொருள. ௫௩௧.) வரலாறு. "நிலநீர்வளிவிசும்பென்றநான்கி - னளப்பரியை நாள்கோடிங்கள் - ஞாயிறுகனையழலைந்தொருங்குபுணர்ந்த- விளக்கத்தனையை......வாலியரோவிவ்வுலகமோடுடனே" எனவரும். (இலக்கண ௭௫௭. உரை.)

எண்ணுவமம் — உவமைவகையுள் ஒன்று. "ஒருவனுக்கு அன்னமிடுவது ஆயிரங்கோதான்த்துக்கொப்பு" என்பதிற்போல.

எண்ணுறுத்தல்—உறுதிப்படுத்துதல்.

எண்ணுல்— கணிதநூல். (காஞ்சிபு. சனற்கு. ௬0.)

எண்ணூறு—எட்டு நூறு.

எண்ணெட்டு— எட்டு எட்டு.

எண்ணெய்— 1. இருப்பைநெய்முதலியன. [எள்ளினெய்போல்வதுபற்றிவந்தபெயர்.] 2.

எள்ளிலிருந்தெடுக்கப்பட்டநெய். (உ-ம்.) "எண்ணெயுஞ் சங்குஞ்சூழ்விட்டதுபோலுமன்றே" (கந்தபு. திருவவ. க௦எ.)

எண்ணெய்க்காப்பு—எண்ணெயபிடேகம். (உ-ம்.) "மணங்கமழெண்ணெய்க்காப்புமாநெல்லிமஞ்சட்காப்பு" (காஞ்சிபு. தழுவ. ௯௫அ.)

எண்ணெய்க்காரன்—எண்ணெய்வாணிகன்.

எண்ணெய்ச்சாணை—எண்ணெய்பூசிப்பிரயோகிக்கப்படும் ஒருவகைச்சாணைக்கல்.

எண்ணெய்ச்சாயம்—1. எண்ணெய்சேர்த்துச்செய்யப்பட்டசாயம். 2. வேப்பெண்ணெய் சேர்த்துச்சிவப்பூட்டியசாயம்.

எண்ணெய்ச்சிக்கு— உண்ணப்பட்ட எண்ணெய்சேர்ந்த உணவினால் வரும் அசீரணம்.

எண்ணெய்த்தண்டு—எண்ணெய்பெய்திருக்குங்குழாய். (உ-ம்.) "முழங்குறுமதுப்பெய்தண்டுமுருகுலாமெண்ணெய்த்தண்டு" (காஞ்சிபு. திருக் ௪௦.)

எண்ணெய்தோட்டுப்போட்டுவைத்தல்—தலையில் எண்ணெய்தேய்த்துக் கொள்ளுவதற்குமுன் சிரஞ்சீவியர் எழுவரைநினைத்து எழுதுளிதரையில்வைத்தல். அதனால் ஆயுள்விருத்தியாகுமென்றெண்ணம்.

எண்ணெய்ப்பற்று—எண்ணெய்பற்றியிருத்தல்.

எண்ணெய்ப்புல்விடுதல் — நெசவுபாவுக்கெண்ணெயிடுதல்.

எண்ணெய்மணி— வெண்மட்டமாகச்செய்யப்பட்ட ஒருவகையாபரணம்.

எண்ணெய்வழுக்கு— எண்ணெயமினுக்கு.

எண்ணெய்வாணிகன் — எண்ணெய்விற்போன்.

எண்ணெயூற்றல்—எண்ணெய்வடித்தல்.

எண்ணெழுத்து—இலக்கம். (சிலப். இந்திர. ௧௧௨. உரை.)

எண்ணேகாரம்—எண்ணுப்பொருளில்வரும் ஏகார இடைச்சொல். "நிலனேநீரேதியேவளியே" என்பதிற்போல. (இலக்கணவி. ௨௫௨.)

எண்ணேயம்—எண்ணெய்.

எண்ணோகாரம்—எண்ணுப்பொருளில்வரும் ஓகாரவிடைச்சொல். "வெண்ணெயோவிதரனிட்டவிருந்தையோ வேலைசூழ்ந்த - மண்ணையோவுண்டுமுன்னாள்வருபசிதீர்த்த மாயோன்" என்பதிற்போல. (நன் இடை. ௪. உரை. இராமா.)

எண்பக—அளவிறக்க. (உ-ம்.) "மாரன்படைபோர்மூண் - டெண்பகவெய்வானுகியவந்தன்றிளவேனில்" (திருவிளை. தருமிக்கு. ௧.)

எண்படுதல்—அகப்படுதல்.

எண்பதம்— எளியசெவ்வி. (உ-ம்.) "எண்பதத்தானோராமுறைசெய்யாமன்னவன்" (வள். ௫௪௮.)

எண்பது—எட்டுமுறைபத்து. (உ-ம்.) "எண்பதுகோடிநினைந்தெண்ணுவன" (நல்வழி. ௨௮)

எண்பித்தல்—அத்தாட்சிபண்ணல்.

எண்பேராயம்—1. அரசர்க்குச் சாந்து, பூ, கச்சு, ஆடை, பாக்கு, வெற்றிலை, கஞ்சுகம், நெய்கொடுப்போரை எண்பேராயமென்பர். (சிலப்.) 2.எண்வகைத்துணைவர்.

எண்பொருள் — வேராதி வித்தீறாகிய எட்டுப்பதார்த்தங்கள்; அவை: வேர், கிழங்கு, பட்டை, பிசின், இலை, பூ, கனி, வித்து என்பனவாம். (தைல. பாயிர. ௯அ.)

எண்மடங்கு — எட்டுமடங்கு. (உ-ம்.) "இறைவர்க்கிதல்னெண்மடங்கீந்தவவ்வேழும்" (இரகு. தசர. ௪.)

எண்மயம்— எண்வகைச்செருக்கு; அவை: பிறப்பு, குலம், வலி,செல்வம், வனப்பு, சிறப்பு, தவம், உணர்வு என்பன. (உ-ம்.) "பெம்மானறம்பேணலின்றி-மூடந்தரித்தெண்மயத்துநின்றார் நல்லர்மும்மடியே" (திருநூற்றந். ௬௨.)

எண்மர் — 1. எட்டுப்பேர். (உ-ம்.) "என்கணித்தெண்டிசையெண்மர்காப்பதே" (இரகு. நகர. ௬.) 2. கணிதர்.

எண்மை— 1. இலேசு. (உ-ம்.) "உவனைப்பொருவதுவு-மெண்மையதுவோ" (கந்தபு.காம. ௯அ.) 2. எளிமை. (உ-ம்.) "எண்மையாருலகில்" (இராமா. சடாயு. ரு.) 3. பரிதாபநிலை. 4. மதிப்பு.

எண்மையன்—1. இலேசானவன். 2. எளியவன்.

எண்வகைத்துணைவர்—அரசர்க்குரிய எட்டுவகைச்சகாயபுருடர்; அவர்: கரணத்தியல்வோர், கருமாதிகாரர், சுற்றம், கடைகாப்பாளர், நகரமாக்கள், படைத்தலைவர், இவுளிமறவர், யானைவீரர் என்பவர். (சிலப். இந்திரவிழ. ௧௫௭. உரை.)

எண்வகைப்பத்தி — சிவதொண்டர்க்குரிய பத்திச்செயல்கள் எட்டு; அவை: தொண்டரடிதொழுதல், சிவபூசையின் மகிழ்தல், சிவார்ச்சனையியற்றல், சிவனுக்குப்பணிவிடை செய்தல், சிவசரிதங்கேட்டாநந்தபாஷ்பஞ் சொரிதல், அதனாற்புளகமுறுதல், அதனைப் பலகாற் சிந்தித்தல், திருப்பணிக்குரியபொருளை அபகரியாமை. (உ-ம்.) "தொண்டரடிதொழல் பூசைத்தொழின்மகிழ்தலழகார்துளங்கியவர்ச்சனைபுரிதல் ஒருகுதிநியமங்கள் - கொண்டபணிதிருவடிக்கேகொடுத்தலீசன் குணமருவுமருங்கதையைக்குலவிக்கேட்டு - மண்டிவிழிதுளும்பண்மயிர்சிலும்ப

னுன்னன் மருவுதிருப்பணிகாட்டிவருபவாங்கியுண்டிகொளாதொழிதலென விவையோரெட்டு முடையரவர்பத்தரெனவுரைத்துளாரே" (திருத்தொண்டர்புராணசாரம். சுகூ.)

**எண்வகையாலிங்கநம்** — எட்டுவிதமாய்த்தழுவுதல்; அவை: லதாவேஷ்டிதாலிங்கநம், விருக்ஷாதரூடாலிங்கநம், திலதண்டுலாலிங்கனம், க்ஷீரநீராலிங்கநம், ஊருப்பிரகூடாலிங்கநம், சககநோப சிலேஷாலிங்கநம், ஸ்தநாலிங்கநம், லாலாடிகாலிங்கநம்; என்பன. (கொக்கோக. ரு: சo. உரை.)

**எணம்** — மதிப்பு. (உ-ம்.) "மணமலரை-யெணமிழந்து பறித்துமுகந்தெழிலுறவேமுடிக்கணியில்" (சிவதரு. சுவர்க்கநரகவி. கசுகூ.) [இஃது எண்ணமென்பதில் ணகரந்தொக்கவிகாரமொழி.]

**எணல்** — நினைத்தல். (உ-ம்.) "பிறர்தம்பொருட்கேடெணல்" (தணிகை. அகத். உஉரு.) [இஃது எண்ணல் என்பதில் ணகரந்தொக்க விகாரமொழி.]

**எணியார்** — எண்ணப்பட்டவர். (உ-ம்.) "எணியாரிவர்களெல்லோரும்" (சிவதரு. சிவஞாநதாந. எசு.) [இஃது எண்ணியாரென்பதில் ணகரந்தொக்க விகாரமொழி.]

**எணுதல்** — தியானித்தல்.

**எணும்** — எண்ணும் என்பதில் ணகரவொற்றுத் தொக்குநின்ற இருவிகாரமொழியாக் கருதும் எனப் பொருள்படும் ஒரு பெயரெச்சம். (உ-ம்.) "யானெனவும்மைத்தெணுமோர்மயலதாமிருளை" (வை. நீ. அ.)

**எத்தநம்** — 1. ஆயாசம். 2. சாக்கிரதை. 3. முயற்சி. (உ-ம்.) "ஆத்துமஞானசர்த்திரியமானவெத்தநம்" (ஞாநவா. முமூட்சு. க. உரை.) [யத்நம்.]

**எத்தநித்தல்** — எத்தநஞ்செய்தல்.

**எத்தர்** — இதஞ்சொல்லிவஞ்சிப்போர். (உ-ம்.) "புறனுரைச்சமணத - ரெத்தராகிநின்றுண்பவர்" (தேவார. திருக்கேதீச்சர. கo. திருஞா.)

**எத்தன்** — இதஞ்சொல்லி வஞ்சிப்போன். (உ-ம்.) "வந்தியைய்லைப்பான்வந்தவெத்தனே விவன்றானென்பார்" (திருவிளை. மண்சு. சகூ.)

**எத்தனை** — 1. அளவின் மிக்கன என ஒழிந்தபொருளை யவாவிநின்ற ஒரு வினா மொழி. (உ-ம்.) "தராதலமிசையேபிறந்திவன் கற்றவெத்தனையிந்திரசாலம்" (பாரத. இராசசூ. ககசு.) 2. எவ்வளவு. (உ-ம்.) "எத்தனைகாலங்காப்பல்யானிந்தமூதூரென்று-மெத்தனை வினவினேற்கு" (இராமா. ஊர்தேடு. கசு.)

**எத்தால்** — எதனால் என்னும் பொருள்பட எது என்னும் வினைப்பெயர் விகாரப்பட்டு ஆலுருபேற்று நின்ற ஒருசொல். (உ-ம்.) "எத்தாற்பிழைப்பேனோ" (தாயு. பரா. ருரு.)

**எத்தி** — அனுப்புகிறவள். சையெழுப்புமெத்திகள்" (திருப்பு.)

**எத்தில்** — எதனில். (உ-ம்.) "எத்திற்பாயுமென்றெண்ணினவிருந்தனவேகலா திருந்தனவெறிவேலே" (இரகு. திக்கு. கசுரு.) [இஃது எது என்பது விகாரமாய் ஏழனுருபடுத்துவந்த ஒரு மொழி.]

**எத்து** — 1. இதஞ் சொல்லி வஞ்சித்தல். (உ-ம்.) "எத்தோநின்னன்புடைமை யெல்லோமறியோமோ" (திருவாச. திருவெம்பாவை கூ.) 2. எத்தென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும்.

**எத்துணை** — எவ்வளவு.

**எத்துதல்** — இதஞ் சொல்லி வஞ்சித்தல். (உ-ம்.) "நேசித்தாரையுமெத்திவடிப்பவர்" (திருப்பு. சoஉ.)

**எத்தும்** — எத்திறத்தும். (உ-ம்.) "எத்துந்தமதுரைதேறி நின்றேனையிங்கேதனியே-வைத்தங்ககன்றுமறந்துறையார்" (வாண. உசு.)

**எத்துவாதம்** — எத்துப்பேச்சு. [வாதம்-பேச்சு.]

**எத்தேசகாலமும்** — எவ்விடத்திலும், எக்காலத்திலும்.

**எதளா** — புளியமரம்.

**எதாசத்தி** — தன் வலிமைக்குத்தக்கபடி. (உ-ம்.) "பொருந்தியவெதாசத்தியீந்தான்" (மச்சபு. தீர்த்தயாத். ரு.)

**எதாப்பிரகாரம்** — உள்ளபடி. [யதாப்ரகாரம்.]

**எதார்த்தம்** — 1. உள்ளபடி. (உ-ம்.) "பிரமத்திலே ஆரோபிதமாகத்தோற்றிய கற்பனைகளைநீக்கி அப்பிரமவடிவமான எதார்த்தமாகச்சஞ்சரிக்கவேண்டுமென்பதாம்" (ஞாநவா. பாலன். அ. உரை.) 2. நிச்சயம். [யதார்த்தம்.]

**எதாவஸ்து** — உள்ளபடி. யதாவஸ்து.]

**எதி** — துறவி. (உ-ம்.) "மூங்கைமுடவன் செவிடன்முற்றுநீதியற்றோன் - வீங்கறிவிலாரெனினுமேவுமெதியாவார்" (கூர்மபு. ஆச்சிரம. ரு.) [யதி.]

**எதிர்** — 1. எதிர்காலம். (உ-ம்.) "எதிரது தழீஇயவெச்சவும்மை" 2. எதிர்வார்த்தை. (பழமொழி. உக.) 3. எதிரிடை. (உ-ம்.) "அவ

ஞெடெதிர்சந்தியாவெகுளா" (பாரத. பதினெட். கககூ.) 4. ஒப்பு. (உ-ம்.) "கரன்முதல்வெங்கதப்போரெதிரிலாதவர்" (இராமா. சூர்ப்ப. கஎ.) 5. தடை. (உ-ம்.) "காமக்கடற்கெதிர் நங்நிறையாம் வரம்பினினிற்பதன்றால்" (வாண. கஐ.) 6. நேரானதிசையிலாவது மாறானதிசையிலாவதிருந்தான்முன்னிலை. (உ-ம்.) "உயிர்க்குமெல்லுயிர்ப்பெதிரோடி" (பாரத. குருகுல. கக.) 7. பிரபஞ்சம். (பாரத. குருகுல. ககசு. உரை.) 8. மாறு. (உ-ம்.) "எதிரல்லநின்வாய்ச்சொல்" (கலி. கசு.) 9. முரண். 10. முன். (உ-ம்.) "ஏந்துகையெதிரே-வாடுக" (புறநா.சு.) "என்விழியெதிர்" (பாரத. பதினெட். ககஉ.) 11. முன்னிலை, சந்நிதானம். (உ-ம்.) "சிற்பொருட்பரமான பொருட்கெதி - ருற்பவிக்குமுபாயம்" (பாரத. குருகுல. ககசு.)

**எதிர்க்கட்சி**— எதிரான கூட்டம்.

**எதிர்க்கை**— 1. எதிர்மரம். 2. விரோதிக்கை.

**எதிர்காலம்**—வருங்காலம். (உ-ம்.) "பருகுதொறுமெதிர்காலநிலையுள்ளும்" (இரகு. குறை. ருஉ.)

**எதிர்காலவினையெச்சம்**—எதிர்காலப்பொருளில்வரும் வினையெச்சம். (உ-ம்.) "வினையெச்சம்" பார்.

**எதிர்காற்று** — முன்னானதிசையிலிருந்து மாறாகவருங்காற்று.

**எதிர்கொண்டு**—ஏற்றுக்கொண்டு. (புறப்.)

**எதிர்கொள்ளல்** — 1. தபோதனரை எதிர்கொள்ளல்; இது நவபுண்ணியத்தொன்றென்பர். (திவாகர.) 2. வந்தவர்க்குமுன்னேசென்று அளவளவாவுதல். (உ-ம்.) "அறத்தின்சுதன் வந்தெதிர்கொண்டிடமீண்டார்" (பாரத. இராச. ஈஎ.)

**எதிர்கோடல்**—ஏற்றுக்கொள்ளுதல். (உ-ம்.) " வழிபாடுமறுத்தன் மறுத்தெதிர் கோடல் " (தொல். பொரு. ககக.)

**எதிர்கோள்** — எதிர்கொள்ளுதல். (உ-ம்.) "எதிர்கோள்கூறிவரைவுகடாதல்" (திருக்கோ. கஈரு. முகக்கிளவி.)

**எதிர்ச்சீட்டு**—எதிர்முறி.

**எதிர்ச்செட்டு**—எதிரிடைச்செட்டு.

**எதிர்சாய்தல்** — ஏற்றுக்கொள்ளுதலையொழிதல். (உ-ம்.) "இகலிற்கெதிர்சாய்தலாக்கம்" (வள். அருஅ.)

**எதிர்செய்குறை**— ப்ரதியுபகாரம். (உ-ம்.) " சூலையினுக்கெதிர் செய்குறை யென்கொலெனத்தொழுதார்" (பெரியபு. திருநாவு. எரு.)

**எதிர்த்தல்**— 1. அலைத்தல். 2. சந்தித்தல். (உ-ம்.) "சிற்றவ்வைமார்களைக்கண்பிழைப்பித்தெதிர்த்தெங்குநின்றெப்பரிசளித்தான்" (திருக்கோ. ருககசு.) 3. சம்பவித்தல். (உ-ம்.) "ஏழைக்கோரெட்டானமதத்தோடும்வந்தெதிர்த்த" (தாயு. பன்மா. உ.) 4. தடுத்தல். 5. மாறாகத்தாக்குதல். (உ-ம்.) "இத்திறமாகியபடையொடெப்படிநாஞ்சிலபடைகொண் டெதிர்ப்பதென்றான்" (பாரத. பதினெட். கரு.) 6. முற்படுதல்.

**எதிர்த்தவன்**— ஒருபாஷாணம்.

**எதிர்தல்**—1. எதிர்காலத்துவருதல். (உ-ம்.) "எதிர்வ" பார். 2. சந்தித்தல், உபசரித்தல். (உ-ம்.) "துறவோர்க்கெதிர்தலும்" (சிலப். கொலைக்கள. எஉ.) 3. தோன்றுதல். (உ-ம்.) "சுணங்கெதிரிளமுலை" (மதுரைக். சுகசு.) 4. மலைதல். (உ-ம்.) "மேவருகன்னனன்றிவிண்ணுளோரெதிர்ந்தபோதும்" (பாரத. சூது. உக.) 5. மாறாகத்தாக்குதல். (உ-ம்.) "யாளிகளிரண்டெதிர்ந்திகலுமாறுபோல்" (பாரத. பதினெட். சுக.)

**எதிர்ந்தன்று**— ஏற்றிருந்தது. (புறப்.)

**எதிர்ந்தனம்**— ஏற்றுக்கொண்டோம். (ஐங்குறு.)

**எதிர்ந்து**—ஏற்றுக்கொண்டு. (புறநா.)

**எதிர்ந்தோர்**—பகைவர்.

**எதிர்நிரனிறை**— முறைபிறழ்ந்துவரும் நிரனிறை; அதனை "பெயரும் வினையுமாஞ்சொல்லையும் பொருளையும் வேறுநிரனிறீஇ முறையினுமெதிரினு நேரும் பொருள்கோணிரனிறைநெறியே" என்பதனாற்காண்க. (வ-று.) "ஆடவர்களெவ்வாறகன்றொழிவார்வெஃகாகவும்- பாடகமூரகமும் பஞ்சரமா - நீடியமா - னின்றானிருந்தான் கிடந்தானிதுவன்றோ - மன்றார்மதிற்கச்சிமாண்பு" (நன். பொர்து. சுரு. உரை.)

**எதிர்நிலை**— 1. எதிர்நிற்றல். 2. கண்ணாடி.

**எதிர்நிலையகத்திணை**— அகத்திணையுறுப்புக்களுளொன்று; அது: பிறிதுமொழிந்தொன்றனையுணர்த்துதல். நல்லோரது மேன்மை தோன்றத்தீயோரதீனத்தைக்காட்டுதலும், கல்லாமையால் வருமிகழ்ச்சி தோன்றக் கல்வியால் வரும் புகழ்ச்சியைக் காட்டுதலும் போல்வது. (தொன்னூல். கருக.)

**எதிர்நிலையணி**— அலங்காரவகையுளொன்று; அஃது: உபமானத்திற்குக்குறைவு தோன்றச்சொல்வது. உபமானத்திற்கு எதிராய் நிற்றலின் எதிர்நிலையெனப்பட்டது. (வ-று.) "அதிர்கடல்சூழ்வையத் தணங்குமுகம்போல - மதியுஞ்செயுமேமகிழ்" (விசாக. அணி. கஎரு - பக்.) "வழங்குவமானத்தினுக்குவமேயத்தன்மைவிளம்பில் - ஒழுங்குறுநாமமெதிர்நிலைகண்போலுளதுகஞ்சம் - எழுஞ்சசியானனம்போலுளதென்

பதிலக்கியங்காண்-டொழும்பலவேந்தரைக்காக் குங்குமாரெட்ட சுந்தரனே" எனவும், "உவமானமா மூவமேயத்திறுற்புகழும்பொருளுக்- கவமானமோதிலிரண்டாமெதிர்நிலையாமுகமே- யிவர்காந்தியா லுனைப்போன்மதியுண்டுனக்கேன் கருவ - நவில்வாயென்றோத லிலக்கிய மெட்டநகர்க்கரசே" எனவும், "புகழுவமேயத்தினுறு வமானப்பொருட்கு நிந்தை - பகருவமேலதுமூன்றுமெதிர்நிலை பாசகர - நிகழுனக்கேனுக்கிரத்தாற் செருக்குனை நேர்ந்தமின்னார் - மிகவுளரென்பதிலக்கியஞ் சந்திரவெற்புளனே" எனவும், "புனைவுளியோடுவமானத்தினுக்கொப்புமையிலெனி - லனைவருநான்கா மெதிர்நிலையாமென்பரம்புயநின் - வினைமுகம்போன்மின்னுளதெனில் வீணவவாதமலர்ப் - பொனேயனையென்னலுதாரண மெட்டபுரத்தரசே" எனவும், "பயனின்மையை யுவமானத்தினுக்குப் பகரிலெந்தா - திய சொலெதிர்நிலைபெண்முகங்காணக்கிடைத்தவர்க்கே - யியன்மதியாற்பயனென்மரையாற் பயனென்னெனவோ - தியதிங்குதாரணந்தே ரெட்டயபுரசிதரனே" எனவும் வருங் குவலயாநந்தச்செய்யுட்களான் அதன்விரிவையுணர்க.

**எதிர்நிற்றல்**— 1. போர்செய்தல். 2. மாறுகநிற்றல். (உ-ம்.) "காகமானவை கோடிகூடிநின்றுலு மொரு கல்லின்முன் னெதிர்நிற்குமோ" (தாயு. எங்கு. ௬.) 3. முன்னிற்றல்.

**எதிர்நூல்**—முதனூலின்முடிந்தபொருளை ஒராசிரியன் யாதானுமொருகாரணத்தாற்பிறழவைத்தால் அதனைக் கருவியாற் பிரிவுகாட்டி ஒருவாமைவைத்தற்கு ஒள்ளியான் ஒருபுலவனுலுரைக்கப்படுவது. (இறைய. கக.)

**எதிர்நோக்குநட்சத்திரம்** — 1. எதிர்நாள். 2. பக்கநாள்.

**எதிர்ப்படுத்தல்**—1. எதிராக்கல். 2. பகையாக்கல்.

**எதிர்ப்படுதல்**—1. ஒப்பாதல். (உ-ம்.) "பண்ணெதிர்ப்படுமொழிக்கு"(இரகு. இரகுவுற். ௪௦.) 2. சந்தித்தல். 3. சம்பவித்தல். 4. தோன்றல். (உ-ம்.) "மண்ணெதிர்ப்படுபெங்தொடாடுமற்றைய-கண்ணெதிர்ப்படினும்" (இரகு. இரகுவுற். ௪௦.) 5. நேரிடுதல். 6. நேரேவருதல். (உ-ம்.) "எதிர்ப்பட்டாற்பின்னைவிடுமோவிறல்வீமன்" (பாரத. பதினெட். ௪௬௩.)

**எதிர்ப்பாடு**—நேரிடுதல்.

**எதிர்ப்பாய்ச்சல்** — முன்வரும் பாய்ச்சலுக்கு எதிர்பாய்தல்.

**எதிர்ப்பு**—1. அலைப்பு.2. இலக்கு. 3. எதிர்மொழி. 4. சண்டிவாளம். 5. சந்தித்தல். 6. தடுப்பு. 7. மாறுகத்தாக்கல். 8. வருங்காலம்.

**எதிர்ப்பை**— வாங்கிய அளவு எதிர் கொடுத்தல். (உ-ம்.) "வறியார்க்கொன்றீவதேயீகைமற்றெல்லாங்-குறியெதிர்ப்பைநீரதுடைத்து"(வள். உ௨௧.)

**எதிர்ப்பொருளுவமை**— உவமையலங்காரவகையுள் ஒன்று; அஃது: ஒருபொருளைமுன் ஒருவாக்கியத்திலே அதன்குணத்தோடு வைத்து அக்குணமுடையதாகப் பின்வாக்கியத்திலே வைக்கும் எதிர்ப்பொருள் அதற்கு உபமானமாகத்தோன்றுமாறு சொல்லப்படுவது. பொதுத்தன்மையொன்றே யாயினும் இருவாக்கியத்தினும் வெவ்வேறு சொல்லப்படும். தண்டியாசிரியர் இதனை மறுபொருளுவமையென்பர். வரலாறு, "நின்னொக்குமன்னருளரல்லர்கற்பகந் - தன்னொக்கும் பாதபமுமில்" (வீரசோ. அலங்கார. ௧௪.)

**எதிர்பார்த்தல்**—1. காத்திருத்தல். 2. வரவுபார்த்தல்.

**எதிர்மறுப்பு** — உடன்பாட்டிற்கு மாறுகச்சொல்லல்.

**எதிர்மறை**—எதிர்மறுப்பு.

**எதிர்மறையணி**—அலங்காரவகையுள் ஒன்று; அஃது: ஒழிப்பணிக்குவேறுகியுங் கேட்போரைமகிழ்விப்பதாகியும் உள்ள மறுப்பைச்சொல்லுவது. வரலாறு, "ஒண்கதிர்த்திங்காணீயுன் வடிவையிங்கெமக்குக்- கண்களிகூரக்கடிதுகாட்டுவாய் - வண்களிகூர்- பூண்டாங்குகோங்கையுடைப்பூவைமுகமுண்டதனல் - வேண்டாம் போவெற்றுக்குவீண்" (விசாக. இலக்கணவி. ௧௭௭. பக்.)

**எதிர்மறையிடைநிலை**—எதிர்மறைப்பொருளில் வரும்'இடைநிலைகள்; அவை: இல், அல், ஆ என்பன.

**எதிர்மறையும்மை** — எதிர்மறைப் பொருளில்வரும் உம்மென்னுமிடைச்சொல். "கொற்றன்வருதற்குமுரியன்" என்பதிற்போல.(நன். இடை. ௬.) [இது வாராமைக்குமுரியன் எனவும்பொருள்படும்.]

**எதிர்மறையெச்சம்**— ஒன்பதுவகைச் சொல்லெச்சங்களுள் ஒன்று; அஃது: எதிர்மறைப்பொருளைத்தருஞ்சொல் வெளிப்படாமல் எஞ்சிநிற்பது. "யானேசெய்வேன்" என்பதிற்போல. (நன். பொதுவி. ௯.) [இதிலே செய்யேன் என்பது எஞ்சிநின்றது.]

**எதிர்மறையெஞ்சணி** — சொல்லெஞ்சணிவகையுள் ஒன்று; அஃது: எதிர்மறைச் சொல்லின்றி எதிர்மறைப் பொருளில் ஒகாரமாவது

உம்மையாவது வருவது. "யானேசெய்வேன்" என்பதில் செய்யேன் என்பது தோன்றவுரைத்தலும் இவ்வெழுத்து இவ்வழிதிரியவும் பெறுமென்பதிலே திரியாமையும் பெறும் என்பதன்ற உரைத்தலும் போல்வது. (தொன்னூல். ௯௧௧.)

**எதிர்மறையேகாரம்** — எதிர்மறைப்பொருளில் வரும் வினாரூபமான ஒகாரம். "அவனே கொண்டான்" என்பதிற்போல. (நன். இடை. ௯.) [இது ஒரோவிடத்து அவன்கொண்டிலன் எனப்பொருள்பட்டுநிற்பது.]

**எதிர்மறையோகாரம்** — எதிர்மறைப்பொருளில்வரும் வினாரூபமான ஒகாரம். "யானோ செய்வேன்" என்பதிற்போல. (நன். இடை. ௪.) [இது ஒரோவிடத்துச்செய்யேன் எனப்பொருள்படநிற்பது.]

**எதிர்மறைவிடை**—எண்வகைவிடைகளுள் ஒன்று; அது: நேரே எதிர்மறுத்துக் கூறும்விடை. "சாத்தா இது செய்வாயோவெனின்; செய்யேன்" என்பது போல்வது.

**எதிர்மறைவினை**— உடன்பாட்டிற்குமாறாக வரும் வினைச்சொல். "உண்ணேன்" என்பதிற்போல்வது.

**எதிர்மீன்**— நீர்ப்பாய்ச்சலுக்கு எதிரேவரும் மீன்.

**எதிர்முகசிற்சத்தி** — பிறபொருட்பிரமேய மாத்திரத்தில் அறிதற்றொழில்பண்ணி மலர்ந்த சிற்சத்தி. (சி. சி. அளவை. ௧௪. ஞானப்.)

**எதிர்முகம்**—முன், சந்நிதி.

**எதிர்முறி**—எதிர்ச்சீட்டு.

**எதிர்மொழி**— 1. மறுப்புரை. (உ-ம்.) "யானுவன்ற மொழிக்கெதிர் மொழியுண்டாமாகிற் சொல்லுவீரே" (பாரத. சூது. உ௪௯.) 2. மறுமொழி.

**எதிர்வ**— வருவன. (உ-ம்.) "ஆயவனெதிர்வநல்லவல்லவையடாது" (இரகு. குறைகூறு. ௧.)

**எதிர்வரல்**— 1. எதிராக வரல். 2. விரோதமாக வரல்.

**எதிர்வாதம்**—பிரதிவாதம்.

**எதிர்வாதி**—பிரதிவாதி.

**எதிர்வினை** — 1. எதிர்காலத்திற்செயயும் வினை. 2. எதிர்மறைவினை.

**எதிர்வினைவிலக்கு**— முன்னவிலக்கலங்காரவகையுள் ஒன்று; அஃது: எதிர்காலச்செயல் கொண்டு குறிப்பினால் விலக்குவது. (வ-று.) "முல்லைக்கொடிநுடங்கமொய்காந்தள் கைகுலைப்ப - வெல்லையினவண்டெழுந்திரங்க - மெல்லியன்மேற் - றீவாய்நெடுவாடைவந்தாற் செயலறியேன் - போவாயொழிவாய்பொருட்கு" (தண்டி. பொருளணி. ௬௨.) இதனை எதிர்கால விலக்கெனவுங்கூறுவர்.

**எதிர்வு**— 1. எதிர்காலம். (உ-ம்.) "தவ்வொடிறப்புமெதிர்வும்" (நன். பத. ௧௮.) 2. எதிர்த்தல். 3. எதிர்ப்படல். 4. சம்பவித்தல். 5. வருவது.

**எதிர்வைத்தல்**—சரிவைத்தல்.

**எதிர** — ஒருவமையுருபு. (இலக்கணவி. ௬௪௨.)

**எதிரதாக்காத்தல்**— வரக்கடவதாகிய அதனைமுன்னே அறிந்து அதன் காரணத்தை விலக்குதல். (உ-ம்.) "எதிரதாக்காக்குமறிவினார்" (வள். ௪௨௯.)

**எதிரதுதழீஇயவெச்சவும்மை**—சாத்தனும்வந்தான் என்பது கொற்றனும் வருவானென்பொருள்படவதிற்போல எதிர்காலச்செயலை விளக்கி நிற்கும் உம்மையிடைச்சொல். (நன். இடை. ௯. உரை.)

**எதிரதுநோக்கியவெச்சவும்மை**—எதிர்மறைச்சொல்லைக்காட்டிநிற்கும் உம்மை; அது: "மறப்பினுமோத்துக்கொளலாகும்" என்பதில் இங்கே மறப்பினுமென்புழியும்மை மறக்கலாகாதென்னுங் கருத்தை நோக்கி நிற்றல்போல்வது.)

**எதிரதுபோற்றல்**— முப்பத்திரண்டு தந்திரவுத்திகளுள் ஒன்று; அது: முன்பில்லதாய்ப் பின் வழங்கிவருவதைத் தழுவிக்கொள்ளுதல். (நன். பொது. ௧௪.)

**எதிரல்**— 1. எதிர்த்தல். 2. எதிர்ப்படல். 3. தோன்றல்.

**எதிராது**—ஏற்றுக்கொள்ளாது. (புறப்.)

**எதிராப்பு**—கழலாதபடி வைக்கும் ஆப்பு.

**எதிராளி**—1. எதிர்வழக்காளி. 2. சமமாயிருப்பவன். 3. பகைஞன்.

**எதிரி**— 1. எதிர் நிற்பவன். 2. ஏற்றுக்கொண்டு எனப்பொருள்படும் ஒரு வினையெச்சம். (உ-ம்.) "நீழுமேலுங்கால்வாய்த்தெதிரி" (மலைபடு. ௧௪௨.) 3. பகைவன். (உ-ம்.) "எதிரி தேர் வருவன்மைகண்டு" (பாரத. பதினெட். ௨௨.)

**எதிரிடல்**—எதிர்த்தல்.

**எதிரிடை**— 1. எதிரித்தனம். 2. சமமாயிருத்தல். 3. பகை.

**எதிரிடைகட்டல்**—விரோதித்தல்.

**எதிரிடைகாரன்**— விரோதஞ்செய்வோன்.

**எதிரிடைச்சீட்டு**—எதிரிடைமுறி.

**எதிரிய**—எதிர்கொண்ட. (உ-ம்.) "எதிரிய விலவழும்" (கலி. உ௬.)

எதிருக்கெடுத்தல்— ஏப்பமெடுத்தல், வாந்தியெடுத்தல்

எதிருத்தரம்—மறுமொழி.

எதிருரை—1. மறுப்புரை. 2. மறுமொழி.

எதிருன்றல்— 1. உறுதியாய்நிற்றல்.(உ-ம்.) "எல்லையன்னதிற் சதமுகற் சூழ்வரு மிலக்கருமெதிரூன்றி" (கந்தபு. சதமுகன். ௬௦.) 2. எதிர்த்துநிற்றல். 3. எதிர்தல்.

எதிரேடுத்தல்— 1. எதிருக்கெடுத்தல். 2. வாந்திபண்ணல். (உ-ம்.) "கனைதல்" பார்.

எதிரேற்றம் — மாறுக எதிரே போதல். (உ-ம்.) "அமண்வாதுகுறித்தபொழுதெதிரேற்றங்கொண்டபாடல்" (சேதுபு. திருநா. ௫.)

எதிரேற்றல்— 1. எதிர்த்தல். 2. எதிரேவல். 3. தடுத்தல். 4. பிறன்மேல்வருவதைத் தானேற்றல்.

எதிரேற்று—எதிரேவல்.

எதிரொலி—பிரதித்தொனி. (உ-ம்.) "இவனுமப்பொழுதெதிரொலியென" (பாரத. பதின்மூன். ௮௮.)

எதிரொலித்தல்—பிரதித்தொனிசெய்தல். (உ-ம்.) "நீடுகுன்றெதிரொலிக்கவே" (பாரத. வேத்திர. ௬௦.)

எது— யாது. (உ-ம்.) "நம்பியவனுமமெதுவென்னினிதுவாமே" (சிந்தா. ௧௩௧. ௨௪௦.)

எதுகுலகாம்போதி—ஓரிராகம்.

எதுகுலம்— யதுகுலம். (உ-ம்.) "எதுகுலத்துதித்து" (காஞ்சிபு. வாணி. ௩௫.)

எதுகை—எதுகைத்தொடை. (யாப். காரிகை. உறுப். ௧௬.)

எதுகைத்தொடை— செய்யுட்டொடைவகைகளுள் ஒன்று; அஃது: அடிகளின் இரண்டாமெழுத்தாவது சீர்களின் இரண்டாமெழுத்தாவது ஒன்றிவரத்தொடுக்கப்படுவது. (யாப். தொடை. ௧௬.)

எதேச்சை— இச்சைப்படி. [யதேச்சா: யதா - படி. இச்சை - விருப்பம்.]

எதேட்டம்— இட்டப்படி. [யதேஷ்டம்: யதா - படி. இஷ்டம் - விருப்பம்.]

எதோத்தேசபக்கம்— யதோத்தேசபக்கம். (நன். எழுத்ததி. விருத்.) "எதோத்தேச பக்கம்" பார்.

எந்த—வினப்பொருளிலே பெயர்ச்சொற்கு முன்வரும் ஓரிடைச்சொல். (உ-ம்.) "எந்தவெந்த வெஞ்சாயகம்" (பாரத. பதினெட். ௯௦.)

எந்திரகாரன்—சூத்திரகாரன்.

எந்திரம்— 1. ஆலை. (உ-ம்.) "எந்திரத்துறுபாகுமடையுடைத்தொண்"(இராமா. பள்ளி. ௧௮.) 2. ஊர்தி. 3. குயவன் திரிகை. (உ-ம்.) "கடசக்கரவெந்திரமெனச்சுழல் வெம்பவக்கடல்" (காஞ்சிபு. காப்பு.) 4. சூத்திரம். (உ-ம்.) "பாவையொப்பா-ரெந்திரத்தியங்கு மங்கபஞ்சரத்தினிமையென்னே"(ஞானவா. வைரா. ௬௬.) 5. தீக்கடைகோல் 6. தேர். 7. தேர்ச்சில்லு. (உ-ம்.) "எந்திரத்தடந்தேரிழிந்தான்" (இராமா. கர. ௧௮௧.) 8. பஞ்சுகொட்டுமெந்திரம். 9. மதிலுறுப்பு. (உ-ம்.) "எந்திரம் யாத்த வெயிலோடகழில்லையாயினும்" (தணிகை. களவு. ௯௭௮.) 10. மந்திர சக்கரம்

எந்திரவாவி—நீரிறைக்குஞ் சூத்திரம்.

எந்திரன்—சூத்திரகாரன்.

எந்து—என்ன; திசைச்சொல்.(உ-ம்.) (திருவாசகம். அருட்பத்து.)

எந்தை—1. என்பிதா. (உ-ம்.) "பிரியதரிசனனேதமெனன்-னெந்தை" (இரகு. அயனெ. ௧௧௪.) 2. எமதுகுரு. (உ-ம்.) "எந்தை-யேயினபணியினிற்பன்" (கந்தபு. அண்டகோச. ௧.) 3. எமதுசுவாமி.(உ-ம்.) "எந்தைகணின்றும்வந்தவியற்கையால்" (கந்தபு. மூன்றுநான். ௨௧௨.) 4. எமதுதலைவன். (உ-ம்.) "எறிந்துகளம்படுத்தவேந்துவாள்வலத்த-ரெந்தையொடுகிடந்தோர்" (புறநா. ௧௧.)

எந்தையான்— எந்தலைவன். (உ-ம்.) "உமைதன்னொருகூறுடை-யெந்தையான்" (தேவார. மழபாடி. ௭. திருஞா.)

எந்தோ—எப்படி. (உ-ம்.) "எந்தோவெனவெண்ணியசூழ்ச்சியினன்"(தணிகை. பிரம.௪.)

எப்படி—எவ்விதம். (எப்படிநாஞ்சிலபடைகொண்டெதிர்ப்பதென்றான்" (பாரத. பதினெட். ௩௫.)

எப்பொருட்குமிறைவன் — எல்லாப்பொருட்குந்தலைவன்.

எப்பொழுது—எப்போது.

எப்பொழுதும்— எப்போதும். (உ-ம்.) "யானெப்பொழுதுமுன்னு-மருந்து" (திருக்கோ. ௬௦௦.)

எப்போது— எப்போழ்து— } எக்காலம். (உ-ம்.) "எறிதேனலம்புஞ்சிலம்பினெப்போதுமிரந்து" (வாண. ௩௫.)

எம் — 1. தன்மையிடத்திற் பன்மைவரும் ஒரு வினைவிகுதி. (உ-ம்.)"யாம் உண்டனெம்" "யாம் தாரினெம்" இஃது யானும் அவனும் உண்டனெம் எனப் படர்க்கையாரை உளப்படுத்தியும்வரும். (நன். ௩௩௨.) 2. யாம் என்னுந் தன்மைபன்மைப்பெயர் வேற்றுமை வழியில் விகாரமடைந்துவந்த ஒரு சொல். (உ-ம்.) "எம்மை, எம்மால்"

எம்பர்—எவ்விடம்.
எம்பி— என்றம்பி. (உ-ம்.) "நம்புவிக்கெம்பியே" (பாரத. குருகுல. ௧௧௩.)
எம்பியர்—எனது தம்பியார். (உ-ம்.) "இந்தனுாலமுமெம்பியர்ஞாலம்" (பாரத. குருகுல. ௧௭.)
எம்பிராட்டி—எங்கள்முதல்வி. (உ-ம்.) "எம்பிராட்டிபா-னின்றமாதரை"(உமைதவ.உ௭.)
எம்பிரான் — 1. எமது தலைவன். (உ-ம்.) "எம்பிரானுமெம்முனும்" (இராமா. பள்ளி. ௫௮.) 2. எமதுதேவன். (உ-ம்.) "எம்பிரானை முராரியைமாயனை" (பாரத. பதினெட். ௧௬௧.) 3. ஒரு விட்டுணுபத்தன்.
எம்புகம்—நிலக்கடம்பு.
எம்பெருமாட்டி— எங்கள் தலைவி. (உ-ம்.) " இந்தவாறினையர்பாலா யெம்பெருமாட்டிவைகி" (கந்தபு. பார்ப்பதி. ௩௦.)
எம்பெருமான்—1. எமதுதலைவன். (உ-ம்.) "எம்பெருமானேயெம்மையொளித்தியோ" (சிந்தா. நாமக. உ௬௫.) 2. எமது தேவன். (உ-ம்.) "விடைமேல்கொண்டெம்பெருமான்மேவுதலும்" (கந்தபு. வரம்பெறு. ௧௭.)
எம்மட்டு—எவ்வளவு.
எம்மர்—எமர்.
எம்மனை—தாய். (மணிமே.)
எம்மனோர்— 1. எங்கள். (புறநா.) 2. எம்மோடொத்தவர். (உ-ம்.) "என்னேயெனேகருணை விளையாட்டிருந்தவா றெம்மனோர்புகலவெளிதோ" (தாயு. எங்குநிறை. உ.)
எம்மாத்திரம்—எவ்வளவு.
எம்மான் — 1. எம்பிதா. (உ-ம்.) " எம்மானெம்மனையென்றெனக் கெட்டனைச்சார்வாகார்" (தேவார. மழபாடி: ௩. ௬௩.) 2. எம்பெருமான். (உ-ம்.) "எந்தையேயெம்மானேயென்றென்றேங்கி" (தாயு. ஆகார. ௬.)
எம்முன்—எமதுதமயன். (உ-ம்.) "எம்முன் யாண்டையான்" (இராமா. பள்ளி. அ௧.)
எம்மை— 1. எங்களையெனப் பொருள்படயாம் என்பது விகாரப்பட்டு ஐயுருபேற்று வந்த மொழி. (உ-ம்.) "எம்மைநீர்வெல்லப்பெற்றீர்" (சிந்தா. காந்த. உ௬௩.) 2. எப்பிறப்பு. (உ-ம்.) "எம்மைக்கிதமாகவிஃதெண்ணினை" (இராமா. சடாயுவு. ௧௧.) "எம்மையுமில்லதோரின்பம்" (கந்தபு. அசுரர். தோற்று. ௧௪.)
எம்மையும்— 1. எங்களையும். 2. எப்பிறப்பும்.
எம்மையோர்—எம்மவர். (உ-ம்.) "எம்மையோரனைவரும்" (இராமா. சடாயு. ௪அ.)
எம்மோர்—எம்முடையவர்.

எம்மோன்—எம்முடையதலைவன். (உ-ம்.) "எம்மோன்சிலைசெல" (புறப். கடுள.)
எமகணம்—இயமனுடையகூட்டத்தோர்.
எமகிங்கிரர் — இயமனுடைய ஏவல் செய்வோர்.
எமதருமன் — இயமதருமராசன். (உ-ம்.) "தன்முகத்திலுயிர் வரவழைக்கு மெமதருமனும்" (தாயு. சிற்சு. ௧௦.)
எமது—எம்முடையது. (உ-ம்.)"எமதுயிருமொக்கவிடவேநினைந்தேமால்" (கந்தபு. வரம்பெறு. அ.)
எமதூதன் — 1. நாகபாம்பின் பற்களிலொன்று. 2. யமதூதன்.
எமதூதி— நாகபாம்பின் பற்களிலொன்று. (சிந்தா. பதுமை. ௧உ௩. உரை.) [யமதூதி]
எமநாகம்— 1. அசமதாகம். 2. ஊமத்தை.
எமநாமம்—ஊமத்தை.
எமபாசம் — இயமனுடையபாசம். (உ-ம்.) " சூலம்பிடித்தெமபாசஞ்சுழற்றித் தொடர்ந்து வருங்-காலன்றனக்கு"(கந்தரல. ௧௦௩)
எமபுரம்—இயமபுரம்.
எமர்—1. எம்போலியர். (உ-ம்.) "எமர்மாதுயர் " (இராமா. அகத்திய. ௫உ.) 2. எம்முடையவர். 3. எமதுசுற்றத்தார். (உ-ம்.) "நிரம்பியகாலமறிந்தெமர்" (தணிகை. களவு. ௩௩௧.)
எமரங்கள்—எமதுசுற்றத்தவர்கள். (உ-ம்.) "இற்பூட்டிப்போயினரெமரங்களெனக்கவுரியியம்பலோடும்" (திருவிளை. விருத்த. உஉ.)
எமராசன்—இயமராசன். (உ-ம்.) "எமராசன்விட்டகடையேடு வந்தினியென்செயுமே" (கந்தரல. அ௭.)
எமள்— 1. எம்முடைய சுற்றத்தவள். 2. எம்முடையவள்.
எமன்— 1. இயமன். (உ-ம்.) "எமன்கனற்ரோன்றல்" (நல். பாரத. நளன். ௫௫.) 2. எம்முடையவன். 3. நாக பாம்பின் பல்லினொன்று. (சிந்தா. பதுமை. ௧உ௩. உரை.)
எமாஸ்திரம்— இயமனுடைய ஆயுதங்கள்; அவை: கணிச்சி, தண்டு, பாசம் என்பன.
எமார்—எம்முடையவர்.
எமி—தமியல்லாதவன். (உ-ம்.) "எமியை யிருந்தரசாள்வது கண்டவென்கண்கள்" (தணிகை. சீபரி. ௫௩௩.)
எமுநை— யமுநாநதி. (உ-ம்.) "சாலுமயத்தெமுனை" (தணிகை. அகத். ௪அ௧.) [யமுநா.]
எய்— 1. அம்பு. (உ-ம்.) "இவளாகத்-தெய்யேறுண்டவாறெவன்" (திருவிளை. பழிய.

உச.) [தொழிலாகுபெயர்.] 2. எய்யென்னே வலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத் தொகையும். 3. உவமவுருபு. (சிந்தா.) 4. முட் பன்றி. (உ-ம்.) "கணைகோடிதூண்டி-மையார வுணர்புகழ்தாரகமானவேழ - மெய்யாகும்வண் ணஞ்செறித்தானவன் யாக்கையெங்கும்" (கந் தபு. தாரக. கசக.)

**எய்த்தல்**— 1. அறிதல். (உ-ம்.) "முத்து டைம்முலைக்கண்கணைந்தவென்- றெய்த்தடிச் சிலம்பிரங்கும்" (சிந்தா. முத். அரு.) 2. இளை த்தல். (உ-ம்.) "ஈட்டியதவத்தாற்சாலவெய்த் தனை" (தணிகை. அகத். கசா.) 3. தரித்திர மடைதல். 4. வருந்துதல். (உ-ம்.) "விளைவு காணுறு-வெய்திடுநிரப்பினெனன்ன" (கந்தபு. எதிர்கொள். கஉ.)

**எய்தல்**— 1. அடைதல். (உ-ம்.) "தூநிறக் கங்கையாள்சூழலெய்தினன்" (பாரத. குருகுல. நச.) 2. அடையாதேயென்பொருள்படும் ஒ ரெதிர்மறைவினைமுற்று. (உ-ம்.) "இளங்கொ டியேயிடரெய்தல்" (திருக்கோ. கரு.) 3. செ ன்றுசேர்தல். (உ-ம்.) "எங்குந்தானென்னி னுமெய்தவேண்டாம்" (சி. சி. அ: நஅ.) 4. பெறுதல். (உ-ம்.) "ஒன்றெய்தினுறிழக்குஞ் சூதர்க்கு" (வள். கநஉ.) 5. வில்லினின்று நாண்விசையினாலே செலுத்துதல். இதனை நால்வகையூறுபாட்டிலொன்றென்பர். (உ-ம்.) "மின்னுங்கணையாலவனெய்துடன் வீழ்த்த போதில்" (பாரத. சம்பவ. சக.)

**எய்தர்மை**—அடையாமை.

**எய்துதல்**—1. அடைதல், சேர்தல். (உ-ம்.) "ஈங்கெனை யார்தடுப்பார் மடப்பாவையையெய் துதற்கே" (திருக்கோ. கக.) 2. சம்பவித்தல், பெறுதல்.

**எய்ப்பன்றி**—முட்பன்றி.

**எய்ப்பாடி**—வேடரூர்.

**எய்ப்பில்வைப்பு** — உற்றவிடத் துதவும் பொருள். (உ-ம்.) "அண்டருக்குமெய்ப்பில்வை ப்பாம்" (தாயு. எங்ஙா. பொருள். ரு.)

**எய்ப்பின்வைப்பு**-எய்ப்பில்வைப்பு. (உ-ம்.) "எய்ப்பின்வைப்பாங்களைகணே" (காஞ்சிபு. தழுவ. கரு.)

**எய்ப்பு**-1. இளைப்பு, பெலமின்மை. (எ-ம்.) "விற்கைவேள்விளைத்தபோரா-லெய்ப்படையு ளங்கறுத்தார்" (இரகு. மீட்சி. எ.) 2. ஒடுக்க நிலை. (உ-ம்.) "சந்ததமுநீயிறந்தவெய்ப்பிலே யாநந்தமே" (தாயு. உடல். சo.)

**எய்ம்மான்**—எய்ப்பன்றி. (உ-ம்.) "எயினர்த ந்தவெய்ம்மானெறிதசை" (புறநா. கஎஎ.)

**எய்யாது**— ஒழியாது. (ஞாஞ.)

**எய்யாமை**—1. அறியாமை. (உ-ம்.) "இய ங்கியடாதென்பிர்நீயிரெய்யாமையென் றீவினை யே" (தணிகை. களவு. நசஉ.) 2. வருந்தாமல் எனப் பொருள்படு மோரெதிர்மறைவினையெச் சம். (உ-ம்.) "எய்யாமை-யெல்லாவறமுந்தரும்" (வள். உகூசு.) 3. வருந்தாமை.

**எயில்**—1. ஊர். (உ-ம்.) "நீக்கார்முற்சூழ்காடு நீடெயிற்கொள்ளொணு" (அவிரோ. கச.) 2. புரம். (உ-ம்.) "சென்றுமூவெயிலழலெழநகை த்தவன்" (கந்தபு. திருநகர. கக.) 3. மதில். (உ-ம்.) "எயினலம்புனைகோபுரமாபுரத்து" (பா ரத. சம்பவ. கககூ.)

**எயிற்பட்டினம்**—நல்லியக்கோடனூர்.

**எயிற்றம்பு**—அலகம்பு. (சிந்தா.)

**எயிற்றி**—1. பாலைநிலப்பெண். (சூ. நிகண். உ: சுஎ.) [எயிற்றி யென்பது பாலைநிலப்பெண் களுள் உயர்ந்தவள்.] (அகப்பொருள். அகத். உக.) 2. வேட்டுவப்பெண். (உ-ம்.) "இளமர் வெயிற்றி" (சிலப். வேட்டுவவரி. உகரு. பக்.)

**எயிற்றிமார்**—எயிற்றியர். (உ-ம்.) "எயித் றிமாரெழினலத்தினுக்கு" (காஞ்சிபு. நாட். ருகூ.)

**எயிற்றியர்**—1. பாலைநிலப்பெண்கள். [எயி ற்றியர் என்பது பாலைநிலப்பெண்களுட்டாழ்ந் தோர்.] அகப்பொருள். அகத். உக.) 2. வேட்டு வப்பெண்கள். (உ-ம்.) "எயிற்றியரட்டவின்பு ளிவெஞ்சோறு" (சிறுபா. கஎரு.)

**எயிறதைப்பு**—பல்லினடியின்வீங்குகின்ற வீக்கம். (உ-ம்.) "இருநெறியின்றெறிப்பு" யார்.

**எயிறலைப்பு**—பற்கடிப்பு.

**எயிறிலி**—சூரியன். [எயிறு - பல்லு, இலி - இல்லாதவன்.]

**எயிறு**—1. பல்லு. (உ-ம்.) "வாளெயிறிலங் கநக்கான்" (இராமா. சூர்ப்ப. ருசு.) 2. பன்றிக் கொம்பு. (உ-ம்.) "உளைவரும்பெருமையோரெ யிற்றினுள்" (இராமா. கிளை. கககூ.) 3. யானை க்கொம்பு. (உ-ம்.) "இருநெடுவிசும்பிற்செல்லு மெழிலியையெயிற்றூற்பாய்ந்து-சொரிதருபுன லைவாரித்துதிக்கையால் வீசுகின்ற - பருமணி யோடையானை" (கந்தபு. தெய்வ. சoசு.)

**எயிறுதின்றல்**—பற்கடித்தல். (உ-ம்.) "தெ விட்டுரப்பியெயிறுதின்றுவைது" (பாரத. நி வாத. ககரு.)

**எயின்**—வேடச்சாதி.

**எயின்சேரி**—வேடரூர். (உ-ம்.) "எயின்சே ரியி-னுள்ளமாதர்" (கந்தபு. வள்ளி. உஅ.)

**எயின்மூன்று**-அருகனுடைய மும்மதில்கள்; அவை: உதயதரம், பிரீதிதரம், கல்யாணதரம் என்பன. (உ-ம்.) (திருநூற். கஅ. உரை.)

**எயினர்**—1. பாலைநிலமாக்கள். ( சூ. நிகண். உ: சுஎ.) [எயினர் என்பது பாலைநிலமாக்களுட்டாழ்ந்தோர்.] 2. வேடர். (உ-ம்.) "வினைகழலெயினரோமெம் வல்லையின் மீண்டுபோனான்" (கந்தபு. வள் கக.)

**எயினன்**—வேடன். (உ-ம்.) "எயினர்க்கெல்லா மிறைவனுகிய வெயினனவனை நோக்கி" (பாரத. அருச்சுனன்றவ. கரு.)

**எரல்**—ஒருகடற்சிப்பி.

**எரி**— 1. எரியென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 2. கெந்தகம். (உ-ம்.) "சவுக்காரம்பூதமெரி - யேலமிலவமிலவத்தோனுரியுரம்"(தைல. தைலவ. கஙரு.) 3. கேட்டைநட்சத்திரம். (சூ. நிகண். க: எரு.) 4. நரகம். 5. நெருப்பு. (உ-ம்.) "எரியாற்சுடப்படினுமுய்வுண்டாம்" (வள். அகசு.) 6. நெல்லிக்காய்க்கெந்தகம். (உ-ம்.) "பதமிட்டெரிபுரந்தட்டெடன" (தைல. தைலவ. கoசு.) 7. பிரபை. (உ-ம்.) " இரவியின்றியும்பகல்செயுமெரிமணி கிடந்த" (கூர்மபு. அட்டமூ. உ.) 8. புனர்பூசநட்சத்திரம்.

**எரிக்கோடி**—1. சோதிவல்லி. 2. நெருப்பின்கொழுந்து. (1, 2. ஐங்குறு.)

**எரிகரும்பு**—விறகு.

**எரிகலை**– மாதாவின்வயிற்றிலுள்ள ஒருகலை. (த. நி. போ. சுசு.)

**எரிகாசு**—காசுக்கட்டி; இதனை அகிற்கூட்டு ஐந்தினென்றென்பர். (சூ. நிகண். கஉ: ஙசு.)

**எரிகாலி**—காட்டாமணக்கு.

**எரிகுஞ்சி**—செம்மயிர்.

**எரிகுடல்**—எரிவயிறு.

**எரிகுடலன்**—மிக்கபசியுடையவன்.

**எரிகுன்மம்** — ஒருநோய்; அஃது: அட்டகுன்மங்களுள் ஒன்று. (உ-ம்.) " அட்டகுன்மம் " பார்.

**எரிகொள்ளி**—கொள்ளிக்கட்டை.

**எரிச்சல்**— 1. அழற்றல். 2. உறைப்பு. 3. எரிதல். 4. கோபம். 5. பெருங்காயம். (உ-ம்.) 'சேரப்பாதிரிகடுகுசிவப்புநாவிதிறமானவெரிச்சலொடுபொரிச்சலேழும்" (வை - ர. ஙஙு.) 6. பொறாமை.

**எரிசனம்**—நரகத்திருப்போர்.

**எரிசினம்**—கடுக்கோபம்.

**எரிசுடர்**—1. அக்கினி. 2. செவ்வொளி. 3. விளக்கு. (உ-ம்.)"பல்வகைப்-பருமணியெரிசுடர்பரப்பி" (கந்தபு. நகரழி. ஙஎ.) [அக்கினிபோலும் ஒளியென்றபடி.]

**எரித்தல்**—1. சிரணிப்பித்தல். 2. நெருப்பினாலே தகித்தல். (உ-ம்.)"மேல்வருமூஎரித்தநெருப்பதற்கு" (திருக்கோ. கசரு.)

**எரித்தோன்**— நெருப்பினாலே தகித்தவன். (உ-ம்.) "கற்றவர்விளைத்துத்திரிபுரமெரித்தோன்" (பாரத. அருச்சுனன்றவ. அ0.)

**எரிதயிலம்**—எரித்தெடுக்குந்தயிலம்.

**எரிதல்**— 1. அழற்றல். 2. கோபங்கொள்ளல். 3. சுவாலித்தல். ( உ-ம். ) "அநலொன்றிடவெறிந்து" (தாயு. வண்ணம்.) 4. நெருப்பிலே வேகுதல். ( உ-ம். ) "எரிகின்றேனுனைப்போல" (கந்தபு. காமதகன. ககo.) 5. பிரகாசித்தல். (உ-ம்.) "அதினெரியும் வெய்யவனமூந்தினன்" ( இராமா. கிளைகண். உக. ) 6. பொறாமைகொள்ளல். 7. வெந்தற்றுப்போதல். ( உ-ம். ) "எரிந்தனநெடுநிலையேழும்" (இராமா. இலங்கையெரி. சுக.)

**எரிதைலம்**—எரிதயிலம்.

**எரிநரகம்**—ஒரு நரகம்.

**எரிநாள்**—கார்த்திகை நட்சத்திரம். (சூ. நிகண். க: சுஅ.)

**எரிப்பு**— 1. எரித்தல். (உ-ம்.) "எண்ணில்காமமெரிப்பினுமேற்செலா" (சிந்தா. குணமா. கசஅ.) 2. பொறாமை.

**எரிப்புறம்**—நரகம்

**எரிபடுவன்**— 1. ஒருநோய். 2. பிளவை.

**எரிபந்தம்**— 1. எரிச்சல். 2. தீவர்த்தி.

**எரிபிடாரி**— 1. எரிச்சலுடையவள். 2. துர்க்கை.

**எரிபுழு**—கம்பளப்பூச்சியினொருவகை.

**எரிபூச்சி**—ஒருவகைப்பூச்சி.

**எரிபோத்தல்**—அழலைமூட்டுதல். (சிலப்.)

**எரிபொழுது**—அஸ்தமனகாலத்திலே இலங்கும்பொழுது.

**எரிமணி**— 1. பிரகாசமுள்ள மணி. 2. மாணிக்கமணி. (உ-ம்.) "மரகதங்கோமேதகந்துகிர்தரளம் வைரம் வைதூரியநீல - மெரிமணிபுட்பராகமென்றிவற்றிற்காகரம்" (பாரத. இந்திர. கஉ.)

**எரிமருந்து**—எரித்தெடுத்த மருந்து.

**எரிமலர்**—முருக்கிதழ். (சிந்தா.)

**எரிமுகன்**—அக்கினிமுகாசுரன்; இவன்: சூரபன்மன் புதல்வருளொருவன். (உ-ம்.) "எரிமுகனவ்விடையிறப்ப" (கந்தபு.அக்கினி.கசஅ.)

**எரிமுகி**—1. சேங்கொட்டைமரம். 2. சேராங்கொட்டை, (உ-ம்.) "உயராடு" பார். (தைல. தைலவ. கஉ.)

**எரிமுட்டைப்பீநாறிமரம்**—வெதுப்படக்கி.

**எரியல்**— 1. எரிதல். 2. எரிந்தது. 3. பிரகாசித்தல்.

எரியவிட்டமருந்து—நீற்றினபற்பம்.

எரியவிழித்தல்—கோபத்தோடு பார்த்தல்.

எரியாடி— சிவன். ( உ-ம். ) "முத்தி-வழங்கும்பிரானெரியாடி தென் றில்லைமணிநகர்க்கே" (திருக்கோ. கஉஎ.)[ஊழித்தீயின்கணாடுவானென்றபடி.]

எரியிடுதல்—நெருப்பையிடுதல்.

எரியூட்டுதல்— நெருப்புக்கிரையாக்குதல். (உ-ம்.) "வையெரியூட்டியவையை" ( சிலப். கொலை. ௯௯.)

எரியோம்பல்— அக்கினிகாரியஞ்செய்தல். (உ-ம்.) "ஏந்தெரியோம்பி" (இராமா. கங்கை. உசு.)

எரியோன்—அக்கினிதேவன். (உ-ம்.) "ஒள்ளெரியோனுமொளித்தான்" (இராமா. இலங்கையெரி. சுச.)

எரிவட்டம்— ஏழுநரகவட்டத்தொன்று.

எரிவண்டு-பட்டவிடமெரியும் வண்டு, கண்ணிலடிக்கும் வண்டு.

எரிவந்தம்— 1. எரிச்சல். 2. தீவர்த்தி. 3. மிகவெரிக்குமொருநோய்.

எரிவநம்—சுடுகாடு.

எரிவரியன்—ஒருவகைப்பாம்பு.

எரிவிழித்தல்— 1. அக்கினிக்கண்ணாற்பார்த்தெரித்தல். (உ-ம்.) "மதனைவேவவெரிவிழித்து"( சி. சி. க: ருகூ. ) 2. கோபித்துப்பார்த்தல். (உ-ம்.) "என்னலுமவ்வாயிரருமேற்றெரிவிழித்து" (கந்தபு. அவைபுகு. கருரு.)

எரிவு— 1. அழற்சி, எரிதல். (உ-ம்.) "சிந்தையையெரிவுசெய்து" ( இராமா. சடாயுவு. ககச.) 2. கோபம். 3. பொறாமை.

எரு—பசளை, சாணி. (உ-ம்.) " பிடித்தெருவும்-வேண்டாதுசாலப்படும்" (வள். கoகஎ.)

எருக்கட்டல்—பயிரிடுநிலத்திலே எருவிடும்பொருட்டுமாடுமுதலியன கட்டுதல்.

எருக்கட்டு— 1. கிடைவைக்கை. 2. கிடைவைத்தகொல்லை.

எருக்கம்—1. எருக்கம்பூமாலை. (உ-ம்.) "வாலுழையெருக்கமுங்-கரந்தையும் வன்னியும்"(கல்லா. உo.) 2. எருக்குச்செடி.

எருக்கல்—1. அடித்தல். (உ-ம்.) "பைம்புதலெருக்கி " (பெரும்பா. ககஉ.) 2. குட்டுதல். ( உ-ம். ) " எருக்கிவன்கரம்பிறையெனப்பிடர்கொடுத்தெற்றி" (தணிகை. வீரா. சசு.) 3. கொல்லல். 4. சுமத்தல். 5. மோதல். (ஞானாமிர்தம்.) 6. வெட்டல். (உ-ம்.) " சேணுறுபிடவமொடு பைம்புதலெருக்கி" (முல்லை. உரு.)

எருக்கலை—எருக்கஞ்செடி.

எருக்களம்— 1. ஆநிலை. 2. எரு இருக்குமிடம்.

எருக்கு— 1. எருக்கென்னேவலும், தெரிநிலைவினைபகுதியும். 2. ஒருசெடி. (உ-ம்.) "மண்ணோங்கியவெருக்கின்முகிழ்நோக்கும் " (தணிகை. களவு. உஎச.) 3. வெள்ளெருக்கு.

எருக்குதல்—எருக்கல்.

எருச்சாட்டி—எருப்பட்டநிலம்.

எருத்தங்கோட்டல்— கழுத்தைச்சாய்த்தல். (உ-ம்.) "கமுகின்கண்போற்கலனணியெருத்தங்கோட்டி" (சிந்தா. சுர. சுஉ.)

எருத்தடி—(இலக்கணம்) ஈற்றயலடி.(உ-ம்.) "எருத்தடிநைந்தும்" (யாப்-காரிகை. செய். க.)

எருத்தம்— 1. கலிப்பாவினோருறுப்பாகியதரவு. (வீரசோ. யாப். கo. உரை.) 2. கழுத்து. (உ-ம்.) "நின்-னிகழ்பாடுவோரெருத்தமடங்க" (புறநா. சo.) 3. புறக்கழுத்து, பிடர். (உ-ம்.) "யானையெருத்தத்தணியிழையார்மேலிரீஇ" (சிலப். மங்கல. ௬௯. பக்.)

எருத்து—1. ஈற்றயல். 2. கழுத்து. (உ-ம்.) "எருத்துவவ்வியபுலிபோன்றன"(புறநா. ச.)3. பிடர்.

எருத்துக்கரணம்—ஒருகரணம்.

எருத்துக்காளை—இளவெருது.

எருத்துத்திமில்—விடைமுரிப்பு.

எருத்துப்பூட்டு—ஏர்ப்பூட்டு.

எருத்துமாடு—இடபம்.

எருத்துவாலன்—ஒருகுருவி.

எருதடித்தல்—1. உழுதல். 2. போரடித்தல்.

எருது—1. இடபம். (உ-ம்.) "எருதுடையான்வேளாளன்"(நான்மணி. ருச.) 2. இடபராசி.

எருதுமறித்தல்— பசுவுடனே எருது புணர்தல்.

எருதுரப்பல்— எருதையதட்டியோட்டல்.

எருந்தி—இப்பி, ஏராமுட்டி.

எருந்து— 1. உரல். (சூ. நிகண். கக: ரகர. ௯௯.) 2. கிளிஞ்சில். (உ-ம்.) "முத்தம்-வாள்வாயெருந்தின்வயிற்றடக்கி" (சிறுபா. ருஅ.)

எருமணம்—1. சாணிநாற்றம். 2. செங்குவளைப்பூண்டு.

எருமன்றம்— இடையர்களூரிலுள்ள அம்பலம். (மணிமே.)

எருமுட்டை—எருவறட்டி.

எருமுட்டைப்பீநாறி — வெதுப்படக்கிப்பூண்டு.

எருமை—ஒருமிருகம். (உ-ம்.) "குடம்புரைசெருத்தற்குவளைமேய்கயவாய்க்குவிமுலைப்படர்மருப்பெருமை" (சிந்தா. மண்மக. க.)

எருமைக்கடா—எருமையாண்.
எருமைக்கற்றாழை—ஒருவகைக்கற்றாழை.
எருமைக்காஞ்சோறி — ஒருவகைக் காஞ்சொறி.
எருமைக்குழவி—எருமைக்கன்று.(ஐங்குறு.)
எருமைக்கோற்றன்— ஒருவகைக் கொற்றான்கொடி.
எருமைச்சுறா—ஒருவகைமீன்.
எருமைத்தக்காளி— ஒருவகைத் தக்காளிச்செடி.
எருமைநல்லேறு—எருமைக்கடா.(ஐங்குறு.)
எருமைநாக்கி—1. ஒருவகைமீன். 2. சாணாக்கிப்பூண்டு.
எருமைநாக்கள்ளி—ஒருவகைக்கள்ளி.
எருமைநாக்கு—ஒருவகைமீன்.
எருமைநாகு—எருமைப்பெண்கன்று.
எருமைநாத்தோட்டி— வைப்புப்பாஷாணமூப்பத்திரண்டிலொன்று.
எருமைப்பாற்சோற்றி — ஒருவகைப்பாற்சொற்றிப்பூண்டு.
எருமைப்புனிற்று—ஈன்றணிமையையுடையபெண்ணெருமை. (ஐங்குறு.)
எருமைப்போத்து— எருமைக்கடா. (ஐங்குறு.)
எருமைமறம்—மற்போர். (சிந்தா.)
எருமைமுல்லை—ஒருவகைமுல்லை.
எருமைமுல்லைத்தீவு— யாழ்ப்பாணத்துக்கு முன் வழங்கப்பட்ட ஒரு பெயர்.
எருமைமுன்னை—ஒருமரம்.
எருமையூர்தி — இயமன். (சூ. நிகண். க: கூ0.) [எருமை; ஊர்தி - வாகநம்.]
எருவடைத்தல்— ஆடுமாடுகளடைத்து எருப்படுத்துதல்.
எருவறட்டி—காய்ந்தசாணி.
எருவாரம் — எரு இட்டதற்காக நிலத்தில் வரும் பிரயோசநப்பாகம்.
எருவிடுதல்—1. எருப்பெய்தல். (உ-ம்.) "ஏரினுநன்றாலெருவிடுதல்" (வள். க0கூ அ.) 2. மலங்கழித்தல்.(உ-ம்.)"எருவிடும்வாசற்கிருவிரன்மேலே" (திருமந். பிரத்தி. எ.)
எருவிடுவாசல்—மலவாசல். (உ-ம்.) "எருவிடும்வாசற்கிருவிரன்மேலே"(திருமந்.பிரத்தி. எ.)
எருவை—1. இரத்தம். (உ-ம்.) "எருவையினுருமிக்கே" (கந்தபு. மார்க்கண்டேய. கூச.) 2. கழுகு. (உ-ம்.) "காவல்செய்யெருவையின்றலைவன்" (இராமா. சடாயுவு. கக.) 3. கழுதை. 4. கொறுக்கச்சி. (குறிஞ்சி. கூஅ. உரை.) 5. கோரை, கோரைக்கிழங்கு. (உ-ம்.) "மாதவனுந்திக்கந்தமட்பனையெருவைதொட்டி" (தைல. தைலவ. கூச.) 6. செம்பு. (பிங்கல. கூஉஉகூ.) 7. தலைவெளுத்து உடல்சிவந்திருக்கும்பருந்து. (உ-ம்.) "விசும்பாடெருவை பசுந்தடிதடிப்ப" (புறநா. கூச.) 8. நாணல். 9. பஞ்சாய்க்கோரை. (உ-ம்.) "எருவைசெருவிளைமணிப்பூங்கருவிளை" (குறிஞ்சி. கூஅ.) 10. யானை.
எல்—1. இகழ்ச்சி. 2. இரவு. 3. ஒளி.(உ-ம்.) "விழித்தவாண்முகத்தி-னெல்லிழந்திலன்"(இராமா. கர. ககூகூ.) 4. சூரியன். (உ-ம்.) "கட்கமழ்நெய்தலூதியெற்பட" (திருமுரு. எச.) 5. நாள். 6. பகல். (உ-ம்.) "பானுமேவருமெல்லென்ச்செய்தலின்" (கந்தபு. குமாரபுரி. ரு.) 7. வெயில். (1, 2. பிங்கல. கூஉஉரு.)
எல்லம்—இஞ்சி.
எல்லரி— 1. கைம்மணி. (உ-ம்.) "எல்லரியோதைபொங்கி யெழுகடலொலியைவீட்ட" (இரகு. திக்கு. சரு.) 2. சல்லியென்னும்வாத்தியம். (புறநா.)
எல்லவர்தமக்கும்— எல்லாருக்கும். (உ-ம்.) "எல்லவர்தமக்குமுத்தியிருங்கனியுதவும்" (கந்தபு. வள். உருஅ.)
எல்லவரும்—எல்லாரும். (உ-ம்.) "நா-மெல்லவரும்" (கந்தபு. தேவர்புலம்புறு. கக.)
எல்லவன்—1. சந்திரன். 2. சூரியன்.(உ-ம்.) "எல்லவன்வீழுமுன்னம்யாரையுந்தொலைத்து" (பாரத. பதினெட். கககூ.)
எல்லா— 1. தோழனைவிளிக்குமொருமுன்னிலைப்பெயர்.(உ-ம்.)"எல்லாநீ, முனர்த்தாஞென்றுகுறித்தாய்போற்காட்டினை" (கலி. கூக.) 2. தோழியை விளிக்குமொரு முன்னிலைப்பெயர். (உ-ம்.) "எல்லாவிஃதொத்தனென்பெறான்" (கலி. கூக.)

எல்லாம்— அகண்டமும் எனக்கருத்துவைத்து உயர்திணை யஃறிணைகளிலும், தன்மைமுன்னிலைபடர்க்கையென்னும் மூவிடங்களிலும் பிரயோகிக்கப்படும் ஒரு பொதுச்சொல். (உ-ம்.) "உள்ளஞ்சோர்ந்துதியங்குவார்சிந்தரெல்லாம்" (இரகு. அயனெ. க0உ.) [உயர்திணைப்படர்க்கை.] "எய்திடுஞ்சிறுமையெல்லாம்" (கந்தபு. எதிர்கொள். உ0.)[அஃறிணைப்படர்க்கை.]"நீவிரெல்லா - மடியனேன்றன்பால்வந்தநிமித்தமென்"(கந்தபு,மணம்.அ.)[உயர்திணைமுன்னிலை.] "நாயகற்கிதனைக்கூற நாமெலாம் போதுமென்றார்" (கந்தபு. திருவவ. ச.) [உயர்திணைத்தன்மை.] [இஃது ஆறும் வேற்றுமையொழிந்தவேற்றுமையுருபுகளை யேற்குமிடத்து மகரங்கெட்டு அஃறிணையிலே உருபின்முன் அற்றுச்சாரியையும், பின் முற்றும்மையும் பெற்றும், உயர்

திணையிலே தன்மைப் பன்மையிலே உருபின் முன் நம்முச்சாரியையும், பின் முற்றும்மையும் பெற்றும்வரும். (உ-ம்.) "எல்லாவற்றையும்""எல்லாநம்மையும்".

**எல்லார்**—தேவர். (சிந்தா.

**எல்லாநும்**—யாவரும். (உ-ம்.) "விண்ணோ-ரெல்லாருமிறந்தாரோ" (கந்தபு. காமதகன. ௧௰௯.)

**எல்லி**—1. இராத்திரி. (உ-ம்.) "சோமனுமுடு-வும்போன-வெல்லியம்பொழுதுபோன்றே"(கந்தபு. இந்திரன்கரந். ௨௧.) 2. சூரியன்.

**எல்லிநாதன்**— } சந்திரன். [எல்லி - இரா. நாதன் - தலைவன்.]
**எல்லிநாயகன்**— }

**எல்லிப்பகை**— சூரியன். [எல்லி - இரா. பகை. விரோதி.]

**எல்லிமன்**—எல்லிநாதன்.

**எல்லிமனை**—தாமரை. (உ-ம்.) "தந்திமருப்-பல்லிவாராகிசிக்குவைசின்னிமுஸ்தைபிரம்-பெல்லிமனைமுருக்கிணையிந்திவரம்" (தைல. தைலவ. ௧௯௫.) [எல்லி - சூரியன். மனை - மனைவி.]

**எல்லியறிவன்**—கோழிச்சேவல்.

**எல்லிநும்**— எல்லீரும். (உ-ம்.) "எல்லிருமேகியீது-நின்றிடும்வனத்தினூடே நிலைப்படவிருத்திரென்றான்" (கந்தபு. திருநகர. ௧௧௯.)

**எல்லிநள்**—விடியற்காலத்திருள். (சிந்தா.)

**எல்லினன்**—சூரியன். (உ-ம்.) "புயங்கமுண்டுமிழ்ந்த-வெல்லினனென விளங்கினான்" (கந்தபு. அக்கினி. ௨௨௯.)

**எல்லீநும்**—நீவிர் யாவரும். (உ-ம்.) "குவலயத்து-ளெல்லீருமுறங்குதிரோ." (இராமா. சூர்ப்ப. ௧௧௯.)

**எல்லு**—சூரியன். 2. நாள்.

**எல்லெண்**—பன்னிரண்டு. (உ-ம்.) "கடுநிசி நீர்முத்தங்காட்டசை சத்தியெல்லெண்" (தைல. தைலவ. ௬௧.)

**எல்லே**—ஓரதிசயவிரக்கச்சொல். (உ-ம்.) "எல்லேயுனைநம்புவதென்" (கந்தபு. அக்கினி. ௨௪௰.) 2. வெளியே. (சிந்தா.)

**எல்லேங்களும்**—நாமெல்லோரும். (உ-ம்.) "இங்கு நினதடியேமெல்லேங்களுமரற்ற" (கந்தபு. சயந்தன்பு. ௬௰.)

**எல்லேமும்**—நாமெல்லாரும்.

**எல்லை**—1. அவதி. 2. அளவு. (உ-ம்.) "எல்லைதீராசிகூறி" (கந்தபு. அசுரர்யாக. ௯௪.) 3. ஆதிதொடங்கி அந்தம்வரையுமுள்ள இடம். (உ-ம்.) "அம்பலத்தோனெல்லை செல்குறுவோர்" (திருக்கோ. ௧௧௭.) 4. ஆதிதொடங்கி அந்தம்வரையுமுள்ளகாலம். (உ-ம்.) "இவ்வகையாமினியெல்லைமுற்றவும்" (கந்தபு. குமார. ௫௯.) 5. இடம். (உ-ம்.) "சீர்பயிலருச்சனைசெய்தவெல்லையாங் - கார்பயில்சாலைசூழ்கந்தமாதநம்" (சேதுபு. கந்த. ௨.) 6. எல்லைப்பொருள். (உ-ம்) "குணகடல்குமரிகுடகம் வேங்கட-மெனுநான்கெல்லையின்" (நன். சிறப்புப்பாயிர.) 7. காலவெல்லை, காலக்கூற்றின்முடிவு. (உ-ம்.) "பாருடைத்தேயமுற்று, மெல்லைப்பொழுதுமயக்குற்ற" (கந்தபு. அகத்திய. ௮.) 8. கூப்பிடுதூரம். 9. சூரியன். (உ-ம்.) "எல்லைவந்திடுதலும்" (கந்தபு. அசுரர்தோற்ற. ௯௪.) 10. நாள். 11. பகல். (உ-ம்.) "துங்கநன்முநிபணித்துவவெல்லையில்" (கந்தபு. பாயிர. ௪௧.) 12. பொழுது. (உ-ம்.) "தொட்டிலிற்றுயிலுமெல்லை" (கந்தபு. புதல்வரை. ௪.) 13. மரணகாலம். (உ-ம்.) "எல்லைக்கு வரம்பாய விடும்பைகூர்மருண்மாலை" (கலி. ௧௨௧.) 14. முடிந்தவிடம், வரம்பு. (உ-ம்.) "மண்ணும்வானமுமாதிரவெல்லையும்" (கந்தபு. சுக்கிர. ௧௰.) 15. முடிவு. (உ-ம்.) "ஆயுளினெல்லையுமெய்தத்-தத்தனும் விண்ணிடைசார்ந்தனனன்றே" (கந்தபு. மார்க்கண்டேய. ௧௪௯.)

**எல்லைக்கட்டு**— 1. வரம்பு. 2. கட்டுப்பாடு.

**எல்லைக்கல்**— எல்லையறிய நிறுத்திய கல்.

**எல்லைக்காவல்**— ஊரெல்லையிற்காக்கும் வயற்காவல்.

**எல்லைக்குறிப்பு**— எல்லையைக்காட்டுமடையாளம்.

**எல்லைக்கேடு**— 1. இடமொவ்வாமை. 2. சமயமொவ்வாமை.

**எல்லைகட்டுதல்**— 1. முடிவுகட்டுதல். 2. வரம்புவைத்தல். 3. வரையறுத்தல்.

**எல்லைகடத்தல்**—அளவைக்கடத்தல்.

**எலைகுறித்தல்**— 1. அவதிகுறித்தல். 2. எல்லைகட்டுதல்.

**எல்லைகெட்டநேரம்**— ஒவ்வாதநேரம்.

**எல்லைத்தீ**—ஊழித்தீ.

**எல்லைப்படுத்தல்**— 1. அளவுபடுத்தல். 2. எல்லைகட்டுதல். 3. தீர்த்தல்.

**எல்லைப்படுபொருள்**— மற்றோரிடத்தைத் தனதெல்லையாகவுடையது.

**எல்லைப்பத்திரம்** — எல்லைவழக்குத்தீர்த்து எழுதும்பத்திரம். (மிரு. ௪. ௯௪.)

**எல்லைப்பிடாரி**—தெருச்சந்தியில்வசிக்கும் ஒரு தேவதை.

**எல்லைப்பொருள்**— ஓரிடத்தோடுதொடுத்து அதன்முடிவிலிருக்குமது.

எல்லைமாநம்—எல்லையளவு.
எல்லையின்மை—அளவின்மை. (உ-ம்.) "எல்லையில்காலநீங்கியிருந்தனம் " (கந்தபு. வள். உருஉ.)
எல்லோ—ஓரதிசயவிரக்கச்சொல்.
எல்லோமும்—நாமெல்லாரும். (உ-ம்.) "ஒயுமுணர்வெய்தியெல்லோருமோடினமால்" (கந்தபு. மார்க்கண். கூஎ.)
எல்லோநும்—சகலரும். (உ-ம்.) "கடவுளரெல்லோரும்" (கந்தபு. மோன. ரு.)
எல்லோன்—சூரியன்.
எல்வை—1. காலம். 2. நாள்.
எலாம்— எல்லாம். (உ-ம்.) "பூவினயகன் முதற்புகலும்வானவரெலாம்" (கந்தபு. திருவவ. ௬o.) " வேதநூல்சாத்திரங்கள் வேள்விகளெலாம்" (சேதுபு. இராமநாத. ௬o.)
எலி— 1. எலி. (உ-ம்.) " எலிப்பகை நாகமுயிர்ப்பக்கெடும்" (வள். எசுக.) 2. கள். 3. கள்ளி. 4. பூரநட்சத்திரம். (சூ. நிகண். க: எக.) 5. மது. 6. மூஷிகம். (உ-ம்.) "வலிமிகுத்தமும்மதத்துவாரணத்தையையோ- வெலியிழுத்துப்போகின்றதென்" (காளமேகம்.)(2, 5. பிங்கல. ௬உஉச.)
எலிச்செவி — 1. எலியின்செவி. (உ-ம்.) " ஆதிபுகழணியாதசெவியுமெலிச்செவியாம் " (வேதாரணியபு. மேன்மை. அஎ.) 2. சவரியார் கூந்தலென்னுமொருபூண்டு.
எலிச்செவித்துத்தி— எலிச்செவிப்பூண்டு.
எலித்திசை—வடமேற்றிசை.
எலித்துநமம்—தான்றிமரம்.
எலிப்பகை—பூனை.
எலிப்பாகம்— } காட்டாமணக்கு.
எலிப்பாலை— }
எலிப்பாஷாணம்— ஒருவகைப்பாஷாணம்.
எலிப்பிடுக்கன்—ஒருவகைப்பூண்டு.
எலிப்புலி—பூனை.
எலிப்புற்று—எலிவளை.
எலிப்பொறி—எலியைப்படுக்கும் யந்திரம்.
எலிமயிர் — புடவைநெய்தற்குக்கருவியாயுள்ளது.
எலிமயிர்ப்போர்வை— எலிமயிராற்செய்யப்பட்டபோர்வைச்சீலை. (உ-ம்.) "எலிமயிரின் போர்வையுங்கழித்திலாரரைக்கணமும் யாவரும்" (காஞ்சிபு. கழுவாய். ௬௩அ.)
எலியளை—எலிப்புற்று.
எலியாமணக்கு—ஒருவகையாமணக்கு.
எலியால்—காட்டாமணக்கு.
எலியோட்டி—ஓட்டொட்டி.
எலியோட்டி—குருக்குப்பூண்டு.
எலியோடி— நடுமுகட்டிலேவைக்கும் உருட்டுமரம்.
எலிவளை—எலிப்புற்று.
எலு— 1. கரடி. (உ-ம்.) "துன்றியவேங்கையரிமரையெலுவுந்தழனிசெய்தோடுவதொருபால். (நல். பாரத. சாவித். சச.) 2. தோழமை.
எலும்பன்—எலும்பு புறப்பட்டவன்.
எலும்பி—ஒருமரம்.
எலும்பிலி—1. ஒருமரம். 2. புழு.
எலும்புக்கூடு —எலும்புக்கோவை.
எலும்புக்கோறை—எலும்புத்துவாரம்.
எலும்புச்சீப்பு— 1. எலும்பினாற்செய்யப்பட்ட ஒருவகைச்சீப்பு. 2. விலாவெலும்பு.
எலும்புருக்கி— உடம்பை வாட்டி எலும்பு வற்றித்தோன்றச்செய்யும் ஒருநோய். (உ-ம்.) " பீதிதருமெலும்புருக்கிக்கெலும்புருக்கியாம் " (தைல. தைலவ. சஅ.)
எலுமிச்சை— ஒருமரம். (உ-ம்.) (சூ. நிகண். ச: கஎ.) [இது: காய், பழம் முதலிய வருமொழியோடு சேரும்போது எலுமிச்சங்காய், எலுமிச்சம்பழம் என இறுதி ஐகாரங்கெட்டு அம்முச்சாரியை பெற்றுவரும்.]
எலுவன்—தோழன். (சூ. நிகண். உ: சஉ.)
எலுவை—தோழி. (உ-ம்.) "எசறவுனக்கெலுவையாகுவதெனெண்ணம்" (பாரத. நாடுகரந். ௬௬.)
எவ்—எவை. (தொல்கா.)
எவ்வத்தள்—வருத்தமுடையவள். (உ-ம்.) "அழிவொடுகலங்கியவெவ்வத்தள்" (கலி. ச.)
எவ்வது—யாதொருவாறு. (உ-ம்.) "எவ்வதுறைவதுலகம்" (வள். சஉசு.)
எவ்வநம்—1. இளமை. (உ-ம்.) "எவ்வநவாயுளானது" (ஞானவா. வைரா. சுக. உரை.) 2. களிப்பு. (உ-ம்.) "தனதெவ்வநந்தனைநினக்கே வழங்கிட " (நல். பாரத. யயாதி. கoo.) [1. யௌவநம்.]
எவ்வநோய்——தீராதநோய். (உ-ம்.) "எனைத்தொன்று,மெவ்வநோய்தீர்க்குமருந்து"(வள். கஉசக.)
எவ்வம்—1. இளிவரவு. (உ-ம்.) "இலனென்னுமெவ்வமுரையாமையீதல்" (வள். உஉ௬.) 2. கபடம். (உ-ம்.) "எவ்வமாகவந்தெய்தி"(பெரியபு. திருநாவு. அ௬.) 3. குற்றம். (உ-ம்.) "எவ்வக்கொடியோன்" (கந்தபு. தாரக. எசு.) 4. தனிமை. 5. தீராதநோய். (உ-ம்.) "எவ்வநோய்" பார். 6. மானம். ( புறப்பொ. ) 7. வருத்தம். (உ-ம்.) " துனிகூரெவ்வமொடுதுயராற்றுப்படுப்ப" (சிறுபா. ௬க.) 8. வெறுப்பு. (உ-ம்.)"கொ

வ்வையங்கனிவாய்க்குணமாலேயோ - டெவ்வந்தீர்ந்திருந்தாளிதுகூறினன்" (சிந்தா. குண. உச.)

**எவ்வநும்**— யாவரும். (உ-ம்.) "அவ்வாறம் பல்வகைத்தாகுமாங்கவை - யெவ்வரும்பெறுகிலர்" (கந்தபு. மாயையுப. கச.)

**எவ்வளவு**— எம்மட்டு. (உ-ம்.) "அல்கும் பயனெவ்வளவாம்" (தணிகை. அகத்திய. அஎ.)

**எவ்வாறு**—1. எப்படி. (உ-ம்.) "உயங்கிய வாருயிரெவ்வாறு தாங்குது மொண்புவிக்கே" (தணிகை. களவு. ௬௨௬.) 2. எவ்வழி.

**எவ்வி**—ஒருவேள். (புறநா.)

**எவ்விடம்**—எந்தவிடம்.

**எவ்வெத்தேயம்**—எந்தெந்தத்தேசம்.(உ-ம்.) "எவ்வெத்தேயத்திலுள்ளாரிவரென" (திருவிளை. மெய்க்கா. உக.)

**எவ்வெலாம்**— எல்லாமெல்லாம், எல்லாவற்றினுமுள்ளவெல்லாம். (உ-ம்.) "எவ்வெலாவண்டம்" (கந்தபு. சூரனர. தக.)

**எவ்வெவர்க்கும்**— எந்தெந்த ஆட்களுக்கும். (உ-ம்.) "எவ்வெவர்க்குமிறைவர்க்குநல்கியே" (கந்தபு. திருவிளை. கஉ௬.)

**எவ்வை**—எந்தங்கை. (ஐங்குறு.)

**எவ்வையர்**—எந்தகையர். (புறப்பொ.)

**எவட்சரம்**—எவட்சாரம்.

**எவட்சாரம்**— வெடியுப்பு. [யவக்ஷார.]

**எவண்**— 1. எவ்வண்ணம். (ஞானமிர்தம்.) 2. எவ்விடம். (உ-ம்.) "எவண்படர்ந்தனளெனா" (காஞ்சிபு. கழுவாய். கக.)

**எவர்**—யாவர். (உ-ம்.) "பீழைசெய்வார்கட்குதவிசெய்வாரெவரே" (தணிகை. களவு. ௬எ௬.)

**எவர்க்கும்**—1. எல்லார்க்கும். (உ-ம்.) "நின்றவரெவர்க்குந்தலைவனுமுரிமை வழங்கினன்" (பாரத. நாடுகரந். க௬.) 2. ஒருவருக்கும்.(உ-ம்.) "எழிலுடைக் கொண்டல் வண்ண னகப்பட்டானெவர்க்குமென்றான்" (பாரத. கிருட்டிண. களச.)

**எவரும்**—எல்லாரும். (உ-ம்.) "இன்னேரெவருஞ்சிவனேயென்றிரங்கலோடும்" (கந்தபு. திருக்கல் சக.)

**எவற்றையும்**— எல்லாவற்றையும். (உ-ம்.) "ஆரையுமெவற்றையுமச்சஞ்செய்தவே" (கந்தபு. திருவவ. ௫௦.)

**எவன்**— 1. எவ்வண்ணம். (ஞானமிர்தம்.) 2. எப்படி. (உ-ம்.) "எவன்பலமொழிகுவம்" (கலி. ௫.) 3. யாது. (உ-ம்.) "அறியார்போல வறைந்ததெவன்" (சேதுபு. பிரமகத். ௬.) 4. யாவன். 5. யாவை. [இஃது, அஃறிணையிலே என்ன என வழக்கிலும், என் எனச்செய்யுளிலும்வரும்.]

**எவை**—யாவை.

**எவையும்**—யாவையும். (உ-ம்.) "அவையெவையுந்தா, நின்னவாகவோ" (கந்தபு. தவங். கஎ.)

**எழல்**—1. உதித்தல். (உ-ம்.) "அன்னவடனதுகாளிமங்கழிப்ப வங்கதிலேயைவந்தெழலும்" (கந்தபு. திருநகர. எஉ.) 2. எழும்பல். (உ-ம்.) "அமரைவேட்டுவந்தெழலுறமனத்தினர்" (இராமா. கரன்வ. ச௬.) 3. புறப்படுதல். (உ-ம்.) "துண்ணெனவெழலுற்றான்" (கந்தபு. தவங்கா. க.) 4. மேற்பட்டுவருதல். (உ-ம்.) "மீதெழறணிபன்றே" (கந்தபு. அசுரர்யா. ௨௫.)

**எழாத்தோள்**—முதுகிட்டார்மேற்செல்லாததோள். (பத்துப்.)

**எழால்**—1. புல்லூறென்னுமொரு பறவை. (ஐங்குறு.) 2. மிடற்றிலிருந்தெழுமின்னிசை. (உ-ம்.) "வசந்தவீணை, களம்படுமெழாலினேடு கைவிரனடத்தி" (திருவிளை. தருமிக்கு. எ௬.) 3. யாழ். (உ-ம்.) "பாடல்பற்றியபயனுடையெழாஅல்" (பொருநராற்று. ௫௬.) 4. யாழினெழுமின்னிசை. (உ-ம்.) "எழாலேயன்னசொலேந்திழைமாதரார்" (கந்தபு. திருக்கல். க௫.)

**எழில்**— 1. அசுகை. 2. அழகு. (உ-ம்.) "எழிலுடைக்கொண்டல்வண்ணன்" (பாரத. கிருட்டிண. களச.) 3. இளமை. 4. உயர்ச்சி. (உ-ம்.) "பகட்டெழின்மார்பின்" (புறநா. க௬.) 5. எழுச்சி. (உ-ம்.) "நுண்மாணுழை புலமில்லானெழினல- மண்பாண்புனைபாவையற்று" (வள். ௪௦எ.) 6. பெருமை. (உ-ம்.) "அறுமருப்பெழிற்கலே" (புறநா. உ௬.) 7. வண்ணம். 8. வலி. (பிங்கல. களச௬க.) 9. வெளிப்பட்டுத்தோன்றுதல். (உ-ம்.) கடாதியெழிறருமியற்றுவானல்" (சி. சி. க: ௬.) [எழு - பகுதி இல் - விகுதி.]

**எழில்படுத்தல்** — அலங்கரித்தல். (உ-ம்.) "வீதிக - ளெண்ணருந்திருவுறவெழில்படுத்தினன்" (கந்தபு. வரைபுனே. க௦.)

**எழிலி**—1. கடையெழுவள்ளலிலொருவன். (சூ. நிகண். உஉச.) 2. மேகம். (உ-ம்.) "இந்திரதநுவோ டிந்திரனெழிலி யிடைமறைந்தனனென" (பாரத. குருகுல. அச.)

**எழிலிய**—அழகுபெற்ற. (உ-ம்.) "எழிலிய செம்பொறி" (புறநா. ௬அ.)

**எழிற்கை**—அழகுபெறக்காட்டுங்கை; இஃது: அகக்கூத்திற்குரியது. (சிலப்.)

**எழினி**—1. இடைச்சீலே. 2. கடையெழுவள்ளல்களிலொருவன். (உ-ம்.) "பொய்யாவெழினிபொருதுகளஞ்சேர" (புறநா. உ௩௦.) [நிக

ண்டிலே கடையெழுவள்ளல் பெயரிலே எழி வி எனக்கொள்ளப்பட்டது.] 3. திரைச்சீலை. (உ-ம்.) "பொய்கைவெளியுருதமரரிட்ட-வெழி னிகள்" (கந்தபு. திருவவ. ககக.) 4. உரை. (சிந்தா.)

**எழு**— 1. உருக்கு. 2. உழலைமரம். 3. எழு ச்சி. (உ-ம்.) "எழுவுறுகாதலால்" (இராமா. சூர்ப்ப. கூ.) 4. எழுவென்னேவலும், தெரிநி லைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 5. கணையமரம். (புறநா.) 6. தம்பம். 7. வளைதடி. (உ-ம்.) "சுடர்வேலெழுநாஞ்சில்" (கந்தபு. தாரகன்வதை. கடுஎ.)

**எழுகடல்**— உப்புக்கடல், பாற்கடல், தயிர்க் கடல், நெய்க்கடல், கருப்பஞ்சாற்றுக்கடல், தே ன்கடல், நன்னீர்க்கடல் என்று சொல்லப்படும் ஏழுகடல்கள். (உ-ம்.) "பரவுமிவ்வுலகினுப்புப் பாறயிர்நேய்யேகன்ன - விரதமாமதுநீராகுமெ ழுகடலேழுதீவும் - வரன்முறைவிரவிச்சூழும்" (கந்தபு. அண்டகோச. உ0.)

**எழுகூற்றிருக்கை**— சித்திர கவிகளுள் ஒன் று; அஃது: ஏழுகூறாய் முதற்கூறு மூன்றறை யும் இரண்டாங்கூறு ஐந்தறையும் மூன்றாங் கூறு ஏழறையும் நான்காங்கூறு ஒன்பதறையும் ஐந்தாங்கூறு பதினொரு அறையும் ஆறாங்கூறு பதின்மூன்றறையுமாக ஒன்றற்கொன்று இர ண்டறை மேற்படமுறையேகீறிக் குறுமக்கள் போக்கும் போந்துமீளவுமாடும் பெற்றியின் வ ழுவாமல் ஒன்று முதலாகப்பாடுவது. (வீரசோ. அலங். கூக. உரை.)

**எழுகை**—எழும்புகை. (உ-ம்.) "இணக்கமு றுமிருப்பெழுகை" (தணிகை. அகத். உ0சு.)

**எழுச்சி**— 1. இறுமாப்பு. 2. எழுந்துபோதல். (உ-ம்.) "எழுச்சிக்கட்பிற்கூவார்" (ஆசார. ருO.) 3. எழும்புதல். (உ-ம்.) " தண்பிறையெழுச்சி கண்டசலநிதியென" (பாரத. சம்பவ. சுகூ.) 4. ஏறிச்செல்லல். 5. ஒருவகைக் கண்ணோய். 6. ஓங்கியெழும்புகை. (உ-ம்.) "என்றலும்வட வைத்தீயினிழுதெனுமளக்கர்வீழத் - துன்றிய வெழுச்சிமான" (கந்தபு. தாரக. உக.) 7. காதி லுண்டாகு மொருநோய். 8. பள்ளியெழுச்சி. (உ-ம்.) "படரிருட்கழித்தெழுச்சிபாடுவார்க ள்" (சேதுபு. முத்தீர்த்த. கூஎ.) 9. பிறத்தல். (உ-ம்.) "மீண்டெழுச்சி வியனிலத்தில்லையா ம்" (சேதுபு. சேதுச. ருஉ.) 10. மனமுயற்சி.

**எழுச்சிக்கோடி** — கண்ணிற்பற்றுமொரு நோய்.

**எழுச்சிபாடுவோன்**— அரசர்முதலியோர்க் குப்பள்ளியெழுச்சிபாடுவோன்.

**எழுச்சிமுரசம்**—அரசர்முதலியோரைப்பள் ளியெழுப்ப முழக்கு முரசம்.

**எழுச்சியிலை**— கண்ணோய்க்கிடுமொருந்திலை.

**எழுஞாயிறு**—1. உதயாதித்தன். 2. ஒருநோய்.

**எழுத்தடைத்தல்**— எழுத்துக்களையறைவகு த்தடைத்தல்.

**எழுத்ததிகாரம்**— எழுத்தினது அதிகரித்த லையுடையபடலம், எழுத்தினது அதிகரித்தலே யுடையது. (நன்.)

**எழுத்தந்தாதி** — ஒருவகைச்செய்யுட்டொ டை; அஃது: ஒருசெய்யுளினீற்றெழுத்து அடு த்தசெய்யுளின் முதலெழுத்தாகவாவது ஓரடி யினீற்றெழுத்து அடுத்தவடியின் முதலெழுத் தாகவாவது தொடுக்கப்படுவது. (வ-று.) "அறி வுசேருள்ளமோடருந்தவம்புரிந்து- துன்னியமா ந்தரீதென்ப - பன்னருஞ்சிறப்பின்விண்மிசை யுலகே" இஃது: ஓரடியினீறு மற்றையடிக்கு முதலாகவந்த எழுத்தந்தாதி. மற்றையது வந் துழிக்காண்க. (யாப். காரிகை. கஅ. உரை.)

**எழுத்தலங்காரம்**—எழுத்தணி.

**எழுத்தலிசை**—எழுத்தோசையல்லாத முற் கு, சீளை, இலதை, அநுகரணம் முதலியனவா கச் செய்யுளகத்து வருவது. (உ-ம்.) "எழுத்த லிசையெனவசைசீராக- நிறைக்கப்படுதல் குறி ப்பிசையென்ப" (இலக்கணவி. எருரு.)

**எழுத்தறப்படித்தல்**— எழுத்துக்கள் நன்றா கப்புலப்படும்படி வாசித்தல்.

**எழுத்தாணி**— ஓலையிலெழுதுமூசி. (உ-ம்.) "இலகுநூல்களெழுதெழுத்தாணியோ" (சே துபு. இராமதீ. ருக.)

**எழுத்தாணிப்பூண்டு** — கூத்தன் குதம்பை யென்னுமொருபூண்டு.

**எழுத்தாநந்தம்**— நூற்குற்றங்களுளொன்று. (உ-ம்.) "ஆநந்தம்" பார்.

**எழுத்தாளர்**— 1. அறிஞர். 2. எழுத்துக்கா ரர்.

**எழுத்திலக்கணம்**— 1. எழுத்தினது சிறப் பியல்பு. 2. பஞ்சலக்கணத்தொன்று; அஃது: எழுத்துகளினது இலக்கணத்தைக்கூறுதுவது. (உ-ம்.) "எழுத்திலக்கணத்துச்-சந்தியொடு" (தண்டி. ககசு.)

**எழுத்திலாவோசை**—தனக்கு அறிகுறியாக எழுத்துக்களமையப்பெறாத ஒலி.

**எழுத்திறேசை**— அக்கரம் விளங்கிநிற்குந் தொனி.

**எழுத்து**—1. எழுத்தினுடையனவும், எழு த்தினாலாய சொல்லினுடையனவும், சொல்லி னாலாய பொருளுடையனவுமான இலக்கணம். (உ-ம்.) "எழுத்தெனப்படுவ பல்வோர்" (திருக்

கோ. நூற்சிறப்பு.) 2. எழுதப்பட்டபத்திரம். 3. கணக்கு. (பிங்கல. ௨௦௮௫.) 4. கல்வி. (உ-ம்.) “ எழுத்தெனுமிமையாவுள்ளக் - கண்டிறந்திட்டான்” ( இரகு. இரகுவுற். ௯௭. ) 5. மொழிமுதற்காரணமாமணுத்திரள். (நன். ருஅ.) 6. மொழிமுதற்காரணமாமணுத்திளின் அறிகுறி. (உ-ம்.) “எழுதப்படுதலினெழுத்தே” (இலக்கணவி. ௭௧௧.)

எழுத்துக்காரன்—1. எழுத்துக்களை எழுதுவோன். 2. சித்திரந்தீட்டுவோன்.

எழுத்துக்குற்றம்—எழுத்திலக்கணவழு.

எழுத்துக்கூட்டுதல் — எழுத்துக்களைப்புணர்த்தல்.

எழுத்துச்சந்தி— எழுத்துக்களின்புணர்ச்சி.

எழுத்துச்சாரியை— எழுத்தான்வருஞ்சாரியை.

எழுத்துச்சுருக்கம்— எழுத்துக்களை இடைவிட்டெழுதிவாசிப்பது. அஃது: “என்றவாறு” என்பதனை எ-று. என எழுதுவதுபோல்வது.

எழுத்துத்திரிதல் — (இலக்கணம்) மூன்றுவிகாரத்தொன்று; அது: பழந்தின்றான் என்பதுபோல்வது.

எழுத்துப்புடவை— சித்திரந்தீட்டியசேலை.

எழுத்துப்பொருத்தம்— நூலின் முதற்சீருக்குரிய பொருத்தங்களுளொன்று; அது: முதற்சீர் மூன்று, ஐந்து, ஏழு என்னும் வியனிலையாகிய ஒற்றையெழுத்துக்களில்வரப்பாடுவது.(வரலாறு.) “ எண்ணின்மூன்றைந்தேழொன்பான்முத-னண்ணுமக்கரநாலாறெட்டுரு” ( இலக்கணவி. ௭௮௪.)

எழுத்துமடக்கு— மடக்குவகையுளொன்று; அஃது: ஒரெழுத்தையே பின்னும் மடக்கிக்கூறுதல். (வரலாறு) “ நாநாநாதங்கூடிசைநாடுந் தொழிலோவா- தாதாதாரமாகவிரைத்தண்மலர்மீதே - வாவாவார்தண்சோலையில்வாழும்வரிவண்டே- யாயாயாழிற்சேர்த்துவதன்பற்இசையாமால்” (தண்டி. ௬௫.)

எழுத்துவர்த்தநம் — சித்திரகவிகளுளொன்று; அஃது: ஒரெழுத்தாளுருமொழியாய்ப் பொருள் பயந்து பின்னுேரெழுத்தேற்றப் பிறிதொருமொழியாய்ப் பொருள்பயந்து அவ்வாறே முறைமுறையா னேற்ற ஒவ்வொரு மொழியாய்ப் பொருள்பயப்பது. (வரலாறு.) “ஏந்தியவெண்படையுமுன்னுளெடுத்ததுவும் - பூந்துகிலுமாலுந்திபூத்ததுவும்-வாய்ந்த- வுலைவிலெழுத்தடைவே யோரொன்றுச்சேர்க்கத்-தலைமலைபொன்றாமரையென்றாம்” இங்கே கம் என்பது ஒரு மொழியாய் நின்று தலை எனப்பொருள்பட்டு, அதனோடு ந என்னும் எழுத்தையேற்ற நகம் என்றால் மலையெனப்பொருள்பட்டு, அதனோடு க என்னுமெழுத்தையேற்ற கநகம் என்றாய்ப் பொன் எனப்பொருள்பட்டு, அதனோடு கோ என்னு மெழுத்தையேற்றக் கோகநக மென்றாய்த் தாமரையெனப் பொருள்பட்டு முடிந்தன. (தண்டி. ௬௬. உரை.)

எழுத்துவாசனை—எழுத்துவாசித்தல்.

எழுதகம்—சிற்பவேலையிலொன்று.

எழுதரங்கம்—சித்திரசபை.

எழுதருதல்—எழும்புதல். (உ-ம்.) “மயிலைத் தருவொருவித் தவவடிவுற்றெழுதருவார்” (கந்தபு. சரவண. ௬௬.)

எழுதல்—1. அழுத்துதல். (உ-ம்.) “தொழுதாளினைச்செய்யபஞ்செழுதினும்” ( பாரத. சம்பவ. ௮.) 2. அழுந்தல். (உ-ம்.) “இருவர்நெற்றியுமெழுதினசிலகணை ” (பாரத. பதின்மூன்றாம். ௮௧.)3. இடம்விட்டுப்பெயர்தல்.(உ-ம்.) “எம்பெருமுதல்வனீயெழுதியால்” (கந்தபு. சரவண. ௪.) 4. உயர்தல். (உ-ம்.) “நெற்றிமீதுறவெழுந்திழிந்துமிகநெரிகொம்புருவம்” (கூர்மபு. தக்கன்வமி. ௬௦.) 5. உயிர்பெற்றெழுதல். (உ-ம்.) “மன்னவனுதியர்மால்களிற்றொடு - மங்கிலையெழும்வகை ” (கந்தபு. திருவிளை. ௭௮.) 6. ஊக்கங்கொள்ளல். (பாரதவெ. ௧௨௬.) 7. எழுதுதல். (உ-ம்.) “இணக்கிகீள்பொன்வரையெழுதன்மாண்பினுல் ” ( சேதுபு. கந்த. ௭. ) [இங்கே எழுதல்சிலேடை.] 8. ஒன்றின்மேற்செல்லல், ஒன்றின் முயலுதல். (உ-ம்.) “எழுவாரையெல்லாம்பொறுத்து” (வள். ௧௦௬௨.) 9. கீழிடத்தினின்றுமேலேகிளர்தல். (உ-ம்.) “தந்தையுந்தாயுந்தொழுதெழுக” (ஆசாரக்கோ. ௪.) 10. சித்திரமெழுதல். (உ-ம்.) “தோழினைச்செழுந்தொய்யி-லெழுதினும்”(பாரத.சம்பவ.௨அ.) 11. தலைமைப்படல். 12. தோன்றுதல். (உ-ம்.) “ உளம்பகையென்னவொருமாவெழுதலும் ” (தணிகை. களவு. ௨௭௧.) 13. நித்திரைவிட்டெழுதல். (உ-ம்.)“வரியி-னினமெழுந்தனமாக்களுமெழுந்தன” ( கந்தபு. குமார. ௬௫. ) 14. பரம்பல். 15. மேற்பட்டுவருதல். (உ-ம்.) “தாழ்ந்திடுநீத்தமெழுந்திட ” (கந்தபு. அசுரர்யா. ௪௫.)

எழுதாக்கிளவி—வேதம். (உ-ம்.) “எழுதாக்கிளவிநெறிவழுவாது” (வேதாரணியபு. தேவல. ௧௧. ) [இது தோன்றியகாலத்திலெழுதப்படாமையின்வந்தபெயர்.]

எழுதாக்கேள்வி— வேதம். (உ-ம்.) “ஆதிநூல்” பார்.

எழுதாவெழுத்து—அச்செழுத்து.

எழுதிக்கோள்ளல்— புத்தகத்திற்பதிவுசெய்தல். (உ-ம்.) "எடுத்தல்" பார்

எழுதிய— பண்ணிய. (மணிமே.)

எழுதுகோல்—தூரியக்கோல்.

எழுதுதல்— 1. இலேகினியால் ஓலைமுதலியவற்றில் ஒலியெழுத்திற்கு அறிகுறியாக வடிவமைத்தல். 2. சித்திரந்தீட்டுதல்.

எழுதுபடம்—கிழி.

எழுதுவரிக்கோலம்-பத்திக்கீற்று. (சிலப்.)

எழுந்தபடி— 1. நிலைத்தபடி. 2. நேரிட்டபடி.

எழுந்தமாநம்— ஆலோசனையின்றி மநத்திலே தோன்றியபடி.

எழுந்தருள்படி— சுவாமிகளைக்கொண்டு உலாவுதல்.

எழுந்தருளல்—எழுந்தருளுதல்.

எழுந்தருளிவிக்கிரகம்— இருப்பினின்றெடுத்து வெளியேகொண்டுவரும்விக்கிரகம்.

எழுந்தருளுதல்—இருக்கைவிட்டு அருளுடன்பெயர்தல்; இது: "விநதைமுன்பயந்தயாநமீதெழுந்தருளிவந்து" (பாரத. குருகுல. ௯0.) "யாரையாநீவிரெங்குநின்றிவண்மற்றெழுந்தருளியதெனவினவ" (பாரத. நாடுகரந். ௪௨.) "மேலோ-யிப்புரத்திடையெழுந்தருள்கென்றுன்" (கந்தபு. குமார. ௪௨.) என இங்கே முறையே இருக்கைவிட்டேர்தல் எனவும், வருதல் எனவும், இருத்தல் எனவும் சார்புநோக்கிப்பேதப்பட்டன.

எழுந்தருளுநாயகர்—உற்சவவிக்கிரகம்.

எழுந்திருத்தல்— 1. எழுந்து பின்னிருத்தல். 2. எழும்புதல்.

எழுந்திருப்பு— எழும்புதல். (உ-ம்.) "சமயமெ.ழுந்திருப்பு" (ஆசாரக்கோ. ௫௪.)

எழுந்தேற்றம்—1. இறுமாப்பு. 2. உற்சவம். 3. எழுந்தமாநம். 4. பெருமை.

எழுநகரம்— முத்திகொடுப்பன எனச்சொல்லப்பட்ட பூலோகத்துள்ள ஏழு நகரங்கள்; அவை: அயோத்தி, மதுரை, மாயை, அவந்திகை, காசி, காஞ்சி, துவாரகை என்பன.(உ-ம்.) "அழகியவயோத்தி மதுரையேமாயை யவந்திகைகாசிநற்காஞ்சி- விழுமியதுவரையெனப்புவிதன்னின்மேலவாய்வீடருள்கின்ற-வெழுநகரத்துள்" (கந்தபு. திருநகர. ௭௫.)

எழுநரகம்— அள்ளல், ரௌரவம், கும்பிபாகம், கூடசாலம், செந்துத்தானம், பூதி, மாபூதி என்னும் ஏழுநரகங்கள். (உ-ம்.) (சூ. நிகண். ௪௨. ௭௯.)

எழுநா—1. அக்கினி. (உ-ம்.) "பசிதாகமின்றியெழுநா- மத்தியிடைநின்று" (தாயு. சின்மயாநந்த. ௧௧.) [இது: காளி, கராளி, மனோசவை, சுலோகிதை, சுதூம்பரவருணை, புலிங்கிநி, விசுவரூபி என்னு மேழுநாக்குகளுடைமைபற்றி வந்தபெயர்.] 2. ஏழுநாக்கு. (உ-ம்.) "எழுநாத்தலையிரண்டுடைத்தழலின்- பண்ணவற்கு" (கந்தபு. சுரம்புகு. ௪.) 3. கொடிவேலி.

எழுநாயிறு—ஒருவகைநோய். (ஸ்தல. தைலவ. ௨௧. உரை.)

எழுநாமித்திரன்—காற்று. [எழுநா-அக்கினி. மித்திரன் - நண்பன்.]

எழுநிலைக்கோபுரம் — ஏழடுக்குக் கட்டிடமாய் ஒன்றன்மேலொன்றாக எழும்பிய கோபுரம். (உ-ம்.)"பலன்கொண்மைந்தனுநேரெழுநிலைக்கோபுரம்பணிந்தெழுந்தனர்" (பெரியபு. திருஞான. ௧௬௭.)

எழுநிலைமாடம் — ஒன்றன்மேலொன்றாய் ஏழடுக்குள்ளதும், ஏழுகதவுநிலையுள்ளதுமாய் எழும்பியமாடம்.

எழுப்படை—எழுவாயுதம். (உ-ம்.) "உந்தியவெழுப்படை" (இரகு. மீட்சி. ௧௧.)

எழுப்பம்— 1. உயர்வு. 2. எழுச்சி. 3. சஞ்சரிக்கை. 4. வளர்ச்சி.

எழுப்பிவிடுதல்— 1. எழுப்புதல். 2. முயற்சியுண்டாக்குதல்.

எழுப்பு—1. எழுப்புதல். 2.எழுப்பென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும்.

எழுப்புதல்— 1. உயிர்பெற்றெழும்பச்செய்தல். (உ-ம்.) "அந்தியின்வனப்புடையமெய்க்குகனெழுப்புதலும்" (கந்தபு. திருவிளை. ௭௬.) 2. எழும்பச்செய்தல். (உ-ம்.) "சங்குகளெழுப்பியநாதம்" (பாரத. பதினெட். ௨௪.) 3. முயற்சியுண்டாக்குதல்.

எழுபவம்—1. உயர்பிறப்பு. 2. ஏழுபிறப்பு.

எழுபிறப்பு— எழுவகைப்பிறப்பு; அவை: தேவர், மனிதர், விலங்கு, பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் என்பன. (உ-ம்.) "எழுபிறப்புந்தீயவைதீண்டா" (வள். ௬௨.)

எழும்பல்—1. உயருதல். (உ-ம்.) "போற்றக்கரமெழும்பும்" (தாயு. உடல். ௨௧.) 2. எழும்புதல்.

எழுமதம்—1. நூலுக்குரிய எழுவகைக்கொள்கை; அவை: உடன்படல், மறுத்தல், பிறர் தம்மதமேற்கொண்டுகளைதல், தான் ஒன்றினை நாட்டி அதனை வருமிடந்தோறு நிறுத்துதல், இருவர் மாறுகோளொருதலைதுணிவு, பிறநூற்குற்றங்காட்டல், பிறமதத்தை யுடன்படாது தன்மதங்கொள்ளல் என்பன. (உ-ம்.) "எழுமதந்தழுவி" (நன். பொது. ௧௧.) 2. யானையின் கபோலமிரண்டு, கண்ணிரண்டு, கரத்துவார

மிரண்டு, கோசம் என்னுமேழுறுப்புக்களினி ன்று வரும் மதசலம். இஃது: "எழுதிறத்தினு மிகவிடுவனமததாரை" என்பதனுற்பெறப்படு ம். (பாரத. சூது. எக.)

எழுமலை— உதயகிரி. (உ-ம்.) "எழுமலைவி ழுமலைபுடைமணியாக" (கல்லாட. உ௦.)

எழுமான்—
எழுமான்புலி— } எழுமான்புலிப்பூண்டு.

எழுமுகனை—தொடக்கம்.

எழுமுநிவர்— எழு இருடிகள்; அவர்: அத்திரி, குற்சன், வசிட்டன், பிருகு, கௌதமன், காசிபன், அங்கிரா என்பவர். இஃது: "அத்திரி குற்சன்வசிட்டனருட்பிருகுப்பாசங்- கைத்தய ர்கௌதமர் காசிபரோடங்கிராவென்றேழ்-மெய் த்தவரும்" என்னும் காஞ்சிபு. சத்ததா. இரண் டாஞ்செய்யுளாற்பெறப்படும். [அத்திரி, ஆங் கிரசன், கௌதமன், சமதக்கினி, பரத்துவாச ன், வசிட்டன், விசுவாமித்திரன் என்று கூறு வாருமுளர்.]

எழுமுரசு—எழுச்சிமுரசு. ( உ-ம். ) "எழுக வான்பயணமென்றப்கெழுமுரசியம்புவித்தார்' (கோயிற்பு. இரணிய. ககசு.)

எழுமை — 1. உயர்ச்சி. 2. எழுபிறப்பு. (உ-ம்.) "எழுமையுந்தொடருமாதர்" (நைடத. மணம்புரி. ருக.) 3. எழு.

எழுவகைக்கருமகாரகம் — வினைகொண்டு முடியும் எழுவகைச்செயப்படுபொருள்கள்; அவை. பற்றுக்கருமம், வீட்டுக்கருமம், இருபுறக்கருமம், தான்றெரிகருமம், தான்றெரியாக் கருமம், கருத்தாக்கருமம், தீபகக்கருமம் என்பன. " பற்றுறுவீடேயிருபுறந்தான்றெரிதான் றெரியா - நற்கருத்தாத்தீபகமாம்" என்பதனுற் பெறப்படும். (வீரசோ. உபகார. ச.)

எழுவகைத்தத்துவம்— மகத்துவம், ஆங்காரம், ஆகாயம், வாயு, தேயு, அப்பு, பிருதிவி என்பன. (கூர்மபு. பிரகிரு. கசு. உரை.)

எழுவகைமுழவு— அகமுழவு, அகப்புறமுழவு, புறமுழவு, புறப்புறமுழவு, பண்ணமைமுழவு, நாண்முழவு, காலைமுழவு என்பன. (கூர்மபு. திருக்கல். ருரு. உரை.)

எழுவகையளவை—எழுவகைப்பட்ட அளத்தல்; அது: நிறுத்தளத்தல், பெய்தளத்தல், நீட்டியளத்தல், தெறித்தளத்தல், தேங்கமுகந்தளத்தல், சார்த்தியளத்தல், எண்ணியளத்தல் என்பன. (தொல். எழுத். நூன்மரபு. எ. உரை.)

எழுவர்—எழுபேர். (உ-ம்.) "எழுவரோடெழுவராம்" (இராமா. கரன்வ. சசு.)

எழுவரைக்கூடி—சவ்வீரபாஷாணம்.

எழுவாய்—1. உற்பத்தி. (உ-ம்.) "ஆதியந் தமெனுமெழுவாயீறற்றேங்கி" (தாயு. ஆகார. ச.) 2. ( இலக்கணம் ) முதலாம்வேற்றுமை. (உ-ம்.) "எழுவாயுருபுதிரிபில்பெயரே". (நன். பெயரி. கூஅ.)

எழுவாய்வேற்றுமை — முதலாம் வேற்றுமை; அஃது: ஆ, அவன் என்றாற்போலப்பெயர் தோன்றிய துணையாய் உருபும்விளியுமேலாது பிறிதொன்றனேடு தொகாது நிற்கும் நிலைமை. (உ-ம்.) "அவற்றுள்-எழுவாய்வேற்றுமைபெயர் தோன்றுநிலையே"(தொல். சொல். கூகூ.சேனு.)

எழுவாயெழஞ்சநீ—மகநட்சத்திரம்.

எழுவான்— கிழக்குத்திக்கு. (உ-ம்.) "எழு வான்தொடங்கிப்படுவான்மட்டும்".

எழுவி— எழுப்பியெனப்பொருள்படும் ஒரு வினையெச்சம். (உ-ம்.) " பொற்றாமரைபோற் கையாற்பொடிசூழ்படிநின்றெழுவி" ( இராமா. நகர்நீ. கூஅ.)

எழுவுதல்— எழுப்புதல். (உ-ம்.) "எழுவும் முரசெங்குமியம்பினவே" ( சூளா. கல்யாண. உசஅ.)

எள்— 1. எள்ளெனேவலும், தெரிநிலை வினைப்பகுதியும், வினைத்தொகையும். 2. நவ தானியத்துள் ஒன்று; 3.நிந்தை. (உ-ம்.)"எள்ளு நியகருமநோர்ந்தாள்" (இராமா. நகர்நீ. க௦கூ.)

எள்க—அஞ்ச. (சிந்தா.)

எள்கல்—
எள்குதல்— } 1. இகழ்தல். 2. கூசுதல். (உ-ம்.) " இன்றகத்தில்லாப் பழிவந்துமூடுமென்றெள்குதுமே" (திருக்கோ. கூஉ.)

எள்ள—1. இகழ்ச்சியையுட்கொண்டுபயன் பற்றிவரும் ஒருவம உருபு. (உ-ம்.) " எழிலிவா னமெள்ளினன்றரூஉம்" ( தொல். பொருள். உஅகூ. உரை. ) 2. இகழ என்னும் பொருள்படும் ஒருவினையெச்சம். (உ-ம்.) " பிறரெள்ளப் பீடின்றி" (கலி. அ.)

எள்ளல்—1. அவமதிச்சிரிப்பு. 2. இளிவாகப்பேசல். 3. தள்ளல். 4. நகைத்தல். 5. நிந்தை. (உ-ம்.) "ஒருகாலத்-தெள்ளலில்"(சேதுபு. தத்தம..உ.)

எள்ளளவும்—அற்பமும்.(உ-ம்.) "யானெனுமகந்தைதானெள்ளளவுமாறவிலையே" (தாயு. ஆநந்த. க.) [எள்ளெவ்வளவுசிறிதோ அவ்வளவு சிறிது என்றபடி.]

எள்ளற்பாடு—இகழ்ச்சி.

எள்ளிடை—1. எள்ளளவு. 2. எள்ளிடத்தக் கவிடம்.

எள்ளுச்செவி—ஒருபூண்டு.

எள்ளுண்டை — எள்ளைத்துவைத்துச் சில

சரக்குகள் சேர்த்து ஆக்கிய ஒரு சிற்றுண்டி. (உ-ம்.) "இட்டலி" பார்.

எள்ளுதல்— 1. அவமதித்துச்சிரித்தல். 2. இகழ்தல், இகழ்ந்துபேசுதல். 3. தள்ளுதல். (உ-ம்.) "எள்ளுதற்கரிய சீரூரிடைதனில் யா மத்தேகி" (கந்தபு. வள். கஎச.)

எள்ளுநர்—இகழ்வோர். (உ-ம்.) "எள்ளுநர் கள்சாய" (சிந்தா. காந்தரு. ௯௫௫.)

எள்ளும்—எக்கும். (மணிமே.)

எள்ளுநன்னடை—எள்ளுண்டை.

எள்ளோரை- சித்திராங்கவகையுள் ஒன்று; அஃது. எள்ளும் அரிசியும் செய்யுங்கலந்தாக் கியது.

எளிசு—எளிது.

எளிஞர்—எளியவர்.

எளித்தல்— 1. எளியராகத்தாழ்த்தப்படுத ல். (உ-ம்.) "எளித்தவெய்துமிமையவர்" (கந் தபு. தேவரை. உச.) 2. (அகப்பொருளிலக்க ணம்) தலைவனையெளியனாகக்கூறுதல். (உ-ம்.) "எளித்தலேத்தல்வேட்கையுரைத்தல் - கூறுத லுசாதலேதீடுதலைப்பாடு - உண்மைசெப்புங்கி ளவியொடுதொகைஇ - யவ்வெழுவகையவென் மனார்புலவர்" (தொல். பொருளதி. உ0எ.)

எளிதரல்—எளிதாகத்தருதல். (உ-ம்.) "தா ளையேதரமறிகிலாதெமக்கெளிதரு" (வை - தீ. உ.)

எளிதரவு— 1. எளிமைத்தனம். 2. தரித் திரம்.

எளிதாதல்—இலேசிற்கிடைத்தல். (உ-ம்.) "இத்துணைப்பெறலரும் பொருளிவட்கெளிதா மோ" (கந்தபு. தவங்காண். கக.)

எளிது — 1. அருமையற்றது. 2. இலேசு (உ-ம்.) "பேய்வயினும்மரிதாகும்பிரிவெளிதாக் குவித்து" (திருக்கோ. ௬௪௬.) 3. எளியது. 4. பிரயாசமில்லாதது. (உ-ம்.) "தடவரையிடை சேற-லெளிதள. (கந்தபு. தவங்காண். ச.)

எளிமை—1. இகழப்படுந்தன்மை. (உ-ம்.) "இமையவர் தலைவனேயு மெளிமையினேவல் செய்யும்" (இராமா. சூர்ப்பந. ௪௨.) 2. தரித்தி ரம். 3. தளர்வு. 4. தனிமை. 5. தாழ்வு. 6. வலி யின்மை.

எளிய—இலகுவான. (உ-ம்.) "கைக்கெளிய பந்தாவெடுத்துவிளையாடுவீர்"(தாயு. சித்தர். க்.)

எளியது—எளிமையானது.

எளியர்—எளியவர். (உ-ம்.) "எளியரைவ லியர்வாட்டின்" (காஞ்சிபு. கடவுள். எ.)

எளியவர்—1. ஈனர். 2. தரித்திரர். (உ-ம்.) "சிறுவிலையெளியவருணவுசிந்தினேன்" ( இ ராமா. பள்ளி. ககக.) 3. வலியற்றவர்.

எளியவிலை—அற்பவிலை.

எளியன்— எளிதானவன். (உ-ம்.) "எளிய னேசங்கரன்றனக்கம்மா" (கந்தபு.தவங்கா.௧௦.)

எளியனேன்—எளியேனாகியநான். (உ-ம்.) "எளியனேன்மநமாமாயைக் - குடிகெடுக்க" (தாயு. பன்மாலை. ௬.)

எளியார்—எளியவர்.

எளியை — எளிமைப் பண்படியால் வந்த ஒரு முன்னிலைவினைப்பெயர். (உ-ம்.) "உய்ந் துபோதிவிளிவுறேலெளியையென்றாள்" ( கந் தபு. மகாகாளர். உ௬.)

எளியோர்—1. எளியவர். 2. வலியற்றவர். (உ-ம்.) "மன்றிடைநலிந்துவலியோர்களெளி யோரை" (இராமா. கரன்வ. க௬அ.)

எளிரதம்— எண்ணெய். [எள்+இரதம்.]

எளிவந்த—எளிதிற்கிடைத்த. (உ-ம்.) "எ ளிவந்தவெந்தைபிரான்" ( திருவாச. நீத்தல். கடு.)

எளிவந்தது— இலேசில்வந்தது. ( உ-ம். ) "கடவுளாயி - ரிருணைக்குடையவுருக்கொண் டெளிவந்ததென்ன" (தணிகை. களவு. ௬கக.)

எளிவரல்—1. பிரயாசமின்றிவரல். (உ-ம்.) "அன்பினர்க்கெளிவந்துள்ளவாதியன்பரமன்" (கந்தபு. திருக்கல். ௯௬.) 2. பலவீனமடைதல். (உ-ம்.) "இடுசோறுதின்றுயிர்சுமந்துதோ-ளெ ளிவரும்படியிருந்தபாவியரும்" (பாரத. கிருட் டிண. கஉ௬.)

எற்படல்—சூரியனுதித்தல். (உ-ம்.) "எற் படுகாலை" (அகப்பொரு. அகத்திணை. கஉ.)

எற்பாடு—காலை; இஃது: ஐவகைச்சிறுபொ ழுதுகளுளொன்று. (உ-ம்.) "வைகுறுவிடியன் மருதமெற்பாடு" (தொல். பொருள. அ.) [எல்- சூரியன். பாடு - படுதல்=உண்டாதல். சிறு பொழுது அறுவகையெனக்கொண்டு எற்பாடு என்றற்குப்பிற்பொழுது என்பாருமுளர். அத னைச்சூத்திரவிருத்தியிலே சிவஞானமுனிவர்மறு த்தார்.]

எற்பு—எலும்பு.(உ-ம்.)"எற்படமந்திரத்தி" (ஞானவா. சுக்கிரன. ௬கக.)

எற்றல்—1. எழுப்புதல். (பிங்கல. உகஅஎ.) 2. எற்றன்மரம். 3. எற்றுதல். 4. துணித்தல். (பிங்கல. உகசச.) 5. நருக்கல். (உ-ம்.) "எற்ற றட்டற்போழல்வினைக்கெஃகுநிறைகோல்கள்" (தைல. தைலவ. கஉ.)

எற்றற்கோட்டு—இறைமரக்கொட்டு.

எற்றற்பட்டை—சீலாப்பட்டை.

எற்றன்மரம்—நீரிறைக்கும் மரம்.

எற்றித்தல்—இரங்குதல். (பிங்கல. க௯க௬.) எற்றினன்-எதனல். (ஐங்குறு.)

எற்று— 1. அதிசயவிரக்கத்தைக்குறிக்கு மொருசொல். (உ-ம்.) "எற்றெற்றென்-றேதம் பலவுந்தரும்" (வள். உஎரு.) 2. இறந்தது; இது. கழிந்ததற்கு இரங்கியபொருட்டு "எற் றெனுடம்பினெழினலம்" என்றதிற்போல. (உ-ம்.) "எற்றென்கிளவியிறந்தபொருட்டே" (தொல். சொல். உகூரு.) 3. எத்தன்மைத்து எனப்பொருள்பட்டு ஒன்றன்பாலில்வரும் ஒரு குறிப்புவினைமுற்று. (உ-ம்.) "எற்றென்னையுற் றதுயர்"(வள். கஉருகூ.)4. எற்றென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையு ம். 5. எது. (உ-ம்.) "எற்றினுன்மநத்தால்வர்யா ல்யாச்கையாலியன்றசெய்கை - முற்றியபயனு மேவும்" (சேதுபு. சேதுச. அ.) 6. எறிதல். 7. தட்டுதல்.

எற்றுண்ணல்—எறியப்படல். (உ-ம்.)"இரு வினையெனுந்திரையினெற்றுண்டு"(தாயு. தே சோ. உ.)

எற்றுதல்—1. அடித்தல். (உ-ம்.) "வருண னையெற்றி" (கந்தபு. யாக. ௬௪.) 2. இரங் குதல். (உ-ம்.) "எற்றியகாதலிளுலிசைத்தா ள்" (வாண. உஉச.) 3. இல்லாமற்செய்தல். (உ-ம்.) "ஒப்பெற்றியசுந்தரமேனி" (சேதுபு. அமுத. கசு.) 4. எழுப்பல். (பிங்கல.) 5. எறி தல். (உ-ம்.) "எற்றுவாம்பிடித்தேந்துதும்" (இ ராமா. கரன்வ. கசு.) 6.குட்டல். 7. குத்தல். 8. கொல்லல். 9. துணித்தல். 10. நீர் முதலியவற் றையெற்றல். 11. முட்டிக்கொள்ளுதல்.(உ-ம்.) 'பொற்றைகள்சிகரகோபுரங்கடத்தமி- னெற்று ழி"(கந்தபு. நகரழி. சo.)12. மோதுதல்.(உ-ம்.) "எற்றுதெண்டிரைநீர்ச்சேர்ப்பன்" (திருவிளை. நான்மா. ச.) 13. வெட்டல்.

எற்றுந்திரை— 1. கடல். (உ-ம்.) "எற்றுந் திரையின்னமிர்தை" (திருக்கோ. கருச.) [இஃது. ஓரடையடுத்தவாகுபெயர்.] 2. வீசுந் திரை.

எற்றுநூல்—மரக்கோட்டம் பார்க்கும் நூல்.

எற்றுள்ளும்—எவற்றுள்ளும். (உ-ம்.)"எற் றுள்ளு-மெண்ணப்படுவதொன்றன்று" (வள். சகூஅ.) [இங்கே வகரங்குறைந்துநின்றது.]

எற்றே—ஓரதிசயமொழி. (பிங்கல.உகoச.)

எற்றை—எந்தநாள். (உ-ம்.) "எற்றைவை கலும்" (கந்தபு. அயனைச்சிறைநீக்கு ரு.) "எற் றைக்கும் விண்ணெுத்திருக்குறும்மூரெது" (த ணிகை. களவு. ககஉ.) [என்று+ஐ.]

எற்றே— 1. எத்தன்மைத்தோ. 2. ஓரதி சயவிரக்கச்சொல்.

எறி—1. எறிகை. 2. எறித்தல். (உ-ம்.) "எ றித்தருகதிர்தாங்கி" (கலி. க.) 3. எறி யென் னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினை த்தொகையும். (உ-ம்.) "இழைமணிமாடத்தும் பரெறிதுளியுடைந்துதுள்ள" (திருவிளை.நான் மா. கஎ.) 4. குறிப்பாகச்சொல்லுகை.

எறிகால்—பெருங்காற்று.

எறிகாலி—காலாலெறியும் பசு.

எறிதுறுதல்—வெட்டுதல். (உ-ம்.) "சுந்தர மணிவாளாற்றுணிபடவெறிகுற்றான்" (கந்தபு. வில்வலன் -வாதாவி. கசு.)

எறித்தல்— 1. ஒளிவீசல். (உ-ம்.) "எய்ந்த வப்பதத்தெழிலெறித்தலால்" (பாரத. சூது. கசரு.) 2. உறைத்தல். (புறநா.) 3. பரத்தல். (சிந்தா.) 4. வெயில்காலல். (உ-ம்.) "எறிவெயி லினூடு" (திருவாத. திருப்பெரு. கஉக.)

எறிதரல்—எறிதல். (உ-ம்.) "பிஞ்சகன்மீது கன்மலரா-லெறிதருதேரர்" (கந்தபு. திருநகர. அரு.)

எறிதல்— 1. அடித்தல். (உ-ம்.) "இரவலர ருநிதியெறிந்தவவ்விறேன்" (இராமா. பள்ளி. ககு.) "எறியுமுரசமும்" (பாரத. பதினும். உரு.) 2. அறுத்தல். (உ-ம்.) "எறிவளைகளார்ப்" (சிலப். கானல். கஉ.) 3. உதைதல். 4 ஊறுபடு த்தல். (உ-ம்.) "மீனெறிவோர்" (திருககோ. கஅஎ.) 5. கல்லுமுதலியவைகளை ஆகாயத்தி ற்செல்லும்படியான விசைகொண்டு வீசுதல். (உ-ம்.) "கன்றுன்முன்விளவெறிந்தகண்ண னென்ன" (பாரத. திரௌபதி. சுஉ.) "தட ந்தோளா - மிலக்கையுற்றிடவெறிந்தனனெறித லும்" (பாரத. பதினெட். ருக.) 6. குத்தல். 7. தட்டல். (உ-ம்.) "தாய்தன்கையின்மெல்லத் தண்ணெனன்குறங்கினெறிய" (சிந்தா. குண மா. அo.) 8. தள்ளல். (உ-ம்.) "ஊதையெறிய வொசிபூங்கொடியொப்பார்" (இராமா. நகர்நீ. கூஅ.) 9. திரையெறிதல். (உ-ம்.) "எறியுநேமி சூழுலகத்து" (கந்தபு. அவைபுகு. கசுச.) 10. நீக்கல். (உ-ம்.) "சித்தமாசெறிந்து" (கூர்மபு. பலவ. ரு.) 11. நுகர்வித்தல். (உ-ம்.) "வாழ்வா ய்நன்றுயினுமஃதெறியாதுவிடாதேகாண்" (க லி. கசக.) 12. முறிததல். (உ-ம்.) "களிறே, கதவெறியாச்சிவந்து" (புறநா. ச.) 13. மோது தல். (உ-ம்.) "எறிமருத்திடை" (கந்தபு. மேரு. சு.) 14. வெட்டல். (உ-ம்.) "கல்லாக்களிமக னொருவன்கையில்வெள்வாளெறிந்தனன விலங்கூடறுத்து" (சிலப். கொலை. உகஉ.)

எறிப்பு—1. ஒளிசெய்தல். (உ-ம்.) "எறிப் புடைததரளக்கோவை" (இரகு. கடி. சுக.) 2. விம்பித்தல். 3. வெயில்வீசல்.

எறிபடை—கைவிடுபடை. (உ-ம்.) "ஆன்ற மையெறிபடை" (இராமா. கரன்வ. ருஉ.)

எறிமணி—சேமக்கலம், சேகண்டி. (உ-ம்.) "எறிமணியரவமென்ன"(கந்தபு.உபதேச.கஉ.)

எறிமுத்து—மசூரிகை நோயினாலுண்டாகுங் கொப்புளம்.

எறியாயுதம்—எறிபடை.

எறியால்—ஒருமீன்.

எறியீட்டி—எறிவல்லயம்.

எறிவ—எறியப்படுவன. (உ-ம்.) "எட்டேயொருபான்படைதம்முளெறிவவெல்லாம்" (கந்தபு. திருவிளை. சஎ.)

எறிவல்லயம்—எறிவளையம்.

எறிவளையம்—சக்கரம்.

எறிவு—எறிதல்.

எறிவேல்—எறியீட்டி. (உ-ம்.) "சூலம்வாளெறிவேல்,மழுமுதற்படையாவையும்"(கந்தபு. படையெழு. ௬.)

எறும்பி—யானை. (உ-ம்.) "எறும்பிகாண்குறிவின்கரும்பேகொளும் - செறிந்தவாடிலேதின்பனவென்பவே" (பிரபுலிங்க. சாதகா. எ.)

எறும்பு — ஊரும் பிராணிகளி லொன்று. (உ-ம்.) "நந்தெறும்பு" (ஆசாரக்கோ. அஅ.)

எறுழ்—1. தடி, தண்டு. (சூ. நிகண். எ:கரு.) 2. தூண். 3. வலி. (உ-ம்.) "இந்நடுவேநின்றுனெறுழ்வயிரத்தூணேபோல்" (கந்தபு. வள். ககரு.)

எறுழ்முன்பு— மிக்கவலி. (புறநா.)

எறுழ்வலி—விசயன், பெயர். (சிந்தா.)

எறுழம்—எறுழம்பூ. (உ-ம்.) "எரிபுரையெறுழம்" (குறிஞ்சி. ௬௬. உரை.)

எறுழி—1. காட்டுப்பன்றி. 2. பன்றி. (உ-ம்.) "கொன்னெறுழிதன்னுருவுகொண்டொருவர்தேடும்" (திருவாத. திருப்பெரு. ௬.)

என்—1. என்ன. (உ-ம்.) "என்பல்வுமியாமுரைப்பதிந்த" (பாரத. புட்ப. கச.) [எவன் என்னும் வினாவினைக்குறிப்பிலே வகரந்தொக்குநின்றது.] 2. என்னு மெனப் பொருள்படுமொருவினைத்தொகை. (உ-ம்.) "உயிரென்காவினை" (கந்தபு. குமார. சஎ.) 3. ஓர் அசைச்சொல். (உ-ம்.) "அறிவார்யாரஃதிறுவுழியிறுகென்"(இலக்கணவி. உஎஎ. உரை.)4. தன்மையொருமையில்வருமொருவினைவிகுதி. (உ-ம்.) "யானுநின்றனென்"(இராமா. பள்ளி. எஉ.) 5. யாவை. (உ-ம்.)"என்னேசெயவேண்டிற்றவையெல்லாம்" (கந்தபு. அசுரர்தோற்று.௩.) 6. யானென்னுந் தன்மையொருமைப்பெயர் வேற்றுமையுருபேற்குமாறு திரிந்து வந்த ஒரு சொல். (உ-ம்.) "விளியுமென்னின்னுயிர்" (வள். கஉ0க.) 7. வினாவடியாய் நின்று ஐயமுணர்த்துமொருசொல். எவன் என்பது என் என வந்ததென்க. (நன். வினையி. ௬௧.)

என்கு— என்று சொல்வேன் எனப்பொருள்படும் ஒருமைத்தன்மைவினைமுற்று. (உ-ம்.) "அவன்பெருமுயற்சியேயாற்றலாமென்கோ" (கந்தபு. சிங்கமுகா. உ௬ச.)

என்கும்— என்று சொல்வேம் எனப்பொருள்படும் ஒரு பன்மைத்தன்மைவினைமுற்று.

என்குவை— என்று வினவுவாய். (புறநா.)

என்கை— 1. என்றுசொல்லுகை. (உ-ம்.) "ஆகையாலகிலமெல்லா மவனென்கைதெரிந்ததன்றே" (கந்தபு. மேரு. உ௬.) 2. என்னுடைய கை. (உ-ம்.) "என்கைக்,கொண்டதோர்கணைகள். (கந்தபு. காமதகன. அக.)

என்ப— 1. என்று சொல்லப்படுவன எனப்பொருள்படும் ஒரு வினையாலணையும்பெயர். (உ-ம்.) "எண்ணென்பவேனையெழுத்தென்ப" (வள். ௬௬உ.) 2. என்று சொல்லுவர் எனப்பொருள்படும் ஓர் உயர்திணைப்படர்க்கைப்பலர்பால்வினைமுற்று. (உ-ம்.) "பெண்ணினாற்பெண்மையுடைத்தென்ப" (வள். கஉஅ0.) 3. ஓரசைச்சொல். (உ-ம்.) "வளவயல்வைகலுமின்னதென்ப" (சிந்தா. நாமக. ௬ரு.)

என்பாக்கு— 1. என்றுசொல்லுதல்.(உ-ம்.) "யாந்தம்மை-நீடுவாழ்கென்பாக்கறிந்து" (வள். ௧௬கஉ.) 2. என்னும்படி.

என்பாபரணன்— சிவன். [என்பு-எலும்பு. ஆபரணன் - ஆபரணமுடையவன்.]

என்பித்தல்—என்று சொல்லுவித்தல்.

என்பிலது—எலும்பில்லாத பிராணி.(உ-ம்) "என்பிலதனைவெயில்போலக்காயுமே" (வள். எஎ.)

என்பிலி—எலும்பில்லாதது.

என்பு—1. உடம்பு. (உ-ம்.) "என்புசேர்-முந்துதீவினை" (சேதுபு. கோடி. கரு.) [ஆகுபெயர்] 2. எலும்பு. (உ-ம்.) "அணிகலமரவென்பு" (கந்தபு. தவங்கா. கரு.) 3. புல்.

என்புதின்றி—கழுதைக்குடத்திப்பூண்டு.

என்புருக்கி — 1. எலும்புருக்கிநோய். 2. எலும்புருக்கிப்பூண்டு.

என்மர்—1. என்று சொல்லுபவர்கள்.(உ-ம்.) "பிரமமென்மரு மீசனென்மருஞ் சீவனென்மரும் பேதுறுங் - கருமமென்மரும்வேறுமவ்வவகடவுளென்மருமாகியே - முரணியவ்வவர்பேசநின்றருண்முதல்வனே"(காஞ்சிபு. கச்சி. க0.) 2 என்றுசொல்லுவார் எனப்பொருள்படப் படர்க்கையில்வருமொருவினைமுற்று. (உ-ம்.) "நன்மனக்குஞ்சரநம்பியோடென்மரும்" (சிந்தா ககக. உஅ௬.)

என்மனார்— என்றுசொல்லுவாரெனப்பொருள்படப் படர்க்கையில்வரும் ஒரு வினைமுற்று. (உ-ம்.) "அந்தமாதியென்மனார்புலவர்" (சிவஞானபோ. க.)

என்மார்—என்பார். (சிந்தா.)

என்றல்—என்றுசொல்லுதல். (உ-ம்.) "என்றலுங்கடவுள்வேந்தனிருபுயந்துளங்கநக்கு" (பாரத. நிவாத. எ.)

என்றவன்—சூரியன். (உ-ம்.) "என்றவன் மதலை" (பாரத. பதினே. ௧௦௨.)

என்று—ஒரெண்ணிடைச்சொல். (உ-ம்.) "முதலீறிடைநிலைபோலியென்று" (நன். எழுத். ௩.)

என்றலும்— ஆனாலும். (உ-ம்.) "நடுங்கினின்றாரென்றாலும்" (இராமா. தைல. எக.)

என்றி—1. என்றுசொல்கின்றாய் எனப்பொருள்படும் ஒரு முன்னிலைவினை. (உ-ம்.) "தவமியற்றுமென்றியேல்" (கந்தபு. பார்பதி. எ.) 2. என்பாய். (ஐங்குறு.)

என்றிசினோர் — என்று சொன்னார் எனப் பொருள்படுவதோரிறந்தகாலவினைமுற்று.

என்று—1. எந்நாள். (உ-ம்.) "பார்த்திவரென்றுநம்பைம்பொழில்வாய் வந்தாரன்னுண்முதலா" (தணிகை. களவு. ௩௩௪.) 2. என்றுசொல்லி எனப் பொருள் படும் ஒரு வினையெச்சம். (உ-ம்.) "நேருதிரென்றெதிர்நோர்ந்தவராகம்" (கந்தபு. சிங்கமுக. ௩௮.) 3. ஒரிடைச்சொல்; இது வினை, குறிப்பு, இசை, பண்பு, எண், பெயர் என்னு மாறுபொருண்மைகளில் ஒன்றைக்கருதிவரும். (உ-ம்.) "நரைவருமென்றெண்ணி" [வினை] "விண்ணென்றுவிசைத்தது" [குறிப்பு] "ஒல்லென்றொலிக்குமொலிபுனலூரற்கு" [இசை] "பச்சென்றுபசந்தது" [பண்பு] "நிலனென்றுநீரென்றுதீயென்று" [எண்] "பாரியென்றொருவன்" [பெயர்] (தொல். சொல். உ௬௧.உரை.) 4. சூரியன். (உ-ம்.) "என்றைத்தொடவிண்ணிலெழுந்துறலால்" (கந்தபு. விந்தகிரி. ௪.)

என்றும்— 1. எந்நாளும். (உ-ம்.) "என்றுநல்விளையனுகியவெங்கோன்" (கந்தபு. திருவிளை. ௧௧௩.) 2. என்றுசொல்வேமெனப்பொருள் படும் ஒருதன்மைப்பன்மைவினைமுற்று. (உ-ம்.) "யாமெலாமநங்கமாதிலகனென்றுமே" (சிந்தா. சுரமஞ். எ.)

என்றூழ்—1. கோடை. (உ-ம்.) "வளமழை மாறியவென்றூழ்க்காலை" (புறநா. ௧௬௧.) 2. சூரியன். (உ-ம்.) "அருங்கழிகாதமகலுமென்றூழென்று" (திருக்கோ. ௧௧௦.) 3. வெய்யில். (உ-ம்.) "அவனென்றூழ் - வாதாயனங்கடொறும்வந்துபுகலின்றே" (கந்தபு. நகர்புகு. ௭௭.)

என்றூழி—எப்போதும்.

என்றைக்கு—எப்போதைக்கு. (உ-ம்.) "அல்லலொழிவதென்றைக்கையா" (தாயு. பரா. ௩௦௫.) [என்று என்பது ஐகாரச்சாரியைபெற்று நான்காம்வேற்றுமையில் வந்தது.]

என்ன — 1. எத்தன்மைய எனப் பொருள்பட அஃறிணைப் பன்மையில் வருமொரு குறிப்புவினைமுற்று: (உ-ம்.) "உடம்போடுயிரிடையென்ன" (வள். ௧௧௨௨.) 2. என்று. (உ-ம்.) "என்னப்பலவும்புலம்பி" (கந்தபு. மார்க்கண்டேய. ௩௪.) 3. என்றுசொல்ல எனப்பொருள்படும் ஒருவினையெச்சம். (உ-ம்.) "எண்ணரிய யோகினுக்குமினேயென்ன" (தாயு ஆசை. உ௪.) 4. போல எனப் பொருள்படும் ஒருவமச்சொல். (உ-ம்.) "கேழ்கிளர்தீ-யூட்டரக்கேயென்னவுருகி" (கந்தபு. மார்க்கண்டேய. ௩௫.) 5. யாது. (உ-ம்.) "ஆராரெனக்கென்னபோதித்துமென்ன" (தாயு. தேசோ. எ.) 6. யாவை.

என்னணம்—எவ்வண்ணம். (உ-ம்.) "என்னணஞ்சென்றனளென்னணஞ்சேருமென" (திருக்கோ. உ௩௦.)

என்னத்தை—யாதினை. (உ-ம்.) "என்சொல்லிறுதிக்-கென்னத்தைச்சொல்வேன்" (தாயு. பரா. ௪௬.) [என் என்பது அத்துச்சாரியையும் ஐயுருபுமேற்றுவந்தது.]

என்னதும்—யாதும், சிறிதும். (உ-ம்.) "என்னதுஞ்செயலின்றியிருத்தலால்" (கந்தபு. மேரு. கஎ.)

என்னதூஉம்— சிறிதும். (உ-ம்.) "என்னதூஉங்-கடிமரந்தடிதலோம்பு" (புறநா. ருஎ.)

என்னர்—யாவர். (உ-ம்.) "அருந்தொடைச்சித்திரமதனை -யென்னரேயளந்தறிபவர்" (இரகு. திக்கு. ௧௧௯.)

என்னரும்—யாவரும். (உ-ம்.) "நற்றவ-ரென்னருந்தொழுது" (கந்தபு. அயனைச்சிறைநீக்கு. கஎ.)

என்னல்—என்றுசொல்லுதல். (உ-ம்.) "என்னலோடும்" (இராமா. கரன்வ. க௪.)

என்னவர்— எவ்வியல்பினர். (உ-ம்.) "நீத்தோ-ரென்னவர்தங்கட்கேனும்" (கந்தபு. கிரவுஞ்ச. ௪.)

என்னவரும்—யாவரும். (உ-ம்.) "என்னவர்தமையும்" (கந்தபு. திருக்கல். ௩௩.)

என்னவும்—யாவையும். (உ-ம்.) "ஒன்னலார்" பார்.

என்னன்— எவ்வியல்பினன். (உ-ம்.) "என்னனெவ்விடத்தன்" (இரகு. யாக. ௩௩.)

என்னனோ—யாரோ. (சிந்தா.)

என்னா— என்றுசொல்லி எனப் பொருள்ப

டும் ஒரு வினையெச்சம். (உ-ம்.) "மறுத்தெதிர் மொழிந்தாயென்று" (கந்தபு. அயனைச்சிறை நீக். உக.)

**என்னுங்கு**—என்னுடையகையிடத்து.(உ-ம்.) " என்னுங்குவாராதோம்பினை " (கலி. உகூ. உரை.)

**என்னும்**— 1. எல்லாம். (உ-ம்.) " என்னுடையரேனுமிலர் " (வள். சகூ0.) [ என்னும் என்பதிலும்மையிங்கேதொக்கது. ] 2. என்று சொல்கின்றது எனப் பொருள்படும் ஒரு நிகழ்காலவினைமுற்று. (உ-ம்.) "ஏதிலரென்னுமிவ் வூர்" (வள். ககஙூ0.) 3. என்றுசொல்லப்படும் எனப்பொருள்படும் ஒரு தெரிநிலைவினைப்பெயரெச்சம். (உ-ம்.) " நல்குரவென்னுமிடும்பையுள் " ( வள். க0சரு. ) 4. என்றுசொல்வாள் எனப்பொருள்படும் ஒரு பெண்பாற் படர்க்கை வினைமுற்று. (உ-ம்.) " பிரியார்பிறிவேதென்னும்" (இராமா. நகர்நீங்கு. கூக.) 5. என்றுசொல்வான் எனப்பொருள்படும் ஒரு ஆண்பாற்படர்க்கைவினைமுற்று. (உ-ம்.) "கள்வனேன்-முடிகுவனருந்துயர்முடியவென்னுமால்" (இராமா. பள்ளி. கூக.) 3. என்றுமுயல்கின்ற எனப்பொருள்படும் ஒரு தெரிநிலை வினைப் பெயரெச்சம். ( உ-ம். ) " குடிசெய்வலென்னுமொருவற்கு " ( வள். க0உகூ. ) 7. சிறிதும், எப்படியாயினும். (உ-ம்.) "என்னுந்தமக்கியையில்லேற்கு" (தணிகை. களவு. கூககூ.) " போமினெனவென்னுமுரையீயான்" (சிந்தா. சுர. உ0.)

**என்னே**—ஓர் அதிசயவிரக்கச்சொல். (உ-ம்.) " என்னேயெனேகருணைவிளையாட்டிருந்தவாறெம்மனோர்புகலவெளிதோ" ( தாயு. எங்குநிறை. உ.)

**என்னை**—1. என்பிதா. (உ-ம்.) "என்னைவானமெய்தி" (பாரத. வாரணா. கூக.) 2. என்னிறைவன். (உ-ம்.) "அணங்கருங்கடுந்திறலென்னை" (புறநா. எஅ.) 3. ஓர் ஐயச்சொல். ( சூ. நிகண். க0: கக.) 4. ஓரிகழ்ச்சிக்குறிப்பு. (உ-ம்.) "என்னையென்னையேயீன்றுகாத்தவென் - னன்னையாரெனக்கழகுசெய்தவா" (இராமா. பள்ளி. ககூகூ.) 5. யாது. (உ-ம்.) "ஈண்டுரைத்தபணியென்னை" (இராமா. நகர்நீங்கு. அ.) 6. யான் என்பதுவிகாரமாகி ஐயுருபேற்ற ஒருசொல். (உ-ம்.) " என்னையென்னையேயீன்றுகாத்தவென்" (இராமா. பள். ககூச.)

**என்னோ**—1. ஓர் ஐயக்கிளவி. 2. ஓரிகழ்ச்சிக்குறிப்பு. 3. யாதோ எனப்பொருள்பட்டுவரும் ஓரதிசயவிரக்கச்சொல். (உ-ம்.) "ஐயகோவினிச்செய்வதென்னோவென்று" (கந்தபு. மோக. கூ.)

**என்னோரும்**—1. எத்தன்மையுடையோரும். (புறப்பொ.) 2. யாவரும். (உ-ம்.) "என்னோர்மருங்கினும்" (சிந்தா. மண். உஎ.)

**என**— 1. என்று. (உ-ம்.) "பரவுதல்வீடெனப்பகருவார்சிலர்" (கந்தபு. பாயிர. உகூ.) 2. என்றுகூற எனப்பொருள்படும் ஒரு வினையெச்சம். (உ-ம்.) "என்னணஞ்சேருமெனவயிரா" (திருக்கோ. உகக.) 3. என்னுடையன. 4. ஓரிடைச்சொல்; இது வினை, குறிப்பு, இசை, பண்பு, எண், பெயர் என்னுமாறுபொருண்மைகளில் ஒன்றைக்குறித்துவரும். (உ-ம்.) "மலைவான்கொள்கெனவுயிர்ப்பலிதூஉய்"(வினை) "துண்ணெனத்துடித்தது"(குறிப்பு.) "ஒல்லெனவொலித்தது" (இசை) "வெள்ளெனவிளர்த்தது"(பண்பு) "நிலனெனநீரெனத்தீயென" (எண்) "அழுக்காறெனவொருபாவி" (பெயர்) (தொல். சொல். உருஅ.) 5. போல எனப்பொருள்படும் ஒருவமச்சொல். (உ-ம்.) "சிதலைமெய்த்தொகைவன்மிகத்தெழுந்தென " (கந்தபு. மோக. உ.) 6. யான் என்பது ஆறும்வேற்றுமையில் அஃறிணைப்பன்மை அகரவுருபேற்று வந்த ஒருவிகாரமொழி.

**எனக்கு**— யான் என்னுந்தன்மைப்பெயர் நான்காம்வேற்றுமையுருபேற்றுக் கோடற்பொருளிலேவந்த ஒரு திரிபுமொழி. (உ-ம்.) "அன்றெனக்குநீயொருதுணை" (வைரா. சதக. கக.)

**எனது**—1. என்னுடையது. 2. யான் என்னுந்தன்மைப்பெயர் ஆறும்வேற்றுமையொருமையில் அது என்னுமுருபேற்றுவிகாரமாய் வந்த ஒருமொழி. (உ-ம்.) "எனதுயிரரசுவாழ்வென்பயாவையும்" ( பாரத. குருகுல. சரு. )

**எனல்**— 1. என்றுசொல்லப்படுதல்.(உ-ம்) "அவனியெனலாந்துலைத்தட்டிரண்டின்" (கந்தபு. திருக். சஎ.) 2. என்று சொல்லற்க எனப்பொருள்படும் ஒரெதிர்மறைவியங்கோள்வினைமுற்று. (உ-ம்.) "பயனில்சொற்பாராட்டுவானை-மகனெனல்" (வள். ககூகூ.) 3. என்று சொல்லுக எனப்பொருள்படும் ஓர் வியங்கோள்வினைமுற்று. (உ-ம்.) "மக்கட்பதடியெனல்" (வள். ககூகூ.) 4. என்று சொல்லுதல். (உ-ம்.) "கொன்றுவியுண்பேனெனலும்" (கந்தபு. தாரக. எஉ.)

**எனவ**—என்னுடையன. (உ-ம்.) "எனவகேண்மதி" (புறநா. கூரு.)

**எனு**— 1. என்று. (உ-ம்.) "தன்றிருச்செல்வமுந்தாங்குவாயெனு " ( பாரத. அருச்சுனன்றவ. கசஉ.) 2. ஒரெண்ணிடைச்சொல். (உ-ம்.) "நிலனெனுநீரெனு" (இலக்கணவி. உருகூ. உரை.)

**எனது**—1. என்னுடையது. 2. எனதென்னும்மமகாரம். (உ-ம்.) "எனதுயானெனுஞ்செருக்கிகந்து" (கந்தபு. அயனைச்சிறைபுரி. உ.)

**எனின்**—1. என்கையினுல். (உ-ம்.) "அவையவைமுனிகுவமெனினே" (பொருந. க0எ.) 2. என்றுசொல்லின்.

**எனினும்**—ஆனுலும். (உ-ம்.) "யாவரேயெனினுமுன்னின்" (கந்தபு. அரசு. ரு.)

**எனும்**— 1. என்கின்ற எனப்பொருள்படும் ஓரெச்சவினை. (உ-ம்.) "வந்தனனெனுஞ்சொற்கேளா" (கந்தபு. எதிர்கொள். கஃ.) 2. என்று சொல்லுவாள் எனப் பொருள்படும் ஒரு பெண்பாற்படர்க்கைவினைமுற்று. (உ-ம்.) "அறமெனக்கிலையோவெனும்" (இராமா. நகர்நீங்கு. கசு.) 3. என்றுசொல்வான் எனப்பொருள்படும் ஆண்பாற்படர்க்கைவினைமுற்று. (உ-ம்.) "தொன்மைபோலுறுவதென்றெனும்" (கந்தபு. சயந்த. கசு.) 4. எனினுமென்பதில் இடைகுறைந்து நின்ற உம்மையடுத்த வினையெச்சமாகிய ஒருவிகாரமொழி. (உ-ம்.) "முன்னோரின்வேறு நூல்செய்துமெனும்" (நன். பொது. கூ.) 5. சிறிதும். (உ-ம்.) "அருளெனுமிலராய்" (யாப். காரிகை. செய்யுளியல். கஅ. உரை.)

**எனே**—என்னே. (உ-ம்.) "என்னே" பார். [னகரங்கெட்டுநின்றது.]

**எனை**—1. எவ்வளவு. (உ-ம்.) "வல்லதெனையென்ன" (சிந்தா. சுர. ஙஃ.)

**எனைத்தானும்**—சிறிதாயினும். (உ-ம்.) "எனைத்தானுநல்லவைகேட்க" (வள். சுகசு.)

**எனைத்து**—1. எத்தன்மைத்து. (உ-ம்.) "எனைத்தொன்று-மெவ்வநோய்தீர்க்குமருந்து" (வள். கஉசக.) 2. எவ்வளவு. (உ-ம்.) "எனைத்துளகேட்பனதுன்பம்யானென்றான்"(இராமா. பள்ளி. சு0.)

**எனைத்துணை**—எவ்வளவு. (உ-ம்.) "எனைத்துணையராயினுமென்னும்" (வள். கசுசு.)

**எனைத்தும்**— முழுதும். (உ-ம்.) "சூரினையெனைத்தும்பொன்றும்" (கந்தபு. மேரு. எஅ.) [இஃது: "எனைத்துயிர்க்கு" மென்பதிற்போல உம்முப்பிரிந்து நின்றுமிப்பொருளுணர்த்தும்.] (திருவிளை. விருத்தகுமார. கஅ.)

**எனைப்பயம்**-யாதுபிரயோசனம்.(ஐங்குறு.)

**எனையது**—எவ்வளவு. (உ-ம்.) "எனையதெனையதெய்தினுர்" (சிந்தா. காந். உகஎ.)

**எனையவர்**—எத்தனைபேர். (உ-ம்.) "நம்மனைவியர்தாமெனைவர்"(சிந்தா. கேமசரி. கஙஉ.)

**எனையவன்**—1. எத்தன்மையன். 2. எவன்.

**எனைவீரும்**—நீவிரெல்லீரும்.

**எனைவேமும்**—
**எனைவோமும்**— } நாமெல்லேமும்.

**எனைவோரும்**—யாவரும். (உ-ம்.) "அன்பு ங்காதலுமெனைவோர்க்குங்காட்டுதலருளாகி" (கந்தபு. தவங். க.)

## ஏ

**ஏ**—[இது: தமிழ்ப்பாஷையின் வர்ணமாலையின் உயிர் வருக்கத்திலே வரும் எட்டாமெழுத்து; அஃது: அங்காப்போடு அடிநாவின்விளிம்பு அண்பல்லினை உறப்பிறப்பதும், அகர இகரக்கூறுகள் சந்தித்துப்பிறப்பதுமான ஒரு நெடில்.]

1. இகழ்ச்சிப் பொருளிலே வரும் ஓரிடைச்சொல். (உ-ம்.) "ஏயோவெனவெள்கினர்யாவருமே" (கந்தபு. மூதனுட்பாகு. ஙரு0.)

2. இசை நிறைத்துநிற்கும் ஓரிடைச்சொல். (உ-ம்.) "ஏயேயிவளொருத்திபேடியோவென்ருர்". (நன். இடை. ங. உரை.)

3. ஈற்றசை. (தொல். சொல். இடை. க.)

4. எண்ணுப் பொருளைத் தருமோரிடைச்சொல். (உ-ம்.) "நிலனேநீரேதீயேவளியே" [நிலனுநீருந்தீயும் வளியும் என எண்ணிநிற்றலால் எண்.] (தொல். இடைச். க. உரை.)

5. எதிர்மறைப்பொருளிலே வரும் ஓரிடைச்சொல். (உ-ம்.) "அவனேகொண்டான்" [அவன் கொண்டிலன் என எதிர்மறைப் பொருளிலே வந்தது.] (நன். இடை. ங. உரை.)

6. எய்யுந்தொழில். (புறப்பொருள்வெண்பாமாலை.]

7. குறிப்புமொழி. (சிந்தா.)

8. சிவன்.

9. செலுத்துதல்.

10. சொல்லின் இறுதியிலே ஓர் அசையாக வரும் ஓரிடைச்சொல். (உ-ம்.) "இயம்புவனெழுத்தே" (நன். இடை. ங. உரை.)

11. தேற்றப் பொருளிலே வரும் ஓரிடைச்சொல். (உ-ம்.) "அவனேகொண்டான்" [அவன்தானெனத்துணிதற் பொருள்பட நிற்றலால் தேற்றம்.] (நன். இடை. ங. உரை.)

12. பாணம்.

13. பிரிநிலைப் பொருளிலே வரும் ஓரிடைச்சொல். (உ-ம்.) ""அவருள்இவனேகொண்டான்" [ஒருகூட்டத்துள் நின்றும் ஒருவனைப்பிரித்தமையிற்பிரிநிலை.] (நன். இடை. ங. உரை.)

14. பெருக்கப் பொருளிலே வரும் ஓரிடைச்சொல். (உ-ம்.) "ஏகல்லடுக்கம்"(தொல்.சொல். ஙOO. சேன.)

15. மேல் நோக்குதல். (உ-ம்.) "கார்நினைந்-தேத்தருமயிர்குழாமிருந்தபோன்றவே" (சிந்தா. நாமக. ௫அ.)
16. விட்டுணு.
17. விளிக்கும்போது பிரயோகிக்கப்படுமோரிடைச்சொல்.
18. வினாப்பொருளைத்தருமோரிடைச்சொல். (உ-ம்.) "இவனேகொண்டான்" [இவனோ என வினாவிநிற்றலால் வினா.] (நன். இடை. ௬. உரை.)

ஏஎம்—ஏவி. (பதிற்றுப்பத்து.)

ஏஏ—1. உரத்தசத்தத்தோடு விளிக்குங்கால் வழங்கும் ஒருவிளியுருபு. 2. ஓர் இகழ்ச்சிக்குறிப்பு. (உ-ம்.) "சால்புடையாரெல்லாரும் ஏ! ஏ! இஃதோ இவனறிவென் றெள்ளிநகையாடுதற்கேதுவாம்" (சி. சி. பாயிர. ௪. சிவஞான.)

ஏக்கம்—1. ஆருக்கவலை. "வானவரேக்கமுஞ்சிதைய" (கந்தபு. துணைவர்வரு ௬௦.) 2. ஏங்கல். 3. கவலை. 4. பயம். 5. பேராசை.

ஏக்கரவு—ஏக்கம்.

ஏக்கழுத்தம்—1. இறுமாப்பு 2. தலையெடுப்பு. (உ-ம்.) "எள்ளுநர்கட்கேக்கழுத்தம்போலவினிதன்றே" (சிந்தா. காந்தருவ. ௪.) 3. மேன்மை

ஏக்கழுத்து— அண்ணாந்த நிலையிற்கழுத்து.

ஏக்கறல்—ஏக்கறுதல்.

ஏக்கறவு—1. ஏக்கமடைதல். (உ-ம்.) "ஏக்கறவெய்தவீக்குமிளமுலையமரர்மாதர்" (கூர்மபு. தக்கன்வே. ௪.) 2. ஒன்றைப்பெறவிரும்பித்தாழ்ந்துநிற்குநிலை.

ஏக்கறு— ஏக்கறு என்னுமேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும்.

ஏக்கறுதல்— 1. அவமானித்தல். 2. இளைத்திடைதல். (சிந்தா.) 3. ஒன்றைப்பெறவிரும்பித்தாழ்ந்துநிற்றல். (உ-ம்.) "அதிகாரச்செருக்குடையார் பின் சென்று நின்று ஏக்கறுஞ் சிறுமையின்நீங்குதல் கூடும்" (சி. சி. உ. ௬௬. சிவஞான.) "உடையார்முனில்லார்போலேக்கற்றுங் கற்றார்- கடையரேகல்லாதவர்" (வள். ௬௬௫.) 4. மற்றொன்றின் நன்மையைத்தான் பெறவிரும்புதல். (உ-ம்.) "மதியேக்கறூஉமாசறுதிருமுகத்து" (சிறுபா. கருஎ.)

ஏக்து—ஏக்கம். (உ-ம்.) "ஏக்கெறிதல்" பார்.

ஏக்துதி—ஏகச்செய் எனப்பொருள்படும் ஒருமுன்னிலைவினை.

ஏக்கெறிதல்— கவலைநீக்கல். (உ-ம்.) "ஏக்கெறிந்துலகெங்குமிரைத்திட" (இரகு. ஆற்று. ௬.)

ஏக்கை—இகழ்ச்சி.

ஏகதுண்டலன்—1. ஆதிசேடன். 2. குபேரன். 3. பலராமன். [ஏககுண்டல: ஒருகாதின்மாத்திரங் குண்டலந் தரித்தவனென்றபடி.]

ஏககோசம்—மொத்தபட்டயம்.

ஏகசக்கரம்— 1. ஒருபுரம். 2. ஏகசக்கிரம். [ஏகசக்ர.]

ஏகசக்கிரம்—1. ஒற்றையுருளை. 2. சூரியனுடையதேர். 3. தனியாணைசெலுத்துதல். 4. பொதுநீக்கியரசாளுதல்.

ஏகசக்கிரவர்த்தி—1. கடவுள். 2. தனியாணைசெலுத்துவோன். 3. பொதுநீக்கியாளுவோன்.

ஏகசக்கிரவனம்— வீமனாற்கொல்லப்பட்டயாதுதாநன் என்னும் அரக்கனிருந்த இடம். (உ-ம்.) "ஏகசக்கிரவனத்திருந்ததிறல்யாதுதாநனை" (பாரத. வேத்திரகீய. ௬௬.)

ஏகசக்கிராதிபதி—ஏகசக்கிரவர்த்தி.

ஏகசமன்— } ஒருநிகர்.
ஏகசமாநம்— }

ஏகசர்மதுட்டரோகம்— ஒருவகைக்குட்டரோகம்; அது: சரீரத்தின் சர்மமெல்லாம் யானையின் றுதிக்கைச்சர்மம்போலத்தடித்துக்கெட்டிப்பட்டுவருவது. (சீவரட். ௧௪அ.)

ஏகசரம்—காண்டாமிருகம். [ஏகசர]

ஏகசரன்— 1. உதவியின்றியிருக்கிறவன். 2. தனியேதிரிகிறவன். [ஏகசர:]

ஏகசாதர்—சகோதரர். [ஏக-ஒன்று. சாதம்-பிறப்பு.]

ஏகசாதி— 1. ஒருபிறப்புடையோன். 2. ஒரேசாதியான். 3. சூத்திரன். [பிராமணர்முதலியவர்களைப்போல இருபிறப்பினனாகாது ஒருபிறப்புடையனென்பதனாற் சூத்திரனுக்குப்பெயராயிற்று. ஏகம் - ஒன்று. சாதி - குலம், பிறப்பு.]

ஏகசிந்தை—1. ஒத்தமநம். 2 ஒரேநினைவு. 3. ஒன்றிலேசெல்லுஞ்சிந்தை.

ஏகசிருங்கம்—1. ஒரேகொம்புடையது. 2. காண்டாமிருகம். [ஏகச்ருங்க.]

ஏகசிவம்— வித்தியாகலையில் ராகதத்துவத்திலுள்ள ஐந்துபுவநங்களுளொன்று. (சி-வி. கிரியா. உக. உரை.)

ஏகசுபாவம்—1. ஒரேதன்மை. 2. சமமாகியதன்மை.

ஏகசூத்திரம்— 1. உடுக்கை. 2. ஒருவகைவைரியம்.

**ஏகசேடபதத்துவந்துவன்**— துவந்துவசமாசத்தின் ஒருவகை; அஃது: உம்மைத்தொகை பெற்றுவரும்பலபதங்களிலே முன்மொழிதொக்குப் பின்மொழி பன்மையீருகி ஏகசேடமாய் நின்றுஉளப்பாட்டுத்தன்மைவினையோடுமுடிவது. "அந்தணளனைநருகம்யாமே" என்புழிநீயும் யானும் என்னும் உம்மைதொக்கு நீயான் என நிற்றலுமன்றி நீ என்னும் முன்மொழியும் தொக்கு யான் என்னும் பின்மொழி யாம் எனப் பன்மையீருகி ஏகசேடமாய்நின்று நருகம் என்னும் உளப்பாட்டுத்தன்மைவினையோடு முடிந்தது.] (பி. வி. உ௯. உரை.)

**ஏகசேடம்**—துவந்துவ சமாசத்திலே சேடமாய்நின்ற ஒன்று: " அந்தணளனைநருகம்யாமே" என்னும் வாக்கியத்திலே நீயும் யானும் என்னுங் கருத்தாப்பதங்களில் நீ என்னும் பதமும் உம்மைகளுந்தொக, யான் என்பது திரிந்து, யாம் என்பது ஏகசேடமாய் நின்றது. (பி-வி. உ௯.)

**ஏகசேடன்**—ஏகசேடம். (பி-வி. உ௯.)

**ஏகத்துவம்** — (வேதாந்தம்) அத்துவிதம். ஒன்ருயிருக்குந்தன்மை.

**ஏகத்துவியாதிலதுக்கிரியை**- லகுகுருச்செய்கை. (வீரசோ. யாப். உ௭. உரை.)

**ஏகத்தொகை**—முழுத்தொகை.

**ஏகதண்டி**— ஒருவகைச் சந்நியாசி. [ஸௌக ஓ௦வி.]

**ஏகதத்துவம்**—ஒருவகைத்தீட்சை. (உ-ம்.) "ஓமசம்பந்தமாகிய ஔத்திரியென்றுசொல்லிய தீக்கையைவிசாரிக்கில் ஏகதத்துவ திரிதத்துவ முதலாகிய தீக்கைபலவுமுளவென்றறிக" (சி. சி. அ: ௯. மறை.)

**ஏகதந்தன்**—1. ஒற்றைக்கொம்பன். 2. கயமுகாசுரன். 3. விநாயகன். [கயமுகனைவதைக்கும்பொருட்டுத்தமது இரண்டு கொம்புகளிலே ஒன்றை முரித் தெடுத்துக்கொண்டவராதலின் அவர்க்கு இப்பெயராயிற்று.] [ஸௌகஉஷ.]

**ஏகதமன்**— அநேகருளொருவன். [ஸௌக தஜ.]

**ஏகதரன்**— இருவருளொருவன். [ஸௌக தர.]

**ஏகதா**— ஒரு பிரகாரம். (சி-வி. யோக. உ.) [ஸௌகயா.]

**ஏகதானன்**—ஏகாக்கிரசித்தன். [ஸௌகதாந.]

**ஏகதாளம்**—ஓர் ஒத்துடையதாளம்; அஃது: அரைமாத்திரையுடையது. (சிலப். அரங்கே. ௭௯-ம் பக். உ௯. வரி.) இது, புறக்கூத்திற்குரிய நாற்பத்தொருதாளங்களிலொன்று. (திருவிளை. கான்மாறி. அ. உரை. [ஸௌகதாளு]

**ஏகதிநப்பொருத்தம்**— மணப்பொருத்தங்களுளொன்று; அது: ஸ்திரீபுருஷர்களிருவருக்கும் உரோகிணி, திருவாதிரை, பூசம், மகம், அத்தம், உத்திரட்டாதி, திருவோணம் ரேவதி இவைகளிலே ஒருநாளாகில் உத்தமம் என்றும், அச்சுவினி, கார்த்திகை, மிருகசீரிடம், புநர்பூசம், உத்திரம், சித்திரை, அநுஷம், உத்தராடம் இவைகளுளொருநாளாகில் மத்திமம் என்றும், இவற்றுள் ஸ்திரீபுருஷர்கள் நாள் ஒன்ருகி அந்நாள் இரண்டு இராசிக்குப்பங்குபட்டநாளாகில் முதலிராசிநாள் புருஷனுக்கும் இரண்டாமிராசிநாள் பெண்ணுக்கும் ஆகிற்பொருந்தும் என்றும் அறியப்படுவது.

**ஏகதிரீயத்துவம்**— ஒன்றிலே மூன்றுதத்துவங்கொண்டிருத்தல்.

**ஏகதேகம்**—1. ஒருடம்பாக்கப்பட்டது. 2. சிறப்பாகச்செய்யப்பட்டது. 3. புதனென்னுங் கிரகம். 4. யௌவனம்.

**ஏகதேசக்காரன்**—மாறுபாடுள்ளவன்.

**ஏகதேசதிட்டாந்தம்**— ஏகதேசதிருட்டாந்தம். [திருட்டாந்தம் பார்.]

**ஏகதேசம்**— 1. அரிது. 2. ஒட்டுக்கு. 3. ஓரோவிடத்து விதிபிறழ்வு. 4. ஒவ்வாமை. 5. ஓரிடம். [ஏௌகதெஶ.] 6. சந்தேகம். 7.சிறுபான்மை. (உ-ம்.) "யாம் இந்நூலுட்சொற்களின்பெயரை ஏகதேசந்தமிழாகவும், பிராயிகம் தற்சமம் தற்பவமாகவுங்கூறினும்" (பி. வி. உ. உரை.) 8. பங்கு, முழுதுமல்லாதது, சிறிது, கூறு. (உ-ம்.) "வருஞ்செயன்ஞானமிச்சை- யேயுமக்கலாதிமூன்ருலேகதேசத்தினேய்ந்து"(சி. சி. ௪: உ௧.) 9. முன்பின்னுகல். 10. வேற்றுமை.

**ஏகதேசவறிவு**— சிலவற்றைமாத்திரமறியுமறிவு. (உ-ம்.)"ஏகதேச அறிவைச்செய்தல் ஏகதேசப் படுந்தகுதியுடைய பொருட்கேயன்றி ஏனையதற்குரித்தன்று"(சி. சி. ௧: ௬௪. சிவஞாந.)

**ஏகதேசவுருவகம்**— உருவகவலங்காரத்தொருவகை; அஃது: ஒன்றற்கொன்றிருக்குமியைபுநோக்கி ஒருபொருளை உருவகமாக்கியும், அதற்கியையமற்றப்பொருளிலும் உருவகத்தன்மையையேற்றுதுகூறுதல். (வரலாறு.) "பிறவிப்பெருங்கடனீந்துவர்நீந்தா- ரிறைவனடிசேராதார்" (வள். ௰.) [இதிலே பிறவியில் கடற்றன்மையையேற்றியதற்கிசைய இறைவனடியில் புணைத்தன்மையை ஏற்ருததால் பிறவிப்பெருங்கடல் ஏகதேசவுருவகமாயிற்று.]

ஏகதேசவுவமை—உலுத்தவுவமை.

ஏகதேசி — எங்கும்வியாபகமல்லாத இருப்புடையது. (உ-ம்.) "இவ்வைங்கோசங்களில் அதுவது வாய் வசிப்புண்டு ஏகதேசியாய்ப்போக்குவரவுசெய்துநிற்கும்" (சி. சி. ௪. உ௬. சிவஞாந.)

ஏகதேசித்துவம்— ஒருபாகத்திலிருக்குந்தன்மை. (சி. சி. அ: ௬௧. சிவாக்.)

ஏகதேசியம்—ஒருபங்கிலுள்ளது. (சி. சி. ௪: உ௧. சிவாக்.)

ஏகதேவன்—1. கடவுள். 2. சிவன் 3. புத்தன். (திவாகர. முதலாவது.) [ஏகதேவ.]

ஏகநாதன் — 1. ஒரேகடவுளாகிய சிவன்; இவர்: நிட்களம், சகளம், நிட்களசகளமென ஆன்மாக்களினறிவுக்குப்புலப்படுகையின் பொருட்டுச், சிவம், சத்தி, நாதம், விந்து, சதாசிவம், ஈசன், உருத்திரன், மால், பிரமா என ஒன்பது விதமான திருமேனியை யொன்றிலொன்ருகக் கொண்டு பஞ்சகிருத்தியமாகிய பரமாநந்ததாண்டவத்தை நடிப்பர் என்பர்.(உ-ம்.)"சிவஞ்சத்திநாதம்விந்துச்சதாசிவந்திகழுமீசன்-உவந்தருளுருத்திரன்ருன் மாலயனென்றிஒன்ருய்ப்-பவந்தருமருவநாலிங்குருவநாலுபயமொன்ருய்-நவந்தருபேதமேக நாதனே நடிப்பனென்பர்" (சி. சி. உ: ௭௪.) 2. கடவுள். 3. சுயாதிபதி. [ஏகநாத:]

ஏகநாயகன்—1. கடவுள். (உ-ம்.) "ஏகநாயகனினிதுறைவடபெருங்கைலே" (உபதேச. கைலே. க௬.) 2. சுயாதிபதி. [ஏகநாயக:]

ஏகநேத்திரம்— சாந்திகலேயில் ஈசுரதத்துவத்திலுள்ள எட்டுப்புவநங்களுளொன்று. (சி-லி. கிரியா. உ௧. தாற்.) [ஏக, நேத்ர.]

ஏகநேத்திரர் — ஈசுரதத்துவத்திலிருக்கும் அட்டவித்தியேசுரர்களுளொருவர். (சி. சி. க: உ௫. மறை.)

ஏகப்பிழை—முழுதும்பிழை.

ஏகப்பெருவெள்ளம்— ஒருமிக்கமுடியபெருவெள்ளம்.

ஏகப்பெருவெளி—பெருவெளி.

ஏகபத்தினி—1. ஒரேமனைவி. 2. கற்புடைய மனைவி, பதிவிரதை. [ஏகபத்நீ.]

ஏகபத்திரிகை— வெண்டுளசி. [ஏகபத்ரிகா.]

ஏகபதி— 1. தனித்தனிவருவது. (பி-வி. ௬௬. உரை.) 2. வழி. [ஏகபதி.]

ஏகபந்தநம் — 1. ஒருகூட்டமாய்க்கூடுதல். 2. ஒன்றிப்பு. [ஏக, பந்தந.]

ஏகபாததிரிமூர்த்தம்— பிரமவிட்டுணுக்களிருபக்கத்தினின்றுந்தோன்ற நிற்கும் மூர்த்தம்; அது: "அடிப்பார்க்கருளுமொருதாளுமம்பொற்கமலவிழிமூன்றும் - படப்பாம்பணிந்தபுயநான்குஞ்சூலப்படையுமெழில்வயங்க- விடப்பாலரியை வலத்தயனை யெழுநாற்கோடி யுருத்திரரை- நடுப்பாற்ருேற்றியையைந்துவடிவமுடனுநலம்பிறக்கி" என்னுமிக்காஞ்சிப்புராணச்செய்யுளாற்பெறப்படும். (கூர்மபு. அட்டமூ. உ௪. உரை.)

ஏகபாததிரிமூர்த்தி— மும்மூர்த்தி முதலாய தேவர்களுக்கும் பிறப்பிடமாய்த் தனித்துநிற்குஞ்சிவன். (சிவபரா. க௨௭. பக்.)

ஏகபாதம்— 1. ஒருகால். 2. திரிதரவில்லனவாகிய ஒன்பதுவகை இருக்கைகளு ளொன்று.(சிலப். வேனிற்காதை. உ௫. உரை.) 3. மடக்கலங்காரத்துளொருவகை; அது: நான்கடியும் முழுதுமடக்குதல். (வரலாறு.) "வானகந்தருமிசையவாயின - வானகந்தருமிசையவாயின - வானகந்தருமிசையவாயின- வானகந்தருமிசையவாயின" (தண்டி. ௯௬. உரை.)

ஏகபாதமூர்த்தி— சர்வசங்காரகாலத்திலே யாவரும் லயமடைய எல்லா உலகும் தமதுதிருவடியிற்பொருந்த நிற்குஞ்சிவபெருமான். (சிவபராக். க௯௫. பக்.)

ஏகபாதவாதநம்— அத்தமேற்காலாதநமாய்க்கிடந்து ஒருகான்மேனீட்டுவது.

ஏகபாவனை— ஒருமைப்பாவனை. [ஏகபாவநா.]

ஏகபாவம்—ஒரே தன்மை. [ஏகபாவ]

ஏகபிங்கலம்— இருநூற்றிருபத்துநாலுபுவநங்களுளொன்று. (கந்தபு. கணங்கள்செல்.௬௦. உரை.)

ஏகபிங்கலன்— குபேரன். [ஏக - ஒன்று. பிங்கல - மஞ்சணிறக்குறி.]

ஏகபிங்களம்— வித்தியாகலேயில் மாயாதத்துவத்திலிருக்கும் எட்டுப்புவநங்களுளொன்று. இஃது: ஏகபிங்கலம் என்று மெழுதப்படும். (சி-லி. கிரி. உ௧. தாற்.)

ஏகபிங்கன்—குபேரன். [ஏக - ஒன்று, பிங்க - மஞ்சணிறக்குறி.]

ஏகபிண்டன்-நெருங்கிய உறவினன். [ஏக- ஒன்று. பிண்டம் - திரளே.]

ஏகபிராணன்—ஓர் உயிர்போல நட்பினல் ஒன்றித்திருக்குந்தன்மை.

ஏகப்பெருவெள்ளம்—ஒருமிக்கமூடிய பெருவெள்ளம்.

ஏகபோககிராமம்— ஒருவனுக்கே சுவாதீநமாயுள்ள கிராமம்.

ஏகபோகம்—1. இட்டம். 2. இருவருமொத்தபோகம். 3. ஒருதன்மைத்தானவின்பம். 4. சுகதுக்கங்களைச்சமமாகநினைக்கை. 5. மநத்தின்படி அநுபவிக்கை. 6. மனைவியுங்கணவனுமந்நியோந்நியமாயிருக்கை. [ஹோம.]

ஏகம்—1. அக்குரோணியெட்டுப்பங்குகொண்டது. (பிங்கலந். கசுடுக.) 2. உடன்பாடு. 3. ஒப்பில்லாதது. 4. ஒன்று. 5. சிரேட்டமானது. 6. தனிமை. 7. திப்பலி. 8. முழுவதும். [3, 4, 5, 6. ஏகம்.]

ஏகம்பட்சாரம்—ஒருவகை உலோகம்.

ஏகம்பம்— ஒருதலம். (உ-ம்.) "ஏகம்பத்தினியல்பாயிருந்து" (திருவாச. கீர்த்தித்திருவக. எஎ.)

ஏகம்பர்— காஞ்சியிலே ஏகம்ப தலத்திலே கோயில்கொண்டிருக்கின்ற சிவன். (உ-ம்.) "என்றுமேகம்பரென்றெடுத்தேத்த" (பெரியபு. திருக்குறிப்பு. சுடு.)

ஏகம்பன்—ஏகம்பர்.

ஏகராத்திரம்—ஒன்றான இராத்திரி. [ஏக ராத்ர.]

ஏகராத்திரன்—மருகன்.

ஏகருத்திரம்—சாந்திகலையில் ஈசுரதத்துவத்திலிருக்கும் எட்டுப்புவநங்களுளொன்று. (வி-ணி. உஎசு.) (சி-வி. கிரியா. உக. தாற்.)

ஏகருத்திரர்— ஈசுரதத்துவத்திலிருக்கும் அட்டவித்தியேசுரருளொருவர். (சி. சி. க: உடு மறை.)

ஏகருத்திரன்—புத்திதத்துவத்தினுள்ள எட்டுச்சூக்குமபுவநங்களுளொன்றாகிய மாகேந்திரத்தினதுதலைவன். (கந்தபு. கணங்கள்செல். கO. உரை.)

ஏகருபம்—ஒரேவடிவம். [ஏகம் - ஒன்று. ரூபம் - வடிவம்.]

ஏகருபன்—கடவுள்.

ஏகல்—1. உயர்ச்சி. 2: நடத்தல். 3. போகல். (உ-ம்.)"குழாங்கொண்டேகலில்" (சிந்தா. நாமக. உஅ.) 4. போகாதே எனப் பொருள்படும் ஒருவினைமுற்று. (உ-ம்.) "ஏகலென்பதியானுமுரைக்கிலென்"(இராமா. நகர்நீங்கு.கக.)

ஏகலிங்கன்—குபேரன். [ஏகலிங்க:]

ஏகவசநம்—1. ஒருமைப்பால். 2. ஒரேமொழி. 3. மெய். [ஏகவசநம்.]

ஏகவத்தவாதநம்—ஏகபாதவாதநமாகக்கிடந்து கையைநீட்டியிருப்பது.

ஏகவஸ்து—கடவுள். [வஸ்து-பொருள்.]

ஏகவற்பாவி—துவிகுசமாசனில் ஒருவகை; அது: முன்மொழி எண்ணும் பின்மொழிதத்திதார்த்தமாயும் வந்து ஒருபொருளைத்தருவது. (உ-ம்.) "தொகைத்துவிகு - மூற்பதமெண்பிற்பதந்தத்திதார்த்தமுடித்துமெழுஉம்-பற்பலவேகவற்பாவியனேகவற்பாவியென்றே" (பி. வி. உக.) "பன்னிருபடலம்" என்பதில்; அது பன்னிரு படலங்களாற் செய்யப்பட்டநூல் எனப் பொருள்படுதலுங் காண்க. [ஏக - ஒன்று. வதி - போல, ஆக. பாவி - இருப்பது.]

ஏகவாசம்—1. ஆலமரம். 2. கூடியிருத்தல். 3. தரியிருப்பு.

ஏகவாணை— பொதுவறவாளுதல். (உ-ம்.) "ஏகவாணைவெண்குடை"(சிந்தா.நாமக.ககஉ.)

ஏகவாரி—சிறியசுரிகை.

ஏகவிருட்டு—அதிகவிருட்டு.

ஏகவீரம்—1. ஒருமரம். 2. மான். 3. வித்தியாகலையிற் காலதத்துவத்திலிருக்கும் இரண்டுபுவநங்களுளொன்று. (சி-வி. கிரியா. உக. உரை.) 4. வித்தியாகலையிற் புருடதத்துவத்திலுள்ள ஆறுபுவநங்களுளொன்று. (சி. சி. அ: அ. மறை.)

ஏகவீரன்—1. அருச்சுநன். 2. இணையில் வீரன். 3. இராகதத்துவத்திலிருக்கும் பன்னிரண்டு ருத்திரருள் ஒருவர். 4.கன்னன். 5. ஸ்ரீராமன். 6. மகாதேவாஷ்டகருளொருவர். (வி-ணி. உஎசு.)

ஏகவெளி—1. பெருவெளி. 2. மறைவிலாவெளி.

ஏகவேணி— 1. ஏகமாய்ப் பின்னியசடை. 2. ஏகமாய்ப்பின்னியசடையினையுடையாள். 3. மூதேவி.

ஏகன்—1. ஒருவன். (உ-ம்.) "ஆன்மா ஏகனேஅநேகனே" (சிவஞானபோ. பாண். கக. விரு.) 2. கடவுள். 3. சிரேட்டமானவன்.

ஏகாக்கம்— காக்கை. [ஏகா - ஒன்று. அக்ஷ - கண்.]

ஏகாக்கன்—ஒற்றைக்கண்ணன். [ஏகம்-ஒன்று. சக்ஷுஸ் - கண்ணையுடையவன்.]

ஏகாக்கிரதை — ஒன்றிலே சிந்தைவைத்திருத்தல். [ஏக; அக்ரதா.]

ஏகாக்கிரம்— 1. ஒன்றிலே சிந்தைவைத்திருத்தல். 2. மநங்கலங்காமை. [ஏகாக்ரம்.]

**ஏகாக்கிரன்**—ஒரேவிஷயத்தைமநத்திற்சிந்திப்பவன்.

**ஏகாகம்**—1. ஒரேநாள். 2. இறந்தார்க்குப் பதினொன்றுநாளிற்செய்யுங்கிரியை. [வனகம - ஒன்று. கூஹ நீ - நாள்.]

**ஏகாகாரம்**—1. ஒரேரூபம். (வி-ணி)2. பொன்.

**ஏகாகி**—தனித்திருத்தல். [வனகாகி.]

**ஏகாங்கநமஸ்காரம்**—சிரந்தாழ்ந்துவணங்குதல். அது. "சிரந்தனைத்தாழ்ந்துங்கைதெரி னேகாங்கமாகும்" என்னுஞ்செய்யுளிற்காண்க. (சைவச. பொது. ருருகூ. உரை.)

**ஏகாங்கம்**-ஒன்றாகிய உறுப்பு.[வனகாமம]

**ஏகாங்கவாதம்**— பாரிசவாதம். ( சீவரட். கசுசு. பக்.)

**ஏகாங்கவுருவகம்** — உருவகவலங்காரத்தொருவகை; அஃது: ஒருபொருளினது அங்கம்பலவற்றுள்ளும் ஓர் அங்கத்தையே உருவகஞ்செய்து ஒழிந்த அங்கங்களை வாளாகூறுவது. (தண்டி. பொருளணி. கக.)

**ஏகாங்கன்**—புதன். [வனக-சிரேட்டமான. கூமம - உறுப்பு.]

**ஏகாங்கி**—1. சந்நியாசி. 2. தனிமையாயிருப்பவன். 3. பிரமசாரி.

**ஏகாசம்**— 1. உத்தரீயம். (உ-ம்.) "ஐந்தலையமாசுணங்கொண்டம்பொற்றலைமேலேகாசமாவிட்டு"(தேவார. திருப்புறம். கூ. திருநாவு.) 2. போர்வை. (உ-ம்.) "பெருவேழமுரித்-தேகாசமிட்டவகிலேசர் காசியெழில்வரைமேல்" (விடுகவி.)

**ஏகாட்சரம்**—1.எழுத்தொன்றாகிய அசை. 2. ஒரே எழுத்து. 3.ஓமென்னும் பிரணவ எழுத்து. [வனகாக்ஷர.]

**ஏகாட்சரி**— 1. பிரணவம். 2. புவநாசத்தி. 3. மிறைக்கவியினொன்று; அஃது: ஒருவரி எழுத்தால் ஒருகவி முடிவது.

**ஏகாட்சரிகட்சம்**— } ஒரு மாந்திரிகநூல்.
**ஏகாட்சரிகக்கிஷம்**- }

**ஏகாட்சன்**—புத்திதத்துவத்திலுள்ள எட்டுச்சூக்கும புவநங்களுளொன்றாகிய காந்தருவத்தினது தலைவன். (கந்தபு. கணங்கள்செல்.கo. உரை.)

**ஏகாட்சி**—1. ஒற்றைக்கண்ணன். 2. காக்கை. 3. சிவன். 4. சுக்கிரன். [வனகம - ஒன்று. அக்ஷிம - கண். இ - ஒருவிகுதி.]

**ஏகாண்டம்**— 1. ஆகாயம். 2. பூரணம். 3. வெளி.

**ஏகாத்தியம்**—தனிச்செங்கோன்மை. [ஏகாதிபத்தியம் என்பதின் விகாரம்போலும்.]

**ஏகாதசபதிவிரதையர்**— கற்புடைய மாதர் பதினொருவர். அவர்: பரிசவ, பிரசூதி, கூஷதி, கியாதி, தித்துதி, சம்பூதப்பிரீதி, க்ஷமை, சந்நதி, அநசூயை, தேவபாகை, அருந்ததி என்பவர்களாம். (வி-ணி.)

**ஏகாதசம்**—பதினொன்று. (உ-ம்.) "ஏகாதசந்தன்னிலெக்கோளுநிகரென்ன" (பாரத. பதினேழாம்போ. உஉஅ.) [வனகம - ஒன்று. உரமா - பத்து.]

**ஏகாதசமுக்கியகணேஸ்வரர்**— நந்திகேச்சுவரர், பிருங்கி, மகாகாளர், கிரீடி, கண்டர், காலர், காலகண்டர், கண்டாகர்ணர், சுபோஷர், தண்டி, ஈசாநியர் என்னுங் கணத்தலைவர் பதினொருவர். (வி-ணி. உகூஉ.)

**ஏகாதசவுருத்திரர்**-பதினொரு உருத்திரர்கள்; அவர்கள். மகாதேவன்,சிவோத்தமன்,உருத்திரன், சங்கரன், நீலலோகிதன், ஈசானன்,விசயன், பீமன், தேவதேவன், பவோற்பவன்,கபாலீசன் என்பவர்களாம். இவர்கள் பிரமதேவனுடைய நெற்றித்தலத்தினின் றுற்பவித்துச்சிவன்வடிவத்தைப்பெற்றுள்ளவர்.(உ-ம்.)"முந்தை நான்முகன்விதிபெருன்மயங்கலுமுக்கட் - டந்தையேவலாலாங்கவனெற்றியந்தலத்தின் - வந்துதோன்றிநல்லருள்செய்துவாலுணர்வளித்த - வைந்துமாறுமாமுருத்திரர் தாமும் வந்தடைந்தார்" என்பதினுற்பெறப்படும்.(கந்தபு. கணங்கள்செல். கூ.) கந்தபுராண உரைகாரர் சிவோத்தமன் தேவதேவன் என்னும் பெயர்களை நீக்கி அரன்சௌமியயன் என்னும்பெயர்களைக்கூறுவர். கூர்மபுராண உரைகாரரும் கந்தபுராண உரைகாரரும் ஒத்தநாமங்களால் உருத்திரரைக்கூறினரேனும் சௌமியயன் என்னும் நாமத்தாற் பேதப்படுவர். கூர்மபுராணத்திலே சௌமியயன்என்று ாது. (கூர்மபு. பலவ. கச. உரை.)

**ஏகாதசி**—பதினொராந்திதி.

**ஏகாதசிபுராணம்**—ஒருபுராணம்.

**ஏகாதசிவிரதம்**— வைணவசமய விரதங்களுள் ஒன்று.

**ஏகாதசேந்திரியங்கள்** — ஞானேந்திரியங்கள் ஐந்தும் கன்மேந்திரியங்கள் ஐந்தும் அக இந்திரியம் ஒன்றும் ஆகிய பதினொரு இந்திரியங்கள். (சி. சி. உ: எகூ. சிவாக்.)

**ஏகாதிகாரத்துவம்**—ஏகாதிபத்தியம்.

**ஏகாதிபத்தியம்**—தனியரசாட்சி.

ஏகாதிபதி— தனியரசாட்சிபண்ணுபவன்.

ஏகாந்தசேவை — தனிச்சேவை.

ஏகாந்தத்தலம்—தனித்தவிடம்.

ஏகாந்தநித்திரை—அமைதியான நித்திரை, இலௌகிகவிகாரஞ்சிறிதுமின்றிய நிலை.

ஏகாந்தம்—1. தவமுதமுடிவு. (வள்.ருசுகூ. உரை.) 2. தனித்திருக்குமிடம். 3. தனித்து யோகஞ்செய்கை. 4. தனிமை. [ஏகாந்த.]

ஏகாந்தமாயிருத்தல்— தனித்திருத்தல்.

ஏகாந்தராமம்—ஒரு நகர். (சேதுபு. அமுத தீர்த்த. கூடு.)

ஏகாந்தவாழ்வு—1. ஒப்பற்றவாழ்வு. 2. தனி வாழ்வு. 3. துறவியின்வாழ்க்கை.

ஏகாந்நம்—ஓரிடத்திற்பிச்சையாகப்பெறும் அந்நம். (சைவச. பொதுவி. கூஎசு. உரை.)

ஏகாநேகம்— பேதாபேதம். (சி. சி. சு: கூ. சிவஞாந.)

ஏகாம்பரன்—சிவன்.

ஏகாயநம்— 1. ஒருவன்மாத்திரஞ்செல்லக் கூடிய பாதை. 2. கடவுள் ஒருவரே என்னுங் கொள்கை. 3. தனித்தவிடம்.

ஏகாயநன்—1. அசையாமநமுள்ளவன். 2. ஏகாயநமதப்பிரவர்த்தகன்.

ஏகாயம்— ஏகாசம். (தேவார. புள்ளிருக். சு. திருஞா.)

ஏகார்க்களசக்கரம் — ஏகார்க்களயோகத் தைக்காட்டுமொருசக்கரம். [இதனல் ஏர்ப்பூட் டுநாளறிவது.]

ஏகார்க்களம்—1. ஏர்ப்பூட்டநாட்பார்க்கை. 2. ஒருரேகை, கிழக்கு மேற்காக ஓர் இரே கையைக்கீறி அதிலே பதின்மூன்று விலங்கு ரேகையைக்கீறினல் இரண்டுபக்கமும் உச்சியு மாக இருபத்தேழாம். அதிலே விட்கம்பமா தியாகக்கழித்து ஒன்பது யோகங்களுக்குச்சொ ல்லுகிறநாளை உச்சியில்வைத்துத் தொடங்கி ஆதித்தன் நின்றநாளளவும் வலமாக எண்ணிக் குறிசெய்து பின்னருமுச்சியிலே தொடங்கிச் சந்திரன் நின்ற நாளளவுமெண்ண இருவர்நா ளுமொருகயிற்றிலே யிருக்குமானல் அந்தயோ கமுற்றநாள் ஏகார்க்களம். (உ-ம்.) "நிலையாக வென்றும் விலங்குபன்மூன்று நிலத்தெழுதித் தலையாமியோகத்துநாள்வைத்துச் சந்திரனின் றநாளும் - வலமாங்கதிரவன் மன்னியநாளொ டெதிருறுமேற் - கொலையானவேகார்க்களங்கு றுகும்மிதுகுற்றமென்னே" (விதாந.பஞ்சாங்க. உஎ.) அதிகண்டத்துக்கு அநுஷமும், வைதிரு திக்குச் சித்திரையும், வச்சிரத்துக்குப் பூசமும், சூலத்துக்கு மிருகசிரிடமும், விட்கம்பத்துக்கு அசுபதியும், வியதிபாதத்துக்கு ஆயிலியமும், கண்டத்துக்குமூலமும், பரிகத்துக்கு மகமும்,வி யாகாதத்துக்குப் புநர்பூசமும் உச்சியில் வைக் கும் நாட்களாம். (விதாந. பஞ்சாங்க. உஅ.)

ஏகார்த்தம்— 1. ஒன்றரை. 2. ஒரே அர்த் தம். 3. ஒரேநோக்கம்.

ஏகாலி—1. சவுக்காரம். 2. வண்ணான்.

ஏகாலியர்—வண்ணார்.

ஏகாவரணபூசை— பிரமாங்கங்களைமாத்தி ரம்பூசிப்பது.(சைவச. பொதுவி. ருஉக. உரை.)

ஏகாவலி—1. ஒற்றைச்சரத்துமுத்துமாலை. 2. பொருளணிகளுளொன்று. இதனை விசாக- அணி. உஎ-ம். பக்கத்திற்காண்க.

ஏகான்மபாவம்— ஆன்மா ஒன்றுயேயிருத் தல். (பௌட். சு. எஎ.)

ஏகான்மவாதம்—ஆன்மா என வஸ்து ஒன் றே உளதென வாதிக்குமதம்; அது: மாயாவா தம், பார்க்கரியவாதம், கிரீடாப்பிரமவாதம், சத் தப்பிரமவாதம் என நான்குவகைப்படும். ஏகா ன்மவாதநூல்செய்தவன் வியாசமுநிவன். (சிவ ஞா. பா. சசு. பக்.)

ஏகி—கைம்பெண். [புருஷனையிழந்து தனி யேயிருப்பவள் என்றபடி.]

ஏகிசந்திரன்— சைநத்திற்சொல்லப்படும் இ ருபத்துநான்கு தீர்த்தகரரில் ஒருவன். (த. நி. போ. கங.)

ஏகிபவித்தல்—1. ஒன்றித்தல். 2. சேருதல். (உ-ம்.) "ஆன்மாசிவனுடனேஏகீபவித்து" (சிவ ப்பி. கo: அ. உரை.)

ஏகீபாவம்— 1. ஒருமைப்பாவனை. 2. கூடி யிருத்தல். (சி.சி. கூ: க. ஞாநப.) [ஏகீபாவ.]

ஏகீயன்—1. ஒருவன். 2. தோழன்.

ஏகுதல்— 1. கழிதல். 2. போகுதல். (உ-ம்) "அவற்றையாந்தலைக்-கொண்டனமேகுதல் கூ டற்பாலதோ" (கந்தபு. திருவவதார. எக.)

ஏகேட்சணம்—வித்தியாகலையில் மாயாதத் துவத்திலிருக்கும் எட்டுப்புவநங்களுளொன்று. (சி-வி. கிரி. உக. உரை.)

ஏகை— 1. இரேகை. (சிலப்.) 2. உமை. (உ-ம்.) "பொருவரியசிவையாகி யநந்தையாயே கையாய்ப்புராணையாகி- விரிகதிருமொளியுமெ ன மகேசனைவிட்டகலாத விமலைதோன்றும்" (கூர்மபு. திருக்கல். கூ.) [ஒன்றுயிருக்கின்ற வள் என்றபடி.]

ஏகோத்தாவிருத்திபோசநம்— அந்தியேஷ் டிமுதலிய அபரக்கிரியைகளுள் ஒன்று. (சை வச. பொதுவி. உகக. உரை.)

ஏகோத்திட்டம்— இறந்துபோன ஒருவரு க்காக விசேடமாகச் செய்யும் அபரக்கிரியை; [இஃது: இறந்தவன் நற்கதி அடையும்பொரு

ட்டுப் பிள்ளைகளால் கருமாந்தரகாலத்தில் செய்யும் முக்கிய கிரியை. இதிலுட்காரும் பிராமணன் இறந்தவனுகப்பாவிக்கப்பட்டு அவனுக்கு ஒருவருடத்துக்குப் போதுமான தண்டூல முதலியனகொடுக்கப்பெற்று ஒருவருஷ வரையில் எதிர்ப்படாமலிருக்கவேண்டும். [ஏகோதிஷ்டம்.]

ஏகோதகம்—ஈதிசங்கமம்.

ஏகோதிட்டம்—ஏகோத்திட்டம்.

ஏகோநவிஞ்சதி—பத்தொன்பது.

ஏகோயித்தல்—1. ஒருமனப்படுதல். 2. ஒன்றுதல். (உ-ம்.) "ஞானவனலேச்சுழுமுனைநாடியிலே மேலேகொண்டுபோய்ப் பிரமரந்திரத்திலேவைத்து அந்த அனற்பொறியோடும் ஏகோபிக்கிறதாகப்பாவித்து" (சி. சி. ௧: அ. மறை.) 3. சேருதல்.

ஏங்கல்—1. அஞ்சல். (உ-ம்.) "நேரலன்படையைநோக்கி-யேங்கினர்" (கந்தபு. சூரபன்மன்வதை. ௫௦.) 2. அழுதல். (உ-ம்.) "தழங்குபேரியெனத்தனித்தேங்குவாள்" (இராமா. கரன்வ. ௨.) 3. இரங்கல். 4. ஒலித்தல். (உ-ம்.) "தாரியமுழுதுமேங்க" ("திருவிளை. மெய்க்கா. ௨௬.) 5. கவலைப்படல். (உ-ம்.) "கண்மெற்றதுவானுளோர்கள்கலங்கியேங்கினர்" (கந்தபு. தாரகன்வதை. அ௨.) 6. திகிலுறல். 7. மயிற்குரல். (பிங்கல. ௨௬௧அ.) 8. வாடல். 9. வாய்விடல், சத்தமிடல். (உ-ம்.) "ஏங்கியழுதிட்டனளே" (கந்தபு. வள். ௬௨.) "அழுதேங்கியரற்றுவாள்" (சிலப். ஊர்சூழ்வரி. ௨௫.)

ஏங்கி—இளைத்துநின்று. (சிந்தா.)

ஏங்கு—1. ஏக்கம். 2. ஏங்கென்னேவலும், தெரிநிலைவினைப் பகுதியும், வினைத் தொகையும். 3. ஒரு முதனிலைத்தொழிற்பெயர்.

ஏங்குதல்—1. ஏங்கல். 2. திகைத்தல். (உ-ம்.) "ஏங்கினன்விம்மலோடிருந்தவேந்தல்" (இராமா. பள்ளியடை. ௬௧.)

ஏங்குவனர்— ஏங்குவார், மநம் வருந்துவார். (மதுரைக். ௪௦௪.)

ஏங்குறல்—ஏங்கல்.

ஏச்சு—இகழுதல், வைதல். (உ-ம்.) "ஒரூர்பேச்சு ஒரூர்க்கேச்சு" (வழக்.)

ஏச்சேயாச்சிலை — இந்திரவில். (சிந்தா. முத்தி. ௩௧. உரை.)

ஏசநம் — 1. அசைதல். 2. நடுங்குதல். [ஏஜநா.]

ஏசம்—வெண்கலம்.

ஏசல்—1. இகழ்தல், வைதல். (உ-ம்.) "ஏசலொப்பனகோகிலப்பறவைகளிசைத்தல்" (கந்தபு. நாட்டு. ௪௬.) 2. ஒருபாடல். 3. பழிமொழி.

ஏசலிடல்—ஏசலிட்டுக்காட்டடல்.

ஏசறவு—1. அன்பு. (உ-ம்.) "அமலற்-கேசறவுற்று" (சைவச. ஆசாரிய. ௨௨.) 2. துக்கம். 3. தோத்திரம். (உ-ம்.) "ஏசறவுபேசல்" பார். 4. மநமுதலிய விகாரங்களையகற்றுதல். (சிவதரு. சிவஞாநதாந. ௨௭. உரை.)

ஏசறவுபேசல் — தோத்திரஞ் செய்தல். (உ-ம்.) "என்றுமுநிசண்முகனையேசறவுபேசிநின்று" (சிவதரு. சிறப்புப்பா. ௧௧.)

ஏசறுதல்—1. துக்கித்தல். (உ-ம்.) "எவ்வண்ணமெனநினைந்தேயேசறவினெடுந் துயில்வார்" (பெரியபு. திருநாளைப்போவார். ௨௬.) 2. மநமுதலியவிகாரங்களையகற்றுதல். (உ-ம்.) "உள்ளத்துள்ளேசற்றுவலஞ்செய்துபணிந்து" (சிவதரு. சிவஞாநதாந. ௨௭.)

ஏசாதவர்—1. இகழ்ச்சிசெய்யாதவர். 2. குற்றமில்லாதவர். 3. தேவர்.

ஏசி—கிளி.

ஏசிடாவகம்— அதிமதுரம். (மலையகராதி.)

ஏசு— 1. இகழ்ச்சி. 2. ஏசென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 3. குற்றம். (உ-ம்.) "ஏசறுமாகாசபலம்" (ஞாநவா. சநகரா. ௭.)

ஏசுகை—ஏசல்.

ஏசுதல்—இகழ்தல். (உ-ம்.) "ஏசினும்யானுன்னையேத்தினும்" (திருவாச. நீத்தல். ௫௦.)

ஏட்டிலை— மென்மையையுடைய இலை, முதிராதஇலை. (உ-ம்.) "கோட்டிணர்வேம்பினேட்டிலை" (பெரும்பா. ௫௧.)

ஏட்டிற்கல்வி — ஆசிரியரது துணையின்றி ஏடுகளைவாசித்தலான்மாத்திரம்வரும் அறிவு.

ஏட்டை—1. ஆசை. (உ-ம்.) "ஏட்டைமுற்றும்வன்பிறப்பு" (தணிகை. நைமிச. ௬.) 2. தளர்வு. (உ-ம்.) "ஏட்டைப்பசியினிரைகொள்வியநாகமேபோல்" (சிந்தா. கோவிந்தையார். ௬அ.) 3. துன்பம். 4. வறுமை. [1. ஏஷடா.]

ஏட்டைப்பட்டு—இளைத்து. (சிந்தா.)

ஏட்டைப்பருவம்—தளர்ந்தபருவம்.

ஏட—1. இழிந்தோனைமுன்னிலையாக விளிக்கும் ஒரு சொல். (உ-ம்.) "ஏடவிதனிலைமையிங்காளுமோர்ந்திலையோ" (கந்தபு. காமதகன. ௪௨.) 2. தோழன் முன்னிலை.

ஏடகணி—ஓலையீர்க்கு.(உ-ம்.)"பாற்புலடையேடகணி பாளைகவரிவகை - யாற்புலமினுக்கியிழைத்தாசகற்றி" (தைல. தைலவ. ௨௦.)

ஏடகம்—1. ஆட்டுக்கடா. 2. துகில். (உ-ம்.) (சூ. நிகண், ௭: ௬௧.) 3. தென்னமரம். (உ-ம்.)

"ஏடகநீர்" (தைல. தைலவ. கௗ௫.) 4. பலகை. 5. பனைமரம். (மலையகராதி.) 6. பூவிதழ். (உ-ம்.) " ஏடகமணம் பொருவவெங்களுமியைந் துளாள்" (திருவாதவூ. பாயிர. க.) 7. மதுரைக்குச்சமீபத்திலுள்ள ஒரு சிவஸ்தலம். (உ-ம்.) "வயிறு குற்றாலஞ்-செங்கையேடகமேனியேபூவணம்" (திருவிளை. நகர. உ.) [திருஞானசம்பந்தமூர்த்திநாயனாராலே வையைநதியிலிடப்பட்டருளிய தேவாரத்திருவேடுதங்கிய இடமாதலினிப்பெயர்த்து.]

ஏடணாத்திரயம்— உலகம், அத்தம், புத்திரன் என்னுமூவகை ஆசை.

ஏடணை—விருப்பம். [ஏஷணா.]

ஏடம் — 1. அவமதிப்பு. 2. எதிரிடை. 3. தடுத்தல். 4. நிந்தனை. [1, 4. ஹேலா. 2, 3. ஹேடம்.]

ஏடயதம்— வருகாலம். (பௌட். கு: சக.) [ஏஷ்யத்.]

ஏடல்—கருத்து.

ஏடலகம்—அதிமதுரம்.

ஏடன்— 1. செவிடன். 2. தோழன். [1. ஏட.]

ஏடா — 1. ஆண்பான் முன்னிலைப்பெயர். (மணிமேகலை.) 2. இழிந்தோனைவிளித்தற்கண் வருமொரு முன்னிலைப்பெயர். (உ-ம்.) "ஏடாவேடாவென்னேழை- தன்னைவதைத்தாய்நீயேயென்ற" (திருவிளை. பழியஞ்சின். கச.) 3. தோழன்முன்னிலை.

ஏடாதுடம்— } ஒழுங்கின்மை.
ஏடாகூடம்— }

ஏடாகோடம்— ஏற்றத்தாழ்ச்சியானநடை.

ஏடாசிரியர் — குருவில்லாது ஏடுமாத்திரத்திற்கற்றோர்.

ஏடி— 1. இழிந்தாளை விளித்தற்கண் வருமொரு முன்னிலைப்பெயர். (உ-ம்.) "ஏடிமூடி" (அரிச்ச. மயான. ௯எ.) 2. தோழிமுன்னிலை. (சூ. நிகண். உ: சஉ.)

ஏடு—1. ஏட்டுப்புத்தகம். 2. கண்ணிமை. 3. கோத்தவேடு. (உ-ம்.) "ஏடேறப்பால்குறைந்தது" (நால்வர்நான். உக) 4. பனையோலை. 5. பாலாடை. 6. பூ. (உ-ம்.) "ஏடவிழ்கூந்தலாய்" (கூர்மபு. தேவிதோற்றமு. ௬.) 7. பூவிதழ். (உ-ம்.) "ஏடிருமரை" (பொருந. கடுக.)

ஏடேகப்புண்டரிகம்—ஓரிதழ்த்தாமரை. (இராசவைத்.) [ஏடு-இதழ். ஏகம்-ஒன்று. புண்டரிகம் - தாமரை.]

ஏண்— 1. கர்வப்பேச்சு. (உ-ம்.) "ஏண்பல பகர்ந்தனை" (கந்தபு. அவைபுகு. கடுக.) 2. திண்மை. (சிந்தா.) 3. நிலையுடைமை. (உ-ம்.) "ஏணிலாதவர்" (கந்தபு. மார்க்கண்டேய. சுடு.) 4. பெருமை. 5. வலி. (உ-ம்.) "ஏண்கிளர்சமரில்" (சூ. நிகண். அ: உஅ.) 6. வளைவு.

ஏண்கோண்—திருக்கு, நேரின்மை.

ஏண்டாப்பு—இறுமாப்பு.

ஏணக்கோடு— மான்கொம்பு. (தைல. தைலவ. கௗ௫.)

ஏணகம்— ஒருவகைக் கருமைநிறங்கொண்டமான். [ஏணகம்.]

ஏணம்—1. எலும்பு. 2. ஒருவகைக்கருநிறங்கொண்டமான். 3. நிலைபெறுதல். (தைல. கடவுள். ௩.) 4. மான்றோல். 5. வலி.

ஏணல்—வளைவு.

ஏணாப்பு—இறுமாப்பு.

ஏணி— 1. அடுக்கு. (உ-ம்.) "எண்டிசைப் புறமுமண்டத்தேணியின்பரப்பும்" (கந்தபு. சூரபன்-வதை. சஅ௫.) 2. இறைவை. 3. எண். (ஞானமிர்.) 4. எல்லை. (உ-ம்.) "மூழங்குகடலேணிமலர்தலையுலகமொடு" (மதுரைக். கககக.) 5. நாடு. 6. மான்கன்று.

ஏணிச்சீத்து—ஒருபுல்.

ஏணிப்பந்தம்— ஏணிபோலிருக்கும் ஒருவகைத்தீவர்த்தி.

ஏணை—1. ஆடு. 2. புடவைத்தொட்டில்.

ஏத்தம்—ஏற்றம். (சிலப்பதி.)

ஏத்தல்— 1. துதித்தல். (உ-ம்.) "நீடூழிவாழியெனவாழ்த்தியேத்தும்" (தாயு. கருணாகரக். க.) 2. வணங்கல்.

ஏத்தாளிகன்—புகழ்வோர். (சிந்தா.)

ஏத்திரி—சாதிபத்திரி.

ஏத்து— 1. ஏத்தென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும், வினைத்தொகையும். 2. துதி. (உ-ம்.) "செங்கதிர்க்-கையனேத்தெடுத்தலும்" (சீகாழிப்-சூரியன். கo.)

ஏத்துதல்—1. துதித்தல். (உ-ம்.) "கரிமுகன்பதங்கைதொழுதேத்துவாம்" ( அரிச்ச. பாயிர. உ.) 2. புகழ்தல். (சிந்தா. மண்மக. உஎ.) 3. வணங்கல்.

ஏத்துவம்—பின்பு.

ஏத்துவாபாசம் — ஏதுப்போலி; அஃது: எடுத்துக்கொண்ட பிரதிஞ்ஞைக்கு இயைபில்லாத ஏதுக்களைக்கூறுதல். அஃதைந்துவகைப்படும்; அவை: அசித்தம், விருத்தம், அநைகாந்திகம், பிரகரணசமம், காலாத்தியாபதிட்டம் என்பனவாம். (தர்க்கபா. எச.) [ஹேத்வ: ஆபாஸ - போலி.]

ஏத்வந்தரம்— தோல்வித்தானம் இருபத்திரண்டில் ஐந்தாவது; அது: தன்னாற்சொல்லப்பட்ட பிரதிஞ்ஞையின் ஏதுபிரதிவாதியாலே மறுக்கப்பட்டுழிவேறோரேதுவைக்கூறுதல். (சி. சி. அளவை.) [ஏது- காரணம். இதனை ஏத்துவாந்தரமென்றுங்கூறுவர்.]

ஏதகன்—பிராமணன். [ஏதக:]

ஏதடை—விரோதம்.

ஏதன்னடை—1. சிரும்பி. 2. பலகைத்தூக்கு. 3. நீர்த்துறையிதணம்.

ஏதநம்— சுவாசம்விடல். [ஏதநம்.]

ஏதப்பாடு— குற்றம். (உ-ம்.) "ஏதப்பாடெண்ணி" (கலி. ௮௧.)

ஏதம்—1. குற்றம். (உ-ம்.) "ஏதமின்மதிகுலபுங்கவன்" (திருவாத. மந்திரி. ௨௫.) 2. கேடு. (உ-ம்.) "ஏதமுற்றிறந்ததும்" (பாரத. நச்சு. ௬௧.) 3. துன்பம். (சூ. நிகண். ௧௧. தகரவெ.௩.) 4. பலவர்ணம். [4. ஏத.]

ஏதர்—கெட்டவர்கள்.

ஏதி—1. ஆயுதப்பொது. (உ-ம்.) "தவளமருப்பினுதியேதிகொளுத்தி" (இரகு. திக்கு. ௩௫.) 2. சூரியனதுகிரணம். 3. துண்டு. (பிங்கல.) 4. வாள். (உ-ம்.) "வீரன்கேளா-வேதியினினதுசூலப்படையிறவெறிந்தேன்" (கந்தபு. மகாகாளர். ௨௪.) [1, 3, 4. ஹேதி.]

ஏதியம்—கிரணம்.

ஏதில்—1. அந்நியம். 2. குற்றமற்ற. (உ-ம்.) "ஏதில்வேள்வியியற்றுதன்மேயினான்" (கந்தபு. அசுரர்யாக. ௬௬.)

ஏதிலன்—அந்நியன். (உ-ம்.) "ஏதிலனுமெனவெனைவிட்டேகுதல்" (கந்தபு. மாயைநீங்கு. ௨.)

ஏதிலார்— 1. அந்நியர். (உ-ம்.) "ஏதிலார் பக்கமாகி" (கந்தபு. தவங்காண். ௨௨.) 2. ஏழைகள். (உ-ம்.) "ஏதிலார் போற்றமியேன்கரமிழந்துமிவ்வுயிர்கொண்டிருப்பதேதோ" (கந்தபு. அசமுகிபு. ௩.) 3. தரித்திரர். 4. பகைவர்.

ஏதிலாள் —மாற்றாள். (உ-ம்.) "மாதுலனுகிஞாதிவழக்கறுத்துரிமையீந்த- நாதனேயேதிலாள்வாய்நவையினிற்காத்தியென்ன" (திருவிளை. வன்னியுங். ௪௨.)

ஏதிலாளன்—அயலவன். (உ-ம்.) "அனையவேதிலாளனைவாதினால்வேறுமென்று" (திருவிளை. சமணரை. ௨௧.)

ஏதிலான்—அந்நியன். (உ-ம்.) "ஏதிலான்போலநின்றான்யார்கணும்பந்தமில்லான்" (பாரத. பதினெந்தாம். ௨௮.)

ஏதின்மை— 1. பகைமை. (உ-ம்.) "அறிவுடையா-ரேதின்மைகோடியுறும்" (வள். ௮௧௬.) 2. அயலாந்தன்மை. (உ-ம்.) "ஏதில்பிணந்தழீஇயற்று" (வள். ௯௧௩.) 3. வெறுமை.

ஏதீடு— (அகப்பொருள்) ஒருவன் களிறும் புலியும் நாயும் போல்வன காத்து எம்மைக்கைக்கொண்டான் எனவும், பூத்தந்தான் தழைதந்தான் எனவும் இவை முதலிய காரணமிட்டுணர்த்தல். (உ-ம்.) "எளித்தல்" பார். [ஏது - காரணம். ஈடு - இடுதல்.]

ஏது— 1. (தர்க்கம்) அநுமானவாக்கியத்தினோரங்கம்; அது: மூன்றுமுருபேனும் ஐந்தாமுருபேனும் ஈறுகநின்று இலிங்கத்தையுணர்த்துவது; அஃது: இயல்பேது காரியவேது அநுபலத்தியேது என மூன்றுவகைப்படும். (உ-ம்.) "ஏது மூன்றுமியல்புகாரியத்தோடனுபலத்தியிவை" (சி.சி. அளவை. ௧௦.) 2. உபகரணம். 3. ஏன். 4. ஓர் அலங்காரம்; அஃது: இன்னகாரணத்தான் இன்னதாமெனக்கூறுவது. (உ-ம்.) "யாதன்றிறத்தினுமிதனினிது விளைந்ததென்- றேது விதந்துரைப்பதேதுவது தான் - காரகஞாபகமெனவிருதிறப்படும். (தண்டி. ௫௭.) 5. காரணம். (சிந்தா.) 6. குற்றம். (உ-ம்.) "ஏதிலாக்கற்பமெண்ணிலசென்றன" (கந்தபு. அவையட. ௧௫.) 7. திராணி. 8. நிமித்தம். 9. மூலம். 10. யாது. (உ-ம்.) "இனியேதெமக்குனருள்வருமோ" (தாயு. சச்சிதா. ௫.)

ஏதுக்காட்டல்—காரணங்காட்டல்.

ஏதுக—ஏதுவினாலான. [ஹேதுக]

ஏதுகம்— 1. ஏதுவினால் வந்தது. (உ-ம்.) "சுவாபாவிகமன்று செகத்துஏதுகமென்றது" (சி.சி. ௧. ௩. சிவாக்.) 2. கருவி. 3. குதக்கூடரோகம். (சீவரட். ௨௧௩.) [ஹேதுக.]

ஏதுகரம்— 1. ஆயத்தம். 2. வழி.

ஏதுகருத்தா— பயனிலையாற்பெறப்படுந்தொழிலுக்கு ஏதுவைத்தன்னிடத்துக்கொண்ட கர்த்தா. "ஆசாரியன்மாணக்கனை அறிவித்தான்" என்பதனாற்பெறப்படும். (பி. வி. ௧௧. உரை.)

ஏதுகன்—தார்க்கிகன். [ஹேதுக]

ஏதுத்தற்குறிப்பு—ஓரலங்காரம். (உ-ம்.) வீ. அணியிலக்கணம். (ஏ. பக்.)

ஏதுப்பண்ணல்—வகைசெய்தல்.

ஏதுப்பொருள்— துணிபொருளோடு ஒருநிலைக்களத்திருக்கும்பொருள். (அநுமான.)

ஏதுப்போலி—அநுமானப்போலி; இஃது: ஏது இலட்சணமின்றி ஏதுப்போலத்தோன்றுவது; அது சாத்தியப்பொருளோடு வியாத்தியுடைத்தாய்ப்பக்கத்திருத்தலாய் ஏதுவிலக்கணத்திற்குறைபாடுடைத்தாயும் ஒருபுடையொத்து

ஏதுப்போலத்தோன்றுவது. இவ்வேதுப்போலி அசித்தம், விருத்தம், அநைகாந்திகம் எனமூன்றும்; அவைமூன்றும் முறையே துணியப்படாததூஉம், மறுதலைக்கட்படுவதூஉம், ஒருதலைப்படுவதூஉமாம். அது விரிவால் இருபத்தொன்றும். (சி. சி. அளவை. கச. சிவஞாந.)

ஏதும்— 1. ஏதனையேனும். 2. சிறிதும். (உ-ம்.) "ஏதுநீரிலாதழல்படுவெய்யகான்" (கந்தபு. சுரம்புகு. ௨௨.)

ஏதுமத் — 1. ஏதுகூடியது. 2. காரியம். [ஹேதுமத்.]

ஏதுவநுமானம்—அநுமானஅளவையினொருவகை; அஃது: அவிநாபாவமாகிய ஏதுவைக்கொண்டு அநுமித்தறிதல். "புகையைக்கண்டு நெருப்புண்டென அறிதல்" என்பதனாற்பெறப்படும். (அனுமானவி.)

ஏதுவாதம்—பிணக்கு. [ஹேதுவாத.]

ஏதுவிலக்கு — விலக்கலங்காரத்து ளொருவகை; அஃது: ஒருகாரணத்தைக்கற்பித்து உளளகாரணத்தைவிலக்குவது. "பூதலத்துளெல்லாப்பொருளும் வறியராய்க்-காதலித்தார்தாமே கவர்தலா-னீதி-யடுத்துயர்ந்தசீர்த்தியநபாயயார்க்குங் - கொடுத்தியெனக்கொள்கின்றிலேம்" என்பதனாற்பெறப்படும். (தண்டி. சஎ. உரை.)

ஏதுவின்முடித்தல்—முப்பத்திரண்டுதந்திரஉத்திகளுள் ஒன்று; அது: முடிவுபெறுததைக்காரணத்தான்முடியவைத்தல். (நன். பொதுப். கச.)

ஏதுவுருவகம்—உருவகவலங்காரவகையுள் ஒன்று; அது: காரணத்தைக்காட்டி உருவகஞ்செய்வது. "மாற்றத்தாற்கிள்ளைநடையான்மடவன்னம்" என்பதிற்போல. (தண்டி. ௩௬. உரை.)

ஏதுவுவமை—உவமையலங்காரத்தினொருவகை; அது: இக்காரணத்தினுலிதனையிஃதொக்குமென்று காரணம் புலப்படக்கூறுவது. "வாளரவின்செம்மணியும் வன்னியிளம்பாசிலையு - நாளிளையதிங்கணகைநிலவு - நீளொளியாற் - றேனுலவுபூங்கொன்றைத்தேவர்கோன்செஞ்சடைமேல் - வானுலவுவிற்போல்வரும்" என்பதிற்போல. (தண்டி. ௩௧. உரை.)

ஏதை—1. பேதை. 2. வெறியன்.

ஏந்தல்— 1. அரசன். (பிங்கல.) 2. உயர்ச்சி. (பிங்கல.) 3. ஏந்துதல். 4. சலோதரசன்னிபாதம். (இராசவைத்.) 5. நீட்டல். (உ-ம்.) "இன்னமுஞ்சிறியவாவிடுமென்றேந்துவார்" (திருவிளை. வளைய. உக.) 6. பெருமை. (சூ. நிகண். கக: நகரவெ. ச.) 7. பெருமையிற்சிறந்தோன். (உ-ம்.) "ஏந்தல்காணு" (கந்தபு. தாரகன்வதை.எசு.) 8. மலை. 9. மேடு. (சூ. நிகண். கக: நகரவெ. ச.) 10. வாதம். (இராசவைத்.)

ஏந்தல்வண்ணம் — வண்ணங்கள் இருபதனுள் ஒன்று; அது: சொல்லியசொல்லேமிக்குவந்துசொல்லப்படும் பொருள் சிறப்பச் செய்வது. "வைகலும்வைகல்வரக்கண்டுமஃதுணரார்-வைகலும் வைகலைவைகுமென்றின்புறுவர்-வைகலும்வைகற்றம் வாழ்நாண்மேல்வைகுதல்- வைகலைவைத்துணராதார்" என்பதனாற்பெறப்படும். "ஏந்தல்வண்ணஞ் - சொல்லியதுசொல்லிற் சொல்லியதுசிறக்கும்" (தொல். பொருளதி. ௫௪௪. உரை.)

ஏந்தானம்—1. ஏந்துதானம், அட்டாலை. 2. கையிலேந்துகை.

ஏந்தி—ஏந்துபவன்.

ஏந்திசை— சீரொடுசேர்புணருங்காலத்துப்பிறக்கும் ஓசைகளுள் ஒருவகை.

ஏந்திசைச்செப்பல் — வெண்சீர்வெண்டளையாற்பிறக்குமோசை. (உ-ம்.) "வெண்சீர்வெண்டளையான்வரும்யாப்பை-யேந்திசைச்செப்பலென்மனூர்புலவர்" (யாப். காரிகை. செய்யுளியல். க. உரை.)

ஏந்திசைத்துள்ளல்— கலித்தளையாற்பிறக்குமோசை. (உ-ம்.) "ஏந்திசைத்துள்ளல் கலித்தளையியைபின்" (யாப். காரிகை. செய்யுளியல். க. உரை.)

ஏந்திசைத்தூங்கல்—ஒன்றிய வஞ்சித்தளையாற்பிறக்குமோசை. "ஒன்றியவஞ்சித்தளையேவரினு-மொன்றாவஞ்சித்தளையேவரினு- மென்றிவையிரண்டும்பிறவுமயங்கினு- மேந்தலகவல்பிரிந்திசைத்தூங்கலென் - றாய்ந்தநிரனிறையாகுமென்ப" என்பதனாற்பெறப்படும். (யாப். காரிகை. செய்யுளியல். க. உரை.)

ஏந்திசையகவல்—நேரொன்றாசிரியத்தளையாற்பிறக்குமோசை. "நேர்நேரியற்றளையான்வருமகவலு - நிரைநிரையியற்றளையான்வருமகவலு-மாயிருதளையுமொத்தாகியவகவலு - மேந்தறூங்கலொழுகலென்றிவை - யாய்ந்தநிரனிறையாகுமென்ப" என்பதனாற்பெறப்படும். (யாப். காரிகை. செய்யுளியல். க. உரை.)

ஏந்துதல்— 1. உயர்தல். 2. கையேந்தல். 3. தாங்கல். (உ-ம்.) "அரியேறு" பார். 4. பாத்திரமுதலியவற்றையேந்தல்.

ஏந்தெழில்— உயர்ந்துதோன்றுகின்ற அழகு. (நெடுநல்வாடை.)

ஏநம்—1. தப்பிதம். 2. பாவம். [ஏநஸ்.]

ஏநவாயன்— 1. தப்பிதக்காரன். 2. தீங்கு பேசுவோன். [ஏநம் - தீங்கு. வாய், அன்.]

ஏப்பசுரம்— ஒருவகைச் சுரநோய்; அஃது: ஏப்பம், வாந்தி, மார்பெரிவு, தலைவலி, தாகம், நெஞ்சுலர்தல், தேகத்தைத்திருப்புதல்போலிருத்தல், பிரமை, தலையில் நமச்சலுடன் நடுக்கல், மந்தாக்கினி, மலபந்தம், தலைக்குத்தல், கண்களிலே நோவுடன் நீர்வடிதல் என்னுமிக்குணங்களை உண்டாக்குவது. (சீவரட். ௪௮.)

ஏப்பம்—எதிரெடுத்தல்.

ஏப்புழை—1. அம்புபோகுந்துவாரம். (உ-ம்.) "வார்செவியளிக்குவளை - யேப்புழைபடுத்தது" (தணிகை. களவு. ௩௫.) 2. ஏவறை. (உ-ம்.) அகத்துள்ளோர்புறத்தோர்மேலெய்தற்குமதிலின்மேலமைக்கப்படுதுவாரம். ( மணிமேகலை. )

ஏம்— 1. ஆசை. (ஞானமிர்.) 2. செல்வம். 3. (இலக்கணம்) தன்மைப்பன்மையிலேவரும் ஒரு வினைவிகுதி; இது: தெரிநிலை உடம்பாட்டுவினையிலே வரும்போது கால இடைநிலைகளுளொன்றையடுத்து அதன்பின்னாகவும், எதிர்மறைத்தெரிநிலைவினையில்வரும்போது வினையடியை நேரேயடுத்து அதன் பின்னாகவும் வரும். (உ-ம்.) "படித்தேம்", "படிக்கிறேம்", "படிப்பேம்", "படியேம்" 4. தன்மையிடத்துப் பன்மையிலாவது ஒருமைச்சிறப்பிலாவது எதிர்மறைப்பொருளிலேவரும் ஒரு தெரிநிலைவினைவிகுதி. அது தெரிநிலைவினைப்பகுதியையடுத்துவருவதும், அப்பகுதி, "விடு, படு" என்பவற்றிற்போல இயல்பானவது "தரு, வரு" என்பவற்றிற்போல விகாரத்தானவது வந்த உகரவீற்றதேயாயின் அவ்வுகரத்தைக்கெடுத்து வருவதுமாம். (உ-ம்.) "படியேம்", "ஆடேம்", "வரேம்" 5. மயக்கம். (உ-ம்.) "ஏமுறுகடுந்திண்டேர்" (கலி. ௨௭.) [1, 4. "ஏமம்" என்பதன் கடைகுறைந்துவந்தது.]

ஏம்பல்—1. ஏக்கமடைதல். (உ-ம்.) "ஏம்பலோடுறையுமாயன" (காஞ்சிபு. சலந்தரீ. ௧௭.) 2. கலங்கல். (உ-ம்.) "ஏம்பலென்னைப்-புரியும்" (சேதுபு. வேதாள. ௫௧.) 3. களிப்பு. (உ-ம்.) "ஏம்பலோடார்க்குமோதை" ( கந்தபு. ஆற்று. ௩௩.) 4. வருத்தம். (உ-ம்.)"மத்திகைதாக்க-ஏம்பலுற்றனம்" (திருவிளை. பரிநரி. ௩௨.)

ஏம்பலித்தல்— மிக்க அவாக்கொள்ளுதல். (உ-ம்.) " நின்ருள்சரணென்றேம்பலிப்பார்கட்கிரங்கு" (தேவார. திருக்கச்சியே. அ. நாவு.)

ஏம்புதல்—ஏம்பல் பார்.

ஏமகூடம் — அட்டமலைகளுள் ஒன்றாகிய பொன்மலை. (கந்தபு. அண்டகோச. ௩௪-ம் கவியிலறிக.) [ஹேமகூடம்.]

ஏமசந்திரன்—சைநமதத்திற்சொல்லப்படும் இருபத்துநான்கு தீர்த்தகரரிலொருவன்.(த.நி. போ. ௩௩.)

ஏமசிங்கி—மிருதாரசிங்கிபாஷாணம்.

ஏமத்தி—பொற்றெட்டிப்பாஷாணம்.

ஏமத்தூரி—பொன்னூமத்தை.

ஏமதவஞ்சம் — போகபூமிஆறினொன்று. (கூர்மபு. வருணச். ௨௩. உரை.)

ஏமதி—ஏவுவாயாக. (ஐங்குறு.)

ஏமந்தம்— } பனிக்காலம்.[ஹேமந்த]
ஏமந்தருது— }

ஏமபத்திரம்— 1. மலையத்தி. 2. மலையாத்தி. (மலையகராதி.)

ஏமபுட்டம்— 1. அசோகமரம். 2. செண்பகமரம். 3. பொன்முல்லை. (மலையகராதி.) [1, 2. ஹேமபுஷ்ப.]

ஏமபுட்பி— 1. ஆவரை. (உ-ம்.) "மெய்யெனற்போக்கருந்தைலங்கட்கேமபுட்பிபலை"(தைல. அநுபந்த. ௨௪.)

ஏமபேதி—கற்கடகபாஷாணம்.

ஏமம்—1.இரா. (பிங்கல. ௩௨௩௧.) 2. இன்பம். (உ-ம்.) "ஏமமார்பொருளென" (கந்தபு. பாயிர. ௨௪.)3. உன்மத்தம். (பிங்கல.௩௨௩௧.) 4. கலக்கம். 5. களிப்பு. ( உ-ம். ) "இடையுறுபுலோமசையேமமாகியே" (கந்தபு. தெய்வ. ௪௦.) 6. காவற்சாலை. (உ-ம்.) "ஏமம்புகினுஞ் சாமத்துறங்கு" (கொன்றைவே.) 7. காவல். ( உ-ம். ) " எண்ணிலாப் புரவிமான்றேரேமமாய்ப்பின்னரேக" (கந்தபு. இரண்டாநா.௪௨.) 8. சேமம். (பிங்கல. ௩௨௩௧.) 9. திரைச்சீலை. 10. புதையல். 11. பைத்தியம். 12. பொன். ( உ-ம். ) "ஏமத்தின்வடிவஞ்சான்ற" (கந்தபு. வள். ௨௨.) 13. மயக்கம். (உ-ம்.) "ஏமஞ்சால்கின்றநெஞ்சனிதணிலுக்கணியனானன்" (கந்தபு.வள். ௬௩.) 14. விபூதி. (பிங்கல. ௩௨௩௧.) [12. ஹேம.]

ஏமமாதல்—இளைப்புத்தீர்தல். (உ-ம்.) "எல்லிடைக்கழியுநர்க்கேமமாக"(பெரும்பா. ௬௬.)

ஏமமாலை—இயமன் மனைவி.

ஏமரல்—ஏமருதல்.

ஏமரா—காவலற்ற. (உ-ம்.) "இடிப்பாரையில்லாதவேமராமன்னன் " (வள். ௪௪௮.) [ஏமரு என்னு மடியாற்பிறந்த எதிர்மறைப் பெயரெச்சம்.]

ஏமருதல்—1. கலங்குதல். 2. காக்கப்படுதல். (உ-ம்.) "ஏமரார்" பார். 3. திகைத்தல். 4. மிகுகளிப்புறல். (உ-ம்.) "ஏமருபுவநமூன்றும்" (கந்தபு. மேரு. ௨௪.) 5. மூர்க்கமுறல்.

ஏமல்—முதிரை. (மலையகராதி.)

ஏமவதஞ்சம் — போகபூமி ஆறினொன்று. (சூ. நிகண். கஉ: சுகூ.)

ஏமவதி— 1. கடுக்காய். (மலையகராதி.) 2. வசம்பு.

ஏமன்—1. இயமன். 2. ஒருமுனிவன்.

ஏமா— ஏமாவென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும்.

ஏமாங்கம்— 1. கருடன். 2. சிங்கம். 3. பொன்னிறம். 4. மகாமேரு. [ஹேமாங்க.]

ஏமாங்கன்—பிரமன். [ஹேம - பொன். அங்க - தேகம். பொன்னிறத்தை யுடையவனென்றபடி.]

ஏமாத்தல்—1. அவாவுறல். (உ-ம்.) "எனக்கெனக் கென்றென் றேமாந்திருந்த காவலரை நோக்கி" (பாரத. திரௌபதிமாலையிட்ட. ௯0.) 2. களித்தல். 3. செருக்குறல். 4. புத்திமயங்கச்செய்தல். [ஏமம் - மயக்கம்.]

ஏமாந்த—ஆசையுற்ற. (மணிமே.)

ஏமாந்து—இன்புற்று. (புறநா.)

ஏமாப்ப—1. கலக்கமுறும்படி. (மதுரைக்.) 2. துணிய. (பொருநரா.)

ஏமாப்பு—1. அரணுதல். (உ-ம்.) "எழுமையுமேமாப்புடைத்து" (வள். ௧௨௬.) 2. இறுமாப்பு. (ஞானமிர்.) 3. உதவுதல். 4. கருத்து. 5. கலக்கமுறல். (உ-ம்.) "நெஞ்சேமாப்பவின் றுயிறுறந்து" (மதுரைக். ௩௭௩.) 6. செருக்கு. 7. சேமம். (உ-ம்.) "இரவென்னுமேமாப்பிரூணி" (வள். ௧0௬௮.) 8. மிகுகளிப்பு. 9. வலியாதல். (உ-ம்.) "யெச்சத்திற்கேமாப்புடைத்து" (வள். ௧௧௨.)

ஏமார்த்தல்—ஏமஞ்செய்தல். (உ-ம்) "சலத்தாற்பொருள்செய்தேமார்த்தல்" (வள். ௬௬0.) [ஏமமார்த்தல் என்பது ஏமார்த்தல் என்றாயிற்று. அஃது: ஏமத்தையடையப்பண்ணுதல் என்றபடி. ஏமம் - சேமம்.]

ஏமாற்றம்—எத்து. (திருவாச. திருவெம்பா. ௯. உரை.)

ஏமாற்றல்—ஏமாற்றுதல்.

ஏமாற்றுதல்—வஞ்சித்தல். (திருவாச. திருவெம்பா. ௯. உரை.)

ஏமாறல்—"ஏமாறுதல்" பார்.

ஏமாறு— ஏமாறென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும்.

ஏமாறுதல்—1. அலமருதல். 2. தடுமாறல். 3. மோசம்போதல்.

ஏமி— உடனிகழ்வான். இது சதுர அகராதியிற்கண்டது; ஏமி என்பதே திவாகரம்.

ஏமிலாந்தல்— 1. திகைத்துப்பார்த்தல். 2. நினைவுசிதறல்.

ஏமிலாந்தி— 1. அலமந்துபார்ப்போன். 2. மதிகேடன். 3. மயக்கமுடையவன்.

ஏமிலாப்பு—அலமலப்பு.

ஏமின்கோலா—ஒருமீன்.

ஏமுற்று— இன்பமுற்று. (புறநா.)

ஏமுறல்— } 1. இரட்சையடைதல்.(உ-ம்)
ஏமுறுதல்— } "எஞ்சியபொருள்களையேமுறநாடி" (திருமுருகாற்று. ௬௭.) 2. இறுமாப்புறல். 3. களிப்புறல். (உ-ம்.) "எடுத்தல்" பார். 4. பித்தேறல். (உ-ம்.) "நின்புகழ்பலபாடும் பாணனுமேமுற்றான்" (கலி. ௭௪.) 5. பொருத்தமுறல். (உ-ம்.) "காமமும்பொருளுமேமுறத்தழுவி" (இலக்கணவி. ௭0௪.) 6. மாங்கலங்குதல்.(உ-ம்.) "ஏமுறவுலகமெல்லா மீறசெய்முதல்வன்றன்னை" (கந்தபு. காமதகன. ௮௯.) 7. மயங்குதல். (உ-ம்.) "தரித்திலன்றவத்தையென்றுதார்மன்னரேமுற்றாரே" (சிந்தா. இலக். ௮௨.)

ஏய்— ஏயென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும்.

ஏய்த்தல்—1. இசையப்பண்ணுதல். 2. ஒப்பாதல். (உ-ம்.)"நம்மூர்க்-கருங்குன்றம் வெண்ணிறக்கஞ்சுகமேய்க்குங் கனங்குழையே" (திருக்கோ. ௧௫.) 3. வஞ்சித்தல்.

ஏய்தல்— 1. இயைதல். 2. ஒத்தல். ( திருநூற்றந்தாதி.) 3. சந்தித்தல். (உ-ம்.) "தூயவன்வரவுகேட்டுச்சோதிப்பான்கருதிமன்ன-னேயினனில்லை" (ஞானவா. சுகர். ௧௨.) 4. பொருந்தல். (உ-ம்.) "ஏயினசெயலெலாமியற்றி" (கந்தபு. நாட்டு. ௧௯.)

ஏய்ப்ப— உவமைப்பொருளிலே வரும் ஒருசொல்லுருபு. (உ-ம்.) (நன். பொதுவி. ௬௬௭.)

ஏய்ப்பு—ஏய்த்தல். (உ-ம்.) "ஏய்ப்புக்காட்டல்" (வழக்.)

ஏய— 1. —போன எனப்பொருள்படும் ஓர் இறந்தகாலப்பெயரெச்சம். (உ-ம்.) "அவ்வதன்கிரியெய்தினே - னேயதன்மையிருவருந்தேர்ந்தரோ"(கந்தபு.ததீசிப். ௭.) 2. விடப்படயோக்கியமான. (உ-ம்.) "கன்மசாமியமாமளவுங்கன்மபலத்திலே ஏயபுத்திவாராமற் புசிப்பிக்கும் படிக்கு" (சி. சி. க: ௬௭. சிவாக்.)

ஏயது—ஏற்புடையது, ஏற்றுக்கொள்ளற்பாலது. (உ-ம்.) "ஏயதொருமாற்றமதிசைப்பல்" (கந்தபு. அசுரேந்திரன் மகேந்திரஞ். ௭௪.)

ஏயம்—தள்ளத்தக்கது. (உ-ம்.) "சுரோத்திராதி பஞ்சேந்திரியகோசமான பதார்த்தங்களை இது ஏயம் இது உபாதேயம் இது உபேட்சியம் என்று நிச்சயித்து"(சி. சி. உ: ௫௮.சிவாக்)

ஏயின— 1. ஏவப்பட்ட செயல் எனப்பொருள்படும் ஒரு வினையாலணையும்பெயர். (உ-ம்.)

"ஏயினசெய்யும்மடந்தைமாரொடேகி" (இராமா. கைகேசி. உ.) 2. ஏவின எனப்பொருள்படும் ஒரு பெயரெச்சம். (உ-ம்.) "எந்தையேயினபணியினிற்பன்" (கந்தபு. அண்டகோச க.)

ஏயினர்— ஏவினர் எனப்பொருள்படும் ஒரு வினைமுற்று. (உ-ம்.) "எடுத்தியம்பினரேயினர் போலுமால்" (கந்தபு. ததீசிப். அ.)

ஏயினோர்— 1. ஏவினோர்கள். 2. பொருந்தியவர்கள். (உ-ம்.) "வேந்தரா-யேயினோர்க்கு" (கந்தபு. தாரகன்வதை. கக.) 3. பொருந்தினோர்கள்.

ஏயினன்— ஏவென்னுமடியாற்பிறந்து அனுப்பினன் எனப்பொருள்படும் ஒருவினைமுற்று.

ஏயும்—எனினும். (உ-ம்.) "வானேயும்பெறில்வேண்டேன்" (திருவாச. திருச்சதக.உ.)

ஏயெனல்— ஒரு விரைவுக்குறிப்பு. (உ-ம்.) "ஏயெனுமாத்திரத்தெற்றுகிற்றிலேன்" (இராமா. பள்ளி. எஉ.)

ஏயே—எள்ளிநகையாடுதலைக்குறிக்கும் ஓர் இடைச்சொல். (உ-ம்.) "சால்புடையாரெல்லாரும் ஏயேயிஃதோஇவனறிவென்றெள்ளிநகையாடுதற்கேதுவாம். (சி. சி. பாயிர. ச. சிவஞாந)

ஏர்—1. அழகு. (சூ. நிகண். கக. ரகர. உச.) 2. உழவுமாடு. (உ-ம்.) "ஏரடிப்பார்கோலெடுப்ப" (நளவெண். கலிநீங். சஎ.) 3. உழுதல். (உ-ம்.) "ஏரினுநன்றாலெருவிடுதல்" (வள். கoகூஅ.) [ஆகுபெயர்.] 4. எழுச்சி. (உ-ம்.) "அன்னமென்னடையு நோக்குஞ்சாயலுமணியுமேரும்" (சிந்தா. சுரமஞ்சரி. கoசு.) 5. ஒருவமையுருபு. (உ-ம்.) "இலவம்போதேரெழிற்றகையசீறடிகள்" (சிந்தா. கனக. கூஉ.) 6. கலப்பை. (உ-ம்.) "ஏரினுழா-ருழவர்" (வள். கச.) 7. தோற்றப்பொலிவு. (சிந்தா.) 8. நற்சீரகம். (இராசவைத்.) 9. நீரேற்றம். (இராசவைத்.)

ஏர்க்கால்—1. எருதுபூட்டிய நுகத்திற்கொளுவுங்கலப்பையினுறுப்பு. (உ-ம்.) "ஏர்க்காலின்றலைபிடிப்பார்" (செந்தூர். செயந்திபுர. சக.) 2. பண்டியினுறுப்பு.

ஏர்ச்சீர்— உழவுதொழிலுக்கு வேண்டுங்கருவிகள்.

ஏர்த்தாயம்—தகுந்தகாலத்திலுழுதல்.

ஏர்த்தொழில்—உழவுத்தொழில்

ஏர்த்தொழிலர்—பூவைசியர்.

ஏர்ப்பண்— 1. ஏர்ச்சீர். 2. பூட்டாங்கயிறு.

ஏர்ப்பு-இது சுர்ப்பு என்பதன் மரூஉ.(உ-ம்.) "சுர்ப்பு" பார்.

ஏர்ப்பூட்டல்—உழவுமிருகங்களைக்கலப்பையோடு நுகம்வைத்துத்தொடுத்தல்.

ஏர்பு— 1 எழுச்சி. (உ-ம்.) "மாரனேர்புநீஇ" (கந்தபு. காமதகன. எகூ.) 2. எழுந்து எனப்பொருள்படும் ஒருவினையெச்சம். (உ-ம்.) "உலகமுவப்பவலனேர்புதிரிதரு" (திருமுரு.க)

ஏர்மங்கலப்பாட்டு — ஏர்பூட்டிநின்றோர் ஏரைப்பாடும் மங்கலப்பாட்டு. (சிலப். நாடுகாண். கஙக. உரை.)

ஏரகம்— 1. ஆடு. 2. சுப்பிரமணியத்தலம் ஆறனுள் ஒன்று; அது: மலைநாட்டகத்தொரு திருப்பதி என்று திருமுருகாற்றுப்படை யுரையிலே நச்சினார்க்கினியர் கூறுவர்; அஃது இக்காலத்து உடுக்கைச் சுப்பிரமணியஸ்தலமெனவழங்குகின்றது என்றும், அஃதன்றிச்சோழநாட்டகத்துள்ள சுவாமிமலையெனக் கூறுவாரும் உண்டு என்றும் கந்தபுராண வுரைகாரர் கூறுகின்றனர். (உ-ம்.) "ஏரகத்தறுமுகன்" (கந்தபு. கடவுள். கரு.)

ஏரகை—பெண் ஆடு.

ஏரங்கம்—ஒருவகை மீன்.

ஏரடித்தல்—ஏருழுதல்.

ஏரண்டம்— 1. ஆமணக்கமரம். (சூ. நிகண். ச. உஅ.) 2. ஆமணக்குநெய். (உ-ம்.) "கொச்சையருக்கெண்ணேரண்டம்" (தைல. தைலவ. கூ.) 3. ஒருவகைப்பறவை. (உ-ம்.) "ஏரண்ட-வென்றிப்புள்ளூக்கிரையாவாய்" (வேதாரணியபு. தேவல. கஉ.) 4. சித்திரம். (பிங்கல. கூஉகூஉ) 5. சிற்றாமணக்குவிதை. (உ-ம்.) "ஏரண்டங்காண்டநேயம்" (தைல. தைலவ. ருச.) [ஏரண்ட.]

ஏரண்டி—திப்பலி. [ஏரண்டீ]

ஏரம்பன்— விநாயகன். (உ-ம்.) "கற்பகநாமம்பெறுமேரம்பனேயோர் கொம்பனையுட்கருதிவாழ்வாம்" (சிவராத். கடவுள். கூ.) [ஹேரம்ப.]

ஏரல்— 1. கிளிஞ்சில். (இராசவைத். கஙக.) 2. சமுத்திரச்சுண்டி.

ஏரா—1. நீராழம். 2. மயக்கமில்லாதகள்ளு. 3. மரக்கலத்தின் ஓர் உறுப்பாகிய அடிமரம்.

ஏராண்மை—உழவு.

ஏராளம்—மிகுதி.

ஏராளர்—உழுநர்.

ஏரி— நீர்நிலை. (சூ. நிகண். ரு. உச.)

ஏரிசா— 1. கடற்கொந்தளிப்பு. (திசைச்சொல்.) 2. புரளித்தனம்.

ஏரின்வாழ்நர்—உழவர்.

ஏருழத்தல்— பயிர்செய்தல்.

ஏருழல்—வைசியர் அறுதொழிலினொன்று; அது: கலப்பையினால் உழுதல்.

ஏருழவர்—உழவுத்தொழிலாளர்.

ஏருழநர்—உழவர்.

**ஏரெழுபது** — ஏர் முதலியவற்றைச்சிறப்பித்துக்கம்பர்பாடிய எழுபது செய்யுட்களாலாய தொருநூல்.

**ஏல்**—1. ஆயின் எனப் பொருள்விளைத்துத் தன்மைமுன்னிலைபடர்க்கையிடத்து வரும் வினைமுற்று விகுதிகளுள் ஒன்றை அடுத்துப்பின்னாகவரும் ஒரு வினையெச்சவிகுதி. (உ-ம்.) "வந்தானேல்; வருகின்றானேல்; வருவானேல்; வருமேல்; வந்தாயேல்; வந்தேனேல்; அன்றேல்" 2. ஆயின் எனப்பொருள்விளைத்துப் பெயர்ப்பயனிலையை யணைந்து வரும் ஒரு விகுதி. (உ-ம்.) "செய்தியேலியல்பதின்றாம்" (சி. சி. க: கூ.) 3. இடைச்சொல். (இராமா. கலன்காண். கூரு.) 4. உணர்ச்சி. (சிந்தா.) 5. ஏலென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 6. ஒப்புக்கொளல். 7. கிளிஞ்சில். 8. தெரிநிலை ஏவலொருமை எதிர்மறைப் பொருளில் வரும் ஒருவிகுதி; இது வினையடியைநேரேயடுத்துவரும். (உ-ம்.) "கவலேல்" (கந்தபு. மாயைநீங்கு க) 9. பொருத்தம். (உ-ம்.) "கழுநீர்மாலை-யேலுடைத்தாக" (திருவாச. கீர்த்தித் திருவகவல். கக௪.) 10. மனவெழுச்சி. (சிந்தா.)

**ஏல்வை**— 1. காலம். (சூ. நிகண். க: அ0.) 2. குளம். (உ-ம்.) "மிகநாடுபாலோடையெனுமேல்வையது கொல்லும் விளியாதவினை யாவுமே" (சேதுபு.பாலோ.௪.) 3. நாள். (சூ. நிகண். க: அஉ.)

**ஏல**—1. இயல. 2. பொருந்த. (உ-ம்.) "ஏலத்தாணிதமகிதமாம்" (சிவப்பி. உ: கஉ.) 3. முன்னம். 4. மிக.

**ஏலப்பாட்டு**— 1. இழுக்குநர் சொல்லும்பாட்டு. 2. கப்பற்பாட்டு.

**ஏலம்**— 1. ஆஞ்சி. (சூ. நிகண். ௪: கூ௪.) 2. சடாமாஞ்சில். 3. சிவனது ஆசமநத்துக்காகிய ஆறு திரவியங்களுள் ஒன்றாகிய பேரேலப்பொடி. (உ-ம்.) "இலவங்கங்கர்ப்பூரஞ்சாதிசிற்றேல-நல்வசவாசேலமூநன்று" (சைவச. பொதுவி. ருகூ.) 4. பஞ்சவாசத்தொன்று. 5. மயிர்ச்சாந்து. (உ-ம்.) "ஏலவார்குழலிறைவிக்கு" (கந்தபு. சரவண. உசு.) 6. முதிரை. 7. வாசனைப்பண்டம். 8. விலைகூறுகை.

**ஏலரிசி**—ஏலவரிசி.

**ஏலல்**—1. அங்கீகரித்தல். (உ-ம்.) "பிணையனீட்டப்பெருந்தகையஃதேலான்முகநோக்கலும்" (சிந்தா. கநக. ககஉ.) 2. இசைவாயிருத்தல், பொருந்தல். (உ-ம்.) "இன்னகொள்கையேற்கேலாதென்ன" (சிந்தா. கநக. ககரு.) 3. எதிர்த்தல். 4. ஏலுதல். 5. ஒத்தல். (உ-ம்.) "ஞாலவட்டத்தெழுதருநாகர்போ-லேலவ" (கந்தபு. திருக்கைலாச. உக.) 6. ஒப்புக்கொள்ளல். 7. கைவிடல். 8. பிச்சையேற்றல்.

**ஏலவரிசி**—ஏலக்கொட்டை.

**ஏலவாலுகம்**—1. கபித்தப்பட்டை. 2. பரிமளதிரவியம்.

**ஏலா**— 1. ஏடி எனப் பொருள் விளைத்து ஏலாள் என்பதன்விகாரமாய் முன்னிலையிலே வந்த ஒருமொழி. (உ-ம்.) "ஏலாவிதுகாணெயென" (கந்தபு. அசமுகிப். கஉ.) 2. சிற்றேலம். 3. பேரேலம்.

**ஏலாதது**— 1. இயலாதது. 2. பொருந்தாதது.

**ஏலாதன**—தகாதன. (உ-ம்.) "ஏலாதனவேயியற்றினீர்" (கந்தபு. வள். க0சு.)

**ஏலாதார்**—1. இயலாதார். 2. பகைவர்.

**ஏலாதிக்கணக்கு**— ஏலம், சிற்றேலம், நாணற்றுத்து, சேங்கொட்டை, சடாமாஞ்சில், வெட்டிவேர், சிறுகாஞ்சொறிவேர், கச்சோலம், லவங்கப்பட்டை, கிரந்திதகரம், அத்திப்பிசின், சாதிக்காய், சுக்கு, புலிநகம், தேவதாரம், அகிற்கட்டை, சிவச்சகம், குங்குமப்பூ, வண்ணக்குங்குலு, குங்குல், சுரபுன்னைப்பூ, சிறுநாகப்பூ என்பன.

**ஏலாதிகடுகம்**— ஒரு மருந்து. (உ-ம்.) "ஏலாதியேகடுகமென்றுரைக்குமின்மருந்து- போலாதி" (கந்தபு. அசுரர்யாக. உசு.)

**ஏலாதிசூரணம்**—ஒருவகைப்பொடிமருந்து.

**ஏலாதிமாத்திரை**—ஒருவகைக் குளிகைமருந்து.

**ஏலாப்பு**—துன்பம்.

**ஏலாபத்திரம்**—தக்கோலம்.

**ஏலாபர்ணி**— ஒருபூண்டு. [இதனைச்சென்னையகராதிக்காரர் பரங்கிச்சக்கைஎன்பர்.] [டினவாவணி-ட்.]

**ஏலாமை**—1. இணங்காமை. 2. கூடாமை. (உ-ம்.) "அவையிரண்டும்ஏலாமையின்" (சி. சி. க: எ. சிவஞாந.) 3. துன்பம். [வழக்.]

**ஏலாராசீயம்**— ஒருநூல். (பி. வி. ரு0. உரை.)

**ஏலாள்**—தோழி.

**ஏலி**—கள்.

**ஏலிகை**—சிற்றேலம். [வாஃகா.]

**ஏலு**—சங்கஞ்செடி.

**ஏலுதல்**— 1. இயலுதல். 2. தகுதியாதல். (உ-ம்.) குறுகும்வானவர்க்-கேலுறு பலதவிசிருப்பச்செய்தனன்" (கந்தபு. வரைபுனை. கசு.) 3. பொருந்துதல். (உ-ம்.) "ஏலுறுகுமரன்கஞ்சத்திருந்தது" (கந்தபு. திருவவதார. க0ரு.)

ஏலை — ஏலம். (உ-ம்.) "கிச்சிலிரோகணி ஏலை" (தைல. தைலவ. ருக.)

ஏவ—1. தானே அல்லது நிச்சயமாக எனத்தேற்றப்பொருளிலே வரும் ஓர் ஆரியபதம். (உ-ம்.) "ஏகமேவாத்துவிதம்" (வேதா.சூ.உஎ) 2. சொல்ல. (சிந்தா.)

ஏவங்கேட்டல்— ஒருவருக்காக ஏவிவிடப்பட்டுப்போய் அதட்டல்.

ஏவதும்—ஏதவும், எல்லாமும்.(உ-ம்.)"செய்வினை- யேவதும்" (கந்தபு. சுக்கிரனுபதேச. ௬௬.)

ஏவம்— 1. இகழ்ச்சி. (உ-ம்.) "நந்துகில்வீழினும்வீழுக- வேவமோவெமக்கென் றுரைப்பார்சிலர்"(கந்தபு. ததீசியுத். ருசு.)2. இவ்விதம். 3. ஏவுதல், கற்பித்தல். 4. ஒருவருக்காக ஏவிவிடப்பட்டு அதட்டும்படி வருகை. 5. குற்றம். 6. நீக்கம். (உ-ம்.) "ஏவமற்ற சிலைக்கதையெட்டதாம்" (ஞானவா. வயிரா. ௪0.)

ஏவர்—எவர்.

ஏவர்கள்—யாவர்கள். (உ-ம்.) "ஏவர்கள்காமங்கன்றி" (கந்தபு. மேரு. எரு.)

ஏவரும்—யாவரும். (உ-ம்.) "புங்கவ-ரேவருஞ்செறிந்தெய்தினர்" (கந்தபு. பாயிர. எ.)

ஏவல்— 1. ஆணைசெலுத்துதல். (உ-ம்.) "கடவுளேவலாற்றுணைக்காரணங்காண்" (சி. சி. க: ௪0.) 2. ஏவல்வினைமுற்று. 3. ஏவலாள், அடிமை. (உ-ம்.) "முனிவர்க்கேவலாய்"(தாயு. தேசோமயாநந்த. க.) 4. ஏவுதல், விடுத்தலைச் செய்தல். (உ-ம்.) "கண்ணெனனுயிர்க்கேவி" (வாண. சு.) 5. தொழில், வேலை. (உ-ம்.) "ஏவன்முற்றி" (அரிச்ச. மயான. க.)

ஏவல்கொள்ளுதல்—தொண்டுசெய்வித்தல்.

ஏவல்செய்தல்— 1. ஏவிவிடுதல். 2. தொண்டுசெய்தல். (உ-ம்.) "தந்திமுகத்தவுணனேவல்செய்து" (கந்தபு. தேவர்புலம்புறு. எ.)

ஏவல்வினை—முன்னின்றுரை ஏவும்வினை.

ஏவலர் — ஏவிய வேலையைச் செய்வோர். (உ-ம்.) "ஏவலர்தொழின்முறையியற்றநல்கினன்" (கந்தபு. வரைபுனை. கஎ.)

ஏவலாள்— ஏவற்காரன்.

ஏவற்காரன்—பணிவிடைக்காரன்.

ஏவறை—ஏப்பம்.

ஏவன்—எவன். (உ-ம்.) "இந்தவுற்பவத்தேவனிச்சேதுவை - வந்துகாணினும்" (சேதுபு. சேதுச. கச.)

ஏவா—சொல்லி. (சிந்தா.)

ஏவாகனம்—அசமதாகம்.

ஏவாங்கம்—அசமதாகம், ஓமம்.

ஏவி—தாதுவேளை. (இராசவைத்.)

ஏவிளம்பி — வியாழவட்டத்திலே முப்பத்தொராம்வருடம். (உ-ம்.) "சரபோசிமகாராசராசன்மாநிலங்காத்திடுநாளிற்றஞ்சைமாநகரிற்-றுன்றுமேவிளம்பியுற்றமரமதி"(சிவரகசியம். பாயிர. உ௬.) [அறுபதுவருடத்துக்கும் வியாழவட்டமென்பது சோதிடநூலிற்காண்க.]

ஏவு— 1. அம்பு. (உ-ம்.) "தனுதுகையிருந்தகார்முகம்வளை இமாறிலேவுபூட்டி" (கந்தபு. காமதகன. சுசு.) 2. அனுப்புந்தன்மை. 3. ஏவெனேவலும், தெரிநிலை வினைப்பகுதியும், வினைத்தொகையும். (உ-ம்.) "ஏவுபல்படைவலியினர்" (கந்தபு. நகர. ௬அ.) 4. வருத்தம்.

ஏவுகை—ஏவுதல்.

ஏவுதல்—1. அனுப்புதல். (உ-ம்.) "ஏவுகாலை" (கந்தபு. காமதகன. சு0.) 2. எழுப்பிவிடுதல். 3. கட்டளையிட்டனுப்புதல். (உ-ம்.) "ஏவலுமனையவர்யாரும்" (கந்தபு. தாரகன்வதை. க௬.) 4. கற்பித்தல். 5. செலுத்துதல். 6. தூண்டிவிடுதல். 7. பாணம் எய்தல்.

ஏவுதற்கருத்தா— 1. வேறொருவரையேவியொன்றைச்செய்விக்கிறவன். 2. வேறொருவனையேவிச்செய்விப்பவனைக்கருதும்பெயர்ச்சொல். "அரசன்ஆலயத்தைக்கட்டுவித்தான்" என்பதிற்போல.

ஏவும்வினைமுதல்—ஏவுதற்கருத்தா.

ஏவுவான்—வியவன், ஏவிவிடுவோன். (பிங்கல. அஅ௬.)

ஏவை—எவை. (உ-ம்.) "உல-கேவையுமுடிப்பன்" (கந்தபு. அசமுகிசோக. கக.)

ஏழ்கடல்—ஏழுகடல். அவை: உப்புக்கடல், நல்லதண்ணீர்க்கடல், பாற்கடல், தயிர்க்கடல், நெய்க்கடல், கருப்பஞ்சாற்றுக்கடல், தேன்கடல் என்பன. (சூ. நிகண். கஉ: சுக.)

ஏழ்சுரம்— ச, ரி, க, ம, ப, த, நி என்னும் ஏழுசுரங்கள். (பாரத. இந்திரப். சஉ-ம் பாடலிற்காண்க.

ஏழ்நதி— கைலாயகிரியிலுள்ள காவிரி முதலிய ஏழுநதிகள். (உ-ம்.) "அருங்கைலாயமேவினிதுவைகியவேழ்நதிதன்னுளும்" (கந்தபு. அகத்திய. கஅ.)

ஏழ்நரகவட்டம்— தமப்பிரபை, இமப்பிரபை, தூமப்பிரபை, வாலுகப்பிரபை, சாகரப்பிரபை, இரத்தப்பிரபை, அழற்பிரபை என்னும் ஏழுநரகவட்டங்கள். இவை முறையே, இருள், குளிர், புகை, மணல், துயிலாமை, இரத்தம், தீயெனப்படும். (சூ. நிகண். கஉ: எஉ.)

ஏழ்நரம்பு— குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தார மென்னும் ஏழு நரம்புகள். (சூ. நிகண். ௪0: ௬௫.)

ஏழ்பரி— சூரியனுடைய ஏழு குதிரைகள்; அவை, காயத்திரி, திருட்டுபு, செகதி, அநுட்டுபு, பந்தி, பிரகதி, முட்டிணுகு என்பன. "வயப்பரியேழினுமங்-திகழ் காயத்திரியினெடு திருட்டுபு செகதி வென்றி - மிகுமநுட்டுபு நாற்பந்தி பிரகதிவிளங்கியோங்கும் - மருவுமுட்டிணுகுவென்னும்வாம்பரியேழுபூண்ட - விரதம்" என்னுஞ்செய்யுளாற்பெறப்படும். (மச்சபு. சூரியரத.உஉ,உக.)[ஆசிரியர்சிலர் சப்தா என்னுங்குதிரையின் பெயர் ஏழ்பரியெனமொழிபெயர்க்கப்பட்டதெனவும், ஒன்றே ஏழு வாரங்களையும் நோக்கி யேழுநாமங்கள் கொடுக்கப்பட்டதெனவும் கூறுப.]

ஏழ்பரியோன்—சூரியன்.(சூ.நிகண் க:நுஎ.)

ஏழ்பருவம்— பெண்பாலார்க்குரிய ஏழ்பருவங்கள்; அவை: பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண் என்னும் பருவங்கள். (உ-ம்.)"எழ்பருவ-முற்றமாஞர்தொழ" (இலக்கணவி. அடுஅ.) [எதமில்பருவமாண்டேழெய்துபன்னென்றுபன்மூன் - ரேதுபத்தொன்பானையைந்துடன்முப்பத்தொன்றெண்ணேந்தே" என்னுஞ்சூடாமணிநிகண்டாலவற்றிஞண்டறியப்படும்.]

ஏழ்பவம் — தேவர், மக்கள், விலங்கு, பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் ஆகிய எழுவகைப்பிறப்பு. (உ-ம்.) "எழ்" பார்.

ஏழ்புரி—எழுபுரம்; அவை. அயோத்தி, மதுரை, மாயை, காசி, காஞ்சி, அவந்திகை, துவாரகை என்பன.

ஏழகம்—1. ஆடு. 2. செம்மறிக்கடா.(உ-ம்.) "ஏழகமேவிற்றெம்பால்" (கந்தபு. தகரேறு. உஉ.) 3. துருவாட்டேறு.

ஏழமை —ஏழைமை.

ஏழரை— சநி என்னுங்கிரகம்; பன்னிரண்டாமிராசியினும், சென்மராசியினும், இரண்டாமிராசியினும்நிற்குங்காலமாகிய ஏழரைவருடம்.

ஏழிசை— 1. குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம். (சூ. நிகண். கo: கூடு.) 2. சத்தசுரம். (உ-ம்.) "ஏழிசைநிறுத்திப்-பாடியும்" (கந்தபு. வள். உகக.)

ஏழிசைச்சுவை—பால், தேன், தயிர், நெய், ஏலம், வாழை, தாடிமக்கனி. ( சூ. நிகண். கo: கூஅ.)

ஏழிசைப்பிறப்பிடங்கள்— குரல்-மிடறு, துத்தம்-நா, கிளை-அண்ணம், உழை-சிரம், இளி-நெற்றி, விளரி-நெஞ்சு, தாரம்-நாசி. ( சூ. நிகண். கo: கூசு.)

ஏழிசைமணம்— மௌவல், முல்லை, கடம்பு, வஞ்சி, நெய்தல், தாமரை, புன்னை. ( பிங்கல. கசகசு.)

ஏழிசைமாத்திரைகள்— குரல்-4, துத்தம்-4, கிளை-3, உழை-2, இளி-4, விளரி-3, தாரம்-2. (சூ. நிகண். கo: கூஎ.)

ஏழிசையக்கரங்கள்—ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ. (சூ. நிகண். கo: கூஎ.)

ஏழிசையீசுவரர்— விஸ்வாமித்திரன், இயமன், அங்கி, திங்கள், வெய்யோன், கௌதமன், காசிபன். (சூ. நிகண். கo: கூக.)

ஏழிசையோசைகள்—வண்டு, கிள்ளை, வாசி, யானை, தவளை, தேநு, ஆடு. (சூ.நிகண். கo: கூக.) தவளைக்கு பிங்கலநிகண்டிற் குயிலைக்கூறுவர்.

ஏழிசைவாணர்—கந்தருவர். (உ-ம்.) "பன்னுமேழிசைவாணருஞ்சித்தரும்பரவ" (சேதுபு. விதூம. ச.)

ஏழிலம்பாலை — மகளிரான் மலருமரம் பத்துள் ஒன்று; அது. மகளிர்நட்பாடமலர்வதென்பர். அதன்வாசனையானைகளுக்காகாதாம்.(உ-ம்.) "பூத்தவேழிலம்பாலையைப்பொடிப்பொடியாக்கி" (இராமா. வரைக். சு.)

ஏழு—ஓர் எண்.

ஏழுபுரம்—எழ்புரிபார்.

ஏழை—1. அறியாமை. (உ-ம்.)"அவன்றன்மை-யேழைத்தன்மையோவில்லைதோழி"(கலி. நுடு.) 2. அறிவிலான். (உ-ம்.) "ஏழைக்கோரெட்டதான" (தாயு. பன்மாலை. உ.) 3. தரித்திரன். 4. பெண். (உ-ம்.) "அஞ்சொலேழைகோயில்" (இராமா. கைகேசி. க.)

ஏழைக்குறும்பு— வறுமையைக்காட்டிமோசஞ்செய்கை.

ஏழைத்தனம்—எளிமை.

ஏழைமார்—பெண்கள். (உ-ம்.) "கின்னரம்பயில்கீதகளென்னவாங் - கின்னரம்பயில்கின்றனரேழைமார்" (இராமா. வரைக். நுக.)

ஏழைமை—1. அறியாமை. 2. ஏழைத்தன்மை. 3. சிறியனுந்தன்மை. (உ-ம்.) "ஏழைமை வேடனிறந்திலனென்றெனையேசாரோ" ( இராமா. குக. கடு.) 4. வறுமை.

ஏழையேன்—அறிவிலனுகிய நான். (உ-ம்.) "என்னுமைவுள்ளபடி சுகமாயிருக்கவே யேழையேற்கருள்செய்" (தாயு. எங்குநிறை. நு.)

ஏளநம்—1. இகழ்ச்சிச்சொல். (சூ. நிகண். கo: கக.) 2. சரசம், லீலை. 3. நீக்கல். [1, 2. ஹேலநம்.]

ஏளிதம்—1. இகழ்ச்சி. 2. எளிமை.

**ஏற்க**—1. இணங்க. 2. எதிர்க்க. 3. பிச்சை வாங்க.

**ஏற்குதல்**—1. இணங்கல். 2 இரத்தல். 3. எதிர்த்தல். 4. ஒப்புககொள்ளல். 5. பொருந்தல். 5. வாங்கல். (உ-ம்,) "இதுவிலையாலேற்கும்பான்மையுமாம்" (சிவப்பி. உ: கரு.)

**ஏற்கை**—ஏற்குதல் பார்.

**ஏற்படுத்தல்**—1. இணக்கம்பண்ணுதல். 2. உண்டுபண்ணுதல். 3. நியமித்தல்.

**ஏற்படுத்துதல்**—ஏற்படுத்தல்.

**ஏற்படுதல்**—1. உடன்படுதல். 2. தலைப்படல்.

**ஏற்பாடு**—1. உடன்பாடு. 2. நியமம். 3. பிரமாணம். 4. பொருத்தம். 5. முறை.

**ஏற்பு**—1. இரப்பு. (உ-ம்.) "ஏற்பதிகழ்ச்சி" (கொன்றைவே.) 2. தகுதி. (உ-ம்.) "ஏற்புறு படைக்கெலாமிறைவனுகுநம்-வேற்படை" (கந்தபு. தாரகன்வதை. கருஎ.) 3. பொருந்துதல். (உ-ம்.) "வரம்பறுதானைதன்னை-ஏற்புடையரணமாகவியற்றுவித்து" (கந்தபு. அசுரர்யாக. ருஎ.)

**ஏற்புழிக்கோடல்**—ஒருதந்திர உத்தி; அஃது: ஒரு விதியை இயைபானவைகளுக்கே அமைவனவாகக்கொள்ளுதல். (உ-ம்,) "அல்வழியவற்றோடுறழுமென்றுராயினும், இவற்றோடு மயங்காதென விலக்கிய தகரம்வரின் ஏற்புழிக்கோடல் என்னுமுத்தியினலே திரிபொன்றுமேபெறுமெனக்கொள்க" (நன். மெய்யீற்று. உச. உரை. இராமானுச.)

**ஏற்புறவணிதல்**—(அகப்பொருள்) தலைவிக்குத்தக்கவகையாக அணிகளை அணிதல். (உ-ம்.) "கலந்துழிமகிழ்தலுநலம்பாராட்டலு- மேற்புறவணிதலுமென்னுமிம்மூன்றும்" (அகப்பொ. களவியல். கூ.)

**ஏற்போர்**—இரப்போர்.

**ஏற்ற**—1. எதிர்த்த. 2. தகுதியான. 3. பக்குவமான.

**ஏற்றக்கால்**—1. துலாவைத்தாங்குங்கால். 2. தூண்.

**ஏற்றக்குறைச்சல்**—ஏற்றத்தாழ்ச்சி.

**ஏற்றக்கோல்**—1. ஏற்றக்கழி. 2. துலாமரத்திற்கட்டிநீரிறைக்கப்படும் கழி.

**ஏற்றச்சால்**—நீர்மொள்ளும் பாத்திரம்.

**ஏற்றத்தாழ்ச்சி**—1. ஒவ்வாமை. 2. உயர்வு தாழ்வு.

**ஏற்றத்தாழ்வு**—உயர்வுதாழ்வு. (உ-ம்.) "ஏற்றத்தாழ்வாய்த்துன்புறுபோகம் பலகாற் றேர்ந்து" (ஞானவா. தாசூர. உ.)

**ஏற்றது**—1. இயன்றது. 2. பொருந்தியது.

**ஏற்றம்**—1. அதிகம். (உ-ம்.) "அவன்பெருழிற்குமேற்றமாமே" (தைல. தைலவ. கருசு.) 2. உயர்ச்சி. (உ-ம்.) "ஏற்றமானவரொன்பெருழிபதின்மரோடிலக்கர்" (கந்தபு. சரவண. க.) 3. எழும்புதல். 4. ஏற்றமரம், துலா. 5. ஏற்றுகை. 6. நீரேற்றம். 7. புகழ். 8. பெருக்கம். 9. மிகுதி. (உ-ம்.) "ஏற்றமாகியவெம்மைபோய்நீங்கியே" (கந்தபு. சுரம்புகு. உக.) 10. மேன்மை. (உ-ம்.) "எவ்வெத்தவத்துஞ்சிவபூசனையேற்றமென்ன" (காஞ்சிபு. தழுவ. உச.)

**ஏற்றமடல்**—1. (அகப்பொருள்) தலைவியைக்கூடப்பெறுததலைமகன் அவள்கோலத்தைப்படத்திலேதீட்டி ஏறியூரும்பனைமடல்; இதனைமடலேற்றமெனமாற்றியுமுரைப்பர்.

**ஏற்றமரம்**—துலா.

**ஏற்றமாலை**—ஒருபிரபந்தம்.

**ஏற்றமொழி**—புகழ்மொழி.

**ஏற்றரவு**—அண்ணியகாலம்.

**ஏற்றல்**—1. இசைவாதல். (உ-ம்.) "ஏற்றிடுகிட்டையிலிருந்து" (கந்தபு. மோனநீங்கு. ருரு.) 2. இணங்கல். (உ-ம்.) "என்றமன்னவனுக்கேற்கச்சாமந்தனிசைந்து" (திருவிளை. மெய்க்கா. கசு.) 3. இரத்தல். 4. உணர்த்தல். 5. எதிர்த்தல். (உ-ம்.) "இரிந்திடலின்றிநேர்வந்தேற்றமர்புரிதலாலே" (கந்தபு. தாரகன்வதை. சO.) 6. எழுப்பல். 7. எற்றுதல். (உ-ம்.) "தென்னிலத் தெதிர்ந்துளாரைத்தென்னிலந்தன்னிலேற்றி" (பாரத. பதின்மூன்றும்போர். கசசு.) 8. எறிதல். (பிங்கல. ௨கஉஎ.) 9. ஏந்தல். (உ-ம்.) "ஏதிலாதது" பார். 10. கொள்ளல். 11. தகுதி. 12. நடத்தல், சம்பவித்தல். (உ-ம்.) "ஏற்றதையுணர்கிலமென்று" (பாரத. வாரணவத. உக.) 13. பொருந்தச்செய்தல்.

**ஏற்றார்**—பகைவர். (உ-ம்.) "ஏற்றார்புரமூன்றுமெரியுண்ணச்சிலைதொட்டாய்" (தேவார. திருவெண்ணெய். அ. சுந்த.)

**ஏற்றியல்**—ஏறுதலினியல்பு. (சிந்தா.)

**ஏற்று**—1. ஏற்றுதல். 2. ஏற்றென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 3. மரத்தின்மேற்செய்த ஏதண்டை.

**ஏற்றுக்கொள்ளுதல்**—1. அங்கீகரித்துக்கொள்ளுதல். 2. பெற்றுக்கொள்ளுதல்.

**ஏற்றுதல்**—1. அதிகப்படுத்தல். 2. உணர்த்தல். 3. உயரப்பண்ணுதல். 4. உள்ளேற்றுதல். 5. எழுப்பல். 6. ஏறப்பண்ணுதல். (உ-ம்.) "தொடியணிதோண்முதுமகளைக்களியேற்றி" (திருவிளை. அங்கம்வெட். உஎ.)

**ஏற்றுப்பனை**—ஆண்பனை. (பெரியபு. திருஞா. கூ௮O.)

ஏற்றுமுதல்— தோணிமுதலியவற்றிலேற்ற ப்படுஞ்சரக்கு.

ஏற்றெழுதல்— ஓங்கியெழும்புதல். (உ-ம்.) "ஏற்றெழுவன்னிமேலினிதுதுஞ்சலாம்" (கந்தபு. விடைபெறு. ௩௧.)

ஏற்றை—ஒரு ஆண்பாற்பெயர். (உ-ம்.) "ஆற்றலொடுபுணர்ந்தவாண்பாற்கெல்லா - மேற்றைக்கிளவியுரித்தெனமொழிப" (தொல். பொருளதி. ௬௦௫.)

ஏற—1. அதிகமாக. 2. உயர.

ஏறக்கட்டுதல்— 1. கட்டியுயர்த்துதல். 2. பலப்படுத்துதல். 3. மழைமுதலியபெய்யாதிருத்தல்.

ஏறக்குறைய—ஏறத்தாழ.

ஏறங்கோட்பறை—முல்லைநிலமாக்கள் ஏறு கூப்பிடும்பொருட்டுஅடிக்குமொருபறை. (சூ. நிகண். ௭: ௬௧.)

ஏறங்கோள்—1. ஏறங்கோட்பறை. (உ-ம்.) "ஏறங்கோண்முழங்க" (சிந்தா. கோவிந்தை. ௮௧.) 2. ஏறுகோள். (தொ. ௭: ௬௮.)

ஏறட்டு—ஏறவிட்டு. (உ-ம்.) "கொம்பிலே ஏறட்டோனறகையினை" (குறிஞ்சி. ௩௬. உரை.)

ஏறண்டம்—குமுறலண்டரோகம். (சீவரட். ௧௧௨.)

ஏறத்தாழ—1. கூடக்குறைய. 2. முன்பின்னாக.

ஏறல்—ஏறுதல்.

ஏறவிடுதல்— 1. மரக்கலத்தைக்கரைக்குத் தூரமாகவிடுதல். 2. மேலே ஏறும்படிவிடுதல்.

ஏறவிறங்கப்பார்த்தல்— கேசாதிபாதமீறு கப்பார்த்தல்.

ஏறங்கடைசி—அறமுடிவு.

ஏறுநிலை—மேடு.

ஏறளர்—படைவீரர்.

ஏறிட்டுப்பார்த்தல்—உற்றுப்பார்த்தல்.

ஏறிடுதல்— 1. அடைதல். 2. ஏறவிடுதல். 3. உள்ளேசெலுத்தல். 4. வந்துபொருந்துதல். (உ-ம்.) "அவ்விதியநுபவத்தாலேறிடும்" (சி. சி. ௨: ௧. ஞானப்.)

ஏறியவீரி—சவ்வீரபாஷாணம்.

ஏறு— 1. அச்சுவினிநாள். (சூ. நிகண். ௧: ௬௭.) 2. அழித்தல். (உ-ம்.) "அவ்வெயில்லேறு பெற்றுதிர்வனபோல" (கலி. ௨.) 3. இடபதேவர். (உ-ம்.) "போரேற்றின்பூசையினை" (சைவச. பொது. ௪௯௯.) 4. இடபம். (உ-ம்.) "ஏறு காட்டியதிறலினோர்" (கந்தபு. நாட்டு. ௯௨.) 5. இடபவிராசி. (சூ. நிகண். ௧௧: நகர. ௯.) 6. இடி. (சூ. நிகண். ௧௧: நகர. ௯.) 7. உயர்ச்சி. (உ-ம்.) "ஏறுடைவானந்தன்னிவிடிக்குரலெழிலியோடு" (பெரியபு. கண்ணப்ப. ௬.) 8. எருமை, கவரிமான், சங்கு, சுறு, பசு, பன்றி, புல்வாய், மரை, மான் சிங்கமாகிய இவற்றினாண். (சூ. நிகண். ௩: ௩௩.) 9. எறிதல். (உ-ம்.) "கல்லேறுசெல்லுமோ" (தாயு. சச்சிதா. ௮.) 10. ஏறென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 11. தழும்பு. 12. பனைமுதலியவற்றினாண். 13. மிகுதி. (உ-ம்.) எல்லேற்றுளிகான்றிலங்குதிறல் வடிவாள்விதிராவிதழ்மடியா"(கூர்மபு. அந்தகா. ௧௦௫.) 14. யானை. (புறப்பொருள்வெ.) 15. விலங்கேற்றின்பொது.

ஏறுகோட்பறை—முல்லைநிலப்பறை.

ஏறுகோள்— ஒருபெண்ணைவிவாகஞ்செய்யும்பொருட்டாக ஏறு தழுவுதல். (திருக்கோ. ௧௩௬. செய்யுண்முகம்.) [ஓர் இடத்து ஒரு பெண் பிறந்தால் அப்பெண்ணைப் பெற்றவர் தந்தொழுவிலே அன்று பிறந்த சேங்கன்றுள்ளனவெல்லாம் தம் ஊட்டியாகவிட்டு வளர்த்து அப்பரிசினால் வளர்ந்த ஏற்றைத்தழுவினானொருவனுக்கு அப்பெண்ணைக்கொடுத்தல் முல்லைத்திணைக்குமரபென்ப.]

ஏறுசலாகை—கைமரங்கோக்குஞ்சலாகை.

ஏறுண்ணல் — 1. அம்பு தைக்கப்படுதல். (உ-ம்.) "எய்யேறுண்டவாறு" (திருவிளை. பழியஞ்சி. ௨௪) 2. வெட்டுண்ணல். (உ-ம்.) "கோலமழுவாலேறுண்டு"(பெரியபு. சண்டே. ௫௮.)

ஏறுதல்—1. அதிகப்படுதல். (உ-ம்.) "மட்டேறுபோதிற்படுகின்றுழி"(கந்தபு. திருவிளை. ௭௭.) 2. இவர்தல். (உ-ம்.) "ஏறுதேர்மூரிய" (பாரத. நிரைமீட்சி. ௬௩.) 3. உட்போதல். 4. உயருதல். 5. செல்லல். 6. தைத்தல். 7. தொடர்தல். (உ-ம்.) "இருவினைகள்வந்தேறவழியுமில்லை"(தாயு. ஆநந்தயா. ௧௦.) 8. மேற்போதல். (உ-ம்.) "பூவேறுகோனும்" (திருவாச. திருக்கோத்தும்பி. ௧.)

ஏறுதழுவல்— மணமுடிக்கும்பொருட்டு இடபத்தைப்பிடித்தல். (உ-ம்.) "ஏறுகோள்"பார்.

ஏறுதுறை— நாவாயின்மேலேறுந்துறைமுகம்.

ஏறுநேற்றி—அகன்றநெற்றி.

ஏறுபடி—1. அதிகப்படி. 2. தாழ்வாரம்.

ஏறுபொழுது—காலை நேரம். (வழக்.)

ஏறுமாறு—குழப்பம்.

ஏறுமிராசி— மகரமுதல் மிதுனமீறானவிராசிகள்.

ஏறுவட்டம்—1. ஏதினவட்டம். 2. கரணம் யோகம் நட்சத்திரம் முதலியனநாழிகை ஏறு

முறை. 3. பங்கின் அளவுக்கு அதிகமான நில முதலியன.

ஏறுவது— ஏறப்படும் வாகநம். (உ-ம்.) "விடையேறுவது" (கந்தபு. தவங்காண். கரு.)

ஏறுவால்—நீண்டவால். (உ-ம்.) "பசு ஏறுவாலும் எருது கூழைவாலும்" (வழக்.)

ஏறுவிடுதல்— மணமுடிக்கவருபவன் பிடிக்கும்பொருட்டு இடம் விடுதல்.

ஏறுவெயில்—முன்பொழுதின்வெய்யில்.

ஏறுழவர்—படைவீரர்.

ஏறெடுத்தல்—1. உயர்த்துதல். 2. மேலெடுத்தல்.

ஏன்—1. தன்மை ஒருமையில்வரும் ஒரு வினைவிகுதி. அது தெரிநிலை உடம்பாட்டுவினையில் வரும்போது கால இடைநிலைகளு ளொன்றை அடுத்து அதன்பின்னுகவும் எதிர்மறைப்பொருளிலே தெரிநிலைவினையில் வரும்போது வினையடியைநேரேயடுத்து அதன்பின்னுகவும் வரும். (உ-ம்.) "படித்தேன், படிக்கிறேன், படிப்பேன், படியேன்". 2. யாதுகாரணத்துக்காக எனப்பொருள்படும் ஒரு வினு இடைச்சொல். (உ-ம்.) "அடுத்தவினையுளதானிறையேனென்னில்" (சிவப்பி. உ: சு.) 3. எவன் என்னுவினு வினைக்குறிப்புமுற்றுச்சொல் ஏன் என விகாரப்பட்டு வருமென்பர். (நன்.வினை. ௩௧ உரை.)

ஏன்றல்—1. இயலல். 2. குறித்தல். 3. பொருந்தல். ( உ-ம். ) "ஏன்றவிரண்டும்பொருளுண்மைக்கிடமாம்" ( சி. சி. அளவை. ௬. சிவஞாந.) 4. முயலுதல். (உ-ம்.) "ஏன்றசெய்வினையாவதுஞ்செய்வதும்" (கந்தபு. சுக்கிரனுபதேச. ௩௫.)

ஏன்று—1. ஏற்று. (உ-ம்.) "ஏன்றெடுத்தசிலையினுய்" (இராம. குலமுறை. ௩.) 2. வஞ்சியாதெதிர்நின்று. (உ-ம்.) "கோழியோங்கியவென்றடுவிறற்கொடி" (திருமுரு. ௩௮.)

ஏன்றுகோள்ளுதல்—1. இயலுதல். 2. ஏற்றுக்கொள்ளல். (உ-ம்.) "அடியேனையுமேன்றுகொணீ" (தேவார. மழ. சு. சுந்த. சு.)

ஏன—ஏனைய. (உ-ம்.) "ஏலும்வதுவைக்குரியவேனவுமளித்தான்" (கந்தபு. தெய்வயானை. உக.)

ஏனக்கோடு—வெதுப்படக்கி.(மலையகராதி.)

ஏனப்படம்—பன்றிமுகக்கடகு. (உ-ம்.)"ஏனப்படமுங்கிடுகின்படமும்"(சிலப். ஊர்காண். கஎஉ.)

ஏனம்—1. ஆய்த எழுத்தின் சாரியைகளுள் ஒன்று. (உ-ம்.) "அஃகேனம்" 2. பாத்திரம். (வழக்.) 3. ஓலைக்குடை. (சூ. நிகண். கக: னகர வெ. கரு.) 4. கருவி. 5. பன்றி. (உ-ம்.) "ஏனமாகியுநரவரியாகியும்" (பாரத. உலூகன். க.) 6. பாவம். (சூ. நிகண். கக: னகர. கரு.)

ஏனல்—1. கதிர். (உ-ம்.) "இலைமுதிரேனல்காத்திருக்கும்பேதையான்" (கந்தபு.வள். ௬௧.) 2. பைந்தினை. (சூ. நிகண். ௬: ௬௦.) 3. தினை. (உ-ம்.) "ஏனல்விளையுளினிதளிக்கவைத்தனரே" ( கந்தபு. வள். ௬௮. ) 4. தினைப்புனம். (உ-ம்.) "பொருப்பினிலேனல்காக்கும்"(கந்தபு. வள். ௬௧.)

ஏனவர்— மற்றையோர். (உ-ம்.) "வானவரைத்தானவரை யேனவரைவெற்றிகொள்ளு - மாற்றலொடு" (கந்தபு. வரம்பெறு. உ௩.)

ஏனவாயன்—பேதை. (வழக்.)

ஏனவை—மற்றயவை. (உ-ம்.) "ஏனவைகுழீஇப்போய்" (கந்தபு. தருமகோபன். ௬௮.)

ஏனுதி—1. ஓர் இலேகியம். 2. ஓர் குடியிலுள்ளார்க்குரிய பட்டப்பெயர். (சிந்தா.) 3. நாவிதன். (சூ. நிகண். கக: னகர. க௪.) 4. படைத்தலைவன். (சூ. நிகண். கக: னகர. க௪.) 5. மந்திரி. (உ-ம்.) "ஆய்மாமதியேனுதியரவர்சூழ்தனையதுவாய்" (சேதுபு. அநுமகு. கக.) 6. மறவன்.

ஏனுதிநாயனர்—சிவனடியாரறுபத்துமூவரிலொருவர். (பெரியபு.)

ஏனும்—என்றுலுமெனப்பொருள்படும் ஒரு வினையெச்சவிகுதி. (உ-ம்.)"தாமரைமுதல்வற்கேனும்" (கந்தபு. காமதகன. அ௩.) [எனினும் என்பதன் விகாரம்போலும்.]

ஏனை— 1. ஒழிந்த எனப் பொருள்படும் ஓர் இடைச்சொல். (உ-ம்.) " ஏனைவானவர்யாவரும்"(கந்தபு. திருவிளை. கஉஎ.) 2. மலங்குமீன்.

ஏனைய— ஒழிந்த. (உ-ம்.) "ஏனையதேவருமினையரீரரே" (கந்தபு. திருவவதார. கஎ.)

ஏனையர்—மற்றோர். ( உ-ம். ) "அண்டர்களேனையர்" (கந்தபு. தெய்வயானை. உ௫௦.)

ஏனையவர்—ஏனையர்.

ஏனையோர்—மற்றையோர். (உ-ம்.) "தலைவருமேனையோரும்" ( கந்தபு. தெய்வயானை. ககஉ.)

ஏனோர்— மற்றையோர். (உ-ம்.) "தேவர்மாமுனிவரேனோர்" (கந்தபு. திருக்கலி. ௬௧.)

ஏனோன்— ஏனையோன். ( உ-ம். ) "முன்னோனுக்குயாவரும்பகையாகலானும் ஏனோனுக்குக்காரியந்தோன்றுமையானும்" (வள். அ௬௬. உரை.)

## ஐ

ஐ—[இது: தமிழ்ப்பாஷையின் வர்ணமாலையின் உயிர்வருக்கத்திலே வரும் ஒன்பதாமெழு

த்து; அஃது: அங்காந்தும்முன்னம்பல்லை அடி நாவினது விளிம்புபொருந்தியும் உச்சரிக்கப்ப டுவது. அகரக்கூறும் இகரக்கூறும் யகர ஒற் றொலி இடையிலே கலக்கச்சந்தித்துப்பிறப்ப தோரெழுத்தாதலால் அதனைச் சந்தியக்கரமெ ன்று சொல்வர்.](நன்.எழுத்.௧௨. விரு. உரை.)

1. அசைநிலை. (வள். ௧௦௫௮.)
2. அரசன். (உ-ம்.) "என்னைமுன்னில் லன்மின்" (வள். ௭௭௧.)
3. அழகு. (உ-ம்.) "ஐமைந்தாசரணந்த னமும்" (கந்தரந். காப்பு. ௨.)
4. இருமல். (உ-ம்.) "அன்றுதொட்டிவ னைமுதற்பிணியிளைலமுங்கி" (பாரத. குருகுல. ௨௨.)
5. ஒரு சாரியையிடைச்சொல். (உ-ம்.) "பண்டைக்காலம்" (நன். உருபு. ௫.)
6. ஒரு தொழிற்பெயர் விகுதி. (உ-ம்.) "கொலை" (நன். பதவி. ௧௬. ஆறுமுக.)
7. ஒரு பண்புப்பெயர் விகுதி. (உ-ம்.) "தொல்லை" (நன். பதவி. ௧௬. ஆறுமுக.)
8. கடவுள். (உ-ம்.) "மருதூரையம்பல ருஞ்சடையான்" (ம-தி.)
9. கடுகு. (இராசவைத்.)
10. கருவிப்பொருளிலேவரும் ஒரு பெயர் விகுதி. (உ-ம்.) "பார்வை" (நன். பதவி. ௧௬. ஆறுமுக.)
11. குரு. (உ-ம்.) "அக்கரையாம்பாட நா டுதல்" (கந்தரந். ௧௦.)
12. கோழை, சிலேட்டுமம். (உ-ம்.) "ஐயு ந்தொடர்ந்துவிழியுஞ்செருகியறிவழிந்து" (ப ட்டினத்தடி. திருவொற்றி. ௧.)
13. சர்க்கரை. (இராசவைத்.)
14. சவ்வீரம். (தைல. தைலவ.)
15. சன்னி. (இராசவைத்.)
16. சிலேஷ்மம். (தைல. தைலவ.)
17. சிவன்.
18. செயப்படுபொருளிலே வரும் ஒருபெ யர்விகுதி. (உ-ம்.) "தொடை" (நன். பதவி. ௧௬. (ஆறுமுக.)
19. தண்ணீர்க்காஞன் இலை. (இராசவை)
20. தண்ணீர்முட்டான்கிழங்கு. (இராச வைத்.)
21. தலைவன். (சூ. நிகண். ௧௧: யகரவெ. ௧௧.)
22. தும்பை. (இராசவைத்.)
23. தூர்க்கை. (இராசவைத்.)
24. நுண்மை. (பிங்கல. ௨௨௪௬.)
25. பருந்து. (இராசவைத்.)
26. பிதா. (உ-ம்.) "என்னைவானமெய்தி யானேயிறைவனுஞல்" (பாரத. வாரணா. ௬௧.)
27. பெயரைச்சார்ந்து செயப்படுபொருள் முதலிய பொருள்களிலேவரும் இரண்டாம்வே ற்றுமையுருபு.
28. பெருவியாதி. (இராசவைத்.)
29. முன்னிலைப்பொருளின் ஒருமைப்பாலி லேவரும் ஒருவினைவிகுதி. (நன்.வினையி.௧௬.)
30. யானைப்பாகன் அதட்டும் ஓசை.(உ-ம்) "அங்கையந்தலத்திஞலப்புதாதையெனக்-கொ ங்கலர்கண்ணியான் கொம்மைதான்கொட்டலு ம்" (சிந்தா. கனக. ௨௭௮.)
31. வியப்பாகிய குறிப்பையுணர்த்தும்ஒரு சொல். (உ-ம்.) "ஐவியப்பாகும்" (தொல். சொல். உரி. ௮௭. நச்.)
32. வினைமுதற்பொருளிலேவரும் ஒருபெ யர்விகுதி. (உ-ம்.) "பறவை" (நன். பதவி. ௧௬. ஆறுமுக.)
33. வெண்ணெய். (இராசவைத்.)

[அயன்றனையாதியாக வரனுருவென்பதெ ன்னை, எனச்சிவஞாநசித்தியாரின் முதலாஞ் சூத்திரத்தின் அறுபதாங்கவியிலே அயன்ற னை என்பதில் வரும் ஐ உருவம் எனப்பொரு ள்படும் என்றும் அங்ஙனம் பொருள்படுவது அழகு எனப்பொருள்படும் ஐ ஆகுபெயராக அழகையுடைய உருவத்தின்மேல் நின்றது. என்று சிவஞாநமுனிவர் கூறுவர்.]

ஐக்கம்—ஐக்கியம் பார்.

ஐக்கவம்- கரும்பிலிருந்துசெய்யப்பட்டது. [வைசுவ.]

ஐக்கவாதசைவம்—அகப்புறச்சமயம் ஆறனு ள் ஒன்று; அதன்வழிநிற்பார் வேதஞ்சிவாகமம் இரண்டிற்கும் சிறப்பு வகையாற் பிரமாணங் கொண்டு, அவற்றின் விலக்கியன ஒழித்து வி தித்தவழி ஒழுகுவாராயினும் ஆணவமலத்துண் மைகொள்ளாராயும் அதனுண்மைசாதிக்குஞ்சி வாகமவாக்கியங்களை இகழ்வாராயும் இருப்பவர்.

ஐக்கவாதசைவர் — ஐக்கவாதசைவத்தை அநுசரிப்போர்.

ஐக்கவாதி— 1. ஆன்மசித்துஞ்சிவசித்துந்த் ங்களிற்கூடி ஒன்ருய் விடுகிறதே முத்தியென் றுசாதிக்கும் மதஸ்தன். (சி. சி. ௧௧: ௧௧. நிரம்ப.) 2. ஐக்கவாதசைவமுடையோன். இவன்; ஆண வமலமென்பதொன்றில்லை சத்தனுயுள்ள ஆன் மாவைமாயாகன்மங்கள் இயல்பாகவந்து பொரு ந்துமென்பன். (சிவப்பி. இரண்டாஞ்சூத்திரம். ௧௬-ம் பாட்டிற்காண்க.)

ஐக்கியபதம்—சீவபரங்கள் ஒன்றுபட்டிருக்கு நிலை. (உ-ம்.) "ஐக்கியபதத்தினிதிருந்த விவேகந்தன்னை" (தாயு. மண்டல. சு.)

ஐக்கியபாவம்—ஒன்றுபட்டிருக்குந்தன்மை. (சி. சி. உ. உரை. நிரம்ப.)

ஐக்கியம்— 1. ஒன்றாயிருக்குந்தன்மை. 2. ஒன்றிப்பு, ஒன்றென்றுநினைக்கத்தக்கதாகச்சேர்ந்திருத்தல். (உ-ம்.) "நான்பேதையுப்போடப்பைமருவவிட்டுங்கற்பூரந்தனிற்றீபம்-வயங்கவிட்டுமைக்கியமுன்னிவருந்திகிற்பேன்" (தாயு. ஆகார. உக.) [வௌக்ய.]

ஐக்கியவாதம்—ஐக்கியவாதசைவம். அது: நீரும் நீருஞ்சேர்ந்தாற்போல முத்தியிலே ஆன்மாவுஞ்சிவனும் ஒன்றேயொழியிரண்டறக்கலந்து நிற்குமென்றுசொல்லும் மதம். (சி. சி. கக: கக. சிவஞா.)

ஐக்கியவாதி—சிவமாகியசித்தும் ஆன்மாவாகிய சித்தும் நீரும் நீரும்போல ஒத்தொன்றாய் நிற்குமென்று சொல்லும் மதஸ்தன். அவன் ஐக்கியவாதஞ்சாதிக்கிறவன். (சி. சி. கக: கக. சிவஞான.)

ஐக்குஞ்சு— தண்ணீர் முட்டான் கிழங்கு. (இராசவைத்.)

ஐக்குறுக்கம் — ஐகாரக்குறுக்கம். அஃது: "ஐயௌக்குறுக்கம்" (நன். எழுத். சச.) என்பதனாற்பெறப்படும்.

ஐக—மல்லிகைமொக்குள். (இராசவைத்.)

ஐகாந்திகம்—1. பூரணம். 2. பொதுநீங்கியது.

ஐகாரக்குறுக்கம்— இரண்டுமாத்திரையிற் குறைய உச்சரிக்கப்படும் ஐகாரம்; அஃது: ஒரு பதத்தின் முதல் இடை கடையென்னும் மூன்றிடத்தும்வரும். (நன். எழுத். சO.)

ஐகாரம்— ஐயென்னுமெழுத்து. (நன். எழுத். எக.) [காரம் - சாரியை.]

ஐகான்—ஐகார எழுத்து. (உ-ம்.) "ஐகான் யவ்வழி" (நன். எழுத். சுகூ.) [கான்-சாரியை.]

ஐகிகம்-1.இம்மை.(சி.சி.ச:சO.சிவாக்.)2.இம்மைக்குரியது. [வௌகிக: ஐஹ - இங்கே.]

ஐங்கணை—ஐந்துபாணங்கள். வநசம், சூதம், அசோகு, முல்லை, நீலம் என்பன மன்மதனது ஐங்கணை என்பர். (சூ. நிகண். கஉ: சக.) [சிந்தாமணியில் ஐங்கணை இரண்டென்பர்.]

ஐங்கணைக்கிழவன்— மன்மதன். (உ-ம்.) ஐங்கணைக்கிழவன்காட்சியுண்மகிழ" (கல்லாட. உO.)

ஐங்கணையவத்தை— சுப்பிரயோகம், சோகம், மரணம், மோகம், விப்பிரயோகம். (சூ. நிகண். கஉ: ருO, ரு.)

ஐங்கதி—பஞ்சகதி. (உ-ம்.) "ஆய்ந்தவெம்பரிமாத்தாண்டியையங்கதிநடத்திக்காட்டி"(திருவிளை. மெய்க்கா. கூஎ.) "பஞ்சகதி" பார்.

ஐங்கரன்—விநாயகன். (சூ. நிகண். க: உக.)

ஐங்கனி— விசேடவகையான ஐந்து பழங்கள். அவை: எலுமிச்சம்பழம், நாரத்தம்பழம், மாதுளம்பழம், தமரத்தம்பழம், குளஞ்சிப்பழம் என்பன. (உ-ம்.) "ஐங்கனியமுதமைந்துகௌவியம்" (திருவிளை. நான்மாட. ககூ, உO.) (சைவச. ருகச. உரை.)

ஐங்காயதைலம்—பிண்டதைலம்.

ஐங்காயம்— ஐந்துகாயம்; அவை: கடுகு, ஓமம், வெந்தயம், உள்ளி, பெருங்காயம் என்பன. (தைல. தைலவ. கசுரு.) உவின்சிலோ அகராதிக்காரர். கடுகு நீக்கி மிளகு கூட்டி ஐங்காயமென்றும், மானிப்பாயகராதிக்காரர்: ஓமம் நீக்கிச்சுக்குக்கூட்டி ஐங்காயமென்றுங்கூறினர்.

ஐங்காரம்—வெங்காரம், சீனக்காரம், சவுக்காரம், பொரிகாரம், நவச்சாரம் என்னும் ஐந்து காரங்கள்.

ஐங்காலம்— பிராதக்காலம், சங்கவகாலம், மத்தியாநகாலம், அபரான்னகாலம், சாயாந்தகாலம் என்னும் ஐந்துகாலங்கள். இவை சூரியோதயமுதல்அவ்வாறுநாழிகை அளவாகக்கொள்ளப்படும். (பாலபாடம். கககூ.)

ஐங்குரவர்— பஞ்சகுரு; அவர்: இராசா, தாய், தமையன், உபாத்தியாயன், பிதா.(உ-ம்) "அரசனுவாத்தியாயன்றாய்தந்தைதம்முனிகரில்குரவரிவரைவரைத் - தேவரைப்போலத்தொழுதெழுக" (ஆசாரக். கஉ.) (சூ. நிகண். கஉ: கூஅ-ல் தாயைநீக்கிக் குருவைக்கூறினர்.)

ஐங்குழு— அரசர்க்குரிய பஞ்ச குழுவினர். அவர்: சாரணர், சேனாபதியர், தூதர், புரோகிதர், மந்திரியர் என்பவர். (சூ. நிகண். கஉ:கூஎ.)

ஐங்கோசம்—பஞ்சகோசம்; அவை: அந்நமயகோசமும், பிராணமயகோசமும், மனோமயகோசமும், விஞ்ஞானமயகோசமும், ஆநந்தமயகோசமுமாம். (சி. சி. ச: உகூ.)

ஐசாநம்— 1. ஈசானதிக்கு. 2. ஈசானனோடு சம்பந்தப்பட்டது. [வௌஶாந.]

ஐசாநி— 1. துர்க்காதேவி. 2. வடகீழ்த்திசை. 3. வடகீழ்த்திசையானை. [வௌஶாநீ]

ஐசாநியன்—ஈசாநன்.

ஐசிலம்—சிறுநாகம். (மலையகராதி.)

ஐசுரவிரதம்—ஒருவிரதம். (சூத. நியமமு. கக.)

ஐசுவரி—ஈசுரசம்பந்தமாகிய சத்தி. (பௌட். ச: ௨௫.) [ஐஶ்வரீ.]

ஐசுவரியம்— 1. செல்வம், பாக்கியம். 2. தைவிகமான அதிகாரமுடைமை; அது: சர்வவியாபகம், சர்வசாமர்த்தியம் முதலிய குணங்களுடைமை. 3. மேலான சித்தி. 4. வல்லபம், அதிகாரம், ஆளுந்தன்மை. (பௌட். ௯. ௬௯.)

ஐஞ்சந்தி—ஐந்துதெருக்கள் கூடுமிடம். (மணிமே.)

ஐஞ்சுத்தி— பஞ்சசுத்தி. (உ-ம்.) "தூயராகியைஞ்சுத்திசெய்து" (திருவிளை. வருணனுக்குச். ௪௧.) [ஆன்மசுத்தி, தானசுத்தி, திரவியசுத்தி, மந்திரசுத்தி, இலிங்கசுத்தி என்பன. (சைவச. ௫௦௨. உரை.)

ஐஞ்ஞூறு—ஒரெண்.

ஐட்டிகம்— யாகத்தோடுசெம்பந்தப்பட்டது. [ஐஷ்டிக.]

ஐணம் — கருமானோடுசெம்பந்தப்பட்டது, தோல் முதலியன.

ஐணேயம் — பெண்மானின்றோல் முதலானவை.

ஐத்திரியவுபநிஷத்து — ஓர் உபநிடதம்; அஃது இருக்குவேதத்திலுள்ளது.

ஐதரேயம்— இருக்குவேத உபநிடதம்பத்திலொன்று.

ஐதிகம்—ஓர் அளவை; அது: தொன்றுதொட்டுவருங்கேள்வியைநம்புவது. (உ-ம்.) "கொன்பயில்வேலைக் கடல்புடைசூழுங்குவலயத்தோரன்புடனுவிலல கையுண்டென்பர்களென்பதுவு- மின்பயில்புற்றில் விடநாகமுண்டென்பரென்பதுவு-மென்பர்கணுவலரென்பதுமைதிகமென்பர்களே" (சி. சி. க: க. மறை.)

ஐதிகாதிகன்—1. சரித்திரக்காரன். 2. புராதனக்கதைகளையறிகிறவன். [ஐதிஹாஸிக.]

ஐது — அடர்த்தியற்றது, அற்பம். (உ-ம்.) "ஐதசெந்நெல்பொய்யாவிளைவு" (பிள்ளைப்பிராயம்.) 2. அழகு. (உ-ம்.) "ஐதேந்தல்குல்" கூர்மபு. தக்கனைச்சபித். ௬.) 3. அழகையுடையது. (உ-ம்.) "ஐதுரையாநின்றவணிந்துரையை" (நன். சிறப். ௬.) [ஐ - அழகு. து-விகுதி.] 4. நுண்ணியது. (உ-ம்.) "ஐதமர்நுசுப்பினள்" (கலி. ௫௨.) 5. மெத்தென. (உ-ம்.) "ஐதுநடந்து" (சிறுபா. ௭.) 6. மெல்லிது. (உ-ம்.) "ஐது வீழிகுபெயல்" (சிறுபா. ௧௩.) 7. வியக்கத்தக்கது. (தொல். சொல். ௩அ௫. உரை.) 8. விரைவு. (உ-ம்.) "மிகவு- மைதேறியடனீடுகருடன் றன்முதுகின்கண்" (சேதுபு. பாலோ. ௬.)

ஐதுபடல்—இளகுதல். (உ-ம்.) "மேதகுநானநீரி-னைதுபட்டொழுகி" (சிந்தா. நாமகள். அஅ.)

ஐதென—விரைவாக. (உ-ம்.) "ஐதெனவுலகெலாமழுங்கிற்றென்பவே" (கந்தபு. தாரக. ௧௭௪.)

ஐந்தடக்கல்— பஞ்சேந்திரியங்களையொடுக்குதல். (உ-ம்.) "ஒருமையுளாமைபோலைந்தடக்கலாற்றின்" (வள். ௧௨௬.) [இது தொகைக்குறிப்பு.]

**ஐந்தமுதம்**— பஞ்சாமிர்தம்; அவை: பால், தயிர், நெய், தேன், சர்க்கரை என்பன. ரசபஞ்சாமிர்தம் எனப்படும். இவற்றோடு, வாழைப்பழம், பலாப்பழம், மாம்பழம் என்னுமூன்றையுங்கூட்டிற்பல பஞ்சாமிர்தமெனப்படும். (சைவச. ௫௧௩. உரை.)

ஐந்தாம்—1. அழகுள்ளது. 2. நெருக்கமின்மை. 3. பனை. 4. மந்தம்.

ஐந்தரு—1. காஞ்சிநகரத்திலுள்ள ஐந்துமரங்கள்; அவை: பொன்மலர்மலருமாமரமும், மலருங்காயுமில்லாமல் பழங்களைக்கொடுத்து அவற்றையுண்டவர்களுக்குச் சித்திகளைக்கொடுக்கும் புளிமாமரமும், நறுமணங்கமழும் பலவகை மலர்கள்மலர்கின்ற இருப்பைமரமும், ஆகாயத்தேயுயர்ந்த அத்திமரமும், தன்னிழல் தன்னடிவிட்டுப்பிரியாதிருக்கிற காஞ்சிமரமுமாம். (உ-ம்.) "மறைகளினுருவாய்ப் பொன்மலர்தனிமாமலரொடுகொயிலாதென்றுஞ் - செறிதருபலங்களுதவிநுங்கினர்க்குச்சித்திகள்வழங்குறுமெகினம்-வெறிமலர்பலவுமலர்ந்திடுமதூகம்விண்ணினைநோக்குமோரத்தி-நறுநிழல்பிரியாதிருந்ததோர்காஞ்சிநன்னகர்தன்னிலைந்தருவே" (கந்தபு. திருநகர. ௬௪.) 2. தேவலோகத்திலுள்ள என்று சொல்லப்படும்பஞ்சதரு; அவை: அரிசந்தனம், கற்பகம், சந்தானம், பாரிசாதம், மந்தாரம் என்பன. (சூ. நிகண். ௪: ௨.)

ஐந்தலைநாகம்— ஐந்துதலைகளையுடைய ஒரு பாம்பு; அஃது: இக்காலத்திற் காணப்படுவதில்லை. (உ-ம்.) "இனியைந்-தலைநாகநன்மணியும் பெறலாமித்தரணியிலே" (வாண. ௧௮.)

ஐந்தவம்— 1. சாந்திரமாதம். [இந்துவோடு சம்பந்தப்பட்டதென்றபடி.] 2. மிருகசீரிடநாள். [இந்து சம்பந்தநாள் என்றபடி.] [ஐந்தவ.]

ஐந்தறிவுயிர்— 1. மக்கள். 2. விலங்கு. (1-2. பிங்கல. ௪௦௯௬.)

ஐந்தனுருபு— இன் இல் என்னும் ஐந்தாம் வேற்றுமையுருபு. (நன். பெயரி. ௬௨.)

ஐந்தாங்காரம்— தமம், மோகம், மகாமோகம், தாமிச்சிரம், அந்ததாமிச்சிரம் என ஐந்து வகைப்பட்ட ஆங்காரம். (கூர்மபு. பலவகைத் தோற்ற. ௨.)

ஐந்தார்— பனை. (மலையகராதி.)

ஐந்திணை— 1. அன்புடைக்காமம்பற்றிக்குறிஞ்சி பாலை முல்லை மருதம் நெய்தலாகிய ஐவகைநிலத்திலும் ஆடவர் மகளிர் ஆகிய இருதிறத்தார்க்குள்ளுநிகழுமொழுக்கம். (உ-ம்.) "ஐந்திணையுடையதன்புடைக்காமம்" ( அகப்பொ. அகத்திணை. ௪.) 2. ஐவகைநிலம். (உ-ம்.)"குறிஞ்சிபாலைமுல்லைமருத - நெய்தலைந்திணைக்கெய்தியபெயரே" (அகப்பொ. அகத்திணை. ௬.)

ஐந்திணைச்செய்யுள்– ஒரு பிரபந்தம்; அது: புணர்தன்முதலிய ஐந்துரிப்பொருளும் விளங்கக்குறிஞ்சிமுதலிய ஐந்திணையுங்கூறுவது. (உ-ம்.) "உரிப்பொருடோன்றவோரைந்திணையுந் தெரிப்பதைந்திணைச்செய்யுளாகும்"(இலக்கணவி. அ௬௧.)

ஐந்திர—பிரதிட்டாகலையிலுள்ளபுவநங்களுள் ஒன்று. (சி-வி. கிரி. ௨௧. தாற்.)

ஐந்திரசாலிகன்— இந்திரசாலவித்தைக்காரன். [ஐந்த்ரஜாலிக.]

ஐந்திரம்—1. இந்திரசம்பந்தமானது. 2. இந்திரனாற்செய்யப்பட்ட ஒரு சம்ஸ்கிருத இலக்கணம். (மணிமே.) 3. கிழக்கு. 4. கேட்டை. இந்திரசம்பந்தமானநாளாதலாலென்க. (சூ.நிகண். ௧: ௭௫.) 5. சிற்பநூலிலொன்று. 6. நித்தியயோகத்தொன்று. 7. பகலிலேநிகழும் பத்தாமுகூர்த்தம். (விதான.குணகுண.௭௩.உரை.) [ஐந்த்ர.]

ஐந்திரன்— இந்திரபுத்திரன்.

ஐந்திரி— 1. அருச்சுநன். 2. இந்திராணி. 3. காகம். 4. கிழக்கு. [இந்திரன் ஆளுகைசெய்யுந்திக்கு என்றபடி.] 5. கேட்டைநாள். 6. சயந்தன். 7. பார்வதி. 8. வாலி. [ஐந்த்ரி.]

ஐந்திரியம்—1. இந்திரிய உலகம். 2. இந்திரியங்களோடுசம்பந்தப்பட்டது. 3. இந்திரியப்பிரத்தியட்சம். 4. ஓர் நூல். [ஐந்த்ரிய.]

ஐந்திலவணம்—கறியுப்பு, வெடியுப்பு, அட்டுப்பு, விளையலுப்பு, மண்ணுப்பு. ( தைல. தைலவ. ௭௪.)

ஐந்து—ஒரெண்.

ஐந்துசுத்தி — பூதசுத்தி, ஆன்மசுத்தி, திரவியசுத்தி, மந்திரசுத்தி, இலிங்கசுத்தி என்று சொல்லப்பட்டவை. (சி. சி. அ: ௨௦. கிரம்ப.)

ஐந்துதுந்துபி—பஞ்சவாத்தியம்.

ஐந்துப்பு—"ஐந்திலவணம்" பார்.

ஐந்துபா—வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா, மருட்பா என்னும் ஐந்துபாக்கள். (உ-ம்.) "ஐந்துபாவுடைநால்வகைக்கவிக்கதிபதியாய்" (பாரத. பாயிர. ௧௫.)

ஐந்துபூதம்—பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்னும் ஐந்துபூதங்கள்.

ஐந்துமுகர்—ஐந்துமுகமுடையவராகிய சிவன். (உ-ம்.) "ஐந்துமுகர்தந்தமுருகேசநம" (கந்தபு. திருவிளை. அ௨.)

ஐந்துநவாணி—தேரகத்துச்செறிகதிர்.

ஐந்துவிரை—கோட்டம், துருக்கம், தகரம் அகில், சந்தநம் என்னும் ஐந்து மணப்பொருள்கள். (கந்தபு. குமாரபுரி. ௬௬. உரை.)

ஐந்துவிரைத்தூபம்—அவை: குந்துருக்கம், பச்சைக்கருப்பூரம், காரகில், வெண்சந்தநம், கருஞ்சீதாரி. (திருவிளை.உலவாக்கி.௧௫.உரை.)

ஐந்துறுப்படக்கி— ஆமை. [ஆமை தனக்கோர் இடையூறு வருங்காலத்துக் கால் நாலும் தலை ஒன்றுமாகிய ஐந்துறுப்பையுந் தனக்குளடக்கிகோடல்பற்றி இப்பெயர்பெற்றதென்க. [இதனைப்பிங்கலநிகண்டில் உறுப்படக்கி என்பர்.]

ஐந்தெழுத்தடுக்கு— இருபத்தைந்தென்னுமெண்ணைக்கருதும் ஒரு குறிப்புமொழி. (உ-ம்.) " ஐந்தெழுத்தடுக்கொவ்வொன்றீரைம்பல மசியமுற்றுமிடித்து" (தைல. தைலவ. ௨௩.) [ஐந்தெழுத்தடுக்கென்பது சிவசக்கரத்துள் பஞ்சாட்சரம் மாறலில் ஓர்வகை இருபத்தைந்தெழுத்துகள் என்பதுபற்றி வந்த குறிப்பு.]

ஐந்தெழுத்து—பஞ்சாக்கரமந்திரம்.

ஐந்தை—சிறுகடுகு.

ஐந்தொகைவினு—ஒருகணக்கு.

ஐந்தொழில்— பஞ்சகிருத்தியம்; அவை: சிருட்டி, திதி, சங்காரம், திரோபவம், அநுக்கிரகம் என்பனவாம். (சி. சி. ௧: ௩அ. சிவஞா. உரையிற்காண்க.)

ஐந்நூறு—ஒரெண்.

ஐப்பசி— 1. அச்சுவினிநாள். (சூ. நிகண். ௧: ௬௭.)2. ஒருமாதம்.(உ-ம்.)"அந்த-முனிவரைப்பசியின்மூழ்கி முனிவரிற்றலைமைபெற்றார் " (அருணசலபு. தீர்த். ௧அ.)

ஐம்படை—1. ஐந்து ஆயுதங்கள். 2. விட்டுணுவின் ஆயுதங்களாகிய சக்கரம், வில், வாள்,

தண்டு, சங்கு என்பன. (உ-ம்.) "அங்கையி னேமிசங்குவாடணடோடடற்சராசனந் தரித் தருள்வோன்" (பாரத. நாடுகரந். க.) 3. விட்டு ணுவின் ஐந்து ஆயுதங்களின் உருவம்பதித்துப் பொன்னினாலேசெய்த பஞ்சாயுதம் எனப்படும் சிறுபிள்ளைகளின் ஒருவகைக்கழுத்தணி. இதனை ஐந்தாவதுமாதத்தில் தாரணம் செய்தல் மரபெ ன்பர். (மணிமே.) (உ-ம்.) "ஐம்படைசதங்கை சாத்தி" (பெரியபு. தடுத்தாட். ச.)

ஐம்பதம்—ஒன்றேகால். (உ-ம்.) "இருந்த திப்புனலைம்பதம்" (தைல. தைலவ. கூஅ.)

ஐம்பது—ஒரெண்.

ஐம்பாதகம்—பஞ்சபாதகம்; அவை: கள்ளரு ந்தல், களவு, குருநிந்தை, கொலை, பொய். (சூ. நிகண். கஉ: கூக.)

ஐம்பால்—1. ஆண்பால், பெண்பால், பலர் பால், ஒன்றன்பால், பலவின்பால் என்னுமைந் துபால். (நன். பெயரிய. உ.) 2. மகளிர்கூந்தல். (சூ. நிகண். உ: கூ00.) [மயிரை உச்சியில்முடித் தலாகியமுடி, பக்கத்தில் முடித்தலாகியகொண் டை, பின்னிச்சொருகலாகிய சுருள், சுருட்டி முடித்தலாகிய குழல், பின்னிவிடுதலாகிய பனி ச்சை என ஐவகைப்படும் என்பர்.]

ஐம்புலத்தவர்—பிதிரர், தெய்வம், விருந்து, சுற்றத்தவர், தான் எனப்படும் ஐவகையர். (உ-ம்.) "தென்புலத்தார்தெய்வம்விருந்தொக்க லுனென்றாங்-கைம்புலத்தாறோம்பறலை" (வள். சகூ.)

ஐம்புலம்— 1. ஐந்திடம். 2. ஐம்பொறி. (உ-ம்.) "தன்னியவைம்புலவேடர்சூழலிற்பட்டு" (சி. சி. அ: க.) 3. சத்தபரிசரூபரசகந்தங்க ளாகிய ஐம்புலன்கள். (உ-ம்.) "ஆற்றுமைம்புல த்தாறுசென்மேலையோர்" (கந்தபு. அவையடக். கஎ.)

ஐம்புலம்வேன்றோர்—முனிவர்.

ஐம்புலம்வேன்றோன்—1. அருகன். 2. பஞ்சபட்சிபாஷணம்.

ஐம்புலவிடயன்—இல்வாழ்வான்.

ஐம்புலன்—"ஐம்புலம்" 3. பார்.

ஐம்புலனடக்கல்— சாத்துவிதகுணத்தொ ன்று; அது: பஞ்சப்புலனடக்கல். (சூ. நிகண். கஉ: அ.)

ஐம்பூதங்கள்—பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்னும் ஐந்துபொருள்கள், இவை சூக்குமபூதங்களெனவும், தூலபூதங்களெனவும் இருவகைப்படும். (உ-ம்.) "முந்தியவைம்பூதங்க ள்வானுதியாக" (சிவப்பி. உ: உஎ.)

ஐம்பூதலிங்கம்— பஞ்சபூதவடிவங்களான இலிங்கங்கள்; அவற்றுள் பிருதிவிலிங்கம் காஞ் சியிலும், அப்புலிங்கம் திருவானைக்காவிலும், தேயுலிங்கம் திருவண்ணாமலையிலும், வாயுலிங் கம் சீகாளத்தியிலும், ஆகாயலிங்கம் சிதம்பரத் திலுமுள்ளன என்பர்.

ஐம்பெருங்குழு— அமைச்சர், புரோகிதர், சேனாதிபர், தூதுவர், சாரணர் எனச்சொல்லப் படும் அரசர்க்குரியஐவகைக்கூட்டத்தார். (உ-ம்) "ஐம்பெருங்குழுவுமெண்பேராயமும்" (சிலப். இந்திரவிழ. கருஎ. உரை.)

ஐம்பேருவேள்வி— பிரமம், தெய்வம், பூதம், பிதிர், மானுடம் ஆகிய ஐவகையாகங்கள்; அவ ற்றுள்: வேதமோதல், பிரமயாகம், ஓமம்வளர்த் தல், தெய்வயாகம், பலியீதல், பூதயாகம், தர்ப் பணம் முடித்தல், பிதிர்யாகம், இரப்போர்க்குண வுமுதலிய ஈதல், மானுடயாகம் எனப்படும். (சூ. நிகண். கஉ: சச.)

ஐம்பொறி— மெய், வாய், கண், மூக்குச், செவிகளினிடமாயிருக்கிற ஐந்து இந்திரியங் கள். (சி. சி. உ. கூக.)

ஐம்பொறிநுகர்ச்சி—பொறிபுலனைக்கொள் ளுகை. (சூ. நிகண். கஉ: சஅ.)

ஐம்பொறிவிடயம்—பஞ்சேந்திரியங்களால் அறியப்படுவனவாகிய சத்த பரிச ரூப ரச கந்த ங்கள்.

ஐம்பொன்—இரும்பு, ஈயம், செம்பு, பொன், வெள்ளி ஆகிய ஐவகைலோகங்கள். (சூ. நிகண். கூ: ச.)

ஐம்முகச்சைவச்செந்தீ— பஞ்சப்பிரமமந்தி ரங்களாற்செய்யுஞ்சிவாக்கினி. (உ-ம்.) "ஐம்முக ச்செந்தீயகத்தினும்" ( திருவிளை. அரிச்சனை. சக.)

ஐம்முகப்பிரமன்—பூருவத்திலே ஐந்துமுக ங்களையுடையபிரமன்.

ஐம்மை—தகட்டுவடிவு. (பிங்கல. உஉகூஎ.)

ஐமவதி—உமை. (உ-ம்.) "சிவங்கரியைமவதி" (திருவானை. கோச்செங். அக.) [ஹைமவதீ]

ஐமீன்—1. அத்தநாள். (பிங்கல. கருக.) 2. உரோகணிநட்சத்திரம். (வீமேசுரவுள். கரு.) [ஐந்துவிண்மீன்களைக்கொண்டனவாதலால்.]

ஐமுகன்— ஈசானம், தற்புருடம், அகோரம், வாமதேவம், சத்தியோசாதம் என்னும் ஐந்து முகங்களை உடையராகிய சிவன். (சூ. நிகண். கஉ: சகூ.)

ஐமுகாஸ்திரம்—ஒருபாணம்.

ஐமுகி—1. ஆமணக்கு. 2. சிவன்.

ஐமை— 1. அடர்பு. 2. கூட்டம். 3. தகட்டு வடிவு. (பிங்கல. உஉகூஎ.) 4. பகுதி.

ஐய— 1. அசைப்பொருளில் வருவதோரிடைச்சொல். (உ-ம்.) "ஐயசொற்பொருடன் வடிவானவர்" (திருவிளை. இரசனக்கரையே.௪.) 2. அதிசயத்தையுணர்த்தும் ஓரிடைச்சொல். (உ-ம்.) "ஐயவின்னதொரற்புதமாயை" (திருவிளை. விடை. ௨௬.) 3. அழகிய. 4. இரக்கப்பொருளில்வருமிடைச்சொல். (உ-ம்.) "ஆதலரானீரங்தோவையவென்றழுதுநைந்தார்" (திருவிளை. மாமனாக. ௨௬.) 5. ஐயனே. (விளி.) 6. சிறிய. (திருவால. திருவிளை.)

ஐயக்கணசூலை— அறுவகைச்சூலைகளுள் ஒன்றாகிய ஒருநோய்.

ஐயக்காட்சி— காட்சியளவையின் ஒருவகை. அது கண்டபொருளை அஃதோ இஃதோவென ஒன்றிற்றணிவுபிறவாது இரட்டுறக்கருதியாராயும் ஞானசத்தி. (உ-ம்.) "ஐயம்" பார்.

ஐயக்கிளவி— (இலக்கணம்) இன்னபொருளென்று துணிந்தறிய வராது பொதுவியல்பாற்றோன்றியபொருள். (உ-ம்.) "பான்மயக்குற்றவையக்கிளவி" (தொல். சொல். கிளவியா.௨௬.)

ஐயகுன்மம்— சிலேட்டுமகுன்மம். (வைத்.நி.)

ஐயகோ — ஐயோ என்னுமோர் இரக்கச்சொல். (உ-ம்.) "என்னே" பார்.

ஐயங்கவீநம்— 1. புதுவெண்ணெய். (சப்தகல்பத்ருமம்.) 2. வெண்ணெய். (சூ. நிகண் ௬: ௨எ.) ஹையங்கவீந.]

ஐயங்காய்ச்சி — 1. ஒரு நோய். 2. ஒரு பெண்பேய்.

ஐயங்கார்— வைணவப்பிராமணர்க்குப் பட்டப்பெயர்.

ஐயதங்கு—1. நிலப்பனைக்கிழங்கு. (மலையகராதி.) 2. இருபது. (உ-ம்) "எண்சுவடி"

ஐயநாடி—சிலேற்பனநாடி.

ஐயப்படாமை— அறத்துறுப்பு எட்டனுள் ஒன்று; அது: சந்தேகப்படாமை. (சூ. நிகண். ௧௨: ௫௬.)

ஐயப்பாடு—ஐயப்படுதல். (உ-ம்.) "அறிந்தவை-யையப்பாடில்லதேயொற்று" (வள்.௫௮எ.)

ஐயம்— 1. அகப்பொருட்டுறையுள் ஒன்று; அது: தலைமகன்தான்கண்டபெண்ணை யாரென்று சந்தேகித்தல். (உ-ம்.) "மடமானேக்கிவடிவுங்கண்ட - விடமுஞ்சிறந்துழியெய்துவதையம்" (அகப்பொ. களவி. ௪.) 2. இரப்போர்கலம். 3. ஐயக்காட்சி; அது: பொதுவிலக்கணமாகப்பார்த்தபதார்த்தத்தை அஃதோ இஃதோ எனக்கருதல். (உ-ம்.) "கண்டபொருளையிரட்டுறவேகருதலையம்" (சி. சி. அளவை. ௬.) 4. குற்றம். (ஞானமிர்தம்.) 5. கோழை, சிலேட்டுமம். 6. சந்தேகம். (உ-ம்.) "மெய்யிதற்கையமில்லை" (தாயு. கருணாகர. ௫.) 7. பிச்சை. 8. பொழுது. 9. மோர். (2, 7, 8. பிங்கல. ௬௨௬எ.)

ஐயமறுத்தல்— பஞ்சவினாவினுளொன்று; சந்தேகந்தீர்த்தல். (சூ. நிகண். ௧௨: ௪௨.)

ஐயர்—1. தந்தையர். (உ-ம்.) "தங்குலத்துரியவையர்தம்வயிற்றுதித்தாரல்லர்" (சேதுபு. இராமநாத. ௬௬.) 2. தமையன்மார். (ஐங்குறு.) 3. பார்ப்பார். (உ-ம்.) "ஐயர்கையில்வந்தவுணரைச்செறுங்- துய்யதீம்படை" (கந்தபு. இந்திராணிமறுதலை. ௨௨.) 4. பெருமையிற் சிறந்தோர். 5. முனிவர். (உ-ம்.) "அணைதருமுக்குறும்பரிந்தவையர்" (வேதாரணியபு. பஞ்சாக். ௨௨.) 6. வானோர்.

ஐயவணி—ஓரலங்காரம். அஃதொப்புமையினொருபொருளையதுவோ இதுவோவென ஐயமுறுதல். (உ-ம்.) "தாதளவிவண்டுதடுமாறுந்தாமரைகொல் - மாதர்விழியுலவும்வாண்முகங்கொல்" என்றுற்போல்வருவது. (விசாக. அணியி. ௧௦.) [ இதனைத் தண்டியாசிரியர் ஐயவுவமையணி என்பர்.]

ஐயவதிசயம்— ஓர் அலங்காரம். ( தண்டி. பொருளணி. ௫௪.)

ஐயவி—1. கடுக்காய். (மலையகராதி.) 2. கடுகு. (பிங்கல. ௧எ௬௦.) 3. சீந்தில். (இராசவைத்.) 4. துலாமரம்; இது: கதவிற்குக்காவலாகப்புறவாயிலேதூக்கப்படும் என்பர். அப்புக்கட்டு என்பாருமுளர். (பதிற்றுப்பத்து.) 5. வெண்சிறுகடுகு. (புறப்பொருள்வெ.)

ஐயவித்துலாம்— நெருக்குமரம். ( சிந்தா. நாமகள். எ௬.)

ஐயவிலக்கு— ஓர் அலங்காரம்; அஃது: ஐயுற்றதனைவிலக்குதல். (தண்டி.பொருளணி.௪௪.)

ஐயவினா— ஐயமறுத்தற்பொருட்டுக்கேட்கும் வினா. "குற்றியோமகனோ அங்கேதோன்றுகின்ற உருவெனவினாவுதல்போன்றது" ( நன். பொதுவி. ௬௪. உரை.)

ஐயவும்மை—சந்தேக உம்மை; இல், இன், ஆல், ஆயின் என்னும் விகுதிகளுள் ஒன்றை இறுதியாக உடைய வினையெச்சத்தை அணைந்து ஐயப்பொருளிலே வரும் உம் என்னுமிடைச்சொல். "பத்தாயினும் எட்டாயினுங்கொடு" என்பதிற்போல. (நன். இடையிய. ௬. உரை.)

ஐயவுவமை— உவமாலங்காரத்துள் ஒருவகை; அஃது: உவமையையும் பொருளையும் ஐயுற்றுரைப்பது. "தாதளவிவண்டுதடுமாறுந்தாமரைகொல் - மாதர்விழியுலவுவாண்முகங்கொல் - யாதென்-திருபாற்கவர்வுற்றிடையூசலாடி-யொருபடாதென்னுளம்" என்பதிற்போல.(தண்டி. ௬௦. உரை.)

ஐயவோ—இரக்கக்குறிப்பு. (சிந்தா.)

ஐயள்—வியத்தற்குரியள். (ஐங்குறு.)

ஐயன்— 1. அரசன். 2. அரிகரபுத்திரன். (உ-ம்.) "ஐயனும் - போயினன் றன்புவாநத்தரசினில்" (கந்தபு. மகாசாத்த. ரு௬.) 3. அருகன். 4. அழகுடையவன். 5. உபாத்தியாயன். 6. உயர்ந்தோன். (உ-ம்.) "சுருதிமுடிமீதிருந்த வையனே" (தாயு. ஆநந்தமானபரம். அ.) 7. கடவுள். (உ-ம்.) "ஐயனேயுனையன்றியொரு தெய்வங்-கையினுற்றெருழவுங்கருதேன்கண்டாய்" (தாயு. பொன்னைமாதரை. ௪ரு.) (சூ. நிகண். கக: யகரவெ. ரு.) 8. குரு. 9. சிவன். (உ-ம்.) "அம்பிகையோடுமையனணிமணிவீதி சார்ந்தான்" (சூத. முத்தி. கூ: ௬௬.) 10. தந்தை. (உ-ம்.) "கையனுமைக்கலந்தொழுகுஞ்செயல்-ஐயன்முன்குறிப்பாற்கண்டு" (திருவிளை. மாபாத. கூ.) 11. மூத்தோன், தமயன். (8, 11, பிங்கல. ௬உ௬அ)

ஐயனார்—அரிகரபுத்திரன்.

ஐயா— 1. ஓர் விளிப்பெயர். 2. ஓரிரக்கக் குறிப்புச்சொல். (உ-ம்.) "என்னையாவகன்றனையே" (சிந்தா. நனகமாலை. உ௪௬.)

ஐயாயிரம்— ஓர் எண்.

ஐயாறு—1. ஒரு சிவஸ்தலம். (தேவார.திருவையாறு. ௬. திருநாவு.) 2. முப்பது. எண்சுவடி.)

ஐயாநநம்—சிங்கம். (இராசவைத்.)

ஐயிதழ்— ஒரு துத்திப்பூண்டு.

ஐயிதழ்த்துத்தி— ஒரு துத்திப்பூண்டு.

ஐயிருவட்டம்— வியப்பையுங்கருமையையுமுடையபரிசை. (உ-ம்.) "வீரர்-கையொடுவானிடைசெல்வகணிப்பி-லையிருவட்டம்" (கந்தபு சூரபன். வதை. கஉ௬.) "இருவகை-யையிருவட்டமொடெஃகுவலந்திரிப்ப" (திருமுரு. கககக.)

ஐயுணர்வு— 1. ஐயவுணர்பு. (இறை. எ.) 2. புலன்கள் வேறுபாட்டான் ஐந்தாகிய உணர்வு. (உ-ம்.) "ஐயுணர்வெய்தியக்கண்ணும்பயமின்றே - மெய்யுணர்வில்லாதவர்க்கு" (வள். ௩ரு௪.)

ஐயுறல் — ஐயுறுதல். (உ-ம்.) "ஐயுறுதல்" பார்.

ஐயுறவு—சந்தேகம். (இராமா. சடாயு.ருரு)

ஐயுறுத்தல்—ஐயமுறுத்தல்.

ஐயுறுதல்—ஐயப்படல். (உ-ம்.) "ஐயுற்-றெண்ணமுஞ்செயலும்வேறாய்" (பாரத. நிரைமீட்சி. கஉஎ.)

ஐயெனெ— 1. நல்லதென்று. (உ-ம்.) "ஐயெனவிவனும்" (பாரத. கீசகன்வதை. ருக.) 2. விரைய. (சிந்தா.)

ஐயேனல்— விரைவின்குறிப்பு. (பிங்கல. உககக௬.)

ஐயே—குறவர் விளிக்குறிப்பு. (உ-ம்.) "ஐயோனானுங்கொன்றவனல்லேன்" (திருவிளை. பழியஞ்சு. உ௪.)

ஐயை— 1. காளி. (பிங்கல. ௬உ௬க.) 2. தலைவி. (பிங்கல. ௬உ௬௬.) 3. தவப்பெண். (சூ. நிகண். கக. யகரவெ. க௦) 4. தாய். (உ-ம்.) "ஐயையுரையினையொய்யென்விரைவொடுகைகொளா" (பாரத. வேத்திரகீய. ௪௬.) 5. துர்க்கை.(உ-ம்.) "உன்னருங்கயிலைநாயகனுமையையொருபகனிவியென்றுரைப்ப - அன்னவடனதுகாளிமங்களிப்பவங்கதிலையைவந்தெழலும்" (கந்தபு. நகரப். எஉ.) 6. பார்ப்பதி. 7. மகள். (6, 7. சூ. நிகண். கக: யகரவெ. க௦.)

ஐயையோ—, ஐயோ— 1. அதிசயவிரக்கச்சொல். 2. இரக்கச்சொல். (உ-ம்.) "ஐயோ - வின்றைச்கிருந்தாரை நாளைக்கிருப்பரென்றெண்ணவோதிடமில்லையே" (தாயு. சச்சிதா. ரு.)

ஐயோகன்—நுண்ணியன். (உ-ம்.) "அணுத்தருந்தன்மையிலையோன்காண்க" (திருவாசக. திருவண்ட. ௪ரு.)

ஐராணி—1. இந்திராணி. 2. பார்ப்பதி. (1, 2. சூ. நிகண். கக: மகரவெ. க௪.)

ஐராவணம்—1. அயிராவதயானை. நாமலிங்காநுசாசனத்திற்காண்க. 2. இரண்டாயிரங்கொம்புடையயானை. "அயிராவணம்" பார். 3. ஒருமரம். 4. கோவிந்தராசனது பட்டத்து யானை. (சிந்தா. மண். உரு.) [ஜீவகன் யானைகளுள் ஒன்று.] 5. பிருதிவிலிங்கத்தின்வண்ணம். [ரா - பூமி. வணம் - வண்ணம். ஐரா; ரா என்பதன் தத்திதம்.] "அயிராவணம்" பார்.

ஐராவதப்பாகன்—இந்திரன்.

ஐராவதம்—1. இந்திரன்யானை. 2. ஒரு நாகராசன். 3. தோடை, குளஞ்சிமரம். 4. மின்னல். [ऐरावत.]

ஐராவதி— 1. ஐராவதயானையின் பெண்யானை. 2. ஒருநதி. 3. மின்னல். [ऐरावती]

ஐரிணம்— ஓர் உப்பு; இஃது இரிணசம்பந்தமாயுள்ளது. [இரிணம் - உவர்த்தரை,] (சூ. நிகண். ரு: உக.)

ஐரேயம்— ஒருவகைக்கள்; இஃது அன்னத்திலிருந்துண்டாவது. "சப்தகல்பத்துருமம்" பார்.

ஐலபிலன்— குபேரன். "சப்தகல்பத்துருமம்" பார்.

ஐவகைக்குற்றம்—அவிச்சை, அகங்காரம், அவா, விருப்பு, வெறுப்பு, (வள். கூஅ.) [இவற்றை வடநூலார் பஞ்சக்கிலேசமென்பார்.]

ஐவகைத்தொழில்— இலைகிள்ளல், எண்ணல், எழுதல், மலர்தொடுத்தல், யாழ்வாசித்தல். (சூ. நிகண். கஉ: சரு.)

ஐவகைச்சயனம்— அன்னத்தூவி, இலவின்பஞ்சு, செம்பஞ்சு, மயிற்றூவி, வெண்பஞ்சு, (சூ. நிகண். கஉ: சா.) [பிங்கலநிகண்டில் சில வேறுபடக்கூறுவர்.]

ஐவகைச்சிறுபொழுது— மாலை, யாமம், வைகறை, காலை, நாண்பகல் என்னும் ஐந்துவகையான சிறு பொழுது. (உ-ம்.) "மாலையாமம் வைகறையெற்படு- காலைவெங்கதிர்காயுநண்பகலெனக் - கைவகைச்சிறுபொழுதைவகைத்தாகும்" (அகப்பொ. அகத்திணை. கஉ.)

ஐவகைச்சுற்றம்— ஆயுள்வேதர், நட்பாளர், நிமித்தம்பார்ப்பவர், படைத்தொழிலோர், பார்ப்பார். இவர் அரசர்க்கு ஐவகைச்சுற்றமென்பர். (சூ. நிகண். கஉ: கூஎ.)

ஐவகைத்தற்கிழமை— (இலக்கணம்) தன்னொடு ஒற்றுமையுடையபொருளின் ஐவகைச் சம்பந்தங்கள்; அவை: பண்புத்தற்கிழமை, உறுப்புத்தற்கிழமை, ஒன்றன் கூட்டத்தற் கிழமை, பலவினீட்டத்தற்கிழமை, ஒன்றுவிகாரப் பட்டுமற்றொன்றாயதற்கிழமை என்பன. (நன். பெயரி. சகூ. உரை. இராமானுஜ.)

ஐவகைத்தாயர்— ஊட்டுந்தாய், கைத்தாய், செவிலித்தாய்,பாராட்டுந்தாய், முலைத்தாய்.(சூ. நிகண். கஉ:சச.) [பிங்கலநிகண்டில் பாராட்டுந் தாயைவிடுத்து ஈன்றதாய் என்பர்.]

ஐவகைநாதம்— ஐந்துவகைச்சத்தக்கருவி; அவை: கஞ்சம், கண்டம், தோல், நரம்பு என்பன. (சூ. நிகண். கஉ: சகூ.)

ஐவகைப்பண்டம்— நிலம், களம், காலேயம், மெய்ப்பொருள், மெய்ப்பண்ட மென்னும் ஐவகைப்பண்டங்கள். (வீரசோ. பொருட். உக. உரை.)

ஐவகைப்பந்தம்— மாயாபந்தம், கன்மபந்தம், மலபந்தம், சுத்தமாயாபந்தம், திரோதசத்திபந்தம் என்னும் ஐவகைப்பந்தங்கள்; அவற்றுள் மாயாபந்தமாவது கலைமுதற் பிருதிவியீறானதத்துவங்களும் புவனங்களும் புவனப்பொருள்களுமாயிருப்பது. கன்மபந்தமாவது சோதிட்டோமம் பிரமகத்தி முதலியவற்றா லுண்டாவதாய், அபூர்வமென்னும்பெயருடைய வாதனையாய்ப், புரியட்டகத்துள் புத்திதத்துவத்தைப் பற்றிச் சுகதுக்க மோகவடிவாயிருப்பது. மலபந்தமாவது ஆன்மாக்களுடைய ஞானக்கிரியைகளை மறைப்பதாய், ஆன்மாக்கள்தோறும் வெவ்வேறாய், தத்தங்கால வரையில் நீங்கும் அநேக சத்திகளை உடைத்தாய், நித்தமாய், வியாபகமாய்ச்சடமாயிருப்பது. சுத்தமாயாபந்தமாவதுவித்தை வித்தியேசுரர் முதலியோர் சரீரங்களுக்குக் காரணமாயும் சகலர்போகம்புசித்தற்குக்கருவியாகிய சூக்குமை பைசந்தி மத்திமை வைகரி என்னும் வாக்குகளுக்கு ஏதுவாயுமிருப்பது. திரோதசத்திபந்தமாவது மாயை கன்மம் ஆணவம் வைந்தவம் என்னும் நால்வகைப் பாசத்தினுடைய அநாதித்தன்மை நிகழ்வதற்கு ஏதுவாயிருக்கின்ற சிவசத்தியேபாசமென்று உபசரித்துக் கூறப்படுவது. (சி. பிர-கை. அ.)

ஐவகைமயிர்முடி—ஐவகைக்கூந்தல்; அது: குழல், கொண்டை, சுருள், பனிச்சை, முடி. "ஐம்பால்" பார்.

ஐவகைமன்று—ஐந்துவகையான சபைகள்; திருவாலங்காட்டிலே இரத்தினசபையும், தில்லையிலே கனகசபையும், மதுரையிலே இரசிதசபையும், திருநெல்வேலியிலே தாமிரசபையும், திருக்குற்றாலத்திலே சித்திரசபையும், சிவன் திருவிளையாடல்புரிந்த பஞ்சசபைகள் என்பர். (உ-ம்.)"ஐவகை-மன்றுதொழுதடியவள்ளால்" (கந்தபு. கடவுள்வாழ். கசு.)

ஐவகைமெய்பவத்தை—குறுகுறுப்பு, கொட்டாவி, நட்டுவிழுதல், நெட்டை, மூச்சிடு. (சூ. நிகண். கஉ: சரு.)

ஐவகையயுதசித்தம்—ஐந்துவகையான சமவாயசம்பந்தங்கள்; அவை: அவயவ அவயவிகள், குணகுணிகள், வினைவினைகள், சாதிவியத்திகள், விசேடநித்தியதிரவியங்கள் என்பன. (த. நி. போ. கூகசு.)

ஐவகையாகம்—ஐந்துவகையான மகங்கள்; அவை: (1) கன்மயாகம், தவயாகம், செபயாகம், (மந்திரயாகம்,) தியானயாகம், (பாவனை) ஞானயாகம் என்பன. அது, "கருமமென்று தவமென்று கற்பாற்பயின்மந்திரமென்று- பரிவால் வருபாவனையென்று பரமஞானமகமென்று-தெரியுமகமோரைந்தினையும்" என்னும். (சிவதரு ஐவகையாக. க-ஞ்செய்யுளாற் பெறப்படும். (2) தேவயாகம், பிரமயாகம், பூதயாகம், மானுடயாகம், பிதிர்யாகம் என்பன. (கூர்மபு. உ: கக. உரை.)

ஐவகையுணவு—கடித்தல், நக்கல், பருகல், மெல்லல், விழுங்கல், என்னும் ஐந்துவகையான போசகம், (பிங்கல. கூகூகூ.)

ஐவகையுரு—ஐந்துவகையான வடிவம்; சிவசாதாக்கியம், அமூர்த்திசாதாக்கியம், கார்த்திருசாதாக்கியம், கர்மசாதாக்கியம் என்னும் பஞ்ச

சாதாக்கியங்களும் சிவனுடைய ஐவகை உருவென்பர். (உ-ம்.) "மாலயனுண ராவள்ளலை வகையுருவிஞென்றை ஆகமவிதியாலுய்த்து" (கந்தபு. வள். உ௬௦.)

ஐவகையுலோகம்— "ஐம்பொன்" பார்.

ஐவகைவினை—பஞ்சபாதகம். (உ-ம்.) "ஐவகைவினையுமந்நிலேநாசமாம்" (சேதுபு. கவிதீர்த்த. உ.)

ஐவண்ணம்— மருதோன்றிமரம். (உ-ம்.) "அவிர்பொன்செம்பஞ்சி ஐவண்ணமெனு" (திருவிளை. மாணிக்கம். ௪௦.)

ஐவண்ணமணி — சௌகந்திகப்பதுமராகமணி. (திருவிளை. மாணிக்கம். ௪௦.)

ஐவணம்—மருதோன்றி.

ஐவணி— 1. மருதோன்றி. 2. மருதோன்றிப்பூ. (மலையகராதி.)

ஐவர்— 1. ஞானேந்திரியங்களைந்தையும் உயர்திணைப்பாலாராகக் காட்டிவரும் ஒரு குறிப்புமொழி. (உ-ம்.) "ஐவரொடுங்கூடாமலந்தரங்கசேவைதந்த - தெய்வவறிவேசிவமே பராபரமே" (தாயு. பராபரக். உ௫உ.) 3. பஞ்சபாண்டவர்களையுணர்த்தும் ஒருகுறிப்புமொழி.(உ-ம்) "அந்தணன்சொன்னவேந்த ரைவரிலறனெல்வந்த-மைந்தன்மற்றிவனே"(பாரத. நச்சுப்பொய்கை. ௯அ.)

ஐவலி—அமரகண்டம், குமரகண்டம், பிரமகண்டம், காக்கை, ருயல் என்னுமிவை.(தைல. தைலவ. எ௫.)

ஐவளம் — ஐந்துவகை வளங்கள்; அவை: கறி, கோட்டம், குங்குமம், காரகில், தக்கோலம் என்பன. (தணிகைப். நந்தி. எஎ.)

ஐவனம்—மலைநெல். (உ-ம்.) "ஐவனவெண்ணெலொடரிகொள்புனீடி" (மதுரைக். உஅஅ.)

ஐவாய்மான்— சிங்கம். (உ-ம்.) "கரிமருப்பைவாய்மான்கை கற்புடைமடவார்கண்டம்" (திருவிளை. மாணிக்கம். ௫௪.) [மிருகங்களுக்கெல்லாமரசத்தன்மைவாய்ந்த மிருகம் என்றபடி.]

ஐவிரல்— அத்தநாள். (சூ. நிகண். க: எஉ.)

ஐவிரலி—ஐவேலிக்கொடி.

ஐவினை— தொடை, விலக்கு, செலவு, சேமம், தவறறுத்து வினைசெய்தல் எனப்படும் ஐந்துதொழில்கள்; அதனை வடநூலார் பஞ்சகிருத்தியம் என்பர். (உ-ம்.) "பொருசரஞ்சலாகை வெய்யபுகன்றனர்துரக்குமாறும்- வருகணைவிலக்குமாறும் வளரமர்நீந்துமாறுங் - கருவியுட்கரக்குமாறுங்கணைபுறங்காணுமாறும் - விரியமற்றவர்க்குக்காட்ட வீற்றிருந்தவருங்கற்றூர்" என்பதனாற்பெறப்படும். (சிந்தா. கனக. கஉ௦.)

ஐவேசு— 1. சொத்திருப்பு. 2. வழிவகை. [அராபிப்பதம்.]

ஐவேலி—ஐவிரற்கொவ்வை.(மலையகராதி.)

ஐளன்—புரூரவச்சக்கரவர்த்தி. [இளையென்பவளின் மகன் என்றபடி.]

ஐளேயன்— 1. செவ்வாயென்னுங் கிரகம்; இளைமகனென்றபடி. [இடு - பூமி.] 2. புரூரவச்சக்கரவர்த்தி. இளை-புரூரவன்ருய்.[இளையென்பவளின் மகன் என்றபடி.]

## ஒ

ஒ— [தமிழ்ப்பாஷையின் வர்ணமாலையின் உயிர்வருக்கத்திலே வரும் பத்தாமெழுத்து; அஃது: அங்காப்பாகிய அகரக்கூறும் இதழ்குவிவாகிய உகரக்கூறும் சந்தித்துப்பிறந்த ஒரு குறில்.] (நன். எழுத்திய. உ௬. விருத்.)

1. ஒ என்னும் ஒரு தெரிநிலைவினைப்பகுதி. (உ-ம்.) "ஒக்கும்"

ஒஃகல்—ஒதுங்கல். (உ-ம்.) "எஃகெறிசெருமுகத்தேற்றதெவ்வருக்-கொஃகினன்" (இராமா. பள்ளியடை. ௧௦௬.)

ஒக்க—1. ஒருமிக்க. (உ-ம்.) "உருநீடுயிர்பொருளுமொக்கத்-தருதியென" (தாயு. உடல்பொய்யுறவு. எஎ.) 2. கூட. (உ-ம்.) "உடல்-குறைந்தபோதுதானுமித்தொடொக்கவேகுறைந்திடும்" (சி. சி. பரபக். நிகண்டவாதிமறுதலை. ௬.) 3. சமமாக. (உ-ம்.) "பக்கமும்பிடருமொக்கமுட்டிகள்படப்பட" (பாரத. வேத்திரகீய. ௫௬.) 4. பொருந்த.

ஒக்கடித்தல்—தாளமடித்தல். (உ-ம்.) "காலமானக்கிரியைமுதலியபிறழாதுகூத்துக்கேற்க ஒக்கடித்தல்" (கல்லா. உஉ. உரை.) [ஒக்க - இசைய. அடித்தல்.]

ஒக்கம்—1. அசமதாகம், ஓமம். (மலையகராதி.) 2. ஊர். (பிங்கல. ௬எ௫.) 3. எழுச்சி. 4. கரை. 5. பட்டினம்.

ஒக்கல்— 1. இடைப்பக்கம். (உ-ம்.) "மாண்டவளைத்தன்வெண்ணிடையிட்டான்மகவொக்கற்-ருண்டவனைத்தான்" (திருவிளை. பழியஞ்சு. க௫.) 2. ஒத்தல். 3. சமமாயிருத்தல். 4. சுற்றம். (உ-ம்.) "ஒக்கருய்தந்தைமகவெனும்" (தாயு. எனக். உ௬.) 5. தகுதியாயிருத்தல். 6. பொருந்தல். 7. மூட்டுதல்.

ஒக்கலிடுதல்—ஒக்கலித்தல் பார்.

ஒக்கலித்தல் — 1. இனத்தைப்பாலித்தல். 2. ஒப்புரவாதல். 3. சுற்றமுறையைநடப்பித்தல்.

ஒக்கலை—மருங்கின்பக்கம். (சூ. நிகண். ௨: ௮௮.)

ஒக்குதல்—1. ஒத்திருக்கை. 2. கொப்பளித்தல். 3. பிற்படவிடல்.

ஒக்கோலை— } அம்பர், [இது கடல்படு
ஒக்கோலை— } திரவியமைந்தினொன்று.] (சூ.நிகண். ௧௨: ௬௬.) [இதனைச்சிந்தாமணியில் ஓர்க்கோலை என்பர்.]

ஒகரம்—1. ஒ என்னும் எழுத்து. 2. மயில். (சூ. நிகண். ௯: ௫௦.)

ஒச்சந்தம்—1. உச்சந்தம். 2. குறைந்திருக்கை.

ஒச்சம்—1. ஒச்சை. 2. கவனித்தல். 3. பழுது. 4. வெட்கம்.

ஒச்சித்தல்—வெட்கப்படுதல்.

ஒச்சியம்—1. நிந்தை. 2. பரிகாசம். 3. வெட்கம்.

ஒச்சை—உற்றுக்கேட்டல்.

ஒசித்தல்— 1. அசைத்தல். 2. முறித்தல். (உ-ம்.) "குருந்தொசித்தமாயவன்" (காரிகை. செய்யு. ௯. உரை.) 3. முறுக்கல்.

ஒசிதம்—கற்றுழை. (மலையகராதி.)

ஒசிதல்— 1. அசைதல், துவளல். (உ-ம்.) "விசும்பினின்றவன்றன்றேரிணையொசிதரத்தாவி" (பாரத. சடாயு. ௧௪.) 2. ஒடிதல், முரிதல். (சூ. நிகண். ௯: ௭௧) 3. ஒதுங்குதல். (சிலப்.) 4. சாய்தல். (உ-ம்.) "ஒல்கல்" பார். 5. முறுகல். (ஞானமிர்தம்.)

ஒசிப்பு—முரிக்கை.

ஒசிய—வருந்த. (சிந்தா.)

ஒசிவு— 1. அசைவு. 2. முரிவு. 3. வருத்தம். (உ-ம்.) "உருகுநுண்ணிடையொசியப்புல்லினன்" (சிந்தா. குணமாலை. ௧௩௯.)

ஒஞ்சட்டை—ஒடுக்கமானது. [வழக்.]

ஒஞ்சரித்தல்—1. ஒருச்சாய்தல். 2. ஒருபக்கமாகப்போதல்.

ஒஞ்சி—1. தனம். 2. மார்பு. 3. முலைக்காம்பு.

ஒஞ்சித்தல்— 1. மானத்தையடக்கல். 2. வெட்கப்படுதல்.

ஒஞ்சுதல்—ஒஞ்சித்தல், பார்.

ஒட்ட—1. அடியோடே. [வழக்.] 2. அணுக. 3. இறுக. 4. கிட்ட. 5. சேர.

ஒட்டகப்பாரை—ஒருமீன்.

ஒட்டகம்—1. இரைமீட்டுமெல்லும் இனத்தைச்சேர்ந்த ஒரு மிருகம்; அஃது ஆசிய ஆப்பிரிக்க தேசங்களிலே சுமையேற்றுதற்காகப் பாவிக்கப்படும். (உ-ம்.) "மோட்டினொட்டகமுந்தியகந்தரநீட்டிவாங்குவ" (கந்தபு. அக்கினிமுகாசுரன்வதை. ௨௮.) 2. முத்திப்பி. (உ-ம்.) "ஒட்டகத்துக்குயிர்தொலைக்குஞ்சூலேபோல்" (ஞானவா. வைராக். ௫௪.) [ஒட்டியிருக்கிற உடலையுடையதென்றபடி.]

ஒட்டகை—ஒட்டகம். (உ-ம்.) "கோட்டுவெங்கரியொட்டகையிடபங்கள். (திருநெல். விட்டுணு. ௨௫.)

ஒட்டங்கி—கன்னார்கருவிகளுள் ஒன்று.

ஒட்டச்சி—பூவழலை.

ஒட்டத்தி— 1. ஒட்டுத்துத்திப்பூண்டு. (மலையகராதி.) 2. மண்வேலைசெய்யும் ஒரு ஜாதியான்மனைவி.

ஒட்டம்— 1. இகலாட்டம். 2. உடன்படிக்கை. 3. ஒரு தேயம். 4. ஓடு. 5. சபதம். 6. பந்தயப்பொருள். (உ-ம்.) "கவறுநாமாடற்கொட்டம்யாதெனவுரைத்தனன்" (நைடத. அரசாட்சி. ௫.)

ஒட்டர்— 1. ஒட்டம் என்னும் தேசத்திலே வசிப்போர். (உ-ம்.) "தமிழர்குண்டலரொட்டர் மாளவர்" (பாரத. முதற்போர். ௩௫.) 2. மண்வேலைசெய்வோர். (உ-ம்.) "உயர்ந்தமட்டுங்குவிவைக்குமொட்டர்க்கும்" (தனிப்பா. ௩௩௧.)

ஒட்டல்—ஒட்டுதல்.

ஒட்டலர்—பகைவர். (உ-ம்.) "ஒட்டலராகிச்சூழ்ந்தாங்குடன்று" (கந்தபு. வள். ௧௮௨.)

ஒட்டலன்— 1. பகைவன். 2. மெலிந்தவன்.

ஒட்டறை—புகைப்பற்று. (உ-ம்.) "அசிதளம்" பார். (தைல. தைலவ. ௯.)

ஒட்டன்— 1. ஒட்டம் என்னுந்தேசத்திலே வசிப்போன். 2. மண்வேலைசெய்வோன்.

ஒட்டாக்கற்றி—தன் கன்றை அணுகவிடாத பசு. [ஒட்டா. கன்று. இ.]

ஒட்டாம்பாரை—ஒட்டகப்பாரை மீன்.

ஒட்டார்—பகைவர். (உ-ம்.) "ஒட்டாரையொட்டிக்கொளல்" (வள். ௬௭௧.)

ஒட்டாரக்காரன் — முரட்டுத்தனஞ்செய்வோன்.

ஒட்டாரம்—1. முரட்டுத்தனம். 2. சலஞ்சாதிப்பு.

ஒட்டாவுநவம்—கருங்கற்சிலை.

ஒட்டி— 1. அறுதியிட்டு = துணிந்து. (சிந்தா.) 2. ஒட்டொட்டிப்பூண்டு. 3. ஒருமீன். 4. வஞ்சினங்கூறி. (சிந்தா. கனக. ௧௩௯.)

ஒட்டிக்கிரட்டி— ஒன்றுக்கிரண்டுபங்கு.

ஒட்டிக்குவான்—ஒருபுல்.

ஒட்டியக்காளி—ஒட்டியவித்தைக்காரர்பூசிக்குந்தேவி.

ஒட்டியம்— 1. அட்டகருமநூல்களுள் ஒன்று. 2. ஒரு பாஷை. 3. ஒருவகைமாந்திரிகவித்தை. 4. தேயம் ஐம்பத்தாறினொன்று.

ஒட்டியர்— ஒட்டியதேசத்திலே வசிக்கின்றவர்கள். (உ-ம்.) "மகதரொட்டியர்" (பாரத. இராசசூய. கஙங.)

ஒட்டியாணம்—1. ஓர் ஆபரணம்; அது மாதர் இடையிலே அணிவது. (உ-ம்.) "உடைதாரம்" பார். 2. யோகபட்டை; அது: யோகிகள் முழங்கால்களை உயர்த்தியிருக்கும்போது, முழங்கால்களையும் இடையையுஞ்சேரக்கட்டியிருக்குங் கச்சு.

ஒட்டியாதேவி—ஒட்டியக்காளி.

ஒட்டினர்—1. சேர்ந்தவர். 2. மித்திரர்.

ஒட்டிசகற்பம்— (சைநம்)தீர்த்தகரராற்கற்பிக்கப்பட்ட ஒரு கற்பம். (த. நி. போ. உஎஎ.)

ஒட்டு—1. அருகு. 2. இகலாட்டம். 3. இணைக்கப்பட்டது. 4. ஒட்டென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 5. ஒளிப்பிடம். 6. ஒன்றிப்பு. 7. கதிர்கொய்ததாள். 8. சபதம். 9. சிறு கடுக்கன். 10. தொகைநிலைத்தொடர். (உ-ம்.) "ஆவொட்டு" (வீரசோ. கிரியாபாத. கச.) 11. தோல். (உ-ம்.) "ஒட்டுவிட்டுலறிய" (கல்லாட. அ.) 12. படைவகுப்பு. (உ-ம்.) "ஒட்டுடன்றிரள்வானரர்தமை" (சேதுபு. இராமன். கஎ.) 13. பதிவிருக்கை. 14. பற்றிக்கதுவப்பட்டது. (உ-ம்.) "ஒட்டுதல்" பார். 15. பிறிதுமொழிதல் என்னும் ஓர் அலங்காரம்; அது: கவிதன்னுற்கருதப்பட்டபொருளை மறைத்து அதனை வெளிப்படுத்தற்குரிய பிறிதொன்றனைச்சொல்லுதல். (உ-ம்.) "கருதியபொருடொகுத்ததுபுலப்படுத்தற் - கொத்ததொன்றுரைப்பினஃதொட்டெனமொழிப" (தண்டி. ருக.) 16. புட்படுக்குமொருகருவி. 17. புல்லூரி. (மலையகராதி.) 18. பொருந்துதல். (உ-ம்.) "வந்தியைப்புலனைச்சார்ந்துமருவுதலதுவாந்தீட்டு-முந்தியபறவலாலே மொழிவதை யறிதலொட்டு" (சி.சி.பர. சௌத்திராந்-மதம். கச. உரை.) 19. வாய்ப்பு.

ஒட்டுக்கடுக்கன்—சிறுகடுக்கன். [காதோடு ஒட்டிப்பிடித்தாற்போல இருத்தலால் வந்த பெயர்.]

ஒட்டுக்கண்—கண்ணிலேயுள்ள ஒரு நோய்.

ஒட்டுக்காய்ச்சல்— 1. உடம்போடொத்த காய்ச்சல். 2. தொத்துக்காய்ச்சல்.

ஒட்டுக்கிரகணிரோகம்— ஒருவகைக் கிரகணிரோகம்; இது: வயிற்றுநோய், இளைப்பு, மார்பு முதலியவற்றில் வலித்தல், மலச்சிக்கல் முதலிய குணங்களையுண்டாக்கும். (சீவரட். அசு)

ஒட்டுக்கு—ஒருமிக்க.

ஒட்டுக்குஞ்சு—சிறுகுஞ்சு.

ஒட்டுக்குடி— பிறரை அண்டியிருக்குங்குடி.

ஒட்டுக்கும்—முழுதும்.

ஒட்டுக்கேட்டல்— பிறர் பேசுதலை ஒளித்துநின்றுகேட்டல்.

ஒட்டுக்கொடுத்தல்—இடங்கொடுத்தல்.

ஒட்டுச்செடி— ஒட்டொட்டிச்செடி. (மலையகராதி.)

ஒட்டுடந்தை—ஒட்டுரிமை.

ஒட்டுத்துத்தி— ஓர் துத்திப்பூண்டு.

ஒட்டுதல்– 1. அங்கீகரித்தல், உடன்படுதல். (உ-ம்.) "முதற்கட்டணிக்குறில் நேரசையென்றொட்டப்படாது" (யாப். காரிகை. ஒழிபி. உ.) 2. அடைகொடுத்தல். 3. இடங்கொடுத்தல். 4. ஒளித்துநிற்றல். 5. சார்தல். (உ-ம்.) "ஒட்டியுறுவாருறவு" (மூதுரை. கஎ.) 6. சுருங்கல். 7. சேர்தல். (உ-ம்.) "உலகத்தோடொட்டவொழுகல்" (வள். கசo.) 8. நட்பாக்கிக்கொள்ளுதல். (உ-ம்.) "ஒட்டாரையொட்டிக்கொளல். (வள். சுஎக.) 9. நெருங்கல். (உ-ம்.) "நெருநல்வாய்வந் - தொட்டித்தன்கையைப்பற்றி" (திருவிளை. அங்கம். உகூ.) 10. பந்தயம் வைத்தல். (உ-ம்.) "மாதுதன்னையொட்டி நீ-லகவருங்கவற்றினின்னுமெறிகவென்று" (பாரத. சூது. கஅஉ.) 11. பற்றிக்கதுவுதல். (உ-ம்.) "ஒட்டாகவொட்டியுங்காப்பொன்னின் மாப்பொனுபாயமதாத் - தெட்டாகிறான்" (தனிப்பா. பலபட்டைச்சொக்கநாத. ருக.) 12. பொறுத்துதல். (உ-ம்.) "குறங்குறங்குடன்பகைப்பக்கரங்கரத்தொடுநனிபிணங்க-வொட்டியே" (பாரத. சடாசுரன்வதை. கஅ.) 13. பொருந்துதல். (உ-ம்.) "ஈரடியெண்சீ-ரொட்டுவழியறிந்து" (தொல். சொல். சoசு.) 14. போர்செய்தல். (உ-ம்.) "எயில்வளைந்-தொட்டிஞரைமலையுமாப்பொறிக்கணங்களொத்தவே" (திருவிளை. பன்றிக்குட்டிக்கு முலைகொடுத்த. கஎ.) 15. வற்றல்.

ஒட்டுநர்—மித்திரர்.

ஒட்டுப்பார்த்தல்— உளவுபார்த்தல்.

ஒட்டுப்புதவம்— இரட்டைக்கதவு. (சிலப்.)

ஒட்டுப்புல்—ஒருபுல்.

ஒட்டுரிமை—அற்பசம்பந்தம்.

ஒட்டுவிடுதல்—பொருத்தநீங்கல்.

ஒட்டுவித்தை— இந்திரசாலத்திலொருவித்தை.

ஒட்டுவியாதி—தொற்றுநோய்.

ஒட்டுவைத்தல்— 1. ஒளிவைத்தல். 2. கண்ணிவைத்தல்.

ஒட்டை— 1. ஒட்டகம். 2. ஒட்டைச்சாண். அது பத்துவிரற்கிடை.

ஒட்டைக்கன்று—ஒட்டகக்கன்று.
ஒட்டோட்டி—ஒட்டங்காய்ப்புல்.
ஒட்டோலக்கம்—ஒட்டோலகம்.
ஒட்டோலகம்— 1. ஆடம்பரம். 2. சனத்திரள். 3. வெற்றி.
ஒட்பம்— 1. அழகு. (உ-ம்.) "ஒட்பமொடிவ்வகையுரைப்ப" (கந்தபு. மோன. சுகூ.) 2.அறிவுடைமை. (உ-ம்.) "கல்லாதானொட்பங்கழிய நன்றாயினும்" (வள். சா0ச.) 3. நன்மை. 4.மேன்மை.
ஒடி—ஒடியென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 2. காட்டெப்புதல். (உ-ம்.) "ஒடியெறிந்துவாரொழுக்கி" (பெரியபு. கண்ணப்ப. எரு.)
ஒடிகை—முரிகை.
ஒடிசில்—கவண். (பிங்கல. கரு அக.)
ஒடிந்தல்— 1. ஒளிசெய்தல். 2. பற்றறுத்தல். 3. முரித்தல். (உ-ம்.) "தோள்களைத்தமது கைகளா-லொடித்தனராமென" (கந்தபு. திக்குவிசய. கக0.)
ஒடிதல்—1. அழிதல். (உ-ம்.) "மாமகமொடிய" (கந்தபு. கடவுள்வாழ்த்து. கக.) 2. முரிதல். (உ-ம்.) "விலாவொடிந்துதடமார்பொடிந்து" (பாரத. வேத்திரகீய. சுக.)
ஒடிபு—ஒடிதல். (உ-ம்.) "ஒடிபொன்றுதுறையன்றிமுடிபொன்றுதுறையில்லை" (சேதுபு.பாலோ. க0.) [பு-ஒருதொழிற்பெயர்விகுதி.]
ஒடியல்—1. ஒடிபட்டது. 2. தோல்களைந்துகிழித்து அந்தங்கள் ஒடித்து உலர்த்தி எடுக்கப்பட்ட பனங்கிழங்குப்பிளவு. [திசைச்சொல்.] 3. முரியல்.
ஒடியெறிதல்—காட்டெப்புதல்களைவெட்டுதல். (உ-ம்.) "மறத்துறைவேட்டமாக்கள்வல்லைபோயொடியெறிந்து - புறத்துவார்வலைகள்போக்கி" (திருவிளை. பன்றிக்குட்டிக்குமுலைகொடுத்த. கங.)
ஒடிவு—1. குறைவு. (உ-ம்.) "ஒடிவில்பொற்கிழிநல்கியவள்ளலை" (திருவிளை. இரசவா. க0.) 2. கெடுகை. (உ-ம்.) "ஒடிவிலியமாதிசம்பத்தியுள்ளோனுகி" (சூத. வானப்பிரத்த. ரு.) 3. தவிர்தல். (சிந்தா.) 4. முரிவு.
ஒடு— 1. எண்ணுப்பொருளைத்தரும் ஓரிடச்சொல். (நன். இடையியல். க0.) 2. ஒருமரம். (உ-ம்.) "குங்குமநமையொடுவொண்" (காஞ்சிபு. சனற்குமார. சு.) 3. ஓர் இசைநிறை இடைச்சொல். (உ-ம்.) "விதைக்குறுவட்டிற்போதொடு பொதுள" (நன். இடையியல். கஎ. உரை.) 4. மூதுபுண். (சிந்தா.) 5. மூன்றும்வேற்றுமையிலேவரும் ஓர் உருபு; அஃது: உடனிகழ்ச்சிப்பொருளிலேவருவது. (உ-ம்.) "கையொடுகொலும்"
ஒடுக்கட்டி—கழலைக்கட்டி.
ஒடுக்கம்—1. அடக்கம். 2. அமைவு. 3. ஒதுங்கியிருக்கின்றவிடம். (பத்துப்பா.) 4. ஒன்றிலொன்றடங்குகை. (உ-ம்.) "சாக்கிராதியுயிரினிற்பிறந்தொடுக்க-முற்றதும்போல" (சி. சி. க: கக.) 5. சுருக்கம். (உ-ம்.) "இடைபோந்தொடுக்கமுறலால்" (தாயு. சித்தர்கண. கூ.) 6. நெருக்கமானவிடம். 7. பதுங்கல். 8. முடிவு, அந்தம். (சிலப்.) 9. வழிபாடு. (1-7. சூ. நிகண். க: கசு.)
ஒடுக்கு— 1. அடக்கம். 2. இடுக்கு. 3. ஒடுக்கென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 4. ஒடுங்கினது.
ஒடுக்குதல்— 1. அடக்குதல். (உ-ம்.) "வெவ்வேறுவிபாகமாகித்- தோற்றுதலடைவொடுக்கி" (சி. சி. க: உஉ.) 2. இறையிறுத்தல். 3. உடம்பையொடுக்கல். 4. குறைத்தல். 5. சுருங்கப்பண்ணுதல். 6. செறித்தல். (உ-ம்.) "பண்டாரத்தி-லடைவுறவொடுக்கி" (பெரியபு.குங்கிலிய. கரு.) 7. பூதங்களை லயிக்கச்செய்தல். 8. முடித்தல். 9. வருத்தல்.
ஒடுக்குவாய்— 1. ஒடுங்கினவாய். 2. கோணல்வாய்.
ஒடுங்கல்—1. அடங்கல். (உ-ம்.) "எத்தனைவிதங்கடான்கற்கினுங்கேட்கினுமெனிதையமுமொடுங்கவில்லை" (தாயு. ஆநந்தமா. கூ.) 2. அமைதல். 3. ஒதுங்கல். (உ-ம்.) "மேலையோன்- புடைதனிலொடுங்கியேபோற்றநின்றவே" (கந்தபு. தாரகன்வதை. கசுச.) 4. ஒளிமழுங்கல். 5. கீழ்ப்படிதல். 6. சுருங்கல், குவிதல். (உ-ம்.) "விரிந்தமநமொடுங்கும் வேளையின்" (தாயு. பராபர. கஙகூ.) 7. செறிதல். 8. சேர்தல். 9. சோர்தல். 10. பதுங்கல். 11. முடிதல், ஈறுதல். (உ-ம்.) "உயிரவையொடுங்கிப்பின்னுமுதிப்பதென்னரன்பாலென்னில்" (சி. சி. க: கூஉ.)
ஒடுங்கி—ஆமை. [உறுப்படக்கி என்னும் பெயர்நோக்கிக்கொள்க.]
ஒடுவங்காய்—ஒருமரத்துக்காய்.
ஒடுவடக்கி—1. குப்பைமேனி. 2. திராய்மரம்.
ஒடுவை—ஒருவகை மரம். (மணிமே.)
ஒடை—ஒருமரம். [உடை என்பதன் மரூஉப்போலும்.
ஒண்டன்—நரி. (சூ. நிகண். ரு: உச.)
ஒண்டி— ஊற்றாணி. (பிங்கல. கசுஙகூ.)

ஒண்ணல்— 1. கூடுதல். 2. பொருந்தல்.

ஒண்ணாதது—1. ஒவ்வாதது. 2. பொருந்தாதது.

ஒண்ணாப்பு—இயலாப்பு.

ஒண்ணாமை—1. இயலாமை. 2. கூடாமை. 3. தகாமை. 4. பொருந்தாமை.

ஒண்ணுதல்—1. இயலுதல், கூடுதல். (உ-ம்.) "ஒண்ணுமோவவர்தஞ்செயலோதவே" (கந்தபு. பாயிர. கரு.) 2. ஒள்ளியநெற்றி. (உ-ம்.) "ஒண்ணுதற்கோஒவுடைந்ததே" (வள். கoஅஅ.) 3. பெண். (உ-ம்.) "உலகருள்காரணவொண்ணுதலோடும்" (கந்தபு. தெய்வயானை. உருஉ.) [ஒள்ளியநெற்றியினை உடையாளெனப்பொருடந்து நிற்றலின் இது பண்புத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை.]

ஒண்மை— 1. அழகு. 2. ஒழுங்கு. 3. ஒளி, விளக்கம். (சிந்தா.) 4. அறிவு. (உ-ம்.) "ஒண்மை யுடையம்யாமென்னுஞ் செருக்கு" (வள். அசச.) 5. நன்மை. 6. மிகுதி. (உ-ம்.) "உருவு மிளமையுமொண்பொருளும்" (நாலடி. பழவி. உ.) (1, 2, 5. சூ. நிகண். கக. னகரவெ. கஎ.)

ஒத்தது—உலகத்துக்கொத்தநடை. (உ-ம்.) "ஒத்ததறிவானுயிர்வாழ்வான்" (வள். உகச.)

ஒத்தல்—1. ஒன்றேடொன்றுபடத்தாக்கல். (உ-ம்.) "புயசயிலமொன்றெடொன்-றொத்தினர்" (பாரத. வேத்திரகீய. கச.) 2. சமமாயிருத்தல். (உ-ம்.) "ஆறொத்திலங்குசமயங்களாறுக்கும்" (தாயு. பாயப்புலி. கக.) 3. தகுதியாதல். (உ-ம்.) "மரபிற்கொத்ததொன்மையின்றுணிவிற்றன்றால்" (இராமா. சூர்ப்பநகை. சகூ.) 4. தாளம்போடல். (உ-ம்.) "இசையவொத்தி" (பெரியபு. திருஞான. கoஅ.) 5. பொருந்தல். (உ-ம்.) "வாஞொத்தகாட்சிநல்கும்"(தாயு.பாயப்புலி. உ.) (சிந்தா.) 6. விலகல். (வழக்.)

ஒத்தறுத்தல்—தாளம்போடல்; அது: பண்ணிற்கமைந்த தாளமாத்திரையின் காலத்தை வரையறுத்தல். (உ-ம்.) "கைநிறைந்தவொத்தறுத்துக்கலைப்பதிகங்" (பெரியபு. திருஞா. கoஉ.)

ஒத்தன்—ஒருத்தன். (கலி. கசச. இடைக்குறை.)

ஒத்தாங்கு— ஒப்ப. (உ-ம்.) "ஒத்தாங்கொறுப்பதுவேந்து" (வள். ருசுக.) [இதனை ஒருசொல் என்றார் உரையில்.]

ஒத்தாசை—உதவி. (உ-ம்.) "தம்முன்றம்பி-யொத்தாசைபேசினுமாவதுண்டோ" (பட்டினத்தடிகள். திருத்தில்லை. கரு.)

ஒத்திக்கை— 1. உதவி. 2. ஒத்திருக்கை.

ஒத்திசை— 1. ஒத்த இசை. 2. விட்டிசையாதிருக்கும்பண்.

ஒத்திடுதல்— 1. ஒத்துப்பிடித்தல். 2. ஒப்பிடல். 3. தாளம்போடுதல்.

ஒத்திருத்தல்—இசைந்திருத்தல்.

ஒத்து— 1. அந்தரக்கொட்டு. (சிலப்.) 2. ஒத்திருக்கை. 3. ஒத்திசை. 4. ஒத்தென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும். 5. ஓர் ஊதுகுழல்.

ஒத்துதல்— 1. ஒற்றுதல். 2. தாளம்போடுதல். 3. பலாற்காரமாக முட்டுதல், இடித்தல். (உ-ம்.) "இரண்டுதேருமுட்டவிட்டுமொய்ம்பினொலொத்துவார்"(பாரத. பன்னிர.போர். கூஉ.) 4. விலகுதல்.

ஒத்துப்பிடித்தல்—ஒத்தூதல்.

ஒதி—ஒதியமரம். (உ-ம்.) "ஒதியிலைவேலை வளர்ப்பாய்" (பழமலை. ச.)

ஒதுக்கம்— 1. ஒதுங்கியிருக்கை. 2. ஒழுக்கம். 3. தீட்டு. 4. நடை. (சிலப்.) 5. பதுங்குகை. 6. பின்னிடுகை. 7. மறைப்பிடம். 8 மறைவு. (4, 8. சூ. நிகண். கக. தகரவெ. உஉ.)

ஒதுக்கல்— 1. ஒதுங்கச்செய்தல். (உ-ம்.) "பொருநைதென்றல்-வரைதருமாரமெல்லாமருங்குறவொதுக்குமாதோ" (சேதுபு. திருநாட். உஎ.) 2. கணக்குவழக்குத்தீர்த்தல்.

ஒதுக்கிடம்— 1. ஒதுங்குமிடம், துச்சில். (பிங்கல. சுகஅ.) (உ-ம்.) "ஊறுதண்சாரலொதுக்கிடந்தந்து" (வாண. கக.) 2. புகலிடம். 3. மறைவிடம்.

ஒதுக்கு— 1. ஒதுக்கென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 2. சார்பு. 3. மறைவு.

ஒதுக்குக்குடி—இரவற்குடி.

ஒதுக்குதல்—1. ஒதுங்கச்செய்தல். 2. சேர்த்தல். 3. தீர்த்தல் 4. புடவைமுதலியவையொதுக்குதல்.

ஒதுங்கல்— 1. தோல்வியடைதல். (உ-ம்.) "செந்தளிரொதுங்கமிளிர்சீறடியொதுங்கி" (கந்தபு. தெய்வயானை. உகூஉ.) 2. நடத்தல். (பதிற்றுப்.) 3. பதுங்கல், ஒடுங்குதல். (பிங்கல. உஉ0கூ.) 4. விலகல். (உ-ம்.) "உறுசுடர்வெள்ளியுமொதுங்கிப்போயினான்" (இராமா. வேள்விப். கூகு. ஏட்டுப்பிரதி.)

ஒதுங்குபுறம்—புறம்போக்கு.

ஒப்ப—ஓர் உவமையுருபு. (உ-ம்.)"மதியொப்ப" (நன். பொதுவி. கசு.)

ஒப்பக்கதிர் — கம்மக்கருவிகளுள் ஒன்று; அது. பணியை ஒப்பனைசெய்யுங்கருவி.

ஒப்பங்கொடுத்தல்— 1. அழுத்துதல். 2. கட்டளைகொடுத்தல்.

ஒப்படியிருக்கை -(இசைநூல்)"திரிதரவில்லனவாகிய ஒன்பதுவகை யிருப்புகளுள் ஒன்று. (உ-ம்.) "பதுமுகமுற்கட்டிதமேயொப்படி-யிருக்கைசம்புடமயமுகஞ்சுவத்திகங்-தனிப்புடமண்டிலமேகபாத- முளப்படவொன்பதுமாகுங்- திரிதரவில்லாவிருக்கையென்ப" (சிலப். வேனிற்காதை. உரு. உரை.)

ஒப்படை—
ஒப்படைத்தல்— } ஒப்புக்கொடுத்தல்.

ஒப்பணி—உவமையணி.

ஒப்பந்தம்— 1. இசைவு. 2. உடன்படிக்கை. 3. ஒப்பரவு. 4. சமன்.

ஒப்பம்— 1. ஒப்பு. 2. ஒற்றுமை. (உ-ம்.) "ஒப்பமாயிரண்டற்றொன்றாயுணர்வொளிநிறை வாய்நிற்கும்" (கைவல். தத்துவவிளக்க. உஅ.) 3. கையெழுத்து. 4. சமம். 5. துலக்கம். 6. நிலமுதலியவற்றினொப்பம். 7. மினுக்குதல்.

ஒப்பமிடல்— 1. கையெழுத்துப்போடுதல். 2. சமனுக்கல். 3. துலக்கல்; அது உலோகங்களையொப்பனையாக்கல்.

ஒப்பரவு— 1. ஒப்பம். 2. ஒழுங்கு. 3. சமாதானம்.

ஒப்பல் — 1. அங்கீகரித்தல். 2. உடன்படல். (உ-ம்.) "அப்பெரும்புனலாறவன்பின்செல-வொப்பலோடும்" (கந்தபு. அகத்திய. உரு.)

ஒப்பளவை—உவமானப்பிரமாணம்; அஃது: "அளவைகாண்டல் கருதலுரையபாவம் பொருளொப்பாறென்பர்" என்னும், சி. சி. அளவை க-லே ஒப்பு என்பதனுற்பெறப்படும்.

ஒப்பனை — 1. அலங்கரித்தல், அலங்காரம். (உ-ம்.) "செல்வமாநகர்த்தெருவினையொப்பனை செய்தார்" (பாரத. கிருட்டிண. எக.) 2. உவமை. 3. சமம். 4. செவ்வை. 5. திருட்டாந்தம். 6. பாவனை.

ஒப்பாரி—ஒப்பு. (உ-ம்.) "அவரன்ன-வொப்பாரியாங்கண்டதில்" (வள். க0எக.)

ஒப்பிடுதல்—"ஒப்பிடல்" பார்.

ஒப்பித்தல்—1. அலங்கரித்தல். (உ-ம்.) "தந்தைதனைமுன்போற்றகவுபெறவொப்பித்து" (கந்தபு. அசுரேந்திர. கஅ.) 2. உருபித்தல். 3. உவமித்தல். (உ-ம்.) "மற்றக்கிரகங்களோடும் ஒப்பித்தார்" (பாரத. இராசசூய. அஎ. உரை.) 4. ஒத்துக்கொள்ளச்செய்தல். 5. ஒத்துவிடுதல். 7. ஒப்புவித்தல். 8. சம்மதித்தல்.

ஒப்பில்போலி— ஒப்புமையைக்காட்டவராதபோலென்னுஞ்சொல். (உ-ம்.) "நெருப்பழற்சேர்ந்தக்காலெய்போல்வதூஉம்" (நாலடி. தீவினையச்ச. ௭.) (சிந்தா.)

ஒப்பின்முடிந்தல்— மூப்பத்திரண்டு தந்திர உத்திகளுள் ஒன்று; அஃது: ஒன்றற்குச்சொல்லும் இலக்கணம் அதனேடு இயைபில்லாத வேறொன்றற்கும் ஒத்துவருமாயின் அதற்கும் அதுவே இலக்கணமாக உடன்முடிவு செய்தல். (நன். பொதுப்பா. கரு.)

ஒப்பு—1. அழகு. (பிங்கல. கஃசஃக.) 2. இசைவு. 3 உவமானப்பிரமாணம். "அளவைகாண்டல் கருதலுரை யபாவம்பொருளொப்பாறென்பர்" என்பதனுற்பெறப்படும். (சி. சி. அளவை. க.) 4. உவமானம், சமம். (உ-ம்.) "உழுதுண்டு வாழ்வதற்கொப்பில்லைகண்டீர்" (நல்வழி. கஉ.) [இவ்வொப்பு பிறப்புமுதலியவற்றில் வருமென்ருர்.] (தொல். பொரு. மெய். உரு. காண்க.) 5. ஏற்புடையது. (உ-ம்.) "ஐயர்க்கெனதுசிறு சொல்லுமொப்பாகும்" (கந்தபு. வள். உகூச.) 6. ஒத்தல், இணக்கம். (உ-ம்.) "ஒருவுகவொப்பிலார்நட்பு" (வள். அ00.) 7. ஒப்பென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 8. தகுதி. (புறநா.) 9. பொருந்தல்.

ஒப்புதல்— ஒத்தல்.

ஒப்புப்பொருள்— புகழ்பொருளினும் தன்னினுமிருக்கிறசாதாரணதருமத்தினுல் உவமானமாகிறபொருள் (உ-ம்.) "காக்கையிற்கரிதுகளம்பழம்"என்பதிற்போல. (நன்.பெயரியல்.சஉ.)

ஒப்புமை—உவமானம்.

ஒப்புமைக்கூட்டம்—ஒப்புமைக்கூட்டவணி. அஃது. ஒத்தகுணமுடைய பலபொருள்களைக் கூட்டிச்சொல்லுதல். (உ-ம்.) "கருதியகுணத்தின்மிகுபொருளுடன்வைத்- தொருபொருளுரைப்பதொப்புமைக்கூட்டம்" "புகழினும்பழிப்பினும்புலப்படுமதுவே" (தண்டி. எஅ, எக.) "வெஃகிக்குடியலைக்கும் வேந்தனு-முள்பொருள்சொல்லாச்சலமொழிமாந்தரு- மில்லிருந்தெல்லைகடப்பாளுமிம்மூவர்-வல்லேமழையருக்குங்கோள்" என்பது ஒப்புமைக்கூட்டம். (திரிகடு கம். ௫0.)

ஒப்புமைக்கூட்டவுவமை— ஓர் அலங்காரம்; [இதனை வடநூலார் துல்லியோகோபமை என்பர். துல்லியம் - ஒப்பு. யோகம் - கூட்டம்.] (தண்டி. பொருளணி. ௬க.)

ஒப்புரவறிதல்— உலகநடையினை அறிந்து செய்தல். (வள். அதிகாரம். உஉ.)

ஒப்புரவு—1. உலகநடை, கடப்பாடு.(உ-ம்.) "ஒப்புரவொழுகு" (ஆத்திசூடி.) 2. ஒற்றுமை. 3. கொடை, தருமமாகக்கொடுத்தல். (உ-ம்.)

"உடம்பிற்கே ஒப்புரவுசெய்தொழுகாது" (நாலடி. அறன்வலியுறுத்தல். எ.) 4. சமத்தன்மை, சருச்சரையின்மை. 5. சமாதானம்.

ஒப்புவமை—ஒத்துக்கொள்ளத்தக்க உவமை. (உ-ம்.) "செப்புகேவலநீதியொப்புவமையல்லவே" (தாயு. சச்சிதா. எ.)

ஒப்புவித்தல்— ஒப்புக்கொடுத்தல். (உ-ம்.) "அகண்டாகாரவனனைபால்வினையேனையொப்புவித்து" (தாயு. சச்சிதா. கூ.)

ஒபு—விசுவதேவதைகளுள் ஒன்று. (வி-ணி. உசகூ.)

ஓம்மல்—ஓமல்.

ஒமை—மாமரம். (மலையகராதி.)

ஒய்—யானைப்பாகர் வையுமொழி. (சிலப்.)

ஒய்தல்—1. செலுத்துதல். (பதிற்றுப்பத்.) 2. தவிர்தல். 3. போக்குதல். (சிலப்.)

ஒய்யல்—1. செலுத்துதல். (பிங்கலங்கண்டில் ஒயல் என்பர். உஉ0ச.) 2. நீக்கல்.

ஒய்யாரம்—ஆடம்பரம்.

ஒய்யெனு—கடுக. (உ-ம்.) "நங்-கையதுகேளாவளவையொய்யென" (பொருந. கஙஉ (சிந்தா.)

ஒய்யெனல்— மந்தக்குறிப்பு. (சூ. நிகண். கூ: சப.)

ஒயில்—ஒய்யாரம். (உ-ம்.) "நிலவெறியாங்கக்குலுக்கிலே யெழில்வளைபுனைசெங்கைக்கிலுக்கிலேகன நிதிபதியந்தப்பிலுக்கிலே செயுமொயிலாலே" (திருப்பு. கஙஉ.)

ஒயில்மரம்—ஆக்கினைக்கெனநிறுத்தியமரம்.

ஒரா—தப்பாத. (புறநா.)

ஒராஅ—நீங்கி. (பதிற்றுப்பத்.)

ஒராங்கு—ஒன்றுபோல. (பதிற்றுப்பத்.)

ஒராய்—நீங்கி; இஃது: ஒருவி என்பது திரிந்து வந்தவிகாரமொழி. (உ-ம்.) "சிலாதனுர்புதல்வ-னொராய்முதற்கடைகுறுகி" (கந்தபு. கணங்கள்செல். உக.)

ஒரார்—1. ஒழியாது; இஃது: ஒரு என்னும் பகுதியினின்று பிறந்த ஒரார் என்னும் வினைமுற்றுத்திரிந்துவந்தவினையெச்சம். (உ-ம்.) "கடிந்தகடிந்தொரார்செய்தார்க்கு" (வள். கூஙஅ.) 2. ஒழியார் எனப்பொருள்படும்ஒருவினைமுற்று.

ஒரால்—ஒருவுதல், நீங்குதல். (உ-ம்.) "இன்மையுளின்மைவிருந்தொரால்" (வள். கஙகூ.) [ஒரு- பகுதி. ஆல்-விகுதி.]

ஒரித்தல்—ஒற்றுமையாயிருத்தல்.

ஒரீஇ—நீங்கி. (உ-ம்.) "பிழைத்தோரீஇ" (நாலடி. செல்வநிலையா. கூ.)

ஒரு—ஆடு. (உ-ம்.) "மாவிலொருவாய்த்தீமைசெய்வில்வலன்" (திருநெல். வில்வலன்வாதாவி. க.)

ஒருக்கணித்தல்— } ஒரு பக்கமாகச் சாய்தல்.
ஒருக்கணிப்பு— }

ஒருக்கம்—1. ஒருதன்மை. 2. ஒற்றுமை. 3. மனவொடுக்கம்.

ஒருக்கல்— 1. ஒற்றுமைசெய்தல். (உ-ம்.) "உருத்திரசன்மரெனவுரைத்துவானி-லொருக்கவோவென்றதோர்சொல்" (வள். பாயிர. க.) 2. கெடுத்தல். (உ-ம்.) "வருந்தியுமொருக்கவேண்டும்" (ஞானவா. வீமபாசதிடர். கசு.) 3. சிதறவிடாமற்பற்றிப்பிடித்தல். (உ-ம்.) "இவர்மனமொருக்குமிளமங்கையரில்லைக" (தணிகைப். திருநகர. எஎ.)

ஒருக்கால்—ஒருமுறை. (உ-ம்.) "ஒருக்காலழிதேரன்றியு" (பாரத. பதின்மூன்றாம்போர். கக்க.)

ஒருக்கு— 1. ஒருக்கென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும். 2. ஒருங்கு. (சிந்தா.)

ஒருக்குதல்— "ஒருக்கல்"பார்.

ஒருக்குற—சேர. (சிந்தா.)

ஒருகட்பதுவாய்ப்பறை— பதலை. (பிங்கல. கஙஉ0.)

ஒருகட்பறை—மொந்தை. (பிங்கல. கஙகஙு.)

ஒருகலை—ஒரு கூறு. (உ-ம்.) "தனதுசத்தியி-லொருகலைதன்னுடனுதிக்கவுன்னியே"(கந்தபு. பாயிர. ச0.)

ஒருகால்—1. ஒருமுறை. (உ-ம்.) "ஒருகாலட்டாங்கமுடன்" (திருவிளை. மூர்த்தி. கூ0.) 2. ஒற்றைக்கால்.

ஒருகாலிலி—1. குபேரன். 2. சனி.

ஒருகுடி—தாயத்தார், உதரப்பிரிவினர். (பிங்கல. க0கூ.)

ஒருகூட்டு— 1. ஒரு சேர்மானம். 2. ஒன்றிப்பு.

ஒருங்கல்— 1. அடங்கல், ஒருவழிப்படல். (உ-ம்.) "தன்னிலைமைகாட்டாதொருங்கவிருவினையினல்" (தாயு. எங்குநிறை. கக.) 2. ஒதுங்கல். (உ-ம்.) "ஒருங்கிய"பார். 3. ஒன்றாகச்சேர்தல். (உ-ம்.) "மருத்துமிரும்புனற்கிறைவருமாகிச்-செவ்விதினெருங்கி" (கந்தபு. சூரனமசிரு. கக.) 4. கேடு.

ஒருங்கிய—ஒதுங்கும்படியான. (உ-ம்.) "கார்மயி-லொருங்கியசாயல்" (திருவாச. போற்றித்திரு. கூ0.)

ஒருங்கு— 1. அடக்கம். 2. அழிவு. 3. எல்லாம். (உ-ம்.) "ஒருங்குணர்குரவனுமுயர்வான்மீகனை" (ஞானவா. வைராக். உ0.) 4. ஒருங்கெ

ன்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும், வினைத்தொகையும். 5. ஒருதன்மை. 6. ஒருமிக்க. (உ-ம்.) "உன்னிலையுமென்னிலையுமொருங்கொழிய" (தாயு. ஆசையெனு. அ. உரை.) (ஐங்குறு.)

ஒருங்குடன்றேற்றவேது— ஓர் அலங்காரம்; அது: காரியத்தோடு ஒருங்கேயுடன்றேற்றமுடையவேது. (தண்டி. கூஉ, உரை.)

ஒருங்குதல்—"ஒருங்கல்" பார்.

ஒருங்குபடல்-ஒருசேரத்தோன்றுதல்.(உ-ம்) "உடுக்கணங்க - ணத்தவேலையிலொருங்குபட்டாலென" (கந்தபு. மார்க்கண்டேய. கஉஎ.)

ஒருச்சாய்ந்தல்— ஒருச்சாய்ப்பு— } ஒரு பக்கத்திற் சாயப்பண்ணல்.
ஒருச்சாய்தல்— ஒருச்சாய்வு— } ஒருபுறத்திற் சாய்தல்.

ஒருசாயல்—ஒரேமாதிரி.

ஒருசார்—ஒருபக்கம். (உ-ம்.) "ஒருசார்விடமெனவந்திடும்" (கந்தபு. சூரபன்மன்வதை. சகஉ.)

ஒருசாரார்—1. ஒருபக்கத்தார். 2. சிலர்.

ஒருசிறிது—மிக அற்பமானது. (உ-ம்.) "சுத்தவாதுளமுதலியதந்திரத்தொகுதி - யுய்த்துணர்ந்திடுநீரரேயொருசிறிதுணர்வார்" (கந்தபு. சூரனமைச. கஉக.) [பலவாகப்பகுக்கப்பட்ட சிறுகூறுகளின் ஒன்று என்றபடி.]

ஒருசிறிதும்—அற்பமேனும். (உ-ம்.) "பாலின்வேலை-யிடையொருசிறிதுமின்றி" (கந்தபு. திக்குவிசய. அஉ.)

ஒருசிறை— 1. ஒதுக்கிடம். 2. ஒருபக்கம். (உ-ம்.)"இருவர்நூற்குமொருசிறைதொடங்கி" (நன். பொதுப்பா. அ.) (பொருந.)

ஒருசேர—ஒருமிக்க.

ஒருத்தல்—1.யானை. (உ-ம்.) "ஓய்ந்தபுண்படுமேனியுமாகியோரொருத்தல்- போந்ததோவிவண்புகலுதிர்புகலுதிரென்றான்" (கந்தபு. வள். கஉஅ.) 2 யானை, பன்றி, கரடி, புல்வாய், புலி, மான், கவரி, மரை, கராம், எருமை இவற்றிறாண். (இலக்கணவி. ககசு. உரை.) (சூ. நிகண். ௯: ௯௧.) 3. விலங்கேற்றின்பொது.

ஒருத்தலைப்பரம்—ஒருத்தலைப்பாரம். அஃது: ஒருபக்கத்திற்கொண்டபாரம். (உ-ம்.) "ஒருத்தலைப்பரத்தொருத்தலைப்பங்குவினூர்தி" (இராமா. மந்திர. கூசு.)

ஒருத்தலைப்பாரம்- "ஒருத்தலைப்பரம்"பார்.

ஒருத்தலைவலி—ஒருபுறத்துத்தலைவலி.

ஒருத்தன்—1. ஒப்பற்றவன். (உ-ம்.) "ஒருத்தனேயுன்னையோலமிட்டலறி யுலகெலாந் தேடியுங்காணேன்" (திருவாச. அருட்பத்து. உ.) 2. ஒருவன். (உ-ம்.) "வடமொழியிலே-வல்லானொருத்தன்வரவும்" (தாயு. சித்தர்கண. கo.)

ஒருத்தி—1. ஒரு பெண். (உ-ம்.) "ஒருத்திபொருட்டினிலொண்புனலுய்ப்ப" (கந்தபு. தெய்வயானை. உசசு.) 2. பெண்பாற்பிரபஞ்சம். (உ-ம்.) "ஒருவனோடொருத்தியொன்றென்றுரைத்திடுமுலகமெல்லாம்" (சி. சி. க: க.)

ஒருதரம்—1. ஒருமுறை. 2. ஒருவிதம்.

ஒருதலை— 1. இன்றியமையாமை, ஆவசியகம். (உ-ம்.) "ஒருதலையுரிமைவேண்டியும்" (தொல். பொருளதி. உஉரு.) 2. ஒருபக்கம். (உ-ம்.)"ஒருதலையானின்னாது" (வள். ககக௬௬.) 3. ஓரிடம். (உ-ம்.) "உடையவண்டத்தினுச்சியினொருதலையுய்ப்பேன்" (கந்தபு. அவைபுகு. ககசு.)4. துணிவு. (ஐங்குறு.)5. நியமம். (உ-ம்.) "பிறந்தவப்பொழுதேயினியொருதலையாப்பிறப்பறுத்திடுவெமென்றெணியே" (வை-நீ. உஎ.) 6. யதார்த்தம். (உ-ம்.) "மாநத்தின்கணிகழ்வதனையப்படாது ஒருதலைபாக உணரவல்லானை" (வள். எ0உ. உரை.)

ஒருதலைக்காமம்— ஒருவர்மற்றொருவரைச்சேரவிரும்பி அவர்மனக்கிடக்கையையறியாதுகாமுறுதல். (உ-ம்.)"கைக்கிளையுடையதொருதலைக்காமம்" (அகப்பொருள். அகத்திணை. ௯.)

ஒருதலைதுணிதல்—முப்பத்திரண்டு தந்திரவுத்திகளுள் ஒன்று; அஃது: இருவராலே மாறுபட்ட இரண்டனுள் ஒன்றைத் துணிந்தெடுத்துக்கொள்ளுதல். (நன். பொதுப்பா. கசு.)

ஒருதலையுள்ளுதல் — (அகப்பொருள்) இடைவிடாது ஒருவர் ஒருவரைச்சிந்தித்தல். இது பத்து அவத்தைகளுள் ஒன்று எனப்படும். (உ-ம்.) "வேட்கையொருதலையுள்ளுதன்மெலிதல்" (தொல். பொருளதி. சoo.)

ஒருதலைவழக்கு—ஒருத்தலைநியாயம்.

ஒருதன்மை— 1. ஒருநிலை. 2. ஒரேவிதம். 3. மாறுத்தன்மை.

ஒருதனி— ஒப்பில்லாத தனி. (சிந்தா. நாமகள். உருக. உரை.)

ஒருப்பட— ஒருமிக்க. (உ-ம்.) "ஒருக்கிடவொருப்படநினைவாய்" (ஞானவா. தாசூர. கக.)

ஒருப்படல்— 1. ஒருதன்மையாயிருத்தல். (உ-ம்.) "அஃது இயல்பென்றுசொல்வையாயின் அஃது ஒருப்பட்டிருக்கவேண்டுங்காண்"(சி. சி. உ: நி. மறை.)2. ஒருநினைவாதல். 3. ஒன்றித்தல். 4. சம்மதித்தல். (உ-ம்.) "என்னைநான்கொடுக்க ஒருப்பட்டகலாம்"(தாயு. தந்தைதாய். உ.) 5. துணிதல். (சிந்தா.)

ஒருப்படுத்தல்—ஒருப்படச்செய்தல்.(உ-ம்.)

"உள்ளங்தேற்றியேயொருப்படுத்தினுள்" (கந்தபு. வள். ௩௬௬.)

**ஒருப்படுதல்**—ஒருப்படல்.

**ஒருப்பாடு**—1. உடன்படுகை. 2. சம்மதம். 3. தனித்தொன்றுதல். (உ-ம்.) "உலகெலாமொருப்பாடொன்றி-யீருடன்முயங்குமார்வமின்றியேயிருந்த" (கந்தபு. மேரு. ௧௭.) 4. மனமொன்றுபடுகை. (உ-ம்.) "தன்னுளமொருப்பாடெய்த-நிமலனையுன்னி" (கந்தபு. மேரு. ௬௨.)

**ஒருபால்** — (இலக்கணம்) ஒருமைப்பால். (உ-ம்.) "ஒருபாற்கிளவியெனைப்பாற்கண்ணும்" (தொல். பொருளதி. ௨௨௨.)

**ஒருபாவொருபஃது**—ஒரு பிரபந்தம்; அஃது: அகவல்வெண்பா கலித்துறை என்னுமிவற்றுள் ஒன்றினுல் அந்தாதித்தொடையாகப்பத்துச்செய்யுள்பாடுவது. (உ-ம்.) "அகவல்வெண்பாக்கலித்துறையதுகொண் - டொருபாவொருபஃதுறினப்பெயராம்" (இலக்கணவிள. ௮௨௩.)

**ஒருபான்**— ஒருபஃது. (உ-ம்.) "ஒருபான்சிறுமை" (தொல். பொரு. ௪௬௩.)

**ஒருபிடி**— 1. உறுதி. 2. ஒரேபற்று. 3. கைப்பிடியளவு. (உ-ம்.) "மூடிவிலொரு-பிடிசாம்பலாய்வெந்து"(பட்டினத்தடி. திருத்தில்லை. எ.) 4. பிடிவாதம்.

**ஒருபுடையொப்புமை**—ஏகதேசவுவமம்.

**ஒருபொருட்கிளவி**— ஒருபொருளைக்கருதும் பலசொற்கள். "கிளவி, சொல், மொழியென்னுந் தொடக்கத்தன" (தொல். சொல். ௧. சேனு.)

**ஒருபொருட்டீபகம்** — தீபகவலங்காரத்துளொருவகை; அஃது: ஒருபொருடானே கவிமுற்றுந்தீபகமாகநின்று முடிவது. (உ-ம்.) "வியன்ஞாலஞ்சூழ்திசைகளெல்லாம் விழுங்கு - மயலாத்துணைநீத்தகன்று - ருயிர்பருகும் - விண்கவரும்வேரிப்பொழில்புதைக்குமென்மயில்கள் - கண்கவருமீதெழுந்தகார்" என்பதனுற்பெறப்படும். (தண்டி. ௪௦. உரை.)

**ஒருபொருட்பன்மொழி**— ஒருபொருளைக்குறித்துவரும் பலசொல். "மீமிசை" என்பதிற்போல.

**ஒருபொருள்**—1. ஏகார்த்தம். 2. கடவுள்.

**ஒருபோகு**— ஒத்தாழிசை இரண்டுவகையுளொன்று; அது: கொச்சக ஒருபோகு, அம்போதரங்க ஒருபோகு என இருவகைப்படும். (தொல். பொருளதி. ௪௫௧, ௪௬௦.)

**ஒருமரம்**—அழிஞ்சின்மரம்.

**ஒருமனப்படுதல்**— 1. ஐம்புலனடக்குதல். 2. ஓர் எண்ணமாதல். 3. சம்மதப்படுதல்.

**ஒருமாதிரி**—ஒருவிதம்.

**ஒருமித்தல்**— 1. ஒன்றுபடுதல். 2. சம்மதித்தல். (உ-ம்.) "ஈதலறந்தீவினைவிட்டீட்டல்பொருளெஞ்ஞான்றுங் - காதலிருவர்கருத்தொருமித்-தாதரவுபட்டதேயின்பம்" (ஔவையார். தனிப்பா.)

**ஒருமிப்பு**—ஒன்றிப்பு.

**ஒருமுகம்**—1. ஒருகூட்டம். 2. ஒருபுறம். 3. ஒன்றுனமுகம்.

**ஒருமுகவெழினி**—ஒருவகைத்திரை. (சிலப்.)

**ஒருமை**—1. ஒப்பற்றதன்மை. (உ-ம்.) "உண்மைபிறர்க்கறிவரியவொருமையானும்" (சிவப்பிர. முதற்சூத்திரம். ௬) 2. ஒருதன்மை. 3. ஒருப்பாடு. 4. ஒருபிறப்பு. (உ-ம்.) "ஒருமைக்கட்டான்கற்றகல்வி" (வள். ௬௬௮.) 5. ஒற்றுமை. (சூ. நிகண். அ: ௬௬.) 6. தனிமை. 7. பிளவுபடாதமனம், கவராமனம். (உ-ம்.) "ஒருமைமகளிரேபோல" (வள். ௧௭௪.)

**ஒருமைப்படுத்தல்**—ஒருமைப்படச்செய்தல்.

**ஒருமைப்படுதல்**—1. உடன்படல். 2. ஒற்றுமைப்படுதல்.

**ஒருமைப்பாடு**—ஒன்றிப்பு.

**ஒருமைமகள்**— பதிவிரதை. (உ-ம்.) "ஒருமைமகளிர்" பார்.

**ஒருமைமகளிர்**— கற்புடையமகளிர், கவராமனத்தினை உடையமகளிர். (உ-ம்.) "ஒருமைமகளிரேபோல" (வள். ௧௭௪.)

**ஒருமொழி**— 1. ஒருசொல். 2. ஒருபொருளைத்தரும் ஒருபதம். (உ-ம்.) "ஒருமொழியொருபொருளனவாம்" (நன். பெயரி. ௬.)

**ஒருவந்தம்**— 1. சம்பந்தம். 2. தனித்தல், ஒருதலை. (உ-ம்.) "வெருவந்தசெய்தொழுகும் வெங்கோலனுயி - னொருவந்தமொல்லைகெடும்" (வள். ருகூ௬.) 3. நிலைபேறு. (உ-ம்.) "ஊக்க-மொருவந்தங்கைத்துடையார்"(வள். ருகூ௬.) 4. மன ஒற்றுமை.

**ஒருவயிற்போலியுவமை**—உவமையலங்காரவகையுள் ஒன்று; அஃது: ஒருதொடர்மொழிக்கட்பல உவமைவர அவ்வுவமைகடோறும் உவமைச்சொற்புணராது ஓர் உவமைச்சொற்புணர வருவது. (உ-ம்.) "பலவயிற்போலியொருவயிற்போலி" (தண்டி. ௬௦.)

**ஒருவர்**—ஒராள்; இஃது ஆண்பால், பெண்பால் இரண்டிற்கும்பொதுவாயாவது ஒருபாலுக்குச்சிறப்பாயாவது வரும். (உ-ம்.) "ஒருவரென்பதுயரிருபாற்றுய்ப் - பன்மைவினைகொளும் பாங்கிற்றென்ப" (நன். பெயரி. ௬௨.)

**ஒருவல்**—சவம். (ஞானமிர்தம்.)

**ஒருவழிச்சேறல்**— வேற்றுப்பொருள்வைப்பென்னும் அலங்காரத்துள் ஒருவகை; அஃது:

ஒருதிறமுரைத்தால் அத்திறம் எல்லாவற்றின் மேலும் முற்றச்செல்லாது சிலவற்றின்மேலே சென்றொழிவது. (தண்டி. சஎ.)

**ஒருவழித்தணத்தல்**— வரைவுகூறியபாங்கி யோடு வரைதற்குடன்பட்டதலைவன் தன்னூர்க்கு ஒருவழிப் போய்வருகிறேன் என்று போதல். (உ-ம்.) "செலவறிவுறுத்தல் செலவுடன் படாமை - செலவுடன்படுத்தல்செலவுடன்படுதல்- சென்றுழிக்கலங்கரேற்றியாற்றுவித்தல் - வந்துழி நொந்துரை யெனவெழுவகைத்தே - யொன்றக் கூறியவொருவழித்தணத்தல்" (அகப்பொ. களவியல். ருக.)

**ஒருவழிப்படுதல்**— 1. ஒன்றுபடல். 2 மனம் ஒருநெறிப்படுதல்.

**ஒருவழிமேவல்**—"ஒரோவழிமேவல்" பார்.

**ஒருவன்**—1. ஆண்பாலாருள்ளே ஒன்றென்னுமெண்ணுக்கு இலக்கியமானவன். (உ-ம்.) "தருபவனொருவன்வேண்டும்"(சி. சி. க. க.) 2. ஆண்பாற்பிரபஞ்சம்.(உ-ம்.)"ஒருவனேடொருத்தியொன்றென்றுரைத்திடு முலகமெல்லாம்" (சி. சி. க. க.) 3. ஒப்பற்றவன், ஒப்பாரின்மையிற்றனித்துளான். (உ-ம்.) "என்னுள்ளத்தொருவன்" (தாயு. பாயப்புலி. கூஉ.) "மல்லினுக்கொருவன்யானே" (பாரத. மற்போர். க.)

**ஒருவினைச்சிலேடை**—சிலேடை அலங்காரவகையுள் ஒன்று; அஃது: ஒருவினையான்வருவது. "அம்பொற்பணிமுகத்துத் திண்கோட்டணிநாகம் - வம்புற்றவோடைமலர்ந்திலங்க- வும்பர்- நவம்புரியும்வானதியுநாண்மதியுநண்ணத்- தவம்புரிவார்க்கின்பந்தரும்" (தண்டி. எசு. உரை.)

**ஒருவு**—1. ஆடு. 2. ஒருவுதல். (உ-ம்.) "ஒருவில்வாழ்க்கை" (திருவானை.கெசா. ௬.) 3. ஒருவென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும்,வினைத்தொகையும். [1. உ-சாரியை.]

**ஒருவுதல்**—நீங்கல். (உ-ம்.) "பொய்யதென்பதையொருவிமெய்யுணருதல்போதம்" (தாயு. ஆசை. உக.)

**ஒரூஉ**—ஒரூஉத்தொடை.

**ஒரூஉத்தொடை**—செய்யுட்டொடைகளுள் ஒன்று; அது: நாற்சீரடியிலே முதற்சீரும் இறுதிச்சீரும் மோனை முதலியவரத்தொடுப்பது. (உ-ம்.) "சீரிரண்டிடைவிடத்தொடுப்பினொரூஉவும்" (இலக்கணவி. எஉ௬.)

**ஒரூஉமுரண்** — (யாப்பு.) தொடைவகையுளொன்று; அது: நாற்சீரடியிலே முதலாஞ்சீரும் நாலாஞ்சீரும் மொழியினாலேனும் பொருளினாலேனும் முரண்வரத்தொடுப்பது. "குவிந்துசுணங்கரும்பியகொங்கைவிரிந்து" என்பதனாற்பெறப்படும். (இலக்கணவி. எஉஉ, எஉ௬. உரை.)

**ஒரூஉமோனை**— ஒரூஉத்தொடையினொருவகை; அது: முதற் சீர்க்கண்ணும் நான்காஞ்சீர்க்கண்ணும் மோனைவரத்தொடுப்பது. "அம்பொற்கொடிஞ்சிநெடுந்தேரகற்றி" என்பதனாற் பெறப்படும். (இலக்கணவி. எஉஉ, எஉ௬. உரை.)

**ஒரூஉவண்ணம்**—(யாப்பு) வண்ணங்களுள் ஒருவகை; அஃது: ஆற்றொழுக்குப்போலச்சொல்லியபொருள் பிறிதொன்றனை அவாவாமையறுத்துச்செய்வது. (உ-ம்.) "ஒரூஉவண்ணமொரீஇத்தொடுக்கும்" (தொல். பொருளதி. ருசுO.) [ஒரீஇத்தொடுத்தல் என்பது எல்லாத்தொடையும் ஒரீஇச்செந்தொடையாற்றொடுத்தல் என்பாருமுளர் என்றும், செந்தொடையுந் தொடையாகலான் அற்றன்று என்றும் நச்சினார்க்கினியர் கூறுவர்.]

**ஒரூஉவளபெடை**-(யாப்பு) ஒரூஉத்தொடையினொருவகை; அது: முதற்சீர்க்கண்ணும் நான்காஞ்சீர்க்கண்ணும் அளபெடைவரத்தொடுப்பது. "காஅய்ச்செந்நெற்கறித்துப்போஒய்" என்பதனாற்பெறப்படும். (இலக்கணவி. எஉஉ, எஉ௬. உரை.)

**ஒரூஉவியைபு**— (யாப்பு) ஒரூஉத்தொடையினொருவகை; அது: முதலாஞ்சீரும் நான்காஞ்சீரும் இயைபுவரத்தொடுப்பது. "நிழலேயினியதனயலதுகடலே" என்பதனாற்பெறப்படும்" (இலக்கணவி. எஉஉ, எஉ௬. உரை.)

**ஒரூஉவெதுகை** --(யாப்பு) ஒரூஉத்தொடையின் ஒருவகை; அது: முதற்சீர்க்கண்ணும் நான்காஞ்சீர்க்கண்ணும் எதுகைவரத்தொடுப்பது. "மின்னவிரொளிவடந்தாங்கிமன்னிய" என்பதனாற்பெறப்படும். (இலக்கணவி. எஉஉ,எஉ௬, உரை.)

**ஒரோவழிமேவல்**— ஒருபொருளை முற்றிலும் வியாபியாது ஓர் இடத்தைமாத்திரம் தழுவுதல்; இஃது: ஏழாம் வேற்றுமை இடப்பொருளின் ஒருவகை. "கையின்கண்விரல், பாயின்கண் இருந்தான்" என்பதிற்போல. (உ-ம்.) "விடையமொரோவழிமேவுதலெங்கும் வியாபகமென் - றடையவிம்மூன்றுவகையான் விரியுமதிகரணம்" (பி. வி. கரு.)

**ஒரோவொன்று**—ஒவ்வொன்று. (உ-ம்.)"இவ்விருவகை இயல்பும் வேறுவேறு கூறும் ஆகம

ங்களின் பொருளொருமையுணரமாட்டாது ஒரோவொன்றேபற்றி" (சிவஞா. சிற. பாயிர. உரை.) "இவர்க்கு நண்ணுவதொரோவொன்றுமே" (சி. சி. க: சுo.)

ஒல்— 1. ஒல்லென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 2. ஓரநுகரணவோசை. (உ-ம்.) "ஒல்லொலிக்கதிர்ச்சாலிகள்" (திருவிளை. நகர. அ.)

ஒல்க—1. சாய. (பட்டினப்.) 2. மிருதுவாக. (உ-ம்.) "ஒல்கவெரித்து" (தைல. தைலவ. சுo.)

ஒல்கல்—"ஒல்குதல்" பார்.

ஒல்காமை— தளராமை. (ஐங்குறு.)

ஒல்குதல்—1. எதிர்கொள்ளல். (உ-ம்.) "இட்டவுத்தரிய மெல்லெனிடைசுவல்வருத்தவொல்கி" (சிந்தா. கோவிந்தை. சுச.) 2. ஒதுங்கல். (உ-ம்.) "பொன்னலங்கல்காலசைப்பவொல்கி" (சிந்தா. காந்தருவதத்தை. கoக.) 3. குழைதல். (சிந்தா.) 4. குறைதல், சுருங்கல். (உ-ம்.) "ஒழுக்கத்தினொல்கார்" (வள். கஙகு.) 5. தளர்தல். (உ-ம்.) "ஊழொரானுற்றபினொல்காமை" (வள். சுசுஉ.) 6. நுடங்குதல். (உ-ம்.) "ஓர்வல்லியினொல்கியனநடைவாய்ந்து" (திருக்கோ. க.) (சிறுபா.) 7. மெலிதல். (உ-ம்.) "ஒல்குதேவியைத்தெளித்தொருப்படுத்தி" (கந்தபு. காமதகன. சுக.) 8. வருந்தல். (உ-ம்.) "மூலைசுமந்தொல்கும்புலோமசை" (கூர்மபு. பிரகிரு. க.) 9. வற்றுதல். (உ-ம்.) "கங்கையுமொல்கப்புக்ககடுங்கனற்" (கந்தபு. திருவவ. கo.)

ஒல்லல்—"ஒல்லுதல்" பார்.

ஒல்லாங்கு— பொருந்தும்வழி. (உ-ம்.) "ஒல்லாங்கியாமிரப்பவும்" (கலி. ங.)

ஒல்லாதவர்— பகைவர். (உ-ம்.) "ஒல்லாதவரிற்பொருதேசிலவும்பர்வீழ" (கந்தபு. திருவிளை. சுo.)

ஒல்லாமை—1. இகழ்ச்சி. (சூ. நிகண். அ: சுக.) 2. ஒல்லுதலின் எதிர்மறையாய் இயலாமை முதலியவற்றைக்குறித்துவரும்.

ஒல்லார்— பகைவர். (சூ. நிகண். உ: ருக.)

ஒல்லி—1. ஒடுங்கினது. 2. துடைப்பம். 3. மெலிந்த ஆள். 4. மென்மை.

ஒல்லிமேய்தல்—தேங்காயில் அதன்பருப்பு இடையிடையே குறைந்தும் பழுதடைந்தும் வெறுமையுற்றுமிருப்பது. (வழக்.)

ஒல்லுதல்— 1. அடைதல். 2. இணங்குதல். 3. இயலுதல். (உ-ம்.) "ஒல்லும்வாயெல்லாம்வினைநன்றேயொல்லாக்காற்- செல்லும்வாய்நோக்கிச்செயல்" (வள். சுஎங.) 4. சம்பவித்தல். 5. நிந்தித்தல். 6. நிறைவேற்றல். 7. பொத்துதல். 8. பொருந்தல். (உ-ம்.) "கானத்-தொல்லும்பேரழல்யாவையும்" (கந்தபு. ஆற்று. எ.)

ஒல்லுநர்—மித்திரர். (சூ. நிகண். உ: ருஉ.)

ஒல்லென்—வெளியாக. (சிந்தா.)

ஒல்லென— 1. ஒல்லென்னு மோசைபட. (உ-ம்.) "ஒல்லெனத்-திரைபிறழியவிரும்பௌவத்து" (பொருநரா. கஎஎ.) 2. விரைவாக. (உ-ம்.) "மதுரைமுற்றுமொல்லெனக்களைமினென்றான்" (திருவிளை. நான்மா. ரு.)

ஒல்லெனல்—ஒல்லென்றோசைபடல். (உ-ம்.) "ஒல்லென்றிடநாணொலிசெய்து" (கந்தபு. திருவிளை. சக.) [இஃது அநுகரணவோசை.]

ஒல்லே—விரைவாக. (உ-ம்.) "நங்கையென்னுடுரையாய்நனியொல்லே - யிங்கணென்றடிவீழ்ந்திரந்திட்டாள்" (சிந்தா. குணமா. சஅ.)

ஒல்லை—1. காலவிரைவு. (உ-ம்.) "இறைவனொல்லையினெழுந்துபோய்" (கூர்மபு. அந்தகாசு. சுஉ.) 2. சிறுபொழுது. 3. பழைமை. (உ-ம்.) "ஒல்லையிலிங்கன்கூட்டி" (கந்தபு. வள. உருஉ.) 4. விரைவாக. (உ-ம்.) "ஒல்லைசென்று" (கந்தபு. வரவுகேள்வி. உச.)

ஒல்வது—இயல்வது. (உ-ம்.) "ஒல்வதறிவதறிந்து" (வள். சஎஉ.)

ஒலி— 1. இடி. (சூ. நிகண். கஉ.) 2. ஒலியென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும், வினைத்தொகையும். 3. ஒளி. (ஞானாமிர்தம்.) 4. காற்று. (உ-ம்.) "உருமுக்குரலொலியிற்றுளரொலிவிட்டெறிசெவியிற்று" (திருவிளை. யானையெ. உo.) 5. கொடிவேலி. (மலையகராதி.) 6. கோஷ்டம். (தைல. தைலவ. எஉ.) 7. தழைத்தல். (உ-ம்.) "வாரொலிகூந்தலின்மறைபுக்காலென" (கந்தபு. தெய்வயானை. கஎஎ.) (சிந்தா.) 8. (பிறர்செவிக்குக்கேட்கும்)ஓசை. (உ-ம்.) "வெவ்வேறெழுத்தொலியாய்வரல்பிறப்பே" (நன். எழுத்திய. கக.)

ஒலிச்செபம்— வாசகசெபம், அருகிலிருக்கும் பிறர் செவிக்குக்கேட்கும்படி செபித்தல். (உ-ம்.) "முற்றுமொலியின்முதிர்ந்தபலம் மந்தவொலி" (சைவச. பொதுவி. கருரு.)

ஒலிசை— மணவாளப்பிள்ளைக்குக் கொடுக்கும்உபகாரம். (வழக்.)

ஒலித்தல்—1. ஆடை அழுக்ககற்றல். (உ-ம்.) "ஊரொலிக்கும்பெருவண்ணார்" (பெரியபு. திருக்குறிப்புத்தொண்ட. ககங.) 2. ஆரவாரித்தல். (உ-ம்.) "ஒலித்தலுமுண்டாமென்று" (நாலடி. யாக்கைநிலையாமை. ங.) 3. தழைத்தல். (உ-ம்.)

"அயலொலிநெடும்பீலியொல்க" (நெடுநெல். ௬௩.) 4. மிகக்காய்த்தல்.

ஒலிந்த—தழைத்த எனப்பொருள்படும் ஒரு பெயரெச்சம். (உ-ம்.) "ஒலிந்தபகன்றை" (மதுரைக். ௨௬௬.)

ஒலிமுகம்—ஒலிமுகவாய்தல்.

ஒலிமுகவாயில்— கோட்டையின் முன்புறவாயில்.

ஒலியல்— 1. ஆடை. (சூ. நிகண். ௧௧: லகரவெ. ௫.) 2. ஒலித்தல். (உ-ம்.) "தோட்டுவெண்டொலியன்மாலை" (சிந்தா. மண்மக. ௧௧௩.) 3. தழைத்தல். (புறநா.) 4. தீ. 5. தெரு. (பிங்கல. ௬௯௦.) 6. தோல். (சூ. நிகண். ௧௧: லகரவெ. ௫.) 7. பீலிக்குஞ்சம். (உ-ம்.) "நல்லடியார் தங்கள்செங்கையிலொலியலும்" (திருவாத. திருப்பெரு. ௫௬.) 8. பூமாலை. (சூ.நிகண். ௧௧: லகரவெ. ௫.) 9. யாறு. (உ-ம்.) "அவ்வொலியற்-கொப்பாருவதோவுவராழியதே" (கந்தபு. காளிந்தி. ௬.)

ஒலியலந்தாதி— ஒருபிரபந்தம்; அது, பல சந்தங்கூடிய பதினாறுகலைகொண்ட அடி நான்குடையதாய் அந்தாதித்து முப்பதுசெய்யுள்வரப்பாடுவது; சிறுபான்மை அடி ஒன்று எட்டுக்கலையானும் வரப்பெறும். (உ-ம்.) "ஈண்டியவண்ணமீரெண்கலைமுப்பா- னுண்டதொலியலந்தாதியாகும்" (இலக்கணவி. ௮௨௬.) [அன்றியும் வெண்பா அகவல் கலித்துறை என்னுமிம்மூன்றையும் பப்பத்தாக அந்தாதித்துப்பாடுவதும் ஒலியலந்தாதி என்பர்.]

ஒலியெழுத்து— மொழிமுதற்காரணமாகிய அணுத்திரள். (உ-ம்.) "மொழிமுதற்காரணமாமணுத்திரளொலியெழுத்து" (நன். எழுத்திய. ௩.)

ஒலுகல்— ஒல்கல்.

ஒவ்வாமை— 1. இசையாமை. 2. இயலாமை. 3. தகுதியீனம். 4. பொருந்தாமை.(உ-ம்) "தன்மரபுக்-கொவ்வாதவார்த்தை"(நளவெ. கலிநீங்கு. ௬௧.)

ஒவ்வுதல்—1. இணங்குதல்.(உ-ம்.)"யோகத்திலே சிறிதுமுயலவென்றுற்றேகமொவ்வாது" (தாயு. சச்சிதா. ௩.) 2. ஒத்திருத்தல். (உ-ம்.) "ஊகமனுபவம்வசனமூன்றுக்குமொவ்வும்" (தாயு. எங்கு. ௩.) 3. பொருந்துதல்.

ஒவ்வுறல்— } பொருத்தமுறல்.
ஒவ்வுறுதல்— }

ஒவ்வொன்று — 1. ஒன்றொன்று, வகைக்கொ ரறு. (நன். உயிரீ. ௬௧. விரு. உரை.)

ஒவ்வோன்—ஒப்பாகாதவன்.(உ-ம்.) "யாருமொவ்வோன்மதித்துமமர் மோதவுணர்தலுற்றான்" (பாரத. பதினெட்டாம்போர். ௧௧௧.)

ஒழி— 1. ஒழியென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 2. துணிவுப்பொருளையுணர்த்தும் விகுதி. (உ-ம்.) "கெட்டொழிந்தான்" (நன். பதவி. ௧௩.)

ஒழிகை—ஒழிதல் பார்.

ஒழித்தல்— 1. அழித்தல். 2. ஒடுக்குதல். (உ-ம்.) "அகில - மடங்குநாளம்மை தன்னையுமொழித்து" (தாயு. ஆரணம். ௨.) 3. குறைத்தல். 4. கொல்லல். 5. தவிர்த்தல். 6. தீர்த்தல். 7. துறத்தல். 8. முடித்தல்.

ஒழித்துக்காட்டணி—ஓர் அலங்காரம்;அஃது: ஒருபொருளை ஓரிடத்தில்லையென ஒழித்து மற்றோரிடத்து உண்டென்று நியமித்தல். (உ-ம்.) "நேயத்துறுகுறைவு - தெரிதல்விளக்கிடையல்லாது நன்னுதற்றேவியர்தம்-மிருதயத்தின்று" என்பதனாற்பெறப்படும். (குவலயா. ௧௬௩. பக்.)

ஒழிதல்— 1. அழிதல். (உ-ம்.) "ஒழிந்திடுமணுருபங்கள்" (சி. சி. ௧: ௧௧.) 2. சாதல். (புறநா.) 3. தவிர்தல். (உ-ம்.) "ஒண்ணல்" பார். 4. நீங்கல் (உ-ம்.) "பொய்க்கோலஞ்செய்யவொழியுமே" (நாலடி. தூயதன்மை. ௫.) 5. முடிதல். 6. விடுதல். (உ-ம்.) "ஒன்றுரைக்கமறுதொழிநீ" (பாரத. தீர்த்தயாத்திரை. ௫௮.)

ஒழிந்தார்—ஏனையோர்,தவிர்ந்தோர்.(உ-ம்.) "ஒழிந்தாரை - சாலச்சிரித்து" (நாலடி. தூயதன்மை. ௯.)

ஒழிப்பணி — அபநுதியுருவகவலங்காரம்; அஃது: ஒரு தருமத்தை ஆரோபித்தற்பொருட்டு ஒரு தருமத்தை மறுத்தலாம். (விசாக. அணியில. ௧௧.)

ஒழிப்பு— 1. தவிர்ப்பு. 2. விலக்கு.

ஒழிப்புயர்வுநவிற்சியணி — ஓர் அலங்காரம்; அஃது: உயர்வுநவிற்சியொழிப்பொடு வருதல். (உ-ம்.) "பைந்தொடிநின்சொல்லிலமுதுளதாற பாமரர்க-ளிந்துவிடத்துண்டென்பரே" (விசாக. அணியில. ௧௩.)

ஒழிபியல்— முன்சொல்லாதொழிந்தவற்றைக்கூறும் இயல். (காரிகை.)

ஒழிபு—1. எச்சம். (உ-ம்.) "பெயர்வினையும்மைசொற்பிரிப்பெனவொழியிசை - யெதிர்மறையிசையெனுஞ் சொல்லொழிபொன்பதும்" (நன். பொதுவி. ௬.) 2. பாரிசேடப்பிரமாணம்" (உ-ம்.) "ஒழிபுண்மையையீகம்" (சி.சி.அளவை. ௧.) 3. முன்சொல்லப்படாதொழிந்தது. (உ-ம்.) "ஒழிபியல்" (யாப். காரிகை.)

ஒழிய—1. தங்க. (சிந்தா.) 2. தவிர. (உ-ம்.) "மனமொழிய" (சிவப்பி. ௨: ௨௫.)

ஒழியாமை—நீங்காமை, (உ-ம்.) "இன்பமொழியாமைகண்டாலும்" (நாலடி. பொறையுடைமை. ௯.)

ஒழியிசை — ஒழிந்த சொற்களைத்தருதல்; அது: "படிக்கவோவந்தாய்" என்பதில் ஒகார இடைநிலை படித்தற்கன்று, விளையாடற்கு வந்தாய் என்னும் ஒழிந்த சொற்களைத்தந்துநிற்பதுபோல்வது. (நன். இடையி. ௪.)

ஒழியிசையெச்சம்— பத்துவகை எச்சங்களுள் ஒன்று; அது சொல்லப்படாது ஒழிந்த சொற்களைக்கொண்டுமுடிவது. (உ-ம்.) "ஒழியிசை" பார்.

ஒழிவித்தல்— 1. அழித்தல். 2. ஒழியவைத்தல். 3. கொல்வித்தல். 4. நீங்குவித்தல். 5. முடித்தல்.

ஒழிவு— ஒழிதல்.

ஒழுக்கம்—1. உயர்ச்சி. (சூ. நிகண். அ: அ.) 2. உலகத்தோடொட்டவொழுகல். (உ-ம்.) "ஒழுக்கமன்பருளாசாரம்" (சி. சி. உ: உ௩.) 3. குலம். 4. சீலம். 5. செல்லுகை.(உ-ம்.) "ஆறொழுகும்"( நன்.பொது.௫௩.விருத்.) 6. தன்மை. 7. நன்னடக்கை. (உ-ம்.) "சான்றாண்மைசாயலொழுக்கமிவைமூன்றும்" (நாலடி. குடிப்பிறப்பு. உ.) 8. நால்வகை வருணத்தாரும் தத்தமக்கு விதிக்கப்பட்ட பிரமசரியமுதலிய நிலைகளினின்று அவற்றிற்கோதிய அறங்களின்வழுவாதொழுகுதல். (வள். உரைப்பாயிரம்.) இதனைப்புண்ணியத்தோற்ற நான்கினிலொன்றென்பர். (சூ. நிகண். ௧ல: ௧எ.) 9. மரியாதை. 10. முறை. 11. மேன்மை. 12. வழி. (3, 4, 12. பிங்கல. ௩உ௪௩.)

ஒழுக்கல்—1. ஒழுக்குதல் பார். 2. நிரைத்தல். (புறப்பொ.)

ஒழுக்கு—1. ஒழுக்கம். (உ-ம்.) "ஒழுக்குடையாரதிமேதையர்தம்மையும்" (சிவதரு. சுவர்க்கநரகவி. ௧௧௬.) 2. ஒழுக்கென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 3. ஒழுகல். 4. துளியாய் விழுகை. (உ-ம்.) "இந்த வீட்டிலே ஒழுக்கு இருக்கின்றது" (வழக்.) 5. நடை. 6. முறைமை.

ஒழுக்குதல்— 1. ஒழுகச்செய்தல். (உ-ம்.) "ஆற்றினொழுக்கியறனிழுக்காவில்வாழ்க்கை" (வள். ௪அ.) "பூரமாகதிப்பேடகத்திடைநனிபொதிந்தொழுக்கினண்மன்னோ" (பாரத. சம்பவ. ௩௧.) 2. துளித்தல். 3. நீர்ப்பதார்த்தத்தை விழவிடுதல். (உ-ம்.) "இனியபான்முகந்தொழுக்குமாகுதியென்ன" (பாரத. காண்டவ. உ௧.) 4. நெறிதவறாமல் நடக்கச்செய்தல்.

ஒழுக்குப்பிரமேகரோகம்—ஒருவகைமேகரோகம்; இது: கோசத்தின் துவாரவழியாய்ச் சீழ், இரத்தம், சலம்போல மேகம் ஒழுகுதல், சரீரம் முழுவதும் கருமையான முளைகள் எழும்பல், கனத்த விரணம், குடைச்சல், எரிச்சல், அதிக நோவு முதலிய குணங்களை உண்டாக்கும்.

ஒழுக்குப்பீளை— கண்ணிலிருந்து பீளை ஒழுகச்செய்யுமோர் உரோகம். (உ-ம்.) "ஒழுக்குப்பீளைமுற்றியவெப்பு" (தைல. தைலவ. ௫௭.)

ஒழுக்கெறும்பு—வரிசையாய் ஒன்றின்பின்னொன்றாக ஊர்ந்துசெல்லுமொருசாதி எறும்பு.

ஒழுக—மெல்ல. (சிந்தா.)

ஒழுகல்— 1. இளகுதல், (உ-ம்.) "ஒழுகக்காய்ந்த இரும்பு இறுகிச்சிறிது சிவப்புநின்றாற்போலவும்" (சிவப்பி. ௪: ௧, உரை.) 2. உயர்ச்சி. (பிங்கல. ௧எ. ௬0.) 3. ஒழுங்குபடுதல். (உ-ம்.) "ஒழுகிய" பார். 4. தீயனவற்றின் நீங்கி நல்லனவற்றின்வழி நிற்றல். (உ-ம்.) "அளவின்கணின்றொழுகலாற்றார்" (வள். உஅ௬.) 5. துளியாய்விழுதல். 6. நடத்தல். (ஐங்குறு.) 7. நீளுதல். (உ-ம்.) "ஒழுகுபொற்கொடிமூக்கு" (நைடத. அன்னத்தைத்தூது. ௧௪.) 8. பெருகியோடுதல். (உ-ம்.) "ஒழுகுதீம்புனல்சிறைசெயுமோதையும்" (நைடத. நாட்டு. ௬.) 9. போதல். (உ-ம்.) "ஒழுகிநீண்டவடுவேய்கண்மடந்தையர்க்கும்" (பாரத. வசந்தகால. ௧௪.) 10. வளர்தல். (மலைபடு. ௧0௬.)

ஒழுகிசை— ஓர் அலங்காரம்; அஃது: இன்னாவிசையின்றி வருவது. (உ-ம்.) "இமையவர் கண்மோலி" என்னுமுதற்குறிப்புள்ள வெண்பாவிற்காண்க. (தண்டி. பொதுவி. ௧௧.)

ஒழுகிசைச்செப்பல்— வெண்பாவுக்குரிய செப்பலோசை மூன்றுவகையுளொன்று; அது, வெண்சீர்வெண்டளையும் இயற்சீர்வெண்டளையும் கலந்துவருவது. "வெண்சீரொன்றலுமியற்சீர்விகற்பமும் - ஒன்றியபாட்டேயொழுகிசைச்செப்பல்"(யாப். காரிகை. செய்யுளி. ௧.உரை)

ஒழுகிசைத்துள்ளல் — கலிப்பாவோசையினொன்று. "வெண்டளை தன்றளையென்றிரண்டியையினொன்றியபாட்டே வொழுகிசைத் துள்ளல்" (யாப். காரிகை. செய்யுளி.௧.உரை.)

ஒழுகிசையகவல்—ஆசிரியப்பாவுக்குரிய அகவலோசை மூன்றுவகையுளொன்று; அது: நேரொன்றாசிரியத்தளையும், நிரையொன்றாசிரியத்தளையும் விரவிவருவது. "நேர்நேரியற்றளையான்வருமகவலு-நிரைநிரையியற்றளையான் வருமகவலு-மாயிருதளையுமொத்தாகியவகவலு-

மேந்த றாங்கலொழுகலென் றிவை- யாய்ந்தமிர ணிறையாகுமென்ப" என்பதனாற்பெறப்படும். (யாப். காரிகை. செய்யுளி. க. உரை.)

ஒழுகிய—ஒழுங்குபட்ட.(உ-ம்.) "வயிறுசேர் பொழுகியவகையமையகளத்து" (சிறுபா.உ௰௪)

ஒழுகு— 1. உயரம். 2. ஒழுகென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையு ம். (உ-ம்.) "ஒழுகுசீதளமதுரவெண்கதிர்காலு பெதிக்குலமுய்ந்திட" (சேதுபு. சங்கரபா. உ.) 3. ஒழுங்கு. 4. நீளம். 5. பண்டி. 6. முறை மை. 7. முறைமையாய் நடத்தல்.

ஒழுகுதல்— 1. "ஒழுகல்" பார். 2. பரத்தல். (சிந்தா.)

ஒழுகுவண்ணம்— வண்ணங்களுள் ஒருவ கை; அஃதீ: ஓசையின் ஒழுகிநடக்கும். (உ-ம்) "ஒழுகுவண்ணமோசையிளெழுகும்" (தொல். பொரு. ௫௪௧.)

ஒழுங்கு—1. சகடவொழுங்கு. (உ-ம்.)"நோ ன்பகட்டுமணரொழுகையொடுவந்த" (சிறுபா. ௫௰.) 2. வண்டி. (புறநா.)

ஒழுங்கு—1. கட்டளை, விதி. 2. நன்னடை. 3. நிரை. 4. முறைமை. (உ-ம்.) "இந்தவொ ழுங்கொழிந்துயிருமொன்றைத் - தெரிவுறுது" (சிவப்பி. ௫: ௬)

ஒழுங்கை —ஒடுக்கியவழி.

ஒள்—ஒண்மையின் பகுதி.

ஒள்ளியர்— 1. அறிவுடையோர். (உ-ம்.) "ஒளியார்முன்னொள்ளியராதல்" (வள். ௭௱௪.) 2. மாசற்றவர்.

ஒள்ளொளி—மிக்க ஒளி. [ஒள்-மிகுதி.]

ஒளி— 1. அறிவு. (உ-ம்.) "தனையறிந்தோர்க் கொளியுருவாய்" (ஞானவா. தாசூர. ௬.) 2. ஒளி த்தல், மறைதல். (உ-ம்.) "கூற்றொளியிட்டுவை கும்" (கூர்மபு. திருக்கல். ௬௪.) 3. ஒளிப்பி டம். (உ-ம்.) "ஒளியிருத்தல்" பார். 4. ஒளி யென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 5. கடவுள். 6. கண்மணி. 7. சதாப்பிரகாசவஸ்து; அது: சந்திரிருதை, அ நிருதை, சந்தியாநிருதை என மூன்றுவகைப் படும். (வீரசோ. பொருட்பட. ௨௧. உரை.) 8. கூடஸ்தசைதன்னியம். (உ-ம்.)"மனோவிருத்தி யவையகற்றியொளிதனையறியு மகண்டாகாரம்" (உபநிடத. அ.) 9. கேட்டைநாள். 10. சந்தி ரன். 11. சிவசத்தி. (உ-ம்.) "உலகெலாமாகி வேறுயுடனுமாயொளியாயோங்கி" (சி. சி. உ: க. சிவஞாந.) 12. சுவாலை. 13. சூரியன். 14. நெருப்பு. 15. பார்வைமிருகம். 16. பிரகாசம், நேத்திரேந்திரியவிடயம். (உ-ம்.) "அத்தமதி ன்முன்பின்போலொளியிலதாம்". (வேதா. சூ. ௧௦௮.) 17. புகழ், எல்லாராலும் நன்கு மதிக் கப்படுதல். (உ-ம்.) "ஓதல்வேண்டுமொளிமா ழ்குஞ்செய்வினை" (வள். ௬௫௩.) [ஒளிபோல ப்புகழும் பலருமறியநிற்றலால் புகழை ஒளியெ ன்றது உவமையாகுபெயர்.] 18. விண்மீன். 19. விந்துதரிசநம். (உ-ம்.)"தூய்ய-வொளியோ சையாகியொடுங்குவதும்" ( ஒழிவிலொடுக்க. யோகக்கழற்றி. ௬.) 20. விளக்கு. (ஞாநாமி.) 21. வெயில். 22. வேட்டைக்காரர்பதிவிருக்கும் மறைப்பு. 23. வேந்தர்பாலுள்ள கடவுட்டன் மை. (வள். ௬௯௮. உரை.) [9, 10, 13, 14, 17, 20. பிங்கல. ௬௨௪௪.]

ஒளித்தல்—1. பதுங்கல், மறைதல். (உ-ம்.) "என்னையணையாத வண்ணமெங்கொளித்தார் பைங்கிளியே" (தாயு. பைங்கிளி. ௨௬.) 2. ம றைத்தல். (உ-ம்.) "கன்றொளித்தகலவைத்த கறவையிற்கனிந்துநின்றார்" (சிந்தா. நாமகள். ௬௪௨.)

ஒளிப்பு—ஒளி.

ஒளியார்—ஒள்ளியார் என்பதில் ளகரந்தொ க்க ஒருவிகாரமொழி. (உ-ம்.) "ஒளியார்முன் னொள்ளியராதல்" (வள். ௭௱௪. உரை.)

ஒளியிருத்தல் — 1. மறைவிடத்திருத்தல். (உ - ம்.) " சேட்டிளங்கிளிக்குலங்களத்தெரி வைமாரோப்பும் - பாட்டிசைத்திறமொளியிரு ந்தநுதினம்பயிலும்" (காஞ்சிபு. நாட்டு. ௬௪.)

ஒளியோன்—சூரியன்.

ஒளிர்— ஒளிரென்னேவலும், தெரிநிலைவி னைப்பகுதியும், வினைத்தொகையும். ( உ-ம். ) "தோட்டிபோற்றேய்ந்தொளிர்துண்டத்தான்ற னை" (இராமா. சடாயுகாண். ௬.)

ஒளிர்தல்— ஒளிசெய்தல். (உ-ம்.) "கண்ணு டியோவொளிரும் " (நைடத. அன்னத்தைத் தூது. ௬௪.)

ஒளிர்பு—ஒளிர்தல்.

ஒளிர்வு—பிரகாசம்.

ஒளிவட்டம்—1. கண்ணாடி. 2. சக்கரம். (1, 2. சூ. நிகண்: ௧௧: ளகரவெ. ௬.)

ஒளிவட்டி—பச்சைக்கருப்பூரம்.

ஒளிவிடுதல்—பிரகாசித்தல்.

ஒளிவிளங்குமேனி—ஒரு பாஷாணம்.

ஒளிவீசுதல்—பிரகாசித்தல்.

ஒளிவு—1. ஒளி. 2. மறைவிடம். (வழக்.)

ஒளிவைத்தல்—மிருகங்களைப்படுக்கமறைப் புவைத்தல்.

ஒளிறல்—ஒளிகொள்ளல். (உ-ம்.) "ஒளிறு தல்" பார்.

ஒளிறு—பிரகாசம். (உ-ம்.) "ஒளிற்றுறுகலன் மார்பெய்தி" (கந்தபு. அசமுகிநகர்காண். உச.)

ஒளிறுதல்— விளங்குதல். (உ-ம்.) "ஒளிறு வாள்விழுப்புண்காணிய" (நெடுநல். களஉ.)

ஒற்கம்— 1. அடக்கம். (உ-ம்.) "ஒற்கமின் றாத்தைவாயங்காத்தல்" (நீதிநெறிவிள. உகூ.) 2. குறைவு. (உ-ம்.) "ஒற்கமில்வளன்" (கந்தபு. மேரு. எ0.) 3. தளர்ச்சி. அஃதாவது: வறுமையானுதல் அறிவின்மையானுதல் இடுக்கட்பட்டுழி மனந்தளர்தல். (உ-ம்.) "கற்றிலனாயினுங் கேட்கவஃதொருவர்க் - கொற்கத்தி னூற்றாந்துணை" (வள் சகசு.) 4. வறுமை. (உ-ம்.) "ஒற்கமோவி" (வேதாரணியபு. பிசாச. கூஉ.)

ஒற்றர்—1. தூதர். (உ-ம்.) "ஒற்றரிற்சிலவர் காணுவோடினர்" (கந்தபு. வரவுகேள்வி. உச.) 2. பகைவர், அயலவர், நட்பினர் என்னுமூவரிடத்தும் நடக்குங்காரியத்தை அவர்களோடு ஒன்றுபட்டு நின்று அறிந்துவந்து தம்மரசனுக்குச்சொல்வோர்.

ஒற்றல்— 1. அடித்தல். (சிந்தா.) 2. அடுத்தல். (உ-ம்.) "தானையுளன்றிநின்றதனியிடமொற்றி" (சிந்தா. கனக. கஉகூ.) 3. இடுதல். (உ-ம்) "நென்னலொற்றிய-கொற்றமீனக்குறி" (திருவிளை. விடை. உக.) 4. இழைத்தல். (உ-ம்.) "நாளொற்றித்தேய்ந்தவிரல்" (வள். கஉசுக.) 5. உடுத்தல். 6. ஒற்றுதல். (உ-ம்.) "அறுவையினொற்றிமெய்யீரமாற்றினள்" (காஞ்சிபு. தழுவக்கு. கூசுகூ.) 7. ஒற்றெழுத்தாகவருதல், ஒற்றெழுத்துவருதல். (உ-ம்.) "யவமுன்வரினேவகரமொற்றும்" (தொல். எழுத். உ0சு.) 8. தத்தல். 9. தள்ளிவிடுதல். (உ-ம்) "அல்லியுட்பாவையன்னளறிவுறுவகையினொற்றி- மெல்லவேதிறந்து நீக்கி" (சிந்தா. கேமசரி. கூச.) 10. தீண்டுதல், முட்டுதல். (உ-ம்.) "நாவிளிம்புவீங்கியொற்றவும்வருடவும்" (நன். எழுத்திய. உக.) 11. துடைத்தல். (உ-ம்.) "கண்பொழிகலுழியொற்றி" (சிந்தா. பதுமை. உகூஉ.) 12. தொடுத்தல். 13. நினைதல். (உ-ம்.) "வருவதொற்றி" (சிலப். அரங்கேற். கூரு.) 14. பகைவர்முதலியவரிடத்து நிகழ்வன வற்றை மறைவாகநின்று அறிந்துவரச்செய்தல். (உ-ம்.) "ஒற்றினொற்றிப்பொருடெரியா மன்னவன்" (வள். ருஅகூ.) 15. பகைவர்முதலியவரிடத்து நிகழ்வனவற்றை மறைவாயறிதல். (உ-ம்.) "ஒற்றொற்றித்தந்தபொருளையும்" (வள். ருஅஅ.) 16. மறைந்துட்கொள்ளல். (உ-ம்.) "கள்ளொற்றிக்கண்சாய்பவர்" (வள். கஉஎ.) 17. விலகுதல். (வழக்.)

ஒற்றளபு—ஒற்றளபெடை. (உ-ம்.) "உயிர்மெய்யாய்தமுயிரளபொற்றளபு" (நன். எழுத்திய. ரு.)

ஒற்றளபேடை— தனக்குரிய மாத்திரையின் மிக்கொலிக்கும் மெய்யெழுத்து; அங்ஙனம் மிக்கொலிப்பன ங ஞ ண ந ம ன வ ய ல ள என்னுமொற்றுக்கள். (நன். எழுத்திய. கூஎ.) [குறித்த சூத்திரத்திலே அலகிடவாராத ஆய்தத்தையும் ஒற்றெனக்கொண்டு அளபெழும் ஒற்றுக்கள் பதினொன்று என்று சொல்லப்பட்டிருக்கின்றது.]

ஒற்றன்— பிறர்மாட்டுநிகழ்ந்தன அறிந்து தன்னையனுப்பிய தலைவனுக்குச்சொல்லுகிறவன். (திரிகடு. அரு.)

ஒற்றி—1. ஒற்றிப்பார்த்து. 2. கடனாகவாங்கிய பணத்துக்காக அசைவற்றபொருளை ஈடாகவைத்து ஈட்டையேற்கிறவன் தானே அப்பொருளினால் வரும் பிரயோசனத்தை வட்டிக்காக அநுபவிக்கவிடுகை. (உ-ம்.) "தனியேனென்றென்னை ஊன்றிநின்றுரைவர்க்கொற்றிவைத்தாய்" (தேவார. திருக்கச்சி. க. திருநாவு.) 3. சேர்த்தி. 4. தள்ளி. 5. துடைத்து. (1, 3, 4, 5. சிந்தா.)

ஒற்றிக்கோள்ளல்— முட்டுதல்.

ஒற்றிடுதல்— வக்கம் பிடித்தல்.

ஒற்றித்தல்—1. ஒன்றுபடல். (உ-ம்.) "கண்ணொளியும் ஞாயிற்றினொளியும்போல வேற்றுமை சிறிதுந்தோன்றாதவாறு ஒற்றித்துநிற்றற்குரிய" (சி. சி. க. எ. சிவஞாந.) 2. ஒன்று, மூன்று, ஐந்து என்றாற்போல ஒற்றையாயிருத்தல்.

ஒற்றிய—வீழ்த்த. (புறநா.)

ஒற்றியூர்—திருவொற்றியூர்.

ஒற்றிவைத்தல் — அடமானம் வைத்தல். (உ-ம்.) "இருந்தென்னையாண்டுகொள்விற்றுக் கொளொற்றிவையென்னினல்லால்-விருந்தினனேனைவிடுதிகண்டாய்" (திருவாச. நீத்தல்விண்ணப்ப. கஅ.)

ஒற்று— 1. உளவு. 2. ஒற்றல். 3. ஒற்றும் பொட்டணி. 4. ஒற்றென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 5. செங்கோட்டியாழுறுப்பினென்று. (உ-ம்.) "ஒற்றுறுப்புடைமையில்" (சிலப். புறஞ்சேரி. க0அ.) 6. தூதன். (உ-ம்.) "ஒற்றெனமுன்னம் வந்தோன்" (கந்தபு. சூரபன்மன்வ. சகூச.) 7. பகைவர் அயலவர் நட்பினர் என்னும் மூவரிடத்தும் நடக்குங்காரியத்தை அவர்களோடு ஒன்றுபட்டு அறிந்துவந்து தனது அரசனுக்குச்சொல்வோன். (உ-ம்.) "புடைகெட-வொற்றினுகிய

வேயே" (தொல். பொரு. ருஅ.) 8. மெய்யெழுத்து. (நன். எழுத்திய. ௬௪.)

ஒற்றுக்கேட்டல்—பிறர்பேசுதலை மறைந்துநின்றுகேட்டல்.

ஒற்றுதல்—"ஒற்றல்" பார்.

ஒற்றுப்பெயர்த்தல் — ஒருவகைச்சித்திரகவி; அஃது: ஒருமொழியுந்தொடர்மொழியுமாய்ப்பொருள்படுமவற்றை அப்பொருளொழிய வேறுபொருள்பட வைப்பது. (வ-று.) "வண்புயலைக்கீழ்ப்படுத்துவானத்தருமலைந்து - மண்குளிரச்சாயல் வளர்க்குமாந்- தண்கவிகைக்-கொங்காரலங்கலநபாயன் குளிர்பொழில்சூழ்- கங்காபுரமாளிகை" [இங்கே கங்காபுரமாளிகை என்பது கங்காபுரத்திலுள்ள மாளிகை எனவும், கங்காபுரத்தினை ஆள்பவனுடைய கையெனவும் பொருள்பட்டு ஒருமொழியுந்தொடர்மொழியுமாய் ஒற்றுப்பெயர்த்தலாயிற்று.] (தண்டி. கரு. உரை.)

ஒற்றுபு—அமுக்கி. (சிந்தா.)

ஒற்றுமை—1. இணங்கி ஒருமித்திருக்குந்தன்மை (உ-ம்.) "உரனுறவொற்றுமையுற்றுநிற்றலால்" (வேதாரணியபு. பஞ்சாக். க.) 2. உரிமை. 3. ஒற்றுத்தன்மை. (உ-ம்.) "உண்ணடியமாயைகொடொற்றுமையால் - விண்ணடர்பொருட்டிவண்மேவியுளான்" (கந்தபு. அக்கிநிமுகா. வதை. எ.) 4. கலப்பு. 5. குறிப்பு. 6. தகுதி. 7. மநமொன்றுகை. 8. வாகைவிகற்பத்தொன்று; அது, சிறியோர்நாணப்பெரியோர்கூறிய கூறுபாட்டிற்கழிமநத்தை ஒற்றுமைகொள்ளல். (வீரசோ. பொருட். கக.) 9. வேறன்மை.

ஒற்றுமைகோடல்— வேளாண்மைமாந்தரியல்பொன்று; அஃது: பிறரோடு ஒன்றித்துவாழ்தல். (சூ. நிகண். கஉ: க௦எ.)

ஒற்றுமைநயம்— 1. ஒருமைப்பாட்டின்றன்மை. (நன். உரியி.க௦.) 2. நான்குநயங்களிலொன்று. (மணிமே.)

ஒற்றுவன்— தூதுவன். (உ-ம்.) "ஐயனதொற்றுவன்" (கந்தபு. நகரழி. ௬௬.)

ஒற்றுவித்தல்— ஒற்றுமூலமாய்நிகழ்ந்தன்வற்றையறிதல். (உ-ம்.) "ஒற்றினனே எல்லார் கண்ணுநிகழ்ந்தவற்றை ஒற்றுவித்து" (வள். ருஅ௬. உரை.)

ஒற்றை— 1. அபிந்நப்பேறுவர இரண்டாற்பிரிக்கப்படாத எண். (உ-ம்.) "முந்நூல் - வேய்ந்திடு மறையோரொற்றைப்பட வரித்தூட்டவேண்டும்" (மச்சபு. சபிண்டி. உஎ.) 2. ஒப்பின்மை. (உ-ம்.) "ஒற்றைச்சேவகராய்மாறியாடியவொருவர்வந்தார்" (திருவிளை. மெய்க்கா. உ௬.) 3. ஒருவாத்தியம். (உ-ம்.) "தாரைகளொற்றைகள்வங்கியம்" (பாரத. பதினாறாம்போர். ருக.) 4. ஒன்று. (உ-ம்.) "ஒரெண்". 5. தனிமை. 6. தனியேடு.

ஒற்றைக்கண்ணன்— 1. கண்ணொன்றேயுடையவன். 2. குபேரன். 3. சுக்கிரன்.

ஒற்றையிரட்டைபிடித்தல்— ஒருவிளையாட்டு; அஃது: ஒருவன் கைக்குள்ளே பொத்திவைத்திருக்கப்பட்ட பொருள் ஒற்றைப்பட்டதோ இரட்டைப்பட்டதோஎன வினவி விடைபெறுதல். (வழக்.)

ஒற்றெழிபாட்டு— ஒற்றெழுத்துத்தீர்ந்த ஒருபொருட்பாட்டு. (சூ. நிகண்.கஉ:உரு.) (தண்டி. சொல்லணி. ச. உரை.)

ஒறுத்தல்— 1. அடக்கல். 2. அலைத்தல். 3. கடிதல். (உ-ம்.) "ஒறுத்தெதனைவிடுத்தனருடையவன்மையால்" (கந்தபு. திருவவ. கரு.) 4. செலவைக்குறைத்தல். (உ-ம்.) "ஒறுத்துண்ணுகிறான்" (வழக்.) 5. தண்டஞ்செய்தல். (உ-ம்.) "ஒறுத்தாரையொன்றாக" (வள். கருரு.) 6. வெறுத்துவருத்துதல். (உ-ம்.) "ஒறுக்குமதுகையுரனுடையாளன் - பொறுக்கும்பொறையேபொறை" (நாலடி. சினமின்மை. ரு.)

ஒறுப்பு— "ஒறுத்தல்" பார்.

ஒறுவாய்—ஒடிந்தவாய், குறைவாய். (உ-ம்.) "பசிக்கலைந்து பாதிநாக்கு- முதடுகளிற்பாதியுந்தின்றொறுவாயானேம்" (கலிங்கத்துப்பரணி. பேய்முறைப்பாடு. ௬.)

ஒறுவினை—தீராவருத்தம்.

ஒறுவு—வருத்தம்.

ஒன்—ஒரு சாரியை. (உ-ம்.) "ஒன்னேயானேயக்கேயிக்கே" (தொல். எழுத். கக௯.)

ஒன்பதின்மர்—ஒன்பதுபேர். (உ-ம்.) "இந்தவீரரொன்பதின்மரும்" (கந்தபு. துணைவர். ௬௪.)

ஒன்பது—ஒம்ரண்.

ஒன்பான்—ஒன்பது. (உ-ம்.) "ஒன்பானொடுபத்துநூறுமொன்றின்" (நன். உயிரீ. சச.)

ஒன்றப்பார்த்தல்— பொருந்தச்செய்தல்.

ஒன்றல்—ஒன்றுதல்.

ஒன்றற்றவன்— 1. கூடாதவன். 2. வறியவன்.

ஒன்றறிசொல்—தடற என்னும் ஒற்றையூர்ந்த உகரத்தை இறுதியாகவுடையதாய்வரும் அஃறிணை ஒருமைச்சொல். (உ-ம்.) "ஒன்றறிசொல்லேபலவறிசொல்லென் - றாயிருபாற்சொல்லஃறிணையவ்வே" (தொல். சொல். கிளவி. ௯. சேனா.)

ஒன்றறியாதவன்—ஏதுமறியாதவன். (இராமா. கிட்கிந்தைப். ரு.)

ஒன்றன்கூட்டம்—ஒருபொருளின்கூட்டம். (நன். பெயரி. சகூ.)

ஒன்றன்பால் — அஃறிணை ஒருமைப்பால். (நன். பெயரி. சு. உரை.)

ஒன்றுதவஞ்சித்தளை—(யாப்பு.) நிரையீற்று வஞ்சிச்சீரின்முன் நேரசைவருவது. (இலக்கணவி. ஏகஅ. உரை.) இது ஒன்றாவஞ்சித்தளை எனவும் வழங்குவர்.

ஒன்றாமை—பகைமை.

ஒன்றார்—பகைவர்.

ஒன்றி—1. ஒற்றை. (வழக்.) 2. ஒன்றுபட்டு. (உ-ம்.) "சந்துவாய்தெரியாதொன்றி" (திருவிளை. நான்மாட. கரு.) 3. தனித்த ஆள். 4. தனித்தது.

ஒன்றித்தல்—1. ஒருமைப்படுதல். 2. பொருந்துதல். [ஒன்று - பகுதி. இ-சாரியை. தல் - விகுதி.]

ஒன்றிப்பு—ஒருமிப்பு.

ஒன்றியவஞ்சித்தளை— (யாப்பு.) நிரையீற்றுவஞ்சிச்சீரின்முன் நிரையசைவரயாப்பது. (உ-ம்.) "ஒன்றாதவஞ்சித்தளை" பார். (இலக்கணவி. ஏகஅ. உரை.)

ஒன்றியார்—உள்ளாயினர். (உ-ம்.) "ஒன்றாமையொன்றியார்கட்படினெஞ்ஞான்றும் பொன்றாமையொன்றலரிது. (வள். அஅசு.)

ஒன்றின்மை— யாதொருபற்றுமில்லாமை.

ஒன்றினமுடித்தறன்னினமுடித்தல்— முப்பத்திரண்டு தந்திரவுத்திகளுள் ஒன்று; அஃது: "எயாமுதலுமாவோவீற்று - மேயிருவழியும்வியவ்வாகும்மே" என்பதிற்போல, விதியால் ஒற்றுமைப்பட்டவைகளை ஒருங்குகூட்டிமுடித்தல் ஒன்றைச்சொல்லுமிடத்து அதற்கினமாகிய மற்றொன்றையுமதனோடு முடித்தல். (நன். பாயிர. கச.)

ஒன்று—1. அஃறிணை ஒருமைப்பால்.(உ-ம்) "ஒன்றேபலவென்றிருபாற்றஃறிணை. (நன். பெயரி. சு.) 2. ஐக்கியம், ஒற்றுமை. (உ-ம்.) "விதரணவிதுரன்சொன்ன வார்த்தையும் வேந்தர்வேந்த - னிதயமுமொன்றாய்நின்றவியற்கையை" (பாரத. சூதுபோர். எ.) 3. (ஐம்புலன்களையு)மொருவழிப்படுத்துகை. (உ-ம்.) "ஒன்றுபுரிகாசிபனை" (சேதுபு. கத்துரு. க0எ.) 4. ஒப்பற்றபொருள். (உ-ம்.) "நவமாயிலங்கிய வொன்றே"(தாயு. பாயப்புலி. க0.) 5. ஒருங்கு. (உ-ம்.) "எல்லாவற்றையுமொன்றாக்கினேன்" (வழக்.) 6. ஒருபொருள். (உ-ம்.) "செல்வமுமொன்றேவென்னச்செய்யும்" (சி. சி. காப்பு.) 7. ஒன்றென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 8. ஓர் எண். 9. தனக்கு ஒத்ததில்லை வேறொன்றிலதாய முத்திவீட்டையுணர்த்துமொருகுறிப்புமொழி. (நன். பெயரி. உ. இராமாநு.) 10. வேறு.(உ-ம்.) அவன்சொல்லுகிறதொன்று செய்கிறதொன்று" (வழக்.)

ஒன்றுக்குமற்றவன் — ஒன்றுக்குமுதவாதவன்.

ஒன்றுக்கொன்று— 1. ஒன்றோடொன்று. (உ - ம்.) "ஒன்றுக்கொன்றுதொடர்ச்சியாய்" (வழக்.) 2. பதிலுக்குப்பதில். (வழக்.)

ஒன்றுகுடி—ஒதுக்குக்குடி.

ஒன்றுகை—ஒன்றுதல்.

ஒன்றுதல்—1. இசைதல். 2. ஐக்கப்படுதல். 3. ஒடுங்குதல். (உ-ம்.) "அரனருள்கண்டுதம்புந்தியொன்றி" (கந்தபு. மேரு. சுச.) 4. நெருங்கல். (உ-ம்.) "ஒன்றியகேளிரல்லார்" (கந்தபு. மார்க்கண்டே. க0சு.) 5. பொருந்துதல். (உ-ம்) "ஒன்றினவொன்றினவல்லே-செயிற்செய்க" (நாலடி. செல்வநிலையா. ச.)

ஒன்றுநர்—நண்பர்.

ஒன்றுபடல்— 1. ஒன்றுதல். 2. ஒப்புரவாதல்.

ஒன்றுபடுத்தல்—1. ஒப்புரவாக்கல். 2. ஒருமைப்படுத்தல்.

ஒன்றுபடுதல்—ஒன்றுபடல்.

ஒன்றுபாதி—ஒன்றிற்பாதி.

ஒன்றும்—சிறிதும். (உ-ம்.) "மாயைக்குணர்வொன்றுமில்லையென்றே-வைத்திடும்" (சி. சி. க. கஎ.)

ஒன்றுமொழிதல்— வஞ்சினங்கூறல். (பதிற்றுப்.)

ஒன்றுவித்தல்—ஒன்றுபடுத்தல். (உ-ம்.)"தீவெம்மை-தந்தவைசுட்டொன்றுவிக்கும்" (சிவப்பி. உ: உஎ.)

ஒன்றைவிட்டொன்று— அடுத்ததைவிட்டு மற்றது.

ஒன்றொழிபொதுச்சொல் — இருதிணையிலும் ஆண்பால் பெண்பாலிரண்டிற்கும் பொதுவாய்நின்று அப்பால்களிலொருபாலைக் குறிப்பின்-நீக்குஞ்சொல். (உ-ம்.)"ஒன்றொழிபொதுச்சொல் விகாரந்தகுதி - குறிப்பிற்றருமொழி" (நன். பெயரிய. கஉ.) [ஆயிரமக்கள்பொருதாரென்பதில் "பொருதா"ரென்ற குறிப்பினால் "மக்கள்" என்பது ஆண்மக்களைக்கருதிற்று.]

ஒன்றே—ஓர் எண்ணிடைச்சொல். (உ-ம்.) பொய்படுமொன்றோபுனைபூணும்" (வள். அகஅ.)

ஒன்னப்பூ—மாதர் காதணியிலொன்று.
ஒன்னலர்—பகைவர். (உ-ம்.) "ஒன்னலர்ம ணிமுடியுரிஞ்சு" (நைடத. நகரப். ௬௬.)
ஒன்னலன்—பகைவன். (உ-ம்.) "ஒன்னல னேவலாலே" (சேதுபு. வேதா. ௭௭.)
ஒன்னலார்—பகைவர். (உ-ம்.) "ஒன்னலார் பிணியுரகமண்ணைகோ- ளென்னவும்மவர்க்கிட ரிழைத்திடா" (காஞ்சிபு. இரணி. ௮.)
ஒன்னலான்— 1. பகைவன். 2. ஒன்றுதவ ன். (உ-ம்.) "இம்மியின்றுணையதேனும்-ஒகை யால்வழங்கா நீதியொன்னலாளொருவன் செல் வம்-போகுமாறென்ன" (கந்தபு. காசிபன்புலம் புறு. ௨௧.)

ஒன்னு—பொருந்தாத. (உ-ம்.) "ஒன்னுத்தெ வ்வருலைவிடத்தார்த்து" (பெரும்பா. ௪௧௧.)
ஒன்னுதார்—பகைவர்.
ஒன்னுமை—பொருந்தாமை. (சிந்தா.)
ஒன்னார்—பகைவர். (உ-ம்.) "ஒன்னார் கைப் பட்டக்கால். (நாலடி. தீவினையச்சம். ௩.)

## ஓ

ஓ—[இது: தமிழ்ப்பாஷையின் வர்ணமாலை யின் உயிர்வருக்கத்திலே வரும் பதினொராம் எழுத்து. அஃதங்காப்பாகிய அகரக்கூறும் இத ழ்குவிவாகிய உகரக்கூறும் சந்தித்துப்பிறந்த ஒரு நெடில்.]
1. ஆபத்து. (இராசவைத்.)
2. இரக்கப்பொருளைத் தருமோ ரிடைச் சொல். (உ-ம்.) "ஓஒதமக்கோருறுதியுணரா ரோ". இது, கழிவிரக்கம்.
3. எதிர்மறைப்பொருளைத்தரும் ஓரிடை ச்சொல். (உ-ம்.) "சாத்தனோகொண்டான்" ["சாத்தன்கொண்டிலன்" என்னும் பொருளை த்தருதல்காண்க.]
4. ஒரு வினாவிடைச்சொல். (உ-ம்.) "குற் றியோ மகனோ அங்கே தோன்றுகின்றவுரு".
5. ஒழியிசைப்பொருளைத்தரும் ஓரிடை ச்சொல். (உ-ம்.) "கொளலோகொண்டான்" [இது "கொண்டுய்யப்போயினானல்லன்" என ஒழிந்த சொற்களைத்தருதல்காண்க."]
6. ஒரசைநிலையிடைச்சொல்.(உ-ம்.)"வம் மினோ".
7. கொன்றை. (இராசவைத்.)
8. சிறப்புப்பொருளைத் தருமோ ரிடைச் சொல். (உ-ம்.) "ஓஒபெரியன்" [உயர்வு சிற ப்பு.] "ஓஒகொடியன்" [இழிவு சிறப்பு.]
9. சென்று தங்குதல். (பத்துப்பா. திரு முரு. ௩. உரை.)
10. தெரிநிலைப்பொருளைத்தரும் ஓரிடைச் சொல். (உ-ம்.) "ஆணோ அதுமன்று; பெண் ணோவதுவுமன்று" [இஃதலியைநோக்கியத்த ன்மையின்மைதெரிந்தமைகாண்க.]
11. நீங்குதல். (சூ. நிகண். ௧௧: வகரவெ. ௭௭.)
12. பிரமா.
13. பிரிநிலைப்பொருளைத்தரு மோரிடைச் சொல். (உ-ம்.) "அவருளிவனோகள்வன்"
14. புலம்பலிலே வரும் ஒரு விளியுருபு. (உ-ம்.) "மைந்தவோ" (கந்தபு. பானுகோபன் வதை. ௧௩௪.) "புலம்பினோவுமாகும்" (நன். பெயரி. ௫௩.)
15. மகிழ்ச்சிக்குறிப்பு. (சிந்தா.)
16. மதகுநீர்தாங்கும்பலகை; "தூம்பிற்கத வு" (சிலப்பதி.)
17. வியப்பு. (சிலப். கானல்வரி. ௧௧.)
18. னகரவொற்றீற்றுயர்திணைப்படர்க்கை ப்பெயரின் ஈறு அழிய அல்லது ஈறழிந்து அய லினின்ற குற்றெழுத்து நீண்டுவர அதனோடு கூடிவரும் ஒருவிளியுருபு. (உ-ம்.) "ஐயவோ; ஐயாவோ" (நன்.பெயரி. ௫௦.) [2, 3, 4, 5, 6, 8, 10, 13. "ஒழியிசைவினாச்சிறப்பெதிர்மறை தெரிநிலை- கழிவசைநிலைபிரிப்பெனவெட்டோ வே" என்னும், நன். இடை. ௪-ஞ்சூத்திரத்தி ற்காண்க.]
ஒக்கம்— 1. உயர்ச்சி. (உ-ம்.) "கைலைமூவு லகு - மொடுங்குகின்றநாளோங்கியவோக்கமே யொக்கும்" (திருவிளை. (திருநகர. ௩௩.) 2. எ ழுதல். 3. பெருக்கம். (உ-ம்.) "சுருங்கிற்றிர ண்டடியோக்கமிரட்டி" (காரிகை. ஒழிபியல். ௭.) 4. பெருமை.
ஒக்காளம்—ஓங்காளம்.
ஒக்காளித்தல்— } வாந்திசெய்கை.
ஒக்காளிப்பு— }
ஒக்கி—புறப்படவிட்டு. (சிந்தா.)
ஒக்கிய— 1. உயர்த்திய. (உ-ம்.) "ஒக்கிய வொள்வாள்" (நாலடி. தீவினையச். ௩.) 2. எடு க்கப்பட்ட. (புறநா.) 3. ஓங்குவித்த. 4. யோக் கியமான, தகுந்த. (உ-ம்.) "உடலாக்குந்தன் மைக் - கோக்கியசத்தியுண்டாய்" (சி. சி. ௨: ௪௮.) [இச்செய்யுளின் "ஒக்கிய" என்பதற்கு "ஓங்கச்செய்தல்" எனப்பொருள் கூறுவாருமு ளர்.]
ஒக்கினார்—எறிந்தார். (உ-ம்.) "நன்மாலை- யோக்கினார்" (சிந்தா. முத்தி. ௩௩.)
ஒகணம்— } 1. பேன். 2. மூட்டுப்பூச்சி.
ஒகணி— } (சப்த.) [ஓ, கண.]

**ஒகம்**—1. அடைக்கலம். 2. ஓர்குருவி. 3. கூட்டம். 4. திரட்டு. 5. புகலிடம். 6. பெருக்கு. [கங்கா+ஓகம்=கங்கௌகம்.] (நன். மெய். ௲௬.) 7. போதனை. 8. வீடு. (சப்த.) [1,2, 5, 8. [ஓக.]

**ஓகன்**—சூத்திரன். [ஒக:.]

**ஓகாரம்**—1. ஓ என்னுமெழுத்து. 2. மயில். உ-ம்.) "ஓகாரபரியின்மிசைவருவாயே" (திருப்பு. கஉக.)

**ஓகாரவுரு**—கடவுள். [ பிரணவரூபமென்றபடி.]

**ஓதுலம்**—அப்பம். (சப்த.) [ஒகூலு.]

**ஓகை**— 1. உவகை. (உ-ம்.) "ஓகையோடிநத்தி" (பாரத. குருகுல. ௬௬.) 2. நதி, பிரவாகம். (உ-ம்.) "ஓரோகை" (சி. சி. பர. உலோகாயதன்மறுதலை. அ. உரை. பாடபேத. தத்துவராய.) 3. பிரீதிவார்த்தை.

**ஓகோ**—அதிசயவிரக்கச்சொல். (உ-ம்.) "ஓகோவுனைப்பிரிந்தாருள்ளங்கனலில்வைத்த- பாகோமெழுகோபகராய்பராபரமே" ( தாயு. பராபரக். ௬0.)

**ஓகோதநி**—மூட்டுப்பூச்சி. (சப்த.)[ஒகோதநி.]

**ஓங்கல்** — 1. உயர்ச்சி. (உ-ம்.) "ஓங்குநாசிமேல்" (கந்தபு. நகர. ௬௫.) 2. தலைவன். 3. மரக்கலம். 4. மலை. (உ-ம்.) "ஓங்கலோரிரண்டுசேர்ந்து" (பாரத. மற்போர். ௧0.) 5. மூங்கில். (சூ.நிகண். கக: டகரவெ. ௧௬.) 6. மேடு. 7. யானை. (உ-ம்.) "ஓங்கன்மேன்-மழையென்மாமுரசெற்றுதிர்வல்லென்முன்" (இராமா. கரன். உ௬.) 8. வலியுடையோன். (2, 6, 7. பிங்கல. ௬உ௪௬.)

**ஓங்கலுப்பவன்**— } காந்தபாஷாணம்.
**ஓங்கலுறவன்**— }

**ஓங்காரம்**—ஓம் என்னும் பிரணவமந்திரம். (உ-ம்.) "அருமறையுந்தேறரிய-வோங்காரமூலத்துணர்வாயுறைபகவன்" (கந்தபு. சிங்கமுகாசுரன்வதை. ௬௭௬.) [ஓம்கார:.]

**ஓங்காரவுரு**—1. கௌரிபாஷாணம். 2. பிரணவவடிவம்.

**ஓங்காரன்**—பிரணவரூபி. (உ-ம்.) "ஓங்காரன்காணூழிமுதலானான்காண்" (தேவார. திருவாரூர். உ. திருநாவு.)

**ஓங்காரித்தல்**—1. உறக்குதல். 2. ஓங்காரமுச்சரித்தல்.

**ஓங்காளம்**—வாந்தி.

**ஓங்கில்**—ஒருமீன்.

**ஓங்குதல்**—1. அதிகப்படல். (உ-ம்.)"உரையிறந்தவன்பருளத்தோங் கொளியாயோங்கி" (தாயு. பராபர. ௬.) 2. உயர்த்துதல். 3. உயர்தல். ( உ-ம். ) "ஓங்குதேர்மிசைக்குமரவேண்மேவலும்" ( கந்தபு. படையெழுச்சி. ௪. ) 4. எழும்பல். (உ-ம்.) "அகிலமுற்றுமா-யோங்கிய கால்களும்" ( கந்தபு. திருவவதார. ௪அ. ) 5. தேறுதல். 6. பெருமையுறல். (உ-ம்.) "ஓங்குமெய்ப்பொருட்கு மேலாமோரெழுத்து" (கந்தபு. அயனைச்சிறைநீக்கு. ௪உ.) 7. வளர்தல்.(உ-ம்.) "செறிந்தொர்செம்மலர - யோங்குபு" (கந்தபு. திருவவதார. ௭௫.)

**ஓங்குவித்தல்**—உயரச்செய்தல்.(உ-ம்.)"சிரங்குவிவாரோங்குவிக்குஞ்சீரோன்கழல்வெல்க" (திருவாச. சிவபுராண. ௧0.)

**ஓச்சர்**—1. கணக்காயர். 2. பதினெண்குடிமக்களுளொருவர்.

**ஓச்சல்**—ஓச்சுதல்.

**ஓச்சி**— எடுத்து. (புறநா.)

**ஓச்சு**—1. ஒச்சென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 2. சம்யுத்தபதங்கள் வரப்பெறும் வாசகநடை. 3. சீரசேவத்துவம். 4. சீரபெலம். 5. தோற்றம். 6. நீர். 7. பிரகாசம்.

**ஓச்சுதல்**— 1. எறிதல். (உ-ம்.) "செழியன் செண்டெடுத்-தூந்தியன்ஞேச்சலும்" (காஞ்சிப்பு. நகர. ௬௭.) 2. ஓங்கல். (உ-ம்.) "மணிக்கற்கவணிட்டுக்-கையாலெடுத்தூக்கடிதோச்சிவீசினளே" (கந்தபு. வள். ௫௬.) 3. ஓடச்செய்தல். (உ-ம்.) "கரதலமெடாநின்றேச்ச" (கந்தபு. காவிரிநீங்கு. ௬௬.) 4. குத்துதல். (உ-ம்.) "ஒருபுனிற்றுபோற்றுமவன்மேன்மருப்போச்ச"(பெரியபு. சண்டேசு. ௧௭.) 5. செலுத்தல். (உ-ம்) "ஓசம்" பார். 6. தூண்டிவிடல்.

**ஓசம்**— 1. ஆண்குறி. 2. ஆதாரம். 3. கீர்த்தி. 4. நிமித்தம். (உ-ம்.) "ஓசரம்" பார். 5. பிரகாசம். (உ-ம்.) "ஓசவன்றிகிரியோச்சி" (பாரத. இந்திரப்பிரத்த. ௬௬.) 6. பிராணத்துவம். 7. வலிமை. 8. வெளிப்படுந்தோற்றம். [1, 2, 6, 7, 8. ஓஜம்.]

**ஓசரம்**— நிமித்தம், [ தெலுங்குபாஷையிலுள்ள "கோசரம்" என்னும் பதம் திரிந்து "ஓசரம்" என்றும், "ஓசம்" என்றும் தமிழிலே வழங்கி, "நிமித்தம்" எனப் பொருள்படுகின்றது.]

**ஓசரி**—1. அதிசயக்குறிப்பு. 2. கேடு. 3. துக்கக்குறிப்பு.

ஓசன்—1. உபாத்தியாயன். 2. பிடாரிகோயிற்பூசாசாரி; இஃது: இக்காலத்தில் பூசாரி என மருவிவழங்குகிறது.

ஓசனித்தல்— 1. பறவைசிறகடித்தல். (சூ. நிகண். ௯: எ௦.) 2. போதற்கொருப்பட்டுமுயலல். (சிலப்பதி.)

ஓசனை—யோசனையளவு. அது: நாற்காதம். (சிந்தா.) [யோஜநா- என்னும் வடசொற்சிதைவென்பர். மணிமேகலையில்.]

ஓசீவனம்—1. பிழைப்பு. 2. போசநோபாயம். (சப்த.) [ஒஜ் - சீவித்தல்: ஜீவநம்.]

ஓசுநர்— 1. எண்ணெய்வாணிகர். (உ-ம்.) "பன்னிணவிலைஞரோ-டோசுநர்செறிந்தவூன்மலியிருக்கையும்"(சிலப்.இந்திரன்விழவு. உஎ.) 2. பரவர். (சிலப்.)

ஓசை— 1. ஒலி. (உ-ம்.) "ஓசைபெற்றுயர் பாற்கடல்" (இராமா. அவையடக். ௪.) 2. கீர்த்தி. 3. பிரசித்தி. 4. வாழை. (மலையகராதி.)

ஓசையுடைமை— நூலழகுபத்தினொன்று; அது: சந்தவின்பமுடையதாயிருத்தல். (நன். பாயிர. க௩.)

ஓசையூட்டுதல்— செய்யுளோசையை இசையச்செய்தல். (யாப். காரிகை. ஒழிபி. ௩. உரை.)

ஓட்டம்—1. உதடு. 2. ஓடுதல். (உ-ம்.) "வாலிவெரீயினனோட்டமெடுத்தான்" (காஞ்சிப்பு. மணி. க௮.) 3. தோல்வி. (சூ. நிகண். கக: கரு.) 4. நீரோட்டம். 5. மேலுதடு. (சூ. நிகண். கக: தகரவெ. கரு.) [1, 5. ஒஷ்ட.]

ஓட்டரோகம்— உதட்டில் வரும் ஒருவகை நோய். (சீவரட். உஎக.)

ஓட்டல்—ஓட்டுதல்.

ஓட்டாங்கிளிஞ்சில்—ஒருமீன்.

ஓட்டாங்குச்சு—கலவோடு.

ஓட்டாம்பாரை—ஒருமீன்.

ஓட்டி — 1. ஓடச்செய்வோன். 2. கெடுத்து. (புறப்பொருள்வெ.) 3. கொவ்வைக்கனி.

ஓட்டு—1. ஓடுதல். 2. ஓட்டென்னேவலும், தெரிநிலை வினைப்பகுதியும், வினைத் தொகையும்.

ஓட்டுக்காந்தம்—ஒருவகைச்சரக்கு.

ஓட்டுத்துத்தி—ஒருபூண்டு.

ஓட்டுதல்—1. உட்செலுத்தல். (உ-ம்.) "குடத்துட்செங்கையோட்டுதல்போல" (தாயு. ஆகாரபு. உக.) 2. ஓடச்செய்தல். (உ-ம்.) "உருவிளைக்கட்டியாட்டியோட்டி" (சி. சி. ௪: க௩.) 3. செலுத்தல். ( உ-ம். ) "மாமடலேறிநம்மூர்த்தெருவதனி-லோட்டுவேன்" ( கந்தபு. வள். க௩௬.)

ஓட்டுமுத்து—உள்வயிரமற்றமுத்து.

ஓட்டை— துவாரம். (உ-ம்.) "அருவிசலம் பாயுமோட்டை" (திருப்பு. ௬உஉ.) [ஓடு-பகுதி. ஐ-கருவிப்பொருள்விகுதி. உள் விட்டநீர் ஓடும் வழி என்றபடி.]

ஓட்டைவாயன்— மறைக்கவேண்டியவைகளையும் மறையாதுவெளியாகப்பேசுகிறவன்.

ஓடதி— 1. ஒருமுறைமாத்திரங்காய்த்துப்படும் மரம். 2. பூண்டு.(உ-ம்.)"திங்கட்புத்தே-ணயம்படு செறிவான்மிக்கவோடதிநாதனென்" (வேதாரணியபு. வன்னி. க௬.) 3. கொடிமுதலாகிய மருத்துப்பூண்டு. (உ-ம்.) "ஓடதிநிறைத்தார்" (இராமா. அகலிகைப். உ௩.) [ஒஷதி.] (சப்த.)

ஓடதிபதி—1. சந்திரன். 2. மருந்துச்சரக்கு வியாபாரி. 3. வைத்தியன். [பதி.]

ஓடதீசம்—1. கர்ப்பூரம். 2. துரோணபர்வதம்.

ஓடம்— 1. செங்கருங்காலி. (மலையகராதி.) 2. தோணி. (உ-ம்.) "வெம்பியவேடருளீர்துறையோடம்விலக்கீரோ"(இராமா. குகப். க௯.) [இவ்வோடத்தை, குதிரைமுக ஓடம், யானைமுக ஓடம், சிங்கமுக ஓடம் என மூவகையாகக் கூறுவர்.] (சிலப்.) 3. நெய்வோர்கருவியினொன்று. 4. மகநட்சத்திரம். ( இராசவைத். ) [ 2. ஹோட - போதல்.]

ஓடல்—1. ஓடுதல். 2. கெடுதல். (உ-ம்.) "ஓடாமறவர்" (கலி. கரு.)

ஓடவைத்தல்—புடமிடுதல்.

ஓடன்—ஆமை.

ஓடாணி—ஆபரணக்கடைப்பூட்டாணி.

ஓடாவி— 1. சித்திரகாரன். 2. தச்சன். 3. மரக்கலஞ்செய்வோன்.

ஓடி—1. ஓடுவது. 2. ஓடுவாள். 3. ஓடுவான். 4. வனநெல். [ஒடீ.] (சப்த.)

ஓடிகை—வனநெல். [ஒடிகா.] (சப்த.)

ஓடியம்— 1. சபைக்கடாப்பேச்சு. 2. பரிகாசம்.

ஓடு—1. ஆமைமுதலியவற்றினோடு. 2. இரப்போர்கலம். (உ-ம்.) "நீசர்மனைதொறுமோட்டிரந்துழல்கை" (ஞானவா. மூமூட்சு. கரு.) 3. உடைந்தமட்பாண்டத்தின் துண்டம். (உ-ம்.) "ஓட்டினையெடுத்தாயிரத்தெட்டுமாற்றுக வொளிவிடும்பொன்னுக்குவீர்"(தாயு. சித்தர். உ.) 4.

ஓடென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 5. நீளுதல். 6. மூன்றாம் வேற்றுமையிலே உடனிகழ்ச்சிப்பொருளிலேவரும் ஓர் உருபு. 7. வித்துமுதலியவற்றினோடு. 8. வீடுவேயுமோடு.

**ஓடுதல்**— 1. உயர்வு. (உ-ம்.) "ஓட்டறநிவந்தவண்டப்பித்திகை" (கூர்மபு. பிரமவிஷ்ணு. கஉ.) 2. கெடுதல். (உ-ம்.) "வாடுபுவனப்போடி" (கலி. கசு.) 3. நீர் முதலிய ஓடுதல். 4. நீளல். 5. வருந்துதல். (உ-ம்.) "ஓடியதுணர்தலும்" (சிறுபா. உகச.) 6. வளர்தல். 7. விரைந்துசெல்லல். (உ-ம்.) "எல்லோருமோடினமால்" (கந்தபு. மார்க்கண்டேய. கஎ.) 8. வெடித்தல்.

**ஓடும்**—ஓரசைச்சொல். (உ-ம்.) "தூணினோடுமுளனோசொலென்று" (கூர்மபு. அந்தகா. ௪௬.)

**ஓடுவிப்புநதி**— அரித்தரித்துச்செல்லுமொருபுண்.

**ஓடை**—1. அகழி. 2. உலவைமரம். (சூ. நிகண். ௪: உ௰.) 3. ஒருபடர்கொடி. 4. கிலுகிலுப்பை. (மலையகராதி.) 5. குளம். (உ-ம்.) "தக்கமேருமாமலைமகனோடையில்" (திருவிளை. வலை. உ௬.) 6. சந்தனம்வைக்குமடல். (சிந்தா.) 7. நீரோடை. 8. நெற்றிப்பட்டம். (சூ. நிகண். கக: டகரவெ. கக.) 9. மலைவழி. 10. யானைநுதற்பட்டம். (உ-ம்.) "விளங்கோடைய- வினைநவின்றபேர்யானை" (மதுரை. ௪௬.) (1, 9. பிங்கல. ௬உ௪எ.)

**ஓணம்**— 1. திருவோண நாள். 2. நதி. (உ-ம்.) "ஓலமார்கங்கையாதியோணநீராடலெல்லாம்" (சேதுபு. தோத்திர. ௪௮.)

**ஓணான்**—ஓந்தி.
**ஓணான்குத்தி**— } ஒரு பருந்து.
**ஓணான்கோத்தி**— }

**ஓந்தி**—ஓந்தி. (உ-ம்.) "எள்ளென்றுமோத்தியென்றும்" (கந்தபு. மாயை. ௪௬.)

**ஓத்திரம்**—யாகம். [ஹோத்ரு.] (சப்த.)

**ஓத்திரி**—1. யாகஞ்செய்கிறவன். 2. யாகத்திலே இருக்குவேத கீதங்களைப்பாடுகிற ஆசாரியன்.

**ஓத்திரீயம்**—யாகஞ்செய்யுமிடம்.

**ஓத்திரீயன்**—யாகஞ்செய்யுமாசாரியன்.

**ஓத்து**— 1. ஓதப்படுவேது. 2. ஓரினப்பொருளை ஒருவழி வைத்திருப்பதாகிய இயல். (உ-ம்.) "நேரினமணியைநிரல்படவைத்தாங் - கோரினப்பொருளையொருவழிவைப்ப - தோத்தெனமொழிபவுயர்மொழிப்புலவர்" (நன். பொதுப்பா. கசு.) 3. விதி. 4. வேதம். (உ-ம்.) "மறப்பினுமோத்துக்கொளலாகும்" (வள். க௩௪.) 5. வேதாந்தஞானம். (உ-ம்.) "அகத்தியனுக்கோத்துரைக்குமருட்குருவாங்குருளை" (சி. சி. பாயிர. க. சிவாக். உரை.)

**ஓத்துமுறைவைப்பு** — முப்பத்திரண்டுத்திகளுள் ஒன்று; அஃது: இயல்களைக்காரணகாரியமுறைப்படிவைத்தல். (நன். பொதுப். க௪.)

**ஓத்துரைப்போர்**— 1. கணக்காயர். (பிங்கல. அ௪௬.) 2. வேதம்படிப்பிப்போர். 3. வேதமோதுவோர்.

**ஓதக்கால்**—ஆனைக்கால் என்னும் நோய்.

**ஓதநம்**—1. உண்டி. (உ-ம்.) "உந்துவெம்பசிபெரிது வல்லேயெனக் கோதனமிடுகென்றான்" (பாரத. காண்டவதகன. உ.) 2. சோறு. (உ-ம்.) "ஓதனமுண்டுதமூந்திநிறைப்பார்" (சேதுபு. மங்க. ௫.) 3. பெருமை. [2. ஓதநம்.]

**ஓதப்புரோதம்**—நூல்கள் நீளத்திலுங்குறுக்கிலும் ஓட நெசவுசெய்யப்பட்டது. (உ-ம்.) "இந்தப்பிரபஞ்சமெல்லாம் எப்போதும் ஓதப்புரோதரூபமாய் மேலுங்கீழுமாகச் சிருட்டிக்கப்பட்டிருக்கின்றனவோ" (சி-வி. க. ஞானபா. வியாக்கியானம்.)

**ஓதம்**— 1. அண்டவாதநோய். 2. ஈரம். 3. கடல். 4. கடற்றிரை. (புறப்பொருள்வெ.) 5. குறுக்கேநூலோடித்தைக்கப்பட்டது. 6. நெய்யப்பட்டது. 7. பெருக்கு. 8. வெள்ளம். (உ-ம்) "எங்கோன்புரிதருகருணையென்னு- மோதத்தினொழுக்குமென்ன"(கந்தபு. இந்திரனருச். ௬.) (1, 2, 3. பிங்கல. ௬உ௫௰.) [5, 6. ஓத.]

**ஓதல்**—1. ஒழிதல். (உ-ம்.) "ஓஒதல்வேண்டுமொளிமாழ்குஞ்செய்வினை" (வள். ௬௫௬.) [ஓவுதல் என்றது குறைந்து நின்றது.] 2. சொல்லல். (உ-ம்.) "ஓதரியசுகர்போல" (தாயு. ஆகார. ௬உ.) 3. படித்தல். (உ-ம்.) "ஓதியுணர்ந்தும்பிறர்க்குரைத்தும்"(வள். அ௬௪.) 4. போதித்தல். 5. மந்திரஞ்செபித்தல். 6. வேதாத்தியயனஞ்செய்தல். (உ-ம்.) "ஓதற்றொழிலுரித்துயர்மூவர்க்கும்" (அகப்பொருள். அகத். ௬க.)

**ஓதவனம்**—கடல். (உ-ம்.) "அறையோதவனஞ்சூழ்புவியரசானவனைத்தும்" (பாரத. அருச்சுனன்றீர்த்த. உ.)

**ஓதன்மை**—1. ஓதற்றன்மை. 2. பாடல்.

**ஓதா**—யாகஞ்செய்வோன். (உ-ம்.) "அத்துவரியு" பார். [ஹோதா.]

**ஓதி**—1. அவதிஞானம். (உ-ம்.) "இடமொழித்தினியனாகி - யுற்றவனிலையுமெல்லாமோதியினுணர்ந்துகொண்டான்" (சிந்தா. குணமாலை. க௦க.) (ஜைந.) 2. அறிவு, ஞானம். 3. இடங்கழிமை. 4. ஓந்தி. 5. கல்வி. 6. கற்றோன். (பிங்கல. ௬உ௫உ.) 7. சொல்லுகிறவன், சொன்னவன். (உ-ம்.) "அருமறையாகம-மோதிபோற்றி" (சூத. திருமாலகம்பாவந். ௬௬.) 8. பாடி. (சிறுபா. உஉ.) 9. பூனை. 10. பெண்மயிர். 11. போர் 12. மலை. (உ-ம்.) "ஓதியிதில்வந்தனமுனக்கருளவென்றான்" (சேதுபு. சருவதீர்த்த. ௬௬.) (2, 4, 8, 9. சூ. நிகண். கக: தகரவெ. அ.)

**ஓதிமம்**—1. அன்னம். (உ-ம்.) "அயர்வறுமோதிமம்" (நைடத. அன்னத்தைத்தூது. க௦உ.) 2. கவரிமா. 3. புளியமரம். (மலையகராதி) 4. மலை. (உ-ம்.) "ஒன்றுபொன்னிலங்குமேருவா-மோதிமம்" (இரகு. நகர. ௫.)

**ஓதிமமுயர்த்தோன்**—பிரமன். (சூ. நிகண். க: க௫.)

**ஓது**—ஓதென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும்.

**ஓதுதல்**—"ஓதல்" பார்.

**ஓதுவார்க்குணவிடுதல்**— அறம் முப்பத்திரண்டனுளொன்று; அது: மாணாக்கர்க்கு உணவூட்டுதல். (சூ. நிகண். கஉ: க௬௬.)

**ஓதுவான்**— 1. ஆசான். 2. திருப்பாட்டுப்பாடுவான். (உ-ம்.) "காதலாகிக்கசிந்துகண்ணீர்மல்கி - ஓதுவாருளத்து" (சூத. திருமாலகம்பாவந். ௬௪.) 3. படிப்பவன்.

**ஓதுவித்தல்**— வேதாத்தியயனஞ்செய்வித்தல், படிப்பித்தல்.

**ஓதை**—1. ஒலி. (உ-ம்.) "பரவையினிமிர்ந்தவோதையமர்ந்தபின்" (பாரத. கிருட்டிண. க௯அ.) 2. காற்று. (உ-ம்.) "விரைவினோதை" (கந்தபு. கடல்பாய். அ.) 3. பேரொலி. 4. மதில். 5. மதிலுண்மேடை. 6. மலை. (3, 4, 5. பிங்கல. ௬உ௫௬.)

**ஓதைவாரி**—இறகு.

**ஓந்தி**—ஓணான். (பிங்கல உ௫உக.)

**ஓநாய்**—ஒருவிதநாய்.

**ஓப்பல்**—துரத்தல். (உ-ம்.) "குருவியோப்புதங்கவண்கலால்" (தணிகைப். நாட்டு. சச.)

**ஓப்புதல்**—ஓட்டுதல். (சிலப். கானல்வரி. கூ.)

**ஓம்**—1. சம்மதத்தையுணர்த்தும் ஓர் இடைச்சொல். (உ-ம்.) "ஒன்றுங்கதிர்முடியாற்கோமென்றுரைத்தருளி" (பாரத. கிருட்டிண. ச௦.) 2. சிருட்டிகர்த்தா, திதிகர்த்தா, சங்காரகர்த்தா ஆகிய மூவரும் தோற்றுதற்குரிய ஈசனாகிய ஒருவன் எனப் பொருள்படும் பிரணவமந்திரம். (உ-ம்.) "மாமணாளனேவநசநாதனே - காமநாசனேகாணுமீசனென்-றுமெனும்பொருளாதிமூலமா - மோமெனும்பதமோதிநின்றதே" (சேதுபு. சிவதீர்த்த. கூஎ.) [இப்பிரணவத்திற்குப் பொருள் திரிமூர்த்திகளென்று சிலர் சொல்லுவது பொருந்தாதென்பது காஞ்சிப்புராணம் குமரகோட்டப்படலத்திற்கூறுமாறுகாண்க.] 3. தன்மைப்பன்மைப்பொருளிலே வரும் ஒரு விகுதி. (உ-ம்.) "யாம்கண்டோம்" 4. பௌத்தர் செபிப்பதொருமந்திரம். (மணிமே.)

**ஓம்படல்**—சம்மதித்தல்.

**ஓம்படுத்தல்**—பாதுகாத்தல். (தொல். சொல். கூஎ. சேனா.)

**ஓம்படை**— 1. ஆதரவுசெய்தல், அன்புசெய்தல். (உ-ம்.) "தந்தையுட - னனைபிரமசாரிபிணியாக்கையினரநாதர்களா- யுனையடையுமவர் தம்பாலோம்படைசெய்" (சேதுபு. கவிசம்பு. கூஎ.) 2. கையடை. 3. பரிகாரம். (சிந்தா.) 4. பாதுகாத்தல் (உ-ம்.) "ஓம்படைசாற்றற்பாலதுள்ளவர்க்காகுமன்றே" (சிந்தா. கனக. கஅஉ.)

**ஓம்படைக்கிளவி**— 1. கையடைவாக்கு. 2. (அகப்பொருள்) தலைவற்குத்தலைவியைப்பாதுகாத்துகொள்ளெனக்கூறுங்கிளவி. (உ-ம்.) "ஓம்படைக்கிளவிப்பாங்கின்கண்ணும்" (தொல் பொருளதி. ககச.) 3. பெரியோர்சொல்லும்புத்தி.

**ஓம்பல்**— 1. ஆதரவுசெய்தல், பேணுதல். (உ-ம்.) "குடிபுறங்காத்தோம்பிக்குற்றங்கடிதல்" (வள். ௫சக.) 2. உண்டாக்கல், செய்தல். (உ-ம்.) "ஈசனருளாலெரிவேள்வியையோம்பி" (கந்தபு. அசுரர்யாக. கூக.) 3. காவல்செய்தல். (உ-ம்.) "அகன்றிடாதோம்பிற்றன்றே" (கந்தபு. சூரபன்மன்மூன்றுநா. ககூஎ.) 4. தவிர்தல். (உ-ம்.) "அஞ்சலோம்பென்னு-நன்னர்மொழியும்" (கலி. உக.) 5. பாதுகாத்தல். (உ-ம்.) "குடியோம்பிக் - கொள்ளுமாகொள்வோர்க்கு" (நீதிநெறிவி. உகூ.) 6. வளர்த்தல்.

**ஓம்புதல்**—பரிகரித்தல். (பத்துப்.)

**ஓமகுண்டம்**— வேள்விக்குரிய அக்கினியை மூட்டும்பொருட்டு நிலத்திலே தோண்டப்பட்டகுழி. (உ-ம்.) "உள்ளுறவாயிரவாயிரயோசனையுறுநீளங் - கொள்வதொராழமுமாயிடவோரோமகுண்டந்தா - னள்ளிடையேபுரிவித்தனன்" (கந்தபு. அசுரர்யாக. ௬உ.)

**ஓமத்திரவியம்**—யாக உபகரணம். [கிருத அகிருதம் கிருதாகிருதம் என ஓமத்திரவியம

மூவகைப்படும் என்றும், கிருதமென்பது பாகஞ்செய்யப்பட்ட அன்னம்,மா முதலியவையும், அகிருதம் என்பது பாகஞ்செய்யப்படாத தானியம் முதலியவையும், கிருதாகிருதமென்பது குத்தலால் ஒருவித பாகஞ்செய்யப்பட்டவையும், அன்னம்போலப்பாகஞ்செய்யப்படாதவையுமான அரிசிமுதலானவையும் என்றுஞ்சௌநகர் சொன்னார். (பராசர. சுரு.)

ஓமப்பொடி— 1. யாக நீறு. 2. ஒருவித பக்ஷணம். (வழக்.)

ஓமம்— 1. அசமதாகம். 2. அப்பிரகம். 3. ஒருபூண்டு. 4. தாளகம். (இராசவைத்.) 5. நெய். (இராசவைத்.) 6. பலி. (ப-ம்.) 7. பிராமணர்செய்யும் ஐவகைத் தேவயஞ்ஞைகளுள் ஒன்று; அஃது: அக்கினியில் நெய்யூற்றிச்செய்யும் யாகம். (உ-ம்.) "ஓமம்வேள்வியுதவிதவஞ்செபம்" (சேதுபு. சேதுச. ருக.) 8. யாகம். [ஹோம]

ஓமம்வளர்த்தல்—ஓமாக்கினியை அவியாது எரிந்துகொண்டிருக்கும்படி செய்தல்.

ஓமமண்டபம்—யாகசாலை.

ஓமல்— 1. ஊர்ப்பேச்சு. (உ-ம்.) "ஆரோமல் தரவுமிகமெலிவாளுள்" (திருப்பு. கஉக.) 2. பேச்சுப்பரத்தல்.

ஓமவிறகு—யாகத்திலே எரிக்குஞ்சமிதை.

ஓமாலிகைகள்— நறும்புனலுக்குபயோகமாகும் முப்பத்திரண்டுவகைச்சரக்குகள்; அவை. "இலவங்கம், பச்சிலை, கச்சோலம், ஏலம், நாகணம், கோட்டம், நாகம், மதாவரிசி, தக்கோலம், நன்னாரி, வெண்கோட்டம், கத்தூரிவேரி, இலாமிச்சம், கண்டில்வெண்ணெய், கடு, நெல்லி, தான்றி, துத்தம், வண்ணக்கச்சோலம், அரேணுகம், மாஞ்சி, சயிலேகம், புழுகு, நறும்புன்னை, நறுந்தாது, புலியுகிர், சரளம், தமாலம், வகுளம், பதுமுகம், நுண்ணேலம், கொடிவேரி என்பனவாம். (சிலப்.) சிந்தாமணியிற்சில வேறுபடக்கூறுவர்.

ஓமான்—ஒந்தி, (பிங்கல. உ0உக.)

ஓமி—1. ஓமஞ்செய்கிறவன். 2. தீ. 3. நீர். 4. நெய். [1, ஹோமி ந். 2, 3, 4. ஹோமி]

ஓமிடி—கேடு.

ஓமிடிதல்—கேடுறல்.

ஓமித்தல்— ஓமஞ்செய்தல்.(உ-ம்.)"தரைப்படுதாவரசங்கமங்களென்- றுரைப்பனயாவையும் வாரியோமித்தான்" (உபதேச. பண்டாசு.சுரு.)

ஓமியம்—யாகம். (உ-ம்.) "ஓமியஞ்செய்தங்குள்ளத்துணர்மினோ" (தேவார. திருக்குடமூக்கு. அ. திருநாவு.)

ஓமுடிதல்—அழிதல்.

ஓமை— 1. பாலைநிலத்திற்குரிய ஒருவகைமரம். (உ-ம்.) "கவட்டினோமைசாய்த்தாறலைகள்வரூர்கலக்கித் - தெவிட்டிவந்தது" (கந்தபு. ஆற்று. கச.) 2. மாமரம். (உ-ம்.) "வெண்குன்றிப்பருப்போமைக்கொட்டை" (தைல. தைலவ. கககூ.)

ஓய்– 1. ஒருமையிலேவருமொருவிளியுருபு. (உ-ம்.) "சாத்தாவோய்" "ஆயாளியேயவ்வோடாவானேலோயீரளபெடைகாள்- மாயாவிளியினுருபுகண்மற்றிவை" (வீரசோ. வேற்றுமை. அ.)2. ஒயென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும்,வினைத்தொகையும். 3. பெயரைவெளிப்படையாய்ச்சாராதும் விளித்தற்கண்வழங்கப்படும் ஒருசொல். (உ-ம்.) "ஓய்நாளைவருக"

ஓய்தல்—1.அழிந்தொழிதல்.(உ-ம்.)"நெடுங்கால- மூனையானிருந்தோம்புகின்றேன்கெடுவேனுயிரோயாதே"(திருவாச. திருச்சத.கூஅ.) 2. செயல்விட்டொழிதல். (உ-ம்.) "ஒய்ந்தகனுவிற்கண்டபழங்கதையோதுவன்" (கைவல். சந்தேகந்தெளி. ககூ.) 3. செலுத்துதல். (புறநா.) 4. தளர்தல், சோர்தல். (உ-ம்.)"மேனி-யோய்ந்துவந்தவரை" (சி.சி.பர. லோகாயத. அ.) "கடகளிறுவந்ததுகண்- டோயுமுணர்வெய்தி" (கந்தபு. மார்க்கண்டேய. கஎ.) 5. பண்டு உள்ளதொன் றதுநுணுகுதல். (உ-ம்.) "வேனிலுழந்தவறிதுயங்கோய்களிறு" (தொல்.சொல்.ககூ0. உரை.) 6. விட்டுநீங்குதல். (உ-ம்.) "ஓயாவுள்ளன்பாயுருகி" (தாயு. ஆகாதோவென்கண்ணி. கசு.) 7. இளைப்பாதல்.

ஓய்வு—ஓய்தல்.

ஓய்வுநாள்—இளைப்பாறியிருக்குநாள்.

ஓயல்—ஓய்வு.

ஓயாமை—இடைவிடாமை. (உ-ம்.) "ஓயாதேயுள்குவாருள்ளிருக்குமுள்ளானை" (திருவாச. திருவம்மானை. எ.)

ஓர்— 1. ஒன்று என்னும் எண்ணுப்பெயரின்விகாரமாய் வேற்றுமையுருபேலாததாய்ப் பெயர்ச்சொல்லுக்குமுன்னாகவருவதொருமொழி. (உ-ம்.) "ஓர் கலம்; ஓர் நாழி; ஓர்யானை" (நன். உயிரீ. கூஅ, ககூ. சடகோப.) [தொல்காப்பியர் ஒரு என விகாரப்பட்டுநின்ற எண்ணுப்பெயர், உயிர் முதன்மொழியும் யா முதன்மொழியும் வருமொழியாய்வருங்காலத்தே ஓர் என வருமென்பர்.] 2 ஓரிடைச்சொல். (சிலப்.) 3. ஓர் என்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். (உ-ம்.) "கொலையினையோரவுணர்புரநொடிவரையிற் பொடியாகக்கு

னித்த மேருச்-சிலையினையோ" (திருவிளை. இடைக்காடன். கசு.)

ஓர்க்கோலை—கடல்படுதிரவியத்துளொன்று. (சிந்தா. நாம. கூச. உரை.) ஒக்கோலை எனவுங்கூறுவர் (சூ. நிகண். கஉ: சசு.)

ஓர்கட்புள்— காகம். இரண்டுகண்ணிருக்கினும் ஒருகட்பார்வையுடையதால் வந்தபெயர். (உ-ம்.) "காகத்திருகண்ணிற்கொன்றேமணிகலந்தாங்கு" (திருக்கோ. எக.)

ஓர்குடியிற்கொண்டோன்—சகலன். (சூ.நிகண்: உ. எஎ.)

ஓர்குண்டலன்—பலபத்திரன். (சூ. நிகண்: க: க0.)

ஓர்ச்சி— 1. ஆராய்ச்சி. 2. ஞானம். (உ-ம்.) "ஓர்ச்சியின்புருவாகி" (வேதாரணியபு. வரன். ருரு.)

ஓர்த்தல்— 1. ஆராய்தல். (உ-ம்.) "அறுவகைச்சமயத்தோர்க்குமவ்வவர்பொருளாய்" (சி. சி. பாயிர. க. சிவஞாந.) 2. நினைத்தல். (உ-ம்.) "அந்தணர்வேள்வியோர்க்கும்"(திருமுரு.கசு.)

ஓர்தல்—1. ஆராய்தல். (உ-ம்.)"நீதியையேயோர்மநமே நீ" (தாயு. உடல்பொய்யுறவு. கூ.) 2. தெளிவாயறிதல். (உ-ம்.) "பீடலிங்கத்தினியல்புமோரார்" (சி. சி. க: சுக.) 3. நினைத்தல். (கலி. கூக.)

ஓர்ப்பான்—அறிகிறவன். (உ-ம்.) "சென்றிவற்றை-யோர்ப்பான்வேறுணர் வோர்க்கெல்லாமுணர்பொருள்வேறதாமே" (சி. சி. ச. ரு.)

ஓர்ப்பு—1. ஆடவர்குணம் நான்கினொன்று; அஃது: ஓர்மம். (சூ. நிகண். கஉ: கசு.) 2. உயிர்க்குண மூப்பத்திரண்டனுளொன்று; அஃது: ஆராய்ந்துதெளிதல். (நன். உரியிய. கக.) 3. கருமமுடிக்குந்துணிவு. 4. பொறுமை.

ஓர்பு—1. ஆராய்தல். 2. சிந்தித்தல்.

ஓர்மம்—மநத்திடன்.

ஓர்மிப்பு—ஓர்மம்.

ஓர்மை—துணிவு.

ஓர்வு—1. அறிதல். (உ-ம்.) "ஓர்வரியபவக்கடலின்வீழுமுயிர்" (கூர்மபு. திருக்கல். உ.) 2. ஆராய்வு. (உ-ம்.) "ஓர்வகற்றிருள்" (வைராக். தீப. க0.)

ஓரக்கண்ணன்— 1. சாய்ந்தபார்வையுடையவன். 2. பட்சபாதன்.

ஓரக்காரன்—பட்சபாதக்காரன்.

ஓரகத்தி — கணவனுடைய சகோதரன்மனைவி.

ஓரசைச்சீர்— தனித்து நேரசையானுதல் நிரையசையானுதல் வருஞ்சீர். (யாப். காரிகை. உறுப்பியல். எ.)

ஓரடிமடக்கு— மடக்கலங்காரத்துளொருவகை; அது: நான்கடிச்செய்யுளுள் ஓரடிமாத்திரம் மடங்கிவருவது. "துறைவாதுறைவார்பொழிற்றுணைவர்நீங்க" என்பதிற்போல.

ஓரபட்சம்—ஓரவாரம்.

ஓரம்—1. சத்திசாரமாகிய ஒருவகை உப்பு. 2. நீதிதப்பி ஒருபக்கத்தைச்சார்ந்திருத்தல். (உ-ம்.) "மன்றோரஞ்சொன்னார்மனை" (நல்வழி. உரு.) 3. பக்கம். 4. விளிம்பு.

ஓரல்— 1. ஒடுக்கமானது. 2. ஓர்தல். 3.தெளிதல்.

ஓரவாரம்—நெறிதப்பி ஒருபக்கத்திலே பற்றுவைத்தல்.

ஓரறிவுயிர்—புன்மரமுதலியன. (நன். உரியிய. ச.)

ஓரனையர் — ஒருதன்மையராக ஒப்பவர். (உ-ம்.) "குறித்ததுகூறுமைக்கொள்வாரோடேனை-யுறுப்போரனையரால்வேறு" (வள். எ0ச.)

ஓரா— 1. ஒருமீன். 2. ஓர்ந்து, வினையெச்சம். 3. ஓராத என்னும் ஈறுகெட்ட எதிர்மறைப்பெயரெச்சம்.

ஓராவோட்டி—ஓரா.

ஓராங்கு-1. ஒருபெற்றி. 2. இடைவிடாது. (1, 2. ஞானமிர்தம்.)

ஓராசிடைநேரிசைவெண்பா — ஓர் ஆசு இடையிட்டுவரும் வெண்பா. (யாப். காரிகை. செய்யுளியல். ச.)

ஓராட்டுதல்—தாலாட்டுதல்.

ஓராயம்—1. சாய்வு. 2. பலகைகளைப்பொருந்த இணைத்தல்.

ஓரி—1. ஆண்மயிர். 2. ஆண்முசு. 3. கடையெழுவள்ளலிலொருவன்; இவன்: கூத்தர்க்கு மலைநாடுகளைக்கொடுத்தோன். (சூ. நிகண். உ: உச.) 4. கிழநரி. 5. குதிரையின்பிடர்மயிர். (உ-ம்.) "ஓரிக்குதிரை ஓரியும்" (சிறுபா. ககக.) 6. நரி. (சூ. நிகண். கூ: உச.) 7. நிறம். (உ-ம்.) "நீனிறவோரிபாய்ந்தென" (மலைபடு. ருஉச.) 8. மயிர். (உ-ம்.) "மேம்பாலுரைத்தவோரி" (பெரும்பா. கஎஉ.) 9. விலங்கினாண்பொது. (சூ. நிகண். கூ: கூ0.) (1,2,4. பிங்கல. கூஉருச.)

ஓரிடம்—1. ஏகதேசம். (உ-ம்.) "ஓரிடத்திருத்தன்மாயாவுருநிறைந்திடுதல்" (சிவப்பி. கூ. சூ. அ.) 2. ஒரு இடம். 3. விசாரிக்குமிடம். (உ-ம்.) "ஓரிடத்துணருமுண்மை" (சிவப்பி. கூ. சூ. அ.)

ஓரிதழ்த்தாமரை—ஒருபூண்டு. (பதார்த்த. கூகுரு.)

ஓரிலைத்தாமரை—ஒரு பூண்டு. (பதார்த்த. கூகூச.)

ஓரிலைத்துத்தி—ஒருபூண்டு.
ஓருதல்—ஓர்தல்.
ஓரும்—1. ஓர் என்னும் பகுதியடியாற்பிறந்த எதிர்காலத்திலும் நிகழ்காலத்திலும் வரும் ஒரு தெரிநிலைவினைமுற்று. 2. ஓர் என்னும் வினையடியாற்பிறந்த செய்யு மென்னும் வாய்பாட்டுத்தெரிநிலைவினைப்பெயரெச்சம். (நன். வினையிய. உக.) 3. ஓரசைச்சொல். (உ-ம்.) "செயற்பாலதோருமறனே" (வள். ௪0.)
ஓருள்ளிப்பூடு— பல பல்லில்லாத உள்ளி.
ஓரேடை—ஓர் அளவு. (தொல்.எழுத்.தொகை. உஅ. இளம்.)
ஓரெழுத்தினப்பாட்டு—ஒரு சித்திரகவி. (சூ. நிகண். கஉ: உ௬.)
ஓரெழுத்துமடக்கு— ஒரெழுத்துத்தானே மடங்கிவருவது. (உ-ம்.) "நாநாநாதங்கூடிசை நாடுந்தொழில்வல்லோர்" (தண்டி.சொல்லணி. க௫.)
ஓரை—1. இடைச்சொல். 2. இரண்டரை நாழிகைகொண்டநேரம்" (சிந்தா. விசேடக் குறிப்பு. ௫0௬-ம் கவி.) 3. இராசி. 4. இராசியினுதயம். (உ-ம்.) "ஏற்றநல்லோரையிலெழுந்தாலன்றோ" (நைடத. நளன் றூது க௫.) 5. இரேகை. 6. குரவை. 7. கூகை. 8. சமயம். 9. தோழி. 10. மகளிர்கூட்டம். 11. மாதர்விளையாட்டு. 12. மாதர்விளையாடுங்கருவிகள். 13. மாதர்விளையாடுங்களம். 14. முகூர்த்தம். (சிந்தா.) (1, 3, 6, 10, 11, 13. பிங்கல. ௬உ௫௫.) [2, 4, 5. ஹோரா.]
ஓரையயர்தல் — ஓரைப்பாவையைக்கொண்டு மகளிர்விளையாடுதல். (உ-ம்.) "மடக்குறுமாக்களோடோரையயரும்" (கலி. அஉ.)
ஓரோரு—ஒவ்வொன்று; இஃது: ஒன்றொன்று என்பன வருமொழிநோக்கி விகாரப்பட்டுவந்த ஒருமொழி. (உ-ம்.) "ஓரொருபுலன்களாகமருவிநின் றறிதலானும்"(சிவப்பி. ௩. உ.)
ஓரோருவர்—ஒவ்வொருவர். (உ-ம்.) "ஓரொருவர்க்கொவ்வொன்றே" (கந்தபு. அண்டகோச. உஅ.)
ஓரொற்றுவாரம்—தாளத்து ஒருமாத்திரை பெற்றுவருஞ்செய்யுள். (சிலப். அரங்கே. க௩௬. உரை.)
ஓரோன்று- ஒவ்வொன்று. (உ-ம்.) "ஓரொன்றையுரைசெயில்" (வை-தீ. ௩0.)
ஓல்—1. ஒலி. (உ-ம்.) "ஓலுறுபெருக்கினண்டமொறுக்குநீடுததிபூடே"(இரகு. நகர.௪உ.) [ஓலம் என்பதின் அம்கெட்டுநின்றது.] 2. விளிவேற்றுமையில் வருமோருருபு. (உ-ம்.)"சாத்தாவோல்" (வீரசோ. வேற்றுமை. அ. உரை.)

ஓலக்கம்—1. சங்கத்தானம். 2. சபாமண்டபம். (உ-ம்.)"அந்தவோலக்கந்தன்னிலருந்தவமுனிவரெல்லாம்-வந்தனர்" (அரிச்ச. விவாக. ௬எ.) 3. சபை.
ஓலம்—1. இடருப்பட்டார் அபயங்கேட்டு இரங்கிக்கூறுமொருசொல். (உ-ம்.) "நண்ணினர்க்கினியாயோலஞானநாயகனேயோலம்"(கந்தபு. சூரபன்மன்வதை. ௪௬0.) 2. ஒலி. 3. கடல். 4. திரை. 5. தூக்கமிகுதியைக்குறிக்குமொருசொல். (உ-ம்.) "சாலநீளுமித்தன்மைநன்மையோ- வோலமோலநீரொழிமினிக்கணம்" (சேதுபு. சிவதீர்த்த. ௬௬.) 6. பாம்பு. (2, 6. பிங்கல. ௬உ௫௬.)
ஓலம்போழ்— ஓலைத்துண்டு.
ஓலமிடுதல்—1. அபயமிடுதல். 2. அழுதல். 3. முழங்குதல். (உ-ம்.) "ஆரறிவாரென்னவநந்தமறையோலமிடும்-பேரறிவே" (தாயு. பராபர. ௫.)
ஓலாட்டுதல்—தாலாட்டுதல்.
ஓலிடுதல்—1. அலறுதல். (உ-ம்.) "கலங்கியெழுந்-தோலிட்டழல்கேட்டு"(சேதுபு. அநும. கஉ.) 2. முழங்குதல். (உ-ம்.) "பணைவிதமோலிட" (பாரத. மணிமான். உ0.)
ஓலை— 1. ஆவணவோலை. (உ-ம்.) "அங்கணரோலைகாட்டியாண்டவர்தமக்கு" (பெரியபு. தடுத்தாட். க.) 2. ஒருவர்மற்றொருவருக்கு எழுதியனுப்பும் முடங்கல். (உ-ம்.) "மன்னுடைமன்றத்தோலைத்தூக்கினும்" (நன். சிறப்பு. எ.) 3. ஒலி. 4. கமுகு, தாழை, தெங்கு, பனை முதலியபுறக்காழனவற்றின் இலையுறுப்பு. 5. காதிலணியுந்தோடு. (உ-ம்.) "ஒருத்திபொன்னோலைகாதணிந்தாள்" (பிரபுலிங்க. மாயைபூசை. க0.)
ஓலைக்கண்—ஓலைச்சட்டம்.
ஓலைக்கணக்கர்—வித்தியார்த்திகள்.(உ-ம்) "ஓலைக்கணக்கரொலியடங்குபுன்செக்கர்" (நாலடியார். காமநுதலியல். எ.)
ஓலைக்கறுட்டு—ஓலைத்துண்டு.[ஓலைக்கிணுட்டென்று வழக்கம்.]
ஓலைக்கிழிஞ்சில்—ஒருவிதசங்கு.
ஓலைதீட்டும்படை— எழுத்தாணி. (சூ. நிகண்: எ: க௪.)
ஓலைப்பூ—தாழம்பூ.
ஓலைமூங்கில்— ஒரு மூங்கில்.
ஓலைவாளை— ஒரு மீன்.
ஓவம்— 1. சித்திரம். (உ-ம்.) "வேறுபட்டவினையோவத்து - வெண்கோயில்" (பட்டின. ௪௬.) 2. சித்திரவேலை.

**ஓவர்**—1. ஏத்தாளிகள். (சிந்தா.) 2. ஓவியர். 3. கம்மாளர். (சூ. நிகண். உ: உஎ.) 4. பாடற்கீழ்மக்கள். (உ-ம்.) "அவிகையோவருமொருவழியகன்றிடவகன்றான்" (திருவிளை. விறகுவிற்ற. ௫0.)

**ஓவல்**—ஒவுதல்.

**ஓவாமை**—ஒழியாமை. (உ-ம்.) "அறவினையோவாதே" (வள். ௩௩.)

**ஓவியகாயம்**— புலி. (பாகவத. காளிந்தி. உ௮.) [ஓவியம் - சித்திரம். இந்திரகோபத்தை வலாரிகோபமென்றாற்போலச் சித்திரகாயத்தை ஓவியகாயமெனப்பட்டது.]

**ஓவியநூல்**— நாடகமகளிர்க்குரியநூல்களுளொன்று. (மணிமே.)

**ஓவியம்**—1. சித்திரம். 2. சித்திரத்தொழில். (உ-ம்.) "ஒவியத்துறைகைபோயவொருவனே" (நைடத. அன்னத்தைக்கண்ணுற்ற. ௫.) 3. பிரதிமை.

**ஓவியர்**—1. சித்திரகாரர். 2. சிற்பநூலோர். (1, 2. சூ. நிகண். கக: வகரவெ. கஎ.)

**ஓவு**— 1. ஓவென்னேவலும், தெரிநிலைவினைப்பகுதியும், வினைத்தொகையும். 2. ஒழிவு, நீக்கம். (உ-ம்.) "ஓவில்செல்வமும்" (கந்தபு. சுக்கிரனுபதேச. ௬௬.) 3. சித்திரம். (உ-ம்.) "ஓவுக்கண்டன்னவிருபெருநியமத்து" (மதுரைக். ௩௬௫.)

**ஓவுதல்**—1. இசைதல். 2. நீங்குதல். (உ-ம்) "மலங்களெல்லா-மோவினபோதுசுத்தமுடையன்" (சி. சி. ௬: ௩எ.) 3. வருந்தல். (உ-ம்.) "ஓவலிற்சங்கையானகருமத்தில்" (ஞானவா. வைராக். ௬௩.)

**ஓவெனல்** — 1. ஓவென்று முறையிடல். (உ-ம்) "ஓ-வென்றேயழைப்பது" (தாயு. பராபர. கக௮.) 2. ஓவென்றொலித்தல்.

**ஓளி**—1. ஒழுங்கு, நிரை. (உ-ம்.) "ஓளிகொண்டசெம்பொன்வெற்பிலுடல்புதைத்த வெழிலிபோல்" (பாரத. வாரணாவத. எ௬.) 2. யானைக்கூட்டம். (சூ. நிகண். கக: ளகரவெ. ௫.)

**ஓற்பலம்**—கோங்கமரம். (மலையகராதி.)

## ஔ.

**ஔ**—[இது, தமிழ்ப்பாஷையின் வர்ணமாலையின் உயிர்வர்க்கத்திலே வரும் பன்னிரண்டாமெழுத்து; அஃது: அங்காந்தும் உதட்டைக்குவித்தும் உச்சரிக்கப்படுவது. அகரமும் உகரமும் வகரமெய் இடையிலே கலக்கச்சந்தித்தப்பிறப்பதோர் எழுத்தாதலால் அதனைச்சந்தியக்கரமென்றுஞ்சொல்வர்.]

1. அநந்தன் என்னும் பாம்பு.
2. பூமி.
3. மேதைகலை. (சி-வி. கிரி. கக: உரை.)
4. விளித்தல், தடுத்தல், உறுதிகூறல் ஆகிய பொருளிலே பிரயோகிக்கப்படும் ஓர் அவ்வியயம்.

**ஔக்குறுக்கம்**—ஔகாரக்குறுக்கம். (உ-ம்.) "ஐக்குறுக்கம்" பார்.

**ஔகம்**—இடைப்பாட்டு. (சிலப். ஊர்காண். கடு௬.)

**ஔகாரக்குறுக்கம்**— தன்மாத்திரையிற்குறுகிய ஔகாரம். (உ-ம்.) "ஐகாரக்குறுக்கம்" பார்.

**ஔகாரம்**—ஔ என்னுமெழுத்து.

**ஔசநசம்**— அட்டாதச தருமசாத்திரங்களுள் ஒன்று; அஃது: உசநர் என்பவராற்செய்யப்பட்டது. [ஔஶநஸ]

**ஔசரம்**—இரும்புக்கல். [ஔஷரம்.]

**ஔசித்தியம்**—தகுதி. [ஔசித்யம்]

**ஔசீரம்**—1. ஆசநம். 2. கவரிமாமயிர். 3. படுக்கை. [ஔஶீரம்.]

**ஔட்டணியம்**— சூடு. [உட்டணத்தாலாயதென்றபடி.] [ஔஷ்ண்ய.]

**ஔட்டரம்**— ஒட்டகத்தோடு சம்பந்தப்பட்டது. [ஔஷ்ட்ரம்.]

**ஔட்டரன்**— கிரியைநிலைகெட்டமையிற்குத்திரனாகிய ஓர் அரச சாதியான். (பராசர. ௪0௩.)

**ஔட்டுமாபகவாதம்**—ஒருவகை வாதரோகம்; இது: சடராக்கினிமிகுதியினாலும் கோபம் துக்கம் முதலிய வேறு காரணங்களினாலும் பிறந்து சரீரத்தின்மத்தியிலே தங்கிப்பித்தத்தோடுகூடி அந்தச்சடராக்கினியின் உட்டணத்தைத்தன்னுடன் சேர்த்துக்கொண்டு உபத்திரவத்தைச்செய்து சிரசிலுங்கபாலத்திலுஞ் சஞ்சரிக்குமோர் உரோகம். [உட்டணமுடைமையால் இப்பெயர்பெற்றது.] (சீவரட். க௬௮.)

**ஔடணம்**—மிளகுரசம். [உஷண- மிளகு.]

**ஔடதம்**—மருந்து. (உ-ம்.) ஔடதமுடலினின்றுடலை- வருந்தல்செய்பிணியெலாமகற்றுதலின்" (வைராக். தீப. ௬.) [ஔஷதம்.]

ஔதும்பரம்—தாமிரம். [ஔடும்பர]

ஔத்தமி—பதினான்கு மனுக்களிலே மூன்றாமனுவின்பெயர். [ஔத்தமி] இவனுக்கு உத்தமியென்றும்பெயர். உத்தமன் என்றுங்கூறுவர். (கூர்மபு. மனுவந்தர. ௧.)

ஔத்தரேயன்— அபிமனுடைய மகனாகிய பரிசித்து. [ஔத்தரேய: உத்தரையின் மகன் என்றபடி.]

ஔத்தாநபாதன்— 1. உத்தாநபாதன் மகனாகிய துருவன். 2. (சோதிடம்) துருவநட்சத்திரம். [ஔத்தாநபாதி:]

ஔத்தாநபாதி— ஔத்தாநபாதன். [ஔத்தாநபாதி.]

ஔத்தாலகம்—புற்றுத்தேன். [ஔத்தாலகம்.]

ஔத்திரிதீட்சை— மும்மலமுடையராகிய ஆன்மாக்களுக்குப் பாசத்தைநீக்கும்பொருட்டாகச் சிவன்குருவடிவுகொண்டு ஓமாகிதமாகச் செய்யுந்தீட்சை; அது குண்டமண்டலம் அக்கினி நெய் சுருக்கு சுருவம் முதலிய அனைத்தும் மாத்தாத் கற்பித்துக்கொண்டு அகத்தே. ஆகுதி முதலிய கிரியைசெய்வதாகிய ஞானாவதி என்றும், அவையனைத்தும் புறத்தேயிலவக்கொண்டு புறம்பே அக்கிரியைசெய்வதாகிய கிரியாவதி என்றும் இருவகைப்படும். (உ-ம்.) "அவற்றினையுத்திரியிரண்டாமறியி - னிலகுஞானங்கிரியையெனஞானமனத்தாலியற்றுவது கிரியையெழிற்குண்டமண்டலாதி - நிலவுவித்துச்செய்தல் கிரியாவதிதான்" (சி. சி. அ: ௬.)

ஔத்துவாகிகம்— விவாகஞ்செய்யும்போது பெண்ணுக்குக் கொடுக்கும் உபகாரக்கொடை. [ஔத்வாஹிகம்.]

ஔதகம்—1. நீரையுடையது. 2. நீரோடு சம்பந்தப்பட்டது. [ஔதக: உதகம் - நீர்.]

ஔதசியம்—பால். (தைல. தைலவ.)

ஔதசிவதம்—1. சரிபங்கான தண்ணீர்கலக்கப்பட்டமோர். 2. மோர் முதலியவற்றாலுண்டாக்குவது. [ஔதச்விதம்.]

ஔதநிகன்—சமையல்செய்கிறவன். [ஔதநிக: ஓதநம் - சோறு.]

ஔதர்யம் — உதரத்திலிருப்பது. [ஔதர்ய.]

ஔதரிகன்—மிகவுண்கிறவன். [ஔதரிக: உதரம் - வயிறு.]

ஔதாசீநியம்—1. தனிமை. 2. விருப்புவெறுப்பற்றதன்மை. [ஔதாஸீந்யம்: உதாஸீநம் விருப்புவெறுப்பின்மை.]

ஔதாரியம்—1. உத்தமம். 2. உதாரகுணம். 3. மேன்மை. [ஔதார்யம்: உதாரம்- கொடை.]

ஔதும்பரம்— 1. உதும்பரமரத்தினாற்செய்யப்பட்டது. 2.உதும்பரமரத்தினோடுசம்பந்தமுடையது. 3. தாமிரத்தினாற் செய்யப்பட்டது. 4. திருவொற்றியூர். [உதும்பரம் - அத்திமரம், தாமிரம்.] [ஔதும்பரம்.]

ஔபச்சிலேடிகம்— அடுத்திருத்தல் அல்லது ஒன்றுபட இருத்தலோடு சம்பந்தப்பட்டது. [உபச்சிலேஷம் என்பதினின்றுவந்தது.]

ஔபச்சிலேடிகவியாத்தி— பாலின் நெய் போலவும், பழத்தின் மதுரம்போலவும், எள்ளில் எண்ணெய்போலவும் ஒரு வஸ்துவிலே முழுதும் வியாபகமாக ஒன்றுபட்டிருக்கை. (சி. சி. உ: க. சிவாக்.)

ஔபச்சிலேடிகவியாபகம்— பாலின் நெய்போல எங்குமாய் ஒன்றுபட்டிருத்தல்.(உ-ம்.) " ஒருவாற்றானும் அசித்தாலரிய வியாபகப்பொருள்போல ஔபச்சிலேடிக வியாபகமாதலும்" (சி. சி. ௪: ௨௦. சிவஞான.)

ஔபசாரிகம்— உபசாரமானவார்த்தை; அஃது அடிமையை அரசன் என்பதுபோல உருவகமாகப்பிரயோகிக்குமொழி. (வேதா. சூ. ௧௨௬. உரை.) [ஔபசாரிக.]

ஔபத்தியம்—மகளிரைப்புணர்தல். [ஔபஸ்த்யம்: உபஸ்தம் - பெண்குறி.]

ஔபதர்மியம்— பொய்ப்போதனை. [ஔபதர்ம்யம்: உபதர்மம்.]

ஔபதேயம்—பண்டிச்சில். [ஔபதேயம்.]

ஔபநிடதம்—உபநிடதத்துள்ளது. [ஔபநிஷதம்.]

ஔபநிதிகம்—அடகாக அல்லது ஈடாகவைக்கப்பட்டது. [ஔபநிதிகம்.]

ஔபபத்திகம்— 1. எட்டுக்தூரத்துட்பட்டது. 2. தக்கது. [ஔபபத்திகம்.]

ஔபலி— கல்லாலாயது. [ஔபலீ: உபலா - கல்.]

ஔபாசனம்—கிருகத்திலே உபாசனைக்காக வளர்க்கப்படும் அக்கினி என்பது தாற்பரியம். [ஔபாஸந.]

ஔபாசனுக்கினி— உபாசனார்த்தமாகக்கிருகத்திலே காலைமாலைகளிலே வளர்க்கப்படுமக்கினி. (விவேகசிந்தாமணி.) [ஔபாஸநாக்நி.]

ஔபாதிகம்— உபாதியாலுண்டாயது. (சி. சி. உ; க. ஞாநப்.)

ஔமம் — பிரதிட்டாகலையிற் பிரகிருதிதத்துவத்திலிருக்கு மெட்டுப்புவநங்களுளொன்று. (சி-வி. கிரி. உக. உரை.)

ஔர்வசேயன்— அகஸ்தியமுனிவன். [உர்வசி - ஒரு தேவரம்பை. உருப்பசியினுற்பிறப்புடையன் என்றபடி.] ஔருவசேயன் என்றும் வழங்கும்.

ஔரகம்— 1. ஆயிலியநட்சத்திரம். 2. பாம்புக்குடையது. 3. பாம்போடு சம்பந்தப்பட்டது. [ஔரக: உரகம்-பாம்பு.]

ஔரசன்—ஒருவனுக்குக்கிரமமாகச்சடங்கு செய்யப்பட்ட தனதுசாதி மனைவியிடத்திலே பிறந்த புத்திரன். (மிரு-ச. உ0௯.)[உரஸ் உத்தமம்.]

ஔரப்பிரகம்—ஆட்டுக்கூட்டம். [ஔரப்ரகம்: உரப்ர-ஆடு.]

ஔரப்பிரகன்—ஆடுமேய்ப்பவன்.

ஔரிதம்— தருமசாத்திரம் பதினெட்டினொன்று.

ஔநவவிரதி—நீர் ஒன்றையே உட்கொண்டு தவஞ்செய்பவன்.

ஔவித்தல்—பொறாமையடைதல். (உ-ம்.) "ஔவித்தழுக்காறுடையானைச்" (வள். கசஎ.)

ஔவியம்— பொறாமை. (உ-ம்.) "ஔவிய நெஞ்சத்தானாக்கமும்" (வள். கசுகு)

ஔவுதல்— 1. அங்கலாய்த்துவிழுதல். 2. அழுந்தியடுத்தல். (உ-ம்.) "நெருப்புத்தோலை ஔவி எடுத்துப்போட்டது" 3. கடித்துப்பிடித்தல். (உ-ம்.) "குழந்தை முலையை ஔவி ஔவிப்பாலருந்தும்" 4. வாயினுலேந்தல். (உ-ம்.) "பசுவின்கன்று புல்லை ஔவித்தின்கின்றது" (வழக்.)

ஔவை—ஓர் தெய்வப்புலமைபாட்டி; இவள்: ஆத்திசூடி முதலிய நீதிநூல்களும், அசதிக்கோவைமுதலிய நூல்களும் செய்தவள். 1,2. தாய். (சூ. நிகண். கக: வகரவெ. கஅ.)

ஔவைமார்கள்—ஆரியாங்கனைகள். (ஜைந) (சிந்தா.)

ஃ—ஆய்தஎழுத்து; இப்புள்ளிவடிவினதாய ஆய்தம் குற்றெழுத்தின் முன்னதாய் உயிரோடுகூடிய வல்லெழுத்தாறனுள் ஒன்றன்மேலதாய் வரும். (உ-ம்.) எஃகு, முதலாயின (ந.ன்.- க0. உரை.) இது: செய்யுளில்வருங்கால் அலகுபெற்றுயிர்போல்வும், அலகு பெறாது மெய்போலவும் நிற்றலில் நெடுங்கணக்கில் உயிர்வருக்கத்திற்கு மெய்வருக்கத்திற்கும் இடையில் வைத்து வழங்குவார். இதன் வடிவைப்பிற்காலத்தில் வேறுபட வரைந்து வழங்குவாராயினர்.





நிறுவனத்தில் கிடைக்கும்

பிற வெளியீடுகள்

**செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி பேரகராதி**

| | | |
|---|---|---|
| முதன் மடலம் - முதற்பகுதி (அ) | - | ரூ. 100. 00 |
| முதன் மடலம் - இரண்டாம் பகுதி (ஆ - ஈ) | - | ரூ. 150. 00 |
| முதன்மடலம் - மூன்றாம் பகுதி (உ - ஔ) | - | ரூ. 150. 00 |

**தமிழ் – தமிழ் அகரமுதலி**

| | | |
|---|---|---|
| மு. சண்முகம் பிள்ளை | - | ரூ. 100. 00 |

**7வது உலகத் தமிழ் மாநாடு கருத்தரங்கக் கட்டுரைகள், மொரீசியசு, 1989**

| | | | |
|---|---|---|---|
| Vol. 1 - | English | - | ரூ. 294. 00 |
| | Deluxe | - | ரூ. 423. 00 |
| Vol. 2 - | தமிழ் | - | ரூ. 215. 00 |
| | Deluxe | - | ரூ. 335. 00 |

**8வது உலகத் தமிழ் மாநாடு, தஞ்சாவூர், 1995**

| | | |
|---|---|---|
| சிறப்பு மலர் | - | ரூ. 100. 00 |
| அறிவியல் மலர் | - | ரூ. 50. 00 |
| மாணவர் மலர் | - | ரூ. 25. 00 |